




# IN MEMORY

OF THE

# CORONATION

OF THEIR

MOST GRACIOUS AND IMPERIAL MAJESTIES

## King-Emperor George V.

AND

## Queen-Empress Mary

## AT DELHI

*12th December, 1911.*





# INTRODUCTION.

My friend, Mr. Kanchi Nagalinga Mudaliar, having requested me to write an-introduction to this volume, I do so with much pleasure. It is wellknown that there are very many lexicons in Tamil, and some of them very old, but they are all in verse. The credit of being the pioneer in lexicons on the European model is due to the famous Father Beschi, otherwise known as Viramamunivari, who laboured long and well in Southern India. He was the first to introduce a knowledge of Tamil into the West. He was an Italian Jesuit, and was appointed to the South Indian Missions in 1700, and died at Manaparai in 1742. He lived at Avur near Trichinopoly (the Easter festival is known as Avur Tirunal in Trichinopoly District), assuming the dress, and conforming to the habits of a Hindu Guru. He studied Tamil, Telugu, Sanskrit, Hindustani and Persian; and from 1736 to 1740, he was Dewan or Chief Minister to Chanda Sahib. His contributions to Tamil literature were numerous. His greatest works was the Thembavani, an epic in Tamil verse, summarising the Gospel History, and there are some very fine passages in it. The best of his prose works are, his Vediar Olukkam and the wellknown story of Paramartha Guru. He wrote several Grammars, and the Latin translation of the sacred Kural is also ascribed to him. And his work ‘சதுரகராதி’ is the first lexicon of its kind in Tamil. This was the basis on which the subsequent lexicons have been worked in Southern India. Several such works were brought out in Jaffna by European and Indian Scholars. The First edition of the present work was brought out by my old friend N. KADIRVELU PILLAI

of Melaipuloli, Jaffna, and was the best of the lexicons up to that time. He had added considerably to the vocabulary and added many biographical notes. He was a scholar of rare intelligence and earnestness, and spent the best years of his life in Southern India, in teaching and lecturing. He has published several works in prose and verse, some of which are Sivakshetra Mahima Vilakkam and on the Holy Ashes and Karuvur Puranam and Buddha Madha Khandanam. His premature death has caused a vacancy in the rank of Tamil Pandits, which is hard to be filled up. The popularity of his lexicon can be imagined by the fact that two editions have already been exhausted, and the publishers are bringing out this third edition. The improvement in the present edition is due to my friend Mr. *Kanchi Nagalinga Mudaliar*, a devoted pupil of the famous *Siddanta Sarabham Ashtavadanam Puvai Kalyanasundara Mudaliar Avargal*, who, barring one exception, occupies the premier position among Tamil Scholars in Madras. Owing to his researches in Tamil Siddhanta works, the present Editor has added considerably to the work from the Siddhanta Literature, which will be of the highest value to modern day Tamil students, when a great awakening in the study of Tamil Religion and Philosophy is clearly perceivable. I wish the publication every success which it richly deserves. The work will appeal to all, all the more, as it is issued as a Memorial Edition in honour of the Coronation of our Sovereign Lord *The King-Emperor, George V*.

GUNTUR<br>
12—12—1911 J. M. NALLASAMI PILLAI.

உ

பரமபதிதுணை.

# தமிழ்மொழியகராதி.

யாழ்ப்பாணம்

ஆறுமுகநாவலர் மாணாக்கரின் மாணாக்கராகிய

மேலைப்புலோலி வித்வான்

**நா-கதிரைவேற் பிள்ளையவர்கள்**

சேர்த்த சொற்களோடு



சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்கள்

மாணவரும்

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவருமாகிய

வண்ணக்களஞ்சியம்

**காஞ்சி-நாகலிங்க முதலியாரவர்கள்**

ஆயிரக்கணக்கான சொற்களைச் சேர்த்த பிரதிக்கிணங்க

பிருங்கிமாநகரம்

வேம்புலி முதலியாரவர்கள் குமாரர்

**நமசிவாய முதலியாரவர்களால்**

தமது

நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

ஆறும் பதிப்பு.

நெ. 88, அவதானம் பாபையர் வீதி. சூளை சென்னை.

1928.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

மதுரைத் தமிழ்ச்சங்க ஸ்தாபகரும் அக்கிராசனாதிபதியும்
பாலவநத்தம் ஜமீன்தாருமாகிய
ஸ்ரீமான்

## பொ. பாண்டித்துரைத்தேவரவர்களியற்றியது.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இருந்தமிழ் மொழியின் பொருளினை யுலகோ ரெளிதினிற் றெளிதா லின்றி
வருந்துத லொழிய வோரக ராதி மாண்புற வமைத்தனன் வளங்கள்
பொருந்தியாழ்ப் பாண மாநகர்க் கதிர்வேற் புலவனங் கதனையச் சியற்றி
இருந்தென வளித்தான் சென்னைவாழ் நமச்சி வாயனு மாமதி யவனே. (1)

அப்பதத்துடனே பலமொழி சேர்த்தங் கச்சிட வேண்டுமென் றன்பால்,
இப்பொருட் கிறைவன் றிருவருள் பெற்றேழ் னிருந்தமி ழினிதுகற் றுணர்ந்
தான், செப்பருங் குணத்தான் காஞ்சிநா கலிங்கச் செந்தமிழ்த் தொண்டை
மண் டலத்தான், தப்புற வில்லா தாயிரக் கணக்காய்த் தமிழ்ப்பதஞ் சேர்த்து
ன் குதவ. (2)

சென்னைவாழ் நமச்சி வாயனென் பவன்றன் சிறந்துயர் கிரஞ்சன விலாசத்
தன்னதொப் பில்லா வதனிலச் சியற்றித் தமிழ்வல்லோர் தமக்குப கார
மின்னதே யன்றி வேறிலை யென்ன யாவரு மகிழ்ந்தினி தேற்ப
ன்னூல கதனி லளித்தன னிதற்கு மாறிலை வேறினி மன்னே. (3)

---

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்
ஸ்ரீமத்

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்களியற்றியது.

பன்னிருசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ன்னியபற் பலதுடவை செறிந்திலகும் பிருங்கிமலை வதிந்து வாழ்ந்த
வண்மையுள வேம்புலிக்கோ மான்றவத்தின் பயனாக வந்து தித்த
ன்னியபே ரீகைதயை சாந்தகுண மிருகல்வி தூயசெல்வந்
துன்னியசீர்ப் புகழ்படைத்த நமச்சிவாயப் பெயராற் றுலங்கு சீலன்
ன்னமச் சிட்டவிரண் டாம்பதிப்பி னகராதி முற்றுஞ் சூழ்ந்து
மொழிகளா யிரமாயி ரம்மாயி ரஞ்சேர்த்து முற்று வித்தான்
ன்னருமைக் கண்மணிநேர் மாணவகன் காஞ்சிநக ரெழில்விற் பன்னன்
இரும்வண்ணக் களஞ்சியநன் னாகலிங்க நாவலனு மெழின்மை யோனே.

சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

## ஸ்ரீமத். கோ. வடிவேலுசெட்டியாரவர்களியற்றிய[து]

நிலைமண்டிலவாசிரியப்பா.

நித்த னிருமல னிராமயன் பூரணன்
சுத்த ஞாதி சுயம்பிர காசன்
காரண காரிய கற்பனை கடந்தவன்
ஆரணம் போற்று மாநந்த வுருவினன்
அன்புசெய் யடியார்க் கவனியில் வந்தவர்க்
கின்புரு வீயு மீசன் சங்கரன்
அடிமல ருளத்துவைத் தார்வமா யன்பரைப்
படிமிசை வந்த பரனெனத் துதிக்கும்
வேளாள மரபு வேம்புலி முதலியார்
கேளான விரத்தினக் கிழத்தியோ டுற்றுச்
செய்ய தவத்தைச் சிறப்புட னாகச்
செய்ய வந்த சீர்பஞ் சாக்கரப்
பேரான் பிருங்கிப் பெருநக ரூரான்
ஈரான் பதமே நெஞ்சிற் கொள்வான்
அல்லவர் பரவு நமச்சி வாயன்
னல்லன கண்டு நலமுற மக்கள்
வழிமுறை யாக வருமா ரூத்தமிழ்
மொழியக ராதி முன்னுள நூலோ
டொத்துறப் புலவரா னெப்புநோக் கச்செய்
தித்தரை தன்னி னேருற வகுத்து
நிச்சய மானதன் னிரஞ்சந விலாச
அச்சி யந்திர சாலையி லச்சு
வாகன மேற்றி வந்திடப் புரிந்து
மாகன கீர்த்தி மருவலுற் றனனே.

---

சென்னை வேப்பேரி

எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

## ஸ்ரீமத். கா. நமச்சிவாயமுதலியாரவர்களியற்றியது.

விருத்தம்.

வலம்பாவும் வரிவடிவின் தமிழ்மொழிக்கிங் காமொழிகள் மன்ன வாய்ந்து
புலம்பாவும் கவிஞர்பல ருதவவக ராதியெனப் பொருந்தக் கோத்து
நிலம்பாவு புகழுடைய நமச்சிவா யக்குரிசில் நெடிது ழைத்தே
தலம்பாவத் தந்தனனு லிவன்கீர்த்தி யெந்நாளுந் தழைக மாதோ.

பெரியகுளம் டவுன் விக்டோரியா
மெமோரியல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
கீழ்மங்கலம்

## ஸ்ரீமத். கே. எஸ். சுப்பராயவையரவர்களியற்றியது.

தரவுகொச்சகக்கலிப்பா.

எண்ணியவெவ் வளமுமலி யாழ்ப்பாணத் திசைவளரும்
புண்ணியமே லிடுமேலைப் புலோலிநகர் வாழ்புனிதன்
கண்ணியமா மனமுடையோன் கதிரைவேற் பிள்ளையெனுந்
திண்ணியனிச் செகம்புகழுந் திவ்யகுண மாமேரு. (க)

மகராதி வருகடல்சூழ் மண்ணுலகின் மாட்சிமைசேர்
நகராதி காரரெல்லா நாடிவரு நட்புடையோன்
சுகராதி களும்புகழுஞ் சுகுணன்பதிப் பித்தநற்பேர்
அகராதி நனிசிறப்ப வகத்துன்னி யெமதன்பன். (உ)

கண்டிருக்குங் கனிமொழியுங் கணையிருக்குங் கருவிழியுங்
கொண்டிருக்குங் கொடியையிடங் கொண்டிருக்குங் குணக்கடலை
வண்டிருக்கு மலர்கொண்டு வழிபட்டு வளரறஞ்செய்
செண்டிருக்குஞ் செங்கையினன் றிருக்காஞ்சித் தென்பதியான். (ங)

குன்றிருக்கும் புயமுடையான் குறிப்பறிவி நயமுடையான்
நன்றிருக்குஞ் செயலுடையா னுகலிங்கப் பெயருடையான்
மன்றிருக்குங் கடவுளடி மனமிருக்கு மாண்பினர்கள்
சென்றிருக்குந் திருமனையான் றிரண்டெழுந்த வறமனையான். (ச)

வங்கத்தான் வருவதொடு வண்டிவரு வளமுஞ்சேர்
துங்கத்தார் புனைபாண்டித் துரைசாமித் தேவரவர்
தங்கத்தா மரைமதுரைத் தலத்திற்று பித்ததமிழ்ச்
சங்கத்தா ரினுமொருவன் றரப்பன்மொழி சேர்த்ததனை. (ரு)

பிருங்கிநகர்ப் பெருந்தகைவேம் புலிமுதலி யாரளித்த
வருங்குமா னகத்தியனு மமலவிலக் கணமறிந்தோன்
சுருங்கவிலாப் பொருளுடையோன் சொன்னமொழி மாறுதோன்
அருங்கலைகள் யாவுமுண ரறிவுடையோ னழகுடையோன். (சா)

தாரொன்று தடந்தோளான் றண்ணளியான் சற்குணத்தான்
சீரொன்று சென்னைநகர் சேர்நமச்சி வாயவள்ளல்
நேரொன்று மில்லாத்தன் னிரஞ்சனவி லாசமெனும்
பேரொன்று சாலைதனிற் பிழையறவச் சிட்டனனே. (எ)

சிவகங்கை ராஜா ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

## ஸ்ரீமத். கணபதியாபிள்ளையவர்களியற்றியது.

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

சீரோங்கித் திருமலியுஞ் சிறப்போங்கிச் செல்வமெலாந் தினமு மோங்கிக்
காரோங்கி யுறைமாடங் களியோங்கிக் கவிப்பிரசங் கங்க ளோங்கி
ஏரோங்கி மறைபயிலு மிடமோங்கி யெக்கியங்க ளெல்லா மோங்கிப்
பாரோங்கி வளர்மேலைப் புலோலியெனும் பதியோங்கிப் பண்பின் வாழ்வோன்.

அத்துவித சித்தாந்த மதோத்தாரணப் பெயரை யடைந்தோ னன்ற
பத்திநெறி யுடையவனென் பாலதிக நேயமுளான் பரவு சீர்த்தி
வித்தையிற்றேற ராறுமுக நாவலனிடம் பயில்வி வேகன் விஞ்சு
புத்தியிலப் புதனேர்வான் கதிரைவேற் பிள்ளையெனும் புலவ னம்மா. (உ)

அன்னவனு லியற்றியபே ரகராதி தனைவிரிப்ப வகத்தி லுன்னி
மன்னுவண்ணக் களஞ்சியமா மதுரைநகரத் தமிழ்ச்சங்க வாணன் வாய்ந்த
பொன்னகர்நேர் காஞ்சிபுர நாகலிங்கப் புலவன்மனப் பொருந்த மாகப்
பன்னுமா யிரக்கணக்காம் பதங்கடர வாங்கியுடன் பயிலச் சேர்த்தே. (௩)

கந்தன்மலர்க் கழலிணையைக் கருதுகருத் தினன்றருநேர் கையான்கல்விச்
சந்தமிகு வேம்புலிசெய் தவப்பயனு வுற்பவித்த தனையன் சார்ந்த
பந்தமிகு நமச்சிவாயப் பெயர்கொள் சுகுணனிந்தப் பாரின் மீதே
விந்தைபெற நிரஞ்சனவி லாசமதிற் பதித்திசையே மேவி னனால். (௪)

---

புளியங்குளம் மதுரகவி

## ஸ்ரீமத். முத்துமாணிக்ககவிராயரவர்களியற்றியது.

### ஆசிரியச்செய்யுள்.

பூமேவு செந்தமி ழிலக்கண விலக்கியப் பொற்குன்ற மெனவிளங்கிப்
புதியகற் பனைரசப் பொருளிலற் புதமிகப் புகழ்மிகக் கவிநாட்டிப்
போற்றிய புராணு கமங்கள் சைவாகம புராணபண் டிதவகண்ட
புண்ணிய மகத்துவத் தால்வந்த வித்வகுல புனிதசான் றோர்க்குறித்தாம்
நாமேவு மக்காம கன்மகட் கினியகுக நாதநாமம் புனைந்தென்
னுளும்நிலை நின்றகதிர் வேல்மன்னவன் முன்னம் நல்குமகராதியுடனே
நன்மைதரு மதுரைத் தமிச்சங்க சிங்கம்வண் ணக்களஞ்சியம் காஞ்சிவாழ்
நாகலிங்கக் கல்விமா னுயரும்வித் துவசனர்க்கு மறிஞர்க் குதவியாய்ப்
பாமேவு செஞ்சொலின் பொருண்மேவி வந்திலகு பதபதார்த் தமதனைத்தும்
பாவிலந்தது தெரிந் ததில்மறைந் தவையெனும் பண்ணி னுட்பந்தெரிந்து
பழுதிலா ததிகவிற் பனவிலா சமதியாற் பகருதற் கரியதையெலாம்
பளமைக் கிரட்டிப்பிர பலமேன்மை யானபற்பலவா யிரஞ்சொல்சேர்க்கத்
தாமே தமக்கிணை யெனச்சொல் வேம்புலி முதலிதரு நமச்சிவாயவள்ளல்
சங்கமிகு சென்னையில் நிரஞ்சன தமதச்யந்திர சாலையிலியற்றி யதுவே
தரைமுற்று முயர்வுற்ற பெயர்பெற்ற தமிழ்கற்ற சகலர்க்கு மிருநேத்திர
தானபிர தானகுரு தானவுப மானமென் றுலியான் சொலவல்லனே.

திரிசிரபுரம். எஸ். பி. ஜி. காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்
மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவரும் செந்தமிழ்ச்செல்வம் பத்திராதிபருமான
அமிர்தம்

## ஸ்ரீமத். சுந்தரநாதபிள்ளையவர்களியற்றியது.

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நதியணிந்த முடியானு நறுங்கடப்பந் தாரானு நயந்து தந்த
முதியதமிழ்ப் பெருங்கடலை யுண்டினிமை கண்டுவலி முறையே கொண்டு
பொதியமலை மிசையேறிப் புகழ்விரித்த குறுமுனியும் புகழ்ந்து கூறப்
புதியதொரு தமிழ்நிறைந்த வகராதி பிறந்துளது புவியி னம்மா. (க)

மதியணிந்த பெருமானு மயின்மிசையே வருவானு மகிழ்ந்து கேட்டுத்
துதிபெறுநந் தமிழணங்கு துயரறவே செயலுற்றாள் சொல்லுற் றாளால்
இதினினிமை யெங்குண்டா லெனக்களிக்க வகராதி யெழுந்த தம்மா
புதியவிது பரவவென வச்சியற்றிப் புகழுற்றோன் புவியில் வாழி. (உ)

பண்கொண்ட தமிழ்க்கவிஞன் கதிரைவேற் பிள்ளைமுன்னாள் பரவை ஞாலத்
தெண்கொண்ட தமிழ்பயில்வோர்க் குதவவென வகராதி யென்னு நூலை
எண்கொண்ட மொழிகூட்டி மிகவோங்க வச்சியற்றி விளங்கத் தந்தான்
திண்கொண்ட வந்நூலி லுள்ளதுபோ தாதென்றே தெளிந்து மன்னோ. (ங)

செய்யதிருக் காஞ்சிநகர் செய்நோன்பால் வந்துதித்துத் திகழு மேலோன்
பொய்யணுகா மொழிபுகலும் புனிதவள்ளல் புலவரர்கள் போற்றுஞ்சிங்கம்
தையலொரு பாகத்தான் றொண்மறவாக் குணசீலன் தமிழர் கோமான்
துய்யவண்ணக் களஞ்சியமென் றோதுமொரு நாகலிங்கத் தோன்றல்பின்னும்.

ஆழ்ந்துபரந் தோங்குதமிழ்க் கடல்கடந்த வறிவாலே வழகார் சொற்கள்
வீழ்ந்துபடா திருக்கவென வாயிரவா யிரமாக மேவக் கூட்டிச் [தான்
சூழ்ந்துகடல் விளங்குலகிற் சுவைமணக்குந் தமிழ்மணக்கத் தோன்றச்செய்
வாழ்ந்திருந்த புலவரரில் யார்பெற்றா ரிவன்பெற்ற வளப்ப மம்மா. (ரு)

இலகுமணி மிடற்றான்முன் கடலின்க ணுய்ந்ததமிழ் குழுமிக் கற்கும்
புலவரர்க்கும் மற்றோர்க்கும் வைப்பெனுமிவ் வகராதி புவிக்க ணெங்கும்
நிலவவென வச்சிரத மேற்றியெங்கு முலவுவித்து நிலவி நிற்கும்
உலகுபுகழ் குணனெவனென் றேவினவி லுளங்களிக்க வுரைப்பன்கேண்மோ.

காசினியிச் சிறந்தொளிரும் பிருங்கிநகர் செய்நோன்பாற் கல்வி வல்ல
தேசினிய வேம்புலிவேள் தவத்துதித்தோன்மு த்தமிழ்தேர் சிறப்பின்மிக்கான்
வீசியெண்டோ ணின்றசைய மணிமன்று ணிர்த்தமிடு விமலன் றன்றாள்
பேசியுளங் களித்தோங்கு மூயர்நமச்சி வாயனெனும் பெரியோன்றானே. (எ)

வள்ளிமண வாளனுமே மதிக்குமிந்த வகராதி வாழி வாழி
வெள்ளிமலை யிறையடியே பாடுமிந்த நூற்றலைவன் விளங்க வாழி
கொள்ளவச்சிட் டுதவுகிரஞ் சனவிலா சச்சாலை குலவ வாழி
அள்ளிநட மிடுபதஞ்சொல் நமச்சிவாயத் தலைவனுமே தோன்ற வாழி. (அ)

உ

சிவமயம்.

# பதிப்புரை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நதிகாட்டுந் திருமுடியு நடங்காட்டும் பதமலரு நஞ்ச யின்று
துதிகாட்டுந் திருமிடறுந் துணைகாட்டும் பரசிவையுந் துஞ்ச லில்லா
விதிகாட்டுந் திருவாயும் விடைகாட்டு மீச்சுரனார் விழைவி னேத்தப்
பதிகாட்டுந் திருக்குடிலைப் பதங்காட்டுந் தணிகைவரைப் பகவன் வாழி.

அநாதி மலமுத்த பதியாகிய சிவபெருமானிடத்துத் தோன்றி, சங்கப் பலகையிற் கிடந்து, தவத்திற்கதித்த அகத்தியனாராதிய செந்நாப்புலவரெனுஞ் செவிலிகளாற் போற்றப்பட்டு, வையை யேட்டிலே தவழ்ந்து, பூவுலகெங்கணும் பொலிவுறநடந்து. பொருளணியாதிய விலக்கணங்கள் பொருந்தவளர்ந்து, முதிரா நிலைமையினென்றுங் கன்னியாநின்று, புலவர் நாவினை மணந்து, அறம்பொருளின்பம் வீடென்னு மரும்பொரு ணன்கையும் பயந்து நிலவா நிற்பது அமுதினுமாற்ற வினிய தமிழேயாம்.

இனிமைப்பொருள் கொடுக்குந் தமிழ், என்னும் பண்புப்பெயர் ஆகுபெயராய், அதனையுடைய சொல்லையுணர்த்தி நிற்கும் என்ப. இங்ஙனமன்றி இமிழ் குமிழ், சிமிழ் என்பனபோலத் தமிழ் என்னுஞ் சொல்லையும், தமிழ்பகுதி எழுத்துப்பேறு எனக்கொண்டு, தனிமையானமொழி எனப் பொருள்கொள்வதுமாம். இவற்றானே செந்தமிழ் மொழித்தேவ நங்கையானவள், சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசலம் என்னுந் தற்சூழ்ந்த அயன்மொழி மாதர்களினும், ஏனைய அநாரிய பாஷைப்பேதையர்களினுஞ் சிறந்தவள் என்பதும், சிவபெருமானும், முருகப்பெருமானும், அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும் இவருள்ளிட்ட ஏனைய பொய்யடிமையில்லாப் புலவர்களுஞ் சங்கமிருந்து வளர்த்தமையானும், அநேக அற்புதங்களை விளைத்தமையானும், இறைவன் தன்பெயரைநாட்டி யகப்பொருளியலை யளிக்கப்பெற்றமையானும், எழுது மறையாகிய தேவார திருவாசகங்களை யுடைமையானும், முற்பட்டுத் தோன்றியதாய் இயலிசை நாடகமென்னும் மூத்தமிழியலு மொருங்குணர்த்து மகத்துவமுடைய அகத்திய முதனூலிலக்கணத்தையும் அதன் வழித்தாய் தொல்காப்பிய முதலிய வேனையவழிசார்பு நூல் இலக்கணங்களையு முடைமையானும் உத்தரவேதம் என்னும் வித்தக உத்தரீயம் விளங்கப்பெறுதலானும், வடமொழிக்கணில்லாத புணர்ச்சிக்கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும் உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும் அகம் புறமென்னும் பொருட்பாகு பாடுகளும், குறிஞ்சி, வெட்சி, உழிஞை, முல்லை, வாகை, தும்பை, முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பாமுதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்னவைகளை

யுந் தனக்கே சுதந்தரமாகப்பெற்று விளங்கலானும், தன்னுடன் றோன்றி விளங்கும் ஆரிய முதியாளினு முயர்வுடையளென்பதும் விளங்கும்பெற்றிய தாம். இங்ஙனமாகவுஞ் சம்ஸ்கிருத மொழியினின்றுந் தமிழ்மொழி பிறந்த தென்று முழங்குவாருஞ் சிலர் உளர். மூஞ்சிமுதலாவியலுறுப்பும், வாயிசையும் கானடமும்பெற்று, சொற்பொருண் மலிந்து இனிமைவிளங்கும் பலவளனு நீஇ, முக்கட்கடவுளும் முருகப்பெருமாளாதியருந் தந்திருவாயாற் புகழவும், சிற்றம்பலமுடையார் தந்திருக்கரத்தாற்றீண்டவும் பெற்றதெய்வம் வாயில்லா வடமொழியாள் வயினின்றும்வந்துலவுவளென்பதுசாலவும் வியக்கத்தக்கதே.

"நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்" என்னுஞ் சிலப்பதி காரச் செய்யுட்கண் "முதலூழி யிறுதிக்கண் தென்மதுரை யகத்துத் தலைச் சங்கத்து" என்று அடியார்க்குநல்லார் உரைத்ததனாலும், அகத்தியத்தை யிலக்கணமாக்கொண்டாராய்ந்த முதற்சங்கமிருந்தகாலம், ஆதிகற்பத்திற் கிருத யுகத்துப் பிற்பகுதியென்க. அகத்தியம், தொல்காப்பியமென்னு மிரண்டனையு மிலக்கணமாகவுடைய இடைச்சங்கமிருந்தகாலம் ஆதிகற்பத்தில் திரேதயுக த்து முதற்பகுதியென்க. என்னை! "இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்து இடைச்சங்கத்து" என்று அடியார்க்குநல்லார் உரைத்ததனாலும், இச் சங்க விலக்கணங்களுள் ஒன்றாய தொல்காப்பியம் வாதராயண முனிவர் தோன்றி வேதந்துறைசெய்த காலத்திற்கு முன்னரேயே செய்யப்பட்டுள்ளது என்பது போதரத் தொல்காப்பியச் சிறப்புப்பாயிர வுரைக்கண் "இவர் இந்நூல்செய்த பின்னர் வேதவியாசர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தார்" என்று உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினி யர் உரைத்தமையானும், வேதவியாசர் கூறுசெய்தகாலம் ஆதிகற்பத்துத் துவாபரயுகமென்பது கந்தபுராணத்தார் கருத்தாகலானும், அதுவே நஞ்செந் தமிழ்மண்டலப் புலவர்களுக்குந் துணிபாகலானுமாம் தமிழ்த்தோன்றியகாலத் தைப் பவரும்பலவகையாகக்கூறுப. அவை விரிப்பிற்பெருகும், ஆயினும் இவற் றானும், சிவஞானயோகிகளாதிய ஆசிரியர் கட்டுரைகளானும், தமிழ்மொழி அநாதியே இறைவனால் அருளப்பட்டதொன்றென்பது தெற்றெனவுணர்க.

இன்னன சிறப்புவாய்ந்த தமிழ் மொழிக்கணுள்ள நூல்களோ அளவிறந் தனவாய்க் கிடைத்தலின் சொல்லினளவுஞ் சொல்லுந்தன்மைத்தோ! அந்நூல் களையும் அவற்றினுள்ளசொற்களையும் அவற்றிற்குள்ள பொருள்களையும் ஒவ் வொருவரும் எளிதில் உணர்தல் அருமையாகலின் அவற்றுள் தம்மறிவிற் கெட் டியவளவினவற்றையெல்லாம் ஒருங்குசேர்த்து உதவநினைந்து, கஅஉஉ-ஆம் ஆண்டிலே, யாழ்ப்பாணம் சரவணமுத்துப்புலவர், சந்திரசேகர பண்டிதர் முதலாய செந்தமிழ் விநோதச் செல்வர்கள். பலர்சேர்ந்து, அகரவெழுத்தை ஆதியாகவ ரித்துச் சொற்களையெல்லாஞ் சேர்த்துப் பொருள்களையுங்காட்டி, ஓர் அகரா தியை முதலில் வெளிப்படுத்தினர். அவற்றைப் பிரகடனஞ்செய்ய விரும்பின பின்னோர்சிலர்சிலவடமொழிகளையுஞ்சேர்த்து வெளிப்படுத்தினர். இங்ஙனமே

சிற்சில அகராதிகள் காலந்தோறும் அவ்வவரால் வெளியிடப்பட்டன. அவைக ளெல்லாம் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல்களினும், வேதாந்த சித்தாந்த நூல்களினுமுள்ள அகப்பொருள் புறப்பொருட் பாகுபாடுகள், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகள், வெண்பா முதலிய பாவகை, பாவினம், அலங்காரவகை, பரதாகதாளப்பகுதி, அங்கக்கிரியை, உடலவருத்தனை, அவிநயம், நிலை, கூத்துவகற்பம், வங்கியமுதலிய கருவியிலக்கணம், பண், வண்ணப்பகுதி, வரிப்பகுதி, தத்துவம், முப்பொருளிலக்கணம் என்றின்னோன்ன முக்கிய விடங்களாகிய சொற்பொருட்டொகைகளைக் கொள்ளாதனவாயிருத்தலை யுணர்ந்த சில நண்பர்கள் அவைகளெல்லாமமைய ஒரு அகராதியொன்று தருகவென்று பன்னாளும் பன்முறையுந் தூண்ட அதற்கிசைந்து யாழ்ப்பாணம் மேலைப்புலோலி வித்வான் நா - கதிரைவேற்பிள்ளை அவர்களைக்கொண்டு பரதசேனாபதீயம், இசைநுணுக்கம், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, அன்பிணைந்திணை, கல்லாடம், தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு, கலித்தொகை பத்துப்பாட்டு, இலக்கணவிளக்கம், வீரசோழியம், புராணங்கள், இதிகாசங்கள், சூளாமணி, புறப்பொருள்வெண்பாமாலை, சித்தாந்தசாத்திரம், பிங்கலந்தை, திவாகரம் முதலிய அரியபெரிய நூல்களினின்றுஞ் சொற்களையும் தொகைப்பொருள்களையும் செந்தமிழ்நாட்டு வழக்கமொழிகள் பலவற்றையுஞ் சேர்த்து அச்சிட்டு வெளிப்படுத்தினேன்.

இந்நான்காம்பதிப்பைத் திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துத் திராவிடமாபாடிய கர்த்தாவாகிய சிவஞானயோகிகள் மாணாக்கரின் மாணாக்கருள் ஒருவராகிய, பிரதாபம்-சரவணப்பெருமாள் முதலியார் அவர்கள் குமாரரும், சித்தாந்தசரபம் அஷ்டாவதானம் பூவை-கலியாணசுந்தர முதலியார் அவர்கள் மாணவரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்துவானும், மெய்கண்டசாத்திரப் பிரசாரகரும் ஆகிய வண்ணக்களஞ்சியம் காஞ்சி - நாகலிங்க முதலியார் அவர்கள் ஆயிரக்கணக்கான பதங்களைத் தாம் பதிப்பித்துவரும் மெய்கண்டசாத்திரம் பண்டாரசாத்திரம் முதலிய பற்பல ஞானநூல்களிலிருந்து திரட்டிக்கொடுக்க, அவர்கள் கட்டளையின்படி தமிழ்மொழியகராதி என்னும் பெயரால் அப்பதங்களை இடையிடையேசேர்த்து முந்திய பதிப்பின்படி நன்றாகப் பார்வையிட்டு அச்சிப்பதிப்பித்தேன். இதிற் குற்றமுளதாயின் உலகம் பொறுக்க.

இத்தமிழ்மொழியகராதி என்னும்அரிய பெரிய நூலை 1911ஞு டிசம்பர்மீ 12உ டில்லிமாநகரில் நடைபெறும் மகா மாகனிமை தங்கிய இந்திய சக்கரவர்த்தியவர்கள் முடிசூட்டுத் திருவிழா ஞாபகச்சின்னமாக அர்ப்பணம் செய்கிறேன். சுபம்! சுபம்!!

சென்னை<br>
1-11-18

இங்ஙனம்,<br>
பி. வே. நமசிவாயன்.

கடவுள் துணை.

# தமிழ்மொழியகராதி

எவனாலே முத்தமிழென்றும் துலங்கும்
அவனருளும் இன்னூற் கரண்.



அ - தமிழ் மொழியின் நெடுங்கணக்கில் வரும் முதல் எழுத்து, உயிர் முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள் வாயைத் திறந்த அளவிலே ஒலிக்கும் ஒருகுற்றுயிர், அஃறிணைப் பன்மையீறு, அஃறிணைப் பன்மை வினைமுற்று, ஆறுவ்தன் பன்மையுருபு, இன்மை, எதிர்மறை, குறைவு, சம்மதி, சாரியை, அந்த, சுட்டு, தடை, பிறிது, வியப்பு. இவற்றைக் காட்டும் ஓருபசருக்கம், எட்டென்னும் எண்ணின்குறி, ஓரெழுத்து, சுக்கு, திப்பிலி, பெயரெச்ச வினையெச்சவிகுதிகள், சிவன், விஷ்ணு, பிரமன்.

அஆ - அதிசய விரக்கக் குறிப்பிலே வரும் ஒரு கூட்டிடைச்சொல், விட்டிசை.

அஃக - குறைய, சுருங்க, நுண்மையாக.

அஃகம் - விலைப்பொருள், தானியம், ஊற்றுநீர், முறைமை.

அஃகரம் - வெள்ளெருக்கு, கிரியை.

அஃகல் - குறைதல், சுருங்கல்.

அஃகாமை - குறையாமை, சுருங்காமை.

அஃகான் - அ என்னும் முதலெழுத்து.

அஃகியஇ - குற்றியலிகரம்.

இஃகியஉ - குற்றியலுகரம்.

அஃகியஐ - ஐகாரக்குறுக்கம்.

அஃகியஔ - ஔகாரக்குறுக்கம்.

அஃகியதனிநிலை - ஆய்தக்குறுக்கம்.

அஃகியமஃகான் - மகரக்குறுக்கம்.

அஃகியவறிவு - கூர்மை, நுண்ணறிவு, விவேகம், சூக்குமபுத்தி.

அஃகு - அஃகென்னு முன்னிலையேவல், தெரிநிலைவினைப்பகுதி, பெயரெச்சத்தொகை.

அஃகுதல் - சுருங்குதல், அளவிற்குறைதல், கழிந்துபோதல், குவிதல், நுண்மையாதல், நீர்வற்றுதல்.

அஃகுல்லி - உக்காரி என்னும் சிற்றுண்டி, பிட்டு.

அஃகுள் - அக்குள், கக்கம்.

அஃகேனம் - நெடுங்கணக்கிலே உயிர் வருக்கத்திறுதியில் வரும் ஆய்த எழுத்து, முள்ளில்லாப்பன்றி.

அஃதான்று - அஃதல்லாமல்.

அஃதி - அஃதை.

அஃது - அது, ஒரு சுட்டுப்பெயர்.

அஃதை - ஆதரவற்றவன், ஆதரவற்றவள்.

அஃபோதம் - நிலாமுகிப்புள்.

அஃறிணை - இழிதிணை, உயர்நிலை அல்லாதசாதி.

அகக்கடவுள் - ஆன்மா, உயிர்க்குள் இறைவன், மனம்.

அகக்கணு - உள்ளிருக்குங் கணு.

அகக்கண் - மனக்கண், ஞானக்கண்.

அகக்கமலம் - இதயதாமரை.

அகக்கரணம் - அந்தக்கரணம்.

அகக்கருவி - உட்கருவி, தேகசம்பந்தமாகிய ஆன்மாவினது உட்கருவி.

அகக்காழன - உள்வைர மரங்கள்.

அகக்காழ் - ஆண்மரம் - உள்வயிரம், வச்சிரக்கல்.

அகக்கூத்து - ஞானக்கூத்து, அகச்சுவையாகியகுணத்தின்வழி நிகழுங்கூத்து.

அகக்கூத்துக்கை - அகக்கூத்தில் காட்டும் கை.

அகங்காரம் - அகங்காரம்.

அகங்கரித்தல் - ஆங்காரங் கொள்ளுதல், கர்வங் கொள்ளல். [த்தல்.
அகங்கரிப்பு - மனவெறுப்பு, அகங்கரி
அகங்களித்தல் - மனமகிழ்தல், மனமதர்த்தல். [உள்ளின்பம்.
அகங்களிப்பு - மனமகிழ்வு, உட்களிப்பு,
அகங்காரக்கிரந்தி-சமுசாரபந்தம், ஆணவமறைப்பு, மாயாபாசம், மும்மலத் தொடக்கு.
அகங்காரசைதன்னியவாதி - விஷயவியாபாரமாயிருக்கும் பிராணாதிவாயுக் களை ஆன்மாவென்னும்ஞானத்தினாலேஅதனையறிந்துஅத்தத்துவமடைதலே மோக்ஷமென்னும் மதத்தன்.
அகங்காரதத்துவம் - முப்பத்தாறு தத்துவங்களில் ஒன்று.
அகங்காரத்திரயம் - முக்கியஅகங்காரம், அமுக்கிய அகங்காரம், முக்கியாமுக்கிய அகங்காரம் என மூன்று.
அகங்காரம்-அகந்தை, உட்கரணம் நான் கிஞென்று, கர்வம், பிரவிக்குமூலம் அல்லது வித்து. [வாதிப்பவன்.
அகங்காரவாதி-மனமே ஆன்மா என்று
அகங்காரவிர்த்தி - நானென்னும் வடிவு ஞானம்.
அகங்காரான்ம ஞானம் - அகங்காரமே ஆன்மாவெனக்கொள்ளும் அறிவு.
அகங்காரான்மவாதி - அகங்காரதத்துவமே ஆன்மாவென்று வாதிக்கும் வைசேடிகன்.
அகங்காரி - செருக்குடையவன், கர்வி,
அகங்காழ் - அகக்காழ்.
அகங்கிரகத்தியானம் - சொரூபத்தைத் தனக் கபேதமாகச் சிந்தித்தல்.
அகங்கிரகோபாசனை - தானே தெய்வமென்றுபாவித்துச்செய்யுமுபாசனை.
அகங்கிருதன் - அகங்காரமுடையவன், கொர்வ முடையவன்.
அகங்கிருதி - அகவிவகாரம், அகங்கார தத்துவம், கெருவம், செருக்கு.
அகங்கை - உள்ளங்கை.
அகசன் - கேது.
அகசியக்காரன் - விதூஷகன்.
அகசியக்கூத்து - பகடிக்கூத்து.
அகசியம் - ஆசியம், வேடிக்கை.
அகசு - பகல், பொழுது.
அகசை - பார்வதி, மலையிற்பிறந்தவள்.

அகச்சத்தாநுவித்தசமாதி - ஆறு சமாதிகளில் ஒன்று.
அகச்சத்தானுவேதம் - அகச்சத்தானுவித்தசமாதி, அது சமாதிகள் ஆறிலொன்று. [ம்.
அகச்சமயம் - சைவசமயத்தி னுட்சமய
அகச்சுட்டு-சொல்லகத்து முதனிலையாயமைந்து நிற்குஞ் சுட்டு. [னம்.
அகச்சுவை - நாடகரசத்தொன்று, ஞா
அகடச்சக்கரம் - உதரபந்தனம் என்னுமணி. [லாங்கு.
அகடம் - அநீதி, சித்தியாகாமை, பொல்
அகடவிகடம் - அபாயம், இரண்டகம், தட்டுமாற்று, வஞ்சகம், குறும்பு.
அகடனம் - கேடு, செய்யப்படாதது.
அகடன் - துஷ்டன், நீதியில்லாதவன்.
அகடிதகடநா - மாயாகாரியஞ்செய்தல்.
அகடிதகடநாசமர்த்தன் - செய்தற்கரியதைச் செய்ய வல்லவன்.
அகடிதம் - நிறைவேற்றற்கரியது.
அகடியம் - அநீதி.
அகடு - உள், சீர், நடுப்பக்கம், பொல்லாங்கு, மேடு, வயிறு. [மை.
அகடூரம் - கொடுமையின்மை, கோண
அகடூரி - பாம்பு.
அகட்டுத்தே - விநாயகன்.
அகணம் - கணியாதது, இலகு.
அகணி - உள், கடுக்காய், சுக்கிரப்புரணி நஞ்சு, தெங்கு, பனை, முதலியவற்றின் நார், நஞ்சு, மருதநிலம், வயல்.
அகணித பஞ்சாங்கம் - அலகிடாது சொல்லும் பஞ்சாங்கம்.
அகணிதபஞ்சாங்கி - கணியாத பஞ்சாங்கஞ்சொல்வோன். [ணிதம்.
அகணிதம் - கணிக்கப்படாதது, மனக்க
அகண் - அருகு.
அகண்டகம் - முள்ளில்லாதது.
அகண்டசுருதி - விரிவாய்ப்பொருளுணர்த்தும் வேதம்.
அகண்டஞானம் - பரிபூரணஞானம்.
அகண்டத்துவம் - எதனாலும்பின்னப்படாதிருக்குந்தன்மை.
அகண்டபதம்-பிரம்மபதம், பகாபதம்.
அகண்டபரிபூரணம் } எங்கும் நிறைந்திருத்தல்.
அகண்டபூரணம் }
அகண்டம் - அபின்னம், எல்லாம், கண்டிக்கப்படாதது, சால ஏகவஸ்துவி

னுலும் வேறுபடுத்தப்படாதது, மண் விளக்கு.
அகண்டவடிவம் - நீக்கமற்றசொரூபம்.
அகண்டவாக்கியம் - விட்டும் விடாத விலக்கணை.
அகண்டன் - அருகன், கடவுள், கூறுபடாதவன், சிவன், பூரணன், விட்டுணு
அகண்டாகண்டன் - பரப்பிரமம், கடவுள்
அகண்டாகாரஞானம் - பரிபூரணஞானம்.
அகண்டாகாரம் - விசாலம், அளவுபடாத வடிவம்.
அகண்டாகாரவிருத்தி - அஞ்ஞானம் நீக்கிச் சீவசாட்சியைத் தோற்றுவிப்பது. எல்லைபடாத வடிவு.
அகண்டாகாரவிர்த்திஞானம் - பேரறிவு.
அகண்டி - ஒருவாச்சியம்.
அகண்டிதமூர்த்தி - கண்டிக்கப்படாத வடிவுடையோன்.
அகண்டிதம் - ஏற்றுக்கொள்ளல், கண்டிப்பில்லாதது, கூறுபடாமை, முழுதும்.
அகண்டித பூர்த்தி - கப்படிக்கப்படாத வடிவுடையோன்.
அகண்டிதன் - எங்கும் நிறைந்தவன்.
அகண்டிதாகாரம் - கண்டிக்கப்படாத வுருவம்.
அகதங்காரன் - வைத்தியன்.
அகதம் - ஒருகுளிகை, சுகம், மருந்து.
அகதன் - நோயிலி.
அகதி - திக்கற்றவன், தில்லைமரம், போக்கற்றவன், வறியவன், வேலமரம். [றவன்.
அகதிகன் - ஆதரவற்றவன், உதவியற்
அகதிதம் - உரைக்கப்படாதது.
அகதீதம் - ஊடுசெல்லற்கரியது.
அகதேசி - உள்ளூரவன்.
அகதேசு - பிணியில்லாதவன்.
அகத்தடியாள் - மனையாள்.
அகத்தன் - இடத்தினன், கர்த்தா அல்லாதவன்.
அகத்தார் - உள்ளிடத்துள்ளார், இல் வாழ்வார். சுற்றத்தார்.
அகத்தி - அகத்தியமுனிவன், உள்ளிருக்கிறவன், ஒருமரம், இது சாழையகத்தி, சிற்றகத்தி, செவ்வகத்தி என மூவகைப்படும்.
அகத்திடல் - மனத்தினுள்வைத்தல்.
அகத்திணை - உள்ளத்தே நிகழ்கின்ற இன்பவொழுக்கம். அது கைக்கிளை, குறிஞ்சித்திணை, பாலைத்திணை, முல்லைத்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, பெருந்திணை என, எழுவகைப்படும்.
அகத்திணைப்புறம் - கைக்கிளையும் பெருந்திணையும்.
அகத்திணையியல் - இன்பமாகிய ஒழுக்கத்தினதிலக்கணம்.
அகத்தியம் - அகத்தியராற்செய்யப்பட்ட இலக்கணநூல், அவசியம், சொல்லத்தகாதது. [லப்பட்டஒருமருந்து.
அகத்தியர்குழம்பு - அகத்தியரால்சொல்
அகத்தியவாசம் - பொதியமலை, குறுமுனி வுறையிடம்.
அகத்தியன் - ஒருமுனி சிரேஷ்டன், இவன் பேரகத்தியம் சிற்றகத்தியம் எனப் பெரிய இலக்கணநூலுக்கும் சோதிஷம் வைத்தியமுதலிய இலக்கியநூலுக்கும் ஆசிரியன்.
அகத்தியா - ஆழம், எட்டாமை, கடல்.
அகத்தியாச்சிரமம் - அகத்திய முனிவர் பர்ணசாலை. அகத்தியான் பள்ளி என்னும் ஊர்.
அகத்தியான் - அகத்தியமுனிவன்.
அகத்தியான்பள்ளி - வேதாரணியத்துக்குச் சமீபமாயுள்ள ஒருதலம்.
அகத்திருசியாநுவித்தம் - ஆறு சமாதிகளில் ஒன்று. அது மனத்தின்கண் உள்ள இராகத்துவேஷாதி விடயங்களுக்குத் தானே சாட்சியென்று சிந்திப்பது.
அகத்தினள் - மனைவி, இல்லறக்கிழத்தி.
அகத்தீசரறுகு - அகத்தியேசரறுகு, அது சிற்றறுகம்புல், பேரறுகம்புல் என இருவகைப்படும்.
அகத்தீடு - உள்ளிடுதல், கழுவுதல், கைக்குள்ளே விட்டணைத்தல்.
அகத்துவம் - கர்ப்பக்கிரகத்தன்மை, வீட்டுத்தன்மை.
அகத்துறுப்பு - உள்ளவயவம், மனத்திற்குறுப்புப்போல்வதாகியகுணம்.
அகத்தை - தாய்.
அகநகர் - நகருள்.
அகநகை - இகழ்ச்சிநகை.
அகநகைத்தல் - இகழ்ச்சி நகைசெய்தல்.
அகநம் - பாரமின்மை, பெருமையின்மை

அகநாடகம் - அகக்கூத்து.
அகநாடகவுரு-அகக்கூத்தின் வண்ணம், அவை கந்தமுதல்பிரபந்தமீறாக இருபத்தெட்டாகும்.
அகநாடு - உள்நாடு.
அகநிட்டம் - சமானமல்லாதது, சிரேஷ்டமானது, மூத்தது.
அகநிட்டலோகம் - பிரமலோகம் இருபதினுள்ளே பதினாறும் உலோகம்.
அகநிட்டன்-கனிட்டன் அல்லாதவன், கௌதமபுத்தன்.
அகநிருவிகற்பசமாதி-ஆறுசமாதிகளுள் ஒன்று. அது திருசியாநுவேதம், சத்தாநுவேதம்என்னும்இரண்டும்நீங்கி மனங்கரைந்து நிச்சலமாய் நிற்றல்.
அகநிர்ணயம் - ஆசௌசவிதிகளைக் கூறும் ஒரு சம்ஸ்கிருத நூல்.
அகநிலை - உள்நிலை, ஊர், கடவுள்.
அகநிலைக்குறிஞ்சி - ஒருபண்.
அகநிலைச்செயப்படுபொருள் - வினைச்சொல்லின் அகத்தே செயப்படுவதாக நிற்குந் தொழில்.
அகநிலைச்செவ்வழி - ஒருபண்.
அகநிலைப்பசாசக்கை - மூவகைப் பசாசக்கைகளிலொன்று, அது சுட்டுவிரனுனியிற் பெருவிரலகப்படவளைப்பது.
அகநிலைப்பாலை - ஒருபண்.
அகநிலைமருதம்-ஒருபண், அது உழைகுரலாய கோடிப்பாலை.
அகந்தை - ஆங்காரம், செருக்கு.
அகப்பகை - உட்பகை.
அகப்பக்கம் - அனுமானிக்கப் படும் பொருள், உட்பக்கம்.
அகப்படல் - அகப்படுதல்.
அகப்படுதல் -உட்படுதல், கிடைத்தல். பிடிக்கப்படுதல், சிக்கிக்கொள்ளுதல், வசப்படுதல்.
அகப்படுத்தல் -பிடித்தல், உட்படுத்தல்.
அகப்பட்டி - சுருங்கியபட்டி.
அகப்பட்டியாவார் - இஷ்டம்போன்று நடப்பவர்.
அகப்பணி - மனத்தொழில், வீட்டுவேலை.
அகப்பத்தியம் - மனைவிரதம்.
அகப்பாம் - திண்ணை, வேதிகை.
அகப்பற்று -நான் என்னும் உட்பற்று, மனவிருப்பு.
அகப்பா-அகழி,மதிலுண்மேடை,மதில்
அகப்பாடு - அகப்படுதல், உள்ளேநிகழ்ச்சியானது.
அகப்பாட்டு - அகநானூறென்னும் நூல், அகப்பொருள் பற்றிவரும் பாட்டு.
அகப்பாட்டுவண்ணம் - வண்ணச்செய்யுள்வகையில்ஒனறு. அதுமுடியாதுபோன்று முடிவது.
அகப்பாட்டுறுப்பு-அகத்திணையின் பன்னிரண் டுறுப்புக்கள். அவை: இயல்பகத்திணை, வகையகத்திணை, பொதுவகத்திணை, சிறப்பகத்திணை, உவமவகத்திணை, புரநிலையகத்திணை, எதிர்நிலையகத்திணை, காரணம் அல்லது கருவியகத்திணை, காரியவகத்திணை, காரகவகத்திணை, முன்னவை யகத்திணை, பின்னவை யகத்திணை எனப்படும்.
அகப்பு - ஆழம், தாழ்வு.
அகப்புறக்கைக்கிளை - காமஞ்சாலாவிளமைத் தன்மையுடைய தலைமகள் பக்கத்துத்தலைமகன் குறிப்பினையறியாது சென்றவளோடு மேன்மேலுங் கூறுவது.
அகப்புறச்சமயம் - வேதாகமோக்தச்சைவ சித்தாந்தத்தைப் பிரமாணமாகக்கொண்டும் அவற்றுக்குவிலக்கான கொள்கையைச் சாதிக்குஞ் சமயம், அது பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், அயிக்கியவாதசைவம் என்று ஆறுவகைப்படும்.
அகப்புறத்திணை - அகனாகிய ஐந்திணைக்கும் புறனாகிய ஒழுக்கம். அது கைக்கிளையும் பெருந்திணையுமென இருவகைப்படும்.
அகப்புறப்பாட்டு-மடலேறுதல் முதலாகத் தபுதாரநிலை யீறாகச் சொல்லப்பட்டவியற்பெயர்க்கோடாமையாம்.
அகப்புறப் பெருந்திணை - அகன்றுழிக் கலங்கன்முதலாகத் தலைவியுந்தானும் வனமடைந்துநோற்றலீறாகச்சொல்லப்பட்டனவும் பிறவுங்கூறுதலாம்.
அகப்புறப்பொருள்-அகப்புறத்திணை.
அகப்புறமுழவு - எழுவகை முழவுகளுளொன்று, அது தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலாகப் பலவகைப்படும்.

அகப்புறம்-கைக்கிளையும் பெருந்திணையும், அவைகாந்தள்,வள்ளி,சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை,குறுங்கலி, இல்லாண்முல்லை, பாசறை முல்லை என்னும் பத்தநுபவங்கள்.
அகப்பூ-இதயகமலம்.
அகப்பேய்ச்சித்தன் - பதினெண் சித்தரில் ஒரு சித்துபுருஷன்.
அகப்பை-சட்டுவம்; இது தட்டகப்பை, சாந்தகப்பை,சிற்றகப்பை என மூன்றுவகைப்படும்.
அகப்பொருட்கைக்கிளை - ஒருதலைக்காமம். அதாவது காமம் நுகர்தற்கமைந்த இளமையை யுடைய தலைமகளிடத்துண்டாகிய குறிப்பினைத் தானறியுமளவும் தலைமகன் அவளைச் சாராது நின்று நெஞ்சொடு கூறல்.
அகப்பொருட்கோவை -ஒருபிரபந்தம்.
அகப்பொருட்டுறை - அகப்பாட் டுறுப்புக்கள் பன்னிரண்டனுள் ஒன்று. அது உரைப்போருங் கேட்போருமின்றிக் கவிக்கூற்றாகச் சொல்லப் படுவது.
அகப்பொருட்பெருந்திணை - அகத்தின்கண் உள்ள இன்பத்தைச் சிலநாள் நுகர்ந்த தலைவனுந் தலைவியும் பின் இடைக் காலத்து நுகராமைக்கான இடையூற்றுக் கூற்றுக்களைக் கூறுவது.
அகப்பொருள் - ஓரிலக்கணம். அஃது உண்ணிகழ்ச்சியான சிற்றின்பத்திற்குரிய எழுதிணையைக்கூறும், வீட்டினுள்ளபொருள், உட்பொருள், சிற்றின்பம், பொருளிலக்கண வகையில் இரண்டனுள் ஒன்று.
அகமகிழ்ச்சி - ஆனந்தம், மனமகிழ்ச்சி.
அகமநம்-அடையாமை,நடவாமை,புணராமை, செல்லாமை.
அகமமரம் - வெள்வேலமரம்.
அகமம் - மரப்பொது, மலை.
அகமருடணதீர்த்தம் - அகமருடணஸ்நாநத்துக்குரிய நீர்.
அகமருடணஸ்நாநம் - அகமருடணத்தோடுகூடிய ஸ்நானம்.
அகமருடணம் - நீருக்குள்ளே நின்று செபித்துப் பாவத்தைப் போக்கச் செய்யும் ஒரு மந்திரசெபம்.
அகமருடம் - அகமருட்டணஸ்நாநம், அகமருடண மந்திரம்.
அகமலர்ச்சி-அகமகிழ்ச்சி,மனமகிழ்ச்சி.
அகமாட்சி-இல்லறத்திற்குரிய நற்குண நற்செய்கைகள்.
அகமார்க்கநடம்-மெய்த்தொழிலாற் செய்யுங்கூத்து.
அகமார்க்கம் - அருமையிற்பாடல், உள்வழி, மந்திரக்கிரமம்.
அகமான்மா-நானே ஆன்மா என்று பிரஹ்மத்தின் வேறாகத் தன்னைக் காண்போன்.
அகமிதம் - நான் இது என்பது.
அகமுகம் - உண்முகம், அந்தர்முகம்.
அகமுடையாள் - வீட்டுக்குடையவள்.
அகமுடையான் - வீட்டுக்காரன்.
அகமுழவு - எழுவகைமுழவுகளுள் ஒன்று. அது உத்தம கருவியான இடக்கை. கரடிகை, குடமுழா, சல்லிகை, படகம், பேரிகை, மத்தளம் எனப் பலவகைப்படும்.
அகம் - அகக்கூத்து, அகங்காரம், அது நானூறென்னும் நூல், ஆசௌசம், இருப்பிடம், சரீரம், சீவன், ஆகாயம், ஆழம், ஆன்மா, இடம், பத்திரவம், உள், உள்ளிடம், ஏழனுருபு, ஒருமரம், துக்கம், நாள். பகல், மருதம், மார்பு, பள்ளம், பாம்பு, பாவம், பூமி, மரப்பொது, மலை, மனம், வீடு.
அகம்படித்தொண்டு - அந்தர்முகமாக நின்றுசெய்யுந் தொண்டு.
அகம்படிமை - உட்டொண்டு.
அகம்படியார் - உள்வேலைக்காரர், ஒரு சாதியார்.
அகம்பதவாச்சியம்-அகமென்னும் பதத்தாற் சொல்லப்பட்ட பொருளாகிய ஆன்மா.
அகம்பன் - அசைக்கப்படாதவன்.
அகம்பாவம் - உட்செருக்கு, நானென்னும் எண்ணம்.
அகம்பிரதமர் - தன்னை முதலாகவுடையவர்.
அகம்பிரதமிகா-பெருமைபாராட்டுகை, முந்திக் கொள்ள வேண்டுமென்றுடுகை.
அகம்பிரமமெனல்-சிவமேநான், நானே சிவம் எனல்.

அகம்பிரமம் - ஆங்காரம், நானே பிரமம் எனல்.
அகம்பிரமவாதி - நானே பிரமமென்று வாதிக்கிறவன்.
அகப்பிரமாஸ்மி - யசுர்வேதமகாவாக்கியம் நான்கில் ஒன்று.
அகம்மதி - அறியாமை. தற்பிரியம்.
அகம்மியம் - ஓரெண், கோடி, கோடாகோடி, பத்திலட்சங்கோடி, அணுகக்கூடாதது, அறியக்கூடாதது.
அகம்மியர் - அகம்மியை.
அகம்மியாகமனம் - இழிகுலப் பெண்ணோடு புணர்தல்.
அகம்மியை - பொதுமகள், புணர்ச்சிக்குத் தகுதியற்ற பெண்.
அகரம் - அ என்னும் எழுத்து, இறையின்மை, கையின்மை, செயலின்மை, ஊர், இரசம், எழுத்தின் சாரியை, பார்ப்பனச்சேரி, மருதநிலத்தூர், வீடு
அகராதி - நெடுங்கணக்கிலுள்ளபடி அகர முதலிய எழுத்துக்களால் தொடங்கும் சொற்கோவை.
அகரிடணம் } வெறுப்பு.
அகரிடம் } நிராசை.
அகருஷணம் } துன்பம்.
அகரு - அகில்.
அகருதம் - வீற்றிருத்தல்.
அகருமகம் - செயப்படுபொருளில்லாத வினை.
அகர் - பகல்.
அகர்ணம் - செவிடு, பாம்பு.
அகர்த்தத்துவம் - அழிக்குந்தத்துவம்.
அகர்த்தவ்வியம் - சுதந்தரமற்ற செய்கை
அகர்த்தனன் - குள்ளன்.
அகர்த்தன் - கர்த்தத்துவமில்லாதவன், செய்கையற்றவன்.
அகர்த்தா - செய்கையற்றவன், பஞ்சகோசங்கட்கன்னியன்.
அகர்த்தியம் - கிருத்துவம்.
அகர்த்திருத்துவம் - கடவுளுடைய பிரபத்துவச்சாமர்த்தியகுணங்கள் மூன்றனுள் ஒன்று. அது கர்த்திருத்துவம் நீங்கிநிற்றல்.
அகர்த்திருவாதம் - சிருட்டிகர்த்தா இல்லையென்று வாதித்தல்.
அகர்நாதன் } சூரியன்.
அகர்ப்பதி } சூரியன்.
அகர்மகர்த்தரிப் பிரயோகம். } இது பெருக்கமடைதல். செயப்படுபொருள் குன்றியவினைமுதல் வாக்கியம்.
அகர்மகர்த்துருப் பிரயோகம் } இது பெருக்கமடைதல். செயப்படுபொருள் குன்றியவினைமுதல் வாக்கியம்.
அகர்மணி - விண்மணி, சூரியன்.
அகர்மம் - செயலில்லாமை, தகாத செயல்.
அகர்மி - கர்மமில்லாதவன்.
அகர்முகம் உதயகாலம்,
அகர்ம்மணி சூரியன்.
அகர்ம்முகம் வைகறை.
அகலக்கட்டை - அகலமற்றது.
அகலக்கவி - வித்தாரக்கவி. அது தொடர்நிலைச் செய்யுளாலும் அடிபலவாய் நடக்கும் முத்தகச்செய்யுளாலும் பாடப்படுவது, வித்தாரகவி பாடும் புலவன்.
அகலப்பா - அகலக்கவி.
அகலம் - மார்பு, விசாலம், விரிவு, உழாது விடப்பட்டநிலம்.
அகலர் - கலைநீங்கினவர், சண்டாளர்.
அகலல் - நீங்கல், விரிதல், ஒழிதல்.
அகலவுரை - விரித்துரை, அஃது இலக்கணமும் இலக்கியமுமெடுத்துக் காட்டியபொருள். விரித்துரைக்கும் விரித்துரை.
அகலறை - பாசறை, மலைப்பக்கம்.
அகலன் - ஏழை, கடவுள், கொடியவனல்லாதவன், பெருத்தவன், பெருமையுடையவன்.
அகலி - அகலியை.
அகலிகை - கௌதமமுநிவர்பத்தினி.
அகலிடம் - பூமி.
அகலிது - விசாலமுடையது.
அகலியமாமிசம் } தன்னால் அல்லது தன்னிமித்தமாகக் கொடுக்கப்பட்ட பிராணியின் மாமிசம்.
அகர்பியமாமிசம் } தன்னால் அல்லது தன்னிமித்தமாகக் கொடுக்கப்பட்ட பிராணியின் மாமிசம்.
அகலியம் - ஒருமரம், ஆயத்தமில்லாதது, இணங்காதது, சாமர்த்தியமில்லாதது, மரப்பொது.
அகலியாசாரன் - தேவேந்திரன்.
அகலியாநந்தனன் - சதாநந்தன்.
அகலியை - பஞ்சகன்னிகைகளிலொருத்தி.
அகலுகை - நீங்குதல்.
அகலுஷிதம் } கலங்காதது.
அகலுடிதம் } கலங்காதது.
அகலுதல் - அகன்றுபோதல், நீங்குதல், விரிதல்.
அகலுள் - அகலம், ஊர், நாடு, பெருமை, பூமி.

அகல் - அகலுதல், ஓரளவு, அல்குல், சட்டி, தகழி, நீங்கல், நீங்கென்னேவல், பிரிதல், பெருமரம், விசாலித்தல், வெள்வேலமரம்.
அகல்கதை } வைரமின்மை
அகல்கத்துவம் }
அகல்கை - அகலல்.
அகல்வு - அகலம், நீங்குகை.
அகல்வோர் - ஈனர், விலகியிருப்பவர்.
அகவ - ஒலியாநிற்க.
அகவடி - உள்ளங்கால்.
அகவர் - அழைத்துப்புகழ்வோர், சூதர்.
அகவலிசை- - அகவலோசை.
அகவலுரிச்சீர்-ஈரசைச்சீர். [வோசை.
அகவலோசை - ஆசிரியப்பாவிற்குரிய
அகவல் - அழைத்தல், ஆசிரியப்பா, ஆடல், ஒருசந்தம், மயிர்குரல்.
அகவற்சீர் - அகவலுரிச்சீர்.
அகவற்சுரிதகம்-ஆசிரியச்சுரிதகம்.
அகவற்பா -ஐந்துபாவினுளொன்று. அது நாற்சீரான் வருமளபடியாயும் இயற்சீர்பயின்று மயற்சீர்விரவியு மதன் றளை தழுவியும் பிறதளை மயங்கியும் கருவிளங்கனி கூவிளங்கனிஎன்னும் இருசீர் கலவாது மூன்று முதலிய பலவடிகொண்டு முடிவது.
அகவற்றாழிசை - ஆசிரியப்பா வினத்துளொன்று. அது எவ்வகைச் சீரானும் தளையானும் ஒத்த மூவடியாகத் தனித்தாவது ஒரு பொருண்மேல் மூன்றடுக்கியாவது வருவது.
அகவற்றுள்ளல்-வெண்டளையும் கலித்தளையும் விரவிவருவது.
அகவற்றுறை - ஆசிரியப்பா வினத்துளொன்று. அது நான்கடி பெற்றீற்றயலடி குறைந்தும், நான்கடி பெற்றீற் றயலடிகுறைந் திடைமடக்காயும், நான்கடிபெற் றிடையிடைகுறைந்தும்,நான்கடிபெற்றிடையிடைகுறைந் திடைமடக்காயும் வருவது.
அகவற்றூங்கல் - ஒன்றாத வஞ்சித்தளையான் வருவது.
அகவாட்டி-மனையாள்,இல்லறக்கிழத்தி
அகவாயுக்கள் - உட்கரணங்களைச் சீவனோடுகூடி நின்றசைப்பிக்கின்றனவாகச் சொல்லப்படும் அந்தரியாமி, பிரபஞ்சனன், மகாப்பிராணன், மூக்கியன், வைரம்பன் என்னும் ஐந்து வாயுக்கள்.
அகவாளன் - மனையான்.
அகவிடன் - அகப்பொருளுக்குரிய சட்டக முதலாகிய இருபத்தேழு உரைகளுள் ஒன்றாகிய இடத்தின் வகையிரண்டனுள் ஒன்று; அது ஒருசெய்யுள் மனையும் வளாகமும் பற்றி வருவது.
அகவிதழ் - உள்ளிதழ்.
அகவிலை - தானியவிலை. [தல்.
அகவு - அமுக்கிரா, ஆடுதல், கூத்தாடு
அகவுதல் - அழைத்தல், ஆடல்.
அகவேற்றம் - தானியவிலையேற்றம்.
அகவை - உட்பொருள், வயது.
அகழல் } தோண்டல்.
அகழுதல் } அகழ்தல்.
அகழானெடுத்தல் - தோண்டுதல், எலிகளைப்போல வளையுண்டாக்கி மணலைப் புறம்பே தள்ளுதல்.
அகழான் - ஒருவகைப் பேரெலி, வயலெலி-
அகழி - அகழ், கோட்டை, மதில்சூழ்கிடங்கு.
அகழெலி - அகழான்.
அகழ் - அகழி - தொண்டென்னேவல்.
அகழ்தல் - உழுதல், தோண்டல்.
அகளங்கமூர்த்தி - கடவுள், புத்தன்.
அகளங்கம் - சீதாங்கபாஷாணம், சுத்தமுடைமை.
அகளங்கன் - ஒருசீமான், கடவுள், புத்தன், மாசிலான்.
அகளம் - தாழி, நீர்ச்சால், மிடா, சாடி கிட்களம், களங்கரகிதம், யாழின் பத்தர், சூட்சுமரூபம்.
அகளர் - நிஷ்களர்.
அகளி - தாழி, மிடா, பாத்திரம்.
அகறல்-அகலல், அகலுதல், கடத்தல்.
அகற்சி - அகலம், நீங்குதல், பிரிவு.
அகற்பசெபம் - விதியின்றிச்செய்யும் செபம்.
அகற்பம் - ஒரு பிராணயாம யோகம். அது வாக்கினாலே மந்திரஞ் செபியாமலும் மனத்தினாலே சிவனைத் தியானியாமலுஞ் செய்யப்படுவது.
அகற்பனை - உவமனில்லாதது, மனதிற் கமையாதகற்பனை.

அகற்பிதமரணம் - விதியின்றி நிகழு மரணம்.
அகற்றுதல் - அகலப்பண்ணுதல், துரத் துதல், விரித்தல்.
அகனம் - கனமில்லாதது, பெருமை யின்மை.
அகன் - அகன்ற என்னும் பெயரெச் சம், அகாசுரன், உள், வினைமுதற் பொருளில்வரும் விகுதி (உ-ம்) நாய கன்.
அகன்பணை - அகன்ற மருதநிலம்.
அகன்மகதாது -செயப்படு பொருளில் வந்த வினைப்பகுதி. (உ-ம்) நட.
அகன்மகம் - செயப்படுபொருள் குன் றியவினை.
அகன்மகர்த்தரிப்பிரயோகம் - செயப் படு பொருளில்லாதவினை (உ-ம்) நடந்தான்.
அகன்மணி-தெய்வமணி, அகன்ற இரத் தினம்.
அகஸ்மாத்து - தற்செயல், காரணமில் லாமை.
அகன்றவறிவு - அகண்டாகாரவிருத்தி யாகிய பேறறிவு.
அகன்றில் - ஆணன்றில்.
அகன்னம் - செவிடு.
அகாகம் - ஆசௌசதினம்.
அகாசரம் - அறியாமை.
அகாடி - குதிரை முன்னங்கால் கட் டுங்கயிறு, முன். [திற்பிறந்தது.
அகாண்டசாதம் - காலமல்லாதகாலத்
அகாண்டபாதசாதம்- காலமல்லாத கா லத்திலே பிறந்து உடனே அழிதல்
அகாண்டபாதம் - காலமல்லாதகாலசம் பவம். [திராப்பிரகாரம்.
அகாண்டம் - காலமல்லாதகாலம், காத்
அகாதத்துவம் - ஆழம். [சமயம்.
அகாதப்படுஞ்சமயம் - பிரமாத மாகுஞ்
அகாதம் - ஆழம், தொளை, நீந்துபுனல், நீர், பள்ளம், மூந்து, வஞ்சகம்.
அகாதன் - வஞ்சகன்.
அகாதிதம் - பட்சித்தல்.
அகாத்தியம் - பொல்லாங்கு, வஞ்சனை, உண்ணத்தகாதது. [னமின்மை.
அகாத்திரம் - இன்றியமையாதது, கவ
அகாத்துமசை - பார்ப்பதி. [யின்மை.
அகாமம் - காமமில்லாதவினை, இச்சை
அகாமவினை-நிஷ்காமவினை, அது தெய் வீகத்தாலும், மோகத்தாலும், வியாதி யாலும் சோரபய முதலியவற்றாலும் அபுத்திபூர்வமாகச்செய்யுஞ்செயல்.
அகாயம் - தேகமற்றது, பரப்பிரமம்.
அகாயு - சுத்தி, காகம், பாம்பு, பாவி.
அகாரணம்-காரணமின்மை,தற்செயல்.
அகாரணன் ஏதுவில்லான், கடவுள்.
அகாரத்திரயவித்தை - அகர எழுத்தை முதலிலுடைய ஆகருடணம், அதி ருச்சியம், அஞ்சனம் என்னும் பத ங்களாற் கருதப்பட்ட மந்திரவித் தைகள்.
அகாரம் - அ என்னும் எழுத்து, வீடு, செயலின்மை.
அகாரி-இடி, இந்திரன், கடவுள். [கை.
அகாரியம் - காரியமற்றது, துர்ச்செய்
அகாருண்ணியம் - அன்பின்மை.
அகாலமரணம் - யுத்த வயதல்லாத காலத்திற் சம்பவிக்கும் மரணம்.
அகாலமிருத்து - அநியாயமரணம்.
அகாலம் - அவகாலம், நியமமல்லாத காலம், பஞ்சகாலம்.
அகி-ஆவணி, மேகம், இராகு, இரும்பு, ஈயம், ஒருவகைமரம், ஒருவான்மீன், சூரியன், பாதகன், வஞ்சகன், பாம்பு, பிரயாணி, வச்சிராயுதம், விருத்திரா சுரன்.
அகிகாந்தம் - காற்று.
அகிகை - இலவமரம், துருவ நக்ஷத்தி ரம், பட்டுப்பருத்தி.
அகிஞன் } தரித்திரன், மிக வறிய
அகின்சன் } வன்.
அகிஞ்சகன் - ஜீவ இம்சை செய்யாத வன்.
அகிஞ்சத்யா யதனலோகம் - இருபது பிரம லோகத்தினுள்ளே பத்தொன் பதாம் உலோகம்.
அகிஞ்சனன்-தரித்திரன், பரமலோபி.
அகிஞ்சை - கொல்லாமை, கெடுதிசெய் யாமை, துன்பம்செய்யாமை, தீமை செய்யாமை.
அகிதமிட்டிரன் - ஒரு விராக்கதன்.
அகிதம் - இதமின்மை, உரிமை யின் மை, தியானம், தீமை, பகை, நோயா ளிகளுக்கு கொடுக்கத்தகாத போச னம்.

அகிதர் - பகைவர்.
அகிதலம் பாதாளம்.
அகிதன்-இதஞ்செய்யாதவன், விரோ [தி.
அகிதுண்டிகள்-பிடாரன், பாம்புபிடித்தாட்டுபவன்.
அகிபதி-ஆதிசேடன், வாசுகி, பெரும்பாம்பு.
அகிபுக்கு - கருடன், கீரி, மயில்.
அகிபுஜம் - கலுழன், மயில்.
அகிபேநம் - அவின், பாம்பின் விஷம்
அகிப்பிரத்தினதேவதை - உத்திரட்டாதி நக்ஷத்திர அதிதெய்வம்.
அகிப்பிரத்தினம் - இரவிலே நிகழும் மூன்று முகூர்த்தமாகிய உத்திரட்டாதி நக்ஷத்திரம்.
அகிப்பிரத்தினன்-ஒருருத்திரன், சிவபெருமான்.
அகிமரால் - வெள்வேலமரம்.
அகிம்சை, அஹிம்சை } கொல்லாமை, மனோவாக்குக்காயங்களால் தீங்கு செய்யாமை.
அகிரச்சுகாமியம் - பாம்புக்கும் கயிற்றுக்கும் உள்ள ஒப்புமை. கயிற்றரவு.
அகிரன் - சூரியன், தீ, பதினொரு ருத்திரரில் ஒருவன்.
அகிரிபு - தேவேந்திரன், கருடன், கிருட்டினன், கீரி, மயில்.
அகிருத - இருநூற்றிருபத்து நான்கு புவனங்களில் ஒன்று.
அகிருதகம் - செய்யப்படாதது-
அகிருதஜ்ஞதை - செய்ந்நன்றிமறத்தல்
அகிருதஜ்ஞன் - செய்ந்நன்றி மறந்தோன். [டாதது,
அகிருதம் - முற்றுவேலை, செய்யப்ப
அகிருதர் - கிரியைசெய்யாதவர்.
அகிருதித்துவம் - அந்தக்கேடு.
அகிருத்தியம் - அக்கிரமம், தப்பான செய்கை.
அகிர் - அசர், தலைச்சுண்டு,
அகிர்த்துருமவிஷம்-பாம்புமுதலியசரப் பொருள்களிலும் மரமுதலிய அசரப் பொருள்களிலு முள்ள விஷம்.
அகிர்ப்புத்திநி - இரவில்நிகழும் மூன்று முகூர்த்தமாகிய உத்திரட்டாதி, உத்திரட்டாதி நட்சத்திரம்.
அகிலகாரணன் - உலோக காரணன், பரசிவன்.
அகிலகாரணி - உலகமாதா, பரசிவை.
அகிலநாயகன் - சிவன், கடவுள்.
அகிலபோகம் - சகலவனுபவம், உலக வாழ்வு.
அகிலம் - சருவலோகம், பிரபஞ்சம், எல்லாம், பூமி.
அகிலரூபன் - சிவன், எல்லா வடிவமுமானோன், கடவுள்.
அகிலலோகம் - எல்லாவுலகம்.
அகிலாங்கம் - சதுரவடிவம்.
அகிலாண்டம்-சகலஅண்டம், பிருதிவி அண்டம்.
அகிலாண்டவல்லி - உமாதேவி.
அகிலேசர் - விசுவேசர்.
அகில் - அகில்வாசம், அகரு, ஒருமரம், பஞ்சவிரையில் ஒன்று.
அகிவைரி - கருடன், மயில்.
அகிற்குடம் - அகிற்புகைக்கும்பம்.
அகிற்குறடு - அகிற்கட்டை.
அகிற்கூட்டு - ஏலம், கருப்பூரம், எரிகாசு, சந்தனம், தேன் என்னும் ஐந்தின் கூட்டு.
அகிற்புகை - அகிற்கட்டையிலிருந்துண்டான தூமம்.
அகீசன் - ஆதிசேடன், அகிபதி.
அகீர்த்தி - துர்க்கீர்த்தி, அபகீர்த்தி.
அகீனகு - சூரியவமிசத்தில் ஸ்ரீ ராமனுக்குப்பின்னிருந்த ஓரரசன்.
அகீனம் - குறைவின்மை, பலநாளாகச்செய்யப்படும் ஓர் யாகம்.
அகீனன் - பெரியோன்.
அகுசலம் - அதிட்டவீனம், துக்கம், சாமர்த்தியமின்மை.
அகுசலவேதனை - துக்கவறிவு, இது பஞ்ச கந்தங்களுள் ஒன்றாகிய வேதனையின்பகுதி மூன்றனுள் ஒன்று.
அகுடம் - கடுகுரோகிணிப்பூண்டு.
அகுட்டம் , மிளகு.
அகுணதை - அகுணத்துவம்.
அகுணத்துவம் - குணமின்மை.
அகுணம் - இலட்சணமின்மை, குணமின்மை, குறைவு, துர்க்குணம்.
அகுணன் - குணமில்லாதவன்.
அகுணாத்துமா - அவ்வியத்தம், குணமில்லாத ஆத்துமா.
அகுணி - குணமில்லாதது, குணமில்லாதவன், மூடவன்.

அகுதம் - அழைக்கப்படாமை, ஐவகை யாகத்துள் ஒன்ருகிய தியானம். அது மனமானது சதாசிவாதி விக்கிரகங்களில் ஒன்றை அன்பினுலே நினைந்து அத்தியானத்திலே இடைவிடாது கலந்துநிற்றல், யாகஞ்செய்யப்படாமை, வேதமோதல்.

அகுதி - அகதி.

அகுப்பியம் - பொன், வெள்ளி.

அகும்பை - கவிழ்தும்பைப்பூண்டு.

அகுரு - வெற்றிவேர், அகிலமரம்,இலகுவானது, கனமில்லாதது, குருவல்லாதவன்.

அகுருத்துவம்-கனமின்மை.

அகுலி - நறுவிலிமரம்.

அகுலீனம் - குலவீனம்.

அகுலீனன் - இழிகுலத்தவன்.

அகுவைக்கட்டி - அரையாப்புக்கட்டி.

அகுளிதநாதர் - நிஷேதகர்ம சாத்திரங்கள் செய்த நவநாத சித்தர்களில் ஒருவர்.

அகுளிதி - வேப்பமரம்.

அகூடகந்தம் - பெருங்காயம்.

அகூபாரம் - ஆமை, கடல், கன்மலை.

அகூபாரன் - ஆதிகூர்மம், சூரியன்.

அகேசன் - மொட்டையன்.

அகேது - முகாந்தரமின்மை.

அகை - அகையென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும், எரிதல், கூறுபாடு.

அகைதல் - எரிதல், ஒடித்தல், தளிர்த்தல், முறித்தல், வருந்தல், எழுதல்.

அகைத்தல் - அடித்தல், அறுத்தல், எழுப்புதல், ஓட்டுதல்,செலுத்துதல், தழைத்தல், முறித்தல், வருத்தல்.

அகைப்பு-அடித்தல், அறுத்தல், எழுப்புதல்,ஒடித்தல்,முறித்தல்,வருத்தல்.

அகைப்புவண்ணம் - இருபதுவண்ணங்களில் ஒன்று, அது அறுத்தறுத்தொழுகும் சந்தமுடையது.

அகைமம் - குருவிச்சை, புல்லுருவி.

அகையகாதுரம் - திருதசேகரம்.

அகையம் - விராமம், அனுத்ருதம்.

அகோ - அதிசயச்சொல், இது இகழ்ச்சி, துக்கம், இரக்கம், ஐயம், அழைப்பு, ஆச்சரியம், புகழ்ச்சி, சம்மதம், பொருமை முதலிய பொருள்களுள் ஒன்றை உள்ளிட்ட ஒரு குறிப்புமொழி.

அகோசரம் - அறியொணுமை, புலன்களால் காணப்படாமை.

அகோடம் - சமுகமரம்.

அகோதாரை - மிகப்பொழிதல்.

அகோத்திரம் - கோத்திரமின்மை.

அகோபிலம் - கடப்பை என்னும் ஊரிலுள்ள ஒரு விஷ்ணுதலம்.

அகோரகலை - சிவபூசைசெய்யும்போது சிவலிங்கத்தைச் சதாசிவனுகப் பாவித்து அவரது ஐந்துமுகத்திலும், நிற்பனவாகக் கொள்ளப்படுங் கலைகளுள் அகோரமுகத்தில் நிற்குங் கலைகள், அவை தமம், மோகம், சாயை, நிட்டை, மிருத்து, மாயை, உருத்திரபயம்,சுவரம் என எட்டாமென்றும், அவற்றிற்குத் தானங்கள் இருதயம், கண்டம், வலத்தோள், இடத்தோள், நாபி,வயிறு, முதுகு, மார்பு என எட்டாமென்றும் சொல்வர்.

அகோரகைவல்லியப்பிரதம் - தணிகாசலம் என்னும் தணிகைமலை.

அகோரசிவாசாரியர் - பதினெண் பத்ததிக்காரருள் ஒருவர்.

அகோரதந்திரம்-உபாகமங்களில்ஒன்று

அகோரப்பிரமம் - அகங்காரம், சட்சு, பாதம், ரூபம், அக்கிணி என்பவற்றிற் கதிட்டான தேவதையாகிய உருத்திரர்.

அகோரமுகம் - சதாசிவனுடைய ஐந்து முகங்களில் ஒன்று.

அகோரம் - உக்கிரம், அகோரமுகம், அச்சம் விளைக்கத்தக்கது, அச்சம் விளையாதது, பஞ்ச மந்திரங்களுள் ஒன்று, கொடுமை, நரி.

அகோரலிங்கம் - பஞ்ச லிங்கங்களில் ஒன்று.

அகோரவுரை - அகோரமந்திரம்.

அகோரன் - மங்களகரமானவன், பரசிவன்.

அகோராத்திரம் - அகோரம் அத்திரம் என்னும் மந்திரங்கள், அல்லும் பகலும்.

அகோரை-இரண்டரை நாழிகைக்காலம், ஒருமணிநேரம், உட்டணநாள்.

அக்ககன்னம் - பதனகேந்திரம்.

அக்கசாலை - அணிகலன் செய்யுமிடம், கம்பட்டசாலை, கம்மாலை.

அக்கசாலையர்-கம்மாளர், தட்டார்.
அக்கட - அவ்விடம்.
அக்கடி - அலைவு, இடைஞ்சல், வருத்தம்.
அக்கணம் - அத்தட்சணம், பொரிகாரம், வெங்காரம்.
அக்கணு - தான்றிமரம்.
அக்கண்டே - அக்காளே.
அக்கதம் - அட்சதை, பங்கப்படாதது, பழுதின்மை, பொரித்ததானியம்.
அக்கதயோனி - கன்னி.
அக்கதாரி - பரமசிவன், சிவனடியான்.
அக்கதூர்த்தன்-சூதாடுகிற தீயன், அத்தநாசஞ்செய்வோன்.
அக்கதேவி - சோணைப்புல்லு, சூது விளையாடுவோன்.
அக்கதை - அட்சதை, மங்களகரமான அரிசி.
அக்கந்தம் - தான்றிமரம்.
அக்கந்து - நெற்குவைப்புறத்து விலக்கியபதர், புறக்கந்து.
அக்கபாடகன் - ந்யாயாதிபதி.
அக்கபாடம் - மற்போர்க்களம், திரைப்புடைவை.
அக்கபாதன் - நையாயிகன், நியாயசூத்திரஞ்செய்த கௌதமமுனிவன்.
அக்கப்பாடு - நிலையழிவு, மரக்கலச்சேதம், மோசம்.
அக்கப்பிரம் - மாமரம்.
அக்கமணி - உருத்திராக்ஷம்.
அக்கமம்-பொறுமை.
அக்கமாலிகாபரணன் - கபாலமூர்த்தி.
அக்கமாலை - அருந்ததி, ஜபமாலை, உருத்திராக்ஷமாலை.
அக்கமுன்றி - கண்.
அக்கமை - வலிவின்மை, பொறுமையின்மை, பொறுமை, இயலாமை.
அக்கம் - அருகு, ஆன்மா, உருத்திராக்ஷம், ஒருமரம், கடலுப்பு, கண், கயிறு, சூதாடுகருவி, ஞானேந்திரியம், தராசுக்கோல், தானியம், தான்றிமரம், தூரிசு, தேர், தேருருள், தேருறப்புபக்கம், பண்டியச்சு, ஒருநிறை, பாம்பு, பூகோளாட்சம், பெறும்விலை, பொன், வழக்கு.
அக்கயத்துவம் } அழிவின்மை.
அக்கயம் }
அக்கரச்சுதகம் - இருபதுவகைச்சித்திரக்கவிகளுள் ஒன்று.
அக்கரத்தான் - தான்றி.
அக்கரப்பிரஞ்சம்-எழுத்து மாறாட்டம்.
அக்கரம்-அசரம், அசை, அழியாதது, ஆகாயம், உயிரெழுத்து, எழுத்து, வரையப்பட்டவாசகம், பிரணவமந்திரம், சலம், சொல், நித்தியானந்தம், நோயின்றென்று, பிரமம், மந்திரவெழுத்து, மாமரம், வெள்ளெருக்கு.
அக்கரம்மா - வெள்ளெருக்கு.
அக்கரவர்த்தனம் - அக்ஷரமாதல், இருபது வகைச் சித்திரக் கவிகளுள் ஒன்று, அஃது ஒரெழுத்தா னொரு மொழியாய்ப் பொருட்பயந்து ஓரெழுத்தேற்றப் பிறிதொரு மொழியாய்ப் பொருட்பயந்து அவ்வாறு முறையானே ஏற்றறவேற்ற வேறு வேறு மொழியாய்ப் பொருட்பயந்து வரப் பாடுவது.
அக்கரவிலக்கணம்-எழுத்தியல்பு, கலைஞானம் அறுபத்து நான்கினுள் ஒன்று.
அக்கரன்-ஈச்சுரர்மூவரில் ஒருவனாகிய அந்தரியாமி, கூடஸ்தன், திருமால், பிரமம்.
அக்கரா - அழியாதது, விகாரமடையா
அக்கராகாரம்-ஒருபூண்டு. தது.
அக்கராந்தம்-எழுத்தொலி.
அக்காரம்பம் - எழுத்துப் பயில்வித்தல்.
அக்கருத்திரம்-உருத்திராக்ஷக்கோவை.
அக்கரை - அப்பாற்கரை, குற்றம்.
அக்கர்-உருத்திராக்ஷமுடையவர், பெரியோர், கண்ணுடையவர்.
அக்கவடம் - உருத்திராக்கமாலை.
அக்கவாடம்-சூதாடுமிடம், மற்களரி.
அக்களித்தல்-மனமகிழ்தல்.
அக்களிப்பு - மனமகிழ்ச்சி.
அக்கறை-கவனம், காரியம், தொடர்பு.
அக்கன் - இராவணன் மக்களுள் ஒருவன், கருடன், குருடன், உருத்திராக்கமுடையவன, நாய்.
அக்கா-தாய், முன்பிறந்தாள்.
அக்காக்கிரம்-பண்டியச்சு, பண்டியின் முற்பக்கம்.
அக்காதேவி-மூதேவி.

அக்காத்தான்-தான்றிமரம்.
அக்காரக்கனிநச்சுமனர் - கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவர்.
அக்காரடலை - சர்க்கரை சேர்த்தடப் பட்ட சோறு.
அக்காரம்-கருப்புக்கட்டி, கரும்பு, சருக் கரை, சீலை, மாமரம்.
அக்காளன்-வனப்புல்.
அக்காள்-தமக்கை.
அக்கி - அக்கினிகரப்பான், ஒருநோய், அக்கினிதேவன், ஆனைக் கரப்பா ணெய், உஷ்ணம், ஓர்பூச்சி, கண்.
அக்கிக்கல் - ஓரிரத்தினம்.
அக்கிச்சூர் - நேத்திரரோகம்.
அக்கிதாரை - கண்மணி.
அக்கிநாயி - திரேதாயுகம், அக்கினிதே வன்மனைவியாகிய சுவாகாதேவி.
அக்கிபடலம்-கண்ணோயுள் ஒன்று.
அக்கியம் - பகலிற் பதினைன்காவதாக நிகழு முத்தரமென்னு முகூர்த்தம்.
அக்கியாதம் - மறைவு.
அக்கியாதவாசம் - மறைந்திருத்தல்.
அக்கியாதி - துர்க்கீர்த்தி, நுனிக்கை.
அக்கியானம் - அறிவின்மை, ஞானமி ன்மை.
அக்கியானி - அறிவீனன், ஞானமில் லாதவன்.
அக்கிரகண்ணியன் - சபையில் முதல்வ னாக மதிக்கப்படத்தக்கவன்.
அக்கிரகத்தம் - முதன்மை, கைந்நுதி, யானைக்கைந்நுதி, வலக்கை.
அக்கிரகம் - முன்னர்ப்போதல்.
அக்கிரகரம் - நுனிக்கை. வலக்கை.
அக்கிரகன்-சிரேட்டமானவன், முதன் மையையுடையவன், முன்னுக்குப் போகிறவன்.
அக்கிரகாரம் - தலைச்சேரி, பிராமண வீதி.
அக்கிரசங்கை-முன்றொடை அதாவது ஒரு கூட்டத்தாரில் தலைவனுக்குச் செய்யும் மரியாதை.
அக்கிரசந்தானி - நமன்கணக்கு.
அக்கிரசம்பாவனை - முதல்மரியாதை.
அக்கிரசரம், அக்கிரசரை } முற்செல்லுதல்.
அக்கிரசர்மம் - நுனித்தோல்.
அக்கிரசன் - தமையன், பிராமணன், மூத்தோன்.
அக்கிரசன்மன் - அண்ணன், பிரமன், பிராமணன்.
அக்கிரசாதகன், அக்கிரசாதி } பார்ப்பான்.
அக்கிரசை - தமக்கை, மூத்தாள்.
அக்கிரச்சா, அக்கிரச்சிழை } கிரகங்கிழக்குமேற்கு வீதியகறலில் வருஞ் சா.
அக்கிரணி - தலைவன்.
அக்கிரதாம்பூலம் - முதற்றாம்பூலம்.
அக்கிரநிரூபணம் - முன்னிரூபித்தது
அக்கிரபாகம் - நுனி, முதற்பங்கு,முன் பக்கம்.
அக்கிரபாணி - கைந்நுனி, வலக்கை.
அக்கிரபூசனை - பிரயோசனகாலத்திற் கடவுளுக்குச்செய்யும் பூசை.
அக்கிரபூசை - முதன்மைப்பூசை, மே லான மதிப்பு.
அக்கிரபூமி - இலக்குக் குறிக்கப் பட்ட தானம், அடையக்கருதிய பொருள்.
அக்கிரமம் - அநீதம், ஒழுங்கின்மை, கொடுமை.
அக்கிரமாமிசம் - இரத்தாசயம்.
அக்கிரமி - கொடியவன்.
அக்கிரம் - அதிகம், இலாபம், எதிர், சமீபம், கிரகங் கீழ் மேல் வீதி யக றல், நுனி, இலகு, உச்சி, திரள், தொடக்கம், முதலாவது, முதற்பா கம், மேற்பாகம்.
அக்கிரவருணம் - உயர்ந்தசாதி.
அக்கிரன் - முதல்வன், தமையன்.
அக்கிராகரம், அக்கிராகாரம் } தோஷஹரத்திரவிய ம், இது வடஆபிரி க்கா தேசத்தில் உற்பத்தியாம்.
அக்கிராசியம் - தள்ளத்தக்கது, தீர்க்கப் பட்டது, கிரகிக்கப்படாதது, சம்மதி பெறாதது.
அக்கிராதம் - கோபமின்மை.
அக்கிராத்தம் - கைந்நுனி, வலக்கை.
அக்கிராந்தம் - கடக்கப்படாதது, வெல் லப்படாதது, சேம்பு.
அக்கிராரம்-தலைமையான இடம், விளை நிலம்.
அக்கிரியம் - ஆதியிலுண்டானது, ன்மைப்பட்டது, தொழிலற்றது.

அக்கிரியன் - சிரேட்டன், கிரியைவிட்டவன், தமையன்.
அக்கிரு - விரல்.
அக்கிருதன் - யோகாட்டகரில்ஒருவன்.
அக்கிரேவணம் - காட்டோரம்.
அக்கிலீபதை - வீரத்தன்மை.
அக்கிலு - நெருஞ்சில்.
அக்கிள் - கைக்குழி.
அக்கினி - அக்கினிதேவன், அக்கினி புராணம், உதராக்கினி, ஓமாக்கினி, செங்கொடிவேலி, நவச்சாரம், நெருப்பு, பித்தம், பொன், மூத்திரம், மூலாக்கினி, வெடியுப்பு.
அக்கினிகணம் - தீப்பொறி, நிரைநேர் நிரைக்கணம்.
அக்கினிகண்டம் - நாற்பத்து முக்கோண சக்கரத்திலே எண்கோணமும் இரண்டு பத்துக்கோணமும் ஆகிய கண்டம், மூலம், சுவாதிட்டானம் என்னும் இரண்டாதாரங்களில் இடம் ஆகிய கண்டம்.
அக்கினிகயல் - கடல்நுரை.
அக்கினிகருப்பம் - கடல்நுரை, சூரியகாந்தம், பொறி.
அக்கினிகருப்பன் - குமாரக்கடவுள்.
அக்கினிகர்ப்பம் - நெருப்பைத் தன்னுள் அடக்கியவஸ்து, சூரியகாந்தக்கல், தீக்கடைக்கோல்.
அக்கினிகர்ப்பை - சாமைப்பயிர், பூமி.
அக்கினிகலை - சுவாசம்.
அக்கினிகாதலன் - துருபதன் குமாரனை திட்டத்துய்மன்.
அக்கினிகாரியம் - குண்டம்வெட்டி ஓமாக்கினி வளர்த்துச் செய்யப்படும் கிரியை.
அக்கினிகிரியை - பிரேதத்தை நெருப்பினுற் சுடப்படுங் கிரியை.
அக்கினிகீடம் - புழுவகையில் ஒன்று, அஃதிருபத்துநான்கு பேதப்படும்.
அக்கினிகுமாரன் - கந்தசுவாமி.
அக்கினிகுமாரி - அக்கினியிற் பிறந்த துரோபதை.
அக்கினிகேது - தூமம்.
அக்கினிகோணம் - தென்கீழ்த்திசை.
அக்கினிஹோத்திரம் }
அக்கினிகோத்திரம் } தீ, நெய் யாகமிருபத்தொன்றில் ஒன்று.

அக்கினிஹோத்திரி }
அக்கினிகோத்திரி } யாகாக்கினி நித்தியம் வளர்த்திருப்போன்.
அக்கினிகோத்திரிவிபூதி - யாகத்தினுலுண்டாக்கப்பட்ட விபூதி.
அக்கினிக்கட்டு - அக்கினித்தம்பனம்.
அக்கினிக்கண்ணன் - நெருப்புக் கண்ணை யுடையவன், பரமசிவன், கோரரூபன்.
அக்கினிக்கபம் - கடல்நுரை.
அக்கினிக்கர்ப்பம் - அக்கினிக்கருப்பம்.
அக்கினிக்குமரம் - குளிர்மை, மந்தமுதலாகிய நோய்கட்குக் கொடுக்கப்படு மருந்து.
அக்கினிக்குமரன் - ஒருவகை மாத்திரை, சுப்பிரமணியக்கடவுள்.
அக்கினிசகன் - காற்று.
அக்கினிசகாயன் - காற்று.
அக்கினிசயனம் - ஓமாக்கினிவளர்த்தல்.
அக்கினிசன் }
அக்கினிசன்மன் } அக்கினிபூ, குமாரசுவாமி.
அக்கினிசாந்தி - ஓமம்.
அக்கினிசாலம் - ஒரு பூடு, நெருப்புச்சாலம்.
அக்கினிசாவர்ணி - பதினன்கு மனுக்களில் ஒருவன்.
அக்கினிசிகம் - அம்பு, வானம், விளக்கு
அக்கினிசிலேட்டுமரோகம் - அதிக ஊஷ்ணத்தினுல் உண்டாகுஞ் சிலேட்டும ரோகத்தில் ஒன்று. அது தேக முழுதிலுமாவது கைகால்கள் மூக்கு என்னும் உறுப்புகளிலாவது எரிச்சல், இருமல், கோழை, அதிகதாகம், கைகால்களிற் சீதளம், அதிக தீபனம் ஆகிய குணங்களைச் செய்வது.
அக்கினிசேகரம் - குங்குமமரம், குசும்பமரம், மஞ்சள்.
அக்கினிச்சிலம் - கார்த்திகைக்கிழங்கு.
அக்கினிச்சிவம் - குப்பைமேனி.
அக்கினிச்சுவத்தர் }
அக்கினிச்சுவாத்தர் } பிதுர்தேவதைகளில் ஒரு வகுப்பார், தேவப்பிதிரர்.
அக்கினிச்சுவாலை - தீக்கொழுந்து, ஒரு பூண்டு.
அக்கினிச்சேர்வை - புண்ணுக்கும் பிளாஸ்திரி.
அக்கினிட்டுது - ஒருநாளில் முடிக்கப்படும் ஒரு யாகம்.
அக்கினிட்டோமம் }
அக்கினிஷ்டோமம் } சோமயாகம்.

அக்கினிதம் - அக்கினியூட்டல் சீரணிக்கச் செய்யும் ஒரு மருந்து, வீடெரித்தல்.
அக்கினிதன் - தீயிட்டவன், வீடெரிக்குந் துரோகி.
அக்கினிதாரணம் - ஓமாக்கினி வளர்த்தல்.
அக்கினிதிவ்வியம் - அக்கினிப் பரீட்சை, அஃதொன்பதுவகைத் திவ்வியங்களில் ஒன்று.
அக்கினிதேவன் - அக்கினிதேவதை.
அங்கினித்தம்பம் / அக்கினிஸ்தம்பம் } ஒருவித்தை, கலைஞானம் அறுபத்துநான்கில் ஒன்று, நெருப்புத்தூண்.
அக்கினித்தம்பனம் / அக்கினித்தம்பனை } நெருப்புச் சுடாமற் செய்யும் வித்தை.
அக்கினித்தம்பன் - சிவன்.
அக்கினித்திரயம் - மூவகை யக்கினி; அவை காருக பத்தியம், தக்கிணம், ஆகவனீயம் என்பன.
அக்கினித்திராவகம் - ஒருதிராவகநீர்.
அக்கினித்திரேதை - திரியாக்கினி.
அக்கினித்தூண் - தீப்பிழம்பு.
அக்கினிநட்சத்திரம் - கொடிய நக்ஷத்திரம்.
அக்கினிநாள் - கொடியநாள்
அக்கினிபஞ்சகம் - தவஞ்செய்வோர் நிற்கும் பஞ்சாக்கினி, அக்கினியபாயம்.
அக்கினிபதச்சிலந்தி- சிலந்திவகையுள் ஒன்று;அதன் கால்கடோறும் விஷமுண்டென்றும், கால்பட்ட விடங் கொப்புளிக்குமென்றுங் கூறுவர்.
அக்கினிபம் - பொன்.
அக்கினிபரிச்சதம் - ஓமோபகரணம்.
அக்கினிபரித்தியாகம் - அக்கினியிலே ஓமஞ்செய்யாதொழிதல்.
அக்கினிபரீட்சை - மழுவேந்தன் முதலியவித்தை.
அக்கினிபீசம் - பொன்.
அக்கினிபு - கந்தக்கடவுள்.
அக்கினிபுக்கு - ஒருமுனிவன்.
அக்கினிபுராணம் - பதினெண்புராணங்களுள்ஒன்று. அது ஆக்கிநேயம்; இப்புராணத்தில் விட்டுணுவுடைய அவதாரம், சிருட்டிக்கிரமம், விட்டுணுபூசைமுதலியன சொல்லப்படும் அஃதெண்ணாயிரங் கிரந்த முடையது.
அக்கினிபூ - அக்கினிசன்மன், நீர்.
அக்கினி பூதவாதிமதம் - அக்கினிதானே மும்மூர்த்தி வடிவமாய் நின்று முத்தொழிலுஞ் செய்யும் என்று கொள்ளும் ஒருவனுடைய மதம்.
அக்கினிபோஷணம் - வைசுவ தேவ பூசை.
அக்கினிப்பிரத்தாரம் - சூரியகாந்த தீக்கல்.
அக்கினிப்பிரவேசம் / அக்கினிப்பிரவேசனம் } தீயிற்குதித்தல்.
அக்கினிப்பிழம்பு - நெருப்புச்சுவாலை.
அக்கினிபிளப்பு - எரிமலை.
அக்கினிமணி - சூரியகாந்தம்.
அக்கினிமண்டலம் - மும்மண்டலத்தொன்று, அது மூலாதார முதல் நாபிக்கமல மளவும் உள்ள இடம்.
அக்கினிமந்தசுரம் - சுரநோய் வகைகளுள் ஒன்று.
அக்கினிமந்தம் - கோங்கமரம், சமியாமை.
அக்கினிமந்தனம் - தேய்த்தலால் கோல்களி னின்று அக்கினியைப் பிறப்பித்தல்.
அக்கினிமாந்தம் - ஒருநோய்.
அக்கினிமாந்தியம் - அசீரணம், செரியாமை.
அக்கினிமாருதி - அகத்தியன்.
அக்கினிமுகச்சிலந்தி - ஒருவகைச்சிலந்திப்பூச்சி, அது அதிக நோயையும் நெருப்பாற்சுட்ட கொப்புளம் போன்ற கொப்புளத்தையும் உண்டாக்கும் விஷ முடையது.
அக்கினிமுகம் - சேங்கொட்டை.
அக்கினிமுகன் - பிராமணன், தீ, தேவன், சூரபன்மன் புதல்வன்.
அக்கினிமூலை - தென்கிழக்குமூலை.
அக்கினியத்திரம் - அக்கினிமயமான அம்பு.
அக்கினியாகாரம் - ஓமசாலை.
அக்கினியாதானம் - ஓமாக்கினி வளர்த்தல்.
அக்கினியாதேயம் - நித்திய தீ வளர்த்தல், யாகம் இருபத் தொன்றில் ஒன்று.
அக்கினியாலயம் - அக்கினியாகாரம்.
அக்கினியின்குணம் - ஆலசியம், தாகம், நித்திரை, பசி, மைதுனம்.
அக்கினியின்கோபம் - பித்தம்.

அக்கினியுற்பாதம் - வாள்கொள்ளி விழுகின்ற நக்ஷத்திரம், விண்வீழ்கொள்ளி.
அக்கினியெழுநா - அக்கினி தேவனுக்குள்ள ஏழுநாக்குகள் அவை கராளி, தூளி, சுதூம்பரவருணை, சுலோகிதை, புலிங்கினி, மனோசவை, விஸ்வருபி என்பன.
அக்கினியெழுநாவண்ணம் - அக்கினி தேவனுக்குள்ள ஏழு நாக்குகளின் நிறம். அவை அதியிரத்தம், அருணம், இரத்தம், கனகம், கிருஷ்ணம், சுப்பிரம், வெகுவர்ணம் என்பன.
அக்கினியோகம் - அக்கினிக்குரியயோகம்; அது ஞாயிற்றுக் கிழமையிலே சத்தமி துவாதசிகளும், திங்களிலே சஷ்டி ஏகாதசிகளும், செவ்வாயிலே பஞ்சமி சப்தமிகளும், புதனிலே துதியை அஷ்டமிகளும், வியாழனிலே சஷ்டி நவமிகளும், வெள்ளியிலே அஷ்டமி தசமிகளும், சனியிலே நவமி ஏகாதசிகளும் வரும்நாள்.
அக்கினிரசம் - அக்கினியின்வீரம், இந்திரகோபம், பொன்.
அக்கினிரோகணி ரோகம் - ஒருவகையுரோகம். அது சுரத்தினன் மெலிந்தவருக்குப் பித்தப் பிரதானமான வாத சிலேட்டுமங்களினுலே அக்குளுக் குள்ளே மாமிசகண்டத்தைப் போலக் கட்டிகளை யுண்டாக்கு மென்றும், அக்கட்டிகள் கட்டையினெருப்பைப் போலிருந் துபத்திரவத்தைச்செய்து ரு. எ. கரு. நாட்களில் மரணங்கொடுக்குமென்றும் அந்நாள் விலகினுற் சாத்தியமாகு மென்றுஞ் சொல்வார்.
அக்கினிலிங்கம் - புகை.
அக்கினிவகை - கமலாக்கினி, காடாக்கினி, தீபாக்கினி, சாடராக்கினி, சடராக்கினி, தாபாக்கினி, உஷ்ணம், காங்கை.
அக்கினிவருணன் - சூரிய குலத்திலே இராமனுக்குப்பின்னிருந்தஓரரசன்.
அக்கினிவருத்தகம் - உதராக்கினியை வளர்க்கும் ஒரு மருந்து.
அக்கினி வருத்தனம் - உதராக்கினியை வளர்க்கும் ஒரு மருந்து, தீவளர்த்தல்.
அக்கினிவல்லபம் - குங்கிலியம், கீல்.
அக்கினிவாகம், அக்கினிவாகு - ஆடு, புகை.
அக்கினி விசர்ப்பம் - விரணக்கொதி.
அக்கினி விஷபாகரோகம் - எண்வகை விஷபாகரோகத்துள் ஒன்று. அது வாதபித்தாதிக்கம், தேகமிளைத்தல். வீக்கம், நடை பொருந்தாமை, புரளல், கோழை, இருமல், சத்தி, மூர்ச்சை, வாய்நீரூறல், வயிறளைதல், மலசலச்சிக்கல், பக்கநோய் என்னும் இக்குணங்களை யுண்டாக்குவது.
அக்கினிவீசம் - பொன்.
அக்கினிவீரியம் - அக்கினியின்வீரம்.
அக்கினிவேசன் - இக்குவாகுவுக்குத் தம்பியாகிய அரிஷியினுடைய வம்சத்தில் வந்த தேவதத்தன் மகன் சாதகர்ணமகாவிருடி.
அக்கினிவேசியாயனம் - அக்கினிவேசன் வம்சப் பிராமணகுலம்.
அக்கினீத்திரன் - நாவலந்தீவை அரசுசெய்த பிரியாவிரதனுடைய ஒரு மகன், அக்கினிகாரியஞ்செய்யுங் குரு.
அக்கு - அகில், உருத்திராக்கம், உகாக்காய், எட்டி, எருத்துத்திமில், எலும்பு, ஒருசாரியை, கண், சங்கு, சங்குமணி, பலகறை.
அக்குத்து - சந்தேகம், பொருத்தம், மையம்.
அக்குமணி - சங்குமணி.
அக்குமாலை - உருத்திராக்கத்தினுற் சேர்க்கப்பட்ட மாலை,
அக்குரான் - இடையெழு வள்ளல்களில் ஒருவன்.
அக்குரு - விரல்.
அக்குருக்கி - சயரோகம்.
அக்குரூரன் - கிருஷ்ணன் தகப்பனேடு பிறந்த ஒரு யாதவன், குரூரமில்லாதவன்.
அக்குரோணி - உகஅஎ௦. யானையும், சருகூக௦. குதிரையும், உகஅஎ௦. தேரும், க௦கூகூரு௦ கொண்ட ஒரு சேனைத் தொகை.
அக்குரோதம் - குரோதமின்மை.
அக்குல்லி - உக்காரி, சிற்றுண்டி, பிட்டு.
அக்குளு - அக்குளுத்தல்.
அக்குள் - கக்கம், கைம்மூலம்.
அக்கை - அன்னை, முன்பிறந்தாள்.
அக்கோ - ஒருஅதிசயச்சொல், இரக்கச்சொல்.

அக்கோகிணி - அக்குரோணி.
அக்கோடகம் } கடுக்காய்
அக்கோடம்
அக்கோணி - அக்குரோணி, [தூண்.
அக்கோபம் - உறுதி, யானைக்கட்டும்
அக்கோலம் - தேற்றாங்கொட்டை, தேற்றாமரம்.
அக்கௌகிணி - ஆக்குரோணி.
அக்ரகாரம் - அக்கிரகாரம். [யாதை.
அக்ரபூசனை - முதற்பூசை, முதன் மரி
அங்ககம் - அங்கத்தோடு சம்பந்தமானது, உறுப்பு, சரீரம்.
அங்ககாரம்-அங்கசேட்டை, பரதத்தின் பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுள் ஒன்று.
அங்கஙீனமந்திரம் - இருதய முதலிய அங்கங்களைக் குறியாது சொல்லும் மந்திரம்.
அங்கஙீனம் - உறுப்புக்குறைவு.
அங்கஙீனன் உறுப்புக்குறைந்தவன்.
அங்கக்கிரகம் - ஒருவகைச் சரீரவலி, கெண்டை வாங்கல்.
அங்கக்கிரியை - சரீரத்தினதுறுப்பினாற்செய்யுஞ்செயல், சரீரத்தினால் நடனார்த்தமாகச்செய்யுஞ் செயல், அச்செயல் சரிகை, கிரிகை, சமகலி, திரிகை, ஊர்த்துவகலிகை, பிருட்டகம், அர்த்தபிருட்டகம், சுபத்திகம், உல்லோலம், குர்த்தனம், வேட்டனம், உபவேட்டனம், தானபதப்பிராயவிருத்தம், உட்சேபணம், அவச்சேபணம், நிகுஞ்சனம் எனப் பதினாறு வகைப்படும்.
அங்கசங்கம் - புணர்ச்சி. [நோய்.
அங்கசம் - உதிரம், உரோமம், காமம்,
அங்கசலனவாதரோகம் - ஒருவகைவாதரோகம், வாதத்தைப்பிறப்பிக்கின்றவஸ்துவையும் வாதகோப வஸ்துவையும் புசித்தலினால் சர்வாங்கத்திலும் பிறந்து வாதநரம்புத்துவாரங்களிலும் வியாபித்து உடம்பெங்கும் பரவி வேதனையைச் செய்யும், அப்போது ஊர்த்துவாங்கத்திலாவது அதோங்கத்திலாவது நடுக்க முண்டா
அங்கசவேள் - மன்மதன். [கும்.
அங்கசன் - மகன், மன்மதன். [று.
அங்கசா - சோதிடவுறுப்புக்களில் ஒன்
அங்கசாதனம் - ஒருகுறி.
அங்கசாரி - சிவன்,
அங்கசாலைக்காரன்-ஊரதிபதியின் கட்டளைப்படிகிராமப்பணிசெய்வோன்.
அங்கசிவயோகம் - அஷ்டாங்கசிவயோகம். [பூண்டு.
அங்கசுபாதி - சிறுபுள்ளடிஎன்னும் ஒரு
அங்கசேட்டை - உடம்பினது சலனம், கைமெய்க்காட்டு.
அங்கசை - மகள்.
அங்கச்சனி - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேகவுறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படுஞ் சனி.
அங்கச்செவ்வாய் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேகஉறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படுஞ் செவ்வாய்.
அங்கச்சோமன் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேகஉறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படுஞ் சந்திரன்.
அங்கணம் - இரண்டு தூண்களுக்கு நடுவிலுள்ள இடம், உள்ளறை, கடுமரம், சலதாரை, சேறு, பத்துமுழத்தளவு, பரப்பு, பொரிகாரம், முற்றம், வெண்காரம், மதகு.
அங்கணர் - சிவன்,
அங்கணன் - அருகன், சிவன், மிருதபாஷாணம், விஷ்ணு.
அங்கணாளர் - சிவன்.
அங்கணி - கற்றாழை, காளி, பார்ப்பதி.
அங்கண் - அவ்விடம்.
அங்கதச்செய்யுள் - வசைக்கவி.
அங்கதப்பாட்டு - அங்கதச்செய்யுள்.
அங்கதம் - தோளணி, பழிச்சொல், பாம்பு, பொய், மார்பு, யானையுணவு.
அங்கதர் - வசைச்செய்யுள் சொல்வோர்.
அங்கதன் - இலட்சுமணனுடையமகன், வாலிமகன்.
அங்கதாரி - சிவன், சீவன், தேகம்.
அங்கதாளம் - பரதசாத்திரத்திற் சொல்லப்பட்ட தாளப்பிரமாணங்கள் பத்தினுள் ஒன்று. அது அனுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம் என ஆறுவகைப்படும.
அங்கதி - கொடை, தீ, நோய், பார்ப்பான், பிரமா, வாயு, விட்டுணு.

அங்கதை - தென்றிசை யானைக்குப் பெண்யானை.
அங்கத்தி - பண்டாரங்களை மரியாதையாகக் கூப்பிடுந் தாங்களென்னும் அர்த்தத்தையுடைய ஒரு சொல்.
அங்கத்தீ - உதராக்கினி, அது சமாக்கினி, விஷமாக்கினி, தீட்சணக்கினி, மந்தாக்கினி என நான்குவகைப்படும்.
அங்கத்தை - அவ்விடத்திருக்கும் பெரியவர்.
அங்கநட்சத்திரம் - ஒருவன் பிறக்கும் போது அவனுடைய தேகஉறுப்பில் நிற்பதாகக்காணப்படும் நட்சத்திரம்.
அங்கநம் - அசைதல், அரசர் மனையின் முற்றம், போதல், முற்றம்.
அங்கநாகனம - மாதர்கூட்டம்.
அங்கநியாசம் - அநுஷ்டான முறைமைகளில் ஒன்று, அது இருதயம் முதலிய இடங்களிலே மந்திரத்தோடு கையாற்றொடுதல்.
அங்கநூல் - வேதாங்கநூல்.
அங்கபங்கம் - உடம்பினுறுப்புக்களின் சோர்வு, சரீரவுறுப்பின் சேதம், சோர்வாதம்.
அங்கபடி - அங்கவடி, கவணை, குதிரையங்கபடி.
அங்கபாலி - கட்டித்தழுவுதல், வளர்த்த தாய்.
அங்கபாலிகை - கட்டித் தழுவுதல்.
அங்கபுதன் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் புதனென்னுங் கிரகம்.
அங்கபூ - மகன்.
அங்கப்பிரதக்கிணம் } சரீரத்தால் உருண்டு வலம் வருதல்.
அங்கப்பிரதக்ஷிணம் }
அங்கப்பிரத்தியங்கம் - அங்கமும் பிரத்தியங்கமுமான உறுப்புகள், சிரம், முகம், இருதயம் ஆகிய இவைகள் அங்கமெனப்படும. மார்பு, கழுத்து, தனம், தோள், கொப்பூழ், வயிறு, குய்யம், கண், மூக்கு, காது, நெற்றி, கால், விரல், தொடை, முழங்கால், கணைக்கால் ஆகிய இவைகள் பிரத்தியங்கமெனப்படும்.
அங்கப்பிராயச்சித்தம் - தேகவியோகத்தைக் குறித்த புலம்பற் காலத்தில் வரலாய ஆசௌசம் நிவிர்த்தியாதற் பொருட்டுத் தேக சுத்தி பண்ணிச் செய்யும் பிராயச்சித்தம்.
அங்கமந்திரம் - இருதய முதலிய அங்கங்களைத்தொட்டுச் செபிக்கப்படும் மந்திரம்.
அங்கமாலை - ஒருபிரபந்தம், இது ஸ்த்ரீகளின் முகம், கண், ஸ்தன முதலியவற்றையும்; புருஷரின் தோள், மார்பு முதலியவற்றையும் வர்ணிக்கும் நூல்.
அங்கமைந்து - வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் ஆகிய பஞ்சாங்க பத்திரம்.
அங்கம் - அடையாளம், அபராதம், அரையின் மேலுள்ள உடம்பின் பாகம், அலங்காரம், அவயவம், உடம்பு, உபகரணம், உபாயம், எலும்பு, எலும்புக்கோவை. ஒரு தேயம, [இஃதிப்போது பாகல்பூர் எனப் படுகின்றது] ஒரு பாடை, ஒரு நடன விளையாட்டு, கட்டில், களங்கம், கொன்றை, கோளக பாஷாணம், சமீபம், சற்குருசேவை நான்கனுள் ஒன்று. அது குருவுக்குக் குற்றேவல் செய்தல், சாயல், சைனத்துள்ள ஆகம மூன்றனுள் ஒன்று, தங்குமிடம், தாளப்பிரமாணம் பத்தில் ஒன்று, நூலினுறுப்பு, மூன்றுமங்கம், பத்தெனும் எண், பாத உறுப்புக்களில் ஒன்று, பாகுபாடு, பிரதானம், மனம், வரி, வேதாங்கம், வைத்திய சாத்திரம்.
அங்கம்பயந்தோன் - அருகக்கடவுள்.
அங்கயற்கண்ணி - மதுரையிற் கோயில் கொண்ட மீனாட்சியம்மை.
அங்கயாகம் - யாகத்திலோ ரப்பிரதானமான கிரியை.
அங்கயோகம் - இயமாதிகளால் சாதிக்கப்படும யோகம் எட்டில் ஒன்று.
அங்கரக்கா - மெய்ச்சட்டை.
அங்கரங்கம் - உலகவின்பம்.
அங்கரட்சகர் - மெய்காப்பாளர்.
அங்கரட்சணி - யுத்தகவசம்.
அங்கரட்சா - அங்கரக்கா.
அங்கரமாதி - கௌரிபாஷாணம்.

அங்கரவல்லி - குறிஞ்சா.
அங்கராகம் - பூசும்பரிமளம்.
அங்கராசன் } அங்கதேசத்தரசன் குந்
அங்கராயன் } தியின மூத்த மகனுகிய கன்னன்.
அங்கருகம் - உரோமம்.
அங்கர் - அங்கதேசத்தார்.
அங்கர்கோமான் } அங்கதேசத் தரசன்
அங்கர்பிரான் } கன்னன்.
அங்கலக்கணம் - சரீர அழகு, சாமுத்திரிகாலக்கணம்.
அங்கலாய்த்தல் - இச்சித்தல், துக்கித்தல்.
அங்கலாய்ப்பு - துக்கம், பேராசை.
அங்கவடி - அங்கபடி.
அங்கவம் - பழத்தின்வற்றல்.
அங்கவன் - மிருதபாஷாணம்.
அங்கவிட்சேபம் - அபிநயம்.
அங்கவித்தியை - கணித சாத்திரம், உடம்பிலுள்ள குறிகளினுல் ஒருவனுடைய நன்மை தீமைகளை அறிவிக்கும் நூல், வேதத்துக் கங்கமாகிய சாத்திரம்.
அங்கவியல் - இராசரீகமுறைமை.
அங்கவியாழன் - ஒருவன் பிறக்கும போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் வியாழன் என்னுங் கிரகம்.
அங்கவீனன் - குரூபி.
அங்கவெள்ளி ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் வெள்ளி என்னுங் கிரகம்.
அங்களி - கற்றாழை.
அங்கனம் - கடுக்காய்மரம்.
அங்கனுகணம் - மாதர்கூட்டம்.
அங்கனை - ஓரிராசி, பெண், வடதிசை யானைக்குப் பெண்யானை.
அங்கனையர் - அழகுள்ள பெண்கள்.
அங்கன் - சுவாயம்பு மனுவின் சந்ததியிலே தோன்றிய உரு என்பவனுடைய பத்துப் புத்திரருள் ஒருவன், யயாதியினது நான்காம் புத்திரனுகிய அணுவமிசத்துப் பலிபுத்திரன்.
அங்கா - வாய்திறத்தல்.
அங்காகமம் - ஆருகத ஆகமங்கள் மூன்றனுள் ஒன்று, உபாகமத்துள் ஒன்று.
அங்காங்கம் - உபாங்கம்.
அங்காங்கிபாவசங்காலங்காரம் - உறுப்புறுப்பிக்கலவையணி.
அங்காங்கிபாவம் - அவயவங்களினது சம்பந்தம், உபகாரிய உபகாரக சம்பந்தம், கௌணப் பொருளுக்கும் முக்கிய பொருளுக்கும் உண்டான சம்பந்தம், தேகமுந் தேகியும்போலப் பிரிவின்றி நிற்குந்தன்மை.
அங்காங்கிலக்கணை - இலக்கணை வகைகளுள் ஒன்று, அது அங்கத்தின் பெயர் அங்கியை உணர்த்தி நிற்பது.
அங்காடி - கடைவீதி.
அங்காடிக்கூடை - கடைவீதியில் பண்டங்கள் வைக்கப்பட் டிருக்குங் கூடை.
அங்காதித்தன் - ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் ஆதித்தன்.
அங்காதிபன் - கன்னன்.
அங்காதிபாதம் - ஒரு வைத்திய நூல், முழுவுடம்பு.
அங்காத்தல் - கொட்டாவிவிடல், வாய் திறத்தல்.
அங்காப்பு - அண்ணாத்தல், வாய் திறத்தல்.
அங்காமி - அகித்தியம், மிச்சம்.
அங்காரகமணி - பவளரத்தினம்.
அங்காரகம் - கரி, சிறுநெருப்பு, தழற்கரி பிருங்கராசமென்னும் ஒரு படர் கொடி, மஞ்சளாதியவற்றினிருந்து வடிக்கும் ஒரு தைலம்.
அங்காரகன் - செவ்வாய், நெருப்பு, வடவாக்கினி.
அங்காரகை } ஓராக்கி.
அங்காரதாரை }
அங்காரதானிகை - சூட்டடுப்பு, தீச்சட்டி.
அங்காரபரிபாசிதம் - பொரிக்கறி.
அங்காரம் - கரி, தீ, சிவப்புநிறம்.
அங்காரவல்லி - குறிஞ்சா, சிறுதேக்கு.
அங்காரன் - அங்காரகன்.
அங்காரி - சிறுநெருப்புச்சட்டி, வெங்காரம்.
அங்காரிகை - கருப்பந்தண்டு, நன்னாரி.
அங்காவணம் - பஞ்சதருவின்பந்தர்.
அங்காளி - அங்காளம்மை.

அங்கி - அக்கினிதேவன், அங்கத்தையுடையது, அத்தநாள், கார்த்திகை நட்சத்திரம், சாடராக்கினி, பிரதானம், சட்டை, தீ.
அங்கிகரித்தல் - ஏற்றுக்கொள்ளுதல், தழுவிக்கொள்ளுதல்.
அங்கிகரு - சாதிலிங்கம்.
அங்கிகாரம் - அங்கிகரித்தல்.
அங்கிகை - இரவிக்கை, கஞ்சுகம்.
அங்கிசகன் - சுற்றத்தவன்.
அங்கிசம் - அக்ஷபாகை, உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று, ஒருவகைச் சங்கியாசம், தாயபாகம், தோட்பட்டை, தோள், பின்னம், கூறு, பங்கு, வமிசம்.
அங்கிஷபாதி - சிறுபுள்ளடி.
அங்கிஷம் - வமிசம், வாழை.
அங்கிசயன் - பதினெண் யாகங்களுள் ஒன்று.
அங்கிசன் - அதிதி பிள்ளைகளில் ஒருவன்.
அங்கிசிவயோகம் - அஷ்டாங்கமுடைய சிவயோகம்.
அங்கிசு - அணு, அலங்காரம், கிரணம், சூரியகிரணம், சூரியன், தம்பு, வேகம்.
அங்கிசை - அமிசை.
அங்கிஞானம் - அவயவியறிவு.
அங்கிடுதத்தி - நாடோடி, நிலைகெட்டவன்.
அங்கிடுதுடுப்பன் - நாடோடி.
அங்கிட்டோமம் - கோமேதகம், அக்கினிட்டோமம்.
அங்கிதம் - உடற்றழும்பு, அடையாளம், கணக்கிடப் பட்டது, பாட்டுடைத் தலைவன்.
அங்கிதாரணை - அங்கினிதாரணம்.
அங்கிதீரன் - அக்கினித்தீரன், சம்புத்தீபம், புரந்தவன்பெயர்.
அங்கிநாள் - அத்தநாள், கார்த்திகை நாள்.
அங்கியெதிர்க்கொடைப்பொருள்-விவாகசமயத்திலே அக்கினிமுன்னிலையிலே பெண்பொருட்டுத் தந்தைமுதலானவராலே கொடுக்கப்படும் பூமி முதலான பொருள்.
அங்கிரகம் - சரீரநோ.
அங்கிரசு-அக்கினி, பிரமாவிடம் பிறந்த எழுமுனிவருள் ஒருவர்.
அங்கிரன்-ஆங்கீரசன், சப்தரிஷிகளில் ஒருவன்.
அங்கிரா - சப்தரிஷிகளில் ஒருவன்.
அங்கிரி - கால், மரமூலம், மூன்றுகாலிருடி, செய்யுளினடி.
அங்கிரிநாமகம் - மரமூலம்.
அங்கிரிபம் - மரம்.
அங்கிலேசன் - ஒருமுனிவன்.
அங்கிளி - கற்றாழை.
அங்கினி - ஒருவிதக்கற்றாழை.
அங்கீகரணம் - உடன்பாடு.
அங்கீகரித்தல் - சம்மதித்தல்.
அங்கீகாரம் - சம்மதி, வாக்குத்தத்தம்.
அங்கீகாரியம் - அங்கீகரிக்கத்தக்கது.
அங்கீகிருதம் - அங்கீகரிக்கப்பட்டது.
அங்கீயம் - அங்கத்திற்குரியது.
அங்கு - அவ்விடமெனப் பொருள்படும் ஓரிடைச்சொல்.
அங்குசக்கிரகன் - யானைப்பாகன்.
அங்குசதாரி - தாளகம், யானைப்பாகன், விநாயகக்கடவுள்.
அங்குசபாசகரன் / அங்குசபாசதரன் / அங்குசபாசமேந்தி - விநாயகக்கடவுள்.
அங்குசபாணி - காளி, விநாயகன், வீரபத்திரன்.
அங்குசபாதி - சிறுபுள்ளடி.
அங்குசபிசாரி - கொள்ளுப்பூண்டு.
அங்குசம் - தோட்டி, யானைத்தோட்டி, வாழை.
அங்குசரோசனம் - கூகைநீறு,
அங்குசவி - கொள்ளு.
அங்குசன் - காந்தம், சரகாண்டபாஷாணம்.
அங்குசோலி - அறுகம்புல்லு.
அங்குடம் - திறவுகோல்.
அங்குட்டமாத்திரம் - பெருவிரலளவு.
அங்குட்டமாத்திரன் - வித்தியாதத்துவத்திலிருக்கும் ஒரு சூத்திரன்.
அங்குஷ்டம் - அங்குட்டம், பாண்டு வியாதி.
அங்குட்டம்-இருநூற்றிருபத்து நான்கு புவனங்களுள் ஒன்று, காற்பெருவிரல், கைப்பெருவிரல், குறளுரு.
அங்குட்டருத்திரம் - மாயாதத்துவத்தி

விருக்கும் எட்டுப் புவனங்களுள் ஒன்று.
அங்குட்டரூபி - பெருவிரலளவுவடிவமுடையோர்.
அங்குஷ்டான், அங்குட்டான் } விரலுறை.
அங்குணம் - வெங்காரம்.
அங்குஸ்தான் - பெருந்தாரா, தையற்காரர் விரலிலே அணியும் கூடு.
அங்குரகம் - பறவைமுதலியவைகளின் கூடு.
அங்குரம் - இரத்தம், சலம், உரோமம், குப்பைமேனி, தளிர், நங்கூரம், நீர்ப்பூண்டின்முளை, முளை.
அங்குரார்ப்பணம்-முளையிடுதல், மங்களகாரியங்களின் ஆரம்பத்தே சந்திரனை அதிதெய்வமாகக் கொண்டு கும்பத்தினருகிற் பாலிகையிடத்துப் பாலிற்கலந்த நவதானியங்களை மந்திரத்தோடுபெய்து மண்ணிட்டு வளர்த்தல்.
அங்குரி - விரல்.
அங்குரிதம் - தளிர்த்தது, முளைத்தது.
அங்குரித்தல் - முளைத்தல்.
அங்குரீயகம், அங்குரீயம் } மோதிரம்.
அங்குலம் - பெருவிரல், விரல், விரற்கடை.
அங்குலி - ஐவிரலிச்செடி, துதிக்கைநுனி, யானைக்குக்கட்டுமணி, விரல்.
அங்குலிகம் - மோதிரம்.
அங்குலிசந்தேகம் - விரனெடித்தல்.
அங்குலிதோரணம் - திரிபுண்டரம்.
அங்குலித்திரம், அங்குலித்திராணம் } விரற்புட்டில்.
அங்குலிபஞ்சகம் - ஐந்துவிரல்.
அங்குலிமுகம் - விரனுனி.
அங்குலிமுத்திரிகை, அங்குலிமுத்திரை } முத்திரைமோதிரம்.
அங்குலிமோடனம் - விரலாற்றெறித்தல், விரனெடித்தல்.
அங்குலியம் - மோதிரம்.
அங்குலீ - விரல், யானைக்கைந்நுனி.
அங்குலீகம் - மோதிரம்.
அங்குலீபஞ்சகம் - விரல்கள் ஐந்தின் கூட்டம்.
அங்குலீயகம், அங்குலீயம் } மோதிரம்.
அங்கூசம் - அங்குசம்.
அங்கூடம் - அம்பு, கீரி.
அங்கூரம் - தளிர், முளை.
அங்கை - அழகியகை, உள்ளங்கை.
அங்கோடம், அங்கோலம், அங்கோலவைரவன் } அழிஞ்சின் மரம்.
அங்கோலை - அழிஞ்சிற்பட்டை.
அங்ஙனம், அங்ஙன் } அவ்விடம், அத்தன்மை, அவ்விதம்.
அச - நிவிர்த்திகலையிலிருக்கும் உருத்திர புவனங்கள் நூற்றெட்டினுள் ஒன்று, அது அண்டகடாகத்திற்குப் புறம்பே கிழக்குத்திக்கில் இருப்பதென்பர்.
அசகசாந்தரநியாயம் - மீமாஞ்சையில் கூறப்பட்ட நியாயங்களுள் ஒன்று, அது ஆட்டுக்கும் யானைக்குமுள்ள பேதம்போலும் நியாயம்.
அசகசாந்தரம்- ஆட்டுக்கும் யானைக்கும் உள்ள பேதம்.
அசகண்டர் - வேளை, கைவேளை.
அசகத்து - விடாதது.
அசகந்தை - தைவேளைப்பூண்டு.
அசகம் - மலையாடு, வரையாடு.
அசகரம் - பெரும்பாம்பு.
அசகரோகம் - எண்வகை மசூரிகை ரோகங்களுள்ஒன்று, அது பருத்துந் தடித்தும் ரணத்தைத் தருவதாய் அனேக கொப்புளங்கள் எழும்புவதும் கீல்களிலும் முகத்திலும் வீக்கமும் தாகமும் பிசுபிசுப்பான சலக்கசிவும் உண்டாவதுமாயிருக்கும்.
அசகலக்கணை- விடாதலக்கணை, அது தன்பொருளைவிடாது அதனோடு சம்பந்தமுள்ள வேறுபொருளைத் தருவது.
அசகவம் - சிவனுடைய வில், அஃது இருதலை திருமாலும் பிரமனுமாயிருப்பது.
அசகளன் - சைனசமயத்திற்சொல்லப்பட்ட இருபத்துநான்கு தீர்த்தங்கரருள் ஒருவன்.
அசகளிகாரோகம் - ஒருவகைச் சுத்திரவிரணரோகம். இது சிலேட்டுமவாதங்களினால் பயற்றினைக் கயிற்றிற்கோத்ததுபோலநீளமாகமினுமினு

புடன் நோயில்லாத கொப்புளங்களை உண்டாக்குவது.

அசகாயசூரன் - வேறொருவரது சகாயமில்லாமற் பகைவரைவெல்லும் பலமுள்ளவன்.

அசகாயம் - சிறுகாயம்.

அசகி - பகைவன்.

அசகியம் - அருவருப்பு.

அசகோத்திரம் - வேற்றுக்கோத்திரம்.

அசகோத்திரன் - வேற்றுக்கோத்திரத்தான்.

அசக்கல் - கட்டல்.

அசக்கியம் - செய்யக்கூடாதது, துத்தநாகமணல், நாகமணல்.

அசக்கியன் - தகுதியற்றவன்.

அசக்கீரம் - ஆட்டுப்பால்.

அசங்கச்சித்தன் - அஞ்ஞானமனத்தன்.

அசங்கதம் - அவமதிக்கப்பட்டது, சமமற்றது, சிதறினது, தனிமையானது, நெகிழ்ந்தது, பற்றில்லாதது, ஒழுங்கின்மை, பொய், வெறுப்பு.

அசங்கதி - இணக்கமின்மை, ஒவ்வாமை

அசங்கதியலங்காரம் - தொடர்பின்மையணி.

அசங்கமம் - அசட்டை, இகழ்ச்சி, ஒவ்வாமை, கூடுதலின்மை, சமமின்மை, சூரியனுக்கெதிரேகிரகங்கள்நிற்றல், பவித்திரமின்மை, புலவி.

அசங்கம் - ஆசையின்மை. பற்றின்மை, தடுக்கப்படாதது, தனிமை, நிச்சயம், விரோதம்.

அசங்கற்பமாசம் - சங்கிரமத்தின் ஆதி அந்தங்களிலே அமாவாசைவரநிகழுமாதம்.

அசங்கற்பம் - உண்மை, முன்னிதானிப்பின்மை.

அசங்கன் - அஞ்ஞானன், ஒட்டாதவன்.

அசங்கிதம் - அச்சமில்லாதது, சந்தேகமில்லாதது.

அசங்கியம் - அசங்கமம், அருவருப்பு.

அசங்கியா - எண்ணிறந்தது.

அசங்கியேயம் - எண்ணக்கூடாதது.

அசங்கியை - அசங்கியா,

அசங்கிரகம் - இரவாமை, பின்னுக்கு வேண்டும் பொருளைத் தேடிவைத்துக்கொள்ளாமை.

அசங்கிலபதம் - கொடுத்தவிடத் துண்ணுதல்.

அசங்குதல் - அசைதல்.

அசங்கை - சந்தேகமின்மை, பயமின்மை

அசங்கையன் - சந்தேகமில்லாதவன்.

அசங்கோசம் - அடக்கமின்மை.

அசசரணம் - பூரட்டாதி நக்ஷத்திரத்துக் கதிதெய்வம்.

அசசீவிகன் - ஆடுமேய்த்துச்சீவிப்பவன்.

அசசுரம் - நெருஞ்சிற்பூண்டு, ஒருவகை முருங்கைமரம்.

அசசுவிதி - நாடிகள் பதினான்கினுள் ஒன்று.

அசச்சனன் - துர்ச்சனன்.

அசஞ்சத்தம் - பற்றில்லாதது.

அசஞ்சத்தி - சங்கற்பமறல்.

அசஞ்சயம் - ஐயமின்மை.

அசஞ்சலம் - ஐயம், திடாரிக்கம்.

அசஞ்சலர் - அசைவற்றவர்.

அசஞ்சிதன் - சஞ்சிதமில்லாதவன்.

அசடம் - உடலமில்லாதவஸ்து.

அசடரூபம் - சைதன்யரூபம்.

அசடர் - கீழ்மக்கள்.

அசடன் - களங்கமுள்ளவன், கீழ்மகன், சடமில்லாதவன், சோம்பேறி.

அசடி - குற்றமுள்ளவள்.

அசடு - இசடு, இருப்பு முதலியவற்றிற் பெயரும் பொருக்கு, கீழ்மை, குற்றம்.

அசட்சுதரிசனம் - தீக்குணமாகிய தரிசனாவருணீயத்தின் ஒருவகை.

அசட்டர் - களங்கமுடையவர்.

அசட்டி - அசமதாகம்.

அசட்டை - பராமுகம், மதியாமை.

அசண்டை - சாதுவானதன்மை.

அசதாகமம் - நாஸ்திக முதலிய சாஸ்திரம்.

அசதாசாரம் - துராசாரம்.

அசதி - அயர்ச்சி, ஔவையாரால் கோவைபாடப்பெற்ற ஓரிடையன், சடிதி சிரித்துப்பேசல், மறதி, வசவி.

அசதிசன்னி - ஒருநோய்.

அசதிசுதன் - சோரபுத்திரன்.

அசதியாடல் - நகையாடல், மிக்குச்சிரித்து விளம்பல்.

அசதியாட்டல் - நகையாடச்செய்தல்.

அசதீசுதன் - சோரபுத்திரன்.

அசத்தம் - சத்தமின்மை.

அசத்தர் - அஞ்ஞானிகள், வலிமையில்லாதவர்.

அசத்தல் - அசந்துபோதல்.
அசத்தன் - உலகப்பற்றற்றவன், முருகக்கடவுள், வலியில்லாதவன்.
அசத்தி - பலவீனம்.
அசத்தியம் - பொய்.
அசத்தியோநிருவாணம் - நிருவாண தீட்சைவகை இரண்டனுள் ஒன்று; அது, தேகாந்தத்தின் முத்தியைப்பயப்பதும் வாலீசர் முதலிய மந்தபக்குவர்களுக்குச் செய்யப்படுவதுமாம்.
அசத்திலட்சணம் - அசம்பவம்.
அசத்து - இல்லாதபொருள், உள்ளதல்லாதது, தீயது, மாயை.
அசத்துக்கள் - கீழோர், சிறியோர்.
அசத்துரு - சந்திரன், மித்துரு.
அசத்துவம் - அபாவம், தீமை, வெளிப்படாமை, வலியின்மை.
அசத்துவாபாதகம் - வஸ்து இல்லையென்று தோன்றும்படிசெய்யுஞ் சத்தி.
அசத்தை - சூனியம், பிரபஞ்சம், தீமை, வெளிப்படாமை, பொய்.
அசநபன்னி - சிற்றகத்திப்பூண்டு, அசநம், சிரிப்பு, சோறு, போசனம், வெள்ளுள்ளி, வேங்கைமரம்.
அசநவம் - பிருதுமன்னனுடைய வில்.
அசநவேதி - சீரகம்.
அசநாமிர்ததைலம் - ஒருவகைத்தயிலம். இது வேங்கைப்பட்டை, சீந்தில் முதலியவற்றிலிருந்து வடிப்பது.
அசநியேறு - இடியேறு.
அசநோற்பவவிக்கல் - ஐவகை விக்கல்களிலொன்று, அது: காரவஸ்து, மிகுதீக்ஷணவஸ்து, சீரணமாகாத வஸ்து, கடினவஸ்து முதலியவைகளாற் பிறந்து நோயில்லாமற் கண்டத்திலே அற்பதொனி, அற்பவிருமல் என்னும் குணங்களையுண்டாக்குவது.
அசந்ததி - மக்களில்லாமை.
அசந்தம் - உயிரெழுத்திலே முடியுஞ் சொல், சந்தமின்மை.
அசந்தர்ப்பணம் - திருப்திகொடாமை, விருப்பங்கொள்ளாமை.
அசந்தர்ப்பம் - சமயமின்மை, சரிப்படாமை.
அசந்தானம் - சந்தானமின்மை, சமாதானமின்மை.
அசந்தி - சந்தியின்மை.
அசந்தித்தம் - ஐயப்படாதது.
அசந்துட்டம் - விருப்பமின்மை.
அசந்துட்டன் - மகிழ்ச்சியற்றவன்.
அசந்துட்டி, அசந்துஷ்டி - சந்தோஷமின்மை, திருப்தியின்மை, மகிழ்ச்சியற்றவள்.
அசந்தோஷம், அசந்தோடம் - வெறுப்பு.
அசந்நத்தன் - இறுமாப்புடையவன், யுத்தத்திற் காயத்தமில்லாதவன்.
அசந்நிகருடம்-சேய்மை, பிரத்தியக்ஷப்படாமை.
அசந்நிகிதம் - தூரமுள்ளது.
அசந்நிகிருட்டம் - சமீபமாகாதது, பிரத்தியக்ஷப்படாமை.
அசந்நிதி - சமீபமாகாமை, நம்பிக்கை.
அசந்நியம் - துர்க்குறியான தோற்றம், பிறட்பற்றது.
அசபம் - அசபாமந்திரம்.
அசபன் - ஆடுமேய்ப்போன், செபஞ் செய்யாதவன், பரமபத நூல்களைப் படிப்போன், பிரதிவாதி.
அசபா - ஒருமந்திரம். அது அவன் நான் எனப்படுஞ் சோகம்.
அசபாகாயத்திரி - ஆத்துமப் பிரசாத மந்திரம்.
அசபாஸ்வரம் - காதுகளுக்குக்கேளாது மந்திரித்தல்.
அசபாநலம் - அசபையாகிய அக்கினி.
அசபாவித்தை - அசபாமந்திரம்.
அசபிண்டன் - சபிண்டனல்லாதவன்.
அசபிண்டா - சபிண்ட சம்பந்த மில்லாத கன்னி.
அசபிண்டி - சபிண்டியல்லாதவள்.
அசபுத்தன் - சதருத்திரருள்ளே இந்திரதிக்கிலிருக்குந் தசருத்திரருள் ஒருவன்.
அசபேசத்தி சிவாத்மகம் - அசபாமந்திரத்திற் சத்திவடிவான சகரமும் சிவவடிவான அகரமும்.
அசபை - அசபா என்னும் மந்திரம்.
அசப்பியம் - அதப்பியம், சபைக்கடாத சொல்.
அசமஞ்சசம் - சமமில்லாதது, தெளிவுறவிளங்காதது, பொருந்தாதது, ஒவ்வாதது, வித்தியாசம்.
அசமஞ்சசன் - சகராசாவின் மூத்த மகன்.

அசமதாகம் - ஓமம்.
அசமந்தம் - சம்பந்தமின்மை, மந்த குணம், மலையத்தி, மலையாமை.
அசமந்தன் - சோம்பேறி, மந்தகுண முடையவன்.
அசமபாணன் - மன்மதன்.
அசமபாதை - சேனை நடக்கும்வழி.
அசமம் - ஒற்றைஇரட்டை அல்லாதது.
அசமயம் - ஒவ்வாச்சமயம், கெட்ட காலம்.
அசமருதம் - அத்தி.
அசமர்த்தம் - சாமர்த்தியமற்றது.
அசமர்த்தவிசேடணாசித்தம் - சொரூபா சித்த ஏதுப்போலி வகையுளொன்று அது சாத்தியத்தைச் சிறிதுஞ் சாதிக்க வலியில்லாத விசேடனத்தை யுடையது.
அசமர்த்தவிசேடியாசித்தம் - சொரூபா சித்த ஏதுப்போலி வகையுளொன்று அது சாத்தியத்தைச் சிறிதுஞ் சாதிக்கவலியில்லாத விசேடியத்தை யுடையது.
அசமவாயி - அசமவாயிகாரணம், சம வாயமல்லாதது.
அசமவாயிகாரணம் - சமவாயி காரண மல்லாதது. அது சமவாயிகாரணத் தணுகியிருப்பதுந் துணிந்தகாரணத் தன்மையுடையதுமாயிருப்பது.
அசமன் - சமனின்மை.
அசமானம் - சமானமின்மை.
அசமுகன் - அசமுகாசூரன், ஆட்டுமுக த்தையுடையவன், தக்கன்.
அசமுகி - ஆட்டுமுகமுடையவள், சூர னுக்குத்தங்கையாகிய ஓரசுரப்பெண்.
அசமுசாரி-சுத்தசைதன்னியன், பிரம சாரி.
அசமோதகம் } ஓமம்.
அசமோதம் } ஓமம்.
அசம் - அவமதிச்சிரிப்பு, சிரிப்பு; பிறப் பில்லாதது, ஆடு, ஆட்டுக்கடா, ஆன் மா, ஈரவுள்ளி-உள்ளி, சந்தனம், நெல், மூவருடநெல்.
அசம்பந்தாதி சயோத்தி யலங்காரம் - தொடர்பிலுயர்வு நவிர்ச்சியணி.
அசம்பவம் - அதிசயம், சூனியம், மாறு கொளக்கூறல்; அது நூற்குற்றம் பத் தினொன்று, உற்பத்தியின்மை.
அசம்பவாலங்காரம் - கூடாமையணி.
அசம்பாடிதர் - சம்பாஷணை செய்தற் குத் தகுதியில்லாதவர்.
அசம்பாதை - அடைக்கப்படாமல் வெ ளியாயிருப்பது, ஒடுக்க மில்லாதது, விசாலமுள்ளது.
அசம்பாவனை - கிரகித்தற்கருமை, கிர கித்தற்கேலாமை.
அசம்பாவனைவத்து - தியானித்தறியப் படாதபொருள்.
அசம்பாவனை - அறியக்கூடாமை.
அசம்பாவிதம் - சம்பவிக்கக் கூடாதது.
அசம்பி - தோட்பை.
அசம்பிரக்ஞாசமாதி - நிராலம்ப சிவ யோகசமாதி.
அசம்பிரேட்சியகாரித்துவம் - ஆரா யாதுசெய்தல். அது பஞ்சதந்திரத் துள் ஒன்று.
அசம்பிரேட்சியம் - ஆராய்வின்மை.
அசம்பை அசம்பி.
அசம்போகம் - அனுபவமின்மை, புண ர்ச்சியின்மை, மகிழ்ச்சியின்மை.
அசம்மதம் - சம்மதமின்மை.
அசம்மதி - உடன்பாடின்மை.
அசம்மானம் - அவமரியாதை.
அசம்வேதனம் - உணர்வின்மை.
அசரசீவன் - தானையியங்குந்தன்மையில் லாத உயிர்ப்பொருள்.
அசரம் - அசைவில்லாதது - இரு வகைத்தோற்றத்தில் ஒன்று. அது நடையில்லது.
அசராது - கொன்றைமரம்.
அசரியம் - அழிவின்மை, சினேகம்.
அசரீரத்துவம் - சரீரத்தன்மையின்மை.
அசரீரமுத்தி - விதேகமுத்தி.
அசரீரம் - சரீரமின்மை.
அசரீரன் - காமன், சரீரமில்லாத வன்.
அசரீரி - அரூபி, ஆகாயவாணி, சரீரமற் றது.
அசரு - அகிர், பண்ணின சடு, பொடுகு.
அசருதல் - அயருதல்.
அசரை - ஒரு சிறியமீன், அழிவின்மை, நரைதிரையின்மை.
அசர் - அகிர், தலைச்சுண்டு, பொடுகு.
அசர்வகர்த்திருத்துவம் - சர்வகர்த்தி ருத்துவமின்மை.

அசர்வஞ்ஞதை } சர்வஞ்ஞத்துவம்
அசர்வஞ்ஞத்துவம் } இல்லாமை.
அசலகன்னிகை - உமாதேவி.
அசலக்கால் - தென்றல்.
அசலசலம் - நால்வகைச் சிவலிங்கங்களுள் ஒன்று. அது அசலசலலிங்கம,
அசலசலலிங்கம்-நால்வகைச்சிவலிங்கங்களில் ஒன்று, அது தீட்சைக்குச் சொல்லியபடி வேதிகையிலிட்டுப் பூசித்தற்கும் இட்டலிங்கமாக நாடோறு மிட்டுப் பூசித்தற்கும் உபயோகமான மண்டலலிங்கம்.
அசலபதி - இமயமலை, மலையரசன்.
அசலமூர்த்தி - அசைவின்றி நிலையாயிருக்கும் மூர்த்தி, அது சிவலிங்கம்.
அசலம் - அசையாநிலை, அம்பு, இரும்பு, கற்பாஷாணம், படைக்கலம், பூமி, மலை.
அசலர் - அயலார்.
அசலலிங்கம் - இடப்பெயர்ச்சியின்றித் தாபிக்கப்பட்ட இடத்திலே யிருக்கும் இலிங்கம்.
அசலனம் - அசைவின்மை.
அசலன் - அசைவற்றிருப்பவன், கடவுள், சிவன்.
அசலாதிபன் - இமயமலை, மலையரசன்.
அசலாவதி - அசைவில்லாத எல்லைப் பொருள் பற்றி வினை கொண்டு முடிவது.
அசலேசன் - கிரீசன்.
அசலை - பூமி, மலை, சிற்சத்தமூர்த்தி.
அசலைமூர்த்தி - ஞானக்கிரியா சிற்சத்தி மூர்த்தி. அது தனது சங்கற்பத்தால் தானசைவின்றி அசைவிஞற் சடகாரியம் நிகழப் பண்ணும்.
அசல் - அருகாண்மை, உயர்ந்தது, கொசுகு, சீலை, பூமி, முதற்பிரதி.
அசல்பேரீஜ் - ஆதிவரி.
அசவல் - அசறு, கொதுகு, சேறு.
அசவாகனம் - அன்னப்பறவை.
அசவாகனன் - அக்கினிதேவன், பிரமன், முருகக்கடவுள்.
அசவை - அசபாமந்திரம், பெருவிரலடி.
அசறு-சிறுபூச்சி, சேறு. சொறி, தலைச்சுண்டு, புண்ணிலசடு, புழு.
அசறுக்கம் - கருமைகலந்த சிவப்பு.
அசறை - அசரை.
அசற்காரியம் - உள்ளதல்லாதகாரியம்.
அசற்காரியவாதம் - உள்ளதல்லாத காரியம் தோன்றுமென்று வாதித்தல்.
அசற்கியாதி - அசத்தான ஒன்று உள்ளதாக விளங்குதல்.
அசற்குரு - சற்குரு அல்லாதவன்.
அசற்சீடன் - சற்சீடனல்லாதவன்.
அசற்சூத்திரன் - ஒழுக்கமும்தீக்கையும் இல்லாத சூத்திரன்.
அசற்பதம் - ஆகாதவழி, துன்னடை.
அசற்பாத்திரம் - சற்பாத்திரமல்லாதது
அசற்பாவம் - இல்லாதது, கெட்ட கருத்து, தீயக்குணம்.
அசற்பிரதி - சுத்தமானபிரதி.
அசற்பிரதிபக்கம் - அன்னுவய வியதிரேகி யேதுவின் பஞ்சரூபங்களில் ஒன்று. அது சாத்தியத்திற்கு விபரீத சாதகமாயிருக்கிற வேருேர் எதுவில்லாதிருக்கை.
அசற்புத்திரன் - சற்புத்திர னல்லாதவன், புத்திரனில்லாதவன்.
அசனபன்னி - சிற்றகத்தி.
அசனம் - சிரிப்பு, சோறு, போசனம், வெள்ளுள்ளி, வேங்கைமரம்.
அசனுத் - அதிகாரப்பத்திரிகை, ஆதாரம், உத்தரவு.
அசனி - அனிச்சமரம், இடி, சாம்பிராணியிலை,உயிர்வேதனையினென்று, வச்சிராயுதம்.
அசன் - சிவன், தசரதன்றந்தை, பிரமன், பிரமனுடைய ஒருமகன், பிறப்பில்லாதவன், மன்மதன், விட்டுணு.
அசன்மானம் - நன்குமதியாமை.
அசன்றிகா . வேளை, தைவேளை.
அசன்னிதி - தூரம், நம்பிக்கை.
அசன்னியம் - அபசகுணம், பிறப்பற்றது.
அசா - தளர்ச்சி, பிரகிருதி, மறியாடு.
அசாகசம் - அமைதி, பொய்.
அசாகை - களி, சாகையின்மை,புற்கை.
அசாக்கிரதை - சோம்பல், மறவி, விழிப்பின்மை.
அசாசருமம் - ஆட்டுத்தோல்.
அசாசனம் - அரசாட்சியின்மை, ஆளுகையின்மை.
அசாசி - கருஞ்சீரகம்.

அசாசீவி - ஆட்டுவாணிகன்.
அசாட்சியம் - சாட்சியமல்லாதது.
அசாணிமூலி - உத்தமதாளி, வேலிப் பருத்தி.
அசாதகன் - இல்லறஞ்செய்வோர் இரு திறத்தருள் ஒருவன்.
அசாதசத்துரு - தருமபுத்திரன், தனக் குச் சத்துருவில்லாதவன், தான் பிறர்க்குச் சத்துருவாகாதவன்.
அசாதம் - பிறவாதது.
அசாதவியவகாரன் - பிராயமற்றவன்.
அசாதவேதநீயம் - வேதநீயம் துவித பேதத்துள் ஒன்று.
அசாதனம் - நிலைநிறுத்தாமை.
அசாதாரணகுணம் - விசேடகுணம்.
அசாதாரணசவ்வியபிசாரம் - ஏதுப் போலிகள் ஐவகையினென்றாகிய சவ்வியபிசாரத்தின் ஒருவகை. அது சிறப்பனைகாந்திகம், ஏதுசபக்கவி பக்கங்களில் இல்லாதது.
அசாதாரண தருமம் - சிறப்பிலக்க ணம் அஃதாவது அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவமென்னும் மூன்று தோஷங்களும் நீங்கிய தரு மம்.
அசாதாரணபூதம் - சாதாரணபூத மல் லாதது.
அசாதாரணம் - பொதுவின்மை.
அசாதாரணலக்கணம் - சிறப்பிலக்க ணம்.
அசாதி - உயிரெழுத்தினை முதலாக வுடையது, செவ்வாயென்னுங் கிர கம்.
அசாது - கற்புநீங்கிய மனைவி, தீய வன்.
அசாதுரியம் - சொற்றிறமின்மை.
அசாத்தியசாதகம் - செய்துமுடிக்கக் கூடாததைச் செய்து முடிப்பது.
அசாத்தியம் - அருமை, சந்தேகம், பெருவழக்கற்றது, முடிக்கக்கூடா தது.
அசாத்திரப்பிரபஞ்சம் - சாத்திரநெறி தவறிச் சிற்றின்பத்தைத் தழுவுத லாகிய மாயை. அது தீவிரம், மந்த மென இருவகைப்படும்.
அசாத்திரம் - சாத்திரத்துக் கிசையா தது, சாத்திரமல்லாதது.

அசாத்திரீயம் - சாத்திரத்திற் சொல் லப்படாதது.
அசாந்தர் - சாந்தமில்லாதவர்.
அசாபலம் - அசைவின்மை.
அசாபல்லியம் - உறுதி, திடம்.
அசாபாலகன் - ஆட்டுவாணிகன்.
அசாமர்த்யம் - சாமர்த்தியமின்மை.
அசாரதை - சாரமில்லாமை.
அசாரம் - ஆமணக்கமரம், முக்கியமல் லாதபங்கு, பிரயோசனமின்மை.
அசாவதானம் - அவதானமின்மை.
அசாவாமை - தளராமை.
அசாவிடல் - இளைப்பாறுதல்.
அசாவேரி - வசந்தகால இராகத்துள் ஒன்று.
அசானதேவதைகள் - சிருட்டியாரம் பத்திலே தேவபாவமடைந்து தேவ லோகத்திலே இந்திரனோடு கூடி ஓலக்கத்திலிருக்குந் தேவதைகள்.
அசானித்தியம் - அண்மையின்மை, சந் நிதிப்படாமை.
அசி - அவமதிச்சிரிப்பு, ஆயுதப்பொது, யுத்தம், வாள்.
அசிகுவன் - அசத்தியவார்த்தையும் அதிகவார்த்தையும் இல்லாதவன், நாக்கில்லாதவன்.
அசிக்கல் - அரும்பொருள் சிக்கலின் மை.
அசிக்கினி - அந்தப்புரத்திலே ஏவல் செய்யும் இளம்பெண், தக்கன் மனைவி, பஞ்சாப்புத்தேசத்திலுள்ள ஓர் நதி.
அசிட்டர் - சிட்டரல்லாதவர்.
அசிதம் - அமரபக்கம், அவமதிச்சிரிப்பு, காமன்வில்லு, அறிவின்மை, கரு மை, சனி, சிவாகமமிருபத்தெட்டில் ஒன்று.
அசிதம்சம் - அசித்தின்கூறு.
அசிதன் - சிவன், திருமால், சனி, புத் தன்.
அசிதாங்கவயிரவன் - வயிரவ ரெண்ம ருள் ஒருவன்.
அசிதாசுமம் - இந்திரநீலமணி, மரகத மணி.
அசிதாம்புருகம் } நீலோற்பலம்.
அசிதாம்பூருகம் }
அசிதாரு - அசிபத்திரவனம்.

அசிதாவனம் - நூற்றுநாற்பது நரகங்களுள் ஒன்று. அது வாள்போலிருக்கும்மட்டைகளையுடையபனங்காடு.
அசிதேகு - கத்தி, வாள்.
அசிதை - அவுரி, அவுரிப்பூண்டு, பரை என்னும் சிவசத்தியின் நால்வகைப் பிரிவுகளில் ஒன்று.
அசிதோதம் - மேருமலையின் சாரலிலுள்ள ஒரு வாவி.
அசிதோபலம் - இந்திரநீலமணி.
அசிதோற்பலம் - நீலோற்பலம்.
அசித்தசாத்தியம் - முடியாத சாத்தியம்.
அசித்தம் - ஒரேதுப்போலி, ஏது பக்ஷத்திலிருக்கையில்லாதஏது அதுபக்ஷாசித்தம், சொரூபாசித்தம், வியாப்பியாசித்துவாசித்தம் என மூன்று வகைப்படும். முடிக்கப்படாதது.
அசித்தல் - அழித்தல், நகைத்தல்.
அசித்தன் - அழிக்கப்படாதவன், கண்டிக்கப்படாதவன்.
அசித்தி - அத்தாட்சியற்றது, சித்தியின்மை, தவறு.
அசித்திரம் - சித்திரமின்மை.
அசித்திரன் - கள்வன்.
அசித்து - சடம்.
அசித்துத் தத்துவம் - சட வடிவமாகிய இருபத்துநான்கு தத்துவங்கள் அது ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்து, பிராணாதியைந்து, சத்தாதியைந்து, அந்தக்கரணம் நான்கென்பன.
அசித்துப்பொருள் - சடப்பொருள்.
அசிந்தம் - கோடாகோடி, பத்திலட்சங்கோடி, மரணம்.
அசிந்தன் - சிந்திக்கப்படாதவன்.
அசிந்திதன் - அவமதிக்கப்பட்டவன், கடவுள், நினைக்கப்படாதவன்.
அசிந்தியம் - ஒரெண், சிந்தைக்கெட்டாமை.
அசிந்தை - நிர்ச்சிந்தை, புலனின்மை.
அசிபதசொரூபம் - கூடஸ்தனே பிரமம் பிரமமே கூடஸ்தன் என ஐக்கியார்த்தமாயறிவது.
அசிபதம் - தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தின் மூன்றாம்பதம். அது சிவசீவர்களுடைய ஐக்கியத்தைக் குறிப்பது.
அசிபத்திரகம் - கரும்பு.
அசிபத்திரம் - கரும்பு, படையுறை, வாளலகு.
அசிபத்திரவனம் - ஒருநரகம்.
அசியவாமீயசூக்கம் - பொன்னைத் திருடிய பாதகம் தீர்க்குமாறு செபிக்கப்படும் ஓர் இருக்குவேதவாக்கிய மந்திரம்.
அசிரநானம் - கண்டஸ்நானம்.
அசிரப்பிரபை - மின்னல்.
அசிரம் - உடல், அற்பகாலம், காற்று, தவளை, முன்றில், விடயம், வெள்ளை வெட்டிவேர்.
அசிரவணம் - செவிடு.
அசிரன் - சூரியன், காற்று, பிசாசு, தீ.
அசிராசை - மின்னல்.
அசிருபாடம் - கண்ணீர்சொரிதல்.
அசிர்க்கு - இரத்தம்.
அசிவம் - அதிட்டவீனம், அஞ்ஞானம், தீங்கு.
அசிவயோகி - சிவயோகியல்லாதவன்.
அசிற்பிரபஞ்சம் - அசித்துப் பொருளாலாய பிரபஞ்சம்.
அசினபத்திரி
அசினபத்திரிகை } வௌவால்.
அசினபத்திரை
அசினம் - தோலாசனம், தோல்.
அசினயோனி - மான்.
அசீதகரன் - சூரியன்.
அசீதம் - எண்பதாவது, உட்டணம்.
அசீதளம் - கருப்பூரம்.
அசீதி. எண்பது, சடசீதிமுகம். அது ஆனி, புரட்டாதி, மார்கழி, பங்குனி என்னும் மாதங்களின் பிறப்பு.
அசீதிகம் - எண்பதென்னும் அளவுடையது.
அசீதிகன் - எண்பதுவயதுடையவன்.
அசீரணபேதி - ஒருபேதி.
அசீரணம் - செரியாமை, பசியின்மை, யௌவனம்.
அசீரணரோகம் - செரியாமையாலுண்டாகும் ஒரு நோய்.
அசீரணவாயு - ஒருவாயு.
அசீரியம - அழியாதது.
அசீர் - ஆயத்தம், தளபாடம்.

அசீர்ணம் - செரியாமை, யௌவனம்.
அசீர்த்தி - அசீரணம்.
அசீலன் - நல்லொழுக்கமில்லாதவன்.
அசீவம் - சூனியம், சீவனில்லாமை.
அசீவனி - மரணம்.
அசீவன் - சீவனில்லாப்பொருள்.
அசு - சுவாசம், துக்கம், பிராணவாயு.
அசுகம் - காற்று, துக்கம்.
அசுகிருத்து . பகைவன்.
அசுகுசுப்பு - அருவருப்பு, சந்தேகம்.
அசுகுணி - ஒருபூச்சி, ஒருவகைக்கரப்பன், காதிற்படரும் ஒருநோய்.
அசுகை - எழில், ஐயம்.
அசுசமன் - அன்பன், கணவன்.
அசுசி - அபகீர்த்தி, அருவருப்பு, சுசியின்மை.
அசுசித்தல் - அருவருத்தல்.
அசுசிப்படல் - அழுக்கடைதல்.
அசுசிப்படுத்தல் - அழுக்காகுதல்.
அசுட்கம் - உலராதது, பச்சையானது.
அசுணமா, அசுணம் } கேகயப்புள்.
அசுணன் - வெள்வெங்காயம்.
அசுண்டவாயு - பூமிக்குமேல் ஐம்பது யோசனைக்கப்பாலிருக்கும் ஒருவாயு இது சமஸ்தசீவன்களுக்குந் தீவனம் பிறப்பித்திராட்சதர் கவனத்துக்கும் பட்சிகள் கவனத்துக்கும் ஆதாரமாயிருப்பது.
அசுதந்தரம் - சுதந்தரமில்லாமை.
அசுதாரணன் - சிவன்.
அசுதை - விஷம்.
அசுத்ததத்துவங்கடொகுமுதல்-அசுத்தமாயை.
அசுத்ததத்துவம் - ஆன்மதத்துவம்.
அசுத்தப்படல் - அழுக்காதல்.
அசுத்தப்படுத்தல் - அழுக்காக்குதல்.
அசுத்தமாயாக்கோபகர் - அனந்தேசுவரர்.
அசுத்தமாயாதத்துவம் - அசுத்தமாயையிலே அனந்ததேவராற் கலக்குண்டபாசம். அது தத்துவங்களி னிடை வைத்தெண்ணப்படும்.
அசுத்தமாயை - நித்தியமாய் ஏகமாய் எங்கும் வியாபகமாய் அருவமாய்ச் சடமாய்ப் பிரளயகாலத்திலே ஆன்மாக்களுடைய கன்மங்களுக்கு உறைவிடமாய் ஆன்மாக்களுக்குச் சுத்தாசுத்தமும் அசுத்தமுமாகிய தனுகரணபுவனபோகங்கள் தோன்றுதற்கு முதற்காரணமாய்த் தன் காரியமுகத்தான் ஞானக்கிரியைகளை விளக்குமாயினும் மயக்கஞ் செய்வதாயுள்ள ஒருபதார்த்தம்.
அசுத்தம் - சுத்தமின்மை, வேசிமார்க்கம்.
அசுத்தன் - சுத்தமில்லாதவன்.
அசுத்தாத்துவா - பிருதிவிமுதல் பிரகிருதிவரையுள்ள இருபத்தைந்து தத்துவங்களின் சமூகம.
அசுத்தாவி - சுத்தமில்லாவரூபி, பசாசு.
அசுத்தி - அழுக்கு, ஆணவமலம், சுத்தமின்மை, வழுக்களையப்படாமை.
அசுத்தை - குற்றமுண்டயவள்.
அசுந்தரம் - அடாமை, அவலட்சணம்.
அசுபகாரி - தீங்கினைவிளைவிப்பவன்.
அசுபக்கிரகம் - தீயகிரகங்கள், அவை: ஆதித்தன், செவ்வாய், சனி, அபரபக்கசந்திரன், இராகு, கேது, ஆதித்தனுடன் கூடிநின்ற புதன் என்பன.
அசுபக்கிரியை - அமங்கலக்கிரியை.
அசுபதம்பவாதம் - ஒருநோய்.
அசுபதி - ஒருநாள்.
அசுபபாவனை - பாவனை ஐந்தனுள் ஒன்று. அது உடம்பினை அனித்தியம், துக்கம், அநான்மா, அசுசி என்று பாவித்தல்.
அசுபம் - அமங்கலம், அழுக்கிரா, பாவம்.
அசுபயோகம் - சுபமல்லாதயோகம். அது சாதகனுக் கிலக்கினத்திற்குப் பனிரண்டாமிடத்திலேசந்திர சூரியரல்லாத மற்ற கிரகங்கள் கூடி நிற்கும் நிலை.
அசுபராசி - குரூரராசி.
அசுபவாதனை - தீயவிடயவாதனை.
அசுப்பு - உளவு, சடுதி.
அசுமக்குட்டன் - வானப்பிரத்தருள் ஒருவன்.
அசுமந்தகம் - நாணற்பூண்டு.
அசுமந்தம் - அடுப்பு, அதிட்டவீனமானது, எல்லை யில்லாதது, மரணம், வயல்.
அசுமம் - இடியேறு, கல், தீத்தட்டிக் கல், மேகம்.

அசுமலோட்டிரஞாயம்-மீமாஞ்சையிற் கூறப்பட்ட நியாயங்களுள் ஒன்று-
அசுமாந்தகம் } நாணற்பூண்டு.
அசுமாந்தம் }
அசுமாற்றம் - அசுகை, ஐயம், சயிக்கினை சிலமன்.
அசுமானகிரி . மேற்கட்டி.
அசுமேதம் - அசுவமேதயாகம்.
அசும்பல் - இடையறுதொழுகல்.
அசும்பு - கிணறு, பொல்லாநிலம், வழுக்குநிலம்.
அசும்புசெய்தல் - வழுக்குதல்.
அசும்புதல் - அசும்பல், வழுக்குதல்.
அசுரகன் - அக்கினி, இந்திரன், விஷ்ணு.
அசுரகுரு - சுக்கிரன்.
அசுரசந்தி - இரணியவேளை.
அசுரநாள் - மூலநாள்.
அசுரபி - தூர்க்கந்தம்.
அசுரமணம் - எண்வகை மணத்தொன்று- அது பெண்ணுக்குப் பொன் பூட்டிப் பெண்ணின் சுற்றத்திற்குப் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்வது.
அசுரமந்திரி - சுக்கிரன்.
அசுரம் - அசுரமணம்.
அசுராரிபு - விட்டுணு.
அசுரர் - அவுணர், இராக்கதர்.
அசுரன் - அவுணன், இராகு, கேது.
அசுராதிபன் - மாவலியென்னுமசுரன்.
அசுரேசன் - அசுரர்களுக்குத் தலைவன்.
அசுரேந்திரன் - தாரகாசுரனுடைய ஒரு மகன்.
அசுரை - இராசி, இருள், வேசி.
அசுலபம் - அடைதற்கருமை.
அசுவகந்தி } அமுக்குரவு.
அசுவகந்திகா }
அசுவகந்திச்சூரணம் - அமுக்கிராக் கிழங்காற்செய்யப்பட்ட சூரணம்.
அசுவகந்திபலாலட்சாதைலம் - ஒருவகைத் தைலம்.
அசுவகந்தை - அமுக்கிராப்பூண்டு.
அசுவகிரந்தம் - ஒருபறவை.
அசுவகினி - அச்சுவினி.
அசுவகெந்தி - அமுக்குரவு.
அசுவகோட்டம் - குதிரைச்சாலை.
அசுவசட்டிரம் - நெருஞ்சில்.
அசுவசாத்திரம் - அசுவபரீட்சை நூல்.
அசுவசாந்தி - ஒரு யாகம்.
அசுவசாரத்தியம் - குதிரைச்சாரதித்துவம்-
அசுவசாலை - குதிரைப்பந்தி.
அசுவசாவம் - குதிரைக்குட்டி.
அசுவசிகிச்சை - குதிரைவைத்தியம்.
அசுவதந்திரபாவம் - பரதந்திரத்தன்மை.
அசுவதந்திரம் - சுவதந்திரமின்மை.
அசுவதரம் - ஆண்கோவேறுகழுதை.
அசுவதரன் - ஒருநாகசிரேட்டன்.
அசுவதரி - பெண்கோவேறுகழுதை.
அசுவதாட்டி - குதிரையின்வேகம்.
அசுவதாமன் - அச்சுவத்தாமன்.
அசுவதி - அச்சுவினி, முதனாள்.
அசுவத்தம் - அத்திமரம், அரசமரம்.
அசுவத்தாமன் - சிரஞ்சீவியர் எழுவரில் ஒருவன், அவன் துரோணாசாரியன் மகன்.
அசுவநாயகன் - குதிரைகாப்போன்.
அசுவந்தம் - அடுப்பு, மரணம், முடிவு, வயல்.
அசுவபரி - அலரி.
அசுவபரிட்சை } கலைஞானம் அறுபத்து நான்கினுள் ஒன்று. அது குதிரையைப் பற்றியது.
அசுவபரீட்சை }
அசுவபாலன் - குதிரைப்பாகன்.
அசுவப்பிரதானம் - சுபப்பிரதான மல்லாதது.
அசுவமியம் - குதிரைப்பாஷாணம்.
அசுவமுகன் - குதிரைமுகமுள்ள கின்நரன்.
அசுவமேதபருவம் - பாரதம் பதினெண் பருவங்களுள் ஒரு பருவம்.
அசுவமேதம் - ஒருவகை யாகம்.
அசுவமேதிகம் } அசுவமேதயாகத்திற்குப் பக்குவமான குதிரை.
அசுவமேதீயம் }
அசுவம் - அமுக்கிராக்கிழங்கு, குதிரை, குதிரைப்பற்பாஷாணம்.
அசுவரம் - கீழ்க்குரல், மெய்யெழுத்து.
அசுவலக்கணம் - குதிரையின் குணங்களையுங் குற்றங்களையும் ஆராய்தற்குள்ள குறி.

அசுவவாகன் - குதிரைப்பாகன்.
அசுவவாதரோகம் - ஒருவகை வாதரோகம்.
அசுவவாதியர் - குதிரை பயிற்றுவோர்.
அசுவவித்து - அசுவசாத்திரமறிந்தவன் நளமகாராசன்.
அசுவவைத்தியம் - குதிரை வைத்தியம்.
அசுவாபரி - அலரி.
அசுவாமணக்கு - சிறுபூளை.
அசுவாமி - உடையவனல்லாதவன்.
அசுவாமிவிக்கிரயம் - உடையவனல்லாதவன் விற்றல்.
அசுவாரி - எருமை.
அசுவாரூடமூர்த்தி - மாணிக்கவாசகசுவாமிகள்பொருட்டு நரிகளைக் குதிரைகளாக்கி அரிமர்த்தன பாண்டியனுக்குக் கொண்டுவந்த சிவன்.
அசுவினி - அச்சுவினிநாள்.
அசுவினிதேவர் - அச்சுவினிதேவர்.
அசுவீகாரம் - அங்கீகரியாமை.
அசுவீயம் குதிரைக்கூட்டம், குதிரைச் சம்பந்தமுடையது.
அசுவை - அச்சுவினிநாள், அத்தாட்சியற்றது, பெட்டைக்குதிரை.
அசுழம் - நாய்.
அசூசம், அசூசி } ஆசூசம், சூதகம்.
அசூதி - பிறப்பின்மை, மலடு.
அசூயனம், அசூயை } அவதூறு, பொறாமை.
அசூரி - பாமரன், வீரமில்லாதவன், வைசூரி.
அசூர் - சமுகம்.
அசேசரி - புவர்லோகத்தி லிருக்கும் ஒருவாயு.
அசேசன் - சுத்தவித்தியா தத்துவத்தில் இருக்கின்ற ஐம்பத்தோ ருருத்திரருள் ஒருவன்-
அசேஷம - முழுதும்.
அசேடம - சேடமின்மை.
அசேட்டை - சேட்டையின்மை-
அசேதனம் - அறிவின்மை.
அசேவனம்-அசட்டைபண்ணல், கீழ்ப்படியாமை, விலகுதல்.
அசேவை - அவமதித்தல், அசங்கை, விலகல்.
அசேனன் - சூரியசமுகத்தாறிருதுக்களிலு நின்று பாட்டயர்வோரில் ஒருவன்.
அசை - அசைநிலை, அசையென்னேவல் அலகொன்றேனும் இரண்டேனுங்கொண்டு சீர்க்குறுப்பாய் வருவது, ஆட்டுமறி, இசைப்பிரிவு, இரைமீட்பு, சீரகம், செய்யுளுறுப்பிலொன்று, சொல்லுருபு, பிரகிருதி, பெண்ணுடு, மாயை.
அசைஇ - இருந்து, இளைத்து, இளைப்பாறி, வருந்தி.
அசைஇய - மெலிந்த, ஓய்ந்த.
அசைஇயது - கிடந்தது.
அசைகபாதம்-இரவி னிசமு மிரண்டாமுகூர்த்தமாகிய பூரட்டாதி.
அசைகபாதன் - பதினொ ருருத்திரருள் ஒருவன்.
அசைசை - அசைவு, ஐயம்.
அசைச்சீர் - தளைகொளற்கிடனுகியோரசையே சீராயுநிற்பது. [சொல்.
அசைச்சொல் - அசைநிறைக்குஞ்
அசைதல் - ஆடுதல், இருத்தல், உலாவல், கலங்குதல், சோம்பல், தங்கல், துவளல், பயப்படுதல்.
அசைதன்னியம் - அறியாமை, சடத்துவம், ஞானக்குருடு.
அசைதன்னியரூபம் - சடரூபம்.
அசைத்த - கட்டிய.
அசைத்தல் - ஆட்டல், ஓசையெடுத்தல், கட்டல்.
அசைத்தொழில் - தாக்கியெழுதல்.
அசைநிலை - அசைச்சொல்.
அசைநிலையளபெடை - அசை கோடற்பொருட்டுக்கொண்ட அளபெடை.
அசைநிலையோகாரம் - ஈற்றசையோகாரம். (உ-ம்) கேண்மினோ.
அசைபோடல் - இரைமீட்டல்.
அசைப்பருங்கல் - மலை.
அசைப்பு - அசைதல், இறுமாப்பு, சொல், சொல்லுதல்.
அசைமீட்டல் - மிருகங்கள்தாம் உண்டவுணவை மீட்டுமென்றிரைப்பையினுட் செலுத்தல்.
அசையடி - அம்போதரங்கம்,
அசையந்தாதி - அடியீற்றசைவருமடி முதலசையாகத் தொடுத்திருப்பது.

அசையாநிலை - அசையாது நிற்கும் நிலைமை.
அசையாமணி-ஆராய்ச்சிமணி, விசேஷ சமயங்களில் அசைக்குமணி.
அசையாமை - சலனமின்மை.
அசையிடல் - அசைபோடல்.
அசையு - அமுக்கிரா.
அசைவாடுதல் - அசைதல், உலாவுதல்.
அசைவின்மை - முயற்சி.
அசைவு - இளைப்பு, ஆட்டம், சலனம், சோர்வு, நிலைதவறுகை, புடைபெயர்ச்சி, மடிதல், மனக்கலக்கம், வருத்தம்.
அசைவுதீர்தல் - இளைப்பாறுதல்.
அசைவெட்டுதல் - இரையை மீட்டு மெல்லுதல்-
அசோகத்தளிர்மணி-சௌகந்திகப் பதுமராகமணி.
அசோகம் - ஒருமரம், சோகமின்மை, மன்மதன்கணை, மருது, வரிலோத்திரம், வாழை.
அசோகரோகிணி-ஒரு மருந்துப்பூண்டு.
அசோகவனம் - வாழைவனம்.
அசோகவனிகாநியாயம் - இராவணன் சீதையை வைத்தற்கு மற்றையிடங்களைவிட்டுப்பிரதானகாரணம்ஒன்றுமின்றி அசோகமரச் சோலையைத் தெரிந்துகொண்டதுபோல ஒரு காரியத்தைச் செய்தற்குப் பல வழியிருக்கவும் பிரதானகாரணமின்றி ஒருவழியைத்தெரிந்துகொள்ளுதல்.
அசோகவனிகை-அசோகமரச்சோலை.
அசோகன் - அருகன், சோகமற்றவன், மன்மதன்-
அசோகாரி - கடம்பமரம்.
அசோகு - அசோகமரம், மருது, வரிலோத்திரம், வாழை.
அசோகை - சவரிப்பூண்டு.
அசோசம் - அமைதி, கவலையின்மை.
அசோணம் } குறட்டை, சவரி,
அசோண்டி } சவரிலோத்திரம்.
அசோதனம் - அசுத்தம், திருத்தமின்மை.
அசோதிதம் - சுத்திபண்ணப்படாதது, திருத்தப்படாமை.
அசோதை - நந்தகோபன்மனைவி-

அசோவதி - மேருவின் வடகிழக்கிலுள்ள ஒருநகரம்.
அசௌசம் - ஆசூசம், சுத்தமின்மை, சூதகம்.
அசௌந்தரியம் - அவலக்ஷணம்.
அசௌரியம் - வீரமின்மை.
அச்சகம் - நீர்முள்ளி.
அச்சகாரம் - முன்பணம்.
அச்சக்குறிப்பு - பயப்பாட்டுக்குறி.
அச்சச்சுவை - சுவையலங்காரவகைகளுள் ஒன்று. அது அச்சம் என்னும் மெய்ப்பாட்டால் நெஞ்சினிகழுந்தன்மை புறத்துப்புலனாய் விளங்க நடப்பது.
அச்சஞ்செய்தல் - பயமுறுத்தல்.
அச்சடியன்-ஒருவகைச் சாயப்புடவை.
அச்சடை - கீழ்காய்நெல்லிப்பூண்டு.
அச்சணம - அக்கணம்.
அச்சத்தி - கத்தரிப்பூண்டு.
அச்சந்தசு - சந்தம்பெறாதது, வேதாத்தியயனம் செய்தற்குரிய னல்லாதவன், வேதாத்தியயனம் பண்ணாதவன்-
அச்சபரம் - நாணற்புல்.
அச்சபல்லம் - கரடி.
அச்சப்படுத்தல் - பயங்கரமுறச் செய்தல்.
அச்சமம் - அளத்துப்புல், முசுறுப்புல்.
அச்சமுள்ளோன் - பயமுடையோன்.
அச்சம் - அகத்தி, இலேசு, ஈசுரப்புல், ஓரலங்காரம், கடைப்படுதானம் எழினொன்று. அஃது அச்சத்தானீதல், கரடி,காய்ச்சற்பாஷாணம்,கோரைப்புல், சரியொப்பு,தகடு, பயம்பளிங்கு மகடூஉக்குணம் நான்கில் ஒன்று முன்புறம்-
அச்சயன் - கடவுள்.
அச்சரசு - அப்சரஸ்திரீ.
அச்சரம் - நாக்கில் உண்டாகும் ஒரு நோய்.
அச்சல் - ஆச்சல், தரம்.
அச்சவபிநயம் - அச்சச்சுவையபிநயம்.
அச்சவாரம் - உறுதிப்பணம்.
அச்சவுபதை - உபதை நான்கனுள் ஒன்று.
அச்சறுக்கை - எச்சரிக்கை, பத்திரம்.
அச்சனர் - கடவுள்.

அச்சன் - தந்தை. கடவுள்.
அச்சாணி - அச்சுருவாணி.
அச்சாணிமூலி - வேலிப்பருத்தி.
அச்சாரம் - அச்சவாரம், ஆயத்தபணம்.
அச்சானம் - அஞ்ஞானம்.
அச்சி - ஒருதேயம், அகத்திமரம், தாசி.
அச்சித்தினை - ஒருபுல், தினை.
அச்சிநறுவிலி - நறுவிலிமரம், இம்மரத்துப் பட்டையிலிருந்துரித்த நாரால் மைசூர்தேசத்தில் கயிறு திரிக்கப் படுகிறது.
அச்சிரக்காலை - முன்பனிக்காலம்.
அச்சிரநாள் - கூதிருமுன்பணியும்.
அச்சிரவக்காலம் - முன்பனிக்காலம்.
அச்சு - அடையாளம், உடல், உயிரெழுத்து, எழுத்து, கட்டளைக்கருவி, தேகம், நெய்வோர் கருவியிலொன்று, பண்டியச்சு, யுகம்.
அச்சுக்கட்டு - நெற்பயி ரிடும்படியான நிலம்.
அச்சுக்கம்பி, அச்சுக்கம்பு - துப்பாக்கியில் மருந்து கெட்டிக்குங்கோல்.
அச்சுதம் - அறுகும் வெள்ளரிசியுங் கூட்டி அணிவது, கெடுதலின்மை.
அச்சுதன் - சிவன், அழியாமையுள்ளோன், கடவுள், மூத்தோன், விட்டுணு.
அச்சுதன்முன்வந்தோன் - பலபத்திரன்.
அச்சுதை - அழிவில்லாதவள், உமாதேவி.
அச்சுப்பலகை - நெய்வோர் கருவியில் ஒன்று.
அச்சுமாருதவாதி - அந்தந்தச் சீவனினச்சு, வேறொரு சீவனின் அச்சாகாமல் அந்த அந்த அச்சாகப் பிறந்திறக்கும் என்னும் மதஸ்தன்.
அச்சுரம் - நெருஞ்சில், முருங்கை.
அச்சுருவாணி - தேரகத்திற்செறிகதிர்.
அச்சுலக்கை - துலாவினடுவச்சுமரம்.
அச்சுவசாத்திரம் - அஸ்வசாஸ்திரம்.
அச்சுவசேனன் - தக்கனெனனும்பாம்பின்மகனாகிய ஒருவன்.
அச்சுவதி - அச்சுவினிநாள்.
அச்சுவத்தம் - அரசமரம்.
அச்சுவத்தன் - எட்டா மனுவின்காலத்திலுள்ள எழுமுனிவரில் ஒருவன்.
அச்சுவத்தாமன் - அசுவத்தாமா.
அச்சுவத்தாமா - ஒருயானை, ஒரு யுத்தவீரன்.
அச்சுவ முகாதனம் - கால்மடித்து இரண்டு முழந்தாளினும் முழங்கைகளையூன்றி இரண் டுள்ளங்கைகளையுங் கன்னத்திலே வைத்திருப்பது.
அச்சுவமேதம் - அசுவமேதயாகம்.
அச்சுவம் - குதிரை.
அச்சுவரதன் - சூரியன் தேர் பரிக்கு நாகருள் ஒருவன்.
அச்சுவன் - குதிரைச்சாதியாடவன்.
அச்சுவினி - அசுபதி.
அச்சுவினிகள், அச்சுவினிகுமாரர், அச்சுவினிதேவதைகள், அச்சுவினிதேவர் - தேவ மருத்துவர்.
அச்சுவினிநாள் - அசுபதி.
அச்சுவினிபுத்திரர் - தேவமருத்துவர்.
அச்சுறல் - பயப்படுதல்.
அச்சுறவு - அச்சமடைதல்.
அச்சுறுகொழுந்தொடர் - மரங்களிலிரும்பைத் தைத்து விசையாதபடி கழுத்தில் மாலைபோலிடுவதொன்று.
அச்சுறுத்தல் - பயமுறுத்தல்.
அச்சுறை - உடம்பு.
அச்சென - விரைவாக.
அச்சை - பீதிரோகம், பைத்தியம்.
அச்சொடுபுரிதல் - சரி யொப்பாகச் செய்தல், மூலரூபமாகச்செய்தல்.
அச்சோ - அதிசயச்சொல், இரக்கச் சொல்.
அஸ்தமனம் - அத்தமனம்.
அஸ்தாந்தரம் - பொக்கிஷம்.
அஸ்திசாரபேதி - அதிசாரபேதி.
அஸ்திசுரம் - எலும்புருக்கிசுரம்.
அஸ்திபாரம் - அத்திவாரம்.
அஸ்திரி - உள்வஸ்திரம்.
அஞராட்டி - நோயுள்ளவள்.
அஞர் - அறிவிலார், துன்பம், வருத்தம்.
அஞலம், அஞல் - கொசுகு
அஞ்சணங்கம் - பஞ்சவிலக்கணம்.
அஞ்சணங்கியம் - பஞ்சவிலக்கியம்.
அஞ்சதி - காற்று.

அஞ்சத்தான் - பிரமா.
அஞ்சபாதம் - ஒருபுள்ளடி.
அஞ்சப்படுதல் - மதிக்கப்படுதல்.
அஞ்சம் - அன்னப்புள்.
அஞ்சரதன் - பிரமன்.
அஞ்சலம் - சீலைத்தொங்கல்,வாளுறை.
அஞ்சலர் - பகைவர்.
அஞ்சலளித்தல் - அபயங்கொடுத்தல்.
அஞ்சலி - ஆடுதின்னுப்பாளை; கும்பிடல், சங்கங்குப்பி, நான்குபலம், பேதை, மாவிலிங்கை, வண்டுகொல்லி, வந்தனை, வறட்சுண்டி, வெளவால்.
அஞ்சலிகாரிகை - ஒருபூடு, சித்திரப்பாவை.
அஞ்சலிகை - வெளவால்.
அஞ்சலிக்கை - கைமுகிழ்த்தல்.
அஞ்சலித்தல் - அஞ்சலிசெய்தல்.
அஞ்சலிவந்தனம் - கும்பிட்டு வணங்கல்.
அஞ்சலினவர் - பாஞ்சராத்ரமதத்தோர்.
அஞ்சலோமசம் - அன்னபேதி.
அஞ்சல் - தாங்கல், தரப்பி னெல்லை, தோல்வி, பயப்படுதல், வியங்கோண் முற்று.
அஞ்சவத்தை - ஐந்துநிலை,அவை ஆன்மாவுக்குரிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன.
அஞ்சவாச்சிரமம் - நால்வகைச் சன்னியாசங்களில் ஒன்று.
அஞ்சற்காரன் - தபாற்காரன்.
அஞ்சற்குளச்சி - குங்குமபாஷாணம்.
அஞ்சனகிரி - சேடமலை.
அஞ்சனக்கலிக்கம் - அஞ்சனம்பார்க்கக் கண்ணுக்கிடும் ஒருமருந்து.
அஞ்சனக்கல் - கருநிமிளை.
அஞ்சனக்காரன் - மந்திரக்காரன்.
அஞ்சனக்கிரி - நீலமலை.
அஞ்சனக்கோல் - அஞ்சனந் தீட்டுங்கோல்.
அஞ்சனசலாகை - மைதீட்டுங்கோல்.
அஞ்சனசேவோத்தேசனம் - அஞ்சனப்பிரயோகத்தினல் விளங்குதல்.
அஞ்சனத்திரயம் - மூவிதாஞ்சனம், அவை சோராஞ்சனம், பாதாளாஞ்சனம், பூதாஞ்சனம் என்பன.
அஞ்சனபாஷாணம் - கல்லீயம், விளைவுப் பாஷாணம் முப்பத்திரண்டில் ஒன்று.
அஞ்சனம் - இருள், கறுப்பு, மேற்றிசையானை, ஆணவம், மை.
அஞ்சனவண்ணம் - கருநிறம்.
அஞ்சனவண்ணன் - திருமால், கருநிறத்தையுடையவன்.
அஞ்சனவித்தை-அறுபத்துநான்குகலைஞானங்களில் ஒன்று, அது மறைந்த பொருளைக் காண்பிப்பது.
அஞ்சனன் - இந்திரன்,சனி,விட்டுணு.
அஞ்சனாட்சியம்மை - திருகர்குடியிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
அஞ்சனாதேவி - அனுமன்றாய்.
அஞ்சனாலா - கருங்காக்கணம், நீலோற்பலம்.
அஞ்சனாவதி - வடகீழ்த்திசை யானைக்குப் பெண்யானை, வாயுதேவன் மனைவி.
அஞ்சனி - காயா, நாணற்புல்.
அஞ்சனேயன் - அனுமான்.
அஞ்சனை - அனுமன்றாய், வடதிசை யானைக்குப் பெண்யானை.
அஞ்சனைநாமிகாவர்த்தமரோகம்-இமையைப்பற்றிய ரோகபேதங்களுள் ஒன்று.
அஞ்சாச்சிறப்பு - வாகைத்திணைவிகற்பங்களில் ஒன்று. அதுபகைவர்கண்ணுந் தன்பாலார்கண்ணும் ஒப்புமையாகப் பாசறையுள்ளாச்சால்புடைமை கூறல்.
அஞ்சாணிமூலி - அச்சாணிமூலி.
அஞ்சாப்பட்டயம் - இரட்சண்ணியபத்திரிகை.
அஞ்சாமை - திண்மை, பயப்படாமை.
அஞ்சாரப்பெட்டி-அஞ்சறைப்பெட்டி.
அஞ்சாரவிடையர் - ஒருவகையிடையர், இவர்கள் ஸ்திரீகள் கலியாணத்தில் ஐந்தாலியென்னும் கழுத்தணியணிவது வழக்கம்.
அஞ்சாலியிடையர் - அஞ்சாரவிடையர்.
அஞ்சாவிரா - பெருங்குமிழ்.
அஞ்சானனம் - சிங்கம், சிங்கவிராசி, ஐந்துமுகம்.
அஞ்சானனன் - சிவன், ஐந்துமுகமுள்ளவன்.
அஞ்சி - எசமானன்.

அஞ்சிகம் - கண்.
அஞ்சிக்கை - அச்சம்.
அஞ்சிட்டன் - சூரியன்.
அஞ்சிதமுகம் - வருத்தமாற்றாது இருதோண்மேல் தலைசாய்த்தல்.
அஞ்சிதம் - உண்டாதல், தலைசாய்த்தல். நல்லறிவு, பூசித்தல், பொருந்தல், வணக்கம்.
அஞ்சிதவணி - தற்குறிப்பலங்காரம்.
அஞ்சித்தல் - பூசித்தல்.
அஞ்சீரம் - அத்தி, அத்திப்பழம்.
அஞ்சு - ஐந்து.
அஞ்சுகம் - கிளி.
அஞசுதல் - பயப்படுதல்.
அஞ்சுபயம் - குடிகெடுக்க நேரிடுமைந்துவகைப்பட்ட பயங்கள். அவை அரசனாலும், பரிசனராலும், பகைவராலும், கள்வராலும், விலங்கு முதலிய உயிர்களாலும் வருவன.
அஞ்சுமாலி - சூரியன்.
அஞ்சுமான் - சிவாகமமிருபத்தெட்டில் ஒன்று, துவாதசாதித்தரில்ஒருவன்.
அஞ்சுருவாணி - அச்சுருவாணி.
அஞ்சுவரத்தருன - அஞ்சததருவன.
அஞ்சுவர்ணத்தோன் - துத்தநாகம், நெய்த்துக்காரன்.
அஞ்சுவனத்தார் - நெய்வாரின் ஒருபேதம்.
அஞ்சுவனம் - பஞ்சாக்ஷரம்.
அஞ்சுறல் - பயப்படுதல்.
அஞ்செவி - செவியகம்.
அஞ்செழுத்து - பஞ்சாக்கரம்.
அஞ்ஞதை - அறியநமை.
அஞ்ஞத்துவம் - அஞ்ஞானம்.
அஞ்ஞர் - அறிவிலார்.
அஞ்ஞன் - அறிவிலான்.
அஞ்ஞாதம் - அக்கியாதம்.
அஞ்ஞாதவாசம் - அக்கியாதவாசம், கரந்துறைதல்.
அஞ்ஞாதவாசி - பிறரா லறியப்படாதவாசமுடையவன்.
அஞ்ஞானபூமி - பொல்லாத வாசனையாகிய எழு பூமி. அவை விந்துசாக்கிரம், மேற்சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பனம், சொப்பனம், சொப்பனசாக்கிரம், சுழுத்தி என்பன.

அஞ்ஞானப்பாறை - கருங்கற்பாறை.
அஞ்ஞானம் - ஞானமின்மை, தெய்வவறிவின்மை.
அஞ்ஞானவிருத்தி - அஞ்ஞானச் செயல்கள். அவை தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், அந்ததாமிச்சிரம் என ஐந்துவகைப்படும்.
அஞ்ஞான்று - அப்போது.
அஞ்ஞை - அஞ்ஞானம், அறிவிலான், இலாடத்தானம், தாய்.
அடகாம்பரி - பதினெட்டாவது மேளகர்த்தா.
அடகு - இலைக்கறி, கடன்கோடற் கீடுவைத்தல்.
அடக்கம் - அடங்கிய காரியம், அடங்கிய பொருள். உயிரொடுங்கி யிருத்தல், ஒடுக்கம், ஒருவகைத் தேள், கருத்து, கருவி, மனவமைதி.
அடக்கம்பண்ணுதல் - சேமஞ்செய்தல், பிரேதமுதலியவற்றைப் புதைத்தல்.
அடக்கல் - ஒடுக்கல், கீழ்ப்படியப்பண்ணல்.
அடங்கம் - கடுகுரோகிணி.
அடங்கலர் - பகைவர்.
அடங்கலன் - கீழ்ப்படியாதவர், பகைவன்.
அடங்கலார் - பகைவர்.
அடங்கலும் - அனைவரும், எல்லாம்.
அடங்கல் - அடக்கம், அமைதல், எல்லாம், குத்தகை, சுருங்கல், சுற்றுவட்டம், வியங்கோண்முற்று.
அடங்கவும் - முழுவதும்.
அடங்கன்முறை - தேவாரத் திருமுறை எழும் அடங்கிய ஒரு புத்தகம். இதனுள் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் செய்தருளிய தேவாரத்திருப்பதிகம் ௩௮௪ம், திருநாவுக்கரசு நாயனார் செய்தருளிய தேவாரத்திருப்பதிகம் ௩௧௨ம், சுந்தரமூர்த்தி நாயனார் செய்தருளிய தேவாரத்திருப்பதிகம் ௧௦௦ம், அடங்கும்.
அடங்காதோர் - பகைவர்.
அடங்காப்பற்று - அரசனாணையை மீறுவோரிருக்கும் ஊர்.
அடங்காமாரி - ஒருவருக்குங் கீழ்ப்படியாது முரணிநடப்பவள், விடாமழை.

அடங்காமை - கீழ்ப்படியாமை, மனோ வாக்குக் காயங்களடங்காது தீநெறிக் கட்செல்லுதல்.
அடங்கார் - பகைவர்.
அடங்காவாரிதி - ஒலிமாறாச் சமுத்திரம், கடலூப்பு, மூத்திரம்.
அடங்கிடம் - அழிந்தொடுங்குமிடம்.
அடங்கு - அடங்குதல்.
அடங்குதல் - அடங்கல், வெளிப்படாது மனத்தினுள்ளே அடங்குதல்.
அடசல்
அடசுதல் } அடையப்பண்ணுதல்.
அடஞ்சாதித்தல் - எதிரிடை பண்ணுதல்.
அடடா - ஓரதிசயக் குறிப்பு, தனக்குக் கீழ்ப்பட்ட ஒருவனை விளிக்கும் ஒரு சொல்.
அடதாளம் - சத்ததாளங்களில் ஒன்று.
அடத்தி - வாசி.
அடநம் - அலைந்துதிரிதல், போதல்.
அடநி - வில்நுனி.
அடந்தாளம் - அடதாளம்.
அடந்தை - ஒருதாளம்.
அடப்பங்கொடி - அடம்பங்கொடி.
அடப்பம் - நாவிதன்கருவிப்பை, வெற்றிலைப்பை.
அடப்பனார் - நெய்தற்றலைவனது பட்டப்பெயர்.
அடப்பன் - அடப்பனார், கடப்பமரம்.
அடப்பிரதீபிகை - அடயோகத்தைவிவரிக்கும் ஒருவடநூல்.
அடம் - ஈனம், சஞ்சாரம், பிடிவாதம், பொல்லாங்கு, போகுதல்.
அடம்பங்கொடி - ஒருபூக்கொடி.
அடம்பண்ணல் - தீங்குசெய்தல்.
அடம்பாரம் - இடம்பம், பரப்பம், பிரபல்லியம், முழுதும்.
அடம்பு - அடம்பங்கொடி, அடம்பம்பூ, அடப்பமரம், ஆட்டுக்காலடம்பு, மான்குளம்படம்பு.
அடயோகம் - நால்வகை யோகங்களில் ஒன்று, அது ஒற்றைக்காலினிற்றல், தலைகீழாகத்தூங்கிப் புகை சுவாசித்தல், கையுயர்த்தி நிற்றல் முதலிய பிரயாசைச் செயல்களோடு செய்யப்படுவது.
அடராடிபடராடி - முற்றுமழிக்கை.

அடரார் - பகைவர்.
அடரொலி - அதட்டல்.
அடர் - அடரென்னேவல், செறிவு, தகடு, நெருக்குகை.
அடர்ச்சி - நெருக்கம்.
அடர்தல் - நெருங்கல், பொருதல்.
அடர்த்தல் - நெருக்கல், வருத்துதல், பொருதல்.
அடர்த்தி - நெருக்கம்.
அடர்ந்தேற்றம் - கொடுமை, நெருக்கிடை.
அடர்ந்தேற்றி - இட்டேற்றம், நெருக்கம்.
அடர்பு - செறிவு, நெருக்கம், வினையெச்சம்.
அடர்ப்பம் - நெருக்கம்.
அடர்ப்பு - நெருக்கம், போர்.
அடர்வு - அடர்பு.
அடலம் - மாறுமை, விசாரமடையாமை.
அடலார் - பகைவர், போர்வீரர்.
அடலி - வெள்ளாட்டி.
அடலை - சாம்பல், பற்பம், விபூதி, போர்க்களம், மாறுமை.
அடலைமுடலை - வீண்வார்த்தை.
அடல் - கொல்லுதல், சமைத்தல், பொருதல், வலி, வியங்கோண்முற்று, வெற்றி.
அடவாதி - பிடிவாதக்காரன்.
அடவி - காடு, கூட்டம், சோலை.
அடவிகன் - வனவாசி.
அடவிக்கச்சோலம் - ஒருசரக்கு.
அடவிசரர் - வேடர்.
அடவிச்சொல் - கோரோசனை.
அடவியீ - ஒருவகைக்கீடம்.
அடனம் - அலைந்துதிரிதல், போகுதல்.
அடா - ஓரதிசயக்கிளவி, கீழ்மகனை விளிக்கும் ஒருசொல்.
அடாசனி - ஆரை, புளியாரை.
அடாசு - மட்கிச்செத்தது.
அடாசுதல் - திணித்தல், விலகுதல்.
அடாணா - ஓரிராகம்.
அடாதது - தகாதது.
அடாத்தியம் - அடாதது.
அடாத்து - தகாதது, பொருந்தாதது, முறைகேடானது.

அடார் - புலிமுதலியவைகளை அகப்படுத்தும் பொறியாகிய கல்லடார்.
அடாவந்தி - அநியாயம், இட்டேற்றம், துன்பம்.
அடி - அடியென்னேவல், அடியோர், ஆதி, ஓரளவு, கடவுள், கால், காற்சுவடு, கீழ்மகளை விளிக்குஞ்சொல், செய்யுளுறுப்பினொன்று, தாது, முன், மூலம், வமிசமூலம்.
அடிகண்மார் - சமணருள் ஆசிரியராய் நின்றவர்களைக் குறிக்கும் ஒரு சிறப்புப்பெயர்.
அடிகள் - கடவுள், குரு, தலைவன், தலைவி, முனிவர், மூத்தோன்.
அடிகாற்று - பெருங்காற்று.
அடிகொள்ளல் - தொடங்கல்.
அடிகோலல் - அஸ்திவாரம்போடல், முயலல்.
அடிக்கடி - அடிபெயர்க்குந்தோறும்.
அடிக்கணை - கணைக்கால்.
அடிக்கீழ்ப்படுத்தல் - அடக்கி நடத்தல், ஆண்டுகொள்ளல்.
அடிக்குடி - அடிச்சேரி.
அடிக்குடில் - அடிச்சேரி, வேடரிருக்குமூர், வைகுந்தம்.
அடிக்குள் - உடனே.
அடிக்கொள்ளுதல் - தொடக்கம்பண்ணுதல்.
அடிக்கோலுதல் - இடம்பிடித்தல்.
அடிசில் - சோறு.
அடிச்சால் - உழவின்முதற்சால்.
அடிச்சி - அடியாள்.
அடிச்சியர் - குற்றேவல்செய்யும் பெண்கள்.
அடிச்சுவடு - காற்சுவடு.
அடிச்சூடு - காலடியிற்சுடுதல்.
அடிச்சேரி - அடிக்குடில், கிராமம்.
அடிஞானம் - சிவஞானம்.
அடிதலை - அடிமுடி, ஆதியந்தம், வரலாறு.
அடிதலைதடுமாற்றம் - ஆதியந்தந்தெரியாது தடுமாறுதல்.
அடிதல் - அடிபடுதல்.
அடித்தலம் - அத்திவாரம், கால்.
அடித்தல் - அதுக்கல், அறைதல்.
அடித்தழும்பு - காற்சுவடு.
அடித்தளம் - அத்திவாரம், வீட்டினிற்பரப்பு.
அடித்திகம் - அசுவகந்தி.
அடிநா - நாவினடி.
அடிநிலம் - அடிப்பக்கம், அடியிடம்.
அடிபடல் / அடிபடுதல் } அடிக்கப்படுதல்.
அடிபணிதல் - நமஸ்காரஞ்செய்தல்.
அடிபார்த்தல் - ஏதுபார்த்தல்.
அடிபிடி - சண்டை.
அடிபிடித்தல் - ஏதுப்பிடித்தல், கறிமுதலியசுண்டல், முதற்பிடித்தல்.
அடிபெயர்தல் - விலகுதல்.
அடிப்படல் - கீழ்ப்படிதல், கீழ்ப்படையிலிருத்தல், பாதத்தின்கீழ்ப்படுதல்.
அடிப்படுதல் - அமைதல்.
அடிப்படுத்தல் - கீழ்ப்படுத்தல்.
அடிப்படுத்துதல் - கீழமைத்தல்.
அடிப்படை - ஆதாரமாக அடியிற்கிடப்பது, பிரதானசேனை.
அடிப்பட்டகாந்தி - தீமுறுகற் பாஷாணம்.
அடிப்பட்டசாந்தி - மகாசாந்தம்.
அடிபட்டசான்றோர் - பரம்பரைப்பெரியோர், இது சைவபரிபாஷை.
அடிப்பட்டவன் - பழகினவன்.
அடிப்பதறல் - நிலைகுலைதல், கானடுங்கல்.
அடிப்பந்தி - முதற்பந்தி.
அடிப்பலம் - முதற்பலன், மூலபலம்.
அடிப்பற்றல் - அடிப்பற்றுதல்.
அடிப்பற்று - சோறுமுதலிய பாண்டத்திற் பற்றுகை, பாலைப்பு.
அடிப்பற்றுதல் - கறிமுதலிய பாண்டத்திற் சுண்டுதல்.
அடிப்பாடு - பழக்கம், வழி.
அடிப்பாய்தல் - ஒருவிளையாட்டு, தாண்டுதல்.
அடிப்பார்த்தல் - நிழலளந்து பொழுது குறித்தல், யோசித்தல்.
அடிப்பிடித்தல் - அடிப்பற்றுதல்.
அடிப்பிளை - வங்கமணல், வங்கம்.
அடிப்போடல் / அடிப்போடுதல் } இடம்பண்ணுதல். தொடங்குதல்.
அடிமடக்கு - சித்திரக்கவியில் ஒன்று, பாதமடக்கு.
அடிமடி - உள்மடி.

அடிமடை - உள்மடை.
அடிமயக்கு - பாதமயக்கு.
அடிமறி - எண்வகைப்பொருள் கோளி லொன்றாகிய அடிமறிமாற்று.
அடிமறிமண்டிலம் - அகவற்பாக்களுள் ஒன்று.
அடிமறிமண்டிலவாசிரியப்பா - அகவற் பாவினுள் ஒன்று, அஃது எல்லா வடியும் அளவொத்து எவ்வடியை முதல் நடு இறுதி ஆகக் கொள்ளி னும், ஓசையும் பொருளும் வழுவாது நிற்பது, ஒருவகையாசிரியப்பா.
அடிமறிமண்டிலவாசிரியம் - அடிமறி மண்டிலமென்னும் வகைப்பட்ட ஆசி ரியப்பா.
அடிமறிமாற்று - பொருள்கோள் எட்டி னுள் ஒன்று.
அடிமறிமாற்றுப்பொருள்கோள் - பொ ருள்கோள் எட்டினுள் ஒன்று. அது யாதானும் ஓரடியை இறுதி நடுமுதல் களில் வேண்டிய விடத்துக்குக் கூட் டிப் பொருளிசை மாட்சி மாறாது பொருள்கொள்வது (உ-ம்) "அலைப் பான் பிறிதுயிரையாக்கலுங் குற்றம். விலைப்பாலிற்கொண் டூன்மிசைதலு ங்குற்றஞ், சொலற்பாலவல்லாதசொ ல்லலுங்குற்றங், கொலற்பாலுங்குற் றமேயாம்" இதனை மாறிக்காண்க.
அடிமறிமொழிமாற்றுப் பொருள் கோள் - பொருள்கோள் எட்டினுள் ஒன்று. அஃது அடிகளையேற்புழிக் கூட்டிப் பொருள்கொள்வது (உ-ம்) "படுபயன் வெஃகிப் பழிபடுவ செய் யார் நடுவன்மை நாணுபவர்" என் பதனுள் நடுவன்மை நாணுபவர் படு பயன் வெஃகிப் பழிபடுவசெய்யார் எனக்கூட்டிக்காண்க.
அடிமுகனை - துவக்கம்.
அடிமுடி - ஆதியந்தம், காலுந்தலையும், கீழ்மேல், வரலாறு.
அடிமுதன்மடக்கு - ஆதி மடக்கென் னுஞ் சொல்லலங்காரம்.
அடிமுரண்டொடை - அடிதோறு முத ற்கட் சொல்லேனும் பொருளேனும் மறுதலைப்பட்டு வருவது. (உ-ம்) " இருள்பரந்தன்னமா நீர்மருங்கி- னிலவுகுவித்தன்ன வெண்மண லொருசிறை - இரும்பினன்னகருங் கோட்டுப்புன்னை - பொன்னினன் னநுண்டாதிறைக்குஞ - சிறு குடிப் பரதவர்மடமகள் - பெருமதர் மழைக் கணுமுடையவாலணங்கே."
அடிமை - சிறை, தொண்டானவன், தொண்டு.
அடிமைகொள்ளல் - அடிமையாக்கல்.
அடிமைபூணல் - அடிமையாதல்.
அடிமைப்படல் - தொண்டுபூணுதல்.
அடிமைப்படுத்தல் - அடிமையாக்குதல்.
அடிமைப்பத்திரம் - தொண்டுச்சீட்டு.
அடிமையோலை - அடிமைப்பத்திரம்.
அடிமோனைத்தொடை - அடிகடோறு முதலெழுத்தொன்றி வருவது.
அடிம்பு - சிவதை.
அடியடியாக - தலைமுறை தலைமுறை யாக.
அடியநாதி - தொன்றுதொட்டுள்ள கா லம்.
அடியந்தாதி - நின்றபாட்டினீற்றடிவரு ம்பாட்டின்முதலடியாகப்பாடல்.
அடியர் - தொண்டுசெய்வோர்.
அடியல் - சொரிதல் (உ-ம்) கதிரடித்த து, தொடர்.
அடியவர் - தொண்டர்.
அடியவன் - அடிமையானவன்.
அடியளபெடைத்தொடை-அடிதோறு முதன் மொழிக்கண் அளபெடுத்து வருவது.
அடியறுக்கி - மட்கலமறுக்குங் கருவி.
அடியனாதி - தொன்றுதொட் டுள்ளது.
அடியார் - அடிமைகள், தொண்டர்.
அடியாள் - அடிமைபூண்டவள்.
அடியாறு - தொன்றுதொட்ட வர லாறு.
அடியான் - ஏவலாளன்.
அடியிடுதல் - தொடங்குதல்.
அடியியைபுத்தொடை - அடியிணிறுதி தோறுநின்ற எழுத்தேனுஞ் சொல் லேனும் ஒன்றிவருவது.
அடியீடு - ஆரம்பம்.
அடியீரல் - மண்ணீரல்.
அடியுண்ணல் - அடிபடுதல், திரிதல்.
அடியுரம் - அடிப்பலம், அத்திபாரம்.
அடியுறை - பாதகாணிக்கை.

அடியெதுகைத்தொடை - அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவருவது.
அடியேன் - தொண்டனாகிய நான்.
அடியொட்டி - நிலத்திலே நட்டுவைக்கப்படுகிற ஒருவகையூசி.
அடியோட்டி - யுத்தகருவியில் ஒன்று.
அடியோர் - பிறர்க்குக் குற்றேவல் செய்வோர்.
அடிலவோடாகம் - ஒருசெடி.
அடிவயிறு - கீழ்வயிறு.
அடிவரலாறு - காரணம், தொடக்கம், வமிசவரலாறு.
அடிவருடல் - கால்பிடித்தல்.
அடிவரையறை - அடியாறு.
அடிவாரம் - மலைச்சாரல்.
அடிவாறு - அடியாறு.
அடிவானம் - திகாந்தம்.
அடிவிடுதல் - பாண்டங்களின் அடிப்பொருத்துவிடுதல்.
அடிவிரிதல் } அடிவிடுதல்.
அடிவிள்ளல் }
அடிவீழ்ச்சி - வணங்குதல்.
அடிவீழ்தல் - வணக்கம்.
அடிவெண்குருத்து - முருந்து.
அடிவைத்தல் - ஆரம்பித்தல், தலையிடல், நடக்கத் தொடங்கல்.
அடுகலம் - பாகஞ்செய்யும் பாத்திரம்.
அடுகளம - போர்க்களம்.
அடுகனலவன் - சங்காரத் தொழிற் செய்யுங் காலாக்கினி ருத்திரன்.
அடுகிடை - எழும்பாதகிடை, பிரியாதடுத்துக்கொள்ளுதல்.
அடுகுறல் - கொல்லுதல்.
அடுகை - கொல்லுதல், பாகஞ்செய்தல்.
அடுகைமனை - மடைப்பள்ளி.
அடுக்கணி - ஓரலங்காரம், அது சொல்லும்பொருளும் அடுக்கிவருவது.
அடுக்கம் - பக்கமலை, மலைப்பக்கம்.
அடுக்கவிடல் - நெல்லை இரண்டாமுறை குற்றல்.
அடுக்கல் - ஒன்றன்மே லொன்றுவைத்தல், குவித்தல், தொடுத்தல், மலை, வியங்கொண்முற்று.
அடுக்களை - மடைப்பள்ளி.
அடுக்காலாத்தி - அடுக்குத்தீபம்.
அடுக்கானகன்னி - சரியானவள், பவளப்புற்றுப்பாஷாணம்.
அடுக்கியல் - வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவின் உறுப்புக்களுள் ஒன்றாகிய வராகம்.
அடுக்கு - அடுக்கப்பட்டது, அணியம், ஒழுங்கு, சிரேணி, சேர்மானம், பத்தி, பலவின்கூட்டம்.
அடுக்குகை - அடுக்குதல்.
அடுக்குச்செவ்வரத்தை - அடுக்காக மலருள்ள செவ்வரத்தை.
அடுக்குதல் - ஒன்றன்மேலொன்று வைத்தல்.
அடுக்குத்தீபம் - அடுக்குவிளக்கு.
அடுக்குத்தொடர் - ஒரு மொழியே பலமுறை அடுக்கிவருவது, அஃது அசைநிலையினும், பொருணிலையினும் இசைநிறையினும், இரண்டு முதல் நான்களவும் அடுக்கிவரும் (உ-ம்) அன்றேயன்றே அசைநிலை, தீதீதீ பொருணிலை, வருகவருகவருகவருக இசைநிறை.
அடுக்குப்பண்ணல் - ஆயத்தஞ்செய்தல்.
அடுக்குப்பார்த்தல் - ஒத்திக்கை பார்த்தல்.
அடுக்குமல்லிகை - ஒருமல்லிகை.
அடுக்குமுள்ளி - ஒருபூண்டு, முள்ளி.
அடுக்கூமத்தை - ஒருவகையூமத்தை.
அடுங்குன்றம் - யானை.
அடுசிலைக்காரம் - செந்நாயுருவி.
அடுதல் - உண்டுபண்ணுதல், கொல்லல், சமைத்தல், மேற்கொள்ளல்.
அடுத்த - சரியான, நெருங்கின.
அடுத்தல் - கிட்டல், சம்பவித்தல், சார்தல், சேர்த்தல்.
அடுத்தார் - சேர்ந்தார்.
அடுத்தி - வட்டி, வாசி.
அடுத்து - மெனமேல்.
அடுத்துவரல் - அடிக்கடிவருதல், நெருங்கிவருதல்.
அடுநை - கொல்வாய் என்னு முன்னிலை வினை.
அடுப்பங்கரை - அடுப்பின்பக்கம்.
அடுப்பு - அச்சம, சேர்க்கை, தீவாய்த்தானம், பரணிநாள்.
அடும்பு - அடப்பங்கொடி.
அடுவல் - வரகும் நெல்லுங் கலப்பு.

அடை - அடுத்தல், அடைகஷாயம், அடைகிடத்தல், அடையென்னேவல், அப்பவருக்கம், இலை, உவமை, கனம், கொறுவை, சேரென்னேவல், தோசை, நிலவிறை, மூளை, வினைமுற்று.

அடைகட்டி - அடைமண்.

அடைகலம் - சேமக்கலம்.

அடைகல் - கம்மப்பட்டடை, மதகடைக்குங்கல்,

அடைகாத்தல் - அடைகிடத்தல்.

அடைகாய் - ஊறுகாய், வெற்றிலைப்பாக்கு.

அடைகிடத்தல் - குஞ்சு பிறப்பிக்கமுட்டையைக்காத்தல், நீங்காதிருத்தல்.

அடைகுதல் - அடைதல்.

அடைகுளம் - வாய்க்காலில்லாக்குளம்.

அடைகுறடு - கம்மப்பட்டடை.

அடைகை - நெருங்குகை, பெறுகை.

அடைகொடுத்தல் - நிலவிளைவில் ஒரு பங்கை அரசனுக்குக்கொடுத்தல்.

அடைகொளி - அடைமொழியைக் கொள்ளுதலுடையது, விசேடியம்.

அடைகோட்டை - வெளிப்போகப் பெறாத தடையையுடைய கோட்டை.

அடைகோழி - அவயக்கோழி.

அடைக்கத்து - அடைகிடக்குங் கோழியிடுஞ்சத்தம்.

அடைக்கலக்குருவி - ஊர்க்குருவி.

அடைக்கலங்காத்தல் - அடைக்கலப்பொருளைக் காத்தல், அடைக்கலம் புகுந்தவனைக் காத்தல்.

அடைக்கலங்குருவி - ஊர்க்குருவி.

அடைக்கலப்பொருள் - அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருள்.

அடைக்கலம் - அடைக்கலப்பொருள், அபயம், சரண்புகல், புகலிடம்.

அடைக்கலம்புகுதல் - சரண்புகுதல்.

அடைக்கலாங்குருவி - ஊர்க்குருவி.

அடைக்காய் - தாம்பூலம், வெற்றிலை, பாக்கு.

அடைசல் - அடைசுதல், நெருக்கம்.

அடைசீலை - காரச்சீலை, பாழ்ச்சீலை.

அடைசுதல் - ஒதுக்குதல், கதுப்புக்குள் வைத்துக்கொள்ளுதல், செருகுதல், நெருக்குதல்; நெருங்குதல்.

அடைசுபலகை - செருகி வெளியடைக்கும் பலகை.

அடைசுவலை - ஒருவித வலை.

அடைசொல் - அடைமொழி, விசேடணமொழி.

அடைச்சல் - பொத்துதல்.

அடைச்சி - உடுத்து.

அடைச்சீட்டு - கிஸ்திரசீது.

அடைச்சுதல் - மலர்சூட்டல்.

அடைதல் - அடங்குதல், ஒதுங்குதல், கூடுதல், சேருதல், பெறுதல்.

அடைதூண் - கடைதறி.

அடைத்தது - இட்டகட்டளை.

அடைத்தல் - காப்புச்செய்தல், சேர்த்தல், தடுத்தல், பூட்டல், மழைவிடாது பெய்தல், மறியற் படுத்தல், வெளியைமறைத்தல், வேலியடைத்தல்.

அடைந்தார் - அடைக்கலம் புகுந்தோர், மித்திரர்.

அடைந்தோர் - உறவோர்.

அடைப்பம் - அம்பட்ட ஞயுதவுறை, சாமான்பை, வெற்றிலைப்பை.

அடைப்பன் - ஒருவியாதி, மாடுகளுக்குத் தொண்டையில் உண்டாவது.

அடைப்பு - அடைக்கப்பட்டது, அடைத்தற்றன்மை, அடைத்தறொழில், கதவு, சாளிமுதலியவற்றின் அடைப்பு, வேலி.

அடைப்பை - வெற்றிலைப்பை.

அடைப்பைக்காரன் - பிளவு சுருளெடுத்துக்கொடுப்போன்.

அடைமண் - கலப்பையி லடைந்தமண்.

அடைமழை - விடாமழை.

அடைமாங்காய் - மாங்காயூறுகாய்.

அடைமானம் - உவமை, ஈடு, பிரதி, வழிவகை.

அடைமொழி - விசேடணமொழி.

அடைய - எல்லாம் சேர.

அடையடிமை - தனம் வாங்குதன்முதலியவற்றால் அடையப்பட்ட அடிமை.

அடையடுத்தவாகுபெயர் - ஒருபொருளதன் புறத்துப் பண்பாய் நின்ற அடையோடுகூடி ஆகுபெயராய் வழங்குவது (உ-ம்) புன்கயிலை நட்டான்.

அடையலர்
அடையலவர்
அடையலார் } பகைவர்.

அடையல் - அடைகுதல், அடைந்து வருவது, எல்லாம், வியங்கோண் முற்று.

அடையாதவர்
அடையாதார்
அடையார் } பகைவர்.

அடையாளம் - துறிகுறி, குறிப்பு, சின்னம், மாதிரி.

அடைவிகச்சோலம் - கஸ்தூரிமஞ்சள்.

அடைவு - ஈடு, உபமானம், எல்லாம், முறை, விதம்.

அட்சகன்னம் - நேர் முக்கோணத்தி னெடுவரி.

அட்சகூலை - ஒருவியாதி.

அட்சதை - மங்கலவரிசி, பொரியரிசி.

அட்சபாகை - நேர் முக்கோணத்தி னளவு.

அட்சபாடனம் - திரைப்படல்.

அட்சபாதன் - கௌதமரிஷி, நியாய வழியோன்.

அட்சமணி - அக்கமணி, உருத்திராக்ஷம்.

அட்சமாலாதரன் - அட்சமாலை தரித்த வன்.

அட்சமாலிகை - இருக்குவேத உபநிட தங்களு ளொன்று, உருத்திராக்ஷ மாலை.

அட்சமாலை - அக்கமாலை.

அட்சம் - அக்கம், உத்திராக்ஷம், கண், தான்றிக்காய், வெங்காயம்.

அட்சய - அறுபதுவருடத்தில் கடைசி வருடம்.

அட்சயதிருதியா - வைகாசி மாதத்துச் சுக்கிலபக்கத்தில் வரும் மூன்றாந் திதி.

அட்சயதூணி - அருச்சுன னம்புக்கூடு.

அட்சயபாத்திரம் - பாண்டவர்க்குச் சூரியன்கொடுத்த பாத்திரம், வைண வர்கள் ஐயமேற்கும் பாத்திரம்.

அட்சயம் - கேடின்மை.

அட்சயா - சாந்திரமாதத்தில் ஞாயிற்று க்கிழமையில் அல்லது திங்கட்கிழ மையில் வரும் ஏழாம்நாள்.

அட்சரகணிதம் - பீசகணிதம்.

அட்சரசஞ்சன்
அட்சரசணன் } எழுத்துக்காரன்.

அட்சரசனனி - இலேகனி.

அட்சரசனன்
அட்சரசீவகன்
அட்சரசீவி } எழுத்துக்காரன்.

அட்சரசுதகம் - அக்கரசுதகம்.

அட்சரசுத்தி - உச்சரிப்புத்திருத்தம், எழுத்துத் திருத்தம்.

அட்சரச்சுதகம் - அக்கரச்சுதகம்.

அட்சரதாபனம் - மந்திர எழுத்துக்களை யந்திரத்திலடைத்தல்.

அட்சரதூலிகை - இலேகனி.

அட்சரபாவனை - மகேச்சுரியபாவனை.

அட்சரப்புல் - பீனசப்புல்.

அட்சரமுகன் - மாணுக்கன்.

அட்சரம் - எழுத்து, ஒருநோய், தர்மம், தவம், பிரகிருதி, பிரணவம், முத்தி, வேதப்பொருள்.

அட்சரலட்சணம் - அக்கர விலக்கணம்.

அட்சரவினியாசம் - எழுத்து, எழுதப் பட்ட பத்திரிகை, வேதம்.

அட்சரன் - அக்கரன், அந்தரியாமி.

அட்சராத்துமகசத்தம் - எழுத்தாலாகிய ஒலி.

அட்சராரம்பம் - அக்காரம்பம்.

அட்சன் - அக்கன்.

அட்சி - கண், சேரென்னுமளவை.

அட்சியம் - யசுர்வேத உபநிடதங்களுள் ஒன்று.

அட்சீபம் - ஒருவகைமாமரம், முருங்கை மரம்.

அட்சௌகிணி - அக்குரோணி.

அட்டகசம் - அட்டகுல யானை, ஆடா தோடை.

அட்டகணம் - செய்யுட்குரிய எண் கணம். அவை ஆகாயம், இயமானன், சூரியன், தீ, நிலம், நீர், மதி, வாயு, இவற்றுள் முன்னைய நான்கும் நீக்கி மற்றைய நன்று.

அட்டகணிதம் - எண்கணிதம். அவை கனமூலம், கனம், குணம், சங்கலி தம், பாகாரம், வருக்கமூலம், வருக் கம், விபகலிதம் என்பன.

அட்டகந்தம் - எண்வகை வாசனைப் பொருள். அவை சந்தனம், அகரு, கஸ்தூரி, கருப்பூரம், பச்சிலை, குங்குமம், இலாமிச்சை, கோட்டம் என்பன.

அட்டகம் - அயமலாதி எட்டின் கூட்டம், வசம்பு, வடமொழியினோர் பிரபந்தம்.

அட்டகருமம் - ஆகருடணம், உச்சாடனம், தம்பனம், பேதனம், மாரணம், மோகனம், வசியம், வித்துவேடணமாகிய எண்வித்தை.

அட்டகர்ணன் - பிரமா.

அட்டகவர்க்கம் - அட்டவருக்கம்.

அட்டகவுடலம் - புரியட்டகம்.

அட்டகாசம் - ஒரு சிவஸ்தலம், பெருநகை.

அட்டகாசன் - இருபத்தெண்கலியுகத்தொன்றில் மறைவிரிப்போன்.

அட்டகாசி - சிவன், பெருநகைசெய்வோன்.

அட்டகிரி - அட்டகுலமலை. அவை இமயம், எமகூடம், கந்தமாதனம், கைலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தம் என்பன.

அட்டகீடம் - எட்டுவகைக் கீடமாகிய பிராணிகள். அவை-ஓணன், தவளை, அடவியீ, வீட்டுப்பல்லி, காட்டுமசகம், மக்ஷிகா, மலைப்பீலிகை, சிலந்தி என்பன.

அட்டகுட்டம் - எண்வகைக் குட்டநோய்கள். அவை கருங்குட்டம், இரணகுட்டம், வெண்குட்டம், செங்குட்டம், கிருமிக்குட்டம், நீர்க்குட்டம், விரல்குறை குட்டம், சொறிகுட்டம் என்பன.

அட்டகுணச்செல்வம் - அணிமாதி குணங்களையுடைய அட்ட ஐசுவரியங்கள்.

அட்டகுணபூதன் - அருகன்.

அட்டகுணம் - கடவுட்குரிய எண்குணம். அவை இயல்பாகவே பாசங்களினீங்குதல், இயற்கையுணர்வினனாதல், தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, முற்றுமுணர்தல், வரம்பிலின்பமுடைமை என பன,

அட்டகுரவர் - எட்டுவகையாசிரியர்கள். அவர்கள் போதககுரு, வேதககுரு, நிகிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விகிதகுரு என்பவர்கள். இவர்களுள் போதககுரு சாத்திரார்த்தம் போதிப்பவன். வேதககுரு தத்துவதரிசகன், நிகிதகுரு வசியாகருஷணாதிகளால் இகலோகத்தில் சுகமும் பரலோகத்தில் துக்கமுங் கொடுப்பவன், காமியகுரு சுகர்மோபதேசத்தால் இகபரங்களில் சுகமெய்தப்பண்ணுபவன். சூசககுரு விவேகமுகத்தால் சமாதி சட்குணங்களையும் ஒருங்கேவரப் பண்ணுபவன். வாசககுரு விஷயங்கள் பொய்யென வெறுத்து ஆன்மவிருப்பமுண்டாகச் செய்பவன். காரககுரு சிவசீவர் ஐக்கிய ஞானத்தை வரச்செய்பவன். விகிதகுரு சந்தேகம் நீங்கி மோட்சமடையச்செய்பவன்.

அட்டகுலபருவதம் - அட்டகிரி.

அட்டகுலயானை - அட்டதிக்கயம்.

அட்டகுலவெற்பு - அட்டகிரி.

அட்டகுற்றம் - மலசகிதர்க்குரிய குணமெட்டு. அவை - அந்தராயம், ஆயு, கோத்திரம், ஞானவரணீயம், தரிசனாவரணீயம், நாமம், மோகநீயம், வேதநீயம் என்பன.

அட்டகுன்மம் - எண்வகைக் குன்மநோய். அவை-எரி, சத்தி, சன்னி, சிலேத்துமம், சூலை, பித்தம், வலி, வாதம் எனப்படும்.

அட்டகை - அட்டமி, பிதுர்வணக்கம், யாகமிருபத்தொன்றினொன்று.

அட்டகைச்சிரார்த்தம் - பிதிரர்களையுபாசித்தற்குரியனவாய் மார்கழி, தை, மாசி என்னும் மாதங்களின் அபரபக்கங்களில் வரும் சத்தமி, அஷ்டமி, நவமி என்னும் மூன்று திதிகளில் செய்யப்படும் சிரார்த்தம்.

அட்டகோணம் - எட்டுக்கோணம்.

அட்டங்கால் - அட்டணைக்கால்.

அட்டசத்திகள் - ஆரணி, ஜனனி, உரோதயித்திரி என்னும் மூன்று பரிக்கிரகசத்திகளும், ஈசானம், தற்புருடம், வாமம், அகோரம், சத்தியோசாதம் என்னும் பஞ்சசத்திகளுமாகிய அட்டசத்திகள். சயை, விசயை, சயந்தி, அபராசிதை, சித்தை, இரத்தை, அலம்புசை, உற்பலை என்னும் எட்டுச் சத்திகள். சிவனுடைய கிரியாசத்தியினது உள்ளுருவும் பிறவுருவுமாகிய உருவுகளெட்டு. அவை ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி, ஆரணி, உரோதயித்திரி, ஜனனி என்னும் எட்டுச் சத்திகள். வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பெலவிகரணி, பெலப்பிரதமனி, சர்வபூததமனி என்னும் எட்டுச்சத்திகள்.

அட்டசித்தி - யோகசித்தர்க்குரிய எண்சித்தி. அவை - அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் எனப்படும்.

அட்டசிரவணன் - பிரமன்.

அட்டசுபம்-எண்வகைமங்கலம். அவை இணைக்கயல், கண்ணுடி, சாமரம், கொடி, தோட்டி, நிறைகுடம், முரசு, விளக்கு என்பன.

அட்டணை - குறுக்கே.

அட்டணைக்கால் - மடித்தகக்கால்.

அட்டதந்திரவாதம் - வாயுவினுல் வரும் ஒருவகைரோகம்.

அட்டதயாவிருத்தி-பிறரையநீர்த்தல், தீமைக்கஞ்சல், பிறர் துயர்க்கிரங்கல், நன்மைகடைப்பிடித்தல், பிறர் கருமத்திற்குடன்படல், பிறர் கருமமுடிக்கவிரைதல், பிறர்க்குப் பொருள் வரவை யுவத்தல், பிறர் செல்வம் பொறுத்தல் என்பனவாம்.

அட்டதருமம் - எண்வகைத் தருமம்: அவை யாகம், வேதமோதுதல், தானம், தபம், சத்தியம், திடம், பொறுமை, லோபமின்மை என்பன.

அட்டதளசக்கரம் - எண்வகை யிதழுடைய சக்கரம். அவை சோத்திரத் துவாரம் இரண்டு, நேத்திரத் துவாரம் இரண்டு, ஆக்கிராணத்துவாரம் இரண்டு, துவக்குத் துவாரம் ஒன்று, சிங்குவைத்துவாரம் ஒன்றுஎன்பன.

அட்டதளம் - எட்டிதழ்த்தாமரை.

அட்டதனம் - எட்டுப் பிரயோசனம். அவை குணம், சம்பத்து, தனம், நல்ல குலம், ரூபம், வித்தை, விவேகம், வயது என்பன.

அட்டதா - எட்டுப்பிரிவு, எண்மடங்கு.

அட்டதாது-எண்வகைலோகம். அவை பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா. வங்கம், துத்தநாகம் எனப்படும்.

அட்டதானபரீட்சை - வைத்தியரறி குறியெட்டு. அவை நாடி, முகம், மலம், அமுரி, கண், நா, சரீரம், தொனி என்பனவாம்.

அட்டதிக்கயம் - அட்டகுலயானை: அவை கிழக்காதிமுறையே ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் எனப்படும்.

அட்டதிக்கரிணி- அட்டதிக்கயங்களின் பிடிகள். அவை அப்பிரமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரகரிணி, சுப்பிரதந்தி, அங்கனை, அஞ்சனவதி என்பன. இவை ஐராவத முதலியவற்றிற்கு முறையே பெண்களாம்.

அட்டதிக்காளர்- எண்டிசைகாப்பாளர்.

அட்டதிக்கு - எட்டுத்திசை. அவை கிழக்கு, தென்கீழ், தெற்கு, தென்மேல், மேற்கு, வடமேல், வடக்கு, வடகீழ் என்பன.

அட்டதிக்குப்பாலகர் - திக்குக்காவலர். அவர் கிழக்காதி முறையே இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு. குபேரன், ஈசானன் எனப்படுவர்.

அட்டதிசம் - எருக்கு.

அட்டதிசையானை - அட்டதிக்கயம்.

அட்டதேறல்-காய்ச்சியமது, சாராயம்.

அட்டநாகபந்தம் - சித்திரகவிவகைகளுளொன்று. அது நான்காமெழுத்து நாற்பத்தோராமெழுத்தாகவும், ஆறுமெழுத்து நாற்பத்தைந்தா மெழுத்தாகவும், எட்டாமெழுத்து இருபதாமெழுத்தாகவும், பன்னிரண்டாமெழுத்துப் பதினெட்டா மெழுத்தாக

வும், இருபத்திரண்டாமெழுத்து நாற்பத்தேழாமெழுத்தாகவும், இருபத்து நான்கா மெழுத்து முப்பத்தொன்பதாமெழுத்தாகவும், முப்பத்துமூன்றாமெழுத் தைம்பத்தோரா மெழுத்தாகவும், முப்பத்தேழா மெழுத்து நாற்பத்தொன்பதா மெழுத்தாகவும் வர ஒருசெய்யுட் செய்து கிரமப்படி எட்டுப் பாம்பு வரைந்து அதன்கண் அடைத்துக்கொள்ளப்படுவது.

அட்டநாகம்-எண்வகை நாகம்: அவை அனந்தன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்கன், பதுமன், மகாபதுமன், வாசுகி என்பனவாம்.

அட்டநிக்கிரகங்கள்-தர்க்கநூலிற் கூறிய எட்டுத்தோல்வித்தானங்கள். அவை நியூனம், அதிகம், அவசித்தாந்தம், அசித்தம், விருத்தம், அனேகாந்திகம், பிரகரண சமம், காலாத்தியாபதிட்டம் என்பன.

அட்டபந்தனம் - திக்குக்கட்டு, கருங்குங்கிலியம் வெள்ளைக்குங்கிலியம், சுக்காங்கல், தேன் மெழுகு, செம்பஞ்சு, மைசாட்சி, கொம்பரக்கு, காவிக்கல், வெண்ணெய், இவ்வெட்டையும் இடைப்படிசேர்த்து முறைப்படி அரைத்துச் செய்வது.

அட்டபரிசம் - எண்வகையூறு: அவை ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல் என்பன.

அட்டபாதம் - எண்கார்புள் சிலந்திப் [பூச்சி.

அட்டபாலகர் - அட்டதிக்குப்பாலகர்.

அட்டபாலகர்குறி - திக்குப்பாலகர் அடையாளம். அவை இந்திராதி முறையே இடி, புகை, சீயம், ஞாளி, இடபம், கழுதை, யானை, காகம் என்பன.

அட்டபுட்பம் - எட்டுவகை பூக்கள். அவை புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, நீலோற்பலம், அலரி, செந்தாமரை என்பன. பூப்போல விரும்பத்தக்க எட்டுக்குணங்கள் - அவை கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன,

அட்டபுயம் - காஞ்சிபுரத்திலுள்ள விட்டுணுவாலயங்கள் எட்டனுள் ஒன்று. அது விட்டுணு எட்டுப் புயங்களோடிருந்திலக்குமியை விவாகஞ்செய்த கோலத்தைக்காட்டுவது.

அட்டபைரவர் - அட்டவைரவர்.

அட்டபோகம் - எண்போகம். அவை அணிகலன், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசனம் என்பனவாம்.

அட்டப்பிரகரணம் - எட்டும்பிரகரணங்கள். அவை தத்துவப்பிரகாசிகை, தத்துவ சங்கிரகம், தத்துவத் திரய நிருணயம், போககாரிகை, மோக்ஷகாரிகை, நாதகாரிகை, பரமோக்ஷநிராசகாரிகை, இரத்தினத்திரயம் என்பனவாம்.

அட்டப்பிரணவம் - எட்டுப் பிரணவம்.

அட்டப்பிரமாணம் - அளவையெட்டு. அவை அனுமானம், அபாவம், அருத்தாபத்தி, ஆகமம், உவமானம், ஐதிகம், சம்பவம், பிரத்தியட்சம்என்பன.

அட்டமக - எட்டாவது.

அட்டமகாலீகன் - வானப்பிரஸ்தருள் ஒருவன். இவன் மூன்றுநா ளுணவின்றி யிருந்து நான்காநாட் பிற்பகலிலுண்போன்.

அட்டமங்கலம் - அட்டசுபம், ஒரு பிரபந்தம்.

அட்டமச்சனி - உதயலக்கினத்திற்கு எட்டாமிடத்தில் நிற்குஞ் சனி.

அட்டமணம்-எண்வகைமணம். அவை ஆசுரம், ஆரிடம், இராக்கதம், காந்தருவம், தெய்வம், பிரசாபத்தியம், பிரமம், பைசாசம் எனப்படும்.

அட்டமதம் - குலம், ரூபம், யௌவனம், வித்தை, தனம், பிரபுத்துவம், சகாயம், சகசம் என்னும் எட்டினலும் உண்டாகுஞ் செருக்கு.

அட்டமம் - எட்டாவது.

அட்டமாசித்தி - எட்டுவிதசித்தி.

அட்டமாநாகம் - அட்டநாகம்.

அட்டமாந்தம் - கணமாந்தம், சுழிமாந்தம், செரியாமாந்தம், பெருமாந்தம், போர்மாந்தம், மலடிமாந்தம், வலிமாந்தம், வாதமாந்தம் என எண்வகைப்படும்,

அட்டமி - எட்டாந்திதி.
அட்டமிகை - அரைப்பலம்.
அட்டமூர்த்தம் - ஈசுரன் வடிவம் எட்டு: அவை இயமானன், காற்று, சந்திரன், சூரியன், தீ, நிலம், நீர், வெளி எனப்படும்.
அட்டமூர்த்தி - சிவபெருமான்.
அட்டமூர்த்திகள் - எட்டுமூர்த்திகள்: அவர்கள் பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், உக்கிரன், மாதேவன், உருத்திரன் என்பவர்கள்.
அட்டமூர்த்திதரன் - பிருதிவி முதலிய அஷ்டமூர்த்தங்களுக்கும் அதிபர், சிவன்.
அட்டமூலம் - எட்டுவகை வேர்கள்: அவை அரத்தை, கண்டுபாரங்கி, காஞ்சொறிவேர், கோரைக்கிழங்கு, சித்திரமூலம், சுக்கு, செவ்வியம், நன்னாரிவேர் என்பன.
அட்டமெய்ப்பரிசம் - அட்டபரிசம்.
அட்டம், அஷ்டம் - அண்ணம், அருகிடம், எட்டு, சாதிக்காய், மேல் வீடு, வினைமுற்று, நேர், ராசமனை.
அட்டம்பாரித்தல் - பக்கலில் விசாலித்தல்.
அட்டயோகம் - அஷ்டாங்கயோகம்.
அட்டயோசம் - அரைபொடி.
அட்டரக்கு - உருகியவரக்கு.
அட்டலக்குமி - அஷ்டலட்சுமி: தநலட்சுமி, தானிய லட்சுமி, தைரியலட்சுமி, சௌரிய லட்சுமி, வித்தியாலட்சுமி, விசயலட்சுமி, கீர்த்திலட்சுமி, இராச்சிய லட்சுமி என்னும் எட்டு லட்சுமிகள்.
அட்டலட்சணம் - அட்டகுணம்.
அட்டலோகபற்பம் - பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம் என்னும் எட்டு லோகங்களாலுஞ் செய்யப்பட்ட ஒரு மருந்து.
அட்டலோகம் - அட்டதாது.
அட்டல் - அழித்தல், அள்ளுதல், கொல்லல், நெருப்பிற் காய்ச்சுதல்.
அட்டவசுக்கள் - எண்வகை வசுக்கள். அவர் அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் என்பவராம்.
அட்டவணிக்குணம் - வணிகர் குணமெட்டு. அவை இடனறிந்தொழுகல், இறுவஞ்சாமை, ஈட்டல், உறுவதுதெரிதல், தனிமையாற்றல், பகுத்தல், பொழுதொடுபுணர்தல், முனிவிலனாதல் என்பன.
அட்டவணை - சேர்க்கப்பட்டது, சொல்லப்பட்ட காரியத்தினொழுங்கு, வரிசைக்குறிப்பு.
அட்டவருக்கம், அட்டவர்க்கம் - இந்துப்பு, ஓமம், கருஞ்சீரகம், சீரகம், சுக்கு, திப்பிலி, பெருங்காயம், மிளகு கூடிய எட்டு மருந்துச் சரக்குகள்.
அட்டவன் - அழித்தவன்.
அட்டவாதம் - எட்டுவகை வாதங்கள். அவை சிவசமவாதம், ஐக்கியவாதம், சங்கராந்தவாதம், பிரவாகேஸ்வரவாதம், கபாலிகவாதம், அதிகாரவாதம், பேதாபேதவாதம், அநேகேச்சுரவாதம் என்பன.
அட்டவிகாரம் - மனிதர்க்குரிய எட்டு விகாரம். அவை காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், அசூயை, இடும்பை என்பன.
அட்டவிஞ்சதி - இருபத்தெட்டு.
அட்டவிஞ்சதியோகாசாரியர் - அவர் சுவேதர், சதாசிவர், தமனர், சகோத்திரர், கங்கர், லோகாட்சர், ஜனிஷர், ததித்தியவந்தர், விஷயர், உக்கிரர், அத்திரி, சுபாலகர், கௌதமர், வேதசிரர், கோகர்ணர், குகாவாசர், சிகண்டி, சடமாலி, அட்டகாசர், தாருகர், லாங்குலி, மகாகாயர், சூலி, டிண்டி, முண்டி, சயிஷ்ணு, சோமசர்மர், இலகுளீசுவரர் என்னும் இருபத்தெட்டு யோகாசாரியர்.
அட்டவிததாடனம் - எட்டுவகைத் தாடனம். அவை சங்கோசம், பக்கத்தம், பிரசுரிதம், முட்டி, கீலம், கர்த்தரிகை, சந்தங்கிசம், வித்தை என்பன.
அட்டவித்தியேசுரர் - எட்டுவகை வித்தியேசுரராகிய விஞ்ஞானகலர். அவர் அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தர், ஸ்ரீகண்டர், சிகண்டி என்பவர்.

அட்டவூறு - எண்வகை யூறு. அவை சருச்சரை, சீர்மை, தண்மை, திண்மை, நொய்மை, மென்மை, வண்மை, வெம்மை என்பன.

அட்டவெற்றி - எண்வகை வெற்றி, அவை பகைவரைக் கவர்தல், பகைவர் கவர்நிரை மீட்டல், பகைமேற்செல்லல், பகைமுன்னெதிரூன்றல், தன்னரண்காத்தல், பகைவரரண் வளைத்தல், பொருதல், போர்வெல்லல் என்பனவாம். இவற்றிற்கு முறையே மாலை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை எனப்படும்.

அட்டவைசுவரியம் - எண்வகைச்செல்வம். அவை அடிமை, இராசாஙகம், சுற்றம், நெல், பொன், மக்கள், மணி, வாகனம் என்பன.

அட்டவைரவர் - எட்டு வைரவர்கள். அவர் மகாவைரவர், உக்கிரவைரவர், சண்டாளவைரவர், குரோதவைரவர், உன்மத்தவைரவர், கபாலவைரவர், பீஷ்ணவைரவர், சாகரவைரவர். இவர் சிவலோகத்திற் சோதிமயமான கோட்டையில் எட்டுவாசல்களிலுங் காவல்செய்துகொண்டிருப்பவர்.

அட்டனம் - சக்கராயுதம்.

அட்டாங்கசீலம் - பௌத்தமதத்தின் நல்லொழுக்கமாகிய சீலத்தின் எட்டுறுப்புக்கள். அவை கொல்லாமை, திருடாமை, வியபிசரியாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை என்னும் பஞ்சசீலத்துடன் இல்லறத்தார்களில் நிட்டாபரர்களைப் போகியாமை, தரையிற்படுத்தல், பாய்மேற்படுத்தல் என்பன.

அட்டாங்கநமஸ்காரம்-மோவாய், செவிகள் இரண்டு, தலை, புயங்கள் இரண்டு, கைகள் இரண்டு என்னும் எட்டுறுப்பும் நிலத்திலே தோய நமஸ்கரித்தல்.

அட்டாங்கமார்க்கம் - பழுதிலாவாழ்க்கையெனப்படும் எட்டங்கங்களை யுடைய துக்கநிவாரண மார்க்கம் அவை நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல் வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு என்பன.

அட்டாங்கயோகம் - யோகமுறை எட்டு. அவை ஆதனம், இயமம், சமாதி, தாரணை, தியானம், நியமம், பிரத்தியாகாரம், பிராணயாமம் என்பன.

அட்டாங்குலசிகாச்சேதம் - குடுமியை எட்டங்குலம்விட்டறுத்தல்.

அட்டாட்சரம் - விட்டுணுமந்திரம்.

அட்டாட்சரி - அட்டாட்சரம்.

அட்டாதசகணம் - பதினெண் கணங்கள். அக்கணங்களாவார் தேவர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியர் என்பவர்களாம்.

அட்டாதசகுணம் - யாக்கைக் குறு பதினெண்குற்றம். அவை அதிசயம், இன்பம், உவகை, உறக்கம், கேதம், கையறவு, நறை, நினைப்பு, நீர்வேட்டல், நோய், பசி, பயம், பிறப்பு, மதம், மரணம், வியர்த்தல், வெகுளி, வேண்டல் என்பன.

அட்டாதசதருமசாத்திரம் - தரும நூல் பதினெட்டு. அவை மனு, அத்திரி, ஔரிதம், விட்டுணு, யாஞ்ஞவற்கியம், உசனம், ஆங்கிரசம், இயமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்தியாயனம், பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், தர்க்கம், கௌதமம், சாதான்மம், வசிட்டம் என்பனவாம்.

அட்டாதசபாடை - பதினெட்டுப் பாஷை: அவை அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திராவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம் என்பன.

அட்டாதசபுராணம்-பதினெட்டுப் புராணம். அவை சைவம், பவிடியம், மார்க்கண்டம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மற்சம், கூர்மம், பிரமாண்டம், பிரமம், பதுமம், காருடம், நாரதீயம், விண்டு, பாகவதம், ஆக்கிநேயம், பிரமகைவர்த்தம் என்பன.

அட்டாதசமூலம் - பதினெண் வகை வேர். அவை எருக்கு, கண்டங்கத்திரி, கரந்தை, கறிமுள்ளி, குமிழ், கொடிவேலி, சங்கங்குப்பி, சிற்றாமல்லி, தழுதாழை, தூதுளை, நன்னாரி, நொச்சி, பாதிரி, பேராமல்லி, மாவிலிங்கம், முருங்கை, வில்வம், வேர்க்கொம்பு என்பன.

அட்டாதசம் - பதினெட்டு.

அட்டாதசவித்தை - பதினெண்வித்தைகள். அவை ஆறு வேதாங்கங்கள், நான்குவேதங்கள், மீமாஞ்சை, நியாயம், ஸ்மிருதி, புராணம் என்னும் பதினான்கும் ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அர்த்தவேதம் என்பனவுமாம்.

அட்டாதசவியவகாரபதம் - வழக்குக்குரியபதினெண்விடயங்கள்: அவை கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், நல்கியதை நல்காமை, ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையானல்லான் விற்றல், விற்றுக்கொடாமை, கொண்டுள்ள மொப்பாமை, கட்டுப்பாடு கடத்தல், நிலவழக்கு, மாதராடவர் தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூதென்பனவுமொழிந்த பலவுமாம்.

அட்டாதசவிவாதபதம் - அட்டாதசவியவகாரபதம்.

அட்டாதசோபபுராணம் - பதினெட்டு உபபுராணம். அவை நாரசிங்கம், சனற்குமாரம், நாரதீயம், சிவதன்மம், துருவாசம், நந்திகேச்சுரம், அவுசனம், காளிகம், வாருணம், சாம்பேசம், பரா்சரம், பார்க்கவம், காபிலம், மாநவம், வாசிட்டலிங்கம், சவுரம், மாரீசம், பிரமாண்டம் என்பன.

அட்டாதுட்டம் - அதிகதீங்கு.

அட்டாதுட்டி - அதிகதுட்டத்தனம்.

அட்டாபதபத்திரம், பொற்றகடு.

அட்டாபதம் - எண்காற்புள், கதவின்றாள், பொன், வன்னப்புடவை.

அட்டாலகம் - கோபுரம், மேல்வீடு.

அட்டாலம் - அட்டாலை, மேன்மாடம்.

அட்டாலிகாகாரன் - கற்சிற்பன். சிற்பி.

அட்டாலிகை - அரசர்மனை, மேல்வீடு.

அட்டாலை - அட்டாலை, மன்னர்மனை, மேல்மாளிகை.

அட்டாலைமண்டபம் - மேல் வீடாகக் கட்டப்பட்ட மண்டபம்.

அட்டாலைமரம் - ஒருமரம்.

அட்டாவதானம் - ஒரேசமயத்தில் எட்டுக்காரியத்தைச் சிந்தித்தல்.

அட்டாளகம், அட்டாளம் - மேல்மாடி

அட்டாளிகை - மேன்மாடம்.

அட்டாளை - ஒருமரம், சிறும்பி.

அட்டி - அதிமதுரம், இட்டு, இருப்பை, எட்டி, செஞ்சந்தனம், தடை, பருப்பு, மிகவிட்டு.

அட்டிகம் - சாதிக்காய்.

அட்டிகை - உட்கட்டு, ஓராபரணம், ஒருவகைக் கழுத்தணி.

அட்டிமதுரம் - அதிமதுரம்.

அட்டிமை - ஓமம், சீரகம்.

அட்டியல் - அட்டிகை.

அட்டில் - அடுக்களை.

அட்டினம் - சீரகம்.

அட்டு - அணை, சமைக்கப்பட்டது, செய்தது, பஞட்டு, மதிப்பு, வியங்கோள் விகுதி, வினையெச்சம்.

அட்டுதல் - வார்த்தல்.

அட்டுப்பு - காய்ச்சியவுப்பு.

அட்டை - செருப்பினடி, நீரில்வாழும் ஒரு செந்து, செவ்வட்டை, நீரட்டை, மரவட்டை என மூன்றுவிதம், வினைமுற்று.

அட்டோலகம் - ஆடம்பரம், ஒட்டோலகம்.

அட்டோலிங்கம் - ஆடம்பரம், ஆரவாரம், மகிழ்ச்சி.

அணகதாரம் - சுத்தநிஷாதம்.

அணங்கம். இலட்சணம்.

அணங்கயர்தல் - விழாக்கொண்டாடுதல்.

அணங்கல் - அணங்குதல்.

அணங்காடல், அணங்காடுதல் - வெறியாடுதல்.

அணங்காட்டு - சன்னதம், வெறியாட்டு.

அணங்கார் - பெண்கள்.

அணங்கிய - அழகிய, பின்னிவளர்ந்த.

அணங்கினர் - தேவப்பெண்கள்.

அணங்கு - அச்சம், அணங்கென்னேவல், அழகு, பராசத்தி, ஆசை,

கொலை, தெய்வப்பெண், தெய்வம், தேவர்க்காடுங் கூத்து, நோய்,பெண் மகள், பேய்மகள், ரோகம், வருத்தம், வருந்துந்தெய்வம்.
அணங்குசார்ந்தாள் - படிமத்தாள்.
அணங்குதல் - அஞ்சல், கொல்லுதல், வருந்துதல், விரும்புதல்.
அணங்குதாக்கு - காமநெறியால் உயிர் கொள்ளுந் தெய்வமகள் தீண்டல்.
அணத்தல் - தலையெடுத்தல், மேல் நோக்கிநிற்றல்.
அணந்த - மேனோக்கிநின்று வருந்தின
அணம் } கீழ்வாய்ப்புறம், மேல்வாய்.
அணரி }
அணர்ச்செவி - எடுத்தசெவி.
அணல்-கீழ்வாய்,மிடறு, கழுத்து,தாடி.
அணவல் - கிட்டல், பொருந்தல்.
அணவன் - பொருந்தினவன்.
அணவு - அணவென்னேவல், நடு,பொருந்துதல்.
அணவுதல் - கிட்டல். இணைதல், புணர்ச்சி.
அணுப்பல் - அணுப்புதல்.
அணுப்பி - ஏய்ப்பவள்.
அணுப்பித்து - ஏய்த்து.
அணுப்பு - ஏய்க்கை.
அணுப்புதல் - ஏய்த்தல்.
அணுர் - கழுத்து.
அணுவல் } அணவுதல்.
அளுவுதல் }
அணி - அடுக்கு, அணியென்னேவல், கூட்டம், சம்பாரம், சமீபம், அச்சாணி, அலங்காரம், அழகு, ஆபரணம், எல்லை, ஏர்ச்சீர், ஒழுங்கு, ஓரிலக்கணம், நன்மை, நிரை, படைவகுப்பு, பெருமை, பூமாலை, நுணா.
அணிகம் - ஆபரணச்செப்பு, சிவிகை.
அணிகலச்செப்பு - ஆபரணப்பெட்டி.
அணிகலம் - ஆபரணம், கம்மாளர் கருவி, பணிமுட்டு.
அணிகலன் - ஆபரணம்.
அணிச்சை - நாகமல்லிகை.
அணிஞ்சில் - அழிஞ்சில், கொடிவேலி, சிற்றுமுட்டி, நொச்சி,முள்ளி.
அணிதல் - அணிந்துநிற்றல், அலங்கரித்தல், படைவகுத்தல், பூணல்.
அணித்து - சமீபித்து.
அணிநுணா - சீத்தா என்னும் மரம்.
அணிந்தம் - கோபுரவாயிலின் மேடை.
அணிந்தவை திருத்தல் - மெய்ப்பாடுகளுள் ஒன்று. அது ஒருபெண் தானணிந்திருக்குங் கடிசூத்திர முதலியன திருத்துதல்.
அணிந்து - அழகுபெற்று, தரித்தென்னும் வினையெச்சம்.
அணிந்துரை - பாயிரம்.
அணிபெறுத்தல் - அலங்காரம் பெறச்செய்தல், புனைதல்.
அணிப்படுத்தல் - அணிப்படுத்துதல், சிங்காரித்தல்.
அணிமா - அட்டசித்தியி னொன்று. அஃது அணுப்போலாதல்.
அணிமுலை - பூசுணைக்கொடி.
அணிமை - சமீபம், நுட்பம்.
அணியம் - கப்பலின்முற்பக்கம், படைவகுப்பு.
அணியல் - அணிதல், ஆயத்தம், தளபாடம், படவின் முன்பக்கம், மாலை.
அணியன் - அணியுடையவன், கிட்டினவன்.
அணியிலக்கணம் - பஞ்ச இலக்கணத்தொன்று.
அணியெண் - முப்பத்தைந்து.
அணிலன் - அட்டவசுக்களில் ஒருவன்
அணில் - அணிற்பிள்ளை, அன்றில்.
அணில்வரியன் - ஒருநிறப்பசு, ஒருவகைப்பட்டு, ஒருவகைப் பலாப்பழம், ஒருவகை வெள்ளரி.
அணில்வாற்றினை - ஒருவகைத்தினை.
அணிவகுத்தல் - படைவகுத்தல்.
அணிவகுப்பு - படைவகுப்பு.
அணிவடம்-மாதர்கழுத்தணியில் ஒன்று.
அணிவியூகம் - படைவகுப்பு.
அணிவிரல் - மோதிரவிரல்.
அணிவு - அணிதல்.
அணிவேர் - வெட்டிவேர், குருவேர்.
அணு-இனம்,உயிர், சிறுமை, நுண்மை, ஒருவகைத்தானியம், சூக்கும சத்திரூபம், சூக்குமசீதகம், பரமாணு.
அணுக - கிட்ட.
அணுகம் - சிறியது.
அணுகலர் - அயலார், பகைவர்.
அணுகல் - கிட்டல்.
அணுகன் - சமர்த்தன்.

அணுகாரணவாதம் - பரமாணுக்க டாமே பிரபஞ்சமாகத்தோன்றி நின்று அழியுமென்று சொல்லுதல்.
அணுகார் - பகைவர்.
அணுகுதல் - அணிகல்.
அணுகுபு - அண்ணிதாகநின்று.
அணுக்கத்தொண்டர் - சமீபமாயுள்ள சீடர்.
அணுக்கம் - சந்தனம்.
அணுக்கர் - சிநேகர்.
அணுக்கன் - அந்தரங்கன், சமீபத்தன், சினேகிதன்.
அணுக்கன்றிருவாயில் - தன்னையடைந்தாரைச் சிவன் சமீபமாகச்செய்யும் வாயில்.
அணுக்கு - சமீபம்.
அணுசதாசிவர் - சதாசிவ தத்துவத்தில் சதாசிவமூர்த்தியைச் சூழச் சேவித்துக்கொண்டிருந்து போகங்களைப் புசிக்கும் பரமுத்தர், இவர்கள் பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவார், அங்குசு எனப்பதின்மராவர்.
அணுசைவம்-ஒருவகைச்சைவம். அது சிவனை யுள்ளும்புறமும் பஞ்சகிருத்தியஞ் செய்வனென்றறிந்து திகம்பரவேடங்கள்பூண்டு சன்மார்க்கலக்கணத்தோடு கூடிக் குருலிங்க வேடம் பொருளாய்ச் சிவன் செய்யுந் தொழில்களை அனுபவத்திற் பார்த்தானந்தம்பொங்கி அதன்கண் மனோலயமாவதே மோக்ஷமென்று சொல்லுவதாம்.
அணுச்சைவம் - சைவம் பதினறில் ஒன்று.
அணுத்துவம் - அணுத்தன்மை.
அணுபட்சநவபேதம் - சத்தியலோக முதற்புவனுதிபதிகளாய் வாஸ்தவ பேததேகிகளாயிருக்கும்பிரமாமுதற் சிவமூர்த்தி பரியந்தம் ஒன்பதின்மராகியபேதமாம்.
அணுபட்சம் - ஆன்மபட்சம்.
அணுபரசிவன் - அணுபட்சத்துப் பரசிவன்.
அணுபேதம் - ஆன்மபட்சபேதம்.
அணுபை - மின்னல்.
அணுப்பிரமன் - ஆன்மபட்சப்பிரமன்.
அணுமூர்த்தி - ஆன்மமூர்த்தி.
அணுமை - அணிமை, சமீபம்.
அணுரூபம்-அணுவகை, மிகச்சிற்றுரு.
அணுரூபி - ஆன்மா, கடவுள்.
அணுரேணு - சிறுதுகள்.
அணுவங்கபதிகள் - விஞ்ஞானகலரிற் பரிபக்குவம் வந்தவர்களில் தீவிரபக்குவம் வந்துள்ளோர்களாய்ச் சூக்கும சிவாபிவியத்தில் விளங்கிச் சத்திதத்துவத்தும் சிவதத்துவத்தும் இருப்பவர்கள்.
அணுவலி - ஆன்மசத்தி.
அணுவெழுத்து - இனவெழுத்து.
அணை - அணையென்னேவல், உதவி, கரைப்பொது, ஆசனம், முட்டு, செய்கரை, படுக்கை, புணர்ச்சி, மெத்தை, வரம்பு.
அணைகட்டல் - வரம்புகட்டல்.
அணைகயிறு - ஏணைக்கயிறு, பால்கறக்கக் கட்டுங்கயிறு.
அணைக்கட்டு - வரம்புகட்டு.
அணைக்கை - அணைத்தல்.
அணைசல்
அணைசுதல் } ஒதுங்கல், விலகல்.
அணைசொல் - அசைச்சொல், துணைச்சொல்.
அணைதல் - அடைதல், உண்டாதல், அவிதல், சேர்தல், புணர்தல்.
அணைதறி - யானைகட்டுங்கயிறு.
அணைதுகில் - ஏணையாடை.
அணைத்தல்
அணைப்பு } அடுத்துக்கொள்ளுதல், அவித்தல், சேர்த்தல், தழுவுதல்.
அணையாடை - ஏணைத்துகில், சாணைச்சீலை.
அணையார் - பகைவர்.
அணைவு - அணைக்கப்பட்டது, அணைத்தல்.
அனோக்கம் - அநோக்கம், மரப்பொது, மரம், மேனோக்கம்.
அண் - அண்ணென்னேவல், தடியில் வெட்டியவரை, மேல், வேட்டை நாயின் உருவுகயிறு.
அண்டகடம்
அண்டகடாகம்
அண்டகபாலம் } அண்டகோளவோடு

அண்டகம் - குப்பைமேனி, சிறு முட்டை, பீசகோசம்.
அண்டகன் . அண்ணகன்.
அண்டகை - அப்பவருக்கம்.
அண்டகோசம் - அண்டசொரூப சாத்திரம், எல்லை, பழத்தோல், பழம், பீசப்பை.
அண்டகோளகை - அண்டகடாகம், கூடம்.
அண்டகோளம் - அண்டவுண்டை.
அண்டங்காகம் } ஒருவகைக் காகம்.
அண்டங்காக்கை } அது கழுத்தில் வெண்மையுடைய மற்றைக் காகங்களைப்போலாது உடன்முழுவதுங் கருமையையுடையது.
அண்டசம் - முட்டையிற் பிறப்பன. அவை அரணை, ஆமை, இப்பி, உடும்பு, ஓணன், தவளை, நண்டு, பல்லி, பறவை, பாம்பு, மீன், முதலை முதலியன.
அண்டசன் - பிரமா.
அண்டசை - கத்தூரி.
அண்டச்சுவர் பித்திகை.
அண்டரதன் - சிவன்-
அண்டநாயகி - உமாதேவி.
அண்டபகிரண்டம் - துருவசக்கரத்துட்பட்ட உலககோளமும் அதற்குப் புறத்திலுள்ள கோளமும்.
அண்டபிண்டம் - பிரமாண்டமுந் தேகமும்.
அண்டப்பார்த்தல் - பொருந்தப்பார்த்[தல்.
அண்டப்புத்தேள்-விராட்புருடன்
அண்டமீன்றவன் - பிரமா.
அண்டமுகடு - அண்டத்தினுச்சி.
அண்டமூர்த்தி - அண்டரூபி.
அண்டம் - ஆகாயம்,உலகம்,தலையோடு, பீசம், முட்டை, விதை.
அண்டயோனி - முட்டையிற்றோற்றுவது, சூரியன்.
அண்டரசம் - சூத்தரசம்.
அண்டரண்டப்பட்சி - பெரும்பறவை.
அண்டரண்டம் - தேவரண்டம்.
அண்டர்-இடையர், பகைவர்,வானோர்.
அண்டர்நிலை - பொன்னாங்காணி.
அண்டர்பிரான் - சிவபெருமான்.
அண்டலர் } பகைவர்.
அண்டலார் }

அண்டல்-அண்டுதல், அழுந்தல், கிட்டுதல், சேர்தல்.
அண்டவாணர்-ஆகாயவாசிகள், தேவர்.
அண்டவாணன் - தேவன்.
அண்டவாதம் - அந்திரவாயு, வளி, விரைவாதம்.
அண்டவாயு-அண்டவாதம், ஒருநோய்.
அண்டன் - கர்த்தா, சிவன்.
அண்டா - பெருஞ்சட்டி, பெரும்பாத்திரம்.
அண்டாகாரம் - முட்டைவடிவம்.
அண்டாதவன் - பகைவன்.
அண்டாதிநாதன் - சிவலோகத்திலே தக்கணதிசையோலக்கஞ்சேவிக்கும் பதினெண் முக்கிய கணேசரிலே ஒருவன்.
அண்டார் - பகைவர்.
அண்டிகம் - செந்நாய், நாய்.
அண்டிகா - மட்பானை.
அண்டிரன் - ஆடவன், ஆ என்னும் வள்ளல்.
அண்டில் - மாடு முதலியவற்றின் கண்ணிற்பற்றும் ஒருபூச்சி.
அண்டீரன் - ஆடவன், சமர்த்தன்.
அண்டுகை } நெருங்கல்.
அண்டுதல் }
அண்டை-அயல், அருகிடம்,ஒட்டு, பீறலடைக்குந்துண்டு, முட்டு, வரம்பு-
அண்டைபோடல் . ஒட்டுப்போடுதல்.
அண்டையர் - அயலார்.
அண்டைவீடு . பக்கத்துமனை.
அண்ணகன் . பீசம் வாங்கப்பட்டவன்.
அண்ணணித்து - மிகக்கிட்டியது.
அண்ணந்தாள் . அண்ணாந்தாள்.
அண்ணம் - உண்ணா, மேல்வாய்.
அண்ணலார் - சிவபெருமான்.
அண்ணல் - அரசன், அருகன், சார்தல், சிவன், தமையன், தலைமை, புத்தன், பெருமை,பெருமையிற்சிறந்தோன், முல்லைநிலத்தலைவன்.
அண்ணன் - முன்பிறந்தான்.
அண்ணா - அருணாசலம், உண்ணாக்கு.
அண்ணாக்கு - உண்ணாக்கு.
அண்ணாத்தல் - அங்காத்தல், மேனோக்கல்.
அண்ணாந்தாள் - அண்ணந்தாள், தண்டனைக்கயிறு.

அண்ணமலை - அருணசலம்.
அண்ணர் - பகைவர்.
அண்ணவி - உவாத்தி, புலவன், மூத்தோன்.
அண்ணி - தமையன் மனைவி.
அண்ணிசு - அணுமை.
அண்ணிடல் - பொருந்தல்.
அண்ணிது - அணிமை.
அண்ணித்தல் - பொருந்துதல், மதுரித்தல்.
அண்ணிப்பான் - மதுரிப்பான்.
அண்ணியது - கிட்டியது.
அண்ணியன் - சமீபமானவன்.
அண்ணுதல் - சார்தல், அணுகுதல், பொருந்துதல்.
அண்ணெறிஞ்சான் பூண்டு - அன்றெரிந்தான் பூண்டு.
அண்பல் - மேல்வாய்ப்பல்.
அண்மல்
அண்முதல் } கிட்டுதல்.
அண்மை-அடையுந்தன்மை, அணுமை.
அண்மைச் சுட்டு - சமீபத்தி லிருக்கும் பொருளைச் சுட்டிக்காட்டல்.
அண்மைவிளி - சமீபத்திலிருப்பவரை அழைத்தல்.
அதகடி - அதட்டு.
அதகணம் - நாசகணம்.
அதகம் - சுக்கு, பெருமருந்துக்கொடி, மருந்து.
அதகன் - வைத்தியன்.
அதக்குதல் - இளக்குதல், கசக்குதல், குதப்புதல்.
அதங்கம் - ஈயம்.
அதங்கோட்டாசான் - அகத்தியமுனிவனிடங்கற்ற தொல்காப்பியன் முதலிய பன்னிரு மாணவர்களுள் ஒருவன்.
அதசம் - ஆன்மா, காற்று, மரவுரி.
அதசி - சணல்.
அதசிரசு - பரிதானம் வாங்குவோர் புகும் நரகம்.
அதசிரோதோபவம் - இருவகைச் சைவாகமங்களுளொன்று.
அதசு - கேள்வி, நாசம்.
அதடம் - மலைமுதலியவற்றின் சரிவில்லாத இறக்கம், செங்குத்து.
அதட்டம் - அரவுயிர்ப்பு, அரவினச்சுப்பல்.
அதட்டல்-உரப்புதல், உறுக்குதல்.
அதட்டு-அதட்டென்னேவல், உறுக்கு.
அதட்டுதல் - அதட்டல்.
அதத்குணலங்காரம் - பிறிதின் குணப்பேரின்மையணி.
அதத்தம் - அபலக்கொடை.
அதத்தன் - குபேரன்.
அதத்துவாவிருத்தி - சரீரமுதலியவைகளை யுத்தியால் நேதிகளாந்து எஞ்சிநின்ற ஆன்மாவைத் தெரிவித்தல்.
அதத்துவியாவிருத்தம் - மற்றைப் பொருளிலிருந்து நீங்கி இலக்கியத்திலிருக்கும் இலக்கணம்.
அதபலோகம்-பௌத்தமதத்தின் பிரமலோகம் இருபதனுட் பதின்மூன்றுவது லோகம்.
அதப்பியம் - அசப்பியம்.
அதமசரீரம் - பரலோக இகலோக புத்திகள் இல்லாதிருக்கிற சீவனைக் கொண்ட சரீரம், கற்பகத்தரு, பாரிசாதம் முதலாயின அதமசரீரம்.
அதமசிருட்டி - ஐவகைச் சிருட்டிகளில் ஒன்று. இச்சிருஷ்டிகாலத்திலே குணநிலயப் பிரமவிட்டுணுக்களும், பிரமாண்ட நிலயப் பிரமவிட்டுணுக்களும் குணுதிபிருதிவியந்த புவனங்களிலேபோக்கியப்பொருள்களையுந், தூலதேகங்களையும், தேவர் முதலிய தேகிகளையும் படைத்துக் காப்பர்.
அதமதமப்பிராரத்தம் - அதமதரப் பிராரத்தத்தினும் அதிகப்பட்ட பிராரத்தம். அது இட்டப்படி நடத்தல் புசித்தல் முதலிய பிரமாதங்களுக்கேதுவானது.
அதமதரப்பிராரத்தம் - கனிட்டப்பிராரத்தத்தினும் அதிகப்பட்ட அதமமான பிராரத்தம். அது முதலில் நிவர்த்திக்கும் பின் பிரவர்த்திக்குங் காரணமானது.
அதமதானம் - கடைப்படுதானம். அது ஆசை, புகழ், அச்சம், கைம்மாறு, கண்ணோட்டம், கடப்பாடு முதலிய காரணம் பற்றி கொடுக்கப்படும் கொடையாம்.
அதமத்தோற்கருவி - முழவேழு வகையுளொன்று. அது கணப்பறைமுதலான புறமுழவும் நெய்தற்பறை முதலான புறப்புறமுழவுமாம்.

அதமபட்சம் - மிகக்குறைந்தபடி.
அதமபிருகதன் - சுமைகாரன்.
அதமம் - கடைத்தரம், நீதித்தப்பு.
அதமர் - கடையாயர், கடைத்தரமானவர்.
அதமர்ணிகன் - கடன்வாங்கினவன்.
அதமவாசான் - மூவகைக் குரவருட் கடைத்தரமானவன், இவன் வைசியர்க்குஞ் சூத்திரர்க்குங் குரு.
அதமவிஞ்சதி - பிரபவமுதவிய அறுபதுவருடங்களிலே தீதாக விளங்குங் காலமாகிய கடையிருபது வருடம்.
அதமவிமிசதி - அதம வருடமிருபஃது.
அதமன் - கடையானவன், நாணமில்லாக் காமி.
அதமாகல் - அழிதல்.
அதமாக்கல் - அழித்தல்.
அதமாங்கம் - கால்.
அதமாதமன் - மிகக்கீழ்மையானவன்.
அதம் - அத்தி, சங்காரம், தாழ்வு, கீழ், தொலை, பள்ளம், பின்பு.
அதம்பம் - கற்பரிபாஷாணம்.
அதம்பல், அதம்புதல் } அதட்டல்.
அதரபானம், அதரமதம், அதரமது } இதழூறல்.
அதரம் - உதடு, கீழுதடு, நிதம்பம்.
அதராமிர்தம் - அதரபானநீர்.
அதராவலேரபம் - இதழதுக்கல்.
அதரிகொள்ளுதல் - கடாவிடுதல்.
அதரிசனம் - காணப்படாமை, குருடு, மறைதல்.
அதரிசனன், அதரிசி } கடவுள், குருடன்.
அதரிதிரித்தல் - கடாவிடல்.
அதரித்திரன் - கன்னன், தரித்திரமில்லான்.
அதருமம் - அநீதச்சொல், பாவமான செய்கை.
அதருமாத்திகாயம் - யாதனுசரீரம்.
அதருவணம் - அதர்வணவேதம்.
அதர் - ஆட்டின்கழுத்திலே தொங்குங் குழல், முறைமை, நீளக்கிடங்கு, நுண்மணல், புழுதி, வழி, விலங்கு செல்வழி.
அதர்கொளல் - வழிப்பறித்தல்.
அதர்கோள் - வழிப்பறி.
அதர்க்கம் - குதர்க்கம்.
அதர்க்கன் - குதர்க்கி.
அதர்பறித்தல் - குழிவெட்டல்.
அதர்மசாரி - அதர்மவழியிற் செல்லுவோன்.
அதர்மம் - தருமமல்லாதது, அதுவேதத்துள் விதிக்கப்பட்டன செய்யாமையும் விலக்கப்பட்டன செய்தலுமாம்.
அதர்மன் - சதருத்திருள்ளே இயமதிசையிலிருக்கும் தச ருத்திருள் ஒருவன்.
அதர்மாசாரி - துராசாரி.
அதர்மாத்திகாயம் - காரணகாயத்தொன்று.
அதர்வசிகை, அதர்வசிரசு, அதர்வசிரம் } அதர்வணவேத உபநிடதத்தொன்று.
அதர்வச்சிரம் - உபநிடதம் முப்பத்திரண்டினொன்று.
அதர்வணம் - நான்காம்வேதம்.
அதர்வணவேதோபநிடதங்கள் - அதர்வணவேதத்துக்குரிய உபநிடதங்கள். அவை காருடம், தத்தாத்திரேயம், அயக்கிரீவம், கிருஷ்ணம், கோபாலதபனம், பிரச்சினம், திரிபாத்வீய மகாநாராயணம், இராமரகசியம், முண்டகம், மாண்டூக்கியம், அதர்வசிரசு, அதர்வசிகை, கணபதி, மகாவாக்கியம், பசுமசாபாலம், பாவனை, தேவி, திரிபுராதபினி, பரப்பிரமம், பாசுபதம், ஆத்மம், சூரியன், அன்னபூரணை, பிருகச்சாபாலம், நரசிம்மதாபனி, நாரதபரிவிராசகம், சீதை, இராமதாபனி, சரபம், சாண்டில்லியம், பரமஹம்சபரிவிராசகம் என்னு முப்பத்தொன்று.
அதர்வணன் - சிவன்.
அதர்வணி - அதர்வண வேதத்திலே நற்பயிற்சியுடைய பிராமணன்.
அதர்வம் - நான்காம்வேதம்.
அதலகுதலம் - கலகம்.
அதலமூலி - ஆடுதின்னாப்பாளை.
அதலம் - கீழேழுலகினொன்று.
அதலன் - சிவபெருமான்.
அதவம் - அத்திமரம், பள்ளம், பின்பு.
அதவா - அல்லாமல்.

அதவாபட்சம் - அல்லாதபட்சம்.
அதவிடம் - அதிவிடயமூலிகை.
அதவு - அத்தி, நெய், பள்ளம்.
அதவுதல் - சொல்லுதல்.
அதழ் - பூவிதழ்.
அதளி - அமளி.
அதளை - அடைநிலப்பீர்க்கு, புளியதளை, வயல், வெளியிலிடும்காவற்குடிசை.
அதள் - களகம்பளம், தோல், பட்டை.
அதள்புனையரணம் - தோற்கைத்தளமென்னுங் கருவி.
அதறுதல் - உதிர்த்தல், பதறுதல்.
அதனப்பிரசங்கி - அகங்காரி.
அதனம் } மிகுதி.
அதனு }
அதன்மசாதனம்-தருமமல்லாதசெயல்.
அதன்மம் - பாவம், நீதிக்கேடு.
அதன்மாத்திகாயம் - சமண மதத்திற் சொல்லிய அசீவ பதார்த்தத்தினது நான்குவகையுள் ஒன்ருய்த் தீமை பயப்பதோ ரத்தியாயம்.
அதாசலம் - காட்டுமல்லிகை.
அதாதா - உலோபி.
அதாதிமக்தம் - அதாதிமந்த ரோகம். அது அதிமந்தரோகம் ஐவகைகளுள் ஒன்று.
அதாதிமந்தரோகம்-கண்களில் விரணத்தைப் பிறப்பித்துப் பார்வையைக் கெடுக்கும் ஒருவகைநோய்.
அதாதிரு - உலோபி, கன்னிகையை விவாகம் பண்ணிக் கொடாதவன்.
அதாது - தாதுவல்லாதது.
அதாயன் - தாயத்துக் குரிமையில்லாதவன்.
அதாபன் - விவாகஞ்செய்யாதவன்.
அதாலத்து - நியாயஸ்தானம்.
அதி - அதிதி, மிகுதிப்பொருளைக் காட்டு மசைச்சொல்.
அதிகசிதம் - பெருநகை.
அதிகடம் - யானை.
அதிகண்டம - நித்தியயோகத்தொன்று: அது சந்திரனைப்பற்றியது. மாணவஸ்தை.
அதிகதம்-அடையப்பட்டது, அறியப்பட்டது, சென்றது, படிக்கப்பட்டது.
அதிகதை - பயனில்பேச்சு.
அதிகதாரி - கொடிவேலி.
அதிகந்தம் - ஒருவாசனைப்புல், கெந்தகம், சண்பகப்பூ.
அதிகப்பற்று - பெரும்பான்மை, வரவேண்டியதற்கு மேற்பற்றுதல்.
அதிகப்பிரசங்கம் - அதிகப்படப்பேசுதல், தன் மேம்பாட்டுரை.
அதிகப்பிரசங்கி - மட்டுக்குமிஞ்சிப் பேசுவோன்.
அதிகமாதம் - ஆறுவருஷத்துக் கொருதரம் ஒருவருஷத்தில் அதிகமாகு மாதம். [நிவிர்த்தி.
அதிகமாதாபவாதம் - அதிகமாசதோஷ
அதிகம் - அடையாளம், இலாபம், ஏற்றம், ஓரலங்காரம், குருக்கத்திமரம, சேனை, மேன்மை, உதாரணங்களைப் பலவாருகப் பிரயோகித்தல், தோல் வித்தான மிருபத்திரண்டி னென்று, படை, பொலிவு, மிகுதி.
அதிகரணத்துவம் - அதிகரணமாயிருக்குந் தன்மை.
அதிகரணம் - இடம், உரித்து, எழனுருபு கேள்வி, மேன்மை, தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிவும், இயைபுமென்னு மிவற்றினது நிலைக்களம்.
அதிகரிக்கை } அதிகப்படுதல், விசேடித்தல்.
அதிகரித்தல் }
அதிகரிப்பு }
அதிகர் - மேலானவர்.
அதிகர்த்தம - இருபத்து நான்குவகை அக்கினிக்கீடங்களுள் ஒன்று.
அதிகல் - காட்டுமல்லிகை.
அதிகவுச்சம் - அத்துச்சம்.
அதிகற்ருதி - கொடிவேலி.
அதிகன் - ஆதிக்கன், ஒருவள்ளல். இவன் தனக்குக்கிடைத்த அமிழ்து விளையுங் கருநெல்லிக்கனியைத் தானுண்டு உடம்புபெருதே ஔவைக்குக்கொடுத்தோன், சிவன்.
அதிகாங்கிஷை - பேராசை.
அதிகாசம் - பெருநகை. [வழகு.
அதிகாந்தம்-ஒருகல், செவ்வானம், மிகு
அதிகாயன் - இராவணன் மக்களில் ஒருவன், மிகப்பெருஞ்சரீர முடையவன்.

அதிகாரசத்தி-சிருட்டியாதி அதிகாரஞ் செய்யுஞ் சாமர்த்தியம், சிவன், இலயம், போகம், அதிகாரம் என்பவைகளுள் அதிகாரவவத்தையிலிருக்கும் போது அவரோடு நிற்குஞ்சத்தி.

அதிகாரசத்திகள் - பிரமாவை அதிட்டித்துச் சிருஷ்டிசெய்யும் வாமையும், விட்டுணுவை அதிட்டித்துத் திதிசெய்யுஞ்சேட்டையும், காலருத்திரரைஅதிட்டித்துச்சங்காரஞ்செய்யும்ரோதயித்திரியுமாகிய சத்திகள்.

அதிகாரசிவன் - மகேசர். இவர் சுத்த மாயையிலே உற்பன்ன காரியத்தைச் செய்வதனால் அதிகார சிவனெனப்படுவர்.

அதிகாரதத்துவம் - ஈசுரதத்துவம்.

அதிகாரத்தலைவன் - அதிகாரி.

அதிகாரத்திரயம் - கருமகாண்டி, பத்திகாண்டி, ஞானகாண்டி என்னு மூவகை அதிகாரிகள். இவருள் தேககிருத்தியாதிகளிற் கிரமத்தில் யானெனதென்னும் அகந்தையுள்ளவன் கருமகாண்டி, சகல கிரியைகளையு மீசுரார்ப்பணஞ்செய்வோன் பத்திகாண்டி, சகல கருமத்துக்குந் தான் சாட்சிகனென்போன் ஞானகாண்டி.

அதிகாரபஞ்சகம் - கருமி, முமூட்சு, அப்பியாசி, அனுபவி, ஆரூடன் என்னும் அதிகாரரைவர். அவருள் மூடத்தனத்தால் தன்சாதி கருமமாத்திரம் பிடித்துச் சதசென்மத்தில் முத்தனாகிறவன் கருமி, சகம் அசத்தென்று தெளிந்தாத்கரும நிட்டனாய் மூன்று சென்மத்தில் முத்தனாகிறவன் முமூட்சு, சொப்பனம்போலப் பிரபஞ்சம் மித்தையென்றறிந் தப்பியந்தரத்தில் தியானாதிகருமயுக்தனா யிரண்டு சென்மத்தில் முத்தனாகிறவன் அப்பியாசி, விவகாரபேட்சைவிட்டு விவேகதற்பரனாகி ஏகசென்மத்தில் முத்தனாகிறவன் அனுபவி, விசுவ விகிருதி தோன்றாமல் ஆத்மஞானத்தாற் சத்தியோமுத்தி யடைபவன் ஆரூடன்.

அதிகாரப்புறனடை - அதிகாரத்துள் எஞ்சியதற்கோர் விதியாய் நிற்பது.

அதிகாரமலம் - மலபரிபாகமாந்தியமுடையரான விஞ்ஞானகலரைச் சுத்தாத்துமாக்களில் அதிகாரமுடையராக நிறுத்தும் பெலமுடையமலம்.

அதிகாரமுத்தி - ஆன்மா சுத்ததத்துவத்தில் அதிகாரமலத்தோடு மாத்திரமிருப்பதாகிய முத்தி.

அதிகாரமுறைமை-ஒருத்தி; அதுமுன்னின்ற சூத்திரப்பொருண்மை பின் வருஞ் சூத்திரத்துக்கும் பெறற்பாலனப் பெறவைத்தல்.

அதிகாரம் - அதிகரித்தல், உத்தியோகம், உரித்து, ஒழுங்கு, சிலாக்கியம், தத்துவம், நூலுரை பதினன்கின் ஒன்று, நூற்கூறுபாடு, பண்பு.

அதிகாரர் - தூலபஞ்சகிருத்தியத்திலே உன்முகமாயிருந்த கிரியாசத்திக்குப் பின் இதுஇப்படியாகக்கடவதென்று சங்கற்பத்தைப்பண்ணுஞ் சங்கற்ப இச்சாசத்திரூபமாயிருந்த ஈசர்.

அதிகாரவுரை - நூலுரை பதினன்கினொன்று.

அதிகாரன் - மகேசுரன், மேல்விசாரணை செய்வோன்.

அதிகாரி - அதிபதி, நூல்கேட்டற்குரியோன், நூல்செய்வித்தோன், பாட்டுடைத்தலைவன்.

அதிகாரித்துவம் - உடையனாந்தன்மை.

அதிகாரியர் - அதிகாரமுடையோர்.

அதிகாரை - சாதிகாரதீட்சை.

அதிகாலங்காரம் - பெருமையணி.

அதிகாலம், அதிகாலை } விடியற்காலம்.

அதிகிரமம் - அசட்டை, அதிகப்படல், எதிர்மீறுதல்.

அதிகிருச்சிரம் - ஒருவிரதம். அது ஆறுநாள் ஒவ்வோர்பிடி அன்னமுண்டு மேன்மூன்றுநாள் உபவாசித்திருப்பதாம்.

அதிகிருதர் - அதிகரித்தவர்.

அதிகிருதன் - அத்தியட்சன், பிராட்டுவிவாகன், வரவுசெலவுக் கணக்கதிகாரி.

அதிகிருதி -ஒரு கவிச்சந்தம். அது அடியொன்றிற்கு இருபத்தைந் தசையுடைய நான்கடிகொண்டதாய் வருவதாகும்.

அதிகிருதை - அதிகாரமுடையவள்.
அதிகுணம் - நற்குணம்.
அதிகுணன்-கடவுள், அருகன், சிவன், நற்குணன்.
அதிகும்பை - பொற்றலைக் கையாந்தகரை, பொற்றுது.
அதிகுய்யாஷ்டகர் - தேயுதத்துவத்திலிருக்கும் அரிச்சந்திரன், ஸ்ரீசைலன், கல்பமானன், மாதகேச்சுவரன், மகாகாளன், மத்திமன், கேதாரன், வயிரவன் என்னும் எண்மர்.
அதிகுரு - அதிகபாரம்.
அதிகை - அதிகமானது, நடுகாட்டிலே உள்ள ஒரு சிவஸ்தலம்.
அதிகைவீரட்டனர் - அதிகைவீரட்டமெனுந் தலமுடையோர்.
அதிகோரம் - தொகைநரகங்கள் இருபத்தெட்டுள் மூன்றுநரகம்.
அதிகோலம் - அழிஞ்சின்மரம்.
அதிகோவம் - அதிகோபம், அழிஞ்சில்.
அதிக்கம் - மேன்மை.
அதிக்கிரமம் - அக்கிரமம்.
அதிக்கிரமித்தல் - அசட்டைசெய்தல், இல்லாதுபோதல், கடத்தல், கழித்தல், குறுக்கேபோதல், தப்பிப்போதல், நீக்குதல், போகவிடுதல், மேற்படுதல், விடுதல், விலகுதல்.
அதிக்கிராந்தபிந்து - ஈசுரான் நவபேதத்தில் ஒன்றாகிய ஆண்தத்துவம், ஒரேரூபமான பெரியோர்.
அதிக்கிராந்தம் - அவமதிக்கப்பட்டது, எல்லைகடந்தது, கடந்தது, சென்றுபோனது, மட்டற்றது, மிகுந்தது, வெறுக்கப்பட்டது.
அதிக்கிராந்தவிந்துக பரசிவம் - அதிக்கிராந்த விந்துகபரசிவன்.
அதிக்கிராந்தவிந்துக பரசிவன் - சிவஞன்மாக்களுடையஅறிவுக்குப்புலப்படும் பொருட்டுத் தனது சிற்சத்தி சந்நிதி மாத்திரத்தில் தோற்றுவித்த சிவபேதம் ஒன்பதனுள் முதலாவதாகிய நிட்களசிவம். இவர் விந்துவைநீங்கிய இலயராதலால் அதிக்கிராந்தவிந்துக பரசிவன் எனப்பட்டார்.
அதிக்கிராந்தவிந்துக பராசத்தி - சுத்தமாயையாகிய விந்துவுக்குமேற்பட்ட விந்துவை அதிட்டிப்பவளாய் அதிக்கிராந்தவிந்துகபரசிவத்துக்குச்சத்தியாக நிற்பவள், இந்தச் சத்தியை அதிக்கிராந்தவிந்துக பரசிவந்தோற்றுவித்தது.
அதிக்கிராமகன் - கிரமந்தவறி நடப்பவன்.
அதிக்குதி - ஒவ்வாத நடை, கொடுமையான நடை.
அதிங்கம் - அதிமதுரம்.
அதிசகதி - ஒருகவிச்சந்தம். அது அடியொன்றிற்குப் பதின்மூன்றசையுடைய நான்கடியாய் வருவது.
அதிசக்கரி-ஒருகவிச்சந்தம். அது அடியொன்றிற்குப் பதினைந்தசையுடைய நாலடிகொண்டதாய் வருவது.
அதிசக்குவரி - அதிசக்கரி.
அதிசக்தி - நெருங்கிய வொற்றுமை, பெரியவல்லமை.
அதிசங்கலிதம் - சங்கலிதசங்கலிதம்.
அதிசஞ்சயம் - திரவியக்குவியல்.
அதிசத்திரகம் }
அதிசத்திரம் } காளான்.
அதிசந்தானம் - பொய், எய்த்தல்.
அதிசயச்சொல் - வியப்புமொழி.
அதிசயம் - அதிரேகம், அற்புதம், ஓரலங்காரம், நூதனம், புதுமை, மாயை, யாக்கைக்குரிய பதினெண் குற்றத்தொன்று.
அதிசயவிரக்கச்சொல் - இரக்கத்தோடுகூடிய வியப்புமொழி.
அதிசயவுவமை-உவமையலங்காரவகைகளுள் ஒன்று. அது உபமான உபமேயமென்னுமிரண்டிற்கும் சார்பிடத்தாலின்றி ஒப்புமைக்குரிய குணத்திஞல் தம்முள்ளே பேதமில்லையென அதிசயந்தோன்றச் சொல்லப்படுவது.
அதிசயன் - அருகன்.
அதிசயித்தல் - அதிசயங்கொள்ளல்.
அதிசயோக்தி - உயர்வுநவிற்சியணி. அஃது ஒருபொருளானது தன் சொல்லால் சொல்லப்படாமல் கேட்போரை மகிழ்விப்பதும் இஃது அஃதன்றென்று தெரிந்தும் தன்னிச்சையா லாமென்று கொள்ளப்படுவதுமாகிய ஆரோபநிச்சயத்திற்கு விடயமாகுதல், மிகப்பேசுதல்.

அதிசயோத்தி - மிகக்கூறல்.
அதிசரணயோனிரோகம் - பெண்களுடைய யோனியில் வரும் ஒருவகை ரோகம்.
அதிசரம்-நெட்டுயிர்ப்பு, நிலைபெற்றது.
அதிசரன்-அப்பாற்போகிறவன், வழிகாட்டி.
அதிசரித்தல் - தூரமாய்ப்போதல், மிகுகதியாய் நடத்தல்.
அதிசருச்சனம்-கொடுத்தல், கொடை, கொலை.
அதிசனசி - கொடிவேலி.
அதிசாக்கிரதை - மிகுவிழிப்பு.
அதிசாந்திரன் - சந்திரன்.
அதிசாமியை - வெண்குன்றிச்செடி.
அதிசாரசிலேட்டுமரோகம் - சிலேட்டுமரோகங்களுள் ஒருவகை. அது சிவந்தபேதி, வயிற்றிலிரைச்சல், குத்தல், விலாவிற் சூலை, பொருமல், மார்பிலும் நெஞ்சிலும் நோய், வாய்வுறளல், இருமல், சுவாசம், தாகம், எரிச்சல் என்னுங்குணங்களையுடையது.
அதிசாரணம் - மாவிலிங்கு.
அதிசாரத்திரவியங்கள் - அதிசாரநோயைத் தீர்க்கும் மருந்துக்குச் சேர்க்கப்படும் சரக்குகள். அவை : அதிவிடயம், ஆவிரை, இருபூலர், இலவம்பிசின், ஓமம், கஞ்சா, கருங்காலிப்பிசின், கருவேல், காட்டாத்திப்பூ, கிராம்பு, கீழ்க்காய்நெல்லி, குங்கிலியம், சாதிக்காய், சிறுகாஞ்சொறி, நீர்முள்ளி விதை, சுக்கு, திப்பிலி, தென்னம்பாளை, தேன், புளியங்கொட்டைத்தோல், புளியம்வேர், மாதுளம்பிஞ்சு, மாவிரை, முத்தக்காசு, வட்டத்திருப்பி, வறட்சுண்டி, வாழை, வெட்பாலையரிசி, வெள்ளிலோத்திரம் என்பனவாம்.
அதிசாரம்-ஒருபேதிநோய், சுரத்தோடு கூடிய ஒருவகைப்பேதி. அதுசிலேத்துமம், திரிதோஷம், பித்தம், வாதம் என நான்கு கிரகநடை.
அதிசாரவக்கிரம் - கிரகவக்கிரத்தொன்று.
அதிசிகுவை - நாக்கில்வரும் ஒருவகை ரோகம். அது அடிநாவின் கீழ்நுனி நாவைப்போலத்தடித்து வீங்குவது.
அதிசித்திரம் - மார்க்கசடப் பிரமாணத்தொன்று. அது கால்மாத்திரை ஒரு கலையாகக்கொண்டது.
அதிசீக்கிரம் - மிகுசுறுக்கு.
அதிசீதம் - இருபத்தெட்டுத்தொகை நரகங்களுள் முதலாவதாகிய கோரத்துக்குள்ள ஐந்துநாயக நரகங்களுள் ஒன்று.
அதிசீரணம் - மிகுந்தசீரணம்.
அதிசுட்கம்-ஒருநோய். அது சரீரத்தை வறட்டுவது.
அதிசுத்தம் - மிகுசுத்தம்.
அதிசூக்குமசித்து - தூலசித்துப்போலாது மிக நுண்ணியதான சித்துப்பொருள்.
அதிசூக்குமத்துவம் - மிகு நுண்மைத்தன்மை.
அதிசூக்குமம் - மிகநுண்மை.
அதிசூக்குமவாக்கு - மிகச் சூக்குமமான சொல்.
அதிசூக்குமிப்பித்தல் - மிகநுண்மையாக்கல்.
அதிசூக்குமை - ஒருசத்திகலை.
அதிசூரன் . சிங்கமுகாசூரனுடைய ஒருமகன், மிக்கவீரன்.
அதிசோபனை - உமாதேவி.
அதிசௌரபம் - தேமாமரம், பரிமளத்திரவியம்.
அதிச்சத்திரகம் } கள்ளான்.
அதிச்சத்திரம் }
அதிட்சேபம் -அனுப்புதல் நிந்தைப்படுத்தல்.
அதிட்டகன்மம் . அதிருட்டகன்மம்.
அதிட்டக்காரன் - அதிருட்டவான்.
அதிட்டச்செல்லி - இந்திரபாஷாணம்.
அதிட்டம் - நல்லனுபோகம், நல்வினைப்பயன், மிளகு.
அதிட்டவலி - அதிட்டபெலம்.
அதிட்டாகாரர் - அறியக்கூடாத உருவமுடையவர்.
அதிட்டாதா - அதிட்டிக்கிறவன், ஆளுமதிபதி.
அதிட்டாத்திரி - அதிட்டிக்கிறவள், ஆளுபவள்.
அதிட்டாயகன் - அதிட்டிப்பவன்.
அதிட்டானசேதனன் - கூடஸ்தன்.
அதிட்டானசைதன்னியம் - பிரமம்.

அதிட்டானபூதம்-அதிட்டிக்கும்வஸ்து.
அதிட்டானபூதை - அதிட்டிக்குமவன்.
அதிட்டானம் - இடம், காரியத்திற்குக் காரணம், சில்லு, நிலை, பட்டினம்.
அதிட்டானன் - பரப்பிரமம்.
அதிட்டானுமானம் - கருதலனுமானம். அது ஒருவன் சொன்ன வார்த்தையைக்கொண்டே அவனுக்கிவ்வளவு ஞானமுண்டாயிருந்ததென்றறிதல்.
அதிட்டிதம் -தாபிக்கப்பட்டது, நியமிக்கப்பட்டது. நிலைப்படுத்தப்பட்டது, பிரேரேபிக்கப்பட்டது, மேல்விசாரணை செய்யப்பட்டது.
அதிட்டித்தல்-நிலைப்படுத்தல்,விதித்தல்
அதிட்டேயத்தானம்- அதிட்டித்தற்கு யோக்கியமான பொருள்களின் பேதம்.
அதிட்டேயம் - அதிட்டிக்கப்பட்டபொருள்.
அதிட்டேயரூபிணி - அதிட்டிக்கப்படுதற்கு யோக்கியமான ரூபமுடையவள்.
அதிதந்தம் - குட்டிப்பல்.
அதிதந்தரோகம் - பல்லில் வருமோர் நோய். அது பற்களின் சந்திற் குட்டிப்பல் முளைப்பதினால் வரும் உபத்திரவம்.
அதிதபனக்கிருச்சிரம்-கிருச்சிரவிவரதவகையுளொன்று. அது இருபத்தொருநாளைக்குமூன்றுபலம்பசும்பாலுண்டு செய்யும் விரதம்.
அதிதபனம் - அதிதபனகிருச்சிரம்.
அதிதமம் - முதலாந்தொகைநரகமாகிய கோரமென்பதற்குள்ள ஐந்து நாயக நரகங்களுள் ஒன்று.
அதிதலசிலேட்டுமம்-ஒருவகை சிலேட்டுமநோய்.
அதிதவளம் - மிகுவெண்மை.
அதிதனு - பொன்.
அதிதாதா - பெருங்கொடையாளன்.
அதிதாதிரு - ஈகையாளன்.
அதிதாபகவாதம்-சரீரத்தைத் தபிக்கப் பண்ணும் ஒருவகைவாதம்.
அதிதாரம் . இலந்தை.
அதிதானம் - கொடை.
அதிதி - காசிபப்பிரம்மாவின் மனைவிகளிலொருத்தி. சத்தபிதிர்களிலொருவர், சிராத்தத்திற்கொவ்வாததிதி. தேவரையீன்றாள், பரதேசி, புதியவன், பூமி, விருந்தன்.
அதிதிகிரியை - விருந்தோம்பல்.
அதிதிசேவை - விருந்துபசாரம்.
அதிதிநாள் - புநர்பூசநாள்.
அதிதிபூசனம் } பரதேசிக் கன்னமிடல்.
அதிதிபூசை }
அதிதிப்பம் - பசியின்மை.
அதிதியர் - சூரியர், விருந்தினர்.
அதிதீரன் - அதிகவீரன்.
அதிதீவிரம் - மிகக்கடுமை.
அதிதும்மர்பீனசம்-அதிகதும்மலையுண்டாக்கும் ஒருவகைப் பீனசரோகம்.
அதிதுர்ப்பலம் - மிகுந்ததுர்ப்பலம்.
அதிதூதர் - அதிகப்பிரதான விசேடங்களை அறிவிக்க உலகத்துக் கனுப்பப்படுவோர்.
அதிதூலரோகம் - சரீரத்தைப் பருக்கச்செய்யும் ஒருவகை ரோகம்.
அதிதெய்வம் - அதிட்டிக்குந்தெய்வம், ஆளுந்தெய்வம், மேலானதெய்வம்.
அதிதேசம் - ஒப்புமைகாட்டியுணர்த்துவது.
அதிதேசவாக்கியம்-ஒருபொருளை யறியாதவனுக்கு அதுபோன்ற வேறொரு பொருளைக்காட்டி அறிவிக்கும் வாக்கியம்.
அதிதேவன் - கடவுள்.
அதிதைவம் - அதிட்டிக்குந் தெய்வம், ஆளுந்தெய்வம்.
அதிநிந்திதம் - அதிகநிந்திக்கப்பட்டது.
அதிநுட்பம் - அதிகநுட்பமுடையது. அதிக நுண்மை.
அதிபசமி - கொன்றை.
அதிபதி-இராசா, சண்பகம், தலைவன்.
அதிபதிச்சங்கம் - வாலுழுவையரிசி.
அதிபதுங்கி - கொடிவேலி.
அதிபத்தர் - அறுபத்துமூன்று நாயன்மார்களிலொருவர்.
அதிபத்தினி - ஆளுகைசெய்கிறவள், எசமாட்டி, பெருமாட்டி.
அதிபரமாப்தர்-சதாசிவர், இவர்தம்மின் மேலாகிய ஆப்தர் பிறரின்மையின் இப்பெயர்பெற்றனர்.

அதிபரன் - சத்துருவை வென்றவன்.
அதிபர் - முதல்வர்.
அதிபல - நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப் புவனங்களு ளொன்று.
அதிபலம் - நேர்வாளம், மிகுபெலம்.
அதிபலன் - சதருத்திரருள் வருணதிக்கிலிருக்கும் பதினன்கு ருத்திரரில் ஒருவன்.
அதிபலை - பேராமுட்டி.
அதிபறிச்சம் - வாலுழுவையரிசி.
அதிபன் - இராசன், எசமானன், எப்பொருட்கு மிறைவன்.
அதிபாதகம் - மிகுபாதகம். இது சிவபெருமானுக்கும்சிவனடியாருக்கும், சிவனைப் பூசிக்கும் குருவுக்கும் விரோதஞ்செய்தலாம்.
அதிபாதகர் - மிகுந்தபாதகமுடையவர்.
அதிபாதர் - எதிரிடை, மீறுதல்.
அதிபாரகம் - கோவேறுகழுதை.
அதிபாரகன் - மிகுநிபுணன்.
அதிபாரம் - மிகுபாரம்.
அதிபாவம் - பெருங்குற்றம்.
அதிபானம் - மதுபானம்.
அதிபீடிதம் - அதிகமாக விறுக்குதல்.
அதிபூச்சியர் - அதிகம் பூசிக்கப்படத் [தக்கவர்.
அதிபூதம் - பிரகிருதிமாயை.
அதிபெலம் - அதிபெலம் என்னும் புவனம்.
அதிமதுரம் - ஒருச்ரக்கு, குன்றிவேர், மிகுமதுரம், வெண்குன்றி.
அதிமந்தம்-சருவநேத்திரரோகம் மூன்றுவகையுளொன்று. அது வாதாதிமந்தம், பித்தாதிமந்தம், சிலேட்டுமாதிமந்தம், இரத்தாதிமந்தம், அதாதிமந்தம் என ஐந்தாகவிரியும்.
அதிமலம் - மாவிலிங்கைமரம்.
அதிமாதம் - அதிகமாதம்.
அதிமாத்திரம் - உயர்வு, மிகுதி.
அதிமாமிசகம்-ஒருவகைத்தந்தரோகம்.
அதிமாமிசம் - கண்ணில் வரும் ஒருவகைத் தசைச்சுரப்பு நோய்.
அதிமாமிசரோகம்-பற்களில்வரும் ஒருவகை நோய். அது பல்லின் வேர் சந்துகளிலே ஆணியை யொத்த கட்டிகளைப் பிறப்பித்துக் காதுகளிலுந் தாடைகளிலும் நோயுண்டாகும்.
அதிமாமிசார்மரோகம் - கண்ணில்வரும் ஒரு நோய், அது வெள்ளை விழியாலே அதிகமாமிசம் வளர்வது.
அதிமாயம் - மாயையின்மை.
அதிமார்க்கநூல் - பரசமயங்களுக் கப்பாற்பட்டு உட்சமயமாய்ச் சித்தாந்தமல்லாததாயுள்ள ஞானத்தைப் போதிக்குஞ் சாத்திரம். அது பாசுபதம், கபாலம், மகா விரதம் என மூன்று வகைப்படும்.
அதிமார்க்கம் - பரசமயங்களுக்கப்பாற்பட்ட சமயமாய்ச் சித்தாந்தமல்லாததாயுள்ள சமயம்.
அதிமானம் - மிக்க அபிமானம்.
அதிமானுடம் - தெய்வத்தன்மை, மனுடனுக்கு மேற்பட்டது.
அதிமானுடன் - உத்தமபுருடன், சிரஞ்சீவி.
அதிமிதம்-அளவின்மிக்கது, ஈரமில்லாதது, காய்ந்தது.
அதிமிதி - அதிக்குதி.
அதிமித்திரன் - கணவன், மிகுநேசன்.
அதிமிருத்தியாதிமாத்திரை - கோரோசனை மாத்திரை.
அதிமுத்தம் - குருக்கத்தி, தேகம் நீங்கியடையும் முத்தி.
அதிமுத்தி - சாயுச்சியமுத்தி.
அதிமூர்க்கம் - கடுங்கோபம்.
அதிமூர்க்கன் - கடுங்கோபி.
அதிமோகம் - அனேகம், ஒருதலைக் காமம்.
அதிமோட்சம் - அதிமூர்த்தி.
அதியட்சன் - கண்காணி.
அதியட்டி - அடியொன்றிற்குப்பதினேழு அசையுடையதாய் நான்கடியால் வருமொரு கவிச்சந்தம்.
அதியம் - அதிகம், ஒருமருந்து.
அதியாதரம் - மிகுவிருப்பம்.
அதியாமம் - அறுகம்புல், முயற்புல்.
அதியுக்கிரகண்டன் - ஒருயமதூதன்.
அதியுட்டணம் - மிகுவெப்பம்.
அதியோகம் - சென்மலக்கினத்துக்காவது சந்திரலக்கினத்துக்காவது ஆறு மேழாமெட்டாமிடங்களிற் சுபக்கிரகம் இருக்குநிலை. இது ஞானம், கீர்த்தி, மன்னர்பிரிய முதலிய சுபகாரியங்களைக் கொடுக்கும் யோகம்.

அதிரசம் - இரசம், உப்பு, ஒரு பண்ணிகாரம், ஒரு பானம்.
அதிரதம் - ஒரு பண்ணிகாரம், ஒருபானம், நால்வகைத்தேரினொன்று.
அதிரதர் - முழுத்தேரரசர்.
அதிரதன்-சத்தியகருமன் மகன், இவன் கங்கைக்கரையில்வந்தடைந்த குந்தி மகனாகிய கன்னனை எடுத்து வளர்த்தவன், இவன்மனைவி விராதை, முழுத்தேராசன், இவர்தேரினின் றமர்புரிந்து தனதுசேனையையும்தேரையும் காவல்பண்ணிக்கொண்டு சத்துருவைச் செயிக்குமரசன்.
அதிரதி - அதிரதன்.
அதிரத்தம் - மிகுசிவப்பு.
அதிரல் - அதிர்தல், புனலிப்பூ, மோசிமல்லிகை, விரிதூறு.
அதிராகம் - கந்தகம்.
அதிராசன் - அரசனுக்குமேற்பட்டவன், சிரேட்டராசன்.
அதிராத்திரம் - யாக மிருபத்தொன்றினொன்று, இது சோதிட்டோமயாகத்தொருபகுதி.
அதிராம்பை - பொற்றலைத்தகரை.
அதிராயம் - அதிசயம்.
அதிரிசம் - கடவுள், காணப்படாததன்மை, குருடு.
அதிரிசயம் - கலைஞானம் அறுபத்துநான்கில் ஒன்று.
அதிரிசனம் - அதரிசனம்.
அதிரிசன் - கடவுள், குருடன்.
அதிரிசியம் - அதிரிசம்.
அதிரித்தம் - மிகுதி.
அதிருக்கு - குருடு.
அதிருசம் - அதிருசியம்.
அதிருசன் - குருடன்.
அதிருசியந்தி . அருந்ததி.
அதிருசியம் - அறுபத்துநான்குகலைஞானங்களுள் ஒன்று. காட்சிக்கு விடயமாகாதது, காணப்பட யோக்கியமில்லாதது, தாமதகுண சித்திகளில் ஒன்று. அது காணப்படும்பொருளைக்காணாமற்போகச்செய்வது.
அதிருசியன் - கடவுள், பரசிவன்.
அதிருச்சியம் - காணப்படும் பொருளைக் காணாமற்போகச்செய்வது.

அதிருட்டகன்மம் - மறுமையிலே சுவர்க்க நரகங்களை அனுபவித்தற்குக் காரணமாயிருக்கும் இம்மையிற் செய்யப்பட்ட கருமம்.
அதிருட்டபோக்கியம - ஒருவர் செய்த கருமந் தேகாந்தத்திற் சுவர்க்கத்திலாதல் நரகத்திலாதல் மற்றொருபிறப்பிலாதல் பலிப்பது.
அதிருஷ்டம் . பார்வைக்கெட்டாதது.
அதிருட்டம்-இந்திரியங்களாற் காணப்படாதது. பார்வைக் கெட்டாதது, பாவபுண்ணியத்தொழிலினாற் புத்திதத்துவத்திற் சமவாயசம்பந்தியாய் வைக்கப்பட்டுப் பலபரியந்தமிருக்குஞ் சம்ஸ்காரமாகிய சூக்கும கன்மம். இதுசுவர்க்க நரக பூமிகளுக்கு ஆன்மாவுடன் சூக்குமதேகத்திலிருந்து போதலும் வருதலும் உடையதென்பர்.
அதிருட்டானுமானம் - அதிட்டானுமானம்.
அதிருட்டிபூதனை - ஒரு குருட்டுப் பெண்பேய், அது குழர்தைகளை வருத்தும் ஏழு பெண்பேய்களுள் ஒன்றென்று சொல்லுவர்.
அதிருட்டிபூதனைகிரகதோஷம் - அதிருட்டிபூதனை என்னும் பெண்பேயினாற்குழந்தைகளுக்கு வருந்தோஷம் அது அற்பப்பார்வை, வாந்தி, சுரம், இருமல், மலபேதம், தேக நிற மாறுதல், தேகத்திற் றுர்க்கந்தக் கவிச்சு வீசுதல், அல்லது அசங்கியநாற்றம், இளைத்தல். சொற்பநித்திரை, உதடுநோவு, தினவு, விக்கல், பயம், முலைப்பாலிலசங்கியம், ஈனத்தொனி, நடுக்கமுதலிய குணங்களை யுண்டாக்கும்.
அதிருத்தி - திருத்தியின்மை.
அதிரூபம் - மிகச்சிறந்தவடிவம்.
அதிரேகமாயை - பெரிதாகியமயக்கம்.
அதிரேகம் - அதிசயம், மிகுதி, மேற்பட்டது.
அதிரோகணி - ஏணி.
அதிரோகம் - ஒருகாசம்.
அதிரோகிணி - ஏணி.
அதிரோகிதபாவம் - மறைக்கப்படாதிருத்தல்.
அதிரோகிதல் - அடுத்திருத்தல்.

அதிரோபிதம் - மேலாக உயர்த்தப்பட்டது, மேலாக வைக்கப்பட்டது.
அதிர் - அதிரென்னேவல், ஒலி, நடுக்கம், பயம்.
அதிர்ச்சி - அதிகப்படுதல், ஆரவாரம், குமுறல், பயம்.
அதிர்ச்சியம் - காணப்பட யோக்கியமாகாதது.
அதிர்தல் - குமுறுதல், நடுங்கல்.
அதிர்த்தல் - அதட்டல், குமுறல், சொல்லுதல்.
அதிர்ப்பு - அச்சம், அதிரல், ஆரவாரம், நடுக்கம்.
அதிர்வு - யாழ்நரம்பைச் சிதறவுந்தல்.
அதிர்வெடி, அதிர்வேட்டு } ஒருவெடி.
அதிலவோடாகம் - அடிலவோடாகம், ஒருபூண்டு.
அதிலுத்தன் - பிறர் பொருள்களில் மிக்க ஆசையுடையோன்.
அதிலோகம் - உலகம், இரசகர்ப்பூரம்.
அதிலோபம் - தன் பொருளைப் பிறர்க்குக் கொடுக்க விரும்பாமை, மிக்க பொருளாசை.
அதிவசனம் - பேர்.
அதிவருணர்-அதிவருணச்சிரமத்தோர்
அதிவர்ணச்சிரமி - வருணச்சிரமங்களைக்கடந்து வேதாந்தமகாவாக்கியக் கேள்வியினுல் கடவுளையும் தன்னையும் அறிந்த ஐக்கியாத்மஞானி-
அதிவன்ணச்சிரமி-அதிவருணச்சிரமி.
அதிவாசம் - அயல், இடம், உபவாசத்திற்கு முதனுள், கிரியை ஆரம்பச் சடங்கினென்று, மிகுமணம், வீடு.
அதிவாசனம் - வாசனபிஷேகம்.
அதிவாதம் - பெருங்காற்று.
அதிவாதி - பிறமதங்களெல்லாவற்றையுங் கண்டித்துத் தன்மதந் தாபிப்பவன்.
அதிவாலகன் - குழந்தை.
அதிவிகடம் - துஷ்டத் தன்மையான யானை.
அதிவிகடன் - மிக்ககோபி.
அதிவிசித்திரம் - மிகுந்த வாச்சரியம்.
அதிவிடம் - அதிவிடயம்.
அதிவிடயம் - அத்தம், அவிருகம், ஒரு மருந்து.
அதிவிடை - அதிவிடயம்.
அதிவித்தாரம் - அதிகவிஸ்தாரம்.
அதிவியதை - மிகுவேதனை.
அதிவியப்பு - அதிகவாச்சரியம்.
அதிவியயம் - அதிகச்செலவு.
அதிவியயி - பெருஞ்செலவாளி.
அதிவியாத்தி - அருத்தாபத்தி, மிகக் கூறல், மிகவியாபித்தல்.
அதிவிரகன் - அதிக உபாயமுள்ளவன்.
அதிவிருட்டி, அதிவிருஷ்டி } பெருமழை.
அதிவினயம் - அதிகக் கீழ்ப்படிவு, மாரீசாசாரம்.
அதிவின்னை - தன்கணவன் வேறொருத்தியை மணஞ்செய்தற்குக்காரணமாயிருந்த முதன்மனைவி.
அதிவெப்பம்-இருபத்தெட்டுத்தொகை நரகங்களிலே முதலாவதாகிய கோரத்துக்குள்ள ஐந்துநாயக நரகங்களில் ஒன்று.
அதிவெள்ளைச்சிந்தூரம் - சவ்வீரம், பறங்கிப்பாஷாணம்.
அதிவேகம் - மிகுகதி.
அதிவேதனம் - மனைவியைவிட வேறொருத்தியை விவாகம்பண்ணுதல், மிகக்கூலி.
அதீக்கிதர், அதீக்கையோர் } தீட்சையில்லாதவர்.
அதீசன் - எசமான்.
அதீசாரம் - அதிசாரம்.
அதீச்சன்-மிகவிச்சையையுடையவன்
அதீச்சுரபதவி - நவவிலாச சபைக்குரிய அதிகாரம்.
அதீச்சுரன், அதீச்சுவரன் } அரசன், கடவுள்.
அதீட்சணதை - மழுங்கல்.
அதீட்சணன் - கூர்மையில்லான்.
அதீதகலை-ஐந்துகலைகளுளொன்றாகிய சாந்தியதீதகலை, அது விகற்பஞானஞ் சாந்தமான மென்கிற நினைவுங் கழன்று பரமாகாசரூபமாய் நிற்பது.
அதீதகாலம் - இறந்தகாலம்.
அதீதப்பிரமம் - கடவுள்.
அதீதம் - எட்டாதது, கடந்தது, குரல் முன்னுந் தாளம் பின்னுமாய் வருவது, பொன், மேற்பட்டது.
அதீதர்-வானோர், முனிவர், மேலோர்

அதீதன்-எட்டாதவன், கடந்தவன், பாசத்தினின்று விடுவிக்கப்பட்டவன்.
அதீதாவஸ்தை - கீழாலவத்தை ஐந்தனுள் ஒன்று. அது கருவிகளெல்லாம் நீங்கி யொன்றும் அறியாமற் கிடக்கும் அவத்தை.
அதீதியம் - ஆசையின்மை.
அதீந்திரியம் - காணப்படாதது, புலனுக்கெட்டாதது.
அதீரம்-கரையின்மை, தைரியமின்மை.
அதீரை - அமையாதவள், மின்னல்.
அதீனதை - அடிமைத்தன்மை, கீழ்ப்படிதல், சார்ந்திருத்தல்.
அதீனத்துவம் - இட்டம்.
அதீனம் - உரித்து.
அது-அஃது, ஆருவதனொருமையுருபு.
அதுக்ககரம் - துக்கமில்லாமையைச் செய்வது.
அதுக்கம் - அடிப்பு, ஒதுக்கம், குழிவு.
அதுக்கல் - அடித்தல், அடைசுதல்.
அதுங்கல் - ஒதுங்கல், குழிதல்.
அதுட்டி - துக்கம்.
அதுநா - இப்பொழுது.
அதுநாதனம்-இப்பொழுதைக்குரியது.
அதுநாபாவம் - இப்பொழுதுள்ளது.
அதுலம் - உவமையின்மை, ஓரெண்.
அதுலன் - ஒப்பிலி, கடவுள்.
அதுலிதம் - அசைவின்மை.
அதுல்லியம் - ஒப்பின்மை.
அதூரம் - சமீபம்.
அதூவபத்தம் - சமணமதத்திற் கூறிய படி விட்டுவிட்டுப் பந்திக்குஞ் சொரூபத்தது.
அதெந்து - பயப்படாதே எனப் பொருள்படும் ஒரு பொன்மொழி.
அதேகி - தேகமில்லாதவன்.
அதேயதானம் - கொடுக்கத்தகாததைக் கொடுத்தல்.
அதேயம் - கொடுக்கத்தகாதது.
அதைத்தல்-தாக்கிமீளல், வீங்கல்.
அதைப்பு - தாக்கியெழுதல், வீக்கம்.
அதைரியம் - தைரியமின்மை.
அதொன்மையம் - நூதனம்.
அதோகதோஷம் - நவலோக சம்பந்தமான ஐவகைத் தோஷங்களு ளொன்று. அது நாபித்தானத்தின் கீழ் வாயுவைச்சஞ்சரிக்கச்செய்து அடிக்கடிமலம்நழுகல்வாயுலர்தலென்னுங் குணங்களையுண்டாக்கும் ஒருநோய்.
அதோகதி - இறங்குதல், நரகம், பள்ளம், பாதலம்.
அதோங்கம் - குதம், யோனி.
அதோசாதி - கீழ்சாதி.
அதோட்சசன் - விட்டுணு.
அதோபாகம் - கீழ்ப்பக்கம்.
அதோபுடம் - கீழ்ப்புறம்.
அதோபுவனம் - கீழுலகம்.
அதோமாயை - ஒருமாயை.
அதோமார்க்கம் - கீழ்மார்க்கமாகிய சரியை முதலியன.
அதோமுகக்கட்டு-வயிற்றிலேனும் இடுப்பிலேனுங் கருநிறத்துடன் பருமனுக எழும்பி அதிக உபத்திரவத்தையும் வியர்வையையுங் கொடுக்கும் ஒருவகைக்கட்டு.
அதோமுகம் - ஆற்றுநீர்க்கழிமுகம், கீழ்நோக்கிய முகம்.
அதோமுகரத்தபித்தம் - இரத்தபித்த ரோகத்தில் ஒருவகை. அது சலத்துவாரம் மலத்துவாரம், உரோமத்துவாரம் என்னும் மூவகைத்துவாரங்களினுலும் இரத்தம் போகச்செய்யும் ஒருவகைநோய்.
அதோமுகராசி - ஆதித்தியனின்றவிராசி.
அதோமுகவாதம் - மார்பிலும் வயிற்றிலுங் கீழ்வயிற்றிலுங் கவுட்டியிலுங் கீழேயிறங்கி வேதனைசெய்யும் ஒருவகைநோய்.
அதோமுகா - ஆற்றுநீர்க்கழிமுகம்.
அதோமுகி - கவிழ்தும்பை.
அதோமுகியான் - கன்றீன்றுகொண்டிருக்கும் பசு.
அதோரணர் - யானைப்பாகர்.
அதோலம்பம் - செங்குத்து, தூங்குதல், நிறுத்திவிட்டவரி.
அதோலோகம் - கீழுலகம்.
அதோவகனம்-அதோமுகம்.
அதோவாயு - அபானவாயு.
அதோளி - அவிடம்.
அதோனியமிகாசத்தி - ஆன்மாக்களுக்குப் போகநுகர்ச்சியை விளைவிக்கும் ஆணவ மலசத்தி.

அத் - ஒன்று, பாதி.
அத்தகடகம் - கைவளை.
அத்தகண்டாதனம் - ஒரு கால் மேல் நீட்டி, ஒருகைகொண்டு நீட்டின காலைக் கட்டி மற்றைக்கையை நிலத் தூன்றி இருப்பது.
அத்தகம் - ஆமணக்கு, கருஞ்சீரகம்.
அத்தகிரி - சூரியன் அத்தமிக்குமிடமாகச் சொல்லப்படும் மேற்குமலை.
அத்தகோரம் - நெல்லி.
அத்தகோளம் - கோளத்தின்பாதி.
அத்தக்குன்று - சூரியன் அஸ்தமானஞ் செய்யுமலை.
அத்தசகாயம் - பொருளுதவி.
அத்தசதம் - ஐம்பது, நூறுண்டு.
அத்தசந்திரன் - பாதிசந்திரன், பாலசந்திரன்.
அத்தசாமப்பூசை - நடுராத்திரியிற் செய்யும்பூசை.
அத்தசாமம் - நடுச்சாமம்.
அத்தசித்திரம்-மார்க்கண்ட பிரமாணத்தொன்று. அஃது அரைமாத்திரையோர் கலையாகக்கொண்டது.
அத்தடி - அடிக்கெடுதல், அந்தரிப்பு.
அத்தத்தாவெனல்- அத்தா அத்தாவெனக் கூறுதல்.
அத்தநாசம் - பொருளழிவு.
அத்தநாரீசர் - அத்தநாரீசுரர்.
அத்தநாரீசன் - தனதுடலிற் பாதி பெண்வடிவான சிவன்.
அத்தநாரீசுரன்-சிவன், பாதிஸ்திரீயாக விருப்பவன்.
அத்தநாரீசுவரன் - அத்தநாரீசன்.
அத்தநாள் - பதின்மூன்றாநட்சத்திரநாள்.
அத்தபள்ளம் - ஏழாமிராசி.
அத்தபாதம் - பாதி, பொருட்பாகம்.
அத்தப்பிரசுரம் - நாலேகால்நாழிகை கொண்டது.
அத்தப்பிரசுரன் - காந்துறைகோள்களிலொன்று.
அத்தப்புனருத்தம் - ஒரு நிக்கிரகத்தானம். அது முன்சொன்ன பொருளைப் பின்னுஞ் சொல்லுதல்.
அத்தப்பொருந்தி - ஒருபூடு.
அத்தமண்டபம் - கருப்பக்கிரக மண்டபம், கோவிலின் நடுமண்டபம்.
அத்தமத்தகரையோகம் -கையான் மத்தகத்திற் றடவுதல்,

அஸ்தமம், அத்தமம் - அஸ்தமிக்கை, அத்தகிரி.
அத்தமயம், அத்தமயனம் - சூரியன் முதலியனபடுதல்.
அத்தமலை - சூரியன் அத்தமிக்கும்மலை.
அஸ்தமனம், அத்தமனம் - அத்தமனகாலம், அத்தமித்தல்.
அத்தமானம் - ஆமணக்கு.
அத்தமானியம்-கண்டதிற்பாதி இறைதருதல்.
அஸ்தமிக்கை, அத்தமிக்கை - படுகை.
அத்தமித்தல் - அற்றுப்போதல், உட்குதல், படுதல், மறைதல்.
அத்தமிப்பு - படுகை.
அத்தமேற்காலாதனம் - இருகாலுமேலுறமடக்கி அக்கா லிரண்டையுங் கையாற்பற்றிக்கிடப்பது.
அஸ்தம் - அஸ்தமிக்கை, அத்தகிரி, ஒரு நட்சத்திரம், கை.
அத்தம் - அதிவிடயம் அருநெறி, ஆண்டு, ஒரு நட்சத்திரம், ஒரு நாள், ஒருமலை, கண்ணாடி, காடு, குக்கில், கை, சொற்பொருள், பாதி, பொன், முகில், வழி.
அத்தயாமம் - ஒருதினத்திற் பதினறிலொன்றுகொண்ட நேரம்.
அத்தரசிதம் - மடல்துத்தம்.
அத்தர் - சிவன், முனிவர், தேவர், வனவாசர், வாசனைப்பண்டம்.
அத்தலைப்பொருந்தி - ஒருபூடு.
அத்தவசனம் - நினைந்த பொருளைச் சொல்லும் சொல்.
அத்தவரை - அஸ்தகிரி.
அத்தவர் - ஆடையுடையோர்.
அத்தவாகனன் - சிவன்.
அத்தவாரணம் - போதுமெனல்.
அத்தவாளம் - உல்லாசம், காடு, போர்வை, வடகம்.
அத்தவுதயம் - அருத்தோதயம்.
அத்தவேடனை - பொருளிச்சை.
அத்தனை - அவ்வளவு.
அத்தன்-அருகன், வைரவன், கடவுள், கடுக்காய், குரு,உயர்ந்தோன், சிவன், பிதா, மூத்தோன், வெள்ளீயம்.
அத்தன்மை - அம்மாதிரி.
அத்தா-தமக்கை, தாய், பெண்கொடுத்த மாமி, மெய்யாய், வெளிப்படையாய்.

அத்தாட்சி - ஒப்பனை, திட்டாந்தம்.
அத்தாணி - அரசிருக்கை, சபைகூடும் இடம்.
அத்தாணிமண்டபம் - அரசிருக்கைமண்டபம், சபைகூடுமண்டபம்.
அத்தாதிகம் - பாதிக்கதிகப்பட்டது.
அத்தாதிகாரம்- பொக்கிஷாதிகாரியின் அதிகாரத்தனம்.
அத்தாதூரம் . பொருளாசை.
அத்தாந்தரம் - எதிரார்த்தம், புதுக்காரியம், வேதாந்தம், வேதநிமித்தம்.
அத்தாபித்தல் - உரப்பிநெருக்கல்.
அத்தாப்பித்தல் - உறுத்தி வெளிப்படையாய் தட்டிப்பேசல்.
அத்தாயம் - அந்தரம், கடைச்சற்சக்கரத்தின் மிதிதடி.
அத்தார்ச்சனம் - திரவியந்தேடுதல்.
அத்தார்ச்சனை - திரவியசம்பாத்தியம்.
அத்தார்த்தம் - ஆண்டிற்பாதி, பொருணிமித்தம்.
அத்தார்ந்தம் - அரைவருடம், பொருணிமித்தம்.
அத்தாவரம் - அசைவுள்ளபொருள்.
அத்தானம் - சரியற்ற இடம், கோயின் முதலியவற்றின் வாயில், மிகுந்த ஆழம்.
அத்தாணி } சபைகூடுமிடம.
அத்தாணிமண்டபம் }
அத்தான் - அக்காள்கணவன், மைத்துனன்.
அத்தி - அக்காள், அத்திநுபுரி, ஆனைவணங்கி, அதவு, அத்தன்மையன், உண்மை, எலும்பு, என்பு, ஒருமரம், கடல், கண்ணினிற்கு மோர் நரம்பு, கருவிளை, கொலை, திப்பிலி, பாதி, செய்யென்னேவல், பிடியன்யானை, மலை, யானை, வெருகமரம், கல்லத்தி, காட்டத்தி, கொடியத்தி, பேயத்தி, மலையத்தி, விழலத்தி, சந்திரவமிசத்துள்ள பரதன்குலத்திற் பிறந்த ஓரரசன், தேவசேனை.
அத்திகபம் - கடனுரை, கணவாய் மீனெலும்பு.
அத்திகம் - வருடந்தோறும் வருவது.
அத்திகா - அத்திகை.
அத்திகாயம் - தன்மாத்திரையம், அதன் மாத்திகாயம் என அசீவபதார்த்தங்களோடு கூட்டி வழங்கப்படும் ஒரு வாய்பாடு.
அத்திகிரி - காஞ்சிபுரத்துள்ளவிட்டுணு தலங்கள் எட்டனுள் ஒன்று. அது வெள்ளையானை தன்னமிச மொன்றினாலே விட்டுணுவைத் தாங்கப்பெற்ற காரணத்தாலேவந்த பெயரென்பர். இக்கோயிலைச் சுற்றிய மாடவீதி முதலிய சிறியபாகங்களுக்கு முற்காலத்தில் வழங்கிவந்த பெயர் அத்தியூர் என்பதாம்.
அத்திகை - அக்காள், அத்தன்மையளதுகை.
அத்திகோசத்தான் - ஒருகுழுஉப்பெயர். அது இளந்துணைமகார்தம்மிற் கூடிவிளையாடல் குறித்தபொழுதைக்குத் தாமே படைத்திட்டுக்கொண்டது.
அத்திகோபம் - ஒரு நயனரோகம்.
அத்திகோலம் - அழிஞ்சில்.
அத்திக்கன்னி - காசிலாங்கண்ணி, வெருகமரம்.
அத்திசஞ்சயம் - இறந்தவரின் உடம்பைத் தகனஞ்செய்தபின் எலும்புகளைக் கங்கை முதலிய தீர்த்தங்கள் ஒன்றில் இடும்படியெடுத்துத் திரட்டல்.
அத்திசமர்ப்பணம் - இறந்ததேகத்தினெலும்பைக் கங்கைமுதலிய தீர்த்தங்களிலெறிதல்.
அத்திசம்-நீர்முள்ளி சங்கு, சந்திரன்.
அத்திசயனன் } பாற்கடற்றுயின்றோன். விட்டுணு.
அத்திசயன் }
அத்திசாரம் - எலும்புத் தானங்களில் உள்ள எண்ணெய்ப்பற்றுன ஊன்-
அத்திசுரம் -எலும்பைப்பற்றின சுரம், ஒருநோய். [கொம்பு.
அத்திதந்தம் - முள்ளங்கி, யானைக்
அத்திதாரணம்-எலும்புமாலை தரித்தல்.
அத்திதி - நிலையின்மை, மரியாதையின்மை.
அத்தித்தல் - பாதிசெய்தல்.
அத்தித்திப்பிலி - யானைத்திப்பிலி.
அத்திநந்தனி - பார்வதி.
அத்திநவநீதகம் - சந்திரன்.
அத்திநாத்தி - உண்டு இல்லை எனவும் உள்ளதும் இல்லதும் எனவுஞ் சங்

தேகிக்க நின்றதெனவும் பலவேறு பொருள்களைத்தரும் ஒருவடமொழி அவ்வியயம்.
அத்திநாத்திவாதம் - உண்டில்லை என்னும் வாதம்.
அத்திபங்கம் - எலும்புமுறிதல்.
அத்திபஞ்சரம் - என்புக்கூடு, முழுவென்பு.
அத்திபாதிப்பிரியம் - சச்சிதானந்தம்.
அஸ்திபாரம் } அடிப்படை.
அத்திபாரம்
அத்திபுரசாதனி - அவுரிப்பூண்டு.
அத்திபெருக்கல் - அத்திசஞ்சயம்.
அத்திபேதம் - ஒருநாகம்.
அத்திபேதி - ஒருமருந்து.
அத்திப்பதி - அஸ்தினபுரம்.
அத்திப்பிரக்கேபம் - இறந்தவனுடைய எலும்பைக் கங்கைமுதலிய தீர்த்தங்களில் இடுதல்.
அத்திமண்டூகி - முத்துச்சிப்பி.
அத்திமாலி - சிவன்.
அத்தியக்கம் - தலைமை, பிரத்தியக்கம், மேல்விசாரணை.
அத்தியக்கினி - சீதனம், வடவாமுகாக்கினி.
அத்தியக்கினிட்டோமம் - யாகம் இருபத்தொன்றனுள் ஒன்று.
அத்தியசனம் - ஏகோத்திட்டஊண்.
அத்தியஸ்மி - மிகவும் ஐக்கியம்.
அத்தியட்சரம் - பிரணவம்.
அத்தியட்சன் - மேல்விசாரணை செய்வோன், அதிகாரி.
அத்தியந்தகோபம் - மிகுகோபம்.
அத்தியந்தகோபனம் - அதிகக்கோபம்.
அத்தியந்தபாவம் - முழுதுமின்மை.
அத்தியந்தப்பிரளயம் - ஐவகைப்பிரளயங்களுள் ஒன்று, அது முத்தி, இந்த அவத்தையில் அஞ்ஞானஞ் சிறிதுமில்லை.
அத்தியந்தம் - ஒரெண், மட்டற்றது, மிகுதி.
அத்தியந்தாதிசயோக்தி யலங்காரம் - மிகையுயர்வுநவிற்சியணி.
அத்தியந்தாபாவம் - அபாவப்பிரமாணவகைகளுள் ஒன்று. அஃதொன்றுமில்லாமை.
அத்தியயநம் - வேதமோதல், படித்தல்.
அத்தியயம் - அத்தியாயம், அழிவு, ஆக்கினை, இக்கட்டு, ஒருபொருளின்பேதத்தை ஐயத்துடனறிதல், குற்றம், சட்டம், பொல்லாங்கு, மரணம், மீறுதல்.
அத்தியயனம்-படித்தல், வேதமோதல்.
அத்தியவசம் - மிகவும் அவசமாதல்.
அத்தியவசயித்தல் - ஒருபொருளின்கண் இயல்பாய் நிகழுந் தன்மையையொழித்துத் தானெடுத்தபொருண்மேலேற்றிச் சொல்லல், தற்குறிப்புச் செய்தல்.
அத்தியவசாயம் } தானெடுத்துக்கொண்டது, முயற்சி.
அத்தியவசாயிதம்
அத்தியவசாயினி-விஷயநிச்சயஞ்செய்யுமது.
அத்தியற்பம்-மிகவும் அற்பம்.
அத்தியற்புதம் - மிக்க ஆச்சரியம்.
அத்தியாகரணம் - தொக்குநின்றதை நிரப்புதல், வாதுபேசுகை, வேதமோதல்.
அத்தியாகாரம் - அவமானம், குற்றம், மிகுபோசனம், வருவித்தசொல்.
அத்தியாகாரி - மிகப்புசிக்கிறவன்.
அத்தியாகாரியம் - ஒருவாக்கியத்தில் ஒருசொல் அங்ஙனம் வெளிப்படையாயிராத மற்றொருசொல்லை அவாவி நிற்றல்.
அத்தியாசசதுட்டயம் - ஒன்றனை மற்றொன்றாகக் கொள்ளுதலாகிய நால்வகை அத்தியாசங்கள், அவை மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தியாசம் என்பன. அவற்றுள் மித்தியாத்தியாசமாவது நித்தியமான ஆன்மா நெருப்பின் சம்பந்தத்தால் நீரினிடத்துச் சூடுவந்ததுபோல் அநித்தியமானதேகசம்பந்தத்தால் தன்னிடத்து வந்த சரித்தன் முதலிய தொழில்களைத் தன்னுடையதாகப் பாவித்தலெனவும் இதராத்தியாசமாவது தனக்கு வேறான இந்திரியங்களின் றொழில்களைத் தன்னுடையனவாகக் காண்டலெனவும், இதரேதராத்தியாசமாவது மனமுதலியன யானென்னதெனச் சங்கற்பிப்பதைத் தனதாகப் பாவித்தலெனவும், சத்தியாத்தியாச

மாவது தானல்லாததைத் தானுகக் கருது மகங்காரத்தைத் தானுகவறித லெனவும் வேதாந்திகள் கூறுவர்.
அத்தியாசநம் - ஏகோத்திட்டம்.
அத்தியாசம் - காட்டுதல், வித்தியாசம், வீற்றிருத்தல்.
அத்தியாசவாதம் - விபரீதவாதம்.
அத்தியாசனம் - அபரக்கிரியையினேர் பகுதி, ஏகோத்திட்டம்.
அத்தியாசாரம் - விதிக்கப்பட்ட ஆசாரங்களைக்கடந்து நடத்தல்.
அத்தியாசாரி - அத்தியாசாரமாய் நடப்பவன்.
அத்தியாசிரம பாவனை - பிராமியபாவனை.
அத்தியாசிரம யோகசன்னியாசி - பாரமேசுவரி பாவனையில் நிற்பவன்.
அத்தியாசை - அதிக ஆசை.
அத்தியாசோபாதி - மூன்றுவகைச் சீவ உபாதிகளுள் ஒன்று. அது அந்தக்கரண சம்பந்தமாகிய சுகதுக்கங்கள் முழுவதும் ஆத்துமா அனுபவிப்பது போல முயற்சிப்பது.
அத்தியாச்சியம் - விடப்படக்கூடாதது.
அத்தியாச்சிரமம் - ஆச்சிரமங்களைக் கடந்தநிலை.
அத்தியாச்சிரம யோகசன்னியாசி - பாரமேசுவரி பாவனையில் நிற்பவன்.
அத்தியாச்சிரமயோகி - மூவகையோகிகளுள் ஒருவன்.
அத்தியாதாநம் - கிரமத்தினின்று மாறுபடுதல்.
அத்தியாத்துமஞானம் - பரமான்மாவை அறியும் அறிவு.
அத்தியாத்தும தத்துவநூல் - அத்தியாத்துமஞான சாத்திரம்.
அத்தியாத்துமம் - யசுர்வேத உபநிடதங்களுள் ஒன்று.
அத்தியாத்துமா - சீவான்மா, பரமான்மா.
அத்தியாத்துமிக நூல் - அத்தியான்மிக நூல்.
அத்தியாத்துமிகம் - கடவுள் கடுத்தது தன்னுல்வருந் துன்பம்.
அத்தியாபகன் - வேத மோதுவிப்போன், உபாத்தியாயன்.
அத்தியாபநம், அத்தியாபனம் - ஓதுவித்தல், வேதமோதுவித்தல்.
அத்தியாபிதம் - படிக்கப்பட்டது.
அத்தியாயநம் - அத்தியயநம்.
அத்தியாயம் - இலக்கிய செய்யுட்பகுதி காண்டம், சருக்கம், படலம், பரிச்சேதம், வேதநூலைவிரித்த இலக்கியத்தின் கூறுபாடு, வேதம்.
அத்தியாரூடம் - மிகவும் உயர்ந்தநிலை, மிகுந்த வளர்ச்சி.
அத்தியாரோகணம், அத்தியாரோகம் - ஏறுதல்.
அத்தியாரோபணம், அத்தியாரோபம் - ஒன்றையொன்றிலேற்றல்.
அத்தியாரோபனம் - ஒன்றையொன்றிலேற்றுதல், கயிற்றைச் சர்ப்பமாக விளக்குதல்போல ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக விளக்குதல்.
அத்தியாவசியகம் - மிகுந்த அவசியம்.
அத்தியாவாகனிகம் - சீதனம்.
அத்தியானம் - தியானுபாவம்.
அத்தியான்ம ராமாயணம் - விசுவாமித்திரரால் செய்யப்பட்ட ஓர் உபதேச நூல்.
அத்தியான்மர் - அண்டபிண்டம் இரண்டிலும் வியாபாரமாயுள்ள பதின்மூன்று வாயுக்கள்.
அத்தியான்மிகசடாகமம் - பிறன் படிக்கும் ஆகமவாக்குச் செவியினுற் கேட்கப்பட்டு உணரோசையாகிய மத்திய வாக்குரூபமா யிருதயத்திற்றோன்றி நிற்பது.
அத்தியான்மிகநூல் - பதிநூல், அது சாங்கியம், பதஞ்சலியம், வேதாந்தம் எனப்படும.
அத்தியான்மிகம் - அத்தியாத்துமிகம்.
அத்தியான்மீகநூல் - மூவகைச் சாத்திரம்.
அத்தியுத்தி - அதியுத்தி அலங்காரம், பெருமைப்படுத்திப் பேசுதல், வர்ணித்துப்பேசுதல்.
அத்தியுத்தி யலங்காரம் - மிகுதிநவிற்சியணி.
அத்தியூடன் - சிவபெருமான்.
அத்தியேதா - படிக்கிற மாணக்கன்.
அத்திரசத்திரம் - அம்பும் வாளும்.
அத்திரசந்தானம் - அம்பின் தொடர்ச்சி.

அத்திரசாஸ்திரம் - வில்வித்தை.
அத்திரசிகிற்சகன் - சத்திர வைத்தியஞ் செய்வோன்.
அத்திரசிகிற்சை - சத்திரவைத்தியம்.
அத்திரதர் - காற்றேரரசர்.
அத்திரதேவர் - ஆயுததேவர்.
அத்திரத்தாமன் - அசுவத்தாமன்.
அத்திரபரிட்சை - கலைஞானமறுபத்து நான்கினுள் ஒன்று, வில்வித்தை கற்கை.
அத்திரப்பிரயோகம் - அம்புசெலுத்தல்
அத்திரம் . அம்பு, இலந்தை, கடுக்காய்ப்பூ, கழுதை, குதிரை, கைவிடு படை, நிலையின்மை, மலை, முன் விடுமம்பு.
அத்திரயூகம் - ஒருவகைப்படைவகுப்பு-
அத்திரலாகவம் - அத்திரப்பிரயோக வன்மை.
அத்திரவர்-விசுவதேவர்களிலொருவர்.
அத்திரா - அரசு.
அத்திராகாரம் - ஆயுதசாலை.
அத்திராசம் - பயமின்மை.
அத்திராதரம் } அம்புக்கூடு அம்புறை
அத்திராதாரம் } தூணி.
அத்திரி - உலைத்துருத்தி, ஒட்டகம், ஓரிருடி, அவர் அத்திரிமாமுனிவர், கணை, கழுதை, குதிரை, சூரியன், தருமநூல் பதினெட்டினொன்று, மலை, விண்.
அத்திரிகீலை - பூமி.
அத்திரிகை - ஓரப்சரப்பெண்.
அத்திரிசாதன்-சந்திரன்முதன்மூன்று வருணத்தாருள் ஒருவன்.
அத்திரிசாரம் - இரும்பு.
அத்திரிசிருங்கம், சிகரம்.
அத்திரிசை } பார்வதிதேவி.
அத்திரிநந்தினி } பார்வதிதேவி.
அத்திரீசன் - இமையம், சிவன்.
அத்திரு - அரசமரம்.
அத்திரோகம் - மெத்தெனவு.
அத்திலை - செருப்படை.
அத்திவாரம் - அடி, அடிமரம்.
அஸ்தினபுரம் } அத்தினபுரம் அஸ்தி
அத்தினபுரம் } னபுரி, இது வங்காள வடமேற்கு மாகாணங்களில் மீரட்டு என்னும் ஊர் மகா பாரதத்திற் சிறந்த சந்திரவமிசத்தரசர்களாகிய பாண்டவர்களின் இராஜதானிப் பட்டினம்.
அஸ்தினபுரம் } அத்தினபுரம்.
அத்தினபுரி } அத்தினபுரம்.
அத்தினி - நால்வகைப்பெண்களிலே ஒருத்தி, பெண்யானை.
அஸ்து - அப்படியாக.
அத்து - அசைச்சொல், அரைஞாண், அரைப்பட்டிகை, இசைப்பு, காரியை, சிவப்பு, செவ்வை, தைப்பு.
அத்து } தெலுங்கில், எல்லை.
ஹத்து } தெலுங்கில், எல்லை.
அத்துகமானி - அரசமரம்.
அத்துகம் - ஆமணக்கு.
அத்துச்சம்-கிரகங்களின் அதிகவுச்சம்.
அத்துணை - அவ்வளவு.
அத்துதல் - அடைதல், அரத்தைப் பூண்டு, இசைத்தல், பொருத்தல்.
அத்துமம் - அரத்தை.
அத்துமானி - அரசமரம்.
அத்துருக்கம் - அகழ்சூழ்ந்தகோட்டை.
அத்துரோகம் - துரோகமின்மை.
அத்துலாக்கி - சருஞ்சீரகம்.
அத்துவகமனம் - பிரயாணம்பண்ணல்.
அத்துவகன் - தீர்த்தயாத்திரைக்குவெளிப்பட்டு வழிநடப்போனாய் உண்டியின் பொருட்டு வந்த யாசகன்.
அத்துவசுத்தி - ஆறத்துவாக்களினுங் கட்டுப்பட் டிருக்கின்ற போகங்களெல்லாவற்றையும் ஏககாலத்திலே புசித்துத் தொலைப்பித்து மோட்சங் கொடுத்தல்.
அத்துவசோதனை -பிரமசோதனை செய்தல்.
அத்துவந்திரயம் - அத்துவாக்கள் மூன்று. அவை சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் என்பன.
அத்துவரிட்டம் - வழியிலிருப்பது.
அத்துவம் - இரண்டொன்ருயிருத்தல், ஒன்றிப்பு, சிவப்பு, வழி.
அத்துவயதாரகம் - யசுர்வேத உபநிடதங்களுளொன்று.
அத்துவயம் - இரண்டன்மை, பிரமமும் பிரபஞ்சமும் ஒருபொருளான தன்மை.
அத்துவயவாதி - பிரமமும்பிரபஞ்சமுமொன்றெனச் சாதிப்போன், பௌத்தன்.

அத்துவயன் - பௌத்தன்.
அத்துவரியு-யசுர்வேதம், யாகபுரோகிதன்.
அத்துவரியுவேதம் - யசுர்வேதம்.
அத்துவர் - பிரமஞானிகள்.
அத்துவர்க்கயம் - கருஞ்சீரகம்.
அத்துவர்க்காயம் - கருஞ்சீரகம், சீரகம்.
அத்துவலிங்கம் - ஆன்மதத்துவம் அடிப்பாகமும் வித்தியாதத்துவம் நடுப்பாகமுஞ் சிவதத்துவங் கடைப்பாகமுமாக அமைந்த சிவலிங்கம்.
அத்துவா-ஆன்மாக்களைப் பரகதியடைவிக்கை காரணமாகிய வழி, அது மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என ஆறு.
அத்துவாகாயாரோணம் - ஒருதீட்சை.
அத்துவாக்காயம் - கருஞ்சீரகம்.
அத்துவாசங்கற்பவாதி - அத்துவாவடிவாகச் சிவனைப்பாவிப்போன்.
அத்துவாசுத்தி - ஆத்துமாக்களிலுஞ் சஞ்சிதமாயிருந்த கன்மங்களையெல்லாம் நசிப்பித்தல்.
அத்துவாசுத்திபண்ணல் - அத்துவாக்களிற் சனனங்களுக்கு எதுவான கன்மங்களை எல்லாஞ் சுத்திகரித்தல்.
அத்துவாசைவம் - ஒரு சைவம். அது சத்திநிபாதம் வரப்பெற்ற சைவன் சிவனை வழிபடும் நெறி.
அத்துவாந்தம் - காலைமாலை வெளிச்சம்.
அத்துவாமூர்த்தி - பிரபஞ்சத்திற் கலந்து நின்று சேட்டிப்போன்.
அத்துவானம் - கட்டம், செவ்வானம், பாழ்ங்காடு.
அத்துவிதநிலை - சிவமு மான்மாவுந் தம்முள் வேறுபடாத ஒற்றுமைப்பட்டு நிற்றல்.
அத்துவிதபாஷியம் - வியாசசூத்திரத்திற்குச் சங்கராச்சாரியர் செய்த பாஷியம். இதுபரமான்மா ஜக்கியமான அத்துவித சுவரூபத்தைக் கூறுவது.
அத்துவிதம்-இரண்டல்லாதது, அத்துவிதம் அத்துவிதம், பாணினீயம். ஆறாவது அத்தியாயம் மூன்றாவது பதம், எழுபத்துமூன்றாவது "நலோபோநஜ்ஞ:" என்னும் சூத்திரவிதியால் நகாரம் அகாரமாயிற்று பேதப்பொருளிரண்டு தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம் அஃதாவது பொருளிரண்டா யிருந்தும் வேறறக்கலந்து நிற்குந்தன்மை.
அத்துவிதர் - சிவத்தோடு இரண்டறக் கலந்தவர்.
அத்துவிதாநந்தம் - எண்வகையாநந்தங்களிலொன்று. அது சீவன் வேறு, பிரமம் வேறெனக்கொள்ளுந் துவித ஞானம் நீங்கியவிடத் துண்டான ஆநந்தம்.
அத்துவிதியம் - ஒன்றிப்பு.
அத்துவிதியன் - ஒன்றானவன்.
அத்துவை - கோழையினது மூழையினதுங் கலப்பு, தெரு நேரம்.
அத்துவைதம் - பரமாத்துமாவும் சீவாத்துமாவும் ஒன்றென்கை.
அத்துவைதவாதி - அத்துவிதமேமெய்யென்று சாதிப்போன். இவன் சிற்சத்தியே சகத்துக்கு உபாதான காரணமென்பன்.
அத்துவைதி - அத்துவிதக்கொள்கையுடையோன்.
அத்தூரம் - மரமஞ்சள்.
அத்தேயம் - களவுசெய்ய நினையாமை, களவு செய்யாமை.
அத்தை-அக்காள், குரு, தலைவி, மாதா, மாமி, முன்னிலை அசைச்சொல்.
அத்தையர் - மாமிமார்.
அத்தோ - ஓர் அதிசய இரக்கச்சொல், இரக்கச்சொல்.
அத்தோதயம் - அருத்தோதயம், ஒரு விசேடநாள். இது அறுபதுவருஷத்துக்கொருதரம் தைமாதத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமையில் சூரியன் மகரத்திலும் சந்திரன் விதிபாதயோகங் கூடின திருவோண நட்சத்திரத்திலும் இருந் தொன்றாக உதயமாதல், இந்நாளில் ஸ்நாநம் தருமம் முதலியன செய்தால் விசேடமென்பது திண்ணம்.
அத்தோர்யாமம் - ஒரு யாகம், அது சோதிட்டோமயாகத்தின் இறுவாயாகிய எழாம் பகுதி.
அநங்காரம் - அகங்காரமின்மை.
அநகம் - பாவமின்மை, மாசின்மை.

அநகர் - அழகுடைய ஆடவர், அழகுள்ளவர், பாவமற்றவர், மறுவற்றவர், மேன்மக்கள்.

அநகன் - அருகன், கடவுள், சிவன், விஷ்ணு, பாவமில்லாதவன்.

அநக்கம் - குருடு.

அநக்கரம் - சொல்லத்தகாதது, நிந்தை.

அநக்கரன்-ஊமை, கல்வியில்லாதவன், சொல்லத்தகாதன சொல்லுவோன்.

அநக்கினி-அக்கினியல்லாத வஸ்து. அக்கினி யில்லாமை, உதராக்கினியின் சேட்டையற்றவன், விவாகம் பண்ணுதவன்.

அநங்கம் - ஆகாயம், வாயு, இருவாட்சி, உடலின்மை, மல்லிகை.

அநங்கர் - மதனெனப்படுவார் பலர்.

அநங்கலீலை - மதனநூல் வழியாடும் விளையாட்டு.

அநங்கன் - உடலிலான், கடவுள், மன்மதன்.

அநங்கு - மன்மதன்.

அநசூயை - அழுக்காறின்மை, அத்திரிமுனியின் மனைவி.

அநச்சரசத்தம் - எழுத்தொலி யல்லாதவொலி.

அநச்சராத்மகம் - எழுத்தல்லாததனுலாய வோசை.

அநச்சுவம் - குதிரையல்லாதது.

அநதிகதம் - அறியப்படாதது, படிக்காதது.

அநதிகதார்த்தந்திரு - ஒருக்காலு மறியாதவஸ்துவை அறிவிப்பது.

அநதிகதார்த்தம் - அறியப்படாதவஸ்து

அநதிகாரம் - அதிகாரமின்மை.

அநதிகாரி - அதிகாரமில்லாதது, அதிகாரமில்லாதவன்.

அநதிக்கிரமம் - அதிக்கிரமமின்மை.

அநதிக்கிராந்தம் - கடவாதது.

அநதிக்கிராந்தவிந்துகபரசிவம் - விந்துவை நீங்காத நிலையர்- இவர் மகாமாயையினது பரநாதப் பிரதேசத்தை அதிட்டிப்பவர்.

அநதிக்கிராந்தவிந்துகபராசத்தி - சிவனுடைய நவபேதத்து ளொன்று. அது பரவிந்துவை அதிட்டிக்குஞ் சிவசத்தி.

அநதிசயம் - அதிசயமின்மை.

அநதிதேசம் - அதிதேசமின்றி யுணர்த்துவது.

அநதிரோகம் - அதிரோகமின்மை.

அநத்தம் - பயனற்றது.

அநத்தியயனம் - ஓதுத லொழிந்திருக்க வேண்டியகாலம்.

அநத்தியவசாயாத்துமா - பாவம். அதுகிராககவாத்துமாவுடைய சுபாவம்.

அநத்தியாயம் - அதத்தியயனம்.

அநநுபாடனம் - தோல்வித்தானம் இருபத்திரண்டனு ளொன்று. அது பிறன்கூறிய பொருளை அனுவதிக்க மாட்டாமை.

அநந்த - நிவிர்த்திகலையிற்பிரிதிவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவனங்களுள் ஒன்று, வித்தியாகலையிலே இராகதத்துவத்திலுள்ள ஐந்துபுவனங்களுள் ஒன்று.

அநந்தகீர்த்தி - அளவிறந்தகீர்த்தியுடையோர்.

அநந்தகோடி - எண்ணத்தொலையாதன.

அநந்தசதுட்டயம் - ஆருகமதத்திற்சொல்லப்பட்ட மோட்சத்திற் பெரும் பயனுகிய அனந்தஞானம், அனந்த தரிசனம், அனந்தவீரியம், அனந்த சுகம் என்னும் நான்குவகை.

அநந்தசதுர்த்தசி - புரட்டாசிமாதத்துச் சுக்கிலபக்கச் சதுர்த்தசி திதி. இது விட்டுணுவைப்பூசிக்கும்ஒருவிசேஷ தினம்.

அநந்தசத்தி - அளவிலாற்ற லுடைமை. இது கடவுளுடைய அறு குணங்களுள் ஒன்று, கடவுள்.

அநந்தசயனம் - சர்ப்பசயனம், மலையாளதேசத்துள்ள ஒரு விட்டுணுதலம்.

அநந்தசயனன் - சேடசயனன், விட்டுணு.

அநந்தசாயி - விட்டுணு.

அநந்தசீரிடை - வாசுகியின் மனைவி.

அநந்தசுகம் - வரம்பிலா இன்பம்.

அநந்தசொரூபி - கடவுள்.

அநந்தஞானம் - வரம்பிலாஅறிவு.

அநந்தஞானி - கடவுள், பார்ப்பதி, பிரமன்.

அநந்ததரிசனம் - வரம்பிலாக்காட்சி.

அநந்ததிட்டி - இந்திரன், சிவன்,

அநந்ததிருதியை - புரட்டாசி மார்கழி வைகாசி என்னும் மாதங்களில் வரும் சுக்கிலபக்கத்திருதியை.

அநந்ததீர்த்தகிருத்து - பதினான்காஞ் சமணதீர்த்தகன்.

அநந்ததீர்த்தம் - சிதம்பரத்திலே திருக்கோயிலுக்குமேற்கே திருவனந்தேச்சுரத்துக்கு முன்னுள்ள ஒருதீர்த்தம்.

அநந்ததேவன் - அநந்தேசுவரன், ஆதிசேடன், சேடசயனத்திற் றுயில் கொள்ளுகிறவிட்டுணு.

அநந்ததை - நித்தியம்.

அநந்தத்துவம் - அனந்தமாயிருக்குந் தன்மை.

அநந்தநாதன் - சருவேசன்.

அநந்தநான்மை - அனந்தசதுட்டயம்.

அநந்தமயன் - அந்தரியாமி.

அநந்தம் - அளவின்மை, ஆகாயம், ஒரெண், கோளகபாஷாணம், குப்பைமேனி, சிறுகாஞ்சோறி, பொன்.

அநந்தரம் - மேல்.

அநந்தரூபன் - அளவிறந்த ரூபங்களைக் கொண்டவன், சிவன், விட்டுணு.

அநந்தர் - சுத்ததத்துவங்களுள் ஒன்றாகிய ஈசுரதத்துவத்திலிருக்கும் அட்டவித்தியேசுரர்களுக்குள்ளே தலைமை பெற்றவராகிய சுத்தாத்துவ கருத்தாவாயிருப்பவர்.

அநந்தலோசநன் - கடவுள், புத்தன்.

அநந்தவாதம் - ஒருவகை வாதரோகம் அதுமுகமுங்கழுத்துஞ் சோரும்படி செய்வது.

அநந்தவிபவை - பார்வதி.

அநந்தவியம் - சுவாயம்புதவாகமத்திலே சொல்லப்படும் ஒருமண்டலம், பஞ்சபாண்டவருள் தலைவனான தருமனுடைய ஓர் சங்கு.

அநந்தவிரதம் - புரட்டாசிமாதச் சுக்கில சதுர்த்தசியில் விட்டுணுசமயத்தார் அனுட்டிக்கும் ஒருவிரதம்.

அநந்தவீரம், அநந்தவீரியம் } அளவில்லாதவீரம்.

அநந்தவீரியன் - சைனமதத்திற்சொல்லப்பட்ட இருபத்துமூன்றாந் தீர்த்தகரன்.

அநந்தன் - அருகன், கடவுள், சினன், சேடன், சோரபாஷாணம், திருமால், பலபத்திரன்.

அநந்தாசனம் - பஞ்சாசனங்களுள் ஒன்று. அது சர்ப்பாசனம்.

அநந்தானந்தம் - வரம்பிலாவானந்தம்.

அநந்தியம் - அளவற்றிருக்கை, எண்கூற்றிருக்கை, நித்தியம்.

அநந்தீச்சுரம் - சிதம்பரத்திலே பதஞ்சலி முனிவராலே தாபிக்கப்பட்ட கோவில்.

அநந்தேசுரர் - அநந்தேசுவரர்.

அநந்தேசுவரர் - ஈசுவரதத்துவத்திலுள்ள எட்டுப்புவனங்களுள் ஒன்று. சுத்தாசுத்தாத்துமாவிற்குக் கருத்தராகிய அனந்தர். இவர் ஈசுவரதத்துவத்தைத் தமதிருப்பாகக்கொண்டு அத்தத்துவத்திற் கபிமான தேவதையாயிருப்பவர்.

அநந்தை - பார்வதி, அழிவில்லாதவள், ஒருசத்தி, பூமி.

அநந்நியசன் - மன்மதன்.

அநந்நியம் - அன்னியமல்லாதது, ஒற்றுமை.

அநந்நியை - அபின்னசத்தி.

அநந்வயாலங்காரம்- இயைபின்மையணி

அநபக்கிரியை-கடனிறுக்காமை, நோப்படுத்தாமை, பழிக்குப்பழி வாங்காமை.

அநபத்தியம் - பிள்ளையின்மை.

அநபரன் - பிரமன்.

அநபாயம் - அழிவின்மை, குறைவின்மை, தேய்வின்மை.

அநபாயன் - அநபாயனென்னுஞ் சோழச்சக்கரவர்த்தி, அழிவில்லாதவன், சிவன், நிலையாயிருப்பவன்.

அநபாயோகம் - சந்திரனுக்குப் பனிரண்டாம் இடத்திற் சுபக்கிரகங்கள் நிற்குநிலை.

அநபிகிதகருத்தன் - அநபிகித கருத்தா.

அநபிகிதகருத்தா - தன்செயலையுணர்த்தும் வினைக்கு எழுவாயாகாது மூன்றாம் வேற்றுமையிலே அல்லது நான்காம்வேற்றுமையிலேநிற்குங்கருத்தா "மகன் றந்தையாலடிக்கப்பட்டான்!' என்னும்வாக்கியத்திலேஅடித்தலைச் செய்த தந்தை மூன்றாம் வேற்றுமையினிற்பதும் அவர்க்குச் செய்யத்தகும் "அக்காரியம்" என்னும் வாக்கியத்திலே செய்தற்கருத்

தாவாகிய "அவர்" நான்காம் வேற்றுமையிலே நிற்பதும் போல்வது.
அநபிகிதகருமம் - செய்வினைக்கெழுவாயாகாது. ௨-ஆம், ௩-ஆம் ௪-ஆம், ௬-ஆம் வேற்றுமைகளுள் ஒன்றனது ரூபமாகவருஞ் செயப்படுபொருள். அது "மரத்தை தக்குறைத்தான்" "ஆலத்தினு லமுதாக்கிய கோன்" "அவட்குக்கொள்ளுமிவ்வணிகலம்" "குடும்பத்தினது குற்றமறைப்பான்" என்பவற்றிற்போலவருவது.
அநபிகிதம் - சொல்லப்படாநிலை, தெரியாநிலை.
அநபிமதம் - சம்மதமின்மை.
அநபிவியத்தம்-வெளிப்படையாகாதது.
அநபிவியத்தி - வெளிப்படையாகாமை.
அநபேட்சன் - ஆசையில்லாதவன்.
அநபை - அநபாயோகம்.
அநப்பியாசம் - அப்பியாசமின்மை.
அநம் - சோறு.
அநம்பு - சாதகப்புள், நீரில்லாதது.
அநயம் - அதிட்டவீனம், தீங்கு, வருத்தம்.
அநரண்ணியன் - சூரியவமிசத்திற்பிறந்த பாணனென்பவனுடைய மகன்.
அநரவன் - பஞ்சபட்சிபாஷாணம், வெந்தோன்றி.
அநருகம் - தகுதியற்றவர்.
அநர்க்களம் - தடையின்மை.
அநர்த்தகம் - பிரயோசனமின்மை.
அநர்த்தம் - பயனிலாச்சொல்.
அநலக்கிரி - அண்ணுமலை.
அநலசனபட்சி - தழல்விழுங்கிப்பறவை
அநலநட்சத்திரம் - செவ்வாய்நின்ற நாளுக்கேழாநாள், பதினுன்காநாள், பதினுருநாள், இருபத்தைந்தாம் நாளாய்வந்து தோஷமடைந்தநாள்.
அநலபித்தம் - உண்பதைச் சீரணிக்கச் செய்யும உதராக்கினி.
அநலம் - அக்கினி, அநலநட்சத்திரம், உட்டணம், சித்திரைமூலம், சிவாகமம் இருபத்தெட்டினுள் ஒன்று, திருத்தியற்றது, பித்தம்.
அநலர் - அக்கினியுடையவர்.
அநலல் - கனலுதல், வெப்பமாயிருத்தல்.
அநலன் - அக்கினிதேவன், அட்டவசுக்களிலொருவன்.
அநலாடி - சிவன்.
அநலி - சூரியன், நெருப்பு.
அநலுதல் - கனலுதல்.
அநலேறு - இடியேறு.
அநலோடுவேந்தன் - கார்முகிற் பாஷாணம்.
அநல்-அக்கினி, உட்டணம், கொடிவேலி,பித்தம்,மூலாக்கினி, வன்னியிலை.
அநல்காலி - சூரியகாந்தக்கல்.
அநல்வென்றி - தங்கம்.
அநவசரம்-அகாலம்,ஓய்வுநேரமின்மை.
அநவச்சின்னத்துவம் - அனவச்சின்னமாயிருக்குந்தன்மை.
அநவச்சின்னம் - எல்லைப்படாதது.
அநவதானம் - அவதானமின்மை.
அநவத்தாதோஷம் - முடிபுகாணுமையாகியதோஷம்.
அநவத்தானம்-தவருனநடை, தவருனநிலை, நிலையின்மை, வாயு.
அநவத்திதம் - நிலையற்றது.
அநவத்தை - அநவத்தாதோஷம்.
அநவத்தைப்படுதல் - முடிபுகாணுது முட்டுப்படுதல்.
அநவபாசம்-தோற்ருமை,வெளிப்படாமை.
அநவரதம் - எப்போழ்தும்.
அநவலோபம் - இச்சித்தபண்டங்களைத் தந்து திருத்திசெய்தல்.
அநவலோபனம் - கருப்பந்தரித்த மூன்ருமாதத்திற் செய்யப்படுங் கருப்பக்கிரியை.
அநவ்வியயகிருத்து - அவ்வியயமல்லாத கிருத்து.
அநற்கல் - சிக்கிக்கல்.
அநற்புதம் - அற்புதமின்மை.
அநற்றல் - எரித்தல், கனலச்செய்தல், சுடுதல்.
அநற்றிரள் - சோதிரூபி.
அநற்றுதல் - எரித்தல், சுடுதல்.
அநாகதசிவமூர்த்தி - அனுகத சிவமூர்த்தங்கொண்டது.
அநாகதசிவன் - பரமசிவத்திலிருந்து தோன்றினவருஞ் சதாசிவத்தைத் தோற்றுவித்தவருஞ் சகள நிட்கள போகருமான சிவன், இவர் வியாபினிக்குமேல் நாலங்குல அளவிலிருக்கின்ற வியோம என்னுஞ் சமனையின் தானத்தை வியாபித்தவர்.

அநாகதநாதம் - பராசத்தி.
அநாகதம் - அடிக்கப்படாமை, அறியப்படாதது, சம்பாதித்துக் கொள்ளப்படாதது, சொல்லப்படாதது, நோய்படுத்தப்படாமை. வெளுக்கப்படாததும் புதிதுமானசீலை, மானுடசரீரத்திலுள்ளவாகச் சொல்லப்படு மாறுதாரங்களின் நான்காவது. அது மணிபூரகத்துக்குப் பத்துவிரற் பிரமாணத்திற்குமேல் இருதயகமலத்தின் முக்கோணவடிவினதாய்ப் பன்னிரண்டிதழுடையதா யிருக்கும், வந்தடையாமை, வருங்காலம்.
அநாகந்துகம் - அனுதியாயுள்ளது, இடையில்வந்த தல்லாதது.
அநாகாமி - பௌத்தமதத்தின் தியானங்க ளைந்தனுள் மூன்றாவது.
அநாகாரம்-உணவின்மை,வடிவின்மை.
அநாகாலபிருதன் - பஞ்சகாலத்திலே தன்னைக் காத்துக்கொள்ளும்படி ஒருவனுக் கடிமையானவன்.
அநாகாலம் - பஞ்சகாலம்.
அநாகுலன் - இடைச்சங்கத்தார் காலத்திருந்த தெய்வப்பாண்டியன்.
அநாசத்தன் - விருப்பமில்லாதவன்.
அநாசரணம் - ஒழுக்கந்தவறின நடை, துன்னடை.
அநாசரித்தல் - துராசாரமாய் நடத்தல்.
அநாசாரம்-உபசாரமின்மை,உலகநடைக்கு மாறு, சீலயுடாமை, நல்லொழுக்கமின்மை, நிருவாணம், மரியாதையின்மை.
அநாசாரன் - நல்லொழுக்கமில்லாதவன்.
அநாசிகன் - மூக்கில்லாதவன்.
அநாசிரயம் - சார்பின்மை, பற்றுக்கோடாதலின்மை.
அநாசிரிதம் - சார்பில்லாதது, பற்றுக்கோடாகாதது.
அநாசிரிதர் - அநாசிரிதையைப்பொருந்தினவர், ஒன்றைப்பற்றுக்கோடாகக் கொண்டு பொருந்தாதவர்.
அநாசிரிதன் - அபேட்சியாதவன்.
அநாசிரிதை - சாந்தியாதீதகலையிற் சிவதத்துவத்திலிருக்கும் பத்துப் புவனங்களுளொன்று. சோடசகலைப்பிராசாதத்திற்பதினொன்காவதுகலை. இது வியாபினிகலைக் கப்பாலுஞ் சமனைகலைக் கிப்பாலும் நடுவிலிருக்கின்ற நான்குகலைகளுள் நான்காவதும் அந்நான்கி லொன்றான அனுதைகலைக்குமே லோரங்குலத்தில் துவாசாந்தத்து ளிருப்பதுமான அதன்வடிவு வட்டமென்று சொல்வர்.
அநாசிரியர் - ஆசிரியரல்லாதவர்.
அநாதகி - சந்நியாசி.
அநாதபம் - குளிர்மை, நிழல், வெயிலின்மை.
அநாதம் - அந்தரித்தது, ஆதரவற்றது.
அநாதரட்சகர் - கடவுள்.
அநாதரம் - மதியாமை.
அநாதரித்தல் - பற்றிக்கொள்ளாது விடுதல்.
அநாதர் - ஆதரிப்போரில்லாதவர்.
அநாதன் - ஆதரவில்லாதவன்.
அநாதி - கடவுள், சிவன், புராதனம்.
அநாதிகரம்பு - நெடுநாளாகப் பாழாய்க்கிடந்தநிலம்.
அநாதிகாரணம்-பிரபஞ்சத்தினது முதற்காரணமாகிய மாயை.
அநாதிசடிலன் - சிவன்.
அநாதிசித்தபதி-அநாதியாய்ச் சித்தித்த பதித்துவமுடையவர்.
அநாதிசித்தன் - அருகக்கடவுள்.
அநாதிசைவம்-பதினறுவகைச் சைவத்துளொன்று. அது பதி பசு பாசம் என்னும் மூன்றும் அநாதிநித்தமாய் வியாத்தமாய் இருக்கின்றன என்றும் பதிப்பொருளாகிய சிவனை முக்குணவிகற்ப மில்லாதவனுய்க் கண்டு விபூதி உருத்திராக்கம் பஞ்சாக்கரம் குருலிங்கவேடம் பொருளாய்க் கொண்டு சிவபூசைசெய்து பாசம் நீக்கி ஆன்மாவானது சிவனுடன் சேர்ந்தவனைக் கும்பிட்டிருத்தல், பரமுத்தியென்றுஞ் சொல்லும்.
அநாதிசைவன் - சதாசிவமூர்த்தி.
அநாதிதரிசு - நெடுநாளாகப் பாழாய்க்கிடந்தநிலம்.
அநாதித்துவம் - தொடக்கமில்லாத நித்தியத்தன்மை.
அநாதிநாதர் - கௌளயாமளாதிகளைக் கற்பித்த நவநாத சித்தர்களில் ஒருவர்.
அநாதிநின்மலன் - அநாதியாகவே மலரகிதமாயிருப்பவன்.

அநாதிபஞ்சர் - நெடுநாளாய்ப் பாழாகக் கிடந்த நிலம்.
அநாதிபந்தம் - அநாதியாயுள்ள பந்தம்.
அநாதிபீடு - நெடுநாளாய்ப் பாழாகக் கிடந்த நிலம்.
அநாதிபெத்தசித்து - அநாதியே ஆணவ மலத்திலேகட்டுண்டுகிடந்த ஆன்மா.
அநாதிபெத்தன் - அநாதியே மலத்திற் கட்டுண்டவன்.
அநாதிபோதம் - இயல்பாகவே ஞான முடைமை, இக்குண மலாகிதமான ஆன்மாவுக்குரியதாகலால் இதனை அநாதிமுத்தத்தன்மையில் அடக்குவர்.
அநாதிபோதன் - நித்திய ஞானமுடையவனான கடவுள்.
அநாதிமலமுத்தர் - இயல்பாகவே பாசங்களின் நீங்கினவர்.
அநாதிமான் - அநாதியுள்ளதாயிருப்பது.
அநாதிமுத்தசித்து - இயல்பாகவே பாசங்களின் நீங்கினவனான கடவுள்.
அநாதிமுத்தசிவன் - அநாதியே மலபந்தமின்றியிருக்குஞ் சிவன்.
அநாதிமுத்தத்துவம் - இறைவனது குணங்களுள் ஒன்று. அது இயல்பாகவே பாசங்களில் நீங்கியிருக்குந் தனிமையாம்.
அநாதிமுத்தன் - அநாதியே மலத்தாற் பந்திக்கப்படாத கடவுள்.
அநாதியமலன் - அநாதியே மலமில்லாத நிட்கள சிவன்.
அநாதியன் - அநாதியாயுள்ள கடவுள்.
அநாதியுருத்திரர் - ஈசுர தத்துவத்திலிருக்கிற பதினெட்டு ருத்திரர்களுள் ஒருவர்.
அநாதிரேக்கியம் - மிகுதியின்மை.
அநாதீநவம் - ஆதீனமின்மை, சுத்தம்.
அநாதுரம் - அறிவின்மை, சிரமமடையாமை, தைரியம், நோயின்மை.
அநாதேயம் - ஆதேயமற்றது.
அநாதை - ஒருசத்தி, அது ஞானசொரூபமாய் ஞானசத்தியாயிருக்கும் சாந்தியாதீதகலையிற் சிவதத்துவத்திலிருக்கும் பத்துப்புவனங்களுள் ஒன்று. சோடசகலைப் பிரசாதத்திற் பதின்மூன்றுவது கலை. அது வியாபினிகலைக்கப்பாலுஞ் சமனைகலைக் கிப்பாலும் நடுவிலிருக்கின்ற நான்குகலைகளின் மூன்றுவதும் அந்த நான்கிலொன்றான அநந்தைகலைக்கு மேலோரங்குலத்திற் றுவாதசாந்தத்துளிருக்கின்றதுமானது.
அநாத்தன் - ஆத்தனல்லாதவன்.
அநாத்துமலட்சணம் - ஆத்துமாவல்லாததனிலட்சணம் அவ்விலட்சணங்கள் அசத்து, சடம் என்பன.
அநாத்துமா - ஆத்துமாவல்லாத பதார்த்தம், தன்னையடக்கி ஆண்டுகொள்ளாமை.
அநாத்தை - அவசங்கை, நிலையின்மை.
அநாந்தம் - இறுதியல்லாதது.
அநாமயம் - நோயின்மை.
அநாமயன் - கடவுள், நோயில்லாதவன்.
அநாமிகை - ஆழிவிரல், பெயரில்லது.
அநாமை - அநாமிகை.
அநாயகம் - அரசாட்சியின்மை, முதன்மையின்மை.
அநாயதம் - தடையினில்லாதது, நீளமில்லாதது, பிரிவின்றி நெருங்கிய தொடராயிருப்பது.
அநாயம் - அநியாயம்.
அநாயாசகவாதம் - ஒருவகை வாதம். அது வேகமான வோட்டம், மலசலமுதலிய பதினன்கு வேதத்தை அடக்கிவிடுதல், சீதளவஸ்து ஷய போசனம் இவைகளினற் பிறந்து சகல தாதுக்களிலும் வியாபித்துச் சரீரத்தில் மதத்தல், குத்தல், கனத்தல் முதலிய நானவித வருத்தங்களையுண்டாக்கும்.
அநாயாசம் - அலைவில்லாதது, இலகு, சோம்பின்மை.
அநாயு - தக்கன் மக்களுள் ஒருத்தி. அவள் விருத்திராசுரன்-முதலிய நாற்பது பிள்ளைகளுக்குந் தாய்.
அநாரதம் - எப்போழ்தும்.
அநாரபதம் - ஆரம்பஞ்செய்யப்படாதது.
அநாரம்பம் - தொடக்கமின்மை.
அநாரியதித்தம் - நிலவேம்பு.
அநாரியர் - ஆரியரல்லாதவர், மிலேச்சர்.
அநாரோக்கியம் - நோய்.
அநார்ச்சவம் - மனக்கோட்டம், மனநேர்மையின்மை, வளைவு, வியாதி.
அநாவிருஷ்டி, அநாவிருட்டி } மழைக்குறைவு.

அநாவிருதம் - தடையின்மை, மறைக்கப்படாதது.
அநாவிருத்தி - திரும்பிவராமை, மறுதரம் பிறவாமை, பாசமுத்தி.
அநாவிலம் - நலங்கலின்மை, தெளிவு.
அநாவிலன் - சுக்கிரன்.
அநான்ம - ஆன்மாவல்லாதது.
அநான்மபுத்தி - ஆத்துமாவல்லாத தேகாதிப்பிரபஞ்சத்தை உண்மையாகத் தானென்றுகொள்ளுதல்.
அநான்மவாதி - ஆன்மாவென்ளெரு பொருளில்லை என்று சொல்லுவோன்.
அநான்மா - ஆன்மாவல்லாதது, ஆன்மாவல்லாததேகாதிப்பிரபஞ்சம். தேகம்.
அநி - நெற்பொரி.
அநிகம் - சங்கம் மூன்று கொண்டபடை.
அநிகர் - சேனையாளுேர்.
அநிகேதன் - நிலையான வாசஸ்தானமில்லாதவன்.
அநிக்கிரகம், அநிக்கிரகித்தல் - கட்டுப்பாடின்மை, காத்தல்.
அநிசம் - நித்தியம்.
அநிச்சகன் - விருப்பமில்லாதவன்.
அநிச்சாப்பிராரத்தம் - ஒருவருக்குப் பிரியமில்லாதிருந்தும் வலாற்காரத்தினல் அவரைப் பயனனுபவிக்கச் செய்யும் முன்னைவினை.
அநிச்சிதம் - நிச்சயிக்கக்கூடாதது.
அநிச்சை - இச்சையின்மை.
அநிட்டநிவிர்த்தி - வேண்டாதன வொழிதல்.
அநிட்டப்பிரசங்கம் - தருக்கப் பாஷையிற்சொல்லப்படும் எட்டாம் பதார்த்தமாகிய தருக்கம். அது சித்தமான வியாத்தியையுடைய தருமங்களுள் வியாப்பிய அங்கீகாரத்தால் வியாபகத்தின் வரவு.
அநிட்டம் - இட்டமல்லாதது, விரும்பப்படாதது.
அநிட்டை, அநிஷ்டை - உறுதியின்மை.
அநிதம் - அநித்தியம்.
அநிதானம் - அனுதாரம்.
அநித்தம் - அநித்தியம்.
அநித்தியகாலம் - முடிவுகாலம்.
அநித்தியசமம் - உதாரணத்தால் ஞாயம் பேசல்.
அநித்தியசமாசம் - நித்தியசமாசமில்லாத சமாசம்.
அநித்தியதை - அநித்தியத்துவம்.
அநித்தியத்துவப்பிரசங்கம் - அநித்தியத்துவஞ்சாதித்தல்.
அநித்தியத்துவம் - நித்தியத்துவமல்லாமை.
அநித்தியம் - நிலையின்மை, பொய்.
அநித்தியலிங்கம் - வடமொழியில் விசேடணமாகி வரும்பதம் ஒரு லிங்கத்தில் நின்றது விசேடியமாகிவரும் பதத்திற்கொத்ததாக மற்ளென்ருக வரும் லிங்கம்.
அநித்திரைச்சுரம் - அறுபத்துநான்கு வகைச்சுரரோகங்களுள்ஒன்று. அது நித்திரையின்மை, தேகவெரிச்சல், தாகம், மயக்கம், தலைத்திருப்பல், நாவும் வாயுமுலரல், மேற்சுவாசம், சீதளம் அதிகரித்தல், மிகுகூச்சல், அடித்தொடைச்சதையு முழங்காற் சதையும்நோவு, ஈனத்தொனியான வார்த்தை, சதாவிருமல், மூர்ச்சை என்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
அநிந்திதை - உமாதேவியுடையதோழிப் பெண்களுள் ஒருத்தி, நிந்திக்கப்படாதவள்.
அநிமாவினம் - சாவு.
அநிமிடம் - இமைவெட்டாமை, மற்சம்.
அநிமிடன் - கண்ணிமைக்காதிருப்பவன், தேவன், விட்டுணு.
அநிமீலனம் - இறவாமை.
அநிமேடம் - பிசாசு, மீன்.
அநிமேடன் - இமையாது கண்ணூன்றிப்பார்ப்போன், கடவுள்.
அநியதகன்மம் - ஈட்டியமுறையில் வாராமற் பக்குவம்வந்துழிப் புசிக்கவருங் கன்மம். அது அசுவமேதமும் பிரமஹத்தியும் ஒருகாலத்திற் செய்யப் பட்டுப் பக்குவம் வந்துழி ஒருங்கே இரண்டும் புசிக்கப்படாமையிற் கருத்தால் இன்னகாலத்தில் இதுவென் றுறுத்திப் புசிக்குமதுபோல்வது.
அநியதகாலம் - நியமமல்லாதகாலம்.
அநியதகாலோபபோக்கியம் - இன்னவேளை புசிக்கப்படுமென் றறியப் படாத கன்மம்.
அநியதம் - அழிவுள்ளது, விலக்கியது.
அநியமச்சிலேடை - சிலேடையணியில் ஒன்று.

அநியமம் - தேகம், குன்னடை, விலக்கியது.
அநியமவுவமை - நியமித்தவுவமையை விலக்கிப் பிறிதுமொரு பொருளைக் கூட்டி உவமிப்பது (உ-ம்) "மதுவார் கவிரே நின்வா யொப்பதன்றி-யது போல்வதுண்டெனினுமாம்".
அநியம் - அன்னியம்.
அநியாயசம் - அநியாயத்தா லுண்டாயிருப்பது.
அநியாயம் - நியாயமின்மை.
அநிரதம் - சத்துரூபத்துக்கன்னியமாகு மாயை.
அநிராகருத்தா - அநிராகருத்திருசம்பிரதானம்.
அநிராகருத்திரு சம்பிரதானம் - கேளாதேற்றலில் "முக்கண் மூர்த்திக்குப் பூவிட்டான்" என்பதிற்போல் வரு நான்காம்வேற்றுமை.
அநிருதம் - உள்ளதல்லாதது, பொய்.
அநிருதவாதி - பொய்பேசுவோன்.
அநிருத்தபதம் - ஆகாயம்.
அநிருத்தபாவினி - அநிருத்தன் மனைவியான உஷை.
அநிருத்தம்-தடையின்மை, நன்குவிளக்காமை.
அநிருத்தன் - அடங்காதவன், கிருட்டினன் பௌத்திரன்,மன்மதன் மகன்.
அநிருமலம் - அழுக்கு.
அநிருவசனம் - சொல்லொண்ணுதது.
அநிர்தம் - ஒன்றுமில்லாதிருத்தல், மாயை.
அநிர்வசனம் - வசனித்தற்கியலாத இல்பொருள்.
அநிர்வசனியம் - வசனிக்கப்படக் கூடாதது.
அநிர்வாகம் - இயைபின்மை, உணவுக்கு வழியின்மை, ஒவ்வாமை, பூரணமின்மை.
அநிலசகன் - நெருப்பு.
அநிலசம் - செம்முகக்குரங்கு.
அநிலச்சூலே - வாதசூலே.
அநிலநாள் - சோதிநாள், விசாகநாள்.
அநிலம் - காற்று, வாதரோகம், பிறப்பு.
அநிலன் - அட்டவசுக்களில் ஒருவன், ஓரவுணன், வாயு.
அநிலாசனம் - உபவாசம்.
அநிலாத்துமகன் - அனுமான், வீமன்.
அநிலாமயம் - வாதநோய்.
அநிலி - சோதிநாள்.
அநிவாரிதம் - தடுக்கப்படாதது.
அநீகம் - அநிகம், ஒருபடைத்தொகை.
அநீகிதம் - விரும்பப்படாதது, சுவனமின்மை, போர்.
அநீகினி-சேனை, தாமரை, படைத்தொகைகளுளொன்று. அது இரண்டாயிரத்து நூற்றெண்பத்தேழு ஆனைகளும் அவ்வளவு தேர்களும் ஆருயிரத்தைந்நூற்றறுபத்தேழு குதிரைகளும் பதினயிரத்துத் தொளாயிரத்து முப்பத்தைந்து காலாட்களுங் கொண்டது, இஃதக்குரோணியின் பத்தில் ஒருபங்கு.
அநீசம் - மரியாதை.
அநீசன்-சாமர்த்தியமில்லாதவன், தலைவனில்லாதவன், நீசனல்லாதவன்.
அநீசுரவாதி, அநீசுவரன் } கடவுள் இல்லை என்னும் மதஸ்தன்.
அநீச்சுரத்துவம் - ஈச்சுரனில்லையென்னும் பாவம்.
அநீச்சுரவாதி, அநீச்சுவரன் } கடவுளில்லையென்பவன்.
அநீதம் - நீதியின்மை.
அநீதர் - கீழ்மக்கள், நீதியற்ருேர்.
அநீதி . நீதிக்கேடு.
அநீதிமான் - நீதியில்லாதவன்.
அநீதியர் - நீதியின்மையர்.
அநு - அணு, கதுப்பு, தொடர்ச்சி.
அநுகதநம் - சம்பாஷணை.
அநுகதம் - ஈட்டப்பட்டது, தொடர்பு, நிச்சயிக்கப்பட்டது.
அநுகதன் - பின்றெடர்வோன்.
அநுகதி, அநுகதிகம் } பின்போதல்.
அநுகமம், அநுகமனம் } கூடப்போதல், தனது நாயகனேடு உடன்கட்டையேறுதல், பின்போதல்.
அநுகம் - செஞ்சந்தனம்.
அநுகம்பம், அநுகம்பனம் } இரக்கம், கிருபை.
அநுகம்பை - அநுக்கிரகம், இரக்கம்.
அநுகர்ணம் - ஒப்பாதல், வேறென்று செய்வதுபோலச் செய்தல்.
அநுகரணவோசை - ஒலிக்குறிப்பு.
அநுகரி - யானையின்மேல்,

அநுகருடணம்-ஆகருஷணம். அது மந்திரத்தினல் அழைத்தல், இழுத்தல்.
அநுகவீனன் - இடையன்.
அநுகற்பம்-உபவிதி, பிரதமகற்பமாகிய உரியபொருள் கிடையாதகாலத்துக் கொள்ளப்படும் இரண்டாம்பொருள் பிரதிவிதி, மூவகை விபூதிகளிலொன்று. அது காட்டிலுலர்ந்து கிடந்த கோமயத்தை எடுத்திடித்துத் தூளாக்கி மந்திரத்தோடு கோசலம்விட்டுப் பிசைந்து உண்டையாக்கி அக்கினியில் வைத்தெடுக்கப்படுவது.
அநுகன் - கணவன், காமவிச்சையுடையோன், பின்ருடர்வோன், யசமானன், வேலைக்காரன்.
அநுகாமி - கூடச்செல்வோன், தோழன்.
அநுகாரம் - ஒப்புமை, வேருென்று செய்தல்போலச் செய்தல்.
அநுகிருதி-அநுகாணம்,ஒத்தசெய்கை.
அநுகிலாதன் - இரணியனது மக்களுளொருவன்.
அநுகீர்த்தனம் - பிரசித்தஞ்செய்தல்.
அநுகுணம்-ஏற்றது, அனுகூலமானது.
அநுகுணலங்காரம் - தன் குணமிகையணி. அது மற்ருெரு சார்பினல் தனதியற்கைக்குண மிகுதல்.
அநுகூலசாத்திரம் - ஆத்தவாக்கியமாகிய விம்சைக்குரியவைகளையும் பரோட்சார்த்தங்களையுங் குற்றமறவுணர்த்திச் சுருதியின் முதன்மையை விளங்கப்போதிக்கின்ற வழிநூல்.
அநுகூலம் - காரியசித்தி, விக்கினமின்மை.
அநுகூலர் - அனுகூலமுடையவர்.
அநுகூலன் - உபகாரி, சிங்கார நாயகர், நால்வருளொருவன், சிநேகன்.
அநுகூலி - சகாயஞ்செய்வோன்.
அநுகூலித்தல் - அநுகூலமுடையதாதல்.
அநுகோதம் - மூளையின் பிற்பக்கத்திற் கீழ்ப்பிரிவாகிய சிறிய மூளை.
அநுக்கம் - சந்தனம், சேம்பு, பயம், பாம்பு, வருத்தம்.
அநுக்காட்டல் - சாடைக்காண்பித்தல்.
அநுக்காரம் - ஒப்புமை.
அநுக்கிரககர்த்தா - அநுக்கிரகிருத்தியம் செய்யுங் கடவுள்.
அநுக்கிரகபரை - அனுக்கிரகத்தை முக்கியமாக உடையது, பராசத்தி.
அநுக்கிரகம் - சிவனுடைய பஞ்சகிருத்தியங்களுளொன்று. அது பசுவாகிய ஆன்மாவின் மலநீக்கிச் சிவத்துவம் வருவித்தல், தீட்சைசெய்தல், தீமையைநீக்கி நன்மையை அதிகப்படுத்தலாகிய தயவு.
அநுக்கிரகாங்குரம் - அநுக்கிரகமுண்டாதல்.
அநுக்கிரகித்தல், அநுக்கிரகிப்பு - அநுக்கிரகஞ் செய்தல்.
அநுக்கிரமணம் - கிரமமாக நடத்துதல், பின்போதல்.
அநுக்கிரமணி, அநுக்கிரமணிகை - நூலினிடத் தடங்கிய விஷயங்களிவை எனச் சுருக்கிச் சொல்லும் பாகம்.
அநுக்கிரமம் - கிரமப்படி நிகழ்தல்.
அநுக்கிராககன், அநுக்கிராகி - அனுக்கிரகஞ் செய்பவள்.
அநுக்கிராகம் - அநுக்கிரகஞ்செய்தல்.
அநுக்கிராகிணி - அனுக்கிரகஞ் செய்பவள்.
அநுக்கிராகியத்துவம்- அனுக்கிரகிக்கப்பட யோக்கியமாயிருத்தல்.
அநுக்கிராகியம் - அனுக்கிரகிக்கப்பட யோக்கியமானது.
அநுக்கிராகியர் - அனுக்கிரகிக்கப்படுதற்கு யோக்கியமானது.
அநுக்கிராகியன் - அனுக்கிரகிக்கப்படுதற்கு யோக்கியமுள்ளவன்.
அநுக்கிராகியானுக்கிராகக சம்பந்தம் - அனுக்கிரகிக்கப்படுவதும் அனுக்கிரகிப்பதுமாகிய சம்பந்தம்.
அநுக்குரோசம் - இரக்கம்.
அநுசங்கம் - அதிகாரத்தால் வருவித்து முடிப்பது, இரக்கம், காரணகாரியத் தொடர்ச்சி, விருப்பம்.
அநுசங்கீதம் - காரியமாகத் தொடர்ந்தது, கூடநிகழ்வது, சம்பந்தப்பட்டது.
அநுசந்தாத்திரு-அனுசந்தானஞ் செய்வோன், கூடஸ்தன்.
அநுசந்தானம்-ஆய்த்தப்படுதல், இடையருது சிந்தித்தல், இலக்குப்பார்த்

தல், ஏற்றசார்பு, ஒழுங்குசெய்தல், செபஞ்செய்தல், தக்கசம்பந்தம், மிக்கவாராய்வு, விசாரணை.
அநுசந்தானம்பண்ணல் - இடையறாது சிந்தித்தல், செபஞ்செய்தல், வில்லிலம்பு பூட்டல்.
அநுசந்தேயம் - விசாரணைக்குப் பாத்திரமானது, விசாரிக்கத்தக்கது.
அநுசயம் - ஒரு பொருளிற் சம்பந்தப் பட்டிருத்தல், பகைமை, பற்று, மனஸ்தாபம்.
அநுசரணம் / அநுசரணை } ஒன்றன் காரியம், ஒன்றுடனாகிய விசைவு, பழக்கம், பின்றொடர்தல், வழக்கம்.
அநுசரண் - கூடச்செல்வோன், தோழன், பின்செல்வோன்.
அநுசரிக்கை - அநுசரித்தல்.
அநுசரிதம் - தொடர்ந்தசரித்திரம்.
அநுசரித்தல் / அநுசரிப்பு } சார்ந்துநடத்தல், பின்செல்லல்.
அநுசர் - தம்பியர்.
அநுசன் - தம்பி.
அநுசாசகன் - ஆளுபவன்.
அநுசாசனம் - கட்டளை.
அநுசாதன் - தம்பி.
அநுசாதை - தங்கை.
அநுசாத்தி - கட்டளை.
அநுசாரணம் - பின்றொடர்தல்.
அநுசாரம் - ஒப்புமை, காரியம், கிரகவக்கிரம், பின்செல்லல், பொருட்சுபாவம்.
அநுசாரி - உதவிசெய்வோன், சார்ந்து நடப்போன், பின்செல்வோன், வழிபடுவோன்.
அநுசிதம் - தகுதியின்மை, பொய்.
அநுசிந்தனம் - முன்னறிந்த விஷயத்தை நினைத்தல்.
அநுசிந்தை - தியானித்தல்.
அநுசிரஞ்சவாதம் - மகாவாத மிருபத்து நான்கு வகைகளு ளொன்று. அது தாடையின் பூட்டை யனுசரித்து எந்நேரமும் வாயைத் திறந்தாவது மூடியாவது இருக்கச் செய்வது.
அநுசீவகன் / அநுசீவி } ஒருவரை அடைந்து சீவிப்போன், வேலைக்காரன்.
அநுசூதத்துவம் - மிக்கவியைபுடைமை
அநுசூதம் - நீங்காது கூடியிருத்தல்.
அநுசூதன் - கலந்திருப்பவன்.
அநுசூதை - நீங்காதிருப்பவள்.
அநுசை - தங்கை.
அநுசைவர் - சிவதீட்சைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும்.
அநுசோகம் / அநுசோசனம் } பின்றுன்புறுதல், மேலுமேலுந் துன்புறுதல்.
அநுச்சிட்டம் - உச்சிட்டமல்லாதது.
அநுச்சுவாரம் - உயிரின் பின்வருமகார விகாரமாகிய புள்ளி, அது வடமொழியிலுயிர்வருக்கத்துப் பதினைந்தாம் எழுத்து.
அநுச்சூநகம் - வடுப்படாது பற்குறி வைத்தல்.
அநுச்சை - உத்தரவு.
அநுஞை - கட்டளை.
அநுஞ்ஞாலங்காரம் - வேண்ட லணி. அது குணமல்லாததனுல் குணமுண்டாதலை அறிந்தக்குணமல்லாததனை வேண்டுதல்.
அநுஞ்ஞை - உத்தரவு, கட்டளை, சம்மதம், விடுகை.
அநுடம் - ஒருநட்சத்திரம்.
அநுட்டணசீதம் - வெப்பமுங் குளிருமில்லாதது.
அநுட்டணம் - உற்பவம், குளிர்ந்தது, சூடற்றது, சோம்பு.
அநுட்டஞ்சீதம் - சூடுங் குளிர்ச்சியுமின்மை.
அநுட்டயம் - அநுட்டிக்கப்படுவஃது.
அநுட்டாதா - அநுட்டிக்கிறவன், தொழிலை முயன்றுசெய்வோன்.
அநுட்டானம் - சித்தாந்தப்படுத்தல், செய்கை, செய்துமுடித்தல், தகுதி, தியானித்தல், தொடங்குதல், விதிக்கப்பட்ட கிரியைகளைச் செய்தல்.
அநுட்டித்தல் / அநுட்டிப்பு } சித்தாந்தப் படுத்துதல், செய்தல், தொடங்குதல், தொழிற்செய்தல்.
அநுட்டுபு - சூரியனது தேருருஞ் சந்தச்சானவயப்பரி எழின் பெயர்களுள் ஒன்று.
அநுட்டுப்பு - முப்பத்திரண்டசைகளையுடைய ஒருவகைச் செய்யுட்சந்தம். அஃது அடியொன்றிற் கெட்டசைகளை யுடையதாய் நான் கடிகளைக்

கொண்டதா யாவது முதலா படிக் கெட்டசையும், இரண்டாமடிக்குப் பனிரண்டசையும் மூன்றாமடிக்குப் பன்னிரண்டசையும் உடைய மூன் றடிகளைக் கொண்டதாயாவது வரு கிற சந்தம்.

அநுஷ்ணம்-குளிர், சோம்பல், பாதகம்.

அநுதரம் - சிற்றிடை, தோணி முதலிய வற்றின் ஏற்றமதிக்கூலி.

அநுதரிசணம் - மதுநீருண்ணல், மதுநீ ருண்ணும் பாத்திரம்.

அநுதரிசம் - ஆசை, தாகம், மதுநீருண் ணும் பாத்திரம்.

அநுதரித்தல் - படகிலேற்றல், மெலி தல்.

அநுதாத்தம்-உருபகத்தினென்று, வே தஸ்வரம் நான்கினென்று.

அநுதாபம் - மனத்தாபம்.

அநுதாரன் - உதாரகுணமில்லாதவன், தகுந்த மனைவியையுடையவன், பிசு னன், மனைவியாற் றொடரப்பட்ட வன்.

அநுதாவனம் - ஆராய்தல், சுத்திசெய் தல், பின்றொடர்தல், பின்னாகவோ டித்துரத்துதல், பின்னாகப்போதல்.

அநுதினம் - நாடோறும்.

அநுதோடம் - உபபாதகம்.

அநுத்தசித்தம் - சொல்லப்படாமற் சித் தியானது.

அநுத்தமம் - உத்தமமல்லாதது, எல்லா வற்றினு மிக்கவுத்தமம், தனக்குமே லாக உத்தமமான ஒன்றை யில்லா தது.

அநுத்தம் - பொய்.

அநுத்தம்பவாதம் - ஒருவகை வாதரோ கம். அது வாயினிருபக்க மூலங்களி லுங் காதினடிகளிலும் வருவது.

அநுத்தரம் - உத்தமம், உறுதிநிலை, தெ ற்கு, மற்றொன்று கூறு மறுமொழி, மறுமொழி சொல்லக் கூடாமை, மாறுகொளக்கூறு மறுமொழி, மிகச் சிரேட்டம், மேன்மை.

அநுத்தரன் - உத்தமன், மிகுச்சிரேட் டன்.

அநுத்தரோபபாதிக தசாங்கம் - அங் காகமத்தினொரு பகுப்பு.

அநுத்தானம் - முகங்குப்புறக்கிடத்தல்.

அநுத்தியோகம் - சோம்பு, முயற்சியில் லாமை.

அநுத்திரபஞ்சமம் - அயிர்ப்பு.

அநுத்துருதபஞ்சமம் - ஒருபெண், குறி ஞ்சியாழ்த்திற வகையினொன்று.

அநுத்துருதம் - ஒரு காலவளவு. அது ஒரு துருதகாலத்தின் பாதி, ஒருமாத் திரையின் காற்பங்கு, பின்றொடரப் பட்டது.

அநுத்துவயம் - இருகதுப்பு.

அநுத்துவாகம் - பிரமசரியம், விவாக மின்மை.

அநுத்துவேகம் - ஆவலின்மை.

அநுநயம் - ஆசாரக்கிரமம், சாந்திசெய் தல், பயிற்றுதல், மரியாதை, விண் ணப்பம், விருந்தர் முதலியோரை யுபசரித்தல்.

அநுநாசிகம்
அநுநாசிகை } மெல்லெழுத்து.

அநுநாதம் - எதிரொலி, ஒலி.

அநுபசங்காரி - சவ்வியபிசாரமாகிய ஏதுப்பொலிவகையு ளொன்றாகிய முடிவுபெறாமை.

அநுபதிதம் - இறங்கினது, பின்றொட ரப்பட்டது, விழுந்தது.

அநுபத்தானம் - சமீபத்தி லில்லாமை.

அநுபத்திதி - சமீபத்திலில்லாமை, ஞா பகப்படுத்தவியலாமை.

அநுபந்தசதுட்டயம் - ஒரு நூல் செய் வோன், அந் நூலொடு சேர்த்துத் தந்துரைக்கும் நான்கு பொருள்கள். அவை விடயம், சம்பந்தம், பயன், அதிகாரி என்பன.

அநுபந்தம் - அநுசரித்தல், அபிப்பிரா யம், ஆகாமியம், இடையறாத் தொ டர்ச்சி, இம்மையி லுண்டாகின்ற நன்மைதீமைகள், ஏது, ஒற்றுமை, ஒன்றனோ டிணைக்கப்பட்டது, ஒன் றிப்பு, கட்டுதல், காரியத்தொடர்ச்சி, கூடுதல், சிசு, தடை, தொடக்கம், தொடர்ச்சி, பிரயோசனமான செய் கையைச் செய்யப் பழகல்.

அநுபந்தன் - உடன்பட்டவன், குரு வைப் பின்றொடர்ந்து நடக்குஞ் சீடன், பெரியோரைப்பின்றொடர்ந்து நடக்கும் பிள்ளை.

அநுபந்தித்தல் - கூடிப்பந்தித்தல்.

அநுபந்தை - தாகம், விக்கல்.
அநுபபத்தி - சத்தியத்தைச் சாதிக்க வல்லதல்லாதது, சித்தாந்தமாகாத நியாயம், சித்தியாகாமை, தகுதியின்மை, நிறைவேறுமை, பிரயோகிக்கப் படாமை, பொருத்தமின்மை, யுத்தியில்லாமை.
அநுபபத்திப்பிரசங்கம் - முற்றுப்பெறுததாதல்.
அநுபபத்தியேது - சாத்தியத்தைச் சாதிக்கவல்லாதவேது, சித்தாந்தமாகாத நியாயம்.
அநுபமம் - தனக்குநிகரில்லாதது, மிகச் சிரேட்டமானது.
அநுபமன் - தனக்குநிகரில்லாதவன், மிகச்சிரேட்டன்.
அநுபமை - உவமையின்மை, தென்மேற்றிசையானைக்குப் பெண்யானை மிகச் சிரேட்டமானது.
அநுபம் - சேற்றுநிலம், மிகுதியும் நீர்ப்பாங்கான நிலம்.
அநுபயம் - இரண்டுமல்லாதது.
அநுபயோகம் - உபயோக மில்லாதது.
அநுபலத்தம் - அடையாமை, காணப்படாதது.
அநுபலத்தி - அநுபலத்தி அலங்காரம், உண்டென்னு ஞானத்தினின்மை.
அநுபலத்தியலங்காரம் - நுகர்ச்சியின்மையணி.
அநுபலத்தியேது - மூன் றேதுக்களுளொன்று. அது சீதமின்மை, பனியின்மையைக் காட்டல்போலப் பிறிதொன்றின தில்லாமையைக் காட்டும் ஒன்றனது இல்லாமை யாகிய ஏது.
அநுபலத்திவேத்தியம் - இல்லாமையைக்கொண்டறியப்படுவது.
அநுபல்லவம் - நுனித்தளிரை யடுத்திருக்குங் கீழ்த்தளிர்.
அநுபல்லவி - பதமென்று வழங்குஞ் செய்யுளின் இரண்டாமுறுப்பு.
அநுபவபூமி-இருவகை ஞானபூமிகளுளொன்று, அது சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தாபாவனை, துரியகாமி என நான்குவகைப்படும்.
அநுபவப்படல் - உற்றறிதல்.
அநுபவம். அநுபோகம், காரியம், கைவல்லியம், சுகபோகம், தானே கண்டறியுமறிவு, நினைவிற்கு வேறுகிய உணர்வு, வாசனையாற் றோன்றும் அறிவு.
அநுபவாரூடம்-அநுபவத்திலேறினது
அநுபவி - உலக விவகாரங்களை நினையாமல் ஆத்துமவிவேகத்தை அடைந்து ஒரு சனனத்தில் சீவமுத்தனுகுவோன்.
அநுபவித்தல் - துய்த்தல்.
அநுபவிப்பு - அநுபோகம்.
அநுபவியம் - அநுபவிக்கப்படுவது.
அநுபவை - பார்ப்பதி.
அநுபவைகவேத்தியம் - அனுபவமொன்றுலே அறியத்தக்கது.
அநுபவைகவேத்தியன் - அனுபவமொன்றுலே அறியத்தக்கவன்.
அநுபாகம் - அலகுக்குரிய பாகம்.
அநுபாடணம் - கண்டிக்கும்பொருட்டாக ஒரு பிரதிஞ்ஞையைத் திரும்ப எடுத்துச் சொல்லுதல், சொன்னதைப் பின்னுஞ்சொல்லுதல்.
அநுபாடித்தல் - அநுவதித்தல், ஒருவர் சொன்னதை எடுத்துச் சொல்லல், சொல்லுதல்.
அநுபாதகம் - மகாபாதகதுல்லியம்.
அநுபாதம் - சரணங்களிலொன்று, சங்கலிதம், திரயராசிகம், பின்ருெடர்தல்.
அநுபாதேயன் - அங்கீகரிக்கப்படக் கூடாதவன்.
அநுபாலனம் - கீழ்ப்படிதல், பாதுகாத்தல்.
அநுபாவம் - கண்காட்டுக் கைகாட்டு முதலிய அங்கசேட்டைகளினல் மனக்கருத்தை விளக்குங் குறி, திடமானவெண்ணம், தேசசு, நிச்சயம், மகத்துவம்.
அநுபாவியம் - அனுபவிக்கத்தக்கது.
அநுபானம் - மருந்தை யுட்புகுத்தற்குக் கொள்ளும் பானம், மருந்துடனருந்தும் பதார்த்தம், மருந்துடன் குடிக்கும் பானம்.
அநுபூதம் - அறிந்துகொள்ளப்பட்டது, காரியமாக வந்தது.

அநுபூதி - தானே கண்டறிந்ததும் பிறர்க்குச் சொல்ல இயலாததுமான அறிவு, நினைவிற் கயலாகி வேறாகிய உணர்வு.

அநுபூதிகம் - அநுபவிக்கத்தக்கது.

அநுபூதியநுசூதம் - அநுபவசித்தி.

அநுபூதியர் - அநுபூதியுடையோர்.

அநுபோகம் - அனுபவம், கைவல்லியம்.

அநுபோகி - அனுபோகங்கொள்ளுவோ

அநுபோகித்தல் - அநுபவித்தல். [ன்.

அநுப்பிரமாணம் - அளவானது, இசைவானது.

அநுப்பிரவிட்டம் - உட்புகுதல்.

அநுப்பிரவிட்டன் - உட்புகுந்திருப்பவன்.

அநுப்பிரவேசம் - அநுக்கிரகம். அது போகவாசனையை நீக்கித் தெளிவித்தல், உட்புகுந்திருத்தல், ஒருவர்கருத்துக்குத் தன்னை இசைவர்க்கல்.

அநுப்பிரவேசி - உமாதேவி.

அநுப்பிராசம். அனுராகம், வழியெதுகை. அது ஒருசெய்யுளடியில் வரும் பலசீர்களில் இரண்டாமெழுத்து முதலியன ஒன்றிவருதல்.

அநுமகுண்டம் - சேதுவிலுள்ள ஒரு புண்ணியதீர்த்தம்.

அநுமக்கொடியோன் - அருச்சுனன்.

அநுமசக்கரம் - விதிப்படி யனுமமந்திரமெழுதப்பட்ட யந்திரம். [நூல்.

அநும்சந்தேகம் - அனுமார் தூது, ஒரு

அநுமதம் - அங்கீகரிப்பு, அன்பு, சம்மதி, பிரியம்.

அநுமதி - சம்மதி, பௌரணை.

அநுமந்தன் - அனுமான்.

அநுமந்தா - சம்மதித்தவன்போலிருப்

அநுமந்திரு - இணங்குதல். [பவன்.

அநுமந்திருசம்பிரதானம் - சம்மதமாயேற்ற பொருளில் வரும் நான்காம் வேற்றுமையுருபு.

அநுமரணம் - இறந்தவனோடு உடன் கட்டையேறி மரித்தல்.

அநுமாநம் - ஒருபிரமாணம், சந்தேகம்.

அநுமாபகம் - அனுமிக்கப்பண்ணுவது.

அநுமானசாமக்கிரி - அனுமானத்திற்கு வேண்டுமுறுப்புக்கள்.

அநுமானப்பிரமாணலங்காரம் - அனுமானப்பிரமாணவணி.

அநுமானப்போலி - சாதநம் பட்சத்திவிருக்கையின்மை, சபட்சத்திவிருக்கையின்மை, விபட்சத்தினீக்கமின்மைஎன்னுங்குற்றங்களோடுகூடியுஞ் சிலரூபயோகத்தால் அனுமானம் போலத்தோற்றும் போலிநியாயம்.

அநுமானம் - ஐயத்தோடெண்ணுதல், ஐயம், தருக்கசாத்திரத்திற் சொல்லப்பட்ட பிரமாணங்களுளொன்றாகிய கருதலளவை. அது நேரேயறியப்படாது சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்துநின்ற பொருளை அதனைவிட்டு நீங்காது யாண்டுமுளதாய் நிகழும் ஏதுவைக்கொண்டுணர்வதாகிய ஆன்மாவின் ஞானசத்தி. அது புகையைக் கண்டு காணப்படாத நெருப்பை யுண்டென்று உணர்தல் போல்வது.

அநுமானவாக்கியம் - அனுமானப் பிரமாணத்தாலொருவனறிந்ததைப் பிறனறியும்படி யுணர்த்தும் வாக்கியம், இவ்வாக்கியத்திற்குப் பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பன அவயவங்கள்.

அநுமானுகம்மியம் - அனுமானத்தால் அறியப்படாதது.

அநுமானுநுமானம் - கருதலனுமானம்.

அநுமானுபாசம் - அனுமானப்போலி.

அநுமானிதம் - குதிரைக்கனைப்பு.

அநுமானித்தல் - அனுமானப் பிரமாணத்தாலறிதல், ஐயத்தோடெண்ணுதல், குதிரைகனைத்தல்.

அநுமானோத்தி - அனுமானித்துப் பேசுதல்.

அநுமான் - அஞ்சனையென்னும் பெண்ணினுடைய மகன்.

அநுமிதி - அநுமானத்தினாற் றோன்றுமறிவு.

அநுமித்தல் - அனுமானப் பிரமாணத்தினாலறிதல்.

அநுமேயம் - அனுமானப்பிரமாணத்தாலறியப்பட்டது, அறியத்தக்கது.

அநுமை - அனுமானத்தினால் வரும் அறிவு, கண்ணிமையினடி.

அநுமோதனம் - அங்கீகரிப்பு, ஒத்து மகிழ்தல், சம்மதம்.

அநுயாத்திரி } பிரயாணத்திற்கூ
அநுயாத்திரிகன் } டப்போவோன்.
அநுயோகம் - கண்டித்தல், தேவத்தியானம், வருந்திக்கேட்டல், விசாரணை, வினா.
அநுயோகி - கூடியிருக்குமது, விதிவினை.
அநுயோசனம் - வினா.
அநுரகசம் - ஏகாந்தம்.
அநுரஞ்சகம் - திருத்தியாதல்.
அநுரஞ்சனம் - நேசித்தல்.
அநுரதம் - ஆசையாயிருத்தல், நேசிக்கப்படல்.
அநுரதி - அன்பு, நன்கு மதிப்பு.
அநுராகபோகம் - காமபோகம், காமவனுபவம்.
அநுராகமாலை - ஒரு பிரபந்தம். அது தலைவன் கனவின்கண் ஒருத்தியைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து இனிமையுறப் புணர்ந்ததைத் தன்னுயிர்ப்பாங்கற்கு உரைத்ததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது.
அநுராகம் - ஆசை.
அநுரூபம் - இணக்கம், ஏற்றது, ஒத்தது, தக்கது, தடை, மத்தியஸ்தம்.
அநுரோதகம் - இணங்குதல்.
அநுரோதம் - பிறருக்காக அவர் விரும்புங்காரியங்களை முடித்தல்.
அநுர்தம் - பொய்.
அநுலாபம் - கூறியதுகூறல்.
அநுலேபகம் - சந்தன முதலிய பூசும் பொருள், தைல முதலியவைகளைப் பூசுதல்.
அநுலேபம் - அபிடேகம், தைல முதலியவைகளைப் பூசுதல்.
அநுலேபனம் - பூசுதல்.
அநுலோமசன் - அனுலோமன்.
அநுலோமசை - சூரிய முகத்தினடிக்கு மாதர்களுளொருத்தி.
அநுலோமன் - உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்த பிள்ளை.
அநுவகன் - வாயுசக்கரங்களுள் ஒன்று.
அநுவக்கிரகம் - அனுவக்கிரம்.
அநுவக்கிரேட்டம் - இட்டத்தைச் சர்ப்பாகாரமாக வைத்து அதிலொருவிராசிகளைந்துநின்ற காலவளவு. இது மூன்று பாகையும் இருபது கலையுமாம்.
அநுவசனம் - ஒத்தவாக்கியம்.
அநுவதித்தல் - முன்னர்க்கூறிய ஒரு பொருளை ஒரு நிமித்தத்தாற் பின்னுமெடுத்துக்கூறுதல்.
அநுவமிசம் - வமிசவரலாறு.
அநுவயித்தல் - ஒருவாக்கியத்தி லிலக்கண முறைப்படி எழுவாய் பயனிலைகள் வெளிப்படத் தோன்றுமாறு சொற்களைக்கூட்டிச் சொல்லுதல்.
அநுவருணனை - வருணித்துச் சொல்லுதல்.
அநுவருத்தனம் - காரியம் கீழ்ப்படிதல். சம்மதித்தல், தொடருதல், பிரியப்படுத்துதல், முற்சூத்திரத்திற்சொல்லப்பட்டதைக்கொண்டு குறைநிரப்புதல்.
அநுவருத்தி - அனுசரித்தல்.
அநுவருத்தித்தல் - தொடருதல்.
அநுவழி - புதன்.
அநுவாகம் - இருக்கு அல்லது யசுர் வேதத்தின் சங்கிரகம், வேதத்தினுட்பகுப்பு.
அநுவாகாரியம் - அன்னுவாகாரியம்.
அநுவாக்கியை - யாகத்தில் தேவதையை அழைத்தற்குச் சாதனமான ஒரு வேத மந்திரம்.
அநுவாசம் - அன்பு, கூடியிருத்தல், வாசனையூட்டுதல், வேலைச்சாலை.
அநுவாசனம் - அன்பு, கூடியிருத்தல், வஸ்திரங்களுக்கு மண மூட்டுதல், வாசனையூட்டுதல், வேலைச்சாலை.
அநுவாசிதம் - வாசனையூட்டப்பட்டது.
அநுவாதம் - சம்மதம், நிந்தித்தல், முன்னர்க்கூறிய ஒருபொருளை ஓர் நிமித்தத்தாற் பின்னுமெடுத்துக் கூறுதல். வாதிகூறிய பொருளை நீ யிவ்வாறு கூறினையெனக்கண்டனஞ்செய்யும் பொருட்டுப் பிரதிவாதியுங்கூறல்.
அநுவாதி - அநுவாதம் செய்பவன், சமணரிலொருவன்.
அநுவாதித்தல் - அனுவதித்தல்.
அநுவாதேயம் - அங்கீகரிக்கப்படாதது.
அநுவாரோகணம் - அன்னுவாரோகணம்.
அநுவிதாயினீ - அனுசரிப்பது, இணங்கியது.
அநுவித்தம் - கலக்கப்பட்டது, கலந்து பின்னப்பட்டது, குயிற்றப்பட்டது.

கூடினது, சம்பந்தப்பட்டது, துலக்கப்பட்டது, பலவன்னப்பட்டது.
அநுவியவசாயம் - பிரத்தியக்ஷப் பிரமாணத்தினல் உணர்ந்ததை உணர்ந்தேன் என ஒருவனுக்குப் பின்னிகழு முணர்வு.
அநுவிரசனம் - வழிவிட்டனுப்புதல்.
அநுவிருத்தம் - முட்டைவடிவம், முன் சூத்திரத்திலிருந்து அவாய்நிலையாற் பின்சூத்திரத்திற் கெடுத்துக்கொள்ளப்படுஞ் சொன்முதலியன.
அநுவிருத்தி - இசையச்செய்தல், இணங்கல், உபசாரம், ஒப்பாகச்செய்தல், கூடிநின்று செய்தல், சேர்ந்திருத்தல், தொடர்ச்சி, புறநடை.
அநுவுரு - ஒத்தரூபம்.
அநுவுலோமன் - அநுலோமன்.
அநுவேதம் - கூட்டுதல், சம்பந்தம்.
அநுற்பத்தி - சித்தியின்மை, பிறப்பின்மை.
அநுர்பூதம் - காணப்படாதது.
அநூகம் - ஆமோதித்தல், ஒழுக்கம், கழிந்த பிறப்பு, குணம், கோத்திரம், தன்மை.
அநூகன் - பிறப்பற்றவன்.
அநூடன் - விவாகஞ்செய்யாதவன்.
அநூநகன் - குறைவில்லாதவன்.
அநூநம் - குறைவின்மை, முழுமையும்.
அநூபசம் - இஞ்சிப்பூண்டு.
அநூபம் - ஈரம், எருமை, தவளை, நீர்நிலை, நீரருகுள்ளநிலம், யானை.
அநூரு - சூரியன் தேர்ப்பாகன், புதன், முடவன்.
அநூர்த்துவாத்தி - மேற்கதுப்பினெலும்பு.
அநேகதங்காவதம் - காஞ்சிபுரத்துள்ள ஒரு சிவஸ்தலம்.
அநேகபம் - அநேகபேசம் என்னுந் தலம், யானை.
அநேகபேசம் - காஞ்சிநகரத்துள்ள இருபது சிவாலயங்களுள் ஒன்று. இது விநாயகர் கயமுகனைக் கொன்று அவன் கொம்பிலுள்ள முத்துக்களாற் சிவனைப் பூசித்தமையால் வந்த பெயர் என்பர்.
அநேகமூர்த்தி - கடவுள்.
அநேகம் - ஒன்றுக்குமேற்பட்டது, பல.
அநேகர் - பலர்.
அநேகவற்பாவி - முன்மொழியெண்ணும் பின்மொழி தத்திதார்த்தமாயும்வந்து பலரையாவது பலபொருளையாவது கருதிநிற்குஞ் சமாசம்.
அநேகன் - கடவுள், பசுவாகிய ஆன்மா, பலயோனிகளிலும் நிற்பவன்.
அநேகாகாரம் - பலவடிவம், பலவுருவம்.
அநேகாங்கம் - அநேகாங்கவுருவகம், பல அங்கம்.
அநேகாங்கவுருவகம் - உருவக அணிவகைகளுள் ஒன்று, அது ஒன்றன் அங்கங்கள் பலவற்றையு முருவகஞ்செய்து சொல்லுவது.
அநேகாசிரிதகுணம் - இரண்டு அல்லது இரண்டுக்கதிகமாகிய பல திரவியங்களை ஆதாரமாகக்கொண்டசையோக முதலிய குணம்.
அநேகாந்தம் - சந்தேகமானது, பல முடிவு.
அநேகாந்தவாதம் - ஆருகதவாதம்.
அநேகாந்தவாதி - ஆருகதன்.
அநேகாந்திகம் - அனைகாந்திகம்.
அநேகார்த்தம் - பலபொருள்.
அநேகான்மவாதி - ஆன்மாக்கள் அநேகம் என்று வாதிப்போன்.
அநேகேசுரவாதி - அநேகேச்சுர வாதி.
அநேகேசுவரத்துவம் - ஈசுவரர் பலராயிருக்குந்தன்மை.
அநேகேச்சுரவாதம் - பல கடவுளருளரென்று வாதித்தல்.
அநேகேச்சுரவாதி - சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களை ஓரீசுவரர் தனியே நடத்தமாட்டாரென்றும் அநேகேசுரர்கள்கூடி நடத்துவார்கள் என்றுங் கொள்பவன்.
அநேகை - அநேகமாயிருப்பவன்.
அநேடமூகன் - கபடமுடையவன், செவிடூமையுமானவன், துர்ச்சனன்.
அநேடன் - அறிவில்லாதவன்.
அனைகாந்தம் / அனைகாந்திகம் } ஏதுப்போலிமூன்றுவகையுள் ஒன்று.
அது விபட்சத்தினீங்கிப் பட்சசபட்சங்களி லிருத்தலாகிய நியமமல்லாத ஏது. இது பொதுஅனைகாந்தஞ் சிறப்புஅனைகாந்தம் என விரண்டாய் விரியும்.

அநைக்கம் } ஒற்றுமையின்மை,ஒன்
அநைக்கியம் } றன்மை, தடுமாற்றம், தாறுமாறு, பன்மை.
அநைக்குமம் - ஐக்கக்குறைவு, பன்மை.
அநைசுவரியம் - ஐசுவரியமின்மை.
அநைதிகம் - ஐதீகமல்லாதது.
அநோக்கம் - மரப்பொது, மரம்.
அந் - அன், எதிர்மறையுபசரிக்கை.
அந்த - சேய்மைக் கட்டுப்பொருளிற் பெயர்ச்சொற்கு முன்னாக வரும் ஓரிடைச்சொல்.
அந்தகசயன் - சிவன், நமனைவென்றோன்.
அந்தகசன்னிபாதசுரம் - ஒருவகைச் சன்னிபாதசுரம், அது மறதி அடிக்கடி தலைநடுக்க முதலிய குணங்களையுண்டாக்குவது.
அந்தகம்-ஆமணக்கு, குருடு, ஒருசன்னி நோய்.
அந்தகரணம் - குருடாக்கல்.
அந்தகரன் - அழிப்போன்.
அந்தகரிபு - சிவன்.
அந்தகர் - அறிவிலிகள், எமர், குருடர்.
அந்தகன் - அழிப்போன், இயமன், ஓரிராக்கதன், குருடன், சவுக்காரம், சனி, புல்லுருவி.
அந்தகாசுகிருதன் }
அந்தகாசுகிருத்து } சிவன்.
அந்தகாந்தகன் }
அந்தகாரம் - இருள், நரகம், மனவிருள்.
அந்தகாரி - சிவன், நமவிரோதி.
அந்தகாலம் - சரணகாலம், வடிவுகாலம்.
அந்தகூபம் - ஒருநரகம், தூர்ந்தகிணறு
அந்தகோ - ஐயோவெனப் பொருள்படும் ஓர் இரக்கச்சொல்.
அந்தகோரம் }
அந்தகோலம் } நெல்லிமரம்.
அந்தகோலாங்கூலநியாயம் - மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களுள் ஒன்று, அது ஒரு குருடன் பிறர்வார்த்தையை நம்பி ஊர்க்குப்போகலாம் என்று ஒரெருத்தின் வாலை விடாமற் பிடித்துப்போய் நட்டம் அடைந்தது போலப் பிறர்வார்த்தையை நம்பி நட்டமடைதலைக் காட்டுவது.
அந்தகோளம் - நெல்லிமரம்.
அந்தக்கரணசதுட்டயம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்கள்.
அந்தக்கரணசாபேட்சம் - பாகியேந்திரியங்களினாற் கண்ட பதார்த்தங்களைச்சிற்சத்தியானது அந்தக்கரணங்களோடுகூடி நின்று சிந்திப்பது.
அந்தக்கரண சைதன்னியர் - அந்தக்கரணங்களையே ஆன்மாஎன்றுசொல்லு மதத்தர்.
அந்தக்காரணபுவனம் - அந்தக்கரண தத்துவங்களிலிருக்கும் புவனம். அவை மனோதத்துவத்தில் தூலேசுவரம் என்னும் புவனமொன்றும், அகங்காரதத்துவத்தில் தலேசுரம் என்னும்புவனமொன்றும், புத்தி தத்துவத்தில் பைசாசவிராட்சச யாட்சகாந்தருவவைந்திரசௌமியபிராசேசபிரமமாகிய புவனங்கள் எட்டுமாம்.
அந்தக்கரணம் - உட்கரணம், மனம்.
அந்தக்கரணான்மவாதி - அந்தக்கரணங்களு ளொன்றே ஆன்மாவென்று சாதிக்கும் மதத்தன்.
அந்தக்காரி - அழகானவள்.
அந்தக்கிரகம் - உள்வீடு.
அந்தக்கிருத்தசாங்கம் - அங்காகமத்தொருபகுப்பு.
அந்தக்கேடு - அழகீனம்.
அந்தக்கேணி - உள்ளே மறைந்த நீரையுடைய கிணறு, இது சுரப்புநீர்க்கேணி எனப்படும்.
அந்தசடகநியாயம் - மீமாஞ்சையில் சொல்லப்பட்ட நியாயங்களுளொன்று, அது ஓரவிவேகியாற் சொல்லப்படுவதொன்று, ஒருகுருடன், ஊர்க்குருவியை பிடித்துக் கொண்டது போலப் பலிக்கவருவது, இதுகருத்தினாற் குணாக்ஷர நியாயத்தையொத்தது.
அந்தசடம் - வயிறு.
அந்தணத்துவம் - அந்தணனுந்தன்மை.
அந்தணநாழி - விஷத்தைப்போக்குகிற மருந்து.
அந்தணமை - அந்தணன்றன்மை.
அந்தணாதுதொழில் - ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் என்பன.
அந்தணர் - அந்தத்தையுணர்வார் என்றது வேதாந்தத்தையே நோக்குவாரென்றவாறு, பார்ப்பார், முனிவர்.
அந்தணர்வாக்கு - வேதம்.

அந்தணன் - அருகன், கடவுள், சனி, சிவன், பார்ப்பான், பிரமன், வியாழன்.
அந்தணாளர் - அழகியதண்ணளியுடையவர், அரசர்க்குறுதிச்சுற்றத்தினொருவர், பார்ப்பார், முனிவர்.
அந்தணாளன்-அழகிய தண்ணளியுடையவன், பிராமணன்.
அந்தணி - உமை, பிராமணப்பெண்.
அந்தண் - அந்தணர்குலம்.
அந்ததமசம் - மிகுவிருள்.
அந்ததரம் - சித்தாந்தம்.
அந்ததரன் - பிராமணனுயுள்ளவன்.
அந்ததாமிசிரம் } ஒருநரகம், தயோ
அந்ததாமிச்சிரம் } சிருட்டியாகிய ஐவகை யஞ்ஞானத்துள் ஐந்தாவது; அது திவ்வியாதிவ்வியபேதத்திலே சத்தாதிகள் பத்தும் அணிமாதி சித்திகள் எட்டும் பெற்று அதிலே மிகு பற்றுவைத்தல்.
அந்தத்தம் } யரலவ என்னும்
அந்தத்தாக்கரம் } இடையெழுத்துக்கள்.
அந்தத்தாபம் - உள்ளேதவிக்கை.
அந்தஸ்து - ஒழுங்கு, நிருவாகம், நிலை.
அந்தந்த - அந்தஅந்த.
அந்தந்தலை - முடிவுமுதலும்.
அந்த பரம்பரா நியாயம் - மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட ஞாயங்களுள் ஒன்று; அது குருடனைக் குருடன் பின்றொடருவதுபோலத்தான்செய்வதின்னதென ஆலோசியாமல் ஒருவன் மற்றொருவன் செய்வதுபோற் செய்தல்.
அந்தப்புரம் - பெண்களுடைய அறை, மன்னன்றேவியில்லம்.
அந்தப்போதிகை - பின்னங்காலிற் சங்கிலி.
அந்தமந்தம் - உறுப்புக்கேடு, கூர்மையின்மை, செப்பமின்மை.
அந்தமன் - திருதராட்டிரன்.
அந்தமூள் - குறிஞ்சா.
அந்தம் - அவயவம், அழகு, ஆகாயம், இருள், எல்லை, ஒழுங்கு, கடை, கத்தூரி, சமீபம், சாவு, சுபாவம், சோறு, நிச்சயம், நீர், பாஷாணம், முடிவு.
அந்தரகணம் - ஆகாயகணம்.
அந்தரகாந்தாரம் - அந்திகைக்கிளை.
அந்தரகாமி - ஆகாயமார்க்கமாய்ச்செல்லுங்குதிரை.
அந்தரகுமாரன் - தேவருளொரு சாதியான்.
அந்தரங்ககிருத்தியம்-தன்னாலேநேரே செய்யப்படும் கிருத்தியம்.
அந்தரங்கத்தியானி - ஆமை.
அந்தரங்கம் - ஆலோசனை, இரகசியம், உள்ளாகவுடையது, ஏகாந்தம், மனம்.
அந்தரங்கன் - அதிகம் நேசிக்கப்பட்டவன், அருமையானவன், இரகசியங்கேட்டு வைத்திருப்போன், உற்ற நண்பன், விஷயங்களில் நம்பத்தக்கவன்.
அந்தரசரிதர் - ஆகாயத்திற்றிரிபவர்.
அந்தரசாதி - வேறுசாதி.
அந்தரசாரி - ஆகாயசாரி.
அந்தரசிந்து - கற்பாஷாணம்.
அந்தரசைவம் - ஒருசைவம்.
அந்தரசைவர்-அந்தரசைவத்தைத் தழுவினோர்.
அந்தரசௌசம் - உட்சுத்தி.
அந்தரதசை - மகாதசையிலுள்ளான கிரகநிலை.
அந்தரதாமசர் - இடையிற் கருமையடைந்தவர்.
அந்தரதிசை - சாதகத் திசைகளி னொன்று.
அந்தரதுந்துபி - ஒரு வாச்சியம்.
அந்தரத்தர் - சுவர்க்கலோகவாசிகள்.
அந்தரத்தாமரை - ஆகாயத் தாமரைப்பூண்டு.
அந்தரஸ்தானம் } ஆகாயநிலை.
அந்தரத்தானம் }
அந்தரநடனர் - கழைக்கூத்தர், கழாயர்.
அந்தரநதி - ஆகாயகங்கை.
அந்தரநாதன் - இந்திரன்.
அந்தரபவனி - ஆகாயகதி, ஆகாயகமனம், மிகுவேகம்.
அந்தரபுத்தி - கிரகங்களினுட்கதி.
அந்தரபுருஷன் - உடம்பினுளிருக்கும் ஆன்மா.
அந்தரமகளிர் - அரம்பையர்கள்.
அந்தரமாமூலி - ஆகாயத்தாமரை.
அந்தரமிசிரம் - ஒருநரகம்.
அந்தரம் - அந்தரிப்பு, அளவு, ஆகாயம் ஆதரவின்மை, இடம், இடை, இருள்,

உடுப்பு, உவமை, உள்வெளி, கடவுள் காலம், கூட்டம், கோயில், சேடம், சொந்தம், தனிமை, தீமை, தேவர், நடு, நிமித்தம், பிழைப்பு, புருவத்தி னடு, பேதம், முடிவு, மோகம், விக் கினம், வெளி.
அந்தரர் - தேவர்.
அந்தரவல்லி - கருடன்கிழங்கு.
அந்தரவனசம் - கொடிப்பாசி.
அந்தரவனம் - பாழ்ங்காடு.
அந்தரவாசம் - ஆகாயத்தில் வசிக்கை, கொட்டைப்பாசி.
அந்தரவாசி-ஆகாயகமனஞ்செய்பவன்.
அந்தரவாணி - அசரீரிவாக்கு.
அந்தரவாயு - அண்டவாதம், வீமபீசம்.
அந்தரவாயுக்கிரகணி - ஒருவகைக் கிர கணரோகம், அது அசதி, இரைச் சல், தளர்ச்சி, தாகம், புசித்தவுடன் பேதியாதல், விலாவிலிசிவு, சரீரம் வெளிறல், விக்கல் என்னும் இக் குணங்களை யுண்டாக்குவது.
அந்தரவிட்டை - ஒருநோய்.
அந்தரவீச்சு - அந்தரத்தில்வீசுதல், அந் தரிப்பு, பொறுப்பின்மை.
அந்தரவீணை - இருபத்திரண்டு வகை வீணைகளுள் ஒன்று.
அந்தராத்துமா - உயிர்க்குளுயிராயிருப் பவன்.
அந்தராந்தரதசை - கிரகங்களினது தசையில் உள்ளுக்குள்ளான தசாகா லம்.
அந்தராபத்தியை - கருப்பிணி.
அந்தராயம்-இடையூறு, துக்கம், தீமை.
அந்தராயாமவாதம் - தேகத்தினுட்புற நரம்புகளைப்பற்றிய ஒருநோய்.
அந்தராளசம்பந்தம் - ஆகமம் உபதே சித்த ஸ்ரீகண்டர்க்கும் உபதேசிக்கப் பட்ட தேவர்க்குமுள்ள சம்பந்தம்.
அந்தராளதிக்கு - கோணத்திசை.
அந்தராளம் - இடைக்காலம், கர்ப்பக் கிரகம், நடு-
அந்தராளன்-அநுலோமத் தந்தைக்குப் பிரதிலோமத் தாயிடத்திற் பிறந்த பிள்ளை.
அந்தரான்மா-ஆகாயத்தில் அந்தரமாகத் திரியும் ஆன்மா, உள்ளுணர்வு, உள் ளேயிருக்கும் ஆன்மா, மனுடனுள் ளத்திலிருக்கும் பரமான்மா.
அந்தரி - அந்தரியென்னேவல், ஆகாய வாணி, ஒருவகைத் தோற்கருவி, துர்க்கை, பார்வதி.
அந்தரிட்சம் - ஆகாயம்.
அந்தரிதம் - சேடம்.
அந்தரித்தல் - அலைதல், நிலைகெடுதல், மனந்தடுமாறல்.
அந்தரிந்திரியம் - அந்தக்கரணம்.
அந்தரிப்பு-உதவியின்மை, தனித்திருக் கை.
அந்தரியாகம் - உட்பூசை.
அந்தரியாமி - ஆன்மா, கடவுள், சீவ சாட்சி.
அந்தரியாமித்துவம் - ஆன்மாவோடு கலந்திருத்தல், உள்ளீடா யிருக்குந் தன்மை.
அந்தரிலம்பம் - ஒடுங்கிய முக்கோணம்.
அந்தரிலயம் - துரியாதீதம்.
அந்தரீட்சம் - ஆகாயம்.
அந்தரீபம் - தீவு.
அந்தரீயம் - உள்ளுடை.
அந்தருத்திரேகம் - உட்டொடக்கம்.
அந்தரேண-ஒழிய, இல்லாமல் நடுவில், ஊடாக.
அந்தரேணம் - நடு.
அந்தர் - உள், கீழ்மக்கள், மறைவு.
அந்தர்க்கதம்-இடையில்வருதல்,மறைந் திருக்கை.
அந்தர்க்கதவுவமை-உள்ளுறையுவமை.
அந்தர்க்கரணம் - உட்கருவி.
அந்தர்க்கிருகம் - உள்வீடு.
அந்தர்ச்சடரம் - இரைச்குடர்.
அந்தர்ச்சரீரம் - உள்ளிந்திரியம்.
அந்தர்த்தகனம் - மதுநீர்வடித்தல், உள் ளனல்.
அந்தர்த்தசை - சோதிடத்திற் சொல் லப்பட்ட மகாதசையில் இடை வருங் கிரகங்களுடைய அதிகாரத்தோடு பொருந்திய காலம்.
அந்தர்த்தானம் - உள், மறைவிடம்.
அந்தர்த்துவாரம் - உட்கதவு.
அந்தர்நியமனம் - உள்ளேயடக்குதல்.
அந்தர்ப்பகிர்வியாப்தன் - உள்ளும் புற முஞ் செறிந்திருப்போன்.
அந்தர்ப்பவம் - உள்ளாதல், உள்ளே பிறத்தல்.
அந்தர்ப்பவித்தல் - உள்ளாக்குதல், உள் ளாதல்.

அந்தர்ப்பாவனை - உள்ளத்திற் பாவித்தல்
அந்தர்ப்பாவிதகருமம் - அகனிலைச் செயப்படுபொருள்.
அந்தர்ப்பாவிதணிச்சு - பிறவினைவிகுதிகள் தொக்குநிற்பது.
அந்தர்ப்பிரகிருதி - உள்ளிந்திரியம்.
அந்தர்ப்பிரஞ்ஞன் - தன்னையறிபவன்.
அந்தர்ப்புரம் - அரசன் றேவியில்லம், உள்வீடு.
அந்தர்ப்பூதம் - உள்ளிருப்பது.
அந்தர்மலக்கிருமி - தேகத்திலே கபத்திலுமுதிரத்திலும் பிறக்கின்றகிருமிகள், மதுராந்நம் வெல்லம் பால் தயிர் மா மழைத்தண்ணீர் இவ்வத்துக்களைத் தின்பதினுற் பிறக்கின்ற கிருமிகள்.
அந்தர்முகம் - உண்ணோக்கியமுகம்.
அந்தர்முகி - அடங்கியமனத்தன், உண்ணோக்கிய முகமுடையவன்.
அந்தர்முகியோனி - வாயு அதிகரித்து அந்தர் முகமாக எழும்பிப் பெண்களுக்கு யோனித்தானத்திலே உபத்திரவஞ்செய்யும் ஒருவகை நோய்.
அந்தர்யசனம் - அந்தரியாகம்.
அந்தர்யாகம் - கண்களை மூடி அல்லது மூக்கு நுனியைப் பார்த்து ஞானமுத்திரையோடிருந்துகொண்டு தன்னுள்ளே குண்டலி முதலிய எல்லாவுபகரணங்களையும் தேடியதாகவும் புறத்திற் செய்யுமாறேஉள்ளே அக்கினிகாரியஞ் செய்யப்படுவதாகவும் பாவித்துச்செய்யும் வழிபாடு.
அந்தர்வஞ்சிசன் - அந்தப்புரக் காவலாளன்.
அந்தர்வேதி - இருநதிகளுக்கும் நடுவேயுள்ள சமபூமி. அது பிரயாகை தொடங்கிக் கங்கைக்கும் யமுனைக்கும் நடுவேயுள்ள தேசம்.
அந்தலை, அந்தலைப்பு - சந்திப்பு, பேறு, முடிவு, மேடு.
அந்தளம் - கவசம்.
அந்தளி - தேவர்கோயில்.
அந்தன் - கடுக்காய், குருடன், சனி.
அந்தா - ஒருமகிழ்ச்சிக் குறிப்புமொழி.
அந்தாதி - ஒரு பிரபந்தம். நின்ற பாட்டி னிறுதியும் வரும்பாட்டின் முதலும் ஒன்றாய் வருமோர்தொடை, பராபரம் கடவுள்.
அந்தாதிச்சா - மகராதியாறினும் வருந்தசாபலம்.
அந்தாதித்தல் - அந்தாதியாகத்தொடுத்தல்.
அந்தாதித்தொடை - அடிதோறும் இறுதிக்கணின்ற எழுத்தேனும், அசையேனும், சீரேனும், சொல்லேனும், அடியேனும், மற்றை அடிக்காதியாக வருவது.
அந்தாதிமடக்கு - ஓரடியின் இறுதியும் மற்றையடியின் முதலும் பல பொருள் ஒருமொழியான் மடங்கி வருவது.
அந்தாளி - குறிஞ்சியாழ்த்திறன் வகை முப்பத்திரண்டில் ஒன்று.
அந்தாளிபாடை - பாலை யாழ்த்திறள் வகையில் ஒன்று, ஒருபண்.
அந்தி - அக்காள், அந்தியென்னேவல், இரா, தில்லைமரம், பாலையாழ்த்திறத்திலொன்று, பொருத்து, மாலைக்காலம், முடிவு, மூத்தெருக்கூடுமிடம்.
அந்திகைக்கிளை - அந்தரகாந்தாரம்.
அந்திகம்-அயல், கொள்கொம்பு, பக்கம்.
அந்திகாசிரயம் - தாவரம்.
அந்திகாவலன் - ஒரு தேவதை, மாலைக்காலத்தில் தெருக்களில் காவலாகத் திரியுந் தேவதை.
அந்திகை-அக்காள், அடுப்பு, இரவு, ஒரு கண்ணோய், குருடு, சமீபம, பெண்.
அந்திகோன் - சந்திரன்.
அந்திசந்தி - எப்போதும், காலைமாலை.
அந்தித்தல் - பொருந்தல், பொருமுதல், மந்தப்படுதல்.
அந்திபகல் - இராப்பகல், கேவலசகலாவத்தைகளைக் கருதும் ஒரு குறிப்பு மொழி.
அந்திப்பூ - அந்திமந்தாரை, அந்திமல்லிகை.
அந்திப்பொழுது - மாலைக்காலம்.
அந்திமந்தாரம், அந்திமந்தாரை - ஒருபூமரம்.
அந்திமலர்ந்தான், அந்திமல்லிகை - அந்திப்பூ.
அந்திமாலை - பகற்காலத்தின் முடிவில் வரும் மாலைக்காலம்.

அந்திமான் - இடையெழு வள்ளலில் ஒருவன்.
அந்தியகருமம் - சாச்சடங்கு.
அந்தியகாலம் - மரணகாலம்.
அந்தியகிரியை - அந்தியகருமம்.
அந்தியசர் - புலையர்.
அந்தியசன் - சூத்திரவருணத்தோன், தம்பி.
அந்தியசைவர்-சிவதீட்சை பெற்ற பிரபிரதிலோமர் முதலிய சாதியார்.
அந்தியபம் - இரேவதி, மீனராசி,
அந்தியம் - மரணம், சமுத்திரம் பத்துக் கொண்ட எண், முடிவு.
அந்தியர் - கீழ்மக்கள்.
அந்தியவருணம் - நாலாம் வருணம், மிக்க கீழான வருணம்.
அந்தியாவசாயி - நிஷாதமாதுக்குஞ் சண்டாளனுக்கும்பிறந்தவன், இவன் றொழிற் சண்டாளத் தொழிலுஞ் சுடுகாடு காத்தலும், வேட்டையாடு தற்றொழிலையுடைய ஒரு வருணத்தார்.
அந்தியாவயவி - இறுதியில்வரும் அவயவமுடைய பிண்டம்.
அந்தியேஷ்டி } மரணயாகம்.
அந்தியேட்டி }
அந்தியை-மிலேச்சப்பெயருடையவள்.
அந்திரக்கண்மணி - நீலக்கல்.
அந்திரக்கொடிச்சி - கெந்தகம்.
அந்திரம் - குடம்.
அந்திரவசனம் - கொட்டைப்பாக்கு.
அந்திரன் - வேடன்.
அந்திரு - நிவர்த்திகலையில் பிருதிவிதத்துவத்தில் உள்ளனவாகச் சொல்லப்படும் புவனங்கள் நூற்றெட்டனுள் தென்மேற் றிசையிலிருக்கும் பத்திப்புவனங்களுள் ஒன்று.
அந்தில் - அசைச்சொல், அவ்விடம்.
அந்திவண்ணர் - சிவன்.
அந்திவண்ணன் - சிவன், மாலைக்கால மேகநிறமாகிய சிவப்பு நிறமானவன்.
அந்தீகிருதன் - குருடனாக்கப்பட்டவன்.
அந்தீபூதன் - குருடனானவன்.
அந்து - கிணறு, கொலை, நெல்வண்டு, பாதகிண்கிணி.
அந்துகம் - சங்கிலி, பாதகிண்கிணி, யானைச்சங்கிலி.
அந்துளியிந்துளியாத்தல்-சூறையாடல், பதைபதைத்தல்-
அந்தூகம் - யானைப்பாதகிண்கிணி.
அந்தேசம் - அந்தரிப்பு, அபலம்.
அந்தேசாலம் - தேற்று.
அந்தேவாசி-சண்டாளன், மாணாக்கன்.
அந்தை - ஒரு நிறை.
அந்தைமந்தை - மந்தக்குணம்.
அந்தோ - அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல்.
அந்தோட்டம் - கண்டோட்டம் என்னும் ஒரு ரோகம், அது வாயு உதட்டிற் சேரும்போது பிறந்து உதடுகளிலே வெடிப்பையுண்டாக்குமென்பர்.
அந்தோர் - நெல்லிமரம்.
அந்நலார் } அப்பெண்கள், அழகிய
அந்நல்லார் } பெண்கள்.
அந்நியபுட்டம் - குயில்.
அந்நியம் - அயல், குயில்.
அந்நியர் - பிறர்.
அந்நியோன்னியம் - ஒற்றுமை, ஐக்கியம்.
அப - ஓரெதிர்மறையுபசருக்கை.
அபகடம் - அவகடம்.
அபகமம் - புறப்பட்டுப்போதல், மறைந்துபோதல், மரணம்.
அபகாணம் - அபகரிப்பு, களவுசெய்தல், வழுச்செய்கை.
அபகரித்தல் - கொள்ளையிடல், வஞ்சனையாகக் கவர்தல்.
அபகருடசமை - அபகர்டசமை.
அபகருமம் - துர்க்கருமம், நெருக்கிடை, பொல்லாங்கு.
அபகர்டசமை - தருக்கத்தினது அசத்தான உத்தரஜாதியி லொருவகை; அது அவ்வியாத்தமான திட்டாந்தருமத்தால் அவ்வியாபகமான தருமத்தினது அபாவத்தைப் பொருளுக்கு வருவித்தல்.
அபகர்த்தா - அகற்றுவோன், அபகரிப்போன், திருடன்.
அபகளங்கம் - நீங்காவசை.
அபகனம் - அவயவம்.
அபகாசம் - வீண்சிரிப்பு.
அபகாதம்-அடித்தல், வெட்டல், கொல்லல்.
அபகாரகன் - திருடன்.

அபகாரம் - களவு, கொடுங்கோன்மை, தவறு, நட்டம், நன்மைக்குத் தீமை செய்தல், பொல்லாங்கு, வன்னம்.
அபகாரி - எத்தன், துஷ்டன், நன்றி யீனன்.
அபகிருதி - எதிரிடை, துர்ச்செய்கை, நெருக்கிடை.
அபகீர்த்தி - துர்க்கீர்த்தி, நிந்தை.
அபகுண்டனம் - சுற்றல்.
அபக்கியாதி - நிந்தை, பழி.
அபக்கிரமம் - புகலிடம், போதல்.
அபக்கிரியை - தீங்கு, துர்ச்செய்கை.
அபக்குரோசம் - நிந்தித்தல்.
அபக்குவம் - பக்குவமின்மை.
அபக்குவர் - பக்குவரல்லாதவர்.
அபக்குவி - பக்குவமில்லாதவன்.
அபங்கம் - கோளகபாஷாணம், பழுதின்மை.
அபங்கன் - நாசமில்லாதவன், பங்கமில்லாதவன்.
அபசகுநம், அபசகுனம் - துர்நிமித்தம்.
அபசங்கம் - பாதம்.
அபசதம் - கீழ்மை.
அபசதர் - அனுலோமராகிய கீழ்ச்சாதியார், கீழ்மக்கள்.
அபசதன்-அனுலோமனாகிய கீழ்ச்சாதியான், கீழ்மகன்.
அபசத்தம் - அசுபமொழி, அவசத்தம், வழூஉமொழி, வீண்பேச்சு.
அபசயப்படல் - தோல்வியடைதல்.
அபசயம் - தோல்வி, பலவீனம்.
அபசரணம்-பின்னிடுகை, புறப்படுதல்.
அபசரம் - அகற்றுதல், சீக்கிரகதி.
அபசரிதம், அபசரிதை - ஒழுக்கவீனம், துர்ச்சரித்திரம்.
அபசருச்சனம் - கொல்லுதல், நன்கொடை, பிறவி நீங்கல், விடுதல்.
அபசவ்வியம் - தற்சனிக்கும் அங்குட்டத்திற்கும் நடு, இடப்பக்கம்.
அபசாரம் - குறைவு, துர்ச்செய்கை, துன்னடை, வெளிச்செல்லுதல்.
அபசாரி - ஒழுக்கந்தப்பினவள், வேசி.
அபசிதம் - ஆதரித்தல், செலவிடல்.
அபசித்தாந்தம் - தன் சித்தாந்தத்திற்கிணங்காதவற்றைச்சொல்லி சாதித்தல்.
அபசித்துமூர்த்தம் - எட்டாமூர்த்தம்.
அபசுமாரம் - காக்காய் வலி, புத்தியின் றெளிவு நீங்குதல்.
அபசுமாரரோகம் - புத்தியின் றெளிவை நீக்கும் ஒருவகை ரோகம்.
அபசெயம் - அவசயம்.
அபசேதிரு - ஆராதுரிக்காரன்.
அபச்சாயை - ஒரு மரணக்குறி. தள்ளு படிச்சாயை.
அபச்சுமாரம்-காக்காய்வலி, பைத்தியம்.
அபஞ்சீகிருதபூதம் - தன்மாத்திரை.
அபஞ்சீகிருதம் - தனித்தனியே நிற்கும் பூதங்கள்.
அபடி - திரைப்படாம், திரைச்சீலை.
அபடு - சாமர்த்தியமின்மை.
அபடுகரணம் - புலக்குறைவு.
அபட்கை - பாம்பின் நச்சுப் பல்லின் ஒன்று.
அபட்சணம் - நோன்பு.
அபட்சதை - எதிர்.
அபட்சம் - வெறுப்பு.
அபட்சியம் - உண்ணத்தகாதது.
அபட்டமம், அபட்டம் - அங்குசநுனி.
அபதந்திரவாதம் - ஒருவகை வாதரோகம். அது ஊர்த்துவகாயத்திலிருந்து அதோகாயத்தைமரத்தலடையச்செய்தும், அதோகாயத்திலிருந்து ஊர்த்துவகாயத்தை மரத்த லடையச்செய்தும், மிகுந்த உபத்திரவத்தைவிளைப்பதும், அங்கத்தை விற்போலவளைத்துவருத்தமுற நெட்டுயிர்ப்பை எழுப்புவதுமான ஒரு நோய்.
அபதம் - மனுநீதபூரணமின்மலசிவம்.
அபதரித்தல் - பொறுத்தல்.
அபதர்ப்பணம் - திருத்தி யில்லாமை, நோயுற்றுழிப் பசிபொறுத்தல்.
அபதாந்தரம் - சமீபம்.
அபதானகம், அபதானம் - சுத்தநடை, மேன்மையான தொழில், வலி.
அபதூறு - கொள்ளை, துர்க்கீர்த்தி, பழிமொழி.
அபதேசம்-இலக்கு, உபாயம், காரணம், கீர்த்தி, திக்கு, வஞ்சம், வேடம்.
அபதேவதை - பைசாசம்.
அபத்தச்சந்தம் - உணவில் விருப்பின்மை, பசியின்மை.

அபத்தம் - தவறு, பொய், மோசம்.
அபத்தன் - பத்தியில்லாதவன்.
அபத்தி - பத்தியின்மை.
அபத்திச்சந்தம் - பசியின்மை.
அபத்தியசத்துரு - நண்டு.
அபத்தியதை - மருத்துவிச்சி.
அபத்தியதோஷம் - தருண சூத்தில் வரும் எழுவகைத் தோஷங்களுள் ஒன்று.
அபத்தியபதம் - யோனி.
அபத்தியம் - பத்தியத்தவறு, பிள்ளை.
அபத்தியவிக்கிரயி - மகவைவிற்பவன்.
அபத்தியானம் - அவமதிப்பு, கெட்ட சிந்தனை, பொல்லாங்கு.
அபத்திரபம் - வெட்கக்கேடு.
அபத்திரபை - வெட்கக்கேடு, வெட்கப் படுகை.
அபத்திரவியம் - அசுத்தம், கலப்பு.
அபநயனம் - அழிதல், அழித்தல், எடுத் துக்கொள்ளுதல், கடனிறுத்தல்.
அபநீதம் - அபகரிக்கப்பட்டது, இறுக் கப்பட்டது, எடுக்கப்பட்டது.
அபநுதியுருபகம் - பொருளை மறுத் துவமையையுடம்படுத் துரைப்பது (உ-ம்.) "கையல்ல காந்தண்மலர்".
அபநுத்தி - அகற்றுதல், துரத்துதல்.
அபநோதம் - பிராயச்சித்தம், அகற்றுதல்.
அபநோதனம் - போக்குதல்.
அபந்தலம் - செங்கத்தாரி.
அபப்பிரசாதை - வயிற்றிற் கருவழியப் பெற்றவள்.
அபப்பிரபஞ்சம் - பாமர சாதிகளான விழிசனர்மொழி.
அபமம் - கீழ்க்கதி, சூரியன் தக்கிணாய னத்திலாவது உத்தராயணத்திலா வது இறங்குதல்.
அபமரணம் - அகாலமரணம், துன்மர ணம்.
அபமார்க்கம் - துன்மார்ககம், நாயுருவி, புன்சமயம்.
அபமார்க்கி - நாயுருவி.
அபமானனம் - துர்க்கீர்த்தி.
அபமிருத்தியு - சடுதிமரணம், நோய் முதலிய காரணமில்லாதமரணம்.
அபமிருத்து - துன்மரணம்.
அபம் - எதிர், கீழ்மை, பிரிவு, வித்தி யாச முதலியதைக் காட்டும் ஒருப சருக்கம்.

அபயகத்தம், அபயகரம் - பயந்தீரவமைக் குங் கை.
அபயகுலசேகரன் - ஒரு சோழன்.
அபயக்கை - அபயகரம்.
அபயங்கரம் - அச்சமின்மை.
அபயங்கொடுத்தல் - அடைக்கலமா யேற்றுக்கொள்ளுதல்.
அபயசம் - துர்க்கீர்த்தி.
அபயஸ்தம் - அபயகரம்.
அபயஸ்தன் - தற்காப்போன்.
அபயதானம், அபயப்பிரதானம் - அடைக்கலம்.
அபயமிடல், அபயமிடுதல் - அடைக்கலம் புகுதல், முறையிடுதல்.
அபயம் - அச்சமின்மை, அடைக்கலம், உலகமுடிவு, ஓலம், கிருபை, செவ் வியம், தயை.
அபயர் - படைவீரர்.
அபயலை - விலாமிச்சம்வேர்.
அபயவத்தம் - அபயகரம், இணைக்கை பதினைந்து வகையுள் ஒன்று. அது இருகையுஞ் சுகதுண்டமாக நெஞ் சுறநோக்கி நெகிழ்ந்து நிற்பது.
அபயவாக்கு - அஞ்சேலெனல்.
அபயன் - அச்சமறுத்தோன், அருகன், கடவுள், சோழன், பயமற்றவன், வீரன்.
அபயாஸ்தம், அபயாத்தம், அபயாரத்தம் - பயந்தீரவமைக்குங் கை.
அபரகாத்திரம் - கால், பின்கால்.
அபரசத்திதத்துவம் - அபரவிந்து.
அபரசன் - பின்னோன்.
அபரசாமானியம் - அற்பவிடயங்களி னுளதாகிய சாமானியத்தன்மை.
அபரசிவதத்துவம் - அபரநாதம்.
அபரஞானம் - வாலஞானம்.
அபரஞ்சி - புடமிட்டபொன்.
அபரதி - தாமதித்தல்.
அபரத்துவம் - எதிர், பின்.
அபரநாதகலைகள் - இந்திகை, தீபிகை, உரோசிகை, மோசிகை, ஊர்த்து காமினி என்னும் ஐந்துகலைகள்.
அபரநாதம் - எதிரொலி.
அபரபக்கம் - சந்திரன்பிற்பக்கம்.
அபரபட்சம் - அபரபக்கம், பதினைந்து நாளெனப் பொருள்படும் ஓர் குறிப்புமொழி.

அபரபதி - ஆணவமலம் நீங்கி இடைக் காலத்திற் பதித்தன்மை அடைந்த ஆன்மா.
அபரபுத்தி - கீழ்ப்போகங்களை அனுபவித்தல், பின்புத்தி.
அபரபோகம்-கீழ்ப்பட்ட போகானுபவம். அது அசுத்தமாயாகாரியமாகியபுவனங்களிலிருக்கும்அமரேசராதியான உருத்திரர்கள்புசித்திருக்கும்போகம்.
அபரப்பிரணவம் - சுத்தப்பிரணவம்.
அபரப்பிரமம் - சகுணப்பிரமம்.
அபரமந்திரேசுவரர்-ஸ்ரீகண்டர் வீரபத்திரர் முதலிய அபரமுத்த சிவன்கள். இவர்கள் பிரளயாகலருட் பரிபக்குவமலர்களாய்ச் சிவானுக்கிரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களாவார்கள்.
அபரமார்க்கம் - நாயுருவி.
அபரமுத்தசிவன் - அபரமுத்தியை அடைந்து சிவத்துவம் பெற்றிருக்கும் ஆத்துமா.
அபரமுத்தி - சுத்தமாயா புவனத்தை அடைந்திருத்தல்.
அபரம்- எதிர், கவசம், நரகம், பிணக்கு, பிந்தினது, பிற்பக்கம், பின், முதுகு, யானைப்பின்கால்.
அபரராத்திரம் - இராத்திரியின் பிற்சாமம்.
அபரர் - கீழ்ப்பட்டவர்.
அபரலோகம் - மோட்சம்.
அபரவயசு - முதிர்ந்தவயது.
அபரவாகீசுவரர் - பரவாகீசுவரரல்லாதவர், அபரமாகிய வாக்குக்கதிபர்.
அபரவாகீசுவரி - பரவாகீசுவரியல்லாத சத்தி, அபரமான வாக்குக் கதிபதியானவள்.
அபரவாக்கியம்-பிரதான வாக்கியத்திற்குப் பின்வரும் வாக்கியம்.
அபரவித்தை - வேதாங்கமுதலியன.
அபரவிந்து - அனதிக்கிராந்தவிந்துக பாரசத்தி, இது அனதிக்கிராந்தவிந்துக பரசிவம் என்னுமபரநாதத்தாற் றோற்றுவிக்கப்பட்டது. அபரசத்தி தத்துவம் அர்த்தசந்திரன் நிரோதியென்னும் இரண்டும் இதிலடங்கும். மூலோபாதானமான குண்டலியினின் றுண்டான குணாத்துமகங்கள் மூன்றனுள் ஒன்று. அபரவிந்து, மோகினி, மகான் என்பவைகளே மூன்று மகாத்துமகங்கள், மகாமாயை என்னுங் குண்டலினிசத்தியின் இரண்டாவது சோபத்தால் உண்டாகுஞ் சங்கற்பரூபமான விந்து.
அபரவிந்துகலை - சாந்தி, சாந்தியதீதை, நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை என்னும் பஞ்சகலைகள்.
அபரன் - தாழ்வுடையோன்.
அபராங்கம் - சரீரத்தின் பிற்பாகம்.
அபராசிதன் - அரன், அரி.
அபராசிதை - விசயதசமியில் வணங்கப்படுந் துர்க்கை.
அபராணம் - ஏற்பாடு, பின்னேரம்.
அபராதம் - கட்டளையை மீறுதல், குற்றம், தண்டம், பிழை.
அபராதர் - கட்டளையை மீறுவோர்.
அபராதி - குற்றவாளி.
அபராத்தர் - பின்னுன வாப்தர்.
அபராத்தன் - தவறுசெய்பவன், தீங்கு செய்பவன், பின்னுனவாப்தன்.
அபராத்திரம் - கடைச்சாமம்.
அபராந்தம்-மேற்குக்கடற்கரையிலுள்ள தேசம்.
அபராந்தர்-மேற்குக்கடற்கரையி லிருப்பவர்.
அபரான்னம் - மத்தியானத்தை யடுத்துப் பின்வரும் ஆறு நாழிகை கொண்ட நேரம்.
அபரிகாரம் - விலக்காமை.
அபரிசகுட்டரோகம்-ஒருவகைக்குட்டரோகம், அது சர்வாங்கத்திலுங் கறுத்தவிரத்தம் வடிதல், நோய், தொடப்படக்கூடாமை, வீக்கம், வெடிப்பு முதலிய குணங்களுடையது.
அபரிசரம் - தூரம்.
அபரிச்சதம் - நிருமாணம்.
அபரிச்சின்னத்துவம் - கண்டஞ்செய்யப்படாத தன்மை, தேசத்தாலும் காலத்தாலும் வத்துவாலும் எல்லைப்படாமை.
அபரிச்சின்னம் - கண்டஞ்செய்யப்படாமை.
அபரிச்சேதம்-ஒழுங்கின்மை, பிரிவின்மை.
அபரிட்காரம் - சீர்கேடு.
அபரிட்சயம் - காசமின்மை.

அபரிணயனம் - இல்வாழ்க்கைப்படாதிருத்தல்.
அபரிணீதை - விவாகம்செய்யாதவள்.
அபரிதம் - அளவில்லாதது.
அபரிபக்குவமலர் - விட்டுநீங்கப்பக்குவமாகாத ஆணவ மலத்தை யுடைய ஆன்மாக்கள்.
அபரிபாடி - ஒழுங்கின்மை.
அபரிபூதம் - முதிராதது.
அபரிமாணம் - அளவில்லாதது.
அபரிமிதம் - அளவின்மை, எல்லையின்மை, பெருமை.
அபரியந்தம் - மட்டற்றது.
அபரியாத்தம் - வல்லமையற்றது.
அபரியாத்தி - பூரணமில்லாமை.
அபரியாயம் - ஒழுங்கின்மை.
அபரீபாத்திரம் - தசவித பாத்திரங்களில் ஒன்று.
அபரூபம் - அருமை, அவலட்சணரூபம்.
அபரை - சிவசத்தி மூன்றனுள் ஒன்று இதுவும் பிராமி, வைஷ்ணவி, இரௌத்திரி எனமூன்றுவிதப்படும். இவற்றுள் பிராமி நூறுகோடியோசனை விசாலங்கொண்ட இரத்தமண்டலத்திலே சகல லோகங்களையுஞ் சிருஷ்டித்தல்காரணமாகவும், வைஷ்ணவி இரண்டுகோடியோசனை விசாலங்கொண்ட சுவேதமண்டலத்திலே சர்வலோகங்களையும் இரட்சித்தல் காரணமாகவும், இரௌத்திரி மூன்று கோடி யோசனை விசாலங்கொண்ட விந்துமண்டலத்திலே சகல லோகங்களையுஞ் சங்கரித்தல் காரணமாகவும் இருப்பார்கள் என்பர். சிவதன்மிணி தீட்சை யிரண்டனுள் ஒன்று. அது பவுதிகிதீட்சை.
அபரோட்சஞானம் - பிரமசைதன்னிய தரிசனம்.
அபரோட்சம் - அனுபவஅறிவு, பிரத்தியக்ஷம்.
அபரோட்சன் - பிரமசைதன்னியதரிசனன்.
அபலச்சா - அபலமானசா.
அபலம் - கதவின்ருள், பலவீனம், பலனற்றது.
அபலன் - பெலவீனன்.
அபலாடிகை - தாகம்.
அபலாபம் - உருக்கம், வஞ்சகம், நேசம், பிறத்தல்.
அபவநம் - காற்றில்லாதவிடம், நந்தனவனம்.
அபவம் - அபாவம்; உலகமுடிவு, திமிங்கலம்.
அபவரணம் - மூடி.
அபவருக்கம் - நிறைவேற்றம், பலம், முடிவு, முத்தி, விடுதல்.
அபவருச்சனம் - நன்கொடை, பிறவி நீங்கல், விடுதல்.
அபவருத்தம் - அழித்தல்.
அபவருத்தனம் - அகற்றுதல், கலக்குதல், சுருக்குதல்.
அபவர்க்கம் - அபவருக்கம்.
அபவர்த்தம் - அகற்றியெடுத்தல், ஒன்றுக்கொன்று வித்தியாசமான இரண்டு இராசியையாவது பலராசியையாவது சேடம்வராமல் அரிக்கும் வேறோரிராசி.
அபவர்த்தனம் - ஆட்டியசைத்தல், சுருக்குதல், நீங்குதல்.
அபவனம் - நந்தனவனம்.
அபவாகம் - அருத்தாபத்தி, உள்ளறை.
அபவாதம் - ஒவ்வாப்பேச்சு, குற்றச்சாட்டு, தடை, பழிச்சொல், வெள்ளை.
அபவாதயோகம் - குற்றஞ்சொல்லல்.
அபவாரணம் - மறைவு, மரணம்.
அபவிதவ்வியம் - அசம்பவம்.
அபவித்தபுத்திரன் - தாய் தந்தையரால் நீக்கப்பட்டுப் பிறரால் எடுத்துவளர்க்கப்பட்ட புத்திரன்.
அபவித்தன் - அகற்றப்பட்டவன், அபவித்தபுத்திரன்-
அபவித்திரம் - அசுத்தம்.
அபவித்திரன் - அசுத்தன்.
அபவியயமானம் - கடனிறுமை, செலவிடல்.
அபவியயம் - ஆராதூரித்தனம்.
அபவிருத்தி - குறைவு.
அபவேட்டிதம் - கைவட்டணை நான்கனுளொன்று. அதுதற்சனிவிரல்முதலாக் கைவரப்பிடிக்குந் தொழில்.
அபாகசாகம் - இஞ்சி.
அபாகம் - முதிராமை, பாகமின்மை.
அபாகரணம் - நிராகரணம், கடனிறுத்தல்.

அபாகிரோகம் - மசூரிகைரோக வகையுள் ஒன்று. அது சரீரத்திலே தூரந்தூரமாக உலர்ந்ததுபோலுங் கருகினதுபோலுங் கொப்புளங்களாக எழும்பி இறக்கங்கொள்ளாமல் நெடுநாளைக்குநின்று உபத்திரவஞ்செய்யும்.
அபாக்கியம் - நிர்ப்பாக்கியம்.
அபாக்கியவான் } நிர்ப்பாக்கியன்.
அபாக்கியன் }
அபாங்ககம் - அங்கவீனம், கடைக்கண்.
அபாங்கதரிசனம் - கடைக்கண்பார்வை.
அபாங்கம் - கடைக்கண், கடைக்கண் பார்வை, திலகம்.
அபாசங்கம் - அம்புக்கூடு.
அபாசம் - ஆசையின்மை, குற்றம்.
அபாசிரயம் - முற்றத்தின்பந்தர்.
அபாசீனம் - தெற்கு.
அபாசுவரம் - ஒளியில்லாதது.
அபாஷணம் } அமைதி, பேச்சின்மை,
அபாடணம் } மௌனம்.
அபாடவம் - அந்தக்கேடு, நோய்.
அபாணிக்கிரகணம் - விவாகமின்மை.
அபாண்டம் - அபாத்திரம், நிந்தை.
அபாதானகாரகம் - நீக்கப்பொருள்கொடுக்கும் ஐந்தாம்வேற்றுமை வினையோடு முடிவது.
அபாதானம் - ஐந்தாம் வேற்றுமைப் பொருள்.
அபாதிதவிடயத்துவம் - அவாதித விடயத்துவம்.
அபாத்திரம் - பாத்திரவீனம்.
அபாத்திரீகாணம் - சுயதருமம்விட்டு அன்னியதருமஞ்செய்தல்.
அபாபம் - இன்மை, ஒவ்வாமை, பாவமின்மை, மரணம்.
அபாமார்க்கஸ்நானம் - தேகத்தில் நாயுருவி தடவிச்செய்யும் ஸ்நானம்.
அபாமார்க்கம் - நாயுருவி.
அபாம்பதி - சமுத்திரம்.
அபாயம்-அழிவு,எழுச்சி,சதியோசனை, நட்டம், பிரிவு, மோசம், வஞ்சகம்.
அபாரணை - உண்ணுமை.
அபாரமார்த்திகம் - பரமார்த்தமில்லாதது, யதார்த்தமல்லாதது.
அபாரம் - அளவின்மை, எல்லைப்படாதது, கடவுள், கேடு.
அபார்த்தகரணம் - கள்ளவழக்கு.
அபார்த்தம் - அருத்தமில்லாதது, பிரயோசனமில்லாதது.
அபாவசதுட்டயம் - முன்னில்லாமை, பின்னில்லாமை, ஒன்றினொன் றில்லாமை, என்றுமில்லாமை என்னு மபாவம் நான்கு.
அபாவப்பிரமாணம்-ஓரளவை: அஃது இயல்பாய் இல்லதனை இல்லையெனக் கோடல்.
அபாவம்- இன்மை,ஓரளவை, கடுக்காய், பாவமின்மை.
அபாவயோகம் - ஐவகையோகங்களுள் ஒன்று, அது காரணங்களுக்கெட்டாத பிரமத்தில் மனோலயமானது.
அபாவர்த்தனம் - திருப்புதல்.
அபாவவளவை-இல்லாததற்குவமை.
அபாவனை தியானமின்மை, நிந்தனை.
அபாவாபாவம் - ஓரலங்காரம், அது பள்ளியுளீரம் புலராமையேறற்க என்பதிற்போல எச்சமுமுடிக்குஞ் சொல்லும் எதிர்மறுத் துடன்பாட்டுப் பொருளில் வருவதொன்று.
அபானத்தானவித்திரிதிக்கட்டி - ஒருவகை வித்திரிதிக்கட்டி, இது ஆசனத்திற் பலவித உபத்திரவங்களையுண்டாக்கி மலத்துவாரத்தைக் கெடுக்கும்.
அபானம் - கடுக்காய், குதம், பாயுரு, மூலாதாரம்.
அபானவாயு - கீழ்நோக்கிச் செல்லுங் காற்று.
அபானவிருத்தி - அபானவாயுவாய்ச் சேட்டித்தல்.
அபானன் - உச்சத்தலத்தில் நிற்பது, தசவாயுவினொன்று.
அபானீயம் - குடிக்கத்தகாதது.
அபி - கண்டனை, கதிப்பு, கேள்வி, சந்தேகம், சமீபம், பிரிவு, மேன்மை, விருப்பம் இவற்றைக் காட்டும் ஒருபசருக்கம்.
அபிகதம் - சமீபித்தல்.
அபிகமநம் - சமீபம்.
அபிகமம் - சமீபமாகப்போதல்.
அபிகருடணம் - உரிஞ்சுதல், பொய்க் கோட்படல், தேய்த்தல்.
அபிகாதசுரம் - ஒருவகைச்சுரம். இது குத்துக்காய்முதலிய இரணங்களினாலும், அக்கினி சமீபமாயிருந்து நடத்

துந் தொழிலினலு மதிகநடையினு லும், அதிகஉழைப்பினலும்வருவது.

அபிகாதசோபை - ஆயுதக்காயமுதலி யவற்ருல் உண்டாகும் ஒருவகை ரோகம்.

அபிகாதம் -உபாதி, அடித்தல், நிருமூல மாயழித்தல், பரிசித்தல், காயப்படுத் தல்.

அபிகாதவாதம் - அதிகமாக வழிநடத் தல் முதலிய காரணங்களாற் பிறந்து சரீரமுழுதும் வியாபித்து அடித்தாற் போல நோகச்செய்யும் ஒருவகை வாதநோய்.

அபிகாதி - சத்துரு.

அபிகாயம்- அழர்சி, ஒருகாசம், சீற்றம், மனவேகம்.

அபிகாரம் - கொள்ளையிடல், நெய், படைக்கலந்தரித்தல், வருத்துகை.

அபிகிதகருத்தா, அபிகிதகர்த்தா - தன்செயலை யுணர்த் தும் வினைக்கெழுவாயாக நிற்குங் கருத்தா.

அபிகிதகர்மம், அபிகிதகன்மம் - செயலை யுணர்த்தும் வினை செயப்பாட்டு வினையாய்வர அதற் கெழுவாயாக நிற்குஞ் செயப்படுபொருள்.

அபிகிதத்துவம் - மேற்கோள்.

அபிகிதம் - முன்சொல்லப்பட்டது.

அபிகிருதி-ஒருவகைச்சந்தம். அது ஒற் ருெழித்து உயிராவது உயிர் மெய் யாவது அடியொன்றிற்கு இருபத் தைந்தெழுத்தாய் வருவது.

அபிக்கியாதம் - அறியப்பட்டது.

அபிக்கியை-அழகு, அழைத்தல், சீர்த்தி சொல்லல், தூர்க்கீர்த்தி, நாமம், பரி யாயபதம், பிரகாசம்.

அபிக்கிரகணம் - உடையவன் முன் னிலையில் யாதாமொரு பொருளைக் கவர்தல், கொள்ளையிடல்.

அபிக்கிரகம் - திருடுதல், போர்க்கறை கூவுதல்.

அபிக்கிரணம் - எதிர்கொள்ளல்.

அபிக்கிரமம் - ஏறுதல், சருவுதல்.

அபிசங்கசுரம் - ஒருவகைச்சுரம், அது பூதாவேசசுரம், அவுஷதகந்தசுரம், விஷசுரம், கோபச்சுரம், பயச்சுரம், துக்கச்சுரம், காமச்சுரம் என எழாக விரியும்,

அபிசங்கம்-குற்றச்சாட்டு, கூட்டம், ச தியம், சமிப்பு, தழுவுதல்.

அபிசத்தி - தூர்க்கீர்த்தி, இரத்தல், ந திந்தல்.

அபிசந்தானம் - உடந்தை, எய்ப்பு, சப தானம் பண்ணுதல், விசேடமாக உடன்படிக்கை.

அபிசந்தாபம் - யுத்தம்.

அபிசந்தானம் - அணுப்புதல்,இணக்கப பற்றுதல்.

அபிசந்தி-அணுப்பு, இணக்கம், காரியப்

அபிசம் - சங்கம்.

அபிசம்பந்தம்-சங்கிரதம், நல்லிணக்கம்

அபிசம்பாதம் - சாபம், யுத்தம்.

அபிசரன் - தோழன்.

அபிசர்க்கம் - சிருட்டிப்பு.

அபிசர்ச்சனம் - கொலை, நற்கொடை

அபிசவணம் - அபிடவணம்.

அபிசவம் - கஞ்சி.

அபிசவனம் - முழுகுதல்.

அபிசனம் - கீர்த்தி, பிறந்ததேயம், வமி சத்தலைமை, வமிசம்.

அபிசனவான் - உயர்குலத்தோன்.

அபிசாதகுலம் - நற்குலம்.

அபிசாதம் - தகைமையானது.

அபிசாதன் - உயர்குலத்தோன், தக்க வன், பண்டிதன்.

அபிசாபம்-குற்றச்சாட்டு,சபிப்பு,வீண்.

அபிசாபனம் - சபித்தல்.

அபிசாபிவாரம் - இச்சித்தல்.

அபிசாரகம் - மந்திரத்தாற்கொல்லல்.

அபிசாரகோமம் - மந்திரயந்திரங்களி னற் கொலைமுதலிய தீங்குசெய் தற்கு அமைக்கும் யாகம்.

அபிசாரசுரம் - ஒருவகைச் சுரநோய், அது அதர்வணவேத மாரணமந்தி ரங்களைக்கொண்டு ஒருவன் பே ரைச் சொல்லி யோமஞ் செய்தலி னற் பிறக்கும் என்பர்.

அபிசாரணம் - சந்தித்தல், சமீபித்தல்.

அபிசாரமந்திரம் - மோகனமந்திரம்.

அபிசாரம் - நிலமிப்பு, பெலன், மோக னம், யுத்தம்.

அபிசாரவோமம் - மாரணவோமம்.

அபிசாரி - மோகஸ்திரீ, மோகன வித் தைக்காரன், வியபிசாரி,

அபிசாரிகை - பிறர்சம்பந்தஸ்திரீ.
அபிசாரிக்கை - கொலைமுதலிய தீங்கு விளைத்தற்பொருட்டுச் செய்யும் மந்திரசாதனை.
அபிசாரிதம் - மோகிக்கப்பட்டது.
அபிசிதம் - கூப்பிட்டிடுமன்னம், உண்ணல்.
அபிசித்தாந்தம் - சித்தாந்தஞ் சொல்லத்தொடங்கி வேறொன்றைச் சொல்லுதல்.
அபிசித்து - திராவிடதேசத்து அரசன், அபிசித்து, ஓரெட்டு நட்சத்திரம், இதுஉத்திராடத்திற்குப்பின் சோதிவிஷயமாய்ச் சேர்க்கப்படுவது, ஒரு முகூர்த்தம்.
அபிசுதம் - புளித்தகஞ்சி.
அபிஞ்ஞர் - அறிந்தவர், நிபுணர்.
அபிஞ்ஞாப்பிரத்தியட்சம் - கேவலம் இந்திரியசம்பந்தத்தால்அறியுமறிவு.
அபிஞ்ஞானம் - அடையாளம், அறிவு, [கறை.
அபிஷங்கம் } சாபம்.
அபிடங்கம் }
அபிஷதம் } மருந்து.
அபிடதம் }
அபிடவணம் - நீரின்முழுகுதல், யாகாதி செய்தல்.
அபிடவம் - நீரின்முழுகுதல், புளிப்பேறினகஞ்சி.
அபிடித்தர் - அபிடேகஞ் செய்யப்பட்டவர்.
அபிடியந்தம் - கண்ணின் பெலவீனம், பாய்தல். பெருகுதல், பொசிதல், மிஞ்சினபாகம்.
அபிடுதம் - புளிப்பேறினகஞ்சி.
அபிடேகக்கூட்டு - சுவாமிக்கபிடேகஞ் செய்தற்குக் கூட்டுஞ்சரக்கு.
அபிடேகதிரவியங்கள் - அபிடேகஞ் செய்தற்கு வேண்டிய திரவியங்கள், அவை எண்ணெய்க்காப்பு, மாக்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட்காப்பு, பஞ்சகவ்வியம், இரசபஞ்சாமிருதம், பலபஞ்சாமிருதம், பால், தயிர், நெய், தேன், சருக்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு தமரத்தம் பழச்சாறு, குளஞ்சிப்பழச்சாறு, மாதுளம் பழச்சாறு, இளநீர், சந்தனக்குழம்பு என்பவைகளாம்.

அபிஷேகம் } திருமஞ்சனம், முழுக்கு.
அபிடேகம் }
அபிட்டம் - இதம்.
அபிட்டுதம் - துதிக்கப்பட்டது.
அபிதம் - இரட்சித்தல்.
அபிதன்மபிடகம் - பௌத்தருடைய பிடகாகமங்கள் மூன்றனுள் ஒன்று.
அபிதா - அபிதை.
அபிதானகோசம் } பதங்களில் அருத்தமறிவிக்கும் புத்தகம்.
அபிதானசிந்தாமணி }
அபிதானமாலை }
அபிதானம் - அபிதானகோசம், சலாகை, சொல்லுதல், பெயர், பெயரிடுதல்.
அபிதாபம் - கலக்கம், மிகுவெப்பம்.
அபிதாமூலத்தொனி } பெயராடியாகத் தோன்றிய குறிப்புப்பொருள்.
அபிதாமூலம் }
அபிதார்த்தம் - பதவுரை.
அபிதாவகம் - பின்றொடர்ந் தோடுதல்.
அபிதாவநம் - பின்றொடர்ந்து துரத்துதல்.
அபிதானம் - பெயர், பொருணூல்.
அபிதிட்சை - விருப்பம்.
அபிதேயம் - நாமம், பொருளுள்ளசொல்.
அபிதேயரகிதம் - பயனில்சொல்.
அபிதை - செஞ்சொல், சொற்பொருள், பெயர்.
அபித்தியானம் - இச்சித்தல், தியானித் [தல்.
அபித்தியை - இச்சை.
அபித்துரோகம் - குரூரம்.
அபிநந்தை - விருப்பம்.
அபிநயக்கூத்து - நிருத்தக்கைதழுவாது பாட்டினதுபொருளுக்குக்கை காட்டி வல்லபஞ் செய்யும் பலவகைக் கூத்து.
அபிநயபிடகம் - பிடகசாத்திரங்கண் மூன்றுளொன்று.
அபிநயம் - அலங்கரிப்பு, உபசாரணை, கூத்து, கைமெய்காட்டல், காமக்குறிப்பு.
அபிநயர் - கூத்தர்.
அபிநயித்தல் - அபிநயஞ் செய்தல்.
அபிநவம் - அதிசயம், புதுமை.
அபிநாசசன்னி - ஒருவகைச்சன்னி.
அபிநிட்கிரமணம் - கக்குதல், புறப்படல்.
அபிநிட்சத்தி - முடிவு.
அபிநியாசசன்னிபாதசுரம் - ஒருவகைச் சன்னிபாதசுரம். அது வாதமும்பித்

தமுஞ் சிலேஷ்மமுஞ் சமமாக அதிகரித்தலினுற் பிறப்பதும், பசிநீங்குதல், முகத்திற் பளபளப்பு, பேச்சில்லாமை, துர்ப்பலம், பஞ்சேந்திரியத்தன்மை குறைவு, மயங்கியநித்திரை, அறிவின்மை என்னும் இக்குணங்களை யுண்டாக்குவது.

அபிநியாசவாதம் - ஒருவகை வாதநோய்: அது வாதபித்த சிலேஷ்மங்களை அதிகரிக்கச்செய்து வருத்தும்.

அபிநிரியாணம் - படையெழுச்சி.

அபிநிவேசம் - அபிப்பிராயம், தொழிலிற்பிரவேசிக்கை, படிப்புமுயற்சி.

அபிநீதி - சயிக்கை, சினேகம்.

அபிபவம் - கீழ்ப்படுத்தல்.

அபிப்வனம் - கீழ்ப்படுதல், கீழ்ப்படுத்தல், வியாதிமுதலியவற்ருல் அறிவு மாறுபடுதல்.

அபிபூதம் - அபசயப்பட்டது, அறியாமையுள்ளது, கீழ்ப்படுத்தப்பட்டது, மழுங்கினது.

அபிபூதன்-அறியாமையுள்ளவன், கீழ்ப்படுத்தப்பட்டவன்.

அபிபூதி . அவமானம், கீழ்ப்படுத்தல், தோற்கச்செய்தல்.

அபிப்பிரணயம் - தயவு, நிவிர்த்தி.

அபிப்பிரணயனம் - தயவு, பிராயச்சித்தம்.

அபிப்பிராயச்சந்தம்-அபிப்பிராயம், சம்மதம்.

அபிப்பிராயம் - உட்கருத்து, எண்ணம், நோக்கம், மறைபொருள்.

அபிமதம் - அன்பு, சம்மதம், விருப்பம்.

அபிமந்தம் - கண்ணோய்.

அபிமந்திரணம் - அழைத்தல், ஆலோசித்தல், ஒன்றில் மந்திர உருவேற்றல், பிரதிஷ்டை.

அபிமந்திரம் - செபித்தல்.

அபிமந்திரிதம் - நால்வகைச் சுத்தியுள் ஒன்று, அது மந்திரித்தலாற் செய்யப்படுஞ் சுத்தி, மந்திரஞ் செய்யப்பட்டது.

அபிமந்திரித்தல் - ஒன்றிலேமந்திர உருவேற்றல், பிரதிஷ்டைபண்ணல்.

அபிமந்து - பஞ்சபாண்டவரு ளொருவனுகிய அருச்சுனனுக்குச் சுபத்திரை பெற்ற ஒரு மகாவீரன்.

அபிமரம் - கொலை, மறியல், யுத்தம்.

அபிமர்த்தம் - ஊர்க்கொள்ளை, தேய்த்தல், யுத்தம்.

அபிமன் } அருச்சுனன்மகன்வாளபீமன்.
அபிமன்னு }

அபிமாநதேவதை - ஒன்றைத் தன்னுடையதாகப் பாவிக்கும் அதிதெய்வம்.

அபிமாநம் - களிப்பு, மதிப்பு, மானம்.

அபிமானபுத்திரன் - ஸ்வீகாரபுத்திரன், வைப்பாட்டியின் பிள்ளை.

அபிமானம் - அறிவு, ஒன்றைத் தன்னுடையதாக நினைத்தல், செருக்கு, தைசதாகங்காரம், நேரப் படுத்தல், மதப்பு, விரும்புதல், ஆணவமறைப்பு, உருக்கம், களிப்பு, கொலை, நேசம், பெருமை.

அபிமானவிருத்தி - அகங்காரம்.

அபிமாஞக்கினி - அக்கினிமண்டலத்திலுள்ள அக்கினிதேவர்களாகிய அனலர் நாற்பத்தொன்பதின்மரில் தலைமைபெற்ற ஒருவன், பாவகன், பவமானன், சுசி என்பவர்கள் அவனுடைய புத்திரர்கள்.

அபிமானி-அபிமானமுடையோன், கனவான்.

அபிமானிதம் - புணர்ச்சி.

அபிமானித்தல் - அளவிடல், கனம்பண்ணல், மதித்தல், மெச்சல்.

அபிமானு - அறிவு, உருக்கம், பெருமை.

அபிமுகம் - நேர்முகம், முகதா.

அபிமுகர் - அபிமுகமுடையவர், பிரியமுற்றவர்.

அபிமுகன்-அபிமுகமுடையவன், எதிர்நோக்கிய முகமுடையோன், பிரியமுற்றவன்.

அபிமுகி - அபிமுகமானது, எதிர்நோக்கிய முகமுடையது.

அபியவகிரீஷணம் - கல்லிப்பிடுங்கல்.

அபியாதி - சத்துரு, பகைவன்.

அபியிதகருத்தன் - எழுவாய்க்கருத்தன்.

அபியிதம் - சொல்லப்பட்டது.

அபியுத்தம் - பகையெதிர்கொள்ளல்.

அபியுத்தன் - குற்றஞ் சாட்டப்பட்டவன், சாவதானமுடையோன், படித்தவன், வித்துவான்.

அபியூட்சணம் - அமைத்தல்.

அரவித்தல் - ஒலித்தல்.
அரவிந்தம் - தாமரை, நாரைப்பறவை, செம்பு, மன்மதன் கணையினொன்று.
அரவிந்தலோசனன் - விட்டுணு.
அரவிந்தன் - பிரமன்.
அரவிந்தாக்கன் - விட்டுணு.
அரவிந்தை - இலக்குமி.
அரவிஞள் - அரவுநாள்.
அரவீசம் - பாதரசம்.
அரவு-ஆயிலியம், பதஞ்சலி முனிவர், வைக்கோற்பழுதை, பாம்பு.
அரவுநாள் - ஆயிலியநாள்.
அரவுயர்த்தவன் / அரவுயர்த்தோன் } துரியோதனன்.
அரவுயிர்ப்பு - பாம்பின்சத்தம்.
அரவெனுந்துதி - கருமசாந்தி.
அரவொலி - ஹரனென்று சிவனைநோக்கிச் சொல்லும் சத்தம்.
அரவோன் - பதஞ்சலிமுனிவன்.
அரளல் - பிரமித்தல்.
அரளி - நாறிமரம், பீநாறி, ஒருவகைப் பூச்செடி, பெருமரம்.
அரளித்தொக்கு - பீநாறிப்பட்டை.
அரளுதல் - பிரமித்தல், மிகவஞ்சுதல்.
அரற்றல் - அரற்றுதல், யாழ்நரம்போசை.
அரற்று-ஒலி, குறிஞ்சியாழ்த் திறவகை பலவுஞ் சொல்லியழுது தன் குறை உறுதல்.
அரற்றுதல் - அழுதல், ஒலித்தல்.
அரனிடத்தவள் - பார்ப்பதி.
அரனெறி - ஒரு சிவாலயம்.
அரன்-எப்பொருட்குமிறைவன்,சிவன் பதினோருருத்திரரி லொருவன், மஞ்சள்.
அரன்மகன்-குமரன், விநாயகன், வீரபத்திரன்.
அரன்வெற்பு - கயிலைமலை.
அரன்றோழன் - குபேரன்.
அரா-அராவென்னேவல்,ஆயிலியநாள் நாகமல்லி, பாம்பு.
அராகதத்துவம் - வித்தியாதத்துவமேழினொன்று, அது வித்தையி லிருந்து தோற்றிப் போகத்திலே ஆசையை யெழுப்புவது.
அராகபகவான் - புருஷதத்துவத்திற்கும் அராக தத்துவத்திற்கும், அபிமான தேவதை.
அராகம் - அடங்காமை, அவா, ஒரு பண், சிவப்பு, பரதவுறுப்புளொன்று பாலையாழ்த்திறம், பொன், முடுகியல்,வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவி னோருறுப்பு.
அராகவொத்தாழிசைக்கலிப்பா - வண்ணக ஒத்தாழிசைக்கலிப்பா.
அராக்கோன் - இராகு கேது.
அராதி - சத்துரு.
அராதிபங்கம் - முறியடித்தல்.
அராத்தல் - அராத்துதல், நினைப்பூட்டுதல், தேய்த்தல்.
அராத்திரி - கைலாசமலை.
அராத்துதல் - அராத்தல்.
அராநட்பு-பிடிகொடாத கொண்டாட்டம், வேண்டா வெறுப்பு.
அராபதம் - போர், வண்டு.
அராமம் - சோலை, பயிர்.
அராமி - கெட்டவள், கெட்டவன்.
அராமுனி - பதஞ்சலிமுனி.
அராமை - கீழ்மகள்.
அராலம்-கொடுவாள், மதயானை, வளைந்தது.
அராலை - நாட்டியப்பெண், வேசி.
அராவணம் - புலம்பாமை.
அராவணல் - ஆதிசேடன்.
அராவணை - அரவணை.
அராவல்-அழுத்தல், உராஞ்சல், மிண்டல்.
அராவவெங்கொடியோன் - துரியோதனன்.
அராவாரம் - திராட்சைப்பழம்.
அராவுதல் - அராத்துதல்.
அராவைரி - கருடன், கீரி, மயில்.
அராளகடகாமுகம் - நிருத்தக்கைமுப்பதனுளொன்று.
அராளம்-இருவாட்சி, குங்கிலியம், வெள்ளைக்குங்கிலியம்.
அரி - அடர்பு, அரிசி, அரிப்பிடி, அரியென்னேவல், அழகு, ஆயுதப்பொது, ஈர்வாள், உட்டுளைப் பொருள், ஐமைவடிவு,ஒளி, ஒருகண்டம், கடல் கட்டில், கண்வரி, கள், காற்று, கிரணம், கிளி, குதிரை, குரங்கு, குற்றம், கூர்மை, கொடுவேலி, சக்கரம், சத்துரு, சந்திரன், சிங்கம், சிங்கவிராசி, சிலம்பின்பருக்கைக்கல், சிலம்

பு, சில்லு, சிவன், சூரியன், செம்மறியாட்டுக்கடா, சோலை, தவளை, தீ, தேர், தேவேந்திரன், நமன், நித்திரை, நிறம், நெருக்கம், நெல், நெற்கதிர், பகை, பச்சை, படுக்கை, பறை, பன்றி, பாம்பு, புகை, பொன், மரகதம், மரவயிரம், மழை, மழைத்தூவல், மாலை, மூங்கில், மென்மை, வண்டு, வரி, வலி, வில், விட்டுணு, வெற்றி.

அரிகண்டபுலவர் - காளமேகப் புலவர்.

அரிகண்டம் - ஒருவிரத வேடம். அது கழுத்தி லிருப்புத்தகடுகள் இணைத்துச்செய்த ஒருசட்டத்தை யணிந்து செய்வது, தொந்தரை, நவகண்டத்தி லொன்று.

அரிகண்டம்பாடுதல் - கழுத்தில் கத்தி கட்டிக்கொண்டு எதிரி கொடுக்குஞ் சமிசைக்கிணங்கப்பாடுவது ஏதாவது தவறினலக்கத்தியால் வெட்டுண்ண வேண்டிவரும்.

அரிகயிறு - அரிநூற்பொறி.

அரிகரகுமரன், அரிகரபுத்திரன் - ஐயனர்.

அரிகரப்பன், அரிகரப்பான் - வாதக்கரப்பான்.

அரிகரி - அத்திக்கொழுந்து.

அரிகல் - மகாமேரு.

அரிகளவம் - நதி.

அரிகள் - பகைவர்.

அரிகறையான் - செல்லு, தொந்தரை செய்வோன்.

அரிகாந்தி - விஷ்ணுக்கிராந்தி.

அரிகாம்போதி - இருபத் தெட்டாவது மேளகர்த்தா.

அரிகிணை - மரவயிரத்தாற் செய்யப்பட்ட ஒரு மருதநிலவாத்தியம்.

அரிகுரல் - கரகரத்தல்.

அரிகூடம் - கோபுரவாயில், கோபுரவாயின்மண்டபம்.

அரிகேசம் - சூரியனுடைய கதிர்களின் ஒன்று.

அரிகோரதினி - ஓரிட்டதேவதை.

அரிக்க - தினவுபிடிக்க.

அரிக்கட்டு - அரிவிக்கட்டு.

அரிக்கண்சட்டி - அரிசியரிக்கிறசட்டி.

அரிக்கரியார் - சிவன்.

அரிக்காந்தி - விட்டுணுகாந்திப் பூண்டு.

அரிக்குதல் - அரித்துப்போடுதல், பேச்சினல் வருத்துதல்.

அரிசட்டுவர்க்கம் - உலோபம், காமம், குரோதம், மோகம், மதம், மற்சரம் என்னும் ஆறுபகையின்கூட்டம்.

அரிசந்தனம் - ஐந்தருவிலொன்று, ஒருவகைச் சந்தனமரம், தாமரைப்பூந்தாது, நிலவு, மஞ்சள்.

அரிசம் - அமாவாசையதிகமும், பிரதமைகுறைவுமாகக் கூடிநிற்குந்தினம் மகிழ்ச்சி, மிளகு.

அரிசயம் - எலுமிச்சை, கொன்றைமரம்.

அரிசரன் - சிவன்.

அரிசலம் - எலுமிச்சை, கொன்றைமரம்.

அரிசனம் - மஞ்சள்.

அரிசா - பெருங்குமிழிமரம்.

அரிசி - ஒருதானியம், தண்டுலம், வீயம்.

அரிசிச்சாதம் - அரிசிச்சோறு.

அரிசில் - ஒருநதி.

அரிசு - தேன், மிளகு.

அரிசொல் - கும்பகோணத்துள்ள ஒருநதி.

அரிசோபகந்தரவிரணம் - மூலபகந்தரம்.

அரிசோரோகம் - ஆண் குறியில் வருமொருவகையுரோகம், அது வாதபித்தகபங்கள் இரத்தமாமிசங்களை அனுசரிக்கும்போது பிறப்பதும் அப்போதாண்குறியினுள்ளிலாவது வெளியிலாவதுநமைச்சல்அவ்விடங்களின் மூலரோக முளைகளைப்போலுஞ் சிறுசிறுகாளான் மூளைகளைப்போலும் மாமிசம்எழும்புதல் அவைகளின் மிகவியர்வைகசிதல் இரத்தம் வடிதல்என்னும் இக்குணங்க ளுண்டாவதுமானது.

அரிசோவர்த்தமரோகம் - கண்ணிமையில்வரு மொருவகைரோகம். அது இமைச்சந்திகளிலே துர்மாமிசம் வளரக் கண்களின் மாத்தல், மினுமினுப்பு, எரிச்சல், சிவப்பென்னுங் குணங்களுண்டாதல்.

அரிச்சந்தனம் - ஐந்தருவிலொன்று, சந்தனம்.

அரிச்சந்திர, அரிச்சந்திரம் - பிரதிட்டகலையிலே தேயுதத்துவத்திலே உள்ள எட்டுப்புவனங்களிலொன்று.

அரிச்சந்திரன்-அறுவகைச் சக்கிரவர்த்திகளிலொருவன், அவன் சத்தியத்திற்குப்பேர்போனவன், இடையெழுவள்ளலிலொருவன்.
அரிச்சனை - பூசனை.
அரிச்சிகன் - சந்திரன்.
அரிச்சுவடி - அரிவரியேடு.
அரிச்சுனம் - எருக்கு, மருதமரம்.
அரிடணம் - நித்தியயோகத்தொன்று.
அரிஷம் - உரோமப்புளகம்.
அரிடம் - கடுகுரோகிணி, வேம்பு.
அரிடிகம் - சிற்பநூன்முப்பத்திரண்டி
அரிட்சி - பயம். [னொன்று.
அரிட்டசூதனன் - விட்டுணு.
அரிட்டநேமி-சூரியனுடைய துவாதச சாரதிகளுளொருவன்.
அரிஷ்டம் } அதிட்டம், அந்தர்ப்புரம்,
அரிட்டம் } அமங்களம், உற்பாதம், கள், காக்கை, கேடு, சுபம், சென்மதோஷம், தாமிரம், பங்கம், பிரசவிக்கும்வீடு, புள்ளி, மங்கலம், மாரணக்குறி, முட்டை, மோர், வம்பு, வெள்வெங்காயம், வேம்பு.
அரிட்டன் - ஓர் அசுரன்.
அரிட்டானகம் - அபசயம், பயங்கரம்.
அரிட்டித்தல் - கொல்லல்.
அரிட்டை-கடுகுரோகிணி, கந்தருவராயிரவர்தாய்.
அரிணம்-கடல், சிவப்பு, பொன்,மான், யானை, வெள்ளை.
அரிணவம் - கடல்.
அரிணன்-சிவன், சூரியன், விட்டுணு.
அரிணங்கன் - சந்திரன்.
அரிணி - பெண்மான், வஞ்சிக்கொடி.
அரிணை - கள்.
அரிதகி - கடுக்காய்மரம்.
அரிதகிக்காய் - பச்சைக்கடுக்காய்.
அரிதம் - திக்கு, இருண்டநீலநிறம், பசும்புள்ளிலம்,பச்சை, பொன்னிறம்
அரிதல் - அறுத்தல். [மஞ்சள்.
அரிதவெலி - மஞ்சணிறமுள்ள ஒருவகையெலி, அதுகடித்தாலக்கினிமந்தமுங் கொட்டாவியும்மயிர்க்கூச்செறிவும் உண்டாகுமென்பர்.
அரிதளம் - பொன்னரிதாரம்.
அரிதாரம் - அரித்திராபம், இலக்குமி, ஒருமருந்து.

அரிதாரவகை-அரிதாரத்தினது வகை, அவை கட்டியரிதாரம், காட்டரிதாரம், கனத்தீயரிதாரம், தகட்டரிதாரம், தாளகம், பொன்னரிதாரம், மடலரிதாரம், வைப்பரிதாரம் என்பன.
அரிதாலம் - அரிதாரம்.
அரிதாலிகை - புரட்டாசிமாதச் சுக்கில பக்கச்சதுர்த்தி.
அரிதாளம் - நவதாளத்தொன்று, பொன்னரிதாரம்.
அரிதாள் - ஒட்டு, கதிரறுத்தாள்.
அரிதினம் - ஏகாதசி.
அரிதின்வயச்சி - திருநாமப்பாலை, நன்
அரிது - அரியது, பச்சை. [னாரி.
அரிதேவம் - திருவோணநட்சத்திரம்.
அரிதை - பகைமை, வன்மம்.
அரிதொடர் - துவக்கும், சங்கிலிகளுள் ஒருவகை.
அரித்தல்-அணில், எலிமுதலியவறுத்தல், புன்முதலியவற்றைத் தூசுகளைநீக்கியெடுத்தல், மாமுதலியவற்றைப் பிரித்தொழுக்குதல்.
அரித்தவிசு - சிங்காசநம்.
அரித்திரம் - கந்தம், சுக்கான், மஞ்சள்.
அரித்திரா-மஞ்சட்கிழங்கின்மாமஞ்சள்
அரித்திராசுரம் - ஒருவகைச் சுரநோய். அது சர்வாங்கத்திலும் மஞ்சள்வன்னத்துடன் தடிப்பு,சயித்தியம், சடத்துவம், முகத்தில் எண்ணெய்தடவினதுபோலப் பிசுபிசுத்தல் நகங்களிலுங் கண்களிலும்நோவு, கீல்களில்வீக்கம்,எப்பம், கொட்டாவி, விக்கல், கைகால் குளிர்ச்சி, சிரோபாரம், தலைத்திருப்பல், நாவுகசத்தல்,தாகம் நெஞ்சுலர்தல், மார்பெரிச்சல்,அக்கினிமந்தம், மலபந்தம், பலவீனம் அரோசகம், வாயினுரைவீழ்தல்,அதிகப்பேச்சு என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.
அரித்திராபம் - பொன்னிறம்.
அரித்திராப்பிரமேகரோகம் - ஒருவகைப்பிரமேகரோகம். அது மஞ்சணிறமானவெள்ளைக்காணல்,சூடாகநீரிறங்கல்,நெருப்பைக்கொளுத்தினபோலளரிச்சலுடன்கூடியகடுப்பு, விருவிருப்பு, அதிகவுட்டணம், முகத்தின் மஞ்சணிறம்நாவிற்கசப்பு மனந்திடுக்

கிடல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.
அரித்திராமேகம்-போகத்தால் விளைந்த பித்தவெட்டை.
அரித்திரான்னம்-மஞ்சட்சாதம்.
அரித்து - அரித்தலைச் செய்யென்னச்சம், பச்சை.
அரித்துவசம்-சிங்கக்கொடி.
அரித்துவசன்-சிங்கக்கொடியை யுடையோன், வீமன்.
அரித்துவஞ்சத்துவம் - இருபத்தைந்து சிவமூர்த்தத்தொன்று, அது யமனைச்சங்கரித்தமூர்த்தம்.
அரித்துவம்-பகைமை.
அரித்துவாரம் - கங்காநதியுற்பத்தி, மாயாபுரி.
அரித்தை - கிலேசம், துன்பம், வினைமுற்று.
அரிநர்-அறுப்பார்.
அரிநாதம் - அறைகூவுதல், சிங்கநாதம்.
அரிநி - சித்தினிச்சாதிப்பெண்
அரிநிம்பம்-மலைவேம்பு.
அரிநூற்பொறி - நகரத்தின் மதிலில் வைக்கப்படும் பொறிகளிலொன்று.
அரிநெல்லி-ஒருமரம்.
அரிந்தமன்-விட்டுணு, வெற்றியாளன்.
அரிபாகர்-அரியர்த்தர்.
அரிபாலுகம் - தக்கோலச்செடி, தக்கோலம் விதை.
அரிபிராணன்-சிவன்.
அரிபிளவை-ஒருசிலந்தி. [பு.
அரிபிறப்பு - பத்துவிட்டுணுவின்பிறப்
அரிபீடிகை - சமஸ்கிருத பாஷையிலுள்ள ஒருவியாகரணநூல்.
அரிபுதை-இரவு.
அரிபுரம்-சத்துருப்பட்டணம்.
அரிபுழு-அரிக்கும்புழு.
அரிபெட்டி - சல்லடை, மாமுதலியவற்றை அரிக்கும்பெட்.
அரிப்பதாகன்-வீமன்.
அரிப்பர்-அரிதுப்பொருடேடுவோர்.
அரிப்பன், அரிப்பாளன், அரிப்பான் } அரிப்புக்காரன்.
அரிப்பிணு-பெண்சிங்கம்.
அரிப்பிரத்தம்-இந்திரப்பிரத்தம்.
அரிப்பிரியம்-கடம்பு, சங்கு.
அரிப்பிரியை-இலக்குமி.
அரிப்பு-அரித்தல், குற்றம், தினவு.
அரிப்புக்காரன் - பொன் முதலியவற்றைத் தெரிக்கிறவன்.
அரிப்புக்கூடை-அரிப்பெட்டி.
அரிப்புழுக்கல்-சோறு.
அரிப்பெட்டி-அரிபெட்டி.
அரிமகன்-வாயுவின் மகனாகிய வீமன்.
அரிமஞ்சரி-குப்பைமேனி.
அரிமணல்-நுண்மணல்.
அரிமணி-மரகதரத்தினம்.
அரிமந்திரம்-சிங்கத்தின்குகை.
அரிமருகன்-முருகன், விநாயகன்.
அரிமருத்தனன், அரிமர்த்தனன் } மாணிக்கவாசகப் பெருமான்காலத்திருந்த ஒருபாண்டியன், சத்துருவைச் சங்கரிப்போன்.
அரிமல்-மாவிலிங்கு.
அரிமா-ஆண்சிங்கம், சிங்கவிராசி, சிங்கவேறு.
அரிமாநோக்கம் - சிங்கத்தின் பார்வை, அது முன்னும்பின்னும் பார்த்தல்.
அரிமாநோக்கு-செய்யுணினை சூத்திரநிலையினொன்று.
அரிமான்-ஆண்சிங்கம்.
அரிமுகச்சிவிகை-சிங்கத் தலைச்சிவிகை அது சமயவாதிகளைவென்ற ஆசிரியர்களேறுவது.
அரிமுகவம்பி-சிங்கமுகவோடம்.
அரிமுகன்-சிங்கமுகாசுரன்.
அரிமைதா-வெள்வேலமரம்.
அரிய-அருமையான.
அரியகம் - காற்சரியென்னுமாபரணம் கொன்றைமரம்.
அரியகொள்கை-தாபதர்க்குரிய அரியவியல்பு, அவைபலதாமு நீரின்மூழ்கல், நிலத்திற்கிடத்தல், தோலுடுத்தல், அக்கினியோம்பல், ஊரடையாமை, சடைதரித்தல், காட்டிலுணவு, கடவுட்பூசை என எட்டு.
அரியசம்-கொன்றை.
அரியசாரணை-மாவிலிங்குமரம்.
அரியணை-சிங்காசனம்.
அரியணைச்செல்வன்-அருகன்.
அரியது-அருமையானது.
அரியபச்சை-வங்காளப்பச்சை.
அரியமன்-துவாதசாத்தரிலொருவன்

அரியமா-ஒருபிதிர்தேவதை, சூரியன்.
அரியமான் - அதிதியின் புத்திரராகிய சூரியர் பன்னிருவரிலொருவன், பிதிர்களுட்டலைவனாகிய வரியமன்.
அரியம்-வாச்சியம்.
அரியயற்கரியார் } சிவபெருமான்.
அரியயற்கரியோன் }
அரியரபுத்திரன்-அரிகரபுத்திரன்.
அரியர்-கிடைத்தற்கருமையானவர்.
அரியல்-அரிதல், கள், வியங்கோண் முற்று.
அரியன்-அருமையானவன்சிரேட்டன் மேலானவன், வைசியகுலத்தோன்.
அரியாசனம்-சிங்காசனம்.
அரியாணி-வைசியஜாதிப்பெண்.
அரியாயோகம்-கருவிலக்காகப் புனைந்த வரைப்பட்டிகை.
அரியார்பவம்-பத்து.
அரியுண்மூலம்-கோரைக்கிழங்கு.
அரியேறி-துர்க்கை.
அரியேறு-ஆண்சிங்கத்தினது சாயலாகச்செய்யப்பட்டவடிவம்,ஆண்சிங்கம்
அரில் குற்றம், சிறுதூறு, பகை, பிணக்கு, மூங்கில்.
அரிவட்டம்-கழுத்திலே மாட்டும் அரிகண்டம்.
அரிவரி-அரிச்சுவடி, எழுத்துவருக்கம்.
அரிவருடம் - சலகண்டத்துளொன்று. அது ஏமகிரிக்கும் நிடதகிரிக்கும் இடையேயுள்ளது.
அரிவாட்கள்ளன் - கூன்வாள்பிடிக்குங் கைப்பரண்டையில் வருநோய்.
அரிவாட்கொண்டன் - கடலிற்றிரியும் ஒருகொக்கு.
அரிவாட்டயர் - அறுபத்துமூன்றுநாயன்மாருளொருவர்.
அரிவாண்மணை-அரிவாண்மனைப் பூண்டு, காய்முதலிய கறிபதார்த்தங்களை அரியுங்கருவிசெறிக்கப்பட்டபலகை
அரிவாண்மணைப் பூண்டு - ஒருவகைப் பூண்டு.
அரிவான்மூக்கன்-ஒருகொக்கு.
அரிவாள்-கூன்வாள்.
அரிவாள்மணை-ஒருபூண்டு, கறிகுறைக்குங்கருவி.
அரிவி-அரிகதிர்.
அரிவிகொய்தல்-அறுத்தல்.

அரிவிக்கள்ளன்-அரிவிபிடிக்குங் கைப்பிடிப்பு, கைப்பரண்டையில் வரும் நோய்.
அரிவை-இருபத்தைந்துவயதுப்பெண், தேவப்பெண், பெண்பொது.
அரிவைபங்காளன்-சிவன்.
அரிள்-பயம்.
அரீடம்-கடுகு, கடுகுரோகிணி.
அரு-அணு, அறிவு, மாயை, காயம், உருவமற்றது, கடவுள்.
அருக-நெருக்கமாக.
அருககனி-பேரேலப்பூண்டு.
அருகஞ்சி-சீந்திற்கொடி.
அருகணி-பிரண்டைக்கொடி.
அருகணைத்தல்-தழுவல்.
அருகத்து - பௌத்தமதத்தினதுதியானங்கள் ஐந்தனுள் நான்காவது.
அருகந்தர்-அருகசமயத்தோர்.
அருகந்தன் - அருகசமயத்தோன், சைனமதத்திற் சொல்லப்படும் இருபத்துநான்குதீர்த்தகருளொருவன். [ம்.
அருகம்-சமணமதம், தகுதி, யோக்கியம்
அருகர்-அனுசரிதர், சமணர், சமீபத்திலுள்ளவர், தோழர்.
அருகல்-அணைதல், ஒழுகல், கிட்டுதல், குறைதல், சாதல், சுருங்குதல், வியங்கோன்முற்று. [தை.
அருகனைமுடிதரித்தாள் - தர்மதேவதை.
அருகன்-சங்காத்தி, சயினர்களின்தேவகுரு, பக்குவன்.
அருகன்குடை-பொற்குடை, முத்துக்குடை, இரத்தினக்குடை என முறையே சொல்லப்படும் சகலபாசனம்,சந்திராதித்தியம், நித்தியவிநோதமாகிய அருகதேவனுக் குரியவாகிய முக்குடைகள்.
அருகன் குணம் - அருக தேவனுக்குடையனவாகச் சமணநூலிற் சொல்லப்படுநற்குணங்கள், அவை அநந்தசுகம், அநந்தஞானம்,அநந்த தரிசனம், அநந்தவீரியம், நிர்க்கோத்திரம், நிர்நாமம், நிராயுஷியம், அறிவின்மை என எட்டாம்.
அருகன்சிறப்பு-அருக தேவனுக்குடையமங்கலப்பொருள்கள், அவைதூபதீபக்காட்சி,தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காதனம்,பிண்டி,வெண்

சாமரை, புட்பமாரி, மும்மைக்குடை என எட்டாம்.

அருகன்ஞானம்-அருகனுக்குரிய ஐந்து வகை ஞானங்கள் அவை மதிஞானம், சுருதஞானம், அவதிஞானம், மனப்பரியயஞானம், கேவலஞானம் என்பன. அவற்றுண் மதிஞானம் சுபாவபுத்தி, சுருதஞானம் நூலுணர்ச்சி. அவதிஞானம் தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவு, மனப்பரியயஞானம் தன்னுடைய முற்பிறப்பையும் பிறருடைய முற்பிறப்பையுமறியுமறிவு, கேவலஞானம் திரிகாலவுணர்ச்சி.

அருகன்மதில் - உதயதரம், கலியாணதரம், பிரீதிதரம், எனச் சொல்லப்படும் அருதகனுடைய மும்மதில்கள்.

அருகன்விட்டகுணம் - அருகதேவனுக்குடையனவல்லவாகச் சமணநூலிற் சொல்லப்படுந்தீக்குணங்கள். அவை ஞானவருணியம், தரிசனவருணியம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷியம், கோத்திரம், நாமம், அந்தராயம் என எட்டாம்.

அருகா-கெடாத.

அருகி-கள், கொஞ்சங்கொஞ்சமாய் பக்குவி, வினையெச்சம்.

அருகித்தோன்றல் - அரிதாகத் தோன்றல், சுருங்கித் தோன்றல்.

அருகியரத்தம்-பூனைக்காலி.

அருகியகுறிஞ்சி
அருகியற்செவ்வழி } ஒருபண்.
அருகியற்பாலை

அருகியன்மருதம்-குரல்குரலாய செம்பாலை.

அருகில்-சமீபத்தில்.

அருகு-அருகென்னேவல், சமீபம், தீவர்த்தி, பக்கம்.

அருகுதல்-அருகல்.

அருகுறல்-கிட்டல்.

அருகே-கிட்ட.

அருக்கசர்-அச்சுவினி தேவராகிய தேவவைத்தியர்.

அருக்கசன்
அருக்கசூனு } கன்னன், சனி, சுக்ரீவன், யமன்.

அருக்கசோதரம்-இந்திரன்யானை.

அருக்கதானம்-பொற்காணிக்கை.

அருக்கத்தி-வருத்தம்.

அருக்கந்தன்-சிவன், பௌத்தன்.

அருக்கபாதவம்-நிம்பம்.

அருக்கபுத்தி-சூரியகதி.

அருக்கமண்டலம்-சூரியமண்டலம்.

அருக்கம்-எருக்கு, குறைவு, சூரியன், தாமிரம், திரவியம், துன்னிமித்தம், நீர்க்காக்கை, நெருப்பு, படிக்கல்.

அருக்கர்-சூரியர்.

அருக்கலம்-அலை, தடை.

அருக்கல்-அச்சம், அருக்காணி பண்ணல், அருமைப்படுத்துதல், அழுக்காறடைதல், சுருக்கல்.

அருக்கவிக்கேபம்
அருக்கவிட்சேபம் } சூரியாட்சம்.

அருக்களித்தல் - அருவருத்தல், பயப்படுதல்.

அருக்களிப்பு-அருவருப்பு, பயம்.

அருக்கனிலை-காணுக் கோளிரண்டின் நிலை, சூரியநிலை.

அருக்கன் - இந்திரன், காணுக்கிரகங்களிரண்டு, சுக்கு, சூரியன், ஞாயிற்றுக்கிழமை, மூத்தகுமாரன்.

அருக்கன்வீதி - கிராந்தி மண்டலத்தை நான்கிராசிகொண்ட மூன்றுபாகமாகக்கொண்டு சூரியன் செல்லும்வீதி.

அருக்காணி-அருக்கிறவன், அருக்குதல் அருமை, அழுத்தம்.

அருக்காணிகாட்டல்
அருக்காணிபண்ணல் } பிரிய வீனங்காட்டிப்பின்னிற்றல்.

அருக்கியத்திரவியங்கள்-அட்சதை, எள் சம்பாநெல், சலம், தருப்பை, நுனி, பால், யவம், வெண்கடுகு என அருக்கியத்திற்கு உபயோகமாகும் எட்டுத்திரவியங்கள்.

அருக்கியம்-பூசனை முறையுளொன்று, அது படையற்போடுதல், மந்திரநீரிறைத்தல்.

அருக்கினம்-ஆரோக்யம், நோவின்மை.

அருக்கீசம் - இருதயமுதற் கண்டமட்டாக ஏழங்குலம் வியாபித்து நிற்கும் ஒரு கலை.

அருக்கீசன் - தேவர்யாவர்க்கும் மிகப் பூசிக்கப்படத்தக்க மகாதேவன்.

அருக்கு - அஞ்சுகை, அருக்காணி, அருக்கென்னேவல், அருமை, எருக்கு.

அருக்குதல்-அருமைசெய்தல், ஒடுக்குதல், குறைத்தல், சுருக்குதல், செய்யப்பின்னிற்றல்.
அருக்கு-தடங்கல்.
அருக்கேந்துசங்கமம்-அமாவாசியை.
அருக்கை-தமக்கை.
அருக்கோபலம்-சூரியகாந்தம், பளிங்கு.
அருங்கலச்செப்பு - ஒரு நூல், மணிக்கலம்பெய்த பணிப்பெட்டகம்.
அருங்கலச்செவ்விதழ்-பொற்றாமரை.
அருங்கலம்-அரசர்க்குரியபொருள்.
அருங்கலைநாயகன்-புத்தன்.
அருங்கிடை-பட்டினி.
அருங்குரைத்து - அருமைத் தெனப் பொருள்படுமொருகுறிப்புவினை.
அருங்கேடன் - அழியாதவன், பொருமைக்காரன்.
அருங்கேடு-கேடில்லாமை.
அருங்கொடைத்தானம்-உத்தமதானம்.
அருங்கோடை - அதியுஷ்ணம், மழையின்மை.
அருசாவிரா-பெருங்குமிழமரம்.
அருசி-சுவையின்மை, பசியின்மை, அறுப்பு, அரோசிகம்.
அருச்சகன்-சம்பாத்தியகாரன்.
அருச்சியம் - அருச்சனை, அருச்சிக்கத்தக்கது.
அருச்சயோகம்-பூசை.
அருச்சனம்-சம்பாத்தியம், வணக்கம்.
அருச்சனை-பூசனை.
அருச்சி-அருச்சியென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும், பூசை.
அருச்சிகன்-கோவிற்பட்டன்.
அருச்சிக்கை-அருச்சித்தல்.
அருச்சிதம்-தேட்டம், வணக்கம்.
அருச்சிதன்-பூசிக்கப்படுவோன்.
அருச்சித்தல் - புண்ணிய மொன்பதில் ஒன்று, அது பூசித்தல்.
அருச்சிப்பு-அருச்சனை.
அருச்சியப்பிரபுத்துவம் - அருச்சிக்கப் படத்தக்க முதன்மை, தேவநவவிலாச சபைக்குரிய முதன்மை.
அருக்சியம்-உவப்பில்லாதது, வணக்கம்.
அருச்சுநம் - எருக்கஞ்செடி, ஒருவகை நேத்திரரோகம். அதுவெள்விழிமேற்கடப்பம்பூ நிறமான படலத்தைப் பிறப்பிக்கும், களங்கமின்மை, புல், பொன், மயிற்பரவை மருதமர[ம்], வெண்மை.
அருச்சுநவட்டம்-திருவிடைமருதூர்.
அருச்சுனன்-கார்த்தவீரியன், தாய்க்கு ஒரேபிள்ளை, பாண்டுபுத்திரர் ஐவரி[ல்] லொருவனான விசயன், வெண்ணி[ற]முள்ளவன்.
அருச்சுநி-பசு.
அருச்சுனம்-எருக்கு, துரும்பு, நேத்தி[ர] ரோகம், பொன், மயில், மருந்து, வெண்மை.
அருச்சுனன்-அருச்சுநன், விஜயன்.
அருச்சை-பூசிக்கப்படுந்தெய்வம்பூசை.
அருஞ்சயன் - சீவகனுடைய தாயாகிய விசையை என்பவளுக்குப் பாட்ட[ன]ன ஒருவன்.
அருஞ்சிறை-கடுஞ்சிறை, நரகம்.
அருடணன் - வைசிய விராத்தியனு[ம்] வைசியப் பெண்ணும் சோரத்தி[ற்] புணர்ந்து பெற்றபிள்ளை.
அருடம் கோபமின்மை, திருத்தி.
அருட்கண்-கிருபைநோக்கு.
அருட்குடையோன்-அருகன், கடவுள்.
அருட்குறி-சிவலிங்கம்.
அருட்கேவலம்-தத்துவசுத்தியின் பின்னர்ப்படுங்கேவலம்.
அருட்கொடியோன் } அருகதேவன்
அருட்கொடிவேந்தன் }
அருட்கொடையோன்-கடவுள்.
அருட்சத்தி-இரசம், பராசத்தி.
அருட்சி-அருளுதல்.
அருட்சித்தி-பாதரசம்.
அருட்சித்து - அனுக்கிரகத்திற் குரிய சித்து.
அருட்செல்வம்-கடவுள்கடாட்சம்.
அருட்சோதிகடவுள்-கவுரிபாஷாணம்.
அருட்டம்-கடுகுரோகிணி, மிளகு, வே[ம்பு]
அருட்டல்-அருட்டுதல்.
அருட்டி-அச்சம், நடுக்கம்.
அருட்டு-எச்சரிப்பு.
அருட்டுதல் - எழுப்புதல், ஏவிவிடுதல், சாக்கிரதையாகப்பண்ணுதல், நித்திரைதெளிவித்தல்.
அருட்டெரிசனம்- சூரியோதயத்திலே இருளும்நட்சத்திரமுமின்றிச் சூரிய பிரகாசமாத்திரங் கண்டகண்யோ...

அருடோற்றிய காலத்துக் கேவலவி ருளுங் கருவிக்கூட்டங்களுந் தோன் ருது அருளைமாத்திரம் ஆன்மாக் கண்டுகொண்டிருப்பது.
அருட்டை - கடுகுரோகணி, தக்கனது புத்திரிகளிலொருத்தி.
அருட்பாக்கள் - கடவுளருள்பெற்ருேர் எனப்பட்டார் செய்தபாக்கள்.
அருட்புரி - குறிஞ்சியாழ்த்திறவகையி ஞென்று.
அருணகிரணகலம் - சித்தாந்தத்திற்பி ராசாதகலைகள் பன்னிரண்டில் எட் டாவதாகியநாதாந்தம் அதுவலப்புற த்தின்மாத்திரம்விந்துவையுடைய க லப்பை வடிவுள்ளதாக நாதகலைக்கு மேற்பிரமரந்திரமட்டாக மூன்றங் குலம் வியாபித்து நிற்குங்கலை.
அருணகிரி - அருணசலம்.
அருணகிரிநாதர் - திருவண்ணமலையில் எழுந்தருளியிருந்த கௌமாரபரமா சாரியசுவாமிகள்.
அருணகிரியந்தாதி - ஒருபுத்தகம்.
அருணசாரதி - சூரியன்.
அருணபூதரம் - அருணசலம்.
அருணமணி - மாணிக்கம்.
அருணம்-ஆடு, எலுமிச்சு, கருமைகலந் தசிவப்பு, செவ்வானம், தாமிரம். தேயமைம்பத்தாறி ஞென்று. பதி னெண்பாடையிஞென்று. பொன், மான், மிகுசிவப்பு, யானை, விடியல்.
அருணர் - சான்மலித்தீவிலரசர்.
அருணலோசனம் - புரு.
அருணவசம் - கடலிற்பிறந்தது.
அருணவமந்திரன் - வருணன்.
அருணவம் - கடல்.
அருணவூரி - இந்திரகோபம்.
அருணவெலி - ஒருவகையெலி.
அருணன் - சூரியன், சூரியன் சாரதி, புதன், வருணன்.
அருணக்கிரசன் - கருடன்.
அருணசலக்கவிராயன் இராமநாடகஞ் செய்த ஒரு சிறந்தவித்துவான்.
அருணசலபுராணம் - ஒருசைவபுரா ணம்.
அருணசலம் - திருவண்ணமலை.
அருணத்துமசன் - இராமாயணத்திலே சொல்லப்படுஞ் சடாயுஎன்னும் பற வை,கன்னராசன், சனி, சாவர்ண மனு, சுக்கிரீவன், யமன்.
அருணினம்-திருநாமப்பாலை, நன்னரி.
அருணினைவு - நற்குணம்பத்தினுள்ளே ஒன்று.
அருணெறிசுரக்குஞ்செல்வன்-புத்தன்.
அருணை - அருணசலம்.
அருணேதம்-மேருமலையின்கீழ்த்திசை யிலுள்ள ஒருகுளம்.
அருணேதயம் - சூரியோதயம், வைக றைப்பொழுது.
அருணேபலம் - பதுமராகம்.
அருதா - சதாப்புப்பூண்டினிலை.
அருத்தகங்கை - காவிரியாறு.
அருத்தகாமம் - பொருளாசை.
அருத்தகோளம் - பாதிக்கோளம்.
அருத்தசந்திரகுண்டம்-ஒன்பது பங்கா கச்செய்யப்பட்டநாற்கோணசேத்தி ரத்தினடியிலுங்கடையிலும்ஒவ்வொ ருபங்கு தள்ளிவிட்டு நடுவிலிருக்கும் எழுபாகத்தைச் சமசூத்திரத்தினுற் சுற்றவரும் அர்த்தசந்திராகாரமான குண்டம்.
அருத்தசந்திரபாணம் - பிறைமுகாத் திறம்.
அருத்தசந்திரம் - மயிற்றேகைக்கண்.
அருத்தசந்திரன் - அட்டமியற் சந்திர ன், இளம்பிறை.
அருத்தசாத்திரம்-அருத்தவேதம். அது பொருடேடுதற்குபயோகமான பார் க்கஸ்பத்தியம்,ஔசனமுதலிய நூல் களைக்கருதும்.
அருத்தசாமம் - சாமத்திற்பாதி. நடிரா.
அருத்தசானவி - காவேரிநதி.
அருத்தசீரி-விளைவிற்பாதிவாரமா யெ டுக்கப்பொருந்தி யுழுது பயிரிடுஞ் செய்கைக்காரன்.
அருத்தஞ்ஞன்-சொல்லி னருத்தங்கள் பலவற்றையும் அறிந்தவன்.
அருத்தநம்-இடுக்கண்செய்தல், நிந்தித் தல்.
அருத்தநாரீசன், அருத்தநாரீசுரன், அருத்தநாரீசுவரன் - பாதி பெண் வடிவமான சிவன்.
அருத்தநாள் - பாதிநாள்.
அருத்தநிசா - அர்த்தசாமம்.
அருத்தபதி - அரசன், குபேரன்.
அருத்தபாகம் - பாதிப்பங்கு.

அருத்தபாகை - வேதநூற்பொருள்.
அருத்தப்பிரயோகம் - திரவியங்களை எடுத்துப்பாவித்தல்.
அருத்தப்பிராத்தி - சம்பத்தடைதல்.
அருத்தம்-கருத்து, சொற்பயன், பாதி, பிரயோசனம், பொருள், பொன்.
அருத்தயாமம்-அரையாமம். அது மூன்றேமுக்காலுழிகை,இரவின்முன்னிகழும் மூன்றேமுக்காலுழிகையையும்பின்னிகழும் மூன்றேமுக்காலுழிகையையும்விட்டு இரவில் திரியாமாவென மூன்றியாமங் கொள்ளப்படுவதின் நடுநிகழும் யாமம்.
அருத்தராத்திரம் - நடுராத்திரி.
அருத்தரேசிதம்-நிருத்தக்கை முப்பதிலொன்று.
அருத்தலக்கணை - விட்டும் விடாதலக்கணை.
அருத்தலாபம் - திரவியசம்பாத்தியம்.
அருத்தலோபம் - சத்தவிசனத்தொன்று, அஃதுகொடாமை.
அருத்தல் - உண்பித்தல்.
அருத்தவத்து - அருத்தமுடையது.
அருத்தவாதம் - அபிப்பிராயத்தைக் கூறுதல்,சிரவணத்திற்குரிய சடுவிதலிங்கங்களில் ஆறுவதானது அதுகூடத்தனதுசொரூபமாகியபிரமத்திற்குப்பஞ்ச கிருத்தி கர்த்திருத்துவஞ் சொல்லுதல், துதித்தல், புகழ்தல், பொருளைவிளக்கும் வாக்கியம். அது சாத்திரவிதியை வழங்குவிக்கும்பொருட்டு விதிப்படி நடத்தலால்வரும் நன்மைகளையும் நடவாமையால்வருந் தீமைகளையும் விவரமாகக்கூறி விதிவிடயத்தைப் புகழ்தலும், விலக்குவிடயத்தை இகழ்தலும், பிறர்செய்கைகாட்டலும், பழையநிகழ்ச்சி கூறலுமுடையது.
அருத்தவிற்பத்தி-தெளிவாக வருத்தஞ் சொல்லுந்திறமை, பயன்சொல்லல்.
அருத்தவேதம் - உபவேதம் நான்கின் ஒன்று.
அருத்தனம் - நிந்தை.
அருத்தனை - பிச்சைகேட்டல்.
அருத்தன் - கடவுள்.
அருத்தாங்கீகாரம் - அரைமனம்.
அருத்தாதிகாரன், அருத்தாதிகாரி - உக்கிராணக்காரன்.
அருத்தாநம் - தோத்திரஞ்செய்தல்.
அருத்தாந்தரநியாசம் - எதிர்க் கருத்து, வேற்றுப்பொருள் வைப்பணி.
அருத்தாந்தரம் - கருத்துப்பிரிவு.
அருத்தாந்தரன்னியாசம் - அருத்தாந்தரநியாசம்.
அருத்தாபத்தி-ஆறளவைகளில்ஒன்று. அது பகலுண்ணுனைப் பருத்திருப்பானொருவன் இரவிலுண்டானென்பதிற்போல அனுமித்தல்.
அருத்தாபத்திப்பிரமாணம் - அருத்தாபத்தி.
அருத்தார்த்தி - திரவியந்தேடப் பிரயாசைப்படுவோன்.
அருத்தானம் - தோத்திரஞ்செய்தல்.
அருத்தி - இரந்துகேட்போன்,செல்வமுடையவன், வேலைக்காரர், ஆசை, உண்பித்தென்னுமெச்சம், கூத்துபாதம் பாதிசெய்யென்னேவல்.
அருத்திதம் - இரந்துகேட்டல், விரும்பல், பிட்சைத்திரவியம்.
அருத்தித்தல் - பாதிசெய்தல்.
அருத்தியன்-விருப்பமுடையவன், வேண்டியவன்.
அருத்திரம் - மரமஞ்சள்.
அருத்து - அருத்தென்னேவலுந்தெரிநிலைவினைப் பகுதியும்பெயரெச்சத்தொகையும், பொருள்.
அருத்துதல் - உண்பித்தல்.
அருத்துரு - ஆராய்வு, நுணுக்கம்.
அருத்துமமம் - வெள்வேலமரம்.
அருத்தேந்து - அர்த்தசந்திரன்.
அருத்தோதயம் - அர்த்தோதயம், குரு அத்தமிக்கச் சூரியனுதிக்கு முகூர்த்தம்.
அருத்தோபார்ச்சனம்-பொருளீட்டல்.
அருநரகம் - பாழ்நரகம்.
அருநிலை-கடந்துசெல்லற்கரிய ஆற்றுநிலம், யுத்தநிலை.
அருநெல்லி - ஒருமரம்.
அருநெறி-சுருங்கியவழி, நரகம், பாலைநிலம், வாயில்.
அருந்ததர் - அருந்ததிப்புதல்வர்.
அருந்ததி-ஒருநட்சத்திரம், வசிட்டன் மனைவி, அவள் கற்பிற்சிறந்தவள்.
அருந்ததிகாட்டல் - கற்பில் அருந்ததி போலிருக்கக் கலியாணத்தில் மணப்

பெண்ணுக்கு அருந்ததி நட்சத்திரங் காட்டல்.
அருந்ததிபதி - வசிஷ்டமுனிவன்.
அருந்தமிழ் - நல்லதமிழ்.
அருந்தல் - அருமையாதல், அனுபவித்தல், புசித்தல்.
அருந்தவர் - முனிவர்.
அருந்திடல் - உண்ணுதல்.
அருந்து - அருந்தென்னேவலுந்தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.
அருந்துதல் - அனுபவித்தல், உண்ணுதல், குடித்தல், விழுங்குதல்.
அருந்துதன் - வேதனை செய்வோன்.
அருந்துதி - அருந்ததி.
அருந்துவோன் - உண்போன்.
அருந்தூதன் - வேதனை செய்வோன்.
அருப்பகம் - அற்பமானது, குழந்தைத்தன்மையானது, பெலமில்லாதது, விலங்கின்பிள்ளை யல்லது குட்டி.
அருப்பகன் - இலங்தை, பைத்தியக்காரன், மூடன்.
அருப்பம் - அரண், அரிது, உரோமக்கிளர்ச்சி, ஊர், கள், காடு, கொலை, கோட்டை, துக்கம், தொடரிப்பூண்டு, நோய், பனி, பிட்டு, பிள்ளை, மருதநிலத்தூர், மா, மீசை முளைக்க அரும்புவிடல், முகரோகம், மோர், வழுக்கு நிலம்.
அருப்பலம் - அனிச்சமரம்.
அருப்பு - தயிர், அரும்பு, கிளைத்தல், கொலை, துக்கம்.
அருப்புத்துருப்பு - அருந்தேட்டம், அருமை.
அருமதாளம் - நவதாளத்தொன்று.
அருமந்த - அரியமருந்தன்ன.
அருமந்தன்ன - அரியமருந்து போன்ற எனப் பொருள்படும் ஒரு விகாரமொழி.
அருமருந்து - அமிர்தம்.
அருமலதி - ஒருபண்.
அருமறை - மேலானவேதம்.
அருமறைக்கொடியோன் - துரோணசாரி.
அருமேதகம் - அக்கினிக்கீடங்கள் இருபத்தேழினுள் ஒன்று.
அருமேனி-கலைகளுடன் கூடாத நிட்களமான திருமேனி. அது உருவாதீதமான சரீரம்.
அருமை - அரியதன்மை, எளிதாய்க்கிடையாதது, சிறப்பு, மேன்மை.
அரும்பண்டம் - கிடைக்காத சாமான், விசேஷமானது.
அரும்பர் - அரும்பு.
அரும்பல் - முகைத்தல், முளைத்தல்.
அரும்பாலை - ஓரிசை.
அரும்பி - குங்குமபாஷாணம்.
அரும்பிணி - தீராதவியாதி.
அரும்பித்தல் - தோன்றுதல், முகிழ்த்தல்.
அரும்பு -அரும்பென்னேவல், பூவரும்பு, பொன் முதலியவற்றாற் செய்தவரும்பு, முகை, மெல்லிய மயிர்.
அரும்புதல் தோன்றுதல், புன்னகைத்தல், பொடித்தல், முகைத்தல், முளைத்தல், வளரல்.
அரும்புமணி பொன்னாற்செய்யப்பட்ட அரும்புகளையுடைய ஒருகழுத்தணி.
அரும்பூட்டு - இணைக்கக்கூடாமை, ஒட்டு, தொடர்ச்சியின்மை, போங்தும் போதாதிருப்பது, மோசத்திலகப்படுகை.
அரும்பூதுகை - ஊதிப் பொன்மணி செய்கை.
அரும்பெறல் - பெறற்கருமை.
அரும்பொருவினை - எண்வகைமணத்துளொன்று.
அரும்பொருள் - அரியகருத்து, பெறுதற்கரிய பொருள்.
அருவசாட்சாத்காரம் - அறிவினின்று குருவாிணர்த்தியது.
அருவசிவசமவாதி-ஆன்மசித்துஞ் சிவசித்தும் ஒத்து வேறாய் நிற்குமென்று சொல்லுமதஸ்தன்.
அருவத்திருமேனி-சிவன் நடிக்கும் நவபேதத்திலே அருவவடிவமாகக்கற்பிக்கப்படுஞ்சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கு மேனிகள்.
அருவம் - அருந்தல், உருவமில்லாதது.
அருவருத்தல் - வெறுத்தல்.
அருவருப்பு - அரோசிகம், வெறுப்பு.
அருவல் - சருவுதல், சற்றுச்சற்றாய்ப்போதல்.

அருவன் - உருவிலி.
அருவா - கொடுந்தமிழ்நாட்டு பன்னிரண்டினென்று.
அருவாணம் - தாலம்.
அருவாவசு - சூரியன் கதிர்களுள்வியாழனை விளங்கச்செய்யுங்கதிர், சூரிய சமுகத்தினின்று பாட்டயர்வோருள் ஒருவன்.
அருவாவடக்கு - கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுளொன்று.
அருவாவடதலை - கொடுந்தமிழ்நாட்டினென்று.
அருவாளர் - அருவாளநாட்டிலரசர்.
அருவி - அருகதிர், கழிமுகம், திணைத்தாள், மலையின்வீழாறு.
அருவிபாய்தல் - மலையில் அருவிபாய்தல்போலக் கண்ணீர் பாய்தல்.
அருவினை - விசேஷபாவம்.
அருவுடம்பு - பத்துவகை இந்திரிய வுணவோடும் ஐவகைவாயுக்களோடுங் காமவினை விளைவுகளோடுங் கூடிய மனம். அது நுண்ணுடம்பு எனவும் படும்.
அருவுதல் - அருவிமுதலியன பாய்தல், கண்கரித்தல், குறைதல், சருவுதல்.
அருவுரு - சகளநிட்களத்திருமேனி.
அருவுருவத்திருமேனி-சிவன் நடிக்கும் நவபேதத்திலே அருவுருவவடிவமாகக் கற்பிக்கப்படுஞ் சதாசிவமாகிய திருமேனி.
அருளகம் - வெள்ளெருக்கு.
அருளரிசி - குடசப்பாலை, வெட்பாலை.
அருளல்-அசைதல், உத்தரவுபண்ணல், காத்தல், கிருபைசெய்தல், கொடுத்தல், சிருட்டித்தல், சொல்லல், நித்திரை விழித்தல்.
அருளவம் - அழிஞ்சில், பெருமரம்.
அருளறம்பூண்டோன் - புத்தன்.
அருளாதி - குடசப்பாலை.
அருளாபு - சாரணைப்பூண்டு.
அருளாமை - அருள் செய்யாமை.
அருளாழிவேந்தன்-அருகன், கடவுள்.
அருளாளன் - கிருபையை விசேடமாகவுடையவன்.
அருளிகேட்டல்-ஒருவர் சொன்னதை அருள்பண்ணிக்கேட்டல், தயவோடு செவிகொடுத்துக்கேட்டல்.
அருளிச்செய்தல் - அனுக்கிரகித்தல் கிருபைசெய்தல்.
அருளிப்பாடு - அருளப்பட்ட உத்தரவு.
அருளிலி - தயவில்லாதவன்.
அருளுடைமை-தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்லுவதாகிய கருணையுடைமை.
அருளுதல் - அருளல்.
அருளுவம் - அருளவம்.
அருளுறுதி - வேம்பு.
அருள் - ஈயென்னேவல், உமை, கொடை, சத்தி, சாத்துவிகக் குணத்தொன்று அஃது கிருபை.
அருள்செய்தல் - கிருபையோடு சொல்லுதல்.
அருள்புரிபத்திரம் - அரசனொருவன் சேவகம் சௌரிய முதலியவைகளை வியந்து கொண்டாடி அவனுக்குக்கிராமமுதலியவற்றைக் கொடுத்தற்குச்சாதனமாக எழுதிக்கொடுக்கும் பத்திரம்.
அருள்மரம் - முதிர்ந்தமாதுளைமரம்.
அருள்விருட்சம் - பஞ்சதாரு.
அரூபகம் - உருவமின்மை.
அரூபதை - அவலட்சணம்.
அரூபம்-ஆகாயம், உருவமற்றது, குறைவு, வெறுமை.
அரூபி - உருவிலி, கடவுள், கருப்பூரம், சிவன்.
அரூபினரூபின் - எண்பத்தொருபதங்களிலொன்று.
அரூபை-அவலட்சணமுள்ளவள், உருவமில்லாதவள், ஒப்பில்லாதவள்.
அரேசகண்டு - கருணைக்கிழங்கு.
அரேசிகம் - வாழைமரம்.
அரேணுகம் - கடுக்காய்வேர், கவுந்தி, காட்டுமிளகு, வால்மிளகு.
அரேணுகை - காட்டுமிளகு.
அரை-அரையென்னேவல், இடை, பாதிக்கொடி, ஒருமரம், உடம்பின் நடுவிடம், வயிறு.
அரைகல் - அம்மி.
அரைக்கச்சு, அரைக்கச்சை - இடைக்கச்சு.
அரைக்கல் - அரைத்தல்.
அரைக்காணி-நூற்றறுபதில் ஒருபாகம்.
அரைக்கால் - எட்டிலொன்று.
அரைக்குளகம் - ஒருபடி, அரைமரக்கல்

அரைங்கரம்-நாஞழி.
அரைசபாரம்-அரசுநடத்துங் கடமை.
அரைசர்-அரசுசெய்வோர்.
அரைசன்-அரசன்.
அரைசி-இராசாத்தி, இராணி, பட்டமகிஷி.
அரைசிலே-அம்மி.
அரைசு-அரசு.
அரைச்சதங்கை-ஓரிடையணி.
அரைச்சல்லடம்-அரைச்சட்டி.
அரைஞாண்-ஆண்மக்கள் அரையிற்கட்டும் கயிறு, அரைவடம்.
அரைஞாண்மணி-அரையிற்கட்டுஞ் சதங்கை, கிங்கிணி,
அரைதல்-அரைப்படல், உரோஞ்சல், தேய்தல் .
அரைத்தல்-அரக்குதல், அரைச்குதல், அழித்தல், உரிஞ்சல், தேய்த்தல், நசுக்கல், வியாதியிலமுழுந்துதல்.
அரைத்துகில் - உடம்பினரையி லணியப்படுஞ்சீலே.
அரைத்தொடர் - அரையிற்கட்டுஞ் சங்கிலி.
அரைநலம் - விதைநருங்காது குறையாயிருக்குநலம்.
அரைநலவன்-விதை செம்மையாஅடிக்காதமாடு.
அரைநா-முதலே.
அரைநரண்-இடுப்பில்கட்டுங் கயிறு.
அரைநாவை - ஒருபார்கோடிய மண்வெட்டி நுனி.
அரைநாள்-நடுநாள், நாளிற்பாதி, பாதிநாள்.
அரைநூல்-அரைச்சதங்கை, அரைஞாண், நூலிற்பாதி.
அரைநெக்கல் - அரைத்திட்டம் பழுத்தது.
அரைப்பட்டிகை - மாத ரிடையணியிலொன்று.
அரைப்பணம்-அல்குல், ஒருபணத்திற்பாதி.
அரைப்பு-அரைத்தல், இருப்பைப்பிண்ணக்கு.
அரைப்புக்கட்டி-இருப்பைப் பிண்ணக்கு.
அரைப்பூட்டு-இடைக்கட்டு இடுப்பின்பொருத்து.
அரைமா-நாற்பதிலோர்பாகம்.
அரைமூடி - சிறு பெண்பிள்ளேகள் அரையிற்றரிக்கும் ஒருபணி.
அரையலன்-சோம்பன்.
அரையலிடுகை-தேய்த்தல்.
அரையல் - அரைக்கப்பட்டது, சோம்பல், துவையல்.
அரையனுடுதல் } அரைத்துத் தூளாக்கல்.
அரையனிடுதல் }
அரையன்-அரசன், துகளிதம்.
அரையாப்பு-அரையிலுண்டாகும் ஒருகட்டி, மேக நோயால் இடையிலுண்டாகும்பரு.
அரையிரவு } அர்த்தராத்திரி, இரவிற் பாதி.
அரையிருள் }
அரைவடம்-அரைஞாண்பனேயேற்றுக்காரர் அரையிற்கட்டும் ஒருகயிறு.
அரைவட்டம்-அரைமூடி,பாதிவட்டம்.
அரைவயிரக்கண்-கம்மாளர் கருவியின் ஒன்று.
அரைவயிறவன் } அரையரிசிநெல், கருக்காய்.
அரைவயிறன் }
அரைவாசி-பாதி.
அரைவாய் - தேய்ந்தவாய், பாதிவாய்கொண்டது.
அரைவெறி-சிறிதுவெறி.
அரோ-ஓரசைச்சொல்.
அரோகம்-சுகம்.
அரோகி-சுகமுடையவன், நோயில்லாதவன்.
அரோகிதை-சுகமுடைமை, நோயின்மை.
அரோகை - தைத்தியநாமத்திலே கோயில்கொண்ட உமை.
அரோசகம் } அருவருப்பு, சமியாக்குணம்,பசி, யின்மை, பிரயாசமின்மை, வெறுப்பு.
அரோசம் }
அரோசனம்-அருவருப்பு, பிரியவீனம்.
அரோசிகம்-அசுத்தம், அருவருப்பு, ஒக்காளம்.
அரோசிகை - அருவருத்தல், பசியின்மை.
அரோசித்தல் - அருவருத்தல், வெறுத்தல்.
அரோசிப்பு-அருவருப்பு.
அரோதனம்-அழுகையின்மை, சூழ்தல், தடை, படைவளேப்பு.
அரோரூட்டுமா-ஒருகிழங்கின்மா. அது ஆள்வள்ளிக்கிழங்கென்பர்.
அர் -ஒருபகுதிப் பொருள்விகுதி, பெயர்வினேகளில் உயர்திணேப்பன்மை

யைக்காட்டும் ஒரு விகுதி, பெயர்வி னைகளில் ஒருமைச் சிறப்பில் வரும் ஒரு விகுதி, மென்றொடர்க்குற்றிய லுகரப்பெயரிறுதியுகரத்தோ டொ த்துவரும் ஓரிடைச்சொல்.

அர்கதமுனி-அருகன்.

அர்க்கக்கீராதித்தைலம் - எருக்கம்பால் சதுரக்கள்ளிப்பால் முதலியவற்றில் வடித்தெடுக்கும் ஒருவகைத்தயிலம்.

அர்க்கசூனு - இயமன், கன்னன், சனி, சுக்ரீவன்.

அர்க்கத்து-தடங்கல்.

அர்க்கபந்து-கௌதமபுத்தன், தாமரைக் கொடி.

அர்க்கமலை-அருணஜலத்துக்குக் கிழக் கேயுள்ள ஒருமலை.

அர்க்கம்-அருக்கம், எருக்கஞ்செடி, செ ம்பு, நீர்க்காகம், பளிங்கு, தானியவிலை பூகோளாட்சம், பொன்.

அர்க்கலம்-கதவடைக்குந்தாழ்.

அர்க்கன்-இந்திரன், ஞாயிற்றுக்கிழமை, அருக்கன்.

அர்க்காதிபன்-திரவியாதிபதி.

அர்க்காமசு-துவாதச கலாப்பிரசாதம், சூனியமாகிய ஹகாரத்தின்மேல்ச ண்டாம்சு ஆகிய அகாரம் கோணம் ஆகிய உகாரம், ஆன்மா ஆகிய மகாரம் லம்பநா ஆகியபிந்து, அர்த்தாப்சம் ஆகிய அர்த்தசந்திரன் ரோயிஆகிய நிரோதினி, தண்டமாகிய நாதம் தண்டாந்தமாகிய நாதாந்தம், இட ப்புறத்தில் விந்துவோடுகூடின கலப் பைவடிவானசத்தி. வியாபிகா ஆகிய வியாபினி, ஸமநா, உன்மநா ஆகிய வைகளே, இதிற் சமனைவரையிற் பாசசமூகம், உன்மநாந்தத்திற் பிரா சாதமந்திரவாச்சியராகியபரமசிவன் விளங்கினர்.

அபக்காரி }
அர்க்கார் } வேவுகாரன்.

அர்க்கியம்-அருக்கியம்.

அர்ஜி }
அர்ஜிதாஸ்து } விண்ணப்பம்.

அர்ச்சகன் - அருச்சகன்.

அர்ச்சகாகிரகம்-ஒருவகைநோய். அது குழந்தைபிறந்த பதினோராநாளிலா வது பதினோராமாதத்திலாவது பதி னோராம்வருஷத்திலாவது குழந்தை யை அல்லது தாயைப்பிடிக்கும் ஒரு பெண்கிரகத்தாலாயதென்பர், அத னாற்றேகமிளைத்தல், சுரம், சர்வாங் கத்திலு மிகுநோவு, அன்னத்தில் வெறுப்பு. விழுத்தவிழி விழித்தபடி யிருத்தல்என்னும் இக்குணங்களுண் டாகும்.

அர்ச்சனம் - திரவியஞ்சம்பாதித்தல்.

அர்ச்சனாதிகாரம் - பூசனை செய்தற்கு யோக்கியம்.

அர்ச்சனியம் - அருச்சியம்.

அர்ச்சனீயம் - மதிக்கத்தக்கது.

அர்ச்சனை - அருச்சனை.

அர்ச்சி - ஒளி, சுவாலை, பூசைசெய்யெ னப்பொருள்படும்அர்ச்சிஎன்னேவல்

அர்ச்சிதன் - அருச்சிதன்.

அர்ச்சித்தல் - அருச்சித்தல்.

அர்ச்சியசிஷ்டர் - பரிசுத்தவான்கள்.

அர்ச்சியம் - அருச்சியம்.

அர்ச்சுனம் - அருச்சுனம்.

அர்ச்சுனன் - அருச்சுனன்.

அர்ச்சை-மூர்த்தி, கல், மரம், மண்முத லியவற்றாற்செய்யப்பட்ட விக்ரகம்.

அர்டணம்-சந்தோஷம், நித்திய யோக த்தொன்று.

அர்த்தக்கிரியாஸ்திதி - யாதொருபதார் த்ததெரிசனத்தினால் ஞானமானது கெடுக்கப்படாமலிருக்குமோ அது.

அர்த்தக்கிரியார்த்தி - பிரயோசனமான கிரியை யிச்சிக்கின்றவன். [காரி.

அர்த்தசஞ்சயக்கிருது - ஒருவகை யதி

அர்த்தசந்திரபாணம் - பிறைமுகங்கொ ண்டபாணம்.

அர்த்தசந்திரம் - வியூதவகை நான்கனு ளொன்றாகிய அசங்கத்தின் விரியா றனுளொன்று.

அர்த்தசந்திரன்-பாதிச்சந்திரன் பாதிச் சந்திரன்வடிவான வளைவாக நகத் தைப் பதித்துவைக்கும் நகக்குறி, பாதிச்சந்திராகாரமாக வளைக்கப்பட் ட கை, பிறைமுகாஸ்திரம், புருவ நடு வுக்குமேல் மூன்றங்குலம் வியாபித் துநிற்கும் பிறை வடிவுடைய கலை அது பன்னிரண்டுகலைகளில் ஆறு

அர்த்தசம்வாதம்-உண்டில்லை [வது. என்னும் வாதம்.

அர்த்தசம்வித்தி - விடயத்தை யறியும் அறிவு.
அர்த்தசா - பிறைவடிவு.
அர்த்தசாமம் - இரவில் நடுச்சாமம்.
அர்த்தசாமர்த்தியம் - சொற்பொருளின்வலிமை.
அர்த்தசாலம் - பொருட்கூட்டம்.
அர்த்தசித்திரம் - தாளப்பிரமாணம் பத்துவகையுள் ஒன்ருகிய மார்க்கம் என்பதின் பிரிவுகள் ஆறனுள் ஒன்று. அது அரைமாத்திரையோர் கலையாகக்கொண்டது.
அர்த்தநாரீசத்துவம் - பாதியுடம்பு பெண்ணுயிருக்குஞ் சிவமூர்த்தம்.
அர்த்தநாரீசுரன் - பாதியுடம்பு பெண்ணுக இருக்குஞ் சிவன்.
அர்த்தநாரீசுவரம்-பாதிச்சரீரம், பார்வதியாரும் பாதிச்சரீரஞ் சிவபெருமானுமாக வீற்றிருந்த கோலம்.
அர்த்தபிதாபூதம்-ஒருவகைநோய். அது கண்ணிமைகள் சரிந்து தொங்குதல், தலைமயிர் முறைத்தல், தாடையுலரல், முகக்களை நீங்குதல், துக்கித்த முகம், உருட்டி யுருட்டிப் பார்க்குதல், அகாலநித்திரை, மந்தாக்கினி, சுபாவவார்த்தை, சொப்பனத்திலிறந்தவர்களைக்கண்டு பேசுதல், கறுப்பாகியவஸ்து, வெல்லம், பால், மாமிசமிவைகளில் விருப்பம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.
அர்த்தபிப்பலி - பாதிவால்மிளகு.
அர்த்தபிருட்டகம் - அங்கக்கிரியை பதினுறிலொன்று.
அர்த்தபேதரோகம் - சிரசில்வரும் ஒருவகை ரோகம்.
அர்த்தப்பிரகரன்-அர்த்தப் பிரகரதோஷம் அது ஞாயிற்றுக்கிழமைமுதல் சனிக்கிழமை வரைக்கும் முறையே வருநாலாஞ்சாமம், ஏழாஞ்சாமம், இரண்டாஞ்சாமம், ஐந்தாஞ்சாமம், எட்டாஞ்சாமம், மூன்ருஞ்சாமம், ஆருஞ்சாமம், என்னும் காலங்கள், புதன் மகன்.
அர்த்தப்பிரதீதி - அர்த்தமறிதல்.
அர்த்தப்பிராணன் - அர்ப்பப்பிராணனுக்கும் மகாப்பிராணனுக்கும் இடையாக உச்சரிக்கப்படும் எழுத்துக்கள்.
அர்த்தமண்டபம் - கருப்பக்கிரகமண்டபம்.
அர்த்தமாத்திரயோசன நிர்விகற்பக்காட்சி-குணங்களையின்றிப் பொருண்மாத்திரம் அகப்படுக்கும் நிர்விகற்பக் காட்சி.
அர்த்தம் - அருத்தம்.
அர்த்தம்பண்ணல்-பொருள்சொல்லல்.
அர்த்தரதன்-ஒருவில்லாளியோடு போர்ச்சத்தியற்றவன்.
அர்த்தராத்திரி - பாதியிரா.
அர்த்தவாதம்-பிரயோசனத்தை சொல்லுதல், புகழ்தல்.
அர்த்தவுதயம் - அர்த்தோதயம்.
அர்த்தவேதம்-உபவேதங்கள் நான்கனுளொன்று. அது தக்ஷண ஆச்சியசரு உபகாராதிகளை நிண்ணயம் பண்ணுவித்துத் தருமாதிசதுர்வித புருஷார்த்தத்திற்குஞ் சாதனமாயிருப்பது.
அர்த்தாங்கம் - அர்த்தாங்கவாதரோகம்.
அர்த்தாங்கவாதம் - பாரிசவாதம்.
அர்த்தாங்கீகாரம்-ஒருபகுதியை அங்கீகரித்தல்.
அர்த்தாட்சி-பக்கப்பார்வை.
அர்த்தாதுரம் - பணவாசை.
அர்த்தாத்து-அர்த்தத்தினுல், இருக்கிறபடி, உள்ளபடி.
அர்த்தாந்தரநியாசம் - வேற்றுப்பொருள் வைப்பென்னும் ஓலங்காரம்.
அர்த்தாந்தரம் - தோல்வித்தானம் இருபத்தொன்றில் ஒன்று அது தனக்கு வருந் தோல்வியைப் பிறிதொன்று பேசி மறைத்தல், பிரகிருதத்திற்சம்பந்தமான பொருளுடைய சொல், வேறரத்தம், வேறுகாரணம்.
அர்த்தாபத் - அருத்தாபத்தி என்னும் பிரமாணம்.
அர்த்தாபத்தியலங்காரம் - பொருட்பேற்றுப் பிரமாணவணி.
அர்த்தி-இரவலன்ஏவியதுசெய்வோன் முறையிடுவோன், வாதி.
அர்த்திதவாதம் - ஒருவகைரோகம்.
அர்த்தித்தல் - இரத்தல், வேண்டுதல்.
அர்த்தோதயம் - அறுபது வருஷத்திற்கொரு முறை வரும் ஒரு விசேடகாலம் அது தைமாசத்தில் ஞாயிற்றுக்கிழமையும் அமாவாசையும் திருவோணநட்சத்திரமுங் கூடியகாலம்.
அர்ப்பகன் - பாலகன்.

அர்ப்பணம் - நிவேதித்தல்.
அர்ப்பம்-ஒளியில்லாதது,பனி, பிள்ளை, பூண்டு.
அர்ப்பன் - மாணுக்கன்.
அர்ப்பிதம் - கொடுக்கப்பட்டது, நிவேதிக்கப்பட்டது.
அர்ப்பித்தல் - நிவேதித்தல்.
அர்ப்பீடம் - அரப்பாயம்.
அர்ப்புதம் - ஓரெண், ஒருமலை, பாம்பு, மாமிசமொத்தை, மேகம்.
அர்ப்புதவர்த்துமரோகம் - கண்ணிமையிஞேரங்களின் மாமிச மொத்தையைப் போலத் தடித்தலையுண்டாக்கும் ஒரு நோய்.
அர்வாசீனம் - நவீனகாலத்து,பின்வருவது, மாருனது.
அல-அலவென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும்,அல்லவென்னுங்குறிப்புவினைலகாரங்கெட்டு நின்ற ஒரு விகாரமொழி.
அலகம் - யானைத்திப்பிலி, வேப்பலகு.
அலகரி - பெருக்கு.
அலகிடல் } அளவிடுதல், எழுத்தெண்ணி யோசை கூட்டுதல், கணித்தல்.
அலகிடுதல்
அலகிரி - அலகரி.
அலகின்மாறு - விளக்குமாறு.
அலகு - ஆயுதப்பொது, எண், கதுப்பு, கத்தியிற்கூர்ப்புறம்,சலாக்கு, திடைப்பம், நுளம்பு, நென்மணி, பயிர்க்கதிர், பலகறை, பறவைமூக்கு, பாவோடநிரைக்குமலகு, மகிழம்விதை, விசாலம்.
அலகுகட்டல் - கணக்குப்பைசல் செய்தல், மந்திரத்தால் வாயைக்கட்டல்.
அலகுகிட்டுகை - திறக்கப்பட இயலாமல் மேல்வாயலகுங் கீழ்வாயலகும் நெருங்கிநிற்கை.
அலகுகூடை - பிரப்பங்கூடை.
அலகுசோலி - அறுகு.
அலகுஞ்சம் - நுளம்பு.
அலகுநிலை - பாக்குச்சுநிலை.
அலகுநிறுத்தல் - திரௌபதை யுத்ஸவத்தில் கத்திக்குக்காப்புக்கட்டுகை.
அலகுபருப்பு - ஒருபட்டாணி.
அலகுபனை - ஆண்பனை, ஒருபனை.
அலகுபாக்கு - மெல்லிதாய்க்கத்தரிதது வேகவைத்த ஒருபாக்கு.
அலகுபூட்டல்-தவசில் வாயை மூடுதல்.
அலகுபோடல் - நாக்கைத் துளைத்துச் செய்யுமோர் தவம்.
அலகுவிறைப்பு - குளிர்ச்சியால் வாய் கிட்டுதல்.
அலகை - கற்ருழை,காட்டுக்கற்ருழை, பிசாசம், பேய்க்குமட்டி.
அலகைக்கொடியாள் - காளியம்மை.
அலகைக்கொடி யுயர்த்தாள் - காளியம்மை.
அலகைத்தேர் - கானலாகிய பேய்த்தேர்போலும் அசத்தியம்.
அலகைமூலையுண்டோன் - கண்ணன்.
அலகைமூலையோடாவியருந்திஞேன் - கிருட்டினன்.
அலக்கணம் - அதிட்டவீனம், இலக்கணவீனம்.
அலக்கண் - துன்பம்.
அலக்கழித்தல் - துன்பப்படுத்தல்.
அலக்கியம் - அறியப்படாதது, அற்பக்காரியம், இலங்கியமல்லாதது, காணப்படாதது, தோற்றத்திற்சிறியது, விசேடக்குறிகளல்லாதது.
அலக்கினம்- இலக்கினமல்லாதது, துட்டலக்கினம்.
அலக்கு - கிளை.
அலக்கைச்சுரம் - கீழ்க்காய்நெல்லி.
அலங்கடை - அல்லாவிடம்.
அலங்கம் - அரண், கொத்தளம், மதிலிஞேருறுப்பு.
அலங்கரணம் - அலங்கரிப்பு, அலங்காரம்.
அலங்கரி- அலங்கரியென்னேவலுந்தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.
அலங்கரித்தல் - அலங்காரஞ் செய்தல்.
அலங்கரிப்பு - சிங்காரிப்பு.
அலங்கலம் - அசைதல்.
அலங்கல் - அசைவு,இரக்கம்,ஒளிசெய்தல், கலுழ்தல், தளிர், பூமாலை.
அலங்கஞரி - முத்துச்சிப்பி.
அலங்காரத்திருவிழா - விசேடத் திருவிழா.
அலங்காரநைவேத்தியம் - மண்டப்படி, நைவேத்தியம்.
அலங்காரபஞ்சகம் - ஒருபிரபந்தம்.
அங்காரப்படுத்துதல் - சிங்காரித்தல்.

அலங்காரப்பிரியன் - விஷ்ணு.
அலங்காரம் - அணியிலக்கணம், அழகு, ஆபரணம், உவமை, ஒருநூல், கட்டழகு, கலைஞானம், அறுபத்துநான்கினென்று, சிறப்பு, வாசகச் சிறப்பு.
அலங்காரித்தல் - அலங்கரித்தல்.
அலங்கியம் - கடத்தற்கரியது.
அலங்கிருதம் } அலங்காரம்.
அலங்கிருதி
அலங்கு-அலங்குதல், அலங்கென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.
அலங்குதல்-அசைதல், இரங்கல், ஒளிசெய்தல்.
அலங்கை - துளசிப்பூண்டு, துளசி.
அலங்கோலம் - ஒழுங்கின்மை, கோலக்கேடு.
அலசகம் - உதாவாயு, சோம்பு.
அலசகுட்டம் - ஒருவகைகுட்டரோகம் அது இரத்தநிறமாக ஆற்றிற் கிடக்குஞ் சிறு சிறு கூழாங் கல்லுகளைப் போலக் கொப்புளங்கள் பிறந்து உடைந்து இரணங்களாவது.
அலசத்துவம் - சோம்பு.
அலசம்-ஒதம், ஒருமரம், சோம்பு, மந்தம்.
அலசரோகம் - மந்தத்தினால்வரும் ஒருவகைக் கொடியரோகம்.
அலசல்-அலசுதல், அலைவு, இழைவிலக்கமானவஸ்திரம், கழுவுதல், சிந்துண்டுகிடப்பது, சோம்பல், பயனற்றவேலை.
அலசவிரணரோகம் - விரணபேதங்களிலொன்று. அதுஅழுகற்சேறுமுதலியவற்றைபலதரமிதித்தலினாலே பாதங்களினோரங்களிலு முள்ளங்கால்களிலும்விரற்சந்துகளிலுந்தினவோடுண்டாகும்வெளிறின்சேற்றுப்புண்
அலசி - ஒருவகைநத்தை, மேகவிரணம் வீக்கத்தையுடையது.
அலசிரோகம் - ஒருவகைக்குய்யரோகம், அது ஆண்குறியினின்றுமேகத்தை விழச்செய்து விரணத்தையுண்டாக்குவது, வெள்விழிக்கும் இமைச்சந்திற்கும் இடையில்வரும் ஒருவகை ரோகம். அது கருவிழிக்குள் வீக்கத்தைப்பிறப்பிக்கும்.
அலசிவர்த்தமரோகம் - இவைகளில் வரும் ஒருவகைரோகம். அது கருவிழிக்குவெளியிற் சிவந்தகட்டிகளை பிறப்பித்தோயாதபீளையைத்தருவது.
அலசு - அலசென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும், வருந்துதல்.
அலசுதல்-கழுவுதல், சோம்புதல், தளர்தல்.
அலச்சை - நாணமின்மை.
அலஞ்சரம் - நீர்ச்சாடி, மட்சாடி.
அலட்சிதம் - அறியப்படாதது, காணப்படாதது.
அலட்சியம் - அற்பமானது, கணிசக்குறைவானது.
அலட்டல் - அலட்டுதல்.
அலட்டி - அலட்டுகிறவன். பிதற்றுக்காரன்.
அலட்டு } அலைக்கழிப்பு, தொந்தரவு, பிதற்று.
அலட்டுகை
அலட்டுச்சன்னி - பிதற்றுச்சன்னி.
அலட்டுதல் - இடைவிடாமற் பேசிவருத்துதல், தொந்தரைசெய்தல், பிதற்றுதல்.
அலதரன் - உழவுக்காரன், பலராமன்.
அலது - அல்லதென்பதில் மெய்லகரந் தொக்க ஒரு விகாரமொழி.
அலத்தகம் } செம்பஞ்சு.
அலத்தம்
அலத்தல்-அங்கலாய்த்தல், துன்பப்படுதல், வறுமைப்படல்.
அலத்தி-அங்கலாய்ப்பு, துன்பு, நுளம்பு மின்மினி.
அலத்துவம் - மிக்கதன்மை.
அலத்தோன் - பலபத்திரன்.
அலந்தம் - மெய்யீறு.
அலந்தலை - துன்பம், மயக்கம்.
அலந்தல் - செங்கத்தாரி.
அலந்தவர் - துன்பமுற்றவர், வறுமையுற்றவர்.
அலந்தார் - துயரப்படுகிறவர்கள்.
அலந்தை - குளம், துன்பம்.
அலந்தோர் - இடுக்கட்பட்டோர்.
அலபதுமம் - நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று.
அலப்படை - கலப்பைப்படை.
அலப்படைகொண்டோன் -பலராமன்.
அலப்பல் - அலப்புதல், உளறுதல்.
அலப்பன் - வீண்பேச்சுக்காரன்.

அலப்பாரித்தல் - ஆர்ப்பரித்தல்.
அலப்பியம் - அடையக்கூடாதது.
அலப்பிருத்து-உழுகிறவன்,பலராமன்.
அலப்பு - அலப்பென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.
அலப்புதல்-அலட்டுதல், ஆரவாரித்தல், குழப்புதல், வீண்பேச்சுப் பேசுதல்.
அலமந்த-தெரிநிலைவினைப்பெய ரெச்சம்.
அலமந்து - அலமருவென்னும் பகுதியினின்றுபிறந்த ஒருதெரிநிலை வினையெச்சம்.
அலமரல் - அச்சம், அஞ்சல், கலங்கல், சுழலல், துன்பம், வருந்துதல்.
அலமரு - அலமருவென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.
அலமரும் - அசையும்.
அலமல-அலமலவென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும்.
அலமலத்தல்-அங்கலாய்த்தல், ஏம்பவித்தல்.
அலமலாத்தல் - அங்கலாய்த்தல், கலங்கல், சுழலல்.
அலமாரி - அலவாரி, அவாவுள்ளோன்.
அலமுகவிரும்பு-கலப்பையின் கொழு.
அலமுறல் - துன்பமடைதல்.
அலம் - அமையமென்றல், அலமரல், கலப்பை, சஞ்சலம், சுழற்சி, தேட்கொடுக்கு, தேள், நீர், பொன்னரிதாரம், போதுமென்கை, விருச்சிகராசி.
அலம்பசன்-ஓரரக்கன் இவன் துரியோதனனுக்காகப் போர்க்குவந்தவன்.
அலம்பல்-அலக்குத்தடி, ஒலித்தல், கழுவல், ததும்பல், தவறல், தளம்பல், வருத்தம், வீண்பேச்சுப்பேசுதல்.
அலம்பிறத்தல் - திருத்திபிறத்தல்.
அலம்பு - அலம்பென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும் தசநாடியிலொன்று.
அலம்புசம் - வாந்தித்தல், விரித்தகை.
அலம்புசை-அப்சரஸ்திரீகளிலே ஒருத்தி.
அலம்புடம்-வாந்திசெய்தல், விரல்கள் விரித்த உள்ளங்கை.
அலம்புடை-அலம்புசை, அறு தசநாடிகளிலொன்று, மூலாதாரந்தொட்டு இடதுகாதளவாய் நிற்பது.
அலம்புதல்-அதிர்தல், கழுவுதல், ததும்புதல்
அலம்புத்தி - போதியபுத்தி.
அலம்புரிதல் - மிகச்செய்தல்.
அலம்புருடன் } தசநாடிகளிலொன்று, அது கண்களிலேநிற்பது.
அலம்புருடை }
அலம்வரல் - அமைவுண்டாதல், சுழலுதல்.
அலம் - அழியாமை,உற்பத்தி, ஒடுங்காமை, நிலையுண்மை.
அலயன் -அழிவில்லாதவன், வீடில்லாதவன்.
அலரவன் - பிரமன்.
அலராள் - இலக்குமி.
அலரி - அயமரம், அழகு, ஒருபூமரம். அது ஆற்றலரி, ஈழத்தவரி, குங்குமவலரி, செல்வலரி, நீரலரி, வெள்ளலரிஎன ஆறுவகை, கண்வரி, கோதுமை, சூரியன், தேனீ,நீராவி, பூப்பொது.
அலரியோன் - சூரியன்.
அலருதல் - மலர்தல், விரிதல்.
அலரோன் - பிரமன்.
அலர் - நீர்,பலரறிந்துபழிதூற்றல், பழிச்சொல்,பூமாலை, மகிழ்ச்சி, மஞ்சள், மலரென்னேவல், மலர்ந்தபூ.
அலர்கதிர் - பரந்த கிரணத்தையுடைய சூரியன்.
அலர்கதிர்ஞாயிறு-விரிகிரணச்சூரியன்.
அலர்க்கம்-ஒருவகைக்கிருமி, விசர்நாய் வெள்ளெருக்கு.
அலர்ச்சி } அலருதல், மலர்கை.
அலர்தல் }
அலர்த்தல்-மலரச்செய்தல், விரித்தல்.
அலர்த்தி - அலர்ச்சி.
அலர்ந்தகாதல் - அதிக அன்பு.
அலர்ந்தபூ - கொத்தான்செடி, மலர்ந்த [பூ
அலர்ந்திடுதல் - மலர்தல்.
அலர்மகள் - இலக்குமி, சரச்சுவதி.
அலர்முகராகம் - பரதவுறுப்புக்களுள் ஒன்று.
அலர்முலை - விம்மியமுலை.
அலர்வு - மலர்தல்.

அலவியம் - கலப்பை.
அலல் - அல்லல்.
அலவர்-உழுதொழிலாளர், வேளாளர்.
அலவலை - அற்பக்காரியம், விலக்கமாய் செய்யப்பட்டது.
அலவல் - அலமரல், அலவலை, கந்தை.
அலவன்-ஆணண்டு, இஞ்சிரசம். கர்க்கடகவிராசி, சந்திரன், நண்டு, பூனை.
அலவாங்கு - கட்டப்பாரை.
அலவாட்டு - வழக்கம்.
அலவாநிற்றல் - அங்கலாய்த்தல்.
அலவு - அலைதல்.
அலவுறல் - அலம்வருதல்.
அலவுற்று - அலம்வந்து.
அலவை - அல்லவை.
அலவைப்பெண்டிர் - வியபிசாரப் பெண்கள்.
அலறல் - அழுதல், ஒலித்தல், கதறல், கூப்பிடல், சிதறுதல், விரிதல்.
அலறு-அலறென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத் தொகையும்.
அலறுசன்னி-அலறியலறி பெழும்பச் செய்யும்ஒருவகைச்சன்னிபாதசுரம்
அலறுதல் - அலறல்.
அலன்றல் - சாதல்.
அலாக்கு - தீங்கு, வேறான.
அலாசம் - நாப்புற்று.
அலாதம் - கரி, நெருப்புக்கொள்ளி.
அலாதா - தொழிற்படாதது, வேறு.
அலாதார் - ஒழிந்தபிறர்.
அலாதி - மெய்யெழுத்துமுதல்.
அலாது-அல்லாது, தொழிற்படாதது, [வேறு.
அலாபதம் - இலாமிச்சு.
அலாபத்திரம் ஒற்றைக்கைக்குக்காட்டியமுப்பத்துமூன்றுவகையுளொன்று அது சிறுவிரன் முதலாகிய ஐந்தும் வளைந்துமறிவது.
அலாபம் - அடையாமை, இடையூறு, தீமை, நட்டம்.
அலாபு - சுரைக்கொடி.
அலாபுகம் - சுரைக்காய்.
அலாபுகரோகம்-ஒருவகைரோகம்.அது கழுத்தின் உட்புறத்திற் சுரைப்பிஞ்சுபோன்று அடியகன்றமாமிசகண்டமாய்வரும். அதனாற்சுவாசம் விடுவது பிரயாசமாகும்.

அலாயிதா - வேறான.
அலாயுதம் - கலப்பப்படை.
அலாயுதன் - பலராமன்.
அலாரம் - கதவு.
அலாரி, அலாரிதா } அலரி.
அலால் - அல்லால்.
அலானம் - கலப்பை.
அலி-இயமன், உழவுச்சால், உழுவோன், கள், காகம், குயில், தீ, தேள், நறுவிலிமரம், பலதேவன். பேடி, வண்டு, விருச்சிகராசி, வெளிற்றுமரம், வேளாண்மை.
அலிகம் - நெற்றி.
அலிக்கிரகம்-ஒருபக்கமுஞ் சேராத கிரகம். அது புதன், சனி, கேது.
அலிக்கை-ஆறுவகைக்கையினுள்ஒன்று.
அலிங்கம்-இலிங்கமில்லாதது, குறிகள் இல்லாதது.
அலிச்சர்ப்பம்-ஒருவகைச்சர்ப்பம். அது மிருதுவுடன் நீண்ட வுருவத்தையும் வெளுத்தபடத்தையும், மந்தநடையையும், குறைந்ததொனியையும், அற்ப கோபத்தையும் உடையது.
அலிஞ்சரம் - மட்சாடி.
அலிநாள்-ஆண் பெண் என்னும்வகுப்பல்லாத சாதிப்பட்ட நட்சத்திரங்களாகிய மிருகசிரமுஞ் சதயமும்.
அலிந்தம் - அணிந்தம், முற்றம்.
அலிபகம் - கருவண்டு, தேள், நாய்.
அலிபிஞ்ஞன் - எழுதவறியாதவன்.
அலிப்பேடு-அல்லியமென்னுங் கூத்து.
அலிமரம் முருக்குப்போல உள்ளாவது வெளியாவது வைரமில்லாத சாதிப்பட்டமரம்.
அலிமுகப்பாண்டுரோகம் - ஒருவகைப் பாண்டுரோகம்.
அலியர் - அலித்தன்மையுடையவர்.
அலியன் - கடுக்காய்.
அலியெழுத்து - ஆய்த எழுத்து.
அலிவேதம் - மோகனவரணியத் தொன்று.
அலீகம் - நெற்றி, பொய், வானம், வெறுப்பானது.
அலீசா - கிண்டன்சீலை, தோணிவலிக்குந்தண்டு.

அலு - அலுவென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும்பெயரெச்சத் தொகையும்,நீர்விட்டுவைக்குஞ்சிறுகுடம்
அலுக்குதல் - பிலுக்குப்பண்ணல்.
அலுக்குத்து - ஒருகாதணி.
அலுக்குலைதல்-அடுக்குக்குலைதல், கொலுகொலுத்தல்.
அலுக்குலைவு-அலைக்குலைதல், தாறுமாறுதல்.
அலுக்கொலு - குலைவு.
அலுசிலம்பல்-ஒழுங்கின்மை,குழம்பல்.
அலுத்தசத்தி-பேரருளுடைமை. [தி.
அலுத்தம்-ஆசையின்மை, மனத்திருப்
அலுத்தல்-அலைக்கழிவுபடல், சலித்தல், பிலுக்குப்பண்ணல், வெறுத்தல்.:
அலுத்தன் - ஆசையற்றிருப்போன்.
அலுப்பிஞத்தி - குண்டூசி.
அலுப்பு - அயர்வு, சலித்துப் போதல், தோய்வு, வெறுப்பு.
அலுமம் - புளிப்பு.
அலுமாரி - உடுப்புகள்வைக்குமிடம்.
அலுவலுவெனல் - அலப்பல்.
அலுவல் - கவ்வை, வேலை.
அலுவா - ஒரு பலகாரம்.
அலுவீகம் - வில்வமரம்.
அலேகம் - பஞ்சலோகமணல், வெள்ளேடு.
அலை-அலைத்தல். அலையென்னேவல், கடல், கருமணல், திரை, புனற்றுறை, பூமி, மது, மிகுதி.
அலைகுதல் - அலைதல்.
அலைக்கல் - அலைத்தல்.
அலைக்கழிதல் - அலைந்து வருந்தல்.
அலைக்கழித்தல்-உலைவுபண்ணுதல், கெடுத்தல்.
அஅலைக்கழிவு-உலைவு.
அலைக்கும் - வருத்தும்.
அலைசடி
அலைசடை } அலைவு, சோலி, துன்பம்.
அலைசல்-அலைவு, சோம்பு, தொந்தரை.
அலைசுதல் - அலைசல், சோம்பல்.
அலைசோலி - அலைக்கழிவு.
அலைச்சல் - உலைவு, தொந்தரை.
அலைதரல் - அலயச்செய்தல்.
அலைதல் - அலையல், சோம்பல், துன்பம், வருந்துதல்.
அலைதாடி - களகம்பளம்.
அலைத்தரல் - அலைதல்.
அலைத்தல் - அறைதல், உலைத்தல், கெடுத்தல், சலனப்படுத்தல், வருத்தல்.
அலைத்திடல்-அலையச்செய்தல், வருத்துதல்.
அலைத்துவம் - மிகுதி. [துதல்.
அலைநீர் - கடல்.
அலைப்ப - வருத்த.
அலைப்படுதல் - வருந்துதல்.
அலைப்பு-அலைத்தல்-கூத்தின் விகற்பம், வருத்தம், வருந்துகை.
அலைமகள்
அலைமான் } இலக்குமி.
அலையல் - அலைதல், சோம்பல், துன்பம், வருத்தம்.
அலையெடுத்தல் - அலையெழல், திரையலைசல்.
அலைவாய் - கடல், திருச்செந்தூர்.
அலைவாய்க்கரை - கடற்கரை.
அலைவு-அலைதல்,அளவின்மை, வருத்தம்.
அலோகம்-காட்சிக்குவிடமாகாதது. [ம்.
அலோகனம் - அதரிசனம்.
அலோகி - பசளைப்பூண்டு.
அலோபம் - மரியாதை, வெறுப்பு.
அலோமம் - ஏற்றல்.
அலோமி-பொற்றலைக்கையாந்த கரை.
அலௌகிகசன்னிகருடம் - அலௌகீகமல்லாதசம்பந்தம்.
அலௌகிகப்பிரத்தியக்கம் - இலௌகிகப் பிரத்தியட்சமல்லாதது.
அலௌகிகம்-இலௌகிகமல்லாதது.
அல்-அல்லென்னேவல், இரவு, இருதிணைமுக்கூற்றொருமைத் தன்மைவிகுதி(உ-ம்)நடப்பல், இருள், உடலெழுத்து எதிர்மறைவிகுதி (உ-ம்) அஞ்சல்,ஒருவிகுதி, சாரியை,(உ-ம்)தொடையல், தொழிற் பெயர் விகுதி (உ-ம்)வரல்,மதில்,வடமொழியினொற்றெழுத்து, யியங்கோள் மிகுதி (உ-ம்) வருத்தனர்கொளறே.
அல்கலும் - நாடோறும்.
அல்கல்-இரா, குறைதல், சுருங்கல்,தங்கல். தரித்திரம், நாள் வறுமை.
அல்கி - தங்கி.
அல்கு-அல்கவெனப்பொருள்படும்ஒரு முதனிலைத் தொழிற்பெயர், அல்கென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.

அல்குகழி - உப்புக்கழி, சிற்ருறு.
அல்குதல்-குறைதல், சுருங்குதல், தங்கியிருத்தல்.
அல்குல் - அரை, கதம்பம், பெண்குறியின் மேற்பக்கம்.
அல்நார் - கல்நார்-கன்ஞர்.
அல்பொருள் - அவர்ணியம்.
அல்ல - இன்மையைக்காட்டுஞ்சொல்.
அல்லகண்டம் - துன்பம்.
அல்லகம் - கோவணம்.
அல்லகாத்திரி - தணிகைமலை.
அல்லது - அல்லாமற்போனல்.
அல்லதூஉம் - அல்லாமலும்.
அல்லதேல் - அல்லாமலிருந்தால்.
அல்லதை - அல்லது.
அல்லத்தட்டல் - தடுத்தல், நம்பிக்கைகெடுத்தல்.
அல்லமன் - சுஞ்ஞானி, நிராங்காரன் என்னும் இருவரிடத்திலும் பிறந்த புதல்வன்.
அல்லம் - இஞ்சி.
அல்லரியல் - கண்ணறை கண்ணறையுள்ளது.
அல்லர் - அல்லாதவர்.
அல்லல் - துன்பம், முடைதல்.
அல்லவர் - பிறர்.
அல்லவை - ஒழிந்தன, தீமை, தீயன, பயனில்லாப்பொருள்.
அல்லள்-அல்லென்னுமடியாற் பிறந்து படர்க்கைப்பெண்பா லொருமையில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று.
அல்லற்படல் - துன்பப்படல்.
அல்லன - ஒழிந்தன, தீமை,தீயன,பயனில்லாப்பொருள்.
அல்லன் - அல்லாதவன், தீயன்.
அல்லா - ஒழிந்த, கடவுள், தாய்.
அல்லாக்கால் - அல்லாவிடத்து.
அல்லாத - தீமை யுடையவை எனப் பொருள்படும் ஒரு குறிப்பு வினையாலணையும்பெயர், தீமை யுடையன எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று, தீமையையுடைய எனப் பொருள்பட|வன்மை என்னும் அடியாற் பிறந்த ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம், மாருனவெனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம்,மாருனவைஎனப்பொருள்படும் ஒரு குறிப்பு வினையாலணையும் பெயர்.

அல்லாதது - ஆகாதது, ஒழிந்தது.
அல்லாதவர் - தகாதவர், தீயவர், முன்சொல்லப்படாதவர்.
அல்லாதன - ஒழிந்தபிற, செய்த்தகாத செயல்களெனப் பொருள்படும் ஒரு குறிப்பு வினைப்பெயர்.
அல்லாதார் - ஒழிந்தோர், தீயோர்.
அல்லாது - அல்லாமல்.
அல்லாத்தல் - அலமரல், துன்பமுறல்.
அல்லாந்து - மகிழ்ந்து.
அல்லாமல் - அன்றி.
அல்லாமை - கெட்டகுணம்.
அல்லாரி - அல்லி, வெள்ளல்லி.
அல்லார் - அல்லாதார்.
அல்லால் - அல்லாமல்.
அல்லி - அகவிதழ், ஆம்பல், இரா, இளவேர், காயாமரம், நெய்தல், பூந்தாது.
அல்லிகம் - பேய்க்கும்மட்டி.
அல்லிப்பிஞ்சு - பூவிழாதபிஞ்சு.
அல்லிமூலகம் - அல்லிக்கிழங்கு.
அல்லியத்தொகுதி - விட்டுணுவின்கூத்துக்குள் ஒன்று. அது மாதுலஞகிய கஞ்சனனுப்பிய யானையின்கொம்பினை முறித்தற்காடியது.
அல்லியம் - இடையரூர், கொட்டி,விட்டுணு கூத்து.
அல்லியன்-தன்குழுவைப்பிரிந்தயானை
அல்லியாமரம் - படவுவலிக்குந் தண்டு.
அல்லியான் - பிரமா.
அல்லியை - கலப்பைக்கூட்டம்.
அல்லிவகை - ஆகாசவல்லி, சிற்றல்லி, செவ்வல்லி, வெள்ளல்லி என்பன.
அல்லு - இருள், முடைதல்.
அல்லுச்சில்லுப்படுத்தல் - குலைதல், சிதறுண்டிருத்தல்.
அல்லுழி - அல்லாவிடத்து.
அல்லூரம் - வில்வமரம்.
அல்லேம் - அன்மைப்பொருளிற்றன்மைப்பன்மையில் அல்லதொருமைச் சிறப்பில் வரும் ஒரு குறிப்பு வினைமுற்று.
அல்லேன் - அன்மைப் பொருளுடைத்தாய்த் தன்மை யொருமையில்வரும் ஒரு குறிப்பு வினைமுற்று.
அல்லை - அல்லாயென்னு முன்னிலை ஒருமைக்குறிப்பு வினைமுற்று, ஒரு கொடி, தாய்.

அல்லோர் - அல்லாதார்.
அல்லோன் - ஒழிந்தோன், சந்திரன்.
அல்வழி - வேற்றுமையொழிநிலை.
அல்வழிப்புணர்ச்சி-வேற்றுமையொழிநிலைத்தொடர்.
அவ - அறிவு, ஆதாரம், கட்டளைசெய்தல், குறைத்தல், சுத்திசெய்தல், திருத்தல், தோல்வி, நிந்தை, நீக்கம், புறம்பு, போஷித்தல், வியாபகம் எனப் பொருள்படும் ஓரவ்வியயம்.
அவகடம் - எதிரிடை, தந்திரம், தாறுமாறு, பொல்லாங்கு, வஞ்சகம்.
அவகட்டனம்-உரோஞ்சித் தள்ளுதல்.
அவகணிதம் - அவமானம்.
அவகணிதன்-அவமானிக்கப்பட்டவன்.
அவகண்டம் - முகப்பரு.
அவகண்டனம் - அழித்தல், களைதல்.
அவகதவாய் - கீழ்க்காய்நெல்லி.
அவகதன் -பிரசித்திபெற்றவன்.
அவகதி - அறிவு, இடம்விட்டுப் பெயர்தல், புலப்படுதல்.
அவகத்தம் - புறங்கை.
அவகமம் - அகற்றல், அறிதல், யதார்த்தமான வறிவு.
அவகரணம்- அபகரித்தல், மீட்டெடுத்தல்.
அவகர்த்தம் - குழி.
அவகர்த்தவிரணம் - ஒருவகைவிரணம். அது விரணத்திற்குழிவிழுவது.
அவகர்த்தனம் - சீவுதல், தரித்தல்.
அவகாகம் - நன்ருனபயிற்சி,நீராடல்.
அவகாகம் - நீராடுதல், நீராடுமிடம்.
அவகாசதன்-ஒதுக்கிடங்கொடுப்பவன்
அவகாசப்பிரதம் - இடங்கொடுப்பது.
அவகாசம் - ஆகாயம், ஓய்ந்திருக்குமநேரம், இடம், சமயம், தகுதி, திராணி, பொக்கிஷசாலை, வெளி.
அவகாசிப்பித்தல் - இடங்கொடுத்தல், இடங்கொள்ளச்செய்தல்.
அவகாதம் - அவமானம், கொல்லுதல், நெல்லுக்குற்றல்.
அவகாரம் - அழைத்தல், பதித்துவம் யானை மீன்.
அவகாரன் - கள்ளன்.
அவகார்த்தவிரணம்-ஒருவகைவிரணம். அது விரணத்தில் குழி விழுந்துள்ளது.

அவகாலம் - கெடுகாலம்.
அவகிரந்தனம் - சத்தமிட்டழுதல்.
அவகிருத்தியும்-அமங்கலகாரியம் துர்ச்செய்கை.
அவகீதம் - நிந்தை, வசைப்பாட்டு.
அவகீரணம் - அவமதிக்கப்பட்டது, சிதறுதல், பருப்பொருளாகக் குத்தப்பட்டது.
அவகீரணிவிரதம் - ஒருவிரதம், அது சந்நியாசி மகளிர்போகம் விரும்பினைந்ததோஷம் நீங்கச் செய்யப்படுவது.
அவகீர்ணம் - அவமதிக்கப்பட்டது, சிதறுதல். பருப்பொருளாகக் குத்தப்பட்டது.
அவகீர்ணி - ஸ்திரீசங்கமஞ்செய்தலால் பிரமசரியநெறிதவறினவன்.
அவகீர்த்தி - கட்டசாத்தியகுணம், தீக்குணம், துர்க்கீர்த்தி.
அவகீனம் - தேள்.
அவகுஞ்சனம் - சுருங்குதல், வளைவு.
அவகுடாரம் - எதிர்கீழ்ப்போவது,பின்போவது.
அவகுணம் - தீக்குணம், துர்க்குறி.
அவகுண்டனம் - இழுத்தல், சூழ்தல், முக்காடு.
அவகுண்டிதம் - இழுக்கப்பட்டது, கற்றப்பட்டது, மறைக்கப்பட்டது,மூடப்பட்டது.
அவகுண்டியம் - இழுத்தல், சுற்றல்.
அவகேசி - பூத்துங்காயாதமரம்.
அவகேடு-மிகுகேடு.
அவகேளகம்
அவகேளம்
அவகேளனம் } அவசங்கை, அவமதிப்பு.
அவகேளிதம் - அவமதிக்கப்பட்டது.
அவகோரணம் - பொருதல்.
அவக்கவக்கெனல் - அச்சக் குறிப்பு, விரைவுக்குறிப்பு.
அவக்கியாதம் - அவமானம்.
அவக்கியாதி-சங்கையீனம் துர்க்கீர்த்தி.
அவக்கியாதை - அவமானம்.
அவக்கிரகணம் - அவசங்கை, தடை.
அவக்கிரகம் - எடுத்தல், ஏற்றுக்கொள்ளுதல், சுபாவம், தடை, நிந்தை, பற்றுதல், மழையின்மை, யானைத்திரள், யானையின் நெற்றி.

அவக்கிரசம் - காடி.
அவக்கிரந்தனம் - உரத்தழுதல்.
அவக்கிரயம்-அநீதவிலை, அரசனுக்கிருக்கும் வரிப்பணம், கூலி, சம்பளம்.
அவக்கிராகம் - சபிப்பு.
அவக்கிராந்தி-இறங்குதல், சமீபமாய்ப் போதல்.
அவக்கிரியை - அசட்டை.
அவக்குணம் - அவகுணம்.
அவக்குறி - துர்க்குறி, மரணக்குறி.
அவக்கொடை - வீண்கொடை.
அவக்கொலை - துன்மரணம்.
அவசகுனம் - துர்ச்சகுனம்.
அவசங்கை - சங்கையீனம், அழகின்மை, சாமர்த்தியமின்மை.
அவசதம் - கல்லூரி, கிராமம், வீடு.
அவசத்தம் - அமங்கலவோசை,இன்னு வோசை.
அவசம் - பரவசம், மயக்கம்.
அவசயம் - கைக்கூடாமை, தோல்வி நட்டம்.
அவசரநாமம்-நிற்குநிலைக்கேற்றபெயர்.
அவசம் - ஆண்டு, ஆலோசனை, சமயம், சுருக்கு, மழை, மிகுதேவை.
அவசர்ப்பிணி - உலகம்வாழ்நாள் போக முதலியவற்றால் தேய்பிறைபோலச் சுருங்குங்காலம், சைனருடைய ஒரு கால அளவு.
அவசனம் - அமைதி.
அவசாதம்-இளைப்பு, கட்டளைதைரியக் குறைவு, நிந்தை, முடிவு.
அவசாயகன் - சமாப்திசெய்வோன், நிச்சயிப்போன்.
அவசாயம் - நிச்சயம், நிறைவேறுதல், முடிவு.
அவசாரணம் - நடத்துதல்.
அவசாரம் - அப்பிரயோசனம், வேசித்தனம்.
அவசாரி - வேசி.
அவசானம் - எல்லை, மரணம், முடிவு.
அவசி - கழுதைப்பாலை.
அவசிட்டம் - மிச்சமானது.
அவசிதம் - அறிந்தது, முடிந்தது.
அவசித்தாந்தம் - சித்தாந்தமாகாதது.
அவசித்து - உத்திராடத்திற்குந் திருவோணத்திற்கும் நடுநாள்.
அவசியம் - அவசரம், ஆவத்து, நிச்சயம் பிதிராசாரம்.

அவசீனம் - தேள்.
அவசுத்தம் - சுத்தமின்மை.
அவசூலம் - சாமரை.
அவசேகம் - தெளித்தல், நனைத்தல், புரோட்சித்தல்.
அவசேடம் - மிச்சம், முடிவு.
அவச்சா - துன்மரணம்.
அவச்சாயை - தள்ளுபடியானசாயை.
அவச்சாவு - பிராயமின்றி வருஞ்சாவு.
அவச்சின்னம் - எல்லைக்குள் அடங்கியது, வெட்டப்பட்டது, பிரிவு.
அவச்சின்னன் - பிரிக்கப்பட்டவன்.
அவச்சுரிதகம், அவச்சுரிதம் - குதிரைக்கனைப்பு.
அவச்சூலம் - சாமரம்.
அவச்சேதகம் - அளவிடல், எல்லைபடுத்தல், நிச்சயித்தல்,விசேடகுணம், விசேடித்தல், வேறுக்கல்.
அவச்சேதம் - எல்லை,ஒன்றற்குரியன, நறுக்குதல், பங்கு.
அவச்சேதனம்-நறுக்குதல், பகுத்தறிதல்.
அவஞானம் - அவமானம்.
அவஞ்ஞாதம் - அவமதிக்கப்பட்டது.
அவஞ்யாலங்காரம் - இகழ்ச்சியணி.
அவடி - குழாம்;குழி, திரைச்சீலை,துளை.
அவடு - கிணறு, குழி, பிடர்.
அவட்சயம் - அழிவு, நட்டம்.
அவட்சேபணம் - விழுதல்.
அவட்சேபம் - எறிதல் நினைவுக்குமாறுனஅர்த்தம் விளைக்குஞ் சொற்களைச் சொல்லி நிந்தித்தல்.
அவண - அவ்விடத்தன.
அவணம் - அம்மணம, இருபதினுயிரம் கொட்டைப்பாக்கு, நிந்தனை.
அவணன்-திண்ணியன், துர்புகழுடையோன், வீணன்.
அவணி - நன்மை.
அவண் - அவ்விடம்.
அவண்ணியம் - அவர்ணியம்.
அவதஞ்சம்-காதணியிலொன்று, தலையணி.
அவதந்திரம் - சதியோசனை, மடிப்பு.
அவதந்திரி - சதியோசனைக்காரன்.
அவதரணம்-இறங்குதல், மொழிபெயர்த்தல்.
அவதரணிகை - நூலினாம்பத்திற் சொல்லப்படுங் **காப்பு.** முகவுரை.

அவதரம் - சமயம், தறுவாய்.
அவதரித்தல் - கருவிற்புகுதல், தங்கல், பிறத்தல்.
அவதாதம் - சிறந்தது, சுத்தம், வெண்மை, மஞ்சணிறம்.
அவதாதன் - வெண்ணிறத்தோன்.
அவதாரணஞானம் - நிண்ணயம்.
அவதாரணபூர்வபதகருமதாரயன்-சமாசங்கள்ஆறனுளொன்று. அதுமுன்மொழித் தேற்றமாகிய பண்புத்தொகை.
அவதாரணம் - தாபித்தல், நிச்சயம், நிதானித்தல், மண்வெட்டி.
அவதாரமெடுத்தல் - பிறத்தல்.
அவதாரம் - உற்பத்தி, தீர்த்தக்கரை, மறுபாஷைப்படுதல்.
அவதாவனம் - சுத்திசெய்தல், துரத்தல், பின்றொடருதல்.
அவதானம்-கிரகித்தல்,சாதுரியம்,நிதானம்,நினைவு,பாவனை,பின்றொடர்தல்.
அவதானம்பண்ணல்-நினைத்தல், பாடம்பண்ணல்.
அவதானித்தல் } நினைத்தல், பாடம்
அவதானிப்பு } பண்ணல்.
அவதி - அளவு, ஆவத்து, இணக்கம், எல்லை, கவனம், காலம், கிடங்கு, சமயம், முடிவு, வருத்தம்.
அவதிகத்தம் - கடனுரை.
அவதிக்காரகம் - நீக்கப்பொருளைக்காட்டுமுருபுடைப்பெயர்.
அவதிஞானம் - அதீதகதமானபரிஞ்ஞானம்,அதுமுற்பிறப்பை அறியுமறிவு முக்காலத்தையும் அறியுமறிவு.
அவதிதரிசனம் - தரிசனுவரணியமொன்பதுபேதத்துளொன்று.
அவதிப்படல் - கஷ்டப்படல்.
அவதீரணம் - அவசங்கை.
அவதும்பாகுட்டரோகம் - ஒரு வகைக் குட்டரோகம், அதிற்கொப்பளங்கள் அத்திப்பழத்தையொத்து விஸ்தரித்துச்சீக்கிரத்திற்பிறந்து நசுங்கிக்குழி விழுந்த விரணங்களாகும்.
அவதும்பரம் - அத்திப்பழம்.
அவதூதகீதை - துறவைப்பற்றிய ஒரு புத்தகம்.
அவதூதம் - முழுத்துறவு.
அவதூதர்-இலௌகீகப் பற்றுக்களனைத்தையுமொழித்த ஒரு சன்னியாசி. அவர் அறுவகைச்சன்னியாசிகளில் ஒருவர்.
அவதூதன் - அதிவர்ணாச்சிரமி.
அவதூதி - முற்றத்துறந்தவன்.
அவதூறு - நிந்தை, பிறர்பழிகூறல்.
அவதூனனம் - அகற்றல், அசைத்தல், கலங்குதல், மிதித்தல்.
அவதோகம் - பால்.
அவத்தம்-ஆபத்துடையது,நாய்வேளை, பொய்.
அவத்தன் - பிரயோசனமில்லாதவன்.
அவத்தாசதுட்டயம் - மனிதருடையநான்குபருவநிலை அவைபாலியம் கௌமாரம்யௌவனம்வார்த்திகம்என்பன.
அவத்தாத்திரயசாட்சித்துவம்- வேதாந்தத்திலேசொல்லப்பட்ட அவத்தாத்திரயங்களிற் கூடியிருந்துங் கூடாதிருந்தும் அவத்தாத்திரயத்தையும் அவத்தாத்திரய வியாபாரத்தையும் அவத்தாவாசரையும் அறிந்துகொண்டிருப்பது.
அவத்தாத்திரயம்-சாக்கிரம் சுவப்பனம் சுழுத்திஎன்னும் மூன்றவத்தைகள். சுரோத்திராதி இந்திரியங்களிறைச் சத்தாதி விடயஞானம் எந்தமட்டும் வருகின்றதோ அந்தமட்டுஞ் சாக்கிரம்சாக்கிரவாசனையாற்பிறந்தவிடயத்துடன்கூடினஞானமே சுவப்பனம். சமத்தவிடயஞானங்களும் இல்லாதிருத்தல் சுழுத்தி.
அவத்தானம் - நிலை,நிலைத்தல்,நிற்குமிடம் விடாத்தொடர்பு.
அவத்திதன் - இருக்கின்றவன்.
அவத்திதி - இருப்பு.
அவத்தியகவசம்-உயிர்நாசத்தை விலக்குவதென்றுசொல்லப்படுங் கவசம்.
அவத்தியம்-இழிந்தது. தீங்கு, மரணத்துக்கு விலக்கு, வெறுக்கப்பட்டது, பாவம்.
அவத்தியன் - கொல்லத்தகாதவன்.
அவத்திரங்கம் - கடை.
அவத்திரியம் - ஆபத்து.
அவத்து-உதவாதபொருள், பொருளல்லாதது.
அவத்துறை - தீயவழி.
அவஸ்தை } ஆபத்து சாக்கிர முதலிய
அவத்தை } உயிர்நிலையுபாதி,நிலைமாணவுபாதி, முடிவு, வேதனை.

அவத்தைப்பிரயோசம் - கலைஞானம் அறுபத்திநான்கினொன்று. சூனியம் வைத்துக்கொல்லல்.
அவநதம்-குனிதல், தலைகவிழ்தல்.
அவநதர்-குனிந்தவர் - தலைகவிழ்ந்தவர்.
அவநதன் - குனிந்தவன், தலைகவிழ்ந்தவன்.
அவநதி-குனிதல், தலைகவிழ்தல், தாழ்மை, மரியாதை, மேற்குத் திசையிலத்தமித்துப்போதல், வணக்கம்.
அவநம் - அலங்கரித்தல், அன்பு, இருத்தல், காத்தல், கொல்லல், செய்தல், தழுவுதல், தாங்குதல், திருத்திகொடுத்தல், திருத்தியடைதல், தீவிரம், பட்சம், பிடித்தல், பெலன்.
அவநம்பிக்கை - நம்பிக்கையீனம்.
அவநாசி - கலைமகள், ஒரு சிவத்தலம்.
அவநாயகம் - இறங்கச்செய்தல்.
அவனி - பூமி, மருதநிலம்.
அவனிகேளவன் - விட்டுணு.
அவனிதம் - தோத்தரித்தல்.
அவனிந்தை - தூஷணம்.
அவனிபதி - அரசன், உதிட்டிரன், விட்டுணு.
அவனிபர் - அரசர்.
அபனிபன் / அபனிபாரகன் / அவனிபாலகன் } அரசன்.
அவனிபாலர் - அரசர்.
அவனிபாலன் - அரசன்.
அவனியாயம் / அவநீதி } அநீதம்.
அவநீதி - நீதியின்மை.
அவநுதி - ஓரலங்காரம். அது ஒன்றனுண்மையை மறுத்துப் பிறிதொன்றாக உரைப்பது.
அவநுதியுருபகம்-ஓரலங்காரம். அஃது சிறப்பினதும் குணத்தினதும் பொருளினதும் உண்மையை மறுத்துப் பிறிதொன்றாக உரைப்பது.
அவநுதியுருபகவலங்காரம் - ஒருவகையுருபகவலங்காரம்.
அவநெறி - பாவவழி.
அவநேசனம் - கழுவுதற்கான தண்ணீர் சிரார்த்தக்கிரியையிற் றர்ப்பையினீர் தெளித்தல்.
அவந்தரை - குளப்பம், சேதம்.

அவந்தன் - பாக்கியகீனன், வீணன்.
அவந்தி-அக்காள், காடித்தண்ணீர், சதபுரியினொன்று அதுஉஜிளிதேசம்
அவந்திகன் - அவந்தித்தேசவரசன்.
அவந்திகை - அவந்தி, கிளி.
அவந்திக்கிண்ணி - மெருகன்கிழங்கு.
அவந்திசோமம் - காடி.
அவந்தியன் - அவந்திதேசத்தவன்.
அவபத்தி - பத்தியின்மை, வீண்பக்தி.
அவபத்தியம் - இச்சாபத்தியம், விடுபத்தியம்.
அவபாகுகவாதம் - தோள்களைக்கூம்பச்செய்யும் ஒரு நோய்.
அவபாசகத்துவம் - விளக்குதல்.
அவபாசகம்-ஒலியுடையது, பரப்பிரமம்.
அவபாசகன் - விளக்குகிறவன், பரப்பிரமம்.
அவபாசம் - வெளிச்சம்.
அவபாசனை - விளக்குதல், விளங்குதல்.
அவபாதம் - படுகுழி, விழுதல்.
அவபாதனம் - வெட்டுதல்.
அவபிருதம் - வேள்விமுடிவிற் செய்யும் ஸ்நானம்.
அவபுத்தி - துர்ப்புத்தி.
அவபேதகம் - பிளத்தல்.
அவபேதகவாதம் - ஒருவகை வாதரோகம், அது கண், புருவம், நெற்றிஎன்பவைகளில் வியாபித்து, நெற்றிபிளந்துபோவதுபோலச் சகிக்கக்கூடாத வேதனையைச் செய்வது.
அவபோதகன்-உபாத்தி, எழுச்சிசெய்வோன், சூரியன்.
அவபோதம் - அறிவு, ஊகம், படிப்பித்தல், விழிப்பு.
அவபோதரூபம் - அறிவுரூபம்.
அவபோதனம்-அறிவு, காட்சியுணர்வு.
அவப்பிரசவம் - ஆறுக்கு மேலான மாதங்களிலே கருவழிதல்.
அவப்பிரஞ்சம் - இழிசனர்மொழி.
அவப்பெயர் - துர்க்கீர்த்தி.
அவப்பொழுது - வீண்பொழுது.
அவமதாங்குசம் - மதயானை.
அவமதி - நிந்தை, வெறுப்பு.
அவமதிச்சிரிப்பு - நிந்தனைச்சிரிப்பு.
அவமதித்தல் - இகழ்வாகமதித்தல்.
அவமதிப்பு - நிந்தனை, மதியாமை.
அவமந்தம் - கலத்தல்.

அவமந்தரோகம்-ஆண்குறியிலே வரும் ஒருவகை ரோகம். அது ஆண்குறியில் நீளவடிவாய் அனேக கொப்புளங்களையுண்டாக்க அக்கொப்புளங்களின் நடுவில் வீறலுண்டாகிச் சீழ்இரத்தம் ஒழுகுவதும் அன்றிவேதனையும் உரோமச்சிலிர்ப்பும் உண்டாம்.

அவமரணம் - துன்மரணம்.

அவமரியாதை - மரியாதைத்தப்பு.

அவமழை - அகாலமழை.

அவமா-மூன்றுதிதிகள் ஒருநாளிற் கலந்திருப்பது.

அவமாக்கல் - வீணாக்கல்.

அவமாக்குதல் - உபயோகப்படாமற்செய்தல்.

அவமானம் } இழிவு, மானவீனம்.
அவமானிதம் }

அவமானித்தல்-அவமானப்படல், அவமானப்படுத்தல்.

அவமிருத்தியோகம்-திருவாதிரை, கேட்டை, ஆயிலியம், பரணி, கார்த்திகை, முப்பூரம் என்னு நாட்களுடன் பாவவாரமும் இருத்தையுங்கூடிவருவதுஇந்தயோகத்திலேவியாதி கொள்ளின் மரணம் வருமென்பதுபற்றி வந்தபெயர்.

அவமிருத்து - துன்மரணம், கேதுவின் மகன்.

அவமோசனம் - இட்டமாக்கல், கக்குதல்.

அவம் - பயனின்மை, வீண்.

அவம்போதல் - வீணாகப்போதல்.

அவயக்கோழி - அடைக்கோழி.

அவயங்காத்தல் - அடைகாத்கல்.

அவயமிடல் - அபயமிடல்.

அவயம் - அடை, அழுகை,இலாமிச்சு, நன்மையின்மை.

அவயவசாபிண்டியம் - தேகவுறுப்புக்களின் கலப்பினாற்சபிண்டராயிருக்குந்தன்மை.

அவயவம் - உடல், உறுப்பு, ஒருருவகம்.

அவயவவுருவகம்-அவயவத்தை உருவகஞ்செய்து அவயவியை வாளாஉரைப்பது (உ-ம்) "புருவச்சிலை குனித்துக் கண்ணெம்பனுள்ள முருவத்துரந்தாரொருவர்."

அவயவி - உடல், பலசினைகளை அடக்கிய ஒருமுதல்.

அவயவியுருவகம்-அவயவியை யுருவகஞ்செய்து அவயவத்தை வாளாவுரைப்பது (உ-ம்) "வார்புருவங் கூத்தாடவாய்மழலைசோர்ந்தசைய - வேர்வரும்பச்சேந்து விழிமதர்ப்ப-முரலளிக்குந் தெரிவைவத நாம்புயத்தாற்களிக்குந்தவமுடையோன் கண்."

அவயோகம்-துர்ச்சம்பவம்,நாசயோகம்

அவரகாத்திரம்-கால், யானையின் பின்காலும் முன்காலும்.

அவரசன் - தம்பி.

அவரசை - தங்கை.

அவரசைலம - அஸ்தமயமலை.

அவரம் - அபரம்.

அவராகம் - இச்சையின்மை.

அவரி - அவுரி.

அவருணியம் - அவர்ணியம்.

அவரை- ஒருகொடி,கொள்ளு,துவரை, முதிரை முதலாயின.

அவரோகணமந்திரம் - ஒருமந்திரம்.

அவரோகணம் - இடை, இறங்குதல், விழுது.

அவரோகம் - இறங்குதல், சுவர்க்கம், விழுது.

அவரோகி - ஆல்.

அவரோதம் - அரண்மனை, உள்மண்டபம், தடை, வேலி.

அவரோதனம் - உள்மாளிகை, தடை.

அவரோபணம் - அத்தமித்தல், இறக்குதல், கெடுத்தல், வேரோடு பிடுங்கல்.

அவர்-அவர்கள், உயர்திணைப்பலர்பால் படர்க்கைச்சுட்டு.

அவர்கள்-பலர்பாற் படர்க்கையில்வரும் ஒரு சேய்மைச் சுட்டுப்பெயர்.

அவர்ச்சனீயம் - தள்ளிவிடத் தக்கதல்லாதது.

அவர்ணியம் - வர்ணித்துச்சொல்லப்படுவதல்லாதது.

அவர்வயின்விதும்பல் - பிரிவின்கண் தலைமகனுந் தலைமகளும் வேட்கை மிகுதியால் ஒருவரிட மொருவர் செல்லவிரைதல்.

அவலக்கணம் - அவலட்சணம்.

அவலச்சுவை-ஒன்பதுசுவைகளுள்ஒன்று. அது துயருறுதல்.

அவலச்சுவையலங்காரம் - சுவையலங்கரவகையுளொன்று. அதுபொறியுணர்வாலாகிஉள்ளத்தி னிகழுந்துயரைக்குறிப்பது.
அவலட்சணம் - அழகின்மை, இலக்கணக்கேடு, ஒழுங்கின்மை.
அவலட்சணன் - இலட்சண மில்லாதவன்.
அவலத்தருக்கம் - குதர்க்கம்.
அவலத்தவினயம் - விலக்குறுப்புப் பதினன்கனுள் ஒன்ருகிய சுவை ஒன்பதுவகையுள் ஒன்று.
அவலம் - ஓரலங்காரம். அஃது துயரந்தோன்றக்கூறுவது. கிலேசம், கேடு, நோய், மிடி, வருத்தம்.
அவலம்பகசிலேட்டுமம் - இதயத்தானத்திலே வாசம்பண்ணிக்கொண்டு தனதுசுபாவபராக்கிரமத்தைக் கொண்டுதிரிகத்தானத்துக்கும் அன்னசாரத்தைக்கொண்டு இதயத்தானத்துக்குஞ்சலத்தொழிலைக்கொண்டுமற்ற நான்குசிலேட்டுமங்களுக்கும் ஆதாரமாயிருக்குஞ் சிலேட்டுமம்.
அவலம்பகம் - பற்றுதல்.
அவலம்பம் - ஊன்றுகோல் தாவரம்தூங்கல், புகலிடம்.
அவலம்பித்தல் - சார்ந்துநிற்றல்.
அவலரக்கு - அரக்கிலொருவகை.
அவலவவிநயம் - அவலத்தவிநயம்.
அவலன் - உடற்குற்றமுடையவன்.
அவலி - பூனைக்காலி.
அவலித்தல் - புலம்பல், வருந்தல்.
அவலீலை - அவமரியாதை, விளையாட்டு.
அவலுஞ்சனம் - வேரோடுபிடுங்குதல், வெட்டுதல், கிழித்தல்.
அவலுண்டனம் - உருளல், திருடல்.
அவலேகம் - இலேகியம், கஷாயம், நக்குதல்.
அவலேகனம் - நக்குதல்.
அவலேசம் - அவமானம், அற்பம், ஆபத்து, சிறுமை.
அவலேபம் - அலங்காரம், பூசுதல், பெருமை.
அவலேபனம் - [illegible]வு.
அவலை - கடப்பு, காடு.
அவலோககன் - ஒற்றன், வேவாள்.
அவலோகம் }
அவலோகனம் } பார்வை.
அவலோகிதம் - இயற்கையான பார்வை.
அவலோகிதன் - அறியப்பட்டவன், அனுப்பப்பட்டவன்.
அவல் - ஒரு சிற்றுணர்வு, குளம், சிறுபள்ளம், விளைநிலம்.
அவவாதம் - சடைப்பிடி, கற்பித்த கட்டளை, நம்பிக்கை, நிந்தனை, வீண்பேச்சு.
அவவிசுவாசம் - விசுவாசவீனம், பொய்விசுவாசம்.
அவவியாத்தி - பொருண்மாறு படக்கூறல் அது நூற்குற்ற மூன்றினென்று.
அவவு - அவா
அவளம் - பிரயோசனமற்றது.
அவளிகை - இடுதிரை.
அவளிவணல்லூர் - ஒரு சிவஸ்தலம்.
அவளைதுவளை - கதம்பவுணவு.
அவள் - அப்பெண்.
அவற்கம் - கஞ்சி.
அவற்காளான் - ஒருவகைக்காளான்.
அவற்பதம் - அவலிடிக்கும்படியானபதம்.
அவனதம் - குனிதல், தலைகவிழ்தல்.
அவனதர் - குனிந்தவர், தலைகவிழ்ந்தவர்.
அவனதன் - குனிந்தவன், தலைகவிழ்ந்தவன்.
அவனதி - குனிதல், தலைக்விழ்தல், தாழ்மை, மரியாதை, மேற்குத்திசையில் அத்தமித்துப்போதல், வணக்கம்.
அவனம் - அலங்கரித்தல், இருத்தல், கொல்லல், செய்தல், தழுவுதல், தற்காத்தல், தாங்குதல், திருத்தி, தீவிரம், பட்சம், பிடித்தல், பெலன், விருத்திப்பு, விருப்பம்.
அவனஞ்சி - ஒரு சிவஸ்தலம்.
அவனி - பூமி.
அவனிகேள்வன் - விட்டுணு.
அவனிபதி - அரசன்.
அவனிபர் - அரசர்.
அவனிபாரகன் }
அவனிபாலகன் } இராசா.
அவனிபாலன் }
அவனேசனம் - கழுவுதல்.
அவன் - உயர்திணை ஆண்பாலொருமை படர்க்கையிடத்துப் பெயர்ச்சுட்டு.
அவன்னியம் - உபமானப்பொருள்.
அவா - அவாவென்னேவல், ஆசை, ஆசைப்பெருக்கம், இறங்குதல்.
அவாகு - கஞ்சி.

அவாகேசவுப்பி - பெருந்தும்பை.
அவாங்கமனோகோசரம் - வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதது.
அவாங்கமாநசகோசரம்- அவாங்கமனோகோசரம்.
அவாசி-கீழ்த்தேசம்தெற்கு.
அவாசியர்-ஞானிகள் தென்னாட்டார்.
அவாசீனம் - அவாசி, இறங்கினது.
அவாச்சியம்-கெட்டது,சொல்லத் தகாதது, சொல்லினால் வெளிப்படுத்த முடியாதது.
அவாதிதம் - கண்டிக்கப்படாதது.
அவாதிதவிடயம்-தருக்கநூலில்அனுமானவாக்கியத்திற்சொல்லப்படும் பஞ்சரூபங்களுளொன்று. அஃதேதுவுக்குவிடயமானசாத்தியதருமம் எப்பிரமாணத்தானுங் கண்டிக்கப்படாதிருத்தல்.
அவாஸ்தம் - புறங்கை.
அவாத்தம் - அடைந்தது, புறங்கை.
அவாந்தரகாரணம்-இடையில்வந்த காரணம்.
அவாந்தரசங்காரம்-பிரகிருதி தத்துவம் வரையினிகழுஞ்சங்காரம். அதுபிரமவருடம் பதார்த்த சங்கியையான பின்நிகழ்வது.
அவாந்தரசிருட்டி - இடையில் நிகழுஞ் சிருட்டி.
அவாந்தரசைவர் - சிவதீக்ஷை பெற்ற சூத்திரர்.
அவாந்தரதிசை -இடையிலுள்ளதிசை அவை தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு என்பன.
அவாந்தரப்பிரயோசனம் - இடையில் வரும் பிரயோசனம், பிரதானமல்லாத பிரயோசனம்.
அவாந்தரப்பிரளயம்-பஞ்சப் பிரளயங்களுளொன்று.
அவாந்தரம்-அழிவு, உதவியின்மை உள்ளடங்கியது, மத்தியகாலம், வெறுவெளி.
அவாந்தரவாக்கியம் - விதிரூபமும் விலக்குரூபமும்ஆகாது. வரும்வாக்கியம் அது சோதிட்டோமாதிகளைப் பண்ணினோர்சிவனுக்குச் சொர்க்காதி பலனுண்டாகும் என்றாற்போல்வது.
அவாந்தரவியாபாரம் - தரித்தற் கருவியாகியநவியத்துக்கு மரத்தோடு கூடுதல்போல இடையிலுள்ள செயல்.
அவாந்தரை-உள்ளடங்கியதுவெறுமை.
அவாபுளப்பி
அவாபுளிப்பி } பிரமி.
அவாய் - வகரவுகரங்கெட்டுநின்ற வவாவுமென்னும் பெயரெச்சம்.
அவாய் - அவாவி.
அவாய்நிலை - அருத்தம்பூர்த்தியாகாமல் எஞ்சிநிற்பது, பதப்பொருத்தம்.
அவாரபாரம் - கடல்.
அவாரம் - ஆற்றங்கரை.
அவாரி - சிறுநீர்.
அவாலுதார் - ஓரதிகாரி.
அவாவல் - அவாவுதல்.
அவாவறுத்தல் - ஆசைநீக்கல்.
அவாவன்-கள்ளன், பேராசையுள்ளோன்.
அவாவாமை - ஆசைப்படாமை.
அவாவின்மை - வெறுப்பு.
அவாவு-அவாவென்னேவல்,பெயரெச்சத்தொகை.
அவாவுதல்-இச்சித்தல்,இறங்குதல், சார்தல், பேராசைகொள்ளல்.
அவி - அவியென்னேவல்,ஆடு,எலி,காற்று,சூரியன்,சோறு,தலைவன்,தேவருணவு,நீர், நெய், மதில், மலை.
அவிகசம் - குவிந்தது.
அவிகசிதம் - மலராதது.
அவிகடம் - ஆட்டுமந்தை.
அவிகம் - வயிரரத்தினம்.
அவிகலம்-நிறைவு அத்தியந்தநிஷ்களம்.
அவிகற்கம் - சந்தேகமின்மை, நிருவிகற்பக்காட்சி.
அவிகாயம்-எரிச்சல், ஒருகாசம்வேகம்.
அவிகாரம் - எழுவாய், விகாரமின்மை.
அவிகாரவாதசைவன்-பக்குவம் அடைந்தஆன்மாவான துஞானம்பெற்ற விகாரமின்றிநிற்கும்பதியைத் தானே சென்றடையுமென்றுசொல்லும்சைவன்.
அவிகாரன்-ஆட்டுக்காரன்,கடவுள்.
அவிகாரி - கடவுள், மாறாதவன்.
அவிக்கிநம்-இடையூறின்றி யிருத்தல், ஒருமரம்.
அவிக்கியாதார்த்தம் -தோல்வித்தானம் இருபத்திரண்டனுளொன்று. அது பொருள்இனிது விளங்காத சொற்களை எடுத்துக்கொண்டு பேசுதல்.
அவிக்கிரமம் - பராக்கிரமமின்மை.
அவிக்கினம் - விக்கினமின்மை.

அவிக்கை - அவித்தல்.
அவிசம்வாதம் - பிராயணத்தை அனுசரித்தது.
அவிசம்வாதி - வேறு பிராமாணத்தை அனுசரிப்போன்.
அவிசாரம்-கவலையின்மை, புத்திக்கேடு.
அவிசாரி - அபிசாரி.
அவிசிதம் - கூப்பிட்டுக்கொடுத்தாலுண்ணல்.
அவிசு-உப்பின்றிச்சமைத்த பச்சரிசிச்சோறு, தேவருணவு, நீர், வெண்ணெய், வெறுஞ்சோறு.
அவிசுப்பம் - தொடரி.
அவிசுவாசம் - விசுவாசமின்மை.
அவிசுவாசி - பத்தியில்லாதவன்.
அவிசேடம்-ஒருதன்மையானது விசேடம் அல்லாதது.
அவிச்சி - அபேட்சை.
அவிச்சின்னம் - இடைவிடாமை, பிரிவின்மை.
அவிச்சின்னன் - பாரமார்த்திகன்.
அவிச்சை-அறியாமை,மனமயக்கு, வெறுப்பு.
அவிஞை - அஞ்ஞானம்.
அவிஞ்சதை - அறியாமை.
அவிஞ்சன் - அறியாமையுடையோன்.
அவிஞ்சாதம் - அறியப்படாதது.
அவிஞ்சை - அவித்தை.
அவிஞ்ஞதை - அறியாமை.
அவிஞ்ஞாதம் - அறியப்படாதது.
அவிஞ்ஞாதார்த்தம் - அவிக்கியாதார்த்தமென்னுந் தோல்வித்தானம். அது பொருளினிது விளங்காத சொற்களை எடுத்துக்கொண்டுபேசுதல் வாதியானவன் தனக்கு வந்த தூஷணமறைத்தற்காகத்தெரியாத சத்தங்களைக்கொண்டுபேசுதல், வாதியானவன் மூன்றுபிரகாரஞ்சொல்லி யிருக்கையிலும் மத்தியஸ்தர்க்கும் பிரதிவாதிக்கும் அருத்தந் தெரியாத சத்தஞ்சொல்லுகை, பிரதிவாதி யானவன் ஒரேதுவை மூன்றுதாஞ் சொல்லுகையிலுஞ்சபையிலிருக்கின்றபரீக்ஷித்துக்கள்அனுவதிக்கையிலும் வாதியானவன்எதுவையறியேனென்றல்
அவிடி - திரைச்சீலை.
அவிடியந்தியசூக்கம்-குருவின் இல்லாளைப்புணர்ந்த பாதகந் தீர்க்குமாறு செபிக்கப்படும் ஒருமந்திரம்.
அவிடியந்தியம், அவிடியந்தீயம் - ஒருவேத மந்திரம்.
அவிட்டம் - ஒருநட்சத்திரம்.
அவிட்டுமான் - ஆறுமனுவின்காலத்துச் சத்தவிருடிகளிலொருவன்.
அவிததம் - மெய்ம்மை.
அவிதம் - இரட்சிக்கப்பட்டது.
அவிதல்-அடுப்பில்வேகுதல்,அமைதல், அழிதல், கெடுதல், தணிதல், வருந்தல், வேகுதல்.
அவிதா - யாதேனுமோராபத் தடைந்தவர்அதினின்றுநீங்குதற்குதவிபெறும்பொருட்டுத் துணை செய்யெனப் பொருள்பட முறையிட்டுக் கூறும் ஒருசொல்.
அவிதாவிடல்-ஆபத்திலுதவி வேண்டி முறையிட்டுக்கூறுதல்.
அவிதானம் - ஒழுங்கின்மை.
அவிதி - கிரமமின்மை, வருத்தம்.
அவிதூசம் - ஆட்டுப்பால்.
அவித்தம் - உண்மையறியப் படாதது, வறுமை.
அவித்தல்-அழித்தல்,கெடுத்த்ல், தணித்தல், வருத்தல், வேவித்தல்.
அவித்தா - அவித்தை.
அவித்தியசம் - சூதம்.
அவித்தியமான - இருக்காத, உள்ளதல்லாத.
அவித்தியம் - அறியாமை, மாயை.
அவித்தியா - அஞ்ஞானம்.
அவித்தியாகதம்-அஞ்ஞானத்தின் றுக்கம்.
அவித்தியாபஞ்சகவுரு-அபுத்தி பூர்வகமாகியஐவகைச்சிருட்டி அவைதமம், மோகம், மாமோகம், தாமிசிரம்அந்ததாமிசிரம் என்பன.
அவித்தியை - அஞ்ஞானம், அவித்தை அறியாமை.
அவித்தியோபாதிகன் - பிராஞ்ஞன்.
அவித்துருமம் - இலுப்பைமரம்.
அவித்துவையல் - பச்சடி.
அவித்தை-அஞ்ஞானம், பஞ்சமாயையிஞென்று, மனமயக்கு.
அவித்யமான - அபாவம், உள்ளதல்லாத.

அவிநயக்கூத்து-சாந்திக்கூத்து நான்கினுளொன்று.
அவிநயசாலை - நாடகவரங்கு.
அவிநயம் - ஒருநூல், கூத்து, நாடகாங்கம், பாவனை.
அவிநயர் - ஒருநூலாசிரியர், நாடகர்.
அவிநா - விட்டுநீங்காமல்.
அவிநாசம் - நாசமின்மை.
அவிநாசி-அழியாமை, அழிவற்றவன், கொங்கநாட்டுள்ள ஒரு சிவஸ்தலம்.
அவிநாபாவசத்தி - பராசத்தியில் ஆயிரத்திலோரமிசமாய்ச் சிவனை விட்டு நீங்காதபடி இருக்கிற இச்சாஞானச் சுயரூபிணியான சத்தி.
அவிநாபாவம் - அசாதாரணதருமம்.
அவிநாபூதம் - நீக்கமின்றியிருத்தல்.
அவிநாபூதை - விட்டுப் பிரியாதிருப்பவள்.
அவிநிசமம்-அநியாயத்தான்வந்ததீர்ப்பு.
அவிநீதம் - தீயவொழுக்கம், மரியாதையின்மை.
அவிநீதன் - பிறரைவருத்துவோன்.
அவிநீதை - கற்பில்லாள், பரஸ்திரீ.
அவிபடம் - கம்பளம்.
அவிபட்சம்-எதிரியில்லாதது, விபட்சமல்லாதது.
அவிபத்தர்-பகுக்கப்படாத பொருளுக்குரியவர், பங்காளிகள்.
அவிபவனம் - மேற்கொள்ளுதல்.
அவிபன்னம் - அதிட்டவீனம், சுத்தம்.
அவிபாகம் - அசீரணம், அநுபவியாத வினை, இளமை.
அவிபாச்சியத்துவம்-பிரிக்கக்கூடாமை.
அவிபாச்சியம்-பிரிக்கப்படக்கூடாமை.
அவிபாடிதம்-அதிகம்பிளத்தல்.
அவிபாடிதரோகம்-வாதபித்தசிலேஷ்மங்களினுல்ஆண்குறியின் கருமத்தை எல்லாம்மிகவுந்தடிக்கச்செய்து பின்புஅத்தடிப்பைப் பிளப்பிக்கும் ஒரு [ரோகம்.
அவிப்ாவனம் - அதரிசனம்.
அவிபுச்சன் - வாலில்லாதவனல்லாதவ[ன்.
அவிபூதி - அவசங்கை.
அவிப்பலி - இன்னது செய்யேனுயின் இன்னதுசெய்வேனெனவஞ்சினங் கூறித் தன்னுயிரை அக்கினிக்குப் பலியாகக்கொடுத்தல். இதுவாகைத் திணையின் துறைகளுளொன்று.

அவிப்பாகம் - தேவருணவு.
அவிமுத்த - பிரதிட்டாகலையில் ஆகாயத்திலிருக்கும் எட்டுப்புவனங்களில் ஒன்று.
அவிமுத்தம்-காசி. நீக்கிவிடப்படாதது.
அவிமுத்தி காசிக்குஅருகே இருக்கும் ஒரு புண்ணியபூமி.
அவிமுத்தேசன் } காசியிலிருக்கும் விசுவநாதர்.
அவிமுத்தேசுவரன் }
அவியம் - பொய்வடிவம், வடிவமில்லாமை.
அவியல் - அவிந்தது, உட்டணம், ஒரு கறி, புழுக்கம், வாய்ப்புண்,வெப்பம்.
அவியாகிருதம்-பிரமத்தோடு பிரிவின்றிநிற்பது.
அவியாத்தம் - பிரிந்திருப்பது.
அவியாத்தி - அபிவியாத்தி.
அவியாத்தியம் - அவியாத்தம்.
அவியாப்பியம் - முழுதிலும் வியாபியாமை.
அவியோகம் - கூட்டம்.
அவிரதம் - இடையின்மை, எப்பொழுதும்.
அவிரளம் - நெகிழ்ச்சியின்மை.
அவிரி - நீலிப்பூண்டு.
அவிருகம் - அதிவிடயம்.
அவிருத்தம் - விரோதமின்மை.
அவிரேசனம் - மலவரட்சி.
அவிரோதச்சிலேடை - ஓரலங்காரம். அஃது முன்னர் விரோதித்தபொருளைப் பின்னரும் விரோதியாமற் சிலேடிப்பது.
அவிரோதம் - விரோதமின்மை.
அவிரோதவுந்தியார்-சாந்தலிங்கசுவாமிகள்செய்த நூல்களில் ஒன்று.
அவிர் - அவிரென்னேவலுந்தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும், பிரகாசம், பீறல், புல்லு.
அவிர்தல் - ஒளிசெய்தல், பீறல்.
அவிர்ப்பாகம் - அவிப்பாகம்.
அவிர்ப்புக்கு-அக்கினி, சத்திரியபிதிர்.
அவிர்மதி - விரிகிரணச்சந்திரன்.
அவிலம்பிதம் - விரைவு.
அவில் - அவற்றுள்.
அவிவாதம் - இணக்கம்.
அவிவு - அழிவு.
அவிவேகம் - புத்திக்குறைவு.

அவிவேகி-அறிவீனன், மதியீனன், மந்தன்.
அவிவேகித்துவம் - அவிவேகியாயிருக்குந் தன்மை.
அவிழ் - சோறு.
அவிழ்கேசி - விரிதலைவன்.
அவிழ்தம் - அவுடதம்.
அவிழ்தல்-கட்டவிழ்தல், நெகிழ்தல், மலரல், விரிதல்.
அவிழ்த்தல்-அலர்த்தல், அவிழச் செய்தல், கட்டுநீக்கல்.
அவிளம்பம் } விரைவு.
அவிளம்பிதம் }
அவினா - நீக்கமற்றது, வெளியற்றது.
அவினாபாவம் - அவிநாபாவம், ஒன்றற்கேயுள்ளது, ஓரளவை.
அவினாபூதம் - சுபாவசம்பந்தம்.
அவீசி-இராசாதிராசநரகம், இருபத்தெட்டாவதாகிய மாயை என்னும் நரகத்திலுள்ளநாயகநரகங்கள் ஐந்தனுளொன்று திரையில்லாதது.
அவுக்கவுக்கெனல் - ஒரு ஒலிக்குறிப்பு, விரைதல்.
அவுசநசம்-உசநசுமுனிவராற் செய்யப்பட்ட ஒரு உபபுராணம்.
அவுசனம் - அவுசநசம்.
அவுசு - அவிசு, சுத்தம்.
அவுசுக்காரன்-உடுப்பிலதிக ஆசையுள்ளவன்.
அவுசுப்பம் - தொடரி.
அவுசுமாபகவாதரோகம்-ஒருவகை வாதரோகம்.
அவுடதகந்தசுரம் - ஒருவகையபிஷங்கசுரம். அது இரசம், கந்தகம், பாஷாணம், சேங்கொட்டை முதலியவைகளின் வேதத்தாற் பிறப்பது.
அவுஷதம் } ஔஷதம், மருந்து.
அவுடதம் }
அவுணர் - அசுரர்.
அவுணன் - அசுரன், மாவலி.
அவுண் - அவுணர்.
அவுதசியம் - பசுவின்பால்.
அவுதா - யானைமேற்றவிசு.
அவுத்திரம் } ஔத்திரிதீக்கை.
அவுத்திரி }
அவுத்திரிதீட்சை - சயிக்கை செய்தும் தரையிலெழுதியும் காட்டுமோருபதேசம்.
அவத்துவாசனம்-ஔத்துவாசனம்.
அவுபசர்க்கிகரோகம்-கண்களில் வரும் ஒருவகைரோகம். அது தூர்ப்பலகாலத்திற் சூரியவிம்ப முதலிய தீட்சணவொளிகளைத் தினந்தினம் உற்றுப்பார்ப்பதினால் வாதபித்த கபங்கள் கண்களில் வியாபிக்கும்போது பிறந்து அவ்விழிகளின் ஒளியைக் குறைத்துப் பார்வையில்லாததுபோலச்செய்யும். அல்லது வைடூரியத்திற் சொலிக்கு மிறங்களைப் போலத் தோற்றுவிக்கும். இது மற்றொரு ஒளியினாற் பிறந்து நேத்திர வொளியைக் கெடுத்தலால் வந்த பெயர்.
அவுபலபாஷாணம் - விளைவுபாஷாணமுப்பத்திரண்டினொன்று.
அவுபாசனம் - ஔபாசனம்.
அவுரி - நீலிப்பூண்டு.
அவுழதம் } மருந்து, அவுஷதம்.
அவுழ்தம் }
அவுறுதம் - கிரந்தி, பித்தாதிக்கம்.
அவெளி - நரிவிளாமரம்.
அவேட்சை-இணக்கம், கவனம், பார்த்தல்.
அவேட்டிதம் - சுற்றிக்கொள்ளப்படாதது, மூடப்படாதது.
அவேதம் - மறதி.
அவேத்தியம் - அறியப்படாதது, பசுக்கன்று.
அவேத்தியன் - அறியப்படாதவன்.
அவை-அம்பலம், அவையென்னேவல் அவ், கூட்டம், சவை, புலவர்.
அவைகரணம் - தோண்டல், மூடல்.
அவைதிகசாத்திரத்திரயம் - வேதவிரோதமான மூன்று சாத்திரங்கள். அவை சார்வாகம், சைனம், பௌத்தம் என்பனவாம்.
அவைதிகம் - வேதசம்பந்தப்படாதது.
அவைத்தல்-நெரித்தல், நென் முதலிய குற்றல், வெட்டுதல்.
அவைப்பு - குற்றப்பட்டவரிசி.
அவையடக்கம் - சவை முன்றன்னைத் தாழ்த்தல்.
அவையடக்கு-ஒருவர் தாம்செய்த நூலிலே குற்ற மேற்றுதபடி கற்றோரை வழிபட்டடர்குதல்.
அவையம் - திரள்.

அவையர் - சபையிலுள்ளார்.
அவையல்-அவல், குற்றலரிசி, திரட்சி.
அவையல்கிளவி-அவைக் கண்ணுரைக்கத் தகாதசொல்.
அவையவம் - அவயவம்.
அவையவவுருவகம் } அவய உருவ
அவையவவுருவகவணி } கவணி.
அவையவி - அவயவத்தையுடையது.
அவையவியுருவகம் } அவயவி உரு
அவையவியுருவகவணி } வகவணி.
அவையறிதல்-சபையினதியல்பையறிதல் அது மிகுதி யொப்புத்தாழ்வென்னு மூவகையில் எத்தன்மைத்தெனத் தன்னோடு தூக்கியறிதல்.
அவையாவரிசி - கொழியலரிசி.
அவையிற்றின் - அவற்றின்.
அவையிற்றுக்குள் - அவற்றுள்.
அவைராக்கியம்-வைராக்கியம்இன்மை.
அவைராக்கியன்-வைராக்கியம் இல்லாதவன்.
அவ் - அவை.
அவ்வ - அந்தந்த.
அவ்வது - அவ்வாறு.
அவ்வயின் - அவ்விடம்.
அவ்வவர் - அவரவர்.
அவ்வழி-அதன்பின்பு, அந்ரமார்க்கம், அப்படிவருமிடத்து.
அவ்வளவு - அம்மட்டு.
அவ்வாப்பியம்-முழுதிலுஞ்செறிந்திராமை.
அவ்வாய் - அழகிய இடம்.
அவ்வாறு - அந்தவழி, அப்படி.
அவ்விடம் - அந்தவிடம்.
அவ்விதழ் - அழகிய இதழ்.
அவ்வித்தல் - பொறாமைகொள்ளுதல்.
அவ்வியஞ்சனம் - அடையாளமற்றது, கொம்பிலாமிருகம்.
அவ்வியதத்திதன்-அவ்வியயதத்திதன்.
அவ்வியதி - அஞ்சாதது, குதிரை.
அவ்வியதிதி - இரவு, பூமி.
அவ்வியத்தகாயத்திரி - வெளிப்படச்செபிக்கப்படாத காயத்திரி.
அவ்வியத்தக்கிரமம்-மயக்கமாகச்சொல்லப்பட்ட கிரமம், வழக்கத்தில் வெளிப்படாத கிரமம்.
அவ்வியத்தசாமியம்-அறியப்படாத சங்கியைவைத்துச்செய்யும்சமீகாணம்.
அவ்வியத்தபாவனைமகேசுவரியபாவனை
அவ்வியத்தபூதம்-அவ்வியாகிருத பூதத்தை வியாபித்திருக்கும் பஞ்சபூதம்.
அவ்வியத்தம்-அதரிசனமானது, ஆன்மா கடவுள், கோடி, கோடிகோடி கோடாகோடி, பரமான்மா, பிரகிருதி, பிரமம்,விளங்கக்காணப்படாதது.
அவ்வியத்தராசி |பீசகணிதத்திற்சொல்லப்பட்ட அறியப்படாதசங்கியை.
அவ்வியத்தலக்கணன் - சிவன்.
அவ்வியத்தலக்கணை - உமாதேவி.
அவ்வியத்தவத்து-வெளிப்படாத பொருள்.
அவ்வியத்தன்-சிவன்மன்மதன், மூடன்
அவ்வியத்து - பிரகிருதி. [விட்டுணு.
அவ்வியபாகம் - தேவர்களுக்குப் பாகம் பண்ணப்பட்ட அவி.
அவ்வியபாவம் - அவ்வியயீபாவம்.
அவ்வியம் - தேவர்க்கிடப்படுவது.
அவ்விய-நிவிர்த்திகலையிற்பிருதிவிதத்துவத்திலுள்ளபுவனங்களுளொன்று.
அவ்வியயதத்தின்தன்-இடைச்சொற்களாலாயதத்தின் அவைஆங்கு, ஆன், ஈன் முதலியவாகவருஞ்சுட்டுப் பிளந்துநில்லாதஇடப்பெயர்களும் அவ்வயின், இவ்வயின், உவ்வயின், அங்கண், இங்கண், அவ்வாய், ஆயிடை எனச் சுட்டோடும் எவ்வயினென விஞவோடும்வந்துஏழாம் வேற்றுமை யிடப்பொருளுணர்த்துவனவுமாம்.
அவ்வியயபதம் - இடைச்சொல்.
அவ்வியயம்-அடைமொழி, அழியாதது செலவுசெய்யாமை,மனக்கோட்டம்.
அவ்வியயன் - விட்டுணு.
அவ்வியயீபாவம்-அழிவுறாமை, இடச்சொற்சமாசம் அது நாமபூர்வபதம். அவ்வியயபூர்வபதம்என இருவகைப்படும். பெயர்க்குப்பின்வரு மிடைச்சொல்நாமபூர்வபதம் (உ-ம்) வாண்மன்பெயர்க்கு முன்வருமிடைச் சொல் அவ்விய பூர்வபதம் (உ-ம்) மற்றையாடை.
அவ்வியவகிதம்-அடுத்திருத்தல், கிட்டினது.
அவ்வியவச்சின்னம் - தடுக்கப்படாதது.
அவ்வியவத்தை-அபத்தமானவறிவு, கிரமமல்லாதது விதிதவறுதல்.
அவ்வியவாகனன் - அக்கினிதேவன்.

அவ்வியன் - ஒன்பதாமனுவின் காலத்துள்ள எழுமுனிவருளொருவன்.
அவ்வியாகிருதம் - பிரமத்தோடு பிரிவற்றது, மாயை.
அவ்வியாகிருதன் - செகத்காரண சாட்சியானவன்.
அவ்வியாசம் - நிதார்த்தம்.
அவ்வியாத்தம் - எங்குஞ் செறிந்திராமை, வியாத்தமின்மை.
அவ்வியாத்தி-அடைதல், இன்மை,இலக்கணத்தைக் கெடுக்குந் தூஷணங்கண் மூன்றனுளொன்று, எங்குமிருத்தலின்மை.
அவ்வியாபகம் - வியாபகம், இன்மை.
அவ்வியாபி-சர்வவியாபகம் இல்லாதது சர்வவியாபகம் இல்லாதவள், சர்வவியாபகம் இல்லாதவன்.
அவ்வியாபித்துவம்- அவ்வியாபியாயிருக்குந்தன்மை.
அவ்வியாப்பியம் பெரும்பாலா வற்றிற்செறிந்திராமை, முழுதிலுஞ்செறிந்திராமை, வியாப்பியமின்மை.
அவ்வுதல்-அவாவிவிழுதல், அழுந்துதல்
அவ்வேயன்-பதின்மூன்றுமனுவின்காலத்துள்ளஎழுமுனிவருளொருவன்.
அவ்வை-ஔவையார், தவப்பெண், தா[ய்.
அவ்வோன் - அவன்.
அழகர்-அழகுடையவர்,வெள்ளெருக்கு.
அழகர்மலை-சுப்பிரமணியர் தலம் ஆறினென்று நாட்டெட்டுத் திருப்பதிகளினென்று.
அழகவேதம் - அதிவிடயவேர்.
அழகன் - அழகானவன், விட்டுணு.
அழகாரம் - பேச்சுச்சித்திரம், மதுரம், வீண்புகழ்ச்சியாகப் பேசுதல்.
அழகி - அழகுடையவள்.
அழகிது - நன்றாயிருந்தது.
அழகிய - அழகுடைய.
அழகியர் - அழகுடையோர்.
அழகியவாணன் - ஒருநெல்.
அழகியார் - அழகையுடையவர்.
அழகு-ஒழுங்கு, சருக்கரை, நூலின்பத்தழகு பதினறுபேரினென்றுயௌ[வனம்.
அழகுகாட்டல்-சரசஞ்செய்தல்
அழகுகாட்டுதல் உடை முதலியவற்றுனுடைய சிறப்பினைக்காண்பித்தல், சரசஞ்செய்தல்.

அழகுகாமாலை - காமாலைவகைகள் பதின்மூன்றனுளொன்று. அது சரீரம் வாட்டமில்லாமல் வெப்பத்துடன் மினுமினுத்தல்.
அழகுதுமைப்பெண்-இந்திர பாஷாண[ம்.
அழகுதேமல்-அழகாகத்தோன்றும் ஒருவகைத்தேமல்.
அழகுத்தேமல்-படர்சுணங்கினென்று.
அழகுவனப்பு-செய்யுள் வனப்பெட்டினென்று.அதுசெய்யுட் சொல்லாகிய திரிசொற்களினு லோசைபெறப்[பாடுவது.
அழக்கு - ஆழாக்கு.
அழத்தியன்- சோமனுதிப்பெருங்காயம்
அழம் - பிணம்.
அழவல் - அழலுதல்.
அழலவன்-அக்கினி,சூரியன், செவ்வா[ய்.
அழலாடி - சிவன்.
அழலிக்கை-பொருமை, மனமெரிதல்.
அழலுதல் - எரிதல், கனன்றல், கோபித்தல், வெப்பங்கொள்ளல்.
அழலேந்தி - சிவன்.
அழலோம்பல் - அக்கினிகாரியஞ்செய்தல்.
அழலோன் - சூரியன், செவ்வாய், தீ.
அழல் , அழலென்னேவல்,உட்டணம், எருக்கு, கள்ளி, கேட்டைநாள்,கொடுவேலி, செவ்வாய், தீ, நரகம், வெப்பம்.
அழல்வணன் }
அழல்வண்ணன் } சிவபெருமான்.
அழல்விரியன் - எரிவிரியன் பாம்பு.
அழல்விரை - நேர்வாளம்.
அழற்கடவுள் - அக்கினித்தேவன்.
அழற்கண்ணன் - உருத்திரன், சிவன்.
அழற்கண்வந்தோன்-முருகன், வீரபத்திரன்.
அழற்கதிர் - சூரியன்.
அழற்கருமம் - அக்கினிகாரியம்.
அழற்காய் - மிளகு.
அழற்குத்துதல் - வேகமான நாற்றம் வீசுதல்.
அழற்சி-அழுக்காறு, வெப்பம், உரைப்பு எரிதல்.
அழற்பால் - எருக்கு.
அழற்பித்தம் - ஒரு பித்தரோகம்.
அழற்பிரபை- எழுநாகவட்டத்தொன்று. அஃது தீநரகு.

அழற்புற்று - ஒருவகைப்புற்றுரோகம்.
அழற்றி - அழற்சி, எரிவு.
அழற்று - அழற்றென்னேவல், தெரிநிலை வினைப்பகுதி, பெயரெச்சத்தொகை.
அழற்றுதல் - எரிதல், சுடுதல்.
அழனம் - தீ, பிணம்.
அழனுகம் - ஒருவகை விஷப்பாம்பு.
அழன் - பிணம்.
அழன்ற - வெம்மைசெய்த.
அழாக்கு - ஆழாக்கு.
அழால் - அழுதல்.
அழி - அழியென்னேவல், அழிவு,இரக்கம்,தெரிநிலை,வினைப்பகுதி, பெயரெச்சத்தொகை, வைக்கோல்.
அழிகட்டு-சாட்டு, தடை, மாற்று,வீண்போச்சு.
அழிகரு - அழிப்புக்காரன், சிதைந்துபோகிற சருப்பம்.
அழிசருட்பம்-வயிற்றில் உருவங்கொள்ளாத இளங்கருவாயிருக்கும்போது சருப்பங் கரைந்துவிழுதல்.
அழிசவுள் - மதம் இடைவிடா தொழுகுதலாலே தனதியற்கை அழிந்த கன்னம்.
அழிகுட்டி - வயிற்றில்மரித்தகுட்டி.
அழிகை - அழிவு, சிதைவு.
அழிக்கல் - அழித்தல்.
அழிச்சாட்டியக்காரன் - தொந்தரவுக்காரன்.
அழிச்சாட்டியம் - அலைவு.
அழிஞ்சில்-ஒருமரம், கிராணிதிரவியம்.
அழிஞ்சு - அழிஞ்சில்வேர்.
அழிதகன் - அழிக்கப்படத்தக்கவன், தகுதிகெட்டவன்.
அழிதகை - தகுதிக்கேடு.
அழிதகையவள் - கற்பழிந்தவள், தகையழிந்தவள்.
அழிதகையவன் - தகுதிகெட்டவன்.
அழிதகையாள் - கற்பழிந்தவள், தகையழிந்தவள்.
அழிதகையான் - தகையழிந்தவன்.
அழிதரவு - அழிதல்.
அழிதலை - தலையோடு.
அழிதல் - இரங்குதல்,கலங்குதல், குலைதல், சிதறுதல், தோல்வியடைதல், நிலைகெடுதல், பெருகுதல், மனங்கலங்கல், வருந்துதல், கெடுதல், தவறல்,

அழிதன்மாலை - அழியுந்தன்மை யுடையன.
அழிதுளி - மிக்கத்துளி.
அழிதூ - அலி.
அழித்தல்-கண்டித்தல், குலைத்தல், கெடுத்தல், முத்தொழிலிலொன்று. அஃது சங்கரித்தல்.
அழிந்தோரைநிறுத்தல் - அறத்துறுப்பெட்டினுளொன்று.
அழிபசி - மிக்கபசி.
அழிபடல் - வருந்தல்.
அழிபுண் - ஆறாதபுண்.
அழிப்பாளி - அழிப்புக்காரன்.
அழிப்பு - அழிக்கை, தொலைப்பு.
அழிமதி - கெடும்பு, மிஞ்சினசெலவு.
அழிமுதல் - மூலவழிவு.
அழிம்பன் - ஊதாரி, புரட்டன்.
அழிம்பு - அழிவு, சேதம், நட்டம்.
அழியாதபத்தினி - திரௌபதி.
அழியாமுதல்-நிலமுதலிய அசைவற்ற பொருள், கடவுள்.
அழியாமை - அழிவின்மை.
அழியுநர் - தோற்பவர்.
அழிவழக்கு-கள்ளநியாயம், புரட்டுநியாயம்.
அழிவி - கழிமுகம்.
அழிவிலான் - கடவுள்.
அழிவிலூர் - சிதம்பரம்.
அழிவு - கழிமுகம் - குற்றம், கேடு.
அழிவுகாலம் - யுகமுடிவு.
அழிவுபாட்டபாவம் - அபாவப்பிரமாணவகையுளொன்று. அது ஒருபொருளழிவதனாற் பின்னில்லை என்னும் அபாவம்.
அழு - அழுவென்னேவல், தெரிநிலை வினைப்பகுதி,பெயரெச்சத்தொகை
அழுகண்ணி - ஒருபூடு.
அழுகல் - அழிதல், அழுகினது.
அழுகள்ளன்-பொய்யாயழுகிறவன்.
அழுகு-அழுகென்னேவல், தெரிநிலை வினைப்பகுதி,பெயரெச்சத்தொகை
அழுகுசப்பாணி - அழுகுசர்ப்பம், ஒரு விஷநோய்.
அழுகுசர்ப்பம் - ஒரு விஷச்செந்து.
அழுகுணி-அழுபிள்ளை, ஒருகாப்பன்.
அழுகுதல்-அருவருக்கப்படுந் தன்மையாதல், பதனழிதல்.
அழுகை-அழுதல்
அழுக்ககற்றி-சாம்பற்சாரநீர்.

அழுக்கடித்தல்-அழுக்கொழிக்கச் சீலையடித்தல்.

அழுக்கணவன் - ஒருபுழு, புழுக்கூடு.

அழுக்கம் - கவலை.

அழுக்கறல்-அழுக்காறடைதல், அழுக்கு நீங்கல்.

அழுக்கறுத்தல்-பொறாமைகொள்ளல்.

அழுக்கறுப்பான் - அழுக்கறு என்னும் வினையடியாற்பிறந்து உயர்திணையாண்பாலில்வரும் ஓர் எதிர்காலவினைமுற்று, பொறாமைகொள்பவன்.

அழுக்கற்ற - அழுக்காறடைந்த அழுக்குநீங்கிய.

அழுக்கற்று - அழுக்கறுவென்னும் வினையடியாற்பிறந்த ஓரிறந்தகால வினையெச்சம், அழுக்குநீங்கி.

அழுக்காமை - ஒருவகையாமை.

அழுக்காறாமை - பொறாமை யடையாமை.

அழுக்காறு-அசுத்தநெறி, பொய், பொறாமை.

அழுக்கு - அசுத்தம், ஆமை, ஊத்தை, பொறாமை, மலம், மாசு.

அழுங்கல்-அச்சம், அலையல், அழுதல், அழுந்தல், ஆரவாரித்தல், இரங்கல், ஒலித்தல், ஒளிமழுங்கல், கெடுதல், சோம்பல்,துன்பம்,நோய், வருத்தம்.

அழுங்கள்ளம் - கள்ளமாயழுதல்.

அழுங்கள்ளர் - கள்ளமாயழுவோர்.

அழுங்கள்ளன் - கள்ளமா யழுவோன்.

அழுங்காமை - அஞ்சாமை,அலையாமை அழாமை, அழுந்தாமை, ஆரவாரியாமை, இரங்காமை, ஒலியாமை, ஒலிமழுங்காமை, கெடாமை,சோம்பாமை, வருத்தப்படாமை.

அழுங்கு-அழுங்கென்னேவல், ஆமை, ஒரு மிருகம்.

அழுங்குதல் - அழுங்கல்.

அழுங்குப்பிடி- நெகிழாதுபிடித்தபிடி.

அழுங்குவித்தல் - துன்பம் உறப்பண்ணல்.

அழுதல் - இரங்கல்,கத்தல்,பதனழிதல், புலம்பல்.

அழுத்தக்காரன் - அடக்கமானவன், இறுக்கமுடையவன்.

அழுத்தங்கோல் - ஒருவகை யெழுதுகோல், மைதீட்டுங்கோல்.

அழுத்தம்-அடக்கம், உலோபத்தனம், உறுதி, ஒப்பம், கடினம்.

அழுத்தல் - அழுந்தச்செய்தல், பதித்தல், பாராட்டுதல்.

அழுத்தி-அழுந்தச்செய்கிறவள், அழுந்தச்செய்கிறவன்.

அழுத்து-அழுத்துகை, அழுத்தென்னுமேவல்,தெரிநிலைவினைப்பகுதி, பதித்தல், பெயரெச்சத்தொகை.

அழுத்துகை, அழுத்துதல் } அழுந்தச்செய்தல், பதித்தல், பாராட்டுதல்.

அழுந்தக்கட்டல் - இறுக்கக்கட்டல்.

அழுந்தல் - அழுந்துதல், உத்தரித்தல், பதிதல், வருந்தல்.

அழுந்து-அழுந்தென்னேவல், நீராழம், வெற்றிலைநடும் வரம்பு.

அழுந்துதல் - அழுந்தல்.

அழுந்துபட்டிருத்தல்-நெடுங்கால மடிப்பட்டிருத்தல்.

அழுந்தூர், அழுந்தை } ஓரூர்.

அழுப்பு - சோறு.

அழுப்புகம் - தேவலோகம்.

அழும்பில்- வானவிறல் வேளென்னுங் குறுநிலமன்னனூர்.

அழுவம்-அப்பவருக்கம், அழுக்குநிலம், ஆழம், கடல், குழி, நடுக்கம், நாடு, பரப்பு, பெருமை, மலைமேற்கோட்டை, முரசு, வழுக்குநிலம்.

அழை - அழையென்னேவல்.

அழைக்கை - கூவுகை.

அழைத்தல் - கூவுதல், வாவெனல்.

அழைப்பு - அழைத்தல்.

அள - அளவென்னேவல்,தெரிநிலை, வினைப்பகுதி.

அளகத்தி - அளகமுடையவள்.

அளகநந்தை - ஒருதீர்த்தம்.

அளகநாதர் - சைனமதத்தின் தீர்த்தகருளொருவர்.

அளகபந்தி - கேசபாரம், மகளிர் கூந்தலின்பந்தி.

அளகபாரம் - கூந்தற்பாரம்.

அளகம் - நீர், பனிச்சை, பன்றிமுள், பெண்மயிர் மயிற்குழற்சி, வெள்ளெருக்கு.

அளகளப்பு - அளவளப்பு, ஐக்கம்.

அளகாதிபதி
அளகாதிபன் } குபேரன்.
அளகாபதி
அளகாபுரி - குபேரனுடையநகரம்.
அளகாரம் - சித்திரமாய்ப்பேசுகை, வீண் புகழ்ச்சியாய்ப் பேசுகை.
அளகு - அன்னப்பெடை, கார்த்திகை நாள், கோழி கூகை மயில் இவற்றின்பெண்சேவல்.
அளகேசன் - குபேரன்.
அளகை-எட்டுவயசுக்கும் பத்து வயசுக்கும் இடைப்பட்டபெண், குபேரன் நகர்.
அளகைக்கோன் - குபேரன்.
அளகைமன்சகா - சிவன்.
அளகையாளி
அளகையான் } குபேரன்.
அளகையையாளி
அளகையோர் - செட்டிகள்.
அளக்கரர் - உப்பமைப்போர்.
அளக்கர் - உப்பளம், கடல், கார்த்திகை நாள், குழைசேறு, நீளவழி, பூமி.
அளக்கல்-அளவிடல், எண்ணல், பிரமாணித்தல், மதித்தல், வரையறுத்தல்.
அளக்கிய - அளந்து காட்டும்படி எனக் கருதும் ஒரு வினையெச்சம்.
அளக்குதல்
அளக்கை } அளவிடல், எண்ணல், பிரமாணித்தல், மதித்தல், வரையறுத்தல்.
அளத்தல்
அளத்தி - நெய்தநிலப்பெண்.
அளத்தியர் - உப்பமைப்போர் பெண்கள்.
அளத்துநிலம் - களர்நிலம்.
அளத்துப்பச்சை- மருக்கொழுந்துச்சக்களத்தி.
அளத்துப்புல் - முயிற்றுப்புல்.
அளத்துப்பூனை - ஒருசெடி.
அளந்திடல் - அளத்தல்.
அளபு - அளபெடை, அளவு, ஓரலங்காரம், அஃது அளபெடையாய் வருவது.
அளபெடுத்தல் - எழுத்தின் மாத்திரையை எழுப்புதல்.
அளபெடை - எழுத்துக்கள் தத்தமாத்திரையில் நீண்டொலித்தல்.
அளபெடையனுகரணம்- அளபெடைப்போலி.
அளபெடைவண்ணம் - அளபெடை பயின்றுவருவது.

அளப்பம் - அளப்பு, அலக்கை, ஊழ்.
அளப்பளத்தல் - பிதற்றல்.
அளப்பன் - வீணகப்பேசுவோன்.
அளப்பு - அலப்பு, அளத்தல், ஊழ்.
அளப்புக்கு - முடக்கொத்தான்.
அளப்புதல் - அலப்புதல், குழப்புதல்.
அளமரல் - அலமரல்.
அளமளைதல் - அளவளாவுதல்.
அளம் - உப்பளம் - கூர்மை, நெய்தல், நிலம், நெருக்கம்.
அளார்க்கம் - தாதுளம்.
அளவடி - நாற்சீரான்வருமடி.
அளவடிவிருத்தம் - நாற்சீரோரடியாய் வரும் விருத்தம்.
அளவர்-அளப்போர்,உப்பமைப்போர்
அளவல் - எட்டுதல், கலத்தல்.
அளவழிச்சந்தம் - தனித்தனியே நான்கெழுத்துச் சிறுமையும் இருபத்தாறெழுத்துபெருமையும்பெற்று எழுத்தளவொத்தனவாய்குருவும் இலகுவும் ஒவ்வாத அடிகளால் வருவது.
அளவழித்தாண்டகம் - எழுத்தலரும், எழுத்து மொவ்வாது வருமோர் பிரபந்தம்.
அளவளாத்தல்
அளவளாதல் } கலத்தல்.
அளவளாய் - அளவளாவினெனப் பொருள்படும் ஒரு வினையெச்சம்.
அளவளாவல் - அளவளாவுதல்.
அளவளாவு - அளவளாவென் னேவல், கொண்டாட்டம், தெரிநிலைவினைப் பகுதி, நெஞ்சுகலத்தல், பெயரெச்சத்தொகை.
அளவளாவுதல் - கலத்தல்.
அளவறுத்தல் - வரையறுத்தல்.
அளவன் - அளக்கிறவன், உப்பமைப்போன், கோரபாஷாணம்.
அளவி - அளவு.
அளவிடுதல் - மதித்தல்.
அளவிடை - அளவு, நிருவாகம், நிறை, மட்டறிதல்.
அளவியற்சந்தம் - தனித்தனிநான்கெழுத்துச் சிறுமையும் இருபத்தாறெழுத்துப் பெருமையும்பெற்று எழுத்தளவொத்துக்குருவும் இலகுவும்ஒத்தடிகளால் வருவது.
அளவியற்றாண்டகம் - இருபத்தேழெழுத்துமுதலாகவுயர்ந்த எழுத்தடியி

னவா எழுத்துங்குருவும் இலகுவும் ஒத்துவரும் ஒருபிரபந்தம்.
அளவிறத்தல்-எல்லைகடத்தல், மீறல்.
அளவின்மை - அபரிமிதம்.
அளவு-எண்ணன் முதலிய நான்களவு, தாளவகையுளொன்று, பிரமாணம், வரையறை.
அளவுகோல் - நிலமளக்குந்தண்டு.
அளவுதல் - கவத்தல்.
அளவுநாழி - அளக்குங்கொத்து.
அளவுப்பண்புத்தொகை - அளவுப்பண் புருபு தொக்கு நிற்பது (உ-ம்) நாற் பொருள்.
அளவும் - மட்டும், வரைக்கும்.
அளவெடுத்தல் - ஒன்றனது நீளமகல முதலிய அளவைக்குறித்தல்.
அளவெண் - அளவடி, ஓரடியாக நான் கடிவருவது.
அளவை - அளவு, அறிதல், அனுமா னம், ஆகமம், பிரத்தியட்சம், எனு மூவளவை,எடுத்தல்,எண்ணல், முக த்தல்,நீட்டல், எனும் நான்களவை எல்லை, ஓர்நூல், தன்மை, நாள், பிர மாணம்.
அளவையாகுபெயர் - எடுத்தல், எண் ணல், நீட்டல்முகத்தல்என்னும்அள வைப்பெயரதனைஅடைந்தபொருட் காவது.
அளவைவிளக்கம் - பிரமாணங்களைவிள க்கும் ஒரு நூல்.
அளறல் - அளறுதல்..
அளறு - குழைசேறு, நரகம்.
அளறுதல் - சிதறுதல், பிளத்தல்.
அளாய - அளாவின, கலந்த.
அளாயின - அளாவியவை எனப் பொ ருள்படும்ஒருவினைமுற்றுப் பலவின் பாற்பெயர்.
அளாவல் - கலத்தல், சேர்ந்து பற்றல், துழாவியாற்றல்.
அளாவு-அளவென்னேவல், தெரிநிலை வினைப்குபதி,பெயரெச்சத்தொகை
அளாவுதல்-கலத்தல், சேர்ந்துபற்றல், துழாவியாற்றல்.
அளி-அளியென்னேவல், அன்பு, கள், காய், குளிர்ச்சி, கொடை, [illegible] தேன்,பாணம், மது, வண்.
அளிகம் - கட்டழகு, நெற்றி, பொய்.
அளிகுலம் - தேனீக்கூட்டம், வண்டுக் கூட்டம்.
அளிக்கிய - கொடுக்கும்படி.
அளிக்குலம்-தேனீக்கூட்டம், வண்டுக் கூட்டம்.
அளிதல்-உருகுதல், கனிதல், வார்தல்.
அளிது - அளிக்கத்தக்கது, இரங்கத்தக் கது.
அளித்தல்-காத்தல், கொடுத்தல், நெரு ங்கல், பாதீடு.
அளிந்தம்-கோபுரவாயிற்றிண்ணை முற் றம்.
அளிப்பு - சிருட்டிப்பு.
அளியர் - அன்புள்ளோர், எளியோர்.
அளியன் - அளிக்கத்தக்கவன்.
அளீகதை - பொய்மை.
அளீகம் நெற்றி, பிரியக்கேடு, பொய்.
அளுக்கல் - அச்சக்குறிப்பு.
அளுக்கு - அழுக்கென்னேவல், தெரி நிலை வினைப்பகுதி, பெயரெச்சத் தொகை.
அளுக்குதல் - அஞ்சுவித்தல்.
அளுங்கு - அழுங்கு.
அளோசுவெப்பம் } அதிவிடயம்.
அளோசுவெப்பு }
அளோருகம் - தூதுளங்கொடி.
அளை-எழாம் வேற்றுமையுருபு, குழை யென்னேவல், தயிர், புற்று, மலைக் குகை, முழை, முழைஞ்சு, மோர், வளை, வெண்ணெய்.
அளைஇ - கலந்து.
அளைகுதல் - கலக்குதல்.
அளைக்கள்வன் - விட்டுணு.
அளைதல் - அளைவு, கலக்குதல், குறை தல்.
அளைமறிபாப்பு - அளைமறிபாப்புப்பொ ருள்கோள்.
அளைமறியாப்புப்பொருள்கோள் -பொ ருள்கோளெட்டினொன்றுஅதுசெய் யுளிறுதிமொழியாவது அடியாவது அச்செய்யுளின் முதலினும் நடுவி னும் பொருள் கொண்டு வருவது (உ-ம்) ''தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளவார் தாமுன் [illegible] சுடீ [illegible] ழிந்து நா[illegible]யிற் சுழல்வாற்தாமு- மூழ்ந்தபிணிநலியமுன்செய்த வினை

யென்றேமுனிவார் தாமும்-வாழ்ந்த பொழுதினேவானெய்துநெறிமுன் னிமுயலாதாரே" எனவரும்.

அலையெடுத்தல்-புரைவைத்தல், வலை செய்தல்.

அலைவு - கலப்பு, குழைவு.

அலைவைத்தல் - அலையெடுத்தல்.

அள்-அள்ளென்னேவல், உயர்திணைப் பெண்பாற் படர்க்கை யொருமை விகுதி, கன்னம், காது கூர்மை, நெருக்கம், பற்றிரும்பு.

அள்வழுப்பு - காதுக்குறும்பி.

அள்ளத்தி - ஒருமீன்.

அள்ளல்-அள்ளுதல்,குழைசேறு, சத்த நரகங்களிலொன்று.

அள்ளாத்தி - ஒருமீன்.

அள்ளி - வெண்ணெய்.

அள்ளிருள் - மிகுவிருட்டு.

அள்ளு - அளவுகூலித்தானியம், அள்.

அள்ளுகொள்ளை - பெருங்கொள்ளை.

அள்ளுக்கட்டல் - பலப்படுத்தல், பற்றிரும்புகட்டல்.

அள்ளுதல் - அள்ளல், நெருங்கல்.

அள்ளுமாந்தம் -ஒருவகைமாந்தரோகம் அது விலாவைத் தாக்கிக் கொள்ளுதல்.

அள்ளூறல் - வாயூறல்.

அள்ளை - பிசாசம்.

அற - அறும்படி, தீர, முற்ற.

அறக்கடவுள் - இயமன், விதுரன்.

அறக்கடை - பாவம்.

அறக்கம்பிளப்பி - திருநாமப் பாலை பூண்டு.

அறக்கர்ப்பு - மறந்தவிகர்ப்பு.

அறக்காடு - சுடுகாடு.

அறக்குளாமீன் - சூரைமீன்.

அறக்கொடி - உமையம்மை.

அறக்கொடிபாகர், அறக்கொடிபாகன் } சிவபெருமான்.

அறக்கொடியோன் - கடவுள்.

அறங்கடை - பாவம்.

அறங்கூறவையம் - அறங்களைக்கூறுந் தருமாசனத்தார்.

அறங்கை - அகங்கை.

அறச்சாலை - தருமசத்திரம்.

அறச்செல்வி-தருமதேவதை,பார்ப்பதி

அறணை - காட்டுக்கருணை.

அறத்தவிசு - நியாயப்பீடம்.

அறத்தளி - அந்தப்புரம்.

அறத்தார் - புண்ணியமுள்ளவர்.

அறத்தின்சேய் - பஞ்சபாண்டவருள் ஒருவனாகிய தருமன்.

அறத்தின்மூர்த்தி - தருமதேவதை.

அறத்தின்மைந்தன் - தரும்புத்திரன்.

அறத்துப்பால் - புருஷார்த்தங்களிலே தருமநெறியைக் கூறும்பாகம்.

அறத்துறத்தல்- உலகப்பற்றைமுற்றாய் விடல்.

அறத்துறந்தோன்-உலகப்பற்றை முற்றாயொழித்தவன், சன்னியாசி.

அறத்துறுப்பு - அறத்தினது அங்கம்.

அறத்துறுப்பெட்டு - அறத்திற்கங்கமாக எண்ணப்படுங்குணங்க ளெட்டு. அது அழிந்தோரைநிறுத்தல், அறம் விளக்கல், ஐயப்படாமை, பழியை நீக்கல், பேரன்புடைமை, மயக்கமின்மை,விருப்பின்மை, வெறுப்பின்மை என்பன.

அறத்துறை - புண்ணியவழி.

அறத்தைக்காப்போன் - அரிகாபுத்திரனாகிய ஐயன்.

அறத்தொடுநிலை-அறத்தொடு நிற்றல்.

அறத்தொடுநிற்றல் - கையறு தோழி கண்ணீர்துடைத்துழிக்கலுழ்தற்காரணங் கூறன் முதலாகக் கனையிருளவன் வரக் கண்டமை கூறல் ஈறாகிய வேழும்.

அறநிலை - தருமம், பிரமமணம்.

அறநிலைப்பொருள் - நெறிவழி நின்று தத்தம்நிலையினால் முயன்று பெறு பொருள்.

அறநிலையறம்-தத்தம்வருணத்திற் பிறழாது நிலைபெறப் பாதுகாத்தல்.

அறநிலையின்பம்-ஒழுக்கமும் குணமும் குலமும் பருவமும் ஒத்த கன்னியைத் தீவேட்டில்லத்திருத்தல்.

அறநெறி - தருமவழி.

அறப்பாடல் - அறம்பாடல்.

அறப்பால் - அறத்துப்பகுதி.

அறப்புறம் - அறச்சாலை.

அறமுடியப்பார்த்தல் - முற்ற முடியப் பார்த்தல்.

அறமூர்த்தி - தருமமேவடிவாகவுடையவன்.

அறம் - கையறம், தருமம்,நீர்மை. நூற் பயன் நான்கினென்று, பெரியோ ரியல்பினென்று.
அறம்பகர்ந்தோன் - புத்தன்.
அறம்பாடல் - கையறம்பாடுதல்.
அறம்புறம் - அகம்புறம், அடிதலை, உட் புறம், தடுமாற்றம்.
அறம்விளக்கல் - அறத்தைப் பிரபலப் படுத்தல்.
அறல்-அறுதல், கடற்றிரை,கருமணல், சிறுதூறு, நாசம், நீர், விழவு.
அறவரி - அறவிடுதல்.
அறவர் - பெரியோர், முனிவர்.
அறவன் - புத்தன்.
அறவாக்கல் - அறவிடுதல்.
அறவாணர் - சிவன்.
அறவாழி-தருமக்கடல்,தருமச்சக்கரம்.
அறவாழியந்தணன்-அரன், அரி, அருகன், கடவுள்.
அறவாழியாள்வோன் - புத்தன்.
அறவாழிவேந்தன் - அருகன், கடவுள்.
அறவாளன் - அறச்செயலுடையவன்.
அறவான் - அறவு.
அறவி - அறமுடையது அறவழி நின்றோன்.
அறவிடுதல்-அறவாக்குதல், தண்டுதல்.
அறவிய - அறத்தோடுகூடிய.
அறவியங்கிழவோன் - புத்தன்.
அறவியான் - அறத்தினிற்போன்.
அறவிருத்தம் - தருமவிரோதம்.
அறவிலைவாணிகன் - பொருளைவிலையாகக்கொடுத்தது அதற்குத் தருமங் கொள்ளும் வியாபாரி.
அறவு-அறுபட்டவிடம், ஒடிவு,தடவை.
அறவுபதை - உபதைநான்கனு ளொன்று அது மந்திரிமுதலியோரைப் பரிசோதிக்குமிடத்துஅவரிடம்புரோகிதரையும்அறவோரையும்விட்டு அவரைக்கொண்டிவ்வரசன் அறவோனன்மையின்அவனைப்போக்கி அறனுமுரிமையுமுடையானொருவனைவைத்தற்கெண்ணினம் இதுதான் இயாவர்க்கும்இயைந்ததுநின் கருத்தென்னையெனச் சூழுறவோடு சொல்லுவித்தல்.
அறவுளி - முடிவு, வியாதிஸ்தனுக்கு மந்திரித்தல்.
அறவுளிபார்த்தல்-தீர்ப்புப்பண்ணுதல் முற்றுங்கொடுத்தல்.
அறவூதல் - புடமிடல்.
அறவை-உதவியற்றது,உதவியற்றவள், உதவியற்றவன்.
அறவைச்சோறு - அநாதருக்கன்னங் கொடுத்தல்.
அறவைத்தல் - புடமிடுதல்.
அறவைத்தூரியம் - அநாதருக்குப் புடவை கொடுத்தல்.
அறவைப்பிணஞ்சுடுதல் - அநாதப்பிரேதத்திற் கிமக்கடன்செய்தல்.
அறவையேன் - அநாதையேன்.
அறவோர்-துறவோர், பார்ப்பார். முனிவர்.
அறவோர்பள்ளி-அருகர்பள்ளி, புத்தர் பள்ளி.
அறவோன் - அருகன், தருமநெறியோன், பார்ப்பான், முனிவன்.
அறளை - அரிகண்டம், ஒரு வியாதி.
அறனழித்தல்-அறமென்ப தொன்றில்லையெனவழித்துச் சொல்லுதல்.
அறனளித்துரைத்தல் - அறக்கிழவனை அன்புசெய்தல்.
அறனிலாளன்-கருமமில்லாமை உடையவன்.
அறனோம்படை - தருமம் போதிக்குமிடம்.
அறன் - அறக்கடவுள்.
அறன்கடை - பாவம்.
அறன்மகன் } தருமன்.
அறன்மைந்தன் } தருமன்.
அறாத - அறுந்துபோகாத, நீங்காத.
அறாமை - கவிழ்தும்பை.
அறாவிலை - கடுவிலை.
அறாவிலைக்காலம் - கருப்புக்காலம்.
அறி-அறியென்னேவல், அறிவு, தெரிநிலை, வினைப்பகுதி, பெயரெச்சத் தொகை.
அறிகருவி - ஞானேந்திரியம்.
அறிகிலார்தார்- அறியவன்மையில்லாதவர்.
அறிகுதல் - அறிதல்.
அறிகுறி - அடையாளம்.
அறிகை - அறிதல், உணர்வு.
அறிகொன்று - அறிவையழித்து, அஃதாவது அறிந்து சொல்லியாது

அறிவை ஏற்றுக்கொள்ளாது இகழ்ந்து கூறி.
அறிக்கை-அறிவித்தல், அறிவு, கட்டுப்பாடு, விளம்பரம்.
அறிக்கைபண்ணுதல்-அறிவித்தல், கட்டுப்படுத்தல்.
அறிக்கைப்பத்திரம் } அறிவித்தல்காவற்பத்திரம்.
அறிக்கைபத்திரிகை }
அறிக்கையிடல் - அறிக்கைபண்ணல்.
அறிஞர்-அறிவுடையோர், புலவர்முனிவர்.
அறிஞன்-அறிவுள்ளோன், புதன், புத்தன், புலவன், முனிவன்.
அறிதல் - தெரிதல்.
அறிதுயிலமர்ந்தமூர்த்தி } விட்டுணு.
அறிதுயிலமர்வோன் }
அறிதுயில்-அறிவுகுன்றாதுசெய்யு நித்திரை, யோகநித்திரை.
அறிநன் - அறியவல்லவன்.
அறிபொருள்-அறியப்பட்ட பொருள்.
அறிபொருள்வினா - தன்னாலறியப்பட்டபொருளையே அறிவு ஒப்புக் காண்டல் முதலிய பயனோக்கி ஒருவன் வினவுவது.
அறிப்பலம் - திப்பிலி.
அறிப்பு - அறிவிப்பு.
அறிமடம் - அறிந்துமறியார்போன்றிருத்தல்.
அறிமுகம் - கண்டபழக்கம்.
அறியக்கொடுத்தல்-அறிக்கைசெய்தல், குற்றஞ்சாட்டுதல்.
அறியபலம் - திப்பிலி.
அறியலுறவு - அறியவிரும்பியது.
அறியல் - அறிதல்.
அறியாதுடம்படல் - தந்திர யுத்திகண் முப்பத்திரண்டினுள் ஒன்று. அது தானேதிய இலக்கணத்தின் வேறுபடவருவன தானறிந்திலனைக் கூறி அதன் புறத்துச் செய்வதோர்புறனடை.
அறியாமை-அறிவீனம், முத்தவிக்கின மூன்றினொன்று.
அறியாவறிவு-அறிதற்கரிதாகிய வறிவு.
அறியாவினா } தானறியாத தொன்றைஅறிதற்குவினவும் வினா.
அறியான்வினா }
அறியான்வினவல் - பஞ்ச வினாவில் ஒன்று.

அறியுநர் - அறிபவர்கள்.
அறியொணா - அறியப்படக்கூடாத.
அறியொணாமை } தெரிந்து கொள்ளக்கூடாமை.
அறியொண்ணாமை }
அறிவரன் - அருகன்.
அறிவர் - அறிஞர், கம்மாளர்.
அறிவர்சிறப்பு - இறைவர்பூசனை.
அறிவழி - கள், பிசாசம்.
அறிவழிதல் - புத்திகெடல்.
அறிவறை-அறிவற்றதன்மை, அறிவற்றது, அறிவற்றவள், அறிவற்றவன்.
அறிவனர் - பஞ்சமரபு, நூலாசிரியர்.
அறிவனாள் - உத்திரட்டாதி.
அறிவன்-அருகன், அறிவுடையோன், உத்திரட்டாதி, கடவுள், கம்மாளன், சிவன், செவ்வாய், புதன், விட்டுணு.
அறிவாகரன் - கல்வியிற்றேர்ந்தவன்.
அறிவாளன் } புத்திமான்.
அறிவாளி }
அறிவித்தல் } அறியச்செய்தல்பிரசித்தம்.
அறிவிப்பு }
அறிவிலர் } மூடர்.
அறிவிலார் }
அறிவிலான் } மூடன்.
அறிவிலி }
அறிவில்லான் }
அறிவிற்பரிந்தான் - தோழன்.
அறிவினா-அறுவகைவினாக்களுள் ஒன்றுஅதுஒருவன்தான் அறிந்தபொருளைக் குறித்து வினவுதல்.
அறிவின்மை - அசேதனம்.
அறிவீனம் - அஞ்ஞானம், அறியாமை.
அறிவீனன் - மூடன்.
அறிவு-அறிதல், ஆடூஉக்குணம் நான்கினொன்று, உணர்வு, கல்வி, புத்தி, போதனை.
அறிவுகொடுத்தல் } கற்றுக் கொடுத்தல் தெளிவித்தல்.
அறிவுகொளுத்தல் }
அறிவுகூடு - நினைத்திருக்கத் தக்கதாகச் செய்ததீமை.
அறிவுசொல்லல் - புத்திசொல்லல்.
அறிவுடைமை-உண்மையறிவுடையனாகுதல்.
அறிவுணர்த்தல் - அறிவுபயிற்றல்.
அறிவுதித்தல் - அறிவுபிறத்தல்.
அறிவுபயிற்சி - படிப்பு.

அறிவுமடம் - தான்கூறுகின்றவற்றை யுணரும் அறிவிலாதார்மாட்டுத்தா னறியாமைப்பட்டிருப்பது.
அறிவுமயக்கம் - சீவவறிவு தொழிற் படாதொடுங்கி யிருத்தல், புத்தி தடு மாற்றம்.
அறிவுமயங்கல் - புத்திதடுமாறல்.
அறிவுவரம்பிகந்தோன் - அருகன், வரம் புகடந்த அறிவினையுடையோன்.
அறிவுறல்
அறிவுறுத்தல் } அறிவுபயிற்றல்.
அறிவொப்புக்காண்டல் - பஞ்சவினைவி னொன்று.
அறு - அற்றது, ஆறு, ஒழி.
அறுகரிசி - அட்சதை.
அறுகழி - நீரற்றகழி.
அறுகால் - தேனீ, வண்டு.
அறுகாற்பீடம் - சேஷசயனம், மதுரை மீனாட்சியம்மன் பீடம்.
அறுகீரை - அறைக்கீரை. [ளி, யானை.
அறுகு - ஆண்புலி, ஒருபுல், சிங்கம், யா
அறுகுணன் - கடவுள், ஆறுகுணங்க ளுள்ளவன் அவை ஐசுவரியம், வீரி யம், புகழ், திரு, ஞானம், வைராக் கியம் என்பன.
அறுகுதராசு - சிறுதராசு.
அறுகுறை - கவந்தம்.
அறுகை - அறுகம்புல், அறுதல், ஒருகுறு நிலமன்னன்.
அறுகோணம் - ஆறுமூலைகளுள்ள வடி
அறுக்கை - அறுத்தல். [வு.
அறுசமயத்தோர்க் குண்டி - முப்பத்தி ரண்டுதருமங்களுள் ஒன்று.
அறுசரம் - ஓசையாழ்.
அறுசீர்க்கழிநெடிலடி - ஆறுசீர்கொண் ட கழிநெடிலடி.
அறுசுவை - ஆறுவிதவுருசி, அவை உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, தித்திப்பு, துவர்ப்பு, புளிப்பு என்பன.
அறுதலி - மங்கலியமிழந்தவள்.
அறுதல் - அறப்பட்டது, அறல், கைம் பெண், தோசி.
அறுதி - இல்லாமை, சாவு, சொந்தம், தீர்ப்பு, விலை, முடிவு, நாசம், விக்கிர யச்சீட்டு.
அறுதிக்கரை - நிலத்தை நியாயமாகப் பங்கிடல்.

அறுதிச்சாதனம் - அறுதிச்சீட்டு.
அறுதிச்சொல் - உறுதியாகச் சொல் லுஞ்சொல்.
அறுதியிடல் - நாள்குறித்தல், நிர்ணயித் தல்.
அறுதியுறுதி - அறுதிச்சீட்டு.
அறுதொழிலோர் - ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்த லென்னும் அறுதொழிலை யுடை யோராகிய பார்ப்பார்.
அறுதொழில் - அறுவகைத்தொழில், அவை ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவி த்தல், வேட்டல், வேட்பித்தல், அந் தணர், அறுதொழிலென்றும், ஈதல் உலகோம்பல், ஓதல், படைபயிறல், பொருதல், வேட்டல், அரசரதுதொ ழிலென்றும், ஈதல், ஏருழல், ஓதல், பசுக்காத்தல், பொருளீட்டல், வேட் டல், வைசியர் அறுதொழிலென்றும் உழுதல், காருகவினைகளாக்கல், குயி லுவத் தொழில்செய்தல், பசுக்காத் தல், பொருளீட்டல், முதன்மூவருக் கேவல்செய்தல், சூத்திரர் அறுதொ ழிலென்றுஞ்சொல்லப்படும். இவற் றுள் சாருக வினைகளாவன பட்டு நூலையும் பருத்திநூலையுங்கொண்டு ஆடையாக்கலுஞ் சுமத்தலு முழத் தலுமாம், குயிலுவத் தொழில்களா வனதோற்கருவிகளைக் கொட்டலுந் துகளைக் கருவிகளை யூதலுமாம்.
அறுத்தல் - அரிதல், அறச்செய்தல்.
அறுநூறு - ஆறுநூறு.
அறுந்தருணம் - தற்சமயம்.
அறுந்தறுவாய் - உறுந்தறுவாய், தற்ச மயம்.
அறுந்தொகை - மிச்சமில்லாத தொகை.
அறுபகை - ஆறுபகையான உட்பகை கள், அவைகாமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம்என்பன.
அறுபதம் - கையாந்தகரை, வண்டு.
அறுபது - ஓரெண்.
அறுபத்துநாலடிச்சிந்து - சிந்துகவியுள் ஒன்று. அது அறுபத்துநாலடியுடை யது.
அறுபருவம் - ஆறுபருவம், அவை கார், கூதிர், முன்பனி, பின்பனி, முது வேனில், இளவேனில் என்பன.

அறுபான் - அறுபது.
அறுபுள்ளிவண்டு - ஒருவகை வண்டு, அது கடித்தாற் சர்வாங்கத்திலுஞ் சிலநாள்சென்றபின்பு வட்டம் வட்டமான தடிப்புக்கள் உண்டாகும் என்பர்.
அறுபொருள் - ஐயமற்றபொருள்.
அறுப்பு-அரிகை, அறுத்ததுண்டு, ஆட்சேபிக்கை, மங்கலியமிழத்தல்.
அறுப்புக்காலம்-அரிவி வெட்டுங்காலம்.
அறுமணை - அரிவாண்மணை, ஊத்தை, நாறி.
அறுமர் - எண்ணெய்வாணிபர்.
அறுமீன்-கார்த்திகைநாள், கார்த்திகை மாதம்.
அறுமீன்காதலன், அறுமுகவன், அறுமுகம் } குமரக்கடவுள்.
அறும்பன் - துஷ்டன்.
அறும்பு - கொடுமை, பஞ்சகாலம்.
அறுவகைப்படை - அதுகாட்டுப்படை, கூவிப்படை, துணைப்படை, நாட்டுப்படை, பகைப்படை, மூலப்படை என்று பெயர்பெறும்.
அறுவகைப்புறச்சமயம்-ஆருகதம், உவகாயதம், பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம், பௌத்தம், மீமாஞ்சம் எனச் சைவத்திற்குப்புறமான ஆறுவகைச் சமயம்.
அறுவகைப்பொருள் - வினைச் சொற்கள் கொள்பொருளாறு. அவை கருவி, காலம், செயப்படுபொருள், செயல், செய்பவன், நிலம் என்பன.
அறுவகைப்போகப்பூமி - ஆதியரிவஞ்சம், இரணவஞ்சம், உத்தரகுருவம், எமதவஞ்சம், தேவகுருவம், நல்லரிவஞ்சம் என்னும் அறுவகைப் போகப்பூமிகளாம்.
அறுவகையுட்சமயம்-காளாமுசம், சைவம், பாசுபதம், மகாவிரதம், சாமம், வைரவம், எனச் சைவத்திற்குட்பட்ட சமயங்களாறு.
அறுவகைவழக்கு - பௌத்தமதத்திற் சொல்லப்பட்ட தொகை யின்மை வழக்கு, தொகையுண்மை வழக்கு, தொடர்ச்சியின்மை வழக்கு, தொடர்ச்சியுண்மைவழக்கு, மிகுத்துரையின்மை வழக்கு, மிகுத்துரையுண்மை வழக்கு எனப்படும். அறுவகை வழக்குகள். வேறுமொருவகையாய் இல்வழக்கு, உள்வழக்கு, உள்ளது வார்ந்த இல்வழக்கு உள்ளதுசார்ந்த உள்வழக்கு, இன்மைசார்ந்த இல்வழக்கு, இன்மைசார்ந்த உள்வழக்கென ஆறுவழக்குள்ளன.
அறுவடை - நென்முதலியவறுத்தல்.
அறுவரி - குறித்தகாலத்திற் கொடுக்க வேண்டிய வரி.
அறுவர்-ஆறுபேர், கார்த்திகை மாதர்களாகிய ஆறுபேர்.
அறுவாய்-கார்த்திகைநாள், வெட்டுவாய்.
அறுவான் - அரவு.
அறுவிகாரம் - செய்யுள் விகாரமாறு. அவை குறுக்கல், தொகுத்தல், நீட்டல், மெலித்தல், வலித்தல், விரித்தல் என்பனவாம்.
அறுவிதி - தீர்மானம்.
அறுவு - அறுதி.
அறுவை-உடை, சித்திரைநாள், சீலை, துகில், பலகையறுத்தல்.
அறுவையர் - ஆடையுடையவர், சீலை நெய்வார்.
அறை-அடி, அரங்கு, அறுந்தது, எழுத்திஞனைச்சொல், கண்ணறை, குறை, சிற்றில், சொல், திரை தாக்கங்கள், பறையடித்தல், பறையறையென்னேவல், பாத்தி, பாறை, மலையுச்சி, முழைஞ்சு.
அறைகுதல் - அடித்தல், கொல்லுதல்.
அறைகுறை - முடியாமை, வருத்தம்.
அறைகுறைபார்த்தல்-பழுதுபார்த்தல்.
அறைகூவல் - பொரவழைத்தல்.
அறைக்கீரை - ஒருகீரை.
அறைசெய்தல் - அறுத்துத்துண்டமாக்குதல்.
அறைதல்-அடித்தல், கடாவல், சொல்லல், பறையடித்தல், மோதல்.
அறைத்தொழிலார்-கீழறுக்குந் தொழிலுடையோர்.
அறைநர் - அறுப்பவர்.
அறைபோக்கு - அற்றுப்போதல்.
அறையோதல் - கீழறுத்தல்.
அறைப்படுத்தல்-கீழறுத்துத் திறப்பித்தல்.

ஆடரி - சுப்பிரமணியக்கடவுள்.
ஆடலை - பூவில்லாமரம், பூவிளா.
ஆடல் - அசைதல், குளிர்த்தல், கூத்தாடல், கூத்து, செய்தல், கொல்லல், ஸ்நானஞ் செய்தல், நயச்சொல், புணர்தல், பொருதல், வெற்றி, நட்புரை, வீரம், வார்த்தை, விசயம், விளையாடல்.
ஆடவர்-ஆண்மக்கள் இளையோர் பிராயமுப்பத்திரண்டிற்கும் நாற்பத்தெட்டிற்கும் இடைப்பட்டவர். இவர்மன்னரெனவும்படுவர், புருடர்.
ஆடவவிருத்தம் - வயது நாற்பத்தெட்டிற்கும் அறுபதுக்கு மூடான பருவமுள்ளவர். இவர் மூத்தோரென வும்படுவர்.
ஆடவள் - பெண், மங்கைப் பருவம், விருத்தை.
ஆடவன்-புருடன், வயது,முப்பத்தின் மேனற்பத்தெட்டுக் குட்பட்டவன்.
ஆடவை - ஏவல், நிருத்தசபை,பெண், மிதுனவிராசி.
ஆடற்கூத்தியர் - அகக்கூத்தாடுவோர்.
ஆடற்கூறுபாடு - கூத்தினதுபகுப்பு. அதுதாண்டவம், நாட்டியம், நிருத்தம் என மூவகைப்படும்.
ஆடற்பேதம் - கூத்தினதுவேற்றுமை. அது நின்றாடல், வீழ்ந்தாடலென இருவகைப்படும்.
ஆடாதொடை } பாவட்டை.
ஆடாதோடை }
ஆடி - அளைந்து, உத்திராடநாள், கண்ணுடி, கர்க்கடகமாதம், காற்று, கூத்தாடி, ஓரசுரன்.
ஆடிக்கரு - கர்ப்போடகமேகம்.
ஆடிப்பட்டம்-ஆடிப்பருவத்திற் பயிரிட உத்தேசிக்கு நாட்கள்.
ஆடிய - அளைந்த.
ஆடு - அசம், ஆடென்னேவல்,கூத்து, கூர்மை, மறியாடு, மேடவிராசி, வெற்றி.
ஆடுகால் - துலாநிற்குமரம்.
ஆடுதல் - ஆடல்.
ஆடுதின்னாப்பாலை } ஒருமருந்துப் பூடுபுழுக்கொல்லி.
ஆடுதின்னாப்பாளை }
ஆயுதுறை - ஓரூர்.
ஆடுதொடை-தொடையின் கீழ்ப்புறம்.
ஆடுபந்தர் - நடைப்பந்தர்.
ஆடுமாலை-ஓரிடத்துந் தரித்திராதவன், யௌவனஸ்திரீ.
ஆடுவான்-ஆடப்பட்டவன், நடேசன்.
ஆடூஉ - ஆண்மகன்.
ஆடூஉவறிசொல் - ஆண்பான் மொழி,
ஆடை-சித்திரைநாள்,சீலை,நேத்திரப்படலம், பனங்கிழங்கினுட்டோல், பால், முதலியவற்றினேடு, போர்வை.
ஆடையொட்டி - ஒட்டுப்புல், சீலைப்பேன்.
ஆடோபம் - பெருமை, வாயு, பாக்கை, வீங்குகை,
ஆடோபம் - பெருமைக்காரன்.
ஆடோபி - பெருமைக்காரி.
ஆட்காட்டி - ஆள்காட்டுகின்றவன். ஆள் காட்டுகின்றவள், ஒருபுள், சுட்டு விரல்.
ஆட்கொல்லி - கொலைகாரன், கொலைகாரி, பணம்.
ஆட்கொள்ளுதல் - அடிமைகொள்ளுதல் உருக்கொள்ளுதல்.
ஆட்சபணம் - உபவாசம்.
ஆட்சபாடிகன் - நியாயாதிபதி.
ஆட்சபாதன் - ஒரு தருக்கசாத்திரி.
ஆட்சாரணம் - குற்றச்சாட்டு.நிந்தனை.
ஆட்சாரம் - குற்றச்சாட்டு.
ஆட்சி-ஆண்மை,ஆளுகை, உரிமைநிலையினென்று, நன்னிமித்தம்,பழக்கம், முயற்சி.
ஆட்சிபடல் - தற்கிழமையாதல்.
ஆட்சேபகம்-குற்றச்சாட்டு,நோய்,வலி.
ஆட்சேபம்-தடைபண்ணுதல், நியாயத்தைத் திரும்பத்திரும்பக் கொடுத்தல் வழக்குரைத்துத்தள்ளுதல்.
ஆட்சேபவணி-ஓரலங்காரம், அது உள்ளபொருளை மறுத்தலாற் கருதிய பொருளுக்குச் சிறப்புண்டாக வருணித்துரைப்பது.
ஆட்சேபனம் - எதிர்நியாயம்.
ஆட்சேபனை - மறுப்பு.
ஆட்சேபலங்காரம் - முரணணி அல்லதெதிர் மறையணி.
ஆட்சேபித்தல் - தடைசெய்தல் மறுத்தல்
ஆட்சேபிப்பு - தடை, மறுப்பு.
ஆட்டமடித்தல் - ஒருவிளையாட்டு அது புள்ளைக்கிட்டியாலடித்தல்.

ஆட்டம் - அசைவு, அலைவு, உவமையுருபு, கூத்து, சூதாடுதல், சூது முதலியவற்றினோர்முறை விளையாட்டு, தன்மை, முயற்சி.
ஆட்டல் - அசைத்தல், கூத்தாட்டுதல், நடப்பித்தல், ஸ்நானம்பண்ணுவித்தல்.
ஆட்டாங்கள்ளி - திருகுகள்ளி.
ஆட்டாங்கோரை - ஒருகோரை.
ஆட்டாம்புழுக்கை - ஆட்டுமலம்.
ஆட்டி-ஆட்டுவோன், தலைவி, பெண்.
ஆட்டியவாதம் - ஒருவகை வாதநோய். அது இனிப்புவஸ்து, எண்ணெய்வஸ்து, மச்சம், மாமிசம், மந்தரசம், தயிர், பால் இவைகளை மிகவும் புசித்தெக்காலத்து நடக்காமல் நித்திரை செய்வதினாற் பிறந்து சத்த தாதுக்களில் இருக்கின்ற வாத மார்க்கங்களையுஞ் சிலேஷ்ம மார்க்கங்களையும் அடைத்துச் சிலேஷ்மத்தோடுகூடி உபத்திரவத்தைச் செய்வது. அதனால்தேகத்தில் திமிர், கனம்,நோய், உறக்கம், இளைப்பு, வீக்கம், மலமூத்திரச்சிக்கல், பிரமை, தாழ் வாய்நோவு முதலிய குணங்கள் உண்டாகும்.
ஆட்டு - அலைப்பு, ஆடுந்தன்மை, ஆட்டுந்தன்மை, ஆட்டென்மினவல், கூத்து, தத்துவம், வல்லமை.
ஆட்டுக்கடா - ஆணாடு.
ஆட்டுக்கல் - அமுத பாஷாணத்தினொன்று, அரைக்குங்கல்.
ஆட்டுக்கால் - அடம்பென்னுங்கொடி, ஆட்டினது கால்கள்.
ஆட்டுக்காற்கல் - கொக்கைக்கல்.
ஆட்டுக்கிடை - ஆட்டுத்தொழுவம்.
ஆட்டுக்கோன் - சிவன்.
ஆட்டுசம் - ஆடாதோடை.
ஆட்டுச்செவிப்பதம் - தேங்காய் வழுக்கைப்பருவம்.
ஆட்டுதல் - அரைத்தல், அலைத்தல், ஆடச்செய்தல்.
ஆட்டுவாகனன் - அக்கினிதேவன்.
ஆட்டுவாணிபன் - கசாப்புக்காரன்.
ஆட்டை - ஆண்டு.
ஆட்டைக்கருமம் / ஆட்டைத்திதி / ஆட்டைத்திவசம் } இறந்தவன் விஷயமாக முதல் வருடமுடிவிலே அவனிறந்த திதியிலே செய்யப்படும் சிரார்த்தக்கிரியை, முதல் திவசம்.
ஆட்படல் - தொண்டனாதல்.
ஆட்படுதல்-அடிமைப்படுதல், தலைப்படுதல்.
ஆணகம் - சுரை.
ஆணங்காய் - ஆண்பனையின்காய்.
ஆணட்சத்திரம் - புருட நட்சத்திரம். அது அத்தம், புனர்பூசம், பூசம், திருவோணம், அபிசித்து, அனுஷம், உத்திரட்டாதி, பூரட்டாதி, அசுவதி முதலியன.
ஆணம்-அன்பு, ஆணவம், குழம்பு, கொள்கலம்.
ஆணரி - ஓரி.
ஆணர்-நன்மை, பாணர், வளமை.
ஆணவப்பிணிப்பு-ஆணவமலபந்தம்.
ஆணவமலகாரியம்- ஆணவமலத்தினது காரியம். அது விகற்பம், கற்பம், குரோதம், மோகம், நகை, கொலை, அஞர், மதம் என்பன.
ஆணவமலம் - அறியாமை, சுபாவமயக்கம், மும்மலத்தொன்று, மூலமலம். அது உடம்பை யானென்றிருக்கை.
ஆணவமறைப்பு - மூலமலத்தடை.
ஆணவம் - ஆங்காரம், கோளகபாகுணம், நான் பெரியவன் என்கிறகுணம், மூலமலம்.
ஆணவேதி - ஆக்கினைபயதி.
ஆணாய்ப்பிறந்தோன் - ஆவாரை, கழுக்காணி, புருடனாக அவதாரஞ் செய்தவன்.
ஆணார் - ஆண்டன்மையுடைய பெருநாள்.
ஆணி - உரையாணி, எழுத்தாணி, எல்லை, காயாணி, தைக்கிறவாணி, முதன்மை, மேன்மை, வாளலகு.
ஆணிக்குருகு - அடிக்குருகு.
ஆணிக்குருத்து-பனை, தெங்கு, முதலியவற்றி னடுக்குருத்து.
ஆணிக்கோவை-உரையாணிக் கொத்து.
ஆணிச்சிதல் - பருவின்முளை.
ஆணிச்சீ - மூலச்சிதல்.
ஆணிச்செருக்கம்-இலவணபாஷாணம்.
ஆணித்தங்கம் - உயர்ந்தபொன்.
ஆணித்தரம் - உறுதி, முதற்றரம்.
ஆணிப்பூ / ஆணிப்பூடு } ஒருநோய், கண்வியாதி.

ஆணிப்பொன் - உயர்ந்தபொன்.
ஆணிமாண்டவியர் - மாண்டவியன்.
ஆணிமுத்து - வயிரமுத்து.
ஆணிரோகம் - ஒருவகைரோகம். அது பருக்கைக் கற்களின்மேனடத்தலாலும் முட்கள் தைத்தொடிதலாலும் பாதத்தில் அரத்தைப்போலிருக்கின்ற முடிச்சுகளையுண்டாக்குவது.
ஆணிவேர் - உச்சிவேர்.
ஆணு - இனிமை, நன்மை.
ஆணெழுத்து - குற்றெழுத்து.
ஆணை-அடையாளம், ஆக்கினை, ஏவல், சத்தியம், சபதம், தடுத்தல், நிண்ணயம், மெய், வெற்றி.
ஆணைச்சக்கரம்-அரசாட்சித் தத்துவம், செங்கோல்.
ஆணையாசக்கரம்
ஆணையாசக்கிரம் } அரசாட்சித் தத்துவம்.
ஆணையிடுதல் - சத்தியம்பண்ணல்.
ஆணைவழிநிற்றல் - அரசன் கட்டளைப்படி நடத்தல்.
ஆண்-ஆண்பாற்பொது, ஆண்மகன், கலைமை.
ஆண்குமஞ்சான்-குங்குலியம்.
ஆண்குறி - ஆடவக்குறி.
ஆண்கை-ஆறுவகைக்கையு ளொன்று. அஃது ஆறுவகையதென்பது பின்னே காட்டப்படும் சத்தானந்தப் பிரகாசச் செய்யுளான் விளங்கும் (உ-ம்) "முட்டி சிகர மலர்பதமஞ் சந்தஞ்சம்-விட்ட சிலந்தி மிருகசி-ஒட்டுஞ் - சதுரம் பதாகந் தருதிரிப தாக - மதிகமுறு மாண்கை நவமாம்.
ஆண்கோள்-ஆண்கிரகம், அங்காரகன், குரு, சூரியன்.
ஆண்டகை - ஆண்டன்மை, இராசா சிறந்தோன், வீரன்.
ஆண்டகைமை - ஆண்டன்மை, வீரம்.
ஆண்டண்டு - காதிற்புறவருகு.
ஆண்டருளுமுறை - ஆண்டருளுகின்றவொழுங்கு. அது மர்க்கடசம்பந்தம் மார்க்கசார சம்பந்தமென இருவகைப்படும்.
ஆண்டலை - கோழி, படைத்தலைவன், பூவில்லாமரம்.
ஆண்டலைக்கொடி - குமரக்கடவுள்கொடி, பேய் முதலியன பலியை நுகராமற் கட்டப்படுங்கொடி. அது தலை ஆண்மகன்றலையாகவும் உடல் புள்ளின் வடிவமாகவும் எழுதினது.
ஆண்டலைக்கொடியுயர்த்தோன்
ஆண்டலைக்கொடியோன் } குமரன்.
ஆண்டவன்-அரசன், ஆளுகை செய்கிறவன், எசமான், கடவுள்.
ஆண்டளக்குமையன்-ஆதனூரிற் கோயில்கொண்ட விட்டுணு.
ஆண்டளப்போன் - வியாழன்.
ஆண்டாள்-ஆள்வோன், எசமான், கடவுள்.
ஆண்டி-தவசி,பண்டாரம்,யாசகி.
ஆண்டிச்சி - பண்டாரத்தி.
ஆண்டு - அவ்விடம், வருடம்.
ஆண்டை-அவ்விடம், எசமான், தேட்கொடுக்கி.
ஆண்டையர் - மனிதர்.
ஆண்டொழில்-பராக்கிரமவேலை.
ஆண்டொழின்மைந்தன்-அருச்சுனன்.
ஆண்பட்சிதோஷம் - ஒருவகைதோஷம் அது தாகம், பேதி, சரீரவுலர்ச்சி, கண்களிற்குழி ஆகிய இக்குணங்களை யுண்டாக்கும்.
ஆண்பாடு-ஆண்குணம், மனிதன்செயல்.
ஆண்பாலெழுத்து - ஆண்பாலிற்குரிய எழுத்துக்கள் அது அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ என்பன இதன்றி ஒருசாரார் உயிர் குற்றெழுத்தும் உயிர்மெய்க்குற்றெழுத்தும் என்பர்.
ஆண்பால்-ஆண்பகுதி, ஆண்டன்மை, புல்லிங்கம்.
ஆண்பாற்பிள்ளைக்கவி - காப்பு முதற் சிறுதேரீறாய்ச் சொல்லப்படும் பத்துறுப்புக்களும் பப்பத்து விருத்தத்தான் முடியப் பாடுவது.
ஆண்பிள்ளை-ஆண்குழந்தை, கெட்டிக்காரன், தலைவன், மனிதன்.
ஆண்பிள்ளைச்சிங்கம் - வீரன்.
ஆண்மகன் - ஆணிற்சிறந்தோன், கணவன், மகன், மனிதன்.
ஆண்மரம் - அகவயிரமுள்ளமரம், அழிஞ்சில், செம்மரம்.
ஆண்மலடு - புருடர்களுக்கேற்படும் ஒருவகை மலட்டுரோகம்; அது விந்து தித்திப்பற்றுச் சலத்தில் விட்டாற் கரைந்து மிதப்பதும், உயிர்ப்பில்லாததும் மூத்திரத்தில் நுரைகட்டுவதுமான தன்மையை யுண்டாக்கும்.

ஆண்மாரி - மூர்க்கமுடையாள்.
ஆண்மை-ஆண்டன்மை, திடன், மனமுயற்சி, மெய், வலி.
ஆண்மைச்சினைப்பெயர் - ஆண்பாலையே விளக்கி நிற்குஞ் சினைப்பெயர் (உ-ம்) முடவன்.
ஆண்மைச்சினைமுதற்பெயர் - ஆண்பாலையே விளக்குஞ் சினைமுதற்பெயர் (உ-ம்) முடக்கொற்றன்.
ஆண்மைமுதற்பெயர் - ஆண்பாலையே விளக்கிநிற்கு முதற்பெயர் (உ-ம்) சாத்தன்.
ஆண்மைமுறைப்பெயர் - ஆண்பாலையே விளக்கிவருமுறைப்பெயர்(உ-ம்) தந்தை.
ஆண்வழி-ஆண்சந்ததி, தந்தைவழி.
ஆதங்கம்-ஆபத்து, உபத்திரவம், கலம், காய்ச்சல், தீங்கு, நோய், பறையொலி, புயம்.
ஆதஞ்சனம்-அழிந்தல், உபத்திரவம், உறையிடல், தீவிரம், பஸ்பமாக்கல்.
ஆதண் - நோய், வருத்தம்.
ஆதண்டை - காற்றோட்டி.
ஆததாயி - கொல்லவொருப்பட்டு நிற்கிறவன்.
ஆதபசுரம்-ஒருவகைச் சுரநோய். அது சித்திரை வைகாசி ஆனி ஆடி ஆகிய மாதங்களி லுதயமுதல் இரண்டு சாமமளவையிலும் நிற்காமல் வெயினடப்பதினாற் பிறந்து எரிவு, வேதனை, பன்னோய், தாகம், சோர்வு, தலைவலி, தலைச்சுழல்வு, வாயுலர்வு, பேதி, அடிக்கடி நித்திரை, பிரமை, மாரடைப்பு, கால்கைநடுக்கம், கண்களில் நீரொழுக்கு ஆகிய இக்குணங்களையுண்டாக்கும்.
ஆதபத்திரம்-குடை, வெண்குடை.
ஆதபசீரம் - ஒருவகைநெல்.
ஆதபம் - ஒளி, குடை, வெயில்.
ஆதபவாரணம் - குடை, ஆதபத்திரம்.
ஆதபன் - சூரியன், பார்ப்பான்.
ஆதப்பிரியசுவரம்-சிவத்தலங்கள் ஆயிரத்தெட்டினொன்று.
ஆதமில்லி - ஆதரவில்லாதவன்.
ஆதம் - ஆதரவு, கூந்தற்பனை, விருப்பு.
ஆதம்பாதுமில்லாதவன் - ஆதரவில்லாதவன்.
ஆதம்பேதி-செப்பு நெருஞ்சிப்பூண்டு.

ஆதரம்-அன்பு, ஆசை, ஊர், கேள்வு, சங்கிப்பு, சங்கை, சிலம்பு, துவக்கம்.
ஆதரவு-அன்பு, ஆதாரம், உதவி, தாவரம், விருப்பம்.
ஆதரவுசெய்தல் - அன்பு பண்ணுதல், தாங்குதல்.
ஆதரிசம் உரை, கையெழுத்துப்பிரதி, பளிங்கு, மூலம், வியாத்தி.
ஆதரிசனம் - கண்ணாடி, வெளிப்படையாக்கல்.
ஆதரித்தல்-அன்புவைத்தல், உதவிசெய்தல், சங்கித்தல், தாபரித்தல்.
ஆதலை - உதவி, தாபரிப்பு.
ஆதல் - ஆகுதல், கல்விநூல், கூத்து, தெரிதல், நுணுக்கம்.
ஆதவம்-ஆதபம், ஒளி, குடை, கொன்றைப்பூ, வெயில்.
ஆதவன் - சூரியன், பார்ப்பான்.
ஆதளை - ஆமணக்கு, ஆயாசம், எலியாமணக்கு, மாதளை.
ஆதளைமாதளை-வருத்தம், மனக்கலக்கம்.
ஆதனமூர்த்தி - சிவலிங்கம்.
ஆதனம்-ஆசனம், சீலை, நிலைமை, நீளுதல், பார்வை, விலாசம்.
ஆதனூர் - நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று.
ஆதன் - அருகன், அறிவிலான், உயிர், குரு, குருடன்.
ஆதாயம் - இலாபம், நன்மை.
ஆதாரகாரகம் - தானப்பொருளைக்காட்டு முருப்புடைப்பெயர்.
ஆதாரதண்டம் - முதுகெலும்பு.
ஆதாரதலம் ஆதாரமாநிற்கும் உரியதானங்கள் அவை திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, சிதம்பரம், திருக்காளத்தி, காசி என்பன.
ஆதாரதேவதை-ஆதார தானத்திற்குரிய தெய்வங்கள், அவர் விநாயகர், பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்பனவாம்.
ஆதாரதோற்றம் - ஆதார தானத்திற்றோற்றுந் தோற்றங்கள். அவை பந்தம், விளக்கு, மின்னல், மின்மினி, சூரியன், சந்திரன் என்பன.
ஆதாரம்-அடி, அத்திபாரம், [illegible], காக்குதல், தாபரம், தானம், [illegible], பாத்தி, மழை, வாய்க்கால்.

ஆதாயுயேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டினென்று.

ஆதாளி-இரைச்சல், கலக்கடி, சத்தம், படாடோபம், புரட்டல், வீம்புபேசல்

ஆதாளிக்கல்-இரைதல், உடலே, அங்குமிங்கும் புரட்டியருளல், கலக்கடி பண்ணல், சத்தமிடல், படாடோபம் பண்ணல், வீம்புபேசல்.

ஆதாளிக்காரன் - படாடோபக்காரன்.

ஆதாளிக்குதல் - ஆதாளிக்கல்.

ஆதாளித்தல் - ஆயாசப்படுதல்.

ஆதாளிமன்னன் - ஆதாளி பண்ணுவதிற் றலைமைபெற்றவன், கரடி.

ஆதானம்-ஈடு, எற்றுக்கொள்ளுதல், சங்கற்பித்தல், ஸ்தாபனம் பெறுதல்.

ஆதானிகம் - கருப்பாதானம்.

ஆதி-அதிசயம், அருகன், இடம், இறைவன், ஈடு, எப்பொருட்குமிறைவன், எழுவாய்; ஒருதாளம், கடவுள், காய்ச்சற் பாஷாணம், குதிரைக் கதியுள் ஒன்று, சூத்திரம், சூரியன், தொன்மை, நேரோடல், பரமசிவம், பழமை, பிரதானம், பிரமன், புத்தன், மண்டலமாயோடல், மனவிருப்பம், மிருதபாஷாணம், முதல், வனப்பு, அது பழங்கதைகூறுதல், விட்டுணு, வேர்.

அதிகடுஞ்சனி - முதன்மையான கொடிய சனிரோகம், மகம்.

ஆதிகம் - சிறுகுறிஞ்சா.

ஆதிகான் - பிரமன்.

ஆதிகவி-பழமையானபுலவன், வால்மீக மஹாருஷி.

ஆதிகாரணகாரியம்-முதற் காரியத்தாற் காரியப்படுவது.

ஆதிகாரணம் - முதற்காரணம்.

ஆதிகாரணவகத்திணை - முதற்காரண வகத்திணை (உ-ம்) மண்ணாலாயகுடம்.

ஆதிகேசவன் - விட்டுணு.

ஆதிக்கடுஞ்சாரி - நவச்சாரம்.

ஆதிக்கமேகம் - ஒருவகை மேகரோகம். அது மூத்திரத்தைச் சும்மா வைத்திருந்தாலுங் காய்ச்சினாலும் இளநீர்ச்சலம்போனிறமும் வாசனையுமுண்டாகச்செய்வது. அதனால் தாகமும் தேகவாட்டமும் உண்டாகும்.

ஆதிக்கம்-உயர்ச்சி, உரிமை, முதன்மை.

ஆதிக்கல்நாதம், ஆதிக்கல்பேதம் } அன்னபேதி.

ஆதிக்கன்-பெரியவன், மேன்மகன்.

ஆதிக்குடி - சவர்க்காரம், முதன்மை பெற்றகுடி.

ஆதிக்குரு-முப்பூ, அது பஞ்சலோகங்களைப்பேதிக்கச்செய்வது, பூவழலை, பூநீறு; முதன்மைபெற்ற குரு.

ஆதிசாரம் - சிற்பநூல்கள் முப்பத்திரண்டினொன்று.

ஆதிசேஷன், ஆதிசேடன் } பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிறது என்று சொல்லப்படும் அனந்தன் என்னும் பாம்பு.

ஆதிசைவம்-சைவம்பதினாறினொன்று

ஆதிசைவன் - பதினறு சைவர்களுள் ஒருவன்.

ஆதிச்சரக்கு - சூதம்.

ஆதிச்சனி - மகநாள்.

ஆதிஷ்டம், ஆதிட்டம் } உண்டசேடம், சேடம்.

ஆதிஷ்டி, ஆதிட்டி } பிரமசாரி.

ஆதிதாரணம் - ஈடு.

ஆதிதேயம்-அன்னபானதிகள் கொடுத்து அதிதியைப் பூசித்தல்.

ஆதிதேயர்-அதிதிவமிசத்தார் அவர்கள் தேவர்கள்.

ஆதிதேயன் - தேவன், விருந்தினரை உபசரிப்போன்.

ஆதிதேவன் -சிவபெருமான், சூரியன், முதற்கடவுள், நாராயணன்.

ஆதித்தசூனு - எமன், கன்னன், காளிந்தி, சனி, சுக்ரீவன், தத்தியன், நாதன், மனு.

ஆதித்ததேவர் - திருவிசைப்பாபாடிய கண்டராதித்தர்.

ஆதித்தபுத்தி - அருக்கபுத்தி.

ஆதித்தபுத்திரர்-சூரியனது மக்கள்கள். அவர் கன்னன், காளிந்தி, சனி, சுக்கிரீவன், தத்தியமகன், நாதன், மனு என்பவராம்.

ஆதித்தமணி - சூரியன், முத்து.

ஆதித்தமண்டலம் - சூரியமண்டலம், மும்மண்டலத்தொன்று. அஃதுஇதயகமலமுதற்கண்டத்தானமளவும்.

ஆதித்தம் - காவிக்கல், துருசு.

ஆதித்தர் - வானோர்.
ஆதித்தல் - ஆதியாகத் தொடுத்தல்.
ஆதித்தன் - ஆதிக்குரு, சூரியன், சேர நாட்டிலிருந்த ஓரரசன். இவன், சிதம்பரத்துக் கனகசபையின் முகட்டைக் கொங்கிற் செம்பொன்னினுல் செய்தவன்.
ஆதித்தன்கூர்மை-இலவணபாஷாணம்
ஆதித்தன்மத்திமச்சா - ஆதித்தனுக்குக் கற்கடகமுதல் ஆறிராசியிற்கண்டசா.
ஆதித்தன்வெள்ளை-ஆதித்தன்கூர்மை.
ஆதித்தன்றேவி - உஷை, சாயை.
ஆதித்தியசா- ஆதித்தனுடைய சாவாக்கியம்.
ஆதித்தியம் - அதிதிபூசைக்குரிய பொருள், உபசரணை, கவனித்தல்.
ஆதித்தியர் - அதிதியிடத்திற் காசிபப்பிரசாபதிக்குப் பிறந்த புத்திரர் பன்னிருவர் அவர் அமிசுமந்தன், அரியமன், இந்திரன், சவிதா, தாதா, துவஷ்டா, பகவன், பூஷன், மித்திரன், வருணன், விசுவந்தன், விஷ்ணு என்பவராம். இவருள் இந்திரன் விஷ்ணு என இருவரும் வைவசுவத மனுவந்தரத்தில் ஆதித்தியராகவிருந்து சட்சுர் மனுவந்தரத்தில் துஷிதராயினர். கற்பாரம்பத்தில் பிரமாவினுற் சிருஷ்டிக்கப்பட்ட ஜயரென்றும் இவரைச் சொல்வார்கள். இப்பன்னிருவரும் சிருஷ்டியில் இச்சையில்லாதவராய் பிரமாவினது ஆஞ்ஞைக் குட்படாராயினர். அதனால் மனுவந்தரங்கடோறும் பிறக்குமாறு சபிக்கப்பட்டார்கள்.
ஆதித்தியவிருதயம் - ஒருதோத்திரம் இதை ஓதிவந்தால் சூரியானுக்கிரகமுண்டாம், இராவணனைக் கொல்லச்சென்ற இராமருக்கு அகஸ்தியரால் உபதேசிக்கப்பட்டது.
ஆதித்தியன் - சூரியன், தேவன்.
ஆதித்தியை - சரச்சுவதி.
ஆதநாதப்பெருமாள் - திருக்குருகூரிற் கோயில்கொண்ட விட்டுணு.
ஆதிநாதர் - நவநாதசித்தரி லொருவர்.
ஆதிநாதவல்லி - திருக்குருகூரிற் கோயிற்கொண்ட இலக்குமி.
ஆதிநாதன் - ஒரு சைனகுரு.
ஆதிநாராயணன்-வச்சிரக்கல்விட்டுணு.
ஆதிநூல் - முதனூல், வேதம்.
ஆதிபகவன் } கடவுள், சிவன்.
ஆதிபகவான் }
ஆதிபதி - அதிபதி, எப்பொருட்குமிறைவன், கடவுள்.
ஆதிபத்தியம் - அதிகாரம், சுதந்திரம், தத்துவம், தலைமை, மகத்துவம்.
ஆதிபரம் - சாதிக்காய், பரப்பிரமம்.
ஆதிபரன் - இராசா, எப்பொருட்கும் இறையவன், கடவுள்.
ஆதிபராபரன் - கடவுள்.
ஆதிபலம் - சாதிக்காய்.
ஆதிபன் - அரசன், எசமானன்.
ஆதிபிட்சு - சிவன்.
ஆதிபுங்கவன் - அருகன், கடவுள்.
ஆதிபூதம் - அதிட்டானபூதம்.
ஆதிபோகம் - ஈடுவைத்ததைப் பாலித்தல், முதற்போகம்.
ஆதிமகாகுரு - துரிசு.
ஆதிமகாநாதம் - உலோகமணல்.
ஆதிமடக்கு-ஓரலங்காரம், அது வரிக்கு முதலில் ஒரே சொல்வரப்பாடுவது.
ஆதிமத்தியாந்தம் - முதலிடைகடை.
ஆதிமத்தியாந்தரகிதன் } கடவுள், சிவன்.
ஆதிமத்தியாந்தன் }
ஆதிமருந்து - சுக்கு, மிளகு, திப்பிலி, முதன்மையான ஒருமருந்து.
ஆதிமலடு-ஒருவகை மலட்டுநோய் அது வயிற்றின் மூன்றுமடிப்பு விழுந்து இடுப்புப் பருத்துத் தேகம்ஸ்தூலிப்பதாற் கருத்தரியாது போவதாம்.
ஆதிமுதல்-எல்லாவற்றிற்குமுன், கடவுள், முதன்முதல்.
ஆதிமூர்த்தி - கடவுள், ஆதிமூலம்.
ஆதியங்கடவுள் - அருகன், கடவுள்.
ஆதியந்தபதிச்சா - சீக்கிரவுச்சம், மகரச்சா.
ஆதியந்தமில்லாதவன்-கடவுள், சிவன்.
ஆதியந்தம்-அடிமுடி, முதற்றொடங்கி முடியுமட்டும்.
ஆதியரிவஞ்சம்-போகபூமியாறிலே ஒன்று.
ஆதியாமம் - மூவகைப்புல்.
ஆதியாசை - நாற்படைவாலுரைக்கப்பட்டவிசை, அதுபதினாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொருவகைப்படும்.

ஆதியெழுத்து - முதலெழுத்து. அது உயிர்பன்னிரண்டும்மெய் பதினெட்டும்.
ஆதியோடிடைமடக்கு - ஓரலங்காரம், அது நான்கடிகளுளடியின் முதலினும் இடையினு மடக்கு வருவது.
ஆதியோடுகடைமடக்கு - ஓரலங்காரம். அது அடிகளுள் முதலுங்கடையு மடங்கிவருவது.
ஆதிரம் - நெய்.
ஆதிரவிச்சிலை - காவிக்கல்.
ஆதிரன் - பெரியோன்.
ஆதிராச்சியம் - ஏகாதிபத்தியம்.
ஆதிரை - சாதுவன் மனைவி, திருவாதிரை.
ஆதிரௌத்திரம் - சௌவீரம்.
ஆதிவராகன் - விட்டுணு.
ஆதிவருணம் - பார்ப்பாரச்சாதி.
ஆதிவருணர் - முதல் வருணத்தார், அவர் பார்ப்பார்.
ஆதிவருணன் - பார்ப்பான்.
ஆதிவாயிலார் - பரதசேனாபதிய நூலாசிரியர்.
ஆதிவாரம் - ஞாயிற்றுக்கிழமை.
ஆதிவிந்து - நிலப்பாஷாணம், மழை, கார்முகிற் பாஷாணம்.
ஆதிவிராகன் - அருகன், சிவன், சோரபாஷாணம்.
ஆதிவிராட்டியம் - வெள்ளைப்பாஷாணம்.
ஆதிவிருத்திசத்தி - மொழிக்கு முதனின்ற இ-ஈ-எ ஐயாகவும், உ-ஊ-ஒ ஔவாகவும், அகரம் ஆகாரமாகவும் இரு ஆராகவுந் திரிவது.
ஆதீண்டுகுற்றி - தருமமாய்ப் பசுமுதலியன சொறிந்துகொள்ள நாட்டியிருக்குங்கல்.
ஆதீபனம் - கோலஞ்செய்தல்.
ஆதீனம் - ஆஸ்தி, ஆளுகை, உடமை, உரிமை, வமிசம்.
ஆதீனவம் - கீழ்ப்படியாமை, மீறுதல்.
ஆது - ஆறனுருபு, தெப்பம், யானையைப் பாகரதட்டுமோசை.
ஆதுரம் - அவா, நோய்.
ஆதுரன் - ஆசையுற்றோன்நோயுற்றோன்.
ஆதுலம் - தரித்திரம்.
ஆதுலர் - தரித்திரர்.
ஆதுலர்க்குச்சாலையளித்தல் - அறமுப்பத்திரண்டினொன்று.

ஆதுலன் - தரித்திரன்.
ஆதுவம் - கள்.
ஆதூர்த்தரசன் - கசனது மூன்றாம் புத்திரன். இவன் தருமாரணியத்தை யுண்டாக்கினவன். இவனது மகன் இராஜவிருடியாகிய கயன்.
ஆதெரிசம் - கண்ணடி.
ஆதேசம் - ஆதாயம், ஒழுங்கு, கிரகசாரம், திரிபு, பதில், புத்தி.
ஆதேயம் - ஆதாயம், தாங்கப்படுவது.
ஆதொண்டை - காற்றோட்டி, சாத்தோட்டி.
ஆதோரணர் - தூரத்துகிறவர்கள், யானைப்பாகர்.
ஆத்தன் - அருகன், கடவுள், கூட்டாளி, சங்காத்தி, சத்தியஆடையவன், சிவன், சிநேகிதன், தோழன், பெரியவன்.
ஆத்தா - அணிநுணாமரம்.
ஆத்தாடியுள்ளான் - ஒரு குருவி.
ஆத்தாள் - தாய், பார்ப்பதி.
ஆஸ்தானக்கோழை - சபைக்கோழை.
ஆஸ்தானசந்தோஷம் - கோணங்கித்தன்மை, விகடக்கூத்து.
ஆஸ்தானசந்தோஷி - விகடக்கூத்தன், விகடக்கூத்தி.
ஆஸ்தானமண்டபம் - தருமசபை கூடுமிடம், கொலுமண்டபம்.
ஆஸ்தானமேறல், விவகாரந்தீரும்பொருட்டுத் தருமசபையேறுதல்.
ஆஸ்தாநம், ஆஸ்தானம், ஆத்தானம் - ஆபத்து, கொலு, கோபுரவாயில், நீதித்தலம், தருமசபை, மண்டபம்.
ஆஸ்தி - ஆதனம், சம்பத்து, பாக்கியம்.
ஆத்தி - ஒரு மரம்.
ஆஸ்திகன் - ஏகேச்சுவரவாதி.
ஆத்திகேடு - ஆற்றாண்மை, சத்துக்கேடு.
ஆத்திக்கனி - வெருகு.
ஆஸ்திக்காரன் - சம்பத்துடையவன்.
ஆஸ்திக்காரி - சம்பத்துடையவள்.
ஆத்திசூடி - ஔவைசெய்த ஒரு நூல், சிவன்.
ஆத்திஷ்டி, ஆத்திட்டி - நீராள்ளி.
ஆத்தியன் - சிவன்.
ஆத்தியு - ஆவத்து.

ஆத்தியேபாந்தம் - ஆதியந்தம்.
ஆத்திரக்காரன் - அவசரமுடையவன்.
ஆத்திரக்காரி - அவசரமுடையவள்.
ஆத்திரதம் - இஞ்சி.
ஆத்திரமூலம் - ஒருவித மூலரோகம், இது இரத்தத்தினாலும் பித்தத்தினாலும்பிறந்தெப்பொழுதும் இரத்தக்கசிவை யுண்டாக்கும்.
ஆத்திரம் / ஆத்திரவம் / ஆத்திரியம் - அவசரம், ஆவத்து, கோபவிரைவு.
ஆத்திரேயர்-வடமொழியில் வைத்திய அகராதி நிகண்டுசெய்த பேர்போன ஒரு பண்டிதர்.
ஆத்திரேயன்-சந்திரன், தத்தாத்திரேய முனி.
ஆத்திரையன் - ஒரு தமிழ்ப்பேராசிரியன்.
ஆத்துமகத்தியை - தற்கொலை.
ஆத்துமகம் - பிறத்தல்.
ஆத்துமகன்னம் / ஆத்துமகாந்தன் - தற்கொலை.
ஆத்துமகோஷம் / ஆத்துமகோடம் - காகம்.
ஆத்துமசந்தேகம் - உள்ளையம்.
ஆத்துமசன் - மகன்.
ஆத்துமசிநேகம் - நெருங்கியவுறவு.
ஆத்துமசிநேகன் - நெருங்கிய உறவையுடையோன்.
ஆத்துமசிநேகி - நெருங்கிய உறவையுடையவள்.
ஆத்துமசுத்தி - பஞ்சசுத்தியினொன்று.
ஆத்துமசை - மகள்.
ஆத்துமஞானம்-ஆத்துமாவை அறியும் அறிவு.
ஆத்துமஞ்ஞன் - தன்னையுந் தலைவனையு மறிபவன்.
ஆத்துமதரிசகம் - கண்ணாடி.
ஆத்துமதரிசம் - பளிங்கு.
ஆத்துமதரிசனம்-ஆத்துமநிலையறிதல்.
ஆத்துமதெரிசனை - ஆத்துமாவினிலையைத் தெரிசித்தல்.
ஆத்துமபுத்தர் - பூனைக்காலி.
ஆத்துமபுத்தி - சிவகாட்சி, சுயவறிவு, தன்னறிவு.
ஆத்துமபூ-சிவன், பிரமன், மன்மதன், விட்டுணு.

ஆத்துமபோதம் - ஆத்துமஞானம்.
ஆத்துமமோனி - காமன், சிவன், பிரமன், விட்டுணு.
ஆத்துமம் - அதர்வண வேதோபநிடதம் முப்பத்தொன்றி னொன்று. அரத்தை, பிராணன், மனம்.
ஆத்துமலக்கணம் / ஆத்துமலட்சணம் - ஆத்துமாவின் சுபாவக் குணம், அஃது ஆனந்தம், சத்து, சித்து.
ஆத்துமவசம் - தன்னடக்கம்.
ஆத்துமவாதி - ஆத்துமாவே தெய்வமென்று வாதிப்போன்.
ஆத்துமவிசாரம்-ஆத்துமாவை யறியும் [விசாரம்.
ஆத்துமவிசாரணை-ஆத்துமாவை யறியும்பொருட்டு விசாரிக்கும் விசாரிப்பு.
ஆத்துமா-அறிவு, ஆன்மா, உடல், உறுதி, கரடிக்குட்டி, காற்று, சீவன், சுபாவம், சூரியன், தீ,பிரமன், பிராணன், புத்தி, மகன்.
ஆத்துமார்த்தம் - ஆத்துமலாபத்திற் குரியது, தற்பிரயோசனம்.
ஆத்துமானவாதம்-ஒருவகை வாதநோய், அது சீதளம், மலபந்தவஸ்து, சிலேஷ்மவஸ்து, புளிப்புவஸ்து, மாப்பண்டம், பனிக்காற்றிவைகளினாற்பிறந்து அடிவயிற்றிற்றங்கி வேதனைசெய்யும். அக்காலங்களில் குடலின் துவாரத்தில் வலித்தல், மலஜலங் கட்டுப்படல், வயிற்றிலிரைச்சல், வயிறுப்பல், வாதசுரக்குறியாகிய இக்குணங்களுண்டாகும்.
ஆத்துமீகம் - ஆத்துமசம்பந்தம்.
ஆஸ்தை - நிலை.
ஆத்தை - அதிசயவிரக்கச்சொல், ஈன்றாள்.
ஆநகதுந்துபி-இரணபேதி,வசுதேவன்
ஆநகம் - தேவதாரு.
ஆநந்த-நாற்பத்தெட்டாவதுவருடம்.
ஆநந்தகரப்பன்-ஒருவகைக் கரப்பானோய், அது சர்வாங்கத்திலுஞ் சாரைப்பாம்பின் றோலையொத்துத் தினவு, சொறி, சலக்கசிவு முதலியன உண்டாவதோடு கண்டத்தில் வெடித்து நீரொழுக விகாரரூபம், தாதுநஷ்ட முதலிய குணங்களை யுண்டாக்கும்.
ஆநந்தகாநநம் - ஆநந்தத்தை யுண்டாக்குங் காடு, காசிநகரம்.

ஆநந்தகிரி - சாலிவாகனசகாப்தமெண் ணூற்றின் மேலிருந்தவோர் சமஸ் கிருத வித்துவான் இவனைச் சங்கர திக்குவிசயம் என்னும் நூல்செய்தா னென்றொரு சாராரும் சங்கராச்சா ரியருக்குச் சீடனென்றொரு சாரா ருங் கூறுவர்.
ஆநந்ததம் - யோனி.
ஆநந்ததீர்த்தர்-மத்துவாச்சாரியர்கள்.
ஆநந்தத்தாண்டவம் - சந்தோஷக்கூத் து, சிவன்கூத்து.
ஆநந்தத்தாண்டவன் - நடேசன்.
ஆநந்தநாயகி - திருநெல்வாயிலிற் கோ யில்கொண்டிருக்குந் தேவியார்.
ஆநந்தரி - பிரமன் பட்டணம்.
ஆநந்தநித்திரை-யோகநித்திரை.
ஆநந்தபடம் - கூறைப்புடவை.
ஆநந்தபரவசம் - ஆநந்தக்களிப்பு.
ஆநந்தபாஷ்பம் } சந்தோஷத்தினால்
ஆநந்தபாட்பம் } உண்டாகுங் கண்ணீர்.
ஆநந்தபைரவி - ஓரிராகம்.
ஆநந்தப்பிரபவம் - இந்திரியம்.
ஆநந்தமயகோசம் - பஞ்சகோசத் தொ ன்று, அது அவித்தை.
ஆநந்தமயம் - கடவுள் கோசமைந்தில் ஒன்று, தன்வசமற்றிருத்தல்.
ஆநந்தமயன் - கடவுள்.
ஆநந்தமூலி - கஞ்சா.
ஆநந்தம் - அரத்தை, கடவுள், சந்தோ ஷம், பாக்குற்றங்களிலொருவகை. பேரின்பம்.
ஆநந்தரூபன் - சந்தோஷத்தோற்றமு டையவன்.
ஆநந்தரூபி-சந்தோஷத்தோற்றமுடை யவள்.
ஆநந்தலட்சணம்-பரமாத்மா சகல பதா ர்த்தத்தைக் காட்டியுந் தன்னிடத் துப் பிரமை நீங்காதிருப்பது.
ஆநந்தவருவி - ஆநந்தக்கண்ணீர்ப்பெ ருக்கு.
ஆநந்தவல்லி-சந்தோஷத்தையுடையவ ள், உமாதேவிகோழித்தலைக் கந்தகம்.
ஆநந்தவாதி - கௌரிபாஷாணம்.
ஆநந்தனம்-இன்பங்கொடுப்பது, உபச ரணை, சந்தோஷித்தல்.
ஆநந்தன் - கடவுள், சந்தோஷத்தை யு டையவன்.

ஆநந்தாத்மா - பிரமன்.
ஆநந்தாலயம் - சந்திரனுலகு.
ஆநந்தி - அரத்தைப்பூண்டு, ஆனந்தமு டையவள், மகிழ்ச்சி, பார்வதி.
ஆநந்தித்தல் - சந்தோஷித்தல்.
ஆநந்தியம்-அழிவின்மை,முடிவின்மை.
ஆநந்தை-கொட்டைக்கரந்தை, பார்வதி
ஆநாகசுரம்-ஒருவகைச் சுரநோய். அது மலபந்தம், மலத்துவாரத்திற் சூலை, அக்கினிபந்தம், சீதளம், சிரோபா ரம், நெற்றியெரிவு, தாகம், நெஞ்சு லர்வு, தூர்ப்பலம், தேககனம், தேக நிறபேதம், கண்சிவப்பு, உரோமச் சிலிர்ப்பு, அடிக்கடி நீரொழுக்குமுத லிய குணங்களை யுண்டாக்குவதோடு நாடியையலைவுற்றுச் சூட்சமமாகவும் வேகமாகவும் நடக்கச்செய்யும்.
ஆநாகரோகபேதம் - ஆநாகநோயினது விகற்பம், அது அஷ்டிலாரோகம், பிரதி யஷ்டிலாரோகம், துனிரோ கம், பிரதிதுனிரோகம் என நான்கு வகைப்படும்.
ஆநாகரோகம்-வயிற்றை யிழுத்துப்பி டிக்கும் ஒருவகைநோய்.
ஆநாகரோகலட்சணம்-ஆநாக நோயின திலக்கணம், அது குதஸ்தானத்தில் அபானவாயுவும் இதய ஸ்தானத்தி லுதானவாயுவும் தமக்குரிய தொழி லைவிட் டொன்றாகச்சேர்ந்து வயிற் றையிழுத்துவலித்துக்கொள்ளும். அக்காலத்தில் வயிற்றிலிரைச்சல், மல ச்சிக்கல், சுரம், சுவாசமுதலிய உபத் திரவங்களுண்டாகும்.
ஆநாத்தம் - ஆடரங்கு, ஒருதேயம், க டல், சண்டை, தோல்.
ஆநாயகலை - வலைபோன்றவத்திரம்.
ஆநாயம் - வலை, வாயுக்கண்ணறை.
ஆநி-கழித்தல், குறைவு, கேடு, விடுதல், நஷ்டம்.
ஆநிரை - பசுக்கூட்டம்.
ஆநிரைகாத்தோன் - கிருட்டினன்.
ஆநிலன் - அநுமான், வீமன்.
ஆநிலை - பசுக்கொட்டில்.
ஆநின்று - நிகழ்காலவிடைநிலை (உ-ம்) நடவாநின்றார்.
ஆநீர் - கோசலம்.

ஆநுபூர்வி } கிரமம், வரிசை.
ஆநுபூர்விகம் }
ஆநெய் - பசுநெய்.
ஆந்தகம்-குருடர்கூட்டம், பாதாளம்.
ஆந்தகர் - பாதாளலோகத்தர்.
ஆந்தம் - இறுதி, முடிவு.
ஆந்தரங்கம் - இரகசியம், உச்சிதம்.
ஆந்தரங்கன்-அதிகநேசிக்கப்பட்டவன் அருமையானவன், இரகசியங்களைக் கேட்டுவைத்திருப்பவன், உற்றநண்பன், விஷயங்களை நம்பத்தக்கவன்.
ஆந்தரதேசம்-ஒருதேசம். இது கோதாவிரி கிருஷ்ண நதிகளுக்கு மத்தியில் உள்ளது. இதைத் தெலுங்கு தேசம் எனப்படும். திரிலிங்க தேசமென்பது வடமொழி வழக்கு.
ஆந்தரபிருத்தியர் - சூத்திரன் வமிசத்தாரான மகததேச வரசர். இவர்கள் சாலிவாகன சகாப்தமுதல் நானூறு வருடம் இராச்சியம் புரிந்தோர்.
ஆந்தரம்-ஆந்தரதேசபாஷை. இதுவே தெலுங்கு என்றும் தெலிங்கு என்றும் வழங்குவது. இது கண்ணுவ மகாவிருடியாற் பிரவிருத்தி செய்யப்பட்ட தென்பர்.
ஆந்தரர் - ஆந்தரதேசத்தர், பஞ்ச திராவிடருள் ஒருவகையார்.
ஆந்தனையும் - ஆமளவும்.
ஆந்திகை - அக்காள்.
ஆந்திரதேசம் - ஆந்தரதேசம்.
ஆந்திரபித்தவாதம் - ஒருவகைப் பித்தவாதரோகம். அதுவாதவஸ்து, சீதளவஸ்து, மச்சம், மாமிசம், வெல்லம், பிண்ணாக்கு, தயிர், காந்தியவன்னம், இவைகளை அதிகமாகப் புசித்தலினு ற்பிறந்து பெருங்கடலின் துவாரத்தில் வியாபித்து வயிற்றிற் கலக்குவதுபோலு மறுக்குதல்போலும்இருப்பதோடு உப்பல், நோவு, மலமூத்திரக் கட்டுப்பாடு, மிகுவார்த்தை, வாந்தி, எப்பம், மூர்ச்சை, பிரமம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.
ஆந்திரம்-ஒருபாடை, குடல்சாதி நான்கினொன்று, தேயமைம்பத்தாறில் ஒன்று, மரணம்.
ஆந்திரர் - ஆந்தரர்.
ஆந்திரீகம் - குருடர்.

ஆந்தை - ஒரு பறவை, பஞ்சபட்சியில் ஒன்று, புறுமுட்டி, பேராமுட்டி.
ஆந்தைக்காதல் - ஆந்தைக்கூவுகை, ஆந்தைநூல். [கை.
ஆந்தோளி ஓரிராகம், ஒருவகைச் சிவி
ஆபகம் } ஆறு.
ஆபகை }
ஆபச்சைவன்-அட்டவசுக்களி லொரு
ஆபணம் - கடை, கடைவீதி. [வன்.
ஆபணியம் } கடைவீதி, கடைச்சாக்கு
ஆபணீயம் }
ஆபதம் - ஆபத்து.
ஆபதோத்தாரணன் - வயிரவன்.
ஆபத்சகாயர் திருப்பழனத்திற் கோயில்கொண்டிருக்குஞ்சுவாமி க்ஷணிகாசலத்தில் எழுந்தருளிய விநாயகர்.
ஆபத்சகாயேசுவரர்-குரங்காடு துறையிற்கோயில்கொண்டிருக்குந்தெய்வம்.
ஆபத்சன்னியாசம் - மரிக்குங்காற் பெருந்துறவு.
ஆபத்தம் - பிரதிட்டை.
ஆபஸ்தம்பசூத்திரம் - யசுர்வேத விகித கருமங்களைக் குறித்து ஆபஸ்தம்பரென்பவராற் சூத்திரமாகச் செய்யப்பட்ட ஒருநூல். [ஒன்று.
ஆபத்தம்பம்-தருமநூல் பதினெட்டில்
ஆபஸ்தம்பர் - வடமொழி வைத்தியசாஸ்திரங்களிற் பேர்போன ஒரு பண்டிதர்.
ஆபஸ்தம்பன் } ஒரு மகா விருடி இவர் யசுர்வேதவிகித கருமங்களைக் குறித்துச் சூத்திரங்கள் செய்தவர். அஃது ஆபஸ்தம்ப சூத்திரம் எனப்படும்.
ஆபத்தம்பன் }
ஆபத்தி - தோஷம், பொருத்துதல்.
ஆபத்து - அவசரம், பெரியதேவை, மிகு வருத்தம்.
ஆபந்தம்-அலங்காரம், உருக்கம், கட்டு,
ஆபந்நம் - விபத்து [நுகம்.
ஆபந்நன் - விபத்தையடைந்தவன்.
ஆபந்நாகரன் - விபத்திற் குறைவிடமா
ஆபம் - நீர், நீர்ச்செறிவு. [னவன்.
ஆபரணக்கடைப்புணர்வு பின்கொக்கி.
ஆபரணச்செப்பு - ஆபரணங்கள்வைக்கும் ஒருவகைச் செப்பு.
ஆபரணம் - சத்தாவத்தையி னொன்று. அது இருபத்தைந்து தத்துவங்களை

யும் ஒன்றற்கொன்று பேதந்தெரிய வொட்டாமல் மறைத்திருப்பது, சீலை, பூணாரம்.
ஆபற்சந்நியாசம் - ஆபத்துக் காலத்திற் பெறுந்துறவு.
ஆபனம் - மிளகு.
ஆபனிகன் - வேடன்.
ஆபன் - அட்டவசுக்களிலொருவன்.
ஆபாகம்-அடுப்பு, குயக்கலஞ்சுடும்சூளை.
ஆபாசம் - அபிப்பிராயம், ஒளி, கெடுதல், பயங்கரரூபம், பிரதிபிம்பம், பொய்த்தோற்றம், மிகுவிருப்பு.
ஆபாஷணம் } சுற்றத்தாரிடத்தும் சிநேகரிடத்தும் பேசும்
ஆபாடணம் } [பேச்சு.
ஆபாஷம் } பாயிரம்.
ஆபாடம் }
ஆபாதசூஷம்
ஆபாதசூடம்
ஆபாதமஸ்தகம் } உச்சிதொடங்கிஉள்ளங்கால் மட்டும், பாதாதி கேசம்.
ஆபாதமத்தகம்
ஆபாதமஸ்தம்
ஆபாதமத்தம்
ஆபாலி - பேன்.
ஆபானம் - மதுக்கடை.
ஆபிலவனம்-நீர்தெளித்தல்,முழுகுதல்.
ஆபீஷம் } சிகையிற்சுற்றின பூமாலை.
ஆபீடம் }
ஆபீரம் - இடையர்சேரி, சிந்துநதிக்கு மேற்காரியாவர்த்தத்தோடு சேர்ந்த ஒருதேசம்.
ஆபீரர் - இடையர்.
ஆபீரன் - இடையன்.
ஆபீலம்-சங்கடம் - நவரசங்களினொன்று.
ஆபீனம்-கிணறு, கொழுப்பு, சிற்பர்வீதி, பசுவின்மடி.
ஆபூஷம் } துத்தநாகம்.
ஆபூடம் }
ஆபூபிகம்-மாவினுற்செய்த பலகாரசமுதாயம்.
ஆபூப்பியம் - மா.
ஆபோகம் - அனுபவம்,பாம்பின்படம், பூரணம், முயற்சி, கீதவுறுப்புள் ஒன்று.
ஆபோசனம்-போசனம், விழுங்குகை.
ஆபோதனம் - அறிவு, போதித்தல்.
ஆப்தம் - ஆண்டு, நேசம்.
ஆப்தர் - நேசர்.
ஆப்தன் உள்ளதுகூறுவோன். [விராசி.
ஆப்பம் - ஒருவகைப் பலகாரம், கும்பவிராசி.
ஆப்பனூர்க்காரணர் - திருவாப்பனூரிற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
ஆப்பி - பசுச்சாணி.
ஆப்பிநீர்-கரைத்த பசுவின்சாணி, பசுவின் மூத்திரமுஞ் சாணியும்.
ஆப்பியந்தரம் - உள்.
ஆப்பியாயகம் - உறவினரது சேர்க்கை, சந்தோஷம், திருப்தி.
ஆப்பிரச்சனம் - வழியுபசாரம்.
ஆப்பு - எட்டி, மரம்பிளக்குங்கருவி.
ஆப்புளண்டம் - கையாந்தகரை.
ஆப்பேறல் - ஆப்பேறினபிரிவு.
ஆப்பை - அகப்பை.
ஆமகணம்-குழந்தைகட்குச் சீதவழும்பு விழுகிற ஒரு நோய்.
ஆமகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டி னொன்று.
ஆமக்கணம் - ஒருவகைக் கணரோகம். அது வாதநாடி மற்றநாடிகளிற் பின்னிக்கொண்டு நடத்தல், புளிப்புத் துவர்ப்பு வஸ்துக்களை வெறுத்தல், அன்னத்தி லிச்சையறல், நாபியில் நோதல், தேகத்தினுள்ளிற் காய்தல் முதலியவைகளை அதிகரிக்கச் செய்து எரிகுன்மக் குணம், பித்தவெட்டை, தாதுநஷ்டம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.
ஆமசிராத்தம்-பச்சைப்படி கொடுக்கிற சிராத்தம்.
ஆமசூலை - வயிற்றுவலி.
ஆமசூலைரோகம்-ஒருவகைச் சூலைநோய் அது மிகு சலபானம்,அகாலபோசனம், மலசலபந்தம், அசீரணவஸ்துக்களைப் புசித்தல் முதலியவற்றால் ஆமமாகிய வசீகரணம்விருத்தியடைந்து சூலையை அதிகரிக்கச்செய்யும். அதனால் மார்பு விலா வயிறுமுதலிய இடங்களில் ஈட்டியாற் குற்றல் போற் குற்றலுண்டாகும்.
ஆமஷ்டம் } உத்தேசம், பலன், மதிப்பு.
ஆமடம் }
ஆமடி - காஞ்சீரம்.
ஆமணக்கநெய்-ஆமணக்கென்னு மரத்தின் விதையால் உண்டாக்கப்படும் ஒருவகை நெய். [டை.
ஆமணக்கமுத்து - ஆமணக்கங் கொட்டை.

ஆமணக்கு-ஒருசெடி, அது எலியாமண க்கு, கடலாமணக்கு, காட்டாமண க்கு,சிற்றாமணக்கு,செவ்வாமணக்கு பறங்கியாமணக்கு, புல்லாமணக்கு, பேராமணக்கு, மலையாமணக்கு, சூரி யகாந்தவாமணக்கு, எரிக்கரைகாட் டாமணக்கு, மணியாமணக்கு, படுக் கையாமணக்கு, அறுபதாங் கொட் டையெனப் பலவகைப்படும்.

ஆமணத்தி - கோரோசனை.

ஆமண்டம்-ஆமணக்கு, சிற்றாமணக்கு.

ஆமதோஷம்-ஒருவகை தோஷரோகம்.

ஆமந்திரிகை-இடக்கையென்னும் வாச் சியம்.

ஆமபித்தம் - ஒருவகைப் பித்தரோகம். அது பித்தமதிகரித்து ஆமத்திற்சே ர்ந்து அதையு மதிகரிக்கச் செய்து பற்பல உபத்திரவங்களை யுண்டாக் கும்; அக்காலங்களிற் றேகங் கறுப்ப தோடு வியர்வை, மூர்ச்சை, தாகம், கோழை, வாந்தி, தலைநோவு,வயிறு, மார்பு, கண்டம் முதலிய விடங்களி லெரிவு ஆகிய குணங்களுண்டாகும்.

ஆமம் - ஒருநோய், கடலை, சீதம், துவ ரை, பச்சை, மலவாட்சி.

ஆமயம் - பசுச்சாணி, நோய்.

ஆமயன் - நோயாளி.

ஆமயாவித்துவம் - அசீரணம்.

ஆமரகோளா - கடுக்காய்ப்பூ.

ஆமரபலம் - எட்டிக்கனி.

ஆமரம் - எட்டி.

ஆமரி - வசனம்.

ஆமரிகபலம் - நெல்லிக்கனி.

ஆமரிகம் - நெல்லி.

ஆமருவியப்பன்-திருவழுந்தூரிற் கோ யில்கொண்ட விஷ்ணு.

ஆமலகபலம் - நெல்லிப்பழம்.

ஆமலகமலம் - ஆகாசத்தாமரை.

ஆமலகம் - நெல்லிமரம், பளிங்கு.

ஆமலகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டி னொன்று.

ஆமல் - மூங்கில், விஷமூங்கில்.

ஆமளவும் - கூடியவரையில்.

ஆமா - காட்டுப்பசு, நெல்லிக்கனி.

ஆமாகோளம், ஆமாகோளா - கடுக்காய்ப்பூ.

ஆமாங்கு - ஆம்பசு, தந்தி, விபரீதம்.

ஆமாசயகதகாரன்ன லட்சணம்-விஷங் கலந்த அன்னத்தைப் புசித்தலினா லுண்டாகுங்குணம். அது தேகத்தில் புரை, வியர்வை, மூர்ச்சை, மதம், பிரமை, உரோமச்சிலிர்ப்பு, வாந்தி, தாகம், கண்ணோவு, மார்நோவு, முத லியவையாம்.

ஆமாசயம் - இரைக்குடர், சமித்தல்.

ஆமாசீரணம்-ஒருவகை அசீரணநோய். அது கண்ணிலுந் தாடைகளிலுமதை ப்பு, சாப்பிடாதகாலத்துஞ் சாப்பிட் டதுபோ லேப்பம், வாயில் நீர்பெ ருக்கு, வயிற்றில் வருத்தம், சரீரத் தில் வேதனை வீக்கம்முதலிய குணங் களை யுண்டாக்கும்.

ஆமாதிசாரம் - வயிற்றுளைவு.

ஆமாத்தியர், ஆமாத்திரர் - ஆலோசனைக்காரர், குரு தந்திரிகள், வைத்தியர்.

ஆமாத்தூர் -ஒரு சிவஸ்தலம்.

ஆமாவசகம்-ஒருவகைநோய், அது பிர மாணந்தப்பி மிகப்புசித்தலினால் அவ் வன்னம் வாந்திபேதிசீரணமாகாமல் ஆமமாகிய சிலேட்டுமத்திற் சேர்ந்து மிகு வேதனையை யுண்டாக்குவது.

ஆமாறு - ஆகுமுறை.

ஆமானவன் - சிறந்தவன்.

ஆமிசம்-அனுபவம், இச்சித்தல், கைக்கூ லி, போசனம், மாமிசம், விருப்பம்.

ஆமிஷம் - ஆமிடம், ஆமஷம்.

ஆமிடம் உத்தேசம், பலன், மதிப்பு.

ஆமிரம் - மாமரம், புளிப்பு.

ஆமிரேஷணம், ஆமிரேடணம் - கூறியது கூறல்.

ஆமிலபித்தம் - ஒருவகைப்பித்தநோய். அது மஞ்சளைக் கரைத்தாற்போல புளித்த வாந்தி, சூலை, அக்கினிமந் தம், நடுக்கம், மாறுரூபம், இருமல், சோம்பல், தாகம், துர்ப்பலம், வியர் வை, நித்திராபங்கம், துக்க முதலிய குணங்களை யுண்டாக்குவது.

ஆமிலபித்தரோகலட்சணம்-ஆமில பித் தரோகத்தினது குணம். அது ஆம த்தை விருத்தியாகிய பித்தமானது சிலவேளை அதை மிகவுங் குறைத்து அவ்வாறே தானுங்குறைந்து மிகவும் உபத்திரவத்தை யுண்டாக்கும். அத னாற் சரீரத்தில் வளையாகாரமான

புடைகளும், பல நிறங்களைப்பெற்ற கொப்பளங்களும் எழும்பி மாறுத்தினவு, புளிப்புங் காரமுமான வாந்தி, மார்பிலெரிவு, அதிர்வு, தேகப்பாரிப்பு, சூடு, அரோசகம்,மூர்ச்சை,சோர்வு, பிரமை, புலப்பம், இளைப்பு, துக்கம், வாய்நோவு, கண்ணிலிருட்சி முதலிய குணங்களை யுண்டாக்கும்.
ஆமிலம் - புளிப்பு, புளியமரம்.
ஆமிலவிதத்தம் - ஒருவகைநோய். அது மிகவும் புளிப்புள்ள வஸ்துவைப் புசித்தலினால் இரத்தத்தோடுகூடிய திரிதோஷம் கண்களில் பார்வையைச் சேர்ந்து பிறந்து உபத்திரவத்தைச் செய்யும், அதனால் விழிகளில் வீக்கமுஞ் சிவப்புந் தினவு முண்டாகும்.
ஆமிலிகை - புளிப்பு, புளியமரம்.
ஆமிலோஷிதம்-ஒருவகைநோய். அது பித்தரத்த முதலிய வாதாதிதோஷ அசீரணவஸ்துக்களைக்கூட்டிப் புசிக்கப்பட்ட அன்னசாரங்களை வயிற்றிற்குட் புளிக்கவைத்து அந்தநீரைக் கண்களுக்காதாரமாயிருக்கின்ற நரம்புகளின் துவாரத்தின்வழியாக நேத்திரங்களிற்செலுத்தி நிரப்பிப்பதாற் பிறந்து அக்கண்களி லிருட்சி சிவப்பு, வீக்கம், நீரொழுக்கு, கலக்கம், பார்வைக்கேடு முதலிய குணங்களை யுண்டாக்கும்.
ஆமுகம் - துவக்கம், முகனை.
ஆமுகர் - நந்திதேவர்.
ஆமுத்தி - மோக்கம்.
ஆமுத்து-ஆவின்பல்லிற் பிறந்தமுத்து.
ஆமுநாயம் - பாரம்பரை, வேதம்.
ஆமூர் - நல்லியக்கோடனூர்.
ஆமூலாக்கிரம்-வேர்முதற் கிளைபரியந்தம்.
ஆமேற்பல்லூரி - கோரோசனை.
ஆமேற்புல்லூரி - கடுக்காய்ப்பூ.
ஆமை - இராசசின்னத்தொன்று, ஒருநோய், கூர்மம், வாசனை.
ஆமைக்கல்-தளவரிசைக்கான ஆறு மூலைக்கல்.
ஆமைச்சுரம் - சிறுபிள்ளைகளுக்குவரும் ஒரு சுரம்.
ஆமைப்பூட்டு - ஒருவகைப்பூட்டு.
ஆமைமடி - சிறுமடி.
ஆமையம் - சாணம், நோய்.
ஆமையன் - நோயுள்ளோன்.
ஆமையவதாரி - விட்டுணு.
ஆமையாழ் - செவ்வழியாழ்த்திறம்.
ஆமையோட்டுக்கட்டி-ஒருவகை கட்டிநோய். அது குழி விழுந்தும், மினுமினுத்தும், நோவைத்தருவதும் ஒருக்கால் தராததுமாய் எவ்விதச் சிகிச்சைக்குங் குணப்படாமல் ஆமையோட்டைக் கவிழ்த்ததுபோலிருக்கும்.
ஆமோசனம் - காலுதல், பிரகாசித்தல்.
ஆமோசித்தல் - ஒளிர்தல்.
ஆமோதம் - உவகை, மிகுமணம்.
ஆமோதித்தல் - ஒருவர் சொல்லுவதற் குடன்பட்டுச் சொல்லுதல்.
ஆமோதிப்பு - உடன்பாடு.
ஆமோதேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
ஆம்-ஆமெனல், இடைச்சொல், ஈரம், உவமையுருபு, நீர், அசைச்சொல். (உ-ம்) பணியுமாம், தன்மை முன்னிலை யுளப்பாட்டுப் பன்மைவினை விகுதி (உ-ம்) சொல்வாம்.
ஆம்படையான்-அகமுடையான், கணவன்.
ஆம்பலரி - சூரியன், முதலை.
ஆம்பலா - புளிபாரைப்பூண்டு.
ஆம்பலானனன் - விநாயகன்.
ஆம்பல்-அடைவு,அல்லி, இசைக்குழல், ஊதிடுகொம்பு, ஒழுங்கு, ஓரெண், கள், குமுதம், சந்திரன், துன்பம் நெல்லி, பண், புளியாரை, மூங்கில், யானை.
ஆம்பற்குழல் - வெண்கலத்தாற் குமுதவடிவாக அணைசுபண்ணிச் செறித்த குழல்.
ஆம்பி - இறைகூடை, ஒலி, காளான், குடைக்காளான், பன்றிப் பத்தல், அது நீரிறைக்குங் கருவி.
ஆம்பிகேயன் - குமாரன், திருதராட்டிரன்.
ஆம்பியம் - இரதம்.
ஆம்பிரம் - புளிப்பு, புளிமா, மாமரம்.
ஆம்பிரவனேசர் - திருமாந்துறையிற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
ஆம்பிராதகேசுவரம் } சிவத்தலங்கள்
ஆம்பிரேசுவரம் } ஆயிரத்தெட்டனு ளொன்று.

ஆம்பிலங்கனி - புளியம்பழம்.
ஆம்பிலம் - கள், புளிப்பு, புளியமரம்.
ஆம்பு - காஞ்சொறி.
ஆம்புலம், ஆம்புவம், ஆம்பூறு - குதிரை.
ஆம்மிரம் - ஒருபலம்.
ஆம்மிலம் - புளி.
ஆம்மிலை - புளியாரை.
ஆயக்கசுரம் - முறைக்காய்ச்சல்.
ஆயக்கட்டு - ஒரு மாகாணத்திலுள்ள பூமியின் முழுவிஸ்தீரணம், மோசகடியான பேச்சு.
ஆயக்கல் - காரக்கல்.
ஆயக்காரன் - சுங்கம் வாங்குவோன்.
ஆயக்காரி - சுங்கம் வாங்குபவள்.
ஆயக்கால், ஆயக்கோல் - குத்துக்கால் சிவிகைமுதலியன தாங்குதல்.
ஆயசம் - ஆயுதம், இரும்பு.
ஆயசூரி - கடுருப்பூண்டு.
ஆயதம் - அகலம், நீளம், முட்டை வடிவம்.
ஆயதனம் - ஆலயம், வீட்டுக்குரிய நிலம், பலிபீடம், வாசம், வீட்டினுட்டளம்.
ஆயதி - எதிர்காலம், தாதா, மனைவி, நீளம், பொருத்து, மகத்துவம், மனக்கட்டு, மிருகண்டன்தாய், மேருபுத்திரி.
ஆயத்தப்படல் - எத்தனப்படுதல்.
ஆயத்தம் - எத்தனம்.
ஆயத்தலம் - ஆயத்துறை.
ஆயத்தன் - ஒருவனுக்குட்பட்டவன், கூர்மையுள்ளவன், தள்ளப்பட்டவன்.
ஆயத்தி - உருக்கம், எல்லை, நன்னடை, நாள், நீளம், பெலன்.
ஆயத்துக்கருத்தன் - அஞ்சன பாஷாணம்.
ஆயத்துக்குள்ளேமாயம் - சிறிது வியாபாரத்தில் சிறுலாபம்.
ஆயத்துறை - தீர்வைத்துறை.
ஆயப்பாலை - நால்வகைப் பாலையுள் ஒன்று.
ஆயமானம் - இரகசியம், உயிர்நிலை.
ஆயமுற்காவலன் - குபேரன்.
ஆயம் - ஆதாயம், கடமை, சுங்கம், சூதாடு கருவி, சூது, தாயம், தாய், திரள், தோழி, நாணி, நீளம், மகளிர்கூட்டம், மல்லரி, வரவு, வழக்கம்.
ஆயர் - இடையர்.
ஆயர்குலம் - இடைச்சாதி.
ஆயர்பாடி - இடையரூர், கிருஷ்ணன் ஒளிக்கப்பட்டு வளர்ந்தவூர்.
ஆயர்பிரான் - கிருட்டினன்.
ஆயல் - ஆராயல், களைந்துவிடல், தியானித்தல், தெரிதல், தெளிதல், நுண்மை, பறித்தல்.
ஆயனம் - ஆண்டிற்பாதி, வருடம்.
ஆயனூர் - திருக்கோவலூரிற் கோயில்கொண்ட விட்டுணு.
ஆயன் - இடையன், கிருஷ்ணன்.
ஆயாசம் - இளைப்பு, சோர்வு, துக்கம், தைரியக்கேடு, மனவருத்தம், முயற்சி.
ஆயாசவர்த்தவாதம் - ஒருவகை வாதரோகம். அது பிரமாணந்தப்பிப் புசிக்கும் பித்தகபவஸ்துவினாற் பிறந்து பித்தத்தோடுகூடிச் சத்ததாதுக்களிலுஞ் சேர்ந்து ஆயாசத்தைப் பிறப்பித்து வேதனைசெய்யும். அதனாற் சர்வாங்கநோவுங்குற்றலும் பிரமையுமுண்டாகும்.
ஆயாதி - உத்தானபாகி.
ஆயாமம் - அகலம், நீளம்.
ஆயான் - தாயைப்பெற்றவள், தாய், வளர்க்குந் தாய்.
ஆயானம் - சுபாவகுணம்.
ஆயி - தாய்.
ஆயிரக்காலி - தடைப்பம், மரவட்டை.
ஆயிரங்கண்ணன் - இந்திரன்.
ஆயிரங்கதிரோன் - ஆதித்தன்.
ஆயிரங்காய்ச்சி - அதிகமாய்க்காய்க்கிற தென்னமரம் அல்லது பலாமரம்.
ஆயிரங்கிரணன், ஆயிரஞ்சோதி, ஆயிரஞ்சோதியுள்ளோன் - சூரியன்.
ஆயிரநாமன் - சிவன், திருமால்.
ஆயிரம் - பத்துநூறு, சகஸ்த்ரம்.
ஆயிலி - தாயற்றவன், தாயற்றவள்.
ஆயிலியம் - ஒருநாள்.
ஆயிலியன் - ஆயிலியநட்சத்திரத்திற் பிறந்தவன்.
ஆயில் - ஆயிலியநாள், ஒருமரம்.
ஆயிழை - அரிவாணுனி, பெண், விசேஷவாபரணம்.
ஆயிளை - கொடிவாட்டலை.
ஆயினி - ஆசினி.

ஆயினிமேனி - பச்சைக்கல்.
ஆயினும் - ஆனாலும்.
ஆயின் - ஆனால்.
ஆயின்மேனி - ஆயினிமேனி.
ஆயு-புரூரவன்மகன், இவன் நகுஷன், க்ஷத்திரவிருத்தன், இரஜி, இரம்பன், அநேநசெனன் என ஐந்து புத்திரரைப்பெற்றவன், வயது.
ஆயுகம் - வயது.
ஆயுகாரன் - சனி.
ஆயுசு - வயது.
ஆயுசுவிருத்தி- உலோகமணல், வயது விருத்தி.
ஆயுஷியம் - வாழ்நாள்.
ஆயுஷ்மந்தன் - பிரகலாதன் புத்திருளொருவன்.
ஆயுஷ்மான் - தீர்க்காயுசுடையவன்.
ஆயுஷ்யம்-அருகன் வென்றவினை நான்கனு ளொன்று.
ஆயுட்டானம் ஆயுத்தானம் பிறந்தகாலத்தில் சந்திரனிருந்த இடத்திற் கெட்டாமிடம்.
ஆயுண்மான்-நித்தியயோகத்தொன்று.
ஆயுதபரிட்சை - படைக்கலப்பயிற்சி.
ஆயுதபாணி-படைக்கலந்தரித்தவன்.
ஆயுதபூசை - படைக்கலப்பூசை. இது புரட்டாசிமாதம் சுக்கிலபட்சம் பிரதமை முதற்கொண்டு இலட்சுமி, சரச்சுவதி, துர்க்கையைக் குறித்து ஒவ்வொன்றுக்கு மூன்று நாளாக ஒன்பதுநாள் ஆயுதங்கள், படைக்கலங்கள் புத்தகங்கள்வைத்துச் செய்யும் பூசை. இப்போது சாதாரணமாய்க் கடைசிநாளாகிய நவமியில் கொண்டாடப்படுகிறது.
ஆயுதம் - உபகாரணம், கருவி, கூத்துப் பயிலிடம், படைக்கலப்பொது.
ஆயுதாகாரம் - ஆயுதசாலை.
ஆயுதிகன் / ஆயுதீகன் / ஆயுதீயன் } ஆயுதங்களைக்கொண்டுபிழைப்பவன்.
ஆயுதேந்திரம் - விஷ்ணுசக்கரம்.
ஆயுத்தானம்-ஆயுளினது தானம். அது பிறந்தகாலத்திற் சந்திரனிருந்த இடத்திற் கெட்டாமிடம்.
ஆயும்யாழ்முனி - நாரதர்.
ஆயுரு - பரிகாரவித்தை.
ஆயுருவேதம் - ஆயுள்வேதம்.
ஆயுருவேதர் / ஆயுருவேதியர் } வைத்தியர்.
ஆயுர்வர்த்தனை - ஆயுசுவிருத்தி.
ஆயுர்வேதம் - ஆயுள்வேதம்.
ஆயுர்வேதர் - வைத்தியர்.
ஆயுர்வேதாக்கினி-மருந்து செய்வதில் உபயோகமாகுமக்கினி.
ஆயுர்வேதாக்கினித்திரயம் - மருந்து செய்வதிலுபயோகமாகுமூவகை அக்கினிகள். அவை கமலாக்கினி, காடாக்கினி, தீபாக்கினி என்பன.
ஆயுர்வேதியர் - வைத்தியர்.
ஆயுவின்மை-ஈச்சுரனெண்குணத்தொன்று. அது செனனமரணமின்மை.
ஆயுள் - ஆயுசு, வைத்தியன்.
ஆயுள்வேதம் - வைத்தியசாஸ்திரம்.
ஆயுள்வேதர் / ஆயுள்வேதியர் } வைத்தியர்.
ஆயே - ஒரு வியப்புச்சொல்.
ஆயோகம் - கரை, பூசனை.
ஆயோசனம் - படித்தல், முயற்சி.
ஆயோதம் - சேனை, போர்.
ஆயோதனப்பிரவீணன்-குவிசராசகுலோத்துங்கனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன். இவன் காலம் துவாபரயுகத்தந்திரம்.
ஆயோதனம் - ஆயோதம்.
ஆய்-ஆயெனேவல், இடையர்க்குரியது. ஏவல்விகுதி (உ-ம்) கேளாய், ஒருவள்ளல். இவன் தனக்குப் பாம்பு கொடுத்த நிலக்கலிங்கத்தை ஆலின்கீழிருந்த இறைவனுக்குக் கொடுத்தோன், தாய், நுட்பம், முன்னிலை யொருமை முற்றுவினைவிகுதி (உ-ம்) சென்றாய், வருத்தம், வினையுருபு (உ-ம்) கிள்ளாய்.
ஆய்க்குழல்-இடையருதுங்குழல். அது கொன்றையங் குழல், முல்லையங் குழல், வேய்ங்குழல்.
ஆய்ச்சல் - ஆச்சல், பறிப்பு, முறை.
ஆயச்சாதி - இடைச்சாதி.
ஆய்ச்சி - இடைச்சி, தாய்.
ஆய்ச்சியர் - இடைச்சியர்.
ஆய்தக்குறுக்கம் - தன் மாத்திரையில் குறைந்தொலிக்குமாய்தம்.

ஆய்தத்தொடர்க்குற்றியலுகரம் }
ஆய்தத்தொடர்க்குற்றுகரம் } ஆய்த மொழிக்கீற்றயலாக நிற்க ஈற்றில் வரும் வல்லெழுத்துக்க ளாறனு ளொன்றன்மேலூர்ந்து தன் மாத்திரையிற் குறைந்தொலிக்கு முகரம்.

ஆயுதப்புள்ளி - புள்ளிவடிவாகிய ஆய்தம்.

ஆய்தம்-அஃகேனம்,சிறுமை,நுண்மை

ஆய்தல்-ஆராய்தல், களைந்துவிடல், தியானித்தல், தெரிதல், தேர்தல், நுண்மை, பறித்தல்.

ஆய்த்தல் - ஆய்ச்சுப்பார்த்தல்.

ஆய்ந்தோர் - அறிவுடையோர், பார்ப்பார், புலவர்.

ஆய்பு-செய்யென்னும் வாய்ப்பாட்டான் வந்த வாய்ந்தென்னு மிறந்தகால வினையெச்சம்.

ஆய்ப்பாடி - ஆயர்பாடி, இடையரூர்.

ஆய்ப்பு - அசைப்பு, வீச்சு.

ஆய்மகள்-இடைச்சாதியிற் பிறந்தவள்.

ஆய்மகன்-இடைச்சாதியிற்பிறந்தவன்.

ஆய்மதி - விசேஷ புத்தி.

ஆய்மயில் - அழகான மயில்.

ஆய்மலர் - தாமரை, தெரிந்தெடுத்த புஷ்பம்.

ஆய்வு-அகலம், அழகு, ஆராய்தல், நுட்பம், வருத்தம்.

ஆரகட்டம்-ஆழமாகிய கிணறு.

ஆரகம்-ஆரம், இரத்தம், ஈயுமெண்.

ஆரகுவதம் - கொன்றை.

ஆரகூடம் }
ஆரகூலம் } பித்தளை.

ஆரகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.

ஆரகேரம் - வாகுவலயம்.

ஆரகோரம் - கொன்றை.

ஆரக்கம் - அகில், சந்தனம்.

ஆரக்குவதம் - கொன்றைமரம்.

ஆரசகம் - அகில்.

ஆரஞர் - அருந்துயர், துக்கம்.

ஆரஞ்சோதி - அருந்ததி.

ஆரட்சகன்-இடையன், சேகண்டக்காவற்காரன்.

ஆரணம் - பங்கலர்சொல்லி ஞென்று, வேதத்தின் ஞானபாகை, வேதம்.

ஆரணவாணர் - பிராமணர்.

ஆரணன்-சிவன், பார்ப்பான், பிரமன், விட்டுணு.

ஆரணி - காளி, சுழல்காற்று, பார்வதி.

ஆரணியம் }
ஆரண்ணியம் } காடு, பற்றை, சிவந் திருத்தல்.

ஆரதக்கறி - மரக்கறிபதார்த்தம்.

ஆரதம் - சுத்தபோசனநிலை.

ஆரதி - ஆலாத்தி, சோடச வுபசாரத் தொன்று, விட்டுவிடுதல்.

ஆரத்தியம் - ஒளி.

ஆரத்திரகம் }
ஆரத்திராசகம் } இஞ்சி.

ஆரநாலகம் }
ஆரநாலரம் } காடி.

ஆரநாளம் - காடிச்சலம்.

ஆரபடி - விலக்குறுப்பு பதினான்கனுள் ஒன்றாகிய விருத்திவகைநான்கனுள் ஒன்று. அது பொருள் பொருளாக வீராகிய மானிடர் தலைவராக வருவது.

ஆரப்தம் - தொடங்கப்பட்டது.

ஆரமாலையன் - ஆத்திமாலை யணிந்த சோழன்.

ஆரம்-அஞ்சனபாஷாணம், ஆட்டதள், ஆத்திமரம், ஆபரணம், ஒருபாணம், கடம்பு, காளிதம், கீச்சுக்கிட்டம், கீழ்வாயிலக்கம், கோடகசாலை, கோணம், சந்தனமரம், சந்தனம், சனி, செவ்வாய்,நந்தனவனம்,நுனி,படப்பொறி, பட்சிகளுடைய களவரி,பதக்சம், பித்தளை, பூமாலை, மாதாணிவடம், முத்து முத்துமாலை.

ஆரம்பசூரன் - தொடக்கத்தில் வீரனாயிருப்போன், வீம்பு பேசுவோன்.

ஆரம்பம்-ஒலி, கொலை, துவக்கம், பாயிரம், பெருமை, பேரொலி, முயற்சி.

ஆரம்பித்தல் - ஒலித்தல், தொடங்கல்.

ஆரருள் - மிகுவருள்.

ஆரலம் - பகை.

ஆரல் - அக்கினி, ஒரு பூடு, ஒரு மீன், கார்த்திகைநாள், செவ்வாய், நிறைதல், நெருப்பு, பித்தம், மதில்.

ஆரவடம் - முத்துவடம்.

ஆரவம் - ஒலி.

ஆரவலர் - காட்டாத்திப்பூ.

ஆரவாரம்-ஆடம்பரம், ஒலி, கிளர்ச்சி, கொண்டாட்டம், பேரொலி.

ஆரவாரித்தல் - மிகவொலித்தல்.
ஆராகரியம் } அரசு.
ஆராகவரியம் }
ஆராட்டல் - தாலாட்டல்.
ஆராட்டு - தாலாட்டு.
ஆராட்டுதல் - தாலாட்டல்.
ஆராதனம் - சமைத்தல், சம்பாத்தியம், நிறைவேற்றம், வணங்கல்.
ஆராதனித்தல் - நிறைவேற்றல்.
ஆராதனை - பூசனை, வணக்கம்.
ஆராதி - சத்துரு.
ஆராதித்தல் - பூசித்தல்.
ஆராதியம் - சமீபம்.
ஆராதூரி - அழிப்புக்காரன், அழிவு, ஊதாரிக்குணம், துட்டத்தனம்.
ஆராதூரித்தனம் - அழிக்கிறகுணம்.
ஆராத்தியர் - ஆராத்திரியர்.
ஆராத்திரவியம் - அரசர்பொக்கசம்.
ஆராத்திரிகம் - ஆலாத்திவிளக்கு.
ஆராத்திரியர் - பார்ப்பார், வீரசைவர்.
ஆராப்பத்தியம்-அரும்பத்தியம் அற்பம்.
ஆராமம் - சோலை, பூந்தோட்டம்.
ஆராய்ச்சி-ஆராய்வு, விசாரிப்புக்காரன்.
ஆராய்ச்சிமணி - இராசவாசலிலே கட்டிய அசையாமணி.
ஆராய்தல் - தெரிதல், தேடல்.
ஆராய்வு - நுண்ணறிவு, விசாரிப்பு.
ஆராலிகன் - பாகஞ்செய்வோன், பாகதாரி.
ஆரால் - ஆரால்மீன்.
ஆராவமுது - உண்ணுந்தோறும் இன்னும் உண்ணவேண்டும் என்னும் விருப்பத்தைக்கொடுக்கும் அமுது.
ஆராவம் - ஆரவம், ஒலி.
ஆரி - சோழன், துர்க்கை, பார்ப்பனி. பார்வதி-மாலை, மேன்மை.
ஆரிஷம் } ஆகமம், இருஷிகள் வாக்கு
ஆரிடம் } ஒன்றிரண்டுபசுமெருதும் வாங்கிக் கன்னியைத் தீ முன்னர்க் கொடுக்குமணம்நூல், பூசை, வழுக்குநிலம்.
ஆரிடர் - சமணர், முனிவர்.
ஆரிதம் - தருமநூல்.
ஆரிதேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
ஆரியகம் - சிறுகுறிஞ்சா.
ஆரியக்கூத்து - பாவைக்கூத்து.
ஆரியபடன் } சாலிவாகன சகாப்த
ஆரியபட்டன் } மிருநூற்றின்மேலிருந்த ஒரு மகாசோதிடர். இவர்செய்த சோதிட சித்தாந்தத்திற் பூமிகோளவடிவினதென்றும்பூமிதன்நாராசத்திலே தினந்தோறுஞ் சுழன்றுவருகின்றதென்றுங் கூறப்பட்டுள்ளது.
ஆரியபுத்திரன்-கணவன், குருபுத்திரன்
ஆரியப்பாவை - சித்திரப்பாவை.
ஆரியப்பூமாலை-அடங்காப்பெண், காத்தவராயன் மனைவி.
ஆரியமொழி - வடமொழி.
ஆரியம்-அழகு, இமயமலைக்கும் பொதியமலைக்கு நடுத்தேசம், செல்வம், பண்டம், வடமொழி.
ஆரியரூபன் - எத்தன்.
ஆரியர் - ஆசிரியர், ஆரியதேசத்தவர், குருமார், பார்ப்பாரிலோர் பேதத்தோர், புலவர், மிலேச்சர், வைத்தியர்.
ஆரியவராடி - ஒருபெண்.
ஆரியவாசியம் - ஓமம்.
ஆரியவேளா கொல்லி-கொல்லித்திறத்தி னொன்று.
ஆரியன்-அதிவிடயம், அறிவுடையோன், ஐயன், குரு, சூரியன், தொம்பன், புலவன், மிலேச்சன், வைத்தியன்.
ஆரியாங்கனை - ஓரியக்கி.
ஆரியாவர்த்தம் - இமயத்திற்கும் விந்தியத்திற்கு மத்தியிலுள்ள ஒரு தேசம் அது ஆரியர்களுடையது. பூர்வத்தில் பரதகண்ட ராஜாக்களியாவரும் இதிலேயே வசித்தார்கள்.
ஆரியை - உமாதேவி, காளி, துர்க்கை.
ஆரியைதநயன் - குமரன், வயிரவன், விநாயகன், வீரபத்திரன்.
ஆரீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
ஆரீதர் - வடமொழி வைத்தியங்களிற் கைதேர்ந்த ஒரு பண்டிதர்.
ஆரீரம் - சிற்றீரம்.
ஆரு - குடம், நண்டு, பன்றி.
ஆருகதம்-அருகசமயம், நாவன்மரம்.
ஆருகதன் - அருகசமயத்தவன், ஞானாவரணீய முதலிய பதினெண்குணத்தையு மரசிக முதலிய ஆறு குணத்தையும் விடுத்து முன்னைக் கன்மம் புசித்துத் தொலைந்தவிடமே வீட்டின்பமென்பவன்,

ஆருணி - அயோதன், உபநிடத முப்பத்திரண்டிலொன்று.
ஆருதல் - ஆர்தல்.
ஆருத்திரை - திருவாதிரை.
ஆருபதம் - பித்தளை.
ஆருப்பியம் - வங்கமணல்.
ஆருயிர் - அரியவுயிர்.
ஆருவம் - நீர்.
ஆரூடம் - ஏறுதல், முன்னறிக்கை.
ஆரூடன்-ஞானத்திற்றேறினவன்,பஞ்சாதிகாரிகளுக்கு ளொருவன்.
ஆரூபம்-அருமையானவை, நீங்காமை.
ஆரூரையாண்டவன்-வீதிவிடங்கப் பெருமான், வன்மீகநாதசுவாமி.
ஆரூர் - திருவாரூர்.
ஆரூர்மன்னன் - வன்மீகநாதன்.
ஆரே - ஆத்திமரம்.
ஆரேவதம் - சரக்கொன்றை.
ஆரை - ஒரு பூடு, நீராரை, புற்பாய், மதில்.
ஆரைக்காலி - தாழைக்கோரை.
ஆரைக்கீரை - ஒருவகையிலைக்கறி.
ஆரைப்பற்றி - உடும்பு.
ஆரோகணம் - எழும்புதல், ஏணி, ஏறுதல், கற்படி, தாழ்வாரம்.
ஆரோகணித்தல்-எழும்புதல், ஏறுதல்.
ஆரோகம் - அளவு, ஏறுதல், சகனம், நீளம், பாரம், மாதரிடை.
ஆரோக்கியசிந்தாமணி - ஒரு வடமொழி, வைத்தியநூல்.
ஆரோக்கியஸ்நானம்-நோய் தீர்ந்தபின்பு செய்யப்படும் ஸ்நானம்.
ஆரோக்கியம் - சுகம், சௌக்கியம்.
ஆரோபணம்-ஏறுதல், உயர்த்தல், ஒப்புவித்தல், நாட்டுதல், வில்வளைத்தல்.
ஆரோபம் - ஏறுதல், ஒன்றை வேறொன்றாயறிதல், சுட்டுதல், வைத்தல்.
ஆரோபிதம்-உண்டாக்கினது, நிறுத்தினது, வைத்தது.
ஆரோபித்தல் - தாபித்தல்.
ஆர்-அருமை, ஆத்தி, ஆரென்னேவல், உயர்திணைப் பன்மைப் படர்க்கைவிகுதி, ஐந்துருவாணி, கூர், கொன்றைசோதி, தேர்ப்பண்டியகவாய், நிறைவு, நுண்மை, பாகு, பூமி, யாரென்வினா, வண்டியிலை.
ஆர்கதம் - ஆருகதம்.
ஆர்கதன் - அருக சமயத்தான்.
ஆர்கதி - திப்பிலி.
ஆர்கலி - கடல், மழை, வெள்ளம்.
ஆர்கலிவாரணம் - வெள்ளையானை.
ஆர்கோதம் - தொன்றை.
ஆர்க்கங்கோடன்-கொல்லன்கோவை.
ஆர்க்கண்ணியன் - ஆரமாலையன்.
ஆர்க்கம் - இரத்தம், பெறுபேறு.
ஆர்க்கு - எருக்கு, ஒருமீன்.
ஆர்க்குவதம் - கொன்றைமரம்.
ஆர்க்கை - கட்டு, அரும்பு, வரிச்சு.
ஆர்ச்சவம் - உண்மை, நேர்மை.
ஆர்ச்சனம் } சம்பாத்தியம், பாதுகாத்தல், வழியுபசாரம்,விருந்தோம்பல்.
ஆர்ச்சனை }
ஆர்ச்சிதக்காரன் - சம்பாத்தியக்காரன்
ஆர்ச்சிதம் - ஆர்ச்சனம்.
ஆர்ச்சித்தல் - சம்பாதித்தல்.
ஆர்தல் - அனுபவித்தல், இணைத்தல், உடைத்தாயிருக்குதல், குடித்தல், தங்குதல், நிறைதல், புசித்தல், பொருந்தல்.
ஆர்துபம் - அரத்தை.
ஆர்த்தநாதம் - புலம்பல்.
ஆர்த்தபம் - மகளிர்சூதகம்.
ஆர்த்தர்-எளியவர், துயருறுவோர், பெரியோர், யோகிகள்.
ஆர்த்தல் - அணிதல், ஊட்டல், ஒளித்தல், ஒளிவீசி மின்னுதல், பொருதல், பொருத்தல்.
ஆர்த்தவம் - புட்பம்.
ஆர்த்தார்க்கோன் - ஆரமாலையன்.
ஆர்த்தி - அனுபவம், ஒப்பில் வழியாற் பொருள்செய்பவை, கொடுத்து அன்பம் பஞ்சசிவசத்திகளிலொன்று, மகிழ்ச்சி, விருப்பம், வின்னுதி.
ஆர்த்திகை - துன்பம்.
ஆர்த்தியம் - காட்டுத்தேன்.
ஆர்த்திரகம் } இஞ்சி.
ஆர்த்திரசாகம் }
ஆர்த்திரை - ஆருத்திரை.
ஆர்த்துதல் - நிறைத்தல், நிறைவேற்றுதல், புசிப்பித்தல்.
ஆர்த்துவம் - நுகர்விக்கும்.
ஆர்பதம் - நீழல், வண்டு.
ஆர்ப்பதம் - சாரம், பச்செனவு.
ஆர்ப்பரவம் - இரைச்சல்.

ஆர்ப்பரித்தல்-ஆரம்பித்தல், ஆரவாரித்தல், கர்ச்சித்தல்.
ஆர்ப்பரிப்பு - ஆரம்பம்.
ஆர்ப்பு - கட்டு, சிரிப்பு, நுண்ணியன, பேரொலி, போர், முண் முதலிய முறிந்ததுகள், யாழ்க்குற்றம் நான்கினுென்று. அது மாத்திரையிறந்த சுருதி ஓங்கியிசைத்தல்.
ஆர்மதி - கர்க்கடகவிராசி, நண்டு.
ஆர்மை - கூர்மை, மதில்.
ஆர்யர் - மதிக்கத்தக்கவர்.
ஆர்வக்கோழி - கோழிக்காரகமூன்றனுளொன்று. அது கொடுப்பானுங் கொள்வானும் ஆர்வத்தோடு சொடுத்தலுங் கொள்ளுதலுமாம்.
ஆர்வத்தன் - ஆசையுடையவன்.
ஆர்வமொழி - ஓரலங்காரம்.
ஆர்வம் - அன்பு, ஆசை, ஒலி, கடைப்படுதான மேழினுென்று, அஃது அன்பு முதலியவற்று னளித்தல், சருதிய பொருள்கள்மேற் றேன்றின பற்றுள்ளம், சீலை, நரகம்.
ஆர்வலன்-அன்புடையோன், நாயகன், மித்திரன்.
ஆர்வு-ஆராய்தல், உண்டல், குடித்தல், நிறைவு.
ஆர்வை - கோரைப்பாய்.
ஆலகண்டன் - சிவன், வாசுகி.
ஆலகம் - சோம்பு, நெல்லி.
ஆலகாலம் - நஞ்சு, நிலவாகை, விடம்.
ஆலகிரீடை - அலரி.
ஆலக்கச்சி - அரிதாரம்.
ஆலக்கட்டி - துருசு.
ஆலங்காடு - ஒரு சிவத்தலம்.
ஆலங்குடிவங்கனுர் - கடைச்சங்கப் புலவர்களு ளொருவர்.
ஆலசியம் - சோம்பு, தாமதம்.
ஆலத்தி - அட்டமங்கலத்தொன்று, நீராஞ்சனம்.
ஆலந்தரித்தவீசுவரர் - திருப்புள்ளமங்கையில் திருக்கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
ஆலமர்கடவுள், ஆலமர்ந்தமூர்த்தி - சிவன், தக்ஷணுமூர்த்தி.
ஆலமுடையோன் - துரிசி.
ஆலமுண்டோன் - சிவன்.
ஆலம்-அம்புக்கூடு, ஈயம், ஒருமரம், கலப்பை, நஞ்சு, நீர், பாம்பினஞ்சு, புன்கு மலர்ந்தபூ, மழு, மழை, மஞ்சளுஞ் சுண்ணும்பு கலந்தநீர், மாவிலங்கு.
ஆலம்பம் - ஆதாரம், தூங்கல், நிறுத்திட்டவரி, பற்றுக்கோடு, புகலிடம்.
ஆலம்பன் - ஆதாரமானவன், புகலிடமானவன்.
ஆலயம் - தங்குமிடம், தேவர்கோயில், யானைக்கூடம், வீடு.
ஆலலம் - கூறை.
ஆலல் - ஆடல், ஒலித்தல், சேருதல், மயிற்குரல்.
ஆலவட்டம் கால்செய்வட்டம், விசிறி.
ஆலவணியம் - அவலட்சணம்.
ஆலவாட்டு-வெய்யலில் வாட்டுகை.
ஆலவாய் - மதுரைநகர், பாம்பு.
ஆலவாய்ச்சுந்தரன், ஆலவாய்நாதன் - மதுரையிற்கோயில்கொண்ட பரமசிவக்கடவுள்.
ஆலவாய்நாயகி - மதுரைமீனுட்சியம்மை.
ஆலவாலம் - பாத்தி, வயல்.
ஆலவிருக்ஷம், ஆலவிருட்சம் - ஆதொண்டை, ஆலமரம், பெரியமரம்.
ஆலனந்தலன் - திருமால்.
ஆலா ஒருபட்சி.
ஆலாங்கட்டி - மழைக்கட்டி.
ஆலாட்டு - ஆலவாட்டு.
ஆலாதம் - நெருப்புக்கொள்ளி.
ஆலாத்தி - ஆலத்தி.
ஆலாத்து-அம்மாறு, ஒரு புள், கப்பல் வௌவாற் கொடிமுடியுங்கயிறு.
ஆலாபம், ஆலாபனம் - அலப்பு, சம்பாஷணை.
ஆலாபித்தல் - அலப்புதல், சம்பாஷித்தல்.
ஆலாபினி - ஒருவகைவீணை.
ஆலாபு - சுரை.
ஆலாபிப்பு-அலப்புகை, சம்பாஷிக்கை.
ஆலாலசுந்தரர் - ஆதிகாலத்திற் சிவன் தமது திருவுருவத்தைக் கண்ணுடியிற் பார்த்தருளலும் அத்திருப்பிரதிவிம்பம் அதி சுந்தரவடிவுகொண்டொருமூர்த்தியாயிற்று. அம்மூர்த்தியே இவர், இவர் பின்னர் ஒரு காரணத்தாற் சுந்தரமூர்த்தி நாயனுராக அவதாரஞ் செய்தவர்.
ஆலாலம் - விடம், வெளவால்.

ஆலாவர்த்ததம் - ஆலவட்டம்.
ஆலானம் - கட்டுகை, கயிறு, யானைகட்டுங்கயிறு, யானைகட்டுந்தறி.
ஆலி-அமுதம், ஆலாங்கட்டி, களியென்னேவல், கள், காற்று, மழை, மழைத்துளி, தேள், தேனீ, தோழி, வமிசம், வரம்பு, வரி, விடமுள்ளன.
ஆலிங்கனம் - தழுவல், புணர்ச்சி.
ஆலிங்கியம் - மார்பில் வைத்துக்கொட்டும் வாத்தியம்.
ஆலிஞ்சரம் - நீர்ச்சாடி.
ஆலித்தல் - களித்தல், தூறல்.
ஆலிந்தகி - அணில்.
ஆலிந்தம் - திண்ணை, முற்றம்.
ஆலியகம் - சிறுகுறிஞ்சா.
ஆலீடம் - வலக்கால் மண்டலித்திடக்கால் முந்துறுநிலை.
ஆலீனகம் - துத்தநாகம்.
ஆலீனம் - புதையல்.
ஆலு - நீர்க்குடம்.
ஆலுதல் - ஆலல், தொங்குதல்.
ஆலூகம் - வில்வம்.
ஆலேகனம் - எழுதுகை.
ஆலேகனி - எழுத்தாணி, வரைகோல்.
ஆலேபம், ஆலேபனம் } ஒரு கந்தத்தயிலம்.
ஆலை-கரும்பாலை, கரும்பு, கள், கிட்டி.
ஆலைபாய்தல் - மனச்சுழற்சி.
ஆலயம் - தங்குமிடம், தேவர்கோயில், நகரம், பிராமணவீடு, யானைக்கூடம், வீடு.
ஆலவாய் - மதுரை.
ஆலோகம், ஆலோகனம் } பார்வை பிரபை, முகமன்.
ஆலோகன் - தெளிந்தபுத்திமான்.
ஆலோசகபித்தம் - ஒருவகைப் பித்தம். அது கண்களில் வாசம் பண்ணிக்கொண்டு எல்லாப் பொருள்களையும் நன்றாய்த் தெரிவிக்கும்.
ஆலோசகம் - அறிவிப்பது.
ஆலோசனை - காட்சி, சிந்திப்பு, புத்தி, யோசனை.
ஆலோசித்தல்-சிந்தித்தல், யோசித்தல்.
ஆலோடனம் - கலக்குதல், கலப்பு.
ஆலோலம் - கலக்குதல், நீரொலி, புள்ளோச்சு மொலி.
ஆலோலிதமுகம் - ஆசையான் மலர்ந்த முகமா யொருவனை அழைத்தல்.
ஆலோலிதம் - சந்தோஷம், விருப்பம்.
ஆலோன் - சந்திரன்.
ஆல் - அசைச்சொல், ஆமெனல், ஆலமரம், ஆலென்னேவல், கார்த்திகைமீன், துவர்பத்தினென்று, மூன்றனுருபு.
ஆல்வாடல், ஆல்வாடுதல் } சிறுகக்காய்தல்.
ஆல்வாட்டு - உலர்ச்சி.
ஆல்வாட்டுதல் - சிறிதுகாயச்செய்தல்.
ஆல்வு - அகலமானது.
ஆவகம்-சத்தவாயுவினென்று, சுமக்குமது.
ஆவகை - யாறு.
ஆவசதம் - ஓமாக்கினி வளர்க்குமிடம், வீடு.
ஆவசம் - சத்தமுகிலினென்று.
ஆவசியகம் - அவசரம்.
ஆவஞ்சி-ஒருவகைத்தோற்கருவி, இது ஆவினுடைய வஞ்சித்தோலைப்போர்த்தலால் இப்பெயர் பெற்றது.
ஆவடுதுறை - திருவாவடுதுறை.
ஆவட்டங்கொட்டல் - ஆவாய்க் கத்துதல்.
ஆவட்டே சுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
ஆவட்டை - ஒருபூண்டு.
ஆவணம் - அடையாளம், உரிமை, உரிமைப்பத்திரம், கடை, கடைவீதி, கரை, தெரு, தேரோமோட்டுப் பொருந்தியபீடம், புனர்பூசம்.
ஆவணி - அவிட்டநாள், ஐந்தாம்மாசம்.
ஆவணியம் - கடை, கடைவீதி.
ஆவணியவிட்டம் - ஆவணிமாதத்திலே வரும் அவிட்ட நக்ஷத்திரம்.
ஆவணீயம் - கடைவீதி.
ஆவதத்தம் - ஆபத்துக்காலத்துக் கென்றுவைத்த திரவியம், சத்தமுகிலில் ஒன்று.
ஆவதம் - ஆவர்த்தம்.
ஆவது ஆகுவது, விகற்பப்பொருளைத் தருமோரிடைச்சொல்.
ஆவத்து - ஆபத்து, இக்கட்டு, உபத்திரவம்.
ஆவத்துவம் - நீர்ச்சுழி.
ஆவநாழி - அம்புக்கூடு.
ஆவபநம் - கோணி, தொம்பைக்கூடு.
ஆவம்-அம்புக்கூடு, குங்குமமரம், நாணி,

ஆவரகம் - திரைச்சீலை, மூடி.
ஆவரணசத்தி - பசு பதி பாசம் மூன்றையும் பேதந் தெரியாது மறைக்கும் ஒரு சத்தி.
ஆவரணம் - ஆணவமலம், ஈட்டி, கேடகம், கோட்டை, சீலை, பரிசை, மதில், மறைவு, மூடி, மேற்புடவை, [வேலி.
ஆவரணித்தல் - மறைத்தல்.
ஆவரணியம் - மறைந்திருக்கை.
ஆவரி - அம்பு.
ஆவரை - ஆவரை, நிலவாகைப்பூண்டு.
ஆவர்த்தகம் - சுழலுதல், சுழற்காற்று பிடருரோமம், மயிர்முடி, மனக்கலக்கம்.
ஆவர்த்தம்-சத்தமேகத்தொன்று. அஃது நீரைப்பொழிவது, சுழல்காற்று சுழி, மயிர்முடி.
ஆவர்த்தனம் - உருக்குதல், கடைதல், கலக்குதல், சுழற்றுதல், பழக்கம்.
ஆவர்த்தேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
ஆவலங்கொட்டல்-வாயாலார்த்தாடல்.
ஆவலம் - கொல்லை, வாயாலார்த்தல்.
ஆவலர் - காதலர், நாயகர்.
ஆவலாதி - அங்கலாய்ப்பு, ஆசை, தூற்றுதல்.
ஆவலி - இரேகை, ஒழுங்கு, தொடர்ச்சி, வமிசம்.
ஆவலித்தல் - ஆசைப்படுதல், கொட்டாவிடுதல், புலம்பல்.
ஆவலிப்பு, ஆவல் - ஆசை, பேராசை, வளைவு
ஆவல் - சீந்தில்.
ஆவளி - இரேகை, ஒழுங்கு.
ஆவளித்தல் - ஆவலித்தல்.
ஆவளிப்பு - ஆசை, வளைவு.
ஆவறி - அங்கலாய்ப்பு, அவா.
ஆவா - அதிசயக்குறிப்பு, இரக்கக்குறிப்பு.
ஆவாகனமுத்திரை-அத்திராதி முத்திரை இருபத்தாறனு ளொன்று.
ஆவாகனம்-அக்கினிக்குப் பலி செலுத்தல், அழைத்தல், தாபனம்.
ஆவாகித்தல் - தாபித்தல்.
ஆவாகை - நிலவாகைப்பூண்டு.
ஆவாசம்-புகலிடம், வசிக்குமிடம், மருதநிலத்தூர், வீடு.
ஆவாபகம், ஆவாபம் - கைவளை, கூத்திஞேர்வி கற்பம், பாத்தி, விரை தானியம்.
ஆவாபனம்-நெய்வோர்தறி, வடிக்கயிறு
ஆவாயகம் - வளையுடைப்பொருள்.
ஆவாய்க்கத்துதல்-இல்லையென்று சொல்லித்திரிதல்.
ஆவாரை - ஆவரை, நிலவாகை.
ஆவாலம் - பாத்தி, வெளவால்.
ஆவி - அரூபி, ஆன்மா, உயிரெழுத்து, உயிர், உயிர்ப்பு, குளம், தெவதிரீத்துவத்திஞென்று, நீராவி, பிட்டு, புகை, புகையிலை, வாசனை, வெப்பம்.
ஆவிசீவாளம் - யாவச்சீவம்.
ஆவிடை - சத்திரூபம்.
ஆவிடையார் - ஆவுடையார்.
ஆவிதம் - துறப்பணம், திருகூசி.
ஆவித்தல்-கொட்டாவிவிடுதல், புகைத்தல், பெருமூச்செறிதல்.
ஆவிபதம் - புறுமுட்டை, பேராமுட்டி
ஆவிபத்தம் - பேராமுட்டி.
ஆவிபத்திரம் - புகையிலை.
ஆவிபறிதல்-ஆவியெழும்புதல், சாதல்.
ஆவிபோதல் - சாதல்.
ஆவிப்பதங்கம் - வைப்புச்சரக்கு.
ஆவிப்பு - கொட்டாவி.
ஆவியம் - உயிர், சரீரபலம்.
ஆவியர் - வேடர், வேளாளர்.
ஆவியேகல் - இறத்தல்.
ஆவியேற்றம் - பெருமூச்சு.
ஆவிரங்காய் - ஆவாரைக்காய்.
ஆவிரம் - இடையரூர்.
ஆவிரம்பு - ஆவாரம்பூ.
ஆவிருஷ்டி, ஆவிருட்டி - மழை.
ஆவிருதம்-மறைக்கப்பட்டது, வஸ்திர முதலியவற்றுற்சுற்றப்பட்டதேகம்.
ஆவிருதவாதம் - ஒருவகை வாதநோய்.
ஆவிருதி-ஆணவமலம், கிரமம், சடங்கு, மறைப்பு, விதம்.
ஆவிருத்தி-சுற்றுதல், மாறிப்பிறத்தல், முழுவட்டம், வழக்கம்.
ஆவிரை - ஆவாரை, ஒருமரம்.
ஆவிலம் - அழுங்கு, கலங்கனீர்.
ஆவிலன் - அழுக்கன், கருமை, கிறத்தோன்.

ஆவிவாங்குதல் - உயிர்வாங்குதல் சுவாசத்தை யுள்வாங்குதல், வருத்துதல்.
ஆவிவிடல் - உயிர்விடல்.
ஆவினன்குடி - சுப்பிரமணிய மூர்த்திக்குரிய ஆறுதலங்களிலொன்று.
ஆவின் - புல்லுருவி.
ஆவீதம் - முப்புரிநூல்.
ஆவு - குன்றி.
ஆவுகன் - தகப்பன்.
ஆவுடைநாயகர் - திருமுருகன்பூண்டியிலே திருக்கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
ஆவுடைநாயகி - திருமுருகன் பூண்டியிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
ஆவுடையார் - சத்திரூபமாகிய பீடம்.
ஆவுதி - ஆகுதி.
ஆவுத்தன் - தமக்கைபுருடன்.
ஆவிரிஞ்சி, ஆவுரிஞ்சுதறி } ஆதீண்டுகுற்றி.
ஆவுளி - ஆதரவின்மை, ஒழுங்கீனம்.
ஆவுளிப்பேச்சு - ஆதரவற்ற பேச்சு, ஒழுங்கற்ற பேச்சு.
ஆவெனல்-இரக்கக்குறிப்பு, வாய்திறத்தல்.
ஆவேசம்-சீக்கிரம், தடுமாற்றம்.
ஆவேகி - ஆடுதின்னாப்பாளை.
ஆவேசம்-ஆவி, சன்னதம், பெருமை, மனம், பற்றுதல், வாயில், வெறி, வேடம்.
ஆவேசனம்-கம்மாலை, கோபம், சித்திரக்காரர்வீதி, சூரியமண்டலம், வாயில்.
ஆவேசிகன் - விருந்தன்.
ஆவேஷம், ஆவேடம் } ஆவேசம்.
ஆவேட்டகம் - வேலி.
ஆவேட்டனம் - சுற்றுதல்.
ஆவேஷ்டன், ஆவேட்டன் } யாகத்தி லுபதேசஞ் சொல்லுவோன்.
ஆவேதகன் - வழக்காளி.
ஆவேலம் - தம்பலம்.
ஆவேலி - தொழுவம்.
ஆவோ - அதிசயவிரக்கச்சொல்.
ஆழமுடைமை- நூழலகுபத்தனுள் ஒன்று, அது பார்க்கப்பார்க்க ஆழ்ந்தகருத்திருத்தல்.
ஆழம்-அறிதற்கரியது, ஆழ்ந்தகருத்து. கடல், தாழ்வு.

ஆழல் - கறையான், தாழ்தல்.
ஆழாக்கு - அரைக்காற்படி.
ஆழி - கடல், கரைப்பொது, சக்கரம், தேருருளை, மோதிரம், யானைக்கை, நுனி, வட்டம், வண்டி.
ஆழிக்கொடி - பவளம்.
ஆழித்தல் - ஆழமாகத்தோண்டல்.
ஆழிமுரசோன் - மன்மதன்.
ஆழியளித்தோன் - விஷ்ணுவுக்குச் சக்கரம் கொடுத்தோன், சிவன்.
ஆழியன், ஆழியான் } விஷ்ணு, வஞ்சகன், வருணன்.
ஆழிவிட்டோன் - சிவன், விட்டுணு.
ஆழிவித்து - முத்து.
ஆழிவிரல் - பவுத்திரமோதிரம்.
ஆழிவிரை - ஒருபயிர், ஒருவிரை.
ஆழிவெம்முரசோன் - மன்மதன்.
ஆழுதல், ஆழ்தல் } அழுந்தல், தாழ்தல்.
ஆழ்த்தல் - கட்டல், தாழ்த்தல்.
ஆழ்ந்தகருத்து - உட்கருத்து.
ஆழ்ந்தவறிவு - மகா அறிவு.
ஆழ்வார் - கருடன், விட்டுணுபத்தர்.
ஆழ்வார்திருநகரி-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்று.
ஆளகம் - சுரைக்கொடி.
ஆளரி - சிங்கவேறு, நாரசிங்கமாகிய விஷ்ணு.
ஆளல் - ஆளுதல்.
ஆளவந்தார் - ஆழ்வார்களு ளொருவர்.
ஆளன் - எசமான்.
ஆளாமை-கட்டுத்தறி, கலப்பை, யானைகட்டுந்தறி.
ஆளி ஆலி, ஆள்வோன், ஒழுங்கு, ஒருவிரை, கரைப்பொது, சிளிஞ்சில் போன்றசிப்பி, சிங்கம், சிங்கவிராசி, செய்கரை, மட்டி, யாளி, யானை.
ஆளியூர்தி - காளி, துர்க்கை.
ஆளிவிரை - ஒருவிரை.
ஆளுகை-ஆட்சி, ஆளுந்தன்மை, இராச்சியப்பொது.
ஆளுடைநாயகியம்மை - திருப்பரங்குன்றத்திற் கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
ஆளுதல்-அடிமைகொள்ளுதல், ஆட்சிபண்ணல், காவற்கூடு.
ஆளொட்டி, ஆளொதுங்கி } காவற்கூடு, மறைவு.

ஆளோட்டி - ஆளை வேலைகொள்வோ[ன்.
ஆளோலை - அடிமைச்சீட்டு.
ஆள்-அடிமை, ஆண்டவன், ஆண்மகன், ஆளென்னேவல், உயர்திணைப் பெண்பாற்படர்க்கை யொருமைவிகுதி.
ஆள்மாகாணம் - கூலியாட்கள் வேலை செய்யுமிடம்.
ஆள்வணங்கி - அரசமரம், வேப்பமரம், தொட்டால்வாடி.
ஆள்வள்ளி - மலைச்சக்கரவள்ளி.
ஆள்விழுங்கி - நீளவங்கி.
ஆள்வினை - உற்சாகம், முயற்சி, ஆள்வினை.
ஆரகோரம் - கொன்றை.
ஆறங்கம் - வேதாங்கத்தின் பொருளாறும்.
ஆறடிவிருத்தம் - கலிவிருத்தம், தரவு, கொச்சகம்.
ஆறதீகம் - ஆறு; கல்நார்.
ஆறலை - வழிப்பறிக்குந்தன்மை,
ஆறலைத்தல் - வழிப்பறித்தல்.
ஆறலைப்பு - வழிப்பறிக்கை.
ஆறல் - அலைதல், ஆறுதல்.
ஆறாக்காரியம் - தேற்றம்.
ஆறாடி - தூர்த்தன்.
ஆறாட்டம் - நோயுற்றோர்கலக்கம்.
ஆறாதாரச்சூத்திரம்-எற்றச் சித்தரென்பவராற் செய்யப்பட்ட ஒரு வைத்திய நூல்.
ஆறாதாரம் - சடாதாரம், அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பனவாம்.
ஆறாதூறு - அவதூறு, அழிப்பு.
ஆறாத்துயர் - நீங்காதகவலை, மாறாத்துக்கம்.
ஆறாப்புண் - குலைநோயா லுண்டாகும் ஒருவித விரணம்.
ஆறாமீனறவோட்டு - மாலுமிகள் பெரும் புசலடித்துப்போகிறதைத் தெரிந்துகொள்ளும் ஒரு வானக்குறி.
ஆறாமீன் - கார்த்திகைநாள்.
ஆறு-ஆறென்னேவல், ஒழுக்கம், ஒரு எண், நதி, வழி.
ஆறுகட்டி - பண்டாரங்களணியும் ஒரு காதணி.
ஆகாறுடு - ஆற்காடு, சடாரணியம்
ஆறுகாட்டி - மாலுமி, வழிகாட்டி.
ஆறுதல்-ஆறியிருத்தல், இளைப்பாறல், ஓய்தல், சூடுகுளிர்தல், சொஸ்தமாதல், தணிதல்.
ஆறுமுகன் } முருகன், குமரக்கடவுள்.
ஆறுமுகவன் }
ஆறெறிபறை - வழிபறித்துக்கொட்டும் பறை.
ஆறை - ஆற்றூர்.
ஆற்காடு - ஒரூர்.
ஆற்பதம் - சாரம்.
ஆற்பலம் - சாரம், பலம்.
ஆற்ற - மிகுதியாய்
ஆற்றலரி-சுடலைப்பூச்செடி, செங்கோட்டை.
ஆற்றலுடைமை - வலியுடைமை.
ஆற்றல் - அதிகம், சகித்தல், செய்தல், ஞானம், தணித்தல், நிலையுடைமை, பரித்தல், பொறை, மிகுதி, முயற்சி, [வலி.
ஆற்றல்கேடு-வலியழிவு.
ஆற்றாக்கேடு - மிகுதரித்திரம், மிகுதேவை.
ஆற்றாக்கொலை - ஆற்றாப்பட்சம்.
ஆற்றாச்சண்டி-திருத்தியடையாதவன் மானமற்றவன், விடாதுஇரப்போன்.
ஆற்றாத்தனம் - திருத்தியடையாமை.
ஆற்றாப்பட்சம்-ஆற்றாமை, தரிக்கக்கூடாமை.
ஆற்றாமை-சகிக்கக்கூடாமை, திருத்தியின்மை, பொறாமை.
ஆற்றார் - தரித்திரர், தோற்றார், பகைவர், வருந்தினர்.
ஆற்றி - ஆறுதல்.
ஆற்றிடைக்குறை - அரங்கம், ஆற்றினெடுக்கமான விடம், ஆற்றுக்கிடையே யுயர்ந்ததிடர்.
ஆற்றிடைப்படல் - வழியிலிருத்தல், வழியெதிர்ப்படல்.
ஆற்றித்தேற்றல் - தணித்துத் திடன் சொல்லல்.
ஆற்றிப்போற்றிக்கொள்ளல் - ஆற்றல், தன்புற்றோரைக் காத்தல், விருந்தினரை யுபசரித்தல்.
ஆற்றின்வித்து - கர்ப்பூரசிலாசத்து.
ஆற்று-ஆற்றென்னேவல், தலைக்கடை.
ஆற்றுக்காலாட்டியர்-உழத்தியர், மருதநிலப்பெண்கள்.

ஆற்றுக்கால் - ஆற்றிலிருந்து பாயும் வாய்க்கால்.
ஆற்றுச்சிப்பி - ஆற்றுக்கிளிஞ்சில்.
ஆற்றுச்சுழி - ஆற்றுநீர்ச்சுழி.
ஆற்றுச்செருப்படி } ஒருபூண்டு.
ஆற்றுச்செருப்படை }
ஆற்றுணா - கட்டுச்சோறு, வழியுணவு.
ஆற்றுதல் - தணித்தல், துயர்தீர்த்தல்.
ஆற்றுத்தும்மட்டி-பேய்க்கொம்மட்டி.
ஆற்றுநத்தை - ஒருவிதநத்தை.
ஆற்றுநீர் - ஆற்றுச்சலம்.
ஆற்றுநீர்ப்பொருள்கோள் - பொருள்கோளெட்டினொன்று.
ஆற்றுநெட்டி - நீர்ச்சுண்டி. [கல்.
ஆற்றுப்பச்சை-நாகப்பச்சை, பச்சைக்
ஆற்றுப்படுத்தல் - சன்மார்க்கத்தி லுட்படுத்தல், வழிநடத்துதல்.
ஆற்றுப்படை - ஒரு பிரபந்தம், வழிப்படுத்தல்.
ஆற்றுப்பாசி - ஒருபூண்டி.
ஆற்றுப்பித்தல் - ஆற்ரேரம்.
ஆற்றுப்பூத்தான் - பூனைக்காலி.
ஆற்றுப்பூவரசு - ஒருமரம்.
ஆற்றுப்பெருக்கு - வெள்ளம்.
ஆற்றுமடை - வாய்க்கால்முகம்.
ஆற்றுமம் - ஆற்றுமா, பிராணன்.
ஆற்றுமரி - நீருமரி.
ஆற்றுமல்லிகை - ஒருமல்லிகை.
ஆற்றுமா - ஆன்மா, பிராணன்.
ஆற்றுமுள்ளி - கண்டங்கத்திரி.
ஆற்றுமேலழகி - ஒருபூடு.
ஆற்றுவரி-இசைப்பாவகையுளொன்று
ஆற்றுவாளை - ஒருமீன்.
ஆற்றுவித்தல் - ஆறுபாய்முகம், உறுதிசெய்தல், தயிரியப்படுத்தல், வலிதருதல்.
ஆற்றெதிர்ப்படல்-வழி யெதிர்ப்படல்.
ஆற்றொழுக்கு-ஆற்றுநீரோட்டம், சூத்திரநிலை செய்யுணிலைகளிலொன்று.
ஆனகதுந்துபி - போர்ப்பறை, வசுதேவன்.
ஆனகம் - இடி, காதினுட்சவ்வு, சுரை, தம்பட்டம், துந்துமி, தேவதரு, போர்ப்பறை, மத்தளம், முகில், மேளம்.
ஆனகன் - வசுதேவன், தம்பி.
ஆனகொந்தி - இருஷீயமுகபர்வத சமீபத்திலுள்ள ஒருநகர்.

ஆனதம் - வணங்கியிருப்பது.
ஆனத்தேர் - விடத்தேர்ச்செடி.
ஆனந்த-நாற்பத்தெட்டாவதுவருடம்.
ஆனந்தகானனம் - காசிப்பட்டினம்.
ஆனந்ததம் - யோனி.
ஆனந்தது - சந்தோஷம்.
ஆனந்தநி - பிரமன்பட்டணம்.
ஆனந்தநித்திரை - யோகநித்திரை.
ஆனந்தபடம் - கூறைப்புடவை.
ஆனந்தபரவசம் - ஆநந்தக்களிப்பு.
ஆனந்தபாஷ்பம் } பேரின்பக் கண்ணீர்.
ஆனந்தபாட்பம் }
ஆனந்தபிரபவம் - இந்திரியம்.
ஆனந்தபைரவி - ஒருபண்.
ஆனந்தமயகோசம் - பஞ்சகோசத்துள் ஒன்று.
ஆனந்தமயம்-கடவுள், கோசமைந்தில் ஒன்று, தன்வசமற்றிருத்தல்.
ஆனந்தமயன் - கடவுள், தன்வசமற்றிருப்போன்.
ஆனந்தமூலி - கஞ்சா.
ஆனந்தம் - அரத்தை, கடவுள், சந்தோஷம், பாக்குற்றங்களி னோர்வகை, பேரின்பம்.
ஆனந்தரூபன் - பஞ்சகோச கன்மபந்த சன்மமரணதியற்ற வடிவன்.
ஆனந்தலட்சணம் - பரமாத்மா சகலபதார்த்தத்தைக் காட்டியுந் தன்னிடத்திற் பிரமை நீங்காதிருப்பது.
ஆனந்தவருவி - ஆனந்தக் கண்ணீர்ப் பெருக்கு.
ஆனந்தவல்லி - பார்ப்பதி.
ஆனந்தவாதி - கௌரிபாஷாணம்.
ஆனந்தனம்-இன்பங்கொடுப்பது, உபசரணை, சந்தோஷித்தல்.
ஆனந்தன் - அருகன், கடவுள், களிப்புடையோன், சிவன்.
ஆனந்தாத்துமா - பிரமன்.
ஆனந்தாலயம் - சந்திரனுலகு.
ஆனந்தி - களிப்புடையாள், பார்வதி.
ஆனந்தித்தல் - சந்தோஷித்தல்.
ஆனந்திப்பித்தல் - சந்தோஷப்படுத்து
ஆனந்திப்பு - சந்தோஷம். [தல்.
ஆனந்தியம் - அழிவின்மை, முடிவின்மை.
ஆனந்தை - கொட்டைக்கரந்தை, பார்வதி.

ஆனமானம் - சிறப்பு.
ஆனமானவன் - சிறந்தவன்.
ஆனம் - கள், பூரகவாயு, மஸ்துள்ள பானம்.
ஆனயம் } உபநயம், கொண்டு வ
ஆனயனம் } ருகை.
ஆனர்த்தம்-களரி, நீர், யவனசமுத்திரத்தில் துவாரகைக்குச் சமீபத்திலுள்ள நாடு. இதிற் சரியாதிமகன் ஆனர்த்தன் குசஸ்தலி என்னும் நகரத்தை நியமித்தான். அதனால் அதனையுள்ளிட்டநாடெல்லாம் அவன் பெயர்பெற்றது, யுத்தம்.
ஆனர்த்தன் - சரியாதிமகன், இவனுடைய மகன், ரைவதன்.
ஆனல் - நீங்கல்.
ஆனனம் - ஆநநம், முகம்.
ஆனுகம் - சலவடைப்பு, நீளம், பொருமல்.
ஆனுது - கெடாது.
ஆனுத்தியம் - கராகபத்தியத்தில் இருந்தெடுத்துத் தக்ஷணைக்கினியிற் சேர்க்கு நெருப்பு.
ஆனுமை - அமையாமை, உத்திராடம், கெடாமை, நீங்காமை.
ஆனுயகலை - வலைபோன்றவத்திரம்.
ஆனுயம் - வலை.
ஆனுயர் - அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர்.
ஆனி - உத்திராடநாள், எல்லை, ஒருமாதம், கேடு, கேட்டை, பொருந்தாதி, மூலநாள், வானலகு, வெட்டுக் குருத்து.
ஆனியம் - நாள், பகல், பருவம், பொழுது, மூலநாள்.
ஆனிரை - பசுக்கூட்டம்.
ஆனிரைகாத்தோன் - கிருட்டினன்.
ஆனிலன் - அனுமான், வீமன்.
ஆனிலை - பசுக்கொட்டில்.
ஆனீகன் - வசுதேவன் தம்பி, இவன் இரண்டா மைந்தனும் இப்பெயர் பெறுவன்.
ஆனும் - இனிமை, நன்மை.
ஆனுதல் - நீங்குதல்.
ஆனுலகு - தேவலோகம்.
ஆனெய் - பசுவினெய்.
ஆனேறு - எருது.

ஆனை - அத்திமரம், யானை.
ஆனைக்கண் - ஆனைக்காய், முதிர்ந்தகாயிற்படும் புள்ளி.
ஆனைக்கண்படுதல் - புள்ளிபடுதல்.
ஆனைக்கதுப்பு - யானையின்கன்னமதம்.
ஆனைக்கரப்பன் - அக்கியென்னும் ஒருவகைநோய்.
ஆனைக்கள்ளிமுளையான் - ஒரு பூடு.
ஆனைக்கற்றலை - ஒருமீன். [ட்டி.
ஆனைக்கன்று - அத்திமரம், யானைக்கு
ஆனைக்காயம் - யானைக்குக் கொடுக்கும் ஒருவிதப் பெருங்காயம்.
ஆனைக்கால் - தண்ணீர்க்குழாய், யானையினதுகால், வாதக்கால். [ய்.
ஆனைக்கால்வாதம்-ஒருவகை வாதநோ
ஆனைக்கூடம்-ஆனைக்கட்டுமிடம். [ய்.
ஆனைக்கொம்பன் - ஆனைவாழை, ஒருவகைநெல்.
ஆனைக்கோடன்சுரை ஒருவகைச்சுரை
ஆனைக்கோடு - ஆனைக்கொம்பு.
ஆனைசேனை - மிகுதி.
ஆனைச்சப்பரம் - அம்பாரி.
ஆனைச்சீரகம் - ஒருபூடு.
ஆனைச்செவியடி - ஒருபூண்டு.
ஆனைத்தடிச்சல்-புளிநடலை, புளிநரளை,
ஆனைத்தடிப்பு - ஒருபூடு. [புளியரணை.
ஆனைத்திசை - வடக்கு.
ஆனைத்தும்பை - பெருந்தும்பை.
ஆனைத்தோட்டி - அங்குசம்.
ஆனைநெருஞ்சில் - ஆனைக்கால்வணங்கி புளியரணை, பெருநெருஞ்சில்.
ஆனைப்படுவன் - விலங்கிஞோர்நோய்.
ஆனைப்பந்தி - ஆனைக்கூட்டம்.
ஆனைப்பாகன் - யானைப்பணிக்கன்.
ஆனைப்பிச்சான் - ஒருபூண்டு.
ஆனைப்பேன்-ஒருபேன், கத்திரிச்செடியிலுண்டாகும் ஒருபூச்சி.
ஆனைமஞ்சள் - ஒருபூடு.
ஆனைமத்தகம் - கும்பம்.
ஆனைமயிர்க்காப்பு - யானை வால்மயிராற்செய்த கைவளை.
ஆனைமலை-மதுரைக்குச் சமீபத்திலுள்ள ஒருமலை.
ஆனைமீன் - ஒரு பெருமீன்.
ஆனைமுகத்தோன் - விநாயகன்.
ஆனைமுகன் } கசமுகாசுரன், விநா
ஆனைமுகவன் } யகன்.

ஆனையணைதறி - ஆனைகட்டுந்தறி.
ஆனையறுகு - ஒருவகையறுகு.
ஆனையறையும்புள் - ஆனையுண்குருகு.
ஆனையானனன் - விநாயகன்.
ஆனையிலத்தி-ஆனைச்சாணம்.
ஆனையிருஞ்சிப்புள் } யானையை விழுங்கும் பட்சி.
ஆனைவுண்குருகு }
ஆனையூர்தி - இந்திரன், ஐயன்.
ஆனையேற்றம்-ஆனையேறும்பரிட்சை, யானையை மரக்கலத்தேற்றுதல்.
ஆனைவணங்கி - தேட்கொடுக்கி.
ஆனைவாழை - ஒருவாழை.
ஆனைவிழுங்குமீன் - திமிங்கிலம்.
ஆனைவீரர் - அரசரெண்வகைத் துணைவரில் ஒருவகையார்.
ஆன் - ஆனென்னேவல்,இடபவிராசி, உயர்திணை யொருமை யாண்பாற்படர்க்கை விகுதி, சாரியை, பசு, பசுப்பொது, பெண்மரை, மூன்றனுருபு.
ஆன்கன்று - கன்றுக்குட்டி.
ஆன்கொட்டில் - ஆனிலை.
ஆன்பொருந்நதி - சூதநதி.
ஆன்பொருத்தம் - புண்ணிய தீர்த்தம் ஐம்பத்து மூன்றனுளொன்று.
ஆன்மசரீரத்திரயம்-மூவகையான்மசரீரம். அவை தூலசரீரம், சூக்கும சரீரம், காரணசரீரம் என்பன.
ஆன்மதத்துவம்-ஆத்துமத்திற்குரியதத்துவம். அவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், மெய், வாய், கண், மூக்கு, செவி, வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம், சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம், குணம் என்பன.
ஆன்மதரிசினை - ஆத்துமநிலையறிதல்.
ஆன்மத்திரயம்-மூவகை யான்மாக்கள். அவர் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் எனப்படுவார்.
ஆன்மபோதம் - ஆத்துமஞானம்.
ஆன்மவறிவு-ஆத்துமத்திற்குரிய உணர்ச்சி. அவை சுவையுணர்வு, ஒளியுணர்வு, ஊறுவுணர்வு, ஓசையுணர்வு, கந்தவறிவு,பகுத்தறிவுஎன்பனவாம்.
ஆன்மாவென்பன - உயிர், சிவனட்டமூர்த்தத்தொன்று, பசு.
ஆன்மீச்சணம் - தேடல்.
ஆன்மெழுக்கு - பசுஞ்சாணம்.
ஆன்வலர் } இடையர்.
ஆன்வல்லோர் }
ஆன்வீட்சகம் - தருக்கசாத்திரம்.
ஆன்ற-மாட்சிமைப்பட்ட,விசாலமான.
ஆன்றல் - அபலம், மாட்சிமை, மிகுதி.
ஆன்றவர் } அறிவுடையோர், சன்மார்க்கர், புலவர், பெரியோர்.
ஆன்றோர் }
ஆன்றிரள் - பசுமந்தை.
ஆன்றோர் - ஆன்றவர்.

# இ



இ-தமிழ் மொழியின் நெடுங்கணக்கில் வரும் மூன்றாம் எழுத்து,உயிர் முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள் அண்பல்லடியை நாவினது விளிம்பு பொருந்த ஒலிக்கும் ஒரு குற்றுயிர், அன்பு, ஆச்சரியம், இகழ்ச்சி, ஓரெழுத்து, ஒரு சுட்டு, முப்பாலொருமை முன்னிலை வினைவிகுதி (உ-ம்) உண்டி, முப்பாலொருமை, முன்னிலையேவல்விகுதி (உ-ம்) கேட்டி உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கைப் பெயர்விகு (உ-ம்) குறத்தி,உயர்திணையாண்பாற படர்க்கையொருமைப்பெயர்விகுதி (உ-ம்) வில்லி,அஃறிணைப்படர்க்கையொருமைப்பெயர் விகுதி (உ-ம்) ஊருணி விரவுத்திணை யொருமைப் பெயர் விகுதி (உ-ம்) செவியிலி,வினையெச்சவிகுதி (உ-ம்) எண்ணி.
இஃது - இது.
இக - இகவென்னேவல், முன்னிலை அசைச்சொல்.
இகசுக்கு - நீர்முள்ளிப்பூண்டு.
இகத்தல் - கடத்தல், நடத்தல், பழித்தல், புறப்படுதல், பொறுத்தல், போதல், மீறுதல், விட்டு விடுதல்.
இகந்துபடுதல் - கடந்துபோதல், நிராகரிக்கப்படுதல், பிறழுதல், தவறுதல்.
இகபரசாதனம் - இம்மை மறுமைக்கடுத்த கடமைகளை நடப்பித்தல்.

ஒலி, கூடிநிற்றல், கொடை, சங்கீதம், சொல், பண்பு, பாட்டிசை, புகழ், பொன், முத்தமிழிலொன்று.

இசைகேடு - அவகீர்த்தி, சத்துக்கேடு, சுரபேதம்.

இசைகொள்ளல் - கீர்த்திபெறல்.

இசைகோள் - தாளம்.

இசைக்கரணம் - இசைக்குரிய கரணங்கள், அவைபண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்பன.

இசைக்கருவி-இசைக்குரிய கருவிகள். அவை தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி என்பன.

இசைக்கழல்-தேர் நூறுகுதிரை, ஆயிரம் யானை, நூறு காலாள் பதினாயிரம், போரின் மடியவென்ற வெற்றிபெற்ற வேந்தர் இடக்காலிலணியும் வீரவெண்டயம்.

இசைக்கிரியை - இசைக்குரிய செயல்கள் அவை எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டி, தாக்கு என்பன.

இசைக்குதல் - சொல்லுதல்.

இசைக்குழலிலக்கணம் - இசைக்குழலினதிலக்கணம். அது மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி என்னும் இவற்றால் உண்டாக்கப்படுவதாம்.

இசைக்குழல் - ஊதுகுழல்.

இசைக்குழற்பிண்டி யிலக்கணம்-இசைக்குழலினது பிண்டிக்குரிய இலட்சணம். அது இருபதுவிரல் நீளமும் நாலரைவிரற் சுற்றளவும் ஆகத் துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஓர்பாதி மானிறுத்திக் கடைந்து வெண்கலத்தால் அணைசுபண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகத்தை வெளியாக விடப்படுவது.

இசைக்குழற்றுளை யிலக்கணம்-இசைக்குழலினது துளைக்குரிய இலக்கணம் அது இருபது விரலளவாகத் தாயமுகத்தினிரண்டுநீக்கி முதல் வாய் விட்டு அம்முதல்வாய்க்குஎழங்குலம் விட்டு வளைவாயினும் இரண்டு நீக்கி நடுவினின்ற ஒன்பதுவிரலினும் எட்டுத் துளையிடப்படுவது இவற்றுள் ஒன்று முத்திரையென்று கழித்து நீக்கிநின்ற ஏழினை ஏழுவிரல்வைத் தூதப்படும். இத்துளைகளின் இடைப்பிறப்பு ஒருவிரலகலமாம்.

இசைச்சுவை-இசைக்குரிய சுவைகள். அவை பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி என்பனவாம்.

இசைஞானியார் - சடைய நாயனாது மனைவியார். இவர் சுந்தரமூர்த்திநாயனாருக்குத் தாயார்.

இசைதல்-இராகஓசையொல்லல், சம்மதித்தல், சரிப்படல், பொருந்தல்.

இசைத்தமிழ்-சங்கீதத்தமிழ் அது முத்தமிழிலொன்று.

இசைத்தல்-இணக்குதல், ஈதல், ஒலித்தல், கட்டல், பாடல், பேசுதல், பொருந்தப்பண்ணுதல்.

இசைத்திரிபு-இசையறுப்பு, வேறுபாடு.

இசைத்தேவர்-இசைக்குரிய தேவர்கள் அவர் விஸ்வாமித்திரன், எமன், அக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன் என்பவராம்.

இசைநாள்-உத்திரட்டாதி, பூரட்டாதி.

இசைநிறை - ஓசைநிறைத்து நிற்பது.

இசைநிறைச்சொல் - இசைநிறைபொருளைத் தருமொழிகள். அவை ஒடு, தெய்ய என்பன.

இசைநிறையசைச்சொல்-இசையை நிறைத்தற்பொருட்டு வருமசைச்சொற்கள். அவை ஏ - ஓ-உம்-அம்ம-அரோகுரை என்பன.

இசைநிறையேகாரம்-ஈற்றசை யேகாரம்.

இசைநுணுக்கம்-சாரகுமாரன் பொருட்டுச் சிகண்டிசெய்த இசைத்தமிழ் நூல்.

இசைநூபுரம்-யானையைக் கொன்ற சுத்தவீரன் வலக்காலிலணியும் வீரச்சிலம்பு.

இசைநூல்-சங்கீதசாத்திரம்.

இசைந்தவேளை - தற்சமயம்.

இசைபுனை-ஆயிரம்பேரைவென்றவன் இடக்காலிலணியும் வீரச்சங்கிலி.

இசைப்பா - இசைக்குரியபாக்கள். அவைசெந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்த

கம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைப்போகு மண்டிலம், சிந்து, திரிபதை, சவலை, சமபாகவிருத்தம், சாதிக்கிரியைச் செந்துறை, சாதிக்கிரியை வண்டுறை, சாதிக்கிரியைப் பெருந்தேவபாணி, சாதிக்கிரியைச் சிறுதேவபாணி என்பனவாம்.

இசைப்பாச்சாதியோசை-இசைப்பாவிற்குரிய சாதியோசைகள். அவை சுத்தம், சாளகம், தமிழ் என்பன.

இசைப்பாட்டு - இராகம்.

இசைப்பாமுகநிலை - கொச்சகம்.

இசைப்பிறப்பிடம் - இசையுதிக்குந்தானங்கள். அவை நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணுக்கு, உதடு, பல், தலை என்பன.

இசைப்பு - இணக்கம், கூடிநிற்றல், சொல்லல், பொருத்து.

இசைப்புள் - அன்றிற்பறவை, குயில்.

இசைப்பெருந்தானம் - இசை பிறக்குமிடம்.

இசைமடந்தை - சரச்சுவதி.

இசைமணி-பதினுயிரப்பேரை வென்ற வேந்தர் வலக்காலிலணியும் பொன்னுற்செய்த வீரகண்டை.

இசைமாத்திரை - இசைக்குரியமாத்திரைகள், அவை குரலிற்கு நான்கும், துத்தத்திற்கு நான்கும், கைக்கிளைக்கு மூன்றும், உழைக்கு இரண்டும், இளிக்கு நான்கும், விளரிக்கு ஒன்றும், தாரத்திற் கிரண்டுமாம்.

இசைமுடி - சிலந்திநாயகம்.

இசைமுட்டி - செருந்தி.

இசையந்தாதி - ஓரலங்காரம், அது ஒரு வசனத்தீறு மற்றொரு வசனத்தாதியாகவருவது.

இசையாசிரிய ரிலக்கணம் - இசையாசிரியனுக்குரிய இலட்சணம் அது யாழ்ப்பாடலும், வங்கியப் பாடலும், இருவகைத் தாளக்கூறுபாடல்களும்மிடற்றுப்பாடலும், மந்தமாகிய சுரத்தினையுடைய தண்ணுமையும், அகம் புறம் பதினேராடலென்னுங் கூத்துக்களினும் வல்லனுய் இவற்றுடனே சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும் இரசம்பொருந்தும்படியும் புணர்க்கவும் வல்லனுய் இருவகைப்பட்ட பாடல்களும் பொருளான இயக்கநான்கினையும் அமைத்துத் தேசாந்தரங்களின் கண்ணுள்ள பாஷைகளையும் அறிந்து அந்தப் பாஷைகளிசை பூணும்படியும் இயற்புலவனினைவும், நாடகப்புலவனீடும். வரவுகளும் இவற்றிற்கடுத்த பாடல்களுந் தம்மிற் சந்திப்பிக்குமிடத்துக் குற்றந்தீர்ந்த நூல்வழக்கால் விரிக்கவும் வகுக்கவும் திறமுளனுதலாம்.

இசையிலக்கணம் - இசைக்குரிய இலட்சணம். அவை ஆடல், பாடல், ஆதியிசை, முத்தமிழ், பண், பாணி, தூக்கு, முடம், தேசிகம் என்பன.

இசையுந்தொழிலர் - சூத்திரர்.

இசையுரிச்சொல் - ஓசையாலறியப்படுங் குணச்சொல் (உ-ம்) கலிசடல்.

இசையுள்ளான் - சிறந்தவன்.

இசையெச்சம்-ஒழிந்துநிற்குஞ் சொற்கொண்டு கருத்து முடிவது.

இசையெஞ்சணி - இசையெச்சம்.

இசையெடுத்தல் - இராகமாரம்பித்தல்.

இசையெழுத்து - இசைக்குரிய எழுத்துக்கள். அவை ச ரி க ம ப த நி.

இசையோசை - இசைக்குரியவோசைகள் அவை வண்டு, கிளி, குதிரை, யானை, குயில், தேனு, ஆடென்பன.

இசைவலன் / இசைவலான் } சங்கீதம் பாடுவதின் மிக்கான்.

இசைவல்லோர்-கந்தருவர், சங்கீத பாடகர்.

இசைவளை-குதிரை நூறு போர்க்களத்திற்பொருதுவென்றமல்யுத்தர் காற்பெருவிரலிலணியும் வளை.

இசைவாணர் - இசைவல்லோர்.

இசைவிரும்பி - அசுணம்.

இசைவு-இணக்கம், சம்மதி, பொருத்து.

இசைவுபிசகு-இணக்கமின்மை, இசகு பிசகு.

இச்சகம் - முகமன்.

இச்சயம் - ஆசை.

இச்சலம் - நீர்க்கடம்பு.

இச்சாசத்தி - பஞ்சசத்தியி லொன்று, அது பஞ்சபூதமாகநின்று உயிர்க்கருணைசெஞ் செய்வது.

இச்சாநாசம் - நிராசை, விரக்தி.

இச்சாபத்தியம் புறப்பத்தியம், மைதுன முதலிய நீங்கல், விடுபத்தியம்.
இச்சாபோகம் - இச்சித்த வனுபவம்.
இச்சாப்மியகம் - நானிச்சிக்கிறேன்.
இச்சாவசு - குபேரன்.
இச்சாவதி-சந்தனபுஷ்பாதிகளில் மிக்க விருப்பமுள்ளவள்.
இச்சானுவிருத்தி - ஆசையடக்கம்.
இச்சி - இத்திமரம்.
இச்சித்தல் - காமுறல், விரும்புதல்.
இச்சியல் - கடுகுரோகணி.
இச்சியால் - இத்தி, இச்சி, கல்லிச்சி.
இச்சு - ஓரிடைநிலை, விரும்புதல்.
இச்சை - அஞ்ஞானம், ஆசை, இடித்தல், இட்டம், உறுதிச்சொல், பேராசை பொய், விருப்பம்.
இஞ்சம் - வெங்தோன்றிக்கிழங்கு.
இஞ்சல் - இறுகல், சுவறல்.
இஞ்சாகம் - இறால்மீன்.
இஞ்சி - இஞ்சிக்கிழங்கு, ஒருமருந்துப்பூடு, கேடகம், கொத்தான், மதில், வாவி.
இஞ்சிச்சாறு-இஞ்சியிலிருந்தெடுக்குஞ்சாறு.
இஞ்சித்தேறு - இஞ்சித்துண்டு.
இஞ்சுச்சார் - வெல்லம்.
இடகலை - சந்திரகலை.
இடக்கயம் - இடக்கியம்.
இடக்கரடக்கல்-சொல்லத்தகாத வார்த்தையை மறைத்துச்சொல்வது.
இடக்கர் - குடம், தாறுமாறுசெய்பவர், தூர்த்தர், நெருங்கல், மறைத்துசொல்.
இடக்கன் - தாறுமாறுசெய்பவன்.
இடக்கியம் - தேர்க்கொடி.
இடக்கு - இழிசொல், எதிரிடை, எறுமாறு, குதர்க்கம், சேஷ்டை, தடை, முரட்டுத்தனம்.
இடக்குமடக்கு-குதர்க்கம், தொந்தரை.
இடக்கை - இடதுகரம், ஒரு வாச்சியம், தம்பட்டம், தாறுமாறு, மருதநிலத்தூர்.
இடக்கையான் - அஞ்சாவீரன்.
இடங்கணம்-பொரிகாரம், வெங்காரம்.
இடங்கணி - ஆந்தை, உளி, சங்கிலி.
இடங்கம் - கல்வெட்டியின் உளி, காசு, கொடுவாள்.
இடங்காம் - மகளிர் சூதகம்.
இடங்கர் - குடம், சிறுவழி, தூர்த்தர், நீர்ச்சால், முதலை.
இடங்கழி - ஓரளவு, நெருங்கல்.
இடங்கழிநாயனர் - கோனட்டின்கண்ணுள்ள கொடும்பாளூரிற் சிவனடியார்க் கன்பராயிருந்து அரசியற்றிய ஓரரசர்.
இடங்கழிமை - ஓரளவு, நெருங்கல்.
இடங்கழியர் - காமுகர், தூர்த்தர்.
இடங்காரம்-மத்தினிடப்பக்கம், ஆச்சரியம், கீர்த்தி.
இடங்கெட்டபாவி - ஆதரவற்றவன்.
இடங்கேடு - தரித்திரம், வெறுமை.
இடசாரி - இடச்சுற்று.
இடதந்தம் - இராசயானை.
இடதானன் - கன்னன்.
இடது - இடப்புறம்.
இடத்தல் - அகலப்பண்ணுதல், கிழித்தல், தோண்டல், பிரித்தல், விரிந்து நிற்றல்.
இடத்தாலணையும்பேர் - குறிஞ்சி முதலிய ஐந்திணையைப்பற்றியும், வான் அகம் புறம்முதலிய இடங்களைப் பற்றியும்வரும்பெயர் (உ-ம்) வெற்பன், மறவன், ஆயன், ஊரன், சேர்ப்பன், வானத்தான், அகத்தான், புறத்தான் முதலியன.
இடத்திடல் - சொலித்தல்.
இடத்தையச்சொல்-இடத்தை ஐயப்படுத்துஞ் சொற்கள், அவை யாங்கு, யாண்டு யாங்ஙனம் முதலியன.
இடநாகம் - அடையிருக்கும் பாம்பு.
இடந்தலைப்படல் - கூடல்.
இடந்தலைப்படுத்தல் - கூட்டுதல்.
இடந்தலைப்பாடு-களவுப் புணர்ச்சி நான்கினென்று. அஃது இடந் தலைப் படுதல்.
இடபக்கொடியோன் - சிவபெருமான்.
இடபப்பிரியை- அறுபத்திரண்டாவது மேளகர்த்தா.
இடபம்-இராச்சின்னத்தொன்று. எருது, ஓரிராசி, சிவன்கொடி, மேற்றிசைப்பாலன்குறி.
இடபவாகனன்-எருமைநாக்கி, சிவன்.
இடபவீதி - சூரியன், மூவகைவீதியி னடுவீதி.
இடபாரூடன் - சிவன்.

இடப்பகுபதம் - ஒரு பகுபதம்.
இடப்பிறிதின்கிழமை - இடம் பற்றிய பிறிதின்கிழமை (உ-ம்) அரசனது மாளிகை.
இடப்பு - இடக்கப்பட்டது, மண்கட்டு, கான் முதலியவற்றை அகலவிடுதல்.
இடப்பொருளிடைச் சொல் - இடப் பொருளைக்காட்டும் இடைச்சொற்கள். அவை கண், கால், கடை, இடை முதலியன.
இடப்பொருள் - ஏழாம் வேற்றுமைப் பொருள்.
இடமரம் - தேசோபத்திரவம்.
இடமலைவு-ஓரலங்காரவழு. அஃது ஓரிடத்துள்ள பொருள் மற்றோரிடத்துளவாகக் கூறுவது.
இடமன் - இடப்புறம்.
இடமாரம் - ஒரு பெரும்பறை.
இடமானம் - மேன்மையான விடம், விசாலமான இடம்.
இடமிடுதல் - பருத்தல்.
இடமிடைஞ்சல் } இடங்கழிமை, ஒடுக்கம், நெருக்கம்.
இடமுடங்கு }
இடமை - பூமி, இடப்பக்கம், இடையினம்.
இடம் - அகலம், ஆகாயம், இடப்பக்கம், இடம்பாடு, இராகத்தகுதிநான்கினொன்று. அஃதுஐந்திணையைப்பற்றியது இளக்காரம், ஏது, ஏழாம் வேற்றுமையுருபு (உ-ம்) என்னிடம் ஐப்பசி, சமயம், செல்வம், தலம், தன்மை, முன்னிலை, படர்க்கையென்னு மூவிடம், தூரம், படுத்தல், பெருமை, வலி, விசாலம், வீடு.
இடம்பக்கம் - திரவிய முதலிய வுதவி.
இடம்பம் - பெருமை மேம்பாடு.
இடம்பரம் - இடப்பக்கம், வழிவகை.
இடம்பல் - இடம்புதல்.
இடம்பாடு - செல்வம், பருமை, விரிவு.
இடம்புதல் - விலகுதல், வெறுத்துவிடுதல்.
இடம்புரி - இடைக்கயிறு, இடம்புரிச்சங்கு, சங்கு.
இடம்மானம் - ஒரு பறை.
இடர் - ஆபத்து, இடைஞ்சல், துன்பம்.
இடர்ப்பில்லம் - ஒருவகைப் பில்லரோகம். அது இமையினடியிலும் புருவமத்தியிலு மிருக்கின்ற நரம்புகளை மஞ்சணிறமாக்கித் தடிக்கப் பண்ணுவது.
இடலம் - அகலம், விசாலம்.
இடலித்தல் - விசாலித்தல்.
இடலிப்பு - அகலம்.
இடலை - துக்கம், துன்பம்.
இடல் - எரிதல், கொடுத்தல்.
இடவகம் - இலவங்கம், பனம்பிசின், மாம்பிசின்.
இடவகை - வீடு.
இடவம் - பூமி.
இடவழு-தன்மைமுன்னிலை படர்க்கை மூவிடத்தைப் பிறழக்கூறல், ஐந்திணைக்குரியவற்றுள் ஒன்றற்குரியவற்றை மற்றொன்றற்குக் கூறுவதுமாம்.
இடவன்-இடக்கப்பட்டது, எதிரிமாடு, மண்கட்டி.
இடவாகுபெயர்-இடத்தினுமத்தை அதனிடத்த பொருட்கு வழங்குவது (உ-ம்) அகம்.
இடவியது - அகலமுள்ளது.
இடவை - வழி.
இடவோட்டு-இடப்புறச்செலவு, இராகு கேதுவின் நடை.
இடறல் - தடைபண்ணல், சிந்தித்தல்.
இடறி - யானை.
இடறு - ஆபத்து, இடறென்னேவல்,
இடறுகட்டை - தடைகாரன். [தடை.
இடறுதல்-காலினுலெற்றுதல், தடுக்குதல், தட்டுதல்.
இடற்சம் - குக்கில்.
இடனறிந்தொழுகல் - வணிப ரெண்குணத்தொன்று.
இடன் - அகம், இடம்.
இடா - இறைகூடை, ஒரு பொறி.
இடாகினி-காளியேவல் செய்வோன், பிணந்தின்னும் பேய்.
இடாகு - புள்ளி.
இடாசல் } அகலநிற்குதல், அடித்தல், அவமதித்தல், தள்ளல், நெருக்கல், மேற்படல்.
இடாசுதல் }
இடாடிமம் - தாதுமாதுளை.
இடாப்பித்தல் - காலையகலப் பண்ணி நிற்றல்.
இடாப்பு - அட்டவணை, சமாதுபண்ணினது, பார்த்தெழுதும்பிரதி, பெயர் விலாசம்.

இடாமுடாங்கு - எதிரிடை, ஏறுமாறு, ஒழுங்கின்மை.
இடாம்பீகன் - இடம்பன்.
இடாயர்-இறைகூடை, உலுத்தர், எலி முதலியன பிடிக்கும் பொறி.
இடி- அசனி, இடியென்னேவல், இந்திரன்கொடி, உறுதிச்சொல், ஒலி, சிற்றுண்டி, சுண்ணம், தகரம், தினைநென்முதலியவற்றின்மா, துடிப்பு, மயிர்ச்சாந்து.
இடிகம் - பெருமருந்து.
இடிகரை - அழிந்தகரை.
இடிகைபூமி - யானைவிழி.
இடிக்கொடியன் - இந்திரன்.
இடிசாமம் - கெடுகாலம், நிந்தை.
இடிஞ்சில் - அகல்.
இடிதல் - உடைதல், ஒடிதல், சரிதல், நொறுங்கல்.
இடித்தல் - இடிக்குதல், இடிவிழுதல், உறுதிச்சொல், ஒலித்தல்.
இடித்துரை - உறுதிச்சொல்.
இடிபடல்- இடியுண்ணல், நொறுங்குதல்.
இடிப்பு - ஒலி.
இடிமம் - விங்கணவணி.
இடிமரம் - உலக்கை.
இடியப்பத்தட்டு- இடியப்பஞ்சுடுந்தட்டு, இடியப்பம் விற்குந்தட்டு.
இடியப்பம் - ஒரு சிற்றுண்டி.
இடியப்பவுரல் - இடியப்பம் பிழியும் பாத்திரம்.
இடியேறு - இடி.
இடிவு-இடிந்திருப்பது, இழிவு, ஒடிவு.
இடீகை - வியாக்கியானம்.
இடீக்கு-இடம்பம், பிரபலியம், மேன்மை.
இடு - கொடுவென்னேவல்.
இடுகடை - தருமமீயும்வாயில்.
இடுகறல் - விறகு.
இடுகாடு - சுடுகாடு.
இடுகால் - பீர்க்கு.
இடுகிடை - இடுக்கண், நெருக்கம்.
இடுகு - ஒடுக்கம்.
இடுகுதல்-ஒடுங்குதல், சுருங்குதல், நோ
இடுகுறி - நியமித மாத்திரைப்பேர்.
இடுகுறிச்சிறப்புப்பெயர் - இடுகுறியானென்றற்கேவருஞ்சிறப்புப்பெயர்.
இடுகுறிப்பெயர் - ஒரு காரணமும் பற்றாமல் ஒருபொருளுக்குக் கடவுளாலும் அறிவுடையோராலும் இட்ட குறியாகிய பெயர்.
இடுகுறிப்பொதுப்பெயர் -இடுகுறியாற் பலவற்றிற்குப் பொதுவாய் வரும் பெயர்.
இடுகை - ஈகை.
இடுக்கணி - இடுக்கு.
இடுக்கண்-இக்கட்டு, துன்பம், வறுமை.
இடுக்கப்படல் - ஒடுக்கப்படல், துன்பப்படல்.
இடுக்கப்படுத்தல் - துன்பப்படுத்தல், நெருக்கல்.
இடுக்கம்-ஒடுக்கம், துன்பம், நெருக்கம், வறுமை.
இடுக்கி-இடுக்குவது, உலோபி, குறடு. கொடிறு, சரவணம்.
இடுக்கிடை . நெருக்கம்.
இடுக்கு-இடைஞ்சல், ஒடுக்கம், கொடுக்குகொடுவென்னேவல், சந்து, துன்பம், நெருக்கமான விடம்.
இடுக்குதல் - அணைத்தல், நெருக்கல்.
இடுக்குத்தடி - கிட்டித்தடி.
இடுக்குப்பனை - கள்ளும்பதநீரும் உண்டாக்கும்பனை.
இடுக்குப்பிள்ளை - கைக்குழந்தை.
இடுக்குமரம் - எண்ணெ யூற்றுமரம், கடம்புமரம்.
இடுக்கு-முடுக்குசங்கடம்,மூலை முடுக்கு.
இடுதங்கம் - மாற்றுயர்ந்ததங்கம்.
இடுதண்டம் - பம்பல், வந்தி.
இடுதண்டல் - பம்பல்.
இடுதல் - அணிதல், ஈதல், எறிதல், சொரிதல், நீசமித்தல், வைத்தல்.
இடுதி - அம்புக்கூடு.
இடுதிரை - திரைச்சீலை.
இடுதெண்டம்-தண்டனை, வாராவந்தி.
இடுதேளிடுதல் - தேளிடப்படுவர்காணுமேதேளல்லாதகொன்றை மறையக் கொடுவந்து மேலேயிட்டு அவரைக் கலங்கப் பண்ணுதல், பாய்ச்சுத்தேளுமாம்.
இடுப்பு - இடை, பக்கம்.
இடுமருந்து - கைமயக்கு மருந்து.
இடுமுடுக்கு - நெருக்கமானவிடம்.
இடுமோலி - மலையாளக்கரையில் உற்பத்தியாகிற ஒருமரம்.
இடும்பர் - ஒருவகைஇராக்கதர், செருக்கர் துயர்செய்வோர்.

இடும்பன் - ஓரரக்கன், குமரனேவல் செய்வோன்.
இடும்பி - இடும்பன் தங்கை, ஓரிராக்ஷசி, செருக்குடையாள்.
இடும்பிகேள்வன் } வீமன்.
இடும்பிகொழுநன் }
இடும்பில் - ஓரூர்.
இடும்பு - அகந்தை, அவமதி, துன்பம், தோகோபத்திரவம்.
இடும்பை - அச்சம், ஆபத்து, தரித்திரம், தவறு, துன்பம், பொல்லாங்கு, விகாரமெட்டினென்று.
இடுலி - பெண்ணுமை.
இடுவந்தி-அநீதம், நெருக்கிடை, வாராவந்தி.
இடுவேற்றி - இடைத்தட்டு.
இடை - அளவு, இடமூக்கினிற்கும் நரம்பு, இடம், இடையர்க்குரியது, இடைச்சொல், இடையென்னேவல், எழனுருபு, சமயம், சுவாசத்திற் சந்திரகலை, சுற்றுடல், தசநாடியினென்று, நடு, நிறை, முசுப்பு, பக்கம், பௌரணை, மருங்குல், யானை.
இடைகடை - மத்தியாந்தம்.
இடைகலை-இடைமூக்கால்வருஞ் சுவாசம், இடமூக்கினிற்கும் நரம்பு.
இடைகழி - வாயில்.
இடைக்கச்சு } அரைக்கச்சை.
இடைக்கட்டு }
இடைக்கணம் - இடையினவெழுத்துக்கள் அவை ய ர ல வ ழ ள என்பன.
இடைக்கருவி - சல்லி.
இடைக்காடன் - ஒரு சித்தன்.
இடைக்கிடை-ஊடையூடை, ஒன்றைவிட்டொன்று, நிறைக்கு நிறை.
இடைக்குலநாதன் - விட்டுணு.
இடைக்குலம் - இடையரது குலம்.
இடைக்குறை-இடையிற் குறைந்துநிற்கு மொழி.
இடைக்குன்றூர்கிழார் - நெடுஞ்செழியனது போர்த்திறம் பாடிய புலவர்.
இடைக்கொள்ளை - அவமிருத்தாய்ச் சாதல், இடையிலே வாருதல்.
இடைச்சுருங்குபறை - உடுக்கை.
இடைச்சூரி - அலுப்பு வளையம்.
இடைச்சங்கப்புலவர்-அகத்தியன் முதலிய ஐம்பத்தொன்பதின்மர்.
இடைச்சங்கம் - மதுரையில் இரண்டாவதாயிருந்த சங்கம்.
இடைச்சனி - பூரநாள்.
இடைச்சன்-இரண்டாம்பேறு, நடுமகன்.
இடைச்சி - முல்லைநிலப்பெண், இடையை யுடையவள்.
இடைச்சீலை - திரைச்சீலை.
இடைச்சுரநாதர்- திருவிடைச்சுரத்திற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
இடைச்சேரி - இடையரூர்.
இடைச்சொல்-பெயர்வினைகளோடே சார்ந்து வழங்குஞ்சொல்.
இடைச்சொற்பகாப்பதம் - ஒரு பகாப்பதம்.
இடைச்சொற்பொருள்கோள் - தெரிநிலை முதலிய இருபத்தொன்பதுவிதப் பொருள்கோள்.
இடைச்சோழகம்-மறுகாற்றுக் கிடையிலே வீசுந் தென்றல்.
இடைஞ்சல் - இக்கட்டு, நெருக்கிடை, வருத்தம்.
இடைதரம் - இடைத்தரம்.
இடைதல் - சீலை, தோற்குதல், பின்வாங்குதல், வசங்கெடுதல்.
இடைத்தட்டு - இடையிலே காரியம் பார்த்தல், சஞ்சாயம்.
இடைத்தரம் - நடுத்தரம்.
இடைத்திரிசொல்-இபற்சொற்போற் றம்பொருள் விளக்காது அரிதுணர் பொருளனவாய் நிற்கும் இடைச்சொல் (உ-ம்) சேறும்.
இடைத்தொடர்க்குற்றியலுகரம் - மொழிக்கீற்றியலில் வல்லெழுத்துக்களோடு தொடராக வகர நீங்கலாகவுள்ள இடையெழுத்துக்கள் ஐந்தனுள்ளே ஏதேனும் ஒன்று தொடர ஈற்றிலுள்ள வல்லின மெய்களின் மேலூர்ந்து தன் மாத்திரையிற் குறைந்தொலிக்கும் உகரம்.
இடைத்தொடர்க்குற்றுகரம் - ஒரு குற்றுகரம்.
இடைநடு - ஊடை.
இடைநரை-இடைக்கிடையே நரைமயிருப்பது.
இடைநிலை - இடையிற்படுந்தாவு, பகுபதங்களி னிடையே நிற்பது.

இடைநிலைத்தீபகம்-ஓரலங்காரம், அஃது தீபகம் சொல்லிடையினிற்பது.
இடைநிலைப்பாட்டு - தாழிசை.
இடைநிலைமயக்கு - மெய்யொடு மெய்யேனும் உயிரொடு மெய்யேனுமொழிக்கிடை மயங்கி வருதல்.
இடைநிலையெழுத்து - சொற்களுக்கிடையே மயங்கி வரத்தகு மெழுத்துக்கள்.
இடைநீரினிற்றல் - நீரினீந்திநிற்றல்.
இடைப்பக்கம் - ஒக்கல்.
இடைப்படல் - இடையிலுண்டாதல்.
இடைப்படுதல் - வழியிற் சந்தித்தல்.
இடைப்படுதானம்-மூவிதத் தானங்களிலொன்று. அது ஆதுலர், புருடர், மாதர் முதற் பிறர் சிறுமையைப் பற்றி மனமிரங்கி யீவது. [ம்.
இடைப்பழம் இடையிடை பழுத்தபழ
இடைப்பழுப்பு-பச்சைகலந்த பழுப்பு, முற்றும் பழாதது.
இடைப்பானிலம் - குழிதோண்டிய விடத்து மண்மிகாமலும் குறையாமலும் இருக்கு நிலம்.
இடைப்பிறவரல் - எழுவாய் முதலிய தொன்றினுள் இடையிலேற்ற பிற சொல்வரல்.
இடைப்புணரளபெடை - நடு விருசீர்க்கண்ணும் அளபெடை வருவது.
இடைப்புணரியைபு - நடுவிரு சீர்க்கண்ணு மியைபு வருவது.
இடைப்புணரெதுகை - நடு விருசீர்க்கண்ணும் எதுகை வருவது.
இடைப்புணர்முரண் - நடுவிருசீர்க்கண்ணுமுரண் வரத் தொடுப்பது.
இடைப்புணர்மோனை-நடுவிருசீர்க்கண்ணு மோனைவரத் தொடுப்பது.
இடைப்புழுதி - ஈரங்கலந்த புழுதி.
இடைப்புள்ளி - இடைவரி.
இடைப்பூட்டு - அரைப்பூட்டு.
இடைப்போகம்-இடையிற் புன்செய்ப் பயிர் விளைவு.
இடைமடக்கு - இடக்குமடக்கான பேச்சு இடையிற் றடுக்கை, ஓரலங்காரம். அஃது இடைமுற்று மடக்கி வருவது.
இடைமுள்-இடைப்பரு, ஒருகரப்பன்.
இடைமேடு - நடுத்தரமான மேடு.

இடைமை-இடையின வெழுத்துக்க
இடையர் - முல்லை நிலமாக்கள்.
இடையல் - ஒதுங்கல், தாழல், நல்[கு]டை, பின்னிடல், மெலிதல்.
இடையறல்-நடுவே முடிந்து போத
இடையறுவன்பு - முடியாவன்பு.
இடையன்கால்வெள்ளி-ஒருவிண்மீ
இடையாகெதுகை-அடிதோறு மி[டை]யிலேயாகு மெதுகை.
இடையாந்தரம் - நடு.
இடையாபரணம் - அரைப்பட்டிகை
இடையாமர் - மத்திமர்.
இடையிடல் - நடுவிற்றோன்றல்.
இடையிடுதல் - ஊடேசம்பவித்தல்.
இடையிடை - இடைக்கிடை.
இடையிட்டுவண்ணம் - எதுகைத்தா
இடையிட்டெதுகை-அடிகளொன்[றை]விட்டொன்றெதுகையொன்றி வ[ரு]வது.
இடையியற்சொல்-செந்தமிழ் நிலத்[து]மொழிகளாய்ச் செய்யுளினும் வழ[க்]கினுநின்ற தம்பொருளை இயல்பா[ய்]விளக்கு மிடைச்சொல்.
இடையினமோனை - இடையெழுத்து[க்]களொன்றிற்கொன்று மோனையா[ய்]வருவது.
இடையினம் - இடையெழுத்துக்கள்.
இடையீடு - இடையிட்டுக்கொண்ட[து], ஊறுபாடு, தடை.
இடையூறின்மை-தடையின்மைஅஃ[து]ஈச்சுரனென்குணத்தொன்று.
இடையூறு - இடர், ஊறுபாடு, தடை
இடையெண்-சிந்தடி, ஓரடியாக எட்
இடைஎழுஞ்சணி-பூரநாள். [வருவது
இடையெழுத்து - வல்லோசை மெ[ல்]லோசை இரண்டிற்கும் இடைநி[லை]மையா யுச்சரிக்கு மெழுத்து.
இடையொடு கடைமடக்கு - ஓரலங்க[ா]ரம்-அஃது அடிகளினிடையுங்கடை[யு]யும் அடங்கி வருவது.
இடைவழக்கு - எதிரிக்கும் வழக்காளி[க்]கும் இடையிலே வேறொருவ[ன்]தொடர்தல், கிளைவழக்கு.
இடைவழி - பாதிவழி. [எழுவா
இடைவள்ளல்-கேட்டன கொடுப்போ
இடைவிடல் - விட்டுவிட்டுத் தொடங்
இடைவிடாமல் - ஓயாமல். [ல்

டைவிடாமழை ஓயாமழை.
டைவு - தோல்வி, நீக்கம், வெளி.
டைவெட்டு-இடையிலே பெறுதல்.
டைவெட்டுப்பணம்-பொறுக்கி யெடுத்தபணம், மாறுமுத்திரை விழுந்த பணம்.
டைவெட்டுப்பேச்சு - நிந்தனை.
டைவெளி - ஊடுவெளி, நடுவெளி.
டோலி - ஒருவகைச்சிவிகை.
டோல் - ஒருபறை.
ஷ்டகந்தம் } வாசனை.
ட்டகந்தம் }
ஷ்டகாபதம் - வெள்வெட்டிவேர்.
ஷ்டகாமியம் } இச்சித்தபொருளை நினைத்தபடிபெறுதல்.
ட்டகாமியம் }
ட்டங்கட்டல்-இராசிநிலை வரைதல்.
ஷ்டசட்டம் } யதேச்சை.
ட்டசட்டம் }
ஷ்டசித்தி } அழகர் மலையின்கண்ணுள்ளஒருபொய்கை.
ட்டசித்தி }
நினைத்தகாரியம் முடிவு பெறுதல்.
இட்டடை-இட்டிடை, கடைச்சல்மரம்.
இஷ்டதேவதை } குலதேவதை, தான் வழிபடுதெய்வம்.
இட்டதேவதை }
இஷ்டபோகம் } தன்னிடம் விரும்பிய போகம்.
இட்டபோகம் }
இஷ்டப்பிரசாதம் } கைம்மாறு வேண்டாக் கொடை.
இட்டப்பிரசாதம் }
தேவகிருபை, தொடர்ந்த வன்பு, யாகசேடம்.
இஷ்டம்-ஆமணக்கு, இட்டம், சடங்கு, யாதபலி, யாகம், விடுதலை.
இட்டம் - அடிமைவிடுதலை, அன்பு, இச்சைப்படி, கிரக நிலையாலாகும் பலாபலன்.
இஷ்டம்வைத்தல் } இட்டங்கட்டல்.
இட்டம்வைத்தல் }
இட்டலி - ஒரு பண்ணிகாரம்.
இட்டலிடைஞ்சல்-இடையூறு, தரித்திரம், துன்பம்.
இட்டளம் - உவாதி, தளர்வு, துன்பம்.
இட்டறுதி - நியமித்தவெல்லை, முட்டு, வறுமை.
இஷ்டி - யாகம்.
இட்டி - இஷ்டி, ஈட்டி, செங்கல், விருப்பம்.

இட்டிகை - இடுக்குவழி, கூட்டு மெழுகு, செங்கல்.
இட்டிடை-அற்பம், கடைச்சற்கருவியினுருறுப்பு, சிறுமை, தரித்திரம்.
இட்டிடைஞ்சல் - இட்டறுதி, முட்டு.
இட்டியம் - பாகம்.
இட்டிவனம் - ஒருசடங்கு.
இஷ்டு - விருப்பம்.
இட்டு-அசைச்சொல், அற்பம், இஷ்டு, நுண்மை.
இட்டுக்கட்டிக்கொள்ளல் - குறைவாய் மதித்தல்.
இட்டுக்கட்டிப்பேசுதல் - இல்லாததை நியமித்துப் பேசுதல்.
இட்டுப்புகுதல் - தேசக்காலிருபத்து நான்கனுளொன்று.
இட்டுவாம்-விரையடித்த எருது.
இட்டுறுதி - ஆபத்காலவுதவி, கண்டிதம்.
இட்டேற்றம் - அநீதம், முழுப்பொய்.
இட்டொருசட்டு - இட்டம்.
இட்டோடல் - நீங்கல்.
இட்டோடு - பிரிவு.
இட்டோடுதல் - பிரிதல்.
இட்டோட்டல் - அலைக்கழித்தல், தொந்தரை பண்ணல்.
இட்டோட்டு - அலைக்கழிவு, தொந்தரை.
இட்டோட்டுதல்-அலைக்கழித்தல், தொந்தரைபண்ணல்.
இஷ்வாசம் - வில்.
இணக்கம் - இசைவு, சம்மதம், சேர்மானம், திருத்தம்.
இணக்கல் - உடன்படுத்தல்.
இணக்கு-இணக்கென்னேவல், இயைவு, சம்மதி.
இணக்குதல் - உடன்படுத்தல்.
இணக்கோலை-உடன்படிக்கைப் பத்திரம், பொருத்தோலை.
இணங்கலர் - பகைவர்.
இணங்கல் - உடன்படுதல்.
இணங்கன் - வெடியுப்பு.
இணங்கார் - பகைவர்.
இணங்கி - தோழி.
இணங்கு - இணங்கென்னேவல், பிசாசம்.
இணங்குதல் - சம்மதித்தல், பொருந்துதல்.
இணபம் - யாக்கைக்குற்றம், பதினெட்டில் ஒன்று.

இணரெரி - பலசுடருள்ள நெருப்பு.
இணர் - இணரென்னேவல்; கிச்சிலி மரம், குலை, தளிர், பூங்கொத்து, பூந்தாது, பூமலர், மாமரம்.
இணறு - பூ.
இணாட்டு - ஓலைத்தளிர், ஓலைத்துண்டு, குணாட்டு, மீன்செவுள்.
இணைப்பல் - எய்த்தல்.
இணைப்பு - எய்ப்பு.
இணைப்புதல் - எய்த்தல்.
இணி - எல்லை, ஏணி, கண்ணூறு.
இணுக்கு - இரண்டோலைகளினிடை, இணுக்கப்பட்டது, கிளை முதலியவைகளின் இடைச்சந்து குலையினெட்டு, கைப்பிடியளவினுக் ககப்பட்டது, வளார், வெளி.
இணுக்குதல் - இசித்தல்.
இணுங்கல் - ஒடித்தெடுத்தல்.
இணுங்குதல் - இணுக்குதல்.
இணை-இசைவு, இச்சை, இரண்டு உவமை, கூந்தல், சகாயம், சோடு, துணைபிணையென்னேவல், வதில்.
இணைக்கயல் - அட்டமங்கலத்தொன்று இராசசின்னத்தொன்று. [லை.
இணைக்கல்லை-பரிமாறின இரட்டையி
இணைக்குப்போதல் - இணையாகப்போதல்.
இணைக்குறளாசிரியப்பா - அகவற்பாவு ளொன்று. அஃது ஈற்றடியும் முதலடியு மளபொத்து நடுவடிகளுள் ஒன்றும் பலவும் ஒருசீரும் பலசீருங் குறைந்து வருவது-
இணைதல்-இசைதல், சேர்தல், சையோகஞ் செய்யல், பொருந்தல்.
இணைத்தல்-உவமித்தல், சேர்தல், தொ
இணைப்பு-இசைப்பு, சேர்ப்பு. [டுத்தல்.
இணைமணிமாலை-ஒரு பிரபந்தம். அஃது வெண்பாவும் அகவலும் வெண்பாவுங்கலித்துறையுமா யிரண்டிரண்டாக இணைத்து வெண்பா அகவலிணைமணிமாலை எனவும் வெண்பாக் கலித்துறை யிணைமணிமாலை எனவும் நூறு நூறு அந்தாதித்தொடை நான்கானும் பாடுவது.
இணைமுரண் } முதலறுசீர்க்
இணைமுரண்டொடை } கண்ணு முரண்வருவது.

இணைமோனை } முதலிருசீ
இணைமோனைத்தொடை } ர்க்கண்ணு மோனை வருவது.
இணையசை - நிரையசை.
இணையடி - உபயபாதம், ஓரலங்காரம், அஃது இருசீரொன்றாய் வருதல்.
இணையணை - பலவானவணை.
இணையல் - இணைதல்.
இணையளபெடை } முதலி
இணையளபெடைத்தொடை } ருசீர்க் கண்ணும் அளபெடை வருவது.
இணையாவினைக்கை - ஒற்றக்கை.
இணையியைபு - அடிகளினீற்றசை யிரண்டுமொத்து வருவது.
இணையெதுகை } முதலிரு
இணையெதுகைத்தொடை } சீர்க் கண்ணு மெதுகை வருவது.
இணையெழுத்து - போலியெழுத்து.
இணைவிழைச்சு-கற்பின்மையாய்க்கொள்ளுமிச்சை, காமம், ஸ்திரீ புருஷர் இருவருக்கு மொத்த வின்பம்.
இணைவு - ஒன்றிப்பு, கலப்பு, சேர்மானம், புணர்ச்சி.
இண்டஞ்செடி-இண்டு, அது செவ்விண்டு வெள்ளிண்டென இருவகை.
இண்டர்-இடையர், சிநேகர், சுற்றம்.
இண்டு ஈகைக்கொடி, சிங்கிலிச்செடி.
இண்டை - ஈகைக்கொடி, தாமரை, மாலை, முல்லை, புலிதொடக்கி.
இதங்குதல் - இதாகிதம், நவ்வுசுவ்வு.
இதணம் } அட்டாலை, காவற்பரண்,
இதண் } பரண்.
இதமாகாரவிர்த்தி-இஃதெனும் வடிவஞானம்.
இதமித்தல் - ஒன்றித்தல்.
இதமிப்பு - ஒன்றிப்பு.
இதமியம் - இதப்படுதல், இனிமை, திருத்தி.
இதம்-இனிமை, உரிமை, சொல், நன்மை.
இதம்பண்ணல் - இன்பஞ்செய்யல்.
இதயம் - மனம்.
இதரபதார்த்தம் - வேறு வஸ்துக்கள்.
இதரபதார்த்தானவச் சின்னவான்மா-தேகப் பிணிப்பில்லாத ஆத்துமா, மறுமைக்கடுத்த வாத்துமா.
இதரமதம் - புறசமயம்.

இதரம்-அழிவு, அன்னியம், ஈனம்,ஒரு மருந்து, கீழ்மை, தீங்கு, பாதரசம், வித்தியாசம்.
இதரயோகவிவச்சேதம் - பிரிநிலை.
இதரர் - அந்நியர், கீழ்மக்கள்.
இதரவிதரம்-அன்னியோன்னியம், இதரேதர வுவமை.
இதரன் - அற்பன், அந்நியன், நீசன்.
இதரேதரக்கிரியை-தடுமாறுதொழில்.
இதரேதரம்-அன்னியோன்னியம், இதரேதர வுவமை.
இதரேதரவுவமை-ஓரலங்காரம், அஃது பொரு ளொருக்கால் உவமையாய் உவமை யொருக்கால் பொருளாய் ஒரு தொடர்க்கண் வருவது.
இதலை - கொப்பூழ்.
இதல் - கவுதாரி, காடை, சிவல்.
இதவு - இதம், முகமன்.
இதழவிழ்தல் - மலரல்.
இதழி - கொன்றை.
இதழ்-இலை, உதடு, கண்ணிமை, கதவி னிலை, பனையேடு, பாளை, பூவிதழ்.
இதழ்குவிதல் - உதட்டைக் குவித்தல், கண்மூடுதல், மலர்மூடிக்கொள்ளல்.
இதழ்விள்ளல் - பேசல், மலரல், வாய் திறத்தல்.
இதள் - இரதம், சிறுதூறு.
இதாகிதம் - நன்மை, தீமை, விருப்பு, வெறுப்பு.
இதார்த்தம் - எதார்த்தம்.
இதி-அத்தாட்சி, இப்படி, உறுதி, காரணம், பிரகாசம்.
இதிகாசப்பிரியர் - நைமிசாரணியர், வேதவியாசர்.
இதிகாசம்-அறிவு, கலைஞானமறுபத்து நான்கினொன்று, பழங்கதை, மேற்கோள்.
இதிகாசன் - சூதமாமுனி, வேதவியாசன்.
இதிகை-பரம்பரையாய்வந்தவுபதேசம்.
இதியாசம்-அறிவு, உதாரணம், கலைஞானமறுபத்து நான்கினொன்று, பழங்கதை.
இது-இஃது, சுட்டுச்சொல்.
இதை-கலப்பை, காராமணி, புதுக்கொல்லை, மரக்கலப்பாய்.
இதைப்புனம் - புதுக்கொல்லை.
இத்தி-இச்சிமரம், கல்லால், துவர்பத்தினொன்று.
இத்திநடையம் - நத்தை.
இத்தியாதி - இதுமுதலானவை.
இத்து-காவட்டம்புல்.
இத்துமம் - சமித்து.
இத்துமா - விக்கல்.
இத்துமாபித்தம்-ஒருவகைப் பித்தநோய். அது மாறுவிக்கல், சோஷை,எப்பம், மூர்ச்சை, வியர்வை, உள்ளங்கால், உள்ளங்கை ஆகியவைகளிற் கொப்பளம், சுரசுரப்பு, இருமல், சுவாசம், தலைநோவு, சுரம், தேகச் சிலிர்ப்பு, புத்திப்பிரமை ஆகிய இக் குணங்களை உண்டாக்கும்.
இத்துரா - காவட்டம்புல்.
இத்துரு-ஈயமணல், காவட்டம்புல், வங்கமணல்.
இத்துவரம் - எருது.
இத்துவரன் - நீச்சன்.
இத்துவரி - வியபிசாரி.
இத்துவாகன்-அகத்தியன்பௌத்திரன்
இத்தை - முன்னிலையசைச்சொல்.
இந்தம் - புளியமரம்.
இந்தம்பரம் - நீலோற்பலம்.
இந்தரி - இராகு.
இந்தளம் - ஒருபண், தூபக்கால்.
இந்தளூர்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்று.
இந்தனம் - காடு, சுவாலை, நறும்புகை, மேல், விறகு.
இந்தனை - உத்தரீயம்.
இந்தா-இங்கேவா,இதைவாங்கிக்கொள்
இந்தி - இலக்குமி, பூனை.
இந்திகோபம் - ஈயம்.
இந்திந்திரம் - வண்டு.
இந்தியம் - இந்திரியம், புலன்கள்.
இந்திரகணம் - மூன்று நேரசைகூடிய சீர். அஃது இயமானகண மெனவும் படும்.
இந்திரகம்-சங்கமண்டபம்.
இந்திரகாளியம் - யாமளேந்திர முனிவர் செய்த இசைநூல்.
இந்திரகிரி - ஒருமலை. அது நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருப்பேர் நகரிலுள்ளது.
இந்திரகீலம் - மந்தரமலை.
இந்திரகுஞ்சரம் - இந்திரன்யானை.
இந்திரகுதிரை - உச்சைச்சிரவம்.
இந்திரகொடி - இடி.

இந்திரகோ - காமதேனு.
இந்திரகோபம் - தம்பலப்பூச்சி.
இந்திரசத்தி - இந்திராணி.
இந்திரசாபம் - வானவில்.
இந்திரசாலம் - அற்புதங்களைக் காட்டும் வித்தை, எத்து, ஒருநூல், கலைஞான மறுபத்துநான்கினொன்று.
இந்திரசாலி - அழிஞ்சில், இந்திரசால வித்தைக்காரன்.
இந்திரசித்து-இந்திரனைச் சயித்தவன், இராவணன்மகன், கருடன், கிருஷ்ணன்.
இந்திரசிற்பம் - சிற்பநூலினொன்று.
இந்திரசுகந்தம் - நன்னாரி.
இந்திரசுதன்-அருச்சுனன், சயந்தன், வாலி.
இந்திரசுரசம் - நொச்சில்.
இந்திரசேனன்-நளன்மகன், தருமன், சாரதி, சூரியன் மகன்.
இந்திரசேனை - மெத்கல்லியர்பாரி, து ரோபதை, நளன்மகள்.
இந்திரதனு - வானவில்.
இந்திரதாமேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
இந்திரதிசை - கிழக்கு.
இந்திரதிரு - மருதமரம்.
இந்திரதீர்த்தம் - நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்றாகிய திருப்பேர் நகரிலுள்ள ஒரு புண்ணியதீர்த்தம்.
இந்திரதுவசேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
இந்திரத்துயுமனம்-ஒருவாவி, இது இந்திரத்துயுமன னென்னுமரசன் தானஞ்செய்த ஆடுமாடுகணின்று பள்ளமாகியதால் வாவியாயிற்று.
இந்திரத்துயுமனன் - இருஷபன்பௌத்திரன், பரதன்புத்திரன், இவன் அகத்தியர் சாபத்தால் யானையாகி முதலைவாயிற் சிக்குண்ட சமயத்தில் விஷ்ணுவா லிரட்சிக்கப்பட்டான்.
இந்திரநகரி - தணிகைமார்க்கம்.
இந்திரநாள் - கேட்டை.
இந்திரநீலம் - ஓரிரத்தினம்.
இந்திரபடை - வச்சிராயுதம்.
இந்திரபண்டாரம் - சுதனனு.
இந்திரபதம் } தேவலோகம்.
இந்திரபதி }
இந்திரபம் - பாலை- வெட்பாலை.
இந்திரபாஷாணம்-வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினொன்று.
இந்திரபிரக்கணம்-இடியேறு, ததிசியின் முதுகெலும்பினாலாய வச்சிராயுதம்.
இந்திரபுசிப்பி-வெங்தோன்றி.
இந்திரபுஷ்கரிணி - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய மணிமாடக் கோயிலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தம், மேற்படி திருப்பதிகளுளொன்றாகிய சீர்வரமங்கையிலுள்ள தீர்த்தம்.
இந்திரபுஷ்பம்-வெங்தோன்றி.
இந்திரபூதம் - ஒருவகைப்பூதம்.
இந்திரப்பிரஸ்தம் - பாண்டவர் நகரம். அது பழய டில்லி நகரம்.
இந்திரப்பிரமிதி-வியாசசீஷனாகிய பயிலவன் சீஷன். இவன் இருக்குவேத சங்கிதையை நான்கு பாகமாக்கி பாஷ்கலன், போத்தியன், யாஞ்ஞுவற்கியன், பாராசான், மாண்டுகேயன், அக்கினிமதி என்பவர்களுக்கு பதேசஞ் செய்தவன்.
இந்திரப்பிரியம் - பொதியமலையிலுண்டான மஞ்சணிறமுள்ள சந்தநம்.
இந்திரமண்டபம் - சயந்தம்.
இந்திரமாசாலம் } இந்திரசாலம்.
இந்திரமாஜாலம் }
இந்திரமாளிகை - வசந்தம்.
இந்திரம் - ஆத்துமா, இந்திரியம், இராகடப்பமரம், சிற்பநூன் முப்பத்திரண்டினொன்று, நவகண்டத்தொன்று, மாயம், மேன்மை, வண்டு.
இந்திரயவம் - வெட்பாலை யரிசி.
இந்திரயாணி - இந்திராணி.
இந்திரர் - தேவர்.
இந்திரலோகேசன் - இந்திரன்.
இந்திரவணி - சங்கநிதி, பதுமநிதி.
இந்திரவதி - கோதாவிரியுடன் கலக்கும் ஒருபநதி.
இந்திரவம் - கருங்குவளை.
இந்திரவல்லி-கொற்றான், முடக்கொற்றான், பிரண்டை.
இந்திரவாகனம் - மேகம்.
இந்திரவாகனன் - கருத்தன்.
இந்திரவாசம் } நெய்தல்.
இந்திரவாமம் }
இந்திரவாருணி - பேய்த்தும்மட்டி.

இந்திரவிகூடல் }
இந்திரவிகூட்டல் } அமாவாசி.
இந்திரவியாகரணம் - இந்திரன்செய்த ஒரு சம்ஸ்கிருத இலக்கணம்.
இந்திரவில் - வானவில்.
இந்திரனூர் - தேவலோகம், பொன்னுங்காணி.
இந்திரன்-அதிதியிடத்திற் காசிபப் பிரசாபதிக்குப் பிறந்த பன்னிரு புத்திரர்களு ளொருவனாகிய தேவேந்திரன், கடவுள், தலைவன், மிருகசீரிடம், வாசவன்.
இந்திரன்மைந்தன்-அருச்சுனன், சயந்தன்.
இந்திராட்சி - பார்வதி.
இந்திராணி-இந்திரன்மனைவி, நொச்சி
இந்திராணிகை - நொச்சிமரம். [ல்.
இந்திராணிப்பூ-கையணியினொருறுப்பு.
இந்திராபரசன் - உபேந்திரன்.
இந்திராயுதம்-கருங்கட்குதிரை, வச்சிராயுதம், வானவில்.
இந்திராரயர் - அசுரர்.
இந்திராரி - இராக்கதன்
இந்திராவரசன் }
இந்திரானுசன் } விட்டுணு.
இந்திரி - காந்தம், கிழக்கு, நன்னாரி.
இந்திரியகிராமம்-பஞ்சேந்திரியக் கூட்டம்.
இந்திரியகோசரம்-புலனுக்கெட்டியது.
இந்திரியக்காட்சி - பண் முதலிய புலனால் அறிதல்.
இந்திரியஸ்கலிதம்-இந்திரியம் வெளிப்படுகை.
இந்திரியத்துவாரம் - பொறிவாயில்.
இந்திரியநிக்கிரகம்-இந்திரியமடக்கல்.
இந்திரியநுகர்ச்சி }
இந்திரியபோகம் } ஐம்புலனுகர்ச்சி.
இந்திரியப் பிரத்தியட்சம்-பஞ்சேந்திரியக்காட்சி.
இந்திரியம் - சுக்கிலம், தாது, பஞ்சவிந்திரியம், பொறி.
இந்திரியவம் - வெட்பாலை.
இந்திரியவருக்கம்-பஞ்சேந்திரியம். [சி.
இந்திரியவிப்பிரதிபத்தி - திரிப்புக்காட்
இந்திரியாசங்கம்-அனுபவவெறுப்பு.
இந்திரியாபதனம் - உடல்.
இந்திரேகம் - வெட்பாலை.
இந்திரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
இந்திரேபம் - வெட்பாலை.
இந்திரேயம் - வெட்பாவட்டை.
இந்திரை - அரிதாரம், இலச்சுமி.
இந்திரகேள்வன் - திருமால்.
இந்திரைக்குமூத்தாள் - மூதேவி.
இந்தீவரம்-கருங்குவளை, கருநெய்தல்.
இந்தீவரம் - விஷ்ணு.
இந்தீவராக்ஷசன் - நளநாபனென்னுங் கந்தருவராசன்மகன், வரூதினி தம்பி; இவன் கபடோபாயத்தினாலோரி ருடியை அடைந்து ஆயுள்வேதத்தை முற்றக்கற்ற பின்னர் இக்குருவை இகழ்ந்ததனால் இராக்ஷசருபம் பெறுமாறு சபிக்கப்பட்டுப் பின்னர் ஈசுவரரோசியினால் அச்சாபவிமோசனம் பெற்றவன்.
இந்தீவரீ - தண்ணீர் முட்டான்.
இந்து - இந்துப்பு, எட்டி, கரடி, கரி, கௌரிபாஷாணம், சந்திரன், சிந்துநதி, பச்சைக்கருப்பூரம்.
இந்துகமலம் - வெண்டாமரை.
இந்துகாந்தம் - சந்திரகாந்தக்கல்.
இந்துசனகம் - சமுத்திரம்.
இந்துசேகரன் - சிவன்.
இந்துதலம் - சந்திரன்கலை.
இந்துதேசம் - சிந்துதேசம்.
இந்துஸ்தானம் }
இந்துஸ்தானி } ஒரு பாடை.
இந்துபம் - மிருகசீரிடம்.
இந்துபுஷ்கரிணி-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய இந்தளூரிலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தம்.
இந்துபுத்திரன் - புதன்.
இந்துப்பு - ஒரு மருந்துச்சரக்கு.
இந்துமதி-விதர்ப்பராஜன் குமாரி, அஜன்மனைவி, தசரதன்தாய், பூரணை.
இந்துரத்தினம் - முத்து.
இந்துரம் - எலி.
இந்துரவிகூட்டம் - அமாவாசியை.
இந்துரு - பெருச்சாளி.
இந்துரேகை }
இந்துலேகை } சந்திரன்கலை.
இந்துலோகம் - வெள்ளி.
இந்துவவரீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

இந்துவாரி-தண்ணீர்மிட்டான், சாத்தாவரி.
இந்துழி - பெருங்காயம்.
இந்துளம் - கடப்பமரம், நெல்லி.
இந்துளி - நெல்லி, பெருங்காயம்.
இந்துள் - நெல்லி.
இந்துறு - இலந்தை.
இந்தோளம் - ஊசல், ஓரிராகம்.
இந்நாள் - அந்நியநாள், இன்று.
இபங்கம் - புளிமா.
இபபாலகன் - யானைப்பாகன்.
இபம் - மரக்கோடு, யானை.
இபவ - விபவ.
இபியன் - தனவான்.
இபேரமம் - பதினன்கு வயதுள்ள யானை.
இப்பந்தி-உலோபி, பலவீனன், பேடி, வகை தெரியாதவன்.
இப்பந்தியாடு - ஒருவகையாடு.
இப்பர்-இடையர், உழவர், செட்டிகள், வைசியர், பொது.
இப்பவம் - இப்பிறப்பு.
இப்பால் - இந்தப்பக்கம், இனிமேல்.
இப்பி - சங்கு, சிப்பி.
இமகரன் - சந்திரன்.
இமகிரி - இமாசலம்.
இமசானு - இமயமலை, இமயமலையின் மேற்பரப்பு.
இமபடி - சூரியன்.
இமப்பிரவை-எழுநரகவட்டத்தொன்று, அஃது குளிர்நிலம்.
இமம் - உறைந்தபனி, குளிர், சீதளம், பொன்.
இமயகிரி - இமாலயமலை. இது பாரதவருஷத்துக்கு வடக்கெல்லையாகவுள்ளது பூவுலகத்துள்ள மலைகளுளுயர்ந்து வளஞ்சிறந்ததாதலின் இம்மலை பருவதராஜனெனவும் பெயர்பெறும், இம்மலையரசன் இமவானெனப் படுவன். இம்மலையில் மகா விருடிகளும் யோகிகளும் சித்தர்களும் வசிப்பார்கள்.
இமயமடக்கொடி - திரு இடைச்சுரத்திற் கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
இமயம்-இமயமலை, பொன்மலை.
இமயவல்லி - பார்வதி.
இமயவில்லி - சிவன்.
இமலம் - மரமஞ்சள்.
இமவாலுகை - பச்சைக்கருப்பூரம்.
இமவான் - மலையரசன்.
இமாசலம் } இமயமலை.
இமாலயம் }
இமிசை - எளிமை, கொல்லுதல், சங்கையீனம், வருத்தம்.
இமிர்தல்-ஒலித்தல், முரிதல், மொய்த்தல்.
இமில்-எருத்தினேரி,குட்டேறு.
இமிழல் - ஒலித்தல்.
இமிழ் - இனிமை; இழியென்னேவல், ஒலிபறை.
இமிழ்தல் - இனிதாதல், ஒலித்தல், கக்குதல்.
இமிழ்த்தல்-ஒலித்தல், கட்டல், கொப்பளித்தல்.
இமேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
இமை - அற்பம், இமைப்பொழுது, இமையென்னேவல், கண்ணிதழ், கரடி,மயில்.
இமைகொட்டல்-இமைத்தல்.
இமைக்குழிவு - கண்ணில் ஒருவித குத்தல் நோய்.
இமைத்தல் - ஒளிசெய்தல், கண்ணிமைத்தல்.
இமைப்பு-இமைத்தல், இமைப்பொழுது, விளக்கம்.
இமைப்பொழுது - கணப்பொழுது.
இமையம் - இமயம்.
இமையவரம்பன் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருச்செங்குன்றூரிற் கோயிற்கொண்ட விட்டுணு.
இமையவர் - வானோர்.
இமையவர்கோன் } இந்திரன்.
இமையவர்வேந்தன் }
இமையில் - கருடன்.
இமையோர் - இமையவர்.
இமைவரி - ஒருவகைக் கண்ணோய்.
இம்பர் - இவ்விடம், இவ்வுலகம்.
இம்பி - கருந்தினை.
இம்பூறல்-ஒருசாயவேர். இது இராமேச்சுரத்தில் அதிகமாய் விளைகிறது ஆதலின் இராமேச்சுர வேரென்றும் பேர்.
இம்பூறற்சக்களத்தி - ஒருபூடு.
இம்மடி - யானை.
இம்மி-அற்பம், ஒருகணக்கு. அதுபத்துலட்சத்தெழுபத்தையாயிரத்து இருநூற்றில் ஒருபாகம், நுண்மை,புலம், பொன்மை, மத்தங்காய்ப் புல்லரிசி.

இம்மியளவு - தேர்த்துகள் எட்டுக் கொண்ட ஓரளவு.
இம்மெனல் - அனுகரணவோசை, விரைவின் குறிப்பு.
இம்மை - இப்பிறப்பு.
இயக்கதுவமம் - வாசனைத்திரவியம்.
இயக்கதூபம் - குங்கிலியப்புகை.
இயக்கமாதர் - கந்தருவஸ்திரீகள்.
இயக்கம்-அசைதல், இயங்குதல், செய்குதல், நடமாடுதல், பலம், பாக்கியம், பிரகாசம், பெருமை, போதல், மிகுதி, வடதிசை, வழி.
இயக்கராஜன் - குபேரன்.
இயக்கர் - கந்தருவர்.
இயக்கர்கோமான் } குபேரன்.
இயக்கர்கோன் }
இயக்கல் உழத்தல், நடத்தல், மின்னல்.
இயக்கன் - கந்தருவன், குபேரன், நாய், பூதப்பாண்டியன், தோழன்.
இயக்கி - ஒலிப்பித்து, கந்தருவஸ்திரீ, தருமதேவதை.
இயக்கினி - கண்டங்கத்திரி.
இயக்கு - இயக்கென்னேவல், செலவு, நடை.
இயக்குதல் - உழத்தல், ஒளிசெய்தல், செலுத்தல், தங்கல், நடத்தல்.
இயக்குமை - க்ஷயரோகம்.
இயக்குரோதம் - ஆல்.
இயக்கேசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனுளொன்று.
இயங்கல் - இளைத்தல், உலாவல், தரித்தல், நடத்தல், மின்னல்.
இயங்காத்திசை - சூனியதிசை.
இயங்காத்திணை - நடையில்லது.
இயங்கு-இசங்கு, இயங்கென்னேவல், ஒரு முட்செடி.
இயங்குதல்-இளைத்தல், உலாவல், ஒளிசெய்யல், தங்கல், நடத்தல்.
இயங்குதிசை - பூரணதிசை.
இயங்குதிணை - நடையுள்ளது.
இயங்குநர் - வழிபோவார்.
இயசவடகம் - வீரகண்டை.
இயசு } இரண்டாம் வேதம்.
இயசுரு }
இயஷ்டிமதுகம் - அதிமதுரம்.
இயதாசாதன் } ஒன்றுந் தெரியாதவன்.
இயதாஜாதன் }
இயதி - சந்நியாசி.
இயத்தனம் - கருவி, பாத்திரம்.
இயத்தினம்-ஆயத்தம், கருவி, முயற்சி.
இயந்திரம் - ஆலை, சக்கரம், சூத்திரம், தேர்மதிலுறுப்பு.
இயந்திரி - இத்தி.
இயந்தை - மருதயாழ்த்திறம்.
இயமகொடி - சிங்கம்.
இயமதூதர் - எமபடர்.
இயமதூதி - பாம்பினச்சுப்பல்லின் ஒன்று.
இயமபடர் இயமதூதர்.
இயமபடை - தண்டு.
இயமமந்திரி - காலன்.
இயமம்-அட்டயோகத்தொன்று, அஃது இச்சை, களவு கொலை, பொய், இவற்றினீங்கிப் புலனடக்கி யிருத்தல்.
இயமவாகனம் - எருமை.
இயமன்-அரவினச்சுப்பல்லினொன்று, கூற்றுவன்.
இயமாவியமகம் - சித்திரக் கவியினோர் பேதம், அது ஒரேசொல்லால் நான் கடியு மடக்கிவருவது.
இயமானகணம் - நேரசைமூன்றடுத்து வருவது.
இயமானன் - உயிர், காரியத்தலைவன், யாகஞ் செய்விப்போன்.
இயமாணி - எசமாட்டி.
இயமான் - எசமான்.
இயம்-ஈ, ஒலி, சொல், மிறுதாறுசிங்கி, வாச்யம்.
இயம்பல் - எவ்வகை வாச்சியமுமுழக்கல், ஒலித்தல், சொல்லல், பழமொழி.
இயம்புதல் சொல்லுதல், வேட்கையுவமை, ஓரலங்காரம், அஃதுபொருளையின்ன தொன்றென்று சொல்ல வேட்கின்ற தென்னுள்ளம் எனக் கூறுவது.
இயலடி - இயற்சீரான் வருமடி.
இயலல்-இசைதல், ஏலுதல், கூடியதாயிருத்தல், பொருந்தல், விதிக்கப்படல்.
இயலாமை - கூடாமை.
இயலி - உலாவி.
இயலுவமம் - அதீதம்போலுஞ் சாக்காடெனவருவது, பண்புவமை.
இயல் - ஆகமம், இயற்கை, இசை, இயலென்னேவல், இயற்றமிழ், இலக்கணம், ஒழுங்கு, ஒத்து, குணம், சாயல், நடை, பகுதி.

இயல்பகத்திணை - அவ்வவ் வியல்பைக் கொண்டு பொருளைக் காட்டுவது.
இயல்பளவை-நால்வரிலொருவன் கள்வனெனில் மற்றையர் கள்வரல்லர் என்றுணர்தல்.
இயல்பு - ஒழுக்கம், குணம், சுபாவம், தகுதி, பெலன்.
இயல்புகேடு - பலவீனம். [று.
இயல்புக்காட்சி - காட்சிபேதத் தொன்
இயல்புப்புணர்ச்சி - எழுத்து விகாரமில்லாத புணர்ச்சி.
இயல்புவழக்கு - எப்பொருட்கெப்பெயர் இயல்பிலமைந்ததோ அப்பெயராலேயே அப்பொருளைக்கூறுவது.
இயல்பூ - வில்வம்.
இயல்பூதி-நாய்வேளை, வெல்லம்.
இயல்பூபதி - வில்வமரம்.
இயல்பேது-ஓரளவை, அது பலபொருள்குறித்தஒருசொல்லாயினும் இயல்பையுங் காரணத்தையுங்கொண்டு ஒருபொருளைக் கருதுவது (உ-ம்) மா.
இயவகம் - காராமணி.
இயவகியம் - தானியம் விளைநிலம்.
இயவசம் - புல்.
இயவட்சாரம் - யவசார்ரம்.
இயவபலம் - மூங்கில்.
இயவம் - ஒரு தானியம், நெல்.
இயவர்-கீழ்மக்கள், சண்டாளர், தோற்கருவியாளர்,வாச்சியக்காரர்.
இயவனர் - கம்மாளர், சித்திரக்காரர்,
இயவனிகை - திரை. [சோனகர்.
இயவாகு - கஞ்சி.
இயவாக்கிரசம் - யவசாரம்.
இயவாசம் - சிறுகாஞ்சொறி.
இயவானி - ஓமம்.
இயவியம்-தானியம், விளைநிலம்.
இயவீயன் - தம்பி.
இயவு-ஊர், காடு, புகழ், வழி. [ளன்.
இயவுள் - தலைவன், தெய்வம், புகழா
இயவை-துவரை, தோரை, நெல்,வழி.
இயறல் - போதல், முத்தி.
இயற்கை - ஏது, குணம், சுபாவம், தகுதி, தட்டு, முட்டு, திராணி, பாக்கியம், முறைமை, வரிக்கம்.
இயற்கைக்குணம் - சுபாவகுணம்.
இயற்கைஞானம் - சுபாவஞானம்.
இயற்கைப்புகழ்ச்சியணி - இயற்கையையே யுவமையாகக்கூறல் (உ-ம்) கன்னன் கொடையேகொடை.
இயற்கைப்புணர்ச்சி - களவுப்புணர்ச்சியினொன்று அது தலைவனுந் தலைவியுமுயற்சியின்றிக்கூடுதல். [ள்.
இயற்கைப்பொருள் - இயல்புப்பொரு
இயற்கையறிவு - சுயவறிவு.
இயற்கையுணர்வுடைமை - கடவுளெண்குணத்தொன்று, அது பூருவஞானம்.
இயற்கைவினைக்குறிப்பு - ஆக்கச்சொல் வேண்டாதியற்கைச்சொல்லாய் நிற்கும் வினைக்குறிப்பு.
இயற்சீர் - ஆசிரியவுரிச்சீர்.
இயற்சீர்வெண்டளை - ஆசிரியவுரிச்சீரீற்றசைவருஞ்சீர் முதலசையோடொன்றுவது நிற்பது. [ல்.
இயற்சொல்-இயற்றமிழ், வழக்கச்சொ
இயற்பகைநாயனார் - அறுபத்துமூன்று நாயன்மாருளொருவர், இவர் காவிரிப்பூம்பட்டினத்திலே வணிகர்குலத்திற் பிறந்தவர்.
இயற்படுத்துரைத்தல் - வழிபடுத்திச் சொல்லல். [பெயர்.
இயற்பெயர் - காரணமின்றி வழங்கும்
இயற்றமிழ்-செந்தமிழ், வழக்கத்தமிழ்.
இயற்றல் - ஏவுதல், செய்தல்.
இயற்றளை - ஆசிரியத்தளை.
இயற்றனம் - கருவி, பாத்திரம்.
இயற்றி - முயற்சி. [ம்.
இயற்று-இயற்றென்னேவல், பாத்திர
இயற்றுதல் - செய்தல், நடத்தல், விதித்தல். [தா.
இயற்றுதற்கருத்தா-வினைமுதற் கருத்
இயற்றும்வினை-தன்வினை. [ருத்தா.
இயற்றும்வினைமுதல் - செய்வினைக்க
இயனம்-மரமேறிகளின் கருவியுறை.
இயனிலையுருவகம் - உருவக அலங்காரத்தொன்று; அஃது ஒன்றனங்கம் பலவற்றையு முருவகித்து முருவகியாது முரைத்தங்கியை வருவித்துரைப்பது.
இயன்மொழிவாழ்த்து-ஒரு பிரபந்தம்.
இயாகதம் - சிற்றகத்தி. [ள்வி.
இயாகம் - கொன்றை, பாத்திரம், வே
இயாகாதிபதி - இந்திரன்.

உரிமை - ஆட்சி, இஷ்டம், இனம், உரித்து, ஒவ்வொன்றிற்குத் தகுவது, கடமை, குணம், சிநேகம், சுதந்தரம், மனைவி.
உரிமைகொண்டாடல்-உரிமை பாராட்டல்.
உரிமைக்கஞ்சி-சாகுந்தறுவாயில் வார்க்குங்கஞ்சி, சாவீட்டிற் சுற்றத்தார்க்கு வார்க்குங்கஞ்சி.
உரிமைக்கடன்-சேர்ந்திருந்த உரித்துக்குச் செய்யுங் கடன், பிரேதத்திற்குரியவர்கள் செய்யுங்கடமை.
உரிமைக்கட்டு - இனக்கட்டுப்பாடு.
உரிமைக்காணி - உரிமை வழியிற்காணி.
உரிமைக்காரர்-உரியவர்கள்,சுதந்திரர்.
உரிமைசெய்யல்-கடமைசெய்யல், கருமாதி செய்யல்.
உரிமைச்சொல் - உரித்துக்கொண்ட பேச்சு.
உரிமைத்தத்துவம் - உரித்தெடுக்கும் அதிகாரவுறுதி, பாத்தியம்.
உரிமைபாராட்டுதல் - உரித்துக்கொண்டாடல், சம்பந்தங்கொண்டாடல்.
உரிமைபேசல்-உரிமைகாட்டிப்பேசல்.
உரிமைபங்கு - உரிமை வழியாய் வரும் பங்கு.
உரிமைப்பாடு - உரித்து.
உரிமைப்பிள்ளை-உரித்துக் குடந்தைப் பிள்ளை, சுவீகாரபுத்திரன்.
உரிமைப்பெண் - விவாகத்துக்குரிமையான பெண்.
உரிமைமண் - சவக்குழியி லுரிமைக்காரர் போடுமண்.
உரிமையாட்சி-உரிமையால்வந்தஆட்சி.
உரிமையாளி - சொந்தக்காரன்.
உரிமையின்மை - சொந்தமற்றது.
உரிமைவழி - உரித்துக் காரணமாய் வருவது, சம்பந்தமுறை.
உரியடி - உரிச்சீரான்வருமடிஒரு வைணவத் திருவிழா.
உரியது - உடையது, சுதந்தரமானது, தக்கது.
உரியபொருள் உரிய அர்த்தம், சுதந்திரமான திரவியம்.
உரியர் - உரியோர்.
உரியவள்-உரித்தானவள் மனைவி.
உரியவன்-இனத்தான் உரித்தானவன் கணவன், தக்கவன்.
உரியன் - உரியவன்.
உரியார்-அறிஞர், தாயத்தார்,உரியோர்.
உரியாழாக்கு-அரையேஅரைக்கால்படி
உரியாள் - உரியவள், மனைவி.
உரியோன் - கணவன், சுதந்தரி.
உரிவை-தோல், மரவுரி, வினைமுற்று.
உரீகாரம்-வாக்குத்தத்தம், அங்கீகாரம்.
உரீகிருதம் - அங்கீகரிக்கப்பட்டது.
உரு-அதிகமான,அட்டை,அழகு,உடல் உருத்தலைசெய்யென்னேவல், உள், எலுமிச்சை, கரு, கலை, கோபம், சன்னதம், செபத்தினுரு,தோற்றம், நிறம், நோய், பதுமை, பருமை,பெரிய, மரக்கலம், வடிவு, விலையுயர்ந்தது, வெப்பம்,வேற்றுக்குறி முதலிய வெண்வகையிடைச்சொற்குறி,வைக்கோற்புரி.
உருகம் - பிறப்பு.
உருகல் - இரங்குதல், கரைதல், நீராழமாதல், மனங்கரைதல்.
உருகாயேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
உருகுதல் - உருகல்.
உருகை - புல்லூரி, அறுகம்புல்.
உருக்கம்-அன்பு, இரக்கம், உருகுந்தன்மை, தொடை.
உருக்கல் - உருக்குதல்.
உருக்கனடித்தல் } ஒரு நோய் சடைவு.
உருக்கன் }
உருக்காரம் - வெண்காரம்.
உருக்கினம் - அஞ்சனபாஷாணம்.
உருக்கு-உருக்கென்னேவல், எஃகு, எருக்கு.
உருக்குக்காரம்-உருக்குச்சாக்கு, வெங்காரம்.
உருக்குதல்-உருகச்செய்தல், கெடுத்தல் தீயிற்கரைத்தல், வருத்தல், வாட்டல்.
உருக்துப்பிரமியம் - இரத்தப்பிரமியம், சலக்கழிச்சல், நீரிழிவு.
உருக்குமகாரன் - தட்டான்.
உருக்குமணல் - அயமண்.
உருக்குமணி - ஒருகாதணி, கிருட்டிணன்றேவி.
உருக்குமண் - உருக்குமணல்.
உருக்குமம் - பொன்.
உருக்குலைதல் - வடிவங்கெடல்.
உருக்குவளை - மெதுகாணி.

உருக்கொள்ளல் - ஆவேசங்கொள்ளல்' கருக்கொள்ளல், வடிவமெடுத்தல்.
உருக்கொள்ளுதல் - உறுப்படைதல், சன்னதங்கொள்ளுதல்.
உருசகம் - ஒருவித உப்பு, ஆமணக்கு, கொம்மட்டி, புண்ணுக்கு வைக்குங் காரம், மாதளை.
உருசதி - அசுபவார்த்தை.
உருசம் - மனோகரமானது.
உருசி } இன்பம், சுவை, மதுரம்.
உருசிகரம் }
உருசிகாட்டல் - ஆசை, பதங்காட்டல், இனிப்புக்காட்டல்.
உருசிகாணல் - உருசி அறிதல்.
உருசிதட்டுதல் - உருசிப்படுத்தல், சுவைதோன்றல்.
உருசிதம் - விரும்பப்பட்டது.
உருசித்தல் - அனுபவித்தல், சுவைத்தல்,சுவைப்படுதல்.
உருசியசிம்மகுட்டம் - ஒருவகை குஷ்டநோய். அது கொம்புளங்கள் முட்களைப்போல் மெல்லியதாய் நீண்டும் பிசுபிசுத்தும், சுரசுரத்தும், உள்ளிற் கறுத்தும், முனையிற்சிவந்தும் நெருக்கமாக வெழும்பி இரணங்களாவது. அவைகளில் புழுக்கள் நெளிதலும், நோதலும், எரிச்சலுமுண்டாகும், சிலவேளை நோவுமாத்திரமிருந்தாலுமிருக்கும்.
உருசியம் - கடமையென்னு மோர்மிருகம்.
உருசிரம் - மனோகரமானது.
உருசிரவன் - சத்தியசுவன்மகன்.
உருசு - அத்தாட்சி, திருஷ்டாந்தம்.
உருசுபகந்தவிரணம் - ஒருவகைவிரணநோய். அ.து வாதபித்தத்தினாற் பிறந்து குதவளையங்களை யொட்டி ஒழுங்கான துவாரங்களை யுண்டாக்கிச் சீழை யொழுகுவிப்பது.
உருசுப்படுத்தல் } மெய்ப்பித்தல்.
உருசுவாக்கல் }
உருசை - ஆசை, இன்சுவை,விருப்பம் உருசி.
உருஷங்கி - துரியோதனன் றம்பியருள் ஒருவன்.
உருடி - முனி.
உருட்சி - உருளுதல்.

உருட்டல்-உருகச்செய்தல், கவணெறிதல், திரட்டல், புரட்டல், மத்தளம், விரைவாயடித்தல், வெல்லல்.
உருட்டிப்பார்த்தல்-கோபமாய்ப் பார்த்தல்.
உருட்டிப்போடல்-அழித்துப்போடல், புரட்டிவிடல்.
உருட்டு - உருட்டென்னேவல், உருளுதல், திரட்சி, புரட்டு, வெருட்டு.
உருட்டுக்காரன் - புரட்டன்.
உருட்டுதல் - உருட்டல்.
உருட்டுவண்ணம் - அராகந்தொடர்ந்து வருவது, துரிதமுள்ளவண்ணம்.
உருணி - உருளுந்தன்மையுடையது.
உருண்டை - உண்டை, திரட்சி.
உருதம் - மிருகபட்சிகளின் சத்தம்.
உருத்தகம் - ஒரு சன்னிநோய்.
உருத்தகுதம் - ஒருவகைக்குதநோய். அது நாள்தோறு மலத்தை அடக்கியடக்கி விடுதலால் அபானவாயுவு குதத்தை நன்றாயனுசரித்து அத்துவாரவளையத்தி னடியையும் நுனியையுஞ் சுருங்கச்செய்யுங் காலத்திற் பிறப்பது, அந்தச் சுருக்கத்தால் மலமானது பிரயாசையின்மேல் வெளிப்படும். இப்படி வெளிப்படுந்தோறும் ஆசனத்தில் வெடிப்புண்டாகிப் பச்சைப் புண்போல உபாதி நேரிடும்.
உருத்தம் - தடுக்கப்பட்டது.
உருத்தரித்தல் - வடிவங்கொள்ளல்-
உருத்தல் - கோபம்,கோபித்தல், சினேகக்குறிப்பு, தோற்றுதல், மிகுதி, முளைத்தல்.
உருத்தாகசன்னிபாதசுரம் - ஒருவகைச்சுரநோய். அது அவயவங்களின் மிகுநோவு, உடம்பெரிவு, கால்கை கழுத்துக்குள் நோவொடு, தினவு, பிரமை, சோர்வு, பிரலாபப்பேச்சு, தாகம், அதிக பேதி அல்லது சொற்பபேதிஎன்னும் இக்குணங்களையுண்டாக்குவது.
உருத்தாகசன்னிவாதசுரம் - ஒருவகை சுரநோய். அது இரைப்பு, இருமல், உடம்புசுற்றல், கழுத்தினரம்பு இழுத்தலோடு வேதனை, தாழ்வாய்க் கீல்கள் பிடித்தலோடுநோவு, சர்வாங்கத்திலும் குத்தலுடன் நடுக்கம் கழுத்

திலு நெற்றியிலும் வியர்வை, பிதற்றல், தவித்தல், தயக்கம், கண்டவரோடு, முறையிடல், கிடைபொருந்தாமற்புரளல், உதடு உலர்தலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.

உருத்திரம் - அழுகை, உரியபொருள், தொழிலின்லாபம், வளர்தல்.

உருத்திரகாணம் - சிவகணம்.

உருத்திரகணிகை - உயர்குலத்துப் பெண் தேவதாசி.

உருத்திரகணிகையர் - வேசியர்களுக்கு வேறாய் கர்புநிலை வழுவா திருந்து பூஜாகாலத்தில் சுத்த நிருத்தஞ்செய்யும் மகளிர்.

உருததிரகணேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

உருத்திரகிரி - கயிலாயமலை.

உருத்திரகோடீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று திருக்கழுக்குன்றம்.

உருத்திரங்கண்ணர் - சங்கப் புலவருள் ஒருவர். இவர் பத்துப்பாட்டுள் ஒன்ருகிய பெரும்பாணுற்றுப்படை செய்தவர்.

உருத்திரசடை - சிவதுளசி, மஞ்சிலிக்கான்.

உருத்திரசம் - பாதரசம்.

உருத்திரசன்மகண்ணர் - கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மரில் ஒருவர். இவர் திருவள்ளுவமாலைச் செய்யுளிலொன்று செய்தவர்.

உருத்திரசன்மர்
உருத்திரசன்மனர் } கடைச்சங்கப் புலவருளொருவர். இவர் உப்பூரிகுடிகிழார் குமாரர், இவரைக் குமாரக்கடவு ளம்சமென்பர், அகநானூறு தொகுத்தவர் இவரே, இறையனாகப்பொருளுரை செய்த நாற்பத்தொன்பதின்மர் உரையையுமரங்கிற்கேட்டு நக்கீரருரையையே மெச்சின ஐயாண்டுநிரம்பா மூங்கைப்பிள்ளையாகியவரு மிவரே.

உருத்திரசாவர்ணி - பன்னிரண்டாவது மனு.

உருத்திரணீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

உருத்திரபசுபதிநாயனர் - அறுபத்துமூன்றுநாயன்மார்களில்ஒருவர்இவர் தலையூரிற்பிறந்து இரவும்பகலும் தண்ணீரில் நின்று உருத்திரஞ்சொல்லிச் சிவபக்தி பண்ணியவர்.

உருத்திரபஞ்சமம் - ஒருபண்.

உருத்திரபூ - மயானம்.

உருத்திரபூஷணம் - பாம்பு.

உருத்திரபூமி - மயானம்.

உருத்திரம் - ஓரலங்காரம், அஃது வெகுளிதோன்றக் கூறுவது, பெருங்கோபம், மஞ்சள்.

உருத்திரரோகம் - மாரடைப்பு.

உருத்திரவீணை - ஒருவீணை.

உருத்திரலோகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

உருத்திரன் - ஏகாதசவுருத்திரரி லொருவன், சிவன், பெருங்கோபி.

உருத்திராக்கம்
உருத்திராட்சம் } உருத்திரமணி.

உருத்திராக்கேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

உருத்திராணி - பார்வதி.

உருத்திராபிஷேகம்-உருத்திர மந்திரஞ் செபித்துச் செய்யும் அபிஷேகம்.

உருத்திராரி மன்மதன்.

உருத்திராவாசம் - காசி.

உருத்திரி - ஒருவீணை.

உருத்திரேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

உருத்திரை - உருத்திராணி.

உருத்திரோற்காரி - ஐம்பத்தேழாவது வருடம்.

உருத்துவம் - பருப்பம்.

உருத்துவிசேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

உருநாட்டு - சித்திரம், விக்கிரகம்.

உருந்திரம் - விசாலமானது.

உருபகதீவகம் - ஓரலங்காரம்.

உருபகம் - உருவகம்.

உருபு - உருவம் வேற்றுமையுருபு முதலிய விடைச்சொல்.

உருபுகம் - ஆமணக்கு.

உருபுத்தொகை-உவமையுருபு, தொக்குநிற்பது (உ-ம்) புயற்கருங்குழல்.

உருபுப்புணர்ச்சி - வேற்றுமையுருபு, புணர்ந்துவருவது.

உருபுமயக்கம்-ஒருவேற்றுமையுருபுநிற்கவேண்டுமிடத்துப் பிறிதொன்று.

தன்பொருள்படாது அதன் பொருள் படநிற்றல்.
உருபுவமானத்தொகை - உருபுமுபமானமுந் தொக்குநிற்பது (உ-ம்) வாயநயச்சிவப்புள தொன்றில்லை.
உருபுவமைத்தொகை-உருபுவமைதொக்குநிற்பது (உ-ம்) சேல்விழி.
உருபூதம் - ஆமணக்குச்செடி. [த்தி.
உருப்பசி - தெய்வப்பெண்களிலொரு
உருப்படல் } உருவாதல்,உருவேறல்
உருப்படுதல் } சன்னதங்கொள்ளல் சீர்ப்படுத்தல்.
உருப்படுத்தல் - உருவேறப்பண்ணுதல் சித்திரித்தல்.
உருப்பம் - உட்டணம், கோபம், திணைமா, மிகுதி.
உருப்பிரமம் - ஆட்டுக்கொம்பு.
உருப்பு - பூரணம், மிகுதி, வெப்பம்.
உருப்போடல் } பாடம்பண்ணல்,மந்
உருப்போடுதல் } திரஞ்செபித்தல்.
உருமணி - கருவிழி.
உருமம் - உட்டணம், மத்தியானம்.
உருமலைவாரி - உலோகமணல்.
உருமாறல் } கோலமாறுதல், சரீரம்
உருமாறுதல் } வேறுபடல்,வேற்றுருக்கொள்ளல்.
உருமித்தல் - உட்டணித்தல்,மனவெப்பமடைதல்.
உருமிப்பு - உட்டணம், மனவெப்பம்.
உருமிளை - யமன்மனைவி.
உருமு - அச்சம், இடி.
உருமுக்குரல் - இடியோசை.
உருமுதல் - உறுமுதல்.
உருமேறு - உருமு.
உருமை - சுக்ரீவனதுமனைவி, உப்புவிளையும் பூமி.
உரும் - அச்சம், இடி, விடுதல்.
உரும்பாம் - சர்ப்பம்,செம்பு,பெருங்கா
உருகு - கறுப்புக்கலைமான். [யம்
உருவகப்படுத்தல்-அலங்காரப்படுத்திச் சொல்லல்.
உருவகம் } ஓரலங்காரம். அஃது
உருவகமணி } உபமேயத்தைப் பொருளாயும் பொருளை யுவமையாயுங் கூறுவது.
உருவகவிரி - ஓரலங்காரம். அது பண்புருபு விரிந்து நிற்பது.
உருவகவுயர்வு-நவிற்சியணிஓரலங்காரம் அஃது உபமேயத்தைச் சொல்லாற் சொல்லாமல் உபமானச் சொல்லால் இலக்கணையாய்ச் சொல்லுதல் (உ-ம்) வில்லுவக்கா யிரண்டுகொண்ட வல்லி.
உருவகவுருவகம் - ஓரலங்காரம். அது உருவகத்தையே பெயர்த்தும் பிறிதொன்றாக வுருவகஞ் செய்வது.
உருவகன் - வசுதேவனுக்கிளையிடம் பிறந்த மகன்.
உருவகித்தல் - உபமேயத்திலுவமானத்தைப் பேதமின்றி யேற்றிச் சொல்லுதல்.
உருவக்கொடியோர் - கொடியுருவினோ
உருவங்காட்டி - கண்ணாடி. [ர்.
உருவசாத்திரம் - கலைஞான மறுபத்துநான்கினொன்று.
உருவசி - உருப்பசி.
உருவமெடுத்தல் - வடிவமெடுத்தல்.
உருவம் - அழகு, உடலுறுப்பு, உடல், காணக்கூடியது, சொரூபம், நிறம், வடிவம், விக்கிரகம்.
உருவல் - உருவுதல்,காதணியினொன்று
உருவழிதல் - உருக்கெடுதல்.
உருவாக்கல் } உண்டுபண்ணுதல், சீ
உருவாக்குதல் } ர்ப்படுத்தல், படைத்தல், பொருளாக்குதல்.
உருவாணி - தேய்ந்துபோனது, மெலிந்தவுடல்.
உருவாணிபற்றுதல் - தேய்ந்துபோதல்.
உருவாதல் - உருவமெடுத்தல், உரூபமடைதல், பொருளாதல்.
உருவாரச்சம்மட்டி - வீழி.
உருவாரம் - பிரதிமை, வெள்ளரி.
உருவி - செம்முள்ளி, நாயுருவி, புல்லுருவி, முள்ளி.
உருவித்தல் - உருவகப்படுத்தல்.
உருவியுப்பு - நாயுருவி யுப்பு.
உருவில் - உருவில்லாதவன்,மன்மதன்.
உருவிழத்தல் - வடிவமிழத்தல்.
உருவு - அச்சம், உருவம், உருவன்னேவல், வடிவம்.
உருவுதடம் - சுருக்குக்கயிறு.
உருவுதல் - இலைமுதலியன வுருவுதல், உறுப்பு, உறைகழித்தல்,புதைந்தோடல்.

உருவுவம் - உருவவுபமானம், அஃது மனுவடிவம்போலுங் குருவடிவென வருவது.
உருவுள்ளு - கொள்.
உருவெடுத்தல் - உருக்கொள்ளுதல்.
உருவெளி } மனதிலுள்ள பொருளின்மருட்சித்தோற்றம்.
உருவெளிக்காட்சி
உருவெளித்தோற்றம்
உருவெளிப்படல் } மனதிலெண்ணியது தோன்று மனத்தோற்றம்.
உருவெளிப்படுதல்
உருவெளிப்பாடு - உருவெளிக்காட்சி.
உருவேறல்-அதிகப்படுதல், ஆவேசமேறல், உருப்படுதல்.
உருவேற்படல் - உருவமுண்டாதல்.
உருவேற்றல் } ஆவேசமேற்றல், துர்ப்போதனைசெய்யல் மந்திரத்தை அதிகமாய்ச்செபித்தல்.
உருவேற்றுதல்
உருவை - சூறை, முள்ளி.
உருவொளி-கண்ணடி முதலியவற்றிற் காணும் நிழல்.
உருளரிசி - கொத்துமல்லி.
உருளல் - உருளுதல்.
உருளி - உரோகிணிநாள், தேருருளை, பொருத்து, வட்டம்.
உருளிபேர்தல் - பொருத்து விலகுதல்.
உருளியெடுத்தல் - பொருத்துப் புரட்சியெடுத்தல்.
உருளுதல் - அழிதல், புரளுதல்.
உருளை - உருண்டை, உரோகிணிநாள், தேர் முதலியவற்றினுருள், பண்டி, முட்டை, வட்டம், வெள்ளைப்பாஷாணம்.
உருளைக்கல் - பாறகற்கள்.
உருளைக்காந்தம்-ஒருவகைக் காந்தகல்.
உருள்-உருளென்னேவல், உரோகிணி நாள், தேருருளை, பண்டி, வட்டம்.
உரூடபதம் - இடுகுறிமாத்திரப்பெயர், பகாப்பதம்.
உரூடம் - இடுகுறி, பகாப்பதம், பிரசித்தம்.
உரூடி - இடுகுறி, பிரசித்தமானது.
உரூடிகம் } தூளியினுன்மறைபட்டது.
உரூஷிதம்
உரூடியார்த்தம் - இயற்சொல்.
உருட்சை - வாழைக்கிழங்கு.

உருதி - ஆயில்பட்டை.
உரூபகம் - அத்தாட்சி, ஒரு செய்யுள், உரூவக அலங்காரம், சத்த தாளத்தொன்று.
உரூபகாரம் - அத்தாட்சி.
உரூபகாலங்காரம் - உருவகவணி.
உரூபதன்மாத்திரை - பஞ்சதன்மாத்திரையிலொன்று.
உரூபம்-உருவம், கிரிகாமாலைபண்ணல், சாயை, சுபம், நிலை, நிறம், மந்தை.
உரூபாணம் - சிவிகை.
உரூபாய்-பதினறு அணுகொண்ட வெள்ளிநாணயம்.
உரூபாரூபம்-நவபேதத்தொன்று. அஃது சதாசிவம்.
உரூபாவதி - அழகுடையவள், பன்னிரண்டாவது மேளகர்த்தா.
உரூபி - உரூபமுள்ளது.
உரூபிகாரம் - உரூபம், உரூபிகரிக்கை.
உரூபிகரித்தல்-உரூபப்படுத்தல், கருவிலுருப்படல்.
உரூபிகாரப்படுத்தல்-உரூபிகரித்தல்.
உரூபிகாரம் - உரூபம்.
உரூபிகை - வெள்ளெருக்கு.
உரூபித்தல்-அத்தாட்சிப்படுத்தல், மெய்ப்பித்தல், ஆராய்தல், சிந்தித்தல்.
உரூபு - உரூபம், சாயல்.
உரூப்பியம்-அழகானது, பொன், வெள்ளி நகை, வெள்ளி, வெள்ளை.
உரேந்திரன் - வீரன்.
உரை - ஆகமப்பிரமாணம்புகழ்வியாக்கியாபனம், உயர்ச்சி, உரையென்னேவல், ஒலிசொல், சொற்பயன், தேய்மானம் தேய்வு, பேச்சு, பொன், மாற்றறியுமுறை, வேதமொழி.
உரைகட்டல் } உரைபண்ணுதல்
உரைகட்டுதல்
உரைகல்-பொன் வெள்ளி யுரைக்குங் கல், கட்டளைக்கல்.
உரைகாரர்-உரையாசிரியர், வண்ணார்.
உரைக்கோள் - உரைகாரன்கருத்து.
உரைசல் } உரைசுல், சீக்கல், தேய்த்தல்.
உரைசுதல்
உரைசெய்யல்-பேசல், வியாக்கியானம் பண்ணல்.
உரைஞ்சல் - தேய்த்தல், சீக்கல்,
உரைதல் - தேய்தல்,

உரைத்தல்-ஒலித்தல், கற்பித்தல், சொல்லுதல், தேய்த்தல்.
உரைத்தாமென்றல் } உத்தியில் ஒன்று.
உரைத்துமென்றல் }
உரைநூல் - உரையுள்ள நூல்.
உரைப்பு - உரைக்கை, சொல்லுகை, தேய்ப்பு.
உரையல் - உரைதல்.
உரையாசிரியன் - உரைசெய்வோன்.
உரையாடல் - சொல்லல், பேசல்.
உரையாணி - மாற்றறியுமாணி.
உரையிடல் - உரைத்தல்.
உரையிலக்கணம்-நூலுரைக்கு வேண்டுமிலக்கணம்; அது பாடம் கருத்து சொல்வகை சொற்பொருள் தொகுத்துரை உதாரணம் வினு விடை விசேடம் விரிவு அதிகாரம் துணிவு பயன் ஆசிரியவசனம்.
உரையிற்கோடல் - உத்தியில் ஒன்று.
உரைவன்மை-சாதுரியப்பேச்சு, சொற்றிட்பம்.
உரைவு - உரைதல்.
உரொக்கக்காரன்-பணஇருப்புள்ளவன்
உரொக்கம் - கையிருப்புப்பணம்.
உரொட்டி - உறட்டி, அப்பம்.
உரோக்கம் - சிவனடிபாதம்; இது இலங்கைத்தீவிலுள்ள ஒருமலை.
உரோக்கிநம் - மருந்து.
உரோகசாந்தகன் - வைத்தியன்.
உரோகசிரேட்டம் - சுரம்.
உரோகணி - ஒரு நட்சத்திரம், பலதேவன்றாய்.
உரோகணிதனயன் - பலபத்திரன்.
உரோகணீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
உரோகதி - நாய்.
உரோகஸ்தன் - உரோகி.
உரோகம் இறங்குதல், உயர்தல், எழும்புதல், தளிர், ஏறுதல், ஒளியின்மை, நோய், பூவரும்பு.
உரோகராம் - கயரோகம்.
உரோகாதம்-நெஞ்சிடித்தல், மாரடித்தல்.
உரோகி - நோயாளி.
உரோகிணி - உரோகிணிநாள், ஒன்பானைந்தெண்டுபெண், கடுக்காய், கடுகுரோகணி, பலராமன்றாய், பீதரோகணி.
உரோகிணிதனயன் - பலபத்திரன்.
உரோகிதகம் - செம்மரம்.
உரோகிதம் - இந்திரதனு, சிவப்பு.
உரோகிதாசுவம் - அக்கினி.
உரோகீ - செம்மரம்.
உரோகீஷம் - கலைமான்.
உரோங்கல் - உலக்கை.
உரோசங்கெட்டவன் - மானவீனன்.
உரேசப்படல் } சுவரணைகொள்ளல், காணப்படல்.
உரேசப்படுதல் }
உரோசம்-மானம், மூலை, வெட்கம்.
உரோசல் - உரைஞ்சல்.
உரோசனகம் - எலுமிச்சை.
உரோசனம் - முள்ளிலவு.
உரோசனி கடுகு, கோரோசனை, செந்தாமரை.
உரோசனை-கடுகு, கோரோசனை, செந்தாமரை, மகிடரோசனை முதலிய ரோசனை.
உரோசி - சூரியகாந்தி.
உரோசித்தல் - உரோசப்படுதல்.
உரோசுதல் - உரோசல்.
உரோஞ்சுதல் - உரைஞ்சுதல்.
உரோணி - உரோகிணிநாள்.
உரோதசி - ஆகாயமும் பூமியு மேகோபித்திருத்தல்.
உரோதம் - தடை, நதிதீரம்.
உரோதனம் - அழுதல், கண்ணீர்.
உரோதனி - சிறுகாஞ்சொறி.
உரோதேர்வக்கிரை - நதி.
உரோபணம் - இரங்குதல்.
உரோபம் - அம்பு, பாணம்.
உரோமகசுவணம்-மயிர்க்கூச்சிடுதல்.
உரோமகுச்சகம் } சாமரம்.
உரோமகுச்சம் }
உரோமகூபம் - மயிர்க்குச்சு.
உரோமகேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
உரோமக்கட்டு - நிறைமயிர்.
உரோமக்கால் - மயிர்த்துவாரம்.
உரோமக்கிழங்கு - வசம்பு.
உரோமசங்காரி - அம்பட்டன், உரோமத்தைப்போக்கும் ஒரு மருந்து.
உரோமசன் - உரோமரிஷி.
உரோமத்துவாரம் - மயிர்த்துவாரம்.
உரோமந்தேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
உரோமபூமி - தோல்.

உரோமப்புளகம் / உரோமப்புளகிதம் / உரோமப்பொடிப்பு } மயிர்ச்சிலிர்க்கை.
உரோமமுனி - பதினெண் சித்தரில் ஒருவர்.
உரோமம்-புறமயிர், மயிர், மயிர்ப்பரப்பு.
உரோமாஞ்சம் - மயிர்க்கூச்சிடுதல்.
உரோமராசி - மயிரொழுங்கு.
உரோமரேகை-உரோமத்தினொழுங்கு.
உரோமலம்பம் - வண்டு.
உரோமாஞ்சம் / உரோமாஞ்சலி / உரோமாஞ்சிதம் } உரோமம் பொடிப்பு, குதுகலிப்பு.
உரோமாம்பரம் - கம்பளம், சால்வை.
உரோமாரிஷம் - மயிர்ப்புளகம்.
உரோமாவலி - உரோமரேகை.
உரோமி - மயிர்ச்சிகைப்பூடு.
உரோருகம் - முலை.
உரோவேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
உர்வசீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
உலகங்காத்தான் - அவுரிச்செடி, அரி.
உலகசஞ்சாரம் - உலகவாழ்வு.
உலகசயன் - புத்தன்.
உலகத்தோற்றம் - புராணவிலக்கணங்களைந்தனுளொன்று. அது உலகத்தினுற்பத்தியைக் கூறுவது.
உலகநடை - உலகவியற்கை, உலகாசாரம்.
உலகநாதன்-அரசன், கடவுள், பிரமன்.
உலகநாயகி - பாவநாசப்பதியிற் கோயில்கொண்டிருக்குந் தேவி.
உலகநீதி-இயல்பானநீதி, உலகநடை, தேசவியற்கைநீதி, நன்னெறி, ஒரு நூல்.
உலகநேத்திரன் - சூரியன்.
உலகபாந்தவன் - சூரியன், விட்டுணு.
உலகபாரணன் - விட்டுணு.
உலகப்பற்று - உலகபந்தம்.
உலகப்புரட்டன்-மிகு புரளிக்காரன்.
உலகமலையாமை - நூலழகினொன்று.
உலகமலைவு-ஓரலங்காரம்; அஃது உலகொழுக்கிறப்பக் கூறுவது, கற்றோர்க்கும் மயங்கவைத்தல்.
உலகமாதா-இலக்குமி, சரச்சுவதி, செம்மணத்தக்காளி, பார்ப்பதி.
உலகமீன்றாள் - பார்ப்பதி.
உலகமுண்டோன் - விட்டுணு.
உலகம் - ஆகாயம், உயர்ந்தோர், உலகத்தார், உலகு, குணம், சனம், சிருட்டிப் பொருள்கள், திசை, நாடு, பதவி, பிரபஞ்சம், பூமி, மங்கலச்சொல், இருபத்திரண்டினொன்று.
உலகரட்சகன்-உலகத்தைக்காப்போன்.
உலகரட்சணியம் / உலகரட்சை } உலகத்தாரையீடேற்றுகை.
உலகர் - உலகத்தார்.
உலகவழக்கம் / உலகவழக்கு } இயல்பாய் வழங்குவது உலகொழுங்கு.
உலகவாஞ்சை - உலகவிருப்பம்.
உலகவிருட்சகன்-கடவுள், மனுஷரையீடேற்றுபவன்.
உலகவொடுக்கம்-ஒவ்வொரு காரியதத்துவங்களும் அதனதன் காரியத்தில் ஒடுங்குதல்.
உலகளந்தோன் - விட்டுணு.
உலகாசாரம் - உலகவொழுக்கம்.
உலகாயதம்-புறச்சமயம் ஆறினொன்று; அது சார்வாகன் கோட்பாட்டின்படி உலக இன்பமே சிரேஷ்டமென்னும் ஒருநிரீச்சுரவாத சமயம்.
உலகாயதன்-உலகாயத சமயத்தோன்.
உலகாயிதம்-உலகாயதம், சடமாயாவாதம்.
உலகாளல் / உலகாளுதல் } உலகோம்பல்.
உலகாள்வோன் - உலகாதிபன்.
உலகியல் - உலகநடை.
உலகு - ஆகாயம், உயர்ந்தோர், ஒழுக்கம், திசை, நாடு, நிலம், பூமி, மக்கள், முப்பகையினொன்று.
உலகுலம் - திப்பிலி, திரிபாலை.
உலகோம்பல் / உலகோம்புதல் } அரசாறுதொழிலின் ஒன்று; அஃது உலகுகாத்தல்.
உலக்கை - இருப்புத்தண்டு, ஒழிக்கை, குத்து முலக்கை, கேடு, சாவு, திருவோணம், மெருகன்கிழங்கு.
உலக்கைக்கணை-உலக்கையின் திரண்டதலை, திரண்டதலையுள்ள உலக்கை.
உலக்கைக்கொழுந்து - முசலகிசலம்.
உலக்கைசார்த்தல் - கெடுத்தல்.
உலக்கைத்திங்கள் - ஆவணிமாதம்.

உலக்கைப்பாட்டு - வள்ளைப்பாட்டு.
உலக்கைப்பிடங்கு - உலக்கைக் கணை.
உலக்கையாணி - பூட்டினடுவாணி.
உலங்கலம் - கற்பாத்திரம்.
உலங்காரணை - அவிரி.
உலங்கு - கொசுகு, திரண்டகல்.
உலண்டம், உலண்டு } கோற்புழு.
உலத்தல் - ஒழிதல், கெடுதல், சாதல்.
உலத்திசூலை - ஒருவிதச்சூலை.
உலபம் - நெருங்கிப் படர்ந்த கொடித்திரள்.
உலப்பல் - உலப்புதல்.
உலப்பு - ஒழிவு, கேடு, சாவு.
உலப்புதல் - அலப்புதல், ஆர்த்தல்.
உலமரல், உலமருதல் } அச்சக்குறிப்பு, அஞ்சல், துன்பம், துன்புறல்.
உலம் - கற்றிரள், திரண்டகல்.
உலம்பல், உலம்புதல் } ஒட்சித்தல், ஒலித்தல்.
உலால் - உலர்தல்.
உலருதல் - காய்தல், வாடல்.
உலர்ச்சி - காய்வு, வாட்டம்.
உலர்தல் - காய்தல், வாடல்.
உலர்த்தல் - உலர்த்துதல்.
உலர்த்தி - சூலை, ஒருநோய்.
உலர்த்தசூலை ஒருவகைச் சூலைநோய்; அது பித்தவுஷ்ணம், அக்கினி, வறட்சி, குடல்வாதம், குன்ம முதலிய வற்றாற் பிறந்து சரீரத்தி னுட்புறத்தில் உலர்த்தலுடன் குத்தல், வெளிப்புறத்தில் வீங்கித்தடித்தல், சர்வாங்கமும் நோதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்குவது.
உலர்த்துதல் - காய்ச்சுதல்.
உலர்ந்ததேங்காய் - கொப்பறை.
உலர்மரம் - வானம்.
உலர்வு - உலர்ச்சி.
உலவக்காரன் - உலோபக்காரன், பிறனில்லிற் கொஞ்சமாயுண்பவன்.
உலவமரம் - இலவமரம்.
உலவம் - உலோபம்.
உலவல் - உலவுதல்.
உலவாக்கிழி - எடுக்க வெடுக்கப் பொருள் குறையாக்கிழிக்கட்டு.
உலவித்தல் - உலோபமா யிருத்தல், ஒறுத்தல், கூசியொழுகல்.
உலவுதல் - உலாவுல், ஒழிதல், கூசிக்குறைத்தல்.
உலவை-ஊர், ஒடை மரம், காற்று, கிலுகிலுப்பை, குடி, குலம், தழை, மரக்கொம்பு, மரப்பொந்து, முல்லைநிலக்கான்யாறு. வள்ளி, விலங்கின் கொம்பு.
உலவைநாசி - திப்பிலி.
உலறல் - காய்தல், சினக்குறிப்பு.
உலறுதல்-காய்தல், சிலம்புதல், சினக்குறிப்புக் காண்பித்தல்.
உலா-உலாவென்னேவல், ஒரு பிரபந்தம்; அஃது பாட்டுடைத்தலைவன் உலாவந்ததாக நேரிசைக்கலிவெண்பாவாற்கூறி அவனது குலமுதலிய மகிமையை விளக்குவது, பவனிவருதல்.
உலாகுயம், உலாகுனம், உலாங்கம் } மனோசிலை.
உலாங்கிலிங், உலாங்கு, உலாங்குலி, உலாஞ்சல் } காவட்டம்புல்.
உலாஞ்சுதல் - கிறுகிறுத்தல், தள்ளாடுதல்.
உலாத்தல் - உலாவுதல், சாரிவரல்.
உலாத்து - உலாத்தென்னேவல், உலாவுகை.
உலாத்துக்கட்டை - கதவுக்குடுமி, சுழியாணி, முளையாணி.
உலாத்துக்கதவு - பிணையற்கதவு.
உலாத்துதல் - உலாவல், சாரிவரல்.
உலாப்போதல் - பவனிபோதல்.
உலாமடல்-ஒரு பிரபந்தம்; அஃது ஒரு பெண்ணைக் கனவின் மணந்தோன், அவள் பொருட்டு மடலூர்வேனெனக் கலிவெண்பாவாற் கூறுவது.
உலாமா - கச்சமரம்.
உலாவல், உலாவுதல் } சாரிபோதல், பொழுது கழித்து விளையாடல், மெல்ல நடத்தல்.
உலிந்தம் - ஒருதேயம்.
உலிமணி - நாயுருவி.
உலிற்கள் - வெண்கலம்.
உலு-தினைமுதலியவற்றின் சப்பட்டை.
உலுக்கல் - குலுக்கல்.

உலுக்குதல்-அசைத்தல், குலுக்குதல்.
உலுக்குமரம்-மிண்டிமரம். [நடுங்கல்.
உலுடிதம்-துவாரம், நிலத்திலுருளுதல்,
உலுட்டிதம்-அடிக்கடி பூமியிற் புரளுங் குதிரை.
உலுண்டனம்-உருட்டுதல், களவுசெய் தல், கொள்ளையிடுதல்.
உலுத்தகன் - வேடன்.
உலுத்தத்தனம் - உலோபத்துவம்.
உலுத்தம் - உலோபம், பொருளாசை.
உலுத்தல் - உதிர்த்தல்.
உலுத்தன் பொருளாசைக்காரன், வாங்கின கடனைக் கொடாதவன்.
உலுத்துதல் - உதிர்த்தல்.
உலுப்தன்-மிக்க ஆசையுள்ளவன்.
உலுப்பை - அடைந்தோர் பெரியோர் முதலியவர்களுக்களிக்கு மூண்பண்டம், காய்வருக்கம், கோயில் முதலியவற்றிற் கனுப்புங் காணிக்கை, சாமான்பை, சிறுகாய்.
உலுப்பைகட்டுதல் - பெரியோர் தயவு சம்பாதிப்பதற்காக வெகுமதி அனுப்புதல்.
உலுப்பைகொடுத்தல் - கீழ்ப்பட்டவர்க்குப் படிகொடுத்தல்.
உலுப்பைப்பை - சாமான்பை.
உலுலாயம் - காட்டெருமை.
உலுவம் - வெந்தயம்.
உலுவா } பெருஞ்சீரகம், வெந்தயம்.
உலுவாவரிசி }
உலூகம் - ஆந்தை, இந்திரன், ஒருவகைப்பரி, குங்கிலியம்.
உலூகலகம் - குங்கிலியம்.
உலூகலம் - உரல், குங்கிலியம்.
உலூகன்-இந்திரன், சகுனிமகன், இவன் பாரதயுத்தத்திற் சகாதேவனாற் கொல்லப்பட்டவன்
உலூகாரி-காக்கை
உலூதை - சிலந்திப்பூச்சி.
உலூநம் - அறுக்கப்பட்டது.
உலூபி - ஒருவகைமீன்.
உலை - உலையென்னேவல், கம்மாளனுலை, நெருப்புள்ளவடுப்பு, பாகஞ்செய்யவைக்கு நீருலை.
உலைக்கட்டல் - பொங்கற்பானைக்கு மாவிலைசெருகிய கயிறுகட்டல்.
உலைக்களம் - அடுப்பு, உலைமுகம், கொல்லனுலையிடம்.
உலைக்குறடு-கம்மாளர் கருவியினென்று
உலைங்குதல் - கீழ்ப்படுதல்.
உலைசல் உலைவு, ஒவ்வாமை, கெடுதல்.
உலைச்சல் - அலைவு, கலக்கம்.
உலைதல் - அலைதல், அழிதல், கலைதல், கெடுதல், சீரழிதல், மனங்கலங்கல், பலங்குறைதல், வருந்தல்.
உலைத்தண்ணீர் - உலைநீர்.
உலைத்தல்-அலைத்தல், அழித்தல், கலைத்தல், கெடுத்தல், சீரழித்தல், மனதைக்கலக்குதல், முறியடித்தல், வருத்தல்
உலைத்துருத்தி - உதி.
உலைநீர் - இரும்புதோய்க்குநீர், பாகஞ்செய்யவைக்குநீர்.
உலைப்பு-அலைப்பு, முறியடிக்கை, வருத்தம்.
உலைமுகம் - கம்மாளனுலைமுகம். [தம்.
உலைமூக்கு - கொல்லனுலையின்மூக்கு.
உலைமூடி - உலைப்பானையின்மேல் மூடும் சிறுசட்டி.
உலைமூட்டல் - அடுப்புமூட்டல், கொல்லனுலையில் நெருப்புமூட்டல்.
உலையாணிக்கோல் - உலையிருப்புக்கோல், சூட்டுக்கோல்.
உலையிற்பிணந்தின்னி - மாமிசபேதி.
உலையேற்றுதல்-உலைப்பானையை யடுப்பிலேவைத்தல், உலைவைத்தல்.
உலைவு-அச்சம், அலைவு, அழிவு, கெடுதி, நடுக்கம், நிலையின்மை.
உலைவைத்தல் - உலைமூட்டல்.
உலொடலொட்டைப்பேச்சு - பிரயோசனமில்லாத பேச்சு.
உலொடுக்கு - ஒலிக்குறிப்பு, வெறுப்பு.
உலொட்டி-கள்ளுக்குடுவை, மஸ்துள்ள பதார்த்தம்.
உலொட்டிக்காரன் }
உலொட்டிக்குடிக்கிறவன் } குடியன்.
உலொட்டிமூஞ்சி }
உலொட்டை - சொட்டைப்பேச்சு.
உலோககாந்தம் - காந்தம்.
உலோகக்காரன் - கொல்லன்.
உலோகக்கட்டி-பஞ்சலோகத்தை யுருக்கிக்கூட்டிய கட்டி.
உலோகசனனி - இலக்குமி.
உலோகசித்து - புத்ததேவன்.
உலோகதாது - துத்தபாஷாணம்.
உலோகத்திரம் - வெள்ளிலோத்திரம்.
உலோகபாந்தவன் - சூரியன்.

உலோகபாலன் - இராசா.
உலோகமணல் - இரும்புமணல்.
உலோகமாதா - இலக்குமி.
உலோகம் - இரத்தம், இரும்பு, எழுவகைலோகம், தேவலோக முதலிய பதினலுலோகம், பஞ்சலோகம், பார்வை, பூமி, மனிதன்.
உலோகரட்சகன் - உலகத்தைக் காப்பவன், விட்டுணு.
உலோகராட்டு - கடவுள்.
உலோகரூடம் - தேசவழக்கம்.
உலோகலன் - சுத்தமாகப்பேசாதவன்.
உலோகவிருஷ்டம் - கழுகு, பருந்து.
உலோகவேடணை - மண்ணிச்சை.
உலோகாதியந்தம் - உலக ஆரம்பமும் முடிவும்.
உலோகாதீதம் - உலகத்துக் கதீதப்பட்டது. அதாவது உலகத்துக்கெட்டாதது, மேற்பட்டது.
உலோகாபிசாரம் யுத்தத்திற்குப் புறப்படும்போது அரசர் செய்யும் பூசை.
உலோகாயதம் - உலகாயதமதம்.
உலோகாயதன் - ஈசன்கன்மம் ஆன்மாவென்பன இலவாமென்றும் மகளிரிடத்தின்ப மொன்றமே பொருளாமென்றுங் கூறுஞ் சமயவாதி.
உலோகார்த்தம் - இலௌகீகயம், உலக நன்மை.
உலோகாலோகம் - பூமியை வளைந்திருக்கும் சக்கரவாளப்பருவதம்.
உலோகிதகம் - செம்புக்கல்.
உலோகிதசந்தனம் - குங்குமப்பூ.
உலோகிதம் - இரத்தம், சிவப்பு, செவ்வாய், மஞ்சள், யுத்தம்.
உலோகிதாங்கம் - செவ்வாய்.
உலோகேசன் - கடவுள்.
உலோகேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
உலோகோத்தமம் - பொன்.
உலோகோத்தரம் - எல்லாரும் இச்சிக்கக்கூடியது, விசேஷமானது.
உலோகோயம் - இமயமலைக்குத் தெற்கும் இராமேசுரத்துக்கு வடக்குமுள்ள தேசங்கள்.
உலோசமஸ்தகம் - ஓமம்.
உலோசம் - கண்மணி, காதணி, கட்டியாபரணம், வானம், வின்னுண்.
உலோசனம் - கண்.
உலோசி - பேய்ப்பசளை.
உலோசிதம் - சந்தனமரம்.
உலோச்சனர். இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிஎன்னுஞ் சோழனைப் பாடிப் பரிசுபெற்ற ஒரு புலவர். அகநானூறு பாடிய புலவருள்ளு மொருவர்.
உலோஷ்டபேதனம்-மண்கட்டி யுடைக்குந்தடி.
உலோஷ்டம் - மண்கட்டி
உலோட்டம் - ஓடு.
உலோட்டி-சோலி, வெரியுள்ள சாராயம்.
உலோஷ்டு - மண்கட்டி.
உலோபம் - அற்பம், ஆசை, ஈயாமை, உட்பகையாறினென்று, குறைவு, கெடுதல், பொருளாசை, விகாரம் எட்டினென்று.
உலோபனம் - ஒறுப்பு, குறைத்தல்.
உலோபன் - பிசுனன்.
உலோபாமுத்திரேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
உலோபாமுத்திரை-அகத்தியன் மனைவி.
உலோபி-நொய்யது, பிசுனன்.
உலோபித்தல் - பிசுனித்தனம் பண்ணல்.
உலோமகருணம் - புளகப் பொடிப்பு.
உலோமசம் - சடமாஞ்சில்.
உலோமசன் - ஒரு மஹரிஷி.
உலோமம் - ஒழுங்கு, வால், வானுனி.
உலோமன்-உரோமன், ஒழுங்குடையான்.
உலோலம் - அசைவு, விருப்பம்.
உலோலம்பம் - வண்டு.
உலோலன் - காமவிகார முள்ளவன், துஷ்டன்.
உலோலிதமுகம்-சிந்தையா லொருதோண்மேற் றலைசாய்ந்து நிற்குமுகம், துக்கமுகம்.
உலோலிதம் - அசைவு, சிந்தையாலொருதோண்மேற்றலைசாய்த்தல், பயம்.
உலோலுபன்-விஷயசுகங்களில் ஆசையுள்ளவன்.
உலோலை - இலக்குமி, நா.
உலௌகீகம் - இலௌகீகம்.
உல் - கழு, கூர்க்கட்டைப்பாரை.
உல்கு -ஆயம்.
உல்பகம் - மறைப்பது.
உல்லாகசனம் - புளகப்பொடிப்பு.

உல்லங்கனம் - உல்லிங்கனம்.
உல்லம் - ஒரு மீன்.
உல்லரி - தளிர்.
உல்லாசக்காரன் - உல்லாசன்.
உல்லாசம் - அத்தவாளம், அத்தியாயம், உத்தரீயம், உள்ளக்களிப்பு, சந்தோஷம், சரசக்களிப்பு, வத்திப்பு.
உல்லாடி - மெல்லிய ஆள்.
உல்லாபம் - நலிந்தமொழி, மழலைச்சொல், மேற்கட்டி.
உல்லாபன் - நோயுற்றெழுந்தோன்.
உல்லாப்பியம் - காமை.
உல்லி - ஒல்லி, மெல்லியஆள், மெல்லியது, வெங்காயப்பூ.
உல்லிங்கனம் - அவமதிப்பு, கடக்கை, கலக்கம், சண்டைமிகுதி, நிந்தை, மீறுதல்.
உல்லியம் - கிணறு.
உல்லியர் - கூவநூலோர்.
உல்லு - ஒருதலைக் கூருள்ளகட்டை.
உல்லுசம் - கொள்ளி.
உல்லேகம் - உச்சரிப்பு ஓரலங்காரம்.
உல்லேகனம் - உயர்த்துதல், உவாந்தித்தல், எழுதல், கல்லுதல், சீவுதல்.
உல்லேற்றல் } சமூவேற்றுதல்.
உல்லேற்றுதல் }
உல்லோசம் - மேற்கட்டி.
உல்லோலம் - பெருங்கடற்றிரை.
உவகுலம் - திப்பிலி, திரிபலை.
உவகை - களிப்பு, மாயயாக்கை, பதினெண்குற்றத்து ளொன்று.
உவகைப்பறை - மங்கலப்பறை.
உவ்க்காண் - அப்பொழுது, அவ்விடம் உங்கே.
உவச்சர் - ஓச்சர், சோனகர்.
உவட்சி - அசைப்பு, துவளுகை.
உவட்டல் - அருவருத்தல், எதிரெடுத்தல், சத்திபண்ணல், பெருகல், வெறுத்தல்.
உவட்டி - உவட்டிப்பு.
உவட்டித்தல் - அருவருத்தல், எதிரெடுத்தல், தேக்கெடுத்தல்.
உவட்டிப்பு - அருவருப்பு, குமட்டு.
உவட்டிற்கூர்மை - மாமிசபேதி.
உவட்டு-அருவருப்பு, உவட்டென்னேவல், குமட்டுகை, புரட்சி, பெருக்கு.
உவட்டுதல் - அருவருத்தல், குமட்டுதல் பிரவாகித்தல், புரளுதல்
உவட்டுரை - இகழ்ச்சிசொல்.
உவட்டெடுத்தல் - பெருக்கெடுத்தல்.
உவணகேதனன் } விட்டுணு.
உவணக்கொடியோன் }
உவணமுயர்த்தோன் }
உவணம் - உயர்ச்சி, கருடன், கழுகு, பருந்து.
உவணன் - கருடன்.
உவணி - வாள்.
உவணை - உவ்விடம், தேவலோகம்.
உவண் - உவ்விடம்.
உவதி-தருணி, பதினாறுவயதுப்பெண்.
உவதை - மலையின்வீழருவி.
உவத்தல் - மகிழ்தல், விரும்பல்.
உவந்தோனவிநயம் - உயர்த்தினிதாயுள்ள கண்மலருடைமையும், இனிமையான வள்ளமுடைமையும், கோபமின்றிய முறுவலும் நகையுடைமையுமிருத்தலும், சோலை, முதலியவற்றிற்சென்று விளையாடலுடைமையு முதலியவாம்.
உவப்பு - உயரம், பிரியம், பொலிவு, மகிழ்வு, விளையாட்டு.
உவமத்தொகை-உவமையுருபு தொக்கதொடர்மொழி (உ-ம்) பான்மொழி.
உவமம் - ஒன்றொடொன்றை யொப்புறுத்தல்.
உவமாதீவகம் - உவமைவிளக்கணி, ஒரு அலங்காரம்.
உவமாநிலம் - சுவர்.
உவமாவாசகம் - உவமையுருபு.
உவமானசங்கிரகம் - ஒரு நூல்.
உவமானத்தொகை உபமானந்தொக்கு நிற்பது (உ-ம்) முகத்திற்கொப்பாங் காந்திகொள்பொருளு மூண்டோ.
உவமானப்பிரமாணம்-ஓளவை,அஃது ஆமாவை ஆப்போன் றிருக்குமென் றறிதல்.
உவமானம் - உவமிக்கும்பொருள், சமானம்.
உவமானித்தல் - ஒப்பிடுதல்.
உவமானோவமானம் - ஓரலங்காரம்.
உவமித்தல் - உவமைப்படுத்தல்.
உவமிப்பு - ஒப்பிடுகை.
உவமேயம் - உவமிக்கப்படுபொருள்.

உவமை - உவமம்; ஓரலங்காரம்,அஃது பண்பு தொழில் பயன் முதலிய காரணமாகப் பொருளொடு பொருளிசைய ஒப்புவமைப் படுத்துவது.
உவமைத்தொகை-உவமையுருபு தொக்கசொல்.
உவமையகத்திணை-இருபொருட்குஒன்றனை ஒப்புமைகாட்டி யுரைத்தல்.
உவமையாகுபெயர் - உவமானத்தின் பெயரை உவமேயத்திற்கு வழங்குவது (உ-ம்) மயில்வந்தாள்.
உவமையின்மை - அசமானம்.
உவமையுருபு - உவமை.
உவமையுருவகம்-ஓரலங்காரம், அஃது உருவகஞ்செய்பொருளைத் திரும்பவுமோர் விசேடத்தினால் ஒன்றோடு ஒப்புமைப்படுத்துவது.
உவமைவிரி - ஓரலங்காரம், அது உபமாவாசகம் விரிந்து நிற்பது.
உவராகம் - கிராணகாலம்.
உவரி - கடல், மகளிர்விளையாட்டு,மூத்திரம்.
உவரிக்கெண்டை - ஒருமீன்.
உவரிலீலை - உபரிலீலை.
உவரை - பயிரோடு கூடிய பூமி. பூமி.
உவர் - உவப்பு, உவர்ப்பு, கடல்,கடுகடுப்பு, உயர்திணைப் பலர்பாற் படர்க்கைச் சுட்டுப்பெயர், வெறுப்பு.
உவர்க்கடல்-சத்தசமுத்திரத்தொன்று.
உவர்க்களம் - உப்பளம், சவர்நிலம்.
உவர்க்காரம் - சவர்க்காரம்.
உவர்ச்சங்கு - முட்சங்கு.
உவர்த்தரை - உவர்க்களம்.
உவர்த்தல் - அரோசித்தல், துவர்ப்பு, வெறுப்பு.
உவர்நிலம் - உவர்த்தரை.
உவர்நீர் - உப்புச்சலம்.
உவர்ப்பு - உப்புறைப்பு, நிந்தை, வெறுப்பு.
உவர்ப்பூமி-உவர்ப்பைக்கொண்டநிலம்
உவர்மண் - உழமண், சவர்மண்,
உவலை - தழை, பொய்.
உவளகம் - அந்தப்புரம், இடைச்சேரி, இரண்டு, உப்பளம், ஒருபக்கம், கன்மதம், குளம், பள்ளம், மதில்.
உவளம் - சோறு, யானைக்கவளம்.
உவளல் - துவளல்.
உவளித்தல் - தூயதாக்கல்.
உவளுதல் - துவளுதல்.
உவளுயம் - துவைத்துக்கட்டும்மருந்து.
உவனி - வாள்.
உவனித்தல் - ஈரலித்தல்.
உவனிப்பு - ஈரம்.
உவன் - ஒரு சுட்டுச்சொல்.
உவர்-அமாவாசி,இளமை,இளையோன், கடல், தம்பி, நிறைவு, பூரணை, யானை, வாலிபன்.
உவாகருமம் - உபாகருமம்.
உவாதி - உபாதி.
உவாதை - வேதனை.
உவாத்தி - கற்பிப்போன்.
உவாத்திமைத்தொழில் - பள்ளிக்கூடம் வைத்திருத்தல்.
உவாத்தியாயன் - கற்பிப்போன்.
உவாநாடி - கிரகணபரிசனநாடி.
உவாந்தம் - அமாவாசை, பூரணை.
உவாந்தி - சத்தி.
உவாமதி - பூரணைச்சந்திரன்.
உவாய் - ஒருமரம்.
உவாலம்பம் } தூஷணை.
உவாலம்பனம் }
உவாவறுதி - அமாவாசி பூரணையின் முடிவு.
உவாவாளி - பூட்டை.
உவிதல் - சாதல், நீர்வற்றியவிதல், நெருக்கத்தினாலவிதல்.
உவை } அஃறிணைப்பன்மைப் படர்க்கைச்சுட்டுப்பெயர்.
உவ் }
உவ்வி - தலை, தலைவி.
உவ்விடம் - உம்பர்.
உவ்வு - தவம்.
உவ்வை - உப்பை.
உழக்கல் - கலக்கம், காரியம், நடத்தல், சிலம்பம்பழகல், மறுவைத்தல், மிதித்தல், வருந்தல்.
உழக்கால் - உழவுகோல்.
உழக்காழாக்கு - காலேயரைக்கால்படி.
உழக்கு - உழக்கென்னேவல், காற்கொத்து. காற்படி, மிதிப்பு.
உழக்குதல் - உழக்கல்.
உழ்ச்சியர் - மருதநிலப்பெண்கள்.
உழத்தல் - பழகல், புரளல், வருந்தல், வெல்லல்.
உழத்தி - மருதநிலப்பெண்.

உழத்திப்பாட்டு-ஓர் பிரபந்தம். அஃது வேளாண்மைச்சிறப்பும், வேளாண்மை மாந்தர் சிறப்புந்தோன்ற இடையிடைச் சிந்தும் விருத்தமும் விரவி வரப்பாடுவது.
உழப்பல் - குழப்பிப்பேசல், பழகல்.
உழப்பன்-கள்ளகியாயம் பேசுகிறவன்.
உழப்பாளி-பிரயாசி முயற்சியுள்ளவன்.
உழப்பு-ஊக்கம், குழப்பப்பேச்சு, கைத்தொழில், பழக்கம், முயற்சி, வருத்தம், வலி.
உழப்புதல் குழப்பிப்பேசல், பழகுதல்.
உழமண் - அழுக்கெடுக்குமண்.
உழம்பல் } ஒலித்தல், குழம்பல், பிதற்றல்.
உழம்புதல் }
உழர்தல்-கோதிவகிர்தல், புரளுதல், வருத்தமாற்றாது புரளுதல்.
உழவல் } அசைதல், ஆடுதல், உலைந்து திரிதல், சுழலல், மனஞ்சுழலல்.
உழலுதல் }
உழலை - உழலைமரம், தாகம்.
உழலைமரம் - தொண்டுக்கட்டை.
உழல் - உழலென்னேவல், உழுதல்.
உழவர்-சூத்திரர், படைவீரர், பூவைசியர், மருதநிலமாக்கள், வேளாளர்.
உழவன்-உழவுமாடு, உழுபவன், கருமபாரகன், வீரன்.
உழவாரப்படை } உழைவாரம்.
உழவாரம் }
உழவு - உழுந்தொழில், சூத்திரர் வைசியர்க்குரிய அறுதொழிலி லொன்று, படைச்சால்.
உழவுகட்டல் - முதற்சால்போதல்.
உழவுகட்டி-உழவிலேபுரண்ட மண்ணாங்கட்டி.
உழவுகுட்டை - உழவுமாடு.
உழவுகோல்-கேட்டிக்கம்பு, முட்கோல்.
உழவுசால் - உழவிடும் வளையம்.
உழவுபொறுத்தமாடு - உழவில்தேர்ந்த மாடு.
உழவோர் - உழவர்.
உழற்சி - ஆடுகை, சுழற்சி, திரிதல், வருத்தம்.
உழறல் - தாகம், வெப்பம்.
உழற்றி - சுழலுகை, மிகுதாகம்.
உழற்றுதல் - சுழற்றுதல், வருத்துதல், வருந்திப்புரளுதல்.
உழன்றி - சுழலத்தக்கது.
உழி-இடம், எழனுருபு, பக்கம், அளவு.
உழிஞை - அஷ்டவெற்றி மாலையின் ஒன்று, சிறுபூளை.
உழிஞைமாலை-ஒரு பிரபந்தம். அஃது மாற்றார் தூர்ப்புறஞ்சூழ உழிஞைப் பூமாலைசூட்டிப் படைவளைப்பதைக் கூறுவது, பகைவாரரண்பிடிப்பார்க் குமாலை.
உழிஞ்சில் - உன்னம்.
உழிதரல் - சுழலல், திரிதல்.
உழு-உழுவென்னேவல், பிள்ளைபூச்சி.
உழுகை - உழுதல்.
உழுதல் உழல், நிலத்தைக் கிளைத்தல்.
உழுதுண்போர் - வேளாளர்.
உழுகர் - உழவர்.
உழுநிலம் - உழுதற்குரிய பூமி.
உழுந்து - உளுந்து, மாடம்.
உழுபடை - கலப்பை.
உழுபடைச்சால் - சீதை.
உழுவம் - எறும்பு.
உழுவல் உழுவனென்னுமுற்று, குணம்,முறை,விடாது தொடர்ந்தவன்பு.
உழுவளைப்பு - தொழுப்பு.
உழுவான்-ஒருவகைப்புழு,உழுவானெடுத்தமண், பிள்ளைப்பூச்சி.
உழுவை-ஒருவிதமீன், புலி.
உழை- இடம், அருகு, உவர்மண், சூரியன் மனைவிகளில் ஒருத்தி, பூவிதழ், இரா, உழையென்னேவல். எழனுருபு(உ-ம்) அவனுழைவந்தான். எழிசையினொன்று, சிரத்திற் பிறக்குமிசை, பக்கம், பசு,மான்,யாழினோர் நரம்பு, வைகறை, வாணன்மகள்.
உழைதல் - இரைதல், துன்பமுறல்.
உழைத்தல்-சேகரித்தல், சொல்லாலெழுமொலி, பிரயாசப்படுதல், வருந்தியீட்டுதல், வேலைசெய்தல்.
உழைப்பறித்தல்-சேற்றிற் புரளுதல், போராட்டப்படல்.
உழைப்பாளி - பிரயாசப்படுபவன்.
உழைப்பு - சுறுசுறுப்பு, சேகரிப்பு, பிரயாசம், முயற்சி, வருந்தியீட்டுகை.
உழைமண் - உழமண், உவர்மண்.
உழையர் } ஏவல்செய்வோர், மந்திரிகள்.
உழையோர் }
உழைவாரம் - ஓராயுதம், புற்செதுக்கி,

உளகு - யாழிறேருறுப்பு.
உளதம் - கேட்டல்.
உளது - மெய்ம்மை. [ச்சொல்.
உளத்தியலிடை - நாயக சுரத்திலிடை
உளப்புலப்பயன்றற் குறிப்பு - ஓரலங்காரம். அஃது இயல்பாயுள்ள பயன் வேறொன்றா லாயதெனத் தற் குறிப்புச் செய்தல் (உ - ம்) முலை சுமந்து தேய்ந்ததிடை.
உளபுலவேதுத்தற்குறிப்பு - ஓரலங்காரம். அஃது இயல்பாயுள்ளதை ஏது வினால் வந்ததென அத்தியவசயித்தல் (உ-ம்) மின்றாளவனி மிதித்தலினாற் சேர்ந்தனவென்றுள்ளு மென்னெஞ்சு.
உளப்படல் } இணங்குதல், உட்படுதல், சம்மதித்தல், மனதிலிருத்தல்.
உளப்படுதல் }
உளப்படுத்தல் - உறழச்செய்தல்.
உளப்பாடு - இணக்கம், உட்படுகை.
உளப்பாட்டுவினை - ஓரிடப் பொருளுடன் பிறவிடப்பொருள்களையுமுட்படுத்தி அவ்வொன்றுக்குரிய விகுதியான் வினைப்படுத்துவது.
உளம் - ஆன்மா, நெஞ்சு, உள்ளம், கருத்து, மனம்.
உளராதல் - இடமாதல், உடைந்தையாதல், உள்ளாதல்.
உளர் - உடந்தை, உட்பட்டது, உடந்தை, உளரென்னேவல், ஏது.
உளர்தல் - அசைதல், இறகு உதறுதல், இறகுகோதல், ஈடாடுதல், குரவையிடல், சிந்தல், சுலாவல், சுழலல், தடவல்.
உளர்வு - அசைவு, ஈடாட்டம், சுலாவல், சுழலல், பேரொலி.
உளவன் - உளவுக்காரன், வேவுகாரன்.
உளவு - அசுகை, உட்காரியம், ஒற்றன் ஒற்று, வேவு.
உளறல் } குளிறுதல், தடுமாறிப்பேசல், பிதற்றல், பே
உளறுதல் }
உளறுபடி } கலக்கம், குழப் [ரொலி.
உளறுபிடி } பம்.
உளறுவாயன் - விடாதுபேசுவோன்.
உளி - இடம், எழுனுருபு (உ-ம்) என்னுளி, தறிக்குங் கருவியி னொன்று, நகஞ்சீவி.
உளிஞை - கோபுரவாயில், படை.
உளிப்பாரை - குழிகல்லுங் கருவியில் ஒன்று.
உளியம் - காடி, இடம்.
உளிவைத்தல் - மரத்தினுளியிட்டுத்தறித்தல்.
உளு - உசு, உளுவென்னேவல், ஒருபுழு.
உளுக்கல் - உளுக்குதல்.
உளுக்காத்தல் } இருத்தல், இருத்துதல்.
உளுக்கார்த்தல் }
உளுக்கு - ஒருகருவி, நரம்புச் சுருக்கு.
உளுக்குதல் - உளுத்தல், சுளுக்குதல், நெளிதல்.
உளுத்தல் - உலோக பாத்திரங்களுக்கு முருகிடல், சிதைந்துபோதல், மரமுதலியமாவாதல்.
உளுந்து - உழுந்து, ஒருபயறு.
உளுப்பு - உளுத்தல்.
உளுப்புத்தாவல் - புழுக்க ஆரம்பித்தல்.
உளுவை - ஒருமீன்.
உளை - ஆண்மயிர், உரோமம், உளையென்னேவல், ஒலி, குதிரை முதலியவற்றின் பிடர்மயிர், சேறு, புறமயிர், பேசலாவெழுமொலி, தலை தலை
உளைக்கால் - உரோமக்கால். [யாட்டம்.
உளைதல் - உவாதிப்படுதல், கைகால் முதலியவுளைதல், நொதித்தல், பிரசவவேதனைப்படுதல், மனம்நோதல்.
உளைத்தல் - அழைத்தல், ஒலித்தல், வருந்தல்.
உளைந்துபேசல் - ஒருவனைக் கருதிப் பேசல், சுட்டிப்பேசுதல், மனத்தாங்கலாய்ப்பேசல்.
உளைப்பு - அழைப்பு, ஒலிப்பு, வருத்தம்.
உளைமாந்தை - கடுநோய்.
உளைவு - குடைவு, சரீரவருத்தம், மனநோ, வலிப்பு, வாதநோயினொன்று.
உள் - இடம், உட்புறம், உள்ளென்னேவல், எழனுருபு (உ - ம்) ஊருள், தொழிற்பெயர்விகுதி (உ - ம்) செய்யுள், மனம்.
உள்கல் } நினைத்தல், மடிதல்.
உள்குதல் }
உள்பொருள் - முக்காலத்தினுமுள்ள பொருள்.
உள்யோசனை - உள்ளுக்குள்ளான யோசனை.

உள்வணக்கம் - மனவணக்கம்.
உள்வயிரம் - அகவயிரம், மனவயிரம்.
உள்வலிப்பு - ஒருநோய்.
உள்வழிகடந்தோன் - கடவுள்.
உள்வளையல் - உள்ளேவளையலானது.
உள்வளைவு - உட்கவிவு.
உள்வாரம் - சமவாரம், மனவிருப்பம்.
உள்விழுதல் - உள்ளேபோதல், சிநேகங்கூடுதல், குறைதல்.
உள்வினை - உட்களம், உட்பகை.
உள்வீச்சுச்சன்னி - ஒருவகைநோய்.
உள்வெக்கை - ஒருநோய்.
உள்வெட்டு - உயர்ந்தமாற்று, உரையாணியினுள்வெட்டு, சோற்றிவெட்டு.
உள்ளக்களிப்பு - மனமகிழ்ச்சி.
உள்ளக்குறிப்பு - உட்கருத்து, மனக்குறிப்பு.
உள்ளக்குறை - மனக்குறை.
உள்ளங்கம் - உள்ளுறுப்பு.
உள்ளங்கால் - உட்கால்.
உள்ளங்கை - அகங்கை.
உள்ளடக்கல் - அமசடக்கம்.
உள்ளடக்குதல் - உட்பட்டிருக்கச்செய்தல்.
உள்ளடங்கல்
உள்ளடங்குதல் } உட்பட்டிருத்தல்.
உள்ளடி - இரகசியம், உள்ளங்கால், கிட்டடி, சமீபம், நெருங்கிய சுற்றம்.
உள்ளடியார் - உறவர்.
உள்ளது - உடையது, உண்மை, உள்ளமை, சரியானது.
உள்ளதுசிறத்தல் - களிப்பு.
உள்ளத்தம் - கருத்துப்பொருள்.
உள்ளத்துறைவோன் - கடவுள்.
உள்ளநாள் - ஆயுள்நாள்.
உள்ளபசுமை-ஐயமற்ற, உண்மை, மெய்வாழ்வு.
உள்ளபடி - உண்டான அளவு, யதார்த்தம்.
உள்ளப்படிறு - மனவஞ்சம்.
உள்ளப்புணர்ச்சி - மனதிலே புணர்ச்சி பண்ணுவதாக நினைத்துருகி யடைதல், வீணெண்ணத்திற்கொண்டமகிழ்வு.
உள்ளமிகுதி - ஊக்கம்.
உள்ளமுடையான் - ஒரு சோதிடநூல்.
உள்ளமை - உடைமை, உண்மை.
உள்ளம் - ஆன்மரூபஞானம், ஆன்மா, புருடன், கருத்து, மனம், முயற்சி, வாக்கியத்தின் கருத்து.
உள்ளல் - உள்ளான்குருவி, நினைத்தல், மறவாது மதித்தல்.
உள்ளவன் - உடையவன், பணக்காரன்.
உள்ளளவு - உண்டானமட்டும், சிலநாள் மட்டும்.
உள்ளறை - உள்வீடு, பெட்டியினுள்ளறை.
உள்ளன் - உள்ளிருக்குமாள், சிநேகன், போர் அடிக்கிற மாடுகளில் தலைமாடு.
உள்ளாகல்
உள்ளாகுதல் } உடந்தையாதல், உட்படுதல், கீழ்ப்படுதல், சேரல்.
உள்ளாக்கல்
உள்ளாக்குதல் } வசப்படுத்தல்.
உள்ளாடல் - உள்ளாடுதல்.
உள்ளாடுசத்துரு - உள்ளானவனைப் போலிருக்குஞ் சத்துரு.
உள்ளாடுதல் - உடந்தையாதல், உட்சேரல்.
உள்ளாதல் - உடந்தையாதல், உட்படுதல்.
உள்ளாந்தரங்கம் - மிகுந்த அந்தரங்கம்.
உள்ளாயிருத்தல் - உற்றயோசனைக்காரனாயிருத்தல்.
உள்ளார் - இருப்போர், உடையோர், உள்மனிதர், பகைவர்.
உள்ளாளனம் - கூத்தின்விகற்பம்.
உள்ளாளுங்கள்ளாளும் - இருபுறத்துக்குமிணங்கிக் கள்ளமாய் நிற்பவன்.
உள்ளானம் - உள்ளாளனம்.
உள்ளான் - இருப்போன், உடையோன், உள்மனிதன், ஒருகுருவி, பகைவன்.
உள்ளி - வெண்காயம், வெள்ளைப்பூண்டு.
உள்ளிடல்
உள்ளிடுதல் } உட்படுதல்.
உள்ளிடை - உட்காரியம்.
உள்ளிட்டது - உள்ளடங்கியது.
உள்ளிட்டார் - கூட்டாளிகள், பங்காளிகள்.
உள்ளிந்திரியம் - மனமுதலியபுலன்கள்.
உள்ளிப்பல் - பூண்டின்திரி.
உள்ளியர் - அறிவுடையோர்.
உள்ளிருப்பு - வைத்திருக்குமாஸ்தி.
உள்ளின்மாசு - மனமாசு.

உள்ளீடு - உட்படுகை.
உள்ளு - உள்ளான் பறவை.
உள்ளுக்குள் - உள்ளே.
உள்ளுடன் - பலகாரத்திலுள்வைத்தது.
உள்ளுடை - உள்வேட்டி, கௌபீனம்.
உள்ளுடைவு - மனத்துயர்.
உள்ளுதல் - எண்ணல், நினைத்தல்.
உள்ளுயிர் - கடவுள்.
உள்ளுயிர்க்குன்று - நத்தை.
உள்ளுருக்கி - ஒருவகைநோய்.
உள்ளுறுத்தல் - உட்படுத்தல், நினைப்பித்தல்.
உள்ளுறை-உள்ளெண்ணம், பாடும்படி புலவர்க்குக் கொடுக்குஞ் சமிசை, மறைபொருள்.
உள்ளுறையுவமம் - உய்த்துணர்வகைத்தாய்ப் புள்ளொடும் விலங்கொடும் பிறவற்றொடும் புலப்படுவது தோன்றுமலுவமிப்பது.
உள்ளூர் - ஊர்நடு, சொந்தவூர், வழக்கமானவூர்.
உள்ளே - உள்ளாக.
உள்ளொடுக்கம் - மனவொடுக்கம்.
உள்ளோசை - அகவொலி, மணிமுதலியவற்றினுள்ளனுக்கு.
உறக்கம் - ஒடுக்கம், நித்திரை, மரணம், யாக்கைக்குற்றம்பதினெட்டில்ஒன்று.
உறக்கல் - உறங்கச்செய்தல், கறக்குதல், கிள்ளல், பிழிதல், முற்றுங் கவரல், விரலாற் பிதுக்கியெடுத்தல்.
உறக்கு உறக்கென்னேவல், நித்திரை.
உறங்கல் - உறங்குதல்.
உறங்கி - புளியமரம்.
உறங்குதல் - இலை முதலிய வொடுங்குதல், நித்திரைசெய்தல், வதங்குதல்.
உறட்டலன் - வறண்டவன்.
உறட்டல் - உலர்த்தல், வறண்டது.
உறட்டற்களி - வறட்களி.
உறட்டி - அப்பம், வறண்டது.
உறட்டு - உறண்டைநாற்றம், குறை, குறைசொல்லல், சதுப்புநிலம், சுறட்டு.
உறட்டுதல் - வறட்டுதல்.
உறட்டை - துர்க்கந்தம், வறட்சி.
உறட்டையடித்தல் } துர்க்கந்தம் வீசல்.
உறட்டைவீசல் }
உறண்டல்மண் - வறள்மண்.
உறண்டற்களி - வறட்களி.
உறண்டு - முரட்டுக்குணம்.
உறண்டுதல் - வறள்தல்.
உறண்டை - உறட்டை, தொந்தரைசெய்கை, முரட்டுத்தனம். [யல்.
உறண்டையாடல் - அலைக்கழிவு செய்
உறத்தல் - கறத்தல், பிதுக்கல், முற்றக் கவர்தல்.
உறந்தை - உறையூர்.
உறமுறை - உறவின்முறை.
உறல் - உறுதல், கிட்டல், வருதல்.
உறவர் - உறவோர்.
உறவாக்கல் - ஒருமைப்படுதல்.
உறவாடுதல்-உறவாதல், நட்புச்செய்தல்
உறவாதல் - ஒருமைப்படல், கேண்மையாதல்.
உறவி - உயிர், உலைக்களம், உறவு, ஊற்று, எறும்பு, ஒருபுழு, கிணறு, சுற்றம், மலைமுருங்கை.
உறவின்முறையார் - உறவர்.
உறவு - உற்றசமயம், எறும்பு, ஐக்கம், ஒற்றுமை, சம்பந்தம், சிநேகம், சுற்றம், சேர்க்கை, பொருத்தம்.
உறவுகூடுதல் - சிநேகங்கூடல்.
உறவுகொண்டாடல் - உறவாடல், உறவு பாராட்டல்.
உறவுமுறையார் - உறவின்முறையார்.
உறவோர் - சுற்றத்தார், நண்பர்.
உறழ - ஒருவகையுருபு.
உறழ் - இடையீடு, ஒப்பு, காலம், பெருக்கம், வாது.
உறழ்ச்சி - உறழ்வு, உண்கூட்டின் பெருக்கம்.
உறழ்தலுவமை - ஓரலங்காரம்.
உறழ்தல் - இகலல், இடையிடல், உவமித்தல், எண்கூட்டிப்பெருக்கல், எதிராதல், பகைத்தல், போலுதல், விகற்பமாதல்.
உறழ்வு - இடையீடு, உணர்வு, உவமை, எண்ணின் பெருக்கம், எதிர், சமம், பகை, போர், விகற்பம்.
உறுவரை - முற்றூட்டு, சொந்த அநுபவத்திற்குரிய நிலம்.
உறி - உறியென்னேவல், தூக்கு.
உறிஞ்சல் } உள்ளேவாங்கல்.
உறிஞ்சுதல் }
உறிதல் - உறிஞ்சுதல்.

உறியடி - வைணவத்திருவிழா.
உறியிற்சமணர் - சமண முனிவருள் ஒருபாலார்.
உறு - உறுவென்னேவல், மிகுதி.
உறுகண் - அச்சம், தரித்திரம், துன்பம், நோய்.
உறுகண்ணுளர்-உறுகண்ணுடையோர், தரித்திரர்.
உறுகண்ணுளன் - அச்சமுள்ளான், தரித்திரன்.
உறுக்கல் - அதட்டல், கடத்தல், குதித்தல், கோபம், சினக்குறிப்பு.
உறுக்காட்டம், உறுக்காட்டியம், உறுக்கு - உறுக்குதல், தத்துவம்.
உறுசூது - வஞ்சகம்.
உறுண்டுகம் - அவுபலபாஷாணம்.
உறுதல் - அடைதல், உண்டாதல், கிடைத்தல், கூடல், சம்பவித்தல், சேர்தல், தங்கல், பொருந்தல், வருதல்.
உறுதி - அங்கம், அறிவு, ஆதாரம், ஆற்றல், ஆன்மலாபம், உள்ளகாரியம், உற்றதொழில், சம்பவிப்பது, கல்வி, உபதேசம், தளராநிலை, திடவாக்கு, நம்பப்படுந் தன்மை, நல்லகாரியம், நன்மை, நிச்சயம், பயன்.
உறுதிச்சுற்றம் - உற்றதுணைவர்.
உறுதிச்சொல் - கண்டிப்பு, நல்லுபதேசம், நிசச்சொல்.
உறுதிபயத்தல் - நயன்றரல்.
உறுதிப்படுத்தல் - சாதனமுடித்தல், வற்புறுத்தல், நிச்சயப்படுத்தல், பெலப்படுத்தல்.
உறுதிப்பத்திரம் - எழுத்துறுதி.
உறுதிப்பாடு - திடம்.
உறுதிப்பொருள்-ஞானம், கடவுள், நிச்சயார்த்தம்.
உறுதியர் - உற்றதுணைவர், தூதர், மந்திரிகள்.
உறுத்தல் - உண்டாக்கல், உறுவித்தல், ஏற்படுத்தல், ஒற்றுதல், சேர்த்தல், தாக்கல், நாட்டல், நினைப்பித்தல், பயத்தல், வருத்தல், வருவித்தல்.
உறுத்தை - அணில்.
உறுந்தறுவாய் - தற்சமயம்.
உறுபு - செறிவு, பாலையாழ்த்திறம், மிகுதி.
உறுப்படக்கி - ஆமை.
உறுப்பணங்கெட்டவன் - உறுப்பிலங்கெட்டவன் என்பதின் திரிபு.
உறுப்பற்றவன் - அவயவவீனன் ஒழுக்கமில்லான்.
உறுப்பா - ஒருமரம். இது மலையாளக்கரையில் உற்பத்தி.
உறுப்பில்பிண்டம் - உறுப்புக் குறை எட்டினொன்று. அஃது அங்கங்கள் நிறைவில்லாதது.
உறுப்பினகவல் - ஒரு பொருண்மேற் பத்திசைப்பது.
உறுப்பு - அங்கம், அடுக்கு, அடையாளம், அவயவம், உடல், உறுதி, காணியாட்சிப்பத்திரம், துறுவல், நெருக்கம், பங்கு, மரக்கொம்பு, மிகுதி, மேல்வரிச்சட்டம்.
உறுப்புக்குறைவிசேடம் - ஓரலங்காரம். அஃது வேண்டுமுறுப்புக் குறைவை செயலினருமைதோன்றக்கூறுவது.
உறுப்புத்தற்கிழமை - உறுப்போடொற்றுமையுடையது.
உறுப்புத்தோல் - பூனுலிற் கட்டிய மான்றோல்.
உறுப்புநலனழிதல் - துயருறுவோரது அங்கத்தழகுகெடல்.
உறுப்புமயக்கம் - உறுப்புக்குறை எட்டினொன்று.
உறுப்புள்ளவன் - அங்கலட்சணமுடையவன், ஒழுக்கமுள்ளவன், திறமையுடையவன்.
உறுமல் - இரைதல், உறுமுதல், எழும்பல், குமுறல்.
உறுமாலா, உறுமாலை, உறுமால் - அஸ்தபாவாடை, தலைச்சீலை, தலைப்பாகை.
உறுமி - ஒருபறை தண்ணுமை.
உறுமுதல் - உறுமல்.
உறுவது - வரப்பாலது, ஒப்பது.
உறுவதுகூறல் - எண்வகை விடையிலொன்று.
உறுவதுதெரிதல் - வணிகரெண்குணத்தொன்று. அஃது வருவதறிதல்.
உறுவதுறைத்தல்விடை - வினவுக்கு விடையாய் உறுவதைச் சொல்லல் (உ-ம்) உண்டாயோவென வயிறு நோமெனல்.
உறுவர் - முனிவர்.

உறுவல் - உறுவேனென்னுமுற்று, துன்பம்.
உறுவன் - அருசன்,முனிவன்,அடைந்தோர், எதிர்ந்தவர்.
உறுவித்தல் - வருவித்தல்.
உறுவை-ஔவை சகோதரிகள் நால்வருளொருத்தி.
உறை - ஆடையழுக்கற்றநீர், இடம், இருப்பிடம், உரை, இலக்கக்குறிப்புளொன்று, உயர்ச்சி, உவர்நீர், உறையென்னேவல், காரம், கிணற்றுறை, கௌசலை, துளி, நீளம், படைக்கூடு, பண்டம், பெய்யறை, பாம்பின்விஷப்பை, பாலிடுபிரை, பொருள், மருந்து, மழை, மழைத்துளி, வாழ்நாள், விலங்குணவு, வெண்கலம்.
உறைகாரர் - படையுறைசெய்வோர்.
உறைகாலம் - மழைக்காலம், வாழ்நாள்.
உறைகுத்தல் - பிரைகுத்தல்.
உறைதல்-இருத்தல், சஞ்சரித்தல், நிலம்பால்முதலியனவிறுகுதல்,வசித்தல்.
உறைத்தல் - அழுந்தல், எரிதல், காத்தல்,தாக்கல்.
உறைத்துளி-மழைத்துளி,
உறைந்தமழை - கட்டியானமழை.
உறைபதி - இருப்பிடம், வசிக்குமூர், சுயவிருப்பு.
உறைப்பு - உக்கிரம், எரிவு, காரம், கூர்மை, கொடுமை, திரப்படுகை, மழை, தாக்குகை, பதிவு.
உறைமோர் - பாலிடுபிரை, பலப்பு.
உறையல் - பிணக்கு.
உறையிடம் - இருப்பிடம், உள்வீடு, தங்குமிடம்.
உறையுள் - ஆயுள் இருக்குமிடம்,உறைகாலம், ஊர்ப்பொது, தங்குமிடம், நாடு, மக்கட்படுக்கை, மருதநிலத்தூர், வீடு.
உறையூரேணிச்சேரி - ஒருசிற்றூர், அது உறையூரெல்லையிலுள்ளது.
உறையூர்-திரிசிராப்பள்ளிக் கருகிலுள்ள சோழனூர், மருதநிலத்தூர்.
உறையூர்நிசுளாபுரி - காவிரியின்றென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
உறையூர்முதுகூற்றனர் - கடைச்சங்கப் புலவர்களு ளொருவர்.
உறையூர்வல்லி - உறையூரிற் கோயில்கொண்ட இலக்குமி.
உறைவு - இருப்பு, உறையுந்தன்மை, தங்குகை.
உற்கசம் - ஒரு புண்ணியதீர்த்தம். அது தவுமியரைப் பாண்டவர்கள் புரோகிதராக வரித்தவிடம்.
உற்கடம் - அதிகம், சமயமில்லாநிலம், நிறைவுடையது, செருக்கு, நன்னரி, மதயானை, வெறி.
உற்கடிதம்-பஞ்சதாளத்தொன்று.
உற்கடுகாதனம் - சம்மணமாயிருத்தல்.
உற்கணம் - தட்டை.
உற்கண்டிதம் - துக்கப்படல்.
உற்கம் - ஊழித்தீ, கடைக்கொள்ளி, தீத்திரள்.
உற்கரித்தல் - சினத்தார்த்தல், வாந்தித்தல்.
உற்கருடம் - அதிசயம்.
உர்கலம் - ஒருதேசம்,கௌடமைந்தின் ஒன்று.
உற்கலன் - சுமைகாரன், பறவைபிடிப்போன்.
உர்கன் - சயன்மகன்.
உர்காதம் - ஆரம்பஞ்செய்காரியம், ஆயுதம், ஆரம்பம், நூர்பிரிவு, விரணம்.
உற்காமுகம் - சொள்ளிவாய்ப்பேய்.
உற்காரசூலை - ஒருநோய்.
உற்காரம் - அதிர்ச்சி, இரைதல், உக்காரம், தூற்றியபொலி, வாந்தி.
உர்கிரமணம் - போதல்.
உர்கிராமம் - எதிரிடை, திரம்புதல்.
உர்கிருஷ்டம்-மிகுதி, மேன்மை.
உர்கிரணம் - உவாந்தித்தல்.
உர்குரோசம் - சத்தம், நீர்வாழ்பறவை.
உர்கை - கடைக்கொள்ளி, சுவாலை, தீ, தீக்கொள்ளி, விண்மீன், விண்வீழ்கொள்ளி.
உர்கோசகன் - பரிதானம்வாங்கி.
உர்சர்க்கத்தலம் - மூலாதாரம்.
உர்சர்க்கப்பிணி - உலகம் வாணுள்போக முதலியவைகளால் வளர்பிறைபோற் பெருகுங்காலம், சமணரின் காலப்பிரிவில் ஒன்று.
உற்சர்க்கம் - அத்திவாரம், கைவிடுதல், கொடை, தானம், மலமோசனம்.
உற்சவம் - உயர்ச்சி, களிப்பு, கோபம், திருவிழா, விருப்பம், விவாகம்.
உற்சவவிக்கிரகம் - திருவிழாவில் எழுந்தருளுந் திருவுரு.

உற்சற்சனம் - நன்கொடை.
உற்சாகம் - ஊக்கம், சந்தோஷம், நூல், புண்ணியமேழினென்று, முயற்சி.
உற்சாதனம் - அழித்தல், உழுதிரட்டித்தல், போதல், வாசனையூட்டல்.
உற்சாயம் - உற்சாகம்.
உற்சாரகன் - கடைகாப்போன்.
உற்சுகம் - இச்சித்தல்.
உற்சுகாசீரணம் - ஒருவகைச்சீரணநோய். அது அறுசுவையுடனொருவன் புசிக்க அதிலிச்சைப்பட்டேக்கமுற்றவர்களுக்குமுன் வழக்கமான போசனம் அசீரணப்பட்டு வெகுநேரம் பொருத்துஞ்சீரணிக்காமல் எலும்பைப்போலவே கிடக்கும். அப்போது புளியேப்பம், வயிற்றிலிரைச்சல், பொருமல், நோவோடு அநேக வுபத்திரவங்களான விகார முதலிய குணங்களை யுண்டாக்குவது.
உற்சேதம் - உடல், உயர்ச்சி, காயப்பட்ட சரீரம், கொலை.
உற்சேபணம் - கால்செய்வட்டம்.
உற்சேபம் - அலைபுரள்தல், அனுப்புதல், எறிதல், கக்குதல், மோதுதல்.
உற்பதம் - தப்பு, பறவை, பிழை, மேலேபோதல்.
உற்பதனம் - உற்பத்தி, ஏறுதல், மேலேபோதல்.
உற்பத்தி - கருவுண்டாகுகை, தோற்றம், பிறப்பு.
உற்பத்திக்கிரமம் - பிறப்புவகை, வங்கிஷ அட்டவணை.
உற்பத்திப்பிரயோகம் - காரணங்களாகியகாரியம், பொருண்மாட்சி.
உற்பலசாசனன் } பெருங்காயம்.
உற்பலசானன் }
உற்பலபத்திரம் - உற்பலத்தினிலை, பெண்களின் தனம், திலதம், நகரேகை.
உற்பலம் - கருநெய்தல், குவளை, சீதேவியார், செங்கழுநீர், செங்குவளை.
உற்பலம்பம் - தோற்றம்.
உற்பலவரை - திருத்தணிகைமலை.
உற்பலவனம் - நடந்தது.
உற்பலாவதி - சுராஷ்டிரன்பாரி, தாமசமனுவுக்குத் தாய், இவள் நிர்விருதவிருஷிசாபத்தால் மிருகமாகிச் சுராஷ்டிரன் பரிசத்தாற் கருப்பந்தாங்கினவள்.
உற்பதாவர்த்தகவிமானம் - திருவிண்ணகரியிலுள்ள விமானம்.
உற்பவமாதல் - பிறத்தல்.
உற்பவமாலை - ஒரு பிரபந்தம். அஃது பாட்டுடைத்தலைமகன் பிறப்பினை ஆசிரியவிருத்தத்தாற் பாடுவது.
உற்பவம் - கருப்பந்தரித்தல், பிறப்பு.
உர்பவம் - பூரணாகுதிசெய்தல்.
உற்பவித்தல் - உற்பத்தியாதல், பிறத்தல்.
உற்பவிப்பு - கருப்படுகை, பிறப்பு.
உற்பனம் } உண்மை, உத்தமம், கல்வி, தோற்றம், பிறப்பு.
உற்பன்னம் }
உர்பாடனம் - கக்கல், நிர்மூடம்.
உர்பாதகம் - எண்காற்புள்.
உற்பாதம் - கொடுமை, தப்பு, தானாய்ச் சம்பவித்தது, துன்னிமித்தம், நுண்ணறிவு, பூகம் முதலியன, விண்வீழ்கொள்ளி.
உற்பாதனம் - பிறப்பித்தல்.
உர்பிராசனம் - நிந்தை.
உற்பிரேட்சை - ஓரலங்காரம்.
உர்பின்னம் - பிளவுபடுதல்.
உர்பீசம் - நிலத்திற்பிறப்பன.
உற்றது - சரியானது, தகுந்தது.
உற்றதுரைத்தல்விடை - வினவுக்குவிடையாய்ச் சம்பவித்ததைச் சொல்லல் (உ-ம்) உண்டாயோ வென வயிறு நோகின்றதென்பது.
உற்றபண்புரைப்போர் - தூதர்.
உற்றவளவு - உள்ளதன்மை, சரியளவு.
உற்றவன் - உறவின்முறையான், சேர்ந்தவன், தகுந்தவன்.
உற்றறிதல் - ஆராய்ந்தறிதல், சேர்ந்தறிதல், பரிசித்தறிதல்.
உற்றுண்மை - உள்ளந்தரங்கம், உற்ற சிநேகம்.
உற்றுராய்தல் - தீர்க்கமா யாலோசித்தல்.
உற்றுர் - உறவோர், சினேகர்.
உற்றிடம் - அடைக்கலம், ஆபத்து உற்றசமயம்.
உற்றுக்கேட்டல் - கவனமாய்க் கேட்குதல்.
உற்றுப்பார்த்தல் - கண்ணூன்றிப்பார்த்தல்.

உற்றுழி - வருத்தமான காலம்.
உனத்தகு - குறிஞ்சா.
உன் - இழுப்பு, உனது, உன்னென் னேவல், மனம்.
உன்மணி - உயர்ந்தமணி.
உன்மதம் - மதிமயக்கம்.
உன்மத்தகி - குறிஞ்சா.
உன்மத்தம் - ஊமத்தை, மயக்கம், மன் மதாவஸ்தையிலொன்று, வெறி.
உன்மத்தர் - பித்தர், மயக்கமுடையோர், வெறியர்.
உன்மத்தன் - மாலியவந்தன் மகன்.
உன்மத்தி - குறிஞ்சா.
உன்மத்து } ஊமத்தை.
உன்மத்தை }
உன்மந்தம் - கொலை.
உன்மனை - பிராசாத வியல்பிலொன்று.
உன்மாதபித்தம் - ஒருவகைப்பித்தநோய், அது அறிவீனம், மந்தபுத்தி, வெட்கமுஞ் சாதிபேதமும் விடல், அதிகவார்த்தை, எப்பம், வாந்தி, வயிறுப்பல், அக்கினிமந்தம், கூச்சம், அழுகை; தூர்ப்பலம், நித்திராபங்கம், அதிகதாகம், மூர்ச்சை, சோவை, எரிச்சலென்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.
உன்மாதம் - மயக்கம், வெறி.
உன்மாதவானு - சித்தப்பிரமைகொண்டவன்.
உன்மார்க்கம் - துன்னடை.
உன்மானம் - நிறை, அளவு.
உன்மானன் - இச்சித்தபொருள் கிடைப்பதெப்போதென்றவசரப்படுவோன்.
உன்முகம் - ஒன்றிற் கருத்தாயிருக்கை, மேனோக்கம், மேனோக்கியமுகம்.
உன்முகன் - சக்ஷுர்மனுவுக்கு நடுவலையிடம் பிறந்தபுத்திரன், பாரிபுஷ்கரிணி, மக்கள் அங்கன், சுமனசன், கியாதிகிருது, அங்கிரசன், கயன்.
உன்மேதை - கொழுப்பு.
உன்மை - தசைபிடுங்குங்குறடு.
உன்னதம் - உயர்ச்சி, மேன்மை.
உன்னதி - வத்திப்பு.
உன்னமனம் - எழுச்சி.
உன்னம் - அன்னப்புள், ஈரம், தசைபிடுங்குங்குறடு, நினைவு, நீர்வாழ்பறவைப்பொது, மனம்.
உன்னயம் - உயர்வு.
உன்னயனம் - உந்நயம், அருத்தாபத்தி, ஆலோசித்தல், தியானம்.
உன்னலர் - பகைவர்.
உன்னல் - உன்னுதல், நினைத்தல்.
உன்னுகம் - காடி.
உன்னுமம் - உயர்த்துதல்.
உன்னுயம் - உயர்வு.
உன்னுலயம் . இதயம்.
உன்னி - அழிஞ்சில், குதிரை.
உன்னிப்பு - உயர்வு, ஊகிப்பு, கவனிப்பு, குறிப்பு, பலம், முயற்சி.
உன்னியம் - அயிக்கம்.
உன்னியர் - பந்துக்கள்.
உன்னுதல் - இழுத்தல், உந்தல், கிளர்தல், நினைத்தல், பாய்தல், விரைந்தெழுப்பல்.

---

## ஊ

ஊ - தமிழ்மொழியின் நெடுங்கணக்கில் வரும் ஆறும் எழுத்து உயிர்முயற்சியாற்பிறக்கும் எழுத்துகளுள் வாயைத்திறத்தலோடு இதழ்குவிவாற்பிறக்கும் ஒருநெட்டுயிர், உணவு, இறைச்சி, சந்திரன், சமாக்கியகலை, சிவன், ஊன், ஓரெழுத்து, ஓரொலிக்குறிப்பு, வருத்தமாற்று தனுங்கல், வினையெச்சவிகுதி.
ஊகடன் - முருங்கை.
ஊகம் - ஊமத்தை, கருத்து, குரங்கு, தியானம், நிலைவு, படைவகுப்பு, புலி.
ஊகனம் - அனுமித்தல், தீர்த்தல், நியாயஞ் சொல்லுகை.
ஊகனி - துடைப்பம்.
ஊகாரம் - ஓரெழுத்து.
ஊகி - ஊகிப்பவன்.
ஊகித்தல் - உத்தேசித்தல், நியாயஞ் சொல்லல், நினைத்தல், மட்டுக்கட்டுதல், யோசித்தல்.
ஊகிபாவை - யூகிபாவை.
ஊகூ - ஒரு வித்தியாதரன்.
ஊகை - யூகை.
ஊக்கம் - உண்மை, உயர்ச்சி, உள்ளமிகுதி, உற்சாகம், முயற்சி, வலி.

ஊக்கல் - எழுப்பல், எறுதல், தளர்த்தல், அசைத்தல், அதிகப் படுத்துதல், மிகுதி.
ஊக்கு - ஊக்கம், முயற்சி.
ஊக்குதல் - உற்சாகங் கொள்ளுதல், எழுப்பல், எறுதல், முயலுதல்.
ஊங்கனூர் - சேரநாட்டிற் கடற்கரைக் கண்ணதோரூர். இதன் பக்கமாகக் கடலில் வஞ்சத்தால் முளைத்துநின்ற ஒரு கடப்பமரத்தைச் சேரனொருவன் வெட்டினன்.
ஊங்கு - உயர்ச்சி, உவ்விடம், மிகுதி, முன்னிலையிடம், விசேடம்.
ஊங்கென-மிகவும்.
ஊசரத்திராவணம் - வெடியுப்பு.
ஊசரம் - பூவழலை.
ஊசலாடல் - அடிக்கடி போக்குவரத்தா யிருத்தல், ஊஞ்சலாடுதல்.
ஊசல் - அசைதல், ஊஞ்சல், ஊழல், ஒருபிரபந்தம். அஃது ஆசிரியவிருத்தத்தாலுதல், கலித்தாழிசையாலுதல், ஆடிரூசல், ஆடாமோ ஊசலென முடிவுறக்கூறுவது, பதனழிதல்.
ஊசா - மூக்குத்திப் பூச்செடி.
ஊசாடுதல் - ஊடாடுதல்.
ஊசாட்டம் - உலாத்து, களவு, வரத்துப் போக்கு, விரைவு.
ஊசி - இழைவாங்கி, எழுத்தாணி, சூசி, நிரைச்சமூ, கடிகாரத்தின் முள்ளு, நிறைகோலிமுள்ளு, வடக்கு.
ஊசிகன் - கிருதிபுத்திரன்.
ஊசிக்கண்
ஊசிக்காது } ஊசித்தொளை.
ஊசிக்காந்தம் - இரும்பிழுக்குங் காந்தக்கல், சலாகை, சும்பகம்.
ஊசிக்கார் - ஒருவகைநெல்.
ஊசிக்கால் - மச்சுக்கால்.
ஊசித்துளை - பாசம்.
ஊசித்தொண்டை - சிறுமிடறு.
ஊசிப்பாலை - ஒருபாலை.
ஊசிப்புல் - ஒருபுல்.
ஊசிமல்லிகை - ஒருமல்லிகை.
ஊசிமிடறு - சிறுத்தொண்டை.
ஊசிமுல்லை - ஒருவகைமுல்லை.
ஊசிமுனை - ஊசிநுனி.
ஊசிமூடித்தலைவாரை - ஒரு தலைப் பெட்டி.

ஊசுதம் - அச்சம்.
ஊசுதல் - சீவுதல், தைத்தல், நாறுதல், பதனழிதல்.
ஊஞ்சல் - ஊசல்.
ஊடகம் - ஒருமீன்.
ஊஷம் - உவர்மண், விடியற்காலம்.
ஊஷணம் - சுக்கு, மிளகு, மிளகுக் [கொடி.
ஊஷணை - திப்பிலி.
ஊஷரக்கல் - சுக்கான்கல்.
ஊஷரத்திராவணம் - வெடியுப்பு.
ஊஷரம்
ஊடரம் } பூவழலை.
ஊடலுவகை - ஊடலினாலே கூடலின் பஞ்சிறந்ததெனக் கூறுவது.
ஊடல்-கல்வியிற்பிணங்கல், பிரிவு, விரோதித்தல், வெறுத்தல்.
ஊடல்விரி - வெள்ளணி யணிந்து விடுத்துழித்தலைவன் வாயில் வேண்டன் முதலாகப் பாங்கி தலைவனை அன்பிலைகொடியை யென்றிகழ்தல் ஈருகியவை.
ஊஷவானு - உழமண் பூமி.
ஊடறுத்தல் - நடுவறுத்தல், வழக்குத் தீர்த்தல்.
ஊடாடல் - கல்விபயிலல், நடமாடல், பழகல். [ல்.
ஊடாடிப்பார்த்தல் - ஆராய்ந்துபார்த்த
ஊடாடுதல் - கல்விபயிலுதல், நடமாடுதல், பழகுதல்.
ஊடாட்டம் - பழக்கம்.
ஊடான் - ஒருமீன்.
ஊடு - இடம், உள், ஊடென்னேவல், ஏழனுருபு, தார்நூல், நடு.
ஊடுசெல்லல் - ஊடுபோதல்.
ஊடுதல் - பிரிதல், பிரியவீனப்படுதல்.
ஊடுதாக்கல் - பலத்தைச் சோதித்துப் பார்த்தல், பின்னிடாம லெதிர் நிற்றல்.
ஊடுபற்றுதல் - விளக்குள்ளே பற்றியெரிதல்.
ஊடுபோக்கல் - உருவச்செய்யல், நடுவறுத்தல், வழக்குத் தீர்த்தல்.
ஊடுருவல் - தட்டுருவல்.
ஊடுருவுதல் - நுழைதல், பீறுதல், புதைத்தல்.
ஊடுவெளி - இடைவெளி.
ஊடுடே - அடிக்கடி, இங்குமங்கும்.

ஊடை-நூற்றூர், புடவையின் குறுக்கு நூல் மனைவி.
ஊடையம் - நீரரண்.
ஊட்டம் - உண்டி.
ஊட்டல் - ஊட்டுதல்.
ஊட்டி-உணவு, பறவையுணவு, மழை, மிடறு, வினையெச்சம், வினையாலணையும்பெயர்.
ஊட்டிரம் - தேட்கொடுக்கி.
ஊட்டு-உண்பிக்கை, கவளம்.
ஊட்டுக்கன்று - பால்குடிக்குங்கன்று.
ஊட்டுக்குற்றி - மிடறு.
ஊட்டுணை - தலையாட்டம்.
ஊட்டுதல்-அகிற்புகை பஞ்சு மை முதலிய வூட்டுதல், இன்ப துன்பங்களை யருத்தல், உண்பித்தல், கன்று முதலிய பாலுண்ணல், நினைப்பூட்டல், விருந்திடல்.
ஊட்டுந்தாய் - அஞ்சுதாயருளொருத்தி, அவள் பிள்ளைக்கூட்டுதல் செய்பவள், செவிலித்தாய்.
ஊஷ்மம் - கோடைகாலம்.
ஊஷ்மாகமம் - கோடைகாலம்.
ஊணம் - ஒருதேயம்.
ஊணர்-ஊணதேயத்தார், பேருண்டிக்காரர்.
ஊணல் - ஊணுதல்.
ஊணன் - போசனப்பிரியன், மிகவுண்போன், மிலேச்சன்.
ஊணுதல் - ஊன்றுதல், நடுதல்.
ஊண் - இரை, உண்டி, சோறு.
ஊண்பாக்கு - உண்டபின்னிடும் பிளவிலை.
ஊதநாதன்-இனத்தைக்காக்கும் யானை.
ஊதம்-போருக்கு வரும்படி கேட்டல், யானைக்கூட்டம்.
ஊதல் - ஆரவாரம், ஊதுதல், காற்று, வீங்கல்.
ஊதா - மங்கனிறம்.
ஊதாரி - அழிப்புக்காரன், வீண்செலவுக்காரன்.
ஊதாரித்தனம்-அழிப்பு, வீண்செலவு.
ஊதிகை - முல்லைக்கொடி.
ஊதிடுகொம்பு - கொம்பினாற்செய்த இசைக்குழல்.
ஊதியம் - இலாபம், கல்வி, பலன்.
ஊதியொடுக்கம் - சுவாசம்.

ஊதுகட்டி - சொக்கவெள்ளி.
ஊதுகரப்பன் - ஒரு கரப்பன்.
ஊதுகாமாலை - ஒருநோய்.
ஊதுகுழல் - ஒரு வாச்சியம்.
ஊதுகொம்பு - ஊதிடுகொம்பு.
ஊதுதல்-அரித்தல், காற்று, நொய்தாய் வீசல், குழல் முதலிய வூசல், பொருமுதல், வீங்கல்.
ஊதுமா - ஓரினிப்புக்கூழ்.
ஊதுமாந்தம் - ஒருநோய்.
ஊதுவழலை - ஒருவகைப்பாம்பு.
ஊதுவாரம் - வெள்ளி.
ஊதுவிரியன் - ஒருவிதப்பாம்பு.
ஊதை-காற்று, குளிர்காற்று, வாதம்.
ஊத்தை - அழுக்கு, ஊண், சுரோணித நீர், புலால்.
ஊத்தைக்குடியன் - ஒருபிசாசம்.
ஊத்தைச்சீலை - அழுக்குச்சீலை, சூதகச்சீலை.
ஊத்தைநாறி - துர்க்கந்த முடையவள், பீநாறி.
ஊத்தைப்பாண்டம் - அழுக்குப்பாத்திரம், உடம்பு.
ஊத்தைப்பிணம்-அழுக்குடம்பு, நாறிய பிணம்.
ஊந்து - கச்சோலம்.
ஊமச்சி-ஒருவித நத்தை, ஊமைச்சி.
ஊமணை - அந்தங் கெட்டது, ஊமை, ஊமை முகமுள்ளது, மந்தன்.
ஊமணைச்சட்டி-நன்றாய் வேகாத மட்சட்டி.
ஊமணச்சி - அழகற்றவள்.
ஊமணையன் - அவலட்சணன்.
ஊமத்தங்கூகை - ஊமைக்கோட்டான்.
ஊமத்தம், ஊமத்து, ஊமத்தை - உன்மத்தை.
ஊமல்-கிழங்குகழிந்த பனங்கொட்டை.
ஊமற்கச்சி - உலர்ந்த பனங்கொட்டையில் பாதி.
ஊமற்கரி - பனங்கொட்டையின்கரி.
ஊமண் - ஊமை, கூகை.
ஊமாண்டி - உம்மாண்டி, ஊமை, பூச்சாண்டி.
ஊமிள் - சிறுபூனை.
ஊமை-உறுப்புக்குறை எட்டினொன்று; அஃது மூங்கை, ஒருவாத்தியம், கீரி,

ஊமைக்கட்டி - பொன்னுக்குவீங்கி முகங்கொள்ளாத கட்டி.
ஊமைக்காடை - ஒருவகைகாடை.
ஊமைச்சி-ஊமைப்பெண், ஒருநத்தை.
ஊமைதேங்காய் - குலுங்காததேங்காய்.
ஊமைப்பயில்-கரபாஷை, கைப்பயில்.
ஊமையன் - தமிழ்நாட்டிலிருந்த ஒரு வீரன், ஊமை.
ஊமையெழுத்து-ஒலியற்றவெழுத்து.
ஊமைவிளையாட்டு - ஒரு விளையாட்டு.
ஊம் - மவுனம்.
ஊம்பல், ஊம்புதல் } சூப்புதல்.
ஊய்தல் - பதனழிதல்.
ஊரகம் - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்று.
ஊரண்டினர் - கள்ளி.
ஊரப்பார்த்தல் - ஊர்ந்துசெல்ல மந்திரித்தல்.
ஊரல்-ஈரம், உரிஞ்சல், ஊறுதல், காய்ந்துவருகிறபுண், கிளிஞ்சில்நகர்தல், பசுமை, குளுவை என்னும் பறவை.
ரல்பதம் - பச்சைப்பதம்.
ஊரல்புண் - காய்ந்துவரும்புண்.
ஊரவியன் - வைசியன்.
ஊரன் - மருதநிலத்தலைவன்.
ஊராண்மை - மிக்கசெயல், உபகாரியாந்தன்மை.
ஊரார் - ஊரவர், பிறர்.
ஊராளி - ஊரதிகாரி, ஒரு சாதியான்.
ஊரி - இளமை, சங்கு, மேகம், ஒருவிதப்பூண்டு.
ஊரிலிகம்பலை - கலாதி.
ஊரின்னிசை-ஒரு பிரபந்தம். அஃது பாட்டுடைத் தலைவனூரினைச் சார இன்னிசை வெண்பாவால் தொண்ணூறேனும் எழுபதேனுங்கூறுவது.
ஊரீகிருதம் - அங்கீகரிக்கப்பட்டது.
ஊரு - அச்சம், அட்டை, தொடை.
ஊருகால் - சங்கு.
ஊருசன் - வைசியன்.
ஊருடை, ஊருடைமுதலியார் } முருங்கைமரம்.
ஊருணி - ஊரடுத்தகுளம், ஊரெல்லாமுண்ணுங்குளம், கிணறு.
ஊருதல்-ஏறுதல்,செலுத்தல்,நகருதல்.
ஊருஸ்தபவாதம்- ஒருவகைவாதநோய்.
ஊரெல்லை - ஊரினெல்லைமானம்.
ஊரெழுச்சி ஊரவர்களொன்றாயெழுதல், ஊர்க்கலகம்.
ஊரேறு - ஊர்பன்றி, பட்டிமாடு.
ஊரோச்சம் ஊரெல்லாம் பேசத்தக்கதாயிருத்தல்.
ஊர் - ஊரென்னேவல், நாடு, பரிவேடம், நகர், தேசத்தினுட்பிரிவு.
ஊர்கலிகம்பலை - கலாதி.
ஊர்கூடுதல் - ஊரவர்கள் திரளுதல்.
ஊர்கோலம்வருதல்-ஊர்வலம் வருதல்.
ஊர்கோள், ஊர்கோள்வட்டம் } பரிவேடம்.
ஊர்கதை-நிசமற்றபேச்சு,வீண்செய்தி.
ஊர்க்கலகம் - இராச துரோகமான கலகம், ஊரிலுண்டாகுங் கலகம்.
ஊர்க்காறுபாறு-அன்னியருடைய காரியவிசாரிப்பு,ஊர்க்காரியம்ஊர்விசாரிப்பு.
ஊர்க்குருவி-அடைக்கலங்குருவி. [ப்பு.
ஊர்க்கூட்டம் - ஊரார்களொன்றுகூடுங் கூட்டம்.
ஊர்கொள்ளை - ஊழிநோய், கொள்ளையடித்தல்.
ஊர்சூழ்சோலை - வனம்.
ஊர்ச்சஸ்வதி - பிரியவிரதன்மகள், சுக்கிரனது மனைவி, தேவயானை.
ஊர்ச்சம் - ஊக்கம், சுவாசம், சௌரியம், கார்த்திகைமாதம்.
ஊர்ச்சிதம் - உறுதி, தத்துவம், திரம், நிலைப்படுதல்.
ஊர்ச்சிதன்-கார்த்தவீரியார்ச்சுனன்மகனாகிய சூரன்.
ஊர்ச்சை - வசிஷ்டன்பாரி.
ஊர்ணநாபி - சிலந்திப்பூச்சி.
ஊர்ணம் - ஆடு முதலியவற்றின் மயிர், நூலிழை, புருவநடுவிலுள்ள சுழி.
ஊர்ணயு - ஆடு, ஆட்டுமயிர், கம்பளம், சிலந்திப்பூச்சி.
ஊர்தல் - ஊருதல், ஏறுதல், செலுத்துதல், தவழ்தல், தினவுறல், பாத்தல்.
ஊர்தி - எருது, பண்டி முதலிய வாகனங்கள்.
ஊர்த்ததாண்டவர் - திருவாலங்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் நடராஜப்பெருமான்.
ஊர்த்தம்-ஊர்த்துவம், சைவம் பதினென்று.

ஊர்த்துவகததோஷம் - ஒருவகை தோஷநோய். அது பித்தகபஸ்தானத்திற்குமேல் அபானவாயுவைச் சஞ்சரிக்கச்செய்து பீனிசம், இருமல், இரைப்பு, தோளில் நோவு அல்லது தலைவலி, குரற்கம்மல், அரோசகமென்னும் இக்குணங்களை யுண்டாக்குவது.

ஊர்த்துவகதி - மேற்கதி, மேனோக்கு.

ஊர்த்துவகபுரம் - அரிச்சந்திரனுடைய நகரம்.

ஊர்த்துவகம் - மேலேறுதல்.

ஊர்த்துவகாமினி - மேனோக்கிய பார்வையுள்ள குதிரை.

ஊர்த்துவகாயம் - உடல், சரீரத்தின் தலைப்புறம்.

ஊர்த்துவகுதம் - ஒருவகைக்குதநோய்; அது கொப்பூழின கீழிருக்குமபான வாயு மூலரோகத்தினாலாவது குன்மரோகத்தினாலாவது சிலேஷ்மரோகத்தினாலாவது மேனோக்கி யேறும்போது பிறந்து அவ்வாயுவு மலசலாதிகளிற் றோய்ந்து மேல்நோக்க வாயிற் றுர்க்கந்தத்தை யுண்டாக்குவது.

ஊர்த்துவசீலம் - நெருப்பு.

ஊர்த்துவசுவாசம் - ஒருவகைச் சுவாசநோய். அது சாதாரணமாக வருஞ் சுவாசமானது நீண்டு மேல்நோக்கி வருதலால் தலையைக் குனியக்கூடாமல் நிமிரல், சிலேஷ்ம நிறைவினால் முகத்தினரம்புகளெல்லா மூப்புதல், அதிக சுவாசவருத்தத்தால் மேற்பார்வை மயங்கல், சுற்றிச்சுற்றிப் பார்த்து விழித்தல், மர்ம ஸ்தானங்களின் நோவினலழுதல், பேசவேலாதிருத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்குவது.

ஊர்த்துவதேவன் - விட்டுணு.

ஊர்த்துவபாதம் - எண்காற்புள்.

ஊர்த்துவபித்தம் - ஒருவகைப் பித்தநோய், அது அதிககோபம், சதாசண்டை, இறைந்துகூவல், ஆதாளம், பூமியிற் குழிவிழும்படியான பேதி, பிரமை, கண்சிவப்பு, அதிநித்திரை, சரீரத்துலிப்பு என்னும் இக்குணங்களையுண்டாக்குவது [கோபிசந்தனம்

ஊர்த்துவபுண்டரம் - மேனோக்கியிடும்

ஊர்த்துவமுகம் - மேற்பக்கம்.

ஊர்த்துவமுகாரத்தபித்தம் - ஒருவகைப் பித்தநோய்; அது கண், செவி, நாசி, வாயென்னுமிந்நான்கின்வழிகளாலும் இரத்தத்தை வெளிப்படுத்துவது.

ஊர்த்துவமுகவாதம் - ஒருவகை வாதநோய்; அது மலபந்த வஸ்து, சீதளவிரோதவுண்டி, பகல்நித்திரை, சதா படுக்கை அல்லது உட்கார்ந்திருத்தல், மலசல மடக்கல் முதலியவைகளாற் பிறந்து மேல்வயிற்றையு மார்பையும்பற்றி அபானசமான வாயுக்களுடன் கூடி விஷரூபமாக அதிகரித்து மிகுவேகத்துடன் மேலெழும்பிக் கொண்டிருப்பது, அப்போது எலும்புகளெல்லாம் நொறுங்கினது போல் வேதனை, குடல் விலா கண் முகம் இவைகளில் அதிகநோவு, வயிற்றிலுப்பிசம், கனம், தாழ்வாய்ப் பிடிப்பு, நடுக்கம், அறிவின்மை, பிரலாபம், வாயில் நுரையாகிய இக்குணங்களுண்டாகும்.

ஊர்த்துவம் - மேல், மேனோக்கம்.

ஊர்த்துவராசி - மேனோக்கிராசி.

ஊர்த்துவலிங்கன் - சிவன்.

ஊர்த்துவலோகம் - தேவலோகம்.

ஊர்த்துவலோசனம் - சாபம்.

ஊர்த்துவாமிச்சிரவாதம்-ஒருவகை வாதநோய்; அது தோளில் மதர்த்தல், நோதல், கனத்தல் பலவீனமுதலிய குணங்களை யுண்டாக்குவது.

ஊர்நேரிசை - ஒருபிரபந்தம்; அஃது பாட்டுடைத்தலைவன் ஊரினைச்சார நேரிசைவெண்பாவாற் கூறுவது.

ஊர்புல் - ஒருவகைப்புல்.

ஊர்ப்பகை - ஊரார்பகை.

ஊர்ப்பழி - ஊர்நிந்தை.

ஊர்ப்பாடு - அன்னியருடைய காரியம்.

ஊர்ப்புகைச்சல்-புகைநிறமாய்த் தோற்றல்.

ஊர்ப்புரளி - ஊர்க்குழப்பம்.

ஊர்ப்புலம் - ஆமணக்கு.

ஊர்மச்சி - ஊமச்சி.

ஊர்மனை - குடியிருப்பு.

ஊர்மன்று - ஊரம்பலம், பொதுமனை.

ஊர்மி-ஒளி, சீலை இமிசை, திரை, நீரோட்டம், அலை, வருத்தம், வஸ்திரமடி

ப்பு,வயிறு முதலிய விடங்களிலுள்ள மூன்று மடிப்பு,விராகம், ஆற்றுமை, **விரைவு.**
**ஊர்**மிகை - அலை, மோதிரம்.
**ஊர்**மிமாலி - கடல்.
**ஊர்**மிளை -இலக்குமணன்மனைவி, சண வனுல் விரும்பப்பட்ட கற்புள்ள ம [னைவி.
**ஊர்**வசன் - சுசிமகன்.
**ஊர்**வசி - சுவர்க்கலோகவேசை,
**ஊர்**வரப்பன் - வெள்ளரி.
**ஊர்**வலம்வருதல் -பட்டினப்பிரவேசம் வருதல்
**ஊர்**வன, **ஊர்**வனவு } எழுபிறப்பினென்றுஅது ஊரும்பிராணி.
**ஊர்**வன் - இவன் அத்தி யுக்கிரதவஞ் செய்யும்போது நாரதாதி தேவரிஷிகளும், பிரமவிருஷிகளும்வந்து ஒரு புத்திரனை யுற்பத்திசெய்து தருக வென்ன ஒரு நாணற் கூர்ச்சத்தைக் கையிலெடுத்து தனது தொடையை ஓமாக்கினிமேல் நிறுத்தி அக்கூர்ச்சத்தால் அத்தொடையைக்குடைந்த மாத்திரத்தில் சுவாலாமாலி என்னும் புத்திரன் பிறந்தான். அத்தருணத்தில் பிரமா பிரசன்னமாகி இப்புத்திரனை சமுத்திரமத்தில் வடவாமுக ரூபமாக இருக்குமாறு செய்க வெனறுவேண்டஅப்படியேசெய்தவன் சுவாலாமாலி ஔர்வன எனவும் படுவன். அவனுக்கு ஆகாரம் சலம்.
**ஊர்**வெண்பா - ஒரு பிரபந்தம், அஃது பாட்டுடைத்தலைவன் **ஊரி**னைச்சார வெண்பாவாற் பத்துச்செய்யுள் கூறுவது.
**ஊ**லுகம் - ஆந்தை, ஒருவகைக்கரை, கோட்டான்.
**ஊ**ழகம், **ஊ**ழம் } வைகறை.
**ஊ**ழலித்தல் - அருவருத்தல், இளைத்தல், நாற்றமடைந்து கெடுதல், பதனழிதல்.
**ஊ**ழல் - ஆகாதது, **ஊ**த்தை, கெட்டது, நரகம், நாற்றம், பழுதானது.
**ஊ**ழல்நாற்றம் - துர்க்கந்தம்.
**ஊ**ழி - உறைகாலம். ஒரு பிசாசம், நெடுங்காலம், பிரமனுயுள், **பூ**மி, யுகமுடிவு, விதி.

**ஊ**ழிகாலம் - உகாந்தகாலம், நெடுங்காலம்.
**ஊ**ழிக்காய்ச்சல் - கொள்ளை நோய் தொத்துசுரம்.
**ஊ**ழிக்கால் - உகாந்தவாயு.
**ஊ**ழிக்காற்று-யுகமுடிவி லுண்டாகுங் காற்று, விஷக்காற்று.
**ஊ**ழித்தீ - வடவாமுகாக்கினி.
**ஊ**ழிநாள் - முடிவுநாள்.
**ஊ**ழிநீர் - உலகமுடிவி லுண்டாகுஞ் சலப்பிரளயம்.
**ஊ**ழிநோய் தொத்தவியாதி, பெருவாரி நோய்.
**ஊ**ழியக்காரன் - வேலைக்காரன்.
**ஊ**ழியஞ்செய்தல்-தொண்டுசெய்தல்.
**ஊ**ழியம் - தொண்டு.
**ஊ**ழியூழிகாலம் - நித்தியம்.
**ஊ**ழைக்குருத்து - துளசி.
**ஊ**ழ் - உலகமுடிவு, **ஊ**ழ்த்தலைச் செய் யென்னேவல், குணம், நியமம், பகை, பழவினை, பழமை, பூர்வகன்மம், முடிவு, முறை, விதி, வெயில்.
**ஊ**ழ்த்தல் - உதிர்த்தல் ஊன், சமயம், சிதைவு, சிந்திப்பு, செவ்வி, நினைத்தல், பதனழிவு, புலால், மடித்தல், மலர்தல், முதிர்தல், வாடுதல்.
**ஊ**ழ்த்துணை - மனைவி.
**ஊ**ழ்முறை - நியதி, பூருவநியாயம்.
**ஊ**ழ்விதி - பிரார்த்துவவிதி.
**ஊ**ழ்வினை - பழவினை.
**ஊ**ளன் - ஆணரி, நரி.
**ஊ**ளா - நெடுவாய்மீன்.
**ஊ**ளான் - நரி.
**ஊ**ளி - ஊளாமீன்.
**ஊ**ளை - **ஊ**த்தை, சளி, நாய், நரி முதலிய ஓலிடுஞ் சத்தம்.
**ஊ**ளைகொள்ளுதல், **ஊ**ளையிடுதல் } ஓலிடல்,குரவையிடுதல்.
**ஊ**றணி - ஊறல், **ஊ**ற்று, கசிவுநிலம், சேற்றுநிலம், வருவாய்.
**ஊ**றல் - ஊறுதல், **ஊ**ற்று, களிம்பு, காய்ந்தபச்சை, சருமத்தின்மேலுண்டாகும் ஒருநோய், தினவு, பஞ்சலோகக் கலப்பு, வருவாய்.
**ஊ**றவைத்தல் - **ஊ**றும்படி வைத்தல்.
**ஊ**றற்பாக்கு - நீரிலூறிய பாக்கு.

ஊறு - இடையூறு, ஊறென்னேவல், காயம், கொலை, தழும்பு, தீண்டல், தீமை, பரிசம்.
ஊறுகாய் - அடைகாய்.
ஊறுகோள் - காயம், கொலை.
ஊறுதல் - சாரமேறுதல், நனைதல், நீர் பெருகுதல்,பலவழியினும் பொருள் வந்தடைதல், மாமிசஞ்சேர்ந்து பிடி[த்தல்.
ஊறுநீர் - ஊற்றுநீர்.
ஊறுபாடு-இடையூறு, இரணம், காயம், சேதம், தீமை.
ஊறுபுண் - ஆறிவருங்காயம்.
ஊறுவைத்தல் - இடையூறுண்டாக்கல், தழும்புபடுத்தல், வடுவைத்தல்.
ஊற்றங்கால்-வயல் முதலியவைகளில் நீர்வடியும்படி யிடுங்கால்.
ஊற்றங்கோல் - ஊன்றுகோல்.
ஊற்றம் - அசையின்றிநிற்றல், அறிவுடைமை, ஆற்றல், பற்றுக்கோடு, புகழ், மிகுதி, முயற்சி, கேடு, நீரூறல், வலி.
ஊற்றல் நீர்முதலியவூறிவருதல், பெய்தல்.
ஊற்றாணி இடையூறு, ஊறு, கலப்பையுறுப்பினென்று.
ஊற்றும்பெட்டி - ஊற்றுப்பெட்டி.
ஊற்றல் - உரோசணிநாள், கரப்பு, மீன்கூடு.
ஊற்றல்கவித்தல் } கரப்புக்குத்துதல்
ஊற்றல்போடல் }
ஊற்று - ஈரம், ஊற்றென்னேவல், ஊன்றுகோல், நீரூற்று.
ஊற்றுக்கண் - ஊற்றுத்துவாரம்.
ஊற்றுக்குழி - நீரூறும்படி தோண்டுங்குழி, ஓரூர்.
ஊற்றுக்கோல் - ஊன்றுகோல்.
ஊற்றுண்ணல் - சாதல், சித்தப்படல்.
ஊற்றுதல் - எண்ணெய்முதலிய வூறச்செய்தல், கீழேயொழுக்கல்,வார்க்குதல்.
ஊற்றுநீர் - ஊறுநீர்.
ஊற்றுப்பட்டை-ஊற்றிறைக்கும் பட்டை.
ஊற்றுப்பூ - எண்ணெயூற்றின தேங்காய்ப்பூ.
ஊற்றும்பெட்டி - எண்ணெயூற்றும் பெட்டி.

ஊற்றுபெயர்தல்-ஊற்றுத்திரும்புதல்.
ஊற்றுமரம் - எண்ணெயூற்றுகிறமரம், செக்குலக்கை.
ஊற்றெடுத்தல் - ஊறலெழுதல்.
ஊனகத்தண்டு - கருவண்டு.
ஊனக்கண் - கட்பொறி, குருட்டுவிழி.
ஊனபானம் - உரோசாபிமானங்கள்.
ஊனம் - ஈனம், குறைபாடு, கேடு, சாரம், தீமை, மாமிசநீர்.
ஊனன் - குறைவுள்ளோன்.
ஊஞங்கொடி - ஆஞன்.
ஊஞயம் - நூஞயம், பிழை.
ஊஞன் - ஒருகொடி.
ஊனி - அமுக்கிராங்கிழங்கு.
ஊனுருக்கி - கபவியாதி.
ஊனெட்டி - உடும்பிறைச்சி.
ஊன்-உடல் தசை, நிணம், மாமிசம்.
ஊன்விற்போர் - இறைச்சிவிற்போர்.
ஊன்றக்கட்டுதல் - பலப்படுத்தல்.
ஊன்றல் - இறுகப்பிடித்தல், சார்தல், தள்ளல், நடுதல், நிறுத்தல், நினைத்தல், பதித்தல், பலப்படுத்தல், மெய்ப்பரிச மெட்டினென்று.
ஊன்றள்ளல் - ஆன்வளரல்.
ஊன்றி - ஒருபாம்பு.
ஊன்றிக்கேட்டல் உறுதியாய்வினவல் கருத்தாய்ச் செவிகொடுத்தல்.
ஊன்றிக்கொள்ளல் - சார்ந்திருத்தல், நிலைபெறல்.
ஊன்றிப்பேசல் - அசைநிறுத்திப் பேசல், பலப்படுத்திப்பேசல்.
ஊன்றுகால் - உதைகால்.
ஊன்றுகோல் - பற்றுக்கோல்.
ஊன்றுதல்-அமர்த்தல், தாபரங்கொடுத்தல், நடுதல், நிலைப்படுத்தல், பதித்தல், பலப்பித்தல், மேர்வைத்தல்.

# எ

எ - தமிழ்மொழியின் நெடுங்கணக்கின் வரும் ஏழாம் எழுத்து, உயிர் முயற்சியாற்பிறக்கும் எழுத்துக்களுள் வாயைத் திறத்தலோடு அடிநாவில்விளிம்பு அண்பல்லினை யுறப்பிறப்பதும் அகர இகரக் கூறுகள் சந்தித்துப்

பிறப்பதுமான ஒரு குற்றுயிர் ஏழு என்னும் எண்ணின்குறி, வினாவெழுத்து.
எஃகம்-ஆயுதப்பொது, ஈட்டி, எரியாயுதம், கைவேல், வாட்படை, வேற்படை, சக்கரம்.
எஃகல்-அவிழ்தல், எட்டுதல், எதிர்தாக்கல், ஏறுதல், தாழ்ந்தெழும்பல், நீளல், நெகிழல், நொய்தாக்கல், பஞ்சமுதலியவெஃகுதல்மேலேவாங்கல்.
எஃகு-ஆயுதப்பொது, உருக்கு, எஃகென்னேவல், கூர்மை, மதிநுட்பம், மனவொடுக்கம், வேல்.
எஃகுகோல் - பஞ்சுகொட்டும் வில்.
எஃகுதல்-அவிழ்தல், உதைந்தேறுதல், எட்டுதல், எதிர்க்குதல், தாழ்ந்தெழும்பல், நீளல், நெகிழ்தல், நோய்தாக்கல், பஞ்சுகொட்டல், எக்கல்.
எகரம் - ஓரெழுத்து.
எகினம், எகின் - அழிஞ்சின், அன்னம், கவரிமா, செம்மரம், நாய், நீர்நாய், புளி, புளிமா, புளியமரம்.
எகுன்று - குன்றிக்கொடி.
எக்கச்செக்கம் - இடக்கு, ஒவ்வாமை, குழப்பம், தாறுமாறு.
எக்கண்டம் - ஒருமிக்க, முழுதும்.
எக்கரணம், எக்கரவம் - தொனுப்போடுதல், முக்காரம்.
எக்கர் - இடக்கர், சொரிதல், மறைத்தசொல், மேலுக்கேறப்பண்ணல்.
எக்கல்-எட்டல், ஏறுதல், குவிதல், சொரிதல் பதிவு, பொருதல், வயிற்றையெக்கல், வற்றல்.
எக்கழுத்தம், எக்கழுத்தல் - இறுமாப்பு.
எக்களித்தல் – மிகமகிழ்தல்.
எக்களிப்பு - மிகுமகிழ்ச்சி.
எக்காளம் - ஒருகுழல், காகளம்.
எக்கியம் - யாகம்.
எக்கியோபவீதம் - பூண் நூல்.
எக்குதம் - ஒருபுரம் வற்றிவளைதல், வயிற்றை வற்றப்பண்ணல்.
எங்கண் - எவ்விடம்.
எங்கத்து, எங்கத்தை, எங்கத்தைய - எவ்விடத்த.
எங்கு - எவ்விடம்.
எங்கும் - எல்லாவிடத்திலும்.
எங்கே - எவ்விடம்.
எங்கை - என்தங்கை.
எங்ஙனம், எங்ஙனே, எங்ஙன் - எவ்விடம், எவ்விதம்.
எசமாட்டி - தலைவி.
எசமானத்துவம் - தலைமை.
எசமானன் - கணவன், தலைவன், முதல்வன்.
எசமானி - எசமாட்டி, தலைவி.
எசமானிக்கை - முதன்மைத்தனம்.
எசமானினி - தலைவி.
எசமான் - எசமானன்.
எசம் - நரம்பு.
எசலாட்டம் - இகலாட்டம்.
எசலி - எசலாட்டம்.
எசுசு - யசுர்வேதம்.
எசுர-முதல்வேதம், உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று.
எச்சச்சொல் - பெயர், வினை, உம்மை, சொல், பிரிநிலை, என, ஒழியிசை, எதிர்மறை இசை, குறிப்பு முதலிய குறைந்து நிற்குஞ்சொல்.
எச்சத்தன்-சண்டேசுரநாயனார்தந்தை.
எச்சதேவன் - யாகதேவன்.
எச்சமிடல், எச்சமிடுதல் - பறவை மலம் விசர்ச்சித்தல்.
எச்சம்-உண்மை, எச்சில், காரியம், குறைசந்ததி, சேடம், பட்சிப்பீ, பிள்ளை, மரண சாதன ஈவு, யாகம்.
எச்சரிக்கை-அமைதியா யிருக்கச்சொல்லுகை, ஒருபிரபந்தம், கண்டிப்பு, கருத்து, கவனம்.
எச்சரித்தல் - கடிந்துகொள்ளல், புத்திசொல்லல், முன்னறிவித்தல், விழிக்கப்பண்ணுதல்.
எச்சரிப்பு, எச்சரிகை - எச்சரிக்கை.
எச்சவனுமானம்-ஓரளவை; அது ஆற்றில் நீர்வரக்கண்டவன் மலைக்கண் மழையுண்டெனவறிதல்.
எச்சவாய் - குதம்.
எச்சவும்மை-எஞ்சியதைக் காட்டும்மை.
எச்சன் - யாகஞ்செய்வோன், யாகத்தினதிதேவதை, விட்டுணு.
எச்சிலன் - பிசுனன்.

எச்சிலார் - இழிஞர்.
எச்சிலூண் - உச்சிட்டவுணவு.
எச்சில் - உச்சிட்டம், சேஷம்.
எச்சில்தோஷம் - ஒருவகைத் தோஷ நோய், அது தலையெடுக்கக்கூடாத மயக்கம், சரீரவாட்டம், சரீரத்தினுற் றம் மூலையுண்ணுமை, அற்பப்பேதி இவையொன்ருெடொன்ருெட்டிக் கொள்ளுவதால் திறக்க முடியாது, மண்ணிற் புரளுகை, அழுகை, பூத சுரம், ஒருவேளை தாயைக்கண்டு சீறி யழுதல் என்னு மிக்குணங்களையுண் டாக்குவது.
எச்சில்வாய் - உச்சிட்டிவாய்
எச்சிற்கல்லை - எச்சிலிலை.
எச்சிற்பருக்கை - சிந்திக்கிடக்குஞ்சோறு.
எச்சிறபேய் - உச்சிட்டதேவதை, பெருந்தீனிக்காரன்.
எச்சிற்றழும்பு } தழுதணை.
எசசிற்றேமல் }
எச்சின்மாற்றல் - சாணத்தினுல் மெழுகிச் சுத்திசெய்யல்.
எச்சு - உயர்வு, ஒரு வாத்தியக்கருவி.
எஞ்சணி - எஞ்சிநிற்குஞ்சொல்.
எஞ்சல் - குறைதல், சுருங்கல், விசேஷமாயிருத்தல், மிஞ்சுதல்.
எஞ்சிநிற்றல்-ஒழிந்து குறிப்பாய்நிற்குதல், மிஞ்சிநிற்குதல்.
எஞ்சியசொல்லினெய்தக்கூறல் - ஒரு தந்திரயுக்தி.
எஞ்சுதல் - எஞ்சல்.
எஞ்சுமுரை - எச்சமாய் நிற்கும் பொருள் விரித்தவுரை.
எஞ்ஞான்றும் - எப்போழ்தும்.
எடாதஎடுப்பு - தொடங்காத தொடக்கம், பெரியகாரியம்.
எடார் - வெளிநிலம்.
எடுகூலி - சுமைகூலி.
எடுக்கல் } எடுத்தல்.
எடுக்குதல் }
எடுத்தடிமடக்கு - நிடுகூறு, துணிவு.
எடுத்தடிவைததல் - தளர்நடையாய்நடத்தல்.
எடுத்தபடி - திடீலென, நேர்ந்தபடி.
எடுத்தமொழியினெய்தவைத்தல் - ஒரு யுத்தி.
எடுத்தலளவு - நிறைவு.
எடுத்தலளவையாகுபெயர் - நிறையின் பெயர் நிறுக்குங் கருவிக்கு வழங்குவது (உ-ம்) துலாக்கோல்.
எடுத்தலும்மைத்தொகை - நிறையளவும்மைத்தொக்கிநிற்பது (உ-ம்) ஒன்றேமுக்காற்பலம்.
எடுத்தவோசை - குமுறலானவோசை.
எடுத்தலோசைவகை - உளை.
எடுத்தல் - அங்கீகரித்தல், இடங்குறித்தல், உடைத்தாதல், எடுக்குதல், எடுத்துதல், ஏற்றுக்கொள்ளல், ஓரோசை, சுமத்தல், தரித்தல், தாங்குதல், தூக்குதல், தெரிந்து கொள்ளல், தொடக்குதல், நிறுத்தல், நீக்குதல், பற்றிக்கொள்ளல், பொருந்தல், வாங்குதல், வீடு முதலிய கட்டல், வேடங்கொள்ளுதல்.
எடுத்தன் - பொதிமாடு.
எடுத்தாட்சி - வழக்கம்.
எடுத்தார்கைப்பிள்ளை - எவர்சொல்வதையுங் கேட்டு நடப்பவன்.
எடுத்து-எடுத்துந்தன்மை, எடுத்தென்னெச்சம், எடுத்தென்னேவல், சுமை.
எடுத்துக்கட்டல்-எடுத்துத் தொடுத்தல்.
எடுத்துக்கட்டு - கட்டுக்கதைபொய்.
எடுத்துக்காட்டல் - ஒருவகை யுத்தி.
எடுத்துக்காட்டு - உதாரணம்.
எடுத்துக்காட்டுதல் உதாரணங்களினுல் தெரிவித்தல்.
எடுத்துக்காட்டுவமையணி - ஓரலங்காரம், அது விம்பப் பிரதிவிம்ப பாவத்தைக் காட்டுவது.
எடுத்துக்காரர் - பொதிமாட்டுக்காரர்.
எடுத்துக்கூட்டுதல் - பிசகினதை ஒரு படி சரிப்படுத்தல்.
எடுத்துக்கைநீட்டுதல் - கைத்தொண்டு செய்தல்.
எடுத்துக்கொள்ளல் - ஏற்றுக் கொள்ளல், தனக்காகக்கொள்ளல்.
எடுத்துக்கோள்வரி - தான் கையறவெய்தி வீழ்ந்தாளாகவீழ்ந்து பிறரெடுத்துக்கொள்ளும்படி நடித்தல்.
எடுத்துச்சொல்லல் - தன்கருத்தை யெடுத்துக்கூறல், பிறர்கருத்தை யெடுத்துக்கூறல்.
எடுத்துதல் - எடுக்கப்பண்ணுதல், ஏற்றுதல்.

எடுத்துத்தொடுத்தல் - கட்டிப்பேசல், வழக்குப்பிணைத்தல்.
எடுத்துப்பிடித்தல் - குறை குணங்களை நிறுத்திப் பிடித்துப்பேசல், திடப்படுத்தல், தூக்கிக்காட்டல்.
எடுத்துப்பேசல் - துதித்தல், நியாயமுத்தலரிதல், பரிந்துபேசல், விட்டதைத் திரும்ப வெடுத்துப்பேசல்.
எடுத்துப்போடல் - தள்ளிப்போடல்.
எடுத்தேற்றம் } இணக்கமின்றி யிருப்பது.
எடுத்தேற்றி }
எடுபடல் } அறிந்துபோதல், எழும்புதல், திக்கற்றுப்போதல்,
எடுபடுதல் } நியமந்தப்புதல், நீக்கப்படுதல், வெளிவருதல்.
எடுபட்டவள் - குடும்பத்தைவிட்டு வெளிப்பட்டவள்.
எடுபட்டவன் - நிலையற்றவன்.
எடுபாடு - அழிகை, உயர்ச்சி, நிமிர்ச்சி, நிலையின்மை, மகிமை, மேட்டிமை, விசாலமான நடை.
எடுபிடி - மதிப்பு, முயற்சி.
எடுப்பல் - எடுத்தல், எழுப்பல், தூங்கிஞரை யெழுப்பல்.
எடுப்பானவன் - மேட்டிமைக்காரன்.
எடுப்பித்தல் - எடுக்கச்செய்தல், சுவர் முதலிய வேற்றுவித்தல்.
எடுப்பு - இறுமாப்பு, உயரம், எடுத்தல், எடுப்பென்னேவல், கோப்பு, தூக்குகை, தொடங்குகை, நிந்தை, பெரிய வண்ணம், மேட்டிமை.
எடுப்புச்சாய்வு உயர்வு, தாழ்வு, தராதரமறிந்து நடக்கும் நடை, நிமிர்ச்சியுங் குறைவும், மேன்மை.
எடை - எடுத்தல், எழுப்பல், ஏற்றுக்கொள்கை, தூக்குகை, நிறையிடை.
எட்கடை } எட்பிரமாணம்.
எட்கிடை }
எட்சத்து - எண்ணெய்.
எட்சாதம் - எள்ளுச்சாதம்.
எட்சி } இலக்சகுலப்பெண் குபேரன்மனைவி, துர்க்கைக்கு
எட்சினி } ஏவல்செய்யும் பெண்.
எட்ட - தூரமாக.
எட்டக்கட்டுதல் - தூரமாய்ப்போதல்.
எட்டம் - தூரம்.
எட்டம்பற்றுதல் - கிடைத்தல்.
எட்டர் - மங்கலப்பாடகர்.
எட்டல் - எட்டுதல்.
எட்டாக்கை - தூரம்.
எட்டி-ஒருசாதி, காஞ்சிரமரம், செட்டி.
எட்டிகம் - சிலந்தி, சீந்தில்.
எட்டிகுடி - திருப்புகழ்பெற்ற ஒரு சுப்பிரமணிய ஸ்தலம்.
எட்டிமரம் - காஞ்சிரைமரம்.
எட்டியர்-செட்டிகள், வைசியர்பொது.
எட்டிவிரியன் - ஒருபாம்பு.
எட்டினர் - சிநேகிதர்.
எட்டு - (அ) ஓரெண், அட்டம், ஆசை, எட்டென்னேவல், சாச்சடங்கில், ஒன்று.
எட்டுதல்-அகப்படுதல், தாவுதல். [ன்று.
எட்டேகால்லக்ஷணம் - அவலக்ஷணம்.
எட்பாகு - எள்துவையல்.
எட்பிரமாணம் - எள்ளளவு.
எண் - இலக்கம், அம்போதரங்கம், அறிவு, ஆலோசனை, இலேசு, எண்ணம், எண்ணெய், கணிதம், கவலை, தருக்கம், தாழிசை, நினைவு, மனம், எண்ணிக்கை, எண்ணென்னேவல், எளிமை, எள், கணக்கு, சோதிடநூல், மதிப்பு, வரையறை, வலிவிசாரம்.
எண்கணன் - பிரமன்.
எண்காற்புள் - சரபம்.
எண்கு - கரடி.
எண்குணன்-அருகன், கடவுள், சிவன்.
எண்கூட்டிப்பெருக்கல் - உழலல்.
எண்சாத்திரம் - கணிதம்.
எண்சிறப்புள்ளோன் - அருகன்.
எண்சுவடி - கணக்கேடு.
எண்செய்யுள்- எண்ணாற் பெயர்பெறும் பிரபந்தம்.
எண்டிக்கு எண்டிசை. [ம் பிரபந்தம்.
எண்டிசை - எட்டுத்திக்கு.
எண்டிசைப்பாலர்-அஷ்டதிக்குப் பாலகர்கள், அவர் இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பவர்.
எண்டிசையானை - அட்டகயங்கள், அவை ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன.
எண்டிசையோனி - அட்டதிக்கு யோனிகள், அவைகொடி, புகை சிங்கம், நாம், இடபம், கழுதை, காகம், மான் என்பன.

எண்டோளன் - சிவன்.
எண்டோளி - காளி, துர்க்கை.
எண்ணக்குறிப்பு - நினைவு.
எண்ணத்தப்பு - நினைவுமயக்கம், மதிகேடு, மதியாமை.
எண்ணப்படுதல் - கணிக்கப்படுதல், நினைவின்றேற்றல், மதிக்கப்படுதல்.
எண்ணம் - ஆலோசனை, இறுமாப்பு கருத்து, கனம், கிலேசம், குறிப்பு, நம்பிக்கை, நினைவு, நோக்கம், மதிப்பு, விசாரம்.
எண்ணர் - கணிதர், மந்திரிகள்.
எண்ணலர் - பகைவர், பிறரை மதியாதோர்.
எண்ணளவு - இலக்கத்தாலெண்ணு மளவு.
எண்ணலளவையாகுபெயர் - எண்ணுக்குரிய பெயரை அதற்குரிய பொருட்குவழங்குவது (உ-ம்) ஒன்றுவந்தது.
எண்ணலும்மைத்தொகை - எண்ணலும்மை தொக்குநிற்பது (உ-ம்) அறம், பொருள், இன்பம், வீடு.
எண்ணல் - ஆலோசித்தல், இறுமாத்தல், உத்தேசித்தல், எண்ணுதல், கணிதம், கவலைப்படல், குறித்தல், தேர்ச்சி, நினைத்தல், மதித்தல், யோசித்தல்.
எண்ணுதகண்டன், எண்ணுதநெஞ்சன் - துணிவுள்ளவன்.
எண்ணுதவன் - துணிந்தவன்.
எண்ணுமை - மதியாமை.
எண்ணுயிரவர் - ஸ்மார்த்தப்பிராமணரில் ஒரு வகுப்பினர், சமணரில்ஒரு கூட்டத்தார்.
எண்ணுர் - பகைவர்.
எண்ணிக்கை - எச்சரிக்கை, எண், கணிப்பு, சங்கை, மதிப்பு.
எண்ணிடல் - கணக்கிடல்
எண்ணில்கண்ணுடையோன் - புத்தன், கடவுள்.
எண்ணில்காலம் - அளவில்லாதகாலம்.
எண்ணுதல் - எண்ணல்.
எண்ணும்மை - எண்ணுக்கு நிற்கு மும்மென்னு மிடைச்சொல் (உ-ம்) நீயு மவனும்.
எண்ணும்மைத்தொகை - எண்ணலும்மைத்தொகை (உ-ம்) அற்பகல். [வது.
எண்ணுவண்ணம் - எண்பயின்று வருவது.
எண்ணுவமம் - ஒருவமானம் (உ-ம்) ஒருவனுக் கன்னமிடுவது ஆயிரங்கோதான மீந்தற்கொப்பு.
எண்ணுறுத்தல் - உறுதிப்படுத்தல்.
எண்ணெயூற்றல் - எண்ணெய்வடித்தல்.
எண்ணெய் - தைலம்.
எண்ணெய்க்காப்பு - எண்ணெயபிஷேகம்.
எண்ணெய்க்காரன் - எண்ணெய்வாணியன்.
எண்ணெய்ச்சாணை - ஒருவிதமான சாணைக்கல்.
எண்ணெய்தொட்டுப் பொட்டுவைத்தல் - தலையில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுவதற்குமுன் சிரஞ்சீவியா எழுவரைநினைத்து எழுதுளி வைத்தல், அதனால் ஆயுள் விருத்தியாகுமென்றெண்ணம்.
எண்ணெய்ப்புல்லிடுதல் - நெசவு பாவுக்கெண்ணெயிடுதல்.
எண்ணெய்மணி - வெள்மட்டமணி.
எண்ணெய்வாணியன் - எண்ணெய்விற்போன்.
எண்ணேகாரம் - எண்ணைக்காட்டு மேகாரம் (உ-ம்) நிலனே நீரே தீயே.
எண்ணோகாரம் - எண்ணைக்காட்டுமோகாரம் (உ-ம்) முத்தனென்கோ முதன்மூர்த்தி யென்கோ.
எண்படுதல் - அகப்படுதல்.
எண்பது - எட்டுமுறை பத்து.
எண்பித்தல் - அத்தாட்சிபண்ணல்.
எண்மடங்கு - எட்டுத்தடவை.
எண்மர் - எட்டுப்பேர் கணிதர்.
எண்மை - இலேசு, எளிமை, கணிசம் பரிதாபநிலை.
எண்மையவன் - இலேசானவன், எளியவன்.
எண்வகுப்பு - ஒன்றுமுதல் முப்பத்தாறு தானம்வரை வருவது.
எண்வகைக்கணவகை - அறம் பொருள் இன்பம் வீடென்றுசொல்லப்பட்ட இவற்றினது பாகுபாடமைய ஒரு நூலைச் சொல்லுங்காலத்து நீர் நிலம் தேயு வாயு அந்தரம்இயமானன் சூரியன் சந்திரனென்று சொல்லப்பட்ட எண்வகைக்கணங்களு முதற்செய்யுளின் முதலி லமையக் கூறுவது.

எண்வகைத்துணைவர் - அரசருக்குரிய எட்டுத்துணைவர். அவர் மந்திரியர், கருமாதிகாரர், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், இவுளிமறவர், யானைவீரர்.
எண்வகைமாலை - வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, என்பன.
எதாஸ்து - அப்படியாகட்டும்.
எதாப்பிரகாரம் - அந்தப்பிரகாரம், இருந்தபடியே.
எதார்த்தம் - உண்மை, யதார்த்தம்.
எதிர் - உவமைச்சொல்.
எதிரதுதழீஇயவெச்சவும்மை - எஞ்சியசெயலைவிளக்கி யெதிர்காலத்தைத் தழுவிநிற்கு மும்மை (உ-ம்) இனிக் கொற்றவனும் வருவான்.
எதிரதுநோக்கிய வெச்சவும்மை - எதிர்மறைச் சொல்லைக்காட்டி நிற்கு மும்மை.
எதிரதுபோற்றல் - ஒருவகையுத்தி.
எதிரல் - எதிர்த்தல், எதிர்ப்படல், தோன்றல்.
எதிராக - முன்.
எதிராத்தம் - சுற்ற, நிதார்த்தம். [ப்பு.
எதிராப்பு - கழலாதபடி வைக்கிற ஆ
எதிராளி - எதிர்வழக்காளி, சமமாயிருப்பவன் பகைஞன், எதிரி.
எதிரி - எதிர்நிற்கிறவன், பகைவன், பிரதிவாதி.
எதிரிடல் - எதிர்த்தல், எதிர்ப்படல்.
எதிரிடை - எதிர்த்தனம், எதிர்க்கை, சமமாயிருப்பது,பகை.
எதிரிடைகட்டல் - எதிர்த்தல், விரோதித்தல். [வோன்.
எதிரிடைகாரன் - விரோதஞ் செய்
எதிரிடைமுறி - எதிரிடைச்சீட்டு.
எதிருக்கெடுத்தல் - ஏப்பமெடுத்தல், வாந்தித்தல்.
எதிருத்தரம் - மறுமொழி.
எதிருரை - எதிரிடைப் பேசு, மறுமொழி.
எதிருன்றல் - உறுதியாய்நிற்றல், எதிர்தல், எதிர்த்தல்.
எதிரெடுத்தல் - உண்டது மேலுக்கு வருதல்,எவறையெடுத்தல்,தேக்கெடுத்தல், வாந்தித்தல்.

எதிரேற்றல் - எதிரேவல், எதிர்த்தல், தடுத்தல், பிறன்மேல் வருவதைத் தானேற்றல்.
எதிரேற்று - எதிரேவல், தனக்கெதிரே வந்ததைத் திருப்பிவிடுதல்.
எதிரொலி - அதிர்ந்துகேட்கிறசத்தம், பிரதித்தொனி. [ணல்.
எதிரொலித்தல் - பிரதிதொனி கா
எதிர் - எதிரிடை, எதிரொன்னேவல், ஒப்பு, முரண், முன், வருங்காலம்.
எதிர்கட்சி - முன்பக்கம்.
எதிர்காலம் - வருகாலம்.
எதிர்காலவினைத்தொகை - வரும்காலவினைத்தொக்கு நிற்பது (உ-ம்.) இனிக்கொல்களிறு.
எதிர்காலவினையெச்சம் - இன், ஆல், கால், கு, இய, இயர், வான், பான், பாக்கு என்னும் விகுதிகளைக்கொண்டு இடைநிலைபெற்றும்பெறாதுந் தாமே எதிர்காலங்காட்டிநிற்கும் வினை
எதிர்காற்று - நேர்காற்று. [யெச்சம்.
எதிர்கொள்பாடி-சோழநாட்டிற் காவிரிக்கு வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
எதிர்கொள்ளுதல் - நவபுண்ணியத்தொன்று. அஃதுவந்தவர்க்குமுன்சென்றெவ்வளாதல்.
எதிர்கோள் - எதிர்கொள்ளல்.
எதிர்க்கை - எதிர்மரம், விரோதிக்கை.
எதிர்ச்சீட்டு - எதிர்முறி.
எதிர்ச்செட்டு - இரண்டாம்செட்டு, எதிரிடைச்செட்டு, ஒருவன்விற்பதற்கு மாறுகவிற்கை.
எதிர்தல் - சந்தித்தல், தோன்றல், மலைதல், மாறுபடுதல்.
எதிர்த்தல்-அலைத்தல், எதிர்பார்த்தல், சந்தித்தல், தடுத்தல், நோதல், மாறுபடுதல், முற்படுதல். [வன்.
எதிர்த்தவன் - ஒருபாஷாணம், பகை
எதிர்நிரனிறை, எதிர்நிரைநிறை } நேரின்றி மாறிவரும் நிரனிறை.
எதிர்நிலை - எதிர்நிற்றல், கண்ணாடி.
எதிர்நிலையகத்திணை - அகப்பொருளுறுப்பினொன்று. அதுஒன்றனை விளக்க அதனை மறித்து எதிர்நிற்கும் பொருளைக்காட்டல்(உ-ம்.)முட்டருடாடிய நட்புக்கடை யூடாடியகால்.

எதிர்நிலையணி - உபமானத்திற் குறைவு தோன்றச் சொல்லல் (உ-ம்) அணங்கு முகம்போன் மதியுஞ் செயுமே மகிழ், அன்றியும் அன்னியத்தையுபமேயமாகக் காட்டி அன்னியத்தையிகழ்தலுமாம் (உ-ம்) முகமே மதி முனையொக்கும்.

எதிர்நிற்றல் - போர்செய்யல், மாறுபட்டு நிற்றல், முன்னிற்றல்.

எதிர்நோக்கு நட்சத்திரம் - எதிர்நாள், பக்கநாள்.

எதிர்ந்தோர் - பகைவர்.

எதிர்படுதல்-எதிர்தல், சந்தித்தல், சம்பவித்தல், தோன்றல், நேரிடுதல்.

எதிர்படுத்தல் - எதிராக்கல், பகையாக்கல்.

எதிர்பாடு - நேரிடுதல்.

எதிர்ப்பாச்சல்-நேரிட்டபாச்சலுக் கெதிர்த்துப்பாய்தல்.

எதிர்ப்பார்த்தல் - காத்திருத்தல், வரவு பார்த்தல்.

எதிர்ப்பு-அலைப்பு, இலக்கு, எதிர்த்தல், எதிர்மொழி, சண்டிவாதம், தடுப்பு, வருங்காலம்.

எதிர்ப்பை - கைம்மாறு.

எதிர்மறுப்பு, எதிர்மறை } உடன்பாட்டிற்கு மாறுய்ச் சொல்லுதல்.

எதிர்மறையணி - ஒரு அலங்காரம். அஃது ஒழிப்பணிக்கு வேறுகியுங் கேட்போரை மகிழ்விப்பதாயும் இருக்கின்ற மறுப்பைச் சொல்லுதல்.

எதிர்மறையும்மை - எதிர்மறுத்துச்சொல்லுமும்மை (உ-ம்) சாத்தன்வருதற்கு முனியன்.

எதிர்மறையெச்சம் - எதிர்மறுப்பைக் காட்டுமெச்சம் (உ-ம்) அவனே கொண்டான். [சவலங்காரம்.

எதிர்மறையெஞ்சணி - எதிர்மறையெச்

எதிர்மறை யேகாரம் - எதிர்மறுக்குமேகாரம் (உ-ம்) தூற்றுதே தூரவிடல்.

எதிர்மறை யோகாரம் - எதிர்மறுக்குமோகாரம் (உ-ம்) நானே கொண்டேன்.

எதிர்மறைவிகுதி - வினையை எதிர்மறுக்கும் இல்-அல்-ஆ என்னு மூன்றுமாம் (உ-ம்) உண்டிலன், உண்ணலன், உண்ணுன்.

எதிர்மறைவிடைவினுவெதிர் - மறுத்துத்தரங்கூறல் (உ-ம்) செய்யேனெனல்.

எதிர்மறைவினை - எதிர்மறுப்புள்ள வினை. அஃது இல், அல், ஆ எனும் விகுதிகள் புணர்ந்தவினைச் சொல்.

எதிர்மீன்-நீர்ப்பாய்ச்சலுக் கெதிர்வருமீன்.

எதிர்முகம் - சந்நிதி, நேர்முகம், முன்.

எதிர்முறி - கள்ளச்சீட்டு.

எதிர்மொழி - எதிர்வார்த்தை, மறுமொழி.

எதிர்வரல் - விரோதமாகவரல்.

எதிர்வழக்கு - எதிர்வியாச்சியம்.

எதிர்வாதம் - பிரதிவாதம்.

எதிர்வாதி - பிரதிவாதி.

எதிர்வினை-எதிர்மறைவினை, வருவினை.

எதிர்வின்விலக்கு - ஓரலங்காரம். அஃது வருகால விடையூற்றைக்காட்டி மறுப்பது.

எதிர்வு எதிர்காலம், எதிர்த்தல், எதிர்ப்படுகை, சம்பவிக்கை, வருவது.

எதிர்வைத்தல் - சரிவைத்தல்.

எது - யாது.

எதுகை-செய்யுட்டொடை; அஃது இரண்டாமெழுத் தொன்றிவருவது.

எதுகைத்தொடை - செய்யுட்டொடையினோர்வகை. அஃது அடிகளின் முதற்சீரினிரண்டா மெழுத்தொன்றிவரினடியெதுகை அடிகளின் முதலிரு சீர்களிரண்டா மெழுத்தொன்றிவரி னிணையெதுகை.

எதேச்சை - சுவேச்சை, திருத்தி.

எதேஷ்டம், எதேட்டம் } யதேஷ்டம்.

எத்தல் - நறுக்குதல்.

எத்தனம்-ஆயத்தம், கருவி, பிரயத்தனம்.

எத்தனித்தல் - ஆயத்தமாக்கல், நோக்கமாயிருத்தல்.

எத்தனை - எவ்வளவு.

எத்தன் - அணுப்புக்காரன்.

எத்தினம் - எத்தனம்.

எத்து - அணுப்பு, எற்று, எத்தென்னேவல், வஞ்சகம்.

எத்துணை - எவ்வளவு.

எத்துதல் - அணுப்புதல், இதஞ்சொல்லல், வஞ்சித்தல்.

எத்துவாதம் - அகடவிகடம்.

எத்தேசகாலமும் - எப்போழ்தும்.
எந்திரகாரன் - சூத்திரக்காரன்.
எந்திரம் - ஆலை, இயந்திரம், சூத்திரம், திரிகை, தேர், பண்டி, மதிலுறுப்பு.
எந்திரவாவி - இலவந்திகை, சூத்திரவாவி.
எந்திரன் - சூத்திரி, தேர்.
எந்தை - எமதுசுவாமி, என்றந்தை.
எப்படி - எவ்விதம்.
எப்பிறப்பு - எம்மை.
எப்பொருட்குமிறைவன் - எல்லாவற்றிற்கு மதிபன், கடவுள்.
எப்பொழுதும் - எக்காலமும்.
எப்போ, எப்போது } எப்பொழுது.
எப்போதும், எப்போழ்தும் } எப்பொழுதும்.
எமகணம் - நமன்றூதர், யமகணம்.
எமகிங்கிரர் - நமன்றூதர்.
எமது - எம்முடையது.
எமதூதன், எமதூதி } நாகப்பாம்பின் நச்சுப்பல்லினொன்று.
எமநாகம் - அசமதாகம், ஊமத்தை.
எமநாமம் - ஊமத்தை.
எமர் - எமதுசுற்றத்தார், எம்முடையவர்.
எமள் - எம்முடையவள்.
எமன்-இயமன், நம்முடையவன், நாகப்பாம்பினது நச்சுப்பல்லினொன்று.
எமாஸ்திரம் - நமனாயுதங்கள்; அவை கணிச்சி, தண்டு, பாசம்.
எமார் - எமர்.
எம் - எம்முடைய, தன்மைப்படர்க்கையுளப்பாட்டுப் பன்மை விகுதி (உ-ம்) உண்டனெம்.
எம்பர் - எவ்விடம்.
எம்பி - என்றம்பி.
எம்பிராட்டி - எங்கள் தலைவி.
எம்பிரான் - எங்கள் தலைவன், எங்கள் தேவன்.
எம்புகம் - நிலக்கடம்பு.
எம்பெருமாட்டி - எங்கள் தலைவி.
எம்பெருமான் - எம்பிரான்.
எம்மட்டு - எவ்வளவு.
எமர் - எம்முடையோர்.
எம்மனோர் - எம்மோடொத்தவர்.
எம்மாத்திரம் - எவ்வளவு.
எம்மான் - எமது தெய்வம், எம்பிரான்.
எம்மை - எங்களை, எப்பிறப்பும்.
எம்மையும் - எங்களையும், எப்பிறப்பும்.
எம்மோர் - எம்முடையவர்.
எயிலூர் - பாண்டிநாட்டகத்தோரூர்.
எயில் - ஊர்ப்பொது, நரகம், மதில்.
எயிறலைப்பு - பற்கடிப்பு.
எயிறிலி - சூரியன்.
எயிறு - பல், பன்றிக்கொம்பு, யானைக்கொம்பு, வக்கிரதந்தம்.
எயிறுதின்றல் - பற்கடித்தல்.
எயிற்றியர் - பாலைநிலப்பெண்கள், வேடுவப்பெண்கள்.
எயினர் - பாலைநிலமாக்கள், வேடர்.
எயின் - வேடசாதி, வேடருக்குரியன்.
எய் - எய்யென்னேவல், முட்பன்றி.
எய்தல்-அடைதல், நால்வகை யூறுபாட்டினொன்று. அஃது எய்யல்.
எய்துதல்-அடைதல், சம்பவித்தல், சேருதல், பெறுதல்.
எய்த்தல்-அறிதல், இளைத்தல், தரித்திரமடைதல், மெலிதல்.
எய்ப்பன்றி - முட்பன்றி.
எய்ப்பாடி - வேடரூர்.
எய்ப்பில்வைப்பு-தான் தளர்ந்தும் பிறரைத் தாங்கல்.
எய்ப்பு - இளைப்பு, பலவீனம்.
எய்யாமை - அறியாமை.
எரல் - சமுத்திரசுண்டி.
எரி - எரியென்னேவல், கந்தம், கேட்டை நாள், தீ, நரகம், நெல்லிக்காய்க்கந்தகம், பிரபை, புனர்பூசம்.
எரிகரும்பு - விறகு.
எரிகாசு - அகிற்கூட்டைந்தினொன்று. அஃது காசுக்கட்டி.
எரிகுஞ்சி - செம்மயிர்.
எரிகுடலன் - மிகு பசியுள்ளவன்.
எரிகுன்மம் - ஒருநோய்.
எரிகொள்ளி - கொள்ளிக்கட்டை.
எரிகலக்காம்போதி - ஓரிராகம்.
எரிசனம் - நரகத்திருப்போர்.
எரிசினம் - கடுங்கோபம்.
எரிசுடர் - அக்கினி, செவ்வொளி, விளக்கு.
எரிச்சல்-அழற்றல், உறைப்பு, எரிதல், கோபம், பொருமை.
எரிச்சல்விஷபாகம்-ஒருவகை விஷபாகநோய்; அதுவாயினுலிரத்தம்வீழ்தல்.

எரிச்சல், கோழை, சுவாசம், மார்பிலடைப்பு, விரணம், விரணத்தில் மாமிசவளர்ச்சி, குற்றல், கட்டிபோல் நெஞ்சிற்புரளல், பேதி, வீக்கமென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
எரிதயிலம் - எரித்தெடுக்குந் தயிலம்.
எரிதல் - அழற்றல், அனற்றல், தீச்சுவாலித்தல், பிரகாசித்தல், வெந்தற்றுப் போதல்.
எரித்தல் - எரியச்செய்தல்.
எரித்திங்கள் - ஆனிமாதம்.
எரிநரகம் - ஒருநரகம்.
எரிநாள் - கார்த்திகைநாள்.
எரிபடுவன் - ஒருநோய், பிளவை.
எரிபந்தம் - எரிவந்தம், தீவர்த்தி.
எரிபிடாரி - எரிச்சற்காரன், ஒரு தேவதை.
எரிபித்தம் - ஒருவகைப் பித்தநோய். அது அடித்தொடை, பாதம், கண், உள்ளங்கால், உள்ளங்கையாகிய இவ்விடங்களி லெரிச்சல், காது முதுவாகிய இவ்விடங்களில் வறவறப்பு, முழங்கை முழங்காலாகிய இவ்விடங்களில் விருவிருப்பு, சீதள ஸ்தானத்திலுங் குளிர்ந்தகாற்றிலும் விருப்பமாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.
எரிபுழு, எரிபூச்சி } கரியமயிர்க்குட்டி.
எரிபொழுது - இலங்குபொழுது, செவ்வானப்பொழுது.
எரிப்பு - எரித்தல், பொறாமை.
எரிப்புரம் - நரகம்.
எரிமணி - பிரகாசமுள்ள மணி.
எரிமருந்து - சுடுமருந்து.
எரிமுகம் - கோலத்தோற்றமுள்ள முகம்.
எரிமுகி - சேங்கொட்டைமரம்.
எரிமுட்டைப்பீநாறி - வெதுப்படக்கி.
எரியல் - எரிதல், எரிந்தது, பிரகாசித்தல்.
எரியவிட்டமருந்து - நீற்றினபஸ்பம்.
எரியவிழித்தல் - கோபத்தோடு பார்த்தல்.
எரியிடுதல் - எரியவைத்தல்.
எரிவட்டம் - நரகவட்டத்து ளொன்று.
எரிவண்டு - கண்ணிலடிக்கும் வண்டு, பட்டவிட மெரிகிறவண்டு.
எரிவந்தம் - எரிச்சல், மிகவெறிக்கும் ஒருநோய்.
எரிவரியன் - ஒருபாம்பு.
எரிவனம் - சுடுகாடு.
எரிவிழித்தல் - கோபித்துப்பார்த்தல்.
எரிவு - அழற்சி, எரிதல், கோபம், பொறாமை.
எரு - சாணி, வயலுக்கிடுமெரு.
எருக்கட்டல் - கிடைவைத்தல்.
எருக்கட்டு - கிடைவைக்கை, கிடைவைத்தகொல்லை.
எருக்கட்டுதல் - கிடைவைக்குதல்.
எருக்கம், எருக்கலை } எருக்கு.
எருக்கல் - கொல்லல், சுமத்தல், வெட்டல்.
எருக்களம் - ஆனிலை, எருவிருக்குமிடம்.
எருக்கு எருக்கலை, எருக்கென்னேவல்.
எருக்குதல் - எருக்கல்.
எருச்சாட்டி - எருப்பட்டநிலம்.
எருதடித்தல் - உழுதல், போரடித்தல்.
எருது - இடபம், இடபவிராசி.
எருதுமறித்தல் - பசுவுடனே எருது புணர்தல்.
எருதுரப்பல் - எருதைப்போற் சத்தித்தல், எருதை யதட்டியோட்டல்.
எருத்தங்கோட்டல் - தலைகவிழ்தல்.
எருத்தடி - ஈற்றயலடி.
எருத்தம் - தரவு, பிடர்.
எருத்து - ஈற்றயல், பிடர்.
எருத்துக்கரணம் - எருகாணம்.
எருத்துக்காளை - இளவெருது.
எருத்துத்திமில் - விடைமுரிப்பு.
எருத்துப்பூட்டு - ஏர்ப்பூட்டு.
எருத்துமாடு - எருது.
எருத்துவாலன் - ஒருகுருவி.
எருந்தி - இப்பி, எராமுட்டி.
எருந்து - உரல், கிளிஞ்சில்.
எருமணம் - சாணிநாற்றம், செங்குவளை.
எருமுட்டை - எருவராட்டி.
எருமுட்டைப்பீநாறி - வெதுப்படக்கி.
எருமை - காரா.
எருமைக்கடா - பகடு.
எருமைக்கற்றாழை - ஒரு கற்றாழை.
எருமைக்காஞ்சொறி - ஒரு காஞ்சொறி.
எருமைக்கொற்றாள் - ஒருகொடி.
எருமைச்சுறா - ஒருமீன்.
எருமைத்தக்காளி - ஒருசெடி.
எருமைநாகு - எருமைப் பெண்கன்று.
எருமைநாக்கள்ளி - ஒருகள்ளி.

எருமைநாக்கி - ஒருமீன், சாணைக்கி.
எருமைநாக்கு - ஒருமீன்.
எருமைநாத்தொட்டி - வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினொன்று.
எருமைப்பாச்சோற்றி - ஒருபூண்டு.
எருமைப்பால்குடித்தவன் - மந்தன்.
எருமைமுல்லை - ஒருமுல்லை.
எருமைமுல்லைத்தீவு - யாழ்ப்பாணத்தில் பூர்வீகப்பேர்.
எருமைமுன்னை - ஒருவகை முன்னைமரம்.
எருமையூர்தி - யமன்.
எருவடைத்தல் - எருப்பெய்தல்.
எருவராட்டி - காய்ந்த எரு.
எருவாரம் - எருச்செய்கைப்பங்கு.
எருவிடுவாசல் - குதம்.
எருவை - உதிரம், ஒருபூடு, கழுகு, கழுதை, கொறுக்கை, கோரை, கோரைக்கிழங்கு, செம்பு, நாணல், யானை.
எலி - கள்ளிமரம், பூரநாள், முடிகம்.
எலிசுக்கிலவிஷநிதானம் - ஒருவகை நோய். அது எலிகள் புணருங்காலத்தில் அச்சுக்கிலம் யார்மீதாவது சிதறில் அவ்விடத்தில் கிரந்தி, வீக்கம், மச்சங்களெழும்பல், பிரமை, அரோசகம், குளிர்காய்ச்சல், கீல்நோவு, நடுக்கம், உரோமச்சிலிர்ப்பு, மூர்ச்சை, சிலேஷ்மாதிக்கம், வாந்தி, தாக முதலிய குணங்களை யுண்டாக்குவது.
எலிச்செவி, எலிச்செவித்துத்தி } சவரியார் கூந்தல்.
எலித்திசை - வடமேற்றிசை.
எலித்துருமம் - தான்றி.
எலிப்பகை - பூனை.
எலிப்பனை - எலிப்புற்று.
எலிப்பாகம், எலிப்பாஷாணம், எலிப்பாலை } காட்டாமணக்கு.
எலிப்பிடுக்கன் - ஒருபூடு.
எலிப்புலி - பூனை.
எலிப்புற்று - எலிவளை.
எலிப்பேதம்-எலிகளினது பேதம்; அது பதினெண்வகைப்படும். அவை இலாலசம், சபளம், புண்டாம், அரிதம், சிகுரம், அசிதம், கஷாயதந்தம், குணகம், கோகிலம், கபிலம், கிருஷ்ணம், அருணம், சபலம், சுவேதம், கபோதம், உந்துரு, பலினி, இரசாலம் என்பன.
எலிப்பொறி எலிப்பிடிக்குஞ்சூத்திரம்.
எலிமயிர் - புடவைநெய்தற் கருவியாயுள்ளது.
எலியாமணக்கு - ஒருமரம்.
எலியொட்டி - ஒட்டொட்டி.
எலியோடி - உருட்டுமரம், முகட்டுப்பாய்ச்சு.
எலியோட்டி - குருக்குப்பூடு.
எலிவளை - எலிப்புற்று.
எலு - கரடி, தோழமை.
எலுநன் - சோழன்.
எலுமிச்சை - எலும்பிச்சை.
எலும்பன் - எலும்பு புறப்பட்டவன்.
எலும்பி - ஒருமரம்.
எலும்பிலி - ஒருமரம், புழு.
எலும்பு - என்பு.
எலும்புக்கூடு - எலும்புக்கோவை, கங்காளம்.
எலும்புக்கோறை - எலும்புத்துவாரம்.
எலும்புச்சீப்பு - தந்தச்சீப்பு, விலாவெலும்பு.
எலும்புருக்கி - ஒருநோய், ஒருபூடு, ஒருமரம்.
எலும்பூறல் - ஒடிந்தவெலும்பு கூடல்.
எலுவன் - தோழன்.
எல் - இகழ்ச்சிக்குறிப்பு, இரவு, ஒளி, சூரியன், நாள், பகல், வெயில்.
எல்லப்பநாவலர் - ஒரு தமிழ்ப்புலவர்.
எல்லம் - இஞ்சி.
எல்லரி - சைமணி.
எல்லவர் - எல்லாரும்.
எல்லவன் - சந்திரன், சூரியன்.
எல்லன் - ஒருபுகழாளன், இவன் குன்றத்தூரிலிருந்த ஆற்றூர்ப் பரமேசுரன் மகன். இவன் தமிழ் வல்லோர்க்குப் பெருநிதி வழங்கியும், தன்மீது பட்சமுடையவனாயிருந்த பாண னிறந்தபோது அவனுடலைச் சுமக்கப் புகுந்தும் பெரும்புகழ்படைத்துத் தொண்டைநாட்டில் விளங்கினவன்.
எல்லாம் - முழுவதும்.
எல்லாரும் - சகலரும்.
எல்லி - இராத்திரி, சூரியன்.
எல்லிநாதன், எல்லிநாயகன் } சந்திரன்.
எல்லிப்பகை - சூரியன்.
எல்லிமனை - தாமரை.

எல்லிமன் - எல்லிநாதன்.
எல்லியறிவான் - கோழிச்சேவல்.
எல்லீரும் } நீவிர்யாவரும்.
எல்லீர் }
எல்லு - சூரியன், நாள்.
எல்லேமும் } நாமெல்லோரும்.
எல்லேம் }
எல்லை - அவதி, அளவு, கூப்பிடுதூரம், சூரியன்,நாள்,பகற்பொழுது,முடிவு.
எல்லைக்கட்டுதல்-தீர்த்தல், முடிவுகட்டுதல்,வரம்புவைத்தல்,வரையறுத்தல்.
எல்லைகுறித்தல் - அவதிகுறித்தல் எல்லைகட்டுதல்.
எல்லைகட்டு - இறைக்கட்டு, எல்லைமானம், கட்டுப்பாடு, வரம்பு.
எல்லைக்கல் } எல்லையறிய நிறுத்துங்கல்.
எல்லைக்கால் }
எல்லைக்காவல் - எல்லைமானக்காவல்.
எல்லைக்குறிப்பு - எல்லையடையாளம்.
எல்லைகெட்டநேரம் - ஒவ்வாதநேரம்.
எல்லைக்கேடு-சமயமொவ்வாமை, ஸ்தானமொவ்வாமை.
எல்லைக்கேரி - ஒவ்வாமை.
எல்லைத்தீ - ஊழித்தீ.
எல்லைப்படுத்தல் - அளவுபடுத்தல், எல்லைக்கட்டுதல், தீர்த்தல்.
எல்லைப்பிடாரி - ஒருதேவதை, சந்திப்பிடாரி.
எல்லைப்பொருள் - ஒரு பொருளினது திசையளவைக் குறிப்பதற்கு எல்லையாய் நிற்கும்பொருள் (உ-ம்) உத்தரார்த்த கோளத்திற்குத் தெற்சமரேகை.
எல்லைமானம் - அளவு, எல்லை.
எல்லையிலான் } கடவுள், கற்பனாதீதன்.
எல்லையிலி }
எல்லையில்லான் }
எல்லையின்மை - அளவின்மை.
எல்லையோடல்-எல்லையைச்சுற்றிவரல்
எல்லோ - அதிசயவிரக்கச்சொல்.
எல்லோமும் } நாமெல்லாரும்.
எல்லோம் }
எல்லோரும் - சகலரும்.
எல்லோன் - சூரியன்.
எல்வை - காலம், நாள்.
எவட்சாரம் - வெடியுப்பு.
எவண் - எவ்விடம்.
எவரும் - எல்லாரும்.
எவற்று - எது.
எவன்-என்னை,யாது,யாவன்,யாவை.
எவையும் - யாவையும்.
எவ் - எவை.
எவ்வது - எது, எவ்வண்ணம்.
எவ்வநோய் - தீராதநோய.
எவ்வம் - இகழ்ச்சி, குற்றம், தனிமை, தீராநோய், துக்கம், துன்பம்.
எவ்வரும் - எவரும்.
எவ்வளவு - எத்துணை.
எவ்வனம் - இளமை, மதர்த்தல்.
எவ்வாறு - எவ்வழி.
எவ்விடம் - எந்தவிடம்.
எழல் - எழும்பல், துக்கம்.
எழாலும்-மயிரொழிந்தபறவையினொண்.
எழால்-ஒருபட்சி, மிடற்றோசை, யாழ், யாழ்நரம்பினோசை.
எழிலறிதல் - அசுகைமட்டுக் கட்டுதல், குறிப்பறிதல்.
எழிலி - கடையெழுவள்ளலிலொருவன், மேகம்.
எழில்-அசுகை, அழகு, இளமை, வண்ணம், வலி.
எழிற்கை - அழகுபெறக் காட்டுங்கை.
எழினி - இடைச்சீலை, திரைச்சீலை.
எழினிஅதிகமான்-ஒருவள்ளல், இவன் குதிரை மலையைத் தன்னகத்தேயுடைய ஒரு சிறுநாட்டுக் கதிபனாயிருந்தவன்.
எழு - உருக்கு, உழலைமரம், எழுவென்னேவல், எழு, ஒருமரம், கம்பம், வளைதடி.
எழுகடல்-எழுவகைக்கடல். அதுஉப்பு, தேன், கருப்பஞ்சாறு, தயிர், நெய், பால், சுத்தோதகமென்பன.
எழுகூற்றிருக்கை-ஒருபிரபந்தம்; அது எழரைத்தட்டு விளையாட்டுச் சிறப்புக்கூறுவது.
எழுகை - எழுதல்.
எழுச்சி-இறுமாப்பு, எழும்புதல், எறிச்செல்லல்,கண்ணோயினொன்று,காதிலெழும்பு மோர்புண், மனமுயற்சி.
எழுச்சிக்கொடி - கண்ணினிற் படரும் ஒருநோய்.
எழுச்சிபாடுவோன்-தேவராசர் முதலியோர்க்குப்பள்ளியெழுச்சிபாடுவோன்.

எழுச்சிரமுரசம் - தேவராசரிவர்களை வைகறையிலெழுப்பமுழக்குமுரசம்.
எழுச்சியிலை - கண்ணோய் மருந்திலை, பலவனிலை. [யாதி.
எழுஞாயிறு - உதயாதித்தன், ஒரு வி
எழுதகம் - எழுதப்பட்ட ரூபு, சித்திரக் கம்பி, சித்திரசொரூபம். [தல்.
எழுதல் - எழுதுதல், எழும்புதல், கிளர்
எழுதாக்கிளவி } வேதம்.
எழுதாமறை
எழுதாவெழுத்து - அச்செழுத்து.
எழுதீவு-எழுவகைத்தீவுகள்; அவை நாவல், இறலி, கிரவுஞ்சம், குசை, இலவம், தெங்கு, புட்கரமென்பன.
எழுதுகோல் - எழுதுங்கோல், தூரியக்
எழுதுதல் - எழுதல். [கோல்.
எழுதுபடம் - கிழி.
எழுதுவரிக்கோல் - பத்திக்கற்று.
எழுதுவோன் - இலேசகன்.
எழுத்தடைத்தல் - எழுத்துக்களை யறைவகுத்தடைத்தல்.
எழுத்ததிகாரம் - எழுத்திலக்கணம்.
எழுத்தந்தாதி - ஈற்றெழுத்தாதியாகப் பாடல், ஓரந்தாதி.
எழுத்தலங்காரம் - எழுத்திலோரியல்பு.
எழுத்தறப்படித்தல் - தீர்க்கமாய் வாசிக்கப் பயிலல்.
எழுத்தறிந்தநாதர் - திருவொற்றியூர் தியாகராயப்பெருமான்.
எழுத்தாணி - ஓலையிலெழுதுங்கருவி.
எழுத்தாணிப்பூடு - கூத்தன் குதம்பை எனும் பூடு.
எழுத்தாளர் - அறிஞர், எழுத்துக்காரர்.
எழுத்தானந்தம் - பாடற்குவிலக்கப்பட்டவெழுத்து. [தொன்று.
எழுத்திலக்கணம் - பஞ்ச விலக்கணத்
எழுத்திலாவோசை - எழுத்தொலிகாட்டாதஅசை. அது இரைச்சல் முதலியன.
எழித்திஞேசை - அக்கரம் விளங்கிநிற்குந்தொனி.
எழுத்து - அக்கரம், அட்டவணை, இலக்கணம், இலிகிதம், உடன்படிக்கைச்சீட்டு, சித்திரம், தலையெழுத்து.
எழுத்துக்காரன் - எழுதுகிறவன், புடவை முதலியவற்றிற் சித்திரந்தீட்டுவோன்.
எழுத்துகாரியஸ்தன்-எழுத்துக்காரன்.
எழுத்துக்கிறுக்கு - உடன்படிக்கை யெழுதுகை.
எழுத்துக்குற்றம் - எழுத்திலக்கணவழு, நச்செழுத்து முதலியன வருதல்.
எழுத்துக்கூட்டுதல் - எழுத்துக்களைப் புணர்த்தி வாசித்தல்.
எழுத்துச்சந்தி-எழுத்துக்களின் புணர்ச்சி.
எழுத்துச்சாரியை-ஒரெழுத்தான் வருஞ்சாரியை.
எழுத்துச்சுருக்கம் - ஓரணி; அது எழுத்துக்களை யிடைவிட்டெழுதி வாசிப்பது.
எழுத்துநடை-எழுத்துவாசனை- [பது.
எழுத்துப்புடவை - சித்திரவஸ்திரம்.
எழுத்துப்பொருத்தம்-பாலன் முதலியவெழுத்துத்தானப்பொருத்தம். பிறந்த நட்சத்திரத்திற்குப் பொருந்தப் பெயரிடுகை.
எழுத்துமடக்கு - ஓரணி. அது ஒரேயெழுத்து மடங்கிவரப் பாடுவது.
எழுத்துவர்த்தனம் - சித்திரக் கவியில் ஒன்று. அஃது எழுத்தெழுத்தாய்ப் பிரிக்கப் பொருள்பயப்பது.
எழுத்துவாசனை - எழுத்துநடை.
எழுத்துவேலை-எழுதுந்தொழில், சீலையின்மீதெழுகை.
எழுநரகம்-எழுவகை நரகங்கள். அவை கூடசாலம், கும்பிபாகம், அள்ளல், அதோகதி, ஆர்வம், பூழி, செந்தென்பன.
எழுநா - அக்கினி, கொடுவேலி.
எழுநாமித்திரன் - வாயு.
எழுந்தபடி-நினைத்தபடி, நேரிட்டபடி.
எழுந்தமானம் - யோசனை பண்ணாமை.
எழுந்தருளிவிக்கிரகம் - வெளி கொண்டுவருகிற விக்கிரகம்.
எழுந்தருளுதல் - தோன்றல், பெரியோரெழுதல்.
எழுந்தருளுநாயகர் - உச்சவ விக்கிரகம்.
எழுந்திருத்தல் - எழுந்தருளுதல்.
எழுந்தேற்றம் - உற்சவம், எழுந்தமானம், எழுந்தருளல், துணிவு, பெருமை.
எழுபவம் - உயர்பிறப்பு, எழுபிறப்பு.
எழுபிறப்பு-எழுவகைப்பிறப்பு, அவை தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன.

எழுப்பம் - உயர்ச்சி, எழுச்சி, நடமாட்டம், வளர்ச்சி.
எழுப்பல் - எழுப்புதல்.
எழுப்பில் - எற்றல்.
எழுப்பிவிடுதல் - எழும்பப் பண்ணுதல், முயற்சியுண்டாக்குதல்.
எழுப்பு - எழுப்புதல், எழுப்பென்னேவல்.
எழுப்புதல் - எழுப்பிவிடுதல், கிளப்பிவிடல், சண்டைமூட்டல்.
எழுமதம் - எழுவகைமதங்கள். அவை பிறர்மதத்திற்குத் தானுடன்படுதல், பிறர்மதத்தைத்தான்மறுத்தல், பிறர் மதத்திற்குடன்பட்டுப் பின்பு மறுத்தல், தானே யொருபொருளை யெடுத்துநாட்டி அதனை வருமிடந்தோறு நிறுத்துதல், இருவரால் விரோதமாகக் கொள்ளப்பட்ட இரண்டனு ளொன்றனிடத்துத் துணிதல், பிறர் நூலிலுள்ள, குற்றத்தை யெடுத்துக் காட்டுதல், பிறர் மதத்திற் குடன்படாளுகித் தன் மதத்தையே கொள்ளுதல் என்பனவாம்.
எழுமலை - எழுவகை மலைகள். அவை கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன.
எழுமான்
எழுமான்புலி } ஒருபூடு.
எழுமுகனை - துவக்கம், முதல்.
எழுமேகம்-எழுவகைமேகங்கள். அவை சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணமென்பன.
எழுமை - உயர்ச்சி, ஏழு, எழ்பிறப்பு.
எழும்பல் - எழும்புதல், கைத்தோம்பு.
எழுவரைக்கூடி - சவ்வீரபாஷாணம்.
எழுவாயுருபு-பெயர்வேற்றுமையுருபு.
எழுவாயெழுஞ்சனி - மகநாள்.
எழுவாய் - ஆதி, முதல் வேற்றுமை.
எழுவாய்வேற்றுமை - முதலாம் வேற்றுமை.
எழுவான் - கிழக்கு.
எளிசு-அருமையற்றது, இலேசானது, எளியது.
எளிஞர் - எளியவர்.
எளிதரவு - எளிமைத்தனம்.
எளிது - எளிசு.
எளிமை - தரித்திரம், தளர்வு, தனிமை தாழ்வு.
எளியது - எளிமையானது.
எளியர்
எளியவர் } ஈனர், தரித்திரர், திராணி யற்றவர்.
எளியவிலை - அற்பவிலை.
எளிவரல் - எளிதாகவரல்.
எள் - எள்ளு, எள்ளென்னேவல்.
எள்கல்
எள்குதல் } இகழ்தல்.
எள்ள - உவமைச்சொல்.
எள்ளல் - அவமதிச்சிரிப்பு, இழிவாகப் பேசல், தள்ளல், நகைத்தல், நிந்தை.
எள்ளற்பாடு - இகழ்ச்சி.
எள்ளிடை - எள்ளளவு.
எள்ளுச்செவி - ஒருபூண்டு.
எள்ளுண்டை - ஒரு சிற்றுண்டி.
எள்ளுதல் - இகழ்தல், தள்ளுதல்.
எள்ளுருண்டை - ஒரு சிற்றுண்டி.
எள்ளோரை - எள்ளுச்சாதம்.
எறி-எறிகை,குறிப்பாகச்சொல்லுகை.
எறிகாலி - காலாலெறியும் பசு.
எறிகால் - பெருங்காற்று.
எறிசக்கரம் - எறியுஞ்சக்கரம்.
எறிச்சலூர்மலாட்னர்-ஒருபுலவர்;இவர் கடைச்சங்கக்காலத்துள்ளோர்.
எறிதல் - அடித்தல், உதைத்தல், குத்தல், நால்வகையூறினொன்று, வீசல், வெட்டல்.
எறித்தல் - ஒளிவீசல், வெயில்காய்தல்.
எறிபடை - கையிடுபடை.
எறிபத்தநாயனர் - சிவனடியார்களு ளொருவர். இவர் சிவகாமியாண்டார் சுவாமிக்குச்சாத்தக் கொண்டு சென்ற புஷ்பங்களை புகழ்ச்சோழ நாயனுருடைய யானையானது பறித்துச் சிந்தியது கண்டு ஓடி அதன் துதிக்கையை வாளினல் வெட்டினவர். அது கண்ட புகழ்ச்சோழநாயனர் தமது யானைசெய்த குற்றத்திற்காகத் தம்மையும் வெட்டுகவென்று தமது வாளைக்கொடுக்க எறிபத்தர்வாங்கித் தமதூட்டியை அரிய வெத்தனித்தனர். அப்பொழுது பரமசிவனது திருவருளா லோர் அசரீரி யுண்டாக யானையு முயிர் பெற்றெழ இருவரும் சுவாமியைத் துதித்துப் போயினர். இவர்க்கு ஊர் கருவூர்.

எறிப்பு ஒளிசெய்தல், கோடை, பிரகாசம், விம்பித்தல், வெயிலெறிக்கை.
எறிமணி - சேமக்கலம்.
எறிமுத்து - வசூரிநோயி லிடையிடை போட்ட முத்து.
எறியாயுதம் - வேல்முதலிய படை.
எறியால் - ஒருமீன்.
எறியீட்டி - எறியும் வல்லயம்.
எறிவலயம் - எறிவளையம்.
எறிவளையம் - சக்கராயுதம்.
எறிவு - எறிதல்.
எறும்பி - யானை.
எறும்பு - பிபீலிகை.
எறுழி - காட்டுப்பன்றி, பன்றி.
எறுழ் - தடி, தண்டு, தூண், வலி.
எற்பாடு-மாலைப்பொழுதுக்கு முன்பத்து நாழிகைநேரம்.
எற்றல் - அடித்தல், அறுத்தல், இறைமரம், எதிர்த்தல், மறிதல், எற்றுதல், சூத்தல், கொல்லல், தட்டப்படுதல், வெட்டல்.
எற்றல்மரம் - நீர் இறைமரம்.
எற்றற்கொட்டு - இறைமரக்கொட்டு.
எற்றற்பட்டை - சீலாப்பட்டை.
எற்றித்தல் - இரங்கல்.
எற்று-இரக்கக்குறிப்பு, எத்தன்மைத்து, எறிதல், எற்றெனேவல், எத்தல்.
எற்றுதல் - அடித்தல், எறிதல், எத்தல், கொல்லல், நீர் முதலியவற்றையெற்றல், புடைத்தல், வெட்டல்.
எற்றநூல் - மரக்கோட்டம்பார்க்குநூல்.
எற்றே - இரக்கச்சொல்.
எற்றை - என்று.
எற்றோ - அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல், எத்தன்மைத்தோ.
எற்றோகாம் - சூரியோதயம்.
என-என்க, என்னுடையது, ஒருவகையுருபு, ஓரெச்சச்சொல் (உ-ம்) ஒல்லென வொலித்தது, எண்ணிடைச்சொல் (உ-ம்) பகை பாவம் அச்சம் பழியென நான்கு.
எனது - என்னுடையது.
எனல் - என்றல்.
எனவெஞ்சணி - எனவெனெச்சம்.
எனு - எண்ணிடைச்சொல் (உ-ம்) சாத்தனெனு கொற்றனெனு.
எனுது - எனது.
எனில் - என்றுசொல்லில்.
எனை - எத்தன்மைத்து, எவ்வளவு.
எனைத்து - எத்தன்மைத்து, எவ்வளவு.
எனைத்துணை - எவ்வளவு.
எனையவன் - எத்தன்மையன், எவன்.
எனைவரும் - யாவரும்.
எனைவீர் - எல்லாநீர்.
எனவேமும், எனைவேம், எனைவோமும், எனைவோம் - எல்லோம்.
எனைவோரும் - யாவரும்.
என்-இகழ்ச்சிக்குறிப்பு, இடைச்சொல், என்ன, யாவை, ஐயக்கிளவி, சொல்லுகை, தன்மையொருமைச்சொல்.
என்கு, என்கும் - என்று சொல்லும்.
என்பாபரணன் - சிவன்.
என்பித்தல் - அத்தாட்சிப் படுத்தல், என்று சொல்வித்தல்.
என்பிலி - புழு.
என்பு - எலும்பு, புலி.
என்புதின்றி - கழுதைக்குடத்தி.
என்புருக்கி - எலும்புருக்கி, ஒருபூடு.
என்மர், என்மனர் - என்று சொல்லுவார்.
என்றவன் - சூரியன்.
என்று - எண்ணிடைச்சொல்.
என்றிசினோர் - என்றுசொல்லுவார்.
என்று - எந்நாள், சூரியன்.
என்றும், என்றூழி - எப்போழ்தும்.
என்றூழ் - கோடை, சூரியன், வெயில்.
என்ன உவமைச்சொல், எத்தன்மைய, என்றுசொல்க, யாவை.
என்னல் - என்றுசொல்லல்.
என்னே - அதிசயவிரக்கச்சொல்.
என்னை - என்றந்தை, என்ன, விரவுத்திணையொருமைத் தன்மைச் செயப்படுபொருள்.
என்னைப்பெற்றதாயார் - நூற்றெட்டுத்திருப்பதிகளுளொன்றாகிய திருநின்றவூரிற்கோயில்கொண்ட இலக்குமி.
என்னோ-அதிசயவிரக்கச்சொல், இகழ்ச்சிக்குறிப்பு, இரக்கச்சொல், ஐயக்கிளவி.

## ஏ

ஏ - தமிழ்மொழியின் நெடுங்கணக்கில் ஏ எனும் எட்டாம் எழுத்து, உயிர் முயிர்ச்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள் வாயைத் திறத்தலோடு அடிநாவின் விளிம்பு அண்பல்லினை உறப்பிப்பதும் அகர இகரக் கூறுகள் சந்தித்துப் பிறப்பதுமான ஒருநெட்டுயிர், சிவன், செலுத்துதல், விஷ்ணு, அடே, அம்பு, இகழ்ச்சிக்குறி, இசைநிறை, ஈற்றசை, எண்ணின்குறிப்பு (உ-ம்) நிலனேநீரே, எதிர்மறை(உ-ம்)பொய்யேஒரிடைச்சொல் ஓரெழுத்து, தேற்றக்குறிப்பு (உ-ம்) நானே வந்தது, பிரிவின் குறிப்பு (உ-ம்) இவற்றுள்ஒன்றேநன்றுவினவுக்குறிப்பு (உ-ம்) தரவேவந்தது.

ஏஎ - இகழ்ச்சிக்குறிப்பு.

ஏககாயனி - ஒரு வருடத்துக் கடாரி.

ஏககுண்டலன் - குபேரன், ஆதிசேடன், பலராமன்.

ஏககுரு - உடன்கற்றோன்.

ஏககோசம் - மொத்தப்பட்டம்.

ஏகசகடு - ஒரொட்டு, சரிசரிவிலே, மொத்தம்.

ஏகசக்கரபுரம் - இது, பாண்டவர்களும் குந்தியும் அரக்குமாளிகை ஆபத்துக் குத்தப்பிப் பிராமண வேடம்பூண்டு போய்ச்சேர்ந்த அக்கிரகாரம்.

ஏகசக்கிரம் - தனியரசாட்சி, ஒருபுரம்.

ஏகசக்கிரவர்த்தி - சுயாதிபதி, கடவுள்.

ஏகசக்கிரவனம்-பாண்டவர்கள் வாசஞ் செய்த ஒருவனம்.

ஏகசக்கிரன்-தனுபுத்திரருளொருவன்.

ஏகசக்கிராதிபதி - ஏகசக்கிரவர்த்தி.

ஏகசமன் - ஒருசரி.

ஏகசரம் - காண்டாமிருகம்.

ஏகசர்மகுஷ்டம் - ஒருவகைக் குஷ்டநோய். அதுசரீரத்தினதுசருமமெல்லாம் யானைத் துதிக்கையினது சருமம்போற்றடித்துப் பலமாய் வலுவுடன் சுரசுரத்துப் பார்வைக்கு விகாரமாயிருப்பது, அதனோடு வியர்வும், கைகால்களிலுள்ள விரல்கள் குறைதலுமுண்டாகும்.

ஏகசாதர் - சகோதரர்.

ஏகசாதி - சூத்திரன், ஒரு பிறப்புடையோன், ஒரேசாதியான்.

ஏகசிந்தை - ஒருமனம், ஒன்றிப்பு.

ஏகசிருங்கம் - காண்டாமிருகம், ஒரே கொம்பையுடையது.

ஏகசிருங்கன் - கிருஷ்ணன்.

ஏகசுபாவம்-ஒரேதன்மை, சமமானதன்மை.

ஏகசூத்ரம் - உடுக்கை, ஒருவகை வைடூரியம்.

ஏகசூனு - ஒரேபேறானபிள்ளை.

ஏகதந்தன் - விநாயகன். இவன்தன் ஒரு கொம்பை ஒடித்தெடுத்துக்கொண்டு கயமுகாசுரனைக் கொன்றான்; விநாயகன், கயமுகாசுரன்.

ஏகதமன் - அநேகருள் ஒருவன்.

ஏகதரன் - இருவருள் ஒருவன்.

ஏகதனன் - ஒரேமனதாயிருப்பவன்.

ஏகதன் - பிரமமானசபுத்திரருள் ஒருவன்.

ஏகதாநன் - ஒரேமனமுள்ளவன்.

ஏகதாளம் - சத்ததாளத்தொன்று. அது ஒரொத்துடையது.

ஏகதிரீயத்துவம் - ஒன்றில் மூன்றுதத்துவங் கொண்டிருத்தல்.

ஏகதிருஷ்டி
ஏகதிருட்டி } காக்கை.

ஏகதூரன் - ஒரு குருவினிடத்தில் வேதமுதலியவற்றைக் கற்றுக்கொண்டவன்.

ஏகதுராவகம் - வண்டியிலாவது கலப்பையிலாவது ஒன்றைச் சுமக்கின்ற வெருது.

ஏகதுரீனன் - ஏகதூரன்.

ஏகதேகம் - ஒருடம்பாக்கப் பட்டது, சிறப்பாகச் செய்யப்பட்டது, புதனென்னும் கிரகம், யௌவனம்.

ஏகதேசக்காரன் - மாறுபாடுள்ளவன்.

ஏகதேசம் - அரிது, அலங்காரத்துளொன்று, ஒட்டுக்கு, ஓரிடம், சந்தேகம், பங்கு, முன்பின்னாகல், வேற்றுமை, வித்தியாசம்.

ஏகதேசவருபகம்
ஏகதேசவுருவகம் } ஓரலங்காரம். அஃது ஒரே யங்கத்தை யுருவகஞ் செய்வது.

ஏகதேவன் - கடவுள், சிவன், புத்தன்.
ஏகதொகை - முழுத்தொகை.
ஏகத்துவம் - ஒரு பொருளாயிருக்குந் தன்மை.
ஏகநாதன் / ஏகநாயகன் } கடவுள், சுயாதிபதி.
ஏகபதம் - ஒற்றைவழி.
ஏகபதி - வழி.
ஏகப்பத்திரிகை - வெண்டுளசி.
ஏகப்பத்தினி-ஒரேமனைவி, பதிவிரதை.
ஏகபந்தனம் - ஒரேகூட்டமாய்க் கூடுதல், ஒன்றிப்பு.
ஏகபாதம்-நான்கடியுமோரடியாய் வருங் கவி, ஓரிருக்கை.
ஏகபாதவாதனம் - விசேஷபத்தி நிலையினொன்று,
ஏகபாதன் - சிவன்.
ஏகபாவம் - ஒரேதன்மை.
ஏகபாவனை - ஒருமைப்பாவனை.
ஏகபிங்கலன் / ஏகபிங்கன் } குபேரன்.
ஏகபிண்டன் - நெருங்கியவுறவன்.
ஏகபிராணன் - ஒரேபிராணன்.
ஏகபுத்திரன் - ஒரேபுதல்வன்.
ஏகபோகம் - இட்டம், இருவருமொத்த போகம், ஒருதன்மைத்தானவின்பம், சுகதுக்கங்களைச் சமமாக நினைக்கை. மனதின்படி யனுபவிக்கை.
ஏகபிழை - முற்றும்பிழை.
ஏகப்பெருவெள்ளம் - ஒருமிக்க மூடிய பெருவெள்ளம்.
ஏகமாய் - ஒன்றாய்.
ஏகம் உடன்பாடு, ஒப்பில்லாதது, ஒன்றி, தனிமை, திப்பிலி, முழுவதும்.
ஏகம்பட்சசாரம் - ஒருவகையுலோகம்.
ஏகம்பவாணன் - ஆற்றூரில் விளங்கிய ஒரு வேளாண் பிரபு.
ஏகம்பன் - கச்சிப்பதீசன்.
ஏகராத்ரன் - ஒருநாளிற் செய்து முடிக்கும் யாகம், மருகன்.
ஏகரூபன் - கடவுள்.
ஏகலவன் / ஏகலவ்வியன் } துரோணருடைய உருவத்தின் முன்னர் வில்வித்தைபயின்றவோர் கிராதன். துரோணர் இவனுக்கு வில்வித்தைக் கற்றுக்கொடுக்க உடன்படாததாலிவ்வாறு செய்தான்.

ஏகலன் - வசுதேவன்றம்பி, தேவசிரவசன்மகன்.
ஏகலிங்கன் - குபேரன்.
ஏகலைவன் - பாண்டவரிருந்த காலத்துள்ள ஒரு வேடன்.
ஏகல் - உயர்ச்சி, நடத்தல், போகல்.
ஏகவசனம்-ஒருமைச்சொல், ஒரேமொழி, மெய்.
ஏகவத்தவாதனம் ஏக பாதவாதனமாகக் கிடந்து கையை நீட்டியிருப்பது.
ஏகவஸ்து - கடவுள்.
ஏகவாசம் - ஆலமரம், கூடியிருத்தல், தனியிருப்பு.
ஏகவாரி - சிறுசுரிகை.
ஏகவிப்பிரன் - ஒற்றைப் பிராமணன்.
ஏகவீரம் - ஒருவகைமரம், மான்.
ஏகவீரன்-அருச்சுனன், ஒப்பற்றவீரன், கர்ணன், ஸ்ரீராமன்.
ஏகவெளி - மறைவிலாவெளி.
ஏகவேணி - ஒற்றைச்சடை, ஒற்றைச்சடையான், மூதேவி.
ஏகன் - ஒருவன், கடவுள், சிவன்.
ஏகாகாரம் - ஒரேரூபம்.
ஏகாகி - தனித்திருப்பவன்.
ஏகாக்கம் - காக்கை.
ஏகாக்காரம் - ஒற்றையெழுத்து.
ஏகாக்ஷி-ஒற்றைக்கண்ணன், குபேரன்.
ஏகாக்கிரம் / ஏகாகிருதை } ஒரேநோக்கம்.
ஏகாங்கம் - சந்தனம், தனிமை, புதன்.
ஏகாங்கவாதம் - ஒருவகைவாதநோய்.
ஏகாங்கவுருவகம் - ஓரலங்காரம். அஃது ஒன்றனங்கம் பலவற்றையும் வாளா கூறியோரங்கத்தையேயுருவகிப்பது.
ஏகாங்கி - சந்நியாசி, தனிமையாயிருப்பவன், பிரமசாரி.
ஏகாங்குலம் - மூத்திரம்.
ஏகாசம் - உத்தரீயம், போர்வை.
ஏகாட்சரி - பிரணவம், புவனசத்தி, மிறைக்கவியினொன்று. அஃது ஒருவரியெழுத்தானோர்கவி முடிவது.
ஏகாட்சரிகக்கிஷம் / ஏகாட்சரிகட்சம் } ஒரு மாந்திரிக நூல்.
ஏகாட்சி - ஒற்றைக்கண்ணன், காக்கை, சுக்கிரன்.
ஏகாண்டம் - ஆகாயம், பூர்ணம், வெளி.
ஏகாதசம் - பதினொன்று.

ஏகாதசருத்திரர்கள் - பதினொருருத்திரர்.
ஏகாதசி - பதினொன்றாந்திதி.
ஏகாதசிப்புராணம் - ஒருபுராணம்.
ஏகாதிபதி - தனியாட்சிபண்ணுபவன்.
ஏகாதிபத்தியம் - தனியரசாட்சி.
ஏகாத்தியம் - தனிச்செங்கோன்மை.
ஏகாந்தசேவை - தனிச்சேவை, தனித்துக் குருவைப்பணிகை.
ஏகாந்தஸ்தலம் - தனித்தவிடம்.
ஏகாந்தமண்டபம் - கொலுமண்டபம், தனியிருக்குமண்டபம்.
ஏகாந்தம் - சந்தனம், தனித்திருக்குமிடம், தனித்து யோகஞ்செய்கை, தனிமை, புதன்.
ஏகாந்தவாழ்வு - ஒப்பற்றவாழ்வு, தனிவாழ்வு, துறவியின்வாழ்க்கை.
ஏகாபை - ஒருவருடத்துக்கடாரி.
ஏகாம்பரநாதர்-திருவேகம்பத்திற்கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
ஏகாம்பரன் - சிவன்.
ஏகாயநகதன் - ஒரேமனதாயிருப்பவன்.
ஏகாயநன் - அசையா மனமுள்ளவன், ஏகாயநமதப் பிரவர்த்தகன்.
ஏகாரம் - ஓரெழுத்து, பொன்.
ஏகாரவல்லி - பலா, பாகல்.
ஏகார்க்களம் - ஏர்பூட்ட நாட்பார்க்கை.
ஏகார்த்தம் - ஒரேநோக்கம், ஒரேயர்த்தம், ஒன்றனை.
ஏகாலி - சவுக்காரம், வண்ணான்.
ஏகாலியர் - வண்ணார்கள்.
ஏகாவலி - ஓரலங்காரம்; ஒருசரமுள்ள முத்துமாலை.
ஏகி - கைம்பெண்.
ஏகீபவித்தல் - ஒன்றித்தல், சேருதல்.
ஏகீபாவம் - ஒருமைப்பாவனை.
ஏகீயன் - தோழன்.
ஏகுதல் - கழிதல், போகுதல்.
ஏகை - இரேகை.
ஏகேந்திரியம் - வைராக்கியம் நான்கனுளொன்று. அது இந்திரியங்களையடக்குதலாகிய தவம்.
ஏகோதகம் - நதிசங்கமம்.
ஏகோதிஷ்டம், ஏகோதிட்டம், ஏகோத்திட்டம் } அபரக்கிரியையியென்று. இது இறந்தவன் நற்கதியடையும் பொருட்டுப் பிள்ளைகளாற் சருமாந்தரகாலத்திற் செய்யும் முக்கியகிரியை. இதிலுட்காரும் பிராமணன் இறந்தவனாகப் பாவிக்கப்பட்டு அவனுக்கு ஒரு வருஷத்துக்குப் போதுமான சாமக்கிரியை கொடுத்து வருஷாப்திகம் வரையில் எதிர்ப்படாமல் விருக்கவேண்டும்.
ஏகோநவிம்சதி - பத்தொன்பது.
ஏகோபித்தல் ஒருமனப்படுத்தல், ஒன்றுதல், சேர்தல்.
ஏக்கம் - ஏங்குகை, கவலை, பயம், பேராசை.
ஏக்கரவு - ஏக்கம்.
ஏக்கழுத்தம் - இறுமாப்பு, மேன்மை.
ஏக்கறல் - ஏக்கறுதல்.
ஏக்கறவு - ஏற்றுக்கொள்ளுதல், வணங்கல்.
ஏக்கறுத்தல் - அங்கலாய்த்தல், அவமானித்தல், தாழ்ந்துநிற்றல்.
ஏக்கிபோக்கி - எளியோர்.
ஏக்குறல் - அங்கலாய்த்தல், பயமுறுதல், வியசனப்படல்.
ஏக்கை - இகழ்ச்சி.
ஏங்கல் - அஞ்சல், அழுதல், இரங்கல், ஒலித்தல், ஒரிழுப்பு, மயிற்குரல்.
ஏங்குதல் - அஞ்சுதல், அழுதல், இரங்குதல், ஒலிக்குதல்.
ஏங்குரல் - விசனப்படல்.
ஏசம் - வெண்கலம்.
ஏசல் - ஒருவகைப்பாடல், பழிமொழி, வைதல்.
ஏசறவு - துக்கம்.
ஏசறுதல் - துக்கித்தல்.
ஏசனம் - கலக்குதல்.
ஏசாதவர்-குற்றமில்லாதவர், நல்லோர், தேவர்
ஏசி - கிளி.
ஏசிடாவகம் - அதிமதுரம்.
ஏசு- இகழ்ச்சி, ஏசென்னேவல், குற்றம்.
ஏசுகை, ஏசுதல் } ஏசல்.
ஏசுமதநிராகரணம் - துறைமங்கலஞ் சிவப்பிரகாச சுவாமிகள்செய்த கிறிஸ்துமத கண்டனநூல்.
ஏச்சு - இகழ்ச்சி, உதாசினம், வைதல்.
ஏடன் - தோழன்முன்னிலை.
ஏடணி - ஒலையீர்க்கு.
ஏடகம் - ஆட்டுக்கடா, சீலை, தென்னமரம், பலகை, பனைமரம், பூவிதழ்,

மதுரைக் கருகிலுள்ள திருவேடகம் என்னும் ஒரு சிவஸ்தலம்.
ஏஷணை } விருப்பம்.
ஏடணை }
ஏடமூகம் - பாணம், செவிட்டுமேன்.
ஏடமூகன் - தைரியமில்லாதவன்.
ஏடலகம் - அதிமதுரம்.
ஏடல் - கருத்து.
ஏடன் - செவிடன், தோழன்.
ஏடா - தோழன் முன்னிலை.
ஏடாகுடம் } ஏறுமேடு, ஒழுங்கின்மை.
ஏடாகூடம் }
ஏடாகோடம் - ஏற்றத்தாழ்ச்சியானநடை.
ஏடாசிரியர் - குருவில்லா தேடு மாத்திரத்திற் கற்றோர்.
ஏடி - தோழி, முன்னிலை.
ஏடு - கண்ணிமை, பனையேடு, பாலாடை, பூவிதழ்.
ஏடுகம் - பிரேதக்கல்லறை.
ஏடுவாரல் - ஓலைவாருதல்.
ஏட்டிக்குப்போட்டி - எதிருக்கெதிர், ஒவ்வாமை.
ஏட்டிற்கல்வி - குருவில்லாக்கல்வி.
ஏட்டை - ஆசை, தளர்வு, துன்பம், வறுமை.
ஏட்டைப்பருவம் - வாலிபப்பருவம்.
ஏணகம் - மான்.
ஏணம் - எலும்பு, நிலைபெறுதல், மான், மான்றோல், வலி.
ஏணல் - வளைவு.
ஏணாசினம் - மான்றோல்.
ஏணாப்பு - இறுமாப்பு.
ஏணி - அடுக்கு, இறைமை, எல்லை, நாடு, மான்கன்று.
ஏணிச்சீகு - ஒருபுல்.
ஏணிப்பந்தம் - ஏணிபோலிருக்கும் ஒருவகைத் தீவர்த்தி.
ஏணிலையுடைமை - கண்ணோட்டம்.
ஏணை - ஆடு, புடவைத்தொட்டில், மஞ்சம்.
ஏண் - நிலையுடைமை, பெருமை, வலி, வளைவு.
ஏண்கோண் - ஒழுங்கின்மை, திருக்கு, நேரின்மை.
ஏண்டாப்பு - இருமாப்பு.
ஏதசன் - பிராமணன்.
ஏதடை - எதிரிடை, விரோதம்.
ஏதண்டை - சிறும்பி, நீர்த்துறையிதணம், பலகைத்தூக்கு.
ஏதம்-குற்றம், கேடு, துன்பம், பலவன்னம், மான்.
ஏதர் - கெட்டவர்கள்.
ஏதவிடுதல் - பொறுமையாய்ப்பேசல்.
ஏதனம் - சுவாசம்விடல்.
ஏதி - ஆயுதப்பொது, துண்டு, வாள்.
ஏதிதம் - விருத்தியடைந்திருப்பது.
ஏதியம் - கிரணம்.
ஏதிலன் - அயலான்.
ஏதிலார் - அயலோர், அன்னியர், தரித்திரர், பகைவர்.
ஏதில் - அயல், அன்னியர்.
ஏதின்மை - பகைமை, பிரியவீனம், வெறுமை.
ஏது - உபகாரணம், எத்தனம், என், ஓரலங்காரம்; அஃது இன்னகாரணத்தானின்னதாமெனக்கூறுவது. காரணம், திராணி, நிமித்தம், மூலம், யாது.
ஏதுகரம் - வழிவகை.
ஏதுக்கெட்டவன் - இடமற்றவன், வீணன்.
ஏதுத்தற்குறிப்பு - ஓரலங்காரம்.
ஏதும் - சிறிதும், யாதொன்றும்.
ஏதுவலங்காரம் - ஓரலங்காரம்; அதுயாதாயினுமொரு பொருளின்ன காரணத்தாலிவ்வாறுயதெனச் சிறப்பாய்க் கூறுதல் (உ - ம்) "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கியாண்டு மிடும்பையில்."
ஏதுவனுமானம் - ஓரளவை, அதுபுகையைக்கண்டு நெருப்புண்டென வறிதல்.
ஏதுவானவன் - இடமுள்ளவன், பிராப்தியுள்ளவன்.
ஏதுவிலக்கு-ஓரலங்காரம் அஃது இன்னதிது வின்னகாரணமின்றெனக் கூறுவது.
ஏதுவின்முடித்தல் - ஒருயுத்தி. அது காரணம் காட்டிமுடித்தல்.
ஏதுவுருவகம்-ஓரலங்காரம். அஃதுகாரணத்தைக்காட்டியுருவகப்படுத்துவது.
ஏதுவுவமை - காரணங்களை யெடுத்துக்காட்டி யுவமையைப்பொருட்கொப்பிட்டுக்கூறுவது (உ - ம்) மாமணியும் பாகிலையும் இளம்பிறையுங்கூடி பிரபையால் வானவிற்போன்றது.

ஏதை - பேதை, வறியன்.
ஏத்தல் - துதித்தல், வணங்கல்.
ஏத்திரி - சாதிப்பத்திரி.
ஏத்து - ஏத்தென்னேவல்; துதி.
ஏத்துதல் - துதிக்குதல், வணங்குதல்.
ஏத்துவந்தரம் - தோல்வித்தான மிருபத்திரண்டனுளொன்று. அதுதன்னாற்சொல்லப்பட்ட பிரதிஞ்ஞையானது பிரதிவாதியாலே மறுக்கப்பட்டுழி வேறோரேதுவினைக் கூறுதல்.
ஏத்துவம் - பின்பு.
ஏத்துவாபாசம் - தூஷணை.
ஏந்தல் - அரசன், உயர்ச்சி, ஏந்துதல், பெருமை, பெருமையிற்சிறந்தோன், மலை, மேடு.
ஏந்தல்வண்ணம் - ஒருசந்தம், சொல்லியது சிறந்துவருவது.
ஏந்தானம் - ஏந்துதல், சிறும்பி.
ஏந்தி - ஏந்துபவன், தரித்திரன்.
ஏந்திசை - இராகத்தகுதியுளொன்று.
ஏந்திசைச்செப்பல் - வெண்சீர்வெண்டளையான் வருவது.
ஏந்திசைத்துள்ளல்-கலித்தளை யிசைந்துவருவது.
ஏந்திசையகவல் - நேரொன் றாசிரியத்தளையான் வருவது.
ஏந்திரம் - ஏயந்திரம், திரிகை.
ஏந்திரவச்சு - பண்டியச்சு.
ஏந்திழை - பெண்.
ஏந்திழையார் - பெண்கள்.
ஏந்துகொம்பு - தாங்குகொம்பு, மேல்வளைவான யானைக்கொம்பு.
ஏந்துதல் - தாங்கல்.
ஏந்தெழில் - மிக்க அழகு.
ஏப்பச்சுரம்-ஒருவகைச்சுரநோய்; அது ஏப்பம், வாந்தி, மார்பெரிச்சல், தலைவலி, தாகம், நெஞ்சுலர்தல், தேகத்தைத் திருப்பல்போலிருத்தல், பிரமை, தலை நமைச்சலுடன் நடுக்கல், மந்தாக்கினி, மலபந்தம், தலைக்குத்தல்,கண்களினோவுட னீர்வடிதலால் ஆகிய இக்குணங்களை யுண்டாக்குவது.
ஏப்பம் - ஏவறை, தேக்கெறிவு.
ஏமகண்டன் - ஓரிராக்கதன்.
ஏமகூடம் - அட்டமலையிற்பொன்மலை.
ஏமசிங்கி - மிருதாரசிங்கி.

ஏமதவஞ்சம்-போகபூமியாறினொன்று.
ஏமத்தி - பொற்றொட்டிப் பாஷாணம்.
ஏமத்தூரி - பொன்னூமத்தை.
ஏமபத்திரம் - மலையத்தி.
ஏமபுட்பம் - அசோகைமரம், செண்பகமரம், பொன்முல்லை.
ஏமபேதி - கற்கடகபாஷாணம்.
ஏமமணல் - பொன்மணல்.
ஏமம்-இரா, இன்பம், உன்மத்தம், கலக்கம், களிப்பு, காவல், சேமம், திரைச்சீலை, புதையல், பொன், மயக்கம், விபூதி, பைத்தியம்.
ஏமரல், ஏமருதல் - கலங்குதல், காக்கப்படுதல், திகைத்தல், மிகுகளிப்புறல், மூர்க்கமுறல்.
ஏமல் - முதிரை.
ஏமவஞ்சம்-போகபூமி யாறினொன்று.
ஏமவதி - ஐம்பத்தெட்டாவது மேளகர்த்தா, கடுக்காய், வசம்பு.
ஏமாங்கதம் - சீவகன்தேசம்.
ஏமாத்தல் - அவாவுறல், களித்தல்.
ஏமாந்தகொங்கை - விம்மியமுலை.
ஏமாப்பிரகம் - பொன்னப்பிரகம்.
ஏமாப்பு - கருத்து, காவல், செருக்கு, மிகுகளிப்பு, வலியாதல்.
ஏமாறல், ஏமாறுதல் - அலமருதல், தடுமாறல், மோசம்போதல்.
ஏமாற்றல், ஏமாற்றுதல் - வஞ்சித்தல்.
ஏமி - உடனிகழ்வான்.
ஏமிலாந்தல் - திகைத்துப் பார்த்தல், நினைவுசிதறல்.
ஏமிலாந்தி-அலமந்துபார்ப்போன், மதிகேடன், மயக்கமுடையவன்.
ஏமிலாப்பு - அலமாப்பு.
ஏமின்கோலா - ஒருவகைமீன்.
ஏமுறல், ஏமுறுதல் - இறுமாப்புறல், களிப்புறல், மயங்குதல்.
ஏம் - தன்மைப்பன்மைவிகுதி.
ஏம்பலித்தல் - அங்கலாய்த்தல்.
ஏம்பலிப்பு - அங்கலாய்ப்பு.
ஏம்பல் - ஏம்புதல்.
ஏம்புதல் - ஏம்பலித்தல், களித்தல்.
ஏயர்கோன் கலிக்காமநாயனார் - திருப்பெருமங்கலத்திற் பிறந்த வேளாளராகிய இவர் சூலைநோயால் வருந்துகையிற் பரமசிவனிவருக்குக்கண்விற் றோன்றி இது சுந்தரமூர்த்தியாற்

தீருமென்றருளிச் சுந்தரரையுமேவிப்போக, சுவாமியைப் பரவையிடத்திற்றூதுசெல்லக்கேட்ட சுந்தரனால் இந்நோயைப் போக்குவதிலும் நானே அந்நோயைப் போக்குவேனெனச்சொல்லி வாளையெடுத்து வயிற்றைப்போழ்ந் துயிர்துறந்த வைராக்கியபத்தர் பின்னர்ச் சுவாமியருளாலுயிர்பெற்றுச் சுந்தரரோடு நட்புக்கொண்டவர்.
ஏய்தல் - இசையல், ஒப்பாதல், சேரல், பொருந்தல்.
ஏய்த்தல் - அணுப்புதல், இசையப்பண்ணுதல், உவமித்தல், சமானித்தல்.
ஏய்ப்ப - உவமைச்சொல் (உ-ம்) முத்தேய்ப்ப.
ஏய்ப்பிலேவட்டன் - எத்துக்குட்படுபவன், சணிசமற்றவன், வஞ்சகம்.
ஏரகம் - ஆடு, சுப்பிரமணியத்தலம் ஆறனுள் ஒன்று. இது இக்காலத்தில் சுவாமிமலை எனப்படும் "ஏரகவெற்பெனுமற்புதமிக்கசுவாமிமலைப்பதி" என்பர் திருப்புகழுடையார்.
ஏர்கை - பெண்ணுடு.
ஏரங்கம் - ஒருவகைமீன்.
ஏரடித்தல் - ஏருழல்.
ஏரண்டத்தைலம் - ஆமணக்க முத்து முதலியவற்றாற் செய்யப்படும் ஒரு தைலம்.
ஏரண்டம் - ஆமணக்கு.
ஏரண்டை - திப்பிலி.
ஏரத்தை - பிடரிக்காம்பு.
ஏரம்பமூர்த்தி - விநாயகர்சகஸ்திர நாமங்களுளொன்று. உருத்திருக்குப்பக்கத்திலிருப்பவன்.
ஏரம்பன் - விநாயகன்.
ஏரல் - கிளிஞ்சில், சமுத்திரச்சுண்டி.
ஏரா - நீராளம், மரக்கலத்தினடிமரம்.
ஏராண்மை - உழவு.
ஏராதது - ஏலாதது.
ஏராளம் - மிகுதி.
ஏராளர் - உழுநர்.
ஏரி - இமில், குளம், புனர்பூசம், புரைகப்பா.
ஏரிசா - கடற் கொந்தளிப்பு, புரளித்தனம்.
ஏரின்வாழ்நர் - பூவைசியர்.
ஏருழல் வைசியாறுதொழிலினொன்று.
ஏருழவர் - உழவுதொழிலாளர்.
ஏருழுநர் - உழவர்.
ஏரெழுபது-ஏர்முதலியவற்றினைச் சிறப்பித்துக் கம்பர்கூறிய எழுபதுசெய்யுட்களாலுயதோர் நூல்.
ஏர்-அழகு, உழவுக்கிசைந்த தளபாடம், உழவுத்தொழில், உழுபடை, உழுமாடு.
ஏர்க்கால் - கலப்பையினொருறுப்பு, வண்டியினொருறுப்பு.
ஏர்ச்சீர் - உழவுக்கிசைந்த தளபாடம், வேலைக்கிசைந்த பணிமுட்டு.
ஏர்த்தாயம் - காலத்திலுழுகை.
ஏர்த்தொழிலர் - பூவைசியர்.
ஏர்த்தொழில் - உழவுத்தொழில்.
ஏர்நாழி - கலப்பையினொருறுப்பு.
ஏர்பு - எழுச்சி, கிரககதி.
ஏர்ப்பண் - ஏர்ச்சீர், பூட்டாங்கயிறு.
ஏர்ப்பு - ஈர்ப்பு.
ஏர்ப்பூட்டு - ஏர்தொடுத்தல்.
ஏர்மங்கலப்பாட்டு - ஏரைப்பாடுவது.
ஏர்வாரம் - கமவாரம்.
ஏல - இயல, முன்னம்பொருந்த, மிக.
ஏலக்காய் - ஒரு வாசனைச்சரக்கு.
ஏலக்குழல்-வாசனையூட்டப்பட்ட மயிர்ச்சிகை.
ஏலக்கோலம் - ஆயத்தம்.
ஏலபிலன் - குபேரன்.
ஏலப்பாட்டு - இழுக்குநர் சொல்லும் பாட்டு.
ஏலம்-ஆஞ்சி, இயங்கு, ஒருமரம், பஞ்சவாசத்தொன்று, மயிர்ச்சாந்து, முதிரை, வாசனைப்பண்டம், விலைகூறுகை.
ஏலரிசி, ஏலவரிசி - ஏலக்கொட்டை.
ஏலவார்குழலியம்மை - திருக்காஞ்சியிற் கோயில்கொண்ட அம்மையார்.
ஏலவாலுகம் - பரிமளத்திரவியம்.
ஏலவே - முன்னே.
ஏலா - ஏலம், தோழிமுன்னிலை, பேரேலம்.
ஏலாள் - ஏலா.
ஏலாத்து - இயலாதது, பொருந்தாதது.
ஏலாதார் - இயலாதார், பகைவர்.
ஏலாதி - ஒருநூல்.
ஏலாதிகடுகம் - ஒருமருந்து.

ஏலாபத்திரம் - தக்கோலம்.
ஏலாபரணி - பறங்கிச்சக்கை.
ஏலாப்பு - துன்பம்.
ஏலாமை - இணங்காமை, கூடாமை, துன்பம்.
ஏலாவாலுகம் - ஒருவித ஏலம், வால் மிளகு.
ஏலி - கள்.
ஏலு - சங்கஞ்செடி.
ஏலுதல்-இயலுதல்,கூடல்,பொருந்தல்.
ஏலுநன் - சோழன்.
ஏலேலசிங்கர் - திருவள்ளுவநாயனார்காலத்தில் அப்பெருமானிடத்தி லிகத்தவில்லா அன்புவைத் தொழுகியவர். தமதுமகளை அவருக்கில்லற நடாத்தி விளக்கும்படி மனைவியாகக்கொடுத்த ஒரு வேளாளப்பிரபு.
ஏலை - ஏலம்.
ஏல் - எதிர்மறையேவலொருமைவிகுதி (உ-ம்) நடவேல், ஏலென்னேவல், ஒப்பு, கிளிஞ்சில், முன்னிலை, யொருமை, வியங்கோள்விகுதி, வினையெச்சவிகுதி (உ-ம்) வருமேல்.
ஏல்விலன் - குபேரன்.
ஏல்வை-காலம், குளம், நாள், பொழுது.
ஏவங்கேட்டல் - ஒருவருக்காக ஏவிவிடப்பட்டுப்போய் அதட்டல்.
ஏவம் - ஒருவருக்காக ஏவிவிடப்பட்டு அதட்டும்படி வருகை, நீக்கம், இகழ்ச்சி, குற்றம்.
ஏவலாள் - வேலைக்காரன்.
ஏவல்-ஆணைசெலுத்துதல், ஏவல்வினைமுற்று, ஏவுதல், தூண்டுகை, நடத்துகை, பணிவிடை, பிசாசை, யேவிவிடுகை.
ஏவல்கொள்ளுதல் - தொண்டுசெய்வித்தல்.
ஏவல்சிலதியார் - மடைப்பள்ளியாரடியார்.
ஏவல்செய்தல் - தொண்டுசெய்தல்.
ஏவல்மேவல் - ஏவற்றொழிலும் உள் வேலையும்.
ஏவல்வாய்பாடு - ஏவற்சொல்.
ஏவல்விகுதி-ஏவலில்வரும்விகுதி; அது ஆய், மின், உம், முதலியவை.
ஏவல்விடை - வினவையெதிர்மறுத்தேவும் வினை (உ-ம்) உண்டாயோவென்ற வழி நீயுண்ணென்பது.
ஏவல்வினா - ஏவும்வினா (உ-ம்) எழுகிறாயா.
ஏவல்வினை - ஏவலைச்செய்யும்வினை.
ஏவறை - எதிருக்கெடுத்தல், ஏப்பம்.
ஏவற்காரன் - பணிவிடைக்காரன்.
ஏவற்பணி - ஏவற்றொழில்.
ஏவற்பேய் - ஏவிவிட்டபேய்.
ஏவாங்கம், ஏவாங்கனம் - அசமதாகம்.
ஏவிவிடுதல் - ஏவுதல்.
ஏவிளம்பி - முப்பத்தோராவதுவருடம்.
ஏவு-அம்பு, அனுப்புந்தன்மை, ஏயென்னேவல், வருத்தம்.
ஏவுதல் - அனுப்புதல், எய்யல், எழுப்பிவிடுதல், கட்டளையிடல், கற்பித்தல், செலுத்துதல், தூண்டிவிடுதல்.
ஏவுதற்கருத்தா-இயற்றுதற்கருத்தாவை யேவுவோன்.
ஏவும்விடை - ஏவல்விடை.
ஏவும்வினை - தொழிற்பாற்படுத்தும் வினைச்சொல்.
ஏவும்வினைமுதல் - ஏவுதற்கருத்தா.
ஏவுவான் - ஏவுகிறவன்.
ஏழகம் - ஆடு, செம்மறிக்கடா, திருவாட்டேறு.
ஏழத்தனை - ஏழமடங்கு.
ஏழை, ஏழைத்தனம் - எளிமைத்தனம், ஏழைத்தனம்.
ஏழனுருபு - ஏழாம்வேற்றுமை யுருபு, அஃது கண் முதலியன.
ஏழாங்கால் - கலியாணத்துக்கு ஏழுநாளைக்குமுன் நடும் பந்தக்கால்.
ஏழிசை - ஏழுவித இராகங்கள். அவை இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைபதம், கிடாதமென்பன.
ஏழிலம்பாலை, ஏழிலைம்பாலை - ஒருமரம். அஃது மகளிரான்மலர் மரம் பத்தினொன்று. அதன் வாசனை யானைகளுக்காகாதாம்.
ஏழு - ஒரெண்.
ஏழுநிலைக்கோபுரம் - ஏழு நிலையுள்ள கோபுரம்.
ஏழுநிலைமாடம் - ஏழடுக்குமாடம்.
ஏழுபாலை - ஏழுவிதப்பாலைகள்; அவை செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, கரும்கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என்பன.

ஏழுபுரம்-சத்தபுரி அஃது அயோத்தி, அவந்தி, காசி, காஞ்சி, துவாரகை, மதுரை, மாயை.
ஏழேழு - எவ்வேழு - ஏழுக்கேழு.
ஏழேழுதலைமுறை - எழுதலைமுறையும் புத்திர பாரம்பரையாய் வருமேழ்தலை முறை.
ஏழை-அறிவிலான், தரித்திரன், பெண், பேதை.
ஏழைக்குறும்பு - வறுமையைக் காட்டி மோசஞ்செய்கை.
ஏழைத்தனம் - எளிமை.
ஏழைமை-அறியாமை, பேதைமை, வறுமை.
ஏழ்ச்சி - எழுச்சி.
ஏழ்பரியோன் - சூரியன்.
ஏழ்பவம் - ஏழ்பிறப்பு.
ஏழ்பிறப்பு - எழுபிறப்பு; அஃது ஊர்வன, தாவரம், தேவர், நீர்வாழ்வன, பறவை, மக்கள், விலங்கு.
ஏளனம் - அவமதிச்சிரிப்பு, சரசம், நீக்கல், பரிகாசம்.
ஏளிதம் - இகழ்ச்சி, எளிமை.
ஏற - அதிகமாக, உயர.
ஏறக்கட்டுதல் - இறைந்ததானியத்தைக் கூட்டிச் சேர்த்தல், கட்டியுயர்த்துதல், பலப்படுத்துதல்.
ஏறக்குறைய - முன்பின்னாக.
ஏறங்கோட்பறை - முல்லைப்பறை.
ஏறண்டம் - ஒருவகை அண்டநோய்.
ஏறத்தாழ-கூடக்குறைய, முன்பின்னாக
ஏறல் - ஏறுதல், கிளிஞ்சல்.
ஏறவாங்கல் - நயமாகவாங்கல்.
ஏறவிடுதல் - மரக்கலத்தைக் கரைக்குத் தூரமாய்விடுதல், மேலேவிடுதல்.
ஏறவிறங்கப்பார்த்தல் - கேசாதிபாதமீறாகப்பார்த்தல்.
ஏறாங்கடைசி - அறமுடிவு.
ஏறாமேடு - உயர்ந்தமேடு, சரிப்படுத்தக் கூடாதகாரியம், நீரேறாதமேடு.
ஏறாளர் - படைவீரர்.
ஏறிடுதல்-அடைதல், ஏறவிடுதல், சுமையாப்பித்தல்.
ஏறிட்டுப்பார்த்தல் - உற்றுப்பார்த்தல்.
ஏறியவீரி - சவ்வீரபாஷாணம்.
ஏறு-அசுபதி, இடபவிராசி, இடி, அயர்ச்சி, எருது, எருமை, கவரி, சங்கு, சிங்கம், சுறா, பசு, பன்றி, புல்வாய், மரை, மான் இவற்றினாண், ஏறென்னேவல், தழும்பு, விலங்கேற்றின் பொது.
ஏறுகடை - முடிவானகடை.
ஏறுகுதிரை - ஏறுங்குதிரை.
ஏறுக்குமாறு - குழப்பம்.
ஏறுசலாகை - கைமரங்கோக்குஞ்சலாகை.
ஏறுசேவகன் - எவரினுமுயர்ந்தவீரன். ஏற்றையுடைய வீரன்.
ஏறுதல்-அதிகப்படுதல், இவர்தல், உட்போதல், உயருதல், மேற்போதல்.
ஏறுதழுவல் - மணமுடிக்கும்பொருட்டு இடபத்தைப் பிடித்தல்.
ஏறுதுறை - துறைமுகம்.
ஏறுநெற்றி - அகன்றநெற்றி.
ஏறுபடி - அதிகப்படி, தாழ்வாரம்.
ஏறுபெட்டி - கருப்பநீர்ப்பெட்டி.
ஏறுபொழுது - இளநேரம்.
ஏறுமாறு - குழப்பம்.
ஏறுமிராசி - மகரமுதல் மிதுன மீறான இராசிகள்.
ஏறுவட்டம் - ஏறினவட்டம்.
ஏறுவால் - நீண்டவால்.
ஏறுவிடுதல் - மணமுடிக்கவருபவன் பிடிக்கும்பொருட்டு இடபம்விடுதல்.
ஏறுவெயில்-முன்பொழுதின்வெய்யில்
ஏறுழவர் - படைவீரர்.
ஏறூர்ந்தோன் - சிவன்.
ஏற்றெடுத்தல் - உயர்த்துதல், மேலெடுத்தல்.
ஏற்க-இசைவாயிருக்க, இணங்க, உவப்பாக, எதிர்க்க, பிச்சைவாங்க, முன்.
ஏற்என - முன்.
ஏற்குதல்-இணங்கல், இரத்தல், எதிர்த்தல், ஒப்புக்கொள்ளல், பிச்சைவாங்குதல், பொருந்தல், வாங்கல்.
ஏற்குமட்கலம் - கடிஞை.
ஏற்கென - முன்னே.
ஏற்கை - அங்கீகாரம், இணங்குகை, வாங்குந்தன்மை.
ஏற்படுதல்-உடன்படுதல், தலைப்படுதல்.
ஏற்படுத்தல்-இணக்கம்பண்ணுதல், நிச்சயித்தல், நிருமித்தல்.
ஏற்பாடு - உடன்பாடு, நியமம், பிரமாணம், பொருத்தம், முறை.
ஏற்பு - இரப்பு, ஈர்ப்பு, பொருத்தம்.

ஏற்புழிக்கோடல்-ஒருவகையுக்தி. அது ஏற்றவிடத்திற் பாவித்தல்.
ஏற்புறவணிதல் – தகவணிதல், மணமகளை யலங்கரித்தல்.
ஏற்போர் – இரப்போர்.
ஏற்ற – தகுதியான, பக்குவமான.
ஏற்றக்கால் – தூண், துலாவைத் தாங்குங்கால்.
ஏற்றக்குறைச்சல் – ஏற்றத்தாழ்ச்சி.
ஏற்றக்கோல்-ஏற்றக்கழி, துலாக்கொடி.
ஏற்றக்கால் – நீர்மொள்ளும் பாத்திரம்
ஏற்றது – இயன்றது, பொருந்தியது.
ஏற்றத்தாழ்ச்சி – ஒவ்வாமை, முன்பின்னாக, வேற்றுமை.
ஏற்றபடி – இசைந்தபடி.
ஏற்றமடல் – காமத்தோரூருமடல், துலாவாடுந் தூண்.
ஏற்றமரம் – துலா.
ஏற்றமாலை – ஒரு பிரபந்தம்.
ஏற்றமொழி – புகழ்மொழி.
ஏற்றம்-அதிகம், உயர்ச்சி, எழும்புதல், ஏற்றுகை, துலா, நீரேற்றம், புகழ், பெருக்கம், மிகுதி, மேன்மை.
ஏற்றம்வற்றல் – பெருக்குங்குறைவும்.
ஏற்றாவு – முகனை.
ஏற்றல் – அங்கீகரித்தல், அடுக்குதல், இணங்கல், நடத்தல், பொருந்தச்செய்தல், இரத்தல், உணர்த்தல், எதிர்த்தல், எழுப்பல், எறிதல், ஏற்றுதல், கொள்ளல், தகுதி.
ஏற்றார் – பகைவர்.
ஏற்றியல் – ஏறுதலினியல்பு.
ஏற்று – ஏற்றுதல், ஏற்றென்னேவல், மாத்தின்மேற்செய்த ஏதண்டை.
ஏற்றுக்கொள்ளுதல் – ஒப்புக்கொள்ளுதல், பெற்றுக்கொள்ளுதல்
ஏற்றுதல்-அதிகப்படுத்தல், உணர்த்தல், உள்ளேற்றுதல், எழுப்பல், உயாப்பண்ணுதல், ஏறப்பண்ணுதல்.
ஏற்றுதுறை – ஏற்றிவிடுந்துறை, துறைமுகம்.
ஏற்றுப்பனை – ஆண்பனை.
ஏற்றுமதி – தோணியிலே ஏற்றப்படுஞ்சாக்கு.
ஏற்றுவாகனன் – சிவன்.
ஏன – ஏனைய.
ஏனக்கோடு – பன்றிக்கொம்பு, வெதுப்படக்கி.
ஏனப்படம் – பன்றிமுகக்கடகு.
ஏனமுத்து – பன்றிக்கோட்டிற்பிறந்த பச்சைநிற முத்து.
ஏனம் – எழுத்தின்சாரியை, ஓலைக்குடை, கருவி, காட்டுப்பன்றி, தப்பிதம், பன்றி, பாத்திரம், பாவம்.
ஏனல்-கதிர், செந்தினை, தினைப்புனம், பைந்தினை.
ஏனவாயன் – தப்பிதக்காரன், பேதை.
ஏனவும் – ஒழிந்தவும்.
ஏனாதி – ஓரிலேகியம், தந்திரி, தளகர்த்தன், நாவிதன், மந்திரி, மறவன்.
ஏனாதிதிருக்கிள்ளி – ஏனாதிப் பட்டம் பெற்று விளங்கிய ஒரு வள்ளல். இவன் சிறப்புப் புறநானூற்றிற் கூறப்பட்டுள்ளது.
ஏனாதிநாயனார் – சிவனடியா ரறுபத்துமூவரி லொருவர்.
ஏனும் – ஒரு வினையெச்சவிகுதி.
ஏனை – ஒழிந்த, மலங்குமீன், மற்று.
ஏனைய – ஒழிந்தன.
ஏன் – இரக்கப்பொருளைத் தருமிடைச்சொல், என்னை, தன்மை யொருமை விகுதி.
ஏன்றல் – இயலல், குறித்தல், பொருந்தல்.

---

# ஐ

ஐ – தமிழ் மொழியின் ஐ நெடுக்கணக்கில்வரும் ஒன்பதாம் எழுத்து, உயிர் முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள் வாயைத்திறந்தும் முன்பல்லை அடிநாவினது விளிப்புப் பொருந்தியும்உச்சரிக்கப்படுவது. அரசன், அழகு, ஆசான், கடுகு, சர்க்கரை, சன்னி, தும்பை, தூர்க்கை, நுண்மை, மருந்து, பெருவியாதி, இரண்டனுருப, இருமல், எசமானன், ஓரிடைச்சொல், ஓரெழுத்து, கடவுள், குரு, கோ

ழை, சாரியை (உ-ம்) ஒற்றினேடேற்றை, சவ்வீரம், சிலேஷ்மம், சிவன், சுவாமி, பிதா, யானையைப்பாகனதட்டுமோசை, முன்னிலை யொருமை வினைவிகுதி (உ-ம்) வந்தனை, தொழிற்பெயர்விகுதி (உ-ம்) நடை, பண்புப்பெயர்விகுதி (உ-ம்) தொல்லை, வினைமுதற்பொருள் விகுதி, (உ-ம்) பறவை செயப்படுபொருள் விகுதி, (உ-ம்) தொடை, கருவிப்பொருள் விகுதி (உ-ம்) பார்வை.

ஐக - மல்லிகைமொக்குகள்.

ஐகாக்காரிகன் - திருடன்.

ஐகாக்கிரன் - ஒரே சித்தமுடையவன்.

ஐகாரக்குறுக்கம் - தன் மாத்திரையிற் சுருங்கிய ஐகாரம்.

ஐகாரம், ஐகான் } ஐகாரவெழுத்து.

ஐக்கம், ஐக்கியம் } ஒன்றிப்பு.

ஐக்கியவாதி - சமயிகளிலொருவன்.

ஐக்குரம் - கருப்பஞ்சாற்றாற் செய்யப்பட்ட கருந்தேன்.

ஐங்கணை - மன்மதனதுபஞ்சகணைகள். அவை தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, நீலோற்பலம் என்பன.

ஐங்கணைக்கிழவன் - மன்மதன்.

ஐங்கணைச்செயல் - மன்மதனது பஞ்சகணைகளாலு மேற்படுஞ் செயல்கள், அவை பெருமயக்கு, சிந்தாகுலம், புணர்ச்சிக் கிணங்குதல், மோகனம், சந்தாபனம், வசீகரணம், என்பன.

ஐங்கணையவத்தை - மன்மதனது பஞ்சகணைகளாலுமுண்டாகுமவத்தைகள்; அவை சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்பன.

ஐங்கதி - குதிரைகளின் பஞ்சகதிகள். அவை மல்லகதி, மயூரகதி, வானரகதி, இடபகதி, மனோகதி என்பன.

ஐங்கரற்கிளையோன் - முருகன், வீரபத்திரன்.

ஐங்கரன் - விநாயகன்.

ஐங்கலை - பஞ்சகலைகள். அவைவித்தியாகலை, நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலைஎன்பன.

ஐங்காயதயிலம் - பிண்டதயிலம்.

ஐங்காயம் - ஐந்துகாயம். அஃது உள்ளி, கடுகு, சுக்கு, பெருங்காயம், மிளகு, தலைப்பிள்ளைக்கரு.

ஐங்காவியம் - பஞ்சகாவியங்கள். அவை சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன.

ஐங்குரவர் - பஞ்சகுருக்கள், அவர் இராசா, குரு, தமையன், பிதா, உபாத்தியாயன்.

ஐங்குழு - அரசர்க்குரியபஞ்சகுழு, அவர் சாரணர், சேனபதியர், தூதர், புரோகிதர், மந்திரியர்.

ஐங்கோசம் - பஞ்சகோசம்; அவை அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆநந்தமயகோசம் எனப்படும்.

ஐங்கோல் - பஞ்சபாணம்.

ஐசானம் - ஈசானம்.

ஐசானி - வடகீழ்த்திசையானை.

ஐசானியன் - ஈசானன்.

ஐசிலம் - சிறுநாகம்.

ஐசுவரியம் - செல்வம், பாக்கியம்.

ஐஞ்சத்தி - பஞ்சசத்திகள்; அவை ஆதிசத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி என்பன.

ஐஞ்சாத்தகம் - பஞ்சபொறிகளை அடக்கித் தியானித்திருத்தல்.

ஐஞ்ஞூறு - ஓரெண்.

ஐட்டிகம் - ஓமச்சடங்கு.

ஐணம் - ஏணம்.

ஐணேயம் - பெண்மானினது தோல் தசை முதலானவை.

ஐதி, ஐதிகம் } ஓரளவை; அஃது தொன்று தொட்டுவருங் கேள்வியை நம்புவது.

ஐதியளவை - வழங்குங் கேள்விப்படி மெய்யென்றுணர்தல்.

ஐது - அடர்த்தியற்றது, அழகானது, அற்பம்.

ஐத்திரேயன் - ஜனமேஜயனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்த குரு.

ஐந்தக்கல் - பஞ்சேந்திரியங்களை யொடுக்குதல்.

ஐந்தக்கினி - பஞ்சாக்கினி.

ஐந்தங்கம் - பஞ்சாங்கம்; அவை வாரம், திதி, கரணம், யோகம், நட்சத்திரம், என்பன.

ஐந்தடிவிருத்தம் - கலிவிருத்தம், தரவு கொச்சகம்.
ஐந்தரம் - அழகுள்ளது, நெருக்கமின்மை, பனை, மந்தம்.
ஐந்தரு - பஞ்சதரு. அஃது அரிச்சந்தனம், கற்பகதரு, சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன.
ஐந்தருநாதன் - இந்திரன்.
ஐந்தலைநாகம் - ஒருபாம்பு.
ஐந்தவத்தை-பஞ்சாவத்தைகள்; அவை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன.
ஐந்தவம் - மிருகசீரிடம்.
ஐந்தவர் - கசியபகோத்திரத்தானாகிய இந்துவென்னு மந்தணன் கலைதேர் புலவர்பதினெண்மரைத்தருகவென்று சிவன்பால் வாங் கிடந்துபெற்ற புத்திரர். இவர் பதினெண்மரும் பிரமபதம்பெற்றுச் சிருட்டிசெய்தவர்.
ஐந்தவி - சரச்சுவதி.
ஐந்தவித்தல் - ஐம்புலனடக்கல்.
ஐந்தனுருபு - இன்வேற்றுமை.
ஐந்தாங்கால் - கலியாணத்துக்கு ஐந்து நாளைக்கு முன்னிடும் பந்தற்கால்.
ஐந்தாம்பக்கம் - சுக்கிலபக்கத்து ஐந்து பத்து பதினைந்தாம் நாட்கள்.
ஐந்தார் - பனை.
ஐந்தான்ம் - மிருகசீரிடம்.
ஐந்திணை - அன்புடைக்காமம், ஐவகை நிலம்.
ஐந்திணைச்செய்யுள் - ஒரு பிரபந்தம். அஃது புணர்தல் முதலிய ஐந்துரிப்பொருளும் விளங்கக் குறிஞ்சி முதலிய ஐந்திணையினையுங் கூறுவது.
ஐந்திணைத்தெய்வம் - பஞ்சதிணைகளுக்குமுரிய தேவர்கள். அவர் முருகன், துர்க்கை, திருமால், இந்திரன், வருணன் என்பவராம்.
ஐந்திந்திரியம் - பஞ்சேந்திரியங்கள். அவை மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.
ஐந்திரசாலிகன் - மாயைசெய்வோன்.
ஐந்திரம் - இந்திரசம்பந்தமானது, இந்திரனால் செய்யப்பட்ட ஒரு சம்ஸ்கிருத இலக்கணம், கிழக்கு, சிற்பநூலில் ஒன்று, நித்தியயோகத்தொன்று.
ஐந்திரவியாகரணம் - இந்திரனாற் செய்யப்பட்ட ஒரு வியாகரணநூல்.
ஐந்திரன்-அருச்சுனன், இந்திரன், வாலி
ஐந்திரி-இந்திராணி, ஒருமரம், கிழக்கு, கேட்டைநாள், துர்ப்பாக்கியம், பார்வதியம்மை.
ஐந்திரியகம் - இந்திரியங்களா லறியக்கூடியது.
ஐந்திரியம் - இந்திரியம், ஒருநூல்.
ஐந்திலக்கணம்-பஞ்சலட்சணம்; அவை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன.
ஐந்து - ஓரெண்.
ஐந்துப்பு - பஞ்சலவணம்; அவை இந்துப்பு, கல்லுப்பு, கறியுப்பு, வளையலுப்பு, வெடியுப்பு, என்பன.
ஐந்துருவாணி - தோகத்துச்செறிகதிர்.
ஐந்துருப்படக்கி - ஆமை.
ஐந்தை - சிறுகடுகு.
ஐந்தொகைவினை - ஒருகணக்கு.
ஐந்தொழில்-பஞ்சகிருத்தியம்; அவை சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்பனவாம்.
ஐந்நூறு - ஐந்துநூறு.
ஐப்பசி - அச்சுவினிநாள், ஒருமாதம்.
ஐமலம்-பஞ்சமலங்கள். அவை ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம், திரோதாயி என்பன.
ஐமிச்சம் - அச்சம், ஐயம்.
ஐமீன் - அத்தநாள், உரோகணி.
ஐமுகம்-சிவனதுபஞ்சமுகங்கள். அவை ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்பன.
ஐமுகன் - சிவன்.
ஐமுகாஸ்திரம் - ஒருபாணம்.
ஐமுகி - காட்டாமணக்கு, சிவன்.
ஐமை-அடர்பு, கூட்டம், தகட்டுவடிவு, பகுதி.
ஐம்படை-பஞ்சாயுதம்; அவை சக்கரம், வில், வாள், தண்டு, சங்கு என்பன.
ஐம்பது - ஓரெண்.
ஐம்பால் - ஆண்பால் முதலிய வைந்து பால், அவை ஒருவன், ஒருத்தி, ஒன்று, பல, பலர், ஐவகைமயிர்முடி, பெண்மயிர்.
ஐம்புலத்தடங்கான் - கடவுள்.
ஐம்புலநுகர்ச்சி-பஞ்சேந்திரியாநுபவம்

ஐம்புலம்வென்றோர் - முனிவர்.
ஐம்புலவிடையன் - இல்வாழ்வான்.
ஐம்புலனடக்கல் - சாத்துவித குணத்தொன்று. அஃது பஞ்சபுலனடக்கல்.
ஐம்புலன் - ஐம்புலம்.
ஐம்புலன்விழையான் - துறவி.
ஐம்புலன்வென்றோன் - அருகன், பஞ்சபட்சிப் பாஷாணம்.
ஐம்புலாதி - ஐம்புலன், பேராசை.
ஐம்பூதக்ஷேத்திரம் - பஞ்சாலயங்கள்; அவை காஞ்சி, திருவானைக்கா, திருவண்ணமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்பன.
ஐம்பூதம் - பஞ்சபூதம்.
ஐம்பூதலிங்கம் - பஞ்சபூதலிங்கம்.
ஐம்பூதியம் - பஞ்சபூதியம்.
ஐம்பொறி - பஞ்சேந்திரியம்.
ஐம்பொறியடக்கான் - இல்வாழ்வான்.
ஐம்பொறியடக்கி - துறவி.
ஐம்பொறிவிடயம் - ஐம்புலத்தானறியப்பட்டது.
ஐம்பொன் - பொன் முதலிய ஐவகையுலோகம். அவை இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி.
ஐம்முகப்பிரமன் - பூருவபிரமன்.
ஐய - அழகிய, ஐயனே, வியப்புச்சொல்.
ஐயகோ - ஐயோ.
ஐயக்கணசூலை - ஒருநோய்.
ஐயக்காட்சி - ஐயம், ஓரளவை. அஃது குற்றியோமகனோ எனக்காண்டல்.
ஐயக்காரன் - சந்தேகி, பிச்சைக்காரன்.
ஐயக்கிளவி - ஐயச்சொல்.
ஐயங்கவீனம் - புதுவெண்ணெய்.
ஐயங்கன் - ஒருபேய்.
ஐயங்காய்ச்சி - ஒருதேவதை, ஒருநோய்.
ஐயங்கார் - பிராமணருக்குள் ளதிகாரி, வைணவப்பிராமணன்.
ஐயச்சொல் - வினச்சொல். அவைஎன்னகொல், எவன், யாதென்பன.
ஐயஞ்சு - கிலப்பனைக்கிழங்கு.
ஐயடிகள்காடவர்கோனயனார் - தொண்டைநாட்டிற் பல்லவ ராசவமிசத்துதித்துச் செங்கோ னடாத்திய வோரரசர். இவர் அரசாட்சி துன்பமயமெனக்கருதி அதனை வெறுத்துப் புத்திரனை அரசனுக்கிச்சிவத்தொண்டையே மேற்கொண்டு ஸ்தலங்கடோறுஞ் சென்று தரிசனந் திருப்பணி முதலியன செய்துகொண்டிருந்து திருப்பதமடைந்தவர், க்ஷேத்திரக்கோவை வெண்பாப்பாடியவருமிவரே.
ஐயநாடி - சிலேட்டுமநாடி.
ஐயபூளி - பருமணல்.
ஐயப்படாமை - அறுத்துறுப்பினென்று அஃது சந்தேகப்படாமை.
ஐயப்படல் } சந்தேகப்படுதல்.
ஐயப்படுதல் }
ஐயமறுதல் - பஞ்சவினவி னென்று. அஃது சந்தேகந்தீர்த்தல்.
ஐயம் - இரப்போர்க்கலம், ஒருவிதக்காட்சி, கோழை, சந்தேகம், சிலேசித்துமம், பிச்சை, முத்திவிக்கினமூன்றினொன்று, மோர்.
ஐயர் - பார்ப்பார், பெருமையிற் சிறந்தோர், முனிவர், வானோர்.
ஐயவணி - ஓரலங்காரம். அஃது ஒப்புமையினொருபொருளை அதுவோ அதன் ஒப்புடைப்பொருளோவென ஐயமுறுதல் (உ-ம்) மானோவிழியோ கடுவோ வடுவோ.
ஐயவதிசயம் - ஓரலங்காரம்.
ஐயவி - கடுகு.
ஐயவிளக்கு - ஓரலங்காரம். அஃது ஐயுற்றதனை விலக்குதல்.
ஐயவினு - சந்தேகவினு (உ-ம்) குற்றியோ மகனோ.
ஐயவும்மை - சந்தேகவும்மை (உ-ம்) பத்தாயினு மெட்டாயினுங்கொடு.
ஐயவுவமை - ஓரலங்காரம். அஃது உவமையையும், பொருளையும் ஐயுற்றுரைப்பது (உ-ம்) முகமோ மலரோ வறியேம்.
ஐயனார் - அரிகரபுத்திரன், வனரட்சகன் இவன் சாத்தன்.
ஐயனார்கொடி - கோழிக்கொடி.
ஐயன் - அரசன், அருகன், அழகுடையவன், கடவுள், சிவன், உபாத்தியாயன், உயர்ந்தோன், ஐயனார், குரு, சாத்தன், தந்தை, மூத்தோன்.
ஐயாகோ - ஐயகோ.
ஐயாயிரம் - ஒரெண்.
ஐயானனம் - சிங்கம்.
ஐயானனன் - சிவன்.
ஐயிதழ் - ஒருதுத்தி.

ஐயுறல் - ஐயப்படல்.
ஐயுறுதல் - ஐயுறல்.
ஐயுறவு - சந்தேகம்.
ஐயூர் - மூலங்கிழார் முடமோ சென்னும் புலவர்களைத் தந்தவூர்.
ஐயெனல் - விரைவின் குறிப்பு.
ஐயே - விளிக்குறிப்பு.
ஐயை-காளி, தலைவி, தவப்பெண், தாய், துர்க்கை, பார்வதி, மகள்.
ஐயையோ } அதிசயவிரக்கச்சொல்,
ஐயோ } இரக்கச்சொல்.
ஐராணி - இந்திராணி, பார்ப்பதி.
ஐராவணம்-அமிர்தம், இந்திரன்யானை, ஒருமரம், கீழ்த்திசையானை.
ஐராவணன் } இந்திரன்.
ஐராவதப்பாகன் } இந்திரன்.
ஐராவதம்-இந்திரன்யானை, கீழ்த்திசை யானை, தோடை, மின்னல்.
ஐராவதி - ஒருநதி, மின்னல், யமன் மனைவி.
ஐரிணம் - ஒருப்பு.
ஐரேயம் - கள்.
ஐலபிலன்-குபேரன், திலீபனென்னு மரசன்.
ஐலவிலன் - இலவிலன்மகன்.
ஐலேயம் - ஏலம் விளையும்பூமி.
ஐலேயன் - புரூரவச்சக்கிரவர்த்தி.
ஐவகைக்குசலவித்தை - ஐந்துவகையான குசலவித்தைகள், அவை எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்வாசித்தல் என்பன.
ஐவகைத்தெய்வமணி-ஐந்து வகையான தெய்வமணிகள். அவை சிந்தாமணி, சூடாமணி, சூளாமணி, சிபந்தாகமணி, கௌத்துவமணி என்பன.
ஐவகைப்பொழுது - சிறு பொழுதில் வகையைந்து; அவை காலை, நண்பகல், மாலை, யாமம், வைகறை.
ஐவகைப்பாதம் - எழுவகைக் கூத்துக்களினிலக்கணத்தொன்று; அது சமயநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிதம், குஞ்சிதம் என்பது.
ஐவகைமயிர்முடி - ஐவகைக் கூந்தல்; அவை குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி.
ஐவகைமன்றம் - காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஐந்து வகையான மன்றம்; அவை வெள்ளிடை, இலஞ்சி, கல், பூதசதுக்கம், பாவை என்பன.
ஐவகையுலோகம் - ஐவகைப்பொன்.
ஐவகைவேள்வி-ஐந்துவகையானயாகம் அவை தேவயாகம், பிரமயாகம், பூதயாகம், மானுடயாகம், பிதிர்யாகம் என்பன.
ஐவணம் } மருதோன்றி.
ஐவணி } மருதோன்றி.
ஐவண்ணமணி - சௌகந்திகப்பதுமராகமணி.
ஐவருக்கம் - வடமொழி நெடுங்கணக்கிற்ககரமுதன்மகரவிறுவாய்க்கிடந்த இருபத்தைந்து மெய்யெழுத்துகள்.
ஐவருக்குந்தேவி - துரோபதை.
ஐவர் - பஞ்சபொறி, பாண்டவர்.
ஐவனம் - மலைநெல்.
ஐவாய்மான் - பசு.
ஐவாய்மிருகம் - கரடி, சிங்கம்.
ஐவிரலி - ஐவேலிக்கொடி.
ஐவிரல் - அத்தநாள்.
ஐவேலி-ஒருகொவ்வை, ஒருசிவஸ்தலம்

---

# ஒ



ஒ - தமிழ்மொழியின் நெடுங்கணக்கில் வரும் பத்தாம் எழுத்து, உயிர்முபற்சியாற்பிறக்கும் எழுத்துக்களுள் அங்காப்பாகிய அகரக்கூறும் இதழ்குவிவாகிய உகரக்கூறும் சந்தித்துப் பிறந்த ஒருகுற்றுயிர், ஒருஉயிரெழுத்து.
ஒஃகல் - ஒதுங்கல்.
ஒகரம் - ஒரெழுத்து, மயில்.
ஒக்க - ஒருமிக்க, கூட, சமமாயிருக்க, தகுதியாயிருக்க, நிகர்க்க, பொருந்த, மெத்த.
ஒக்கம் - அசமதாகம், உயர்ச்சி, ஊர்ப்பொது, எழுதல், கரை, கிராமம், பட்டினம்.
ஒக்கவிடுதல் } இனங்கூட்டல், ஒப்புரவாகல், சுற்ற முறைமை நடப்பித்தல்.
ஒக்கவிடுத்தல் } இனங்கூட்டல், ஒப்புரவாகல், சுற்ற முறைமை நடப்பித்தல்.
ஒக்கலை - மருங்கின்பக்கம்.

ஒக்கல் - இடைப்பக்கம், சமமாயிருத்தாதசுற்றம், உறவு, ஒத்தல், குடி, மூட்டுதல்.
ஒக்கல்போற்றல் - வேளாண்மை மாந்தரியல்புளொன்று. அஃது சுற்றத்தைப்பேணல்.
ஒக்குதல் - கொப்பளித்தல், சமானித்தல், பிற்படவிடல்.
ஒக்கை - பாண்டிநாட்டிலுள்ள ஒக்கூரெனுமொரு நகரம்.
ஒக்கொாலை - அம்பர்.
ஒசிதம் - கற்றாழை.
ஒசிதல் - அசைதல், ஒடிதல், துவளல், முறிதல், முறுகல்.
ஒசிப்பு - முறிக்கை.
ஒசிவு - அசைவு, முரிவு.
ஒச்சந்தம்-உச்சந்தம், குறைந்திருக்கை.
ஒச்சம் - ஒச்சை, கவனித்தல், பழுது, வெட்கம்.
ஒச்சித்தல் - வெட்கப்படுதல்.
ஒச்சியம்-நிந்தை, பரிகாசம், வெட்கம்.
ஒச்சை - உற்றுக்கேட்டல்,காந்தர்சோறு
ஒஞ்சரிதீர்ப்பு-ஓரவாரமானதீர்வை.
ஒஞ்சரித்தல்-ஒருச்சாய்த்தல், ஒருபக்கமாய்ப்போதல்.
ஒஞ்சரிவழக்கு - ஒருதலைவழக்கு.
ஒஞ்சி - ஸ்தனம், மார்பு, முலைக்காம்பு
ஒஞ்சித்தல், ஒஞ்சுதல் } மனதையடக்கல், வெட்கப்படுதல்.
ஒடி - ஒடியென்னேவல், கவண்.
ஒடிசில் - கவண்.
ஒடிதல் - முறிதல்.
ஒடித்தல் - ஒளிசெய்தல், முறித்தல்.
ஒடியல் - ஒடிபட்டது, பனங்கிழங்குக்குப் பிளவு.
ஒடியல் - பனங்கிழங்கின்மா.
ஒடிவு - முறிவு.
ஒடு - இசைநிறையிடைச்சொல் (உ-ம்) சொல்லென்றெய்யமின்னெடுபெயர்த்தே ஒடுக்கடி, ஒருமரம், புண்ணிற்கள்ளம், மூன்றுமுருபு (உ - ம்) கையொடுகாலும்.
ஒடுக்கட்டி - கழலைக்கட்டி.
ஒடுக்கநாள் - இடைஞ்சனாள்.
ஒடுக்கம் - அடக்கம், அமைவு, சுருக்கம், நெருக்கமானவிடம், பதுங்கல், முடிவு, வழிபாடு.
ஒடுக்கல் - ஒடுக்குதல்.
ஒடுக்கவணக்கம் - கீழ்ப்படுகிற குணத்தோடேகூடிய வணக்கம்.
ஒடுக்கிடம் - நெருக்கமானவிடம், மறைவிடம், மூலை.
ஒடுக்கு - அடக்கம், இடுக்கு, ஒடுக்கென்னேவல், ஒடுங்கினது, நெருக்கமானது.
ஒடுக்குச்சீட்டு - வரிச்சீட்டு.
ஒடுக்குதல் - அடக்குதல், இறையிறுத்தல், குறைத்தல், சுருங்கப்பண்ணுதல், வருத்தப்படுத்துதல்.
ஒடுக்குத்துண்டு - பற்றுத்துண்டு.
ஒடுக்குவாய் - ஒடுங்கினவாய், கோணல்வாய்.
ஒடுங்கல் - அடங்கல், ஒதுங்கல், ஒளிமழுங்கல், கீழ்ப்படிதல், சுருங்கல், சோரல், பதுங்கல்.
ஒடுங்கி - ஆமை.
ஒடுங்குண்ணல் - ஒக்கப்படுதல்.
ஒடுங்குதல் - ஒடுங்கல்.
ஒடுதடங்கல் - நெளிந்தது, நேரற்றது, வளைந்தது.
ஒடுத்தங்கல், ஒடுநிற்றல் } பருவிற்சீத்தங்கல்.
ஒடுவங்காய் - ஒருகாய்.
ஒடுவடக்கி-குப்பைமேனி, திராய்மரம்.
ஒடுவெண்ணெய்-பருவிலுள்ளசீழ் வரப்போடும் ஒருதயிலம்.
ஒடை - ஒருமரம்.
ஒட்ட - அடியோடே, அணுக, இழுக, கிட்ட, சேர.
ஒட்டகப்பாரை - ஒட்டாம்பாரையென்னுமீன்.
ஒட்டகம் - ஒருமிருகம்.
ஒட்டக்கூத்தர் - குலோத்துங்கசோழன் சமஸ்தானத்தில் விளங்கிய தமிழ்ப்புலவர், இவர் ஜாதியில் செங்குந்தர்.
ஒட்டங்கி - கன்னார்கருவியினொன்று.
ஒட்டச்சி - பூவழலை.
ஒட்டடை - சிலம்பிக்கூடு, புகையுறை.
ஒட்டத்தி - ஒட்டுத்துத்தி.
ஒட்டம் - இகலாட்டம், உடன்படிக்கை, ஒடு, ஓர்தேயம், சபதம், தோண்டலளவைத்திடர், பந்தயப்பொருள்.
ஒட்டர், ஒட்டலர் } ஒட்டதேசத்தார், பகைவர், மண்வேலைக்காரர்.
ஒட்டலன் - ஓரலன், பகைவன், மெலிந்தவன்.

ஒட்டல் - இடங்கொடுத்தல், உடன்படல், ஒட்டுதல், ஒளித்தல், குறுகல், சேர்த்தல், வற்றல்.
ஒட்டறை - புகையுறை.
ஒட்டற்காது - சுருங்கற்காது.
ஒட்டாக்கொற்றி - கணவனிடத்திலும் குழந்தைகளிடத்திலும் ஆசையில்லாதவள், கறக்கவிடாதபசு.
ஒட்டாரம் - முரட்டுத்தனம்.
ஒட்டார் - பகைவர்.
ஒட்டாவுருவம் - கருக்கற்சிலை.
ஒட்டி - ஒட்டொட்டிப்பூடு, ஒருமீன்.
ஒட்டிக்கிரட்டி - ஒன்றுக்கிரண்டு பங்கு.
ஒட்டிக்குவான் - ஒருபுல்.
ஒட்டியக்கரு-ஒட்டியவித்தைக்குவேண்டுங்கரு.
ஒட்டியம் - அஷ்டகருமநூலினொன்று. ஒரு பாஷை, தேயமைம்பத்தாறில் ஒன்று, மாந்திரிகவித்தை.
ஒட்டியர் - ஒட்டியதேசத்தார், ஒரு சாதியார்.
ஒட்டியாக்குதல்-இணையாக்கல், சமனாக்கல்.
ஒட்டியாணம் - ஓராபரணம், மாதரிடையணி, யோகப்பட்டை.
ஒட்டியாதேவி - சூனியக்காரர் பூசிக்குந்தேவதை.
ஒட்டினர் - சினேகிதர், மித்திரர்.
ஒட்டு-அருகு, இகலாட்டம், இணைக்கப்பட்டது, ஒட்டென்னேவல், ஒளிப்பிடம், ஒன்றிப்பு, ஓலங்காரம். அஃது கவிதான் கருதிய பொருளை மறைத்ததன்பொருளை வெளிப்படுத்தற்குறிய பிறிதொன்றைச் சொல்வது, கண்ணி, கதிர்கொய்த தாள், சபதம், நற்சமயம், சிறுகடுக்கன், திண்ணைக்குந்து, படைவகுப்பு, புல்லூரி.
ஒட்டுக்கடுக்கன்-சிறுகடுக்கன். [வாய்ப்பு.
ஒட்டுக்கண் - கண்ணினோர்நோய்.
ஒட்டுக்காய்ச்சல் - உடம்போடொத்த காய்ச்சல், தொத்துக்காய்ச்சல்.
ஒட்டுக்கிரகணி - ஒருவகைக் கிரகணி ரோகம். இது படுக்கையே இதமாகத்தோற்றல், இளைப்பு, வயிற்றிலதிகநோவு, மார்பு, விலா, முதுகாகிய இடங்களில் வலித்தல் முதலிய குணங்களை யுண்டாக்குவது.

ஒட்டுக்கு - ஒருமிக்க.
ஒட்டுக்குஞ்சு - சிறுகுஞ்சு, பேன்குஞ்சு.
ஒட்டுக்குடி - ஒதுக்குக்குடி.
ஒட்டுக்கும் - முழுதும்.
ஒட்டுக்கேட்டல் - ஒளித்து விசேஷங்கேட்டல்.
ஒட்டுக்கொடுத்தல் - இடங்கொடுத்தல்.
ஒட்டுச்செடி - ஒட்டொட்டி.
ஒட்டுடந்தை - உரித்து, சொற்ப சம்பந்தம்.
ஒட்டுதல் - இடங்கொடுத்தல், சுருங்கல், சேர்த்தல், பொருந்துதல், பொருந்துதல்.
ஒட்டுத்திண்ணை - திண்ணைக்குந்து.
ஒட்டுத்தீட்டுக்கலப்பு-உதிரக் கலப்பான உறவு.
ஒட்டுத்துத்தி - ஒருதுத்தி.
ஒட்டுத்தையல் - ஒருதையல்.
ஒட்டுநர் - மித்திரர்.
ஒட்டுப்பார்த்தல் - உளவுபார்த்தல்.
ஒட்டுப்புதவம் - இரட்சதம்.
ஒட்டுப்புல் - ஒருபுல்.
ஒட்டுப்போடல் - சமயம்பார்த்தல்.
ஒட்டுமயிர்-வெட்டிமுளைத்தகுறள்மயிர்.
ஒட்டுரிமை - உடந்தை.
ஒட்டுருவம், ஒட்டுவிசேடம் } மாலிக்கிரகம்.
ஒட்டுவிசேஷம் - ஒட்டிநின்று கேட்கும் வார்த்தை, கட்டுக்கதை.
ஒட்டுவிடல், ஒட்டுவிடுதல் } பிரிந்துபோதல்.
ஒட்டுவித்தை - இந்திர சாலத்திலோர் வித்தை.
ஒட்டுவியாதி - தொத்துநோய்.
ஒட்டுவேலை - ஒட்டுவைக்கிறவேலை.
ஒட்டுவைத்தல்-ஆணியிடல், ஒளிவைத்தல், கண்ணிவைத்தல்.
ஒட்டுறவு - உரித்துறவு.
ஒட்டை - ஒட்டகம், பத்துவிரற்கிடை.
ஒட்டொட்டி - ஒருசெடி, ஒட்டங்காய்ப்புல்.
ஒட்டோலகம், ஒட்டோலக்கம் } ஆடம்பரம், சனத்திரள், வெற்றி.
ஒட்பம்-அழகு, நன்மை, முதுக்குறைவு, மேன்மை.
ஒண்டன் - ஆணரி, நரி.
ஒண்டி - தனிமை.

ஒண்டொடி - பிரகாசமான வளையலணிந்த பெண்.
ஒண்ணல் - கூடுதல், பொருந்துதல்.
ஒண்ணாதது - ஒவ்வாதது.
ஒண்ணாப்பு - இயலாப்பு.
ஒண்ணாமை - கூடாமை, தகாமை.
ஒண்ணுதல் - இயலுதல், பெண்.
ஒண்மை-அழகு, அறிவு, ஒழுங்கு, ஒளி, நன்மை, மிகுதி.
ஒதி - உதயமரம்.
ஒதுக்கம் - ஒதுங்கியிருக்கை, ஒழுக்கம், தாழ்மை, தீட்டு, நடை, பதுங்குகை, பின்னிடுகை, மறைவு.
ஒதுக்கல் - ஒதுங்கச்செய்தல், தீர்த்தல்.
ஒதுக்கிடம் - புகலிடம், மறைவிடம்.
ஒதுக்கு - ஒதுக்கென்னேவல், சார்பு, மறைவு.
ஒதுக்குக்குடி - இரவற்குடி.
ஒதுக்குதல் - தீர்த்தல், புடவை, முதலிய ஒதுக்குதல்.
ஒதுக்குப்படல்-காற்றைக்காக்கும்படல்.
ஒதுக்குப்பாடு - மறைவு.
ஒதுக்குப்புறம் - ஒதுக்குப்பாடு.
ஒதுங்கல் - நடத்தல், பதுங்கல், விலகல்.
ஒதுங்கிடம் - புழக்கடை.
ஒதுங்கிநடத்தல் - தாழ்மையாய் நடத்தல், விலகி நடத்தல்.
ஒதுங்குதல் - ஒதுங்கல்.
ஒதுங்குபுறம் - புறம்போக்கு.
ஒதுப்புறம் - ஒதுக்கிடம்.
ஒத்த - சரிவந்த.
ஒத்தபண்புரைப்போர் - தூதர்.
ஒத்தமொழி - ஒருசரி, ஒன்றுபோல.
ஒத்தல்-ஒத்துதல், ஒப்பு, சமானித்தல், தாளம்போடல், நடு, பொருந்தல், விலகல்.
ஒத்தவாக்கியம்-ஒன்றுபோன்றவசனம்
ஒத்தறுத்தல் - தாளம்போடல்.
ஒத்தாசை - உதவி.
ஒத்தாப்பு - ஒதுக்கு, குடில்.
ஒத்திக்கை-உதவி, ஒத்திருக்கை.[ணம்.
ஒத்திசை - விட்டிசையாதிசைக்கும் ப
ஒத்திடுதல் - ஒத்துப்பிடித்தல், தாளம் போடுதல்.
ஒத்து-ஒத்தென்னேவல், ஒருகுழல்.
ஒத்துக்கொள்ளுதல் - ஒப்புவித்துக்கொள்ளுதல், சம்மதித்தல்,
ஒத்துதல் - ஒற்றிடுதல், தாளம்போடுதல், விலகுதல்.
ஒத்துப்பார்த்தல் - சரிபார்த்தல்.
ஒத்துவாழ்தல் - இணங்கியிருத்தல்.
ஒத்துவிடுதல் - இணங்கிவிடுதல், ஒப்பித்து விடுதல்.
ஒப்ப உவமையுருபு (உ-ம்) மதியொப்ப.
ஒப்பக்கதிர் - பணியையொப்பனைசெய்யுங்கருவி.
ஒப்பங்கொடுத்தல் - அழுத்துதல், கட்டளைகொடுத்தல்.
ஒப்பச்செய்தல் - ஒத்துக் கொள்ளச் செய்தல்.
ஒப்பச்சொல்லல் - ஒத்துக் கொள்ளச் சொல்லல்.
ஒப்படியிருக்கை - யாழ்வாசிக்கு மிருப்பினுளொன்று.
ஒப்படை } ஒப்புக்கொடுத்தல்.
ஒப்படைத்தல் }
ஒப்பணி - ஓரலங்காரம்.
ஒப்பந்தம் - உடன்படிக்கை, ஒப்பரவு, சமன்.
ஒப்பமிடுதல் - உலோகங்களை யொப்பனையாக்கல், கையெழுத்துப் போடுதல்.
ஒப்பம் - அதிகாரப்பத்திரிகை, அழைப்புப்பத்திரம், கையெழுத்து, சமம், கிலமுதலியவற்றி னொப்பம், மினுக்குதல்.
ஒப்பம்பண்ணுதல் - ஒப்பனையாக்கல்.
ஒப்பரவு-ஒப்பம், ஒழுங்கு, சமாதானம்.
ஒப்பம் - ஒப்புதல். [தை அறிவது.
ஒப்பளவை - உவமையினு லுவமேயத்
ஒப்பனை - அலங்கரித்தல், அலங்காரம், உவமை, ஒப்பரவு, சமம், சாட்சி, செவ்வை, திருட்டாந்தம், பாவனை.
ஒப்பாகல் } சமானமாகுதல், சரிவருதல், திருட்டாந்தமாதல்.
ஒப்பாகுதல் }
[கல்.
ஒப்பாக்குதல் - இணையாக்கல், சமனாக்
ஒப்பாசாரம் - உடன்படிக்கை, ஒத்த ஒழுக்கம், கண்சாடை, மாரீசம்.
ஒப்பாரி-ஒப்பு, ஒப்புச்சொல்லியழுதல்.
ஒப்பிடல் } உவமித்தல், சமப்படுத்தல்.
ஒப்பிடுதல் }
ஒப்பிதம்-இசைவு, ஒவ்வுதல், சமம், சம்மதம், சம்மதித்தல்.

ஒப்பிலாநாயகி - திருநெடுங்களத்திற் கோயில்கொண்டிருக்குந் தேவி.
ஒப்பிலாமுலையம்மை-திருவாவடுதுறையில் கோவில்கொண்டிருக்குந்தேவி.
ஒப்பிலுவமை-ஓரலங்காரம். அஃது ஒப்பின்றெனக்கூறுதல் (உ-ம்) தானே தனக்குநிகர்.
ஒப்பில்போலி - ஒப்புமையைக் காட்டவாராதபோலென்னுஞ்சொல்.
ஒப்பின்முடித்தல் - ஒருயுத்தி.
ஒப்பு-அழகு, அவமானம், ஒப்பாரி, ஒப்பென்னேவல், கூட்டு, சமன், சம்மதம், சாயல், பொருந்தல்.
ஒப்புக்கொடுத்தல் - ஒப்புவித்தல், கையளித்தல்.
ஒப்புக்கொப்பாரம் - விருந்து முதலிய உபசாரஞ்செய்தல்.
ஒப்புக்கொள்ளல், ஒப்புக்கொள்ளுதல் - ஏற்றுக்கொள்ளுதல், திருத்திபொருந்தல்.
ஒப்புதல் - ஒத்தல், சம்மதித்தல், பொருந்தல்.
ஒப்புப்பொருள் - புகழ் பொருளினுந் தன்னிலுமிருக்கிறசாதாரணதருமத்தினு லுவமானமாகிற பொருள் (உ-ம்) காக்கையிற்கரிது களம்பழம்.
ஒப்புமை - உவமானம், சமானம்.
ஒப்புமைக்கூட்டம் - ஓரலங்காரம். அஃது பலபொருளைப் பொதுவாகியவொரு தருமத்தின் முடித்தல்.
ஒப்புமைக்கூட்டவணி - ஓரலங்காரம். அஃது பலபொருளை யொருதருமத்தின் முடித்துவமானித்தல்.
ஒப்புரவு - உபகாரம், ஒற்றுமை, கொடை, சமம், சமாதானம், முறைமை.
ஒப்புவமை - ஓரலங்காரம்; அஃது உவமிக்கப்பட்ட பொருளை மற்றோருவமை கொடுத்துவமிப்பது.
ஒப்புவித்தல் - அத்தாட்சிபண்ணல், ஒப்புக்கொடுத்தல்.
ஒப்புறுத்தல் - உவமித்தல்.
ஒமை - மாமரம்.
ஒம்மல் - ஓமல்.
ஒயிலமரம்-ஆக்கினைக்கென்று நிறுத்தியமரம்.
ஒயில் - அலங்காரம், ஒய்யாரம், சாயல்.
ஒய் - யானையைப் யாகர் வையும் ஆரியமொழி.
ஒய்தல் - தவிர்தல்,
ஒய்யல் - ஒழிதல். செலுத்தல்.
ஒய்யாரம் - அலங்காரம், ஆடம்பரம், செருவம், சாயல்.
ஒய்யெனல் - மந்தக்குறிப்பு
ஒரித்தல் - இட்டமாயிருத்தல்.
ஒரு - ஒன்று என்பதின் திரிபு.
ஒருகட்பகுலாய்ப்பறை - பதலை.
ஒருகண்டசீர் - எப்போதும்.
ஒருகண்ணன் - ஒற்றைக்கண்ணன்.
ஒருகண்ணுக்குறங்கல் - ஒரு முறையுறங்கல்.
ஒருகலை - திதி.
ஒருகாலிலி - குபேரன், சனி.
ஒருகால் - ஒருமுறை, ஒற்றைக்கால்.
ஒருகிடை - கிடந்தகிடை.
ஒருகுடி, ஒருகுடித்தமர் - தாயத்தார்.
ஒருகு, ஒருகூட்டு, ஒருகை - ஒருசேர்மானம், ஒருபக்கம், ஒன்றிப்பு.
ஒருகொடி - ஒருவமிசம்.
ஒருகொள்ளை - மிகுதி.
ஒருக்கணித்தல் - ஒருச்சாய்த்தல்.
ஒருக்கம்-ஒருதன்மை, மனவொடுக்கம்.
ஒருக்கல் - அழித்தல், ஒருப்படுத்தல்.
ஒருக்கால் - ஒருமுறை.
ஒருக்கிடை - ஓய்ந்கிடை.
ஒருக்குதல் - ஒருப்படுத்தல்.
ஒருங்கல் - அடங்கல், கேடு.
ஒருங்கு - அடக்கம், அழிவு, எல்லாம், ஒருங்கென்னேவல், ஒருதன்மை, ஒருமிக்கக்கூடி நிற்றல்.
ஒருங்குடன்றோற்றம் - ஓரலங்காரம். அஃது காரணகாரிய மொருங்கு தோற்றல்.
ஒருங்குதல்-அடங்குதல், அழிதல், ஒருவழிப்படல்.
ஒருசந்தி-ஒருநேரப்போசனம், விரதம்.
ஒருசாயல் - அபூர்வம், ஒரேமாதிரி.
ஒருசாய்வு - இடைவிடாமை, ஒருகண்டசீர்.
ஒருசாரார்-ஒருநூலாசிரியர், ஒருபுடையார்.
ஒருசார் - ஒருபக்கம்.
ஒருசிறை - ஒதுக்கிடம், ஒருபக்கம்.
ஒருசேர் - ஒருமிக்க.

ஒருசொன்னீர்மை-ஒருசொற்றன்மை.
ஒருச்சரிதல் - ஒருபுறத்துக்குச்சரிதல்.
ஒருச்சரிவு - ஒருச்சரிதல்.
ஒருச்சாய்தல் - ஒருபுறத்துக்குச் சாய்தல்.
ஒருச்சாய்த்தல் - ஒருபக்கத்துக்குச் சாயப்பண்ணல்.
ஒருசாய்பு - ஒருபுறத்துக்குச்சரிவு.
ஒருதடவை - ஒருமுறை, ஒருவிதம்.
ஒருதலை - உறுதி, ஒருபக்கம், நிசம்.
ஒருதலைக்காமம் - ஆடவனும் பெண்ணுமங்கங்கிருந்து வருந்தல்.
ஒருதலைதுணிதல் - ஒருயுத்தி.
ஒருதலைநோவு - ஒருத்தலைவலி.
ஒருதலையுள்ளுதல் - ஒருதலைக் காமத்தோர் புணர்ச்சியை யிடைவிடாது நினைத்தல். அது பத்தவத்தையில் ஒன்று.
ஒருதலைவழக்கு - ஒருத்தலைநியாயம்.
ஒருதன்மை - ஒருநிலை, ஒரேவிதம், மாறுததன்மை.
ஒருதாரை - ஒருமிக்க.
ஒருதாரைக்கத்தி - ஒருபுறங் கூருள்ள கத்தி.
ஒருதி - ஓரெழுத்தசை.
ஒருத்தலைநியாயம் - ஒருபுறநியாயம்.
ஒருத்தலைப்பரம் } ஒருபுறத்துப் பாரம்.
ஒருத்தலைப்பாரம் }
ஒருத்தலைவலி-ஒருபுறத்துத் தலைவலி.
ஒருத்தல்-எருமை, கரடி, கவரி, பன்றி, புலி, புல்வாய், மரை, மான், யானை, இவற்றினாண், யானை, விலங்கேற்றின் பொது.
ஒருத்தன் - ஒருவன்.
ஒருநெல்லுப் பெருவெள்ளை-ஒருவகை நெல்.
ஒருநேரம் - அகாலம்.
ஒருபடி-ஒருகொத்து, வகை, வருத்தத்தோடே.
ஒருபடித்தாய் - அவ்விதமாய், பிரயாசமாய், மட்டாய்.
ஒருபவம் - ஒருபிறப்பு.
ஒருபாவொருபஃது - ஒரு பிரபந்தம். அஃது அகவல், வெண்பா, கலித்துறையென்னு மிவற்றொன்றா லந்தாதித்தொடையாய்ப் பத்துச்செய்யுட் பாடுவது.
ஒருபிடி-உறுதி, ஒரேபற்று, பிடிவாதம்.
ஒருபுடை - ஒருபக்கம்.
ஒருபுடையொப்புமை - ஏகதேசவுவமம்.
ஒருபொருட்டீபகம்-ஒரு பொருளானே கவிமுற்றுந் தீபகமாய் நின்று முடிவது.
ஒருபொருட்பன்மொழி - ஒரு பொருளைக் குறித்துவரும் பலசொல்.
ஒருபொருள் - எதார்த்தம், கடவுள்.
ஒருபொருள்குறித்த பலபெயர்த் திரிசொல் - செந்தமிழ்நிலத்து மொழிகளாய்ச் செய்யுட்கேயுரியவாய்க் கற்றோர்க்கு மாத்திரம் பொருள் விளங்குவனவாய் ஒன்றன் பெயரையே விளக்கும் பல பெயர்த்திரி சொல் (உ-ம்) கிள்ளை, தத்தை.
ஒருபொருள்குறித்த பலவிடைத் திரிசொல் - செந்தமிழ் நிலத்துமொழிகளாய்க் கற்றோர்க்குமாத்திரம் பொருளைவிளக்கி ஒருபொருடரும் பலவிடைத்திரிசொல் (உ-ம்) என், ஏன்.
ஒருபொருள் குறித்த பலவினைத் திரிசொல் - செந்தமிழ்நிலத்து மொழிகளாய்க் கற்றோர்க்கு மாத்திரம் பொருள்விளக்கித் திரிசொல்லாய் நிற்கும் பலவினைச்சொல் (உ-ம்) சரித்தான், நடந்தான்.
ஒருபொழுது - ஒருகாலம், ஒருசந்தி.
ஒருபோகு - கொச்சகக்கலிப்பாவினுள் ஒன்று.
ஒருபோக்கு-ஒருமுறைபோகுதல், ஒருவிதம்.
ஒருப்படல் - ஒருமனப்படல், ஒன்றித்தல், சம்மதித்தல்.
ஒருப்பாடு - சம்மதம்.
ஒருப்பார்வை - விடாதுபார்த்தல்.
ஒருப்பிடி - உறுதிப்பிடி, வலுபிடி.
ஒருமட்டம் - ஒரேசரி.
ஒருமரம் - அழிஞ்சில், செம்மரம்.
ஒருமனப்படல் } ஐம்புலனடக்கல், ஒரு எண்ணமாதல்.
ஒருமனப்படுதல் }
ஒருமாதிரி - ஒருவிதம்.
ஒருமிக்க - ஏகமாய்.
ஒருமித்தல்-ஒன்றுபடல், சம்மதித்தல்.
ஒருமிப்பு - இசைவு, ஒன்றிப்பு.
ஒருமு - ஓரசையானகியமொழி.
ஒருமுகம் - ஒருகூட்டம், ஒருபுறம்.

ஒருமுறை - ஒருதடவை.
ஒருமை - இறையுணர்வு, ஒருதன்மை, ஒருபிறப்பு, ஒற்றுமை, ஓர்மரம், தனிமை, நிச்சயம்.
ஒருமைப்படல் } உடன்படல், ஒற்றுமைப்படல்.
ஒருமைப்படுதல் }
ஒருமைப்பாடு - ஒன்றிப்பு.
ஒருமைமகள் - பதிவிரதை.
ஒருமையிற்பன்மை - ஒருமைப்பாலிற் பன்மைப்பால் கூறல் (உ-ம்) ஒருவர் வந்தார்.
ஒருமொழி - ஒருபொருளையே விளக்கி நிற்குஞ்சொல்.
ஒருலாகை - ஒருவகை.
ஒருவகை - ஒருபோக்கு, ஒருவிதம்.
ஒருவந்தம் - உறுதி, ஒற்றுமை, சம்பந்தம், தனித்திருக்குமிடம்.
ஒருவயிற்போலியுவமை - ஓரலங்காரம்; அஃது ஒருதொடர்மொழிக்கட் பலவுவமைவர அவ்வுவமைதோறு முவமைச்சொற் புணர்ந்துவருவது.
ஒருவல் - ஒருவுதல்.
ஒருவழிச்சேறல் விலக்கு-ஓரலங்காரம்; அஃது ஒரு பொருட்கோர் காரியங் காட்டி அதற்கு மாத்திரமன்று இன்னுஞ் சிலவற்றிற்குண்டெனக் கூறுவது.
ஒருவழித்தணத்தல் - அகப்பொருட்கிளவிக்கொத்தினு ளொன்று.
ஒருவழிப்படல் } ஒன்றுய்ச்சேர்தல், நேர்படுதல்.
ஒருவழிப்படுதல் }
ஒருவழிமேவல் - ஓரவாரம்.
ஒருவழியொப்பி - ஞெருபொருண் மொழிதல், ஓரலங்காரம்.
ஒருவிசை - ஒருமுறை.
ஒருவியாழவட்டம் - குருசூரியனைச்சுற்றிவருகிறபன்னிரண்டுவருஷகாலம்
ஒருவினைச்சிலேடை - ஓரலங்காரம், அஃது ஒருவினையான்வருவது.
ஒருவு - ஆடு, செய்யுளுறுப்பினோர்பேதம், நீங்குகை, நீங்கென்னேவல்.
ஒருவுதல் - தவிர்தல், நீங்கல், விலகல்.
ஒருவேளை - ஒருபொழுது.
ஒரூஉத்தொடை - செய்யுட்டொடையினொன்று. அஃது நாற்சீரடியில்முதற்சீரு மிறுதிச்சீரு மோனை முதலியவற்றி லியைந்திருப்பது.
ஒரூஉமுரண் - முதலாஞ்சீரினு நான்காஞ்சீரினு முரண்டுவருவது.
ஒரூஉமோனை - ஒரூஉத்தொடை.
ஒரூஉவண்ணம் - ஒரீத்தொடுப்பது.
ஒரூஉவளபெடை - முதற் சீர்க்கண்ணு நான்காஞ் சீர்க்கண்ணு மளபெடை பயிலுவது.
ஒரூஉவியைபு - ஈற்றுச்சீரினு மீற்றயலிருசீரிடை விட்டயர்சீரினு மியைபுவருவது.
ஒரூஉ-வெதுகை-முதற்சீர்க்கண்ணுநான்காஞ்சீர்க்கண்ணு மெதுகைவருவது.
ஒரே - ஒன்று.
ஒரோவென்று - ஒவ்வொன்று.
ஒலி - ஆரவாரம், இடி, ஒலியென்னேவல், ஓசை, காற்று, கொடிவேலி, கோஷ்டம், முழக்கம்.
ஒலிக்குறி - ஒலியைக்காட்டுங்குறி.
ஒலிசை - மணவாளப்பிள்ளைக்குக் கொடுக்கு முபகாரம்.
ஒலித்தல் - ஆடையழுக்கற்றல், ஆர்த்தல், தழைத்தல், மிகக்காய்தல்.
ஒலிப்பண்பு - ஓசைப்பண்பு.
ஒலிமுகம் } கோட்டையின்முன்புறவாயில்.
ஒலிமுகவாயில் }
ஒலியவந்தாதி - ஒருபிரபந்தம். அஃது பதினாறுகலை யோரடியாக வைத்து நாலடிக் கறுபத்து நாலுகலை வகுத்துப் பலசந்தமாக வண்ணமுங் கலை வைப்புந்தவறாமல் அந்தாதித்து முப்பதுசெய்யுட் பாடுவது. அன்றியும் வெண்பா அகவல் கலித்துறை என்னு மிம் மூன்றையும் பப்பத்தாக அந்தாதித்துப் பாடுவதுமாம்.
ஒலியல் - சீலை, தீ, தெரு, தோல், பூமாலை, யாறு.
ஒலியெழுத்து - ஒலிவடிவாமெழுத்து.
ஒலுகல் } ஒலுங்குதல், ஒல்கல்.
ஒலுகுதல் }
ஒலுங்கு - கொசுகு.
ஒல் - ஒலிக்குறிப்பு, ஒல்லென்னேவல், முடிவிடம்.
ஒல்கல் - அருகல், குழைதல், குறைதல், தளர்தல், துவளல், மெலிதல்.
ஒல்காமை - தளராமை.
ஒல்குதல் - ஒல்கல்.
ஒல்லட்டை - ஒல்லியானவன்.

ஒல்லல் - இசைதல், இயலல், பொருந்தல், பொருந்தல்.
ஒல்லாடி - ஒஞ்சட்டை.
ஒல்லாமை - இகழ்தல், இசையாமை, இயலாமை, பொருந்தாமை, வெறுப்பு.
ஒல்லார் - பகைவர்.
ஒல்லி - ஒடுங்கின ஆள், ஒடுங்கினது, துடைப்பம், மெலிந்தவன், மேன்மை, வெறிதாய்ப்போன தேங்காய் முதலியன.
ஒல்லிமேய்தல் - தேங்காய்ப்பருப்பிடையிடையே வெறிதாய்ப்போதல்.
ஒல்லுதல் - அடைதல், இணங்குதல், இயலுதல், சம்பவித்தல், நிந்தித்தல், நிறைவேற்றல், பொத்துதல், பொருந்தல்.
ஒல்லுநர் - நூலுரையுணர்வோர், மித்திரர்.
ஒல்லெனல் - அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு.
ஒல்லை - கடுப்பு, காலவிரைவு, சிறுபொழுது, சீக்கிரம் பழமை.
ஒல்லையூர்கிழான் - தொடித்தலை, விழுத்தண்டினாராற்பாடப்பட்ட பெருஞ்சாத்தன் றந்தை.
ஒவ்வல் - ஒவ்வுதல்.
ஒவ்வாப்பக்கம் - பொருந்தாதபக்கம்.
ஒவ்வாமை - இயலாமை, தகுதியீனம், பொருந்தாமை.
ஒவ்வுதல் - இசைதல், இணங்குதல், பொருந்துதல்.
ஒவ்வுறல் - பொருத்தமுறல்.
ஒவ்வொன்று - ஒன்றொன்று, வகைக்கொன்று.
ஒழி - ஒழியென்னேவல்.
ஒழிகடை - ஈறு.
ஒழிகை - ஒய்தல், விடுகை.
ஒழிதல் - அழிதல், சாதல், தவிர்தல், நீங்கல், முடிதல், விடுதல்.
ஒழித்தல் - அழித்தல், எழுச்சி, குறைத்தல், கொல்லல், துறத்தல், முடித்தல்.
ஒழிமணி - பலவற்றைச் சுருக்கிக்காட்டுவது.
ஒழிபியல் - பொதுவியல்.
ஒழிபு - மிச்சம்.
ஒழிப்பணி - அபநுதியுருபக வலங்காரம்; அஃது ஒரு தருமத்தை யாரோபித்தல்.
ஒழிப்பு - தவிர்ப்பு, விலக்கு.

ஒழிப்புயர்வுநவிற்சியணி - ஓரலங்காரம். அஃது உயர்பு நவிற்சி ஒழிப்போடு வருதல்.
ஒழிய - தவிர.
ஒழியவைத்தல் - ஒழிவித்துவைத்தல், ஒழிவுபார்த்தல், முடித்தல்.
ஒழியாமை - ஒழிவில்லாமை, நீங்காமை.
ஒழியாவொழுக்கம் - பிறழாவொழுக்கம்.
ஒழியிசை / ஒழியிசையெச்சம் } ஒழிந்து நிற்குஞ் சொற்களைக் கொண்டு முடிவது.
ஒழியிசையெஞ்சணி - ஒழியிசை யெச்சம்.
ஒழியிசையோகாரம் - ஒழிபொருளைக் காட்டுமோகாரம் (உ - ம்) கொளலோகொண்டான்.
ஒழிவளவை - ஓரளவை. அதுகீழ்ச்சேரிதோற்றதென்புழி மேற்சேரிவென்றதெனக்கோடல்.
ஒழிவித்தல் - அழிவித்தல், ஒழியவைத்தல், முடித்தல்.
ஒழிவு - இன்மை, ஒழிகை, மறைவு, முடிவு
ஒழுகலான் - ஒழுங்கில்லாதவன்.
ஒழுகல் - உயர்ச்சி, ஒழுக்கம், நடை, நீர் முதலிய வொழுகுதல், நீர் முதலியவோடுதல், நீளப்போதல், முறையாக நடத்தல்.
ஒழுகிசை - ஓரலங்காரம். அஃது இன்னிசையின்றி வருவது.
ஒழுகிசைச்செப்பல் - வெண்சீருமியற்சீரும் விரவி வருவது.
ஒழுகிசைத்துள்ளல் - கலிப்பா வோசையினொன்று.
ஒழுகிசையகவல் - நேரொன்றாசிரியத்தளையு நிரை யொன்றாசிரியத்தளையும் விரவி வருவது.
ஒழுகு - உயரம், ஒழுகென்னேவல், ஒழுங்கு, நீளம், பண்டி, முறைமையாய் நடத்தல்.
ஒழுகுதல் - நீர்முதலியவார்தல்.
ஒழுகுவண்ணம் - ஓசையினொழுகும் வண்ணம்.
ஒழுகை - ஒழுகு, பண்டி.
ஒழுக்கம் - அறப்பான் மூன்றனுளொன்று. அது நான்காச்சிரமத்தோர்க்கு விதித்தன செய்தலும் விலக்கின ஒழிதலும், உயர்ச்சி, எழுச்சி, குலம், நடை, பண்பு, புண்ணியத்தோற்றம்

நான்கினென்று, மரியாதை, முறை, வழி.
ஒழுக்கல் - எழுச்சி, ஒழுகுவித்தல்.
ஒழுக்கவண்ணம் - நல்லொழுக்கம்.
ஒழுக்கவழு - தாமதகுணத்தொன்று, அது முறைத்தவறு.
ஒழுக்கு-ஒழுகல், ஒழுக்கென்னேவல், நடை, முறைமை.
ஒழுக்குதல் - ஒழுகச்செய்தல், துளித்தல், நடத்துதல்.
ஒழுக்குப்பிரமேகம் - ஒருவகைப்பிரமேகநோய். அது கோசத்தின் றுவாரவழியாய்ச் சீழ், இரத்தம், சலமாகிய இவைகளைப்போல் மேக மொழுகுதல், சரீரமுழுவதுங் கருமையுள்ள முளைக்கட்டிகளெழும்புதல், கனத்தவிரணம், குடைச்சல், எரிச்சல், வெகுநோவுடன் புரளல் என்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
ஒழுக்கெறும்பு - ஓரெறும்பு.
ஒழுங்கல்-ஒழுங்குதவறுதல், நிரல்படல்.
ஒழுங்கு - ஒழுங்கென்னேவல், கட்டளை, நன்னடை, நிரை, முறை, விதி.
ஒழுங்கை - ஒடுங்கியவழி.
ஒளி - அறிவு, ஒளிப்பிடம், ஒளியென்னேவல், கடவுள், கண்மணி, சந்திரன், சுவாமி, சூரியன், நெருப்பு, பார்வை மிருகம், பிரபை, புகழ், விண்மீன், விளக்கு, வெயில்.
ஒளிக்கடல் - பல்.
ஒளித்தல்-பதுங்கல், மறைதல், மறைத்தல்.
ஒளித்துவிளையாடல் - கண்பொத்திவிளையாடல்.
ஒளிப்பிடம் - மறைவிடம்.
ஒளிப்பிழம்பு - அக்கினிச்சுவாலை.
ஒளிப்பு - ஒளிக்குதல், பதுங்குகை, மறைவு.
ஒளிமழுங்கல்-பிரகாசமழுங்கல்.
ஒளியிலுருவம் - சுவரிலெழுதருவமுதலியன.
ஒளியிழை - ஆபரணம், பெண்.
ஒளியுருவியகல் - வைடூரியம்.
ஒளியுள்ளுருவம்-கண்ணாடியுளுருவம்.
ஒளியோன் - சூரியன்.
ஒளிர்தல் - ஒளிசெய்தல்.
ஒளிர்பு - பிரபை.
ஒளிர்மருப்பு - யானைக்கொம்பு.
ஒளிர்முகம் - வயிரக்கல்.
ஒளிர்வு - பிரகாசம்.
ஒளிவட்டம் - கண்ணாடி, சக்கிரம்.
ஒளிவட்டி - பச்சைக்கருப்பூரம்.
ஒளிவாடுதல் - ஒளிவிடுதல்.
ஒளிவிடுதல் - பிரகாசித்தல்.
ஒளிவிளங்குமேன் - ஒருபாஷாணம்.
ஒளிவீசுதல் - ஒளிவிடுதல்.
ஒளிவு - ஒளி, மறைவிடம்.
ஒளிவைத்தல் - மிருகங்களைப் படுக்க மறைப்புவைத்தல்.
ஒளிவைத்துப்பார்த்தல் - உற்றுப்பார்த்தல், கைவிளக்குவைத்துப்பார்த்தல்.
ஒளிறல் - ஒளிகொள்ளல்.
ஒளிறு - பிரகாசம்.
ஒளிறுதல் - பிரகாசித்தல்.
ஒள் - அழகு, ஒளி, நல்ல, மேன்மை.
ஒள்ளியர்-அறிவுடையோர், மாசற்றவர்.
ஒள்ளியோன் - அறிவுடையோன்; ஒளிசெய்வோன், சுக்கிரன், நல்லோன்.
ஒறுத்தல் - அலைத்தல், கடிதல், குறைத்தல், நோய்செய்தல், வருத்துதல், வெறுத்தல்.
ஒறுப்பு - அடக்கம், அதட்டுதல், கடிவு, குறைவு, தண்டிப்பு, வெறுப்பு.
ஒறுவாய் - ஓடிந்தவாய்.
ஒறுவினை - தீராவருத்தம்.
ஒறுவு - வருத்தம்.
ஒற்கம் - அடக்கம், ஒடுக்கம், குறைவு, பொறுமை, வறுமை.
ஒற்றர் - தூதர், வேவுகாரர்.
ஒற்றல் - உடுத்தல், ஒற்றுதல், நினைதல்.
ஒற்றளபெடை - மெய்யெழுத்துநீண்டிசைக்கொள்ளுவது.
ஒற்றாடல் - தூதுசொல்லல்.
ஒற்றி - ஈட்டடைமானம், திருவொற்றியூர்.
ஒற்றிடம் - ஒருபூச்சு.
ஒற்றிடுதல் - வக்கம்பிடித்தல்.
ஒற்றித்தபக்கம் - ஒருமைப்பட்டபக்கம்.
ஒற்றித்தல் - ஒற்றைப்படவெண்ணல்.
ஒற்றித்தவெண் - ஒற்றைப்பட்ட கணக்கு.
ஒற்றியூரன் - சிவன், வல்லாளவென்ற ஒரு செங்குந்தவீரன்.
ஒற்றியூர் - சென்னைக்கருகிலுள்ள திருவொற்றியூர்.

ஒற்று உளவு, ஒற்றும்பொட்டணி, ஒற்றென்னேவல், தூதன், தூது, மெய்யெழுத்து, செங்கோட்டியாழுறுப்பினுளொன்று.
ஒற்றுதல் - அடுத்தல், உடுத்தல், எற்றுதல், ஒற்றல், கிட்டல், தள்ளிவிடுதல், விலகுதல்.
ஒற்றுப்பேர்த்தல் - மிறைக்கவியினோருறுப்பு; அஃது ஓர்பயனன்றியின்னுமோர் பயன்படுத்த வெழுத்தைத் திரித்தல்.
ஒற்றுமை - உரிமை, ஒருமை, கலப்புகுறிப்பு, செல்வம், தகுதி, மனமொன்றுகை.
ஒற்றுமைகோடல் - வேளாண்மை மாந்தரியல்பினொன்று. அஃது ஒன்றித்து வாழ்தல்.
ஒற்றுமைநயம் - ஒருமித்ததன்மை.
ஒற்றெழுத்து - மெய்யெழுத்து.
ஒற்றை - ஒன்று, தனிமை, தனியேடு.
ஒற்றைக்கடவை - பன்னகத்தி லொற்றைவிழுந்தவிடம்.
ஒற்றைக்கண்ணன்-குபேரன், சுக்கிரன்.
ஒற்றைக்குடை - ஏகசத்திரம்.
ஒற்றைக்கொம்பன் - விநாயகன்.
ஒற்றைத்தலைவலி - ஒருவகைச்சிரநோய்.
ஒற்றைத்தாட்பூட்டு-ஒரே தாட்பூட்டு.
ஒற்றைத்தாலி - தனித்தாலி.
ஒற்றையாழித்தேரோன் - சூரியன்.
ஒற்றையாழித்தேர் - சூரியன்றேர்.
ஒற்றையாழியான் - சூரியன்.
ஒற்றையிரட்டைபிடித்தல் - ஒரு விளையாட்டு.
ஒற்றொலிவெண்டுறை - ஒரோசைத்தாய்வரும் வெண்டுறை.
ஒற்றொழிபாட்டு - மெய்யெழுத்தில்லாப்பாட்டு.
ஒன்பான் - ஒன்பது.
ஒன்ற - பொருந்த.
ஒன்றடிமன்றடி - ஒருகலப்பு குழப்பம், தலைதடுமாற்றம்.
ஒன்றப்பார்த்தல் - அடுக்கப்பார்த்தல்.
ஒன்றல் - ஒன்றுதல்.
ஒன்றறியாதவன் - ஏதுமறியாதவன்.
ஒன்றற்றவன்-கூடாதவன்,வெறுவிலி.
ஒன்றன்கூட்டம் - ஒருபொருளின்கூட்டம்.
ஒன்றன்பால் - ஒருமைப்பால்.
ஒன்றாதவஞ்சித்தளை - கனிமுன்னேனு நிழன்முன்னேனு நேரொன்றிவருவது.
ஒன்றாதவன் - பகைவன்.
ஒன்றாய் - ஒருமிக்க.
ஒன்றார் - பகைவர்.
ஒன்றாலொன்றும் - யாதொன்றும்.
ஒன்றி-ஒற்றை, ஒன்றியென்னேவல், தனித்தஆள், தனித்தது.
ஒன்றிக்காரன் - சமுசாரமில்லாதவன்.
ஒன்றித்தல்-ஒருமைப்படுதல், பொருந்துதல்.
ஒன்றிப்பு - ஒருமிப்பு.
ஒன்றியவஞ்சித்தளை - யாப்பினோருறுப்பு. அஃது கனிமுன்னிரையொன்றிவருவது.
ஒன்றினமுடித்தல் - தன்னின முடித்தல், ஒருயுத்தி.
ஒன்றின்மை - யாதொரு பற்றுமில்லாமை.
ஒன்று - ஏகம், ஒன்றென்னேவல்.
ஒன்றுகட்டுதல் - சரிப்படுத்தல்.
ஒன்றுகற்றவன் - சிலகற்றவன்.
ஒன்றுகுடி - ஒட்டுக்குடி.
ஒன்றுகூடியிருத்தல் - ஆடவரும் மடவாரும்தங்களிற் கலந்திருத்தல், ஒன்றித்திருத்தல்.
ஒன்றுகூட்டு - உறவு, ஒருகூட்டு, கொண்டுகூட்டு.
ஒன்றுகை - ஒன்றுதல்.
ஒன்றுக்கற்றவன் - கூட்டற்றவன்.
ஒன்றுக்கிருத்தல் - சலம்விடுதல்.
ஒன்றுக்குப்போதல் - சலங்கழிக்கப்போதல்.
ஒன்றுக்கொன்று - ஒன்றோடொன்று, பதிலுக்குப்பதில்.
ஒன்றுதல் - இசைதல், இணங்கல், ஐக்கப்படுதல், பொருந்துதல்.
ஒன்றுநர் - சிநேகிதர், மித்திரர்.
ஒன்றுபடல் / ஒன்றுபடுதல் - கூடுதல், பொருந்துதல்.
ஒன்றுபடுத்தல் - ஒப்புறவாக்கல், ஒருமைப்படுதல்.
ஒன்றுபாதி - அர்த்தசாமம், ஒன்றிற்பாதி, சில பல.

ஒன்றுமற்றவன் - உபயோகமற்றவன், தரித்திரன். [ஞென்று.

ஒன்றுமாறியொன்று - ஒன்றின்பின்

ஒன்றைவிட்டயல் } அடுத்ததைவி
ஒன்றைவிட்டொன்று } ட்டுமற்றது.

ஒன்றொழிபொதுச்சொல் - இருதிணையிலும் ஆண்பால் பெண்பால் இரண்டிற்கும் பொதுவாய்நின்று அப்பால்களி னொருபாலைக் குறிப்புநீக்குஞ் சொல் (உ-ம்) ஆயிரமக்கள் போர் செய்தார்.

ஒன்றோ - அதிசய விரக்கச்சொல், இடைச்சொல் (உ-ம்) பொய்படு மன்றோ புனைபூணும்.

ஒன்னப்பூ - மாதர் காதணியினொன்று.

ஒன்னலர் - பகைவர்.

ஒன்னாதார் } பகைவர்.
ஒன்னார் }

---

ஓ



ஓ - தமிழ்மொழியின் நெடுங்கணக்கில் வரும் பதினோராம் எழுத்து, உயிர் முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள் வாயைத்திறத்தலாகிய அகரக்கூறும் இதழ்குவிவாகிய உகரக்கூறும் சந்தித்துப் பிறந்த ஒருநெட்டுயிர், அகாரஉகாரசந்தியக்கரம்அயன் - அரன் - அழைத்தல் - இரக்கம் இவற்றைக் காட்டிடுமோருபசருக்கம் அசைநிலை(உ-ம்)வம்மினோ ,அதிசயவிரக்கச்சொல்(உ-ம்)ஓபுகினம், இரக்கச்சொல் (உ-ம்) ஓகொட்டேன், இழிவு சிறப்பு (உ-ம்) ஓகொடியன், உயர்வுசிறப்பு (உ-ம்) ஓபெரியன், எதிர்மறை (உ-ம்) யானோசெய்தது, ஒழிபிசை (உ-ம்) கொளலோகொண்டான் ஓரெழுத்து, தெரிநிலை(உ-ம்)ஆணோ அதுவமன்று, பிரிநிலை (உ-ம்) அவனோகொண்டான், மடையடைக்குங் கதவு, வினா (உ-ம்) சாத்தனோ.

ஓகணம் - பேன், மூட்டுப்பூச்சி.

ஓகணி - பேன்.

ஓகம் - அடைக்கலம், ஒருகருவி, சமுகம், திரட்சி, புகலிடம், பெருக்கு, போதனை, வீடு.

ஓகாரம் - ஓரெழுத்து.

ஓகாரவுரு - கடவுள்.

ஓகுலம் - அப்பம்.

ஓகை - உவகை.

ஓகோ - அதிசயச்சொல்.

ஓகோதணி - மூட்டுப்பூச்சி. [சை.

ஓக்கமிராட்டி - ஒருவகைக்கலித் தாழி

ஓக்கம் - உயர்ச்சி, எழுதல், பருமை, பெருமை.

ஓக்காளம் - ஓங்காளம்.

ஓக்காளிப்பு - வாந்திசெய்கை.

ஓங்கலுறவன் } காந்தபாஷாணம்.
ஓங்கலுற்பவன் }

ஓங்கல் - அரசன், உயர்ச்சி, எழுச்சி, சத்திபண்ணல், மரக்கலம், மலை, மூங்கில், மேடு, யானை, வலியுடையோன்.

ஓங்காரம் - பிரணவம்.

ஓங்காரவுரு - ஓகாரவுரு, கௌரிபாஷாணம்.

ஓங்காரி - சத்தி.

ஓங்காரித்தல் - உறுக்குதல்.

ஓங்காளம் - வாந்திப்பு.

ஓங்கில் - ஒருமீன்.

ஓங்குதல் - அதிகப்படல், உயர்தல், உயர்த்துதல், பெருமையுறல், தேறுதல், வளர்தல்.

ஓசம் - கீர்த்தி, கோசம், தாபரம், பிரபை, பிராணவாயு.

ஓசரம் - நிமித்தம், பதில்.

ஓசரி - கேடு, துக்கக்குறிப்பு.

ஓசனித்தல் - பறவைசிறகடித்தல்.

ஓசன் - உவாத்தி, பிடாரிகோவிற்பூசாரி.

ஓசி - சொற்பத்திற்காகக் கெஞ்சுகை.

ஓசீவனம் - பிழைப்பு.

ஓசு - கீர்த்தி.

ஓசை - இசை, ஒலி, கீர்த்தி, வாழை.

ஓசைக்கழல் - வீரவெண்டயம்.

ஓசையுடைமை - நூலழகினொன்று.

ஓசையூட்டல் } செய்யுளோசையை
ஓசையூட்டுதல் } யிசையச்செய்தல்.

ஓச்சம் - கீர்த்தி, பெரும்பேர்.

ஓச்சர் - கணக்காயர்.

ஓச்சல் } எறிதல், ஓங்கல், ஓட்டல்,
ஓச்சுதல் } செலுத்தல், தூண்டிவிடல்.

ஓஜம் - அறிவு, சத்தகுணம், செருக்கு, பலம், பிரகாசம்.

ஓஷட்டியம் - பலித்தவுடன்படும்வாழை.

ஓஷதி } ஒருகாற் காய்த்துப் படுமரம்,
ஓடதி } கொடி, மாமுதன்மருந்து.
ஓடதிபதி - சந்திரன்.
ஓஷதியம் - கொடிகள்.
ஓடதீசம்-கர்ப்பூரம், துரோணபர்வதம்.
ஓஷதீசன் - சந்திரன்.
ஓடம் - செங்கருங்காலி, தோணி, நெய்வோர்கருவியிலொன்று, மிதவை.
ஓஷம் - கொளுத்தல், காய்தல்.
ஓடல் - அச்சக்குறிப்பு, ஓடுதல்.
ஓடவைத்தல் - புடமிடுதல்.
ஓடன் - ஆமை.
ஓடாணி - ஆபரணக்கடைப்பூட்டாணி.
ஓடாவி-சித்திரக்காரன், தச்சன், படகு செய்வோன்.
ஓடி-ஓடுவது, ஓடுவாள், ஓடுவான், வனநெல்.
ஓடிமை - வனநெல்.
ஓடியம்-சபைக்கடாப்பேச்சு, பரிகாசம்.
ஓடியவோடம் - கிளிஞ்சில்.
ஓடு - ஆமைமுதலியவற்றினோடு, இரப்போர்கலம், உடைந்த மண்பாண்டம், ஓடென்னேவல், கொட்டைகளினுறை, நீளுதல், மூன்றனுருபு, வீடுவேயு மோடு.
ஓடுதல் - நீர்முதலிய வோடுதல், நீளல், பிளத்தல், வளர்த்தல், வெடித்தல்.
ஓடுதாவடி - ஓடித்திரிதல், கலக்கம்.
ஓடுபந்தர் - நடைப்பந்தர்.
ஓடுபித்தம் - ஒருவகைப் பித்த நோய்; அது எழுந்தெழுந்தோடுதல், பிதற்றல், யாரையுந்தூஷித்தல், பல்லைக் கடித்தல், கண்சிவத்தலோடு மூடி மூடி விழித்தல், கூச்சலிடுதல், கொக்கரித்தல், கூத்தாடுதல், குதித்தல், அகங்காரமென்னும் அக்குணங்களை யுண்டாக்குவது.
ஓடுவிப்புருதி - ஒரு சிலந்தி.
ஓடை-அகழி, உலவைமரம், ஒருகொடி, கிலுகிலுப்பை, குளம், நீரோடை, நெற்றிப்பட்டம், மலைவழி, யானை, யானை நுதற்பட்டம்.
ஓட்டடை - ஓட்டப்பம்.
ஓட்டபல்லவம் - மேலுதடு.
ஓஷ்டம் - உதடு, மேலுதடு.
ஓட்டம்-உதடு, ஓடுதல், தோல்வி, நீரோட்டம், மேலுதடு.

ஓட்டம் - உட்செலுத்தல், ஓடப்பண்ணல், செலுத்துதல்.
ஓட்டாங்கட்டி - உடைத்த ஓட்டுத்துண்டு.
ஓட்டாங்கிளிஞ்சல் - ஒருமீன்.
ஓட்டாங்குச்சு - கலவோடு.
ஓட்டாம்பாரை - ஒருமீன்.
ஓஷ்டி - கோவைக்கனி.
ஓட்டி - ஓடப்பண்ணுவோன்.
ஓட்டிரம் - உற்கலதேசம்.
ஓட்டு - கப்பலோட்டம்.
ஓட்டுதல் - ஓட்டல்.
ஓட்டுத்துத்தி - ஒருபூடு.
ஓட்டுமுத்து - உள்வயிரமற்ற முத்து.
ஓட்டை - சில்லி, துவாரம்.
ஓட்டைவாயன் - வெளிவாயன்.
ஓணகாந்தன் - ஓரசுரன்; இவன் திருக்கச்சி ஓணகாந்தன்றளியில் சிவனைப் பூசித்துப் பெரும்பேறு பெற்றவன்.
ஓணம் - ஆறு, திருவோணம்.
ஓணான் - ஓந்தி.
ஓணான்குத்தி } ஒருபருந்து.
ஓணான்கொத்தி }
ஓதக்காரன் - அண்டவாதக்காரன்.
ஓதக்கால் - பெருங்கால்.
ஓதமிறங்குதல் - பீசமூதிப்பருத்தல்.
ஓதமேறுதல் - ஈரமுண்டாதல்.
ஓதம் - அண்டவாதம், ஈரம், ஓர்விதவீக்கம், கடல், கடற்றிரை, பெருக்கு வெள்ளம்.
ஓதல் - அந்தணர் வணிகர்க்குரிய அறுதொழிலிலொன்று. ஒழிதல், சொல்லல், படித்தல், போதித்தல், மந்திரஞ் செபித்தல், வாசித்தல்.
ஓதனம் - உண்டி, சோறு, பெறுமை, போர்.
ஓதன்மை - ஓதற்றன்மை, பாடல்.
ஓதி-அறிவுடையோன், இடங்கழிமை, ஓந்தி, கல்வி, ஞானம், பூனை, பெண் மயிர், போர், மலை.
ஓதிமத்தர் - பிரமர்.
ஓதிமமுயர்த்தோன் - பிரமன்.
ஓதிமம்-அன்னம், கவரிமா, புளியமரம், மலை.
ஓது - பூனை.
ஓதுதல் - சொல்லுதல், படித்தல், போதித்தல், மந்திரமுச்சரித்தல்.

ஓதுவார்க்குணவிடுதல் - அறமுப்பத்திரண்டினொன்று.
ஓதுவான் - ஆசான், திருப்பாட்டுப் பாடுவோன், மாணாக்கன்.
ஓதுவித்தல்-அந்தணரரசர்க்குரிய அறுதொழிலி னொன்று, படிப்பித்தல், வேதங்கற்பித்தல்.
ஓதை - ஒலி, பேரொலி, மதிலுண் மேடை, மதில், மலை.
ஓதைவாரி - இறகு.
ஓத்தி - ஓந்தி.
ஓத்து - ஓரினப்பொருளை யொருவழி வைத்திருக்குமியல், வேதம்.
ஓத்துப்புறனடை - இயலிற் கீற்றிற் சொல்லப்படும் புறனடை.
ஓத்துமுறைவைப்பு - ஒருயுக்தி.
ஓத்துரைப்போர் - பொருத்தஞ் சொல்வோர், வேதமோதுவோர்.
ஓநாய் - ஒருவிதநாய், கோனாய்.
ஓந்தி - ஓணான்.
ஓப்பலிபாள் - கணவனின் தமையன் பெண்சாதி.
ஓமகுண்டம் - வேள்விக்குண்டம்.
ஓமசாந்தி - ஓமம்வளர்த்திச் சாந்திபண்ணல்.
ஓமத்திரவியம் - ஓமத்திற்குரிய வுபகரணம்.
ஓமப்பொடி - திருநீறு.
ஓமமண்டபம் - ஓமாலயம்.
ஓமம் - அசமோதகம், அப்பிரகம், ஒருபூடு, யாகம்.
ஓமம்வளர்த்தல் - யாகம்பண்ணல்.
ஓமல் - ஊர்ப்பேச்சு, பேச்சுப்பரத்தல்.
ஓமவிறகு - சமிதை.
ஓமாக்கினி - ஓமத்தீ.
ஓமி-ஓமஞ்செய்கிறவன், தீ, நீர், நெய்.
ஓமிடி - துக்கம்.
ஓமிடிதல் - கேடுறல்.
ஓமூடிவு - அழிவு.
ஓமை - மாமரம்.
ஓமைக்கொட்டை - மாங்கொட்டை.
ஓம் - அயன், அரன், அரி, ஆமெனல், தன்மைப்பன்மைவிகுதி, பிரணவம்.
ஓம்படல் - சம்மதித்தல்.
ஓம்படை - காவல், கையடை.
ஓம்படைக்கிளவி - கையடை வாக்கு, பெரியோர்சொல்லும் புத்தி.

ஓம்பல் / ஓம்புதல் } உண்டாக்கல், பாதுகார்த்தல், வளர்த்தல்.
ஓயல் - ஓய்தல்.
ஓயாமாரி - இடைவிடாமை, ஓயாமழை, பெருங்கொடை.
ஓய் - ஓயென்னேவல், பால்பகா வுயர்திணை யொருமை முன்னிலை விளியுருபு.
ஓய்தல் - ஆறுதல், ஒழிதல், சாய்தல், தளர்தல், முடிதல்.
ஓய்ந்திருக்குதல் - ஆறியிருக்குதல், வேலையொழிந்திருக்குதல்.
ஓய்ப்பிடியாள் - ஓரகத்தி.
ஓய்மான்நல்லியக்கோடன் - மாவிலிங்கையென்னுமூர்ச் சிற்றரசன், நன்னுகாற் பாடப்பட்ட பிரபு, சிறுபாணாற்றுப் படைத்தலைவன், இம்மாவிலிங்கை கோதாவரியாற்றருகே யுள்ளதென்பர்.
ஓய்மான்வில்லியாதன் - மாவிலிங்கையரசன், ஓய்மான் நல்லியக்கோடனுக்குப்பின் அரசுபுரிந்த வீகையாளன்.
ஓய்வு - காதல், தளர்வு, முடிதல்.
ஓய்வுஈரை - அளவுமுடிவு.
ஓரகத்தி - உரிமைச்சுதந்தரக்காரி, சணவனின் சகோதரன் மனைவி.
ஓரக்கண் சாய்வானபார்வையுள்ளவன், பட்சபாதன்.
ஓரக்காரன் - பக்கபாதக்காரன்.
ஓரசைச்சீர் - நேரசையானுவது நிரையசையானுவது வருமசைச்சீர்.
ஓரடிமடக்கு - நான்கடியுள்ளோரடியே மடக்கி வருவது (உம்) துறைவா துறைவார் பொழிற்றுணைவர் நீங்க.
ஓரபட்சம் - ஓரவாரம்.
ஓரம் - காரசாரம், சந்திச்சாரம், பக்கபாதம், பக்கம், விளிம்பு.
ஓரம்பேசல் - ஒருபக்கஞ்சாயப்பேசல்.
ஓரம்போகி-ஐங்குறுநூற்றில்முதனூறு பாடிய புலவர்; இவர் ஓரேர்போகி யெனவும் படுவர்.
ஓரல் - ஆய்தல், ஒடுக்கமானது தெளிதல்.
ஓரவாரம் - ஒருபக்கவாரம்.
ஓரா - ஒட்டி, ஒருமீன்.
ஓராசிடை நேரிசைவெண்பா - ஓராசிடையிட்டுவரும் வெண்பா.

ஓராட்டல் - தாலாட்டல்.
ஓராட்டு - தாலாட்டு.
ஓராட்டுதல் - தாலாட்டுதல்.
ஓராயம் - இணைப்பு, சத்தார், சாய்வு.
ஓரி - ஆணரி, ஆண்மயிர், ஆண்முசு, ஒல்லட்டை, கடையெழு வள்ளலி லொருவன், காளிவாகனம், கிழநரி, புறமயிர், விலங்கின்படுக்கை, விலங் கேற்றின் பொது.
ஓரிசு - ஆயத்தம், இசைவு, இணக்கம், சமாதானம், தீர்மானம்.
ஓரிதழ்த்தாமரை - ஒருபூடு.
ஓரிபூத்தல் - தேடாமறக்கிடத்தல்.
ஓரிலைத்தாமரை - ஒரு பூடு.
ஓருதல் - ஓர்தல்
ஓரும் - அசைச்சொல், (உ-ம்) செயற் பாலதோருமறனே, பெயரெச்சம்.
ஓரெழுத்துமடக்கு-அடிகடோறுமிடை பிறிதெழுத்தின்றி வந்தவெழுத்தே வருவது.
ஓரை - இராசிப்பொது, இலக்கினம், ஐந்துநாழிகைநேரம், கூகை, சமயம், சித்திரான்னம், தோழி, மகளிர்கூட் டம், மாதர்விளையாடும்களம், மாதர் விளையாடுங்கலன்கள், மூர்த்தம்விளை யாட்டு.
ஓரோவழி - ஒருசார்.
ஓரோவிடம் } ஒவ்வோரிடம்.
ஓரோவிடை }
ஓர் - ஒன்று, ஒரென்னேவல்.
ஓர்கட்புள் - காகம்.
ஓர்குடிமணாளன் } சகலன்.
ஓர்குடியிற்கொண்டோன் }
ஓர்குண்டலன் - பலபத்திரன்.
ஓர்க்கோலை - ஒரு வாசனைப்பண்டம்.
ஓர்சல் - ஓரிசு.
ஓர்ச்சி - ஆராய்ச்சி, ஆலோசனை.
ஓர்தல் - ஆராய்தல், தெளிதல்.
ஓர்ப்பு - ஆடூஉக்குணம்நான்கிளென்று. அஃதுஓர்மம்,கருமமுடிக்குருந்துணிவு, பொதுக்கட்டுதல், பொறுமை.
ஓர்மம் } மனத்திடன்.
ஓர்மிப்பு }
ஓர்மை - துணிவு.
ஓர்வு - ஆராய்வு.
ஓலக்கமண்டபம் - சங்கமண்டபம்.
ஓலக்கம் - சங்கத்தாளம், திருச்சமுகம்.
ஓலமிடல் } அபயமிடுதல், அழுதல், கத்தல்.
ஓலமிடுதல் }
ஓலம்-அபயமிட்டழைத்தல், ஒலி,கடல், திரை, துக்கக்குறிப்பு, பாம்பு.
ஓலாட்டல் - தாலாட்டல்.
ஓலாட்டு - தாலாட்டு.
ஓலாட்டுதல் - ஓராட்டுதல்.
ஓலிடல் } ஊளையிடுதல், ஓலமிடு தல்.
ஓலிடுதல் }
ஓலை - ஒலி, கழுகு, தாழை, தெங்கு, பனை முதலியவற்றினோலை, சீட்டு.
ஓலைக்கணக்கர்-வித்தியார்த்திகள், பண் டிதர்.
ஓலைக்கணுட்டு - ஓலைத்தளிர்.
ஓலைக்கண் - ஓலைச்சட்டம்.
ஓலைக்காந்தள் - ஓலைத்துகள்.
ஓலைக்கிளிஞ்சில் - ஒருவிதசங்கு.
ஓலைக்கூடு - ஓலைக்குடை.
ஓலைச்சிறகு - பாதிப்பனையோலை.
ஓலைச்சுருள் - செந்திரிக்கம்.
ஓலைதீட்டல் - திருமுகம்வரைதல்.
ஓலைதீட்டும்படை - எழுத்தாணி.
ஓலைப்பூ - தாழைப்பூ.
ஓலைமுத்திரை - ஒருமுத்திரை.
ஓலைமூங்கில் - ஒருமூங்கில்.
ஓலையெழுதல் - சீட்டெழுதல், சீதன வுறுதி யெழுதுதல்.
ஓலைவாங்குதல் - சாதல்.
ஓலைவாளை - ஒருமீன்.
ஓல் - ஒலி, ஒலித்தல், ஒலம்.
ஓவம்-உயரம், சித்திரம், சித்திரவேலை.
ஓவர் - ஓவியர், பாடற்கீழ்மக்கள்.
ஓவல் - ஓவுதல்.
ஓவன் - சித்திரக்காரன்.
ஓவாப்பிணி - மாறாததுன்பம்.
ஓவாமுயற்சி - ஒழியாமுயற்சி, இஃது வேளாண்மைமாந்தரியல்பிளொன்று
ஓவியநூல் - ஓவியமுறை கூறும் நூல். இது சங்கத்தார்காலத்தது.
ஓவியம் - சித்திரம், பிரதிமை.
ஓவியர் - கம்மாளர், சித்திரக்காரர்.
ஓவுதல்-இசைதல், ஒழிதல், வருந்தல்.
ஓவெனல் - அதிசயக்குறிப்பு, இரக்கக் குறிப்பு.
ஓவென்றவெளி - பெரியவெளி.
ஓளி - ஒழுங்கு, யானைக்கூட்டம்.
ஓற்பலம் - கோங்கு.

ஒனம் - எழுத்தின்சாரியை.
ஒனுய் - கோனுய்.

---

# ஔ



ஔ - தமிழ்மொழியின்நெடுங்கணக்கில் உயிர் வருக்கத்திலேவரும் பன்னிரண்டாம் எழுத்து, உயிர்முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள் வாயைத் திறந்தும் உதட்டைக்குவித்தும் உச்சரிக்கவரும் ஒரு நெட்டுயிர். அழைத்தல், வியப்பு, தடை இவற்றைக் காட்டுமோருபசருக்கம், அனந்தம், ஓரெழுத்து ஔவென்னேவல், கடித்தல், பூமி.
ஔகாரக்குறுக்கம் - தன்மாத்திரையிற் குறுகிய ஔகாரம்.
ஔகாரம் } ஓரெழுத்து.
ஔகான் }
ஔசரம் - கோடாங்கல்லு.
ஔசனசம் - அட்டாதசதருமசாத்திரத்தினென்று.
ஔசித்யம்-உசிததர்மம், தகுதி, மெய்.
ஔசீரம் - ஆசனம், கவரிமாமயிர், படுக்கை.
ஔஷதம் } மருந்து.
ஔடதம். }
ஔடதவாதி - ஒருமதக்காரன்.
ஔடும்பரம் - தாமிரம்.
ஔதகம் - உதகம், நீலரத்தினம்.
ஔதசியம் - பால்.
ஔதரிகன் - சமயல்செய்கிறவன்.
ஔதரிகன் - உதரபோஷகன்.
ஔதலாவணிகம் - உப்பு, நீராற்பக்குவமான வஸ்து.
ஔதாரிகன் - வேறு வேலையில்லாமல் வயிறு வளர்ப்பவன்.
ஔதாரியம் - உதாரம், மிகுகொடை.
ஔதாரியன்-வரையாதுகொடுப்போன்
ஔதும்பரம் - செம்பு, அத்திமரம்.
ஔதேயர் - உசிகரன்மகனுகிய கிருகன் வமிசத்தர்.
ஔத்தானபாதி - துருவநக்ஷத்திரம்.
ஔத்தாலகம் } புற்றுத்தேன்.
ஔத்தாலிகம் }
ஔபசிலேஷம் - ஒருவழிமேலால்.
ஔபதேயம் - பண்டிச்சில்.
ஔபத்தியம் - புணர்ச்சி.
ஔபரிதிகம் - ஈடு.
ஔபவாகியம் - அரசரேறும் பட்டத்தியானை.
ஔபாசனம் } உபாசனை, வைதீகச்சடங்கு நடத்தல்.
ஔபாசனை }
ஔபாதிகம் - நியாயத்துடன்கூடினது.
ஔமீனம் - காசாநெல் விளையும்பூமி.
ஔரகம் - உரகம்.
ஔரசன் - குலமொத்தகன்னியைத் தீவேட்டுப் பெற்றபுத்திரன்.
ஔரசியன் - சொந்தஜாதியில்விவாகம் பண்ணின மனைவியினிடத்துத் தனக்குப்பிறந்த புத்திரன்.
ஔரப்பிரசம் - ஆட்டுமந்தை.
ஔரிதம் - தருமநூல் பதினெட்டினென்று.
ஔருவசேயன் - அகத்தியமுனிவன்.
ஔருவவிரதி - நீரொன்றையே யுட்கொண்டு தவஞ்செய்பவன்.
ஔர்வன் - ஊர்வன் மகன், சியவனன் மருகன்னிகையிடத்துப் பெற்றவிருடி. இவனுக்கு நூற்றுவர்புத்திரர். அவருள் இருஷிகன் மூத்தோன்.
ஔவித்தல் - அழுக்காறடைதல், பொருமையடைதல்.
ஔவியம் - அழுக்காறு, பொருமை, தேவர்களுக்குச்செய்யும் சடங்கு.
ஔவுதல்-அங்கலாய்த்துவிழுதல், அழுந்தியெடுத்தல்.
ஔவை - தவப்பெண், தாய், திருவள்ளுவர் சோதரி.
ஔவையார் - ஔவை.
ஔனம் - மிளகுரசம்.

---

# க



க - அரசன், ஆன்மா, உடல், ஓரெழுத்து, கந்தருவசாதி, காமன், காற்று, சூரியன், செல்வன், திருமால், தீ, தொனி, நமன், பிரமன், மயில், மனம், விநாயகன்.

கஃகான் - ககரவெழுத்து.
கஃசு - காற்பலம்.
ககபதி - இராசாளிப்பறவை, கருடன்.
ககமாறம் - மணித்தக்காளி.
ககமுகன் - சகஸ்திரபாதன் சகாத்தியாயன்.
ககம் - அம்பு, சரகாண்டபாஷாணம், பறவை, மணித்தக்காளி.
ககரம் - ஓரெழுத்து, ஒன்றினிலக்கம்.
ககவசுகம் - ஆல்.
ககனபம் - வீணைதண்டு.
ககனம் - ஆகாயம், ஒருகிழங்கு, காடு, படை, புட்பொது.
ககனுக்கிரகம் - அண்டமுகடு.
ககனாவிந்தம்-அந்தரத்தாமரை, பொய்.
ககன் - சூரியன்.
ககாரம் - ஓரெழுத்து.
கசு - தீச்செய்கையுள்ளவன்.
கருஞ்சலம் - சாதகப்புள்.
ககுதி - முத்திரை குத்தின எருது.
ககுதிமி-அரைவதன்மகன். இவன் தன்னுடைய மகள் இரேவதிக்கு நாயகனொருவனைத் தேட எண்ணிப் பிரமசபைக்குத் தன்னோடவளை யழைத்துப்போய் அங்கேயொரு முகூர்த்தகால மாடல் பாடல்களிற் பிரியனுயிருந்து பின்னர்ப்பிரமாவுக்குத் தன் கருத்தைச்சொல்ல, இங்கே நீ பொழுதுபோக்கிய முகூர்த்தகாலத்திற் பூலோகத்திலிருபத்தேழு சதுர்யுகங்கழிந்துவிட்டன. உனக்குப் பழக்கமானவர்களை நீ காண்பதரிது. இப்போது பலராமர் பிறந்திருப்பதால் அவருக் குன்மகளைக் கொடுவென்று விடை கொடுத்தனுப்ப அவ்வாறு செய்தான்.
ககுஸ்தம் - முதுகு.
ககுஸ்தன் - இக்ஷுவாகு பௌத்திரனுகிய விகுக்ஷிமகன். இவன் விஷ்ணுவினுடைய அனுமதியால் விருஷபரூபம் பெற்றுத் தேவேந்திரன் தன்மீது ஏறி யுத்தஞ்செய்து இராக்ஷதர்களைக் கொல்லும்படியாக முதுகு கொடுத்துத் தாங்கினமையாற் ககுஸ்தன் எனப் படுவன்.
ககுத்து - இராசலட்சணம், எருத்தின் பிடர், நாக்கு, முக்கியம்.
ககுந்தரம் - பெண்களின் புட்டத்திலிருக்குஞ் சுழி.
ககுபம் - திசை, மருதமரம்.
ககுபுதேவி - தர்மன்பாரி, தக்ஷன்மகள்.
ககுபை-ஒட்டிரதேசத்துள்ள ஒருமலை.
ககுரி - கடைதாழி.
ககுவன் - கஞ்சன் றம்பி.
ககேசன், ககேசுரன், ககேந்திரன் - கருடன்.
ககோளசாஸ்திரம் - வானசாஸ்திரம்.
ககோளம் - கோளம், வானவட்டம்.
ககோளவித்தை - வானசாத்திரம்.
கக்கசம் - பிரயாசம்.
கக்கதேசம் - ஒருதேசம், இதுதற்காலம் கச்சுதேசமென வழங்குகின்றது.
கக்கப்பாளம் - கக்கப்பை, கக்கப்பொட்டணி.
கக்கப்பொட்டணி - இடுக்குப் பொட்டணி.
கக்கம் - அக்கிள், எண்ணெய்க் கடுகு, கைக்குழியின்கீழ்.
கக்கரி, கக்கரிகம் - ஒருநாய், ஒருகொடி.
கக்கலாத்து - கரப்பான்பூச்சி.
கக்கல் - இருமல், கக்கப்பட்டது, கக்குதல், சத்திபண்ணல்.
கக்கரம் - குகை.
கக்கார் - மேமா.
கக்கிசம், கக்கிஷம் - ஒன்றை விளக்குமுறை, மாந்திரியநூல், பிரயாசம், வருத்தம்.
கக்கிசாரம், கக்கிஷாரம் - பிரயாசம்.
கக்கிருமல் - ஒருவகை இருமல்நோய்.
கக்குதல் - ஆணிமுரலிய புறப்படுதல், இருமுதல், உட்கொள்ளாமை, வெளிவருதல், எதிரெடுத்தல் கதிர்சூலமுதலிய வீனுதல், கொப்பளித்தல், சத்தித்தல்.
கக்குரீதி - கக்கசம்.
கக்குவான் - குக்கல்நோய்.
கங்கடகம் - கவசம்.
கங்கடகன் - சிவன்.
கங்கடம் - கவசம், சிவனது திரிசூலம்.
கங்கணங்கட்டல் - ஒருகாரியத்திலாயத்தப்படல், சயக்குறியணிதல், விருதுகட்டல்.

கங்கணம் - ஒரு நீர்வாழும்பறவை, கடகம், கைவளை, நீர்த்துளி, மஞ்சட்காப்பு மூடி, மேகக்கூட்டம்.
கங்கணன் - சிம்மரோசன் றம்பி.
கங்கதம் } சீப்பு.
கங்கதிகை }
கங்கபத்திரம் - அம்பு, உமி, பருந்திறகு.
கங்கம் - கழுகு, கோளகபாஷாணம், சீப்பு, தீப்பொறி, பருந்து, பெருமரம், மரணம், வசம்பு.
கங்கரம் - மோர்.
கங்கன் - ஓரரசன், பிறவிச்சீர்பந்தபாஷாணம்.
கங்காசனகன் - விட்டுணு.
கங்காசுதன் - குமரன், விநாயகன், வீடுமன்.
கங்காதரன் - சிவன்.
கங்காதீரம் - கங்கைக்கரை.
கங்காதேவி - கங்கை.
கங்காத்துவாரம் - அரித்துவாரம்.
கங்காளமாலி - சிவன்.
கங்காளம் - உண்கலம், தசைகழிந்தவுடல் முழுவெலும்பு.
கங்காளன் - சிவன், துருசு.
கங்காளி - காளி.
கங்கானம் - குதிரை.
கங்கு - எல்லை, கருந்தினை, கரை, கவர், கழுகு, தீப்பற்றிய துரும்பு, தீப்பொறி பக்கம், பருந்து, பனைமட்டையின்கவை, வரம்பருகு, வரையறை.
கங்குகரை - எண்ணிக்கை.
கங்குல் - இரா, இருள், பரணிநாள்.
கங்குல்விழிப்பு - இராக்காவல் கூகை.
கங்குற்கிறை - சந்திரன்.
கங்குனிறம் - கருப்புநிறம்.
கங்கேஷ்மிசுரம் - கவுடதர்க்கம்.
கங்கேஷ்மிசுரன் - கங்காதீரத்தில்வசித்து கௌடதர்க்கம் என்னும் தர்க்க சாஸ்திரஞ்செய்த ஒரு பிராமண சிரேஷ்டன்.
கங்கை - சத்தநதிகளிலொன்று, நதி, நவட்சாரம், பகீரதி, மேனைபுத்திரி.
கங்கைகோத்திரம் - நீர்விளங்குன்றம், வேளாளர்குலம்.
கங்கைக்குணன் - நவட்சாரம்.
கங்கைசக்களத்தி - பார்வதி.
கங்கைதூவி - மேகம்.
கங்கைபெற்றோன் } குமரன், விநாயகன், வீடுமன்.
கங்கைமைந்தன் }
கங்கையோன் - துருசு.
கங்கைவேணியன் - சிவன்.
கசகசப்பு - ஒலிக்குறிப்பு.
கசகசா - ஒருசரக்கு.
கசகசெனல் - ஒலிக்குறிப்பு.
கசகம் - வெள்ளரி.
கசகரிகம் - கக்கரி.
கசகர்ணன் - ஒருயக்ஷன்.
கசகன்னம் - காதை யசைவிக்கும் வித்தை, மாரீசம்.
கசகன்னி - வெருகு.
கசகுதல் - நழுவுதல், வருந்தல்.
கசக்கம் - சுணக்கம்.
கசுக்கல் - கசங்கப்பண்ணல், வருத்துதல்.
கசக்கர் - தேமா.
கசக்கு - கயக்கு, சோர்வு.
கசக்குதல் - கயங்கச்செய்தல், வருத்துதல்.
கசக்குப்புகையிலை-சுருட்டுப்புகையிலை.
கசங்கம் - பீநாறி.
கசங்கலம் - கடல்.
கசங்கல் - குழைதல்.
கசங்கனம் - கடைவீதி.
கசங்கு - ஈந்து, ஓலைநீங்கியவீந்தின்மட்டை, கசங்கென்னேவல், கயங்கு.
கசங்குதல் - குழைதல், தேம்பல், மனநோவல், வேலையினலிளைத்தல்.
கசடர் - கீழ்மக்கள்.
கசடு - ஐயம், கீழ்மை, குறைவு, குற்றம், தழும்பு, மாசு, வடு.
கசட்டை - இளமை, கசப்பு, கயர், துவர்ப்பு.
கசட்டைதயிர் - ஆடைநீக்கின தயிர்.
கசட்டைப்பிஞ்சு - இளம்பிஞ்சு, கசப்புப்பிஞ்சு.
கசதை - யானைக்கூட்டம்.
கசத்தல் - கைத்தல், வெறுத்தல்.
கசந்தலை - கயந்தலை.
கசபட்சியை - யானைவணங்கி.
கசபம் - புல்.
கசபரீட்சை-கலைஞானமறுபத்து நான்கிலொன்று. அஃதுயானைப்பரீட்சை
கசபாசம் - மயிர்த்திரள்.
கசபுடம் - இரண்டுமுழக்கான் அளவுக்கு ஆயிரம் எருவைத்து எரிக்கும்புடம்.

கசபுளுகன் - பெரியபுளுகன்.
கசப்பி - மயிர்ச்சிகைப்பூடு, வல்லாரை, வேம்பு.
கசப்பு - கைப்பு,வனதுக்கம், வெறுப்பு.
கசமடையன் - பெருமூடன்.
கசமாது - ஊமத்தை.
கசமாலம் - புகை.
கசமுகாந்தஜன் - சுப்பிரமணியன்.
கசம் - இரண்டுமுழ அளவு, ஒருநோய், க்ஷயம், தாரை, மயிர், யானை.
கசரிபு - சிங்கம்.
கசரோகம் - க்ஷயரோகம்.
கசர் - இளநீர் முதலியவற்றின் கயர், ஒருசரக்கு, துவர்ப்பு.
கசர்ப்பு - இறைச்சி.
கசலே - துன்பம்.
கசவஞ்சி - மகாலோபி.
கசவம் - கடுகுச்செடி.
கசவாரக்கெட்டது - அறக்கெட்டது.
கசவியாதி - க்ஷயரோகம்.
கசவிருள் - பெரியவிருள்.
கசற்பம் - மஞ்சள்.
கசனே - ஈரம், காவி, குறிச்சூடு.
கசன் - வியாழன்மகன்.
கசாகு - பாம்பு, விரோதமானநடை.
கசாகூலம் } குப்பை, தாறுமாறு, பல
கசாகூளம் } சாதிக்கலப்பு.
கசாக்கிரம் - மயிர்நுனி.
கசாசனம் } அரசமரம்.
கசாசனே }
கசாயம் - கஷாயம்.
கசாரி - சிங்கம்.
கருசாகன் - கொலையாளன்.
கசாளம் - அடையல்.
கசானனன் - விநாயகன்.
கசிகசிப்பு - ஒட்டீரம்.
கசிதம் - அடுப்பு, பதித்தல், பூச்சு.
கசிதல் - அழுதல், இரங்கல், உருகல், ஊறுதல், கரைதல்.
கசித்தி - வீழி.
கசியபன் - காசிபரிஷி.
கசியம் - கள், குதிரையினிடுப்பு.
கசிகவத்துண்மை - வேளாண்மை மாந்தரியல்புளொன்று.
கசிவு - அழுகை, அன்பு, கசிதல், வருத்தம், வியர்வை.
கசுகசுத்தல் - ஈரலித்தல், கசிவாயிருத்தல்.
கசுகசுப்பு - ஒட்டீரத்தன்மை.
கசுகசெனல் - ஈரமொட்டுங்குறிப்பு.
கசுகுசுத்தல்-இரகசியம்பேசுங் குறிப்பு, இரகசியம்பேசுதல்.
கசுகுசெனல் - மெதுவாகப்பேசுதல்.
கசுபிசுத்தல் - ஒட்டீரமாக்கியிளகியிருக்குதல்.
கசுமலபூதம் - ஒருவகைநோய். அது அன்னத்தைக்கண்டு நகைத்தல், கீச்சுக்குரலாற்கூப்பிடல், திடுக்கென்று பயப்படுதலாகிய இக்குணங்களையுண்டாக்குவது.
கசுமலம் - அழுக்கு, கெட்டது.
கசுமாலி-அசுத்தமானவள், கெட்டவள்.
கசேந்திரஐசுவரியம் - மிகுஐசுவரியம்.
கசேந்திரன்-அயிராவதம், இராசயானை
கசேரிகை - முதுகெலும்பு.
கசேருகம் - தமரத்தை.
கசை - கவசம், குதிரைச்சம்மட்டி, சவுக்கு, சித்திரவேலை, பசை, பின்னற்கயிறு, முறுக்கினகம்பி.
கசைமுறுக்கி - தட்டான்குறடு.
கச்சகம் - குரங்கு.
கச்சகர் - கொள்ளு.
கச்சக்கடாய் - ஆமைஓடு.
கச்சட்டம் - உடைமடிப்பு,கௌபீனம், சண்டை.
கச்சதூஷன் - தவளை.
கச்சபக்கடாய் - ஆமைஓடு.
கச்சபநிதி - குபேரநவநிதியிலொன்று.
கச்சபம் - ஆமை, மற்போர்நிலையிலொன்று.
கச்சபாலயம் - காஞ்சிவரத்தில் ஒருபரிசுத்த ஸ்தலம்.
கச்சைபாலையஐயர் - தில்லைச்சிவகாமியம்மைப் பிள்ளைத்தமிழ்ப்பாடிய பிரதாபம் சரவணப்பெருமாள் முதலியாரவர்கள் மாணுக்கருள் ஒருவராய் ஐயன்பேட்டையில் வசித்து வந்த ஒரு வீரசைவ பண்டாரம்.
கச்சபி - பெண்ணுமை.
கச்சபிரோகம் - ஒருவகைநோய். அது சிற்றுருவமுள்ள ஆமை முதுகைப்போல் மழுங்கலாகக்கிரந்திகளையுண்டாக்குவது.

கச்சம் அளவு, ஒருமீன், கடகரோக ணி, கடன், கவசம், காய்ச்சற்பாஷாணம், குதிரையங்கவடி, துணிவு, நிச்சயம், மரக்கால், மீனெலும்பு, மூலைக்கச்சு, முன்றானை, யானைக்கழுத்திடுகயிறு, வார், கச்சு.
கச்சரம் - மோர், விநயம்.
கச்சலம் - மேகம்.
கச்சலி - ஒரு மீன்.
கச்சல் - ஒல்லியாள், ஒரு மீன், கைப்பு, சிறுமை, பிசகு, மிகவு மிளம்பிஞ்சு, வாழைக்கச்சல், வெறுப்பு.
கச்சவடம் - வியாபாரம்.
கச்சளம் - இருள், கண்ணிடுமை.
கச்சற்கொடி - ஒருகொடி.
கச்சற்கோரை - ஒரு கோரை.
கச்சன் - ஆமை.
கச்சாச்சேர் - எட்டுப்பலம் கொண்ட நிறை.
கச்சாந்தகரை - திராய்.
கச்சாயம் - ஒருபணிகாரம், கடலருகான மூலை.
கச்சாலம் - சுரபாஷாணம்.
கச்சாலை - கச்சயபாலயம், காஞ்சியாநகரம்.
கச்சால் - மீன்பிடிக்குங்கூடு.
கச்சான் - மேற்காற்று, மேற்றிசை.
கச்சி - ஊமற்பிளவு, காஞ்சிபுரம், சிரட்டைக்கையில், சின்னி, சீந்தில்.
கச்சிசாதகிறமணி - சாதுரங்கப் பதுமராகம்.
கச்சியப்பசிவாசாரியர் - கந்தபுராணஞ் செய்த ஓராதிசைவ குலத்தவர்.
கச்சிருமன் - விப்பிரசித்தி புத்திரன்.
கச்சு - இடைக்கட்டு, பிணிக்கை, மூலைக்கட்டு.
கச்சுக்கச்செனல் - விடாது பிதற்றல்.
கச்சுச்சாத்தல் - விக்கிரகத்துக்குக் கச்சிடுதல்.
கச்சுப்பிச்சுப்படுதல் - கப்பலைப்படுதல்.
கச்சுரன் - காமுகன், சிரங்குபிடித்தவன்.
கச்சுரு - நெருப்பு.
கச்சுரை - பெருங்காஞ்சொறி.
கச்சூரம் - கழற்சிக்கொடி, சிறுகுட்டை, பேரீந்து.
கச்சை - கயிறு, கவசம், கௌபீனம், தழும்பு, முழுப்புடவை, யானைகட்டுங் கயிறு, வார்.
கச்சைகட்டுதல் - அரைகட்டுதல், தாறுபாய்ச்சிக்கட்டுதல்.

கச்சைக்கொடியன் - கன்னன்.
கச்சோணி - வாசனைப்பண்டம்.
கச்சோதம் - மின்மினி.
கச்சோரம் - கிச்சிலிக்கிழங்கு.
கச்சோலம் - ஏலப்பட்டை, கிச்சிலிக்கிழங்கு, மாஞ்சில்.
கஞலல் - கஞறல்.
கஞறல் - கள்.
கஞறல் - எழுச்சி, கடுப்பு, சினக்குறிப்பு, நிறைதல், நெருங்கல், பொலிவு, மிகுதி.
கஞன்றல் - எழுச்சி.
கஞ்சகம் - கச்சுவிடுந்தலைப்பு, கண்ணிவிடு மோர் மருந்து, கருவேப்பிலை, முன்றானை.
கஞ்சகன் - கண்ணன்.
கஞ்சகாரர் - கன்னார்.
கஞ்சக்கருவி - தாளமுதலிய வெண்கல வாத்தியம்.
கஞ்சக்கலம் - வெண்கலப்பாத்திரம்.
கஞ்சகன் - பிரமா.
கஞ்சணி - பிரதானம்.
கஞ்சத்தகடு - ஈயத்தினாற் செய்யுமோர் தகடு.
கஞ்சநன் - மன்மதன்.
கஞ்சம் - அப்பவருக்கம், அமிர்தம், ஓரூர், கஞ்கா, கற்கடகபாஷாணம், கைத்தாளம், தாமரை, துளசி, நீர்பாத்திரம், வஞ்சகம், வெண்கலம்.
கஞ்சரன் - குறியவன், சூரியன், பிரமன்.
கஞ்சரீடம் - வலியான் குருவி.
கஞ்சல் - எளியது, குப்பை, கூளம்.
கஞ்சவாதம் - ஒருவகைவாதநோய். அது வாதப் பிரதான மந்தவீரிய வஸ்துக்களைப் பிரதிதினமு முண்பதினாற் பிறந்து கடிகஸ்தானத்தில் நின்றெழும்பி விரைவில் தொடை நரம்புகளை யனுசரித்து நொண்டியைப் போல் நடக்கச் செய்வது.
கஞ்சனம் - கண்ணாடி, கரிக்குருவி, கைத்தாளம், வலியான்.
கஞ்சனை - கண்ணாடி கலசப்பானை.
கஞ்சன் - ஓரரசன், அவன் கிருஷ்ணன் மாமன், பிரம்மா.
கஞ்சா - கள், கோரக்கர்மூலி, சாராயம்.
கஞ்சாகம் - தவிடு.
கஞ்சாக்குடுக்கை - குடுகுடா.
கஞ்சாங்கொற்றி - கனமற்றது, பாலற்றது, பிச்சிப்பேய்.

கஞ்சாங்கோரை - ஒரு துளசி.
கஞ்சாராதி - விட்டுணு.
கஞ்சாரி - கண்ணன்.
கஞ்சாலேகியம் - ஒரு மருந்து.
கஞ்சி - அன்னப்பால், காஞ்சிபுரம்.
கஞ்சிகை - இரத்தினச்சிவிகை, சீலை, திரைச்சீலை.
கஞ்சித்தண்ணீர்குடித்தல் - சாச்சடங்கில் ஒன்று.
கஞ்சிப்பசை - கஞ்சியிலானபசை.
கஞ்சியிடல் - கஞ்சிப்பசைதோய்த்தல்.
கஞ்சிலிகை - இரவிக்கை.
கஞ்சீயம் - வெண்கலம்.
கஞ்சுகம் - சட்டை, சிலந்தி, பாம்பின் றோல், மார்ச்சட்டை, முருக்கு.
கஞ்சுகர் - மெய்காப்பாளர்.
கஞ்சுகன் - காவற்காரன், வயிரவன்.
கஞ்சுகி-காவற்காரன், சட்டை, திரைச்சீலை, பாம்பு.
கஞ்சுளி - சட்டை, பொக்கணம்.
கஞ்சை - சாராயம் வடிக்குமிடம்.
கடகக்கை - ஒருவகைக்கூத்துக்கை. அது பெருவிரனுனியுஞ் சுட்டுவிரனுனியும் பொருந்தவளைந்து நகநுனியைப்பொருந்திநிற்ப மற்றைய மூன்றுவிரல்களும் நிமிர்ந்துநிற்பனவாம்.
கடகடத்தல் உபயவோசைகொள்ளல். உழன்றுபோதல், கழலல், வசங்கெடுதல்.
கடகடப்பு - கடகடத்தல், வசக்கேடு.
கடகடென்னேவல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
கடகபுரி - கஜபதி யிராஜாக்களினிராஜதானி.
கடகம் - ஆயுதவருக்கம், இராஜதானி, உருள், கங்கணம், கர்க்கடகம், கிம்புரி, கூடை, கூத்தின் விகற்பம், கெண்டிகை, கேடகம், கைவளை, நாடு, படை, பூவாது காய்க்குமரம், மதில், மலை, மலைப்பக்கம், யானைக்கூட்டம், வட்டம், வீடு.
கடகன் - நடுவன்.
கடகாதகன் - காக்கை, நரி.
கடகாவருத்தக்கை - ஒருவகைக்கூத்துக்கை; அது இரண்டுகையும் கடகமாய் மணிக்கட்டுக்கேற வியைந்து நிற்பது.

கடகி - மனை.
கடகு - கேடகம்.
கடங்கரம் - உமி.
கடகம் - கங்கணம்.
கடசியம் - கன்னத்தட்டு.
கடதாசி - கங்கதுதி.
கடத்தல்-செலுத்தல், தாண்டல், நடத்தல், நெடுகவிடுதல், பாய்தல், பொழுதுபோக்கல், மீறுதல், விலக்குதல்.
கடத்தி - கழப்புணி.
கடத்துதல் - செலுத்துதல், நாட்போக்குதல், நெடுகவிடுத்தல், விலக்குதல்.
கடைத்தேறல் } கடைத்தேறுதல்.
கடைத்தேறுதல் }
கடைத்தேற்றம் - இரட்சிப்பு.
கடைத்தேற்றுதல் - கடைத்தேற்றுதல்.
கடந்தஞானம் - முற்றுந்துறந்தஞானம்.
கடந்தபொருள் - கடவுள், கிட்டாதது, போனபொருள்.
கடந்தவெண்ணம் - முதிர்ச்சியானவெண்ணம்.
கடந்தேறல் - இடையூறுகடத்தல், நற்கதியடைதல்.
கடந்தைநாயகி - திருத்தூங்கானை மாடத்திற் கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
கடபலம் - தேக்குமரம்.
கடபி - வாலுளுவை.
கடப்பாடு - ஈகை, கடமை, செய்யவேண்டுவது, தகுதி, நடை, நேர்மை, முறைமை.
கடப்பாரை - ஒரு கருவி.
கடப்பு - கருங்குறுவைநெல், கடத்தல், கடவை.
கடப்புக்கால் - விளையற்கால்.
கடமா - காட்டுப்பசு, பொலிப்புயானை.
கடமுடெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
கடமுனி - அகத்தியன்.
கடமை - இறை, கடன், காட்டுப்பசு, குடியிறை, தகுதி, முறைமை.
கடம் - அருநெறி, உடல், உபநிடதமுப்பத்திரண்டினொன்று, ஒருமந்திரம், கடமை, கடன், கயிறு, காக்கை, காடு, குடமுழவு, குடம், கொடிக்கடை, சோலை, சாரல், சுடலை, தோட்டம், நண்டு, நீதி, பதக்கு என்னும் ஓரளவை, பாண்டம், மயானஸ்தானம், மர

மஞ்சள், மலைப்பக்கம், யானைக்கது ப்பு, யானைக்கூட்டம், யானைமதம், யானைமத்தகம், வாச்சியம், வானம்.
கடம்பம்-அம்பு, ஒருமரம், கீரைத்தண்டு, வாலுளுவை.
கடம்பரா - கடுகுரோகணி.
கடம்பர் - ஒருசாதியார், குறும்பர், சுப் பிரமணியர்.
கடம்பல் - குமிழ்மரம்.
கடம்ப்வனசுந்தரன் - மதுரையிலமர்ந்த சிவன்.
கடம்பவனம் - மதுரை.
கடம்பவனேசுபரன் -மதுரையிலமர்ந்த சிவன்.
கடம்பவனேசுபரி - மதுரைமீனாட்சி.
கடம்பன் - குமரன்.
கடம்பாடவி } மதுரை.
கடம்பாடி
கடம்பு - கருங்குறுவை நெல், நீபமரம், பிள்ளைபிறந்தவுடன் சுரக்கும்பால்.
கடம்பவனம் - மதுரை.
கடம்பூர் - ஒரூர்.
கடம்பை - கடம்பூர், ஒருகாட்டுமிருகம்.
கடயம்-அத்தகடகம், இந்திராணிகூத்து.
கடரி - மரமஞ்சள்.
கடலகம்-ஆமணக்கு ஊர்க்குருவி, பூமி.
கடலஞ்சிகம் - தருப்பை.
கடலடக்கி - பேய்முசுட்டை.
கடலடம்பு - ஓரடம்பு.
கடல்டி - இலவுங்கம்.
கடலடைத்தான் - அபின், கஞ்சா.
கடலர் - நெய்தனிலமாக்கள்.
கடலாடி - நாயுருவி.
கடலாமணக்கு - ஓராமணக்கு.
கடலாமை - கடலில்வசிக்கும் ஓராமை.
கடலியாத்திரை - கடற்பிரயாணம்.
கடலியோச்சியம்-சமுத்திர சாஸ்திரம்.
கடலிறுஞ்சி - ஒருமரம்.
கடலுடும்பு - ஒருமீன்.
கடலுறய்ஞ்சி - நீர்வாழ் பறவையில் ஒன்று.
கடலெடுத்தல் - சமுத்திரம்பெருகுதல்.
கடலெவிர் - ஒருமீன்.
கடலெள்ளு - ஓரெள்.
கடலை - ஒருபயறு.
கடலைக்கட்டி - ஒருவகைக்கட்டிநோய்; அது சிறுகடலைப் பிரமாணத்தையும் அதன்வடிவத்தையும்பெற்றுச் சரீர முழுவதிலுங் கொப்பளமாக வெழும்பி வேதனையைச்செய்வது.
கடலைக்கம்பி - புடவையருகிற் சிறுங்கம் பிகளிலொன்று.
கடலோடி - மரக்கலமோடுவோன்.
கடலோடுதல் - கடற்பிரயாணம்பண்ணுதல்.
கடலோட்டு - கப்பலோட்டு.
கடலோரம் - கடற்கரை.
கடல் - இராசசின்னத்தொன்று, ஓரெண், சமுத்திரம், பசு.
கடல்கட்டி - செம்படவன், நீர்தடுப்போன், மச்சங்களின் வாய்கட்டுவோன்.
கடல்கலக்கி - பேய்முசுட்டை.
கடல்கொள்ளுதல் - கடலெடுத்தல்.
கடல்நாய் - நீர்நாய்.
கடல்நுரை - அக்கினிகர்ப்பம், ஓரப்பம்.
கடல்படுதிரவியம் - கடலி லுண்டாகுந் திரவியமைந்து; அவை அக்கு, உப்பு, சங்கு, பவளம், முத்து.
கடல்மனிதன் - நீரிலிருக்கு மோர்வித மனு.
கடல்முனை - கடலந்தம்.
கடல்வண்டு - குடைவண்டு.
கடல்வண்ணன் - ஐயன், விண்டு.
கடல்வருணனை-பெருங்காப்பியவுறுப்பு ளொன்று. அது கடற்சிறப்புக் கூறுவது.
கடல்விராஞ்சி - ஒருசெடி.
கடவ - அப்படியாக.
கடவது - ஆகட்டும், கூடியது, செய்ய வேண்டுவது, முறையானது.
கடவல் - செலுத்தல், பிரயோகித்தல்.
கடவல்லி - ஒரு உபகிடதம்.
கடவுள் - செல்லுநாள்.
கடவன் - செய்வானாக, செய்வேனாக.
கடவாப்பண்டம் - பயணச்சாமான்.
கடவான் - கண்டாயம், செய்வானாக, வரம்பிலுடைவு.
கடவு - தணக்குமரம், வழி.
கடவுட்பணி - ஆதிசேடன், தேவர் தொண்டு.
கடவுட்பாம்பு - ஆதிசேடன்.
கடவுண்மகாமுனிவர் - கச்சியப்பமுனிவர்காலத்தில் பிள்ளையார் பாளையத்தில் இருந்த ஒருபுலவர். இவர் திருவாதவூரடிகள் புராணம் பாடினவர்,

கடவுண்மூர்த்தி - அருகன்.
கடவுதல் - ஏவுதல், செலுத்தல், தகுதியாதல், பிரயோகித்தல்.
கடவுமரம் - தணக்குமரம்.
கடவுளர் - தேவர், வானவர்.
கடவுளர்தாரம் - தேவதாரம்.
கடவுள்-குரு, தெய்வம், நன்மை, முனிவன், வானவன்.
கடவுள்வணக்கம் - கடவுள் வாழ்த்து, தெய்வவணக்கம்.
கடவுள்வாழ்த்து - தேவதுதி.
கடவை-ஏணி, கடத்தல், கடப்பு, கடப்புமரம், குற்றம், வாயில்.
கடவைப்படுதல் - விட்டுப்பிரிதல்.
கடவைப்படுத்தல்-தூற்றரித்தல், நீக்கல்
கடறு - அருநெறி, காடு, வாளுறை, சுரம்.
கடற்கரை - கடலருகு.
கடற்காகம் } ஒரு பறவை, கடலுராஞ்சிமரம்.
கடற்காக்கை }
கடற்காளான் - கடலிஞோர்பாசி.
கடற்குதிரை - ஒரு நீர்வாழ் மிருகம்.
கடற்குருவி - கல்லுப்பு.
கடற்கொஞ்சி - ஒருமரம்.
கடற்கொடி - தும்பை.
கடற்கொழுப்பை - எழுத்தாணிப்பூடு.
கடற்சார்பு - நெய்தனிலம்.
கடற்சிப்பி - கடலிலுள்ள சிப்பி.
கடற்சில் - ஒருகடன், மரக்கொட்டை.
கடற்சேர்ப்பன் - நெய்தற் றலைவன், பாண்டியன்.
கடற்பக்கி - கடற்பட்சி.
கடற்பச்சை - சமுத்திரப்பச்சை.
கடற்பட்சி - கிளிஞ்சில்.
கடற்பன்றி - ஒரு கடல்மிருகம்.
கடற்பாசி - கடலிலுண்டாகும் பாசி.
கடற்பாம்பு-நீர்வாழுமோர்விதப் பாம்பு.
கடற்பாலை - சமுத்திரசோகி.
கடற்பிணா - நெய்தனிலப்பெண்.
கடற்பிறந்தாள் - இலக்குமி, மூதேவி.
கடற்புறா - கடலின் வாழ்புறா.
கடற்பெருக்கு - கடல்நீர்ப்பெருக்கு.
கடற்றாரா-கடலின்வாழுமோர்பறவை.
கடற்றாழை - கொந்தாழை.
கடற்றிரை - கடல்அலை.
கடற்றீ - கடனுரை.
கடற்றேங்காய் - கடற்றெங்கங்காய்.
கடனம் - தாழ்வாரம், முயற்சி.
கடனாளி - கடன்பட்டவன்.
கடனிறுத்தல் - கடன்றீர்த்தல்.
கடனுரை - ஒருபண்ணிகாரம், ஒருமருந்து.
கடனெடுத்தல் - கடன்வாங்குதல், பழிசாதித்தல்.
கடன் - அளத்தல், இருணம், கடமை, குடியிறை, மாக்கால், முறைமை.
கடன்கட்டு - கடன், காவற்சாலை.
கடன்கழித்தல்-கரிசனமற்றவேலைசெய்தல், தென்புலத்தார்க்குச்செய்வன செய்தல், பதிலளித்தல்.
கடன்காரன் - கடன்கொடுத்தவன், கடன்பட்டவன், பார்வைக்கூழியஞ் செய்வோன்.
கடன்சீட்டு - பற்றிய கடனைக்காட்டும் பத்திரம்.
கடன்செய்யல்-இறந்தோர்க்குவேண்டுஞ்சடங்குசெய்தல், கடமைசெய்யல்.
கடன்முறி - கடன்சீட்டு.
கடன்மூர்த்தி - அருகக்கடவுள்.
கடன்வழி-பிரயோசனமின்மை, வீண்.
கடா - ஆடு, எருமை, இவற்றினாண், கடாவென்னேவல், வினா.
கடாகம் - கிணறு, பெருங்கொப்பறை.
கடாகாசம் - குடத்திற்றோன்றிய ஆகாயம்.
கடாகாயம் - உருவுக்குள்வெளி.
கடாகு - பறவை.
கடாக்கம் - கடாட்சம்.
கடாசுதல் - எறிதல், கடாவுதல்.
கடாச்சங்காத்தம் - மடைத்தனம், மதியாத்தன்மை.
கடாட்சம் - கடைக்கண், கருணம், கிருபை, தயவு.
கடாட்சவீட்சணம் - கடைக்கண் பார்வை, கருணை, கிருபைக்கண் வைத்தல், மோகப்பார்வை.
கடாட்சித்தல் - கிருபைசெய்தல்.
கடாத்தன்மை-கீழ்ப்படியாமை, மடமை
கடாம் - யானைமதம்.
கடாயம் } குடிநீர், மருத்துறநீர்.
கஷாயம் }
கஷாயனம் }
கடாரம்-ஒரூர், கருமைகலந்தபொன்மை கொப்பரி, பசுவின் பெண்கன்று.
கடாரன் - காமாதுரன்.

கடாரி - நாகு.
கடாரை - ஒரு நாரத்தைமரம்.
கடாவல் - ஆணிமுதலிய கடாவல், செலுத்தல், வினவல்.
கடாவு - கடாவென்னேவல், வினா.
கடாவுதல் - செலுத்தல்.
கடாவுதற்சீட்டு - பொருத்தச்சீட்டு.
கடி - அதிசயம், அரை, அச்சம், அழகு, இடுப்பு, இரப்போர்கலம், இன்பம், உக்கிரம், ஐயம், ஒழிக்கை, ஒளி, ஓசை, கடிக்கப்பட்டதழும்பு, கடியென்னேவல், கரிப்பு, கலியாணம், களிப்பு, காலநுட்பம், காலம், காவல், கூர்மை, கைப்பற்றல், சிறப்பு, சிறுகொடி சீக்கிரம், தோணி, நந்தனவனம், நிதம்பம், நீக்கல், பிசாசம், பிணம், புணர்வு, புதுமணம், புதுமை, பொழுது, மிகுதி, வாசனை, விளக்கம்.
கடிகண்டு - பூனைக்காலி.
கடிகம் - காமுட்டி.
கடிகாசூத்திரம் - அரைஞாண், கடிகாரம் - நாழிகை வட்டம்.
கடிகாசூத்திரன் - குயவன்.
கடிகாஸ்நாநம் - அரைஸ்நாநம்.
கடிகாரம் - நாழிகைவட்டம்.
கடிகை - அரையாப்பு, உண்கலம், கரகம், சமயம், தாழ்க்கோல், துண்டம், நாழிகை, வேதம்.
கடிகைமாக்கள் - நாழிகைக்கவி சொல்வோர், மங்கலப்பாடகர்.
கடிகைமுத்துப்புலவர் - எட்டயபுர சமஸ்தான வித்துவானாயிருந்த ஒரு புலவர். இவர் கழிக்கரைப் புலம்பல், திக்குவிஜயம் என்னும் நூற்களை செய்தவர்.
கடிகையாரம் - கடியாரம்.
கடிகையார் - அரசனுக்குச்சென்ற நாழிகைக்குக் கவிசொல்லுவோர்.
கடிகைவெண்பா - ஒருபிரபந்தம்; அஃது தேவரிடத்தும் அரசரிடத்தும் நிகழுங்காரியங் கடிகையளவிற்றேன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் கூறுவது.
கடிகைவேளாளர் - ஒருவேளாளர்.
கடிகோல் - கொடுங்கோல், குழிகோல், தட்டை, நாய்க்கழுத்திற் கட்டுந்தடி.
கடிசு - கடுமை, திமிர்வு.
கடிசூத்திரம் - கடிகாசூத்திரம்.
கடிசை - பாய்மரந்தாங்கி.
கடிச்சவாய்துடைச்சான் - காஞ்சொறி.
கடிச்சை - உலோபகுணம், ஒருபூண்டு, ஒருமீன்.
கடிஞை - இரப்போர்கலம்.
கடிதடம் - சகனபக்கம், நிதம்பம், பெண்குறி.
கடிதம் - அடுக்கல், இணைவு, காகிதம், செய்யப்பட்டது, பிசின்.
கடிதல் - அழித்தல், அறுத்தல், ஒடுக்கல், கோபித்தல், சினக்குறிப்பு, தடைசெய்யல், தண்டித்தல், நீக்கல், வெட்டல்.
கடிது - கடியது.
கடிதேசம் - இடை, இடுப்பு.
கடித்தல் - கயிறுமுதலிய விறுக்கிப்பிடித்தல், கறித்தல், தழும்புபடுத்தல்.
கடித்திரம் - மேகலை.
கடிஸ்நாநம் - இடைவரைச்குஞ்செய்யும் ஸ்நானம்.
கடிநம் - சர்க்கரை, பானை, வெல்லம், அழுத்தம்.
கடிநாய் - கடிக்கிறநாய், துஷ்டன்.
கடிந்தமன் - குயவன்.
கடிந்தோர் - முனிவர், துறந்தோர்.
கடிபிடி - சண்டை.
கடிப்பகை - கடுகு, வேம்பு.
கடிப்பம் - ஆபரணப்பெட்டி, காதணி, கெண்டிகை.
கடிப்பான் - ஊறுகாய், கறி.
கடிப்பிடுகோல் - முரசறைகோல்.
கடிப்பிணை - காதணி.
கடிப்பிரதேசம் - பின்பக்கம்.
கடிப்பிரோதம் - தொடைச்சந்து.
கடிப்பு - கடிப்பட்டகாயம், கோல், நெய்வார் கருவியிலொன்று.
கடிப்பை - சிறுகடுகு.
கடிமூலம் - முள்ளங்கிச்செடி.
கடிம் - புருஷடம்.
கடியடு - சிற்றரத்தை.
கடியது - கடுமையானது.
கடியநெட்டுவேட்டவன் - பெருந்தலைச்சாத்தனாற் பாடப்பட்ட ஒருவேட்டுவப் பிரபு.
கடியந்திரம் - ஏற்றமரம்.
கடியல் - மரக்கலங்களின் குறுக்குமரம்.

கடியன் - கடிக்கப்பட்டது, கடிக்கிற குணமுடையது.
கடியாரம் - நாழிகைவட்டம்.
கடியிரத்தல் - மூக்கிரட்டை.
கடிரோமம் - கோரைக்கிழங்கு.
கடிலா - மூக்கிரட்டை.
கடில்லகம் - துளசி.
கடிவாய் - பற்பட்டவிடம்.
கடிவாளப்பூண் - விருளை.
கடிவாளம் - குதிரையின் வாய்வடம்.
கடிவு - அரையில்வருந் திரட்சி.
கடிவுகம் - இடுப்பின்கீழ்வரும் வீக்கம்.
கடிவை - யானை.
கடினகாலம் - தீங்கானகாலம், பஞ்சங் கோதாரியுள்ள காலம்.
கடினம் - கடுமை, கற்கசம், கொடுமை, மிகுதி, முறைப்பு, வருத்தம், வன்மை.
கடினை உரப்பாய் விழியகத்திலிருக்கும் வெள்ளைச்சவ்வு.
கடூரகம் - உபத்தம்.
கடூரம் - அல்குல், பெண்குறி.
கடு - கசப்பு, கடுகுரோகணி, கடுக்காய் மரம், கடுவென்னேவல், காத்தல், கூர், கூன், நஞ்சு, பாம்பு, விடம், மாவிலங்கு, முதலை, முள், முள்ளி.
கடுகடுத்தல்-உவர்த்தல், கசத்தல், வெடுவெடுத்தல்.
கடுகடுப்பு-அதிசீக்கிரம், ஒருசுவை, வெடுவெடுப்பு, வெறுப்பு.
கடுகம் - கடுகுரோகணி, கார்க்கும் மருந்து, கார்ப்பு, குடம், சுக்கு, திப்பிலி, மிளகு, மோதிரம்.
கடுகல் - சமீபித்தல், விரைதல்.
கடுகன்னம் - கடுகோரை.
கடுகாலாத்தி-கடுகினாற்சுற்றுமாலாத்தி.
கடுகி - சுண்டைச்செடி.
கடுகியகாந்தி - இரசதபாஷாணம்.
கடுகீடகம் - கொசுகு.
கடுகு - எண்ணெய்க்காஷாயம், ஐயவி, ஒரு சரக்கு, கடுகென்னேவல், குன்றிச்செடி.
கடுகுக்கட்டி - ஒருவகைக் கட்டிநோய்; அது சரீரமுழுவதிலும் நெருக்கமாகக் கடுகுப் பிரமாணத்தையொத்து விரைவிலெழும்பியுடனேயுடைந்து மிகுந்த வேதனையைச் செய்வது.
கடுகுசாதம் - கடுகோரை.

கடுகுடுத்தல் - கோபமாய்ப் பேசுதல், தெளிவின்றிப்பேசுதல், விரைவுபண்ணுதல்.
கடுகுடுத்தான் - நிலையில்லாதவன், பரபரப்பானவன்.
கடுகுதல் - கடுகல்.
கடுகுமணி - கடுகு, சிறுமணி.
கடுகுரோகணி } ஒருமருந்து.
கடுகுரோணி }
கடுகெண்ணெய் - கடுகுத்தைலம்.
கடுகை - கடுகுரோகணி.
கடுகோரை - சித்திரான்னத்தொன்று.
கடுக்கல்-உவமையாதல், உளைதல், கடுக்குதல், பசைப்படுத்தல்.
கடுக்கன் - ஒருகாதணி.
கடுக்கன்புல் - ஒருவகைப்புல்.
கடுக்காய் - திரிபலையினொன்று, துவர்பத்தினொன்று.
கடுக்காய்த்தலையன் - ஒருபாம்பு, சிறுத்துவட்டித்தலையுடையவன்.
கடுக்காய்நண்டு - ஒருநண்டு.
கடுக்காய்வேர் - அரேணுகம்.
கடுக்கிரந்தி - இஞ்சி.
கடுக்குதல் - உவமையாதல், உளைதல், கடிவாய்கடுக்குதல், பசைப்படுத்தல்.
கடுக்கும் - ஒக்கும்.
கடுக்கெனல் உயருதல், மிகுதல், வளருதல்.
கடுக்கென்குதல் - வளர்தல்.
கடுக்கென்றவன் - வளர்ந்தவன்.
கடுக்கை - கொன்றைமரம், மருதமரம்.
கடுக்கைக்கண்ணியன் - சிவன்.
கடுங்கணாளர் - கொடியோர், வன்கண்ணர்.
கடுங்கண் - ஓலைக்கண், கொடுமை, தறுகண்மை.
கடுங்கறுத்து - கூரியகருத்து, வன்கருத்து.
கடுங்கள் - அழன்றகள்.
கடுங்காந்தி - வைப்புப்பாஷாணத்தொன்று.
கடுங்காய்-சாதிக்காய், பழாதகாய்.
கடுங்காய்தல் - அறக்காய்தல்.
கடுங்காய்நுங்கு - முதிர்ந்தநுங்கு.
கடுங்காரநீர் - முட்டை.
கடுங்காரம் - ஆயக்கல், ஒருப்பு, கடுங்கூட்டானகாரம், சாதிபத்திரி, மிகுவுறைப்பு.
கடுங்காலம் - உபத்திரவகாலம், கொடிய காலம், பஞ்சகாலம், வெப்பமான காலம்.

கடுங்கூர்மை-அமரியுப்பு, அறக்கூர்மை, கடலுப்பு, கந்தகவுப்பு.
கடுங்கை - கடுமை.
கடுங்கோடை - வன்கோடை; வேனிற் காலம்.
கடுங்கோபம் - மிகுகோபம்.
கடுங்கோன் - தலைச்சங்க மிருத்திய பாண்டியர்களில் இறுதியான்.
கடுசரம் - கடுகுரோகணி.
கடுசாரம் - காசிச்சாரம்.
கடுசித்தாழை - பரங்கித்தாழை.
கடுஞ்சாரி - நவட்சாரம்.
கடுஞ்சினப்பூமி - உழமண்.
கடுஞ்சினேகம் - மிகுசினேகம்.
கடுஞ்சுன்னத்தி - சீனக்காரம்.
கடுஞ்சூல் - முற்பட்டசூல்.
கடுஞ்சூல்-பெற்றிருந்தபாலன் தைமாசியில் பாலைநிலத்திற் பிறந்த பூநீறு.
கடுஞ்செட்டு - கொடிய வியாபாரம்.
கடுஞ்சொல் - நால்வகை இழிசொல்லில் ஒன்று.
கடுடம் - மருக்காரை.
கடுதலைமுடிச்சு - விகடச்செய்கை.
கடுதலைவிற்பூட்டு - வழுவாத பூட்டான சொல்.
கடுதல் - திருடல், பறித்தல்.
கடுதாசி - காகிதம், நிருபம்.
கடுதீத்தா - வெண்கடுகு.
கடுதும்பி - பேய்ச்சுரை.
கடுத்தம் - அடர்த்தி, அழுத்தம், சோனகருடைய சீதனவுடம்படிக்கை, புத்தகத்தினட்டை.
கடுத்தலூசி - கற்றுளைக்குங் கருவி.
கடுத்தலை - வாள்.
கடுத்தல் - உவமையாதல், ஐயம், ஒரெறும்பு, ஒருமீன், கோபம், கோபித்தல், சினம், விருவிருத்தல், வேகம்.
கடுத்திரயம் - திரிகடுசம், அவை நெல்லிக்காய், தான்றிக்காய், கடுக்காய்.
கடுநடை - நடைச்சுருக்கு.
கடுநிம்பம் - நிலவேம்பு.
கடுநீர் - மதி, மேகம்.
கடுந்தது - கடந்தது, கடினமுடையது.
கடுந்தரை - வன்னிலம்.
கடுந்தழற்பூமி - உழமண்.
கடுந்தி - நாயுருவி.
கடுந்திலாதணம் - அமரியுப்பு.

கடுந்தோயல் - ஆயுதங்களை அறக்காய்ச்சித்தோய்வது.
கடுபத்திரம் - சுக்கு.
கடுபி - வாலுளுவை.
கடுப்ப - உவமைச்சொல்.
கடுப்படக்கி - எருமுட்டைப் பீநாறி.
கடுப்பிறக்கல் - அகங்காரத்தையகற்றல்.
கடுப்பு - அகங்காரம், எரிவு, கடுநோய், குற்று, கொதிப்பு, சினம், வேகம்.
கடுப்புச்சூடு - வற்றச்சூடு.
கடுப்புமரம் - எண்ணெயூற்று மிடுக்குமரம்.
கடுப்பு-ஊமத்தை, கடுக்காய்வேர்.
கடுப்பெடுத்தல் - கடுப்பிறக்கல்.
கடுப்பை - வெண்கடுகு.
கடுமஞ்சரிகை - நாயுருவி.
கடுமரம் - எட்டிமரம், கடுக்காய்மரம், நச்சுமரம்.
கடுமலை - காரீயமலை.
கடுமழை - பெருமழை, கனத்தமழை.
கடுமண் - கடுமை.
கடுமான்கோதை - சேரமான்குட்டுவன் கோதை.
கடுமுடுக்கல், கடுமுடுக்கு - விரைவு, வில்லங்கம்.
கடுமுடுத்தல் - விரைதல்.
கடுமுடெனல் - ஒலிக்குறிப்பு.
கடுமுள் - ஆயுதப்பொது, கண்டங்கத்திரி, நச்சுமுள்.
கடுமுறவு - மிகுநேசம்.
கடுமூர்க்கம் - மிகுகோபம்.
கடுமை - அகோரம், கடினம், கண்டிப்பு, குரூரம், கொடுமை, கோபம், வன்மை, சீக்கிரம், மிகுதி, முறைப்பு, மூர்க்கம், விரைவு.
கடும்பகல் - உச்சிக்காலம், மத்தியானம்.
கடும்பச்சை - நாகபச்சை.
கடும்பரை - கடுகுரோகணி, முதியார் கூந்தல்.
கடும்பலம் - இஞ்சி, கருணைக்கிழங்கு.
கடும்பால் - ஈன்றணிமைப்பால்.
கடும்பு - உறவு, சும்மாடு, சுற்றம், பாற்கடும்பு முதலியன.
கடும்பை - வெண்கடுகு.
கடுரம் - மோர்.
கடுரவம் - தவளை.
கடுரோகணி, கடுரோணி - ஒருமருந்து.

கடுலன் - கூனன்.
கடுவங்கம் - இஞ்சி, வேர்க்கொம்பு.
கடுவட்டி - அநீதவட்டி.
கடுவல் - கடுங்காற்று, கடுநிலம்.
கடுவழி-அந்தரவழி, அருமையானவழி.
கடுவளி - பெருங்காற்று.
கடுவன் - குரங்கு, நாய், பூனை, முசு இற்றிணாண், மாவிலங்கு, விலங்கேற் றின்பொது.
கடுவாயன் - கழுதை, பாம்பு.
கடுவாய் - ஒருபுலி, நாய், புலிக்குடத்தி.
கடுவான் - ஒரு கரப்பன்.
கடுவிதித்தல் - கடுகுரோகணி.
கடுவெளி நிழலற்றவெளி, வெறுவெளி
கடூரம் - கொடுமை.
கடேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட் டனு ளொன்று.
கடேந்திரநாதர் - ஒரு சித்தர்.
கடோம் - நோய், மூகில்.
கடோன் - நோயாளி.
கடேரியம் - மரமஞ்சள்.
கடை - அங்காடி, குடம், ஏழனுருபு, (உ - ம்) அவன் கடைச்சென்றான், கடையென்னேவல், கதவு, கீழ், பக் கம், புறவாயில், பூணின்கடைப்புண ர்வு,பெண்குறி,முடிவு, வழி, வாயில், வினையெச்சவிகுதி.
கடைகழிமகளிர் - பொதுமகளிர்.
கடைகாப்பாளர் - வாயில்காவலாளர்.
கடைகால் - பால்கறக்கும் மூங்கிற்கு ழல், பின்கோக்கியினேருறுப்பு,பின் னணை.
கடைகுளத்திங்கள் - ஆடிமாதம்.
கடைகெட்டவன் - கீழ்மகன்.
கடைகேடு - மிகவிழிபு.
கடைகோல் - தீக்கடைகோல்.
கடைக்கட்டு - முடிப்பு.
கடைக்கணித்தல் - கடாக்ஷஞ் செய்தல், கடைக்கண்ணாற் பார்த்தல், புறக்க ணித்தல்.
கடைக்கண்-கடாட்சம், கண்ணின்கடை
கடைக்கருவி - உடுக்கை.
கடைக்கனல் - வடவாக்கினி.
கடைக்காப்பு - பதிகத்தின் கடைசிப் பாட்டு.
கடைக்கால் - தறுவாய்.
கடைக்குடர் - கீழ்க்குடர்.
கடைக்குட்டி - கடைசிப்பிள்ளை.
கடைக்குளம் - உத்திராடநாள்.
கடைக்குறை - ஈறுகுறைந்து நிற்குஞ் சொல்.
கடைக்கூட்டல்-அனுபவத்திற்குக்கொ ண்டுவந்து சேர்த்தல், செய்வினைப் பயனை அனுபவிப்பது.
கடைக்கூழை - ஒருதொடை, படைப் பின்னணி.
கடைக்கூழைமுரண் - ஓரடியின் முதற் சீர்க்கணின்றி யேனைச்சீர்க்கண் மு ரண் வருவது.
கடைக்கூழைமோனை-முதற்சீர்க்கணின் றியேனைச்சீர்க்கண்மோனைவருவது.
கடைக்கூழையளபெடை - முதற்சீர்க்க ணின்றி யேனைச்சீர்க்க ணளபடை வருவது.
கடைக்கூழையியைபு-ஓரடியின்கடைச் சீர்க்கணின்றி யேனைச்சீர்க்க ணியை பு வருவது.
கடைக்கூழையெதுகை - ஓரடியின் முதற்சீர்க்கணின்றி யேனைச் சீர்க்க ணெதுகை வருவது.
கடைக்கொள்ளி - குற்றங்கொள்ளி.
கடைக்கோடி - அறக்கடைசி.
கடைசாரம்-காரியத்தின்முடிவு,முடிவு.
கடைசாரி - கடைகெட்டவன்.
கடைசார்-காரியம், பின்னணை, முடிவு.
கடைசி - கடையப்பெண், முடிவு.
கடைசியர் - மருதநிலப்பெண்கள்.
கடைசோரி - அப்பக்கடை.
கடைச்சங்கம் - மதுரையிலிருந்த பிற் சங்கம்.
கடைச்சரக்கு - கரிக்குஞ்சரக்கு, பல சரக்கு.
கடைச்சல் - கடைதல்.
கடைச்சல்மரம் - கடையுமரம்.
கடைச்சற்காரர் - ஒருசாதியார். [ளை.
கடைச்சன் - இளையமகன், கடைப்பிள்
கடைச்சி - இளையமகள், கடைப்பெண், நெட்டி, மருதநிலத்துப்பெண்.
கடைசித்தாழை - பறங்கித்தாழை.
கடைஞர் - மருதநிலமாக்கள்.
கடைதடம் - வாயில்.
கடைதலைப்பூட்டு - விற்பூட்டுப் பொ ருள்கோள்.

கடைதலைவிற்பூட்டு-பூட்டுவிற்பொருள்கோள், பேச்சிற்கொளுவிப்பிடித்தல்
கடைதல் - கலக்குதல், குடைதல்.
கடைதிறப்பு - கதவுதிறத்தலைக்குறித்த ஒரு பிரபந்தம்.
கடைத்தடம் - வாயில்.
கடைத்தரம் - கீழ்த்தரம்.
கடைத்தலை, கடைத்தலைவாயில், கடைத்தலைவாய்தல் } முதல்வாயில்.
கடைத்தெரு - கடைவீதி.
கடைத்தேறல், கடைத்தேறுதல் } ஈடேறுதல்.
கடைத்தேற்றம் - ஈடேற்றம்.
கடைநாள் - இரேவதி.
கடைநிலை - ஈற்றெழுத்து, ஒரு பிரபந்தம். அஃது சான்றோர் எம் வரவினைத் தலைவற் குரையெனக் கடைகாவலர்க்குக் கடைக்கண்ணின்று கூறுவது, புறவாயில்.
கடைநிலைத்தீபகம், கடைநிலைத்தீபம், கடைநிலைத்தீவகம் } ஒருபயனிலை அது இறுதிநிலை விளக்கம்.
கடைநிலையெழுத்து - இறுதிநிலை.
கடைப்பட்டது - இழிந்தது.
கடைப்பட்டவன் - இழிந்தவன்.
கடைபோதல்-நிறைவேறல், முடித்தல்.
கடைப்படல், கடைப்படுதல் } இழிவாதல், நிறைவேறல், மிகவிழிவாதல்.
கடைப்படுதானம் - அதமதானம். அது அச்சம் - ஆர்வம் - கடைப்பாடு - கண்ணோட்டம் - காரணம் - கைம்மாறு - புகழ் முதலியவை, இலௌகீக காரணமாகக் கொடுக்குங் கொடை.
கடைப்பந்தி - கடைசிப்பந்தி.
கடைப்பாடு - இழிவு, தீர்மானிப்பு.
கடைப்பிடி - உறுதி, கருமமுடிக்குந் துணிவு. அது ஆடு உக்குணம் நான்கினொன்று, ஞாபகம், தேற்றம், மறவாமை.
கடைப்பிடித்தல்-உறுதியாய்ப்பிடித்தல், தெளிவாயறிதல், மறவாதிருத்தல்.
கடைப்பிடிப்பு - உறுதியாய்ப்பிடிக்கை.
கடைப்பிறப்பு - கீழ்ப்பிறப்பு, கடையானபிறப்பு.
கடைப்புணர்முரண் - கடைமுரண்.
கடைப்புணர்வு-ஆபரணக்கடைப்பூட்டு.
கடைப்புத்தி-இழிந்தபுத்தி, பின்புத்தி.
கடைப்புளி - கரும முடிக்குந் துணிவு, தேற்றம், மறவாமை.
கடைப்பூட்டு - பின்கோக்கி.
கடைப்போதல் - நிறைவேறல்.
கடைமடக்கு - நான்கடியினீறும் பல பொருள் ஒரு சொல்லான் முடியுங் கவி.
கடைமரம் - கடையுந்தறி.
கடைமீன் - இரேவதிநாள்.
கடைமுரண் - செய்யுளுறுப்பினொன்று; அது அடிதோறும் இறுதிச்சீர் மறுதலைப்பட்டு வருவது.
கடைமுறை - கடைசிமுறை.
கடைமோனை - நான்கடியினீறுமோரடியின் முடியுங்கவி.
கடையம் - இந்திராணிகூத்து, கடகம்.
கடையயல் - ஈற்றயல்.
கடையர் - ஒரு சாதியார், சுண்ணம்புக்காரர், மருதநிலத்தவர்.
கடையவாடல் - கடைசிக்கூத்து, இந்திராணியாடல்.
கடையவாடற்கூத்து - பதினோராடலுளொன்று. அது வாணாசுரனது வடக்குவாயிற் கண்ணுள்ள வயலிடத்தே நின்றிந்திராணி யாடியது.
கடையழிதல் - கஷ்டப்படல், குன்றல், கெடுதல், கேடுறல், தேய்தல், வருந்தல்.
கடையழித்தல் - தேய்த்தல், மிகக்கெடுத்தல்.
கடையளபெடை - செய்யுளுறுப்பினொன்று. அது அடியினிறுதிக் கண்ணளபெடை பயிலுவது.
கடையனல்-ஊழித்தீ, சர்வ சம்மாரகாலத்தில் உண்டாகும் அக்கினி.
கடையன் - இழிந்தோன்.
கடையாகுமோனை-இடையாகுமோனை முரணிவருவது.
கடையாகெதுகை - அடிகடோறுமுதற்சீரினீற்றசையொன்றிவருவது.
கடையாட்டம் - உலைவு, மிகுந்தகஷ்டம், வருத்தம்.
கடையாணி - தேருருளைக்கிடும் ஆணி, அருகாணி, பூட்டாணி.
கடையாந்தரம் - முடிவு.
கடையாயர் - கடையர்.

கடையால் - ஒருசலபாத்திரம், கடைசால், தோணியின் பிற்புறம்.
கடையிணைமுரண்-ஓரடியின் கடையிருசீர்க்கண்ணுமுரண் வருவது.
கடையிணைமோனை-ஓரடியின் கடையிருசீர்க்கண்ணுமோனை வருவது.
கடையிணையளபெடை-ஓரடியின்கடையிருசீர்க்கண்ணுமளபெடைவருவது.
கடையிணையியைபு-ஓரடியின் முதலிருசீர்க்கண்ணுமியைபு வருவது.
கடையிணையெதுகை - ஓரடியின்கடையிருசீர்க்கண்ணுமெதுகை வருவது.
கடையியைபு - அடிதோறு முதற்சீர்க்கண்ணியைபு வருவது.
கடையீடு - இழிந்தது.
கடையுணி - கீழ்மகன்.
கடையுண்ணல் - வருத்தப்படல்.
கடையுவா - பௌரணை, பூரணை.
கடையெதுகை - அடிதோறு மிறுதிக்கண்ணெதுகை வருவது.
கடையெழுஞ்சனி - உத்திரநாள்.
கடைவளர்தல் - ஈனுங்காலத்திற் குறிவிரிதல்.
கடைவள்ளல் - பலமுறையுங் கேட்கமறுத்துக்கொடுப்பவன்.
கடைவாசல் } தலைவாயில்.
கடைவாயில் }
கடைவாய் - வாயருகு.
கடைவாய்நக்கி - உலோபி.
கடைவால் - கடைசிவால்.
கடைவு - கடைதல்.
கடொத்தசேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கடோரம்-கடினம், கொடுமை, வயிரம்.
கடோரன் - கடுமையானவன்.
கடோலவீணை - பறக்கிண்ணாரம்.
கடோற்கசன் - வீமசேநன்மகன்.
கட்கட்டி } இமையிற்கட்டி.
கட்கண்டு }
கட்கத்தம்பம் - கலைஞான மறுபத்துநான்கினென்று. அஃது வெட்டுருமற் கொடுக்கும் வித்தை.
கட்கநேத்திரதேவியம்மை - திருவாக்கூரிற் கோயில்கொண்டிருக்குந் தேவி.
கட்கம் - வாள்.
கட்கராடம் - பரிசை.
கட்காகாதம் - வாளேறு.
கட்காதாரம் - வாளுறை.
கட்சம் - மந்திரசாத்திரம், சங்கபாஷாணம், தந்திரவிதி, நவக்கிரககட்கம் என்னுமோர் நூல்.
கட்சாந்தரம் - அந்தப்புரம்.
கட்சி - காடு, சரீரம், பக்கம், பங்கு, பறவைக்கூடு, மனிதர்படுக்கை வழி.
கட்சியாரோகம் - ஒருவகைநோய்; அது வாதம் அல்லது பித்தத்தால் அக்குளுக் குள்ளிலாவது அதைச் சுற்றியாவது நெற்பொரிபோன்ற கொப்பளங்களை நிறையப்பண்ணுவது.
கட்சிவேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கட்செவி - பாம்பு.
கட்டகம் - காந்தக்கல்.
கட்டகாலம் } கிரகந் தீங்கானகாலம், பஞ்சங் கோதாரியுள்ள காலம்.
கஷ்டகாலம் }
கட்டக்கடுமை - அதிக கடுமை.
கட்டங்கம் } தண்டு, பொல்லு, மாத்திரைக்கோல்.
கட்டங்கு }
கட்டசாத்தியம் - கடுமசாத்தியம்.
கட்டசீவி - ஆயற்காரன், துறைகாவற்காரன்.
கட்டப்பாரை - கடப்பாரை.
கட்டப்படுதல் - சம்பந்தத்திற் குள்ளாதல், பிணிக்கப்படுதல், வருத்தப்படுதல்.
கட்டல் - கஷ்டம், காடு, தாடி, துறைமுகம்.
கஷ்டம்-துன்பம், மலம், மிகுவருத்தம்.
கட்டரம் - சேறு.
கட்டல்-உடுத்தல், கூடுதல், தடை, திருடல், தோண்டல், பருக்கொள்ளல், பிடுங்குதல், மூடல், மெய்ப்பரிசம் எட்டினென்று.
கட்டவிழ்தல் - முறுக்கவிழ்தல்.
கட்டழகு - அலங்காரம், பேரழகு.
கட்டழல் - நெருப்பு.
கட்டழிதல் - நெறிதப்புதல்.
கட்டழித்தல் - நெறியழித்தல், முற்றுமழித்தல்.
கட்டளை - அளவு, உத்தரவு, உருவங்கள் வார்க்குங் கருவி, உரைதல், உவமை, ஒழுங்கு, கற்பனை, செங்கலச்சு, தடை, துலாராசி, நிறை, நிறையறி கருவி, முறை.

கட்டளைக்கலித்துறை - கலித்துறையி னோர்பேதம். அது முதற்சீர் நான் கும் வெண்டளை பிழையாது நிற்பக் கடையொரு சீரும் விளங்காயாகி வருவது.
கட்டளைக்கலிப்பா - கலிப்பாவி னோர் பேதம். அது முதற்கண் மாச்சீர்பெ ற்று நாற்சீரான்வருவ தரையடியாக வும் அஃதிரட்டி கொண்டதோரடி யாகவும் அவ்வடி நான்குகொண்டு வருவது.
கட்டளைக்கல் - உரைகல், படிக்கல்.
கட்டளைக்கோல் } நியாயப் பிரமா
கட்டளைச்சட்டம் } ணம்.
கட்டனன் - குள்ளன்.
கட்டாகட்டிமை - மிகுந்தகட்டிமை.
கட்டாக்காலி - கட்டுக்ககப்படாத காலி.
கட்டாசம் - நாவிமிருகம்.
கட்டாஞ்சி - முள்வேல்.
கட்டாடி - குறிசொல்வோன், வண்ணா ரிற்றலைவன், வண்ணான்.
கட்டாணி - உலோபி, கடைப்பூட்டாணி, சமர்த்தாளி, தூர்த்தன், பலசாலி, பேராசைக்காரன்.
கட்டாண்மை - பேராண்மை.
கட்டாந்தரை - கடுந்தரை, வெறுந்தரை.
கட்டாம்பாரை - ஒருமீன்.
கட்டாயம் - கடுமை, கட்டுப்பாடு, நெருக் கிடை, பலாத்காரம், வெறுப்பு.
கட்டாரம் - குற்றுவாள்.
கட்டாரி எழுத்தாணிப்பூடு, குற்றுவாள்.
கட்டாரிக்குத்துணி - ஒருபுடவை.
கட்டாரிக்கையொலி - ஒருபட்டுச்சீலை.
கட்டார்ச்சிதம் } வருந்தித் தேடின
கட்டார்ஜ்ஜிதம் } தேட்டம்.
கட்டி - அகமகிழ்ச்சி, இடப்பு, ஒருபுள், கருப்பிண்டம், கருப்புக்கட்டி முதலி யன, சருக்கரை, திரண்டமாத்திரை, பாடை.
கட்டிக்கொள்ளுதல் - அடிப்படுத்துதல்.
கட்டிபடுதல் - கட்டியாதல்.
கட்டிப்பிரமேகம் - ஒருவகைப்பிரமேக நோய்; அது சரீர முழுவதுஞ் சகிக் கக்கூடாத நோவுடன கட்டிகளெ ழும்புதல், கோசத்திற் சொறியோடு தினவு, பருக்கைபோற் சீழ்வடிதல், பீசத்தில் நீர்கசிதல், தேகவாட்டம் என்னும் இக்குணங்களையுண்டாக்கு வது.
கட்டிமுட்டி - பெரிதுஞ் சிறிதுமான கட்டி.
கட்டிமை - கட்டுப்பாடு, பிசுனத்தனம்.
கட்டியகாரர் } புகழ்வோர்.
கட்டியக்காரர் }
கட்டியங்கூறல் - எழுச்சிகூறல், புகழ் கூறல்.
கட்டியப்பொல்லு - எழுச்சிகூறுவோர் பிடிக்குந்தண்டு.
கட்டியம் - ஒருகூத்து, புகழ்ந்துபேசல்.
கட்டிபாரம் - இறுக்கம், கடுமை, நெருக் கிடை.
கட்டில் - மஞ்சம்.
கட்டிவிழுதல் - கட்டியாதல், கருவழிந்து விழுதல்.
கட்டிளமை - மிக்கிளமை.
கட்டிளையோன் - மிக்க விளமைப்பரு வத்தையுடையவன்.
கட்டு - அரண், ஆணை, உறுதி, ஒருவகைக் குறி, கட்டென்னேவல், காவல், கிளை, குறி, சம்பந்தம், சிலந்திப்பரு, தளை, பொய், மலைப்பக்கம், மிகுதி, மூட்டை, வரம்பு.
கட்டுக்கதை - பொய்க்கதை.
கட்டுக்கலியாணம் - பாணிக்கிரகணம்.
கட்டுக்கழுத்தி - மங்கிலிபதாரிணி.
கட்டுக்காடை - ஒருபறவை.
கட்டுக்காரன் - குறிசொல்வோன்.
கட்டுக்காவல் - கடுங்காவல்.
கட்டுக்கிடை } வெகுநாளாய்க் கி
கட்டுக்கிடையன் } டக்கிறசரக்கு.
கட்டுக்குத்தகை - ஏகதேசமாய் விற்குங் குத்தகை.
கட்டுக்கூட்டு - எழுத்துமாறியெழுதல், ஒன்றாய்க்கூடல், கட்டுக்கதை, பொய்யான தொடுப்பு.
கட்டுக்கொடி - ஒருபூண்டு, காலிகட்டுங் கயிறு.
கட்டுக்கோப்பு - கட்டடம்.
கட்டுச்சூலை - சூலைக்கட்டு.
கட்டுச்சொல் - பொய்.
கட்டுச்சோறு - ஆற்றுணா வழிவுணவு.
கட்டுடைத்தல் - அணையுடைத்தல்.
கட்டுண்ணல் - கட்டுப்படுதல்.
கட்டுண்ணி - அடிக்கடி கட்டுப்பட்டது,

கட்டுதல் - அடக்குதல், இறுகுதல், சம்பந்தப்படுதல், சுவர்முதலிய வெழுப்புதல், தடைசெய்யல், தழுவுதல், பிணித்தல், விவாகம்பண்ணுதல், வீடு முதலிய தொடுத்தல்.
கட்டுத்தறி-யானைமுதலியகட்டுந் தூண்.
கட்டுத்திரவியம் - கிழிக்கட்டுப்பொன்.
கட்டுத்தேர் - கட்டியெழுப்புந்தேர்.
கட்டுத்தையல் - ஒருவகைத்தையல்.
கட்டுத்தோணி - தெப்பம்.
கட்டுப்படல் } அடங்குதல், அமைதல், தங்குதல், தடைபடுதல்.
கட்டுப்படுதல் }
கட்டுப்படுத்துதல் - அடக்கிக் கொள்ளுதல், எல்லைப்படுத்துதல், கீழமையப் பண்ணுதல்.
கட்டுப்பாடு - இணக்கம், கட்சி, பந்தம்.
கட்டுப்பூட்டு - ஆபரணம்.
கட்டுப்பெட்டி - ஒருவகைப்பெட்டி.
கட்டுப்பேச்சு - வீண்கதை.
கட்டுமட்டு - அச்சறுக்கை, அடக்கம், அளவாய் நடத்தல்.
கட்டுமரம் - மிதவை.
கட்டுமாந்தம் - ஒருவகை மாந்தநோய்.
கட்டுமாமரம் - ஒட்டுமாமரம், ஒருவகை மாமரம்.
கட்டுமுகனை - அச்சறுக்கை, அதிகாரம், கண்டிப்பு, சிக்கனம், தடை, மேல் விசாரணை.
கட்டுமுறித்தல் - கட்டுடைத்தல், நியமம் மீறுதல்.
கட்டுமை - கட்டுப்பாடு.
கட்டுரை - உறுதிச்சொல், ஏற்றசொல், பழமொழி, பொய், பொருளுள்ள சொல்.
கட்டுரைத்தல் - உறுதிப்படச்சொல்லுதல்.
கட்டுவடம் - மணிமாலை.
கட்டுவம் - ஒருகாலணி.
கட்டுவர்க்கம் - பலவித உடை.
கட்டுவன் - கட்டுவம்.
கட்டுவாங்கம் - தண்டு.
கட்டுவாங்கன்-விசுவசகன்மகன். தீர்க்கவாகுதந்தை. இவன் தேவாசுரயுத்தத்திற் றேவர்களுக்குச் சகாயஞ்செய்தபோது தேவர்கள் சந்துஷ்டியடைந்து னக்கு வேண்டியதைக் கேளென, அவன் எனக்கு இன்னமுள்ளவயது எவ்வளவினதென்ன ஒரு முகூர்த்தமிருக்கின்றதென்றார்கள். அது கேட்டு மோக்ஷ சாதனஞ் செய்து மோக்ஷம்புக்கான்.
கட்டுவிசேஷம் - கட்டுக்கதை.
கட்டுவிடல் } அவிழ்தல், இந்திரிய மோசனம், உடைதல், உருகுதல், பலவீனமாதல்.
கட்டுவிடுதல் }
கட்டுவிட்டுப்பாய்தல் - கட்டுடைத்துப் பெருகல்.
கட்டுவிரியன் - ஒருபாம்பு.
கட்டுவை - கட்டில்.
கட்டுண்மாக்கல் - களவு கண்டுண்ணு மூணையுடையமாக்கள்.
கட்டெறும்பு - ஒரெறும்பு.
கட்டை-உடல், குறைவு, திப்பி, தேய்ந்தது, நீளங் குறைந்தது, பிரேதம், மரக்கட்டை, விறகு.
கட்டைக்கருத்து - மந்தக்கருத்து.
கட்டைக்காலி - காடி.
கட்டைக்குரல் - அமர்ந்தகுரல்.
கட்டைக்குருத்து - பொத்திக்குருத்து.
கட்டைப்புத்தி - தடிப்புத்தி.
கட்டையன் - குறளன், குள்ளன்.
கட்டைவாக்கு - அரதனத்தின் மங்கலொளி.
கட்டைவிரல் - காலின்பெருவிரல்.
கட்டைவைத்தல் - ஒருவிளையாட்டு.
கட்டோசை - பேரொலி.
கட்டோடே - முற்றாக.
கட்பலம் - தானறி.
கட்புலன் - நேத்திரேந்திரியம்.
கணகணத்தல் } ஊத்தசூடு, ஒலிக்குறிப்பு.
கணகணப்பு }
கணகம்-படையிலோர்தொகை. அஃது குமுதம் மூன்றுகொண்டது.
கணகன் - கணிதன்.
கணகாசகம் - கருங்கச்சோலம்.
கணக்கதிகாரம் - கணக்கு நூல்.
கணக்கன் - எழுத்துக்காரன், ஒரு சாதியான், சண்பகமரம், கணக்குப் பார்க்கிறவன், புதன்.
கணக்காசாரம் - கணிக்குமொழுங்கு.
கணக்காயர் - அறிஞர், ஒத்துரைப்போர், பொருந்தச்சொல்வோர்.
கணக்காய்ச்சல் - கணரோகம்,

கணக்கு-எண், எழுத்து, காரியம், மட்டு. முடிவு.
கணக்குவகை-சங்கலிதம் என்னும் தொகை, பாகாரம் என்னும் பிரிவு, குணனம் என்னும் பெருக்கு, விவகலிதம் என்னும் கழிவு.
கணக்கோலை - கணக்கேடு, தளிரோலை.
கணதாரர் - ஓரருககுரு.
கணத்திரவியம் - பொதுத்திரவியம்.
கணநாதநாயனார் - சீகாழியில் பிராமண குலத்திற்பிறந்து அடியார்பத்தி சிவபக்திகளிற் சிறந்து விளங்கிய ஒரு சிவபத்தர்.
கணநாதர் } கணாதிபர்.
கணநாயகர் }
கணநீயம் எண்ணிக்கையிடத்தக்கது.
கணபதி - விநாயகன்.
கணபதீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கணபதீசுவரம்-திருச்செங்காட்டங்குடியிற்கோயில்கொண்டிருக்குஞ்சுவாமி
கணப்பறை - ஒருவகைத் தோர்கருவி.
கணப்பு - சூடு, தீச்சட்டி.
கணப்பூண்டு - ஒருபூண்டு.
கணப்பொருத்தம் - செய்யுட் பொருத்தத்தொன்று, விவாக தசப்பொருத்தத்தொன்று.
கணப்பொழுது - நொடிநேரம்.
கணமாந்தம் - ஒருவகை மாந்தநோய்.
கணமூலம் - திப்பிலிவேர்.
கணமூலி - சாணக்கி, திப்பிலி.
கணம - ஒருநோய், ஒருபுல், காலநுட்பம், குறைவு, கூட்டம், சிறுமை, சீரிலக்கணம், திப்பிலி, திரட்சி, தீப்பொறி, நான்கு நிமிஷம் அல்லது முப்பது கலைகொண்ட கால அளவு, நீர்த்துளி, பதினெட்டென்னும் ஒரிலக்கம், பிசாசம், மாத்திரைவட்டம், வருக்கம் விண்மீன், கூட்டம், விலங்கின் கூட்டம்.
கணம்புல்லநாயனார்-வடவெள்ளாற்றுக்குத் தென்கரையிலுள்ள இருக்குவேளூரிலிருந்து சிவாலயத்தில் திருவிளக்கிடுதலையே பெருந்தொண்டாகக் கொண்டு அதன் பொருட்டுத் தமது செல்வமெல்லாமழிந்தும் அதனை விடாது கணம்புல்லரிந்து விற்றுப் பொருளீட்டி அப்பணி புரிந்து வருகையில் ஒருநாள் நெய்போதாது போகத் தமது முடியை விளக்கிற் பொருத்தி யெரிக்கப்புகுந்து சிவனருள்கொண்ட தவச்செல்வர்.
கணராத்திரம் - பலவிரவு.
கணரீபம் - எருக்கு.
கணரோகம் - ஒரு நோய்.
கணவம் - அரசமரம்.
கணவலர் - கொழுநர், பூதவீரர்.
கணவன்-அதிபன், காந்தன், கொழுநன்.
கணவாய் - ஒருமீன், மலைகளுக்கிடைவழி, மலைமேற்பாதை.
கணவீரம் - சிவலிங்கமலர், செவ்வலரி, அலரி.
கணனம் - எண்ணல்.
கணாசலம் - கைலைமலை.
கணாதன் - ஒரு முனிவன்.
கணாதி - வெண்சீரகச்செடி.
கணாதிபன்-கணநாயகன், சிவன், விநாயகன்.
கணாரிடுதல் - ஒலிக்குறிப்பு.
கணி - ஒருசாதி, கணிப்போன், கணியென்னேவல், கூத்தாடுந் தொழில், மருதநிலம், மூங்கில், வேங்கைமரம்.
கணிகம் - நூறுகோடி.
கணிகன் - திருதராஷ்டிரன் மந்திரிகளிலொருவன், இவன் ஜாதியில் துவிஜன், அதருமமான இராச்சிய தந்திரோபதேசம் பண்ணுவதிலும் அக்கிரமமான இழி தொழில்களையும் புரியும்படி அரசரை யுடன்படுத்துவதிலும் மிக்க வன்மையுடையவன்.
கணிகை - தாசி, முல்லை, வேசி.
கணிசம் - அதிசம், அளவு, கணிக்கத்தக்கது, கனம், சங்கை, மதிப்பு.
கணிச்சி-உளி, கோடரி, தறிகை, நமனாயுதம், மழு, முட்கோல், வெற்றிலை, மூக்கரி கத்தி.
கணிதசாஸ்திரம் - ககோள நூல், கணக்கு நூல்.
கணிதசிந்தாமணி - ஒரு சோதிட நூல்.
கணிததீபிகை - ஒரு சோதிட நூல்.
கணிதம்-எண், எண்ணிக்கை, கலைஞான மறுபத்து நான்கினொன்று. அஃது சோதிட நூல்.
கணிதர் - கணக்கறிந்தோர், கணக்கெழுதுவோர், சோதிடர்.

கணிதன் - சத்துரு.
கணித்தல் - அளவு குறித்தல், எண்ணல், மதித்தல்.
கணிப்பு - கணித்தல்.
கணிமம் - பிரேங்கணம்.
கணியன்பூங்குன்றனார் - பேர்யாற்றருகேயுள்ள பூங்குன்றென்னு மூரிற் பிறந்து விளங்கிய புலவர். இவர் உக்கிரப்பெருவழுதிகாலத்துக்கு முன்னுள்ளவர், சாதியிற் கூத்தர், புறநானூற்றில் வரு மிவருடைய பாடல் இவர் ஆன்ற கல்வியுஞ் சான்ற வொழுக்கமு முடையவரெனக் காட்டுகின்றது.
கணியான் - கூத்தாடி.
கணியம் - மிகவுங் கொஞ்சமானது.
கணீரிடுதல் - ஒலிக்குறிப்பு.
கணீர்கணீரெனல் - ஈரடுக் கொலிக் குறிப்பு.
கணீல் - ஒலிக்குறிப்பு.
கணு - கவர், மரத்தின்முளி, மூட்டு.
கணுக்கால் - பரடு.
கணுக்கிரந்தி - ஒரு மேகநோய்.
கணுப்பாலை - ஒரு பாலை.
கணுவட்டு - சிறு வாழைக்குலை.
கணேசன் - சிவன், விநாயகன்.
கணேயம் - எண்ணிக்கையிடத்தக்கது.
கணேரம் - மலைப்புளிச்சைச்செடி.
கணை - பாணம், அம்பு, ஒலி, ஒருநோய், கரும்பு, சிவிகை, மேல்வெம்பு, திப்பிலி, திரட்சி, நிறைவு, பூரநாள், வளைதடி.
கணைக்கால் - திரண்டகால், முழந்தாளின் கீழ்க்கால்.
கணையம் - அம்பு, காவற்காடு, பொன், போர், யானைக்கம்பம், வளைதடி.
கணையாழி - மோதிரம்.
கணையுலக்கை - பூணில்லா வுலக்கை.
கணையோகவணி - வியாயோகம்.
கண் - இடம், ஏழனுருபு (உ - ம்) எண்கண், ஒருவிகுதி (உ - ம்) வன்கண், ஓலைக்கண், கணு, கண்ணென்னேவல், கண்ணோட்டம், குழி, துவாரம், தேங்காய் முதலிய முளைக்குமிடம், நுங்குக்கண், பெருமை, மயிற்றோகைக் கண், மூங்கில், விழி; அது பஞ்ச பொறியினொன்று.
கண்கட்டி - கட்கட்டி.
கண்கட்டு - திருட்டித்தம்பனம்.
கண்கழு-முளைவெளிக்க முன்விடும்நீர்.
கண்காசம் - ஒரு நோய்.
கண்காட்சி - அதிசயம், கண்ணுக்குச் சிறப்பு, பார்வை.
கண்காட்டல் - கண்ணினாற் குறிப்புக் காட்டல்.
கண்காணம் - மேல்விசாரிப்பு.
கண்காணி - அத்தியட்சர், சிரேஷ்டாதிகாரி, மேல்விசாரிப்புக்காரன்.
கண்காணித்தல் - மேல்விசாரணைசெய்தல்.
கண்காந்தல் - கண்ணெரிவு.
கண்காரர் - அஞ்சனம் பார்ப்போர், குறிப்பறியத்தக்கவர்கள்.
கண்குத்திப்பாம்பு - ஒரு பாம்பு.
கண்குவளை - கண்குழி.
கண்குளிர்தல் - பார்வைக்குத் திருத்தியாயிருத்தல்.
கண்குறிப்பு - பார்வையாலறிதல்.
கண்கூடு நெருக்கம், கண்குவளை, காட்சியளவை பிரத்தியட்சம்.
கண்கூடுவரி - வகுப்பகுதியுளொன்று; அது பிரியதரிசனம்.
கண்கூர்மை - பார்வைநுட்பம்.
கண்கூலி - கண்டதற்காகக்கொடுப்பது.
கண்கையில் - தாய்க்கையில்.
கண்கொத்திப்பாம்பு-ஒருவகைப்பாம்பு. அது பசியநிறத்தோடு நீண்டவுருவத்தோடு நீண்ட வுருவத்தைப் பெற்று மரங்களில்வாசம்பண்ணுவது, அடுத்தவர்களது கண்களைக் கொத்துவதே இதற்கு வழக்கம்.
கண்கொழுப்பு - அகங்காரம்.
கண்கொள்ளாக்காட்சி-அடங்காதகாட்சி
கண்சமிக்கை - கண்சயிக்கை.
கண்சயிக்கினை - கண்சாடை.
கண்சாடை - அறிந்துமறியார்போன்றிருத்தல்.
கண்சாய்த்தல் - பதனழிதல், வாடல்.
கண்சாய்ப்பு - கண்சாடை.
கண்சிமிட்டல் - கண்ணாலே குறிப்புக் காட்டல்.
கண்சைகை - கண்சாடை.
கண்டகசங்கம் - முட்சங்கு.
கண்டகதுவாரம் - முட்டொளை.
கண்டகபலம் - பலாப்பழம்.

கண்டகம் - உடைவாள், ஊசிமுனை, கம் மாலை, காடு, தடை, நீர்முள்ளி, புளகம், முள், வயிரம், வாள்.
கண்டகர் - அசுரர், கீழ்மக்கள், துட்டர்.
கண்டகன் - தயவில்லாதவன்.
கண்டகாசனம் - ஒட்டகம்.
கண்டகாரிகை - கண்டங்கத்திரி.
கண்டகி - காசிக்கருகிலுள்ள ஒரு நதி, முள்ளெலும்பு.
கண்டகிக்கல் / கண்டகிச்சிலை } சாலக்கிராமம்.
கண்டகூணிகை - வீணை.
கண்டகோடரி / கண்டகோடாலி } ஒருவகைக் கோடாலி மழு.
கண்டக்கரப்பன் - ஒருநோய்.
கண்டக்கருவு - மிடறு.
கண்டக்காறை-கழுத்திடுகாறை, பொன்னிறம்.
கண்டக்கிரந்தி - ஒருநோய்.
கண்டங்கத்திரி-ஒருவழுதுணை, அஃது சிறுபஞ்ச மூலத்தொன்று, தசமூலத்து மொன்று.
கண்டங்கருவிலி - ஒருபாம்பு.
கண்டங்காலி - கண்டங்கத்திரி.
கண்டசரம் - கழுத்திலணியுமோர்பணி.
கண்டசருக்கரை-ஒருவகைச்சருக்கரை
கண்டசாலிகம் - ஒருவகைநோய். அது சிலேட்மகதியை யடைந்த வாதபித்தத்தாற் கழுத்திற் குட்புறத்திற் சாதிக்காயைப்போல் திரட்சியான வீக்கத்தையுண்டாக்கி அதன்மேல் நெல்வாலையொத்த முட்களை முளைப்பித்துக் கழுத்தைத் திருப்பவொட்டாது செய்வது.
கண்டசித்தி - ஆசுகவி, கண்டகாரியத்திற்குப் பாட்டுச்சொல்ல வல்லபம்.
கண்டசிலேஷ்மரோகணி - ஒருவகைநோய். அது கண்டத்திற் குட்புறத்தில் தடித்த தர்மாமிசத்தைப் பிறப்பிப்பது. அதனல் ஆமணக்கு நெய்யைப்போல் வாயில்மாறாதுசலம்வடிதலும் தேகவெளுப்பு முண்டாகும்.
கண்டசூலை - கழுத்தைச் சுற்றிவரும் நோய்.
கண்டசைலம் - குண்டுக்கல்.
கண்டதிப்பிலி - வங்காளத்திப்பிலி.
கண்டதிரிதோஷரோகணி - ஒருவகைநோய். அது கண்டத்திற் குட்புறத்திற் கண்டவாதரோகணி, கண்டபித்தரோகணி, கண்ட சிலேட்டுமரோகணியென்னு மிவைகளுக்குள்ள குணங்களையெல்லா முண்டாக்குவது.
கண்டதுண்டம் - பலதுண்டம்.
கண்டத்தலம் - கழுத்து.
கண்டஸ்நானம் - கழுத்துவரையும் குளித்தல்.
கண்டநாளம் - மிடறு.
கண்டந்திறத்தல்-தொண்டைதிறத்தல்.
கண்டபலி - ஞாழல்.
கண்டபவம் - ஒருவகைக்கீடம். அது கடித்தால், கடித்தவாயிற் பல கொப்பளங்களுண்டாகி அதிலெரிவுந் தினவு முண்டாகும்.
கண்டபித்தரோகணி - ஒருவகைநோய். அது கழுத்திற்குட்புறத்தில் மூங்கிற் புறத்தைப்போல்தர்மாமிசத்தைப்பிறப்பிப்பது. அதனல் அவ்விடத்தில திநோவோடு புகைகம்மியதுபோலிருத்தல், மேலே தொடக்கூடாதவுபத்திரவம், சுரம், காங்கை, தாகம், சேர்தலென்னு மிக்குணங்களையுண்டாக்குவது.
கண்டபூர்த்தி - கண்டமளவு, நிறைவு.
கண்டபேரண்டபட்சி-இருதலைப்பட்சி.
கண்டபுற்று - ஒருநோய்.
கண்டமணி - கண்டாமணி.
கண்டமண்டலம் - குறைவட்டம்.
கண்டமாலை - கழுத்தைச் சுற்றிவரும் ஒரு நோய்.
கண்டம் - எல்லை, எழுத்தாணி, கண்டசருக்கரை,கண்டை,கவசம்,கழுத்து, கள்ளி, குன்றிவேர், கைப்பிடிவாள், சாதிலிங்கம்,சிறுவாள்,தத்து,திரைச்சீலை, துண்டம், நாடு, நித்தியயோகத்தொன்று, நீர்க்குமிழி, பங்கு, படையினேர்தொகை, மணி, மணியுள்ளோசை, யானைக்கச்சை, யானைக்கழுத்து, வெல்லம்.
கண்டாத்தரோகணி - ஒருவகைநோய். அது கண்டத்திற் குட்புறத்தில் தர்மாமிசத்தைப் பிறப்பித்து அதிற்கரி நெருப்பையொத்த கொப்பளங்களை

நிறைப்பிப்பது. அதனாற் காதுக்குள் நோவும் பித்தரோகணி நோயினது குணங்களு முண்டாகும்.
கண்டாராதித்தர் - திருவிசைப்பாப் பாடினர், ஒன்பதின்மரு ளொருவர். இவர் உறையூரிலிருந் தரசுபுரிந்த சோழருளொருவர்.
கண்டரை - இருதயத்தின் ஜடரங்கள் என்னும் கீழறைகள் இரண்டில் வலத்திலிருந்து உற்பத்தியாகும் பெருநாடியென்னும் பெரிய குழல்.
கண்டர் - திருசு.
கண்டலம் - முள்ளி.
கண்டல் - ஒருமரம், தாழை, நீர்முள்ளி.
கண்டவர்தரோகணி - ஒருவகை நோய். அது கழுத்திற்கு உட்புறத்தில் துர்மாமிச முளைகளை முளைப்பித்து அம்மார்க்கத்தை யடைந்து நாவை யாடவொட்டாமற் செய்வது. அதனால் நெஞ்சும் வாயுமுலர்தல், கண்டத்திலுஞ் செவியிலும் நோதலென்னும் இக்குணங்களுண்டாகும்.
கண்டறியாதவன் - முன்னனுபவித்தறியாதவன்.
கண்டறை - கற்புழை, மலைக்குகை.
கண்டற்குயம் - தாழை, முலை.
கண்டனம் - உறல், கண்டனை, பொலிதூற்றல்.
கண்டனை - தள்ளுதல், நிராகரித்தல்.
கண்டன்-எசமான், சோழன், நாயகன், வீரன்.
கண்டன்று - கண்டது.
கண்டாகண்டன் - ஒருவிஷ்ணுபத்தன்.
கண்டாகர்ணன் - குபேரன் கிங்கரனுகிய ஒரு பிசாசபதி, ஸ்ரீ கிருஷ்ணனுருசமயத்தில் வதரிவனத்தில், யோகத்தி லிருந்தபோது இக்கிங்கரனவரை வழிபட்டுப் பிசாசரூபம் நீங்கப் பெற்றான்.
கண்டாகனன் - ஒரு சிவபத்தனை வசுரன். இவன் விஷ்ணுவினமம் காதிற் படாவண்ணம் செவிகளின் மணியை யணிந்துகொண்டு திரிந்து முடிவில் அவர் விஷ்ணுவாலேயே வைகுந்தப் பதவி யடைந்தவன்.
கண்டாக்கிரி - பட்சி.
கண்டாங்கி - ஒரு புடவை.
கண்டாசுரன் - கண்டாகனன்.
கண்டாஞ்சி - முள்வேல்.
கண்டாபதம் - இராசமார்க்கம்.
கண்டாபலம் - பலாமரம்.
கண்டாமணி - மிக்கோசையுள்ள மணி கண்டை, வீரக்கழல்.
கண்டாயம் - கடவை, துவாரம், வழி.
கண்டாரம் - இருவீரர்போர்.
கண்டாரவம் - ஓரிசை,மணியினோசை.
கண்டாலசி - ஒருவகைநோய். அது தாடையி லெவ்விதத்திலாவது நீங்காத வீக்கத்தைப் பிறப்பிப்பது. அதனாற் சுரமுந் தாகமுமுண்டாகும்.
கண்டாலம் - ஒட்டகம், பாரை, யுத்தம்.
கண்டாலி - வெள்ளெருக்கு.
கண்டாவிழ்தம் - ஒரு பெரிய மருந்து.
கண்டாளம் - எருதின்மேற்போடு மூட்டை.
கண்டார்புதம் - ஒருவகைநோய். அது கண்டத்திற் பிறந்த விரணவிவேகங் கபாலத்தி லடிபடுவதாற் பிறப்பது அதனாலங்கிருக்குங் கபமாகிய கோழைச்சலங் கறுத்தாவது வெளுத்தாவது நாசிவழியாலேனுந் தொண்டை வழியாலேனு மாறாது விழுந்து கொண்டே யிருப்பது.
கண்டி - இலங்கையில் ஒரூர், ஓரளபு, ஓராபரணம், கடவை, சிறுகீரை, மீன்பிடிக்க வடைக்கும் பிரிவு.
கண்டிகம் - ஒருவிதத் தானியம்.
கண்டிகை - உருத்திராட்சம், கடகம், கைக்குழி, தோளணி, நிலப்பிரிவு, பணிச்செப்பு, பதக்கம், மாதாணி வடம்.
கண்டிதம் - உறுதி, கண்டிப்பு, தண்டனை, தறிப்பு, திட்டம், துண்டிக்கை, பூர்ணம், வரையறுப்பு.
கண்டித்தல் - கடிந்து கொள்ளுதல், கொடுமை பண்ணுதல், தறித்தல், பிரிவுபடல், வெட்டல்.
கண்டிப்பு - கண்டித்தல், தூலரூபின் தன்மை, நிச்சயம்.
கண்டியர் - பாணர்.
கண்டில் - இருபத்தெட்டுத் துலாங் கொண்டது.
கண்டில்வெண்ணெய் - ஒருபூடு.
கண்டிறத்தல் - கண்விழித்தல்.

கண்டீரக்கோப்பெருநள்ளி - கடைவள்ளல்க ளெழுவரி லொருவனாகிய இவன் மலைநாட்டரச ரொருவன். புறநானூற்றிற் பெருஞ்சாத்தனரா லெடுத்துப் புகழப்பட்டவன்.
கண்டீரக்கோள் - கண்டீரக்கோப்பெருநள்ளி.
கண்டீரதம்-மனிதரொடுக்கும்விமானம்.
கண்டீரம் - சதுரக்கள்ளி.
கண்டீரவம்-சதுரக்கள்ளி, சிங்கம், புலி.
கண்டீரை - செவ்வியம்.
கண்டு - கழலைக்கட்டி, கற்கண்டு, கண்டங்கத்திரி, சொறி, பரு.
கண்டுகம் - மஞ்சிட்டி.
கண்டுகுணம்பாடி - முகமன் பேசுவோன்.
கண்சாடை } கண்சாடை.
கண்சாய்ப்பு
கண்டுஞ்சல்-கண்ணடைதல். நித்திரை செய்தல்
கண்டுதுத்தி - ஒருபூடு.
கண்டுபாரங்கி-சிறுதேக்கு, பஞ்சமூலத்தொன்று. அஃது சிறகாஞ்சொறி.
கண்டுபாவனை - பிறரைப் பார்த்துச் செய்வது.
கண்டுபித்தம் - ஒருவகைப் பித்தநோய். அது சர்வாங்கத்திலுந் திமிருடன் தினவு, தடிப்பு, சாமையரிசியையொத்த கொப்பளங்களெழும்புதல், சோர்வு, நடுக்கம், சீதாதிக்கம், வியர்வை, சூலை, நித்திரைபங்கம், விக்கல், ஸ்தம்பித்தல், தொடை முழந்தாள்களில் நோவென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கண்டுமுதல் - கண்டமுதல்.
கண்டுமூலம் - சிறுதேக்கு, திப்பிலி.
கண்டூதி - காஞ்சொறி, தினவு.
கண்டுபேதம் - மண்ணுண்ணிப்பாம்பு.
கண்டுபேதி - மண்ணுண்ணிப் பாம்பின் பெண்.
கண்டூயை - தினவு.
கண்டூரம் - கண்டௌஷதம், பூனைக்காலி.
கண்டூரை - பூனைக்காலி.
கண்டூலையோனி - ஒருவகையோனிநோய். அது மிகுந்த சையோகத்தினால் அல்குலஸ்தானத்திலிருக்கின்ற உதிரங் கெடுதியையடைந்து அதிற்கிருமிகள் சனிக்கும்போதுபிறப்பது. அதனால் அவ்விடத்திலதிகநமைச்சலும், அந் நமைச்சலா லெப்போதுஞ் சையோகத்தில் விருப்பமு முண்டாகும்.
கண்டோரதம் - சிவிகை முதலியன.
கண்டை-எறிமணி, ஓராபரணம், ஓலை, சரிகை, சீலை, நூற்கண்டை, பெருமணி, யானைமணி, வீரக்கழல்.
கண்டோஷ்டம்-ஒருவகை நோய். அது வாயுவு உதட்டிற் சேரும்போது பிறந்து அவ்வுதடுகளில் வெடிப்பை யுண்டாக்குவது.
கண்டோலம் - பெருங்கூடை.
கண்டௌஷதம் - கண்டாவிழ்தம்.
கண்ணகனார்-கோப்பெருஞ் சோழனுக்குயிர்த்துணையா யிருந்து அவனிறந்தமை யுணர்த்தப்படாது தாமே யுணர்ந்து டனுயிர்துறந்த பிசிராந்தையாரைப் பாடிய புலவர்.
கண்ணகி } கோவலன் மனைவி.
கண்ணகை
கண்ணஞ்சல் - அஞ்சுதல், கண்ணைமின்னுதல்.
கண்ணடி - கண்ணாடி.
கண்ணடியர் - கன்னடியர்.
கண்ணடைதல் ஊற்றடைதல், துவாரமிறுகல், பயிர்குருத்தடைதல்.
கண்ணடைத்தல் - துவாரமிறுகுதல்.
கண்ணடைந்தபால் - அதிகநேரம்வைத்திருந்து கெட்டுப்போனபால்.
கண்ணப்பமுதலியார் - திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாரது சகோதரர்; இவருங் கம்பராற் புகழ்ந்து பாடப்பட்டவர்.
கண்ணப்பன் - தன்கண்ணைப் பிடுங்கிச் சிவனுடைய கண்ணுக்குப் பதிலாக வைத்து முத்திபெற்ற சிவத்தொண்டராகிய அறுபத்துமூன்று சிவாச்சாரியருள் ஒருவர்.
கண்ணமங்கை-விட்டுணுதலத்தில் ஒன்று.
கண்ணராவி-பார்த்தவனிரங்கத்தக்கது.
கண்ணரிப்பு-கண்ணில்வருமோர்நோய்.
கண்ணல் கருதல், கன்றல், குறித்தல்.
கண்ணழற்சி - கண்ணெரிச்சல், பொறாமை.
கண்ணழித்தல் - பதப்பொருளுரைத்தல்.

கண்ணழிவு - தடுத்தல், பதப்பொருளுரை.
கண்ணறல் - நீங்கல்.
கண்ணறை - அகலம், குருடு, துவாரம், வன்னெஞ்சு.
கண்ணறையன் - குருடன், வன்னெஞ்சன்.
கண்ணன் - கிருட்டினன், அவன் திருமால்.
கண்ணா - ஓர்மரம், திப்பிலி.
கண்ணாடி-உருவங்காட்டி. இஃது அட்டமங்கலத்துளொன்று.
கண்ணாடிச்சால் - பொட்டுழவு.
கண்ணாடித்தரா - தராவி லோர்பேதம்.
கண்ணாடிப்புடையன் - ஓர்பாம்பு.
கண்ணாட்டி-அன்பானவள்,மனையாட்டி
கண்ணாமண்டை - கண்மண்டை.
கண்ணாம்பூச்சி - ஓர்விளையாட்டு, கண்மயக்கம்.
கண்ணாம்பூச்சியாடுதல் - கண்சுழன்று கிறுகிறுப்புத்தோற்றல், பிள்ளைகளினோர் விளையாட்டு.
கண்ணாம்பொத்தி - ஓர் விளையாட்டு.
கண்ணாயிரநாதர் - திருக்காறாயலிற்கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
கண்ணாயிருத்தல் - உற்றுப்பார்த்திருத்தல், காவலாயிருத்தல், மிகு கருத்தாயிருத்தல்.
கண்ணாயிரேசுவரர் - திருக்கண்ணார் கோயிலி லெழுந்தருளி யிருக்குஞ் சுவாமி.
கண்ணாய்ப்பார்த்தல் - கருத்தாய் விசாரித்தல். [காணல்.
கண்ணாரக்காணல் - வெளியரங்கமாய்க்
கண்ணாளர் - கம்மாளர், சித்திரக்காரர், சினேகிதர், நாயகர்.
கண்ணாளன் - கணவன், தோழன்.
கண்ணாள்-சரசுவதி, சிநேகமுள்ளவள்.
கண்ணி - கயிறு, கொழுந்து, தாம்பு, பாவினடி புட்படுக்குங்கயிறு, பூ, பூங்கொத்து, பூட்டாங்கயிறு, பூமாலை, பூவரும்பு.
கண்ணிகட்டுதல் - அரும்புகொள்ளுதல்.
கண்ணிகம் - மணித்தக்காளி.
கண்ணிகுத்துதல் - தடம்வைத்தல்.
கண்ணிருகை - தாமரைக்கொட்டை, பூவரும்பு.
கண்ணிக்கயிறு - நெய்வார் கட்டுங்கயிற்றுள் ஒன்று. [புல்.
கண்ணிக்கொடி - ஒரு படர்கொடி, ஒரு
கண்ணிதழ் }
கண்ணிமை } கண்மடல்.
கண்ணிமைத்தல் - இமைவெட்டல்.
கண்ணிமைப்பு - இமைவெட்டு.
கண்ணியம் - கனம்.
கண்ணிலி - எறும்பு, குருடன், திருதராட்டிரன்.
கண்ணீராக்கி - பச்சைக்கருப்பூரம்.
கண்ணீருகுத்தல் - கண்ணீர்விடல்.
கண்ணீர் - கண்ணிலிருந்து வழியுநீர்.
கண்ணீர்நடுக்குறை - மூக்கிரட்டை.
கண்ணுகம் - குதிரை.
கண்ணுக்கரசன் - துருசி.
கண்ணுக்கினியான் - கரிசலாங்கண்ணி, பொன்னாங்காணி.
கண்ணுக்குக்கண்ணானவன் - கண்போன்றவன், தோழன்.
கண்ணுக்குத்தைத்தல் - கண்ணுக்குப் பிரியப்படுத்துதல்.
கண்ணுங்கருத்துமாய் - மிகஆவலாய்.
கண்ணுடையவள்ளலார் - சீகாழித்திருஞானசம்பந்த நாயனாரது திருவருள் பெற்ற மகான். ஒழிவிலொடுக்கம் செய்தவர்.
கண்ணுதலோன்வெற்பு - இரசதமலை.
கண்ணுதல் - கருதுதல், குறித்தல், சிவன்.
கண்ணுலைமூடி - ஒருலைமூடி.
கண்ணுவம் - கம்மியம்.
கண்ணுவன் - ஓரிருடி.
கண்ணுளர் - கண்ணாளர், நாடகர்.
கண்ணுளாளர் - நாடகர்.
கண்ணுள் - கூத்து.
கண்ணுள்வினைஞர் - கண்ணாளர்.
கண்ணுள்ளர் - சாந்திக்கூத்தர்,மதங்கர்.
கண்ணுறக்கம் - நித்திரை.
கண்ணுறல்-இடத்தைச்சேரல், காணல்
கண்ணுருவி-இரங்கம்படத்தக்கமெலிவு
கண்ணுறுதல் - பார்த்தல்.
கண்ணுறுத்தல் - கண்ணுருட்டல்.
கண்ணுறை - மேலீடு.
கண்ணூறு }
கண்ணெச்சல் } கண் பார்வையால் வந்த தோஷம்.
கண்ணெறிதல் - கடைக்கண்ணாற்பார்த்தல், விரும்பல்.

கண்ணேணி - மூங்கிலேணி.
கண்ணேறு - கண்ணூறு.
கண்ணேறுவாந்தி - ஒருவகை வாந்திநோய்; அது ஒருவன் புசிக்குமன்ன முதலியவைகளைப் பிறர்கண்டு நமக்கவ்வாறு கிடைக்கவில்லையே யென்று ஏக்கங்கொள்ளுவதால் அவர்களினது, திருஷ்டியினாற் பிறந்து மிகவு நாற்றத்தோடு மாறாத வாந்தியை யுண்டாக்கிக்கொண்டிருப்பது.
கண்ணொடையாட்டியர் - கள்ளை விற்கும் வலைச்சியர்.
கண்ணோ - கண்ணிலோர் வியாதி.
கண்ணோக்கல் - பார்த்தல்.
கண்ணோக்கு - கண்பார்வை.
கண்ணோடுதல் - இச்சித்தல், பாரபட்சமாயிருத்தல், மேல்விசாரணை பண்ணல், விருப்பம்வைத்தல்.
கண்ணோட்டம்-கடாட்சம், கடைக்கண்பார்வை, கண்குறிப்பு, நாகரீகம், பட்சம், மரியாதை.
கண்ணோய் - கண்ணிநோய்.
கண்திட்டம் - கண்மதியம்.
கண்திட்டி } கண்ணூறு.
கண்திஷ்டி }
கண்படல் } திட்டிபடுதல், நித்திரை செய்தல்.
கண்படுதல் }
கண்படை - நித்திரை, மனிதர்படுக்கை.
கண்படைநிலை - ஒருபிரபந்தம்; அஃது பெருமையிற்சிறந்தோர் அவைக்கண் நெடிதுவைகியவழி மருத்துவர் முதலியோரவர்க்குக் கண்டுயில் கோடலைக் கருதிக்கூறுவது.
கண்பட்டை - கண்மடல்.
கண்பரிகாரம் - கண்வைத்தியம்.
கண்பாடு - நித்திரை.
கண்பார்த்தல் - இரங்கல், கடாட்சித்தல், பரீட்சித்தல்.
கண்பிடி - ஒருகாம்பிற்பற்றினகாய்களிளங்காய்.
கண்புகைச்சல் - ஒருநோய், வெள்ளெழுத்து.
கண்புணராமை-ஒரளவை; அதுசிலவற்றைக் கண்டதன்பெய ரறியாதிருத்தல்.
கண்புதைத்தல் - கண்பொத்தல்.
கண்பூத்தல் - கண்பகைத்தல், கண்மயங்கல், கண் டிருத்தியடைதல்.

கண்பொத்திக்குட்டல் - ஒரு விளையாட்டு, கனவெடுத்தல்.
கண்பொறித்தட்டுதல் - கண்மின்னல்.
கண்போடல் } மனம்வைத்தல்.
கண்போடுதல் }
கண்மங்கல் } கண்ணொளி குறைவு, வெள்ளெழுத்து.
கண்மங்குலம் }
கண்மடல் - இமை, ஊற்றுக்கண்.
கண்மட்டம் } கண்மதிப்பு.
கண்மட்டு }
கண்மணி-உருத்திராக்கமணி, கண்ணிற்கருமணி.
கண்மதியம் - கண்மதிப்பு.
கண்மயக்கு - மயக்கம்.
கண்மயக்குவாதம்-ஒருவகைவாதநோய். இது உயர்ந்தவஸ்து, இலவணகாரவஸ்து, மந்தமச்சங்கள், சிலேஷ்மபித்தவஸ்து, புண்ணாக்காகியவைகளினாற் பிறந்து விழிகளின் மூலத்திலனுசரித்து அவ்விடத்தி லிருக்குஞ்சிலேட்டுமத்திற்கூடி வேதனையைச்செய்வது. அப்போதுகண்களில்நீர்க்கம்மல், கலங்கல், நோவு, பிரமை, எரிச்சல், விழிக்கும்போது மயக்கமாகிய இச்குணங்க ளுண்டாகும்.
கண்மருட்சி - கண்மயக்கு.
கண்மருட்டு - கண்ணாலே மயக்குதல்.
கண்மலர் - ஒருபணி, கண்.
கண்மறிக்காட்டல் - கண்குறிப்புக் காட்டல்.
கண்மாயம் - கண்ணைமறைத்தல்.
கண்மின்னியார்த்தல் - கண் சுழன்று ஒளியார்த்தல்.
கண்முகிழ்த்தல் - கண்மூடுதல்.
கண்மூடல் - இருள்.
கண்மூடி - அறிவீனன், குருடன்.
கண்மூடுதல் - இமைகுவித்தல், கண்டுங்காணார்போன்றிருத்தல், சாதல், நித்திரைசெய்தல்.
கண்மை - கண்ணுக்கிடுமை, கண்ணோட்டம்.
கண்வரி - கண்ணின்வரி.
கண்வளர்தல் - நித்திரைசெய்தல்.
கண்வாளர் - கணவர், கம்மாளர்.
கண்விடுதல் - உருகுதல், துவாரம் விடுதல், வெண்ணெய்திரளல்.
கண்விடுதூம்பு-ஒருவகைத்தோற்கருவி.
கண்விடுத்தல் - சித்திரப் பாவைக்குக் கண்வரைதல், விக்கிரகத்துக்குக்கண் திறத்தல்.

கண்விதுப்பழிதல்-கண்ணவாக்கெடல், கண்ணின தழகுகெடல்.
கண்விழித்தல்-கண்டிறத்தல், நித்திரை விழித்தல், வாட்டந்தெளிதல்.
கண்விழிப்பு - கவனம், சாக்கிரதை.
கண்வினைஞர் } கம்மாளர்.
கண்வினையாளர் }
கண்வைத்தல் - கிருபைவைத்தல், புண்ணிற்சந்துவிடல் விரும்பிப்பார்த்தல்.
கதகதெனல் - விரைவைக்காட்டுமோர் டுக்கொலிக்குறிப்பு.
கதகம் - தேற்றான்மரம், விதானம்.
கதகன் - சூதமுனிபுத்திரன், புராணஞ்சொல்வோன்.
கதகாலம் - போனகாலம்.
கதசம்-உட்டணம், சரித்திரம், தேற்றா, நோய், முகில்.
கதண்டு - கருவண்டு.
கதத்துவை - கெட்டவழி.
கதமாலம் - அக்கினி.
கதம்-உக்கிரம், கோபம், செல்கை, பஞ்சம், பாம்பு, போதல், வலி.
கதம்பகம் - கூட்டம்.
கதம்பம்-ஆன்கூட்டம், கடம்பமரம், கானங்கோழிக்கூட்டம், சனக்கூட்டம், மேகம், வாசனைப்பொடி, வெண்கடம்பு.
கதம்பாரி - தேற்றா.
கதம்பு - கதம்பம்.
கதம்பை - ஒருவகைப்புல், தென்னமட்டைத் தும்பு, பரும்புல்லின்றாள், வைக்கோல்.
கதம்வதம் - கடுகு.
கதாம் - யானைத்தோட்டி.
கதாரோகம்-ஒருவகைநோய். அதுபருக்கைக் கற்களின்மீது நடத்தலாலும் முட்கள் தைத்து ஒடிதலாலும், பாதத்தி லரத்தைப்போ லிருக்கின்ற முடிச்சுகளை யுண்டாக்குவது.
கதலம் - வாழை.
கதலல் - அசைதல்.
கதலி - கடுதாசுப்படம், காற்றாடி, தேற்றாமரம், வாழை, விருதுக்கொடி.
கதலிகம் - தேற்றா.
கதலிகை - துகிற்கொடி.
கதலிச்சி - கருப்பூரம்.
கதலிதளம் - வாழையிலை.
கதலிபாகம்-சங்கீதத்தினோர்சுவை, பாடலினோர்சுவை. [பூ.
கதலிப்பூ-பச்சைக்கருப்பூரம், வாழைப்
கதலிமலடு - ஒருவகை மலட்டுநோய். அது வாழைமரத்திலுண்டாகுந் தாற்றைப்போ லொருபிள்ளை பெற்ற தோடு கருப்பமில்லாதிருப்பது.
கதலிமுத்து-வாழையிற் பிறந்த பழுப்பு நிறமுத்து.
கதலிரோகம் - தலைமயிர் உதிரல்.
கதலிவனம் - திருக்கழுக்குன்றம், திருப்பஞ்ஞிலி, அனுமன்றபோவனம்.
கதலீபாகம் - கதலிபாகம்.
கதலுதல் - அசைதல்.
கதவடிகாரர்-ஒருசாதியார், மொண்டிப்பிச்சைக்காரர்.
கதவம் - கதவு, காவல்.
கதவாக்கியம் - சோதிட சாத்திரத்தினோர் வாக்கியம்.
கதவு - கபாடம், காவல்.
கதவுநிலை - கதவுநிற்குந்தூண்.
கதழும் - ஓடும்.
கதழ் - வேகம்.
கதழ்தல் - உக்கிரமாதல், கோபித்தல், சினத்தல், விரைதல்.
கதழ்வு - உக்கிரம், உவமைச்சொல், கடுப்பு, சிறப்பு, சினம், பகை, பெருமை, மிகுதி, வேகம்.
கதழ்வுறுத்தல் - கலங்கிக் கூப்பிடுதல்.
கதளசம் - வாழைமரம்.
கதளீ - வாழைமரம்.
கதளீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கதறல் } அழுதல், சத்தல், கூப்பிடல்.
கதறுதல் }
கதனம் - கடுப்பு, கலக்கம், கொலை, பேச்சு, போர்.
கதன் - பலராமன்றம்பி, உரோகணியிடம் வசுதேவனுக்குப் பிறந்தவன்.
கதாகுவயம் - கோஷ்டம்.
கதாக்கிரஜன் - விட்டுணு.
கதாசித்து - இடைவிட்டகாலம்.
கதாதாமேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கதாபாணி - கையிலே தண்டையுடையவன், தண்டபாணி.

கதாப்பிரசங்கம் - சம்பாஷணை, சரித்திரஞ் சொல்லல்.
கதாமஞ்சரி - கோவையானகதை.
கதாயுதம் - தண்டாயுதம்.
கதாயுதன் - வயிரவன், வீமன்.
கதாயுத்தம் - தண்டுப்போர்.
கதாயோகம் - சம்பாஷணை.
கதாய் - கந்தை, பீறல்.
கதி - அடைக்கலம், அதிட்டம், ஆதரவு, ஐசுவரியம், கதியென்னேவல், கிரகநடை, குதிரைநடை, திராணி, நடை, நிலை, படலம், பதவி, பரமகதி, பிறப்பு, புகலிடம், போக்கு, மோட்சம், வழி, விரைவு.
கதிக்கும்பச்சை-நாகப்பச்சை, பச்சைக்கல்.
கதிக்கை - அதிகரிப்பு, கருக்குவாளிமரம்.
கதிசுவரம் } சிவத்தலங்க ளாயிரத்
கதிஸ்வரம் } தெட்டனு ளொன்று.
கதிதம் - சொல்லப்பட்டது.
கதித்தல் - எழுச்சி, ஒலித்தல், கடத்தல், சிறத்தல், பெருத்தல், போதல், மிகுத்தல்.
கதித்தவிலை - அதிகவிலை.
கதிபதம் - கூறியதுகூறல்.
கதிப்பிரதேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கதிப்பு - எழும்பல்,ஒலி,பருமன்,மிகுதி.
கதிமாறல் - பிறவிமாறல்.
கதிமை - கூர்மை, பருமை.
கதியன் - கூறியது.
கதியால் - வேலியில் நாட்டுங்கிளை.
கதிரம் - அம்பு, ஒரு பிசின்மரம், கருங்காலி.
கதிரவன் - சூரியன்.
கதிரெழுதுகள் - அணு எட்டுக்கொண்டத், சூரியகிரணத் தெழுந்துகள்.
கதிரோன் - ஆதித்தன்.
கதிரை - வறட்சுண்டி, கதிர்காமம்.
கதிர் - இருப்புமுள், கதிரென்னேவல், கிரணம், சூரியன், தேருட்பரப்பினமரம், பயிர்க்கதிர்.
கதிர்கட்டு - அரிக்கட்டு.
கதிர்காமம் - இலங்கைத்தீவில் திருப்புகழ்பெற்ற ஒருசுப்பிரமணியஸ்தலம்.
கதிர்கோல்-இருப்புமுள், நேரியகோல்.
கதிர்க்கண் - அக்கினி நாட்டம்.
கதிர்க்குஞ்சம் - கதிர்க்கற்றை.
கதிர்க்குலை - பயிர்க்குலை.
கதிர்செய்தல் - ஒளிவிடல்.
கதிர்த்தல் - இறுமாந்தல், ஒளிசெய்தல், கூர்த்தல்.
கதிர்த்தாக்கம்-தானியக்கதிர்பளுவினல் வளைந்துபோதல்.
கதிர்நாள் - உத்திரநாள்.
கதிர்ப்பகை - அல்லி, இராகு, கேது, குவளை.
கதிர்ப்பாரி - தாமரை.
கதிர்ப்பாளை - ஆண்பனைப்பாளை.
கதிர்ப்புல் - ஒருபுல்.
கதிர்மகன் - கன்னன், சனி, சுக்ரீவன், நமன்.
கதிர்வாங்கல் }
கதிர்வாங்குதல் } ஒளிசெய்தல், கதிரீனுதல்.
கதிர்விடுதல் }
கதிர்விட்டெறித்தல் - கிரணம் விட்டிலங்குதல், செல்வம் பொலிந்து விளங்குதல், பிரகாசித்தல்.
கதிர்வீசல் } கதிரீனுதல், கிரணம்
கதிர்வீசுதல் } விட்டிலங்குதல், செல்வம் பொலிந்து விளங்குதல், பிரகாசித்தல்.
கது - வடுப்படல், வெடிப்பு.
கதுகொதுத்தல் - ஒலிக்குறிப்பு, கொதித்தல்.
கதுக்கு - இராட்டினக்காது.
கதுக்குதல் - அதக்குதல்.
கதுட்டினம் - சிறுவெதுப்பு.
கதுஷ்ணம் - அற்பச்சூடு.
கதுப்பு - மயிர், ஆண்மயிர், கவுள், பசுக்கூட்டம், பெண்மயிர், மஞ்சள்.
கதுப்புளி-முக்கவருள்ள சூட்டுக்கோல்.
கதுமீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கதுமுதல் - உறமுதல், கடிந்துகொள்ளுதல்.
கதுமென - விரைய.
கதுமெனல் - சீக்கிரக்குறிப்பு, சீக்கிரம்.
கதுமை - கூர்மை.
கதுவதன் -நிந்தையானவார்த்தைசொல்பவன்.
கதுவாய் - ஒரு மோனைத்தொடை, வடுப்படல்.
கதுவாலி - கவுதாரி, காடை.

கதுவுதல் - அதிகமாகப்பற்றல், கலங்குதல், நார்முதலிய வரிந்திழுத்தல், நீங்காதுபற்றல், பற்றுதல், வாங்குதல்.
கதூதரேஸ்வரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கதை - காரணச்சொல், சம்பாஷணை, சரிதம், சொல், சொல்லென்னேவல், தடி, தண்டாயுதம்.
கதைகட்டல் - கதையுண்டுபண்ணல்.
கதைகாரன் - சபைநாயகன், வாயாடி., வீண்பேச்சுக்காரன்.
கதைத்தல் - கதைசொல்லுதல், சொல்லுதல், மிகப்பேசல்.
கதைபிடுங்குதல் - கதைவிட்டுக் கதைகேட்டல், பேசிக் காரியமறிதல்.
கதைமாறுதல் - ஒன்றுசொல்லிப் பின்னொன்று சொன்னேனென்றல்.
கதையறிதல் - காரியமறிதல்.
கதைவிடுதல் - ஒன்றையறியப் பேச்சுவிடுதல்.
கதோபகதனம் - சம்பாஷணை.
கத்தகரோகம் - குரல்கம்மல்.
கத்தக்காம்பு - பாக்கு வெற்றிலையோடு போடும் ஒரு சரக்கு.
கத்தபம் - கழுதை.
கத்தம் - கதை, புயம்.
கத்தராளி - அதிபதி.
கத்தரி - ஒருபாம்பு, கத்தரிக்கோல், கத்தரியென்னேவல், சாதிபத்திரி, வழுதுணை, வேனிற் காலத்துக் கடுங்கோடையாகிய சித்திரைமாசம் இருபத்து மூன்றாந் தேதிமுதல் வைகாசி மாசம் ஏழாந்தேதி வரையிலுள்ள அக்கினி நட்சத்திரம்.
கத்தரிகை - கத்தரிக்குங்கருவி.
கத்தரிகைக்கால் - கத்தரிகை போலப் பிணைத்தமிண்டி.
கத்தரிகைக்கை - திரிபதாகைபோல வளைந்த பவித்திர விரலின் பக்கத்து அங்குலியாகிய நடுவிரலைச் சுட்டுவிரலோடு பொருந்த நிமிர்ப்பது.
கத்தரிக்கை - கத்தரித்தல், மயிரெறிகருவி.
கத்தரிக்கோல் - கத்தரிகை.
கத்தறித்தல் - அறுத்தல், திரிவாய் மருந்து, சிதறியெறிதல்.
கத்தரிநாயகம் - யானைச்சீரகம்.
கத்தரிப்புழு - ஒருபுழு.
கத்தரிமணியன் - ஒரெலி.
கத்தரிவிரியன் - ஒருபாம்பு.
கத்தரை - கோத்திரம்.
கத்தலை - கத்தளை.
கத்தல் - கத்துதல்.
கத்தவியம் - தத்துவம்.
கத்தளை - ஒருமீன்.
கத்தனம் - கத்தரித்தல்.
கத்தன் - அருகன், ஆக்குவோன், கடவுள், சிவன், முதலாளி, விட்டுணு.
கத்தா - கடவுள், செய்பவன், முதல்வன்.
கஸ்தி - துன்பம், வருத்தம்.
கத்தி - ஆயுதப்பொது, வாள்.
கத்திகட்டி - இராணுவவீரன்.
கத்திகட்டுதல் - கம்பலைப்படுத்தல்.
கத்திகை - கருக்குவாளிமரம், சிறுகொடி, துகிற்கொடி, பூமாலை.
கத்திதீட்டுதல் - கூராக்கல், பகைசாதித்தல்.
கத்திநுனை - மலவேம்பு.
கத்திப்போர் - வாட்போர்.
கத்தியம் - இலக்கணமின்றி யிலக்கணப் பாட்டுப்போற்சொல்வது, சீலை, நல்லாடை.
கத்தியோதம் - மின்மினிப்பூச்சி.
கத்தீரணம் - காவட்டம்புல்.
கத்திரி-ஓராயுதம் ஒருசெடி, ஒருபாம்பு, ஒருவகைப் பறை, கண்டங் கத்திரி, மயிரெறிகருவி.
கத்திரிக்கை - மயிரொதிக்கருவி.
கத்தரிக்கைப்பூட்டு - ஒருவிதப்பூட்டு.
கத்திரிணி - தேக்குமரம்.
கத்திரிதத்துவம் - கருத்ததத்துவம்.
கத்திரியம் - ஆடுதின்னாப்பாளை.
கத்திரியர் - க்ஷத்திரியர்.
கத்திருவரும் - குதிரை.
கத்திருவாச்சியம் - பிறவினை.
கத்து - கத்துதல், கத்தென்னேவல், சந்து பிதற்றுகை.
கத்துதல் - கூப்பிடல், பிதற்றல், முழங்கல்.
கத்துரு ஆதிசேடன்றாய், ஆள்வோன் காசிபர் மனைவிகளிற் சருப்பங்களை யீன்றாள், நடத்துவோன்.
கத்துருத்துவம் - ஆளுகை, நடத்துதல்.
கத்துருபம் - குதிரை, குதிரைப்பற்பாஷாணம்.

கத்துருவை - கசியபன் பாரியரு ளொருத்தி. தக்ஷன்மகள், இவளால் நாககுலமுண்டாயிற்று. ஆதிசேஷன், கார்க்கோடகன் முதலியோர்தாய். இவளுடைய சகளத்தி விநதையு மிவளும் பாற்கடற் கரையிலே உச்சைச்சிரவமென்னுங் குதிரையைக்கண்டு அதிசயித்துப் பேசும்போது இவள் விளையாட்டாக அக்குதிரைக்கு வால் கறுப்பென்றாள். மற்றவள் ஆதியந்தம் வெள்ளை யென்றாள். கத்துருவை அதிகரியதானால் நீ யெனக்கடிமையாதல் வேண்டுமென்றாள். விநதை அது வெண்மையானால் நீ யெனக் கங்ஙன மென்றாள். இச்சமயத்தில் அஸ்தமயமானது. கத்துருவை உடனே தன்மகன் ஆதிசேஷனிடம் போய்த் தனது கருத்தைச் சொல்ல அவனுடன்படாது மறுத்தான். அப்பால் கோடகனிடஞ் சொல்ல, அவன் அவ்விரவே போய் அக்குதிரையின் வாலை நஞ்சூட்டிக் கறுப்பாக்கி மீண்டான். விடிதலும் விநதைசென்று பார்த்து மறுபேச்சின்றிக் கூறியபடி தாசியானாள். அதுகண்ட ஆதிசேஷன் அவளைவிட்டு நீங்க கோடகனொழிந்த மற்றெல்லோரையுஞ் சர்ப்பயாகத்தின் மடிந்தொழிக வென்று தாய் சபித்தாள்.

கத்தூரி, கஸ்தூரி } ஒருமிருகம், கானம், மான்மதம்.

கத்தூரிநாரத்தை - ஒருநாரத்தை.

கத்தூரிநாவி - ஒருமிருகம்.

கத்தூரிப்பிள்ளை, கத்தூரிப்பூனை } நாவி.

கத்தூரிமஞ்சள் - ஒருமஞ்சள்.

கத்தூரிமான் - ஒருவகையானமான், நாவி.

கத்தூரிமிருகம் - நாவி.

கத்தூரியெலுமிச்சை - ஒரெலுமிச்சை.

கஸ்தேசுவரம் - சிவஸ்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

கத்தை - கழுதை, கற்றை.

கத்தோயம் - கள்.

கநகரசம் - அரிதாரம்.

கநகாசலம் - மேருமலை.

கநகாட்சி - பெண்ணைந்தை.

கநகாபகை - காவிரிநதி.

கநநம் - புதைத்தல்.

கநிட்டன் - இளையவன், தம்பி.

கநீயசம் - தாமிரம்.

கநீயசி - செடி.

கந்தகட்பலம் - தான்றி.

கந்தகத்திராவகம் - கந்தகச்செயநீர்.

கந்தகபாஷாணம் - கந்தகம்.

கந்தகபூமி - காங்கையானதேசம்.

கந்தகம் - அவல்பாஷாணம், உள்ளி, செந்தகம், முருங்கை.

கந்தகரசாயனம் - ஒருமருந்து.

கந்தகவுப்பு - ஒருப்பு.

கந்தகாரி - வறட்சுண்டி.

கந்தகாலோத்தரம் - ஒருநூல்.

கந்தகிரகதோஷம் - ஒருவகைத்தோஷநோய். அது ஒரு கண்ணில் நீர்க்கம்மல், அடிக்கடி தலையாட்டல், அடிபட்டதுபோல் ஒரு பக்கமாகவே கிடத்தல், கழுத்தில் வியர்வை, தலையைத் தூக்கித் தூக்கிப்பார்த்தல், பற்கடித்தல், பாலுண்ணாமை, பயந்துபயந்து ஈனசுரமாக வருதல், ஒருபக்கங்கோட்டுவாய்ச்சலம்வடிதல், மேற்பார்வை, இரத்த நாற்றமாய் வாய்நீரூறல், உளறல், இரண்டு கையையுமுஷ்டிப்பந்தமாகப் பிடித்தல், மலபந்தம், ஒருபக்கத்துப் புருவமுங் கண்ணுந் தாழ்வாய்க் கட்டையுந் துடித்தல், இரண்டு கண்களுஞ் சிவத்தலாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.

கந்தகுடி - ஒருவகை வாசனை.

கந்தகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

கந்தசட்சகம் - தமரத்தை.

கந்தசட்டி, கந்தசஷ்டி } ஐப்பசிமாதத்தி னமாவாசி தொடங்கிக் கந்தன் விரதத்துக்குரிய ஆறுநாள்.

கந்தசாரம் - இந்திரனந்தனம், சந்தனம்.

கந்தசுக்கிலம் - அதிவிடயம்.

கந்தடம் - வெண்குவளை.

கந்ததன்மாத்திரை - மணத்தையறியுமறிவு.

கந்ததாரம் - மது.

கந்தாளி - ஒருவகை நோய்.

கந்தநாகுலி - செவ்வியம், மிளகு.

கந்தநாகுலியம் - அரத்தை.

கந்தபத்திரம் - வெண்டுழாய்.

கந்தபத்திரேசுவரம் - சிவத்தலங்க ளாயி ரத்தெட்டனு ளொன்று.
கந்தபாடானம் - கந்தகம்.
கந்தபுஷ்கரிணி- நூற்றெட்டுத்திருப்பதி களு ளொன்ருகிய திருவெள்ளறை யென்னுந் தலத்திலுள்ள ஒ ரு புண் ணியத் தீ ர் த் த ம், திருச்செந்தூரி லுள்ள முக்கிய தீர்த்தம்.
கந்தபுஷ்பி - மெருகன்கிழங்கு.
கந்தபுட்பை - அவுரி.
கந்தபுராணம் - காந்த புராணத்தின் பகு தியான ஒரு புண்ணிய சரிதை.
கந்தபூதியம் - நாய்வேளை.
கந்தப்பேசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனு ளொன்று.
கந்தப்பொடி - வாசனைப்பொடி.
கந்தமாதனம் - இராமேசுரத்திலுள்ள ஒருமலை. குலகிரி எட்டிஞென்று.
கந்தமாதனன் - சுக்ரீவன் சேனையிலுள் ள ஒருவன், இவன் குபேரன் புத்தி ரன், அக்குரூரன் நம்பிகளு ளொரு வன்.
கந்தமாதிரு - பூமி.
கந்தமாதேசுவரம் - சிவத்தலங்க ளாயி ரத்தெட்டனு ளொன்று.
கந்தமூஷி - மூஞ்சூறு.
கந்தமூஷிகம் - கத்தூரிமிருகம்.
கந்தமூலம் - கிழங்கு.
கந்தமூலி - சிறு இண்டஞ்செடி.
கந்தம் - அணுத்திரள், இந்திரியம், உள் ளி, ஐம்புலனிஞென்று, க ரு ணை, கழுத்தடி, கிழங்கு, சந்தனக்குழம்பு, பகுதி, பங்கு, பஞ்சகந்தம், பாதரசம், பொதியமலை, முருங்கை, வாசனை, வாசனை வேர்.
கந்தரக்காட்டம் - வெள்ளைப் ப ர் ஷ ா ணம், மேகம்.
கந்தரசம் - போளம்.
கந்தரசு - சாம்பிராணி.
கந்தரம் - கடற்பாசி, கழுத்து, கற்கடக பாஷாணம், தீமுருகற் பாஷாணம், புனல்முருங்கை, மலைக்குகை, மே கம்.
கந்தரன் - சம்பாதி வமிசத்துக் கங்கன் நம்பி.
கந்தராகரம் - மலை.
கந்தராசனம் - சந்தம்.
கந்தராபம் - ஒருவகைமரம்.
கந்தருப்பன் - காமன்.
கந்தருவம் - இசை, இசைப்பாட்டு, எண் வகை மணத்துளொன்று. அஃது கன்னியுந் தலைமகனு மொருப்பட்டுக் கலப்பது, குதிரை, தேகம்விட்ட ஆத் துமா, தேவசாதியிலோர் வகை.
கந்தருவர்-தேவசாதியிலோர்வகையார்.
கந்தரை - குகை.
கந்தர்ப்பன் - மன்மதன்.
கந்தர்வேசுரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கந்தலம் - கிரணம், மூளை.
கந்தலோகம் - சுப்பிரமணியபதம்.
கந்தல் - கெடுதல், கெட்டது, பீறல்.
கந்தவகம்-காற்று, மூக்கு, வாசனையுறல்.
கந்தவகன் - காற்று.
கந்தவடி - வாசனைத்தயிலம்.
கந்தவதி - வாயுவுக்கு இராசதானி, வி யாசர் தாயாகிய சத்தியவதி.
கந்தவருக்கம் - சுகந்தம், வாசனைத் திர வியங்கள்.
கந்தவாகம் - வாயு.
கந்தவாகன் - காற்று.
கந்தவாகை - மூக்கு.
கந்தவாரம் - அந்தப்புரம், அரசன்தேவி யில்லம்.
கந்தவானடக்கி - வாதமடக்கி.
கந்தவிஷபாகம் - ஒருவகைநோய். அது சரீரத்திற் பிணநாற்றம் வீசல், சுரம், மயக்கம், சோம்பல், சர்வாங்கமுழங் கனம், மூர்ச்சை, தலைவலி, சிலேட் டுமாதிக்கம், தாகம், அதிகவார்த்தை குளிர், வயிற்றிற் குத்தல், சிரகணி யென்னு மிக்குணங்களை யுண்டாக் குவது.
கந்தவிஷம் - சங்கோசகம் காவீர முத லிய கிழங்குகள்.
கந்தவரு - அசக்கூத்திற்குரிய வுருவா யடிவரையறை யுடைத்தா யொரு தாளத்தாற் புணர்ப்பது.
கந்தவெற்பு - தேவர்கள் குமாரக்கடவு ளைப் பூசித்த மலை.
கந்தளம் - க து ப் பு, க வ ச ம், தளிர், பொன், யுத்தம்.
கந்தறுவா - ஆமணக்கு.
கந்தற்பகூபம் - யோனி.
கந்தற்பசுவரம் - காமம்.

கந்தனேந்திரர் - ஒருசித்தர்.
கந்தனை - சிறநரத்தை.
கந்தன் - அருகன், ஒருபிதிர், காமன், குமரன், சிரப்பந்தபாஷாணம், சூதபாஷாணம்.
கந்தாத்திரி - நெல்லி.
கந்தாயம் - பங்குவருஷத்தின் மூன்றத்தொருகூறு, விளைவுகாலம்.
கந்தாயு - துரியோதனன் றம்பியருள் ஒருவன்.
கந்தித்தல் - நாறுதல்.
கந்தாரம் - காந்தாரம்.
கந்தி - கந்தகபாஷாணம், கந்தகம், கந்தியென்னேவல், சமுகு, தவப்பெண், வாசம்.
கந்திதம் - அழுகை.
கந்தித்தம் - சீலை.
கந்தித்தல் - மணத்தல்.
கந்தியுப்பு - கந்தகவுப்பு.
கந்திரி - நாகூரில் துலுச்கருக்கு விசேஷித்த பண்டிகை, பண்டி.
கந்திரேஸ்வரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கந்திலம்-ஒருவகைமுருங்கை, தூதுவளை
கந்திவாருணி - பேய்த்தும்மட்டி.
கந்து - கம்பம், அருகு, கட்டுத்தறி, கந்தென்னேவல், சமுத்தடி, சந்து, தூண், தூற்றின் மணியருகு, பண்டி, பண்டியுள்ளிரும்பு, பற்றுக்கோடு, பணங்கூடல், மாடு பிணக்குங்கயிறு, யாக்கையின் மூட்டு, யானையணைதறி, வைக்கோற்பிரள்.
கந்துகட்டுதல் - நீர் முதலிய கொதித்துவரைகட்டல், வைக்கோற்பிரட்டிவளைத்து விடுதல்.
கந்துகம் - குதிரை, குருகிலமன்னர், குதிரை, பந்து.
கந்துகன் - தான்றி.
கந்துகி - அந்தப்புரக் காவற்காரன்.
கந்துகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கந்துதல் - கெடுதல்.
கந்துமாறுதல் - இணைத்ததை மாற்றிவிடுதல்.
கந்துவான் - பிணைகயிறு.
கந்துளம் - பெருச்சாளி.
கந்துள் - கரி.
கந்தேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கந்தேறு - கோடகசாலை.
கந்தை-கரணை, சீலை, நல்லாடை, பீறற்புடவை.
கந்தோடம்-கருங்குவளை, வெண்குவளை
கந்தோதம் - தாமரை.
கந்தோத்தமை - கள்.
கந்தோலி - வெட்டுவலியன்.
கந்நன் - கிருட்டினன்.
கபசவிஷ்டம் - ஒருவகைநோய். அது சிலேட்டுமதோஷ மிகைகளி லதிகமாகச் சேருங்காலத்திற்பிறந்து அவ்விடங்களில் நீர்க்கம்மல், ஒருவேளை மரத்தல், எரிச்சலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
கபசிராவம் - ஒருவகைநோய். அதுநரம்புகளிற் சிலேட்டுமம் வியாபிக்கும்போது பிறந்து கண்களிலிருந்து வெண்மையாயும் பிசுபிசுத்த குழம்பாயும் விஸ்தாரமாயுஞ் சலத்தையொழுகப் பண்ணுவது.
கபடஸ்தன் - கபடன்.
கபடநாடகசூத்திரன் - வஞ்சனைத்தொழிலன், விட்டுணு.
கபடநாடகம் - மகா தந்திரமான செய்கை, வஞ்சகநடிப்பு
கபடநாடகன் - திருமால்.
கபடம் - தந்திரம், வஞ்சகம்.
கபடவித்தை - கபடநாடகம்.
கபடன் - வஞ்சகன்.
கபடாதி - புளிவசலை.
கபடி - கபடன்.
கபடு - கபடம்.
கபட்டுப்படிக்கல் - இடைகுறைவானபடிக்கல்.
கபத்தலைவலி - ஒருவகைச் சிரநோய். அது சிரோபாரம், குத்தல், சரீரமுழுதுங்கடுத்தல், மூர்ச்சை, அரோசகம், வாந்தி, கண்களுப்பலோடு நோதல், காதுக்குள் நமைச்சலாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.
கபஸ்தி - சூரியகிரணம்.
கபஸ்தீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கபநாசம் - கண்டங்கத்திரி.
கபநாசனி - தேற்றான்வித்து.

கபந்தம் – உடற்குறை, கவந்தம், நீர்.
கபந்ீசுவரம் – சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கபம் – கோழை, சிலேட்டுமம்.
கபம்பம் – வாலுழுவை.
கபரி – பெருங்காயமரம்.
கபர்த்தம் – சிவன்சடை.
கபவிரோதி - சிற்றரத்தை.
கபாடக்கட்டி - வசம்பு.
கபாடபுரம் – இடைச்சங்கமிருந்தவூர்.
கபாடம் – கதவு, காவல்.
கபாய் – நிலையங்கி.
கபாலகுஷ்டம் - ஒருவகைக் குஷ்டவியாதி. அது இரணக் கொப்பளங்கள் சிறிது சிறிதாகக் கபாலத்தினது காந்தியைப் பெற்றுந் தடித்துங் கறுத்துஞ் சிவந்துஞ் சுரசுரத்து முகங்கள் வாடியு மொன்றை யொன்று சுற்றி அனேக கொப்பளங்க ளெழும்பி இரணங்களாவது அவைகளிற் பெரிய பெரிய குழிகள் விழுவதுஞ் சீத்தண்ணீ ரொழுகுவதும் உரோமங்கள் முளைப்பதும் நோவுந்தினவு மதிகப்படுவதுமான குணங்க ளுண்டாகும். கபாலம்போல் வெளுத்த நிறத்தைப் பெற்றிருப்பதா லிப்பெயர் பெற்றது.
கபாலக்காரன் – ஒருநோய்.
கபாலக்குத்து – தலைமண்டைக்குத்து.
கபாலசன்னி – ஒருசன்னி.
கபாலசாந்தி – ஆவிரை.
கபாலதரன் – சிவன், வயிரவன்.
கபாலபாணி – சிவன்.
கபாலபித்தம் – ஒருவகைப் பித்தநோய்.
கபாலமலை – ஒருமலை.
கபாலமோனம் – ஒரு புண்ணிய க்ஷேத்திரம். இராமராற் கொலையுண்ட மகோதரனது கபால என்புத்துண்டமொரு இருடிகாலிற் றைக்க அவ்வேதனையா லவ்விருடி சுக்கிரன் தபஞ்செய்த விடத்திற்குப் போனார். அஃதங்கே வீழ்ந்தமையா லவ்விடங் கபாலமோசன மென்னப்பட்டது.
கபாலமோசனேசுவரம் – சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கபாலம் – இரப்போர்கலம், தலையோடு.
கபாலரோகம் – ஒருவகை நோய்.
கபாலவாசல் – உச்சித்துவாரம்.
கபாலன் – சிவன், சீர்பந்தபாஷாணம்.
கபாலி - உமை, சிவன், வயிரவன்.
கபாலினி – துர்க்கை.
கபாலீசர் – திருமயிலையிற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
கபாலீச்சுரன் – சிவன்.
கபாலேசுவரம் – சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கபி - கயிறிழுக்குங்கருவி, குரங்கு.
கபிகந்துகம் – தலையெலும்பு.
கபிசம் - ஒருவகை யன்னம்.
கபிஞ்சலம்-ஆந்தை, காடை, சாதகபுள்.
கபிஞ்சலேசுவரம் – சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கபிஞ்சலை - ஒருநதி.
கபிதம் - கருஞ்சீரகம்.
கபித்தம் – கொட்டிக்கிழங்கு, விளாமரம்.
கபித்துவசன் - அருச்சுனன்.
கபிரதன் - சீராமன்.
கபிலபுரம் - கலிங்கநாட்டிலுள்ளவொரு தேசம்.
கபிலம் – உபபுராணம் பதினெட்டில் ஒன்று, கருமைகலந்த பொன்மை.
கபிலவெலி-ஒருவகை எலி; அது கபில நிறமுள்ளது. கடித்தா லவ்விடத்திற் பல கட்டிகளுண்டாய் விரணமாகும். அதனாற் சுரம், வாந்தி, பிரமையாகிய குணங்களுண்டாகும்.
கபிலன் - ஓரறிஞன், திருவள்ளுவர் சகோதரன்.
கபிலாசிலந்தி-ஒருவகைச்சிலந்தி. அது கண்களினாற்பார்க்கில் தேகமுற்றுஞ் சிவந்த தடிப்பும், வாய் நீரூறலும், மயிர்க்கால்களி லெரிச்சலும், தலைப்பாரமு முண்டாகும்.
கபிலாசிரமம் - கங்காசங்கம சமுத்திரப் பிரதேசத்திலுள்ள சகரத்தீவி லுள்ளது, பாதலத்தி லுள்ளதென்றுஞ் சொல்லுவர்.
கபிலாசுவன் - குவலயாசுவன் மகன், துந்துமாரன் மகனாகிய திருடாசுவன்.
கபிலை - கருமைகலந்த பொன்மை, காராம்பசு, தென்கீழ்த்திசை யானைக்குப் பெண்யானை, தேவபசு, பசு, நீரிறைக்குஞ் சூத்திரத்தொன்று.
கபீடம் - நீர்.

கபீதனம் - வாகை.
கபீரம் - ஆழம்.
கபுரம் - சமுகு.
கபோணி - முழங்கை.
கபோதகம் - சித்திரக்கம்பி.
கபோதபாலிகை - மெத்தையினதுகொடுங்கையிற் பட்சிகளிருக்குந் துவாரம்.
கபோதம் - கரும்புறு, சுவர்த்தலங்களின் சித்திரக்கம்பி, புறு.
கபோதலோபன் - விலோமன் மகன்.
கபோதி - குருடன்.
கபோதேஸ்வரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கபோலம் - கதுப்பு.
கபோலேஸ்வரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கப்பச்சு - கம்மாளர் கருவியி னொன்று.
கப்படம் - சீலை.
கப்படா - அரை.
கப்படி - ஒருமரம்.
கப்பணம் - இருப்பு நெருஞ்சின்முள், ஓராபரணம், கழுத்திடு மிரும்புத்தகடு, கைவேல்.
கப்பம் - அரசிறை.
கப்பரை - இரப்போர்கலன், கிடாரம்.
கப்பலோட்டு - கடல்யாத்திரை.
கப்பல் - மரக்கலம்.
கப்பல்வாணம் - ஒருவாணம்.
கப்பல்வாழை - ஒருவாழை.
கப்பறை - சூதிஞோர்தாயம்.
கப்பற்கடலை - ஒருகடலை.
கப்பற்கதலி - ஒருவாழை.
கப்பற்காரன் - கப்பற்றலைவன்.
கப்பற்சண்டை - கப்பலிலிருந்து செய்யும் போர்.
கப்பற்பாட்டு - ஏலப்பாட்டு, ஒருபாடல்.
கப்பி - ஒருகருவி, கயிறிழுக்குங் கருவி, கழிகடை, குறுணல், தானியம், தெள்ளி நீக்கியது.
கப்பித்தல்-கிளைவிடல், முளையரும்பல்.
கப்பிப்பிஞ்சு - கழிகடைப்பிஞ்சு.
கப்பியல் - கப்பி.
கப்பு - கவர்கொம்பு, கிளை, சிறுதூண், மயிர்க்கூட்டுஞ்சாயம்.
கப்புக்கால் - குறுங்கால்.
கப்புச்சாயம் - ஒருவகைச்சாயம்.
கப்புதல் - உண்ணல், கம்முதல், மூடிக்கொள்ளல்.
கப்புத்தோள் - வலத்தோளு மிடத்தோளுமாகக் காவுதல்.
கப்புநாமம் - இருகவர்நாமம்.
கப்புவிடுதல் - கவர்வைத்தல், கிளைவிடுதல்.
கம - நிறைவு.
கமகமத்தல் - மிகமணத்தல்.
கமகமெனல் - வாசனைக்குறிப்பு.
கமகன் - அரும்பொருளைச் செம்பொருணடையாய்க் காட்டிப் பாடுவோன்.
கமக்காரன் - கமத்திலெசமான், வேளாளன்.
கமங்கட்டுதல் - கமமுண்டு பண்ணல், வேளாண்மைக்கணிகோலுதல்.
கமசுகட்டுதல் - மூபன்று நிற்றல்.
கமடத்தரு - சீவதாரு.
கமடம் - ஆமை.
கமடி - பெண்ணாமை.
கமடேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கமண்டலம்-தெண்டிகை, சுரைக்கடுகு; இஃது தவத்தோர் பஞ்சமுத்திரையி னொன்று.
கமத்தொழில் - உழவுதொழில்.
கமநம் - நடை.
கமபாவை - ஒருபயில்.
கமம் - நிறைவு, விளைநிலம், மேகம்.
கமாதம் - மணித்தக்காளி.
கமரி - ஒருவகைப்புல்.
கமருதல் - அழுதல்.
கமர் - வெடிப்பு.
கமலகுண்டலமாய்விழுதல்-கீழ்மேலாய் விழுதல், தலைகீழாய்விழல்.
கமலக்கண்ணன் - விண்டு.
கமலநிருத்தம் - கூத்திஞோர் விகற்பம்.
கமலநிறமணி - சாதுரங்கப்பதுமராகம்.
கமலபவன் - பிரமா.
கமலபாலிகை - இடிம்பை.
கமலம்-ஒருவகைத்தட்டு, தாமரை, நீர், வைரத்தரிப்பு.
கமலயோனி - பிரமன்.
கமலராகம் - பதுமராகம்.
கமலவல்லித்தாயார் - திருப்பேர்நகரிற் கோயில்கொண்ட விலக்குமி.
கமலவூர்தி - அருகன், பிரமன்.

கமலாகாரம் - தாமரைவடிவம்.
கமலாக்ஷன் - தாரகாசுரன் புத்திரன், தாரகாக்ஷன், வித்தியுன்மாலி.
கமலாக்கினி - மட்டானதீ. அது இரண்டு விறகனமுள்ள இரண்டு விறகால் எரிப்பது.
கமலாசனன் - அருகன், பிரமன்.
கமலாசனி } இலக்குமி.
கமலாசனை }
கமலாயம் - திருவாரூர்.
கமலாலயை - இலக்குமி, திருவாரூர்.
கமலி - குங்குமபாஷாணம்.
கமலிப்பட்டு - ஒருபட்டு.
கமலினி - உமை சேடிகளிலொருத்தி.
கமலை - இலக்குமி, திருவாரூர்.
கமலோத்தரம் - குசும்பாவன்னம்.
கமல் - குடசப்பாலை, வெட்பாலை.
கமவாரம் - அணிப்பங்கு.
கமவேலை - உழவுத்தொழில்.
கமழ்தல் - மணத்தல், தோற்றுதல்.
கமலேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கமறல் } அலறுதல், அழல், குமிறுதல், மிகக்காய்தல்.
கமறுதல் }
கமனகுளிகை - இரசகுளிகை, நினைத்த விடத்துக்குப் போகப்பண்ணும் மருந்து.
கமனசித்தி - கமனம்பண்ணும்வல்லபம்.
கமனப்பிரியை - ஐம்பத்து மூன்றாவது மேளகர்த்தா.
கமனம் - கதி, போதல்.
கமனம்பண்ணுதல் - கவனமாய்ச் செல்லல், பெண்ணிடத்திற்சேர்தல், போதல்.
கமனி—ஆகாயமார்க்கமாய்ச்செல்பவன்.
கமனித்தல் – கமனம்பண்ணல்போதல்.
கமாஸ் - ஓரிராகம்.
கமாரிடுதல் - சத்தம்பண்ணல், வெடித்தல்.
கமாரெனல் - சத்தம்பண்ணுதல்.
கமார் - வெடிப்பு.
கமி - மிளகு.
கமிகை - கடிவாளம்.
கமிச்சு - கம்பியச்சு.
கமித்தல் - க்ஷமித்தல், பொறுத்தல்.
கமிப்பு - க்ஷமிப்பு, பொறுமை.
கமுகந்தீவு - சத்ததீவிலொன்று.

கமுகமுத்து - கமுகுமுத்தம்.
கமுகம்பூச்சம்பா - ஒருநெல்.
கமுகு - பாக்குமரம்.
கமுகுமுத்தம் - கமுகிற் பிறந்த பச்சைநிறமுத்து.
கமுக்கட்டு - அக்குல், கைக்குழி.
கமுக்கம் - அடக்கம், அமைந்திருத்தல்.
கமுக்குக்கமுக்கெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
கமை-க்ஷமை, பொறுமை; அஃது சத்தபுண்ணியத்தொன்று.
கம் - அறிவு, ஆகாயம், ஆட்டுக்கடா, இந்திரியம், கம்மியர்தொழில், காற்று, சந்தோஷம், செயல், தலை, நீர், பிரமன், முத்தி, மேகம், விந்து, வெண்மை.
கம்சன் - உக்கிரசேனன் மகன், மதுராபுரத்தரசன், கிருஷ்ணன் மாதுலன். இவன்பூருவஜென்மத்திற்காலநேமியென்னு மிராக்ஷசன், அந்தவாசனையால் தேவர்களைத் துன்பப்படுத்திவந்தான். தனது தங்கையான தேவகியை வசுதேவனுக்கு விவாகம்பண்ணிக்கொடுத்து இரதத்தி லேற்றிக்கொண்டு வனம்பார்க்கப் போகையில் "உன்றங்கைபுத்திரனாற் கொல்லப்படுவாய்" என்றோர் அசரீரி பிறந்தது. அது கேட்டவுடன் திரும்பிவந்து இருவரையுஞ் சிறைச்சாலையிலிட்டுப் பிள்ளைகள் பிறக்குந்தோறுங் கொன்றுவந்தான். முடிவிற் கிருஷ்ணன் பிறந்து தனது யோகமாயையால்நந்தன்சேரிபோய்ச்சேர்ந்தான். அஃதறிந்த கம்சன் அவனைக்கொல்லப் பல உபாயங்கள் தேடியும் பலியாது ஈற்றிற் கிருஷ்ணனாற் கொல்லப்பட்டான். உக்கிரசேனன்மனைவி தோழிகளோடு காட்டிற் சென்றபோது அங்கே தோழிகளைப்பிரிந்து வழிதடுமாறித் தனிக்க அச்சமயமோராக்கன்கண்டு மோகித்து அவளைக்கூடிப்பெற்ற புத்திரன் இக்கம்சன்.
கம்சாராதி - கிருட்டினன்.
கம்சை - உக்கிரசேனனதுமூத்தமகள்.
கம்பக்கணை -அசையாதவன், அசையாத்தம்பம், தழுக்குணி.
கம்பக்கூத்து - தொம்பர்கூத்து.

கம்பக்கோரை - ஒருவிதப்புல்.
கம்பச்சுரம் - ஒருவகைச்சுரநோய். அது நடுக்கம், சர்வாங்கசீதளம், வியர்வை, கொட்டாவி, தலைப்பாரம், அருசி, கண்ணிற் சலப்பெருக்கம், தாகம், சோர்வு, தலைப்புரட்டு, சுவாசம், அதிகவேதனை, அர்ப்பலம், சூக்ஷ்மம், வாயிலும் நாவிலுங் கொப்பளம், நித்திராபங்கம், பேதி, எப்பம், புளித்தவாந்தி, சடத்துவம், கீல்களில் நோவு, நாடி சூக்ஷுமமாகவும் வேகமாகவும் நடக்கையாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.
கம்பட்டக்காரன் - காசடிப்போன்.
கம்பட்டசாலை - காசு முதலியன அடிக்குஞ்சாலை.
கம்பட்டமடித்தல் - காசடித்தல்.
கம்பட்டமுளை - காசடிக்கும் முத்திரை.
கம்பட்டம் - காசு.
கம்பத்தம் - வேளாண்மை.
கம்பத்தன் - இராவணன்.
கம்பத்து - தோணியின் வெடிப்பு.
கம்பநன் - சலநசுபாவமுள்ளவன்.
கம்பந்தாளி - ஒருதாளி.
கம்பந்திராய் - ஒருதிராய்.
கம்பபம் - கம்பளம்.
கம்பபிவாகியம் - பாரவண்டி.
கம்பம் - அசைவு, கர்பரி பாஷாணம், சாலாங்க பாஷாணம், தாலம்பப் பாஷாணம், தூண், நடுக்கம், பாய்மரம், விளக்குத்தண்டு, வெள்ளைப் பாஷாணம்.
கம்பரம் - சஞ்சலம்.
கம்பர்காஞ்சி - காஞ்சிபுரம், ஓர் ஊர்.
கம்பளம் - கம்பளி, செவ்வாடை, மேற்கட்டி.
கம்பலை - அச்சம், ஒலி, சண்டை, துன்பம், நடுக்கம், மருதநிலம், வயல், வருத்தம்.
கம்பலைக்கட்டுதல், கம்பலைப்படல் - சண்டைபிடித்தல், பேச்சு வார்த்தைப்படல்.
கம்பலைமாரி - ஒரு பெண்தேவதை, கம்பலைப்படுகிறவன்.
கம்பவம் - சிலைப்பேன்.
கம்பவாணம் - ஒருவாணம்.
கம்பவாதம் - உதறுவாதம், நடுக்குவாதம்.
கம்பளத்தார் - ஒருசாதியார்.
கம்பளபருகிஷன் - அந்தகன் மகள்.
கம்பளம் - ஒருநாடு, கம்பளி, செம்மறிக்கடா, செவ்வாடை, துருவாட்டேறு.
கம்பளர் - மருதநிலமாக்கள்.
கம்பளி - ஒருமரம், ஒருவகைச்சீலை, ஒருவகையாடு.
கம்பளிக்கொண்டான் - ஒருமரம்.
கம்பற்று - தோணியிற்சில்லி.
கம்பனம் - அசைவு, அதிர்த்தல்.
கம்பன் - ஓரிராக்கதன், ஒருபுலவன்.
கம்பாகம் - அமாற்கயிறு.
கம்பாநதி - காஞ்சிபுரத்திலுள்ளஓராறு.
கம்பாயம் - ஒருபுடவை.
கம்பாரி - குமிழஞ்செடி.
கம்பானம், கம்பான் - அமாற்கயிறு.
கம்பி - இரும்பு முதலியவற்றின் கம்பி, கம்பியென்னேவல், காசு, காதணி, சித்திரக்கம்பி, வெடியுப்பு.
கம்பிகட்டுதல் - புடவைமுதலியவற்றிற்குக் கம்பிகீறுதல்.
கம்பிகை - ஒருவாத்தியம்.
கம்பிக்கடுக்கன் - ஒருவகைக்கடுக்கன்.
கம்பிக்களம் - கம்பிக்குறியுள்ளபுடவை.
கம்பிக்குறி - கம்பிபோன்றகுறி.
கம்பிதம் - அசைவு, நடுக்கம்.
கம்பித்தல் - அசைதல், நடுங்கல்.
கம்பிமணி - ஒருவகைமணி.
கம்பியச்சு - கம்மாளரோர்கருவி, சித்திரக்கம்பி.
கம்பியுப்பு - ஒருப்பு.
கம்பிரம் - அசையுந்தன்மையுடைய அரசிலை முதலியன.
கம்பிவாங்கல், கம்பிவாங்குதல் - நெடுகிவிடுதல்.
கம்பிவிறிசு - ஒருவாணம்.
கம்பிளி - கம்பளி.
கம்பீரசன்னி - ஒருநோய்.
கம்பீரம் - ஆர்ப்பரிப்பு, ஆழம், செருக்கு.
கம்பீரரோகம் - ஒருவகை நோய்; அது இலிங்கநாத நோய்களினின்று மதிகரித்த வாயுவின் விருத்தியாற் கண்களின் நரம்புகள் முடங்கிப் பார்வைக்கு ஒருவியாழ்ந்துவிடும்போது பிறந்து கொஞ்சமேனும் பார்வையைத் தெரிய வொட்டாதபடி செய்வது.

கம்பீரவாதசோணிதம்-ஒருவகைநோய். அது மாமிசத்தையுஞ் சருமத்தையும்பற்றிய நமைச்சல்முதலிய துர்க்குணங்கள் சிலநாள் பொறுத்துள்ளிலாழப் பாய்ந்து சத்த தாதுக்களிலும் வியாபித்து மிக்கவுபத்திரவத்தையுண்டாக்குவது. இது முற்றினாலுடம்பில் முழுவதும் வீக்கங்காணும்.

கம்பீரவாதம் - ஒருவகை வாதநோய். அது வாயுவை யுண்டாக்கும். வஸ்துக்களினாற் பிறந்து முதல் முதல் ஊர்த்து வாங்கத்திலாவது அதோங்கத்திலாவதுசர்வாங்கத்திலாவது இருக்கின்ற தாதுவைப்பற்றி ஒவ்வொரு தாதுக்களாகத் தாண்டிக்கொண்டே யுள்ளிலாழ்ந்து அஸ்திரத் தாதுக்குள்ளிருக்கும சசதாதுவை அனுசரித்துத் துன்பத்தைச் செய்வது. அப்போது சரீர முழுவதும் வேதனை, திமிர், கைகால் முடக்கம், வாந்தி, மூர்ச்சையென்னு மிக்குணங்களுண்டாகும்.

கம்பீரவிக்கல் - ஒருவகைவிக்கல்நோய். அது பக்குவாசயத் தானத்திலாவது நாபி ஸ்தானத்திலாவது மகா விக்கல்ரோகக் குணங்களைப் பெற்று அடிக்கடி கொட்டாவி, தேகமுறுக்கு, அதிக சத்தத்தோடு நீண்டுவருகின்ற விக்கலாகிய குணங்களை யுண்டாக்குவது.

கம்பீரன் - வீரகெற்சிதமுள்ளவன்.

கம்பீரித்தல் - ஆர்ப்பரித்தல், வீராவேசப்படுதல்.

கம்பீர் - கத்தைக் காம்புபோன்ற ஒரு சரக்கு.

கம்பு - ஒருபயிர், சங்கு, சிறுதடி, செந்தினை, மரக்கொம்பு.

கம்புக்கிரீவம் - மூன்றிரேகைகளுள்ள கழுத்து.

கம்புள் - சங்கு, சம்பங்கோழி, வானம்பாடி.

கம்பை - எல்லை, கதவு முதலியவற்றின் கம்பை, காஞ்சீபுரத்திலுள்ள ஒருநதி, பொறுப்பு.

கம்பைக்கல் - ஒருமணி.

கம்போசம் - ஒருவகைச்சங்கு, ஒருதேசம்.

கம்போத்தம் - குவளை.

கம்மக்கை - வேலைநெருக்கம்.

கம்மஞ்செய்மாக்கள் - கைத்தொழிலாளர்.

கம்மம் - கம்மியம், வேலை.

கம்மல் - இருமல், ஒருவகைக் கடுக்கன், காதோலை, குரலடைப்பு, மங்கல், மந்தாரம், மாசு.

கம்மவார் - ஒருசாதியார், கமக்காரர்.

கம்மாலை - கம்மத்தொழில் செய்யுந்தலம்.

கம்மாளர் - கம்மியர், அவர்கள் கன்னார், கொல்லர், சிற்பர், தச்சர், தட்டார்.

கம்மாறர் - கரையார்.

கம்மிடுதல் - வாசனைக்குறிப்பு.

கம்மியமானக்கிரியை - குறிப்புவினை.

கம்மியமானம் - குறிப்பு.

கம்மியம் - கைத்தொழில், பேறு.

கம்மியர் - கம்மாளர், தொழில்செய்வோர்.

கம்முதல் - அதட்டியுரப்பல், இருமுதல், குறல்குன்றல், மூடுதல்.

கம்மெனல் - வாசனைக்குறிப்பு.

கம்மை - சிறுகீரை.

கயக்கம் - கயங்கப்படுதல்.

கயக்கல் - நசுக்கல், முறுக்கல், மெலித்தல், கலக்கல்.

கயக்கு - கயக்கென்னேவல், கைக்குதல், சோர்வு.

கயக்குதல் - நசுக்குதல், முறுக்குதல், மெலிவித்தல்.

கயங்கல் - குழைதல், சோர்தல், மெலிதல், விலகிவிடல்.

கயங்கு - கம்பு, கயங்கென்னேவல்.

கயங்குதல் - குழைவு, சோர்தல், நொந்துமெலிதல், விலகிவிடுதல்.

கயடேரிகம் - அகில்.

கயத்தம் - துளசி.

கயத்தி - கெட்டவள்.

கயந்தலை - மனத்துயர், யானைக்கன்று, வாவி.

கயப்பிணை - வங்கமணல்.

கயமதம் - யானைமதம்.

கயமலர் - பெரியமலர்.

கயமுகம் - கயாசுரன்.

கயமுகன் - ஓரசுரன், விநாயகன்.

கயமுகாரி - விநாயகன்.

கயமுனி - யானைக்கன்று.

கயமை - கீழ்மை, சண்டாளத்தனம், குணவீனம்.

கயம் - நீருநதமடு, அகழி, அழிவு, ஆழம், இளமை, ஒருநோய், கீழ்மை, குளம், கேடு, தேய்வு, நீர், பெருமை, மேன்மை, யானை, கருமை.
கயரோகம் - கசரோகம்.
கயர்-கசர், கயரென்னேவல், துவர்ப்பு.
கயல் - கெண்டைமீன்.
கயவஞ்சி - உலோபன்.
கயவஞ்சித்தனம் - உலோபத்தனம்.
கயவர் - கீழ்மக்கள்.
கயவாகு-சிலப்பதிகாரத்திற்கூறப்பட்ட இலங்கையரசன். இவனே முதல் முதல் கண்ணகிக்கு இலங்கையிற் கோவில் கட்டுவித்து உற்சவங் கொண்டாடியவன்.
கயவாய் - கரிக்குருவி, கழிமுகம், பிளந்தவாய், புகார்முகம்.
கயவாளகம் - கீழுலகம்.
கயவு - உயரம், கழிமுகம், களவு, பெருமை, மிகுதி, மேன்மை.
கயற்கூடு - இணைக்கயல்.
கயனை - கசனை.
கயன் - உன்முகன்புத்திரன், அங்கதன் றம்பி, ஒரு சக்கரவர்த்தி. இவன் பிரியவிரதன் வமிசத்து நந்தனுடைய மகனும் ஐந்நூறு அசுவமேதயாகஞ் செய்து இந்திரபதம் பெற்றவனுமாவன், அதூர்த்தராஜன் மகன், இவன் யக்கியங்கள் பலசெயது இராஜவிருடியானவன். இவன் யக்கியங்கள் செய்தவிடமே கயையெனப் பெயர் பெற்றது.
கயாகரம் - ஒரு நிகண்டு.
கயாரி - சிங்கம்.
கயானனன்-கயமுகாசுரன், விநாயகன்.
கயிங்கரன் - ஏவல்செய்வோன்.
கயிங்கரியம் - வேலை.
கயிங்கிதம் - ஆகாயத்திற் சுரூபமறிதல்.
கயிப்பு - இலாகிரி.
கயிமவாதி - வசம்பு.
கயிரம் - அலரி.
கயிரவம்-செவ்வாம்பல், வெள்ளாம்பல்.
கயிரிகம் - ஒருமண், காவிக்கல்.
கயிரை - சுற்றம்.
கயிர் - தவறு.
கயிலாசநாயகியம்மை - திருக்காருயவிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
கயிலாசப்பருவதம் - வெள்ளிமலை.
கயிலாசம் / கயிலாயம் } ஒருமலை, சிவபதவி.
கயிலாயன் - சிவன்.
கயிலி - பலவன்ன வரிப்புடவை.
கயிலை - கயிலாசம்.
கயிலைமலை - வெள்ளிமலை.
கயிலையாளி - சிவன்.
கயிலையிற்கடுங்காரி - மாமிசபேதி.
கயில் - ஆபரணக்கடைப்புணர்வு, தேங்காய்ப்பாதி, பிடர்.
கயிறடித்தல் - நூல்போடுதல்.
கயிறு - வடம்.
கயிறுகட்டுதல் - நெடுகவிடுதல்.
கயிறுசாத்துதல் - சாத்திரம்பார்க்க ஏட்டிலே கயிறிடுதல்.
கயிறுதடி - நெய்வோர்க்கருவியிலொன்று.
கயிறுபிடித்தல் - நூல்பிடித்து ஒழுங்குபடுத்தல்.
கயிறுமாலைப்படுத்தல் - தொந்தரைப்படுத்தல், வருத்தப்படுத்தல்.
கயிறுமுறுக்குதல் - கயிறு திரித்தல், வருத்தப்படுத்தல்.
கயிற்றுக்கொடி - கயிற்றுலாய கட்டுக்கொடி.
கயிற்றுக்கோலாட்டம் - ஒரு விளையாட்டு.
கயிற்றுக்கோல் - ஒருதராசு, வெள்ளிக்கோல்.
கயிற்றுப்பொருத்தம் - மணப்பொருத்தம் பத்திலொன்று.
கயிற்ரேணி - நூலேணி.
கயினி - அத்தநாள், கைம்பெண்.
கயேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கயை - ஓர் ஆறு, வடதேசத்திலுள்ள ஒரு புண்ணியக்ஷேத்திரம்.
கர - இருபத்தைந்தாவது வருடம், கரவென்னேவல்.
கரகண்டகம் - நகம்.
கரகந்தேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
கரகம்-ஆலாங்கட்டி, கமண்டலம், கெண்டிகை, தாதுமாதளை, வட்டில்.
கரகரணம் - பரதவுறுப்புளொன்று.
கரகரத்தல்-அரிகண்டப்படுத்தல், ஒலிக்குறிப்பு, பரிசக்குறிப்பு.

கரகரப்பிரியை - இருபத்திரண்டாவது மேளகர்த்தா.
கரகரப்பு-அலைக்கழிப்பு, கார்ப்பு, சருக்கரையூறு, தினவு,
கரகரெனல் - கரகரத்தல்.
கரகவசம் - போரில்கைக்கிடும் இருப்பு
கராடம் - செங்கழுநீர்க்கிழங்கு.[றை.
கரகை - ஆலங்கட்டி, மழை.
கரக்கிரகணம் } விவாகம்.
கரக்கிரகம்
கரசம் - புலிதொடக்கி, யானை, யானைக்கரணம்.
கரசாணுதி - கைகால் முதலியசாங்கம்.
கரசல் - புன்செய், வைத்தியநூல்.
கரசாகை - கைவிரல்.
கரசிக்கிருட்டி - ஒருபறவை.
கரசீகரம் - துதிக்கையுமிழ்நீர்.
கரசூகம் - நகம்.
கரசை - கரசம், நாலுமரக்காலளவு.
காஞ்சகம் } புங்கமரம்.
கஞ்சம்
கரடகபாஷாணம் - ஒருமருந்து.
கரடகம் } தந்திரம், வஞ்சகம்.
கரடகம்பம்
கரடகன் - ஒரு வஞ்சகமுள்ளநரி, தந்திரி, வஞ்சகன்.
கரடம்-காங்கை, மதம்பாய்சுவடு, யானைமதம்.
கரடி - ஐவாய்மிருகம், சிலம்பம்.
கரடிகை - ஒருபறை.
கரடிப்பறை - தட்டை.
கரடிப்புண் - அதமப்புணர்ச்சியினாற் பீசத்திலுண்டாகும் ஒருவிதவிரணம்.
கரடிவித்தை - ஆயுதபரிட்சை.
கரடு - ஒருபுல், கணு, கற்பரடு, சருச்சரை, முரடு, வஞ்சகம்,
கரடுமுரடு - செம்மையற்றது, வயிரமுங்கணுவுங்கொண்டது.
கரட்டரிதாரம் - ஒருமருந்து.
கரட்டான் - ஓரோணான்.
கரட்டுக்கரட்டெனல் - ஒலிக்குறிப்பு.
கரட்டுத்தாளகம்-விளைவுபாஷாண முப்பத்திரண்டினொன்று.
கரட்டுநிலம் - வன்றரை.
கரட்டோணான் - ஓரோந்தி.
கரணக்கூத்து - படிந்தவாடல்.
கரணசன் - நீண்டசந்திருக்குமூக்கன்.
கரணத்திராணம் - மஸ்தகம்.
கரணம் - அந்தரிந்திரியம், அறுதிச்சீட்டு, உபகரணம், எண்ணிக்கை, ■து, ஐம்பொறி, கணிதம், கலவி, காரணம், கூத்தினோர் விகற்பம், கூத்து, செய்கை, நர்செய்கை, பஞ்சாங்கத்தில் ஒன்று, விருப்பம்.
கரணவணி - பிரகரணம்.
கரணவேதேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று. [ன்.
கரணி - சஞ்சீவி, செய்குதல், செய்பவ
கரணிதம் - அந்தக்கரணம். அஃது ஆங்காரம்-சித்தம் - புத்தி-மனம்-கலவி-கூட்டம்-கூத்தின் விகற்பம்.
கரணியமேனிக்கல் - கரும்புள்ளிக்கல்.
கரணியாசம் - கைக்கிரியை.
கரணீயம் - காரியம், செய்யத்தக்கது.
கரணை-ஒருசெடி, ஒருநூறு, ஒருவகைக்கட்டு, கொல்லறு, மூளி, வீணைத்தண்டு.
கரணைப்பலா - வெருகு.
கரணைப்பாவட்டை - ஒருபாவட்டை.
கரண்டகம் - ஒருசெப்பு.
கரண்டம் - கமண்டலம், காண்டகம், நீர்க்காக்கை.
கரண்டி - சிற்றகப்பை.
கரண்டை - குண்டிகை, முனிவர்வாசம்.
கரதம் - காக்கை.
கரதலம் - கைத்தலம்.
கரதாலம் - ஒருவாத்தியம்.
கரதாளம் - பணை, கைக்கொட்டு.
கரதோயம்-வங்கதேயத்திலுள்ள வோர் நதி. இது கௌரி விவாககாலத்திற் சிவன் கரங்களினின்று பெருகினமையாற் கரதோயமெனப் பெயர் பெற்றது.
கரதோயை - ஒருநதி.
கரத்தல் - ஒளித்தல், கொடாமை, திருடல், மறைத்தல்.
கரந்தமன் - யயாதிபுத்திரனாகியதுர்வாசன்பௌத்திரன் புத்திரன். இவன் பலாசுவன் எனவும்படுவான். இவன் பலபராக்கிரமமுடையனாயரசுசெய்தபோது பொறாமையால் ■னையவரசர்கள் திரண்டு இவனை வளைய அதுகண்டு அஞ்சிச் சிறிதுநேரம் ஏகாந்தமாயிருந்து சிந்தித்துப் பின் வெளி

யேசென்று யாவரையுஞ் செயித்த வன். இவன் மகன் அவீக்ஷித்து.
கரந்துவரலெழினி - மேற்கட்டுத்திரை யாகவும் செயற்பாட்டுடனே வகுக் கப்படுவது.
கரந்துவரலெழினியினிலக்கணம் - கரந்துவரலெழினியினது இலட்சணம்; அது ஒரு முகவெழினி பொருமுக வெழினியினுஞ் சிறப்புடைத்தாய் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரரென்று சொல்லப்பட்ட வச்சிரதேகன், வச்சிரதந்தன், வருணன், இரத்தகேசுவரனென்னு நால்வகைவருணப்பூதர்களையுஞ்சித்திரத்தாலமைக் கப்பட்டு அரங்கிற் றூங்கவிடுவது.
கரந்துறைகோள் - காணுக்கிரகம்.
கரந்துறைச்செய்யுள் - மிறைக்கவியில் ஒன்று.
கரந்தை - ஒருபூடு; அஃது அட்டாதசமூலத்தொன்று, கல்லாரை, பகைவரோட்டின நிரைமீட்டவர்க்குமாலை, நாறுகரந்தை.
கரந்தையரவம்-கரந்தைத்திணைத்துறை பதின்மூன்றனுளொன்று. அது பசுநிரையைக் கைப்பற்றினமை கேட்டுச்செய்யாநின்ற காரியந்தவிரக் கடுகினராகித் திரளுங் கூறுபாட்டைச் சொல்லுவது.
கரபத்திரம் - ஈர்வாள், கைவாள்.
கரபத்திரிகை - சலக்கிரீடை.
கரபம் - கழுதை.
கரபரிசம் - கையினுற்றொடுகை.
கரபர்ணம் - செவ்வாமணக்கு.
கரபல்லவம் - கைவிரல்.
கரபல்லபம் - விளாமரம்.
கரபாத்திரமெடுத்தல் } கையிலன்னம் வாங்கிப் புசித்துத் திரிதல்.
கரபாத்திரம் }
கரபாலம் - முப்பது அங்குலத்துக்கு மேற்பட்ட கத்தி.
கரபி - யானை.
கரபீரம் - சிங்கம்.
கரபூடணம் } கங்கணம்.
கரபூஷணம் }
கரப்பன் - கரப்பான், கிரந்திப்புண்.
கரப்பன்பூச்சி - ஒருபூச்சி.
கரப்பன்பூடு - ஒருபூண்டு.

கரப்பான் - ஒருபுண்.
கரப்பான்பித்தம் - ஒருவகைப்பித்தநோய். அதுசர்வாங்கத்திலுஞ்சொறி, உபத்திரவத்தோடுகட்டி, குழம்பான பேதி, இரைச்சலுடன் பொருமல், இசிவு, கால்களில் விலவிலப்பு, இடுப்புநோவு, திமிரோடு சரீரத்திற் காந்தல், நிறைக்குறைவென்னு மிக் குணங்களை யுண்டாக்குவது.
கரப்பான்பிரமேகம்-ஒருவகைப் பிரமேகநோய். அதுவயிற்றிலுளைச்சல், சீதளம்வீழல், நீர் உஷ்ணமாகவும், கடுப்பாகவுமிறங்கல், சிலவேளை அத்துவாரத்தைப் புண்ணாக்கிச் சுண்ணம் புக்கல்லைக் கரைத்தசலம்போற் குத்தலோடிறங்கல், அழலையாய் வாட்டத்துடன் கைகாலோய்தல், உடம்பெல்லாம் நெருங்கிய பெருஞ்சொறியென்னு மிக்குணங்களை யுடையது.
கரப்பிரசாரம் - பரதவுறுப்பு ளொன்று.
கரப்பு-ஒளிப்பு, களவு, மத்து, மீன்கூடு.
கரப்புக்குடில் - சிறுகுடில்.
கரப்பொடி-குடிலைத்தண்டேற்றிவைத்தல், குரங்குபிடிக்கும் ஒருபொறி.
கரமஞ்சரி - நாயுருவி.
கரமார்த்திகை - திராட்சைக்கொடி.
கரமாலம் - புகை.
கரமுகவம்பி - யானைமுகவோடம்.
கரமுகன் - விநாயகன்.
கரமுத்தம் - ஒருபாணம்.
கரமை - உல்லாப்பியம்.
கரம்-அழிவுள்ளது, எழுத்தின்சாரியை (உ-ம்) அகரம், ஓலைக்குவியல், கழுதை, கிரணம், குடியிறை, கை, நஞ்சு, முழம், யானைத்துதிக்கை.
கரம்பம் - பொடிமா.
கரம்பனூர்-நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்று. இது உத்தியோக விமானமமைந்ததும் சோழநாட்டிலுள்ளதுமாம். இதற்கு உத்தமர் கோயிலென மறுபெயருமுண்டு.
கரம்பி - சகுனிமகன், குந்தி.
கரம்பு - பாழ்நிலம்.
கரம்பை - ஒருபூடு, களிமண், சிறுகளா, பாழ்நிலம்.
கரயந்திரம் - வில்லின் கைப்பிடி.
கருகம் - நகக்கண், நகம்.

கரவடம் - களவு, வஞ்சகம்.
கரவடர் } திருடர், வஞ்சகர்.
கரவர்
கரவாகம் - காக்கை.
கரவாதி - சுரிகைக்கத்தி.
கரவாபிகை - சிறுவாள்.
கரவாலம் - நகம்.
கரவாளம் } கைவாள், பட்டா.
கரவாள்
கரவிந்தை - களாச்செடி.
கரவீரம் - அலரிச்செடி.
கரவீரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கரவீரேசுவரர் - திருக்காவீரத்திற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
கரவு-உலோபம், ஒளித்தல், களவு, வஞ்சகம்.
கரவுவெளிப்படுமணி - ஒருவரது மறைத்தசெய்கையைத் தன்செய்கையால் வெளிப்படுத்தல் (உ-ம்) செடிமனைக்குக் காலைவரு காவலர்க்குத் அஞ்சும்படிவிரித்தாள் ஓரணங்குபாய்.
கரவை - கம்மாளர் கருவியிலொன்று.
கரவோர் - கரவர்.
கரளம் - காஞ்சிரமம், நஞ்சு.
கரளை - வளர்தலின்மை.
கரன் - அழிவுடையோன், ஓரரக்கன்.
கரா-அழியாதது, ஆண்முதலை, முதலை.
கராகண்டிதம் - சரியாய்ப்பேசுகை,தெளிவு.
கராகரி - தேவதாரமரம்.
கராக்கி - விலைக்குறைவு.
கராக்ஷேபகவாதம் - ஒருவகைவாதநோய்; அது அதிக வாதவஸ்துக்களை மிகவும் புசித்தலினற்பிறந்து சர்வாங்கத்திலும் வியாபித்து பின்னர்க் கைகளை யனுசரிப்பது. அப்போது கிரேமவாகவே கைகளுக்கு சுழற்றலுண்டாவதோடு அசைக்கவும் நீட்டவுமுடக்கவுங் கூடாமலிருக்கும்.
கராசலம் - யானை.
கராசனம் - புலி.
கராடம் - மருக்காரை.
கராமம் - வெண்கடம்பு.
கராமுத்து - முதலையிற் பிறந்த வெண்ணிறமுத்து.
கராம் - முதலைவிசேடம், ஆண்முதலை, முதலை.

கராம்பு - ஒருசரக்கு.
கராலகம் - கருந்துளசி.
கராளகேசரி - மூர்க்கமான சிங்கம்.
கராளம் - தீக்குணம்.
கராளவதனம் - பயங்கரமுகம்.
கராளி - தீக்குணம்.
கராளை - வளராதவன்.
கரி - இருந்தை, கரியென்னேவல், கருமை, சாட்சி, திருட்டாந்தம், நஞ்சு, யானை, வயிரம்.
கரிகரம் - கலவி விளையாட்டிலொன்று.
கரிகறுத்தல் - கவலையான் முகங்கருகல், மிகக்கறுத்தல்.
கரிகன்னி - வெருகு.
கரிகாடு - கரிந்தகாடு,யானைதிரியுங்காடு.
கரிகாலன் - ஒருசோழன்.
கரிகாற்சோழன் - காவிரிப்பூம்பட்டினத்தில் இளஞ்சேட்சென்னியனென்னுஞ் சோழனுக்குப் புத்திரனாக அவதரித்து உத்தரதேசத்திற்படைகொண்டு அநேக நாடுகளைத் தன் வசப்படுத்திப் பகைஞரையடக்கி மனுநெறி வழாது செங்கோல் செலுத்தினவனும் கடியலூர் உருத்திரங்கண்ணனாரென்னும் புலவர்பட்டினப்பாலையென்னும் பிரபந்தத்திற்புகழ்ந்து பாடப்பட்டவனும் அப்புலவர்க்குஅப்பிரபந்தத்திற்காகப் பதினறிலக்கம் பொன் பரிசளித்தவனுமாகிய சோழன். சாரமா முனிவரிட்ட சாபத்தால் உறையூர் மண்மாரியாலழிய அதில் அரசு செய்திருந்த பராந்தகசோழனு மனைவியும் அம்மண்மாரிக்குத் தப்பியோடிக் காவிரிநதியைக் கடந்து செல்லும்போது பராந்தகன் குதிரையினின்றுந் தவறிக் காவிரியில் வீழ்ந்திறக்க அவன் மனைவி அக்கரைப்பட்டு ஒருவனத்தையடைந்தாள். பராந்தகனிறக்கும்போது கருப்பத்திலிருந்த இக்கரிகாற்சோழன் சிலநாளிற் பிரமமாநதி முனிவராச்சிரமத்திற்பிறந்து அம்முனிவராற் சகல கலைகளுமோதியுணர்ந்துவருங்காலத்தில் அரசிழந்த சோழநாட்டிற்கோ ரரசனைத் தேடுமாறு விடப்பட்ட யானையானது சென்று அச்சிறுவனைத் தூக்க வெத்தனித்தும் போதுமான வலி

யின்மையாற் றிகைத்து நிற்க அப்போது அப்பிரமமாநதி முனிவர் அப்புத்திரன்காலில் ஒரு கரிக்கட்டியால் வரைசெய்துவிட அவ்வளவில் அப்புத்திரனை யானை தூக்கிச் சென்று முடிசூட்டுவித்தது. இக்காரணத்தாலேயே இவன் கரிகாற் சோழனெனப் பெயர்பெற்றான். எனவே இப்பெயருடையார் இருவரென்பதாயிற்று.
கரிக்கண்டு - கரிசலாங்கண்ணி.
கரிக்காந்தல் - தூட்கரி.
கரிக்குடர் - மடக்குடர், மலக்குடர்.
கரிக்குருவி - ஒருபுள், கஞ்சனம்.
கரிக்கை - கரிசலாங்கண்ணி, யானைத்துதிக்கை.
கரிக்கொடி - மூவகைக்கொடியினென்று.
கரிக்கொள்ளி - குறைக்கொள்ளி.
கரிக்கோடிடுதல் - சிறுவர்களுக்கு முகவாய்க்கட்டை முதலிய இடங்களில் மயிர் புறப்படுதல்.
கரிக்கோலம் - அழிஞ்சில்.
கரிசங்கு - தென்னோலைமூடு.
கரிசம் - பஞ்சம்.
கரிசலாங்கண்ணி - கையாந்தகரை.
கரிசலை - பொற்றலைக் கையாந்தகரை.
கரிசல் - கருமை, முதிர்ந்தவிலை.
கரிசற்காடு - அடர்ந்தகாடு, கருமண்ணிலம்.
கரிசனம் - அன்பு, இழுத்தல், உழுதல், பரிவு, பொற்றலைக் கையாந்தகரை, யானைக்கோடு.
கரிசனை - அன்பு, பரிவு.
கரிசன்னி - வெண்காக்கணம்.
கரிசாமகம் - யானைக்கன்று.
கரிசாலை - கையாந்தகரை.
கரிசி - இருநூறுபறைகொண்ட அளவு, குறைவு, குற்றம், தவறு.
கரிசை - காசை.
கரிச்சாங்கிழங்கு - ஒருபூண்டு.
கரிச்சால் - கரிசலாங்கண்ணி.
கரிச்சான் - கரிச்சால், கருங்குருவி.
கரிஷ்டம் - மிகவும் பளுவானது.
கரிணி - பெண்யானை, யானை.
கரிணிகம் - ஒரு காதணி.
கரிதம் - அச்சம்.
கரிதல் - கருகுதல், காந்தல், தீதல், பெருங்கோபம்.
கரிதன் - அச்சமுள்ளோன்.
கரிதாரகம் - சிங்கம்.
கரிதிப்பிலி - ஆனைத்திப்பிலி.
கரித்தல்-உறைத்தல்,எரிதல்,கார்த்தல்.
கரிநாள் - கருநாள்.
கரிபதம் - ஒருவகைப் புணர்ச்சி.
கரிபத்திரம் - தாளிசபத்திரி.
கரிபந்தம் - யானைகட்டுந்தறி.
கரிபிப்பிலி - யானைத்திப்பிலி.
கரிப்பான் - கரிசலாங்கண்ணி.
கரிப்பு - அச்சம், கரித்தல்.
கரிப்புறத்திணை - புறத்திணையினொன்று; அது சான்றோர் சொற்றவற்றைச் சாட்சியாகக் காட்டல்.
கரிப்பூசுதல் - வசைவைத்தல்.
கரிப்போதகம் - யானைக்குட்டி.
கரிமரநாய் - கறுப்பு முறுப்புக் கேடுமானது.
கரிமருந்து - வெடிமருந்து.
கரிமா-அட்டசித்தியினொன்று. அஃது இருப்புமலையினுங் கனத்தல்.
கரிமாசலம் - சிங்கம்.
கரிமுகன் - விநாயகன்.
கரிமுண்டம் - அறக்கறுவல், கோரரூபி, மிகக்கறுத்தவன்.
கரிமூடு - அவிந்த கொள்ளிக்கட்டை.
கரியது - கருநிறமுள்ளது.
கரியபிலை - கருவேப்பிலை.
கரியபோளம் - கறுப்புக் குங்கிலியம் நறும்பிசின், மூஷாம்பரம்.
கரியமணி - ஒரு கண்மணி, கரியபாசி.
கரியமால் - காய்ச்சற் பாஷாணம், விட்டுணு.
கரியலாங்கண்ணி - கரிசலாங்கண்ணி.
கரியல் - கருகல், வளராமரம்.
கரியல்வடலி - பனங்கருக்கு.
கரியவன் - இந்திரன், கடவுள், கண்ணன், கள்வன், கறுப்பன், கறுவல், சனி, சிவன், நமன், விட்டுணு.
கரியான் - கரியவன்.
கரில் - கார்ப்பு, குற்றம், கொடுமை.
கரில்லகம் - பாகல்.
கரிவங்கம் - காரயம்.
கரிவரி - வெள்ளைப்பாஷாணம்.
கரிவாகனன் - இந்திரன், ஐயன்.
கரிவு - தீவு.
கரீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.

கரீஷம் - உலர்ந்தசாணம்.
கரீந்திரேசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனு ளொன்று.
கரீரம் - அகத்தி, கருவேல், குடம், கும்பவிராசி, மிடா, மூங்கிற்போத்து, யானை, யானைப்பல்லடி.
கரீரி
கரீரிகை
கரீரை } யானைப்பல்லடி.
கரு - அட்டகருமக்கரு, ஆயுதத்தின்பல், ஓரூர், கம்மக்கரு, கருப்பம், கருப்பொருள், காரணம், நடு, கிறம், பிள்ளை, பெருமை, முட்டை, மேடு, மேன்மை, யோசனை.
கருகருத்தல் - அரிகண்டப்படுத்தல்.
கருகல் - கருகினது, கருகுதல், தீதல், பொருண்மறைவு, மாலைநேரம்.
கருகுதல் - கரிதல், கறுத்தல், தீதல், பொருண்மறைதல்.
கருகுமாலை - மசண்டை, மாலைநேரம்.
கருகூலம் - கருப்புக் கட்டி, புதையல், பொக்கசம்.
கருக்கட்டுதல் - மழைக்குணமா யிருத்தல், யோசனைபண்ணல், வார்ப்புவேலைக்குக் கருப்பிடித்தல்.
கருக்கரிவாள் - கூன்வாள்.
கருக்கரைதல் - கருப்பமழிதல்.
கருக்கல் - இருள், கருகினது, கருப்பாக்கல், காய்ந்தபயிர், சப்பட்டை, மப்பு, மனதை நோவச்செய்தல், மாலைநேரம்.
கருக்கழிய - கூர்மழுங்க.
கருக்காக்குதல் - கூராக்குதல்.
கருக்காய் - இளங்காய், பதர்.
கருக்கானவன் - கபடன்.
கருக்கிடல்
கருக்கிடுதல் } கூராக்குதல்.
கருக்கிடை - யோசனை.
கருக்கு - இரேகித்தசித்திரம், ஈர்வாட்பல், கருகல், கருக்கென்னேவல், கூர், பனைமட்டை, இலை முதலியவற்றின் கருக்கு.
கருக்குச்சுருட்டு - கபடம்.
கருக்குடி - சவுக்காரம்.
கருக்குதல் - கருகப்பண்ணுதல், திட்டல்.
கருக்குப்பீர்க்கு - ஒரு பீர்க்குக்கொடி.

கருக்குவாச்சி
கருக்குவாளி } ஒருமரம்.
கருக்குவேலை - சித்திரவேலை.
கருக்குழி - கருப்பாசயம்.
கருக்கூடு - கருப்பை.
கருக்கூட்டல்
கருக்கூட்டுதல் } கருத்து விசாரித்தல், சினைத்தல், நியாயந்தேடுதல், மழைக்குணங் கொள்ளுதல், யோசனை செய்யல்.
கருக்கொள்ளுதல் - கருப்பற்றுதல்.
கருங்கடல்வண்ணன் - ஐயன், விண்டு.
கருங்கண்ணி - ஒருமீன்.
கருங்கந்து - அகக்கந்தின் புறக்கந்து.
கருங்காப்பன் - கருங்கிரந்தி.
கருங்கரப்பன் - ஒருவகைக் கரப்பான்நோய். அது சர்வாங்கத்திலும் பரபரப்பானவூரல், கருகிறத்தோடு சாரையின்றோலை யொத்த சொறி, அதிற் சிவந்த சலங்கசிதல், கண்டத்தில் விஷக்கடி ரோகம்போல் வெடித்துச் சலம் வடிதல், விகாரரூபம், தாது நஷ்டம் என்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கருங்கலம் - சமைத்தற்குரிய மண்பாத்திரம்.
கருங்கல் - ஒருசாதிக்கல், சிகிமுகி.
கருங்கழல் - வீரக்கழல்.
கருங்கற்றலை - ஒருமீன்.
கருங்காக்கணம் - ஒரு காக்கணம்கொடி.
கருங்காய் - செங்காய்.
கருங்காலி - ஒருமரம்.
கருங்காவி - கருங்குவளை.
கருங்கிரந்தி - ஒருவகைக்கிரந்திநோய். அது சர்வாங்க மல்லது முழங்கால் முழங்கைகளிற் கறுத்தல், வெளிச்சுரம், மூலையுண்ணுமை அல்லது வலதுமூலையுண்ணுமை, நாவுவறளல், உடலிலாவது நோளிலாவதுசுடுகை, மலர விழித்து விழித்துப் பார்த்தல், மேன்மூச்சு, மாறுகுணம், அலறல், இருமல், குரல்கம்மல், வயிற்றில் வேதனை யென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கருங்கிளி - ஒருகிளி.
கருங்குங்கிலியம் - ஒருமருந்து.
கருங்குதிரையாளி - வயிரவன்.
கருங்குந்தம் - கண்ணோயுளொன்று.

கருங்குமுதம் - ஒருவகைநோய். அது கருவழியிற் கருங்குவளைப் பூவைப் போல் விரணத்தை யுண்டாக்கிப் பார்வையி லிருள் கம்மியதைப்போலச் செய்வது.
கருங்குரங்கு - கருகிறமந்தி.
கருங்குருவி - ஒருபறவை.
கருங்குவளை - நீலோற்பலம்.
கருங்குருவை - ஒருநெல்.
கருங்குன்றி - ஒருகுன்றி.
கருங்கேசம் - கருமயிர், வெண்கலம்.
கருங்கை - அரியவேலை.
கருங்கொடி - ஒருபூடு.
கருங்கொட்டி - ஒருகொட்டி.
கருங்கொண்டல் - தென்கீழ்க்காற்று.
கருங்கொல் - இரும்பு.
கருங்கொல்லர் - இரும்புவேலை செய்வோர்.
கருங்கொள் - ஒருகொள்.
கருங்கோழி - ஒருகோழி.
கருங்கோள் - இராகு.
கருசம் - தேயமைம்பத்தாறினொன்று.
கருச்சிதம் - முழக்கம், வீராவேசம்.
கருச்சித்தல் - கர்ச்சித்தல்.
கருஞ்சனம் - முருங்கை.
கருஞ்சாதி - கீழ்மக்கள்.
கருஞ்சாந்து - சேறு.
கருஞ்சாரை - ஒரு பாம்பு.
கருஞ்சார் - அரைப்பூட்டு.
கருஞ்சிலை - கருங்கல்.
கருஞ்சீரகம் - ஒருசரக்கு.
கருஞ்சுக்கான் - ஒருகல்.
கருஞ்சுக்கிரன் - ஒருவகைக்கண்ணோய். அது விழியைச்சுற்றி யுழுந்துபோல் துவாரங்களை யுண்டாக்குவது.
கருஞ்சுரை - ஒருசுரை.
கருஞ்சூரை - ஒரு முட்செடி, செங்கத்தாரி.
கருஞ்செம்பை - ஒருசெடி.
கருஞ்சேரா-ஒருவகைப்பூச்சி;அதுகடித்தால் தேகத்திற் கருமையான தடிப்புசனுண்டாகும்.
கருடகேதனன் - விட்டுணு.
கருடக்கல் - ஒருகல்.
கருடக்கொடி - கருடத்துவசம், குறிஞ்சா, பெருமருந்து.
கருடக்கொடியோன் - விட்டுணு.
கருடக்கொவ்வை - காக்கணம், கொவ்வை.
கருடசாரம் - உப்பு, சிந்துலவணம்.
கருடணம் - அரைத்தல், தேய்த்தல்.
கருடணை - சேர்த்திக்கை.
கருடதிசை - கிழக்கு.
கருடதியானம் - ஒரு மந்திரம்.
கருடத்துவசன் - விட்டுணு.
கருடத்தொண்டை - காக்கணஞ்செடி, கொவ்வை.
கருடநதி - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருவயிந்திர புரத்திலுள்ள ஒரு புண்ணியதீர்த்தம்.
கருடபச்சை - ஒரு மருந்துக்கல், மரகதம்; அது சிவனிந்திரியத்தைக் கருடன் கவ்விக் கடல்விட அதனாற் பிறந்தது.
கருடபஞ்சமி - ஆவணிமாதத்தில் சுக்கிலபட்சத்தில் வரும் பஞ்சமி. இது சுமங்கலிகட் குரிய விரததினங்களுளொன்று.
கருடபஞ்சாக்கரம் - ஒரு மந்திரம்.
கருடபாஷாணம் - ஒரு கல்.
கருடப்பார்வை - இராஜபார்வை, மாறுபார்வை, விடந்தீர்க்கும் பார்வையினொன்று.
கருடர் - பதினெண்கணத்தொருவர்.
கருடல் - விரும்பல்.
கருடவாகனன் - விட்டுணு.
கருடவித்தை - ஒருவித்தை.
கருடவிமாநம் - நூற்றெட்டுத்திருப்பதிகளுளொன்றாகிய திருவழுந்தூரிலுள்ள விமாநம்.
கருடற்கண்ணன் - புதன்.
கருடன் - செம்பருந்து, விட்டுணு வாகனம்.
கருடன்கிழங்கு - ஒரு மருந்துச்சரக்கு.
கருடன்தாய் - விநதை.
கருடாஞ்சனன் - கருடபச்சைக்கல், விஷந்தீர்க்கக் கண்ணிலிடுமருந்து.
கருடாரூடன் - விட்டுணு.
கருடி-சிலம்பம்,சூழ்தல்,படைவளைதல்.
கருடித்தல், கருஷித்தல் } இழுத்துக் கொள்ளுதல்.
கருடுதல் - விரும்புதல்.
கருடேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கருணமல்லி - முல்லை.
கருணம் - எலுமிச்சமரம்.

கருணன் - கன்னன்.
கருணை - ஒருவாச்சியம்.
கருணைகடாட்சம் - கிருபைப் பார்வை, தயவு.
கருணைகரப்பெருமாள் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய கரகத் திற் கோயில்கொண்ட விட்டுணு.
கருணைகரம் - கருணைக்கிருப்பிடம்.
கருணைகரன் - கிருபாமூர்த்தி.
கருணைக்கிரகன் - கிருபையில்லான்.
கருணைநிதி - கடவுள், காருண்ணியன்.
கருணைபரன் - தயையுள்ளவன்.
கருணைப்பள்ளி - திருவாங்கூரில் ஒரு நகரம்.
கருணைமூர்த்தி - கடவுள், கிருபாரூபி.
கருணையலயம் - கருணைகரம்.
கருணையலயன் - கடவுள்.
கருணி-குகை, பிடியன்யானை, வெற்பு.
கருணிகாரகவனம் - ஒருவனம். இது மேருவுக்குச் சமீபத்திலுள்ளது.
கருணிகை - ஆனகன்பாரி, ஓரப்சரசு, பூவினிற்கொட்டை.
கருணிதன் - கிருபையுடையோன்.
கருணீகன் - கணக்கன்.
கருணேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கருணை - ஒருசெடி, கிருபை; இஃது சுபாவகுணமொன்பதினொன்று,பட்சம், பெருங்கிழங்கு, பொரிக்கறி.
கருணைநாயகி - திருமாற்பேற்றிற் கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
கருணோதயன் - கடவுள்.
கருதலர் - பகைவர்.
கருதலனுமானம் - ஓரளவை; அது உரையால் அறிவினளவையறிதல்.
கருதல் - எண்ணல், சிந்தித்தல், நிதானித்தல்,நினைத்தல், மதித்தல்,விரும்பல்.
கருதார் - கருதலர்.
கருதுதல் - எண்ணுதல், சிந்தித்தல், நிதானித்தல், நினைத்தல், மதித்தல், விரும்பல்.
கருத்தங்கல் - கருப்பந்தரித்தல்.
கருத்தபம் - கழுதை.
கருத்தமம் - சேறு, பாவம், மாமிசம்.
கருத்தமன் - வருணன் றந்தை.
கருத்தவ்வியம் - செய்யத்தக்கது, தத்துவம்,
கருத்தனுகுபெயர் - கருத்தாவாகுபெயர்.
[நடப்பிப்போன்.
கருத்தன் - அரன், அருகன், கடவுள்,
கருத்தா - அருகன், கடவுள், சிவன், செய்பவன்.
கருத்தாக்காரகம் - வினைமுதற் பொருளைக்காட்டு முருபுடைப்பெயர்.
கருத்தாவாகுபெயர் - கருத்தாவின் பெயரைக்காரியத்திற்குவழங்கல் (உ-ம்) திருவள்ளுவர்.
கருத்தாளி - ஒருமரம், குறிப்பறிவான், விவேகி.
கருத்திருகாரகம் - எழுவாய்.
கருத்து-அபிப்பிராயம்,ஆழமானபயன், எண்ணம், கவனம், குறிப்பு, சித்தம், சிந்தனை, சொற்பொருள், தாற்பரியம், நினைப்பு, பலன், விருப்பு, விவேகம்.
கருத்துக்கொள்ளல் - மனம்வைத்தல்.
கருத்துடையடை கோளியணி - ஓரலங்காரம். அஃது அபிப்பிராயத்துக்குரிய விசேடணத்தைச் சொல்லுதல்.
கருத்துடையடையணி - அபிப்பிராயத்தோடுகூடிய விசேடணத்தைச் சொல்லுதல்.
கருத்துப்பொருள் - மனக்காட்சிப் பொருள்.
கருத்துரை - பாட்டின் கருத்துரைக்குமுரை.
கருத்தொட்டுதல் - யோசித்தல்.
கருநடம் - கன்னடதேயம், கன்னடபாடை.
கருநந்து - நத்தை.
கருநாகம் - இராகு, ஒருமரம், கரும்பாம்
கருநாசம் - சித்திரமூலம். [பு.
கருநாடகம் - ஒருதேசம், கன்னடதேசத்தாரின் விசேடம், நாகரிகம்.
கருநாடகவித்தை - நாகரிககல்வி.
கருநாபிக்கிழங்கு - ஒருகிழங்கு.
கருநாரை - ஒருகொக்கு.
கருநாவி - கருப்புநாவி.
கருநாள் - ஆகாதநாள்.
கருநிமிளை - நீலாஞ்சனம்.
கருநிலம் - நீரின்மலையின்வனத்திற் பயன்படா மிகுநிலம்.
கருநூல் - ஒரு மாந்திரிகநூல்.
கருநெய்தல் - கருங்குவளை,

கருநெய்தனிறமணி - சாதுரங்கப்பதும ராகம்.
கருநெல்லி - ஒருநெல்லி.
கருநெறி - தீ.
கருநொச்சி-ஒருநொச்சி, சுரோணிதநீர்.
கருந்தகரை - ஒருதகரை.
கருந்தடங்கண்ணி - நூற்றெட்டுத்திருப் பதிகளுளொன்ருகிய தொல்லை வில்லிமங்கலத்திற்கோயில்கொண்ட இலக்குமி.
கருந்தனம் - செல்வம், பொன்.
கருந்தாது - இரும்பு.
கருந்தாரை - காரொளி.
கருந்திடர் - மேடு.
கருந்தினை - ஒருதினை.
கருந்துகிலோன் - பலபத்திரன்.
கருந்துவரை - ஒருதுவரை.
கருந்துளசி - ஒருதுளசி.
கருந்தோளி - அவுரி.
கருப்பகாசம் - ஒருவகைக் காசநோய். அது கருவிழியிற்சுத்த கருநிறத்தைக் காண்பிப்பது.
கருப்பகோசம் - கருப்பப்பை.
கருப்பகோளகை - கருப்பாசயப்பை.
கருப்பக்கிரகணம் - கருப்பந்தரித்தல்.
கருப்பக்கிரகணி - ஒருவகைக் கிரகணி ரோகம்; அது பேதி, கடுப்பு, கைகால் வற்றுதலோ டோய்தல், கண்ணில் பஞ்சணிறம், பலவிதக்கழிச்சல், அதி கதாகம், சாப்பிட்டால் வாந்தியாத லென்னு மிக்குணங்களை யுண்டாக்கு வது.
கருப்பக்கிரகம் - மூலஸ்தானம்.
கருப்பங்கொள்ளுதல் - கருப்பந் தரித் தல்.
கருப்பசர்ப்பவிஷம் - கருப்பமுற்றபாம் புகள்கடிப்பதனாலுண்டாகும் விஷம். அது சிரசு, உதடு, வயிறு, தொடை யாகிய இடங்களினோதல், நாக்கறுத் தல், உண்ணாக்கு, வளருதலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கருப்பசன்னி - பெண்களுக்கு பிரசவ காலங்களி லுண்டாகும் ஒருவகைச் சன்னிநோய்.
கருப்பசிலேட்டுமம் - கருப்பத்திற் கி டையூறு யுண்டாகு மோர் வகை நோய்.
கருப்பசூலை - ஒருவகைச் சூலைநோய். அது இடுமருந்து,வஞ்சனை,சூனியம், பெருங்காயச்சூடு, பிரசவித்தகாலத் திற்றங்கிய அழுக்காகிய இவைகளி னாற் பிறந்து கீழ்வயிற்றி லிரத்தமு றைந்து கருப்பத்தைப்போல் திரண்டு புரண்டுகொண்டு அடிவயிற்றிலதி கச்சூலையை யுண்டாக்குவது.
கருப்பஞ்சாறு - கரும்பிரசம்.
கருப்பஞ்சாற்றுக்கடல் - சத்தசமுத்தி ரத்தொன்று.
கருப்படம் - கந்தைப்புடவை.
கருப்பட்டி - கற்கண்டு, பனங்கட்டி.
கருப்பதாரணம் - கருப்பந்தரித்தல்.
கருப்பநாடி - கொப்பூழ்க்கொடி.
கருப்பநாள் - பிறந்தநாளுக்கு ஒன்பதா நாள்.
கருப்பநீர்-கருப்பஞ்சாறு, பதநீர், பனை முதலியவற்றினீர்.
கருப்பபாதகம் - செம்முருங்கை.
கருப்பபாதனம் - கருப்பம்விழுதல்.
கருப்பப்பரிகம் - கருப்பந்தரித்தல்.
கருப்பப்பை - கருப்பகோளகை.
கருப்பமழிதல் - கருக்கரைதல்.
கருப்பம் - அரண்மனை, உபநிடத மூப் பத்திரண்டினொன்று, உள், சினை.
கருப்பம்பாகு - சருக்கரை.
கருப்பரம் - அத்தி, இருப்புப்பாண்டம், தலையோடு.
கருப்பவதி - கருப்பந்தரித்தவள்.
கருப்பவாதை - கருப்பவேதனை.
கருப்பவாயு - ஒருவாயு, பிரசூதவாயு.
கருப்பவேதை - கருப்பவேதனை.
கருப்பற்று - கருப்பந்தரிப்பு.
கருப்பாகாரம் - கெற்பக்கிரகம்.
கருப்பாசயப்பை - கருப்பப்பை.
கருப்பாசயம் - கருவிருக்குமிடம்.
கருப்பாதானம் - ஒருசடங்கு.
கருப்பிடித்தல் - யோசனை மட்டுக்கட் டுதல்.
கருப்பிணி - கருப்பஸ்த்ரீ.
கருப்பிணியவேட்சணம்-பிரசூதி வைத் தியம்.
கருப்பு - அரிது, குறைவிலை.
கருப்புக்கட்டி - கற்கண்டு, பனங்கட்டி, வெல்லக்கட்டி.
கருப்புப்பு - கிருஷ்ணலவணம்.

கருப்புரம்-ஒருநெல்,நீர்,பாவம்,பொன்.
கருப்புவில் - மதன்வில்.
கருப்புவில்லி - காமன்.
கருப்பூரசலாசத்து - ஒருமருந்து.
கருப்பூரசுந்தரன் - மதுரையிலமர்ந்த சோமசுந்தரக்கடவுள்.
கருப்பூரதீபம் - கருப்பூரவிளக்கு.
கருப்பூரத்தயிலம் - ஒருமருந்து.
கருப்பூரத்துளசி - ஒருதுளசி.
கருப்பூரநீர் - ஒருமருந்து.
கருப்பூரப்புல் - ஒரு வாசனைப்புல்.
கருப்பூரமரம் - ஒருமரம்.
கருப்பூரம் - சூடன், பஞ்சவாசத்தொன்று, பொன், பொன்னரிதாரம்.
கருப்பூரவல்லி } ஒருசெடி.
கருப்பூரவள்ளி } ஒருசெடி.
கருப்பூரவில்வம் - ஒருவில்வம்.
கருப்பூரவெற்றிலை - ஒருவெற்றிலை.
கருப்பூர் - ஓரூர்.
கருப்பூர்வழக்கு - அழிவழக்கு.
கருப்பெட்டி - கருப்பை.
கருப்பை - எலி, உட்கொண்டது, கருப்பாசயப்பை, கரும்பனங்காய்ப்பனை, காரொலி.
கருப்பொருள் - அவ்வந்நிலத்தி லுற்பத்திப்பொருள்; அஃது - உணா - ஊர்-குடி - தலைவர் - தெய்வம் - தொழில்-நீர் - பண்மறை - புள் - மரம் - மலர்-யாழ் - விலங்கு என்பன.
கருமகரன் - நமன், வேலைக்காரன்.
கருமகர்த்தா-கருமஞ்செய்பவன், காரியகர்த்தர்.
கருமகள் - காக்கை.
கருமகாண்டம் - கன்மநிவிர்த்தி முதலியவற்றைச் சொல்லும் நூல்.
கருமகாண்டிகர் - மூவகைப் பக்குவரிலொருவர்.
கருமகாரன் - கம்மாளன், வேலையாள்.
கருமநிலகன் - வண்ணான்.
கருமக்கத்தா - கிரியை நடத்துவோன், செய்வோன்.
கருமக்கழிபலம் - பாவத்தைக்கழிக்கும் புண்ணியம்.
கருமக்காரகம் - வினையைப் பொருளில் புலப்படுத்து முருபுடைப்பெயர்.
கருமக்கியானம் - கரும அறிவு.
கருமங்கட்டுப்படல் - பாவஞ் செய்தல், வினை தீராது நிற்றல்.

கருமசண்டாளன் - துரோகி.
கருமசம் - அரசமரம், கலியுகம், களங்கம், சத்து, தீவினை.
கருமசாங்கரியம் - ஐக்கம்.
கருமசுத்தி - கிரியையிற்குற்றத்தீர்ப்பு, பாவப்பிராயச்சித்தம்.
கருமஞ்சரி - நாயுருவி.
கருமணி - கண்மணி, நீலமணி.
கருமத்தலைவர் - வருங்காரியஞ் சொல்வோர்.
கருமத்தலைவன் - அரசர்க்குத் துணைவன், கருமாதிகாரி.
கருமத்துரோகம் - வினைப்பவம்.
கருமநிட்டன் - பிராமணன்.
கருமநிவிர்த்தி - பாவத்தீர்ப்பு.
கருமபந்தம் - செய்வினைத்தொடர்.
கருமபந்தனம் - பழவினைத் தொடர்பு.
கருமபாகை - வேதநூற்பொருளி னொன்று.
கருமபாவம் - கிரியாபாவம்.
கருமபூமி - இருவினை யியற்றற்குரிய வுலகம், சுடுகாடு.
கருமபூமிக்குரிமை-உழவு, சிற்பம், தொழில், வரைவு, வாணிபம், வித்தை என ஆறுவிதம்.
கருமப்பழி - துரோகம்.
கருமப்பிறப்பு - பாவச்சென்மம்.
கருமமுடித்தல் - செய்தொழில் முடித்தல், நியமநிட்டை முடித்தல்.
கருமமூலம் - தருப்பை.
கருமம் - இயற்கைச்சொல் உட்டணம், கடமை, காரியம், கிரியை, செயப்படுபொருள், செய்கை, முன்வினை, வெப்பம், வேனிற்காலம்.
கருமயிர் - காடி.
கருமயுகம் - கலியுகம்.
கருமர் - கருமார்.
கருமலை - இரும்புச்சுரங்கமலை.
கருமவிபாகம் - ஊழ்வினைப்பயன்.
கருமவியாதி - மருந்திலாறாத நோய்.
கருமவிருத்தி - சுத்தநடக்கை.
கருமவுவமம் - செயலுவமம்.
கருமவேதனை - மிக்கவருத்தம்.
கருமா - பன்றி, யானை.
கருமாதி-அந்தியேட்டிமுதலியசடங்கு.
கருமாதிகாரம் - கருமங்கள் செய்துமுடிக்குமதிகாரம், கிரியைக்கதிகாரம்.

கருமாதிகாரன் - அரசர்க்குத் துணைவரி லொருவன், காரியத்தலைவன், நிமித் தகாரன்.
கருமாதிக்காரர் - கருமத்தி லாதிக்கம் பெற்றோர், காரியத்தலைவர்.
கருமாதிசெய்தல் - ஈமக்கடன் முதலிய செய்தல்.
கருமாத்துமா - கன்மஞ்செய்தவன்.
கருமாநுட்டானம் - நியமநிட்டை.
கருமாந்தம் - கருமாந்தரம், கார்காலம்.
கருமாந்தரம் - கருமாதி, பாவம்.
கருமாந்தியம் - அந்தியேட்டி.
கருமாந்திரம் - கருமாதி, பாவம்.
கருமாயம் - அதிகவிலை, அருமையான [து.
கருமாரன் - கொல்லன்.
கருமாரி - ஒருமரம், பிரசூதவேதனை.
கருமார் - கொல்லர்.
கருமானம் - கரியவானம், கருவித்தை.
கருமானுபவம் - செய்வினைப்போகம்.
கருமான்-கலைமான், கொல்லன், பன்றி.
கருமி - தீவினையுடையோன், நித்திய கருமம் வழுவாது செய்வோன், பாவி, பூசைசெய்பவன்.
கருமிசம் - வினை.
கருமுகில் - நீருண்டமேகம், வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினொன்று.
கருமுகில்வண்ணம் - நீமுறுகற் பாஷாணம்.
கருமுகிற்சிலை - காந்தக்கல்.
கருமுகிற்பாஷாணம் - கார்முகிற் பாஷாணம்.
கருமுகை-இருவாட்சி, சிறுசெண்பகம்.
கருமுடித்தல் - அட்டகருமக் கருவுண் டாக்கல், வேதைக்கருமுடித்தல்.
கருமுதல் - ஒருமீன்.
கருமுரடன் - கீழ்ப்படியாதவன்.
கருமுரல் - ஒருமீன்.
கருமேகம் - காளமேகம்.
கருமேந்திரியம் - கன்மேந்திரியம்.
கருமை - கறுப்பு, நஞ்சு, பெருமை, வலி, வெள்ளாடு, கொடுமை.
கரும்படுசொன்னயகி-திருப்புறம்பயத் திற் கோயில்கொண்டிருக்குந் தேவி.
கரும்பனசை - கருவழலைப்பாம்பு.
கரும்பனூர் - ஒரூர்.
கரும்பனூர்கிழான் - ஒரு வேளாளப்பிர பு; இவன்வேங்கடநாட்டில் விளங்கிய கரும்பனூரான் மகனும் புறத்திணை நன்னகாராற் பாடப்பட்டவனு மாவ [ன்.
கரும்பனையன் - ஒருபாம்பு.
கரும்பன் - ஓரீகையாளன். இவன் தன் தோட்டத்திலிருந்த கரும்பையெல் லா மெவரு நாணுதுவந்து தின்னுக வென்று யாவரையு மழைத்தபோது சிலர் மறுக்க அவர்க்குக் கூலிகொடுத் தழைத் தருத்தின தொண்டைநாட் டு வேளாளன். கரும்பு தின்னக் கைக்கூலியென்ற பழமொழி இவ னால் வந்தது.
கரும்பாம்பு - இராகு, கருவழலை.
கரும்பாலை - ஒருமரம், கரும்பாட்டுஞ் செக்கு.
கரும்பித்தம் - ஒருநோய், ஒருபித்தம்.
கரும்பிள்ளை - காக்கை.
கரும்பிறை - கருஞ்சுக்கான்.
கரும்பு - கன்னல், புநர்பூசம்.
கரும்புக்கட்டி - கருப்பங்கட்டி.
கரும்புசம் - வண்டு.
கரும்புமுத்து - கரும்பிற் பிறந்த மஞ்ச ணிறமுத்து.
கரும்புலி - ஒருபுலி.
கரும்புல் - பனைமரம்.
கரும்புவில்லி - மன்மதன்.
கரும்புளித்தல் - கெட்டுப்போதல், செம் பிற் களிம்பூறுதல்.
கரும்புள் - கரிக்குருவி, காகம், பெண் வண்டு, வண்டு.
கரும்புள்ளிக்கல் - கானகக்கல்.
கரும்புள்ளிதீட்டல் - ஒரு கோலந் தீட் [டல்.
கரும்புறம் - பனை.
கரும்புறவு } ஒருபுறவு.
கரும்புறா } ஒருபுறவு.
கரும்பூ - நீலோற்பலம்.
கரும்பூமத்தை - கரியவூமத்தை.
கரும்பேன் - புடவையிற்பற்றுங் கரும் புள்ளி.
கரும்பொன் - இரும்பு.
கருவகம் - கருத்தரிக்குந்தானம்.
கருவங்கம் - காரீயம்.
கருவடம் - தலைமையானவூர், மலையும் ஆறுஞ் சூழ்ந்தவூர்.
கருவண்டு - கறுத்தவண்டு.
கருவண்ணம் - கறுப்புநிறம்.
கருவதை - சிசுவதை.

கருவம் - அகங்காரம், ஒரெண், சினை.
கருவரி - இருள், கருவிழியின் ரேகை.
கருவரை - வலியமலை.
கருவல் - கருப்பானது.
கருவழலை - ஒருபாம்பு.
கருவழலைச்சர்ப்பவிஷம் - ஒருவகைவிஷம்; அது சரீரத்திற் காங்கையோடு அதிக வியர்வையும், உள்ளங்கால் உள்ளங்கைகளிற் சிவப்பும், கோழையால் மார்பிலடைப்பும் பிறக்கும்படி செய்வது. அதனாலனந்தம்வேதனையுண்டாகும்.
கருவழித்தல் - சிசுவதை.
கருவளைச்சுக்கான் - கருஞ்சுக்கான்கல்.
கருவறிதல் - கருத்தறிதல்.
கருவறுத்தல் - நாளுக்குநாட் கவர்தல்.
கருவா - இலவங்கமரம்.
கருவாடு - காய்ந்தமீன்.
கருவாட்டுவாலி - எருத்துவாலன் குருவி, வலியான்.
கருவாய்ப்பட்டை - இலவங்கப்பட்டை.
கருவாமுப்பு - ஒருப்பு.
கருவாலி - ஒருமரம், ஒருகுருவி.
கருவாழை - ஒருவாழை.
கருவாளி - கருத்துடையோன்.
கருவானம் - கருயானம்.
கருவி - ஆயுதப்பொது, உபகாரணம், கவசம், காரணம், குதிரைக்கல்லணை, கூட்டம், தொடர்பு, நட்பு, மெய் வாய் முதலிய கருவி, மேகம், யாழ், வாச்சியம், வீணை.
கருவிகரணம் - பொறியும் அந்தக்கரணமும்.
கருவிகழலுதல் - பெலன்கெடல்.
கருவிகாண்டம் - வாசிக்கப்பழகும் புத்தகம்.
கருவிக்காரகம்-கருவிப்பொருளைக் காட்டு முருபுடைப்பெயர்.
கருவிக்குயிலுவர் - தோற்கருவி வாசிப்போர்.
கருவிநூல் - கருவிகாண்டம்.
கருவிப்புட்டில் - படையுறை.
கருவிப்பை - ஆயுதவுறை.
கருவிமாக்கள் - யாழ்ப்பாணர்.
கருவியாகுபெயர் - கருவியாகிய பெயர் (உ-ம்) ஞாழி.
கருவிரலூகம் - கரிய விரலையுடைய குரங்குபோ விருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் யந்திரம்.
கருவிலி - ஒருபாம்பு.
கருவிழி - கண்மணி.
கருவிளங்கனி - மூன்றுநிரை யசையாய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளங்காய் - நிரை நிரை நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளநறுநிழல் - நாலுநிரையசையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளநறும்பூ - நிரை நிரை நிரை நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளந்தண்ணிழல் - நிரைநிரை நேர் நிரையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளந்தண்பூ - நிரை நிரை நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளம் - இரண்டு நிரையசையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு, ஒருமரம், காக்கணஞ்செடி.
கருவிளா - ஒருமரம்.
கருவிளை - காக்கணஞ்செடி.
கருவுயிர்த்தல் - ஈனல்.
கருவுளமைப்பு - சென்மத்தி னியமம்.
கருவூமத்தை - ஒருமத்தை.
கருவூர் - கோயம்புத்தூர் ஜில்லாவில் ஒரூர், வஞ்சி; இந்நகர் சேரருக்குரிய இராஜதானி, சேரரை வென்று சோழருமிங் கரசியற்றினர்.
கருவூலம் - பொக்கசம்.
கருவெடுத்தல் - உடம்பெடுத்தல்.
கருவேப்பிலை - கருவேம்பினிலை.
கருவேம்பு - ஒருமரம்.
கருவேல் - ஒருமரம்.
கருவை - ஒரூர், வாருவைக்கோல்.
கருவெள்வால் - ஒருமீன்.
கருளை - கரளை.
கருள் - இருள், கறுப்பு, நல்லாடை.
கருனீகசன்னி - ஒருசன்னி.
கருனை - பொரிக்கறி.
கருசன் - வைவசுதை மனுவினுடைய புத்திரரு ளொருவன், இட்சுவாகு தம்பி, காருசர் இவன் வமிசத்தவர் இவன் தேசம் கருசம்.
கரேசுரம் - குத்துச்சண்டை, முழங்கை மடிப்பு.

கரேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கரேடம் - நகம்.
கரேணு - பெண்யானை, யானை.
கரை - அருகு, எல்லை, கரையென்னேவல், கானல், முடிவு, வார்த்தை.
கரைகடத்தல் - எல்லைக்குமேற்படல்.
கரைகண்டவன் - மிகத்தேர்ந்தவன்.
கரைகலம் - ஆபரணச்செப்பு.
கரைகன்று - அழிகன்று.
கரைகாணல் - எல்லைகாணுதல்.
கரைகாணப்பேரொளி - கடவுள்.
கரைக்கல்லோலம் - கடற்பாசி.
கரைக்காற்று - கடலோரத்தி லடிக்கும் காற்று.
கரைசிலை - இந்துப்பு.
கரைச்சல் - உருக்கம்.
கரைஞ்சான் - அகில்.
கரைதல் - அழுதல், அழைத்தல், அறப்பழக்குதல், ஆரவாரம், இரங்கல், இளைத்தல், உருவழிதல், ஒலித்தல், சொல்லுதல், பதனழிதல், பேரொலி, வருந்துதல்.
கரைதுறை - துறைமுகப், முடிவு.
கரைத்தல் - உருக்குதல், எழுத்திலாவோசை, கரைக்குரல், சொல்லாலெழுமொலி.
கரைபிடித்தல் - கரையடைதல்.
கரைபுரட்டுதல் } கரைமூடிப்பாய்
கரைபுரளுதல் } தல்.
கரைப்படுதல் - கரையேறுதல்.
கரைப்படுத்தல் - கரைக்குக் கிட்டவைத்தல்.
கரைப்பாதை - கரையோரமானவழி.
கரைப்போக்கு - இழிவானது, கரையோரம், கரைவழி, போலிமணி.
கரைப்போர் - கரையிலிருந்து பண்ணுஞ்சண்டை.
கரையடுத்தது - கரையைக்கிட்டினது.
கரையல் - கரைந்தது, கரைந்து போவது, கணிதல்.
கரையார் - ஒருசாதி, வலைஞர்.
கரையேறல் - கரையையடைதல், நற்கதியடைதல்,வருத்தத்தினின்று நீங்கல், வாழ்வடைதல்.
கரையேறவிட்டநல்லூர் - ஒரு சிவத்தலம். இது திருப்பாதிரிப்புலியூருக்குச் சமீபத்திலே கெடிலநதி தீரத்திலுள்ளது. செடிலம்பெருகி மாணிக்கவாசகரை வழிதடுக்கச் சிவன் சித்தராய் வந்து அவர்க்கு வழிவிடுத்த தலமு மிதுவாகும்.
கரையோட்டு-கரைபிடித்தோடல்.
கரைவலை - கரைக்குக்கொண்டுவரும் வலை.
கரைவலைக்காரர் - கரையாரிலோர் பகுதி.
கரைவழி - கரைப்பாதை.
கரைவாடை - வடமேல்காற்று.
கரைவீதம் - கரைக்கேற்றபங்கு.
கரைவு - கரைதல்.
கரோடகம் - துணிப்பெட்டி.
கரோடம் - தலையோடு.
கரோடி - தலையோட்டுப்பொருத்து, முடிமாலை.
கரோடிகை-கழுதை, சூட்டுமாலை, முடிமாலை.
கரோருகம் - நகம்.
கரோரேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கர்கடேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கர்க்கடகசிரிங்கி - கடுக்காய்ப்பூ.
கர்க்கடகம் - ஓரிராசி, நண்டு.
கர்க்கடேசர் - திருந்துதேவன் குடியிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
கர்க்கன் - யாதவர்கள் புரோகிதன்; வசுதேவன் இவனை நந்தன்மனைக்கனுப்பிப் பலராமகிருஷ்ணர்களுக்கு நாமகரணாதி சமஸ்காரஞ் செய்வித்தான், ஹஸ்தமன்னியன் என்னும் புமன்னியன் புத்திரன், சினிதந்தை.
கர்ச்சுரோகம் - சாரஊறல், சொறிசிரங்கு, கமட்டுச்சிரங்கு, தினவு.
கர்ச்சிதம் - இடிமுழக்கம், யானைப்பிளிறொலி.
கர்ச்சித்தல் - முழங்கல்.
கர்ச்சூரம் - கழற்கொடி, பேரீந்து.
கர்ணகண்டு - ஒருவகைநோய்; அது காதுக்குள் அதிக கபத்தினால் நமைச்சலை யுண்டாக்குவது.
கர்ணகிருமி - ஒருவகைநோய். அது காதுகளில் திரிதோஷச் செய்கையாற் பிறப்பது. அதனாற் கிருமிகள் சனித்து அவ்விடத்திற் சீழ், இரத்தம், மாமிச மிவைகளைப் புசித்துக்கொண்டு

அதிக வூரலையும் மிக்க நோவையு முண்டாக்குவது.

கர்ணகூசிகை - ஒருவகைநோய். அது காதுக்குள் வாயு தங்குங் காலத்திற் பிறப்பது. அதனால் செவியின துட்க ருவியாகியகுறும்பி முடங்கிக்கொண் டு மிக்க வுபத்திரவமுண்டாம்.

கர்ணசோபை - ஒருவகைநோய். அது காது ளதிகவீக்கத்தைமாத்திர முண் டாக்குவது.

கர்ணதந்திரிகை-ஒருவகைநோய். அது காதுக்குட் பிசினைப்போல் நெகிழ்ச் சியாகவு மிழுத்தாலறுமல் தந்தியைப் போல் நீளுவதாகவு மிருக்கின்ற சீ ழை யுண்டாக்குவது.

கர்ணநாதம் - ஒருவகைநோய். அது கா துகளி லோசையைத் தெரிவிக்கின் ற நரம்புகளில் வாயு சேருங்காலத் திற் பிறப்பது. அதனாற் காரணமில் லாமலே காதுக்குள் நானாவிதச் சத் தங்களுண்டாகும்.

கர்ணபரிபோடகம் - ஒருவகை நோய். அது வாயுவினாற் காதுக்கு ளற்பவீக் கத்தையுடைய சொப்பளங்களைப் பி றப்பிப்பது. அது அதிகநாள் அப்ப டியேயிருக்கும். அப்பால் விருத்திய டைய ஆரம்பித்தாற் சீக்கிரத்தில் வி ருத்தியடையும். அதனால் அம்மார்க் கத்தில் மிகு சிவப்பும் நோவுமுண் டாகும்.

கர்ணபாலசோஷம் - ஒருவகை நோய். அது காதுக்குள் ளிருக்கும் நரம்புக ளில் வாயுவுதங்கிச் சஞ்சரிக்கும்போ து பிறப்பது. அதனால் நெற்றியுலர்ந் து மிகவும் சுட்கத்தை யடையும்.

கர்ணபிதாரிகை-ஒருவகைநோய்; அது திரிதோஷத்தினாற் காதுக்குள் சிறி ய நிலப்பூசுணிக் கிழங்கைப்போல் மா மிசத்தை யுண்டாக்குவது. அதனால் அவ்விடத்தில் திமிர், வீக்கம், கடு குத் தயிலம்போற் சலவொழுக்கு, குத்து, குறும்பி மடங்குகையாகிய குணங்களுண்டாகும்.

கர்ணபிப்பலி - ஒருவகைநோய். அது மாமிசத்தைப்பற்றிப் பிறப்பது. அப் போது காதுக்குள் கெட்ட மாமிச மானது திரளையாக ஒன்றாயேனும் பலவாயேனு முண்டாய்க்கொண்டே யிருப்பது.

கர்ணபூதி - ஒருவகைநோய். அது பித் தத்தினாற் கபங் கெடுதியை யடை யுங்காலத்திற் பிறப்பது. அதனாற் கா துக்குள்ளிருக்குங் குறும்பியின் சரு மத்தில் நோவு, ஒருவேளை யின்மை, மிகுந்த துர்க்கந்தம், வியர்வை போல் ஓயாது சலம் வடிதலாகிய இக்குணங்களுண்டாகும்.

கர்ணம் - கணக்கன்.

கர்ணலிகியம் - ஒருவகைநோய். அது சிலேட்டுமத்துடன் கூடிய இரத்தத் தினாற் காதுக்குள் கிருமிகள் பிறப் பது. அக்கிருமிகள் சிறுசிறு கொப் பளங்களை யுண்டாக்கும். அதனால் காதுகளில் மிகு தினவு, வியர்வை, வேதனை, அம்மார்க்கத்தி லெங்நோ மு மொரு கருவியைக்கொண்டு கு டைதற்கே கினைப்பென்னு மிக்கு ணங்களுண்டாகும்.

கர்ணவித்திரதி-ஒருவகைக் காதுநோய்; அது காதுக்குளுண்டாகின்ற நமைச் சலாற் சில கருவியைக்கொண்டு குடைவதனாற் புண்ணாகுங் காலத் திற் பிறப்பது. அதனால் வித்திரதிக் கட்டிக்குள்ள குணங்களனைத்து முண்டாகும்.

கர்ணன் - கன்னன்.

கர்ணா - ஒருவாச்சியம்.

கர்ணாசோற்புதம் - ஒருவகைக் காது நோய். அது காதுகளின் மூலத்தில் மூலரோகஉபத்திரவத்தைப்போ பத்திர வத்தையுந் துர்க்கந்தத்தை யுஞ் செவிட்டையு முண்டாக்குவது.

கர்ணாற்புதம் - ஒருவகைக் காதுநோய். அது காதுகளிற் கருணாசோற்புத ரோக குணங்களுடன் செவிப்பிர தேசமெல்லாம் ஏக வீக்கத்தை யுண் டாக்குவது.

கர்ணிகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.

கர்ணிகை - தாமரைக்கொட்டை.

கர்ணோற்பாதம் - ஒருவகைநோய். அது இரத்தபித்த ரோகத்தினாலும், மிக வுங் கனத்த காதுகளினாலுங் காதுக ளில் வேர்க்குருபோற் சிறிய கொப்

பளத்தை யுண்டாக்குவது. அது பழுத்து உடையில் வீக்கமும் பெரிய பெரிய கொப்பளங்களெழும்புதலும், வியர்வையும், இரத்தமும், சூடும் பிறப்பதோடு அதிகநோவும் எரிச்சலுமுண்டாகும்.
கர்ணேன்மந்தம்-ஒருவகைக்காதுநோய் அது வாத சிலேட்டுமங்களினுற் பிறப்பது. அதனுற் செவிமார்க்கத்தில் நிலைபெற்ற வீக்கம், நோவின்மை, அதிக நமைச்சல், சீக்கிரத்தில் வசப்படாமையென்னு மிக்குணங்களுண்டாகும்.
கர்த்தகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கர்த்தத்துவம் - அதிகாரம், இறைமை, தன்மை, சகலத்தையும் நடத்துகிற தத்துவம்.
கர்த்தநம் - வயிற்றிரைச்சல்.
கர்த்தபம் - கழுதை.
கர்த்தபி - ஒருவகைநோய். அது சரீரத்தில் மண்டலாகாரமாய் வெண்காக்கட்டான் காயினது உருவத்தோடு சிவந்தகொப்பளங்களை விஸ்தாரமாய் உண்டாக்குவது.
கர்த்தமப்பிரஜாபதி-பிரமசாயையிலுற்பத்தியானவன். இவன் பாரிதேவஹூதி, புத்திரன் கபிலன்.
கர்த்தமம் - மாமிசம்.
கர்த்தமேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கர்த்தவர்த்தமம் - ஒருவகைநோய். அது இமைச்சந்துகளி லுண்டாகுங் கட்டிகளுடையும்போது பிறப்பது. அதனுல் அவ்விடம் சேற்றைப் பூசினதுபோலிருக்கும்.
கர்த்தவியம் - செய்யத்தக்கது.
கர்த்தன் - எழுவாய், கடவுள், செய்வோன், தலைவன்.
கர்த்திருகாரகம் - எழுவாய்.
கர்த்திரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கர்ப்பகோளகை - கர்ப்பாசயம்.
கர்ப்பக்கல் - ஒரு மருந்துக்கல்.
கர்ப்பக்கிரகம் - மூலஸ்தானம்.
கர்ப்பக்குழி - கருப்பை.
கர்ப்பசிராவம் - கர்ப்பங்கரைந்துபோகுதல்.
கர்ப்பசூலை - இரத்தசூலை.
கர்ப்பபாதம் - அகாலபிரசவம்.
கர்ப்பபிரம்ஸம் - கருப்பை அடிபிறங்கிப் போகுதல்.
கர்ப்பப்பரிசம் - கரு உற்பத்தி.
கர்ப்பப்பை - கருப்பாசயப்பை.
கர்ப்பம் - உள் கருக்கொள்கை, கருப்பாசயம், சினை.
கர்ப்பவதி - கர்ப்பஸ்திரீ.
கர்ப்பவிச்சியுதி - கருவழிவு.
கர்ப்பவோட்டம் - கருக்கொள்ளு மேகவோட்டம். இது மார்கழிமாதத்தில் சூரியன் தனுசில்பிரவேசித்த பதின்மூன்றேமுக்கால் நாளுக்குமேல் பன்னிரண்டுநாள் ஓடுவது.
கர்ப்பாசயம் - கர்ப்பப்பை.
கர்ப்பாதானம் - ஒரு சடங்கு, சோபன கலியாணம்.
கர்ப்புணி - கர்ப்பவதி.
கர்ப்புரை - சாம்பிராணி.
கர்ப்பூரசிலாசத்து - ஒருமருந்து.
கர்ப்பூரதுளசி - ஒருதுளசி.
கர்ப்பூரப்புல் - ஒரு வாசனைப்புல்.
கர்ப்பூரம் - கருப்பூரம்.
கர்ப்பூரவல்லி } ஒருவாசனைச்செடி.
கர்ப்பூரவள்ளி }
கர்ப்பூரவில்வம் - ஒருவில்வம்.
கர்ப்பூரவெற்றிலை-வாசனைவெற்றிலை.
கர்ப்பேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கர்மபலம் - வினைப்பயன்.
கர்மம் - அகங்கார மமகாரங்கள் காரணமாகச் செய்யப்படுஞ் செயல்கள். அவை ஆகாமியம், பிராரத்தம், சஞ்சிதம், என மூன்றுவகைப்படும். இக்கர்மமே சுகதுக்கங்களுக்கும் அவைகளை அநுபவித்தற் கருவியாகிய பிறவிகளுக்குங் காரணமாம். கர்மம் நசித்த விடத்துப் பிறவியும் நசித்து முத்தி கைகூடும்.
கர்மியன் - காந்தாரி புத்திரன்.
கர்வடம்-நானூறுகிராமத்திற்குத் தலைக்கிராமம், மலையும் யாறுஞ் சூழ்ந்தவூர்.
கர்வம்-இலட்சங்கோடி,குபேரனுடைய நிதியிலொன்று, செருக்கு, அகங்காரம்.
கர்வாலியுமரம் - ஒருமரம்.

கர்விதன் - செருக்குள்ளவன், துட்ட தனமுடையவன்.
கர்வேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கர்னகுஷ்டம்-ஒருவகைக்குஷ்டநோய். அது சருமத்திற் பச்சை வன்னத்துடன் பொடிபொடியாக வெடித்தல், திரிதோஷாதிக்கம், தேகம் பாரித்துத் திமிருடன் காக்கட்டான்பூ நிறமாகத் தோற்றுதல், தடிப்பு, வீக்கம், சிலேட்டுமாதிக்கமாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.
கர்ணசூலவாதம் - ஒருவகைநோய். அது அதிக சீதள தடாகத்தில் மூழ்கி மயிரை யுலர்த்தாமல் முடிந்துகொள்ளல், குளிர்காற்றிலடிபடல், உடனே சிலேட்டும வஸ்துக்களைப் புசித்தலாகிய இவைகளினூற் பிறந்து காதுகளிற்சேர்ந்துகொள்வது. அப்போது செவிகளின் மூலத்திற் குத்தோடு நோவு, சிரசு பிடரி நெற்றி நெறி கண் புருவம் நாசி தந்தங்களின் வேர் தாடை கண்டமாகிய இவ்விடங்களில் வாளாலறுப்பதுபோ லிருத்தல், தேககனதி, குடைச்சல் என்னுமிக்குணங்களுண்டாகும்.
கர்னம் - கன்னம், காது.
கர்ணிகசன்னிபாதசுரம்-ஒருவகைச் சுரநோய்; அது காதின் மூலத்தில் வீக்கத்துடன் சத்தங்கேளாமை, வாய்திறக்கக்கூடாமற் கண்டத்தை யிறுக்கிப் பிடித்தல்போலிருத்தல், உடம்பெரிச்சலுடன் நடுக்கல், சிறுவேதனை, வயிறு கொதித்தல், பிதற்றல், மார்பிடித்தல், இரைதல், இருமலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கலககண்டகி - கால கௌசிகன் பாரி.
கலகக்குருவி - ஒருபட்சி.
கலகங்காத்தவரதேசுரர் - திருமாகறலிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
கலகஞ்சம் - ஒருவகையன்னம்.
கலகண்டம் - அன்னம், குயில், புறா.
கலகப்பிரியன் - சண்டைக்காரன்.
கலகம் - ஒருபட்சி, குழப்பம், சண்டை, பேரொலி, போர்.
கலகலத்தல் - அறக்காய்தல், ஒலிக்குறிப்பு, மிகப்பேசுதல்.
கலகலம் - இரைச்சல், பறவைக்குரல்.
கலகலெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
கலகவாயன் - சண்டைக்காரன், வாயாலார்ப்பவன்.
கலகவாய்க்குருவி - ஒருகுருவி.
கலக்கடி - கலக்கம்.
கலக்கம் - அச்சம், ஆரவாரம், குழப்பம், சஞ்சலம், துன்பம், தெளிவின்மை.
கலக்கல் - கலங்கச்செய்தல், குழப்பல், கூட்டல், சேருதல், புணரல்.
கலக்கு - கலக்கென்னேவல், கலங்கப்பண்ணுதல்.
கலக்குதல்-அஞ்சவித்தல், கலங்கச்செய்தல், குழப்புதல், திகைக்கச்செய்தல்.
கலங்கடித்தல் - திகைக்கடித்தல்.
கலங்கரைவிளக்கம் - கப்பலை யழைக்கும் தீராவென்னும் விளக்கு.
கலங்கல்-அஞ்சல், அழுதல், கலங்குதல், சோற்றுநீர், துண்டமுறல், நீர்ப்பாயுமதகு, [illegible]ரியில் அதிகப்பட்டநீர், வெளியே போகுமிடம்.
கலங்கனீர் - கலங்கற்றண்ணீர்.
கலங்காவரிச்சு - குடிலின் கால்வரிச்சு.
கலங்குதல் - கலக்கமடைதல், துயரப்படுதல், தெளிவின்றுதல்.
கலங்கொம்பு - கலைமான்கொம்பு.
கலசபவன் - அகஸ்தியன், வசிட்டன், துரோணன்.
கலசப்பானை - சிறுபானை.
கலசமுனி - அகத்தியமஹருஷி.
கலசம் - குடம், பால்முட்டி.
கலசர் - இடையர்.
கலசி } பெருமல்லிகை.
கலசீ }
கலசேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கலசோத்தி - பாற்குடல்.
கலசோற்பவன் - கும்பமுனி, அகஸ்தியன்.
கலடு - கன்னிலம்.
கலணை - குதிரைக்கல்லணை.
கலதம் - சொட்டைத்தலை.
கலதி - மூதேவி.
கலதிரோகம் - ஒருவகைநோய்.
கலதை - கலக்கம், மூதேவி.
கலத்தல்-எழுத்திலாவோசை, கலக்கச்செய்தல், புணர்ச்சி.
கலந்தருநா - குசவர், பணித்தட்டார்.

கலந்தவர் } அன்பர், உறவினர், சேர்ந்
கலந்தார் } தார்.
கலந்தை - பெருமை.
கலபம் - கலாபம், மயிற்றோகை.
கலபிங்கம் - ஊர்க்குருவி.
கலப்பற்று - மரக்கலத்தி னீக்கலடைப்
கலப்பித்தல் - கலக்கச்செய்தல். [பது.
கலப்பு - உறவாகுகை, கலத்தல், கலவை, சங்கரம், புணர்ச்சி.
கலப்பூ - பணிகாரம்.
கலப்பை - உபகரணம், உழுபடை, கலப் பை யுறுப்பு.
கலப்பைக்கிழங்கு - கார்த்திகைக்கிழங் கு, வேர்தோன்றிக்கிழங்கு.
கலப்பைக்கொழு - கலப்பைப்படை.
கலப்பைச்சக்கிரம் - ஏர்ப்பொருத்தம் பார்க்குஞ் சக்கிரம்.
கலப்பைப்படை - உழுவோராயுதம்.
கலமர் - பாணர்.
கலம் - பேரணிகலம், ஆபரணம், ஆயுதப் பொது, இரேவதி, உண்கலம், ஓர ளவு, மட்கலம், மரக்கலம், யாழ்.
கலம்பகமாலை - பன்மணிமாலை.
கலம்பகம் - ஒரு பிரபந்தம்; அஃது ஒரு போகு வெண்பாக் கலித்துறை முதல் கலியுறுப்பாகக் கூறிப் புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிர தம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூ து, வண்டு, தழை, ஊசல்என்னு மிப் பதினெட்டுறுப்புகளு மியைய மடக் குமருட்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ் சிப்பா ஆசிரியவிருத்தம் கலிவிருத் தம் கலித்தாழிசை வஞ்சி விருத்தம் வஞ்சித்துறை வெண்டுறை என்னு மிவற்றால் இடையே வெண்பாவுங் கலித்துறையும் விரவிவர அந்தாதித் தொடையான் முற்றுறக் கூறுவது. கலப்பு, சண்டை, நறுஞ்சாந்து.
கலம்பகன் - செவிட்டுமேன்.
கலம்பம் - தாலம்பபாஷாணம்.
கலம்பி - கொடிவசலை.
கலயம் - கலசம்.
கலரவம் - புறா.
கலர் - ஈனர், இழிந்தோர், கீழ்மக்கள்.
கலலம் - சுக்கில சுரோணிதஞ் சேர்ந்த பிண்டம்.
கலவசம் - காக்கை.
கலவடை - உரலணை, திரிமணை, புரிய
கலவம் - மயிற்றோகை. [ணை.
கலவரம் - கலக்கம்.
கலவரித்தல் - கலங்குதல், மயங்குதல்.
கலவர் - படைவீரர், மரக்கலமோட்டி கள்.
கலவல் - எழுத்திலாவோசை, கலத்தல்.
கலவன் - கலந்தது.
கலவாங்கட்டி - உடைந்தவோடு.
கலவாசு - ஒருவகைவெடி.
கலவாய் - ஒருமீன், ஒருவெடி.
கலவி - காமநுகர்ச்சி, புணர்ச்சி.
கலவியிற்களித்தல்-அகப்பொருட்டுறை யினொன்று.
கலவுதல் - கலத்தல்.
கலவை - கலப்பு, சங்கீரணம், சுண்ணச் சாந்து, சேறு, பரிமளச்சேறு.
கலவைச்சேறு-சாந்து, பரிமளச்சேறு.
கலவோடு - மண்பாண்டச்சல்லி.
கலனம் - பெரும்பாடு.
கலனை - அலாயுதம், கலப்பை, கலப்பை யுறுப்பு.
கலன் - ஆபரணம், ஓமவுபகரணம், பன் னிரண்டு மரக்கால்கொண்ட அளவு, பாத்திரம், மரக்கலம், யாழ், வழக்கு.
கலன்கழிமடந்தை - கைம்பெண், வித
கலாகூலம் - விஷம். [ந்து.
கலாங்கம் } சித்தபாஷாணம்.
கலாங்கன் }
கலாசி } முன்கை.
கலாசிகை }
கலாசு - மரக்கலம்.
கலாசுகாரர் - மரக்கலமோட்டுவோர்.
கலாதத்துவம்-வித்தியா தத்துவத்திற்கு மேலுள்ளதத்துவம். இது செம்பிற் களிம்புபோல ஆன்மாவை மறைத்து நிற்கும் மலவிருளைச் சிறிது விலக்கி அவ்வான்மாவினது சுவரூபத்தை ஒருவாறு புலப்படுத்துவது. எனவே இது ஆன்மாவினது பிரகாசமாம்.
கலாதன் - தட்டான்.
கலாதி - கலகம், சண்டை.
கலாநிதி - சந்திரன், சாஸ்திரபொக்கி
கலாபதி - சந்திரன். [ஷம்.
கலாபம் - அம்புக்கூடு, அரைப்பட்டிகை, கலம்பகம், கலாபனை, சந்திரன், சா

மணிக்கோவை, பதினறு கோவை யுள்ளமணி, பீலிக்குடை, மயிலி னுண் மயிற்ரேகை.
கலாபனை - கலாபம்.
கலாபி - ஆண்மயிர், மயிலிறகு.
கலாபித்தல் - கலகம்பண்ணுதல்.
கலாபினி - இராத்திரி.
கலாபினை - கலம்பகம்.
கலாபூரணன் - பதினறுகலையோடு கூடிய சந்திரன், மகாவித்துவான்.
கலாப்பித்தல் - கலத்தல்.
கலாமயம் - பாவித்தல்.
கலாமிருது - கம்மாளன், சந்திரன்.
கலாம்-ஊடல்,கொடுமை,கோபம்,பகை
கலாம்பூரம் - ஒருமருந்து.
கலாயம் - ஒருவகைத்தானியம்.
கலாலாபம் - வண்டு.
கலாவதி - ஒருநூல், சந்திரன்.
கலாவல் - கூடுகை.
கலாவல்லபன் - வித்துவான், கலையறிவில் மேம்பட்டவன்.
கலாவிகம் - கோழி.
கலானம் - களக்கூட்டம்.
கலி - அம்பு, ஒலி, ஒருபா, கடல், கடையுகம், கலியுகத்துக்கு அதிதேவதை, கலியென்னேவல், கேடு, சங்ககாலத்து வழங்கியவோர் தொகைநூல், சனி, சிறுமை, போர், யுத்தம், வஞ்சகம், வலி, வறுமை.
கலிகம் - கற்பரிபாஷாணம், வன்னி.
கலிகாரகம் - மயிலச்செடி.
கலிகாரகன் - நாரதமுனி.
கலிகாலம் - கலியுகம், கொடுமையான காலம்.
கலிகை - உசிலமரம், இளம்பூவரும்பு, சீக்கராந்தூள், நாகமல்லி.
கலிக்கம் - கண்மருந்து.
கலிக்கம்பநாயனர்-ஒருசிவபத்தர், இவர் கடந்தை நகரத்தில் வைசியர்குலத்தில் விளங்கினவர்.
கலிங்கதேசம் - ஒருதேயம்; இது ஒட்டிரதேசத்திற்குத் தெற்கும் கருநாடகத்துக்கு வடக்குமுள்ளது.
கலிங்கத்துப்பரணி - சோழன்மேல் செயங்கொண்டார்பாடிய ஒருநூல்.
கலிங்கம் - போர்வை, ஆற்றுத்தும்மட்டிக்காய், ஊர்க்குருவி, கண்மருந்து, குதிரை, சீலை, தேய மைம்பத்தாறினென்று. இது கடகமுதற்கொண்டு சென்னைவரைக்குமெட்டினது, பதினெண்பாடையிலொன்று, மிளகு, வானம்பாடி, வெட்பாலை.
கலிங்கல் - ஏரிநிறைநீர்போம்வழிமதகு.
கலிங்கன் - பலி மூன்றும் புத்திரன். இவனுற் கலிங்கதேசம் விளங்கியது.
கலிங்கு - கலிங்கல்.
கலிசம் - வன்னிமரம்.
கலிச்சி - இரட்டைப்பிள்ளையிற்பெண்.
கலிச்சும்மை - மிக்க ஆரவாரம்.
கலிஞ்சகம் - மீன்.
கலிஞ்சநம் - அம்பட்டரூர்.
கலிதம் - சங்கலிதம், பாய்கை, பெரும்பாடு, பொருத்தம்.
கலிதி - திப்பிலி.
கலித்தல் - ஆரவாரம்,எழுச்சி,ஒலித்தல், கக்குதல், தழைத்தல், பொசிகுதல், பொலிவு, வெடித்தல்.
கலித்தளை - செய்யுட்டளையினென்று, அஃது வெண்பா வுரிச்சீர்கள் தம்மு ளொன்றுவது வரப்பெறுவது.
கலித்தாழிசை-ஒருகவி;அஃது இரண்டு முதலிய பலவடிகளா னீற்றடிமிக்கு ஏனையடி தம்மு ளொத்து நிற்பத் தனித்தேனும் ஒரு பொருண்மேன் மூன்றடுக்கியேனும் வருவது.
கலித்துருமம் - தான்றிமரம்.
கலித்துறை - ஒருகவி; அது நெடிலடி நான்குகொண்டு முடிவது.
கலித்தொகை - ஒரு சங்கநூல்.
கலிநடம் - விநோதக் கூத்து ஆறினுளொன்று.
கலிந்தசை - யமுனைநதி.
கலிந்தம் - ஒருமரம், ஒரு மலை.
கலிந்தன் - சூரியன்.
கலிபணம் - ஒருபணம்.
கலிபலி, கலிபிலி } ஆரவாரம், கலிப்பிலி.
கலிப்பா - ஐந்துபாவினென்று. அது வெண்சீர் மிகப்பெற்று மாச்சீரும் விளங்கனிச் சீரும் பெருது பிறசீர்களுஞ் சிறுபான்மை கலந்து கலித்தளையும் இயற்றளையுந் தழுவி தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச் சொல் சுரிதகம் என்னும்

ஆறுறுப்பினுள் ஏற்பனகொண்டு நாற்சீரடியான் முடிவது.
கலிப்பிலி - எதிரிடை; சுவாதி.
கலிப்பு-உயரம், எழுச்சி, ஒலி, கக்குதல், தாரா, மிருதி, வெடிப்பு.
கலிப்புமலை-அந்தகன்பீடம், தாராவென்னும் உலோகமலை.
கலிமா-முகம்மது மகத்தாருடைய விண்ணப்பம்.
கலிமாரகம் - மயிலச்செடி.
கலிமாராகம் - கிலிகிலிப்பை.
கலிமாலகம் - அகில்.
கலிமோகநம்-ஒருவகை அத்திமரம்.[ம்.
கலியத்தம்-கலியுகத்திற்சென்ற வருட
கலியநாயனுர் - ஒரு சிவபத்தர். இவர் திருவொற்றியூரிற் செக்கார்குலத்திலவதரித்துச் சிவாலயத்திற்குத் திருவிளக்கிடுதலையே பெருஞ் சிவபுண்ணியமாகக் கொண்டு தம்மிடத்துள்ளசெல்வமெல்லாவற்றையும் அதன் பொருட்டுச் செலவிட்டு வறுமையடைந்து தமது மனைவியை விற்கப்புகுந்தும் வாங்குவாரின்மையால் தமதூட்டியை யறிந்துகொள்ளத் துணிந்தபோது சிவபிரான் வெளிப்பட்டு அருள்புரியப் பெற்றவர்.
கலியர் - சிவனடியார்களுளொருவர், படைவீரர், மிடியர், தரித்திரர்.
கலியன் - இரட்டைப் பிள்ளையிலாண், கலியுகத்தலைவன், சனி.
கலியாணக்கால் - வாசலுக்கடுக்க நிறுத்துங்கப்பு.
கலியாணக்கிரதம் - ஓரவிழ்தம்.
கலியாணக்கோலம் - மணக்கோலம்.
கலியாணசுந்தரன் - மதுரையிலமர்ந்த
கலியாணப்பூ - இருப்பைப்பூ. [சிவன்.
கலியாணப்பூசினி-சாம்பல்நிறப்பூசினி.
கலியாணப்பொருத்தம் - மணவாளனுக்கும் மணவாளிக்கும் பார்க்கும் பொருத்தம்.
கலியாணமண்டபம் - மணமண்டபம்.
கலியாணமுடித்தல்-விவாகம் பண்ணல்.
கலியாணம்-கொண்டாட்டம், சந்தோஷம், சுபம், பொன், விவாகம்.
கலியாணி - உமை, ஓரிராகம்.
கலியாத்தம் } கலிவருஷம்.
கலியாப்தம் }

கலியுகம்-கடையுகம். இது நாலிலக்ஷத்து முப்பத்திரண்டாயிரம்வருஷமுடையது.
கலிலம் - ஸ்திரீ புருஷர்களுடையசோணித சுக்கிலங்கள் திரண்ட பிண்டரூபம்.
கலிவிராயன் } ஒருநெல்.
கலிவிராய் }
கலிவிருத்தம்-ஒருகலி. அஃது அளவடி நான்கினைக்கொண்டது.
கலிவெண்பா-ஒருகலி. அஃது வெண்டளை தழுவி ஈற்றடி முச்சீரான் முடிவது.
கலினம் - கடிவாளம்.
கலினி - இடாகினி, கைமை, கைம்பெண், திப்பிலி.
கலினை - கைமை, கொள்ளு, மிளகு.
கலின் - கலினெனல், ஈரடுக்கொலிக் குறிப்பு.
கலீயம் - கடிவாளம்.
கலீரிடுதல் } ஒலிக்குறிப்பு.
கலீரெனல் }
கலுகுலுத்தல் - பல சிற்றொலியிலுண்டானதொனி.
கலுகுலுப்பு - ஒலிக்குறிப்பு.
கலுக்குப்பிலுக்கு - அணிகளானெழுமொலி, ஆடம்பரம்.
கலுங்கு - கலிங்கு.
கலுடம் } கலங்கநீர், பாவம்.
கலுஷம் }
கலுமொலுத்தல் } ஒலிக்குறிப்பு.
கலுமொலெனல் }
கலுவடம் - பூவரும்பு.
கலுவம்-கல்வம், மருந்தரைக்குங்கருவி
கலுழக்கல் - கருடக்கல்.
கலுழம் - கலங்கனீர்.
கலுழன் - கருடன்.
கலுழி - பெருக்கு, கலங்கனீர், முல்லைநிலக்கான்யாறு.
கலுழிதம் - கலங்கியிருத்தல்.
கலுழ்தல்-அழுதல், கலங்குதல், சிந்தல்.
கலேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
கலை - அரைப்பட்டிகை-ஆண்மான், ஆண்முசு, எட்டுவிநாடி அல்லது முப்பது காட்டைகொண்ட ஒருகாலநுட்பம், ஒருபாகையி லறுபதிலொன்று, கலையென்னேவல், கல்வி, காஞ்சிமர

ம், குதிரைக்கலணை, சந்திரன் பங்கு; சவ்வு சீலை, சுவாசத்தின்பகுதி, சுறு மீன், நூல், பிரகாசம், பேயாட்டம், மகாமீன், மகாராசி, மரக்கொம்பு, மேகலை; வண்ணங்களிறோடி, வயிரம், வித்தியாதத்துவ மேழினொன்று, விலங்கேற்றின்பொது, சரீரம், முசுக்கலை.
கலைகுறைத்தல் - சத்துக்குறைதல்.
கலைக்கியானம் - கலையறிவு, கல்விநூல்.
கலைக்கொம்பு - கலங்கொம்பு.
கலைக்கோட்டுமாமுனி - ஒருமஹருஷி.
கலைஞர் - புலவர்.
கலைஞானம் - கலைக்கியானம்.
கலைதல் - குலைதல்.
கலைத்தல்-ஓட்டுதல், நீக்கல், பிரித்தல், குலைத்தல்.
கலைநாதன் - அருகன்.
கலைநாயகன் - புத்தன்.
கலைப்பு - கலைத்தல்.
கலைமகள் / கலைமடந்தை } சரச்சுவதி.
கலைமலைவு - கல்விமயக்கம்.
கலைமான் - ஆண்மான், சரச்சுவதி.
கலையம் - கலயம்.
கலையானத்தி - துர்க்கை.
கலையினன் - சந்திரன்.
கலையுணர்த்துவோன் / கலையுணர்புலவன் } குமரன்.
கலையூர்தி - சரச்சுவதி, துர்க்கை.
கலையேறுதல் - அதிகப்படுத்தல், உருவேற்றுதல்.
கலையேற்றுதல் - உருவேற்றுதல்.
கலையோதல் - நூலோதல்.
கலைவல்லோர் - அறிஞர், புலவர்.
கலைவாணி - சரச்சுவதி.
கலைவு - குலைவு, குழப்பம், பிரிவு.
கல் - இரத்தினம், ஒலிக்குறிப்பு, கல்லு கல்லென்னேவல், காவிக்கல், சிலை மலை, விடந்தீர்க்குமணி.
கல்நாதம் - அன்னபேதி.
கல்நார் - ஒருமருந்து.
கல்நெஞ்சு - வன்னெஞ்சு.
கல்பனை - கற்பனை.
கல்மஷம் - கன்மடம், குற்றம்.
கல்மடி - காய்மடி.
கல்மதம் - கன்மதம்.
கல்மாஷம் - நாநாவன்னம்.
கல்மாஷபாதன் - கன்மாடபாதன்.
கல்முதிரை - ஒருமரம்.
கல்முரசு - கப்பிட்டிமரம்.
கல்மொந்தன் - ஒருவாழை.
கல்யாணஜெகந்நாதன் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருப்புல்லாணியிற்கோயில்கொண்ட விட்டுணு.
கல்யாணசுந்தரர்-திருவேள்விக்குடியிற் கோயில்கொண்டிருக்கும் சுவாமி.
கல்யாணதீர்த்தம் - நூற்றெட்டுத்திருப்பதிகளுளொன்றாகிய உறையூரிலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தம்.
கல்யாண நாச்சியார் - துவாரகையிற் கோயில் கொண்ட இலக்குமி.
கல்யாண நாராயணன் - துவாரகையிற் கோயில்கொண்ட விட்டுணு.
கல்யாணவிமானம் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருவிடை வெந்தையிலுள்ள விமானம்.
கல்லகம் - கடினசித்தம், கல்வீடு.
கல்லகாரம் - செங்குவளை, நீர்க்குளிரி.
கல்லக்காரம்-ஒருவித பனங்கட்டி பனங் கற்கண்டு.
கல்லடிமூலம் - ஒரு பாஷாணம்.
கல்லடைசல் - ஒருநோய், கல்லுறுத்துதல்.
கல்லடைப்பு - நீரடைக்குமோர்நோய்.
கல்லணை - குதிரைமேற்றவிசு.
கல்லத்தி - ஓரத்தி.
கல்லத்துவம் - செவிட்டுத்தனம்.
கல்லம் - செவிடு, மஞ்சள், விந்தமலை.
கல்லரவிந்தம் - கற்றாமரை.
கல்லல்-அரிக்கல், கலாதி, தோண்டல், பேசலாவெழுமொலி.
கல்லழிஞ்சில் - ஒருமரம்.
கல்லளை - மலைமுழைஞ்சு.
கல்லறுத்தல் - கல்லறிதல்.
கல்லறை-கல்வீடு, குகை, பிரேதக்குழி.
கல்லாங்காசு - கலவோடு.
கல்லாசாரி - கற்சிற்பன்.
கல்லாடம் - ஒரு சங்கநூல்.
கல்லாடர் / கல்லாடனார் } கல்லாட நூல்செய்த புலவர்.
கல்லாதவன் - படிக்காதவன்.
கல்லாந்தலை - ஒருமீன்.

கல்லாமறவர் - இயற்கையான மறத்தினை யுடையார்.
கல்லாரகிரி - திருத்தணிமலை.
கல்லாரம் - செங்குவளை, நீர்க்குளிரி.
கல்லார் - கீழ்மக்கள், மூடர்.
கல்லாலம் - இத்திமரம்.
கல்லால் - கயிலாயமலையினிற்குங் கல்வடிவமான ஆல்.
கல்லான் - பாறை.
கல்லி - ஆமை, ஊர்க்குருவி.
கல்லிச்சி } ஒருவகைமரம்.
கல்லித்தி } ஒருவகைமரம்.
கல்லியம்-கட்டை, கள், கால், சாராயம்.
கல்லியன் - தக்கன்.
கல்லியாணகோத்திரை - கங்கை.
கல்லியை - கடிகவாளம், துஷ்டர் கூட்டம்.
கல்லிவாதம்-ஒருவகைவாதநோய். அது கிருத்திரசி வாதத்தினாலாவது விஸ்வபித்த வாதத்தினாலாவது சகிக்கக்கூடாத வுபத்திரவத்தை யுண்டாக்குவது.
கல்லிழைத்தல் - இரத்தினம் பதித்தல்.
கல்லின்காரம் - கல்நார்.
கல்லீயம் - நீலாஞ்சனம், வன்மையான [ஈயம்.
கல்லீரல் - ஓரீரல்.
கல்லு - கல், மலை.
கல்லுகம் - பெருவாகை.
கல்லுக்கலைக்காத்தான் - பொன்னாங்காணி.
கல்லுக்குத்தல் - காரியத்தைத் தடைசெய்யல்.
கல்லுணி - குறுவிச்சை, புல்லூரி.
கல்லுண்டை - ஒருநெல்.
கல்லுதல் - கிண்டல்.
கல்லுதிரி - ஓரம்மை, ஒருநெல்.
கல்லுத்தீரல் - கல்வெட்டல்.
கல்லுநிலம் - கல்லுத்தரை.
கல்லுப்பிரமேகம்-ஒருவகைப் பிரமேகநோய், அது கோசத்திற் கள்ளைப்போல மேகநீர் கசிதல், தேகத்திற் கற்றாளைநாற்றம் வீசுதல், வயிற்றிற் கல்லைப்போல மூத்திரஞ்சிக்கிக்கொண்டுவிம்மி கிருவிருப்புடன்நாபியைப்பற்றி யுப்பிசமாய் பசியையடக்கிக் கனத்தலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
கல்லுப்பு - ஒருப்பு.
கல்லுப்பொறுக்கி - தூதுணம்புறா.
கல்லுப்போடல் - காரியத்தைத் தடைசெய்யல், நங்கூரம்போடல்.
கல்லுரல் - கல்லினாலானவுரல்.
கல்லுருணி - ஒருவிச்சி.
கல்லுருவி - ஒருபூடு.
கல்லுவை - ஒருமீன்.
கல்லுவைத்தல் - காரியஞ்சொல்லாமற் பண்ணுதல், சிலைதாபித்தல், தோணி தரிக்கப்பண்ணுதல், மரணச்சடங்கி லொன்று, வைராக்கியம் வைத்தல்.
கல்லுளி - ஒருவகையுருக்கு, கல்லுப் பொளிகிறவுளி, பேய்க்களா.
கல்லூசி- ஒருமருந்து.
கல்லூரி - கல்விபயிலிடம், பாடசாலை.
கல்லூருணி ஒரூர், பாறைக்கிணறு.
கல்லெடுப்பு - மரணச்சடங்கிற் றுபித்தல், கல்லையெடுத்தல். [ய்.
கல்லெரிப்பு நீரருகல், நீர்ச்சுருக்குநோ
கல்லெறி - எறிபடத்தக்கதூரம், கல்லுயிட்டெறிதல், கவண்.
கல்லெனல் - அனுகாரணவோசை.
கல்லை - இலை, இலைக்கலம், பாதகுறட்டின் குமிழ், பிணக்கு.
கல்லைநீருக்கி - மாமிசபேதி.
கல்லொட்டி - நத்தை.
கல்லோலம் - புனற்றிரை.
கல்வம்-குழியம்மி, மருந்தரைக்குமுரல்.
கல்வருக்கை - ஒருபலா.
கல்வளை -மலைப்பிளப்பு, மலைமுழை.
கல்வி-அறிவு, கற்றல், நூல், புண்ணிய தோற்றம் நான்கினொன்று, வித்தை.
கல்விக்களஞ்சியம் - கல்விக்கிருப்பிடமாயுள்ளவன்.
கல்வித்திறம் - கல்விச்சாமர்த்தியம்.
கல்வித்துறை - கல்விநூல்.
கல்விநூல் - கலை.
கல்விபயிலிடம் - பள்ளிக்கூடம்.
கல்விப்பரிட்சை - கலைநூற்பயிர்ச்சி.
கல்விப்பொருள் - கல்விச்செல்வம்.
கல்விமதம் - கல்விச்செருக்கு.
கல்விமான் - அறிஞன், வித்துவான்.
கல்வியறிவு - கற்றறிவு.
கல்வியூரி - கழகம்.
கல்விவான் - அறிஞன், புலவன்.
கல்வீடு - கல்லினாற்கட்டுமனை.

கல்வீரியம் - அன்னபேதி.
கல்வெட்டி - கல்வெட்டுபவன்.
கல்வெட்டு-அழியாதசொல், ஒரு பிரபந்தம்,சிலாசாசனம்,புகழ்ச்சிசெய்யுள்.
கல்வெள்ளி - இரும்பும் வெள்ளியுங் கலந்தது, முரண்வெள்ளி.
கல்வேகம் - அன்னபேதி.
கல்வேதி - ஒருமருந்து,சகஸ்திரபேதி.
கவக்குன்று - மந்தரமலை.
கவசகுண்டலன்-கவசத்தோடும் குண்டலத்தோடும் பிறந்த கண்ணன்.
கவசம் - இரும்பு முதலியவற்றா லியற்றிய சட்டை, காவற்பண்ணு மந்திரம், சட்டை, சீலைமண்.
கவசனை - கவசம்.
கவசி - துரியோதனன்றம்பியரு ளொருவன்.
கவடம் - தந்திரம்.
கவடி - ஒரு விளையாட்டு, சோகி.
கவடிப்பாய்தல் - ஒரு விளையாட்டு.
கவடு - இடப்படி, கபடம், கப்பு, கவர் சமுத்திடு கயிறு, தொடைச்சந்து, மரக்கொம்பு, யானைகட்டுங் கயிறு, பகுத்தல்.
கவட்டல் - கவட்டுதல்.
கவட்டுக்கால் - கடப்புக்கால்.
கவட்டுதல் - சப்புதல், மெல்லுதல், வளைத்தல்.
கவட்டுநெஞ்சன் - வஞ்சகன்.
கவட்டை - கவர்.
கவணங்கட்டுதல் - காயங்காட்டுதல்.
கவனம் - ஒருமருந்து, காயக்கட்டு.
கவணி - ஒருபுடவை.
கவணை-கவண், மாட்டுச்குப்புல்லிடும் இடம்.
கவண் - கல்லெறிகயிறு.
கவண்டர் - ஒருசாதியார், சண்டாளர்.
கவண்டி } கவண்.
கவண்டு }
கவதம் - பசுப்போலிருக்குமான்.
கவந்தம் - உடற்குறை, நீர்.
கவந்தன் - ஓரிராக்கதன், வாணசுரன் மந்திரி.
கவம் - கோழை, மத்து.
கவயமா - காட்டான்.
கவயம் - கவசம்.
கவயல் - காட்டான்.

கவரம் - சாமரம், சினம்.
கவராசம் } தமரூசி, வட்டமிடுங் கருவி.
கவராயம் }
கவரி-இராசசின்னத்தொன்று,எருமை கவரிமா, சாமரை, தேர்.
கவரிமா } ஒரு மிருகம்.
கவரிமான் }
கவரிறுக்கு - கடவுமரம், தணக்கு.
கவரெழுசங்கம் - முட்சங்கம்.
கவர் - இரண்டாகப்பிரிகை, கவரென்னேவல், மரக்கப்பு, வாழை. [ம்.
கவர்ச்சி-கவருதல், வெள்ளைக்காக்கண
கவர்தல்-ஆசைப்பெருக்கம்,இச்சித்தல், கடத்தல், கொள்ளையிடல், திருடல், பறித்தல், வாருதல்.
கவர்த்தடி - முள்ளிழுக்குந்தடி.
கவர்த்தல் கப்புவைத்தல், கவர்விடல்.
கவர்படல் } இரண்டுபடல், சிக்குப் படல்.
கவர்படுதல் }
கவர்படுபொருள் - செய்யுள்கழுவினொன்று. அஃது ஒருகுறிப்பான் விளங்கவேண்டும்பொருட்டெரிவுற வுணர்த்தவந்தசொல் பலபொருடருவதாயதனை ஐயுறுத்திநிற்பது (உ-ம்) யாமருமூடாடார்அரிமருவுசோலையகம்.
கவர்படுமொழி - பல கருத்துக்கொள்ளுஞ்சொல்.
கவர்பரிப்புரவி - பகுத்துவிரையுஞ்செலவினையுடைய குதிரை.
கவர்வு - வேறுபாடு.
கவர்ப்பு - கப்புவைத்தல்.
கவர்வழி - பலகவராய்ப் போம்பாதை.
கவர்விடுதல்-ஒன்றிலிருந்து பலதோன்றல், கப்புவைத்தல், கிளைத்தல், சந்தேகமா யிருத்தல்.
கவர்வு - கதுவுதல், கவர்விடுதல், கைப்பற்று.
கவலம் - எருமைக்கொம்பு.
கவலல் - கவலைப்படுதல்,பேசலாலெழுமொலி, வருந்தல், விரும்பல்.
கவலி - கவலை.
கவலித்தல் - கவலைப்படல், வருந்தல்.
கவலை - அக்கறை, அச்சம், ஒருகொடி, ஒருமீன், கவர்வழி, கிலேசம், சந்தி, செந்தினை, துன்பம், நீரிறைக்குந் தோற்கூடை, நோய், மரக்கொம்பு, விசாரம்.

கவலைமறுகு - கவர்த்ததெரு.
கவல் - துக்கம், வருத்தம்.
கவவல் - பொருந்தல்.
கவவு-அகத்திடுதல், கவர், மரக்கொம்பு.
கவவுக்கை - அகத்திட்டகை.
கவழிகை - திரைச்சீலை.
கவளமான் - யானை.
கவளம் - சோற்றுத்திரளை, வாயளவு கொண்டவுணவு, வெற்றிலைக்கட்டு.
கவளி - வெற்றிலைக்கட்டு.
கவளிகரித்தல்-அபகரித்தல், விழுங்கல்.
கவளிகை - வெற்றிலைக்கட்டு.
கவளீகரித்தல்-கவளமாயுண்ணல், முற்றும் மூடுதல், விழுங்கல்.
கவள்ளலீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனுளொன்று.
கவறல் - துக்கித்தல், வருந்தல்.
கவறு-தாயக்கொட்டை, பனம்பட்டை.
கவறுருட்டுதல் } தாயம்போடுதல்.
கவறெறிதல் }
கவறை - ஒருசாதி, வடுகர்.
கவறைச்செட்டி-செட்டிகளில் ஒருசாதி.
கவற்சி - வருத்தம், விருப்பம்.
கவற்றல் - வருத்தல்.
கவனம்-கடுப்பு,கருத்து, கலக்கம், காடு, குதிரைநடை, சீக்கிரம், படை, மிகுகவலை.
கவனன் - வேகமுள்ளோன்.
கவனி - கந்தகபாஷாணம்.
கவனித்தல் - கருத்துவைத்தல்.
கவனிப்பு - கருத்து.
கவனேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கவா - வெள்ளைக்காக்கணம்.
கவாக்ஷன் - சுக்கிரீவன்சேனையிலுள்ள ஒரு வானரன்.
கவாச்சி - வெள்ளைக்காக்கணம்.
கவாடக்கட்டி - வசம்பு.
கவாடக்காரன் - புல்லுவெட்டுவோன்.
கவாடசூரணம் - அபினிகலவைச் சூரணம்.
கவாடம் - கதவு, புல்லுச்சுமை.
கவாடலேகியம் - அபினிலேகியம்.
கவாடவடகம் - கட்டுவாங்க குளிகை.
கவாடி - கதவு.
கவாட்சம் } சாளரம், வட்டச்சாளரம்.
கவாட்சி }
கவாட்சீ¦-|பேய்க்கொம்மட்டி.
கவாம்போதி - நாற்பத்து மூன்றாவது மேளகர்த்தா.
கவாய் - ஒருடை, கந்தை.
கவாரம் - தாமரை.
கவாராதனி - இலக்குமி.
கவாளம் - குதிரைப்பேதிமருந்து, புண்ணாற்றுமருந்தி னொன்று.
கவான் - தொடை, மலைப்பக்கம்.
கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுவோன் இக்ஷுவாகுதம்பி, இருக்ஷயன் மகன், கவியென்னேவல், குரங்கு, சுக்கிரன், சுக்கிரன்றந்தை, சூரியன், பாடல், பாடுவோன், பிரமா, புலவன், பூனைக்காலி, வான்மீகி.
கவிகச்சு - பூனைக்காலி.
கவிகம் - குக்கில், குதிரைக்கடிவாளம்.
கவிகருத்து - பாடுவோன் குறிப்பு.
கவிகற்றோர் - மங்கலப்பாடகர்.
கவிகாளமேகம் - ஒரு புலவன்.
கவிகுருந்தம் - கந்தகபாஷாணம்.
கவிகை - ஈதல், கவிதல், குடை.
கவிக்கை - வளைகை.
கவிசனை - உறை.
கவிசாகரப்பெருந்தேவனார்-கடைச்சங்கப்புலவர்களு ளொருவர்.
கவிசினம் - கோவணம்.
கவிசை - ஒரு வயிற்றுநோய்.
கவிசொல்லுதல் - பாட்டுபாடுதல்.
கவிச்சக்கிரவர்த்தி - பெரியபுலவன்.
கவிச்சி - துர்கந்தம்.
கவிச்சு - கிணநாற்றம், புலால்.
கவிஞர் - கலைவல்லோர், புலவர்.
கவிதல்-வளைதல், விருப்பமாயிருத்தல்.
கவிதை - பா.
கவித்தம் - கடுகுரோகிணி, காமுட்டி செய்தல், விளாமரம்.
கவித்தலம் - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்று.
கவித்தல்-கவியப்பண்ணுதல், மூடுதல்.
கவித்துவம் - கவிபாடும் வல்லபம்.
கவிநாயகன் - பாட்டுடைத்தலைவன்.
கவிப்பர் - செட்டிகள்.
கவிப்பு-ஆரூடத்துக்குச் சூரியனிற்கும் கிலை, உட்டுளை, குடை, மூடுதல்.
கவியங்கம் - வெட்பாலை.

கவியம் - கடிவாளம்.
கவிரத்தினம் - கவிபாடுவதைச்குறித்த ஒருநூல்.
கவிரம் - அலரிச்செடி.
கவிராயன் - புலவன்.
கவிரோமம் - பூனைக்காலி.
கவிர் - முண்முருக்கு, முருக்கு.
கவிலாசிகை - ஒருவீணை.
கவிவல்லோர் } புலவர்.
கவிவாணர் }
கவிவு - உள்வளைவு, குவிவு.
கவிழ்ச்சி - குவிவு, குனிவு.
கவிழ்தல் - அகம்புறமாதல், இறத்தல், குனிதல், கெடல், தலைகீழாதல்.
கவிழ்தும்பை - ஒருதும்பை.
கவிழ்த்தல் - அகம்புறமாக்கல், கவிழப் பண்ணல், மூடுதல்.
கவினம் - கடிவாளம், வெண்ணெய்.
கவினல் - அழகாயிருத்தல்.
கவின் - அழகு, தக்கபண்பு.
கவீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கவீச்சுரர் - பெரியகவிவாணர்.
கவீதனம் - காட்டுவாகை.
கவீந்திரதீர்த்தர் - மத்வாச்சாரியர்களு ளொருவர்.
கவீந்துரேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கவீனம் - பசுமேய்ந்த இடம், வெண் ணெய்.
கவுசி - குழைவு, வருத்தம்.
கவுசிகம் - கௌசிகம்.
கவுசிகன்-இந்திரன், விசுவாமித்திரன்.
கவுஷணம் - கௌபீனம்.
கவுடதம் - வெட்பாலை.
கவுடி - ஒருபண்.
கவுடிப்பாய்வு - ஒரு விளையாட்டு.
கவுணியனார் - கடைச்சங்கப் புலவர்களு ளொருவர். இவர் வள்ளுவர்க்குக்கூறிய சிறப்புக் கவியில் அவர் கூறிய வெல்லாம் முந்திய நூல்களிலே கூறப்பட்டன வெனப் பாடியவர். சீகாழித்தலைவராகிய திருஞான சம் பந்தர்.
கவுதமேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கவுதாரி - ஒருபட்சி.
கவுதுகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கவுத்துகம் - பதுமராகம், வஞ்சகம்.
கவுத்துகவாதம் - கலைஞான மறுபத்து நான்கினுளொன்று.
கவுந்தி - பெண்களிற் சிறந்த ஒருத்தி. இவள் கோவலனும் கண்ணகியும் மதுரைக்குச் செல்லும் பொழுது அவர்களுக்கு வழித்துணையாகச்சென்று இடையில் அவர்களை அவமதித்துப் பேசிய இருவரை நரியாகும் படி சபித்து மதுரையை யடைந்த பின் கண்ணகியை மாதரியிடம் அடைக்கலமாகக் கொடுத்தவள்.
கவுமாரம் - இளமை, குமாரம்.
கவுமாரி - பார்வதி.
கவுரகாசு - அக்குமணி.
கவுரவர் - குருகுலத்தவர்.
கவுரிபாஷாணம் - வெள்ளைப் பாஷா ணம்.
கவுரியம்மை - திருக்கேதாரத்திற் கோ யில் கொண்டிருக்குந் தேவியார்.
கவுரீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கவுலவம் - பன்றிக்கரணம்.
கவுல் - உடன்படிக்கை, துர்க்கந்தம்.
கவுளி - ஒருவிதத்தெங்கு, பல்லி.
கவுள் - கதுப்பு, யானைக்கதுப்பு, யானை, மதம் பாயுமிடம்.
கவுனி-குதிரைபற்பாஷாணம், வாசல்.
கவேஷணை - சிரார்த்தாதிகளிற் பிராம ணரைத்தேடுதல்.
கவேஷிதம் - தேடப்பட்டது.
கவேது } காட்டுக் கோதுமை.
கவேதுகை }
கவேரகந்நியை - காவேரிநதி.
கவேலம் - குவளை.
கவை - அகில், ஆயிலியம், எள்ளிளங் காய், கவர், கவர்வழி, காடு, கோட் டை, தேவை, மரக்கப்பு, வேலை.
கவைதல் - மூடல்.
கவைத்தடி - கவர்த்தடி.
கவைத்தாம்பு - தாமணிமையுடைய நெ டுந்தாம்பு.
கவைத்தாள் - நண்டு.
கவைநா - பாம்பு.
கவைமுள் - வேலன்முள்.
கவையடி - கவர்க்குறை, பிளவடி.

கவையம் - கவயம்.
கவோஷ்ணம் - மிதமான சூடு.
கவ்வல்-கவ்வுதல், யாப்புறக்கோடல்.
கவ்வாணம் - ஒரு பண்.
கவ்வியம் - கௌவியம்.
கவ்வியை - பசுமந்தை. [மை.
கவ்வு - கவர், கவ்வென்னேவல், பெரு
கவ்வுதல்-கடித்துப்பிடித்தல், கவர்தல், வாயினாற் கொள்ளல்.
கவ்வை - எள்ளிளங்காய், ஒலி, கள், காரியம், துன்பம், பழிமொழி, வேலை.
கழகம், கழகு - ஆயுதம், பயிலிடம், கல்வி முதலிய பயிலிடம், சூதாடுமிடம், சூது, போர்க்களம்.
கழங்கம் - சூதாடுகருவி.
கழங்கு - கழல், ஓராடல், கழற்சிக்கொடி, வெறியாட்டாளனாடல்.
கழஞ்சு - பன்னிரண்டு பணவெடை கொண்ட நிறை.
கழப்பன், கழப்பாளி - வேலைக் கள்ளன்.
கழப்பு - கள்ளத்தனம்.
கழப்புணி - கழப்பன்.
கழப்புதல் - சோம்பாயிருத்தல்.
கழலடி - கழற்சிக்கொடிவேர்.
கழலல் - நெகிழ்தல், விலகல்.
கழலாபு - பீர்க்கு.
கழலி - பிரண்டை.
கழலிச்சிட்டு - ஒருசிட்டு.
கழலுதல் - நெகிழ்தல், விலகல்.
கழலை - கழலைக்கட்டி, புரைகுழல்.
கழல் - ஆடவர்கொடையாலும் வீரத்தாலுமணியும் பூண், கழலென்னேவல், கழல்மரம், கழற்கொடி, கால், செருப்பு, பொன்வண்டு.
கழல்வு - கழலுதல்.
கழறல் - உறுதிச்சொல், கழலுதல், சொல்லல், நெருங்கல்.
கழறிற்றறிவார் நாயனார்-சிவனடியார்களுளொருவர். இவர் கொடுங்கோளூரிலே சேரர்குடியிற் பிறந்து பெருமாக்கோதையார் என்னும் பெயர் கொண்டு பாலியதசையிற் றானே துறவுடையராகித் திருவஞ்சைக்களத்தையடைந்து அங்கிருந்துசிவகைங்கரியம் புரிந்துவருகையில் அக்காலத்திருந்த சேரன் மோக்ஷ விருப்படைந்து அரசு துறந்து தபோவனம் புகமந்திரிமார்கள் வேண்டிக்கொண்டபடி சிவாஞ்ஞை பெற்று அச்சேரனுக்குப் பதிலாக அரசரானவர் தன்மேனியி லுவர்மண்ணூரியதனை யுத்தூளனமாக விபூதியை யுடம்பெங்குந்தரித்தான்போன்றொருவண்ணனெதிரே வரக்கண்டுசிவனடியாரெனநினைத்து நமஸ்கரித்தவரும், சேரமான்பெருமாள் நாயனாரென்னும் பெயர் கொண்டவரும், சுந்தரமூர்த்தி நாயனாருடன் குதிரைமேற்சென்று கைலாசத்தை அடைந்தவரும் சிவபிரான் பாணபத்திரன் கையில் திருப்பாசுரமொன்றெழுதி யனுப்பப்பட்டவரும், திருக்கைலாசஞானவுலா பாடியவரும் இவரே. பிறர்கழறியவற்றை யறியுமறிவைச்சிவன்பாற் பெற்றவராதலினால் இவருக்குக் கழறிற்றறிவாரென்னும் பெயர் ஏற்பட்டது.
கழறுதல் - சொல்லுதல்.
கழற்காய் - கழங்கு.
கழற்கொடி - கர்ச்சூரம்.
கழற்சி-கழலுதல், கெச்சக்காய்ச்செடி.
கழற்சிங்க நாயனார் - சிவனடியார்களுளொருவர். இவர் காடவர் குலத்திலவதரித்தரசியற்றி வருங்காலத்தில் தமது மனைவியுந் தாமும் திருவாரூரிற்சுவாமிதரிசனம் பண்ணிக்கொண்டுசெல்லுகையில் மனைவியார்ஒரு புஷ்பத்தை எடுத்து மோந்த குற்றத்திற்காக அவர் கையை வாளாற் சேதித்துச் சிவனருள் பெற்றவர்.
கழற்சூபதம் - அதிவிடையம்.
கழற்பதி - பெருங்குமிழ்.
கழற்றல் - கழலப்பண்ணல், விலக்கல்.
கழற்றி - கழலுதல்.
கழற்றுதல் - கழலப்பண்ணல், நீக்கிக் கொள்ளல், விலக்கல்.
கழற்றுரை-கடிந்துபேசும்சொல்[வயல்
கழனி-சேறு, திரைச்சீலை, மருதநிலம்,
கழனியடுத்தவர் - உழவர், வேளாளர்.
கழனிலை - பொதுவியற்றிணைத்துறை பன்னிரண்டனு ளொன்று. அது கொல்லுமாறுபாட்டைப் பெருக்கும்

வீரர்படும் பூசலிற்கடிய முரணையுடைய வீரன் கழலைப் புனைவது.
கழாத்தலையார்-பரணர் காலத்திருந்த ஒருசங்கப்புலவர், இவர்சேரமான்குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன்வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் பொருதுகளத்தில் விழுந்து கிடந்தபோது அவ்விருவர் பெருமையையும் அவர்தேவியர்துன்பத்தையும் எடுத்துப் பாடியவர்.
கழாநிலம் - கழிநிலம்.
கழாயர் - கம்பங்கூத்தர்.
கழாய் - கழுகு.
கழாய்க்கூத்தர் - சிறுகீரை.
கழாலை - உவர்நிலம், கழிநிலம்.
கழி - உப்பளம், உப்பாறு, கயிறு, கழியென்னேவல், கொம்பு, கோல், செம்மெழுகு, நூர்சுருள், மிகுதி, மெழுகுவர்த்தி, யாழினரம்பு.
கழிகடை - அறக்கெட்டது.
கழிகணம்-ஒருவகைக் கணநோய். அது சீதஞ் சீதமாகவும், மலமாகவும், பாலைப்போலவும், சலஞ் சலமாகவும், பேதியாதல், உள்ளங்கை உள்ளங்கால்களிற் சீதளம், சிலவேளை காங்கையென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கழிகோல் - மிருகங்களைப் பிடிக்குங்கோல்.
கழிக்கரை - கழிமுகம்.
கழிக்கரைப்புலம்பல் - ஒருபிரபந்தம்.
கழிக்காரை - ஒருசெடி.
கழிசிறை - உறுப்புக்கேடி, நாடோடி.
கழிச்சல்-பெருக்கம்வயிறு பேதியாதல்.
கழிதல்-கடத்தல், சாதல், செல்லல், தீர்தல், நடத்தல், பிரிதல், போதல், மிகுதல், வயிறு பேதித்தல்.
கழித்தல்-தீர்த்தல், நீக்குதல், போக்குதல், விலக்கல்.
கழிநிலம் - உப்பளம், உவர்நிலம்.
கழிநெடிலடி-செய்யுளடிகளிலொன்று அஃது ஐஞ்சீரின் மிக்க சீர்களடுத்து நீட்டது
கழிநெடில் - ஒருகவி.
கழிபிறப்பு - முற்பிறப்பு.
கழிபோம்யாமம் - கடையாமம், கழிந்துபோம் யாமம், கழிந்து போகின்ற யாமம், கழிந்தயாமம்.
கழிப்பு-கணக்குவகை நான்கிலொன்று கழித்தல், குற்றம், தோஷந்தீர்க்குமோர் சடங்கு.
கழிப்புல் - ஒருபுல்.
கழிமாந்தம் - ஒருவகை மாந்தநோய்.
கழிமுகம் - ஆற்றுநீர்க்கழிவு.
கழிமுட்டான் - ஒருபுல்.
கழிமை - தள்ளுதல்.
கழியர்-உப்பளவர், நெய்தனிலமாக்கள்.
கழியல் - கழிக்கப்பட்டது, பிரிதல்.
கழியிருக்கை - நதிசூழ்ந்தவிடம்.
கழியுடல் - தசைகழிந்தவுடல்.
கழியூணன் - பெருந்தீனியன்.
கழிவாயநஞ்சன் - ஒரு பாம்பு.
கழிவு - இழிவு, உள்ளது சிறத்தல், கழிதல், சேஷம், தள்ளுபடியானது, நீங்குகை, பூரணம், மிகுதி.
கழிவுகணக்கு - ஒருவகைக்கணக்கு.
கழு - சமூகு, கழுமரம், சமூவென்னேவல், சூலம், புற்பற்றை.
கழுகண்டு - வணங்காத்தலையன்.
கழுகு - ஒருபறவை.
கழுகுழுத்தல் - நொதுநொதுத்தல்.
கழுக்கடை - ஈட்டி, சூலம்.
கழுக்களம் - கொலைக்களம்.
கழுக்காணி-குறளன், சோம்பேறி, தழுக்குணி, வயிரக்கட்டை.
கழுக்குன்றம் - செங்கற்பட்டுக்கருகிலுள்ள திருக்கழுக்குன்றம் என்னும் மஹாக்ஷேத்திரம்.
கழுசி - சீந்தில்.
கழுக்கிரையன் - கழுவேற்றப்படவேண்டியவன்.
கழுது-காவல், பரண், பிசாசம், வண்டு.
கழுதை - மூடன், வடமேற்றிசைப் பாலன்குறி, வாலேயம்.
கழுதைகடி - ஒருமூலை குறைந்தவீடு.
கழுதைக்கரணம் - பதினோர் கரணத்தொன்று.
கழுதைக்குடத்தி - கழுதைப்புலி.
கழுதைத்திசை - வடமேற்றிசை.
கழுதைத்தும்பை - ஒருதும்பை.
கழுதைமறி - கழுதைக்குட்டி.
கழுதைமுள்ளி - ஒருசெடி.
கழுதைவண்டு - ஒருவண்டு.
கழுதைவாகினி - மூதேவி.
கழுதைவிட்டை - கழுதைச்சாணி,

கழுதைவிரியன் - ஒருபாம்பு.
கழுத்தடி - தோண்மேல்.
கழுத்தல் - பொய்.
கழுத்து - கண்டம்.
கழுத்துக்குட்டை - கழுத்திற் கட்டுகிற சீலை.
கழுத்துக்கொடுத்தல்-ஒரு வரிக்கட்டில் முன்னிற்றல்.
கழுத்துப்பட்டை - அங்கியிலேறுருப்பு.
கழுத்துப்பொருத்தம் - மனப்பொருத்தம் பத்திலொன்று.
கழுத்துமுறித்தல்-ஒருவரைக் கெடுத்தியாதொன்றடைதல், ஒன்றைச்செய்யவேண்டுமென்று தொந்தரை பண்ணுதல்.
கழுநீர் - அரிசிகளைந்தநீர், ஆம்பல்.
கழுந்தா - கழுத்து.
கழுந்து - சூட்டம் முதலியவற்றின் கழுத்து, தேய்ந்து மழுங்கித்திரண்டவடிவம், பொருத்து, மாவைரம்.
கழுப்பற்றை - புற்றக்கை.
கழுமரம் - கழு.
கழுமலம் - சீகாழி.
கழுமல் - இணைத்தல், செழுமல், நிறைதல், பற்றுதல், மயக்கம், மிகுதி.
கழுமுதல் - இணைத்தல், கலச்குதல், நிறைந்திருத்தல், மயங்குதல்.
கழுமுள் - ஆயுதப்பொது. ஈட்டி, கழுமரம், சூலம், மாதளை.
கழுவல் - கழுவுதல்.
கழுவன் - பொய்யில் நிலைப்பவன், மிகுதுட்டன்.
கழுவாய்நிலம் - புற்றரை.
கழுவிநெய்யுருக்கி - கடியவள், கழுவிலேற்றிய பிணத்தில் நெய்யுருக்குவாள்: பிடித்த பிடிவிடாது சோலிபண்ணுகிறவன்.
கழுவுதல் - சுத்திபண்ணல்.
கழுவெளி - புற்றரை.
கழுவேறி - தழுக்குணி.

| | |
|---|---|
| கழுவேற்றல்<br>கழுவேற்றுதல் | } கழுவில் வைத்தல். |

கழை - கரும்பு, புநர்பூசம், மூங்கில், கோல்.
கழைக்கூத்தர் - கம்பங்கூத்தர்.
கழைக்கூத்து - கம்பங்கூத்து.
கழைதின்யானையார் - வல்லிலோரியைப்பாடிய ஒரு புலவர். இவர்தாம் ஊர்ந்து செல்கின்ற யானைக்குக் கரும்பே யுணவாகக் கொடுப்பவர், இக்காரணம்பற்றியே அப்பெயர்பெற்றார்.
கழைமுத்தம் - மூங்கிலிற்பிறந்த புகைநிற முத்து.
கள - களாச்செடி.
களகண்டபாலை - ஒருவகைச்சிலந்தி.
களகண்டம் - குயில்.
களகதுரோகம் - புரைக்குழல்.
களகம் - பெருச்சாளி.
களகம்பளம் - ஆட்டின்கழுத்தாரம்.
களகளத்தல் - ஈரடுக்காயொலித்தல்.
களகளப்பு - ஈரடுக்கொலிக்குறிப்பு.
களகளம் - பேரொலி.

| | |
|---|---|
| களகளெனல்<br>களகுளெனல்<br>களகொளெனல் | } ஈரடுக் கொலிக் குறிப்பு. |

களக்கடை - களவாய்.
களக்கட்டை - நெற்களத்தினடுங் கட்டை.
களக்கர் - புலையர், வேடர்.
களக்குக்கொளக்கெனல்- ஒலிக்குறிப்பு.
களங்கசத்துரு - ஈயமணல், மலை.
களங்கட்டி - ஒருமீன்.
களங்கம் - அடையாளம், களிப்பு, கறுப்பு, குற்றம், சிதாங்க பாஷாணம், நீலம், மாசு.
களங்கன் - சந்திரன், மாசுள்ளோன்.
களங்கம் - அடையாளம், இரசகுளிகை.
களங்கொள்ளல்-போர்க்களத்திற் கலத்தல்.
களசுவேதம் - அதிவிடையம்.
களஞ்சி - சூதபாஷாணம்.
களஞ்சியம் - பண்டகசாலை, பொக்கசசாலை.
களதபுதம்-கண்ணாடி, வெள்ளி.
களதம் - பெருச்சாளி.

| | |
|---|---|
| களதவுகம்<br>களதூதம்<br>களதௌதம் | } வெள்ளி. |

களதௌதேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
களத்திரகாரகன் - சுக்கிரன்.
களத்திரம்-குடும்பம், சென்மத்துக்கேழாமிடம், மனைவி.
களத்தூர்-செங்கல்பட்டுக்கருகில் ஓரூர்.
களத்தூர்கிழார்-கடைச் சங்கப் புலவர்களு ளொருவர். இவர் வள்ளுவர் குற

ளுக்குக் கொடுத்த சிறப்புக்கவியில் அக்குறள்வேதசாரமெனக்கூறினர்.
களந்தூரி } தான்றிக்காய்.
களந்தூன்றி }
களந்தை - களத்தூர்.
களபகத்தூரி-ஒரு வாசனைப்பண்டம்.
களபம் - கலப்பு, கலவைச்சாந்து,சுட்ட சாந்து, யானை, யானைக்கன்று.
களபிருந்தம் - ஒருவகை நோய். அது கழுத்தி னிருபக்கங்களிலுஞ் சதுரமாகவும் வட்டமாகவு முயர்ந்ததாகவுமிருக்கின்ற கெட்ட மாமிசத்தை வளர்விப்பது. அதனல் அக்கண்டத்துவார அடைப்பு, தாகம் சுரமென்னு மிக்குணங்க ளுண்டாகும்.
களப்பலி - யுத்தவீரர் செலுத்தும்பலி.
களப்பன்றி - பெருங்குமிழ்.
களப்பன்னை - ஒருசெடி.
களப்பாட்டு-போரடிக்கும்போது சொல்லுகிற பாட்டு.
களப்பாய் - கதிர்ப்பாய்.
களப்பிச்சை - விளைகளத்திற் கொடுக்கும்பிச்சை, விலக்கும்பிச்சை.
களப்பித்தம் - ஒருவகைப் பித்தநோய். அது குரல்வளைகம்மல், காந்தவாந்தி கழுத்துக்குள் புண்போ லிருத்தல், நாவில் வழுவழுப்புடன் வறட்டல், பாதத்தில் வீக்கம், காதிலிரைச்சல், சிவந்த மயிர்முளைத்தல், புறவிசிவென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது
களப்பு - கடலிடைப் பறவைத் திடர், கள்ளம். [தல்.
களப்புதல் - வேலைக் கள்ளம்பண்ணு
களப்பேச்சு - களரிபாஷை, சூடுமிதிகளத்திற் பயிலல்.
களப்பேறு - குடிமக்கள்படி.
களமம் - நெல்.
களமர்-அடியார்,உழுநர்,சூத்திரர், மருதநிலமாக்கள்.
களமளத்தல் - ஒலிக்குறிப்பு.
களம் - இடம், இருள், உள்ளம், ஒருர், கடலுண்மிகப் புத்தரை, கழுத்து, களா, களர், நிலம், கறுப்பு, நெற்களம், போர்க்களம், மனைவி, மிடறு, விடம்.
களம்பாடுதல்-போர்க்களத்தை வன்னித்தல்.
களரம் - காட்டுப்புரு, புரு.
களரி-அரங்கம், ஆயுதம், சூது, கூத்துப் பயிலிடம், கருமை, களர்நிலம், காடு, கூட்டம், பாழ்நிலம், போர்க்களம், மிடறு.
களரிகட்டுதல்-அவை யடக்கஞ்செய்தல்,கூத்தரை, மந்திரத்திறுற்கட்டல், நாடகசாலை, கட்டல்.
களரித்தட்டு - ஒருவித்தை. [தல்.
களரிக்கோழை - கவைக்குப் பயப்படு
களரியாவிரை - ஒருநூல். இது தலைச்சங்க காலத்திருந்தது.
களறியேறல் } அரங்கிலேறுதல்.
களறியேறுதல் }
களரிவிடல் } அரங்கிலேவிடுதல்.
களரிவிடுதல் }
களரிளமுலையீசர்-திருக்களரிற்கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
களர்-களர்நிலம், களாமரம்.
களர்நிலம் - உப்புநிலம்.
களர்மண் - உவர்மண்.
களவகத்திணை-அகப்பொருட்டுறையில் ஒன்று.
களவம் - கலப்பு, கலவைச்சேறு.
களவர் - கள்வர்.
களவழிநாற்பது - ஒரு பிரபந்தம். இது செங்கட்சோழன்,சேரமான் கணைக்காலிரும்பொறையைச் சிறைவைத்துழி அவனைச் சிறை விடுவித்தற்குச் சோழனைப் பொய்கையாராற் பாடப்பட்டது.
களவழிவாழ்த்து - பாடாண்டிணைத்துறை நாற்பத்தேழனுளொன்று. அது சிவந்த போர்க்களரியிடத்து வௌவிய செல்வத்தை ஆடற்பாட்டினை வல்லயாழ்ப்பாணர்சொல்லுவது [டு.
களவன்-கர்க்கடகவிராசி, கள்வன், நண்
களவாடல் } களவெடுத்தல், திருடல்.
களவாடுதல் }
களவாணி - களவாளி, திருடன்.
களவாளல் - களவாடுதல், திருடுதல்.
களவாளி - கள்வன், திருடன்.
களவித்திரதி - ஒருவகைப்பிணி. அது கழுத்து முற்றிலும் விரைவில் வீக்கத்தை யுண்டாக்குவது. அதனல் அதிக நோவும் பழுத்தாற் றுர்க்கந்தச் சீழு முண்டாகும்.

களவியல் - கள்ளப்புணர்ச்சி.
களவு - உன்மத்தம், களாச்செடி, திருட்டு. இஃது பஞ்சபாதகத் தொன்று, வஞ்சனை.
களவுதம் - வெள்ளி.
களவுப்புணர்ச்சி - காவுக்கூட்டம், காந்தருவமணம்.
களவேள்வி - வாகைத்திணைத் துறை முப்பத்திரண்டனுள் ஒன்று. அது கொல்லும் வலிவினையுடைய பேய் வயிறுற வுண்ணப்பரந்த வலியினை யுடையான் களவேள்வி வேட்டது.
களவொழுக்கம் - களவாய்ப் புணர்ந்து திரிதல், களவு.
களன் - இடம், உக்கிரம், உன்மத்தம், ஒலி, கழுத்து, கூட்டம், சபை, சிநேகம், போர்க்களம், மருதநிலம்.
களா - ஒருசெடி, களாநிலம், கறுப்பு.
களாகஸதீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
களாசம் - பிரம்பு.
களாசாத்திரம் - காமநூலி னொன்று, கொக்கோகம், மதன நூல்.
களாசி - படிக்கம்.
களாநிலம் - உப்புநிலம்.
களாபடனம்-தயாவிருத்தி பதினொன்கி னொன்று. அஃது கற்பித்தல்.
களாபதி - சந்திரன்.
களாப்பூக்கோரை - ஒருவகைப்புல்.
களாயகஞ்சவாதம்-ஒருவகைவாதநோய் அது சீதகாலத்திற் சீதளமாகிய பூமியில் மிகச் சஞ்சரிப்பதனாலும், சதா வுட்கார்ந்திருப்பதாலும், மிகு நித்திரையாலும்பிறந்து சகல கீல்களிலுந் தங்கியிருப்பது. அப்போது சரீரத்தில் நோவு, வீக்கம், எழுந்திருந்தால் நடுக்கம், நொண்டியைப்போல நொண்டுகை, கீல்களிற் பலமற்ற தளர்வு, திமிர், கனம் என்னு மிக்குணங்களுண்டாகும்.
களாவகம் - சிறுகீரை.
களாவதி - பாரனென்னு மிருடிக்குப் புஞ்சிகஸ்தலையென்னும் அப்சரசினுக்குப் பிறந்த புத்திரி. இவள் அழகைக்கண்ட பார்வதி அதிசயித்து இவளுக்குப் பதுமினி வித்தையை அருளிச்செய்ய இவள் அதுகொண்டு சுவரோசியை வசியஞ்செய்துமணம் புரிந்தாள். பதுமினி, வித்தைவிரும்பியதைக் கொடுக்குமொரு மந்திரம்.
களாவர்த்தவாதம் - கழுத்து நரம்புச்சுளுக்கு, ஒருவாதம்.
களார்புதம் - ஒருவகைநோய். அது நாவின் முடிப்பிலு மடிக் கழுத்திலும் நோவில்லாத வீக்கத்தை யுண்டாக்குவது அது திரிதோஷத்தாற் பழுக்காமலேஇருக்கும். ஒருவேளை பழுத்துடைந்தால் அதில் நின்றுங் குழம்பான இரத்தம் வடியும்.
களி-இறுகியபழச்சாறு,களிப்பு,களிப்புள்ளவன், களியென்னேவல், கள், குரூரம், குழம்பு, சீதம், நெருக்கு, செறிவு, பெருமை, மகிழ்ச்சி, மதம், மயக்கம், மாவாற்கிண்டியகளி, வெப்பு, வெறி.
களிகம் - வாலுளுவை.
களிகூறல் / களிகூறுதல் } அகங்களித்தல் களிப்பு மிகுத்தல்.
களிகை - கலிகை.
களிக்கண் - தட்டார் கருவியினொன்று.
களிக்காய் - தசைக்காய்.
களிக்குளம் - மலையாளக்கரையில் ஒரு பட்டினம்.
களிங்கன் - குடுமிக்கடுவன்.
களிச்சக்காய் - கெச்சக்காய்.
களிதம் - பெருங்கல், வழுக்கல்.
களித்தல்-இன்புறல், செருக்கடைதல் மதத்தல், மிகவுவத்தல்.
களித்துயில் - இன்பத்துயில்.
களித்துறை - இலங்கைத்தீவில் ஒரூர்.
களிநெஞ்சன்-கொடூரன், செருக்கன்.
களிப்பாக்கு - அவித்துக்காய்ந்தபாக்கு.
களிப்பு-இன்பம், உள்ளக்களிப்பு, செருக்கு, மகிழ்ச்சி, மதர்ப்பு, மயக்கம்.
களிமண் - பசைமண், களிப்புடைய [மண்.
களிமம் - எலி.
களிம்பு - குற்றம், துரு, மலினம்.
களிம்பூறல் - களிம்பேறல்.
களிபடைக்காய் - களிப்பாக்கு.
களியர் - நெய்தனிலமாக்கள், வெறியர்.
களியாட்டு - மதுவெறிபாட்டு.
களிவாய்கஞ்சன் - ஒருபாம்பு.
களிறிறம்பு - பனைத்திப்பிலி.

களிறு-அத்தநாள், ஆண்சுறு, ஆண்பன்றி, ஆண்யானை, யானை, விலங்கேற்றின்பொது.
களிற்றுடனிலை - தும்பைத் திணைத்துறையிருபத்து மூன்றனுளொன்று. அதுஒளியையுடைய வேல்படுதலான்வீழ்ந்த யானையின் கீழ்ப்பட்டது.
களுகொளெனல் - நழுநொழுத்தல்.
களுக்குக்களுக்கெனல் - ஒலிக்குறிப்பு.
களுசி - சீந்தில்.
களேபரம் - உடல், எலும்பு, பிணம்.
களை - அயர்வு, அழகு, ஒளி, கசியபன் தாய், கர்த்தமன் மகள், களையென்னேவல், காந்தி, குற்றம், தாளப்பிரமாணம் பத்தினொன்று, தேவகலை, புல், மரீசிமனைவி.
களைகட்டல் - களைபிடுங்கல்.
களைகட்டி - களையெடுக்குங்கருவி.
களைகண் - ஆதரவு, இரக்ஷகன், உதவி, தாவாரம், புகல், புகலிடம்.
களைகொட்டு - களைகோல்.
களைகொள்ளல் / களைகொள்ளுதல் } சோர்தல், தேவபத்திக்கடுத்த முக்குறியடைதல்.
களைகோல் - களைகளையுங்கருவி.
களைச்சத்தகம் - களைகளையுமாயுதம்.
களைஞர் - களைகளைப்பறிப்பார், வேலைக்காரர், மள்ளர், சண்டாளர்.
களைதல் - களைகட்டல், கொல்லல், நீக்குதல், விலக்குதல்.
களைதீர்தல் / களைதீர்த்தல் } சோகந்தீர்தல்.
களைத்தல் - இளைப்புறல்.
களைபறித்தல் - களைபிடுங்குதல்.
களைபோடுதல் - சோகம்போடுதல்.
களைப்பு - களைத்தல், சோகம்.
களைப்புல் - பயிருக்குட்புல்.
களையாறல் / களையாறுதல் } சோகநீங்குதல்.
களையாற்றல் / களையாற்றுதல் } சோகந்தீர்த்தல்.
களையேறல் / களையேறுதல் } களைகொள்ளுதல், சந்திரகளை வளரல்.
களைவாரி-களைசத்தகம், களைவாருவோன்.
களைவு - களைதல்.
களைவெட்டி - களைகட்டி.

கள்-ஒருவண்டு, களவு, கள்ளென்னேவல், சோர்வு, பன்மைவிகுதி, பொய், மது, மலர்த்தேன்.
கள்வர் - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய கார்வானத்திற் கோயில்கொண்ட விட்டுணு.
கள்வன் - கரியவன், கர்க்கடகவிராசி, குரங்கு, திருடன், நண்டு, முசு, யானை.
கள்ளக்கடன் - அநியாயவட்டிக்கு வாங்கல், மென்புரட்டு.
கள்ளக்கதவு - கள்ளவாயில்.
கள்ளக்கயிறு - சூத்திரக்கயிறு.
கள்ளக்கவறு கவறு, வஞ்சகச்சூது.
கள்ளக்கவி - திருட்டுக்கவி.
கள்ளக்களவு - ஒளிப்பு, மறைப்பு.
கள்ளக்காசு - செல்லாக்காசு, திருட்டு நாணயம்.
கள்ளக்காதுபடல் - குற்றினகாது பழுதுபடல்.
கள்ளக்காய் - கனற்றபழம்.
கள்ளக்கிடை - வஞ்சனையாகப் படுத்திருக்கை, பாசாங்குப்படுக்கை.
கள்ளக்கோலம்-இரண்டுக் குற்றசாயல், குணக்கேடானசாயல்.
கள்ளச்சரக்கு - திருட்டுச்சாமான்.
கள்ளச்சாதி - ஒருசாதியார்.
கள்ளச்சாமம் - நடுச்சாமம்.
கள்ளச்சி - திருடி, பூநீறு, பூவழலை, கள்ளச்சாதியாள்.
கள்ளச்சுரம் - விட்டுவிட்டுக் காயுங்காய்ச்சல், உள்ளே மறைந்துவரும் சுரம்.
கள்ளச்சொல்-திருட்டுப்பேச்சு, பொய்.
கள்ளஞ்செய்யல் - களவுசெய்யல்.
கள்ளத்தட்டு - தந்திரத்தட்டு.
கள்ளத்தனம் - திருட்டுத்தனம்.
கள்ளத்தீன் - திருட்டுணவு.
கள்ளத்தோணி - ஒரு ஓடம்.
கள்ளநீர் - புண்ணீர்.
கள்ளநேரம் - தூங்குநேரம்.
கள்ளப்பார்வை - அன்புநோக்கம், திருட்டுப்பார்வை.
கள்ளப்பால்-இடைதட்டில்வருவன.
கள்ளப்புணர்ச்சி-தந்தைதாயாரறியாது தலைவனுந் தலைவியுங் கூடல்.
கள்ளப்புருஷன் - சோரநாயகன்.
கள்ளப்பேச்சு - தந்திரப்பேச்சு.

கள்ளமனம் - வஞ்சகமனம்.
கள்ளம் - கபடம், களவு, குற்றம், புண்ணினுட் கள்ளம், பொய், வஞ்சகம்.
கள்ளம்பண்ணல் - சோர்வுபண்ணல்.
கள்ளர்பற்று - கள்ளச்சாதியரூர்.
கள்ளவிடல்-வேண்டியபடி செய்யாது விடல்.
கள்ளல்-களவுசெய்தல், கள்ளுண்ணல், வஞ்சித்தல்.
கள்ளவல்லியன் - ஒருசாதியான்.
கள்ளவாயில் - கள்ளவழி, திருட்டுவழி.
கள்ளவிலை - இரகசியவிலை.
கள்ளவெட்டு - கள்ளத்தனம்.
கள்ளவேலை - மாரீசமானவேலை.
கள்ளவேளை - நியமிக்கப்பட்ட நேரம்.
கள்ளறை - பெட்டகத்துள்ளறை.
கள்ளன்-ஒருசாதியான்,சோரன், திருடன்.
கள்ளாமை - களவுசெய்யாமை.
கள்ளாம்பல் - வெள்ளாம்பல்.
கள்ளி - ஒருமரம், திருடி.
கள்ளிக்காக்கை - செம்போத்து, ஒருகாக்கை.
கள்ளிக்கோட்டை - ஓரூர்.
கள்ளிச்சீட்டு - ஒருபறவை.
கள்ளிமடையான், கள்ளிமந்தாரை, கள்ளிமுளையான் } ஈழத்தலரி.
கள்ளில் ஆத்திரையனார் - ஒரு புலவர். இவர் ஆதனுங்கனைப் பாடியவர்.
கள்ளு - நீரிடாதபனைநீர், மது.
கள்ளுணி, கள்ளுண்ணி } கள்ளுண்போன்.
கள்ளுதல் - களவுசெய்தல், திருடுதல்.
கள்ளுண் - வண்டு.
கறகறத்தல் - அரிகண்டப்படுத்தல், சீக்கிரக்குறிப்பு.
கறகறப்பு-ஒலிக்குறிப்பு, மணங்கொள்ளாமை.
கறகறெனல் - ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.
கறங்கல்-ஒலித்தல், கழலல், பேய்,வளைதடி.
கறங்கு-கறங்கென்னேவல், காற்றாடி, கழற்சி, பம்பரம்.
கறங்குதல் - ஒலித்தல், சுழலல்.
கறங்கோலை - காற்றிற்சுழலும் ஓலை.
கறட்டி - உலர்ந்தகட்டி வறண்டகட்டம்.
கறட்டியோணன் - கரட்டோணன்.
கறட்டுக்கறட்டெனல்-கோழைகொண்டிழுத்தல்.
கறத்தல்-உறத்தல், கவருதல், பால்முதலிய பிதுக்கல்.
கறமன் - காய்ந்துவறண்டது.
கறமன் - விறகு.
கறவை - பாற்பசு.
கறவையான் - பாற்காரன், பாற்பசு.
கறளை - ஒருமரம், கருளை, குள்ளன்.
கறள் - கறை, துரு.
கறு - காடைக்குரல்.
கறுக்கி, கறுர் } வரையறை.
கறுளி-அடங்காக்குதிரை அடங்காமை.
கறுளை - வளர்ச்சியற்றது.
கறி - கடி, கறியென்னேவல், மிளகு.
கறிக்கரணை - ஒருசெடி.
கறிக்காய் - மிளகு.
கறிச்சுரை - ஒருவகைச்சுரை.
கறித்தல் - கடித்தல், புசித்தல்.
கறித்தும்பை - ஒருவிதத்தும்பை.
கறிப்பாலை - ஒருபாலை.
கறிப்புடல் - ஒருபுடோல், ஒருவண்டு.
கறிமசாலை - கறிச்சரக்கு.
கறிமுள்ளி - ஒருமுள்ளி.
கறியாமணக்கு - பறங்கியாமணக்கு.
கறியுப்பு - இலவணம்.
கறிவடகம் - வற்றல்.
கறு - கோபம்.
கறுகாய்ஞ்சொறி - ஒருசெடி.
கறுக்காய் - இளநீர்க்கயர், ஒருமரம்.
கறுக்கை - கோபித்தல்.
கறுத்தகாக்கட்டான் - ஒருகொடி.
கறுத்தப்பாசி - கறியமணி.
கறுத்தப்பூ - கருங்காக்கணம்செடி.
கறுத்தல் - கறுப்பாதல், கோபித்தல், மனக் குறைப்படுதல்.
கறுத்தவன்-கரியன், பகைவன்,விரோதி.
கறுத்தவுப்பு - காருப்பு.
கறுநாகம் - காரீயம்.
கறுப்பன்-ஒருதேவதை, கரியன், காரிநெல்,தொண்டைநாட்டில்மாவையம்பதியில்விளங்கிய ஒரு பிரபு. இவன் தந்தைபெயர்கஸ்தூரி தமிழ்நாவலர்களுக்குப் பொன்மாரி பொழிந்து பெரும்புகழ் படைத்தவன். தொண்

டைமண்டல சதகத்தைப் படிக்காசு ப்புலவரால் பாடுவித்தவனுமிவனே.
கறுப்பி - எவக்ஷாரம், கரியவன், கருவண்டு, காகநிமினை, மீனம்பர்.
கருப்பு - கருநிறம், கறை, கோபம், சினக்குறிப்பு, மனக்குறை.
கறுப்புக்கட்டல், கறுப்புக்கட்டுதல் - பயிர் கறுத்துண்டாதல், மழைக்கோலங்கொள்ளல்.
கறுப்புக்காய்ஞ்சொறி - ஒருசெடி.
கறுப்புக்கொள்ளல் - கோபங் கொள்ளல்.
கறுப்புச்சிலந்தி - ஒருவகைச் சிலந்தி. அது பட்டவிடத்தில் கறுத்தவீக்கமுண்டாய் இரணம்பிறக்கும். அதில் துர்க்கந்தத்துடன் நிறம் பேதமான இரத்தமுஞ் சீழும் வடிந்துக்கொண்டிருக்கும்.
கறுப்பெறிதல் - கறுத்தல்.
கறுமுதல் - சினக்குறிப்புக்காட்டல், சினத்தல்.
கறுமுறுத்தல் - சினத்தல்.
கறுமுறெனல் - ஒலிக்குறிப்பு, குறைசொல்லல்.
கறுமொறுத்தல் - மொறு மொறுத்தல்.
கறுமொறெனல் - கறுமுறெனல்.
கறுவம் - ஆங்காரம், சினம்.
கறுவல் - கரியவன், கருநிறம், சலஞ்சாதித்தல், சினக்குறிப்பு, சினக்குறிப்புக்காட்டல்.
கறுவா - இலவங்கமரம்.
கறுவாப்பட்டை - இலவங்கப்பட்டை.
கறுவித்தல் - சலஞ்சாதித்தல், ஆங்காரங்கொள்ளுதல்.
கறுவியம் - கறுவித்தல், வைராக்கியம்.
கறுவிருளை - கருங்காக்கணம்.
கறுவு - கறுவென்னேவல், சலஞ்சாதித்தல், சினக்குறிப்பு, சினம், தணியாத கோபம்.
கறுவுதல் - சலஞ்சாதித்தல்.
கறுழ், கறுள் - கடிவாளம்.
கறேரெனல் - ஒலிக்குறிப்பு, கருமை, நிறக்குறிப்பு, விரைவின் குறிப்பு.
கறை - இருள், உதிரம், உரல், கருங்காலிமரம், கறள், கறுப்பு, குடியிறை, குற்றம், நஞ்சு, நிறம், மாசு, கடமை.
கறைக்கட்டுதல் - கறள்பிடித்தல்.
கறைச்சூலை - ஒருவகைச்சூலை. அதுஉதிரம் வாங்கித் தோலைப் பற்றுவதனாலும், பற்றியது. நரம்பின் துவாரத்தில் தடைப்பட்டுத் தங்குவதனாலும் பிறந்து கீழ்முதுகை அனுசரித்து நின்று அவ்விடத்தில் மிக்கவலி, கைகால் உளைவு, அறிவுந் தேஜசுமழுங்கல் என்னுமிக்குணங்களை யுண்டாக்கும்.
கறைபிடித்தல் - கறள்பிடித்தல்.
கறைபோக்கி - சவுக்காரம், உவர்மண்.
கறைப்படல், கறைப்படுதல் - குற்றப்படுதல்.
கறைப்போக்கன் - கீழ்மகன், இழிந்தகுலத்தவன்.
கறைப்போக்கு - கீழ்மை.
கறைமிடற்றிறை, கறைமிடற்றோன் - சிவபெருமான்.
கறையடி - யானை.
கறையான் - சிதல்.
கறையான்புற்று - வன்மீகம், செல்.
கறையான்மேய்தல் - கறையான் கட்டுதல், செல்பிடித்தல்.
கற்கசகாரன் - கடினமுள்ளோன், சுறுக்கிளகாதவன்.
கற்கசம் - உத்தாமணி, கடினம், குரூரம், பிசுனம், பிரயாசம்.
கற்கசர் - உலோபிகள், கடினர், கீழ்மக்கள், அற்பர்.
கற்கடகசரம் - தேள், நண்டுவாய்க்காலி.
கற்கடகக்கை - கூத்திஞோர், வகைக்கை. அது தெரிநிலைக்கை யிரண்டு மங்குலிபிணைந்து வருவது.
கற்கடகசிங்கி - கடுக்காய்ப்பூ.
கற்கடகபாஷாணம் - விளைவு பாஷாணமுப்பத்திரண்டினொன்று.
கற்கடகம் - ஓரிராசி, தாமரைநூல், நண்டு.
கற்கடகவைரி - குரங்கு.
கற்கடி - ஒரு அரக்கி.
கற்கண்டம் - கற்பார்.
கண்கண்டு - கறுப்புக்கட்டி.
கற்கபலம் - மாதுளை.
கற்கம் - இலுப்பைப்பூ, ஒருசரக்கு, தாமரை, கிட்டை, பலவகை கூடிய மருந்து, பாதம், மருந்தின்பொது.
கற்காம் - மத்து.
கற்கரி - கரகம், தயிர்கடைதாழி, மத்து.

கற்கரிகை - சதங்கை.
கற்கருசிலே - ஒருபூடு.
கற்கனல் - கல்மதம்.
கற்கா - கொடுந்தமிழ்நாட்டி னொன்று.
கற்காணம் - கருஞ்சீரகம், கற்செக்கு.
கற்காண்டல் - பொதுவியற்றிணைத்து றைபன்னிரண்டனுளொன்று.அது அமையாத வெற்றியையுடைய பூசலிற் பட்டோற்குக் காட்டில் நீண்ட விடத்துக் கல்லைக்கண்டது.
கற்காமி - கன்மதம்.
கற்காரம் - கல்லக்காரம், காரக்கல்.
கற்காரு - அகில்மரம், கற்காரம்.
கற்காவி - காரக்கல்.
கற்கி-குதிரை, திருமா லவதாரத்தொன்று, தேவர்கோயில், கோட்டம்.
கற்கிச்சா - சாவாக்கியங்களிெனொன்று.
கற்கிணறு - கல்லுக்கிணறு.
கற்கிமண்டலம் - உத்தரவீதிக்கடை.
கற்கியவதாரம்-விஷ்ணுவினது தசாவதாரங்களுட் கடையவதாரம், இது கலியுகாந்தத்திற் சம்பள கிராமத்தில் விஷ்ணு அம்சமாயுள்ள ஒரு பிராமணனுக்கு விஷ்ணுபுத்திரராகப் பிறந்து கற்கி என்னும் பெயருடையராய் வழுவிய தருமங்களை நிலைநிறுத்துவது.
கற்கு - கற்கடகவிராசி.
கற்குடல்-ஒருவிதநோய்க்குடல், மந்தக் குடல், வலியகுடல்.
கற்குளித்தல் - இரத்தினங்குளித்தெடுத்தல்.
கற்கொத்தி கற்பொறுக்கிப்புரு.
கற்கோடன் - கார்க்கோடன்.
கற்கோணநிலை-பொதுவியற்றிணைத்துறைபன்னிரண்டனுளொன்று,அது பூமிமயங்கப் பறையொலிப்பச் சுவர்க்கத்திலே பொருந்தின வனுக்குக் கல்லினைக்கொண்டது.
கற்கோவை - கருடன்கிழங்கு.
கற்சத்து - கல்நார்.
கற்சம் - யானைபிளிறொலி.
கற்சரீரம் - வயிரச்சரீரம்.
கற்சவளை - கற்சத்து.
கற்சனம்-கோபம், தொனி, முழக்கம், யுத்தம், சண்டை.
கற்சாகம் - மரகதம்.
கற்சாடி - கல்லினற்செய்த பாத்திரம்.
கற்சிறை - கல்லாற் கட்டினகரை.
கற்சிற்பன் - சிற்பன்.
கற்சுண்ணம்பு - கன்னீறு.
கற்சுவர் - செங்கல் காட்டுக்கல் இவற்றால் செய்யப்பட்ட சுவர்.
கற்சூரம் - கழற்கொடி, பேரீந்து.
கற்சூலை - ஒரு சூலைநோய்.
கற்பகக்கரம் - கோழித்தலைக்கெந்தகம்.
கற்பகச்சோலை-இந்திரன் நந்தவனம்.
கற்பகத்திணை - அகப்பொருட் டுறையி னொன்று.
கற்பகத்தீசுவரர் - திருவலஞ் சுழியிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
கற்பகம் - ஐந்தருவினொன்று. அஃது வேண்டிற்றெல்லாந் தருமரம், புளியாரை, விநாயகன், தாலமரம்.
கற்பகவல்லித்தாயார் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருக்கடித் தானத்திற் கோயில்கொண்ட இலக்குமி.
கற்பகவல்லியம்மை - திருமயிலையில் கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
கற்பகன் - சௌளகன்.
கற்பகேசுவரர் - திருக்கடிக் குளத்திற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
கற்பகோளகை - கருப்பப்பை.
கற்பஞ்சாதித்தல் - காயசித்திக்கு மருந்து சாதித்தல்.
கற்படி - எறும்படி.
கற்படுத்தல் - செங்கற்பதித்தல்.
கற்படை - கற்படுத்தநிலம், கோட்டையிற் கள்ளவழி.
கற்பதரு - கற்பகவிருட்சம்.
கற்பதித்தல்-இரத்தினமழுத்தல், கல்லழுத்தல்.
கற்பதுருமம்-கற்பதாரு, ஒரு சம்ஸ்கிருதநூல்.
கற்பநிதி-குபேர னவநிதியி னொன்று.
கற்பபாதபம் - கற்பகவிருட்சம்.
கற்பம்-அற்பம், ஆயிரங்கோடி, இரண்டிரவுமொருபகலுங்கொண்டது, உலகமுடியுங்காலம், கஞ்சா, கருப்பம், சித்தர்கள்மருந்து, தேவலோகம், நவநிதியிலொன்று, நிண்ணயம்பிரமனுய, பிரமனேர்நாள், புளியாரை, மந்திரசாத்திரம், மூப்புவராமற்செய்யுமருந்து, வேதாங்கமாறினொன்று.

கற்பரன் - வெள்ளைப்பாஷாணம். [து.
கற்பரிபாஷாணம் - அதம்பம், ஒருமருந்
கற்பலகை - எழுதும்பலகை.
கற்பழிதல் - கற்புக்கெடுதல்.
கற்பழியாதபெண் - கன்னிகை.
கற்பற்று - கிட்டக்கல்.
கற்பனை - இல்லதை யுள்ளதாயுண்டு பண்ணல், கடிப்பு, கட்டளை, கல்வி, கற்பிப்பு, சாதுரியம், நிருணயம், பாவனை, புனைந்துரை, விதிப்பு.
கற்பனைகடந்தோன் - கடவுள், மஹா தேவன்.
கற்பாசி - ஒருமருந்து.
கற்பாஷாணம் - ஒருமருந்து.
கற்பாடு - கல்லுள்ளவிடம்.
கற்பாட்டி - கற்புடையாள்.
கற்பாந்தம் - உறுதியாயிருப்பது, கற்ப முடிவு.
கற்பாரியம்-சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.
கற்பார்-கல்லுப்பார், சிற்பநூன்முப்பத் திரண்டினொன்று.
கற்பார் - கல்லுப்பார், கல்விகற்போர்.
கற்பாலவணம் - சிந்துலவணம்.
கற்பாவுதல் - கற்படுத்தல்.
கற்பாழி - மலைக்குகை.
கற்பாளி - கல்லலை.
கற்பாறை - சன்னிலம், கல்லுப்பாளம்.
கற்பிதம்-அலங்கரிப்பு,கட்டளை,நியமம், பாவனை, போர்யானை, விதிப்பு.
கற்பித்தசொல் - ஆக்கச்சொல், நியமிக் குஞ் சொல்.
கற்பித்தல் - உண்டாக்கல், கட்டளையி டல், நியமித்தல், படிப்பித்தல், வி தித்தல், ஏற்படுத்தல்.
கற்பியல் - கற்பொழுக்கம்.
கற்பிரம் - கல்லாரை.
கற்பிலக்கணம்-கற்புநடை, அது உள்ள மகிழ்ச்சியு மூடலு மூடலுணர்த்த லும் பிரிவும் பிறவுமாம்.
கற்பிற்கிளவித்தொகை-பரத்தையிற் பி ரிவு முதலாகப் பொருள்வயிற் பிரி வீறாம்.
கற்பு-கல்வி,கற்பனை, நீதிநெறி, மகளிர் நிறை,மதிலுண்மேடை, மதில், முல் லைக்கொடி, முறைமை, விதி.
கற்புடைமகளிரத்தியாயம் - காசிகாண் ட மென்னும் நூலில் ஒருபாகம்.
கற்புடைமை - ஒருமையுடைமை.
கற்புப்பலித்தல் - கற்புச்சித்தித்தல்.
கற்புமுல்லை - பொதுவியற் றிணைத்து றை பனிரண்டனு ளொன்று. அது பொன்போலிலங்கு சுணங்கினையும் பொலிந்த கண்ணினையுமுடைய மட ந்தை நன்மையறியுங் கொழுநனு டைய நன்மையைப் பெருகச்சொல் லுவதும், பொருந்துதலமைந்தகொ ழுநன் நீங்கத் தன்னிடத்துக் காவ லைச் சொல்லுவதும், செல்வம் பெ ருகும் அழகியமாளிகையிலேசேர்ந்த கணவன் றன்பெரிய செல்வத்தை வாழ்த்துவதுமாம்.
கற்புரம் - பொன்.
கற்புழை-கல்வளை, கோட்டையிற் கள் ளவழி.
கற்பூ - கல்லாரை, கற்றாமரை.
கற்பூசரம் - நாகமலை, செங்கோடு.
கற்பூமி - கல்லுநிலம்.
கற்பூரசத்து - கருப்பூரச்சிலை.
கற்பூரபாண்டியன் - குங்கும பாண்டிய னுக்குப்பின்முடிதரித்தபாண்டியன்
கற்பூரம்-கருப்பூரம், பொன்னுங்காணி.
கருப்பூரவல்லி } ஒருபூண்டு.
கற்பூரவள்ளி }
கற்பேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெ ட்டனுளொன்று.
கற்பை - படிக்கல்லுப்பை.
கற்பொடி - அன்னபேதி.
கற்பொறுக்கி - ஒருபுள்.
கற்போன் - மாணுக்கன்.
கற்றசை - வாடாத்தசை.
கற்றச்சன் - கற்சிற்பன்.
கற்றடிவிரியன் - ஒருபாம்பு.
கற்றலைமீன் - ஒருமீன்.
கற்றல் - படித்தல், பழகுதல்.
கற்றவர் - புலவர், அறிவுடையார்.
கற்றறிமூடன் - கற்றும் மதியீனனாயி ருப்பவன்.
கற்றறிவு - படிப்பினால்வருமறிவு.
கற்றா - இளக்கன்றுப்பசு.
கற்றாமரை - ஒருதாமரை.
கற்றார் - அறிஞர், படித்தோர்.
கற்றாழை - ஒருசெடி.
கற்றானை - காவிப்புடவை.
கற்றீட்டு - கன்மதம்.
கற்றுக்குட்டி - படிக்கும்பிள்ளை.

கற்றுச்சொல்லி-சிறுகவிஞன், துணைச் சொல்லுச் சொல்வோன்.
கற்றூண் - கல்லாலாயதூண்.
கற்றேக்கு - ஒருமரம்.
கற்றை-கதிர்த்தொகுதி, மயிர்த்தொகுதிபோல்வன, கூட்டம்தென்னோலை முதலியவற்றின் முடையுங்கற்றை.
கற்றொட்டி - கல்லினாற்செய்த நீர்த் தொட்டி.
கற்றோர் - அறிஞர், கலைஞர், புலவர்.
கற்றோர்நவிற்சியணி-மிகுதிக்குக் காரணமாகாததை அதற்குக் காரணமாகச் சொல்லுவது.
கனஅப்பேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கனகக்கொடியோன் - கன்னன்.
கனகசடம் - ஐந்தவர் பிறந்தவூர்.
கனகசபை - பஞ்ச சபையி னொன்று பொன்னம்பலம், அது சிதம்பரம்.
கனகதண்டிகை - பொற்சிவிகை.
கனகதப்பட்டை - ஒரு வாச்சியம்.
கனகதம் - ஒட்டகம்.
கனகதர் - சண்டாளர், புலைஞர்.
கனகத்துவசன்-துரியோதனன் றம்பியருளொருவன்.
கனகபரிட்சை - கலைஞான மறுபத்தி நான்கினொன்று.
கனகமாலை - சீவகன் மனைவியருளொருத்தி.
கனகமிளகு - வால்மிளகு.
கனகம் - பொன்.
கனகரசம் - அரிதாரம்.
கனகலம் - ஒருதலம்.
கனகவிசயர்-ஆசிரிய மன்னனாகிய பாலகுமாரன் புதல்வர். இவர்செங்குட்டுவனால் வெல்லப்பட்டவர்.
கனகனசங்கிலிதம் - கனமாகிய வீரெண்ணின் பெருக்கம்.
கனகன் - இரணியன், பொன்னிறமுடையோன்.
கனகாகுவயம் - ஊமத்தை.
கனகாங்கி - முதல் மேளகர்த்தா.
கனகாசம் - கண்ணிமைோர் நோய்.
கனகாசலம் - மகாமேரு, பொன்மலை.
கனகாசனம் - பொன்னாசனம்.
கனகாபிஷேகம் - பொன்னபிஷேகம்.
கனகாமிரதம் - வெள்ளி.
கனகாரியம் - ஊமத்தை.

கனகாலுகை - பொற்கண்டி, பொன்னாரம்.
கனகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனுளொன்று.
கனகோஷேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கனங்காய் - ஒருமரம்.
கனசங்கலிதம்-சமமாகிய மூவெண் பெருக்கத்தைக் கூட்டியது.
கனகரசம் - இரசம், நீர்.
கனசாரம் - கருப்பூரம்.
கனசாரி - மிகுதி.
கனசியாமன் - விட்டுணு.
கனட்டி, கனட்டு - சிறுவயல்.
கனதண்டி - கனமுள்ளது.
கனதி-இறுமாப்பு, கனம், பாரம், பெருமை.
கனதிக்காரன்-பெருமைக்காரன்.
கனத்தநாள் - தாக்குக்கொண்டநாள்.
கனத்தல் - நெருங்கல், பாரங்கொள்ளுதல்.
கனத்தி - வைப்பரிதாரம்.
கனநயதேசியங்கள் - இராகபேதம்.
கனபலம்-அகலம், கனம், நீளம், மூன்றையும் பெருக்கிவருவது.
கனபுடம் - நூறெருப்புடம்.
கனப்பு - அழுத்தம், இறுமாப்பு, கொழுப்பு, தடிப்பு, பாரம், விறைப்பு.
கனப்புக்காட்டல் - கனத்தல்.
கனமதுவாய் - பலவாக.
கனமழை, கனமாரி - பெருமழை.
கனமூலம் - கனத்தொகையினின்று அதின் மூலமாகிய ஒரு கோணமறிதல்.
கனம்-அகலம், இசைவிகற்பம், இரசம், ஈயம், கூட்டம், கோரைக்கிழங்கு, சங்கை, சமமாகிய மூவெண்ணின் பெருக்கம், சீர்மை, செறிவு, நிறைவு, பருமை, பாரம், பெருமை, பொன், மிகுதி, மேகம், வட்டம், வன்மை.
கனம்பண்ணல், கனம்பண்ணுதல் - சங்கித்தல்.
கனம்பாடல், கனம்பாடுதல் - சுரம் பாடுதலில் ஒன்று.
கனரசம் - ஒருமழை.
கனருசி - மின்னல்.
கனலல் - எரிதல், காய்தல், சூடுகொள்ளுதல்.

கனலி - கள்ளி, கொடுவேலி, சூரியன், நெருப்பு, பன்றி.
கனலுதல்-எரிதல், காய்தல், சூடுகொள்ளுதல்.
கனலொழுங்கு - தீத்திரள்.
கனல்-உட்டணம்; கனலென்னேவல், நெருப்பு, பிரபை.
கனல்நிறக்கல் - செம்புக்கல்.
கனல்நிறம் - மாணிக்கம்.
கனல்பேதி - சாத்திரபேதி.
கனல்மரம் - சோதிமரம்.
கனவட்டம்-குதிரை, பாண்டியன் குதிரை.
கனவான்-கணிசவான், மதிப்புடையோன்.
கனவிரதம் - நீர்.
கனவினரற்றல் - கைக்கிளைத் திணைத் துறைப் பெண்பாற்கூற்று பத்தனுளொன்று. அது ஒள்ளியவளையினையுடைய தலைவி அஞ்சுதல் பொருந்திய இரவுப்பொழுதிடத்துக்கண்ட தலைவன் ஒளிப்பக் கனவின் கண் வாய்விட்டுப் புலம்பியதையும், இட்டவளையினையுடையாள் தலைவனோடு விரும்பிய இரவுப்பொழுதுவரிற் பிழைப்பேனெனச் சொல்வதையுங் கூறுவது.
கனவீனம் - பாரக்குறைவு, மகிமைக்குறைவு.
கனவு - கனா, நித்திரை, மயக்கம்.
கனவுநூல் - கனாவின்பலனறியும்நூல்.
கனவுமூலி - மூங்கில்.
கனறல் - கடுப்பு, கனற்றுதல், சினக்குறிப்பு.
கனற்கூர்மை - வளையலுப்பு.
கனற்சி - சினம், வெப்பம், கோபம்.
கனற்சிலை - மந்தாரச்சிலை.
கனற்சுக்கிரன்-ஒருவகைக் கண்ணோய், அது விழியில் நோவையுமுள்ளிலனற்போற் காந்தலையுமுண்டாக்குவது.
கனற்பு - அடுப்பு.
கனற்றல் } எரிதல், காயப்பண்ணல்.
கனற்றுதல் }
கனனத்தம்பம் - கலைஞான மறுபத்து நான்கினொன்று.
கனனம் - கிண்டல், புதைத்தல், விழுதல்.
கனன்றல் - கனலுதல், சினக்குறிப்பு.

கனா - கனவு.
கனாகரம் - கார்காலம்.
கனாசிரயம் - ஆகாயம்.
கனி - கனியென்னேவல்; தித்திப்பு, நிரசவஸ்துக்கள் பிறக்குமிடம், பழம், முதிர்ந்தபழம்.
கனிகரம் - அன்பு.
கனிகை - கனிதல்.
கனிக்காய் - உதாயக்காய்.
கனிஷ்டம் } அழகு, கடைவிரல், சிறுமை.
கனிட்டம் }
கனிட்டர்-கீழ்மக்கள், பின்பிறந்தோர்.
கனிட்டன் - கீழ்மகன், பின்னோன்.
கனிட்டிகை - கடைவிரல்.
கனிட்டி-கடைவிரல், பின் பிறந்தாள்.
கனிதல் - இரங்கல், உருகல், கரைதல், கோபித்தல், சினக்குறிப்பு, நைதல், பழுத்தல், புதைத்தல், பெருங்கோபம், மனங்களித்தல்.
கனித்திரம் - மண்வெட்டி.
கனித்திரன் - பிரஜானன் புத்திரன். க்ஷபன் தந்தை, விவிம்சன்பாட்டன். இவன் தம்பிகள் இவனைக் கொல்லுமாறு ஒரு யாகத்தினின்று மோர் பூதத்தை யெழுப்பிவிட அஃது அவனைக் கொல்ல வியலாது திரும்பிவந்து ஏவினோரையேகொன்றது. விவிம்சன்புத்சிரன், இவன்மகன் கரந்தமன்.
கனிந்தசொல் - இனியசொல்.
கனியாமணக்கு - ஓராமணக்கு, டப்பாமரம்.
கனிவாய் மொழியம்மை - திருவெண்பாக்கத்திற் கோயில்கொண்டிருக்குந்தேவியார்.
கனிவு - அன்பு, இரங்குகை, முதிர்வு.
கனீயசம் - செம்பு.
கனீனிகை - கண்ணின் கருவிழி.
கனுகுபினுகெனல் - மனங்கனிந் தின்புற்றிருத்தல்.
கனுக்கு-கனுக்கென்னேவல், சந்தத்திலசைப்பு.
கனுக்குதல் - குறைத்தல், சந்தத்திலசைத்தல், சிதைத்தல்.
கனுக்குப்பினுக்கு - அதிக பரிமளிப்பு, ஒலிக்குறிப்பு.
கனை - ஒலி, கனையென்னேவல், செறிவு, சிறைவு, நெருக்கம்.

கனைகதிர்ச்செல்வன் - சூரியன்.
கனைக்கல்
கனைக்குதல் } ஆரவாரம், ஒலித்தல்.
கனைதல் - கூடுதல், நெருங்கல்.
கனைத்தல் - ஆரவாரித்தல், ஒலித்தல், குதிரை முதலிய வனுமானித்தல், கொக்கரித்தல், சிரித்தல்.
கனைப்பு - கனைத்தல்.
கனையிருள் - அதிகவிருள், முற்றிருள்.
கனைவரிவண்டு - ஒருவண்டு.
கனைவு - நெருக்கம்.
கனோபலம் - ஆலாங்கட்டி.
கன்-கல், சிறுதராசுத்தட்டு, வெண்கலவேலை.
கன்கலேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனுளொன்று.
கன்பாயாநாடு - ஓரூர்.
கன்மகாண்டம் - ஒரு வைத்தியநூல், கன்மநிவர்த்தி சொல்லும் நூல்.
கன்மசண்டாளன் - மாபாதகன்.
கன்மசாதாக்கியம் - சிவசாதாக்கிய தத்துவ மைந்தினொன்று.
கன்மசாந்தி - கன்மநிவர்த்தி.
கன்மஷம்
கன்மடம் } அழுக்கு, ஈயம், கறள், பாவம்.
கன்மடி - காய்மடி.
கன்மதம் - கல்மதம்.
கன்மதான்மியம்-சரீரத்தி லகங்காரங்கலத்தல்.
கன்மத்துரோகி - சண்டாளன்.
கன்மநிவர்த்தி - பாபப்பிராயச்சித்தம்.
கன்மபரிபாகம் - கன்மத்தொலைவு, சத்திநிபாதமலம்.
கன்மபூமி - கருமபூமி.
கன்மம்-இருவினை, செய்தொழில், தீவினை, பாவம்.
கன்மரோகம்-சென்மாந்திர நோய், தீராநோய்.
கன்மலி - ஏலம்.
கன்மவலை - இலவுகீக மயக்கு.
கன்மவியாதி-முற்பட்ட சென்மநோய் தீராநோய்.
கன்மழை - கல்லர்கவருஷிக்குமழை.
கன்மாடபாதன்-மித்திரசகன். இவன் வேட்டையாடச்சென்றபோது ஒரிராக்கதனைக் கொன்று சென்றான். அதற்குப் பழிவாங்கு நிமித்தம் அவ்விராக்கதன் தம்பி பரிசாரக வேடந்தரித்து இம்மித்திரசகனிடம்போய் இவன் மடைப்பள்ளிக் கதிபனானான். ஒருநாள் வசிஷ்டர் இவ்வரசன் மனைக்கு விருந்தினராய்ப்போக அப்பரிசாரகன் ஒரு நரனைக்கொன்று அம்மாமிசத்தைப் பாகஞ்செய்து முனிவர்க்கிட முனிவர் அதுகண்டு சினந்துஅரசனைராக்ஷசனுகவென்று சபித்தார்.அரசன் தன்மீது குற்றமில்லாதிருக்கச் சபித்தவருக்குப்பிரதிசாபமிடத்துணிந்து கையி னீரையெடுக்க மனைவி கண்டு தடுத்தாள். அப்படித் தடுத்தலும் அந்நீரைத் தனது பாதத்தில்விட கன்மாஷபாதனாயினான். அதுகண்ட வசிஷ்டர் உண்மையுணர்ந்து ஈராண்டிற் சாபவிமோசனமாகவென் றனுக்கிரகித்தார்.
கன்மாதி-தென்புலத்தோர் கடன், நித்தியகன்மம்.
கன்மாதிகன் - கடன்செய்வோன்.
கன்மாந்திரம் - தீக்கடன் முதலியன, பாவம்.
கன்மி - கிரியைக்காரன், பாவி.
கன்முதிரை - ஒரு முதிரைமரம்.
கன்முரிசு - ஒருமரம்.
கன்முறைபழிச்சல்பொதுவியற்றிணைத்துறை பன்னிரண்டனுளொன்று. அது நிழல்விடும் அழகிய மணிப்பூணினையும் வீரக்கழலையுமுடைய போர் விருப்பத்தோனுடைய கல்லினையேத்துவன்.
கன்மேந்திரியம்-கிரியைக்குரியபொறி அவை உபத்தம், பாணி, பாதம், பாயுரு, வாக்கு என்பன.
கன்மொந்தன் - ஒருவாழை.
கன்றமராயம்-கன்றுகள் மேவிய பிடித்திரள்.
கன்றல்-கோபித்தல், கடுப்பு, கன்றினது கன்றுதல், சினக்குறிப்பு.
கன்றீனல் - கன்றுபோடல்.
கன்று-அற்பம், இளமரம், எருமை ஒட்டை, கடமை, கவரி, காட்டா, குதிரை, பசு, மரை, மான், யானை, யிவற்றின்குட்டி, கன்றென்னேவல், கைவளை, மாக்கன்று.
கன்றுகாலி - மாடு கன்று முதலியன.

கன்றுகொல்லி - பசுநோயினொன்று.
கன்றுதல்-இரங்கல், கன்றல், கோபித்தல், நைதல், பதனழிதல், விசனப்படல்.
கன்றுத்தாய்ச்சி - கன்றுண்டான பசு, சூற்பசு.
கன்றுபடல் - சினைப்படல்.
கன்றுபுக்கான் - ஒருபூடு.
கன்னகடூரம் - காதால் கேட்கப்படாத கொடிய வார்த்தை.
கன்னகண்டு - காதசுருணி.
கன்னகம் - கன்னக்கோல்.
கன்னகூதம் - குறும்பி.
கன்னக்காரன் - கள்வன், கன்னமிடுகிறவன், திருடன்.
கன்னக்கிரந்தி-கன்னத்தில்வரும் ஒருவகை நோய்.
கன்னக்கோல் - சுவரகழ்கருவி.
கன்னங்கரியது - மிகக்கரியது.
கன்னங்கரேரெனல்-மிகுகறுப்பின் குறிப்பு.
கன்னசூலை - ஒருநோய்.
கன்னடகவுளம் } ஒருபண்.
கன்னடகௌளம் }
கன்னடம் - ஒருகூத்து, ஓரிராகம், ஒருபாஷை, சாதிநான்கினொன்று, தேயமைம்பத்தாறினொன்று.
கன்னடியம் - ஒருதேசம், ஒருபாஷை.
கன்னடியர் - ஒருசாதியார்.
கன்னடுதல் - பொது வியற்றிணைத்துறை பன்னிரண்டனுளொன்று. அது வீரன் நாமத்தைக் கல்லிலேயெழுதி அழகுபெறக்கல்லை நட்டதைக் கூறுவதாம்.
கன்னத்தட்டு - தராசுத்தட்டு.
கன்னபரம்பரை - கன்னபாரம்பரை.
கன்னபாகம் - காது.
கன்னபாரம்பரியம் } வாக்கு மூலமாய் வழங்குவது.
கன்னபாரம்பரை }
கன்னபூஷணம் - காதணி.
கன்னபூரம் - அசோகு, காதணியினொன்று, காது, நீலோற்பலம்.
கன்னப்பரிசை - கீழலகு.
கன்னப்பிளவை - ஒருசிலந்தி.
கன்னப்புற்று - கன்னக்கிரந்தி.
கன்னப்பூ - ஒரு காதணி.
கன்னப்பொறி-காதினருகான பொறி, கேள்விமூலம்.
கன்னமதம்-காதில்வடியும் நீர், யானைமதத்தினொன்று.
கன்னமலம் - குறும்பி.
கன்னமிடல் } களவெடுத்தல், சுவரகழ்தல், திருடுதல்.
கன்னமிடுதல் }
கன்னமீசை - கன்னத்தின்மீசை.
கன்னமூலம் - காதினடி, காது.
கன்னம்-அறுகு, கதுப்பு, கன்னக்கோல், காது, கிரகமார்க்கவளவு, தராசு, தராசுத்தட்டு, நரம்பு, பொற்கொல்லன், யானைச்செவி.
கன்னர்-செங்குட்டுவனுக்கு நட்பினராகிய ஆரியவரசர். இவர் நூற்றுவர்.
கன்னல்-காகம், கரும்பு, சருக்கரை, நரம்பு, நாழிகை, நாழிகைவட்டில்.
கன்னவகம் - சிறுகீரை.
கன்னவேதம் } காதுகுத்துதல்.
கன்னவேதனம் }
கன்னவேதை }
கன்னற்கட்டி - கற்கண்டு.
கன்னன்-அங்கராசன். இவன் சூரியனுக்கும் குந்திதேவிக்கும் பிறந்தவன், இடையெழுவள்ளலிலொருவன்.
கன்னா - ஒருவாச்சியம்.
கன்னாடம்-ஒருபாஷை, தேய மைம்பத்தாறினொன்று.
கன்னாதம் - அன்னபேதி.
கன்னாபின்னாவெனல் - உருத்தெரியாமற்சொல்லல், குற்றல்.
கன்னார்-ஒருசாதி, ஒருமருந்து.
கன்னாவதங்கம் - காதிற்பூ.
கன்னி-அத்தநாள், அழிவில்லாள், அழிவின்மை, இளமை, ஓரிராசி, ஓராறு, கரந்தை, கற்புக்கெடாமை, கற்றாழை, காக்கணஞ்செடி, காவிளை, குமரி, தவப்பெண், துர்க்கை, தெய்வப்பெண், பார்வதி, பெண்.
கன்னிகம் - மணத்தக்காளி.
கன்னிகாசலம் - மேரு.
கன்னிகாதானம் - கன்னியை மணமுடித்துக்கொடுத்தல்.
கன்னிகாபதி - மருமகன்.
கன்னிகாரம் - கோங்கு.
கன்னிகை - கல்வியறியாதவள், குமரி, தாமரைக்கொட்டை, துர்க்கை, பூவரும்பு.

கன்னிக்கால் - கன்னி மூலையிற் கப்பு முதல் நாட்டுந் தம்பம்.
கன்னிக்கிழங்கு - கிட்டிக்கிழங்கு.
கன்னிக்குட்டி - முதலீன்றகுட்டி.
கன்னிக்கோழி-முட்டையிடாதகோழி.
கன்னித்திங்கள் - கன்னிமாதம்.
கன்னித்தீட்டு - இருதுத்தீட்டு.
கன்னித்துவம் - கன்னிப்பருவம்.
கன்னித்தேங்காய்-தென்னமரம் முதற் காய்த்த காய்.
கன்னிநாகு - ஈனுதநாகு.
கன்னிபுரம் - மதுரைமாநகர்.
கன்னிபுரேசன் - மதுரையி லமர்ந்த சோமசுந்தரமூர்த்தி.
கன்னிபுரேசுபுரி - மதுரைமீனுக்ஷி.
கன்னிப்பழி - கன்னிகையைக் கற்பழித்த பாவம்.
கன்னிமணி - ஆடு மான் முதலியவற் றின்மறி.
கன்னிமாதம் - புரட்டாதிமாதம்.
கன்னிமார் - வாலைப்பெண்கள்.
கன்னிமுத்திரை - கன்னித்தன்மை.
கன்னிமை - கன்னிப்பருவம்.
கன்னியழிதல் - கன்னிமுத்திரை யழிதல்.
கன்னியாகரணம்-கன்னியை யபகரித்தல்.
கன்னியாகுப்சம் - ஒருதேயம், இது குசநாபன் புத்திரிகள் நூற்றுவரையும் வாயு பகவான் பூப்பின்றி யிருக்குமாறு சபிக்கப் பிருகதத்தன் அச்சாபத்தை நீக்கி மணம்புரிந்து வாழ்ந்த இடம்.
கன்னியாகுமரி - இந்தியாவின் தென் கோடிமுனை, ஓர்யாறு.
கன்னியாக்கிரணம் - கலியாணம்.
கன்னியாஸ்திரி-கன்னிப்பெண்குமரி.
கன்னியாதானம்-அறம் முப்பத்திரண்டினென்று. அஃது கன்னியைத் தீ முன்னர்க் கொடுப்பது.
கன்னியாதூசிகள் - கன்னித்துரோகி.
கன்னியாதோஷம்-கன்னிகாபகீர்த்தி.
கன்னியாபுத்திரன் - கானீனன்.
கன்னியாப்பிரதானம் - கன்னிகாதானம்.
கன்னியாவேதி - மருமகன்.
கன்னியீற்று - தலையீற்று.

கன்னியுமைமாது - திருக்கச்சூ ராலயத்தில் கொயில்கொண்டிருக்குந் தேவியார்.
கன்னியேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கன்னியை-விதர்ப்பன்மனைவி, இவளைச்சியாமகன் தனக்கென்று கொண்டு போய்த் தன் மகன் விதர்ப்பனுக்கு மனைவியாக்கினன்.
கன்னிறம் - இசங்கு.
கன்னீகம் - ஒரு சன்னிநோய்.
கன்னீர்ப்படுத்தல்-பொது வியற்றிணைத்துறை பன்னிரண்டனுளொன்று. அது சுரும்பு சூழுமாலை பக்கத்திலே அசைந்துவரப் பார்த்துக் கைக்கொண்ட கல்லினைப் புனலிலே யிட்டதைக் கூறுவது.
கன்னுவர் - கன்னர்.
கன்னுறுகம் - சிறுகீரை.
கன்னெஞ்சன் - வன்னெஞ்சன்.
கன்னெஞ்சி - அவுரி, வன்னெஞ்சி.
கன்னை - கட்சி, பக்கம்.
கன்னைக்கொற்றி-இருகட்சிக்கு முதவி செய்வோன். [ஒன்று.
கன்னைக்கோல் - நெய்வார் கருவியில்
கன்னைமாறி - அங்கிடுதத்தி.

## கா



கா-அசைச்சொல் (உ-ம்) வேளிவட்காண்டிகா, ஒரெழுத்து, காத்தல், காவடி, காவென்னேவல், சோலை, துலை, தோட்சுமை, பூந்தோட்டம், வருத்தம், வலி.
காககுடம் - எள். [தம், வலி.
காகக்கரிப்பான் - கருங் காசலாங்கண்ணி.
காகங்கரைதல் - காகங்கூவல். [ணி.
காகசகுஷ்டம்-ஒருவகைக் குட்டநோய் அது கொப்பளங்கள் பிறக்கும்போது சிவந்த நிறத்துடன் பிறந்து பின்னர்க் கறுப்பாய்க் கிராம்புமொக்கினுருவத்தைப் பெற்றுடைந்து இரணங்களாவது அக்கொப்பளங்களிலதிக எரிவும், நோவுமுண்டாவதோடு சமஸ்த குஷ்ட குணங்களும் பலநிறங்களு முண்டாகும். இது காச்

கையின் பிறப்பைப்போல் முதலிற் சிவந்து பிறகு கறுப்பதால் இப்பெயர் பெற்றது.
காகசிஞ்சி
காகசிஞ்சீ } குன்றிக்கொடி.
காகசிஞ்சை
காகச்சிலந்தி - ஒருவகைப்பூச்சி. அது பட்டவிடத்து வெளுத்துஞ் சிவந்தும் ஒருவிதக் காயினது விதையைப் போற் கொப்பளமெழும்புவது. அதனாலதிகவேதனை, விக்கல்,இரைப்பு, மிகுந்த தாகம், மூர்ச்சை, நித்திரா பங்கம், சதா மார்னோ வென்னு மிக் குணங்களுண்டாகும்.
காகச்சிலை - கருமுகிற்சிலை.
காகச்சுக்கான் - கருமணற்சுக்கான்.
காகதாலியநியாயம்
காகதாலியம் } காகம் பனம் பழத்தின்மேல் உட்காரப் பழம்விழுதல்,தற்செயல்,பொருத்தம்.
காகதிந்துகம் - கருந்தும்பை.
காக்துண்டம் - அகில்.
காக்துண்டி-ஒருசெடி, ஒருவகைப் பித்தளை.
காகதேரி - மணித்தக்காளி.
காகத்துரத்தி - ஆதொண்டை.
காகத்துவசத்தாள் - மூதேவி.
காகத்துவசம் - வடவைத்தீ.
காகநதி-காவிரிப்பூம்பட்டினம்,காவேரி
காகநாசி - பார்சோற்றி.
காகநாசிகை - சிறுகோவை.
காகநிம்பிளா - கருநிமிளை.
காகபட்சம் - சிறுகுடிமி, பக்ககுடிமி.
காகபதம்-காலதசப் பிரமாணத்தொன்று. அஃது குரு இரண்டுகொண்டது.
காகபலம் - எலிமிச்சமரம்.
காகபலி - காகத்துக்கிடுமுணவு.
காகபாஷாணம் - ஒருமருந்து.
காகபீலி - குன்றிக்கொடி.
காகபுச்சம்
காகபுட்டம் } குயில்.
காகப்பீருதம் - கருந்தும்பை.
காகப்புள் - அவிட்டநாள், காக்கை.
காகமலடு - ஒருவகை மலட்டு ரோகம். அதுமுதல்முதல்இரண்டுபிள்ளையைப்பெற்றுப் பின்னர்க் கருப்பமில்லாதிருப்பது.
காகமாசி - கருந்தக்காளி.
காகம் - அவிட்டம், காக்கை, கீயு, வடகீழ்த்திசைப்பாலன் குறி, வைப்புப்பாஷாண முப்பத்திரண்டி னொன்று.
காகயவம் - பதர்.
காகரி - திப்பிலி.
காகருகம் - எட்செடி.
காகருகன் - வறியன்.
காகருடி - பன்றி.
காகலி - மதுரமான வார்த்தை.
காகலிநிஷாதம் - அமலைதாரம்.
காகலீரவம் - குயில்.
காகலூகம் - ஆந்தை.
காகலூகன் - பயந்தவன், வறியவன்.
காகவாகனன் - சனி.
காகாங்கி-எக்காளம், புள்ளோசை, ஒரு வாத்யம்.
காகாங்கி-ஒருவகைக் கோவைக்கொடி.
காகாபிசாசு-இரத்தமுண்ணும் வாவற் பறவை, ஒருபேய்.
காகாரி - ஆந்தை.
காகி - விளாமரம்.
காகிதம் - கடுதாசி, திருமுகம்.
காகித்தம்
காகித்திரம் } குறிஞ்சா.
காகு - இசையறுப்பு.
காகுசம் - கபோலம்.
காகுத்தன்-இராமன், ஓரரசன், பாஞ்சயன், விட்டுணு.
காகுகாசி - புடோல்.
காகுளி - இகை, தவிசு, மந்தவிசை, மிடற்றெழுமோசை, மெத்தை.
காகூவெனல் - ஒலிக்குறிப்பு.
காகெந்து - கருந்தும்பை.
காகேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காகொடி - எட்டிமரம்.
காகோடகி - வாலுளுவை.
காகோடியர் - நாடகர்.
காகோதரம் - பாம்பு.
காகோதுமபரிகை-பேயத்திமரம்.
காகோலம் - அண்டங்காகம், மகா விஷம்.
காகோளி - அசோகமரம், கொடியாசு-தேட்கொடுக்கி.
காகட்டான் - காக்கணம்.
காக்கணங்கொவ்வை - காக்குறட்டை.
காக்கணம் - கருவிளை.
காக்கம்-காக்குரட்டைச் செடிகோவை.
காக்கன்போக்கன் - துன்மார்க்கன்.
காக்காச்சி - ஒருமச்சி.
காக்காய் - அவிட்டம், காகம்.

காக்காய்க்கொல்லி-ஒருசெடி,ஓர்விதை.
காக்காய்ச்சோளம் - ஒருசோளம்.
காக்காய்ப்பாலை - ஒருபாலை.
காக்காய்ப்பூ - ஒருபூடு.
காக்காய்ப்பொன் - பொன்னிறப்பிசின் போலிப்பொன்.
காக்காய்மீன் - ஒருமீன்.
காக்காய்மூக்கன் - மனுஷரி லோர்வித சாதி.
காக்காய்மூக்கி, காக்காய்மூக்கு - ஒரு முகிற்பாஷாணம்.
காக்காய்வலி - ஒருநோய்.
காக்காரர் - தோட்சுமைக்காரர்.
காக்காவெனல் - ஓரொலிக்குறிப்பு.
காக்குத்துவான் - ஒருபுள்.
காக்குரட்டை, காக்குரூட்டை - காக்கொரட்டை.
காக்கை - அவிட்டநாள், காகம், காக்குதல், பஞ்சபட்சியினொன்று.
காக்கைக்கொடியாள் - மூதேவி.
காக்கைபாடினியம் - ஓரியாப்பிலக்கணம்.
காக்கைபாடினியார் - தொல்காப்பியருடன் தமிழ்கற்ற ஒரு தமிழ்ப்புலவர்.
காக்கைபாடினியார் நச்சென்ளையார் - நாடுகோட்பாடு சேரலாதனைப் பாடி ஒன்பது காப்பொன்னும் நூறாயிரங் காணமும் பரிசாகப்பெற்ற புலவர்.
காக்கைமுகர் - ஒருவகை மாணிடர்.
காக்கைவலி - ஒருநோய்.
காக்கைவேர் - காக்கணன்வேர்.
காக்கைவேலி - உத்தாமணி.
காக்கொரொட்டை - கருங்காக்கணம்.
காங்கவீநம் - தினைவிளையும்நிலம்.
காங்கிசை, காங்கிஷை - விருப்பம்.
காங்கு-ஒருநீலப்புடவை, பெரும்பானை.
காங்கூலக்கை - கூத்திற்காட்டு மோர்வகைக்கை, அது சுட்டுவிரல்,நடுவிரல், பெருவிரலாகிய மூன்றுஞ் சேர்ந்து குவியப் பவித்திரவிரல்வளைந்து சிறுவிரல் கிமிர்ந்த பெற்றியதாம்.
காங்கேசன் - காங்கேயன்.
காங்கேயபூஷனி-முப்பத்து மூன்றாவது மேளகர்த்தா.
காங்கேயம் - பொன்.
காங்கேயன் - குமரன், வீட்டுமசாரி.
காங்கேருகி - ஒருமரம்.
காங்கை - வெப்பம்.
காங்கையன் - வைப்புநலப் பாஷாணம்.
காங்ஷை - ஆசை.
காச்சிலேட்டுமம்-ஒருவகைநோய். அது இருமல், சீதளம், தேகபாரிப்போடு கனம், நாடி அதிக வேகத்திற் சிலேட்டுமகதியாக நடத்தல், வாயு வறளல், அதிகவுஷ்ணம்,மூக்காந்தண்டினடியிற் கனத்தல், தினவாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.
காச்சுவாசம் - ஒருநோய்.
காச்சுவாசம்-ஒருவகைச்சுரநோய். அது எப்பொழுது மிருமல் சிவந்தும் வெளுத்தும் நுரைத்தும் நானுவிதமான கோழைவீழல், தாகம், மூர்ச்சை, வியர்வை, சிரமை, பிரமை, எப்பம், வாந்தி, தலைதிருப்பல், நடுக்கல், துர்ப்பலம், ஈனத்தொனி,தலை கண்களிலெரிவு, வயிற்றுநோய், பேதி, கொட்டாவி, விக்கல் என்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
காசமர்த்தகம் - பெரும்புல்.
காசம்-ஈளைநோய், கண்வியாதி, கற்பாஷாணம், கோழை, சிலேட்டுமம், தேயமைம்பத்தாறினொன்று,பொன்
காசரம் - காட்டெருமை.
காசறை-கத்தூரிமிருகம், மணி, மயிர்ச்சாந்து.
காசனம் - கொலை.
காசனன் - கொலைசெய்வோன்.
காசன் - சுகோத்திரன் மகன்.
காசா - எருமை, காயாச்செடி,நாணல்.
காசாண்டி - ஒருவகைச்செம்பு.
காசாம்பாரை - ஒருமீன்.
காசாம்பூமேனியன் - விட்டுணு.
காசாம்புவண்ணன் - கச்சாலம், காய்ச்சற்பாஷாணம், துரிசி, விட்டுணு.
காசாரம் - ஓடை.
காசாவில்லை - சந்தனக்கூட்டு.
காசி-ஒருபட்டணம், சம்ஸ்கிருதசங்கமிருந்தவிடமுமிதே, சீரகம்.
காசிகாண்டம்-ஒரு புராணப்பகுதிநூல்.
காசிக்கல் - காகச்சிலை.
காச்சிசிருட்டி - ஒருபுள்.
காசிக்குப்பி-ஒருவகை மெல்லியகுப்பி.
காசிச்சாரம் - ஒருப்பு.
காசிதம் - உறியில் வைக்கப்பட்டது.
காசிதும்பை - ஒருதும்பை.

காசிபப்பிரமா - காசிபன். [ஔ.
காசிபம்-தருமநூல் பதினெட்டின்ஒன்
காசிபன்-ஓரிருடி. இவர் மரீசிமகாரிஷியின்பிள்ளை, அதிதி என்பவளால் தேவர்களுக்கும் திதி என்பவளால் அசுரர்களுக்கும் தந்தை. [று.
காசிமீரம் - தேயமைம்பத்தாறி ஞென்
காசியபன் - பாம்பு மந்திரத்தில் வல்ல ஒரு பிராமணன். இவன் பரீக்ஷித்து மகாராஜன் விடத்தினு லிறப்பானென்பதுணர்ந்து அவனிடஞ் சென்றபோது வழியிலே தக்ஷகன்கண்டு வேண்டிய திரவியங்களைக் கொடுத்து அவனை அங்குச் செல்லாமற் றடுத்தான்.
காசியபி - அருணன்.
காசியபீ - பூமி.
காசியபேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
காசியன்-சேனசித்துமகன்,ஆயுபௌத்திரனாகிய சுகோத்திரன் மகன்.
காசியாரண்ணியேசுவரர் - திருஇரும்பூளையிலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
காசிராசா - அம்பிகை, அம்பாலிகை என்பவரின் றந்தை.
காசிரோர்த்தம்-ஆடுதின்ஞப்பாளை,வறட்சுவண்டி.
காசிலவணம் - காசிச்சாரம்.
காசிலிங்கம்-ஒரு சிவலிங்கம், விசுவநாதலிங்கம்.
காசிவாசனி - காசிநகரத்தான்.
காசினி - பூமி.
காசீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
காசு - காசுக்கட்டி, குற்றம், கோழை, நாணயம், பொன், மணிப்பொது, மாதரணிவடம், வெண்பாவிறுதிச் சீருளொன்று.
காசுகட்டுதல் - ஒரு விளையாட்டு.
காசுக்கடை - பொன்விற்கிறகடை.
காசுக்கட்டி - ஒருமருந்து.
காசுக்காரன் - பணக்காரன்.
காசுமண் - ஒருமண்.
காஜலவம் - வளையலுப்பு.
காசை-கயரோகம், காயா, நாணற்புல்.
காச்சக்கீரை - காச்சுரை.
காச்சல் - சுவரம்.
காச்சரக்கு, காச்சிரக்கு - காச்சுரை.
காச்சுப்பு - கவட்டுப்பு.
காச்சுரை - புளிச்சக்கீரை.
காஸ்மீரம் - குங்குமப்பூ, தேயமைம்பத்தாறினொன்று.
காஞா - காயா.
காஞ்சம் - நீலாஞ்சனக்கல்.
காஞ்சனத்தூள் - பொன்மணல்.
காஞ்சனமாலை - மலயத்துவச பாண்டியன் மனைவி.
காஞ்சனம் - புன்கமரம், பொன்.
காஞ்சனன்-புரூரவன் புத்திரனாகிய அமவசுவினது பௌத்திரன், உதயகுமாரனை வாளாற் கொன்றவன்.
காஞ்சனகுவயம் - செண்பகம்.
காஞ்சனி - மஞ்சள்.
காஞ்சா - கஞ்சா.
காஞ்சான்கட்டுதல், காஞ்சான்பற்றுதல் - செற்றலாதல்.
காஞ்சி-எண்கோவைமணி, ஒருபண், ஒருமரம், காஞ்சீபுரம், நாத்தாங்கி,நிலையின்மை புறப்பொருட்டிணை பன்னிரண்டனு ளொன்று. இது அங்ஙனம் போர்செய்வதற்குவந்த பகைவர்க்கு எதிர்சென்று ஊன்றுதல், இதற்குக் காஞ்சிமாலை சூடுதல் உரித்து, இது காஞ்சியெதிர்வு முதலிய இருபத்தொரு துறைகளை யுடையது. அது வஞ்சித்திணைக்கு மறுதலைத்திணை.
காஞ்சிகம் - கழிநீர், காடி.
காஞ்சிகா - எட்டிமரம்.
காஞ்சிமாலை-ஒரு பிரபந்தம்,படைமுன்னெதிரூன்றுஞ் சேவகர்க்குமாலை.
காஞ்சியம் - வெண்கலம்.
காஞ்சியெதிர்வு - காஞ்சித் திணைத்துறை யிருபத்தொன்றனு ளொன்று. அது எதிரூன்றுஞ் சேனை மேலிடுதலைப்போர்ருத வேற்றுழிலைவல்ல வீரனுடைய வெற்றியை மிகுத்துச் சொல்லியது.
காஞ்சிரம், காஞ்சிரை - எட்டிமரம்.
காஞ்சிணி - மஞ்சிட்டி.

காஞ்சிபுரம் - தொண்டைமண்டலத்தின்கணுள்ள ஒரு திவ்யஸ்தலம். பதினெண்ணாயிரம் கோயில்களைக்கொண்டது. இது சோழருக்கு இராஜதானியாயிருந்தது. இங்கே கோயில்கொண்டிருக்கும் சிவபெருமான் திருவேகம்பனார் என்றும், அம்மையார் காமாக்ஷிதேவி என்றும் பெயர்பெறுவர். விஷ்ணுஆலயத்திலெழுந்தருளியிருக்கும் சுவாமிபெயர் வரதராஜர். இத்தலம் கச்சியெனவும்படும். திருக்குறளுக்குச் சிறந்த வுரையெழுதிய பரிமேலழகருக்கும், கந்தபுராணம் தமிழிலே பாடியருளிய கச்சியப்பருக்கும் இதுவே ஜனனபூமி சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர் முதலிய பாஷியகாரரும் வித்தியாவாதங்கள் புரிந்தவிடமு மிஃதே.

காஞ்சுகம், காஞ்சுகி } சட்டை.

காஞ்சொறி, காஞ்சோன்றி } ஒருசெடி.

காடகம் - சீலை.

காடகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

காடவிளக்கு - ஒருவகை விளக்கு.

காடன் - ஒருமீன்.

காடாக்கினி - பெருந்தீ.

காடாந்தகாரம் - பேரிருள்.

காஷாயப்புடவை - காவிப்புடவை.

காஷாயம் - ஒருமருந்து, காவி, கூழ், பலமருந் தொன்றாயூறியது.

காடாரம்பற்று - காட்டுப்புறம்.

காடாற்று - ஈமக்கிரியையிலொன்று.

காடாற்றுதல் - பிரேதத்தின் தீயைத் தணித்தல்.

காடி - ஊறுகாய், ஒருமருந்து, ஒருவகை வண்டி-கஞ்சி, கள், தோண்டுகால், நெய், புளித்தநீர், மூளை.

காடிகம் - சீலை.

காடிக்காரம்-ஆபக்கல், நெருப்புக்கல்.

காடினியம், காடின்னியம் } அதிகடினம்.

காடு - ஆரணியம், இடம், ஊர், எல்லை. ஒருவிகுதி (உ-ம்) நோக்காடு, சுடுகாடு, செத்தை, நெருக்கம், பாணி நாள், விகுதி, வனம்.

காடுகலைத்தல் - வேட்டைக்காரர் மிருகங்களைக் கலைத்தல்.

காடுகாட்டுதல் - கொல்லல், வெறிதாய் விடுதல்.

காடுநாள்-வடுகென்றாய், காளி.

காடுபடுதிரவியம் - காட்டி லுண்டாகுந் திரவியம். அஃது அரக்கு, கருந்தினை, தேன், நாவி, மயிற்பீலி.

காடுபலியூட்டுதல் - காட்டில்வாழுந்தேவர்களுக்குப் பலியிடல், குறவர், வேடர் செய்யுமோராராதனை.

காடுபிராண்டி - காடுவாரி.

காடுமேய்தல் - வீணாய்த்திரிதல்.

காடுவசாதி - காடுவாழ்சாதி.

காடுவாரி - ஓராயுதம், காடுபிராண்டி, சேர்ப்பவன்.

காடுவாழ்சாதி - சரீரத்தைப் பேணாது திரிவோர்.

காடுவாழ்த்து - பொதுவியற்றிணைத்துறைப் பன்னிரண்டனு ளொன்று. அது பலர்க்கும் இசைக்கும் பெரிதாக வொலிக்கும் சாப்பறை அனுகரண சுத்தமுடைத்தாகக் கறங்கும் சுடுகாட்டை வாழ்த்தியது. வனதேவதைகளை வாழ்த்திச்சொல்லுமோர் பிரபந்தம்.

காடுவெட்டி - சிறு மண்வெட்டி, மரம் வெட்டுகிறவன், முரடன், மூடன்.

காடேறி - ஒரு பிசாசம்.

காடை - ஒருபுள்.

காடைக்கண்ணி - ஒருதினை.

காடைக்கழுத்தன் - ஒருநெல்.

காடைப்புடம் - மூவெருப்புடம்.

காட்கரையப்பன்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருக்காடகரையிற்கோயில்கொண்ட விட்டுணு.

காட்சம் - சோழங்க பாஷாணம்.

காட்சி- அறிவு, அற்புதம், ஓராளவை, தரிசனம், தோற்றம், பத்தவத்தையிலொன்று. அது தலைமகளைத் தலைமகன் தனியிடங்காண்டல், பார்வை பிரத்தியட்சபிரமாணம், வேடிக்கை.

காட்சிகொடுத்தல்-தரிசனங்கொடுத்தல்.

காட்சிப்பொருள் - உருவப் பொருள், காணப்படுபொருள்.

காட்சியணி - ஓரலங்காரம். அஃது உபமானோப மேயங்களின் காட்சியை ஆரோபித்தல்.

காட்சியர்
காட்சியவர் } அறிஞர்.
காட்சியார்
காட்சிவரி - தன் வருத்தத்தைப் பலருங் காணும்படி நடித்தல்.
காட்டகத்தி - வீழி.
காஷ்டகுத்தாலம் - மரக்குந்தாலி.
காட்டணம் - பெருங்குமிழ்.
காட்டத்தி - பேயத்தி.
காஷ்டம் - விறகு, வெண்கலம்.
காட்டம் - அடித்தட்டை, விறகு, வெண் கலம்.
காட்டல் - காண்பித்தல்.
காட்டவரை - ஒருவரை.
காட்டழல் - காட்டக்கினி.
காட்டா - காட்டுப்பசு.
காட்டாக்கினி - காட்டுத்தீ.
காட்டாத்தி - ஒராத்தி.
காட்டாமணக்கு - ஓராமணக்கு.
காஷ்டாம்புவாகினி - தோணி.
காட்டாளத்தி - அச்சுடனிகழ்வது.
காட்டாள் - நாகரீகமில்லாதவன்.
காட்டான் - காட்டுப்பசு, பிறன்.
காட்டிக்கழித்தல் - காட்டிமறைத்தல்.
காட்டிக்கொடுத்தல் - குற்றத்திலேற்ப டுத்தல், சுட்டிக்காட்டல்.
காட்டிஞ்சி - சாரணை.
காட்டிலம் - வாழை.
காட்டிலுமிழி - நாகரவண்டு.
காட்டிலேபோதல் - வீணிலே போதல்.
காட்டில் - உவமையுருபு (உ-ம்) அவ னைக்காட்டில்.
காட்டிருள்ளி - நரிவெங்காயம்.
காஷ்டீலை - வாழை.
காட்டு - உதாரணம், காட்டென்னேவல், காண்பித்தல்.
காட்டுக்கடலை - ஒருகடலை.
காட்டுக்கதலி - ஒருவாழை.
காட்டுக்கத்தூரி - பெட்டகத்துத்தி.
காட்டுக்கரணை - ஒருசெடி.
காட்டுக்கல் - வெள்ளைக்கல்.
காட்டுக்காய்ச்சுரை - ஒருசுரை.
காட்டுக்காய்வள்ளி - ஒரு வள்ளிக்கொடி.
காட்டுக்கானுவாழை - ஒருவாழை.
காட்டுக்கிட்டம் - மகாகிட்டம்.
காட்டுக்கிராம்பு - ஒருகிராம்பு.
காட்டுக்கிரியை - ஈமக்கிரியை.
காட்டுக்கீரை - ஒருகீரை.
காட்டுக்குணம் - மிருகக்குணம்.
காட்டுக்குருந்து - காட்டெலுமிச்சை.
காட்டுக்குளவஞ்சி - ஒருகொடி.
காட்டுக்கூந்தல் - ஒருபுல்.
காட்டுக்கொசு - ஒருவகைமசகம். அது கடித்தால் அவ்விடத்தில் நமைச்ச லும் அற்ப வீக்கமும் வேதனையு முண்டாகும்.
காட்டுக்கொஞ்சி - ஒருமரம்.
காட்டுக்கொட்டை - காட்டாமணக்கு.
காட்டுக்கொளஞ்சி - கொளஞ்சியிலோர் பேதம்.
காட்டுக்கொள் - ஒருகொள்.
காட்டுக்கோரை - ஒருகோரை.
காட்டுக்கோழி - ஒருகோழி.
காட்டுச்சீரகம் - ஒருபூண்டு.
காட்டுச்சீரகவள்ளி - ஒருவள்ளி.
காட்டுதல் - அத்தாட்சிபண்ணுதல், உரு பித்தல், காண்பித்தல், நினைப்பூட்டு தல், வெளிப்படுத்துதல்.
காட்டுத்தகரை - ஒருதகரை.
காட்டுத்தனம் - பேதைமைக்குணம்.
காட்டுத்தாரா - ஒருதாரா.
காட்டுத்தாளி - ஒருதாளி.
காட்டுத்தினை - ஒருதினை.
காட்டுத்துத்தி - ஒருதுத்தி.
காட்டுத்துவரை - ஒருதுவரை.
காட்டுத்துளசி - ஒருதுளசி.
காட்டுநாரத்தை - பெருங்குருந்து.
காட்டுநெல்லி - ஒருநெல்லி.
காட்டுப்பயிர் - தன்னிலேயுண்டாகும் பயிர்.
காட்டுப்பன்றி - ஒருபன்றி.
காட்டுப்பாகல் - பழுபாகல்.
காட்டுப்பிள்ளை - ஆருமற்றபிள்ளை, கண் டெடுக்கப்பட்ட பிள்ளை.
காட்டுப்புத்தி - திருந்தாதபுத்தி.
காட்டுப்புளிச்சை - ஒருசுரை, ஒருமரம்.
காட்டுப்புறா - கபோதம்.
காட்டுப்பூனை - ஒருபூனை.
காட்டுமச்சம் - ஒருவகைக்கொசு. அது கடித்தால் அவ்விடத்தில் தினவும், அற்ப வீக்கமும், வேதனையுமுண் டாகும்.
காட்டுமந்தாரை - காட்டாத்தி.
காட்டுமரி - ஒருபூடு.

காட்டுமல்லிகை - மல்லிகையிலோர் பேதம்.
காட்டுமா - ஒருமா.
காட்டுமாவிரை - சாரப்பருப்பு.
காட்டுமிருகம்-கானக்குதிரை, வனமிருகம்.
காட்டுமிருகாண்டி } காட்டில்வாழ்வோன், பாங்கு பாவனை யறியாதவன்.
காட்டுமிருண்டி }
காட்டுமுந்திரிகை - ஒருகொடி.
காட்டுமுருங்கை-மாவிலிங்கை, வனமுருங்கை.
காட்டுமூரி - நாகரவண்டு.
காட்டுவாகை - ஒருவாகை.
காட்டுவெள்ளரி - பேய்க்கொம்மட்டி.
காட்டெருமை - எருக்கு, ஓரெருமை, கூகை, நீறு, சதுரக்கள்ளி.
காட்டெருமைப்பால் - அங்குசரோசனம், எருக்கம்பால், கள்ளிப்பால், கூகை, நீறு.
காட்டெலுமிச்சை - ஓரெலுமிச்சை.
காட்டெள் - ஓரெள்.
காட்டேரி - ஒரு துட்டதேவதை.
காட்டை-எல்லை, காலதசப்பிரமாணத்தொன்று. அஃது இலவமெட்டுக்கொண்டது, காலம், திசை, நுனி, விறகு.
காட்டைப்புடம் - சிறுபுடம்.
காட்டொலிவம் - ஒருமரம்.
காணகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காணதாரேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
காணதேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காணப்படுதல் - தோற்றப்படுதல், வெளிப்படுதல்.
காணம்-ஓரளவு, கொள், செக்கு, பொற்காசு, பொன்.
காணல்-குறித்தல், தோற்றல், நினைத்தல், பெறுதல், வணங்கல்.
காணன் - ஒற்றைக்கண்ணன்.
காணாக்கடி - காணாது விஷந்தீண்டல்.
காணாக்காட்சி - அற்புதக்காட்சி, அறகாட்சி.
காணாக்கிரகம் } சாந்தனைகோள்.
காணாக்கோள் }
காணாத்தலம் - ஆண்குறி, பெண்குறி, மறைவிடம்.
காணாபதியம்-கணபதியினது மதம்.
காணாப்புள்தோஷம் - ஒருவகைத் தோஷநோய், அது உச்சி, கண்ணாகிய விடங்களிற் குழி விழுதல், மூலயுண்ணாமை, பச்சைநிறமாய்ப் பேதியாதல், பறவைக்குரலைபோற் சீறிச்சீறியழுதல், தாகமென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
காணாமாணிக்கங்காட்டல்-விடுப்புக் காட்டல்.
காணார் - பகைவர்.
காணி-உரிமை, ஒரெண், அது ஒன்றிலெண்பது கொண்டது, நிலம், பொன்னாங்காணி, மனையிருபத்துநான்குகொண்ட ஒரு நிலவளவு.
காணிகியம் - வேசைக்கூட்டம்.
காணிக்கை - தட்சணை, வெகுமானம்.
காணித்தாயம் - நிலவுரிமை.
காணியம் - ஆஹதம்.
காணியாட்சிக்காரன் - காணியாளன்.
காணுகம் - காகம்.
காணுதல்-அறிதல், காண்டல், சந்தித்தல், செய்தல், நினைத்தல், பெறுதல், வணங்குதல்.
காணேயம் - எண்ணிக்கையிடத் தக்கது.
காண் - அழகு, ஓரிடைச்சொல் (உ-ம்) கூறினர்காண், காணென்னேவல்.
காண்டகடுகம் - பாகல்.
காண்டகம் - ஊர், காடு, காண்டாமிருகக்கொம்பு, கெண்டிகை, சாகாண்டபாஷாணம், நிலவேம்பு, நோய்.
காண்டகுண்டம் - ஒருவகைக் கோரைப்புல்.
காண்டபுடம் - திரைச்சீலை.
காண்டப்பிரஷ்டன் - ஆயுதம் பிடித்துச் சீவனஞ்செய்பவன்.
காண்டம்-அம்பு, ஆபரணச்செப்பு, ஆயுதம், ஊன்றுகோல், எல்லை, கமண்டலம், காடு, குதிரை, கூட்டம், கோல், சமயம், சாகாண்ட பாஷாணம், சிந்தில், சீலை, தாள், திரைச்சீலை, தீர்த்தம், நிலவேம்பு, நீர், நீர்க்காக்கை, துற்கூறு பாட்டிதென்று, படைக்கலம், பூந்தாள், மலை, முடிவு, வாச்சியம்.

காண்டல்-காணுதல், கைக்கிளைத்திணைத்துறைப் பெண்பாற்கூத்து பத்தினுளொன்று. அது மதுப்பொழியு மாலையினையுடைய தலைவனை அழகிய நுதலினையும் மூங்கில்போன்ற தோளினையுமுடையாள் நோக்கி மெலிந்ததைக் கூறுவது, தோற்றுவித்தல், பெறுதல், வணங்கல்.
காண்டல்-வலித்தல் கைக்கிளைத்திணைத்துறைப் பெண்பாற்கூற்றுபத்தினுளொன்று. அது மேகத்தைப்பொருந்தின மலைநாடனை மடவாள் இரண்டாவதும் கையில்வளை சோர்கையாலே காணவேண்டுமென்றலை நிச்சயித்ததைக் கூறுவது.
காண்டவதகனன் - அருச்சுனன்.
காண்டவம் - காண்டாவனம்.
காண்டவானு - அம்புகளை ஆயுதமாகவுடையவன்.
காண்டவான் - வில்லாளி.
காண்டாமிருகம் - ஒருமிருகம்.
காண்டாமிருகரத்தம்-வேங்கைப்பிசின்.
காண்டாவன மெரித்தோன்-அருச்சுனன்.
காண்டாவனம் - இந்திரவனம்.
காண்டாவனன் - இந்திரன்.
காண்டாவனாரி - அருச்சுனன்.
காண்டிகன்-மணியடித்துப் பூசைசெய்பவன்.
காண்டிகை } கருத்துப்பதப்பொ
காண்டிகையுரை } ருள் உதாரண
மென்னும் மூன்றோடும் வருமுறை.
காண்டிக்கியன் - நிமிவமிசோற்பவனாகிய தருமத்துவஜன்,ஜனகமகாராஜன் பௌத்திரன், மிதத்துவசன்புத்திரன். இவன் தன் சிறியதந்தையாகிய கிருதத்துவசனது புத்திரனாகிய கேசித்துவசனோடு முரணிக்காடு சென்றவன்.
காண்டிபம்-அருச்சுனன்வில், சரகாண்ட பாஷாணம்.
காண்டியகாலம் - காங்கைக்காலம்.
காண்டியயம் - காங்கை.
காண்டில் - இரசதபாஷாணம்.
காண்டீபம் - அருச்சுனன்வில், தனுவிராசி, வில்.
காண்டீபன் - அருச்சுனன்.
காண்டீரம் - யானைத்திப்பிலி.
காண்டீரன் - அம்புகளை ஆயுதமாகவுடையவன்.
காண்டீவம் - காண்டீபம்.
காண்டீவன் - காண்டீபன்.
காண்டு - கூப்பிடுதூரம்.
காண்டுமதம் - வருத்தம்.
காண்டை - ஒருசெடி.
காண்பித்தல் - காட்டல்.
காண்பு - காண்டல்.
காண்வரி-ஒருவகைக்கூத்து, அது பாகைப்பொதிந்த பவளத்தைத்திறந்து ஒளியைத்தருகின்ற முத்தையொத்த நகை நலத்தைக்காட்டி வருகென வந்து வந்தபின் மனமகிழ்வுறுவன தந்து போகெனப்போதல்.
காதகம் - கொலை, பிறரைப் பீடித்தல்.
காதகன் - கொலையாளி.
காதடைத்தல் - இளைப்பு முதலியவற்றாற் செவிப்புலன்கலங்கல், காதுமந்தித்தல், செவிடுபடல்.
காதட்டி - ஆதொண்டை.
காதணி - கன்னபூஷணம், குண்டலம்.
காதணிவகை - கடிப்பிணை, கம்பி, கன்னப்பூ, கன்னுவதங்கம், குணுக்கு, குண்டலம்,குழை,கொட்டை,செவிமலர், தாடங்கம், தூக்கம், தொங்கல், தோடு, மஞ்சிகை, வல்லிகை, வேடம்.
காதம் - கள், காவதம், அது நாலு கூப்பிடு கொண்டதூரம், கொலை, நாற்சதுரத்துறவு.
காதம்பகம் - பாணம்.
காதம்பம் - இனிதாகப்படும் அன்னம், கானங்கோழி.
காதம்ப்ரம்-தயிர்மேலேடு,வாத்தியம் விசேஷம்.
காதம்பரி - ஒரு சம்ஸ்கிருத நாடகம், கள், குயிற்பேடை, சரஸ்வதி, நாகணவாய்ப்புட்பேடை.
காதம்பனி - மேகவரிசை.
காதம்பினி - மேகசமூகம்.
காதரம் } அச்சம், அமைவு,இக்கட்டும்
காதரவு } தீவினைத்தொடர்பு, விருப்பம்.
காதரன்-அச்சமுள்ளோன்.
காதரி - ஒருநதி, மஞ்சள், வேலைக்காரி.
காதர்முகேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.

காதலம் - ஒருமீன்.
காதலன் - அன்பன், கணவன், சிநேகிதன், தலைவன், தோழன், மகன்.
காதலி - காதலியென்னேவல், தலைவி, தோழி, மகள், மனைவி, வாழைமரம்.
காதலித்தல் - அன்புகூரல், ஆசைப்பெருக்கம், விரும்பல்.
காதலித்தோர்-ஆசையுற்றோர், இனத்தவர், சினேகிதர்.
காதலிப்பு - விருப்பம்.
காதலிற்களித்தல் - பெருந்திணைத் துறைகளுளொன்று. அது மேகம்பொருந்தின மலைநாடனுடைய மார்பிடத்தேமேவி நீங்குதலறியாத அன்பினல் மகிழ்வது.
காதல்-அன்பு,ஆசை, ஆந்தை, கௌளி முதலியவைகளின் ஒலி, ஆவல்,ஒரு பாடல், கொலை, கொல்லல், தறித்தல், மகன், முறித்தல், விரகம்.
காதவடி - கன்னமூலம்.
காதவம் - ஆலமரம், வான்கோழி.
காதறுதல் - பகைகொள்ளல்.
காதறுப்பான்-காதைசுற்றிவரும்இரணம்.
காதறை - காதறுந்தது, கெட்டது.
காதறைச்சி - சண்டைக்காரி.
காதற்பரத்தை - சேரிப்பரத்தை.
காதன் - கொலையாளன்.
காதன்மை - அன்பு, உருக்கம்.
காதாங்கி - பாற்சோற்றி.
காதி-ஒருமுனிவன்,ஒருவகைக்கன்மம், மிரதபாஷாணம், விசுவாமித்திரன் றந்தை.
காதிமைந்தன் - விசுவாமித்திரன்.
காதியம் - மென்று தின்னும்படியான மருந்து.
காதிலி - செவிடன்.
காதிவென்றோன் - அருகன்.
காது - ஊசி, நறுக்கு, மடக்குக்கத்தி முதலியவற்றின் றுவாரப்பக்கம், காதென்னேவல், கொலை, செவி, திரி வாய்ப்பெட்டி.
காதுகன் - கொலையாளி.
காதுகுற்றுதல்-கன்னவேதனஞ் செய்தல்.
காதுகொடுத்தல் - உற்றுக்கேட்டல்.
காதுக்குறும்பி - காதழுக்கு.
காதுதல் - கூறுசெய்தல், கொல்லல், தறித்தல்.
காதுப்பூ - கன்னப்பூ.
காதுப்பூச்சி - செவிப்பாம்பு.
காதுமடல் - காதிளிதழ்.
காதுமம் - திருத்தம்.
காதுவெட்டல்-நறுக்கின் றுவாரத்தருகுவெட்டல்.
காதெழுச்சி - ஒருவகைநோய்.
காதை-கதை, கொலை, செய்தி, சொல், சொல்லல்.
காதைகரப்பு - மிறைக்கவியி னொன்று அஃது ஒரு கவிமுடியவெழுதி அதினீற்றின்மொழிக்கு முதலாமெழுத்துத் தொடங்கி யொன்றிடை யிட்டெழுதப் பிறிதோர்செய்யுளாவது.
காதோலை - தோடு, கம்மல்.
காத்தஈசுவரர்-திருவாமாத்தூரிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
காத்தடி - காவடித்தண்டு, காவுதடி.
காத்தட்டி - ஆதொண்டை.
காத்தல்-அரசாளுதல்,அளித்தல், எதிர்பார்த்தல், காப்பாற்றல், பாதுகாத்தல்,முத்தொழிலினொன்று. அஃது காவல்செய்தல், வளர்க்குதல்.
காத்தவராயன் - ஒருதேவதை.
காத்தான் - காத்தவராயன்.
காத்தியாயனம் - உபநிடத முட்பத்திரண்டினொன்று, தருமநூல் பதினெட்டினொன்று.
காத்தியாயனன் - ஒருமுனிவன், யாஞ்ஞவற்கியன், வருரசிமுனி.
காத்தியாயனி-காதொயனஸ்திரந் தரித்தவள், துர்க்கை, பார்வதி.
காத்தியாயனேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
காத்தியாயனி - துர்க்கை.
காத்திரம் - உடல்,உறுப்பு, கனம், கீரி, கூத்து, கோபம், பருமம், முக்கியம், யானையின் முன்கால்.
காத்திரவேயம் } பாம்பு.
காத்திரவேயன் }
காத்திரன் - பருத்தவன், வலியோன்.
காத்திராந்தலேபனி - வாசனை சேர்ந்த சந்தனம்.
காத்திரி - கீரி, படைக்கலம்.
காத்திருக்குதல் - வரவு பார்த்திருத்தல், வழி பார்த்திருக்குதல்.
காத்திரை - ஆயுதம்.

காத்தொட்டி } ஆதொண்டை.
காத்தோட்டி }
காந்தஅயசு - அயச்சிலே.
காந்தக்கல் - ஊசிக்காந்தம், சந்திரகாந்தம், சூரியக்காந்தம், தீக்கல்.
காந்தசத்துரு - நவசாரம், வெடியுப்பு.
காந்தபட்சி - மயில்.
காந்தபஸ்பம் } ஒரு மருந்து.
காந்தபற்பம் }
காந்தபாஷாணம் - ஒருபாஷாணம்.
காந்தப்பெட்டி - திசையறிகருவி.
காந்தமணி - காந்தக்கல்.
காந்தமண் - செம்மண்.
காந்தமலே - ஒருமலே.
காந்தமேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காந்தம் - அழகு, ஊசிக்காந்தம், குணவலங்காரம் அஃது உலகொழுக்கிறப்பப் புகழ்ந்துசொல்வது, பதினெண்புராணத்தொன்று, பிரகாசம்,
காந்தருவசுரம் - ஒருவகைச் சுரநோய். அது சர்வாங்கமுஞ் சுருங்கல்,பனவீனம், அற்பகுலே, கண்களில் மஞ்சள்நிறத்தோடு சலம்வடிதல், பரியாசம்பண்ணல்,பாடல், தலேவலி, சடத்துவம், சர்வசந்துஸ்தானங்களு மசையக்கூடாமை, எழுந்தாற் சுற்றுதல், ஆலசியம்,மதிப்பிரவம், கோபம், பசியில்லாமை, பெருமூச்சு,சயித்தியம், அடிக்கடிமூர்ச்சை,சர்வாங்கவீக்கம், கனவில் விந்துநஷ்டம், எப்பம், விக்கல், அடிக்கடி நீரிறங்கலென்னுமிக்குணங்களே யுண்டாக்குவது.
காந்தருவபூதம் - ஒருவகைநோய். அது மிகுந்த ஆசாரவொழுக்கம், நீங்காத சந்தோஷம், சரீரத்திற் சுகந்தபரிமளம், அற்பவார்த்தை, பூஞ்சோலேயிலும் ஆற்றுமணலிலுஞ் சிவந்த புஷ்பத்திலுமிச்சை, அடிக்கடி நகைப்பு, கேளிவிலாசம், சங்கீதம், பாடலென்னுமிக்குணங்களே யுண்டாக்குவது.
காந்தருவபுணர்ச்சி-கன்னியுந் தலேமகனும் கலியாணத்தின்முன் புணருதல்.
காந்தருவமணம் - கன்னியுந் தலேமகனும் தங்களிற் கூடுமணம்.
காந்தருவம் - இருநூற்றிருபத்து நான்கு புவனங்களி னென்று. காந்தருவமணம்.
காந்தருவர் - கந்தருவர்.
காந்தருவவாதம் - கலேஞான மறுபத்து நான்கினென்று.
காந்தருவவேதம் -உபவேதத்தொன்று, அது கீதசாஸ்திரம்.
காந்தல் - உட்டணித்தல், உமி ஓலேமுதலியவற்றின் காத்தல், சினக்குறிப்பு, பல்லினுற் காந்துதல், முதிரவேதல், வெம்மையினுலுரிஞ்சுதல்.
காந்தவம் - அப்பவர்க்கம், பலகாரம்.
காந்தவிகன்-பலகாரம் சமைப்பவன்.
காந்தள் - உழிஞைத்திணைத்துறையிருபத்தெட்டனுளொன்று. அது கறுத்தகடலிடத்துச்சூரபன்மாவைக் கொன்றவனுடைய காந்தட்பூவின் மிகுதியைச் சொல்லுவது, கார்த்திகைப்பூ குறிஞ்சிப்புறம். அது காமிகள்மடன் மாவேறுதல், சவக்காரம்.
காந்தன்-அரசன், எப்பொருட்குமிறைவன், கணவன், தலேவன், நாயகன்.
காந்தாயகம் - அயக்காந்தம்.
காந்தாரகம் - ஒருவகைக்கரும்பு.
காந்தாரபஞ்சமம் - பாலேப்பண்ணின் றிறமைந்தனுளொன்று.
காந்தாரம்-இசை, இசைப்பாட்டு, ஒருபண், காடு, குறிஞ்சி யாழ்த்திறம், தேசமைம்பத்தாறினென்று.
காந்தாரன் - யயாதிமகன், துருகியனுடைய பௌத்திர பௌத்திரன். இவனே காந்தாரதேசஸ்தாபகன், இந்தக் குலத்தவர்கள் குதிரை யேற்றத்தில் மகாசதுரர்.
காந்தாரி-ஒரலங்காரம், ஒருபண், கொடியவள், சத்தி, சாரம்,சிவனூர்வேம்பு, திரிதராட்டிரன்மனைவி, நாபியிற்றேன்றிச் சுரமேழுக்கு மேழுநாடியாய்க் கண்டத்துறு நரம்பு.
காந்தாரிமைந்தன் - துரியோதனன்.
காந்தாளம் - எரிச்சல், கோபம்.
காந்தாளிகம் - சின்னிமரம்.
காந்தி-அழகு, உட்டணம், ஒளி, ஓரிராகம். அது தமிழிற்பல கூறுபாடுபெற்றுப் புகழ்ச்சியினும் வார்த்தையினுமுலகிறந்த நற்பொருட் பொலிவி

னும் வரப்பாட்ல், காணம், காவிக் கல் கிரணம், சிலாசத்து, சூரியகாந் தி, வைடூரியம்.
காந்திகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
காந்திகை - பாணிகை.
காந்திசீகன் - பயந்தோடுவோன்.
காந்திதம் - பித்தம்.
காந்திதாயகம் - ஒருவகைமரம்.
காந்திமதி - குபேரன்பட்டணம்.
காந்திமதியம்மை - திருமூக்கீச்சரத்திற் கோயில்கொண்டிருக்குந் தேவியார், திருநெல்வேலியிற் கோயில்கொண் டிருக்கும் தேவியார்.
காந்தியதிகமேனி - காவிக்கல்.
காந்தியோனி - சிலாமாதம்.
காந்தியோன் - கருப்பூரச்சிலை.
காந்திரசம் - குங்குமம்.
காந்தினி-அக்குரூரன்தாய், சுவபற்கன் மனைவி.
காந்தீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெ ட்டனு ளொன்று.
காந்துகம் - வெண்காந்தள்.
காந்துகன் - பலகாரஞ் சமைப்பவன்.
காந்துதல்-உட்டணித்தல், எரிதல், ஒளி செய்தல், கருகிப்போதல், காருதல், சுடல், பல்விறைற்கோதல், பிரகாசித் தல், பொறாமைகொள்ளல், மனம் வேகுதல், வெம்மையினு லுறிஞ்சு [தல்.
காலந்தேதலகம் - படுகாணை.
காந்தை-நாயகி, காதலி, பெண், மனைவி.
காந்தோரகம் - ஒருவிதக் கரும்பு.
காபந்து - காவந்து.
காபடிகன்-இந்திரஜாலஞ்செய்கிறவன் சீடன்.
காபாதம் - தீநெறி.
காபாலம் - சிவனிருத்தம், ஒருமதம்.
காபாலம் - சிவன், சீர்பந்தபாஷாணம்.
காபாலி-சிவன், திருகுதாளி, பன்னே ருத்திரரி லொருவன்.
காபாலிகம் - அதிமார்க்கமூன்றனுளொ ன்று. மூன்றாவன பாசுபதம், மகா விரதம், காபாலிகம் என்பன. கபா லிகம்-கபாலத்தில் பிச்சை யேற்று ண்ணலைக் கைக்கொண் டொழுகுந் துறவினை வற்புறுத்தும். இம்மதத் திற்குக் கடவுள் காலவுருத்திரர். இம் மதம் நெடுங்காலத்திற்கு முன்னர் அருகிவிட்டது.
காபி - ஓரிராகம்.
காபிசம் } கள்.
காபிசாயனம் }
காபிலகாலயூபம் - சிற்பநூன் முப்பத்தி ரண்டினுென்று.
காபிலம் - சாங்கியசாஸ்திரம், அது கபி ல முனிவராற் செய்யப்பட்டது.
காபினி - நவச்சாரம்.
காபேயம் - குரங்குக்கூட்டம்.
காபோதம் - புறாக்கூட்டம்.
காப்பரிசி - அட்சதை.
காப்பாற்றல் } இரட்சித்தல், தற்கா த்தல்.
காப்பாற்றுதல் }
காப்பியக்குடி - சோழநாட்டிலே சீகா ழிக்கு வடபாலிலேயுள்ள ஒரூர். இங் கேயே தேவந்தியின் கணவனுகிய சாத்தன் வளர்ந்தது.
காப்பியம் - பொருட்டொடர் நிலைச் செய்யுள். அஃது பெருங்காப்பிய வுறுப்புட் சில குறைந்து வருவது.
காப்பியன் - சுக்கிரன்.
காப்பிரிசல்லாத்து - ஒருபூடு.
காப்பு - ஆடை, இரட்சாபந்தனம், இ ரட்சிப்பு, ஒரு பிரபந்தம், கதவு, கா வல், கையணியி லொன்று, திருநீறு, நூல்களில் தெய்வவணக்கச் செய் யுள் மதில், மூங்கில், விபூதி.
காப்புக்கடவுள் - காப்பானூன் முகத்து ரைக்கப்படுங் கடவுளாகிய திருமால்.
காப்புச்சொல்லல்-காரியந் தொடங்கல் தேவவணக்கஞ் சொல்லல், படித்த நூல் நிறைவேற்றுதல், புராணாரம் பஞ் செய்தல்.
காப்புமாலை-ஒருபிரபந்தம். அஃது தெ ய்வங்காத்தலாக மூன்று ஐந்து எழு செய்யுளாற் பாடுவது.
காமகமனம் - காமத்தின்வழியே நடக் கிற நடக்கை.
காமகாண்டம்-காமன்வில், இன்பநூல்.
காமகாரம் - பொருமை.
காமகேளி - புணர்ச்சி.
காமக்கவலை } காமநோய்.
காமக்காய்ச்சல் }
காமக்கிழத்தி - வேசை.
காமக்கோட்டாத்தி - பார்வதி.

காமக்கோட்டம் - காஞ்சிபுரம், காமாக்ஷி தேவியார் கோயில்.
காமக்கோட்டி - பார்வதி.
காமசகம் - வசந்தகாலம்.
காமசரம் - மாமரம்.
காமசன் - மன்மதன்.
காமசாரி - காமுகன், குருவி.
காமசுதன் - அநிருத்தன்.
காமசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காமச்சுரம் - ஒருவகைநோய். அது நித்திரை, புத்தி, நுட்பம் ஆகிய இவைகளைக்கெடுத்து மோகம், எரிவு, அருசி அதி சுரமென்னு மிக்குணங்களையுண்டாக்குவது, அப்போது வாதமாத்திர மதிகரித்திருக்கும். ஆண்குறி,தொப்புளின்கீழ்த்தானம், தனங்களின் கீழ்த்தானம், புருவம், நெற்றியாகிய இவ்விடங்களி லெரிவு, சையோகத்தி லிச்சை, நாட்டியஞ் செய்ய வெண்ணம், காம்பீரம், சரீரபலம், அதிதாகம், கண்சிவப்பு, அடிக்கடி அசனத்தில் விருப்பம், புன்சிரிப்பு, நித்திராபங்கமென்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.
காமணி - நவச்சாரம்.
காமதகனன் - சிவன்.
காமதாலம் - குயில்.
காமதானசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காமதேனு - தெய்வப்பசு.
காமதை, காமத்து, காமத்துகை } காமதேநு.
காமத்துப்பாலர் - தூர்த்தர்.
காமத்துப்பால்-திருவள்ளுவர் குறளில் அகப்பொருட்பால்.
காமத்துரோகி - காமங்கடிந்தோன்.
காமத்தேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனுளொன்று.
காமநாசன் - சிவன்.
காமநிகை - கட்பாவை.
காமநீர் - இரதம்.
காமநூல் - மதன நூல்.
காமநோய் - மதனநோய்.
காமந்தகம் - இராஜநீதியைக் குறித்துக் கூறும் ஒரு நூல்.
காமபாலன் - பலதேவன்.
காமபூதம் - ஒருவகைநோய். அது தானே யடித்துக்கொள்ளல், பலவிதத்தொனியாகப் பேசல், கம்மிய வார்த்தை, அடிக்கடி நாவைநீட்டல்,செபம்பண்ணல், அசைவறத் திக்குகளைப் பார்த்தல், சுசியென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
காமபோகி - குன்றி.
காமப்பயித்தியம் - காமக்கவலை.
காமப்பற்று-மனத்தீக்குணம் மூன்றில் ஒன்று.
காமப்பால் - காமத்துப்பால், முலைப்பால்.
காமப்பூ - மதனகாமியப்பூ.
காமப்பேய் - காமாதுரன்.
காமமரம் - ஒருமரம்.
காமம்-அன்பு, ஆசை, இந்திரியம், உட்பகை யாறினொன்று, ஊர், காமநோய், காமப்பூ, காமமரம், கிராமம்,குடி, சடத்தீயி னொன்று, சத்தவிசனத்தொன்று, தாமத குணத்தொன்று, பனை,மதனம், முக்குணத்தொன்று, விகாரமெட்டினொன்று, வீரியம்.
காமரசி - நெருஞ்சில்.
காமரம்-அகில்,அடுப்பு, அத்தநாள், ஒரு பண், ஆலமரம், இசை,இசைப்பொது, காத்தடி, சோலை, வண்டு.
காமரி - புளிநறளை.
காமரீசம் - புல்லூரி.
காமரூபி - பச்சோந்தி, வேண்டிய உருவங்கொள்பவன்.
காமரேகை - வேசை.
காமர்-அலங்காரம்,அழகு, ஆசை, ஒளி, பேரழகு.
காமலதை - ஆண்குறி.
காமலம் - காணல், வசந்தகாலம்.
காமலன் - காமுகன்.
காமவதி - மரமஞ்சள்.
காமவர்த்தனி-ஐம்பத்தோராவது மேளகர்த்தா.
காமவல்லபம் - மாமரம்.
காமவல்லபை - நிலவு.
காமவல்லி - கற்பகத்திற் படர்கொடி.
காமவவிநயம்-ஒருவகை அவிநயம், அது சுத்தமாகிய அலங்காரமுள்ள வடிவுந் தொழிலும் காரிகையை நோக்குங் கடைக்கண்ணும் பற்களும் நகையுஞ்

சந்திரனும் நிலவும்போலத் தோன்றுதலும் மலர்ந்தமுகமு மிரந்த பெருமையாகிய சொற்களுமுடையது.
காமவிகாரம் - காமநோய்.
காமவெறி - காமப்பயித்தியம்.
காமற்காய்ந்தோன்-அருகன், சிவன்.
காமனன்-காமுகன், கோரிக்கையுள்ளவன்.
காமனுடல் - பேடு.
காமனுள் - இளவேனில்.
காமனை - சிறுகிழங்கு.
காமன் - திப்பிலி, மன்மதன், வண்டு.
காமன்மைத்துனன் - விநாயகன்.
காமன்றிருநாள் - காமன்பண்டகை, மதன்விழாச் செய்யுநாள்.
காமாக்ஷி - காஞ்சிபுரத்திற் கோயில் கொண்டிருக்கும் உமாதேவியார், கலைமகளையும் மலர்களையும் கண்ணுகவுடைய மாதா.
காமாக்கினி - காமநோய்.
காமாங்குசம் - ஆண்குறி, நகம்.
காமாட்சிப்புல் - காவட்டம்புல்.
காமாட்டி-மண்வெட்டுவோன், மூடன், வேர்கல்லி.
காமாட்டியர் - கூலிக்காரர், நாடோடிகள்.
காமாதிதேவதை - திரயோதசி, திதி.
காமாதுரம் - காமவாசை.
காமாதுரன் - காமி.
காமாந்தகன் - காமமிக்குடையோன், சிவன்.
காமாந்தம் - குயில்.
காமாபலகை - மரக்கலப் பலகையின் ஒன்று.
காமாயு - கருடன்.
காமாயுதம் - காமபாணம்.
காமாரி - சிவன்.
காமாலை, காமாளை } ஒருநோய்.
காமி-உவர்மண், காமதூர்த்தன், பொன்னிமிளை.
காமிகம் - சிவாகம மிருபத்தெட்டின் ஒன்று, வாஞ்சாவிரகம்.
காமித்தல் - இச்சித்தல், மோகமுறல், விரும்பல்.
காமியகம் - ஒருவனம். இதுபாண்டவர்கள் ஆரணியவாசகாலத்து வசித்தது. இது குருஜாங்கலத்தைச் சார்ந்துள்ளது.
காமியகன்மம்-பயனை விரும்பிச் செய்யுங் கிரியை.
காமியக்கல் - கோமேதகம்.
காமியதாநம் - விரும்பினதைக் கொடுத்தல்.
காமியதானம்-ஒன்றைக்குறித்ததானம்.
காமியத்தவம் - ஒருவகைத் தவம். அது இச்சிக்கப்படும் பொருளைக் கருதிச் செய்வது.
காமியமரணம் - தற்கொலை.
காமியமலம் - மும்மலத்தொன்று.
காமியம்-இச்சிக்கும்பொருள், ஒன்றை வேண்டிச்செய்யும் பூசை, கன்மமலம், வில்.
காமியன் - காமி.
காமுகப்பிரியம் - கஸ்தூரிமஞ்சள்.
காமுகம் - அசோகமரம், பூங்குன்றிக்கொடி.
காமுகர் - தூர்த்தர், நாகப்பதிவாழ்நர், நாகரீகர்.
காமுகன் - தூர்த்தன், நாகரீகன்.
காமுகி, காமுகை } ஆசையுள்ளவன், மோகமுடையவள்.
காமுருகி - ஓந்தி, கொடியபெண்.
காமுறல், காமுறுதல் } ஆசைப்படல், மோகமுறல், விரும்பல்.
காமூச்சு - முக்கால்நாழிகை வழி.
காமோதகம் - காமசலம்.
காம்பவம் - சங்கோசை.
காம்பவிகன் - செம்பினுல் வளைபல் செய்து விற்பவன்.
காம்பளம் - கம்பளியினுல் மூடிய தேர்.
காம்பன்னதோளி - திருப்பந்தணநல்லூரிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
காம்பாய்தல் - காம்பு கிள்ளல்.
காம்பு - இறைகூடை, சலசூத்திரம்.
காம்பிரம் - முருக்கு.
காம்பிலி - ஒரு தேயம்.
காம்பிலியம் - பாஞ்சாலதேசத் தொருபாகம், துருபதன் தேசம்.
காம்பிலியன் - பர்மியாசுவன் மகன்.
காம்பீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.

காம்பீரம் } ஆழம், கெம்பீரம், முக்
காம்பீரியம் } கியம்.
காம்பு - இலை முதலியவற்றின் காம்பு, கருவிகளின் காம்பு, கைப்பிடி, பட்டுச்சீலை, பூசுணி, பூந்தாள், மலர்க்கொம்பு, மலர்த்தாள், மூங்கில்.
காம்புக்கிண்ணம் - அகப்பை.
காம்புச்சத்தகம் - ஓலை வாருகிற சிறுகத்தி.
காம்போகி - குன்றி.
காம்போசம் - ஒருமரம், தேசமைம்பத்தாற்றினொன்று. பதினெண்பாடையினொன்று.
காம்போசி - குதிரைவாலி.
காம்போதி - ஒருபண்.
காயகப்பிரியை-பதின்மூன்றாவது மேளகர்த்தா.
காயகம் - ஒருமருந்து, காமப்பிராந்தி, பாடுதல், மருட்டுவித்தை, மோகமயக்கு.
காயகற்பம் - சரீரத்தைப் பலப்பிக்கும் மருந்து.
காயகன் - பாடுவோன், மயக்குவோன்.
காயக்கம் - மருட்டுவித்தை.
காயங்சுட்டுதல்-இரணவைத்தியஞ் செய்தல்.
காயசலம் - மூத்திரம்.
காயசன் - மன்மதன்.
காயசித்தி - காயம் மருந்துக்களினாற் பலத்தல், கருப்பூரசிலாசத்து, சுண்ணம், பொன்னாங்கண்ணி.
காயசித்திக்கடியான் - காந்தம்.
காயசித்திசுண்ணம் - கருப்பூரசிலாசத்து.
காயசித்தியானோன் - சூதகபாஷாணம், மருந்தினால் உடல் நிலைக்கப்பெற்றோன்.
காயசித்தியுப்பு - அமரியுப்பு.
காயத்திரி-அயன்மனைவிகளி லொருத்தி, ஒருமந்திரம், கருங்காலி, சரச்சுவதி.
காயத்திரீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காயத்தையிருத்தி - பூவழலை.
காயத்தையுருக்கி - அஸ்திபேதி.
காயப்பெண் - கனவிலொரு மோகினிப்பெண்.
காயமாயம் - உடம்பின்நிலையின்மை.
காயம் - ஆகாயம், உடல், ஒருகுழம்பு, கடுகு, காரப்பு, கோபம், சுக்கு, தழும்பு, பெருங்காயம், மிளகு, வெண்காயம்.
காயல்-உப்பளம், கழி, கழிமுகம், காய்தல், சுரவியாதி.
காயவியல் - அவியற்காய், காய்க்கறி.
காயவேகம்-எரிச்சல், ஒருநோய். கடுங்கோபமடைதல், காயம்பட்டதினால், வரும் வேகம், பசிநோய்.
காயா - காசாமரம்.
காயாகாயம் - உடற்றழும்பு.
காயாசுவாதம் - காச்சுவாதம்.
காயாபுரி - சரீரம்.
காயாம்புமேனியன் - விட்டுணு.
காயாரோகணேசுவரர் - திருநாகைக்காரோணத்திலேகோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
காய் - கழலைக்கட்டி, நாயென்னேவல், சூது, காய், பழம், மர முதலியவற்றின் காய்.
காய்க்கடுக்கன் - உருத்திராட்சக் கடுக்கன்.
காய்க்குலை-காயாயிருக்குங்குலை.
காய்சினவழுதி-ஒரு பாண்டியன். இவன்உக்கிரபாண்டியனெனப்படுவன். தலைசங்கம் தாபித்து தமிழாராய்ந்த முதற்பாண்டியன் இவனே. இவனுக்கு இராஜதானி தலைச்சங்கமிருந்து பின் கடல்கொண்ட தென்மதுரை. இத்தென்மதுரை குமரியாற்றினருகேயிருந்தது.
காய்சினவேந்தன்-நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருப்புளிங்குடியிற்கோயில்கொண்ட விட்டுணு.
காய்ச்சல்-எரிச்சல், கடிந்துகொள்ளல், காய்தல், சுரம், தண்டித்தல், பகைமை, வெப்பு, நோய், வெறுத்தல், வேக்காடு.
காய்ச்சற்கட்டி - வெப்புக்கட்டி.
காய்ச்சற்பாஷாணம் - ஒருமருந்து.
காய்ச்சிறக்கு - புளிச்சற்கீரை.
காய்ச்சு - கண்டிப்பு, காய்ச்சென்னேவல், காய்வு.
காய்ச்சுக்கட்டி - காசுக்கட்டி.
காய்ச்சுக்கல் - நிறமிட்டகல்.
காய்ச்சுக்குப்பி-ஒரு கண்ணாடிக்குப்பி.
காய்ச்சுண்டி - காய்ச்சுக்கட்டி.
காய்ச்சுதல்-உலர்த்துதல், கண்டித்தல், சமைத்தல், சாயமிடுதல்.
காய்ச்சுநீர் - வெந்நீர்
காய்ச்சுப்பால் - வெந்தபால்.

காய்ச்சுப்பு - உப்புநீர் காய்ச்சியெடுக்கு முப்பு, சவட்டுப்பு, வளையலுப்பு.
காய்ச்சுரை-புடத்தி லிட்டெடுத்த தங்கம், புளிச்சக்கீரை.
காய்ச்சுலவணம் - வளையலுப்பு.
காய்ச்சுவச்சிரம்-ஒருவிதவச்சிரப்பசை.
காய்ச்சுறுச்கு - புளிச்சற்கீரை.
காய்ஞ்சொறி - ஒருசெடி.
காய்தல் - உலர்தல், எரிச்சலடைதல், கோபம், சினக்குறிப்பு, சினம், சீத்தல், பிரகாசித்தல், புண்ணுறுதல், மெலிதல், வெட்டல், வெறுத்தல்.
காய்த்தல்-சரீரங்கன்றியுரத்தல், தழும்புண்டாதல், மரமுதலிய காய்த்தல்.
காய்த்தானியம் - கம்பளிகொண்டான், நவதானியம், முசுக்குட்டை.
காய்ப்பழம் - முழுதும் நிறவாதபழம்.
காய்ப்பரங்கி - கோழிநோயினொன்று.
காய்ப்பிரும்பு-அடிக்கவெடிக்கு மிரும்பு.
காய்ப்பு - காய்த்தல், தடிப்பு, தழும்பு, பழுதான இரும்பு, வெறுப்பு.
காய்மகாரம் - எரிச்சல், பொருமை.
காய்மடி - கன்மடி.
காய்மடை - கனிவகைகளா விடுமடை.
காய்மண்டை - காய்ந்ததலை.
காய்முருங்கை - ஒருவகை முருங்கை.
காய்மை - பொருமை.
காய்மைகரித்தல்-பொருமை யடைதல்.
காய்ம்பனை - பெண்பனை.
காய்வள்ளி - ஒரு கிழங்குக்கொடி.
காய்வு - உலர்வு, எரிச்சல், கண்டிப்பு, கோபம், சூடு, பசிவாட்டம், பிரகாசம், மெலிவு.
காய்வெட்டி-காயை வெட்டித்தள்ளிக் கருப்பநீர் சேர்க்குங்குலை.
காய்வெட்டிக்கள் - முதுபாளைக்கள்.
காய்வேளை - ஒருபூடு.
காரகக்கருவி - கருமத் துணைக்காரணம் ஞாபகக்கருவி.
காரகதீபகம் - ஓரலங்காரம்.
காரகம்-கருவி, காரணத்துவம், செயல் நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்று, வினைகொண்டு முடிவது, வினைமுதல் வெப்பம்.
காரகவகத்திணை - செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் பிறவும் வரக்காட்டல்.
காரகவரிக்கொம்பு-உட்புறத்தில் கறுப்புவரியுள்ள எருத்தின்கொம்பு.
காரகவேது-கருவிகருத்தா முதலிய காரணமாகக் கூறுமலங்காரம், ஞாபகக்கருவி, வினைமுதற்காரணம்.
காரகன் - செய்வோன்.
காரக்கல் - பட்டவிடத்தைக் கருக்குமோர்கல், விஷக்கல்.
காரசாரம் - அறுசு, வைக்கூட்டு, உறைப்பு,பஞ்சலவணத்தொன்று, அஃது கறியுப்பு.
காரடம் - காரடவித்தை. [கறியுப்பு.
காரணகர்த்தா - அற்புதக்கடவுள், நிமித்தகர்த்தா, முதற்கடவுள்.
காரணகாட்சி - அற்புதம்.
காரணக்குரு - ஞானதேசிகன்.
காரணக்குறி - காரணப்பெயர், (உ-ம்) சுரேசன், முன்னறிகுறி.
காரணக்குறிமரபு - தொன்று தொட்டு வருங் காரணப்பெயர்.
காரணக்குறியாளுக்கம் - காரணக்குறியாக்கியபெயர் (உ-ம்) பொன்னன்.
காரணகத்தி - எவட்சாரம்.
காரணச்சிறப்புப்பெயர் - காரணத்தானென்றற்கே வரும்பெயர்.
காரணச்சொல்-கதை, காரணத்தானுய சொல்.
காரணப்பெயர் - யாதானுமொரு காரணம்பற்றிப் பொருள்களை யுணர்த்திநிற்கும் பெயர்.
காரணப்பொதுப்பெயர் - காரணத்தாற் பலவற்றிற்கும் பொதுவாய் வரும் பெயர்.
காரணமறிநிலை-ஓரலங்காரம். அது காரணமுங் காரியமுந் தம்முண்மாறவுவைத்தல்.
காரணமாலை - ஓரலங்காரம்.
காரணமாலையணி - பின்னுக வருவனவற்றிற்கு முன்னுக வருவனவற்றைக் காரணங்களாகவேனுங் காரியங்களாகவேனுஞ் சொல்லுதல்.
காரணம்-எது, கருத்தாமுதற் பலகாரணம், கருவி, சிவாகமிருபத்தெட்டினென்று. சீவதேகம் மூன்றினென்று. நோக்கம், பிரதானம், மூலம்.
காரணவகத்திணை - ஒன்றன் காரணத்தை விளக்கிக் காட்டல் (உ-ம்) கட... வுளுரைத்த நூல்.

காரணவாகுபெயர் - காரணத்தின் பெயரைக் காரியத்திற்குவழங்கல்(உ-ம்) திருவாசகம்.

காரணவாராய்ச்சியணி - ஓரலங்காரம். அது குறைவில்லாத காரணமிருந்துங் காரியம்பிறவாமையைச் சொல்லுதல்.

காரணவிடுகுறி-ஒருகாற்காரணப்பேராயும் ஒரு காலிடுகுறிப்பேராயு மிருப்பது (உ-ம்) முண்டகம்.

காரணவிலக்கணை-காரணத்தைக் காரியமாயுபசரித்தல்.

காரணவிலக்கு - ஓரலங்காரம். அஃது ஏதுவை மறைத்தல்.

காரணவொழிப்பு - அபநுதி யுருபகத்தொன்று. அஃது இன்னகாரணத்தானிஃது இன்னதன்றுவேறின்னதெனக் கூறுவது. (உ-ம்) கங்குல்வாய்வெம்மை கால்வதினலிது திங்களன்று செழுந்தணலாகும்.

காரணன்-அரசன், கடவுள், சிவன், நிமித்தகர்த்தா, மிரதபாஷாணம்.

காரணவஸ்தை } காரணவத்தை } சேவலம்சகலம்சுத்த என்னு மூன்றவத்தை.

காரணி - உவமை, ஓரூர்.

காரணிகன்-பாத்ராபாத்ரபரிசோதகன்.

காரணிக்கம் - சரித்திரம்.

காரணேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.

காரண்டம் - காக்கை, நீர்க்காக்கை.

காரண்டவம் - நீர்க்காக்கை.

காரத்திரி - காரமிட்டதிரி.

காரநீர் - காரமான ஒருநீர்.

காரப்பசை - ஒருபசை.

காரம்-அக்கிராகாரம், அச்சம், உறைப்புங் கடுமையுமான சேர்வை, எழுத்தின்சாரியை (உ-ம்) அகாரம், காரியம், கார்த்தல், சாம்பலுப்பு, சோழங்கபாஷாணம், பக்கம், (உ-ம்) இடங்காரம், புடைவையழுக்கு நீக்குங்காரம், புண்களுக்கிடுங்காரம், பொரிகாரம், பொன், மரவயிரம்.

காரம்பம் - காட்டுத்திப்பிலி.

காரம்பை - ஞாழல்.

காராத்தமம் - மத்தியத்தின்தெளிவு.

காரர் - அச்சமுள்ளோர், செய்வோர்.

காரல் - ஒருமீன், காருதல், காரல்.

காரவல்லி - பாகல்.

காரவி-ஓமம், பெருங்காயம், பெருஞ்சீரகம்.

காரன்-காரியஞ்செய்வோன், சோரபாஷாணம்.

காரா - எருமை.

காராகாரம் - சிறைச்சாலை.

காராக்கரணை - ஒருசெடி.

காராக்கிரகம்-சிறைச்சாலை, காவற்கூடம்.

காராடு - வெள்ளாடு.

காராமணி - கொம்புப்பயறு.

காராமயத்திரிதயமோசனம் - சத்தாங்கோபகாரத்தொன்று. அஃது சிறைநோய், பயமூன்றுந்தீர்த்தல்.

காராமயம் - சிறைச்சாலைத்துன்பம்.

காராம்பசு - தெய்வப்பசு, மறுநிறங் கலவாத கறுத்தபசு.

காராம்பி - இறைகூடை, சலசூத்திரம்.

காராளர்-சூத்திரர், பூவைசியர், வேளாளர்.

காரானை - முகில், யானை.

காரான் - எருமை.

காரி-ஆவிரை, இந்திரன், ஐயன், கடையெழுவள்ளலிலொருவன், கண்டங்கத்திரி, கரிக்குருவி, கருவை, களர்நிலம், கள், காக்கை, கிளி, சனி, தூணி என்னுமோரளவை, தொழில்செய்யுமிடம், நஞ்சு, வயிரவன், வெண்காரம்.

காரிகம் - காவிக்கல், பாதை.

காரிகிழார் - பல்யாகசாலை, பெருவழுதியைப் பாடிய புலவர். இவர் புறநானூறுபாடிய புலவருள்ளும் ஒருவர்.

காரிகை - அமுதசாகரன்செய்த ஒரு பாப்புநூல், அழகு ஒரு ஆரியச்செய்யுள், கலித்துறை, பெண்.

காரிக்கம்-சலவைசெய்யாத வெள்ளைப் புதுப்புடவை.

காரிக்கூன் - ஒருகாளான்.

காரிஷம் - கூட்டம்.

காரிதாய் - வடுகி.

காரிநாயனர் - அறுபான்மும்மைநாயன்மார்களுள் ஒருவர்.

காரிப்பிள்ளை - கரிக்குருவி.

காரிமை - கொடிவேலி.

காரியகருத்தா } காரியகாரன் } காரியத்தலைவன், காரியம்பார்ப்போன், வேலையிலே சாதுரியன்.

காரியகுரு - பொருணிமித்த முபதேசிப்போன்.
காரியக்கடிசு - கற்பாஷாணம்.
காரியக்கெட்டி - சமர்த்தன்.
காரியங்கட்டுதல் - கைகூடுதல்.
காரியசாதகம் - காரியம் வாய்த்தல்.
காரியசாதனம்-காரியத்திற்கேற்ற வேது.
காரியசித்தி - காரியசாதகம்.
காரியசுத்தி-நற்காரியங்கள் தொடங்குதற்குப் பார்க்கவேண்டிய சுத்திகள் அவை விவாகத்துக்குஎழாமிடமும், அன்னப்பிராசனத்திற் கிரண்டாமிடமும், கிரகாரம்பத்திற்கு நான்காமிடமும், யாத்திரைக்குப் பத்தாமிடமும் சுத்திக்கொள்வதும், வாஸ்து பிரதிஷ்டை கருணவேதம், சௌளம், வித்தியாரம்பம், அபிஷேகம், சீமந்தம், நாமகரணம், உபநயனம் இவை ஈற்றுக்கு எட்டாமிடம் சுத்தமாகக் கொள்வதுமாம்.
காரியதரிசி - காரியத்தலைவன்.
காரியதுரந்தரன் - மிகவல்லோன்.
காரியதெரிசி - காரியங்களைப் பார்க்குமதிகாரி.
காரியஸ்தன் - காரியகாரன்.
காரியத்துவம் - செயல்.
காரியபாகம் - காரியபக்குவம்.
காரியப்படல் } சம்பவித்தல், தொ
காரியப்படுதல் } ழிற்படல், தோற்றப்படல்.
காரியம்படுத்தல் - காரியநடத்தல், காரியமுடித்தல்.
காரியப்பிரத்துவேஷம் - சோம்பு.
காரியப்பொறுப்பு - கருமப்பொறுப்பு.
காரியம்-இலாபம், எச்சம், கருமம், கவ்வை, செய்கை, தொழில், பயன், மூலம், வழக்கு, விஷயம்.
காரியம்பார்த்தல் - கருமம்பார்த்தல்.
காரியவகத்திணை - அகத்திணை பன்னிரண்டிலொன்று. அது காரியங்காட்டுவது.
காரியவாகுபெயர் - காரியத்தின் பெயரைக்காரணத்திற்குவழங்கும்பெயர்.
காரியவான் - காரியக்கெட்டி.
காரியவிலக்கணை-காரியத்தைக் காரணமாயுபசரித்தல்.
காரியவிலக்கு-ஓரலங்காரம். அது காரியத்தை மறுத்துக்கூறுவது.
காரியவேது-காரணத்தை யறிவிக்குங் காரியம்.
காரியாகாரியம்-பலகாரியம், பெரியகாரியம்.
காரியார்த்தசித்தி - காரியசித்தி.
காரியாறு - நெடுங்கிள்ளி யென்னுஞ் சோழன் போரில்மடிந்த இடம்.
காரியேட்சணம் - மேல்விசாரணை.
காரிரத்தம் - ஆடுதின்னாப்பாளை.
காரிருள் - பேரிருள், முற்றிருள்.
காரிலவணம் - பிடாலவணம்.
காரிவாபம் - தூணி விரைக்கும் பூமி.
காரீ - தூணி.
காரீடம் - எருமுட்டைக்குவியல்.
காரீயம் - கரியவீயம்.
காரு - செய்வோன்.
காருகபத்தியம் - வேதாக்கினி மூன்றினொன்று.
காருகம் - அக்கினிதேவனைக் கடவுளாய்க் கொள்ளுஞ் சமயம், உழவு, நெசவு முதலிய தொழில், கைங்கரியமான வேலை.
காருகர் - ஓவியர், நெய்வார்.
காருகவினை-சூத்திர ரறுதொழிலுளென்று. அஃது தூற்றல், ஆடையாக்கல், சுமத்தல், ஏருழுதல் முதலியன.
காருகன் - செய்வோன்.
காருகம் - காரெள், நுரை, புற்று.
காருச்சிவல் - கடற்பாசி.
காருடம் - அட்டாதச புராணத்தொன்று, உபநிடத முப்பத்திரண்டினொன்று, கருடன் கலைஞான மறுபத்துநான்கினொன்று, கறிப்புடோல், மருக்காரை.
காருடவித்தை - விஷவித்தையினொன்று.
காருடன் - கருடன், விஷவித்தைக்காரன்.
காருணி-கிருபையுடையோன், வானம்பாடி.
காருணிகம் - கிருபை.
காருணிகன்-கிருபையுடையோன், ஈரளேஞ்சுடையோன்.
காருணியம் - கிருபை, தயை.
காருணியன் - காருணிகன்.
காருண்ணியபாண்டியன் - கற்பூரபாண்டியனுக்குப் பின் முடிதரித்தவன்,

இவனுக்கும் கூன்பாண்டியனுக்குமி டையில் இருவர் அரசுபுரிந்தனர்.
காருண்ணியம் - காருணியம், கிருபை.
காருண்ணியம் - கிருபையுள்ளவன்.
காருதல் - காற்றுதல்.
காருதேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனுளொன்று.
காருப்பு - திலாலவணம், மரவுப்பு.
காருராசி - கறிப்புடோல்.
காருன்னி - ஆடுதின்னாப்பாளை.
காருகம் - கருங்குரங்கு.
காரூடதம் - உபாகட முப்பத்திரண்டி னொன்று.
காரூடம் - அட்டாதச புராணத்தொன் று, உபாகட முப்பத்திரண்டினொ ன்று, கருடன், கலைஞானமறுபத்து நான்கினொன்று.
காரூடவித்தை - கருடவித்தை.
காரெலி - ஓரெலி.
காரெள் - ஓரெள்.
காரை - ஒருசெடி, ஒருமரம், ஒருமீன், சீலை, சுண்ணச்சாந்து.
காரைக்காலம்மை - அறுபத்துமூவரிற் சேர்ந்த ஒரு தவமாது.
காரைத்திருநாதர் - திருநெறிக்காரைக் காட்டிலே கோயில் கொண்டிருக் குஞ் சுவாமி.
காரோடர் - உரைகாரர்.
கார்-அச்சம்,அழகு, ஆவணி, புரட்டாசி யின் பருவம்,இருள், எலி, எரிற்பூட் டிய விரும்பாணி, கருங்குரங்கு, கரு மை, காரென்னேவல், கார்நெல்,நீர், மேகம், வெள்ளாடு.
கார்ஹரிஷி-ஒருமுனிவர். இவர் காரக மென்னுந் தலத்தில் விஷ்ணுவைப் பிரத்தியக்ஷமாகக்கண்டு அருள்பெற் றவர்.
கார்காலம்-ஆறுபருவத்தொன்று, அது ஆவணி புரட்டாசியின் பருவம்.
கார்காலவுரிமை - வாடை வீசலு மிந்திர கோபமயில் கேகய மகிழ்தலும், வெ ண்காந்தள் செங்காந்தள் கொன்றை கூதாளம் வேங்கைகாக்காணம் முல் லை கடம்பு காயா குருந்திவை மலர்த லும் அன்னங் கிளி குயில்வருந்ததும் தாமரைமுதனீர் மலரேங்கலுமாகும்.
கார்கோடன்-கருடப்பச்சைக்கல், ஒரு
கார்கோணி - தேள்கொடுக்கி. [பாம்பு.
கார்கோளி - கடல், கோரைப்புல், முத் தக்காசு.
கார்கோள் - கடல், சனி.
கார்க்காய் - சந்திரநாகம்.
கார்க்கியன் - சினிமகன், பாஷ்கலன் சீஷன், இருக்குவேதத்தில் வல்ல வன். இவன் வமிசத்தார்பிராமணர்.
கார்க்குவளை - செவ்விக்குவளை.
கார்க்குரட்டை - நீலக்காக்கணம்.
கார்க்கொள் - ஒருகொள்.
கார்க்கோடகன் } அட்டநாகத் தொன்
கார்க்கோடன் } று கருடக்கல், துட்டன்.
கார்க்கோழி-கருங்கொள், கருங்கோழி, கருஞ்சீரகம்.
கார்க்கோளி-கருங்கொள், கருஞ்சீரகம்.
கார்த்தபட்சம் } அம்பு.
கார்த்தபத்திரம் }
கார்த்தபம் - கழுதை.
கார்த்தம் - அம்பு, காமம்.
கார்த்தல் - உப்புக்கரித்தல், காழ்த்தல்.
கார்த்தவீரியரிபு - பரசுராமன்.
கார்த்தவீரியன் } அறுவகைச்
கார்த்தவீரியார்ச்சுனன் } சக்கிரவர்த் திகளிலொருவன்.
கார்த்தன் - துருசி.
கார்த்தாந்திகன் - சோதிடநூல் வல்
கார்த்திகம்-கார்த்திகைமாதம்.[லோன்.
கார்த்திகேசன் } முருகக்கடவுள்.
கார்த்திகேயன் }
கார்த்திகை - ஒருநாள், ஒருநக்ஷத்திரம், ஒருமாதம், காந்தள், துர்க்கை, தக்ஷி ணாமூர்த்தியென்பவனது தாய், வார் த்திகனென்னு மந்தணன் மனைவி.
கார்த்திகைக்கிழங்கு - கலப்பைக் கிழங்
கார்த்திகைக்கொடி - காந்தள். [கு.
கார்த்திகைப்பூ - காந்தள்மலர்.
கார்த்தீகம் - கார்த்திகைமாதம்.
கார்நாற்பது - ஒரு செய்யுள்.
கார்நிறம் - கறுப்புவருணம், மாங்கிஷச் சிலை.
கார்நெல் - கார்காலத்தறுக்கும் நெல்.
கார்புகா } கார்ப்போகரிசி.
கார்புகாவரிசி }
கார்ப்படிகன் - யாத்திரைக்காரன்.

கார்ப்பண்ணியம் - உலோபம், மனத்தத ளர்வு, வறுமை.
கார்ப்பம் - கருப்பப்பை.
கார்ப்பாசம் - கார்ப்பாசம், பருத்தி.
கார்ப்பாடகம் - பிறர் மருமமறிந்தவன், மாணுக்கன்.
கார்ப்பாதி - பருத்திச்செடி.
கார்ப்பான் - கையாந்தகரை, கரசலாங் கண்ணி.
கார்ப்பீகம் - கார்ப்பம்.
கார்ப்பு - உறைப்பு, துவர்ப்பு.
கார்ப்புரம் - நீர், பாவம், பொன்.
கார்ப்போகரிசி - ஒருசரக்கு.
கார்மணி - கையாந்தகரை.
கார்மலி - கடல்.
கார்முகம் - மூங்கில், மேகம், வில்.
கார்முகில் வைப்புபாஷாண முப்பத்தி ரண்டிஞென்று, கார்காலத்துமேகம்.
கார்முல்லை பொதுவியற்றிணைத் துறை பன்னிரண்டனு ளொன்று. அது பெறற்கரிய வலியினையுடைய பாச றையினின்றும் தலைவர் வருவதற்கு முன்னே கரியகடலை முகந்துகொ ண்டு மேகம் வந்ததெனக் கூறுவது.
கார்மேகசாரம் - காகிசாரம்.
கார்வண்ணர் - அசுரர்.
கார்வண்ணன் - விட்டுணு.
கார்வலயம் - கடல்.
கார்வண்ணம்-நூற்றெட்டுத் திருப்பதி களுளொன்று. இது தொண்டை நாட்டிலுள்ளது.
காலகண்டகம் - நச்சுக்கருவி.
காலகண்டம் - வயிற்றில் வலப்பக்கமி ருக்குந் தசை.
காலகண்டன் - சிவன்.
காலகதி - காலத்தினடை.
காலகம் - சேங்கொட்டை.
காலகரணம் - காலதாமதம்.
காலகரந்தகம் - நீர்ப்பாம்பு.
காலகவி-விரோசனன்மகன், பலிக்குச் சகோதரன். இவன் துவாபராந்தத் தில் தானவர்கள் சகாயார்த்தம் விஷ கபித்த ரூபமாக ரேபல்லையில் உற் பத்தியாகி அந்தக் கிராமத்திற் கோ பாலர்களுக்குக் குரோதத்தை யுண் டாக்குகிறபோது அச்செய்தியைச் சங்ககர்ணனென்கிற பூதம் ஒரு பி ராமணனிடத்திலே ஆவேசித்து ஸ்ரீ கிருஷ்ண பலராமர்களுக்கு அறிவித் தது. அப்பொழுது அவர்கள் அந் தக் கபித்த விருக்ஷத்தை நிர்மூலஞ் செய்து கோபாலர்களுக்கும் பசுக்க ளுக்கும் சுகத்தை யுண்டாக்கினுர் கள். கபித்தம் - விளாமரம்.
காலகன்மம்காலத்துக்குரியசெய்கை.
காலகார்முகன் - சுமாலிமகன்.
காலகாலன் - சிவன்.
காலகுண்டன் - யமன்.
காலகுந்தி - கழற்சிச்செடி.
காலகூடம் - காளகூடம், விஷம்.
காலகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
காலகேயர்கள்-கசியபப் பிரசாபதிக்குக் காலையிடத்தி லுற்பத்தியானவர்கள் இவர்கள் மிகக் கொடிய பாதகர்கள். இவர்களால் மிக வருந்திய தேவர் கள் அகஸ்தியர்க்குத் தங்குறையைக் கூற அவர் இவர்களுக் குறைவிடமா யிருந்தசமுத்திரநீரையெல்லாம் ஆச மனஞ்செய்து வற்றுவித்தனர். அது காரணமாக நிலைதளர்ந்து வலியிழந் தார்கள். இவர்களுடையசந்ததிஅர்ச் சுனனுல் நிர்மூலமாக்கப்பட்டது.
காலகௌசிகன் - காசியிலிருந்த ஒரு பிராமணன். அரிச்சந்திரனுடைய மனைவியை விலைக்குக் கொள்ளும் பொருட்டுக் சுலிபகவான் விசுவா மித்திரருடைய ஏவலால் இப்பிராம ணனுகக் காசியிலே பிறந்திருந்தா னென்பது புராணசம்மதம்.
காலகௌட்சேயன்-க்ஷேமதரிசியென் னும் கோசலதேச ராஜாவுடைய மந் திரி, இராஜதருமத்தை நன்குணர்ந் தவனென்பது பிரசித்தி.
காலக்கணிதர் - சோதிடர்.
காலக்கிரமம் - காலாட்சம்.
காலக்கிரயம் - தற்காலவிலை.
காலக்குறி / காலக்குறிப்பு } காலவேற்றுமையைக் காட்டுமடையாளம்.
காலக்கொடுமை - காலப் பொல்லாங்கு.
காலங்கண்டவன் - அனுபவப்பட்டவன் வயதானவன்.
காலசக்கரம் - ஆயுட்காலம், ஆயுள் நிய திச்சக்கரம், கிரகபலசக்கரம்.

காலசங்கதி-அவ்வக்காலத்துப்புராணம்.
காலசங்கம் - வைகறைப்பொழுது.
காலசங்கை - காலஉத்தேசம், காலக்கணக்கு.
காலசந்தி - நித்தியகருமம், வைகறை.
காலசம் - காற்று, பேராலவட்டம்.
காலசர்ப்பம் - கரும்பாம்பு.
காலசாகம் - கருவேப்பிலை.
காலசாரம் - அணில்.
காலசுகம் - வேலைச்சுகம்.
காலசூத்திரம் - ஒருநரகம்.
காலசேயம் - மோர்.
காலஞ்சரேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
காலஞ்செல்லுதல் - இறத்தல், காலங்கழிதல்.
காலஞ்சொல்லி - காகம், பல்லி.
காலடி - உள்ளங்கால், கரடு, கார்சுவடு.
காலட்சயம் - நாள்விடுதல்.
காலட்சேபம் - சீவனம், நாட்கழித்தல், நிருவாகம்.
காலணி - காலிலிடும்பணி.
காலதண்டம் - நமனாயுதம், மரணம்.
காலதர் - பலகணி.
காலதர்மம் - காலத்தன்மை, மரணம்.
காலதாமதம் - தாமதம்.
காலதானம் - யமரூபதானம்.
காலதீமை - காலக்கொடுமை, காலசுகவீனம்.
காலஸ்கந்தம் - தும்பை, ஒரு பச்சிலைமரம்.
காலத்தாலணையும்பெயர் - பருவமுதலிய காலங்களாலணையும்பெயர் (உ-ம்) வேனிலான்.
காலத்திரயம் - முக்காலம். அவை செல்காலம், நிகழ்காலம், வருங்காலம்.
காலத்துவாரீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
காலநாபன் - இரணியாக்ஷன் மகனாகிய தாரகன்.
காலநியமம் - காலக்கடன்.
காலநிரூபணம் - காலகணிதம்.
காலநுட்பம் - கணத்தினுணுகியகாலம்.
காலநேமி - தாரக யுத்தத்தில் விஷ்ணுவினாற் சொல்லப்பட்ட ஒருதானவன், இராவணன் மாதுலன்.
காலநேமிரிபு - விட்டுணு.
காலநேரம் - காலம்.
காலநோக்காடு - கருமுதிர் காலத்தின் வயிற்றுநோக்காடு.
காலந்தள்ளல் - காலம்போக்கல்.
காலபரிச்சேதம்-ஒருகாலத்துண்டு ஒருகாலத்தின்றென்பது.
காலபரிபாகம் - காலத்தினாற் பக்குவமடைதல்.
காலபர்ணம் - தகரை.
காலபாசம் - நமன்கயிறு.
காலபுருஷம் - ஒரு சோதிடநூல்.
காலபேதம் - காலவித்தியாசம்.
காலவைரவன் - காசியிலுள்ள வைரவமூர்த்தி, யமன் இவ்வைரவருக்கஞ்சி காசியிலுள்ளாரை வருத்தாது கொண்டேகுவானென்ப தைதிகம்.
கால்போகம்-பருவகாலம், பிரயோஜனகாலம்.
காலப்பகுபதம்-பருவகாலம் பற்றிவரும் பகுபதம் (உ ம்) திருவோணத்தான்.
காலப்பண், காலப்பார் - முன்னேரம்.
காலப்பிரஷ்டம் - கன்னதுவில்.
காலப்பிறிதின்கிழமை - காலம்பற்றிய பிறிதின்கிழமை (உ-ம்) மாரனதுவேனில்.
காலப்பெயர்ச்சி - காலம் வித்தியாசப்படுதல்.
காலமயக்கம், காலமயக்கு - காலவழு, காலவழுவமைதி.
காலமல்லாக்காலம் - அகாலம், கொடியகாலம்.
காலமழை - பருவமழை.
காலமறிதல் - திரிகாலவர்த்தமானமறிதல்.
காலமாறு - காலைதோறும்.
காலமிருத்து - நியமமரணம்.
காலமீரம் - பளிங்கு.
காலமேஷி - ஒருவகைக்கொடி.
காலமேஷிகை- கருஞ்சிவதை.
காலம்-சமயம், தாளப்பிரமாணம் பத்தினென்று பருவம், பொழுது, முடிவு, யுகம், விடியல், வித்தியாதத்துவமேழினொன்று.
காலம்பண்ணல் - இறத்தல்.
காலம்பார்த்தல் - சமயம்பார்த்தல்.
காலம்புரளல், காலம்புரளுதல் - காலம் வேற்றுமைப்படல்.

காலம்போக்கல் - காலத்தை வீணாய்க் கழித்தல்.
காலம்விடுதல்-நாள்விடுதல்.
காலயவன்-ஒருதானவன். இவன் நார தன் உபதேசத்தால் மதுராபுரியைப் படைகொண்டு வளைந்தபோது அத னைமுன்னரேயுணர்ந்த கிருஷ்ணன் சமுத்திர மத்தியிலே ஒரு பட்ட ணத்தை விசுவகர்மாவினாலே யுண் டாக்கி அங்கே தமது ஜனங்களை யெல்லாம் போக்கிவிட்டு தாம் மாத் திரம் நிராயுதமாக இவன் முன்னே வெளிப்பட்டு நடந்தார். அதுகண்ட காலயவன் அவரைத் தொடர அவர் முசுகுந்தன் நித்திரைசெய்த மலைக் குகையினுள்ளேசென்றார். அவனும் அங்கே நுழைந்து கிருஷ்ணனென் றுநினைத்து முசுகுந்தனை யுதைத் தான். முசுகுந்தன் பெற்றிருந்த வரப்பிரசாத மகத்துவத்தால் விழித் துப் பார்க்கக் காலயவன் பஸ்பமா னான். சாளுவன் கார்க்கியனைப்பார் த்து நபுஞ்சகாவென்று விளித்தபோ து யாதவர்கள் சிரித்தார்கள். அது காரணமாகக் கார்க்கியன் லோக பஸ்பம் புசித்துப் பன்னீராண்டு கொடுந் தவமிருந்து காலயவனைப் பெற்றான். காலயவன் காலயவன னெனவும் படுவான்.
காலயுத்தி - ஐம்பத்திரண்டாவது வரு ஷம்.
காலல் - கக்குதல், ஒலி முதலிய வீசல், கொப்பளித்தல், சத்திபண்ணல்.
காலவகை-காலக்கூறுபாடு, காலவேறு பாடு.
காலவம் - நெருப்பு.
காலவயிரவர் - சங்காரவயிரவர்.
காலவருத்தமானம் - காலசங்கதி.
காலவழு-காலத்தை முறைபிறழக்கூறு தல் (உ-ம்) நேற்றுண்பேன்.
காலவன் - ஒரு மஹருஷி.
காலவாகுபெயர்-காலத்தின் பெயரைக் காலத்திலுண்டாம்பொருட்டு வழங் குவது (உ-ம்) கார்நெல்.
காலவிடைநிலை - காலத்தைக்காட்டி வி னைச்சொற் கிடைநிற்பது.
காலவித்தியாசம் - காலவேற்றுமை.
காலவியேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
காலவுரிமை - பருவமும், பொழுதும்.
காலவேகம்-காலத்தின்கதி, மிருகதி.
காலவைரவன் - காலபைரவன்.
காலன்-காணக்கோளிெனென்று. காந்த பாஷாணம், சனி, நமன், நீலபாஷா ணம், நமன் மந்திரி.
காலன்கொம்பு - மாட்டுக்கொம்பு.
காலா-ஒருவகைமீன், வைவசுவாகரன் என்கிற தானவனுடைய மகள். கசி யபனுடைய பாரி. இவளுடைய மக் கள் காலகேயர்கள்.
காலாகாலம்-அந்தந்தக்காலம், ஏற்றகா லம், ஏற்றகாலமு மேலாதகாலமும்.
காலாகுரு - காரகில்.
காலாக்கினி - உபநிடத முப்பத்திரண் டினொன்று,ஊழித்தீ,ஒருருத்திரன்.
காலாக்கினியுருத்திரம் - உபநிடத முப் பத்திரண்டினொன்று.
காலாங்கன் - மூர்த்தபாடாணம்.
காலாடல் - முயலல்.
காலாடி - சுறுக்கன், திரிவோன், பள் ளர்,தலைவன்,முயற்சி யுடையோன்.
காலாடுதண்ணீர்-கணுக்காலளவு, தண் ணீர்.
காலாடுதல் - முயலல்.
காலாட்சயம் } காலாட்செயம்.
கலாட்செயம் }
காலாட்டம் - நடைச் சுருக்கு, நட்பு, முயற்சி.
காலாணி - காலிலாணி, போதிகை.
காலாநலன் - அனுபௌத்திரன், சபா நலன், புத்திரன்.
காலாநுநாதி-ஊர்க்குருவி, சாதகப்புள், வண்டு.
காலாந்தகன்-சாமர்த்தியவான், சிவன், துட்டன், நமன், மிகவல்லோன்.
காலாந்தம்-ஊழித்தீ, காலமுடிவு, கடை சிநாள்.
காலாந்தரம் - காலநடை, காலவிடை.
காலாயசம் - இரும்பு.
காலாயுதம் - கோழி, சேவல்.
காலாவதி - பயிர்செய்பருவம்.
காலாழி - காலின் மோதிரம்.
காலாழ் - குழைசேறு.
காலாள் - கால்நடைகாரன்,நால்வகைத் தானையினொன்று.

காலாறல் } ஓய்ந்திருத்தல்.
காலாறுதல்

காலி-கழிவுநாள், கள், காட்டு முருக்கு, பசுக்கூட்டம்.

காலிகம் - கரி.

காலிகை - ஒருமரம், கருமை, புகைக்கூட்டம், புடர்கிளை, மயிரொழுங்கு, மழைக்கால மேகம், மேகவரிசை, யோகினி, மாசாந்தரம் கொடுக்கும் வட்டி, வருணன் மனைவி.

காலிங்கி } வெட்பாலையரிசி.
காலிங்கை

காலித்தல் - உதித்தல்.

காலிமாடு-எப்போதும் வயல் வெளிகளில் மடக்கிவைத்திருக்கு மந்தை.

காலியம் - வைகறை, விடியல்.

காலியன்மாடு - காலிமாடு.

காலியாங்குட்டி - ஒருபாம்பு.

காலியாந்துவரை - ஒருதுவரை.

காலிராசி - இலங்கைத்தீவிலுள்ள காலிப் பட்டணத்தின் வெற்றிலைப் பாக்கு.

காலிலி-அருணன், காற்று,பாம்பு,மீன்.

காலிரூல் - ஓரிரூல்.

காலீசன் - சிவபெருமான், வருணன்.

காலீயகம் - மரமஞ்சள்.

காலுதல்-கக்குதல்,பொழிதல், வடிதல், விடல் - விளம்பித்தல்.

காலூரம் - தவளை.

காலேகம் } கலவைச் சாந்து முத்து.
காலேசுகவண்ணம்

காலேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.

காலேசுவரர்-இயமனையுதைத்த நாதர்.

காலேயகம் - மரமஞ்சள்.

காலேயம்-அகில், கத்தூரிமஞ்சள், கள், பசுக்கூட்டம், மோர்.

காலை-அடைப்பு, ஒருமீன், காலா, சமயம், தொழுவம், பொழுது, விடியற்காலம், வைகறை.

காலைவெள்ளி - விடிவெள்ளி.

காலோசிதம் - உத்தமகாலம்.

காலோலம் - அண்டங்காகம்.

கால்-அடிப்பக்கம், அளவு, இடம், இந்துப்பு, இரத்தக்கலப்பாமுறவு, இருநூற்று நாற்பதிழை கொண்ட அகலம், இருள், ஏழனுருபு (உ-ம்) ஊர்கானிவந்த பொதும்பர், ஒரு வினையெச்சமிகுதி (உ-ம்) கைதொழுதக்கால், காலம், காலன் காற்பாங்கு, காற்று, குறுந்தறி, கையூன்று கோல், தூண், தேருருள், நாலிலொன்று, பஞ்ச பூதியத்தொன்று, பாதம், பூந்தாள், பொழுது, மகன், மாக்கால், முளை, வலிமை, வளி, வாதம், வாய்க்கால்.

கால்கட்டு - தடை, தளை.

கால்கழுவுதல் - மலங்கழுவுதல்.

கால்கோள் - விழவின் தொடக்கம்.

கால்சீத்தல் - இருளையகற்றல், காலைநிலத்திலே வுரஞ்சி நடத்தல், துடைத்தல், வேரூடுகளைதல்.

கால்செய்வட்டம்-ஆலவட்டம், விசிறி.

கால்நடை - ஆடுமாடுகள்.

கால்நோக்கு - கிரகநோக்கி னொன்று. அஃது காற்பார்வை.

கால்பாவுதல்-கால் நிலத்திலேபடுதல்.

கால்மட்டம் - காலாலொற்றியறிதல்.

கால்மாடு - காற்புறம்.

கால்மிதி - காற்சுவடு.

காலயம்-விடியற்காலம், வைகறை.

கால்வழி-ஒன்றையடிப்பாதை, சந்ததி, சிறுவழி.

கால்வாங்கல் } எழுத்துக்களின் காலிழுத்தல்,சாதல்,
கால்வாங்குதல்
பின்னிடுதல், மழைவெளித்தல்.

கால்வாய்-நீரோடும், வாய்க்கால்.

கால்வாலாயிருத்தல் - அந்த சந்தமாயிருத்தல், ஒழுங்காயிருத்தல்.

கால்விலங்கு - காற்றளை, தொழுவம்.

காவகா - சேங்கொட்டை.

காவகம்-கவசம் போட்டுக்கொண்டவர்களது கூட்டம்.

காவடி - கா, காவுதடி.

காவடிக்காரர் - காவடியெடுப்பவர்.

காவாட்டம்புல் } மாந்தப்புல்.
காவட்டை

காவணம் - பந்தல்.

காவணவன் - ஒருவகைப்புழு.

காவணன் - புழுக்கூடு.

காவதம்-காதம், பத்துகல்தூரம்.

காவந்து - எசமான்.

காவம் - காட்டழல்.

காவலர்-அரசர், கணவர், காவற்காரர்.

காவலன் - அரசன், காப்போன், நாயகன், மெய்காப்பாளன்.
காவலாளர் - காப்போர், சேவகர்.
காவலாளி - காப்போன், காவற்காரன்.
காவலேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காவல்-அரண், கவசம், காத்தல், சிறைச்சாலை, மதில், வேலி, காவற்கூடம்.
காவல்கட்டு - மிருந்தவச்சுருக்கை.
காவளம்பாடி - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்று. இது சோழ நாட்டிலுள்ளது.
காவற்கடவுள் - திருமால்.
காவற்கட்டை - தீக்கட்டை.
காவற்கணிகையர் - களத்தாடுங் கூத்திகள்.
காவற்கப்பல் - பகைவரைத்தடுக்க நிற்குங் கப்பல், போர்க்கு ஆயத்தமான கப்பல்.
காவற்கலி - வாழை.
காவற்காடு - நால்வகையரணிலொன்று.
காவற்காரன் - காப்போன்.
காவற்கூடம் } காவல்வீடு, மறியல்வீடு,
காவற்சாலை } சிறைச்சாலை.
காவற்சால் - புறச்சால்.
காவற்செய்தல் - காவல்பண்ணுதல்.
காவற்புரி-களக்காவற்குச்சூழும் வைக்கோற்புரி.
காவற்பெருமான் - விண்டுணு.
காவன் - சிலந்திப்பூச்சி.
காவன்முல்லை - வாகைத்திணைத்துறை முப்பத்திரண்டனு ளொன்று அது உளருந்திரைஆரவாரிக்கும் குளிர்ந்த கடலை வேலியாகவுடைய ஞாலத்து மணநாறு மாலையினையுடைய வேந்தன் பாதுகாத்தலைச் சிறப்பித்தது.
காவா - நாட்டுமல்லிகைப்பூ.
காவாய் - ஒருபுல்.
காவாரம் - நீர்ப்பாசி.
காவாலி - இளமை, வஞ்சகன், வீண்பிதற்றன்.
காவாளை-காட்டுமல்லிகை, காய்வேளை.
காவாள் - காக்காரர்.
காவி-அவுரிமருந்துண்டைகருங்குவளை. கருநொச்சி, கள், காவிக்கல், காவிமண், செம்மண், பற்காவி, மிதப்பு.
காவிக்கல்-ஒருவகைக்கல், ஆதிரவிச்சிலை
காவிதி - கணக்கன், மந்திரி.
காவிதியர் - கணக்கர், மந்திரிகள்.
காவிபிடித்தல் - காவிநிறமடைதல்.
காவிமாலை - கல்வியை விரும்பிய தலைவன் தலைவிக்கனுப்புமாலை.
காவியம் - கலைஞான மறுபத்து நான்கிலொன்று காப்பியம்.
காவியன் - சுக்கிரன்.
காவியா - கடுக்கன், மரக்கலத்தைத் தரிக்கவிடுங்கல்.
காவியேறல் } காவிபிடித்தல்.
காவியேறுதல் }
காவிரி - காவேரி. இது அகஸ்தியரால் சையகிரியினின்றுமுற்பத்திபண்ணப்பட்ட புண்ணியநதி. இது தக்ஷிணத்திலுள்ளது. இந்நதிநீர் மிக்க சுவையுடையது. இதுபோலப் பயன்படுநதி உலகத்திலே மற்றில்லையெனினுமிழுக்காகாது. இந்நதியே சோழநாட்டைப் புன்னாடாக்கியது. இந்நதியி னிருகரையிலும் சமீபத்திலும் சற்றே தூரத்திலுமாக அநேக சிவாலயங்களும் விஷ்ணுவாலயங்களுமுள.
காவிரிப்பாவைதன்புதல்வர்-வேளாளர்.
காவிரிபூம்பட்டினத்துக்காரிக் கண்ணனார்-ஒரு புலவர். இவர் கடைச்சங்க காலத் திருந்தவர். பெருந்திருமாவளவன், வெள்ளியம்பலத்துத் துஞ்சியபெருவழுதி, பிட்டங் கொற்றன் முதலியோர் இவராற் பாடப்பட்டோர். இவர் ஜாதியில் வணிகர். முதற்கூறிய இருவர் பாண்டியரையும் ஒருங்கே கண்டபொழுது அவ்விருவரையும் ஒற்றுமை யுடையாராக வொழுகும்படி அவர்க்கு ஒற்றுமைப் பயனெடுத்துச் செய்யுளாற் கூறி வாழ்த்தினவரு மிவரே.
காவிரிப்பூம்பட்டினம்-ஒரூர் இதுசோழமண்டலத்திலே கீழ்கடற்கரையிலே காவிரிநதி சங்கமிக்குந் துறையருகிலேயிருந்த சோழராஜதானி. இந்நகரம் புகாரெனவும்படும். தமிழ்நூல்களிலே பெரிதும் பாராட்டப்படும் பழைமையுடைய நகரங்களுள் இதுவுமொன்று. இதன்றுறை பொன்னித்துறை யெனப்படும்.

காவிரியேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
காவிவத்திரம் - காஷாயப்புடவை.
காவிளாய் } காய்வேளை, கொளிஞ்சி.
காவிளை }
காவீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
காவு - ஒருமந்திரமை, பலி.
காவுதடி - காத்தடி.
காவுதல் - சுமத்தல், தோட்சுமையெடுத்தல்.
காவுவோர் - பல்லக்குச் சுமப்போர்.
காவேரம் - குங்குமம்.
காவேரி-அயமணல், மைசூர், கோயம்பத்தூர், தஞ்சாவூர்முதலிய நாடுகளில் பாயும் சத்தநதிகளினொன்று. இது கவேரனாலே திருத்தப்பட்டமையின் காவேரியெனவாயிற்று. கவேரன்புத்திரி யென்பதுபசாரம்.
காவேரிப்பூம் பட்டினம் - ஒரூர்.
காவேளை - காவிளை.
காவோலை - காய்ந்தவோலை.
காவ்வியேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
காழகம் - ஆடை, கடார மென்னுமூர், கருமை, சோறு.
காழி - ஒருதேவதை, சீகாழி.
காழிச்சிராமவிண்ணகரம் - நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்று. இது சோழநாட்டிலுள்ளது.
காழிப்பிரான் - சம்பந்தவள்ளல்.
காழியர் - அப்பவாணிகர், வண்ணார்.
காழியர்கோன் - திருஞான சம்பந்தப்பெருமான்.
காழூன்றுகடிகை - குத்துக்கோல்.
காழ் - இரும்பிலி, எட்டுமணிக்கோவை. ஒளி, காழெனனேவல், குற்றம்,பருக்கைக்கல், பளிங்கு, மணி, மணிவடம், மரவயிரம், வயிரம், விதை.
காழ்த்தல் - உறைத்தல், வயிரித்தல்.
காழ்ப்பு - காரம், மரவயிரம், வயிரம்.
காளகண்டம் - விஷமிருக்கும் மிடறு, குயில்.
காளகண்டன் - சிவபெருமான்.
காளகந்தரி - உமை.
காளகம் - எக்காளம், மருக்காரை.
காளகூடம் - நஞ்சு,
காளங்கன்றுதம் - வெண்கல்மலை.
காளஹத்தி }
காளஸ்தி } ஒரு சிவஸ்தலம்.
காளத்தி }
காளத்தியப்பன் - ஒரு பிரபு. தொண்டைநாட்டிலே வல்லமென்னு மூரிலே விளங்கியவனாகிய இப்பிரபுதன்மீது ஒரு பிரபந்தம்பாடிப் பாற்பசு கேட்ட ஒரு புலவனுக்கு ஒவ்வொரு கவிக்கு மொவ்வொரு பசுவும் அவ்வப்பசுவுக்கு மேய்ப்பவனுமாக மும்மூன்றாளும் உடன் கொடுத்துப் பொன்மாரியும் வழங்கினவன்.
காளஸ்திரி - காளத்தி.
காளத்தீசுவரர்-திருக்காளத்தியிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
காளபதம் - மாடப்புறா.
காளபந்தம் - ஒருவிளக்கு.
காளபம் - போர்.
காளமுகி - சத்தமேகத்தொன்று. அஃது கல்பொழிவது.
காளமேகசவி-காளமேகமென்னும் பெயரினையுடைய ஒரு தமிழ்ப்புலவர். இவர் ஸ்ரீரங்கத்திலே வைஷ்ணவப் பிராமணராக அவதரித்தவர். இவர் சம்புகேசுரத்திலே ஒருதாசியின்மையல் வலையிற்சிக்கி அவள் பொருட்டாகஅங்குச்சென்றுகோயிலினுட்பிரகாரத்திலே அவள் வரவை யெதிர்நோக்கியிருக்கையில்நித்திரைவர அங்கே படுத்து நித்திரை போயினர். தாசி இவரைத் தேடிப்பார்த்துங் காணமையால் தன் வீடுபோய்ச் சேர்ந்தாள். அதன்பின்னர்க் கோயிலும் திருக்காப்பிடப்பட்டது. அப்பொழுது அந்தப்பிரகாரத்தி லொருபக்கத்தில் சரஸ்வதியைநோக்கி ஓரந்தணன் தவஞ்செய்துகொண்டிருந்தான். சரஸ்வதி யதற்கிரங்கிப் பிரசன்னமாகி தனது தம்பலத்தை அந்தணன்வாயி லுமிழப்போக அவன்அதை அனுசிதமென்று வாங்காது மறுத்தான். அதுகண்டசரஸ்வதி அத்தம்பலத்தோடு வைஷ்ணவராகிய இவர் கிடந்த விடத்தையடைந்து இவரையெழுப்பி தம்பலத்தை நாவினூற்கொடுக்க இவர் தம் தாசியே தம்பு

லங் கொணர்ந்தா ளென்றெண்ணி அதனை நாவினுலேற்ருர். அவ்வளவில் சரஸ்வதி மறைந்துபோக இவர் அதனை யேற்றமாத்திரத்தில் சகலகலைகளும்வல்ல பண்டிதராகி சூற் கொண்ட காளமேகம்போலத் தமிழ்க்கவிமாரி பொழியத்தொடங்கினுர். அன்றுமுதல் இவருக்குக் காளமேகமென்னும் பெயருண்டாயிற்று. இவர் திருமலைராயனென்னும் இராசன் சமஸ்தானவித்துவாஞகிய அதிமதுரகவிராயனுக்கு மாருகி அவ்வரசன் சபையிலிருந்த புலவர்களெல்லோரும் பிரமிக்கும்படியாக யமகண்டவிதானப்படி ஆசுகவிகள் மொழிந்தவர், இவர் காலம் சாலிவாகன வருஷம் ஆயிரத்திருநூறு.

காளமேகப் பெருமாள்-நூற்றெட்டுத்திருப்பதிகளுளொன்ருகிய திருமோகூரிற் கோயில்கொண்ட விட்டுணு.

காளமேகம்-ஒரு புலவன், கருமுகில்.

காளமேகன் - ஒருபுலவன்.

காளம்-அவுரி, எட்டிமரம், கருமை, கழு, சிறுசின்னம், சூலம், நஞ்சு, மேகம்.

காளவனம் - சுடுகாடு.

காளவாயன் - பெருங்குரல்வாயன்.

காளவாய் - ஒருவிளையாட்டு, கழுதை, சூளை, நீறுசுடுங் காளவாய், பெருங்குரல்வாய்.

காளவாய்ச்சல் - செங்கல்.

காளன் - மாகாளன்.

காளாஞ்சனம் - ஒரு தீர்த்தம்.

காளாஞ்சி - எச்சிற்படிக்கம், களாசி, தாம்பூலக் கமலம்.

காளாத்தி - காளத்தி.

காளாத்திரி - பாம்பின் நச்சுப்பல்லின் ஒன்று.

காளாமுகம் - உட்சமய மாறினென்று, சைவம்.

காளாமுகர் - காளாமுக சமயத்தார் சைவர்.

காளாமுகன்-சிவனைப் படிகமும் புத்திரதீபமணியும் தரித்த மூர்த்தியாகத் தியானிக்குஞ் சமயி. இவன் அகப்புறச் சமயிகளுளொருவன்.

காளாமுகிதானம் - பயங்கா முகரூபதானம்.

காளான் - ஆம்பி,புற்றிற்பூ.

காளி - அட்டாதசவுபபுராணத் தொன்று, எட்டிமரம், கக்கரி, கரியவள், காலவுருத்திரருடைய சக்தி. அஃதாவது அழிவுக்குக்காரணமாகிய காலத்தை நடாத்தும் உருத்திரர் அவ்வழிவையாது சக்தியாற் செய்து முடிப்பாரோ அச்சக்தியே இக்காளியெனப்படும். இக்காளி சண்டமுண்டாளாகிய அசுரரைக்கொன்று சாமுண்டியென்னும்பெயரும் தாரகனைக் கொன்று தாரகமர்த்தனியென்னும் பெயருங்கொண்டாள். சிங்கம், சூலம், நஞ்சு, பத்திரை, பரிமளகந்தி, பார்வதி, பாம்பின் நச்சுப்பல்லினென்று வியாசர் தாயாகிய சத்தியவதி.

காளிகம்-மணத்தக்காளி, மேகம்.

காளிக்கம்-ஒருவித நீலச்சாயம், கறுப்பு, பித்தளை, மலை.

காளிங்கமர்த்தனன் - விண்டு.

காளிங்கன்-ஒரு பாம்பு, கலிங்கநாதன்.

காளிதம் - களிம்பு, கறுப்பு, கறை.

காளிதாசன்-ஒருபுலவன். இவன் விக்கிரமார்க்கன் வமிசத்தாஞகிய போஜராஜன் சமஸ்தானத்துச் சமஸ்கிருத வித்துவான்கள் ஒன்பதின்மருள் சிரேஷ்டன்.

காளிந்தம் - ஏலம்.

காளிந்தி-கண்ணன் மனைவியிலொருத்தி, சகரன்ருய், தேக்கின்விசேடம், நீர்ப்பசு, யமுனையாறு, வாகைமரம்.

காளிந்திப்போதனன் - பலராமன்.

காளிமம் - கறுப்பு.

காளிமர்த்தனன் - சிவபெருமான்.

காளிமை - கறள், கறுப்பு.

காளிம்பன் - திருவேங்கடப்பதியிலிருந்து தமிழ் நாவலர்களுக்குப் பெருநிதி வழங்கிய ஒரு பிரபு.

காளியமர்த்தனன் - விண்டு.

காளியன் - யமுனையிலிருந்த கொடிய விஷநாகம். அது கிருஷ்ணனுற் கொல்லப்பட்டது.

காளினியம் - கத்தரி.

காளேஸ்வரம் - பயோஷ்ணிகோதாவரி நதிகள் சங்கமிக்குமிடத்துள்ளதிவ்ய க்ஷேத்திரம்.

காளை - ஆண்மகன், இளவெருது, இளையோன், கட்டிளமையோன், பதி

ஞறு வயதுக்குட்பட்டவன், பாலை நிலத்தலைவன்.
காளையங்கம் - போர்.
காறடி - மருக்காரை.
காறல் - ஒரு சுவைகார்ப்பானது,காறற்கொட்டி காறுதல்.
காறற்கத்த - ஒருகத்தரி.
காறற்கொட்டி - ஒருகொட்டி.
காறுக்கருணை - ஒரு கிழங்குச்செடி.
காறுப்பித்தல் - காறுதல்.
காறுயல் - ஒரு தியாகத்தலம்.
காறு-அளவு, காரென்னேவல்,கொழு.
காறுதல் - காறியுமிழல், நெய் முதலிய காறுதல்.
காறுபாறி-அதிகாரத்துவம், கண்டிப்பு, காரியவிசாரிப்பு, வேலை.
காறை - கழுத்தணியிலொன்று, நிலச்சாந்து.
காறையாடல் } சாந்திடுதல்.
காறையாடுதல் } சாந்திடுதல்.
காறையெலும்பு - பூணாரவென்பு.
காற்கட்டு புடைவை விளிம்பு.
காற்காசு - ஒரு சின்னக்காசு.
காற்குளம் - பூசநாள்.
காற்கொட்டை - காலணை.
காற்கோடகன்-கார்க்கோடகன், பாம்பு.
காற்சரி - ஒருபணி.
காற்சவுரம் - முகச்சவரம்.
காற்சீப்பு - சந்தெலும்பு.
காற்படம் - காலிற்படம்.
காற்பரடு - கரடு.
காற்பாசம்-பருத்தி, பருத்திப்பஞ்சு.
காற்புத்தி - தாளகம்.
காற்றடக்கி-துருத்தி, நீர்க்குமிழி.
காற்றடி - காற்றுவீசுதல்.
காற்றண்டை-ஒரு காவணி.
காற்றுடி - கறங்கு, காற்றிற்பறக்கும் படம், கிலுகிலி.
காற்றிளவில் - இளங்காற்று.
காற்றின்சகாயன் - அக்கினி.
காற்று-அபானவாயு, உயிர்ப்பு, சோதிநாள், வாயு.
காற்றுக்கடுவல் - கடுங்காற்று.
காற்றுத்திங்கள் - வைகாசிமாதம்.
காற்றுநாள் - சோதிநாள்.
காற்றுமுந்துநாள் - விசாகம்.
காற்றுவாக்கு - கண்டபாடு, காரியம் பண்ணுமல் விடுதல், காற்றுப்பக்கம், சோம்பல்.
காற்றொதுக்கு- காற்றுச்செல்லாப்புறம்
காற்றோட்டி - ஒரு முன்மரம்.
கானகக்கல் - கரும்புள்ளிக்கல்.
கானகக்கூபரம் - நாகப்பச்சை.
கானகக்கோழி - காட்டுக்கோழி.
கானகசீதம் - கருவண்டு.
கானகச்சங்கம் - நாகரவண்டு.
கானகச்சேவுகன் - எலி, முள்.
கானகதட்டான் - செவ்வட்டை.
கானகதூமம் - கற்பாஷாணம்.
கானகத்தும்பி - கருவண்டு.
கானகநாடகன்-குறிஞ்சிநிலத்தலைவன் முல்லைநிலத்தலைவன்.
கானகப்பச்சை - மரகதப்பச்சை.
கானகம் - கருஞ்சீரகம், காடு, கால்நகம் குறிஞ்சிநிலம்.
கானகுப்பிசம்-பஞ்சகௌடத்தொன்று
கானகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கானக்கல் - கானகக்கல்.
கானகக்காளை-திருக்கானப் பேருரிலே கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
கானக்குதிரை-காட்டுக்குதிரை, மரை.
கானக்குறத்திமுலைப்பால் - தேன்.
கானடை - கால்நடை.
கானத்தேறு - மஞ்சள்.
கானநாடன் - முல்லைத்தலைவன்.
கானப்படம்-கானமாகியகட்டு.
கானப்பலா - காட்டுப்பலா.
கானப்பேரெயில் வேங்கை மார்பனுக்குரியதாகவிருந்த ஒருபேராண் இவ்வரண் கடைச்சங்கத்துக் கடையரசனுகிய உக்கிரப் பெருவழுதியாற் போரிற் கைக்கொள்ளப்பட்டது.
கானமயில் - காட்டுமயில்.
கானமவ்வல் - காட்டுமல்லிகை.
கானமா - காட்டுப்பன்றி.
கானமூர்தி-மூன்றுவது மேளகர்த்தா.
கானமௌவல் - காட்டுமல்லிகை.
கானம்-இசைப்பாட்டு, இராகம், காடு, கீதம், குறிஞ்சிநிலம், சோலை பாடுதல், முல்லைநிலம், வனம், வாசனை, வானம்பாடி.
கானயூகம் - கருங்குராங்கு.

கானலிந்திரன் - கொடுவேலி.
கானல் - உப்பளம், ஒலி, கடற்கரைச் சோலை, கழி, காங்கை, காடு, சூரியன் கிரணம், பேய்த்தேர், வெண்டேர். [ளூ.
கானல்வரி - இசைப்பாவகையுளொன்
கானவர் - குறிஞ்சிநிலமாக்கள், முல்லைநிலமாக்கள், வேடர்.
கானவன் - குரங்கு, வேடன்.
கானவிருக்கம் - பாதிரிமரம்.
கானற்குன்று-வக்கிராந்திப்பாஷாணம்.
கானனம் - காடு.
கானனுசாரி - நன்னாரி.
கானு - சுக்கானிற் கைப்பிடி.
கானுங்கெளிறு - ஒருவிதமீன்.
கானுங்கோழி - கோழியிலோர் பேதம், வான்கோழி.
கானுங்கோழை - ஒருபூண்டு.
கானுத்தடி - கானு.
கானூர்குழலம்மை-திருக்கானூட்டு முள்ளூரிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
கானுவாழை - ஒருசெடி.
கானுவேளை - ஒருசெடி.
கானுன்கோனுன் - பலதும்.
கானியமேனிக்கல் - கரும்புள்ளிக்கல்.
கானிலம்
கானிலிந்திரன் } கொடுவேலி.
கானீனன் - கன்னன், கன்னிபெற்ற பிள்ளை, வியாதமுனி.
கானேக்கு - காலனேக்கு.
கான்எழுத்தின்சாரியை(உ-ம்) ஐகான், கப்பலினறை முதலியன, காடு, கான்யாறு, மணம், வீட்டறை.
கான்மரம் - ஆலமரம்.
கான்மா - பன்றி.
கான்மீரம் - காஸ்மீரம்.
கான்முளை - பிள்ளை.
கான்யாறு - முல்லைநிலத்தியாறு.
கான்றல் - கக்கல்.
கான்றியம் - காங்கை.
கான்றை - ஒரு முட்செடி.

---

## கி



கிகிணி - காக்கணஞ்செடி, வலியான்.
கிகீதிபி - காடை.
கிக்கிரி - மீன்குத்திப்புள்.
கிக்கிலம் - மலை.
கிங்கரபாவம் - தருமம், கைங்கரியம்.
கிங்கரர்-ஏவல்செய்வோர், ஒருசாதி தூதுவர்.
கிங்கரி
கிங்கரை } தாசிவேலைக்காரி.
கிங்கிணி - ஒருமரம், கிலுகிலுப்பைச் செடி, சதங்கை.
கிங்கிரம் - யானையின் கும்பத்தலம், குதிரை, குயில், வண்டு.
கிங்கிரன் - மன்மதன்.
கிங்கிராலம் - வேலமரம்.
கிங்கிரை - இரத்தம்.
கிங்கிலியர் - கிங்கல்லியர்.
கிசம்
கிசலம்
கிசலயம்
கிசலை
கிசாலம் } தளிர்.
கிசில் - ஒருசாளரசம், ஒருபிசின்.
கிசுகிசுத்தான் - வாலில்லாக்காற்றுடி.
கிசுகிசுப்பு
கிசுகிசெனல் } ஈரடுக்கொலிக்குறிப்பு, விரைவின்குறிப்பு.
கிசோரம்-இளமை, இளங்குதிரை, ஒரு செடி ஒரு பூச்சி.
கிசோரன் - சூரியன்.
கிச்சடி-ஒருவகைச்சாதம்,இறுகினகூழ்
கிச்சலாட்டம்
கிச்சாட்டம்
கிச்லாட்சிடம் } தொந்தரை.
கிச்சிலி - ஒரு நாரத்தை.
கிச்சிலிக்கிழங்கு-ஒருவாசனைக்கிழங்கு.
கிச்சு - நெருப்பு.
கிச்சுக்கிச்செனல் - ஒரு ஒலிக்குறிப்பு.
கிஞம் - அறிவு.
கிஞ்சபன்னி - நாயுருவி.
கிஞ்சம் - சிறுமை, புளிமா.
கிஞ்சல் - சிறுமை.
கிஞ்சனன்-அறிவிலான், தரித்திரன்.

கிஞ்சன் - தரித்திரன், வறியவன்.
கிஞ்சாறு - நென்முள், பாணம்.
கிஞ்சி - முதலை, வேம்பு.
கிஞ்சிச்கிஞம் - சிற்றறிவு, அற்பவறிவு.
கிஞ்சிக்கிஞர் - சிற்றறிவர்.
கிஞ்சிக்கியத்துவம் - சிற்றறிவுடைமை.
கிஞ்சிக்கினம் - ஆத்துமா.
கிஞ்சிக்கினன் - சிற்றறிவன்.
கிஞ்சிஞ்ஞத்துவம்-கியஞ்சிக்கியத்துவம்
கிஞ்சிஞ்ஞம் - சிற்றறிவு.
கிஞ்சிஞ்ஞன் - சிற்றறிவன்.
கிஞ்சிதம், கிஞ்சித்து - அற்பம், சிறுமை, புளிமா.
கிஞ்சித்துவம் - சிறுமை, சிற்றறிவு.
கிஞ்சில் - அற்பம், கீழ்மை, சிறுமை.
கிஞ்சுகம் - கிளி, கேகயப்புள், சிவப்பலாசு, முண்முருக்கு.
கிஞ்சுகி - பலாசம்.
கிஞ்சுகம், கிஞ்சுமாரம் - முதலை.
கிஞ்சுலிகம் - மண்ணுளிப்பாம்பு.
கிஞ்ஞா - ஒருசெடி.
கிடக்கை - கிடத்தல், நிலைபரம், பூமி, மக்கட்படுக்கை, மஞ்சம்.
கிடங்கு - அகழி, குழி, குளம், சிறைச்சாலை, பொக்கிஷவீடு, மறியல்வீடு.
கிடத்தல் - இருந்தபடியிருத்தல், கிடத்துதல், சயனித்தல்.
கிடத்துதல் - படுக்கச்செய்தல்.
கிடப்பு - இருக்கை, கிடக்கை.
கிடப்புக்கோழி - கோழிக்காரகலிலக்கணமூன்றனுளொன்று, அது கொள்வோன்வேண்டாது கொடுப்போனியல்பாய்க் கொடுத்தலாம். (உம்) ஆவுக்கு நீர் கொடுத்தான், செய்க்கு நீர் பாய்ச்சினன்.
கிடவாக்கிடை - பட்டினியாயிருப்பது, வயிற்றையொறுப்பது.
கிடா - கடா.
கிடாசுதல் - கடாவுதல்.
கிடாம்பியாச்சான் - ஆழ்வாராசாரியர்களிலொருவர்.
கிடாய் - கடா.
கிடாரம் - கொப்பரை.
கிடாரி - கடாரி.
கிடாரை - ஒருமரம்.
கிடாவல், கிடாவுதல் - கடாவுதல்.

கிடி - பன்றி, மருட்பன்றி.
கிடிபகுஷ்டம்-ஒருவகைக்குஷ்டநோய் அது கொப்பளங்கள் சூட்டோடெழும்பியிரணங்களாகும். அவைகளில் அதிகநமைச்சலிருப்பதனுற்சொறிந்தவிடத்திற் காய்ப்பேறினதுபோற் சுரசுரத்துத் தடிப்புகளுண்டாகும். அதனேடு சர்வாங்கமும் பச்சைநிறமாதல், கனத்தல், யானைத்தோலைப் போன்றிருத்தல், அடிக்கடி நீரிறங்கல், தேகத்திற் சினைத்தண்ணீர்வடிதல், நாற்றம், வாதாதிக்க மென்னுமிக்குணங்களுண்டாகும்.
கிடுகிடாய்மானம் - அதிர்ச்சி.
கிடுகிடு - ஒருபறை, கிடுகிடென்னேவல், நடுக்கம்.
கிடுகிடுத்தல் - அசைதல், அஞ்சல், ஒலித்தல், நடுங்குதல்.
கிடுகிடுப்பு - அசைவு, அச்சம், நடுக்கம்.
கிடுகிடெனல்-அசைதல், அச்சக்குறிப்பு, சரடுக்கொலிக்குறிப்பு, நடுக்கம்.
கிடுகின்படம் - தோற்கட்டு.
கிடுகு-ஒருபறை, கேடகம், சட்டப்பலகை, தேரின்மரச்சுற்று, பன்னுங்குமுடைந்த வோலைக்கீற்று.
கிடுகோலை-முடையும்படியான தென்னம் ஓலை.
கிடுக்கட்டி - கிலுக்கட்டி, இருப்பைப்பூவில் இடித்த சட்டி, ஒலிக்குறிப்பு, ஒருபறை.
கிடுக்கு - ஒலிக்குறிப்பு.
கிடுக்குக்கிடுக்கெனல் - ஒலிக்குறிப்பு.
கிடுயிடி - ஒருவாச்சியம்.
கிடுமுடி - ஒருபறை, சந்தடி.
கிடை-உவமை, கிடக்குந்தன்மை, கிடைச்சி, கிடையென்னேவல், சடை, நிலைமை, படுக்கை, பட்டி, வேதம் பயிலிடல், வேதவொலி.
கிடைச்சரக்கு-நெடுநாட்கிடந்த சரக்கு.
கிடைச்சி, கிடைச்சை - ஒருவகைச்செடி.
கிடைதலை - ஆபத்துக்காலம், மரணகாலம், முடிவுகாலம்.
கிடைத்தல்-அடைதல், எதிர்த்தல், கிட்டுதல், பெறுதல்.
கிடைபாய் - படுக்கைப்பாய்.

கிடைப்படல் } நோய்ப்படுதல்.
கிடைப்படுதல் }
கிடைப்பாடு - வியாதி.
கிடைமாடு - பசுக்கூட்டம்.
கிடையன் - பழங்கிடையன்.
கிடைவாய்த்தல் - சௌக்கியமாயிருக்கக்கிடைத்தல்.
கிட்கிந்தாபுரி - வாலி சுக்கிரீவன் பட்டணம்.
கிட்கிந்தை-மைசூரிராச்சியத்தின் வடபாகத்தில் பம்பாநதி உற்பத்தியாகுமிடத்திலுள்ள ஒருமலை, கிட்கிந்தாபுரி.
கிட்ட - முடுக. [கல்.
கிட்டக்கல்-உருகிய செங்கல், குமிடக்
கிட்டங்கி-விலைச்சரக்குகளிருக்கும்வீடு.
கிட்டச்சிலைக்கல் - கற்கிட்டம்.
கிட்டடி-உள்ளுறவு, கிட்டுமானம்.
கிட்டடிப்பாடு - முடுகினபாதை.
கிட்டவிசு - அதிக கிட்டுமானம்.
கிட்டத்தட்ட } எறக்குறைய முன்பின்னுக.
கிட்டமுட்ட }
கிட்டம் - இருப்புக்கிட்டம் முதலியன இறுக்கம், சமீபம், சேறுமுதலியவற்றினோடு, மலம், வண்டல்.
கிட்டம்பிடித்தல் - நிலமிறுக்கிப் பிடித்
கிட்டலர்-பகைவர். [தல்.
கிட்டல்-இறுக்குதல்,எதிர்த்தல், கிடைத்தல், கிட்டுதல்.
கிட்டார் - கிட்டலர்.
கிட்டாலம் - செம்புக்கடகம்.
கிட்டி-இடுக்குத்தடி, குறும்பொல், கைத்தாளம், சிறுசின்னி, சிறுவர் விளையாட்டுக் கருவியிலொன்று, தலையீற்றுப்பசு, தேய்ந்தகலப்பை, நாழிகைவட்டில், நாகக்கிட்டி, பன்றி.
கிட்டிகட்டல் } ஒறாக்கினை.
கிட்டிகட்டுதல் }
கிட்டிக்கயிறு - பூட்டுக்கயிறு.
கிட்டிக்கலப்பை - சிறுகலப்பை.
கிட்டிக்கிழங்கு - சின்னிக்கிழங்கு.
கிட்டிக்கோல் - கைகிட்டி.
கிட்டிணம் - சறுப்பு, மான்றோல்.
கிட்டிணன் - திருமால்.
கிட்டிணி - கிருஷ்ணநதி.
கிட்டிமம் - உதக்கீர்.
கிட்டியடித்தல் - ஒரு விளையாட்டு.

கிட்டிரம் - நெருஞ்சில்.
கிட்டினர் - உறவர், சேர்ந்தோர்.
கிட்டினன் - திப்பிலி.
கிட்டினி - ஓர்யாறு.
கிட்டுதல் - அடுத்தல், அணுகல், இறுக்குதல், எதிர்தல், எதிர்த்தல், கிடைத்தல், சமீபித்தல், நெருங்குதல்.
கிட்டுமானம் - சமீபம்.
கிஷ்ணஜிம்மகதோஷம் - ஒருவகைத்தோஷ நோய். அது நாக்கறுத்துவறண்டு முட்போலிருத்தல், அடிக்கடி எழுந்திருத்தல், சித்தப்பிரமை, வயிறுப்பிசம், தினவு, வியர்வை, தாகம், சோபம், அழலை, துடிப்பு, கைகாலசதி, சரீரங்கறுத்தலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
கிஷ்ணி - காக்கணஞ்செடி.
கிணகர் - அடிமை, மறியர்.
கிணறு - கூவல், கேணி.
கிணுங்கு - ஒருபூடு.
கிணுட்டு - ஓலைத்தளிர், செலுப்பு.
கிணி - கைத்தாளம்.
கிணிதம் - வாயுதேவன், வில்.
கிணிதி - கிலுகிலுப்பை.
கிணிலெனல் - ஒலிக்குறிப்பு.
கிணில்கிணிலெனல் - ஈரடுக் கொலிக்குறிப்பு.
கிணிலெனல் - ஒலிக்குறிப்பு.
கிணின்கிணினெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
கிணிலெனல் - ஒலிக்குறிப்பு.
கிணுகிணுத்தல் } அணுங்கல், உபயஓசைகுணுகுதல்.
கிணுகிணெனல் }
கிணேலெனல் - ஒலிக்குறிப்பு.
கிணை - மருதப்பறை, உடாரிப்பறை.
கிணைநிலை-பாலைத்திணைத்துறை முப்பத்திரண்டனு ளொன்று. அது மருதநிலத்திற் கழனியிடத்து வேளாளனைத் தெளிந்த கிணைகொட்டுமவன் நல்ல கீர்த்தியைச் சொல்லியது, பாடாண்டிணைத்துறை நாற்பத்தேழனுளொன்று. அது செல்வம் பெருகும் பரந்த மாலிகையிடத்து அழகிய கிணைகொட்டு மகனது நன்மையைச் சொல்லியது.
கிணைமகள் - விறலி. [ன்.
கிணையன்-உடாரிப்பறை கொட்டுவோ

கிணைவன் - கிணைமகன்.
கிண்கிணி - சதங்கை, காலணி.
கிண்கிண்ணெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
கிண்டல் - கிள்ளுதல், ஆராய்தல், தோண்டல்.
கிண்டன்-உரப்புத்துணி, ஒருபுடவை.
கிண்டுதல் - அகழ்ந்தெடுத்தல், அரித்தல், ஆராய்தல், களிசமைத்தல், காரியத்தை வெளிப்படுத்தல், கிளறுதல், தோண்டுதல், நினைப்பூட்டல், பகையெழுப்பல்.
கிண்ணகம் - நீர்ப்பெருக்கு.
கிண்ணம் - சிறுவட்டில், நாழிகைவட்டில்.
கிண்ணரம் - ஒருவீணை.
கிண்ணி - கத்தியின் கைப்பிடியுறை, கிண்ணம், குதிரை மேற்குளம்பு, சின்னப்பொருள், நண்டின்சிறுகால், உண்கலம்.
கிண்ணிக்கருப்பூரம் - இரச கருப்பூரம், உயர்ந்த கருப்பூரம்.
கிண்ணிடுதல், கிண்ணெனல் } ஒலிக்குறிப்பு.
கிதம் - பூருவம்.
கிதவம் - ஊமத்தஞ்செடி.
கிதவன் - சூதாடுவோன், வஞ்சகன்.
கிதி, க்ஷிதி } பத்திலட்சங்கோடாகோடி.
கித்தம் - பூருவம்.
கித்தான் - ஒருவகை உரப்புத் துணி.
கித்துள் - கூந்தற்கமுகு.
கிந்தல் - நொண்டி நடத்தல், நொண்டி விளையாட்டு, படங்குந்திமிதித்தல்.
கிந்திகம் - திப்பிலிமூலம்.
கிந்துகால் - குந்தினகால்.
கிந்துதல்-நொண்டிநடத்தல், நொண்டி விளையாட்டு, படங்குந்திமிதித்தல்.
கிமாரிடுதல் - சத்தப்படுத்தல்.
கிமித்துக்கினம் - புழு, புழுக்கரணம்.
கிமிலை - அதிக சந்தானமுள்ளவன்.
கிம்பசானன் - உலுத்தன், உலோபி.
கிம்புரி - தோளணி, பூண்,முடியுறுப்பு, யானைக்கொம்பிற் பூண்.
கிம்புருடம் - கிம்புருடகண்டம். அது ஜம்புத்வீபத்தின் ஒருபாகம்.
கிம்புருடர், கிம்புருஷர் } பதினெண்கணத்தொருவர்.
கிம்புருடன், கிம்புருஷன் } கிம்புருடத்துமுதல் அரசன். அவன் அங்கீதிரன் இரண்டாவது புத்திரன்.
கிம்புரோடியம் - உபநிடதம் முப்பத்திரண்டினொன்று.
கிம்மீரம்-செம்மட்டை, நாகுவன்னம்.
கிம்மீரன் - பகாசுரன் தம்பி.
கிம்வதந்தி-உலகச்சொல், ஜனங்களின் வார்த்தை.
கியமதம் - இளைப்பு, எய்ப்பு.
கியாதம் - பிரசித்தம், புகழ், மேன்மை.
கியாதன்-பிரசித்தன் புகழுடையோன்.
கியாதி-உன்முகன்மகன், தக்ஷப்பிரஜாபதிகள், பிருகுவின்மனைவி, புகழ், மேன்மை.
கியால் - ஒருவகை யிசைப்பாட்டு.
கியானகேசுரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கியானம் - ஞானம், அளவு, அறிவு.
கிரகக்கழிப்பு - கிரகபலி.
கிரகக்கோதிகை - பல்லி.
கிரகசம் - துளையிடுகருவி.
கிரகசாந்தி - கிரகதோஷநிவர்த்தி.
கிரகசாரம் - கிரகநடை.
கிரகசெபம்-கிரகாராதனையி னொன்று.
கிரகசோசர்க்கேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கிரகச்சுற்று - கிரகத்தின் சுற்றுதல்.
கிரகணதாரணம் - பற்றித்தரித்தல்.
கிரகணபாகம் - ஒருவகைநோய், அது பித்தத்தைக்கொண்டு நுனி மூக்குப் பக்கங்களினுட்புறத்தை வெந்தாற்போல் செய்விப்பது அதனால் அச்சருமத்திலும் மாமிசத்திலும் எரிவோடு மிக்க நோயுண்டாகும்.
கிரகணம்-கிரகித்தல், சூரிய சந்திரர்களுக்கு இராகு கேதுக்களால் வரும் பீடை, நினைத்தல், பற்றுகை.
கிரகணன் - கற்காரப்பட்சி.
கிரகணி - கிரகணியென்னேவல், கிராணி.
கிரகணித்தல் - கிரகணம்பற்றுதல், கிரகித்தல்.
கிரகதானம்-கிரகாராதனையினொன்று.
கிரகதீமை - கிரகதோஷம்.
கிரகத்தன், கிரகஸ்தன் } இல்லொழுக்கத் திருப்பவன், சங்கையுள்ளவன், நிருவாகி.

கிரகஸ்தி-இல்லொழுக்கத்திருப்பவள்.
கிரகநிலை - கிரகம் நிற்கும்நிலை.
கிரகநீசம்-கிரகங்கள் நீசம்பெறுதல்.
கிரகநீதி - இல்லொழுக்கம்.
கிரகநோக்கு - கிரகபார்வை.
கிரகபகை - கிரகங்கள் பகைபெறுதல்.
கிரகபதி - அக்கினி, சூரியன்.
கிரகபாடு - சூரியனுங் கிரகமுமோரிரா சியினிற்றல்.
கிரகபிரீதி - கிரகாராதனை.
கிரகபீடை-கிரகநிலையினால் வருமிடர்.
கிரகபுடம்-கிரகங்களின் தற்கால நிலை யெண்கை.
கிரகப்பிரவேசம் - குடிபுகுதல்.
கிரகப்பிரீதி - கிரகத்துக்குத் திருத்தி செய்கை.
கிரகபிழை - கிரகதோஷம்.
கிரகமாலிகை, கிரகமாலை - கிரகவொழுங்கு.
கிரகம்-கோள், தாளப்பிரமாணம் பத்தி னைன்று, பற்றுதல், வீடு.
கிரகயாளு - கிரகிப்போன்.
கிரகரன் - கற்காப்பட்சி.
கிரகலாசன் - ஓணான்.
கிரகவட்டம் - கிரகசக்கரம், கிரகச்சுற்று.
கிரகவாகு - கோழி.
கிரகாடிகை - பிடாரி.
கிரகாராதனை - கிரகவழிபாடு.
கிரகாராமம் - வீட்டுத்தோட்டம்.
கிரகாவக்கிரகணி-இடங்கழி யென்னும் நடை.
கிரகி - கிரகியென்னேவல், சமுசாரி.
கிரகித்தல்-இரசம், வாங்கல், உணர்ந்து கொள்ளல், உத்தேசித்தல், ஏற்றுக் கொள்ளல், கற்றல், குறிப்பாலறித ல்,பற்றுதல்,புலனறிதல், வெளவல்.
கிரகிப்பு-பற்றுகை, மட்டுக்கட்டுதல்.
கிரகியகை-வீட்டிற் கட்டி வளர்க்கும் பட்சிகள்.
கிரகிதன்-கிரகிப்பவன்.
கிரசன் - தாரக யுத்தத்தில் விஷ்ணுவி னால் கொல்லப்பட்ட ராக்ஷசன்.
கிரசேமிரம் - பச்சைக்கருப்பூரம்.
கிரஞ்சனம் - முருங்கை.
கிரஷ்டி - சூரியகிரணம்.
கிரணபூதம் - ஒருவகைநோய். அது இ ரத்தநேத்திரம், உக்கிரபார்வை, பய ங்கரவார்த்தை, அதிகவுணவு, துன் மார்க்கச் சாவகாசமென்னு மிக்கு ணங்களை யுண்டாக்குவது.
கிரணமாலி - சூரியன்.
கிரணம் - ஒளி, கதிர்.
கிரணன் - சூரியன்.
கிரணார்த்தம் - ஒளியுள்ள பொருள்.
கிரணி - சூரியகிரணம்.
கிரணியம் - ஒலியுள்ள பொருள்.
கிரதஹஸ்தன்-பாணத்தைக் குறிதப்பா மற் போடுமவன்.
கிரதசாபத்தினிகை - மூத்தாள்.
கிரதபுகன் - பாணத்தைக் குறிதப்பா மற் போடுமவன்.
கிரதமாலம் - கொன்றைமரம்.
கிரதலட்சணன்-கொடைதிற முதலிய வற்றிற் சிறந்தவன்.
கிரதனம் - கொலை.
கிரதாசி - அப்சரப்பெண்.
கிரதாந்தன் - இயமன்.
கிரதிதம்-ஒருவகைநோய். அது கபத்தி னாற் கோசச்சுற்றில் முள்ளைநிறைத் தது போற் சிறுசிறு கொப்பளங்களை நெருங்க வுண்டாக்குவது.
கிரது - காணிக்கை, பலி, வணக்கம்.
கிரதுபுஜர் - தேவர்கள்.
கிரதுமுகன் - சதுரன்.
கிரதோடையம் - யாகதோத்திரம்.
கிரதோதம் - நெய்க்கடல்.
கிரந்தம் - பட்சித்தல்.
கிரதித்தம் - சேர்க்கப்பட்ட புஷ்பம்.
கிரத்திரம் - கழு.
கிரத்திவாசன் - சிவன்.
கிரந்தகர்த்தா - நூலாசிரியன்.
கிரந்தம் - ஆரியம், கிறுது, சாத்திரம், தொடர்களுள் ஒற்றொழித்துயிரு முயிர் மெய்யுமாகக்கொள்ளு முப் பத்திரண்டெழுத்தின் கூட்டம்.
கிரந்தனம் - அழுதல், ஒலி, போர்ச்சே னைகளின் வீராவேசக் கூச்சல்.
கிரந்தி-ஏலத்தோல், கரப்பன், நெல்லி, பருப்பு, முடிச்சு, மேகவூறல்.
கிரந்திகம் - திப்பிலிமூலம்.
கிரந்திதம் - அழுகை.
கிரந்தித்தொய்வு - ஒருநோய்.
கிரந்திநாயகம், கிரந்திநாயகன், கிரந்திநாயன் - ஒருபூடு.

கிரந்திநையல் - ஒருநோய்.
கிரந்திப்புண் - ஒருசிலந்தி.
கிரந்திமூலம் - திப்பிலிமூலம்.
கிரந்திலம்-தூதுவளை, முருக்கமரம்.
கிரந்திவாயு - ஒருவாயு.
கிரந்திவியாதி - ஒருநோய்.
கிரமக்காரன் - ஒழுங்காக நடப்போன்.
கிரமம் - ஒழுங்கு, சடங்கு, முறைமை.
கிரமி - ஒழுங்காய்நடப்போன், வைதீக முறைப்படி நடப்போன்.
கிரமுகம் - கமுகு.
கிரம் - கிளி, பன்றி, விழுங்கல்.
கிரயம் - கொள்ளுகை, விலை.
கிரவுஞ்சம் - அன்றில், தாருகன்மலை, கோழிப்பறவை யளவுதூரம், சத்த தீவிலொன்று.
கிரவுஞ்சன் - மேனைபுத்திரரி லொருவன்.
கிராகதி - நிலவேம்பு.
கிராகம் - ஆமை, பற்றுதல்.
கிராகியம் - கிரகிக்கத்தக்கது.
கிராக்கி - அரியவிலை.
கிராசம் - கவளம்.
கிராசாங்குலம்-கிரகணவளவு.
கிராடம்-தேயமைம்பத்தாறிலொன்று.
கிராணம்-கிரகணம், சிறுவட்டில், மூக்கு.
கிராணி - ஒரு கழிச்சல் நோய்.
கிராணித்திரவியம்-அகிலம்பட்டை, அழிஞ்சில், இந்துப்பு, கருவேம்பு, கல்லுப்பு, கரியுப்பு, காவட்டம்புல், திரிசாரணை, திரிசாரம், நற்சீரகம், நாய்வேளை, பாவட்டை, புளியாரை, பெருங்காயம், பொடுதலை, மிளகு, முட்காய், வேளை, மோர், வசம்பு, வளையலுப்பு, வெடியுப்பு.
கிராதகம் - நிலவேம்பு.
கிராததித்தம் - நிலவேம்பு.
கிராதம் - முகரப்பட்டது.
கிராதர்-குறவர், வேடர், குணமற்றவர்.
கிராதன் - குறவன், சிவன், வேடன்.
கிராதாசி - கருடன்.
கிராதார்ச்சுனீயம்-ஒரு சமஸ்கிருத காவியம். இது அருச்சுனன் தவஞ் செய்தபோது சிவபெருமான் கிருதரூபந் தாங்கிவந்து அமர்புரிந்து பாசுபத மீந்துபோன சரித்திரங் கூறுவது.
கிராதி - சாளரம், கைப்பிடிச்சுவர்.

கிராதிகி - சடாமாஞ்சி.
கிராதை - கங்கை.
கிராந்தல்-இலைத்தல், ஒளித்தல், பதுங்கல்.
கிராந்தி - கிரகவட்டத்தின் சாய்ப்பு, சுடர்ச் செலவு.
கிராந்திமண்டலம்-சூரியனது பாதை.
கிராந்துதல்-இளைத்தல், ஒளித்தல், பதுங்குதல்.
கிராமசாந்தி - கிராம முழுவதுக்குஞ் செய்யுமோர் சாந்தி.
கிராமணி - கிராமமுதன்மையோன், சான்றோருட்பெரியவன், சான்றோன், நாவிதன், பள்ளப்பூமி.
கிராமதச்சன் - ஊர்மிராசானதச்சன்.
கிராமதேவதை-அவ்வக்கிராமங்கட்கதி தேவதையா யவ்வக்கிராமத்தோர் வழிபடுந் தெய்வம், ஊர்காக்குந் தேவதை.
கிராமப்பிரதட்சணம் - கிராமத்தை வலம் வருதல்.
கிராமம்-குறிச்சி, நீர்வாழ்பறவை, நூறுகுடியுள்ளவூர், மருதநிலத்தூர்.
கிராமனை - அவுரி.
கிராமாந்தரம்-கிராமத்திற்குச் சமீபமானவிடம்.
கிராமியம்-இழிசனர்வழக்கு, கிராமத்திலுள்ளது, திசைச்சொல், நாட்டுச்சொல்.
கிராமியன்-கிராமமுதன்மையோன்.
கிராம்பு - கராம்பு.
கிராயகன் - கொள்ளுவோன், வாங்குவோன்.
கிராய் - புற்பொழி, வயிரநிலம்.
கிராய்த்தல் - சுவர் முதலியவற்றைத் தேய்த்துத் துலக்கல்.
கிராவணம், கிராவம் - கல், மலை.
கிராவாதி - இரும்பு.
கிராவை - கல், மலை.
கிரி - பன்றி, பிணையாளி, மருட்பன்றி, மலை.
கிரிகம்பலை - கிலிகம்பளை.
கிரிகரன் - தசவாயுக்களுளொன்று, அது முகத்தின்மேனின்று புருவமேற்றுவித்துந் தும்முவித்து மழுவித்துந் திரியும்.
கிரிகன்னி - வெள்ளைக்காக்கணம்.
கிரிகித்தல் - பற்றுதல்.
கிரிகித்துவம் - வாங்கல்.

கிரிகை - கிரியை.
கிரிகோலம் - கிலிகோலம்.
கிரிசகம் - வருத்தம்.
கிரிசம் - இளைப்பு.
கிரிசரம் - மலையிற்பிறந்த யானை.
கிரிசன் - கிரீசன்.
கிரிசாங்கம் - இளைத்ததேகம்.
கிரிசாராந்நம் - எள்ளோதனம்.
கிரிசு - கிறிசு.
கிரிசை - பார்வதி.
கிரிச்சரம்-ஒருவிரதம், மலையிற்பிறந்த யானை.
கிரிச்சரீடம், கிரீச்சிரீட்டம் } சாதிக்காய்.
கிரிடி - கோழி.
கிரிட்டணம், கிரிட்டம் } உறைத்தய்.
கிரிதசாக்கிரி - ஒருபண்.
கிரிபயம் - மரப்பொது.
கிரிமல்லிகை - மலைமல்லிகை, வெட்பாலை.
கிரிமா - கரிமா.
கிரிமி - கிருமி, புழு.
கிரியசமாந்தி - பயனிலை.
கிரியன் - சேரன்.
கிரியாகலாபம்-கிரியானுட்டிப்புக் குரியபோதகம்.
கிரியாகாண்டம்- வேதத்திற் கிரியைகளைப் போதிக்கும் பகுதி.
கிரியாங்கம் - கிரியை.
கிரியாசத்தி - பஞ்சசத்தியி னொன்று. அஃது வினைத்துணையாக நின்றுலகங்களை யாக்குவது.
கிரியாசாதனம்-கிரியானுட்டிப்புக் குரியது, கிரியையனுட்டிப்பு.
கிரியாசைவம் - ஒருசைவம்.
கிரியாதிகாரன் - விநாயகன்.
கிரியாதீதன் - கிரியை யொழிந்தவன்.
கிரியாத்தச்செடி, கிரியாத்துவேர் } நிலவேம்பு.
கிரியாபதம் - வினைச்சொல்.
கிரியாபாதம் - கிரியைநிலை, கிரியைச் சொல்லும் பாகம்.
கிரியாபூசை-கிரியையோடுங் கூடியபூசை.
கிரியாமார்க்கம் - கிரியைநிலை.
கிரியாமாலை - பெயர்ச்சொல்லையாவது வினைச்சொல்லையாவது திணைபாலிடங் காலங்களோடொன்றச் சொல்லல்.

கிரியாவதி - ஒரு சைவதீக்ஷை.
கிரியாவாதி - பிரமாணவாதி.
கிரியாவான் - கிரியைக்காரன்.
கிரியேந்திரியம் - கர்மேந்திரியம்.
கிரியை-சைவசமயநிலை நான்கினொன்று, தாளப்பிரமாணம் பத்தினொன்று, தொழில்.
கிரிகைகேடு - அசுத்தம், செய்காரியவீனம்.
கிரியைக்காரன் - கிரியைசெய்வோன்.
கிரிவாணம் - நீலாஞ்சனக்கல்.
கிரிவிரசம் - மகத்தேசராஜதானி. இதைச்சுற்றி மலைக்கோட்டை யிருப்பதால் கிரிவிரசமெனப்பெயர்பெற்றது, கேகயராஜதானி. இது குசன் மக்களுள் நான்காம்புத்திரன் வசுவினால் ஸ்தாபிக்கப்பட்டது. இது தருமாரணியத்துக்குச் சமீபத்திலுள்ளது.
கிரீசன் - சிவன்.
கிரீசி - சிவை.
கிரீச்சரம் - கிரிச்சரம்.
கிரீடகிராதன் - சிவபெருமான்.
கிரீடசாம்பிராச்சியம்-அதிகார சந்தோஷம்.
கிரீடதாரணம் - முடிசூட்டு.
கிரீடதாரி - மகுடபங்கம்.
கிரீஷமசுந்தரி - சிறு செருப்படை.
கிரீடம் - முடி, வேலிப்பருத்தி.
கிரீடாதிபதி - உத்தாமணி, முடிதரித்த மன்னவன்.
கிரீடாதிபத்தியம் - அதிபதித்துவம், மகுடவர்த்தனத்தகைமை.
கிரீடாப்பிரமவாதி - வேதாந்திகளில் ஒருவன்.
கிரீடாரதம் - விளையாட்டுத்தேர்.
கிரீடாரத்திநம்-இரதிதேவி, மன்மதன் மனைவி.
கிரீடி - அரசன், அருச்சுனன், கிரீடியென்னேவல்.
கிரீடித்தல் - புணர்தல், விளையாடுதல்.
கிரீடை - புணர்ச்சி, மகளிர் விளையாட்டு, விளையாட்டு.
கிரீட்டி - பிரண்டை.
கிரீபம், கிரீவம் } கழுத்து.
கிருகம் - மிடறு, வீடு.

கிருகரன்-கவுதாரி, கிருதரன், சிவன்.
கிருகவாகு - பல்லி, மயில்.
கிருகனம் - கவுதாரி.
கிருசம் - மெலிவு.
கிருசன் - ஒரு மஹருஷி.
கிருகாசுவன் - கிருதாசுவன்.
கிருசாட்சம் - சிலம்பி.
கிருசாணு - தீ, பவளக்கொடி.
கிருசாணுரதசன் - உருத்திரன்.
கிருசாநு - அக்கினி.
கிருசாநுரேதன் - சிவன்.
கிருசாந்தரேதா - சிவன்.
கிருசாந்தன் - அக்கினி.
கிருச்சிரம்-சாந்தபனவிரதம். அது பஞ்சாமிர்தத்தோ டாறுநாளுண்டு ஏழாநாளுபவசிப்பது, பாவம் பிரசாபத்தியமணம், பிராயசித்தம்.
கிருச்சிராதி கிருச்சிரம்-இருபத்தொருநாளளவும் சாந்தயனமனுட்டித்தல்.
கிருச்சிரோன்மீலனவர்த்தமம் - ஒருவகைநோய். அது அபத்தியவஸ்துக்களைப் புசிப்பதனல் வாயு வதிகரித்துக் கண்ணிமைகளி லொட்டியிருக்கும் நரம்புகளை அனுசரிக்கும்போது பிறந்து நித்திரைதெளிந்தவுடன் கண்விழிக்கக்கூடாமை, தூசிவிழுந்ததுபோ லுறுத்தல், மூடிக்கொள்ளல், பிரயாசத்தோடு விழித்தல், நீர்க்கம்மல், இமை கனத்தலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கிருஷகம் - படைவாள்.
கிருஷம் - உழவு, கலப்பை, கொழு.
கிருஷி - பயிர், பயிர்ச்செய்கை.
கிருடி - அருச்சுனன், பயிர், பன்றி.
கிருஷிகன் - பயிர் செய்கைக்காரன், வேளாளன்.
கிருடியை - கூத்திஞேர் விகற்பம்.
கிருஷ்டம் - உழுதபூமி.
கிருஷ்டவிரணம் - ஒருவகைப்புண். அது முள், கட்டைக்குச்சு, கொம்பு, தடி முதலியவைகளிஞற் காயம்படுவதிலிருந்தும், உராயப்படுவதிலிருந்து முண்டா யற்ப இரத்தக் கசிவுடன் கூடினதாய் ஆறுதிருப்பது.
கிருட்டி - ஓரீற்று, பன்றி, பிரண்டை, மருட்பன்றி.
கிருட்டிணசருப்பம் - ஒரு கரும்பாம்பு.
கிருட்டிணசாலி - ஒருநெல்.
கிருட்டிணசிங்கு வாததோஷம் - ஒரு நோய்.
கிருட்டிணசீரகம் - கருஞ்சீரகம்.
கிருட்டிணபக்கம், கிருட்டிணபட்சம் - அபரபக்கம்.
கிருட்டிணபாணம், கிஷ்ணபாணம் - எட்டிமரம்.
கிருட்டிணபேடம் - கடுகுரோகிணி.
கிருட்டிணமிருகம் - கருமான்.
கிருட்டிணமூலி - துளசி.
கிருட்டிணம், கிருஷ்ணம் - இரும்பு, கறுப்பு, காகம், குயில், சந்திரன், பின்பக்கம், துருசு, மான், மிளகு.
கிருட்டிணலோகம் - உலோகமணல்.
கிருட்டிணவல்லி - நன்னாரி.
கிருட்டிணவானம் - உலோகமணல்.
கிருட்டிணவேணி - ஒருநதி.
கிருட்டிண ஞேய்ந்த மிருகம் - கலங்கொம்பு.
கிருட்டிணன், கிருஷ்ணன் - அருச்சனன், கண்ணன், வியாசன்.
கிருட்டிணுசனம், கிருட்டிணுஞ்சனம் - மான்றேல்.
கிருட்டிணுப்பிரகம் - ஓரப்பிரகம்.
கிருட்டிணுவாசம் - அரசுமரம்.
கிருட்டிணி - காக்கணஞ்செடி.
கிருட்டிணை, கிருஷ்ணை - ஓர்யாறு, கடுகு, கருவட்டை, துருபதி, முந்திரிகை, வால்மிளகு.
கிருஷ்ணகர்ணுமிருதம்-ஒருநூல். இது ஸ்ரீலீலாசுகாரற் செய்யப்பட்டது.
கிருஷ்ணகுட்டம் - ஒருவகை குட்டநோய். அது சர்வாங்கமுங்கறுத்தல், சருமத்தில் திமிருடன் நாற்றம் வீசுதல், நோதல், சத்தத்தாதுக்களுமுஷ்ணமாயிருத்தல், அரையிலும் புறங்காலிலுங் கொஞ்சமாகவும் சிரசிலதிகமாகவு மிரணங்காணுதல், புத்திச்சஞ்சல முறுதலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கிருஷ்ணஜயந்தி - ஆவணிக் கிருஷ்ணபக்ஷத்தட்டமி. இது கிஷ்ணன் பிறந்த தினமாதலின் விரததினமாகக் கொள்ளப்படும்.
கிருஷ்ணசர்ப்பம் - ஒருவகைக் கருநாகம்.
கிருஷ்ணசாரம் - கறுப்புமான்.

கிருஷ்ணதேவி - கிருஷ்ணாநதி.
கிருஷ்ணத்துவைபாயனன் - வேதவியாசன்.
கிருஷ்ணபாலை - ஒருவகைக்கொடி.
கிருஷ்ணபாகபலம்- பெருங்களாச்செடி.
கிருஷ்ணபேதி - கடுகுரோகிணி.
கிருஷ்ணமண்டலம் - ஒருவகைச் கண்ணோய். அது இதர வஸ்துக்களைத் தெரியவொட்டாமல் திரைபோட்டதுபோல் மறைத்தல், கறுத்தல், சிவத்தல், உப்புதல், குழிவிழுதலென்னு மிவ்வைங்குணங்களையுங் கருவிழியி லுண்டாக்குவது.
கிருஷ்ணம் - கறுப்புநிறம்.
கிருஷ்ணராயன் - ஒரு சிற்றரசன். இவன் சமுகத்தில் விகடக்கூத்தர்கள் வேளாண்மகளிரைப்போல் வேடம் பூண்டு கூத்தாடினார்கள். அப்போது தொண்டைமண்டலத்து வேளாளர்கள் நம்மைக் கிருஷ்ணராயன் அவமதித்தானென்று சினந்து அவனுயிரை மாய்த்தார்கள்.
கிருஷ்ணலோகிதம் - கறுத்த சிவப்பு.
கிருஷ்ணவிருந்தை - பாதிரிமரம்.
கிருஷ்ணவெலி - கருநிறத்தையுடைய ஒருவகை எலி. அது கடித்தால்தினந்தோறு மிரத்தவாந்தியும், மழைக்காலத்தி லதிகவிரத்தம் வீழ்தலும் உண்டாகும்.
கிருஷ்ணாங்கனை - நைருதன் இராஜதானி.
கிருஷ்ணாவேணி - ஒருநதி.
கிருஷ்ணிகை - கறுத்த கடுகு.
கிருஷ்ணேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கிருதகபடம் - வஞ்சம்.
கிருதகன் - வசுதேவன் மகன்.
கிருதகாலம் - நியமநாள்.
கிருதகிருத்தியம்-செய்யவேண்டுவதையே செய்தல்.
கிருதகிருத்தியன்-திரிகருப்தன் மகன். இவன் விரக்தனா யிறந்தவன்.
கிருதகிருமி - நெய்யாலுண்டாகும்புழு.
கிருதகுளபாளித போசனம் - திருத்திபோசனம், நெய்,சருக்கரைமுதலிய கூடிய இனிய போசனம்.
கிருதகோகேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கிருதசங்கேதம் - இணக்கம்.
கிருதசந்நிதானம் - முன்னிலை.
கிருதசாபத்திரிகை-கணவன் மறுவிவாகஞ் செய்தபின்னும் அவனோடு வாழுமனைவி.
கிருதசிரவணன்-பரசுராமன் அநுசரன்
கிருதசூடன்.உச்சிக்கை வைக்கப்பட்டவன்.
கிருதசோபம் - அலங்காரம், பிரகாசம்.
கிருதசௌசம்-விபசாரப் பெண்களைச் சுத்தஞ்செய்தல்,இதுஒருமதாசாரம்.
கிருததாசன் - வேலையாள்.
கிருததாரன் - விவாகஞ்செய்தோன்.
கிருதத்துயுதி-அங்கராஜபுத்திரி, சித்திரகேதன் மூத்தபாரி.
கிருதநாசனம் - நன்றியீனம்.
கிருதநிருசேனன்-பாவநிவர்த்தி செய்தோன்.
கிருதபலம் - செய்பலம்.
கிருதபுத்திகள் - ஞானிகள்.
கிருதமந்தன் - யமீநான் மகனாகிய திருதிமந்தன்.
கிருதமாலை - மலைய பர்வதத்தி லுற்பத்தியாகும் ஒரு புண்ணியநதி.
கிருதம்-செம்முருங்கைசெய்கை, செய்யப்பட்டது,நெய்,முதல்யுகம், முன்.
கிருதயுகம் - யுகங்களுன்கினு ளொன்று. இது பதினேழிலக்ஷத் திருபத்தெண்ணாயிரம் வருஷங் கொண்ட காலவட்டம். அதருமஞ் சிறிதுமின்றித் தருமமே யோங்கி நடந்தகாலமிதுவே. அதுபற்றி இந்தயுகம்புண்ணியயுகமென்றுஞ் சத்தியயுகமென்றுங் கூறப்படும். வர்ணாச்சிரமத்துக்குரிய கன்மங்களெல்லா முறைப்படியொரு சிறிதுமிழுக்கமின்றிச் செய்யப்பட்ட யுகமாதலிற் கிருதயுகமெனப்பட்டது. இந்தயுகத்தில்தேவர், கந்தருவர், தானவர், யக்ஷர், கிந்நரர், நாகர் என்போர் யாருமில்லை.கொள்ளல், விற்றல்களில்லை. மனிதருக்கு ஒருவகை யுழப்புந் துன்பமுமில்லை. மரங்களும், பயிர்வர்க்கங்களும் மனுஷர்கையால் நீரும், எருவும்,உழவும், காவலுங் கொள்ளாது தாமே பயன் தருவதாயின. நினைத்தமாத்திரத்தே எல்லாப் போகங்களும் வந்துகூடும்.

பிணியும்,மெலிவும், பகைவும், பெருமையும்,வஞ்சமும்,அச்சமும், கொடுமையும், நலிவும், பொருமையும் இந்தயுகத்திற்குரியவனல்ல. சத்தியமே அரசுபுரிந்தது. அறமே விரும்பப்படுவதாயிற்று, பரப்பிரமம் யாவர்க்கும் சாந்நித்தியமாயிருந்தது. நாராயண்ன் சுவேதரூபியா யிருந்தான். எல்லா மாந்தருக்கு நெறியுமொன்றே, செயலுமொன்றே,மனமுமொன்றே, கடவுளுமொன்றே, மந்திரமுமொன்றே, வேதமுமொன்றே.

கிருதரன் - முகத்திடைநின்று தும்மலும், சினமும், வெம்மையும், விளைக்கும் ஒருவிதவாயு.

கிருதாரதன் - மகாதிருதிபுத்திரன்.

கிருதாலட்சணம் - நல்லிலக்கணம்.

கிருதவர்மன் - ஹிருதிகன்மகன். தேவமீடன்தம்பி. பாரதயுத்தத்தில் அசுவத்தாமனுக்குச் சகாயமா யிருந்தவன் கிருதவீரியன் தம்பி.

கிருதவீரியன்-தனிகன் புத்திரன். கார்த்த வீரியார்ச்சுனன் தந்தை.

கிருதவுஜசு }
கிருதவுஜன் } கிருதவீரியன்தம்பி.

கிருதவேசம் - அலங்கரித்தல்.

கிருவேதன் - கூலியாள்.

கிருபன் - கம்பீரன்மகன். இவன் வமிசத்தவர்கள்பிராமணராயினர்கள். கிருட்டிணன்மாமன், பலராமன் தம்பி பிலுக்கன். விதர்ப்பன் இரண்டாம் புத்திரன்.

கிருதாகிருதம் - செய்துகுறைவேலை.

கிருதாக்கினி - கிருதவீரியன் தம்பி.

கிருதாசி - ஓரரம்பை.

கிருதாசுவன் - பரிகிஞ்சுவன் மூத்தகுமாரன் இவன்மகன் இரண்டாம்யவஞசுவன்.

கிருதாஞ்சலி - கைக்கூப்பிக் கும்பிடல்.

கிருதாந்தசனகன் - சூரியன்.

கிருதாந்தம்-இலிகி, தருக்கித்து முடித்ததீர்மானம்.

கிருதார்தன் - நமன்.

கிருதாயு - அரிஷ்டநேமிமகன்.

கிருதார்த்தம் - காரியசுத்தி, பேறு.

கிருதார்த்தர்-கருமமுடித்தோர், பேறுபெற்ருேர், மகிழ்ச்சிபெற்ருேர், விருத்தியடைந்தார்.

கிருதி - உபாதி, சந்நதமந்தன்மகன். இவன் இரணிய நாபனுல் யோகமார்க்க முணர்ந்து சாமசங்கிதையைக் கீழைத்தேசங்களிற் சென்றுபதேசித்தவன், சியவனன் மகன்,செய்கை நடுக்கம், வகுளாசுவன் மகன், விபு மகன்.

கிருதிகான்-இராவணன்வேதனைசெய்வோன்.

கிருது - அங்கதன்றம்பி, உன்முகன்கு சால், கோமளம், செருக்கு, நெய், பிரமமானசபுத்திரருளொருவன். இவனுக்குத் தக்ஷப்பிரசாபதி மகளாகிய சந்நதியிடத்து அங்குஷ்டப்பிரமாணமாக அறுபதினுயிரம் மகாவிருடிகள் பிறந்தார்கள். இவர்கள்பெயர் வாலகில்லிய விருடிகள்.

கிருதோபகாரம் - உதவிசெய்தல்.

கிருதோபநயனன்-பூணூற்றரித்தோன்

கிருத்திமதன் - க்ஷத்திர விருத்தன் பௌத்திரன்சுகோத்திரன்புத்திரன் சுனகன்தந்தை.

கிருத்திஅறிவுஒருதேவதைகிருத்திகைதோல்,மான்ரூேல்

கிருத்திகாசுதன் }
கிருத்திகாசூனு } முருகக்கடவுள்.

கிருத்திகை-மூன்ரும் நக்ஷத்திரமாகிய கார்த்திகை, இது ஆறு நக்ஷத்திரங்களின் கூட்டம். ஒருசமயம் அக்கினிதேவன் சப்தவிருடிகளது பாரிகளைப்பார்த்து மோகித்தான். அதுகண்ட அவன் பாரிசுவாகாதேவி தனதுநாயகன் அந்த இருஷிகள் பாரியரால்சபிக்கப்படுவானென்றஞ்சிஅருந்ததியொழிந்த ஏனைய ஆறுபாரியாருடைய உருவந்தாங்கி ஆறுபாரியாகி நாயகனைக் கூடினுள். இவ்வறுவரே கிருத்திகையாயினர். இவர்களால் வளர்க்கப்பட்டமையின் குமரக்கடவுள் கார்த்திகேய ரெனப்படுவர். அயன சலனத்தால் ஒவ்வொருகாலத்திற் கொவ்வொரு நக்ஷத்திரம்முதலாகவரும், திருஞானசம்பந்தமூர்த்திகள்காலத்தில் இதுமுதல்நக்ஷத்திரமாக எண்ணப்பட்டது.

கிருத்திதம் - சேர்க்கப்பட்ட புஷ்பம்.

கிருத்திமம்-கடமை, செய்கை, தோல், பூதகணம், பொய், மாயை,வஞ்சனை, வைதீகநடை.

கிருத்தியகருத்தா - கருமாதிபன்.
கிருத்தியப்பிழை - செய்கைப்பிழை.
கிருத்தியம்-கடமை, கிரியைமுறை, சடங்கு, தொழில், நடக்கை, நித்திய கருமம், பிதிர்கடன்.
கிருத்தியை-ஒரு தேவதை.
கிருத்திரசிவாதம்-ஒருவகைவாதநோய். அது எப்பொழுதும் நடையின்றி யிருத்தல், பகல்நித்திரை, பதினன்கு வேகத்தை மறித்தலாகிய செய்கைகளாலும், கடற்கரை, மாமிசம், மாப்பண்டம், தயிர், பால், வெல்லம், கள், புண்ணுக்கு, மதுரவஸ்து, மந்தவஸ்து, இலவணவஸ்து, அதிக சீதளவஸ்து, எண்ணெய்வஸ்து, கந்தமூலபலாதியாகிய இவைகளை மிதமின்றிப் புசித்தலினலும் பிறந்து தொடைகளின்நரம்பை அனுசரித்துப் பாதவிரல் முதலடி முதுகுவரைக்கு மிருக்கின்ற நரம்புகளின் றுவாரத்திற் சேர்ந்து கொள்ளுவது. அதனல் தேகத்திற் குத்தல், கனத்தல், நோவு, வேதனையென்னு மிக்குணங்க ளுண்டாகும்.
கிருத்திரமம் - பொய், வஞ்சனை.
கிருத்திரமவிஷம்-நாபி முதலிய விஷப்பூண்டுகளையாவது பாம்பு முதலிய பிராணிகளின் விஷங்களையாவது மற்றெரு வஸ்துவிற் கலந்து கொடுப்பதாற் பிறக்கும் விஷம்.
கிருத்திரமபுத்திரன்-வளர்ப்புப் பிள்ளை.
கிருத்திரிமம் - பொய், வஞ்சனை.
கிருத்திவாசன் - சிவபெருமான்.
கிருத்திவாசேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கிருத்துவம் - அசாத்தியம், குரூரம், செய்தல், செருக்கு.
கிருபணத்துவம் - உலோபத்துவம்.
கிருபணம் - உலோபம்.
கிருபணன் - உலோபன்.
கிருபன்-ஒரு வில்லாசிரியன், குருகுலத்தவரின் பஞ்சாசாரிகளிலொருவன்.
கிருபாகடாட்சம்-கிருபைப்பார்வை.
கிருபாகணம் - வாள்.
கிருபாகான் - கிருபையுடையோன்.
கிருபாசனம்-அருள்செய்யும்படி யிருக்கு மாசனம்.
கிருபாசாரியன் - கிருபன்.
கிருபாணம் - கிருபாகணம்.
கிருபாணி, கிருபாணிகை } கத்தி.
கிருபாணேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கிருபாநாயகி-திருக்கருவூரிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார் பெயர்.
கிருபாமூர்த்தி - கடவுள், கிருபாரூபி, கிருபையாலவதரித்தோன்.
கிருபாலு, கிருபாளு } கிருபையுடையோன்.
கிருபி - சத்தியதிருதி புத்திரி, துரோணன் மனைவி.
கிருபிபுத்திரன் - அசுவத்தாமன்.
கிருபீடஜன்மன்-உலகத்திலே பிறந்தவன், சந்திரன், அக்கினி.
கிருபீடபாலம் - சமுத்திரம்.
கிருபீடயோனி-சந்திரன், அக்கினி.
கிருபேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கிருபை - அருள், இரக்கம்.
கிருபைகூர்தல் - கருணைகொண்டிருத்தல்.
கிருபைக்கண்-அருட்பார்வை.
கிருமி - அரிபுண், உசீநரன், நான்காம் புத்திரன், புழு.
கிருமிக்கிரந்தி - ஒருநோய்.
கிருமிக்குன்றம் - வாலுளுவை.
கிருமிசத்து - ஒருமருந்து.
கிருமிசத்துரு - புரசம்விரை.
கிருமிஜம்தை - அகில்.
கிருமிசிரோரோகம் - ஒருவகைத் தலைநோய். அது சங்கீரணபோசனத்தினல் திரிதோஷத்தை அதிகரிக்கச் செய்து சிரசிலிருக்கு மிரத்தமாமிசத்தைக் கரைத்துக் கிருமிகளைப் பிறப்பிப்பது. அக்கிருமி உதிரத்தைப்பானம்பண்ணும்போது அச்சிரசிற்கோரமான வேதனையுண்டாகும். அதனல் மண்டைவறளல், மதர்த்தல், வீக்கம், பிளந்து போவதுபோலிருத்தல், மிகவு மெரிதல், துர்க்கந்தம், நாசியிற் சலம்வடிதல், நாடையிற் சிவந்த நிறத்தோடு நமைச்சலுண்டாகிப் பின்வெளுத்த வீக்கமாயெழும்புதல், காதிரைச்சல், சுறம், இருமல், துர்ப்பலம், மனக்கலக்க முதலிய குணங்களுண்டாகும்.

கிருமிசுத்தி - மட்டி.
கிருமிச்சுரம் - ஒருவகைச்சுரம்.
கிருமிச்சூலை - கிருமிநோய்.
கிருமிச்சைலம் - கறையான்புற்று.
கிருமிநாசம்-ஓமம், குராசானியோமம், பங்கம்பாலை, பலாசம்விரை, பேய்ப்பீர்க்கு, வேப்பீர்க்கு.
கிருமிநாசி - கிலவாகை.
கிருமிபித்தம்-ஒருவகைப் பித்தநோய். அது மலத்திற்கிருமிவிழுதல், வயிற்றைப் புரட்டிப்புரட்டி வலித்தல், சர்வாங்கத்திலுந்தினவு, நோவு, மலமுஞ்சலமும் வறளல், கைகால் வாழைத் தண்டைப்போற் சில்லிட்டுக்கனத்துக் கடுக்கல், தேகத்திலொருவித நாற்றம்வீசுத லென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கிருமிமார்புரோகம்-ஒருவகைநோய். அது சிலேட்டுமாதிக்க வஸ்துக்களினாலுங் கருணை சேம்பு முதலிய கிழங்குகளினாலும், ஆமாசயத்தானத்திற் பெரும்பூ நாகத்தைப்போலும் நீர்ப்பாம்பைப்போலும் பெரிதாகவுஞ் சிறிதாகவும் பூச்சிகளுற்பத்தியாகிச் சாதாரணமாகப் பூமியிற் சஞ்சரிப்பதுபோ லுள்ளே குடலிலொட்டிப் பின்னிக்கொண்டு இருதயத்தானத்திற்கு மேலுமெதிர்த் தேறுவதால் மார்பில் துடித்தலோடு அதிரல், வீக்கம், அதிக நமைச்சல், ஒருவேளைமார்புதெறித்து விழுவதுபோலும் வாளா லறுபடுவதுபோலு மிருத்தல், கண்கள் கறுப்பாகத் தோற்றல், சிலவேளை யிருட்டிக்கொள்ளல், வாயிற் கோழை விழுதலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கிருமியம் - மாமிசம்.
கிருமியரி - வாய்விளங்கம்.
கிருமிலாபுரம்-ஒருபட்டணம். இது கிருமியால் கிருமிக்கப்பட்டது.
கிருமிவாந்தி - ஒருவகை வாந்திநோய். அதுவாதாதி திரிதோஷங்களினாற் கிருமிகளுற்பத்தியாகி நெளிவதால் வயிற்றுநோய், சரீரநடுக்கம் மார்பில் துடிப்பதோடுமிருந்த நோவென்னு மிக்குணங்களுண்டாகி வாந்திவரும். அவ்வாந்தியிற் கிருமிகளும் விழும்.
கிருமுகம் - கழுகு.
கிருமேளகம் - ஒட்டகம்.
கிரேதம் - கிரேதாயுகம்.
கிரேதா - விலைகொண்டவன்.
கிரேதாயுகம், கிரேதை } முதல்யுகம். அது பதினேழுலட்சத்து இருபத்தெண்ணாயிரம் வருஷம் கொண்டதாகும்.
கிரேஸ்தன், கிரேத்தன் } கிரகஸ்தன், சங்கைமான் நாணயவான்.
கிரேந்தி - கச்சோலம்.
கிரேனிடல் - அஞ்சியொடுங்கல்.
கிரேனிடுதல் - அஞ்சுதல்.
கிரேன்கிரேனெனல்-அச்சக்குறிப்பு.
கிரௌஞ்சன் - மைநாகன்புத்திரன் இவன் அரசிருந்தமலை கிரௌஞ்சமெனப்படும். இவனை அம்மலையோடு சுப்பிரமணியக்கடவுள் பிளந்தமையின் கிரௌஞ்சதாரக னெனப்படுவர்.
கிலஷ்டன் - தரித்திரம் பிடித்தவன்.
கிலம் - அழிவு, சிறுமை.
கிலாசம் - தேமல்.
கிலாசி - தேமலுடையோன்.
கிலி - பயம்.
கிலிகம்பறை - அலுசிலும்பல், கலாதி.
கிலிகை - சிற்றெலி.
கிலிகோலம் - சீர்கேடு.
கிலிஞ்சகம் - பாய்.
கிலிஷ்டவர்த்தமம் - ஒருவகை நோய். அது கபத்தினாற் பிறந்து இமைச்சந்துகளிற் சிவந்த வீக்கத்தை யுண்டாக்குவது. அவ்வீக்கங் கட்டிகளாகத் தோன்றித் தினவையு முபத்திரவத்தையுங் கொடுக்கும்.
கிலிமண்டல் - அஞ்சுதல்.
கிலியம்பறை - கிலிகோலம்.
கிலீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கிலீபம் - பேடு.
கிலீபலிங்கம் - அலிக்குறி.
கிலீபன் - பேடி.
கிலுகிலுத்தல், கிலுகிலுப்பு } ஒலிக்குறிப்பு.
கிலுகிலுப்பை-ஒருசெடி, ஒருவிளையாட்டுக்கருவி.
கிலுகிலெனல் - ஒலிக்குறிப்பு, குரங்கு பண்ணுமொலி.

கிலுக்குதல் - கிலுக்கச்செய்தல்.
கிலுங்கி - கிலுகிலுப்பை.
கிலுங்குதல் - கிலுகிலுத்தல்.
கிலுசிதம் - வறுமை, தரித்திரம்.
கிலுட்டம் - நிறைதல்.
கிலுத்தம் - மணிக்கட்டு.
கிலுமொலுத்தல், கிலுமொலெனல் } ஒலிக்குறிப்பு.
கிலேசம் - அச்சம், கவலை, துன்பம், நோய், வருத்தம்.
கிலேசித்தல் - விசாரப்படல்.
கிலேசு - கீழ்.
கிலேதகசிலேட்டுமம் - ஆமாசயத்தானத்திலிருந்துகொண்டு உண்ணப்பட்ட அன்னபானாதிகளை மிருதுவாக்கும் ஒருவகைச் சிலேட்டுமம்.
கிலேதகம் - ஈரம்.
கில்லம் - கழுத்து.
கிழக்கதை - பழங்கதை, பூராயக்கதை, வீண்கதை.
கிழக்கன், கிழக்கா, கிழக்கி } ஒருவகை மீன்.
கிழக்கு - கீழ்த்திசை.
கிழக்குவெளித்தல்-கீழ்த்திசை வெளித்துவிடுதல்.
கிழக்கோலம் - கிழவடிவு.
கிழங்கன், கிழங்கான் } ஒருவித மீன்.
கிழங்கு - கந்தம்.
கிழங்குக்கொடி - ஒருவகைப்பயிர்க்கொடி.
கிழடன் - கிழவன்.
கிழடு - முதிர்வயதுள்ளது.
கிழண்டுதல் - வயதாற்றளர்தல்.
கிழத்தனம் - கிழத்தன்மை.
கிழத்தி-உரியவள், தலைவி, மருதத்தலைவி, மனைவி.
கிழத்து - ஒருமீன்.
கிழமை-உரிமை, கடமை, குணம், சம்பந்தம், மாட்சிமை, மூப்பு, வாரம்.
கிழமைவட்டம் - ஏழுவாரம்.
கிழமைவிரதம் - வாரவிரதம்.
கிழம் - கிழத்தன்மை.
கிழலை-சுற்றுப்புறம், திசை, மரக்கலத்தின் சாய்வுப் பக்கம்.
கிழவர் - உரியோர், மூப்புடையோர்.
கிழவன்-உரியோன், கணவன், தலைவன், பாணிநாள், மருதநிலத்தலைவன் மூப்புடையோன்.
கிழவி-உரியவள், தலைவி, தாய்க்கிழங்கு, முருங்கை, மூப்புடையாள்.
கிழவு - கிழவுத்தன்மை.
கிழாத்தி - ஒருபுள், ஒருமீன்.
கிழாநெல்லி - ஒருபூடு, சஞ்சீவி.
கிழார் - இறைகூடை, உரியோர், சலசூத்திரம், தோட்டம்.
கிழாலை - களர்நிலம்.
கிழான் - உரியோன், கைக்கிளையிசையின் சுவையுடைமை, சூரியன், தயிர், வேளாளர் பட்டப்பெயர்.
கிழி-எழுதுபடம், கிழிந்ததுண்டு, கிழியென்னேவல், கீழுடை, கீற்று, நிதி, பொதி, பொட்டணி.
கிழிகடை - அறவிளப்பமானது.
கிழிக்கட்டு-நிதிப்பொதி, பொட்டணி.
கிழிதல்-பிளத்தல், பீறுதல், வீணுதல்.
கிழித்தல் - கிழிக்குதல், கீறல்.
கிழிப்பு - கிழிக்கை, பிளவு, வெடிப்பு.
கிழிமுறி-கிழித்த துண்டுச்சீலை, செல்லாச்சீட்டு.
கிழியல் - அறவிளப்பமானது, கிழிந்த சீலை, கிழிவு, பயனற்றவன்.
கிழிவு - காரியக்கேடு, கிழிதல், கீற்று, வாய்க்காமை.
கிளக்கல் - சொல்லல்.
கிளத்தல்-எழுப்பல், சொல்லுதல்.
கிளத்தி - நாமகள்.
கிளத்து - சொல்.
கிளப்பம் - எழுப்பம், வளர்ச்சி.
கிளப்பல்-உயர்த்தல், எழுப்பல், கிண்டுதல், மிதற்றல், முயற்றல்.
கிளப்பு-கிளப்பென்னேவல், கிளம்பச்செய்தல், சொல், மொழிகை.
கிளம்பல்-அதிகரித்தல், எழும்பல், வளருதல்.
கிளருதல் - கிளர்தல்.
கிளர்-ஒளி, கிளரென்னேவல், பூந்தாது.
கிளர்ச்சி-இறுமாப்பு, எழுச்சி, நிறைவு, மேலோங்குகை, விருத்தி.
கிளர்தல்-உயர்தல், எழுதல், கிண்டல், நிறைதல், பிரகாசித்தல், வளர்தல்.
கிளர்த்தல் - எழுப்பல், ஒளிசெய்தல்.
கிளர்வரி-நடுநின்றோரிருவருக்குஞ்சந்துசொல்லக்கேட்டுநிற்பது.

கிளர்வு-எழுச்சி, பெருக்கம், வளர்ச்சி.
கிளவரி-தண்ணீர்விட்டான்கிழங்கு.
கிளவி-அகப்பொருட்டுறை, சொல்.
கிளறல் / கிளறுதல் } கலத்தல், கிண்டுதல், கிளப்புதல், வெளியாக்கல்.
கிளா - களா, கிளாய், கோது.
கிளாலை - களாலை.
கிளி - ஒருமீன், கிள்ளை.
கிளிகடிகருவி / கிளிகடிகோல் } ஒருவிதக்கருவி.
கிளிகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கிளிச்சிறை - நால்வகைப் பொன்னில் ஒன்று.
கிளிஞ்சிலாறு - கிளியாறு.
கிளிஞ்சில் - எறல்.
கிளிதம் - புசிக்கப்பட்ட அன்னம்.
கிளித்தட்டு - ஒரு விளையாட்டு.
கிளிப்பிள்ளை - கிளி.
கிளிப்பூச்சி - வெட்டுக்கிளி.
கிளிமீன் - ஒருவகைமீன்.
கிளிமூக்கான் - காற்றாழை.
கிளிமூக்குக்கிழங்கு - ஆகாசகருடன் கிழங்கு.
கிளிமூக்கெழுத்தாணி - ஒருவகையெழுத்தாணி.
கிளியாறு-புதுச்சேரிக்கு தெற்கிலுள்ள ஒருநதி.
கிளிவெட்டுப்பாக்கு - இடையிடையே தோலுரித்தபாக்கு.
கிளுகிளுத்தல் / கிளுகிளெனல் } ஒலிக்குறிப்பு.
கிளுவை - ஒருபறவை, ஒருமரம், ஒருமீன்.
கிளை - உறவு, ஒளி, ஒருபண், கிளையென்னேவல், கூட்டம், கைக்கிளையென்னுமிசை, தளிர், மந்தை, மரக்கிளை, மூங்கில், வீணையினோர் நரம்பு. [தல்.
கிளைகூட்டல் - ஆந்தைகள் கூச்சலிடு
கிளைக்கதை - ஒன்றிலிருந்து பலக்கதை தோன்றுங்கதை.
கிளைஞர் உறவோர், தோழர், மருதநிலமாக்கள்.
கிளைதல்-கழுவல், களைதல், தெரித்தல்.
கிளைத்தல் - கிண்டல், கிளைவைத்தல், கிறைதல், நெருங்கல், பெருகல்.
கிளைப்பெயர் - சுற்றப்பெயர்.
கிளைமை - உறவு, சினேகம்.
கிளையார் - சிநேகர்.
கிளைவழி - கொடிவழி, வமிசம்.
கிளைவிடுதல் / கிளைவைத்தல் } கப்புவைத்தல்.
கிள்ளல் - கிள்ளுதல்.
கிள்ளாங்கு / கிள்ளாங்கை } உண்டியற்சீட்டு.
கிள்ளாப்பிருண்டு-அலட்சியம், ஒரு விளையாட்டு, கிள்ளையெடுத்தல்.
கிள்ளி-சோழவம்சத்தார், சோழன்.
கிள்ளிக்காட்டுதல் - அருட்டி அறிவித்தல். [கை.
கிள்ளு - கிள்ளப்பட்டதுண்டு, துணிக்
கிள்ளுக்கீரையா யெண்ணல்-அற்பமா யெண்ணல்.
கிள்ளுதல் - துள்ளுதல்.
கிள்ளுப்பிருண்டு - ஒரு விளையாட்டு.
கிள்ளை-கருங்கிளி, கிளி, குதிரை, பத்திரிசாதி.
கிள்ளைவிடுதூது-ஒரு பிரபந்தம்.
கிருக்கி - அருமை, ஒறுப்பு.
கிருணி - ஒருவியாதி.
கிருப்பிராண்டு - ஒரு விளையாட்டு.
கிரும்புதல் - மெல்லச்செதுக்கல்.
கிருய் - பச்சைநிறக்களிமண்.
கிருவல் / கிருவுதல் } ஒலிக்குறிப்பு.
கிறி - பொய், வழி.
கிறிசு - குற்றுவாள்.
கிறிச்சான்-ஒலிக்காட்டுமோர்கருவி.
கிறிச்சிடல் / கிறிச்சிடுதல் } ஒலிக்குறிப்பு.
கிறீச்சனம் - ஒருநோய்.
கிறீச்சுக்கிறீச்செனல்-ஒலிக்குறிப்பு.
கிறீஸ்துவம் - கிறிஸ்துமார்க்கம்.
கிறு-நிகழ்காலவிடை, நிலைச்சொல்.
கிறுகிறுத்தல் - அஞ்சுதல், தலைசுழற்றுதல், விரைவுக்குறிப்பு.
கிறுகிறுப்பு - செருக்கு, தலைசுழற்சி.
கிறுகிறெனல்-சுழலல்விரைவுக்குறிப்பு
கிறுக்கல் - எழுதல், கீறித்தள்ளல்.
கிறுக்கன் - எழுதல், கீறித்தள்ளல்.
கிறுக்கு-அகம்பிரமம், எழுத்து, பைத்தியம்.
கிறுக்குதல் - கிறுக்கல்.
கிறுக்குப்பிடித்தல்-பைத்தியமாதல்

கிறுங்கல்
கிறுங்குதல் } அசைதல்.
கிறுசன் - குங்குமப்பூ, மஞ்சள்.
கிறுது - கிருது, சுறும்பு.
கிறுதுவேதன் - பீர்க்கு.
கிறுத்துவம் - அகில், மருத்துவம்.
கிர்பு - அடிமைத்தனம், கட்டுப்பாடு, செய்கை.
கிர்புறல்
கிர்புறுதல் } எழுதுதல், எழும்புதல், கட்டுப்படுதல்.
கிற்றல் - கட்டுப்படுத்தல், செய்தல்.
கினி - பீடை.
கினிபிடித்தல் - நோய்பிடித்தல்.
கினை - கவசம், வினா.
கின்று-நிகழ்காலவிடை, நிலைச்சொல்.
கின்னம்-கிளி,உபத்திரவம், கீழ்மை, துக்கம்.
கின்னரச்சுரை - ஒருசுரை.
கின்னரம்-ஆந்தை, கின்னரப்பட்சி,நீர்வாழ்பறவை, வீணை, கிளி.
கின்னரர்-தேவருள் ஒரு பாலார். இவர் அசுவமுகமும் நரசரீரமுமுடையவராவர்.
கின்னரர்பிரான் - குபேரன்.
கின்னரன் - புலகன் புத்திரன்.
கின்னரி - ஆந்தை, வீணை.
கின்னரேசன் - குபேரன்.
கின்னரேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கின்னி - மழைக்கிளி.
கின்னிக்கோழி - ஒருகோழி.

## கீ

கீ - ஓரெழுத்து, கிளிக்குரல்.
கீகசம்-எலும்பு, மிகச்சிறிய புழுச்சாதி.
கீக்கீயெனல்-கிளிக்குரல்காட்டல், பறவை பார்ப்பின் குரல்.
கீசகசித்து - வீமன்.
கீசகம் - குரங்கு, தலைச்சீரா, மூங்கில்.
கீசகர் - விராடன்பாரியாகிய சுதேஷணையோடுபிறந்த நூற்றுவர். இவருள் மூத்த கீசகன் பாண்டவர் விராடதேயத்திருந்த காலத்தில் துரோபதையை யிழுக்க அதுகண்ட வீமன் கீசகர் நூற்றுவரையுங்கொன்ருன்.
கீசகன் - ஓரரசன்.
கீசகாராதி
கீசகாரி } வீமன்.
கீசபர்ணம்
கீசபர்ணி } நாயுருவி.
கீசம் - குரங்கு, குருவி, திசையெட்டுக்குட்பட்ட பிரதேசம், நிருவாணம்.
கீசம்பறை - ஒழுங்கீனம்.
கீசரன் - சரக்கொன்றை.
கீசவள்ளி - கீசபர்ணம்.
கீசறை
கீசறைநாடகம் } கிரியைகேடு.
கீசன் - சூரியன், போர்வல்லோன்.
கீசா - பொய்.
கீச்சான் - ஒப்புள், ஒருமீன், ஒருவிளையாட்டு, குழந்தை.
கீச்சி - சிறுமணிக்கோவை, பாசிமணி.
கீச்சிடல்
கீச்சிடுதல் } கத்துதல்.
கீச்சு - கீச்சமுகை, புள்ளொலி.
கீச்சுக்கிட்டம் - இருப்புக்கறள்.
கீச்சுகீச்சுத்தம்பலம்-ஒரு விளையாட்டு.
கீச்சுக்கீச்செனல் - ஒலிக்குறிப்பு.
கீச்சுக்குரல் - குருவிக் குரல்போன்ற குரல், மெல்லியகுரல்.
கீச்சுத்தாரா - ஒருவகைத்தாரா.
கீடக்கிநம் - கெந்தகம்.
கீடதந்தம்-விஷப்பற்களையுடைய ஒருவகைச்செந்து. அது கடித்தால்மலைக்கோங்குப் பூவைப்போல் மஞ்சள் நிறமாகவும் நானாவித நிறங்களாகவும் கடித்தவிடந் தோற்றும்.
கீடப்பகை - வாய்விளங்கம்.
கீடமணி - மின்மினிப்பூச்சி.
கீடயாரி - சிறுபுள்ளடிப்பூடு.
கீடம் - கோற்புழு, புழு, வண்டு.
கீடராஜம் - குலாலகீடகம்.
கீணம்
க்ஷீணம் } குறைபாடு, கேடு,சிதைவு.
கீணர்
க்ஷீணர் } அற்பர், எளியர், கீழோர்.
கீண்டல்
கீண்டுதல் } கிண்டுதல், கிருதல், கிளைத்தல்.
கீதசாத்திரம் - சங்கீதசாத்திரம்.
கீதஞானம் - நால்வகைக் கேள்வியில் ஒன்று.

கீதம் - இசை,இசைப்பாட்டு, மூங்கில், மூன்றாம் வேதம், வண்டு.
கீதகம் - ஊமத்தை.
கீதவாத்தியம் - இசைக்கருவி.
கீதவேதம் - சாமவேதம்.
கீதாங்கம்-வாச்சியக்கூறினு ளொன்று. அது கீதத்திற்கு வாசிப்பது.
கீதாரி - இடையன்.
கீதி-கருங்காலி,கீதம்,கீதம்பாடுவோன்.
கீதி-பாட்டு, பூருவசரித்திர மெடுத்துக் காட்டல். இஃது அவதூதகீதை, ரிபுகீதை, உத்திரகீதை, சிவகீதை, பகவற்கீதை. பிரமகீதை யென்னப் பலவகைப்படும்.
கீய்க்கணக்கு - வடமொழியின் கூட்டெழுத்துக்கள்.
கீரணம் - விழுங்கல்.
கீரந்தையார் - கடைச்சங்கப் புலவருள் ஒருவர்.
கீரம் - கருங்கிளி, கிளி, பால்.
கீரவாணி - இருபத்தேழாவது மேளகர்த்தா.
கீரன்-மதுரைச்சங்கப் புலவரி லொருவனான நக்கீரன்.
கீரி - கள்ளி, நகுலம், கீரிப்பிள்ளை.
கீரிப்பல் - சிறுகூர்ப்பல்.
கீரிப்பாம்பு - ஒருபாம்பு, வயிற்றிலுள்ள ஒருவகைப்புழு.
கீரிப்பிள்ளை - கீரி.
கீரிப்பூச்சி - கீரிப்பாம்பு.
கீரிப்பூடு - ஒருபூடு.
கீரிமரம் - ஒருமரம்.
கீரியுள்ளல் - ஒருள்ளல்.
கீரை - இலைக்கறிப்பொது.
கீரைக்காய் - வெள்ளரிக்காய்.
கீரைக்குத்தண்ணீரிறைத்தல் - குழந்தைகளின் கால்கைகளைச்சேர்த்துப் பிடித்துத் தொங்கவிட்டு ஊசலாட்டும் ஒரு விளையாட்டு.
கீரைநார்ப்பட்டு - ஒரு பட்டுச்சீலை.
கீரைப்பாம்பு, கீரைப்பூச்சி } வயிற்றிலுண்டாகிற பூச்சி.
கீரோதகம் - கிரகீரம்.
கீரோமாரோ - ஒலிக்குறிப்பு.
கீர் - ஒலிக்குறிப்பு-வார்த்தை, சொல்.
கீர்க்கிரெனல் - உபயவொலிக்குறிப்பு.
கீர்த்தனம் - தோத்திரம், துதி, புகழ்.
கீர்த்தனேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கீர்த்தனை - தோத்திரம், துதி, புகழ்.
கீர்த்தித்தல் - புகழ்தல்.
கீர்த்திபூஷணன்-இடைச்சங்ககாலத்திறுதிக்கண் அரசுசெய்த பாண்டியன் இவன் அதுல கீர்த்தி பாண்டியனுடைய மகன் இப்பாண்டியன் காலத்திலேயே ஒரு பிரளயம் வந்து அநேகநாடுகளை உருத்தெரியாமலழித்து அந்நாடுகளிலுள்ள சராசரங்களையெல்லாம் கடல்வாய்ப்படுத்தி நிர்மூலம்பண்ணுவதாயிற்று. இதுவே துவாபர கலியுகசந்தியிலுண்டாகிய பிரளயம். இப்பிரளயத்திலேயே குமரியாற்றையும் அதனைச்சார்ந்த நாற்பத்தொன்பது நாடுகளையும் கடல் கரைகடந்து பொங்கியெழுந்து தன் வயிற்றிலடக்கி யழித்தது. இவ்வுண்மை திருவிளையாடற் செய்யுட்களாலும், சிலப்பதிகாரவுரையானும், நச்சினார்க்கினியர் உரையானுங் காணப்படும்.
கீர்த்திப்பிரதாபம் - கீர்த்தி பிரபலியம், மிகுகீர்த்தி.
கீர்த்திமதி-அனுகன்பாரி, சகுனிமகள்.
கீர்த்திமாலினி-சந்திராங்கதன், மகள்.
கீர்த்திமான் - புகழுடையோன்.
கீர்த்திரதன் - பிரதிரதகன்மகன்.
கீர்த்திராதன் - மகாப்பிரகன் மகன்.
கீர்மகேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று. [ஒருப்குதி.
கீர்வாணம் - சமஸ்கிருத பாஷையின்
கீலக-சொற்பம், கீல், ஒட்டுதல், சாவி, நாற்பத்தெட்டாவது வருடம்.
கீலகம் - அணைப்பு, ஆணி, தந்திரம், பொருத்து.
கீலகவெட்டை கீலகவருஷத்துப் பஞ்சம், மிகுகாங்கை.
கீலகன் - கொழு முதலியவைகளினாற் பந்திக்கப்பட்டவன்.
கீலகை - கீழ்.
கீலம்-ஆணி, கிழிவு, கீல், கீற்று, சுவாலை, பிசின், பொல்லம், வெட்டு.
கீவல் - கீலுதல்.
கீலாபலன் - அரக்கன்.
கீலாலம் - உதிரம், காடி, நீர்.

கீலுதல் - கிண்டுதல், கிழித்தல், பிளத்தல்.
கீல்-தவின்கில், கிசில், கிலென்னேவல், சந்து, நுண்மை, பிணையல், பொருத்து.
கிழடி-மதுரைக்குக்கிழக்கே சுமார் எழுநாழிகைவழித் தூரத்துள்ள ஒரு சிவத்தலம். இத்தலத்திலுள்ள சிவலிங்கத்தை அர்ச்சுனலிங்க மென்றும் ஆதியில் அர்ச்சுனனுற் பூசிக்கப்பட்டகாரணத்தாலிப்பெயர் வந்ததென [வுங்கூறுவர்.
கீழண்டை-கிழக்குப்புறம்.
கீழறுத்தல்-சத்துருவுக்கஞ்சிக் கீழறையாற்போதல், சுரங்கமறுத்தல்.
கீழறை - கீழ்வீடு, முரஞ்சு.
கீழாதல் - தளர்தல், தாழ்வடைதல்.
கீழாநெல்லி - கீழ்க்காய்நெல்லி.
கீழாறு - கீழுற்று [ல்.
கீழாறெடுத்தல் - தோன்றுமற் சிதைத
கீழுடை-கௌபீனத்தோ டிசைந்துள்ள ஒருடை.
கீழுதடு - கீழ்தரம்.
கீழுலகம் } நரகம், பாதலம்.
கீழுலகு }
கீழேபோதல்-வளர்ச்சி படிப்பு முதலியன வரவரக்குறைதல்.
கீழைத்திசை - கீழ்த்திசை.
கீழைப்புறம் - கிழக்குப்புறம்.
கீழோங்கி - கமையானிலோர்வகை.
கீழோர் - கீழ்மக்கள், சண்டாளர்.
கீழ்-ஆதி, இடம், ஈனம், ஏழனுருபு, கடிவாளம், கீழென்னேவல், கிழக்கு, கீழிடம், கீழோர், கோவணத்தோடு சேர்த்து நெய்தவரைநாண், பள்ளம், பூமி, மறதி.
கீழ்காய்நெல்லி - ஒருபூடு.
கீழ்காற்று - கொண்டல்.
கீழ்கை-ஈனக்குலத்தார்பகுதி, கிழக்கு, புறம், பதிவு.
கீழ்கணக்கு - கீழ்வாயெண்.
கீழ்கண்-கண்ணின் கீழ்ப்பக்கம், கீழ்ப்பார்வை.
கீழ்க்கதி-கீழ்நோக்கினசெலவு, தாழ்ந்தபதம், நரகம்.
கீழ்க்கதுவாயளபெடை -கடையயலொழிந்த மற்றெல்லாவற்றின் கண்ணுமளபெடைவரத்தொடுப்பது.
கீழ்க்கதுவாயியைபு-முதலைய லொழிந்த மற்றெல்லாச் சீர்க்கண்ணியைபு வரத்தொடுப்பது.
கீழ்கதுவாயெதுகை-கடையயற் சீரொழிந்த மற்றெல்லாச் சீர்க்கண்ணுமெதுகைவரத்தொடுப்பது.
கீழ்க்கதுவாய்முரண்-கடையயற் சீரொழிந்த மற்றெல்லாச் சீர்க்கண்ணுமெதுகைவரத்தொடுப்பது.
கீழ்க்கதுவாய்மோனை-கடையயற் சீர்க்கணன்றி யொழிந்த சீர்க்கண்மோனைவரத் தொடுப்பது.
கீழ்க்குரல் - கீழோசை, மந்தவொலி.
கீழ்சாதி } ஈனசாதி, தாழ்ந்தசாதி.
கீழ்ச்சாதி }
கீழ்தரம் - இழிந்ததரம்.
கீழ்தல்-அழித்தல் கிழித்தல், பிளத்தல்.
கீழ்த்திசை - கிழக்கு.
கீழ்த்திசைப்பாலன் - இந்திரன்.
கீழ்நோக்கம் - கீழ்ப்பார்வை.
கீழ்நோக்கி - நேர்வாளம்.
கீழ்நோக்கு - கீழ்நோக்கம்.
கீழ்நோக்குதல் - கீழேபார்த்தல், கீழேபோதல்.
கீழ்படிவு - அமைவு, கீழ்ப்பணிவு.
கீழ்பால் - கிழக்கு.
கீழ்பால்விதேகம் - நவகண்டத்தொன் [று.
கீழ்பூமி - பாதலம்.
கீழ்படிதல் - அடங்கிநடத்தல்.
கீழ்ப்படுதல் அடங்குதல், இழிவுபடல்.
கீழ்ப்படுத்துதல் - அடக்குதல், ஈனப்படுத்தல், தாழ்வுபடுத்தல்.
கீழ்ப்பயிர் - பெரும்பயிருக்கு ணிற்குஞ்சிறுபயிர்.
கீழ்ப்பாடு - அடக்கம், கீழ்ப்பக்கம்.
கீழ்ப்பறை-கீழறை, கீழிருக்கும்பாறை.
கீழ்ப்பிள்ளை-முதுமரங்களின் கீழ்நாட்டுந்தெங்கு முதலியவற்றின் கன்று.
கீழ்ப்பிறை - மெய்யெழுத்துக்களோடு கூடியவாகாரவுயிர் நெட்டெழுத்தைக்காட்ட அம்மெய்யெழுத்தின் பின்னிடப்படுங்குறி.
கீழ்ப்புறம் - கீழ்ப்பக்கம்.
கீழ்ப்போக்கிப்பேசுதல்-தூஷணம்பேசு [தல்.
கீழ்மகன் - ஈனன், சனி.
கீழ்மக்கள் - சண்டாளர்.
கீழ்மடி - அடிமடி.

கீழ்மடை - கடைமடை.
கீழ்மாரி - அடிவானத்திற் கருகிக்கொண்டு பெய்யுமழை.
கீழ்முகம் - கீழ்நோக்குமுகம்.
கீழ்மேலாதல் - தலைகீழாதல், தலைதடுமாற்றமாதல்.
கீழ்மை - ஈனம், தாழ்மை.
கீழ்வயிறு - அடிவயிறு.
கீழ்வாடை - வாடைக்கொண்டல்.
கீழ்வாய் - சிற்றெண், தாடி.
கீழ்வாரி - கீழ்மாரி.
கீழ்விதேகம் - கீழ்பால்விதேகம்.
கீழ்விலங்கு - மெய்யெழுத்துக்களோடு கூடிய வுகரவுயிர்க் குற்றெழுத்தைக் காட்ட அம்மெய்யெழுத்தின் கீழிடப்படுங்குறி.
கீழ்விழுதல்-காரியத்துக்காகத் தாழ்தல்.
கீழ்வீடு - கீழ்கட்டுமனை.
கீளல் - கிழித்தல்.
கீளி - ஒரு சிறுமீன்.
கீளுதல் - கிண்டல், கிழித்தல்.
கீறல் - எழுதல், கிழித்தல், கீறுதல், பொன்முதலிய வுரைத்தல்.
கீறு - அடையாளம் எழுத்து, கீற்று தென்னோலை அல்லது பனங்கிழங்கின் பாதிபிளவு, வரி.
கீறுதல் - கிறுக்குதல், குறிப்புக்காட்டுதல், தேய்த்தல், பிளக்குதல்.
கீற்றடித்தல் - கயிறடித்தல்.
கீற்றன் - ஒருபுடவை.
கீற்று-அரதனக்குற்றம், கிடுகு, கீறல், பிளவு, வரி.
கீற்றுமதி - மூன்றாம்பிறைச்சந்திரன்.
கீனம் - அபாவம், இழிவு, குறைபாடு.
கீனர் - அற்பர்.
கீனன்-குலமில்லான்,குறைவானவன்.
கீன்றல் - கிழித்தல்.

---

# கு



கு - இருதிணைப்பா லொருமைத்தன்மைவினைவிகுதி (உ-ம்) உண்கு,இன்மைக்கும் எதிர்மறைக்கும் வருமோருபசர்க்கம், ஓரெழுத்து, குற்றம், சாரியை (உ-ம்) வருகுதி, சிறுமை, தடை, தொனி, நான்காமுருபு, நிந்தை, பண்புப்பெயர் விகுதி (உ-ம்) நன்கு, பாவம்பிரவினைவிகுதி (உ-ம்) போக்குபூமி.
குகம்-அங்கிகரித்தல், அணிதல்,கதியுள்ளகுதிரை குகை, குருத்துவம், நுட்பம், மலைக்குகை, மறைவு.
குகரம்-ஓரெழுத்து, குடவறை, மலைக்குகை.
குகலிதம் - ஒலி, குயில், குரல்.
குகவிமானம்-நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருக்கச்சியிலுள்ள விமாநம்.
குகனன் - எலி, பாம்பு.
குகன்-இராமர்வனவாசம்செய்யப்போகும்பொழுது சிநேகம்பூண்ட ஒரு செம்படவர் தலைவன். குமரன், குருசிருங்கிபேரபுரத்துக்குப் பிரபுவாகிய ஒரு கிராதராஜன்.
குகியகர் - இரகசியத்தை வெளியிடாதவர்கள், குபேரனுடைய நவநிதிகளைக் காப்பவர்கள்.
குகிலம் - பருவதம்.
குகு-அமாவாசை, குய்யம் பற்றியிருக்கும் நரம்பு, கூகையொலி.
குகுதன் - தசநாடியினொன்று.
குகுதேவி - பிரமபாரியரு ளொருவர்.
குகுரம் - ஒருதேசம்.
குகுரன் - அந்தகன்மகன், நாய்.
குகுலா - கடுரோகிணி, தேனீ.
குகூகண்டம், குகூரவம் - குயில்.
குகூபாலன் - ஆதிகூர்மன்.
குகூமுகம் - குயில்.
குகூனவர்த்தமம் - ஒருவகை நோய். அது சிசுக்களுக்குக் கபத்தினாலும், பித்தத்தினாலு மிரத்தத்தினாலும் பிறந்து கண்களில் வீக்கம், சிவப்பு, குத்து, நீர்க்கம்மலோடு பார்ப்பதற்குப் பிரயாசை, காது, கண், மூக்காகிய இவைகளைத் தேய்த்துக்கொள்ளுகை என்னு முக்குணங்களை யுண்டாக்குவது.
குகை - அளை, சமாதியறை, பஞ்சலோகங்களை யுருக்கும்பாத்திரம், மலைமுழை, முனிவர் வாசம்,

குரக்கன் - கேழ்வரகு.
குரக்கு - குரங்கு.
குரங்கதம் - மான்.
குரங்கநாபி - கஸ்தூரி.
குரங்கம் - எட்டிமரம், மான், விலங்கின் பொது.
குரங்கல் தாழ்தல்.
குரங்கன்சுறா - ஒருமீன்.
குரங்கி - சந்திரன்.
குரங்கு - குரங்கென்னேவல், கொளுக்கி, தொடை, மந்தி, முசுமுசுக்கை, விலங்கின் பொது.
குரங்குகடியன் - பழுதுற்ற தேங்காய், முகிழடி சுருங்கின காய்.
குரங்குச்சேட்டை - குணங்கெட்ட செய்கை.
குரங்குதல் - இணங்குதல், குரங்கல், வணங்குதல், வளைதல்.
குரங்குப்பிடி - மர்க்கடமுட்டி, விடாது பிடித்தல்.
குரங்குமுடி - ஒருவகை முடி.
குரங்குவலி - ஒரு நோய்.
குரங்குவாற்பூட்டு - கதவின் பூட்டுகளில் ஒன்று.
குரங்குளை - சுருண்ட பிடர்மயிர்.
குரச்சை - குதிரைக்குளம்பு.
குரஞ்சி - ஒரு பண்.
குரடன் - சக்கிலியன்.
குரணசன் - பாழி மூக்கன்.
குரணம் - முயற்சி.
குரண்டகம் - பச்சைப்பூவுளமருதோன்றிமரம், பொன்மைகலந்த சிவப்பு.
குரண்டநாசி } பருத்திச்செடி.
குரண்டநாசிகி }
குரண்டம் - கொக்கு.
குரத்தம் - ஆரவாரம். [வி.
குரத்தி - ஐயை, குருவின் மனைவி, தலை
குரப்பம் - குதிரைமயிர் கோதுஞ்சீப்பு.
குரமடம் - பெருங்காயம்.
குரம் - ஒலி, குதிரைக்குளம்பு, தருப்பை, பசு, பாகல், விலங்கின்குளம்பு.
குரம்பு - செய்கரை, வரம்பு.
குரம்பை - உடல், சிறுகுடில், பறவைக்கூடு, முட்டை.
குராம் - அழுமன்றில்.
குரரி - பெண்ணன்றில்.
குரலம் - நெற்றியிலசையுஞ் சுரிமயிர்.
குரலீனம் - கழுதை.
குரலெடுத்தல் - பெருங்குரலெடுத்தல்.
குரல் - இரகு, இன்னிசை, எழிசையினொன்று, ஒலி, ஓசை, கதிர், தினை, பாதிரிமரம், பெண்மயிர், மயிர்ச்சுருள் மிடறு, மிடற்றுற்பிறக்குமிசை, யாழ்நரம்பினோசை, யாழ்நரம்பு, பூங்கொத்து.
குரல்வளை - மிடறு.
குரவகம் - செம்பூவுள்ள மருதோன்றிமரம், வாடாக்குறிஞ்சி.
குரவதேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
குரவம் - ஒருமரம், கோட்டம், நறுமணம், பேரீந்து.
குரவாம் - குறிஞ்சா.
குரவர் - அரசர், உவாத்தி, குரு, தந்தை, மூத்தோர்.
குரவளை - குரல்வளை.
குரவன் - அரசன், உவாத்தி குரு தந்தை, பிரமன், மந்திரி, முற்பிதா, மூத்தோன்.
குரவு - குராமரம், நறுமணம்.
குரவுநிறமணி - கோவரங்கப்பதுமராகம்.
குரமேவசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
குரவை - ஒலி, ஒருமீன், கடல், கூத்து, கைகோத்தாடல், பெருஞ்சத்தம், மகளிர் சந்தோஷ ஒலி.
குரவைக்கூத்து - ஒருவகைக் கூத்து அது எழுவரேனுமொன்பதின்மரேனுங் கைகோத்தாடுவது.
குரவையிடுதல் - கூப்பிடுதல், சத்தஞ்செய்தல், மங்கல ஒலிசெய்தல்.
குரற்காட்டுதல் - அழைத்தல், சத்தங்காட்டல்.
குரா - குரவுமரம்.
குராசானி - ஒருவகைப்பூடு.
குரால் - கபிலநிறம், கோட்டான், பசு.
குரிகிற்றுளி - ஒரு கிழங்கு.
குரிசில் - ஆண்மகன், இராசா, பெருமையிற் சிறந்தோன்.
குரீஇ - புள்.
குரீரம் - மைதுநம்.
குரு - அங்கீகிரான் புதல்வரிலொருவன், ஆசான், இருநாக்கிரை, இரும்பு, செம்பு, ஈயமுதலியவுலோகங்களைப் பொன் வெள்ளியாகப் போதிக்குந்

சிந்தூரம், உருசிரவன், ஊவாத்தி, ஓரசன், காத்திரம், காலதசப்பிரமாணத்தொன்று அஃது இலகு இரண்டு கொண்டது சுத்தசலம், சோறு, அருசி, துரோணன், தேசவமம்பத்தாறிஞென்று நிமிடமறுபத்து நான்கு கொண்டது நிறம், பாரம், பிதா, பிரகாசம், பிருகஸ்பதி, பெருமை, மேன்மை, வசூரி, வருத்தம், வியாழம், வேர்க்குரு.

குருகடாட்சம் - குருவின்கிருபை.

குருகு - இடைச்சங்கநூல்களுளொன்று இளமை, உலைமூக்கு, குருக்கத்தி, கொய்யடி, நாரை, கைவளை, கோழி, தேசமைம்பத்தாறிஞென்று, நாரை, நீர்ப்பறவை, பறவைப்பொது மூலநாள் யானையின் மூளை வட்டிக்குட் குருத்து, வெண்மை.

குருகுமணல் } வெண்மணல்.
குருகுமண் }

குருகுலம் - பலண்டுறுகப் பாஷாணம் பாரதர் குலம்.

குருகுலவேந்தர் - கௌரவர்.

குருகூர் } ஆழ்வார் திருநகரி.
குருகை }

குருகைவிமானம் - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய சிங்கவேழ்குன்றத்திலுள்ள விமானம்.

குருக்கண் - குருட்டுக்கண்டு, மூலை.

குருக்கத்தி - ஒருமரம்.

குருக்கன் - உருக்கன்.

குருக்கிரமம் - கன்னபாரம்பரியமாய் வழங்குவது.

குருக்கு - இக்கிரி பிரமதண்டுச்செடி, வடலிமுதலியனநெருங்கியதோப்பு.

குருக்குத்தி - ஒருமுட்செடி, நெல்லைச் சடைவிக்கும் வியாதி.

குருக்ஷேத்திரம் } சமந்தபஞ்சகமென்றும் ஸ்தானேசுவரமென்றும் வழங்கப் படுவதாகிய இடம். இது பிரமாவினது உத்தரவேதி, இது சமஸ்த தேவர்களுக்கும் ஆசிரயஸ்தான மெனப்படும். பாரத யுத்தம் நடந்த இடமிதுவே.
குருக்கேத்திரம் }

குருக்ஷேத்திரேசுவம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

குருக்கொடுத்தல் - ஏவிடல், கொடுமை செய்யத் தூண்டல், புத்தி சொல்லுதல்.

குருக்கொள்ளுதல் - புத்தி முதிர்ச்சிகாட்டல்.

குருசந்தானம் - குருவமிசம்.

குருசந்திரயோகம் - வியாழனுஞ் சந்திரனுங் கூடியிருக்கும் யோகம்.

குருஜாங்கலம் - அஸ்திநபுரிக்கு வாயுதிக்கிலும் பாஞ்சாலத்துக்குத் தெற்கிலும் உள்ள தேசம்.

குருசாரபலன் - வியாழகெதியின் பலம்.

குருஜித்து - அஞ்சகன் மகன்.

குருசூரியன் - வயிரமணி.

குருசேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

குருசேடகம் - குருப்பிரசாதம்.

குருசேவை - குருவுக்குப் பணிசெய்தல்.

குருச்சுனன் - சங்கைமான், தலைவன்.

குருச்சி - சினக்காரம்.

குருடன் - கண்ணிலான், சுக்கிரன், திருதராட்டிரன், அந்தகன்.

குருடி - குருட்டுப்பெண்.

குருடு - அறிவின்மை, உறுப்புக்குறையெட்டிஞென்று. அஃது பார்வையின்மை, விளக்கமற்றது.

குருட்டடி - எழுந்தமான.

குருட்டாட்டம் - அறியாமை, குருட்டுத்தனம்.

குருட்டீ - ஓரிலையான்.

குருட்டுக்கல் - நிறமற்றகல்.

குருட்டுச்சாயம் - நிறமற்றசாயம்.

குருட்டுத்தனம் - குருட்டாட்டம்.

குருட்டுப்பத்தி - அறியாமையானபத்தி.

குருட்டுமுத்து - ஒளியற்றமுத்து.

குருட்டுமை - எழுத்து விளங்காதமை.

குருட்டுவாக்கு - அறியாதவிதமாய் வந்த செய்கை.

குருட்டுவௌவால் - ஒருவவ்வால்.

குருட்டெழுத்து - அக்காசுத்த மில்லாத எழுத்து.

குருணி - ஒரு மரக்காலளவுள்ளது.

குருண்டேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

குருதக்கிணை - குருவுக்குக் கொடுகுந் தட்சிணை.

குருதற்பகன் } குருவின் பன்னியைக் கற்பழித்தோன்.
குருதற்பி }

குருதாமன் - திஷ்யந்தன்மகன்.
குருதி - இரத்தம், சிவப்பு, செவ்வாய்,
குருது - கிருதம், குதிர். [மூளை.
குருதேசம்-அஸ்தினபுரியைத் தனக்கு இராஜதானியாகவுடைய தேசம்.
குருத்தல்-குருப்பித்தல்,பெருங்கோபம்
குருத்து-இளமை, மரமுதலியவற்றின் குருத்து, விலங்கின் கொம்புக்குருத்து, வெண்மை.
குருத்துக்கக்குதல்-குருத்துவருதல், பயிரின்குருத்துத் தெரித்தல். [று.
குருத்துரோகம் - பஞ்சபாதகத்தொன்
குருத்துவம்-குருதத்துவம் மகத்துவம்.
குருத்துவிடுதல் } குருத்து வைத்தல்.
குருத்துவீசுதல் }
குருத்தெறிதல் - குருத்துவீசுதல்.
குருத்தோலை-இளவோலை. [டநூல்.
குருநாகு-ஒரு நாடிவியாதி, ஒருசோதி.
குருநாதன்-குமரன், துருசி, பரமகுரு.
குருநாள் - பூசநாள்.
குருநிந்தை - பஞ்சபாதகத்தொன்று.
குருநிலம் - குருக்கேத்திரம்.
குருநோய் - வைசூரி.
குருந்தக்கல் - வச்சிரக்கல்.
குருந்து - காட்டுநாரத்தை, காட்டெலுமிச்சை, குருத்து, குருந்தக்கல், குழந்தை, வச்சிரக்கல்.
குருபதம்-சிரசிலோராதாரம் மோட்சம்.
குருபத்தி - குருவின்மேல் விசுவாசம்.
குருபத்திரம்-அத்தநாகம், புளியமரம்.
குருபத்திரேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
குருபத்தினி - குருவின்மனைவி.
குருபரன் - குமரன், பரமகுரு.
குருபன்னி - குருபத்தினி.
குருபாரம்பை - குருவுகவழி.
குருபாலப்பிரபோதிகை - ஒருநூல்.
குருபித்தம்-பலமிடைப்பொன்.
குருபீடத்தாள் - குருவின்மனைவி.
குருபுகர்சந்திரயோகம்-வியாழன் சுக்கிரன் சந்திரன் மூன்றுமோரிராசியில்
குருபுடம்-வியாழபுடம். [கிற்பது.
குருபுத்திரன்-குருவின்மகன், சீஷன்.
குருபூசை-இறந்தகுருவைக் குறித்துச் செய்யும் அன்னதானம், குருமாருக்குப் போசனங்கொடுத்தல், குருவணக்கம்.

குருப்பட்டம் - குருவபிஷேகம்.
குருப்பித்தல் - பருக்கொள்ளுதல், முளைத்தல்.
குருப்பிரசாதம் - குருவினால் வரப்பட்டது, குருவுண்ட சேடம்.
குருப்பிரமோதம் - குருவினாற் பெற்ற சந்தோஷம்.
குருப்பு - பரு.
குருப்பூச்சி - குருவண்டு.
குருமன் } குழந்தை, சிறுவுரு.
குருமான் }
குருமித்தல் - ஒலித்தல், பேசலாலெழுமொலி.
குருமுகம் - குருமுகதா.
குருமுடித்தல் - உலோகங்களை நீற்றத் தக்க மருந்தைப் புடமிடுதல்.
குருமுறை - கோடாசுளி, சவுக்காரம்.
குருமுன் } குருமுகதா.
குருமுன்னிலை }
குருமூர்த்தம்-தெய்வம்குருவாகவருதல்
குருமூர்த்தி - பரமகுரு.
குருமூலம் - குருவின் வாக்குமூலம்.
குருமை - பெருமை.
குரும்பட்டி - குரும்பை.
குரும்பம் - வலை.
குரும்பி - புற்றுஞ்சோறு.
குரும்பை-காதுக்குரும்பை, பனை, தெங்கினிளங்காய், புற்றுஞ்சோறு.
குருரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
குருவகம் - வெண்சிவப்பு.
குருவங்கனை - குருப்பன்னி.
குருவசனம் - குருமொழி.
குருவசன் - இரண்டாம் மநுமகன்.
குருவண்டு-துவரைச்செடியி லிருக்கிற வண்டு.
குருவடம் - நவகண்டத்தொன்று.
குருவாக்கு - குருவசனம்.
குருவாரம் - வியாழக்கிழமை.
குருவால் - இத்திமரம்.
குருவி-குன்றிமணி, சிறுபறவை, மூலநாள்.
குருவிக்கார் - ஒருவிதநெல்.
குருவிக்குடல் - சிற்றிரப்பை.
குருவிக்கூடு - குருவிவைக்குங்கூடு.
குருவிச்சி } புல்லுருவி.
குருவிச்சை }

குருவிஞ்சி - ஒருபூண்டு.
குருவிதம் - பெருமுத்தக்காசு.
குருவித்தம் - பலமிடைப்பொன்.
குருவித்தலைப்பாகம் - ஒருவகைச் சிறு காய்ப்பாகல்.
குருவித்தலைப்பாக்கு - ஒருவகைச் சிறு பாக்கு.
குருவிந்தம்-குன்றிக்கொடி, கோரைக் கிழங்கு, சாதிலிங்கம், செம்மணி, மாணிக்கத்தின் இரண்டாவது சாதி, முத்தக்காசு, வாற்கோதும்பை.
குருவிமீன் - ஒருமீன்.
குருவிவாலான் - ஒருநெல்.
குருவிக்காதி - பச்சைக்கருப்பூரம்.
குருவுபதேசம் - ஓமம், குருப்பண்ணுமுபதேசம்.
குருவென்றசாரம் - காசிசாரம்.
குருவேர் - ஒரு வாசனைச்செடி.
குருளை-ஆமை இளமைநரி நாய் பன்றி ஒருவாசனைப் புலி மான் மூசு முயல் யாளி இவற்றின் குட்டி.
குருள்-பெண்மயிர், முன்கொண்டை.
குரூபம் - அவலட்சணம்.
குரூபி - அவலட்சணன், உருவிலி.
குரூபின் - அவலட்சணம்.
குரூப்பியம் - ஆத்தநாகம்.
குரூரம் - கொடுமை.
குரை - அசைச்சொல், ஒலி, குதிரை, குளம்பு.
குரைத்தல்-எழுத்திலாவோசை, ஒலித்தல், குலைத்தல்.
குரைமுகன் - நாய்.
குரோகம் - கூப்பிடுதூரம்.
குரோசானியோமம்-குராசாணி ஓமம்.
குரோட்டம் - நரி, பன்றி.
குரோட்டன் - ஆணரி.
குரோட்டு - பன்றி.
குரோஷ்டு - யதுபுத்திரருளொருவன். விருசினவந்தன் றந்தை.
குரோதம் - உட்பகை யாறினொன்று, சினம், விகாரமெட்டினொன்று.
குரோதவசை-தக்ஷப்பிரசாபதி புத்திரிகளுள் ஒருத்தி, கசியபன்பாரி.
குரோதன - ஐம்பத்தொன்பதாவது வருஷம்.
குரோதன் - வீரபத்திரக்கடவுள்.
குரோதி-குரோதியென்னேவல், கோபி, பகைவன், முப்பத்தெட்டாவது வருஷம்.
குரோதித்தல்-பகைத்தல், விரோதித்தல்.
குர்ப்பரம் - முழந்தாள்.
குர்வகேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
குர்வாணன் - சேவகன்.
குலகண்டன் - குலத்தை வடுப்படுத்துவோன்.
குலகம்-கருந்தும்பை, பேய்ப்புடல்.
குலகருமம் - குலாசாரம்.
குலகன்-சிற்பவித்தையிற்றேறியவன்.
குலகன்னி-நல்லாவில்லாள்பதிவிரதை.
குலகாயம்-குலவொழுக்கம், பேய்ப்புடல்.
குலகாலம் - விலக்கடம்பு.
குலகிரி - அட்டகுலபருவதம்.
குலகுரு - சாதிக்குரு.
குலகூடஸ்தன் - உயர்குலத்தான்.
குலக்காயம் - பிறவிச்சுபாவம்.
குலக்கு - குணுக்கு, குலை.
குலக்கொடி - குலஸ்திரீ.
குலக்கொழுந்து - குலத்துக்கு முதலாயிருக்கும் அரியபிள்ளை.
குலசம்பலம் - குள்ளம்.
குலசம்பவன்-உயர்குலத்திற் பிறந்தோன்.
குலசன் -ஒழுக்கம் குலம் வழுவாதபிதாமாதாவிடத்திற்பிறந்தோன்.
குலசுவேதகன் - சவரிலோத்திரம்.
குலசூடாமணி-சோமசூடாமணி பாண்டியனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன். குலசேகரபாண்டியன் - ஒரு பாண்டியன். இவன் கடம்பவனத்தை மதுரையாக்கினவன், அநுலோமபாண்டியருள் ஒருவன், இவன் சோழவமிசசேகர பாண்டியனெனவும் படுவன். இவன் கலியுக நாலாயிரத்து மூந்நூற்றெண்பதளவில் மதுரையிலரசுசெய்தவன்.
குலசேகராழ்வார் - திருடவிரதராஜனுக்குப் புத்திரராகப் பிறந்த விஷ்ணுபத்தர்.
குலச்சிரேட்டன் - குலத்திலுமொழுக்கத்திலுங் கல்வியிலுமதிகன்.
குலச்சிறைநாயனர் - மணமேற்குடியிலேபிறந்து நெடுமாறனென்னும் பாண்டியனுக்கு முதன் மந்திரியாகித்

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரைக்கொண்டு சமணர்களை நிலைகெட்டோடச் செய்வித்தவர்.
குலடம் - மஞ்சணீர்ப்புத்திரன்.
குலடாஸ்திரி - வியபிசாரி.
குலடாபதி - வசவிகணவன்.
குலழ - செம்பாஷாணம்.
குலடை - குலசாரந்தவறினவள்.
குலட்சயம் - குடியழிவு.
குலட்டு - குலை.
குலதருமம் - குலாசாரம்.
குலதாரகன் - புத்திரன்.
குலதிதி - நாலாமெட்டாம் பன்னிரண்டாந்தேதி.
குலதிலகன் - குலாதிபன்.
குலதெய்வம்-அவ்வக்குலத்தார் வழிபடுந்தெய்வம்.
குலத்தம் - கொள்.
குலத்திகை - காட்டுக்கொள்.
குலத்திரி, குலஸ்திரி - கற்புள்ளவள்.
குலத்துவசபாண்டியன் - பாண்டீசுவரனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன்.
குலத்தை - குலத்தை.
குலநாசகம் - ஒட்டகம்.
குலநிந்தை - குடிப்பழுது.
குலந்தெரித்தல் - குலப்பழி கூறல்.
குலபதி - குலாதிபன்.
குலபதிநாயனார்-கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்.
குலபத்தினி - கற்புடையாள்.
குலபருவதம் - குலமலை. அது மகேந்தரம், கந்தமாதனம், மலயம், சகியம், சுத்திமந்தம், விந்தியம், பாரிஜாதமென எழுவகைப்படும்.
குலபாலகம் - ஒரு தேன்தோடை.
குலபாலகன் - குலபுத்திரன்.
குலபாலகை - பதிவிரதை.
குலபாலிகை - கற்புடையாள்.
குலபூஷணபாண்டியன் - அனந்தகுண பாண்டியனைக்குப்பின் [illegible] [illegible] [illegible] ருவிளையாடல் மூன்றுங்கண்டவன்.
குலப்பகம் - நக்குவான், செம்புமணல்.
குலப்பகை - சாதித்தொடர்ச்சியான பகை.
குலபெள - கணுக்கால்.
குலமகள் - குலஸ்திரீ.
குலமகன் - நற்குடியிற்பிறந்தவன்.
குலமசாதி - நீலக்கல்.
குலமரியாதை - வமிசத்துக்கடுத்த சங்கை.
குலமலை - அட்டமலை.
குலமித்திரன் - குலானுசாரி.
குலமிலான்-குலவீனன், கடவுள்.
குலமுளோன்-நற்குலத்தோன்,மானுடன்.
குலம்-அரண்மனை, இரேவதி, இனம், கற்கண்டு, கூட்டம், சாதி, மனை, விலங்கின் கூட்டம்.
குலம்பா - பேய்ச்சுரை.
குலம்பெயர்தல் - சாதிமாறுதல்.
குலரி - குலை.
குலவரை - துத்தநாகம், மந்தாரக்கல், ஒருமலை.
குலவல் - குலாவுதல், அளவளாவல்.
குலவாரம் - அங்கார சுக்ரவாரங்கள்.
குலவித்தை - சாதிவித்தை.
குலவிருது - குலத்துக்குரிய சின்னம்.
குலவிருத்திபை - மருத்துவிச்சி.
குலவீனன் - கீழ்மகன்.
குலவுகாசம் - நாணல்.
குலவுதல்-அளவளாவுதல், உலாவுதல், கொண்டாடல், நட்புறல், பிரகாசித்தல், பொருந்தல், வளைதல்.
குலவுரி - சந்தனமரம், செஞ்சந்தனம்.
குலவை - குரவை, மாதர்கள், வாயினார் செய்யும் ஒருவித மங்கல ஒலி.
குலன் - கலைவல்லோன், குலம்.
குலா-ஆடம்பரம், குனாவென்னேவல், கொண்டாடல், பட்சம், வளைவு.
குலாகுலதிதி - ஆறுந்திதி.
குலாகுலவாரம் - புதவாரம்.
குலாங்கனை - உயர்குலத்தவள்.
குலாங்குலி - காவட்டம்புல்.
குலாசம் - குலமலை.
குலாசாரம் - குலநடை, சாதியாசாரம்.
குலாசாரியன் - குலக்குரு.
குலாதனி - கடுகுரோகிணி.
குலாதாரகன் - புத்திரன்.
குலாதிக்கம் - குறவிசேடம்.
குலாநினி - கடகரோகிணி.
குலாத்திரி - குலபர்வதம்.
குலாபிமானம்-சாதியபிமானம், குலச்சங்கை.
குலாபு - முட்செவ்வந்தி.

குலாயம் - பறவைக்கூடு, வலை.
குலாரி - ஒருவகைப்பண்டி.
குலாலம் - வரத்தொளை.
குலாலன் - குயவன்.
குலாலி - குயத்தி.
குலால் - செவ்வை.
குலாவல் - அளவளாவுதல், கொண்டாடல், சிநேகம்பாராட்டல், பொழுதுபோக்கல், வளைவு, வியத்தல்.
குலாவு - குலாவென்னேவல், கொண்டாட்டம், சந்தோஷம்.
குலாவுதல் - அளவளாவுதல், சஞ்சரித்தல், சந்தோஷித்தல், பிரகாசித்தல், வளைதல்.
குலி - மனைவி, யாக்கை.
குலிகம்-இலுப்பை, சாதிலிங்கம், சிவப்பு, பந்து.
குலிகன்-மூங்கில்வேலை செய்வோன்.
குலிகாக்கிரீடை - பந்தடித்தல்.
குலிங்கம் - ஊர்க்குருவி, ஒருதேசம், காக்கை, குதிரை, சாதிலிங்கம்.
குலிங்கர் - ஒருசாதியார்.
குலிசபாணி - கந்தன், தேவேந்திரன்.
குலிசம் - இடியேறு, இலுப்பை, கற்பரிபாஷாணம், வச்சிரசோடு, வச்சிராயுதம், வன்னிமரம்.
குலிசல்-நாகபாஷாணம், குலிசபாணி.
குலிசாசனன் - சாக்கியமுனி.
குலிஞன்
குலிஞ்சன் } குலமுள்ளோன்.
குலிந்தம்-தேயமைம்பத்தாறினொன்று.
குலிரம் - நண்டு.
குலிலி - வீராவேசவொலி.
குலிநசம் - நீர்.
குலீரம் - நண்டு.
குலீனன் - குலமுள்ளோன்.
குலுகுலுத்தல் - இரைதல், ஊருதல், சொறிதல்.
குலுகுலுப்பு - தினவு, நமைச்சல்.
குலுகுலெனல் - ஒலிக்குறிப்பு.
குலுக்கம் - அசைவு, ஒருபுள்.
குலுக்கல்-அசைத்தல், கெருவங்காட்டல்.
குலுக்கி-அழகுகாட்டுபவள்பிலுக்கி.
குலுக்கு - அசைப்பு, குலுக்கென்னேவல், பிலுக்கு.
குலுக்குதல்-அசைத்தல், கெருவங்காட்டுதல்.
குலுக்கெனல் - ஒலிக்குறிப்பு, குலுங்குதல்.
குலுக்கை - குதிர், கோரிக்கை.
குலுங்கல் - நடுங்கல்.
குலுங்குதல் - அசைதல், நடுங்கல்.
குலுசம்
குலுஞ்சம் } பூஞ்செண்டு.
குலுத்தம் - கணுக்கால், கொள்.
குலுமமூலம் - இஞ்சி.
குலுமம்-அணியை நடத்தல், ஒருசெடி, கோட்டை, படைத்தொகை, புற்கற்றை, யுத்தப்படை.
குலுமி - யுத்தகளம், பாசறை.
குலேசபாண்டியன்-அரிமர்த்தன பாண்டியனுக்குத் தந்தை. இவன் இடைக்காடர் காலத்தவன்.
குலேசன் - குலநாயகன்.
குலேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
குலேச்சுரன் - குலநாயகன்.
குலை-அம்பின்குறை, ஈரற்குலை, சூதை, குலையென்னேவல், கொத்து, செய்கரை, நடுக்கம், பூங்கொத்து, மரம் முதலியவற்றின்குலை விற்குதை, மணல்மேடு.
குலைகட்டுதல் - குலைபிடித்தல்.
குலைகுலைத்தல் - அச்சத்தானடுங்குதல்.
குலைக்கல் - ஆட்டுக்கல், கோரோசனம்.
குலைச்சல் - அழித்தல், ஒழுங்குத்தப்பு, குலைதல், குலைத்தல், வெறுத்துப் பேசுதல்.
குலைதல் - அச்சக்குறிப்பு, அவிழ்தல், அழிதல், ஒழுங்குகெடுதல், கலைதல், குன்றல், நடுங்கல், பதறுதல்.
குலைதள்ளுதல் - குலைபோடுதல்.
குலைத்தம் - அவிழ்த்தல், கலையச்செய்தல், குரைத்தல், பிரித்தல்.
குலைத்தல்-அழித்தல், ஒழுங்கறச்செய்தல்.
குலைநோய் - குலைமுட்டி, சூலைநோய்.
குலைபடுவன் - ஒருநோய்.
குலைப்பன் - சுக்குவான், சீதநோய்.
குலைப்பு - குலைத்தல், நடுக்கம்.
குலைமுட்டி - நெஞ்சிற்குத்து.
குலையல் - அச்சக்குறிப்பு, குலைதல்.
குலையெரிவு - ஒருநோய்.
குலைவயிறு - ஈரலடி.

குலைவிலை - குலைமதிப்புக்குத்தகை.
குலைவு - குலைதல்.
குலோத்துங்கபாண்டியன் - ஒருபாண்டியன். இவன் புதல்வர் அறுபதிணையிரவர். மாபாதகந்தீர்த்த திருவிளையாடல் கண்டவனுமிவனே.
குலோத்துங்கன் - குலசிரேஷ்டன், சோழன், மஹாராஜன்.
குலோமஸ்தானவித்திரதி - ஒருவகைநோய். அது தொண்டையைப்பேசவொட்டாமல் நெருக்கிப் பிடித்தலையுண்டாக்குவது.
குலோமம் . பக்கவிலாவின் சவ்வு.
குலோமி - வெள்ளறுகு.
குலோமிசை - வசம்பு.
குல்மம் - குன்மம், ஒருவியாதி.
குல்மலம் - பாவம்.
குல்மாஷம் - கழுநீர், கல்லாரம்.
குல்லகன் - அறபன், நீசன்.
குல்லயம் - என்பு, புட்டம், மாமிசம்.
குல்லயன் - மந்திரி.
குல்லரம் - முறம்.
குல்லரி - இலந்தை.
குல்லா - தலைக்கோலம், படைவிற்கட்டுங்குல்லா.
குல்லாய் - தலைவரை.
குல்லான் - சலாகைப்பாரை.
குல்லி - ஒருபூண்டு.
குல்லிபம் - ஆலோசனை. இனிமை.
குல்லியன் - ஆலோசனைக்காரன்.
குல்லியை - வாய்க்கால், கால்வாய்.
குல்லிரி - குலிலி.
குல்லூகபட்டர் - ஒரு சம்ஸ்கிருத நூலின் வியாக்கியான கர்த்தா.
குல்லூகபட்டியம் - ஒருநூல், மனுஸ்மிருதிக்குக் குல்லூகபட்டர் செய்த வியாக்கியானம்.
குல்லை - கஞ்சா, துளசி, வெட்சி.
குல்வலி - இலந்தை.
குவங்கம் - ஈயம்.
குவசம் - இழந்தது.
குவடு - சங்கபாஷாணம், சிறுமலை, திரட்சி, மரக்கொம்பு, மலை, மலையுச்சி.
குவட்டிலுந்தித்தோன் - சொன்னபேதி.
குவட்டிற்புளிதம் - சங்கபாஷாணம்.
குவட்டீனியம் - நீலாஞ்சனக்கல்.
குவட்டுக்கல் - ஆட்டுக்கல்.
குவட்டுக்கூர்மை - தொட்டிப் பாஷாணம். [தோன்.
குவட்டு நுண்முலைச்சி - குவட்டிலுந்தித்
குவட்டுமுலைச்சி - சொன்னபேதி.
குவம் - ஆம்பல்.
குவரிகுண்டல் - வாலுளுவை.
குவலம் - குலம், அவுபலபாஷாணம்.
குவலயநாயகி - திருக்குரங்காடு துறையிற் கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
குவலயப்பிரியன் - சந்திரன்.
குவலயம் - குவளை, நெய்தல், பூமி.
குவலயாசுவன் - இருதத்துவஜன் சத்துருஜித்துமகன் இவனுக்குக் காலமுனி ஜலத்தினுமலையினும் காட்டினும் நினைத்தபடி சஞ்சரிக்கின்ற ஒரு குதிரையைக் கொடுத்தார். அதுகாரணமாகக் குவலயாசுவன் எனப் பெயர்பெற்றான், பிருகதசுவன் மகன். இவன் துந்துஎன்னுமசுரனைக் கொன்றவனாகலின் துந்துமாரன் எனவும் பெயர்பெறுவன், வற்சன் மகன், அலர்க்கன் தந்தை.
குவலயாநந்தம் - ஓர் அலங்கார நூல்.
குவலயாபீடம் - கம்சன்யானை. இதுஎத்துணைப் பலவானையும் கொல்லும் வலிமையுடையது கம்சன் கிருஷ்ணனைக் கொல்லும்பொருட்டு அதனை ஏவ அது கிருஷ்ணனாற் கொன்றொழிக்கப்பட்டது.
குவலி - இலந்தைமரம்.
குவலிடம் - ஊர்.
குவளை - கஞ்சா, துளசி.
குவலையன் - துருசி.
குவவு - குவிதல், கூட்டம், திரட்சி. பருத்தது, பூமி, பெருமை.
குவளச்சி - புற்றும்பழம்.
குவளை - ஒரு நீர்ப்பூக்கொடி, ஒருவகைப் பாத்திரம், கடுக்கனில் வைக்குமிதழ், கண், கண்ணிற்கோளை, கண்மடல், கோளை, பாண்டங்களின் கழுத்து, பொக்கணி, மன்மதன் கணையில் ஒன்று.
குவளையச்சு - தட்டாரிம்பெருங்கருவி.
குவா - ஒருகிழங்கு.
குவாகம் - கமுகு.
குவாகுலம் - ஒட்டகம்.

குவாட்டி - ஒருமட்டி.
குவாதம் - கஷாயம்.
குவாதன் - பிறர்நோதைத்ததைக் குறிப்பவன்.
குவால் - குவிதல், கூட்டம், மேடு.
குவிதல் - ஒடுங்குதல், கூட்டம், சேருதல், திரளுதல், நெருங்குதல்.
குவித்தல் - ஒடுங்குவித்தல், ஒளித்தல், கூட்டுவித்தல், கூப்பல்.
குவிந்தன் - சேணியன்.
குவிப்பு - குவியல்செய்தல், கைகுவிப்பு; சேர்க்கை.
குவியல் - கும்பம்.
குவிரம் - காடு, அடவி.
குவில் - அறுத்தல், கைபிடியாரி, சந்தம்.
குவிவு - குப்பை, குவிதல்.
குவேணி - மீன்புட்டில்.
குவேராசலம் } கைலாயபர்வதம்.
குவேராத்திரி }
குவேலம் - ஆம்பல்.
குவை குப்பை, கூட்டம், திரட்சி, மேடு.
குவையெழுச்சி ஒருவகைக்கண்ணோய் அது விழியிலெழுந்தைப் போலசதையைப் பிறப்பிப்பது.
குழ - இளமை.
குழகம்-அழகு, சிறுவர்க்குரிய ஒருநூல்.
குழகன் - சிவன், முருகன்,
குழகு - குழகம்.
குழகுழத்தல் - லொளுலொளுத்தல்.
குழக்கன் - சிவன்.
குழங்கல் - ஒருமாலை.
குழந்தை - சிறுபிள்ளை.
குழந்தைநீர் - இளநீர்.
குழப்படி } கலகம், கலக்கம், கொந்தளிப்பு, தாறுமாறு.
குழப்பம் }
குழப்பல் - கலத்தல், குழப்பம்பண்ணல்.
குழப்பன் குழப்பக்காரன்.
குழப்பு - கலக்குகை, குழப்புகை.
குழப்புதல் - கலத்தல், குழப்பம்பண்ணுதல்.
குழமகன் - ஒருபிரபந்தம். அஃது கலிவெண்பாவான் மாதர்கடங் கையிற்கண்ட இளமைத் தன்மையுடைய குழமகனைப் புகழ்ந்து கூறுவது, பாலன்.
குழம்பல் - அடிதலைமாறுதல், கலங்கல், நீராளமானது.
குழம்பு - ஒருவிதக்கறி, கஞ்சி, குழம்பென்னேவல், குழைசேறு, சந்தனக்குழம்பு முதலியன, நீராளமானது.
குழம்புதல் - கலங்குதல், தத்தளித்தல், தலை தடுமாறல்.
குழம்புப்பால்-குழம்பாய்க் காச்சப்படும் பால்.
குழலப்பம் - ஒரு தின்பண்டம்.
குழலல் - குழற்சி.
குழலளகம் - குழற்சியையுடைய மயிர்.
குழலுதல் - குழற்சியாதல், சுருட்டிமுடித்தல்.
குழல் - புல்லாங்குழல், இசைப்பாட்டு, ஊதிடு குழல், ஐம்பாலினொன்று. அது சுருட்டிமுடித்தல், ஒரு மீன் கொண்டை, துளையுடைப்பொருள், பெண்மயிர், யோனி.
குழல்வாய் மொழியம்மை - திருக்குற்றாலத்திலே கோயில் கொண்டிருக்குந்தேவியார்.
குழவி - அம்மிக்குழவி, இளமை, ஒட்டகம் கடமை கட்டா பன்றி மான் முசு யாளி யானை இவைகளுமன்றி மரக்கோட்டில் வாழ்விலங்கின் பிள்ளைகளுமாம், குழந்தை, பாலசந்திரன், பெருமை, மரக்கன்று.
குழவிக்கட்டோன்றிய காமப்பகுதி - பாடாண்டிணைத்துறை நாற்பத்தேழுனுளொன்று. அது குழவிப்பருவத்தராகிய மைந்தரது நலத்தை விரும்பின காமப்பகுதி நிறைந்த மங்கையரது தன்மையைச் சொல்லுவது.
குழவு - இளமை.
குழற்கொத்து - மயிர்க்குழற்சி.
குழற்சி - குழன்றிருத்தல்.
குழற்பிட்டு - குழலிலவிக்கும் பிட்டு.
குழற்றிறப்பு - ஒருவகைத்திறவுகோல்.
குழாம் - கூட்டம், திறள்.
குழாம்பல் - குழைவு, நீராளமானது.
குழாய் - துளை, துளையுடைப்பொருள்.
குழி - ஒருகோல்நீளமு மொருகோலகலங்கொண்டதரை கிடங்கு, கிணறு, குழியென்னேவல், குளம், பள்ளம், வயிறு.
குழிகண் - ஆழ்ந்தகண், குழிந்தகண்.
குழிகை - குளிகை.
குழிக்கணக்கு - குழிமதிப்புக்கணக்கு.

குழிக்கிட்டி - ஒரு விளையாட்டு.
குழிங்கை - அகங்கை.
குழிசி - பானை, மிடா.
குழிசிகாரகன் } குசவன்.
குழிசிகாரன் }
குழிசீலை - கௌபீனம்.
குழிச்சட்டி - ஒரு பணிகாரச்சட்டி.
குழிதல் - குழியாதல்.
குழித்தல் - குழியாக்கல், நீராடல்.
குழித்தாமரை - ஆகாசத்தாமரை, கொட்டைப்பாசி.
குழிநரி - ஒருநரி.
குழிநாவல் - ஒருமரம்.
குழிபறிதல் - குடங்குவிழுதல்.
குழிப்பு-குறிசெய்கை, தாழ்வு, பிரபந்தவறுப்பினொன்று.
குழிப்புண்-ஒருவகை விரணநோய். அது விரணத்திற் குழிவிழுவது.
குழிமாந்தம் - ஒருவகை மாந்தநோய். அது உச்சியிற் குழிவிழச்செய்வது.
குழிமாறுதல் } குழியைப்பரப்பாக்கல்.
குழிமாற்று }
குழிமி - பாத்திரத்தின் மூக்கு, மதகு.
குழிமிட்டான் - நத்தைச்சூரி.
குழிமுயல் - ஒருமுயல். [வி.
குழியச்சு-தகட்டைக் குழியாக்குங்கருவி.
குழியம்-திரட்சி, திரண்டவட்டம், பாராவலயம், வலயம்.
குழியம்மி - மருந்தரைக்குங் குழியுள்ளவம்மி.
குழியானை - ஒருவிதச்செந்து.
குழிவு - குழித்தன்மை. [ன்.
குழிவெட்டி-சவக்கிடங்கு வெட்டுவோன்.
குழு- அடங்காமை, குழுவென்னேவல், கூட்டம், மகளிர்கூட்டம்.
குழுக்காலி-கட்டுக்ககப்படாத மாடு.
குழுப்பற்றுதல் } அடங்காமைத் திரிதல்.
குழுப்பாய்தல் }
குழுமல் - கூட்டம் கூடல்.
குழுமாடு - குழுக்காலி.
குழுமுதல் - கூடுதல்.
குழுமூரல் - ஒருமீன்.
குழும்பு - குழி, திரள்.
குழுவல் - கூடல், கூட்டம்.
குழுவன் - சொற்கேளாதவன்.
குழுவுதல் - கூடுதல்.
குழூஉ - கூட்டம்.

குழூவுக்குறி-அவ்வக்கூட்டத்தார் வழங்குஞ்சொல்.
குழூஉப்பெயர்- கூட்டத்தான்வரும்பெயர்
குழை- காடு, காது, குண்டலம், குழைசேறு, குழையென்னேவல், சேறு, தளிர், துளையுடைப்பொருள், நெய்தல்.
குழைகறி - நீராளமானகறி. [தல்.
குழைக்காடித்தல் - மந்திரோச்சாரணத்துடன் குழையடித்துப் பார்த்தல்.
குழைக்காடு - காட்டுத்தேசம்.
குழைக்காதவல்லி-நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருப்பேரையிற் கோயில்கொண்ட இலக்குமி.
குழைசாந்து } கலந்தசுண்ணாம்பு.
குழைசுண்ணம் }
குழைசேறு - குழைந்தசேறு.
குழைச்சி - புற்றாஞ்சோறு.
குழைச்சு- ஆயுதங்களின்கழுத்து, ஆயுத முதலியவற்றின் சுரை, கழுத்து, கைகால் முதலியவற்றின் பொருத்து, முடிச்சு.
குழைஞ்சான் - குழப்பம்.
குழைதல் - கலங்குதல், நெகிழ்ந்தொன்றுதல், வளைதல், வாடல்.
குழைத்தல் - இளகுவித்தல், ஒன்றாய்க் கலத்தல், தளிர்த்தல், வளைத்தல்.
குழைநாற்றம் - குழைமணம்.
குழைபிடித்தல் ஒன்றைவிலக்கத்துழைபிடித்தல்.
குழைப்பு - குழைத்தல்.
குழைமறைவு - ஒளிப்பு.
குழையடி } குழையடித்து மந்திரோச்சாரணத்துடன்பார்க்கும்பார்வை, போதிப்பு.
குழையடித்தல் }
குழையல் - இளகி யொன்றுபட்டிருப்பது.
குழைவு - அணைதல், இளக்கம், உருக்கம், கலப்ப, சேர்மானம், வளைவு, வாடல்.
குளகச்செய்யுள்-ஒருபிரபந்தம். அஃது பலபாட்டா யொருவினை கொண்டு முடிவது.
குளகம்-ஆழாக்கு, குற்றெழுத்துத்தொடர்ந்த செய்யுள், பலபாக் கூடிப் பொருண்முடியுஞ் செய்யுள், மரக்கால்.

குளகன் - குமரன்.
குளகு-இலைக்கறி, இலையுணும் விலங்குணவு.
குளகுளத்தல் } ஈரடுக் கொலிக்குறிப்பு.
குளகுளெனல் }
குளக்கட்டு - குளத்தருகு.
குளக்கரை - தடாகக்கரை.
குளக்கால் - குளத்தின் வாய்க்கால்.
குளக்கீழ் - குளம்பார்த்தவயல்.
குளக்குருவி - நண்டு.
குளக்கொட்டி - ஒருகொட்டி.
குளக்கோடு - குளக்கரை.
குளக்கோட்டன்-குளம்வெட்டுவதிலும் கோயிற்பணி செய்வதிலும் சிறந்த இலங்காபுரியிலிருந்த ஓரரசன்.
குளக்கோரை - ஒருபுல்.
குளசு - குழைச்சு.
குளஞ்சி - ஒரு தோடைமரம், கிச்சிலி, சருக்கரை.
குளத்தே-போதல் - வாகியத்துக்குப் போதல்.
குளநண்டு - ஒருநண்டு.
குளநெல் - குளக்கரையிலும் சதுப்பு நிலங்களிலும் சுயமாய்ப் பயிராகும் ஒரு நெல்.
குளந்தை-குளத்தூர். இது சென்னைக்கு மேற்கே ஐந்துகல் தூரத்திலுள்ளது இங்கே சந்திரன் முதலியோர் பூஜித்தருள்பெற்ற ஒரு தேவாலயமுண்டு. அது திருவாவடுதுறைச்சிவஞான யோகிகளால் அந்தாதியும் முதுமொழி வெண்பாவும் பிள்ளைத் தமிழும் பெற்றது. இச்சிவாலயம் குளத்தூர் மூன்று கிராமத்தைத்தனக்குச் சொந்தமாகவுடையது. தற்காலம் அவ்வூர் சம்பந்தியாகிய ம. தி. சாமிநாத முதலியார் அவர்கள் நன்முயற்சியால் நிலைமாறிக் கிடந்ததினின்றும் கவர்ன்மெண்டார் மூலமாக நித்திய நைமித்திகம் சரிவர நடத்தப்பட்டு வருகின்றது.
குளந்தைவல்லி - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருக்குளத்திற் கோயிற்கொண்ட விலக்குமி.
குளபாகம் - இலளிதபாகம்.
குளப்பயறு - ஒருபயறு.
குளப்பாடு - குளமடுத்த நிலம்.
குளமீன் - குளத்துமீன்.
குளம் - ஏரி, சருக்கரை, தடாகம், நெற்றி, வெல்லம்.
குளம்பு - குரம்.
குளவஞ்சி - குளாஞ்சி.
குளவடம்பு - ஒருகொடி.
குளவட்டை - நீரட்டை.
குளவரகு - ஒருவரகு.
குளவாழை - ஒருநெல்.
குளவி - ஒருவண்டு, காட்டுமல்லிகை, தேனீ, மலைப்பச்சை.
குளவிகொட்டுதல் - குளவிகுற்றுதல்.
குளவிக்கூடு - குளவியிருக்குங்கூடு.
குளவிந்தம் - ஒருமஞ்சள்.
குளறல் } உளறுதல், குளிறுதல்.
குளறுதல் }
குளறுபடை } குழப்பம்.
குளறுபிடி }
குளன் - குளம்.
குளாஞ்சி - ஒருதொடை.
குளாபாகம் - குடாபாகம்.
குளி - குளித்தல், குளியென்னேவல்.
குளிகசித்தி - குளிகாசித்தி.
குளிகம் - மருந்தின்பொது.
குளிகன் - அட்டநாகத்தொன்று, காந்துறை கோளிறென்று.
குளிகாசித்தி-இரசகுளிகையினால் வருஞ்சித்தி. அஃது அட்டசித்தியினுள் ஒன்று.
குளிகாரன் - சங்கு முத்து முதலியன குளித்தெடுப்போன்.
குளிகை - மாத்திரை.
குளிக்கை - குளித்தல்.
குளிசதோஷம் ஒருவகைத் தோஷவியாதி, அது கருப்பம்வேண்டின பெண்கள் குளிசங் கட்டிக்கொள்ளும்போ தவ்விடத்தினேரிட்ட குழந்தைகளுக் குச்சியிற் பள்ளம், கண்களிற் குழிவிழுதலோடு சலம்வடிதல், தேகமிளைத்தல், அதிகசுரம், நோவு, குய்யத்தில் விரணம், பேதி, அடிக்கடி தாகம், நெஞ்சுவரல், வெருட்சியா யழுதல், கால்களில், வீக்கம், வாந்தியென்னு மிக்குணங்களையுண்டாக்குவது.
குளிசமாடுதல் - வளையமிடுதல்.
குளிசம்-சக்கரம்வரைந்ததகடுவளையம்.

குளிசிலை - கௌபீனம்.
குளித்தல் சுழியோடல், தைத்தல், நீராடல், படிதல்.
குளித்தவளெடுத்ததோஷம் ஒருவகைத்தோஷவியாதி. அது சரீரவாட்டம், பால்தங்காமை, உச்சியிற் குழிவிழுதல், வாந்தி, கண்ணில் நீர்க்கம்மலோடு குழிவிழுதல், வாயுலரலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது தூரஸ்திரி நீராடினவுடன் யாதேனுமொன்றையருந்தாமல் சிசுக்களையெடுப்பதால் இந்தத்தோஷம் பிறக்கும்
குளிப்பச்சை-ஆற்றுப்பச்சை.
குளிப்பாட்டல் - குளிக்கச்செய்தல்.
குளிப்பாட்டு - பிரேதமுழுக்காட்டு.
குளிப்பாட்டுதல் - குளிக்கச் செய்தல், பிரேதாலங்காரத்தொன்று.
குளிப்பித்தல் - நீராட்டல்.
குளிப்பு - குளித்தல்.
குளியமாடுதல் - குளிசமாடுதல்.
குளியம் - உண்டை, புலி, மருந்தின்பொது, வளையம்.
குளியோடல், குளியோடுதல் } சுழியோடுதல்.
குளிரக்கொடுத்தல் - மனரம்மியப்படக்கொடுத்தல்.
குளிரி-கல்லாரம், பீலிக்குஞ்சம், வெற்றிலை, மூக்கரிகத்தி.
குளிர்-அச்சக்குறிப்பு, இலைமூக்கரிகத்தி, கவண், கர்கடகவிராசி, குளிர்ச்சி, கூதல், சூலம், நண்டு பனிக்காற்று, மழு, மீனெழுக்கு, முழவு, வெண்குடை, வெற்றிலை மூக்கரிகத்தி.
குளிர்காய்ச்சல் - சீதசுரம்.
குளிர்காய்தல் - கூதிர்காய்தல்.
குளிர்காலம் - கூதல்காலம்.
குளிர்காற்று - குளிரானகாற்று.
குளிர்குளிர்தல், குளிர்கொள்ளல் } சீதளமடைதல், தோஷமேறுதல், விறைத்தல்.
குளிர்சுரம் - சீதசுரம்.
குளிர்ச்சி - குளிர்மை, திருத்திகரம்.
குளிர்தல் குளிருதல், சாதல், விறைத்தல்.
குளிர்த்தி-ஓராராதனை, குளிர்மை.
குளிர்த்திபண்ணுதல்-குளிர்மைசெய்தல்.
குளிர்த்திபோடுதல்-சீதளாதேவிக்குச் செய்யுமோராராதனை.
குளிர்த்தகுரல் - இனியவோசை.
குளிர்ந்தநிறம் - நன்னிறம்.
குளிர்ந்தநீர் - இளவெந்நீர், மணியினலொளி.
குளிர்ந்தபரிமளம்-சீதாங்க பாஷாணம்.
குளிர்ந்தபாட்டு - செவிக்கினிய பாட்டு.
குளிர்ந்தபார்வை - தயைநோக்கு.
குளிர்ந்தபேச்சு - மதுரவசனம்.
குளிர்ந்தமணம் - நறுநாற்றம்.
குளிர்ந்தமனம் - நல்லவிருதயம்.
குளிர்ந்தமுகம் - அலங்காரமுகம், நன்முகம்.
குளிர்ந்தமொழி - இனியவசனம்.
குளிர்ந்தவாசனை - நறுமணம்.
குளிர்ந்தவாயு - வாதவாயு.
குளிர்ந்தவேளை - சாயந்திரம், சமயம்.
குளிர்ந்தவொளி மணிகளினலொளி.
குளிர்ந்தகொல்லி - சொவ்வைக்கொடி, வஞ்சகன்.
குளிர்ந்துபற்றுதல் - வாயுவிடமுதலிய பற்றியேறுதல்.
குளிர்ந்துபோதல் - இறத்தல்.
குளிர்ந்தேறுதல் - குளிர்ந்துபற்றுதல்.
குளிர்ப்பித்தல் - குளிர்ச்சிசெய்தல்.
குளிர்ப்பு - குளிர்மை.
குளிர்மை - அன்பு, சீதளம்.
குளிர்மைக்கட்டு - கூதைக்கட்டு.
குளிறல் - எழுத்திலாவோசை, ஒலித்தல், பேசலாவெழுமொலி.
குளிறு - ஒலி, குளிறென்னேவல், பேரொலி.
குளிறுதல் - அலறுதல், சத்தமிடுதல்.
குளீரம் - நண்டு.

குளுகுளுத்தல் ஒலிக்குறிப்பு, காமாலைகொள்ளுதல், செவ்வியழிதல், மெதுமெதுத்தல்.

குளுகுளுப்பை - காமாலை.
குளுகுளெனல் - ஒலிக்குறிப்பு.
குளித்தி - குளிர்மை.
குளுப்பை -குளுகுளுப்பை.
குளுமை - குளிர்மை.
குளுவன் - கோழிக்காரிற்றலைவன்.
குளைச்சு - கார்பங்கு, குழைச்சு.
குளைமான் - ஒருவிதமான்.
குள்ளக்கெண்டை - ஒருமீன்.
குள்ளத்தாரா - குள்ளவாத்து.

குள்ளநரி - ஒருநரி.
குள்ளம்-குறுமை, கொடுமை, வஞ்சகம்.
குள்ளன் - கட்டையன், வஞ்சகன்.
குள்ளி - கட்டைச்சி, குள்ளன்.
குறங்கு - கொளுவி, தொடை.
குறங்குசெறி - தொடையாபரணம்.
குறங்கொட்டி-தலாவோடே யடுக்கும் மரம்.
குறங்கொள்ளி - குறைக்கொள்ளி.
குறஞ்சனம் - வெண்காரம்.
குறஞ்சால் - உழுதகுறைந்த நிலம்.
குறஞ்சி - செம்முள்ளி.
குறடு - அடைதல், ஒட்டுத்திண்ணை, ஒருகருவி, செருப்பினுேருறுப்பு, திண்ணை, நண்டு, பலகை, புடைப்பு, மரத்துண்டு, மிதியடி.
குறட்டரியம் - குறைகூறல்.
குறட்டாழிசை - நாற்சீரின் மிக்கபல சீரான் வருமடியிரண்டாம் ஈற்றடி குறைந்துவருவதும் விழுமியபொருளும் ஒழுகிய ஓசையுமின்றிக்குறள் வெண்செந்துறையிற்சிதைந்து வருவதும் வேற்றுத்தளை விரவிய குறள் வெண்பாவாய் வருவதுமாகிய விம மூன்று வகையுமாம்.
குறட்டுச்செருப்பு - ஒருசெருப்பு.
குறட்டுப்பாக்குவெட்டி - ஒரு பாக்குவெட்டி.
குறட்டுவாதம் - ஒரு வலிப்பு.
குறட்டை - காக்கணங்கொவ்வை, குறுகுறுப்பு.
குறண்டல் - குறண்டுதல், சுருண்டது, சுருண்டு வளைந்தது.
குறண்டல்வாதம் - வலிவாதம்.
குறண்டவாங்குதல்-சுருட்டி யிழுத்தல்
குறண்டி - ஒருபண், ஒரு முட்செடி.
குறண்டுதல் - சுருண்டு கூனுதல்.
குறத்தி - குறிஞ்சி நிலப்பெண், நிலப்பனை.
குறத்திப்பாட்டு-ஒரு பிரபந்தம், அஃது தலைவன் பவனிவரக்கண்ட தலைவி மயங்கித் திங்கள் முதலிய உவாலம் பனப்பட்டுக் குறிகேட்டல் முதலிய அகப்பொருளுமடங்க அகவல் முதலிய செய்யுளிடையிடைவிரவிவரச் சிந்து முதலிய நாடகத்தமிழ் பாடுவது.

குறம் - ஒருசாதி, குறி.
குறம்பார்த்தல் - குறிபார்த்தல்.
குறம்பிடுத்தல் - குறட்டு சொல்லுதல்.
குறவஞ்சி -ஒருபிரபந்தம், குறத்தலைவி.
குறவுணவன் - ஒருபுழு.
குறவர் - குறிஞ்சிநிலமாக்கள், வேடர்.
குறவன் - இரதம், ஒரு சாதியான்.
குறவை - ஒருமீன்.
குறளடி - இருசீரடி.
குறளடிவஞ்சிப்பா இருசீரடியான்வரும்வஞ்சி.
குறவன் - குள்ளன்.
குறளி - ஒருபிசாசு, வசவி.
குறளிக்கூத்து - பேய்த்தனம்.
குறளிவிடுதல் - கோளாறுபண்ணல்.
குறளை - குள்ளம் கோட்சொல்லல்.
குறள்-இருசீரடி, உறுப்புக்குறைவெட்டிஞென்று,ஒருவகைப்பா,குறுமை, சிறுமை, திருவள்ளுவர்செய்த ஒரு தருமநூல், பூதகணம்.
குறள்வெண்செந்துறை-விழுமியபொருளும் ஒழுகிய ஓசையுமுடைத்தாய் எனைத்துச்சீரானும் அளபொத்த இரண்டடியாய்வருவது.
குறள்வெண்பா - இரண்டடியா யொருவிகற்பத்தானேனு மிருவிகற்பத்தானேனும் வருவது.
குறுசாணி - ஒருமருந்து.
குறுவுதல் - ஒடுங்குதல், மெலிதல்.
குறுள் - மறிக்குருட்டி.
குறி - அடையாளம், ஆண்பெண்குறி, எண்ணம் ஒருவகைச்சாத்திரஞ்சொல்லுதல்,குணம், குறிப்பு, குறியென்னேவல், சகுனம், தோற்றம், நன்னடத்தை, நிமித்தம்,பயில்,புடவை. மாடு முதலியவற்றினிடங் குறி, முறை.
குறிகாணல் } அடையாளந் தோ
குறிகாணுதல் } ன்றல்.
குறிக்கொள்வோர் - கருமமுடிக்குந்துணிவுள்ளோர், பராயணர்.
குறிக்கொள் - ஒற்றுமை, கணித்தல், கருமமுடிக்குந்துணிவு.
குறிசொல்லுதல் - குறியிடம்பார்த்துச் சாத்திரஞ்சொல்லல்.
குறிச்சி - கிராமம், குறிஞ்சி நிலத்தூர், சிற்றூர்.

குறிச்சூத்திரம் - பெயரிடுசூத்திரம்.
குறிஞ்சா - ஒருகொடி.
குறிஞ்சி - ஈந்து, ஐந்நிலத்தொன்று. அது மலைச்சார்பு, ஒருகொடி, ஒருசிமிள், ஒருபண், குறிஞ்சி, நிலத்திராகம், குறிஞ்சிமரம், செம்முள்ளி, மருதயாழ்த்திறம், மருதோன்றிமரம்.
குறிஞ்சிக்கருப்பொருள் - குறிஞ்சிநிலத்திற்பத்திப் பொருள், அவை சேய்முதற் சுனையாடலீறுயவாம்.
குறிஞ்சித்தலைவன் - கானகநாடன்.
குறிஞ்சித்திணை - குறிஞ்சிநிலத்திற்குரியன. அவை மலை, கூதிர், முன்பனி, இருள், ஐவனம், தினை, வெதிர், களவுப்புணர்ச்சி, சிலம்பன், வெற்பன், பொருப்பன், சேய், கானவர், குறவர், தேன், வெறி, சிறுகுடி, குறிச்சி, அருவி, சுனை, யானை, வேங்கை, மயில்.
குறிஞ்சித்திணைப்பொருள் - குறிஞ்சிக்கருப்பொருள்.
குறிஞ்சித்தெய்வம் - சுப்பிரமணியன்.
குறிஞ்சிப்பறை - துடி, தொண்டகம்.
குறிஞ்சிப்பொருள் - குறிஞ்சி நிலத்திற்குரிய பொருள்.
குறிஞ்சிமுதற்பொருள் - வரையும்வரைசார்ந்த விடமுமென்னு நிலப்பொருளும், கூதிர், யாமம், முன்பனியென்னும் பொழுதுஞ் சிறுபொழுதுகளுமாம்.
குறிஞ்சியாழ் - குறிஞ்சி நிலத்தியாழ்.
குறிஞ்சிலைக்கல் - ஈரற்கல்.
குறிஞ்சில் - தொட்டி பாஷாணம்.
குறிஞ்சிவேந்தன் - குமாரக்கடவுள்.
குறிது - குறிமையுடையது
குறித்தகள்வன் - பெயர்போனகள்வன்.
குறித்தபொருள் - நினைத்தபொருள்.
குறித்தல் - அடையாளப்படுத்தல், கருதல், சுட்டுதல், நியமித்தல், மதித்தல், வரைதல்.
குறிநிலையணி - புகழ்பொருளை யுணர்த்துஞ் சொற்களாற் குறித்தறிதற்குத் தகுதியாய் பொருளைச்சொல்லுதல்.
குறிபார்த்தல் - சகுனம் பார்த்தல், சாமுத்திரிகா லக்கணம் பார்த்தல்.
குறிப்பறிதல் - குறிப்பினாலறிதல்.
குறிப்பாளி - குறிப்பறிவோன்.
குறிப்பானவன் - கணிசவான், மதிக்கத்தக்கவன்.
குறிப்பிசை - எழுத்திலாவோசை.
குறிப்பிடம் - சுருக்கம்.
குறிப்பு - அடையாளம், எழுத்துப்பழக்குங் குறிப்பு, ஒருமை, கருத்து, சைகை, நினைப்புக்கெழுதின வெழுத்து, பிறந்தநாளெழுதி வைக்குமோலை, விருப்பம்.
குறிப்புக்காரணவகத்திணை - குறிப்புக்காட்டல் (உ-ம்) பேருலகாளயான் பிறந்ததாயின் பாருலகிழிநலம் பற்றி நக்கவோ.
குறிப்புச்செயல் - செஞ்செயலினுமாக்கச் செயலினுமின்று அவைக்குவேறுய பொருளை யுணர்த்துவது.
குறிப்புச்சொல் - குறிப்பினாற் பொருளுணர்த்துஞ் சொல்.
குறிப்புநவிற்சியணி - ஒரு பொருளைக் குறித்துச் சொல்ல வேண்டியதற்கு மற்றொரு பொருளைக் குறித்துச் சொல்லுதலாம்.
குறிப்புப்பண்பு - மனதாற் குறித்துணரப்படும் பண்பு.
குறிப்புப்பொருள் - குறிப்புச்சொல்லாலுணர்த்தப்படு பொருள்.
குறிப்புமறிநிலை - ஓரலங்காரம். அது சொல் வேருணர்ந்த குறிப்பு வேறாகத்தோன்ற வுரைத்தல்.
குறிப்புரிச்சொல் - மனத்தாற் குறித்தறியப்படு முரிச்சொல் (உ-ம்) நுண்மை.
குறிப்புவினை - பொருளிடங்காலஞ் சினைகுணந் தொழிலடியாகத் தோற்றிக் கருத்தாவை மாத்திரம் விளக்குஞ் சொல்.
குறிப்புவினைப்பகுபதம் - பொருளாதியாறுங் காரணமாகக் கருத்தா வொன்றையே விளக்கி நிற்பது.
குறிப்பெஞ்சணி - ஓரணி, அது குறிப்பெச்சம்.
குறிப்போலை - காரியங் குறித்திருக்குமோலை, சாதகவோலை.
குறியர் - குள்ளர்.
குறியானவன் - நிதார்த்தன்.
குறியிடம் - அடையாளம், அடையாளமுமடமும்.

குறியிடையீடு - குறியிடத்தொழுகாது தடைப்படல்.
குறியீடு - நாமதாரணே.
குறில் - குற்றெழுத்து, நீட்டற்றது.
குறுகலர் - பகைவர்.
குறுகல் - அணுகல், குறைதல்.
குறுகித்தல்-கோபமுதலியவற்ருற் பார்க்குங் குறும்பார்வை.
குறுகுதல்-கிட்டுதல், குறுத்தல், குறைதல், சுருங்குதல்.
குறுத்துதாளி - சிறுதாளி.
குறுகுறுத்தல் - ஒலிக்குறிப்பு.
குறுகுறுப்பு-குரட்டை- அது யாக்கைக் குற்ற மைந்திஞென்று, சினக்குறிப்பு.
குறுகுறுப்பை - குறட்டை.
குறுகுறெனல் - ஒலிக்குறிப்பு. [ழி.
குறுக்கடி - குறுக்குநியாயம், குறுக்குவ
குறுக்கம் - குறுக்கினது, கௌரிபாஷாணம், சுருக்கம்.
குறுக்கல் - குறைத்தல்.
குறுக்கல்விகாரம் - நெடில் குறிலாதல்.
குறுக்களவு - நடுஅளவு.
குறுக்கிடுதல் - இடையேசெல்லல்,கிட்டுதல்.
குறுக்கு - ஊடு, குறுக்கென்னேவல், குறுமை, சுருக்கம், தடை, விட்டத்தளவு.
குறுக்குக்கட்டு - மார்க்கட்டு.
குறுக்குக்கேள்வி - மடிப்பான கேள்வி.
குறுக்குக்குட்டம் - குறுக்குவளே.
குறுக்குச்சார் - குறுஞ்சார்.
குறுக்குச்சூத்திரம் - சுருக்கமாயறியுஞ் சூத்திரம்.
குறுக்குதல் - குறுகப்பண்ணுதல்.
குறுக்குநோய் - சந்துப்பிடிப்பு.
குறுக்குப்பாடு - குறுக்குவிட்ட அளவு.
குறுக்குப்பாதை - குறுக்குவழி [தி.
குறுக்குப்புத்தி-எண்ணிக்கையற்ற புத்
குறுக்குமறுக்கு - இடைக்கிடை, தாறுமாறு.
குறுக்குவிட்டம் - கைவிட்டம்.
குறுக்குவிழுதல் - ஊடுவிழுதல்.
குறுக்குவெட்டி - குறுக்குவழி.
குறுக்கையர் - ஒரு வேளாளர், திருநாவுக்கரசு நாயனர்.
குறுங்கணக்கு-தனியட்சரங்கள்.
குறுங்கண் - பலகணி.
குறுங்கயிறு - சிறுகயிறு.
குறுங்கலி - ஒருபிரபந்தம், பாலையாழ்த்திறம், பெருந்திணைத் துறைகளுள் ஒன்று. அது நறுநாற்றங் கமழும் பெரிய குழலினையுடைய மடைவாரை விரும்ப விகற்பித்த காதலைக்கெடச் சொல்லுவது,மருதப்புறம் தலைமகன் முன்னின்று மாதர்பழிகூறல்.
குறுங்கற்றலை - ஒருவிதமீன்.
குறுங்காசு - ஒருகாசு.
குறுங்காடு - சிறுகாடு.
குறுங்கால் - குள்ளங்கால்.
குறுங்கிண்ணி - வெண்கலம்.
குறுங்குடியாள் - தாளகம்.
குறுங்குடிவல்லி - நூற்றெட்டுத் திருப்பதிகளுலொன்ருகிய திருக்குறுங்குடியிற் கோயில்கொண்ட இலக்குமி.
குறுங்கோல் - இரண்டுமுழத்தடி.
குறுஞ்சாலி - இளமரம்.
குறுஞ்சிறிப்பு - புன்னகை.
குறுஞ்சீர்வண்ணம் - குற்றெழுத்துப் பயின்று வருவது.
குறுஞ்சுனை - சிறுபொய்கை.
குறுணல் - சிறியது.
குறுணி - ஓரளவு, சிறியது.
குறுணை - குறுநொய்.
குறுதல் - குத்தல், தறித்தல்.
குறுத்தல் - குறுகுதல்.
குறுத்தாள் - சிற்றடி.
குறுநகை - புன்சிரிப்பு.
குறுநடை - தளர்நடை.
குறுநகர் - பறிப்பார்.
குறுநறுங்கண்ணி - குன்றிப்பூ.
குறுநிலமன்னர் - சிற்றரசர், குறும்பர்.
குறுநெளிப்பு - ஆங்காரம், இறுமாப்பான அசைப்பு.
குறுநொய் - குறுணை, சிறுநொய்.
குறுந்தடி - குதிரைசெலுத்துங் கருவியினென்று குறுத்ததடி, பறைமுதலிய வடிக்குந்தடி.
குறுந்தறி - குறுந்தடி, சுவர்த்தறி, போதிகை.
குறுந்தாட்டு-குறுகியதாளையுடையது.
குறுந்தாள் - சிற்றடி.
குறுந்துணி - சீலைத்துணி.
குறுந்துளசி - சிறுதுளசி.

குறுந்தெரு - சிறுதெரு.
குறுந்தொகை - பாரதம் பாடிய பெருந்தேவனார் முதலிய இருநூற்றறுவரால் பாடப்பட்ட அகப்பொருட்பகுதியைப் பொருளாகவுடைய ஒருநூல் இதற் குரைசெய்தவர்கள் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்.
குறுந்தொட்டி - காஞ்சொறி, சிற்றமட்டி, தோட்டி.
குறுப்பி - பொன்னிமிளை.
குறுமணல் - இரசதமணல்.
குறுமாக்கள் - சிறுவர், பிள்ளைகள்.
குறுமீன் - ஒருவகைமீன்.
குறுமுட்டு - கிட்டுமோனம், முட்டுத்தனம்.
குறுமுழி-குறுவிழி, வெறித்தபார்வை.
குறுமுனி - அகத்தியன்.
குறுமை-அழகு, சிறுமை, சுருக்கம், பாவம்.
குறும்பச்சி - இடைச்சி.
குறும்பயிர் - இளம்பயிர்.
குறும்பர் - குறுநிலமன்னர், துற்சனர்.
குறும்பலாநாதர் - திருக்குற்றாலத்திற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
குறும்பன் - துற்சனன்.
குறும்பாடு - பள்ளையாடு.
குறும்பாட்டம் - குறும்புத்தனம்.
குறும்புார்வை-குறுகித்தபார்வை, கொடிய பார்வை.
குறும்பி - காதழுக்கு.
குறும்பிடி - உடைவாள், முட்டுப்பிடி.
குறும்பிடையர் - பள்ளையாட்டிடையர்.
குறும்வாங்கி - காதழுக்குவாருங் கருவி.
குறும்பு - அரணிருக்கை, குறும்பர்சாதி, சிறுமை, பாலைநிலத்தூர், பொல்லாங்கு, போர்.
குறும்புத்தனம் - துட்டத்தனம்.
குறும்புவன்னி - ஒரு புட்சாதி.
குறும்புவன்னியன் - பள்ளிகளில் ஒரு சாதியான்.
குறும்புள் } காடை.
குறும்பூழ் }
குறும்பொறி - உதரபந்தம்.
குறும்பொறை-காடு, குறிஞ்சிநிலத்தூர், சிறுமலை, மலை.
குறும்பொறைநாடன் - முல்லை நிலத்தலைவன்.
குறுவஞ்சி - வஞ்சித்திணைத் துறை யிருபதினுளொன்று, அது மண்டி எதிர்ந்த வீரத்தையுடைய மன்னர்க்குத் திறையைக் கொடுத்து நாடுடைய அரசன் குடிக்குத் தண்ணளிபண்ணிக்காப்பது.
குறுவாழ்க்கை - அற்பவாழ்வு, வறுமை.
குறுவாள் - சிறுவாள்.
குறுவிசாரம் - கவலை.
குறுவித்தல் - குறுகித்தல்.
குறுவித்துப்பார்த்தல் - குரூரமா யுற்றுப்பார்த்தல்.
குறுவிலை - அகவிலை, ஒறுப்பு.
குறுவிழி - கோபத்தாற் பயத்தா லுற்றுப்பார்த்தல்.
குறுவிழிக்கொள்ளுதல் } வெறித்துப் பார்த்தல்.
குறுவிழிவிழித்தல் }
குறுவேர்வை-அச்சத்தால் வேர்த்தல், சிறுவேர்வை.
குறுணுத்தகடு } மலாம்பூசினதகடு.
குறுணுபேட்டை }
குறூரம் - குரூரம்.
குறை-அரசிறை, காரியம், குறைந்திருப்பது, குறையென்னேவல், குற்றம், சேடம், தரித்திரம், தவறு, நிறைவற்றது, மன்றாட்டு, மிச்சம், வெறுப்பு.
குறைகூறல் - குறைசொல்லல்.
குறைகோள் - இரத்தல்.
குறைக்கண்ணுக்குறங்கல் - அரைக்கண்ணுக்கு நித்திரை செய்தல்.
குறைக்குதல் - குறைத்தல்
குறைச்சல் - ஒறுப்பு, தாழ்ச்சி.
குறைஞ்சால் - உழுதகுறை.
குறைதல் - கெடுதல், சிறுகல்.
குறைத்தலைப்பிணம் - கவந்தம்.
குறைத்தல் - குறுகுதல், சங்கரித்தல், சுருக்குதல், வெட்டுதல்.
குறைநிறை-எற்றதாழ்ச்சி, குறைச்சல், நிறைச்சல்.
குறைபாடு - ஈனம், குறைவு, குற்றத்தினல் வந்தபாடு, தரித்திரம்.
குறைப்பிராணன் - குற்றுயிர்.
குறைப்பு - குறைத்தல்.
குறையாற்றல் - குறைதீர்த்தல்.
குறையிரத்தல்-பின்சென்று கேட்டல்.
குறையுடல் - தலையற்றவுடல்.
குறையுயிர் - குற்றுயிர்.
குறையொட்டி - உறையொட்டி.

குறையொற்றுமையுருவகம்- உருவகத்தோர் குறைதோன்றச் சொல்வது (உ-ம்) நெற்றிவிழியில்லாச்சங்கரன்.
குறைவயிறு - குறைப்பசி.
குறைவிலி - கடவுள், குறைவில்லாதவன்.
குறை-ஈனம், வறுமை.
குரேட்டை - காக்கணம், பீச்சு, விளாத்தி.
குற்குலு - குங்கிலியம்.
குற்சலை - அவுரி.
குற்சனம் - இகழ்ச்சி.
குற்சன் - குத்சன்.
குற்சிதம் - அசுத்தம், அருவருப்பு.
குற்சித்தல் - அருவருத்தல்.
குற்சிப்பு - அருவருப்பு.
குற்சை-இகழ்ச்சி, சுபாவகுணமொன்பதினொன்று. அது அருவருப்பு.
குற்பகம் - நாணல்.
குற்பம் - பாடு.
குற்றமில்லான்-அருகன், கடவுள், மாசிலான்.
குற்றம்-அபராதம், குறை, தவறு, நோய், பழுது, பிழை.
குற்றம்பிடித்தல் - பிழைகாட்டல்.
குற்றம்பொறுத்தநாதர் - திருக்கருப்பறியலூரிலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
குற்றல்-இடித்தல்,நெரித்தல், பறித்தல்
குற்றவாநந்தம் - செய்யுள்செய்யுமிடத்து எழுத்து சொல் பொருள் யாப்பு அணியாகிய இவ்வைந்தின் குற்றமுமிவற்றினானந்தமும்.
குற்றவாளி - குற்றமுள்ளோன்.
குற்றிகரம்-மாத்திரை குறுகினவிகரம்.
குற்றிசை-குறுஞ்சந்தம், பெருந்திணைத்துறைகளுளொன்று. அது அழகிய மாலைமார்பைப்பொருந்திய அரிவையர்க்கு அற்றறுதிப்பட்டு நடவாது அறத்தைக் கண் மறுப்பது.
குற்றியலிகரம் - மாத்திரை குறுகினவிகாரம்.
குற்றியலுகரம் } மாத்திரை குறுகின
குற்றுகரம் } வுகாம்.
குற்றுடைவாள் - சிறுவுடைவாள்.
குற்றுதல் - குற்றல்.
குற்றுயிர் - குறைப்பிராணன், குற்றுயிரெழுத்து.
குற்றுவாய்-ஒருமீன், கடிவாய்.
குற்றுழிஞை- உழிஞைத்திணைத்துறையிருபத்தெட்டனு ளொன்று. அது பகைவராணுகிய அழிவில்லாத தன்மேல் தான் ஒருவனுமேயாகி மாறுபாட்டினைப் பெருக்குவது.
குற்றெழுத்து - ஒருமாத்திரையா யுச்சரிக்கப்படுமெழுத்து.
குற்றேவல் - அடித்தொண்டு.
குற்றொற்று-குற்றெழுத்தின் கீழொற்று.
குற்றோன் - கெடுத்தோன்.
குனடி - நேபாளக் கடைச்சரக்கு.
குனட்டம் - அதிவிடையம்.
குனட்டு - சேட்டை.
குனட்டை } துடுக்கு, கோணல்.
குனஷ்டை }
குனசகம் - சிறுகாஞ்சொறி.
குனசம் - குன்றி.
குனபி - சுழிக்காற்று.
குனி - குனியென்னேவல், சிதத்துவஜன்புத்திரன், வில்.
குனிங்கேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
குனிதல் - இரங்குதல், தலைதாழ்த்தல், துக்கப்படுதல், வளைதல்.
குனித்தல்-அசைத்தல், ஆடல்,வளைத்தல்.
குனிப்பு - ஆடல், கூத்தின்விகற்பம், வளைப்பு.
குனிவு - வளைவு.
குனுகல் } சிணுங்கிப்பேசல்.
குனுகுதல் }
குனுக்கம் - குணுக்கம்.
குனை - கூர்ப்பக்கம்.

குன்மகாமாலை - ஒருவகைநோய். அது அன்னசீரண காலத்தில் அடிவயிறு வலித்தல், வாந்தி, கண்களில் மஞ்சணிறம், குழம்பியமூத்திரம், வாய்வெளிறல், மனதிற்கொன்றுந்தோன்றுமை, இருமல், இரைப்பு, மயிலுறக்கம்போலுறக்கம், படுக்கையாகக் கிடக்கையிலும் புரளலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
குன்மக்கிரகணி - ஒருவகைக் கிரகணியுரோகம். அது வயிற்றில்குத்தல், அதிகவுறக்கம், வியர்வை, தலைநடுக்கம், தேகவெரிச்சல், உழலை, வயிறுபொ

ருமி யிரைந்து பேதியாகுதல், சில வேளை யொருபக்கத்தி லிரைச்சலென்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.
குன்மசூலை - ஒருநோய்.
குன்மப்புரட்டு - ஒருநோய்.
குன்மம்-ஒருநாய், குலுமம், அது சேனுமுகம் மூன்றுகொண்டது, தூறு.
குன்மவலி - ஒருநோய்.
குன்மவாயு - ஒருநோய்.
குன்மவியாதி - குன்மநோய், வயற்றுவலி.
குன்றக்கூறல் - நூல்வழுவினென்று.
குன்றதாத்தம் - மலைவழி.
குன்றத்துச்சித்தி-தாலம்ப பாஷாணம்.
குன்றத்தூர்-சேக்கிழார்நாயனர் பிறந்தவூர். இது தொண்டைநாட்டிலுள்ளது.
குன்றம் - மலை.
குன்றல் குலைதல், குறைதல், கெடுதல்.
குன்றவர் } குறிஞ்சி நிலமாக்கள்,
குன்றவாணர் } வேடர்.
குன்றவில்லி - சிவன், அருசி.
குன்றுவாடை - வடகீழ்க்காற்று.
குன்றுவாழ்வு - குறையாதசெல்வம்.
குன்றி - ஒருகொடி, மனேசிலை.
குன்றிநிறக்கண்ணன் - காட்டுப்பன்றி.
குன்றிநிறமணி- குருவிந்தப்பதுமராகம்.
குன்றிமணி - குன்றிக்கொட்டை.
குன்றியலுகாம் - குற்றியலுகாம்.
குன்றிவேர் - அதிமதுரம்.
குன்று-குன்றென்னேவல், சதயநாள், சிறுமலை, மலை.
குன்றுகூப்பிடுதல்-எதிரொலி யெழக்கூப்பிடுதல்.
குன்றுதல்-குறைதல், கெடுதல், மெலிதல், வாடல்.
குன்றுவாடை - வடமேல்காற்று.
குன்றெடுத்தோன் - கிருஷ்ணன்.
குன்றெறிந்தோன் - குமரன்.
குன்றேந்தி - கிருஷ்ணன்.
குன்றை எல்லப்பன்-தொண்டை நாட்டிற் குன்றத்தூரிலே தமிழ்ப் புலவர்களுக்குக் கைசலியாமற் பொன்மாரி பொழிந்து புகழ் படைத்தவனுகிய ஒரு வேளாண்பிரபு.

---

## கூ

கூ-ஒரெழுத்து, கூவென்னேவல், பூமி, மலங்கழித்தல்.
கூகமானம் - மறைவு.
கூகம்-ஆந்தை, கூகை, மறைத்தசொல்.
கூகளம் - மாய்மாலம்.
கூகனம்-அசம்பியவார்த்தை, மறைத்தசொல்.
கூகாகம் - கமுகு.
கூகாரி - காகம்.
கூகு - எட்டுவயதுப்பெண்.
கூகுதன்-நல்லபாத்திரத்திற் கன்னிகாதானஞ் செய்பவன்.
கூகூ - அச்சப்பொருட்டு மோரிடைச்சொல்.
கூகை - ஒருபருந்து, கோட்டான்.
கூகைக்கட்டி } பொன்னுக்குவீங்கி
கூகைநீர்க்கட்டி }
கூகைநீறு-ஒருமருந்து, காட்டெருமைப்பால்.
கூகைவீக்கம் - கூகைக்கட்டி.
கூக்குரல் - கூப்பிடுமொலி, முறையீடு.
கூசம் - முலை.
கூசல்-அச்சக்குறிப்பு, அச்சம், கூக்குரல், கூசுதல், நாணுதல்.
கூசனம்-உதாசினம், மறைத்தசொல்.
கூசி } எழுதுகோல்.
கூசிகை }
கூசிதம் - புட்குரல்.
கூசுதல்-கண் பல் முதலிய கூசுதல், நாணுதல், பயப்படல்.
கூசுமாண்டபூதம்-ஒருவகைப்பூதம். அது முகத்தைப் பார்க்கப் பயங்காந்தோற்றல், அதிக கோபம், தாமத வார்த்தை அல்லது மிகுவார்த்தை, நடந்தாலிரண்டு பீசங்களுங் கனத்துத் தளர்ந்து தொங்குதலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
கூசுமாண்டம் - பூசினி.
கூச்சக்காரன் - சங்கோசமுள்ளவன்.
கூச்சத்தம் - கூக்குரல்.
கூச்சந்தெளிதல் - சங்கோசந்தீர்தல்.
கூச்சம்-அச்சம், கண் பல் முதலியவற்றின் கூச்சம், நாணம், வெட்கம்.

கூச்சலிடல்-இரைதல், கூக்குரலிடுதல்.
கூச்சல் - இரைச்சல், கூச்சல்.
கூச்சில் - சவரிலோத்திரம்.
கூச்சிதம், கூச்சிரம் - கடம்பு.
கூச்சு - கூர்ச்சு.
கூட - ஒருங்கு, சேர, தானும் (உ-ம்) எனக்குக் கூடப்பயம்.
கூடகம் - கொழு, வஞ்சனை.
கூடகாரகன், கூடகாரன் - கள்வன், பொய்யன், வஞ்சகன்.
கூடகிருதன் - சிவன்.
கூடசதுக்கம்-ஒரு பிரபந்தம், மிறைக்கவியினொன்று. அது ஈற்றடி எனை மூன்றடியுள்ளுஞ் சொற்புகாவெழுத்துக்கரந்து நிற்கப்பாடுவது.
கூடசன் - சோரபுத்திரன்.
கூடசாசனம் - கள்ளத்தீர்வை.
கூடசாட்சி - பொய்ச்சாட்சி.
கூடசாரன், கூடசாரி - அந்தரங்கத்தூதன்.
கூடசாலம் - ஒருநரகு.
கூடசான்மலி - பட்டுநூல்மரம்.
கூடசுவணம் - கலப்புப்பொன்.
கூடனே - மயிற்றோகைக்கண்.
கூடஸ்தம் - ஒரேரூபமாய் மிருகால மிருக்கும்பொருள்,
கூடத்தர் - ஆன்மாகத்தாவுடன் அயிக்கப்படுதல்.
கூடத்தன், கூடஸ்தன் - நிருவிகார சைதந்நியன் முதன்மையானவன்.
கூடபதம் - பாம்புப்புத்தி.
கூடபலகம் - சூலை, யானைநோய்.
கூடபாஷிதம்-அந்தரங்க சம்பாஷணை.
கூடபாதரம் - பாம்பு.
கூடபுருஷர் - ஒற்றர், சோரநாயகர்.
கூடபூர்வம் - ஹஸ்திசுரம்.
கூடமார்க்கம் - கள்ளவழி.
கூடமைதுனம் - காகம்.
கூடம்-அண்டம், அறை, இந்திரசாலம், இரகசியம், உறையறி, கருவி, எள், ஏகாந்தம், கலப்பை, கூட்டம், கொழு, தானியக்குவியல், கொல்லன் சம்மட்டி, கோளகபாஷாணம், தீங்கு, புதையல், பொய்மலையினுச்சி, மறைவு, மாயம், யாழ்க்குற்றம் நான்கினொன்று. அது இசை நிரவாதது. தன் பகையாகிய ஆருநரம்பி னிசையிற் குன்றித் தன்னோசை மழுங்கல், யானைப்பந்தி, வஞ்சகம், வீடு.
கூடம்பில் - சுரை.
கூடயந்திரம் - பொறி, வலை.
கூடலர் - பகைவர்.
கூடலூர்-நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்று. இது சோழநாட்டி லுள்ளது.
கூடல்-அடுத்தல், இயலல், ஒருவிளையாட்டு, கழிமுகம், கூடுதல், சேர்தல், புணர்தல், மதுரை, மர முதலியவற்றின் செறிவு.
கூடல்வளைத்தல் - மகளிர் விளையாட்டில் ஒன்று.
கூடல்வாய் - ஒடுங்கிய கால்வாய்.
கூடவர்சை - தவளை.
கூடற்குறி-தலைமகன் பிரிந்துழித் தலைவி பார்க்குங்குறி.
கூடற்கோ - பாண்டியன்.
கூடற்பற்றை - காடு, வனம்.
கூடனாயகன்-மதுரையிலெழுந்த சோமசுந்தரக்கடவுள்.
கூடனாயகி-மதுரை மீனாட்சி.
கூடாகாரம் - மேல்வீடு.
கூடாக்கு - புகையிலை.
கூடாங்கம் - ஆமை.
கூடாதகூட்டம் - தீயோர்நட்பு.
கூடாதது-இயலாதது, தகாதது, பொருந்தாதது.
கூடாமை-இயலாமை, பொருந்தாமை.
கூடாமையணி - ஓரலங்காரம். அது ஒரு காரியம் பெறத் தலையருமையுடையதாய்ச்சொல்லுதல்.
கூடாரக்கட்டில் - மூடுகட்டில்.
கூடாரப்பல்லக்கு - மூடுசிவிகை.
கூடாரமடித்தல்-கூடாரம்போடுதல்.
கூடாரம் - படாம்வீடு, பெருங்காயம், வண்டி, கௌசனை.
கூடாரவண்டில்-மேல்மூடிய வண்டில்.
கூடார் - பகைவர்.
கூடார்த்தபாஷிதம் - கட்டுக்கதை.
கூடாவியற்கை - ஓரலங்காரம்.
கூடாவியற்கைவிலக்கு - ஓரலங்காரம். அது கூடாததனைக் கூடுவதாகக்கூறி விலக்கல் (உ-ம்) சீதசந்தனந் தீக்காலும்.

கூடாவுவமை-ஒருபொருட்கு இயல்பாயில்லாதவற்றை யுள்ளதாகச் சொல்லியதனை ஒன்றற் குவமையாக்கியுரைப்பது (உ-ம்) காமுகர்க்குத் தண்மதியந் தீக்கால்வபோலும்.
கூடாவொழுக்கம் - ஒழுங்கற்ற செய்கை, கள்ளவேடம்.
கூடியது-இயன்றது, ஏற்றது, கிடைத்தது, சேர்ந்தது.
கூடிலி-தசைதின்போன், மன்மதன்.
கூடு-அடைப்பு, உடம்பு, உறை, கூடென்னேவல், பறவைக்கூடு.
கூடுங்கழுந்தும் - துளையுங்கழுந்தும்.
கூடுதல் - இயலுதல், ஏற்றிருத்தல், கிடைத்தல், சேருதல், புணர்தல்.
கூடுமியற்கை - ஓரலங்காரம்.
கூடுமியற்கைவிலக்கு-ஓரலங்காரம். அது கூடுவதனைக் கூடுவதாகக் கூறி விலக்குவது (உ-ம்) கைவளைசோர்ந் தாவி கரைந்துருகுவர், மெய்வெதும்பப் பூத்தகையுஞ் செங்காந்தள்பொங்கொலிநீர் ஞாலத்துத் தீத்தகையார்க் கீதேசெயல்.
கூடுவிட்டுக்கூடுபாய்தல்-பாகாயப் பிரவேசம், ஒருடம்பைவிட் டான்மா மற்றோருடம்பிற் புகுதல்.
கூடுவிழுதல்-ஆணிச்சீவிழுதல், சாதல், வியாதியின் வேர்கழலுதல்.
கூடுவைத்தல் - சிலந்தியிணிச்சிதல், காய்ந்துசவ்வுபற்றல், பட்சிகள் கூடு கட்டுதல், வியாதி வேர்வைத்துப்பலத்தல்.
கூடை - கூத்தின்விகற்பம், கோரியை, பூக்கூடை முதலியன.
கூடைப்பாடல்-சொற்செறிவும் இசைச்செறிவுமுடையது, இயக்கம்நான்கி [னுளொன்று.
கூடையன்-பருத்தவன்
கூடோற்பன்னன் - சோரபுத்திரன்.
கூட்டத்துக்குழைதல் - பெருந்திணைத் துறைகளுளொன்று. அது இட்ட மாலையினையுடைய அகலத்தை நீங்குதல் பொறுதபறித்தழையாற் சிறந்த அல்குலினை யுடையாள் புணர்ச்சியிடத்து நெகிழ்வது.
கூட்டம் - இனம், சங்கம், சிநேகம், திரள், தொகுதி, பிண்ணாக்கு, புணர்ச்சி, போர், மிகுதி, மேவினர்.
கூஷ்டரம் - வண்டில்.
கூட்டரவு - கூட்டம்.
கூட்டரிசி - கறிக்கரைக்குமரிசி.
கூட்டல்-அதிகப்படுத்தல், சேர்த்தல்.
கூட்டவணி-ஓரலங்காரம். அது பகையில்லாமையாலொருகாலத்துக் கூட்டத்தக்க பொருளுக்குக் கூட்டத்தைச் சொல்லுதல், பல காரணங்கள் கூடுதலாலோர்காரியம் பிறத்தலுமாம்.
கூட்டற்றவன் - ஆசாரங் குலைந்தவன் கூடாதவன்.
கூட்டாகுழப்பம் - தாறுமாறு.
கூட்டாளி-கூடிநடக்கிறவன், தோழன், பங்காளி, சிநேகிதன்.
கூட்டிமுடித்தல்- தெய்வங்கூட்டிநிறைவேற்றல்
கூட்டியம் - சுவர்.
கூட்டு-உறவு, கலப்பு, கறிக்கூட்டு, கூட்டென்னேவல், சம்பந்தம், சேர்மானம்.
கூட்டுக்கச்சவடம்-கூட்டுவியாபாரம்.
கூட்டுகணக்கு - எண்கூட்டுதல்.
கூட்டுக்கறி-கூட்டமுது, குழம்புக்கறி.
கூட்டுக்கால் - இருகாலையு மோரடியில் மிதித்துநிற்றல்.
கூட்டுணல் - கூட்டியுண்ணல்.
கூட்டுதல் - அதிகப்படுதல், சேர்த்தல், சேர்த்துண்டு பண்ணல், பலவினத்தை யொன்றாக்கல்.
கூட்டுத்தட்டு - ஒரு பாத்திரம்.
கூட்டுத்தொழில்-கூடித்தொழி னடத்துதல், வசியவித்தை.
கூட்டுப்பயிர் - கூடிப்பயிரிடுதல்.
கூட்டுப்பல்லக்கு - ஒருவிதப் பல்லக்கு.
கூட்டுமூட்டு - ஒன்றுபடுத்தல், கோள், சேர்மானமாக்கல்.
கூட்டுமொழி - கூட்டுச்சொல்.
கூட்டுவர்த்தகம் - கூட்டுவியாபாரம்.
கூட்டுறவு - இணைந்தவுறவு.
கூட்டெழுத்து தொடரெழுத்து, பலவெழுத்தொலி யொன்றாயிருப்பது.
கூஷ்மாண்டம், கூஸ்மாண்டம் - நீற்றுப்பூசுணி.
கூணி - கூனி.
கூணிகை - வீணையினோருறுப்பு.
கூண்டுகூடு - பறவைக்கூடு.
கூண்டுதல் - கூடுதல்.

கூன்மாண்டம் - நீற்றுப்பூசிணி.
கூதம் - குதம்.
கூதரன் - தூரஸ்திரீ முயங்கிப் பெற்ற பிள்ளை.
கூதலோடுதல் - குளிர்தல்.
கூதல் - குளிர்.
கூதல்விரைத்தல் - கூதலோடுதல்.
கூதளம் - கூதாளிச்செடி, தூதுளைவெள்ளரி.
கூதறை-இழிந்தது, கிழியல், கூட்டற்றது.
கூதறகாய்தல் - குளிர்காய்தல்.
கூதனம் - மறைத்தசொல்.
கூதாரி - வெள்ளரி.
கூதாளம், கூதாளி } கூதாளம்.
கூதிர்-ஐப்பசி கார்த்திகையின் பருவம், காற்று, கூதல், பனிக்காற்று.
கூதிர்காலம் - குளிர்காலம்.
கூதிர்காலவுரிமை - கூதிர்காற்று வீசலும், குருகு அன்னம் கொக்குசகோரம் சங்கு நண்டுநத்தை இவை மகிழ்தலும், நீர்தெளிதலும், மீனினஞ்செனித்தலும், மேகஞ்சூல் கொள்ளலும், பாரிசாதம் சிறுசண்பகம் செம்பரத்தை சந்தனம் நாணல் இவை மலர்தலும், பல பறவை விலங்குமக்கள் வருந்தலுமாம்.
கூதிற்காற்று - குளிர்காற்று.
கூதிர்ப்பருவம் - குளிர்காலம்.
கூதிர்ப்பாசறை - வாகைத் திணைத்துறைகளுளொன்று. அது கூற்றையொத்தவனுடைய அகன்றபாசறையிடத்துக் கூதிர்க்காலத்து மேகமுறையைக் கொடுப்பப் பிரியவாற்றாமை மேன்மேன் மிகவும் கூரிய எஃகினை யுடையான் கருணையையொழிவது.
கூதை - காற்று, குளிர்காற்று.
கூத்தநூல் - ஒரு நாடகத்தமிழ்நூல்.
கூத்தராற்றுப்படை - பாடாண்டினைத் துறைகளுளொன்று. அது தலைவனைக்கண்டுதுதித்து மீண்ட விரப்பாளன் கூத்தாடுமவரை வழியிற்செலுத்துவது.
கூத்தரிசி - குத்திவிற்குமரிசி.
கூத்தர் - நாடகர்.
கூத்தன்-உயிர், கடவுள், சிவன், துருசி நாடகன் ஒருபுலவன்.
கூத்தன்குதம்பை-மூக்கொற்றிப் பூண்டு.
கூத்தாடி - கூத்தாடுவோன்.
கூத்தாடுதல் - தோரத்தமாடுதல், நடனம்பண்ணுதல், பெருமைகாட்டல்.
கூத்தாட்டு-தோரத்தம், நடனம்.
கூத்தி, கூத்திச்சி } நாடகக்கணிகை, வேசி, வைப்பாட்டி.
கூத்து - ஆடம்பரம், நடனம், நாடகம், விளையாட்டு.
கூத்துகந்தோன் - சிவன்.
கூத்துக்களரி - நடனசாலை.
கூத்துப்பாட்டு - நாடகக்கவி.
கூத்துவிடுதல் - ஏவிவிடுதல், கூத்தாடுவோனைக்களரியில்விடல்.
கூந்தலறுகு - ஓரறுகு.
கூந்தலாற்றுதல் - மயிராற்றுதல்.
கூந்தல்-கமுகோலை, குதிரைமயிர், கூந்தற்கமுகு, கூந்தற்பனை, கூந்தற்றெங்கு, பனையோலை, பெண்மயிர்,மயிர் மயிற்றோகையானைக்கழுத்தடிமயிர்.
கூந்தற்கமுகு - ஒருகமுகு.
கூந்தற்பனை - ஒருமரம்.
கூந்தற்பாசி - ஒரு நீர்ப்பூடு.
கூந்தற்பூகம் - கூந்தற்கமுகு.
கூந்தாலம், கூந்தாலி } குந்தாலி.
கூபகம்-எண்ணெய்த்துருத்தி, கிணறு சிற்றூற்றுக்குழி, பாடை, பாய்மரம்.
கூபம் - கிணறு.
கூபரங்கம் - உரோமப்பொடிப்பு.
கூபரம் - முழங்கை.
கூபரி - தேர்.
கூபாரம் - கடல்.
கூபிகை-நீரிடைப்பட்ட மலை முதலியன.
கூப்பரம் - முழங்கை.
கூப்பல் - கூப்புதல்.
கூப்பாடு - கூப்பிடு.
கூப்பிடல், கூப்பிடுதல் } அழைத்தல்.
கூப்பீடு - குரோசம், கூப்பிடல்.
கூப்பீடுதூரம் - கூப்பிட்டசத்தங் கேட்குமெல்லை.
கூப்புதல் - குவியச்செய்தல், சுருக்குதல்.
கூமம் - நீர்நிலை.
கூமரை - கோங்குமரம்.

கொத்துப்படல் - ஒருபுடல்.
கொத்துமல்லி - கொத்தமல்லி.
கொத்துமேகம் } கொத்துக் கொத்தா
கொத்துவானம் } யிருக்கும் முகில்.
கொத்துவேலை - கொத்திச் செய்யுஞ் சித்திரவேலை.
கொத்தை - இசடு, சொத்தை, பழுது.
கொந்தல் - அணில் முதலியவற்றாற் கொந்தப்பட்டது, ஊனப்பட்டது, கொந்துதல், சினக்குறிப்பு, பெருங் [கோபம்.
கொந்தழல் - தீத்திரள்.
கொந்தளம்-காண்டாமிருகம், கூத்தின் விகற்பம், சமுத்திராப்பழம், பெண் மயிர், மயிர்க்குழற்சி.
கொந்தளித்தல் - கிளம்பல், மும்முரங் கொள்ளுதல்.
கொந்தளிப்பு - கெற்சிதம், மும்முரம்.
கொந்தாலி -கல்லுவெட்டு மோர்கருவி.
கொந்தாழம் - ஒருமரம், ஒருமருந்து.
கொந்தாழை - ஒரு கடற்றாழை.
கொந்தாளம் - ஒருமருந்து.
கொந்தாளித்தல் - கொந்தளித்தல்.
கொந்து - கொந்தென்னேவல், நெய் வோர். கதிர், பூங்கொத்து.
கொந்துதல் - பறவைகளலகினாற் கொத்துதல், மூர்க்கங்கொள்ளுதல்.
கொப்பம் - யானை படுகுழி.
கொப்பரம் - அதட்டுதல், மல்யுத்தத்தி னொன்று.
கொப்பரி } கடாரம், குடம்,
கொப்பரை }
கொப்பளம் - கொப்புளம்.
கொப்பளித்தல் - கக்குதல், கொப்பளமாதல், சொரிதல்.
கொப்பறு } அறக்காய்த
கொப்பறைத்தேங்காய் } தேங்காய்.
கொப்பாட்டன் - மூன்றாம்பாட்டன்.
கொப்பாந்தேன் - கோற்றேன்.
கொப்பி - கொம்மை. [ல்.
கொப்பிகொட்டல் - கொம்மைகொட்ட
கொப்பு - கொண்டை, மயிர்முடி, மரக் கொம்பு, மாதர்காதணியிலொன்று.
கொப்புவாளி-மாதர்காதணியிலொன்று.
கொப்புளம் - குமிழ்ப்பு, சீய்ப்பொடி.
கொப்புளித்தல் - குமிழ்த்தல், கொப்புளமாதல், நீர் முதலிய குதித்தல், வாயால் நீரை யலசிக்கக்கல்.
கொப்புளிப்பான் - ஒரு சிறுவசூரி.
கொப்புள் - நாபி, குமிழ், கொப்புளம், கொப்பூழ்.
கொப்பூழ் - நாபி, உந்தி.
கொப்பூழ்க்கொடி - நஞ்சுக்கொடி.
கொப்பெனல் - விரைவின்குறிப்பு.
கொம்படித்தல் - கடா முதலிய போர் செய்தல், முதன்மைசெலுத்தல்.
கொம்பரக்கு - பொன்மெழுகு.
கொம்பர்-மரக்கொம்பு, விலங்கின்கொம்பு.
கொம்பன் - ஆண்யானை, ஒருநோய், ஒருமீன், கொம்புள்ளது.
கொம்பாபிள்ளை - அதிகார குடிப்பிறந்தோன்.
கொம்பிலிளங்கோதைநாயகி - திருவைகல்மாடத்திற் கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
கொம்பு - ஊதிடுகொம்பு, ஏரிக்கோடி, கோல், நந்து, மரக்கொம்பு, மேன்மை, விலங்கின்கொம்பு.
கொம்புகாவி - சிவியான்.
கொம்புக்குமண்ணெடுத்தல் - யானை முதலிய களிப்புக்கொண்டு கொம்பினால் மண்ணெடுத்தல்.
கொம்புதல் முயலுதல், மூர்க்கங்கொள்
கொம்புத்தேன்-கொம்பாந்தேன். [ளல்.
கொம்புபயறு - ஒருபயறு.
கொம்புப்பாகல் - ஒருபாகல்.
கொம்பேறிமூக்கன் } ஒருபாம்பு.
கொம்பேறிமூர்க்கன் }
கொம்மடி } ஒருகொடி, நீர்மொலாம்
கொம்மட்டி } பழம்.
கொம்மட்டிக்கீரை - ஒருகீரை.
கொம்மட்டிச்சுரை ஒரு சுரைக்கொடி.
கொம்மட்டிமாதளை - சீதளை.
கொம்மெனல் - அனுகரண வோசை, ஒலிக்குறிப்பு.
கொம்மை - அகங்கை விரித்துக்கொட்டல், அழகு, இளமை, கொந்தளம், கொம்மட்டி, திரட்சி, முலை, வட்டம், வலி.
கொய்-ஒருமீன், கொய்யென்னேவல்.
கொய்கை-அறுத்தல், கொய்தல், பறித் [தல்.
கொய்சகம் }
கொய்சுவம் } விடுந்தலைப்பு.
கொய்சுவனம் }

கொய்ச்சாளை - ஒருமீன்.
கொய்தல் - அறுத்தல், ஆய்தல், எஃகிவாங்குதல், கத்தரித்தல், சுருக்குதல், தெரிதல். [தல்.
கொய்துகட்டுதல் - நெரிபிடித்துக்கட்டு
கொய்துவாங்குதல் - எஃகிவாங்குதல்.
கொய்யகச்சட்டி - ஒருசட்டி.
கொய்யகம் - கொய்சகம்.
கொய்யடி - ஒருநாரை.
கொய்யா - ஒருமரம், நெய்வார் கருவியில் ஒன்று.
கொய்யாக்கயிறு - நெய்வார் கருவியில் ஒன்று.
கொய்யாக்குறிஞ்சி - குறிஞ்சிப்பண்.
கொய்யான் - பரணி. [யிர்.
கொய்யுளை - குதிரை, குதிரைப்பிடர்ம
கொய்யோ - சயக்குறிப்புச்சொல்.
கொய்யோர்க்கூறல் - வெற்றிகூறல்.
கொய்வு - கொய்தல்.
கொரவேஷசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கொராசானிஓமம் - குராசானிஓமம்.
கொரிக்கம் - எழுத்தாணிப்பூண்டு.
கொருடன் - கொவ்வை.
கொலு-இராசசமுகம், உல்லாசம், உல்லாசவீற்றிருப்பு, சேவை, கிமிர்ச்சி.
கொலுகொலுத்தல் - அசைதல், ஈடாடுதல்.
கொலுகொலுப்பு - ஈடாட்டம், உல்லாசம், சந்தோஷம்.
கொலுக்கூடம் - கொலுமண்டபம்.
கொலுசு - காலணியிலொன்று.
கொலுச்சாவடி } உல்லாச வீற்றிருப்பு மண்டபம்.
கொலுமண்டபம் }
கொலுவிருத்தல் - வீற்றிருத்தல்.
கொலுவிருப்பு - வீற்றிருப்பு.
கொலை - கொல்லுதல் அதுகாயத்தீக்குணம் மூன்றினொன்று, தாமதகுணத்து மொன்று, பஞ்சபாதகத்தும் ஒன்று.
கொலைகாரன் -கொலைசெய்வோன்.
கொலைக்களம் - கொல்லப்படுமிடம்.
கொலைசெய்தல் - கொல்லுதல்.
கொலைஞர் - கொலைபாதகர், சண்டாளர், வேடர்.
கொலைதல் - குலைதல்.
கொலைநினைக்கை-மனத்தீக்குண மூன்றினொன்று.
கொலைபாதகம் - பஞ்சபாதகத்தொன்று.
கொலைபாதகன் - கொலைத்துரோகி.
கொலைமறுத்தல் - ஒருநூல், ஜீவகாருணியம், கொலைவிலக்கல்.
கொலையிச்சைக்கிரகம்-ஒருவகைக்கிரகநோய். அது நாசியுயரல், நாக்கைக்கடித்தல், வெறிக்கவெறிக்கப் பார்த்தல், சிலவேளை தலையைத்தூக்கிப் பார்த்தல், கண்களில் நீர்வடிதல், மாறுரூபம், முகவிகாரம்,சரீரத்தில் மெலிவோடு துர்க்கந்தம், மலமூத்திரத்தைப் பிசைதல், மார்பிலடித்துக் கொள்ளுதல்,எதிரில்வருவாரையடித்தல், கத்திகள் தடிகள் முதலியவைகளாலெறிதல் அக்கினி குளம் கிணறுகியவைகளில் விழுதற்கேயோடுதல்முதலியதுர்ச்செய்கைகளையுண்டாக்குவதோடு தாகம், வயிற்றிலெரிவு, ஞாபகபங்கம், சலதாரைக்கும்பி, நாற்றவாந்தி, நவத்துவாரங்களிலுமிரத்த வீழ்ச்சிஎன்னுமிக்குணங்களை யுண்டாக்கும்.
கொலையுண்ணல் - கொலைப்படுதல்.
கொல் - அசைச்சொல் (உ-ம்) வருவர்கொல், ஐயக்கிளவி (உ-ம்) இவ்வருக்குற்றி கொல்மகன்கொல், கொல்லென்னேவல்,பஞ்சலோகம், வருத்தம்.
கொல்லச்சேவகர் - பொக்கிஷ காவற்
கொல்லத்து - சிற்பம். [காரர்.
கொல்லத்துவேலை-சிற்பவேலை கட்டடவேலை.
கொல்லம் - தேய மைம்பத்தாறினொன்
கொல்லர் - கம்மாளர், கருமார். [று.
கொல்லல் - கொல்லுதல்.
கொல்லறு - கரணை.
கொல்லன்கோவை - ஆகாச கருடன், காக்கணங்கொடி.
கொல்லன்பகை - அஞ்சனபாஷாணம்.
கொல்லாமற்கொல்லல்-நன்மை செய்கிறதாகத் தீமைசெய்தல்.
கொல்லாமை - இயமத்துறையைந்தினொன்று, அது கொலைசெய்யாமை.
கொல்லாவிரதம் - அருகசமய நெறியினொன்று. அது கொலைபண்ணாவிரதம்.

கொல்லாவிரதியர் - அருக சமயத்தார், கொல்லாவிரதம் பூண்டவர்.
கொல்லாவேதம் - சமணவேதம்.
கொல்லாவேதன் - அருகன்.
கொல்லி - ஒருபண், ஒருமலை, கொல்வோன், நெருப்பு, வில்.
கொல்லிச்சி - கொல்லத்தி.
கொல்லிடம் - கொள்ளிடம், ஒருநதி.
கொல்லிமழவன்-சம்பந்தரால் முயலகன் என்னும் நோய் தீரப்பெற்ற கன்னிகையினது தந்தை.
கொல்லியர் - வண்ணார்.
கொல்லியவராடி - வராடித் திறத்தில் ஒன்று.
கொல்லிவெற்பன் - சேரன்.
கொல்லுதல் - அலட்டல், சங்கரித்தல்.
கொல்லுலை - கம்மாளருலைமுகம்.
கொல்லெனல் - ஒலிக்குறிப்பு.
கொல்லை - குச்சு, சோலை, தோட்டம், புறக்கடை, பூந்தோட்டம்.
கொல்லைப்பல்லி - ஒருபூடு.
கொவிந்தம் - செம்முள்ளி.
கொவின் - ஒருமரம்.
கொவ்வை - ஒருகொடி.
கொவ்வைக்கனிமணி-கோவரங்கப் பதுமராகம்.
கொழிஞ்சி குளவஞ்சி, ஒரு நாரத்தை, பூவாது காய்க்குமரம்.
கொடிதமிழ் - வடிதமிழ்.
கொழித்தல் - ஒதுக்குதல், தெரித்தல், வாருதல்.
கொழிப்பு - குற்றம், கொழித்தல்.
கொழிப்பூண்டு - குப்பைமேனி.
கொழியல் - கொழிப்பு. தவிடெடுபடா தவரிசி.
கொழிற்பூண்டு - குப்பைமேனி
கொழு - காறு, கொழுவென்னேவல், மழு.
கொழுகொம்பு-கொடியேறுங் கொம்பு, தஞ்சம், நடுக்கொம்பு.
கொழுக்கட்டை - ஒரு பண்ணிகாரம், மோதகவல்லிமரம்.
கொழுங்கண் - கிருபைக்கண்.
கொழுங்கிரி - மல்லிகை.
கொழுச்சிராய்-கொழுவடுக்குஞ்சிராய்.
கொழுஞ்சி-கொழுமிச்சை, கொள்ளுக்காய் வேளை.
கொழுத - கோத.
கொழுதல் - கோதல்.
கொழுத்தல்-சரீரந்தெளிந்துபருத்தல், மதத்தல்.
கொழுத்தாடுபிடித்தல்-ஒரு விளையாட்டு.
கொழுநனை - மலரும் பருவத்தரும்பு.
கொழுநன்-எப்பொருட்கு மிறைவன், தலைவன், நாயகன், கணவன்.
கொழுநீர் - வியர்வை.
கொழுந்தன்-மணவாளனுடைய சகோதரன்.
கொழுந்தி - மணவாளியின் சகோதரி.
கொழுந்து - இளங்கிளை, தீச்சுவாலை, மாக்கொழுந்து, வெற்றிலைக்கொடி.
கொழுந்தின்கால்-கொழுந்தின் கொளு கொம்பு.
கொழுந்துதல் - சுவாலித்தல், வெய்யிலிற் கருகுதல்.
கொழுந்துவிடுதல் - சுவாலை விடுதல், தளிர்விடுதல்.
கொழுந்தொட்டி - ஒருபூடு.
கொழுப்பு-செழுமை, நிணம், மதர்ப்பு.
கொழுமரம் - செம்மரம்.
கொழுமிச்சை - கொழுஞ்சி.
கொழுமுறி - இளந்தளிர்.
கொழுமை-கொழுப்பு, செழுமைநிறம். வளமை.
கொழும்புகை - நறும்புகை.
கொழும்புவேர் - ஒருவேர்.
கொழுவு - கொழுகொழுப்பு.
கொளகொளத்தல் - ஈடாடுதல், தளர்தல், திரமற்றுப்போதல்.
கொளகொளெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு.
கொளஞ்சி - குளஞ்சிமரம்.
கொளல் - கொள்ளல்.
கொளல்வினை - கொள்ளும்வினை (உ-ம்) பயருண்டோவணிகீர்.
கொளுகொம்பு - ஆதாரவுகோல்.
கொளுகொளுத்தல்-கொளகொளத்தல்
கொளுக்கி - கொளுவி.
கொளுசு - குளைச்சு.
கொளுச்சொல் - கருத்து.
கொளுத்து - கொளுத்தென்னேவல், சந்து, மூட்டு.
கொளுத்துதல் - கலைகற்பித் தழுத்தல், தெருட்டுதல், பற்றவைத்தல், மூட்டுதல், வீணை முதலிய வாசித்தல்.

கொளுந்தல் - பற்றுதல்.
கொளுமீதி-இறைகொடுத்து மிஞ்சின தானியம்.
கொளுமுதல் - கொளுமீதி, செழிப்பு.
கொளுவம் - கோவைத் துறைவசனம்.
கொளுவல் - கொளுவுதல்.
கொளுவி - கொக்கை.
கொளுவுதல் - அகப்படுதல், அகப்படுத்துதல், கூட்டிக்கொள்ளுதல், கொளுவிவிடுதல், தொடுத்துக்கொள்ளல், மிதியடி முதலிய தொடுதல்.
கொளை - இசைப்பாட்டு.
கொள் - ஒருதானியம், குடைவேல், கொள்ளென்னேவல்.
கொள்கலம் - அணி, ஆடை, சாந்து முதலிய பெய்கலம், பாத்திரம், பிழா.
கொள்கை-அறிவு, குணம், கோட்பாடு, சினேகம், செய்கை.
கொள்வன } கொள்ளப் படுவது, கொள்வனவு } கொள்ளுதல், சிநேகம், விவாகசம்பந்தம்.
கொள்வினை - கொள்வனவு.
கொள்விலை - கொண்டவிலை.
கொள்வோன் - கற்போன், விலைக்கு வாங்குகிறவன்.
கொள்ள - நிகழ்கால விடைச்சொல் (உ-ம்.) அவன் வரக்கொள்ள.
கொள்ளட்டு - ஒருபூண்டு.
கொள்ளம் - குழைசேறு.
கொள்ளல்- பாத்திரமுதலியவற்றினுள்ளே யடக்குதல், மனதிலே பிடித்தல், வாருதல்.
கொள்ளாகொள்ளை } மிகுதி.
கொள்ளாக்கொள்ளை }
கொள்ளாமை-அடங்காமை, மனதிலே பிடியாமை.
கொள்ளார் - பகைவர்.
கொள்ளி - எருமைநாக்கி, நெருப்புறு விறகு.
கொள்ளிக்கட்டை - கொடியவன், நெருப்புக்கொள்ளி.
கொள்ளிக்கண்ணன் - கண்ணூறுகாரன்கொடியவன், கோபக்கண்ணுள்ள [து.
கொள்ளிக்கரப்பன்-ஒருகரப்பன்.
கொள்ளிக்காற்குதிரை-ஒருகால் வெள்ளையான குதிரை.

கொள்ளிக்கொட்டான் - கொள்ளிவாயெறும்பு.
கொள்ளிசெருகுதல் - தீமையை யுட்படுத்துதல்.
கொள்ளிடம்-கொள்ளடம், ஒருயாறு.
கொள்ளித்தேள் - ஒருதேள்.
கொள்ளியம்-உமிறி, புன்குமரம். [ம்பு.
கொள்ளியெறும்பு - கொள்ளிவாயெறு
கொள்ளிவட்டம் - கொள்ளி சுழற்றும் வட்டம்.
கொள்ளிவாய்ச்சர்ப்பம் - கொள்ளிவாய் விரியன்.
கொள்ளிவாய்ப்பிசாசம் } நெருப்புக் காலுமாவி.
கொள்ளிவாய்ப்பேய் }
கொள்ளிவாய்விரியன் - ஒருபாம்பு.
கொள்ளிவாலி-கருப்புடலும் வெள்ளை வாலு முள்ளது.
கொள்ளிவாலெறும்பு ஓரெறும்பு.
கொள்ளிவைத்தல் - தீங்குசெய்தல், பிணஞ்சுடல். [ல்.
கொள்ளு-கொள், கொள்ளென்னேவ
கொள்ளுக்காய்வேளை - ஒருகாய்வேளை.
கொள்ளுதல் - உள்ளே கொள்ளுதல், ஏற்றுக்கொள்ளுதல், கொண்டிருத்தல், சொல்லல், பற்றுதல், பெறுதல். மனதுக்கேற்றல், விலைக்குவாங்கல்.
கொள்ளை - ஒருநோய், கொள்ளையிட்ட பொருள், கொள்ளையெடுத்தல், மிகுதி.
கொள்ளைக்காய்ச்சல் - ஒருநோய்.
கொள்ளைக்காரர் - பரிகாரர்.
கொள்ளைசாற்றி - கொள்ளையூட்டி.
கொள்ளைநோய் - கோதாரி.
கொள்ளையடித்தல் }
கொள்ளையள்ளுதல் }
கொள்ளையாடுதல் } திருடுதல், பறித்தல்.
கொள்ளையிடுதல் }
கொள்ளையெடுத்தல் }
கொறகொறெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.
கொறடா - சவுக்கு.
கொறட்டை - ஒருசெடி.
கொறி - ஆடு, கொறியென்னேவல், செம்மறியாடு, மேடவிராசி.
கொறிக்குதல்-பல்முதலியவற்றாற் கோதுதல், பாம்பு முதலிய பலனரும்பல், பொறிதல்.

கொறிதலை - நிலவேம்பு.
கொறித்தல் } கொறிக்குதல்.
கொறிப்பு }
கொறு - கன்றுபாலூட்டாதபடி முகத்திற் கட்டுமியற்று.
கொறுகொறுத்தல் - கருகருத்தல், குறட்டைவிடுதல்.
கொறுகொறுப்பு - அலட்டு, குறட்டை.
கொறுகொறெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு.
கொறுக்கச்சி - எருவை, நாணல்.
கொறுக்காய் - ஒருமரம்.
கொறுகாயப்புளி - ஒருபுளி.
கொறுக்கை - உயிர்ப்பு, ஒருமீன், குறட்டை, நாணல், வலி.
கொறுக்கச்சி - கொறுக்கைப்புல்.
கொற்கை - மதுரைக்கருகில்ஓரூர். இது பாண்டியர்களின் பழைய இராசதானிகளுளொன்று சிலப்பதிகார கதாநாயகன் காலத்திலே இந்நகரத்திருந்த அரசன் வெற்றிவேற் செழியனென்பவன். இது இப்பொழுது மிகச் சிறிய ஊராக விருக்கின்றது இச்செழியனே வெற்றிவேற்கை யென்னும் அறநூலியற்றினேன். இவன் நல்லொழுக்கஞ் சிறந்தவன்.
கொற்கைவேந்தன் - பாண்டியன்.
கொற்றம் - அரசியல், கொத்தம், வளி, வெற்றி.
கொற்றவஞ்சி - வஞ்சித் திணைத்துறை யிருபதினுளொன்று. அது உலகத்துள்ளா ரெல்லாருந்தொழ வாளாலே வெட்டினனெனச் சொல்லிப் பண்ணின வீரக்கழலினை யுடைய அரசனது நன்மையைப் பெருக்கச் சொல்லுவது.
கொற்றவள்ளை - பகைவர், நாடழித்தல், வஞ்சித் திணைத்துறை யிருபதினுளொன்று. அது அரசன்கீர்த்தியைக் கொல்லிப் பகைவர் தேசம் கெடுவதற்கு வருந்துவது.
கொற்றவன் - அரசன். முடக்கொத்தான்.
கொற்றவுழிஞை - உழிஞைத் திணைத்துறை யிருபத்தெட்டனு ளொன்று. அது பகைவர் தங்காமற் பதியைக் கைக்கொள்வான் வேண்டிச் சேனையோடு கைவளர்ந்து சென்றது.
கொற்றவை - துர்க்கை, வெற்றி சிறந்தோன்.
கொற்றவைநிலை - வஞ்சித்திணைத்துறை யிருபதினு ளொன்று. அது நீண்ட தோளினையுடையவன் வெற்றிபெறுவானாக வெனச்சொல்லி நல்ல பொருள்களால் நிரம்பிய பாத்திரத்தை வெற்றியாக வெடுத்து அரசனுடைய பகைவரை முதுபுறங்காணும் துர்க்காதேவி நிலைமையைச் சொல்லுவது வெட்சித்திணைத்துறை பத்தொன்பதனுளொன்று. அது விளக்கத்தினின்றும் ஒழியாத வெற்றியான் மிக்க ஆயுதத்தை யுடையோளது இரக்கத்தினின்றும் ஒழியாத கருணையைச் சொல்லுவது.
கொற்றன் - கற்சிற்பன், வெற்றியாளன்.
கொற்றான் - ஒருகொடி.
கொற்றி - இளங்கன்றுப்பசு, ஒருபிசாசம், துர்க்கை, பசுவிளங்கன்றுவடுகி.
கொற்றியார் - பிரசவத்துக்குரிய தேவதை.
கொற்று - கொல்லத்துவேலை, கொற்றர், கொற்றென்னேவல்.
கொற்றுதல் - கொத்தல், கோதுதல்.
கொற்றை - இழிவான்.
கொனை - குனை.
கொன் - அச்சம், காலம், பயனின்மை, பெருமை.
கொன்றல் - கொல்லுதல்.
கொன்றை - கடுக்கைமரம்.
கொன்றைக்குழல் - ஊதுகுழலி னொன்று.
கொன்றைசூடி - சிவன்.
கொன்றைவேந்தன் - ஔவையார் செய்த நீதி சாத்திரம்.
கொன்னளர் - பாவிகள்.
கொன்னித்தல் - பேசநாத் திரும்பாதிருத்தல்.
கொன்னுதல் - கொன்னித்தல்.
கொன்னெச்சள் - மாட்டிலையான்.
கொன்னே - விகற்பமற.
கொன்னை - திருத்தமற்றபேச்சு, பேசநாத்திரும்பாமை.

# கோ



கோ - அம்பு, அரசன், ஆகாயம், ஆண்மகன், இடியேறு, இரக்கக் குறிப்பு, இலந்தை, உரோமம், எருது, ஓரெழுத்து, கண், கிரணம், கோவென்னேவல், சந்திரன், சூரியன், திசை, கோமேதயாகம், தேவலோகம், நீர், பசு, பசுப்பொது, பூமி, பொறிமலை, மாதா, மேன்மை, வச்சிராயுதம், வாணி, வெளிச்சம்.

கோகடம் - ஒருவகை முசல்.

கோகண்டகம், கோகண்டம் } நெருஞ்சில்.

கோகதேவம் - புரு.

கோகத்தி, கோகத்தியை } பசுக்கொலை.

கோநகம் - கோகநதம், தாமரைமலர்.

கோகநகை - சலசை.

கோகநதச்சவி - சிவப்பு.

கோகநதம் - செந்தாமரை, செவ்வாம்பல்.

கோகநதன் - சிவன்.

கோகநதை - கோகநகை.

கோகநதம் - கந்தபாஷாணம்.

கோகபந்து - சூரியன்.

கோகம் - உலர்ந்தபூ, சக்கரவாகப்புள், செந்நாய், தவளை, பல்லி, துணி, பேரீச்சமரம், மலைப்புளிச்சை.

கோகரணம் - ஒருவித்தை.

கோகயம் - தாமரை.

கோகருணம் - கோகன்னம்.

கோகருனை - பெருங்குரும்பை.

கோகர்ணநாயகி - திருக்கோகர்ணத்திலே கோயில்கொண்டிருக்குந் தேவியார்.

கோகர்ணம்-கோகன்னம். இது துளுவநாட்டிலுள்ள ஒரு பெரிய சிவக்ஷேத்திரம். இராவணன் தபசுசெய்து பிரமாவிடத்திலே வரம் வாங்கினவிடம்.

கோகர்ணேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.

கோகலி - கடம்பு.

கோகழி - குறுந்தமரம், திருவாவடுதுறை.

கோகனகச்சிலை - பதுமராகக்கல்.

கோகனத்தி - இலக்குமி, கலைமகள்.

கோகனகம் - செந்தாமரை.

கோகனகை, கோகனதை } இலக்குமி.

கோகனம் - கரிசாலை, செந்தாமரை, மலையாளக்கரையில் சிறந்த ஒரு சிவஸ்தலம், நிலக்கடம்பு, நிலவேம்பு.

கோகனுசனி - கோகனகத்தி.

கோகன்னம் - ஒருவித்தை.

கோகன்னவாதனம்-பசுவின்செவிபோலிரண்டு கையையுமடித்துச் சுகாதனமாய்ச் செவி கண் மூக்கு எல்லாம் புதைத்திருப்பது.

கோகானம் - வேய்ங்குழலோசை.

கோகிதம் - குதிகால்.

கோகிரகம் - அரசரில்லம்,ஆன்கொட்டில் போர்வென்றோர் கவர்ந்ததிரவியம்.

கோகிரந்தி - ஆண்கொட்டி, எருவராட்டி.

கோகிராசம் - பசுவிற்கு வாயுறைகொடுத்துச் செய்யுமோர் சடங்கு.

கோகிருட்டி - ஓரீற்றுப்பசு.

கோங்கிருதம் - ஆப்பி, பசுநெய், மழை.

கோகிலம் - இலந்தை, கரி, உலக்கை, கலப்பை, கிளி, குயில், குரங்கு, சிறுகுறிஞ்சா, பல்லி.

கோகிலவெலி - ஒருவகை யெலி. அது குயில்போற் புள்ளிகளைப் பெற்றிருப்பது, கடித்தால் கடிபட்டவருக்குக் கிரந்தியும் உக்கிரமான சுரமுந் தாகமுமுண்டாகும்.

கோகிலாட்சம் - கொம்மட்டிமாதளை, நீர்முள்ளி.

கோகிலாநந்தம், கோகிலர்வாசம் } மாமரம்.

கோகிலேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.

கோகிலோற்சவம் - மாமரம்.

கோகு - கழுதை, புயம்.

கோகுடி - ஒருவகைப்பூ.

கோகுத்தம் - மல்லிகை.

கோகுலம் - ஆண்கொட்டில், இடையரூர், காலிவருக்கம், குயில், குரங்கு, துளையுடைப்பொருள், பல்லி, யமுனநதி தீரத்திலே பிருந்தா வனத்துக்குச் சமீபத்திலுள்ள இடைச்சேரி, இது கிருஷ்ணன் வளர்ந்த இடம்.

கோகுலிகன் - பசுக்காத்தவன்.
கோகோசனம் - கோரோசனை.
கோகோட்டம் - பசுமடம், தொழுவம், ஆன்கொட்டில், ஆன்தொட்டில்.
கோகோயுகம் - ஒருசோடு எருது.
கோகோவெனல் - இரக்கக்குறிப்பு.
கோக்கள் - அரசர், சிறந்தோர், பசுக்கள், பெரியோர்.
கோக்குஞ்சம் - அம்பருத்தூணி.
கோங்கணம் - ஒருதேசம்,ஒருபட்சி,ஒரு
கோங்கணசுதன் - பரசிராமன். [மீன்.
கோங்கணை - பரசிராமன்றாய்.
கோங்கம் - ஒருபுட்பம், நடு, நெல்லி.
கோங்கினம் - ஒருதேசம்.
கோங்கிலவு } ஒருமரம், கன்னிகாரம்.
கோங்கு }
கோசகம் - குறி, முட்டை.
கோசகாரகம் - ஒருவிதக்கரும்பு.
கோசகாரம் - கரும்பு, தென்னமரம், பட்டுநூற்பூச்சி.
கோசக்கம் - குழப்பம்.
கோசக்கிரகம் - உள்வீடு.
கோசங்கம் - வைகறை.
கோசங்கியன் - இடையன்.
கோசநாசி - அலி.
கோசமம் - பெரும்பீர்க்கு.
கோசமம் - பீர்க்கு.
கோசம் - ஆண்குறி, உறை, கருகூலம், கருப்பை, கர்பாஷாணம், சத்திரம், சாதிக்காய், செல்வம், தெரு, பண்டாரம், புத்தகம், பொக்கிஷசாலை, மதிலுறுப்பு, முகை, முட்டை, மேற்போர்வை, கருவூலம்.
கோசரபலன் - கிருகபலனிதென்று.
கோசரம்-அடங்கல், அறியத்தக்கது, இராசி, ஊர், மகிழமரம், விடயம்.
கோசரன் - துறவி, சந்நியாசி.
கோசர் - கொங்குமண்டலத்தரசர், இவர் தங்கள் நாட்டில் கண்ணகிக்குத் திருவிழாச் செய்தவர்.
கோசலம்-தேசமைம்பத்தாறினொன்று அது அயோத்தியாதேசம். இத்தேசம் இக்ஷுவாகு வமிசத்தரசர்க்குரியது. இது ராமருக்குப் பின்னுள்ள காலத்திலே விந்திய பருவதத்துக்குச் சமீபத்தில் இன்னுமொரு கோசலமெனப்படுவதாயிற்று. பின்னைய கோசலத்துக்கு ராஜதானியாக ராமர் மகன் குசன் குசஸ்தலியென ஒரு பட்டணத்தை நிருமித்தான். பின்னையது தக்ஷிணகோசலம், நெருப்பு, பஞ்சகௌவியத்தொன்று, அது பசுமூத்திரம், பதினெண் பாடையினொன்று.
கோசலிகம் - கைக்கூலி.
கோசலை.இராமன்றாய்,கோசலதேசம்.
கோசவதி - பீர்க்கு.
கோசவம் - கோமேதகம்.
கோசனை - கோரோசனை, பேரொலி.
கோசன் - சீர்பந்தபாஷாணம், வலனுக்கும் புலைசிக்கும் பிறந்த புத்திரன்.
கோசாங்கம் - நாணற்புல்.
கோசாதகம் - பசுக்கொலை, மயிர்.
கோசாமி-ஒருதுறவி,திருவாணதவத்தி.
கோசாரம் - இராசி.
கோசாரி - பீர்க்கு.
கோசாலம் - அகங்கை, பசுமந்தை, ஆன்கூட்டம்.
கோசாலை - பசுமடம், ஆன்கோட்டம்.
கோசிகம்-சாமவேதம்,சீலை,பட்டுச்சீலை.
கோசிகன் - காதிமகாராசன் புத்திரனாகிய விசுவாமித்திரன். [கொடி.
கோசிகை - பிட்சாபாத்ரம், மல்லிகைக்
கோசு - இரண்டுகாததூரம்,கப்பலினோர் பக்கம், காரியம், தாமான்கயிறு, தெரு, தோல்வி, முறை.
கோசுகால்-பருமையின்றி நெடுகவளர்ந்தது.
கோசுபோதல் - தாழ்ச்சியாதல், தோல்விபோதல்.
கோச்செங்கட்சோழர் - சிவனடியார்களுளொருவர். இவர் சுபதேவன் என்னும் சோழராஜன் கமலவதியிடத்துப் பெற்ற புத்திரனார். கமலவதி இவரைப் பிரசவிக்கும் சமயத்தில் அங்கேசென்று கூடியிருந்த சோதிடர்கள் இப்பிள்ளை ஒருநாழிகை கழித்துப் பிறக்குமாகில் முப்புவனங்களையுமரசாளும் என்றுசொல்லக்கேட்டு அப்பிள்ளையை அச்சமயம் பிறக்கவொட்டாமல் அடக்கி யிருந்து ஒருநாழிகை கழிந்தபின் பெற்றாள். உரியகாலத்திற் பிறவாது உதரத்திற் கிடந்தமையால் அப்பிள்ளையினது

கண்கள் சிவந்திருந்தன. கமலவதி அப்பிள்ளையை நோக்கி "என் கோச்செங்கண்ணனே" என்று சொல்லிக்கொண்டு உடனே இறந்துவிட்டாள். அதுகாரணமாகவே கோச்செங்கட் சோழனெனப் பெயர்கொண்டார். இவர் பூர்வஜன்மத்திலே ஜம்புகேஸ்வரத்திலிருக்கும் சிவலிங்கத்துக்கு மேற்கட்டியிட்ட சிலந்தியென்னும் பெரியபுராணங் கூறும். இவர் சோழநாட்டிலே அநேக சிவாலயத் திருப்பணிகளும் சிதம்பரத்திலே தில்லைவாழந்தணர்களுக்குத் திருமாளிகைகளும் அமைப்பித்த சிவபக்தர். இவர் கோச்செங்கட் சோழநாயனாரெனப்படுவர். இவர் பாரதயுத்தமுடியும் வரையும் பாண்டவர்களுக்குத் துணையாயிருந்த தென்னாட்டரசர்களுள்ளே யொருவனாகிய சோழனுக்குப்பின்னே சமீபகாலத்திலே முடிசூடி அரசுபுரிந்தவரென்பது கலிங்கத்துப்பரணியால் நிச்சயிக்கப்படும். அதுவுமன்றித் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது தேவாரத்திலே இவர் எடுத்துக்கூறப்படுதலாலும் இவர்காலம் நாலாயிரத்தைஞ்ஞூறுவருஷங்களுக்கு முன்னுள்ளதாதல் வேண்டும். களவழி நாற்பதிலே பொய்கையாராற் பாடப்பட்டவரு மிவரே.

கோடகசாலை - ஒருபூடு.

கோடகம் - குண்டிகை, குதிரை, நாற்சந்தி, புதுமை, முடியுறுப்பினொன்று

கோடகன் - கூரையிடுவோன், வீடுவேய்வோன்.

கோடங்கி - வருங்காரியஞ் சொல்வோன்.

கோடங்கிழங்கு - கோடைக்கிழங்கு.

கோஷணை, கோடணை - ஒலி, கொடுமை, பேரொலி, வாச்சியப்பொது.

கோதரம் - நாமம், சுக்கு.

கோஷம், கோடம் - இரைச்சல், எல்லை, குடில், குதிரை, கோசம், கோட்டை, சங்கபாஷாணம், செங்கருங்காலி, செல்வம், தவளை, மாமரம், வளைவு.

கோடரம் - எட்டிமரம், குதிரை, குரங்கு, சோலைதேர்மொட்டு, மயிர்ச்சாந்து, மரக்கொம்பு, மரப்பொது, மரப்பொந்து.

கோடரி - கோடாலி, துர்க்கை, நிருவாணி.

கோடரோகம் - ஒருவகைநோய். அது உத்கோட ரோகத்திலுள்ள நமைச்சல், முதலிய குணங்களைப் பெற்று விசேஷமாய்ப் படருகின்ற பலவிதத் தேமல்களை யுண்டாக்குவது.

கோடல் - கொள்ளல், மனங்குன்றல், வளைதல், வெண்காந்தள்.

கோடவதி - வீணை.

கோடவி - துர்க்கை, நிருவாணி.

கோடன் - கால்நொண்டி.

கோடா - அரக்குமண்டி, சாராயவண்டல்.

கோடாகுளிகை - ஒருமருந்து.

கோடாகோடி - அளவின்மை, பதுமம், மகாகோடி.

கோடாங்கி - கோடங்கி, வரிப்புடைவை, வேஷக்கூத்து.

கோடாசுழி, கோடாசூரி - கோடகசாலை.

கோடாசொரி - ஒரு பாஷாணம்.

கோடாநீர் - தடிப்பில்லாதநீர்.

கோஷாபகரணம் - செல்வங்களை யபகரித்தல்.

கோடாய் - செவிலித்தாய்.

கோடாரி, கோடாலி - நவியம்.

கோஷி - மாமரம்.

கோடி - இருபதுகொண்டது, இளமை, கொள்தி, கோடியென்னேவல், சீலை, நூறுலட்சம், புதுச்சீலை, புதுமை, முடியுறுப்பு, முனை, மூலை, வாள்வினை, விற்குதை வீட்டின்பின்பக்கம்.

கோடிகம் - அணிகலச்செப்பு, இந்திரகோபம், கெண்டிகை, சீலை, பூந்தட்டு.

கோடிகாண்பித்தல் - சுருங்கச்சொல்லி விளக்குதல்.

கோடிக்கரை - வேதாரணியத்துக்குசமீபத்திலுள்ள ஒரு கடற்றுறையூர்.

கோடிக்கல் - மூலைக்கல்.

கோடிசம் - மண்ணாங்கட்டி யுடைக்குந் தடி முதலியன.

கோடிஜித் - காளிதாசன்.

கோடிசுரேசுவரர் - திருக்கோடி காவிலேகோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.

கோடிதீர்த்தம் - இராமேசுரத்திலுள்ள தீர்த்தங்களில் ஒரு பிரதான தீர்த்தம், தனுக்கோடி.
கோடிதூங்கி-வீட்டுக்கு வீடுபோயிருக்கிறவன்.
கோடித்தரை-புதுச்செய்கை பூண்டதரை.
கோஷித்தல் } கோஷமிடல், அலங்கரித்தல். ஒலித்தல், பிரார்த்தித்தல், புதுப்பித்தல்.
கோடித்தல் }
கோடிப்பருவம்-வாலைப்பருவம்.
கோடிமுத்தல்-ஒரு விளையாட்டு.
கோடியர் - சிவிகை முன்கொம்பின் முன்னும் பின்கொம்பின் பின்னும் நிற்போர், நாடகர்.
கோடியுடம்பு-இளையாவுடம்பு.
கோடிரம்-கீரி.
கோடிரவம்-சதுரக்கள்ளி.
கோடிலம்-கோட்டம்.
கோடிவயது-வாலைப்பருவம்.
கோடிவர்ஷம்-வாணன்பட்டணம்.
கோடிவற்சம்-வாணபுரம்.
கோடீசம் - மண்ணாங்கட்டி யுடைக்குந்தடி முதலியன.
கோடீரம்-இந்திரகோபம், கீரி, சடை, இந்திரன்வில், கிரீடம், இந்திரன்.
கோடீவர்ஷம்-கோடிவர்ஷம்.
கோடு-அரணிருக்கை, அறை, ஊதிடுகொம்பு, கூட்டம், கோடென்னேவல், சங்கு, சுழி, திரள், நத்தை, நீர்க்கரை, பக்கம், மரக்கொம்பு, மலையினுச்சி, வஞ்சனை, வட்டம், வரம்பு, வரி, வரிசூழ்ந்தவிடம், வளைவு, விலங்கின் கொம்பு.
கோடுகடைத்தொழில் - யானைக்கோடு முதலியவற்றைக் கடையுந்தொழில்.
கோடுதல்-எரிதல், குறுவுதல், நெறிதப்புதல், வளைதல்.
கோடுமுத்தம்-சங்கிற் பிறந்த வெள்ளைநிறமுத்து.
கோடேந்துமுலையம்மை - திரு இலம்பயங் கோட்டூரிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
கோடைஷ-சத்தம், சம்பாஷணை.
கோடை-ஒளி, ஒரு கிழங்குப்பூடு, காற்று, குதிரை, செங்காந்தள், முதிர் வேனிற் பருவத்தின்காற்று, மேல் காற்று, வெண்காந்தள், வெயில், வேனிற்காலம்.
கோடைக்காற்று - முதிர்வேனிற் பருவத்தின் காற்று, மேல்காற்று.
கோடைக்கிழங்கு-சிற்றரத்தை.
கோடைக்குவாடன்-ஆவிரை.
கோடைப்போகம் - கோடைப் பிரயோசனம்.
கோடையடிபடுதல்-வெய்யிலி லடிபடுதல்.
கோடைவாகளி-சிறுசெருப்படை.
கோட்காரன்-கோட்சொல்வோன்.
கோட்கூறு-இராசியை முப்பதாகப் பகிருதல்.
கோட்சொல்லல் - குண்டணி சொல்லல், அது வாக்கின் தீக்குணம் நான்கில் ஒன்று.
கோஷ்டகம் - சொந்தம், நீர்த்தொட்டி, பண்டகசாலை பொக்கிஷம்.
கோட்டகம்-குளம், கோயில்.
கோஷ்டபாலன் - பொக்கிஷக்காரன், பொக்கிஷக் காவற்காரன்.
கோஷ்டம்-ஆரவாரம், பசுமடம், பசுத்தொழுவம், ஆன்கொட்டில், ஒரு மருந்துப்பூடு, கூட்டம், கோயில் பசுக்கூட்டம், தேவலோகம், வாசனைப் பண்டம், வீணை.
கோட்டம் - அநீதம், அழுக்காறு, ஆன் கொட்டில், இடம், ஒருமருந்து அது பஞ்ச விரையினொன்று, கடற்கொந்தளிப்பு, குராமரம், குளம், கூட்டம், கோணல், கோயில், சுடுகாடு, தேவலோகம், பசுமடம், தொழுவம், நாடு பசுக்கூட்டம், மருதநிலத்தூர். மாவிலிடுங்கோலம், வயல், வளைவு, வாசனைப்பண்டம், வாட்டரவு, வீணை.
கோட்டரம்-குரங்கு, கொல்லை, நீர்நிலை.
கோட்டரவு-குறுவுதல், துக்கம், வாட்டம்.
கோட்டல்-எழுதல், வளைத்தல்.
கோட்டவீபுரம்-வாணசுரன்நகரம்.
கோஷ்டாகாரம்-பொக்கிஷசாலை.
கோட்டாக்கினி-மூலாக்கினி.
கோட்டாரம்-கிணறு, நாற்சதுரத்துரவு. தாமரைத்தடம், மரம்.
கோட்டாரி-கல்லாரை.
கோட்டாலை-உலை, கஸ்தி, கிரீயை, துன்பம்.
கோட்டான்-ஒருபுள், கூகை.

கோஷ்டி - கூட்டம், கோபுரவாயில், சபை, நிந்தை, பகிடி.
கோட்டி-அழகு, உலைவு, கூட்டம், கோட்டாலை, கோபுரவாயில், சம்பாஷணை, சவை, துன்பம், நிந்தை, பரிகாரம்.
கோட்டியம்-வியப்பு, அதிசயம்.
கோட்டியாழ்-நால்வகையாழினொன்று
கோட்டில்வாழ் விலங்கு-அணில் குரங்கு முதலியன.
கோட்டுதல்-கொட்டல்.
கோட்டுநீறு-கிளிஞ்சில்நீறு.
கோட்டுப்பூ-நால்வகைப் பூவினொன்று.
கோட்டுமண்ணெடுத்தல்-யானை முதலியன களிப்படைந்து கோட்டினால் மண் கிண்டல்.
கோட்டுமலை-யானை, வெண்கல்மலை.
கோட்டுமா-பன்றி, யானை, கிடா.
கோட்டுமுத்து-யானைக்கோடு முதலிய கோட்டில் உண்டாகும் முத்து,
கோட்டுவான்-ஒரு நீர்ப்புள், கோட்டான்.
கோட்டை-அரண், இருபத்துநாலு மரக்கால் கொண்ட ஓரளவை, நெல்விலோர் தொகை, பரிவேடம், பூட்டினோருறுப்பு.
கோட்டைகட்டுதல் - கோலிகை கட்டுதல்.
கோட்டைக்கட்டு - அணிவகுப்பில் ஒன்று.
கோட்டைபிடித்தல் - இராச்சியம் பிடித்தல்.
கோட்டைபோர்-வைக்கோற்பட்டை.
கோட்படுதல் - கொள்ளப்படுதல், கோளாறடைதல், பிடிக்கப்படுதல்-
கொட்படுத்தல்-கோளாறடையச் செய்தல்.
கோட்பதம் - குளம்பின்சுவடு, மாட்டுக்குளம்.
கோட்பறை-நெய்தற்பறை.
கோட்பாடு-அனுசரிப்பு, கொண்டிருக்குந் தன்மை, நிலைமை-
கோட்பு-கொள்ளுதல்.
கோட்புலிநாயனார் - சிவனடியார்களுள் ஒருவர், இவர் சோழநாட்டிலே நாட்டியத்தான் குடியிலே வேளாளர் குலத்தில் திருவவதாரஞ் செய்து சேனாதிபதியாகிய அரசன் கொடுக்கும் வேதனத்தைக் கொண்டு சிவாலய பூசைக்கு நெல்வாங்கிக் கட்டி வைத்துவிட்டு அரசனேவலினாற் போர் முனையிற் சென்றிருந்தபோது அந்நெல்லை ஆணைகடந்து எடுத்துண்ட சுற்றத்தாரையெல்லாம் மீண்டுவந்து தமது வாளினாலே துணித்துத் திடபக்தியை நாட்டிச் சிவானுக்கிரகம் பெற்றவர்.
கோணங்கி விஷ்ணுவின் கூத்து, கோமாளி, ஒருநாடகம்.
கோணங்கித்தாசரி-கோணங்கிதாதன்
கோணங்கியம்மை-ஒருநோய்,
கோணபம்-நிருருதி.
கோணமலை-திரிகோணயலை.
கோணம் - இயந்திரத்தண்டுறுப்பில் ஒன்று, குணில், குதிரை, சனி, செவ்வாய், திசை, தூரம், மூடுக்குத்தெரு, மூக்கு, மூலை, யானைத்தோட்டி, வளைந்தவாள், வளைவு, வீணையியக்கும் வில்.
கோணலயம்-அறிவாள்.
கோணல்-கூன், மாறுபாடு, வளைவு.
கோணன்-கூனன்.
கோணுக்கிணக்கி-சிற்றாத்தை.
கோணுசுவன்-யமன்.
கோணுமலை-திரிகோணமலை.
கோணுமுகல்-கழியிருக்கை,
கோணுய்-ஆணரி, ஓனாய்.
கோணி-அத்தி, இருதூணி என்னும் ஓரளவை, ஒருசரக்கு, கந்தை, பதினாயிரங் கோடாகோடி, பன்றி.
கோணிகை } பை.
கோணியல் }
கோணீசுவரர் - திருக்கோணமாமலையிலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
கோணுதல்-வாட்டமடைதல், வளைதல்.
கோணேசுவரர் - திருக்குடவாயிலிற் கோயில்கொண்டிருக்குஞ் சுவாமி.
கோணை-வலிமை, அழிவின்மை, கொடுமை, பீடை.
கோணைக்களிறு - பலமுள்ள இளம் யானை.
கோணைமாதம்-மார்கழிமாதம்.
கோண்-கரகங்கெண்டி முதலியவற்றின் மூக்கு, கொடுங்கோன்மை, கோணென்னேவல், நேரின்மை, மாறுபாடு, வளைவு-
கோண்டம்-குறிஞ்சா, தூக்கு, நெருஞ்சில்.

கோண்டன்-கீழ்மகன், கொப்புழன்.
கோண்டை-இலந்தை, இலந்தைக்கனி, கழுகு.
கோதண்டபாணி-இராமச்சந்திரன்,
கோதண்டம்-கண்ணிமை, பள்ளிச்சிறுவர் கண்டனையிலொன்று, வில்.
கோதந்தி-கருப்பு, தாடை.
கோதமந்தி-கோதாவரி.
கோதமம்-ஒருதீவு.
கோதமனார்-ஒருபுலவர்; இவர் கடைச்சங்கத்திருந்தவர், கௌதமமஹருஷி.
கோதமன்-கௌதமன்.
கோதம்-சீதாங்கபாஷாணம்.
கோதல்-கொந்தல், கோதுதல்.
கோதனம்-பசுக்கூட்டம், பசுமடி, பசுவின் கன்று.
கோதன்னம்-பசுவின் கன்று.
கோதா-உடும்பு.
கோதாட்டம்-கோட்டி.
கோதாட்டு-சீராட்டு.
கோதாட்டுதல்-ஆராட்டுதல், கோட்டி பண்ணுதல்.
கோதாரணம்-கலப்பை, மண்வெட்டி.
கோதாரி-பெருவாரிநோய்.
கோதாவரி-ஓர்யாறு, அது சத்த நதிகளில் ஒன்று, விருத்த கங்கை.
கோதாவரீசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கோதாவிரி-கோதாவரி.
கோதானம்-பசுத்தானம்.
கோதி-கோதுமை, நெற்றி, முதலை.
கோதிகை-உடும்பு, முதலை.
கோதிமுடித்தல்-மயிர்ச்சீவிக்கட்டுதல்.
கோதீசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கோது-ஒடு, குற்றம், கோதென்னேவல், சக்கை.
கோதுகுலம்-சீராட்டு.
கோதுதல்-கோதல், துளைத்தல், மயிர்வகிர்தல்.
கோதுமம்-கோதுமை, தேன்தொடை.
கோதுமை } ஒரு தானியம்.
கோதும்பை } ஒரு தானியம்.
கோதேரன்-காவற்காரன்.
கோதேனு-பாற்பசு.
கோதை-ஒழுங்கு, ஒருகட்பறை, காற்று, கௌதமநதி, சத்திசாரணை, சேரன், நெற்சுமை, பூமாலை, பெண், பெண்மயிர், முன்கைத்தோற்கட்டு.
கோதைமாதவி - மாலைபோலப் பூக்குங் குருக்கத்தி.
கோத்தந்தம்-மாட்டுக்கொம்பு.
கோத்தல்-கதைகட்டுதல், போக்குதல். தொடுத்தல்.
கோததனம்-நாற்பது சரமுள்ள முத்துமாலை.
கோத்தனி } திராட்சப்பழம், முந்திரிகைக்கொடி.
கோத்தனிகை } திராட்சப்பழம், முந்திரிகைக்கொடி.
கோத்தானம் - பசுமடம், மாட்டுத்தொழுவம்.
கோத்திரங்கள் - மரபுக்கள் இவைகள் அநேகம். அவற்றுட் சீஷபரம்பரையையும் சில புத்திர பரம்பரையையும் தெரிவிக்கும். இவைகளை இவ்வளவென்று கணிக்க வேலாது. ஆயினுமவற்றுள் முக்கியமாகியவை ஐம்பது அவையாவன—காசிப, பாரத்துவாக, அரித, கவுண்டியனிகவுசிக, வசிஷ்ட, கவுதம, காக்கேய, ஸ்ரீவத்ச, ஆத்திரேய, முத்கல, சடமருஷணுதிகள். அவற்றுள் ஒவ்வொன்றில் உட்பிரிவு அநேகம், இன்னுமவைகள் ஏகாறிஷேயம், துவயாரிஷேயம், திரயாரிஷேயம், பஞ்சாரிஷேயமாகவு மிருக்கும்.
கோத்திரமின்மை - கடவுளின் எண்குணத்தொன்று.
கோத்திரம் - காடு, குடை, குலம். இது கடவுட்குத் தகாத வெண்குற்றத்தொன்று, செல்வம், தெரு, தொட்டிப்பாஷாணம், நெட்டிப்புல், பூமி, மலை, வரகு, வர்க்கம், விருத்தி.
கோத்திரவம் - கோசலம், வரகு.
கோத்திரி } முந்திரிகைக்கொடி.
கோத்திரிகை } முந்திரிகைக்கொடி.
கோத்திரை - பூமி, மலை.
கோத்தை - அந்தகன், குருடன், பீளையன்.
கோநகம் - ஒருபாம்பு.
கோநாதன் - இடபம், கிருஷ்ணன், இடையன்.
கோநாய் - ஆணரி, தோண்டான்.
கோநிலயம் - அரசமனை.
கோந்தளங்காள்-குறுதேங்காய், சமுத்திராப்பழம்.
கோந்தனை - பேய்க்கொம்மட்டி.

கோந்தி - குரங்கு.
கோந்து - பிசின்.
கோந்துரு-குடாசகம், கோளாறு, பாட்டனது பாட்டன்.
கோபகன் - கோபன்.
கோபகன்னிகை - இடைச்சி.
கோபகுண்டம் - எட்டிமரம்.
கோபக்காரன் } கோபி.
கோபக்கிரமன் } கோபி.
கோபங்கம் - சரகாண்ட பாஷாணம்.
கோபச்சுரம்-ஒருவகைச்சுரநோய். அது தலைநோவு, அதிகசுரம், சரீரப்பதைப் பாகிய இக்குணங்களை யுண்டாக்கு வது, அக்காலங்களிற் பித்தமதிகரித் திருக்கும்.
கோபச்சுவாலிதம் - பெருங்கோபம்.
கோபணை - கவண்.
கோபதாபம் - பெருங்கோபம்.
கோபதி - அங்கிரசன் வமிசத்தனாகிய ஓரக்கினி, இடபம், இந்திரன், சிவன், சூரியன்.
கோபதீத்தம் - பெருங்கோபம்.
கோபத்திரம் - தாமரைநூல்.
கோபநிரமணி - சாதுரங்கப்பதுமராகம்.
கோபம் - காத்தல், சடத்தீயினென்று. அஃது சினம், தம்பலப்பூச்சி, துத்த பாஷாணம், பாவனைசெய்தல், வெறுப்பு.
கோபராஷ்டிரம் - கொங்கணத்துக்குத் தெற்கிலுள்ள தேசம்.
கோபர் - கிருஷ்ணன் வளர்ந்த சேரியிலுள்ள இடையர்கள்.
கோபவல்லி - ஒரு கொடி.
கோபனம்-இரகசியம், தற்காத்தல், நிந்தை, வெளிச்சம்.
கோபனீயம் - இரகசியம்.
கோபனை - கோபமுள்ளவள்.
கோபன் - அதிகாரி, இடையன், காப்போன்.
கோபாக்கினி - மகாகோபம்.
கோபாடவிகன் - இடையன்.
கோபாட்டமி - கார்த்திகைமாதத்துப் பூருவபக்கத் தட்டமி.
கோபாயகன் - காப்போன்.
கோபாயிதம் - காப்பாற்றல்.
கோபாலகன் - இடையன், கிருட்டிணன், சிவன், பசுக்காப்போன்.

கோபாலக்கிருஷ்ணன் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய காவளம்பாடியிற் கோயில்கொண்ட விட்டுணு.
கோபாலர்-அரசர், இடையர்.
கோபாலன் - இடையன், கண்ணன்.
கோபாலி - சேலத்தில் வழங்கும் ஒருவித நாணயம்.
கோபாலிகை - இடைச்சி.
கோபானன்-யயாதிபுத்திரனாகிய துருவசன் பௌத்திரன்.
கோபி - ஒருமண், கருநொச்சி, கோபியென்னேவல், கௌரி பாஷாணம், சினமுள்ளோன், நன்னாரி.
கோபிகள் - கோபிகாஸ்திரீகள்.
கோபிகாஸ்த்ரீ } இடைச்சி.
கோபிகை } இடைச்சி.
கோபிகைகள் - கிருஷ்ணன் வளர்ந்த சேரியிலுள்ள இடைப்பெண்கள். இவர்கள் பதினாயிரவர்கள். பூர்வ ஜென்மத்தில் விஷ்ணுவுக் கடியார்கள். அவ்வாசனையால் கிருஷ்ணனையணைந்துசுகித்தவர்கள். கிருஷ்ணன் தன் மாயாவல்லபத்தால் ஏககாலத்தில் அப்பதினாயிரவர் வீடுகள் தோறுஞ்சென்று வைகி அவர்களைக் கலந்து விளையாட்டயர்ந்துபோவன். ஒருநாள் இவர்கள் யமுனைநதியிலே நீராடி நிற்பக்கண்டு அவர்களெலருமாறுவைத்த வஸ்திரங்களையெல்லாம் கிருஷ்ணன் கவர்ந்துபோய் ஒருமரத்திலேறிக்கொண்டான். அதுகண்ட அப்பெண்கள் நீரினுள்ளே கண்டத்தளவும் தமதுடலை மறைத்துநின்று கைகளைச் சிரமேற் குவித்து வஸ்திரங்களைத் தருமாறு அவனை யிரந்தார்கள். கிருஷ்ணன்யாவரும்கரையேறி வந்து இருகரங்களையும் சிரமேற் கூப்பி நின்று வேண்டினால் தருவேன் எனக்கூறி அவ்வாறுசெய்தபின் அவ்வஸ்திரங்களை மீளக்கொடுத்தான்.
கோபிசந்தனம் - கோபி.
கோபிட்டன் - கோபக்காரன்.
கோபிதம் - கோபம்.
கோபிதாரம் - குராமரம்.
கோபித்தல் - வாக்கின்றீக்குணம் நான்கினொன்று. அது சினத்தல்.
கோபியர் - கோவியர்.

கோபிரண்டை - ஒருபிரண்டை.
கோபிலன் - காவற்காரன்.
கோபினை - கோபம்.
கோபீதம் - சுத்ததலம்.
கோபிச்சம் - பசுவால்.
கோபுரக்கல் - செங்கல்.
கோபுரத்தும்பை - அடுக்குத்தும்பை.
கோபுரந்தாங்கி-ஒருபூடு,கோபுரத்தைத் தாங்குவதுபோலச் செய்திருக்கும் ஒரு பிம்பம்.
கோபுரம் - கோயிலின்வாயில், நகரின் வாயில்.
கோபுரவாயில்-கோபுரத்தோடுங் கூடிய வாயில்.
கோபுருட்டம் - ஆப்பி, சாணம்.
கோபேந்திரன் - கிருட்டிணன்.
கோப்பியகன்-வேலைக்காரன், அடிமை.
கோப்பியம் - இரகசியம், கண்ணியம், காத்தல், கோலம், மறைத்தல்.
கோப்பியன் - கோப்பியகன்.
கோப்பியாதி - ஈடு.
கோப்பு - உல்லாசம், கோத்தல், பெருமைக்குணம்.
கோப்பெருஞ்சோழன்-உறையூரிலிருந் தரசியற்றிய சோழருள் ஒருவன். இவன்மிக்க புலமையுடையவன் பிசிராந்தையரர்க்கு உயிர்த்தோழன்,தன்னோடுமுரணிய புத்திரர்மீது போர்க்கெழுந்தபோது புல்லாற்றூர் எயிற்றியனூரற் பாடிக் கோபந் தணிக்கப்பட்டவன், சிலகாலஞ் சென்றபின்னர்த் துறவுபூண்டு உத்தரநாட்டிலிருந்து பிசிராந்தையாரோடு சுவர்க்கம் புகுந்தவன்.
கோப்பெருந்தேவி - நெடுஞ்செழியன் மனைவி. இவள் தன் கணவன் கண்ணகிக்கு வழக்கில் தோற்று இறந்தமை தெரிந்து உடனே உயிர் விட்டவள். இவளை அறக்கற்புடையாளென்பர்.
கோமகள் - இராசகுமாரத்தி, தலைவி.
கோமகன் - அரசன், இராசகுமாரன், தலைவன்.
கோமட்டி-கோமுட்டி, ஒரு சாதியான்.
கோமணம் - கௌபீனம், கோவணம்.
கோமணாண்டி-கௌபீனத்துடன் திரியும் பரதேசி.

கோமணிக்குன்றம் - வெண்கலமலை.
கோமண்டலம் - பூமி.
கோமளதல்லிகை - நற்பசு.
கோமதி-ஒருதெய்வம், ஒருமதி. இது இமயத்திலுற்பத்தியாகிகோசலதேசவழியாய் ஒழுகிக் கங்கையிற் கலப்பது.
கோமதீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கோமதை - கோமதி, அயோத்தியில் ஒரு நதி.
கோமம் - ஈரல்.
கோமயம்-ஆப்பி, சாணம், ஆவிற்குரிய தன்மை. அது பஞ்ச கௌவியத்தொன்று.
கோமயவருணம் - கோமேதகம்.
கோமரம் - சதுரக்கள்ளி.
கோமலகம் - தாமரை நூல்.
கோமலகிதம் - இன்னிசைப்பாட்டு.
கோமலதை - மிருது.
கோமலம் - அழகு, சீவன் கையிலுள்ள மான், நீர், பேய்த்தேர், மிருது, வசந்தகாலம்.
கோமலை - திராமலை.
கோமளகாந்தாரம் / கோமளதைவதம் / கோமளநிஷாதம் } பன்னிரு சுரங்களுளொன்று.
கோமளம்-இளமை, இளமைச்செவ்வி, குருகு சந்தோஷம், பசு.
கோமளரிஷபம் - பன்னிரு சுரங்களுள் ஒன்று.
கோமளவல்லி-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருக்குடந்தையிற் கோயில்கொண்ட இலக்குமி.
கோமளவல்லிநாய்ச்சியார் - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருவெஃகாவிற் கோயில்கொண்ட இலக்குமி.
கோமாட்டி - தலைவி.
கோமாமிசபட்சணி - மாட்டிறைச்சி புசிப்பவன்.
கோமாமிசம் - மாட்டிறைச்சி.
கோமாயு - நரி.
கோமாரி - ஒருநோய், பசுக்கோதாரி.
கோமாளம்-கொண்டாட்டம், சந்தோஷம், பரிகாச விளையாட்டு.
கோமாளி - சமாளக்காரன்.
கோமாள் - தலைவி.

கோமான் - அரசன், குரு, தலைவன் பன்றி, பெருமையிற் சிறந்தோன்.
கோமியவண்ணம் - கோமேதகம்.
கோமிலாய் - காட்டுக்குணன்.
கோமுகம்-கோமுகாதனம், கோமுகை.
கோமுகன் - சாகல்லியன் சீஷன்.
கோமுகாதனம் - சகனப்பக்கத்தி லிரு காற்பரட்டையும் மாறவைத்தவ்விரு காற் பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல்.
கோமுகை-பசுமுகமாய்ச் செய்யப்பட்டு அபிஷேக நீர் வரும்வழி.
கோமுட்டி - ஒருசாதியான்.
கோமுதிதீர்த்தம் - நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்றாகிய துவாரகையிலுள்ள வோர் புண்ணிய தீர்த்தம், திருவாவடுதுறையிலுள்ள பிரதான தீர்த்தம்.
கோமூத்திரம் - கோசலம்.
கோமூத்திரி-ஒருமிறைக்கவி; அதுஇருவரி நேரேயெழுதி மேல்வரியுங் கீழ்வரியும் மாறி வாசிக்கச் செவ்வேகவியாய் வரத்தொடுப்பது.
கோமூத்திரிகை - ஒருபுல்.
கேமேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கோமேதகம் - நவமணியினொன்று.
கோமேதம் - ஒருயாகம், கோமேதகம்.
கோமேதேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கோம்பல்-சினக்குறிப்பு, பெருங்கோபம்.
கோம்பறை - ஒன்றுமற்றது.
கோம்பி - ஒந்திப்பொது, பச்சோந்தி.
கோம்பிவிளங்கோதைநாதர் - திருவைகல்மாடத்திற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
கோம்புதல் - கோபித்தல்.
கோம்பை - தேங்காய் முதலியவற்றின் கதம்பை.
கோயாணம் - பண்டி.
கோயிலார்-கோயிற்பணிவிடைக்காரர்.
கோயிலாள் - இலக்குமி.
கோயில்-அரசன்மனை, இலிங்கசம்புடம், சிதம்பரம், சிரங்கம், தேவாலயம், விபூதிப்பை.
கோயில்கொள்ளல்-குடிகொள்ளல், தங்கிவாழ்தல்.
கோயில்வலம்வரல் - ஆலயப் பிரதக்ஷணம். அது காயநற்குணம் மூன்றில் ஒன்று.
கோயிற்கணக்கு-அவ்வவ்வூருக்குச் சனங்களைச் சேர்த்தெழுதிய புத்தகம்.
கோயிற்பழக்கம் - சபைப்பழக்கம்.
கோயிற்பற்று - ஊர்.
கோயிற்பிரதிட்டை - கும்பாபிஷேகம்.
கோயிற்புராணம் - சிதம்பர மான்மியத்தில் ஒன்று.
கோயின்மகிமை - கோயிற்காகத் தண்டப்படுந் தருமப்பணம்.
கோயின்மானியம் - கோயிற்கென்று விடப்பட்ட பூமி.
கோய் - பரணி.
கோரகம் - இளம்பூவரும்பு, நாளம், வட்டில்.
கோரகை - அகப்பை, இளம்பூவரும்பு, குயில்.
கோரக்கநாதர், கோரக்கர் - ஒரு சித்தர்.
கோரக்கர்மூலி - கஞ்சா.
கோரங்கம் - நெல்லி.
கோரங்கி - ஏலம், ஒருபூண்டு, ஒருமருந்து கோதாவரிசில்லாவில் ஒரு துறைமுகப் பட்டணம்.
கோரசம் - கவுதாரி, சிவல்.
கோரட்சகன், கோரட்சன் - சிவன், பசுக்காப்பவன்.
கோரணி - ஆசியம், ஒருநோய், கோளாறு, சட்டை, செய்கைச்சித்திரம், விற்பன்னம்.
கோரணிக்காரன்-ஆசியக்காரன்.
கோரண்டம் - குறிஞ்சி, செம்முள்ளி, மருதோன்றி.
கோரண்ணம் - பெருங்குறிஞ்சி மருதோன்றிமரம்.
கோரதந்தம் - பாம்பின் நச்சுப்பல், வக்கிரதந்தம்.
கோரத்தூஷம் - வாகு.
கோரபுட்பம் - வெண்கலம்.
கோரப்பல் - பாம்பின் நச்சுப்பல்.
கோரம்-அச்சம், உட்டணம், குதிரை, கொடுமை, கோளகபாஷாணம், சீக்கிரம், சோழன் குதிரை, நஞ்சு, வட்டில், வளைவு.
கோரம்பர் - கழாய்க்கூத்தர்.
கோரம்பலம் - உபாயம், கோளாறு, வேடிக்கை.

கோராசனம் - நரி.
கோரவாதம்-ஒருவகை வாதநோய் அது துர்ப்பலம், ஞாபகமறதி, மூர்ச்சை, அடிக்கடிமயக்கம், கீல்களில் தளர்ச்சி என்னு மிக்குணங்களை யுண்டாக்வது.
கோரவாரம் - சந்தனம்,
கோரவிருத்தி - இராசதகுணம்.
கோரன் - சிவன்.
கோராசன் - இடபம்.
கோராவாரி - புயல்.
கோரான் - ஒருசெடி.
கோரான்குஞ்சு } கோரான்சூள்.
கோரான்சுளுந்து }
கோரி - கிடங்கு, பிரேதக்குழி, பிரேதக் குழியின்மேற் கட்டுவது.
கோரிகை-அகப்பை,களஞ்சியக்கூடை.
கோரிக்கை - மன்ருட்டம், விருப்பம், வேண்டுகோள்.
கோரிதம் - துகள், விள்ளல்.
கோரியை - கோரிகை.
கோருதல் - நினைத்தல், விரும்புதல், வேண்டுதல்.
கோரை - ஒருகிழங்கு, ஒருபுல்.
கோரைப்பாய் - புற்பாய்.
கோரையுள்ளான் - ஒருபுல்.
கோரோசனை -ஒரு மருந்து.
கோர்க்கலம் - மட்பாண்டம்.
கோலகண்டன் - விஷ்ணு.
கோலகம் - திப்பிலி.
கோலங்கட்டுதல் - வேஷம்போடுதல்.
கோலங்காட்டுதல்-சாயல்கொள்ளுதல், மாதிரி காட்டுதல்.
கோலங்கெடுதல்-அழருகெடுதல், சீரழிதல்.
கோலங்கொள்ளுதல் - சாயல்கொள்ளுதல், வேஷங்கொள்ளுதல்.
கோலச்சங்கம் - முட்சங்கு.
கோலஞ்செய்வாள் - வண்ணமகள்.
கோலதளம்-ஒருவித வாசனைத்திரவியம்.
கோலபுச்சம் - ஒருநாரை.
கோலப்பிரான்- நூற்றெட்டுத்திருப்பதிகளுளொன்ருகிய திருவல்லவாழிற் கோயில்கொண்ட விட்டுணு.
கோலமிடுதல் - அலங்கரித்தல், கோட்டம்போடுதல்.
கோலமூலம் - திப்பிலிவேர்.
கோலமெழுதல் - கோட்ட மிடுதல் தொய்யிறீட்டல்.
கோலம் - அலங்கரிப்பு, அழகு, இலந்தைக்கனி, உருவம், ஒப்பனை, ஓராயுதம், ஒரு நிலாம், கலிங்கதேயம், சனி, சாயல், தழுவல், தெப்பம், தொடை, தொய்யில், நீரோட்டம், பறவை, பன்றி, பாக்கு, பாம்பு, பீர்க்கு,மருட்பன்றி, மா முதலியவற்ருலிடுங் கோலம், மாதிரி, மிளகு, விந்தைநகர், வேடம்.
கோலம்பகம் - உருவம், வீணையின் ஆகிருதி.
கோலம்பண்ணுதல் } அலங்கரித்தல்.
கோலம்புனைதல் }
கோலம்போடுதல்-அலங்கரித்தல், கோட்டமிடுதல், வேஷம்போடுதல்.
கோலரம் - மூளை.
கோலலவனம் - துருசு.
கோலல் - கோலுதல்.
கோலவல்லி - ஒருகொடி.
கோலவில்லிராமன் - நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்ருகிய திருவெள்ளியங்குடியிற் கோயில்கொண்ட இலக்குமி.
கோலவேர் - நிலப்பனை.
கோலறை - குழித்தரை.
கோலா - திப்பிலி, பறவைமீன்.
கோலாகலம் - இடம்பம், குசால், சம்பிரமம், டக்கு, பேரொலிவிலங்கினல் எழுமொலி.
கோலாகலன் - இமவந்தன் புத்திரன், மைநாகன் தம்பி இவர்கள் முறையே கோலாகலம், இமயம், மைநாகம் என்னும் மலைக்கரசர்கள். சுத்திமதி நதி இக்கோலாகல மலையிலுற்பத்தியாவது.
கோலாங்கூலம் - முசு.
கோலாச்சி - ஒருமீன்.
கோலாஞ்சம் - கலிங்கம்.
கோலாஞ்சி - அடுக்கு, அணியம், அதிகோலம், டம்பம்.
கோலாட்டம் - ஒரு விளையாட்டு.
கோலாரிக்கம் - போர்க்கறைகூவல்.
கோலாரிவண்டில்-விவாகவூர்க்கோலத்துட் சிங்காரித்து வரும் ஒருவிதப் பண்டி.

கோலி - இலந்தைமரம், உடும்பு, திப்பிலி, மயிர், விளையாட்டுக்குண்டு.
கோலிகர் - கோலியர்.
கோலிக்கற்றை - கவரிமா.
கோலியர் - நெய்வோர்.
கோலியை - கோரியை.
கோலிவாசி - காடி.
கோலுதல் - இடங்கொள்ளப்பண்ணல், சூழ்தல், முகந்தள்ளல், வளைதல், வளைத்தல்.
கோலுபட்டை - ஒருபட்டை.
கோலோகம் - கிருஷ்ணலோகம்.
கோல் - அஞ்சனக்கோல், அம்பு, அளவுகோல், இலந்தை, ஊன்றுகோல், எழுதுகோல், குதிரைச் சம்மட்டி, கோலென்னேவல், செங்கோல், தடி, துலாக்கோல், துலாராசி, தூண்டில், தெப்பம், புள்ளி, மரக்கொம்பு, மரக்கோல், யாழினரம்பு.
கோல்கொடுத்தல் - குருடருக்குப் பற்றுக்கோடு கொடுத்தல்.
கோல்கோடுதல் - அரசுமுறை தவறுதல்.
கோல்பிடித்தல் - குருடருக்குக் கோல் கொடுத்துக் கூட்டிப்போதல்.
கோல்வளை - அழகியவளை, பெண்.
கோல்வளைநாயகி - திருக்கருப்பறியலூரிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார்.
கோவசூரி - ஒருவசூரி.
கோவசை - மலட்டுப்பசு.
கோவணம் - கௌபீனம்.
கோவணன் - சிவன், வசிட்டன்.
கோவணுண்டி - கோமணுண்டி.
கோவணி - ஆத்தி.
கோவகை - கோகத்தி.
கோவம் - கோபம், பொன்.
கோவரகழுதை - கழுதையுங் குதிரையுங் கூடிப்பிறந்த குட்டி, வேசரி.
கோவரங்கம் - பதுமராகம் நான்கில் ஒன்று.
கோவர் - இடையர்.
கோவர்த்தநதரன் - கிருட்டிணன்.
கோவர்த்தநதீர்த்தம் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்ருகிய திருப்பிரிதியிலுள்ள ஒரு புண்ணியதீர்த்தம்.
கோவர்த்தநவிமானம் - நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்ருகிய வடமதுரையிலுள்ள விமானம்.
கோவர்த்தநேசன் - நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்ருகிய வடமதுரையிற் கோயில்கொண்ட விட்டுணு.
கோவர்த்தனம் - கிருட்டிணன் கன்மழைக்குப் பசுக்காத்தமலை, சிங்கம், மாதுளை.
கோவர்த்தனர் - இடையர்.
கோவர்த்தேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கோவலர் - இடையர்.
கோவலன் - இடையன், கிருட்டினன், சிலப்பதிகார கதா நாயகனுன ஒரு வைசியன். இப்பெயர் கோபாலனென்பதன் மரூஉ, குபேரனையொத்த செல்வனுகிய இவன் ஒரு கணிகையின்பொருட்டுத் தன் பொருளெலாமிழந்து தனது கற்புடைத் தேவி கண்ணகியோடு காவிரிப்பூம் பட்டனத்தைவிட்டுப் பொருளீட்டும் நோக்கமாக மதுரையை யடைந்தங்கே கண்ணகியின் காற்சிலம்பொன்றை விற்கவேண்டி ஒருபொற்கொல்லன் வீட்டை அடைந்தபோது அக்கொல்லன் செய்த வஞ்சனையால் அரண்மனைச் சிலம்பு திருடிய கள்வனெனப் பாண்டியனுற் கொல்லப்பட்டவன். இவன்காலம் ஆயிரத் தெண்ணூறு வருஷங்களுக்கு முன்னுள்ளது.
கோவளம் - ஒரு பட்டினம்.
கோவற்சை - மலட்டுப்பசு.
கோவாங்கம் - செம்மணி, மாணிக்கத்தின் நான்காவது சாதி.
கோவாங்குமணி - ஒருவகையிரத்தினம் அது கோவைப்பழம், செங்கல், குராமலர், மஞ்சளென்னு மிவைபோன்ற நிறத்தினையுடையது.
கோவிட்டு - சாணம்.
கோவிதம் - கலையறிவு.
கோவிதன் - அறிஞன்.
கோவிதாரம் - காட்டாத்தி, குராமரம்.
கோவிதாரேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
கோவிந்தயோகி - சங்கராசாரிய சுவாமிகளுக்குக் குரு. இவர் நருமதா நதி தீரத்திலே எழுந்தருளி யிருந்தவர்.
கோவிந்தராஜர் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்ருகிய சித்திரகூடத்திற் கோயில்கொண்ட விட்டுணு.

கோவிந்தர் - இடையர்.
கோவிந்தவிமானம் - நூற்றெட்டுத்திருப்பதிகளு ளொன்ருகிய திருக்குருகூரிலுள்ள வியானம்.
கோவிந்தன் - இந்திரன், இராஜன், கண்ணன், பரமான்மா, பிரமன், பிருகற்பதி.
கோவியர் - இடையர், ஒருசாதியார்.
கோவியல் - இராசரீகம்.
கோவியல்வீதி - இராசப்பெருந்தெரு.
கோவிரசம் - ஆனிலை.
கோவிருஷம் - எருது.
கோவிருந்தம் - ஆன்கூட்டம்.
கோவில் - இராசமனை, தேவாலயம்.
கோவில்ஆயனுர் - விட்டுணு பத்தர்களுள் ஒருவர்.
கோவில் ஸோமயாஜியாண்டான் - விட்டுணு பத்தர்களு ளொருவர்.
கோவில்பெரியதிருவடிகள் - விட்டுணு பத்தர்களு ளொருவர்.
கோவுகந்தம் - தாலம்ப பாஷாணம்.
கோவூர்க்கிழார்-ஒருபுலவர். இவர்கடைச்சங்கத்திருந்தவர்.
கோவெனல் - அதிசய விரக்கக்குறிப்பு, அனுகரணவோசை.
கோவேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கோவேறுகழுதை - கோவரசழுதை.
கோவை - அணிவடம், ஒழுங்கு, ஒருபிரபந்தம், கொவ்வை, கொத்தமாலை, கோத்தல் நிரை வரிசை.
கோவைசியர் - மூவைசியரி லொருவர். அவர் இடையர்.
கோவைத்துறை - தலைவனுந்தலைவியுங்களவியலா னடக்கு மொழுக்கத்தைக் கூறுவது.
கோவையாணி - பிணையலாணி.
கோழம் - சங்கபாஷாணம்.
கோழி - உறையூர் முற்காலத்தில் இதிலிருந்த ஒருகோழியானையைப் போரில் வென்றமையால் இதற்கு இப்பெயர் வந்தது, ஒருபுள். அது பஞ்சபட்சியினு மொன்று, பன்றிக்கிழங்கு, வெருகு.
கோழிக்கரணம் - பதினோர் கரணத்தினொன்று.
கோழிக்கல் - ஈரக்கல்.
கோழிக்காரம் - ஒருமருந்து.
கோழிக்கால் - கொடியரசு.
கோழிக்காற்புல் - ஒரு புல்.
கோழிக்கீரை - ஒருகீரை.
கோழிக்குடாப்பு - கோழிக்கூடு.
கோழிக்குரல் - விடியற்புறம்.
கோழிக்குறுமான் - ஒரு பூடு.
கோழிக்கூவல் - விடியற்புறம்.
கோழிக்கொடி - கோழிமுலையாள், கோழியவரை, முருகன், செங்குந்தன், சோழன் இவர்கள் கொடி.
கோழிக்கொடியோன் - ஐயன், குமரன், செங்குந்தன், சோழன்.
கோழிக்கொண்டை, கோழிச்சூடன் - ஒரு பூண்டு.
கோழித்தலைக்கந்தகம் - சிவந்தகெந்தகம்.
கோழிநெஞ்சு - மிதந்த நெஞ்சு.
கோழிப்பசளை - ஒருபசளை.
கோழிப்பஸ்பம் - ஒரு சூரணம்.
கோழிப்புடம் - பத்தெருப்புடம்.
கோழிமுட்டைத்தயிலம் - அண்டத்தயிலம், கோழிமுட்டையி லெடுக்குந்தயிலம்.
கோழிமுளையான் - முக்குளிக்கொடி.
கோழியவரை - ஒரு கொடி.
கோழியுள்ளான் - ஒருகுருவி.
கோழிவேந்தன் - சோழன்.
கோழை - அச்சம், கண்முதலியவற்றின் குழி, கபம், குறைவு, கொடுமை, சிலேற்பனம், தவறு, நாணம்.
கோழைக்கட்டு - சிலேற்பனக்கட்டு.
கோழைக்குத்து - ஒருநோய்.
கோழைத்தனம் - அச்சத்தன்மை, சின்னத்தனம்.
கோழையன் - அச்சமுள்ளோன், நாணமுள்ளோன்.
கோழைவிந்து - துளசி.
கோளகஸ்தானம் - உருண்டை வடிவுள்ளவிடம்.
கோளகபாஷாணம் - விளைவுள்ள பாஷாணமுப்பத்திரண்டினுளொன்று.
கோளகம் - கோளகபாஷாணம், திப்பிலி, பட்டுச்சீலை, மண்டலிப்பாம்பு, மிளகு.
கோளகவச்சிரம் - கருந்தண்ணீர்க்கல்.
கோளகன் - கைமைபெற்றபிள்ளை, சாகல்லியன் சீஷன்.

கோளகேசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனு ளொன்று.

கோளகை - அண்டகடாகம், உருண்டைவடிவம், கவசம், மண்டலிப்பாம்பு, வட்டம்.

கோளம் - உண்டை, வட்டம்.

கோளம்பம் - கிரகணம், வடவிந்தியாவிலுள்ள ஒரூர்.

கோளரி - ஆண்சிங்கம், சிங்கம்.

கோளவங்கம் - வங்கமணல்.

கோளன் - கோளுரைப்போன்.

கோளாங்கல் - பருக்கைக்கல்.

கோளாறு - குடாசகம், குழப்பம்.

கோளி - அத்தி, அரசமரம், ஆலமரம், கொழிஞ்சிமரம், கொள்வோன், பூவாது காய்க்குமரம்.

கோளிகை - பெட்டைக்கழுதை, பெட்டைக்குதிரை.

கோளிப்பொருள் - கொள்ளப்படும் பொருள்.

கோளிலிநாதர் } திருக் கோளிலி
கோளிலியப்பர் } யிலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.

கோளேசம் - குங்குமப்பூ.

கோளை - எலி.

கோள் - இடையூறு, காவட்டம்புல், கிரகம், குணம், கொலை, கொள்ளல், கோட்பாடு, தீமை, நட்சத்திரம், நாள், பழமொழி, புறங்கூறல், பொய், வலி.

கோரணி - குண்டணி, கோரணி.

கோறல் - கொல்லல்.

கோறிக்கை - கினைவு.

கோறுதல் - கொல்லுதல்.

கோறை-குவளை, துளை, பழுது, பொந்து.

கோற்கணக்கு - நிலமளக்கிற கணக்கு.

கோற்கொடி - இலந்தை, சுரை.

கோற்புழு - கீடம்.

கோற்றேன்-மரக்கிளையிற் கட்டிய தேன்.

கோற்றொடி - அழகியவளை, பெண்.

கோனன் - இடையரின் சங்கைப்பேர்.

கோனிச்சி - இடைச்சி.

கோன் - அரசன், இடையன், எப்பொருட்குமிறைவன்.

கோன்மை - ஆளுகை, இராசநீதி.

## கௌ



கௌ-ஓரெழுத்து,கௌவென்னேவல், கிருத்தியம், கொள்ளு, தீங்கு,மனஸ்தாபம்.

கௌகணம் - கொங்கணம்.

கௌகுடிகம் - தூரத்தில் வருபவரைக் காண்டல்.

கௌங்கம் - கொங்கணம்.

கௌசலம் - ஒருதேசம், வாழ்த்து, வேலைத்திறம்.

கௌசலிகை - கொடை.

கௌசலேயன் - இராமச்சந்திரன்.

கௌசலை } ஸ்ரீராமன்தாய்.
கௌசல்யை }

கௌசனை-உரைகௌபீனம்கோமணம்

கௌசாம்பி - குசாம்பன், கிருமித்தநகரம்.

கௌசிகபலம் - தெங்கு.

கௌசிகப்பிரியன் - இராமச்சந்திரன்.

கௌசிகம் - ஒருபண். உபபுராணங்களுளொன்று, கூகை, குங்குலியம், சாமவேதம், சோகி, பட்டுச்சீலை, பதினெண் பாடையிளென்று, பாம்பு, வியாழம் விளக்குத்தண்டு.

கௌசிகன் - இந்திரன், ஒரு முனிவர் இவர் தமது தேகத்தை ஓரிடத்தில் வைத்துவிட்டு மற்றொரு தேகத்திற் புகுந்து சஞ்சரிப்பாராயினர். விட்ட தேகம் ஜீரணமாகி அஸ்திமாத்திரங் கிடந்தபோது அம்மார்க்கமாக ஆகாயத்திலே சென்ற கந்தருவன் அதற்குநேரே வந்தபோது கீழே விழுந்தான். அதுகண்ட பாலகல்லியமுனி அவனை நோக்கி நீ இவ்வஸ்தியைக் கொண்டுபோய்ச் சரஸ்வதி நதியிலிட்டு ஆடிப் போவையேல் அந்தரஞ்செல்லலா மென்ன அவ்வாறு அவனுஞ்செய்து அந்தரஞ் சென்றான். தர்மவியாதனாலே தர்ம விசேஷங்களைத் தெரிந்துகொண்ட ஒருபிராமணன், பாம்பாட்டி, பிரதிஷ்டானபுரத்திலிருந்த ஒருவிப்பிரன், இவன் குஷ்ட ரோகத்தால் தேகமெங்கும் சீநீர் பெருகப் பெற்றவனாயிருந்தும் இவன் பாரி அருவருப்பற்றவளாய் இவனைப் பரிபாலித்து வந்தாள்.

ஒருநாள் இக்குஷ்டரோகி ஒரு வேசியைக் கண்டு மோகித்து அவளைச் சேர விரும்பித் தனது அபிப்பிராயத்தைத் தனது பாரிக்குச் சொல்ல அவள் அதற்கு வேண்டியதிரவியங்களை யெடுத்துக்கொண்டு இவனையும்கட்டி முதுகின்மேற் சுமந்துகொண்டு அவ்விரவிலேதானே அவ்வேசிவீடு தேடிச் சென்றாள். செல்லும்போது கொடிய அந்தகாரமூடிற்று. அதனையும் பொருட்படுத்தாது செல்லும்போது வழியருகே யிருந்து தவஞ்செய்துகொண்டிருந்த மாண்டவ்வியவிருடி தலையிலேகுஷ்டரோகிகால் தட்டியது அதனால்மாண்டவ்வியர் சினந்து தமது தலையிலே காலாலே தாக்கியவன் விடியற்காலத்திலேயிறக்கக்கடவனென்று சபித்தார். அதுகேட்ட கௌசிகன்பாரி நடுக்கமுற்று எனது பதிவிரதமுண்மையானால் பொழுதுவிடியா தொழிகவென்றுபிரதிசாபமிட்டு போனாள். அதனாற் பொழுதுவிடியதாயிற்று. இது கண்டதேவர்கள் விஷ்ணுவைவினவ விஷ்ணு அவர்களை அத்திரிபத்தினியாகியஅநசூயையிடத்தேவ அவர்கள் அவளிடஞ்சென்றுவினவ அவள் அவர்களை அழைத்துக்கொண்டு இக்கௌசிகன் மனைக்கேகி இவர் பத்தினியைச் சாபவிமோசனஞ் செய்கவென்றாள். அவள்என்னயகன் இறந்திடுவானேயென்ன அநசூயைஅஞ்சாதே கௌசிகன் எவ்வனபுருஷனுவானென்ன அவள்விமோசனஞ்செய்யப் பொழுதும் விடிந்தது. கௌசிகனுமிறந்து எவ்வனபுருஷனுயெழுந்தான். வற்சபாலகன் என்னும் வற்சவந்தன் வளர்த்தபுத்திரன், வசுதேவன் மகன், விசுவாமித்திரன்.

கௌசிகாத்மஜன் - அர்ச்சுனன்.

கௌசிகாயுதம் - வானவில்.

கௌசிகி - ஒருநதி, காதிபுத்திரி திசிகுகன் பாரி ஜமதக்கினிதாய், விசுவாமித்திரன் சகோதரி. இவள் சத்தியவதி யெனவும் படுவள்.

கௌசிகிதேவி-கௌரி சும்பநிம்பரைக் கொல்லுமாறு கொண்டவடிவம். இத்தேவிசண்டமுண்டரைக்கொன்று சாமுண்டி யெனப் பெயர் கொண்டாள்.

கௌசிகை - கிண்ணம், தகழி.

கௌசிதகி - அகத்தியன்மனைவி.

கௌசேயம் - ஒரு ஆயுதம், ஒருமேகம்.

கௌஞ்சம் - கிரவுஞ்சம்.

கௌஞ்சிகம் - பொன்வினைமாக்கள்.

கௌடகன்
கௌடகிகன் } புலைஞன்.

கௌடசாட்சி - பொய்ச்சாட்சி.

கௌடதச்சன்-ஒருவனுக்குக் கீழ்ப்படியாது வேலைசெய்யுந் தச்சன்.

கௌட தருக்கம்-ஒரு தருக்கசாத்திரம்.

கௌட பாதாசாரியர் - ஸ்ரீ சுகர்சீஷர். யதி கோவிந்த பகவற் பாதருக்குக் குரு, இவர் உத்தரகீதைக்குப் பாஷியஞ் செய்தவர்.

கௌடபுரி - இலக்ஷ்மணபதி, வங்கதேசத்து முக்கியபட்டணம், ஜன்னு மகா விருஷியுடைய ஆச்சிரம மிருந்தவிடம், இங்குள்ள பிராமணர் கௌடரெனப்படுவார்.

கௌடமார்க்கம் - கௌடர்களின் வழக்கு.

கௌடம் - ஓரலங்காரம். அது குணவலங்காரம் பத்துடனேயுங்கூடாது நடக்குமொழுக்கமுடையது, ஒருகொடி ஒருபாவைை, வங்கதேயம். இது பஞ்சகௌடத்தொன்று, வஞ்சகம்.

கௌடர் - கௌடபுரிப்பிராமணர். இவர்கள் கல்வி கேள்விகளாலும் ஒழுக்கத்தாலுஞ் சிறந்தவர்கள். கரிகம் வாய்ந்தவர்கள்.

கௌடி - ஒருபண்.

கௌடிகம் - கண்ணி.

கௌடிகன்-கசாய்ப்புக்காரன், புலையன்.

கௌடிப்பாய்தல் - ஒரு விளையாட்டு.

கௌடில்யன் - சாணக்கியன்.

கௌடில்லியம் - அவமதி, வளைவு.

கௌட்டினியம் - இருபத்து நான்குவகைக் கீட்டங்களுளொன்று.

கௌஷ்டனம்-முன்பு பசுக்கட்டியிருந்தவிடம்.

கௌணபதந்தன் - வீட்டுமன்.

கௌண்பன் - இராட்சசன்.

கௌணம் - குணம்.

கௌண்டர் - ஒருசாதியார், சண்டாளர், புலைஞர்.
கௌண்டிகர் - தோல்வினைஞர்.
கௌதமகோ - கௌதம இருஷி இராஜமகேந்திரத்துக்குச் சமீபத்திற் கோதாவிரி தீரத்துக்கு தெற்கேயுள்ள கோவூரிலிருந்து தவஞ்செய்யும்போது பன்னீராண்டு பஞ்சம் வந்தடுக்க அகற்கஞ்சி அநேக இருஷிகள் கௌதமரை யடைந்தார்கள். அதுகண்ட கௌதமர் ஒருபிடி நெல்லை யெடுத்துத் தமதருகிலுள்ள மணல்மேட்டில் விதைத்துவிட்டு அநுஷ்டானஞ் செய்தார். அனுஷ்டானஞ் செய்து எழுந்தபோது நெல்லெல்லாம் முளைத்து வளர்ந்து கதிரீன்று விளைந்திருப்பதைக்கண்டு அவற்றையெல்லாம் அறுத்தடிசிலாக்கி உண்ணுமாறு இருஷிகளை ஏவினர். அவ்வாறே தினந்தோறுஞ் செய்துவரப் பன்னீராண்டு கழிந்து நாடு மலிந்தது. மலிதலும் இருஷிகளைநோக்கி இனி உம் வாசஸ்தானம் போமின் என அவர்கள் கௌதமரை நோக்கி நீர் எம்மோடு வரவேண்டுமென்று பிரார்த்திக்க அவர் மறுத்தார். அதனால் இருஷிகள் பொறாமையுற்று ஒரு மாயப்பசுவை யுண்டாக்கி அவர் விதைக்கும் பயிரை மேய்ந்தழிக்குமாறு செய்தனர். அதுகண்ட கௌதமர் தருப்பைப்புல்லால் அப்பசுவை யோச்சப் பசு வீழ்ந்திறந்தது. இருஷிகள் கௌதமரைநோக்கிக் கோஹத்திசெய்தீர் அதற்காகச் சாந்திராயணவிரத மனுட்டிக்கக்கடவீரென்று சபித்துப்போயினர். நன்றிமறந்து ரிஷிகள் செய்த செய்கையை உலகத்தார் உபமானமாகப் பேசும்போது இது கௌதமன் பசு நியாயமென்று வழங்குவர்.
கௌதமநதி - கௌதமைநதி.
கௌதமம் - தருமநூல் பதினெட்டில் ஒன்று.
கௌதமன் - ஆதிபுத்தன், கிருபன், கிருபன் பாட்டன், சதாநந்தன், சத்தவிருடிகளிலொருவன், பாரத்துவாசமுனி.
கௌதமன்பசு - கௌதமன்கோ.
கௌதமாச்சிரமம் - கௌதமருடைய ஆச்சிரமம்; இது விசாலபுரத்திலிருந்து மிதிலாபுரத்துக்குப்போகிற மார்க்கத்திலுள்ளது. ஜயந்தபுரம் இதற்குச் சமீபத்திலுள்ளது.
கௌதமி, கௌதமை - ஒருபசு, கோதாவரி, கோரோசனம்.
கௌதமம் - சிச்சிலிக்குருவி.
கௌதாரம் - உடும்பின்குட்டி.
கௌதாலிகன் - பரதவனும் வண்ணத்தியுங்கூடிப் பெற்ற புத்திரன்.
கௌதுகபந்தனம் - இரட்சாபந்தனம்.
கௌதுகம் - நூதனம், சந்தோஷம், தாலி, பேராசை.
கௌதுவம் - அமிர்தமதன காலத்திலே திருப்பாற்கடலிலே யெழுந்த திவ்ய வஸ்துக்களு ளொன்றாகிய வோர் புதமணி. அதனை விஷ்ணு தமக்கு ஆபரணமாகக் கொண்டருளினர். அனுபவகாலம், இணக்கம், உபசரித்தல், திருவிழா, நூதனம், பொழுதுபோக்கு, மகிழ்ச்சி, மங்கிலிய சூத்திரம், வாஞ்சை.
கௌதூகலம் - அதிக உற்சாகம்.
கௌதேரசர்ப்பம் - ஒருவகைப் பாம்பு; அது உடும்புநிறமுள்ளது.
கௌதேரம் - உடும்பின்குட்டி.
கௌத்திரவீணம் - வரகுவிளையும் பூமி.
கௌஸ்துபம் - அந்தநாள், துளசிமணி, பதுமராகம், மாணிக்கம், விஷ்ணுவின் மார்பணி.
கௌத்துவகாரன் - வஞ்சகன்.
கௌத்துவகாரி - வஞ்சகி.
கௌத்துவம் - அத்தநாள், அனுபவகாலம், காப்பு, துளசிமணி, பதுமராகம், மாணிக்கம், வஞ்சகம்.
கௌத்துவாபரணன் - துளசிமாலையணிந்தவன், விட்டுணு.
கௌந்தி - அரேணுகம், ஒருபூண்டு, குந்திதேவி, தவப்பெண், வால்மிளகு.
கௌந்திகர் - ஈட்டிக்காரர், குந்திபுத்திரர்.
கௌந்தேயர் - தருமன் முதலானோர்.
கௌபம் - கிணற்றுநீர்.
கௌபாரிகம் - கோரட்சணை.
கௌபீனம் - கச்சைச்சீலை, தவறு, பாவம், கோவணம்.

கௌபோதகி - விட்டுணுவின் தண்டாயுதம்.
கௌப்பு - பெருமை.
கௌமாரம் - இளம்பருவம். அது ஒன்றுமுதற் பதினாறுவரையுமாகிய பருவம், குமாரசமயம், பதினாறுவயதின் மேலு முப்பத்திரண்டு வயதினுள்ளுமாகிய பெண்பருவம், பதினெண்கீத புராணத்தொன்று.
கௌமாரி - சத்தமாதர்களி லொருத்தி, பார்வதி.
கௌமுகம் - கார்த்திகைமாதம்.
கௌமுதி - சந்திரகாந்தி, நிலவு.
கௌமுதிகை - உமாதேவியின் தோழிகளிலொருத்தி.
கௌமுதி - திருவிழா, நிலவு.
கௌமுதீபதி - சந்திரன்.
கௌமோதகி - விட்டுணுவின் தண்டாயுதம்.
கௌமோதகம் - கார்த்திகைமாதம்.
கௌமோதி - கார்த்திகைத் திருவிழா, திருவிழா, நிலா.
கௌரமம் - கூர்மம்.
கௌரமுகன் - சமீகன் மகன்.
கௌரம் - அச்சம், கீர்த்தி, சுத்தம், தாமரை, நூல், பொன், மஞ்சணிறம், வெண்மை.
கௌரவம் - மேன்மை.
கௌரவர் - குருகுலவேந்தர்.
கௌரி - சடுகு, காளி, துர்க்கை, துளசி, பத்தாண்டுப்பெண், பார்வதி, புளிநறளை, பூமி, மஞ்சணிறம், வருணன் பாரி.
கௌரிகங்கை - கைலாசபர்வதத்திலுள்ள ஒருநதி.
கௌரிகாந்தசார்வபௌமபட்டாசாரியர் - ஆனந்தலகரிக்குவியாக்கியானஞ் செய்த முப்பதின்மரு ளொருவர்; இவர் பிற்காலத்தவர்.
கௌரிகேணி - வெள்ளைக்காக்கணம்.
கௌரிகை - கன்னி.
கௌரிசங்கம் } இரட்டை யுருத்
கௌரிசங்கரமணி } திராட்சம்.
கௌரிசிப்பி - கௌரிபாத்திரம்.
கௌரிசேயன் - குமரன், விநாயகன்.
கௌரிசேய் - விநாயகன்.
கௌரிச்சிப்பி - கௌரிபாத்திரம்.
கௌரிநந்தனன் - சுப்பிரமணியன்.
கௌரிபாஷாணம் - விளைவு பாஷாணமுப்பத்திரண்டினொன்று.
கௌரிபாத்திரம் - பாத்திரச்சங்கு.
கௌரிமாயூரம் - ஒருதலம்.
கௌரியம் - கருவேம்பு.
கௌரியன் - பாண்டியன்.
கௌரீமனோகரி - இருபத்துமூன்றுவது மேளகர்த்தா.
கௌரீலலிதம் - அரிதாரம்.
கௌருதர்பிகன் - குருபன்னிகர்ப்பழித்தோன்.
கௌலகேயன் - வேசிபுத்திரன்.
கௌலடிநேயன் - பதிவிரதையானாலுந் தேசாந்தரி யானவளுக்குப் பிறந்த புத்திரன்.
கௌலடேயன் } வியபிசாரிக்குப் பி
கௌலடேரன் } றந்த புத்திரன்.
கௌலவம் - பன்றி; அது பதினொரு கரணத்தொன்று.
கௌலாலகம் - மட்பாண்டம்.
கௌலிகன் - எத்தன், பிரதிவாதி.
கௌலினன் - உயர்குலம், தூர்ச்செய்கை, மறைவிடம்.
கௌலேயகம் - குலத்திற்பிறத்தல்.
கௌலேயகன் - இல்லொழுக்கத்திற் பிதாமாதாவிடத்திற்பிறந்தவன், நாய்.
கௌலோகம் - கோலோகம்.
கௌவலம் - இரந்தை.
கௌவல் - கௌவுதல்.
கௌவியம் - கோரோசனை, பசுவிலுள்ளபொருள். அது பால் தயிர் நெய் கோசலம் ஆப்பி பிதுர்கர்மம்.
கௌவுதடி - கவைத்தடி.
கௌவுதல் - கவ்வுதல்.
கௌவை - ஆயிலியநாள், எள்ளிளங்காய், கலக்கம, கள், காரியம், சத்தம், துன்பம், பழிச்சொல்.
கௌவைமரம் - கவைமரம்.
கௌளம் - ஓரிராகம்.
கௌளர் - கௌடர், சக்தியை வாமதந்திரப்படி பூசித்து வழிபடுஞ் சமயத்தோர்.
கௌளி - நூறுவெற்றிலைகொண்டகட்டு, பல்லி.

கௌளிக்காதல் } பல்லிச்சாத்திரம்.
கௌளிசாஸ்திரம் }
கௌளிதம் - பட்சித்தல்.

## ஞ

ஞ - ஓரெழுத்து, குருணிக்குறி.
ஞனம் - இடம், தன்மை.

## ச

ச - ஓரெழுத்து.
சஃகுல்லி - அப்பவருக்கம், மோக்கம்.
சக - கூடவென்னும் அருத்தத்தைக் காட்டும் ஒருபசருக்கை.
சககமனம்-கணவனோடிறத்தல், உடன் கட்டை யேறுதல்.
சககாரம் - தேமா.
சககாரிகாரணம் - துணைக்கருவி.
சகசட்சு - சூரியன்.
சகசண்டி-முருடன், வெட்கமற்றோன்.
சகசதாதான்மியம் - அசங்காரஞ் சீவனுடன் பொருந்தல்.
சகசபாதுருவ்டி - சுபாவமான சந்தோஷம்.
சகசபலம் - வித்யாதிகளினுலடிபடாத யவ்வனபருவமுள்ள தாய் தந்தைகளுக்குப் பிறந்தவருக்குச் சுபாவமாக விருக்கும் பலம்.
சகசமூலம்-ஒருவகை மூலநோய்; அது முளையானது கடினமாகவும், யாரும் பார்க்கக்கூடாமையாகவும், உள்ளே முகங்காணப்பட்டு வெண்மையாய் அதிக வுபத்திரவத்தைச் செய்வது.
சகசம் - இஷ்டம், இயற்கை, உண்மை, ஒற்றுமை, வட்டில்.
சகசாம் - சிறுகுறிஞ்சா.
சகசரன் - உடன்றிரிதோழன்.
சகசரி - பொன்னிறங்கலந்த கரும்பூவுளமருதோன்றிமரம், வாடாக்குறிஞ்சி.
சகசரோகம்-ஒருவகைநோய். அது தாயினது கருப்பத்திலிருந்தே யுண்டாவது. அதனால் மார்நோய், சொறி, இருமல், இரைப்பு, வாந்தி, சுரமுதலிய குணங்களுண்டாகும்.
சகசன் - சகோதரன்.
சகசா - சிறுகுறிஞ்சா.
சகசாட்சி - சூரியன்.
சகசாலம் - உலகமாயம்.
சகசேசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனு ளொன்று.
சகசை - உடன்பிறந்தாள்.
சகசோதி - மிகுபிரபை.
சகச்சை - பொன்னுங்காணி.
சகடகனன் - கிருட்டிணன்.
சகடக்கால்-தேர்சக்கரம், பண்டியுருள்
சகடபலம் - நீர்க்கோழி.
சகடம் - அசுத்தம், உரோகணி, ஊர்கருருவி, ஒருயோகம், ஏமரத்தை, பண்டி, பாண்டில் பூண்டவூர்தி, வட்டில்.
சகடயூகம் - ஒரு படையணி.
சகடயோகம் - வியாழனுக்கு ஆறு எட்டு பன்னிரண்டிற் சந்திரனிற்பது.
சகடாசுரன்-கம்சன்தூதருளொருவன்; இவன் கிருஷ்ணன் சிசுவாயிருக்கும் போது ஒரு சகடரூபமெடுத்துப் போய்த் தனமீதூரவருங் கிருஷ்ணனைக் கொல்ல வெண்ணிக் கிடந்தபோது அஃதுணர்ந்து கிருஷ்ணன் அதன்மீதேறித் தகர்த்தவழி உயிர் துறந்தவன்.
சகடாலன் - நந்தன் மந்திரி.
சகடான்னம் - மாம்சவுணவு, அசுத்த போசனம்.
சகடி - பண்டி.
சகடிகை - உரோகணி, ஒருமிக்ச, சந்தேகம், பண்டி.
சகடை - பண்டி, முரசு, வர்ச்சியம்.
சகணம் - ஆப்பி, சாணம்.
சகணவர்த்தமம் - ஒருவகை வியாதி. அது சிலேட்டுமத்தினுற் பிறந்து இமைச் சந்துகளிற் கட்டிகளைப் பிறப்பிப்பது. அக்கட்டிகளி லிலந்தைப் பழக்கொட்டையளவோ அல்லது அதனினுமதிகரித்தோ குறைந்தோ கெட்டிப்பட்டு வெளுத்து வட்டவடிவாகத் தினவைத்தரும். பழுத்து உடையில் மிகுந்த வேதனையை யுண்டாக்கும்.
சகண்டை - முரசு, வாத்தியம்.

சகதண்டம் - உலகமுழுவதும்.
சகதந்தம் - உலகத்தினெல்லை, உலக முடிவு.
சகதாத்திரி - துர்க்கை, காளி.
சகதாத்துமா - கடவுள்.
சகதாமத்தி - தகரை.
சகதி - சேறு, பூமி, பொல்லாநிலம்.
சகதிபதி } அரசன்.
சகதிபாலன் }
சகதேவன் - சகாதேவன்.
சகதேவி - இலக்குமி, பூமாதேவி.
சகஸ்திரதாரம் - சக்கிரம்.
சகத்திரநாமம் - கடவுள், விஷ்ணு.
சகத்திரபாதன் - சூரியன், விஷ்ணு.
சகத்திரபேதி - கல், வேதி.
சகஸ்திரம் } ஆயிரம் சிவாகம மிருபத்தெட்டினொன்று.
சகத்திரம் }
சகத்திரவீரியம் - அறுகு.
சகத்திரவேதி - சாத்திரவேதி.
சகத்திராட்சன் - இந்திரன்.
சகத்திராமிசன் - சூரியன்.
சகத்திரானிகன் - ஓரரசன்.
சகத்து - அனுபவம், உலகம்.
சகத்துப்பிரதிபாசம் - உலகமாயம்.
சகத்தொழில் - இல்லறவாழ்க்கை, கிருத்தியம்.
சகஸ்வான் - அமரிஷன் புதல்வன்.
சகநாதம் - ஒரு விஷ்ணு ஸ்தலம்.
சகநாதன் - கடவுள், சிவன், விட்டுணு.
சகநாதேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
சகநாயகன் - காந்தம்.
சகநிஷ்டை - சதாநிஷ்டை.
சகநிஷ்டையர் - சதாநிஷ்டையி லிருப்பவர்.
சகந்தம் - சுகந்தம்.
சகந்தரை - ஒருதேசம்.
சகபதி - அரசன், கடவுள்.
சகபாடி - உடன்படிப்போன், கற்றுச் சொல்லி; கூடப்பாடுவோன், சகலன்.
சகப்பிராணன் - காற்று.
சகப்பிராந்தி - உலகத்தை வெறுத்து விடுகை.
சகமார்க்கம் - யோகமார்க்கம்.
சகமோகம் - உலகவாஞ்சை, மண்ணாசை.
சகம் - உலகம், கூட, சட்டை, தேசமைம்பத்தாறினொன்று. இது சிந்துதேசத்துக்கு மேற்றிசைக்கண்ணது, பாம்புச் சட்டை, பூமி, மார்க்கழிமாதம், வெள்ளாடு.
சகரச்சாரி - சத்திசாரம்.
சகரா - சகரபுத்திரர்.
சகரன் - முதலெழுவள்ளலிலொருவன் சக்கிரவர்த்திக ளறுவரிலொருவன், வாருகன்புத்திரன். இவனுக்குப் பாரியரிருவர். மூத்தாள் கேசினி. இளையாள் சுமதி. இவன் அசுவமேதயாகஞ் செய்தபோது அசுவத்தைப் பாதலத்தில் இந்திரன் கொண்டுபோய் மறைத்தான். சகரன் புத்திரர் அறுபதினாயிரவரும் பூமியைத் தோண்டிப் பாதலஞ்சென்று அதனைத் தேடியபோது கபிலரால் நீறுக்கப்பட்டார்கள். இவர்களாலகழப் பட்டமையின் கடல் சாகரமெனப்படும். சகரன் கருப்பத்திலிருக்கும்போது தாய் நஞ்சூட்டப்பட்டமையினால் உரியகாலத்திற் பிறவாது எழுவருஷஞ் சென்று பிறந்தவன். நஞ்சூட்டப்பட்ட காரணத்தால் சகரனென்னும் பெயர் அவனுக்காயிற்று.
சகரிகம் - நாயுருவி.
சகருணன் - தயாளு.
சகருவம் - பெருமை.
சகரூபன் - சகோதரன்.
சகர்மகக்கத்தரிப்பிரயோகம் - செயப்படுபொருளுடைய வினை முதலின் முடிப்பு.
சகர்மம் - கர்மத்தோடு கூடினசெய்கை.
சகலகம் - வெள்ளாட்டுக்கடா.
சகலகலாவல்லவன் - கலைஞானிகுமரன்.
சகலகாமேட்டி - சருவவாஞ்சயாகம்.
சகலகுணசம்பன்னன் - பல நற்குணமும் உள்ளவன்.
சகலத்தியாகம் - சருவத்துறவு.
சகலபாசனம் - அருகன் முக்குடையின் ஒன்று.
சகலபாடி } ஒரு குடியிற் பெண் கொண்டோன்.
சகலப்பாடி }
சகலமங்கலை - பார்வதி.
சகலமும் - எல்லாம்.
சகலமோகினி - மாயை.
சகலம் - எல்லாம், துண்டு, தோல், மீன் முள்.

சகலர் - எல்லோர், ஒருகுடியிற் கொண்டோர், மூவகையான் மாக்களில் ஒருவர்.
சகலவியாபி - கடவுள்.
சகலன் - மூன்றுவது ஆன்மா, மனைவி சகோதரி கணவன்.
சகலாண்டி - பொத்தைக்கீரை.
சகலாத்து - சிவப்புக்கம்பளி.
சகலாவத்தை - ஓரவத்தை.
சகலி - ஒருமீன்.
சகலிகரணம் - துண்டாக்கல்.
சகலை - சகலன்.
சகல் - கொசுகு.
சகவம் - ஒருபுள்.
சகவாசம்-உற்றசிநேகம்,கூடவிருத்தல்.
சகவாசி - உயிர்த்துணைவன், கூடவிருப்போன்.
சகவாழ்வு - உலகவாழ்வு.
சகவிசையை - ஒரு பட்டணம்.
சகளப்பாடி - சகலப்பாடி.
சகளம் - உருவம், மாயாரூபம்.
சகளன் - சகளபாடி.
சகளாதனம்-அட்டணைக்கா லிட்டிருந்து இடச்சையிருகாலினு மூன்றிக் குஞ்சித்திருப்பது.
சகனம் - ஆசனம், சடிதடம், தொடையினுட்பக்கம், பொறுமை.
சகனுவர்த்தவாதம்-ஒருவகை வாதநோய்; அது சிலேட்டுமபிரதானதயிர், அதிசீதளசலம், மாப்பண்டம், கிழங்கு, கீரைக்கட்டை, கனிவருக்கம், மந்த மாமிச மச்சங்கள் முதலியவைகளை மிதமின்றிப் புசித்தலினாலும், சீரணகாலசையோகத்தினாலும், கனநடையினாலும் பிறந்து இடுப்பில் வாசமாகத் தங்கி இரண்டு சகுனம், தொடைக்குக் கீழ்மேலாகிய இடங்களிற் சஞ்சரித்துக்கொண்டிருப்பது அதனால் தொடைகளில் குடைச்சலும், நோவும், மரத்தலும், குனிய முடியாமல் தம்பம்போல கிமிராலும் ஊருஸ்தம்பவாத குணங்களு முண்டாகும்.
சகன்-கூட்டாளி, சங்காத்தி, சாலிவாகனன், துரியோதனன்தம்பி, தோழன்.
சகன்மகபரஸ்மைபதம்-செயப்படுபொருள் குன்றாத வினை முற்றுச்சொல்.
சகன்மகன் - செய்பொருளுறுவினை.
சகன்மகத் திருப்பிரயோகம் - செயப்படுபொருளுடைவினை (உ-ம்) வனைந்தான்.
சகன்மோகினி - உலகமெல்லாம் மயக்கும் மோகினி.
சகன்னம் - உற்றுக்கேட்டல்.
சகன்னியசன் - சூத்திரன், தம்பி.
சகன்னியம் - கடைசி, முடிவு.
சகா - எல்லாம், தோழன், பாம்பு, கொல்லி.
சகாகௌலம் - ஒருநரகம்.
சகாசிதம் - அலங்காரம், பிரபை.
சகாடி - பீர்க்கு.
சகாதி - பாம்புகொல்லி.
சகாதேவன் - பாண்டவர்களில் இளையோன்.
சகாதேவி - சீதேவி.
சகார்த்தம் - சகுனண்டு.
சகாத்தன் - தோழன்.
சகாந்தகன் சாலிவாசநன், விக்கிரமார்க்கன்.
சகாபாடி - சகபாடி.
சகாப்தம் - சகுனண்டு.
சகாமியம் - கோருதல்.
சகாயதம் - சினேகக்கூட்டம்.
சகாயம் - உதவி, துணை, நயம், நன்மை.
சகாயவுபாயம் - யோசனையுதவி.
சகாயன் - தோழன்.
சகாயானம் - சகாயதம்.
சகாயி - சகாயன்.
சகாயித்தல் - இலகுவாதல்.
சகாருகுக்ஷி - வியாசர்.
சகாரணம் - ஏதுவுடையது.
சகாரி-ஒருவள்ளல், விக்கிரமாதித்தன்.
சகார்த்ததிருதியை - மூன்றும் வேற்றுமையுடனிகழ்ச்சிப்பொருள்.
சகார்த்தம் - உடனிகழ்ச்சிப்பொருள்.
சகாலம் - அதிகாலம்.
சகாலன் - வேகமாய் நடப்பவன்.
சகாளு - ஓர்ராகம்.
சகி - சகியென்னேவல், தோழி.
சகிஸேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
சகிதம் - ஒற்றுமை.
சகிதன் - சேர்ந்திருப்போன்.
சகிதேவீநாயகி - திருச்சேனு லூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்.
சகித்தல்-அறுவகைச்சமாதிகளுள் ஒன்று. அது கலகஞ்செய்கின்ற இன்ப

துன்ப முதலியவைகளைப் பிராரத்த மென்று சமசித்தமாயனுபவிப்பதாம். பொறுத்தல், மன்னித்தல்.
சகித்துவம் - தோழமை.
சகிப்பு - பொறுதி, மன்னிப்பு.
சகியம் - கிலப்பனை; மஞ்சள், மா.
சகீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சகு - சவ்வரிசி.
சகுடம் - சேம்பு, நாய், பொதியமலை.
சகுடை - சிற்றகத்தி.
சகுட்டசும் - ஆடுதின்னாப்பாலை.
சகுட்டகம் - ஆடுதின்னாப்பாலை, ஒருவகைக் கிழங்கு.
சகுணம் - குணசம்பந்தமுள்ளது.
சகுண்டலன் - துரியோதனன் தம்பியருளொருவன்.
சகுதேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சகுந்தம் - ஒருநீர்ப்புள், கழுகு, கழுகு, காந்தி, பறவை.
சகுந்தலாத்மஜன் - பரதராஜன்.
சகுந்தலை - மேனகைக்கும் விசுவாமித்ரனுக்கும் பிறந்த பெண்.
சகுந்தி - ஒருபுள், பறவைப்பொது.
சகுப்பிரயோகம் - ஒருதரம்.
சகுலகண்டன் - ஒருமீன்.
சகுலம் - சத்தியுள்ளமீன், சமுசாரம்.
சகுலாட்சகம் - கொடியறுகு, வெள்ளறுகு, வெள்ளெருக்கு.
சகுலாதி - கடுகுரோகிணி.
சகுலாதிணி - கடுகுரோகிணி, நீர்த்திப்பிலி.
சகுலார்ப்பகம் - மீன்குஞ்சு.
சகுலி - ஒலி, மீன்.
சகுல்லியன் - உறவன்.
சகுனசாத்திரம் - கலைஞான மறுபத்துநான்கினுளொன்று. அது நிமித்த சாத்திரம்.
சகுனத்தடை, சகுனப்பிழை } துன்னிமித்தம்.
சகுனம் - கிழங்கு, செம்போத்து, நிமித்தம், பறவை, பேராத்தை.
சகுனி - இரணியாக்ஷன்புத்திரன், கூகை; அது கரணம் பதினொன்றினொன்றுமாம், தசரதன் புத்திரன், துரியோதனன் மாமன், நிமித்தம் பார்ப்போன், பறவை.
சகுனிகிரகம் - ஒருவகைக் கிரகநோய்; அது ஆறும் நாளிலாவது ஆறுமாதத்திலாவது ஆறும் வருடத்திலாவது சிசுவை அல்லது தாயைப்பிடிப்பது. அப்போது சுரமும், சரீரமெலிவும், நோவு முண்டாகும்.
சகுனிக்கிரகதோஷம் ஒருவகைத் தோஷநோய். அது தேகத்திற் பட்சிநாற்றம் வீசல், கீல்கள் தளரலோடு நோதல், பேதி, நாவு கழுத்து தாடை இவ்விடங்களில் விரணங்களோடு கொப்பளங்களெழும்புதல், அக்கொப்பளமு மெரிவும் பகடிலதிகரித்தல், இரவிலடங்கல், முகத்திலு மாசனத்திலுங் காந்தல், பயப்படலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
சகுனீசுவரன் - கருடன்.
சகுன்மம் - கருணைக்கிழங்கு.
சகோரா - பண்டசாலை.
சகோத்தியலங்காரம் - உடனிகழ்ச்சியணி.
சகோடம், சகோடயாழ் } நால்வகையாழில் ஒன்று.
சகோரதத்தானம் - பிறந்த ராசிக்கு மூன்றுமிராசி.
சகோதரத்துவம் உடன்பிறப்பு, சகோதர சம்பந்தம்.
சகோதரம் - உடன்பிறப்பு.
சகோதரர் - உடன்பிறந்தார்.
சகோதரி - உடன்பிறந்தாள்.
சகோத்திரம் - சமுசாரம், வமிசம்.
சகோத்திரன் - பகீரதன் புதல்வன்.
சகோரகம், சகோரம் } சக்கிரவாகம், செம்போத்து, நிலா மூகிப்புள், பேராந்தை.
சக்கட்டம் - நிந்தை, பரிகாசம், மயிர்.
சக்கட்டை - இளப்பம், சமர்த்தின்மை.
சக்கந்தம் - சக்கட்டம்.
சக்கப்பணியவிருத்தல் - சக்களியவிருத்தல்.
சக்கரக்கவி - கோட்டி லெழுத்தடைத்துப் பாடுங்கவி.
சக்கரசமேரதைத்தியன் - திருணவர்த்தன்.
சக்கரதரன் - சக்கரந்தரித்தோன், பாம்பு, விட்டுணு.
சக்கரதாபனம் - அட்சரந்தாபித்தல்.
சக்கரதாரி - விட்டுணு.
சக்கரதிசை - ஆயு முடிவறியுந் திசைகளில் ஒன்று.

சக்கரதீர்த்தம்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருவெள்ளறையென்னுந் தலத்திலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தம்.
சக்கரதேவன்-கலிங்கதேசராசாவாகிய சுருதாயுவினது இரண்டாம்புத்திரன்.
சக்கரந்தரித்தல் - இயந்திரமாட்டல்.
சக்கரபதி - தகரை.
சக்கரபாணி - துர்க்கை, விட்டுணு.
சக்கரப்பொறி - எந்திரப்பொறி.
சக்கரமடைத்தல்-இயந்திரத்தி லெழுத்தடைத்தல்.
சக்கரமுடிவு - ஆயுள்முடிவு.
சக்கரம் - அறுபது வருடங்கொண்டது, ஆணையாசக்கரம். இது இராசசின்னத்தொன்று, இயந்திரம், ஊர், ஓர் சித்திரக்கவி. அது நான்காரச்சக்கரமு மெட்டாரச்சக்கரமு மாறாரச் சக்கரமும் வரப்பாடுவது, கடல், காசு, கிரகநடை, சக்கரவாகப்புள், சக்கிரம், சீவியநாள், சுழல்காற்று, சுற்று, செக்கு, தேருருளை, பதக்கு என்னும் ஓரளவை, பிறப்பு, பீர்க்கு, பூமி, பெருமை, மலை, மலைமல்லிகை, வட்டம்.
சக்கரயூகம் - ஒரு படையணி.
சக்கரரேகை - சக்கராகாரமான ரேகை.
சக்கரவட்டம் - வட்டவடிவு.
சக்கரவர்த்தி - மற்றொருவரைப் பணியாது தனியாள்வோன்.
சக்கரவர்த்திதிருமகன் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருவயோத்தியிற் கோயில்கொண்ட விட்டுணு, இராமச்சந்திரன்.
சக்கரவாகம் - ஒருபுள்.
சக்கரவாணம் - ஒருவாணம்.
சக்கரவாளம் - எல்லை, ஒருபுள், ஒருமலை; இது சக்கராகாரமாகப் பூமியைச் சூழ்ந்திருத்தலின் இப்பெயர் பெற்றது, வட்டவடிவு.
சக்கரன் - இந்திரன், துவாதசாதித்தரிலொருவன், விட்டுணு.
சக்கராகாரம் - வட்டவடிவு.
சக்கராங்கி - கடுகரோகணி.
சக்கராபதி - சுயாதிபதி.
சக்கராயுதத்தி - துர்க்கை.
சக்கராயுதன் - விட்டுணு.
சக்கராயுதி - சக்கரதரன், துர்க்கை.
சக்கரேசுவரன் - வகாதிபதி.
சக்கரை - சருக்கரை, வட்டித்தது.
சக்கரையமுது - சக்கரைச்சாதம்.
சக்கல் - சக்குகட்டினது, சாரம்வடித்தது.
சக்களத்தி - ஒரு பொருளுக்கினமாயிருக்கும் வேறொரு பொருள், கொழுநனின் சகோதரன் மனைவி, மாற்றடிச்சி.
சக்களமை-மாற்றடிமாரி னெதிரிடை.
சக்களவன் - மாற்றவன்.
சக்களிதல் - சளிதல்.
சக்களியல் - சக்களிந்திருப்பது.
சக்களையன் - சழுங்கலன், சழுங்கல்.
சக்காரம் - தேமா.
சக்கிமுக்கி - சக்கைமுக்கி.
சக்கியம் - அன்பு, இயன்றது, சிநேகம், சேர்மானம்.
சக்கியன் - நசமர்த்தன், சிநேகிதன்.
சக்கிரகம் - தருக்க சாத்திரத்தொன்று, பீசாங்குரநியாயம்.
சக்கிரகாரகம் - புலிந்தமென்னும் வாசனைதிரவியம்.
சக்கிரசீவகன் - குயவன்.
சக்கிரதரம் - பாம்பு.
சக்கிரதரன் - திருமால்.
சக்கிரநாயகம் - புலிநகம்.
சக்கிரபந்து - சூரியன்.
சக்கிரபாணி - திருமால்.
சக்கிரபாதபம் - செம்புளிமரம்.
சக்கிரபாதம் - பண்டி, யானை.
சக்கிரபாலன் - அதிபதி.
சக்கிரபுங்கம் - அம்பு.
சக்கிரபுஷ்கரிணி - மணிகர்ணிகை நதி.
சக்கிரபுஷ்பி - குப்பைமேனி.
சக்கிரமணம் - உலாநடை.
சக்கிரமண்டலி - ஒருபாம்பு.
சக்கிரமத்திரகம் - தகரை.
சக்கிரமம் - போகக்கூடாத வெள்ளைமுதலியவற்றிற் கட்டிவிட்ட சாரம்.
சக்கிரமுகம் - பன்றி.
சக்கிரமேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சக்கிரம்-சக்காயுதம், சுழல்காற்று, சேனை, தண்டசக்கிரம், திசை.

சக்கிரயானம் - பண்டி.
சக்கிரலே - குண்டு முத்தக்காசு.
சக்கிரவதன் - சக்கரதாரன்.
சக்கிரவர்த்தினி-சக்கரவர்த்தி, மனைவி, சடாமாஞ்சி, செம்பஞ்சு. [தா.
சக்கிரவாகம் - பதினாறாவது மேளகர்த்
சக்கிரவாகேசுவரம் - சிவத்தலங்களாயி ரத்தெட்டனு ளொன்று.
சக்கிரவாடம் - எல்லை.
சக்கிரவாதம் - சுழல்காற்று.
சக்கிரவாந்தவன் - சூரியன்.
சக்கிரவாலம் - பூமியைக் கோட்டை போற் சுற்றியிருக்கு மலை.
சக்கிரவாளம் - திகாந்தம், வட்டம்.
சக்கிரவானு - கழுதை.
சக்கிரவிருதன் - விட்டுணு.
சக்கிரவிருதி - வட்டிமேல் வட்டி.
சக்கிரவேதிகி - இரவு.
சக்கிராங்கம் - ஒருபுள், பண்டி.
சக்கிராங்கி - ஒருபுள்.
சக்கிராடி - எத்தன், பாம்பாட்டி.
சக்கிராணி - ஊற்று, நவக்கிரகம்.
சக்கிராதம் - பன்றி.
சக்கிராதிவாசி - தேன்தொடை.
சக்கிராவத்தம் - சுழற்றுதல்.
சக்கிரி-அரசன், குயவன், சக்கிரவாகப் புள், செக்கான், தலைவன், திருமால். தேவேந்திரன், மண்டலிப்பாம்பு.
சக்கிரிகை - முழந்தாள்.
சக்கிரீவதம் - கழுதை. [ன்.
சக்கிலி - கண்ணில்லாதவன், சக்கிலிய
சக்கிலிச்சி - சத்திசாரம், செம்மாத்தி.
சக்கிலீயன் - செம்மான்.
சக்கிரகாரகம் - புலிதொடக்கி.
சக்கிரபுட்பி - குப்பைமேனி.
சக்கிரம் - அத்தி, தகரை.
சக்கிறவாதபம் - செம்புளிச்சை.
சக்கிருங்கி - கடுகுரோகிணி.
சக்கு - கண், பூஞ்சு.
சக்ஷுயயாதி பௌத்திரன் - அநு புத் திரன். [ப்பு.
சக்குச்சக்கெனல் - ஈரடுக்கொலிக்குறி
சக்குதானம் - விக்கிரகாராதனையில் ஒ ன்று. அது விக்கிரகத்தின் கண்கழு வல்.
சக்ஷுநதி - கங்கையிற்கலக்குமொரு ந
சக்குபு - கரிசாலைப்பூடு. [தி.

சக்குப்பூத்தல் - பூஞ்சுபிடித்தல்.
சக்ஷுமனு - சர்வதேசசுவினதுபுத்திர ரன். சுவாயம்புவ மனுவமிசம். தாய் அஹுதி. பாரி நடுவலை. புருவன், குற் றன், திருதன், துய்ம்மகன், சத்தி யவந்தன், இருதன், விரதன், அக்கி னிஷ்டோமன், அதிராத்திரன், சுது ய்ம்மன், சிபி, உன்முகன் எனப் பன் னிருவர் புத்திரர்.
சக்கோரா - சகோரா.
சக்கை - கஞ்சல், கானல், பலாக்காய், கோது, சிராய், தக்கை.
சக்கைமூக்கி - ஒருகல், தீத்தட்டி.
சக்கையன் உறுப்பின்றிப் பருத்தவன்.
சக்கோலி - ஒருபூடு.
சக்தி - வசிஷ்டர் மூத்தமகன், பராசன் றந்தை, உலோகமாதாவாகிய சங்கரி தெய்வத்தினது வல்லமை, அருள் ஞான முதலிய குணங்கள்.
சக்துபிரஸ்தன் - குருக்ஷேத்திரத்திருந் த ஒரு பிராமணன். இவன் தான் செய்த அதிதி பூஜாபலத்தால் குடும் பத்தோடு பிரமலோக மடைந்தவன்.
சங்கக்குழையோன் - சிவபெருமான்.
சங்கக்கூலி - சங்கதூதர்கூலி.
சங்கங்குப்பி - பீச்சுவிளாத்தி.
சங்கஜம் - புறாமுட்டையின் அளவின தாய்ச் சங்கிற்பிறந்த முத்து.
சங்கசீவி - வாயில் காவலன்.
சங்கசுகன் - எதிலும் நிலையில்லாதவன்.
சங்கசூடன் - குபேரன் தூதன். இவன் பிருந்தாவனத்திருந்த கோபஸ்திரி களை உத்தரதிசைக்குக் கொண்டு போனபோது கிருஷ்ணனாற் கொல் லப்பட்டவன்.
சங்கச்செய்யுள்-சங்கத்துக்கேற்றசெய் யுள், சங்கப்புலவர் செய்யுள்.
சங்கஞ்செடி - இயங்கஞ்செடி.
சங்கடம் - ஒடுக்கவழி, தொந்தரவு, நெ ருக்கம், மிதவை, முதற்றலை வாய் தல், வருத்தம்.
சங்கடன் - தருமனுக்குக் ககுபுதேவியி டத்துப் பிறந்த புத்திரன்.
சங்கடாட்சம் - கண்மூடுதல். [தனை.
சங்கடை - மரணத்தறுவாய், மரணவே
சங்கட்டம் - மரணவஸ்தை, வியாதி.
சங்கணன் - வச்சிரநாபன் மகன்.

சங்கதம் - சம்பந்தம், தேவர்மொழி,நட்பு, பொருந்தல், முறைப்பாடு.
சங்கதாளம் - கைப்பை.
சங்கதி-சரித்திரம்,தொடர்பு,வரலாறு.
சங்கதை - சங்கதி.
சங்கத்தமிழ் – சங்கப்புலவர்தமிழ், தெளிதமிழ், செந்தமிழ்.
சங்கத்தலைவன் - குமரன், சங்கத்தில் முதல்வன்.
சங்கத்தார் - ஆலோசனைக்காரர், கூட்டத்தார்.
சங்கத்திராவகம் - ஒரு திராவகம்.
சங்கநகை - நத்தை.
சங்கநாதம் - சங்கோதை.
சங்கநிதி – சங்குருவாய்க்கிடக்குநிதி, வட்டக் கிலுகிலுப்பை.
சங்கநிவர்த்தி – அவைக்குநியாயசாந்தி.
சங்கபதம் - அட்டாதச தருமநூலின் ஒன்று.
சங்கபாஷாணம் – தாலம்பபாஷாணம்.
சங்கபாணி - விட்டுணு.
சங்கபாலன் - அட்டமாநாகத்தொன்று, சூரியன்.
சங்கபாலேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
சங்கபீடம் - நாணல்.
சங்கபுங்கி - கடுகுரோகிணி.
சங்கப்பலகை - மதுரைச் சங்கத்திருந்த் புலவராசனம்.
சங்கப்புலவர் – மதுரைச் சங்கத்தவர், மதுரைச் சங்கத்துப்புலவர்.
சங்கமக்குரு – வீரசைவர்குரு.
சங்கமங்கை – சாக்கியநாயனர் முத்தியடைந்ததலம், இது தொண்டைநாட்டிலுள்ளது.
சங்கமதோஷம் - ஒருவகைத் தோஷநோய். அது சையோகத்தினற் பிறந்து சர்வாங்கநோவு, நடுக்கம், மார்பெரிவு, பொய்பேசல், அடிக்கடியெழுந்திருத்தல், பிரமை, உள்ளங்கை உள்ளங்காற் குளிர்ச்சி யென்னும் இக்குணங்களை யுண்டாக்குவது.
சங்கமம் - இயங்குதிணைப்பொருள், ஒருகவி, கலத்தல், கூடுகை, சைவம், நிலையின்மை,புணர்ச்சி, புத்திகூடல், யாறுகூடுமிடம்.
சங்கமரூபம் - சிவரூபம்.
சங்கமர்-திருக்கூட்டத்தார், வீரசைவர்.
சங்கமன் – இலிங்கதாரி,ஒருவாணிகன், நீலிகணவன்.
சங்கமாராதனை, சங்கமார்த்தனை – பண்டாரங்கட் கன்னங்கொடுத்தல்.
சங்கமேசுவரம் – சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
சங்கமேந்தி - திருமால்.
சங்கம்-அழகு, ஐக்கம், ஒருநிதி, கணைக்கால், கூடுதல், கூட்டம், கைக்குழி, சங்கபாஷாணம்,சங்கு, சவை, தாலம்பபாஷாணம், தேறினவன், நூறுகோடாகோடி, நெற்றி, நெற்றியெலும்பு, படையிலோர்தொகை, அது சமுத்திரம் மூன்றுகொண்டது, புணர்ச்சி,புலவர், மதுரைத்தமிழ்ச்சங்கம், யாறுகூடுமிடம், விருப்பம்.
சங்கம்வாங்கி – சங்கிரதத்திற்குக்கூட்டிவிட்டுவாங்கி.
சங்கம்வாங்குதல் – பெண்ணை யொருவனுக்கு விட்டுவாங்குதல்.
சங்காகவி – போஜன் சமஸ்தானத்துக் கவிகளுளொருவர். இவர் ஒருசமயத்திற்சொன்ன அற்புத சுலோகத்துக்காகப் போஜனிடத்திலே பதினோரிலக்ஷம் பொன் பரிசுபெற்றவர்.
சங்காகிதம் - ஒன்றிப்பின்மை, பேதம்.
சங்காகிதன் - சங்கந்துறந்தோன்.
சங்காகிரகணி – ஒருவகைநோய். அது வயிறுபொருமல்,செரியாக்கழிச்சல், அபானத்திற் சுடுகையோடெங்நோமும் நனைதல்,குறுவியர்வை, உக்கிரமானசுரம், மனக்கெடுதி, நெஞ்சிற்கபாதிக்கம், இருகண்களுஞ் சரிதலென்னுமிக்குணங்களை யுண்டாக்குவது.
சங்கரசாதி - கலந்தசாதி.
சங்கரநமச்சிவாயப்புலவர் – நன்னூலுக்கு விருத்தியுரைசெய்தவர். இவர் திருநெல்வேலியிலே நூற்றுத்தொண்ணூறு வருஷங்களுக்குமுன் இருந்தவர். இவர் குரு சுவாமிநாததேசிகர்.
சங்கரம்-கலப்பு, குப்பை, துகள், நஞ்சு, போர், வருத்தம், வியாபாரம்.
சங்கரர் – போர்செய்வோர்.
சங்கரன் - சங்கராசாரியர், சிவன் பலவருணக்கலப்பாய்ப்பிறந்தோன்,பன்னொரு ருத்திரரி லொருவன்.

சங்காரசாரியார் - ஒரு வேதாந்தகுரு, இப்பெயரால் விளங்கிய ஆசாரியர் மூவர்; இவருள் பிரசித்திபெற்றவர் ஆதிசங்காரசாரியர். மற்றைய இருவரும் அப்பெயரைத் தமக்கிட்டுக் கொண்டமையாற் பிரசித்திபெற்ருராயினவர்,சண்மதஸ்தாபனுசாரியர்.

சங்காாதனம் - இருகான்மடித்து இருபடத்தையுங்கூட்டி நேரேயூன்றி யிருகாலின்மேனிற்பது.

சங்காாபரணம் - ஓரிசை.

சங்காலங்காரம் - கலவையணி.

சங்காவாசம் - ஒருவகைக் கர்ப்பூரம், கைலாயமலை.

சங்கரி-சங்கரியென்னேவல், பார்வதி.

சங்கரிங்கி - சங்கபுங்கி.

சங்கரித்தல் - அழித்தல்.

சங்கரிப்பு - அழிப்பு, கொலை.

சங்கரீகரணம்-குழப்பம், சாதிக்கலப்பு, சுபாவ ஒழுங்குத்தப்பான புணர்ச்சி.

சங்கரீகிருதன் - கீழ்மகன், குறைந்த சாதியான்.

சங்கருடனம் - இழுத்தல், உழுதல்.

சங்கருஷணன் } சங்கருடணன் } பலராமன், இவன் தேவகியினது கருப்பத்தி லிருந்தபோது யோகமாயாதேவி சங்கருஷித்துக்கொண்டு போய் ரோஹிணி கருப்பத்திற் சேர்த்தமையால் இப்பெயர் பெற்ருன்.

சங்கருடம் - எதிரிடை.

சங்கரேகை - சங்கிஞகாரமானரேகை.

சங்கரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.

சங்கரோகம்-ஒருவகைநோய். அதுபித்தத்திற்கூடிய வாதசிலேட்டுமங்களின விரண்டு நெறிகளிலுஞ் சிவந்த வீக்கத்தைப் பிறப்பிப்பது அதனலெரிவு, நோவு, சுரம், தாகம், சோர்வு, பிரமை, பிரலாபம், முகத்தில் மஞ்சணிறம், வாய் கசத்தலென்னு மிக்குணங்களுண்டாகும். அது பழுத்துடைந்தால் மூன்று தினத்துக்குள் மரணத்தை யுண்டாக்கும்.

சங்கலம் - எண்கூட்டுதல், காடு, கூட்டம், சேர்மானம், நட்பு, மாமிசம்.

சங்கலர் - யுத்தவீரர், போர்புரிவோர்.

சங்கலனம் - எண்கூட்டல், கலப்பு, குவித்தல், சேர்மானம்.

சங்கலார் - பகைவர்.

சங்கலிதசங்கலிதம் - ஒருகணக்கு.

சங்கலிதம் - எண்கூட்டல், ஓரெண்கலத்தல், கலப்பு, தருமநூல் பதினெட்டினென்று.

சங்கிலீகரணம் - முறையிலாப் புணர்ச்சி, சங்கவாசிதம், வீடடைதல்.

சங்கவருணர் - பாண்டியவரசராற் சூட்டப்பட்ட நாகரிகர் என்னும் பட்டமுடையோருள் ஒருவர், இவர் நந்துமாரன் என்பவனைப் பாடின புலவர்.

சங்கவேஷ்டம் - புணர்ச்சி. [ட்டு.

சங்களை - மண்கிணற்றின் பலகைக்கூ

சங்களைக்கிணறு - பலகைக்கட்டுக்கிண

சங்கறுப்போர் - வளைபோழ்நர். [று.

சங்கற்பசம்-சங்கற்பம்போல்வாய்த்தல்.

சங்கற்பசம்பவம் நினைத்தபடிபெறுதல்.

சங்கற்பசம்பன் } சங்கற்பசன் } மன்மதன்.

சங்கற்பசன்மன் - காமன்.

சங்கற்ப சூரியோதயம் - நாராயணுசாரியர் விசிஷ்டாத்துவைத மதத்துவங்களை ரூபகாரம்பண்ணி நாடகமாகச் செய்தநூல். இது பிரபோத சந்திரோதயமென்னும் நூலை மாதைவேங்கட சுவாமிகள் செய்தருளிய பின்னர் அதற்கிணையாகக் காஞ்சிபுரத்து வைஷ்ணவராகிய இவ்வாசாரியரா லியற்றப்பட்டது.

சங்கற்பஞ் சொல்லுதல்-நினைத்ததைச் சொல்லல், சங்கர்பித்தல்.

சங்கற்பம்-எண்ணம்,நியமம், மனப்பொருத்தனை, மனோநிச்சயம், விருப்பம்.

சங்கர்பயோனி } சங்கர்பவன் } மன்மதன்.

சங்கர்பன் - பிரமமானச புத்திரருளொருவன், தருமருக்குச் சங்கற்பையிடத்துப் பிறந்த புத்திரன்.

சங்கற்பித்தல் - நிருணயித்தல், பிரார்த்தனைசெய்யல், விடுத்தல்.

சங்கற்பை - தருமன்பாரி.

சங்கன்-விராடராஜன்புத்திரன்,இவன் உத்தரைதமையன், கஞ்சன்தம்பி.

சங்கன்னம் - சங்கனனம், நரம்பு.

சங்காகாரிகன்-தூரமாய்ப் போயவிடத்துச் சமாச்சாரந் தெரிவிப்பவன்.
சங்காசம் - உவமை, சிநேகம், சமமான பொருள்.
சங்காடுதல் - சங்கினாற் புடவை மினுக்குதல்.
சங்காதம் - அழித்தல், ஐந்துதா மீரடிகளையும் ஒருங்கெடுத்துவைத்துநடத்தல், ஒருநரகம், கூட்டம், சமூலம், வசனம்.
சங்காத்தம் - இணக்கம், சிநேகம்.
சங்காத்தி - அனுசாரி, கூட்டாளி.
சங்காயம் - கரும்புச்சருகு.
சங்காரகர்த்தா - உருத்திரமூர்த்தி.
சங்காரகாலத்துப்பு - அமுரியுப்பு.
சங்காரக்கிரமம்-சங்காரப்படுமொழுங்கு
சங்காரத்துவனி - பத்தொன்பதாவது மேளகர்த்தா.
சங்காரம் - அழிக்கை, கடிதல், பஞ்சகிருத்தியத்தொன்று.
சங்காரன் - அழிக்கிறவன்.
சங்காரி - குதிரைவாலி, சங்காரியென்னேவல், புதுமண முடித்தபெண்.
சங்காரித்தம் - சத்தமுகிலினென்று; அது பூப்பொழிவது.
சங்காலம் - விரைவு.
சங்காலன் - வேகமாய் நடப்பவன்.
சங்காவியங்கட்டுதல் - அச்சத்தால் வசமாதல்.
சங்காவியம் - அச்சத்தால்வரும் வசம்.
சங்காவேசங்கட்டுதல் - அச்சத்தால் வசமாதல்.
சங்காவேசம் - சங்காவியம்.
சங்கிதன் - தீரமில்லாதவன்.
சங்கிதை - பிரிவு, பாகம், சரித்திரம்.
சங்கித்தல் - அஞ்சல், ஐயப்படல், கனம் பண்ணுதல், சந்தேகப்படல், பயப்படல், மதித்தல், விசாரித்தல்.
சங்கிதி - மீச்சுவிளாத்தி.
சங்கிப்பு - அச்சம், ஐயம், சந்தேகம், மதிப்பு.
சங்கியாதம் - எண்ணிக்கையிட்டது.
சங்கியாவானு - புலவன், வித்துவான்.
சங்கியை - எண்.
சங்கிரகக்கூர்மை - சிந்து லவணம்.
சங்கிரகணம் - ஏற்றுக்கொள்ளல், கல்விப்பேச்சு, நம்பிக்கை.
சங்கிரகம்-உயர்ச்சி, காடு, காத்தல், கைசண்டை, சம்மதம், சுருக்கம், திரட்சி.
சங்கிரகித்தல் - சுருக்குதல், திரட்டல், வழியோட்டம்.
சங்கிரதம் - காதலோர்கூட்டம்.
சங்கிரந்தனன் - தேவேந்திரன்.
சங்கிரபுரி - இடையரூர், முல்லைநிலம்.
சங்கிரமசாதி-கலப்புச்சாதி, சங்கிரசாதி
சங்கிரமணம் - நடை.
சங்கிரமம் - உபாயவழி, கலப்பு, கிரகநடை, மாதப்பிறப்பு.
சங்கிரமித்தல் - சூரியன் முதலிய கிரகங்களோரிராசியிலிருந்து மற்றோரிராசிக்குச் சொல்லல்.
சங்கிரம் - காடு.
சங்கிரவணி - பாணம்.
சங்கிராகம் - கெட்டியானபிடி.
சங்கிராந்தம்-ஒன்றிலிருந்து வேறொன்றிற்குப்போதல், மாதப்பிறப்பு.
சங்கிராந்தவாதசைவன் - விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியிலே அசத்தாகிய கருவிகளே சத்தாகிய சிவத்தைச் சிவகாரணமாய்நின்று அறியுமென்று சொல்பவன். இவன் அகச்சமயிகளுள் ஒருவன்.
சங்கிராந்தி - ஒன்றிலிருந்துவேறொன்றிற்குப்போதல், மாதப்பிறப்பு.
சங்கிராமசூரன் - போர்வீரன்.
சங்கிராமம் - போர், மலைமேல்வழி.
சங்கிராமவிலக்கணம் - கலைஞான மறுபத்துநான்கினுள் ஒன்று. அதுவோர் வித்தை.
சங்கிரீடணம் } விளையாட்டு.
சங்கிரீடமாணம் }
சங்கிருதகம் - நீருள்ளி, வெங்காயம்.
சங்கிருதம் - கலப்பு, சம்ஸ்கிருத பாஷைக்கினமாயுள்ள சௌரசேனி முதலிய பிராகிருதங்களுள் ஒன்று, சமஸ்கிருதம்.
சங்கிருதி - மூன்றாம்நரன்புத்திரன்.
சங்கிருந்தனன் - இந்திரன்.
சங்கிலி - ஓராபரணம், தொடர், தொடை, விலங்கு.
சங்கிலிகரணம் - இயல்புக்கு விரோதமான புணர்ச்சி.
சங்கிலிதம் - சங்கலிதம்.
சங்கிலிப்பூட்டு-ஒருவகைப்பூட்டு, பிசகு.

சங்கிற்கூர்மை - சிந்து லவணம், பிடாலவணம்.
சங்கினி - உபத்தத்தைப்பற்றி நிற்கும் நாடி, நால்வகைப் பெண்ணுள் ஒருத்தி.
சங்கின்குடியோன் – நாகரவண்டு.
சங்கின்பிள்ளை - முத்து.
சங்கீதகோலாகலன் - சங்கீதவாத்தியப்பிரியன்.
சங்கீதசாகித்தியம்-சங்கீதப் பரிட்சை.
சங்கீதம் - இராகசாத்திரம், கிச்சிலிக்கிழங்கு, வாச்சியத்தோடேபாடுதல், வாச்சியத்தோடு பாடும்பாட்டு.
சங்கீதரத்நாகரம் - இராகத்தைக்குறித்த ஒரு நூல்.
சங்கீதலோலன் – கீதவிநோதன்.
சங்கீதவாத்தியம் - சங்கீதத்திற் கிசைய இயக்கும் வாச்சியக்கவி.
சங்கீதி-சங்கீதசாத்திரம், சம்பாஷணை.
சங்கீரணகீடம் - ஒருவகைப்புழு.
சங்கீரணம் - அசுத்தம், ஓரலங்காரம், கலப்பு, நெருக்கம், சம்மதித்தல்.
சங்கிரதம் } எழுத்துப்புணர்ச்சி, புணர்ச்சி.
சங்கீர்தம் }
சங்கீர்த்தனம் - புகழ்ச்சி.
சங்கு - இயங்கு, இராசசின்னத்தொன்று, ஒன்றிப்பு, ஒரெண், கடிகாரவூசி, கணைக்கால்கூடுதல், கைவளை, சங்கு, சவ்வாதுப்பூனை, நெற்றி, படைக்கலம்.
சங்குகர்ணம் - ஒட்டகம், கழுதை.
சங்குகாசம் - கண்ணோயுளொன்று.
சங்குக்கீரை - ஒருவகைக்கீரை.
சங்குசிரசு – தநுபுத்திரருளொருவன்.
சங்குச்சக்கரம் - சங்குசக்கர வடிவாய ரேகை, பாம்பின் படப்பொறி.
சங்குச்சட்டம் - எதிரொலி.
சங்குச்சலாபம் - சங்குக்குழி.
சங்குச்சுரி - சங்குப்புரி, புரியாணி.
சங்குச்சுரை புரியாணி, புரியுள்ளசுரை.
சங்குதிரி - சங்குப்புரி.
சங்குதிருகு - சங்கறுக்குங்கருவி.
சங்குத்தாலி – ஓராபரணம்.
சங்குநாதம் – சங்கோசை.
சங்குசாதித்தல் – சங்கூதல்.
சங்குநிதி - கிலுகிலுப்பைச்செடி.
சங்குபுட்பம் – ஞாழல்.
சங்குப்புரி – சங்குச்சுரி.
சங்குமடப்பளி - ஒருசாதி.
சங்குமணி – சங்காற்செய்தமணி.
சங்குமதம் – சவ்வாது.
சங்குமரு - வேம்பு.
சங்குமறை – தூய்யவெள்ளைமறை.
சங்குமுத்து - சங்கின்முத்து.
சங்குமூர்த்தினி – உச்சி.
சங்குமோதிரம் – சங்காற் செய்யப்பட்ட ஒருவகை விரலணி.
சங்குருளை - ஆமை.
சங்குலம்-எதிர்மொழி, கூட்டம், நஞ்சு, போர்.
சங்குலை - ஒளி.
சங்குவடம் - பரிசு.
சங்குவளையல் - சங்காலானவளை.
சங்குவெள்ளை-சங்குச்சுண்ணக்காறை, சுத்தவெள்ளை.
சங்கூடம் - அடுக்கு, குவியல், சுருக்கம்.
சங்கூதி-பதினெண்குடிமையில்ஒருவர்
சங்கூபிலம் - அட்டசங்கீத புராணத்தொன்று.
சங்கூமச்சி – ஒருவகை யூமச்சி.
சங்கேசுவரம் – சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
சங்கேதம் – ஏற்பாடு, கட்டுப்பாடு, குழூஉக்குறி, குறிப்பு, நியமம், தூராலோசனை, பொருத்தம்.
சங்கேபம் – சஞ்சேபம்.
சங்கை - அச்சம், அளவு, ஐயம், கனம், சுக்கு, சுண்டி, மதிப்பு, வழக்கம்.
சங்கைமான் - சங்கைக்காரன்.
சங்கையீனம் - சங்கைத்தாழ்ச்சி.
சங்கோசபர்யாயம் - ஓரலங்காரம்.
சங்கோசபிசுநம் - குங்குமம்.
சங்கோசம் – அடக்கம், கண்கூச்சம், கூச்சம், சுருங்கல், தந்திரம், மஞ்சள், வெட்கம்.
சங்கோபனம் - மறைவு.
சசகம் - முயல்.
சசகாரம் – கட்டுமாமரம்.
சசசிருங்கம் - முயற்கொம்பு.
சசதரன் – சந்திரன்.
சசமதம் – கஸ்தூரி.
சசம் - நால்வகையாடவருளொருவன், முயல்.
சசம்பரி - ஆமணக்கு.
சசம்பிரியம் - முத்து, வெள்ளாம்பல்.

சசலம் - ஈரம்.
சசவிடாணம்-முயற்கொம்பு அது ஓரில்பொருள் வழக்கு.
சசாங்கம் - சந்திரன்.
சசாங்கன் - சந்திரன், கயாவிலிருந்த போதிவிருக்ஷத்தைவெட்டி அழித்தவன்.
சசாதனம் - கழுகு, பருந்து.
சசாபம் - சிறுநன்ஞாரி.
சசி - இந்திராணி, இந்துப்பு, ஐக்கம், கருப்பூரம், சந்திரன், பச்சைக்கருப்பூரம்.
சசிகடல் - மழை.
சசிகன்னம் - பூமிக்கும் சந்திரனுக்கும் உள்ள தூரம்.
சசிகாந்தம் - சந்திரகாந்தமணி செவ்வாம்பல்.
சசிசேகரன் } சிவன், விநாயகன்.
சசிதரன் }
சசிதரி - சிவன், பார்வதி, விநாயகன்.
சசித்துருவம் - சந்திரன் நிலை.
சசிபதி - இந்திரன்.
சசிபிந்து - சசிவிந்து.
சசிபூஷணன் - சிவன்
சசிப்பிரபை - நிலா.
சசிப்புடம் - சந்திரன் சுத்தபுடம்.
சசிமணாளன் - இந்திரன்.
சசியம் - ஆச்சா, கஞ்சா, கனி, நிலப்பனை, பயிர், மராமரம், விளைவு.
சசியாதிபன் - விளைவுகாரகக்கிரகம்.
சசிவன் - சிநேகிதன், மந்திரி.
சசிவிந்து - குரோஷ்டுவமிசத்துச்சித்திரரதன் புத்திரன், இவன் அநேக மனைவியரும் புத்திரரும் உடையானெனப்படுவன்.
சசீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சசுபம் - அசோகு.
சசேதனன் - அறிவு.
சசேலஸ்நாநம் - உடையோடே முழுகுதல்.
சசேலம் - உடை.
சச்சடம் - தாமரை.
சச்சடி - கலம்பகம், சந்தடி, சனக்கூட்டத்தின் நெருந்தரை.
சச்சந்தன்-ஏமாங்கததேசத்தரசன் ஜீவகன்தந்தை. தாய்வயிற்றிலே ஜீவகனிருந்தபோது சச்சந்தனை மந்திரி கொன்று அரசனைத் தாய்காட்டகத்தோடி உயிர் பிழைத்தாள். இவன் வரலாறு சீவகசிந்தாமணியிற் காணலாம்.

சச்சம் - மெய்.
சச்சரவு - கலகம்.
சச்சரி - ஒரு வாத்தியம்.
சச்சரை - சண்டை.
சச்சரைப்படுதல் - சண்டைபிடித்தல்.
சச்சற்புடம் - ஞானம்,பஞ்சதாளத்தொன்று.
சச்சனம் - காவல்.
சச்சிதம் - அணிதல், அலங்கரிப்பு.
சச்சிதானந்தம் - ஞானத்துக்குக்காரணமாயது, சத்துஞ் சித்துமானந்தமுமாய் நிற்கும் பிரமம்.
சச்சிதானந்தன் - ஒரு முனிவன், கடவுள், பிரமன்.
சச்சிரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
சச்சு - அற்பம், இளந்தது, கெட்டபுகையிலை, கொஞ்சம், சந்தடி, நீர்ச்சுண்டி, பறவை மூக்கு.
சஞ்சடி - சச்சடி.
சஞ்சம் - சச்சு, பூணூல்.
சஞ்சயம் - கூட்டம்.
சஞ்சயவாதம் - ஒரு சமயநூல்.
சஞ்சயனம் - காடாற்றுதல்.
சஞ்சயன் - பாண்டவர் புரோகிதன்.
சஞ்சரம் - உடல், கொலை, சங்கடம், பாதை.
சஞ்சரி - தேனீ.
சஞ்சரிகம் - வண்டு.
சஞ்சரித்தல் - சம்பாஷித்தல், திரிதல், வாசம்பண்ணல்.
சஞ்சரிப்பு - சகவாசம்.
சஞ்சரீகம் - வண்டு.
சஞ்சலத்துவம் - உறுதியின்மை.
சஞ்சலம் - அசைவு, காற்று, சுடலையிற்கொண்டுபோகும்பால், துன்பம்,நிலையில்லாமை, மனக்கவலை, மின்னல்.
சஞ்சலனம் - அச்சத்தால்வந்தநடுக்கம்.
சஞ்சலித்தல் - கலங்கல், கிலேசித்தல்.
சஞ்சலை-இலக்குமி, திப்பிலி,மின்னல்.
சஞ்சலைசீவகன் - புருடராகம்.
சஞ்சவனம்- நான்குபக்கந்தாழ்வாரமும் நடுவில் முற்றமு முள்ளவீடு.
சஞ்சனம் - பணிகளானெழுமொலி.
சஞ்சனனம் - பிறப்பித்தல்.
சஞ்சன் - பிரமன்.
சஞ்சாயம் - இலவசம், வாரப்பங்கு.
சஞ்சாயம்விடுதல்-வாரத்துக்குவிடுதல்.
சஞ்சாரகன் - நடத்துபவன்.

சஞ்சாரணம் – தூண்டுதல், நடத்துதல்.
சஞ்சாரப்பிரேதம் – வனவாசி.
சஞ்சாரம் - ஏற்றியிறக்கிப்பாடுதல், கூடியிருத்தல், கூட்டம், சஞ்சரித்தல், தொற்றுவியாதி, நாகரத்தினம், யானைக்கூட்டம், வாசம்.
சஞ்சாரம்பண்ணுதல் – கூடி யிருத்தல், வாசம் பண்ணுதல்.
சஞ்சாரன் - உயிர்.
சஞ்சாரி - சஞ்சரிப்போன்.
சஞ்சாரிகன் - தூதன்.
சஞ்சாரிகை - தூதி.
சஞ்சாலி – பெருந்துப்பாக்கி.
சஞ்சாவாதம் - காற்றும்மழையும்.
சஞ்சாளிகம் - வண்டு.
சஞ்சானிலம் – காற்றும்மழையும்.
சஞ்சிதகருமம், சஞ்சிதகர்மம், சஞ்சிதகன்மம் } சென்ற சனனங்களிற் செய்யப்பட்டுப்பலனனுபவிக்காமனின்ற கன்மம்.
சஞ்சிதம் – ஈட்டியது, கட்டுப்பட்ட வினை.
சஞ்சிதிகை – இலந்தைக்கனி.
சஞ்சிந்தனம் – ஆலோசனை.
சஞ்சிந்தியம் – தியானித்தல்.
சஞ்சிலேடம், சஞ்சிலேட்டுமம் } ஒன்றுக்குட்புகுதல்
சஞ்சீவகரணி - புளி, புளியமரம், மூர்ச்சைதீர்த் துயிர்தரு மருந்து.
சஞ்சீவனம் – உயிர்ப்பித்தல்.
சஞ்சீவனி – ஒருமூலிகை, உயிர்தரு மருந்து.
சஞ்சீவனை - பூநாகம், மூர்ச்சை தீர்த்துயிர்தரு மருந்து.
சஞ்சீவன் - மாமரம்.
சஞ்சீவினி – சஞ்சீவினி.
சஞ்சு - ஆமணக்கு, சாயல், பறவை மூக்கு, வருஞ்சிரமம்.
சஞ்சுகை – பறவைமூக்கு.
சஞ்சுபம், சஞ்சுவம் } மூஸ்திப்பு.
சஞ்சுவிருதம் – பறவை.
சஞ்சூரியமாணம் - பொல்லாங்கிற் கிசைந்திருத்தல்.
சஞ்சேபம் - அடையாளம், சுருக்கம், சோறு, தருக்கம்.
சஞ்சேபித்தல் - சுருக்குதல்.
சஞ்சேயம் ஈட்டியது.
சஞ்சை – பெருமழை, பேரொலி.
சடகம் – ஊர்க்குருவி, குடிக்கும் பாத்திரம், சாராயம், தேன், வட்டில்.
சடகை - ஊர்க்குருவிப்பேடு.
சடக்கடை – ஒன்பது.
சடக்குச்சடக்கெனல், சடக்குப்புடக்கெனல் } ஈரடுக்கொலிக்குறிப்பு.
சடக்கெனல் - ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.
சடக்கோதன் - வசம்பு.
சடங்கப்படுதல் - கட்டுப்படுதல், சோலிக்குட்படல்.
சடங்கப்பூட்டு – மல்லருடைய பூட்டில் ஒன்று.
சடங்கம் – கிரியை, ஆறுசாத்திரம், ஆறு தூக்குக்கொண்ட ஒருநிறை, சோலி, பூட்டு, மூட்டைப்பை, வருத்தம்.
சடங்கு - கிரியை, செய்முறை.
சடசடப்பு, சடசடெனல் } ஈரடுக்கொலிக்குறிப்பு
சடசீதி - ஒருயோகம்.
சடதி – சிதைவு.
சடத்துவம் – சடத்தன்மை.
சடநிறம் - மாமிசச்சிலை.
சடபதார்த்தம் – அசித்துப்பொருள்.
சடபம் – அறுகு
சடபுடத்தல், சடபுடாவெனல், சடபுடெனல் } ஒலிக்குறிப்பு.
சடப்பால் - மூலைப்பால்.
சடம் - அசிதப்பொருள், ஆறு, உடல், குங்குமம், கொடுமை, சடத்தீயினென்று, தகரம், பொய், வஞ்சமனம், விருட்சமூலம்.
சடாச்சுவாலை - மூலாக்கினி.
சடரம் - வயிறு.
சடரயாதனை - கருப்பவேதனை.
சடராக்கினி - உதராக்கினி, மூலாக்கினி.
சடராமயம் – ஒருநோய்.
சடரூபம் - அறிவற்றபொருள்.
சடர் – மூடர்.
சடலட்சணம் - மாயையாக்கையின் குணம், அதுதன்னையுந்தலைவனையுமறியாதிருத்தல்.
சடலபுடலம்-பருத்தது.
சடலம் – சரீரம், பருத்தவுடல்.
சடலை - பருத்தது.
சடவத்து, சடவஸ்து } அசித்துப் பொருள்.

சடவுப்பு - அமரியுப்பு, சமாதியுப்பு.
சடன் - மதியீனம், மூடன்.
சடாகம் - அருநெல்லி.
சடாகுடம் - சடாமுடி, சடை.
சடாங்கம் - உடலுறுப்பாறு.
சடாங்கன் - சிவன்.
சடாசுவாலம் - தீபம்.
சடாடவி - சடைத்திரள்.
சடாட்சரம் - ஷடாக்ஷரம், ஆறெழுத்து, குமரன் மந்திரம்.
சடாட்சரன் - முருகன்.
சடாட்சரி - உமை, சத்திமந்திரம்.
சடாதரம் - அருநெல்லி.
சடாதரன்-அருநெல்லி, சிவன், இருடி, வீரபத்திரன்.
சடாதரி - சடாதாரி.
சடாதாரம் - ஆறுதாரம். அது மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனகதம், விசுத்தி, ஆஞ்ஞை.
சடாதாரி-கொடியார்கூந்தல், சடையுள்ளோன், சிவன், பார்வதி.
சடாபலம் - பனை.
சடாபாரம் - சடை.
சடாமகுடம் - சடாமுடி.
சடாமகுடன் - சிவன்.
சடாமாஞ்சி, சடாமாஞ்சில் - ஒரு மருந்து.
சடாமுடி - சடைமுடி.
சடாயு - அருணன்மக்களி லொருவன், ஒரு கழுகரசன்.
சடாய்த்தல் - அதட்டல், இடித்துரைத்தல், துவக்கில் மருந்திடல்.
சடாரட்டியென்னல் - ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.
சடாரணியம் - ஆறுகாடு.
சடாரி - கவசம், நம்மாழ்வார்.
சடாரிடுதல், சடாரெனல் - ஒலிக்குறிப்பு.
சடார்ப்புடாரெனல் - ஒலிக்குறிப்பு.
சடாலம் - ஆலமரம், தேன்கூடு, யாகத்தறியினிடும் வளையம்.
சடானனன் - ஆறுமுகன், குமரன்.
சடி - சடை, துப்பட்டி.
சடிதி - கச்சோலம், சீக்கிரம்.
சடிதிவு - கச்சோலம்.
சடிரை - ஒருவகைச்செடி.
சடிலம் - குதிரை, சடாமாஞ்சில், சடைசிங்கம், நெருக்கம்.
சடிலை - சடாமாஞ்சில்
சடினம் - சடைமரம், வசம்பு, வேர்.
சஷீசுவரம் - சிவஸ்தலங்களாயிரத்தெட்டனுளொன்று.
சடு - அழுதல், ஆறு, வயிறு.
சடுதி - சீக்கிரம்.
சடுத்தம் - வலாற்காரம், வில்லங்கம்.
சடுத்தம்பூட்டுதல் - வலாற்காரமாகப் பொறுப்பித்தல்.
சடுலம் - நடுக்கம்.
சடுலவோசை - தீக்கொழுந்துமுதலியவற்றினசைவா னெழுமொலி.
சடேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சடை - அடைக்குந்தடி, ஆணியின்கொண்டை, இரேகை, கூட்டம், சடைச்சி, சடாமாஞ்சில், சடையென்னேவல், பிரபை, பின்னல்மயிர், வேர்.
சடைக்கஞ்சா, சடைக்கந்தசம் - முறகுஞ்சா.
சடைக்சந்தகம் - வசம்பு.
சடைச்சி - கீரிப்பூடு, நெட்டி, பாசி, பார்வதி, பொன்னிமிளை, புளியாரை.
சடைச்சிவேர் - ஒருவகைப்பூடு.
சடைதல் - ஆணி முதலியவை தறைந்து அகற்றுதல், கிலேசப்படுதல், தயிரிய வீனமாதல், மனமடிதல், வளராது நிற்றல்.
சடைத்தல் - கிளைத்து நெருங்குதல்.
சடைநாகம் - ஓராபரணம், பாம்பு.
சடைநாய் - ஒருநாய்.
சடைப்பயறு - ஒருபயறு.
சடைப்பாசி - ஒருபாசி.
சடைப்பில்லை - ஒரு தலையாபரணம், இலாக்கடி.
சடைப்புல் - ஒருபுல்.
சடைமுடி - சரக்கொன்றை.
சடைமுடியோர்-தபத்தர்மஹருஷிகள்.
சடையநாயனுர் - சுந்தரமூர்த்தி நாயனுருடைய தந்தையார்.
சடையன் - சிவன், வீரபத்திரன்.
சடையாணி - குடுமியாணி.
சடையோன் - சிவன், வீரபத்திரன்.
சடைவு - ஆணி முதலியவற்றின் தறைவு, தடை., தயிரியவீனம், துக்கம்.
சட் - ஆறு.
சட்கருமம் - அந்தணர்தொழிலாறு. அது ஸ்நானம், ஓமம், சுவாத்தியாயம்,

செபம், தருப்பணம், பிதிர்பூசை, அன்றியும்; ஈதல், ஏற்றல்,ஓதல்,ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்.
சட்சணம் - பட்சணம்.
சட்ஜம் - பன்னிருசுரங்களுளொன்று.
சட்சரணம் - வண்டு.
சட்சள்ளெனல் - ஒலிக்குறிப்பு.
சட்சு - கண்.
சட்சுதீட்சை - கண்ணினுற்செய்யுந்தீக்ஷை, சற்குருதீட்சையினென்று.
சட்சுருதிதைவதம் - பன்னிரு சுரங்களுள் கைசிக நிஷாதமென்னும் ஒரு சுரம்.
சட்சுருதிரிஷபம் - பன்னிரு சுரங்களுள் சாதாரண காந்தாரமென்னும் ஒருசுரம்.
சட்சுவிந்திரியக்காட்சி ஓரளவை. அது உருவமறிதல்.
சட்சுவை - அறுசுவை.
சட்டகப்பை - தட்டகப்பை.
சட்டகம்-உடல், மக்கட்படுக்கை,வடிவு.
சஷ்டகல்வி } வீண்பேச்சு.
சட்டகல்வி
சட்டங்கட்டுதல் - ஒழுங்குபடுத்தல்,கட்டளையுண்டாக்கல்.
சட்டதிட்டம் } ஒழுங்கு, கட்டளைச்சட்டம், பூரணம்.
சட்டபட்டம்
சட்டப்பலகை - மட்டப்பலகை.
சட்டம் - எழுதுமோலை,கட்டளைத்திட்டம், கட்டில் முதலியவற்றின் சட்டம், திருத்தம், நாவிச்சட்டம், பூரணம்.
சட்டம்பி - உவாத்தி.
சட்டம்பிப்பிள்ளை } தலைவன்.
சட்டம்பிள்ளை
சட்டவட்டம் - சட்டதிட்டம்.
சட்டவளை - குறுக்குவளை.
சட்டவாள் - சட்டம்பூட்டிய ஈர்வாள்.
சட்டவிளக்கு - ஒருவகைநிலைவிளக்கு.
சட்டாட்டம் - சண்டியாட்டம்,வாதாட்டம்.
சட்டாம்பிள்ளை - சட்டம்பிள்ளை.
சட்டால் - வில்வம்.
சட்டி - ஆறுந்திதி, ஆறு, ஓர்பாண்டம், சட்டியென்னேவல், தாமரை.
சட்டி - ஆறுந்திதி, ஆறு.
சட்டித்தலை - பருந்தலை.
சட்டித்தலைப்பா - வட்டத்தலைப்பா.
சட்டித்தலையுள்ளான் - ஒருகுருவி.
சட்டித்தல் - அழிந்தல், கொல்லல்.
சட்டிபூர்த்திசாந்தி - அறுபதுவயதிற் செய்யுமோர் சடங்கு.
சட்டிப்பீரங்கி - அகன்றபீரங்கி.
சட்டிப்புல் - ஒருபுல்.
சட்டியாட்டுதல் } ஒருகூத்து.
சட்டியுருட்டுதல்
சட்டிவட்டு - கப்பல்வள்ளிக்கிழங்கு.
சட்டிவிரதம் - ஒரு கந்தசஷ்டிவிரதம்.
சட்டு - அழிவு, ஆறு, சேதம்.
சட்டுவம் - அகப்பை.
சட்டுவருக்கம் - இலக்கினத்திலிருந்து பிரியுமாறு வருக்கம்.
சட்டென - விரைய.
சட்டை-அங்கி,சணிப்பு, சிறகு, தைவேலைப்பூண்டு, பாம்பின்றோல்,பொதி.
சட்டைகழற்றல்-பாம்புதோல்கழற்றல்.
சட்டைக்காரர் - காற்சட்டைக்காரர்.
சட்டைச்சாம்பு - சட்டைக்குக் கூடிய புடைவை.
சட்டைநாதன் - சிவன், வயிரவன்.
சட்டைபண்ணல் - கனம்பண்ணல்.
சட்டைமுனி - ஒரு சித்தன்.
சட்டோலை - எழுதற்கான வோலை.
சட்பதம் - வண்டு.
சட்பதாதி - சண்பகம், மாமரம்.
சட்பம் - அறுகு, சிறுபயிர், பசும்புல், மயிர். [ன்று.
சட்பிதாபுத்திரிகம் - பஞ்சதாளத்தொ
சட்பிரஞ்ஞன் - ஆறு காரியமறியு மறிவுடையோன். அவை சன்மார்க்கம், தேவதன்மை, பாக்கியம், பிரபஞ்சவியல்பு, மூத்திவிருப்பம்.
சட்புர்ளெனல் - கோபித்துப்பேசல்.
சணகம் - கடலை, புளியாரையிலை.
சணசூத்திரம் - மீன்பிடிக்கும் வலை.
சணபுவ்ஷபிகை - கிலுகிலுப்பை.
சணப்பு - சணல்.
சணம் - கணம், ஏகசித்தம், கடலை, சணல்மரம், தருப்பை.
சணம்பு - ஒருபயிர், மருள்.
சணல் - ஒருபயிர்.
சணற்பனுர் - சணற்றும்பு.
சணுய்த்தல் - காமங்கொள்ளல், சணைத்தல்.
சணுவு - கையாந்தகரை.

சணைத்தல் - கொழுத்தல், விரிந்துண்டாதல்.
சணைப்பு - கிளைப்பு, செழிப்பு.
சண்டகன் - இலிங்கபாஷாணம்.
சண்டகௌசிகன் - கௌதம வமிசத்தில்வந்த ஒரு முனிவர். மகததேசத்தரசனாகிய பிருகத்திரதன். இக்கௌசிகர் அனுக்கிரகித்த ஒரு மாங்கனியால் ஜராசந்தன் என்னும் புத்திரனைப் பெற்றான்.
சண்டப்பிரசண்டம் - மிகுவேகம்.
சண்டப்பை - கருப்பை.
சண்டமாருதம் - பெருங்காற்று.
சண்டமாருதம் பொழிதல் - மிகுதியாய்ப் பொழிதல்.
சண்டமார்க்கன் - சுக்கிரன் புத்திரன், தைத்திய புரோகிதன்.
சண்டமுண்டர் - சும்பநிசும்பர் தோழர்.
சண்டம் - உறைப்பு, எருது, கருப்பம், கொடுமை, கோபம், சீக்கிரம், பேடு, வேகம்.
சண்டவேகம் - மிகுவேகம்.
சண்டன் - அசுரன், அலி, காலன், சிவன், சூரியன், நமன், புளியமரம், பேடி, வேகி.
சண்டாதகம் - சல்லிடம்.
சண்டாதம் - அவுரி.
சண்டாலிகை - பறைக்கின்னரம்.
சண்டாளநீர் - நீசர்பரிசனநீர்.
சண்டாளப்பிராயச்சித்தம் - சண்டாளரால் வந்த குற்றத்துக்குப் பண்ணும் நிவிர்த்தி.
சண்டாளம் - துரோகம், புலைத்தன்மை.
சண்டாளன் - துரோகி, பார்ப்பனத்தியிடத்திற் சூத்திரனுக்குப் பிறந்த புத்திரன், புலையன்.
சண்டாளி - துரோகி, புலைச்சி.
சண்டி - உரோசமற்றவன், ஒருமரம், சண்டேசுரநாயனார், துர்க்கை.
சண்டிகை - காளி, துர்க்கை.
சண்டிக்கார் - ஒருநெல்.
சண்டிக்கீரை - ஒருகீரை. [கேடு.
சண்டித்தனம் - பிடிவாதம், நாணயக்
சண்டியின் - ஒரு முனிவன், சிவன், நாவிதன்.
சண்டிவாளம் - முன்தீர்த்த வினையை அழிக்கும்படி கொடுக்கிறபணம்.

சண்டீசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனு ளொன்று.
சண்டு - ஒருவண்டு, பதர்.
சண்டேசுரநாயனார் - ஒரு சிவபக்தர், இவர் சேனுலூரிலே பிராமண குலத்திலே எச்சதத்தன் மகனாகப் பிறந்து வேத விற்பன்னராகி அக்கிரகாரத்துப்பசுக்களை மேய்த்துவரப்பொருந்திக்கொண்டுபோய் மண்ணியாற்றின் கரையிலே விடுத்து மணலைச் சிவலிங்கமாக்கிப் பசுக்களின் பாலைக்கறந்து அபிஷேகம் பண்ணிப் பூசைபுரிந்து வருவதை யுணர்ந்த தந்தை ஒரு நாட்சென்று மணலினாலமைத்த சிவலிங்கத்தைக் காலாற் சிதைக்க அது கண்டு பொறாராகி வாளினா லவர்காலைச் சிதைத்தவர், இவருடையபக்தி வலிமையைக்கண்டு சிவபிரான் சண்டேசுரபதத்தை யீந்தருளினர். இவர் காலம் நாலாயிரத் தைஞ்ஞூறு வருடங்களுக்கு முன்னுள்ளது.
சண்டேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
சண்டை - யுத்தம், பிணக்கு, போர்.
சண்ணுதல் - செய்தல், வைதல்.
சண்பகசுந்தரன் - மதுரையிற் கோயில் கொண்ட சிவன்.
சண்பகம் - செண்பகம்.
சண்பகாரணியேசுவரர் - திருநாகேச்சுரத்திலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
சண்பனி - காளி, யோகினி.
சண்பு - சண்பங்கோரை.
சண்பை - சீகாழிநகர்.
சண்பையர்கோன் - சம்பந்தன்மூர்த்தி.
சண்மதம் - அறுவகைசமயம், சட்சமயம்.
சண்முகன் - அறுமுகக்கடவுள், குமரான்.
சதகண்டம் - நூறுபாகம், பொன்.
சதகம் - தான்றிமரம், நூறுசெய்யுட் கொண்ட பிரபந்தம்.
சதகுப்பி, சதகுப்பை } ஒருபூடு.
சதகுப்பை - ஒரு மலை; இது பொன் விளைவது.
சதகோடி - இடி, நூறுகொடி, வச்சிராயுதம்.
சதக்கல் - சேறு.

சதக்கிரதம் - மின்னல்.

சதக்காது } தேவேந்திரன்.
சதக்கிருது }

சதக்கினி - நூற்றுவரைக் கொல்வதாகிய பொறி.

சதக்கினிரோகம்-ஒருவகைநோய். அது கண்டத்திற் குட்புறத்தில் விருத்தியடைந்து துர்மாமிசத்தைக்கொண்டு பலாமுள்ளுகளையொத்த முள்ளுகள் நிறையப்பட்ட பெரியஇருப்புத்தண்டத்தைப்போல் கழுகத்தை வீங்கப் பண்ணுவது. அதனல் மிக்கஉபத்திரவமும் தாகமும் சுரமும் தலைநோவுமுண்டாகும்.

சதங்கை - காலணி, சலங்கை.

சதங்கைப்பூரம் } ஒருவகைப்பூரான்.
சதங்கைப்பூரான் }

சதசதத்தல் - நொதுநொதுத்தல்.

சதசதப்பு – நொதுநொதுப்பு. [து.

சதசத்து-ஆத்துமா, சத்துமசத்துமாயா

சதசித்து – பசுமானன் புத்திரன். இவனுக்குப்புத்திரர் நூற்றுவர். அவருள் மூத்தோன் விஷுவசோதி, சகஸ்திரஜித்து புத்திரன், இவன் புத்திரர் மகாஹயன், வேணுஹயன் என்போர்.

சதகிருங்கம் – மேருமலையின் ஒருபாகம்; ஒருமலை, இது துர்வாசர் உபதேசித்தமந்திரத்தால் குந்தி பாண்டவரைப் பெற்றவிடம்.

சதசு – சபை, பிராமணசபை.

சதசுலோபி – பண்டிதன்.

சதசுவன் – சமரன்புத்திரன்.

சதசேதனன் – கிருஷ்ணன் வமிசத்து உக்கிரசேனன் மகன்.

சதச்சதம் – தச்சன்கருவி.

சதஞ்சீவி – நூறுவயதிற்கிருப்பவன்.

சததம் – சதாகாலம், எப்பொழுதும்.

சததளம் - தாமரை.

சததன்வன் - ஹிருதிகன் புத்திரன், தேவமீடன் தம்பி; இவன் சத்தியபாமையைத் தான் பெறக் கருதிச் சத்திராசித்துவை நித்திரை போம்போது கொன்றவன். அது காரணமாகக் கிருஷ்ணனுற் கொல்லப்பட்டவன்.

சததாமன் – விட்டுணு.

சததாரை – இடி.

சதத்திருதி – இந்திரன், பிரமன், பிராசீன பருகிபாரி.

சதத்துரு-ஒருநதி. இது இமாலயத்துக்கு வடபாலிலுற்பத்தியாகிச் சிந்து நதியிற் கூடுவது.

சதத்துவசன் - ஊர்வஜன் புதல்வன்.

சதத்துவம் - சுபாவம்.

சதபதி – சாணிப்பூரான், மரவட்டை.

சதபதுமம் – தாமரை.

சதபத்திரகம் – தச்சன் குருவி.

சதபத்திரம் - கிளி, தச்சன் குருவி, தாமரை, மயில், வெண்ணரை.

சதபத்திரி - தாமரை, தாமரையிலை, புழுக்கொல்லி.

சதபருவை – சுக்கிரன்பாரி.

சதபுட்பம் - சதகுப்பி.

சதபோனகபகந்தரவிரணம் - ஒருவகை விரணநோய். அது பகந்தரக்கட்டிகள்பழுத்துடைந்து ஒன்றோடொன்ருய்க் கலக்கும் காலத்திற்பிறப்பது. அதனுற் புற்றைப்போற் சிறுசிறு துவாரங்களுள்ள விரணங்கள் விருத்தியாகும். அவ்விரணங்களிற்கெட்ட நாற்றத்தைக்கொண்ட சீழிரத்தம் வடிவதோடு சிலவேளை நுரையையுடைய சுத்தசலமும் வடியும்.

சதபோனகம் – ஒருவகை நோய். அது ஆண்குறி முற்றிலுஞ் சிறுசிறு துவாரங்களை யுண்டாக்குவது. அதனல் மூத்திரம் வரும்போதெல்லாம் எரிச்சலதிகரிக்கும்.

சதப்பிராசம் - அலரி.

சதமகன் } தேவேந்திரன்.
சதமன்னியு }

சதமுனை – வச்சிராயுதம்.

சதமூலம் – தண்ணீர்விட்டான்கிழங்கு.

சதமூலி – ஒருபூடு.

சதமூலை - தண்ணீர்விட்டான்கிழங்கு.

சதம-அறுபடுபயிர், இடி, இலை, இறகு, எல்லாம், தமாலமரம், தாழ்தல், நித்தியம், நிலைமை, நூறு, போதல்.

சதயஷ்டி–நூறுசாமுள்ள முத்துமாலை.

சதயம் - ஒருநட்சத்திரம். [னிவன்.

சதயாபன்–கேகயவமிசத்து ஒரிராஜமு

சதருத்திரீசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

சதரூபை - சுவாயம்புபாரி. இவள் பிரமாவினுல் முதன்முதல் சிருஷ்டிக்கப்பட்ட பெண்.
சதர்க்கேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சதவலி - சுக்கிரீவன் சேனுதிபதிகளுளொருவன்; சீதையைவடதிசையிற்றேடிப்போன தூதன்.
சதவல் - சதுப்புநிலம்.
சதவீரியம் - வெள்ளறுகு.
சதவீரு - ஒருமல்லிகை.
சதளம் - கூட்டம்.
சதனம்-இலை, இறகு, உறை, நீர், வீடு.
சதனரோகம் - ஒருவகை நோய். அது சிறுவர்களுக்கு வயிற்றிற் புளித்தமலஞ் சேர்வதாலும், அதிசாரரோகத்தாலும் பிறப்பது. அப்போது குதஸ்தானத்திற் சிவந்த சிலேஷ்மமொத்தையைப்போல் சிவந்த நிறமுடையவிரணமும் உள்ளே அதிக நமைச்சலு மிகுந்த உபத்திரவமு முண்டாகும்.
சதா-எப்பொழுதும், மரக்கலம், மாத்தினுட்பழுது.
சதாகதி - ஓயாநடை, காற்று, நிர்வாணம், பேரலை.
சதாகாநந்தை - பாரிபத்திர பர்வதத்திலுற்பத்தியாகும் நதிகள்.
சதாகாலம் - எப்பொழுதும்.
சதாக்ஷி - துர்க்கை, காளி.
சதாக்கினி - தேள்.
சதாங்கம் - பாண்டில் பூண்டவூர்தி.
சதாசாரம்-சாதுக்களாலாசரிக்கப்பட்டநன்னடை.
சதாசிவதேசிகர் - குட்டித்தொல்காப்பியம் என்னும் இலக்கண விளக்கஞ் செய்த வைத்தியநாத நாவலர் குமாரர்.
சதாசிவம்-சதாசிவன், முடியாநன்மை.
சதாசிவன் - பஞ்சகர்த்தாக்களி லொருவர்; இவர் விந்து ரூபமும், வியோமவடிவும், படிகநிறமும், பிறைமுடியும், ஐந்து திருமுகமும், பத்துக் கரமும், மூன்று நேத்திரமும், உமையொருபாசமும், சௌமியமுமுடையவர். இம்மூர்த்திக்குப் பீஜாக்ஷரம் ஹாகாரம்.
சதாதநன் - அழியாதவன், விட்டுணு.
சதாதாநம் - இந்திரன்யானை.
சதாஸ்தி - எப்போதுமிருத்தல்.
சதாநந்தன் - பிரமா, கௌதமர் அகலியையிடத்துப் பெற்ற புத்திரன். இவன் ஜனகராஜா குலகுரு.
சதாநீகன் - எப்போதுமில்லாமை.
சதாநீகன் - நகுலனுக்குத் துரோபதியிடத்துப் பிறந்த புத்திரன், ஜனமேஜயன்.
சதாநீரை - பாரிபத்திர பர்வதத்திலுற்பத்தியாகும் நதிகள்.
சதாபடம் - எருக்கு.
சதாபதி - நித்தியம், மரவட்டை.
சதாபலம் - அத்திமரம், எலுமிச்சை, தெங்கு, வில்வமரம்.
சதாபுசம் - வண்டு.
சதாபுட்பம் - முல்லை, வெள்ளெருக்கு.
சதாபுட்பி - எருக்கு, செவ்வெருக்கு.
சதாபுயம் - வண்டு.
சதாபூடம் - சதாபடம்.
சதாப்பு - ஒருபூண்டு.
சதாமதுராம்பிகை - திருத்தருமபுரத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்.
சதாமூர்க்கம் - பாம்புகொல்லி.
சதாமூலம் - நீர்மீட்டான்.
சதாயு - சிராயு.
சதாரம் - இடி.
சதாருகுட்டம்-ஒருவகைக்குட்டநோய். அது சிவந்தும் கருத்து மடியகன்றுமனேக கொப்புளங்களெழும்பிச் சர்வாங்கத்திலும் பரவாநிற்கு மிரணங்களாகும். அதில் எரிச்சலு நோவும் கிரிமியு மதிகரிக்கும். அதனுல் மிகுந்த துக்கமுண்டாகும்.
சதாவரி - தண்ணீர்விட்டான்கிழங்கு.
சதாவர்த்தன் - விட்டுணு.
சதாவேரி - நீர்மீட்டான்.
சதானகம் - சுடுகாடு, இடுகாடு.
சதானந்தம்-கடவுள், கௌதமன், சதாநந்தரிஷி, நீங்காமகிழ்ச்சியுள்ளவன், பிரமன், விட்டுணு.
சதானீகன் - ஓரரசன், விருத்தன்.
சதி-அழிவு, அனுமரணம், உரோகிணி, கற்புடையாள், சீக்கிரம், சோறு, தாழ்வாரம், தாளவொத்து, பார்வதி, மனைவி, வஞ்சனை, வட்டம்.

சதிகாரன் - வஞ்சகன்.
சதிகாரி - துரோகி, வஞ்சகி.
சதித்தல் - சதிசெய்தல்.
சதித்துவம் - கற்புடைமை.
சதிபதி - சிவன்.
சதிபுருஷநியாயம் - ஸ்திரீ புருஷருக்குள்ள உரிமை.
சதிமகள் - இந்திராணி.
சதிமானம் - அபகடம்.
சதிமோசம் - மடிப்பு.
சதியோசனை - அபகடம்.
சதிரம் - ஒருகக்கரி.
சதிரிசம் - உவமை.
சதிர் - இலகு, எல்லை, குறைந்தவிலை, நாட்டியசபை.
சதிரக்கிராமம் - ஊரின் தலைக்கிராமம்.
சதீசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டனு ளொன்று.
சதீபதி - சிவன்.
சதீபுத்திரன் - விநாயகன்.
சதீலம் - காற்று, மூங்கில்.
சதீனகம் } பயறு.
சதீனம் }
சது - நான்கு.
சதுகம் - பெருங்காயம்.
சதுக்கம்-சதுரம்,சத்திரம்,தலையுறுமால் திண்ணை, நாற்றெருக் கூடுமிடம்.
சதுக்கல் - வழுக்கல்.
சதுங்கம் - பறவை.
சதுச்சமம்-நால்வகைச்சாந்தின்கலவை
சதுச்சுருதிதைவதம் - பன்னிருசுரங்களுள் சுத்தநிஷாத மென்னும் ஒரு சுரம்.
சதுச்சுருதிரிஷபம் - பன்னிருசுரங்களுள் சுத்தகாந்தாரமென்னும் ஒருசுரம்.
சதுஷ்கம் } நான்கு.
சதுட்கம் }
சதுஷ்டயம் } நான்மடங்கு கொண்டது
சதுட்டயம் }
சதுட்பதம் } சதுர்ப்பதம், நாய், நாற்காலுள்ளது, நாற்றெருக் கூடுமிடம்,
சதுஷ்பாதம் }
சதுட்பாதம் }
நான்கடி கொண்ட பாட்டு.
சதுப்பு - சதசதப்பான நிலம்.
சதுமணி - கழலை.
சதுமுகன் - அருகன், நான்முகன்.
சதும்பை - பேய்மருட்டி.

சதுரகிரி-திருவனந்தபுரத்தருகிலுள்ள ஒரு மலை. இது ஒரு சிவஸ்தலம்.
சதுரக்கள்ளி - ஒருகள்ளி.
சதுரக்கை - ஒருவகைக்கூத்துக்கை. அது சுட்டுவிரலும் நடுவிரலுந் தம்முட் சேர்ந்து இறைஞ்சப் பெருவிரல் அகம் வரவைத்துச் சிறுவிரல் பின்னே நிமிர்ந்து நிற்பது.
சதுரங்ககோலவிமானம் - நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருவல்லவாழிலுள்ள விமானம்.
சதுரங்கசேனை - காலாள் தேர் பரி யானையாகிய நால்வகைச்சேனை.
சதுரங்கதாரணை-நவதாரணையில்ஒன்று
சதுரங்கதானை - சதுரங்கசேனை.
சதுரங்கபட்டினம் - ஒரு கடற்றுறைப் பட்டினம்.
சதுரங்கபந்தம் - சித்திரகவியில் ஒன்று.
சதுரங்கபலம் - நால்வகைத்தானை.
சதுரங்கம் - ஒரு விளையாட்டு, நால்வகைத்தானை, நாற்கோணம்.
சதுரங்கன் - உரோமபாதன் மகன்.
சதுரசாலை - நாற்சார்வீடு.
சதுரந்தயானம் - சிவிகை, பல்லாக்கு.
சதுரப்பாடு - சதுரம், விவேகம்.
சதுரப்பாலை - நால்வகைப் பாலையுள் ஒன்று.
சதுரம்-அகலநீளமொத்தநாற்கோணம், சதுரக்கள்ளி, சமர்த்து, நாகரீகம், யானைப்பந்தி, விரைவு, விவேகம்.
சதுரர் - அறிஞர், திறமுடையோர், நகரப்பதியோர், நாகரிகர்.
சதுரன் - கற்றவன், நாகரிகன், பேராசைக்காரன்.
சதுரானனன் - பிரமன்.
சதுரித்தல் - சதுரமாக்கல்.
சதுரியுகம் - நாலுசமுங்கூடியபேருகம்.
சதுரை - சதுரங்கபட்டினம்.
சதுர் - சபைக்கூடிச் செய்யு நடனம், றம், நான்கு, புத்தி.
சதுர்கூலி - ஆவிரை.
சதுர்க்கதி - ஆமை.
சதுர்க்குணன்-ஓர்ப்பு கடைப்பிடி குறிக்கோள் தோற்றம் எனு நாற்குணமுடையான்.
சதுர்க்குணி - நாணம், மடம், அச்சம் பயிர்ப்பு எனு நாற்குணமுடையாள்

சதுர்த்தசபுவனம் - பதினாலுலகம்.
சதுர்த்தசம் - பதினான்கு.
சதுர்த்தசி - பதினான்காந்திதி.
சதுர்த்தந்தம் - இந்திரன்யானை.
சதுர்த்தபலம் - நாலாவதாகவந்தபேறு.
சதுர்த்தம் - நான்காவது.
சதுர்த்தரங்கியம் - நாலிலொன்று.
சதுர்த்தர் - சமர்த்தர், சூத்திரர், வேளாளர்.
சதுர்த்தல் - அப்புதல்.
சதுர்த்தி - கவிபாடக்கொடுத்தவோரடி, நான்காந்திதி.
சதுர்ப்பதம் - கரணம், பதினொன்றில் ஒன்று; அது நாய்க்கரணம்.
சதுர்ப்பலம் - நான்குபலம்.
சதுர்ப்பாகம் - நாலாம்பங்கு.
சதுர்ப்பாடு - சதுரப்பாடு.
சதுர்ப்பாதை - நாற்றெருக் கூடுமிடம்.
சதுர்ப்புயன் - சிவன், விட்டுணு.
சதுர்முகன் - சதுமுகன்.
சதுர்யுகம் - சதுரியுகம்.
சதுர்வேதம் - நாலுவேதம்; அது இருக்கு எசுர் சாமம் அதர்வணம்.
சதுலம் - வைத்தல்.
சதுனி - வௌவால்.
சதூகை - இண்டஞ்செடி, கச்சோலம், வௌவரல்.
சதேகரு - இலவங்கப்பட்டை.
சதேசன் - நூறுகிராமத்துக்குத் தலைவன்.
சதேசுவரம் - சிவத்தலங்களாயிரத் தெட்டனு ளொன்று.
சதேரன் - பகைவன்.
சதை - ஜோடு, தசை, பாலைமரம், முன்னைமரம்.
சதைக்கழலை - ஒருவகைக் கழலைநோய்.
சதைக்குந்தம் - ஒருவகைக் குந்தநோய்.
சதைக்குவை - ஒருவகைக் கண்ணோய். அது கடைக்கண்ணிற் கருங்குன்றியைப்போற் தசையைப் புடைப்பிப்பது.
சதைதல் - நசுங்குதல்.
சதைத்தல் - தசைபிடிகொள்ளுதல், நசுக்குதல்.
சதைப்படாத்தி - ஒருவகைக்கண்ணோய் அது வெள்விழியில் இருதுவான தசையைத் தடிக்கும்படி செய்வது.
சதைப்பதுமம் - ஒருவகைக் கண்ணோய். அது இமைக்குள் தர்மாமிசத்தை வளர்ப்பிப்பது.
சதைப்புற்று - ஒருவகைக் கண்ணோய்; அது வெள்விழியில் இரத்தத்தினுற் சிவந்த தசையை வளர்ப்பிப்பது.
சதைப்பொருத்தி - ஒரு நீர்ப்பூடு.
சதையம் - ஒரு நக்ஷத்திரம்.
சதையொட்டி - ஒருபூடு.
சதோகநாதர் - நவநாதசித்தரிலொருவர்.
சதோகரு, சதோகுரு - இலவங்கப்பட்டை.
சதோடம் - தோஷ சம்பந்தமுள்ளது, மரகதத்தின் குணம். அது கரட விலக்கணம்.
சத்தகம் - எழுகூடியது, ஒருகத்தி, ஒரு மரணகன்மம்.
சத்தகன்னிகை - அபிராமி, இந்திராணி, கவுமாரி, காளி, நாராயணி, மகேசுவரி, வராகி என்னும் எழுமாதர்கள்.
சத்தகுலாசலம் - இமயம், ஏமகூடம், கைலை, கிடதம், நீலகிரி, மந்தரம், விந்தியம் எனும் எழுமலை.
சத்தசமுத்திரம் - உவர்நீர், கருப்பஞ்சாறு, தயிர், தேன், நன்னீர், நெய், பால் எனும் எழுகடல்.
சத்தசாகரம் - எழுசமுத்திரம், சத்தசமுத்திரம்.
சத்தசாத்திரம் - சொல்லிலக்கணம்.
சத்தசிப்பி - கிளிஞ்சில்.
சத்தசியம் - கிரந்தச்சொல் விலக்கண விரிவு.
சத்தசுரம் - எழுசுரம்.
சத்தசுராக்கரம் - எழ்சுரத்திற்குரியவக்கரம்; அவை ச-ரி-க-ம-ப-த-நி.
சத்ததன்மாத்திரை - ஒலிப்பிரகிருதி.
சத்ததாது - உடல், இரசம், இரத்தம், சுக்கிலம், மூளை, சதை, எலும்பு, தோல் எனும் எழ்தாது.
சத்ததாரணை - ஒன்பது தாரணையினொன்று.
சத்ததாளம் - எழ்விததாளம்; அவை துருவம், மட்டியம், உரூபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம்.
சத்ததானம் - வெடியுப்பு.
சத்ததீர்த்தம் - கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி எனும் எழ் விசேஷதீர்த்தம்.
சத்தபர்ணி - எழிலைப்பாலை.
சத்தபுரி - அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்னும் எழுதலம்.

சத்தப்படுதல் - ஒலிப்படுதல்.
சத்தப்பிரதி - சத்தவுணர்வு.
சத்தப்பிரமம் - எழுத்தொலியே தெய்வமென்னும் நூல், கலைஞான மறுபத்துநான்கில் ஒன்று.
சத்தப்பிரமவாதம் - ஒரு சமயம்.
சத்தப்பிரமவாதி - ஒரு சமயி.
சத்தமண்டலம்-வாயு, வருணன், சந்திரன், சூரியன், நட்சத்திரம், அக்கினி, திரிசங்கு என்னும் எழுமண்டலம்.
சத்தமி - ஏழாந்திதி.
சத்தமுகில் } சத்தமேகம் } ஆவர்த்தம், சம்வர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என ஏழுமேகம்.
சத்தம் - இசை, ஏழு, ஒலி; அது பஞ்சவிடயத்தொன்று, குரல், வாடகை வார்த்தை.
சத்தயோனி - சொன்மூலம்.
சத்தரிஷிகள் - அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன், அன்றியும் அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன், அன்றியும் மரீசி, ஆங்கீரசன், புலவகன், வசிட்டன், அத்திரி, புலத்தியன், கிரது, அன்றியும் காசிபன், அத்திரி, பாரத்துவாசன், விசுவாமித்திரன், கௌதமன், சமதக்கினி, வசிட்டன்.
சத்தவருக்கம்-எழ்வகைமருந்து. அவை இலவங்கம், ஏலம், குருவேர், சடாமாஞ்சி, திராட்சம், நெல்லிக்காய், வெட்டிவேர்.
சத்தவிதம் - தோத்திரஞ்செய்தல்.
சத்தவெடி - இலக்கங்குறியாது வைக்கும் வெடி.
சத்தன் - சிவன்.
சத்தாபாசம் - அசத்து.
சத்தார் - மூலையோட்டம்.
சத்தார்த்தம் - சொற்பிரயோசனம்.
சத்தாவத்தை - அஞ்ஞானம், அபரோட்சம், சோகநிவர்த்தி, ஆனந்தம், என ஏழவத்தை.

சத்தி - இந்துப்பு, உபாயவழி, கக்கல், கந்தகம், குடை, குமட்டிக்கொடி, கைவேல், சத்திசாரணை, சத்திசாரம், சத்தியென்னேவல், சவுக்காரம், சிவதத்துவமைந்தில் ஒன்று. அது கிரியை நாடல், சுரோணிதம், சூலம், தேரிடக்கியம், திமிலை, நீர்முள்ளி, நெல்லிக்காய்க் கந்தகம், பார்வதி, பெண், பெண்கலை, பெலம், பேய்ப்புடல், பொன்னிமிளை, மறியரி, மறியல், மூன்று வலிமை, விருதுக்கொடி, வெண்குடை, வேம்பு.
சத்திகம் - குதிரை.
சத்திகர் - சத்துவகர்.
சத்திகீலம் - வீணைமுறுக்காணி.
சத்திகுருநாதன் - கஞ்சா.
சத்திகுன்மம் - கக்குகிற ஒருநோய்.
சத்திக்கூற்றோன் - நவக்ஷாரம்.
சத்திக்கொடி - குமட்டிக்கொடி.
சத்திசாரணை - ஒருபூடு, மூக்கிரட்டை.
சத்திசாரம் - ஒருப்பு.
சத்திதத்துவம் - சிவதத்துவம் ஐந்தில் ஒன்று; அது கிரியையாயிருப்பது.
சத்தித்தல் - உவாந்தித்தல், ஒலித்தல்.
சத்திநாதம் - ஏமாப்பிரகம், பொன்னிமிளை, பொன்னிறம்.
சத்திநாயனார் - ஒரு சிவபத்தர். இவர் சோழநாட்டிலே வேளாளர் மரபிற்றோன்றிச் சிவனடியார்களை நிந்தை செய்பவர்களது நாக்கையரிதலே தமது திருத்தொண்டாகக் கொண்டு விளங்கினவர்.
சத்திநிபாதம் - சத்திபதிதல்.
சத்திநிபாதர் - மனதையடக்கித்தெய்வ வழிபடுவோர்.
சத்திப்பு - உவாந்தி.
சத்திமுற்றப்புலவர் - சத்திமுற்றமென்னு மூரிலே செங்குந்தர் குலத்திலே விளங்கிய ஒரு தமிழ்ப்புலவர். இவர் தமது வறுமைநோயாற் பாண்டிநாட்டையடைந்து பாண்டியனைத் தரிசிக்கும்பொருட்டுச் சமயம் பார்த்திருக்கும் பொழுது ஓரிரவு பெருமழையி லகப்பட்டுப் போர்த்துக் கொள்ளவும் வஸ்திர மில்லாது குளிரால் மெலிந்து மரத்தின் கீழிருந்து தமது மனைவிமக்களை நினைந்து

சாடி - ஆண்மயிர், கும்பவிராசி, குற்றஞ் சாட்டுதல், சீலை, தாழி, திப்பிலி, பஸ்பம்.
சாடித்தல் - இருபுடையுமசைதல், தண்டித்தல், திட்டல், நொறுக்கல்.
சாடிவி - மனிதர்தசை தின்போன்.
சாடு - ஒரு பெரியகூடை, சாடென்னேவல், சாதுரியம், பண்டி, புலவர்கூட்டம், மணிமுற்றுதசோளம், முகமன் வார்த்தை.
சாடுதல் - அசைதல், அடித்தல், கடிந்துகொள்ளுதல், கொல்லுதல், சரப்தல், முரிதல், வாருதல்.
சாடை -அற்பம், ஒப்பு, குறிப்பு, கோள், சயிக்கை, சாயல், சாய்வு, தாட்சணியம்.
சாடைக்காரன் - கோட்காரன்.
சாட்குண்ணியம் - ஆறுகுணங்கூடியது, ஆறுமடங்கு.
சாட்குலம் - மாமிசவூண்.
சாட்குலி - தசைதின்போன்.
சாட்குலிதம் - முறுக்குப்பணியாரம்.
சாட்கூலி - தசையுண்போன்.
சாட்காது - சமுகம், நிலைபெற்றமகிமை.
சாட்சாத்காரம் } கருவிகாணதிருட்டெ
சாட்சாற்காரம் } ல்லாஞ் சாட்சிபாயிருப்பது, சுயம்பு.
சாட்சி - அத்தாட்சி, உதாரணம், நடந்தைக்கண்டவர்கள், நோரய்க் கண்[டல்.
சாட்சிவிளக்கம் சாட்சிவிசாரணை
சாட்டம் - நூற்றெட்டு.
சாட்டல் - சாட்டுதல்.
சாட்டாங்கதெண்டன் } எட்டங்கம் நி
சாஷ்டாங்கம் } லத்திற் பட
சாட்டாங்கம் நமஸ்காரம். } வணங்கல்
சாட்டி - சவுக்கு, பயிர் செய்தறுத்த நிலம், மிலாறு.
சாட்டித்தரை - பயிர்செய்ததரை.
சாட்டியம் - பிடிவாதம், பொல்லாங்கு, வஞ்சகம், வருத்தம்.
சாட்டு - ஒப்பிக்கை, சாட்டுவிடுதல், சாட்டென்னேவல், புற்றரை, போக்கு.
சாட்டுக்கூடை - ஒரு பெரியகூடை.
சாட்டுதல் - அடித்தல், சாட்டிவிடுதல், சாரப்பண்ணுதல், போக்குச் சொல்லுதல்.
சாட்டுவம் - நாபி.
சாட்டுவலம் - அறுகு, நாவல், பசும்புற்றரை.
சாட்டை - ஒருவிதசவுக்கு, ஒருவிதபலகை.
சாட்டைக்கூடை - சாட்டுக்கூடை.
சாணகம் - சாணகம்.
சாணக்கியசூத்திரம் - ஒருதந்திர நூல்.
சாணக்கியம் - ஒருநூல்.
சாணக்கியன் - அர்த்தசாஸ்திரம்என்று சொல்லப்படுகிற ராஜ தர்மத்தைச் சொல்லுகிற நூலொன்றைச்செய்தவனாகிய ஒரு பிரபலமந்திரி, இவன் முத்திராராக்ஷஸ நாடகத்தில் சிறந்தெடுத்துப் பேசப்பட்டவன். இவனுக்குக் கௌடில்லியன் விஷ்ணுகுப்தன் என வேறு பெயர்களுமுண்டு இவன் சந்திரகுப்தன் மந்திரி.
சாணங்கி - துளசி.
சாணத்தனம் - வம்பு.
சாணம் - அம்மிக்கல், சாணகம், சாணைக்[கல்.
சாணளப்பான் - ஒருபுழு.
சாணன் - கெட்டிக்காரன்.
சாணுகமுதலை - ஒருமுதலை.
சாணுகமூக்கன் - ஒருபாம்பு, ஒருவண்டு.
சாணுகம் - சாணி.
சாணுக்கி - எருமைநாக்கிப்பூடு, மயிர்மா[ணிக்கம்.
சாணுங்கி - சாணுகம்.
சாணுன்-ஒருசாதியான், கள்விற்போன்
சாணி - சாணுகம், விபூதி.
சாணிக்கப்பூரி - பீர்க்கு.
சாணிக்கெண்டை - ஒருமீன்.
சாணூரன் - கஞ்சனுக்குத் தூதனாகிய ஒருமல்லன், இவன் கிருஷ்ணனைக் கொல்லும்படி கஞ்சனு லேவப்பட்டுக் கிருஷ்ணனாற் கொல்லப்பட்டவன்.
சாணை - அம்மி, சாணைக்கல், சிறுகுழந்தைகளுடைய படுக்கைச்சீலை.
சாணைக்கல் - ஆயுதந்தீட்டுமோர் கருவி, கருந்தண்ணீர்க்கல்.
சாணைக்கூறை - பெண்ணை விவாகம்பண்ணிக் கொள்ளும்படி சாணையிற் பெண்பிள்ளைக்கிட்ட புடவை.
சாணைச்சீலை - குழந்தைகட்கிடும் மெத்தைச்சீலை.
சாணைபிடித்தல் - சாணைக்கல்லி லாயுதந்தீட்டல்.

சாணைப்பனங்கட்டி - தட்டையாய் வார்த்த பனங்கட்டி.
சாணைப்பிள்ளை - நான்குமாத வயசுக்குட்பட்டபிள்ளை.
சாண் - அரைமுழம்.
சாண்சீலை - கோவணம், கௌபீனம்.
சாண்டிலி - ருஷபர்வதத்திலே தவஞ்செய்து கொண்டிருந்த ஒருபெண், பிரசாபதி பாரியை, அக்கினிப்பெயருடைய வசுவுக்குத் தாய்.
சாண்டில்லியன் - சாண்டில்லிய ஸ்மிருதிசெய்த ஒரு மஹருஷி, இவன் ஒரு கோத்திரத்தலைவன், நந்தன்வமிசத்திற் சந்திரகுப்தனுக்கு இராஜ்யம் வரும்படிசெய்த வோரந்தணன்.
சாண்மாதுரன் - கந்தன்.
சாண்வயிறு - கீழ்வயிறு.
சாதககட்சி - காந்தம்.
சாதககிள்ளையோன் - காச்சற்பாஷாணம்.
சாதசகுணசலம் - கந்தகம்.
சாதகக்கேடு - சங்கபாஷாணம்.
சாதகசக்கிலி - சத்திசாரம்.
சாதகசூத்தகம் - பிறவித்தீட்டு.
சாதகச்சீர்த்தி - சாதகவர்னத்தி.
சாதகதிசை - முத்திதிசை.
சாதகசீர்ச்சீலை - கண்டகிச்சிலை.
சாதகபலன் - பிறப்பின்படி கிரகங்களாலாகும் பலாபலம்.
சாதகபுட்பம் - கடல்நுரை.
சாதகப்புள் - வானம்பாடி.
சாதகம் - எருக்கு, ஒருபிரபந்தம், அதுதிதிநிலை முதலிய ஏழுவகையுறுப்புக்கணிநிலையையுஞ் சோதிட நூலானுணர்ந்து அவரருல் வரும்பயன்கூறுவது, காரியசித்தி, சனனம், சாதகப்புள், துணைக்காரணம், பயிற்சி, பிரமாணம், பூதகணம், வானம்பாடி.
சாதகாகத்தி - கோழித்தலைக்கந்தகம்.
சாதகருமம் - பிறந்தபோது செய்யும் ஒருசடங்கு.
சாதகர் - மெய்காப்பாளர்.
சாதகர்மம் - சாதகருமம்.
சாதகலம்பம் - தாலம்பபாஷாணம்.
சாதகவன்னி - அக்கினிக்கட்டி.
சாதகவாகி - நாகமணல்.
சாதகவர்னத்தி - இரத்தபாஷாணம்.
சாதகவித்தை - பயின்று கைவந்தசெய்கை.

சாதகன் - சாதகமுடையோன், சாதிப்போன், யாசகன்.
சாதகன்மம் - சாதகருமம்.
சாதகாசாரியன் - குருப் பட்டத்துக்குப் பக்குவவான், துணைக்குரு.
சாதகாலங்காரம் - சாதகவோலையெழுதும் விவரமறியும் ஒருநூல்.
சாதகி - சாதகக்காரி.
சாதகும்பம் - பொன்.
சாதகை - துர்க்கை, காளி.
சாதக்கல் - தேகக்கல்.
சாதசூத்திரம் - வைடூரியம்.
சாதம் - இளம்புதல், உண்மை, சந்தோஷம், சுத்தம், சேறு, சோறு, பிறப்பு, பூதம், மேன்மை.
சாதனம் - துணைக்கருவி.
சாதரங்கம் - பதுமராகம், மாணிக்கத்தின் முதற்சாதி.
சாதரூபம் - நால்வகைப் பொன்னில் ஒன்று, பொன்.
சாதரூபி - அருகன், கந்தகம்.
சாதலம் - திராய்.
சாதல் - இரத்தல்.
சாதவண்டு - சறிப்புடல்வண்டு.
சாதவாகனன் - ஐயனார், சாலிவாகனன்
சாதவேதா - கொடிவேலி, நெருப்பு.
சாதனசதுட்டயம் - நித்தியா நித்தியவஸ்து, விவேகம், இகாமுத்தார்த்த பலபோகவிராகம், சமாதிசட்கசம்பத்தி, முமூக்ஷுத்வம் என்பன.
சாதனசாத்தியம் - காரணகாரியம்.
சாதனபாத்திரம், சாதனமுறி - உரிமைப் பத்திரம், உறுதிப்பத்திரம்.
சாதம் - அடையாளம், அழித்தல், ஆண்குறி, இடம், உறுதி, ஊர், எது, ஐக்கம், கருவி, கிராமம், சமயாசாரத்தைச்சாதித்தல், சாச்சடங்கு, சாத்தைச்சாதித்தல், சாத்தியப்பொருளையுறுதிப்படுத்து மந்தாட்சி, சித்தியாதல், செல்வம், சேனை, தகுதி, பதார்த்தம், பஸ்பமாக்கல், பயிற்சி, மூயம்சி, மெலிவு, வீடு.
சாதனம் பண்ணுதல் - அப்பியாசித்தல், உறுதிமுடித்தல்.
சாதனன் - பிறந்தவன்.
சாதனுந்தாம் - துணையுறுதி.
சாதனை - சலஞ்சாதித்தல், பயிற்சி, பொய்.

சாதா - பருமட்டுவேலை.
சாதாக்கியம் - சிவதத்துவமைந்திலொன்று; அது ஞானமுங்கிரியையுமொத்தது.
சாதாபத்தியை - மாதா.
சாதாரண - நாற்பத்துநாலாவதாண்டு.
சாதாரணகாந்தாரம் - ஆகணகைக்கிளை.
சாதாரணம் - இலேசு, பழக்கம், பொது, பொதுமுறை.
சாதாரண்ணியம் - எங்கும்.
சாதாரி - ஒருபண், முல்லைநிலத்திராகம்.
சாதாவேலி - சாதாவேரி.
சாதாழை - கடற்பயிரினென்று, பலவீனன்.
சாதாழைநிம்பம் } எருக்கிலை.
சாதாளநிம்பம் }
சாதான்மம் - தருமநூல் பதினெட்டில் ஒன்று.
சாதி - ஆடாதோடை, உயர்வானது, கள், குலம், சாதிக்காய், சாதிமரம், சாதியென்னேவல், சிறுசண்பகம், சீந்தில், தாளப்பிரமாணம் பத்தினென்று, தேக்கமரம், தேர்ப்பாகன், பிச்சி, பிரம்பு, பிறப்பு, புழுகுசட்டம், மரப்பொது, யுத்தவீரன்.
சாதிகம் - சாதியின்றன்மை.
சாதிகோசம் சாதிக்காய்.
சாதிக்கட்டு - சாதியாசாரம், சாதியின் ஒருமிப்பு.
சாதிக்கலப்பு - பலகுலங் கலந்திருத்தல்.
சாதிக்காய் - ஒருசரக்கு; அது பஞ்சவாசத்தொன்று.
சாதிக்காரை - தகுதி.
சாதிக்குறைவிசேடம் - குலவிழிபானுயர்வுதோன்றக்கூறுவது, (உ-ம்) ஆயனுய் வாழ்மாயனுயோதனம் வென்ளுன்றாயபுரந்தரனேதோற்ருளும்.
சாதிசட்டம் - மிகநீளம்.
சாதிசம் - சாதிக்காய், நறும்பிசின்.
சாதிசாங்கரியம் - சாதிக்கலப்பு.
சாதிதம் - மறைக்கப்பட்டது.
சாதித்தருமம் - குலதருமம்.
சாதித்தலமை - வமிசத்தலைமை, மேன்மை.
சாதித்தலைவன் - சாதியாரெல்லார்க்கு முதலீடாயிருப்பவன், மேன்மையுள்ளவன்.
சாதித்தல் - அழுத்தல், எண்ணெய்முதலியன தேய்த்தல், சலஞ்சாதித்தல், பழகல், வெல்லுதல்.
சாதித்தன்மை - தன்மை யலங்காரக்குறியில் ஒன்று, அது சாதிப்பொதுவியல்பு.
சாதிபத்திரி - வசுவாசி.
சாதிபலம் - சாதிக்காய்.
சாதிப்பதங்கம் - சாதிலிங்கம்.
சாதிப்பாய் - பிரப்பம்பாய்.
சாதிப்பிரஞ்சகரம் - ஈனசாதிப்புணர்ச்சி குலாசாரந்தவறுதல்.
சாதிப்பிரஞ்சம் - குலாசாரத்தவறு.
சாதிப்பு - சாதித்தல்.
சாதிப்பூ - சாதிக்காய்ப்பூ.
சாதிமல்லிகை - ஒருமல்லிகை.
சாதிமானம் - குலமொத்திருத்தல்.
சாதிமான் - நற்குலத்தோன்.
சாதியாசாரம் - சாதியொழுக்கம்.
சாதியுவமம்-சாதியாலுவமிப்பது (உ-ம்) கரணம்போலு மான்மா.
சாதிரம் - விட்டுணுகரந்தை.
சாதிரிசியம் } உபமானம், திருஷ்டாந்தம், பிரத்தியட்சம்.
சாதிருசியம் }
சாதிரேசம் - குங்குமப்பூ.
சாதிலிங்கம் - ஒருசரக்கு.
சாதினி - கம்பளிச்செடி, பீர்க்கு.
சாதீபம் } சாதிக்கடுத்தது.
சாதீயம் }
சாது-அருகன், சத்வகுணமுடையவன், சற்குணத்தோன், சற்குணம், சாந்தம், தயிர், பேதமை, மேன்மை.
சாதுகம் - பெருங்காயம்.
சாதுசங்கம் - சற்சனரின்கூட்டம்.
சாதுசன்-உத்தமகுலத்திற்பிறந்தவன்.
சாதுதி - மாமி.
சாதுத்வம் - மேலானதன்மை.
சாதுரங்கம் - சதுரங்கம், ஒருவிதமாணிக்கம்.
சாதுரம் - இரதம்.
சாதுரன் - சூதன், விவேகி.
சாதுரிகன் - சூதன்.
சாதுரியம் - கண்டுங் காணுமையுமாயிருத்தல், கல்வித்திறம், சாமர்த்தியம், நாகரீகம்.
சாதுருசியம் - ஒப்புமை.
சாதுருமாசியம் - யாக மிருபத்தொன்றில் ஒன்று.
சாதுர்ப்பாகம் - நாலத்தொன்று.
சாதுவாசி - திருத்தப்பட்ட குதிரை.
சாதூரியம் - நாகரீகம், வாசாலகம்.

சாதேட்டி - சனனச்சடங்கினென்று.
சாதேவம் - குழிநாவல், சிறுநாவல்.
சாதேவன் - பஞ்சபாண்டவரி லொருவனான சகாதேவன்.
சாத்தல் - அப்புதல், ஆடையணி மாலை முதலியன சாத்தல்.
சாத்தவர் - குதிரைவீரர்.
சாத்தனார் - மணிமேகலை நூல்செய்தவரும் பிறர்செய்யும் நூல்களிலுள்ள பிழைகளைக் கேட்குந்தோறும் தம் தலையிற் குட்டிக்கொண்டு வருந்துமியல்பினாற் சீத்தலைச் சாத்தனார் எனப் பெயர்பெற்றவரும், திருவள்ளுவர் காலத்திலே மதுரைச் சங்கத்திருந்த ஒரு புலவருமானவர். இவர் தாணியவணிகர்.
சாத்தன் - அருகன், ஐயன், தண்டிப்போன், தெரிவிக்கிறவன், புத்தன், வயிரவன்.
சாத்தாதவன் - ஒரு கலப்புச்சாதி, சாத்தானி.
சாத்தாவாரி - நீர்மிட்டான்.
சாத்தானி, சாத்தானியன் - ஒருவிதவைணவன்.
சாத்திகம் - அனுகூலப்படத் தக்கது, சாத்துவிகம், சிற்பநூன் முப்பத்திரண்டில் ஒன்று.
சாத்தியகி - சத்தியகன் புத்திரனாகிய யுயுதாநன்.
சாத்தியதேவர் - வியாசர்.
சாத்தியந்தன் - பிறவிக்குருடன்.
சாத்தியம் - அனுகூலம், அனுமேயம், உண்மை, சாதனத்தா லுறுதிப்பட்டது, சாதிக்கத்தக்கது, சித்தியயோகத்தொன்று, பூரணம்.
சாத்தியரோகம் - மாற்றத்தக்க வியாதி.
சாத்தியர்-கணதேவதைகளுளொரு சாரார், தருமன்புத்திரர் பன்னிருவர்.
சாத்தியவதேயன்-சத்தியவதியின் புத்திரரான வியாசர்.
சாத்தியன்-ஒத்தகுலத்திற்பிறந்தோன்.
சாத்தியை-தருமன் மனைவியரிலொருத்தி, இவள் புத்திரர் சாத்தியர்.
சாத்திரகாரர்-சாத்திரமறிந்தோர், சோதிடர்.
சாத்திரசக்கு - இலக்கணம்.
சாத்திரசித்தம் - நூற்கருத்து.
சாத்திரதீட்சை - ஞானசாத்திரம் போதித்து விளக்கல்.
சாத்திரபேதி - ஒருபூடு.
சாத்திரப்பிரசங்கம் - வேதப்பொருள்.
சாஸ்திரம், சாத்திரம் - ஒழுங்கு, கட்டளை, கலைநூல், சோதிடப்புத்தகம் வேதம்.
சாத்திரம்பார்த்தல்-குறிபார்த்தல், சோதிட நூலானன்மை தீமைபார்த்தல்.
சாத்திருவதேயன் - வியாசன்.
சாத்திரவேதி - சகஸ்திரவேதி.
சாத்திரவேரி - நீர்மிட்டான்.
சாத்திராசரணன் - பண்டிதன்.
சாத்திரி - கணிதன், நிமித்தகாரன்,வேதநூன்முதலியனவோதுவிப்போன்.
சாத்திரீகம் - சாஸ்திர சம்பந்தமானது.
சாத்திரை - கிராமதேவி திருவிழா.
சாத்தீகம் - சாத்துவிகம்.
சாத்து - அடி, அணிகை, அப்புகை, சாத்தென்னேவல்.
சாத்துகவி - ஒருவர்செய்யும் பாவிசையைப் பார்த்துப் பாடுவோன்.
சாத்துதல் - அடித்தல், அணிதல், அப்புதல், சார்த்துதல், மூடுதல்.
சாத்துநாறு, சாத்துநாற்று - நடும் நாற்று.
சாத்துப்படி - மாலை முதலியன சாத்தி அலங்கரித்தல்.
சாத்தும்பெட்டி - சார்த்தும்பெட்டி.
சாத்துவசம் - பயம்.
சாத்துவதன் - பலராமன்.
சாத்துவதன்-விஷ்ணுபரிசாரகரில் ஒருவன், விதர்ப்ப னிரண்டாம் புத்திரனாகிய கிருதன் வமிசத்தொருவன், இவனுக்குப் புதல்வரெழுவர்.
சாத்துவதி - சிசுபாலன்தாய்.
சாத்துவாலம் - யாககுண்டம்.
சாத்துவிகம் - முக்குணத்தொன்று, அது அருள், ஐம்பொறியடக்கல், ஞானம்,தவம்,பொறை, மேன்மை, மோனம், வாய்மை என்னுமெண்குணம்.
சாத்துவிகன் - பிரமன்.
சாத்தேயம் - சத்திபூசைசெய்யும் ஒரு சமயவகுப்பு.
சாத்மீகம் - சாந்தகுணம்.
சாநசி - பொன்.
சாநித்தியம் - சமூகம்.

சாநு - முழங்கால்.
சாந்தகப்பை - ஒருகருவி, சுண்ணம்பு பூசுகிற ஆயுதம்.
சாந்தகம் } சாந்தம், மெத்தெனவு.
சாந்தகைமை }
சாந்தசந்திரோதயம் - ஒரு குளிகை.
சாந்தபனம்-ஒருநாள், இலகுவான பதார்த்தமாகிய தயிர் முதலிய சாப்பிட்டு மறுநாள் புசிப்பின்றியிருந்து செய்யும் ஒரு விரதம்.
சாந்தமுகம் - தண்ணெனவானமுகம்.
சாந்தம் - அமைதி, கலவை, குளிர்ச்சி, சந்தனம், சாணி, தண்ணெனவு, தயவு, நவரசத்தில் ஒன்று அது பொறுமை, மலைப்பக்கம்.
சாந்தரூபம் - தண்ணெனவானகாட்சி, தண்ணெனவானகோலம், யோகநிஷ்டை.
சாந்தலிங்கசுவாமிகள் - துறையூரில் விளங்கிய ஒரு தமிழ்ப்புலவர், சமய சாத்திரவிசாரத்திற்சிறந்தவர், சமையத்தால் வீரசைவர், இளமையிற்றுறந்தவர், அவிரோதவுந்தியார், வைராக்கியசதகம், வைராக்கிய தீபம், கொலைமறுத்தல் முதலிய நூல்கள் செய்தவர், சாலிவாகநசகம் ஆயிரத்தறுநூற்றிலிருந்தவர்.
சாந்தவாரி - நீர்மிட்டான்.
சாந்தனிகம் - சந்தனக்கலவை.
சாந்தனு - சந்தனு.
சாந்தனையும் - சாமளவும்.
சாந்தன்-அருகன், சந்திரன், தண்ணெனவானவன், பிரகிருதியைச் சுட்டவன், புத்தன்.
சாந்தாற்றி-கால்செய்வட்டம், சிற்றாலவட்டம், பீலிக்குஞ்சம், விசிறி.
சாந்தானிகபிச்சை - பெரியோர் பரம்பரையா யனுபவிக்கும்படி கொடுக்கப்பட்டன.
சாந்தி - ஆற்றுதல், ஓமம், கழிப்பு, சாந்தம், தணிவு, தோஷநிவாரணம்.
சாந்தி-அஜமீடன்பௌத்திரன், நீலன் புத்திரன், தேவகன்மகள், வசுதேவன் மனைவி.
சாந்திகலை }
சாந்தியாதீதம் } பஞ்சகலையில் ஒன்று.
சாந்தியாதீதை }
சாந்திரகம் - இஞ்சி.
சாந்திரமாதம் - சந்திரன்சுற்றிவருவதினுலுண்டானமாதம்.
சாந்திரமானம் - சாந்திர மாதங்களால் வரும் வருடம்.
சாந்திரம் - சந்திரகாந்தம், சந்திரசம்பந்தமானது, சுக்கிலபக்கம், நிறைவு, நெருக்கம், மிகுதி, மிருது.
சாந்திராண்டு - சாந்திரமானம்.
சாந்திராயணம்-ஒருதிங்களுள் விரதம், இது பௌரணைதொடங்கி அமாவாசைவரைக்கும் ஒவ்வொரு பிடியன்னம் குறைத்தும், அமாவாசைதொடங்கி ஒவ்வொரு பிடியன்னம் அதிகமாகப் புசித்தும் அனுஷ்டிக்கும் ஒரு விசேஷ விரதம்.
சாந்திராயனம் - சந்திரன் வீதி.
சாந்திவிருத்தி - சாத்துகவிருத்தி.
சாந்தீபன்-கிருஷ்ண பலராமர்களுக்குக் குரு, இவர்க்கு வானஸ்தாநம் அவந்தி, இவர் புத்திரன் பிரகாசதீர்த்தத்திலே ஸ்நானம் செய்தபோது அவனையொருதானவன் நீருக்குள்ளேயிழுத்துக் கொண்டுபோய்க் கொன்முன், அவனைக் கிருஷ்ண பலராமர்கள் யமபுரம்போய் மீட்டுவந்து குருதக்ஷணையாகச் சமர்ப்பித்தார்கள்.
சாந்து-கலவைச்சாந்து, சந்தனம், சாந்தகுணம், சுண்ணச்சாந்து, பராகம், பூந்தாது, மலம், வாசனைத்தூள்.
சாந்துக்கறை - சுண்ணத்தளம்.
சாந்துப்பொடி - வாசனைத்தூள்.
சாந்துருவம் - சுண்ணச்சீலை.
சாந்துவம்-இன்சொல், சாமோபாயம், தாட்சிண்யம்.
சாந்துவாரி-சுத்திசெய்பவன், பீவாரி.
சாந்தை-கங்கை, சாந்தமானவள், பூமி.
சாந்தை - ரோமபாதன் வளர்த்த புதல்வி, தசரதன்மகள், இருசிய சிருங்கன் மனைவி, இவளைக் காந்தையென்றுங் கூறுவர்.
சாந்தோக்கியம் - வேதரஹஸ்யங்களைக் கூறும் நூற்றெட்டு உபநிடதங்களுளொன்று, அதிரஹஸ்யார்த்தமாகிய தஹதவித்தை இதிற் கூறப்பட்டுள்ளது. இதற்கு பாஷ்யம் செய்தவர் சங்கராசாரியர்.

சாபத்திரி-சாதிபத்திரி.
சாபத்ீடு - சாபம்.
சாபம் - குட்டி, சபிப்பு, தனுவிராசி, வட்டத்திற்பாதி, வில்.
சாபலம் - அநித்தியம், சாக்கொண்டு பெற்றபலம், இது கணிதமுறையில் ஒன்று.
சாபலன் - ஆட்டுவாணிபன்.
சாபலாச்சிரயம் - அநித்தியம்.
சாபல்லியம் - அநித்தியம், அனுகூலம், பேறு.
சாபறை - நெய்தனிலப்பறை, பிணப்பறை.
சாபனை - சபிப்பு.
சாபஸ்தி - கௌடதேசத்தில் சபஸ்தனுல் கிருமிக்கப்பட்ட நகரம்.
சாபாலம் - உபநிடதத்தொன்று.
சாபாலி - ஒருமுனி.
சாபிண்டம் - அறக்கிழடு.
சாபித்தல் - சபித்தல்.
சாபிள்ளை - செத்துப்பிறக்கும் பிள்ளை, பிறந்தவுடன் சாகும்பிள்ளை.
சாபினை - சபிப்பு.
சாபேட்சை - தீராதவாஞ்சை.
சாப்படுதல் - உண்ணல், பருகல்.
சாப்பாடு - உணவு.
சாப்பிடுதல் - சாப்படுதல்.
சாப்பு - ஒருதாளம்.
சாப்பை - சப்பை, சாட்டை, புற்பாய்.
சாப்பைச்சொண்டன் - ஒரு நாரை.
சாமகம் - சாணைக்கல்.
சாமகர்ப்பன் - விட்டுணு.
சாமகானம் - சாமவேதகீதம்.
சாமகானன் - சிவன்.
சாமக்காவல் - சாமந்தோறும் மாறிக்காத்தல்.
சாமக்கிரிகை - தளபாடம்.
சாமசம் - யானை.
சாமணம் - சாவணம்.
சாமத்தியம் - சாமர்த்தியம், வல்லமை.
சாமத்துரோகி - குரூரன், மிகுபாதகன்.
சாமந்தம் - அயல், ஒருபண்.
சாமந்தர் - அமைச்சர், சேனழர், தானைத்தலைவர்.
சாமந்தி - ஒருபூஞ்செடி, செவ்வந்தி.
சாமம் - அறுகு, இரா, ஏழரை நாழிகை கொண்டகாலம், ஒருபாயம், கருமை, சமாதானம், பச்சை, பஞ்சம், பலவீனம், பாதியிரா, பொன், மரணம், மூன்றும் வேதம், யாமம்.

சாமயோனி - பிரமன்.
சாமரபுட்பம் - கமுகு, மாமரம்.
சாமரம் - கவரி, இது அட்டமங்கலத்துள் ஒன்று, சிவதை.
சாமரி - குதிரை.
சாமரீகம் - பொன்.
சாமரை - சாமரம்.
சாமர்த்தியம் - இருது, சாமார்த்தியம்.
சாமளம் - பச்சை.
சாமளாங்கி - ஐம்பத்தைந்தாவது மேளகர்த்தா.
சாமளாதேவி, சாமளை - காளி, பார்வதி.
சாமான் - காமன்றம்பி, புதன்.
சாமாசி, சாமாஞ்சி - தூதன், மத்தியஸ்தன், யோசனை.
சாமாதி - தூதன்.
சாமாத்தியம், சாமர்த்தியம் - சமர்த்து, வல்லபம்.
சாமானியசங்கமம்-சிற்றின்ப கிவாரணம்.
சாமானியம் - பொது, முழுவதும்.
சாமானியசுபாவம் - பொதுசுபாவம்.
சாமான் - சரக்கு, தளபாடம்.
சாமி - அருகன், கடந்தஞானி, கடவுள், கந்தன், கற்புடையாள், குரு, சாமை, தலைவன், தலைவி, தாய், பொன், மூத்தோன்.
சாமிநாததேசிகர் - நன்னூல் விருத்தி செய்தருளிய சங்காநமச்சிவாயப்புலவர்க்கு ஆசிரியர். இவரே இலக்கணக்கொத்துச் செய்தவர். நூற்றைம்பது வருடங்களுக்கு முன்னிருந்தவர்.
சாமிநாதன் - சுவாமிநாதன்.
சாமிபோகம் - மேல்வாரம்.
சாமிமலை - திருவேரகம் இது கும்பகோணத்துக்கு அருகில் காவிரிக்கரையிலே உள்ள திருப்புகழ்பெற்ற ஒரு சுப்பிரமணிய ஸ்தலம்.
சாமியம் - போசனம், ஒப்புமை.
சாமியன் - பிறர்கடனுக்கீடுகின்றேன்.
சாமீகரம் - பொன்.
சாமீபம், சாமீப்பியம் - ஒருபதவி, அது கடவுளது சமீபத்திருத்தல், சமீபம்.
சாமுகூர்த்தம் - அசுபமுகூர்த்தம்.
சாமுண்டி - அவுரி, காளி, துர்க்கை,

நாணல், பொன்னுவிரை, பர்வதவா சியாகிய பராசக்தி.
சாமுதம் - கடுக்காய், கோரை.
சாமுத்திரிகம் } அங்கலட்சணம், அங்க இலக்கண நூல்.
சாமுத்திரிகலட்சணம் }
சாமேளம் - சாப்பறை.
சாமை - ஒருபயிர், கற்சேம்பு, பெரு நெருஞ்சில்.
சாமோபாயம் - நான்குபாயத்தி னென்று, அது இணக்குமுபாயம்.
சாம்பம் - யானைநெருஞ்சில்.
சாம்பராயம் - இடர், சமீபம், போர், யானைக்சட்டு.
சாம்பராயிகம் - யுத்தம்.
சாம்பர் - சாம்பல்.
சாம்பலச்சி - எவட்சாரம்.
சாம்பலொட்டி - எருக்கு.
சாம்பல் - ஒடுங்கல், சாம்பர், நாவல்மரம், பழம்பூ.
சாம்பல்மொந்தன் - ஒருவாழை.
சாம்பவம் - அட்டாதச உபபுராணத் தொன்று, சம்புநாவல், பொன்.
சாம்பவன் - இராமச்சந்திரன் படைத் தலைவரில் ஒருவன், சம்புவை வழி படுவோன், சிவன்.
சாம்பவி - பார்வதி, பெருநாவல்.
சாம்பவியார்விந்து } கௌரி பாஷாணம்.
சாம்பவிவிந்து }
சாம்பற்பூசுணி - நீற்றுப்பூசுணி.
சாம்பனுரை - ஒருநாரை.
சாம்பன் - கிருஷ்ணனுக்கு ஜாம்பவதி பெற்ற புத்திரன், சிவன்.
சாம்பாட்டு - கறிப்புடோல்.
சாம்பாத்தி - பறைச்சி.
சாம்பான் - பறையன், உமாபதி சிவத் தால் முத்திபெற்ற ஒரு மஹருஷி.
சாம்பி - கப்பியல்.
சாம்பிராச்சியம் - ஆளுகை, சக்கிரவர்த் தித்தன்மை, செல்வம், தத்துவம், பாக்கியம், மேன்மை.
சாம்பிராச்சியலட்சுமி-பாக்கியலட்சுமி.
சாம்பிராணி - ஒருமரம், ஒரு வாசனைப் பண்டம்.
சாம்பிராணித்தயிலம் - ஒரு வாசனைத் தயிலம்.
சாம்பிராணிப்பட்டயம் - எழுதிக்கொடுத்தபத்திரம்.
சாம்பிராணிப்பதக்கம் - ஒரு மருந்து.
சாம்பு-சாம்பென்னேவல், பறை, பறைச்சாதி, புடைவை, நாவல்மரம்.
சாம்புசண்பகம் - நாவற்பூ.
சாம்புதல் - அடித்தல், இழுத்தல், ஒடுங்குதல், கூம்புதல்.
சாம்புநதம் - மேருமலைக்குத் தெற்கிலே உள்ள நாவல்ரச ஆறு.
சாம்புவந்தன் - இராமன் படைத்தலைவரிலொருவன்.
சாம்புவன் - சுடலைகாப்பவன்.
சாம்புவான் - சாம்புவந்தன்.
சாம்புனதம் } நால்வகைப்பொன்னில் ஒன்று, பொன்.
சாம்பூநதம் }
சாம்வர்த்தம் - சமவர்த்தம்.
சாயகம் - அம்பு, வாள்.
சாயக்காரர்-ஒருசாதியார், வன்னக்கார்.
சாயங்காலம் - அந்திப்பொழுது.
சாயசாந்தி - அந்தியேட்டி.
சாயந்திரம் - அந்திப்பொழுது.
சாயந்தீருதல் - வன்னமிடுதல்.
சாயப்பணி - சாயவேலை, செஞ்சாயம் போடுதல்.
சாயம் - அந்திநேரம், அம்பு, சாயவேர் [நிறம்.
சாயரட்சை - அந்தி.
சாயரி - ஒருபண்.
சாயலன் - காவிரிப்பூம் பட்டினத்திருந்த ஒருவணிகன், இவன் வணிகர்க்குரிய எட்டிப்பட்டம் பெற்றவன்.
சாயல் - அழகு, ஒப்பு, சாய்தல், நிழல், நிறம், நுண்மை, மக்கட்படுக்கை, மஞ்சள், மாதிரி, மேன்மை.
சாயவிடுதல் - மரக்கலத்தைக் கரைக்க விடுதல்.
சாயவேர் - ஒருபூண்டு.
சாயவேளாகொல்லி - கொல்லித் திறத் தினென்று.
சாயனதம் - சாயானதம்.
சாயனம் - கள், கிரகபுடம்.
சாயணசாரியர் } இவர் மாதவாசாரியர் சகோதரர், சாயணசாரியரென்பது மாதவாசாரியருக்கு நாமாந்தரமென்று கூறுவாருமுளர்.
சாயனுசாரியர் }
சாயன் - குருதேவியிடத்திற் பிறந்த புத்திரன்.

சாயாகவுசம் - லூரிசை.
சாயாக்கிரகம் - இராகு, கேது.
சாயாதனயன் - சனி.
சாயாதேவி - சூரியன்மனைவிகளிலொ [ருத்தி.
சாயாத்துவம் - நல்லிலாட்குரிய குண [ம்.
சாயாபதி - சூரியன்.
சாயாபுத்திரன் - சனி.
சாயாவநேசர் - திருச்சாய்க்காட்டிலே திருக்கோயில் கொண்டிருக்கும் சுவாமியின் திருநாமம்.
சாயானதம் - ஓந்தி.
சாயித்தியம்-சேர்மானம்,புலமை. [கள்.
சாயுச்சியகாரர்-வீரசைவர்,இலிங்கதாரி
சாயுச்சியம்-ஒன்றிப்பு, ஒருபதவி, அது கடவுளோ டயிக்கப்பட்டிருத்தல், கலத்தல், மோக்கம்.
சாயை-சாயாதேவி,நிழல்நிறம், மனைவி.
சாய-ஒருவகைக்கோரை, சாயென்னேவல், கோரைக்கிழங்கு.
சாய்கை - பன்னகசாலை.
சாய்தல்-அசைதல், அழிதல், இரிதல், இறத்தல், சரிதல், திரும்புதல், நுண்மை.
சாய்த்தல்-அசைத்தல், சரித்தல், திருப்புதல்.
சாய்ப்பு-இறப்பு, சரிப்பு, சார்மானம், தாழ்வாரம், தாழ்வு, நடத்தல், பத்தி வெற்றிலை.
சாய்மரம் - சிவதை.
சாய்மானம் - ஒப்பாசாரம், சாய்தற்கிடுமணை, சார்வு.
சாய்வு - சரிவு. பக்கம்.
சாரகந்தம் - சந்தனம்.
சாரகம் - தேன்.
சாரகன் - குதிரைப்பாகன், தோழன்.
சாரகுமாரன் - அநாகுலனுக்குத் திலோதமையிடத்துப் பிறந்தவன், இவன் இசையறிதற் பொருட்டுச் சிகண்டியென்னு முனிவனால் இசை நுணுக்கமென்னும் இசைத்தமிழ்நூல்செய்யப்பட்டது.
சாரங்கதரன் - ஓரரசன்.
சாரங்கபாணி - விட்டுணு.
சாரங்கம்-ஆபரணம்,இரா, இராகம் முப்பத்திரண்டினொன்று, ஓரிசை, கர்ப்பூரம், குயில், குறிஞ்சா, சங்கு, சாதகப்புள், சிங்கம், சிறுகுறிஞ்சா, படவை, பூமி, மயில், மான், மேகம், யானை, வண்டு, வானம்பாடி, விட்டுணுவின் வில், வெளிச்சம்.
சாரங்கம் - விஷ்ணுவின் வில், இதற்குக் கொம்பினாற் செய்யப்பட்டதென்பது பொருள்.
சாரங்கன் - விட்டுணு.
சாரங்கன்-சிவன்,பலநிறங்கொண்டமேனி யென்பது இதன்பொருள்.
சாரங்கி - ஒருவகையாழ்.
சாரசம் - அவுபலபாஷாணம் இனியவோசை, குருகு, தாமரை, மாதரிடையணி, வெண்ணாரை.
சாரசனம்-மாதரிடையணியினொன்று.
சாரசன் } சோரபுத்திரன்.
சாரசாதன் }
சாரசி - இலக்குமி.
சாரசியம் - விற்பன்னம்.
சாரசுவதம்-சாதுரியம், பஞ்சகௌடத்தொன்று.
சாரசுவதம்-சரசுவதீ நதிக்கரையிலுள்ள தேசம், ஸம்ஸ்கிருதசந்திகளை யுணர்த்தும ஒரு வியாகரணநூல்.
சாசுவதர்கள் - சாரசுவததேசவாசிகள், இவர்கள் பஞ்ச கவுடர்களு ளொரு சாரார்.
சாரசுவதன் - ததீசிமுனி வீரியத்தால் சரசுவதிநதியிற் பிறந்த ஒரு இருடி.
சாரசை - இலக்குமி.
சாரணத்தி - சாரணை.
சாரணம் - உலகங்களைப் பஸ்மமாக்குதல், போதல்.
சாரணர் - ஒற்றர், அவர் அரசருக்குப் பஞ்சகுழுவிலொருவர், கூத்தாடிகள், சமணமுனிவர், புலவர்.
சாரணன் - வசுதேவன் ரோகிணியிடத்துப்பெற்ற புத்திரன், இராவணன் அநுசர்களு ளொருவன்.
சாரணி - மதகு.
சாரணை - ஒருபூடு, பிடாலவணம்.
சாரதம் - இனியபண், ஒருபூடு, ஒருவகைப்பாட்டு, அது அடிகளினிறுதி ஒரே தொடையாகவுங் கடைக்கட்டனிச் சொல்லாய்ச் செயசாரதமென முடிவது, பூதம்.
சாரதரு - வாழைமரம்.
சாரதன் - சாரதி.

சாரதா
சாரதாம்பாள் } சரசுவதி.
சாரதி-தேர்ப்பாகன்,புலவன்,விட்டுணு.
சாரதிகம் - ஒரு சாச்சடங்கு.
சாரதீயம் – குளிர்காலம்.
சாரதை-ஒருவீணை,சரச்சுவதி,துர்க்கை.
சாரத்தியம் - தேர் முதலிய செலுத்துந் தொழில்.
சாரஸ்திரி - விபசாரி, வேசி.
சாரத்தின்சத்துரு - முட்டை.
சாரத்துவம் - விபசாரம்.
சாரபதம் – முச்சந்தி.
சாரபூமி – நன்னிலம்.
சாரப்பருப்பு - காட்டுமாவின்விதை.
சாரமாமுனி-சிவபெருமானுக்குத் தாம் செய்துவந்த புஷ்ப கைங்கரியத்துக்கு இடையூறு செய்த பாரந்தகசோழனது நாட்டை மண்மாரி பெய்வித்தவர்.
சாரமிரக்குதல் – சாரவடித்தல்.
சாரமேயன் – நாய், அக்குரூரன் தம்பி.
சாரம் - இலுப்பை, இனிவை, உருக்கு, எதண்டை, சத்து, நடை, நிலாமுகிப்புள், பாலாடை, புடவையழுக்ககற்றுங்காரம், மரவயிரம், முந்திரிகை, மேடு, விபசாரம்.
சாரர்-ஒற்றர், சோரநாயகர், நட்பாளர்.
சாரலம் – எள்.
சாரலி – ஒருநெல்.
சாரல்-கிட்டல், குளிர்காற்று, சாருதல், தூறல், மருதயாழிசை, மலைப்பக்கம்.
சாரவறுதி – இலேசு.
சாரவாக்கியம் – கிரகமானம்.
சாரவிறுதி - இலேசு.
சாரன் - விபசாரன்.
சாராசாரி - கூட்டமாய்ப்போதல்.
சாராயப்பாவாலை - சாராயப்பானை.
சாராயம் – அருக்கு, மது.
சாராலம் – எள்.
சாரி-அஞ்சனபாஷாணம், அரசர்க்குச் செங்கோல்செல்லல்,உலாப்போதல், சூதாடுகருவி, சூறைக்காற்று, பரத்வுறுப்புளொன்று,யானைமேற்றவிசு.
சாரிகை-கடமை, கவசம், சுங்கம், சுழல்காற்று, சூதாடுகருவி, நாகணவாய்ப்புள், யாழ்விசிக்குங்கருவி, வட்டமாயோடல்.

சாரிசம் - கறியுப்பு.
சாரிசாதன் – கத்தூரி மிருகம்.
சாரிசிருங்கலை - சூதாடுங்கருவி.
சாரிசெய்தல் – இழந்த உத்தியோகத்தைத் திரும்பக் கொடுத்தல், தீர்த்தல், முறையிடுதல்.
சாரிதம் - ஒழுக்கம், சாரீரம்.
சாரித்திரம்-ஒழுக்கம், கதை, வரலாறு.
சாரிபம் – நன்னாரி.
சாரிபுத்தே - எட்டி.
சாரியை – நன்னாரி.
சாரியம் – எட்டில், நன்னாரி.
சாரியல் – இந்துப்பு.
சாரியை–சாந்துவருமிடைச்சொல் புறக்கூத்துக்குரிய ஆடலுளொன்று.
சாரீரகம் – சரீரம்.
சாரீரத்தை - எட்டி.
சாரீரம் - ஆன்மா, இன்னிசை,உபமிடதத்தொன்று, சரீரசம்பந்தமானது, மலம், ஒரு வைத்தியநூல்.
சாருகு - அழகு, கிள்ளை.
சாருகம் – கொலை.
சாருகன் – கொலைசெய்வோன்.
சாருகேசி இருபத்தாறுவது மேளகர்த்தா.
சாருசம் - கல்லுப்பு.
சாருதல் – அடுத்துக்கொள்ளுதல், சாய்தல்.
சாருலோசனம் - மான்.
சாருவபூமம் - சார்வபூமம்.
சாருவரன்
சாரு } புமநசியன் புத்திரன்.
சாருவாகம் – உலகாயத மதத்தினோர் பேதம்.
சாரூபம் - கண்டுசாய்ப்பு, சாரல், நாற்பதவியினொன்று. அது கடவுளுருப்பெற்றிருக்குதல், பொன்.
சாரூப்பியம் - இசைதல், ஒரேதன்மை, சாதுரியம், சாரூபம்.
சாரூரகம்
சாரூரசம் } கல்லுப்பு.
சாரை – ஒருபாம்பு, நீளமானவரை.
சாரைக்கடா – சாரைப்பாம்பு.
சாரையோட்டம் - நேரோட்டம்.
சாரைவாலன்-நீண்டவாலெருது,புகைமரத்திலோரினம்.
சாரோசி – நவட்சாரம்.
சாரோலை – முதிர்ந்த குருத்தோலை.

சார் - அணைக்கரை, அழகு, இடம், இளவேலை, எழனுருபு, கடலுண்மேடு, சாரென்னேவல், தட்டி, தாழ்வாரம், திண்ணை, பகுதி, பக்கம், வகை.
சார்கெசபுஞ்சம் - இலவம்பிசின்.
சார்க்ககம் - கற்கண்டு, பாலாடை.
சாரங்கதரர் - சங்கீத சாஸ்திரம் செய்த ஒரு ஸம்ஸ்கிருத பண்டிதர், பாத சூத்திரஞ்செய்தவரு மிவரே.
சார்ங்கம் - மாதுரங்கம்.
சார்ங்கிகர் - மந்தபாலன்புத்திரர், இவர் நால்வர், காண்டவதகந காலத்திலே அக்கினியினற் காக்கப்பட்டவர்.
சார்ச்சி, சர்த்தல் } அடைதல், கலத்தல், கிட்டல், கூடுதல், சாருதல், பட்சபாதமா யிருத்தல்.
சார்த்தவகன் - வியாபாரி.
சார்த்துதல் - மதகு முதலியனவற்றை யணைத்தல், சாரச்செய்தல்.
சார்த்துப்பெட்டி - அரிப் பெட்டியின் கீழ்ப்பெட்டி.
சார்த்தூலம்-ஒருபட்சி, ஒருபண், புலி.
சார்த்தூலன்-ராவணன் பரிசாரத்தவருளொருவன்.
சார்ந்தார், சார்ந்தோர் } உறவோர், சினேகிதர்.
சார்பறுத்தல் - துறவு.
சார்பிலார் - பகைவர், முனிவர்.
சார்பு - அடைக்கலம், அணைவு, இடம், உதவி, கடவுள், கிட்டுகை, குணம், சேர்பு, தயவு, தன்மை, பற்று.
சார்புநூல் - முதனூல் வழிநூல்களது பொருட்கூட்டத்திரிபு வேறுடைய நூல்.
சார்பெழுத்து - சார்ந்துவருமெழுத்து.
சார்மனை - சாருகிறதற்கிடுமனை.
சார்மானம் - சார்பு.
சார்வகாலம், சார்வதா } எப்போழ்தும்.
சார்வபூமம் - வடதிசையானை.
சார்வபூமன் - ஒருவனைப் பணியா துலகாள்வான்.
சார்வபௌமம் - சார்வபூமம்.
சார்பௌமன் - சார்வபூமன்.
சார்வபௌமன்-விதூரதன் புத்திரன்.
சார்வரி-முப்பத்துநாலாவது வருஷம்.
சார்வாகம் - புறச்சமயமாறினொன்று.
சார்வாகன் - துரியோதனனுக்குநட்பினனாகிய ஓரரசன். இவன் தரும ராசனுக்குப் பட்டாபிஷேகம் நடக்குங் காலத்திலே அதனைப் பங்கஞ் செய்யக் கருதி ஓரிருடிவேடங்கொண்டு போயிருந்தபோது அங்கிருந்த இருடிகளால் சபிக்கப்பட்டுச் சாம்பரானவன்.
சார்வாய் - அறுத்தவித்த பனங்காய்.
சார்வாரம் - கச்சின்கடைக்கயிறு, முன்றானை.
சார்வு - ஆசைப்பெருக்கம், இளவேலை சார்பு.
சார்வேலை - சாரோலை.
சால - மிகுதி.
சாலகடங்கடை-வித்யுத்கேசன்மனைவி, சுகேசன் தாய்.
சாலகடங்கடர் - இராக்கதர்.
சாலகம் - அதலோகம், இளம்பூவரும்பு, உபாயம், கூட்டம், சலதாரை, சிறுதிஞ்சா, சிலந்திப்பூச்சி, பலகணி, பறவைக்கூடு, பெருமை, வலை.
சாலகன் - விரிவாய்ப்பேசுகிறவன்.
சாலகாரகன்-சிலம்பிவலைசெய்வோன்.
சாலகிரி - அழுக்ககற்றுமிடம்.
சாலகை - முப்பத்தேழாவது மேளகர்த்தா.
சாலக்காரன்-மாயவித்தைக்காரன்.
சாலக்கிராமம் - ஒரூர், ஒருவகைச்சிலை. சாலஒரு புண்ணியக்ஷேத்திரம். இது கண்டகிநதி உற்பத்தியாகு மிடத்திலுள்ளது. பூசித்தற்குரிய விஷ்ணு மூத்திரையுள்ள ஒருவகைக் கல். இது நிலத்திலும் நீரிலும் உண்டாகும். நிலத்திலுண்டாவதை ஸ்தலஜங்யமென்றும், நீரிலுண்டாவதை ஜலஜங்யமென்றுங் கூறுவர். இது இமயமலைக்கருகே பன்னிருயோசனை அந்தர்க்கத பூமியிலே சாலக்கிராமாதி தீர்த்தங்களில் மிகுதியாயுண்டாவது.
சாலசாரம் - ஒருமரம், பெருங்காயம்.
சாலடிமேடு - உழவிடைப்பிட்டி.
சாலபஞ்சி - சித்திரப்பாவை.
சாலபஞ்சிகை - பாவை, வேசி.
சாலபோதகன் - ஒரு நாகராஜன், நந்தை தந்தை.
சாலப்பிராயம் - போர்க்கவசம்.
சாலமாலம் - கண்டுசாய்ப்பு, மாயம்.

சாலம் - அரண், ஆச்சாமரம், இளம்பூ வரும்பு, இறுமாப்பு, எசுர்வேதம், கடம்பு, கூட்டம், சவை, செடி, தாழ்வாரம், பலகணி, பெருமை, மரப்பொது, மாயவித்தை, வலை, வலைபோன்றதோரணம், விகற்பம், விலங்கின் கூட்டம்.
சாலம்பம் - ஒருமரம்.
சாலரி - ஒரு வாத்தியம்.
சாலர் - நெய்தனிலமாக்கள்.
சாலல் - மிகுதியாயிருத்தல், மேன்மையுடைத்தாதல்.
சாலவகன் - திருமால்.
சாலவம்-தேயமைம்பத் தாறினொன்று.
சாலவராளி - மூப்பத் தொன்பதாவது மேளகர்த்தா.
சாலவிருட்சம் - ஆடாதோடை.
சாலன் - சாலிவாகனன்.
சாலாங்சம் - ஒரு பாஷாணம்.
சாலாங்கி - பாலை.
சாலாதுரீயன் - பாணினிமுனிவன்.
சாலாமிசரி - ஒருசரக்கு.
சாலாரம் - ஏணி, படி, பறவைக்கூடு.
சாலார்ணவம் - முப்பத்தெட்டாவது மேளகர்த்தா.
சாலாவிரதம் - குரங்கு.
சாலாவிருகம் - நரி, நாய்.
சாலி-அருந்ததி,கவசம்,கள்,நாவி,நெல், நென்மணி,புழுகுசட்டம்,மிக்கோன்.
சாலிகர் - ஒருசாதியார்,நெய்தொழிலாளர்.
சாலிகை - கவசம்.
சாலிகோர்த்திரம் - குதிரை.
சாலிகோத்திரன்-ஒருமுனிவன்,இவன் இடும்ப வனத்துக்குச் சமீபத்திலுள்ளதனது ஆசிரமத்துக்குப்பாண்டவர் அரக்குமாளிகைக்குத் தப்பிச் சென்றபோது அவர்களை யுபசரித்தவன். அசுவசாஸ்திரஞ் செய்தவன். சாமவேதாத்யயநராகிய ஒரு முனிவன்.
சாலிச்சி - சாலியப்பெண்.
சாலியர் - சாலிகர்.
சாலியன் - ஒரு சாதியான்.
சாலிவாகனன் - ஓரரசன், விக்ரமார்க்கனைக்கொன்று, தன்பெயரால் சகவருஷம் நிலைபெறுத்தினவன், சுலோசநன் என்னும் வேதியனுக்குச் சுமித்திரை என்னும் ஒருபுத்திரி பிறந்தாள். அவள் மணப்பருவ மடைந்தபோது தன்வசந் தப்பி ஒரு சோரநாயகனைக் கூடிக் கர்ப்பவதியானாள். அது அவள் மனதை வருத்தச் சோரநாயகனைக் கண்டு, என் ஒழுக்கந் தவறிப்போயிற்று, குலப்பழி தேடிக்கொண்டேன். இனி என் செய்வேன் என்று சொல்லித் துக்கித்தாள். அதைக் கண்ட சோரநாயகன் அவளை நோக்கி, பெண்ணே, யான் மனிதனல்லேன், யான் ஆதிசேஷன், உன் வயிற்றிலிருக்கும் புத்திரன் பெரும்புகழையுடைய ஓரரசனாவான், அவனால் உன் குலம் விளங்கும். அவனைப் பெற்றுச் செவ்வனே வளர்க்கக்கடவையென் றாசீர்வதித்துத் தனது நிஜரூபத்தைக் காட்டி அந்தர்த்தானமானான். இவ்வாறு நிகழ்ந்தவற்றையெல்லாம் சுமித்திரையானவள் தன் தந்தையிடம் போய்ச் சொன்னாள். அவன் இது தெய்வ சங்கற்பமெனக் கொண்டு தேற்றியிருக்கையில், சுமித்திரையானவள் சோரநாயகனைக் கூடிக் கர்ப்பவதியாயின ளென்று அயலார் அவ்வூரரசனுக்கு அறிவித்தார்கள். அரசன் சுலோசநனை யழைத்து உன் புத்திரியை இந்த நகரத்துக்கு வெளியே அனுப்பிவிடக் கடவையென்று கட்டளை யிட்டான். அவன் அவ்வாறே செய்ய, அவள், அந்நகரத்துக்கு வெளியே யுள்ள ஒரு குசப்பேட்டையைச் சேர்ந்து ஒரு குசவனை அடைக்கலம் புகுந்து அவன் வீட்டில் வசிக்கையில் ஒரு புத்திரனை யீன்றாள். அப்புதல்வனுக்குச் சாலிவாகநன் என்று நாமகரணஞ்செய்து வளர்த்து வருகையில், குழந்தைக்கு ஐந்து வயதாகி, அந்தக் குலாலச்சேரிப் பிள்ளைகளோடு கூடி விளையாடி வருங்காலத்தில், ஒருநாள் தான் அரசனாகவும் அச்சிறுவர் மந்திரி பிரதானி முதலியோராகவும் பாவித்து விளையாடினான். அது கண்ட குலாலத் தலைவன், ஐந்து வயது நிரம்பாத இச்சிறுவன் அரசனைக் கண்டதெங்கே, இவனுக்கு இவ்வறிவு வந்த

தெப்படி யென்று, அதிசயித்திருந் தான். இச்சிறுவன் நாள் தோறும் இராஜ்யபரிபாலநம் விளையாட்டாகச் செய்து கொண்டு வருநாளில், ஒரு நாள் அவ்வழியேசென்ற ஒரு வேதி யன் இந்த விளையாட்டைக் கண்டு, சாலிவாகனுக் கெதிரேபோய், விந யத்தோடுநின்று பஞ்சாங்கஞ்சொன் ஞன்: அது கண்ட சாலிவாகநன் தன் பக்கத்தில் மந்திரியாக நின்ற வனை நோக்கி, அவ்வேதியனுக்கு ஒரு குடங் கொடுக்கக் கட்டளையிட் டான், வேதியன் அக்குடம் பெற் றுப் போய்த் தன் வீட்டில் வைத்து மறுநாள் காலையிற் பார்த்தபோது அது பொற்குடமா யிருக்கக்கண்டு அதிசயித்து இந்தச்செய்தியை நாடு முழுதும் வெளியிட்டான். இது இப்படியிருக்க, குலாலத் தலைவன், இச்சிறுவனுக்கு மண்ணிஞல் சிங்கா சநம் முதலியவும், இரத கஜ துரக பதாதிகளும் செய்து கொடுத்தான். இவையாவும் விக்கிரமார்க்கன் சபை யளவுஞ்சென்றெட்டின. விக்கிரமார் க்கனும் இச்சிறுவனைப் பார்க்க வே ண்டுமென்ருசைகொண்டிருந்தான். இப்படி யிருக்கையில், புரந்தர புர த்தி லிருந்த தநஞ்சயன் என்னும் வைசியன் இறக்கும்போது தன் புத் திரர் நால்வரையும் அழைத்து, இந்த க் கட்டிற்கால்கள் நான்கிற்கும் கீழே வைத்திருக்கும் திரவியத்தை நீங்கள் நால்வரும் பங்கிட்டுக் கொண்டு சுக மாய் வாழ்ந்திருக்கக் கடவீர்களென் று சொல்லி யிறந்தான். தந்தைக்குரி யசடங்குகளெல்லாஞ் செய்தபின்பு, புத்திரர் நால்வரும் தந்தை சொன்ன படியே கட்டிற்கால்களின்கீழே வெ ட்டிப்பார்த்தபோது ஒன்றிலே மண் ணும், ஒன்றிலே உமியும், ஒன்றிலே பொன்னும், ஒன்றிலே சாணமும், இருக்கக்கண்டு, இவை திரவிய மாவ தெப்படி, இவற்றை நாம் பாகித்துக் கொள்வ தெப்படியென்று மனமய ங்கி, கற்று வல்லாரிடத்திற் காட்ட, அவர் அரசனிடத்திற் காட்டுங்க ளென்று சொல்ல, அவ்வாறே அர சனுகிய விக்கிரமார்க்கனிடஞ் செ ன்று காட்டினர். அவன் தன் மந்தி ரிகளோடு ஆராய்ந்தும் அதன் குறிப் பறியாது மயங்கினன். பிறகு அப் புதல்வர் தமதூர்க்கு மீண்டு வரும் போது, சாலிவாகநன் விளையாடும் வழியாகச் செல்ல, சாலிவாகநன் அவர்களைக் கண்டு, அவர்களுடைய நிலையை ஆராய்ந்து, இந்தச் சிறுகாரி யத்துக்காகவா இவ்வளவு அலைச்சற் பட்டீர்கள். நான் அதன் குறிப்பைக் கூறுகிறேன், பைகளை யெடுங்களெ ன்றான். எடுத்துக் காட்டினவுடனே மண்பையினால் ஒருவனுக்கு நிலங்க ளும், உமிப்பையினால் ஒருவனுக்குத் தானியங்களும், பொற்பையினால் ஒரு வனுக்கு ஆபரணாதிகளும், சாணப் பையினால் ஒருவனுக்கு மாடுகளுமாக எடுத்துக் கொள்ளுங்களென்று உங் கள் தந்தை குறித்த குறிப்பென் றான். அதுகேட்ட வைசிய புத்திரர் நால்வரும் மகிழ்ந்து, சிறுவனைப் புக ழ்ந்து போயினர். அதுகேட்ட விக் கிரமார்க்கன் தன் புகழ் பங்கப்பட்ட தைக் குறித்து, சாலிவாகநனைக் கொ ல்லக் கருதிப் படையெடுத்துப்போ னன். சாலிவாகநன் அவனைத் தன்சி றுபடை கொண்டெதிர்த்து முதுகி டச்செய்து நர்மதா நதிக்கு இப்பு றத்தேயுள்ள தேசத்தைக் கவர்ந்து அரசனானன். இவன் வமிசத்தவரே மைசூர் அரசர். நருமதைக் கிப்பால் சாலிவாகநசகமும், அப்பால் விக்ர மார்க்கசகமும் அது முதல் வழங்கு வனவாயின, சில நாளில் சாலிவாக நனுல் விக்ரமார்க்கனும் கொல்லப் பட்டான். வைத்தியசாத்திரம், அசு வசாத்திரம், அலங்கார சாத்திரம் என்னும் மூன்று நூல்கள் இவனால் செய்யப்பட்டன.

சாலினி – கள்வாணிச்சி, தேவராட்டி, பீர்க்கு, பேய்ப்பீர்க்கு.

சாலினிகரணம் – நிந்தை.

சாலீயன் – சாகல்லியன் சீடனன ஒரு முனிவர்.

சாலீனத்துவம் – மரியாதை.

சாலுகம், சாலூகம் – சாதிக்காய், தாமரைக்கி ழங்கு.

சாலூரம் - தவளை, மேன்மை.
சாலேகம் - சந்தனம், சிந்தூரம், பலகணி, பூவரும்பு.
சாலேசரம் - சத்துவாரி.
சாலேயம் - கம்பளிப்புடவை, சிறுதேக்கு, நெல்விளை நிலம்.
சாலை - அரசன்மனை, அறத்தின்சாலை, அறை, இருமருங்கும் விருட்சங்கள் செறிந்தபாதை, குதிரைப்பந்திகூடம், வெளிமண்டபம்.
சாலோகம் / சாலோக்கியம் } ஒருபதவி, அது கடவுளதுலகத்திருத்தல்.
சால் - சாலென்னேவல், தண்ணீர் மொள்ளும் பாத்திரம், நீர்ச்சால், படைச்சால், மிகுதி.
சால்கட்டுதல் - உழவுசால் விடுதல்.
சால்பு - இசைவு, ஊக்கம், கல்வி, குணம், மாட்சிமை, மேன்மை.
சால்மலி / சான்மலி } சத்ததீவுகளில் ஒன்று. அது சுராசமுத்திரத் திடையேயுள்ளது. அங்கே முள்ளிலவமரங்கள் மிகுந்திருக்கையால் அது இப்பெயர் பெற்றது. குமுதம், உன்னதம், பலாஹம், துரோணம், கங்கம், மகிஷம், ககுத்துமான் என ஏழு பர்வதங்கள் அத்தீவிலுண்டு. அதிலுள்ள விசேஷ நதிகள் - யோனி, தோயை, விதிர்ஷ்னை, சந்திரை, சுக்கிலை, விமோசனி, நிவர்த்தி என்னும் எழுமாம். அங்குள்ளோர், நிறத்தினால் கபிலர், அருணர், பீதர், கிருஷ்ணர் என நால்வகையர். அவர்கள் கடவுளை வாயுவினிடத்தில் தியானித்து அவிகளை நிவேதித்து வழிபடுவார்கள். அஸ்திரேவியதீவு என இக்காலத்து வழங்குவது இதன் மீதி போலும், முற்காலத்தில் அநுமான் சஞ்சீவி கொணர்ந்தது இந்தத்தீவிலிருந்தேயாம். ஒருநரகம், யமதூதர்கள் அங்குள்ள முள்ளிலவமரக்காட்டிலே பாவிகளைச் செலுத்தி நடத்தி வருத்துவார்கள்.
சால்வம் - சாலவம்.
சால்வளைத்தல் - சால்கட்டுதல்.
சால்வை - உத்தரீயம்.

சாவகம் - செபம், பதினெண்பாடையில் ஒன்று.
சாவகர் - ஒருபடைக்காரர், சமணர்.
சாவகன் - சனி.
சாவகன்குறிஞ்சி - குறிஞ்சித்திறத்தில் ஒன்று.
சாவகாசம் - வசதி, விரைவின்மை.
சாவகாரியம் - பகுத்தறிதல்.
சாவகேலம் - நிந்தை.
சாவசம் - பதினெண்பாடையில்ஒன்று. அது மலேயா தேசத்து பாஷை.
சாவசேடம் - மிச்சம்.
சாவடி - சத்திரம்.
சாவட்டை - சாவீர், வண்ணாத்திப்பூச்சி, வாடல்.
சாவணம் - ஒருகருவி, குழாய், நாணல், நாளம்.
சாவதானம் - கவனம், மிருது, விழிப்பு.
சாவம் - விலங்கின்பிள்ளை.
சாவரம் - இதழ், தப்பு, பாவம்.
சாவரி - ஒருஅற்பமான ப்ராக்ருதபாஷை.
சாவருணன் - எட்டாவதுமனு.
சாவருணியம் - கலப்பற்றசாதி.
சாவர்ணி-எட்டாவதுமநு. இவன்சூரியனுக்குச் சாவர்ணியினிடத்துப் பிறந்தபுத்திரன், ஒரு புராணிகன்.
சாவர்ணை - சூரியன்மனைவியருள் ஒருத்தி.
சாவல் - ஆண்கோழி, சேவல்.
சாவறுதி - மரணகாலம்.
சாவற்பண்ணை - கோழிக்கொண்டைச்செடி.
சாவானம் - பூரணாகுதி.
சாவாக்கியம் - கணிதமுறையில்ஒன்று.
சாவாக்கிழங்கு - கருடன்கிழங்கு.
சாவாசம் - சகவாசம்.
சாவாஞ்செத்தவள் - அப்பிராணி.
சாவாது - ஒரு வாசனைத்திரவியம், சவ்வாது.
சாவாமூலி - மயிர்ச்சிகைப்பூடு, வேம்பு.
சாவாமை - அழியாமை.
சாவாளை - ஒருமீன், மெலிந்தது.
சாவி - சப்பட்டை, சாவீர்.
சாவிகை - மருத்துவிச்சி.
சாவிசேடம் - மாணச்செய்தி.
சாவித்திரம் - பூணூல்.
சாவித்திரன் - காற்று, சிவன், சூரியன், பிரமன்.

சாவித்திரி - உமை, சூரியகிரணம், பிரமன் மனைவிகளில் ஒருத்தி, பூணூலணியாதவன். அசுவபதிமகள், இவள் பதிவிரதைகள் எனப் பெயர்படைத்த மாதரசிகளில் ஒருத்தி, இவள் மணப்பருவ மடைந்தபோது அசுவபதி இவளையழைத்து நீயோஎனக்கு ஏகபுத்திரி, என்னிஷ்டப்படிஉனக்கு ஒரு நாயகனை நாடித்தரின் அந்த விவாகம் உனக்கு உவப்பாகாமற்போகினும் போம், ஆதலால் நீ உன் இஷ்டநாயகனை நாடிவந்து சொல்லுவையாகின் அவனுக்கே உன்னை மணமுடித்துக் கொடுப்பேனென்று கூற, அவள் அதற்கிசைந்து எங்கும் நாடி, இறுதியில் ஒரு காட்டிலே தன் மனைவியோடு தவஞ்செய்து கொண்டிருந்த விருத்தனுன ஓரரசனுடைய மகனுகிய சத்தியவானைக்கண்டு அவன் மேற் காதல் கொண்டவளாய்த் திரும்பிவந்து தந்தையினிடத்தில் தன் கருத்தைஅறிவித்தாள், அப்பொழுது அங்குவந்திருந்த நாரதர் அவளைப்பார்த்து, சாவித்திரீ! என் செய்தாய், மோசம் போனுயே, சத்தியவானை மணம்புரிவையாயின் நீ சுகமடையமாட்டாய், அவன் இன்றுமுதல் ஒரு வருஷத்திற் குள்ளே இறந்துபோவான், அவனைவிட்டுவேறொருவனை நாடக்கடவை யென்று தடுத்தார், அதற்கவள் உடன்படாமையால் தந்தையானவன் சத்தியவானுக்கே அவளைமணமுடித்துக்கொடுததான். சாவித்திரியானவள் சிலதினங்கள், நாயகனேடு காட்டுக்குச் சென்று அங்கே தனது அலங்கார ஆடையாபரணங்களை யொழித்து, தவத்திற் கேற்ற ஆடையைத்தரித்து நாயகனது ஆயுளைக் குறித்துத் தவஞ்செய் திருந்தாள். அவனது ஆயுள் இன்ன மூன்றுநாளென்னு மெல்லைவந்தடுத்தது. அந்த மூன்றுநாளும் ஊணுறக்கமின்றிக் கடுந்தவம் புரிந்தாள். மூன்றுவது நாளிலே சத்தியவான் தன் வழக்கம்போல மரம் வெட்டப்போய் மீண்டுவந்துமிகுசோர்வினுல் சாவித்திரி மடிமேற் சாய்ந்து நித்திரை செய்தான். அந்தச்சமயத்தில் யமன் சென்று அவனுயிரைக் கவர்ந்துகொண்டு தென்றிசை நோக்கிச் சென்றுன், அதையறிந்த சாவித்திரியும் யமனைத் தொடர்ந்து சென்றுள், யமன் அவளை நோக்கி, நீ யென்னைத் தொடர்ந்து வருவதனுல் பயனில்லையே யென்றுன். அதைக்கேட்ட சாவித்திரியும் என் நாயகனைப் பிரிந்து போவதனுல் எனக்கு யாதொரு பயனுமில்லையென்று சொல்லித் தொடர்ந்தே சென்றுள், அது கண்டயமன் அவளதுகற்பைவியந்து, சத்தியவான் உடலில், அவனுயிரைப் புகுத்தி வாழ்த்திப்போனுன், சாவித்திரி தனது நாயகனேடுதன் தந்தையிடமடைந்து நெடுங்காலம் இனிது வாழ்ந்திருந்தாள். இருக்கு வேதத்திலுள்ள ஒரு பிரபலமாயிருக்கும் இந்தப் பெயர்பெறும், பிரமன்மனைவியருளொருத்தி, ஒரு சாரார் சரசுவதியே இந்தப்பெயர் பெறுவளென்பர், பார்வதி, காசிபன் மனைவி.

சாவித்திரிசூத்திரம் - பூணூல்.

சாவித்திரிவிரதம் - ஒரு நோன்பு.

சாவித்திரிவிரதம் - ஆனி மாசத்துப் பௌர்ணமியில் சுமங்கலிகள் தமக்கு வைதவ்வியம் வராமலிருக்கும்படி அநுஷ்டிக்கும் ஒரு விரதம்.

சாவீர் - செத்தவீர்.

சாவு - பிசாசம், மரணம்.

சாவுன் - சவுக்காரம்.

சாவெடில் - பிணநாற்றம்.

சாவெழுத்து - நச்செழுத்து.

சாவேரி - ஒருபண்.

சாவோடுதல் - வாடுதல்.

சாவோலை - மரணச்சீட்டு.

சாழல் - ஒரு பிரபந்தம், காடி, மகளிர் விளையாட்டில் ஒன்று.

சாழை - குச்சு, குடிசை, கைகொட்டல்.

சாழையகத்தி - ஓரகத்தி.

சாளக்கிராமம் - சாலக்கிராமம், வடபழநியாண்டவர் எழுந்தருளிய ஒரூர்.

சாளக்கிராமம் - வடநாட்டிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம்.

சாளம் - குங்கிலியம், மணல்.

சாளரம் - சன்னல், பலகணி.

சாளா - ஒருவகைமீன்.
சாளிகம் - வண்டு.
சாளிகை - சாடி, பணப்பை, வண்டு.
சாளியா } ஒருசரக்கு.
சாளியாவிரை } ஒருசரக்கு.
சாளுவம்-தேசமைம்பத்தாறினென்று.
சாளுவம்-நடுநாட்டிலுள்ள ஒருதேசம்.
சாளுவர் - சளுக்குவேந்தர், சாளுவ தேசத்தார்.
சாளுவன் } சிசுபாலன்தம்பி, கிருணன்
சாலுவன் } உருக்குமணியைக்கவர்ந்து சென்றபோது சிசுபாலனை கொன்றது கண்டு தவம்புரிந்து சகல மாயா சக்திகளையும் சௌம்பகவிமாநத்தையும், சிவனிடம்பெற்று ஆகாயத்திற் சஞ்சரித்து மாதவரை வருத்தும்போது கிருஷ்ணனால் கொல்லப்பட்டவன். வசுதேவன்தம்பியாகிய விருகனது மூன்றும் புத்திரன்.
சாளேசுரம் - குறும்பார்வை, வெள்ளெழுத்து.
சாளை } ஒருவகைமீன்.
சாளைக்கெண்டை } ஒருவகைமீன்.
சாறடை } ஒருவிதபூடு.
சாறணத்தி } ஒருவிதபூடு.
சாறணை } ஒருவிதபூடு.
சாறயர்தல் - விழாவயர்தல்.
சாறல் - குளிர்காற்று, சாறுதல்.
சாறு - ஆணம், கள், குலை, கொத்து, சாரம், சாறென்னேவல், திருவிழா.
சாறுதல்-களங்கூட்டுதல், சறுகக்கொத்துதல், சறுக்குதல், வடிதல்.
சாறுதாரி - கையாந்தகரை.
சாறுவேளை - சாறணை.
சாற்சமந்தம் - மலையாத்தி.
சாற்றுதல் - சொல்லுதல்.
சாற்றுவாய் - நீர்வடியும்வாய்.
சானகம் - வில்.
சானகி - ஓரரக்கன், கொடிக்கொத்தான், சனகன்புத்திரியாகியசீதை, பொன்னுங்காணி, மூங்கில்.
சானசி - பொன்.
சானல்-அம்மி, உரைகல், சாதிலிங்கம், தியானம், பெருங்காயம்.
சானவி - கங்கைநதி.
சானி - வேசி.
சானித்தியம்-கிட்டுதல், முதற்படுதல்.
சானினி - சாகினி, சேம்பு.
சானு-தோள், மலைச்சாரல், முழந்தாள்.
சானுக்கிரகம் - தேவர்மொழி.
சானுசந்தி - முழந்தாட்பொருத்து.
சானுபலகம் - முழந்தாட்சில்லு.
சானுவி - சானவி.
சான் - சானகம்.
சான்மலம் } இலவமரம், ஒருதீவு.
சான்மலி } இலவமரம், ஒருதீவு.
சான்மலிசாரம் - இலவம்பிசின்.
சான்றவர் - அறிஞர்.
சான்றாண்மை - ஊக்கம், ஞானம்.
சான்றார் - பெரியோர், சான்றோர்.
சான்று - உதாரணம், சாட்சி.
சான்றோராட்சி - கற்றோர்வழக்கு.
சான்றார் - அறிஞர்.
சான்றோர்வழக்கு - கற்றோர்வழக்கு.
சான்றோன் - அறிஞன், சூரியன்.
சான்னவி - சானவி.
சான்னித்தியம் - சானித்தியம்.

---

## சி



சிஃஃகுவீகம் - ஒருநோய்.
சிஃஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா-ஒரு கலிப்பா, அது சில தாழிசைகளோடு பிறவுறுப்புகளைக்கொண்டு முடிவது.
சிகண்டகம் - உச்சிச்சிகை.
சிகண்டம்-உச்சிச்சிகை, மயிற்றோகை.
சிகண்டி - அங்கிரரிஷி, அம்பு, அலி, ஆமணக்கு, ஒருபண், சேவல், துருபதன்மகன், பாலையாழிறைசை, பேடுமயில், மயிற்றோகை, இசைநுணுக்க நூலாசிரியர்.
சிகண்டி - அந்தர்த்தாநன்மூத்தமனைவி, த்ருபதராஜன் புதல்வியாகப்பிறந்து ஒருபுதல்வனைப்போல வளர்க்கப்பட்டவள், அதன்பிறகு ஒரு யக்ஷனாலே தன் பெண்ணுருவ மாற்றப்பட்டு, பீஷ்மரைக் கொல்லும் பொருட்டு ஆணுருப் பெற்றவள், பாரதயுத்தத்திலே பீஷ்மரை யெதிர்த்தபோது அவர் பெண்ணோடு போர்செய்யலா

காவென்றுமறக்க, அசுவத்தாமனால் கொல்லப்பட்டவள்.
சிகண்டிகம் - கோழி.
சிகண்டிகை - கருங்குன்றிச்செடி.
சிகண்டிசன் } சிகண்டியின் புத்திரனா
சிகண்டிதன் } ன வியாழன்.
சிகநாதம் - அப்பிரகம்.
சிகமதம் - அரத்தை.
சிகம் - கிரணம்.
சிகரகேந்திரம் - சூரியனுக்கு மற்றொரு கிரகத்துக்குமுள்ள தூரம்.
சிகரப்பாடி - கோஷ்டம்.
சிகரம் - இலவங்கம், உயர்ச்சி, கவரிமா, காக்கை, கோபுரமுடி, சுக்கு, தலை, தலைச்சீரா, திரை, நீர்த்துளி, மயிர் முடி, மலை, மலைமுடி, வட்டில், வீடு
சிதரவாசிகி - துர்க்கை, காளி.
சிகரி-எலி, கருநாரை, கோபுரம், சிகரம், புல்லுருவி, மலை, மலைமேற்கோட்டை
சிகரிகை - நேர்வாளச்செடி.
சிகரிநிம்பம் - மலைவேம்பு.
சிகரியந்தம் - புல்லுருவி.
சிகலல் - குறைதல், கெடுதல்.
சிகலோகம் - அகில்.
சிகல் - குறைவு, கேடு.
சிகழிகை - தொடுத்தமாலை, மயிர்முடி மாலை, வாசிகை.
சிகா - எலி, சிகை.
சிகாச்சேதம் } அபரக்கிரியைக்கு
சிகாச்சேதனம் } மயிர்களைதல்.
சிகாண்டகம் - பக்கக்குடுமி.
சிகாதரம் - மயில், மேகமுழக்கம்.
சிகாதரு - விளக்குத்தண்டு.
சிகாதாரம் - மயில்.
சிகாமணி-சிரேஷ்டன், சிரோரத்தினம், முதல்வன்.
சிகாமூலம் - கிழங்குள்ளபூடு.
சிகாரி - வேட்டை.
சிகாவரம் - பலாமரம்.
சிகாவர்க்கம் - சுவாலைக்கூட்டம்.
சிகாவலம் - ஒருபாசி.
சிகாவளம் - மயில்.
சிகானகம் - உலக அழிவு.
சிகி-அம்பு, எருது, குதிரை, கேது, சிலம்பு, சேவல், தீ, தீபம் மயில், மலை.
சிகிகண்டம் } மயில்துத்த.
சிகிக்கிரீவம் }
சிகிசேகரம் - மயிற்சூடு.
சிகிச்சகன் - வைத்தியன்.
சிகிச்சை - பரிகாரம், வைத்தியம்.
சிகிடிமா - கொட்டைமுந்திரிகை.
சிகித்துவசன் - ஒரு அரசன், கந்தன்.
சிகிபுச்சம் - மயிற்றோகை.
சிகிப்பீலி - மயிலிறகு.
சிகிலம் - சேறு.
சிகிலாடுதல் - மினுக்குதல்.
சிகிலி - ஒப்பஞ்செய்யுங்கருவி.
சிகில் } ஆயுதங்களைத்துலக்குகை.
சிகிகல்லி }
சிகிவர்த்தகம் - பூசினி.
சிகிவாகனன் - குமரன்.
சிகிவிரதம் - ஒருநோன்பு.
சிகுதல் - அழிதல், குறைதல்.
சிகுரம் - மயிர்ப்பொது.
சிகுவாக்கிரம் - நுனிநா.
சிகுவாசன்னி - நாக்குஇழுத்துக்கொள்ளும் ஒருநோய்.
சிகுவாநிரிலேகனம் - நாவலம்புதல்.
சிகுவாபம் - நாய்.
சிகுவாமூலம் - அடிநா.
சிகுவீகசன்னி - சிகுவாசன்னி.
சிகுவை - கண்ணினிற்கும் நரம்பு.
சிகூரம் - தலைமயிர்.
சிகை - கிரணம், குடுமி, கொப்பு, சுவாலை, நுதி, படைத்தசாதம், மயிர் முடி, மயிர்சூடு.
சிகைதாடு - கொண்டையணியில் ஒன்று, தலைமயிர், கட்டுங்கயிறு.
சிக்கடி - அவரை, சிக்கு.
சிக்கடிமுக்கடி - சிக்குமுக்கு, முட்டுப்பாடு.
சிக்கணத்தை - அழுத்தம்.
சிக்கம் - உச்சி, உறி, குடுமி, சிறைச்சாலை, சீப்பு, பின்னல், மெலிவு, வண்டு, வேலை.
சிக்கர் - கள்.
சிக்கல் - இளைத்தல், ஒரூர், காக்கைக்கல், கிடைத்தல், சிக்குதல்.
சிக்கறுக்கி - சீப்பு.
சிக்கனம் - இவறல்.
சிக்கனவு - இறுக்கம்.
சிக்காரம் - அழுகை.
சிக்கி - நாணம்.
சிக்கிலிதம் - ஈரம்.

சிக்கு - எண்ணெய்ப்பற்றுமுதலியன, கண்ணி, தடை, பிசகு, மயிர்ச்சிக்கு, மாசு.
சிக்குச்சடை - மிகுபிசகு.
சிக்குண்ணல் - சிக்குப்படுதல்.
சிக்குதல்-அகப்படுதல், பின்னப்படுதல்.
சிக்குப்பாடு - தடை, பிசகு.
சிக்குப்பிக்கு, சிக்குமுக்கு } தொந்தரை, பிசகு.
சிக்குரு - நல்லமுருங்கை.
சிக்குவாங்கி, சிக்குவாரி } சீப்பு.
சிக்குவை - சிங்குவை, தண்ணீர் விட்டான் கிழங்கு.
சிக்கெனவு - இறுக்கம், உறுதி.
சிங்கத்திசை - தெற்கு.
சிங்கத்தோலுடையோன் - வீரபத்திரன்.
சிங்கநாதம்-ஒரு தொளைக்கருவி, சிங்கத்தின் கெர்ச்சிப்பு, வீராவேசத்தால் ஆர்த்தல்.
சிங்கநோக்கு - ஒருதலையிருபுறமும்பார்த்தல், சூத்திரநிலையெட்டினென்று.
சிங்கபுரம் - கலிங்கதேசத்திலுள்ள ஒரு நகரம்.
சிங்கப்பல் - குட்டிப்பல்.
சிங்கப்பெருமாள் - துளசி.
சிங்கமடித்தல் - கிட்டிப்புள்ளடித்தல்.
சிங்கதாணி - திக்குவிசயம் பண்ணிய வேந்தர் மார்பிலணியுஞ் சிங்கமுகப் பதக்கம்.
சிங்கமுகக்காப்பு - ஒருவகைக்காப்பு.
சிங்கமுகப்பல்லக்கு-ஒருவகைச்சிவிகை
சிங்கமுகன், சிங்கன் } சூரபன்மன் தம்பி, காசிபன் சிங்கவுருக்கொண்டு நின்ற மாயையைச் சேர்ந்து பெற்ற புத்திரன், இவன் மனைவி விபுதை, புத்திரர் அதிசூரன் முதலிய நூற்றுவர். இவன் தேவர்களுக்குப் பெருந்துன்பஞ்செய்து வருங் காலத்தில் முருகக்கடவுளால் போரில் கொல்லப்பட்டவன்.
சிங்கமுகி - பொன்னூமத்தை.
சிங்கம்-ஆடாதோடை, இராசசின்னத்தொன்று, உயர்ந்தோன், ஒரு மிருகம், ஓரிராசி, ஒருவிளையாட்டு, சரகாண்ட பாஷாணம்.
சிங்கல் - இளைத்தல்,குறைதல்,கெடல்.

சிங்கவல்லி - தூதுளை.
சிங்கவாகினி - துர்க்கை, பார்வதி.
சிங்கவேரம் - சுக்கு.
சிங்கவேறு - ஆண்சிங்கம், வீரன்.
சிங்களம் - ஒருகூத்து, தேயமைம்பத்தாறினொன்று; அது ஈழம், பதினெண் பாடையினொன்று.
சிங்களர், சிங்களவர் } ஒருபாடைக்காரர்.
சிங்கன் - குறவன்.
சிங்கன்வாழை - ஒருவிதவாழை.
சிங்காசனம் - சிங்காதனம்.
சிங்காடி - சுண்டுவில்.
சிங்காணசம், சிங்காணம் } மூக்குச்சளி.
சிங்காணி - சுண்டுவில்.
சிங்காதனம் - பத்திராசனம்.
சிங்காரத்தோட்டம் - நந்தனவனம்.
சிங்காரம் - அணி, அலங்காரம், திருத்தம், நவரசத்தினொன்று.
சிங்காரவனம் - பூந்தோட்டம்.
சிங்காரி - அலங்காரி,சிங்காரியென்னேவல்.
சிங்காரித்தல் - அலங்கரித்தல்.
சிங்காரிப்பு - அலங்கரிப்பு.
சிங்கி - ஒருநோய், ஒருமீன், கடுக்காய், கற்கடகசிங்கி, குறத்தி, துட்டை, நஞ்சு, மிருதாரசிங்கி, வல்லாரை,வைப்புப்பாஷாண முப்பத்திரண்டினொன்று.
சிங்கிகம் - கறிமுள்ளி.
சிங்கிட்டம் - ஒருமரம், பாலைக்கொடி.
சிங்கிநாதம் - நூனுதிக்கம்.
சிங்கியடித்தல் - ஒரு விளையாட்டு.
சிங்கிரம் - சுங்கிட்டம்.
சிங்கிலி - இரண்டு, குன்றிச்செடி.
சிங்கிவேரம் - சுக்கு.
சிங்கினி - வில், விண்ணாண்.
சிங்குதல் - அழிதல், இளைத்தல், தேய்தல்.
சிங்குவம் - சுக்கு.
சிங்குவை - சிங்குவை.
சிங்கேசுவரர் - திருப்பத்தூரிலே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்குந் தேவியார்.
சிங்கேந்திரமத்திமம் - ஐம்பத்தேழாவது மேளகர்த்தா.
சிங்கேறு - ஆண்சிங்கம்.
சிங்குவை - நா.

சிங்குவையிந்திரியக்காட்சி - நாப்பொறி யறிவு.
சிகம் - தமரத்தை.
சிசிரம் - சந்தனம், குளிர், பின்பனிக்காலம்.
சிசிரன் - சாகல்லியன் சீஷன்.
சிசு - எட்டுவயதிற்குட்பட்டவன், குழந்தை, மாணக்கன், விலங்கின்குட்டி.
சிசுகத்தி - சிசுவதை.
சிசுகம்-ஒருமரம்,கடற்பன்றி, குழந்தை.
சிசுத்துவம் - பிள்ளைத்தன்மை.
சிசுநாகன் - சைநாகர்களுக்குக் கோத்திரத்தலைவனாகிய மகததேசத்தரசன், இவன் அரசுசெய்தகாலம் புத்தருக்குப்பின் எழுபத்திரண்டாவது வருடம் அதாவது 2372-வருடங்களுக்கு முன்னுள்ளது, கலியுகத்தாற் கூறுமிடத்து அவனிருந்தகாலம் 2623-ம் வருடம்.
சிசுபாலன் - கிருட்டினன்.
சிசுபாலன் - இடையெழு வள்ளலிலொருவன். சேதிதேசத்தரசனாகிய தமகோஷன் வசுதேவன் தங்கையாகிய சுருதசிரவையிடத்திற் பெற்ற புதல்வன், இவன் முற்காலத்திலேஇரணியகசிபனாகவும், அதன்பிறகு இராவணனாகவும் பிறந்து விஷ்ணுமூர்த்தியாற் கொல்லப்பட்டவன், இந்தச்சிசுபாலப்பிறப்பில், முற்பிறவிகளிற் பார்க்கிலும், மிகக்கொடியனா யொருகுநாளில் கிருஷ்ணமூர்த்தியால் கொல்லப்பட்டவன். இவனது வன்மைமுதலிய குணங்கள் சிசுபாலவதம் என்னும் வடநூலில் விரிவாய்க் காணலாம்.
சிசுபுடம் - இருபதெருப்புடம்.
சிசுமாரம் - கடற்பன்றி, முதலை.
சிசுரம் - கிலுகிலுப்பைச்செடி.
சிசுருட்சை - உண்டுபண்ணல், கருமமுடிக்குமபேட்சை.
சிசுரூடை - தொண்டு.
சிசுவதை - குழந்தையைக் கொல்லல், புரூணகத்தி.
சிசுள் - கோடகசாலை.
சிச்சிலி - சிரற்புள், பொன்வாய்ப்புள்.
சிச்சிலிப்பான், சிச்சிலிர்ப்பான் - வகுரி வகையில் ஒன்று.
சிச்சிலுப்பான் - ஒருகுருவி, ஒரு வகுரி.
சிச்சிலுப்பை - ஒரு வகுரி.
சிச்சீ - இகழ்ச்சிக்குறிப்பு.
சிஞ்சதை - திப்பிலி.
சிஞ்சம் - சிஞ்சிதம், புளிமா,புளியமரம்.
சிஞ்சாரி - புளியமரம்.
சிஞ்சி - ஆபரணவொலி.
சிஞ்சிதம் - அசையுமாபரணங்களால் எழுமொலி.
சிஞ்சினி - வின்னாண்.
சிஞ்சினிதம் - நாணொலி.
சிஞ்சிகம் - கேகயப்புள்.
சிஞ்சிமாரம் - முதலை.
சிஞ்சிரம் - புளி.
சிஞ்சை - அணிகளாலெழுமொலி, நாணொலி, புளியமரம்.
சிஞ்சைவித்தூரி - புளியங்கொட்டைத்தோல்.
சிடம் - சாதிக்காய்.
சிட்சகன்-உபாத்தியாயன், மாணக்கன்.
சிட்சன் - சீஷன்.
சிட்சாகரன் - உவாத்தி, வியாசன்.
சிட்சிதாட்சரன் - மாணக்கன்.
சிட்சித்தல் - தண்டித்தல், போதித்தல்.
சிட்சிப்பு - சிட்டித்தல்.
சிட்சை - கல்வி, சிட்டித்தல், வேதாங்கத்திலொன்று.
சிட்சைப்படுதல் - அறிவு பயிற்றுப்படுதல், ஏவல் செய்தல்.
சிட்டபரிபாலனம் - சட்சனரைக் காத்தல்.
சிட்டம் - கிட்டம், ஒழுக்கம்.
சிட்டர், சிஷ்டர் - தெய்வதொண்டர்,நல்லோர் பெரியோர்.
சிட்டாசாரம் - படிந்தவொழுக்கம்.
சிஷ்டி, சிட்டி - ஒழுங்கு, கட்டளை, சூதுகவற்றுச் செப்பு, படைப்பு.
சிட்டிகன்-ஆக்கியோன், கடவுள், பிரமன்.
சிட்டித்தல் - படைத்தல்.
சிட்டிப்பு - படைப்பு.
சிட்டிலிங்கி - ஒருமரம்.
சிட்டு - அற்பம், ஒருகுருவி.
சிணட்டல் - பிடித்தல்.
சிணட்டுதல் - வியாதிமக்களித்தல்.
சிணறு - மரக்கிளை.
சிணி - கெட்டநாற்றம்.
சிணிக்கம் - அழுகை.
சிணுக்கு - அழுகை, உழலைமரம், சிக்கு, சிணுக்கென்னேவல், சீண்டுகை.

சிணுக்குதல் - சிக்குப்படுத்தல், சீண்டல், பிதுக்கல், பிள்ளை திருடல், பொசியப்பண்ணல்.
சிணுக்குவாங்கி - மயிர்ச்சிக்குவாங்கி.
சிணுங்கல், சிணுங்குதல் - அழுதல், கொஞ்சுதல், மழை தூறல்.
சிண் - கூட்டாளி, கையாள், சூதாட்டு, தாயம்.
சிண்டி, சிண்டு - அளவுபடி, குடுமி, தலைமயிர்.
சிண்டுதல் - சருவுதல், தொடுதல், நெருங்குதல்.
சிதகம் - இடியேறு, தூக்கணங்குருவி.
சிதகல் - எழுதினதைக் கிறுக்கல்.
சிதகன் - சுக்கிரன், தூக்கணங்குருவி.
சிதகுஞ்சரம் - ஐராவதம்.
சிதசத்திரம் - வெண்குடை.
சிதசிந்து - கங்கை.
சிதடன் - அறிவில்லான், குருடன்.
சிதடி - அறிவிலி, குருடி, சில்லி, சிள்வண்டு.
சிதடு - குருட்டுத்தன்மை, பேதைமை.
சிதத்துவசன் - அஜன்புத்திரன்.
சிதப்பூரம் - பொன்னுங்காணி.
சிதமருகம் - வெண்மிளகு.
சிதமை - வெள்ளாடு.
சிதம் - அசையப்பட்டவை, சந்தனம், சயமுறப்படல், ஞானம், புளியாரை, வலுமை, விட்டுணு கரந்தை, விண்மீன், வெண்மை, வெள்ளி.
சிதம்பரசுவாமிகள்-வைராக்கிய சதகம் வைராக்கியதீபம் முதலிய நூல்களுக்கு உரைசெய்தவர், திருப்போரூர்சந்நதிமுறையும் பஞ்சாதிகார விளக்கமும் செய்தவர். பஞ்சாதிகார விளக்கம் சிருட்டி முதலிய ஐந்தொழில்களை விளங்கக் கூறுவது. இவர் சாந்தலிங்க சுவாமிகள் சீடர்.
சிதம்பரம் - ஒரு சிவஸ்தலம்.
சிதம்பரம் - பஞ்சலிங்கங்களி லொன்றுகிய ஆகாசலிங்கஸ்தலம். இது சோழநாட்டிலுள்ளது. இந்தத் தல மான்மியங்களெல்லாம், கோயிற்புராணம், சிதம்பரபுராணம், தில்லைவனபுராணம், ஏமசபாநாதபுராணம், புண்டரீகபுராணம் முதலியவற்றில் பரக்கக்காணலாம். பிண்டமும் பிரமாண்டமும் சமம், பிண்டமாகிய சரீரத்தில் இடப்பக்க நாடியாகிய இடைக்கும் வலப்பக்கநாடியாகிய பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழும்நாநாடியும் பிரமாண்டத்திலுள்ள இப்பரதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லையும், சிவபெருமான் ஆநந்த நிருத்தஞ்செய்யும் இடம், சரீரம் பிரமபுரம், சரீரத்துள்ளிருக்கும் இருதயம் தஹரமாகிய புண்டரீக வீடு. இருதயத்துள்ளிருக்கும் பிரமமாகிய சிவம் ஆகாசம்-புறத்தும் இப்படியே, பிரமாண்டம் பிரமபுரம், அதனுள்ளிருக்கும் தில்லைவனம் புண்டரீகவீடு, அதில் நிருத்தஞ்செய்யும் சிவம் ஆகாசம். இந்த ஆகாசம் பூதாகாசம்போல் சடமாகாது சிந்தேயாம். ஆதலால் இது சிதம்பரம் எனப்படும். இது எக்காலமும் நீக்கமின்றி விளங்குமிடமாதலால் இத்தில்லையும் சிதம்பரம் எனப்படும். சிதம்பரத்திலே ஞானசபையில் சிவபெருமான் சிவகாமியம்மையார் காண ஆனந்தநிருத்தஞ்செய்தருளுவர், சிதம்பரத்திலெழுந்தருளியிருக்கும் திருமூலஸ்த்தானமாகிய சிவலிங்கப்பெருமானுக்கு வேதசிவாகம விதிப்படி பூசை முதலியன செய்யும் பிராமணர் தில்லைவாழந்தணர் எனப்படுவர். அவர் மூவாயிரவர், இப்போதுள்ளார் முந்நூற்றுவரே, சேக்கிழார்காலத்திலே மூவாயிரரா யிருந்தவர் இப்போது முந்நூற்றுவராயினது தமக்குரிய தருமங்களினின்று மிழுக்கிய காரணத்தாற்போலும், சிதம்பரம் என்பதன் பொருள் ஞானகாசம்.
சிதம்பல் - பதனழிதல்.
சிதம்பு - ஒருகாலணி, குணமின்மை, சிதம்பென்னேவல், பதனழிவு.
சிதம்புதல் - பதனழிதல்.
சிதரம் - உறி, மழைத்துளி.
சிதர் - உறி, கந்தை, சிதரென்னேவல், சீலைத்துணி, தேனீ, பராகம், பூந்தாது, பூமி, மழைத்துளி, மழைத்தூறல்.
சிதர்ச்சி, சிதர்தல் - சிந்தல்.
சிதர்த்தல் - சிந்துதல்.

சிதலம் - பதனழிவு.
சிதலை - கறையான்,சீலைத்துணி,நோய்.
சிதல் - ஒருபூச்சி, கறையான்.
சிதவல் - குறைவுபட்டது. சிதறுதல், சீரைசெத்தல், தேரிடக்கியம், படுக்கை, புரையோடுபுண், மரவுரி.
சிதளி - பொன்னுங்காணி.
சிதள் - கறையான், செதுக்குத்துண்டு, புண்ணசறு, மீன்செதிள்.
சிதறடித்தல் - சேதப்படுத்தல், தோற்கடித்தல்.
சிதறி - பாடலமரம், மழை.
சிதறுதல் - சிந்துதல்.
சிதனம் - கோடகசாலை.
சிதன் - அச்சமுள்ளோன், சுக்கிரன்.
சிதாகாசம் - ஞானகாசம்.
சிதாகாயம் - ஞானவிண்.
சிதாக்கினி - ஈமாக்கினி.
சிதாத்துமா - கடவுள்.
சிதாபாங்கம் - மயில்.
சிதாபாசம் - மயக்கு.
சிதாபாசனம் - முக்குணங்களு ளொன்றில் விவேக மழுந்தியிருத்தல்.
சிதாபாசன் - சீவன்.
சிதாப்பிரம் - வெள்ளைமுகில்.
சிதாம்புசம் } வெண்டாமரை.
சிதாம்போசம் }
சிதாரம் - இடுகாடு, சுடலை.
சிதாரம் - தேரிடக்கியம்.
சிதார் - சீரை, மரவுரி.
சிதானந்தம் - ஞானனந்தம்.
சிதானனன் - கருடன்.
சிசி - ஈமவிறகு, கறுப்பு, கோடாலி, வெண்மை.
சிதிகண்டன் - சிவன்.
சிதிகை - மாதரிடையணியிலொன்று.
சிதிச்சதம் } அன்னப்புள்.
சிதிபட்சம் }
சிதிரம் - கோடாலி, தீ, வாள்.
சிதிலம் - சிதலம், நெகிழ்தல்.
சிதுமலர் - நீர்மீட்டான்.
சிதுரம் - நேர்வாளம்.
சிதுரான் - பகைவ்ன், சத்துரு.
சிதேகி - கடுக்காய்.
சிதேசகதிரம் - வெண்கருங்காலி.
சிதேதரம் - கருமை.
சிதேந்திரியம் - ஞானேந்திரியம்.

சிதை - ஈமவிறகு, கீழ்மை, சிதையென்னேவல், பாய்மரம்.
சிதைசுற்று - ஆலை, சக்கரம், செக்கு.
சிதைதல் - அழிதல், கெடுதல்.
சிதைந்தசொல் - எழுத்துத் திரிந்துங் கெட்டும் வழங்குஞ்சொல்.
சிதைப்பு - அழிப்பு, கெடுத்தல்.
சிதையர் - கீழ்மக்கள்.
சிதைவு - குறைவு, கேடு, பதனழிவு.
சிதோதரன் - குபேரன்.
சித்தகங்கை - ஆகாயநதி.
சித்தகம் - தலைச்சீரா, மெழுகு.
சித்தகலிதம் - அறியப்பட்டது.
சித்தகாசம் - பேரறிவு.
சித்தக்கல் - ஈரக்கல், சிலாநாகக்கல்.
சித்தசமாதானம்- சமுசயமற்றிருத்தல்.
சித்தசமுசயம் - மனச்சந்தேகம்.
சித்தசமுன்னதி - சத்தவிசனத்தொன்று, அது அகங்காரம்.
சித்தசலனம் - மனத்தளப்பம்.
சித்தசன் - மன்மதன்.
சித்தசாதனம் - வெண்கடுகு.
சித்தசாந்தி - மனத்தையடக்கல்.
சித்தசுத்தி - மனத்தூய்மை.
சித்தசேனன் - முருகன்.
சித்தஞானம் - கேவலஞானம்.
சித்தத்தியாகம் } துறத்தல்.
சித்தநிவர்த்தி }
சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் - இராஜ யோகத்திலிருந்து சிவனைத் தியானித்து முத்தியடைந்ததொகையடியார்கள், இவர்களுடைய பெயர் ஊர் முதலியன புலப்படாமையால் கூறப்பட்டில், சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப்பட்ட திருத்தொண்டத் தொகையில், "சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்" என்று துதிக்கப்பட்டிருத்தலால், அந்த நாயனார்க்கு முந்தி யிருந்தவர்களென்பது வெளிப்படை.
சித்தநாதேசுவரர் - திருநரை யூரிலே திருக்கோயில் கொண்டிருக்கும் சுவாமி திருநாமம்.
சித்தபுரி - இது மேகலா ரேகையிலே இலங்காபுரிக்கு நேரே அதோபாகத்திலே ரோமகாபுரிக்கு மேற்கே தொண்ணூறு பாகையிலேயுள்ளது,அமெ

ரிகா தேசம் என்று இப்பொழுது வழங்குத் தேசத்திலிருந்ததாதல் வேண்டும்.

சித்தப்பிரசின்னதை - மகிழ்ச்சி.

சித்தப்பிரமை - பயித்தியம், மனமயக்கம்.

சித்தமன் - ஆமணக்கு.

சித்தமுகம் - கிலுகிலுப்பை.

சித்தம் - உட்கரண நான்கினொன்று, உண்மை, உப்பு, உள்ளம், எப்பொழுதும், கீர்த்தி, சிவாகம மிருபத்தெட்டினொன்று, திறவு, நித்திய யோகத்தொன்று, முடிப்பு, முருங்கை.

சித்தம்பலம் - சிதம்பரம்.

சித்தயோகம் - சுபயோகம்.

சித்தாம்பரி - அறுபத்தாறுவது மேளகர்த்தா.

சித்தாருடம் - விஷவாடத்தொன்று.

சித்தார் - சித்திபெற்றவர்கள்.

சித்தர்கள் - அணிமாமுதலியவை சித்திக்கப்பெற்றவர்கள். அவர்கள் எண்ணிறந்தவர்கள். அவர்களுள்ளே தமிழ்நாட்டிலே விளங்கிய சித்தர்கள் பாம்பாட்டிச் சித்தர் அகப்பேய்ச் சித்தர் முதலியோர்களே. பாம்பாட்டிச் சித்தர் அந்தணர் என்றும், அகப்பேய்ச் சித்தர் வேளாளர் என்றும் கூறுவர். இருவரும் அணிமாதி சித்திகளைப் பெற்றபின்னர் அவற்றாற் பயனின்மைகண்டு ஞானநிலை யடைந்தவர். இருவரும் அகப்பேய் என்றும் ஆடு பாம்பே என்றும் தம்பாடல்களிற் பாடினமையே தம் பெயர்களுக்குக் காரணமாகக் கொண்டவர்கள். இவர்களியற்பெயர் தெரியவில்லை. இவர்கள் பாடல் எளிய நடையினவாயினும் ஆழ்ந்த ஞானப்பொருளுடையன. கோரக்கர் சத்தியநாதர் முதலியோர் ஒன்பதின்மரும் நவநாத சித்தர் எனப்படுவர். இவர்கள் பதார்த்தங்களின் பகுதிகளையும் சரீரத்தின் பகுதிகளையும் நன்றாக ஆராய்ந்து நிச்சயித்து அந்தப் பகுதிகளின் சொரூபலக்ஷணங்களை யுணர்ந்து அவற்றைத்தமதெண்ணப்படி ஏவல்கொள்ளும் ஆற்றலுடையராதலால் சித்தர் எனப்படுவர். ரசாயந சாத்திரங்களும் வைத்திய சாத்திரங்களும் செய்தவர்களும் இவர்களே. இவர்கள் செய்த நூல்கள் பெரும்பாலும் இறந்தன. இவர்களால் செய்யப்பட்ட நூல்களென்று சொல்லப்பட்டு இக்காலத்து வழங்குவன யாவரோ சாமானியர் பாடிய புரட்டு நூல்களேயாம்.

சித்தலயம் - மனவொடுக்கம்.

சித்தல் - சீலை.

சித்தவிப்பிரமம் - ஒருநோய்.

சித்தவிலாசம் - பிரபஞ்சவிச்சை.

சித்தவேதனை - மனக்கலக்கம்.

சித்தன் - அருகன், இலவுமரம், காந்தக்கல், சித்திபெற்றோன், சிவன், தந்திரி, வயிரவன்.

சித்தன்சாபக்கல் - தவளைக்கல்.

சித்தாகாரம் - அரூபம்.

சித்தாசங்கம் - புற்று.

சித்தாசிரமம், சித்தாச்சிரமம் - விசுவாமித்திர முனிவர் தவமும் யாகமும் செய்த இடம். இவ்விடத்தில் விஷ்ணுமூர்த்தியும் ஒருகாலத்தில் தவஞ்செய்ததாகவும் புராணங்கள் கூறுகின்றன. இவ்விடத்தில் தவஞ்செய்வோர் சித்தியடைவது நிச்சயமாம்.

சித்தாதிகள் - சித்தர்.

சித்தாந்தசாத்திரங்கள்-௧௪ - "உந்திகளிறுடையர்போதஞ் சித்தியார், பிந்திருபாவுண்மைப் பிரகாசம், வந்தவருட்பண்புவினாபோற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு, உண்மைநெறி சங்கற்ப முற்று" என்னும் வெண்பாவால் இவை இத்தனையென்பதறியப்படும். திருவருட்பயன், சங்கற்ப நிராகரணம், வினாவெண்பா, கொடிக்கவி, போற்றிப்பஃறொடை, சிவப்பிரகாசம், நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம் என்னும் இவ்வெட்டும் உமாபதி சிவாசாரியராற் செய்யப்பட்டன. உண்மைவிளக்கம்-திருவதிகை-வனவாசகங் கடந்தாராற் செய்யப்பட்டது. சிவஞானசித்தியார், இருபவிருபது என்னு மிரண்டும் அருணந்திசிவசாரியராற் செய்யப்பட்டன. சிவஞான போதம் மெய்கண்டதேவராற் செய்யப்பட்டது. திருவுந்தியார் உய்யவந்த தேவநாயனாராற் செய்யப்பட்

டது. திருக்களிற்றுப்படியார் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாராற் செய்யப்பட்டது. இவர் திருக்களிற்றுப்படியார் செய்தவருடைய சீடருடைய சீடர். இந்தச் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் சிவாகமத்தின் ஞானகாண்டப் பொருளைச் சுருக்கி விளக்குந் தமிழ் நூல்களாம். இவை ஐஞ்ஞூற்றுத் தொண்ணூறு வருடங்களுக்கு முன்னே பாடியருளப்பட்டனவென்பது சங்கற்ப நிராகரணஞ் செய்த உமாபதி சிவாசாரியர் தாமே அந்த நூலில் சாலிவாகன வருடம் ஆயிரத்திருநூற்று முப்பத்தைந்தில் அதனைச் செய்ததாகக் கூறுவதால் நிச்சயிக்கப்படும். உமாபதி சிவாசாரியர் அருணந்தி சிவாசாரியாருடைய சீடர். சிவஞானபோதம் செய்யப்பட்டகாலம் சாலிவாகனவருடம் ஆயிரத்திருநூற்றென்று துணியப்படுகின்றது. உமாபதி சிவாசாரியாராற்பாடப்பட்ட சேக்கிழார் எழுநூற்றெழுபத்தைந்து வருடங்களுக்கு முன்னிருந்தவர். வேதத்தின ஞானகாண்டப் பொருளை உள்ளபடி அறிவிக்குந் தமிழ் நூல்கள் தேவார திருவாசங்களாம். இவை யிரண்டும் தமிழ்வேதம் எனப்படும். இந்தச் சித்தாந்த சாத்திரங்கள் தமிழிலே வெளிவருதற்கு முன்னே பக்குவர்கள் குருவைத்தேடி யடைந்து உபதேச முகமாகச் சமயவுணர்ச்சியைப் பெற்றுக் கொள்வார்கள். இக்காலத்தில் நூல்களே எல்லார்க்கும் குருக்களாயின. ஆகியும் உண்மையறியத் தலைப்பட்டார் மிகச் சிலரே. அக்காலத்தில் அறியாதார் பலர். இக்காலத்தில் அறிந்தும் அறியாதார் பலர்.

சித்தாந்தசாராவளி-ஒரு சம்ஸ்கிருதநூல்.

சித்தாந்தகௌமுதி - பாணினி வியாகரணத்துக்கு ஒரு வியாக்கியானம்.

சித்தாந்தசிகாமணி - சிவப்பிரகாச சுவாமிகள் செய்தஇருபதுநூல்களுள் ஒன்று. இதுயாப்பினாலுமிகச்சிறந்தநூல்.

சித்தாந்தம்-சுத்தாத்துவித சைவசமயம் தருக்கமுடிவு, நிச்சயமானது, மதம், முடிந்த முடி.

சித்தாந்தன் - சிவன்.

சித்தாந்தி - கணிதன், சித்தாந்தசமயி, தருக்கமுடிவு சாற்றுவோன்.

சித்தாபாசம் - சடம்.

சித்தாமலகம் - சிற்றாமலகம்.

சித்தாமோகம் } பேரோசனை.
சித்தாமோசம்

சித்தாராகம் - விருப்பம்.

சித்தார்த்தம் - கடுகு, தத்துவஞானம், வெண்கடுகு.

சித்தார்த்தி - ஐம்பத்து மூன்றாவதுவருஷம்.

சித்தி-அறிவு, இரைமுதலிய விருத்தல், ஊறு செய்தல், எட்டிமரம், எண்ணெய்க்குத்தி, சவக்காரம், சித்தித்தல், சித்தியென்னேவல், செல்வாக்கு, நித்தியயோகத்தொன்று, நிலப்பனை, நிறைவேற்றம், பெலம், பொன்னாங்காணி, மகிழ்ச்சி, மந்திரோச்சாரணமிதியடி, மறைவு, மோக்கம், வேட்டல், ஒரு சைவ சாத்திரம்.

சித்திக்கல் - சித்தக்கல்.

சித்தித்தல் - சித்தக்கல்.

சித்தித்தல்-கைக்கூடுதல், சம்பவித்தல்.

சித்திநெறி - முத்திவழி.

சித்திமூலம் - நிலப்பனங்கிழங்கு.

சித்தியம் - உறி, கோரி.

சித்தியாமலகம் - ஒருநெல்லி.

சித்தியாரூடம்-விஷவாகடங்களில் ஒன்று.

சித்தியாரோகணம் - உடன் கட்டையேறுதல்.

சித்தியார்-சைவசித்தாந்த நூலினொன்று.

சித்திரகடகம் - காடு.

சித்திரகண்டம் } புறவு.
சித்திரகண்டன்

சித்திரகம் - ஆமணக்கு, ஒருபூடு, திலம், புலி, கொடுவேலி.

சித்திரகம்பலம் - வன்னக்கம்பளி.

சித்திரகரன் - சித்திரகாரன்.

சித்திரகவி - நாற்கவியில் ஒன்று; அது எழுகூற்றிருக்கை, எழுத்து வருத்தனம், ஏகபாதம், ஒற்றெழுத்துத்தீர்ந்த ஒரு பொருட்பாட்டு, ஓரெழுத்தினம், கரந்துறை, காதைகரப்பு, கூடசதுக்கம், கோமூத்திரி, சக்கரம், சருப்பதோபத்திரம, சித்திரப்பா, சுழிகுளம், தூசங்கொளல், பாதமயக்கு,

பாவின் புணர்ப்பு, மாலைமாற்று, வானூற்று, விசித்திரப்பா, வினவுத்தரம் இவை முதலிய மிறைக்கவி.
சித்திரகன்-யவனன். விருஷ்ணிவமிசத்தில் வந்த வொருயாதவன்.
சித்திரகாயம் - புலி.
சித்திரகாரர்-சித்திரஞ்செய்வோர், சிற்பர்.
சித்திரகிரீவன் - புறா.
சித்திரகுத்தன் - யமன்கணிகன். இவன் மனிதர் செய்யும் நல்வினை தீவினைகளைக் கிரமமா யெழுதி யமனுக்குக் கணக்குக் காட்டுவோன்.
சித்திரகூடம்-ஒருமலை, சமஸ்தானமண்டபம். தற்காலம் பண்டல்கண்ட் என்று வழங்குமிடத்திலுள்ள ஒரு மலை. இதுவான்மீகி முனிவரது ஆசிரமம், இது சிருங்கிபேர புரத்துக்கு நிருதி திசையிலுள்ளது.
சித்திரகெண்டி - ஒரு மஹாரிஷி.
சித்திரகெண்டிசன் - வியாழன்.
சித்திரகேதன் - வசுதேவன் தம்பியாகிய தேவபாகன் மூத்தமகன். சூரசேன தேசத்தரசன், இவன் சிலகாலம் சந்ததியில்லாதிருந்து பிறகு தவஞ்செய்து ஒரு புத்திரனைப் பெற்றான். அதுகண்ட சக்களத்திகள் பொறாமையால் நஞ்சூட்டி அப்புதல்வனைக்கொன்றார்கள். அது காரணமாகச் சித்திரகேதன் புத்திர சோகத்தால் வருந்தினான், அப்போது நாரதனும் அங்கிரசனும் அவனிடஞ்சென்று அவனுக்கு ஞானோபதேசம் செய்துபோக, அவன்மஹாஞானியாகித்தன் சரீரத்தைவிட்டு, வித்தியாதர சரீரத்தைப்பெற்று, கைலாசத்துக்குச் சென்று, அங்குசிவபெருமான்சக்திசமேதராயிருக்கக்கண்டு, அவரைநோக்கி, ஜகத்காரணராகிய நீரும் இவ்வாறு பெண்ணோடுகூடியே யிருக்கவேண்டுமோ வென்று மெய்யறியாதவன் போன்று பரிகசித்தான். அதனால் ராக்ஷஸரூபம் பெற்றுப் பூமியிற்பிறந்து விருத்திராசுரன்என்றுவிளங்கி இந்திரனாற் கொல்லப்பட்டு முத்தியடைந்தான்.
சித்திரகோலம் - நச்சுப்பல்லி.
சித்திரக்காலி - ஒருநெல்.
சித்திரக்கிளிச்சி - கதண்டு.
சித்திரக்குள்ளன் - குறுத்தவன்.
சித்திரசருப்பம் - பெரும்பாம்பு.
சித்திரசாலை - சித்திரமண்டபம்.
சித்திரசூரூபம் - எழுதப்பட்ட ரூபம், வெட்டப்பட்ட ரூபம்.
சித்திரசேனபூாண்டியன் - சித்திரவர்மபாண்டியனுக்குப் பின்னே அரசு செய்தவன்.
சித்திரசேநன்-ஒருகந்தருவன். அர்ஜுநன் தோழன், துரியோதநன்தம்பிகளுளொருவன், கர்ணன்மகன், நரிஷ்யந்தன் புத்திருருள் ஒருவன், ஜராசந்தன் தோழன்.
சித்திரசேனன்-நாககணக்கரிலொருவன்.
சித்திரதண்டகம் - பருத்தி.
சித்திரதாம் - மார்க்கசடப் பிரமாணத்தொன்று, அது ஒருமாத்திரை ஒருகலையாகக்கொண்டது.
சித்திரதாரணை - நவதாரணையிலொன்று.
சித்திரதாளம் - நவதாளத்தொன்று.
சித்திரத்துவசன் - சித்திரபூஷணபாண்டியனுக்குப் பின்னே அரசாண்ட ஒரு பாண்டியன்.
சித்திரபானு-சூரியன்தீ, பதினாறுவது வருடம்.
சித்திரபுச்சகம் - மயில்.
சித்திரபுத்திரனர் - சித்திரகுத்தனர்.
சித்திரபூஷணன் - சித்திரவிரதனுக்குப் பின் அரசுபுரிந்த பாண்டியன்.
சித்திரப்பட்டம், சித்திரப்படாம் - எழுத்துச்சீலை.
சித்திரப்பா - மிறைக்கவியிலொன்று.
சித்திரப்பாலடை, சித்திரப்பாலாடை - ஒருவகைப்பூடு.
சித்திரப்பாலாவி - சித்திரைப்பாலாவி.
சித்திரப்பாவை, சித்திரப்பிரதிமை - சித்திரித்தஓவியம்.
சித்திரப்பூம்பட்டாடை-சித்திரித்த நல்லாடை.
சித்திரப்பொம்மை - சித்திரித்தபிரதிமை.
சித்திரமிருகம் - மான்.
சித்திரமூலம்-கொடிவேலி. அது பஞ்சமூலத்தொன்று, நிலப்பனங்கிழங்கு.
சித்திரமூலி - கொடுவேலி.
சித்திரமெழுதல் - வன்னந்தீட்டுதல்.
சித்திரமெழுதுமண் - செம்மண்.

சித்திரமேகலை - மயில்.
சித்திரம் - அதிசயம், அற்பம், ஆகாயம், ஆமணக்கு, ஒருகவி, கொடுவேலி, சித்திரப்பாவை, சித்திரிக்கப்பட்டது, சிறப்பு, சிறுகுறிஞ்சா, சிற்பநூன் முப்பத்திரண்டினொன்று, நூதனம், நொடிக்கதை, பேரழகு, மார்க்கசடப் பிரமாணத்தொன்று, அது இரண்டு மாத்திரை ஒருகளையாகக் கொண்டது, மெய்போற் பொய்கூறல்.
சித்திராதன்-ஒருகந்தருவன். சூரியன், முனிமகன், கந்தர்வராஜன், பேருசங்கன்புத்திரன், சசிவிந்தன்தந்தை, அதிவிரதன் புத்திரன், துரியோதிரன் தம்பி.
சித்திரரேகை - அரசமரம், ஓரிரேகை, குபேரன்மனைவி. வாணாசுரன்மந்திரியாகிய வந்தன் மகள், உஷாதேவிக்குத் தோழி, சித்திரத்தில் வல்லவளாதலால் இவள் இப்பெயர் பெற்றாள்.
சித்திரர் - சித்திரகாரர், தச்சர்.
சித்திரலேகை - சித்திரப்படம்.
சித்திரவகவல்-சித்திரமுள்ளவாசிரியம்
சித்திரவண்ணம் - குறியவும் நெடியவும் ஒத்துநேர்ந்தடுக்கிவருவது.
சித்திரவதை-கண்டதுண்டமாய் வெட்டிக்கொல்லல்.
சித்திரவர்மபாண்டியன்-சித்திரத்துவச பாண்டியனுக்குப்பின் அரசாண்ட ஒருவன்.
சித்திரவாகநன் } மணலூர் புரத்தில்
சித்திரவாகன் } அரசுசெய்த பாண்டியன், பப்பிருவாகன் தாயைப் பெற்ற பாட்டன். இவன் பாரதயுத்தத்திலே பாண்டவர் பொருட்டுச் சென்று உதவி செய்தவன்.
சித்திரவாரத்தி - கண்டங்கத்திரி.
சித்திரவிக்கிரமன் - சித்திரசேநபாண்டியனுக்குப் பின் அரசு செய்த பாண்டியன்.
சித்திரவிதழ் - அத்தி.
சித்திரவிதை-முத்துக்கொட்டை.
சித்திரவித்தாரன் - விற்பன்னன்.
சித்திரவித்தை - நூதனவித்தை.
சித்திரவிரதன்-சுகுணசேகர பாண்டியனுக்குப்பின்அரசாண்டபாண்டியன்
சித்திரவேலை - வன்னவேலை.
சித்திரவேளாகொல்லி - கொல்லித்திறத்தினொன்று.
சித்திரவோடாவி-சித்திரகாரன். [சன்.
சித்திரன் - சித்திரவேலைசெய்பவன் தச்
சித்திரன் - கநகவிஜயனுக்குத்துணையாக விருந்த ஒரு அரசன்.
சித்திராக்கினை - சித்திரவதை.
சித்திராங்கதன்-குருகுலவாசரி லொருவன், நரகிலோர் கணக்கன், விஞ்ஞசயர்வேந்தன். ஒரு கந்தருவன், விசித்திரவீரியன் தமையன், திருதராஷ்டிரன் பெரிய தந்தை, சித்திராங்கதன்என்னும் பெயரோடிவன்காலத்திருந்த கந்தர்வனை எதிர்த்துக் கொடும்போர்செய்து அவனாற் கொல்லப்பட்டவன், துரியோதநன் தம்பியருளொருவன்.
சித்திராங்கதை-அர்ச்சுனன்பாரி, சித்திரவாகனன்மகள். இவளே பப்பிருவாகனனுக்குத் தாய், அருச்சுனன் தருமன்செய்த அசுவமேதயாக காலத்தில் அவ்வசுவத்தோடு சென்றபொழுது அவ்வசுவத்தைப் பப்பிருவாகனன் பிடித்துக்கட்ட, அர்ச்சுனன் அவனை இன்னனென்றறியாது அவனோடு யுத்தம்செய்து அவன்பாணத்தால் மூர்ச்சையாயினன், அப்பொழுது பப்பிருவாகனன் அர்ச்சுனனைத்தந்தையென்றுணர்ந்து அவன்மூர்ச்சையைத்தீர்த்து அவனை வழிபட்டுவணங்கி அக்குதிரையை ஒப்புவித்தான். அல்லியெனப் படுபவளும் இச்சித்திராங்கதையேயாம்.
சித்திராங்கம் - குங்குமம்.
சித்திராங்கி - தந்திரகாரி, நரேந்திரன் மனைவி, ராஜராஜநரேந்திரன் காமக்கிழத்தி, காமலீலையில் இவளைவென்றவரில்லை. அற்புத சரீரமுடையாளென்பது பதார்த்தம்.
சித்திராதேவி - குபேரன்பாரி, இவள் சித்திரரேகையென்றும் சொல்லப்படுவள்.
சித்திராபதி - மாதவிநற்றாய்.
சித்திராபூபம் - பணிகாரம்.
சித்திராபூரணை - சித்திரையிற் பௌர்ணமி, அதுசித்திரகுத்தர்பிறந்தநாள்.

சித்திராயுதன் - ஒரு கந்தருவன்.
சித்திரான்னம் - பலவகைச்சாதம்.
சித்திரி - செந்தலவணம், சித்திரியென்னேவல்.
சித்திரித்தல்-ஓவியந்தீட்டல், கொத்துவேலைசெய்தல்.
சித்திரீணி - சித்தினி.
சித்திரை - ஒருநாள், ஒருமாதம், சித்திரப்பாலாவி.
சித்திரைக்கதை - சித்திரகுத்தர்கதை.
சித்திரைசிலம்பன் - சித்திரைமாதத்திற்பாயுங் காவிரியாறு.
சித்திரைப்பாலாவி-அம்மான் பச்சரிசி.
சித்திரைவசந்தன் - சித்திரைத் தென்றல்.
சித்திரோடாவி - சித்திரசன்.
சித்திரோபலை - இருக்ஷபர்வதத்திற் பிரவகிக்கும் ஒருநதி.
சித்திரோதனம் - மஞ்சளரிசிச்சோறு.
சித்திரோததி - அசரீரிவார்த்தை.
சித்திலி - சிற்றெறும்பு.
சித்திலிகை - எழுத்துச்சீலை, புடவை.
சித்தில் - அறிவு.
சித்தினி - நால்வகைப்பெண்ணி னொருத்தி.
சித்து - அருபம்,அறிவு,மாயவித்தை,யாகம்.
சித்துஞானம் - சூக்குமஞானம்.
சித்துடு - கிலுகிலுப்பைப்பூடு.
சித்துப்பொருள் - அறிவுமயமான பொருள்.
சித்துருபம் - நேர்வாளம்.
சித்துருபன் - கடவுள்.
சித்தை - தோற்றுருத்தி, பாகமாதல்.
சித்தோன்னதி - அகங்காரம்.
சிங்வாலி - தாதைபாரி.
சிநேகபலம் - எள்ளு.
சிநேகம் - சினேகம்.
சிநேகம் - சாதிக்காய்.
சிந்தகம் - தூக்கணங்குருவி, புளியமரம்.
சிந்தடி - முச்சீரடி.
சிந்தடிவஞ்சிப்பா-முச்சீரடியான் வந்து தனிச்சொற்பெற்று ஆசுரியச்சுரிதகத்தான் முடிவது.
சிந்தம் - புளியமரம்.
சிந்தனுபோகம் - மனத்தினுற்பண்ணும் போகம்.
சிந்தனை - ஆராய்வு, எண்ணம்,தியானம் நினைவு விருப்பம்.
சிந்தன் - குறளன், சீர்பந்தபாஷாணம், தூக்கணங்குருவி.
சிந்தாகுலம் - மனக்கவலை.
சிந்தாகட்டிகை - ஓாட்டிகை.
சிந்தாக்கு-ஓராபரணம்,ஒருவிளையாட்டு.
சிந்தாத்திரி, சிந்தாத்திரை } சுகவாழ்வு, நல்லபயணம்.
சிந்தாமணி-ஒருமருந்து, ஒருமாத்திரை, தேவமணியினென்று. திருத்தக்கதேவரென்னும் சைனமுனிவரியற்றிய தமிழ்க்காவியம்.ஒருநூல்,இதுசீவகன்கதையைவனப்புறக்கூறுவது. நச்சினார்க்கினியராலுரை செய்யப்பட்டது. சீவகசிந்தாமணி எனவும் படும். இது கடைச்சங்க காலத்தை யடுத்தநூல்.3145செய்யுளும்,பதின்மூன்றிலம்பகங்களு முடையது.
சிந்தாமணிமாத்திரை - ஒருமருந்து.
சிந்தித்தல் - நினைத்தல்.
சிந்திப்பு - நினைப்பு.
சிந்தியம் - சிந்திப்பது, சிவாகம மிருபத்தெட்டினொன்று.
சிந்தியல்வெண்பா-மூன்றடியாய் நேரிசைவெண்பாப் போலவும் இன்னிசைவெண்பாப்போலவும் வருவது.
சிந்து-ஆறு, இருவாட்சி,ஒருபா, ஒருயாறு, கடல், குறள், சிந்தென்னேவல், தேயமைம்பத்தாறினொன்று, நீர், பதினெண்பாடையினொன்று .முச்சீரடி, யானை, யானைமதம், வைடூரியம்.
சிந்துகம் - நொச்சி.
சிந்துசங்கமம் - ஆறும் கடலும் பொருந்துமுகம், ஆற்றுப்பொருத்து.
சிந்துசம் - உப்பு.
சிந்துச்சாரம் - சிந்துலவணம்.
சிந்துதல்-கெடுதல், சிதறல், சொரிதல்.
சிந்துத்துவீபன் - அயுதாயுவினது தந்தை, சிந்து தேசராசர்.
சிந்துநதி - ஒருநதி.
சிந்துநந்தனன் - சந்திரன், வீடுமன்.
சிந்துநாடர் - நெய்தனிலமாக்கள்.
சிந்துநாதன் - வருணன்.
சிந்துபுட்பம் - சங்கு.
சிந்துரதம் - இந்துப்பு.
சிந்துரத்தம் - ஒருப்பு.
சிந்துரம்-சிந்தூரம், சிவப்பு, செவ்வியம், புளியமரம், யானை, வெட்சி.
சிந்துரித்தல் - சிந்தூரமாக்கல்.
சிந்துலவணம் - கடலுப்பு.

சிந்துவாரம்-கடல்,வில்,வெண்ணொச்சி.
சிந்தூரம் - சிவப்பு, செங்குடை, செந்திலகம், சேங்கொட்டை, திலகம், புடமிட்ட பஸ்மம், புளியமரம், யானை, வெட்சி.
சிந்தூரவீதி - சிந்தூரம்வைக்குமுறை.
சிந்தூரவைப்பு - சிந்தூரமாகப் புடமிடல், சிந்தூரவிதி.
சிந்தூரிகை - சிந்தூரம்.
சிந்தூரித்தல் - சிவப்பாக்கல், பஸ்மமாக்கல்.
சிந்தை-கருத்து,குறிப்பு,துன்பம்,மனம்
சிந்தைகூரியன் - கூர்மையான புத்தியுடையவன், புதன்.
சிபாகந்தம் - தாமரைக்கிழங்கு.
சிபாயம் - சுவறுதல்.
சிபாருகம் - ஆலமரம்.
சிபி - சிபிசக்கிரவர்த்தி உசீநரன் மூத்த மகன். இவன் யாகஞ்செய்த காலத்தில் இந்திரனும் அக்கினியும் இவன் உத்தம குணத்தைப் பரீக்ஷிக்குமாறு இந்திரன் பருந்தாகவும் அக்கினி புறவாகவும் ரூபந்தரித்துப் பருந்து புறவைப்பற்றி யுண்ணுமாறு துரத்திச்செல்ல, புறவானது ஓடிப்போய்ச் சிபி சக்கிரவர்த்தியிடம் அடைக்கலம் புகுந்தது. அதுகண்ட சிபி அப்புறவுக்கு அபயஸ்தங்காட்டி அணைத்தான். பருந்துந் தொடர்ந்துள்ளே சென்று சிபியைநோக்கித் தான் துரத்திவந்த புறவைவிடுமாறு கேட்க, சிபி என்னிடத்தடைக்கலம் புகுந்த புறவை விடமாட்டேனென்ன, எனக்கு மாமிசம்புசித்தல் இயல்பு,மனுஷரைப்போலக் காய்கனிகளை அருந்திச் சீவித்தல் எனக்குப் பொருந்தாது, ஆகையால் என் புறவை விடக்கடவாயென்றது. சிபி அப்பருந்தை நோக்கிப் புறவை விடமாட்டேன். அப்புறவினதளவையுள்ள மாமிசத்தை என் தேகத்திற் கொய்து தருவேன் ஏற்றுக்கொள்க வென்ன, பருந்து அதற்குடன்பட்டது. உடனே ஒரு துலையின் ஒரு தட்டிலே அப்புறவையிட்டு எதிர்த்தட்டிலே அதற்கீடாகத் தனது சரீரத்தி னின்றுஞ் சதையைக்கொய்துவைத்தான். அத்தட்டுத் தாழ்ந்து புறவிருந்த தட்டுக்குச் சமமாகாதது கண்டு மீண்டுங் கொய்துவைத்தான். அவ்வளவிலும் நிரம்பாமை கண்டு தன் சரீரத்திலே கொய்யத்தக்க தசையெல்லாங்கொய்துகொய்துவைத்தும் ஆற்றாது ஈற்றிலே தானே முழுதும் இரையாக வேறினன். அவ்வளவிலேதட்டுச் சமப்பட்டது. உடனே இந்திராக்கினி தேவரிருவரும் தமது மெய்வடிவைக்காட்டி உனது சீவகாருணியத்தை மெச்சினோம். உன்போற் சிறந்தான் எவனுமில்லை. உனக்கு இஷ்டமாகிய வரங்களைத் தருவோமென்று அவனைப் பழமைபோலாக்கிஅநேக வரங்களைக் கொடுத்துப் போயினர். இவனுக்கு விருஷதர்ப்பன், சுவீரன், கேகயன், மந்திரன் எனநால்வர் புத்திரர் பிரகலாதனன் புத்திரன்.
சிபிகை - சிவிகை.
சிபிட்டகம் - அவல், குழந்தை.
சிபித்துவம் - உடைத்தல்.
சிபிவல்லபம் - மாமரம்.
சிபிவிட்டம் - சொட்டைத்தலை.
சிபிகம் - நாடி.
சிப்பம் - சிறுகட்டு.
சிப்பாதிமூலி - தைவேளை.
சிப்பாரிசு - அறிமுகப்படுதல், புகல்மொழி.
சிப்பி-இப்பி,கிளிஞ்சில்,நச்சுப்பல்.
சிப்பிநீறு - சிப்பிசுட்ட நீறு.
சிப்பிமுத்து - சிப்பியில் விளையுமுத்து.
சிப்பியச்சு - கம்மக்கருவியிலொன்று.
சிப்பியர் - தையற்காரர், புகழ்ந்துபாடுவோர்.
சிப்பிரம் - அற்பம்.
சிப்பிலாட்டி - சில்லறை, தொந்தரை.
சிப்பிலாட்டு - தொந்தரை.
சிப்பிவேலை - சிப்பியாகாரமானசெய்கை.
சிமட்டி - பேய்க்கொம்மட்டி.
சிமந்தூரி - சிறுபுள்ளடி.
சிமம் - எல்லாம்.
சிமயம் - பொதியமலை,மலை, மலையுச்சி.
சிமாளம் - களிப்பு.
சிமாளித்தல் - சந்தோஷித்தல், சரிக்கட்டல்.
சிமி - குடுமி.
சிமிகம் - கிளி.
சிமிக்கி - ஒருபணி.
சிமிக்கிப்பூ - ஒருபணி, ஒருவகைப்பூ.

சிமடன் - சுமடன்.
சிமிட்டி - பேய்த்திமிட்டி.
சிமிட்டு-இமைப்பு,சிமிட்டென்னேவல் மருட்டு.
சிமிட்டுதல் - அணுப்புதல், கண்சிமிட்டுதல், வஞ்சித்தல்.
சிமிண்டி - கிமிண்டி.
சிமிண்டு - தடி.
சிமிண்டுதல் - தோற்றுமலெடுத்தல், நுள்ளுதல்.
சிமிலம் - மலே.
சிமிலி - உறி,குடுமி,சிள்வண்டு,தோணி, பூளைச்செடி.
சிமிழ் - சிமிழென்னேவல், செப்பு.
சிமிழ்த்தல் - கட்டல், பிடித்தல்.
சிமிழ்ப்பு - கட்டு, கட்டுகை.
சிமிளல் - சிமிட்டுதல்.
சிமிளித்தல் } சிமிட்டுதல்.
சிமிளிப்பு }
சிமிள் - சிமிழ்.
சிமுக்கிடுதல் - அசைதல், சிற்றெலிக்குறிப்பு.
சிமுட்டி - கீழ்காய்நெல்லி.
சிமை - குடிமி.
சிம்சுபாயன் - ஒரு பௌராணிகன்.
சிம்சுமாரம்-சோதிசக்கரம். இது பகோளத்தின் கண்ணேயுள்ளது. இச்சக்கரம் துருவன் இந்திரன் வருணன் கசியன்முதலியோர்கூடிப்பிரதக்ஷிணமாகத் தினந்தோறுஞ் செல்லப்பெற்றுள்ளது. இதன் வாற்பக்கத்திலே பிரஜாபதியும் அக்கினி இந்திரன் தருமன் என்போரும், வான்மூலத்திலே தாதாவும், விதாதாவும், கடிதடத்திலே சப்தரிஷிகளும்,மேன்மோவாயிலே அகஸ்தியரும், கீழ்மோவாயிலே யமனும், முகத்திலே அங்காரகனும், குய்யத்திலே சனியும், பீஜத்திலே பிரகஸ்பதியும், பக்கத்திலே சூரியனும், நாபியிற் சுக்ரனும், நெஞ்சிலேசந்திரனும், ஸ்தனங்களிலே அசுவினி தேவர்களும்,பிராணவாயு அபனவாயுக்களிலே புதனும், சர்வாங்கமும் சனி கேதுக்களும், ரோமங்களிலே நக்ஷத்திரங்களுமாக அதிகரித்து நிற்பர். இஞ்சிச்சுமார சக்கரம் மகாவடிவமாக வுள்ளது, முதலைவடிவெனினும் ஒக்கும்.
சிம்பதை } சிறுப்புள்ளடி.
சிம்பத்தை }
சிம்பர் - துப்பாக்கியிலிடுந் தக்கை.
சிம்பல் - ஒலித்தல், சிம்பு, பாய்தல்.
சிம்பிகம் - கரும்பயறு.
சிம்பு - இரும்புத்துகள், சிராய், தும்புநார்.
சிம்புதல்-உச்சுதல், ஒலித்தல், காவாய்க் கவருதல், துள்ளல்.
சிம்புரி - சும்மாடு, புரிமணை.
சிம்புளானேன் - வீரபத்திரன்.
சிம்புளி - கம்பளி, செவ்வாடை.
சிம்புள் - எண்காற்புள், சரபம்.
சிம்பை - அவரை.
சிம்மதம் - பாம்பு.
சிம்மபலன் - கீசகன்.
சிம்மமுகன் - சிங்கமுகன் காண்க.
சிம்மமுகி - ஆடாதோடை.
சிம்மம் - சிங்கம்.
சிம்மாசனம் - சிங்காசனம்.
சிம்மாளம் - சிமாளம்.
சிம்மிகை - திதிபுத்திரி. இவள் விப்பிரசித்தி மனைவி. இவள் தக்ஷன் மகளென்றும் கசியபன் பாரி என்றும் பாரதம் கூறும் இரணிய கசிபன் மகள். சயாக்கிராகிணி. ஒரிராக்ஷஸி. அநுமான் இலங்கைக்குச் செல்லும் போது அவனுற் கொல்லப்பட்டவள். இலங்கணி யெனவும் படுவள்.
சிம்மு - எல்லை.
சிபச்சினி - உத்தாமணி.
சிபத்தினி - தக்காளி.
சியநாயகம் - அத்தபாஷாணம்.
சியவனன் - பிருகுவுக்குப் புலோமையிடத்தி லுற்பத்தியான புத்திரன் சுகோத்திரன் புத்திரன். மித்திராயு புத்திரன்.
சியாமகன் - வசுதேவன் தம்பி.
சியாமரஸ்மி - கபிலன் சிஷ்ன். இவன் வேதங்கள் அப்பிரமாணமெனக் கபிலனோடு வாதித்து முடிவில் வேதங்களே எல்லாவற்றுக்கும் பிரமாணமென அக்கபிலன் நாட்ட ஒப்பியவன்.
சியாமாளாதேவி - யமன்பாரி உச்சிஷ்டை.
சியேனி - அநூரன்பாரி. இவள் புத்திரர் சம்பாதி சடாயுக்கள்.

சியிருதம் }
சியிறுதம் } கடுக்காய்.
சிரகபாலம் - தலையோடு.
சிரகம்-கரகம், தலைச்சீரா, திவலை, மழைத்துளி.
சிரகம்பம் }
சிரகம்பிதம் } தலையசைப்பு.
சிரகாகருமம் - பரதவுருப்பு ளொன்று, அது அபிநயம்.
சிரகாரி - மேதாதிதிபுத்திரன், இவன் தந்தை தன் மனைவியை தாயை வெட்டுமாறு இவனை ஏவ அவன் சற்றே தாமதித்துச் சிந்தித்து நின்றான். அவ்வளவில் தந்தை கோபந்தணிந்து சந்தோஷித்து இவனுக்கு இப்பெயரை யிட்டான். சிரம்-தாமசம். காரி - செய்பவன்.
சிரக்கம்பம் - தலையசைப்பு.
சிரக்கொழி }
சிரக்கோழி } குழலாதொண்டை வசம்பு.
சிரங்சம் - தலை, பிரதானம்.
சிரங்காடு - அடர்ந்தகாடு.
சிரங்காய் - சிரங்கை.
சிரங்கு-ஒருகுருநோய், ஒருபண், சொறி
சிரங்கை - கைகொண்ட அளவு
சிரசம் - தலைமயிர்.
சிரசன் - சீர்பந்தபாஷாணம்.
சிரசாவகித்தல் - தலைமேல் வைத்தல்.
சிரசிதம் }
சிரசிருகம் } தலைமயிர்.
சிரசீவி - காகம், திருமால், நெடுங்காலம் வாழ்வோன்.
சிரசு - தலை, முதல்.
சிரசுதயம் - பிறவிநோக்கம்.
சிரசேவகன் - பழயவேலைக்காரன்.
சிரச்சேதம் - தலையவதாரம்.
சிரச்சௌளம் - தலைச்சௌளம்.
சிரஞ்சீவி - காகம், நெடுங்காலஞ் சீவித்திருப்போன்.
சிரஞ்சீவியர் - நெடுங்காலஞ்சீவிப்போர்.
சிரட்டை - தேங்காயோடு.
சிரணி - ஓமச்செடி.
சிரத்தகாழகம் - மருக்காரை.
சிரஸ்தம் - நெடுநாள்.
சிரத்தம் - அசையப்பட்டவை.
சிரஸ்தர் - சிரேஷ்டர்.
சிரத்தல் - அழித்தல், எழுத்திலாவோசை, ஒலித்தல்.

சிரஸ்தாதார் - பிரதானி.
சிரஸ்தாபி - யானை.
சிரத்தாவதி - வருணன் ராஜதானி.
சிரத்தினம் - பழையது.
சிரத்துதல் - ஒலித்தல், பேசலாவெழுமொலி.
சிரத்தை-அன்பு, ஆங்காரம், குருவினிடத்திலுஞ் சாத்திரங்களிடத்திலு மனதைநிறுத்தல், முதன்மை, விசுவாசம்.
சிரத்தை - தருமன்பாரி, சமன்தாய். வைவசுவதன் பாரி.
சிரத்தைக்காழகம் - மருக்காரை.
சிரநதி - கங்கை.
சிரபங்கம் - சிரச்சேதம்.
சிரப்பலம் - தெங்கு.
சிரமம் - இரைச்சல், இளைப்பு, சிலம்பம், வருத்தம்.
சிரமருகி - உடற்குறை.
சிரமன் - அடிமை, ஈனன்.
சிரமாலை - கபாலமாலை, சிரசிற்றரிக்கு முருத்திராக்கமாலை.
சிரமித்திரன் - பழையசினேகிதன்.
சிரமிலி - நண்டு.
சிரமை - இளைப்பு, வருத்தம்.
சிரம் - ஆமணக்கு, உயர்ச்சி, கமுகு, கூகைநீறு, தலை, திப்பிலிமூலம், நெடுங்காலம், மேன்மை.
சிரம்பம் - சாலாங்கபாஷாணம், சிலம்பம்.
சிரயணம் - அடுத்தல்.
சிரல் - சிச்சிலிக்குருவி, முடிவிடம்.
சிரவணத்துவாதசி-திருவோண நக்ஷத்திரத்தோடு கூடின துவாதசி. இத்தினத்தில் விஷ்ணுமூர்த்தி வாமனாவதாரஞ் செய்தமையால் உலகத்தில் அத்தினம் விரததின மாயிற்று.
சிரவணம்-உபநிடதம்முப்பத்திரண்டில் ஒன்று, காது, கேள்வி, திருவோணம்.
சிரவணன் - முராசுரன் புத்திரன். கிருஷ்ணனாற் கொல்லப்பட்டவன்.
சிரவம்-கவுதாரி, காது, பெருகல், யாகாக்கினியில் நெய்விடுங்கருவி.
சிரவியம் - கேட்டற்குரியது.
சிரவை - பெருகல்.
சிரப்புள் - பொன்வாய்ப்புள்.
சிராங்கம் - தலை.
சிரார்த்தம் - இறந்தோர்க்குச் செய்யும் ஒருகிரியை, அது யாகமிருபத்தொன்றில் ஒன்று.

சிராந்தன் - அலுத்தவன், இந்திரியநிக்கிரகஞ்செய்தவன்,சாந்தமுள்ளவன்.

சிராபத்திரம் - விளாமரம்.

சிராமம் - காலம், மண்டபம், மாதம்.

சிராயம் / சிராயணம் } அனுசரித்தல்.

சிராயு - பிரமதத்தன் தகப்பன்.

சிராய் - சிராம்பு.

சிராய்ப்பாக்கு - ஒரு பருவப்பாக்கு.

சிராப்பீனசம் - ஒருநோய்.

சிரார்த்ததேவன் - சூரியனுக்குச் சமிஞ்ஞாதேவியிடத்துப்பிறந்தபுத்திரன்.

சிரார்த்தம்-பிதிர்கன்மம்,இதுபிதிர்தேவதைகளுடைய திருப்தியின்பொருட்டுச் செய்யப்படும் பிண்டகருமம். இது சுபகருமத்தின் கண்ணும் அசுபகருமத்தின் கண்ணும் செய்யப்படும். சிரார்த்தம் சாந்தியென்றும் அப்பியுதயமென்றும் சொல்லப்படும்.அசுபசிரார்த்தங்களனேகம். அவற்றுள் பிரேதசிரார்த்தம் பிரேத திருப்தியின் பொருட்டும் பிரேதவிமுத்தியின் பொருட்டும் செய்யப்படுவது. இது நக்கினமிலை ஏகோதிஷ்ட சோடச பிண்டீகரண சிரார்த்தங்களெனப் பல. பைதிருக சிரார்த்தம் பிதிர்தேவதைகளின் பொருட்டுச் செய்யப்படும். பிதிர்தேவதைகள் வசுருத்திர ஆதித்திய பதப்பேறுடையவர்களாயுள்ளவர்கள். காசி கயை பிரயாகை குருக்ஷேத்திரம் கோகர்ணம் குருஜாங்கலம் புஷ்கலக்ஷேத்திரம் முதலியன சிரார்த்த கருமங்களுக்குரிய சிறந்த ஸ்தலங்கள். அவற்றுள் கயாசிரார்த்த மிக்க விசேஷமுடையது. இறந்த தினம், அமாவாசை, மகாளயபக்ஷமுதலியன சிரார்த்தத்துக்குரியகாலம்.

சிராலன் - பெருந்தலையன்.

சிராவணம் - ஆவணிமாதம், ஒருகல். திருவோணம். ஆவணி மாசத்துத் திருவோணம் நக்ஷத்திரத்திலே இருபிறப்பாளர் மூவராலும் அநுட்டிக்கப்படுவதாகிய ஒரு வைதிககிரியை அது பதினான்கு வித்தைகளையும் சிரவணஞ்செய்யத் தொடங்குதற்குரிய கிரியை.

சிராவணி - யாகமிருபத்தொன்றினொன்று.

சிராவம் - கேட்டல்.

சிராவிதம்-இராமன்புத்திரனாகியலவன் இராஜதானி.

சிராவிருத்தம் - ஈயம்.

சிரி - அம்பு, கொலைசெய்வோன், சிரிஎன்னேவல், வாள், வெட்டுக்கிளி.

சிரிட்டம் - வெள்ளிலோத்திரம்.

சிரிதம் - கஷாயம்.

சிரித்தல் - நகைத்தல், பரிகாசம்பண்ணல்.

சிரித்துப்பேசல்-நயச்சொல், பரிகாசச்சொல், மலர்ந்தமுகமாய்ப்பேசல்.

சிரிப்பாணி - சிரிக்கத்தக்கவன், சிரிப்புக்கிடம், பகிடி.

சிரிப்பு - நகை, பகிடி, பழிப்பு.

சிரீ - இலக்குமி, மேன்மைக்குறிப்பு.

சிரீடம் - குன்றி, வாகைமரம்.

சிரீமுகம் - ஏழாவதாண்டு.

சிரு - தோட்பொருத்து, போதல்.

சிருகம் - அம்பு, காற்று, தாமரை.

சிருகாலவாசுதேவன் - மதுரா புரத்துக்குச் சமீபத்திலேயுள்ள கரவீர புரத்தரசன். இவன் எப்பொழுதும் கிருஷ்ணன்மீது பகை பாராட்டி வந்தமையால் கிருஷ்ணன் இவனைக்கொன்று மகனுக்கு முடிசூட்டினான்.

சிருகாலன் - கடுஞ்சொற்காரன்,நரி,வீரமில்லான்.

சிருக்கு - சுருக்கு.

சிருங்கசிரி - மைசூர் நாட்டிலுள்ள ஒரு மலைமேல் நகரம். சங்கராச்சாரியராலே ஸ்தாபிக்கப்பட்ட சாரதாபீடமும் மடாலயமு மிருக்குமிடம். இம்மடத்துக்கு சங்கராச்சாரியரது சீஷ பரம்பரையில் வருவோர் அதிபதியாவர். அவருஞ் சங்கராசாரியர் பட்டமே பெறுவர். இம்மடாலயத்திலேயுள்ள கிரந்தமண்டபத்திலே அநேக நூல்களுள.

சிருங்கம்-அடையாளம், கூர், மலைமுடி, விலங்கின் கொம்பு.

சிருங்கர் - புஷ்யமித்திரன் வமிசத்தரான மகததேசத்தரசர். இவர்கள் பதின்மர் நூற்றுப் பன்னிரண்டுவருஷம் அரசிபற்றினர்.

சிருங்கலம்-சங்கிலி யானைச்சங்கிலி,விலங்கு.

சிருங்கலை-ஒருசெடி,கால்விலங்கு.

சிருங்கலைபேரம் - இஞ்சி.

சிருங்கலேமோஹி - சண்பகம்.
சிருங்காடகம் } நாற்றெருக்கூடுமிடம்.
சிருங்காடம் }
சிருங்காரம் – அன்பு, காரம்பு, சிங்காரம், சிந்தூரத்திலகம், புணர்ச்சி.
சிருங்காரயோனி - மன்மதன்.
சிருங்காரித்தல் - சிங்காரித்தல்.
சிருங்கி – பொன், சமீகன் புத்திரன்.
சிருங்கிபேரபுரம் - இது ஸ்ரீராமர் சிநேகனுகிய குகனுடைய பட்டணம், இது கங்கைக்கரையிலுள்ளது.
சிருஞ்ஜயன் - பர்மியாசுவன் புத்திரருளொருவன். இவன் தவங்கிடந்து நாரத ரனுக்கிரகத்தாற் பொன்னுகவே மூத்திரபுரீஷங்களைக் கழிக்கின்றஒருதிவ்வியபுத்திரனைப்பெற்ருன். அவன் வளர்ந்து வருநாளில் அவன் தேகத்திலே பொன்னிருக்கின்றதெனக் கருதிக் கள்வர் அவனைக் கொன்று உடலைப் பரிசோதித்துப் போயினர். அப்பாலும்நாரதரனுக்கிரகத்தால் உயிர் பிழைத்தான். அவன் சுவர்ணஷ்டீவி யென்னும் பெயரினன். வசுதேவன் தம்பி காலா நலன் புத்திரன்.
சிருஷ்டியாதிபத்தியம் - பூமிக்குப் பிருருது சக்கரவர்த்தியும், ஓஷதிகள், யாகம், விரதம், நக்ஷத்திரங்கள் முதலியவற்றுக்குச் சந்திரனும், நீருக்கு வருணனும், தனத்துக்கும் யக்ஷர்களுக்கும் குபேரனும், துவாத சாதித்தியர்களுக்கு விஷ்ணுவும், வசுக்களுக்கு அக்கினியும், பிரஜாபதிகளுக்குத் தக்ஷனும், தேவர்களுக்கு இந்திரனும், தைத்திய தானவர்களுக்குப் பிரஹ்லாதனும், பிதிர்களுக்கு யமனும், பசுபூதாதிகளுக்கு உருத்திரனும், மலைகளுக்கு இமயமும், நதிகளுக்குச் சமுத்திரமும், கந்தருவ வித்தியாதர கிந்நர கிம்புருஷர்களுக்குச் சித்திரரதனும், சர்ப்பங்களுக்கு வாசுகியும், திக்கஜங்களுக்கு ஐராவதமும், பறவைகளுக்குக் கருடனும், குதிரைகளுக்கு உச்சைசிரவமும், மிருகங்களுக்குச் சிங்கமும், சராசரங்களனைத்திற்குச் சிவபெருமானும் சிருட்டிகாலத்தில் ஆதிபத்தியம் பெற்ருர்கள்.
சிருஷ்டி - மூலப்பிரகிருதியினின்றும் உலகங்களெல்லாந்தோன்றுதல் சிருஷ்டியெனப்படும். கேவலாத்துவைதிகள் பிரபஞ்சமெல்லாம் பிரமத்தினின்றும்தோன்றும்என்றுகூறுவார்கள். துவைதிகள் சித்தும் அசித்துமென இரண்டு பொருளுண்டென்றும் சித்தினது அதிகாரத்தால் சித்தும் அசித்துமாகிய பிரபஞ்சந்தோன்றும், விசிஷ்டாத்து வைதிகளும் சுத்தாத்துவைதிகளும் பிரமம், ஆன்மா, மாயை என மூப்பொருளுண்டென்றும் பிரமம் ஆன்மாவின் பொருட்டுமாயையினின்றும், பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்குமென்றும் சிருஷ்டியைப் பல திறப்படக்கூறுவர். இரண்டோரமிசமின்றி மற்றெல்லாம் எல்லாவைதிகசமயிகளுக்கும் பொதுவே, மாயையென்று கூறப்படுவதாகிய மூலப்பிரகிருதியிலே பிரகிருதி தோன்றும், அதனிடத்தே குணத்தத்துவந்தோன்றும், அக்குணம் சாத்துவிகம், இராஜதம், தாமதமென மூன்ரும். அக்குண தத்துவத்திலே புத்தி தத்துவந்தோன்றும் புத்தியெனினும் மஹதத்துவமெனினும் பொருளொன்றே. அப்புத்தி தத்துவம் குணத்திரயத்தையுடையதாய்த்தோலினலே மூடிக்கொள்ளப்பட்ட வித்துப்போலப் பிரகிருதியினலே மூடப்பட்டிருக்கும், அதினின்றும் வைகாரிகம் தைஜசம் பூதாதியென்னும் அகங்காரங்கள் மூன்றும் தோன்றும். அவ்வகங்காரம் புத்திதத்துவத்தினலே மூடப்பட்டிருக்கும். அம்மூன்றனுள்ளே பூதாதியாகிய தாமசாகங்காரத்தினின்றும் சத்ததன் மாத்திரை தோன்றும். அத்தன் மாத்திரையினின்றும்ஆகாசந்தோன்றும். அவ்வாகாசம் தாமசாகங்காரத்தினலே மூடப்பட்டிருக்கும். அவ்வாகாசம் விவகாரப்பட்டுப் பரிசதன் மாத்திரையை யுண்டாக்கும். அதினின்று வாயுத்தோன்றும். அக்காரணத்தால் வாயுவின் குணம் பரிசமாயிற்று, வாயுவும் ஆகாயவசமுடையது, வாயு விகாரப்பட்டு ரூபதன்மாத்தி

ரையினின்றும் தேயுத்தோன்றும் அதுபற்றித் தேயுவுக்கு ரூபம் சிறப்பியல்பாயிற்று. தேயுப் பரிசதன் மாத்திரையினாலே மூடப்பட்டிருக்கும். தேயு விகாரப்பட்டு ரசதன் மாத்திரியை யுண்டாக்கும். அதினின்றும் அப்புத்தோன்றும். அப்புவும் ரூபதன் மாத்திரையினாலே பொதியப்பட்டிருக்கும். அப்பு விகாரப்பட்டுக் கந்ததன் மாத்திரையை யுண்டாக்கும். அதினின்றும் பிருதிவி தோன்றும், மூலப்பிரகிருதியும் மகத்துவம் அரூபம், அகங்காரமும் தன்மாத்திரையையும் மகாபூதங்களும் ரூபம், தசத்தத்தினின்றும் ரூபம்தோன்றும். சத்தம் சோதியிற்றோன்றும், சோதிமனத்திற்றோன்றும். மனம் புருஷனிற்றோன்றும் சத்தம் சோதியிற்றோன்றுமென்பது யோகசூத்திரத்திலே "அநாஹதஸ்யஸூப்தஸ்ய" என்னுஞ் சூத்திரத்தினாலறிக. மேலே கூறப்பட்ட பஞ்சபூதங்களும் தம்மிற்கூடிச் சிருட்டியை விருத்திபண்ணும் ஆற்றலில்லாதனவாக ஈசுரசத்தி அவற்றுட் கலந்து நின்றாக்கும். ஊக்கவே, அவை பஞ்சீகாணப் பட்டுப் பிரமாண்டத்தைத் தோற்றுவிக்கும்.

பிரபஞ்ச மனைத்தும் சித்தும் சடமுமாகிய இருகூற்றில் அடங்கும், சித்தின்றிச் சடம் இயங்காது. ஆகவே தோற்றம் திதிநாசமென அவ்வியக்கமும் மூன்றாய்த் தோன்றும், தோற்றுவிக்குஞ் சக்தி பிரமாவெனப்படும். திதிசெய்யுஞ் சக்தியாகிய காலவடிவும் விட்டுணு வெனப்படும். நாசஞ்செய்யும் சக்தி உருத்திரன் எனப்படும், ஒவ்வோரணுவையும் இம்மூன்று சத்திகளும் பற்றிநின்று தத்தம் முறையிலே தமது தொழில்களைச் செய்யும், இவற்றை ஐரோப்பிய பண்டிதர்கள் ஆற்றல் என்பார்கள், ஆரியர் தனித்தணிக் கடவுளென்பர்.

இப்போதுள்ள சிருட்டிதொடங்கி இருபத்தேழு சதுர்யுகங்கடந்து இருபத்தெட்டாஞ் சதுர்யுகம் நடக்கின்றது. இந்த சிருட்டியிலே ஆறுமனுக்களிறந்து ஏழாவது மனுவாகிய வைவசுவதமனுவின்காலம்நடக்கின்றது. மனுவந்தரங்கள் தோறும் சோபாநுக்கிரமமாக மனிதர்களுடைய உருவும் குணமும் வேறுபட்டுயர்ந்துவரும். முன்னிருந்த மனுவின்காலத்தில் மக்கள் நம்மினும் உருவம் குணம் இவற்றாற் குறைந்தவரா யிருப்பார். இனிவரும் சாவர்ணி மனுவினது காலத்து மக்கள்நம்மினுஞ் சிறந்தோராவர். மனுவென்றது மாநுடமாகிய கணத்தை அவ்வக்கணத்துக்கு ஆதிதலைவனெனினும்பொருந்தும்.

வாயுவுலகம் சனி, தேயுவுலகம் சூரியன், அப்புவுலகம் சுக்கிரன், பிருதுவியுலகம் பூமி, ஒவ்வொருபூதத்திலும் மற்றைய நான்கு பூதங்களும் கூடியிருக்கும், தனிப்பூதங்கள் தன்மாத்திரைகள். தன் மாத்திரைகளது சையோகத்திலே பூதங்களும் உலகங்களும் தோன்றும், உலகம்தோன்றி நின்றொடுங்கு மியல்பின தாதலால் நித்தியமாயுள்ளது. உய்த்து நோக்குங்கால் கணந்தோறும் சிருட்டி ஸ்திதி சங்காரமாகிய முத்தொழிலும் நிகழ்வது பிரத்தியக்ஷமாம். நிலைதிரிதலேயன்றி அழிதலென்பதில்லை.

சிருட்டம் - சிற்பநூன் முப்பத்திரண்டில் ஒன்று.

சிருட்டி - சிருட்டியென்னேவல், சுபாவம், படைப்பு.

சிருட்டிகத்தா, சிருட்டிகர் } கடவுள், பிரமா.

சிருட்டிகாலம் - உலகத்தைத் தோற்றுவிக்குங் காலம்.

சிருட்டித்தல் - பிறப்பித்தல்.

சிருட்டிப்பு - படைப்பு.

சிருட்டியாளன் - சவுக்காரம்.

சிருணி - சத்துரு, யானைத்தோட்டி.

சிருணிரை - உமிழ்நீர்.

சிருதம் - நன்மை.

சிருதாம் - பாம்பு.

சிருதி - காது, தெரு.

சிருபாடிகை - பறவைமூக்கு.

சிரும்பணம் - கொட்டாவிவிடுதல்.

சிரும்பிகை - கொட்டாவி.

சிரேசு - செல்வம்.
சிரேடம் - கூடுதல்.
சிரேஷ்டபுத்திரன் - மூதற்புத்திரன்.
சிரேஷ்டம் } சிறந்தது, செழிப்பு, மூ
சிரேட்டம் } தன்மை, மேன்மை.
சிரேட்டாதேவி - மூதேவி.
சிரேணம் - நெடுநாள். [வரிசை.
சிரேணி - இடையர்வீதி, ஒழுங்குபடி,
சிரேணியம் - இடையர்வீதி.
சிரேயசு - கீர்த்தி, விர்த்தி.
சிரேவணம் - காட்டாமணக்கு. [ம்பு
சிரை-குரங்கு, சிரையென்னேவல், நர
சிரைத்தல் - மயிர்கழித்தல், புடைவ யொதுக்கல்.
சிரைப்பித்தல் - சௌளம் பண்ணுவித் [தல்.
சிரைப்பு - சௌளம்.
சிரையன் - நாவிதன்.
சிரோசம் - மயிர்.
சிரோட்டம் - கடுக்காய், தான்றிமரம், திரிகடுகு, நெல்லிமரம்.
சிரோணி - காட்டாமணக்கு.
சிரோதரம் - கழுத்து.
சிரோததி - கழுத்து.
சிரோத்தி - தலையோடு.
சிரோத்திரம் - காது, கேள்வி.
சிரோந்தம் - மயிர்ச்செறிவு.
சிரோபத்தியம் - கடுக்காய்.
சிரோமணி } நாகரத்தினம், முடி
சிரோரத்தினம் } யிலணியும் மணி, மேன்மையானது.
சிரோருகம் - தலைமயிர்.
சிரோவல்லி - மயிற்சூடு.
சிரோவிருத்தம் - மிளகு.
சிரோவேட்டம் } தலைச்சீரா.
சிரோவேட்டனம் }
சில - கொஞ்சம்.
சிலகம் - சட்டுவம்.
சிலக்குணம் - திமிங்கிலம்.
சிலங்கம் - விளாம்பட்டை, வெள்ளி லோத்திரம்.
சிலதர் - ஏவல்செய்வோர், தோழர்.
சிலதி - ஏவல்செய்வாள், தோழி.
சிலதியர் - ஏவல்செய்தோழியர், தோ [ழியர்.
சிலத்திற்கடுகு - திமிங்கிலம்.
சிலத்தின்பிரிதிவி - கற்பூரசிலாசத்து.
சிலந்தி-ஒருபூச்சி, ஒருபூமரம், கிரந்திப் புண், பரு.
சிலந்திநாயகம் - கிரந்திநாயகப்பூடு.
சிலந்தியரிசி - பூங்கோரை.
சிலப்பதிகாரம் - ஒருநூல்.
சிலமக்காரன்-அதட்டி, சிலம்பக்காரன்.
சிலமங்காதல் - அசுமாற்றங் காண்பித்த ல்,சிலமித்தல்;பயமுறுத்திவெருட்ட [ல்.
சிலமப்படுதல்-அசுமாற்றப்படுதல்.
சிலமம் - அசுமாற்றம், சிலம்பம், பயமு றுத்துகை.
சிலமன் - அசுமாற்றம்.
சிலமான்கல் - ஒருகல்.
சிலமி - சிலம்பக்காரன், பகடக்காரன்.
சிலமித்தல் - அதட்டுதல், சிலம்பம்பண் ணுதல்.
சிலமீவிகை - மின்மினி, மின்னல்.
சிலம் - இந்துப்பு.
சிலம்பக்காரன் - சிலம்பப் பயிற்சியுள் ளோன், பகடக்காரன்.
சிலம்பக்கூடம் - சிலம்பம்பழகுமிடம்.
சிலம்பம் - தந்திரோபாயம், படைக்க லப்பயிற்சி, பயப்படுத்துகை.
சிலம்பல் - ஒலி. [வன்.
சிலம்பன் - குமரன், குறிஞ்சிநிலத்தலை
சிலம்பாறு - சோலைமலையிலுள்ள ஒரு நதி, இதனை நூபுரநதியென்றுங் கூ றுவர்.
சிலம்பி - ஒருபாத்தை, சிலந்திப்பூச்சி.
சிலம்பிநூல் - சிலந்திப்பூச்சிநூல்.
சிலம்பு - ஒலி, காற்சிலம்பு, சிலம்பென் னேவல்,பூசாலிகள்கைச்சிலம்புமலை.
சிலம்புகூறல் - கோவலன் கதையைச் சொல்லும் ஒரு பிரபந்தம்.
சிலம்புதல் - ஒலித்தல்.
சிலம்புரி - ஒருவகைச்சீலை.
சிலர் - சிலபெயர்.
சிலவங்கம் - மீனெலும்பு.
சிலவர் - வேடர்.
சிலாகை - சலாகை, தேகக்கல், தொ ட்டிப்பாஷாணம். [ம்.
சிலாக்கியம் - உரிமை,புகழ்ச்சி, முக்கிய
சிலேசத்து - கற்பூரச்சிலை, கன்மதம், மண்தைலம்.
சிலாசம் - இரும்பு தாமிரம் முதலியவு லோகங்கள், மலையிற்பிறப்பன.
சிலாசாதனம் - கல்வெட்டு, கல்லிலெ ழுதிவைக்கும் சாதனம், கற்பொளி கருவியில் ஒன்று.

சிலாசாரம் - இரும்பு.
சிலாசித்து - சிலாசத்து.
சிலாஞ்சனம் - நீலாஞ்சனம்.
சிலாடகம் - மேல்வீடு.
சிலாதன் } நந்திதேவன் பிதா.
சிலாதரன் }
சிலாதர் - கல்லைநுகர்ந்தவர்.
சிலாதலம் - கற்படி, பாறை.
சிலாதிக்குமரி - கௌரிபாஷாணம்.
சிலாத்துமசம் - இரும்பு.
சிலாநஞ்சு - கன்மதம்.
சிலாநாகம் - சூடாலைக்கல்.
சிலாந்தி - சீந்தில்.
சிலாபம் - முத்துக்குளிப்பு.
சிலாபேசி - செப்புநெருஞ்சில்.
சிலாப்பி - வேலைக்கள்ளன்.
சிலாப்புதல் - வீண்பொழுதுபோக்கல்.
சிலாமணி - கற்பூரச்சிலை.
சிலாமதம் - கன்மதம்.
சிலாமனு - மனோசிலை.
சிலாமேனி - கண்டகிச்சிலி.
சிலாம்பு - செகிள், மாப்பொருக்கு.
சிலாயுதன் - ஆமை.
சிலாரம்பை - ஒருவகைவாழை.
சிலாரு } குழப்பம்.
சிலார் }
சிலாவங்கம் - ஈயக்கல்.
சிலாவட்டம் - அரைகல், சாணைக்கல்.
சிலாவருஷம் } கன்மழை, சத்தமுகிலி
சிலாவருடம் } னென்று, அது கன்மழை பொழிவது.
சிலாவி } கன்னார்.
சிலாவிந்து }
சிலாவுதல் - சுலாவுதல்.
சிலாவுறட்டி - ஒரு பணிகாரம்.
சிலாவைரம் - சிலாசத்து.
சிலிட்டம் - ஓரலங்காரம், அது சொற்செறிவுடையது. (உ-ம்) "பற்றுகபற்றற்றான் பற்றினை யப்பற்றைப்-பற்றுக பற்றுவிடற்கு."
சிலியானை - முடக்கொற்றான்.
சிலிர்த்தல் - தளிர்த்தல், மயிர்கூச்சுக்கொள்ளல்.
சிலிப்பு - உரோமப்பிடிப்பு.
சிலீபதம் - யானைக்கால்.
சிலீமுகம் - அம்பு, தேனீ முலைக்கண்டன், மூயுத்தம், வண்டு.

சிலீரிடுதல் - ஒலிக்குறிப்பு, குளிர்தல், பயப்படுதல்.
சிலுகன் - கலகக்காரன்.
சிலுகி - கலகக்காரி.
சிலுகு - சண்டை, சிலுகென்னேவல், தடை, தப்பிதம், துன்பம்.
சிலுகுதல் - சண்டைபிடித்தல், துன்பப்படுதல்.
சிலுக்கு - இரும்புமோதிரம், சண்டை, சிலும்பு, பலது, வாட்டல், வெட்டிய சிறுதுண்டு.
சிலுசிலுத்தல் - அலட்டுதல், ஒலிக்குறிப்பு, குளிர்விறைதல்.
சிலுசிலுப்பான் - ஒருவகை வைசூரி.
சிலுசிலுப்பு - அலட்டு, ஒலிக்குறிப்பு, குளிர்க்குறிப்பு.
சிலுசிலெனல்-ஒலிக்குறிப்பு, குளிர்தல்.
சிலுசிலுத்தம் - அறக்கரைதல், கோபித்தல், விள்ளுதல்.
சிலுநீர் - இலையிற்றங்கிவிழும் மழைத்துளி.
சிலுசிலுப்பு - அசைப்பு, சிலிப்பென்னேவல், நடுக்கம்.
சிலுப்புதல் - அசைத்தல்.
சிலும்பாடுதல் - சிலுப்பலாதல்.
சிலும்பலி - அவலட்சணமுள்ளவள்.
சிலும்பல்-அசைத்தல், ஒலித்தல், சீராய் முதலிய சிலும்புதல், பீற்றல்.
சிலும்பு - களிம்பு, மரச்செதும்பு.
சிலும்புதல் - சிலும்பல்.
சிலுவட்டை - சிறியது.
சிலுவலி - சிலும்பலி.
சிலுவல்-அலுசிலும்பல், அவலட்சணம், கந்தை, சுசியிலி, மரியாதையற்றது.
சிலுவை - கொல்லப்படுபவர்களை அறையும் ஒரு மரம்.
சிலேடம் - அக்கரூ.
சிலேடாதீபகம்-ஒரு அலங்காரம், அது சிலேடையிடத்துத் தீபகமாய் நின்று பயன்றருவது.
சிலேடித்தல்-உபயார்த்தம்படச் சொல்லல்.
சிலேஷை } ஓரலங்காரம், அது உபா
சிலேடை } யார்த்த முள்ளது.
சிலேடையின் முடித்தவிலக்கு - ஓரலங்காரம், அது முன்னர்வைத்த பொருளையும் பின்னர்வைத்த பொருளையு மொருசொற் றொடராற் சிலேடித்

துக் கூறியோர் காரியத்தை விலக்கல், (உ-ம்) கொடியோர்க்கு முண்டோ குணம்.
சிலேடையுருவகம் - உவமையையும் பொருளையு மொரு சொற்றொடையாற் சிலேடித் துருவகஞ்செய்வது, (உ-ம்.) கண்ணெகிழ்ந்து காதல்கரையிறப்ப வைகுமால் வண்ணமதனும் புயம்.
சிலேடையுவமை - சிலேடையு முவமையு மொருங்கு வருதல்.
சிலேடைவிலக்கு - ஓரலங்காரம், அது இருபொருளை ஒன்றுபோற் சிலேடித்துக் கூறிக் காரியத்திற் கின்னது வேண்டா வென ஒன்றை விலக்கல்.
சிலேட்டர் } செட்டிகள்.
சிலேட்டியர் }
சிலேட்டுமகாசம் - ஒருநோய்.
சிலேட்டுமகிரந்தி - கிரந்திநோயினொன் [று.
சிலேட்டுமகுன்மம் - ஒருநோய்.
சிலேட்டுமசூலை - ஒருசூலை.
சிலேட்டுமபித்தசூலை - ஒருநோய்.
சிலேட்டுமம் - சிலேற்பனம்.
சிலேதம் - செம்முருங்கை.
சிலேபியர் - செட்டிகள்.
சிலேயம் - மலையிலுண்டாவன.
சிலேற்பனநாடி - சேடநாடி.
சிலேற்பனம் - கோழை.
சிலை - ஒலி, ஒருமரம், கல், சிலையென்னேவல், சூதபாஷாணம், தனுவிராசி, மலை, மனோசிலை, மூலநாள், விக்கிரகசி, வில்.
சிலைக்கல் - ஈரக்கல், சிலாநாகக்கல்.
சிலைக்காறி - அஞ்சனபாஷாணம்.
சிலைக்கெந்தி - சாத்திரவேதி.
சிலைச்சாதனம் - சிலாசாதனம்.
சிலைச்சோணிதம் - கன்மதம்.
சிலைத்தல் - ஒலித்தல்.
சிலைத்தாசி - சாளக்கிராமம்.
சிலுத்தாசி - சாளக்கிராமம்.
சிலுத்தாலு - சிலாமதபாஷாணம்.
சிலைத்தீட்டு } கன்மதம்.
சிலைத்தூமம் }
சிலைநஞ்சு - சிலையிரத்தம்.
சிலைநாகம் - சூடாலைக்கல்.
சிலைநார் - கல்நார்.
சிலைநிறக்கல் - மாமிசச்சிலை.
சிலைமா - மாக்கல்லு.
சிலையாவி - சிலைவிந்து.
சிலையிரத்தம் - கன்மதம்.
சிலையிராசன் - வயிரம்.
சிலையுருக்குக்கல் - செங்கல்.
சிலையொழுக்கு - கன்மதம்.
சிலையோடல் - எதிரொலித்தல், புரையோடல்.
சிலைரத்தம் - கல்மதம்.
சிலைவங்கம் - அஞ்சனபாஷாணம்.
சிலைவயிரம் - வயிரக்கல்.
சிலைவிந்து - கல்நார்.
சிலோச்சயம் - மலை.
சிலோத்பவம் - ஒருவகைச்சந்தனம், மலையிற் பிறப்பன.
சில் - அற்பம், ஆரவாரம், ஒலிக்குறிப்பு, தலைப்பணி, தேர், பண்டி முதலியவற்றினுருள், மூக்குக்கண்ணாடி, வடம்.
சில்லங்கெடுதல் - சிதலுண்ணல்.
சில்லத்து - சிறுசட்டை.
சில்லந்தட்டல் - வெறுத்தல்.
சில்லந்தட்டிப்போதல் - தரித்திரத்துக்குட்படல்.
சில்லபொல்லம் - சிதறுதல், பலதுண்டா யுடைந்தது.
சில்லம் - அவதி, எட்டி, துண்டு, தேற்றாமரம்.
சில்லம்பாய் - சீலம்பாய்.
சில்லரி - சிலம்பின்பருகைக்கல்.
சில்லர் - வேடர்.
சில்லறை - அற்பகாரியம், உபத்திரவம், ஒருவகைக்காதணிகள், சிதறினதொகை, சொச்சம்.
சில்லா - ஒரு நியாயாதிபதிக்குள்ளடங்கிய விடம்.
சில்லாடை - பன்னாடை.
சில்லாட்டு - சில்லறை, சிறுகாரியம்.
சில்லாடை - பன்னாடை.
சில்லான் - ஓந்தி, ஒருவிளையாட்டு.
சில்லி - கண்ணறை, சிள்வண்டு, சிறுகீரை, சௌவு, தேருருள், வட்டம்.
சில்லிகை - சிள்வண்டு, சீலை, சூரியகிரகணம், நல்லாடை.
சில்லிடுதல் - ஒலிக்குறிப்பு, பயப்படல், விம்முதல்.
சில்லியடை - சல்லடை.

சில்லிரத்தினம்-விம்மிப்பொசியு மிரத்தம்.
சில்லிவாயன் - வெளிவாயன்.
சில்லு - ஓடு, ஒருமரம், சில்.
சில்லுண்டி - சிலுவட்டை.
சில்லூரு - ஒருபூச்சி.
சில்லை - இழிவு, கிலுகிலுப்பை, சிவல், சிள்வண்டு, தூர்த்தை.
சில்லொண்டி - சில்லுண்டு.
சில்வண்டு - ஒருவண்டு.
சில்வாய் - கடைவாய்.
சில்வானம் - கொச்சம்.
சில்லிடம் / சில்விஷம் - சிலவிஷ செந்து, சிறுவிஷம்.
சிவகங்கை - கைலாயத்திலுள்ளஒருநதி; சிதம்பரத்திலுள்ள ஒரு தீர்த்தம். இதில் இரணியவன்மன் மூழ்கித் தனதுடற் குற்றம் நீங்கப் பெற்று அரசனானன்.
சிவகணம் - சிவசேவைப்பரிவாரர்.
சிவகதி - மோட்சம்.
சிவகதியிறைவன் - அருகன், சீவன்.
சிவகம் - சாதிக்காய், நாய்ச்சீரகம்.
சிவகரந்தை - ஒருபூடு.
சிவகலை - பட்டினத்துப் பிள்ளையின் மனைவி.
சிவகளை - தெய்வசோலை.
சிவகன்மகன் - செவ்வாய்.
சிவகாஞ்சி - ஒருதலம்.
சிவகாமி-பார்வதி. சிதம்பரத்திலெழுந்தருளியிருக்குஞ்சிவசத்தியின்பெயர்.
சிவகாமித்தாயம்மை - திருப்புத்தூரிலே திருக்கோயில்கொண்டிருக்கும்தேவியார் பெயர்.
சிவகெங்கரன்-சுபமுண்டாக்குவோன்.
சிவகீர்த்தனம் - திருமால்.
சிவகெங்கை - சிதம்பரத்தில் ஒரு தீர்த்தம், மதுரைக்கருகிலுள்ள ஓரூர்.
சிவகோசரியார் - கண்ணப்ப நாயனார் காலத்திலே திருக்காளத்தியிலிருந்த அருச்சகர்.
சிவசங்கற்பம் - உபநிடதம் முப்பத்திரண்டினொன்று.
சிவசத்தி-உமை,சிற்சத்தி முதலிய பஞ்சசத்தி, துருசு.
சிவசதுர்த்தசி - ஒருவிரதம்.
சிவசமயம் - சைவசமயம்.
சிவசன் - சுக்கிரன்.
சிவசன்மா - வடமதுரையிலிருந்தவோரந்தணன். இவனை விஷ்ணு கணநாதர்கள் உபசரித்து அழைத்துப்போய்ச் சந்திரலோக முதலியவற்றைக் காட்டினார்கள்.
சிவசாத்திரம் - பதிநூல்.
சிவசேகரம் - சந்திரன்.
சிவசேத்திரம் - சிவத்தலம்.
சிவச்சி - சாதிக்காய்.
சிவஞானசித்தியார் - ஒரு சைவசித்தாந்தசாத்திரம். இதுமெய்கண்ட சாத்திரம் பதினான்கனுள்ளும் விரிவானதும் மிகச் சிறந்தது மென்பது— "பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே-ஓர் விருத்தப் பாதி போதும்" என்னும் சிவபோகசார நூலுடையார் திருவாக் கானும்,— "தொகுசித்தியாராறுந் - தண்டமிழின்மேலாந்தரம்-" என்னும் உமாபதி சிவாசாரியர் திருவாக்கானும் இனிது விளங்கும் இச்சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் என இரண்டு பிரிவினையுடையது. அவற்றுள் முந்திய பாபக்கத்திலே உலகாயதன்முதல் பஞ்சராத்திரி ஈறாகிய பரசமயிகளுடைய கோட்பாடுகளை எடுத்துக் காட்டிச் சித்தாந்தப் பார்வையால் மறுப்புச்செய்யப்படும். பிந்திய சுபக்கத்திலே தம்மை யொழித்தொழிந்த எத்திறத்துச் சமயவாதிகளாலும் விடுக்கப்படும் ஆட்சேபங்களுக் கெல்லாம் பரபக்கப்பார்வையால் சமாதானஞ்செய்து சுவமதம் நாட்டுதல்செய்யப்படும். இச்சுபக்கத்திலே அமைந்தபன்னிரண்டு சூத்திரத்துள்முதல் இரண்டு மூன்று என்னும் மூன்றையும் பிரமாண வியலெனவைத்து முதற் சூத்திரத்தால் உலகிற்கு நிமித்த காரணமாகிய பதியுண்மைக்குப் பிரமாணமும், இரண்டாஞ் சூத்திரத்தாற் பாசவுண்மைக்குப் பிரமாணமும், மூன்றாஞ் சூத்திரத்தாற் பசுவுண்மைக்குப் பிரமாணமும், நான்கு ஐந்து ஆறு என்னும் மூன்றையும் இலக்கண வியலெனவைத்து நான்காஞ் சூத்திரத்தாற் பசு லக்கணமும், ஐந்தாஞ் சூத்திரத்தாற் பாசலக்கண

மும், ஆருஞ் சூத்திரத்தாற் பதிலக்கணமும், ஏழு எட்டு ஒன்பது என்னும் மூன்றையும் சாதன வியலென வைத்து ஏழாஞ் சூத்திரத்தாற் சாதித்துப்பெறுதற்குரிய அதிகாரமுடையது இதுவென்பதும், எட்டாஞ்சூத்திரத்தாற் சிறந்த கருவியெனப்படும். சாதனம் இதுவென்பதும் ஒன்பதாஞ் சூத்திரத்தாற்சாதனஞ் செய்யுமாறு இதுவென்பதும் பத்துப் பதினொன்று பன்னிரண்டு என்னும் மூன்றையும் பயனியலென வைத்துப் பத்தாஞ் சூத்திரத்தாற்பெத்த நீக்கப்பயனும் பதினொன்ருஞ் சூத்திரத்தால் முத்திப்பயனும், பன்னிரண்டாஞ் சூத்திரத்தாற் பெத்தநீக்கமும் முத்தியும் பெற்றவர்க்குச் சீவன்முத்தி நிலைக்கணிகழுமியல்பும், வகுத்துக்கூறப்படும். இந்நூலுக்கு மறைஞானதேசிகர், சிவாக்கியயோகிகள் ஞானப் பிரகாசமுனிவர் நிரம்பவழகியதேசிகர் திராவிட மாபாடிய கர்த்தா முதலியோராலே உரைகள்செய்யப்பட்டிருக்கின்றன.

சிவஞானபோதம் - ஒரு அரிய பெரிய சிவசூத்திரம். இது சீவர்கள் தம்முடைய சிற்றறிவினல் நிச்சயித்தற்கு ஏலாத சொரூப அருட்குணங்களுடையரான முழுமுதற் கடவுளிருப்பினையும், அக்கடவுள் சிறப்புவகையால் சிவன் என்னும் திருநாமமும் மான் மழு சதுர்ப்புயம் காளகண்டம் திரிநேத்திரம் உமாசகாயம் முதலிய அருளடையாளங்களும் உடையராய் அன்பருடைய ஞானக் கண்ணிற்குக் கோசரமாய்த் தோன்றி அனுக்கிரகிக்கும் அவரது அருட்டிருநெறியினை வியக்குவது, இதனையும், உலகம் இனிதறிந்துய்தற் பொருட்டுத் தோன்றி அம்முறையினை அற்புத விசேட நெறியான் விளக்கியருளிய சைவசமயாசாரியர் நால்வர். இனிச் சீவர்கள் அங்ஙனம் அற்புத நெறியால் பதிப்பொருள் நிச்சயம் பெற்ற பின்றையும், அதனை மேலும் வலிபெற நாட்டுவித்தற்கு இன்றியமையாது வேண்டப்படுந் தருக்கமுறையினுனும், அவ்வரும் பேருண்மையினை நிறுவிவிளக்குதற் பொருட்டுத் தோன்றிய சைவ சந்தனசிரியர் நால்வர், சைவசமயாசிரியர் நால்வருட் தலைநின்ற ஞான சம்பந்த பெருமானேபோல், சந்தனசிரியருட் தலைநின்ற மெய்கண்ட தேவரும் குழவிப்பருவத்தே பேரறிவுமுற்றுப் பேறுடையராய்ச் சிவஞானபோதச் செம்பொருணுல் அருளிச்செய்து ஞானநெறி விளக்கினுராகலின் அவரருமைச் சரிதம் ஈண்டொரு சிறிது விளக்கி எழுதுவாம்.

சந்தனசிரியருள் நாலாமவரான கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் தமது சங்கற்ப நிராகரணம் என்னும் நூலைச் சிதம்பரத்தில் அரங்கேற்றிய காலம் தாமதற்கெழுதிய பாயிரச்செய்யுளிலே நன்கெடுத்துக் குறித்திட்டார்.

'ஏழஞ் சிருநூ றெடுத்த வாயிரம்
வாழுஞ் சகன மருவாகி நிற்ப''

என்பதனல் அந்நால் சாலிவாகனசகம் கஉ௩௰ - ஆம் ஆண்டில் அரங்கேற்றப்பட்ட தென்பதறியப் படுகின்றது. எனவே, உமாபதிசிவாசாரியர் காலம் இற்றைக்கு ஐந்நூற்றுத் தொண்ணூற்று மூன்று வருடங்கட்குமுற்பட்டதென்பது நன்குபெறப்படும்.

இனி உமாபதி சிவாசாரியர்க்கு ஞானசிரியரான மறைஞான சம்பந்ததேசிகர் அவர்க்குமுன்னும் இருபத்தைந்து வருடங்களிருந்தா ரென்று கொண்டு இவர்-கூகஅ, வருடங்களுக்கு முன்பிருந்தாரென்று கோடலிழுக்காது.

இனி மறைஞான சம்பந்தர்க்கு ஞானசிரியரான அருணந்தி சிவாசாரியர் அவர்க்குமுன்னுமவ்வாறே இருபத்தைந்து வருடங்க ளிருந்தாரென்று கொள்ளப்படும். ஆதலின் இவர்காலம் இன்றைக்கு சுசங-வருடங்கட்கு முற்பட்ட தென்பது நிறுவப்படும்.

இனி அருணந்தி சிவாசிரியர்க்கு ஞானசிரியரான மெய்கண்ட தேவர் தம் மாணக்கர் சிவசாயுச்சியம் எய்து

தற்குமுன்னும் ஒருஎழுவருடம் இருந்தாரென்பது கொள்ளப்படு மாதலின், ஆசிரியர் மெய்கண்ட தேவர் இற்றைக்கு ௬௫௦-வருடங்கட்கு முற்பட்டவர்என்பது இனிதுபோதரும். இதனுல் ஆசிரியர் காலம் சாலிவாகனசகம் ௧௧௭௮-ஆம் ஆண்டின் கண்ணதா மென்பதூஉம், சருவதரிசன சங்கிரகம் இயற்றிய மாத்துவாசிரியர் காலம் சாலிவாகனசகம் ௧௨௫௪-ஆம் ஆண்டின் கட்படுதலின் இவர் அவர்க்கு எழுபது வருடங்கட்குப் பிற்பட்டவராவரென்பதூஉம், நினைவுகூரற்பாலனவாம், இஃதுணரமாட்டாதார் அருணந்திதேவர். தாம் சிவஞானசித்தியார் பரபக்கத்திலே வகுத்துக்கூறிய சமயங்களெல்லாம் மாத்துவாசிரியர் இயற்றிய சருவதரிசன சங்கிரகத்தைப் பார்த்துக் கூறினுரென்று பெரிதும் மூரணுறக் கூறுவர், மாத்துவா சிரியர் அருணந்திதேவர்க்குப் பின் பலவருடங்கழியத் தோன்றினு ரென்பது மேலே குறிப்பிட்ட சரித்திரமுறையால் இனிது பெறப்படுதலின் அங்ஙனம் உரைப்பாருரை வழக்குரையா மென்றொழிக அது கிடக்க.

திருப்பெண்ணாடகம் என்னும் ஊரிற் சைவவேளாளர்குலத்துதித்த எல்லாநற்குண நற்செய்கைகளுள் ஒருங்கு வாய்ப்பப் பெற்ற அச்சுதகளப்பாலர் என்பார் ஒருவரிருந்தனர். அவர் சிவாலய வழிபாட்டின் கட்டளைநின்று சிவபத்தி சிவனடியார் பத்தியுட்சிறப்புற்றவர். அவர்தமக்கு நீண்ட நாளாய் மகப்பேறின்மை குறித்து மிரம்ப மனம் வருந்தி, ஒருநாள் தமதாசிரியர் விதித்தபடி திருஞான சம்பந்தமூர்த்திகள் தேவாரத் திருமுறையிற் கயிறுசாத்த, "பேயடையாபிரிவெய்தும்" என்னும் திருப்பாசுரம் துணிபொருப்பாடுவருவித்தற்கு புலனுயிற்று, அத்திருப்பாசுரத்தின்கட் "பிள்ளையினோடுள்ள நினை வாயினவேவரம் பெறுவர் வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார்" என்று போந்த வாக்கியத்தைக் கடைப்பிடித்து, நெறிவழாது அம்முக்குளநீரிற்றோய்ந்து சிவபெருமானை வழிபட்டு வருவாராயினர். அங்ஙனம் அவர் ஒழுகுகையில், ஒருநாள் அவருக்குச் சொப்பனத்திலேசிவபிரான் தோன்றி, "உனக்குத் திருஞானசம்பந்தப்பிள்ளை என்றே கொள்ளும்படி தமிழ் நாடுய்யும் வண்ணம் தமிழ்வேதத்துப்பொருளை உள்ளடக்கிய சுத்தாத்துவ சித்தாந்தத்தை வெளிப்படுத்தத் தகுந்த ஆசிரியனுக ஒரு புத்திரன் அவதரிப்பன்" எனக் கூறி மறைந்தருளினர். அவ்வாறே அவருக்கு ஓர் அருமைத்திருமகவு தோன்றிற்று. அம்மகவுக்கு அங்குள்ள சிவபெருமான் திருப்பெயரான சுவேதவலிப்பெருமான் என்பதனையே பெயராகச் சூட்டினர்.

பின் அச்சுதர்களப்பாளர் மனைவியார்க்கு ஓர் அருமைச் சகோதரர் திருவெண்ணெய் நல்லூரி லிருந்தனர். அவர் தம்முடைய சகோதரியார் நெடுநாண் மகப்பேறின்றி வருந்த மிக வரிதிற் பெற்ற அவ்வாண்மகவைப் பன்முறையும் வந்து கண்டு அதன்அருமைத்திருவுருவத்தைக்காணக்காண அதன்பாற் பேரன்புடையரானுர். அக்குழவிக்கு மூன்றுமாண்டு நடை பெறுகையில் அதனைத் தாமெடுத்துப்போய்வளர்க்கக்கருதித் தங்கருத்தைத் தம் மைத்துனர்க்கும் சகோதரியார்க்கும் அறிவிப்ப அவர் அதற்கு மிகவரிதிலிணங்கினர். அவரும் பேருவகையுடையராய்ச் சுவேதவனப் பிள்ளையாரைத் திருவெண்ணெய் நல்லூரில் தம்மனைக் கெடுத்துச்சென்று தாமும் தம் மனைவியாரும் பொன்னேபோல் மகம்போற்று வளர்ப்பாராயினர்.

இனிப் பிள்ளையார் தெருவேவாயின்முற்றத்தில்மணலைச்சிவலிங்கவடிவாய்க் குவித்து அதனை அருச்சித்தவாறே விளையாடுவர். ஒருநாட் பிள்ளையார் இங்ஙனம் விளையாட்டயர்கையில், அவ்வழியே சென்ற திருக்கைலாய பரம்பரை அகச்சர்தானகுர

வருள் ஒருவராகிய பரஞ்சோதிமகா
முனிவர் உள்ளம் அப்பிள்ளை பால்
இழுக்கப்படுதல் ஓர்ந்து அதனருகே
போய் அதனருமைத்திருவுருவும்அரி
யசெய்கையுங்கண்டுஅதன்பெருமை
நன்குணர்ந்தனராய், அதன் அதி தீ
விர பக்குவ முதிர்ச்சியின் நோக்கி
மகிழ்ந்து தமது ஞானதிருட்டியால்
அதற்குச் சிவதீக்கை புரிந்து மந்திர
வுறையான பிரணவசொரூப இய
லை அதற்குணர்த்தி அப்பிரணவவிரி
வாயுள்ள சிவஞானபோதப் பன்னி
ரண்டு சூத்திரங்களையும் அவற்றின்
உட்பொருளையும் உபதேசித்தனர்.
உபதேசித்து "தமிழுலகமுந் தற்
பொருட்டு இந்த ஞானநூற்பொரு
ளைப் பக்குவான் மாக்கட்டு விரித்து
ணர்த்துக" என்றருளிச்செய்து,மெ
ய்கண்ட தேவர் எனத் தீட்சநாமஞ்
சாத்திப் போயினர்.

இனி மெய்கண்டார் திருவெண்
ணெய் நல்லூரில் திருக்கோயில்கொ
ண்டெழுந்தருளி யிருக்கும் பொல்
லாப் பிள்ளையார் பால் மெய் பத்தி
வழிபாடுடையராய் ஒழுகுகையில்
அச்சுவாமிகள் அவர்க்குச் சிவஞான
போத உள்ளுறைச் செம்பொருண்
முழுவதூஉம் வேதசிவாகமங்கள் ஒரு
பொட்டுரைக்கும் ஞானபாத முடி
பொருட்டுறை யெல்லாம் தன்கட்
டு சறித்துக்கொண்டு விளங்கும்அந்த
ரங்கமுறை இனிது புலனும் வண்
ணம் தெருட்டியருளி அவ்வச்சூத்தி
ரப்பொருள் நனிவிளக்கும் சூரிணி
கை என்னும் கருத்துரையுஞ் செய்
து தந்தருளினர்.

அவற்றை யெல்லாங் கொண்டு
சுவேதவனப் பிள்ளையார் அப்பன்
னிரு சூத்திரங்கட்கு வார்த்திகப்
பொழிப்புரையும், அவ்வுரைப் பொ
ருளைத் தருக்கித்து நிலைபெறவிக்குந்
திருவெண்பாக்களும் இயற்றி அவற்
றின் மெய்ப்பொருளைப் பக்குவமு
டைய நற்சீடர்க்குபதேச வாயிலான்
விளக்குவாராயினர். வேதாகம சூத்
திரத்திற் குறைவிரித்த நீலகண்டர்,
சங்கரர், இராமாநுசர்,மாத்துவர்முத
லான உரைகாரரெல்லாம் மெய்ப்
பொருள் காணாது மயங்கிய அத்து
விதம் என்னுஞ் சொல்லுக்கு மெய்ப்
பொருள் நண்குரை நிறுத்தினர்.

இனிப்பிள்ளையார்மிகச்சிறுபருவ
மான ஐந்துவயதிலே பேரறிவு மூற்
றுப் பெறுதலுடையராய், மிகவரிய
ஞான வமிழ்தத்தை எல்லார்க்கும்
ஊட்டிவருதல் தமிழ்நாடெங்கும் பர
வத் தலைப்பட்டது. ஆங்காங்குத் தத்
துவஞானந் தலைப்படுதல்வேண்டிய
பெரியோர் பல்லாயிரக்கணக்காய்ப்
பலநாடுகளினின்றும் போந்து மெய்
கண்டாரைச் சூழ்ந்து அவர் மலர் வா
ய்ப்பிலிற்றும் உபதேச வமிழ்தத்தி
னைப் பருகி களித்துப் பேரின்பத்தி
ன்நிலைபெற்றார் பிள்ளையார் அருமை
ச்சீர் யாண்டும் பரவவே. திருத்து
றையூரிற் சகலாகமப்பொருளும்முற்
றுருங் குணர்ந்து சிவநிட்டாபரா
ய்ச் சிவோபதேசஞ் செய்து சீடர்
தம்மை நன்னெறிக்குய்க்கும் சகலா
கமபண்டிதர் என்னும், பிராமணோத்
தமர்செய்விக்கும் அவ்வற்புதச்செய்
தியெட்டியது. அவரது சீடர்குழாம்
மெய்கண்டதேவப்பிள்ளையாரதுஉப
தேசங்கேட்கும் விழைவுபெரிதுடை
யராய்த் தம்மாசிரியர்பால் விடைபெ
ற்றேகிப்பிள்ளையாருபதேசப்பொரு
ள்கேட்டுத் தமக்குத் தம்முன்னையா
சிரியரான் சகலாகம பண்டிதரானும்
விளக்கப்படாது கிடந்த ஐயம்திரிபு
களெல்லாம் விலகப்பெற்று ஞானந்
ததும்பும் பேரறிவுற்றுப் பிள்ளையா
ரது உபதேச சிவநிட்டையின் கண்
அழுந்திஅவரைப்பிரியாதிருந்தனர்.
சகலாகமபண்டிதர் தம்பால் விடை
பெற்றுச்சென்ற தஞ்சீடர் பலர் நெ
டுநாள் வாராமைகண்டு வாலாறறிதற்
பொருட்டுத் திருவெண்ணெய் நல்
லூரினுக்குவந்து பிள்ளையார் பிரபா
வங்கண் முழுதுங்கேட்டுப் பொறா
மைமிகுந்துநேரேபோய்ப்பிள்ளையா
ரைத் தலைகவிழச்செய்வோமென்று
செருக்கிப் பிள்ளையார் திருமுன்பு
சென்றார்.அப்போதுமெய்கண்டதே

வர் தம்மைப் புடைசூழ்ந்து சித்திரப் பாவைபோல ஞானத்தின்கண் திருட்டியுடையராயிருக்கும் பல்லாயிரஞ் சீடர்கட்கும் பதிபசுபாச விலக்கணங்களை விரித்தருளிச் செய்துகொண்டிருந்தார்அப்போது அங்குச்சென்ற சகலாகம பண்டிதர் குலத்தினாலும் வயதினாலும்பிள்ளையார் தமக்குத் தாழ்ந்தவர்தாமே யென்று மதியாவுள்ளத்தோடும் பிள்ளையாரை நோக்கி "ஆணவமல சொரூபத்தைத் தரிசித்தல் யாங்ஙனம்" எனக் கடாயினர். அதுகேட்ட பிள்ளையார் அவரைக் கடைக்கண்ணுற் குறித்து நோக்கி அவர் அதிதீவிரபக்குவ நுண்ணறிவு வாய்க்கப்பெற்றும் ஆணவமல சேட்டை சிறிதுடையராதல் பற்றிமிசவிரகித் தமது திருநயனத்தால் பண்டிதரை முடிமுதல் அடிகாறும் ஒருமுறைநோக்கிவாளாவிருந்தனர். அக்குறிப்பினை ஆசிரியர்திருவருள்விசேடத்தாலுணர்ந்த பண்டிதர்சிவஞானமுதிர்ச்சியுற்றுத்தாம் அங்ஙனம்வினயதே ஆணவமல சொரூபம்என்றும் அவ்வியல்பினராய் வினவிய தம்மை ஆசிரியர் ஒருமுறை தம்மை நோக்கித் திரும்பவும் வாளாதிருத்தல்போலத் தாமும் புறப்பற்று அகப்பற்றினைக்கெடுத்து உண்ணேக்கி தியானிக்கற் பாலதென்றும் நன்றித்து ஆசிரியர் மெய்கண்டதேவர் திருவடியில் அடியற்ற பனைபோல் வீழ்ந்து "கடையேனை யுய்விக்க வெழுந்த செல்வமே, ஞானத்திருவுருவே, நாயேன் பிழைப்பினைபொறுத்தருளித் தொழும்புகொள்ளல்வேண்டும்" என வேண்டினர். பிள்ளையாரும் மனமிகவுவந்து சிவஞானபோதவருணூற்செம்பொருளை அவர்க்குப் தேசித்து அதனை இன்னும் விரித்து அதற்கு வழிநூலாக சிவஞானசித்தியென்றொருநூல் செய்கவென்று கட்டளையிட்டு அவர்க்கே தமதுபதேச வுரிமைகளையு மீந்து தாம் சிவநிட்டையி லமர்ந்தருளினர்.

சிவஞானமுனிவர் - பாண்டிவள நாட்டிலே,பொதியமலைச்சாரலிலே பாவநாசமென்னும் திருப்பதியைச் சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே, அருந்தவக்கொள்கை அகத்திய முனிவரிடத்தே எழுதலைமுறையளவும்பிறைமதிபோல முறையேவளர்ந்து அருட்புலமை நிரம்புவண்ணம் உரம்பெற்ற பரம்பரைச்சைவவேளாளர்குலத்திலே சிவபத்தியிற் சிறந்த ஆனந்தக் கூத்தர் என்பவருக்கும் அவர் மனைவியராகிய கற்பினிற் சிறந்த மயிலம்மையாருக்கும் புத்திரராகத் திருவவதாரஞ் செய்து முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத்திருநாமம் பெற்று ஒழுக்க முதலிய நற்குணங்களுடன் வளர்ந்து ஐந்து பிராயத்திலே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப் படித்து வளர்கையில் அக்காலத்திலவ்விடம் யாத்திரையாகவந்த துறைசையா தீனத்துச் சில முனிவர்கள் ஆண்டினிலையரும், அறிவின் முதியருமாகிய முக்களாலிங்கரைக் கண்டு அவர் வழிபாட்டிற் கிரங்கி அவர் வீட்டில் திருவமுது செய்து வீற்றிருக்க அவரம் முனிவர்களோடு தாஞ் செல்ல வேண்டுமென்னுங் குறிப்பினைத் தந்தைக்குணர்த்தி விடைபெற்று அம்முனிவர்களுடன் வழிக்கொண்டுதிருவாவடுதுறையையடைந்து ஆதீனபரம முதற்குருவாகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணேக்கம் பெற்றுக் கொண்டு அப்பொழுது சின்னபட்டத்திலெழுந்தருளியிருந்தஞானசிரியராகியபின் வேலப்ப தேசிகரை ஒடுக்கத்திலே போய்த் தரிசித்து மிச்சைவஸ்யாசமும் சிவதீக்ஷையும் சிவஞானயோகிகள் என்னுந் தீக்ஷாநாமமும் பெற்று மெய்கண்டசாத்திர பண்டாரசாத்திரங்களைக் கேட்டருளினர். சிவஞானயோகிகள் செந்தமிழ்ப் பேராசிரியரான அகத்திய மகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவ ராகலின் எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்றொருங்குணர்ந்து மெய்யுணர் வின்பமுற்றுப் பேறுடையராய் அமர்ந்தருளினர்.

சிவஞான யோகிகள் திரணதூமாக்கினிமுனிவர் அருளிச்செய்ததொல்காப்பியத்திற்கு இளம் பூரணம், சேனாவரையம் நச்சினார்க்கினியம் எனவேற்பட்டுள்ள மூன்றுநூல்களினுமுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும் சூத்திரவிருத்தியெனப் பெயர்பெற்ற பாஷ்யமும் வடமொழித் தருக்கசங்கிரக அன்னபட்டியங்களின் மொழிபெயர்ப்பும் நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப் புலவர் செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திருத்தமும் செய்தருளினர்.

அன்றியும் சர்வாத்மசம்புசிவாசாரியர் அருளிச்செய்த சத்தியரூபசித்தாந்தப் பிரகாசிகையை மொழிபெயர்த்தருளினர். மெய்கண்டதேவர் மொழிப்பெயர்த்தருளிய வார்த்திகப் பொழிப்பாகிய சிவஞான போதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிட மகாபாஷ்யமெனப் பெயர் பெற்ற விருத்தியுரையும், இலகு வியாக்கியானமாகிய சிற்றுரையும், அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த சிவஞான சித்தியார் சுபக்ஷத்திற்குப் பொழிப்புரையும்.

ஆசாரிய சரணராகிய அரதத்த சிவாசாரியர் நெருப்பிலே பழுக்கக் காய்ச்சிய இருப்புமுக்காலிலே எழுந்தருளியிருந்து சிவபெருமானே பரம்பொருளென்னி இருபத்திரண்டு ■ துக்களாலே காட்டியருளிய சுலோக பஞ்சகத்தின்மொழிபெயர்ப்பும், அப்பதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேகமூலமொழிபெயர்ப்புஞ் செய்தருளினர்.

அன்றியும் பெரும்பாலும் உண்மைநாயன்மார் சரிதமுதலியவற்றைத்தழுவிப் பூருவார்த்தமும் அதற்கு எடுத்துக் காட்டாகத் திருவள்ளுவநாயனர் திருக்குறள் உத்தரார்த்தமு மாகக்கொண்டு குளத்தூர் சோமேசர் மீது முதுமொழிவெண்பா, யமகரூபமான திருவேகம்பத்தந்தாதி, திருக்ரூபமான திருமுல்லை வாயிலந்தாதி, குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப் பத்தந்தாதி, கச்சியானந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், குளத்தூர் அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ், செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம் மார்கழிமாதத் திருவாதிரை யுற்சவத்திலே தேவார முதலிய திருக்காப்பிடப் பட்டுத் திருவெம்பாவை என்னும் திருவாசகத் தருப்பதிகம் ஒன்றே ஆன்மார்த்தபாரார்த்தசிவபூஜாகாலங்களில் ஓதப் பெற்றுவருஞ் சாம்பிரதாயத்தால் நித்தநியம மந்திரமாகதி திருத்தொண்டர் திருநாமத்தை ஒருயுய்யவேண்டுவோர் கருத்தத்தடையுறுவண்ணம் திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியாராகிய நமச்சிவாயமூர்த்திகள் மீது மாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினர்.

அன்றியும் மரபட்டவணையெனப் பெயர் பெற்ற துறைசை யாதீன சாம்பிரதாய கட்டளையைத் தருமையாதீனத்தார் மறுத்தெழுதியதற்குச் சித்தாந்த மரபுகண்டன் கண்டனம், செய்தருளி யாழ்ப்பாணம் ஞானப்பிரகாச முனிவர் சிவஞான சித்தித் திருவிருத்தங்களை மனம் போனவாறெல்லாம் அலைத்து இடர்ப்படுத்து தற்குச் சிவசமலாதபரமாக எழுதிய வுரையினை, சித்தாந்த சாத்திரங்களை முறையாற் கற்றுணரு மதுகையின்றிச் சித்தாந்தவுபதேச மாத்திரங்கேட்டுச் சிந்தித்துக் கொண்டிருக்கும் மந்தபுத்தியுடையார் கண்டு மயங்காது சுத்தாத்துவித சித்தாந்தசைவநெறிதலை நின்றனுட்டித்து வீட்டின் பயனுறுதிகூடுமாறு அதற்கோர்மறுப்பாகச் சிவசமவாதவுரை மறுப்பு என ஒரு நியாயகண்டனமுஞ் செய்தருளினர், திருவண்ணமலை ஆதீனத்தர். தம்மாதீனத்து ஞானப்பிரகாச முனிவர். இயற்றியசிவசமவாதவுரை

யின் உயர்வுதோனிக்கும் வண்ணம் மாதவச் சிவஞானயோகிகளிடத்தே எடுத்து, என்னுஞ் சொல்லுக்குப் பொருள் என்னை என்று வினவுவித்தபோது எடுத்து, என்னுஞ் சொல்லுக்குச் சிவசமவாதவுரைமறுப்பு என ஒன்றும், அதன்மேற்பிரதிகண்டனமுண்டாயவழி மேன்மறுத்த மறுப்பு குதர்க்க வுரையாராற் போழ் படாதவாறு, எத்து என்னும் சொல்லுக் கிட்டவைரக்குப்பாயம் என ஒன்றும், அன்றியும் காஞ்சிமான்மியம் தமிழ்மொழி பெயாத்தியற்றி அரங்கேற்றுழி அதன் சொற் பொருண் மாட்சி கண்டு பொறுராய். மற்றது கம்பராமாயணமாமோ, வென த்தருக்குக் கலாய்த்த பாஞ்சராத்திரிகளை அதன் முதற் செய்யுளான நாடிய, வென்பதன் சொற்பொருள் பற்றிப் பலவாறு சங்கிக்க அவர்கள் அவ்வாசங்கைகட்குத்தா மளிக்கலாற்றுது தருக்கற்று வணங்கித் துதித்தவழி 'சங்கோத்தா விருத்தி, இயற்றியவர்களை யுவப்பித் தருளினர். இலக்கணவிளக்கத்தில் உள்ள பற்பல வழுக்களை வெளியிடக் கருதி இலக்கண விளக்கசூறாவளி யொன்று செய்தருளினர்.

இங்ஙனம் செஞ்தமிழ்வரம்பு நிலையிட்ட திராவிட மாபாடிய முனிவரான ஆசிரியர் சிவஞான யோகிகள் உலோகோபகாரமாக பல வுரைகளையும், பலநூல்களையும், பலகண்டனங்களையும் செய்து பல நல்மாணாக்கர் கட்குப்போதித்து வடமொழியினுந் தென்மொழி சிறந்ததென்னும் படி அபிவிருத்தி, செய்து தவமே திருவுருக்கொண்டாற் போலும் விளங்கிச் சிவப்பேற்றிற்குக் காரணமாகிய கிட்டையில் வீற்றிருந்தருளித் திருவாவடுதுறையில் சித்திரைமதி ஆயிலியக் ஷேத்திரத்திலே சிவபரிபூரணத்தை யடைந்தனர்.

சிவதத்தம் - சிவனால் கொடுக்கப்பட்ட சக்கரம், விஷ்ணுவின் சக்கரம்.

சிவஞானம்-தெய்வஞானம், பதிஞானம்.

சிவண - உவமைச்சொல்.

சிவணல் } கலத்தல், கிட்டல், பொ
சிவணிதல் } ருதல், பொருந்தல்.

சிவதடி - வெள்ளரி.

சிவதத்துவம்-தொண்ணூற்ரறு தத்துவத்திற் கடவுட்பகுதியான ஐந்து தத்துவம், அவை-ஈச்சுரம் சத்தி சாதாக்கியம் சிவம் சுத்தவிதை.

சிவதம் - இருக்குவேதம்.

சிவதரிசி - தாமேபாமெனத் தெளிந்தவன்.

சிவதருமம்-உபபுராணங்களுள் ஒன்று.

சிவதருமோத்தரம்-மறைஞான சம்பந்தர் செய்த நூல், இது பரமதருமாதியியல், சிவஞானதானவியல், ஐவகையாகமவியல், பலவிசிட்ட காரணவியல், சிவதருமவியல், பாவவியல், சுவர்க்கநரகவியல், சநநமரணவியல், சுவர்க்கநரக சேடவியல், ஞான போகவியல், பரிகாரவியல், கோபுரவியல் என்னும் பன்னிரண்டியல்களையுடையது.

சிவதலம் - சிவசேத்திரம்.

சிவதன்மம் - அட்டாதசவுப புராணத்தொன்று, தெய்வபுண்ணியம்.

சிவதன்மோத்தரம் - உபாகம பேதத்தொன்று,சைவசாத்திரத்தொன்று.

சிவதாதி - சுபமுண்டாக்குவோன்.

சிவதாது - இரதம், ஒருகல்.

சிவதாரம் - தேவதாரம்.

சிவதுளசி - ஒருபூடு.

சிவதூதி - துர்க்கை.

சிவதை - ஒருகொடி.

சிவத்தொண்டர் - சிவனடியார்.

சிவத்தொண்டு - சிவபணிவிடை.

சிவத்தம் - செம்முருங்கை.

சிவத்தல் - கோபம், சிவக்குதல், சினக்குறிப்பு.

சிவத்தாட்சி-செம்பரத்தை, செம்பருத்தி.

சிவத்தாபனம் - சிவலிங்கபிரதிட்டை.

சிவத்தானம் - சிவத்தலம்.

சிவத்திருவம் - வில்வமரம்.

சிவத்துரோகம் சிவபுண்ணியத்துக்கிடையூறு செய்தல்.

சிவநிசி - சிவராத்திரி.

சிவநேசர் - மயிலாப்பூரிலிருந்த ஒரு சிவபத்தர், இவர் பாம்பு கடித்திறந்த தம்புதல்வியின் எலும்பை ஒருகுடத்திலிட்டுவைத்திருந்து, திருஞான

சம்பந்தர் அங்கெழுந்தருளின காலத்தில் அவர் முன்னேவைக்க, அவர் கருணையால் அவ்வெலும்புபெண்ணுருவம் பெற்றெழுந் திருக்கக் கண்டு களிகூர்ந்தவர்.
சிவந்தநாயுருவி - செந்நாயுருவி.
சிவந்தலோகமண் - செம்புமணல்.
சிவந்தவேசை - செம்பரத்தைப்பூடு.
சிவந்தி - கொடிப்பாலை, செவ்வந்தி.
சிவத்திரம் - பிரதிபலன்.
சிவபத்தி சிவநேசம்,சைவசமயவொழுக்கம்.
சிவபாவம் - சிவனிடத்துள்ளகுணம்.
சிவபீசம் - பாதரசம்.
சிவபுரம் / சிவபுரி / சிவராஜதானி } காசி.
சிவபுராணம் - பதினெண் புராணத்தொன்று.
சிவபுராணம் - சிவனது மகிமையைக் கூறும்புராணம், அது இலிங்கம், காந்தம், கூர்மம், சைவம், பிரமாண்டம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமனம்.
சிவபுரி - ஒருதலம், காசி, கைலாசபுரி.
சிவபூசை - சிவார்ச்சனை.
சிவபோகம் - ஆனந்தம்.
சிவப்பம்மான்பச்சரிசி - ஒருபூடு.
சிவப்பவரை - ஒருகொடி.
சிவப்பானவெள்ளைச்சி - புற்றும்பழம்.
சிவப்பி - சிவப்புத்தேங்காய்.
சிவப்பிரகாசம் - ஒருசைவசித்தாந்தநூல்
சிவப்பிரகாசசுவாமிகள் - பிரபுலிங்கலீலை, திருக்கூவப்புராணம், சித்தாந்தசிகாமணி, வேதாந்தசூடாமணி, சிவப்பிரகாச வியாசம், சிவநாமமகிமை, தர்க்கபரிபாஷை கோணசைலமாலை, நன்னெறி, நால்வர், நான்மணிமாலை, வெங்கையுலா, வெங்கைக் கோவை, முதலிய நூல்கள் செய்தவர் காஞ்சிபுரத்திலே பிறந்து சிந்துபூந்துறையிலே வெள்ளியம்பலத் தம்பிரானிடம்பாடங்கேட்டவர். இலக்கண இலக்கியங்களில் மகாசதுரர். கற்பனைக் களஞ்சியம்,சமயத்தில்வீரசைவர். இவர்இற்றைக்கு இருநூற்றிருபதுவருஷங்களுக்கு முன்னர் விளங்கியவர்.
சிவப்பிரியம் - உருத்திராக்கம்.
சிவப்பிரியை - பார்வதி.
சிவப்பிரீதி - சிவாராதனை.
சிவப்பு - இலிங்கம், சினக்குறிப்பு,செம்மை நிறம்.
சிவப்புக்கந்தி - கோழித்தலைக்கந்தகம்.
சிவப்புக்கல் - ஈரற்கல்.
சிவப்புக்கொடப்பசளை - ஒருபூடு.
சிவப்புமந்தாரை - ஒருமரம்.
சிவமது - சிவகிருபை, சிறுபுள்ளடி.
சிவமயம் - சிவத்தின்றன்மை,மங்களகரம்.
சிவமரம் - ஒருமரம்.
சிவமலை - கொங்குநாட்டின்கணுள்ள ஒரு சுப்பிரமணியஸ்தலம்.
சிவமல்லி - கொங்குமந்தாரை.
சிவம் - மங்கலம், உப்பு, உயர்வு, ஒரு குளிகை, ஒரு செய்கையுப்பு, ஒரு வாசனைகடலுப்பு, கடவுள், குறுணி, சந்தோஷம் சிவதத்துவமைந்தினொன்று. அது ஞானமொன்றல், சிவலிங்கம், தண்ணீர், நன்முகூர்த்தம், நன்மை, நித்தியயோகத்தொன்று, பசுவணதறி, பாதாசம், முத்தி, முற்றத்துறத்தல், வெண்காரம், வேதம்.
சிவயோகநாயகி - திருக்காணூரிலேகோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர், திருநாமம்.
சிவாசம் - மூன்றுநாளுறியகஞ்சி.
சிவராத்திரி - மாசிமாசத்திலே அபரபக்ஷசதுர்த்தசியோடு கூடிய அர்த்தராத்ரி காலமாகிய புண்ணிய முகூர்த்தம் அது லிங்கோற்பவருக்குப் பிரியமுகூர்த்தம்.
சிவராத்திரிவிரதம் - மாசிமாசத்துக்கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியிலே சிவபெருமானைக் குறித்து அநுஷ்டிக்கும் விரதம். அத்தினத்திலே உபவாசஞ்செய்து நான்குயாமமும் நித்திரையின்றிச் சிவபூசை செய்தல் வேண்டும். சிவபூசையில்லாதவர் நித்திரையின்றி ஸ்ரீபஞ்சாக்ஷரசெபமுஞ்சிவபுராணசிரவணமும் சிவாலய தரிசனமுஞ் செய்தல் வேண்டும். இது சைவசமயிகள் யாவராலும் ஆவசியகம் அநுஷ்டிக்கத்தக்கது.
சிவலிங்கப்பெருமான் - சிவலிங்கத்திற் கோயில் கொண்ட சுவாமி.
சிவலிங்கம் - சிவபூசைத்திருவுரு.

சிவலை - சிவப்பு நிறமுள்ளது, செந்நிறமுள்ளோன்.
சிவலோகச்சேவகன் - நந்திபெருமான், காந்தம்.
சிவலோகநாயகர் - திருப்புன்கூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
சிவலோகம் - சைலலோகம், மோக்கம்.
சிவல் - கவுதாரி, பகன்றை.
சிவவல்லபம் - எருக்கு,ஒருவகைநாவல், செவந்திச்செடி.
சிவவல்லபன் - சிவபத்தன்.
சிவவல்லபை - பார்வதி.
சிவவல்லி-ஒருவகைக் கோவைச்செடி.
சிவவாகனம் - எருது.
சிவவாக்கியம் - ஒருநூல்.
சிவவிந்து } இரதம்.
சிவவீசம் }
சிவவேடம் - சைவவேடம்.
சிவனார்கிழங்கு - கார்த்திகைக் கிழங்கு.
சிவனார்பாகல் - ஐவேலி, கொவ்வை.
சிவனார்வேம்பு - ஒருசெடி.
சிவனி - கழுதை.
சிவனிப்பால் - கழுதைப்பால்.
சிவனுள்மலை - அயச்சிலை.
சிவனேங்கிவன்னி - காந்தம்.
சிவன் - கடவுள்; சங்கரன், வைடூரியம். திரிமூர்த்திகளுளொருவரென்று விஷ்ணுபுராணங்களும், அம்மூவரையும் அதிஷ்டித்து நிற்கும் பரப்பிரமமென்று சைவபுராணங்களும் கூறும் சிவன் என்னுஞ்சொல்லுக்கு மங்களரூபி என்பது பொருள். சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுவோர் சைவரெனப்படுவர். அவர்கள் சமயம் சைவசமயமெனப்படும். பதினெண் புராணங்களுள்ளே சிவபரமாகவுள்ள புராணங்கள் பத்து, சிவனை வழிபடுவோர்க்கு ஆதாரமாகிய நூல்கள் சிவாகமங்களாம். அவை இருபத்தெட்டு. சிவன் ரூபமும் அரூபமும் ரூபா ரூபமும் ஆகிய மூன்று திருமேனிகளுடையர், அரூபத்திருமேனியோடு கூடியவிடத்துச் சிவனென்றும், ரூபாரூபத் திருமேனியில் சதாசிவமூர்த்தியென்றும், ரூபத்திருமேனியில் மகேசுவரரென்றும் சொல்லப்படுவர். பிரமனை சிருஷ்டிகர்த்தாவென்றும் விஷ்ணுவை ரக்ஷகர்த்தாவென்றும் சிவனை சங்காரகர்த்தாவென்றும் வைதீகர்யாவரும் கூறுவர். சங்காரகிருத்தியம்சிருஷ்டிஸ்திதிகளுக்கு ஏதுவாகச் செய்யப்படுவதல்லது நாஸ்தியாக்கும் பொருட்டன்று. ஆதலால் சங்கார கிருத்தியத்தில் மற்றை இரண்டு கிருத்தியங்களும் அடங்கும். அடங்கவே சங்காரகர்த்தாவே மற்றை இருவரையும் அதிஷ்டித்து நின்றுநடாத்தும் முழுமுதற் கடவுளென்பார்கள். விருஷபத்துவசன், உமாபதி, சர்மவாசன், நந்திவாகனன், சூரி, கபாலமாலாதரன், சர்ப்பகுண்டலன், காலுகாலன், நீலகண்டன், கங்காதரன், திரிநேத்திரன், சந்திரசேகரன், திரிபுராந்தகன் முதலிய அநந்த நாமங்கள் பெறுவர். லோககண்டகராகிய திரிபுராசுரரைச் சங்காரஞ்செய்தருளினமையால் திரிபுராந்தகன் எனப்படுவர். திரிபுரதகனஞ்செய்யப்பட்டபோது பூமியை இரதமாகவும் சூரிய சந்திரர்களை இரதசக்கிரங்களாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மேருமலையை வில்லாகவும், சாகரத்தை அம்புக்கூடாகவும், விஷ்ணுவை பாணமாகவும் கொண்டு சென்றார். இவ்விஷயத்திலே அத்தியற்பு தத்துவார்த்தம் அடங்கி யிருக்கின்றது. அதனை ஈண்டு விரிப்பிற் பெருகும். பிரமவிஷ்ணுக்களது கபாலத்தை மகா கற்பாந்தரங்களிலே தரித்து தனித்துநின்று ஆநந்தத் தாண்டவஞ் செய்தலால் கபாலமாலாதரன் என்னும் நாமம்பெறுவர். சிவன் மூன்றுகண்கள் உடையார், ஒன்று நெற்றியிலுள்ளது, அதனால் கண்ணுதல் எனப்படுவர். இந்தக் கண்ணினாலே காமதகனஞ்செய்தாராதலின் காமநாசன் காமாரி முதலிய நாமம்பெறுவர். பகீரதன் தன் பிதிரரை சுவர்க்கஞ்சேர்க்கும் பொருட்டுப் பெற்ற கங்கையின் பிரவாகவேகத்தைச் சடைக்கொழுந்து ஒன்றினால் அடக்கினமையால் கங்கா

தான்கங்கைவேணியன் முதலியநாமங்களைப் பெறுவர். திருப்பாற் கடல் கடைந்தகாலத்தில் அதில் தோன்றினவிஷத்தைக்கண்டத்தில் அடக்கித் தேவரைக்காத்தருளினமையால் நீலகண்டன், காளகண்டன் முதலிய நாமங்களைப் பெறுவர். அந்தக்காலத்திற்றானே உண்டான சந்திரனைச் சடையில் தரித்தமையால் சந்திரசேகரன், சந்திரமௌலி முதலிய நாமங்களைப் பெறுவர். மார்க்கண்டனைகாக்கும்பொருட்டு யமனை உதைத்தருளினமையாலும் காலவரையறைக்கப்படாத அனாதி நித்தியராதலினாலும் காலகாலன் காலாந்தகன் முதலிய நாமங்களைப்பெறுவர். இந்தச் சிவபிரானை மகாலிங்கம் அர்த்தநாரீசுவரர், நடேசர் முதலிய இருபத்தைந்து மூர்த்தத்திலே தியானித்து வழிபடுவர். இவருக்குச் சத்தி உமாதேவியார் எனப்படுவர்.

இருபத்தைந்து மூர்த்திகளாவார், லிங்கமூர்த்தி, சுகாசனமூர்த்தி, உமாசமூர்த்தி, கல்யாணசுந்தரமூர்த்தி, அர்த்தநாரீசுவரமூர்த்தி, சோமாஸ்கந்தமூர்த்தி, சக்கரப்பிரதானமூர்த்தி, திரிமூர்த்தி, அர்த்தாங்கவிஷ்ணுமூர்த்தி, தக்ஷிணாமூர்த்தி, பிக்ஷாடனமூர்த்தி, கங்காளமூர்த்தி, காமசம்ஹாரமூர்த்தி, காலாரி, ஜலந்தராரி, திரிபுரசம்ஹாரமூர்த்தி, சரபமூர்த்தி, ஏகபாதமூர்த்தி, வைரவமூர்த்தி, விருஷபாரூடமூர்த்தி, நடராஜமூர்த்தி, கங்காதரமூர்த்தி, அக்குரூரன் தம்பி.

சிவன்வேம்பு - சிவனார்வேம்பு.

சிவன்றேகம் - காசிமீர்ப்படிகம்.

சிவா-கடுக்காய், கீழ்காய்நெல்லி, நெல்லி, பங்கம்பாளை, வன்னிமரம், வெறுமை.

சிவாகமம் - பதிநூல்.

சிவாக்கிரயோகி-இவர்தஞ்சாவூரிலே சரபோஜி மகாராஜாவுடைய சபையிலே மணவாளமுனியென்னும் வைஷ்ணவ சிரேஷ்டரோடு பதினேழு நாள்வரையில் அவர்கடாவியவினாக்களுக்கெல்லாம் ஏற்றவாறு விடையளித்துச் சிவபரத்துவம் நாட்டி வரும்போது பதினேழாநாளிரவு சிவாக்கிரயோகி எழுந்தருளியிருந்தமடத்திற் றீக்கொளுவினார்கள். அம்மடம்முழுதுஞ் சாம்பராகியும் சிவாக்கிரயோகி சிறிதும் வருந்தாது நிஷ்டையிலிருந்தனர், அதனைக் கேள்வியுற்ற சரபோஜி அம்மடத்திற்குத் தீயிட்டவர்களையெல்லாம் அக்கினிக்கிரையாக்கினார். சிவாக்கிரயோகிகள் செய்த நூல்கள் சிவஞானபோதபாஷியம், சித்தாந்ததீபிகை, தத்துவதரிசனம், பாஞ்சராத்ராசபேடிகை என்பவைகளாம்.

சிவாட்சம்-உருத்திராக்கம்.

சிவாதரம் - மரக்கொம்பு.

சிவாராதி - நாய்.

சிவாருகம் - ஆலமரம்.

சிவார்ச்சனை - சிவாற்சனை.

சிவாலயமுனிவர்-சபாநாதர் அருளால் அகஸ்தியரை யடைந்து அகஸ்தியத்திரட்டு என்னும் தேவாரப்பதிகம் இருபத்தைந்து பெற்று அவற்றைக் கிரமமாகப் பாராயணம் பண்ணித் திருவருள் பெற்றவர்.

சிவாலயம்-சிவன்கோயில், செந்துளசி.

சிவாலு - நரி.

சிவாலேயம் - சிவாலயம்.

சிவாற்சனை - சிவபூசை.

சிவானந்தவல்லியம்மை - திருக்கோவலூர் குரட்டத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் திருநாமம்.

சிவானந்தலகரி-சங்கராசாரிய சுவாமிகள்செய்த ஒருநூல்.

சிவானீ - பார்வதி, சிவசத்தி.

சிவானி - துர்க்கை.

சிவானுபவம் - சிவபோகம்.

சிவிரம் - சாதிக்காய்.

சிவிகை - தண்டிகை, பாண்டில் பூண்டவூர்தி.

சிவிங்கி-ஒருபட்சி, ஒருமிருகம் ஒருமீன்.

சிவிடு-சிறிசு, முந்நூற்றறுபது நெல்லுக் கொண்டது.

சிவியார் - ஒருசாதியார்.

சிவிரதம் - சிவிகை.

சிவிரம் - அரசிருக்கை, படை.

சிவிறி-நீர்வீசுந்துருத்தி, பெருந்துருத்தி, விசிறி.

சிவுகம் - தாடை.

சிவேதன்-கனகவிஜயற்கு நண்பன்.
சிவேதை-சிவதை, சீந்திற்கொடி, தெகு, பகன்றை.
சிவேரெனல் - சிவப்புகிறக்குறிப்பு.
சிவை - ஆணரி, உலே, உலேத்துருத்தி, ஓரளவு, துர்க்கை, நரி, நெல்லிக்காய், பார்வதி, புத்தன்ருய், மூக்கு, வேர், அங்கிரசன்பாரி.
சிவைகத்துவம்-சிவனுஞ் சீவனுமொன்ருயிருப்பது.
சிவைக்கியம்-சிவனுஞ்சீவனு மைக்கமாயிருத்தல்.
சிவைபாகன்-பார்வதியை யிடப்பாகத்திலுள்ளவன்.
சிவ்வல் - கடற்பாசி.
சிளுசிளுத்தல், சிளுசிளுப்பு, சிளுசிளெனல் - ஒலிக்குறிப்பு, பதனழிவு.
சிளுபிளுத்தல் - ஒலிக்குறிப்பு, நொதுநொதுத்தல்.
சிள்வண்டு, சிள்வீடு, சிள்ளீடு - சில்வண்டு.
சிள்ளுபிள்ளு - கம்பலே.
சிறகடி - சிறகடித்தல்.
சிறகர் - இறகு.
சிறகாற்றல் - சிறகடித்தல்.
சிறகாற்றுதல்-சிறகு, விரித்துலர்த்தல், புள்ளெழச் சிறகுவிரித்தல்.
சிறகி - ஒரு நீர்வாழ்பறவை, ஒருமீன்.
சிறகு-இறகு, பக்கம், பனைமடலிற்பாதி.
சிறகுகதவு-இருபுறத்து நிலேயினுமிடுங்கதவு.
சிறகுகுடில் - சிறகோலேயில் வேய்ந்த சிற்றில்.
சிறகுகோதுதல், சிறகுதெரித்தல், சிறகுலர்த்தல் - சிறகையலகால்வகிர்தல், சிறகையுலர்த்தல்.
சிறகை - ஒருபுள்.
சிறகொதுக்குதல்-சிறகைச்சுருக்குதல்.
சிறக்கணித்தல் - உபேட்சைசெய்யல், கடைக்கண்ணுற் பார்த்தல், குறைத்தல், சிறுமையாகவெண்ணுதல், சுருக்குதல்.
சிறக்கணிப்பு, சிறங்கணிப்பு - கடைக்கண்பார்வை, குறைகை, சுருங்குகை.
சிறங்கித்தல் - கணிசக் குறைவுபண்ணல், கைநிறையவள்ளுதல்.
சிறங்கை - கைநிறைந்தவளவு.
சிறத்தல்-அருமை, சிறப்பாதல், சிறப்பு, திறப்படல், மிகுதல், மேன்மைப்படல்.
சிறந்தகற்பம் - நாகபாஷாணம்.
சிறந்தோர்-அழகுள்ளோர், உறவோர், துறந்தோர், பெருமையிற்சிறந்தோர்.
சிறப்பகத்திணே - அகத்திணே வகையினென்று, பொருள்களைச் சிறப்பித்துச் சொல்லுதல்.
சிறப்பாங்கல் - குருந்தக்கல்.
சிறப்பித்தல்-அலங்கரித்தல், கனப்படுத்தல், புகழ்தல்.
சிறப்பிலாதாள் - மூதேவி.
சிறப்பில்சீர் - வகையுளியுள்ளசீர்.
சிறப்பில்லாதாள், சிறப்பில்லாள் - மூதேவி.
சிறப்பு - அருமை, அலங்காரம், அழகு, உயர்ச்சி, ஒன்றற்கேயுரியது, சுபம், மகிமை, மிகுதி, மேன்மை, வரிசை, விசேடம், வேடிக்கை.
சிறப்புச்சூத்திரம்-ஒன்றிற் குரித்தாய்ச் சொல்லுஞ் சூத்திரம்.
சிறப்புடைச்சீர்-வகையுளியில்லாச் சீர்.
சிறப்புப்பாயிரம் - நூற்பெயருங்காரணமும் ஆக்கியோன்பெயரும் அளவும் பயனு முரைப்பது.
சிறப்புப்பேர் - ஒன்றற்கே யுரித்தாய் வரும் பெயர்.
சிறப்பும்மை-உயர்வுப் பொருடரு மும்மை, (உ-ம்) அரசனும் பொய்சொன்ஞன்.
சிறப்புருவகம் -உருவகவலங்காரத்தொன்று; அது ஒரு பொருளை யெடுத்ததற்குச் சிறந்த வடைகளை யுருபித்தவற்ரு னுருவகமாக்கி யுரைப்பது.
சிறப்புலிநாயனர் - சிவனடியார்களைச் சிவனெனக்கொண்டுஅவர்களைஅன்போடு திருவமுது செய்வித்து அவர்களுக்குவேண்டுந்திரவியங்கொடுத்து வழிபட்டுவந்த திருவாக்கூர்ப் பிராமணராகிய பக்தர்.
சிறப்புவிதி - ஒன்றற்குரிய முறை.
சிறப்பெழுத்து - அவ்வவ்பாஷைக்குமாத்திரமுரியதாய் வழங்குமெழுத்து.
சிறப்பை - மரமணி.

சிறப்போகாரம் - சிறப்புப் பொருடரு மோகாரம் (உ-ம்) ஒஓ பெரியன்.
சிரும்பி - அட்டாலே.
சிரும்பு - சிருய், சிறம்பென்னேவல்.
சிரும்புதல்-உராய்ஞ்சல், தழும்புபடுத்தல்.
சிருய்த்தல் - சீத்தல்.
சிருய்த்துக்குச்சி - ஒருபூடு.
சிருர் . சிறுவர்.
சிறிசு - கொஞ்சம், சிறியது.
சிறிட்டம் - வெள்ளிலோத்திரம்.
சிறிது - சிறிசு.
சிறியசிந்தையர் - அற்பமானமுடையவர் கீழ்மக்கள்.
சிறியதகப்பன் - தந்தைபின்னேன்.
சிறியதாய் - தாயின் றங்கை.
சிறியபிதா - தந்தைபின்னேன்.
சிறியத்தினி - உத்தாமணி.
சிறியமாதா - தாயின் றங்கை.
சிறியமாத்தி - சிற்றகத்தி.
சிறியர் - அற்பர், கீழ்மக்கள், குறள்வடிவோர்.
சிறியாணங்கை - ஒருசெடி.
சிறியின்புட்பம் - வெண்டாமரை.
சிறியோர் - கீழ்மக்கள், குள்ளர்.
சிறிவில் - அகிலமரம்.
சிறீ-ஓரிராகம், திரு, தெய்வத்தன்மை, பெண்.
சிறீகண்டன் - சிவன்.
சிறீகாம் - இலட்சுமீகாம்.
சிறீகாந்தன் - விட்டுணு.
சிறீசைந்தி - விட்டுணுவின்திருநாளில் ஒன்று.
சிறீதரன் - சீதரன்.
சிறீநிவாசன் - திருமால்.
சிறீபதி - விட்டுணு.
சிறீபலம் - வில்வம்.
சிறீமது - இலட்சுமீகரமான, தெய்வீகமான.
சிறீமான் - செல்வவான், திருமால்.
சிறீமுக - சிமுக.
சிறீராகம் - ஓரிராகம்.
சிறீலிங்கம் - பெண்குறி, பெண்பால்.
சிறீவச்சம் - திருமால், மார்பின்மறு.
சிறீவதி - பாக்கியவதி.
சிறு - அற்பமான.
சிறுஉமரி - சிற்றுமரி.
சிறுக - அற்பமாய்.
சிறுகடலாடி - நாயுருவி.
சிறுகடுகு - ஒருகடுகு.
சிறுகண்ணுகம் - ஒருநாகம்.
சிறுகம்மான்பச்சரிசி-சிற்றிலேப் பாலாவி.
சிறுகல் - சிறுகுதல்.
சிறுகல்லூரி - ஒருமருந்து.
சிறுகளா - ஒருமரம்.
சிறுகளி - ஒருசெடி.
சிறுகாஞ்சொறி } ஒருகொடி.
சிறுகாஞ்சோன்றி }
சிறுகாடு - தூற்றுக்காடு.
சிறுகாப்பியம் - பெருங்காப்பியம் போன்றிருந்துஞ் சிலகுறைபாடுள்ளபொருட்டொடர் நிலைச்செய்யுள்.
சிறுகாய் } சாதிக்காய்.
சிறுகாரிடம் }
சிறுகாலே - சிறுவயது, பிராதக்காலம்.
சிறுகால் - காவட்டம்புல், தென்றல்.
சிறுகாற்று - மிருதுவாக வீசுங்காற்று.
சிறுகாணுவாழை - ஒருபூடு.
சிறுகிடைச்சி - ஒருசிடைச்சி.
சிறுசிண்ணம் - சிறுவட்டில்.
சிறுகிராமம்-குடிநூறுகொண்ட குறிச்சி.
சிறுகிழங்கு - ஒருகிழங்கு.
சிறுகீறை - அறைக்கீறை, ஒருகீரை.
சிறுகு - இடைஞ்சல், சிறுகென்னேவல், துன்பம்.
சிறுகுடி - குறிஞ்சிநிலத்தூர், சிறுகுடும்பம், சிற்றில்.
சிறுகுடில் - சிற்றில்.
சிறுகுதல் - குறைதல், சினத்தல்.
சிறுகுரங்கு - ஒருகுரங்கு.
சிறுகுரு - உவர்மண்.
சிறுகுரும்பை - ஒருநெல்.
சிறுகுழி - சிறுகோனீளமகலங்கொண்டது.
சிறுகுறடு - ஒருகுறடு.
சிறுகுறட்டை - ஒருபூடு.
சிறுகுறிஞ்சா - ஒருகுறிஞ்சா.
சிறுகுறிஞ்சி - நேர்வாளம், புளியாரை.
சிறுகொடி - ஒரு கிழங்குக்கொடி, ஒருதுவசம்.
சிறுகொட்டைக்காந்தை - அட்டாதசமூலத்தொன்று.
சிறுகொம்மட்டி - ஒருகொம்மட்டி.
சிறுகொன்றை - ஒருகொன்றை.
சிறுகோல்-நாலுமுழங்கொண்டகோல்.
சிறுக்கன் - வாலிபன்.
சிறுக்கி-வாலிபஸ்திரீ, வேலைக்காரப்பெண்.
சிறுக்குதல் - கோபித்தல், சிறிதாக்கல்.

சிறுசண்பகம் - ஒருமரம்.
சிறுசின்னம் - ஒருகுழல்.
சிறுசின்னி - ஒருசெடி.
சிறுசெய் - பாத்தி.
சிறுசெருப்படி - ஒருபூடு.
சிறுசொல் - பழிச்சொல்.
சிறுசோறு - பிள்ளைகள் விளையாட்டுக்குச் சமைக்குஞ்சோறு.
சிறுச்செய் - பாத்தி.
சிறுதக்காளி - மணித்தக்காளி.
சிறுதாரை - நீர்வீசுந் திருத்தி.
சிறுதாளி - ஒருசெடி.
சிறுதானியம் - புன்முனியம்.
சிறுதிப்பிலி - ஒருதிப்பிலி.
சிறுதுடி - ஒருபறை.
சிறுதுத்தி - ஒருபூடு.
சிறுதுருமம் - வெடியுப்பு.
சிறுதுளசி - ஒருதுளசி.
சிறுதூறு - சிறுசெடி, தூற்றுக்காடு.
சிறுதென்றல் - இளஞ்சோழகம்.
சிறுதேக்கு - ஒருமரம்.
சிறுதேங்காய் - சமுத்திராப்பழம்.
சிறுதேர் - பிள்ளைக்கவியிலோர் பகுதி, விளையாட்டுத்தேர்.
சிறுதேவபாணி - இசைப்பா வகையுளொன்று.
சிறுதேன் - கொசுகாந்தேன்.
சிறுத்தல்-சிறிதாதல், சிறிப்பனவாதல், சினத்தல்.
சிறுதுத்தி - ஒருதுத்தி.
சிறுத்தை - சிறுபுலி.
சிறுத்தொண்டநாயனுர் } சிவபிரான் பரஞ்சோதியார் } வைரவவேடங்கொண்டு சென்றுநம்மைஅமுது செய்விப்பீரோ வென்று கேட்க, செய்விப்பேனென்றுகூறி வைரவர் கேட்டபடி தமதுஒரேபிள்ளையாகிய சீராளனை வெட்டிக் கறியாகப்பாகம் பண்ணி விருந்திடத் துணிந்தபோது வைரவர் உமது புத்திரனை அழையுமென இப்போது உதவான் எனச் செப்பியும்கேளார் வைரவரை திருப்தி செய்யும்படி வாளாவழைக்க, அப்புத்திரன் உண்மையாகவே வரப்பெற்ற பக்தர். இவர் திருச்செங்காட்டங்குடியில்விளங்கிய பிராமணர்.மனைவி பெயர் திருவெண்காட்டுநங்கை, சிறுத்தொண்டர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் காலத்தவர் என்பது பெரிய புராணத்தாற் றுணியப்படும் 4000 வருஷங்களுக்குமுற்பட்டவர்.
சிறுநாளை - ஒருபூடு.
சிறுநன்னாரி - ஒருபூடு.
சிறுநாகப்பூ - ஒருசரக்கு.
சிறுநாகம் - ஒருமரம்.
சிறுநாரை - இசைநாடகநூல்.
சிறுநார் - கன்னுர்.
சிறுநாவல் ஒருசெடி.
சிறுநிம்பம் - மலைவேம்பு.
சிறுநீர் - மூத்திரம்.
சிறுநெருஞ்சி - ஒருபூடு.
சிறுபகன்றை - ஒருபூடு.
சிறுபசளை - ஒருபசளை.
சிறுபசி - இளம்பசி, காலப்பசி.
சிறுபஞ்சமூலம் - ஒருநூல், கண்டங்கத்தரி, சிறுமல்லி, சிறுவழுதுணை, நெருஞ்சி, பெருமல்லி.
சிறுபண்டரங்கனுர்-இடைச்சங்கப் புலவருளொருவர்.
சிறுபதம் - சிறுவழி.
சிறுபதி - சிறுகிராமம்.
சிறுபயறு - ஒருபயறு.
சிறுபயர் - இளம்பயிர், புன்பயிர்.
சிறுபறை - ஒருபறை, பிள்ளைக்கவியிலோர் பகுதி.
சிறுபாணற்றுப்படை-இதுகடைச்சங்கநூல்களில் ஒன்றாகிய பத்துப்பாட்டுளொன்று. பத்துப்பாட்டுகள் மூன்றுவது பிரபந்தமாகிய இது ஏறுமாநாட்டு நல்லியக்கோடன் மீது கடைச்சங்கப்புலவரில் ஒருவராகிய நல்லூர் நத்தத்தனுர் பாடியது, தன்யாழ்வன்மைகாட்டிப் பரிசுபெற விரும்பிய பாணனை நல்லியக்கோடன் மாட்டுச் செலவிடுத்தமையின் ஆற்றுப்படையாயிற்று.
சிறுபாலடை - ஒருபூடு.
சிறுபாலி - கள்ளி.
சிறுபான்மை - சிறுவழக்கு.
சிறுபிராயம் - இளம்பிராயம்.
சிறுபிள்ளை - இளம்பிள்ளை.
சிறுபுலியூர்-காவிரியின் தென்கரையில் உள்ள விஷ்ணுஸ்தலம்.
சிறுபுள்ளடி - ஒருபூடு.
சிறுபுறம் - பிடரி.

சிறுபூளை - ஒருபூடு.
சிறுபெண் - இளம்பெண்.
சிறுபொழுது - ஐந்திணைக்குரிய முதற் பொருளினொன்று. அது மாலை - யாமம்-வைகறை-ஏற்பாடு - காலை - நண்பகல், இவையன்றி எற்பாடு விலக்கி யைம்பொழுதாய்க் கூறுவாருமுளர், பத்து நாழிகை கொண்ட நேரம் - அது - காலை உச்சி யாமம் அத்தசாமம் வைகறை.
சிறுபோகம் - புன்மயிர்போகம்.
சிறுப்பம் - சிறுபிராயம்.
சிறுப்பனை - எளிமை, குறைவு.
சிறுப்பித்தல் - கணிசக்குறைவுபடுத்தல், சிறுகப்பண்ணுதல்.
சிறுமட்டம் - இளமட்டம், குள்ளம், சிற்றளவு.
சிறுமணி-சிர்நெல், சதங்கை.
சிறுமணுக்கொட்டுவான் - ஒருநீர்ப்புள்.
சிறுமலை - குன்று, பாண்டியநாட்டுள்ளதோர் மலை.
சிறுமல் - நீர்மீட்டான்.
சிறுமல்லி - பஞ்சமூலத்தொன்று, தசமூலத்து மொன்று.
சிறுமாரோடம் - செங்கருங்காலி.
சிறுமி - புத்திரி, பெண்.
சிறுமியம் - சேறு.
சிறுமுட்டியல் - சுத்தியல்.
சிறுமுதுக்குறைவி - சிறிய பருவத்தே பெரிய அறிவினையுடையாள்.
சிறுமுள்ளி - ஒருமுள்ளி.
சிறுமூலகம் } ஒருகிழங்கு, திப்பிலி.
சிறுமூலம் }
சிறுமேதாவியர் - இவர் கடைச்சங்கப்புலவர்களில் ஒருவர்.
சிறுமை-அற்பம், இடைஞ்சல், இளமை, எளிமை, கீழ்மை, குறைவு, தரித்திரம், துன்பம், நோய், அவித்தை.
சிறுமைத்தனம் - இடைஞ்சல், எளிமை, தரித்திரம்.
சிறுமைப்படுதல் - இடைஞ்சற்படுதல், எளிமைப்படுதல், தரித்திரப்படுதல்.
சிறுமையர் - கீழ்மக்கள்.
சிறுவம் } இளம்பிராயம்.
சிறுவயது }
சிறுவரல் - பாத்தி.
சிறுவரை - அற்பம், காலவிரைவு, சிறுபொழுது.
சிறுவர் - மக்கள்.
சிறுவல் - இளம்பிராயமானது, இளம்பிராயம், குழந்தை.
சிறுவழுதுணை - ஒருசெடி, அது, தசமூலத்தொன்று, சிறுபஞ்சமூலத்து ஒன்று.
சிறுவள்ளி - ஒருபூடு.
சிறுவன் - இளையோன், மகன்.
சிறுவாடு - சொற்பதேட்டம்.
சிறுவி - பெண், மகள்.
சிறுவிதி - தக்கன்.
சிறுவிதிமகஞ்சிதைத்தோன் - வீரபத்திரன்.
சிறுவிரல் - கனிட்டிகவிரல்.
சிறுவிலை - குறுவிலை, பஞ்சம்.
சிறுவீடு - சிற்றில்.
சிறுவுமரி - சிற்றுமரி.
சிறுவெள்ளரி - ஒருவெள்ளரி.
சிறை-அடிமை, அழகுள்ளவள், இடம், இறகு, கட்டுப்பாடு, காமம், சிறைச்சாலை, தடை, நீர்க்கரை, பக்கம், மதில், விபசாரி.
சிறைக்கணித்தல் - கடைக்கண்ணாற் பார்த்தல், புறக்கணித்தல்.
சிறைக்களம் } சிறைச்சாலை.
சிறைக்கூடம் }
சிறைசெய்தல் - அடிமைப்படுதல், கட்டுப்படுத்தல்.
சிறைச்சாலை - மயில், வீடு.
சிறைச்சோறு - காவலிலகப்பட்டவர்களுக் கன்னங்கொடுத்தல், அது அறம் முப்பத்திரண்டினொன்று.
சிறைநீக்குதல் - சிறைமீட்குதல்.
சிறைபிடித்தல் - அடிமையாகப் பிடித்தல்.
சிறைப்படுதல் - அடிமைப்படுதல், தடைப்படுதல்.
சிறைப்படுத்தல் - அடிமைப்படுத்தல், காவலுக்குட்படுதல், தடைப்படுத்தல்.
சிறைப்பாடு - அடிமைத்தனம், கட்டுப்பாடு, தடை.
சிறைமீட்குதல் - இட்டமாக்குதல்.
சிறைமீளுதல் - இட்டமாக்கல், இட்டமாதல்.
சிறையிருப்பு - அடிமைத்தனம்.
சிறையெடுத்தல் - சிறைமீட்டல், பெண்கொள்ளல்.
சிறைவிடுதல் } சிறையிருப்பை நீக்குதல்.
சிறைவிடுத்தல் }

சிறைவைத்தல் - அடிமைப்படுத்தல், காவலில் வைத்தல்.
சிற்குணம் - பரிசுத்தகுணம்.
சிற்குணன் - கடவுள்.
சிற்குணாலயம் - உபநிடதத்தொன்று.
சிற்சத்தி - பஞ்சசத்தியிலொன்று, அது உயிர்க்கொளியாய் நிற்பது.
சிற்சபை - ஞானசபை.
சிற்சிவிர்ப்பான் - ஒரு வைசூரிநோய்.
சிற்சோமான் - சீர்பந்தபாஷாணம்.
சிற்பசாத்திரம் - கோயில்முதலியனகட்டுஞ்சாத்திரம், அது கலைஞான மறுறுபத்து நான்கிலொன்று.
சிற்பசாலை - சிற்பவேலைவீடு.
சிற்பத்தொழில் - இல்லமெடுத்தல் முதலிய கற்சிற்பவேலை.
சிற்பம் - அறுதொழிலிலொன்று, அற்பம், சிறிசு, சிற்பநூல், நுண்மை.
சிற்பரகம் - சிற்பனை.
சிற்பரக்கூர்மை - கந்தகவுப்பு.
சிற்பரம் - கடவுள், பிரமம்.
சிற்பரவுப்பு - கெந்தகலவணம், சிந்துலவணம்.
சிற்பரன் - கடவுள், சிவன்.
சிற்பரி - பொன்னிமிளை, வெண்காரம்.
சிற்பரை-சவுக்காரம், கிமிளை, பராசத்தி.
சிற்பர் - சித்திரகாரர், சிற்பாசாரியர்.
சிற்பாசாரி - கற்சிற்பன்.
சிற்பியர் - கம்மாளர், சிர்பர்.
சிற்பொருள் - சித்துப்பொருள்.
சிற்றகத்தி - ஒருமரம்.
சிற்றகப்பை - ஒரு அகப்பை.
சிற்றடி - சிறுகாற்சுவடு, சிறுகால்.
சிற்றடிப்பாடு - சிறுவழி.
சிற்றடியார் - குற்றேவல்செய்வோர்.
சிற்றணி - சிறுபாத்தி.
சிற்றண்டம் - இருவகை யண்டத்துள் ஒன்று, அது உலாம்பு, கோழிமுட்டை.
சிற்றப்பன் - தந்தைக்கிளையோன்.
சிற்றமட்டி } ஒருசெடி.
சிற்றமுட்டி } ஒருசெடி.
சிற்றமபலம் - சிதம்பரம், சிதாகாசம்.
சிற்றம்மான்பச்சரிசி - சிற்றிலைப் பாலாவி.
சிற்றரத்தை-ஒருசெடி, ஒருமருந்து.
சிற்றருக்கன் - ஓரருக்கன்.
சிற்றவை - ஒருகோடி.
சிற்றறிவு - சொற்பவறிவு, புல்லறிவு.
சிற்றறுகு - ஓரறுகு.
சிற்றன்னை - சிறியதாய்.
சிற்றாடை - சிறுபிள்ளையுடுப்பு.
சிற்றாதாயம் - கள்ளச்சிறுதேட்டு.
சிற்றாத்தாள் - சிறியதாய்.
சிற்றாமணக்கு - ஓராமணக்கு.
சிற்றாமுடி - ஒருசெடி.
சிற்றாயி - சின்னாயி.
சிற்றாலவட்டம் - விசிறி.
சிற்றாள் - ஏவலாள்.
சிற்றி - சிறியதாய், பசரி.
சிற்றிணி - சிற்றணி.
சிற்றிதழ் - அகவிதழ்.
சிற்றிரு - கிலுகிலுப்பை.
சிற்றிரை - சாப்பாடு, சிறுவிலங்கினுணவு, சிற்றுண்டி.
சிற்றிலக்கம் - கீழ்வாயிலக்கம்.
சிற்றிலை-கடுமரம், குன்றி, நெய்ச்சிட்டி.
சிற்றிலைப்பாலாவி - ஒருபூடு.
சிற்றில் - குடிசை, சிலை, பிள்ளைக்கவியினோர் பகுதி, பிள்ளை விளையாட்டியினொன்று, அது சிற்றில் சிதைத்தலும் சிற்றில் புனைதலுமாம்.
சிற்றிளைப்பு - மெல்லிளைப்பு.
சிற்றினஞ்சேர்தல் - துன்மார்க்கருடன் கூடுதல்.
சிற்றினம் - ஆகாதகூட்டம்.
சிற்றினிப்பு - சுள்ளிட்டவினிப்பு.
சிற்றின்பம் - இலௌகீகவின்பம்.
சிற்றீரம் - அற்பவீரம்.
சிற்றுணவு - பலகாரவகை.
சிற்றுணர்வு - சிற்றறிவு.
சிற்றுண்டி - அப்பவருக்கம் ஒருபண்ணிகாரம், பலமூலசாகவுணா, பொறிக்கறி.
சிற்றுமரி - ஒருபூடு.
சிற்றுமல் - கையுமல்.
சிற்றுமல்லிகை - ஒருமல்லிகை.
சிற்றுயிர் - அற்பசீவபிராணி.
சிற்றுரு - குறள், சிறுதோணி, சின்னவுருவு.
சிற்றுலாத்து - பதமயானநடை.
சிற்றுளி - சிறுவுளி.
சிற்றுள்ளான் - ஒருள்ளான்.
சிற்றூர் - குறிஞ்சிநிலத்தூர்.
சிற்றூரல் } சின்ன நீரூற்று.
சிற்றூற்று } சின்ன நீரூற்று.

சிற்றெண் - கீழெண், குறளடிபதினு ருன் வருவது.
சிற்றெள் - ஒரெள்.
சிற்றெறும்பு - ஒரெறும்பு.
சிற்றொழுங்கை - கையொழுங்கை.
சிற்றேலம் - ஒரேலம்.
சிற்றேலை - கவிப்பேலோர்பேதம்.
சினகரம் - கோவில்.
சினத்தல் - கோபித்தல்.
சினத்திலெழுந்தீ - உயிர்முத்தியினென்று.
சினந்தவிர்ந்தோன் - அருகன்.
சினப்பு - கோபம், பரு, விம்முதல்.
சினம் - கோபம், பரு, விம்முதல்.
சினவரன் - அருகன், புத்தன்.
சினவர் - பகைவர்.
சினவுதல் - கோபித்தல், சினக்குறிப்பு, பொருதல்.
சினன் - அருகன், சருவஞ்ஞன், திருமால், புத்தன், விருத்தன்.
சிஞ - பங்கம்பாலை, வட்டத்திருப்பி.
சிஞடி } மூக்கிரட்டை.
சிஞடிகா }
சிஞ்சு - செத்தல், மெலிவு
சிஞவில் - தும்பை.
சினி - கர்கன்புத்திரன். கார்க்கியன்தந்தை, யுதாசித்துபுத்திரன், அநமித்திரன்புத்திரன், விரேதன்புத்திரன்.
சினீவாலி - அமாவாசிக்குமுதனாளிரா.
சினேகசத்துரு - சிநேகிதன்போல நடக்கும் சத்துரு.
சினேகம் - எண்ணெய்,நட்பு,அதுபுண்ணியமேழினுென்று, பட்சம்.
சினேகி - சினேகிதன், சினேகிதி.
சினேகிதம் - நட்பு.
சினேகிதர் - மித்துருக்கள்.
சினேகிதி - அன்புள்ளவள்.
சினேகித்தல் - நட்பாயிருத்தல்.
சினேகிப்பு - சினேகம்.
சினேசதாரு - சாதிக்காய்மரம்.
சினேசம் - சாதிக்காய்.
சினேந்திரன் - அருகன், புத்தன்.
சினை - உறுப்பு, கருப்பம், கொழுப்பு, சினையென்னேவல், பூவரும்பு, மரக்கொம்பு, முட்டை, மூங்கில்.
சினைகொள்ளுதல் - அரும்புதல், கருக்கொள்ளல், கொழுக்குதல், புளகப்பொடிப்புக் கொள்ளுதல்.

சினைதல் } சினைகொள்ளல்.
சினைத்தல் }
சினைபருவம் - கருக்கொள்ளும் பருவம்.
சினைப்பகுபதம் - ஒருபகுபதம் (உ-ம்) கண்ணன்.
சினைப்படுதல் - சருக்கொள்ளுதல்.
சினைப்படுதல் - சினைபருவம்.
சினைப்பு - கொழுப்பு,சினைத்தல்,வியர்க்குரு.
சினைப்பெயர் - உருப்புக்காரணமாய் வரும்பெயர், (உ-ம்) முடவன்.
சினைமுதற்பெயர் - சினையடுத்து வருமுதற்பெயர்,(உ-ம்) முடக்கொற்றன்.
சினையாகுபெயர் - சினையான்வந்த பெயர் (உ-ம்) வெற்றிலைநட்டான்.
சினைவினை - உருப்புப்பொருளது தொழில், சினையின்ருெழிலைக் காட்டி நிற்கும் வினைச்சொல்,(உ-ம்)காலொடிந்தது.
சின் - அசைச்சொல் (உ-ம்) கண்ணும் படுமோ என்றிசின்யானே, ஞானம்.
சின்மதநூல் - சீவகசிந்தாமணி.
சின்மந்திரன் - அறிவுவடிவன்.
சின்மயம் - ஞானமயம்.
சின்மாத்திரம் - ஆன்மாவின் சயதன்மை.
சின்முத்திரை - ஞானமுத்திரை.
சின்மூர்த்தி - கடவுள்.
சின்மொழி - இழிவானசொல்.
சின்மை - சிறிசாந்தன்மை.
சின்னக்காசு - ஒருகாசி லெட்டிலொன்று.
சின்னச்சலவாதை - சிறுநீர்கழித்தல்.
சின்னஞ்சிறியது - மிகச்சிறியது.
சின்னட்டி - ஒருபூடு, சின்னன்.
சின்னத்தனம் - எளியதன்மை.
சின்னபின்னம் - கண்டதுண்டம்.
சின்னப்படுதல் - அற்கீர்த்தியடைதல், பங்கப்படுதல்.
சின்னப்பன் - சிற்றப்பன்.
சின்னப்பூ - ஒருபிரபந்தம், அது நேரிசைவெண்பாவாற் றசாங்கம்வைத்து நூறு தொண்ணூறு எழுபது ஐம்பது முப்பது பாட்டுப் பாடுவது.
சின்னமுத்து - ஒரு குருநோய்.
சின்னமேளம் - மத்தளம்.
சின்னம் - அடையாளம், ஈனம், ஒருகாசு, காளம்,சங்கு,சிறுமை, தட்டு, துண்டு, பராகம், பெண்குறி, முறம், விசித்திரம்.

சின்னம்மை - சின்னமுத்து.
சின்னயோகம் - அடையாளம்.
சின்னல் - வேடிக்கை.
சின்னவைசூரி - சின்னமுத்து.
சின்னன் - சிறியது.
சின்னன் - ஈனன், சிறிசும்பெரிசும்.
சின்னுனா - சிற்றப்பன்.
சின்னுபின்னம் - பொடிப்பொடியானது.
சின்னுயி - சிறியதாய்.
சின்னுருகம் - சீந்தில்.
சின்னி - இலவுங்கம், ஒருசெடி.
சின்னிவிரல் - சிறுவிரல்.
சின்னீரவின்பம் - சிற்றின்பம்.
சின்னீர் - அற்பநீர், சிறுநீர், நிலையாமை.
சின்னை - ஒருமீன்.
சின்னோக்கு - சிறுபார்வை.
சின்னோய் - சிலநோய்.

---

## சீ



சீ - அடக்கம், இகழ்ச்சிக்குறிப்பு, இலக்குமி, இலக்குமீகாம், காந்தி, சம்பத்து, சரச்சுவதி, சீதல், சீயென்னேவல், நித்திரை, பார்வதி, பிரகாசம், பெண், விடம், விந்து.
சீகண்டன் - சிவன்.
சீகம் - தமரத்தை.
சீகரம் - இலக்குவீகாம், கடற்றிரை, காகம், கவரி, திவலை, புனற்றிரை, மழை, மழைத்துளி, மழைத்தூவல்.
சீகரி - நீர்த்திவலை.
சீகர் } பஞ்சலோகம்.
சீகா
சீகாம் - ஒருபண்.
சீகாழி - ஒருசிவஸ்தலம்.
சீகாளத்தி - இதுதொண்டைநாட்டிலுள்ள சிவஸ்தலம். இது திருக்காளத்தி எனவும்படும். சிலந்தியும் பாம்பும் யானையும் பூசித்து முத்திபெற்ற தலமாதலின் இப்பெயர்பெற்றது. கண்ணப்பரும் நக்கீரரும் முத்திபெற்றதும் இத்தலத்திலேயே, இது வேங்கடகத்திற்கு கிழக்கேயுள்ளது.
சீகு - துடைப்பம், புல்.

சீக்கரம் - சீக்கிரம்.
சீக்கல் - சீழ்க்கை.
சீக்காச்சா - நாய்ப்புடோல்.
சீக்காய் - ஈசற்கொட்டுகை, சீழ்க்கை, பழாதகாய்.
சீக்காய்நிறம் - வெளிறினநிறம்.
சீக்கிரகதி - மிகுவிரைவு.
சீக்கிரம் - வாயு, விரைதல்.
சீக்கிரகேந்திரம் - சூரியனுக்குங் கிரகத்திற்குமுள்ள தூரம்.
சீக்கிரசேதனம் - நாய்
சீக்கிரதை - சீக்கிரம்.
சீக்கிரபத்திரம் - முருங்கைமரம்.
சீக்கிரம் - அம்பு, காரம், குரூரம், கோபம், விரைவு.
சீக்கிரான் } உசிலமரம்.
சீக்கிரி
சீக்கிரியம் - சீக்கிரம், பூனைச்சண்டை.
சீக்கிரியன் - சிவன், திருமால், விரைந்து செல்வோன்.
சீக்கிரியான் - உசிலமரம்.
சீக்கு - செத்தை.
சீக்குரு - முருங்கை.
சீக்கூட்டுதல் - சிதல்கொள்ளுதல்.
சீக்கை - ஒருநூல்.
சீசகம் } ஈயம்.
சீசபத்திரம்
சீசம்
சீசா - ஒருகுப்பி.
சீசீ } இகழ்ச்சிக்குறிப்பு.
சீச்சி
சீஷப்பிள்ளை - சீஷன்.
சீஷம் - அசுத்தம், இழிவு, சிக்கனம்.
சீஷர் } மாணாக்கர்.
சீடர்
சீஷன் } மாணாக்கன்.
சீடன்
சீடு - குஞ்சமெட்டுக்கொண்ட நூற்றடு.
சீடை - ஒருகாரம், சடைவு.
சீட்டி - எழுத்துப்புடவை.
சீட்டு - பத்திரிகை.
சீட்டுத்தெரிப்பு - கையுறுதி.
சீட்டுப்போடுதல் - பீலி போடுதல்.
சீட்டுவாங்குதல் - சாதலைக் காட்டுங்குறிப்புச்சொல், சீட்டுப்பெறுதல்.
சீட்டை } முதைக்கொல்லையில்விளைகதிர், விடுகதிர்.
சீட்டைகதிர்

சீணசந்திரன் - தேய்பிறை.
சீணம் - பதனழிவு.
சீணித்தல் - பதனழிதல்.
சீணிப்பு - பதனழிவு.
சீண்டல் - நாறல்
சீண்டறம் - ஊழல், தொந்தரை.
சீண்டிரம் - ஈனவார்த்தை.
சீண்டுதல் - சருவுதல், தொடுதல்.
சீதகந்தம் - வெண்சந்தனம்.
சீதகம் - ஈயம், குளிர்ந்தகாலம், தபா, [தேள்.
சீதகரன் - சந்திரன்.
சீதகன்-சந்திரன், சுக்கிரன், சோம்பன்.
சீதகாத்திரம் - ஒரு சன்னி.
சீதகிரணன் - சந்திரன்.
சீதகிருச்சரம் - மூன்றுநாணீர் பருகி யிருக்குமோர் விரதம்.
சீதகும்பம் - அலரி.
சீதக்கடுப்பு - வயிற்றுக்கடுப்பு.
சீதக்கட்டு - சீதப்பற்று.
சீதசம்பகம் - கண்ணாடி.
சீதசுரம் - குளிர்க்காய்ச்சல்.
சீதபானு - சந்திரன்.
சீதபீரு - மல்லிகைக்கொடி.
சீதபுஷ்பகம் - எருக்கு.
சீதபேதி - ஒருநோய்.
சீதப்பற்று - சீதப்பிடிப்பு.
சீதப்பிரபம் - கருப்பூரம்.
சீதமண்டலி - ஒருபாம்பு.
சீதமயூகம் - கர்ப்பூரம்.
சீதமயூகன், சீதமரீசி } சந்திரன்.
சீதம் - அகில், ஆமம், குளிர்ச்சி, அது உயிர்வேதனையி னென்று, கொடுந் தமிழ் நாட்டினென்று, சந்தனமரம், சீதாங்கபாஷாணம், சிரணித்தது, சோம்பு, நறுவிலி, சீர், பற்பாடகம், மாரிகாலம், மேகம்.
சீதரன்-இலக்ஷுமியை மார்பினுடைய விஷ்ணு.
சீதவழும்பு - ஆமம்.
சீதவற்கம் - அத்திமரம்.
சீதவாதக்கடுப்பு - சலக்கடுப்பு.
சீதவாதம் - குளிர்நோய், சலரோகம், குளிர்ந்தகாற்று.
சீதவாதம் - உத்தாமணி.
சீதளகம் - வெள்ளாம்பல்.
சீதளகாலம் - மழைகாலம்.
சீதளங்காய் கொடிமாதளை.
சீதளப்ரதம் - சந்தநம்.
சீதளம்-ஈரம், குளிர்ச்சி, கோடகசாலை, சந்தனம், தாமரை, துரிசு, பச்சைக் கருப்பூரம், முத்து.
சீதளாதேவி - ஒருசத்தி.
சீதளி - பொன்னாங்காணி.
சீதளை-ஒருநாரத்தை, கொடிமாதளை.
சீதனம் - மகட்குக்கொடுக்கும்பொருள்.
சீதனவோலை - சீதனவுறுதி.
சீதன்-சந்திரன், மந்தபுத்தியுள்ளவன்.
சீதாங்கபாஷாணம் - ஒரு பாஷாணம்.
சீதாங்கனி, சீதாங்களை, சீதாதேவி } இராமன்றேவி.
சீதாத்திரி - இமயமலை.
சீதாபதி - இராமன்.
சீதாரு - கேதருமரம், நகரி.
சீதாலபத்திரம், சீதாளபத்திரம் } தளப்பத்தோலை.
சீதாளம் - தாளிப்பனை.
சீதாளை - தளப்பத்தோலை.
சீதி - குளிர், பாவம், முற்றத்துறத்தல்.
சீதிகை - ஒருவகைப் பாலைமரம்.
சீதீபாவம் - குளிர்ச்சி, மோட்சம்.
சீது - ஈயம், கள், யானைக்கண்மதம்.
சீதுகந்தம் - மகிழமரம்.
சீதுளாய் - ஒருதுளசி.
சீதேவி - இலக்குமி.
சீதேவியார்செங்கழுநீர் - ஒருபூடு.
சீதை - ஜனகன் யாகஞ்செய்துபெற்ற புத்திரி. இராமன்றேவி, அவள்பஞ்ச கன்னிகளிலொருத்தி, உவமை, உழுபடைச்சால், பொன்னாங்காணி, [மது.
சீதோதகம் - குளிர்நீர்.
சீதோத்தமம் - நீர்.
சீத்தலைச்சாத்தனார்-இவர்கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவரே மணி மேகலை யென்னும் நூல்செய்தார். இவர் பிறநூல்களிலே குற்றங்காணு ந்தோறும் தமது தலையே குட்டிக் கொள்ளுத லியல்பாதலினாலே அது காரணமாக உண்டாகிய புண், ஆறப் பெறாத தலையையுடையவர். அது பற்றியே சீத்தலைச்சாத்தனார் என் னும் பெயர்கொண்டார். கண்ணகி யால் மதுரையெரிந்து நிலைகெட்ட

போது இவர் பொருளீட்டும் பொருட்டுச், சேரராஜாவாகிய, செங்குட்டுவன் பார்சென்று மதுரையினிகழ்ந்ததுகூற, செங்குட்டுவன் தம்பி இளங்கோவடிகள் அதனைச் சிலப்பதிகாரமென்னும் பெயராற் பாடினர்.
சீத்தல்-சீக்குதல், சீவுதல், செப்பம்பண்ணல், தூய்தாக்கல், நீக்கல்.
சீத்தா - ஒருமரம்.
சீத்தி - இளப்பம்.
சீத்தியம் - தானியம்.
சீத்தியோஞன் - ஒரு ஓஞன்.
சீத்திரம் - குதம்.
சீத்துப்பூத்தெனல் - சடிந்துகொள்ளுதல், முறுமுறுத்தல்.
சீத்துவம் - சித்தம், செம்பை, திறம்.
சீத்தை - கீழ்மக்கள், சிதம்பல், சீட்டிச்சீலை, பதனழிவு, பீழை, பூரான்பீழை.
சீத்தைக்கண் - பீழைசாகுங்கண்.
சீந்தல் - துளிமழை.
சீந்தில் - ஒரு படர்கொடி
சீந்துதல் - மூக்குசீறுதல், விரும்புதல்.
சீந்தை - சீத்தை.
சீபதி - அருகன், கடவுள், விட்டுணு.
சீபம் - சரகண்டபாஷாணம்.
சீபாதம் - குருவடி. திருப்பாதம்.
சீப்பங்கோரை - ஒருபுல்.
சீப்பாய்தல் - சிதல்வடிதல்.
சீப்பால் - ஈன்றவணிமைப்பால்.
சீப்பிடுதல் - மயிர்சீவுதல்.
சீப்பு - எலும்புக்கோவை, கதவின்ருள், தோளெலும்பு, மயிர்சீவுஞ்சீப்பு, வாழைக்குலைச்சீப்பு, விலாவெலும்பும்.
சீப்புச்சாட்டை - ஒருவிதமீன்.
சீப்புப்பணிகாரம் - அப்பவருக்கத்தொன்று.
சீமாங்கலி - நாவிதன்.
சீமணல் . நாகமணல்.
சீமந்தகம் - சிந்தூரச்சாந்து.
சீமந்தபுத்திரன் - தலைமகன்.
சீமந்தம் - கருப்பந்தரித்து ஆறுமாதம் உச்சிவகிர்ந்து செய்யுமோர்சடங்கு, முதுகுநீரிடுகை.
சீமந்தரேகை - ஓரிரேகை.
சீமந்தனி, சீமந்தினி - ஒரு கற்புடைய பெண்.
சீமாட்டி - செல்வி, தலைவி.
சீமாலிங்கம் - எல்லையடையாளம்.
சீமாலிவாதம் - எல்லைவழக்கு.
சீமாள் - சீமாட்டி.
சீமான் - அருகன், செல்வமுள்ளவன், தலைவன்.
சீமுக - ஏழாவதாண்டு.
சீமுகம் - திருமுகம்.
சீமுதகூடம் - பர்வதம்.
சீமுதம் - நீருண்டமேகம், பிடியன்யானை, மலைமேகம்.
சீமூதவாகனன். இந்திரன், 'தர்மாத்நம் என்கிறஸம்ருதி சங்க்ரஹ நூலாசிரியன்.
சீமூதவாகி - புகை.
சீமூதன், இந்திரன் உழவன், ஓரசுரன். சிவன், துன்புறுவோன், நரகாசுரன், சாரதி.
சீமூதை - இரவு, கொடிமுந்திரிகை.
சீமை-அனுட்டிப்பு, எல்லை, கரை, தேசம், தோண்மேல், வயல்.
சீமைக்கரி - ஒருகரி.
சீமைச்சுண்ணும்பு - ஒரு சுண்ணும்பு.
சீமைத்தக்காளி - ஒரு தக்காளி.
சீமைநெல்லி - ஒருவித நெல்லிமரம்.
சீம்பால் - ஈன்றணிமைப்பால்.
சீயகங்கன் - ஓரரசன்.
சீயக்காய், சீயங்காய் - சீபக்காய்.
சீயம் - எருக்கம்பால், சிங்கம், சிங்கவிராசி, தென்றிசைப்பாலன் குறி.
சீயா - ஒருமரம்.
சீயாக்காய் - அரைப்புக்காய்.
சீயாள் - பாட்டி.
சீயான் - ஒருவகைப்பூரான், மூன்றும் பாட்டன்.
சீயெனல் - இகழ்ச்சிக்குறிப்பு.
சீய்த்தல்-உரிஞ்சுதல், சிறுய்த்தல், சீவுதல், செருக்குதல்.
சீரகக்கோரை - ஒருகோரை.
சீரகச்சம்பா - ஒருநெல்.
சீரகத்தாமர் - வணிகர்.
சீரகத்தாமன், சீரகத்தாரோன் - குபேரன், வணிகன்.
சீரகம் - ஒருசரக்கு, ஒருபயிர், பன்றி.
சீரங்கம் - திரிசிராப்பள்ளியில் ஒருபட்டினம், விட்டுணுதலத்தொன்று.

சிரணம் - கிழங்கு, சமித்தல், சிவாகமமி ருபத்தெட்டினொன்று, பதனழிவு.
சிரணவாடிகை - இடிந்தவீடு.
சிரணன் – விருத்தன்.
சிரணி - ஓமச்செடி, காடு, கூத்தினோர் பேதம், சிறந்தவழகு, சீரணியென் னேவல்.
சிரணித்தல் – சமித்தல், பதனழிதல்.
சிரணை - பழக்கம்.
சிரத்துவசன்-ஒருசந்திரவமிசத்தரசன்
சிரத்துவஜன் - ஜனகன்.
சிரந்தாதி – ஈற்றுச்சீராதியாகப்பாடல்.
சிரபாணி - பலபத்திரன்.
சிரமோடா - காட்டெருமைப்பால், நார் ச்சீலை, விழுதி, வீதி.
சிரம்- இரேகை,இலாமிச்சை;எழுத்து, கலப்பை, காட்டெருமைப்பால், சீ ரை, சூரியன், மலைப்பாம்பு, மரவுரி, மாலை, பால்முடி.
சிரவட்டம் - ஈயம்.
சிரா - கவசம், பலாசு.
சிராங்கம் - கலப்பை, கொழு.
சிராட்டல் – கொண்டாடல், கோதுகு லம்பண்ணல், சிறப்புப்பண்ணுதல்.
சிராட்டு-கொண்டாட்டம்,கோதுகுலம், சிறப்பு, சிறப்புச்செய்தல், சீராட் டென்னேவல்.
சிராட்டுதல் - சீராட்டல்.
சிராபதிதநயை - இலக்குமி.
சிராளன் - சிறுத்தொண்டர்புத்திரன்.
சிரி - பலதேவன், புளியமரம், முக்காடு.
சிரிகை - ஒருவண்டு.
சிரிடம் - தலை, வாகை.
சிரிணப்பன்னம் – வேம்பு.
சிரிணன் - கற்றோன்.
சிரித்தல் - பழகல்.
சிரிய - சிறப்பான.
சிரியர் - அறிஞர்,சிறந்தோர்,நல்லோர், புலவர்.
சிரிவிருக்கம் - புளியமரம்.
சிருகை – வண்டு.
சிருணம், சிருணி - செம்பு.
சிருத்திரம் - உபநிடதம் முப்பத்திரண் டில் ஒன்று.
சிருள் - ஈயம், செம்பு, செல்வம், பஞ்ச லோகம்.
சீரை - சீலை, மரத்தோல், மரவுரி.
சீர் – அழகு,ஒலி,இரைச்சல்,ஒழுங்கு, காவுதடி, காற்றண்டை, சித்திரம், சிலம்பம், சிறப்பு,சுபாவம், செல்வம், சொல், செய்யுளுறுப்பி னொன்று, தண்டாயுதம், தாளவொத்து, துலா ராசி, நடுத்தரம், நன்மை, நிலபரம், பாரம்,புகழ்,பொன்,மூச்சை,வாழ்வு.
சீர்காரம் - எதிரொலி.
சீர்தலைதல் - ஒழுங்குகெடல்,பதனழிதல்.
சீர்கேடி - மூதேவி.
சீர்கேடு - கேடானநிலைமை, சிறப்பில் லாமை.
சீர்க்காரம், சீர்க்கிரதம் - எதிரொலி.
சீர்கோழி - நரைக்கொள்ளு.
சீர்கோள் - ஒருகோள்.
சீர்செய்தல் – சீராக்கல்.
சீர்ணபதிரம் - வேம்பு.
சீர்ணபர்ணம் - பேரீச்சமரம்,வேப்பமரம்.
சீர்ணபாதன் – யமன்.
சீர்ணம் - சீரகம், பழுத்தது, பேதம், வ யோதிகம்.
சீர்ணவஸ்திரம் – பழந்துணி.
சீர்திருத்தல் – சீராக்கல்.
சீர்திருத்துதல் - சீராக்குதல்.
சீர்திருத்தல் – செப்பமாதல்.
சீர்தூக்கல், சீர்தூக்குதல் - ஆராய்தல், ஒத்துப்பார்த்தல்.
சீர்த்தல் - சிறப்புக்கொள்ளுதல்.
சீர்த்தி - மிகுபுகழ்.
சீர்த்துழாய் – ஒருதுளசி.
சீர்நிருவாகம் - இயல்பு, நிலைபரம்.
சீர்பண்ணுதல் - ஆயத்தப்படுத்தல், ஒ ழுங்குபடுத்தல்.
சீர்பதி – கடவுள்.
சீர்பந்தபாஷாணம் – ஒருபாஷாணம்.
சீர்பந்தம் - விளைவுபாஷாண முப்பத்தி ரண்டி னொன்று.
சீர்பாதம் - திருப்பாதம்.
சீர்படுதல் – ஒழுங்குப்படுதல், குணப்ப டுதல்.
சீர்ப்படுத்தல் - குணப்படுத்துதல்.
சீர்ப்பாடு – சிறப்புறல்.
சீர்ப்பிழை - ஒழுங்குத்தப்பு.
சீர்மடக்கு - சீரைமடக்கிப்பாடல்.
சீர்மரம் - நெய்வார்கருவியினொன்று.

சீர்மை - எண்வகையூறினொன்று அது ஒப்பம், சங்கை, சிறப்பு, செம்மை, நன்னடை.
சீர்வண்டு- நெய்வார் கருவியினொன்று.
சீலசம்பன்னன் - நற்குணன்.
சீலத்துவம் - குணம்.
சீலம் - அழகு, குணம், சரித்திரம், சீந்தில், சுபாவம், தருமம், நல்லறிவு, நல்லொழுக்கம்.
சீலம்பாய் - கிழியற்பாய்.
சீலவான் - நற்குணசாலி. [பாதோன்.
சீலவிருத்தன்-நல்லவொழுக்கிற் றிறம்
சீலனம் - சாத்திராப்பியாசம்.
சீலன் - நற்குணசாலி.
சீலா - இறைகூடை, இறைபட்டை, ஒருபறவை, ஒருமீன்.
சீலாப்பட்டை, சீலாப்பூட்டை - இறைகூடை.
சீலி - நற்குணமுடையாள்.
சீலிதன் - கலைகற்றோன்.
சீலித்தல் - பழகல்.
சீலை - வத்திரம்.
சீலைப்பாம்பு - ஒரு விஷமுள்ள பாம்பு.
சீலைப்பிள்ளை - துணியாற் செய்யப்பட்ட ஒருவிதப் பொம்மை.
சீலைப்பேன் - சீலையிற்பற்றும் பேன்.
சீலைமண் - மருந்து எரியவைக்கும் பாத்திரங்களைச் செம்முமண்சீலை.
சீவகம் - இலந்தைப்பிசின்.
சீவகர் - புத்ததவத்தோர்.
சீவகளை - இராகக்காட்சி, உயிர்ப்பு.
சீவகன்-ஓரரசன், குறவன், சீவன்முத்தன், தருமம், வாங்கியுண்போன், புத்ததவத்தோன், வேலைக்காரன்.
சீவகாருண்ணியன் - கிருபை யுள்ளோன்.
சீவசஞ்சீவி - சீந்தில்.
சீவசாட்சி அறிவுக்காதாரமாயிருப்பது.
சீவசாதனம் - தானியம்.
சீவசிதாபாசர் - பிரமசைதந்நியர்.
சீவசெந்து - உயிருள்ளவைகள்.
சீவதம் - ஆமை, சன்மார்க்கம், சீவன், மயில், முகில்.
சீவதயை - சிவானுக்கிரகம்.
சீவதருமம் - சீவபுண்ணியம்.
சீவதனம் - சீவனுள்ள திரவியம்.
சீவதன் - சத்துரு, சன்மார்க்கன், நீண்ட ஆயுசுகாரன், வைத்தியம்.
சீவதாது - சீவவாயு சஞ்சரிக்கும் நாடி.
சீவதிசை - பிராணதிசை.
சீவதேகம் - ஆன்மாசீவிக்கும் வடிவம்.
சீவத்தறுவாய் - மரணத்தறுவாய்.
சீவத்துவம் - அநாதி.
சீவநாடி - பிராணவாயுவுலாவும் நரம்பு.
சீவநாயகன் - பிராணநாயகன்.
சீவநாள் - ஆயுள்.
சீவந்தம் - ஔஷதம், பிராணன்.
சீவந்தி - கடுமரம், சீந்திற்கொடி, பாலைமரம், புல்லூரி, வெட்பாலை.
சீவந்திகன்-பறவை வேட்டைக்காரன்.
சீவந்தில் - சீந்தில்.
சீவபிராணி - உயிர்ப்பிராணி.
சீவபுண்ணியம் - உயிர்கட்குச் செய்யும் புண்ணியம்.
சீவபேதம் - உயிர்ப்பேதம்.
சீவப்பிரியை - கடுக்காய் மரம்.
சீவமந்திரம் - உடல்.
சீவமூதம் - மேகம்.
சீவம் - சீவன்.
சீவரட்சை-ஈடேற்றம், சீவபரிபாலனம்
சீவரம் - நீலவண்ணப்புடைவை.
சீவர் - புத்தர்.
சீவர் - சீவனுள்ளோர்.
சீவலம் - ஒரு நீர்ப்பூடு.
சீவலோசநி - கையான்றகரை.
சீவல் - சீவப்பட்டது, சீவுதல், பெலமற்றது, மிருதுவானது.
சீவவிலயம் - மரணம்.
சீவனகம் - சோறு.
சீவனம் - அமுதம், உத்தியோகம், உயிர்வாழ்தல், தைத்தல், நீர், புசிப்பனவு, மூளை, வெண்ணெய்.
சீவனகாதம் - நஞ்சு.
சீவனகினி - நீர், வெற்றிலை.
சீவனந்தம் - மரணம்.
சீவனர்த்தம் - உயிர்வாழ்தற்குரியது, சீவனமுகாந்தரம்.
சீவனவரசன் - வருணன்.
சீவனவுபதம் - உயிர்தருமருந்து.
சீவனளி - உயிருடையான், உயிருள்ளோன்.
சீவனி-ஆடுதின்னாப்பாலை, சகனம், சஞ்சீவி, சீவநாடி, செவ்வள்ளி, பாலைமரம், மந்தாரச்சிலை, வெட்பாலை.
சீவனித்தல் - சீவனம்பண்ணுதல்.

சீவனிநாடி - சீவநாடி.
சீவனியம் } நீர்.
சீவனீயம் }
சீவனோபாயம் - சீவனத்துக்கடுத்தவுபாயம், சீவனார்த்தம்.
சீவனௌஷதம் - இறுதிக்காலத்திலும் உயிரை நிறுத்து மருந்து, சீவனோபாயம்.
சீவன் - அனுபவிக்கப்படுதல், உயிர், உயிர்தருமருந்து, காந்தம், சீந்தில், சீவில், முயற்சி, வியாழம், வைடூரியம்.
சீவன்கொடுத்தல் - உயிர் கொடுத்தல், திடப்படுத்தல்.
சீவன்முத்தன் - துறந்து ஞானமடைந்தோன்.
சீவன்முத்தி - ஞானமடைந்து பிறப்பறுத்திருத்தல்.
சீவா - பாலை.
சீவாதாரம் - உலகம்.
சீவாது - உயிர்ப்பிக்குமருந்து.
சீவாத்துமா - சரீராவச்சின்னவான்மா.
சீவாந்தகன்-கொலையாளி, வேட்டைக்காரன்.
சீவாந்தம் - சீவியமுடிவு.
சீவாவத்தை-ஆத்துமாவடங்குமவத்தை.
சீவாளம் - வீணையின்சீர்.
சீவி - அழிஞ்சில், உயிருடையாள், உயிருடையோன்.
சீவிகா - சாதிக்காய்.
சீவிகை - சீவனம்.
சீவிதகாலம் - சீவிக்குங்காலம்.
சீவிதசமுசயம் - மரணபயம்.
சீவிதசாமி - கணவன்.
சீவிதஞ்ஞை - இரத்தாசயம்.
சீவிதம் - உயிர்வாழ்க்கை.
சீவிதேசன்-உயிர்தருமருந்து, கடவுள், கணவன், சந்திரன், சூரியன்.
சீவித்தல் - சீவியம்பண்ணுதல், மரித்தல், மோட்சஞ் சேருதல்.
சீவிப்பித்தல் - சாக்காட்டல்.
சீவிமுடித்தல் - கோதிக்கட்டல்.
சீவியகாலம் - ஆயுணாள்.
சீவியங்கம் - கல்லுப்பு.
சீவியநாள் - ஆயுணாள்.
சீவியம் - ஆயுள், உயிரோடிருக்கை, காலட்சயம், சீவனம், வாழ்நாள். [தல்.
சீவியம்பண்ணுதல் - சீவனம் பண்ணுத
சீவியர் - சீவிப்போர்.
சீவியன்-சீவன், சீவிப்போன், திருமால்.
சீவினி-சஞ்சீவி, செவ்வழிப்பண், யாழிளோசை.
சீவீசுரப்பிராந்தி-சீவனைச் சிவனெனக்காண்டல்.
சீவீசுரம் } ஆன்மா.
சீவீச்சுரம் }
சீவு - ஒருபுல்.
சீவுதல் - செதுக்குதல், மயிர்கோதுதல், மெல்லியதாயரிதல்.
சீவுளி - ஒருகருவி.
சீவுளியாடுதல் - சீவுளிபோடுதல்.
சீவேசுவரம் - சீவீசுரம்.
சீவோபகாரம் - சீவதயை.
சீவோற்பத்தி-உயிர்த்தோற்றம், கருக்கொள்ளுங்காலம்.
சீழ் - ஒலிக்குறிப்பு, சிதல், சீழ்க்கைவிடுதல்.
சீழ்க்கை - வாயாலூது மோர்வகைச்சத்
சீழ்க்கைக்கருவி சீழ்க்கைக்குழல். [தம்.
சீறடி - சிற்றடி.
சீறல் - அதட்டல், இரைதல், உர்த்ததிகரித்தல், கோவித்தல், சினக்குறிப்பு, பெருங்காயம், பெருங்கோபம், மூக்குச்சீறுதல், வேகம்.
சீறு - சீற்றம்.
சீறுதல் - சீறல்.
சீறுபூறெனல் - ஒலிக்குறிப்பு, சினக்குறிப்பு.
சீறுமாறு - கலகம், குழப்பம்.
சீறூர் - வேடரூர்.
சீற்காரம் - சீர்காரம்.
சீற்றம் - கோபம், சினம்.
சீனக்கண்ணாடி - மூக்குக்கண்ணாடி.
சீனக்காக்காய் - ஓரினக்காகம்.
சீனக்காரம் - படிகாரம்.
சீனக்கிழங்கு - ஒரு மருந்துக்கிழங்கு.
சீனக்குடை - கடுதாசிக்குடை.
சீனசம் - உடுக்கு.
சீனச்சட்டி - ஓரிரும்பு.
சீனட்டங்குருவி - ஒருகுருவி.
சீனட்டி - ஒருநெல்.
சீனபிட்டம் - செவ்வியம்.
சீனப்பட்டை - பறங்கிப்பட்டை.
சீனப்பா - பறங்கிக்கிழங்கு.
சீனப்பாகு - ஒருமருந்து.

சீனப்பூ - ஒருபுட்பம்.
சீனமல்லிகை - ஒரு பூச்செடி.
சீனமிளகு - வால்மிளகு.
சீனமுத்து - ஒரு செய்கைமுத்து.
சீனம் - ஒருபுடவை, தேயமைம்பத்தா றினொன்று, நூல், பதினெண்பாடையினொன்று, மலைப்பாம்பு, மான்.
சீனவங்கம் - ஈயம்.
சீனவெடி - ஒருவெடி.
சீனன்-சீனதேயத்தான், மூர்க்கன், விருத்தன்.
சீனு - ஒருதேசம்.
சீனி - ஒருவகைச்சருக்கரை, சீனக்காரம், பித்தளைமணல், மரநங்கூரம்.
சீனிக்கிழங்கு - வத்தாளைக்கிழங்கு.
சீனிப்பாகு - அதிரசத்துதிர்பாகு.
சீனியதிரசம் -ஒரு பண்ணிகாரம்.
சீனை - வன்னிமரம்.

———

## சு



சு - அதட்டுமோசை, ஓரெழுத்து, நன்மை, சுகம் முதலியவற்றைக் காட்டுமோருபசருக்கம், வியப்புக்குறிப்பு.
சுஃறெனல் - ஒலிக்குறிப்பு.
சுககீனம் - சௌக்கியவீனம்.
சுகசரீரம் - துன்பமற்ற சரீரம்.
சுகசரீரி - சவுக்கியதேகி.
சுகசன்னி-ஒருசன்னி, ஸ்திரீதோஷம்.
சுகசிம்பி - பூனைக்காலி.
சுகசீவி - சுகவாழ்வுடையான், சுகவாழ்வுடையோன்.
சுகச்சாயை - சிருஷ்டி மனைவி.
சுகசெய்தி - நற்செய்தி.
சுகட்டான் - நாணற்புல், முடக்கற்றான்.
சுகண்டி - ஓரிரத்தினம்.
சுகபேதம் - பேதம் மூன்றினொன்று. அது மரத்துக்கிலையாய் முதலிய வித்தியாசம்
சுகதம் - சொந்தமானது.
சுகதர் - புத்தர்.
சுகதாதை - வியாசன்.
சுகதாரு - கடம்புமரம்.
சுகதுக்கம் - இன்பதுன்பம்.

சுகத்திரம் - வாகைமரம்.
சுகநயம் - சௌக்கிய நன்மைகள்.
சுகந்தம்-ஈரவெண்காயம், கந்தகத்தூள், தேன்தோடம்பழம்.
சுகந்தநாயகி - திருவேட்டக் குடியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் திருநாமம்.
சுகந்தபரிமளம் மிகுவாசனை, வாசனைப் பண்டம்.
சுகந்தமா-கஸ்தூரிமிருகம், கருப்பூரம்.
சுகந்தமூலி - வெட்டிவேர்.
சுகந்தம் - அரத்தை, ஈரவெண்காயம், கந்தகம், கிழங்கு, சந்தனம், சீரகம், நறுமணம், நீலோற்பலம், வாழை.
சுகந்தவருக்கம் } வாசனைப்பண்டம்.
சுகந்தவற்கம் }
சுகந்தவனநாயகி - திருச்செம்பொன் பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
சுகந்தி - சுகந்திக்கல்.
சுகந்திகம் - ஒருநெல், கந்ததூபம், வெண்டாமரை.
சுகந்திக்கல் - ஒருரத்தினம்.
சுகந்திரம் - சுதந்திரம்.
சுகபலம் - எருக்கஞ்செடி.
சுகபலை - எருக்கு.
சுகபுச்சம் - கந்தநீறு.
சுகபேதி - சுகவிரேசனம்.
சுகபோகம் - சுகவனுபவம்.
சுகபோசனம் - நல்லூண்.
சுகப்படுதல் - சுகமடைதல்.
சுகப்பிரியை - சம்புநாவல்.
சுகப்பிழை - சௌக்கியவீனம்.
சுகம்-இராக்கதன், இன்பம், கிளி, சரீரம், சீக்கிரம், சுபம், தருமம், தலைப்பாகை, நன்மை, நீர், பாத்திரம், புடவை, புளிகரைத்த நீர்முத்தி, மூலைக்கண், வருத்தமின்மை.
சுகம்பல் - புளிநறளை.
சுகரம் - தருமம்.
சுகருமம் - நற்கருமம், சித்தியயோகத்தொன்று.
சுகர்மன்-ஜைமினி முனிவர் புத்திரனாகிய சுமந்தன் புத்திரன்.
சுகவல்லபம் - மாதளை.
சுகவாகன் - மகன்.

சுகவாஞ்சிநாயகர் - திருவாஞ்சியத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
சுகவாழ்வு - நல்வாழ்வு.
சுகவிருத்தி - சுகசெய்தி, சுகவாழ்வு.
சுகவிரேசனம் - சுகபேதி.
சுகவீனம் - துன்பம்.
சுகவேளை - சுகமானகாலம், நற்காலம்.
சுகன் - இவ்விருஷி வியாசருக்குக் கிருதாசி யென்னும் அப்சரஸ்திரியிடத்துப் பிறந்த புத்திரனர். கிளிரூபத்தோடிருந்த கிருதாசியிடத்தே பிறந்தமையான் இவர் சுகரெனப் பட்டார். இவர் பிறந்தவுடனே தத்துவ ஞானியாயினர். இவர் அரம்பையென்னும் தெய்வப்பெண் தன்னேடு சேருமாறு தன்னுலியன்றவாறெல்லாம் காதல் காட்டியும் சித்தஞ் சலியாத சுத்த வைராக்கிய முடையவர், முனிவருள் இவர் ஒருவரே பெண் போகத்திலே மயங்காதவர். இராவணன் சாரணர்களு ளொருவர்.
சுகன் - ஒரு கந்தருவன், சுகப்பிரமா, சுவர்க்கமுற்ருேன், வியாசன்மகன்.
சுகன்மம் - சுகருமம்.
சுகன்ருதை - வியாசன்.
சுகாங்கி - இரதிதேவி.
சுகாசகம், சுகாசம் - வெள்ளரி.
சுகாசனம் - சுகாதனம்.
சுகாசுகம் - சுகதுக்கம்.
சுகாதனம் - சுகமுந்திடனுமெவ்வாறிருக்கினெய்துமோ அவ்வா றிருத்தல், [மாதளை.
சுகாதாரம் - சுவர்க்கம்.
சுகாதிசயம் - சுகசெய்தி.
சுகாதீதம் - மேறபட்டசுகம்.
சுகாந்தம் - ஈரவெண்காயம்.
சுகாந்திக்கல் - சுகந்திக்கல்.
சுகாய் - சொக்காய்.
சுகாந்தம் - மிகுவின்பம், மோட்சம்.
சுகானுபவம் - நல்லனுபவம்.
சுகி - காசிபன் மனைவி, சுகபோகி, சுகியென்னேவல், சுகானுபவம், செல்வன், சௌக்கியம், நோயிலான்.
சுகிதம் - பால்.
சுகித்தல் - இன்பமனுபவித்தல், செல்வங்களை யனுபவித்தல்.
சுகிப்பு - நல்லனுபவம்.
சுகியன் - சுகானுபோகி, போசனுதி சௌக்கியமுடையோன்.
சுகியாதி - நடீர்த்தி.
சுகிர் - உட்டுளை, உட்டுளைப்பொருள், சுகிரென்னேவல், சுகிர்வு.
சுகிர்தகுணம் - நற்குணம்.
சுகிர்தகுறள் - ஒருநூல்.
சுகிர்தநூல் - வேதநூல்.
சுகிர்தபுண்ணியம் - நற்புண்ணியம்.
சுகிர்தம் - அதிட்டம், அறம், இன்பம், சன்மார்க்கம், சுசி, தயவு, நன்மை, நெய், புண்ணியபலன்.
சுகிர்தலாபம் - சினேக சம்பாத்தியம்.
சுகிர்தல் - வகிர்தல்.
சுகிர்தவசனம் - சுத்தவசனம், மெய்வசனம்.
சுகிர்தி - பிருது புத்திரன்.
சுகிர்த்து - சினேகம்.
சுகிர்தலாபம் - நட்புப்பேறு.
சுகு - ஒருபாத்திரம்.
சுகுடம் - சேம்பு.
சுகுணபாண்டியன் - இராஜாதிராஜ பாண்டியனுக்குப் பின் அரசுசெய்தவன். இவன்காலத்திலேயே கரிக்குருவிக்கு உபதேசஞ்செய்த திருவிளையாடல் நடந்தது.
சுகுணசேகரபாண்டியன் - சுகுணபாண்டியனுக்குப் பின் அரசுசெய்தவன்.
சுகுனன் - பாண்டுபுத்திரனுகிய வீமசேனனுக்கு ஜலதரை யென்பவளிடத்துப்பிறந்தபுத்திரன். நற்குணமுடையோன்.
சுகுமாரநூல் - இலவமரம்.
சுகுமாரதை - ஓரலங்காரம், அது வல்லொற்று நீங்கியுள்ள சொற்களாலாக்கப்பட்டது.
சுகுமாரம் - ஒரு கரும்பு, ஒருதானியம், மிருது.
சுகுமாரன் - சுவிபு புத்திரன். திருஷ்டகேதன் தந்தை.
சுகுர்தம் - சுகிர்தம்.
சுகுவது - தீ.
சுகேசன் - வித்தியுற்கேசன் புத்திரன். மாலியவந்தன் முதலியோர் தந்தை. இவன் பாரி தேவவதி.
சுகேசினி - சகரன் முதன்மனைவி. அசமஞ்சசகன் தாய்.

சுகேதனன் - தாடகை தந்தையாகிய ஒருயக்ஷன்.
சுகேதன் - மிதிலன் புத்திரனுக்குப் பௌத்திரன். க்ஷேமன் புத்திரன்.
சுகோச்சம் - மகாசுகம்.
சுகோததி - இன்பக்கடல்.
சுகோதரம் - தாளிசபத்திரி.
சுகோற்சவன் - கணவன்.
சுக்கங்காய் - மிதக்கங்காய்.
சுக்கங்கீரை - ஒருகீரை.
சுக்கச்சிலை - வங்கக்கல்.
சுக்கடித்தம் - அழுத்தமான புடைவை.
சுக்கம் - ஒருகொடி, களவு, பொதுக்கு.
சுக்கம்வைத்தல் - களவாயபகரித்தல்.
சுக்கல் - அற்பம், துண்டு.
சுக்காய் - சொக்காய்.
சுக்காரம் - கெர்சிதம்.
சுக்கானி - கப்பலோட்டி.
சுக்கானீறு - சுண்ணும்புக்கன்னீறு.
சுக்கான் - ஒருகல், கப்பலை நடத்துங் கருவி.
சுக்கான்கல் - சுண்ணாம்புக்கல்.
சுக்கான்கீரை - புளிக்கீரை.
சுக்கான்பருப்பதம் - வங்கக்கல்.
சுக்கிகை - புளியாரை.
சுக்கியானம் - பரமஞானம்.
சுக்கிரபடர் - அசுரர்.
சுக்கிரபகவான் - வெள்ளி.
சுக்கிரம் - ஆனிமாதம், கண்ணோய், கழுநீர், கள், நீர், புண்ணியம், பொன், விந்து, வெண்ணிறம்.
சுக்கிரவாரம் - வெள்ளிக்கிழமை.
சுக்கிரவாரவிரதம் - இது உமாதேவியாரைக் குறித்து அநுஷ்டிக்கப் படுவதும், விநாயகரைக் குறித்து அநுஷ்டிக்கப் படுவதும், சுப்பிரமணியரைக் குறித்து அநுஷ்டிக்கப் படுவதும் என மூன்றாம். தேவியைக் குறித்து சித்திரைமாசத்துச் சுக்கில பக்ஷத்து முதற் சுக்கிரவாரந் தொடங்கியும், விநாயகரைக் குறித்தது வைகாசி மாசத்துச் சுக்கில பக்ஷத்து முதற்சுக்கிரவாரந்தொடங்கியும், மற்றது ஐப்பசிமாசத்து முதற்சுக்கிரவாரந் தொடங்கியும் அனுஷ்டிக்கத்தக்கதாம்.
சுக்கிராளி - முத்து.
சுக்கிரன் - அசுரர்குரு, ஒருகண்ணானன் கண்ணேயுமொன்று. தீ, வெள்ளி, பிரமமானச புத்திரருள் ஒருவனாகிய பிருகுவினது பௌத்திரன். இவன் அசுரகுரு. இவன்மகள்தெய்வயானை. இவன் தாய் தெய்வலோகத்திலே தவஞ் செய்திருந்தபோது விஷ்ணுவினாற் கொல்லப்பட்டாள். இவன் அசுரமந்திரிஎனவும்படுவன். இவன் மகாபலி சக்கிரவர்த்தி யிடத்திலே மந்திரியாக விருந்தகாலத்திலே விஷ்ணு வாமனாவதாரமெடுத்து மகாபலியிடஞ்சென்று மூன்றடிமண் வேண்டியபோது சுக்கிரன் "இது விஷ்ணுவினது வஞ்சகத்தொழில் நம்பாதொழி" என்று மகாபலியைத் தடுத்தகாரணத்தால் விஷ்ணு அச்சுக்கிரன் கண்களிலொன்றைக் கெடுத்தார். சுக்கிரன் இறந்த வுயிரை யெழுப்பும் வன்மையுடையவன். இவனிருக்கும் மண்டலம் அப்புமண்டலம். நவக்கிரகங்களிலொன்று. சுக்கிரன் சுபஸ்தானங்களில் நிற்கப் பிறப்போர் திரிகால வுணர்ச்சியும் இராஜ யோகங்களுமுடையராய் விளங்குவர், சுக்கிரன் மழைக்கதிபதி யாதலின் மழைக்கோளெனப்படும்.
சுக்கிராக்கினை - கொடிய இமிசை.
சுக்கிராங்கம் - மயில்.
சுக்கிராசாரியன் - சுக்கிரன்.
சுக்கிரிகை - புளியாரை.
சுக்கிரீபன், சுக்கிரீவன் - கிட்கிந்தையரசன், குரங்கிறை.
சுக்கிரீவேசன் - இராமன்.
சுக்கிரீவன் - வாலி தம்பி. இருக்ஷவிருஜன் புத்திரன். இவன் மனைவி உருமை, இவன், வாலிதன்மனைவியையும் அரிசுரிமையையுங் கவர்ந்துகொண்டு தனக்குச்செய்த துன்பங்களையெல்லாம் இராமரிடத்திலே முறையிட்டு அத்துன்பத்தை நீக்கித்தந்தால் அவ்வுபகாரத்துக் கீடாக தானும் தன் சேனையும் சீதையைச் சிறைமீட்டற்கு வேண்டிய துணை செய்வதாக்கூறி ராமரால் வாலியைக்கொல்வித்துடன் சென்று இலங்கையிற் சீதையைச் சிறைமீட்டவன்.

விஷ்ணு இராவண சங்காரத்தின் பொருட்டுத் தமதுலகத்தை விட்டுப்

புறப்படும்போது அத்தேவருட் சிலரைத் தம்மோடுசென்றுபூமியிற் பிறக்குமாறு பணித்தருளினர். அவருட் சூரியனது அமிசமாகப் பிறந்தவன் இச்சுக்கிரீவன். அவனைத் துணையாகக் கொள்ளும்படி இராமருக்குச் சூழ்ச்சி கூறியவன் கவந்தன். சுக்கிரீவனுடைய வாசஸ்தானம் பம்பைக் கரையிலுள்ளது. இராமரது வில்லாண்மையைப் பரீக்ஷிக்கும்பொருட்டுச் சர்ப்பகோணமாக மாறிமாறி நின்ற ஏழு மராமரங்களையும் ஓரம்பாலே துளை செய்யும்படி கேட்டு அவர் அது செய்தபின்னர் அவர்மீது நம்பிக்கை வைத்தவன். இராமரால் அரசு பெற்ற சுக்கிரீவன் குறித்த அவதியிலே சேனையோடு புறப்படாது இராஜபோகத்திலே மயங்கிக் கிடந்து, இராமர் அச்சுறுத்தித் தூதுபோக்கிய பின்னர்ப் படைதிரட்டிக் கொண்டுபோய் வணங்கித் தான்செய்த குறையைப் பொறுத்தருளுமாறு செய்த விண்ணப்பம் மிக வியக்கற்பாலது. சுக்கிரீவனும் இராவணனும் செய்த கொடும்போரிலே சுக்கிரீவன் ஒரு மலையைப் பெயர்த்து இராவணன் மார்பிலே மோத, அவன் வெகுண்டு ஒரு கொடிய வேலைவிட்டெறிந்தான். அவ்வேலை அனுமான்பற்றி முழந்தாளிற் பூட்டித் தகர்த்தான். அதுகண்டு இராவணன் ஒரு மலையை யிடந்து சுக்கிரீவன் சிரசில் மோத அவன் வீழ்ந்து மூர்ச்சையானான். இராவணன் உடனே அவனைத் தூக்கி யிடுக்கிக்கொண்டு செல்லச் சிறிதுபோதிலே அவன் தெளிந்து பல்லாலும் நகங்களாலும் அவனுடைய விலாவைக் கடித்துக் கிழிக்க, அவன் அத்துன்பத்தாற் கையை நெகிழ்த்தான். உடனே சுக்கிரீவன் குதித் தந்தரத்திலெழுந்து இராமர் பக்கல் சார்ந்தான். இவ்வாறே சுக்கிரீவன், இராமர் இராவணனைக் கொன்று சீதையை சிறைமீட்குங்காறும் தன் வாக்குத்தவறாமல் மிக்க பத்தியோடு போர்புரிந்து அவருக்குப் பெருந்துணை புரிந்தான்.

சுக்கிரீநகன்-பார்ஹத்திரத வமிசத்துரிபுஞ்சயன் மந்திரி.
சுக்கிரை - புளியமரம்.
சுக்கில - மூன்றுவதாண்டு.
சுக்கிலகலிதம் - இந்திரியக்கலிப்பு.
சுக்கிலகுட்டம் - வெண்குட்டம்.
சுக்கிலத்தம்பம் - கலைஞான மறுபத்து நான்கினுென்று.
சுக்கிலத்துவம் - வெண்மை.
சுக்கிலபக்கம், சுக்கிலபட்சம் } பூருவபக்கம்.
சுக்கிலபம் - நாணம்.
சுக்கிலபுட்டா - குங்குமமரம்.
சுக்கிலப்பிரமியம் - ஒருநோய்.
சுக்கிலமண்டலம் - வெள்ளைவிழி.
சுக்கிலம்-இந்திரியம், ஒருயோகம், கண்ணேயினுென்று, பாலைமரம், புளி, வெண்ணெய், வெண்மை, வெள்ளி.
சுக்கிலாங்கம் - வெள்ளைத்தேகம்.
சுக்கிலாசயம் - இந்திரியகோசம்.
சுக்கிலாபாங்கம் - மயில்.
சுக்கிலை - புளியமரம்.
சுக்கு-சுக்கான்கல், சுண்டி, துண்டு, வேர்க்கொம்பு; அது திரிகடுகத்தொன்று, பஞ்சமூலத்து மொன்று.
சுக்குச்செட்டுக்காரன் - உலுத்தன்.
சுக்குதல் - செய்தல், புணர்தல்.
சுக்குநாறிப்புல் - ஒருபுல்.
சுக்குப்பொடி - வேர்க்கொம்புச் சூரணம்.
சுக்குமம் - சிற்றேலம்.
சுக்கை - கப்பற்கேழ்வு, நட்சத்திரம், மாலை, மொசுமொசுக்கை.
சுக்ஞானம் - பரமஞானம்.
சுக்திமதி - கடகபுரிக்குச் சமீபத்திலேயுள்ள ஒரு புண்ணியநதி.
சுங்கம் - ஆடுதின்ஞப்பாலை, ஆயம், இறை, களவு, பொதுச்சுங்கு.
சுங்கன் - ஒருமீன், சுக்கிரன்.
சுங்கான் - புகைகுடிக்கிற குழல்.
சுங்கி - ஆலமரம், வன்னிமரம்.
சுங்கிதன் - ஈனன்.
சுங்கு - மடிப்பு.
சுங்குத்தான்குழல்-உண்டை யெறிகுழல்.
சுசரித்திரன் - அறுபத்தேழாவதுமேளகர்த்தா.
சுசர்மா, சுசர்மன் } திரிகர்த்த தேசத்தரசன் புத்திரன், தன் பாரியைப்

பலாகன் என்னு மிராக்ஷசன் அபக ரித்துப்போனபோது உத்தானபாத ன் மகனாகிய உத்தமன் கண்டு அவ ளை மீட்டுக் கொடுக்கப்பெற்ற ஓர்ந்த ணன். கர்ணன் புத்திரன். நகுலனாற் கொல்லப்பட்டவன். மகததேசத்த ரசரான காண்வாயருள்ளேகடையர சன். ஆந்தரவிருத்திய னென்னுஞ் சூத்திரனாற் கொல்லப்பட்டவன்.
சுசலம் - சுத்தசலம்.
சுசனம் - காற்று.
சுசனன் - மல்லவன்.
சுசாதி - சுயசாதி, வேறுபடாதசாதி.
சுசாதிபலம் - சாதிக்காய்.
சுசாதிபேதம் - சுயசாதிக்குள்ளபேதம், அது மாத்துக்கு மறுமாம்.
சுசாந்தி - அஜமீடன் இரண்டாம் புத்தி ரனாகிய நீலன் பௌத்திரன்.
சுசி ஆடிமாதம், இணக்கம், காமக்கவலை, கொடிவேலி, கோடைகாலம், சந்தி ரன், சிவன், சுக்கிரன், சுத்தம், சூரிய ன், சிதார்த்தம், நெருப்பு, பாதரசம், பிரமன், மாசின்மை, மாணுக்கன்ற ன்மை, மூலை, வெண்குடை, வெண் மை, மிதிலைவமிசத்து ஓரரசன். அந் தகன் புத்திரன் சுத்தன் புத்திரன்.
சுசிகம் - புளியாரை.
சுசிகரம் - சுத்தம், நேர்மை, மேன்மை.
சுசிதம் – பால்.
சுசித்துருமம் - அரசமரம்.
சுசிந்தனம் - தியானம்.
சுசிமனி – இரத்தினம்.
சுசிமிதம் - புன்னகை.
சுசிரம் - அக்கினி, ஊதுகுழல், துளை.
சுசிருவைஷ } பணிவிடை.
சுசிரூவைஷ }
சுசிரோசி - சந்திரன்.
சுசீலம் - காற்று, நற்குணம், நேர்மை.
சுசீலன் - நற்குணன்.
சுசுகம் – மூலைக்கண்.
சுசுந்தரி - கோபி, நாவி, மூஞ்சூறு.
சுசுமை - சுக்கிரன் மனைவி.
சுசுருதன் - (1) மிதிலாதி பதிகளுள் ஒருவன் ஜயன் தந்தை (2) காசிரா ஜன் புத்திரருளொருவர். இவர் சுசு ருதம் என்னும் பெயராற் சிறந்த வைத்திய நூலொன்று சம்ஸ்கிருதத் திலே செய்தவர்.
சுசுலம் - சிறுபண்டம்.
சுசூகம் – மூலைக்கண்.
சுசூக்குமை – நான்குவாக்கினொன்று.
சுசேலம் – புடைவை.
சுசை – சோகம்.
சுசோபை-சூரியவமிசத்துப் பரீக்ஷித்து பாரி. இவள் மண்டூகராஜன் மகள்.
சுஜன்மகிருது(பா)சோமகன்புத்திரன்.
சுஜாதை-அஷ்டவக்கிரன்தாய். ஏகாபா தன் பாரி.
சுச்சு – சுக்கு, சுண்டி, பறவைமூக்கு.
சுஞ்சுமாரம் – காலணி, மிடற்றெலும்பு, முதலை.
சுஞ்ஞானம் – பரமஞானம்.
சுடகமாமிசம் - கருவாடு.
சுடகம் – காய்வு, சடை.
சுடரெண்ணெய் - சூட்டெண்ணெய், பந்தயிலம்.
சுடரோன் – சூரியன்.
சுடர் - அக்கினி, ஒளி, சந்திரன், சூரி யன், தளிர், தீச்சிகை, விளக்கு.
சுடர்க்கடை - மின்மினி.
சுடர்க்கொடி - ஆரதிகருப்பூரம், பெண்.
சுடர்க்கொழுந்தீசர் - திருத்தூங்கானை மாடத்தில் கோயில்கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
சுடர்ச்செலவு-சட்டுவருக்கத்தொன்று. அது இராசியை யிரண்டாகப் பகிர்த ல்.
சுடர்தல் – ஒளிசெய்தல்.
சுடர்நிலை – தகழி, விளக்குத்தண்டு.
சுடர்மௌலியர் - வானோர்.
சுடர்விடுதல் - சுவாலித்தல்.
சுடர்விழியோன் - வீரபத்திரன்.
சுடர்விழுதல்-தீயிலிருந்து சுடரிழிதல், விளக்கு முதலியவற்றிலிருந்து தீச் சிகை விழுதல்.
சுடர்வு சுடர்தல்.
சுடலை – சவுக்காரம், சுடுகாடு.
சுடலைக்குருவி – ஒருகுருவி.
சுடலைஞானம் - மயானவைராக்கியம்.
சுடலைமாடன் – ஒருதேவதை.
சுடலையாடி - சவுக்காரம், சிவன்.
சுடலையினீறு – சவச்சாம்பல்.
சுடலையோன் - அரின்.
சுடலைவயிரவன் – மயானவயிரவன்.

சுடாரி - கவசம்.
சுடிகை-உச்சி, கள், சடாமுடி, சூட்டு, நெறிச்சுட்டி, மயிர்முடி, முடி.
சுடீரியம் - வீரியம்.
சுடு - வெம்மையுறல்.
சுடுகண் - கொள்ளிக்கண்.
சுடுகலம் - குயக்கலம், செங்கல்.
சுடுகல் - சுட்டசெங்கல்.
சுடுகாடு - ஈமம்.
சுடுகாடுமீட்டான் - முடக்கற்றான்.
சுடுகாட்டுக்கோட்டம் - சக்கரவாளக் கோட்டம்.
சுடுகாட்டுமணிபொறுக்கி - ஒருபட்சி.
சுடுகோல் - சூட்டுக்கோல்.
சுடுசுடுத்தல் - தீவிரித்தல்.
சுடுசுடுப்பு - தீவிரம்.
சுடுசுடெனல்-தீவிரித்தல், வெடுவெடுத்தல்.
சுடுசுண்ணம் - சுட்டசாந்து.
சுடுதல்-உலோகங்களையொட்டுதல், சூடுகாணுதல், தகித்தல், நீற்றுதல், விசனமடைதல், விசனமடைவித்தல், வேகவைத்தல்.
சுடுதூரத்தம் - சித்திரப்பாலாவி.
சுடுதொறட்டி - ஒருசெடி.
சுடுநிலம் - சுடுகாடு.
சுடுநீர் - வெந்நீர்.
சுடுமண் - ஓடு.
சுடுமருந்து - எரிமருந்து.
சுடுவடு - இரத்தம்.
சுடுவனம் - இரத்தம், சுடுகாடு.
சுடுவன் - இரத்தம்.
சுடுவான்-படகிற்சமையல் பண்ணுமிடம்.
சுடுவு - சும்மாடு.
சுட்கதர்க்கம் - வீண்தர்க்கம்.
சுஷ்கம், சுட்கம் - வறட்சி.
சுட்டல், சுட்குதல் - வறளல்.
சுட்சுள்ளெனல்-முள்ளு, வாயு முதலிய குற்றுங்குறிப்பு.
சுட்டல்-காட்டுதல், குறித்தல், சுடுதல், சுடல், மதித்தல்.
சுட்டாவிரல் - சுட்டுவிரல்.
சுட்டி, சுட்டிகை - உச்சிவெள்ளை, நுதலணி, நெற்றிச்சுட்டி.
சுட்டிக்காட்டுதல்-குறித்துக் காண்பித்தல்.
சட்டித்தலை - குறும்புத்தனம் திரியாபுரம்.
சுட்டித்தலையன், சுட்டியன் - துட்டன், நெற்றிச்சுட்டியுள்ளது.
சுட்டு - எண்ணம், குறிப்பு, சுட்டென்னேவல்.
சுட்டுக்கோல் - உலையாணிக்கோல், தீயோன்.
சுட்டுச்சொல்- ஒன்றைக்குறித்துக்காட்டுமொழி.
சுட்டுதல்-எண்ணுதல், கருதுதல், குறித்தல், மதித்தல்.
சுட்டுப்பொருள் - குறித்தபொருள்.
சுட்டுவிடை - சுட்டிக் காட்டும் விடை (உ-ம்) இது.
சுட்டுவிரல் - ஆள்காட்டிவிரல்.
சுட்டுவைத்தல் - இலக்குவைத்தல்.
சுட்டெழுத்து-அ, இ, உ என்னுமெழுத்துக்கள்.
சுணக்கம் - சோர்வு, தாமதம், பிணக்கம்.
சுணக்கன் - நாயாட்டந்திரிகிறவன் நீசன்.
சுணக்குதல் - தாமதப்படுத்தல், மெலியச்செய்தல்.
சுணங்கத்திசை - தென்மேற்றிசை.
சுணங்கல்-சோர்தல், தாமதித்தல், மெலிவு.
சுணங்கன் - நாய்.
சுணங்கன்முத்திரை - நாயாகாரமானவோர் முத்திரை.
சுணங்கு-சுணங்கென்னேவல், தேமல், மெலிவு.
சுணங்குதல் - சோர்தல், தாமதித்தல்.
சுணை - அபிமானம், கூர்மை, சுரணை, சுனை, தினவு.
சுணைக்கோரை - ஒருபுல்.
சுணைத்தல் - சுனைத்தல்.
சுணைநெருஞ்சில் - ஒருபூடு.
சுணைவு - பேய்க்கடலை.
சுண்டகம் - மூங்கில்வில்.
சுண்டகன் - சாராயம் வடிப்போன்.
சுண்டக்கட்டுதல் - இறுகக்கட்டுதல்.
சுண்டக்காய்தல் - இறுகக்காய்தல்.
சுண்டங்காய் - சிறுகாய், சுண்டிக்காய்.
சுண்டப்பிடித்தல் - இறுகப்பிடித்தல்.
சுண்டம் - கள், யானைத்துதிக்கை.
சுண்டல்-இறுகல், எய்தல், சுண்டற்கறி, சுண்டுதல், தெரித்தல், வற்றுதல்.
சுண்டற்கறி - தீயற்கறி.

சுண்டன் - அறிவிலி, சதயநாள், மூஞ்சூறு.
சுண்டாங்கி-அற்பம், குறைவு, துவையல்.
சுண்டாரன் - சாராயம்வடிப்போன்.
சுண்டாலம் } யானை, யானைத்துதிக்கை.
சுண்டாலி }
சுண்டான் - கள் அளவு.
சுண்டி - கள், சுக்கு, சுண்டில், தொட்டால்வாடி, நீர்ச்சுண்டி.
சுண்டிகை - உண்ணாக்கு.
சுண்டிமூஷிகை - மூஞ்சூறு.
சுண்டியம் - சுக்கு.
சுண்டியுண்டை - கொழுஞ்சி, சதுரக்கள்ளி, சீரகம்.
சுண்டில் - சுண்டிற்செடி.
சுண்டு-அடிப்பற்றியது,அற்பம்,ஒருசிறு அளவுபடி, சுண்டென்னேவல்.
சுண்டுகட்டை-நெய்வார்கருவியில் ஒன்று.
சுண்டுவிரல் - சின்னவிரல்.
சுண்டுவில்-கன்முதலியசெலுத்தும்வில்
சுண்டெலி - ஓரெலி.
சுண்டை - கள்,கிணறு, சுண்டைச்செடி, நீர்க்குண்டு.
சுண்ணக்கல் - சுக்கான்கல்.
சுண்ணப்பொடி - பராகம், வாசனைப்பொடி.
சுண்ணமிடித்தல் - ஓமக் கிரியையில் ஒன்று.
சுண்ணமொழிமாற்று - மொழிமாற்றுப் பொருள் கோள்களிலொன்று.
சுண்ணம் - சதயம், சுட்டசாந்து, சுண்ணப்பொடி, பராகம், புழுதி.
சுண்ணவரசி - முல்லை.
சுண்ணவிரோதி - சவ்வீரம்.
சுண்ணாம்படித்தல்-சுண்ணாம்புபூசுதல்.
சுண்ணாம்பு-குழைசாந்து,சிப்பிமுதலியவற்றின் சுண்ணம்.
சுண்ணாம்புக்காறை - சுண்ணாம்புச்சாந்திடுதல்.
சுண்ணாம்புத்துடுப்பு - சுண்ணாம்புத் தோண்டி.
சுண்ணித்தல் - நீற்றுதல், பூசுதல்.
சுதசனம் - சுதனம்.
சுதசித்தம் - தானகவே ஏற்பட்டது.
சுதஸ்தம் - தோத்திரம்.
சுதந்தன் - கூத்தாடி.
சுதந்தி - வடமேற்றிசை யானைக்குப் பெண்யானை.
சுதந்திரம் - இட்டமானவாளுகை, உரிமை.
சுதந்திரர் - உரிமைக்காரர்.
சுதந்திரவாளி - உரித்தாளி.
சுதந்திரி-இட்டமாய் நடத்துவோன், உரிமைக்காரன், உரிமையுடையாள்.
சுதந்திரித்தல் - இட்டமாய் நடத்தல், உரிமைபெற் றனுபவித்தல்.
சுதந்திரியம் - இட்டம்.
சுதபன்-(அ)ஹமன் புத்திரன். பலிதந்தை.
சுதமாரதை-ஓரலங்காரம்;அது வல்லொற்று நீங்கியுள்ள சொற்களா லாக்கப்பட்டு மெல்லினமாக விசைப்பது.
சுதம்-கேடு, நெருஞ்சில்,மலத்துவாரம், முறைமை.
சுதரிசனம்-அழகு, கண்ணாடி, சக்கிரம், சம்புநாவல், தேவலோகம், மேருமலை, வலியான்.
சுதர்சனன் - (1)அங்கிரசனைப்பார்த்து சிரித்துச் சர்ப்பமாகச் சபிக்கப்பட்டு கிடந்து பின்னர்க் கிருஷ்ணன் திருவடி தீண்டப்பெற்றுத் தொல்லுருப் பெற்ற வித்தியாதரன். சுதர்சனை புத்திரன். இவன் தன் கிருகத்துக்குத் தருமதேவதை அதிதியாகிச் சென்று விருந்தருந்தப் பெற்றவன்.
சுதர்சனை - மநுவமிசத்துத் துரியோதநன்நருமதையிடத்துப்பெற்றபுத்திரி இவள் அக்கினிதேவனைக்கூடிச் சுதர்சனனென்னு மாசனைப் பெற்றவள்.
சுதருமம் - நற்கிரியை.
சுதர்ச்சி - சதுரக்கள்ளி.
சுதர்த்தனம் - குயில்.
சுதர்மம் - சுதருமம்.
சுதர்மன் - ஒருசாதி.
சுதலம் - கீழேழுலகிலொன்று. பச்சைவர்ணமுடையது.
சுதனபாரம் - ஆயுதவுறை.
சுதனம் - ஆயுதப்பொது.
சுதனுசு - குருபுத்திரு ளொருவன்.
சுதனுவன்-விச்சுவகன்மா,வில்லாச்சிரமி.
சுதன் - இராசகுமாரன்.
சுதன்மம் - இந்திரன் வசந்தமண்டபம், சுதருமம், தேவசபை.
சுதன்மை - சுதன்மம்.
சுதன்வன்-(1) லோகபாலகர் நால்வருளொருவன். (2) திரிகர்த்ததேசாதீசனுகிய ஓரரசன். சுசர்மன் தந்தை.

சுதன்வானன் - (ய) வசுதேவனுக்கு ஸ்ரீதேவிடத்துதித்த புத்திரரு ளொருவன்.

சுதக்ஷிணன் - பௌண்டரக வாசுதேவன் புத்திரன். தந்தையைக் கிருஷ்ணன் கொன்ற காரணத்தால் அப்பழிவாங்க வேண்டிச் சிவனை நோக்கித் தவங்கிடந்து ஓரபிசார வோமஞ் செய்து அதினின்றும் பெற்ற ஒரு பூதத்தைத் துவாரகைக் கனுப்பினன். கிருஷ்ணன் அதனைக்கொண்டே சுதக்ஷிணனைக் கொன்று அவன் நகரத்தையு மெரியூட்டுவித்தான்.

சுதக்ஷிணை-திலீபன்மனைவி. இவள்அதிரூபவதி. திலீபன் நெடுங்காலம் புத்திரப்பேரின்றி வருந்தி வசிஷ்டரையடைந்துவிண்ணப்பம்செய்ய, அவர் நீயும் உன் மனைவியும் தேனுவைக் கிரமமாக வழிபடுவீர்களாயின் புத்திரப்பேறு சித்திக்குமென்றனர். அச்சொற்கொண்டு இவளும் திலீபனும் கிரமமாகத் தேனுவை வழிபட்டு ரகுவைப் பெற்றார்கள்.

சுதா - தானாய்.

சுதாகரன் - கருடன், சந்திரன்.

சுதாகிருது - கருடன்.

சுதாங்கரன் - சந்திரன்.

சுதாசன் - (பா) மூன்றாஞ்சியவனன் புத்திரன், சஹாதேவன் தம்பியாகிய அநீகன்பாரி.

சுதாசூதி - சந்திரன்,யாகம், வனசம்.

சுதாச்சி - சதுரக்கள்ளி.

சுதாதாரன் - சந்திரன்.

சுதாத்துமசன் - பேரப்பிள்ளை.

சுதாநிதி - சந்திரன்.

சுதாபிரீதி - சந்திரன், யாகம்.

சுதாமனு - மலை, முகில்.

சுதாரித்தல் - தைரியங்கொள்ளல்,மேற்கொள்ளல், வாதித்தல்.

சுதாவாக }
சுதாவிலே } தானாய்.

சுதி - அறிஞன், குதத்துவாரம், சுருதி, பூருவபக்கம், பெண், யாழினரம்பு.

சுதிக்கியானம் - சுருதிவித்தை.

சுதினம் - நற்றினம்.

சுதீக்ஷிணன் - (ரி) அகஸ்தியராதுஆச்சிரமத்தைநாடிச்சென்றராமரைக்கண்டு உபசரித்து விருந்திட்ட முனிவர். இவருடைய ஆச்சிரமம் அகஸ்தியருடைய ஆச்சிரமத்துக்கு உத்தரதிசையிலே சிறிது தூரத்திலுள்ளது.

சுதுப்புநாங்காலர - ஓர்காரை.

சுதும்பு - ஒருமீன்.

சுதேசம் - சொந்ததேசம்.

சுதேவன் - (1) (ய) தேவகன் புத்திரன் (2) சம்பன்புத்திரன்,விஜயன்தந்தை.

சுதேவ்ஷ்ணை }
சுதேட்டிணை } (1) அநுவமிசத்துப் பலிபாரி. (2) விராடன் பாரி, கேகயராஜன் மகள். கீசகன் சகோதரி, பாண்டவர்கள் விராடனுடைய நகரத்திலிருந்தபோது திரௌபதி இச்சுதேவ்ஷ்ணையிடத்திலேவண்ணஞ்செய்யுந்தோழியாகவிருந்தாள். அக்காலத்திலேயே கீசகன் திரௌபதியைக்கண்டு காதல் கூர்ந்து அவளை வலிதிற்கூட வெத்தனித் துயிர் மாண்டது.

சுதை - அக்கினிதேவி,அமிழ்து, உதைகாற்பசு, கங்கை, சுண்ணச்சாந்து, சுண்ணம்பு, சுவை, பால், பூந்தேன், பொருள், மகள், மருந்து, மின், வெண்மை.

சுதோற்பத்தி - பிள்ளைப்பேறு.

சுத்தசுழி - சுத்தமத்திமம்.

சுத்தகரணம் - பரதவுருப்புளொன்று.

சுத்தகாந்தாரம் - அணிகைக்கிளை, ஆசானுடைய பெருகுஜாதி.

சுத்தகேவலம் - ஓரவத்தை. [று.

சுத்தகௌடம் - யஞ்ச கௌடத்தொன்

சுத்தகட்டி - கலப்பற்ற பொற்கட்டி.

சுத்தசத்தியம் - மகாவுண்மை.

சுத்தசலம் - தெளிநீர்.

சுத்தசாத்துவிகம் - சித்ரூபசத்தி.

சுத்தசாந்தம் - ஆனந்தரூபசத்தி.

சுத்தசாரி - பரதவுருப்புளொன்று.

சுத்தசீவன் - குற்றமற்றபிராணி.

சுத்தசூனியம் - அறத்தீர்ந்த வெறுமை, முழுப்பாழ்.

சுத்தசைதன்னியம் - சுத்தரூப ஞானம்.

சுத்தசைவம் - ஒருசைவம்.

சுத்தசைவன்-ஆன்மாவுஞ்சிவமுங்கூடியவிடத்து, ஆன்மா சிவானுபவத்துக்கு உரியதாகாதென்று சொல்பவன். இவன் அகச்சமயிகளு ளொருவன்.

சுத்தஞானம் - மயக்கந்தீர்ந்தஞானம்.
சுத்தஞானி - பக்குவஞானி.
சுத்ததாமதம் - சுத்தரூபசத்தி.
சுத்ததினம் - சென்றநாள், புண்ணிய தினம், வருடத்தின் முதனாள்.
சுத்தநிஷாதம் - மணிகதாரம்.
சுத்தநீர்க்கடல் - புறவாழிக்கடல்.
சுத்தபத்தி - மாசற்றபத்தி.
சுத்தபுடம் - சுத்தப்புடம்.
சுத்தபோசனம் - ஆராதபோசனம்.
சுத்தப்பிரமம் - சருவசாட்சி.
சுத்தப்பிழை - முற்றும்பிழை.
சுத்தப்புடம் - உண்ணலிற்களைந்தெடுத்தது.
சுத்தப்பொய் - முற்றும்பொய்.
சுத்தமதி - நன்மதியுள்ளோன்.
சுத்தமத்திமம் - சுத்தவழி.
சுத்தமனம் - வஞ்சகமற்றமனம்.
சுத்தமாயை - மகாமாயை.
சுத்தமார்க்கம் - சத்தியமார்க்கம், நன்னடை.
சுத்தம் - உண்மை, கலப்பற்றது, குற்றமற்றது, சுயம், சுசி, பவித்திரம், பொரிக்கறி.
சுத்தம்பண்ணுதல் - தூயதாக்கல்.
சுத்தரிஷபம் - பிந்ததுத்தம்.
சுத்தவாசனை - நறுமணம்.
சுத்தவாளர் - தெய்வபத்தர்.
சுத்தவாளி - சுத்தன்.
சுத்தவித்தை - சிவதத்துவ மைந்தில் ஒன்று; அது ஞானமேறிக் கிரியை குறைந்தது.
சுத்தவீரன் - மிகுவீரன்.
சுத்தவுபவாசம் - பட்டினி.
சுத்தன் - ஆயுபௌத்திரன். அநேநசன் புத்திரன். மூன்றும் சுசிதந்தை.
சுத்தன் - அருகன், சிவன், கடவுள், பரிசுத்தன், பிரமன், மெய்யன், வருணாச்சிரமமில்லா ஞானி, விட்டுணு.
சுத்தாங்கம் - கலப்பற்றது, முற்றும்.
சுத்தாத்துமா - பரிசுத்தவான்.
சுத்தாந்தபாலகன் - அரண்மனை காவலன்.
சுத்தாந்தம் - அரசன்றேவியில்லம்.
சுத்தாந்தை - ராஜபத்நி.
சுத்தாவத்தை - பரிசுத்தவத்தை.
சுத்தி - அரைப்பலம், இரப்போர்கலம், கும்பிடுகிளிஞ்சில், சங்கு, சுத்தியல், நெய்க்குத்தி முதலிய பாத்திரம், பரிசுத்தம், பவித்திரம்.
சுத்திகாம் - சுத்திசெய்தல்.
சுத்திகரித்தல் - சுத்தமாக்குதல்.
சுத்திகரிப்பு - சுத்தம்பண்ணுதல்.
சுத்திகை - அகவல், இப்பி.
சுத்திசெய்தல், சுத்திபண்ணுதல் - பவித்திரஞ் செய்தல்.
சுத்தியடைதல் - சுத்தியாதல்.
சுத்தியல் - சம்மட்டி.
சுத்தியுமனன் - இவர் வைவசுதமனுவுக்கு யாகத்திலே முன்னர்பெண்ணாகத் தோன்றிப் பின்னர் வசிஷ்டர் பிரயத்தனத்தாற்புருஷரூபம்பெற்றவர். பெண்ரூபத்தோடிருந்த காலத்தில் இளையென்னும் பெயரோடு புதனைக் கூடிப் புரூரவனைப்பெற்றுப் பின்னர்ப் புருஷரூபம் பெற்றபோது உற்கலன், கயன், விஹ்வலன் என மூவர் புத்திரரைப் பெற்றவர்.
சுத்தியுவு - (பு) சாருபுத்திரன்.
சுத்திராமன் - இந்திரன்.
சுத்துரம், சுத்துரு - கண்டங்காலி.
சுத்தோதகம் - சுத்தசலம்.
சுநகன் - (1) கிருற்சுனமதன் புத்திரன். தபோ நியமத்திற் சிறந்தவராகிய சௌநகர்தந்தை(2) (ரி)ருரன் பிரமத்துவரையிடத்துப் பெற்றபுத்திரன்.
சுநசை - பாரிபத்திர பர்வதத்திலேஉற்பத்தியாகிய ஒருநதி.
சுநச்சேபன் - ருசீகமுனி புத்திரன். இருசிகன் இரண்டாம் புத்திரன். இவனுக்குத் தேவராதனெனவு மொரு பெயருளது. அஜிகர்த்தன் மகனென்பாருமுளர். அரிச்சந்திரன் தன் புத்திரனாகிய ரோகிதனை வருணனுக்குத் தத்தஞ்செய்வதாக நியமஞ் செய்துவிட்டுப் பின்னர் அவனுக்கு ஈடாக இவ்வஜிகர்த்தன் புத்திரனாகிய சுநச்சேபனை விலைக்குவாங்கித் தத்தஞ் செய்ய, அவன்வருணனையிரந்து தப்பிப்போய்த்தன் தந்தையிடஞ் செல்லாமல், விசுவாமித்திரனை யடைந்து அவனுக்குத் தத்தபுத்திரனானான் எனவுமொரு கதையுளது.
சுநந்தன் - விஷ்ணுபரிசாருள்ஒருவன்.

சுநந்தை-(1) துஷ்யந்தன் புத்திரனாகிய பரதன்பாரி. (2) இந்துமததோழிகளு ளொருத்தி.
சுநயம் - நன்னடை.
சுநாபன் - (ய) கம்சன் தம்பி.
சுநாமன் - (ர) வச்சிரநாபன் தம்பி.
சுநாசீரன் - இந்திரன்.
சுநாரம் - அடைக்கலான்குருவி, நாய்ப் பால், பாம்பின்முட்டை.
சுநி - பெண்ணாய்.
சுநிதம் - சுநயம்.
சுநீதன் - (கா) சந்நதிபுத்திரன். அலர்க் கன் பௌத்திரன். க்ஷேமன் தந்தை. சிசுபாலன் சேனாபதி.
சுநீதி - உத்தானபாதன் பாரி.
சுநீதை-அங்கன்பாரி. மிருத்தியு மூத்த புத்திரி. வேனன் தாய்.
சுநுகி - சதுரக்கள்ளி.
சுன் - சுனி.
சுந்தரகுசாம்பிகை - திருவீழி மிழலை யிலே கோயில்கொண்டிருக்குந்தேவி யார் பெயர்.
சுந்தரநாயகியம்மை - திருமீயச்சூரிலே கோயில் கொண்டிருக்குந்தேவியார் பெயர்.
சுந்தரமூர்த்திநாயனார்-சைவசமயகுரவ ர் நால்வருள் ஒருவர். கைலாசத்திலே சிவபிரானது அடியார்களுள் ஒருவ ராய் ஆலாலசுந்தரரென்னும் பெய ரோடிருந்து உமாதேவியாரது சேடி யர்கள்மீது மோகித்த காரணத்தாற் பூலோகத்திலே திருமுனைப்பாடி நா ட்டிலே திருநாவலூரிலே சடையனா ருக்கு இசை ஞானியார் வயிற்றிலே அவதரித்தவர். அச்சேடியார்களும் பர வையார் சங்கிலியார் என்னும் பெய ரோடுமுறையேதிருவாரூரிலும் திரு வொற்றியூரிலும் அவதரித்தார்கள். ஆலாலசுந்தரர் கைலாசத்தை விட்டு நீங்குமுன் மனம் பரிதபித்தழக்கண் ட சிவபெருமான் கருணைகூர்ந்து, "பூலோகத்திலுன்னை வந்தாட்கொ ள்வோம்" என்றனுக்கிரகித்தபடியே சுந்தரமூர்த்திநாயனார் மணப்பருவத் தையடைந்து மணக்கோலத்துடன் மணப்பந்தரின் கீழிருக்குஞ் சமயத் தில், அச்சிவபிரான்ஒரு கிழப்பிராம ண வடிவங்கொண்டு ஒரு முறியோ லையோடவ்விடத்தை யடைந்து நாய னாரைத் தமக்கு அடிமையென அச் சபையிலுள்ளோர் ஒப்புமாறு நாட்டி, மணம் புகவொட்டாமற் றடுத்து அ ழைத்துப்போய்த்தம்மை இன்னாரெ ன்றுணருமாறு மறைந்தருளினர். அ ப்பொழுது நாயனார் பூர்வ வாசனை யாற் சிவபக்திமேலிடப்பெற்று அன் றுமுதல் அன்புமயமான அற்புத பா டல்களைப்பாடி சிவஸ்தலங்கள் தோ றுஞ்சென்று வணங்கி வருவாராயி னர். தமது பிறவிக்குக் காரணமாகிய பெண்ணவாவின் பயன்வந்து கூடுங் காலம் வந்தடுக்க, திருவாரூரிலே சுவாமி தரிசனஞ்செய்து மீள்பவர் ஊழ்வலியாலேபரவையாரைக்கண்டு மயங்கி அவர்பாற்சிவபிரானைத் தூது போக்கி அவரை இசைவித்து அவர் மெய்ந்நல நுகர்ந்தங்கிருந்தார். பின் னர்த்திருவொற்றியூரிற்சென்று அங் கு மூழ்கூட்டச் சங்கிலிபாரையுங்கூ டி அவ்வூழையும்புசித்தனர். அச்சங் கிலியார் பொருட்டுச்செய்த பொய்ச் சத்தியத்தின் பயனாகப் பார்வையிழந் து சிலநாள் வருந்திப் பதிகம்பாடிப் பார்வை பெற்றார். சிவபிரானுக்குத் தோழர் என்னும் பெயர்பெற்றவரா யிருந்தும் செய்தபிழையை அக்கட வுள் பொறுத்தருளாது அதற்காக சுந் தரமூர்த்தியைதண்டித்தலின் சிவபி ரான் நடுநிலைதவறாதநீதியுடையரெ ன்பதும்எவ்வினையும் அனுபவித்தன் றித் தீராதென்பதும், க்ஷமித்துப் பா வங்களைத் தீர்க்கும் அதிகாரங் கடவு ளுக்கில்லையென்பதும்பெறப்படும்.

சுந்தரமூர்த்தி நாயனாரது பெரு மைகளையெல்லாம் கேள்வியுற்ற சே ரராஜாவாகிய சேரமான்பெருமாணா யனார்அவரையழைத்துப்போய்த் தம தரமனையிலே விருந்திட் டுபசரித்து வைத்திருந்து அவரிடத்திலே பே ரன்பும் பெருநட்புமுடையரா யிருந் தார் சுந்தரமூர்த்திநாயனார்பதினெட் டாம்வயதிலே திருவாஞ்சைக் களத் திற் சுவாமி தரிசனஞ்செய்து மீண் டு கோபுரவாயிலை யடைந்தபோது

கைலாசகிரியி னின்று சிவகணங்களோடு மொரு வெள்ளையானையானது சிவாஞ்ஞையினாலே அவர் முன்னேசென்று நின்று சிவாநுக்கிரகத்தையுணர்த்த, ஆனந்தபரவசராய் அதன் முதுகின்மேற்கொண்டு சென்றார். சேரமான்பெருமாளும்,அதனையுணர்ந்து தமது குதிரைமேற் கொண்டு அதன்செவியிலே ஸ்ரீ பஞ்சாட்சரத்தையோத அது அந்தரத்தெழுந்து பாய்ந்துசென்று சுந்தரருடைய யானையை வலம்வந்து முன்னே சென்றது. இருவரும் கைலாசத்தை யடைந்து சிவ கணபதப்பேறு பெற்றார்கள். சுந்தரமூர்த்தி யிடத்திலேயே விளங்கிய அற்புதங்கள், முதலை விழுங்கிய புதல்வனை அம்முதலையை யழைத்துஉமிழச்செய்துபிழைப்பித்தது; நென்மலைபெற்றது, அம்மலையைப் பூதங்கள் வாரிப்போய் பரவையார் வீட்டிலும் திருவாரூரிலுள்ளார் வீடுகள்தோறும் குவைசெய்யப் பெற்றதும் தலைக்கணையாக அடுக்கிப் படுத்திருந்த செங்கற்கள் உதயத்திலே பொன்னாயிருக்கப் பெற்றது. மணிமுத்தா நதியிலேயிட்ட பொன்னைத் திருவாரூர்க்கமலாலயக் குளத்திலே யெடுத்தது முதலியனவாம்.

சுந்தரமூர்த்திநாயனார் பொன்னை ஆற்றிலிட்டுவந்துதிருவாரூரிலே பரவையார் முன்பாகக் குளத்திலே தேடியபோது பரவையார் அவரைப்பார்த்து ஆற்றிலேயிட்டுக் குளத்திலே தேடினாலகப்படுமாவென்று அவருடைய ஆற்றலை உணராமற் பரிகசித்தவாக்கியம்இந்நாளிலும் "ஆற்றிலிட்டுக் குளத்திலே தேடல்" என்னும் பழமொழியாய் வழங்குவதாயிற்று.

சேரமான்பெருமாணாயனார்காலம் கடைச்சங்கத்திறுதிக்காலம் என்பது கல்லாடத்தாலும் திருவிளையாடல் முதலிய நூல்களாலும் நன்கு நிச்சயிக்கப்படும். இச்சேரமான் புறநானூற்றிலே சேரமான்மாவெண்கோவெனப்படுவர். அந்நூலிலே தானே சேரமான்மாவெண்கோவும் உக்கிரப்பெருவழுதியும் நட்புடையாரெனப்படுவர். சுந்தரமூர்த்திநாயனார் புராணத்திலே சேரசோழபாண்டியர் மூவரும்சுந்தரரோடு மதுரையிலே ஒரு சமயமொருங்கியிருந்தார்களென்பது கூறப்பட்டிருத்தலால், அவர்கள் புறநானூற்றிலே ஒருங்கிருந்தாரெனக் கூறப்பட்ட சேரமான்மாவெண்கோவும் உக்கிரப்பெருவழுதியும் இராசசூயம்வேட்ட சோழன் பெருநற்கிள்ளியுமேயாவர். சேரமான்மாவெண்கோவெனப்படும் சேரமான் பெருமாணாயனாரை ஔவையார் பாடினாரென்பது புறநானூற்றால் மாத்திரமன்று. அவர் கைலாசத்திற்குக் குதிரைமேற்சென்றபோது ஔவையாரும் தாம் பூசித்துவந்த விநாயகர் அருளாலே குதிரைமேற் சென்றாரோ டொக்கச் சென்றாரென்றொரு கதையும் "குதிரையுங் காதம் கிழவியுங்காதம்" என்ற பாடலு முண்மையாலும்நிச்சயிக்கப்படும். படவே சேரமான் பெருமாணாயனாரும் கடைச்சங்கத்து இறுதிக்கண்ணிருந்த உக்கிரப்பெருவழுதியும் சுந்தரமூர்த்திநாயனாரும், அவருடைய தேவாரத்திலும்புராணத்திலுஞ் சுட்டப்பட்ட சோழனாகிய இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், கல்லாடர், கபிலர், பாணர் முதலியோரும் ஒரேகாலத்தவர்களென்பது சித்தாந்தமாம். ஆகவே அவருடைய காலம் ஆயிரத்தெண்ணூறு வருஷங்களுக்கு முன்னுள்ளதாம். கடைச்சங்ககால நிச்சயம் சம்பந்தர் வரலாற்றினுட் கூறினாம். ஆண்டுக்காண்க.

சுந்தரத்தாது - அத்தபாஷாணம்.

சுந்தரபாண்டியன் - ஒருநூல், ஒரு பாண்டியன்.

சுந்தரமூர்த்தி - அறுபத்துமூவரிலொருவன்.

சுந்தரம் - அழகு, நிறம்.

சுந்தரவல்லி - தெய்வயானை.

சுந்தரன் - அழகன், காமன், சுந்தரமூர்த்தி.

சுந்தரி - மாலியவந்தன்பாரி, நருமதையென்னும் கந்தர்வப் பெண்ணினது புத்திரி.

சுந்தரி - அழகுள்ளவள், இந்திராணி, சிறுசெருப்படை, துர்க்கை, பார்வதி, பெண், மூஞ்சூறு.
சுந்தரிசுட்டது - இந்துப்பு.
சுந்தரேசன் - சிவன்.
சுந்தன்-தாடகைமகன் மாரீசன் சுபாகு என்போர்க்குந் தந்தை.
சுந்தி - கோட்சொல்வோள்.
சுந்தோபசுந்தர்கள் - (தீ) இரணியகசிபன் வமிசத்து நிசுந்தன் புத்திரர். இச்சகோதரரிருவரும் பெருந்தவங்கள் செய்து பிரமாவினிடத்திலே இச்சித்த ரூபம் பெறவும் இச்சித்த இடத்துக்குப் போகவும் அந்நியராற் கொல்லப்படாம லிருக்கவும் மாயா ஜாலங்களை யறியவும் வரம்பெற்று, ஜனங்களை மிகவருத்தி வருங்காலத்தில், விஷ்ணு விசுவகர்மாவினால் ஒரு கன்னிகையை அதிரூபவதியாகச் சிருஷ்டிப்பித்து, அவளை இவர்களிடத்தனுப்பிவிட்டார். அவளைக் கண்ட இருவரும் அதிமோகராய் அவளை நோக்கி நீ நம்மில் யாவருக்கு மனைவியாக விரும்புகின்றாயென்ன, அவள் நும்முள் யார் ஜயவீரனோ அவனுக்கே மனைவி யாவேனென்றாள். அதுகேட்டுப் போர்தொடுத்து ஒருவரை யொருவர் வெட்டி இருவரும் உயிர் துறந்தார்கள். இவர்கள் புத்திரர்கள் சும்ப நிசும்பர்கள்.
சுபகதி - சந்தோஷம், மோக்கம்.
சுபகரன் - ஈகையாளன்.
சுபகருமம் / சுபகன்மம் / சுபகாரியம் } மங்கலகாரியம்.
சுபகாலம் - நற்காலம்.
சுபகிரியை - மங்கலகாரியம்.
சுவகிருது - முப்பத்தாறாவது வருடம்.
சுபக்கம் - பொருளிருக்கும் பக்கம்.
சுபக்கிரகம் - சுபக்கோள்.
சுபங்கரன் - சுபமுண்டாக்குவோன்.
சுபங்கரி - பார்வதி.
சுபசகுனம் - நன்னிமித்தம்.
சுபசெய்தி - நற்செய்தி.
சுபசோபனம் - மங்கலம்.
சுபதந்தி - புஷ்பதந்தம் என்னும் திக்கியானையினது பெண்.

சுபபந்துவராளி - நாற்பத்தைந்தாவது மேளகர்த்தா.
சுபட்சம் - சித்தியாரி லோரத்தியாயம், சுபக்கம்.
சுபதம் - அரசமரம்.
சுபதினம் - நற்றினம்.
சுபத்தலம் - தேவாலயம்.
சுபத்திகாதனம் - தொடைக்கும் முழங்காற்கு நடுவே யிரண்டுள்ளங் காலையுஞ்செலுத்தி நிமிர்ந்திருத்தல்.
சுபத்திரன்-(ய)வசுதேவன் புத்திரன். தாய் பௌரவி.
சுபத்திரேசன் - அருச்சுனன்.
சுபத்திரை - கிருஷ்ணன் தங்கை. அர்ச்சுனன் பாரி. அபிமன்னியன் தாய்.
சுபந்தன் - விக்கிரமார்க்கன் காலத்தில் விளங்கிய ஒரு சம்ஸ்கிருத கவி. வாசவதத்தை யென்னும் நூல் செய்தவரிவரே.
சுபமங்களம் - வாழ்த்து.
சுபமஸ்து - மங்கலச்சொல்.
சுபமிருத்து - நன்மரணம்.
சுபமுகூர்த்தம் - நன்முகூர்த்தம்.
சுபம் - காற்று, நன்மை, நித்தியயோகத்தொன்று, பரிசம், மங்களம், யுத்தம், வாழ்த்து.
சுபயோகம் - ஒருயோகம்.
சுபர்ணகேது - சுபன்னகேது.
சுபர்ணன் - சுபன்னன்.
சுபலன்-காந்தாரதேசத்தரசன். இவன் புத்திரன் சகுனி. புத்திரி காந்தாரி.
சுபவசனம் - மங்கலவசனம்.
சுபவாக்கு - வினவுதல்.
சுபவாசகம் - நல்வசனம். [ல்.
சுபவாதனை - ஆன்மாவானந்தத் தழுந்த
சுபவாரம் - நற்கிரகவாரம்.
சுபன்னகேது - விட்டுணு.
சுபன்னன் - கருடன், சேவல்.
சுபாகு, சுவாகு-(1)சேதிதேசத்தரசனாகிய வீரவாகுவின் புத்திரன், சுநந்தை இவன் சகோதரி. (2) இராமன் தம்பியாகிய சத்துருக்கினன் மூத்த புத்திரன். (3) (ய) கிருஷ்ணன் வமிசத்துப் பிரதிவாகு புத்திரன். (4) (ரா) தாடகை புத்திரன். மாரீசன் தம்பி. இவன் விசுவாமித்திரர் யாககாலத்திலே ராமராற் கொல்லப்பட்டவன்.

சுபாங்சி - அழகுள்ளவள், இரதி, குபேரன் மனைவி.
சுபாசுபம் - இன்பதுன்பம், நன்மை தீமை.
சுபாதிசயம் - நற்செய்தி.
சுபாதிட்டானம் - சுவாதிட்டானம்.
சுபாபம் - சுபாவம்.
சுபாபாங்கை - அழகுடையாள்.
சுபாபாவிகம் - இயற்கையாயுள்ளது.
சுபார்சுவன்-(1) சம்பாதி புத்திரன். (2) (ரா) சுமாலி புத்திரன். (3)(பு) துலிமீடன் வமிசத்தனாகிய திருடநேமி புத்திரன். சுமதி தந்தை.
சுபாலம் - உபநிடதத்தொன்று.
சுபாலிகை - அடுப்பு.
சுபாவக்குணம் - இயற்கைக்குணம்.
சுபாவஞானம் - அதிட்டானமு மாரோபமு மற்றிருத்தல்.
சுபாவமுத்தி - சுத்தமுத்தி.
சுபாவம் - இயல்பு, உபநிடதத்தொன்று, காடகமின்மை.
சுபாவவாதம் - ஒருநூல்.
சுபாவி - நற்குணன், மெய்யன்.
சுபாவீகம் - சுபாவக்குணம்.
சுபானு - பதினேழாவது வருடம்.
சுபானுபாவாதீதம் - பிரமம்.
சுபிஷம் - மிகுதி.
சுபிட்சம், சுபிக்ஷம் } செழிப்பு.
சுபு - (ய) கஞ்சன் தம்பி.
சுபுகம் - மோவாய்க்கட்டை.
சுபுட்பம் - காம்பு, பவளமரம்.
சுபுத்தி - நற்புத்தி.
சுபை - அரசாட்சி, தேவகூட்டம், நியாயஸ்தலம், மூங்கில்.
சுபையதார் - ஓரதிகாரி.
சுபோகம் - சுவானுபோகம்.
சுபாகி - சுவானுபோகி.
சுப்தக்கினன் - (ர)மாலிரவந்தன் புத்திரன்.
சுப்பல், சுப்பி } விறகுசுள்ளி.
சும்பியம் - விளாம்பட்டை, வெள்ளி லோத்திரம்.
சுப்பிரசுதை - காட்டெருமைப்பால்.
சுப்பிரதந்தி-வடமேற்றிசையானையின் பெண்யானை.
சுப்பிரதிஷ்டம் - அத்திமரம்.
சுப்பிரதீகம்-ஈசானதிக்குக் காவல்பூண்ட பெண் யானை.
சுப்ரதீகன்-தன் பிதாவின்து திரவியங்களைத் தமையனை வஞ்சிக்கும் பொருட்டுக் கவர்ந்தமைக்காகத் தமையனால் யானையாகச் சபிக்கப்பட்ட பிராமணன்.
சுப்பிரதீகம், சுப்பிரதீபம் } மிக்கவொளி, வடகீழ்த் திசையானை.
சுப்பிரதீபன் - கீர்த்திபெற்றோன்.
சுப்பிரபேதகம் - சிவாகம மிருபத்தெட்டி னொன்று.
சுப்பிரபை (1) முதல் நாபாகன் பாரி. இவள் ஜாதியில் வைசிய ஸ்திரி.
சுப்பிரமணி - வச்சிரம்.
சுப்பிரமணியர்பிரதானஸ்தலம் - திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவேரகம், திருவாணன்குடி, குன்றுதொறாடல் பழமுதிற்சோலை.
சுப்பிரமணியன் - குமரன்.
சுப்பிரமதுவா - கூகைநீறு.
சுப்பிரமன் - சும்ஹன்.
சுப்பிரம்-ஒளி, கருடப்பச்சையின்குணம், சந்தநம், நித்தியயோகத்தொன்று, நீர், மிக்க வெண்மை, வெள்ளி.
சுப்பிரயோகம் - பஞ்ச பாணவத்தையினொன்று, அது சொல்லும், நினைவுமாயிருத்தல்.
சுப்பிரயோகை - சையகிரியிலுற்பத்தியாகித் தக்ஷிணவாகினியாகப் பாய்கின்ற ஒருநதி.
சுப்பிரலாபம் - சாதுரியம்.
சுப்பிராங்கி - இந்திரன்குதிரை.
சுப்பிரி - பிரமன்.
சுப்பெனல் - ஒலிக்குறிப்பு, நீர்வற்றல், விரைவின்குறிப்பு.
சுமங்கலம் - நன்மங்கலம்.
சுமங்கலி, சுமங்கலை } உமை, மங்கிலியப் பெண்.
சுமங்கை - ஆடுதின்னாப்பாலை, வறட்சுண்டி.
சுமடர்-அறிவிலார், கீழ்மக்கள்.
சுமடி - அறிவிலாள்.
சுமடு - அறிவின்மை, சுமை, சும்மாடு.
சுமதலை - பொறுப்பு.
சுமதன் - விசுவாமித்திரன் புத்திரன்.
சுமதி-நற்குணமுடையாள், நற்குணன், நன்மதி, பாரம், மிகுதி. (1) இக்ஷ்-

வாகு தம்பியாகிய கிருகன்புத்திரன் (2)இருஷபன் புத்திரனாகிய பாதன் புத்திரன். (3)(பு) மதிசாந்திரன் புத்திரன். ரைப்பியன் தந்தை. (5) சகல வேத சாஸ்திர பாரகனாகிய பாரன் புத்திரன்.(6) அரிஷ்டநேமி புத்திரி. சகரன் பாரிகளு ளொருத்தி.இவளிடத்திலே பிறந்த அறுபதினாயிரம் புத்திரரும் கபிலரால் நீருக்கப்பட்டார்கள்.

சுமத்தல் - தாங்குதல், பாரமேற்றல், பொறுத்தல்.

சுமத்திரை - பாண்டுவின் மனைவிகளு ளொருத்தி.

சுமத்து - சுமத்துதல், சுமத்தென்னேவல்.

சுமத்துதல் - ஏற்றுதல்.

சுமநசன்-(1)உன்முகன் புத்திரன். அங்கன் தம்பி. (2) (இ) சம்பூதி. இவன் தந்தை ஹரியசுவன். புத்திரன் திரிதன்வன்.

சுமந்தன் - (1) (ரி) வியாசர் சிஷனாகிய அதர்வணவே தாத்தியானன். (2) (ரி) சாமவேதாத்தியாயராகிய ஜைமினி புத்திரன்.

சுமந்திரன்-(1)புரூரவன்வமிசத்து ஜன்னுபுத்திரன்.(2) தசரதன் சாரதியும் மந்திரியுமானவன்.

சுமப்பு - சுமைதி.

சுமம் - பூ.

சுமரணம் } சுவரணை.
சுமரணை }

சுமருதல் - சுமக்குதல்.

சுமலி - கள்.

சுமவாச்சுமை - சுமக்கொணுச் சுமை.

சுமசனம் - பூ.

சுமாரகம் - நினைப்பு.

சுமாலி - ஓரிராக்கதன், கள்.

சுமா-(1) (ர) சுகேசன்புத்திரன், மாலியவந்தன் தம்பி, ராவணன் மாதாமஹன். (2) கம்சன் தம்பி பலராமனாற் கொல்லப்பட்டவன்.

சுமானம் - நினைப்பு .

சுமத்திரன்- (1) (ய)பஜமானன் பௌத்திரன். விருஷ்ணி புத்திரன். (2) (ய) வசுதேவன்தம்பியாகிய அநீகன் புத்திரன். இவன் பாரதயுத்தத்திலே அபிமன்னியனாலே கொல்லப்பட்ட பிருகத் பலன் மாபிலே முப்பதாம் வழித்தோன்றலாகிய அரசன்.

சுமித்திரை-தசரதன் இரண்டாம்பாரி. லக்ஷ்மண சத்துருக்கினர்களுக்குத் தாய்.

சுமுகம் - நன்முகம்.

சுமுகன் - நன்முகமுள்ளவன்.

சுமித்திரை - சரிநிறை. சரியளவு, தசரதன் மனைவிகளுளொருத்தி,நன்மூத்திரை, நிதானம்.

சுமை - பாரம்.

சுமேரு-இது வடக்கின் கண்ணே துருவ நட்சத்திரத்தை நோக்கி நிற்கும் மேருவினது சிகரம். மேருவின் வாற்பக்கம் குமேருவெனப்படும். அது தெற்கேநோக்கியிருக்கும். அது வடவாமுக மெனவும்படும். மேருவானது பூமிக்கு நாராசம்போலத்தெற்கிருந்து வடக்கே யுருவியோடி நிற்பது. ஆரியர் பூகோளத்தை ஊர்த்துவகபாலம் அதக்கபாலம் என இருகூறாக்கி ஊர்த்துவ கபாலம் முழுதும் நிலமென்றும், அதக்கபால முழுதுநீரென்றும்கூறுவர். ஐரோப்பிய பண்டிதர் பூமியின் கர்ப்பத்திலே யிருக்கும் சருஷண சக்திக்கு அளவில்லையென்று கூறுவதுபோலப் புராணங்களும் இம்மேருவை அநேக தேவதாகணங்களுக்கு வாசஸ்தானமாகக் கூறும். சுமேரு இளாவிருத வருஷ நடுவிலே யுள்ளது. இச்சுமேருவை மனுஷர்சென்றடைவதுகூடாதென்பது புராணக்கருத்து. அவ்விடத்தை அடைதற்கு ஐரோப்பியர் பலர் பலவாறாகப் பலகாலத்திலும் பன்முறை முயன்றும் சித்தியுற்றார் ஒருவருமில்லை. அத்தேச வியற்கை மனுஷர் சஞ்சரித்தற் கொவ்வாத தாதலின் அங்குச் செல்வது யார்க்கும் கூடாத கருமமாம். இதனால் இக்காலஐரோப்பியர் துருவியாராய்ந் துணராத துருவநாட்டைப் பூர்வ ஆரியர் துருவியாராய்ந்தவர்க ளென்பது நன்றாகப் புலப்படும்.

சுமைகாரன் - சுமைசுமப்பவன்.

சுமைகூலி - சுமையெடுத்தகூலி.

சுமைதாங்கி - தண்டை, பொறுப்பாளி.

சுமைதி - பாரம், பொறுப்பு

சுமையடி
சுமையடை } சும்மாடு.
சுமையாள் - சுமைகாரன்.
சுமையிறக்கி - சுமைதாங்கி.
சும்பகம்-ஊசிக்காந்தம், தீத்தட்டிக்கல், முத்தஞ்செய்தல்.
சும்பகன் - ஸ்த்ரீலோலன்.
சும்பகாதிமி
சும்பமர்த்திமி } துர்க்கை.
சும்பநிசும்பர்-சுந்தோப சுந்தாது புத்திரர். இவர்கள் இரணியகசுபன் வமிசத்தர், இவர்கள் புஷ்கரத்திலே பிரமாவை நோக்கித் தவங்கிடந்து இந்திராதி தேவர்களை அடக்குஞ் சக்தி பெற்று மூர்க்கராய்த் திரிந்தகாலத்திலேகாளியினுற்கொல்லப்பட்டவர்கள்.
சும்பனம் - சூப்புதல், முத்தம்.
சும்பன் - காமாதுரன்.
சும்பிதம் - சிம்பனம்.
சும்புதல் - வாடிச்சுருங்குதல்.
சும்பித்தல் - சும்பனஞ்செய்தல்.
சும்புள் - கடம்பு, மரம்.
சும்மா - இலவசம், விருதா.
சும்மா - பட்டடை.
சும்மை - ஆவாரை, ஊர், ஒலி, சுமை, நகர், நாடு, நெற்போர்.
சும்ஹன்-சுப்பிரமன் பலியினது கடைமகன். இவன் சௌம்ஹ நகரம் நிருமித்தவன்.
சுயகுணம் - சுபாவக்குணம்.
சுயகுரு - வமிசக்குரு.
சுயசாதி - கலப்பற்றசாதி.
சுயசோதி
சுயஞ்சோதி } இயற்கையொளிகடவுள்,கலப்பில்லாவொளி
சுயஞ்ஞன்-(1) தசரதன் புத்திரகாமேஷ்டியாகத்தை நடாத்திய கர்த்தாக்களு ளொருவர். (2) உசீநகர தேசத்தரசன். இவன் சத்துருக்களால் யுத்தத்திலே வீழ்த்தப்பட்டபோது பந்துக்கள் துக்கத்தில் மூழ்கிக்கிடக்க யமன் ஒரு பாலப்பருவ முடையனுகிச் சென்று தத்துவோப தேசஞ் செய்துபோகப் பெற்றவன்.
சுயபழக்கம் - இயல்பு.
சுயபாரபத்தியம் - சுதந்திரவதிகாரம்
சுயபாஷை - சொந்தப் பாஷை.
சுயபுணர்ச்சி - தற்புணர்ச்சி.
சுயபுத்தி - சொந்தப்புத்தி.
சுயம்-இயல்பு, கலப்பற்றது, சொந்தம்.
சுயம்பாகம் - சமைத்தல்.
சுயம்பாகன்
சுயம்பாகி } சமையற்காரன், சவுக்காரம்.
சுயம்பாடுதல் - சங்கீதம்பாடுதல்.
சுயம்பாரபத்தியம் - சுயபாரபத்தியம், தனியதிகாரம்.
சுயம்பிரகாசம் - இயற்கையொளி, கடவுள் கலம்பற்றவொளி.
சுயம்பிரகாசன் - தற்சோதியானவன்.
சுயம்பு - கடவுள், சிவன், சுயாதீனம், தானாகவாதல், பிரமன்.
சுயம்புநாதர்-திரு ஆக்கூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
சுயம்புலிங்கம் - தானேயானலிங்கம்.
சுயம்வரம் - சுவயம்வரம்.
சுயாதிபதி-சக்கிரவர்த்தி, தன்னரசுகாரன்.
சுயாதிபத்தியம் - சக்கிரவர்த்தி தத்துவம், சுயவதிகாரம்.
சுயாதீனம் - சொந்தம், தன்னிட்டம்.
சுயாதீனம் - தன்னிட்டக்காரன்.
சுயிரகம் - குசப்புல்.
சுயேச்சை-தன்னிச்சை,தன்னிட்டம்.
சுயோகி - கள்.
சுயோதனன் - துரியோதனன்.
சுரகு - ஒரு வேடராஜன்.
சுரகுரு - வியாழன்.
சுரங்கம்-கீழறை, சாதிலிங்கம், திலகசிந்தூரம்,தேன்,தோடம்பழம், தோன்றுமலிருக்குந் துவாரம்.
சுரசத்துரு - அசுரர்.
சுரசந்தி - ஓரிசை.
சுரசம்-கற்கண்டு முதலிய சுயசாரவஸ்து, சாறு,சிறுகிழங்கு, சுகிர்தசாரம், துளசி, நறும்பிசின், நொச்சில், பாதரசம், முறித்தசாறு.
சுரசனி - இரவு.
சுரசன்னிதி - வானோர்கூட்டம்.
சுரசா - துளசி.
சுரசுதம் - இரட்சிப்பு.
சுரசுலை - ஒருசூலை.
சுரசை - சிற்றரத்தை. (1) தக்ஷன்மகள் காசிபன்பாரி, மாயையில் வல்லவளாதலின் மாயை யெனவும் படுவள், இவளே சூரன் தாரகன் முதலிய அசு

ரர்களைப் பெற்றவள். (2) நாகர்கள் தாய், அனுமான் சீதையைத்தேடி இலங்கைக்குப் போகும்போது வழியிலே சமுத்திரமத்தியிலேநின்று வழியடைத்து நின்ற இவளைக் கர்ப்பத்திற் பிரவேசித்து வயிற்றை போழ்ந்து கொன்று போயினன்.
சுரச்சதி - சுரத்தின்ருளம்.
சுரஞ்சனம் - சமுகு.
சுரடி - ஒருபண்.
சுரணை - சுவரணை.
சுரண்டல், சுரண்டுதல் - கவருதல், சீண்டுதல், தூண்டுதல், விபசாரஞ்செய்யல்.
சுரததாவி - கும்பதாசி.
சுரதநீர் - காமநீர்.
சுரதநூல் - காமநூல்.
சுரதமங்கை - வேசி.
சுரதமாரபாண்டியன் - பராக்கிரமபாண்டியனுக்குப்பின் அரசுசெய்தவன்.
சுரதம் - அன்பு, இசைப்பு, ஒட்டல், பாதரசம், புணர்ச்சி, மருந்திழிசாரம்.
சுரதரு - தேவதரு.
சுரதலீலாவிநோதம் - புணர்ச்சி விளையாட்டிற் பொழுதுபோக்கு.
சுரதலீலை - புணர்ச்சிவிளையாட்டு.
சுரதவித்தை - புணர்ச்சிவிற்பன்னம்.
சுரதனு - வானவில்.
சுரதன் - (கு)ஜன்னுபுத்திரன். வேதன் தம்பி, சுவேதனுக்குப்பின் விதர்ப்ப தேசத்திற்கு அரசனாயினவன்.
சுரதாக்கு - அரத்தை.
சுரதாபதயிலம்-ஒருமருந்தெண்ணெய்.
சுரதாரு - கற்பகம்.
சுரத்தல் - உண்டாதல், ஊறுதல், நிறைதல், பயத்தல்.
சுரநடை - பாலைப்புறம், அது சுரம்புகு மாதர் வருத்தங்கூறல்.
சுரநதி - ஆகாயகங்கை, கங்கை.
சுரநிந்தனை - ஜேஷ்டாதேவியிடத்து வருணனுக்குப் பிறந்த புத்திரி, அதாமன் தங்கை.
சுரப்தம் - ஆகாயம், தேவலோகம்.
சுரபதி - சுரர்பதி.
சுரபி - கபிலை, கந்தகத்தூள், கள்ளி, சாதிக்காய், சித்திரைமாதம், துளசி, பசி பிரமிப்பூடு, பூமி, மது, மல்லிகை, வாசனை.
சுரபிபத்திரை - சம்புநாவல்.
சுரபிவாணன் - காமன்.
சுரபு - இலவம்பிசின். உக்கிரசேனன் மகள், சியாமதன் பாரி.
சுரபுன்னாகம், சுரபுன்னை - ஒருமரம்.
சுரப்பு - இரத்தமுதலிய சுரத்தினால் வருங்கனப்பு, சுரத்தல்.
சுரப்புவடிவு - முலைமேற்றிரள்.
சுரகஞ்சரி-ஒருசங்கீதசாஸ்திரம். (2) ஆடவரைச் சேர்வதில்லையென்று விரதம்பூண்டிருந்து பின்னர்ச் சீவகன் சங்கீதத்தால்மயங்கி அவனுக்குமனைவியாயினவள், (சீவகசிந்தாமணி.)
சுரமண்டலம் - ஒருவாத்தியம்.
சுரமதி - சிலந்தி.
சுரமலி, சுரமலிகம் - செந்தீக்கரப்பன்.
சுரம் - அருநெறி, இசை, இராகபேதம், உட்டுளை, ஒருப்பு, கள், காடு, காய்ச்சல், கொம்பினுட்குருத்து, பாலைநிலம், வழி.
சுரம்பாடுதல் - சத்தசுரப்பரிட்சைபண்ணல்.
சுரம்போக்கு - பாலையிற்செல்லல்.
சுரம்போடுதல்-சுரஞ்சொல்லிப்பாடுதல்
சுரரிடம் - தேவலோகம்.
சுரர் - வானோர்.
சுரர்பகைவர் - அசுரர்.
சுரர்பதி - இந்திரன், தேவலோகம்.
சுரலோகம் - தேவலோகம்.
சுரழ் - இலவம்பிசின்.
சுரளிகை - பாலைமரம்.
சுரன் - அறிஞன், சூரியன்.
சுரா - கள்.
சுராகாரம் - தெங்கு.
சுராட்டு - இந்திரன், சிவன்.
சுராட்புருடன் - சிவன் வாஸ்துபுருடன், விட்டுணு.
சுராதிராஜன் - இவனே சோழமண்டலமமைத்த முதற்சோழன் என்பது கலிங்கத்துப் பரணியிற் கூறப்பட்டுள்ளது.
சுராபாகை - கங்கை.
சுராபானம் - கள்முதலியன குடித்தல்.

சுராபானி - குடிகாரன்.
சுராரலர் - இராக்கதர்.
சுராரி - அசுரன், பைசாசம்.
சுரார்க்கம் - பொன்.
சுராபானம் - கள்குடித்தல்.
சுராலயம் - கள்விற்குமிடம், சுவர்க்கலோகம், மேரு.
சுராலை - சாம்பிராணி.
சுராளம் - கெச்சைநடை.
சுராஷ்டிரன்-(1) தாமசமநுதந்தை. (2) காசிபன் புத்திரன். தீர்க்கதமன் தந்தை.
சுரி - ஆணரி, எட்டுத்தொளை, சங்குச்சுரி, சுரியென்னேவல், சுயற்சி, சேறு, தமர், முறுக்கு.
சுரிகுழல் - அளகம், கவசம், பெண்.
சுரிகை - உடைவாள், கத்தி, கவசம். [று.
சுரிதகம் - கலிப்பாவுறுப்பாறனுளொன்
சுரிதம் - கலக்கப்பட்டது, வெட்டப்பட்டது.
சுரிதல் } சுருங்கல், சுழித்துள்ளே
சுரித்தல் } வாங்கல், சேருதல்.
சுரிபோடுதல் - தமரிடுதல்.
சுரிப்புறம் - சங்கு, துவாரமுள்ள பக்கம், நத்தை.
சுரிமண் - சேறு.
சுரிமுகம் - சங்கு, நத்தை.
சுரியல் - இளைஞர்மயிர், சுரிதல், சுழலல், நீர்ச்சுழி, பெண்மயிர், மயிர்.
சுரியாணி - புரியாணி.
சுரியூசி - தருமரூசி. [பு
சுரீரிடுதல்-அச்சக்குறிப்பு, ஒலிக்குறிப்
சுரீரெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.
சுருக்கங்கோரை - ஒருகோரை.
சுருக்கம் - அடக்கமானசெய்கை, கட்டு குறைவு, சங்கிரகம், சிறுமை, சுருக்கல்.
சுருக்கல் - சுருக்குதல்.
சுருக்கி - ஆமை, சிறுகீரை, தொட்டாற்சுருக்கி.
சுருக்கு - உருவுதடம், கட்டு, கண்ணி, சுருக்கம், சுருக்கென்னேவல், சுருங்கப்பிடித்துக் கட்டியது, நெய்த்துடுப்பு, மடிப்பு.
சுருக்குதல்-அடக்குதல், ஒடுக்குதல், கட்டுதல், சிறுகப்பண்ணல், சுருங்கச்செய்தல்.
சுருக்குப்பிடித்தல் - சுருக்குப்பிடித்துக் கட்டுதல்.
சுருக்குப்பை - சுருக்கிவிடும்பை.
சுருக்குப்போடுதல் - உருவு கயிறிடுதல்.
சுருக்குவைத்தல் - கண்ணுவைத்தல்.
சுருங்கப்பிடித்தல் - குறைத்தல்.
சுருங்கச்சொல்லணி-ஓரலங்காரம், அது அடைமொழி யொப்புமை யாற்றலான் அப்பொருட்செய்தி தோன்றப் புகழ்பொருட்செய்தியைச்சொல்வது.
சுருங்கச்சொல்லல்-நூலழகிலொன்று.
சுருங்கல் - குறைதல், சுருங்குதல், திரைவு, நுழைவாயில், மாலை.
சுருங்கு-சலதாரை, சுருங்கென்னேவல்.
சுருங்குதல்-அடக்கமாயிருத்தல், இறுகுதல், ஒடுங்குதல், குறைதல், கூம்புதல், கெடுதல்.
சுருங்கை - கோட்டையிற்கள்ளவழி, நுழைவாயில், மதகு.
சுருசி - உத்தானபாதன் இளையமனைவி, உத்தமன் தாய்.
சுருசுருத்தல் - ஊடுருவு மொழிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.
சுருசுருப்பு } சுருசுருத்தல்.
சுருசுரெனல் }
சுருட்டி - ஆலவட்டம், ஓரிராகம், மயிர்ச்சிகைப்பூடு.
சுருட்டிப்பிடித்தல் - குறைக்குதல். [ல்.
சுருட்டிவாங்குதல்-குறண்டைவாங்குத
சுருட்டு-உபாயம், சுருட்டென்னேவல், சுருள் மடக்குகை.
சுருட்டுக்கொழுக்கட்டை - ஒருகொழுக்கட்டை.
சுருட்டுதல் - சுருளச்செய்தல்.
சுருட்டுவாள் - சுருட்டும்வாள்.
சுருட்டை - ஒருபாம்பு, மயிர்ச்சுருள்.
சுருட்டைவிரியன் - ஒரு விரியன்பாம்பு.
சுருணி - யானைத்தோட்டி.
சுருணை - ஒருவளைவு, சுருண்டது, நூல் முதலியவற்றின் யந்து.
சுருண்டுபோதல் - சோர்ந்துபோதல், பலங்குன்றல்.
சுருதகீர்த்தி-அர்ச்சுனனுக்குத் திரௌபதியிடத்துப் பிறந்த புத்திரன், (2) வசுதேவன் தங்கை. கேகயராஜாவாகிய திருஷ்டகேது பாரி. (3) விக்கிரமார்க்கன் பாட்டன் இவன் தனக்குப்

புத்திரனின்மையாற் புத்திரி புத்திரனாகிய விக்கிரமார்க்கனுக்கு அரசு கொடுத்தான். (4) சத்துருக்கினன் பாரி, குஜத்துவஜன் மகள்.
சுருதசிரவன் - (ரி) சோமசிரவன் தந்தை. இவன் ஜனமேஜயன் காலத்திலிருந்தவன்.
சுருதசிரவை - வசுதேவன் தங்கை. சிசுபாலன் தாய். தமகோஷன் பாரி, சாத்துவதியென்றும் பெயர்பெறுவன்.
சுருதசேனன் - (1) சகதேவனுக்கு திரௌபதி யிடத்துப் பிறந்த புத்திரன். (2) ஜனமேஜயன்.
சுருதசோமன் - வீமனுக்குத் திரௌபதியிடத்துப் பிறந்த புத்திரன்.
சுருததேவன் - மிதிலையிலிருந்த ஒரு விஷ்ணு பக்தன். (2) விஷ்ணு பரிவாரத்தவருளொருவன்.
சுருததேவி - வசுதேவன் தங்கை. இவள் விருத்தசர்மன் பாரி. தந்துவத்திரன் தாய்.
சுருதமுக்கியன் - வசுதேவன் புத்திருளொருவன். இவன்தாய் சகாதேவி.
சுருதம் - சரித்திரம்.
சுருதவர்மன் - துரியோதனன் தம்பி.
சுருதன் - (இ) சுவேராத்திரன், பகீரதன் புத்திரன்.
சுருதாயு - (1) புரூரவன் புத்திரனாகிய வசுமந்தன். (2) கலிங்கதேசத் தாசன். இவன் சகோதர புத்திரர்களோடு வீமனால் பாரதயுத்தத்திலே கொல்லப்பட்டவன். (3) (மி) அரிஷ்டநேமி புத்திரன்.
சுருதாயுதன் - வருணன் புத்திரனாகிய ஓரரசன். இவன் தான் வருணனிடத்துப்பெற்ற கதாயுதங்கொண்டு கிருஷ்ணனைச் சாடியபோது அக்கதை மாலையாகி விழுந்து மீண்டுவந்து தன்னையே கொல்லப்பெற்றவன்.
சுருதிகள் - வேதங்கள்.
சுருதி - இசை, ஒலி, காது, சுதி, சுரம், லச்சொல், மந்திரம், வேதம்.
சுருதிகீதைகள் - சகம் ஒடுங்கியவிடத்து யோக நித்திரையிலிருந்த பரமேசுவரனை வேதங்கள் செய்த தோத்திரங்கள். இவை பரம தத்துவார்த்த முடையன.
சுருதிகூட்டுதல் - சுதியெடுத்தல்.
சுருதிசம்மதம் - பிரபானுவம்.
சுருதிசாரம் - ஒரு ஞானநூல்.
சுருதிஞானம் - நால்வகைக் கேள்வியிளொன்று, வேத அறிவு.
சுருதிவிலோசனம்-வேதமறியும்விவேகம்.
சுரும்பர் - ஆண்வண்டு, வண்டு.
சுரும்பாயன் - மன்மதன்.
சுரும்பு - ஆண்வண்டு, மலை வண்டு.
சுருவம், சுருவை } நெய்த்துடிப்பு.
சுருளல் - மயிர்ச்சுருள்.
சுருளி - ஒருமலை, தொழுகண்ணி.
சுருளுதல் - சுருளாதல், வளைதல்.
சுருளை-சுருள், நூற்சுருள் முதலியன.
சுருள் - ஐம்பாலிலொன்று, அது பின்னே செருகல், சுருளென்னேவல், தாமரையுட்சுருள், நூற்சுருள் முதலியன பெண்மயிர், வெற்றிலைச்சுருள்.
சுருள்வு - சுருட்சி.
சுரூபம் - உருவம், நல்லுருவம்.
சுரூபவதி - அழகி.
சுரூபி-அழகுள்ளவள், அழகுள்ளவன், உரூபி.
சுரூபிணி - நல்லரூபி.
சுரேசன்-இந்திரன், ஈசானன், குமரன்.
சுரேசுவரி - உமை, தேவகங்கை, முசுமுசுக்கை.
சுரேச்சியை - துளசி.
சுரேந்திரசித்து-இந்திரசித்து, கருடன்.
சுரேந்திரன் - இந்திரன்.
சுரேந்திரன்மைந்தன் - அருச்சுனன்.
சுரை-அமுதம், அம்புத்தலை, உட்டுளை, களவு, கள், சுரைக்கொடி, சூர்ணம், பசு, பசுவின் முலை, பூண், விலங்கின் முலை.
சுரைக்கந்தகம், சுரைக்காய்க்கந்தகம் } ஒருவகைக் கந்தகம்.
சுரோணராசவர்த்தம் - சிகப்பு இரத்தினம்.
சுரோணி - யோனி.
சுரோணிதம் - உதிரம், மகளிர்சூதகம்.
சுரோதம் - கட்கடல்.
சுரோத்தமன் - சூரியன்.
சுரோத்தாம் - சந்தனம்.
சுரோத்திரம் - காது, கேள்வி.
சுரோத்திரியம் - கற்றோர்க்கிடப்பட்ட காணி முதலியன.

சுரோத்திரியாகாரபஜனுக்கினி - பிராமணரடுப்பினெருப்பு.
சுலட்சணை - உமாதேவியின் சேடியரிலொருத்தி.
சுலபம் - அற்பம், இலேசு.
சுலபை - பரமதத்துவார்த்த முணர்ந்தாளொருபெண். இவள் மகாத்துமாவான பின்னர் ஒருநாள் மகாஞானியாகிய ஜனகமகாராஜாவினது மனநிலைமையை ஆராயும் பொருட்டுச் சம்வாதம் புரிந்தவள்.
சுலவல் } சுழலல், சுழற்றுதல்.
சுலவுதல் }
சுலனன் - அக்கினி.
சுலாவல் } சுற்றிவருதல், சுற்றுதல்.
சுலாவுதல் }
சுலாவுரொட்டி } ஒரு பணிகாரம்.
சுலாவுறட்டி }
சுலு - லேசு.
சுலுகம் - கலகம், குறைவு, சிரங்கை, சேறு.
சுலுகை - மூதலை.
சுலுப்பு - ஓர் மரக்கலம்.
சுலூபம் - அற்பம்.
சுலோகம்-ஆரியச்செய்யுள்,பழமொழி, புகழ், வசனம்.
சுலோகி - கள்.
சுலோசனம் - மான்,மூக்குக்கண்ணுடி.
சுலோசனன் - துரியோதனன்.
சுலோசனை - மூக்குக்கண்ணுடி.
சுலோபம் - அற்பம், எளிது, எறும்பு, மூதுரை.
சுல் - வெள்ளி.
சுல்லம் - கயிறு, தாமிரம்.
சுல்லன் - பீளைக்கண்ணன்,பீளைக்கண்ணி.
சுல்லி - அடுப்பு, மடைப்பள்ளி.
சுல்லு - வெள்ளி.
சுல்வம் சிறங்கை, சிறுமை, செம்பு.
சுவகதம் - சுகதம்.
சுவகபோலம் - தானுயுண்டுண்ணல்.
சுவசந்தம் - சித்திராபூரணை.
சுவசனம் - சாதுரியம், நல்வசனம்.
சுவசை-பிரஜாபதிபாரி, அநிலன்தாய்.
சுவச்சம் - எண்ணெய், குற்றமற்றது. சொச்சம்.
சுவச்சிரகம் - ஸ்ரீராமன் வில்.
சுவடி - எழுதிய புத்தகம்.
சுவடு - அங்கவடி, அடையாளம், கட்டு, கபடம், குறிப்பு, சுளுகு, தழும்பு, பக்கரை.
சுவணகாரர் - தட்டார்.
சுவணதானம் - இரணியதானம்.
சுவணபுட்பம் - அருச்சனை செய்யும் பொன்.
சுவணபூமி - தேவலோகம்.
சுவணமயம் - பொன்மயம்.
சுவணம் - கருடன், கழுகு, பொன்.
சுவதந்தரம் } சுதந்திரியம்.
சுவந்தரம் }
சுவதந்திரியம் }
சுவத்தம் - சொஸ்தம்.
சுவத்தி } ஓரடையாளம், மங்கலவடை.
சுவஸ்தி }
சுவத்திகம் } ஓரடையாளம்.
சுவஸ்திகம் }
சுவத்திகாதனம் - தொடைக்கு முழங்காற்குநடுவேயிரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி யிருமாந்திருப்பது.
சுவத்திகாமண்டலம் - தீக்ஷாமேடை.
சுவநம் - சண்பகம்.
சுவபற்கன் - (ய) பிரசினன் மூத்தபுத்ரன், இவனுக்குக் காந்தியினிடத்துப் பன்னிருவர் புத்திரர் பிறந்தார்கள். அவருள் மூத்தோன் அக்குரூரன்.
சுவப்பிரம் - நரகம், பாதலம், வளை.
சுவம் - ஐசுவரியம்.
சுவயங்கிருதம் - தானேயானது.
சுவயத்தானம் - சொந்த இடம்.
சுவயம் - சுயம்.
சுவயம்பு - சயம்பு.
சுவயம்புவன் - சுவாயம்பு.
சுவயம்வரம் - தன்னிட்டம், தானுகவரித்து மணமாலையிடல்.
சுவயம்வரை - மாலையிட்டு மணமுடித்தபெண்.
சுவரகழ்கருவி - கன்னக்கோல்.
சுவரணை - உணர்ச்சி.
சுவரொட்டி - அணைசுவர், ஆட்டின் மண்ணீரல், ஒருவகைப்புரு, சுவர் முள்ளங்கி.
சுவர் - அலங்காரம், ஆகாயம், காயத்திரியிலோருறுப்பு, தேவலோகம், மதில்.
சுவர்க்கபதவி } தேவலோகம்.
சுவர்க்கபூமி }

சுவர்க்கம் - சொர்க்கலோகம், மூலை.
சுவர்க்கருவிலி - ஒருபாம்பு.
சுவர்க்கர் - வானோர்.
சுவர்க்கலோகம் - விண்ணுலகம்.
சுவர்க்கவீடு - மோக்கம்.
சுவர்க்கோழி - ஒருவண்டு.
சுவர்ச்சலை-சத்தமாதரிலொருத்தி, சூரியன் மனைவி.
சுவர்ச்சாதி - சத்திச்சாரம்.
சுவர்ணகதலி - ஒருவகைவாழை.
சுவர்ணபிந்து - விட்டுணு.
சுவர்ணம் - சொன்னம், பொன்.
சுவர்ணரோமன்-(மி) மகாரோமன் புத்திரன்; ஹிருசுவரோமன் தந்தை.
சுவர்ணவர்ணன் - மஞ்சள், விட்டுணு.
சுவர்ணஷ்டீவி-சிருஞ்சயன் புத்திரன்.
சுவர்ணங்கி - நாற்பத்தேழாவது மேளகர்த்தா.
சுவர்தாங்கி - அணைசுவர்.
சுவர்ப்பாம்பு } சுவர்ப்புடையன்.
சுவர்வளையன் }
சுவர்ப்பானவி-ஆயுவின் பாரி, நகுஷன் தாய்.
சுவர்ப்பானன் (1) தனுபுத்திரன் (2) விப்பிரசித்தி புத்திரன், ராகு.
சுவர்வைத்தல் - சுவர்க்கட்டுதல்.
சுவர்ன்னயூகி - செப்புமல்லிகை.
சுவலை - அரசமரம்.
சுவலோகம் - மேலேழுலகிலொன்று.
சுவல் - குதிரைக்கழுத்தின்மயிர், தோண்மேல், பிடர், முதுகு, வேடு.
சுவல்லி - கார்போகிவிதை.
சுவல்வரி - அணில்.
சுவவு - சுவர்க்கம், பறவைமூக்கு, மூஞ்சூறு.
சுவறல் } ஊறுதல், காய்தல், வற்றல்.
சுவறுதல் }
சுவற்பம் - சொற்பம், நெற்றி.
சுவற்றல் } குடித்தல், சுவறப்பண்ணுதல்.
சுவற்றுதல் }
சுவனன் - சந்திரன், சூரியன், தீ.
சுவன்னகாரன் - பொற்கொல்லன்.
சுவன்னயூதி - செம்புமல்லிகை.
சுவா - நாய்.
சுவாகசம் } கிளி, க்ஷேமம் விசாரித்தல்.
சுவாகதம் }
சுவாகா - அக்கினிதேவி, மந்திரமுடிவினொன்று.

சுவாகாதேவி - அக்கினிதேவன்பாரி.
சுவாகாசகந்தி - இத்தி.
சுவாகிதன்-(ய்) விருஜினவந்தன் புத்திரன்.
சுவாகு - சுபாகுகாண்க.
சுவாக்கீரை - ஒருபூடு.
சுவாசகம் - கிளி, சவட்டுமண், பேராமுட்டி, விஷமுட்டி.
சுவாசகாசம் - ஒருநோய்.
சுவாசக்குத்து - ஒருநோய்.
சுவாசங்கட்டியேற்றல் - பிராண வாயுவைச் சுழுமுனை நாடிவழியாய்ச்செலுத்தல்.
சுவாசமடக்குதல் - பிராண வாயுவைக் கும்பித்தல்.
சுவாசம் உயிர்ப்பு, சுவட்டுமண், நல்லிருப்பிடம்.
சுவாசம்வாங்குதல்-பிராண வாயுவைப் பூரித்தல்.
சுவாசம்விடுதல் - பிராண வாயுவை யிரேசித்தல்.
சுவாசிகி - பாதிமரம்.
சுவாதகந்தி - இத்திமரம்.
சுவாதந்திரியம் - சுதந்திரம்.
சுவாதம் - ஒருநோய், சுவாசம்.
சுவாதி - சோதிநாள்.
சுவாதிஷ்டானம் } ஆறாதாரத் தொன்று, அது குய்யத்தானம்.
சுவாதிட்டானம் }
சுவாதீனம் - சுயாதீனம்.
சுவாது - ஆடாதோடை, தித்திப்பு.
சுவாதுகண்டகம் } நெருஞ்சில்.
சுவாதுகண்டம் }
சுவாதுகந்தி - துளசி.
சுவாஸ்தியம் } இன்பம், சுகம், பாக்கியம்.
சுவாத்தியம் }
சுவாத்தியம்- உபாசிரியனைகப் படித்தகல்வி, மந்திரமுச்சரித்தல், வேதமோதல், வேதம்.
சுவாந்தம் - மனது.
சுவாபப்பிரமாணம்-ஓரளவை, அது ஒருசொற்பல பொருள்விரிந்தவழி அதற்கேற்ற பொருள்கொள்ளல், (உ-ம்) யானையூர்ந்தோன் தோட்டிதாவென்றூர்ப்பிறிதொருதோட்டி யென்றுணராமல் யானைத்தோட்டி கொடுத்தல்.
சுபாவம் - இயல்பு.
சுவாயாலிரம் - தானுயிருத்தல்.

சுவாமி - அரசன், அருகன், உவாத்தி, எசமானன், கடவுள், கந்தன், குரு, சிவன், பொன்.
சுவாமிநாதன் - கந்தன்.
சுவாமிமலை - ஒருமலை.
சுவாமை - வாமையென்னும் நதி.
சுவாயம்பு - ஒருமனு.
சுவாயம்புவமனு-பிரமமானச புத்திரனாகிய ஒருமனு. இவன் பாரி சதரூபை. பிரியவிரதன் உத்தானபாதன் என்போர் புத்திரர். பிரசூதி, ஆகூதி, தேவகூதி என்போர் புத்திரிகள்.
சுவாயம்புவம்-சிவாகமமிருபத் தெட்டினொன்று.
சுவாய் - கப்பலினோர்கயிறு.
சுவாரசம் } வெள்ளிலோத்திரம்.
சுவாரசுயம் }
சுவாரி - கப்பலின் பின்னணியம், சிவிகை முதலிய பிரயாணம்.
சுவாரோசிஷன் - சுவரோசி புத்திரனாகிய ஒருமனு தாய்பெயர் மனோரமை. இவன் நெடுங்காலந் தவங்கிடந்து மனுவாயினவன்.
சுவார்ச்சிதம் - தன் சம்பாத்தியம்.
சுவார்த்தம் - இயல்பாயுள்ளது, சுயதிரவியம்.
சுவார்த்தவனுமானம் - இயல்பனுமானம், சுயமதிப்பு.
சுவாலித்தல் - சொலித்தல், பற்றியெரிதல்.
சுவாலை - சொலிப்பு.
சுவானம் - நாயுருவி, நாய், பொன்.
சுவானுபவம் - சுகவனுபவம், சுயவனுபோசம்.
சுவானுபூதி - தெய்வவருள், தெய்வவறிவு.
சுவானுபூதிகம் - சுயமுயற்சியாற்பெற்றுக்கொண்டவறிவு.
சுவான் - உடையவன், உடையவள்.
சுவி - இத்திமரம், துளசி.
சுவிகர்ம் - சுவிகாரம்.
சுவிகரித்தல் - அனுபவித்தல், தனதாக்கல், வழங்குதல்.
சுவிகாரப்புத்திரன் - தத்துப்புத்திரன்.
சுவிகாரம் - அங்கீகரிப்பு, அனுபவம், தனதாக்குதல்.
சுவிகை - கச்சோலம், கள்.
சுவிக்கிராதம் - வீரம்.
விசட்சணம் - பேரறிவு.
சுவிசாலம் - அதிகவிசாலம்.
சுவிசேஷகன் } சுவிசேஷம் போதிப்போன், நற்செய்தி சொல்வோன்.
சுவிசேடகன் }
சுவிசேஷம் } நற்செய்தி.
சுவிசேடம் }
சுவிசேஷன் - சுவிசேஷன்.
சுவித்தலம் - அந்தப்புறம்.
சுவிதன் - அரசன்.
சுவிந்திரம்-மலைநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
சுவிர்தன்-(அ) உசீநான் ஐந்தாம் புத்திரன்.
சுவீகாரச்சுதன் - சுவீகாரபுத்திரன்.
சுவீகரம் } சுவிகாரம்.
சுவீகாரம் }
சுவீரன்-(1) (அ)சிபியினது இரண்டாம் புத்திரன். இவன் தேசம் சவ்வீரம் (2) (ய) வசுதேவன் தம்பியாகிய தேவசிரவசன் புத்திரன்.
சுவீரியம் - இலந்தைக்கனி.
சுவுகம் - மோவாய்க்கட்டை.
சுவேகம் - வெண்கரும்பு.
சுவேச்சை - தன்னிச்சை.
சுவேதகம் - சவரிலோத்திரம்.
சுவேதகாண்டம் - வஞ்சிக்கொடி.
சுவேதகி - ஓரிராஜருஷி. இவருடைய பக்தி வைராக்கியத்தைப் பிரமா மெச்சி இவர் செய்யப்புகுந்த யாகத்தை நடாத்தும்படி துர்வாசரை அனுப்பினார். இவ்வியாகம் நடந்த பன்னிராண்டு காறும் அவன் நெய்யேயிடையறாமற் சொரிந்து அக்கினி திருப்தி செய்தமையால் அக்கினி தேவருக்குத் தீபனாக்கினி மந்தமுண்டாயது அதுகாரணமாகவே அக்கினி தேவர்காண்டவவனத்தை யுண்ணற்கொருப்பட்டனர்.
சுவேதகுசுமம் - வெள்ளெருக்கு.
சுவேதகேதன்-(1)(ரி) அஷ்டவக்கிரன் தாய்மாமன். இவன் கோபத்தாற்றமது மகனை யமபுரத்துக்கு அனுப்ப அவன் அவ்வாறு சென்று மீண்டான். (2) உத்தாலகன் புத்திரன்.
சுவேதசம் - வேர்வையிற் பிறப்பன.
சுவேதசாரம் - நாணற்புல்.
சுவேததீவு - ஒருதீவு.

சுவேதநாதம் - இந்திரியம்.
சுவேதமூலம் - சாரணை.
சுவேதம்-நாணல்,மாவிலங்கமரம்,வஞ்சிமரம், வியர்வை, வெண்மை, வெள்ளி. [ரத்தினம்.
சுவேதாராசாவர்த்தம்-வெண்மைநிற இ
சுவேதவராககற்பம் - விட்டுணு பன்றியாகவந்த கற்பம்.
சுவேதவராகமூர்த்தி } விட்டுணு.
சுவேதவராகம்
சுவேதவராகம்-பாத்ம கற்பாந்தத்திலே ஜலத்திலே மூழ்கிய பூமியை யெடுத்து நாட்ட விஷ்ணுவெடுத்த வெண்பன்றிவடிவம். இப்போது நடப்பது சுவேதவராக கற்பம்.
சுவேதவனப்பெருமாள்-சிவஞானபோதம் செய்த மெய்கண்ட தேவர்.
சுவேதவனம்-சிதம்பரத்துக்குத்தெற்கிலுள்ள திருவெண்காடு.
சுவேதவாகனன் - அருச்சுனன்.
சுவேதன்-(1) விராடராஜன் புத்திரன். உத்தரன் தமையன் (2)காளாஞ்சுன தீர்த்தக்கரையிலே சிவனைநோக்கித் தவங்கிடந்தபொழுது யமன்சென்று பிடித்துப்போகச் சிவன் தோன்றி விடுவிக்கப்பெற்ற ஓரிராஜருஷி. (3) விதர்ப்பதேசத்தரசன், சுவேதன் மகன். (4) சுக்கிரன்.
சுவேதாசுவதாரம்-உபநிடதம் முப்பத்திரண்டில் ஒன்று.
சுவேலம் - இலங்கையில் ராமர் வானர சேனையை நிறுத்தி வைத்தமலை.
சுவை-இரசம், இனிமை, உருசி,ஓரலங்காரம், சித்திரைநாள், சுவையென்னேவல்.
சுவைத்தல்-இன்பந்தால்,உண்டல்,உருசித்தல்.
சுவைப்பண்புத்தொகை - மதுரப்பண்பு தொக்குநிற்றல் (உ-ம்) தேன்மொழி.
சுழங்குதல் - சுழலுதல்,
சுழலமாடுதல் - சுற்றுதல்.
சுழலல் - சுழல்வு.
சுழலன் - எத்தன்.
சுழலவிரை - ஒருஆவிரைச்செடி.
சுழலுதல் - கலங்குதல், சுற்றுதல்.
சுழலையாடுதல் - சோருதல்.
சுழல்-காற்றாடி, சுழலென்னேவல், சுழல்வு.
சுழல்காற்று - சூறைக்காற்று.
சுழல்நோய் - ஒருநோய்.
சுழல்படை - சக்கரம், வளைதடி.
சுழல்வண்டு - ஒருவண்டு.
சுழல்வு } கலக்கம், சுற்று.
சுழற்சி
சுழற்றல்-உழற்றல், கிறுகிறுப்பு, சுற்றியாட்டல்.
சுழற்றி - கருவண்டு, சுழற்சி.
சுழற்று - சுழச்சி, சுழற்றென்னேவல்.
சுழற்றுதல்-சுழலச்செய்தல், சுற்றுதல்.
சுழாரை - பொன்னுவிரை.
சுழி-இலக்கணச்சுழி,உரோமச்சுழி, கபடம், சுழியென்னேவல், நீர்ச்சுழி முதலியன, மூர்க்கம், விந்து.
சுழிகுளம்-சித்திரக் கவியினொன்று, அது நான்கடியுஞ் சுற்றி வாசிக்கினுஞ் சரிவரத் தொடுக்குங்கவி.
சுழிகை கள், சுருள், சுழிதல், மதுரைக் கருகில் ஒரு சிவஸ்தலம்.
சுழிற்காற்று - சூறைக்காற்று.
சுழிக்குணம் - சுழித்தனம்.
சுழிக்குதல்-சுருட்டுதல், சுற்றி வாங்குதல், வட்டமிடுதல்.
சுழிதல் - கலங்கல், சுழித்தல்.
சுழித்தல் - எழுச்சி, சுழிக்குதல்.
சுழித்தனம் - கபடபுத்தி.
சுழித்துவாங்குதல் - உள்ளேயிழுத்தல்.
சுழிப்பு - சுழித்தல், தொட்டம்.
சுழிப்புத்தி - கபடத்தனம்.
சுழிமழை - திக்குதிக்காய்ப் பெய்யும் [மழை.
சுழிமாந்தம் - ஒருநோய்.
சுழிமின்னல் - பகிர்விடும்மின்.
சுழிமுனை-நடுநாடி, மூலாதாரத்திலிருந்து உச்சித்துவாரம் வரைக்கு நிற்கும் நாடி.
சுழியச்சு - தட்டார்கருவியினொன்று.
சுழியப்பேசுதல்-குத்திரமாய்ப்பேசுதல்.
சுழியல் - ஆண்பெண்மயிர், சுருள்.
சுழியன் - சுழற்காற்று, வஞ்சகன்.
சுழியாணி } கதவு நிற்குங்குழிக்குற்றி.
சுழியாணிக்கட்டை
சுழியாணிக்கதவு - குழிக்குற்றியி னிற்குங் கதவு.
சுழியோடுதல் - நீரினுருவித்தாழ்தல்.

சுழிவு - ஒளிவு.
சுழித்தி - மயக்கமானநித்திரை, மூன்று மவத்தை; அது இதயத்தானம்.
சுழுந்து - சுளுந்து.
சுழுமுனை } சுழிமுனை.
சுழுனை }
சுஷேணன் - (1)கர்ணன்புத்திரன். இவன் சாத்தகியினாற் கொல்லப்பட்டவன். (2) கிருஷ்ணன் உருக்குமிணியிடத்துப் பெற்றபுத்திரன். (3) உருமைதந்தை.சுக்கிரீவன்மாமன்.இவன் வருணனாற் பிறந்தவன். (4) கஞ்சனாற் கொல்லப்பட்ட வசுதேவன் மக்களு ளொருவன்.
சுஹோத்திரன்-(1)க்ஷத்திர விருத்தன் மகன். இவனுக்குக் காசியன்,குசன், கிருத்தினமதன் என மூவர்புத்திரர். (2) (பு) பிருஹத க்ஷத்திரன் புத்திரன். ஹஸதிகன் தந்தை. (3)(கு)சுமநசுபுத்திரன். (4) (இ) பகீரதன் புத்திரன். சுருதன் எனவும்படுவன். (5) புரூரவன் பௌத்திரனான வீமன் பௌத்திரன். ஜனஹன் தந்தை. இவன் சோடமகாராஜாக்களுள் ஒருவன். இவன்அரசுபுரிந்துவருநாளில் இந்திரன் தனது மேகங்களைக்கொண்டு நண்டு மீன் தவளை ஆமை முதலிய ரூபங்களாகப் பொன்மழையை இவன்நாட்டிற்பொழிவித்தான். அப்பொன்னையெல்லாமெடுத்து அநேக யாகங்களைச்செய்து அவற்றைநடாத்திய ஆசாரியர்களுக்கும் மற்றைப் பண்டிதர் ஏழைகளுக்கும் வாரிவழங்கினன். (6) சஹதேவனுக்கும் விஜயையிடத்துப் பிறந்த புத்திரன்.
சுளகு - முறம், விசாகநாள்.
சுளகுப்பின்னல்-ஒருவகைப் பின்னல்.
சுளாவுதல் - சுலாவுதல்.
சுளி - புளியாரை.
சுளிகை - முருங்கை.
சுளிக்கு - ஊன்றுகோல்.
சுளிதல் - கோபித்தல்.
சுளித்தல் - கோபித்தல், சினக்குறிப்பு.
சுளிப்பு } சினக்குறிப்பு, சினம்.
சுளிவு }
சுளுகன் - உபாயப் புத்திரகாரன்.
சுளுகு - அற்பம், உபாயம், சிறுமை.
சுளுகோதகம் - சிறங்கைநீர்.
சுளுக்கு - உளுக்கு.
சுளுக்குதல் - உளுக்குதல்.
சுளுந்து - கோரான், சூள்.
சுளுவு - இலேசு, சலக்கரணை, சுலபம், தணிவு.
சுளை-பலாக்காய்முதலியவற்றின் சுளை.
சுள்-அற்பம், உறைப்பு, கருவாடு, சூள், சுமல்லிது.
சுள்ளக்கம்-கோபம், மேட்டிமை;வேர்க்குரு.
சுள்ளக்கன்-கோபி, போக்கிரி.
சுள்ளக்காய் - மிளகாய்.
சுள்ளம் - கோபம்.
சுள்ளலன் - ஒல்லாடி.
சுள்ளலி உயரத்துக்குத்தக்க பருமையற்றது, பருமையற்றவள்.
சுள்ளல் - சுள்ளி, பருமையற்றது.
சுள்ளாக்காய் - மிளகாய்.
சுள்ளாணி - மெல்லியவாணி.
சுள்ளாப்பித்தல்-அடித்தல்,உறைத்தல், எரிதல், சூடுகாட்டல், வீசுதல், வேகங்கொள்ளல்.
சுள்ளாப்பு - அடி, உறைப்பு, சீக்கிரம், பழிச்சொல், வெப்பம்.
சுள்ளி அனிச்சமரம், ஆச்சாமரம், சிறுவிறகு, ஞாழல், மயிர்க்கொன்றை மாமரம்.
சுள்ளிடுதல் - உறைத்தல், நோதல்.
சுள்ளிடுவான் - ஒருபூச்சி, மிளகுகாய்.
சுள்ளு - கோபம், கள், வெப்பம்.
சுள்ளுப்பூச்சி - சுள்ளிடுவான்.
சுள்ளெறும்பு - கொள்ளியெறும்பு.
சுள்ளை - காளவாய், சூளை, மட்கலஞ்சுடுசூளை.
சுறடு - வறண்டது.
சுறட்டலன் - முறடன், வறண்டவன்.
சுறட்டன் - முறடன்.
சுறட்டு - சிக்கு, தலையிடுகை, துறட்டு, தொந்தரை, மூர்க்கம்.
சுறட்டுத்தனம் - முரட்டுத்தனம்.
சுறட்டுப்பண்ணுதல் - மூரண்டுபண்ணுதல்.
சுறட்டுப்பிடி - முரட்டுப்பிடி.
சுறட்டுவலி - குறண்டல்வலி, மூரட்டுப்பிடி
சுறட்டை-பசையற்றுறண்டினது
சுறணம் - கருணை.
சுறண்டல் - சுறண்டுதல்.
சுறண்டி - ஒருகாண்டி, கவர்பவன், தூண்டிவிடுபவன்.

சுறண்டிவிடுதல் - மூட்டிவிடுதல்.
சுறண்டு-கோள், சருவல், சுறண்டென்னேவல்.
சுறண்டுதல்-கவர்தல், சருவுதல், தூண்டிவிடுதல், புறாண்டுதல்.
சுறவம், சுறவு } புறா.
சுறவை - கள்ளக்கம்.
சுறா-தேக அழுக்கு, மகாமீன், மகராசி.
சுறாக்கவடி - ஒருவிளையாட்டு, மறியற்கூடம்.
சுறாக்களிறு, சுறாவேறு } ஆண்சுறா.
சுறாளம் - கதி, கோபம்.
சுறீரெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.
சுறுக்கன் - சுறுக்குள்ளது, சுறுக்குள்ளவன்.
சுறுக்கு - கதி, காரம், கூர்மை.
சுறுக்கெனல் - விரைவின்குறிப்பு.
சுறுசுறுத்தல், சுறுசுறுப்பு } விரைவு, வேகம்.
சுறுசுறெனல் - சினக்குறிப்பு, விரைவின்குறிப்பு.
சுறுதி - சுறுசுறுப்பு.
சுறை - கொத்தான்.
சுறோணிதம் - அணிச்சை, சுரோணிதம்.
சுறோணிதவழலை - இந்துப்பு.
சுர்பம் - செம்பு, சொற்பம்.
சுற்றத்தார் - இனத்தார், துணைவர், பரிசாரகாரர்.
சுற்றந்தழால் - இனந்தழுவியிருத்தல்.
சுற்றம் அரசர்க்குத் துணையினொன்று, உறவு, உற்றார்.
சுற்றல் - சுற்றுதல்.
சுற்றளவு - புற அளவு.
சுற்றிக்கொள்ளுதல் - கவர்தல், சிக்குப்படுதல், சூழ்ந்துகொள்ளுதல்.
சுற்று-உழற்சி, கயிறு முதலிய சுற்றுஞ்சுற்று, கவர்தல், சுருள், சுற்றளவு, சுற்றுப்புறம், சுற்றென்னேவல், மதில், மதிற்சுற்று, வட்டமாயோடல்.
சுற்றுக்கட்டு - எழுத்துக்கூட்டிக் கட்டியெழுதல், சுட்டுக்கதை, பரிதானம், வீடுகளின் புறக்கட்டு.
சுற்றுக்கால் - அயல்.
சுற்றுக்கோயில் - சுற்றுத்தேவதை கோயில்.
சுற்றுச்சுழல், சுற்றுச்சுழற்சி } சுற்றுத்திரிபு, மாறுபாடு.
சுற்றுதல்-அலைதல், கவர்தல், சுருட்டுதல், சூழுதல், நூன்முதலிய சுற்றுதல், வட்டமாயோடல்.
சுற்றுப்படாகை - அயற்கிராமம்.
சுற்றுப்பட்டு - சுற்றுப்புறம்.
சுற்றுப்பலி - திக்குப்பலி.
சுற்றுப்பிராகாரம் - கோயின் முதலியவற்றின் வீதி.
சுற்றுப்புறம் - அயல்.
சுற்றுபூசை - திக்குப்பூசை.
சுற்றுமதில், சுற்றுமதிள் } உப்பரிகை, அஃது இராசசின்னத்தொன்று.
சுற்றுவட்டகை - சுற்றுப்படாகை.
சுற்றுவழி - நேரற்றபாதை.
சுற்றுவாரி - கல்வியூரி, சுவர்ப்புறத்து நீண்டவுத்திரம்.
சுனகன் - நாய், கிருதிமூலை.
சுனக்குடம் - சதுரக்கள்ளி.
சுனம் - வெள்ளுள்ளி.
சுனாசீரன், சுனாசு } இந்திரன்.
சுனி - பெண்ணாய்.
சுனிசனம் - புளியாரை.
சுனுக்கு - சதுரக்கள்ளி.
சுனை-உரோசம், கரு,ருளம், கூர், இளைவு, நீரடுத்தவிடம், நீரூற்று, பசும்புற்றரை.
சுனைதல் - குழியாக்கல், குழைதல், மிருதுவாதல், வாடல்.
சுனைத்தண்ணீர் - புண்ணீர்.
சுனைத்தல் - சொறிதல்.
சுனைத்தவிடு - உமித்தவிடு.
சுனைவு - பேய்க்கடலை.
சுன்-சனி, சுன்னை, வட்டம், வெண்மை, வெறுமை.
சுன்னச்சி - சத்துச்சாரம்.
சுன்னத்து - விருத்தசேதனம்.
சுன்னம் - பூச்சியம், சுன்னை.
சுன்னிதம் - நுண்மை.
சுன்னுக்கட்டி - திரட்டுப்பாற்கட்டி.
சுன்னை - பூச்சியம்.

---

## சூ



சூ-ஓரெழுத்து, மிருகங்களையோட்டுங் குறிப்பு, வியப்புச்சொல்.
சூகம்-அம்பு இரக்கம், ஊர்வன, காற்று, சுனை, தவழ்சாதிப்பொது, தாமரை, நெல்வால், முண்மயிர்.
சூகரம் - பன்றி, மான்.
சூகை-ஓரெறும்பு, சுழற்சி, தலைச்சுழற்சி, யானை, வீட்டின்பின்புறம்.
சூகைக்கண் - கூச்சக்கண்.
சூகைக்கை - சூம்பியகை.
சூகைமூலை - வற்றிப்போனமூலை.
சூகையாடுதல்-கிறுகிறுத்தல், சுழலல்.
சூக்கம் - சூட்சம்.
சூக்காட்டுதல் - உச்சுக்காட்டுதல்.
சூக்காய் - ஒருநண்டு.
சூக்கீடம் - மயிர்க்குட்டி.
சூக்குமகாயம் } நுண்மைவடிவமான
சூக்குமசரீரம் } வுட்சரீரம், புரியட்
சூக்குமதேகம் } டகாயம்.
சூக்குமதண்டுலம் - திப்பிலி.
சூக்குமதாரி - வஞ்சகன்.
சூக்குமபஞ்சாக்கரம்-ஒருபஞ்சாக்கரம்.
சூக்குமபத்திரம் - கடுகு, கொத்தமல்லி, சீரகம், செங்கரும்பு.
சூக்குமபூதம் - நுண்வடிவான வட்பூதம்.
சூக்குமம்-அணு, அற்பம், ஓரலங்காரம், கடவுள், சிவாகமமிருபத்தெட்டினொன்று, சீந்தில், சீவதேகம் மூன்றினொன்று, தவறு, நுண்ணியவறிவு, நுண்மை, வஞ்சகம், வானோர்வரம் நாலினொன்று, அது கண்டிப்பின்மை.
சூக்குமர் - ஒருவகைத்தேவர்.
சூக்குமித்தல் - நுட்பமாயிருத்தல்.
சூக்குமில் - சிலந்திப்பூச்சிக்கூடு.
சூக்குமை - நான்குவாக்கினொன்று.
சூக்குளி - வெற்றிலை.
சூக்குமம் - வேலிப்பருத்தி.
சூசகம் - உளவு, தருப்பைப்புல்.
சூசகவாயு - சூசிகாவாயு.
சூசிகன் - உவாத்தி, ஒற்றன்.
சூசம் - திருவாட்டேறு.
சூசனம் - அறிவித்தல், பார்த்தல்.
சூசனை-சயிக்கை, நுண்மை, போதனை, விவேகம்.
சூசாக்கிரம் - ஊசிமுனை.
சூசி - ஊசி, குறிப்பு, துளை.
சூசிகம் - ஒருவாச்சியம்
சூசிகன் - தையற்காரன்.
சூசிகாதரம் - யானை.
சூசிகாபாணம் - அத்திமரம்.
சூசிகாமுகம் - சங்கு.
சூசிகாவாயு - சூதகவாயு.
சூசிகை-ஊசி, குறிப்பு, யானைத்துதிக்கை.
சூசிக்கல் - ஊசிக்காந்தம்.
சூசியம் - சூட்டிறைச்சி.
சூசியாசியம் - மூஞ்சூறு.
சூசு } முலைக்கண்.
சூசுகம் }
சூச்சான் - ஒரு விளையாட்டு.
சூடகம் - கிணறு, கைவிளை, சடை.
சூடல் - சூடுதல்.
சூடம் - உச்சிச்சடை, சிவன்சடை.
சூடன் - ஒருமீன், கருப்பூரம்.
சூடாகரணம் } குடுமிவைத்தல்.
சூடாகருமம் }
சூடாக்கல் - ஒருகல்.
சூடாமணி - ஒருதேவமணி, ஒருநூல், குன்றிமணி, முடிமணி.
சூடாமணிநிகண்டு - ஒருநிகண்டு.
சூடாலம் - சணப்புவிதை, தலை.
சூடாலை - சிகித்துவசன்மனைவி.
சூடாளக்கல் - ஒருகல்.
சூடி - புடைவை.
சூடிகை - முடி.
சூடிக்கொடுத்தாள் - இம்மாதுசிரோமணியார் பெரியாழ்வாருக்குப் புத்திரியாகத் துளசியிலே பிறந்து விஷ்ணு கைங்கரிய பக்தியிற் சிறந்து விளங்கினவர்.
சூடிச்சி - எவட்சாரம்.
சூடினர் - கோங்குமரம்.
சூடு - அரிக்கட்டு, உச்சிகுடுமி, எருத்துத்திமில், சுடுதல், சூடுதல், சூடென்னேவல், சேவற்சூடு, தலை, நுனி, நென்முதலியவற்றி னருவிக்குவியல், மயிர்சூடு, முடி, வெடி, வெப்பம்.
சூடுதட்டுதல் - போரடுக்குதல்.
சூடுகாட்டுதல் - சிறுசூடுபடுத்தல்.

சூடுதல் - அணிதல்.
சூடுமிதித்தல் - போரடித்தல்.
சூடை - ஒருமீன், குடுமி, கைக்கடகம், வீட்டிறப்பு.
சூட்சம் - அற்பம், உபாயம், சுருக்கம், சூக்குமம், சூத்திரம், தந்திரம், நுட்பம், நூதனம், யூகம்.
சூட்சவழி - சுருக்கவழி, நன்னெறி.
சூட்சாதிசூட்சம் } அதிசூக்குமம்.
சூட்சானுசூட்சம் }
சூட்சி - உபாயம்.
சூட்சுமதரிசனம் } அறிவினுற் காண்டல், கூர்மையாய்க்காணல்.
சூட்சுமதிஷ்டி }
சூட்சுமபுத்தி - நுண்ணியபுத்தி.
சூட்சுமம் - சூக்குமம்.
சூட்டடுப்பு - ஓரடுப்பு.
சூட்டல் - அணிதல், ஏற்றுதல்.
சூட்டிக்கை - கூர்மைப்புத்தி.
சூட்டிறைச்சி - சுட்டவிறைச்சி.
சூட்டு - குற்றச்சாட்டு, கூர்மை, சூட்டுந்தன்மை, சூட்டென்னேவல், தரித்தல், நுதலணிமாலை, பாம்பின்சூட்டு, மயில்முதலியவற்றின்சூட்டு, மாலை, முடிப்பு.
சூட்டுக்கோல் - சுடுங்கோல்.
சூட்டுதல் - அணிதல், ஏற்றிச்செல்லுதல், நியமித்தல், முடித்தல்.
சூட்டுப்பாய் - களப்பாய்.
சூட்டுமாலை - தோளணிமாலை.
சூட்டுமிதி - நென்முதலியவற்றின் சூடுமிதித்தல்.
சூட்டெண்ணெய் - எரித்துவடிக்குமெண்ணெய்.
சூதகக்கட்டி - இருதுநீர்க்கட்டி.
சூதகக்கிராணி - ஒருநோய்.
சூதகசத்துரு - காந்தம்.
சூதகசன்னி - ஒருசன்னி.
சூதகண்டகி - சத்திசாரம்.
சூதகமலடு - ஒருவகை மலடு.
சூதகம் - அருவருப்பு, ஆசுசம், கிணறு, தீட்டு, பழமை, பிறப்பு, மகளிர்பூப்பம், மாமரம்.
சூதகவாயு - இருதுநீர்க்கட்டும் வாயு.
சூதகவீடு - ஆசுசவீடு.
சூதசங்கிதை - வியாசர் சூதர் பொருட்டுச்செய்த சங்கிதை. இது ஸ்காந்தபுராணத்தாறு சங்கிதைகளுளொன்று. ஆயிரங் கிரந்தமுடையது.
சூதசாலை - மடைப்பள்ளி.
சூதடி - பித்தலாட்டம்.
சூதத்தைப்பொன்னுக்கி - நாக பாஷாணம்.
சூதநதி - பொருந்தநதி.
சூதநோக்கல் - நீலாஞ்சனக்கல்.
சூதபாஷாணம் - இரசத்தி லுண்டாக்கும் பாஷாணம்.
சூதபுத்திரன் - கர்ணன். சூதன்வளர்த்தமையால் வந்தபெயர்.
சூதமாகதர் - இவர்களே வந்தியரென்றும், சூதரென்றும் தமிழ் நூல்களிலே வழங்கப்படுவார்கள். அரசர்களுக்கு உற்சாகம் முதலியன உண்டாதற்பொருட்டுப் பாடுபவர்களாகிய இவர்கள் பிருது பிறந்த யாகசுத்திகாலத்திலே உற்பவித்தவர்களது வமிசத்தவர்கள்.
சூதமாமுனி - ஒருமுனிவர்.
சூதம் - இரதம் குறிகேட்டல், சூதாடு கருவி, சூது, பவளமல்லிகை, பாதரசம், புளிமா, மடைத்தொழில், மன்மதன் கணையினென்று, மாமரம், வண்டு, விழுதல்.
சூதரம் - மாங்கனி.
சூதராட்சசன் - பொன்னம்பர்.
சூதர் - சூதாடுவார், தேர்ப்பாகர், பாணர், புகழ்வோர், வியாசர் சிஷருள்ளே ஒருவராகிய இவ்விருஷியேநைமிசாரணிய வனத்திலேயிருந்த முனிவர்களுக்குப் புராணங்களை யெல்லா முபதேசித்தவர்.
சூதவஞ்சனம் - நீலாஞ்சனக்கல்.
சூதவம் - வண்டு.
சூதவைரி - மூவிலைக்குறுத்து.
சூதனம் - அழித்தல்.
சூதன் - அரசர்க்குப்பார்ப்பனத்திபெற்றஇரதமூர்வோன், சமையற்காரன் சூதமாமுனி, சூதாடுவோன், சூரியன, தச்சன், தேர்ப்பாகன், பாணன், புகழ்வோன், வஞ்சகன்.
சூதாஞ்சனம் - நீலாஞ்சனம்.
சூதாடல் - சூதுவிளையாடல், வஞ்சித்தல்.
சூதாடி - எப்போதுஞ் சூது விளையாடுவோன்.
சூதாடுகருவி - தாயக்கட்டை.

சூதாடுதல் - தாயம்விளையாடல்.
சூதாட்டம் - கவறுருட்டியாட்டல்,தந்திரம்.
சூதானம் - எச்சரிப்பு, சேமம்.
சூதி - அசைவு,கதி,நடை,பிள்ளைபெற்றவள்.
சூதிகாகிரகம் } பிள்ளைபெற்றவீடு.
சூதிகாபவனம் }
சூதிகை - பிள்ளைபெற்றவள், பிள்ளைபெற்றவடு.
சூதிக்கிரகம் - சூதிகாகிரகம்.
சூதிமம் - தைத்தல்.
சூது - ஓரிதழ்த்தாமரை, சூதாடுகருவி, சூதாட்டுதாமரை, தாய்விளையாட்டு, வஞ்சகம்.
சூதுகாரன் - சூதுவிளையாடுபவன், தந்திரகாரன்.
சூதுபோர் - சூதுவிளையாட்டு.
சூத்தாடியுள்ளான் - ஒருவகைப்புள்.
சூத்திரகண்டன் - பார்ப்பான்.
சூத்திரகன்-மகததேசத்தரசனாகிய சுசர்மனுக்கு மந்திரியாயிருந்து பின்னவனைக்கொன்றுஇராச்சியமகவர்ந்துகொண்டவன்.
சூத்திரங்கள் - சுபாசுப கர்மங்களைக்குறித்துச் செய்யப்பட்ட விதிகள்,அவை போதாயனம், ஆபஸ்தம்பம், சத்தியாஷாடம், சிராஹியாயனம், அகஸ்தியம், சாகல்லியம், அசுவலாயனம், சாம்பவீயம், காத்தியாயனம், வைகாசனம், சௌணகீயம், பாரத்துவாசம், அக்கினிவைசியம், ஜைமினீயம், வாதூலம், மாத்தியந்தினம், கௌண்டின்னியம், கௌஷீதகம், ஹிரண்யகேசி எனப்பதினெட்டு நூல்களாம்.
சூத்திரதருமம் - சூத்திரத்தொழில்.
சூத்திரதாரி - கடவுள், பதுமையாட்டி.
சூத்திரநாகம் - ஒருநாகம்.
சூத்திரநிலை - கருத்துத் தொடர்ந்துநிற்கும் நிலை, சூத்திரப்பாடல்.
சூத்திரபுட்பம் - பருத்தி.
சூத்திரப்பதுமை - சூத்திரப்பிரதிமை.
சூத்திரப்பா - ஒரகவல், நூற்பா.
சூத்திரப்பாவை } கயிற்றினலாட்டும் பாவை.
சூத்திரப்பிரதிமை }
சூத்திரப்புறநடை - சூத்திரக்கடையில் விசேடித்துச் சொல்வது.
சூத்திரம் - இயந்திரம், இரகசியம், உபாயம், ஒழுங்கு, தீர்ப்பு, நூல்,பஞ்சிநூல், பூணூல் வழிநூல்.
சூத்திரயாசகன் - சூத்திரபுரோகிதன்.
சூத்திரர்-சூத்திரவேலைசெய்பவர்,நான்காம் வருணத்தோர். இவர்கள் பிரமன்பாதத்திற் பிறந்தோர். இவர்கள் வனை வருணத்தாரைப்போல வேதமோதற் கதிகாரிகளல்லர். இவர்களுக்குபநயனம் விவாகம். சூத்திராவார் வேளாளரே யென்பதுத்தொல்காப்பியம் அகத்திணை யியலில்வரும் "மன்னர்பாங்கில்" என்னுஞ் சூத்திரத்தானுணரப்படும். அவ்வேளாளர் உழுவித் துண்போரும் உழு துண்போருமென இருதிறப்படுவர், உழுவித்துண்போர் மண்டில்மாக்களும், தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப்பிடவூரும்,அழுந்தூரும்,நாங்கூரும், நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும்,கிழாருமென்றிவை முதலியவூர்களிற்றேன்றி,வேள் எனவும் அரசுஎனவும்உரிமைபெற்றோரும், பாண்டிநாட்டுக்கா விதிப்பட்டங் கொண்டோரும், குறுமுடி குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்குமாம், கொடைக்குரியவேளாளர்உழுதுண்போர் பலவகைப்பட்ட தொழிலினரேனும் உழவொன்றையுமே யுரியதொழிலாகவுடையோர். இவ்விருவகை வேளாளரும் தம்மினுயர்ந்தவைசியர் க்ஷத்திரியர் பிராமணர் மூவரையும் வழிபடற்குரியர். இனி,ஆகமங்களிலே சூத்திரர் சற்சூத்திரர் அசற்சூத்திரரென இருபாலாகக் கூறப்படுவர், மேலாகிய வொழுக்கமுங்குடிப்பிறப்புமுடையோர் சற்சூத்திரர்.
சூத்திரர்தொழில் - சூத்திரர்க்குரியவறுதொழில், அவை, உழுதல், காருகவினைகளாக்கல், குயிலுவத்தொழில், பசுக்காத்தல், பிரமசத்திரிய வைசியர் ஆகிய மூவருணத்தோர்க்கு மேவல் செய்தல், பொருளீட்டல்.
சூத்திரவிருத்தி - சூத்திரர்தொழில்.
சூத்திரவீணை - ஒருவகை வீணை.
சூத்திரவுருவம் - ஆடும்பிரதிமை.

சூத்திரவேட்டணம் - நூற்சுற்றல்.
சூத்திரன் - நான்காம் வருணத்தோன், புஷ்பராகம், வைடூரியம்.
சூத்திரி - சூத்திரவேலைசெய்பவன்.
சூத்திரிச்சி - சூத்திரப்பெண்.
சூத்திரித்தல் - சூத்திரநடத்துதல்.
சூத்தை - கெடுதல், புழுக்குற்றல்.
சூத்தைகுற்றுதல் - புழுக்குற்றுதல்.
சூந்துமம் - சிலந்திநாயகம்.
சூபன் - சுயம்பாகி.
சூபகாரன் - சமையற்காரன்.
சூபதுபனம் - பெருங்காயம்.
சூபம்-அம்பு, ஒருபயறு, மடைத்தொழில்.
சூபாங்கம் - பெருங்காயம்.
சூப்பல் - சூப்புதல்.
சூப்பி-உச்சிட்டவுண்ணன், ஓர்சிற்றுண்டி, திரிந்து வாங்கித்தின்போன்.
சூப்பிக்கலியாணம் - சுன்னத்துசடங்கு
சூப்பியம் - பாம்புகொல்லி.
சூப்பியறுத்தல்-சுன்னத்துப்பண்ணல்.
சூப்புதல் - உமிந்தெடுத்தல், சும்பனம் பண்ணல், சுருக்குதல்.
சூமம் - ஆகாயம், நீர், பால்.
சூம்பல் } வாடியிரத்தம்முதலியசுண்
சூட்புதல் } டிச்சிறுத்தல்.
சூரசூதன் - அருணன், புதன்.
சூரசேனம்-தேயமைம்பத்தாறில் ஒன்று. மதுராபுரியையிராஜதானியாகப் பெற்றிருந்த தேசம். சத்துருக்கன் புத்திரனாகிய சூரசேனன் ஆண்டமையின் அப்பெயர் பெற்றது.
சூரசேனன்-கார்த்தவீரியார்ச்சுனன் இரண்டாம்புத்திரன். சத்துருக்கினன் புத்திரன். கிருட்டிணன் பாட்டன்.
சூரணபாரதம் - இரசபர்பம்.
சூரணம் - கருணைக்கிழங்கு, பஸ்பம்.
சூரணிகை - ஒருவகைப்பா, கருத்துப் பொருள், விபரம்.
சூரணித்தல் - பொடிசெய்தல்.
சூரதை } வீரம்.
சூரத்துவம் }
சூரபதுமன் } காசிப மாயையிடத்துப்
சூரபற்பன் } பிறந்த புத்திரருள்
சூரபன்மன் } ளே மூத்தோனும் ம
சூரன் } கா வரப்பிரசாதங்கள்
பெற்று ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டு யுகமாண்டவனும் இந்திராதிதேவரைச்சிறையிட்டவனும் ஈற்றிலே குமாரக்கடவுளாற் சங்கரிக்கப்பட்டழிந்து ஒருபாதி மயிலாகி அக்கடவுட்கு வாகனமாகவும் ஒருபாதி குக்குடக் கொடியாகவும் பெற்றவனுமாகியஓாசுரன். இவன் பிறந்ததும் தவத்தாலிணையற்றுயர்ந்ததும் செல்வம் அதிகாரம் புஜபல முதலியவற்றை அளவின்றிப் பெற்றும்மயங்கித் தீநெறியிற் சென்றுலகங்களுக்கெல்லாம் பயங்கர காரணனாயிருந்தும், தெய்வசிந்தைசிறிதுமின்றி அகங்கரித்திருந்ததும், ஈற்றிலே எல்லாமிழந்துகதியற்றதும், பின்னர் பூர்வஜன்மபுண்ணிய வசத்தினாற் சுப்பிரமணியக் கடவுளுக்குச்சேவலும் மயிலுமாயதுமாகிய சரித்திரங்களையெல்லாம் சாங்கோபாங்கமாக விரித்துத் தீநெறிப்பயன்காட்டி அதனை விலக்கி முத்திநெறி விதிப்பது கந்தபுராணம்.
சூரமானம் - வீரத்திரம்.
சூரம் - அச்சம், சடலை, வீரம்.
சூரர் - படைவீரர்.
சூரவன் - பாண்டியன்.
சூரல் - பிரம்பு, சூர்தல்.
சூரன்-கார்த்தவீரியார்ச்சுனன் ஐந்தாம் புத்திரன். யாதவர் அநேகர் இப்பெயரால் விளங்கினர். விரோதன் புத்திரன். சினிதந்தை தேவமீடன் புத்திரன், வசுதேவன் தந்தை. வசுதேவன் மதிரை வயிற்றிற்பெற்ற புத்திரன். ஓாசுரன், காடி, கிருட்டிணன் பாட்டன், கோழிச்சேவல், கௌரிபாஷாணம்,சிங்கம்,சூரபன்மன், சூரியன்,தீ,நவசாரம்,நாய்புலவன்வீரன்.
சூரி-ஜைன நூலாசிரியர்கள் மேற்கொள்ளும் பட்டப்பெயர். எருக்கு, காடுகாள், காளி, கிருட்டிணன், சூரியன், நத்தைச்சூரி, பண்டிதன், புத்தகுரு, புலவன், புளிச்சக்கீரை, மடக்குக்கத்தி, வீரமுள்ளவன்.
சூரிக்கத்தி - எழுத்தாணிக்கத்தி.
சூரிக்கிளிஞ்சில் - ஒருகிளிஞ்சில்.
சூரியகடியாரம்-பகல்நாழிகை, யறிவிக்கும் ஒருகருவி.
சூரியகணம் - நேர்நிரைநேரடுத்துவருவது.

சூரியகதி - சூரியசெலவு.
சூரியகலை - பிங்கலை.
சூரியகளை - சூரியப்பிரபை.
சூரியகாந்தப்பட்டு - ஒருபட்டாடை.
சூரியகாந்தம்-ஒருவகைப்புட்பம், சூரிய சன்னிதானத்துத்தீக்காலுங்கல், பதினேழாவது மேளகர்த்தா.
சூரியகாந்தாமணக்கு - ஓராமணக்கு.
சூரியகாந்தி - எட்பூ, ஒருபூமரம், சூரியப்பிரபை.
சூரியகாரம் - பகல்.
சூரியகிரகணம் - சூரியகிராணம்.
சூரியகிரகம் - இராகுகேது.
சூரியகிரணம் - ஆதித்தன்கதிர்.
சூரியகுண்டம் - காவிரியின் சங்கமுகத்துக்கு அயலதாகிய ஒரு தடாகம்.
சூரியகும்பம் - சூரியனைக்குறித்துவைக்கும்கும்பம்.
சூரியகுலம்-சூரியவமிசம்.
சூரியசங்கிரமம் } மாதப்பிறப்பு.
சூரியசங்கிராந்தி }
சூரியசரம் - பிங்கலை.
சூரியசாவர்ணி எட்டாம்மனு, சூரியனுக்குச் சாயாதேவியிடத்துப்பிறந்த புத்திரன், இம்மனுவேஇனிவரப்போகும் மனு இவன் முன்பிறந்த மனுவுக்குச் சமானனுயினமையின் சாவர்ணி, யெனப்படுவன் இவன் காலத்திலே சுதபர் அமிதாபர் முக்கியர் எனத் தேவகணங்கள் மூத்திறத்தராவர். அக்காலத்திலே தீப்திமான், காலவன், ராமன், கிருபன், அசுவத்தாமன், வியாசன், சிருங்கன் என்பவரே சத்தரிஷிகளாவார்கள், பாதலத்திலே தவஞ் செய்திருப்பவனுகிய பலிசக்கிரவர்த்தியே தேவேந்திர பதம்பெறுவன், விரஜன் சர்வரீவான் கிர்மோகன் முதலியோர் பூலோகத்துமானுஷிய வர்க்காதிபராவார்கள்.
சூரியசித்தாந்தம் - வைண வாகமத்தொன்று.
சூரியநமஸ்காரம் } சூரிய பிரீதியில் ஒன்று.
சூரியநமற்காரம் }
சூரியபகவான் - சூரியன்.
சூரியபுடம் - கணிதபுட்பங்களி னென்று, வெயிற்புடம்.
சூரியபுத்திரன்-கன்னன், சனி, சுக்கிரீவன், நமன், வருணன்.
சூரியபுராணம் - பதினெண் புராணத்தொன்று.

சூரியபூசை - ஆதித்தபூசை.
சூரியப்பிரபை - பரிவேடம்.
சூரியமணி - ஒருமரம், சூரியகாந்தம்.
சூரியமண்டலம் - சூரியபதவி.
சூரியமூர்த்தி - சூரியன்.
சூரியர் - துவாதசாதித்தர், புலவர்.
சூரியலோகம் - சூரியபதவி.
சூரியவட்டம்-சூரியகடிகாரம், சூரியபிம்பம்.
சூரியவாதம் - சூரியனைக் கடவுளாய்க் கொள்ளுஞ் சமயம்.
சூரியவாதி - ஒருசமயத்தான்.
சூரியவிட்சேபம்-சூரியனது பதனகேந்திரம்.
சூரியவிம்பம் - சூரியனொளி.
சூரியன்-ஆதித்தன், அது சிவனட்டமூர்த்தத்தொன்று, செப்புமலை, செவ்வெருக்கு, சோழன், ஞாயிறு.
சூரியன்வீதி - மேட இடபமிதுனவீதிகள்.
சூரியாஸ்தமனம் } சூரியனத்தமித்தல் மாலைப்பொழுது.
சூரியாஸ்தம் }
சூரியாஸ்திரம் - ஒருபாணம்.
சூரியாலோசம் - சூரியகிரணம்.
சூரியேந்துசங்கமம் - அமாவாசி.
சூரியை - புதுமணப்பெண்.
சூரியோதயம் - உதயகாலம்.
சூருமம் - குசைப்புல், மாந்தப்புல்.
சூரை - ஒருசெடி, ஒருபயிர், ஒருமீன், கள், தாதூளி, நெற்றிப்புல்.
சூர்-அச்சம், ஓரசுரன், சூரென்னேவல், துன்பம், தெய்வப்பெண், தெய்வம், நோய், மிளகு, யோகினி, வனதேவதை, வால் மிளகு.
சூர்ணபாரதம் - இங்குலிகம்.
சூர்தல் - சுகிர்தல்.
சூர்த்தநோக்கு - கொடுங்கண், கொடுமை.
சூர்த்தல்-அச்சங்கொடுத்தல், சினத்தல், சுகிர்த்தல், சுழற்றல்.
சூர்ப்பகன்னம் - முறம், யானை.
சூர்ப்பகைவன் - முருகன்.
சூர்ப்பநகி } இராவணன்றங்கை.
சூர்ப்பநகை }
சூர்ப்பம்-சுளகு, தூணியென்னும் ஓரளவை.
சூர்ப்பு - சுழற்சி, பயம்.
சூர்மகள் - தெய்வப்பெண், யோகினி.
சூர்வு - சுகிர்வு.
சூலக்குறடு - ஓராயுதம்.
சூலதான் } சிவன், வைரவன்.
சூலபாணி }

சூலம் - இரேவதிநாள், ஓராயுதம், கழு, சதுரக்கள்ளி, சாமரம், சூலை, துகிற்கொடி, நித்தியயோகத் தொன்று.
சூலல் - சூலுதல்.
சூலவாசனம் - ஒருப்பு.
சூலவிளக்கு - ஒருவிளக்கு.
சூலவேல் - கழுமுள்.
சூலி - கருப்பிணி, காளி, சிவன், துர்க்கை, யோகினி.
சூலிகம் - கோழி.
சூலிகை - யானைக்காதடி.
சூலினி - சவக்காரம், வெற்றிலை, முப்பத்தைந்தாவது மேளகர்த்தா.
சூலுதல் - குடைதல்.
சூலுளைதல் - ஈற்றுளைதல்.
சூலை - ஒருநோய்.
சூலைகிருது - பெருங்காயம்.
சூலைகுன்மம் - ஒருவிதநோய்.
சூலைக்கட்டு - ஒருநோய்.
சூலைசத்துரு - ஆமணக்கு.
சூலைநீர் - உடம்பிலுண்டாமோர் நோய்நீர்.
சூல் - கருப்பம், சூலென்னேவல்.
சூவாரை - ஒருமீன்.
சூவானக்காரன் - சமையற்காரன்.
சூவானக்காரி - சமையற்காரி.
சூவானம் - அடுக்களை.
சூழல் - ஆராய்தல், ஆலோசனை, இடம், கருத்து, குறிப்பு, கூட்டம், சுற்றுப்புறம்.
சூழாமை - ஆராய்வின்மை.
சூழி உச்சி, உச்சிக்கொண்டை, கடல், குளம், சுனை, யானை முகபடாம்.
சூழிகை - கள்.
சூழியல் } வீட்டிறப்புத் தாங்கு
சூழியற்கம்பு } கம்பு.
சூழுதல்-ஆலோசனைபண்ணல், சூழ்ந்திடல்.
சூழ் - கடலை, சுற்று, சூழென்னேவல்.
சூழ்கழியிருக்கை - தோணுமுகம்.
சூழ்ச்சம் - ஆலோசனை, உபாயம்.
சூழ்ச்சி - ஆராய்தல், ஆலோசனை, உபாயம், நுண்ணறிவு.
சூழ்ச்சித்துணைவர் - அமைச்சர், மந்திரிமார்.
சூழ்தல்-ஆலோசனைப்பண்ணல், சூழ்ந்திடல், பிற்படை.
சூழ்தாழை - தாமரை.
சூழ்ந்திடல் - வளைந்து கொள்ளல்.
சூழ்ந்தோர் - அடுத்தோர், உறவோர், சூழநிற்போர், மந்திரிகள்.
சூழ்வு - ஆராய்கை, ஆராய்வு, உபாயம், சுற்றுகை.
சூழ்வோர் - உறவினர், சூழ்ந்துநிற்பவர், மந்திரிகள்.
சூளாமணி - சூடாமணி. தோலாமொழித்தேவர் செய்த ஒரு சைநகாவியம், காவியநாயகன் பயாபதி, அந்நூல் பயாபதி புத்திரரைப் பெற்று அவரால் பகையரசரை வென்று இராஜபோக மநுபவித்துப் புத்திரனுக்கு முடிசூட்டித் துறவடைந்து அருகசரணம் பெற்ற வரலாறுகளை மிக வெடுத்துரைக்கும்.
சூளாமணிநிகண்டு - சூடாமணிநிகண்டு.
சூளி - ஆண்மயிர். சூளி-பிரமதத்தன்தந்தை.
சூளிகம் - அப்பவருக்கம்.
சூளிகை - அரமியம், யானைச்செவியடி.
சூளுதல் - குடைதல்.
சூளுறல் - சத்தியஞ் செய்தல்.
சூளை - சுடுசூளை, வேசி.
சூளைக்கல் - செங்கல்.
சூளையாடுதல் - கொள்ளையாடுதல்.
சூள்-ஆணை, சத்தியம், சபதம், சுளுந்துபாளை முதலியவற்றின் சூள்.
சூறல் - தோண்டல்.
சூறன் - மூஞ்சூறு.
சூறவளி - சூறாவளி.
சூறாவளி - சுழல்காற்று.
சூறாவளிச்சட்டக - நீர் தெளியவிடும் பெருநெல்லிக் கட்டை.
சூறுவாரி - சூறைக்காற்று.
சூறு - சூத்து.
சூறை - ஆறலைத்தல், கொள்ளை, சுழல்காற்று.
சூறையாடல் }
சூறையாடுதல் } கொள்ளையிடுதல்.
சூறையிடுதல் }
சூற்கொள்ளுதல் - கருக்கொள்ளுதல்.
சூற்பகன்னம் - சூர்ப்பகன்னம்.
சூற்பம் - சூர்ப்பம்.
சூனம் - பிறப்பித்தல், பூமொட்டு, மான், வீக்கம்.
சூனர் - ஊன்விற்போர்.
சூனன் - ஊன்விற்போன், சூரியன், பெருவயிறன்.
சூனி - வேட்டைக்காரன்.
சூனியகடம் - வெறும்பானை.

சூனியகதி - பிரபுலிங்கலீலையில் ஒரு படலம்.
சூனியகாரன் - மாரணவித்தைக்காரன்.
சூனியதிசை - இயங்காத்திசை, தென்கீழ்திசை.
சூனியதிதி - சிராத்தத்திற்கடாததிதி.
சூனியத்துவம் - நாசம்பண்ணுதல், வெறுமை.
சூனியப்படுதல் - பலனற்றுப் போதல், பாழாதல்.
சூனியமாதம் - ஆடி புரட்டாசி மாசி மார்கழி மாதங்கள்.
சூனியம் - அசுசி, ஆகாயம், இன்மை, பாழ், புள்ளி, பூச்சியம், பொறி, மாயை, மாரணவித்தை.
சூனியம்பண்ணுதல் - கெடுத்தல், சூனியஞ் செய்தல்.
சூனியவாதம் - கடவுளில்லை யென்னும் ஒரு சமயவாதம்.
சூனியவாதி - ஒருசமயத்தான்.
சூனியவித்தை - மாரணவித்தை.
சூனியன் - அந்தரித்தவன், முடவன்.
சூனு - சூரியன், பின்னோன், மகள், மகன்.
சூனை - குற்றம், சூனம், சொத்தைமகள்.
சூன் - ஊன், பெருவயிறு.
சூன்மதம் - பைத்தியம்.
சூன்மாதம் - உன்மத்தம்.
சூன்முகில் - கருமுகில்.
சூன்றல் - தோண்டல்.
சூன்றிடல் - குடைதல்.

---

## செ



செ - ஓரெழுத்து.
செசோதி - மிக்கவொளி.
செகதகுரு - கம்மாளன்.
செகதம் - பட்சித்தல்.
செகதி - இங்கிதம்.
செகநாதன் - கடவுள், சிவன்.
செகம் - சகம்.
செகரட்சை - உலகரக்ஷணம்.
செகராஜசேகரன் - செகராஜசேகரம் என்னும் சோதிடநூல் செய்த ஈழநாட்டரசன், இவன் அந்நாட்டிலே தமிழ் வளர்த்த அரசருளொருவன், இற்றைக்கு நானூற்றுப்பத்து வருடங்களுக்கு முன்னிருந்தவன்.
செகரிகம் - நாயுருவி.
செகற்பிதா - கடவுள்.
செகனவாதம் - ஒருநோய்.
செகன் - செகம்.
செகில் - தோண்மேல்.
செகிள் - கேழ்வரகின்கப்பி, செதிள்.
செகுத்தல் - அழித்தல்.
செக்கச்சிவத்தல் - மிகச்சிவத்தல்.
செக்கமலம் - செந்தாமரை.
செக்கர் - சிவப்பு, செவ்வானம்.
செக்கர்ச்சிவப்பு - மிகுசிவப்பு.
செக்கர்மேகம் - செவ்வானம்.
செக்கர்வானம் - செக்கர்வான்.
செக்கர்வானிறத்தோன் - சிவன், வீரபத்திரன்.
செக்கர்வான் - செம்மேகம்.
செக்கல் - செவ்வானம், மாலைநேரம்.
செக்கவுரி - கர்சூரை.
செக்காடுதல் - எண்ணெயூற்றுதல்.
செக்காட்டி - எண்ணெய்வாணிபன்.
சேக்காட்டுதல் - செக்காடுதல்.
செக்கான் - செக்காட்டி.
செக்கு - காணம், சதயநாள்.
செக்குக்கீரை - ஒருகீரை.
செங்கடம்பு - ஒருகடம்பு.
செங்கட்டி - காவிக்கல், சாதிலிங்கம், செங்கட்டி.
செங்கணன் - விட்டுணு.
செங்கண் - சிவந்தகண்.
செங்கண்ணன் - செங்கணன்.
செங்கண்ணி - ஒருமீன்.
செங்கண்மாரி - கண்ணோய்.
செங்கண்மால் - விட்டுணு.
செங்கதாரி - செங்கத்தாரி.
செங்கதிரோன், செங்கதிர் - சூரியன்.
செங்கதிர்நாள், செங்கதிர்பிறந்தநாள் - உத்திரநாள்.
செங்கத்தாரி - ஒருசெடி.
செங்கமலம் - செந்தாமரை.
செங்கமலை - இலக்குமி.
செங்கரடு - செம்மன்குன்று.
செங்கரப்பன் - ஒருநோய்.
செங்கரா - ஒருமீன்.

செங்கருங்காலி - ஒருமரம்.
செங்கரும்பு - ஒருகரும்பு.
செங்கலங்கல் - செந்நிறமான கலங்கல்.
செங்கல் - காவிக்கல், சுட்டமண்கல்.
செங்கல்மங்கல் - கருமை வெண்மை கலந்த சிவப்பு, மங்கினசிவப்பு.
செங்கல்வரை - திருத்தணிகைமலை.
செங்கவளநாரை } செங்காநாரை.
செங்கழல்நாரை
செங்கழுநீர் - செங்குவளை.
செங்கழுநீர்மலை - திருத்தணிவரை.
செங்களம் - போர்க்களம்.
செங்களை - குதிரைப்பற் பாஷாணம், செங்கரும்பு.
செங்கற்கட்டளை - செங்கலச்சு.
செங்கற்பட்டு-ஒரூர். இது செங்கழுநீர் பேட்டை என்பதின்மரூஉ.
செங்கற்றலை - ஒருமீன்.
செங்கனிறமணி - கோவரங்கப்பதுமரா[கம்.
செங்காகம் - செம்போத்து.
செங்காடு - சிவந்தநிலம், செங்காட்டங்[குடி.
செங்காட்டங்குடி - ஒருதலம்.
செங்காந்தள் - ஒருகாந்தள்.
செங்காய் - பழத்துக்குச்சாய்ந்தகாய்.
செங்காய்வேளை - ஒருபூடு.
செங்காரணி } கருஞ்சிவலை.
செங்காரி
செங்கார் - ஒருவிதநெல், கருஞ்சிவப்பு.
செங்காநாரை - ஒருநாரை.
செங்காவி - செங்காவிக்கல்.
செங்கிடை } ஒருகிடைச்சி.
செங்கிடைச்சி
செங்கிரந்தி - ஒருகிரந்தி.
செங்கிளுவை - ஒருபறவை, ஒருமரம்.
செங்கீரை-ஒருகீரை, பிள்ளைக்கவியின் ஒருறுப்பு, அது பிள்ளை யிருகையு முழந்தாள்களு மூன்றித் தலைநிமிர்த் திட்டாடல்.
செங்கீரையாடுதல்-சாணையிற் பிள்ளை தலையுயர்த்திக்கைகாலூன்றி யுடம் பையசைத்தல்.
செங்குங்கிலியம் - ஓர்சரக்கு.
செங்குட்டுவன் - இளங்கோவடிகட்கு மூத்தோனாகிய சேரன்,இவன் கண் ணகி தன்னாட்டையடைந்து தன் க ணவனோடு சுவர்க்கம் புகுந்தாளென் புதைக்கேட்டு இமயமலையிலிருந்து சிலைகொணர்ந்து அவள் வடிவமைப் பித்துப் பிரதிஷ்டை செய்வித்துப் பூசையுந்திருவிழாவும்நடத்தினவன்
செங்குத்து - நேரேநிமிர்ந்தது.
செங்குந்தம் - பகைவரது உதிரத்திற் றோய்ந்த கைவேல், கண்ணோயுள் ஒன்று.
செங்குந்தர்-கையில் வேலையுடையோர் உபசுப்பிரமணியர் சந்ததியார், கைக்[கோளர்.
செங்குமிழ் - ஒருமரம்.
செங்குமுதம் - செவ்வாம்பல்.
செங்குரங்கு - ஒருகுரங்கு.
செங்குவளை - ஒருநீர்ப்பூ.
செங்குளவி - ஒருகுளவி.
செங்குன்றி - ஒருகுன்றி.
செங்குன்று - ஒருதலம். கொடுங்கோளூருக் கயலிலுள்ள ஒருமலை, கண் ணகி இம்மலையில்ஒரு வேங்கை மர நிழலிலேநிற்கும்போது அங்கேதெய் வவடிவத்தோடுவந்த கோவலனைக் கண்டுஅவனோடுசுவர்க்கமடைத்தாள்
செங்கை - ஆதிரைநாள், சிவந்தகை.
செங்கையான் - ஒருபூடு.
செங்கொடிவேலி } ஒருகொடி.
செங்கொடுவேலி
செங்கொல் - செம்பொன்.
செங்கொல்லர் - தட்டார்.
செங்கோடு-ஒருமலை, செருந்திமரம். திருச்செங்கோடுஎன்கிறமலை, இதனை முருகக் கடவுளுக்குரிய இடமாக இளங்கோவடிகளும் கூறியிருக்கின் றனர்.
செங்கோடுபாய்தல் - மலையுச்சியிலிருந் துபாய்தல்.
செங்கோட்டம் - ஒருமருந்து.
செங்கோட்டியாழ் - நால்வகையாழில் [ஒன்று.
செங்கோலம்-செம்புமணல்.
செங்கோலன் - இராசன். [ல்.
செங்கோலாணை - செங்கோல்செலுத்த
செங்கோல்-ஆணைநடத்துங்கோல், நீதி.
செங்கோற்கடவுள் - இயமன்.
செங்கோன்மை-நீதிவழுவாவாளுதை.
செச்சை-உதயசந்திரன், சிவந்தநிலம், செங்காடு, செஞ்சாந்தின் குழம்பு, செந்துளசி, சோடு, நீறு, வீட்டின் மேற்பக்கம், வெட்சிமரம், வெள் ளாட்டுக்கடா.

செஞ்ச - சேர, நிறைய.
செஞ்சடையோன் - காசிமீரப்படிகம், சிவன், வயிரவன், வீரபத்திரன்.
செஞ்சந்தனம் - ஒருசந்தனம்.
செஞ்சம்பா - ஒருநெல்.
செஞ்சாந்து - குங்குமமுதலான சிவந்த பரிமளத்தாற் கூட்டுகிற கூட்டு.
செஞ்சாலி - செந்நெல்.
செஞ்சால் - துப்பாக்கி முதலியன.
செஞ்சி - அரணனபட்டினம், ஓரூர்.
செஞ்சிலை-கற்காவி, சாந்திரவேதி, செங்கல்.
செஞ்சீரகம் - ஒருசீரகம்.
செஞ்சுடர் - ஆதித்தன், தீ.
செஞ்சுடர்ப்பகவன்-அக்கினி தேவன், சூரியன், தீ.
செஞ்செயல்-உரியபொருளை யுணர்த்துவது.
செஞ்செவியர் - செல்வர்.
செஞ்செவ் - நேரே.
செஞ்செழிப்பு - செழிப்பு, தாராளம், முகமலர்ச்சி.
செஞ்சேறு - சிவந்தசுரி.
செஞ்சொல் - செஞ்செயலை யுடைய சொல், வெளிப்படைச்சொல்.
செஞ்சோதி-சிவந்த ஒளி, மிகுபிரபை.
செஞ்சோளம் - ஒரு சிவப்புச் சோளம்.
செஞ்சோறு - இரத்தமூட்டியசோறு.
செடகன் - அடிமை, வேலைக்காரன்.
செடல் - செடில்.
செடன் - செடகன்.
செடி - அற்பம், ஒளி, குணமின்மை, செத்தை, பதனழிவு, பற்றை, பாவம், புதர், பூண்டு.
செடிக்காடு - பற்றைக்காடு.
செடிக்குடிபுக்கி - நாகரவண்டு.
செட்டிச்சி - கெட்டவள்.
செடித்தல் - செடிபற்றல்.
செடியன் - கூட்டற்றவன்.
செடிலூஞ்சல்-செடில்குற்றியாடு மூஞ்சல்.
செடில - ஒருகருவி.
செட்டி - குமரன், ஜட்டி, வாணியன், வைசியன்.
செட்டிச்சி - செட்டிப்பெண்.
செட்டிநாகம் - ஒருபாம்பு.
செட்டிமை - செட்டித்தன்மை.
செட்டு - சிக்கனம், வியாபாரம்.
செட்டை - இறகு, கைப்பட்டை.

செணம் - சனம்.
செண்டாயுதன் - ஐயன்.
செண்டு - குதிரைவையாளிவீதி, பந்து, பந்தெறிவீதி, பூஞ்செண்டு.
செண்டுவெளி-வெளி, மதுரையில் ஒரு வீதி, வையாளிவீதி.
செண்ணம் - வடிவு.
செண்பகம் - சண்பகம்.
செண்பகவருக்கை - ஒருபலா.
செதில் - செகிள், தோல், பொருக்கு.
செதில் - சிறுதுண்டு, சீவல், தோல், பொருக்கு.
செதுக்கல் - செதுக்குதல்.
செதுக்கி - உளவார முதலிய கருவி.
செதுக்கு - உடற்றழும்பு, செதுக்கென்னேவல், சேறு, பூதம், மந்தி.
செதுக்குதல் - சீவுதல், புன் முதலிய செதுக்கல்.
செதுக்குவேலை - இரத்தின முதலிய வழுத்தும் வேலை.
செதுக்கை - தழும்பு.
செதும்பு - சேறு.
செத்தல் - அறக்காய்ந்து, உலர்ந்ததேங்காய், சாகுதல், பசுமையற்றது, மெலிந்தது.
செத்து - உவமையுருபு, சந்தேகம்.
செத்தை - தூரால்.
செந்தட்டி - செந்தொட்டி.
செந்தட்டு - அந்தாத்தட்டு, பொறுப்பில்லாமை.
செந்தணல் - செந்தீ.
செந்தணற்கொடி - பவளம்.
செந்தண்டு சிவந்ததாள், செங்குருத்து, செந்தண்டுக்கீரை, பவளம்.
செந்தமிழ் - மதுரைத்தமிழ்ச் சங்கத்திலே நடைபெறும் ஒரு நற்றமிழ்ப் பத்திரிகை, இயற்றமிழ்.
செந்தமிழ்க்குரியோன் - அகத்தியன், வயிரவன்.
செந்தமிழ்நாடு, செந்தமிழ்நிலம் - தமிழ் வழங்குமிடம், பாண்டிநாடு.
செந்தமிழ்வழக்கு - இயற்றமிழ்வழக்கு
செந்தம் - எழுத்தாணிப்பூண்டு.
செந்தருப்பை - நச்சுப்பல்.
செந்தலைவிரியன் - ஒருபாம்பு.
செந்தழல்-கேட்டைநாள், தீ, தீத்தழல்.
செந்தழல்வளர்ப்போர் - பார்ப்பார்.

செந்தழற்கொடி - தழற்சிகை, பவளக் கொடி.
செந்தளித்தல், செந்தளிப்பு } செழிப்பு.
செந்தளிர் - இளந்தளிர்.
செந்தளிர்ப்பு - செஞ்செழிப்பு.
செந்தாது - செம்பொன்.
செந்தாமரை - சிவந்ததாமரை.
செந்தாழை - ஒருகண்ணோய், ஒருதாழை.
செந்தாழைநோய்-உதடுவெடித்து வாய் நாறுமோர் நோய்.
செந்தாளி - ஒருதாளி.
செந்தாள் - செந்தண்டு.
செந்தி - திருச்செந்தூர்.
செந்திரம் - சிவப்பு, நெய்தனிலம்.
செந்திரிக்கம் - செந்துருக்கம்.
செந்திரு - இலக்குமி, தாளகம்.
செந்திருக்கம் - செந்துருக்கம்.
செந்திருக்கை - ஒருமஞ்சள்.
செந்திலந்தாதி - முருகன்பேரில் ஒரு அந்தாதி.
செந்தில்-திருச்செந்தூர். அநேகப்பிர பந்தங்களால் புகழப்பட்ட இத்தலம் முருகக்கடவுளது படை வீடுகளுள் ஒன்று இது இக்காலத்தில் திருச்செந்தூர் என்று வழங்கப் படுகின்றது. குமரகுருபரர் தமது ஊமைத்தன்மை நீங்கப்பெற்ற தலமிதுவே.
செந்திறம்-குறிஞ்சியாழ்த்திறம்,சிவப்பு.
செந்தினை - கம்பு, சிவந்ததினை.
செந்தீ - அக்கினி, ஒருசிலந்தி.
செந்தீக்கடவுள் - அக்கினிதேவன்.
செந்தீவண்ணன் - சிவன், செவ்வாய்.
செந்தீவளர்ப்போர் - அந்தணர்.
செந்து-அணு,ஊர்வன,கிழநரி,சடாமாஞ்சி, சீவப்பிராணி, நரகம், பெருங்காயம்.
செந்துத்தானம் - ஒருநரகு.
செந்துத்தி - ஒருதுத்தி.
செந்துத்தீ-சடாமாஞ்சி, பெருங்காயம்.
செந்துநாசனம் - பெருங்காயம்.
செந்தும்பை - ஒருதும்பை.
செந்துரசம் - ஒருபிசின்.
செந்துருக்கம் - ஒருசெடி, ஓலையையடைக்குஞ் சுருள்.
செந்துருக்கு - ஒருசெடி.
செந்துருதி - ஒருநரகம், ஒருபண்.
செந்துருத்தி - ஒருபண்.
செந்துளசி - ஒருதுளசி.
செந்துளிர் - செந்தளிர்.
செந்துறை-ஆடற்கேற்கும்பாட்டு, ஒரு வெண்பா.
செந்துறைவெள்ளை-ஈரடியா யளபொத்து முடியும் வெண்பா.
செந்தூக்கு-ஒருவகையாற்றூக்கு மிலேசானதூக்கு, ஒருவகைப் பாட்டு, கைத்தூக்கு.
செந்தூரத்தாசி - கந்தகம்.
செந்தூரம்-இலிங்கபாஷாணம், பொன் முதலியவற்றாலாகிய சுண்ணம்.
செந்தூரித்தல்-சிந்தூரநீற்றுதல், சிந்தூரமாதல்.
செந்தூள்-செம்பராகம்,மிருதுவானதூள்.
செந்தொடை-சிவந்தமாலை, மோனைமுதலாகப்புகன்ற தொடை புகலாது தொடுப்பது.
செந்தொடையன்-சிவன், வைரவன்.
செந்தொட்டி-ஒருபாஷாணம், சிறுகாஞ்சொறி.
செந்தோட்டி-ஒருசெடி, சிறுகாஞ்சொறி, பெருகாஞ்சொறி.
செந்தோன்றி - செங்கழுநீர்.
செந்நரை - ஒருமரம்.
செந்நல் - ஒருமீன்.
செந்நாகம் - கேது.
செந்நாடிக்கா - மூங்கிரட்டை.
செந்நாயுருவி - ஒருநாயுருவி.
செந்நாய் - ஒருநாய்.
செந்நிறக்கல் - மாமிசச்சிலை.
செந்நீர் - இரத்தம்.
செந்நீர்ப்பவளம் - சிவந்தபவளம்.
செந்நெல் - நந்நெல்.
செந்நெறி - நன்மார்க்கம், நல்வழி.
செந்நென்முத்து - நெல்லிற்பிறந்தமுத்து.
செந்நொச்சி - ஒருநொச்சி.
செபத்தியானம் - அந்தரங்கசெபம்.
செபத்துவம் - செபக்குணம்.
செபமந்திரம் - செபிக்குமந்திரம்.
செபமாலை - செபமெண்ணுமாலை.
செபம்-மந்திரமுச்சரித்தல், மன்றாட்டு.
செபவடம் - செபமாலை.
செபவான்-செப வனுட்டிப்புக்காரன்.
செபனம் - செபம்பண்ணுதல்.
செபித்தல்-உருவேற்றுதல், மன்றாடுதல்.

செப்படி } செப்பிடுவித்தை.
செப்படிவித்தை }
செப்பட்டை - செட்டை, தோட்பட்டை.
செப்பப்புல் - நாணற்புல்.
செப்பமிடுதல்-செவ்வை பண்ணுதல், திருத்துதல்.
செப்பம்-இணக்கம்,ஒப்பாவு,செவ்வை, திருத்தி, நடுவீதி, மார்பு, வழி, வீதி.
செப்பலோசை-மத்திம வோசை, வெண்பாவினோசை.
செப்பல் - ஓரோசை, சொல்லுதல்.
செப்பல்வெண்பா-எழுசீரா னிசைப்பது
செப்பலாய் - இடை.
செப்பனிடுதல் - ஒப்பமாக்கல், செவ்வைபண்ணுதல்.
செப்பன் - செப்பம்.
செப்பிடில் - சடாமாஞ்சில்.
செப்பிடுவித்தை - ஒரு தந்திர வித்தை.
செப்பியம் - திரும்பத்திரும்பவுச்சரித்தல்
செப்பிலை - தும்பை.
செப்பு-சிமிழ்,செப்பென்னேவல்,சொல், விடை.
செப்புச்சிலை - மாந்தளிர்க்கல்.
செப்புதல் - சொல்லுதல்.
செப்புத்தொட்டி - வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினொன்று.
செப்புநிறம் - கருஞ்சிவப்பு.
செப்புநெரிஞ்சி - சிவப்புநெரிஞ்சி.
செப்புப்பட்டயம் - செப்புத்தகட்டிலெழுதிய வுறுதி.
செப்புப்பாத்திரம் - தாமிரபாத்திரம்.
செப்புப்பாளம் - செம்புப்பாளம்.
செப்புமணல் - செம்புமணல்.
செப்புமலை - காஷாயம், தாமிரமலை.
செப்போடு - செம்பாலாயவோடு.
செம் - சிவப்பு, செம்மை.
செம்பகை-யாழ்க்குற்றம் நான்கினொன்று, அது தாழ்ந்த இசை இன்பமின்றியிசைத்தல்.
செம்பசலை } சிவப்புப்பசளை.
செம்பசளை }
செம்பஞ்சி } சிவந்தபஞ்சு.
செம்பஞ்சு }
செம்பஞ்சுநிறமணி - சௌந்திகப் பதுமராகம்.
செம்பஞ்சூட்டுதல் - செம்பஞ்சழுத்தல்.
செம்படத்தி - செம்படவப்பெண்.
செம்படவர்-மீன்பிடிகாரரிலோர்வகை
செம்படாம் - சிவப்புச்சீலை.
செம்படிகம் - காசிமீரப்படிகம்.
செம்படை - சிவந்தமயிர்.
செம்படைச்சி-சிவந்த மயிருடையாள், செம்பட்டத்தி.
செம்பட்டத்தி - செம்படத்தி.
செம்பட்டை - செம்படை.
செம்பண்ணை - காவற்பண்ணை.
செம்பரத்தை - சப்பாத்துச்செடி.
செம்பருத்தி - ஒருசெடி.
செம்பருந்து-கருடன், கலுழன்.
செம்பலகை - செங்கல்.
செம்பவளச்சம்பா - ஒருநெல்.
செம்பழம் - காய்ப்பழம்.
செம்பளசை - ஒருபாம்பு.
செம்பன் - சிவலை.
செம்பாகம்-சரிபங்கு,செவ்வையானது நடுநிலை.
செம்பாடு - சிவந்தநிலம்.
செம்பாதி - சரிபாதி.
செம்பாம்பு - கேது.
செம்பாரை - ஒருநண்டு
செம்பாலை-மிடற்றிற்பிறந்து மிடற்றினின்றிசைக்குமிசை.
செம்பால் - இரத்தம்.
செம்பால்முடாங்கி - ஒருபூடு.
செம்பாளை - செந்நெல்.
செம்பாற்சிட்டி - ஒருகீரை.
செம்பி-கருவண்டு, சிவப்பு, மருதோன்றி.
செம்பிச்சி - செந்தோட்டி.
செம்பியன்-முதலெழு வள்ளலிலொருவன், சோழன்.
செம்பிரால் - ஒருமீன்.
செம்பில்வேதை - சோரபாஷாணம்.
செம்பிறை-கற்கிட்டம், கானற்கல், தேசுக்கல்.
செம்பினிறம் - மாந்தளிர்க்கல்.
செம்பின்பச்சை - நாகப்பச்சை.
செம்பு-தபலை, பஞ்சலோகத்தொன்று அது தாம்பிரம்.
செம்புகம் - செம்போத்து.
செம்புக்குள்வேதை - கற்பரி பாஷாணம்.
செம்புலம்-சுடுகாடு, செம்புமலை, பாலைநிலம், போர்க்களம்.
செம்புலி - ஒருபுலி.
செம்புளிச்சை - செம்மணத்தி.

செம்புரு - ஒருமீன்.
செம்புறைக்கல் - ஒரு சிவத்தகல்.
செம்புனல் - இரத்தம்.
செம்பூரம் } ஒருவகைப் பூரான்.
செம்பூரான் }
செம்பூறல் - செம்பிறகளிம்பு.
செம்பை - ஒருமரம், சிற்றகத்தி.
செம்பொடி - செம்புமணல், செம்மணல், தேக்கக்கல்.
செம்பொருள் - கடவுள், செஞ்சொல்லா லுணர்த்தப்படும்பொருள், சொல்லொடு பொருள்.
செம்பொன் - சுத்தபொன், பொன்.
செம்போத்து - செம்புகம்.
செம்மட்டி - ஒரு மட்டி, மரமஞ்சள்.
செம்மணத்தி - செம்புளிச்சை.
செம்மணல் - சிவந்தமணல்.
செம்மணி - கண்ணின்கருமணியைச் சூழ்ந்திருக்குஞ் சிவந்தமணி, குருந்தக்கல், குருவிந்தம், கெம்பு, பதுமராகம், மாணிக்கம், மாமிசகந்தி.
செம்மண் - காவிமண், சிவந்தமண்.
செம்மண்சிலை - கற்காவி.
செம்மந்தாரை - ஒரு பூமரம்.
செம்மயிர்க்கொண்டை } ஒரு கொன்றை.
செம்மயிர்க்கொன்றை }
செம்மரம் - அழிஞ்சில், ஒருமரம்.
செம்மலை - ஆவிரை.
செம்மலைப்பார் - சிவந்தகற்பார்.
செம்மலைப்பார் - செம்பாலை.
செம்மல்-அரசன், அருகன், ஈசன், எப்பொருட்கு மிறைவன், செம்முதல், தலைமகன், பழம்பூ, புதல்வன், பெருமையிற் சிறந்தோன்.
செம்மறி - ஆட்டின்பொது, ஒருவகை
செம்மறியாடு - ஒருவகையாடு. [யாடு.
செம்மாணி - ஒருவகைப் பாதரட்சை.
செம்மாத்தல் - அகந்தையாயிருத்தல், நிமிர்ச்சியாயிருத்தல், மிகக்களித்தல்.
செம்மாத்தி - சக்கிலிச்சி.
செம்மாப்பு - இறுமாப்பு.
செம்மார் - சக்கிலியர்.
செம்மாளி - பாவரிடும் பாதகுறடு.
செம்மானம் - செக்கர்மேகம்.
செம்மான் - சக்கிலியன்.
செம்மீன் - ஒருமீன்.
செம்மீன்வயிரம் - மீனம்பர்.

செம்முதல் - பொருமுதல், மூடுதல்.
செம்முருங்கை - ஒருமுருங்கை.
செம்முள்ளி - ஒருமுள்ளி.
செம்மூக்கன்-ஓரலி,ஒருவகைமுதலை.
செம்மேவுதல்-இணக்குதல், இணங்குதல், சரிப்படுதல்.
செம்மேனி - சிவந்தமேனி.
செம்மேனிநாயகர் - திருக்கானூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
செம்மை-அழகு, இணக்கம், கனம், சிவப்பு, செப்பம், செவ்வை, நிதார்த்தம், மாணிக்கம்.
செம்மைகட்டுதல் - நேர்கட்டுதல்.
செம்மைக்கல் - கானக்கல்.
செம்மைபண்ணல் - அலங்கரித்தல், ஒழுங்கு படுத்தல்.
செம்மைப்படுத்தல் - நற்சீரடைதல்.
செம்மையாதல் - நேராதல்.
செம்மொழி-இயற்றமிழ்வசனம், நயவசனம்.
செம்மொழிச்சிலேடை - சிலேடையில் ஒருபேதம். அது மொழிப் பிரிப்பின்றி நிற்பச் சிலேடிப்பது.
செயசூறை-வென்றுவாருங் கொள்ளை.
செயசெயவெனல் - போற்றுதல்.
செயசேதி - உப்பு.
செயத்தம்பம் - வெற்றித்தம்பம்.
செயநீர்க்கருத்தன் - நவட்சாரம்.
செயந்தி-திருச்செயந்தி,திருச்செந்தில்
செயபரம் - மரமஞ்சள்.
செயபரி - பட்டத்துக்குதிரை.
செயபீதம் - கௌரிபாஷாணம். [ள்.
செயப்படுபொருள் - காரியப்படுபொரு
செயப்பாட்டுவினை-பகுதி விகுதி புணர்ந்து முதனிலைகளை யுடையவாய் மூன்றும் வேற்றுமைக் கருத்தாவைக்கொண்டு முடிவன.
செயமணி - வெற்றிபெற்றடிக்குமணி.
செயமன்னர் - போர்மன்னர்.
செயமுரசு - வெற்றிமுரசு.
செயம் - வெற்றி, சயம்.
செயலறல் - உதவியற்றுப்போதல், தத்துவமற்றுப்போதல்.
செயலறவு - கையறவு.
செயலறுதல் - செயலறல்.
செயலறுநிலை - கையறுநிலை.

செயலுவமம் - செயலையேயுவமானமா கக்கொண்டு வமிப்பது (உ-ம்) நன விற்செயல்போலுங் கன்விற்செயல்.
செயலூர்க்கொடுஞ் செங்கண்ணனார் - இவர் கடைச்சங்கப்புலவர்களுள்ஒரு
செயலை - அசோகமரம். [வர்.
செயல் - ஒழுக்கம், காவல், செய்கை, சேறு, தொழில்.
செயவானை - பட்டத்தியானை.
செயவீரர் - போர்வீரர்.
செயற்கை யுணர்வு - செயற்கை யான் வந்த வுணர்வு.
செயித்தல் - சயித்தல்.
செயிரியர்-வீணைமுதலியவியக்குவோர்.
செயிர்-ஊனம், குற்றம், கோபம்,சினம், செயிரென்னேவல்,துன்பம், நோய்.
செயிர்க்காவிரியார் மகனார் சாத்தனார் - இவர்கடைச்சங்கப்புலவர்களுள் ஒரு
செயிர்த்தல்-சினத்தல்,கோபித்தல்[வர்.
செயிர்ப்பு - சினப்பு.
செயிற்றியம் - செயிற்றியனார் செய்த ஒரு நாடகத் தமிழ்நூல்.
செய்-சிவப்பு,செய்யென்னேவல், வய விலோரளவை, வயல்.
செய்கடன் - நித்தியகருமம், பிதிர்க டன், முறைமை.
செய்கரை - கட்டுக்கரை.
செய்காரியம் - செய்கருமம், செய்யவே ண்டியபிரகாரமெல்லாஞ் செய்வது.
செய்கின்ற-நிகழ்காலப் பெயரெச்சவா
செய்குதல் - உண்டாக்கல். [ய்பாடு.
செய்குறை - செய்கைத்தப்பிதம்.
செய்குற்றம்-செய்கைத்தப்பிதம், செய் கைக்குறை.
செய்குன்று - செய்கைமலை.
செய்கூலி - செய்தகூலி.
செய்கை - ஒழுக்கம், தொழில், பண்ப டுத்துவது, வேளாண்மை.
செய்கைக்காரன்-செய்கையிட்டோன், வேலைக்காரன்.
செய்கைச்சரக்கு - வைப்புச்சரக்கு.
செய்கைச்சுட்டு - செய்கையொப்பம்.
செய்கைத்தரை - பண்படுத்தின நிலம்.
செய்கைத்தாழ்ச்சி - செய்கைப்பிழை.
செய்கைபூணுதல் - செய்கைப்படுதல்.
செய்கைப்பங்கு - செய்கைக்கு வரும் பங்கு.
செய்கையாட்சி - செய்கையினால் வந்த வாட்சி.
செய்கையுப்பு - விளைவிக்குமுப்பு.
செய்த - செல்காலப்பெயரெச்ச வாய்
செய்தல் - செய்குதல். [பாடு.
செய்தவம் - செய்யப்பட்டதவம்.
செய்தி - ஒழுக்கம், காரியம், சமாசாரம், சரித்திரம், செய்கை,செய்வாயென் னுமுற்று.
செய்திகொன்றார் - நன்றியீனர்.
செய்து - வினையெச்சவாய்பாட்டிலொ
செய்நன்றி - செய்தநன்றி. [ன்று.
செய்நீர்ச்சித்திரம் - நவசாரம்.
செய்பவன் - கருத்தா.
செய்பாகம் - செய்யும்பக்குவம்.
செய்பாட்டுவினை - படுவென்னும் விகு திபுணர்ந்த முன்னிலை யுடையன வாய் மூன்றாம்வேற்றுமைக்கருத்தா வைக்கொண்டுவரும் வினை. [று.
செய்பு-வினையெச்சவாய்பாட்டில் ஒன்
செய்ய - அழகிய, சிவந்த,சிறந்தவென் னும் பொருள்படவரும் பெயரெச் சப்பண்புச் சொல், வினையெச்ச வாய்பாட்டிளொன்று.
செய்யர் - நேர்மையுள்ளவர்.
செய்யல் - செய்தல், சேறு.
செய்யவர் - செய்யர்.
செய்யவன்-சிவந்தமேனியன்,சூரியன்,
செய்யவள்-இலக்குமி,சீதை. [செவ்வா
செய்யன்-சிவலை,சிவன்,நோாளி. [ய்.
செய்யா - வினையெச்சவாய்பாட்டில் ஒ
செய்யார் - செய்யர். [ன்று.
செய்யாள் - இலக்குமி.
செய்யான் - ஒருபூரான்.
செய்யிய-வினையெச்ச வாய்பாட்டில் ஒ
செய்யியர் - செய்யா. [ன்று.
செய்யிழை - பெண். [சொல்.
செய்யுட்சொல் - உயர்ந்தசொல், திரி
செய்யுட்பொருத்தம்-பாட்டுப் பொருத் தம் பத்து, அவை-உண்டி, எழுத்து, கணம், கதி, சொல், தானம், நாள், பால், மங்கலம், வருணம்.
செய்யுட்டாரணை-நவதாரணையில் ஒன்
செய்யுணடை - செய்யுள்வழக்கு. [று.
செய்யும்-இருதிணைக்கு மைம்பாற்குமு ரிய வருகாலவினைமுற்று, வருகாலப் பெயரெச்ச வாய்பாடு,

செய்யுளுறுப்பு செய்யுட்கு வேண்டுமுறுப்பு.
செய்யுள் - பாட்டு, விளநிலம்.
செய்யுள்வழக்கு - பாவின்வழக்கு.
செய்யுள்விகாரம்-மெலித்தல் வலித்தல் முதலிய ஒன்பது விகாரம்.
செய்யூ-வினயெச்சவாய்பாட்டில் ஒன்று.
செய்யோன் - அருகன், செந்நிறமுள்ளோன், செம்மையுடையோன், செவ்வாய்.
செய்வித்தல் - செய்யப்பண்ணுதல்.
செய்வினை - சூனியம், செய்கை, செய்தொழில், நடவா முதலிய முதனிலைகளை யுடையன வாய்ப்படுவிகுதி புணராது எழுவாய்க் கருத்தாவைக் கொண்டு முடியும் வினைச்சொல்.
செரிகுடர், செரிகுடல் - உண்டது தங்காது கழியுமுடல்.
செரித்தல் - கோபத்தையடக்கல், சமித்தல், சீரணித்தல்.
செரியாக்குணம் - சமியாக்குணம்.
செரியாப்படுவன் - ஒருநோய்.
செரியாமை - சமியாமை.
செரு - சண்டை, போர், யுத்தம்.
செருகல் - அடைசுதல், சொருகுதல்.
செருகுகொண்டை - ஐம்பாலினென்று; அது சுருள்.
செருகுபூ - இடையிடைவைக்கும்பூ.
செருக்கம் - மாதளை.
செருக்கல் - செருக்குதல்.
செருக்களம் - போர்க்களம்.
செருக்களவஞ்சி - ஒருபிரபந்தம்; அது பறந்தலைச் சிறப்புக்கூறுவது.
செருக்கன் - கெருவி, ஆங்காரி.
செருக்கு - ஆங்காரம், ஆணவம், களிப்பு, செருக்கென்னேவல், மயக்கம், மனோராச்சியம்.
செருக்குதல் - அகங்கரித்தல், களிக்குதல், மயக்கடியாக்குதல்.
செருத்தணி - இது சூரபன்மனோடு சுப்பிரமணியர் செய்த செருத்தணித்தவிடமாதலால் இப்பெயர்பெற்றது. இத்தலத்தில் காலையில் ஒரு பூவும், உச்சிக்காலத்தில் ஒரு பூவும் மாலையில் ஒரு பூவும் மலர்கின்ற செங்கழுநீர்க்கொடியை யுடைய ஒரு அற்புதமான சுனையுள்ளது. இது இந்திரனால் காணப்பட்டது.
செருத்தல் - எருமைபசுஇவற்றின்மடி.
செருத்தி - விருதுக்கொடி.
செருத்துணைநாயனார் - இவர் தஞ்சாவூரில் வேளாளர்குலத்திலே அவதரித்துத் திருவாரூரை யடைந்து அங்கே சுவாமிக்குத் திருத்தொண்டு செய்துகொண்டிருக்கையில், புஷ்பமண்டபத்தின் பக்கத்திலே விழுந்திருந்தவொரு புஷ்பத்தை யெடுத்து மோந்த கழற்சிங்க நாயனாருடைய மனைவியை மூக்கரிந்த சிவபத்தர்.
செருநர் - யுத்தவீரர், படைவீரர்.
செருந்தி - ஒருமரம், மணத்தக்காளி, வாட்டுக்கோரை.
செருப்படி, செருப்படிநாயன், செருப்படை - ஒருபூண்டு.
செருப்பு - காற்றோடுதோல்.
செருமல், செருமுதல் - அடைசுதல், இருமுதல், திணித்தல், நெருக்கல்.
செருனர் - போர்வீரர், செருநர்.
செலகம் - மல்லிகை.
செலக்கனல் - அக்கினிக்கட்டி.
செலக்குரு - நவசாரம்.
செலக்கூபம் - நண்டு.
செலக்கூர்மை - நவசாரம்.
செலம் - கோரைக்கிழங்கு.
செலந்தி - புண்.
செலப்பிரீதி - கருப்பூரச்சிலை.
செலமலம் - கடற்பாசி.
செலம் - இலாமிச்சு, சலம்.
செலல் - கழிதல், போதல்.
செலவயர்தல் - போதல்.
செலவழிதல் - செலவுபோதல்.
செலவழித்தல் - செலவிடுதல்.
செலவாளி - செலவுகாரன்.
செலவிடல், செல்விடுதல் - அனுப்புதல், எறிதல், செலவழித்தல், விடுதல்.
செலவு - உத்தரவு, செலவிடுதல், செல்லும் பொருப்பு, பயணம், பெருங்காப்பியவுறுப்புளொன்று, போக்கு, போதல், முடிவு, வழி.
செலவுநடத்தல் - செலவு நடத்திவருதல், செலவு நடந்து வருதல்.
செலவோடுதல் - விசாலித்தல்.
செலியம் - இலாமிச்சை.

செலு-செத்தல்நறுவிலிமரம் மீன்சிறை
செலுத்தல் } அனுப்புதல், கொடுத்தல், செருகுதல், நடத்துதல், விடுதல்.
செலுத்துதல்
செலுந்தி } செத்தல்.
செலுந்தில்
செலுப்பு - சிறுதுண்டு, சீவல்.
செலுமூரல் - ஒருமீன்.
செலுவல் - செத்தல்.
செலுவன் - செத்தவன்.
செல் - இடி, உண்டியற்சீட்டு, கறையான் கையொப்பம், சொல்லென்னேவல், மேகம், வேல்.
செல்காலம் - இறந்தகாலம், காரியஞ் சித்திக்குங்காலம்.
செல்லக்கட்டுதல்-இறுத்தல்,சேர்த்தல்.
செல்லம் - செல்வம்.
செல்லல் - துன்பம், நடத்தல், போதல், வெறுப்பு.
செல்லன் - செல்லன்.
செல்லாக்காசு - மாற்றக்கூடாத காசு, வழங்காதகாசு.
செல்லாக்காலம் - நடப்பற்றகாலம்.
செல்லி - செல்வி.
செல்லியம் - கோழி.
செல்லு - செல்.
செல்லுதல் - கழிதல், காரியசித்தியாதல், சாதல், போதல், வழங்குதல்.
செல்லுமதி - செல்லவேண்டுவது.
சொல்லொளி - வைடூரியம்.
செல்வக்கடி - பருங்கடி.
செல்வச்சிரிப்பு - புன்முறுவல்.
செல்வத்தீன் - சிறுதீன்.
செல்வநடை - மிருதுநடை.
செல்வநரை - இடைநரை.
செல்வப்பிள்ளைக்காய்ச்சல்-ஒருகாய்ச்சல்.
செல்வப்பேச்சு - குதலைப்பேச்சு.
செல்வமடி - மிருகங்களுக்குச் சௌக்கியத்தினால் வளர்ந்திருக்கும் மடி.
செல்வமட்டி - ஒருகோடி.
செல்வம் - இன்பம், ஐசுவரியம், கல்வி, சீர், சுவர்க்கம், பாக்கியம்.
செல்வம்பொழிதல்-செல்வங்காட்டல்.
செல்வன் - அரசன், அருகன், கடவுள்.
செல்வமுள்ளோன் - மகன்.
செல்வாக்கு - பெறும்பேச்சு.
செல்வி - இலக்குமி, ஐசுவரிய முடையாள், தலைவி, மகள்.
செல்விநாதன் - விட்டுணு.
செல்விக்கை - ஐசுவரியம்,செல்வாக்கு.
செவத்தம் - ஒரு முருங்கைமரம்.
செவி - காது, அது பஞ்சபொறியினுள் ஒன்று, கேள்வி.
செவிகொடுத்தல் - உற்றுக்கேட்டல்.
செவிக்கெட்டுதல் } கேள்விப்படுதல்.
செவிக்கேறுதல்
செவிசாய்த்தல் - செவிகொடுத்தல்.
செவிச்சொல் - கேள்விச்சொல்.
செவிடர் - செவிமந்தர்.
செவிடு - செவிப்புலனற்றது. அது உறுப்புக்குறையெட்டி னொன்று.
செவிட்டல் - அழித்தல்.
செவிட்டு - செவியடி.
செவிட்டுதல் - செவிட்டல்.
செவிதாழ்த்தல் - செவிகொடுத்தல்.
செவிதின்றல் - இரகசியம்பேசுதல்.
செவிபடுவாதம் - ஒருவாதம்.
செவிப்பாம்பு - ஒருசெந்து.
செவிப்புலன் - கேள்வி.
செவிப்புற்று - ஒருநோய்.
செவிமந்தம் - செவிடு.
செவியடி - கன்னம்.
செவியடித்தல் - செடியாட்டல்.
செவியம் - செவ்வியம்.
செவியறிவுறுத்தல் - செவி யுபதேசமாய்ச் சொல்லும்புத்தி.
செவியறிவுறுமருட்பா - வியப்பின்றி யுயர்ந்தோர்கண் நயந்தொழுகல் கடனென அரசர் முதலியவர்க்கு மருட்பாவானுரைப்பது.
செவியறிவுறூஉ-உபதேசம்,ஒரு பிரபந்தம், அது அவையடக்கியற் பொருளைக்கூறுவது.
செவியறை - காதறை.
செவியிலி - பாம்பு, செவிடு.
செவிரம் - பாசி.
செவிலி - அக்காள், வளர்த்ததாய்.
செவுடு - செவிடு.
செவுள் - செகிள்.
செவை - செம்மை.
செவ் - சிவப்பு, செவ்வை.
செவ்வகத்தி - ஓரகத்தி.
செவ்வட்டை - ஓரட்டை.
செவ்வணி - தலைமகனையூடிய தலைமகள் அவன் விட்ட பெண்ணுக் கணியுஞ் செந்நிறவணி.

செவ்வண்-செங்குத்து, நேரேநிற்றல்.
செவ்வந்தி-சாமந்தி,ஒருபூச்செடி,செக்கர்மேகம்.
செவ்வந்திக்கல் - ஒருகல்.
செவ்வம்மான்பச்சரிசி - ஒருசெடி.
செவ்வரத்தமணி - குருவிந்தப் பதுமராகம்.
செவ்வரத்தை - செம்பரத்தை.
செவ்வலரி - ஓரலரி.
செவ்வல் - சிவந்தநிலம்.
செவ்வல்நார், செவ்வல்லி } செவ்வாம்பல்.
செவ்வவரை - ஓரவரை.
செவ்வழி-ஒருபண், அது நெய்தனிலத்திராகம்.
செவ்வழிப்பாலை - ஓரிராகம்.
செவ்வழியாழ்-நால்வகையாழில்ஒன்று.
செவ்வள்ளி - ஒருகொடி.
செவ்வனூர் - செவ்வல்லி.
செவ்வனிறை - இருவகை விடையில் ஒன்று, அது வினவுக்கு நேர்விடை கூறுவது.
செவ்வன் - செவ்வை.
செவ்வாக்கு - நீண்டவிளைவு.
செவ்வாப்பு - ஒருகட்டி.
செவ்வாமணக்கு - ஓராமணக்கு.
செவ்வாம்பல் - அரக்காம்பல்.
செவ்வாய்-ஒருகிரகம், ஒருநாள், சிவந்தவாய்.
செவ்வாரம் - செய்கைக்குங் காத்துக்குமுள்ள சரிவாரம்.
செவ்வாரை - ஒரு ஆரை.
செவ்வாவிரை - ஓராவிரை.
செவ்வாழை - ஒருவாழை.
செவ்வானம் - செக்கர்மேகம்.
செவ்வி-அழகு, காலம், சித்திரைநாள், பருவம்.
செவ்விண்டு-ஒரு பூச்செடி.
செவ்விநிறம் - மாந்துளிக்கல்.
செவ்வியம் - ஒருமருந்து, அது பஞ்சமூலத்தொன்று, மிளகுக்கொடி.
செவ்வியருமை - சமயம்பெறுமருமை.
செவ்வியான் - கிரகஸ்தன்.
செவ்விளநி - மழுதைவண்டு.
செவ்விளநீர்-சிவந்ததோலுள்ளவிளநீர்.
செவ்விளை - ஒருவகைத் தென்னமரம்.
செவ்விரநி - செவ்விளநி.
செவ்வு-சிவப்பு, செவ்வை, முத்தெண்கணக்கிலோர் சூத்திரம்.

செவ்வெண்-முறையே ஒற்றுமையான் வருமெண்.
செவ்வெண்ணெய்-வாலபுத்திரர்க் கிடுமெண்ணெய்.
செவ்வேள் - குமரக்கடவுள்.
செவ்வை - சுத்தம், செப்பம்.
செழிச்சி - செழிப்பு.
செழித்தல்-செழிக்குதல், பெருகுதல்.
செழிப்பம் - செழிப்பு.
செழிப்பு - ஐசுவரியம், செழுமை, பொலிவு, வளர்ச்சி.
செழியன் - பாண்டியன்.
செழுப்பம் - செழுமை.
செழுமறை - நெருப்பு.
செழுமை - அழகு, கொழுப்பு, சவுந்தரியம், நிறைவு, மாட்சிமை, வளமை.
செழும்பல் - செழிப்பு.
செளிம்பொன் - குணக்கேடன்.
செளிம்பு - களிம்பு.
செளிம்பூறல் - களிம்புப்பற்று.
செள்ளு - தெள்ளுப்பூச்சி.
செறல் - கொலை, கோபம், பகை.
செறி-செறியென்னேவல், நெருக்கம்.
செறிதல் - கலத்தல், குளித்தல், சேர்தல், நெருங்கல், பொருந்தல், மிகுதல்.
செறித்தல்-அழித்தல்,சொல்லல்,சேர்த்தல், நெரித்தல், பாதீடு, மூழ்கல்.
செறிப்பு - சேர்த்தல், நெருக்கம்.
செறிமை - நெருக்கம், மிகுதி.
செறிவு-குணவலங்காரம் பத்தினொன்று. அது நெகிழையின்றிவரச்செய்யுட்டொடுப்பது, நிறைவு, நெருக்கம், மிகுதி.
செறு-சிறுவயல், செறுவென்னேவல், வயல்.
செறுக்குதல் - செறுத்தல்.
செறுதல் - கொல்லல், கோபித்தல்.
செறுத்தல் - கொல்லல், கோபித்தல், தூக்குதல், நெருக்குதல், வெறுத்தல்.
செறுநர் - பகைவர்.
செறுப்பு - கொலை, செற்றல்.
செறும்பு-சலஞ்சாதித்தல்,சிறும்பு,வெறுப்பு.
செறுவு, கொலை, வயல்.
செற்றம் - கோபம், சலஞ்சாதித்தல், சினம்.
செற்றலர் - பகைவர்.

செற்றல்-கொல்லல், செறிதல், செறுத்தல், நெருக்கல், வெறுத்தல்.
செற்றார்-கொலைசெய்வோர், பகைவர்.
செற்று - செடி, நெருக்கம்.
செற்றுதல் - நெருக்குதல்.
செற்றை - செத்தை.
செனம் - சனம்.
செனனம் - பிறப்பு.
செனித்தல் - கருப்படுதல், பிறத்தல்.
செனிப்பித்தல் - பிறப்பித்தல்.
செனிப்பு - சனிப்பு.
சென்மசாபல்லியம் - செனன மெடுத்த பலன்.
சென்மபத்திரிகை - சாதகம்.
சென்மம், சென்மாந்திரம் - சன்மம்.
சென்மித்தல் - கருப்படுதல், பிறத்தல்.
சென்மிப்பு - பிறப்பு.
சென்றுதேய்ந்திறுதல் - நூற்குற்றம்பத்தினொன்று. அது வரவரச் சொன்னயம் பொருணயங் குறைதல்.
சென்னக்கூனி - கூனிப்பொடி.
சென்னம் - ஒருவகைப்புள், வடிவு.
சென்னல் - தேன்கொண்டை.
சென்னக்கூனி - இறால்.
சென்னங்கூனி - கன்னவோரா.
சென்னி - அச்சுவினிநாள், சோழன், தலை, பாணன், முடி.
சென்னிமலை - கொங்கு நாட்டிலுள்ள ஒரு சுப்பிரமணியஸ்தலம்.
சென்னியர் - பாணர்.
சென்னை - கதுப்பு, சென்னபட்டினம்.

# சே



சே - அழிஞ்சில்மரம், இடபவிராசி, உயர்ந்த எதிர்மறை, எருது, ஒலிக்குறிப்பு, ஓரெழுத்து, சிவப்பு, சேரான்மரம், சேவென்னேவல், விலங்கேற்றின் பொது.
சேகண்டி - சேமக்கலம், தெருக்காவல்.
சேகம் - தெளித்தல்.
சேகபாத்திரம் - கப்பலில் நீரிறைக்கு மரத்தொட்டி.
சேகரத்தார் - கூட்டத்தார்.
சேகரம் - கூட்டம், சம்பாத்தியம், சேகரித்தல், தலை, தலையில் முடிக்கப்படுவன, மாமரம், முடி, முருங்கை.
சேகரி-சேகரியென்னேவல், நாயுருவி.
சேகரித்தல் - கூட்டுதல், சம்பாதித்தல்.
சேகரிப்பு - சேகரம்.
சேகன் - வேலையில் சமர்த்தன்.
சேகிலி - வாழை.
சேகு - தழும்பு, மரவயிரம், வயிரம்.
சேக்கரித்தல் - கொக்கரித்தல்.
சேக்கிழார் - தொண்டநாட்டிலே குன்றத்தூரிலே சேக்கிழார்மரபிலவதரித்த அருள் மொழித்தேவர், இவருக்குச் சேக்கிழார் என்பது அம்மரபை விளக்கினமையா லுண்டானபெயர், இவரது கல்வியறி வொழுக்கங்களை யறிந்த அநபாயச் சோழமகாராஜன் இவரை யழைப்பித்து தமக்கு மந்திரியா யமைத்து உத்தமசோழப்பல்லவர் என்னும் வரிசைப் பெயரையுங்கொடுத்தான், இவர்சைவசமயிகள்புறச்சமயக்காப்பியமாகிய சீவகசிந்தாமணியை சொற்சுவைபொருட்சுவைகளை மாத்திரம் விரும்பிக் கற்றுத்தமதுவாணாளை வீணாளாகக்கழிப்பது கண்டு மனங்கசிந்து இம்மைமறுமை யின்பங்களை யொருங்கே தரவல்ல பெரியபுராணம் என்னுஞ் சிவனடியார் சரித்திரத்தைப் பாடினர். இது சிதம்பரத்தில் சபாநாயகர் சந்நிதியில், திருவருளாலெழுந்த அசரீரி வாக்காகிய, "உலகெலா முணர்ந்தோதற்கரியவன்" என்னும் அடியை முதலாகக்கொண்டு பாடப்பட்டது. இது சபாநாயகர் சந்நிதியிலே அரங்கேற்றப்பட்டது, அநபாயச் சோழன் இவருக்குக்கநகாபிஷேகஞ் செய்து இவரையும் பெரியபுராணத்தையும்யானைமீதேற்றித்தானுமேறியிருந்து இவருக்குச் சாமரம் வீசிக்கொண்டு வீதிவலஞ் செய்வித்தான், பிறகு பெரிய புராணத்தைச் செப்பேட்டி லெழுதுவித்து அவ்வாலயத்திலே வைத்தான், சேக்கிழார் ஞானமுடிசூடி அத்தலத்திற்றானே யிருந்து சிலகாலங்கழிந்த பிறகு சிவபதமடைந்தார். அநபாயர்சோழன்காலம்

சாலிவாகனசகம் ஆயிரத்து நாற்பது வரையிலுள்ளது, ஆதலால் சேக்கிழார் காலம் எழுநூற்றெழுபதுக்கு முன்னுளதாதல் வேண்டும்.
சேக்கு - முலைப்பால்.
சேக்குதல் - சிவத்தல்.
சேக்கை-உடற்றழும்பு, கற்கடகவிராசி, சிவத்தல், செம்பளை, நண்டு, மக்கட்படுக்கை, முலை, விலங்கின்படுக்கை.
சேங்கன்று - நாம்பன்கன்று.
சேங்கொட்டை - சேரான்கொட்டை.
சேசநம் - பெண்ணுமை.
சேசனம் - நனைத்தல்.
சேசூரணம் - கௌரிபாஷாணம்.
சேசூனம் - தெளித்தல், புசித்தல்.
சேச்சை - பாலை, முல்லை.
சேடகம் - பரிசை.
சேடக்குடும்பியன் - திருவநந்தபுரத்துள்ளானோரந்தணன், இவன்தன்னிடத்தடைக்கலமாயிருந்தகண்ணகிக்கு நேர்ந்த துன்பங்களைக்கேட்டுத்தீயில் வீழ்ந்திறந்த மாதரி மறுமையில் இவனுக்கு மகளாயினள்.
சேடசாயி } விட்டுணு.
சேஷசாயி
சேடகாரம் - ஒருநோய்.
சேடநீர் - சிலேற்பனநீர்.
சேடபாகம் - மிச்சப்பங்கு.
சேடம் } அழித்தல், எச்சில், சிலேற்பனம், மிச்சப்பொருள்.
சேஷம்
சேடர் - அடிமைக்காரர், ஏவல் செய்வோர்.
சேடல் உச்சிச்செலுந்திலென்னுமரம்.
சேடவட்டில் - உண்கலம்.
சேடன் } அடிமைக்காரன், அனந்தன், இளையோன், ஏவல்செய்வோன், ஒருசாதியான், கட்டிளமையோன், பலதேவன், பாங்கன்.
சேஷன்
சேடாத்திரி - திருச்செங்கோடு, திருவேங்கடமலை.
சேடார்த்தம் - குறைப்பொருள்.
சேடி-வித்தியாதாருலகு, அடிமைக்காரி, அழகுள்ளவள், இடையர் வீதி, இளையாள், ஏவல்செய்வாள், சேடியென்னேவல், தோழி.
சேடிகை - ஊழியக்காரி.
சேடித்தல் - அலங்கரித்தல், குறைத்தல், மிஞ்சிநிற்றல்.
சேடியர்-அடிமைகளிற்சிறந்தோர்ஏவற்பெண்கள், பாங்கியர்.
சேடு - அழகு, இளமை, திரட்சி, நன்மை, பெருமை.
சேவைஷ } மாக்காப்பு.
சேவை
சேவைஷயரிசி - அழுகரிசி.
சேட்சி - தூரம்.
சேட்செலவு - தூரமாய்ப்போதல்.
சேட்டகம் - அதிசத்தம்.
சேட்டபாரி - முதன்மனைவி.
சேட்டம் } அழகு, ஆனிமாதம், செழிப்பு, திறம், முதன்மை, மேன்மை.
சேஷ்டம்
சேட்டனம் - முயற்சி.
சேட்டன் } தமையன், மூத்தோன்.
சேஷ்டன்
சேட்டாதேவி - மூதேவி.
சேட்டி } அக்காள், பெருமையிற்சிறந்தாள்.
சேஷ்டி
சேட்டித்தல் } காரியப்படுதல், திறப்படல், நடத்தல்.
சேஷ்டித்தல்
சேட்டிப்பித்தல் - நடப்பித்தல்.
சேட்டுமம் - சிலேட்டுமம்.
சேட்டை } அக்காள், அசைகை, இயக்கம், குணங்கெட்டதொழில், கேட்டைநாள், செய்கை, தொந்தரவு, தொழில், மூறம், பெருமையிற் சிறந்தவள், மூதேவி, விசாகநாள்.
சேஷ்டை
சேட்படைகிலை-காதலன் றலைவியோடு சேராது தோழி தடுத்தல்.
சேணம் - கல்லணை, மெத்தை.
சேணவி - அறிவு.
சேணுடர் - வானோர்.
சேணுடு - சுவர்க்கம்.
சேணி - ஏணி, தரங்கல், முறை, வித்தியாதாருலகு.
சேணிச்சி - ஒரு ஜாதியார்.
சேணியர் - நெய்வாரிலோர்பகுதி.
சேணுவணன்-ஆகாயக்கருடன்கிழங்கு.
சேணை - புத்தி.
சேண் - அகலம், ஆகாயம், உயர்ச்சி, தூரம், நீளம்.
சேண்டிரவர் - நெய்வார்.

சேதகம் - சிவப்பு, சேறு.
சேதகரம் - வெட்டுதல்.
சேதநகி - கடுக்காய்மரம்.
சேதநை - மனம்.
சேதபாதம் - நட்டம்.
சேதம் - அழிவு, இடையூறு, தீய்வாயிலக்கம், கேடு, துண்டு, நட்டம், பிரிவு.
சேதனம் - அறிவு, உணர்ச்சி, வெட்டுதல்.
சேதனன் - அறிவுடையோன், ஆத்துமா, துருஹியன் பௌத்திரன்.
சேதா - சிவப்புப்பசு, நற்பசு.
சேதாம்பல் - செவ்வாம்பல்.
சேதாரம் - அழிவு, கேடு, தேமாமரம், பொன்னுரை, வெட்சிமரம்.
சேதி - ஒருநாடு, புதினம். விதர்ப்பன் மூன்றாம்புத்திரனாகிய ரோமபாதன் வமிசத்தனாகிய உசிகன் புத்திரன், இவன் வமிசம் சேதிவமிசம், இவனுந்தேசம் சேதிதேசம்.
சேதிதம் - வெட்டப்பட்டது.
சேதித்தல் - அறுத்தல், வெட்டல்.
சேதிமம் - தேவர்கோயில்.
சேதிராஜன் - சிசுபாலன்.
சேதிராயர் - திருவிசைப்பாப் பாடின ஒன்பதின்மருள் ஒருவர்.
சேது - இராமேச்சுரம், ஒருகடல்தீர்த்தம், சிவப்பு, செய்கரை, பாலம். ஸ்ரீராமர் இராவணசங்காரஞ்செய்து மீண்டகாலத்தில் பிரமஹத்தி நீங்கும்பொருட்டு ஆடிய தீர்த்தத் துறை, இது சேதுபந்தநத்துக்கருகே இராமேசுவரத்தைச் சார்ந்த கடலிலுள்ளது, இது சிறந்த தீர்த்த மென்று இமய முதலிய இடங்களினின்றும் ஆரியர் வருடம்தோறுஞ் சென்று மூழ்கப் பெறுவது.
சேதுநாதன் - இராமநாதன், இராமேச்சுரன்.
சேதுபதி - இராமநாதபுரவரசன்.
சேதுபந்தனம் - அணைக்கட்டு. திருவணை, இது பாண்டி நாட்டிலுள்ளது, இலங்கைக்குச்செல்லவேண்டி ஸ்ரீராமரும் வாநரசேனையும் கடலைத்தூர்த்திட்ட அணைப்பாதை.
சேதுபுராணம் - இராமேச்சுர தலபுராணம், இது நிரம்பவழகிய தேசிகரால் பாடப்பட்டது, இது மூர்த்தி தலம் தீர்த்தம்என்னு மூன்றனையுஞ் சிறப்பித்துக் கூறுவது.
சேத்தல் - சிவத்தல்.
சேத்திரக்கோவை - சேத்திரநாமமாலை.
சேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழ் - இது காஞ்சி, சிதம்பரமுனிவர்செய்த சுப்பிரமணியர் தோத்திரம்.
சேத்திரஞ்ஞன் - ஆன்மா, சரீரத்திரயத்தை யறிபவன்.
சேத்திரம் - உடம்பு, காற்று, சரீரத்திரயம், தலம், வயல்.
சேத்திரவாசம் - தலவாசம்.
சேத்து - உறுப்பு, ஐயம், ஒப்பு, கருத்து, சிவப்பு, நெருக்கம், மிகுசிவப்பு, வயல்.
சேநாரு - படைத்தலைவன்.
சேந்தனார் - திவாகரம் நிகண்டுஇவைகளைச்செய்வித்தவொரு சிற்றரசர், இவர்அருகசமயத்தவர், பட்டணத்துப்பிள்ளையார்க்கு மந்திரியாகவும் தோழருமாயிருந்த ஒரு வைசியர், திருவிசைப் பாடினவரு ளொருவர்.
சேந்தன் - குமரன், திவாகரநிகண்டு செய்வித்தோன்.
சேந்து - அசோகமரம், சிவப்பு, நெருப்பு.
சேந்துதல் - சாம்புதல்.
சேந்துபந்தம் - அரக்கு.
சேந்தை - மேற்படாம்.
சேபம் - இலிங்கம்.
சேபனம் - சுவறுதல்.
சேபனார்த்தகம் - இறைத்தல்.
சேபாலம்கொட்டை, சேபாலம் - சேங்கொட்டை.
சேபாலிகை - கருநொச்சிமரம்.
சேபிட்டம் - வேகம்.
சேபேது - உடைத்தல், போடல்.
சேப்பு - சிவப்பு.
சேமக்கலம் - எறிமணி.
சேமக்காரன் - சூதானகாரன், பொருட்பத்திரம் பண்ணுவோன்.
சேமங்கொள்ளுதல் - சேமம்பண்ணுதல்.
சேமணி - ஆமணி காமப்பகை, சேமக்கலம்.
சேமண்டன் - தந்தையற்றவன்.
சேமதருமம் - சுயதருமம்.
சேமத்தேர் - உதவித்தேர்.
சேமநம் - போசநம்.
சேமநிதி - புதையல்.
சேமந்தி - ஒருசாமந்தி, புடபம்.

சேமப்படைக்கலம் - தறுவாய்க்குவைத்திருக்கும் படை.
சேமப்பொருள் - அடைக்கலப் பொருள், சேமமாயிருக்கும்பொருள், புதையல்.
சேமம்-அடக்கம், அரண், இன்பம்,காவல்,காவல்வீடு,சவச்சேமம், புதையல்.
சேமம்பண்ணுதல்-சேமித்தல், பிரேதங்களை யடக்கம் பண்ணல்.
சேமரம் - அழிஞ்சில், சேரான்.
சேமறி - எருதும் பசுவும் புணர்தல்.
சேமனம் - சிவமணி.
சேமன் - தந்திரி.
சேமாசாரம் } சேமிக்குந்தண்டை.
சேமாதிசயம் }
சேமாளச்சம்பா - ஒருவகை நெல்.
சேமித்தல் - காவல்பண்ணிவைத்தல், [புதைத்தல்.
சேமுஷி - புத்தி.
சேமை }
சேம்பு } ஒரு செடி.
சேம்பை }
சேயமம் - கௌரிபாஷாணம்.
சேயம் - ஓட்டம், கரை, கூறப்பட்டது,
சேயவன்-கந்தன்,செவ்வாய்.[வெற்றி.
சேயன்-மகன்,வெல்லத்தக்கபகைஞன்
சேயா - கடுக்காய்.
சேயார் - பகைவர், பிறர், மகன்.
சேயான் - சிவன், முருகன்.
சேயிலம் - இலுப்பை.
சேயிழை - ஆபரணம், பெண்.
சேயேபசம் - மரமஞ்சள்.
சேயோன் - கந்தன், சிவன்.
சேய் இளமை, குமரன், குழந்தை, சிவப்பு, செவ்வாய், தூரம், நீளம்,மகன். மனை, மூங்கில்.
சேய்த்து - தூரம், நீளம்.
சேய்நீர் - ஒருவித மருந்துநீர்.
சேய்மை - தூரம், நீளம்.
சேய்மைச்சுட்டு-தூரப்பொருளைச் சுட்டிக் காட்டல், (உ-ம்) அது.
சேர - ஒன்றாய்.
சேரக்கட்டுதல் - சேர்த்தல், சேர்த்துக் கட்டுதல்.
சேரங்கை - செரங்கை.
சேரமண்டலம்-சேரநாடு, அதுவடக்கில் பழனி, கிழக்கில் திருச்செங்கோடு, மேற்கில் கள்ளிக்கோட்டை, தெற்கில் சமுத்திரம், இந்தநாற்பாங்கெல்லைக்குட்பட்ட எண்ணூறுமயில் விஸ்தீரணமான பூமி.
சேரமான் - அறுபத்துமூவரிலொரு பெரியோர் சேரன்.
சேரமான்-கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் - பரணரால் பாடப்பட்ட ஒரு சேரன்.
சேரமான்கடுங்கோவாழியாதன் - கபிலராலும் குண்டுகட்பாலியாதனாராலும் பாடப்பட்ட ஒருசேரன்.
சேரமான்கணைக்காலிரும்பொறை-கோச்செங்கட் சோழனாலே சிறைசெய்யப்பட்டுக் காராக்ருஹத்திலே கிடந்து தாகத்தால்வருந்தியபோதும்தண்ணீர் பெறும லுயிர்நீங்கினவன்.
சேரமான் - கருவூரேறிய வொள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறை- இவன் நரிவெரூஉத்தலையரால் புகழ்ந்து பாடப்பட்டவன்.
சேரமான்குட்டுவன்கோதை - சோணாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனாரால்பாடப்பட்டபெருங்கொடையாளன். [றை.
சேரமான் - குடக்கோச்சேரலிரும்பொ
சேரமான் - குடக்கோவிளஞ் சேரலிரும்பொறை இவன் பெருங்குன்றூர்க் கிழாரால் பாடப்பட்ட சேரன்,பதிற்றுப்பத்தினுள்ளே ஒன்பதாம்பத்திற்குத் தலைவனுமிவனே.
சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதன் இவனும் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி யென்னும் சோழனும் போரிலிருந்த போது, கழாத் தலையராலும்பாணராலும் அச்சோழனோடு சேர்த்துப் பாடப்பட்டவன்.
சேரமான்கோக்கோதைமார்பன் - இவன் கோச்செங்கட் சோழன் காலத்துச் சேரன், இவன் பொய்கையாரால் பாடப்பட்டவன்.
சேரமான்- கோட்டம்பலத்துத்துஞ்சிய மாக்கோதை - புறநானூற்றி லுள்ள ஒரு பாடலால் புலமை நிறைந்த சேரருளொருவனென விளங்கும்.
சேரமான்செல்வக்கடுங்கோவாழியாதன்-சிக்கற்பள்ளியிலிறந்த பெருங்கொடையாளனாகிய சேரன், இவன

குண்டுகட்பாலியாதனாற் பாடப்பட்டவன். கபிலரது கையைப் பற்றி நுங்கைமெல்லியவென அவரா ற்பாடப்பட்ட சேரன்.(புறநானூறு)

சேரமான்தகடுரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறை - தனது முரசுகட்டிலி லறியாதேறி நித்திரைசெய்த மோசிகீரனரைத் தண்டியாது அவர் துயிலொழிந்தெழுந்துணையும் கவரி வீசி நின்ற பெருந்தகையாகியசேரன்,அவ்வரும் பெருஞ்செயல் புறநானூற்றினுள்ளேவரும் மோசிகீரனர் பாடலில் விரித்துப் புகழப்பட்டுள்ளது, பதிற்றுப்பத்தினுள் எட்டாம் பத்தாலே தன்னைப்பாடிய அரிசில் கிழாருக்கு ஒன்பது லக்ஷம் பொன் பரிசில் கொடுத்தோனும் தகடூரை வென்றவனும் இவனே.

சேரமான்மாமுளூரெறிந்த நெய்தலங்கானலிளஞ் சேட்சென்னி சேரமானுடைய மாமுளூரைவென்று கைக்கொண்டசோழன்,இவன்ஊன்பொதிபசுங்குடையரால்பாடப்பட்டவன் ஒருநாள் ஊனை வாங்கிக்குடையினுள் மறைத்து சென்றமையால் அப்புலயர்க்கு இப்பெயர்வருவதாயிற்று.

சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ - இவன் கொடையாலும் வீரத்தாலும் புகழ்படைத்த ஒரு சேரன், பேய்மகன் இளவெயினியாற் பாடப்பட்டவன், பாட்டிலும் வல்லவன்.

சேரமான் பெருஞ்சேரலாதன்-இவன் கரிகாற் சோழனுக்குத்தோற்றுநாணி வடநாட்டிற் சென்றிருந்த சேரன், இவன் கழாத்தலையார் வெண்ணிக்குயத்தியாயர் என்னும்இருவராலும் பாடப்பட்டவன்.

சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்-இவன்பாண்டவர்களும் கௌரவர்களும் செய்த யுத்தத்தில் அவர்கள் சேனைகளுக்கு யுத்தமுடியுமளவும் நல்லுணவளித்து பெருஞ்செல்வமாகியசேரன்இவன்இடைச்சங்கத்திலிருந்த முடிஞ்சியூர் முடிநாகராயரால் பாடப்பட்டவன்.

சேரமான்மாந்தரஞ் சேரலிரும் பொறை-இவன் சோழன் ராஜசூயம்வேட்டபெருநற்கிள்ளியோடுபோர்செய்த சேரன், இவன் பொருந்தி விளங்கீரனாலும் வடவண்ணக்கன்பெருஞ்சாத்தனாராலும்பாடப்பட்டவன்.

சேரமான்மாவெண்கோ - கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியும், சோழன் இராஜசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் இச்சேரன்காலத்தவர்கள் சேரமான் பெருமாளுயனர் என்பவரு மிவரே. இவர் ஔவையாரால் பாடப்பெற்றவர்.

சேரமான் யானைக்கட்சேரலிரும் பொறை - மாந்தாஞ்சேரலிரும் பொறை பாதுகாத்தநாடு தேவருலகத்தை நிகர்க்கும் என்றுலகத்தார் புகழ அரசாண்டசேரன், இவன் தன்னைப்பாடும் புலவர்க்கு பிறரிடத்தேசென்று பாடி யிறவாதபடி பெரும்பொருள் வழங்கும் பெருங்கொடை வள்ளல், இதனைப் பாடியபுலவர் குறுங்கோழியூர் கிழார், இவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனல் சிறைப்படுத்தின காலத்தும் குறுங்கோழி, யூர் கிழார் தாம் முன்னே அவன்பாற்பெற்ற நன்றியை மறவாது போய்க்கண்டு அவன் புகழை மிக வெடுத்துப் பாடினர்.

சேரமான்வஞ்சன் - இவன் திருத்தாமனரால் பாடப்பட்ட சேரன்.

சேரமான்பெருமாள் - ஆயிரத்தறுபது வருடங்களுக்குமுன்னேசேரநாட்டில் அரசுபுரிகையில், அருக்கரோடு போர்செய்து தோற்று அவர்களுடைய சமயத்திற் பிரவேசித்துத் அருக்கனகிப் பின்னுஞ் சிலநாள் அரசாண்டு இறுதியில் தனது நாடுவிட்டோடித் அருக்கருடைய தெய்வஸ்தலமாகிய மக்கபுரியையடைந்து அங்கே யிறந்தவன். இவன்சமாதிஇன்றும் அங்குளது, இவன்இறந்தகாலம் அந்தச் சமாதிகல்லில் எழுதப்பட்டிருக்கின்றது.

சேரலர் - பகைவர்.

சேரலன் - சேரன், பகைவன்.

சேரலாதன்-செங்குட்டுவனுக்கும் இளங்கோவடிகளுக்கும் தந்தை.

சேரலார் - பகைவர்.

சேரல் - கிட்டல், கொழியலரிசி.

சோவமிசாந்தக பாண்டியன் - சோழ வமிசாந்தக பாண்டியன் மகன்.
சேரன்-சேரநாட்டரசன், இவன்தமிழ் நாட்டு மூவேந்தருளொருவன், இவனது நாடு மலைநாடு, அது தற்காலம் மலையாள மெனப்படும். இந்நாட்டுத் துறை பொருநைத்துறை, இவன் மாலை பனைமாலை, இவன் மலைகொல்லி மலை.
சேரா - கள்.
சேராங்கொட்டை-சேரான்கொட்டை.
சேரார் - பகைவர்.
சேரான் - சேங்கொட்டைமரம்,பகைவன்.
சேரி - ஊர், தெரு.
சேரிடுதல் - பிணைத்தல்.
சேரிப்பாத்தையர்-பொது ஸ்திரீகளில் ஒரு வகையார்.
சேருகம் - நாகணவாய்ப்புள்.
சேருதல் - சேர்தல்.
சேரும்பாடும் - அடிதலைமாறி.
சேறை - சிறங்கை.
சேர் - ஓரளவு, ஓரேர்மாடு, ஒருநிறை, சேரென்னேவல், தளை, தானியப் போர், பிணையல்.
சேர்க்கை - ஒன்றிப்பு, சேருமிடம், சேர்க்குதல், புணர்ச்சி.
சேர்தல்-அடுத்தல், அடைதல், இணங்குதல், ஒருமித்தல், கிட்டுதல், கூடுதல், புணர்தல்.
சேர்த்தல் - அடுத்தல், அணிதல், அறுத்தல், இணைத்தல், கலத்தல், கூட்டுதல், சமைத்தல், சேகரித்தல், சேரப்பண்ணுதல்.
சேர்த்தி, சேர்த்திகை - உறவு, சேர்மானம்.
சேர்த்துதல் - இணைத்தல், சேரப்பண்ணுதல்.
சேர்ந்தகைமை - சேரத்தகுந்தன்மை.
சேர்ந்தலை - உற்றசினேகம்,ஒன்றிப்பு.
சேர்ந்தவன் - அடுத்தவன்.
சேர்ந்தார் - உற்றார்.
சேர்ந்தார்க்கொல்லி - நெருப்பு.
சேர்பந்து - கசை.
சேர்பு - சேர்மானம், வீடு.
சேர்ப்பன் - நெய்தனிலத்தலைவன்.
சேர்ப்பு - அனுபந்தம், இறங்குதுறை, கடற்றுறை, கலப்பு, சேர்க்கப்படுவது, சேர்ப்பூட்டு, சோடு.
சேர்மானம் - ஒன்றிப்பு,கலப்பு,கூட்டு.
சேர்விடம் - சேருமிடம், சேர்மானம், மனிதர் படுக்கை.
சேர்வு - ஐக்கம்கூட்டம், திரட்சி,மருதநிலத்தூர், வீடு.
சேர்வை - ஐக்கம், ஒருமருந்து, கலத்தல், கூட்டம், சேகரிப்பு, சேர்மானம், சேனை, பிளாஸ்திரி.
சேர்வைக்காரன் - சேனைத் தலைவன், போர்ச்சேவகன்.
சேர்வைக்கால் - உண்கலமுதலியவைக் குந்தாள்.
சேலகம் - முத்தக்காசு.
சேலப்பிரட்சாளகன் - வண்ணான்.
சேலம் - ஓரூர், புடைவை, பொருமை, மயிற்றோகைக்கண்.
சேலன் - அதமன்.
சேலி - வஸ்த்ரம்.
சேலியாள் - இலாமிச்சை.
சேலுகன் - வேலைக்காரன்.
சேலேகம் - சந்தனம், சிந்தூரம்.
சேலை - அசோகு, சீலை.
சேலோதம் - சந்தனம்.
சேல் - கயல்மீன்.
சேவகம் - சேவகத்தொழில், சோம்பு, துயில், பேயுள்ளி,யானை துயிலிடம், வணக்கம், வீரம், வேலை.
சேவகனார் - ஐயனார்.
சேவகன் - ஐயன், சிற்றுமுட்டி, பணிவிடைகாரன், பேயுள்ளி, வீரன்.
சேவகன்பூடு - காந்தள், சிறுபுள்ளடி, சிற்றமட்டி.
சேவடி - சிவந்தபாதம்.
சேவதி - குபேரன்திரவியம்.
சேவம் - ஆண்குறி, உயரம், பாம்பு.
சேவலங்கொடியோன் - சேவற்கொடியோன், சுப்பிரமணியன்.
சேவலிகி - நதி.
சேவல்-காவல், கோழியினாண், சேழு, பறவையினாண், மயிலொழிந்த பறவையினாண்.
சேவற்கத்தி - காவற்போருக்குக் கட்டுங்கத்தி.
சேவற்கொடியோன்-ஐயன், கந்தன்.
சேவற்பண்ணை - ஒரு பூமரம்.
சேவனம் - சேவகம், தைத்தல்.
சேவனை - சேவிப்பு, வணக்கம்.

சேவனைகாரர் - ஊழியஞ் செய்வோர், வழிபடுவோர்.
சேவாலங்கொட்டை - நேர்வாளம்.
சேவாலிகம் - கருநொச்சி.
சேவிதம் - சேவகம்.
சேவிதன் - ஆச்சரியித்தோன்.
சேவித்தல்-ஊழியஞ் செய்தல், வணங்கல், வழிபடுதல்.
சேவியம் - வெள்ளை வெட்டிவேர்.
சேவுகம் - சேவகம்.
சேவை - ஊழியம், வழிபடுதல்.
சேவையூர் - சிதம்பரம்.
சேறல் - எழுச்சி, செல்லல், நடத்தல்.
சேறுடல் - செள்ளாடுதல்.
சேறு-அளறு, இனிமை, கள், குறிப்பு, தெள்ளல், தித்திப்பு, திருவிழா.
சேழற்கண்ணி - மீனுக்ஷி, அரிதாரம்.
சேற்பம் - சிலேற்பனம்.
சேற்பனசுரம் - ஒரு காய்ச்சல்.
சேற்பனம் } சிலேட்டுமம்.
சேற்றுமம் }
சேனஜித்து-கிருதாசுவன் புத்திரனென்றும் இரண்டாம் யுவநாசுவன் தந்தை யென்றும் சொல்லப்படுவன், விசுவஜித்து புத்திரன், ருசிராசுவன் த்ருடஹநு காசிபன், வற்சஹநு என்னும் நால்வரும் இவர் புத்திரரே.
சேஷன் - ஆதிசேடன்.
சேனம் - பருந்து.
சேனப்பாம்பு - ஒருமீன்.
சேனன்-பிறப்பிலே சிலாக்கிய முடையோன்.
சேனு - ஒருபூடு, விலாங்குமீன்.
சேனுங்கம் - படையுறுப்பு.
சேனுசமுத்திரம் - பெருஞ்சேனை.
சேனுதரசன் - படைவீரன்.
சேனுதிபதி - படைத்தலைவன்.
சேனுதிபன்-சுப்பிரமணியன், படைத்தலைவன்.
சேனுதிராயன் - கந்தன், சேனுதிபதி.
சேனுபதி - சேனுதிபன்.
சேனுபத்தியம் - தானுபத்தியம்.
சேனுமுகம் - படையினேர் தொகை. அது பதாதி மூன்று கொண்டது, முற்படை.
சேனுவதி - ஏழாவது மேளகர்த்தா.

சேனுவரையர்-தொல்காப்பியம் சொல்லதி காரத்துக்குச் சேனுவரையம் என்னும் உரைசெய்த ஆசிரியர், வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லவர். இவர் நச்சினர்க்கினியருக்கு முன்னிருந்தவர் என்பது நச்சினர்க்கினிய ரியற்றிய உரையில் ஒரேவிடத்துச் சேனுவரையர் மதத்தை மறுத்துத் தம்மதத்தை நாட்டலால் இனிது விளங்கும். இவருடைய ஜாமபூமி பாண்டி நாடென்றும் ஜாதியில் அந்தணர் என்றும் கூறுவர். இவர் இளம்பூரணர் உரையை இடையிடையே மறுத்தலால் இளம்பூரணர் இவர்க்கு முன்னிருந்தவராதல் வேண்டும். ஆதலால் சேனுவரையர் இற்றைக்கு ஆயிரத்திருநூற்றைம்பது வருடங்களுக்கு முன்னிருந்தவரென்று துணியப்படும்.
சேனுவு - தகரை.
சேனுனியன் - குமரன், படைத்தலைவன்.
சேனை - ஆயுதம், கடைவீதி, படை, மிகுதி.
சேனைத்தலைவர்-செங்குந்தர், உபசுப்பிரமணியர்.
சேனைத்தலைவன் - படைத்தலைவன்.

---

## சை



சை - இகழ்ச்சிக்குறிப்பு, ஓரெழுத்து.
சைகதம் - ஆற்றங்கரை, மணல், மணற்கரை.
சைகதவுண்டை - மலை.
சைகன் - ஒழுக்கந்தவறின பார்ப்பனப் புத்திரன்.
சைகை } பயில்.
சைக்கினை }
சைங்கம் - சிங்கம்.
சைங்கிகேயம் - இராகு.
சைங்கியம் - சைங்கம்.
சைசவம் - இளமை பதினறு வயதிற்குள்ளான பருவம்.
சைசுநாகர்-சிசுநாகன்வமிசத்தார், இவர் பதின்மர். பிரத்தியோதர்களுக்குப்

பின்னே மகததேசத்திலே மூந்நூற்றறுபத்திரண்டு வருஷம் அரசாண்டவர்.
சைசவப்பருவம் - குழந்தைப்பருவம்.
சைதவாகிநி - ஒருநதி.
சைதன்னியதரிசனம்-தானுந்தலைவனுமொன்றெனக் காண்டல்.
சைதன்னியம் - அறிவு, ஆத்துமா, கடவுள், தத்துவஞானம்.
சைதன்னியர் - இவர்கள் இலிங்கதாரிகளைப்போல வருணாச்சிரம தருமங்களை நிராகரித்திருப்பவர்கள், இவர்களுக்கு பத்தியே சிறந்தது. விஷ்ணுவைப் பூசிப்பவர்கள். இவர்கள் உத்தரத்திலே பெருக்கமுள்ளவர்கள்.
சைதிதம் - பிரம்பு.
சைதியமுகம் - கமண்டலம்.
சைத்தியம் - இறப்புக்கல்வெட்டு, குளிர்மை, பலிபீடம்.
சைத்தியர் - யாதவபேதம், விதரியன் புத்திரனாகிய ரோமபாதன் வமிசத்தனாகிய சேதிவழியிற் றோன்றியனவராதலால் இவர்களுக்கு இப்பெயர் வழங்கும்.
சைத்திரகம் - சித்திரைமாதம்.
சைத்திரம்-சித்திரவேலை, சித்திரைமாதம், வெற்றி.
சைத்திரரதம் - குபேரன் உத்தியானவனம்.
சைத்திராகன் - வீரன்.
சைத்திராவிலி - சித்திராபூரணை.
சைத்திரி-சித்திரைமாதம், யாகமிருபத்தொன்றினொன்று.
சைத்திரிகம் - சித்திரவேலை, சித்திரைமாதம்.
சைத்திரியஞானம் - சித்தஞானம், பேரறிவு-
சைத்திரியம் - தெளிவு.
சைத்துவம் - செய்தல்.
சைநிகன் - சேனைத்தலைவன்.
சைந்தவம் - இந்துப்பு, சிந்துநதி, குதிரை, தலை.
சைந்தவன் - ஜயத்திரதன், இவன் சிந்துதேசத்தரசன். துரியோதநன் தங்கையாகிய துர்ப்பலையை மணம்புரிந்தவன். இவன் தந்தை விருத்த க்ஷத்திரன். இவன் பாண்டவர் வனவாசகாலத்தில், ஒருநாள் தனியேயிருந்த துரோபதையைக் கவர்ந்துபோக, பாண்டவர்கள் இவனைத்தொடர்ந்துபோய்த் தடுத்து இவனை மாநபங்கஞ்செய்து துரோபதையை மீட்டுச்சென்றார்கள். இவன் பாரதயுத்தத்தில் அர்ஜுநனால் கொல்லப்பட்டான்.
சைந்தவி - சயிந்தவி.
சைந்யம் - சதுரங்கபலம்.
சைப்பியர் - உசீநரன் புத்திரனாகியசிபி வமிசத்தார்.
சைப்பியை-விதேகராஜபுத்திரி, இவள் மஹா பதிவிரதை, சியாமகன்பாரி, விதர்ப்பன்தாய்.
சைமானம் - வெகுமானம்.
சைமினி-உத்தரமீமாம்சநூலாசிரியன் ஒருமுனிவன், இயமலோகம்.
சைமிநகரோன் - நமன்.
சைமினிநகர் - இயமலோகம்.
சைம்மினி - இயமன்பட்டணம்.
சைகிரி - ஒருமலை.
சையம்-கல், குடகுமலை, செல்வம், மலை.
சையெனல் - இகழ்ச்சிக்குறிப்பு.
சையை - சைகை.
சையோகம் - கூட்டம், புணர்ச்சி.
சையோகித்தல் - கூடுதல்.
சையோகை-சத்தியினாற் சிவத்துக்குண்டாகுந் துன்பம், மனைவி.
சையோத்தி, சையோத்திகம், சையோத்தியம் - அயிக்கம்.
சைரந்திரி-அன்னியன்வீட்டிலிருப்பவள்.
சைரிகம்-உழவெருது, கலப்பு.
சைரிகம் - உழவன், வர்மாடு.
சைரிபம் - எருது, எருமை.
சைரியம் - பெருங்குறிஞ்சி.
சைரேயகம் - சயிரேகம்.
சைலகம் - மலையிருவேலி.
சைலசிருங்கம் - மலைமுடி.
சைலதரன் - கிருட்டிணன்.
சைலபதி - இமயமலை.
சைலபித்தி - கல்லுளி.
சைலம் - கல்லுள்ளது, சேலை, மலை.
சைலாந்திரம் - மலைக்குகை.
சைவகுரு - சைவாசாரியர்.
சைவசமயகுரவர் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார்,

மாணிக்கவாசக நாயனர் என்னும் இந்நால்வரும் இப்பெயரால் வழங்கப்படுவர்.
சைவசமயம் - சிவசமயம்.
சைவசாத்திரம் - சிவாகமம்.
சைவசித்தாந்தம் - ஒருநூல், சைவசமயத் தெளிவுண்மை.
சைவநூல் - சிவாகமநூல்.
சைவபூடணம் - ஒருநூல்.
சைவம்-சிவசமயம், அது உட்சமயமாறினென்று, பதினெண்புராணத்தொன்று, புலால்தின்னமலிருக்கை. ஒரு புராணம், இது வாயுவினுற் கூறப்பட்டது, சுவேதவராக கற்பசம்பந்தமாகிய சிவமான்மியங்களையெடுத்துரைப்பது. இது பன்னீராயிரம் கிரந்தமுடையது. சிவனை முதற்கடவுளாகக்கொண்ட சமயம். இச்சமயத்தோர் சைவர் எனப்படுவர்.
சைவர்-சிவசமயத்தார், விசேடதீட்சைபெற்றோர்.
சைவலம் - பாசி.
சைவாகமங்கள்-அவை காமியம் முதலியஇருபத்தெட்டு, இவைசிவபெருமானுடைய மேன்முகத்திற் பிறந்தன, இவை ஒவ்வொன்றும் கோடி கிரந்தமுடையன, சரியைகிரியையோக ஞானங்களை விரித்துரைப்பன.
சைவாசாரம் - சிவசமயவொழுங்கு.
சைவியம் - சைவத்திற்குரியது.
சைவை - அகிலன்பாரி.
சைனர் - சமணர், ஜீனர்.
சைனன் -அருகசமயத்தவன், அருகன், புத்தன்.
சைனபத்தியம் - சேனபதித்துவம்.
சைனியம் } சேனை.
சைன்னியம் }

---

# சொ

சொகுசா - உயர்ந்தசெம்பு, தம்பாக்கு.
சொகுசு-அழகு, சௌக்கியம், நாகரீகம்.
சொக்கட்டான் - ஒருசூது
சொக்கட்டான்கவறு - பாச்சிகை.
சொக்கட்டான்காய் - சொக்கட்டானடைவைக்குங்கருவி.
சொக்கட்டான்பந்தல் - சொக்கட்டான் மனைபோற் செய்தபந்தர்.
சொக்கட்டான்மனை - சொக்கட்டான் விளையாடுமறைப்பலகைமுதலியன.
சொக்கதேவன் - கூகை, கூகைக்கட்டு, பொன்னுக்கு வீங்கி.
சொக்கநாதர் - திருவாலவாயிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
சொக்கநாதன் - சிவன்.
சொக்கநாயகி - திருப்புன்கூரிலே கோயில்கொண்டிருக்கும்தேவியார்பெயர்.
சொக்கப்பனை - விளக்கீட்டிலெரிக்கும் ஒருசெய்கை விருட்சம்.
சொக்கப்பையன் - வேலைக்காரன்.
சொக்கம் - அழகு, கலப்பின்மை, களவு கெம்புக்கல், சிறப்பு, தூய்மை, நன்மை, மேன்மை, ஒருகூத்து.
சொக்கரை - குறை, சிறிய, அடைப்பு, மதில் முதலியவற்றின் துவாரம்.
சொக்கலி - மூங்கிலிச்செடி.
சொக்கலிங்கம் - சொக்கநாதன்.
சொக்கறை - சொக்கரை.
சொக்கன் - சிவன், சொக்கப்பையன்.
சொக்கா - ஒருவகையங்கி.
சொக்காரன் - ஆஸ்திக்குப்பாத்தியஸ்தரானஅண்ணன்தம்பிமுதலியவர்கள்.
சொக்காலி } சிறுபூளைப்பூடு.
சொக்காளி }
சொக்கிடுவித்தை , களவுபண்ண மயக்கும்வித்தை.
சொக்கு - அழகு, அறியாமை கண்தூக்கம், கதும்பு, சொக்கன், சொக்கென்னேவல், சோர்வு, பொன், மயக்கு.
சொக்குப்பொடி - அயர்ந்து நித்திரையாக்கும்படி மேலிற்போடும்பொடி.
சொக்குவித்தல் - மயக்குதல்.
சொக்குவித்தை - மயக்குவித்தை.
சொங்காரன் - சொக்காரன்.
சொச்சம் - குறை, பணவட்டி, மாசின்மை, மிச்சம்.
சொச்சோர் - சொற்சோர்.
சொடக்கு-கடுகு, கிலுகிலுப்பை, சோம்பற்றன்மை, நெட்டி.
சொடித்தல் - குறைத்தல்.
சொடுகு - சொறி, பொடுகு.

சொடுதலை - போகணி.
சொட்டா - ஒருவகைப்பட்டயம்.
சொட்டல் - அணுப்பல், இடித்தல், குட்டல்.
சொட்டு - குட்டு, குற்றம், சொட்டென்னேவல், திவலை, துண்டு.
சொட்டுதல் - அணுப்புதல், இடித்தல், குட்டுதல்.
சொட்டுத்தண்டம் - இடுவந்தி.
சொட்டுப்போடுதல் - திவலைவிழுத்தல்
சொட்டை - ஓராயுதம், கோணல், நொன்னை, பரிகாசம், பள்ளம்.
சொட்டைத்தலை - வெண்டலை.
சொண்டறை - சொண்டலி.
சொண்டி - உத்தியோகம், கடனுறுதி வேர்க்கொம்பு.
சொண்டு - அற்பன், ஆயுதநுனி, உதடு, உத்தியோகம், கனத்தவிளிம்பு, தலையழுக்கு, கிந்தை, பறவைமூக்கு.
சொண்டுக்கதை-கோட்சதை, முகமன் கதை.
சொண்டுத்தீன் - உறசியானசிறுதீன்.
சொண்டுபண்ணல்-இகழ்ச்சிபண்ணல்.
சொதை - ஐசுவரியம்.
சொஸ்தகம் - சுகம்.
சொஸ்தம், சொத்தம் } சுகம், சௌக்கியம்.
சொத்தலி - பனங்காயின் பொய்க்கொட்டை.
சொஸ்தானம் - உயிர்த்தெழுதல், சரியிடம்.
சொத்தி-நொண்டி, முடம்.
சொத்தியன் - முடவன்.
சொத்திரி, சொஸ்திரி } குலஸ்திரி, மனைவி.
சொத்து-உடைமை, குறை, பசை, பொருள்.
சொத்துவம் - உரிமை, சுயம்பு.
சொத்தை - கதுப்பு, சீர்க்கேடு, சூத்தை.
சொந்தம் - உரியது, சுயம்.
சொப்பனம் இரண்டாமவத்தை, கனவு
சொப்பனவத்தை - ஓரவத்தை.
சொம் - ஆஸ்தி, உடைமை, உரிமைப்பொருள்.
சொம்மாளி-உரிமைக்காரன்.
சொயம், சொயம்பு } சுயம்.
சொயாதீனம் - சுயாதீனம்.
சொரங்கம் - கச்சோலம். லவங்கம்.
சொரசத்தோர்சி - இலங்கப்பட்டை, இடி.
சொரடு - இரும்பு, கொடுக்கி, வலையற்ற
சொரணை - சொருணை.
சொரிகுரும்பை - ஒருநெல்.
சொரிதரல் - சுழலல், கொழிதல்.
சொரிதல் - உதிர்தல், பொழிதல், மிக வீழ்தல்.
சொரிவு - ஈவு, உதிர்வு, தாராளம், பொழிவு.
சொருகம்புல் - ஒருவகைப்புல்.
சொருகுதல் - செருகுதல்.
சொருணை - சுவரணை.
சொருணைகேடு - உணர்ச்சியின்மை.
சொரூபஞானம் - பரமஞானம்.
சொரூபம்- அழகு உடம்பு, சாயல், பரம், வடிவு, விக்கிரகம்.
சொரூபன் - கடவுள்.
சொரூபானந்தம் - ஒரு வேதாந்தநூல்.
சொரூபானந்தர் - ஒருயோகி.
சொரூபி - உரூபி, சுரூபி.
சொர்க்கம் - சுவர்க்கம்.
சொர்ணபுரீசுவரர் - திருச்செம்பொன் பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
சொர்னபுரீசர் - திருப்பத்தூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
சொர்ணம் - கோடாசுழி, பொன்.
சொர்ப்பனம் - கனவு.
சொர்னமாக்கி - பவளபாஷாணம்.
சொர்னம் - சொர்ணம்.
சொர்னக்கல் - இராசாவர்த்தக்கல்.
சொர்னசீரம் - கரும்பு.
சொர்ன்னம் - சொர்னம்.
சொலித்தல், சொலித்திடல் } இடந்திடல், சுவாலித்தல், பிரகாசித்தல்.
சொலிப்பித்தல்-சொலிக்கச் செய்தல்.
சொலிப்பு - சுவாலை, பிரகாசம்.
சொலியன் - முடக்கொத்தான்.
சொலுசொலுத்தல் - பொலுபொலுத்தல்.
சொலுசொலுப்பு-பொலுபொலுப்பு
சொலுசொலெனல்-பொலுபொலெனல்
சொல்-எழுத்திேைசச்சொல், கட்டளை, கள், செந்நெல், செந்நெற்கதிர், சொல்லென்னேவல், நெல், புகழ், பேச்சு, மொழி, வாக்கியம்.
சொல்லணி-சொற்றொடை வகைச்சிறப்பு.
சொல்லலங்காரம் - சொல்லணி.
சொல்லல் - உரைத்தல், பாடல்.
சொல்லறிபுள் - கிளி.

சொல்லாகுபெயர் - ஓராகுபெயர்,அது சொல்லின் பெயரதன் பொருட்கு வழங்குவது,(உ-ம்) உரைசெய்தான்.
சொல்லாதசொல் - அசப்பியம், இரகசியம், வசை.
சொல்லானந்தம் - சொற்குற்றம்.
சொல்லிக்கொள்ளுதல்-எடுத்துப்பேசுதல், பிணைநீற்றல், பொறுப்புச்சொல்லுதல்.
சொல்லிலக்கணம் - சொல்லினியல்பு.
சொல்லின்பம் - சொற்சுவை.
சொல்லின்முடிவினப் பொருண்முடித்தல்-ஒருயுத்தி.
சொல்லுதல் - புலமைபாடுதல், மொழிதல்.
சொல்லுதவி - வாயுதவி.
சொல்லுறை - சொற்பயன்.
சொல்லுவான்குறிப்பு - சொல்வோன் கருத்து.
சொல்லுறுதி - மெய்வார்த்தை.
சொல்லெச்சம்-சொல்லெஞ்சிகிற்பது.
சொல்லெஞ்சணி - ஓரணி, அது,சொல்லெச்சம்.
சொல்லேருழவர் - புலவர், மந்திரிகள்.
சொல்லொடுபொருள் - சொற்றேறும் பண்ணும்பயன்.
சொல்லொப்பணி-ஓரணி, அது சொல்லொத்துவருவது.
சொல்வகை-நூலுரை பதினுன்கினென்று.
சொல்வரை - சொற்பகுதி.
சொல்வளம்-சொற்சாதுரியம், சொன்னயம்.
சொல்வன்மை - சொல்லுறுதி, சொற்சாதுரியம், வாக்குவல்லபம்.
சொல்விலக்கு-ஓலங்காரம், அது ஆராயாது சொன்னதை விலக்கல்.
சொல்விளம்பி - கள்.
சொளுசொளுத்தல்-நீர்ப்பிடிப்பாயிளகிக் காட்டல்.
சொள்ளல் - குறைவு, வித்தை.
சொள்ளை - சொட்டு, பழுதுபட்டது,புழுவரித்தது.
சொறி - காஞ்சொறி, குட்டம், சொறியென்னேவல், தினவு.
சொறிகட்டை - ஆவுரிஞ்சுதறி.
சொறிக்கல் - சுக்கான்கல்,தவளைக்கல், மஞ்சட்கல்.
சொறிக்கிட்டம் - கீச்சுக்கிட்டம்.
சொறிதல் - அரித்தல், பிருண்டல்.
சொறிமண்டலி - ஒருபாம்பு.
சொறியன் - தவளை.
சொறிவு - தினவு.
சொற்கப்பனை - சொக்கப்பனை.
சொற்கம் - சுவர்க்கம்,மாணிக்கம்,முலை.
சொற்கருவி - உரைக்காரகவேது,அது உதடுநா, பல்.
சொற்கலகம் - வாச்குவாதம், விபரீதம்.
சொற்காத்தல் - சொற்றவருமை.
சொற்குறி - சூதபாஷாணம்.
சொற்குற்றம் - சொற்பிழை.
சொற்சுந்தி - சொற்புணர்ச்சி.
சொற்சாதுரியம்-வாக்கு விற்பன்னம்.
சொற்சித்திரம் - கருவானபேச்சு.
சொற்சிமிட்டு - சொற்சாதுரியம்.
சொற்சீரடி - தளைகள் ஒன்றும் பலவுமடுத்து வருவது.
சொற்சுவை - சொல்லின்பம்.
சொற்சோர் - சொல்லிழுக்கு.
சொற்பம் - அற்பம், சிறியது.
சொற்பயன் - சொற்பொருள்.
சொற்பனம் - சொப்பனம்.
சொற்பின்வருநிலை - மொழிந்தசொல்லே மொழியினும் பொருள் வேறுபட்டு நிற்பது.
சொற்பொருட் பின்வருநிலை-சொல்லும்பொருளுமொன்றே மறித்து வருவது,(உ-ம்) வைகலும் வைகல்வரக்கண்டு.
சொற்பொருள் - சத்தார்த்தம்.
சொற்பொருள்விரித்தல்-ஒருயுத்தி, அது சொற்பொருள் விளங்க உருபுமுதலானவற்றை விரித்துச்சொல்லல்.
சொற்றல் - சொல்லல்.
சொற்றுணை - சொல்லுதவி.
சொற்றொடைநிலைச்செய்யுள்-ஒருபிரபந்தம், அது சொல்லாற்றொடர்ந்து வருவது.
சொனகு - பெரும்புல்.
சொனுகம் - உத்தாமணி.
சொன்மாலை - ஏற்றமொழி.
சொன்மிக்கணி -ஓலங்காரம்,அது வந்தசொல்லே மீண்டு மீண்டும் வரத்தொடுத்தல்.
சொன்றி - சுக்கு, சோறு.
சொன்றிக்குழிசி - சோற்றுப்பானை.
சொன்னகாரர் - தட்டார்.
சொன்னசீரம் - கரும்பு.

சொன்னதானம் - இரணியதானம்.
சொன்னபுட்பம் - சுவர்ணபுட்பம்.
சொன்னபேதி - ஒருமருந்து.
சொன்னமயம் - பொன்னிறம்.
சொன்னமாக்கி - பவளபாஷாணம்.
சொன்னம் - பொன்.
சொன்னல் - இரும்பு, சோளம்.

## சோ



சோ - அரண், உமை, ஓரெழுத்து, வியப்புச்சொல், வாணாசுரன் நகர்.
சோகநீக்கி - மாதவி.
சோகம் - உண்டை, ஒட்டகம், சோம்பல், சோர்வு, துன்பம், தொடை, பஞ்சபாணத் தவத்தையினொன்று, அது வெதுப்புந்துய்ப்பன தெவிட்டலுமா யிருத்தல்.
சோகரிகன் - வேட்டைக்காரன்.
சோகரியம் } சௌகரியம்.
சோகரீயம் }
சோகவிருத்தி - சத்தாவத்தையிலொன்று, அது சீவாவத்தையிற் சனனமரண துக்கந் தனக்கில்லை யென்று தள்ளி நிற்றல்.
சோகாக்கினி - மிகுதுயர்.
சோகாத்தல் - துக்கப்படுதல், வதங்குதல்.
சோகாபனோதன் - ஞானசாரியன்.
சோகாப்பு - துயரம்.
சோகாரி - கடம்பு.
சோகி - பலகறை, பிடாரன், விடவைத்தியன்.
சோகித்தல் - அலசப்படல், துக்கப்படுதல்.
சோகு - பிசாசம்.
சோகை - அப்பிராணி, ஒருநோய்.
சோகையன் - காமாலையன்.
சோங்கம் - அகில்மரம், கிச்சிலிக்கிழங்கு.
சோங்கு - ஒரு மரக்கலம், குருகு, துப்பாக்கி முதலியவற்றினடி, மலையின் கண்சோலை, மறத்தல்.
சோங்குவெட்டு - குதிவெட்டு.
சோசகம் - மரப்பட்டை.
சோசக்காய் - தேங்காய்.
சோசனம் - உள்ளி.

சோசாக்கினி - மிகுதுயர்.
சோசியம் - சோதிடசாத்திரம்.
சோசியர் - சோதிடகாரர்.
சோச்சி - சோறு.
சோச்சியகன் - கீழ்மகன்.
சோடச்சைவம் - சைவபேதம் பதினாறு, பதினாறு பாதச்சைவம்.
சோடசமுத்திரை - சைவமுத்திரைபதினாறு.
சோடசம் - பதினாறு, மரப்பட்டை, நார்.
சோடசவுபசாரம் - பதினாறு வகை வழிபாடு, அது அடைகாய்தரல், அமுதமேந்தல், ஆசமனநீர்தரல், ஆடைசாத்தல், கருப்பூரதீபமேந்தல், கால்கழுநீர்தரல், கைகழுநீர்தரல், தவிசளித்தல், தேய்வைபூசல், நறும்புகைகாட்டல், நீராட்டல், மஞ்சளரிசி தூவல்; மந்திரமலரான்ருச்சித்தல், மலர்சாத்தல், முப்புரிநூறால், விளக்கிடல்.
சோடசாவதானம் - பதினாறுவித அவதானம்.
சோடசாவதானி - பதினாறுவித அவதானஞ் செய்வோன்.
சோடசி - யாகமிருபத்தொன்றி னொன்று.
சோடசோபசாரம் - சோடசவுபசாரம்.
சோடணம் - உமிந்துகுடித்தல், உலர்த்தல்.
சோடம் } சந்தோஷம், பொறுமை,
சோஷம் } மார்ச்சட்டை.
சோடன் - கீழ்மகன், சோம்பன், மூடன்.
சோடி - சீக்கிராந்துள்.
சோடித்தல் - அலங்கரித்தல்.
சோஷித்தல் - களைத்தல், வற்றுதல்.
சோடிப்பு } அலங்காரத்திற்கு வேண்டுவன.
சோடினை }
சோடு - இரண்டு, கவசம், சரியொப்பு.
சோடுகட்டுதல் - சரிவர விணைத்தல், சூதாட்டத்தொன்று.
சோடுதோல் - பாதகுறடு.
சோடை - சடைந்தது, சடைவு.
சோடைஷ - சோர்வு, திரீவாட்சி.
சோட்டா - வளைதடி.
சோட்டை - ஆசை, பேராசை.
சோணகிரி - இரத்தினமலை, அருணசலம்.
சோணகிரிவள்ளல் - சிவன்.
சோணங்கி - ஒருநாய்.
சோணசைலம் - சோணகிரி.

சோணநதி - கங்கையின் உரு உபநதி.
சோணம் - இரத்தம், ஒருயாறு, கடல், சிவப்பு, செங்கரும்பு, செந்தூரம்,தீ.
சோணகம் - பெருவாகை.
சோணசலம் - இரத்திஞசலம்,அருணசலம்.
சோணடு - சோழநாடு.
சோணட்டுப் பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன்—அந்தணர்க்குரிய அறுதொழிலும்சிரத்தையோடு செய்கிற ஒரு வேதியர். கொடையிற் சிறந்தவர். ஆவூர்மூலங்கிழாரால் பாடப்பட்டவர்.
சோணலு - விருத்தம்.
சோணிதபுரம்-அசுரரிருக்கும் ஒரு பட்டினம்.
சோணிதம் - இரத்தம், சிவப்பு, சுரோணிதம், மஞ்சள்.
சோணேசன் - சிவன்.
சோணை-அருகு, அருணைமாநகர், காதினருகு, சோணசலம், சோனைநதி, புகையிலை முதலியவற்றினடிப்புறம். மைநாகமலையி லுற்பத்தியாகிக் கங்கையிற் கலக்கும் ஒருநதி, சித்தா சிரமத்திலிருந்து மிதிலைக்குப் போகும் வழியில் இப்பெயர்கொண்ட நதியுமொன்றுண்டு, அது மகததேசத்திற் பாய்தலால் மாகதியெனவும் படும். இதிலிருந்தே சோணபத்திரவிநாயகமூர்த்தங்கள் எடுப்பார்கள்.
சோதகம் - கழிக்குந்தொகை, சுத்திபண்ணல்.
சோதகர்-எழ்தலைமுறையளவு மிறந்தபிதிரர், எழ்தலைமுறையிற் புத்திரர்.
சோதகும்பம் - சுத்தோதககும்பம்.
சோதம் - ஒழுகல், சுத்தமானநீர்.
சோதரம் - சகோதரம்.
சோதரன் - சகோதரன்.
சோதரி - சகோதரி.
சோதனம் - சுத்தஞ்செய்தல், சோதித்தல், துரிசு, புடமிடுகை.
சோதனை - அளவு, ஆராய்வு, கட்டளை, சோதிப்பு, பிரமாணம்,புடமிடுகை.
சோதி-அருகன், இடிவு,உணர்வு, ஒளி, கடவுள், கருப்பூரம், சாதிலிங்கம், சிவன், சுவாதிநாள், சூரியன்,சோதியென்னேவல்,தீ,பிரகாசம்,பூநாகம், வான்மீன், விட்டுணு.
சோதிக்குட்சோதி - கடவுள்.
சோதிக்குண்மணி - முத்து.
சோதிசக்கரம் - துருவசக்கிரம்.
சோதிசொருபிணி - அறுபத்தெட்டாவது மேளகர்த்தா.
சோதிடகாரர் - சோசியர்.
சோதிடசாத்திரம் - கலைஞானமறுபத்துநான்கில் ஒன்று.
சோதிடநூலோர் - எண்கலைஞர்.
சோதிடநூல் - சோதிடசாத்திரம்.
சோதிடம் - சோதிடசாத்திரம், நன்னிமித்தம், சாத்திரங்களு ளொன்று.
சோதிடர் - சோசியர்.
சோதிடவாதம் - சோதிடவிசுவாசமார்க்கம்.
சோதிட்வாதி-சோதிடமார்க்கி.
சோதிதம்-அறிவிக்கப்பட்டது, நியமிக்கப்பட்டது.
சோதித்தல் - ஆராய்தல், இலங்கல்.
சோதிநாயகன் - கடவுள்.
சோதிநீச்சடம் - முத்துச்சிப்பி.
சோதிப்பிழம்பு-ஒளிப்பிழம்பு, கடவுள்.
சோதிப்பு - ஆராய்வு.
சோதிமண்டலம் - வானசோதிகளின்மண்டலம்.
சோதிமயம்-ஒளியுருவம், மிக்கவொளி, வாலுளுவை.
சோதிமயவேதி - பூநாகம்.
சோதிமா - சோதிமரம்.
சோதியம் - வாலுளுவை.
சோதிராத்திரி - நடுராத்திரி.
சோதிரூபம் - ஒளிவடிவு.
சோதிவிருட்சம் - இரவெரி.
சோதிவிழல் - இடிதல்.
சோதினி - செத்தை, துடைப்பம்.
சோத்தம் - ஸ்தோத்திரம், இழிந்தார் செய்யும் அஞ்சலி.
சோத்தி-அத்தசாமம், சுழுத்தி, நித்திரை.
சோத்தியம் - அதிசயம், கழிக்கப்படுந்தொகை, சுத்தம்,சோதிக்கப்படுவது, தவறுவினை.
சோத்திரம் - காது, கேள்வி.
சோத்திரியம் - தக்கோர்களித்தநிலம்.
சோத்திரியவிந்திரியக்காட்சி-சத்ததன்மாத்திரை.
சோநிசி - குகை.
சோந்தை - உடந்தை, தடை.
சோபகிருது - முப்பத்தேழாவதாண்டு.
சோபதானம் - சோபாதானம்,

சோபபிரகாசன்-எல்லாவற்றையு மறிவாலறிபவன்.
சோபன் - அழகு, ஆயாசம், இரக்கம், ஒளி, கள், சோம்பல், சோர்வு, தாமதருணத்தொன்று, பத்துக்கோடி, கோடாகோடி, பிரபை.
சோபலம் - சோம்பு.
சோபலாங்கி - சோம்பன்.
சோபனம்-அழகு, சந்தோஷம், சுபம், தாமரை, நித்தியயோகத் தொன்று அது நன்மை, முகூர்த்தம், வாழ்த்து.
சோபாதானம்-முதற்காரணமுள்ளது.
சோபாலிகை-அடம்பு, அடுப்பு, சுவாலையுள்ளது, விரிதூறு.
சோபானம்-கற்படி, தாழ்வாரம், நன்னிமித்தம், வசதி.
சோபிதம் - சௌந்தரியம், பிரபை.
சோபித்தல் - ஒளிசெய்தல், சோர்தல்.
சோபை - அழகு, ஒளி.
சோப்பம் - அயர்வு, சோர்வு.
சோப்பளாங்கி - சோம்பன்.
சோப்பறுதி - மிகுவாட்டம்.
சோப்பி - ச்சோப்பி.
சோப்பு-அடி, சோப்பென்னேவல்.
சோப்புதல் - அடித்தல், வாட்டுதல்.
சோமகர்ப்பன் - விட்டுணு.
சோமகன்-சகதேவன் புத்திரன், ஸுஜந்மகிருது தந்தை, விருஷதன் தந்தை தந்தை, ஜயிந்தன் தந்தையாகிய வோரிராஜரிஷி, பிரமன் தாங்கும்போது வேதங்களைத் திருடிப்போய்க் கடலிலொளித்திருந்த அசுரன், விஷ்ணு மச்சாவதாரஞ்செய்து அவனிடத்து வேதங்களைக் கைக்கொண்டுபோய் பிரமனுக் களித்தனர்.
சோமகுண்டம் - காவிரிநதி சங்கமுகத்துக்கு அருகேயுள்ள ஒரு தடாகம்.
சோமக்கொடி - ஒருவகையாகத்திற்கட்டுங் கொடி.
சோமசமஸ்தங்கள் - சுரௌதாக்கியிலே செய்யப்படுகிற யாகபேதங்கள், அவை அக்கிஷ்டோமம், அத்யக்கிஷ்டோமம், உக்தியம், ஷோடசி, அதிராத்ரம், அப்தோர்யாமம், வாஜபேயம் என எழாம்.
சோமசம் - பால்.
சோமசித்தாந்தி-சோமசித்தாந்த மதஸ்தன்.
சோமசிந்து - விட்டுணு.
சோமசிரவசு - சுருதசிரவர் புத்திரன், ஜநமேஜயன் புரோஹிதன்.
சோமசிரவம்-பாஞ்சால தேசத்துக்குச் சமீபத்திலுள்ள புண்ணிய தீர்த்தம். இந்தத் தீர்த்தக்கரையிலேயே அங்காரவர்ணன் அர்ச்சுநனோடு யுத்தஞ்செய்து சாபவுடல் விட்டுப் பூர்வரூபமாகிய சித்திராதன் என்னும் பெயரோடு தன்னுலகஞ் சேர்ந்தனன்.
சோமசுதன் - புதன்.
சோமசுதை - நர்மதாநதி.
சோமசுந்தரபாண்டியன் - இவன் மலயத்துவச பாண்டியன் மருகன், தடாதகைப் பிராட்டிக்கு மணவாளன்.
சோமசுந்திரபாதசேகரன்-இவன்வங்கியபாத பாண்டியனுக்குப் பின்னே அரசுசெய்த பாண்டியன், சோமசுந்தரக் கடவுளருளால் சோழனை மடுவில் வீழ்த்தினவன் இவனே.
சோமசுந்தரன்-உமையோடு கூடியவழகன், ஒரு பாண்டியன், சிவன்.
சோமசூடாமணி - வமிசபூஷண பாண்டியனுக்குப் பின் அரசுசெய்த பாண்டியன்.
சோமசூரியவமிசம் - சந்திரகுல முஞ் சூரியகுலமுங் கலந்த வம்சம்.
சோமசேகரன்-ஒருபாண்டியன், சிவன்
சோமதத்தன்-சந்தனு சகோதரனாகிய பாஹ்லிகன் புத்திரன், இவன் பாரதப்போரிலிறந்தான், பூரி, பூரிசிரவன், சலன் என்னு மூவரும் இவன் புதல்வர்.
சோமதாரி-இந்துப்பு, சிவன்.
சோமதாரை - ஆகாயம்.
சோமதீர்த்தம் - பிரபாசதீர்த்தம், இது சோமநந்தபுரத்துக் கருகிலுள்ளது, சந்திரன் தக்கனது சாபத்தால் உண்டான கொடிய ரோகத்தை இந்தத் தீர்த்தஸ்நானத்தினால் ஒழித்துக் கொண்டதனால் இதற்கு இப்பெயர் வழங்கும்.
சோமநாதம் - கூர்ச்சரதேசத்திலுள்ளவொரு சிவஸ்த்தலமும் நகரமுமாகும், சந்திரன் தவஞ்செய்து க்ஷயரோகம் நீங்கப்பெற்ற தலம்.
சோமநாதன் - சிவன்.
சோமநாதி - ஒரு பெருங்காயம்.

சோமபந்து - ஆம்பல், சூரியன், புதன்.
சோமபானம் – மதுபானம்.
சோமமணல் - வெள்ளிமணல்.
சோமமமண்டலம் - சந்திரமண்டலம்.
சோமம் - ஆகாயம், ஒருபூடு, ஒருயாகம், கஞ்சி, கள்.
சோமயாகம் – பூரணுதினத்துச் செய்யும் ஒரு வேள்வி.
சோமயாகன் - சோமயாககர்த்தா.
சோமயோகி – ஒருவகைச்சந்தனம்.
சோமராகம்-இலைப்பண்ணின் திறமைந் தனு ளொன்று.
சோமலிங்கன் - சோமாரணியேசுரன்.
சோமவல்லரி – பொன்னுங்காணி.
சோமவல்லி – சீந்தில்.
சோமவாரம் - திங்கட்கிழமை.
சோமவுலுக்கம் - தேக்கு, வணங்கல்.
சோமனுப்பு - இந்துப்பு, பச்சைக்கருப்பூரம்.

சோமன் - அத்திரிக்கு அநசூயையிடத்துப்பிறந்த சந்திரன், இவனே இல வுலகிற் பிரகாசிப்பவன், கற்பபேதத்தால் இவன் அத்திரி புத்திரனென்றும் பாடற்கடலிற் பிறந்தவனென்றும் சிலபுராணங்கள் கூறும் சிவன், வசுக்களுளொருவன்,இவன் பிரஜாபதி புத்திரன் இவன் மனைவி மனோஹறை, புரோஜபன், வரியன் பிராணன் காணன், ரமனன் என ஐந்து புதல்வரையும் பிரதையென்னும் ஒரு புத்திரியையும் பெற்றாள் இந்தப் பிரதை பதின்மர் கந்தருவருக்குப் பொதுமனைவி, யமன், குபேரன்.
சோமன் - அட்டவசுக்களில் ஒருவன், அமுதம், ஒருவள்ளல், கருப்பூரம், காற்று, சந்திரன், சவக்காரம், சிவன், சீலை, தூசு, நமன், நீல பாஷாணம், பன்னிரண்டு முழமுள்ளபுடவை, புதன், மலை.

சோமன்சோடு-அங்கவஸ்திரமுமுடையும்.
சோமாக்கியம் - செவ்வல்லி.
சோமாசிமாறநாயனர் - அந்தணர்குலத்திலே பிறந்து அடியார்களுக்குத் திருத்தொண்டு செய்தலே பெரிய சிவபுண்ணியமெனக் கொண்டு சுந்தாமூர்த்திநாயனுரை யடைந்து அவரேவலின்வழியே நின்று ஒழுக்கந்தவருது சிவபத்தி சாதித்தவர்.
சோமாரணியம் – ஒருவனம்.
சோமாறல், சோமாறுதல் - இரவல் வாங்குதல், ஒருத்தியைப்பலர் புணரல், சோர்மாறுதல், திருடல், பண்டமாற்றல்.
சோமாற்று - சோர்மாற்று.
சோமாஸ்கந்தர்-மஹேஸ்வரரூபம் இருபத்தைந்தனு ளொன்று, சிவனும் உமாதேவியாரும் முருகக்கடவுளைத் தழுவிய அவசரம்.
சோமி - ஆற்றூரிலேபிறந்துதமிழ்க்கல்வியிலே மிகுபுலமை யுடையளாய்த் தன்னை நோக்கிவரும் புலவர்களுக்குப் பொன்மாரி பொழிந்து, காளமேகப் புலவராலும் புகழ்ந்து பாடப்பட்ட ஒரு தாசி.
சோமிகாயகம் - சோமயாகம்.
சோமுகன் - ஓரசுரன்.
சோமேகரன் - சிவன்.
சோமோத்பவை - நர்மதாநதி.
சோம்பலம் - சேரான் கொட்டை.
சோம்பல்-அழுங்கல், சோம்புதல், மயக்கம், வசூரி.
சோம்பரை, சோம்பறை - சோம்பு.
சோம்பற்றழும்பு - அம்மைத்தழும்பு.
சோம்பன் - சோம்பறைகாரன்.
சோம்பாகி, சோம்பாயி - சமையற்காரன்.
சோம்பி - சோம்பன்.
சோம்பு - அழுங்கல், சோம்பென்னேவல், தாமதகுணத்தொன்று, பெருஞ்சீரகம், மடி அது மாயயாக்கை பதினெண்குற்றத் தொன்று, மந்தம்.
சோம்புதல் - உறங்கல், தாமதித்தல், மடியாதல், வாட்டங்கொள்ளுதல்.
சோம்பேறி - சுவர்ணபேதி, சோம்பி.
சோய்வு - சோர்வு.
சோரகவி - ஒருவர்பாவையெடுத்துச் சிலமாற்றுதல் செய்து வேறொருவருக்குரைப்பவன்.
சோரகன் - கள்வன், திருடன்.
சோரக்கதண்டு - கருவண்டு.
சோரசத்துரு - சவ்வீரம்.
சோரணம் - விடுதல்.

சோரத்திரவியம்-கொள்ளையிட்ட பொருள்.
சோரத்திரீ } விபசாரி,வேசி.
சோரஸ்திரீ
சோரநாசம் } கள்வர் சேதம்.
சோரபஞ்சம்
சோரபயம் - கள்வர்பயம்.
சோரபாஷாணம் - ஒருபாஷாணம்.
சோரபுத்திரன் - விபசாரபுத்திரன்.
சோரபுருஷன் - கள்ளப்புருஷன்.
சோரபேதி - அஞ்சனபாஷாணம்.
சோரப்போடுதல்-ஆறப்போதல், பின்போடுதல்.
சோரமார்க்கம் - தூர்த்தத்தனம்.
சோரமிடுதல் - களவெடுத்தல்.
சோரம் - களவு, வஞ்சனை, விபசாரம், வைப்புப்பாஷாணமுப்பத்திரண்டில் ஒன்று.
சோரம்போதல் - களவுபோதல், கற்பழிதல்;தவறுதல்.
சோரர் - திருடர்.
சோரல் - சோருதல், தளர்தல்.
சோரவிடுதல் - இளகவிடுதல், காரியத்தைப் பின்போடுதல், தவறவிடுதல்.
சோரன்-ஆட்டுக்குட்டி ஒருவருடதேவதை, திருடன், ஒருவருடமொழிப் புலவன், இவனை பிலஹணன் என்றுங் கூறுவர்.
சோராவாரி - கொள்ளை.
சோரி - இரத்தம், மழை, சிறுசெருப்படை.
சோரிகை - களவு.
சோர் - சோரென்னேவல், சோர்வு.
சோர்ச்சி - அயர்ச்சி, சோகம், தளர்வு.
சோர்தல் - தவறுதல், தளர்தல், பொசிதல், வதங்குதல், வாடல், விழுதல்
சோர்த்தல் - கவர்தல்.
சோர்பு - சோர்வு.
சோர்மாறுதல் - நெகிழவிடுதல்.
சோர்மாற்று - நெகிழ்ச்சி.
சோர்வாதம் - அயர்ச்சி நோய்.
சோர்வு-அயர்ச்சி, களவு, தவறு,தளர்வு, நிறையழிவு,நெகிழ்வு,மறதி,மெலிவு, வதக்கம்.
சோலி காரியம், தொந்தரை,தோணியிலொதுங்கிடம், மார்க்கச்சு.
சோலை - தோப்பு, மரச்செறிவு.
சோலைமலை - படை வீட்டில் ஒன்று, சுப்பிரமணியஸ்தலம், மதுரைக்கருகிலோர் விஷ்ணுதலம்.

சோவெனல் - ஒலிக்குறிப்பு.
சோவை - நீர்க்கோவை.
சோழக்கச்சான்-தென்மேற்றிசை,தென்மேற்றிசைக் காற்று.
சோழகம் - தெற்கு, தென்காற்று.
சோழங்கபாஷாணம் - ஒருபாஷாணம்.
சோழங்கன் - சோழன்.
சோழதேசம் சோழகுலத்தரசர்க்குரிய தேசம், இது காவிரியாறுபாயு நாடாதலால் இதனை நீர்மலிவான்என்றும் புனனாடு என்றும் கூறுவர். இதில் தஞ்சை திருக்குடந்தை முதலிய மஹாநகரங்களும், அளவிறந்த, சிவாலய விஷ்ணுவாலயங்களு முண்டு. செல்வம் கல்வி அறிவு ஒழுக்கங்களாலுஞ் சிறந்தது.
சோழமண்டலம் } சோழதேயம், அது தேயமைப்பத்தாறில் ஒன்று.
சோழம்
சோழவமிசாந்தக பாண்டியன்-ரிபுமர்த்தந பாண்டியனுக்குப் பின் அரசு செய்த பாண்டியன்.
சோழன்-தமிழ்நாட்டு மூவேந்தரில்ஒருவன், திஷ்யந்தனுக்குப் பவுத்திரனாகிய ஆசிரிதன் புத்திரன், இவனே சோரதேசஸ்தாபகன்.
சோழன்-இராஜசூயம்வேட்ட பெருநற்கிள்ளி-சேரமான் மாந்தரஞ் சேரலிரும் பொறையனைப் போரில் வென்றவன்.
சோழன்நலங்கிள்ளிசேட் சென்னி - இவன் இலந்திகைப் பள்ளியிலே பிறந்தசோழன், எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனால் பாடப்பட்டவன்.
சோழன் - உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னி இவன் வீரத்தினலும்கொடையாலுஞ் சிறந்தவன், கரிகாற்சோழன் தந்தை, பரணராலும்பெருகுன்றூர் கிழாராலும் பாடப்பட்டவன்.
சோழன்-கரிகாற்பெருவளத்தோன்.
சோழன் - கரிகாலன், இவன் உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னி புதல்வன்.

சோழன் கிள்ளிவளவன் - கருவூரையழித்தவன், கோவூர் கிழார் இடைக்காடனார் முதலிய பல புலவராலும் பாடப்பட்டவன். உறையூரி லிருந்து அரசு புரிந்தவன்.

சோழன்பெருந்திருமாவளவன்-இவன் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனாராலும் மருத்துவன் தாமோதரனாராலும் பாடப்பட்டவன்.

சோழன்செங்கணன்-ஒருசோழன், இவன் கல்வி வீரம் கொடை முதலியவற்றாற் சிறந்தவன்.

சோழன்நல்லூருத்திரன் - இவன் புலமை மிக்க ஒரு சோழன்.

சோழன்மாவளத்தான் - இவன் சோழன் நலங்கிள்ளி தம்பி, தாமப்பல் கண்ணனாரால் பாடப்பட்டவன்.

சோமன்நலங்கிள்ளி - சோழன் மாவளத்தான் தமையன், பாடும் புலமையுடையவன்; உறையூர்முதுகண்ணன் சாந்தனார் கோவூர்கிழார் ஆத்தூர் கிழார் என்னு மூவராலும் பாடப்பட்டவன்.

சோழன்நெய்தலங் கானவிளஞ் சேட்சென்னி - இவன் ஊன்பொதிபசுங்குடையாரால்பாடப்பட்டவன். இளவரசாகி நெய்தலங்கானலென்னும் ஊரிலிருந்து உரியகாலத்தில் அரசு கொண்டவனாதலால் இப்பெயர்பெற்றான்.

சோழன்போர்வைக்கோப்பெருநற் கிள்ளி - தித்தன் என்னுஞ் சோழன் மகன், தந்தையைப் பகைத்து நாடிழந்து நல்குரவால் புல்லரிசி யுண்டு சிலகால மிருந்து பின்பு நாடு கைக்கொண் டரசுபுரிந்தவன்.

சோழன் முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளி - சேரமான் அந்துவஞ்சேரவிரும்பொறைக்குப் பகைவன், உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரால் பாடப்பட்டவன்.

சோழன்வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி - சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனால் கொல்லப்பட்டவன், பரணராலும் கழாத்தலையராலும் பாமாலை சூட்டப்பட்டவன்.

சோழநாட்டுப்பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தன் - அரசர் பெண்கொள்ளுங் குடியிற் பிறந்தவன், மதுரை நக்கீரனால் பாடப்பட்டவன்.

சோழியக்கடகம் } சாட்டுக்கூடை மண்
சோழியகூடை } ணள்ளுங் கடகம்.

சோழியப்பை - இரப்போர்பை.

சோழியர் - ஒரு வேளாளசாதியார்.

சோழியவணம் - இருபதினாயிரம்வெற்றிலைபாக்கு கொண்டது.

சோழியவேளாளர் - சோழியர்.

சோழியவேனாதிதிருக்குட்டுவன் - பெருங் கொடையாளன், எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனால் பாடப்பட்டவன்.

சோழியன் - ஒருவேளாளன், மண்வெட்டி.

சோழியாவணம்-சோழியவணம் [

சோளகம் - செளளம்.

சோளம் - ஒருபயிர், சங்கஞ்செடி.

சோளனை - ஒருபை.

சோளன் - சோளம்.

சோளி } ஒரு கூடை, பிச்சைக்கா
சோளிகை } ரர்பை.

சோறும் - அன்னம்,கற்றாழஞ்சோற்றி முதலியன, பரணிநாள், பூஞ்சுண்ணம்.

சோறுகொல்லி-அன்னபேதி, பெருந்தீனிக்காரன்.

சோறூட்டு - அன்னப்பிராசனம்.

சோற்றாலாத்தி - ஓராலாத்தி.

சோற்றி-மரத்தினுட்சோறு, வயிரமற்றது.

சோற்றிலை - கற்றாழை. [

சோற்றுக்கற்றலை - ஒருமீன்.

சோற்றுப்பதம் -காய்கள் பழுக்கத்தக்க பருவம்.

சோற்றுப்பாளையம் - ஸ்திரீசனம்.

சோற்றுப்பை - இரைப்பை.

சோனகம்-தேயமைம்பத்தாறி னொன்று, பதினெண்பாடையி னொன்று. ஆரிய தேசத்துக்கு மேற்கிலுள்ள ஒருதேசம். [

சோனகர் - துலுக்கர்.

சோனைமாரி - சோனைவாரி. [

சோனைமேகம் - பெருமழைபொழியு முகில்.

சோனைவாரி - பெருமழை, விடாமழை.

சோனை-சொரிதல், திருவோணநாள், விடாமழை. வச்சிரநாட்டைச்சார்ந்த வோராறு.

சோனைப்புல் - அக்கதேவி.

சோனைமழை - பெருமழை.
சோன்மதன் - பித்தன்.

---

## சௌ



சௌகசூத்திரன்-பள்ளியெழுச்சி பாடுவோன்.
சௌகதன் - சூனியவாதி, புத்தன்.
சௌகதிகம் - சந்தேகம்.
சௌகந்தம் - சுகந்தம்.
சௌகந்தி - கந்தபாஷாணம்.
சௌகந்திகம் - சௌகந்திக புஷ்பங்கள் நிறைந்துள்ள ஒரு தடாகம் இது குபேரன் நந்தநவநத்திலுள்ளது. இந்தச் சௌகந்திக புட்பமொன்றை வாயு பறித்துவீச அதுதிரோபதைக்கு முன்னே வந்து விழுந்தது, அதைக்கண்ட திரோபதை, அந்தப் புட்பமொன்று கொண்டுவந்து தரவேண்டுமென்று வீமனை வேண்ட அவன் அவ்வாறே கொண்டுவந்து கொடுத்தான்.
சௌகந்திகம் - கருங்குவளை, செங்குவளை, பதுமராகமணி, மாணிக்கத்தின் மூன்றாவது சாதி.
சௌகந்திகை - ஒருவகைத்தாமரை.
சௌகந்தியம் - சுகந்தம்.
சௌகம் - கிளி, துக்கம்.
சௌகரிகன் - வேடன்.
சௌகரியம் - சுகம், சோகரியம்.
சௌகாதிகம் - மகா யோகபீடம், மங்கல, சூத்திரம்.
சௌகாத்தியம்
சௌகார்த்தகம் } சினேகம்.
சௌகிருத்தியம்
சௌக்கியம் - சந்தோஷம், சுகம், வசதி.
சௌகுமாரியம் - இளமை, சுகுமாரம்.
சௌசம் - சுத்தஞ்செய்கை, சுத்தம்.
சௌசவிதி - சுத்தஞ்செய்விதி.
சௌசன்னியம் - அன்பு, இரக்கம், சினேகம், பட்சம்.
சௌசன்னியன் - பட்சமுடையோன்.
சௌசாசாரம்-ஆசவுசநிவர்த்திசெய்வி

சௌசி
சௌசிகன் } தையற்காரன்.
சௌசேயன் - வண்ணான்.
சௌடீரியம் - வீரம்.
சௌடு - சவுடு.
சௌண்டி - ஒருபிதிர், திப்பிலி.
சௌண்டிகரணம் - சிராத்தக்கிரியையினொன்று.
சௌண்டிதர் - சாணர், கள்விற்போர்.
சௌதம் - அரண்மனை, சாலை, மலிவு, வெள்ளி.
சௌதாகிரி - குதிரை வியாபாரி.
சௌதாக்கிரிக்குதிரை-விலைக்குதிரை.
சௌதாசன் - இட்சுவாகு வமிசத்திற் பிறந்த ஓரரசன்.
சௌதாமனி - மின்.
சௌதாயம் - சீதனம், நன்கொடை, பந்தயப் பொருள்.
சௌதாயிகம் - சீதளம்.
சௌத்தி-சக்களத்தி, சகக்கிழத்தி, சகளத்தி, சதுர்த்தி.
சௌத்திரன் - சூத்திரன்.
சௌராந்திகம் - சவுத்திராந்திகம்.
சௌத்திராமணி - யாகமிருபத்தொன்றி னொன்று.
சௌனகன் - சுநகன் புத்திரன், கருதசிரமதன பௌத்திரன், இவன் தபோநியதியோடும் பிறந்தவன்.
சௌநந்தம் - பலராமனுலக்கை.
சௌநந்தி - பலதேவன்.
சௌநந்தை - மூதாவதி.
சௌந்தரநாயகி-சௌந்தரியவதி. திருப்பெரும்புலியூரில் கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
சௌந்தரநாயகியம்மை - திருக்கோளம்பத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
சௌந்தரபாண்டியன்-இவர் தடாதகைப்பிராட்டியார்க்கு மணவாளன்.
சௌந்தரமுகம் - பூரித்தமகிழ்ச்சியான் மலர்ந்தமுகம்.
சௌந்தரம் - அழகு.
சௌந்தரலகிரி - ஒருநூல்.
சௌந்தரன் - அழகன், சிவன்.
சௌந்தரி - அழகி, பார்வதி.
சௌந்தரிகம்
சௌந்தரியம் } சௌந்தரம்.

சௌந்தரியவதி - அழகுள்ளவள்.
சௌந்தரீகம் - பேரழகு.
சௌந்தரேசர்-திருநாரையூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
சௌந்தரேசன் - சிவன்.
சௌபஞ்சனம் - புனன்முருங்கை.
சௌபம் - அரிச்சந்திரன் பட்டணம்.
சௌபரி - ஒருமுனி மாந்தாதாவுக்குமருகனுகிய வோரிருடி, வேதமித்திரன் சீடன், சாகல்லியன் தந்தை, இவன் யமுனாநதி நீரினுள்ளே பன்னிரண்டு வருடம் தவங்கிடந்து பின்பு மாந்தாதாவினிடஞ் சென்று தனக்கொரு பெண் கொடுக்கும்படி வேண்ட அவன் என் பெண்களில் எவள் உன்னை விரும்புகிறுளோ அவளை மணக்கக்கடவீரென்றுசொல்லித் தன் பெண்களெல்லாரையுங்கன்னிமாடத்துக்கனுப்ப, இவ்விருடிமன்மதன்போலப்பேரழகான வுருவங்கொண்டு அங்கே செல்ல, அப்பெண்களெல்லாரும் இவனைக்கண்டு மோகிக்க, அவர்களையெல்லாம் மணம்புரிந்து கொண்டு சென்று நெடுங்காலம் காமவின்பம் நுகர்ந்தவன்.
சௌபன்னம் - சுக்கு, மரகதம்.
சௌபத்திரன் - சுபத்திரைமகன்.
சௌபத்திரேயன் - அபிமந்யன்.
சௌபதிகம் - இராப்போர், பாரதத்திலோர் பருவம்.
சௌபாக்கியசிந்தாமணி - ஒரு ஔஷதம்.
சௌபாக்கியம் - நித்தியயோகத்தொன்று, மிகுபாக்கியம்.
சௌபாக்கியவதி-மிகுபாக்கிய முடையவள்.
சௌபாஞ்சநம் - முருங்கைமரம்.
சௌபிகன்-இந்திரசாலிகன், மாந்திரிகன்.
சௌமநசை - சாதிபத்திரி.
சௌமம் - சவுமம்.
சௌமனசியம் - பூரணம்.
சௌமன் - புதன்.
சௌமாரம் - இளமை.
சௌமிகம் - கோபிக்யாகம்.
சௌமித்திரன் } இலக்குமணன்.
சௌமித்திரி } இலக்குமணன்.
சௌமித்திரை - சுமித்திரை.
சௌமிய-நாற்பத்து மூன்ருவதாண்டு.
சௌமியக்கிரகம் - சுபக்கிரகம்.
சௌமியதாது - கோழை.
சௌமியத்துவம் அழகு, சாந்தம், மனவொடுக்கம்.
சௌமியநாராயணன் - விஷ்ணு.
சௌமியம் - சௌமியத்துவம்.
சௌமியர் - சாந்தர், முனிவர்.
சௌமியன் - அருகன், சாந்தன், பன்னுருத்தரில் ஒருவன், புதன்.
சௌமேசகம் } பொன்.
சௌமேருகம் } பொன்.
சௌம்பகம்-சாளுவன் விமானம், சிவன் கட்டளையால் மயன்செய்து கொடுத்த இரதம்.
சௌரகன் - நாவிதன்.
சௌரசேனி-சூரசேநதேசத்துப் பிராக்ருதபாஷை.
சௌரபம் - குங்குமம், பரிமளம்.
சௌரபேயம் - எருது.
சௌரபேயி - ஒரு அப்சரஸ்த்ரீ.
சௌரப்பியம் - சுகந்தம்.
சௌரப்பியன் - குபேரன்.
சௌரமாதம் } சூரியமாதம்.
சௌரமானம் } சூரியமாதம்.
சௌரம்-அட்டாதச வுபபுராணத்தொன்று, சூரம், சூரியமாதம், சௌளம், நாள்.
சௌரவம் - வாசனை.
சௌரன் - சனி, சூரியன், சோரன்.
சௌராடி } ஒருபண்.
சௌராட்டி } ஒருபண்.
சௌராஷ்டிரம் } ஓரிராகம். ஒரு தேயம்.
சௌராட்டிரம் } ஓரிராகம். ஒரு தேயம்.
சௌராஷ்டிரம்-சூராட்டு என்னும் நகரத்தையுடைய தேசம்.
சௌரி-க்ருஷ்ணன், சூரன் மகனுகிய வசுதேவன் புதல்வனுதலால் இப்பெயர் வந்தது. கருடன், கன்னன், சனி, தாருகன் மனைவி, திருமால், துர்க்கை, நமன்.
சௌரிகம் - மோக்கம்.
சௌரிகன்-சாணுன், கள்விற்போன்.
சௌரிகை - சோரம்.
சௌரியப்பிரதாபம் - இராசமகிமை.
சௌரியம் - களவு, பலம், வீரம்.
சௌரியவான் - சூரன், பலசாலி, வீரவான்.

சௌரியன் - கன்னன், சூரபன்மன், சூரியபுத்திரன், சௌரியவான்.
சௌரியார்ச்சிதம்-சோரத்திரவியம்.
சௌரிரத்நம் - நீலமணி.
சௌரு - சவர்.
சௌவம் - கட்டளை.
சௌவர்ணம் - சுக்கு, மரகதம்.
சௌவஸ்திகன் - புரோஹிதன்.
சௌவிதன் - அண்ணகன், அந்தப்புரக் காவற்காரன்.
சௌவீரகம் - இலந்தைமரம்.
சௌவீரம்-இலந்தைக்கனி,ஒருமருந்து. சிபிபுத்திரனாகிய சுவ்வீரனால் நிருமிக்கப்பட்டதாகிய ஒரு பட்டணம்.
சௌளகருமம் - குடுமிச்சடங்கு.
சௌளகம், சௌளம் - மயிர்கழித்தல்.
சௌளாம்பரம் - பட்டாடை.
சௌனகன் - ஒருமுனிவன்.
சௌனகீயம் - உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று.
சௌனந்தி - பலராமன்.
சௌனிகன் - ஊன்விற்போன், புலைஞன்.
சௌன்னம் - பலிபுத்திரனாகிய சுந்ஹனால் நிருமிக்கப்பட்ட நகரம்.

ஜ



ஜ - ஒரு ஸம்ஸ்கிருத எழுத்து.
ஜகநாதபாண்டியன் - அரிமர்த்தனபாண்டியனுக்குப்பின் அரசுசெய்தவன்.
ஜகநாதம் - ஒட்டரதேசத்திலுள்ள விஷ்ணுஸ்தலம்.
ஜகராஜசேகரன் - ஈழநாட்டில் அரசு செய்திருந்த சோழகுலத்தரசன்.
ஜடபரதர் - நீர்பருகிக்கரையேறும்போது சிங்கநாதங்கேட்டஞ்சிக் கருவுயிர்த்த மான்கன்று கங்கையிலே மிதந்து செல்ல, அதனைக்கருணையாலெடுத்து வளர்த்து, இறக்கும்போது கண்ணெதிரே நின்று நைந்துருகிய அக்கன்றின்மீதுவைத்த கருத்தோடு உயிர்விட்டமையால் மானாகப்பிறந்து எல்லாமுணர்ந்தும் ஒன்றுமுணராத ஜடனைபோல நடித்திருந்த பரதராஜா, சவ்வீர ராஜாவுக்கு ஞானோபதேசம் பண்ணினவர்.

ஜடாபர்வதங்கள் - நீலநிஷத பர்வதங்களுக்கு நடுவேயுள்ள மலைகள்.
ஜடாமுனி - சடைதரித்தமுனி.
ஜம்பம் - இடம்பம்.
ஜலபாதை - சலபாதை.
ஜலம் - சலம்.
ஜலவாதி - சலபாதை.
ஜனம் - சனம்.

ஜா



ஜாக்கிரதை - சாக்கிரதை.
ஜாணத்தனம் - உபாயம்.
ஜாதகம் - சாதகம்.
ஜாதி - சாதி.
ஜாமம் - சாமம்.
ஜாலம் - சாலம்.

ஜீ



ஜீமூதலாகநன் - தன் தேகத்தை கருடனுக்கு ஆகாரமாகக்கொடுத்து ஒரு நாககுமாரனைக் காப்பாற்றின ஒரு வித்தியாதரன்.
ஜீமூதன் - வியோமன்மகன்.
ஜீவரேக்கு - சீவரேக்கு.
ஜீவலன் - ருதுபர்ணன்சாரதி.
ஜீவன் - சீவன்.
ஜீவானம் - சீவானம்.

ஜெ



ஜெகம் - செகம்.
ஜெந்து - செந்து.
ஜெபம் - செபம்.
ஜெயம் - செயம்.
ஜென்மம் - சென்மம்.

ஜை



ஜைமினி - வியாசமுனி சீடருளொருவர், இவர் சாமவேதாத்யாயி, மார்க்கண்டேயரையடைந்து தர்மபக்ஷிகள் மூலமாக உபதேசம் பெற்றவர், இந்தப்பட்சிகளா லுபதேசிக்கப்பட்டதே மார்க்கண்டேய புராணமாம்.
ஜைனர் - ஜைநமதர், இந்தமதம் புறச்சமய மாறனுளொன்று, இவர்கள்

வேதங்களை ஈசுவர ப்ரோக்கதங்கள் என்றும் உண்மையென்றும் நம்பாதவர்கள். இவர்கள் கைக்கொண்டநுஷ்டிக்குஞ் சிறந்த ஒழுக்கமாவது ஜீவகோடிகளை ஹிம்ஸை செய்யாமையாகிய கொல்லாவிரதமாம். இவர்கள் பகலிலன்றி இரவிலுண்ணுதவர்கள். இவர் திகம்பரர் என்றும் சுவேதாம்பரர் என்றும் இருவகுப்பினர். இவர்க்குக் கடவுள் அருகதேவர்.

ஜோ



ஜோதி - சோதி.

ஸ்



ஸ் - ஒரு ஸம்ஸ்கிருத எழுத்து.
ஸ்கந்தம் - கந்தம்.
ஸ்கந்தன் - கந்தன்.
ஸ்கலனம் } பெரும்பாடு, விந்து வீழ்கை, விழுகை.
ஸ்கலிதம் }
ஸ்காந்தம் - கந்தபுராணம்.
ஸ்தம்பம் - தம்பம்.
ஸ்தம்பனம் - தம்பனம்.
ஸ்தலம் - தலம்.
ஸ்தவம் - தவம்.
ஸ்தனம் - முலை.
ஸ்தாணு - தாணு.
ஸ்தாபகம் - தாபகம்.
ஸ்தாபனம் - தாபனம்.
ஸ்தாபிதம் - நிலைநிறுத்துகை, புதைப்பொருள்.
ஸ்தாபித்தல் - நிலைநிறுத்துதல்.
ஸ்தாவாரம் - தாவாரம்.
ஸ்தானம் - இடம்.
ஸ்தானிகம் - கோயிற்றலைமை.
ஸ்தானிகர்கள் } கோயிலார்.
ஸ்தானிகாள் }
ஸ்தானியம் - நிலை.
ஸ்தானியாள் - ஸ்தானிகாள்.
ஸ்தானீகம் - தானீகம்.
ஸ்தானீகன் - பூசாரி.
ஸ்திதம் - நிற்பது.
ஸ்திதி - இருப்பு.
ஸ்திரம் - திரம்.
ஸ்திராங்கம் - அவிரி.
ஸ்திரீ - பெண்.
ஸ்துதி - திதி.
ஸ்துத்தியம் - துத்தியம்.
ஸ்துஸ்ருதிதைவதம் - மத்தியவிளரி.
ஸ்துஸ்ருதிரிஷபம் - மத்தியதுத்தம்.
ஸ்தூண் - தூண்.
ஸ்தூபி - தூபி.
ஸ்தூலம் - தூலம்.
ஸ்தோத்திரம் - தோத்திரம்.
ஸ்தோமம் - சேனை.
ஸ்தௌத்தியம் - ஸ்தவம்.
ஸ்நானம் - முழுக்கு.
ஸ்நேகம் - சிநேகம்.
ஸ்பஷ்டம் - தீர்க்கம், வெட்டவெளிச்சம்.
ஸ்படிகம் - படிகம்.
ஸ்பரிசம்-ஊறு, பரிசம், மெய்யெழுத்து.
ஸ்பரிசனம் - தொடுதல்.
ஸ்போடகம் - கொப்புளம்.
ஸ்மார்த்தம் - சுமார்த்தம்ஸ்மிருதிசம்பந்தம்.
ஸ்மிருதி - தருமசாத்திரம், நினைவுகூர்கை.
ஸ்வகதம் - தன்கொள்கை.
ஸ்வகதன் - சந்தேகி, நாஸ்திகன்.
ஸ்வச்சம் - சுவச்சம்.
ஸ்வஸ்தம் - சுஉஸ்தம்.
ஸ்வஸ்தி - சுவஸ்தி.
ஸ்வஸ்திகம் - சுவஸ்திகம்.
ஸ்வதந்திரம் - சுவதந்திரம்.
ஸ்வதர்மம் - கடன்.
ஸ்வதா - சுதா.
ஸ்வபாவம் - சுபாவம்.
ஸ்வபூ - ஸ்வயம்பு.
ஸ்வயங்கிருதம் - சுயமாயுண்டானது.
ஸ்வயம் - சுயம்.
ஸ்வயம்பு } முதல்மனு.
ஸ்வயம்புவன் }
ஸ்வயம் - சுயம்வரம்.
ஸ்வரமண்டலம் - சுரமண்டலம்.
ஸ்வரம் - சுரம்.
ஸ்வரூபம் - சொரூபம்.
ஸ்வர்க்கம் - சுவர்க்கம்.
ஸ்வர்க்காதிபதி - இந்திரன்.
ஸ்வர்ணம் } சுவர்ணம்.
ஸ்வர்னம் }
ஸ்வல்பம் - சொற்பம்.
ஸ்வாகதம் - வாழ்த்து.
ஸ்வாகா - சுவாகா.
ஸ்வாஸ்தியம் - சுவாஸ்தியம்.
ஸ்வாதந்திரியம் - சுதந்தரம்.

ஸ்வாபாவிகம் - சுபாவம், சுபாவிகம்.
ஸ்வாமி - சுவாமி.
ஸ்வார்த்தம் - சுவார்த்தம்.
ஸ்வேச்சை - சுவேச்சை.
ஸ்வேதசம் - சுவேதசம்.
ஸ்மசானம் - சுடுகாடு, மசானம்.
ஸ்மசானவாசி - ஆதியந்தமில்லான், சிவன்.
ஸ்மரணம் - அவதானம்.
ஸ்மரித்தல் - நினைவுகூரல்.

## ஸ்ரீ

ஸ்ரீ - இலட்சுமி, பாக்கியம்.
ஸ்ரீகண்டன் - சிவன்.
ஸ்ரீகரம் - இலட்சுமீகரம், பாக்கியம்.
ஸ்ரீகாந்தன் - விஷ்ணு.
ஸ்ரீகாரியம் - பரமகாரியம்.
ஸ்ரீஜயந்தி - சயந்தி.
ஸ்ரீதரன் - விஷ்ணு.
ஸ்ரீதாளம் - தாளிப்பனையோலை.
ஸ்ரீநிவாசன், ஸ்ரீபதி } விஷ்ணு.
ஸ்ரீநிவாசன், ஸ்ரீபதி } சீமான்.
ஸ்ரீமுகம் - சீமுகன்.
ஸ்ரீமுகவருஷம் - சீமுகவருஷம்.
ஸ்ரீராமன் - இராமர்.
ஸ்ரீவச்சம் - விஷ்ணுவின் மார்பிலுள்ள ஒருவகைமறு.
ஸ்ரீவல்லி - வள்ளியம்மை.

## ஷ

ஷடங்கம் - ஆறங்கம்.
ஷடத்துவா - ஆறத்துவா, அவைமந்திரம் புவன முதலியன.
ஷடாதாரம் - ஆராதாரம்.
ஷட்கர்மம், ஷட்கிரியை } அறுதொழில்.
ஷட்குணம் - இறைவனது அறுகுணம்.
ஷட்சமயம் - அறுசமயம்.
ஷட்சாஸ்திரம் - ஆறுசாஸ்திரம்.
ஷட்ஸ்ருதிதைவதம் - மங்கதவிளரி.
ஷட்ஸ்ருதிரிஷபம் - மங்கத்துத்தம்.
ஷஷ்டி - முருகனுக்குரிய விரத்தினம், ஆறுந்திதி.
ஷட்பதம் - வண்டு.
ஷட்ரசம் - அறுசுவை.
ஷட்வர்க்கம் - காமமுதலிய அறுபகை.
ஷட்விதமார்கிணி - நாற்பத்தாறாவது மேளகர்த்தா.
ஷண்முகப்பிரியை - ஐம்பத்தாறாவது மேளகர்த்தா.
ஷண்முகம் - ஆறுமுகம்.
ஷண்முகன் - குமரன்.
ஷண்முகி - பஞ்ச முத்திரைகளிலொன்று.

## க்ஷ

க்ஷ - ஒரு ஸம்ஸ்கிருத எழுத்து.
க்ஷணம் - கணம், சணம்.
க்ஷதை - உடைந்தது.
க்ஷத்திரியன் - சத்திரியன்.
க்ஷபணகன் - புத்தன்.
க்ஷபணமதம் - சமணமதம்.
க்ஷணிகாசலம் - தணிகாசலம், திருத்தணி.
க்ஷமித்தல் - பொறுத்தல்.
க்ஷமை - பொருமை.
க்ஷயம் - ஒருநோய், சிதைவு.
க்ஷயித்தல் - கெடல்.

## க்ஷா

க்ஷாத்திரம் - குரோதம்.
க்ஷாமம் - பஞ்சம்.
க்ஷாரம் - உப்பு.

## க்ஷி

க்ஷிதி - கிதி.

## க்ஷீ

க்ஷீணம் - ஈனம்.
க்ஷீணித்தல் - கெட்டுப்போதல்.
க்ஷீரசாகரம் - பாற்கடல்.
க்ஷீரநீரம் - நீரும்பாலுங்கலந்தது.
க்ஷீரம் - பால்.
க்ஷீராப்தி - பாற்கடல்.
க்ஷீராப்திதநயை - இலட்சுமி.
க்ஷீரான்னம் - பாற்சோறு.
க்ஷீரோதகம் - ஐக்கியம்.

## க்ஷா

க்ஷாத்திரம் - கொடுமை, சிறுமை.

க்ஷுத்து - பசி.
க்ஷுத்பாதை - பசிவருத்தம்.

## க்ஷூ



க்ஷுத்குணதை - கெடுதி.

## க்ஷே



க்ஷேத்திரக்கோவை - ஒரு நூல்.
க்ஷேத்திரக்கியன் - ஆத்துமா.
க்ஷேத்திரம் - ஸ்தலம்.
க்ஷேபம் - காலங்கழித்தல்.
க்ஷேமம் - சுகம்.

## க்ஷௌ



க்ஷௌரம் - சௌரம்.

## ஞ



ஞஃகான் - ஞகரம்.
ஞண்டு - கற்கடகவிராசி, நண்டு
ஞமகண்டன் - காணக்கிரகத்தொன்று.
ஞமலி - கள், நாய், மயில்.
ஞமன் - யமன்.
ஞாம் - நயம்.
ஞரலுதல் - ஒலித்தல்.
ஞரல்வு - ஒலி.
ஞலவல் - மின்மினிப்பூச்சி.
ஞரு - மயிற்குரல்.

## ஞா



ஞாங்கர் - இடம், இனி, பக்கம், முன்பு, மேல், வேல்.
ஞாஞ்சில் - கலப்பை, மதிலுறுப்பு.
ஞாட்பு-கூட்டம், படை, பாரம், போர், போர்க்களம், வலி.
ஞாஞ்ஞை - ஞாண்டெறிக்குமொலி.
ஞாண் - கயிறு, விண்ஞாண்.
ஞாதசித்தாந்தம் - அறிவிற்றேற்றம்.
ஞாதசித்தாந்தன்-சோமசூரிய சித்தாந்தங்களை யறிந்தவன்.
ஞாதம் - அறியப்பட்டது.
ஞாதவியம் - அறிதற்குரியது.
ஞாதா - அறிவுடையோன்.
ஞாதி - சுற்றம், தந்தை, தாயத்தான்.
ஞாதிகருமம்-சுற்றத்தார்க்குச் செய்யுங் கருமாதி.
ஞாதிகள் - தாயத்தார், பங்காளி.
ஞாதுரு - அறிவு, காண்போன்.
ஞாதேயம் - பந்துத்துவம்.
ஞாத்தல் - கட்டுதல்.
ஞாபகக்கருவி - அறிவிற்குத் தாரகமாய காரணங்களும் பொறிகளும்.
ஞாபகசூத்திரம்-எளிதினியற்றற் பாலவாயதனையறிதாய்ப் பிறிதொருபொருளாலறிவிப்பது.
ஞாபகத்துணைக்கருவி -அறிவிற்குக்காரணமாயகருவி, அது கண், செவி, மூக்கு, மெய், வாய்.
ஞாபகநிமித்தகருவி - ஆத்துமா.
ஞாபகப்படுதல் - நினைவுகூருதல்.
ஞாபகப்படுத்தல் - அவதானப்படுத்தல், நினைப்பித்தல்.
ஞாபகமுதற்கருவி - சீவசாட்சி.
ஞாபகம் - அரும்பொருள், அறிவு, இலக்கியமெடுத்துக் காட்டுநினைவு, புறனடை.
ஞாபகவேது-அறிவிற்குக் காரணமாயது, கருவி முதலிய காரணமாறுமன்றிப் பிரகரணத்தா லுய்த்துணரக்கூறுவது.
ஞாபகி - நினைப்பாளி.
ஞாபநம் - போதிப்பு.
ஞாபிதம் / ஞாபிதை } அறிவித்தல்.
ஞாயம் - நியாயம்.
ஞாயில் - மதிலுறுப்பு.
ஞாயிறுஆதிவாரம் - சூரியன், ஓரூர்.
ஞாயிறு - திரும்பி, சூரியகாந்தம்.
ஞாயிறுவணங்கி - கொழுஞ்சி.
ஞாலமாது - ஊமத்தை, பூமிதேவி.
ஞாலமுண்டோன் - திருமால்.
ஞாலம் - ஊமத்தை, பூமி.
ஞாலம்படைத்தோன் - பிரமன்.
ஞாலல் / ஞாலுதல் } தொங்குதல்.
ஞாழல்-குங்குமமரம், குங்குமம், கோங்குமரம், சங்குபுட்பம், பலினி,பொன்னாவிரை, மயிர்க்கொன்றை, வைரம்.
ஞாழி - வள்ளைக்கொடி.
ஞாழல்மாது - ஊமத்தை.
ஞாளம் - படர்க்கொடி.
ஞாளி - கள், நாய்.

ஞாளிகம் }
ஞாளிதம் } வள்ளைக்கொடி.
ஞானியூர்தி - வயிரவன்.
ஞாற்சி - தொங்குதல்.
ஞானகாண்டிகர்-மூவகைப் பக்குவரில் ஒருவர்.
ஞானகுரு - காரணகுரு, பரமகுரு.
ஞானக்கண்-தேவஞானம், பிரத்தியட்சப்படாதவற்றையறியத்தகுமறிவு.
ஞானக்கலை - ஞானசாதனத்தாலுண்டாகுங்குறி.
ஞானக்காட்சி-சைதன்னிய தரிசனம்.
ஞானசத்தி - ஞானசத்தி.
ஞானசமாதி-ஞானநிட்டையில் ஒன்று.
ஞானசரிதர் - ஞானிகள்.
ஞானசாதனம் }
ஞானசாதனை } ஞானபயிற்சி.
ஞானசாத்திரம் - ஞானநூல்.
ஞானசுகம் - பேரின்பசந்தோஷம்.
ஞானசூட்சம் - பரமசிவம்.
ஞானசைவம் - ஒருசைவம்.
ஞானதிசை - ஞானசாரத்தி னிற்குங் காலம்.
ஞானதிட்டி }
ஞானதிருட்டி } ஞானக்கண்.
ஞானதீட்சை - ஞானவுபதேசம்.
ஞானத்தகப்பன் - ஞானஸ்நானப்பிதா.
ஞானத்தாய் - ஞானஸ்நானத்தாய்.
ஞானஸ்தானம் }
ஞானஸ்நானம் } அகஸ்நானம், கிறீஸ்துமார்க்கத் தோர் சடங்கு.
ஞானத்திற்கிரியை }
ஞானத்திற்சரிதை }
ஞானத்தில்ஞானம் }
ஞானத்தில்யோகம் } சைவ நிலை பதினாறு பாதத்துள் ஒன்று.
ஞானநாயகன் - கடவுள், சிவன்.
ஞானநிட்டை - ஞானனுட்டிப்பு.
ஞானநிலை - ஞானமார்க்கம்.
ஞானநூல் - ஞானசாத்திரம்.
ஞானபரன் - கடவுள், ஞானகுரு.
ஞானபாகை-வேதநூற் பொருள்களில் ஒன்று.
ஞானபாதம் - நான்குபாதத்தொன்று, அது சிவனுஞ் சீவனுமொன்றெனக் கண்டு நிற்கை.
ஞானபாநகன்-ஞானவறிவிலேதெளிந் [தவன்.
ஞானபுத்திரன் - சீஷன்.

ஞானபூசை - மனோபூசை.
ஞானபூரணி - பார்வதி.
ஞானபூருவம் - முன்னறிவு.
ஞானபூர்த்தி - மிகுஞானம்.
ஞானப்பிரகாசசுவாமிகள் - ஈழநாட்டிலே திருநெல்வேலியிலே வேளாளர் குலத்திலே பிறந்து பருவகாலத்திலே கௌட தேசஞ்சென்று வடமொழிபயின்று அதில் வல்லவராகி, மீண்டு திருவண்ணாமலைக்கு வந்து அத்தலமடாதிபதியிடத்தில் காஷாயம்பெற்று, அங்கிருந்து பௌஷ்கராகமத்துக்கு வடமொழியிலே சிறந்த வ்யாக்யாநமொன்றும், சித்தாந்த சிகாமணி ப்ரமாண தீபிகை முதலிய அநேக நூல்களுஞ்செய்து பிரசித்தியடைந்தவர், சிவஞான சித்தியாருக்குத் தமிழிலும் ஓருரையிட்டனர், இவர் முந்நூற்றிருபது வருஷங்களுக்கு முன்னிருந்தவர்.
ஞானப்பிராந்தி }
ஞானப்பயித்தியம் } ஞானமயல்.
ஞானப்பூங்கோதை - திருக்காளத்தியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் திருநாமம்.
ஞானமார்க்கம் - ஞானநிலை. [ரை.
ஞானமுத்திரை - தேவதியான முத்தி
ஞானமூர்த்தி-கடவுள்சரச்சுவதிசிவன்.
ஞானம்-அறிவு, இராசதகுணத்தொன்று, கல்வி, சாத்துவிக குணத்தொன்று, தெளிவு, நல்லொழுக்கம்.
ஞானரோகை - வரையில் ஒன்று.
ஞானவடிவம் - பஞ்சவிகாரங்கன்னிய
ஞானவதி - ஞானமுள்ளவள். [ரூபம்.
ஞானவஸ்து - பார்வதி.
ஞானவல்லியம்மை-திருச்சேறைப்பதியில் கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
ஞானவாசிட்டம்-வசிட்டர் வடமொழியிற் செய்த ஒரு ஞானநூல், இது இவரால் ஸ்ரீராமருக்கு உபதேசிக்கப்பட்டது, இதனைவீரை, ஆளவந்தார் என்னு முனிவர் தமிழில் மொழி பெயர்த்தார். இத்தமிழ் நூலுக்கு உரைகண்டவர்பிறைசை அருணசல சுவாமிகள், இராமனுக்ருவசிஷ்டராற் கற்பிக்கப்பட்ட ஒரு வேதாந்த நூல்.

ஞானவான் - ஞானி.
ஞானவிரல் - ஆழிவிரல்.
ஞானன் - கடவுள், பிரமன்.
ஞானாகாயம் - பரவெளி.
ஞானசத்தி-பஞ்சசத்தியிலொன்றுஅது ஐம்பொறியுணர்ச்சியாக நின்று கருமங்களை யறிந்தூட்டுவது.
ஞானசாரம் - ஞானவொழுக்கம்.
ஞானசாரியன் - ஞானபோதகன்.
ஞானதிக்கம் - ஞானதிகாரம்.
ஞானதிக்கர்-கடவுளைக்குறித்த ஞானத்திலாதிக்கம் பெற்றோர்.
ஞானதாரம் - ஞானவேட்கை.
ஞானத்துமா - சுத்தாத்துமா.
ஞானவழி - சைவநிலை நான்குபாதத்தொன்று.
ஞானாமிர்தம்-வாகீசரால்செய்யப்பட்ட ஒரு சைவசமயசாத்திரம்; இது இருபது அகவற்பாக்களா னியன்றது, பதிபசுபாசங்களைத் தர்க்கமுறையாக உணர்த்துவது. இதனை மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் செவ்வனே உரையுடன் அச்சிட்டனர்.
ஞானார்த்தம் - உட்பொருள்.
ஞானாவரணியம் - அறிவுமறைப்பு.
ஞானானந்தம் - பேரின்பம்.
ஞானானந்தன் - கடவுள்.
ஞானானுட்டானம் - ஞானநிட்டை.
ஞானானுபவம் - ஞானபோகம்.
ஞானானுபானம்-திரவியம், திருவிருந்துவஸ்து.
ஞானி - அருகன், கோழி, பிரமன், பேரறிவுடையோன்.
ஞானேந்திரியம்-அறிகருவி,அதுமெய், வாய், கண், மூக்கு, செவி.
ஞானோபதேசம் - ஞானபோதகம்.
ஞான்று-ஓரிடைச்சொல், காலம்,நாள்.

## ஞி



ஞிமிர் - ஒலி, ஞிமிரென்னேவல்.
ஞிமிர்தல் - ஒலித்தல், கிமிருதல்.
ஞிமிறு - வண்டு.

## ஞெ



ஞெகிழம் - பொற்சிலம்பு.
ஞெகிழி - கொடுவேலி, சிலம்பணி, சிவப்பு, தீ, தீப்பொறி, நெருப்புக்கொள்ளி.
ஞெகிழ்தல் - அலையல். அவிழ்தல்,வாடுதல்.
ஞெண்டு - கர்கடகவிராசி, நண்டு.
ஞெண்டுகம் - பெருவாகை.
ஞெப்தி - ஞாபகம்.
ஞெமிர்தல்-ஒடிதல், நெரிதல். பரத்தல்.
ஞெமிர்த்தல் - ஒடித்தல், நெரித்தல், பரப்புதல்.
ஞெமுக்கம் - அழுந்துகை.
ஞெமுங்கல் } அழுந்தல்.
ஞெமுங்குதல் }
ஞெரி - ஞெரியென்னேவல், நெரிவு.
ஞெரிதல் - நெரிதல்.
ஞெரித்தல் - நெரித்தல்.
ஞெரேலெனல்-அச்சக்குறிப்பு, அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.
ஞெலிகோல் - தீக்கடைகோல்.
ஞெலிதல் - கடைதல், குடைதல்.
ஞெலுவல் - செத்தல்.
ஞெலுவன் - தோழன், சிநேகன்.
ஞெளிர் - உள்ளோசை, ஒலி.
ஞெள்ளல்-உடன்படல்,ஒலித்தல்,சீக்கிரம், சோர்பு,தவறு, பள்ளம், மிகுதி, மேன்மை, வீதி.
ஞெள்ளெனல்- அனுகரணவோசை.

## ஞே



ஞேயம் - அறியப்படுவது,நெய்,நேயம்.
ஞேயர் - அறிவுடையோர், நேயர்.
ஞேயா - பெருமருந்து.

## ஞை



ஞை - இகழ்ச்சிக்குறிப்பு.

## ஞொ



ஞொள்கல் } அச்சக்குறிப்பு, அலைதல்,இளைத்தல்,சோம்பல்.
ஞொள்குதல் }

## த



த - ஒரெழுத்து, குபேரன், பிரமன்.
தகசு - ஒருமிருகம்.
தகடு - அடர்பு, இலை, இலைதட்டு, ஐமை வடிவு,கம்மாறவெற்றிலை,மண்படை.
தகட்டரிதாரம் } ஒருமருந்து.
தகட்டுத்தாளம் }
தகதகெனல் - ஒலிக்குறிப்பு.
தகப்பன் - ஈன்றோன், பிதா.
தகமை - தகைமை.
தகம் - உட்டணம், எரித்தல், நித்திரை, நீர், வேகம்.
தகாடி - சிதறவடிக்குமடி.
தகரப்பொடி - வாசனைப்பொடி.
தகரம்- இரும்பின் மேர்பூசும் ஒருலோகம், ஈயம், ஒரெழுத்து, தகரமரம், அது பஞ்சவிரையில் ஒன்று, மயிர்ச்சாந்து, வாசனைப்பண்டம், விலங்கின்பிள்ளை.
தகராறு - தடை.
தகரு - புன்முருக்கு.
தகரை - ஒரு சிறுசெடி.
தகர் - சுறவினாண், செம்மறிக்கடா. தகரென்னேவல், துண்டு, துருவாட்டேறு, பராகம், பலாசு, பூமி, மேடவிராசி, யாளி யானை யிவற்றினாண்.
தகர்ச்சி - உடைவு.
தகர்தல் - உடைதல்,நெரிதல்,நொறுங்கல்.
தகர்த்தல்-அடித்தல், உடைத்தல்,குட்டுதல்.
தகர்ப்பு - உடைப்பு, குட்டு.
தகர்வு - உடைவு.
தகல் - தகுதல், திராய்.
தகல்பாசி - எத்தன், மோசக்காரன்.
தகவல் - உதாரணம்.
தகவு - அறிவு, உரிமை, உவமை, ஒழுக்கம், கிருபை, குணம், தகுதி, தெளிவு, நன்மை, நீதி.
தகழி - அகல்.
தகழிகை - உண்கலம்.
தகழிச்சி - கருப்பூரம்.
தகலை - அகல், தகழி.
தகனசேதனம் - புகை.
தகனக்கிரியை - ஈமச்சடங்கு.
தகனபலி - தீயிலிடும்பலி.
தகனப்பிரியை - சுவாகாதேவி.
தகனம் - எரித்தல், சுடல்.
தகனன் - அக்கினிதேவன், துட்டன், நெருப்பு.
தகனாராதி - நீர்.
தகனித்தல் - தகனம்பண்ணுதல்.
தகனை - உலோகக்கட்டி.
தகனோபலம் - சூரியகாந்தம்.
தகன்-அக்கினி, திராய், பூரான்.
தகா-தந்திரம், தாகம், பேராசை, மோகம்.
தகாக்காட்டுதல் - ஆசைபதங் காட்டல்.
தகாதது - ஒழுங்கற்றது.
தகாதவன் - ஒழுக்கமில்லாதவன்.
தகாதா - வழக்கு.
தகாமை - ஒவ்வாமை, தகுதியின்மை.
தகித்தல் - சீரணித்தல், சுடுதல்.
தகிப்பு - சுடுகை, பட்சிப்பு.
தகிலன் - வஞ்சகன்.
தகிலாயம் - சிநேகம், நன்றி.
தகிலித்தல் - உட்செலுத்தல், பலப்பித்தல், விதித்தல், வஞ்சித்தல்.
தகிலிப்பு - உட்செலுத்துகை,மதிப்பு.
தகிலிமா - சோரான்மரம்.
தகுணிச்சம் - ஒருவகைத்தோற்கருவி.
தகுணிதம் - வாச்சியப்பொது.
தகுதல்-இயலுதல், உரிமை, ஏற்குதல்.
தகுதி-அறிவு,உரிமை,ஒழுக்கம்,குணம், சனக்கூட்டம், நடுநிலை, பொறுமை, பாத்திரம்.
தகுதிப்பொருள் - தக்கபொருள்.
தகுதியர் } அறிஞர், தமர், பெருமையிற் சிறந்தோர், நடுவுநிலைமையோர்.
தகுதியோர் }
தகுந்தவர் - ஒழுக்கமுடையவர்.
தகுவ - இயன்றவை.
தகுவர் - அசுரர்.
தகுவல் - தகவல்.
தகுளம் - மகளிர்விளையாட்டு.
தகை-அழகு, அன்பு, இளைப்பு, கவசம், குணம், தகுதி, தகையென்னேவல், தளர்வு, தாகம், துண்டு, பெருமை, முகடு, மேன்மை.
தகைதல்-ஆணையிடல், இளைத்தல்,தடுத்தல்.
தகைத்தல்-ஆணைசெய்தல், இளைத்தல், தடுத்தல், வாட்டுதல்.
தகைத்து - தன்மையுடையது.
தகைப்பு-இளைப்பு, தடுப்பு, மதிற்சுற்று.

தகைமை-அழகு, ஒழுங்கு, குணம், தகுதி, தன்மை, பொறுமை.
தகையணங்குறுத்தல் - களவுப்புணர்ச்சி செய்த தலைவியைக் குறிப்பினலச்சுறுதல்.
தகைவிலான் - அடைக்கலாங்குருவி.
தகைவு - தடை, தளர்ச்சி.
தக்ககன் - அட்டநாகத்தொன்று.
தக்கசங்காரன் - சிவபெருமான்.
தக்கடி-குதர்க்கம், துரோகம், மூர்க்கம், வஞ்சனை.
தக்கடை - தாசு
தக்கணம் - தாளத்தின்மார்க்க சடப்பிரமாணத்தொன்று, அது எட்டுமாத்திரையோர்களையாகக் கொண்டது, தெற்கு, வலப்பக்கம்.
தக்கணக்கினி, தக்கணக்கினியம் - வேதாக்கினிமூன்றிலொன்று.
தக்கணயணம், தக்கணயனம் - தெட்சணயனம்.
தக்கணை - தெட்சணை.
தக்கது - தகுதியானது.
தக்கம்-ஒருவிளையாட்டு, தருமநூல் பதினெட்டிலொன்று.
தக்கராகம்-பாலைப்பண்ணின் திறமைந்தனுள் ஒன்று.
தக்கர் - சாடி.
தக்கல் - தக்கை.
தக்கவர் - தகுதியுடையோர்.
தக்கனை - தக்கடி.
தக்கன்-அட்டநாகத்தொன்று, நவப்பிரமாவில் ஒருவன்.
தக்காரி - தழுதாழை, வாதமடக்கி.
தக்கார்-அறிஞர், உறவோர், தகுதியுடையோர், பெருமையிற் சிறந்தோர்.
தக்காளி - ஒரு செடி.
தக்காளிப்பிள்ளை - பிள்ளைப்பூச்சி.
தக்காளியம்மை-தக்கோலத்தில்கோயில்கொண்ட காளியம்மை. இக்கோயில் ஐயா இராமசாமி முதலியாரால் புதுக்கப்படுகிறது, இது பிரபலஸ்தலமாகும்.
தக்காள் - சிறந்தவள்.
தக்கிஷாரயன் - பொன்னம்பர்.
தக்கிணன்-தக்ஷிணமூர்த்தி, இவன் பாண்டிநாட்டுத் திருத்தங்காலிலிருந்த வார்த்திகன் என்னும் ஓரந்தணன் மகன்.
தக்கிரம் - மோர்.
தக்கிராடம் - மத்து.
தக்குதல் - அரக்குதல், ஆட்சிக்குட்படுதல், எல்லைகூட்டுதல், தகுதியாயிருத்தல், நயப்படல், வசப்படுதல்.
தக்குத்தக்கெனல், தக்குபொக்கெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
தக்குவித்தல் - ஆட்சிக்குட்படுத்தல்.
தக்கெனல் - ஒலிக்குறிப்பு.
தக்கேசி - ஒருபண்.
தக்கை - காதிடுதக்கைகிடைச்சி, குதம், தப்பை, தெப்பம், பம்பைவாச்சியம், பலவகைப்பறை.
தக்கையுருவம் - சடவுருவம்.
தக்கோர் - மேலோர், அறிஞர்.
தக்கோலம்-ஒருசெடி, அது பஞ்சவாசத்தொன்று, சிறுநாவற்பூ, வால்மிளகு, ஒரு பிரபல சைவக்ஷேத்திரம், இது தேவாரத்தில் திருவூறல் எனப்படும். இங்கே நந்திவாயில் சமுதாசலம் வந்துகொண்டிருக்கிறது, இத்தலபுராணம் அவ்வூர் ஐயா செல்லப் பநாகமணி முதலியார் குமாரர்கள் நன்முயற்சியால்நடைபெற்றுவருகின்றது.
தங்கக்காசு - ஒரு நாணயம்.
தங்கச்சி - தங்கை.
தங்கஞ்சலமாக்கி - சொன்னபேதி.
தங்கப்பட்டை - சேணங்கட்டுங்கச்சு.
தங்கம்பூச்சு - ஒரு மருந்துப்பூச்சு.
தங்கமலை - மேருமலை.
தங்கமழுத்தல் - தங்கமழுத்துதல்.
தங்கமிருதியாதி - தங்கசிந்தூரம்.
தங்கமிழைத்தல் - தங்கமழுத்துதல்.
தங்கமோரு - ஒருநாணயம்.
தங்கம் - உயர்ந்தபொன், சுத்தம், பயம்.
தங்கரேக்கு - பொன்னிற்செய்தவிதழ்.
தங்கல் - தங்குதல், தங்குமிடம், தாங்கல்.
தங்காள் - தங்கை.
தங்கான் - அரை.
தங்கு - தங்குதல், தங்கென்னேவல்.
தங்குடிச்சுற்றம், தங்குடித்தமர் - ஜாதியர்.
தங்குதல் - இருத்தல், தடைபடல், தரித்தல், தாமதித்தல், விடுதிவிடல்.
தங்குதுறை - தரிக்கத்தக்கவிடம்.
தங்குளம்வெட்டி - தங்கள்வமிசத்தைக் கெடுப்போன்.

தங்கை
தங்கைச்சி } இளையாள், குவளை.
தங்கையைக்கொல்லி - சிறியாநங்கை.
தசகண்டசித்து - இராமன்.
தசகண்டன் - இராவணன்.
தசகம் - பத்து.
தசகரம்-தசவியசம், அது,அபாவனை, காமம், சிற்றின்பக்கவி, சூது, நடனம், பகற்றுயில், மதுவூண், மாயம், விளையாட்டு, வேட்டம்.
தசகுணம் - பதின்மடங்கு.
தசகூலி - உழவுக்கூலி. [ஆர்.
தசக்கிராமம் - பத்துக்கிராமங்கொண்ட
தசக்கிராமினி - பத்துக்கிராமாதிகாரி.
தசக்கிரீவன்-இராவணன், இவன் புலஸ்தியன் மகனாகிய விசிரவசுவின் மகன், இவன் தாய் சுவாமிகளாகிய கைகசி, இவன் மனைவி மயன்மகளாகிய மந்தோதரி,இவன்சகோதரர்கள் கும்பகர்ணன் விபீஷணன், இவன் மக்கள் இந்திரஜித்து முதலானவர்கள், இவன் தலைகள் பத்தாதலால், தசகண்டன் முதலிய பெயர்களுண்டாயின, சீதை வியாஜமாக ஸ்ரீராமரால் இவன் கொல்லப்பட்டான.
தசதானம்-பத்துத்தானம், அவைஉப்பு, எள், நெய், நெல், பசு, பூமி,பொன், வத்திரம், வெல்லம், வெள்ளி.
தசநாடி-அத்தி, அலம்புடை, இடை,காந்தாரி, குகு, சங்கினி,சிருவை,சுழி, மூளை, பிங்கலை, புருடன்.
தசபலன் - புத்தன். [வம்.
தசபிராதுர்ப்பாவம் - தசப்பிராதுற்ப
தசபூமிகன்
தசபூமீசன் } புத்தன்.
தசப்பிராதுற்பவம்-விஷ்ணுவின் பத்தவதாரங்களை விவரிக்கும் ஒரு பிரபந்தம்.
தசப்பொருத்தம் - செய்யுட் பொருத்தம், மணப்பொருத்தம்.
தசமபாகம் - பத்திலொருபங்கு.
தசமஸ்கந்தம்-பாகவதத்தில் பத்தாவது பாகம்.
தசமம் - தசமஸ்கந்தம், பத்தினொன்று.
தசமி - பத்தாந்திதி, பத்தாவது.
தசமுகன் - இராவணன்.
தசமுகாந்தகன் - ஸ்ரீராமன்.

தசமூலம் - பத்துவகைமருந்துவேர், அவைகண்டங்கத்திரி,சிறுமல்லிகை,சிறுவழுதுணை, தழுதாழை, நெரிஞ்சி, பாதிரி, பெருங்குமிழ், பெருமல்லிகை, வாகை, வில்வம்.
தசம் - சிவிகை, பத்து.
தசரதன் - இராமன்பிதா.
தசராத்திரம் - பத்துநாள்.
தசரூபவிருத்தி - திருமால்.
தசலட்சம் - பத்துலட்சம்.
தசவவதாரம் - தசாவதாரம்.
தசவாஜி - சந்திரன்.
தசவாயு - தேகத்தினிற்கும் பத்துவாயு அவை அபானன், உதானன், கிருகரன்,கூர்மன்.சமானன், தனஞ்சயன் தேவதத்தன், நாகன், பிராணன், வியானன்.
தசனப்பொடி - பற்காவி.
தசனம்-பல், போர்க்கவசம், மலைமுடி.
தசனவாசம் - உதடு.
தசனங்கம் - தந்தரேகை.
தசனேச்சிட்டம் - சும்பனம், தந்தமின்மை. 
தசாகம் - பத்துநாள். [மை.
தசாகரிசம்
தசாகரிசி } விளக்கு. [கு.
தசாக்கரி - ஆசான்பண்ணின் அருகுசா
தசாங்கத்தயல்-ஒருபிரபந்தம். அது அரசன் றசாங்கத்தினை யாசிரிய விருத்தம் பத்தினாற் பாடுவது.
தசாங்கப்பத்து-ஒருபிரபந்தம். அது நேரிசை வெண்பாவா லரசர்க்குரிய தசாங்கத்தினைப் பத்துச்செய்யுளாற் கூறுவது.
தசாங்கம் - அரசர்க்குரிய பத்துறுப்பு, அவை ஊர்,கரி,கொடி,செங்கோல், நாடு, பரி, மலை,மாலை,முரசு,யாறு.
தசாசியன் - இராவணன்.
தசாசுபன் - சந்திரன்.
தசாட்சரி - ஓரிராகம், ஒருமந்திரம்.
தசாபலம் - பிராயத்திற் கடுத்தபலம்.
தசார்ஹன் - கிர்வ்ருதிமகன்.
தசாரசன் - அருகன், புத்தன்.
தசாரணம் - காசிக்குத் தென்மேற்கிலுள்ள தேசம்.
தசார் - ஆயத்தம்.
தசாவதாரம் - திருமாலவதாரம் பத்து, அவை இராமன்,கண்ணன்,குதிரை,

கூர்மம், நரசிங்கம், பரசிராமன், பல பத்திரன், மச்சம், வராகம், வாமனம்.
தசானனன் } இராவணன்.
தசானன் }
தசியு-அநீதன், கள்வன், கீழ்மகன், சத்துரு
தசிரதேவதை-அச்சுவினிதேவதை
தசிரம் - உட்டுளை, மழைத்தூறல்.
தசிரர் - தேவமருத்துவர்.
தசுகரம் - தஸ்கரம்.
தசுமம் - தீ.
தசுமன் - கள்வன், யாகஞ்செய்விப்போன்.
தசும்பர் - குடம்.
தசும்பு - குடம், கொப்பரி, பொன்.
தசேந்தனம் - விளக்கு.
தசேந்திரியம் - உடலுறுப்புப்பத்து, அவை ஆக்கிராணம், உபத்தம், சட்சு, சிங்குமை, சுரோத்திரம், தொக்கு, பாணி, பாதம், பாயுரு, வாக்கு.
தசை-ஊன், தாது, நிலைமை, புலால்.
தசைதல்-தசைபூரித்தல், தசைவைத்தல்.
தசைத்தல்-கொழுத்தல், தசைபிடிப்பாதல்.
தசைநார் - தசைநரம்பு.
தசைபிடி } மிகுதசைகொண்டிருத்தல்.
தசைப்பற்று }
தசைப்பு - கொழுப்பு, தசைபிடி.
தசைமுற்றுதல் - கொழுப்பேறுதல்.
தசையடைப்பு - சலத்துவாரநோயில் ஒன்று.
தசையூறுதல் - தசைவைத்தல்.
தஸ்கரம் - களவு.
தஸ்கரம் - திருடன்.
தச்சகன்-குடும்பத்தலைவன். [மாளன்.
தச்சன் - சித்திரைநாள், மரவேலைக்கம்மாளன்.
தச்சகன்குருவி - ஒருகுருவி.
தச்சிச்சி - தச்சப்பெண்.
தச்சு - தச்சன், தச்சன்றொழில்.
தச்சுவை - வஸ்திரம்.
தஞ்சக்கேடு - பலவீனம்.
தஞ்சம் - அடைக்கலம், எளிமை, தாழ்வு, துணை, பற்றுக்கோடு, பெருமை.
தஞ்சன்பொளி - துருசி.
தஞ்சை - தஞ்சாவூர்.
தஞ்சை } காவிரி யாற்றின்தென் கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
தஞ்சைமாணிக்கோயில் }
தஞ்சனம் - தன்னையறிந்தவன்.
தஞ்ஞன் - அறிஞன்.
தடகம் - ஏரி.

தடக்கம் } தடை.
தடகம் }
தடக்குதல் - தடைபண்ணல், தட்டுதல்.
தடக்கை - விசாலமானகை.
தடங்கல் - அடைப்பு, தடை, தாமதம், வறிதிருக்கை.
தடங்கண் - பெரியகண்.
தடங்கண்ணி - பெரியகண்ணுள்ளவள்.
தடங்குதல் - தாமதப்படுதல்.
தடபிடத்தல் - நடுக்கத்தாற்றளம்பல், நாக்குத்தட்டல்.
தடதடப்பு - தள்ளாட்டம்.
தடதடெனல் - தள்ளாடுதல், நடுக்கக் குறிப்பு.
தடத்தம் } அருகு, இலௌகீக கவலை விட்டிருத்தல், கரை.
தடஸ்தம் }
தடஸ்தன்-ஞானி, பாரபட்சமற்றவன்.
தடந்தேடுதல் - கெடுக்கவகைபார்த்தல்.
தடபடத்தல் - தளம்பல்.
தடபடெனல் - தள்ளாட்டக்குறிப்பு.
தடபன் - சுதைமண்.
தடம் - ஓமகுண்டம், ஒருமரம், கண்ணி, கரை, குளம், தராசு, துலாராசி, பெருமை, மலை, மலைப்பக்கம், வரம்பு, வழி, வளையம், விசாலம், வெளி.
தடம்புரளுதல்-தடுமாறுதல், நிலைகெடுதல்.
தடயம் - பலபண்டம்.
தடல்-சிதள், பலாப்பழச்செதிள், வாழைநார்த்தன்மையானது, வாழைமடல்.
தடவரல் - தடவுதல், யாழ்வாசித்தல்.
தடவம்-அருமை, ஆறு, தடவுதல், இது மெய்ப்பரிசமெட்டிலொன்று, வீணை வாசித்தற்றொழிலுளொன்று.
தடவற்புலு - அறுபது.
தடவு - தடவென்னேவல், தூபக்கால், பெருமை, வளைவு.
தடவுச்செவி - பெரியகாது, யானைக்காது.
தடவுதல்-பூசுதல், வருடல், வீணைவாசித்தல்.
தடவை-எல்லை, தரம், முறை.
தடறு - ஆயுதவுறை.
தடா - பானை, மிடா.
தடாகம் - குளம்.
தடாதகைப்பிராட்டியார் - உமாதேவியார் அமிசமாக மலயத்துவச பாண்டியனுக்கு மகளாகப்பிறந்து மதுரையையாண்டவள்.
தடாதடி - குழப்பம், மாறுபாடு.

தடாரம் - இரண்டொத்துடையதாளம்.
தடாரி-தடாரியென்னேவல், பம்பை, பேரிகை,மத்தளம்,வாச்சியப்பொது.
தடாரித்தல்-அடித்தல், ஊடுருவுதல்.
தடி-அளவுகோல், ஆற்றங்கரை,உடம்பு, உலக்கை, ஊன், சிறுவயல், தடியென்னேவல், தண்டு, பற்றுக்கோடு, பாத்தி, மின், வயல், வளைதடி,வில்.
தடிகை - மின்னல்.
தடிதல்-அறுத்தல், குறைத்தல், கொல்லல்,தறித்தல்,மின்னுதல்,வெட்டல்.
தடித்தல்-கனத்தல், காரியம் பலத்தல், புடைத்தல், மின்னுதல்.
தடித்து - மின்னல்.
தடித்துபதி - மேகம்.
தடிநி - நதி.
தடிப்பம் } கனப்பு,தழும்பு,பருமைவீக்கம்.
தடிப்பு }
தடிமம்-ஒருபூடு, சளி.
தடிமல் - சலதோஷம்.
தடிமன் - சலதோஷம், தடிப்பம்.
தடிமிண்டன்-மூடன்,வகையாதவன்.
தடிமூக்குள்ளான் - ஒருகுருவி.
தடியன்-மூடன், வகையாதவன்.
தடிவு - கொலை, வெட்டு.
தடினி - யாறு.
தடுக்கல் - தடை.
தடுக்கு - சிறுபாய், தவிசு.
தடுக்குதல் - தடைசெய்தல்.
தடுதல் - இசைதல். [கல்.
தடுத்தல் - தம்பித்தல், மறித்தல், விலக்
தடுத்தாளி - அவசரம்.
தடுத்தாளுதல் - மீட்டிரட்சித்தல்.
தடுபடை - மாற்றுப்படை.
தடுபொடுதாயம் - அவசரம். [குறிப்பு.
தடுபொடுத்தல் - அவசரப்படுதல்,ஒலிக்
தடுபொடெனல் - ஒலிக்குறிப்பு.
தடுபொறி - மிகுசுருக்கு.
தடுப்பு - தடுத்தல்.
தடுமன் - தடிமல்.
தடுமாறல் } கலங்குதல், குழம்புதல்.
தடுமாறுதல் }
தடுமாற்றம்-கலக்கம், மாறுாட்டம்.
தடை-கவசம், தடங்கு, தடையம், மறி [யல்.
தடைதல் } தடுத்தல். [ட்டு.
தடைத்தல் }
தடையம்-கத்திப்பிடி, தடை, தட்டுமு

தட்சகந்நிறை - பார்ப்பதி.
தட்சகன் - அட்டநாகத்தொன்று,தக்ககன், தச்சகன், விசுவகர்மன்.
தட்சசங்காரன் - சிவன்.
தட்சஜாபதி - சந்திரன், சிவன்.
தட்சசை } துர்க்கை.
தட்சஜை }
தட்சணதுருவம் - தென்முனை.
தட்குதல் - தடுத்தல்.
தட்சணம் - உடனே,தெற்கு,நிதானம், வலப்பக்கம்.
தட்சணாக்கினி - வேதாக்கினி.
தட்சணாஸ்தம் - வலக்கை.
தட்சணாமூர்த்தம் - குருமூர்த்தம்.
தட்சணாமூர்த்தி - அகத்தியன், சிவன்.
தட்சணாயனம் - சூரியன் தெற்கில்சஞ்சரிக்கும் ஆடி ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மார்கழி என்னும் ஆறுமாதகாலம்.
தட்சணை-காணிக்கை, சிட்சை.
தட்சதம் - அடித்தட்டை.
தட்சப்பிரசாபதி - தக்கன்.
தட்சன்-இடபம், சிவன், சேவல், தக்கன், தீ, பரஸ்திரிகமனன், புலவன்.
தட்சாபன்னி - ஒருமனு.
தட்சாயம் - கருடன்.
தட்சாரி - வீரபத்திரன்.
தட்சிணஸ்தன்-தேர்ப்பாகன். [பக்கம்.
தட்சிணபதம் - தெட்சணவீதி, தென்
தட்சிணம்-தாராளம், தெற்கு, வலப்பக்கம், விவேகம்.
தட்சிணாக்கினி - தக்கணாக்கினி.
தட்சிணாசலம் - பொதியமலை.
தட்சிணாசாபதி - நமன்.
தட்சிணை - தெற்கு.
தட்சிணாதீசன் - யமன். [ல் ஒன்று.
தட்சிணாயனம் - சூரியன்மூவகைவீதியி
தட்சிணாவர்த்தம் - வலம்புரிச்சங்கு.
தட்சிணை - தட்சணை.
தட்சை - பூமி.
தட்டகப்பை - சட்டகப்பை.
தட்டத்தனி-யாதொரு துணையுமில்லாத தனிமை.
தட்டம்-அல்குல், உண்கலம், தட்டையானபாத்திரம்,தாடி,பல்,பாம்பினச்சுப்பல், மக்கட்படுக்கை, நீர்நிலை, யானைசெல்புறவழி,வயல்,வெள்ளை.

தட்டல்-அடித்தல், அபகரித்தெடுத்தல், ஆணையிடல், ஐந்துகிட்டல், தடுத்தல், நறுக்குதல், மறுத்தல், மூட்டுதல், மெய்ப்பரிசமெட்டினென்று, வீணை வாசித்தற்றொழிலினென்று.
தட்டவைத்தல் - பொருக்கவிடுதல்.
தட்டழிதல் - நிலைகுலைதல்.
தட்டழிவு - நிலைகுலைவு.
தட்டற்புலு - ஐம்பது.
தட்டாத்தி - பொன்வினை மக்காளின் பெண்.
தட்டாரப்பூச்சி - ஒருபூச்சி.
தட்டாரப்பொட்டு - வெளிவேஷம்.
தட்டானுப்பி - ஒருகொடி.
தட்டான் - ஒருபூச்சி, கோஷ்டம், புடோல், பொற்கொல்லன்.
தட்டான்கொட்டோசை - புடோல்.
தட்டி-காவல்சேடகம், கோட்டம், படல், பலகை, வெற்றிலைக்கட்டு.
தட்டிச்சிந்து - ஒருசிந்து.
தட்டிலம் - சதகுப்பி.
தட்டு உட்கட்டு, கண்ணியேற்றுந்தட்டு, கம்பு முதலிய, புன்பயிர்த்தாள், குறை குற்றம், தகடு, தட்டென்னேவல், தந்திரம், தராசுமுதலியவற்றின் தட்டு, திரிகை, தேர்நடு, பரிசை, மரவட்டணை, முட்டு, முற்றம், வட்டம், வளைவு, விலச்கு.
தட்டுக்காரன் - தந்திரி.
தட்டுக்கிளிபாய்தல் - ஒரு விளையாட்டு.
தட்டுக்கெடுதல் - கலங்குதல், நிலைதளம்பல்.
தட்டுக்கேடு-இல்லாமை, நிலையழிதல், முட்டு.
தட்டுகொடி - ஒரு கடுதாசிப்படம்.
தட்டுக்கொட்டு - கொட்டுமுழக்கும் தந்திரம்.
தட்டுச்சுளகு-வட்டச்சுளகு.
தட்டுண்ணல் - குறைந்துபோதல், தவறிப்போதல்.
தட்டுதம் - அடித்தல், அபகரித்தெடுத்தல், ஏற்றுதல், தப்புதல், திருப்புதல், மறுத்தல், முட்டுதல்.
தட்டுப்பாடன் - தட்டுமினுக்கின புடவை.
தட்டுப்பாய்தல் ஒருவிளையாட்டு.
தட்டுமணி - உட்கட்டு.
தட்டுமாறுதல் - நிலைமாறுதல்.
தட்டுமுட்டு - தளபாடம்.
தட்டுருவுதல் - ஊடுருவுதல்.
தட்டுவாணி - சிறுகுதிரை, வேசி.
தட்டுவிக்கினம் - தட்டம், மேனிலை.
தட்டை - அரிதாள், கவண், கிளிகடிகோல், தினைத்தாள், தீ, பாந்தவடிவுள்ளது, மூங்கில், மொட்டை.
தட்டைக்காரை - ஒருவகைமீன்.
தட்டைச்சீட்டு - ஒருசீட்டு.
தட்டைத்திருப்பு - ஒருபணி.
தட்டையம்மை - ஒரு வைசூரி.
தட்டோடு - தட்டையோடு.
தப்பம் - குளிர்ச்சி.
தணக்கு - தணக்கமரம், நுணாமரம்.
தணத்தல் - நீங்கல், பிரிதல், போகல்.
தணப்பு - செலவு, பிரிவு.
தணலம் - எருக்கு.
தணல் - தழல்.
தணல்விழுங்கி - தீக்குருவி.
தணவம் - அரசமரம்.
தணிகை - தணிகாசலம், க்ஷணிகாசலம், மூதண்டகிரி, திருத்தணி.
தணிசு - கவிசு, குறைவு, தாழ்ச்சி.
தணிதல் - ஆறுதல், இளகுதல், குளிர்தல், குறைதல், பருத்தல்.
தணித்தல் - அறிவித்தல், இளக்குதல், குறைத்தல்.
தணிப்பு - ஆற்றி, குறைப்பு.
தணியல் - கள், தணிதல்.
தணிவு - ஆறுதல், கீழ்மை, குறைவு.
தண் - குளிர்ச்சி.
தண்கதிர் - சந்திரன்.
தண்காண் - இழிந்தகாடு.
தண்சுடர் - சந்திரன்.
தண்டகநாடு - காஞ்சிபுரம்.
தண்டகமாலை-ஒருபிரபந்தம். அது வெண்பாவான் முந்நூறு செய்யுள் கூறுவது புணர்ச்சிமாலை.
தண்டகம்-ஆபாணம், கரிக்குருவி, ஒருவனம், குறுந்தறி, தொண்டைமண்டலம், நுரை, வடமொழியினேர் செய்யுள்.
தண்டகன் - ஓரரக்கன், ஓரரசன்.
தண்டகாகம் - செம்போத்து.
தண்டகாரணியம் - இக்ஷ்வாகு புத்திரனாகிய தண்டகன் என்பவன் தந்தைக்கு மாறாயொழுக தந்தையானவன் இவனை விந்தமலைச்சாரலிற் போயிரு

க்கும்படி யோட்டிவிட்டான். இவன் அங்கே மதுமந்த மென்னும் ஒரு பட்டணத்தை யுண்டாக்கி அங்கே சுக்ரனுக்குச் சீஷனுனன், ஒருநாள் சுக்கிரன் மகளாகிய அரசையைக் கண்டு மோகித்து அவளை வலிதிற் புணர்ந்தான், அதுகேட்ட சுக்கிரன் அவனும் அவன் பட்டணமும் மண்மாரியால் அழிகவென்று சபித்தான்,அவ்வாறழிந்த இடமும் அதற்குத் தெற்கிலுள்ள பூமியும் தண்டகாரணியம் எனப்படும். அதுவே தக்ஷிணதேசம்.

தண்டகாரணியம்-தண்டகவனம், திண்டிவனம்.

தண்டகிரகணம் - தண்டுதாங்கல்.

தண்டகை - தண்டகம், நஷ்டம்.

தண்டகம் - கொல்லுலை

தண்டட்டி - தண்டொட்டி.

தண்டதரன் - அரசன், குயவன், தண்டேசன், தண்டேந்தி, நமன், வீமன்.

தண்டதாசன் - அடிமை.

தண்டதாமிரி - சலமுட்புகுதலினுழிகையறிவிக்கு மோர் பாத்திரம்.

தண்டதாரணம்-ஆக்கினை, தண்டுதரித்தல்.

தண்டநாயகன்-அரசன்,சேனபதி,நந்தி

தண்டநீதி - கட்டளைச்சட்டம்.

தண்டநீயத்துவம்-தண்டத்திற்குநீங்கல்.

தண்டபாசிகன் - கொலைகாரன்.

தண்டபாணி - காசியிலுள்ள ஒருதேவதை, பழனியாண்டி, யமன்.

தண்டபாணி-தண்டதரன், தண்டேசன் நமன், விஷ்ணு, பழனிக்கடவுள்.

தண்டபாலகம் - வாயிற்பால்.

தண்டபாலன் - துவாரபாலன்.

தண்டமானம் - தண்டைமானம்.

தண்டமிழ் - இனியதமிழ்.

தண்டம் - அரசன்கொடுங்கோன்மையாகிறையிறுத்தல், அறப்பான் மூன்றனுளொன்று. அது ஒழுக்கத்தினும் வழக்கத்தினும் திறம்பினேரை அவற்றினெறியே கிறுத்தத்தண்டித்தல், உபாயநான்கினென்று, [illegible]ன்றுகோல், ஒரு நாழிகைநேரம், ஒரு ருடப்பிரமாணக்கோல், கடைதறி,குடைக்காம்பு, தண்டிப்பு, தெண்டம், தேசம், நாடு, படை, பண்டாரம், பற்றுக்கோடு, பெருமை, யானைசெல்வழி, யானைத் துதிக்கை, வணக்கம், வளை தடி.

தண்டயாமம் - தினம்.

தண்டயாமன் - அகத்தியன், இயமன்.

தண்டயாமி-அகத்தியன், இயமன்,தினம்.

தண்டலர் - சத்துருக்கள்.

தண்டலை-ஒரூர்,சோலை, பூந்தோட்டம்.

தண்டல் - அறவிடுதல், கெடுதல், சேகரிப்பு, தோணித்தலைவன்.

தண்டவாசி - துவாரபாலன்.

தண்டவாலதி - யானை.

தண்டவால் - தண்டமானம்.

தண்டவாளம் - உருக்கிரும்பு.

தண்டற்காரன் - அறவிடுவோன்.

தண்டனம், தண்டனை } ஆக்கினை.

தண்டன்-அரசன்,குயவன்,நமன்,வணங்கல், இக்ஷ்வாகு புத்திரன் - தண்டகன் எனவும் படுவன், சுவாமிமகன்.

தண்டாகதம் - மோர்.

தண்டாகாரம் - கணிதவாக்கியம் வைத்துக் கணிக்கு முறையினென்று.

தண்டாசுவன் - த்ருடாசுவன் துந்துமாரன்மகன்,இவன்மகன் ஹரியசுவன்.

தண்டாச்சிறப்பினள் - சரச்சுவதி.

தண்டாமரைக்கோரை - ஒருபுல்.

தண்டாமை - நீங்காமை.

தண்டாயம் - கந்தாயம், காத்தண்டு.

தண்டாயுதபாணி சுப்பிரமணியர் பழனியாண்டி.

தண்டாயுதம் - தண்டம், வளைதடி.

தண்டாயுதன்-ஐயன்,வயிரவன்,வீமன்.

தண்டாரம்-குலாலசக்கிரம், மதயானை, யானம், வில்.

தண்டி - ஒரு புலவன், தண்டற்காரன், தண்டியன்னேவல், தண்டேசுரன், தரம், நமன், பருப்பம், வாயில்காப்போன், வானப்பிரத்தன். காளிதாசனுக்கு நண்பராகிய ஒருஸம்ஸ்க்ருத வித்வான், போஜராஜன் சபையில் விளங்கிய நவகவிரத்நங்களுள் ஒருவர் காவ்யாதர் சமும் தசகுமார சரித்ரமும் இவரால் செய்யப்பட்டனவே.

தண்டிகம் - ஒருமீன், முத்துச்சரம்.

தண்டிகை - ஒரு கழுத்தணி, சிவிகை.

தண்டிகைகுச்சு - தாழ்வாரந்தாங்கி.

தண்டிதாம் - திராணி,

தண்டித்தல்-தண்டனை பண்ணல், வெட்டுதல்.
தண்டிப்பு-தண்டனை, வருத்தம், வெட்டல்.
தண்டியடிகணாயனார்-பிறவிக் குருடராகப்பிறந்து சிவபத்தியிற் சிறந்துதிருவாரூர் திருக்குளத்து மண்ணைக்கல்லி கூடையிலெடுத்துக்கொண்டு தடவிக்கொண்டே போய்க் கரையிலே கொட்டுகிற திருத்தொண்டு செய்து வருநாளில், சமணர்கள் தடுத்து, கண்கெட்டவனே யென்று பழிக்க, சுவாமி சந்நிதியையடைந்து தமது வருத்தத்தை விண்ணப்பஞ்செய்து கண்பெற்று சமணர்கள் கண்ணிழந்து அவ்வூர்விட்டு நீங்கும்படி செய்து சோழராஜனால் அந்தச் சமணர்களுடைய பாழிகளைப் பறிப்பித்து அந்தக் கற்களைக்கொண்டு கமலாலயத்திருக்குளக்கரையைக் கட்டுவித்துத் திருவாரூரிலே வாழ்ந்திருந்த ஒரு சிவபத்தர்.
தண்டியலங்காரம்-தமிழிலேயுள்ள ஒரு அலங்காரநூல். இது வடமொழியிலுள்ள காவ்யாதரிசமென்றும் அலங்கார சாஸ்திரத்தின் மொழிபெயர்ப்பு, மொழிபெயர்த்தவர் இன்னாரெனப் புலப்படவில்லை. வடமொழியிற் செய்தவர், தண்டி.
தண்டியல் - தண்டிகை.
தண்டிலம் - மந்திரவேதிகை.
தண்டினம் - நீர்மேற் படர்கொடி.
தண்டீசர் - சண்டேசுரநாயனார்.
தண்டு ஆண்குறி, ஆயுதப்பொது,ஓந்தி, கீழ்க்காதுச்சோணை, சவளமரம்,சிவிகை, சேனை, தடி,தண்டாயுதம்,தண்டென்னேவல், தண்டேசன், தராசுக்கோல், துளையகைப்பொருள், பச்சோந்தி, படை, பூவிற்றுள், மிதுனவிராசி, மூங்கில், வரம்பு, வளைதடி, வாஸழத்தாறு, வில், வீணை.
தண்டுக்கீரை - ஒருகீரை.
தண்டுதல் - தண்டல், விலகுதல்.
தண்டுப்பிளவை - ஆண்குறியில் வருமோர் சிலந்தி.
தண்டுப்பற்று - ஆண்குறியினோர்நோய்.
தண்டுமிண்டு - அடாதது.
தண்டுரீனம் - அரிசிக்கழுநீர்.
தண்டுலபலை - திப்பிலிச்செடி.
தண்டுலம் - அரிசி, வாயுவிளங்கம்.
தண்டுலம்பு - அரிசிக்கழுநீர்.
தண்டுலீகம் - ஒருசெடி, நெல்முதலியன வாயுவிளங்கம்.
தண்டுலேரம் - ஒருகீரை.
தண்டுலோகம் - தண்டுலாம்பு.
தண்டுலீயம் - சிறுகீரை.
தண்டெலும்பு - புதுகென்பு.
தண்டேசன் / தண்டேசுரன் } ஒருசிவதொண்டன்.
தண்டேறு - எலும்பு.
தண்டை - தொந்தரை, பிரப்பங்கேடகம், மாதர்காதணியில் ஒன்று, வால்.
தண்டைக்காரன் - எத்தன்.
தண்டைமாரம் / தண்டைமானம் } வால் முறுக்குதல்.
தண்டொட்டி - காதணியினொருறுப்பு.
தண்ணடை-நாடு, பச்சிலை, மருதநிலத்தூர்.
தண்ணம் - ஒருகட்பறை, காடு, குளிர், பறைப்பொது, மழு.
தண்ணவன் - சந்திரன்.
தண்ணளி - இரக்கம், கிருபை.
தண்ணனவு - தண்ணெனவு.
தண்ணியகுலம் - கீழ்ச்சாதி.
தண்ணியது - குளிர்ந்தது, தாழ்ந்தது.
தண்ணீர் - குளிர்ந்தநீர், நீர்.
தண்ணீர்கட்டுதல் - கொப்புளங்கொள்ளல், நீர் [illegible]டித்தல்.
தண்ணீர்காட்டுதல் - [illegible]ப்த்தல், கெடுத்தல், சேதப்படுத்தல்.
தண்ணீர்ச்சாலை - நீர்ச்சாலை.
தண்ணீர்மாறுதல் - நீர்ப்பாய்ச்சுதல்.
தண்ணீர்விட்டான் - சாத்தாவாரி.
தண்ணுமை - உடுக்கை, உறுமிமேளம், ஒரு கட்பறை, பேரிகை, மத்தளம்.
தண்ணெனல் குளிர்தல். சீதக்குறிப்பு.
தண்ணெனவு - குளிர்ச்சி.
தண்பதங்கொளுந்தலைநாள் - புதுப்புனல் விழவு கொண்டாடுந் தலைநாள்.
தண்பதப்பெருவழி - புதுப்புனலாடப்போம் பெரியவீதி.
தண்மை-இகழ்த்தகுபொருள்,இன்பம், எளிமை, குளிர்ச்சி, அது எண்வகையூறில் ஒன்று, சாந்தம், தாழ்வு, புல்லறிவு.

ததகம் - வாயு, காற்று.
ததச்சதை - வாழைமரம்.
ததபத்திரி - வாழை.
ததம் - அகலம், பின்பு, விரிவு.
ததர்ப்பணம் - கொடுத்ததையபகரித்த [ல்.
ததர்முகம் - தொடக்கம்.
ததல் - நிலை.
ததனந்தரம் - அதன்பின்.
ததநம் - தாநம்.
ததா - அப்படி.
ததாகதன் - புத்தன்.
ததாகாரம்-அநந்தரூபம், விஸ்தாரம்.
ததாஸ்து - அப்படியாகட்டும்.
ததாமுகம் - ஆரம்பம்.
ததி-ஒருபிசின், கிரகம் தத்துவம், தயிர், நிறை, பருவம்.
ததிகூர்ச்சிகை - தயிரன்னம்.
ததிகேடு - பலக்குறைவு.
ததிசம் - வெண்ணெய்.
ததிசாரம் - தயிர்கடைதறி, வெண்ணெ [ய்.
ததிசி - ததீசி.
ததிசுவேதம் - மோர்
ததிசோணம் - செங்குரங்கு.
ததிபலம் - விளாமரம்.
ததிமண்டம் - மோர்.
ததிமண்டோதம் - தயிர்க்கடல்
ததிமுகன் - சுக்ரீவன் மாமன், மதுவனங்காவலன், சுக்ரீவன் மாதுலன்.
ததியை - திரிதிகை.
ததியோதனம் - தயிரன்னம்.
ததிரம்- யாகமிருபத்தொன்றில்ஒன்று.
ததிவாகநன் - அங்கன்மகன்.
ததீசி-ஓரிருடி இவர் தமது முதுகெலும்பை இந்திரனுக்குக் கொடுத்து இதையுன் வச்சிராயுதத்துக்கு முனையாக்கிக்கொள்கவென்று அருள்செய்தவர்.
ததீசியஸ்தி - வச்சிராயுதம்.
ததுமல் - குழப்படி, சந்தடி.
ததும்பல் } அசைதல்,நிறைதல்,மூடிப்பாய்தல், வழிதல்.
ததும்புதல் }
ததுளன் - இளைஞன், காற்று.
ததேககிட்டை - அசைவறத் தியானித்திருத்தல்.
ததைதல் - நெருங்கல், மிடைதல், வெளிப்படாதிருத்தல்.
ததைத்தல்-கூடுதல், நெருக்கல்.

ததைவு - ததைதல்.
தத்தநன் - அதிலோபி.
தத்தம் - ஈகை, சுவீகாரம்.
தத்தரம் - நடுக்கம், மிகுவிரைவு.
தத்தல் - தவளை, தாண்டல், பாய்தல்.
தத்தளித்தல் - தடுமாறுதல், தடுக்கிடல், முட்டுப்படுதல்.
தத்தளிப்பு - தடுமாற்றம், முட்டுப்பாடு.
தத்தாங்கி - மகளிர்விளையாட்டு.
தத்தாத்ரேயன்-அத்திரிக்குஅனசூயையிடத்துப் பிறந்த புதல்வன், இவன் விஷ்ணு அமிசம் என்பர்.
தத்தாத்திரியன்-ஓரிருடி, இவன் திருமால் பதினைந்தவதாரத்தொருவன்.
தத்தாபகாரம் - கொடுத்ததை யபகரித் [தல்.
தத்தாபிகாரம் - பார்த்தல்.
தத்தி - கொடை, பலம்.
தத்திகாரம் - பொய்.
தத்திதம் - பகுபதம்.
தத்தியம் - மெய்
தத்தியன் - மெய்யன்.
தத்தியோதனம் - ததியோதனம்.
தத்திரம் - பதில்.
தத்தினம் - நடுநாள், நாடோறும்.
தத்து-அவமிருத்து,கண்டம், கிரகவொழுங்கு, சுவிகாரம், தப்பிச்சரித்தல், தத்தென்னேவல்,பாய்தல், மோசம்.
தத்துக்கிளி - விட்டில்.
தத்துதல் - கடத்தல், பாய்தல்.
தத்துப்புரட்சி - கிரகநடையினோர்விகா [ரம்.
தத்துப்பூச்சி - தத்துவண்டியன்.
தத்துவக்கடுதாசி-ஒருவனுடைய தத்துவத்தைப் பெற்றவுறுதி.
தத்துவக்கட்டளை - ஒருநூல்.
தத்துவசாத்திரம் - தத்துவபேதங்களையறிவிக்குநூல்.
தத்துவசாலி - அதிகாரம் பெற்றோன், பலசாலி.
தத்துவஞானம் - உண்மைஞானம், கடவுளையறியுமறிவு, தத்துவங்களையறியுஞானம்.
தத்துவஞானி - தத்துவங்களைப் பிரித்தறிந்தோன்.
தத்துவண்டியன் - ஒருபூச்சி.
தத்துவதரிசனம் - தத்துவக்காட்சி.
தத்துவதி - ஒருவகைக்கழு.

தத்துவத்திரயம் - மூவகைத் தத்துவம் அது ஆத்மதத்துவம், சிவதத்துவம், வித்தியாதத்துவ மெனப்படும், ஒரு வைணவ நூல்.

தத்துவநிரூபணம் - ஒரு ஞான நூல்.

தத்துவப்பிரகாசம் - ஒரு சைவ நூல்.

தத்துவம்-அதிகாரம், உண்மை, சுபாவம், தத்துவத்திரயம், பலம், புத்தி, பூத்தியம், பூதியம்.

தத்துவம் - பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, மனம், அகங்காரம், புத்தி, குணம், பிரகிருதி இவை ஐந்து. ஆக தத்துவம் இருபத்தைந்தும் அசுத்தாத்துவா, இருபத்தாறுந் தத்துவம் அராகம் அதற்குமேலே கலாதத்துவம், அதற்குமேலே நியதிதத்துவம், அதற்குமேலே காலதத்துவம், அராகம்முதல் காலதத்துவமீறாகிய, ஐந்தும் மிச்சிராத்துவா, இவை முப்பதும் ஆன்மாக்களுக்குத் தனித்தனியே சூக்குமதேசங்களாம் அதற்குமேல் மாயாதத்துவம், அதற்குமேல் சுத்தவித்தியாதத்துவம், அதற்குமேல் ஈசுரதத்துவம், அதற்குமேல் சதாசிவதத்துவம், அதற்குமேல் சத்திதத்துவம், அதற்குமேல் சிவதத்துவம், இவைகளே முப்பத்தாறு தத்துவங்களெனப்படும், சிவதத்துவம் நாதம் என்றும் சத்திதத்துவம் விந்து என்றும் சொல்லப்படும், சொல்லொற்றுமை நோக்கிச் சிவதத்துவமும் பரமசிவமும் ஒன்றெனக்கொள்ளாதொழிக. அந்தச் சிஷ்டிக்கிரமம் வருமாறு.

## பிரமம்.

| | |
|---|---|
| சிவதத்துவம் | (ஙசு) |
| சத்திதத்துவம் | (ஙரு) |
| சதாசிவதத்துவம் | (ஙச) |
| ஈசுரதத்துவம் | (ஙங) |
| சுத்தவித்தியாதத்துவம் | (ஙஉ) |
| மாயாதத்துவம் | |
| காலதத்துவம் - நியதிதத்துவம் | |
| ஙo | உக |
| காலதத்துவம். | உஅ |
| வித்தியாதத்துவம் | (உஎ) |
| ராகதத்துவம் | (உசு) |
| புருஷதத்துவம், பிரகிருதி தத்துவம் சித்தம் | (உரு) |
| குணதத்துவம் | (உச) |
| புத்திதத்துவம் | (உங) |
| அகங்காரதத்துவம் | (உஉ) |
| சாத்துவிகாங்காரம். | |
| மனமும் ஞானேந்திரியமும் | (ரு) |
| ராஜஸாகங்காரம். | |
| கன்மேந்திரியம் | (ரு) |
| தாமஸாகங்காரம். | |
| தன்மாத்திரை பூதம் | (ரு) |

இது சிவாத்துவதீபிகையிலே கூறப்பட்ட தோற்றக்கிரமம். இனி அதிகார தேவர்கள் இருக்குமிடஞ் சொல்லுவோம்.

சுத்த வித்தியா தத்துவத்திலே, சப்தகோடி மஹாமந்திரர்களும், நந்திமுதலிய கணநாதர் எண்மரும், இந்திரன் முதலிய வுலகபாலரும், ஈசுரதத்துவத்தில், அநந்தர் முதலிய வித்தியேசுவரரும் இருப்பார், அநந்தர் மாயாதத்துவ புவனங்களை யுண்டாக்குவர். ஸ்ரீகண்டருத்திரர் குண தத்துவத்திலிருந்து ஒடுக்காக்காலத்தில் அராகத்திலிருப்பார், பிரகிருதி மத்தகத்திலே எட்டுருத்திரர் இருப்பார், பிரம விஷ்ணுக்கள் ஸ்ரீகண்ட ருத்திரரோடு குணதத்துவத்திலிருப்பார், பிரணவம் ஈசுரதத்துவத்திலிருக்கும் உருத்திர கணங்களுக்குச் சங்கையில்லை.

ஆகாயம் வாயிலாகி மற்றைப் பூதங்களுக்கிடங்கொடுக்கும். வாயுகலித்து மற்றைப் பூதங்களைத் திரட்டும், தேயு சுட்டு ஒன்று விக்கும், அப்பு குளிர்ந்து பதஞ்செய்யும் பிருதவி வன்மையாகிய மற்றெல்லாவற்றையுந் தாங்கும் ஆகாயம் வட்ட வுருவினது, வாயு அறுகோணம், தேயு முக்கோணம், அப்பு பிறைவடிவினது, பிருதுவி சதுரம், ஹ - ய - ர - வ - ல ஆகாய முதலிய ஐந்திற்கும் முறையே அக்ஷரங்களாம், மாயையின் வேறாகியும் அதிற் கட்டுப்பட்டுக் கிடை

ந்த ஆன்மாவுக்குக் காலதத்துவம் மின்னற் கதிர்போல இருட்டைச் சிறிது விலக்கித் தெருட்ட, அக்கலையினின்றும் அறிவுக்கு உபகரணமாயுள்ள வித்தியா தத்துவமும் அதினின்றும் போகத்துக்குக் கருவியாகிய அராகமுந்தோன்றும். அந்த அவதாரத்திலே ஆன்மா போகாதிகாரத்தைப் பொருந்தும். அவ்வதிகாரியையேபுருஷன் என்றுமேலேசொன்னது. அது உள்ளபடியே தத்துவமாகாமையின் தத்துவங்களோடு சேர்த்தெண்ணப்படாததாயிற்று. ஆன்மாவுக்கும் போகியமாயுள்ளன; பிரகிருதிமுதல் நிலமீறாயுள்ள இருபத்தைந்துமாம். சித்தம் சேர்த்தெண்ணப்படாமைக்கு நியாயமும் இது போன்றதேயாம்.

சைவசித்தாந்திகள் சுத்தசிவமாகிய பிரமும் ஆன்மாவும் மாயையும் நித்தியப்பொருள்களென்பார்கள். சுத்தசிவத்துக்குச்சிவதத்துவமும். சக்தியும் சதாசிவமும் திருமேனியாகும், சிவதத்துவத்திலே சுத்த சிவகலைஸ்தூலமாக சத்திகலை சூக்குமமாக நிற்கும் சத்திதத்துவத்திலே சிவகலையாதியுமாயிருக்கும். அதிலே சதாசிவம் சூக்குமமாகும் சதாசிவத்திலே சிவ கலைகாலும் சத்திகலை முக்காலுமாக விளங்கும். சிவதத்துவத்திலே ஆன்மாவும் சத்திதத்துவத்திலே மாயையும் அந்தர்க்கதமாய் நிற்கும். ஈசுர தத்துவத்திலே சிவகலை சைதந்யரூபமாகச் சத்திகலை மேம்பட்டு நிற்கும். சுத்தவித்தியா தத்துவத்திலே சைதந்யமும்மாயையும் சமப்பட்டுநிற்கச் சத்தியோங்கி நிற்கும். அந்தச் சுத்த வித்தையிலே அதோபாகத்திலுள்ள மாயையைச் சத்திநோக்கிநிற்க மாயை வேறாகிப் பிரியும். சிவதத்துவ முதலிய ஐந்தும் பிரேரகமாக மாயை முதலிய எழும் ஆன்மாவுக்குப்போகக்காண்டமாம். அவற்றின் கீழுள்ள இருபத்துநான்கும் போக்கியமாம். இவற்றின் உள்ளுறையெல்லாம் சிவ தத்துவ விருத்தியிற்காண்க. [வை.

தத்துவயம் - குருணியென்னு மோராளை

தத்துவராயர்-எண்ணூற்றெழுபது வருஷங்களுக்கு முன்னே வீரையென்னுந்தலத்திலே பிராமண குலத்தில் அவதரித்து, வடமொழி தென்மொழி இரண்டிலும்வல்லராய்ஞானகுருவைத்தேடித் தமது சகாத்யாயராகிய சொரூபாநந்தரோடு வெளிப்பட்டவர். இருவரும் தம்முள் யார் முதலிலே குருவையடைவாரோ அவரே மற்றவர்க்குக் குருவாகக் கடவரென்றேற்பாடு செய்துகொண்டு ஒருவர் வடநாட்டிலும் ஒருவர் தென்னாட்டிலுஞ்சென்றனர். தெற்கிற்சென்ற சொரூபாநந்தர் ஒரு குருவையடைந்து ஞான நூல்களையோதி மெய்யுணர்ந்தார். முன் செய்துகொண்ட எற்பாட்டின்படியே தத்துவராயர் சொரூபாநந்தரைகுருவாகக்கொண்டு ஞான சாத்திரங்களைக் கேட்டுத் தமக்கியற்கையாயுள்ள கவந சக்தியால் லோகோபகாரமாகச் சசிவர்ணபோதம், பாடுதுறை, சிவப்பிரகாச வெண்பா, தத்வாமிர்தம், அமிர்தசாகர வெண்பா, ஞானவிநோதன் கலம்பகம், தசாங்கம், நெஞ்சுவிடுதூது, கலிமடல், கலித்துறையந்தாதி, அஞ்ஞவதைப்பரணி முதலிய பல நூல்களைச் செந்தமிழாற்பாடி யருளினர். அஞ்ஞவதைப் பரணிபாடின சாதுரியம் மிகவும்வியக்கத்தக்கது. இவர்மெய்ஞ்ஞானிகளுள் ஒருவரென்பது அவர் செய்த நூல்களாலும் கர்ணபரம்பரையாலும் நிச்சயிக்கப்படும்.

தத்துவவாதம் - ஒருசமயம்.

தத்துவவாதி - ஒருசமயி.

தத்துவவிளக்கம்-தத்துவபேத மறிவிக்கும் ஒரு நூல்.

தத்துவன்-அதிகாரி, அரசன், அருகன், உண்மையுள்ளோன், உருத்திரன், கடவுள், பிரமன், விட்டுணு.

தத்துவாதி - ஒருவகைப் பார்ப்பான்.

தத்துவாதீதன் - கடவுள்.

தத்துவெடியன் - ஒருபூச்சி.

தத்தெறிதல்-அலையெறிதல், ஒருவிளையாட்டு.

தத்தேயன் - இந்திரன்.

தத்தை - ஜம்பன்மகள், ஹிரண்யகசிபன்பாரி
தத்தை-கிளி, முன்பிறந்தாள். [யை.
தநம் - சந்தனம், மனம்.
தநுச்சாயை - சரீரநிழல்.
தநுத்திராணம் - கவசம்.
தநுத்துவசம் } சிறுநெல்லிச்செடி.
தநுத்துவசை
தநுர்வேதம் - உபவேதம் நான்கினுள் ஒன்று,அது யஜுர்வேதச்சார்புடையது.
தநுநபம் - நெய்.
தநூருகம் - உரோமம், குருவிமயிர்.
தந்தகரிசம் } சுண்ணாம்பு.
தந்தகரிசனம்
தந்தகாட்டம் - தந்ததாவனக்குச்சு.
தந்தகாதகன் - அரிச்சந்திரனை மயக்குதற்காகவிசுவாமித்திரன்சிருஷ்டித்த ராக்ஷஸன்.
தந்தக்காரி - வாதமடக்கி.
தந்தக்குறி - பற்குறி.
தந்தக்கோரை - ஒருபுல்.
தந்தசடம்-எலுமிச்சமரம்,எலுமிச்சை, விளாமரம்.
தந்தசடை - புளியாரை.
தந்தசம் - பல், யானை முதலியவற்றின் கொம்பு.
தந்தசிரம் - பன்முரசு.
தந்தசீரை - பல்லீறு.
தந்தசுத்தி - பல்விளக்கல்.
தந்தசூகம் - பாம்பு.
தந்தசூகன் - துட்டன்.
தந்தசூலை - ஒருநோய்.
தந்ததாவனம் - தந்தசுத்தி, பற்குச்சி.
தந்தந்தண்ணீர் - அத்திபேதி.
தந்தபத்திரம் - ஒருமல்லிகை.
தந்தபலம் - விளாமரம்.
தந்தபலை - திப்பிலி.
தந்தபாகம் - யானைமத்தகம்.
தந்தபீஜகம் - மாதுளை.
தந்தப்பூண் - கிம்புரி.
தந்தமலம் - பல்லழுக்கு.
தந்தமாமிசம் - பன்முரசு.
தந்தமுத்து - யானைத்தந்தமுத்து.
தந்தம் - தாடி, பல், மலைச்சாரல், மலைமுடி, யானைக்கொம்பு.
தந்தயாவனம் - கருங்காலி
தந்தரீணம் - அரிசிக்கழுநீர்.
தந்தரோகம் - ஒருநோய்.
தந்தவக்த்ரன்-விருத்த சர்மனுக்கு வசுதேவன் தங்கையாகிய சுருததேவியிடத்துப்பிறந்தபுத்திரன்; இவனும் சிசுபாலனும் சநக சநந்தனர் சாபம் பெற்ற ஜயவிஜயர்களுடைய அவதாரம்;இவன் கிருஷ்ணனுற் கொல்லப்பட்டவன்.
தந்தவக்கிரன்-இடையெழு வள்ளலில் ஒருவன், சிவன்.
தந்தவத்திரன் - சிவன்.
தந்தவஸ்திரம் } உதடு.
தந்தவாசா
தந்தவேட்டம் - பன்முரசு.
தந்தாயுதம் - பன்றி.
தந்தாலிகை - கடிவாளம்.
தந்தாவளம் - யானை.
தந்தி - ஆண்யானை, கம்பி, நரம்பு, நெய்வோன், நேர்வாளம், பாம்பு, யாழ் நரம்பு, யானை.
தந்திகர்ணி - மெருகன்கிழங்கு.
தந்திபீசம் - நேர்வாளம்.
தந்திப்படல் - எரிச்சற்படல்.
தந்திமதம் - யானைமதம்.
தந்திமுகன் - விநாயகன்.
தந்தியம் - பல்லழுக்கு.
தந்தியுரியோன் - சிவன்.
தந்திரகம் - சீந்தில், நூதனவஸ்திரம்.
தந்திரகலை - ஆகமத்திேனார்பகுதி.
தந்திரபாலன் - படைத்தலைவன்.
தந்திரமணம் - மிருதுநடை.
தந்திரமா - நரி.
தந்திரம்-அலங்கரிப்பு, உபாயம், ஒரு குளிகை, கல்விநூல், கிரியை,கூட்டம், திருட்டாந்தம், நூல், படை, புடைவை,மிகுகளிப்பு, முதனூல், யாழ்நரம்பு, வீடு, வேதத்தினோர் பகுதி.
தந்திரயுத்தி - நூலுத்தியா னமைக்கப்படுபொருள்.
தந்திரர் - கந்தருவர், தந்திரக்காரர், தந்திரியர்.
தந்திரவாதம் - ஒருசமயம்.
தந்திரவாயன் - சிலம்பி, நெய்வோன்.
தந்திரவிபன் - நெய்வோன்.
தந்திராகமம் - தந்திரகலை.
தந்திரி - தந்திரக்காரன், படைத்தலைவன், மந்திரி, யாழ்நரம்பினோசை, யாழ்நரம்பு.

தந்திரிகாம் - செங்கோட்டியா முறுப்பி னுள் ஒன்று.
தந்திரிபாலன்-அஞ்ஞாதவாசத்தில்சகா தேவன் கொண்ட பெயர்.
தந்தரிகை - கம்பி, சோம்பு.
தந்திரை - சோம்பல், நித்திரை.
தந்திவந்தநம் - சுதலலோகம்.
தந்திவீழுரியோன் - சிவன்.
தந்து-கல்வி நூல், சந்ததி, தந்திரம், தந் தென்னெச்சம்,நூல்,பஞ்சிநூல்,பல காற்கேட்டல்.
தந்துகடம் - சிலம்பிப்பூச்சி.
தந்துகம் - கடுகு.
தந்துகி - நாடி.
தந்துகீடம் - சிலம்பிப்பூச்சி.
தந்துசாரம் - கமுகு.
தந்துசாலை - நெசவுவீடு.
தந்துநாபம் } கடுகு, பசுவின் கன்று.
தந்துபம்
தந்துமந்து - குழப்படி, சந்துமந்து.
தந்துமாரன்-சங்கவர்ணர் என்னும் நாக ரிகராலே பாடப்பட்ட ஒரு பிரபு.
தந்துரம் - தாமரைக்கொடி.
தந்துரன் - உயர்பல்லன்.
தந்துலம் - தாமரைக்கொடி.
தந்துரை - பாயிரம்.
தந்துரைத்தல்-கொணர்ந்து புணர்த்திச் சொல்லல்.
தந்துவர் - நெய்வோர்.
தந்துவாபன் } சிலம்பி,நெய்வோன்.
தந்துவாயன்
தந்துவாயி - நெய்வோன்.
தந்துவிக்கிரியை - வாழை.
தந்தை - பிதா.
தபகிருஷன் - தபத்தி.
தபசம் - பறவை.
தபசன் - சந்திரன்.
தபசி - தவசி.
தபசியம் - பங்குனிமாதம், முல்லைப்பூ.
தபசியன் - அருச்சுனன்
தபசு - தவம்.
தபதாபிகாரம்-அக்கினியைப் பார்த்தல்.
தபதி - சம்வருணன்பாரி, குருவினது தாய், சூரியன் புத்திரி, சூரியன் மனைவி.
தபதியா-கம்மாளர், தச்சர்.
தபத்தர் - தபோதனர்.
தபத்தி - தவத்தி.

தபந்தநயை-யமுனையாறு,வன்னிமரம்.
தபநாத்துமசை } கோதாவரி.
தபதி
தபநேஷ்டம் - தாமிரம்.
தபம் - தவம், மாசிமாதம், வெப்பம், வெயிற்காலம்.
தபலை - சருவக்குடம்.
தபலோகம் - தபோலோகம்.
தபனகரம் - சூரியகிரணம்.
தபனமணி - சூரியகாந்தம்.
தபனம் - தாகம், மனத்துயர், வெப்பம், வெய்யிற்காலம்.
தபனற்கஞ்சி - மஞ்சள்.
தபனன்-அக்கினிதேவன்,கொடுவேலி, சூரியன், நெருப்பு.
தபனீயகம் } பொன்.
தபனீயம்
தபன்-அங்கிரசன்சந்ததியாராகிய காசி பன், வசிட்டன், பிராணன், அங்கிர சன், சயவநன் என்னும் ஐவருக்கும் பிறந்தபாஞ்ச ஜந்யன்என்னும்அக்கி, சூரியன்.
தபாது - தப்பிதம்.
தபாத்தியம் - மாரிகாலம்.
தபித்தல் - தவித்தல்.
தபிலை - தபலை.
தபுதல் - கெடுதல், சாதல்.
தபுதாரநிலை } ஊடியதலைவியைத் தலை
தபுதாரம் } வன்காதலித்திருத்தல், மனைவிக்காகப் புலம்பல்.
தபோதனர் - முனிவர்.
தபோதினி - முனிவன்.
தபோதி - தவத்தி.
தபோதுக்கம் - உலகவெறுப்பு.
தபோநிதி - தபத்தி.
தபோபலம் } தவப்பலன்.
தபோபுண்ணியம்
தபோபுத்திரன் - தவத்தினாற்பெற்ற பிள்ளை.
தபோமகிமை-தவமேன்மை.
தபோமயம்- ஒருவனம், தவத்தின்றன்மை.
தபோராசி - தவத்தி.
தபோலோகம்-மேலேழுலகிலொன்று.
தபோவனம் - தவவனம்.
தப்தசிலாசயனம் - காய்ந்த பாறையிற் படுத்தல்.
தப்தகும்பம் ஒருநரகம். இது நெருப்புரு வாகக் காய்ச்சிய எண்ணெய்க்குடங்க

ளால் நிறைந்துள்ளது. பாவிகள் இக்குடங்களில் தலைகீழாக அமிழ்த்தியெடுக்கப்படுவார்கள்.
தப்தாயபிண்டம் - காய்ந்த இரும்புருண்டை.
தப்பட்டை - ஒருபறை
தப்பவைத்தல்- நீங்கினின்று விலக்கிக்காத்தல்.
தப்பளை - ஒருமீன், சளியல், தவளை, பெருவயிறு.
தப்பறை - கபடம், கெட்டமொழி, தப்பு, பொய்.
தப்பிதம் - குற்றம், தப்பு.
தப்பிலி - தப்பில்லாதவள், தப்பில்லாதவன், போக்கிரி.
தப்பு - ஒருமேளம், கபடம், குற்றம், தப்புதல், தப்பென்னேவல், வழு.
தப்புதல் - சப்பளித்தல், சீலைதப்புதல். தவறுதல், பிழைத்தல், விலகுதல்.
தப்புத்தண்ணீர் - பரவுதண்ணீர்.
தப்புமேளம் - ஒருபறை.
தப்புவீணை - ஒருவீணை.
தப்பை-முறிந்தவென்புபொருந்தவைத்துக்கட்டுமட்டை, மூங்கிற்பற்றை.
தமகன் - கொல்லன்.
தமக்குதல் - தணித்தல், நிரப்புதல்.
தமக்கை - அக்காள்.
தமசம்-உருள், கிணறு, பட்டினம்.
தமசு ஒருநரகம். இது அந்தகாரரூபமாயுள்ளது.
தமசு - இருள், தாமசம்.
தமசை - ருக்ஷபர்வதத்திலுற்பத்தியாகுமொருநதி.
தமளையணி - வீதி.
தமதமெனல் - ஒலிக்குறிப்பு.
தமதை - ஒருநதி.
தமதம்-பஞ்சேந்திரியநிக்கிரகம், விருப்பம்.
தமதன் - விருப்புள்ளோன்.
தமது - தடி, தம்முடையது.
தமப்பன் - தகப்பன்.
தமப்பிரவை - ஏழ் நரகவட்டத் தொன்று, அது இருணிலம்.
தமம்-இராகு, இருள், கன்மேந்திரியங்களிற்போகாதுமனதைமறித்தல், கீழ்ப்படுதல், ஞானேந்திரியம், சேறு, தன்னையடக்கல், திக்கம், நிக்கிரகம், பஞ்சமாயையி னொன்று. அது சீவசைதன்னியத்தைமறைக்கைபாவம், யாகசாலை.
தமயந்தி - நளன்பாரி, விதர்ப்பராஜனுகிய வீமன் புதல்வி, மல்லிகையில் ஒருபேதம்.
தமயன் - மூத்தோன்.
தமரகம் - உடுக்கு, வங்கம்.
தமரகவாயு - நெஞ்சடைப்பு.
தமரகவொலி - கிலுகிலுப்பை.
தமரத்தை - ஒருமரம்.
தமரம் - அரக்கு, ஈயம், பேரொலி.
தமரல் - பெரிதொலித்தல்.
தமராசம் - ஒருவகைச் சர்க்கரை.
தமராணி - துளையாணி.
தமரிடுதல் - துளைத்தல்.
தமரித்தல் - ஆர்த்தல், விரும்பல்.
தமரிப்பு - ஆர்ப்பு, விருப்பம்.
தமருகம் - உடுக்கு.
தமருதல் - ஒலித்தல்.
தமரூசி - துளையூசி.
தமரோசை - கிலுகிலுப்பை.
தமர் - உறவோர், துளை, மூடர்.
தமர்ப்படுத்தல் - இணங்கல், விரும்பல்.
தமலிப்தர் - கங்கைக்கு மேற்கேயுள்ள தேசவாசிகள்.
தமள் - தம்மவள்.
தமனகம் - மருக்கொழுந்து.
தமனகன் - ஒரு நரி.
தமனம் - தவனம், மருக்கொழுந்து.
தமனன் - பண்டிதன், வீரன்.
தமனி - வன்னிமரம்.
தமனிகை-மேனகைமகள், பக்ஷிவரன் பாரி, தார்க்ஷிதாய்.
தமனியம் - பொன்.
தமனியன்-இரணியன், சனி, பிரமன்.
தமன்-இராகு, கடவுள், கிருட்டிணன், சந்திரன், தம்மவன்.
தாமாசி - சேலி, பரிகாசம்.
தமார்க்கவம் - பீர்க்கு.
தமாலகிரி - கீழ்வாய்நெல்லி.
தமாலதளம் - பச்சிலை.
தமாலபத்திரம் - திலகமரம்.
தமாலம்-இலை, நுதற்குறி, பச்சிலைமரம், பட்டயம், மூங்கிற்குருல்.
தமி-இரவு, ஒலம், ஒப்பின்மை, தவனம், தனிமை.
தமிசிரப்பக்கம் - அபரபக்கம்.
தமிசிரம் - குறைவு.
தமிசு - வேங்கைமரம்.

தமிதம் - குருசிட்டி.
தமித்தல் - தணித்தல்.
தமியம் - கள்.
தமியன் - தனித்தவன், வறியவன்.
தமிழத்தி - தமிழப்பெண்.
தமிழர் - பாடைக்காரர்.
தமிழிச்சி - தமிழத்தி.
தமிழெல்லை - தமிழ்வழங்குமெல்லை.
தமிழோர் - தமிழ்ப்புலவர்.
தமிழ் - குணகடல், குமரி, குடகம், வேங்கடம் என்னும் நான்கெல்லைக் குட்பட்ட நாட்டிலே வழங்கிவருவதோர் பாஷை. இது திரமிளம் என்னும் வடசொற்சிதை வென்றுஞ் சில ஆசிரியர். தமிழ் என்னுஞ் சொல்லுக்குப்பொருள் இனிமை.
தமிழ்க்கூத்தர் - தமிழ்நாடகர்.
தமிழ்நடவை - தமிழ்வழங்குமிடம்.
தமிழ்நாடன் - பாண்டியன்.
தமிழ்நாடு - பாண்டிதேசம்.
தமிழ்மலை - பொதியமலை.
தமிழ்முனி - அகத்தியன்.
தமிழ்வாணர், தமிழ்வாழ்நர் } தமிழ்ப்புலவர்.
தமிழ்வேதம் - திருவள்ளுவர் குறள், திருமந்திரம், திருவாசகம், தேவாரம், வேதாந்த சூத்திரம்.
தமுக்கம் - யானையைப் போருக்கனுப்புமிடம்.
தமுக்கு - ஒருபறை.
தமுவ்ஷ்டரி - சுக்கிரன்மகள், தைத்தியர்குரு.
தமை - புறக்கணதண்டம்.
தமையந்தி - நளன்றேவி.
தமையம் - அரிதாரம்.
தமையன் - அண்ணன்.
தமோகரன் - சந்திரன்.
தமோக்கினன் - அக்கினி, சந்திரன், சிவன், சூரியன், புத்தன், விட்டுணு.
தமோபகம் - வெளிச்சம்.
தமோபகன் - சந்திரன், சூரியன், புத்தன்.
தமோமனு - மின்மினி.
தமோவிகாரம் - நோய்.
தமோனுதன் - சந்திரன், சூரியன், விளக்கு.
தம் - அசைச்சொல், கொடை, சாரியை தர்க்காத்தல், நல்முகுர்த்தம், பங்கிடுதல், புண்ணியம், மகாவாக்கிய நான்கினொன்று, மனையாட்டி.
தம்பட்டம் - ஒருபறை.
தம்பட்டை - ஓரவரை.
தம்பதி - ஸ்திரீபுருடர், வதூவரர்கள்.
தம்பபிஹுஷியம் - கிடைத்ததையுண்ணல்.
தம்பம் - வஞ்சனை, கவசம், கோபம், சங்கீதம், தூண், நிலை, பற்றுக்கோடு, பாவம், யானைத்தறி.
தம்பலடித்தல் - பயிருழவுழுதல்.
தம்பலப்பூச்சி - இந்திரகோபம்.
தம்பலம் - இந்திரகோபம், வெற்றிலைச்சாரம்.
தம்பலாடுதல் - சேறுக்குதல்.
தம்பலி - மருதமரம்.
தம்பலை - திலவிந்தை, பாக்குவெட்டிமரம்.
தம்பல் - சேறு தம்பலம், தம்புதல்.
தம்பளகம் - மண்வெட்டி, மரக்கொத்து.
தம்பனகாரன் - தம்பனவித்தைக்காரன்.
தம்பனம் - தம்பித்தல், அது அட்டகருமத்தொன்று, மண்வெட்டி, மரக்கொத்து.
தம்பாக்கு - சொகுசா.
தம்பி - தம்பிபெண்ணேவல், பின்னோன்
தம்பித்தல் - தடுத்தல், நிறுத்தல்.
தம்பிராட்டி உடன்கட்டையேறுபவள்.
தம்பிரான் - கடவுள், கட்டளைப்படி நடத்துவோன், திருக்கூட்டத்தலைவன்.
தம்புதல் - கிட்டமாதல்.
தம்புரு - ஒருவீணை.
தம்போலி - வச்சிராயுதம்.
தம்மவன் - சுற்றத்தான்.
தம்மனை - தாய்.
தம்மிடுதல் - தடைப்படல், தணிதல்.
தம்மிலம் - மயிர்முடி.
தம்முன் - தமையன், முன்னோன்.
தம்மை - தாய்.
தயக்கம் - அசைவு, ஒளிதரல், கலக்கம், பிரபை.
தயங்கல் - அசைதல், இளைத்தல், ஒளிசெய்தல், திகைத்தல்.
தயமணற்குன்றம் - கருமணல்.
தயவு, தயா } தயை.
தயாகரம் - இரக்சம்.
தயாகூர்ச்சன் - புத்தன்.
தயாசீலம் - தயையானகுணம்.
தயாபரன் - கடவுள் கிருபையுடையோன்.

தயாமூர்த்தி - கிருபாரூபி, கிருபைக் கடவுள்.
தயாலு - தயாளன்.
தயாலுத்துவம் - உருக்கம்.
தயாவம் - தயை.
தயாவிருத்தி - தயைசெய்தல்.
தயாளமலர்க்குழல்நாயகி - திருக்கடவூர் மயானத்திலே கோயில்கொண்டிருக்கும் அம்மன் பெயர்.
தயாளம் / தயாளத்துவம் } கிருபை.
தயாளன் - கிருபையுடையோன்.
தயாளு - கிருபாளு.
தயிதம் - பிரியவஸ்து.
தயிதை - ஸ்திரீ, மனைவி.
தயிரியம் - தைரியம்.
தயிரேடு - பாலாடை.
தயிர் - உறைந்தபால், அது பஞ்சகௌவியத் தொன்று.
தயிர்கடைதறி - மத்துப்பிடி.
தயிர்கடைதாழி - தயிர்கடை பாத்திரம், மத்து.
தயிர்க்கடல்-சத்தசமுத்திரத்தொன்று.
தயிர்ச்சாதம்-சித்திரான்னத்தொன்று.
தயிர்தோய்த்தல்-பாலுறையவைத்தல்.
தயிர்வளை / தயிர்வேளை } தைவேளைப்பூடு.
தயிலகித்தம் - பிண்ணாக்கு.
தயிலசாதனம் - நாவிநெய்.
தயிலபாணிகம் - வெண்சந்தனம்.
தயிலபிபீலிகை - எறும்பு.
தயிலபீதம் - அத்திப்பிசின்.
தயிலமாடுதல் - எண்ணெய் பொருத்துதல்.
தயிலமாலி - எண்ணெய்த்திரி.
தயிலமிறக்குதல் / தயிலமெடுத்தல் } சத்து வாங்குதல், தயிலம் வடித்தல்.
தயிலமெரித்தல் - சுடர்த்தயில மிறக்குதல்.
தயிலம் - எண்ணெய்.
தயிலம்வைத்தல் - அடக்குதல், எண்ணெய்ப் பொருத்துதல்.
தயிலகாதன் - எண்ணெய்க்காரன்.
தயினியம் - எளிமை.
தயை - கிருபை.
தயை - தாட்சண்ணியம், உருக்குமான விரக்கம்.
தயோமித்தம் - தசநாடகத்தொன்று.
தரகண்டிகை - யானைநெருஞ்சில்.
தரகன் - விற்பனவு கொள்வனவை பொருத்துவோன்.
தரகு - ஓரளவு, ஒருபுல், தரவு.
தரக்கு - புலி, புலிக்குட்டி.
தரங்கம் / தரங்கர் } இக்கட்டு, கடல், கலக்கம், நீர்த்திரை.
தரங்கன்பாடி - ஒருபட்டினம், கடலைச் சார்ந்த வூர்.
தரங்கிணி - யாறு.
தரங்கு - ஈட்டிநுனி, தங்கல், வழி.
தரசம் - மாமிசம்.
தரணம் - அரிசி, இமயமலை, சூரியன், தரித்தல், தாண்டல், பாவம், பூமி.
தரணி - சூரியன், நீர்ப்பெருக்கு, பூமி, மலை, மேனைபுத்திரிகளிலொருத்தி. பரசுராமன் மனைவி.
தரணிகீலகம் - மலை.
தரணிதரன் - அரசன், திருமால்.
தரணிரத்தினம் - மாணிக்கம்.
தரணிவாரிக்கல் - கானக்கல்.
தரணீசுதை - சீதை.
தரணீசுவரன் - அரசன், சிவன், மலையரசன்.
தரணீதரம் - ஆமை.
தரணீதரன் - அரசன், ஆமை, திருமால்.
தரணீபூரம் - சமுத்திரம்.
தரந்தம் - கடல், தவளை, விடாமழை.
தரபடி - நடுத்தரம்.
தரம் - அச்சம், அரக்கு, குண்டு, கூட்டம், சங்கு, சமானம், தரிக்கை, தலை, தெப்பம், பக்கை, வலி, வீதம்.
தரல் - தருதல், தாராயென்னுமுற்று.
தரவழி - நடுத்தரம்.
தரவாய் - சமயம்.
தரவிணைக்கொச்சகக்கலிப்பா - ஒருதரவு பெற்றுவருங் கொச்சகக்கலிப்பா.
தரவு - தண்டற்காரன், தலைவன் கட்டளைபிடாரி, வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா அம்போதரங்க வொத்தாழிசை கலிப்பா கட்காறடியாயும் மற்றைக் கலிப்பாகட்கு மூன்றடி முதலிய பலவடிகளாயுந் தாழிசைக்கு இரண்டடி முதனான்கடி யளவாயும் வருவது, விற்பன கொள்வனவைப் பொருத்துதல்.
தரவுகொச்சகக்கலிப்பா - ஒருதரவுபெற்று வருவது.

தரவுவண்ணம்-சொற்சீரடித்தாய நூலுடன் பயிலுவது.
தரவை-கரம்பு, களர்மூடிய உவர்நிலம்.
தரளம் - அசைவு, திரட்சி, முத்து.
தரளை - கஞ்சி, கள்.
தரன்-அனுமகள், இவன் அந்தகன் எனவும் படுவன். அட்டவசுக்களில் ஒருவன், தரித்தவன்.
தரா-ஒருகசப்புக்கீரை சங்கு, பூசநாள், பூமி, பொன்னுதியேழுலகத்தொன்று.
தராகதம்பம் - கடம்பு.
தராங்கம் - மலை.
தராசம் - ஒளிசலித்தல்.
தராசு-சமானம், துலாராசி, நிறைகோல், பரணிநாள், வெள்ளெருக்கு.
தராசுகுண்டு - நிறைகல்.
தராசுக்கொடி-பெருமருந்து, முல்லை.
தராசுக்கோல் - தராசுத்துலா.
தராசுத்தட்டு - கன்னத்தட்டு.
தராசுநா - தராசூசி.
தராசுப்படி - நிறைகல்.
தராசுமுள் - தராசூசி.
தராதரம் - இனம், தரம், திறம், மலை.
தராதரன் - திருமால்.
தராதலம்-கீழேழுலகிலொன்று, திறம், பூமி.
தராத்துமசன் - செவ்வாய்.
தராபதி - இராசா.
தராமரன் - பூதேவன், பூதேவி.
தராலயம் - சவாசநம், பாடை.
தரி - தரிப்பு, தரியென்னேவல்.
தரிகபூரணமாசம்-யாகமிருபத்தொன்றிளொன்று.
தரிசயாமினி - அமாவாசியிரவு.
தரிசவிபத்து - சந்திரன்.
தரிசனபேதி-காட்சியிலிரும்பைப் பொன்னுக்கு மருந்து.
தரிசனம்-அறிவு, கண், கண்ணாடி, கனு, காட்சி, திறம், பளிங்கு, யாகம்.
தரிசனவேதி - தரிசனபேதி.
தரிசனாவரணியம்-எண்குற்றத் தொன்று, அது காட்சி மறைப்பு.
தரிசனீயம் - அழகுள்ளது, காணப்படுவது.
தரிசனை - கண்ணாடி, காட்சி.
தரிசன் - தாதாவுக்குச் சினீவாலியிடத்துப் பிறந்த புத்திரன்.
தரிசி - தரியென்னேவல், தரிசிப்பவன்.
தரிசிதம் - அறியப்பட்டது, விடயம்.

தரிசித்தல் - காண்டல்.
தரிசியம் - தரிசனீயம்.
தரிசு - சரிசு, விளையாநிலம்.
தரிஞ்சகம் - அன்றில்.
தரிதம் - அச்சம், பீறல்.
தரிதன் - பயந்தவன்.
தரித்தல் - அணிதல், சகித்தல், தங்கல், தாங்குதல்.
தரித்திரம் - வறுமை.
தரித்திரன் - வறியன்.
தரித்திராயகன் - எளியவன்.
தரித்திரி - பூமி, வறியவள்.
தரித்திரிதன் - எளியவன்.
தரித்திரியம் - வறுமை.
தரித்துவம் - தரித்தல்.
தரிப்பித்தல் - அணியச்செய்தல், தரிக்கப்பண்ணல்.
தரிப்பு - இருப்பிடம், கைப்பணம், ஞாபகம், தரித்தல், நிறுத்துமிடம்.
தரியலர் } பகைவர்.
தரியலார் }
தரு - ஒருசந்தம், ஒருவகைச்சுதிப் பிரமாணம், தேவதாரம், மரம்.
தருகை - ஈகை.
தருக்கன் - கேட்கிறவன், தருக்கி, மன்றுட்டக்காரன்.
தருக்கசாத்திரம் - நியாயநூல்.
தருக்கசிந்தாமணி - தர்க்கசாத்திரத்தில் ஒன்று.
தருக்கம் - நியாயசல்லபம், வாது.
தருக்கல் அகங்கரித்தல், சிலாநாகக்கல்.
தருக்கவித்தியை - தருக்கசாத்திரம்.
தருக்கி - செருக்கன், தருக்கசாலி.
தருக்கித்தல் - தர்க்கித்தல்.
தருக்கு-அகங்காரம், எழுச்சி, கதிர், களிப்பு, சௌரியம், தருக்கென்னேவல்.
தருக்குதல் - அகங்கரித்தல், களித்தல், வீரங்கொள்ளுதல்.
தருசணம் அவசங்கை, கோபம், புணர்ச்சி.
தருசணி - வேசி.
தருசம்-ஊணம், பெருமை, பொறுமை.
தருசாயி - பறவை.
தருசாரம் - கர்ப்பூரம்.
தருசீவநம் - மரவேர்.
தருசு - இழைபொத்திருக்கை.
தருச்சகன் - [illegible], வாயில்காப்போன்.

தருச்சனம் - குற்றப்படுத்தல், கோபம், நிந்தைப்படுத்தல்.
தருச்சாரம் - கருப்பூரம்.
தருச்சிதம் - தாகம், விருப்பம்.
தருணதை - தருணி.
தருணநாரி - சிறுநன்னாரி.
தருணம் - ஆமணக்கு, இளமை, எண்ணம், சமயம், புதுமை, பெருஞ்சீரகம், மோட்சம்.
தருணர் - காளைப்பருவத்தோர்.
தருணன் - காளை, பாலியன், பிரமன்.
தருணாஸ்தி - கொழுப்பு.
தருணி - இளம்பெண், கற்றாழை, சூரியன், தெப்பம், பெண்பருவநான்கில் ஒன்று, அது பதினாறுவயது தொடங்கி முப்பது மட்டும்.
தருணீகணம்-இளம்பெண்கள் கூட்டம்.
தருதல் - உண்டாக்கல், கொடுத்தல்.
தருத்தமணி - மரமஞ்சள்.
தருத்தரம் - மலை.
தருநகம் - முள்.
தருநிறப்பஞ்சரம் - காந்தம்.
தருப்பகம் - தாழ்மை.
தருப்பகன் - காமன்.
தருப்பசயனம் - இராமர்சேதுபந்தனஞ் செய்யத்தங்கின ஒரு தலம், தவத்தோர் தவசின்னென்று.
தருப்படன் - ஊர்க்காவற்காரன்.
தருப்பணம் - ஓமவிறகு, ஒருசடங்கு, ஒருதாளம், கண்ணாடி, சுவாலை, திருத்தியாக்கல், மந்திர நீரிறைத்தல், மனத்திருத்தி.
தருப்பம் - நாவிச்சட்டம், பெருமை, வெப்பம்.
தருப்பன் - துட்சணன்.
தருப்பி - அகப்பை, சருப்படம்.
தருப்பித்தல் - கடவுளுக்குத் தன்னையொப்பிவித்தல், தருப்பணஞ் செய்தல்.
தருப்பு - ஒருகல்.
தருப்பை - தெர்ப்பை.
தருமக்கட்டை - அநாதபிள்ளை, ஆவுரிஞ்சுதறி.
தருமக்கருத்தர் - நீதிதீர்க்குநடுவர்.
தருமக்கிழத்தி - தருமதேவதை.
தருமக்கிழவர் - தருமவான்கள், வைசியர், பொது.
தருமசங்கடம் - காரியமுட்டுப்பாடு.
தருமசங்கிதை - நீதிசாத்திரம்.
தருமசத்திரம் - அறச்சாலை.
தருமசபை - தருமச்சங்கம், நீதித்தலம்.
தருமசமஸ்காரம்-அனாதப் பிரேதஞ்சுடுதல்.
தருமசாதனம் - தருமங்கொடுத்த பொருளினுறுதி.
தருமசாது - நற்குணன்.
தருமசாத்திரம் - கலைஞான மறுபத்து நான்கில்ஒன்று.தருமநூல்,ஸ்மிருதி.
தருமசாலி - தருமஞ்செய்வோன்.
தருமசாலை - தர்மசாத்திரம், நியாயஸ்தலம்.
தருமசாவன் - ஒருமனு.
தருமசிந்தனம் - தருமசிந்தை.
தருமசிவாசாரி - வைசியகுரு.
தருமசீலன் - தருமசாலி.
தருமசுதன் - உதிட்டிரன்.
தருமசேத்திரம் -பாரதர்பொருதவிடம்.
தருமச்சக்கிரம் - அருகனுடைய தருமசாதனச்சக்கிரம்.
தருமச்சங்கம்-அறச்செயற்கடுத்த கூட்டம்.
தருமச்செல்வி - தருமதேவதை.
தருமச்சேத்திரம் - குருக்கேத்திரம்.
தருமணற்சுக்கான் - கருமணற்சுக்கான் கல்.
தருமதேவதை-இயக்கிதேவி, உத்தமி, நந்தி.
தருமத்திரவி - கங்கை
தருமத்துவம்-சன்மார்க்கம், தேவபத்தி.
தருமநடை - புண்ணியவொழுக்கம்.
தருமநந்தனன் - தருமபுத்திரன்.
தருமநாள் - பரணிநாள்.
தருமநியாதம், தருமநீதி } தருமமுறை.
தருமநூல் - தருமசாத்திரம்.
தருமபத்தினி - இல்லொழுக்கத்தில் திறம்பா மனைவி.
தருமபாகினி-இல்லொழுக்கத்திற்குரிய மனைவி.
தருமபாடகன் - வேதபோதகன்.
தருமபிரவத்திரு-வேதவியார்த்திகாரன்
தருமபுத்திரன் - பாண்டவரின்மூத்தோன். முதுமையில் தந்தையைப்போற்றுவோன்.
தருமபுரம் - இயமலோகம், ஒருதலம்.
தருமபுருஷன் - தருமசீலன்.
தருமபுரேசர்-திருநள்ளாற்றிலே திருக்கோயில் கொண்டிருக்கும் சுவாமி திருநாமம்.
தருமம்-அம்பு,அறம், அதுஇராசதகுணத்துளொன்று, இயல்பு, உபநிடதம்,

ஒப்பு, சுத்தம், தொழில்,நல்லொழுக்கம், நியாயப்பிரமாணம், யாகாதிகருமம், வேதம்.
தருமாசன்-அருகன், குந்திமுதற்புதல்வன், நமன், பாலைமரம், புத்தன்.
தருமவாகனன் - சிவன்.
தருமவாசரம் - பூரணை.
தருமவாட்டி - தருமசீலி.
தருமவாளி, தருமவான் } தருமசீலன்.
தருமவிலபவம் - துன்மார்க்கம்.
தருமன்-எமன், குந்திபுதல்வரில் ஒருவன் சன்மார்க்கன்பதினைந்தாம் புத்தன்.
தருமாசனம் - நீதாசனம்.
தருமாதிகாணம் - நியாயஸ்தலம்.
தருமாதிகாரி-நியாயவிசாரணைக்காரன்.
தருமாத்தி - தருமச்சங்கத்தலைவன்.
தருமாத்திகாய்ம் - புண்ணியவுடம்பு.
தருமாத்தியட்சன் - நீதியதிபன்.
தருமாத்துமா - சுத்தன்.
தருமாபேதம் - நியாயத்தவறு.
தருமி - தருமவாட்டி, தருமவான்.
தருமிட்டான் - நன்மைப்பிரியன்.
தருமிருகம் - குரங்கு.
தருமோபதேசகன் - குரு.
தருராகம் - தளிர்.
தருராஜம் - பனைமரம்.
தருவாய் - தறுவாய், சமயம்.
தருவாரி - கல்லுப்பு.
தருவி - சட்டுவம்.
தருவித்தல் - தரச்செய்யல்.
தருவிராசன் - பனைமரம்.
தருடம் - தாமரைப்பட்டம்.
தரை-ஆணித்தலை, கருப்பாசயம்,நரம்பு, பூமிமூலை.
தரைப்பங்கு - நிலவாரம்.
தரைமட்டம் - நிலவொப்பரவு.
தரையிலாக்குருவி - ஒருகுருவி.
தரைவாரம் - தரைப்பங்கு.
தரோதரம் - சூது, பந்தயம்.
தரோதரன் - சூதாடுவோன்.
தர்க்கசங்கிரகம் - அன்னம்பட்டர் வடமொழியில் செய்த நியாயநூல், சிவஞானமுனிவர் அதனைத் தமிழிலே மொழி பெயர்த்து அதற்குத் தர்க்கசங்க்ரஹம் என்னும் பெயரையே சூட்டினர்.
தர்க்கம் - தருக்கம்.
தர்ச்சனி - சுட்டுவிரல்.
தர்ப்பகன் - தருப்பகன், மன்மதன்.
தர்ப்பணம் - தருப்பணம்.
தர்ப்பம் - கர்வம், கஸ்தூரி.
தர்மநேத்திரன் - ஹேகயன் புத்திரன்.
தர்மபக்ஷிகள்-பிங்காக்ஷன், வியோதன், சுபுத்திரன்,சுமுகி என்னும் நான்கு பக்ஷிகள். பூர்வகாலத்தில் விபுலன் என்னும் முனிக்குச் சுகுருசன், தும்புரன் என இரண்டு புத்திரர் பிறந்தார்கள். இந்திரன் பக்ஷிரூபமெடுத்து சுகுருசனிடஞ் சென்று நரமாமிசம் தருகவென்று கேட்டான். சுகுருசன் தன் மைந்தர் நால்வரையும் நோக்கி, உங்களிலொருவன் இவருக்கு இரையாகுகவென்றான். அதற்கு ஒருவரும் உடன்படாதது கண்டு, நால்வரையும் பக்ஷிகளாகும்படி சபித்தான். அதனால் அவர்கள்பக்ஷிகளாகி ஜைமினி முனிவருக்குச் சந்தேகம் தீர்த்துச் சாபநிவர்த்தியடைந்தார்கள்.
தர்மம் - தருமம்.
தர்மஷணன்-ஸ்ருஞ்ஜயன் இரண்டாம் புத்திரன்.
தர்மரதன் - சித்ரரதன் புத்ரன்.
தர்மராஜன்-பாண்டவர்களுள் மூத்தோன் தாய் குந்தி, இவன் யமப்ரஸாதத்தால் பிறந்தவன். யுதிஷ்டிரன் என்பது இவனதியற்பெயர். இவனுக்கு த்ரௌபதியிடத்துப் பிறந்தபுத்திரன் ப்ரதிவிந்த்யன்.
தர்மவியாதன்-மிதிலாநகரத்திற் பிறந்த ஒரு குறவன். இவன் குருபத்தி முதலியநல்லொழுக்கமுள்ளவன். இவன் பூர்வத்திலே பிராம்மணனாயிருந்து சாபத்தால் இந்தச் சநநமெடுத்துக் கௌசிகனென்னும் பிராமணனால் ஞானோபதேசம் பெற்றவன்.
தர்மவிரதன் - தண்டகாரணியத்திலிருந்தவோரிருடி. இவர் ஸ்ரீராமருக்கு பஞ்சாப்ஸரஸினது வரலாறு கூறினவர்.
தர்மன்-பிரமகன் பெற்றவொரு தேவனை. இவனுக்கு சமன், காமன், ஹர்ஷன் என மூவர் குமாரர். பிருதுசிரவன் மகன் தர்மராஜன்.

தர்மாரணியம் - இது குசன் மக்களுள் ஒருவனாகிய ஆர்த்தராஜன் என்பவனால் உண்டாக்கப்பட்ட நகரம்.
தலகபாடம் - இலைக்கதவு, முகை.
தலகம் - தடாகம்.
தலகாணி - தலையணை.
தலகிருதயம் - உள்ளங்கால்.
தலசுத்தி - தலபுனிதம்.
தலசூசி - முள்.
தலதரிசனம் - புண்ணிய க்ஷேத்திரக் கட்சி.
தலத்தாது - நிலப்பனை.
தலத்தார் - புண்ணியக்ஷேத்திரத்தார்.
தலபம் - சாத்திரம், பொன்.
தலபுஷ்பம் - தாழை.
தலபம் - மான்.
தலபுராணம் - தலவிசேட முரைக்குஞ் சரித்திரம்.
தலபோடகம் - ஆவிரை.
தலமகிமை - க்ஷேத்திரமகான்மியம்.
தலம் - ஆழம், இடம், இலை, உலகின் பொது, உள்ளங்கால், கருவியுறை, கலப்பு, காடு, கீழ் குவியல், கைகொட்டல், துவாரம், நிமித்தம், பனைமரம், பாதி, பிளப்பு, பூமி, விரித்தகை.
தலரூபகத்தாதி - ஆமணக்குவேர்.
தலவிசேஷம் - க்ஷேத்திரமுக்கியம்.
தலன் - தலம், சயன், தம்பி.
தலாகவம் - போர்க்களம்.
தலாகிநி - கிலநெல்விச்செடி.
தலாடகம் - அகழ், காட்டெள், சுழல் காற்று, யானைச்செவி.
தலாடகன் - யானைப்பாகன்.
தலாடம் - அணில்.
தலாதலம்-கீழேழுலகத்தொன்று. ஒரு அதோலோகம் இதிற் பரற் கல்லுகளேயுள்ளன. இங்கே காலநேமி முதலிய அசுரர்கள் இராச்சியம் பண்ணுவார்கள்.
தலாதிபதி, தலாதிபன் - அதிகாரி, இராசா.
தலாமலம் - தவனம், மருக்கொழுந்து.
தலிகம் - விறகு.
தலிதம் - பிளந்தது, மலர்ந்தது.
தலிநன் - பலவீநன்.
தலை-அதிகாரம், ஆகாயம், ஆதி, இடம், ஏழாம்வேற்றுமையுருபு, ஓராள், சிரசு, தலைவன், தலைமை, திசை, நுனி, பெருமை, முதல்.
தலைகட்டுதல் - மயிர்முடித்தல், முற்றச் செய்தல்.
தலைகவிழ்தல் - அதோமுகமாதல், நாணித்தல்.
தலைகாட்டுதல் - தன்னைக்காட்டுதல்.
தலைகாணி - தலையணை.
தலைகொடுத்தல் - காரியத்திலே முன்னிற்றல்.
தலைகொண்டு புரவியாடுதல் - வல்லபம் பண்ணி வருந்தல்.
தலைக்கடை, தலைக்கடைவாயில் - முதற் பிரதான வாயில்.
தலைக்கண்விருத்தி - பதுமாசனம்.
தலைக்கல் - ஆட்டுக்கல், பிரதானகல்.
தலைக்கனப்பு - தலைப்பாரம்.
தலைக்காவல் - முக்கியகாவல்.
தலைக்கிறுகிறுப்பு - தலைநடுக்கம்.
தலைக்குடி - முதற்குடி.
தலைக்குத்தலைநாயகம் - ஆளுக்காட்டலைமை.
தலைக்குத்து - தலையிடி.
தலைக்குலை-குலையின்றலை, முதற்குலை.
தலைக்குறை-கவந்தம், சொல்லின்முதல் குறைதல்.
தலைக்கூடுதல் - ஒன்றித்தல்.
தலைக்கூலி - தோணியிலாளேற்றுவோர் வாங்குங்கூலி.
தலைக்கொம்பு-சிவிகையின்முன்கொம்பு முதன்மையுள்ளவன்.
தலைக்கொள்ளுதல்-அதிகப்பட்டு மேலேறுதல், எற்றுக்கொள்ளுதல்.
தலைக்கோடை - முதற்கோடை.
தலைக்கோலம் - தலையணி.
தலைக்கோல்-கணிகையர் பெறும் சிறந்த பட்டம்.
தலைசாய்தல், தலைசாய்த்தல் - நாணித்தல், வணங்குதல்.
தலைசீவுதல் - மயிர்கோதுதல்.
தலைசுருளி, தலைசூடுவல்லி - பெருமருந்துபூண்டு.
தலைச்சங்கநாண்மதியம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம்.
தலைச்சன் - முதற்பிள்ளை.
தலைச்சார்த்து - தலைப்பா, தலையிற்சீலை.
தலைச்சீரா - தலையணியுங்கவசம்.
தலைச்சுருணி, தலைச்சுருள்வள்ளி - பெருமருந்து.
தலைச்சுழல், தலைச்சுழற்சி - ஒருநோய்.

தலைச்செங்காடு-சோழநாட்டுள்ள ஓரூர். தலைச்செங்கானமெனவும் வழங்கும். இது மாடல னென்னும் அந்தணனூர். காவிரிப்பூம்பட்டினத் தருகிலுள்ளது.
தலைச்செய்தல் - பலன்படல், வாழ்ந்து தழைத்தல்.
தலைச்சேரி - ஒருபட்டினம்.
தலைச்சோடு - தலைச்சீரா.
தலைச்சோழகம் - முற்சோழகம்.
தலைதடவுதல் - கெடுத்தல்.
தலைதடுமாறுதல்-ஒழுங்குமாறுதல், கலக்கடி.
தலைதடுமாற்றம் - கலக்கம்.
தலைதட்டுதல் - பறைவெட்டுதல்.
தலைதல் - மழையோய்தல்
தலைதாழ்தல் - நாணித்தல், வணங்கல்.
தலைதாழ்த்தல் - வணங்கல்.
தலைதிதல் - அழிதல்.
தலைதொட்டபிள்ளை - சுவிகாரபுத்திரன்.
தலைதோஷம் - தலைவிறைப்பு.
தலைதோய்தல் - நீராடல்.
தலைத்தாது - நிலப்பனை.
தலைத்திராணம் - தலைச்சீரா.
தலைத்திருப்பு - ஒருநோய்.
தலைத்தூக்கம் - அமைவு, தலைதாழ்தல், நாணித்தல்.
தலைநடுக்கம் - கிறுகிறுப்பு
தலைநாள் - அச்சுவினிநாள்.
தலைநிமிர்த்தல் - தலையுயர்த்தல்.
தலைநிம்பம் - சிவனார்வேம்பு.
தலைநீட்டுதல் - முன்னிடுதல்.
தலைநோ - தலைக்குத்து.
தலைபோகுமண்டிலம்-இசைப் பாவகையில் ஒன்று.
தலைபோடல் - பொடுதலை.
தலைப்படல் } எதிர்த்தல், தொடங்கல், வளர்தல், வாழ்தல்.
தலைப்பாடு }
தலைப்படுதல் }
தலைப்படுதானம் - முத்தானத்தொன்று அது அறத்தாலீட்டியபொருளை முக்குற்ற மற்ற நற்றவத் தோரைக் கொள்கெனப்பணிந்து குறையிரந்து தம்முள்ள முவந்தீதல்.
தலைப்படுத்தல் - வளரச்செய்தல், வாழ்வித்தல்.
தலைப்பட்டை - தலைச்சிடும்பட்டை.
தலைப்பணி - முடி.
தலைப்பந்தி - பந்தியின் முதலிடம்.
தலைப்பற்று - தளப்பற்று.
தலைப்பனி - முன்பனி.
தலைப்பா } ஒருவித தலைச்சீலை.
தலைப்பாகை }
தலைப்பாடு - கூடுதல், பொறுப்பு, வளர்ச்சி.
தலைப்பாரம் - தலைக்கனம், தலைச்சுமை.
தலைப்பாளை - தலைப்பாவிலோருறுப்பு.
தலைப்பிரட்டு - தொந்தரை.
தலைப்பிரட்டை - கடற்றவளை.
தலைப்பிரிதல் - விட்டுப்பிரிதல்.
தலைப்பிள்ளை - முதற்பிள்ளை.
தலைப்பு - காரியமுடிவு, நுதி, விடுதலைப்பு.
தலைப்புக்கிள்ளுதல் - கொழுந்து நுள்ளுதல்.
தலைப்புச்சாய்த்தல் - தலைப்புவாங்கும்விடுதல். தலைப்பு, வெட்டல்.
தலைப்புரட்டு - தொந்தரை.
தலைப்புரட்டை - ஒவிரும்பு.
தலைப்புரளுதல் - மேன்மேல்மிகுதல்.
தலைப்புரம் - முப்புறம்.
தலைப்புற்று - ஒருநோய்.
தலைப்பெயல் - முதல்மழை.
தலைப்பெய்தல்-ஒன்றாய்க்கூடுதல்.
தலைப்போடுதல் - கையிட்டுக் கொள்ளுதல்,
தலைப்போர் - முனை.
தலைமகள் - தலைவி, மனைவி, முதற்புத்திரி.
தலைமகன் - அதிகாரி, சாதிமான், நாயகன், பெருமையிற்சிறந்தோன், முதற்புத்திரன், வீரன்.
தலைமக்கள் - மேன்மக்கள்.
தலைமடக்கம் - அடக்கம்.
தலைமடக்கு - ஆதிமடக்கு.
தலைமடங்கல் - கீழ்ப்படிதல், தணிதல், வளைதல்.
தலைமடை - வாய்க்காற்றலை.
தலைமண்டை - தலையோடு.
தலைமயக்கம்-இடந்தடுமாற்றம், கலக்கம், தலைச்சுழற்சி, மதிமயக்கம்.
தலைமயங்குதல்-எங்கும்பொலிதல், கலத்தல், கூடுதல், தலைதடுமாற்றம்.
தலைமயிர் - சிரோருகம்.
தலைமாடு - தலைப்புறம்.
தலைமாணாக்கர் - முதன்மாணாக்கர்.
தலைமாலை - சிரமாலை.

தலைமுடி - சிகை.
தலைமுழுகுதல்-சருவாங்கஸ்நானம்பண்ணல், மூன்றுகநட்டப்படுதல்.
தலைமுழுக்கு - சருவாங்கஸ்நானம், மகளிர்சூதகம்.
தலைமுறை-ஒருவரிருந்து வாழுங்காலம்.
தலைமூச்சினை } தீராக்கலக்கம்.
தலைமூர்ச்சனை
தலைமேற்கொள்ளுதல் - அதிகரித்தல், பயபத்தியா யேற்றுக்கொள்ளுதல்.
தலைமை - அதிகாரம், பெருந்தன்மை, முதன்மை.
தலைமைப்பொருள்-வினைகொண்டுமுடிகிற பொருளினுயர்புடையது
தலையடி } தலைக்கதிரடித்தல்,தொந்தரை.
தலையடிப்பு
தலையணை - உபாதானம்.
தலையணைதாங்கி-கட்டிலினொருறுப்.
தலையல் - நீந்துபுனல், புதுநீர்வரவு, மழைபெய்துவிடுதல், மிகுதி.
தலையழிதல் - கெடுதல்.
தலையளித்தல் - காத்தல்.
தலையனுமானம் - ஓரளவை, அது சூன்முகில் கண்டு மழைபெய்யுமென்றறிதல்.
தலையாகுமோனை - ஓரடியின் முதற்சீர் மற்றையடியினுமுதற்சீராய்வருவது
தலையாகெதுகை - அடிகளின் முதன்மொழி முதலெழுத தொழிய ஒரு படித்தாய் வருவது.
தலையாடி - தலைப்புத்துண்டு.
தலையாயார் - பெரியோர்.
தலையாய்ச்சல் - முதலாய்ச்சல்.
தலையாரி - காவற்காரன்.
தலையாலங்கானம் - இது நெடுஞ்செழியன் பகையாசரைப் பெரும்போரில் வென்றவிடம்திருவாலங்காட்டோடு மயங்காவண்ணம் தலையாலங்கானமெனப்படுவதாயிற்று.
தலையிடி - தலைக்குத்து.
தலையிடுதல் - ஏற்படுதல்.
தலையிலெழுத்து - தலைவிதி.
தலையில்லாச்சேவகன் - நண்டு.
தலையிறக்கம் - தலைத்தூக்கம்.
தலையிற்சீலை . தலைசுற்றும் புடவை.
தலையீற்று - முதலீற்று.
தலையுலாஞ்சல் - தலைநடுக்கம்.
தலையுவா - அமாவாசி. [தல்.
தலையெடுத்தல் - ஆட்படுதல், தலைநிமிர்தல்.
தலையெடுப்பு - அதிகப்படல், நிமிர்ச்சி.
தலையெழுத்து - தலைவிதி.
தலையேறுதண்டம் - வில்லங்கம்.
தலையோடு - தலைமண்டை.
தலைவடி - முதல்வடி.
தலைவணக்கம் - தலைவளைத்தல், மடக்கம், வணக்கம்.
தலைவணங்கல் - வணங்கல், வளைந்துசாய்தல்.
தலைவலி - தலைக்குத்து.
தலைவன்-அண்ணன், அரசன்,எப்பொருட்கு மிறைவன், குரு, புருடன், மூத்தோன்.
தலைவாசகம் - தலையேட்டுவசனம்.
தலைவாசல் } முதல் வாய்தல், வாய்தன் மண்டபம்.
தலைவாயில்
தலைவாய்தல்
தலைவாரை } ஒருதலைப் பெட்டி.
தலைவாரைப்பட்டை
தலைவார்தல் - மயிர்சீவுதல்.
தலைவி-எப்பொருட்குமிறைவி,மனைவி.
தலைவிதி - தலையெழுத்து, விதி.
தலைவிரிகோலம் - அலங்கோலம்.
தலைவிரிச்சான்-சாரணை,செருப்படை, தலைமயிர் முடியாதவன்.
தலைவிரிச்சான்கூட்டம் - ஸத்ரீசனம்.
தலைவிரித்தான் - சாரணை, செருப்படி.
தலைவிரியன் - மூளிவாய்ப்பெட்டி.
தலைவிலை - முதல்விலை.
தலைவீச்சு - தலைச்சுழற்சி.
தலைவைத்ல் - தலைப்போடுதல், முன்னிடுதல்.
தலோதரி - மனையாட்டி.
தலோதை - நதி.
தல்லம் - குழி, நீர்க்குண்டு.
தல்லி - தாய்.
தல்லிகை - திறப்பு.
தல்லு - புணர்ச்சி.
தல்லுமெல்லு - இழுபறி.
தல்லை - இளம்பெண், தெப்பம்.
தவ - குன்றல், மிகுதி.
தவக்கம் - தடை, தாகம், தேவை, வாட்டம், விருப்பம்.
தவக்கை } தவளை.
தவக்களை
தவங்கம் - துக்கம்.

தவங்குதல் - துக்கித்தல், வாடுதல்.
தவசம் - தானியம், பலபண்டம்.
தவசி - தவத்தோன், பண்டாரி.
தவசிப்பிள்ளை-குருவின்வேலைக்காரன்.
தவசு - தவம், விரதம்.
தவசுமுருங்கை - ஒருபூடு.
தவச்சாலை - தவம்பண்ணுமிடம்.
தவஞ்செய்தல் - தவசுபண்ணல்.
தவடை - தாடை.
தவணை-எல்லை, கெடுவு, நீந்துவோர்க்கிடு மிதவை.
தவணைச்சீட்டு - காலங்குறித்தெழுதுஞ் [சீட்டு.
தவண் - தடை.
தவண்டை - ஒருவாத்தியம், தவிப்பு, துகளிதம்.
தவண்டையடித்தல் } தவித்தல்,துளிதமாடுதல்.
தவண்டையாடுதல் }
தவண்மந்திரம் - தடைமந்திரம்.
தவத்தர் - முனிவர்.
தவத்தல் - தவற்றுதல்.
தவத்துதல் - தவத்தல்.
தவத்தி - தவசி.
தவநிலை - தவவேடம்.
தவந்து - தானியம்.
தவப்பற்று - தவவிருப்பு, அது மனதினற்குண மூன்றினொன்று.
தவப்பெண் - தவஞ்செய்பவள்
தவம்-காடு, காட்டாக்கினி, தவசு, அது இராசதகுணத்தொன்று, சர்த்துவிதகுணத்துமொன்று, புண்ணியதோற்ற நான்கினுமொன்று, தீ, வெப்பம்.
தவராஜம் - வெள்ளைச்சர்க்கரை.
தவருதல் - சிந்துதல், தப்புதல்,தொளைத்தல்.
தவர்-தவறொன்னேவல், தொளை, முனிவர் வில்.
தவலபட்சம் - அன்னப்புள், சுக்கிலபட் [சம்.
தவலபாடலி-வெண்பாதிரிமரம்.
தவலமிருத்திகை - வெள்ளைப்பாஷாணம், வெள்ளை மண்.
தவலம் - அவுபலபாஷாணம்.
தவலாங்கி - சரச்சுவதி.
தவலி-எருது,ஒருமீன், வெண்ணிறம்.
தவலுதல் - முன்சறல், ஈதல்.
தவலை - தபலை.
தவலோகம் - தபோலோகம்.
தவலோத்பலம் - வெள்ளாம்பல்.
தவல் - குறைவு, கெடுதல்.
தவவேடம் - தவச்சொரூபம்.
தவழவாங்குதல் - கூனவாங்குதல்.
தவழ்சாதி - தவழுயிர்வருக்கம்.
தவழ்தல் - நகருதல்.
தவழ்புனல் - ஆற்றுச்சலம்.
தவழ்வன - தவழ்சாதி.
தவளச்சத்திரம் - வெண்குடை.
தவளபக்கம் - சுக்கிலபக்கம், வெண்ணு [ரை.
தவளமிருத்திகை - சுண்ணம்பு.
தவளம் - கருப்பூரம், சங்கபாஷாணம், வெண்மிளகு, வெண்மை.
தவளாங்கம் - வெள்ளைமேனி.
தவளாம்பரம் - வெள்ளைவஸ்திரம்.
தவளிதம் - வெண்மை.
தவளை - தப்பளை.
தவளைக்கல் - சொறிக்கல். [டு.
தவளைக்குறங்கு - ஆபரணத்திணோர் பூட்
தவளைப்பாச்சல் } சூத்திர நிலைநான்கினொன்று, தவளைத்தத்து.
தவளைப்பாய்த்து }
தவளோற்பலம் - வெள்ளாம்பல்.
தவறல் - கடத்தல், குறைதல், சாதல், தப்புதல்.
தவறு குற்றம்,தப்பு, தவறென்னேவல்.
தவறுதல் - அழிதல், சாதல், தப்புதல், வழுவுதல்.
தவற்றுதல் - விலக்கல்.
தவனகம் - மருக்கொழுந்து.
தவனம் - ஆசை, தாகம், வெப்பம்.
தவனன் - சூரியன், நெருப்பு.
தவன் - எத்தன், தவத்தி, புருடன்.
தவாக்கினி - காடாக்கினி.
தவாதயம் - உபத்திரம், நிலைகலங்கல்.
தவாணகம் - காற்று.
தவாநிலை - வழுவாநிலை.
தவால் - அஞ்சல்.
தவாவினை-தவருச்செயல்,மலை,முத்தி.
தவாளித்தல்-துவாளிப்பாய்த் தோண்ட [ல்.
தவாளிப்பு-கண்ணறை,துவாளிப்பு.
தவிசம் - சமுத்திரம், மோட்சம்.
தவிசு - ஆசனம், தடுக்கு, திராவகம், தொட்டில், பாய், மெத்தை.
தவிசு - அரிசியின்றுகள்.
தவிட்டான் - ஒருமரம்.
தவிட்டுக்கிளி - ஒருதத்துக்கிளி.
தவிட்டுச்செடி - மலைத்கொய்யா.

தவிட்டுப்பாற்சோற்றி - ஒருபூண்டு.

தவிட்டுப்புறா - ஒருபுறா.

தவிட்டுமேனி - சவட்டுப்பு.

தவிட்டை - ஒருமரம், தவிட்டுப்புறா.

தவித்தல் - இளைத்தல், தாகப்படல்.

தவித்திரம் - மான்றோலினாற்செய்த விசிறி.

தவிப்பு - இளைப்பு, தாகம்.

தவிப்புவைத்தல் - தகாவைத்தல்.

தவிர்தல்-ஒழிதல்,வற்றுதல், விலகுதல், வெறுத்துவிடுதல்.

தவிர்த்தல் - விட்டுவிடுதல், விலக்குதல்.

தவிர்ப்பு - ஒழிவு, தடை, விலக்கு.

தவிர்வு - ஒழிவு, விலக்கு.

தவிலை - ஒருபாத்திரம்.

தவில் - ஒருபறை.

தவிழ்தல் - தவிர்தல்.

தவீசம் - தவிசம்.

தவுக்கார் - சுண்ணச்சாந்து.

தவுசயம் - முருக்கு.

தவுசெலம் - முருங்கை.

தவுடு - தவிடு.

தவுட்டை - ஒருசெடி.

தவுதல் - குன்றல், கெடுதல், சாதல்.

தவுரிதகம் - தௌரிதகம்.

தவுரிதம் - தௌரிதம்.

தவ்வல் - இளைது, தவ்வுதல்.

தவ்வி - அகப்பை.

தவ்வு - சிதைவு, தவ்வென்னேவல், துளை, பாய்ச்சல்.

தவ்வுதல் - குந்திநடத்தல், கெடுதல்.

தவ்வெனல் - குறைதல்.

தவ்வை - அக்காள்,செவிலித்தாய் மூதேவி.

தழங்கல் / தழங்குதல் } ஒலித்தல்.

தழம் - தயிலம், புறவுருபு.

தழலல் / தழலுதல் } அழலல்.

தழல் - கவண், கார்த்திகைநாள், கிளிகடிகோல், கொடுவேலி, தழலென்னேவல், தீ, வெப்பம்.

தழற்கல் - சுக்கான்கல்.

தழற்சி - அழற்சி.

தழற்பூமி - உவர்மண்.

தழனிறமணி - சாதுரங்கப்பதுமராகம்.

தழாத்தொடர்-உருபும்பயனிலையுந் தழுவாது புணரும் புணர்ச்சி.

தழால் - தழுவல்.

தழிஞ்சி சாய்ந்தோர் மேற் படாராமை.

தழீந்தழீமெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.

தழுதணை - படர்மேகத்தடிப்பு.

தழுதழுத்தல் / தழுதழுப்பு } நாத்தடுமாறிப்பேசல்.

தழுதாழை - ஒருமரம், அது தசமூலத்தொன்று.

தழும்பு - காயம், குற்றம், நாத்தழும்பு, மறு.

தழும்புபடுதல் - குற்றப்படுதல், மறுப்படுதல்.

தழுவணை - அணைக்குந்தலையணை, கடலட்டை, சாய்மானமெத்தை.

தழுவல் - தழுவுதல்.

தழுவாவட்டை - கடலட்டை.

தழுவு - ஆலிங்கனம், கொடுங்கையளவு.

தழுவுதல் - ஏற்றுக்கொள்ளுதல், கட்டியணைத்தல், கலத்தல்.

தழுவுதொடர் - உருபும் பயனிலையும் விரிந்து புணரும் புணர்ச்சி.

தழூஉம் - தழுவுவிக்கும்.

தழை-இலை,தழையென்னேவல்,தளிர், பீலிக்குடை, மயிற்றோகை.

தழைக்கை - தழைத்தல்.

தழைதல் - செழித்தல், தளிர்த்தல், வாழ்தல்.

தழைத்தல் - தளிர்த்தல்,வளர்தல்,வாழ்ந்திருத்தல்.

தழைப்பு / தழைவு } செழிப்பு, தளிர்த்தல், பெருக்கம், மிகுதி, வாழ்வு.

தளகர்த்தன் - சேனைத்தலைவன்.

தளதளத்தல் - இளகல், சோபித்தல்.

தளதளப்பு - இளக்கம், சோபை, முகமலர்ச்சி.

தளதளெனல் - இளகக்குறிப்பு, சோபைக்குறிப்பு.

தளநார் - தளர்நார்.

தளபதி - தளகர்த்தன்.

தளபாடம் - தட்டுமுட்டு.

தளப்படி - ஆயாசம்,நிலைதளம்பல்,முட்டுப்பாடு.

தளப்பம் - தளப்பற்றுமரம், தளர்வு.

தளப்பற்று - சீதாளியோலை.

தளப்பற்றுக்காரன் - தளப்பற்றுப்பிடிக்குங்கையாள்.

தளப்பற்றுமீன் - ஒருமீன்.

தளமெடுத்தல் - படையெடுத்தல்.

தளம் - இலை, உப்பரிகை, கப்பலின் தட்டு, கூட்டம், சாடி, சாணைப்பிடியாத கெம்பு, சாந்து, தடிப்பு, நிலத்தின் றளம், படை, பறந்தவடிவு, பூவிதழ், வீட்டின் றளம்.
தளம்பல் - அசைதல்,ததும்பல்,நடுங்கல், நிலைகுலைதல், முட்டுப்படல்.
தளம்பு - மதகு.
தளம்புதல் - அசைதல்,ததும்புதல் நடுங்குதல், நிலைகுலைதல், முட்டுப்படுதல்.
தளரவிடுதல் - தொய்யவிடுதல்.
தளருடை - நுகைந்தவுடை.
தளர் / தளர்ச்சி } சோம்பல், சோர்வு, தரித்திரம்,மெலிவு,வருத்தம்.
தளர்தல் - தளர்ச்சி,நுகைதல்,விருதாப்பியமாதல்.
தளர்த்தல் - நுகைத்தல்,பலவீனப்படுத்தல்.
தளர்நடை - தள்ளாட்டநடை, மிருதுவான நடை.
தளர்நார் - மரமேற்றக்காரர், காலுக் கிடுநார்.
தளர்பாடம் - தாராளமானபாடம்.
தளர்வு - சோர்வு, நுகைவு.
தளவம் - முல்லை முல்லைக்கொடி.
தளவரிசை - கற்படுக்கை, நிலத்திற் பரவுங்கல்.
தளவாடம் - தளபாடம்.
தளவாய் - ஆராய்ச்சி, படைத்தலைவன்
தளவாய்க்கோவை - ஒருகோவை.
தளவாய்த்துவம் - சேனாதிபத்துவம்.
தளவாளம் - தளபாடம்.
தளவிசை - தளவரிசை.
தளவு - முல்லை.
தளிகுளிர் - கோயில்,நீர்த்துளி,மழைத்துளி, விளக்குத்தகழி,விளக்குத்தண்டு.
தளிகை உண்கலம்,புற்கைக்கட்டி.
தளிசை - புற்கைக்கட்டி.
தளிமம் - அழகு, கட்டில், திண்ணை,மக்கட்படுக்கை, மெத்தை, வாள், வீடு கட்டற் கெத்தனிக்கும் நிலம்.
தளிரடி / தளிரியல் } பெண்.
தளிர் - தழை, தளிரென்னேவல்.
தளிர்த்தல் - துளிர்த்தல்.
தளிர்ப்பு - துளிர்ப்பு.
தளுகன் - புளுகன்.
தளுகு - புளுகு.
தளுக்கிடுதல் - அழுத்தமாகுதல்,மினுக்குதல்.
தளுக்கு - ஒளி, தளுக்கென்னேவல், மினுக்கம், மூக்குத்தி.
தளுக்குணி - உரோசமில்லாதவன்.
தளுக்குதல் - அப்புதல்,ஒப்பரவுபண்ணல்.
தளும்புதல் - தளம்புதல்.
தளை - ஆண்மயிர், கட்டு, கால்விலங்கு, காற்சிலம்பு, சிறை, தளையென்னேவல், யாப்புறுப்பெட்டிலொன்று. அது நின்ற சீர்ற்றசையோடு வருஞ்சீர் முதலசையொன்றியு மொன்றாதுங் கூடி நிற்பது, வரம்பு.
தளைதட்டு - தளைபிழைப்பு.
தளைதட்டுதல்-யாப்பிற்றளை பிழைத்தல்
தளைதம் - தளை.
தளைதல் - கட்டுண்ணல், கட்டுதல்.
தளைத்தல் பிணித்தல்.
தளைநார் - தடைநார்.
தளைபடுதல் / தளைப்படுத்தல் } சிறைப்படல், கட்டுப்படுதல்.
தளைப்பு - கட்டு.
தளைப்பொருத்தம் - செய்யுட்டளையிணிக்கம்.
தளையல் - கட்டுதல்,மறியற்படுத்துதல்.
தளையவிழ்தல் - கட்டுவிட்டு விரிதல், பூமலருதல்.
தளையன் - குயவர்,சாணர்,மறவர்:இவர்களிற்றலைவன்.
தள்ளம்பாறுதல் - தத்தளித்தல், தள்ளாடுதல்.
தள்ளல் - தவறு, தள்ளுதல், பொய்.
தள்ளாடல் / தள்ளாடுதல் } அசைதல், தள்ளம்பாறுதல்.
தள்ளாட்டம் - அசைவு, தடுமாற்றம்.
தள்ளாமை - இயலாமை, இல்லாமை, தளர்ச்சி.
தள்ளிச்சி - பூநீறு.
தள்ளு - கழிவு, தள்ளென்னேவல்.
தள்ளுண்ணல் - தள்ளப்படுதல்.
தள்ளுதல் - இடங்கொடுத்தல்,இயலுதல் ஒட்டுதல்,கக்குதல், கழிக்குதல்,தாங்குதல்,நெருக்குதல்,விட்டுவிடுதல்.
தள்ளுநூக்குப்படுதல்-இழுபறிப்படுதல்
தள்ளுபடி - குறைவு, நீக்கம், விலக்கு.
தள்ளுமட்டம் - யானையினிளங்கன்று.
தள்ளுமெள்ளு - இழுபறி.
தள்ளை - மாதா.
தறதறத்தல் / தறதறெனல் } ஈாடுக் கொலிக்குறிப்பு

தறி - கட்டுத்தறி, கோடாரி, தறியென் னேவல், தூண், நெய்வோர்தறி,முளைவெட்டு.
தறிகிடங்கு - ஆலக்கிடங்கு.
தறிகை - உளி, கோடாரிதறி, மழு.
தறிக்கால் - கொடிக்கார்வாய்.
தறிதல் - தறிபடல்.
தறித்தல் - வெட்டல்.
தறிப்பு - தறித்தல்.
தறியாணி - வெட்டிரும்பு.
தறுகணாளன் - குரூரன், படைவீரன்.
தறுகண் - அஞ்சாமை, குரூரம், மரம்.
தறுகண்ணன் - தறுகணாளன்.
தறுகண்மை - தறுகண்.
தறுகல், தறுகுதல் - தடைப்படல், தவறுதல்.
தறுகுறும்பன - தூர்ச்சனன், வணக்கமில்லான்.
தறுகுறும்பு - தப்பிதம், துட்டத்தனம், வணக்கமின்மை.
தறுக்கணித்தல் - கர்ப்போலாதல், கன்றுதல்.
தறுக்கணிப்பு-கன்றிப்பு.
தறுசு - இழைச்சுளிர்த்தி.
தறுதலை - தறுகுறும்பு.
தறுதலையன், தறுதும்பன் - தறுகுறும்பன்.
தறுதும்பு - தறுதலை.
தறுப்பு - தருப்பு.
தறும்பு - நீரணை, வரம்பு.
தறுவாய் - உற்றசமயம்.
தழுலி - மருந்து முதலியன பூசுமோர்சருவி.
தறுவுதல் - குறைதல்.
தறை - ஆணியின்சடை, தரை, தறைதல், தறையென்னேவல்.
தறைதல் - ஆணிமுதலியவற்றை யிறுக்கல், சடைதல், தைத்தல்.
தறையாணி - கடையாணி.
தற்கம் - தருக்கம்.
தற்கான் - கள்வன்.
தற்காத்தல்-இரட்சித்தல், தன்னைக்காத்தல், பாதுகாத்தல்.
தற்காத்தர்கடுதாசி-அறிவித்தர்காகிதம்
தற்காப்பு - தற்காவல், பாதுகாப்பு.
தற்காலகிரகநிலை - குறித்த காலத்துக் கிரகநிற்கும் நிலை.
தற்காலசுத்தடம் - குறித்த காலத்துக் கிரகங்கணிற்கும் நிலையைச் சரியாயறியுஞ் சுத்த கணிதம்.
தற்காலமத்திமம் - குறித்த காலத்துக் குக் கிரகங்கணிற்கும் நிலையைப் பொதுவாக வறியு மத்திமகணிதம்.
தற்காலம் - தற்சமயம்.
தற்காலவிலை - தற்சமயவிலை,அக்காலக்கிரயம்.
தற்காலித்தல் - தற்காலபுடம்வைத்தல்.
தற்காலீகம் - கிடைத்ததை யுண்ணல்.
தற்காவல் - தற்புகிறை, தற்காப்பு.
தற்கி - தருக்கம்பண்ணுபவன், தருக்கியென்னேவல்.
தற்கித்தல் - நியாயமூத்தரித்தல்,வாக்குவாதம் பண்ணல்.
தற்கிப்பு - தருக்கம்.
தற்கிழமை - ஒற்றுமையாயுரியது.
தற்குணம் - சுயகுணம்.
தற்குணகம் - சத்தாதிவிடயர்.
தற்குறி - கைக்கீறு, தற்குறிப்பு.
தர்குறிப்பணி - ஓலங்காரம், அது ஒரு பொருளை மற்றொரு பொருளின் றரும்சம்பந்தத்தினுல்லிஃதஃதென் றெனத்தெரிந்தும் அப்பொருளாகத் தர்குறிப்புச்செய்தல்.
தற்குறிப்பு - தானுய் நியமிப்பது.
தற்குறிப்பேற்றம் - ஓலங்காரம், அது ஒரு பொருளின்கணியல்பாய் நிகழ்வது தவிரப் பிறிதொன்றை யேற்றிச்சொல்லுதல்.
தர்குறைச்சல் - குறைவு, தேய்வு.
தற்கொலை தன்னைத்தான்கொல்லுதல்.
தற்கோலம்-தக்கோலம், ஒருசைவகேூத்திரம்.
தற்சணம் - உடனே.
தற்சமயம்-வடமொழிக்கும்பிறபாடைக்கும் பொதுச்சொல்.
தற்சமயம் - அச்சமயம், உற்றசமயம்.
தர்சனி - சுட்டுவிரல்.
தற்சாட்சி - பரமாத்துமா,மனச்சாட்சி.
தற்சிவம், தற்சிவன் - பரமேச்சுரன்.
தர்சினேகம் - தன்னைச் சினேகிக்குஞ் சினேகம்.
தர்சுட்டு - தற்குறிப்பு.
தற்சுதந்திரம் - தனக்குரியது.
தர்சுபாவம் - சுயகுணம்.
தற்சுரூபம் - சுயரூபம்.
தர்செயல் - தானுய்நிகழ்வது.
தற்செய்தல் - பலித்தல், வாய்த்தல்.
தற்செல்வம் - வலி.

தற்பகன் - தருப்பகன்.
தற்பகீடம் - மூட்டைப்பூச்சி.
தற்பணம் - தருப்பணம், பளிங்கு, முது கெலும்பு, யானைமுதுகு.
தற்பதம்-கடவுள், தனனையுந் தலைவனை யுமறிதல்.
தற்பதி - கழுகு.
தற்பம் - அகந்தை, கஸ்தூரி, சில, பாவம், மக்கட்படுக்கை, மனைவி, மெத்தை, மேனிலை, வஞ்சனை.
தற்பரம் } கடவுள், சிவன்.
தற்பரன் }
தற்பறை - ஒருமாத்திரையில் முப்பத்தி லொன்று, சிவசத்தி.
தற்பரம் - வெள்ளாம்பல்.
தற்பவம் - வடமொழிதற்றிரிந்த சொல்.
தற்பாடி - வானம்பாடி.
தற்பி - இந்திரன், இந்திரன்கொடி, தற் பியென்னேவல்.
தர்பித்தல் - தருப்பித்தல்.
தற்பிரகாசம் - சுயம்பிரகாசம்.
தற்புகழ்ச்சி - தன்மேம்பாடுகூறல்.
தற்புணர்ச்சி - சுயபுணர்ச்சி.
தற்புருடம் - சிவனைம்முகத்தொன்று.
தற்பெருமைப்புகழ்ச்சி ஓரணி அது தன் பெருமையைக் காட்டிப் புகழ்தல்.
தற்பெருமையிகழ்ச்சி - ஓரணி அது புக ழுடையோர்தம்மைத்தாமேயிகழ்ந்து கூறல்.
தற்பொழிவு - தன்னியம்.
சற்போதம் - தன்னறிவு, பிரஞானம்.
தனகரன் - கள்ளவன், குபேரன், சுதந் தரன்.
தனகு - உள்ளக்களிப்பு, தன கென்னே
தனகுதல் - களித்தல், சருவுதல் [வல்.
தனகேலிகன் - குபேரன்.
தனக்காரர் - ஒருசாதியார்.
தனசித்திரம் - பொற்பணி.
தனத்தியோதன் - குந்துபிமகன், அபி ஜித்தன்.
தனஞ்சயன் } அருச்சுநன், உயிர்போ
தனஞ்செயன் } கினும் போகாதுட லை வீக்கித் தலைகிழித்தாலும் வாயு, தீ தனஞ்சயம் எனறும் கிகண்டு செய்த சமஸ்கிருத கவி. மணலூரிலிருந்த ஒரு வணிகன. இவனே கடம்பவனத் திற் சொக்கலிங்க மூர்த்தியைக் கண்டுவந்து குலசேகரபாண்டியனுக் குத் தெரிவித்ததனை நகராக்குவதற் குக் காரண கர்த்தனாயிருந்தவன்.
தனதற்பம் - செல்வவிடம்பம்.
தனதன் - ஈகையாளன், குபேரன், சிவ ன்றோழன்.
தனதானுசன் - இராவணன்.
தனதிருட்சணம் - பொருளாசை.
தனது - சிநேகம், தன்னுடையது.
தனபதி - குபேரன்.
தனபதித்துவம் - உதாரகுணம்.
சனபாரம் - கொங்கை.
தனபோகம் - சையோகம்.
தனம் - எண்ணிலோரடையாளம், சம் பத்து, தன்மை, பசுக்கன்று, பொன்.
தனயன் - புத்திரன்.
தனயை - புத்திரி.
தனரேகை - கையிரேகையிலொன்று.
தனலக்குமி - அட்டலக்குமியிலொன்று.
தனவசியர் - தனவைசியர்.
தனவந்தன் - செல்வன்.
தனவனு - ஆச்சாமரம்.
தனவான் - செல்வன்.
தனவை - சிறுகாஞ்சொறி.
தனவைசியர் - மூவைசியரி லொருவர். அவர் வணிகர்.
தனவை - சிறுகாஞ்சொறி.
தனாட்டி - தனவாட்டி.
தனாட்குயன் - தனவான்.
தனாதிகிருதன் - பொக்கிஷகாரன்.
தனாதிபன் } குபேரன், பொக்கிஷ
தனாதியட்சன் } காரன்.
தனாது - தன்னுடையது.
தனாபாரம் - தனம்.
தனாயனம் - கிரகசுற்றோற்றவழி, நீண் டவழி.
தனார்சனம் - திரவியார்ச்சிதம்.
தனி-ஒப்பின்மை, ஒற்றை, கலப்பில்லா தது, சுத்தம், தனிமை, தனியென் னேவல்.
தனிகம் - கொத்தமல்லி.
தனிகன் - தூர்த்தமன் புத்திரன். கார்த் தவீரியார்ச்சுனன் பாட்டன். கடன் றியாகி, கணவன், தனவான்.
தனிகா - கொத்தமல்லி.
தனிகை - இளம்பெண், பதிவிரதை, பெண்.

தனிக்குடை - தனியரசாட்சி.
தனிக்குறில்-தனிநிற்குங்குறெழுத்து
தனிக்கோலான் - கடவுள், சுயாதிபதி.
தனிசு - கடன், மாதிரி.
தனிச்சபை - இராசச்சபை.
தனிச்சொல் - தனிமொழி.
தனிட்டை - அவிட்டநாள்.
தனிதம் - முழக்கம்.
தனித்தல் - உதவியற்றிருத்தல், தனியாதல்.
தனித்தியிலிடுகுறி-ஒன்றிற்கும் பலவற்றிற்கும் பொதுவாய் வழங்கு மிடுகுறிப்பெயர்.
தனித்திருத்தல் - ஒன்றியாயிருத்தல், தனிமையாயிருத்தல்.
தனிநிலை-ஆய்தவெழுத்து, தனித்துநிற்கை.
தனிப்பாடு - தனிமை, முத்தகம் அது ஒன்றன் பேரிற்சொன்ன ஒற்றைக்கவி.
தனிப்பால் - கலப்பில்லாதபால்.
தனிப்பு - தனிமை.
தனிப்புடம் - ஓரிருக்கை.
தனிப்புரத்தல் - தனியரசாளல்.
தனிப்புரம் - அரண்மனை.
தனிப்புறம் ஏகாந்ததலம், மறைவிடம்.
தனிப்பெறுதல் - தனிப்படுதல்.
தனிப்போர் - தனிப்பாடை.
தனிமகவு - பட்டத்துப்பிள்ளை.
தனிமகள் - பட்டத்தரசி.
தனிமுதல் - கடவுள்.
தனிமை - உவமையின்மை, ஏகாந்தம், தனிப்பு, பிரிவு. [தொன்று.
தனிமையாற்றல் - வணிகரென்குணத்
தனிமொழி - தனியேநிற்குஞ்சொல்.
தனியரசாட்சி-ஏகாதிபத்தியம், சுயவரசாட்சி.
தனியன் - ஒன்றி, தனித்தது, தனிப்பாட்டு.
தனியா - கொத்தமல்லி.
தனியிசை - நேரிசை.
தனியிருத்தல் - தனியேயிருத்தல்.
தனியுப்பு - அமுரி.
தனியவமம்-ஒருபொருளுவமம், (உ-ம்.) கன்னெஞ்சு.
தனியெழுத்து-கூட்டரவற்றதனியொலியெழுத்து.

தனிவலிப்பெருமாள், தனிவல்லி } குப்பைமேனி.
தனிவழி - துணையற்ற பிரயாணம்.
தனிவீடு-தனிமையானவீடு, மோட்சம்.
தனு-அத்தி, உடல், ஓரிராசி, காசிபர் மனைவி, சிறுமை, தக்கன்மகள், தானவர்தாய், தோல், பெண், முக்காரம், வில், கசியபன்பாரி, தக்ஷப்பிரசாபதிமகள். இவள், வழி, வந்தோர் தானவரெனப்படுவர்.
தனுகரன் - வில்லாச்சிரமி.
தனுகாண்டன் - அம்பு, வில்.
தனுகூபம் - உரோமத்துவாரம் [னி.
தனுக்கோடி - சேதுதீர்த்தம், வின்னு
தனுகஞ்சாரிணி - பத்துவயதுப்பெண்.
தனுசர் - அசுரர், மகார்.
தனுசணி, தனுசன் } மகன்.
தனுசாத்திரம் - வில்வித்தை.
தனுசாரி - இந்திரன், திருமால்.
தனுசு - தனுவிராசி, வில்.
தனுசூனு - அரசன்.
தனுசை - மகள்.
தனுதரன் - வில்லுடையோன்.
தனுத்தரன் - கனவிசயர்க்குநட்பாளனாகிய ஒரு அரசன்.
தனுத்திரம் - போர்க்கவசம்.
தனுத்திருமம் - மூங்கில்.
தனுநபம் - வெண்ணெய்.
தனுப்பச்சை - பச்சைக்கல்.
தனுப்பாஷாணம்-சரகண்டபாஷாணம்
தனுப்பீசம் - இந்திரகோபம்.
தனுமணி - வில்விற்கட்டியமணி. அது ஆயிரம்பேரை வில்லால் விசயம் பெற்ற வீரர் கைவில்லின் விருது.
தனுமேகசாய்கை - நீலக்கல்,
தனுரசம் - வியர்வை.
தனுரணம் - தனுவிரணம்.
தனுரத்தினம் - சூடாலைக்கல்.
தனுராகம் - மாணிக்கம்.
தனுருகம் - உரோமம்.
தனுரேகை - தனுவாகாரமானரேகை.
தனுர் - தனுசு.
தனுர்வாதம் - ஒருவாயு.
தனுர்வேதம்-உபவேதநான்கினொன்று
தனுவாதம் - ஒருநாகம், ஒருநோய்.
தனுவாரம் - போர்க்கவசம்.

தனுவித்தை - வில்லாச்சிரமக்கல்வி.
தனுவிரணம் - சிரங்கு.
தனுவிருக்கம் - ஆச்சாமரம்.
தனுவேதம் - தனுர்வேதம்.
தனேசன் - குபேரன்.
தனை-அளவு, எண்.
தனையள் - தனயை.
தனையன்-தனயன்.
தனையை-தனயை.
தனோபசயம்-திரவியார்சனம்.
தன்-ஒருசாரியையுருபு.
தன்காலம்-தனது தத்துவஞ் செல்லத் தக்க காலம்.
தன்கு - களிப்பு.
தன்குலம்வெட்டி - கோடரிக்காம்பு, தனது வமிசத்தைக்கெடுக்கிறவன்.
தன்படுவன் - விளைவுப்பு.
தன்பாடு - தன்காரியம்.
தன்பொருட்டனுமானம் - தன்னப்பியாசத்தினு லனுமானித்தறிதல்.
தன்பொருப்பு - தனமேற்பாரம்.
தன்மணி - தருமஞ்செய்வோன்.
தன்மாதா - நல்லுபகாரி.
தன்மதிப்பு - தன்மேம்பாடு.
தன்மம் - அறம், தருமம், நன்மை, நீதி.
தன்மயம் - தற்சுபாவம்.
தன்மராசா-உதிரட்டிரன், பாலைமரம்.
தன்மலைக்காசி - சாலக்கிராமம்.
தன்மகன் - இயமன், தருமன், திப்பிலி, திப்பிலிமூலம்.
தன்மாதன்மியம் - புண்ணியபாவம்.
தன்மாத்திகாயம் - புண்ணிய தேகத் தொன்று.
தன்மாத்திரை -பூதங்களினுதி, பொறிகளின் மூலம்.
தன்மானி - எளிமை, நிற்பந்தன்.
தன்மூப்பு - இட்டம், இறுமாப்பு.
தன்மூலம் - திப்பிலிக்கட்டை.
தன்மேம்பாடு - தற்புகழ்ச்சி.
தன்மேம்பாட்டுரை-ஓரலங்காரம். அது தற்புகழ்ச்சி.
தன்மை - ஓரலங்காரம்.அது யாதொரு பொருளை அதன் தன்மை விளங்கச் சொல்வது, குணம், சுபாவம், நிலைபரம், மரியாதை, மாதிரி, மூவிடத் தொன்று.
தன்மையெழுத்து - உணர்வெழுத்து.
தன்யாசி - தன்னியாசி, ஓரிராகம்.
தன்வசம் - தன்பொறுப்பு, தன்மாதிரி.
தன்வந்தரி - ஒரு வைத்திய சாஸ்திரி. அவன் திருப்பாற்கடல் கடையும் போதுண்டான தேவர் மருத்துவன், சிவன், சூரியன், தீர்க்கதன்மன், புத்திரன். பூர்வம் சமுத்திரமர்த்தன காலத்திற் பாற்கடலிற் பிறந்த தன்வந்தரியே ஆயுர்வேதத்தை வெளிப்படுத்தவேண்டி இத்தீர்க்கதமன் புத்திரனுக அவதரித்தார். ஆயிரத்துத் தொளாயிரத்தைம்பத்தேழு வருஷங்களுக்கு முன்னே விக்கிரமார்க்கன் சபையில் விளங்கியவன்.தன்வந்தரி என்னும் பட்டங்கொண்டவன். இவனேதன்வந்தரி நிகண்டுசெய்தவன்.
தன்வயத்தாதல் - கடவுள் தென்குணத் தொன்று.
தன்வழி - தன்வசம்.
தன்வழிப்படுதல் - தன்வசப்படுதல்.
தன்விருத்தி - தன்றொழில்.
தன்வினை-ஊழ்வினை, எழுவாய்க்கருத்தாவின் புடையெர்ச்சியாய் நிகழுந் தொழில், தன்னிலையதொழில்.
தன்வேதனை - சுயபரீட்சை.
தன்வேதனைக்காட்சி - அராகாதியாலறிந்தாசைப்படுவது.
தன்வையாதம் - சிறுகாஞ்சொறி.
தன்னடக்கம்-தன்னைக்கட்டுப்பாடு பண்ணல்.
தன்னந்தனி - மிகுதனி.
தன்னமதி - பிறைச்சந்திரன்.
தன்னமை - இணக்கம், ஒற்றாமை, சிநேகம், தாழ்மை.
தன்னம்-அற்பம், பசுவின்கன்று,மான்கன்று, ஒர்யுத்தி, வழக்கமிகவெடுத்துரைத்தல்.
தன்னயம் - தன்பலம்.
தன்னரசு - இட்டமானவாளுகை.
தன்னரசுநாடு } இராஜாவில்லாததேசம்.
தன்னரசுபற்று
தன்னரண்காத்தல்-எண்வகை வெற்றியிளென்று.
தன்னவன் - தன்னுடையவன்.
தன்னறிவு - சுயவறிவு, தனக்குரிய வுணர்ச்சி, பிரக்னு.
தன்னிச்சை } ஏதேச்சை, மனப்படி.
தன்னிட்டம்

தன்னியத்துவம் - செல்வமுடைமை.
தன்னியம் - தனது திரவியம், முலைப்பால்.
தன்னியல்புப்புரமேயம் - ஓரளவை. அது மிகுதிகாரணமாய் ஒன்றற்கு வழங்கியும்பிறவுமுளவென வியல்பினாற்கோடல்(உ-ம்.)சேதுப்புராணம்
தன்னியன் - தனவான், தீவினை நீங்கினோன்.
தன்னியாசி - ஒரு இராகம்.
தன்னியை - வளர்த்ததாய்.
தன்னிரைமீட்டல்-எண்வகை வெற்றியினொன்று.
தன்னிலை-சமனாய்நிற்கை, சுபாவநிலை.
தன்னிறமாக்கி - குளவி, பொன்.
தன்னிறம்-சுபாவநிலை,மாந்தளிர்ச்சிலை.
தன்னினி - வேங்கைமரம்.
தன்னீக்கள் - தன்னிட்டம், தான்றவிர்வாதல்.
தன்னுணர்ச்சி - தன்னறிவு.
தன்னுதல் -சற்றுச்சற்றாய்க் கொண்டுபோதல்.
தன்னுதோணி } சிறுவத்தை.
தன்னுவத்தை }
தன்னெடுப்பு - அகங்கதை. தன்முபற்சி.
தன்னை - இரண்டாம் வேற்றுமையுருபுடைப்படர்க்கை யொருமை விரவுப்பெயர், தமக்கை, தாய், மூத்தோன்.
தன்னைக்கட்டுதல்-தன்னைக் காவல்செய்தல், மனதைக் கட்டுப்படுத்தல்.
தன்னைப்பருப்பித்தல் - தன்னைப் புகழ்தல், தன்னை யுயர்த்தல்.
தன்னையறிதல் - இருதுவாதல், தன்றன்மையுணர்தல்.
தன்னையொறுத்தல் தனக்குள்ள செலவைக்குறைத்தல், தன்னைக் கொல்லல், தன்னை வாட்டுதல்.
தன்னொழுக்கம் - தன்னிலைக்குத் தக்க பரிமாற்றம்.
தன்னோடொற்றுமைப்பொருள் - தற்கிழமைப்பொருள்(உ-ம்)முருகன்கை.
தன்னோடொற்றுமைப்பொருள்- உபாங்கப்பொருள்(-உம்.) முருகன்வேல்.

## தா

தா-அழிவு, ஓரெழுத்து, குற்றம், கேடு, கொடியன், தாண்டுதல், தாவென்னேவல், பகை, பாய்தல், பிரமன், வருத்தம், வலி, வியாழம்.
தாகசாந்தி - விடாய், தணித்தல்.
தாகசுரம் - ஒருவகைச்சுரம்.
தாகப்புளி - விடாய்ப்புளி.
தாகமடக்கி - புளியாரை.
தாகமெடுத்தல் - தாகங்கொள்ளுதல்.
தாகம் - ஆசை, உணவு, எரிவு, எருது, தூண், நீர்விடாய், அது உயிர்வேதனையினொன்று, மாயயாக்கை பதினெண் குற்றத்துமொன்று.
தாகனம் - தகனம்.
தாகன் - கொடையாளன், யாகஞ்செய்விப்போன்.
தாகாரித்துவம் - ஆகாயசுரூபமறிதல்.
தாகித்தல் - தாகங்கொள்ளுதல்.
தாக்கணங்கு - இலக்குமி.
தாக்கணித்தல் - அத்தாட்சிப்படுத்தல்.
தாக்கம் - அதைப்பு, கனப்பு, வீக்கம்.
தாக்கல் - தாக்குதல்.
தாக்காட்டுதல்-ஆதரவுபண்ணுதல், உதவிசெய்தல்,எய்தல்,பராக்குகாட்டல்.
தாக்கிதை - கட்டளைப்பத்திரம்.
தாக்கியன் தார்க்கியன்-
தாக்கீது - தார்க்கிதை.
தாக்கு - அடி, அதிர்ச்சி, இடம், உரம், கனம், சாதிப்பு, தாக்கென்னேவல், நிலவறை, நெல்வயல், போர், வலி, வேகம்.
தாக்குதல்-அடித்தல், எண்கூட்டிப்பெருக்கல், எதிர்த்தல், கனத்தல், தள்ளுதல், தாழுதல், பாய்தல், முட்டுண்ணல்.
தாங்கல் - குளம், சுமத்தல், தாங்குதல், மனக்குறை, விதனம்.
தாங்கான்மட்டை - நூற்பாவைத்தாங்கவைக்கு மட்டை.
தாங்கி - ஆதாரம், பணிகளின் கடைப்பூட்டு, பூண்.
தாங்கு -ஈட்டிக்காம்பு, தாங்கல், தாங்கி,
தாங்குகோல் - மரக்கோல்.

தாங்குதல் - அணைத்தல், ஆதரித்தல், காத்தல், சகித்தல், சுமத்தல், தரித்தல், தோணிதள்ளல், பொறுத்தல், உதனப்படுதல்.
தாசத்துவம் - அடிமைத்தனம்.
தாசநந்தினி - சத்தியவதி. அவள் வியாசன்றாய். [வன்.
தாசநம்பி - சாத்தானியன், சாத்தாத
தாசபாலனம்-தயாவிருத்தி பதினன்கினென்று, அது அடிமைகாத்தல்.
தாசபுரம் } ஒரு புல்.
தாசபூரம் }
தாசரதன் - இராமன்.
தாசரதி - தசரதபுத்திரனை இராமன்.
தாசரி - தாதன், மலைப்பாம்பு.
தாசருகன் - விட்டுணு.
தாசர்-அடிமைகள், நெய்தனிலமாக்கள்.
தாசன் - அடிமை, ஊழியக்காரன், சூத்திரன், ஞானி, தாதன், நெய்தனிலத்தவன்.
தாசி } அடிமை, நாடகக்கணிகை, பரணிநாள், மேகவண்ணப்பூவுள் மருதோன்றி மரம்.
தாசிகை }
தாசிக்கல - காக்கைக்கல்.
தாசிதம் - அழிந்தது.
தாசியப்பிருந்தம் - பசுக்கூட்டம்.
தாசியம் - அடிமைத்தனம்.
தாசினப்பொடி - பன்மிறுக்குதூள்.
தாசு - இரண்டரை நாழிகை கொண்ட நேரம், சூதாடுகருவி, நாழிகைவட்டில்.
தாசுவம் - கொடை.
தாசுவன் - கொடையாளன்.
தாசூரன் - ஒருமுனிவன்.
தாசேயன் - வேலைக்காரன்.
தாசேரகம் } ஒட்டகம்.
தாசேரம் }
தாசேரன் - வேலைகாரன்.
தாசோகம் - அடியேன், ஒட்டகம்.
தாச்சி - சோணைப்புல், தாய்ச்சி.
தாடகம் - நீர்முள்ளி, வீழி.
தாடகை - ஓரரக்கி, மாயாங்கெட்டவள். மாரீசன் தாய். இவ்விராக்ஷசியை இராமன் விசுவாமித்திரரோடு யாகங்காக்கச் சென்றபோது வழியிலே கொன்றொழித்தான். இவள் சுகேதனென்னும் யக்ஷன்மகள் ஆயிரம் யானைப் பலமுடையவள். இவள் ஒருகாலத்தில் அகஸ்தியர் ஆச்சிரமத்திற்சென்று அவரைப் பயமுறுத்த, அவர், சினந்து நீயும் உன் புத்திரரும் இராக்ஷசாமிசம் பெறுக வென்று சபிக்கப்பட்டவள்.
தாடங்கம் - காதணி, தோடு.
தாடபத்திரம் - ஒரு காதணி. [மலை.
தாடம் - உப்பட்டில், ஒலி, தண்டித்தல்,
தாடனம்-அடித்தல், தட்டுதல், தட்டல்.
தாடன் - தாசன்.
தாடாண்மை - முயற்சி.
தாடாளன் - முயற்சியுள்ளோன்.
தாடாற்றி - ஆறுதல், சகாயம்.
தாடி-மாடு முதலியவற்றின் கழுத்தாரம், மோவாய், மோவாய்மயிர்.
தாடித்தம் - அமர்த்தல், இடித்தல், தட் [டுதல்.
தாடிமஞ்சம் - சத்திக்கொடி.
தாடிமபட்சணம் } கிளி.
தாடிமப்பிரியம் }
தாடிபம்-சிற்றேலம், தாதுமாதளை. [பம்.
தாடை- சன்னம்தாடி பெரும்பல்விருப்
தாட்குற்றியீனுதல் - செந்தாளினல்.
தாட்கோரை - ஒருபுல்.
தாட்சகன் - தக்கன்வமிசம்.
தாட்சணம் } இரக்கம், தாழ்மை.
தாட்சணியம் }
தாட்சணை }
தாட்சண்ணியம் }
தாட்சம் - கொடிமுந்திரிகை, முந்திரி [கை.
தாட்சயம் - விவேகம்.
தாட்சன் - கருடன். [ம்.
தாட்சாயணம்-பொன், பொன்னுபாண
தாட்சாயணி - பார்ப்பதி, இருபத்தேழ் நட்சத்திரப் பொது, உரோகணி, தர்க்கை.
தாட்சாயணிபதி - சந்திரன்.
தாட்சாயணிபன் - சந்திரன், சிவன்.
தாக்ஷாயணி தக்ஷப்பிரஜாபதி மகளாகிய உமாதேவி, அதிதி.
தாட்சாயம் - வலியான்.
தாட்சிணியம் } இணக்கம், இரக்கம், சமர்த்து, மரியாதை.
தாட்சிணை }
தாட்சிண்ணியம் }
தாட்சீபுத்திரன் } பாணினிமுனி.
தாட்சேயன் }
தாட்டன் - கடுவன்குரங்கு, தலைவன், பெருமைக்காரன்.

தாட்டாந்தகம்-திருட்டாந்தப்பட்டது.
தாட்டாந்தம்-திருஷ்டாந்தத்தைக்கொண்டது.
தாட்டாந்தரம்-அத்தாட்சிவேண்டியன.
தாட்டான் - கணவன், தலைவன்.
தாட்டி - ஆண்மாரி, கெட்டிக்காரி, சாமர்த்தியம், தடவை, தலைவி, தைரியம்.
தாட்டிகம் - அகந்தை, பலம்.
தாட்டுப்போடு } குழப்பம்.
தாட்டுமேட்டு
தாட்டோட்டம் } எத்து.
தாட்டோட்டு
தாட்படை - கோழி.
தாட்பாள் - கதவடைச்குந்தாள், நுழையடைக்குந்தாள். [ரம்.
தாணி - தாணியென்னேவல், தான்றிமரம்.
தாணித்தல்-குற்றமேற்றல், கறைதல், தாளித்தல், துப்பாக்கியில் மருந்திடுதல், பலப்படுத்தல்.
தாணு - குறுந்தறி, சிவலிங்கம், சிவன், தாபரம், தூண், நிலை, நிலைபேறு, புகலிடம், மலை, வெற்றி.
தாணையம் - பந்தயம்.
தாண்டகம் - ஒருபிரபந்தம், அது இருபத்தாறெழுத்தின் மிக்க வெழுத்தானடிகொண்டுவரும் பா.
தாண்டல் - தாண்டுதல்.
தாண்டவதாலிசன் - நந்திதேவன்.
தாண்டவப்பிரியன் - சிவபெருமான்.
தாண்டவம்-கூத்து, சிவன்கூத்து.
தாண்டவராயன் } சிவன்.
தாண்டவன்
தாண்டவராயசுவாமிகள்-சோழதேசத்திலே நன்னில நகரிலே அந்தணர் குலத்திலே அவதரித்து விளங்கிய இவர், வேதாந்த சாஸ்திர வுண்மைநிலைகண்டு கைவல்லிய நவநீதம் என்னும் நூல் செய்தவர்.
தாண்டு-நடனசாத்திரம்.
தாண்டு - கடத்தல், குதி, தாண்டென்னேவல், வெற்றி.
தாண்டுதல்-ஆடுதல், கடத்தல், பாய்தல், வெல்லுதல்
தாததி - ஆத்திரம்.
தாதக்கூத்து - ஒருகூத்து.
தாதச்சி - தவப்பெண்.
தாததுல்லியன் - பித்ருசமானன்.
தாதநம் - கரிக்குரிவி.
தாதமம் - பட்சித்தல்.
தாதமார்க்கம் - சரிதைநிலை.
தாதம் - அசையப்பட்டவை, கொடை.
தாதரூப்பியரூபகம் - ஓரலங்காரம்.
தாதர் - அடிமைக்காரர், கொடையாளர், தொண்டர், வைணவர்களில் ஒருவகையார்.
தாதலம் - நோய், பாகம், மனத்திட்பம்.
தாதன்-அடிமைக்காரன், ஈகையாளன், தொண்டன், பிதா. [பிரமன்.
தாதா - ஈகையாளன், பாட்டன், பிதா,
தாதாத்மியம் } ஒருமைப்பட்டிருக்கை பிறித்தற்கியலாதது.
தாதான்மியம்
தாதாத்மியாத்தியாசம் - ஒன்றென்னும் பிராந்தி.
தாதி-அடியவள், செவிலித்தாய், தோழி.
தாதிரி - கொடையாள்.
தாதிராதகம் - இந்திரியம்.
தாதிரு - திருமால், பிதா, பிரமன்.
தாது - காவிக்கல், சத்ததாது. அது இரதம் இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை, சொன்மூலம், தாதுமாதளை, துகள், நரம்பு, பஞ்சபூதம், பஞ்சவிடயம், பத்தாவதாண்டு, பூந்தாது, பொன்னுதியேழு, மண்ணுதியைந்து, பூவிதழ்.
தாதுகட்டுதல் - சுக்கிலத்தம்பனம்பண்ணுதல்.
தாதுகலித்தல் - தாதுகக்குதல்.
தாதுக்களையோன் - புட்பராகம்.
தாதுசேகரம் - துருசி.
தாதுநட்டம் - தாதுச்சிதைவு.
தாதுபார்த்தல் - கைநாடியறிதல்.
தாதுமாதளை - பூமாதளை.
தாதுமாரிணி - பொரிகாரம்.
தாதுமூலசீவன் - இரச மிரச வஸ்துக்களுஞ் சீவவஸ்துக்களும்.
தாதுராஜகம் - விந்து.
தாதுரோகம் - ஒருவியாதி.
தாதுவல்லபம் - பொரிகாரம்.
தாதுவாதம் - கலைஞான மறுபத்துநான்கினொன்று.
தாதுவாதி - பொன்முதலிய வுலோகங்களைப் பரிசோதிப்போன்.
தாதுவிருத்தி - தாதுவிளைவு.
தாதுவைரி - ஏலம், கடுக்காய், கந்தகம்.

தாதை - பேய்க்கொம்மட்டி, தகப்பன், பாட்டன், பிரமன். இவனும் விதாதையும் சுவாயம்புவ மனுவுக்குத் துணைவர்களாய் பிரமாவினாற் சிருஷ்டிக்கப் பட்டவர்கள். இவர்களோடு வருணன்பாரியாகிய ஜியேஷ்டாதேவியும் விஷ்ணுதேவியாய் இலக்ஷுமியும் சிருஷ்டிக்கப்பட்டார்கள். இது ஒருகற்பத்துவரலாறும். மற்றொரு கற்பகாலத்தில் பிருகுவுக்குக் கியாதியிடத்திலே தாதை விதாதை இலக்ஷுமி இம்மூவரும் பிறந்தார்களென்பது பாகவதக் கூற்று.

தாதைதன்றாதை, தாதைதாதை } பாட்டன்.

தாத்தாரி - நெல்லி.

தாத்திரம் - கூன்வாள், கோடாலி.

தாத்திரி - ஆடுதின்னாப்பாளை, நெல்லி, பூமி, மாதா.

தாத்திரிசை - திரௌபதியினது பரிசாரகி.

தாத்திரிபலம் - நெல்லிக்கனி.

தாத்திரிபுத்திரன் - வளர்ப்புப்பிள்ளை.

தாத்திரியம் - வறுமை.

தாத்திருவாதம்-எத்து, கபடம், பொய்.

தாத்துதல் - தாற்றுதல்.

தாத்துரு-துருவாதசாதித்தரில்ஒருவன்

தாத்துவன் - உபகாரி.

தாநகம், தாநாகம் } சொத்துமல்லி.

தாநி ஒருநதி, ஒருமரம், கொத்துமல்லி, நிதாநம், வாசஸ்தாநம்.

தாந்தம் - குருகிட்டி.

தாந்தவம் - குருகிட்டி.

தாந்தவம் - தூற்றல், நெய்குதல்.

தாந்தனம் - காற்று.

தாந்தன் - தவஞ்செய்தலி லுண்டாகும் துன்பத்தைச் சகிப்பவன்.

தாந்திமம் - பஞ்சேந்திரிய நிக்கிரகம்.

தாந்திரிகம்-ஒருநோய் தந்திரத்திற் கடுத்தது, தந்திரசியாயத்துக் குரியது.

தாந்திரிகன் - நூல்வல்லோன்.

தாபகம்-துக்கம், நிலை, நிறுத்தல், வெப்பம், வைத்தல்

தாபகன் - நிலைநிறுத்துபவன்.

தாபசபத்திரிகம் - தவனம்.

தாபசப்பிரியை - கொடிமுந்திரி.

தாபசம் - ஒருமரம், கொக்கு.

தாபசன் - தவசி.

தாபசுரம் - ஒருநோய்.

தாபசோபம் - தளப்பம், மிகுவாட்டம்.

தாபதநிலை - கைமைவிரதம், தபவொழுக்கம் நெய்தற்புறம் அறு தலைமகனை நீங்கிய, மாதர்நிலை.

தாபதம் - முனிவர்வாசம்.

தாபதர் - சடைமுடியர், சமண்முனிவர், முனிவர்.

தாபத்தியர் - தபதிவமிசத்துப் பிறந்த கௌரவ பாண்டவர்கள்.

தாபநன் - சூரியன்.

தாபநி - இரவு, ஒருநதி, ஒருமந்திரம்.

தாபநீயம் - உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று.

தாபந்தம், தாபந்திரியம் } வேதனை.

தாபமாரி - தான்றி.

தாபம் - உட்டணம், காடு காட்டாக்கினி, தாகம், துக்கம், துன்பம், வெப்பம்.

தாபரசங்கம் - எழுவகைத் தோற்றத் தொன்று, அது மாமுதலியன.

தாபரம் - ஆதாரம், உடல், கோயில், தஞ்சம், துணை, நிலத்திணைப்பொருள், பூமி.

தாயரன் - கடவுள்.

தாபரித்தல் - தாங்குதல்.

தாபனம் - சூரியகிரணம், தாபிப்பு, வெப்பம்.

தாபி - புத்தன், யமுனையாறு.

தாபிஞ்சம் - ஆமணக்கு, பச்சிலைமரம்.

தாபிதம் - சூடு, தாபித்தல்.

தாபித்தல் - இருத்துதல், தாபனம்பண்ணுதல்.

தாபியம் - வைத்தல்.

தாப்பணிவார் - கசை, கல்லணைக்கச்சை, தாம்புக்கயிறு.

தாப்பால் - தாழ்ப்பாள்.

தாப்பிசை, தாப்பிசைபொருள்கொள் } பொருள்கோளெட்டினொன்று, அது நடுவினுள்ளே மொழியை யேனையீரிடத்துங் கூட்டிப் பொருள் கொள்வது.

தாப்பு - குறித்தநேரம்.

தாப்புக்கொள்ளுதல் - சமயம் பார்த்திருத்தல்.

தாமக்கிரந்தி - அஞ்ஞாத வாசத்திற் குதிரைப்பாகனுகவேஷம்பூண்டநகுலன்பெயர்.

தாமசபதார்த்தம் - வெறியூண்.
தாமசப்பிரகிருதி - தாமதகுணத்தின்மூலம்.
தாமசம் - இருள், தாமதம்.
தாசன் - நான்காம்மனு இவன்றந்தை சுராஷ்டிரன், தாய் உற்பலாவதி.
தாமணி - கயிறு, தாம்பு.
தாமதம் - தாமதித்தல், முக்கணத்தில் ஒன்று இது ஒழுக்கவழு, காமம், கொலை, கோபம், சோம்பு, நீதிவழு, நெடுந்துயில், பேருண்டி, பொய், மறதி, வஞ்சக முதலியன.
தாமதவேளை-மூன்றேமுக்கா நாழிகை கொண்டு வருமோர் காலம்.
தாமதித்தல் - தடைபடல், தரித்தல்.
தாமதித்தர்-திருக்குறளுக்குறை செய்த பதின்மருள் ஒருவர்.
தாமகிதி - சூரியன்.
தாமம் - அஞ்சத்தக்கது, அணைகயிறு, இடம், உடல், ஒழுங்கு, ஒளி, கயிறு, கிரணம், கீர்த்தி, கொன்றைமரம், சரீரம், சுகம், தாமணி, நிங்கு, பட்டினம், பிரபை, பிறப்பு, புள்ளினதாரம், பூ, பெருமை, போர்க்களம், மகத்துவம், மணிவடம், மலை, மாலை, முடியுறுப்பு, மூவாறு கோவைமணியுள்ள மாதரிடையணி, யானை, விருப்பம், வீடு.
தாமரசம்-செம்பு, தாமரை, பொன்.
தாமரம் - நீர், நெய்.
தாமரை - கமலம்.
தாமரைக்கண்ணன் - விட்டுணு.
தாமரைக்கொட்டை - பொகுட்டு.
தாமரைச்சத்துரு - ஒரு பாஷாணம்.
தாமரைநண்பன், தாமரைநாயகன் } சூரியன்.
தாமரைநூல் - தாமரைவளையத்திநூல்.
தாமரைமணி - தாமரைக்கொட்டை.
தாமரையாசனன் - பிரமன்.
தாமரையாசனி, தாமரையாள் } அரிதாரம், இலக்குமி.
தாமரையான் - பிரமன்.
தாமரைவாசி - தாமரையாள்.
தாமலகி - கிலநெல்லி.
தாமலகிதளம் - தாளிசபத்திரி.
தாமலை - புன்னை.
தாமனபருவம் - சித்திரை சுக்கிலபக்கச் சத்தமி.
தாமணி - நரம்பு.
தாமான் - கப்பர்பின்பக்கத்துக் கயிறு.
தாமிசிரம் - நாமம், பேரிருள்.
தாமிரகருணி - மேற்றிசை யானைக்குப் பெண்யானை.
தாமிரசிகி - கோழி.
தாமிரசிந்தூரம் - ஒருமருந்து.
தாமிரபட்டம் - செப்பேடு.
தாமிரபருணி-அஞ்சன் என்னும் திக்கியானையினது பெண், மலையமலையில் உண்டாகும் ஒருபுண்ணியநதி. இதில் முத்துச்சிப்பிகள் அகப்படும்.
தாமிரபல்லவம் - அசோகமரம்.
தாமிரபீசம் - கொள்.
தாமிரம் - செம்பு.
தாமிரலிப்தி-கங்காநதி சங்கமத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு நகரம்.
தாமிரன் - முராசரன்மகன், கிருஷ்ணனாற் கொல்லப்பட்டவன்.
தாமிரவிருந்தம் - கொள்.
தாமிரிகை - குன்றிக்கொடி.
தாமிரை- செம்புதக்ஷப்பிரஜாபதிமகள். தாய் உற்பலாவதி.
தாமை - தாம்பு.
தாமோதரன்-ஆமை, விட்டுணு. அசோதையால் உதரத்தில் கயறுகொண்டு உரலோடுகட்டப்பட்டகிருஷ்ணன்.
தாம் - அசைச்சொல்(உ-ம்.) அவர்தாம், சாரியை (உ-ம்.) எல்லோர் தாமும், தானென்பதன் பன்மை.
தாம்பணி - தாம்புக்கயிறு.
தாம்பாளம் - ஒருவகைத்தட்டம்.
தாம்பிகம்-தூரத்தில்வருபவரைக் காணல்.
தாம்பிகன் - மாயக்காரன்.
தாம்பிரகம் - செம்பு.
தாம்பிரகருப்பம் - துருசி.
தாம்பிரகாரர் - கன்னர்.
தாம்பிரசூடம் - சேவல்.
தாம்பிரபத்திரம் - செருப்பப்பட்டயம்.
தாம்பிரமிருகம் - செங்கிறமான்.
தாம்பிரம் - செம்பு.
தாம்பிரவன்னமன் - செம்புமணல்.
தாம்பிரவன்னம் - சிவப்பு.
தாம்பிரவனனி - ஓர்யாறு.
தாம்பிராட்சம் - குயில்.
தாம்பு - கயிறு, தாமணிக்கயிறு.
தாம்புலோவல்லி - மஞ்சாடி.
தாம்பூரவல்லம் - வாழை.

தாம்பூலகரங்கம் - வெற்றிலைப்பெட்டி.
தாம்பூலதன் - அடைப்பைக்காரன்.
தாம்பூலதாகியம் - வெற்றிலைச்சுருள்.
தாம்பூலபீடிகை - வெற்றிலைப்பெட்டி.
தாம்பூலம் - வெற்றிலை அது அட்டபோகத்தொன்று, வீடிகை.
தாம்பூலவல்லி - வெற்றிலை, வெற்றிலைக்கொடி.
தாம்பூலவாகன் - அடைப்பைக்காரன்.
தாம்பூலி - தாம்பூலவல்லி.
தாம்பூலிகன் - வெற்றிலைவாணியன்.
தாயகம் - ஈகையுடைமை.
தாயகன் - கொடையாளி, பாலகன்.
தாயக்கட்டை - சூதுகவறு.
தாயதி, தாயத்தனம் } உரிமைப்பங்கு, தாயாதித்தனம்.
தாயத்தார் - பங்காளிகள், ஞாதிகள்.
தாயபந்து - சகோதரன்.
தாயபாகம் - சுதந்திரம், பங்கு.
தாயம் உடைத்தல், உபகாரம், உரித்து, ஒரு சூது கொடை, சமயவாய்ப்பு, சுற்றம், சூது, கவறு, தந்தைவழிச்சுற்றம், துன்பம், நட்டம், பங்கு.
தாயம்பார்த்தல்-சமயவாய்ப்புப்பார்த்தல்
தாயம்போடுதல் - சூதாடுதல்.
தாயவிபாகம் - உரிமைப்பொருள் பிரித்தல்.
தாயாதன் - உரிமைப்பங்காளி, உறவன் மகன்.
தாயாதிகள் - ஞாதிகள், தாயத்தார்.
தாயாதித்தனம் - எதிரிடை, எரிச்சல்.
தாயாபவர்த்தனம் - பொருட்சேதம்.
தாயான் - ஒன்பது.
தாயான்புலு - தொண்ணூறு.
தாயித்து - அட்சரக்கூடு.
தாயுமானவர், தாயுமானார் } ஒரு ஞானி, செவ்வந்தி யீசர்.
தாயுமானேச்சுரர் - திரிச்சிராப்பள்ளியிலே கோயில்கொண்டிருக்கும்சுவாமி திருநாமம்.
தாயுமானவர்-இற்றைக்கு இருநூற்றெழுபது வருஷங்களுக்குமுன்னே திரிச்சிராப்பள்ளியிலே அரசுசெய்தவிஜயரங்க சொக்கநாத நாயகர்க்குச் சம்பிரதியாக விருந்த கேடிலியப்ப பிள்ளைக்கு அருந்தவப்புதல்வராக அவதரித்த இவர், சிவயோகியாகி அற்புதபத்திரசங்கான்றெழுகுவதாகிய அநேக பாக்களைப் பாடியவர். அப்பாக்கள் தாயுமானவர் பாடலெனப்படும். அந்நூலிலே சம்ஸ்கிருதச்சொற்கள் மிக மலிந்து கிடத்தலின் அவர் வடமொழியிலும்வல்லுநரென்பது நன்கு துணியப்படும்.
தாயேடு - பாடேடு.
தாயைக்கொல்லி குட்டியிடுக்கி, மாபாவிவாழை.
தாயைக்கொன்றான் - புல்லூரிவாழை.
தாயோலை - முதலோலை.
தாய் அண்ணன்தேவி, அரசன்தேவி, ஊட்டுந்தாய், குருவின்தேவி, கைத்தாய், செவிலித்தாய், தன்தேவியையீன்றாள், நற்றாய், பாராட்டுந்தாய், மாதாவின் சகோதரி, முதல், முதற்றாம், முதன்மை.
தாய்க்கண் - பருங்கண்.
தாய்க்கிழங்கு - கிழவிக்கிழங்கு.
தாய்ச்சி - கருப்பிணி, தாய், முங்கீடுகாரன்.
தாய்ச்சிற்றம்பலம் - ஒரு விளையாட்டு.
தாய்ச்சீட்டு - முன்னுறுதி.
தாய்பெற்றமேனி - நிருவாணம்.
தாய்மாமன் - தாயின்சகோதரன்.
தாய்வழி, தாய்வழிச்சுற்றம் } மாதாவழிச் சுற்றம்.
தாரகசித்து - குமரன், குமாரக்கடவுள்.
தாரகத்தான் - பன்றிக்கொம்பு.
தாரகப்பிரமம் - ஒருமந்திரம்.
தாரகம் - ஆதாரம், உச்சவிசை, ஒருமந்திரம், கண், கண்மணி, பலண்டுருவபாஷாணம், பிரணவம், வெள்ளி.
தாரகருமம் - கல்யாணம்.
தாரகன் - கண்ணன், தேர்ச்சாரதி, குழந்தை, தாங்குவோன், தாபரிக்கிறவன், மகன். (தி) வச்சிராங்கனுக்கு வச்சிராங்கி வயிற்றிற் பிறந்த இராக்ஷசன், இவன் பிரமாவை நோக்கித் தவஞ்செய்து எவராலுஞ் சாகாத வரம்வேண்ட, பிரமா அவனுக்குப் பிரசன்னராகி ஏழுநாட்பிள்ளையன்றி மற்றெவருங் கொல்லாவரங்கொடுத்தார் தநுபுத்திரன். இரணியாக்ஷன் மகன். இவன் காலநாபன் எனவும் படுவன். சசியபனுக்கு மாயையிடத்துப் பிறந்த புத்திரன். சூரபன்மன்

தம்பி, சுப்பிரமணியராற் கொல்லப்பட்டவன். கிருஷ்ணன் சாரதி.
தாரகாகணம் - விண்மீன் கூட்டம்.
தாரகாபதி - சந்திரன், வியாழம்.
தாரகாரி - குமரன்.
தாரகிகி - இரவு.
தாரகேதன் - பாதாளகேதன் தம்பி இவன் றமையினைக் குவலயாசுவன் கொன்ருன்.
தாரகை-கண்மணி, விண்மீன் நக்ஷத்திரம்.
தாரகைமாலை-ஒரு பிரபந்தம், அது கற்பின் மகளிரியற்கை தோன்றக்கூறுவது.
தாரக்கம் - தாரகம், பத்தியம்.
தாரசங்கிரகம் - விவாகம்.
தாரசுத்திகரம் - ஈயம்.
தாரண - பதினெட்டாவதாண்டு.
தாரணகன் - கடனாளி.
தாரணம் - ஒருபூடு, கடன், தாரணை, தெப்பம், கிளைத்தமைத்தல்.
தாரணி - பூமி.
தாரணை - அட்டாங்கயோகத்தொன்று, அது இதயம் கண்டம் கபாலம் நாபி நெற்றி இவற்ருென்றிற் சிந்தை வைத்திருத்தல், அதிவாசம், உறுதி, கடன் கட்டளை, சரிகிலையினிற்றல், ஞாபகம், தரித்தல், கிலை, புலனடக்கல், வாயுவைக் கும்பித்தல்.
தாரதண்டுலம் - வெண்சோளம்.
தாரதம் - இரதம், கடல், சிந்தூரம்.
தாரதம்மியம் } உவமை, ஏற்றத்தாழ்ச்சி, ஒப்புவித்தி
தாரதன்மியம் }
தாரநாசம் - பேரொலி.
தாரபரிகிரகம் - விவாகம்.
தாரம்-அரிதாரம், அரும்பண்டம், எல்லை, கடன், கல், சாதிலிங்கம், சிற்றரத்தை, தாரா, தேவதாரம், நட்சத்திரம், நா, நாரத்தைநீர், பச்சிலைப்பாம்பினஞ்சு, பனி, பாதரசம், பார்வை, பிரணவம், மழை, மழைத்துளி, மனைவி, முத்து, மூக்காற் பிறக்குமிசை, வல்லிசை, விவாகம், வீணை நரம்பில் ஒன்று, வெண்கலம், வெள்ளி.
தாரன்-தாரதந்தை இவன் பிரகஸ்பதி குமாரன், இவன் வாநாருள்ளே மகா புத்திமான்.
தாரா - ஒருபுள், ஒரு பெயரெச்சம், ஒரு வினைமுற்று, ஒரு வினையெச்சம், குருகு, மனைவி, விண்மீன்.
தாராகணம் - நட்சத்திரக்கூட்டம்.
தாராகதம்பம் - கடம்பு.
தாராங்கம் - மழைத்துளி, வாள்.
தாராங்குரம் - ஆலங்கட்டி.
தாராசம்பாதம் - விடாமழை.
தாராசாரம் - பெருமழை.
தாராடம் - குதிரை, சாதகப்புள், மதயானை, மேகம்.
தாராட்டு - ஒருபாட்டு, தாலாட்டு.
தாராட்டுதல் - ஓராட்டுதல்.
தாராதத்தம்-நீரோடு தானஞ்செய்தல்.
தாராதரம் - மேகம், வாள்.
தாராதாரம் - மேகம்.
தாராதிபதி - சந்திரன்.
தாராதீனன்-மனைவிக் கமைந்து நடப்போன்.
தாராபதம் - நட்சத்திரபதவி, வானம்.
தாராபதி - சந்திரன், வியாழம்.
தாராபீடன் - சந்திரன்.
தாராபுரம்-போஜன்ராசதானி, ஓரூர்.
தாராபூஷணம் - இரவு.
தாராப்பிரம் - கர்ப்பூரம்.
தாராமண்டலம் - நட்சத்திரமண்டலம்.
தாராமூக்கன் - ஒருபாம்பு.
தாராவணி - காற்று.
தாராவிஷம் - வாள்.
தாராளம் - இட்டம், உதாரம், கொடை, தெளிவு, தைரியம், பொலிவு, மிகுதி, விசாலம்.
தாரி-அரிதாரம், உடையோன், குணம், தரிப்பவர், வழி, விதம், விலைவாசி.
தாரிகம் - தீர்வை.
தாரிகாதானம் - கன்னிகாதானம்.
தாரிகை - பனஞ்சாறு.
தாரிசம் - இணக்கம், ஒப்பந்தம், சம்மதி.
தாரிணி - பட்டுப்பருத்தி, பூமி.
தாரிதம் - குதிரைநடை, பிழைத்தல்.
தாரித்தல் - தாங்குதல்.
தாரித்திரம் } தரித்திரம்.
தாரித்திரியம் }
தாரிபாரி - சமாசார மறிந்தவன், சுபாவம், நல்லவழி யறிந்தவன்.
தாரிஷி-கந்தாஜனுக்குத் தமனகையிடத்துப் பிறந்தபெண், இவள் பக்ஷிரூப

முடையவள். வபுஸ்ஸு என்னும்அப்சரசை துர்வாசர்சாபத்தால் பக்ஷியாகித் தருமபக்ஷிகளுக்குத்தாயாயினள்.

தாரிக்ஷியன்-கசியபன், ஒரு ரிஷி, இவர் ஆச்சிரமத்தில் இவர்மகன் மான்ரூபோல் போர்த்திருந்தபோது அவரை மானென நினைந்து கைகயவமிசத்துத் துந்துமாரன் அம்பினாற்கொன்றான். அறியாது செய்தா னென்பதைப் பொறுத்துத் தமது தபோபலத்தால் மகனை உயிர்பெற் றெழும்புமாறு செய்தவர் கருடன். விஷ்ணுபரிசாரகருள் ஒருவன்.

தாரிஷ்டவமிசம்- வைவசுவதமனுபுத்திரனாகிய திருஷ்டனால் வந்தவமிசம்.

தாரீடம்-சமுத்திரம், சுவர்க்கம், பொன்.

தாரு-பித்தளை, மரக்கொம்பு, மரப்பொது, தேவதாரு.

தாருகசித்து - குமரன்.

தாருகதலி - கான்வாழை.

தாருகம் - சோலை, தேவதாருவனம்.

தாருகருப்பை - மரப்பாவை.

தாருகவனம் - தேவதாருவனம்காண்க.

தாருகவிநாசனி, தாருகற்செற்றாள் } காளியம்மை.

தாருகற்செற்றோன் - குமரன்.

தாருகன், தாருகசூரன் } காளியால்கொலையுண்டவசுரன், குமரனால் கொல்லப்பட்ட அசுரன்.

தாருகாரி - குமரன்.

தாருகாவனம் - ஒருவனம்.

தாருசம் - செம்புளிச்சை, மத்தளம்.

தாருணம் - அச்சம், கூச்சம்.

தாருணி - நத்தைச்சூரி, பூமி.

தாருண்ணியம் - இளம்பருவம்.

தாருபத்திரிகை - மரப்பாவை.

தாருபாத்திரம் - மரப்பாத்திரம்.

தாருமயம் - மரத்தாலாயது.

தாருவனம் - சோலை.

தாரை - அபிஷேகம், ஒப்பு, ஒழுங்கு, கண், கண்மணி, காளம், கீர்த்தி, குதிரைநடை, கூர்மை, கொடிப்படை, சக்கராயுதம், சந்ததி, சலதாரை, சிறுசின்னம், சீலை, தத்தம்பண்ணுநீர், திகிரி, திரள், நா, நேரோடல், பஞ்சகன்னியரி லொருத்தியான சுரகுருபன்னி, படையின்முன்னணி, பண்டியுருள், பாய்தல், பெருமழை, மலைச்சாரல், மழை, மனைவி, வலி, வழக்கம், வழி, விண்மீன், ஓரப்சரசை, பிருகஸ்பதி பாரி. இவள் சந்திரனை சோரமார்க்கத்திற்கூடிப் புதனைப் பெற்றவள். தாரன் புத்திரி, வாலிபாரி, அங்கதன் தாய்.

தாரைவார்த்தல்-தத்தம்பண்ணி நீர்விடுதல்.

தாரோபசங்கிரகம் - விவாகம்பண்ணல்.

தார் - கிண்கிணிமாலை, கொடிப்படை, தாறு, படை, படைவகுப்பு, பூ, பூவரும்பு, மாலை.

தார்காணித்தல் - அத்தாட்சிப்படுத்தல்.

தார்க்கிகன் - ஒருமதக்காரன், தருக்கக்காரன்.

தார்க்கிகன்-வித்தியாகர்பனை, தோஷம், பிரவிருத்தி, சனனம், துக்கமென்பவைகளைத் தனித்தனிநீக்கிச்செல்ல முடிவினின்ன துக்கம் ஒழியுமென்றும், இதுவே முத்தியென்றுங் கூறும் சமயி.

தார்க்கியன் - கருடன்.

தார்க்குழல் - தார்நூல் சுற்றுகுழல்.

தார்த்தராஷ்டிரன் - துரியோதனன்.

தார்த்தியம் - சடுமை.

தார்மணி - கிண்கிணிமாலை, குதிரைக்கழுத்தின் கிண்கிணிமாலை.

தார்மபத்தநம் - மிளகு.

தார்மிகன - புண்ணியவான்.

தார்மிகை - காதசிதிதி.

தார்யம் - தரிக்கத்தக்கது.

தார்வாதாடம் - தச்சன்கருவி.

தாலகி - கள்.

தாலகேதனன்-பலராமன், வீட்டுமர்சாரி.

தாலதவ்வியம் - கைவாள்.

தாலத்துவசன் - பலதேவன்.

தாலபத்திரம் - பனையோலை.

தாலபத்திரி - மரமஞ்சள்.

தாலபோதம் - ஆவிரை.

தாலமூலி - நிலப்பனை.

தாலமேழுடையோன் - அக்கினிதேவன்.

தாலம் - அகங்கை, உண்கலம், கூந்தற்பனை தட்டம், தாலம்பபாஷாணம், தேன், நா, பனை பூமி, யானைச்செவி.

தாலம்பபாஷாணம் - ஒருமருந்து.

தாலவட்டம்-பூமி, யானைச்செவி, யானைவால், விசிறி.

தாலவிருந்தம் போராலவட்டம்,விசிறி.
தாலவ்வியம்-அண்ணத்தால் பிறப்பன.
தாலங்கன் - பலராமன, வீடுமன்.
தாலாங்கை - யமுனையாறு.
தாலாட்டு - ஒருவிளையாட்டு.
தாலாலம் – பழமொழி.
தாலி கீழ்காய்நெல்லி, மங்கலநாண்.
தாலிகட்டு - கலியாணம், மங்கிலியதாரணம்.
தாலிகம் - விரித்தகை.
தாலிக்காரி - சுமங்கலி.
தாலிக்கொடி - மங்கலநாண்.
தாலிக்கோவை - மங்கிலியங் கோக்கப்பட்ட ஒரு பணி.
தாலிசம் – மலை.
தாலிச்சரடு – தாலிக்கொடி.
தாலிபாகம் - தீட்சையிற் குருப்பகுக்குமன்னம்.
தாலிப்பெட்டி பொன்னைத்துப் பெட்டி.
தாலிப்பொருத்தம்- மங்கிலியப்பொருத்தம்.
தாலியம் - பாதிரி.
தாலு - அண்ணம், நா.
தாலுசண்ணி - வெள்ளைக்சாக்கணம்.
தாலுகா – நீதித்தலம்.
தாலுகை - மேளு.
தாலூரம் – சுழல்காற்று.
தால் - தாலாட்டு, தாலு, பிள்ளைக்கவியுறுப்பில் ஒன்று.
தாவசி – ஒரு சன்னியாசி.
தாவடம் - இருப்பிடம், உருத்திரமணிமாலை, சமுத்தணிமாலை.
தாவடி – பிரயாணம், போர்.
தாவட்டம் - ஒழுகல், சிற்பநூன் முப்பத்திரண்டில் ஒன்று.
தாவணி - கண்டங்கத்திரி, மாட்டைப்பிணிக்குங் தாம்பு.
தாவந்தம் - இக்கட்டு, நரகம்.
தாவம் - காடு, காட்டுத்தீ, மருதநிலத்தூர், வெப்பம்.
தாவரசங்கம் - நிலத்திணைப்பொருள்.
தாவரம் – அசரம், இடம், இட்டம், உடல், உதவி, உறுதி, எழுபிறப்பில் ஒன்று, நிலை, பூமி,மரப்பொது,மலை, வின்ஞாண்.
தாவரன் - கடவுள்.
தாவரித்தல்-காப்பாற்றுதல், தாங்குதல்.
தாவல் - தாண்டல், பரத்தல்.
தாவளக்கட்டு - கூன்வாங்கிக்கட்டுதல்.
தாவளக்காரர்-தேசாந்தரவணிகர், பொதிக்காரர்.
தாவளமாடு - பொதிமாடு.
தாவளம் – இருப்பிடம், கடை, தாங்கல், பொதிகாரர், மருதநிலத்தூர்.
தாவளி – கம்பளி.
தாவனம்-அசைவு, சுத்திசெய்தல்,தாபனம்.
தாவாக்கினிவிபூதி - காட்டுத் தீச்சாம்பல்.
தாவாரம் - தாழ்வாரம்.
தாவானலம் - காட்டுத்தீ.
தாவிஷம் - சமுத்திரம், சுவர்க்கம்.
தாவிளை - சகாயம், நன்மை.
தாவு - இளைப்பாறுமிடம், உறைவிடம், ஒதுக்கிடம், குதிரைநடை, தாவென்னேவல், பகை, பற்றுக்கோடு,பாய்ச்சல், வருத்தம், வலி.
தாவுதல் - அழிதல், எட்டிப்பிடித்தல், தாண்டல், நீட்டல், பரத்தல்.
தாவுரி – இடபவிராசி.
தாழ்க்கோல் - தாழ்ப்பாள், திறப்பு.
தாழச்சங்கு - வாயகன்றசங்கு.
தாழாமை – இறுமாப்பு.
தாழி-அரிதாரம், குடம், சாடி,சிவதை, பரணிநாள்.
தாழிகை - ஒருசவி.
தாழுகை } தாழ்தல்.
தாழுதல் }
தாழை – தாழைமரம், தென்னமரம்.
தாழ் – இரௌவுக்லைகக்கச்சு, சுவர்ப்புறத்து நீண்டவுத்திரம், தாழ்க்கோல், தாழென்னேவல், நீளம்.
தாழ்குழல்-பின்சாய்ந்தவளகம், பெண்.
தாழ்க்கோல் - தாட்பாள்.
தாழ்சடை - நீண்டசடை.
தாழ்ச்சி-குறைவு,தவறு,தாழ்மை,நட்டம்.
தாழ்ச்சிவளர்ச்சிசிறுமைபெருமை.
தாழ்தல்-அமிழ்ந்துதல், ஆசை,ஆசைப்பெருக்கம், குறைதல், சரிதல்,தங்கல் தாமதித்தல், தூங்குதல்.
தாழ்த்தல்-அடக்கம்பண்ணுதல், இருத்தல், கீழ்ப்படுத்துதல், குறைத்தல், தாமதித்தல், புதைத்தல், மந்தப்படுதல்.
தாழ்த்துதல்-அடக்குதல், அமழ்த்துதல் கீழ்மைப்படுத்துதல், குறைத்தல், சாய்த்தல், தாமதித்தல், பணித்தல்.

தாழ்ப்பம் - ஆழம்.
தாழ்ப்பாள் - தாட்பாள்.
தாழ்ப்பு - தாழ்ச்சி, தாழ்த்துதல்.
தாழ்மை ஒடுக்கம், கீழ்மை, நீசத்துவம்.
தாழ்வடம்-முத்துக்கோவைமுதலியன.
தாழ்வயிறு - சரிந்தவயிறு.
தாழ்வாய் } தாடி.
தாழ்வாய்க்கட்டை } தாடி.
தாழ்வாரம் - வீட்டிறப்பு.
தாழ்வு-கீழ்மைக்குறைவு, சாய்வு,தவறு, பள்ளம்.
தாளகம் } அரிதாரம்.
தாளக்கம் } அரிதாரம்.
தாளஜங்கள் - கார்த்தவீரியார்ச்சுனன் பௌத்திரன், இவன் ராஜதானி மாகிஷ்மதிபுரம்.
தாளத்திரயம்-உலக்கைமூவிரலரல் இடதுள்ளங்கையிற் சலத்தை மூத்திரந் தட்டல்.
தாளப்பிரமாணம் - சங்கீதசுருதிப்பிரமாணம். அது அங்கம், இலயை, கலை காலம், கிரகம், கிரியை, சாதி, பிரத்தாரம், மார்க்கம், யதி.
தாளம் - ஒருவாச்சியம், கலைஞான மறுபத்துநான்கில் ஒன்று, சதி, பனை.
தாளம்போடுதல் - தாளங்கொட்டுதல்.
தாளவகையோத்து.பழைய தமிழ்நூல்களுள் ஒன்று, அதிற் கூறப்படும் பொருள் தாளவிலக்கணம். கடைச்சங்கத்தார் காலத்திற் செய்யப்பட்டது.
தாளன் - குழைக்குறியிர்கனவீனன்.
தாளாண்மை - ஊக்கம், முயற்சி.
தாளாளர் - ஊக்கமுள்ளோர், வைசியர் பொது.
தாளி - அனுடநாள், ஒருகொடி, தாளியென்னேவல், பனைமரம்.
தாளிக்கம் - தளைப்பு, திடன்.
தாளிசபத்திரி - ஒருமருத்திலை.
தாளிசம் - ஒருமரம்.
தாளிதம் - தாளிப்பு.
தாளித்தல் - மசித்தல்.
தாளிப்பனை - சீதாளம்.
தாளிப்பு - மசிப்பு, மதாப்பு.
தாளினி - சிவதை, கிலவாகை.
தாளுதல் - இயலுதல், பொறுத்தல்.
தாள்-அருவி, அலகு, ஆதி, ஒட்டு, ஒற்றைக்காகிதம், கதவுறுதாள், கால், தாளென்னேவல், திறவுகோல்,பணிகளின் கடைப்பூட்டு, முயற்சி,விளக்குத்தண்டு, விற்குதை.
தாள்கழுவல்-பாதசுத்திபண்ணல் அது புண்ணிய மொன்பதில் ஒன்று.
தாறு - அங்குசம், அளவு, இருப்புமுள், ஐது, கமுகு வாழை முதலியவற்றின் குலை, நூனுழி, விற்குதை.
தாறுகன்னி - வெள்ளைக்காக்கணம்.
தாறுமாறு - குழப்பம், விரோதம்.
தாற்கரியம் - களவு.
தாற்பரியம்-கருத்து,கொள்கை,விபரம்.
தாற்பரியம் பண்ணுதல் - பருப்பித்துப் பேசுதல்.
தாற்பரியவுரை - விபாவுரை.
தாற்று - கொழிப்பு.
தாற்றுக்கதிர் - கொத்தாய்க் காய்க்குங்கதிர்.
தாற்றுக்கோல் - துறட்டி, முட்கோல்.
தாற்றுதல் - தரித்தல், புடைத்தாற்றிக் கழித்தல்.
தாற்றுப்பூ - கொத்துப் .
தானகம் - பரதவுறுப்புளொன்று.
தானக்கை - உயிர்நிலை, பொறுப்பிடம்.
தானங்கொடுத்தல் - காயத்தினற்குணமூன்றிஞென்று, கோதானமுதலிய வீதல்.
தானசுத்தி - பஞ்சசுத்தியிலொன்று அது இருக்குந்தானத்தைச் சுத்திசெய்தல்.
தானசீலம் - கொடைச்குணம்.
தானஞ்செய்தல் - தானங்கொடுத்தல்.
தானத்தார் - கோயில் விசாரணைக் குரியோர்.
தானநிலை-வலிவுமெலிவுசமனென்பன.
தானபதி - கொடையாளன்.
தானபத்திரம் } நன்கொடையுறுதி.
தானபத்திரிகை } நன்கொடையுறுதி.
தானப்பிரட்டன் -உத்தியோகமிழந்தவன்.
தானப்பிரதிபாலியம் - அடகு.
தானப்புழு - மலக்குடலிற்புழு.
தானம்-அடித்தல், இடம், ஈகை,அஃது இராசதகுணத்தொன்று,உபாயநாலிஞென்று, புண்ணியமேழிஞென்று தரிசனப்படுவது,தண்டித்தல்,தேவலோகம், தேன்,நீராட்டு,யானைமதம், வலி.
தானவம் - மிருது.
தானவர் - காசிபனுக்குத் தநுவினிடத்துப் பிறந்த புத்திரர். இந்தச் சந்ததி

யில் பெயர் படைத்தவர் அயோமுகன் ஏகசுசான், புலோமகன், சபிலன், அந்தகன் முதலானோர்.
தானவர் - அசுரர்.
தானவன் - அசுரன், சந்திரன்.
தானவாரி - இந்திரன், திருமால்.
தானவியத்தியாசம் - அதமதானம்.
தானவிரன் - மிகுகொடையாளன்.
தானுகுதல் - தானுயாதல்.
தானுட்டித்தனுநிறுத்தல் - எழுவகை மதத்திலொன்று அது கற்பித்தற்கு நியாயமுரைத்து நிறுத்தல்.
தானுதிபதி - படைத்தலைவன்.
தானுபதி - தூதன், படைத்தலைவன்.
தானுபதிக்கம் } தானுதிபதி யுத்தி
தானுபதித்தியம் } யோகம்.
தானுனமூவர் - சாலக்கிராமம்.
தானி-இருப்பிடம், தானத்திலுள்ளது, பண்டசாலை.
தானிகம் - கொத்துமல்லி.
தானிகன் - பூசாரி.
தானிகை - கொத்துமல்லி.
தானிப்பு - தாணித்தல்.
தானியதற்பகம் - பதர்.
தானியகோட்டகம் - கோரியை, தானியக்களஞ்சியம்.
தானியசங்கிரகம் - தானியஞ் சேர்த்து வைத்தல், பண்டசாலை.
தானியசாரம் -அரிசி தூற்றினபொலி.
தானியதவசம் - தானியசம்பத்து.
தானியப்பொட்டு - அந்துப்பூச்சி, பயிர் நோயில் ஒன்று.
தானியமாயன் - தானியம் விற்போன்.
தானியமாலினி - இராவணனைக் கூடி அதிகாயன் என்னும் புத்திரனைப் பெற்ற அப்ஸரப்பெண்.
தானியம்-கொத்துமல்லி, நென்முதலிய மணிகள்.
தானியராசன் - கோதுமை.
தானியவத்தனன்-பொலியைக்கொடுப்போன்.
தானியவிலக்குமி - அட்டவிலக்குமியில் ஒருத்தி.
தனியாகம் - கொத்துமல்லி.
தானியாகுபெயர் - தானத்திலிருக்கும் பொருளானுகும் பெயர்(உ - ம்.) விளக்கு.
தானியாதிபன் - தானியத்துக்கதிபன்.
தானியாரி - பெருச்சாளி
தானியார்த்தம் - தானியசம்பத்து.
தானியோத்தபம் - அரிசி.
தானீயம் - கொடை.
தானீயோத்தமம் - செந்நெல்.
தானு-காற்று, கொடையாளன், வெற்றியாளன்.
தானெடுத்துமொழிதல் - ஒருயுத்தி.
தானை - ஆயுதப்பொது, சீலை, படை.
தானைத்தலைவன் - சேனுபதி.
தானைத்தறுகணுளர் - படைவீரர்.
தானைமாலை - ஒருபிரபந்தம் அது அகவலோசை பிறழா தாசிரியப்பாவாற் கொடிப்படையைச் சிறப்பித்துப் பாடுவது.
தான் - அசைச்சொல் (உ-ம்.) நீதான், படர்க்கை யொருமைப்பெயர், முழுப்புடைவை.
தான்றி - ஒருமரம்.
தான்றிக்காய் - ஒரு மருத்துக்காய் அது திரிபலையிலொன்று, துவர்ப்பத்திலுள் ஒன்று.
தான்றோன்றி - ஒருவராலுண்டாக்கப்படாதது, வலியமுளைத்தது.

---

## தி

திகசம் - அசமோதம் எனும் ஓமம்.
திகதி - தேதி.
திகந்தம் - திகாந்தம்.
திகந்தராளம் - ஆகாயம்.
திகம் - அதிகம், புலித்தோல், வைராக்கியம்.
திகம்பரம் - இருள், நிருவாணம்.
திகம்பரர் - சமண்முனிவர், நிருவாணிகள்.
திகம்பரன் - அருகன், சிவன், நிருவாணி.
திகம்பரி - துர்க்கை, நிருவாணி, பார்ப்பதி.
திகடி - சோர்வு.
திகரம் - அவா, இளைப்பு, ஈளை, ஒழுத்து, சோர்வு, முட்டுத்தொய்வு.
திகழல் - ஒளிசெய்தல்.
திகழ் - ஒளி, திகழென்னேவல்.
திகழ்ச்சி - ஒளி, தோற்றம், விளக்கம்.

திகழ்தல் - தோற்றல், பிரகாசித்தல், [ளங்கல்
திகழ்வு - திகழ்ச்சி.
திகணு - கொடுவேலி
திகாந்தம் - திக்கின் முடிவு.
திகாந்தரம் - ஆகாயம்.
திகிரி - உருளை, சக்கராயுதம். தண்டசக்கரம், திரிகை, தேர், பண்டி, மலை, மூங்கில், வட்டம், வண்டியுருளை.
திகிரிகை - சக்கரம்.
திகிரிக்கல் - ஆட்டுக்கல், கோரோசனை, சக்கிரவாளகிரி.
திகில் - திடுக்காட்டம், பயம்.
திகிலிடுதல் } திக்கிடுதல், பயப்படுதல்.
திகிற்படுதல் }
திகு - தாளக்குறிப்பு.
திகுதிகெனல் - ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.
திகை - திகையென்னேவல், திசை, தேம
திகைத்தல் - பிரமித்தல், மயங்கல். [ல்.
திகைப்பு - திடுகாட்டம், மயக்கம்.
திகைப்பூடு - ஒருபூண்டு, ஒருசெந்து.
திகைமயக்கு - திக்குத்தடுமாற்றம்.
திக்கங்கம்-அட்டபாலர்குறி அது கிழக்காதிமுறையே கொடி புகை சீயம் நாய் இடபம் கழுதை யானை காகம்.
திக்கசம் - திக்குயானை.
திக்கடைப்பு - திக்கெல்லை.
திக்கம் - இளயானை.
திக்கயம் - அட்டயானை அவைகிழக்காதிமுறையே ஐராவதம், புண்டரீகம், வாமனம். குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம்.
திக்கஜங்கள் - அஷ்டதிக்கிலுள்ள யா
திக்கரன் - குமரன். [னைகள்.
திக்கரி - குமரி.
திக்கரித்தல் - நிந்தித்தல்.
திக்கற்றவன் - தாபரமற்றவன்.
திக்காதிக்கு - பலதிசையிலும்.
திக்காரம் - நிந்தை.
திக்காலுக்கு - திக்காதிக்கு.
திக்கிடுதல் - துணுக்குறல்.
திக்கு - ஆதரவு, கொடுவேலி, திக்கெனனேவல், திசை, பேச்சுத்தடக்கு
திக்குக்கட்டு - திக்குத்தம்பனம்.
திக்குக்கெடுதல் - உதவியற்றுத்திரிதல், திக்குமயங்குதல்.

திக்குதல் - பலவழியாய்ச்சிதறல், பாடந்தடக்குதல், பேச்சுத்தடக்குதல், வழிதப்புதல்.
திக்குத்திகெனல் - அச்சக்குறிப்பு, ஒலிக்குறிப்பு, தாளக்குறிப்பு.
திக்குபதிக்கிரகம் - திசாபதிகள். இவர் கிழக்காதிமுறையே சூரியன் சுக்கிரன் செவ்வாய் இராகு சனி சந்திரன் புதன் வியாழம்.
திக்குபந்தனம் - திக்குக்கட்டு.
திக்குபாலகர் } அஷ்டதிக்குப்பாலகர்.
திக்குப்பாலகர் }
திக்குப்பூசை - அஷ்டபாலகர் பூசை.
திக்குமாறாட்டம் - திசைமாறுதல்.
திக்குமூக்கு - மூச்சுமுட்டு.
திக்குவாய் பேச்சுத்தடக்கும்வாய். [தல்.
திக்குவிசயகிரமம் - திக்குவிசயஞ்செய்
திக்குவிசயம் - அட்டதிக்கும்வெல்லல்.
திக்குவிபாகம் - திக்கின்பகுதி.
திக்குறு - புனமுருங்கை.
திங்கட்குடையோன் - காமன்.
திங்களாள் - மிருகசீரிடம்.
திங்கள் - ஒருவாரம், சந்திரன், பன்னிரண்டு மாதம்.
திசாமுகம் - திக்குப்புறம்.
திசாமிதன் - ஆசையற்றவன்.
திசாயம் - குக்கில்.
திசாலம் - தேசகாலம்.
திசி - திசை, திசையையுடையது.
திசிலன் - இராக்கதன், சந்திரன்.
திசை - ஒவ்வோர்திக்குப்புறமரசாளு மதிகாரி, திக்கு, நிலை, நோக்கு.
திசைச்சொல் - அடுத்த புறங்களிலிருந்து வந்து வழங்குஞ் சொல்.
திசைநா - கொடுவேலி.
திசைபிலம் - மருக்காரை.
திசைமயக்கு } திக்குத்தடுமாறுதல்.
திசைமாறுதல் }
திசைமுகன் - பிரமன்.
திசைமொழி - திசைச்சொல்.
திசையடித்தல் - வாக்குச் சித்தி முதலிய வாய்த்தல்.
திசையுடையவர் - தேசாதிபதி.
திடங்கொள்ளுதல் - தயிரியமடைதல்.
திடசித்தம் - உறுதிப்பட்டமனம்.
திடசெய்தி - நிச்சயகாரியம்.
திடசாட்சி - உறுதியான சாட்சி.

திடஞ்சொல்லுதல் - உறுதிசொல்லுதல், தேற்றப்படுத்தல்.
திடஞானம் - மாறாதஞானம், கலக்கமற்ற ஞானம்.
திடத்துதல் - திடப்படுதல்.
திடத்துவம் - பெலன்.
திடபத்தி - உறுதியானபத்தி.
திடபாரப்படுதல் - தைரியப்படுதல், கிசப்படுதல்.
திடபரம் - உறுதி, மனவலி.
திடபிடி - பெலபிடி.
திடபுருடன் - தைரியவான்.
திடப்படுதல் - உறுதிப்படுதல், தைரியப்படுதல்.
திடப்படுத்துதல் - உறுதிப்படுத்துதல், தேற்றப்படுத்துதல்.
திடப்பிரஞ்ஞன் - சீவன் முத்தன்.
திடமனம் - சலனமடையாமனம்.
திடமை - வெள்ளெருக்கு.
திடம் - உறுதி, தைரியம், மெய், வலி.
திடரிடுதல் - மேடாதல்.
திடர் - மணற்குன்று, மலைமேடு.
திடர்ச்சுண்டி - வரட்சுண்டி.
திடல் - திடர்.
திடன் - திடம்.
திடாரி - தைரியவான்.
திடாரிக்கம் - திடம்.
திடின்பொதினெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
திடீரிடுதல்
திடீரெனல் } ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.
திடீர்திடீரெனல்
திடீர்பொதீரெனல் } ஈரடுக்கொலிக்குறிப்பு.
திடுகூறு - சடுதி.
திடுக்கம் - அச்சம், துணுக்கம்.
திடுக்காட்டம் - திடுக்கிடுதல்.
திடுக்கிடுதல் - அச்சத்தால் மனமசைதல், பயத்தாலுடல் கம்பித்தல்.
திடுக்கீடு - திடுக்கம்.
திடுக்குத்திடுக்கெனல்
திடுக்கெனல் } அச்சக்குறிப்பு.
திடுதிடுத்தல்
திடுதிடுப்பு } ஈரடுக்கொலிக்குறிப்பு.
திடுதிடெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு.
திடுமலி - திண்மையுள்ளவள்.
திடுமல் - திண்மை.
திடுமனடித்தல் - திண்மைக்குணங்காட்டல்.
திடுமன் - திண்மை.

திட்நல் - அச்சக்குறிப்பு.
திட்கிடுதல்
திட்கெனல் } அச்சக்குறிப்பு, திடுக்கிடுதல்.
திட்டபட்டம் - செவ்வை.
திஷ்டம் - காணப்படுவது.
திட்டம் - உறுதி, ஒப்புரவு, கட்டளை, கணிசம், சரி, செவ்வை, திறம், நிலைபரம், பூரணம்.
திட்டல் - சபித்தல்.
திட்டவட்டம் - திட்டபட்டம்.
திட்டனம் - இருப்பைமரம்.
திட்டாணி - மரத்தை வளைவிடுமேடை.
திட்டாந்தம்
திஷ்டாந்தம்
திட்டாந்தரம் } அத்தாட்சி, உறுதி, கணிசம்.
திஷ்டி - ஞானம், கண், கண்ணூறு, பார்வை.
திட்டி - ஞானம், கண், சந்தோஷம், தினை, தேவதச்சன், நுழைவாயில், பார்வை, மேடு.
திஷ்டிக்கல்
திட்டிக்கல் } ஓரிரத்தினம்.
திட்டிதோஷம் - கண்ணேறு.
திட்டித்தம்பம் - கண்கட்டு, அது கலைஞான யறுபத்து நான்கில் ஒன்று.
திஷ்டித்தல்
திட்டித்தல் } காண்டல்.
திட்டிபடுதல் - கண்ணூறுபடுதல்.
திட்டிவாயில் - ஒடுக்கவாயில்.
திட்டிவிதை - ஒரு மருந்துவிதை.
திட்டினம் - இலுப்பை.
திட்டு - கணையச்சுவர், சபிப்பு, சிறுதிடர், திட்டென்னேவல், முட்டடைப்பு, வசை.
திட்டுதல் - சபித்தல்.
திட்டுமுட்டு - சபிப்பு, முட்டடைப்பு.
திட்டை - உரல், கண், திடர், திண்ணை, மலைமேடு, வெள்ளறுகு.
திட்டையிடுதல் - மேடாதல், வரைகட்டுதல்.
திட்பம் - காலநுட்பம், திண்மை, நிசம்.
திணறுதல் - மூச்சுத்தடுமாறுதல்.
திணி - திணியென்னேவல், திண்மை.
திணிகம் - போர்.
திணிதல் - திண்மையாயிருத்தல், நெருங்கல்.
திணித்தல்
திணிப்பு } அடைத்தல், துறுத்தல்.

திணியன் - திடமுள்ளவன், திண்ணியன், பருத்தவன், மந்தையன்.
திணிவு - காடின்னியம், நெருக்கம்.
திணுக்கம் - நெருக்கம்.
திணுங்கல் } நெருங்குதல்.
திணுங்குதல் }
திணை - இடம், ஒழுக்கம், குடி, குலம், பூமி, பொருள்.
திணைப்பெயர் - குறிஞ்சி முதலிய நிலங் காரணமாய் வரும் பெயர்.
திணைமயக்கம் - திணை மயங்கி நிற்றல்.
திணைவழு - உயர்திணை யெழுவாய்க் கிழிதிணை விகுதியும் இழிதிணை யெழுவாய்க் குயர்திணை விகுதியு மேற்றிப் பேசுவது.
திண் - பலம், வலி.
திண்கல் - சுக்கான்கல்.
திண்டகம் - கிலுகிலுப்பை.
திண்டாடுதல் - அலைக்கழிதல், கலக்கப் படுதல், நெருக்கப்படல்.
திண்டாட்டம் - அலைக்கழிவு, கலக்கம், நெருக்கம்.
திண்டாட்டு - அலைக்கழிவு.
திண்டி - அரசு, ஓரசுரன், தம்பட்டம், பசலைக்கொடி, யானை.
திண்டிமம் - தம்பட்டம்.
திண்டிறல் - வல்லபம், அதிவீரம்.
திண்டு - வளைந்தமெத்தை.
திண்ணசம் - செம்மறிக்கடா, தட்டார் கருவியில் ஒன்று, திருவாட்டேறு.
திண்ணக்கம் - மனஉரம்.
திண்ணம் - மெய்ம்மை, சத்தியம், வலி.
திண்ணன் - கண்ணப்பன், வலியன்.
திண்ணியன் - வலியுடையோன்.
திண்ணெனல் - ஒலிக்குறிப்பு.
திண்ணை - வேதிகை.
திண்படுதல் - வலியுறுதல் [ல்.
திண்பொறுத்தல் - தாக்குப் பொறுத்த
திண்மை - உறுதி, எண்வகையூறினொன்று, நிதானம், மெய்ம்மை, வலி.
திண்மைக்கவர்ச்சி - மற்றொன்றைவலிக் கத் தக்க சத்து.
திதாபகம் - நிலைப்படுத்தல்,
திதம் - அக்கினி, அசைபவை, உறுதி [நிலை.
திதலை - தேமல்.
திதனம் - மாமரம்.
திதலை - தேமல்

திதி - காசிபன் மூத்தமனைவி, தக்ஷன்மகள், இவள் வயிற்றிற் பிறந்தோர் தைத்தியர். இருப்பு, கனம், காசிப்பிரமாவின் மனைவிகளிலொருத்தி, காத்தல், சங்கை, சந்திரனாள், அது பஞ்சாங்க வுறுப்பினொன்று, சிராத்தம், திதியென்னேவல், தைத்தியர் தாய், நிலைபேறு, பாக்கியம், வாழ்வு.
திதிகத்தா - விட்டுணு.
திதிகை - இருத்தல்.
திதிசர் } அசுரர்.
திதிசுதர் }
திதிட்சயம் - அமாவாசி.
திதிக்ஷன் - மகாமநுவினது இரண்டாம் புத்திரன்.
திதிட்சிதம் } பொறுமை.
திதிட்சை }
திதித்தல் - நிலைபெறுத்தல்.
திதித்தவில் - கட்டியவீடு. [திதி.
திதித்திரயம் - ஒருநாளில்வரும் மூன்று
திதித்துவயம் ஒருநாளில்வரு மிரண்டு திதி.
திதிநிச்சயம் - சிரார்த்தத்துக்கேற்ற திதியை நிச்சயித்தல்.
திதிநியதம் - திதிநிச்சயம்.
திதிபரன் - விட்டுணு.
திதிப்பிரகாரணம் - காத்தல்.
திதிப்பிரணி - சந்திரன்.
திதிமைந்தர் - அசுரர்.
திதியம் - அழிவின்மை.
திதிவிரதம் - திதிக்குறித்தநோன்பு.
திதீக்கை } தமேதகநிஷ்டை
திதீட்சை }
தித்தகம் - நிலவேம்பு, மலைவேம்பு.
தித்தகோசாதகி - பேய்ப்பீர்க்கு.
தித்தம் - அக்கினி, எண்ணெய், கசப்பு, கட்டுக்கதை, நச்சம்பு, நிலவேம்பு, மலைவேம்பு, வாசனை.
தித்தன் - சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியினது தந்தை இவன் உறையூரிலிருந் தரசு புரிந்தவன். (அகநானூறு)
தித்தா - பீதரோகிணி, வட்டத்திருப்பி, தாளக்குறிப்பு.
தித்தி - ஒருதுகுழல், ஒருபனை, குரலம், சதி, தித்திப்பு, தித்தியென்னேவல், திற்றி, வேள்விக்குண்டம்.

தித்திகம் - பேய்ப்புடோல்.
தித்திசாகம் - மாவிலிங்கு.
தித்தித்தல் - இனித்தல்.
தித்திப்பு - இனிப்பு.
தித்திமுளை - தித்திப்புப் பனங்கட்டி.
தித்தியரர் - அசுரர்.
தித்திரம் - அரத்தை.
தித்திரி - ஒருரிஷி, ஒருகௌதாரி, சிச்சிலிக்குருவி.
தித்திரு, தித்திருச்சி } நாணல்.
தித்துப்பாடு - திருத்தம்.
திந்திடம் - புளியமரம்.
திந்திடி - புளியமரம்.
திந்திடிகம் - புளி.
திந்திருணி - புளியமரம்.
திபதிசம், திபதிச்சம் } வாலுழுவை.
திபோதாசன் - திவோதாசன் காண்க.
திப்பி - கோது.
திப்பியம் - அசமதாகம், திவ்வியம், விளக்கம்.
திப்பிலாட்டம் - தொந்தறை.
திப்பிலி - அலைவு, ஒருசரக்கு.
திப்பிலிக்கட்டை - கண்டதிப்பிலி.
திப்பிலிகொச்சிக்காய் - சிறுமிளகாய்.
திப்பிலிமூலம் - ஒருசரக்கு.
திப்பிலியரிசி - திப்பிலிக்கொட்டை.
திப்பிலியாட்டம் - அலைவு, வஞ்சனை.
திப்பிலியாட்டல், திப்பிலியாடுதல் } அலைவுபண்ணல்.
திப்பை - மேடு.
திமி-குத்தல், சமுத்திரம், திமிங்கிலம்.
திமிகோடம் - கடல்.
திமிங்கிலகிலம்-திமிங்கிலத்தை விழுங்கும் மீன்.
திமிங்கிலம்-யானையை விழுங்கும் மீன்.
திமிசம், திமிசு } வேங்கைமரம்.
திமிதகுமுதம் - இரைச்சல், ஊதாரித்தனம், பம்பல், மகிழ்ச்சி, மிகுதி.
திமிதம் ஈரம், உறுதி, ஒருகணக்கு, பேரொலி.
திமிதம்போடுதல் குதியன் குத்துதல்.
திமிதிமி - யானையை விழுங்குமீன்.
திமிதியெனல்-ஈரடுக்கொலிக் குறிப்பு, தாளக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.

திமித்துவஜன் - தசரதனைத் துணைக்கொண்டு இந்திரனாற் கொல்லப்பட்ட அசுரன். அந்த யுத்தத்திலே தசரதன்மூர்ச்சையடைந்தபோது கைகேசி அவன் மூர்ச்சையைத் தீர்த்து அவனை ரக்ஷித்தாள். அது கண்டு தசரதன் மகிழ்ந்து அவளை நோக்கியாதுவேண்டுமென்ன இவள் நான் இனிமேல்எக்காலத்திலாயினும் இரண்டுவரம்வேண்டுவேன் அப்போது அவைகளை மறாதுதருதல்வேண்டுமென்ன, அங்ஙனமேயாகுகவென்று அவளுக்குவாக்குத்தத்தஞ்செய்தான் அதனை வாய்ப்பாகக்கொண்டே கைகேயி இராமபட்டாபிஷேக காலத்திலே அவனைக் காடுகொள்ளவும் தன் மகன்பரதனை அரசுகொள்ளவும், இருவரங்கள் தசரதன்பாற்பெற்றனள்.
திமிரகாசம் - கண்ணோயுளொன்று.
திமிரடைதல் - திமிர்குத்தல்.
திமிரம்-இருள், நரகம்,பாரம்,விறைப்பு.
திமிரரிபு - சூரியன்.
திமிரன் - விறைப்புள்ளவன்.
திமிராரி - சூரியன்.
திமிரி - திமிரன்.
திமிரேறுதல்-விறைப்புக்கொள்ளுதல்.
திமிர்-சன்னி, சோம்பு, திமிரென்னேவல், மயக்கம், விறைப்பு.
திமிர்ச்சி - திமிர்.
திமிர்தம் - ஒலி.
திமிர்தல் - பூசுதல், வளர்தல்.
திமிர்த்தல் - திமிர்கொள்ளுதல்.
திமிர்ப்பு - திமிர்ச்சி.
திமிர்ப்பூச்சி - வயிற்றுப்புழு.
திமிர்முரித்தல் - சோம்புமுரித்தல்.
திமிர்மொய்த்தல் - விறைப்புக்கொள்ளுதல்.
திமிர்வாதம் - ஒருநோய்.
திமிர்வாயு - திமிர்வாதம்.
திமிர்வு - பூச்சு.
திமிலகுமிலம் - திமிதகுமுதம்.
திமிதம் - பேரொலி, யானைமீன்.
திமிலர்-நெய்தனிலமாக்கள், மீன்காரர்.
திமிலிடுதல் - ஒலித்தல், நெருக்கல்.
திமிலை - பம்பைமேளம்.
திமில் - எருத்தினேரி, தோணி, மரக்கலம், வேங்கைமரம்.

திமிறல்-அலக்குதல், தேய்த்தல், பறித்தல், மீறுதல், வளர்தல்.
திமைத்தல் - இளப்புதல்.
திம் - திக்கு.
திம்மிலி - தடித்த சரீரக்காரி.
திம்மன்-இகழுஞ்சொல்,ஓராண்குரங்கு
திம்மை - சுருணை, பிரமை.
தியக்கடி - தியக்கம்.
தியக்கம் - அசைவு, கலக்கம், சஞ்சலம், சோர்வு, மயக்கம்.
தியக்கு - தியக்கம், தியக்கென்னேவல்.
தியத்தம் - தள்ளப்பட்டது.
தியங்குதல் - சோருதல்.
தியசம் - மரமஞ்சள்.
தியந்தி - திராய்.
தியாடி - திகாடி.
தியாகங்கூறுதல் - கொடையைப் பிரசித்தப்படுத்தல்.
தியாகம் - உபகரிப்பு, கைவிடல், கொடை, துறத்தல்.
தியாகராயன்-விடங்கப்பெருமான், சிவன்.
தியாகன் } உபகாரி, கொடையாளன்,
தியாகி } சிவன், தவத்தி.
தியாச்சியம் - ஒவ்வொருநாளிற் கழிவாகிய மூன்றே முக்கானுழிகை, விலக்குகை.
தியாத்துவம் - தியானம்.
தியாமம் - இருவேலி, நான்முகப்புள், முபற்புல்.
தியாம்பதி - ஆன்மா.
தியாலம் - திசாலம்.
தியானசமாதி - யோகநிலையில் ஒன்று.
தியானம் - அட்டாங்கயோகத்தொன்று அது ஐம்புலனடக்கிச் சிவயோகஞ் செய்தல், அனுட்டானம், சிந்திப்பு, நினைவு.
தியானம்பார்த்தல் - அனுட்டானம்பண்ணல்.
தியானவான் } தியானியென்னேவல்,
தியானி } யோகி.
தியானித்தல்-அனுட்டானம் பண்ணல், சிந்தித்தல்.
தியானிப்பு - தியானம்.
தியு - பகல், மோட்சம்.
தியுகணம் - தவணை.
தியுகம் - புள்.
தியுகாரி - காகம்.
தியுதம் - கிரணம்.
தியுதி - கிரணம், வெளிச்சம்.
தியுதிகரம் - அழகு, பிரபை.
தியுதிகரன் - துருவன்.
தியுசம்பந்தன்-சுவாயம்புவ மநுபுத்திரருள் ஒருவன், கிரௌஞ்சத் துவீபத்தை மனுஇவனுக்குக் கொடுத்தான்.
தியுநிசம் - இராப்பகல்.
தியுபதி - இந்திரன், சூரியன்.
தியுமணி - சூரியன்.
தியுமத்சேனன்-சாளுவராஜன். சத்தியவந்தனுக்குத் தந்தை சாவித்திரிக்கு மாமன்.
தியுமந்தன் - திவோதாசன்.
தியேசேயே - மரமஞ்சள்.
தியோதம் - பிரகாசம், வெயில்.
திரசமூலகம் } முடக்கொத்தான்.
திரசமூலம் }
திரகம் - கொன்றை.
திரகலூமம் - செம்புளிச்சை.
திரக்கத்தாரு - நிலப்பனை.
திரக்கம் - கொன்றை.
திரக்கரித்தல் } நிந்தித்தல்.
திரஸ்கரித்தல் }
திரக்காரம் } நிந்தை
திரஸ்காரம் }
திரக்கிரசம் - கண்வலி.
திரச்கிரணி - பிரண்டை.
திரங்கம் - நகரம், மிளகு.
திரங்கலம் - மிளகு.
திரங்கல் - திரைதல், மிளகு.
திரங்குதல் - திரைதல்.
திரசாரம் - நூற்சுற்றல்.
திரச்சீனமுகம்-நாணத்தால் தலையாட்டுமுகம்.
திரசதஸயன்-புருகுத்சன் மகன். அநரண்ணியன் தந்தை. வசுதன் எனவும் படுவன்.
திரடம் - வெண்ணெச்சிமரம்.
திரட்கோரை - ஒருவகைப்புல்.
திரட்சி - உண்டை, கூட்டம், திரண்ட தன்மை, முத்து.
திரட்டல் - கூட்டல்.
திரட்டு - இருது, சேர்த்தொன்றாக்கியிருப்பது, சேர்ப்பு,திரட்டென்னேவல், திரண்டகைமரம், திரளை, முழுமை.
திரட்டுக்கலியாணம் - இருதுக்கலியாணம்.
திரட்டுக்கோவை-ஒருகோவை.

திரட்டுதல் உருட்டுதல், சங்கிரகித்தல், சேர்த்தல்.
திரட்டுப்பால் - திரளக் காய்ச்சும்பால், அது முப்பாலில் ஒன்று.
திரணச்சி - எவட்சாரம்.
திரணபதி - வாழை.
திரணப்பிராயம் - வெறுமை.
திரணம் - அற்பம், திருணம், புல்.
திரணராசன் - கிலப்பனை.
திரணுசனம் - தர்ப்பாசனம்.
திரணி - ஒருவகைச்செடி.
திரணிக்கல் - காக்கைக்கல்.
திரணை - கம்பி, திரண்டது, திரளை.
திரண்டகொடிச்சி - புற்றும்பழம்.
திரண்டபால் - திரைந்தபால்.
திரண்டவடிவு - உண்டை.
திரதயம் - பலகாற்கேட்டல்.
திரஸ்தம் - பயங்கரம்.
திரந்திகம் - திப்பிலிமூலம்.
திரபம் - வெட்கம்.
திரபாகன் - மிலேச்சன்.
திரபாண்டை - வேசி.
திரபாணிரத்தம் - வெட்கக்கேடு.
திரபுட்பம் } அத்தநாகம்.
திரபுலம் }
திரப்படுதல் - உறுதிப்படல்.
திரப்பியம் - பொருள்.
திரப்பியவணி - பொருட்டன்மை யலங்காரம்.
திரப்புசம் - கத்திரி.
திரமம் - சாதிலிங்கம்.
திரமாக்குதல்-அத்தாட்சியாக்கல், நிலைப்படுத்தல்.
திரமாதம் - வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி.
திரமிடம் - தமிழ், திராவிடம்.
திரம்-உரம், உறுதி, தகரைச்செடி, நிலை, பெலன், முத்தி.
திரயப்பிணிசடம் - தாலதேகம்.
திரயம் - மூன்று.
திரயாங்கம் - மூவங்கம், அது திதிவாரநட்சத்திரங்கள்.
திரயாட்சரி - மூன்றுவரி யெழுத்தான் முடியுமோ ரலங்காரம்.
திரயாரணன் - சூரியாரணியன்.
திரயாருணி - ரிக்ஷயன்மகன்.
திரயீதநு - சூரியன்.
திரயீதர்மம்-வேதவிஹிதமான தர்மம்.
திரயீமுகன் - பிராமணன்.
திரயோதசி - பதிமூன்றாந்திதி.
திராசி-இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம்.
திராசிகம் - முத்தொகைவினை.
திரலடி - எலம்.
திரல் - காட்டாமணக்கு.
திரவணம்-திரவிரம், பாய்தல், போதல், வெப்பம்.
திரவகத்துவம் - ஈர்மை.
திரவந்தி - ஒருநதி, காட்டாமணக்கு.
திரவபோதம் - பூசினி.
திரவம்-திராவகம், பாய்தல், பொசிதல்.
திரவிடம் - திராவிடம் ஆந்திரகருநாடக தேசங்களுக்குத் தெறகேயுள்ள தேசம். அது தமிழ் நாடென்பது.
திரவிடன்-க்ஷத்திரியகுலத்துகீழ்மகன்.
திரவிணம்-பாக்கியம், பெலன், பொன்.
திரவித்தல்-நீர் முதலிய பொசியப்பண்ணல்.
திரவியசம்பன்னன்-சம்பாத்தியகாரன்
திரவியசித்தி - பாக்கிய சம்பாத்தியம், பாக்கியத்தினால் வருஞ்செல்வாக்கு.
திரவியசுத்தி-பஞ்சசுத்தியிலொன்று.
திரவியம்-ஓர்மருந்து, சரக்குநிதி, பாக்கியம், பித்தளை, பொருள், பொன்.
திரவியலோபம் - பொருட்குறைவு.
திரவியவான் - செல்வன்,
திரவீகரணம் - உருக்குதல்.
திராாரம் - கிலப்பனை.
திரளி - ஒருமீன்-
திரளுதல் - உருட்சியாதல், கூடுதல், திரட்சியாதல், தெருளுதல்.
திரளை - உருண்டை, கட்டி, திரட்டப்பட்டது.
திரள்-குழியம், கூட்டம், திரட்சி, திரளன்னேவல், திரளை, படை, மிக முடுகிய நடையை யுடைய பாடல், இயக்கம் நான்கினு ளொன்று.
திரள்கோரை - கஞ்சாங்கோரை.
திரா - ஒருமரம், தரா.
திராகம் - உயர வெறிந்து பிடித்தல்.
திராகிட்டம் - மிகநீளம்.
திராகம் - அச்சம்.
திராட்சம் } கொடிமுந்திரிகை.
திராட்சை }

திராக்ஷாராமம் - 'இது' மகாராஷ்டிர கர்நாடாந்தரதேசங்களுக்கு மத்தியிலுள்ள பர்வதத்தின்கண்ணுள்ள சிவஸ்தலம்.
திராணதம் - இரட்சித்தல்.
திராணம் - உறை, இரக்ஷித்தல்.
திராணி, திராணிக்கம் - தகுதி, தத்துவம், பலம்.
திராணிக்கை - திராணி.
திராபம் - ஆகாயம், சேறு, மூடன்.
திராபை - புத்தியற்றவன்.
திராமரம் - பவளமல்லிகை.
திராமிடம் - திராவிடம்.
திராமிலன் - ஒருமுனி.
திராய் - ஒரு கசப்பான கீரை.
திராலம் ஒருவகை வெள்ளரிச்செடி.
திராவகத்துக்கடுங்காரம், திராவகத்துக்காதி - அன்னபேதி.
திராவகநீறு - வெடியுப்புச்சுண்ணம்.
திராவகம்-காந்தக்கல்,செய்நீர்,மெழுகு.
திராவகன் - அறிஞன், கள்வன்.
திராவடி - ஏலம்.
திராவிடம் - ஒரெண், சாதிஞன்கில் ஒன்று, தமிழ், தேயமைம்பத் தாறிஞென்று. தமிழ்நாடு பஞ்சதிராவிடகர்ஞட கூர்ச்சர மகாராஷ்டிர தைலங்கமென்பன. இவ்வைந்து நாட்டுப்பிராமணரும் திராவிடரெனப்படுவர். தைலங்கம் திரிலிங்கமெனவும்படும்.
திராவிடாசாரியார் - வடமொழியிலே வேதாந்த சூத்திரத்திற்கு ஒரு பாஷியஞ்செய்தவர். இராமநுஜாசாரியர் செய்த பாஷியத்துள் இவர் மதமெடுத்துக்கூறப்படுதலின் இவர் இரண்டாயிரம்வருஷங்களுக்குமுன்னர் விளங்கினவராதல்வேண்டும்.தமிழ்நாட்டாராதலின் இப்பெயர்பெற்றார்.
திரி - காரத்திரி, திரியென்னேவல், பெண், மூன்று, விளக்குத்திரி.
திரிகடம் - யானைநெருஞ்சில்.
திரிகடி - இந்திரன்சங்கு.
திரிகடுகம், திரிகடுகு - ஒருநூல், சுக்கு, திப்பிலி, மிளகு.
திரிகண்டகம் - ஒருவகைப்புல், நெருஞ்சில்.
திரிகண்டகி - நெருஞ்சில்.
திரிகண்டம் - நெருஞ்சில்.
திரிகதம் - மும்மடங்கு.
திரிகத்தம் - ஒருதேயம்.
திரிகர்த்தம் - ஆரியர்வர்த்தத்துக்குவாயுதிக்கிலுள்ள தேசம்.
திரிகம் - திரிகடுகம், முச்சந்தி, மூன்றுகூடியது.
திரிகாயன் - புத்தன்.
திரிகாலசந்தி - காலை மாலை உச்சிகளிற் பண்ணுமனுட்டானம்.
திரிகாலஞானம் - முக்காலமறியு ஞானம்.
திரிகாலம் - முக்காலம், அவை உச்சி, காலை, மாலை, அன்றியும் இறப்பு, எதிர்வு, நிகழ்வு.
திரிகாலவர்த்தமானம் - முக்காலநிகழ்ச்சி.
திரிகாலோசிதம் - குசைப்புல்.
திரிகி - குயவன்சக்கிரம், நினைத்தல்.
திரிகுணம் - முக்குணம்.
திரிகூடம் - ஒருமலை.
திரிகூர்ச்சகம் - முக்கருவுள்ளது.
திரிகேது - கிளி.
திரிகை - இடக்கைமேளம், எந்திரம், குலாலசக்கிரம், திரிதல், முந்திரிகைமரம்.
திரிகோணசாத்திரம் - முக்கோணசாத்திரம்.
திரிகோணப்பாலை - நால்வகைப் பாலையுளொன்று.
திரிகோணமாலை - திருக்கோணமலை. திருக்கோணுமலை எனவுங் கூறுவர்.
திரிகோணம் - முக்கோணம்.
திரிசங்கசன் - அரிச்சந்திரன்.
திரிசங்கு - இக்ஷ்வாகு அரிச்சந்திரனதந்தை. இத்திரிசங்குதான் தேகத்தோடுசுவர்க்கம் புகவேண்டித் தனது குலகுருவாகிய வசிஷ்டரையடைந்துபிரார்த்தித்தான். அது கூடாதென்றவர் மறுக்க, அவர் புத்திரரிடஞ் சென்ருன். அவர்கள் குருவாக்கைத் தடுத்தனை யென்று நீசனுமாறு சபிக்க, அவன் விசுவாமித்திரரிடஞ் சென்ருன். அவர் அவனுக்காக ஓரந்தர சுவர்க்கத்தை யுண்டாக்கி அவனை அங்கே வைத்தார்.
திரிசங்குசன் - அரிச்சந்திரன்.
திரிசங்குமண்டலம் - ஒருநக்ஷத்திரமண்டலம்.
திரிசடை - விபீஷணன் புத்திரி. இவள் சீதாதேவியை ராவணன் சிறைவைத்தபோது அவருக்கு நற்றுணையாயிருந்தவள்.

திரிசனம் - வாஞ்சை.
திரிசவனம் - திரிகாலம்.
திரிசாகபத்திரம் - வில்வமரம்.
திரிசாரம் - எவட்சாரம், சத்திசாரம், நவச்சாரம்.
திரிசி - சமுசாரி.
திரிசிகம் - சிகரம், சூலம், வில்வமரம்.
திரிசிகன் - இராவணன் மகன்,
திரியம் - காணப்படுவது, தோற்றப் படத்தக்கது.
திரிசியாதிரிசியம் - தோற்றப்படத் தக்கவைகளுந் தோற்றப்படாதவைகளு[ம்.
திரிசிரபுரம் - திரிசிராப்பள்ளி.
திரிசிரன் - இப்பெயரையுடைய இராக்ஷசர்அநேகர்.விச்சிரவாவுபுத்திரன். இவன் ஜனஸ்தானத்திற் கரனேடிருந்தவன். இராவணன் புத்திரன் அக்கினி.
திரிசிரா - ஒரு ராக்கதன்
திரிசிராப்பள்ளி - ஒருபட்டினம்.
திரிசிராமலை - ஒருமலை.
திரிசிருங்கம் - முக்கோணம், திரிகூடசைலம்.
திரிசுடர் - முச்சுடர்.
திரிசூத்திரம் - உபவீதம், பூணூல்.
திரிசூலம் - இச்சை கிரியை ஞானம் என்னும் முத்தலைவேல்.
திரிசூலி - சிவன்.
திரிசொல் - செய்யுட்சொல்.
திரிச்சல் - திரிதல்.
திரிச்சிரமம் - முக்காலநியமட்டை.
திரிஞ்சல் - துரிஞ்சில்.
திரிடி - கருப்புக்கணு
திரிடீசரித்தல் - நிச்சயித்தல்.
திரிட்டை - காணப்படல்.
திரிணீகரம் - அற்பமாகவெண்ணல்.
திரிதசமஞ்சரி - துளசி.
திரிதசன் - கடவுள்.
திரிதசாசாரியன் - வியாழம்.
திரிதசாயுதம் - வச்சிராயுதம்.
திரிதசாரி - அசுரன்.
திரிதசாலயம் - சுவர்க்கம், மேருகிரி.
திரிதசாவாசம் - சுவர்க்கலோகம்.
திரிதசஹாரம் - அமிர்தம்.
திரிதசி - திரயோதசி.
திரிதண்டதாரணம் - முக்கோறரித்தல்
திரிதண்டம் - திரிதண்டு.
திரிதண்டி - காரணமூன்றுமடக்கினேன், முக்கோற்பகவன்.
திரிதண்டு - முக்கோல்.
திரிதயம் - மூன்று.
திரிதால் - சுழலல், திரிதல், மீளல்.
திரிதராட்டிரன் - துரியோதிரன்றந்தை
திரிதலை - ஒருபூடு.
திரிதல் - அலைதல், உலாவல், கெடுத்தல், சுழலல்,நடத்தல்,மாறுதல்,மீளல்.
திரிதல்விகாரம் - எழுத்துத்திரிபு விகாரம்.
திரிதன் - பிரமன்மானசபுத்திரர்களுள் ஒருமன்.
திருதன்றுவன் - சுமனன் மகன். சூரியாரண்ணியன் தந்தை.
திரிதாது - விநாயகன்.
திரிதிகை - மூன்ருந்திதி.
திரிதியம் - செவ்வள்ளி.
திரிதியை - மூன்ருந்திதி.
திரிதிவம் - முத்தி.
திரிதிவேசன் - தேவன்.
திரித்திவை-பாரிபத்திர பர்வதத்திலுள்ள நதி.
திரிதீர்க்கம் - மணப்பொருத்தம்பத்தில் ஒன்று.
திரிதூளி - சில்லபொல்லம்.
திரிதேகம் - காரணதேகம் சூக்குமதேகம், தூலதேகம்.
திரிதோஷம் - ஒருநோய், முப்பிணி.
திரித்தல் - சுழற்றுதல், மாறுபடுத்தல், மாற்றுதல், முறுக்குதல்.
திரித்துவம் - மூன்றுதத்துவம்.
திரிநயனன் - சிவன்.
திரிநாயசம் - பெண்டலைமை.
திரிநேத்திரசூடாமணி - சந்திரன்.
திரிநேத்திரன் - சிவன்.
திரிபங்கி - மிறைக்கவியினென்று, அது ஒரு செய்யுளாய் நின்று மூன்ருய்ப் பிரித்தோத மூன்று செய்யுளாயும் நிற்குங்கவி.
திரிபணி - உபமானப்பொருள் நிகழ்கின்ற செய்கையிற்பயன் படுதற்பொருட்டு உபமேயத்தின் உருவத்தைக் கொண்டுபயித்தல்(உ-ம்) தாட்கமலத்தா னடந்து கட்குவளையானேக்கி.
திரிபதகை - கங்கை.
திரிபதம் - முத்தெருக் கூடுமிடம்.

திரிபதாகம் - நெற்றியிலுள்ள மூவிரே கை.
திரிபதார்த்தம் - பசுபதிபாசம். [
திரிபதி - யானைக்காலிலிடுஞ்சங்கிலி.
திரிபதை - இசைப்பாவகையுளொன்று.
திரிபலம் - திரிபலை.
திரிபலாசம் - முருக்கமரம்.
திரிபலை - கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய்.
திரிபழுகம் - பால், நெய், தேன்.
திரிபாகி - மிறைக்கவியினொன்று. அது ஒருமொழி மூவெழுத்தானின்றோர் பயனும் அதனிடையெழுத்து நீங்க வேறோர் பயனும் அதன் முதலெழுத்துநீங்க வேறோர்பயனுங்கொண்டு முடிவது.
திரிபாதம் - முச்சந்தி.
திரிபீஜம் - ஒருபுன்செய்த தானியம்.
திரிபு - முத்திவிக்கினமூன்றினொன்று, வேறுபாடு, தகரம்.
திரிபுக்காட்சி - ஒன்றைவேறொன்றாய்க் காணுதல்.
திரிபுடகம் - முக்கோணம்.
திரிபுடி - ஞாதிரு, ஞானம், ஞேயம்.
திரிபுடிபலம் - ஆமணக்கு.
திரிபுடை - சத்ததாளத்தொன்று.
திரிபுண்டரகம் }
திரிபுண்டரபி } மூன்றுவரியாப் பூசும் விபூதிப்பூச்சு.
திரிபுண்டரம் }
திரிபுரசுந்தரி - பார்ப்பதி. திருநாரையூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர். திருவான்மியூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
திரிபுரசுந்தரியம்மை - திருநல்லூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
திரிபுரதகனன் - சிவன்.
திரிபுரமல்லிகை - ஒருமல்லிகை.
திரிபுரமெரித்தான் - சிவன், நொச்சி, மாவிலிங்கை.
திரிபுரம் - முப்புரம்.
திரிபுராசுரர் - தாரகாசுரன் புத்திரராகிய கமலாக்ஷன், வித்தியுன்மாலி, தாரகாக்ஷன் என்னும் மூவரும் இப்பெயர் பெறுவர். இவர்கள் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து இரும்பு வெள்ளி பொன் என்னும் மூன்று லோகத்தாலும் அமைந்த கோட்டைகளையுடைய மூன்று ஜங்கமபுரங்களைப் பெற்று அப்பட்டணங்களோடு அந்தரத்தெழுந்து தமக்கிஷ்டமாகிய இடங்களுக்குச் சென்று ஆங்காங்கு முள்ள பட்டணங்கள் மீதும் உட்கார்ந்து அவைகளை நாசஞ் செய்து வந்தார்கள். அதுகண்ட விஷ்ணு நாரதரை ஏவித் திரிபுராசுரருக்குப் பாஷண்டமதத்தை உபதேசித்துச் சிவன்மீது அவர்வைத்த பத்திக்கு ஊறுசெய்வித்தார். அதனால் சிவபெருமான் இவர்களை அழிக்க நினைந்து யுத்தஞ்செய்து மூவரையுங்கொன்று தமது கணங்களோடு சேர்த்தருளினர்.
திரிபுராந்தகேசுரர் - திருவிற்கோலத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி திருநாமம்.
திரிபுராந்தகன் - சிவன்.
திரிபுரி - சாறடை.
திரிபுருஷம் - முத்தலைமுறை.
திரிபுருஷ்டன் - வசுதேவனுக்குத் திருத்தேவியிடத்துப் பிறந்த புத்திரன்.
திரிபுரை - ஒருசத்தி, பார்ப்பதி.
திரிபுவனம் - சுவர்க்கம்மத்தியபாதலம்.
திரிபுவனம் - காவிரியின் தென்கரையிலுள்ள திருவிடைமருதூரை அடுத்த ஒரு சிவஸ்தலம். இங்கே நாரசிம்மமூர்த்தமூர்த்தியைக் காணலாம்.
திரிபோகம் - பெண்போகம்.
திரிப்பு - மாற்றுதல், முறுக்கு.
திரிமஞ்சள் - கஸ்தூரிமஞ்சள், மஞ்சள், மரமஞ்சள்.
திரிமணை - திருமணை.
திரிமனம் - அறிவு, நினைவு, புத்தி.
திரிமார்க்கம் - முச்சந்தி.
திரிமுருடம் - திரிகூடபர்வதம்.
திரிமூர்த்தி - மும்மூர்த்தி.
திரிமூர்த்திகள் - சுந்தப்பிரமம் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் முத்தொழிற்காகச் சகளீகரித்த பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னு மூன்று திருமேனிகள்.
திரிமூலம் - கண்டுமூலம், சித்திரமூலம், திப்பிலிமூலம்.
திரிய - திரும்ப. [
திரியம் - விலக்கு, மிருகம்.

திரியக்கு - குறுக்கு.
திரியக்ஷி - தேங்காய்.
திரியமுகம்-அடிவானம் நோக்கிய பார்வை.
திரியம்பகன் - அரன், அருகன், விட்டுணு, விநாயகன், வீரபத்திரன்.
திரியவும் - திரும்ப.
திரியங்குமுகம் - சமுகம்.
திரியமிசன் - விப்பிரசித்தி புத்திரன்.
திரியம்பகம்-வீரபத்திரர் தக்கனையழிக்க எடுத்தவில், பிறகு அதுசீதையோடு நிலத்திற்றோன்றிக்கிடந்து அவர் கல்யாண காலத்தில் ஸ்ரீராமரால் முறிக்கப்பட்டது.
திரியம்பகன் - சிவபெருமான், மூன்று கண்களை யுடையவன்.
திரியாங்கம் - திரயாங்கம்.
திரியாமகம் - பாவம்.
திரியாமயம் - முத்திவிக்கினம் மூன்று.
திரியாமை - இரவு, நீலக்கல், யமுனையாறு.
திரியாவரம் - புரளி.
திரியேகத்துவம் - மூன்றொன்றாயிருத்தல்.
திரியேகம் முப்பொருளொன்றாயிருத்தல்.
திரியேகன் - கடவுள்.
திரிரேகம் - சங்கு.
திரிலிங்கம் - திரீலிங்கம்.
திரிலோகசிந்தூரம் - ஒருமருந்து.
திரிலோகம் - திரிபுவனம் அதுபூமி அந்தரம் சுவர்க்கம். பொன் வெள்ளி செம்பு.
திரிலோகவசியம் - சருவ வசீகரம்.
திரிலோகாதிபதி - இந்திரன், கடவுள்.
திரிலோகி - விட்டுணுகரந்தை.
திரிலோகேசன் - சூரியன்.
திரிலோசனி - துர்க்கை.
திரிலோசனன் - திரியம்பகன்.
திரிவசியம் - பெண்வசியம்.
திரிவட்டம் - இயந்திரத்திறேருறுப்பு.
திரிவருக்கபாரீணன் - திருவருக்க மடைந்தவன்.
திரிவருக்கம் - அகவியல் மூன்று; அது அசுத்தம், அறியாமை, சுத்தம், அரசியல் மூன்று; அது ஆதாயம் நட்டம் மத்திமம், இயல்பாய் விரும்புவது மூன்று, அது கடமை செல்வம் பெண்போகம்.
திரிவாய் - தீவாய்.
திரிவிக்கிரமன் - ஓரரசன், விட்டுணு.
திரிவிஷ்டபம் - ஆகாயம், சுவர்க்கலோகம்.
திரிவு - திரிபு.
திரிவேணிசங்கமம் - ஒருதலம். அது கங்கை சரச்சுவதி யமுனை என்னும் மூவாறுகளின் சந்திப்பு.
திரீ, ஸ்திரீ } பெண்.
திரீசனப்பிரியன் - தூர்த்தன்.
திரீயத்துவம்-மூன்றொன்றாயிருப்பது.
திரீலிங்கம் - சிறீலிங்கம்.
திரு - அழகு, இலக்குமி, செல்வம், தெய்வீகம், மங்கல மொழியி னொன்று, மேன்மை.
திருஅகத்தியான்பள்ளி-காவிரியாற்றுத் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், வேதாரணியத்துக்குத் தெற்கிலுள்ளது. சுவாமிபெயர் அகத்தீசுரர், அம்மைபெயர் மையார்தடங்கண்ணி, சம்பந்தமூர்த்தி நாயனாரால் பாடல் பெற்றது.
திருஅச்சிறுபாக்கம்-திருக்கழுக்குன்றத்துக்குத் தென்மேற்றிசையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் பாக்கபுரேசர். அம்மைபெயர் ஆதிசுந்தரமின்னம்மை. முப்புரத்தையழிக்கும் பொருட்டெழுந்த சிவபெருமானுக்குத் தேவர்கள் தேராகி தமது உதவியின்றித் திரிபுரஜயங்கூடாதென்று நின்ற அத்தேவர்கருவத்தைப் பங்கப்படுத்தத் தேரின் அச்சைச் சிவபிரான் திருவடிவைத்தொடித்தலமாதலால் இதற்கு இப்பெயர் வாய்த்தது. இது சம்பந்தர் தேவாரம் பெற்றது.
திருஅச்சோபுரம்-நடுநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
திருஅண்ணமலை பிரம விஷ்ணுக்களுக்குச் சோதிப்பிழம்பாக நின்று சிவன் தரிசநம் கொடுத்த தலம் இதுவே. இங்குள்ளது தேயுலிங்கம். இது நடுநாட்டிலுள்ள அரி பிரபலமான சிவஸ்தலம். மாணிக்கவாசகர் திருவெம்பாவையும் திருவம்மானையும் பாடி

யது இத்தலத்திலேயே. இது சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது. திருப்புகழ்பாடின அருணகிரிநாதரது ஜன்மபூமியு மிதுவே.

திரு அம்பர்ப்பெருந்திருக்கோயில் - காவிரிநதியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் பிரமபுரநாதேச்சுரர்; அம்மைபெயர் பவளவண்ணப்பூங்குழல்நாயகி. இத்த ஆலயம் கோச்செங்கட் சோழரால்செய்விக்கப்பட்ட திருப்பணி, சம்பந்தரால் பாடப்பெற்றது, சோமாசி மாறநாயனார் ஜன்மபூமியு மிதுவே.

திருஅம்பர்மாகாளம் - காவிரி யாற்றுத் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். மாகாளர் காவலிலிருந்த இந்திராணியை அஜமுகியிழுத்துக் கைவெட்டப்பட்டஸ்தலம். சம்பந்தரால் பாடப்பெற்ற தலம்.

திருஅம்பிலாந்துறை - காவிரியாற்றின் வடகறையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் சத்தியவாகீசுரர், அம்மைபெயர் சௌந்தரநாயகி. திருநாவுக்கரசராலும் சம்பந்தராலும் பாடப்பெற்றுள்ளது.

திருஅரசிலி - திருஅச்சிறு பாக்கத்துக்குத் தெற்கேயுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் அரசிலிநாதர், அம்மைபெயர் பெரியநாயகி. இது சம்பந்தரால் பாடப்பெற்றது.

திருஅரதைப் பெரும்பாழில் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பாதாளேச்சுரர், அம்மை அலங்காரநாயகி. இரணியாக்ஷனைக் கொன்றுன்மத்தங்கொண்ட வராகத்தினது கொம்பைச் சிவன் ஒடித்து தமது மார்பிலணிந்துகொண்ட ஸ்தலம். சம்பந்தரால் பாடப்பெற்றது.

திரு அரிசிற்கரைப்புத்தூர் - புகழ்த்துணைநாயனாரவதரித்தசிவஸ்தலம் அரிசில் நதிதீரத்திலுள்ளது. மூவராலும் பாடப்பெற்றது.

திரு அருவேபவிண்ணகரம் -காவிரியின் வடகரையின்கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் குடமாடிய கூத்தன், சத்தி விழியமுதவல்லி. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் பெற்றது.

திரு அவணிவணல்லூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி காட்சிநாயகேசுரர், அம்மை சவுந்தரநாயகி. சம்பந்தராற் பாடப்பெற்றது.

திருஅழுந்தூர் - காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி வேதபுரேசர், அம்மை சௌந்தராம்பிகை. சம்பந்தராற் பாடப்பட்டது. சோழநாட்டிலே காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் ஆமருவியப்பன், சத்தி செங்கமலவல்லி. திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம் உடையது.

திருஅன்பில் - காவிரின் வடகரையிலேயுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி வடிவழகிய நம்பி, சத்தி சௌந்தரியவல்லி. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் பெற்றது.

திருஅன்னியூர்-சோழநாட்டிலே காவிரிக்கு வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி ஆபத்சகாயேசுரர், அம்மை பெரியநாயகி. நாவுக்கரசராலும் சம்பந்தராலும் பாடப்பெற்றது.

திருஆப்பாடி - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பாலுகந்தார், அம்மை பெரியநாயகி. நாவுக்கரசராலும் ஐயடிகள் காடவர்கோனாலும் பாடப்பட்டது.

திருஆலம்பொழில் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி ஆத்மநாதேசுரர், அம்மை ஞானம்பிகை. நாவுக்கரசராற் பாடப்பட்டது.

திருஆவூர்ப்பசுபதீச்சுரம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமி பசுபதீச்சுரர், அம்மைமங்களநாயகி. சம்பந்தராற் பாடப்பட்டது.

திருஇடும்பாவனம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி சற்குணநாதேச்சுரர், அம்மை மங்களநாயகி. சம்பந்தராற் பாடப்பட்டது.

திருஇடைச்சுரம் - திருக்கச் சூராலக் கோயிலுக்குத்தெற்கே திருக்கழுக் குன்றுக்கு வடக்கே உள்ள ஒரு சிவ ஸ்தலம். சிவாமி இடைச்சுரநாதர், அம்மை இமயமடக்கொடி. சம்பந்த ராற் பாடப்பட்டது.

திருஇந்தளூர் - காவிரின் வடகரையின் கணுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். சுவாமி சுகந்தவனநாதர். சத்தி புண் டரிகவல்லி. குலசேகராழ்வார் திரு மங்கையாழ்வார் இவர்களால் பாடப் பெற்றது.

திருஇராதாபுரம் -மறந்து மாலைக்காலங் காறும் வேட்டையாடித் தனது நக ரஞ்சென்றுசுவாமிதரிசனஞ்செய்ய வியலாது காட்டிற்றங்கி அதுவே கவ ற்சியாக விருந்த வாகுணபாண்டிய னுக்குச் சிவன் தரிசனமருளியதலம். அது பாண்டியநாட்டிலே தென்பாலி லுள்ளது. சுவாமி வரகுணபாண்டி யேச்சுரர், அம்மை நித்தியகல்யாணி.

திருஇராமனதீச்சரம் காவிரியின்தென் கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவா மிஇராமநாதேச்சுரர். அம்மைகருவார் குழலி சம்பந்தராற் பாடப்பட்டது.

திருஇராமேசநல்லூர் - பாண்டியநாட் டின்கணுள்ள ஒருசிவஸ்தலம். சுவா மிஇராமனுதேச்சுரர். அம்மைகுணக் குன்றுநாயகி. இத்தலம்தாமிரவருணி நதிதீரத்கிலுள்ளது.

திருஇராமேச்சுரம் - பாண்டிநாட்டிலே சேதுதீர்த்தத்தை யடுத்த ஒருசிவஸ் தலம். ஸ்ரீராமர்பிரதிஷ்டைசெய்து பூசித்த லிங்கமூர்த்தி யுண்மையால் இதற்குஇப்பெயர்வாய்ந்தது. சுவாமி பெயர் இராமநாதர், அம்மை பெயர் பர்வதவர்த்தனி.

திருஇரும்பூளை -காவிரியின் தென்கரை யிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது ஆல ங்குடியெனவும்படும். சுவாமி பெ யர் காசியாரணியேசர், அம்மை பெ யர் ஏலவார்குழலி. இத்தலம் சம்பந்த ரால் பாடப்பட்டது.

திருஇரும்பைமாகாளம் - தொண்டை நாட்டிலே திருஅரசிலுக்குத் தென் கீழ்த்திசையிலேயுள்ள ஒருசிவஸ்த லம். மாகாளர் பூசித்த தலமாதலால் இப்பெயர்வாய்த்தது. சுவாமிபெயர் மாகாளேசுவரர், அம்மைபெயர் குயின்மொழியம்மை.

திருஇலம்பையங்கோட்டூர் - காஞ்சிநக ரத்துக்கு வடகிழக்கிலுள்ள ஒருசிவ ஸ்தலம். சுவாமிபெயர் சந்திரசேக ரேசுவரர், அம்மைபெயர்கோடேந்து முலையம்மை. இத்தலம் சம்பந்தராற் பாடப்பட்டது.

திருஇளையான்குடி - காவிரியாற்றின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். இளையான் குடிமாற நாயனர் அவத ரித்த தலம் இதுவே.

திருஈயங்கோய்மலை - காவிரியாற்றின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் மரகதாசலேசுவரர், அம்மை பெயர் மரகதவல்லி. சம்பந் தரால்பாடப்பட்டது. அகத்தியர் ஈயு ருக்கொண்டு பூசித்ததலமாதலால் இதற்கு இப்பெயர் வாய்ந்தது.

திருஉத்தரகோசமங்கை - பாண்டிநாட் டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது மா ணிக்கவாசகருக்குத் தரிசநந்தந்து நீத் தல் விண்ணப்பம் பாடப்பெற்றது.

திருஎயினனூர்-காவிரியாற்றின் தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். எனு திநாயனர் அவதரித்த தலமிதுவே.

திருஎருக்கத்தம்புலியூர் - நடுநாட்டிலே மணிமுத்தாநதி தீரத்திலுள்ள ஒரு சிவஸ்தலம். நாகேந்திரபட்டணமெ னவும்படும். சம்பந்தராற் பாடப்பட் டது. சுவாமி நீலகண்டநாயகர், அம் மை நீலமலர்க்கண்ணி.

திருஎறும்பியூர்- காவிரியின்தென்கரை யிலுள்ள ஒரு சிவஸ்தலம். அது எறு ம்பு பூசித்தருள்பெற்ற தலமாதலின் இப்பெயர்த்தாயிற்று. நாவுக்கரசராற் பாடப்பட்டது. சுவாமி எறும்பீசர், அம்மை நறுங்குழல்நாயகி.

திருஏகம்பம்-சமயாசாரியர் மூவராலும் பாடப்பட்ட காஞ்சிபுரத்துச் சிவஸ் தலம். மிக்க பிரபலமுடையது. சோ ழர்களுக்கு இராஜதானியாகவுமிருந் தது. சுவாமி ஏகாம்பரநாதர், அம்மை காமாக்ஷி. உமாதேவியார மண்ணி னற் சிவலிங்கம் ஸ்தாபித்துப் பூசிக்க அதனைப் பரீக்ஷிக்குமாறு சிவபெரு

மான் கம்பாநதியை பெருகச்செய்து அவ்விலிங்கத்தைப் மூழ்குவிக்க, தேவியார் மார்போடதனை யெடுத்தணைக்க, அவர்முலைத்தழும்பு பதிந்தபடியே சிவலிங்கப்பெருமானுகியஅற்புத நிகழ்ந்தஸ்தலம். அங்குள்ள மாமரம் வேதங்களின் வடிவம்.

திருஓமாம்புலியூர் - இதுகாவிரியின்வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். புலியினலே தொடரப்பட்ட ஒருவேடன். இத்தலத்து வில்வமரத்திலேறியிருந்து அஸ்தமயனகாலமுதல் விடியுங்காறும் அம்மரத்துப் பத்திரங்களைப் பறித்தொவ்வொன்ருக அதன்கீழிருக்கும் சிவலிங்கப் பெருமானுக்கர்ச்சித்து விடியற்காலத்திலே அருள்பெற்று அப்புலியோடு நற்கதிபெற்றமையின் இப்பெயர்த்தாயிற்று. சுவாமி துயர்தீர்த்தசெல்வர், அம்மை பூங்கொடியம்பிகை.

திருகணி - சங்குதிரி, திருகாணி.

திருகணை - புரிமணை.

திருகம் - சாதிக்காய், துவாரம்.

திருகலி-துனிவலைந்தபனைமுதலியன.

திருகல் - முரணல், முறுகல், வளைதல்.

திருகல்முறுகல் - திருக்கானது.

திருகாணி - சுரியாணி.

திருகு - கள்ளம், திருகென்னேவல். முறுக்கு, வஞ்சனை.

திருகுகள்ளி - ஒருவகைக்கள்ளி.

திருகுதல் - திருப்பி முரித்தல், திரும்புதல், பறித்தல், முறுகுதல்.

திருகுதாழை - ஒருதாழை.

திருகுதாளம் - மாறுபாடு.

திருகுதாளி - மாறுபாடுள்ள ஆள்.

திருகுபலை - வலம்புரிக்காய்.

திருகூசி - தமருசி, துலா அச்சு.

திருக்கங்கைகொண்டான்-பாண்டிநாட்டின்கணுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருக்கச்சிஅத்திகிரி - இதுதொண்டைநாட்டிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம். சுவாமிவரதராஜப்பெருமாள், சத்திபெருந்தேவியார். இத்தலம் இக்காலத்தில் சின்னகாஞ்சிபுரம் எனப்படுகிறது.

திருக்கச்சி அநேகதங்காவதம் - காஞ்சிபுரத்திலேதிருவேகம்பத்தைச்சார்ந்த ஒரு சிவஸ்தலம்.

திருக்கச்சிஓணகாந்தன்றளி - இதுவும் திருவேகம்பத்தைச்சார்ந்த ஒரு சிவஸ்தலம். இது ஓணகாந்தனென்னும் அசுரன் பூசித்தது.

திருக்கச்சி நெறிக்காரைக்காடு - இது திருவேகம்பத்தைச் சேர்ந்த ஒரு சிவஸ்தலம்.

திருக்கச்சிமேற்றளி இது திருவேகம்பத்தைச் சேர்ந்த ஒரு சிவஸ்தலம். பிள்ளையார் பாலயத்திலே உள்ளது.

திருக்கச்சூராலக்கோயில்-இது தொண்டைநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுந்தரமூர்த்திக்குத் திருவமுது அளித்த ஸ்தலம்.

திருக்கஞ்சனூர் - இது காவிரியின் வடகரையிலுள்ள ஒருசிவஸ்தலம். மணக்கோலஞ்செய்து மணப்பந்தரின் கீழ் வந்திருந்த கன்னிகையினது கூந்தலை மாவிரதி வேடங்கொண்டு சென்று சிவபெருமான்கேட்க, அதனை அக்கன்னிகையின் தந்தையாகிய மானக்கஞ்சாறநாயனர் மறுதுகொய்து கொடுத்த ஸ்தலமுமிதுவே. பழுக்கக் காய்ச்சிய இருப்புப் படியேறிச் சிவபாரஞ்சாதித்த ஹரதத்தாசாரியர் திருவவதாரஞ்செய்த ஸ்தலமுமிதுவே. இங்குள்ள சிவமூர்த்தி அக்கினீச்சுரர், அம்மை கற்பகநாயகி.

திருக்கடம்பந்துறை -காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி கடம்பவனநாதர், அம்மை முற்றிலா முலையம்மை. நாவுக்கரசரால் பாடப்பட்டது.

திருக்கடம்பூர்க்கரகோயில் - இது காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி அமிர்தகடேசுவரர், அம்மை சோதிமின்னம்மை. இது நாவுக்கரசரும் சம்பந்தரும் பாடிய தலம்.

திருக்கடவூர் - காவிரியின் தென்பாலிலே சோழநாட்டிலே கீழ்க்கடலோரத்திலேயுள்ள சிவஸ்தலம். மூவராலும் பாடப்பட்டது. அது யமசம்மாரமூர்த்தியாய்ச் சிவனெழுந்தருளியிருக்கும் ஸ்தலம் சுவாமி அமிர்தகடேசுரர், அம்மை அபிராமித்தாய் இது அட்டவீரட்டத்துள்ளொன்று.

யம சங்காரம் காசியில் நடந்தது. குங்கிலியக் கலய நாயனார்க்கும் அபிராமிப் பட்டர்க்கும் ஜன்மஸ்தலமிதுவே.

திருக்கடவூர் மயானம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். இதுவும் மூவராலும் பாடப்பட்டது.

திருக்கடிகை-தொண்டைநாட்டிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம். இது சோழசிங்கிபுரமென வழங்கப்படுவது. சுவாமிநாசிங்கமூர்த்தி. சத்தி அமிர்தவல்லி, பேயாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் என்னும் மூவராலும் பாடப்பட்டது.

திருக்கடிக்குளம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி கற்பகேச்சுரர், அம்மை சௌந்தரநாயகி. இது கற்பகவிநாயகர் சிவன்பால் மாங்கனிபெற்ற ஸ்தலம். சம்பந்தர் பாடல்கொண்டது.

திருக்கடித்தானம் - மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். திருவஞ்சைக்களத்துக்குத் தென்கீழ்த்திசையிலுள்ளது.

திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி சொர்ணபுரேச்சுரர். அம்மை சிவாம்பிகை, நாவுக்கரசர் பாடல்கொண்டது.

திருக்கடைமுடி - இது சோழநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தர் பாடல்கொண்டது.

திருக்கடைக்காப்பு-கோவிற்கதவு சார்த்தல், திவ்யபிரபந்தத்தின் முடிவுப் பாட்டு.

திருக்கடையாப்பு-சம்பந்தர் பாடிய நூல்

திருக்கடையூர் - தஞ்சாவூருக்கருகில் ஒரு சிவஸ்தலம்.

திருக்கண்சார்த்துதல் - கிருபையாய்ப் பார்த்தல்.

திருக்கண்டியூர்-பிரமனது சிரங்கொய்த ஒரு சிவஸ்தலம். காவிரியின் தென்கரையிலுள்ளது. சுவாமி வீரட்டானேச்சுரர். அம்மை மங்கைநாயகி. சம்பந்தராலும் நாவுக்கரசராலும் பாடப்பட்டது. காவிரியின் தென்கரையிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம். சுவாமி அருஞ்சாபந்தீர்த்த பெருமாள், சத்தி கமலமடந்தை.

திருக்கண்ணங்குடி -காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். திருமங்கையாழ்வாராற் பாடப்பட்டது.

திருக்கண்ணமங்கலம்-காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருக்கண்ணபுரம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். காளமேகப்புலவர், இங்குள்ள விஷ்ணுமூர்த்தியைப் பாடீராயின் கபாடந்திறவேனென்றாடிநின்ற காமக்கிழத்தியினது ஊடலைத் தீர்ப்பான் கருதி, "கண்ணபுரமாலே கடவுளிலும் நீயதிகம்" என்று முதலடியைக் கூறி அவளை மகிழ்வித்துக் கதவு திறப்பித்த பின்னர், "உன்னிலுமோ நானதிகமொன்றுகேள் முன்னமே-உன்பிறப்போ பத்தா முயர்சிவனுக் கொன்றுமில்லை, என்பிறப் பெண்ணப்போகாதே" என்று மற்றைய அடிகளையுங்கூறி நிந்தாஸ்துதிசெய்யப்பெற்றது மித்தலமே.

திருக்கண்ணப்பதேவர்மறம்-நக்கீரர் பாடிய பிரபந்தம். கல்லாடரும் இப்பெயரால் ஒரு பிரபந்தம் பாடினர்.

திருக்கண்ணமங்கை -காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி சௌந்தரராஜப் பெருமாள்; சத்தி கண்ணபுரநாயகி. குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார் மூவராலும்பாடப்பட்டது.

திருக்கண்ணார்க்கோவில் - இது சோழநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி கண்ணாயிரேச்சுரர்; அம்மை முருகுவளர் கோதை, சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்கைலாசபுரம் - பாண்டி நாட்டின் கணுள்ள ஒருசிவஸ்தலம். இது சிந்துபூந்துறை யெனவும்படும். சுவாமிகைலாயநாதேச்சுரர், அம்மை சிவகாமி. இது அகஸ்தியருக்குச் சிவன் திருமணக்கோலங்காட்டி யருளிய தலம்.

திருக்கரணம் - பாம்பு.

திருக்கரம்பனூர் -காவிரியின் வடகரையின்கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

சுவாமி புருஷோத்தமன்; சத்தி பூர்வாதேவி. திருமங்கை யாழ்வாராற் பாடப்பட்டது.

திருக்காவீரம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி காவீரேச்சுரர்; அம்மைபிரத்தியக்ஷமின்னுள். சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்கரிவலம்வந்தநல்லூர் - இதுபாண்டி நாட்டின்கண்ணுள்ளஒருசிவஸ்தலம். சுவாமி பால்வண்ண நாதர், அம்மை ஒப்பிலம்பிகை. குலசேகர பாண்டியன் வேட்டையாடும்போது எதிர்ப்பட்ட ஒரு யானையைத்துரத்த அஃதோடிப் போய் இம்மூர்த்தி யிருந்த புதரை வலம்போய்ச் சிவகணமாகப் பெற்றமையால் அத்தலம் இப்பெயர் பெற்றது.

திருக்கருகாவூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி முல்லைவனநாதர்; அம்மைகரும்பனையாள். சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்கருக்குடி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். இதுவலங்கைமான் எனவும்படும். சுவாமி சற்குண லிங்கேச்சுரர்; அம்மை சர்வாலங்கிருத மின்னம்மை. சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்கருப்பறியலூர் - இது ஞாயிறு என வழங்குஞ்ஒருசிவஸ்தலம் சோழநாட்டிலே காவிரியின் வடகரையிலுள்ளது. சுவாமி குற்றம்பொறுத்த நாதர், அம்மை கோல்வளைநாயகி; பூத வடிவு கொண்டுநின்ற தம்மை யுணராமற் குலிசத்தாற்றுக்கவெத்தனிந்து இந்திரன்மீது நாடகமாத்திரையாகக் காட்டிய கோபாக்கினியைத் தணித்துப் பிழைபொறுத்து அவனுக்குச் சிவபிரான் அருள்புரிந்ததலமாதலின் இங்கே கோயில்கொண்டிருக்கும் மூர்த்தி கோபம் பொறுத்த நாதர் எனப்படுவர். சுந்தரராலும் சம்பந்தராலும் பாடப்பட்டது. தணித்த கோபாக்கினியை மேலைச்சமுத்திரத்திற் சிவன் வீச அது ஜலந்தராசுரனாயிற்று.

திருக்கருவிலி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி சற்குணேச்சுரர்; அம்மை, சர்வாங்க நாயகி. நாவுக்கரசராற் பாடப்பட்டது.

திருக்கருவூர்த்திருவானிலை - கொங்கு நாட்டின்கணுள்ள ஒரு சிவஸ்தலம். கருவூரெனப்படும். பிரமாசிருஷ்டியின் றியிருந்த காலத்திற் காமதேனுசிவனை வழிபட்டுச் சிருஷ்டி அதிகாரம் பெற்ற தலமாதலின் ஆநிலையெனப் பட்டது. சிவயோகமும் அணிமாதி சித்திகளும்வல்லவராய், மழைபொழிவித்தல், நினைந்தபோது வெயிலை நீக்கல், அரங்கநாதரை அழைத்தது முதலிய அற்புதங்களைச் செய்து விளங்கியவரும், திருவிசைப்பா பாடியவருமாகிய கருவூர்த்தேவர்க்கு அவதார ஸ்தலமுமிதுவே. சுவாமி பசுபதீச்சுரர்; அம்மை கிருபாநாயகி. சம்பந்தராற் பாடப்பட்டது. இத்தல சம்பந்தமான சரித்திரங்களுக்கு அளவில்லை.

திருக்கலிக்காமூர் - சோழநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தராற் பாடப்பட்டது

திருக்கலையநல்லூர் - காவிரியின் தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுந்தராராற் பாடப்பட்டது.

திருக்கவித்தலம் - இது காவிரியின் வடகரையின் கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி கஜேந்திரவரதர்; சத்தி ரமாமணிவல்லி, திருமழிசை யாழ்வாராற் பாடப்பட்டது.

திருக்கழிப்பாலை சோழநாட்டிலேகாவிரியின் வடபாலிலுள்ள ஒரு சிவஸ்தலம். சமயாசாரியர் மூவராலும் பாடப்பட்டது.

திருக்கழுக்குன்றம் - இது திருவிடைச்சுரத்துக்குத் தெற்கும் செங்கல்பட்டுக்கு மேற்கும்ஒன்பதுகல்லில் உள்ள ஒரு சிவஸ்தலம். சிவபெருமான் றிருவாக்கிற்கு எதிர்வாக்குரைத்த இறவிகளிருவரும் கழுகுருபம்பெற்று அங்கே வழிபட்டுக்கொண்டின்று மிருக்கப்பெற்ற ஸ்தலம். மாணிக்கவாசகருக்குக் குருவடிவு காட்டிய தலமிதுவே. "காட்டினாய் கழுக்குன்றிலே" எனத் திருவாசகத்திலே வருதல் காண்க. சுவாமி வேதகிரீச்சுரர்; அம்

மை பெண்ணினல்லாள். சமயாசாரியர் மூவராலும் தேவாரஞ் சூட்டப்பட்டது.

திருக்கழுமலமும்மணிக்கோவை - பட்டினத்தடிகள் பாடிய பிரபந்தங்களுளொன்று.

திருக்காளக்காடு - பாண்டி நாட்டின்கணுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமிசகலபுவனேச்சுரர். அம்மை உமாதேவி.

திருக்களர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்களிற்றுப்படியார் - ஒரு சைவசித்தாந்த நூல்.

திருக்கள்ளில்-திருவொற்றியூருக்குவடமேற்கிலுள்ள ஒரு சிவஸ்தலம், சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்கள்வனூர் - தொண்டைநாட்டின்கணுள்ளஒருவிஷ்ணுஸ்தலம். சுவாமி ஆதிவராகன்; சத்தி அபயநாயகி. திருமங்கையாழ்வாராற் பாடப்பட்டது.

திருக்கற்குடிமலே - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்,சுவாமி முத்தீச்சுரர். அம்மை அஞ்சனாட்சி; மூவராலும் பாடப்பட்டது. இதுஉய்யக்கொண்டான்என்றுவழங்குகிறது

திருக்கன்றாப்பூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். பசுக்கன்றுத் தறியிலேதோன்றி ஒருபெண்ணுக்குத் தரிசநங்கொடுத்த தலமாதலால் இப்பெயர்பெற்றது. இது திருநாவுக்கரசரால் பாடப்பட்டது.

திருக்காசிபேச்சரம் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இதுஅம்பாசமுத்திரம் எனவும் படும், சுவாமி பெயர் எரித்தாள் உடையார்; அம்மை பெயர் சிவகாமி. சிவசர்மனது பொருளைக் கவர்ந்துகொண்டு போய்ச் சத்தியஞ்செய்யப்புகுந்த அர்ச்சகனை யெரித்துச் சிவசர்மாவை ஆட்கொண்டமையால் இந்த மூர்த்திக்கு எரித்தாள் உடையார் என்னும் பெயருண்டாயிற்று.

திருக்காட்கரை-மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். இதுநம்மாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்காட்சி - தேவதரிசனம்.

திருக்காட்டுப்பள்ளி-சோழநாட்டில் காவிரிக்கு வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் ஆரணியசுந்தரேச்சுரர். அம்மைபெயர்அகிலாண்டநாயகி. இது சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்காந்தீச்சரம் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது ஆழ்வார் திருநகரி யெனவும்படும்.

திருக்காம்பிலி-காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருக்காரகம்-தொண்டை நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் கருணாகரன்; அம்மைபெயர் பத்மாமணி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்காராயில்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், இதுசப்தவிடங்களுளொன்று, சம்பந்தராற் பாடப்பட்டது.

திருக்கார்வானம் - தொண்டை நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி பெயர், நவநீதசோரன், அம்மைபெயர் கமலவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்காவளம்பாடி-காவிரியின்வடகரையிலுள்ளஒருவிஷ்ணுஸ்தலம்,சுவாமி பெயர் கோபாலன், அம்மை பெயர் மடவரல் மங்கை. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்காழிச்சீராமவிண்ணகரம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் ஸ்ரீநிவாசன் அம்மை பெயர் உலகநாயகி, திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்காளத்தி-தொண்டைநாட்டுச் சிவஸ்தலங்களு ளொன்று. சிலந்தியும் பாம்பும் யானையும் பூசித்து முத்திபெற்ற தலமாதலால் இதற்கு இப்பெயர்வாய்ந்தது. இத்தலத்திலேயே கண்ணப்பநாயனார் முதிர்ந்த திடபத்தியினால் ஆறு நாளுக்குள்ளே முத்திபெற்றனர்.

திருக்கானப்பேர்- பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் சானக்காளையீச்சுரர், அம்மைபெயர்

மகமாயி, சுந்தராலும் சம்பந்தராலும் பாடப்பட்டது.

திருக்காறாட்டுமுள்ளூர்-காவிரியின்வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் பதஞ்சலி நாதேசுவரர்; அம்மைபெயர் திரிபுரசுந்தரி. சுந்தரரால் பாடப்பட்டது.

திருக்காறூர் - காவேரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் செம்மேனி நாயகர்; அம்மைபெயர் சிவயோக நாயகி. சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது.

திருக்கீழ்வேளூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் அக்ஷலிங்கேசுவரர்; அம்மைபெயர் வனமூலநாயகி. சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது.

திருக்கு-கண், குற்றம், முறுக்கு, வஞ்சம்.

திருக்குடந்தாபுரி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் ஆராவமுது; அம்மைபெயர் கோமளவல்லி. பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார்என்பவர்களால், பாடப்பட்டது.

திருக்குடந்தைக்காரோணம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் சோமநாதர்; அம்மைபெயர் தேனார்மொழி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்குடந்தைக்கீழ்கோட்டம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் மடந்தைபாகர்; அம்மைபெயர் பெரியநாயகி. திருநாவுக்கரசரால் பாடப்பட்டது.

திருக்குடமூக்கு - கும்பகோணம், காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இங்குள்ள தீர்த்தம் மாமக தீர்த்தமெனப்படும். ஒரு முனிவர் தமது தாயின் அஸ்தியை யெடுத்துக்கொண்டு தீர்த்தங்க டோறுஞ் சென்று நீராடி, சுவர்ண, புஷ்கரிணி யென்னும் மாமக தீர்த்தத்திலும் ஆடிக்கரையேறி, அவ்வென்புப்பொதியை யவிழ்த்துப் பார்க்க அது பொற்றாமரைப் பூவாயிற்று. சுவாமிபெயர் கும்பேசுவரர்; அம்மைபெயர் மங்களநாயகி. மூவராலும் பாடப்பட்டது.

திருக்குடவாயில் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் கோளேசர். அம்மைபெயர் பெரியநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்குரக்குக்கா - காவிரியின் வடகரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமிபெயர் கொந்தளேசர்; அம்மைபெயர் கொந்தளநாயகி. திருநாவுக்கரசரால் பாடப்பட்டது. அநுமாரால் பூசிக்கப்பட்டது.

திருக்குரங்கணின்முட்டம்- தொண்டைநாட்டிலே வாலி பூசித்த ஒரு சிவஸ்தலம். இது திருமாகறலுக்கு வடக்கேயுள்ளது. சுவாமிபெயர் வாலீச்சுரர்; அம்மைபெயர் இறையார் வளையம்மை. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்குருகாவூர்-சோழநாட்டில் காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் திருமேனி வெள்ளடையீச்சுரர்; அம்மைபெயர் காவியங்கண்ணி. அப்பராலும் சுந்தராலும் பாடப்பட்டது.

திருக்குருகூர் - பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். சுவாமிபெயர் ஆதிநாதப்பெருமாள். அம்மைபெயர் ஆதிநாதவல்லி, நம்மாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்குலசேகரன்பட்டினம் - இந்தத் தலத்திலுள்ள ஒரு அற்புதமான மாமரம் எக்காலத்தும் பூவும் காயுமாறாமல் பூத்துக்காய்த்திருப்பது. இந்தச் சிவஸ்தலம் திருச்செந்தூருக்குத் தென்மேற்கிலுள்ளது.

திருக்குழந்தை - பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் மாயக்கூத்தன்; அம்மைபெயர் குழந்தைவல்லி.

திருக்குழப்பம் - திருவிளையாட்டு, தேவசெயர் குழப்பம், புளித்தனம்.

திருக்குழல்நாயகி - திருச்செங்காட்டங்குடியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

திருக்குளம் - கோயிற்குளம்.

திருக்குறிப்புத்தொண்டர் - காஞ்சிபுரத்திலே எகாலியர்குலத்தில்அவதரித்த ஒரு சிவபத்தர். சிவபெருமான் ஒரு முனிவர்போல வேடங்கொண்டு சென்று வெளுத்துத் தரும்படி தம்மிடத்துக்கொடுத்த ஆடையை மழையினால் வெளுத்தரக்கூடாமையாகிய காரணத்தால் வாக்குத்தவறிற்றே;குளிரினால் சிவபத்தர் வருந்துவரேயென்று தம் தலையைக் கல்லின்மேல் மோதப் புகுந்து சிவபெருமான் திருக்கரத்தாலே தடுத்தாலாகிய பெரும்பேறு பெற்றவர்.

திருக்குறுக்கை - மன்மதனை யெரித்த ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர்வீரட்டானேசுவரர். அம்மையார் பெயர் ஞானம்பிகை. திருநாவுக்கரசரால் பாடப்பட்டது.

திருக்குற்றாலம் - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். அகத்தியமுனிவர் பொதிகைக்கு எழுந்தருளும்போது அதனை விஷ்ணுதலமென்றறியாமல் அதன் வழியே செல்ல, அங்குள்ள வைணவர்கள் அகத்தியர் தரித்திருந்த சிவ சின்னங்களைக்கண்டு பொறாதவர்களாகி வெளியே துரத்த, அகத்தியர் வெளியேவந்து, வைஷ்ணவர்கள் போல வடிவுதாங்கி மீண்டு சென்று அவர்கள் அநுமதிப்படி ஆலயத்துட் பிரவேசித்து விஷ்ணுமூர்த்தியைத் தமது திருக்கரத்தால் குழைவித்து சிவலிங்கமாகச் செய்து பூசித்து வைணவர்களைக் கர்வபங்கஞ்செய்த ஸ்தலம். இது சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்குன்றுமலை - திருக்கோணமலை.

திருக்கூடலூர் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம்.

திருக்கூடலையாற்றூர் - நடுநாட்டில்மணிமுத்தா நதிக்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருக்கூடல்தென்மதுரை-பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் கூடலழகர்; அம்மைபெயர் வகுளவல்லி. திருமழிசை யாழ்வார் பெரியாழ்வார், திருமங்கை யாழ்வார் என்னு மூவரால் பாடப்பட்டது.

திருக்கூட்டம் - தேவதொண்டர்கூட்டம்.

திருக்கூத்து - திருநடனம்.

திருக்கேதீச்சுரம் ஈழநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது சம்பந்தராலும் சுந்தராலும் பாடப்பட்டது. ஆலயம் அழிந்துபோயிற்று.

திருக்கை - ஒருவகைமீன்.

திருக்கைச்சின்னம் - காவிரியின்தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்கைலாயஞானவுலா - சேரமான் பெருமாணயனரால் செய்யப்பட்ட ஒரு பிரபந்தம்.

திருக்கொடுங்குன்றம் - பாண்டிய நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சோலைமலைக்குக் கிழக்கே யுள்ளது.

திருக்கொடும்பாளூர் -காவிரியின்தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருக்கொட்டையூர்க்கோடீச்சுரம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் கோடீச்சுரர்; அம்மை பெயர் பந்தாடு நாயகி. திருநாவுக்கரசராலே பாடப்பட்டது.

திருக்கொண்டீச்சுரம் - காவிரியின் தென்கரையிலுள்ளஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் பசுபதீச்சுரர்; அம்மை பெயர் சாந்தநாயகி. திருநாவுக்கரசரால் பாடப்பட்டது.

திருக்கொள்ளம்பூதூர் - சோழநாட்டிலே குடமுருட்டி நதிக்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமி பெயர் வில்வவனநாதர்; அம்மைபெயர் சௌந்தரநாயகி.சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்கொள்ளிக்காடு-காவிரியின் தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்கொன்றை - ஒருமரம்.

திருக்கோகர்ணம் - திருக்கைலாயத்திலே சிவனிடத்து இராவணன் இரந்துபெற்ற சிவலிங்கத்தை, இவ்விடத்தில் ஒரு அந்தணச்சிறுவனாகத் தன் முனனே தோன்றியவிநாயகர் கையிலே கொடுத்து சலமோசனம் செய்தபோது விநாயகர் அதனைக் கீழேவைத்துவிட அவன் தன் இருபது கைகளாலும் பற்றியிழுக்கவும், அது

பசுவின்காதுபோலக்குழைந்து வேர்கொண்டமையால் இது மஹாபலம் என்று சொல்லிவிட்டுப் போனான். அதுபற்றி இத்தலம் கோகர்ணம் எனப்பட்டது. இது துளுவநாட்டிலேயுள்ளது. திருநாவுக்கரசராலும் சம்பந்தராலும் பாடப்பட்டது.

திருக்கோடிக்கா - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருக்கோடிக்குழகர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பாவாலும்சம்பந்தவாகீசராது தேவாரத்தாலும் பாடப்பட்டது.

திருக்கோடீச்சுரம் - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். அகஸ்தியர்மணலால் அமைக்க அமைக்க அமையாது நின்ற இலிங்கத்தைப்பார்த்து இதென்ன கோட்டியென்றுகூறித் தியானித்தலும் அமைந்திருந்தமையால் இதற்கு இப்பெயர் வாய்ந்தது.

திருக்கோட்டாறு - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்கோட்டியூர் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் சௌமியநாராயணர்; அம்மைபெயர் திருமாமகள். பூதத்தாழ்வார் முதலிய ஐவரால் பாடப்பட்டது.

திருக்கோட்டூர் - காவிரியின் தென்கரையிலுள்ளஒருசிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருக்கோணமலை ஈழநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது சம்பந்தரால் பாடப்பட்டது. திரிகோணமலை எனவும்படும்.

திருக்கோலக்கா - சம்பந்தருக்குப் பொற்றாளமருளிய ஒரு சிவஸ்தலம். இது சோழநாட்டிலுள்ளது. சுந்தரர் சம்பந்தர் இருவராலும் பாடப்பட்டது.

திருக்கோலம் - திருவேடம், தருவமண்டலம், தேவகோலம்.

திருக்கோவலூர்வீரட்டலம் - போர்க்கோலங்கொண்டு கைலாயத்துக்குச் சென்ற அந்தகாசுரனை வென்றருளின ஒரு சிவஸ்தலம். இது அட்டவீரட்டானத்தொன்று. பெண்ணையாற்றங் கரையிலுள்ளது. அப்பர் சம்பந்தர்களால் பாடப்பட்டது.

திருக்கோழம்பம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம், சுவாமிபெயர் கோகிலேசுவரர்; அம்மைபெயர் சௌந்தரநாயகி. அப்பர் சம்பந்தர்களால் பாடப்பட்டது.

திருக்கோளிலி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் கோளிலிநாதர்; அம்மைபெயர் வண்டமர் பூங்குழல், மூவராலும், தேவாரஞ் சூட்டப்பட்டது. சப்தவிடங்க ஸ்தலங்களு ளொன்று. சுந்தரமூர்த்திகள் தாம் குண்டையூர்க் கிழவர்பாற் பெற்ற நெற்குவையைக் கொண்டுபோதற்கு ஆளின்மையால் வருந்திச் சிவபெருமானை நோக்கி, "ஆளிலையெம்பெருமான்" என்று பாடிப்பூதகணங்களை ஆளாகப்பெற்ற தலம் இதுவே.

திருக்கோளூர் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். இது நம்மாழ்வாரால் பாடப்பட்டது.

திருக்கோவில் - தேவகோயில், சிதம்பரம்.

திருசி - கண்.

திருசிபத்துவம் - பார்வை.

திருசியம் - தோற்றமுள்ளது.

திருசை - கண்.

திருசோபம் - வெண்டாமரை.

திருச்சக்கரப்பள்ளி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தராற் பாடப்பட்டது.

திருச்சங்கரநாராயணர்கோவில் - பாண்டிநாட்டின்கணுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருச்சத்திமுற்றம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சத்திமுற்றப்புலவர் விளங்கிய ஸ்தல பூமிதுவே. சுவாமி சிவக்கொழுந்தீச்சுரர்; அம்மை பெரியநாயகி. நாவுக்கரசர், "கோவாய்முடுகியதிறற்கூற்றங் குமைப்பதன்முன் பூவாரடிச்சுவடென்மேற் பொறித்துவை" என்று தேவாரத்தில் விண்ணப்பஞ் செய்த ஸ்தலமுமிதுவே.

திருச்சவை - திவ்யசங்கம், தேவசபை.

திருச்சாத்தமங்கை அயவந்தி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்

தலம். இது சிவனடியார் வேண்டும் எதனையும் மறுதுகொடுக்கும் இயல்புடையராகிய இயற்பகை நாயனரிடத்திலேசிவபிரான்ஒரு விடபுருடனுகிச்சென்று அவர்மனைவியை வேண்ட, மறுதுகொடுக்கத்துணிந்த அந்நாயனருடைய பத்தியை மெச்சி அவருக்கு முத்தியளித்த ஸ்தலம்.

திருச்சிக்கல்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். திருஞானசம்பந்தராற் பாடப்பட்டது.

திருச்சிங்கவேள்குன்றம் -வடநாட்டின் கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

திருச்சித்தம் – திவ்வியசித்தம்.

திருச்சித்திரக்கூடம்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். இதுசிதம்பரத்துக்குவைஷ்ணவர்கள் இட்டுக்கொண்டபெயர். சுவாமிகோவிந்தராஜன்; சத்தி புண்டரீகவல்லி. குலசேகராழ்வார் முதலியோராற் பாடப்பட்டது.

திருச்சிராப்பள்ளி – காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். தனகுப்தன் மனைவி சிவபக்தியிற் சிறந்தவளாளொழுகி வருநாளிற் கருப்பவதியாகிப் பிரசவித்தாள். அச்சமயம் அவள் தாய் காவிரிப்பெருக்கால் அக்கரையில் நின்றுவிடச் சிவபிரான் அத்தாயைப்போல் உருவங்கொண்டு சென்றுபோய் அப்பெண்ணுக்குப் பிரசவ அறையில் உதவி புரிந்திருந்தார். அதுபற்றி இத்தலத்திலெழுந்தருளியிருக்கும் சுவாமிக்குத் தாயுமானுர் என்னும் பெயருண்டாவதாயிற்று.

திருச்சிவபுரம்-காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பிரமபுரி நாயகேச்சுரர். அம்மை பெரியநாயகி.

திருச்சிறுகுடி-காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிமங்களேச்சுரர்; அம்மை மங்களநாயகி.

திருச்சிற்றம்பலம் – சிதம்பரம்.

திருச்சிற்றேமம் – காவிரியின் தென்கரையிலுள்ளஒருசிவஸ்தலம். சுவாமி பொன்வைத்த நாதேச்சுரர்; அம்மை அகிலாண்டேசுவரி. திருஞானசம்பந்தராற் பாடப்பட்டது.

திருச்சின்னம் - ஒருவாச்சியம்.

திருச்சீரலைவாய் – திருச்செந்தூர்.

திருச்சுண்ணம் - அபிஷேகச்சுண்ணம்.

திருச்சுழியல் - பாண்டிநாட்டின்கணுள்ளஒரு சிவஸ்தலம். சுவாமி திருமேனிநாதேச்சுரர்; அம்மைதுணைமாலை. சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பாடப்பட்டது.

திருச்செங்காட்டங்குடிக்கணபதீச்சரம் காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சிறுதொண்டநாயனர் விளங்கிய ஸ்தலமுமிதுவே. சுவாமி கணபதீச்சுரர்; அம்மை திருக்குழனயகி.

திருச்செங்குன்றூர்-கொங்கு நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிஅர்த்தநாரீச்சுரர்; அம்மை பாகம்பிரியாள். திருஞானசம்பந்தராற் பாடப்பட்டது. மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

திருச்செந்தூர் – சீரலைவாயெனப்படும். இராமேசுரத்துக் கருகில்சுப்பிரமணியர் பிரதான ஸ்தலங்களி னென்று. பாண்டி நாட்டிலே சமுத்திரதீரத்துள்ளது. சுவாமிசுப்பிரமணியர்; அம்மை வள்ளியம்மை தெய்வானை.

திருச்செப்பறை-பாண்டிநாட்டின்கணுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி தியாகேச்சுரர்; அம்மை சிவகாமியம்மை. இத்தலம் திருநெல்வேலிக்கு வடகீழ்த்திசையிலுள்ளது.

திருச்செம்பொன்செய்கோவில் – காவிரியின்வடகரையிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம். சுவாமி கிருபாகரன்; சத்தி அல்லிமலர் மங்கை. திருமங்கையாழ்வாராற் பாடப்பட்டது.

திருச்செம்பொன்பள்ளி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி சொர்ணபுரேச்சுரர்; அம்மை சுகந்தவனநாயகி. நாவுக்கரசராலும் சம்பந்தராலும் பாடப்பட்டது.

திருச்சேய்ஞலூர்-குமாரக்கடவுளுக்காக விசுவகர்மாவினல் அமைக்கப்பட்ட நகரம். இது சோழ நாட்டிலுள்ளது. இது வடமொழியிலுஞ் சேய்ஞலூ

ரென்றே வழங்கப்பட்டுள்ளது. குமாரக்கடவுள், சூரசங்காரத்தின் பொருட் டுச்செல்லும் வழியில், ஒருநாள் தங்கிச் சிவபூசைசெய்துஆயுதங்கள் பெற்ற தலமிதுவே. இங்கெழுந்தருளியிருக்குஞ்சிவமூர்த்தி சத்தகிரீசர், அம்மை சகிதேவி. சண்டீசர் அவதரித்த தலமுமிதுவே. சம்பந்தராற் பாடப்பட்டது.

திருச்சேயன்மாதேவி-பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருச்சேர்ந்தமங்கலம் - பாண்டி நாட்டின்கணுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருச்சேறை - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம் சுவாமிபெயர் செந்நெறியய்யர், அம்மை ஞானவல்லி. சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது. காவிரியின் தென் கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

திருச்சோமேச்சுரம் - பாண்டிநாட்டுச் சிவஸ்தலங்களுளொன்று. இது ஆற்றூரெனவும்படும்.

திருச்சோற்றுத்துறை-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் தொலையாச்செல்வேச்சுரர். அம்மை பெயர் ஒப்பிலாவம்பிகை. மூவராலும் பாடப்பட்டது.

திருடகம் - அடுக்கு.

திருடகாண்டம் } மூங்கில்.
திருடக்கிரந்தி }

திருடதை-உறுதி, பெலம், வயிரம்.

திருடநேமி - சத்தியதிருதன் மகன்.

திருடமூலம் - தேங்காய். [மிகுதி.

திருடம் - இரும்பு, தத்துவம், பெலம்,

திருடலோமை - காட்டுப்பன்றி, பருமயி

திருடல் - திருடுதல். [ர்.

திருடவிரதன் - விஜயன் மகன்.

திருடழம் - தேங்காய்.

திருத்ஹநு - சேநசித்தன்மகன்.

திருடன்-கள்வன், விஷ்ணுசாந்தை. [ள்

திருடாபத்தி - நம்பிக்கையான மனையா

திருடார்த்தி - மிகுவருத்தம், விண்ணுதி.

திருடாசுவன் - தண்டாசுவன்.

திருடி - கள்ளி.

திருடு - களவு, திருடென்னேவல்.

திருடுதல் - களவெடுத்தல்.

திருட்டகூடம் - நொடிக்கதை.

திருட்டம் } தெளிவு.
திருஷ்டம் }

திருட்டாந்தம் } அத்தாட்சி, உதாரணம், சாத்திரம்.
திருட்டாந்தரம் }

திருட்டாபோகம்-இம்மையிற் கண்ணால் அனுபவிக்குமனுபவம்.

திருட்டி-அறிவு, கண், பாம்பு, பார்வை,

திருட்டித்தல் - காண்டல். [விஷம்.

திருட்டிப்பந்து - மின்மினி.

திருட்டிபாதம் - பார்வை.

திருட்டிபூதம் - காக்கப்பட்டது.

திருட்டிபோகம்-கட்பார்வை புணர்ச்சி.

திருட்டியம் - ஞானம்.

திருட்டினிபாதம் - பார்வை.

திருட்டு - அணுப்பு, களவு.

திருட்டுத்தனம் - கள்ளக்குணம், தந்திர

திருட்டுமாயம்-திருக்கு, மாறுபாடு. [ம்.

திருணகம் - வாளுறை.

திருணகேது - மூங்கில்.

திருணசாதி - மாமூதல்மருந்து.

திருணசாரை - வாழை.

திருணசிங்கம் - தறிகருவி.

திருணசூனியம் - தாழை.

திருணதை - வில்.

திருணத்தானியம் - புன்பயிர்.

திருணத்துருமம் - பனை தெங்கு முதலி

திருணபூலி - புற்பாய். [யமரம்.

திருணம் - உடையாள், திரணம், துரும்பு, தேள், தேனீ, புல், வில்.

திருணராசன் - பனை.

திருணவிந்து - மநுசக்கரவர்த்திவமிசத்தில் வந்த புதன் மகன், விகாலன் தந்தை.

திருணவர்த்தன் - சுழற்காற் றுருவங்கொண்டுபோய் திருவாய்ப்பாடியில் சிசுவாயிருந்த கண்ணனை வாரிக்கொண்டு ஆகாயத்தி லெழுந்தபோது அக்கண்ணனாலேயே கொல்லப்பட்டவ

திருணியை - புற்றிரள். [ன்.

திருணோற்பவம் - காட்டுப்பயிர்.

திருதபதம் - கெதிநடை.

திருதம் - தரித்தல்.

திருதன் - காந்தாரன்பௌத்திரன், கங்காபுத்திரன்.

திருதி - உறுதி, ஒருமீன், சந்தோஷம், திருத்தி, துணை, தோல், நித்தியயோகத் தொன்று, நீர்த்திருத்தி, யாகம்.

திருதிகரி - நாய்.
திருதியபிரகிருதி - அண்ணகன், அலி.
திருதியை - மூன்று.
திருத்தக்கதேவர் - சீவகசிந்தாமணிஎன்னும்நூல்செய்ததமிழ்ப்புலவர். இவர் சோழநாட்டிலிருந்த சமணசமயி.
திருத்தங்கால் - பாண்டி நாட்டூர்களுள் ஒன்று; இது வார்த்திகனுக்கு ஒரு பாண்டியனால் பிரமதாயமாகக் கொடுக்கப்பட்டது. ஸ்ரீவில்லிபுத்தூருக் கருகேயுள்ளது.
திருத்தண்கா-தொண்டைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். சுவாமிபெயர் தீபப்பிரகாசன; தேவியார் பெயர் மரகதவல்லி. திருமங்கை யாழ்வாரால் பாடப்பட்டது.
திருத்தண்காலூர்-பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம்.
திருத்தண்டலைநீணெறி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் நீணெறி நாதேச்சுரர்; தேவியார்பெயர்ஞானநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.
திருத்தருமபுரம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர்யாழ்மூறிநாதேச்சுரர்;தேவியார்பெயர் சதாமதுராம்பிகை. சம்பந்தரால் பாடப்பட்டது.
திருத்தம் - ஒப்பரவு, ஒழுங்கு, திருந்தல், தீர்க்கம்.
திருத்தலைச்சங்காடு - காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் சங்கநாயகேச்சுரர்; செங்குருநாதேச்சுரர்அம்மை பெயர் சவுந்தரியம்மை. சம்பந்தரால் பாடப்பட்டது.
திருத்தலையாலங்காடு-காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் ஆடவல்ல வீச்சுரர். தேவியார்பெயர் திருமடந்தை. வாகீசரால் பாடப்பட்டது.
திருத்தலையூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். உருத்திர பசுபதி நாயனார் திருவவதாரஞ் செய்த தலமிதுவே.
திருத்தல் - திருந்தச்செய்தல்.
திருத்தாண்டவம் - திவ்வியநடனம்.
திருத்தி - பூரணம், மனரம்மியம்.
திருத்திரு-யானைமுதலியவற்றை நடத்தும் ஓசை.
திருத்திலதைப்பதி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர்மதிமுத்தநாதேச்சுரர்;தேவியார் பெயர் பொற்கொடியம்மை.
திருத்தினைநகர் - கெடிலைநதிக் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் திருநத்தீச்சுரர்;தேவியார் பெயர் ஒப்பிலாநாயகி. சுந்தரரால் பாடப்பட்டது.
திருத்து - பயிர்செய்த நிலம்.
திருத்துசெய்கை-திருத்தென்னேவல்.
திருத்துதல் - சமனுக்குதல், சீர்திருத்தல், செவ்வைப்படுத்தல், தேற்றுதல், நிலமுதலியவற்றைப் பண்படுத்தல், மிகுவித்தல்.
திருத்துருத்தி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது குற்றால மெனவும்படும். சுவாமி பெயர் வேதேச்சுரர்; தேவியார் பெயர் அமிர்த முருளாம்பிகை. மூவராலும் பாடப்பட்டது.
திருத்துருவாசநல்லூர் - பாண்டி நாட்டுச் சிவஸ்தலங்களுளொன்று. சுவாமி பெயர் காளத்தீச்சுரர்; தேவியார் பெயர் பூங்கோதை யம்மை.
திருத்துறையூர் - சகலாகமபண்டிதர் என்னும் அருணந்தி சிவாசாரியர் அவதரித்த ஒருசிவஸ்தலம். இது நடுநாட்டிலுள்ளது. சுவாமிபெயர் துறையூரப்பேச்சுரர்;தேவியார் பெயர் பூங்கோதையம்மை. சுந்தரரால் பாடப்பட்டது.
திருத்தூங்கானைமாடம் - கெடிலநதிக்கயிலுள்ள ஒரு சிவஸ்தலம். வாகீசர் தமது தோள்களில் சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப் பெற்ற தலம். சுவாமிபெயர் சுடர்க்கொழுந்தீச்சுரர், தேவியார்பெயர் மடந்தை நாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.
திருத்தெங்கூர் - காவிரியின்தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் வெள்ளிமலை நாதேச்சுரர், தேவியார்பெயர் பெரியநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருத்தெளிச்சேரி - காவிரியின் தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர்பாதாளேச்சுரர்; தேவியார் பெயர் சத்தியம்மாள். சம்பந்தரால் பாடப்பட்டது. சம்பந்தர் புத்தசமயியாகியநந்திசெய்ததீமைக்காக அவன் தலையின்மேல் இடிவிழச்செய்து தம்மோடு வாதஞ்செய்ய வெழுந்த ஆசாரியையும் அவன் கூட்டத்தாரையும் வென்று அவர்களை நீறணிவித்த தலமிதுவே.

திருத்தெற்றியம்பலம் - காவிரியின்வடகரையிலுள்ளஒருவிஷ்ணுதலம்,சுவாமிபெயர் செங்கண்மால்; தேவியார் பெயர் செங்கமலை. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருத்தென்குடித்திட்டை - காவிரியின் தென்கரையிலுள்ளஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் சுபதீச்சுரர்; தேவியார் பெயர் உலகநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருத்தென்முல்லைவாயில் - சோழநாட்டிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமிபெயர் முல்லைவனநாதேச்சுரர், தேவியார் பெயர் அணிகொண்டகோதை. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருத்தேவனர்தொகை - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமியெர் மாதவப்பெருமாள் தேவியார்பெயர்கடிநீராப்திவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருத்தேவி - தேவகன் மகள், வசுதேவன் மனைவி.

திருத்தேவூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி தேவகுரு நாதேச்சுரர். அம்மை மதுரபாஷிணி. சம்பந்தராற் பாடப்பட்டது.

திருத்தொண்டாந்தாதி - நாயன்மார்களதுசரித்திரத்தை நம்பியாண்டார் நம்பிசுருக்கி அந்தாதியாகச்செய்த நூல்.

திருத்தொண்டர்-தெய்வத்தொண்டர்.

திருத்தொண்டு - தேவதொண்டு.

திருத்தொலைவில்லிமங்கலம் - இது பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி அரவிந்தலோசனன். அம்மை கருந்தடங்கண்ணி. நம்மாழ்வாராற் பாடப்பட்டது.

திருநடனம் - திருத்தாண்டவம்.

திருநணா - கொங்குநாட்டின்கணுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி சங்கமேச்சுரர்; அம்மை வேதாம்பிகை. சம்பந்தராற்பாடப்பட்டது. இதுபவானியெனவும்படும்.

திருநந்திபுரவிண்ணகரம் - காவிரியின் வடகரையின்கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி ஜகநாதன்; அம்மை செங்கமல மடந்தை. திருமங்கையாழ்வாராற் பாடப்பட்டது.

திருநயனம் - திருக்கண்.

திருநல்லம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது கோனேரிராயபுரமெனவும்படும். சுவாமி உமாமகேசர்; அம்மை மங்களநாயகி. திருநாவுக்காசராலும் சம்பந்தராலும் பாடப்பட்டது.

திருநல்லூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெரியபாண்டவேச்சுவரர்; அம்மைதிரிபுரசுந்தரி. திருநாவுக்கரசர் திருவடிசூட்டப்பெற்றதலம். சம்பந்தராலும் நாவுக்காசராலும் பாடப்பட்டது.

திருநல்லூர்ப்பெருமணம்- கொள்ளிடக்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். இது ஆச்சாபுரமெனவும்படும்.சுவாமி சிவலோகத்தியாகேசர்; அம்மை திருநீற்றுமையம்மை. திருஞானசம்பந்தர் சிவஜோதியுட்கலந்த தலம். அவராற் பாடப்பட்டது.

திருநருலிங்கபுரம் - பாண்டிநாட்டின் கணுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி நவலிங்கேசுவரர். அம்மை சிவகாமி.

திருநள்ளாறு - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமி தெர்ப்பாரணி யேச்சுரர், அம்மை போகமார்த்த பூண்முலை. மூவராலுப் பாடப்பட்டுள்ளது.

திருநறையூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி வடிவழகியநம்பி, சத்தி நம்பிக்கை நாய்ச்சியார்.

திருநறையூர்ச்சித்தீச்சரம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்,

இது திருநறையூர் எனவும் படும். சுவாமி சௌந்தரேச்சுரர், அம்மை அழகம்பிகை. சம்பந்தராலும் சுந்தராலும் பாடப்பட்டது.

திருநனிபள்ளி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருநன்னிலத்துப்பெருங்கோயில் - காவிரியின்தென்கரையிலுள்ளஒருசிவஸ்தலம். கோச்செங்கட்சோழரால் எடுப்பிக்கப்பட்ட ஆலயத்திருப்பணியையுடையது. சுந்தரராற்பாடப்பட்டது.

திருநாகேச்சுரம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருநாகைக்காரோணம் - காவிரியின் தென்பாலிலே கடற்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி காயாரோகணர், அம்மை. நீலாயதாக்ஷி மூவராலும்பாடப்பட்டது. இத்தலபுராணம் மகாவித்துவான் மீனாக்ஷிசுந்தரப் பிள்ளையால் பாடப்பட்டது. அது சொற்பொலிவும் பொருட்சிறப்புடையது.

திருநாட்டியத்தான்குடி - காவிரியின் தென்கரையிலுள்ளஒரு சிவஸ்தலம்

திருநாதன் - விட்டுணு.

திருநாமக்கத்திரி - ஒரு பாம்பு.

திருநாமச்செடி
திருநாமத்துத்தி } ஒரு பூடு.
திருநாமப்பாலை.

திருநாமம் - தெய்வீகநாமம், மேன்மையான நாமம்.

திருநாராயணபுரம் - துளுவநாட்டிலுள்ள ஒருவிஷ்ணு ஸ்தலம்.

திருநாரையூர் - காவிரின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். மரத்திலேறிக் கனிபறித்தெறிந்து துருவாச முனிவரது நிஷ்டைக்கிடையூறு செய்து அவரதுசாபத்தால்நாரையுருப்பெற்ற ஒருகந்தர்வன். சிவனைப்பூசித்து முத்திபெற்றதலமாதலால் இதற்கு இப்பெயர்வாய்த்தது நம்பியாண்டார் நம்பி அவதரித்த தலமும் இதுவே.

திருநாவலூர் - சுந்தரமூர்த்தி நாயனார் அவதரித்த சிவஸ்தலம். நடுநாட்டில் திருவதிகைக்கு மேற்கேயுள்ளது.

திருநாவுக்கரசுநாயனார் - திருமுனைப்பாடிநாட்டிலே திருவாமூரிலே வேளாளர்குலத்தில் புகழனார் என்பவர்க்குமாதினியார்வயிற்றிற் பிறந்தவர். மருணீக்கியார்என்பது இவரது பிள்ளைத்திருநாமம். இவர் சைவசமயாசாரியர் மூவரில் ஒருவர். இவரது அற்புத சரித்திரமுழுதும் பெரியபுராணத்திற் பரக்கக்காணலாம்.

திருநாளைப்போவார் - சிவத்தொண்டரில் ஒருவர் நந்தனார். ஆதனூரிலே புலையர் குலத்தில் அவதரித்தவர். பூர்வ புண்ணியமேலீட்டால் தில்லை நடராஜரைத் தரிசிக்கவேண்டுமென்கிறபேரவாவுடையராய் நாளைப்போவேன் என்று சொல்லித்திரிந்தகாரணத்தால் இவர் இப்பெயர் பெற்றனர். இவர் சிதம்பரத்தை யடைந்து புறத்தே நின்றபொழுது சிவாக்ஞையால் வளர்க்கப்பட்ட அக்கினியில் முழுகி நடராஜரைத் தரிசித்து முத்தியடைந்தவர்.

திருநாள் - விசேடாராதனைத்தினம்.

திருநிலாத்திங்கட்டுண்டம் - தொண்டைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். இது கச்சித் திருவேகம்பராலயத்திலுள்ள ஸ்தலமாம்.

திருநின்றவூர்- சோழநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்தொண்டைநாட்டிலுள்ள ஒருசிவஸ்தலம். பூசலாநாயனார் திருவவதாரக்ஷேத்திரமும் இதுவே இங்கே ஒரு விஷ்ணுதலமு முண்டு.

திருநீடூர் - சோழநாட்டில் காவிரிக்கு வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருநீரகம் } தொண்டைநாட்டிலுள்
திருநீர்மலை } ள ஒரு விஷ்ணுதலம்.

திருநீலகண்டநாயனார் - வேசையுறவு காரணமாக தம்மனைவியார் திருநீலகண்டமறிய எம்மைத்தீண்டற்க வென்றுசொன்ன ஆணையால் அம்மனைவியையன்றிப் பிறரைத் தீண்டாது துறந்து மூப்புவந்தகாலத்துச் சிவபிரான் ஓடொன்றைக்கொடுத்துமறைத்தமையால் சத்தியஞ்செய்யப் புகுந்து மனைவியைத் தீண்டாது கோவிணைருதலைப்பற்றி வாவியில் மூழ்கி இளமைபெற்று முத்தியடைந்தவராகிய இவர் சிதம்பரத்தில் குலாலவமிசத்திலவதரித்து விளங்கினவர்.

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்- சிவபெருமானுடைய திருப்புகழையாழிலிட்டுப் பாடுவோராய் மதுரைச் சோமசுந்தரக்கடவுளால் தாம்பெற்ற பொற்பலகையுடையராய்த் திருஞானசம்பந்த நாயனார் பாடியருளும் திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசிக்கும் பெரும் பேருடையராய்த் திருநல்லூர்ப்பெருமணத்திலேஅவரோடு முத்தியடைந்தவராகிய இவர் திருவருக்கத்தம்புலியூரிலே அவதரித்தவர்.

திருநீலகண்டன்-ஒருபூரான். சிவதொண்டரிலொருவன்.

திருநீலக்குடி-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருநீலநக்கநாயனார்-சிவபூசையும் அடியார்பூசையுஞ் செய்பவராய் அயவந்தியிலுள்ள சிவலிங்கப் பெருமானைப் பூசிக்கையில், அந்த லிங்கத்தின் மீது விழுந்தசிலம்பியைமனைவியார் வாயாலூதினமையால்அவரைத்துறந்துநித்திரை செய்தபோது சிவபிரான்வெளிப்பட்டு உன்மனைவி யூதினவிடமொழியமற்றை யிடங்களிளெல்லாம் கொப்புளம் மிகுந்திருப்பதைப்பாரென்று காட்டியருள மகிழ்ந்து மனைவியாரோடு திருத்தொண்டு செய்திருக்கப்பெற்றவராய்த்திருஞானசம்பந்தசுவாமிகளிடத்தே அன்புள்ளவராயுள்ள இவர்சாத்தமங்கையிலேமறையவர் குலத்திலே அவதரித்தவர்.

திருநீறு - விபூதி.

திருநீற்றுக்காப்பு-விபூதியிட்டிரட்சை.

திருநீற்றுக்கோவில் - திருநீற்றுப்பை.

திருநீற்றுப்பச்சை } உருத்திரசடைப்பூடு.
திருநீற்றுப்பத்திரி }

திருநீற்றுப்பழம் - திருநீற்றுண்டை.

திருநெடுங்களம் - வங்கியசோழன் நாடோறும் தரிசித்துப் பேறுபெற்ற சிவஸ்தலம். இது காவிரியின் தென்கரையிலுள்ளது.

திருநெய்த்தானம்-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருநெல்வாயிலரத்துறை } செடிலநதிக்கரையிலேயுள்ள ஒரு சிவஸ்தலம்.
திருஅரத்துறை }
இது அரத்துறையெனவும்படும்.

திருநெல்வாயில்-சோழநாட்டிலே காவிரிக்கு வடக்கேயுள்ள ஒருசிவஸ்தலம் சிவபுரி யெனவும்படும்.

திருநெல்வெண்ணெ - பெண்ணை நதிக்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருநெல்வேலி-வேதசர்மா பஞ்சகாலத்தில் நைவேத்தியத்திற்கென இரந்து வந்துலர்த்திய நெல்லைஅப்போது பெய்த பெருமழை நனைத்து வாரிப்போகாதபடிசிவபிரான்காத்தருளினமையால் இது இப்பெயர்த்தாயிற்று. சுவாமிபெயர் நெல்வேலி நாதர், தேவியார் பெயர் காந்திமதி. சபை தாமிரசபை. சம்பந்தரால் பாடப்பட்டது

திருநோக்கு - திவ்யபார்வை.

திருந்தகை-பெருமையிற் சிறந்தோன்.

திருந்தகைமை - பெருமை, மேன்மை.

திருந்தலர் } பகைவர்.
திருந்தார் }

திருந்துகை - செவ்வைப்படுதல்.

திருந்துதல்-செய்துமுடித்தல், திருத்தமாதல், திருந்தல், தேறுதல்.

திருந்துதேவன்குடி - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருபலை - ஒருகொடி.

திருப்படைவீடு - தேவர்கள் பெரியோர்கள் கூட்டத்துடனிருக்கும் வாசஸ்தலம்.

திருப்பட்டீச்சரம்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருப்பணி - கோயில்வேலை, திவ்விய தொண்டு.

திருப்பணித்தல்-யானையை நிற்கப்பண்ணல்.

திருப்பணிமுட்டு-கோவிற் றளபாடம்.

திருப்பதி-தேவதலம், விட்டுனு. வேங்கடமலை. இது பிரபலமான விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் வேங்கடேசுவரர்;தேவியார்பெயர்அலர்மேன்மங்கை. இந்தத்தலம் பூர்வகாலத்திலும் இப்போதும் சுப்பிரமணிய ஸ்தலம் என்று சைவர் பல பிரமாணங்கொண்டு கூறுவர்,இது தமிழ்நாட்டு வடவெல்லையாயிருப்பது.

திருப்பந்தணைநல்லூர் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருப்பம் - திரும்புகோடி, பணவியாபாரம்.

திருப்பயற்றூர்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருப்பரங்குன்று-மதுரைக்கருகில் சுப்பிரமணியருக்குப் பிரதானமலே.

திருப்பரங்கிரி } மதுரைக்கு தெற்
திருப்பரங்குன்றம் } கேயுள்ள ஒரு சுப்பிரமணியஸ்தலம்.

திருப்பரமேச்சுரவிண்ணகரம் - தொண்டை நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் வைகுந்தநாதர், தேவியார்பெயர் வைகுந்தவல்லி.

திருப்பரம் - சோறு.

திருப்பாய்த்துறை-காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம்சுவாமிபெயர் பராத்துறைநாதர். தேவியார்பெயர் பொன்மயிலம்பிகை. சம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பாடப்பட்டது. மாணிக்கவாசகராலும்எடுத்துக் கூறப்பட்டது.

திருப்பருதிநியமம்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமிபெயர் பருதியப்பேசர், தேவியார்பெயர் மங்களநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பல்லவனீச்சுரம்-காவிரிப்பூம் பட்டினம். இது பல்லவராயன் பூசித்து அநேக வரங்களைப் பெற்ற தலமாதலால் இப்பெயர் பெற்றது, இயற்பகை நாயனாரும் பட்டினத்தடிகளும் அவதரித்ததலம். சம்பந்தரால்பாடப்பட்டது.

திருப்பவளவண்ணம்-தொண்டை நாட்டிலுள்ளஒருவிஷ்ணுஸ்தலம்.சுவாமிபெயர் பவளவண்ணர், தேவியார்பெயர் பவளவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருப்பழனிமலே-பாண்டி நாட்டிலுள்ள ஒரு சுப்பிரமணியஸ்தலம். பழத்துக்காகப் பிணங்கியிருந்த குமாரக்கடவுளைச் சிவபிரான் பழம் நீயன்றோவென்று சொல்லிச் சாந்திசெய்தருளின தலம்.

திருப்பழமண்ணிப்படிக்கரை - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் நீலகண்டேசர், தேவியார் பெயர் அமிர்தகரவல்லி. சுந்தரரால் பாடப்பட்டது.

திருப்பழனம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் ஆபத்ஸஹாயர், தேவியார்பெயர் பெரியநாயகி. அப்பூதியடிகள் அவதரித்த தலம். சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது.

திருப்பழுவூர் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் வடவனமூலநாதர், தேவியார் பெயர் அருந்தவநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பழையாறை - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர், சோமேசர், தேவியார் பெயர் சோமகலாநாயகி.

திருப்பள்ளி - சயனதலம்.

திருப்பள்ளித்தாமம் - கோவிற்பூமாலே.

திருப்பள்ளியெழுச்சி - ஒரு பிரபந்தம், தேவர்களனந்தல் விட்டெழுதல்.

திருப்பறியலூர் வீரட்டானம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர் வீரட்டானேசுவரர், தேவியார்பெயர் இளங்கொம்பன்னே. இது தக்கன் தலேயறிந்த தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பனங்காட்டூர் - இது திருவல்லத்துக்குத் தெற்கேயுள்ள ஒரு சிவஸ்தலம். கண்ணுவர் நிவேதநத்துக்கொன்றுங்கிடையாமையால் பனம்பழத்தை நிவேதித்து அநுக்கிரகம்பெற்ற தலமாதலால் அன்றுதொட்டிதுகாறும் பனங்கனியும் நிவேதனப் பொருளாயிற்று. நடுநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பனந்தாள் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சிவபத்தியிற்சிறந்த ஒரு பெண்மணியார் தாம் தொடுத்த மாலேயை இங்குள்ள சிவபெருமானுக்குச் சாத்தப்போனபோது தமது ஆடைநெகிழ அதனே யிரண்டு முழங்கைகளாலும் இடுக்கிக்கொண்டு திருமாலேத் தொண்டுக்கு இடையூறு நேர்ந்ததேயென்றுகவலேயறசிவபெருமான் தமதுதிருமுடியைச் சாய்த்து மாலே யேற்றுக்கொண்ட

தலம், குங்கிலியக்கலயநாயனார் தமது கழுத்திற் கயிறுபூட்டியிழுக்க நிமிர்ந்தது இந்த லிங்கமே.

திருப்பனையூர்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் சௌந்தரேசுவரர், தேவியார் பெயர் பெரியநாயகி. சப்தவிடங்கஸ்தலங்களுளொன்று. சம்பந்தராலும் சுந்தரராலும் பாடப்பட்டது.

திருப்பாசூர் - சோழனுக்குச் சிவபெருமான் பாம்பாட்டியாகவந்து தரிசனங் கொடுத்ததலம். இது திருவொற்றியூருக்கு மேற்றிசையில் திருவெண்பாக்கத்திற்குத் தெற்கேயுள்ளது. திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய கோயிற்புக்க திருத்தாண்டகத்தில் 'பாகப்பொழுதெல்லாம்பாசூர்மேவி' என்று எடுத்தாளப்பெற்றது. இங்கே எழுந்தருளிய நடராஜமூர்த்தியின் மூர்த்தவிசேஷம் மேற்படாலால் நன்கு விளங்கும். திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் திருக்கடைக்காப்பால் துதிக்கப்பெற்ற கோயிலாம்.

திருப்பாச்சிலாச்சிராமம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். கொல்லிமன்னவன் தன் மகளுக்குண்டாகிய குமரகண்டவலியைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரால் நீக்குவித்த சிவஸ்தலம். சுவாமிபெயர் நீலகண்டேசுவரர், தேவியார்பெயர் விசாலாக்ஷி. சம்பந்தராலும் சுந்தரராலும் பாடப்பட்டது. "நச்சிலராகிவிவரல்லாற் பிரானில்லையோ" என்று பாடிப்பொன்பெற்றதலமுமிதுவே.

திருப்பாடகம்-தொண்டைநாட்டு விஷ்ணுஸ்தலங்களுளொன்று, சுவாமிபெயர் பாண்டவதூதன். தேவியார்பெயர் உருக்குமிணி. பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார் இம்மூவராலும் பாடப்பட்டது.

திருப்பாணழ்வார் - சோழதேசத்தில் உறையூரில் அவதரித்தவர். இவர்வீணைவாசிப்பதில் வெகு சமர்த்தராய்ப் பகவந்நாம ஸ்மரணைசெய்து அதனால் சிறந்து இறைவரது கருணைக்கிலக்கானவர்.

திருப்பாண்டிக்கொடுமுடி - கொங்குநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் கொடுமுடிநாதேசுவரர், தேவியார் பெயர் பண்மொழியம்மை. இது மூவராலும் பாடப்பட்டது. இங்குள்ள லிங்கம் அகஸ்தியருடைய கமண்டலத்தைக் கவிழ்த்த விநாயகரால் தாபித்துப் பூசிக்கப்பட்டது.

திருப்பாதாளேச்சுரம்-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது பாமணி யெனவும்படும், சுவாமி பெயர் சர்ப்பபுரேசர், தேவியார் பெயர் அமிர்தநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பாதிரிப்புலியூர் - சமணர்கள் கற்றூணிற் சேர்த்துக்கட்டிக் கடலில் வீழ்த்தினபோது, வாகீசர் "சொற்றுணைவேதியன்" என்னும் தேவாரப்பதிகம்பாடிக் கரைசேர்ந்த சிவஸ்தலம். இதுபெண்ணைநதிக்கரையிலுள்ளது. சுவாமிபெயர் தோன்றாத்துணையீசர், தேவியார்பெயர் தோகையம்பிகை. சம்பந்த வாகீசர்களால் பாடப்பட்டது.

திருப்பாம்புரம் - காவிரியின்தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம், சுவாமிபெயர் பாம்புரேச்சுரர், தேவியார்பெயர் வண்டமர்பூங்குழல் நாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பார்த்தன்பள்ளி-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் பார்த்தசாரதி, தேவியார் பெயர் மலர்மாது. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருப்பாலைத்துறை-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் பாலைவனநாதர், தேவியார் பெயர் தவளவெண்ணகையம்மை. வாகீசரால் பாடப்பட்டது.

திருப்பாற்றுறை-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் திருமூலநாதேசுவரர், தேவியார்பெயர் மேகலாம்பிகை. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பாவநாசம் - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் பாவநாசேசுவரர், தேவியார் பெயர் உல

கம்மை. மாணிக்கவாசகப் பெருமானால் பாடப்பெற்றது.

திருப்பிரமபுரம் - சீகாழியென்று வழங்கப்படும் சிவஸ்தலம்.

திருப்பிரமேச்சுரம் - பாண்டிநாட்டுச்சிவஸ்தலங்களுளொன்று.

திருப்பிருதி - வடநாட்டுவிஷ்ணுஸ்தலங்களுள்ஒன்று. சுவாமிபெயர்பரமபுருஷர், தேவியார்பெயர் பரிமளவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருப்பிரம் - நெய்.

திருப்பு - வளைப்பு.

திருப்புகலூர் - வாகீசர் முத்தியடைந்த சிவஸ்தலம். இது காவிரியின் தென்கரையிலுள்ளது, சுந்தரர் பொன்வேண்டிப் பாடினபோது செங்கல்பொன் கல்லான தலமுமிதுவே, இதுமூவராலும் பாடப்பட்ட எட்டுத்திருப்பதிகங்களையுடையது. சுவாமிபெயர் அக்நீசுவரர், தேவியார்பெயர் கொந்தார் குழலியம்மை.

திருப்புகலூர்வர்த்தமானேச்சுரம் - காவிரியின தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமிபெயர்வர்த்தமானேச்சுரர், தேவியார்பெயர்கருந்தார்குழலி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்புகழ் - அருணகிரிநாதர் குமாரசுவாமியின புகழைப் பலவகையானும் புகழ்ந்துபாடின ஒருநூல், இது பதினாறுயிரம் பாடலுள்ளது. இதன தொகை இவ்வளவிற்றுதல் "எம்மருணகிரிநாதன்ஓது பதினாயிரத்திருப்புகழமுதமே" என்னும்விரிஞ்சிபுரத்துப் பிள்ளைத்தமிழ்க் காப்புப்பருவச்செய்யுளால் அறியப்படும்.

திருப்புக்கொளியூரவிநாசி - கொங்குநாட்டுச் சிவஸ்தலங்களு ளொன்று, இது அவிநாசியெனவும் படும். சுவாமி பெயர். அவிநாசீசுவரர், தேவியார்பெயர் பெருங்கருணைநாயகி. சுந்தரர், "புரைக்காடுசோலை" என்னும் பதிகம் பாடிமுதலையுண்டபிள்ளையைமீட்ட தலமிதுவே.

திருப்புடார்ச்சுனபுரம் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருப்புட்குழி - தொண்டை நாட்டின்கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமி ஜயராகவன், சத்தி மரகதவல்லி. திருமங்கை யாழ்வாரற் பாடப்பட்டது.

திருப்புதல் - திரும்பச்செய்தல், மாறவைத்தல், மீட்குதல், மொழிபெயர்ப்பு.

திருப்புத்தீசர் - திருப்புத்தூரிலே கோயில்கொண்டிருக்குஞ் சுவாமிபெயர்.

திருப்புத்தூர் - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது திருக்கோட்டியூருக்குத் தென்கீழ்த்திசையிலுள்ளது.

திருப்புல்லாணி - பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமி கல்யாண ஜகநாதன், சத்தி கல்லியாணவல்லி. திருமங்கையாழ்வாரற்பாடப்பட்டது.

திருப்புளிங்குடி - பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

திருப்புள்ளமங்கை - காவிரியின்தென் கரையிலுள்ளஒருசிவஸ்தலம் சுவாமி திருவாலந்தரித்த ஈச்சுரர், அம்மை அல்லியங்கோதை. சம்பந்தரற்பாடப்பட்டது.

திருப்புள்ளம்பூதங்குடி - காவிரியின் வடகரையின்கணுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

திருப்புள்ளிருக்கும்வேளூர் - இதுசேர்ழநாட்டிலுள்ள ஒருசிவஸ்தலம். சடாயுபுள் பூசித்தமையால் இப்பெயர்பெற்றது. திருப்புள்ளிருககுவேளூர் எனக்கொண்டு புள்ளும் இருககுவேதமும்சுப்பிரமணியரும் சிததலமென்று பொருள்பண்ணுவாருமுளர். சுவாமிவைத்தியநாதர், அம்மைதையல்நாயகி. அப்பர்சம்பந்தர்களாற பாடப்பட்டது. இத்தலத்து முத்துக்குமாரசுவாமிமேலுள்ள பாமாலைகள் அநேகம் புள்ளிருக்கு வேளூர்க்கலம்பகஞ்செய்தவர் செங்குந்தமரபிலே திருவவதாரஞ்செய்தபடிக்காசுப்புலவர்தரிசனார்த்தமாக நாற்றிசையிலிருந்தும் சனங்கள் சென்று பெருந்திரளாகக் கூடுவார்கள். இத்தலத்தைவசித்தவர்களும் நோய்தீரப் பெறுவரென்பது ஐதிகம்.

திருப்புறம்பயம் - இதுகாவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி காட்சிநாதர், அம்மை கரும்பன்ன

சொல் நாயகி. அரவாலிறந்தவணிக னைச் சம்பந்தர் பதிகம்பாடி யுயிர்ப் பித்ததலம். சமயாசாரியர் மூவரா லும் பாடப்பட்டது.

திருப்புனவாயில் - பாண்டி நாட்டின்க ணுள்ள ஒருசிவஸ்தலம், சுவாமிபழம் பதிநாதர், அம்மைபரங்கருணைநாயகி சுந்தரர் சம்பந்தர்களாற் பாடப் பட்டது.

திருப்புன்கூர் - நந்தனர்பொருட்டு நந் திதேவரை விலகும்படி செய்து அ வர்க்குத் தரிசநங் கொடுத்தருளின சிவஸ்தலம். சோழநாட்டில் காவிரி யின் வடகரையிலுள்ளது. சமயாசா ரியர் மூவராலும் பாடப்பட்டது.

திருப்பூந்துருத்தி - காவிரியின் தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சு வாமிபெயர் புஷ்பவனநாதர், தேவி யார் பெயர் அழகாலமர்ந்தநாயகி. வாகீசரால் பாடப்பட்டது.

திருப்பூவனூர் - காவிரியின்தென்கரை யிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருப்பெருந்துறை - சோழநாட்டுச்சிவ ஸ்தலங்களுளொன்று, பாண்டியனுக் காகக் குதிரை கொள்ளச் சென்ற மாணிக்கவாசகரைத் தடுத்தாட் கொண்டு திருவாசகம் பெற்ற தலம். சுவாமிபெயர் ஆன்மநாதன். தேவி யார் பெயர் உமாதேவி.

திருப்பெருமிழலையூர்-காவிரியின்தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருப்பெரும்புலியூர் - கா ரியின் வட கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவா மிபெயர்வியாக்கிரபுரேசுவரர்,தேவி யார்பெயர் சவுந்தரநாயகி. சம்பந்த ரால் பாடப்பட்டது.

திருப்பெருவேளூர் - காவிரியின்தென் கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவா மிபெயர் பிரியாதநாயகர், தேவியார் பெயர் மின்னனையாள். சம்பந்தரா லும் வாகீசராலும் பாடப்பட்டது.

திருப்பேணுபெருந்துறை - காவிரியின் தெனகரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சுவாமிபெயர் சிவாநந்தேசர், தேவி யார்பெயர் மலையரசி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருப்பேரநகர் - காவிரியின் வடகரை யிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவா மிபெயர் அப்பக்குடத்தான், தேவி யார்பெயர் கமலவல்லி. திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், பெரியாழ்வார் இந்நால்வ ராலும பாடப்பட்டது.

திருப்பேரூர்-கொங்குநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம், இது மேலைச்சிதம்பர மெனவும்படும். சுவாமிபெயர் பட் டீச்சுரர், தேவியார்பெயர் பச்சைநா யகி. ஸ்தலவிருக்ஷங்கள் பிறவாப்புளி யும் அரசும் இறவாப்பனையும், முசு குந்தன் குரங்குமுகம் ஒழிந்து மனி தர்முகம் பெற்றதலம், "பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத் தே பெற்றாமன்றே" என்று சுந்தர ரால் பாடப்பட்டது.

திருப்பேரெயில் - காவிரியின் தென்க ரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவா மிபெயர் சகலபுவனேசுவரர், தேவி யார் பெயர் மேகலாம்பாள். வாகீச ரால் பாடப்பட்டது.

திருப்பைஞ்ஞீலி - காவிரியின்வடகரை யிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் மாற்றறிவரதேசுவரர், தேவி யார்பெயர் வாலசவுந்தரி இங்குள்ள ரத்நசபையி லாடியருளும் நடேசர் ரத்நசபாபதி யெனப்படுவர், மூவரா லும் பாடப்பட்டது ஒரு வைஷ்ண வரால் இரத்தினசபாபதி மாலையும் பாடப் பெற்றுள்ளது.

திருமங்கலக்குடி - காவிரியின்வடகரை யிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் பிராணவரதேசுவரர், தேவி யார் பெயர் மங்களநாயகி. அரசி றைப்பொருளை ஆலயத் திருப்பணிக் குபயோகித்து அரசனுக்கஞ்சி உயிர் விட்ட ஒரு சிவபத்தருக்கு உயிர் கொடுத்ததலம். அப்பர் சம்பந்தர்க ளால் பாடப்பட்டது.

திருமங்கைபுரம் - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது கோவிற் பட்டி யெனவும்படும். சுவாமிபெயர் பூவணலிங்கேசுவரர், தேவியார் பெயர் சண்பகவல்லி. சுந்தரரால் பாடப்பட்டது.

திருமங்கையாழ்வார்-இவர் கலியுகம் நானூற்றறுபதின்மேல் இவர் திருநகரிலே நீலன் என்னும் ஒருசூத்திரனுக்குப் புதல்வராகப் பிறந்தவர். இவர் திருவரங்கத்துக் கோபுரத்திருப்பணி செய்த விஷ்ணுபக்தர். இவர் தேவியார் குமுதவல்லி, இவர் விஷ்ணுபக்தராவதற்கு முன்பு ஆறலைக்குங்கள்வரா யிருந்தவர், இவர் திருவாய்மலர்ந்தருளின பெரிய திருமொழி நாலாயிரப் பிரபந்தத்தில் இரண்டாவதாயிரமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

திருமணஞ்சேரி - சோழநாட்டில் காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் அருள்வள்ளனாயகேச்சுரர், தேவியார் பெயர் யாழின்மென்மொழியம்மை. சம்பந்த வாகீசரர்களால் பாடப்பட்டது.

திருமணவைமாநகரம் - பாண்டியநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் மங்களேச்சுரர், தேவியார் பெயர் மங்களாம்பிகை.

திருமணிக்கூடம்-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் மணிக்கூடநாயகர், தேவியார்பெயர் திருமாமகள். திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருமந்திரம்-திருமூலரால்செய்தருளப்பட்ட ஒருநூல். இது மூவாயிரம் பாடலுள்ளது. இந்நூல் சரியை கிரியை யோகம்ஞானம்என்னும் நான்கு பாதங்களையும் விரித்துக்கூறும்.

திருமந்திரேச்சுரம் - பாண்டியநாட்டுச் சிவஸ்தலங்களு ளொன்று.

திருப்பூட்டு - தாலி, மங்கலியதாரணம்.

திருப்பூட்டுதல் - மங்கலியந்தரித்தல்.

திருமகண்மைந்தன் - மன்மதன்.

திருமகள் - இலக்குமி.

திருமஞ்சனம் - அபிஷேகம்.

திருமடந்தை - இலக்குமி.

திருமணியிற்றுநர் முத்துக்கோப்பார்.

திருமண் - திருநாமம்.

திருமண்டலம் - திருவமண்டலம்.

திருமயிலை - மயிலாப்பூர். சிவநேசர் இறந்துபோன தமபெண்ணினதுஎலும்பைச் சம்பந்தருக் கெதிரேவைக்க அவர் திருப்பதிகம்பாடி அவ்வெலும்பு உருப்பெறச்செய்த சிவஸ்தலம். சுவாமிபெயர் கபாலீச்சுரர், தேவியார்பெயர்கற்பகவல்லி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருமயேந்திரப்பள்ளி - சோழநாட்டிலே கொள்ளிட நதிக்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இதுதிருக்கோயிலினுள்ளேயிருந்த தீபத்தைத் தூண்டிய எலிக்கு மானுடப்பிறப்பருளிஸ்தலம். சுவாமிபெயர் திருமேனி அழகேசுரர், தேவியார்பெயர்முல்லைநகைவடிவம்மை. சம்பந்தரால்பாடப்பட்டது.

திருமரம் - அரசு.

திருமருகல் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். சுவாமி பெயர் மாணிக்கவண்ணேச்சுரர், தேவியார் பெயர் வண்டுவார்குழலி. சம்பந்த வாகீசர்களால் பாடப்பட்டது.

திருமலர் - தாமரை.

திருமலை - கயிலாயமலை திருப்பதி கைலாயம், திருவேங்கடமலை. இது வடநாட்டுவிஷ்ணுஸ்தலங்களுளொன்று. இங்கே எழுந்தருளிய மூர்த்தியின் திருக்கோலம் சுப்பிரமணிய மூர்த்தியின் காக்ஷியாகும்

திருமழபாடி - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் வச்சிரத்தம்பநாதேச்சுரர், தேவியார்பெயர் அழகாம்பிகை. சமயாசாரியர் மூவராலும் பாடப்பட்டது.

திருமழிசையாழ்வார் - திருமழிசையில் பிருகுவுக்கு ஒரு அப்ஸரஸ்த்ரீயினிடத்துப் பிறந்தவர். இவர் பாடிய திருச்சந்த விருத்த முதலியவை நாலாயிரப் பிரபந்தத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

திருமறம் - கல்லாடர்கண்ணப்பநாயனார் மீது பாடினநூல், நக்கீரர் செய்தது.

திருமறுமார்பன் - அருகன், திருமால்.

திருமறைக்காடு-காவிரியின் தெனகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம் இதனை வடநூலார் வேதாரணிய மென்பர், சுவாமி பெயர் மறைக்காட்டீச்சுரர், தேவியார் பெயர் யாழைப்பழித்த

மொழியம்மை. இது சமயாசாரியர் மூவராலும் பாடப்பட்டது.

திருமாகறல்-காஞ்சிக்குத்தெற்கேயுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் அடைக்கலங் காத்தவர், தேவியார் பெயர் புவநநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருமாணிகுழி- திருப்பாதிரிப்புலியூருக்குத் தெற்கேயுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் மாணிக்கமேனி வரதேசுவரர், தேவியார் பெயர் மரகதவல்லி. சம்பந்தரால்பாடப்பட்டது.

திருமாது - இலக்குமி.

திருமாந்துறை-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர். ஆம்ரவநேசுவரர், தேவியார் பெயர் அழகாலுயர்ந்த அம்மை. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருமாலிருஞ்சோலை - பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமி மாவலங்காரர், தேவியார் சௌந்தரியவல்லி. நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் இவர்களால் பாடப்பட்டது. இது சுப்பிரமணியர் க்ஷேத்திரமாம்.

திருமாலுந்தி - தாமரை.

திருமால் - விட்டுணு.

திருமால்புதல்வன் - மன்மதன்.

திருமாற்பேறு-காஞ்சீபுரத்திற்கு வடக்கேயுள்ள ஒரு சிவஸ்தலம், விஷ்ணு பூசித்துச்சக்கரம்பெற்றதலம், சுவாமி பெயர்வால்வணங்கீசுவரர், தேவியார் பெயர் கருணைநாயகி. சம்பந்த வாகீசர்களால் பாடப்பட்டது.

திருமானகரம் - வைகுண்டம்.

திருமீயச்சூர் காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் திருமுயற்சி நாதேச்சுரர், தேவியார்பெயர் சவுந்தரநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருமீயச்சூரிளங்கோயில் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் சகலபுவனேசுவரர், தேவியார்பெயர் மேகளாம்பாள். வாகீசரால் பாடப்பட்டது.

திருமுகம்-தேவசந்நிதானம்பெரியோர் சமுகம், வரைந்தனுப்புமோலை.

திருமுண்டீச்சுரம்-நடுநாட்டிலுள்ளஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் முண்டீச்சுரர். தேவியார்பெயர் கானார்குழலி. வாகீசரால் பாடப்பட்டது.

திருமுதல் - திரும்புதல்.

திருமுதுகுன்றம் - நடுநாட்டிலே மணிமுத்தா நதிக்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர்பழமலைநாதர், தேவியார்பெயர் பெரியநாயகி. விருத்தாசலமென்பது மிதுவே, மூவராலும் பாடப்பட்டது.

திருமுருகன்பூண்டி - கொங்குநாட்டிலுள்ள வொரு சிவஸ்தலம். சுவாமி பெயர் முருகநாதர், தேவியார் பெயர் முயங்குபூண்முலை. சுந்தரரால் பாடப்பட்டது.

திருமுருகாற்றுப்படை-நக்கீரர் தமக்கு நேரிட்ட ஆபத்காலத்திலே சுப்பிரமணியக் கடவுளைப்பாடி அவரது அநுக்கிரகத்தால் அவ்வாபத்து நீங்கப் பெறுதற் காரணமான ஒருநூல், இது பத்துப்பாட்டு என்னும் நூலின் முதலிலுள்ளது.

திருமுழுக்காட்டுதல் - அபிஷேகம்பண்ணுதல்.

திருமுழுக்கு - திவ்வியாபிடேகம்.

திருமுறப்பநாடு - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருமுறை - திருவாசகம், புத்தகம்.

திருமுற்றம் - குதிரை வையாளிவீதி, கோயில், கோயிற்சந்நிதானம்.

திருமுன் } திருமுன்பு } தேவசந்நிதானம், பெரியோர் முன்பு.

திருமூக்கீச்சுரம் - சோழநாட்டில் குடமுருட்டிநதிக்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் பஞ்சவர்ணநாதேசுவரர், தேவியார்பெயர் காந்திமதியம்மை. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருமூலநகரம் -பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருமூலட்டானேசுவரர் -திருப்பாற்றுறையிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

திருமூலநாயனார் - நந்திதேவர் மாணாக்காகிய சிவயோகியா ரென்பவர்,

இவர் அகஸ்தியரைக் காணும் பொருட்டுத் தெற்கு நோக்கிச் செல்லும் வழியில் திருவாவடுதுறையில் மூலன் என்னு மோரிடையன் இறந்து கிடக்க அவனால் மேய்க்கப்பட்ட பசுக்கள் நின்று கதறியழுவதைக்கண்டிரங்கி அவனுடம்பிற் பிரவேசித்து அவனைப்போல அவற்றை மேய்த்து அவற்றின் துயரத்தை யொழித்து வந்து தமது சரீரத்தைத் தேடிக் காணாமையால் அம்மூலன் சரீரத்தோடே அங்கிருந்து மூவாயிரவருடம் யோகஞ் சாதித்த இவர் வருடத்திற்கொரு பாடலாக மூவாயிரம் பாடல் பாடியருளினர், அந்தப்பாடல் திருமந்திரம் எனப்படும்.

திருமூழிக்களம்-மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் திருமூழிக்களநாதர், தேவியார்பெயர் மதுரநாரணி. நம்மாழ்வாரால் பாடப்பட்டது.

திருமெய்யம் - பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமி பெயர் சத்தியகிரிநாதர், தேவியார் பெயர் அத்திவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருமெழுக்கு-கோவில்மெழுகுதல்.

திருமேரபூச்சு-திருமேனியிற்பூசும்பூசு

திருமேனி-ஓராபரணம், குப்பைமேனி, திவ்வியதேகம், விக்கிரகம்.

திருமேனிக்கடுக்கன் - கைம்பெண்காதணியினொன்று.

திருமேனியழகர்-திருமயேந்திரப் பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர். திருவேட்டக் குடியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

திருமேனியழகி - குப்பைமேனி.

திருமோகூர்-பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.

திரும்பல் - திரும்புதல்.

திரும்பு-இடியேறு, சக்கிரம், சந்திரன், திரும்பென்னேவல், பாம்பு.

திரும்புதல்-மாறுதல், மீளல், வளைதல்.

திருவக்கரை-திரு அச்சிறுபாக்கத்துக்குத் தென்மேற்றிசையிலே தேவாரம் பெற்றுள்ள ஒரு சிவஸ்தலம்.

திருவஞ்சைக்களம் - மலைநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் அஞ்சைக் களத்தீசர், தேவியார் பெயர் உமையம்மை.

திருவடதளி-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் வடதளிநாயகர், தேவியார்பெயர் கௌரியம்பிகை.

திருவடமுல்லைவாயில்- திருவொற்றியூருக்குத்தென்மேற்றிசையிலேதிருப்பாசூருக்குத் தெற்கேயுள்ள ஒருசிவஸ்தலம், சுவாமி பெயர் பாசுபதேச்சுரர், தேவியார் பெயர் கொடியிடையம்மை.

திருவடவாலவாய்-மதுரையிலுள்ளஒரு சிவஸ்தலம். இடைக்காடன் பொருட்டு ஆலவாயினின்றும் சிவபெருமான் எழுந்தருளியிருந்ததலம். இது வைகை நதியின் தென்கரையிலுள்ளது.

திருவடி - ஆருப்புண், திவ்வியபாதம்.

திருவடிநிலை - ஓரூர், பாதுகை.

திருவடிப்புண்-ஆறுதகலும்புண்.

திருவடிராச்சியம் முறைகெட்டவிராச்சியம்.

திருவடுகூர் - திருப்பாதிரிப்புலியூருக்கு மேற்கேயுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் வடுகேசுவரர், தேவியார் பெயர் வடுவகிர்க்கண்ணி. சம்பந்தரால் பாடப்பட்டது.

திருவடையாளம் - சமயசாதனம்.

திருவட்டம் - திரிவட்டம்.

திருவட்டபுயங்கம் - தொண்டைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமி பெயர் சக்கரராஜன், தேவியார் பெயர் பதுமவல்லி. பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் இருவராலும் பாடப்பட்டது.

திருவட்டி - கள்ளி.

திருவணை - சேது.

திருவண்ணாமலை - அருணசலம்.

திருவமுது - திவ்வியவுணவு.

திருவண் புருஷோத்தமம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம். சுவாமிபெயர் புருஷோத்தமன், தேவியார்பெயர்புருஷோத்தமவல்லி திருமங்கையாழ்வாரால்பாடப்பட்டது.

திருவண்வண்டூர் - மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம். சுவாமிபெயர் பாம்பணையப்பன், தேவியார்பெயர் கமலநாயகி. நம்மாழ்வாரால் பாடப்பட்டது.

திருவரகுணமங்கை - பாண்டி நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், நம்மாழ்வாரால் பாடப்பட்டது.

திருவருட்பயன் - கொற்றவன்குடியார் செய்த ஒரு சைவசித்தாந்த நூல்.

திருவலகு - கோவில் விளக்குமாறு.

திருவலஞ்சுழி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் சித்தீசுவரர், தேவியார்பெயர் சித்தியநாயகி. சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது.

திருவலிதாயம் - தொண்டைநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது திருவொற்றியூருக்குத் தென்மேற்றிசையிலுள்ளது, சுவாமிபெயர் திருவலிதாயநாதேசுவரர், தேவியார்பெயர் தாயம்மை. சம்பந்தரால் பாடப்பட்டது. இது பாடியென வழங்கப்படுகிறது.

திருவலிவலம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சமயாசாரியர் மூவராலும் பாடப்பட்டது.

திருவல்லவாழ் - மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் கோலப்பிரான், தேவியார்பெயர் செல்வத்திருக்கொழுந்துவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருவல்லிக்கேணி - சென்னப்பட்டணத்தைச்சார்ந்த ஒரு விஷ்ணுஸ்தலம்.

திருவள்ளக்குளம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் கண்ணன், தேவியார்பெயர் நன்மலராள். திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.

திருவள்ளுவர் - ஒரு நீதிநூல், வள்ளுவநூலாசிரியன.

திருவனந்தபுரம் - மலையாளக் கரையில் ஒரு பட்டினம்.

திருவன் - கள்வன், திருவாலி, விகடக்காரன்.

திருவன்னியூர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம், வாகீசரால் பாடப்பட்டது.

திருவாக்கு - திவ்வியவாக்கு.

திருவாக்கூர்த்தான்றோன்றிமாடம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது.

திருவாசகம் - ஸ்ரீவாசகம், மணிவாசகம், திருவாக்கு, மாணிக்கவாசகர் செய்த தமிழ் வேதம்.

திருவாசி - ஓராபரணம்.

திருவாசிகை - ஒருமாலை.

திருவாஞ்சியம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சம்பந்தரால் பாடப்பட்டது.

திருவாடானை - பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம், சம்பந்தரால் பாடப்பட்டது.

திருவாடுதண்டு - திருவுருவைக்காவுமரம்.

திருவாட்சி - ஒரு பூமரம்.

திருவாதரம் } புரளி.
திருவாதிரம் }

திருவாதிரை - ஒருநாள்.

திருவாத்தி - ஒருபூமரம்.

திருவாத்தான் - விகடன்.

திருவாபரணம் - தெய்வாபரணம்.

திருவாயில் - கோயில்வாயில், மடம்.

திருவாய் - திருவாக்கு.

திருவாய்ப்பாடி - வடநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் நவமோகனக்ருஷ்ணன், தேவியார்பெயர் சத்தியபாமை. குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் இம்மூவராலும் பாடப்பட்டது.

திருவாய்மலர்தல் - தேவவாக்கு விள்ளுதல்.

திருவாய்மொழி - ஒருபிரபந்தம், தெய்வவாக்கு, பெரியோரதுசொல்.

திருவாரூர் - ஒருபிரபலதிவ்யக்ஷேத்திரம்

திருவாரூர்ப்பரவையுண்மண்டளி - திருவாரூர் மூலட்டானத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் பரவையுண்மண்டளீச்சுரர், தேவியார்பெயர் பஞ்சின் மெல்லடியம்மை. சுந்தரரால் பாடப்பட்டது.

திருவாலி - கள்வன், திருவாதிரக்காரன், பொய்யன்.

திருவாலிதிருநகரி - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் வயலாலிமணவாளர்,

தேவியார் பெயர் குமுதவல்லி. திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.
திருவாவினன்குடி - சுப்பிரமணியர் படைவீடாறினுள்ஒன்று அது பழனி.
திருவாழங்கோடு - ஒருதலம்.
திருவாழித்தண்டு - திருவாடுதண்டு.
திருவாழ்த்தான் - விகடன்.
திருவாளன் - செல்வன்.
திருவாள்கொளிபுத்தூர் - திருமால் மாணிக்கத்தைவைத்துப் பூசித்த சிவஸ்தலம். இது காவிரியின் வடகரையிலுள்ளது, சுவாமிபெயர் மாணிக்கவண்ணேச்சுரர், தேவியார் பெயர் வண்டமர் பூங்குழனாயகி.
திருவாறன்விளை - மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் ததிவாமநன், தேவியார்பெயர் பத்மாஸநநாய்ச்சியார்.
திருவானைக்கா - ஜம்புகேஸ்வரம்.
திருவான்கோடு - ஒருபட்டினம்.
திருவிசயமங்கை-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். இது அர்ஜுநன் பூசித்த தலமாதலால் இப்பெயர்த்தாயிற்று, சுந்தரராலும் வாகீசராலும் பாடப்பட்டது.
திருவிடவெந்தை - தொண்டைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.
திருவிடையாறு - நடுநாட்டிலே பெண்ணைநதிக்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் இடையாற்றீச்சுரர், தேவியார்பெயர் சிற்றிடைநாயகி. சுந்தரரால் பாடப்பட்டது.
திருவிண்ணகரம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், சுவாமிபெயர் உப்பிலியாப்பன், தேவியார்பெயர் பூமிதேவி. திருமங்கையாழ்வாராலும் நம்மாழ்வாராலும் பாடப்பட்டது.
திருவியலூர் - இது காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமிபெயர் யோகாநந்தேசுவரர், தேவியார்பெயர் சவுந்தரநாயகி. சம்பந்தரால் பாடப்பட்டது.
திருவிருந்து - திவ்வியவிருந்து அது சத்திய வேதத்தார் உடன்படிக்கையில் ஒன்று.
திருவிலி - கைம்பெண், அறியன்.
திருவிழா - உற்சவம்.
திருவிளக்கு - கோவிற்றீபம்.
திருவிளநகர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
திருவிளம் - சிவதை, திராய்.
திருவிளையாடல், திருவிளையாட்டு - ஒருபுராணம், திருவிளையாடற்புராணம் பரஞ்சோதி முனிவராலும் வேப்பத்தூர் கூட்டத்தாராலும் பாடப்பட்டது. தெய்வவிளையாட்டு.
திருவிற்குடி வீரட்டானம் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், இதுசலந்தரனைச்சிரங்கொய்தஇடம்.
திருவிற்றுவக்கோடு - மலைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
திருவின்னம்பர் - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
திருவீழிமிழலை-காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
திருவுந்தியார் - மெய்கொண்ட சாத்திரத்தொன்று, மாணிக்கவாசகர்செய்த திருவாசகத்தோருறுப்பு.
திருவுரு - விக்கிரகம்.
திருவுளச்சீட்டு - தெய்வ சித்தமறியுஞ் சீட்டு.
திருவுளமத்தியஸ்தம் - தேவ மத்தியஸ்தம்.
திருவுளம் - கடவுள், திவ்வியசித்தம்.
திருவுளம்பற்றுதல் - கிருபையாய்ச் சொல்லுதல்.
திருவுளம்வைத்தல் - கிருபைபுரிதல்.
திருவுருப்பு - நுதன்மேலணி.
திருவூசல், திருவூஞ்சல் - தெய்வவூஞ்சலாட்டு.
திருவூறல் - காஞ்சிபுரத்துக்கு வடக்கேயுள்ள ஒரு சிவஸ்தலம், திருவாயினின்றும் நீரூறிக்கொண்டேயிருத்தலால் இது இப்பெயர்பெற்றது. இத்தலபுராணம் அவ்வூர் ஐயாசெல்லப்பநாகமணி முதலியார் அவர்கள் குமாரர்களாகிய இராமசாமி முதலியார் இராமகிருஷ்ணமுதலியார் என்னும் இருவர் பெருமுயர்ச்சியால் பாடப்பெற்று வருகிறது.
திருவெஃகா - தொண்டைநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுதலம்.
திருவெனற்சாரம் - காசிச்சாரம்.

திருவேங்கடம் - திருப்பதி, வடமலை.
திருவேடம் - சமயவேடம்.
திருவேட்களம்-காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சுவாமி பெயர் பாசுபதேசுவரர், தேவியார் பெயர் நல்லநாயகி. சம்பந்தவாகீசர்களாள் பாடப்பட்டது.
திருவேதிகுடி - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சம்பந்தராலும் வாகீசராலும் பாடப்பட்டது.
திருவேரகம்-சுவாமிமலை சுப்பிரமணியராறிடத் தொன்று.
திருவேளுக்கை - தொண்டைநாட்டிலுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம், பேயாழ்வாராலும் திருமங்கை யாழ்வாராலும் பாடப்பட்டது.
திருவைகன்மாடக்கோயில் -காவிரியின் தென் கரையிலுள்ள ஒருசிவஸ்தலம். சம்பந்தரால் பாடப்பட்டது.
திருவைகாவூர் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம், சம்பந்தரால் பாடப்பட்டது.
திருவைகுந்தவிண்ணகரம் - காவிரியின் வடகரையிலுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம், திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டது.
திருவொற்றாடை - விக்கிரகங்கட்குச் சார்த்துமாடை.
திருவொற்றியூர்-சென்னைக்கருகில்ஒரு பிரபல திவ்ய சிவஸ்தலம்.
திருவோணம் - ஒருநாள்.
திருவோலக்கம் - மகா திவ்விய சபை.
திருனகம் - திருணகம்.
திரேககரணம் - இராசியை மூன்றாய்ப் பகிருதல்.
திரேககாணதிபன் - திரேககாணத்ததிபன்.
திரேகம் - தேகம், மூன்று.
திரேக்காணம் - உதயராசியை மூன்றாகப் பகிர்தல்.
திரேசந்தி - திராய்.
திரேதம் - இரண்டாம்யுகம்.
திரேதாக்கினி - முத்தீ.
திரேதாயுகம் - திரேதம்.
திரேத்து - நிறைவு.
திரேந்தி - திராய்.
திரை - அலை, இடுதிரை, உடற்றிரை, கடல், திரைச்சீலை, திரையென்னேவல், திரைவு, புனற்றிரை, யாறு; வைக்கோற்புரி.
திரைச்சீலை - மறைப்பீட்டுச்சீலை.
திரைதல் - சுருங்குதல், பால் முதலியகண்விடுதல்.
திரைத்தல் - திரைக்குதல்.
திரைப்பு - திரைதல்.
திரைப்புடைவை - திரைச்சீலை.
திரையல் - சுருங்கல், வெற்றிலை.
திரையன் - தொண்டைமான், நெய்தனிலத்தலைவன.
திரையெறிதல் - திரைவீசுதல்.
திரைராசிகம் - மூத்தொகைவினை.
திரைவிழுதல்-உடறிரங்குதல், சுருங்குதல். திரைதல்.
திரைவு - திரைப்பு.
திரோகதம் - அதரிசனம்.
திரோகிதம் - மறைவு.
திரோதசத்தி - பஞ்சசத்தியினொன்று.
திரோதம், திரோதயம் - பஞ்ச கிருத்தியத்தொன்று, மறை.
திரோதாயி, திரோதானசத்தி - பஞ்ச சத்தியின் ஒன்று.
திரோதானம் - திரைச்சீலை, மறைப்பு.
திரோபவம் - மயக்கம்.
திரோபவித்தல் - மறைத்தல்.
திரோபாவம் - மயக்கம்.
திர்ப்தி - திருத்தி.
திலககண்டம் - ஊர்க்குருவி.
திலகடம் - பிண்ணாக்கு.
திலகநிறமணி-குருவிந்தப் பதுமராகம்.
திலகம் - கலித்துறை, சிந்தூரம்,சுட்டி, திலோதகம், பொட்டு,மஞ்சாடிமரம், மேன்மை.
திலகலம் - செக்கு.
திலகற்கம் - பிண்ணாக்கு.
திலகாசிரயம் - நெற்றி,
திலகாதகன் - வாணியன்.
திலகாளகம் - கரும்புள்ளி.
திலசூர்ணம் - எட்பொடி.
திலட்சாரம்-எள்ளிலெடுக்கும்லவணம்.
திலதண்டகன் - வாணிபன்.
திலதண்டுலகம் - எள்ளுடன் கலந்த அரிசி.
திலதம் - சுட்டி, நெற்றித்திலகம் பொட்டு.
திலதயிலம் - நல்லெண்ணெய்.
திலதர்ப்பணம் - எள்ளுந் தண்ணீரு மிறைத்தல்.

திலதேனு - தானஞ்செய்ய எள்ளினாற் செய்த பசு.
திலபகம் - தூபம்.
திலபவம் - எண்ணெய்.
திலபருணி } சந்தனம்.
திலபருணிகை }
திலபாவி - கொளுஞ்சிமரம்.
திலபாவிசி - சாதிமல்லிகை.
திலபிச்சடம் - பிண்ணாக்கு.
திலபிஞ்சம் - ஆணெள்.
திலபேஜம் - ஒருவகையெள்.
திலமயூரம் - ஒருவிதமயில்.
திலமலம் - பிண்ணாக்கு.
திலம் - எள், மஞ்சாடிமரம்.
திலயந்திரம் - செக்கு.
திலரசம் - எள்ளெண்ணெய்.
திலவகம் - வெள்ளிலோத்திரம்.
திலாட்சாரம் - திலாலவணம்.
திலீபன் - ஓரரசன்.
திலு - மூன்று.
திலுப்புலு - முப்பது.
திலோதகம் - எள்ளும் நீரும்.
திலோத்தமை - ஓரம்பை.
தில்-அசைச்சொல், ஒழியிசை, காலம், விழை.
தில்லகம் - வெள்ளிலோத்திரம்.
தில்லமெழுகு - தில்லைமெழுகு.
தில்லம் - காடு.
தில்லாணு - ஒரு சந்தக்குறிப்பு, தாளக் குறிப்பு.
தில்லியம்-எட்சாட்டி, நல்லெண்ணெய்.
தில்லுப்பில்லு } சண்டை, தருக்கம்,
தில்லுமுல்லு } மாறுபாடு.
தில்லை - ஒருமரம், சிதம்பரம்.
தில்லைநாயகம் - ஒருவிதநெல்.
தில்லைநாயகர் - சிதம்பரேசுவரன்.
தில்லைமூவாயிரவர்-சிதம்பர க்ஷேத்திர வுரிமைப் பார்ப்பார்.
தில்லையம்பலம் - கனகசபை.
தில்லையம்பலவாணன் - சிதம்பரேசுவரன்.
தில்லையெண்ணெய்-தில்லைமரத்தெண்ணெய்.
தில்லைவனம் - சிதம்பரதலம், ஆகாயத் தலம்.
திவசகரன் - சூரியன், விடியல்.
திவசமுகம் - உதயகாலம்.
திவசம் - சிராத்தம், நாள்.
திவசாத்தியம் } அந்தி.
திவசாவசானம் }
திவச்சுவான்-துவாதசாதித்தரி லொருவன்.
திவடல் - துவளுதல்.
திவண்டல் - துவளல்.
திவம்-ஆகாயம், காடு, தோற்றம், நாள், பகல்மோக்கம், விளக்கம்.
திவரம் - நாடு.
திவலுதல் - சாதல்.
திவலை - துளி, மழை, மழைத்துளி.
திவவு - படி, வீணைவலிக்கட்டு.
திவளல் } துவள்ல், மெலிதல்.
திவளுதல் }
திவறல் - சாதல்.
திவா - பகல்.
திவாகரம் - ஒருநிகண்டு, காகம், சூரிய காந்தப்பூ.
திவாகரன்-திவாகரஞ்செய்தவன், சூரியன், நாவிதன்.
திவாக்கீர்த்தி - ஆந்தை, சண்டாளன், நாவிதன்.
திவாசுத்தம் - பகனித்திரை.
திவாடனம் - காக்கை.
திவாநிசம் - பகலிரா.
திவாந்தகி - மூஞ்சூறு.
திவாந்தம் - ஆர்தை.
திவாபீதம் - ஆந்தை, வெண்டாமரை.
திவாபீதன் - கள்வன்.
திவாபீதி - ஆந்தை.
திவாமணி - சூரியன்.
திவாமத்தியம் - நடுப்பகல்.
திவாமானம் - பகற்காலம்.
திவாராத்திரம் } பகலிரா.
திவாராத்திரி }
திவார்த்தம்-பகலிற்பாதி, மத்தியானம்.
திவிசர் - தேவர்.
திவிபிநாபம் - கொடிவேலி.
திவியன் - சாத்துவதன்மகன்.
திவிரதன் - ததிவாகநன்மகன்.
திவேச்சுரன்-துவாதசாதித்தரிலொருவன்.
திவோதாசன் } காசியரசன்.
திவோதாதன் }
திவ்வியகந்தம் - கராம்பு.
திவ்வியகவி - தெய்வப்புலவன்.
திவ்வியகாயநன் - கந்தருவன்.

திவ்வியசட்சு } ஞானநோக்கு,தெய்
திவ்வியதிருட்டி } வீக பார்வை.
திவ்வியது - திவ்வியமானது.
திவ்வியநானம் - சூரியகிரணம் பாயு மழைத்தூறலிற்படிதல் இது எழ்வகை நாணத்தொன்று.
திவ்வியம்-ஆணை,இனிமையானது,ஒருவகைச்சந்தனம்,கராம்பு,தெய்வீகமானது மேன்மையானது.
திவ்வியரதம் - நறுஞ்சுவை.
திவ்யரத்தினம்-சிந்தாமணி, சூடாமணி.
திவ்வியவருஷம் - தேவவருடம் அது மானிட வருஷம் முந்நூற்றறுபத்தைந்துகொண்டது.
திவ்வியாதிவ்யம்-தெய்வீகமும்மனுஷீகமும்.
திவ்வியாத்திரம்-தேவர்களாற் கொடுக்கப்பட்ட அம்பு.
திவ்வியோதகம்-தீர்த்தநீர், மழைத்தண்ணீர்.
திளைத்தல்-அழுந்துதல், அனுபவித்தல், நிறைதல், நெருங்கல், பெருகுதல்.
திறக்கு - காரியம்.
திறக்குதல்-அதிகப்படல்,திறத்தல்.
திறத்தகை - வலியானகை,வலிவானவன்
திறத்தல் -திறக்குதல், வலுத்தல், வழிவெட்டிவிடுதல், விரித்தல், விளக்குதல்.
திறத்தார்-பகுதியார்,பக்கத்தார்.
திறத்தி - மருத்துவிச்சி.
திறந்தறை-அந்தரங்கத்தை வெளியிடுவோன், அரணற்றது.
திறபு - ஈயம், துத்தநாகம்.
திறப்படுதல்-தேறுதல், பலப்படுதல்.
திறப்பணம் - தமருசி, துறப்பணம்.
திறப்பாடு - வகை, வலிமை.
திறப்பு - காவலின்மை, துறப்பு.
திறமை - சமர்த்து, தகுதி, மேன்மை, வகை, வலி.
திறம்-அதிகம்,அரையென்னுமோரிலக்கம்,உச்சிதம்,உறுதி,காரணம்,குணம், குறை, நரம்புள்ளவீணை, கூறுபாடு, சாமர்த்தியம், தத்துவம்,தன்மை,திறமை, பக்கம், பாக்கியம், மருத்துவம், மேன்மை, வகை, வலி.
திறம்பல் } தவறுதல், மாறுபடல்.
திறம்புதல் }
திறபம் - திரயம்.

திறலோன்-வல்லமையுள்ளவன், திண்ணியன்.
திறல்-தைரியம், பகை, போர், வலி.
திறவறிதல் - உளவுபார்த்தல், மறைந்திருப்பதை யறிதல்.
திறவாளி - காரியகிரகஸ்தன், விவேகி.
திறவான் - வலியவன்.
திறவு - உளவு, திறத்தல், வழி.
திறவுகோல் - திறப்பு.
திறவுண்ணல் - திறவுபடல்.
திறனில்யாழ் - நெய்தல் யாழ்த்திறம்.
திறன் - காரணம், குணம், கூறுபாடு.
திருணி - திராணி.
திறி - மூன்று.
திறிதண்டம் - நெறுஞ்சில்.
திறிதியம் - செவ்வள்ளி.
திறிதேகி - பற்பாடம்.
திறிபாதி - சிறுபுள்ளடி.
திறியம் - செவ்வள்ளி.
திறிலிங்கம் - தான்றி.
திறிலேகரி - விஷ்ணுகாந்தை.
திறிவாசம் - கக்கரி.
திறிவிச்சதா - மூக்கிரட்டை.
திறுதட்டம் } நேரே நிற்றல்.
திறுதிட்டம் }
திறுதியை - திருதியை.
திறுதிறுத்தல் }
திறுதிறுப்பு } அச்சக்குறிப்பு.
திறுதிறெனல் }
திறேதம் - திரேதம்.
திறை - அரசிறை.
திறைகொள்ளுதல் - திறை வாருதல், வெல்லுதல்.
திறையளத்தல் - இறைகொடுத்தல்.
திற்றி - தின்றற்குரியன.
தினகரன் - சூரியன்.
தினகவி - அரசர்க்குப்புகழ்ச்சியாயந்திசந்தி சொல்லுங்கவி, தினகவிப்புலவன்.
தினகாலம் - நித்தமும்.
தினகேசவம் - இருள்.
தினசேரி - நித்தம்.
தினத்திரயம் - ஒருநாளில்மூன்றுபெருநாள் சம்பவிப்பது.
தினந்தினம் - நாளுக்குநாள்.
தினபலம் - ஐந்தாம் ஆறும் எழாம் எட்டாம் பதினொன்றும் பன்னிரண்டாமிராசிகள், நிதநடக்கும்பலன்.

தினப்பாடு - தினசேரி.
தினப்பிராணி } சூரியன்.
தினமணி
தினமானம் - நித்தமும்.
தினம் - திருநாள், நாள், பகல்.
தினவிருத்தி - நாடோறும்;நாள்வேலை, நித்தம்.
தினவு - சொறிவு
தினவுதின்றல் } சொறிதல்.
தினவெத்துதல்
தினங்கிசம் - சாமம்.
தினாதி - விடியல்.
தினாதினம் - பிரதானநாள், பிரதானப் பிரதானம்.
தினாந்தகம் - இரவு.
தினாந்தம் - மாலைப்பொழுது.
தினாந்தரம் - ஒன்றைவிட் டொருநாள், நாடோறும்.
தினாமிசம்-நாளின்பங்கு.
தினாரம்பம் - வைகறை.
தினாவசானம் - அந்தி.
தினிகை - நாட்கூலி.
தினுசு - வகை.
தினுசுவாரி - பலவகை.
தினை - ஒருசாமை, சிறுமை.
தினைக்குருவி - ஒரு சிறுகுருவி.
தினைச்சாமை - ஒருசாமை.
தினைப்புனம் - தினைவிளைபுலம்.
தின்பனவு - உணா.
தின்மை - தீமை.
தின்றல் - உண்ணல், மெல்லுதல் அது நால்வகை யுணவில் ஒன்று.
தின்றி - தீன்.
தின்னல் - தின்றல்.
தின்னாத்தீன் - இழிந்தபோஜனம், நிந்தைப்பட்டுவாங்கிப் புசிக்கும் புசிப்பு.
தின்னி - தின்கிறவன்.
தின்னுகை - தின்னுதல்.
தின்னுதல் - உண்ணல்.

## தீ



தீ-அறிவு, இனிமை,உபாயவழி,ஓரெழுத்து, ஜடராக்கினி,கொடுமை,தீமை, தீயென்னேவல், நரகம், நெருப்பு அது அட்டமூர்த்தத்தொன்று,பஞ்சபூதியத்தும் ஒன்று.
தீகன - சந்திரன.
தீக்கஞ்சி - ஆரதிகருப்பூரம்.
தீக்கடன் - ஈமக்கடன்.
தீக்கடைகோல் ஞெலிகோல்.
தீக்கட்டி - அக்கினிக்கட்டி.
தீக்கணம் - நேரசைநடுவும் நிரையசை யிருபாலும் நிற்பன.
தீக்கதர் - தீட்சதர்.
தீக்கதிக்கும்பச்சை - நாகப்பச்சை.
தீக்கதிர் - உலையாணிக்கோல், சூரியன்.
தீக்காண்டி - நெருப்பகப்பை.
தீக்கருமம் - ஈமக்கிரியை, துற்கிரியை.
தீக்கவை - முருக்கு.
தீக்கல் - நெருப்புக்காலுங்கல்.
தீக்காய்தல் - குளிர்காய்தல்.
தீக்காரியம் - அக்கினிகருமம், பொல்லாங்கு.
தீக்காலி - துடைகாலி
தீக்கித்தல் - தீட்சித்தல்.
தீக்குணம் - துர்க்குணம்.
தீக்குணர் - கீழ்மக்கள்.
தீக்குண்டம் - அக்கினிவளர்க்கும் குழி.
தீக்குதல்-கருகுவித்தல், தீபச்செய்தல்.
தீக்குதித்தல் - ஆவேசமுதலியவற்றால் தீப்பாய்தல்.
தீக்குருவி - தழல்விழுங்கி.
தீக்கு - வெறுங்குகை, சவுக்காரம்.
தீக்குளித்தல் - அக்கினியிற்படிதல்.
தீக்குறி - துற்குறி, அபசகுனம்.
தீக்கூர்மை-இந்துப்பு, திலாலவணம்.
தீக்கை - தீட்சை, விரதநியமம்.
தீக்கையோன் - அரன், குரு, தீட்சை பெற்றோன்.
தீக்கோள் - துர்க்கிரகம்.
தீங்கனி } உருசியானபழம்.
தீங்காய்
தீங்கு - குற்றம், கேடு, தவறு, தீமை.
தீங்குணர் - துட்டர்.
தீசகன்-ஆலோசனைகாரன், உபாத்தி.
தீச்சகுனம் - துற்சகுனம்.
தீச்சடம் - அமுரி.
தீச்சட்டி - நெருப்புச்சட்டி.
தீச்சலம் - கடனுரை.
தீச்சனம் } மிளகு.
தீக்ஷணம்
தீச்சுடர் - வெடியுப்பு.

தீச்சொல் சாபம், பழிச்சொல்.
தீஞ்சுவை - நற்சுவை.
தீஞ்சொல் - இனியசொல், நற்சொல்.
தீட்சணகண்டகம் - முண்ஞவல்.
தீட்சணகந்தகம் - ஈரவெண்காயம்.
தீட்சணகம் - வெண்கடுகு.
தீட்சணசாரம் - இலுப்பை.
தீட்சணதண்டுலம் திப்பிலி.
தீட்சணபத்திரம் - அலரி.
தீட்சணபுட்பம் - காம்பு.
தீட்சணம்-ஆயுதம், இரும்பு, உக்கிரம், உப்பு, உறைப்பு, கஞ்சாங்கோரை, கூர்மை, கொள்ளைநோய், கோபம், சீக்கிரம், நஞ்சு, போர், மரணம், வெப்பம்.
தீட்சணசரம் - வெடியுப்பு.
தீட்சணியம்-உக்கிரமம், கூர்மை, வெப்பம்.
தீட்சதர் - சிதம்பரப்பார்ப்பார், தீட்சைபெற்றோர்.
தீட்சம் - சம்பவிப்பதை வெருதனுபவித்தல்
தீட்சதன் - தீட்சைபெற்றோன்.
தீட்சாவரன் - தீட்சதன்.
தீட்சித்தல் - தீட்சைகொடுத்தல்.
தீட்சை - உபதேசம், விரதநியமம்.
தீட்சைகேட்டல்-உபதேசம்பெறுதல்.
தீட்சைகொடுத்தல், தீட்சைபண்ணுதல், தீட்சைவைத்தல் } உபதேசங் கொடுத்தல்.
தீட்டம் - ஆசூசம், மகளிர்தொடக்கு.
தீட்டலரிசி தயிடுதீங்கமற்றுக்கினவரிசி
தீட்டல் - தீட்டுதல்.
தீட்டு-அழுக்கு ஆசூசம், எழுதுதல், கூர்மையாக்குதல், சூதகம், தீட்டென்னேவல், மகளிர் சூதகம்.
தீட்டுக்கோல் - எழுதுகோல்.
தீட்டுக்கல் - சாணைக்கல், மாக்கல்.
தீட்டுக்கழித்தல் - தடக்குக்கழித்தல்.
தீட்டுக்காரி - சூதகக்காரி.
தீட்டுக்குறி - ஆயுதந்தீட்டுந்தடி.
தீட்டுச்சீலை - அழுக்குச்சீலை.
தீட்டுதல்-அழுத்துதல், எழுதுதல், கட்டுதல், கூராக்கல், சாதித்தல், சித்திரித்தல், மிருக்குதல்.
தீட்டுத்தடி - ஆயுதந்தீட்டுந்தடி.
தீட்டுப்படுதல்-அழுக்குப்படுதல், அஞசாரப்படுதல், குற்றப்படுதல், சூதகநீர்பாய்தல்.
தீட்டு - இழிவு. தீமை.

தீண்டல் - தொடல்.
தீண்டியம் - பவளக்குறிஞ்சி.
தீண்டுகை, தீண்டுதல் } தொடுதல் அது மெய்ப்பரிசமெட்டில் ஒன்று.
தீதல் - கருகுதல், திந்துபோதல்.
தீதி - தாகம்.
தீதிலி - குற்றமில்லான்.
தீது - குற்றம், தீமை.
தீதை - அறிவு, கன்னி.
தீத்தகம் - பொன்.
தீத்தசிகுவை - நரி.
தீத்தட்டி - தீத்தருங்கருவி.
தீத்தட்டிக்கல் - தீக்கல்.
தீத்தட்டிக்குடுக்கை - சக்கைமுக்கி.
தீத்தட்டிவளையம் - தீக்கல்லைத் தட்டும் வளையம்.
தீத்தபிங்கலம் - சிங்கம்.
தீத்தம் சிங்கம், சுவாகமமிருபத்தெட்டினென்று, தீர்த்தம், பிரகாசம், பெருங்காயம், பொன்.
தீத்தரசம் - நாங்கூழ்.
தீத்தலோகம் - செம்பு, மாந்துளிர்க்கல், வெண்கலம்.
தீத்தலோசனம் - பூனை.
தீத்தா - வட்டத்திருப்பி.
தீத்தாங்கம் - மயில்.
தீத்தாங்கி - தீமறைக்கும் பலகை
தீந்தாட்சம் - பூனை, மயில்.
தீத்தி-அழகு, சரகதி, பிரகாசம், வெண்கலம்.
தீத்தியம் - அரத்தை.
தீத்திரள் - ஜோதி, சுவாலைக்கூட்டம்.
தீத்தீண்டல் - கலியாணம்.
தீத்தீண்டுகையான் - சிவபெருமான்.
தீத்தெய்வம் - அக்கினி.
தீத்தொழில் தகாதசெய்கை அக்கினி, கருமம், அற்செய்கை.
தீத்தோபலம் - சூரியகாந்தக்கல்.
தீநா - சுப்பற்காரர் சுழைபிடிக்கக்கொளுத்தின வெளிச்சம்.
தீநாற்றம் - கெட்டநாற்றம், முடை.
தீநிரம் - மாந்துளிர்க்கல்.
தீநுரை - கடனுரை.
தீந்தமிழ் - இனியதமிழ், நற்றமிழ்.
தீந்திரியம் - அறிகருவி.
தீபகம் - ஓரலங்காரம் அது ஓரிடத்து நின்றமொழி பலவிடத்துநின்றுபொருளுருவது, சந்திரசிகாமணி, புட்படுச்

கும்படி கொண்டுபோகிறபுள், மஞ்சள், விளக்கு.
தீபகாந்தி / தீபகாந்தியோன் } வயிரக்கல்.
தீபகூபி / தீபகோரி } விளக்குத்திரி.
தீபக்கால் - தீபக்கருவி.
தீபக்கொடிச்சி - ஆரதிகருப்பூரம்.
தீபங்காட்டல்-தீபாற்சனைசெய்தல் அது புண்ணியமொன்பதினொன்று.
தீபசிகை - விளக்குச்சுவாலை.
தீபதிச்சம் - வாலுளுவை.
தீபதைலி - ஆமணக்கு.
தீபபாதவம் - விளக்குத்தண்டு.
தீபபுட்பம் - சண்பகப்பூ.
தீபவத்திகை - விளக்குத்தண்டு.
தீபம் - சோதிநாள், தீவு, விளக்கு அது இராச சின்னத்தொன்று.
தீபவதி - யாறு.
தீபவராடி - வராடித்திறத்தினொன்று.
தீபவிருட்சம் - விளக்குத்தண்டு.
தீபனம்-ஆகாரம், நைவேத்தியஞ் செய்தல், பசி, பிரகாசம், மஞ்சள், மிகப் பிரகாசம்.
தீபாக்கினி - ஒருசுடர் கொண்டெரியு நெருப்பு.
தீபாந்தம் - பெருச்சாளி.
தீபாராதனை - விளக்காலாத்தி.
தீபாவலி / தீபாவளி / தீபாளி } ஒருபண்டிகை, தீபவரிசை, தீவாளி.
தீபிகை - விளக்கு.
தீப்தம் - தீத்தம்.
தீப்படுதல்-அழிதல், எரிச்சலடைதல், எரிந்துபோதல்.
தீப்பாய்தல் - தீக்குதித்தல்.
தீப்பி - நெருப்பு.
தீப்பியமானம் - பிரபை.
தீப்பியம் - அசமதாகம், சுவாலை.
தீப்பிரகாசி - குங்கிலியம்.
தீப்பிரம் - பிரபை.
தீப்பிரயசம் - ஓமம்.
தீப்பு - எரிப்பு, கருக்குதல்.
தீப்பொறி - கங்கம்.
தீப்போடுதல்-குரூரஞ்செய்தல், கோத்தல், நெருப்பிட்டுச்சுடுதல்.
தீமதி - அறிவுள்ளவள்.
தீமலம் - கரி.
தீமந்தன்-புரூரவன்மகன், விருஹணன் மகன்.
தீமான் - பண்டிதன், புத்திமான், வியாழபகவான்.
தீமிதித்தல் - நெருப்பினடத்தல்.
தீமுகம்-உலைமுகம், நெருப்பெரியுமிடம்.
தீமுறுகல்-ஒருசரக்கு அது வைப்புப்பாஷாண முப்பத்திரண்டில் ஒன்று.
தீமை - கேடு, பொல்லாங்கு.
தீமைக்கஞ்சல்-பொல்லாங்கிற்குப் பயப்படல் அது தயாவிருத்தி எட்டில் ஒன்று.
தீமொழி-சாபம், பொல்லாவார்த்தை.
தீம் - இனிமை, தித்திப்பு.
தீம்பண்டம் - நற்பண்டம்.
தீம்பர் - கீழ்மக்கள், தீங்குசெய்வோர்.
தீம்பால் - தித்திப்பாளபால்.
தீம்பி - தட்டை.
தீம்பு - கீழ்மை, தீது.
தீம்புகை - நறும்புகை.
தீம்புழல் - இனியபணியாரம்.
தீய-இனிமையான, சுத்தமான, தீதான.
தீயகம் - நரகம்.
தீயது-ஆரதம், இனியது, தீங்குள்ளது.
தீயபுட்பம் - சண்பகப்பூ.
தீயம் - தித்திப்பு.
தீயர் - கீழ்மக்கள், பொல்லாதவர்கள், வேடர்.
தீயல் - தீய்ந்தது, பொரிக்கறி.
தீயவன் - தீயோன்.
தீயவு - தீய்தல்.
தீயளி - காசா, காய்.
தீயறம் - பொல்லாங்கு.
தீயன-இனிமையுள்ளன, சுத்தமுள்ளன, தீங்குள்ளன.
தீயாக்கீரை - பொன்னாங்காணி.
தீயாடியப்பர் - மேலைத் திருக்காட்டுப் பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
தீயார் - தீயோர்.
தீயின்வயிரம் - மீனம்பர்.
தீயொழுக்கம் - துன்மார்க்கம்.
தீயோர் - தீம்பர், மூடர், வேடர்.
தீய்ச்சலம் - அக்கினிக்கட்டி.
தீர - முற்றுக.
தீரத்துவம்-அறிவுடைமை, உறுதி, தைரியம்.

தீரம்-அம்பு,அறிவு,கரை,குளிர், சிறுவரம்பு, பெலன், மஞ்சள், மனத்தைரியம், வலி.
தீரன் - திண்ணியன்.
தீராந்தரம் - மறுகரை.
தீராந்தி - மச்சுமரம்.
தீராப்பசியன் - மகோதரன்.
தீராமை - கொடுமை.
தீரிக்கை - ஒழிந்தவேளை.
தீரை - அறிவுடையாள்.
தீர்கடை - முடிவு, முழுமை.
தீர்க்ககணம் - வெண்சீரகம்.
தீர்க்ககதி - ஒட்டகம்.
தீர்க்ககந்தை - மெருகன் கிழங்கு.
தீர்க்ககாடிகம் - ஒட்டகம்.
தீர்க்ககாண்டம் - கோரைப்புல்.
தீர்க்ககேசம் - நெடுமயிர்.
தீர்க்கக்கிரீபம் - ஒட்டகம்.
தீர்க்கசங்கம் - ஒட்டகம், ஒரு நாரை, தொடை.
தீர்க்கசதுரம்-சரிசதுரம்,நீண்டசதுரம்.
தீர்க்கசத்திரம் - ஒருயாகம்.
தீர்க்கசந்து - எழுத்து விகாரப்பட்டுப் புணரும் புணர்ச்சியில் ஒன்று. அது நிலைமொழியீறும் வருமொழி முதலு நிற்கும் அகர ஆகாரங்கெட ஆகாரமும் இகர ஈகாரங்கெட ஈகாரமும் உகர ஊகாரம் கெட ஊகாரமுந் தோன்றுதல்
தீர்க்கசாலம் - சாலமரம்.
தீர்க்கசிகுவம் - பாம்பு.
தீர்க்கசீவம் - நெட்டாயுள்.
தீர்க்கசுமங்கலி - பூரணசுமங்கலி.
தீர்க்கசுரதம் - நாய்.
தீர்க்கசுரம் - நெட்டுயிரெழுத்து.
தீர்க்கசூத்திரம் - கண், குன்மநோய், வயிற்றுவலி.
தீர்க்கதண்டம் - ஆமணக்கு, சாட்டாங்கம், பூரணவணக்கம்.
தீர்க்கதமசு-தீர்க்கமகன், அகலியைநாயகனாகிய கௌதமன்.
தீர்க்கதமன் - உதத்தியன் மகன்,இவன் பாரிபாத்துவேஷிணி,புத்திரர் கௌதமாதியர். இத்தீர்க்கதமன் பிரகஸ்பதிக்குருடன், சுராஷ்டிரன் மகன். தன் வங்கிரிக்குத் தந்தை
தீர்க்கதரிசனம் - முக்கால வருத்தமானமறிதல்.
தீர்க்கதரிசி - முக்கால வருத்தமானமறிவோன்.
தீர்க்கதரு - பனைமரம்.
தீர்க்கதாரு - நிலப்பனை.
தீர்க்கதிருட்டி - உற்றுப்பார்த்தல்.
தீர்க்கநாதம் - சங்கு.
தீர்க்கநிச்சுவாசம் - பெருமூச்சு.
தீர்க்கநித்திரை-நெடுந்தூக்கம்,மரணம்.
தீர்க்கபத்திரகம், தீர்க்கபத்திரம் - உள்ளி.
தீர்க்கபரணி - வாழை.
தீர்க்கவாகு, தீர்க்கபாகு - கட்டுவாங்கன்மகன், இரவுக்குத் தந்தை.
தீர்க்கபாதபம் - தென்னமரம்.
தீர்க்கபாதன் - ஒருமுனிவன், சூரியன்.
தீர்க்கபிருட்டம் - பாம்பு.
தீர்க்கமாருதம் - யானை.
தீர்க்கமூலம் - ஒருவகைவில்வம், தொட்டாற்சுருங்கி, முடக்கொற்றான்.
தீர்க்கம் - அந்தரம், ஆறு மேழாமிராசிகள், உச்சரிப்பின் திறம், திட்டம், தெளிவு, தூரம், நிச்சயம், நீளம், நெட்டுயிரடையாளம், நெட்டுயிரெழுத்து, பூரணம்.
தீர்க்கரஸநம் - பாம்பு.
தீர்க்கரதம் - பன்றி.
தீர்க்கராஜிகை - மஞ்சள்.
தீர்க்கராத்திரம்-நீண்டராத்திரி, நெடுங்காலம்.
தீர்க்கலோகிதம் - சிலிந்தி, தருப்பை.
தீர்க்கவசனம் - உறுதிச்சொல்.
தீர்க்கவத்திரம் - யானை.
தீர்க்கவருணம் - நெட்டுயிரெழுத்து.
தீர்க்கவர்சிகை - முதலை.
தீர்க்கவிருக்கம் - பெருமரம்.
தீர்க்கவைரம்-நெடுநாளையில்விரோதம்.
தீர்க்காசனம் - பாம்பு.
தீர்க்காதேவி - நிருதிபாரி.
தீர்க்காயு, தீர்க்காயுசு - காகம், நீடிய ஆயு, மார்க்கண்டன்.
தீர்க்காயுஷியம் - நெடுங்காலம்.
தீர்க்காயுதம் - ஈட்டி, பன்றி.
தீர்ணம் - காயம்.
தீர்தல்-இட்டமாதல், எழுதல், செல்லுதல், நடத்தல், நிசமாதல், நீளம், நீளித்தல், முடிதல், விடுதல், வெடிதீர்தல், வெட்டல்.
தீர்த்தகர் - சமணமுனிவர், பெரியோர்
தீர்த்தகரன் - சமணகுரு.

தீர்த்தகரர் } ஜைனமதாசாரியார். அ
தீர்த்தங்கரர் } வர் ஆதிநாதன் முதலி
ய இருபத்து நால்வர்.
தீர்த்தசேவி - தீர்த்தவாசி.
தீர்த்தம் - சுத்தம், திருமஞ்சனநீர், திரு
விழா, தீ, நீர், பிறப்பு, புண்ணியதீ
ர்த்தம், பெண்குறி, யாகம்.
தீர்த்தராஜி - காசி கெங்காநகரம்.
தீர்த்தர் - கடவுளர், பரிசுத்தர்.
தீர்த்தல் - இட்டமாக்கல், தீர்ப்புச்செய்
தல், நீக்கல், போகுதல், முடித்தல்,
விடுத்தல்.
தீர்த்தவாகம் - மயிர்ச்சுருள்.
தீர்த்தவாசி - யாத்திரைக்காரன்.
தீர்த்தன் - அருகன், ஆசான், ஆலோச
னைக்காரன், உபாத்தியாயன், குரு,
சிவன், பரிசுத்தன்.
தீர்த்தி - பரிசுத்தவர்ட்டி, பார்ப்பதியா
தீர்த்திகை - யாறு. [று.
தீர்ந்தவன் - துறந்தவன், தேறினவன்,
தைரியவான்.
தீர்ப்பான் - வைத்தியன்.
தீர்ப்பு } நியமம், நிவிர்த்தி, பரிகரி
தீர்மானம் } ப்பு, முடிப்பு.
தீர்மானித்தல் - நிச்சயித்தல்.
தீர்மானிப்பு - தீர்மானம்.
தீர்வு - தீர்வை, முடிப்பு, விலக்கு.
தீர்வை - கிரி, சங்கம், தீர்மானம், பிரே
தக்கிரியையி்ஞென்று, விதி.
தீர்வைக்காரன் - ஆயக்காரன்.
தீர்வைச்சரக்கு ஆயமிறுக்குஞ்சாமான்.
தீர்வைத்துறை - ஆயத்துறை.
தீவகம் - தீபசம்.
தீவட்டி } ஒருவிளக்கு.
தீவத்தி }
தீவரம் - தீவர்த்தி, தீவிரம்.
தீவரி - செம்படத்தி.
தீவர்த்தி - எரிபந்தம்.
தீவலஞ்செய்தல் - லியாணச் சடங்கி
ஞென்று; அது அக்கினிப்பிரதட்
சணம் பண்ணல், கலியாணம்.
தீவளர்த்தல் - அக்கினிவளர்த்தல்.
தீவளர்ப்போர் - அந்தணர், முனிவர்.
தீவறை - பெருநெருப்பெரிக்குங்குழிய
தீவாந்தரம் - தீவு, வெளி. [டுப்பு.
தீவாளி - தீபாவளி.
தீவான் - கரையான்,

தீவி - புலி.
தீவிகை - தீபிகை.
தீவிதிராட்சம் - கொடிமுந்திரிகை.
தீவியது - இனியது.
தீவிரகந்தம் - துளசி.
தீவிரம் - உறைப்பு, கொடுமை, சடுதி,
சூரியகிரணம், நரகம், பெருங்கோ
பம், மூர்க்கம்.
தீவிரவேதனை - மிகுவேதனை.
தீவிரித்தல் - கொடுமையாயிருத்தல், சீக்
கிரம்பண்ணல்.
தீவிளங்குவயிரம் - மீனம்பர்.
தீவிளி - காய். [ன்று.
தீவினை - பாவம் அது இருவினையிஞெ
தீவு - கடலிடைக்குறை, கடலுட்டிடர்,
கண்டம், சுவை, தீய்தல், தீவாந்
தரம், தூரதேசம்.
தீவுபற்று - தீவுப்புறம்.
தீவேட்டல் - கலியாணம், யாகம்பண்ண
தீவேள்வி - கலியாணம். [ல்.
தீழ்ப்பு - கீழ்மை, தீட்டு.
தீற்றுக்கல் - மணியாசிக்கல்.
தீற்றுதல் - ஊட்டுதல், சுத்தம்பண்ணு
தல், சுவர்முதலிய மெழுகுதல்.
தீற்றுப்பலகை - மணியாசிக்கட்டை.
தீனபந்து - கடவுள்.
தீனம் - இட்டம், எளிமை, குரூரம்,
குறை, கேடு.
தீனர் - இரப்போர், தீம்பர்.
தீனன் - இரப்போன், தரித்திரன், பெ
ருந்தீனன்.
தீனி - தீன்.
தீன் - உணவு, உண்டல்.
தீன்பண்டநல்லகல் - உணப் பொருளீத
ல் அது அறம் முப்பத்திரண்டிஞெ
ன்று.
தீன்பண்டம் - இரசவஸ்து, தின்பண்
டம்.

---

## து



து - அசைத்தல், அநுபவம், இருதிணைமு
ப்பா லொருமைத்தன்மை விகுதி
(உ-ம்) யான்நடத்து, எரித்தல், ஒரெ

மூத்து, கெடுத்தல், சேர்மானம், துவ்வென்னேவல், நடத்தல், நிறைத்தல், பிரிவு, பிறவினை, விகுதி, வருத்தல், வளர்தல்.
துகளிதமாடல் - துகளாக்கல்.
துகளிதம் - தூள்.
துகள் - குற்றம், பராகம், புழுதி, பூந்தாது.
துகி - மகள்.
துகிதுபதி - மகளின்கணவன்.
துகிதை - துகி.
துகிரிகை - சாந்து, சித்திரம்.
துகிர் - பவளம்.
துகிர்த்தாளி - பவளமல்லிகை.
துகிலிகை - எழுதுகோல், சித்திரம்.
துகிலின்பீசம் - பருத்திவிதை.
துகில் - சீலை, விருதுக்கொடி.
துகினசயிலம் - இமயமலை.
துகினம் - சந்திரகிரணம், பனி.
துகினத்திரி - இமயம்.
துகு - வருத்தம்.
துகூலம் - நொய்யபுடைவை.
துகைத்தல் - இடித்தல், உழக்கல், நசுக்கல், வருத்தல், வருந்துதல்.
துகையல் - துகைத்தபொருள்.
துக்ககன் - துயரமுள்ளோன்.
துக்கங்கொண்டாடுதல் - இழவுகொண்டாடுதல், புலம்புதல்.
துக்கசாகரம் - உலகம், பெருந்துக்கம்.
துக்கதோக்கியை - உதைகால்.
துக்கத்திரயம் - கடவுளாலும் உயிர்த்தோற்றங்களாலும் பஞ்ச பூதியங்களாலும் உண்டாகிற துக்கம்.
துக்கம் - கிலேசம், குற்றம், துன்பம், நரகம், நோ.
துக்கரம் - அம்பு, ஒருதேயம்.
துக்கராகம் - துக்கப்பாட்டிற்குரியராகம்.
துக்கவீடு - செத்தவீடு.
துக்காணி - இரண்டு தம்படிகொண்ட ஒரு செம்பு நாணயம்.
துக்காதிதம் - சுகம்.
துக்காராம் - பக்தலீலாம்ருதத்திற்சொல்லப்பட்ட ஒரு விஷ்ணுபக்தர்.
துக்கி - துக்கமுடையோன், துக்கியென்னேவல்.
துக்கிதம் - வருத்தம்.
துக்கிதன் - துக்கிக்கிறவன்.
துக்கித்தல் - கிலேசித்தல், புலம்பல், மனநோதல்.
துக்கிப்பு - துக்கம்.
துக்கு - உதவாதது, கீழ்மை, துப்பு.
துக்குணி - அற்பம்.
துக்கை - மகளிர் சூதகம்.
துக்கைச்சி - சூதகமுள்ளவள்.
துங்கசேகரம் - மலை.
துங்கதை - துங்கம்.
துங்கமந்தோச்சம் - கிரகவட்டத்தினது தூரமான நிலை.
துங்கபத்திரி } ஒரு புண்ணியநதி.
துங்கபத்திரை }
துங்கப்பிரஸ்தம் - இராமகிரிக்குக்கிழக்கின்கணுள்ள மலை.
துங்கம் - உயர்ச்சி, நுனி, பரிசுத்தம், பெருமை, மந்தோச்சம், மலை, வெற்றி.
துங்கரிகம் - காவிக்கல்.
துங்கன் - கிரகவட்டத்தின் தூரமான முனை, மேன்மையுடையோன்.
துங்கி - இரவு.
துங்கீசன் - சந்திரன், சிவன், சூரியன், திருமால்.
துங்கீபதி - சந்திரன்.
துசகம் - கொம்மட்டிமாதளை, மாதளை.
துசம் - இருபிறப்புள்ளன, உமி, குங்கிலியம், கொடி, தவிடு, துவசம், பல்.
துசன் - பார்ப்பான்.
துசானலம் - உமித்தீ.
துச்சகம் - சுகந்தம்.
துச்சதானியம் - பதர்.
துச்சத்தாரு - ஆமணக்கு.
துச்சம் - கீழ்மை, கொம்மட்டி, பதர், பொய், பேய்க்கொம்மட்டி, வெறுமை.
துச்சலை - திருதராஷ்டிரன்மகள், தாய் காந்தாரி, ஜெயத்திரதன் மனைவி.
துச்சவனன் - இந்திரன்.
துச்சன் - கீழ்மகன்.
துச்சாசனன் } துரியோதனன் தம்பி.
துச்சாதனன் }
துச்சி - அனுபவம், பரிட்சை, புசிப்பு,
துசிமை - கீழ்மை. [பூநீறு.
துச்சில் - ஒதுக்கிடம், சரீரம், கூடு, தங்குமிடம்.
துஞ்சர் - அசுரர்.
துஞ்சல் - துஞ்சுதல்.
துஞ்சற - முற்றுக.

துஞ்சுதல் - உறங்கல், சாதல், சோம்பல், நிலைபெறுதல், வாடுதல்.
துஞ்சுமிலை - கட்டில்.
துஞ்சுமன் - சோம்பன்.
துடக்கம் - தொடக்கம்.
துடக்கறுப்பான் - கொத்தான்கொடி, முடக்கொற்றான்.
துடக்கு - ஆசூசகம், கட்டு, சிக்கு, துடக்கென்னேவல், மகளிர் சூதகம்.
துடக்குதல் - கட்டுதல், தொடங்குதல், பொருத்துதல்.
துடங்கு - துடங்கென்னேவல், துலங்குமாம்.
துடங்குதல் - தொடங்குதல்.
துடப்பம் - துடைப்பம்.
துடராமுறி - தொடராமுறி.
துடரி - தொடரி.
துடர் - தொடர்.
துடர்ச்சி - தொடர்ச்சி.
துடர்தல் - தொடர்தல்.
துடவை-உழவுகொல்லை,பூந்தோட்டம்.
துடி - அகில், இசங்கு, உடுக்கை, உதடு, ஏலம்,காலதசப்பிரமாணத்தொன்று; அது நிமிடமெட்டுக்கொண்டது, காலநுட்பம், குமரனுடல், குறிஞ்சிப்பறை,கூதாளிச்செடி, சத்தகன்னிகைகளாடல், துடியென்னேவல், பாலைநிலப்பறை, மேன்மை, வலி.
துடிகம் - தும்பை.
துடிசாத்திரம் - துடிநூல்.
துடிதுடிக்குதல் - துடிக்குதல், துட்டத்தனம் பண்ணல்.
துடிதுடிப்பு - துடியாட்டம், துட்டத்தனம், மிகுசுறுக்கு.
துடித்தல் - அசைதல், அதிகப்படுதல், உருக்கங் கொள்ளுதல், குதித்தல், செருவங்கொள்ளல், துள்ளுதல், பதறல், பதற்றல், மின்னல்
துடிநூல் - சரீராங்கத்துடிப்பினால் வருநயநட்டஞ்சொல்லுமோர்சாத்திரம்.
துடிப்பு-அசைவு,உருக்கம்,சதிப்பு,சுறுக்கு, துட்டத்தனம், பதைப்பு.
துடியடி - யானைக்கன்று.
துடியன் - கோபமுள்ளவன்,துட்டன், விரைவுள்ளவன்.
துடியாஞ்சி - இசங்கு.
துடியாட்டம் - துடிப்பு.
துடியானவன் - பலாஷ்டிகன்.
துடியிடை - பெண், பெண்ணிடை
துடுக்கன் - தீம்பன், துடியன்.
துடுக்கு-குறும்பு, தீக்குணம், விரைவு.
துடுப்பாற்றி - ஒருவகைமீன்.
துடுப்பு - அகப்பை நெய்த்துடுப்பு முதலியன, பூங்கொத்து, மரக்கோற்கை, வலிதண்டு.
துடுப்புக்கீரை - ஒருகீரை.
துடுப்புள்ளான் - ஒருகுருவி.
துடுமெனல் - ஒலிக்குறிப்பு.
துடுமை - ஒருவகைத் தோற்கருவி.
துடுவை - நெய்த்துடுப்பு.
துடை-அரசமரம்,சுவர்க்கட்டை,சுவர்ப்புறத்துநீண்டவுத்திரம், துடையென்னேவல், தொடை, விஷமூங்கில், விட்டம்.
துடைகாலி - தீக்காலி.
துடைக்குதல், துடைத்தல் } அழித்தல், சீய்த்தல், தள்ளுதல், நாசம்பண்ணுதல்,விட்டுவிடுதல்,வீழ்த்தல்.
துடைப்பம் - வாருகோல்.
துடைப்பு - துடைத்தல்.
துடைவாசி - விஷமூங்கில்.
துடைவாழை - தொடைவாழை.
துடைவை - உழவுகொல்லை, பூந்தோட்டம்.
துட்காம் - ஆகாயம், வருத்தப்பட்டு நிறைவேற்றுங்கிரியை.
துட்கல் - அச்சக்குறிப்பு.
துட்கிரமம் - எட்டாதது,ஒழுங்கற்றது.
துட்குதல் - வெருவுதல்.
துட்குலேயன் - இழிகுலன்.
துட்கெனல் - அச்சக்குறிப்பு.
துட்சணத்துவம் - பொல்லாங்கு.
துட்சணம் - அசப்பியம், பொல்லாங்கு.
துட்டகண்டகன் - துட்சணன், நிற்பந்தன், மகாகுரூரன்.
துட்டகம் - பொல்லாங்கு.
துட்டக்குணம் - தீக்குணம்.
துட்டசதுர்த்தர்-மகாபாரதத்தில் கொடுமையிற் சிறந்த நால்வராகிய கன்னன் சகுனி துர்ச்சாதனன் துரியோதனன்.
துட்டசித்தன் - கொடியோன்.
துட்டசிரோமணி - கொடியன்.
துட்டதேவதை - அக்கிரமதேவதை.
துட்டத்தனம் - தீக்குணம்.
துட்டத்தொழில் - துர்ச்செய்கை.
துட்டநிக்கிரகம் - துட்டரை யழித்தல்.

துட்டமிருகம் - காட்டுமிருகம், தீப்பிரு கம்,
துட்டம் - அடங்காமை,ஒழுங்கீனம்,கீழ் மை, தீங்கு, நீலோற்பலநிறம் அது மாகதக்குற்றத்தொன்று, பலவீனம், பொல்லாங்கு.
துட்டரி - தொடரி.
துட்டரோகம் - ஒருநோய்.
துட்டர் - தீயர்.
துட்டவி - ஒருசெடி.
துட்டவித்தை - தீக்கல்வி,தீத்தொழில்.
துட்டவினை - தீத்தொழில்.
துட்டன் - தீயன், தேள்.
துட்டாட்டம் - துட்டத்தனம்.
துட்டாப்பு - காவுதடி,சுமத்தல், மந்தம்.
துட்டு - தீமை, பணத்திலுலில் ஒன்று கொண்ட நாணயம்.
துட்டுத்தடி - குறுந்தடி, வளைதடி.
துட்டுவம் - அற்பம்.
துட்டை - வசவி.
துட்பிரதருசனி - சேம்பு.
துணங்கறல் - இருள், திருவிழா.
துணங்கு - இருள்.
துணங்கை - இருகையுமுடக்கிப்பழுப்பு டையொத்துயாடல், கூத்து, திருவிழா.
துணர் - பூ,பூங்கொத்து,பூந்தாது.
துணர்த்தல் - முகைத்தல்.
துணவு - சீக்கிரம், நுணமரம்.
துணி - ஒளி, கந்தை, சீலைத்துணி, சோதிநாள், துணியெனேவல்,துணிவு, துண்டு, தூக்கங்கள், தெளிவு, தேரிடக்கியம்.
துணிகரம் - தைரியம், துணிவு.
துணிகை - துணிவு.
துணிக்கை - துணுக்கை, துண்டாக்கல்.
துணிச்சல் - துணிகரம்
துணித்தல் - திடன்கொள்ளல், தெளிதல், நிச்சயித்தல், முயலல், வெட்டுண்ணல்.
துணித்தல் - அறுத்தல், வெட்டல்.
துணிபு - தீர்ப்பு, தெளிவு.
துணிபொருள் - நிசப்பொருள்.
துணிவு - திடன், துண்டு, தெளிவு, நம்பிக்கை, நோக்கம், வெட்டு.
துணிவுரை - விருத்தியுரைப்பிரிவு பதினானகில் ஒன்று.
துணுக்கம் - அச்சம், உள்ளோசை.
துணுக்கிடுதல் - திடுக்கிடுதல்,பயப்படுதல்.
துணுக்கு - துண்டு, பயங்கரம்.
துணுக்குறுதல் - அச்சப்படுதல்.
துணுகெறிதல் - நடுங்கல்,வருத்தமாற்றுது மூச்சுவிடுதல்.
துணுக்கெனல் - அச்சக்குறிப்பு.
துணுக்கை - துண்டு.
துணுக்குதல் - வெறுவுதல்.
துணை - அளவு, ஆதரவு, ஆயுதமுனை, இணை, உதவி, ஒப்பு, சகாயம், சல்லியம், சோடு.
துணைக்கருவி - உபகருவி.
துணைக்காரணம் - உபகாரணம்.
துணைக்காரணவகத்திணை - உதவிக்காரணம் (உ-ம்) ஐம்பொறி யுணர்ந்தும் தன்மையறிவுள்ளோர் நம்பார்.
துணைசெயல்விலக்கு - துணைசெய்வார் போற் கூறி விலக்குவது.
துணைச்சொல் - உதவிச்சொல்.
துணைப்படை - உதவிப்படை.
துணைமை - துணை.
துணைவர் - உறவோர்,சகோதரர்,தோழர், மந்திரிகள்.
துணைவன் - உதவிக்காரன், கடவுள், மகோதரன்,தலைவன்,தோழன்,மந்திரி.
துணைவி - சகோதரி, தோழி, மனைவி.
துண்டகன் - கபடன்.
துண்டகேரி - கோவைக்கொடி, பருத்திச்செடி.
துண்டம் - கைவாய்க்கால்,சாரைப்பாம்பு, துண்டித்தல், துண்டு, பங்கு, பறவைமூக்கு, முகம், மூக்கு, யானைத்துதிக்கை.
துண்டரிக்கம் - குரூரம்,நெருக்கிடை.
துண்டாயம் - பொற்பணம், பொன்மணல்.
துண்டி - கழி, கொப்பூழ், துண்டியென்னேவல், துண்டு, துண்டுநிலம், பறவைமூக்கு முகம்.
துண்டிகேரி } துண்டகேரி.
துண்டிகேரிகை } துண்டகேரி.
துண்டிகை - கொப்பூழ்.
துண்டித்தல் - அறுத்தல், உறுத்திப்பேசல், கண்டித்தல், கிழித்தல், தறித்தல், பங்கிடுதல், பலப்படுதல், வெட்டல்.
துண்டிப்பு - உறுதிப்படுத்தல்,துண்டித்தல்.

துண்டிவிநாயகன் - காசியில் விநாயகன்.
துண்டீரபுரம் - காஞ்சிமாநகர்.
துண்டீரன் - காஞ்சியரசன்.
துண்டு - இரண்டு சிப்பம் புகையிலை, கையொப்பத்துண்டு, துணி, துணிக்கை, நஷ்டம், பங்கு, பற்றுச்சீட்டு.
துண்டுக்கத்திரி - ஒரு விஷப்புழு.
துண்டுபம் - ஒருவகைப்பாம்பு.
துண்டுவிழுதல் - நட்டம்விழுதல்.
துண்ணிடுதல் - திடுக்கிடுதல்.
துண்ணெனல் - அச்சக்குறிப்பு, விரைவுக்குறிப்பு. [வி.
துதகாரம் - துப்பும்பொழு தெழுமொலி.
துதமுகம் - தலையாட்டம், வேண்டாமைக்குத் தலையசைத்தல்.
துதம் - அசைவு.
துதி - துதியென்னேவல், தோத்திரம்.
துதிக்கை - துதிக்குதல், யானைத்துதிக்கை.
துதித்தல் - வழுத்தல். [கை.
துதிகிந்தை - இகழாவிகழ்ச்சி.
துதிபூமி - யாசபூமி.
துதிப்பு - துதி.
துதியம் - சவரிலோத்திரம்.
துதியரிசி - அட்சதை.
துதியை - இரண்டாந்திதி.
துது - இருது.
துதை - துதையென்னேவல், நெருக்கம்.
துதைதல் - நெருங்குதல்.
துதைத்தல் - நெருக்கல்.
துத்தகம் - துத்தம்.
துத்தநா - முசற்புல்.
துத்தநாகமணல் - ஒருமருந்து.
துத்தநாகம் - சத்தலோகத்திலொன்று.
துத்தபாஷாணம் - ஒருபாஷாணம்.
துத்தபேனம் - பானுரை.
துத்தமஞு - முயற்புல்.
துத்தமன் - ஒருதூர்த்தன்.
துத்தம் - ஏழிசையிலொன்று, கண்மருந்து, சமனிசை, தீ, நாய், நாவினுற்பிறக்குமிசை, நாணற்புல், நாண்முகப்புல், நாய்ப்பாகல், நீர்முள்ளி, பால், யாழினோர் நரம்பு, வயிறு.
துத்தல் - அனுபவித்தல், புசித்தல்.
துத்தன் - கபடன், தப்பிலி.
துத்தாஞ்சனம் - துத்தம்.
துத்தாத்தி - பாற்கடல்.
துத்தாத்திசயனன் - விட்டுணு.
துத்தாத்திதனையை - இலக்குமி.
துத்தாரி - ஒருவிதசீலை, ஒருவாச்சியம்.
துத்தி - உண்டற்குறியன, ஒருசெடி, தேமல், பாம்பின்படப்பொறி.
துத்தியம் - துதி, வணக்கம்.
துத்து - கம்பளி, தப்பிதம், பொய், வஞ்சனை.
துத்துநாகம் - துத்தநாகம். [சனை.
துத்துமாற்று - எத்து, தந்திரம், பொல்லாங்கு.
துத்தூரம் - ஊமத்தை.
துநீ - நதி, பறவைமுட்டை.
துநீநாதன் - சமுத்திரம்.
துந்தகடம் - கோதுமைநொய்.
துந்தகூபிகை - கொப்பூழ்.
துந்தமம் - ஒருபறை.
துந்தம் - வயிறு.
துந்தி - கொப்பூழ், வயிறு.
துந்திகன் - தொப்பையுள்ளவன், பெருவயிறன்.
துந்திலை - துந்தி.
துந்திதன் - பெருங்கொப்பூழுள்ளவன்.
துந்திபன் - பெருவயிரன்.
துந்து - உதங்கமகாரிஷிக்குப்பகைவனாயிருந்த ஒரு கொடிய அசுரன். குவலயாசுவன் தன் புத்திரர் இருபத்தோராயிரவரோடுஞ் சென்று இவ்வசுரனை எதிர்த்து யுத்தஞ்செய்து கொன்று துந்துமாரனென்னும் பெயர் கொண்டான். குவலயாசுவன் புத்திரருள் திருடாசுவன், சந்திராசுவன், கபிலாசுவன் என்னும் மூவரொழிய, ஒழிந்தோர் யாவரும் துந்துவினது அக்கினி சுவாசத்திலகப்பட்டு மடிந்தனர். இச்சரித்திரத்தைக் கம்பர் "துந்துவெனுந்தானவனைச் சுடுசரத்தாற் றொலைத்தானும்" என்பதாற் சுட்டினர். கம்பராமாயணம் குலமுறைகிளத்து படலம்.
துந்துபம் - கடுகு.
துந்துபி - துந்துமி. நரன்மகன். மயன் புத்திரன். மாயாதேவியினது இரண்டாம் மகன். வாலியாற் கொலையுண்டவன். மதங்கமுனிவர் வாசஞ்செய்த இருஷியமுக பர்வதத்திலே துந்துபியினது இரத்தம் தெறித்து வீழ்ந்து அதனை அசுசிதம்பண்ண, மதங்கர், "இவ்வசுசிதத்துக்குக் கார

ணனுகிய வாலி இம்மலையை மிதிப்பனேல் அவன் தலை ஆயிரம், கூறுகுக'' என்று சபித்தனர். அன்றுதொட்டு வாலி அங்கே செல்லாதொழுகினன்.
துந்துமாரன் - (இக்ஷ்வா) குவலயாசுவன் துந்து என்னும் இராக்ஷசனைக் கொன்றவனாதலின் இப்பெயர்பெற்றான். துந்து காண்க.
துந்துமாரி - முதலெழுவள்ளலிலொருவன்.
துந்துமி-துந்துபி, ஐம்பத்தாறுவது வருடம், ஓரசுரன், துளிமழை, பறைப்பொது, பேரிகை, பேரொலி.
துந்துருபாவை } துடிப்புள்ளவர், து
துந்துருமாலை } டிப்புள்ளவன்.
துந்துவாயன் - சேணியன்.
துபரம் - கொம்பில்லாப்பசு.
துபாக்கி - துப்பாக்கி.
துபாக்கிக்காது - துப்பாக்கிவத்திவாய்.
துப்பம் - உதிரம்.
துப்பாக்கிவத்திவாய் - இரஞ்சகம்.
துபாசி - துப்பாசி.
துப்பகம் - நெய்.
துப்பட்டா } ஒரு சீலை.
துப்பட்டி }
துப்பரவு-துப்புரவு,முழுமை,மேன்மை.
துப்பலிடுதல் - ஆணையிடுதல், எச்சலிடுதல்.
துப்பல் - உமிழ்நீர், துப்புதல்.
துப்பல்விடுதல் - ஆணையைவிலக்கல்.
துப்பற்களாசி - துப்பற்பாத்திரம்.
துப்பாக்கி - துவக்கு.
துப்பாசி - பாஷையை மறுபாஷையிற் சொல்பவன்.
துப்பிரசம் - கருஞ்சொண்டி.
துப்பு - அரக்கு,அறிவு,அனுபவம், ஆயுதப்பொது,ஆராய்ச்சி,உணவு, கதை, குற்றம், சகாயம், சாமர்த்தியம், சிவப்பு, சுத்தம், சோதித்தல், துணை, துணைக்காரணம், துப்பென்னேவல், நெய், பகை, பவளம், பானம், பொலிவு, மேன்மை, வலி, வன்மை.
துப்புக்கேடு - சீர்கேடு.
துப்புண்ணி - சீர்கேடி.
துப்புதல் - உமிழ்தல்.
துப்புத்துருவிசாரித்தல் - ஒட்டினது தப்பினது விசாரித்தல்.

துப்புரவு - அலங்காரம், அனுபவிப்பன, ஐம்பொறி நுகர்ச்சி, ஒப்புரவு, ஒழுங்கு, சுத்தம், முழுமை, மேன்மை.
துப்புளி - ஆயுதசாலை.
துமாகாரன் - கொல்லன்.
துமால் - இறையின்மை.
துமானம் - ஆபரணப்பெட்டி.
துமி - சிறுதிவலை, துமியென்னேவல், மழைத்துளி.
துமிதம் - நீர்த்துளி.
துமித்தல் - அறுத்தல்,துளித்தல்,வெட்டல்.
துமிப்பு - துமி, வெட்டு.
துமிரம் - கருமை, மிக்க சிவப்பு.
துமிலம் - பேரொலி.
துமுலம் - குழப்பம்.
தும் - உளப்பாட்டுத்தன்மைப் பன்மை வினை விகுதி (உ-ம்) நடத்தும், துகள், தும்மென்னேவல்.
தும்பகர் - தும்பை.
தும்பகா - அத்தி, தும்பரம், தும்பராஷ்டகம், தும்பை, பேராத்தை.
தும்படைசி - நாடாவினொருபுப்பு.
தும்பம் - வீணைக்காய்.
தும்பரம் - அத்தி.
தும்பராஷ்டகம் - பேராத்தை.
தும்பல் - தும்மல்.
தும்பன் - துட்டன்.
தும்பாலை - சுரை.
தும்பால் - துமால்.
தும்பி - ஒருமீன், கரும்பு, கருவண்டு, கொத்தான், சுரை, துட்டை, தும்பிமரம், யானைவண்டிலுண், வண்டு.
தும்பிகரும்பு - பனிச்சை.
தும்பிக்கை - துதிக்கை.
தும்பிச்சி - துட்டை.
தும்பியூதுதல் - நுரைதள்ளுதல்.
தும்பிலி - ஒருமரம்.
தும்பு - கரும்பு, கயிறு, குறைவு, சிம்பு, நார், நெருஞ்சில்.
தும்புராட்டகம் - தும்பராஷ்டகம்.
தும்புரு-ஒருகந்தருவன், வீணை,வீணைப்பரிட்சையுள்ளவன்.
தும்பை - ஒருகொடி,ஒருபூடு,ஒருமீன், கறவைப்பசு, கூட்டம், பொருதல், போர் வென்றோர்க்குமாலை, வெற்றி.

தும்பைமாலை - ஒருபிரபந்தம், அது தும்பைப்பூமாலை சூடி மாற்றாரோடு பொருவதைக்கூறுவது, போர்வென்றோர்க்கு மாலை.
தும்மட்டி - ஒருசெடி.
தும்மல் - உயிர்ப்பு, தும்முதல், விடுதல்.
தும்மிட்டி - சிறுகுமட்டி, பேரீந்து.
தும்மு - கொசுகு, தும்மல், தும்மென்னேவல்.
தும்முட்டி - ஒருசெடி.
தும்முதல் - தும்மல்.
துயக்கம் - சோர்ச்சி.
துயக்கு - சோர்வு, தளர்வு.
துயங்குதல் - சோர்தல்.
துயம் - இரண்டு, கொடி.
துயரடி - துன்பம், வாட்டம்.
துயரம் - கிலேசம், துன்பம், மழை.
துயரி - யாழ்நரம்பு.
துயருறுவோன் - தரித்திரன், துன்புறுவோன்.
துயர் - கிலேசம், துயரென்னேவல், துன்பம்.
துயர்தல்-கிலேசப்படல், துன்பப்படல்.
துயர்தீர்த்தசெவ்வர் - திரு ஓமாம் புலியூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
துயலுதல் - அசைதல்.
துயவு - அறிவின்றிரிபு.
துயிலல் - நித்திரைசெய்தல்.
துயிலாதாராலயம் - மகமேரு.
துயிலார் - தேவர்.
துயிலிடம் - நித்திரைசெய்யுமிடம், மக்கட்படுக்கை.
துயிலுகல் - நித்திரை செய்தல்.
துயிலுணர்தல் - விழித்தல்.
துயிலெடை - துயிலெழும்பல்.
துயிலெடைநிலை - ஒரு பிரபந்தம் அது மனக்கவற்சியின்றிப் பாசறைக்கட்டியின்ற அரசர்க்குப் புகழ்கொடுத்தலைக் கருதிய சூதர் துயிலெழுப்புதலாகப் பாடுவது.
துயில் - துயிலென்னேவல், நித்திரை.
துயில்கூர்தல் - நித்திரை பண்ணல்.
துயில்போதல் - ஆறுதல், நித்திரையாதல்.
துயில்வு - நித்திரை.
துயிறல் - நித்திரை செய்தல்.
துயிற்றுதல் - நித்திரையாக்கல்.

துயுலி - தொய்யில்.
துய் - அறிவின்றிரிபு, உணவு, துய்யென்னேவல், பஞ்சிற்றொடர் நுனி.
துய்ச்சி - அனுபவம்.
துய்து - துய்யது.
துய்த்தல் - அனுபவித்தல், நுனூற்றல், புசித்தல்.
துய்ப்பு - அனுபவம், புசிப்பு.
துய்மை - தூய்மை.
துய்யது - சுத்தமானது.
துய்யம் - சுத்தம்.
துய்யவன் - சுத்தமானவன்.
துய்யஷாயிரவியாக்கி - பவளப் புற்றுப் பாஷாணம்.
துய்யன் - பரிசுத்தன், வெள்ளிமணல்.
துய்யாள் - அழகுள்ளவள், சரசுவதி.
துய்யான்குறுமணல் - வெள்ளிமணல்.
துய்யோன் - சுத்தமானவன்.
துரகதமூலம் - நீர்முள்ளி.
துரகதம் - குதிரை.
துரகம் - குதிரை, குதிரைப்பற் பாஷாணம், மனம்.
துரக்காரர் - பொறுப்பாளிகள்.
துரகாநநம் - குதிரைமுகமீன்.
துரகி - அச்சுவமூர்வோன்.
துரங்கப்பிரியம் - கோதும்பை.
துரங்கமம் - குதிரை.
துரங்கம் - குதிரை, மனம்.
துரங்கவதனர் - கந்தருவர்.
துரங்காரி - எருமை.
துரங்கி - குதிரைக்காரன்.
துரடன் - துர்மார்க்கன்.
துரட்டு - துறட்டு.
துரதிட்டம் - துர்ப்பாக்கியம்.
துரத்துதல் - ஓட்டுதல், செலுத்தல், தொடர்தல்.
துரந்தரம் - பொதியெருது, வல்லபம்.
துரந்தரன் - பாரந்தாங்குவோன், வல்லோன்.
துரபிமானம் - ஈனுபிமானம், வீண்பெருமை.
துரப்பணம் - கம்மக்கருவியிலொன்று.
துரப்பு - துரத்துதல்.
துரமி - தூதுளை, தொடரி.
துரம் - சுமை, பொறுப்பு.
துரவு - கிணறு, தூது.
துரவுச்சட்டம் - சூறுவளிச்சட்டம்.

துரா - பாரம்.
துராகதம் - துன்னடை.
துராகன் - மிலேச்சன்.
துராகிருதம் - தீத்தொழில்.
துராசாரம் - ஒழுக்கத்தவறு, பவித்திர வீனம்.
துராசாரி - ஒழுக்கவீனன், ஒழுக்கவீனி
துராசை - துரிச்சை.
துராத்தியம் - எளிமை.
துராத்துமா - தீம்பன்.
துராபம் - பெருதற்கரியது.
துராயணல் - தடையின்றி வாசித்தல், பாராயணம்.
துராயுதம் - அநீதி.
துராய்-அறுகம்புல்லாற்றிரித்த பழுதை
துராரோகம் - பனை, பேரீந்து.
துரால்பம் - கிடைத்தற்கரியன, சிறு காய்ஞ்சொறி.
துராலாபம் - பழிமொழி.
துராலோகம் - பேரொளி.
துராலோசனை - தீயோசனை.
துராலோபம் - சிறுகாஞ்சொறி.
துரால் - செற்றை, துரும்பு, துன்பம்.
துரி - எழுதுகோல், நூற்பாத்திருத்தும் படைமயிர்.
துரிகம் - சொர்ணபாத்திரம்.
துரிசி - துருசி.
துரிசு - குற்றம், துருசி, துன்பம்.
துரிச்சை - பொல்லாவிருப்பு.
துரிஞ்சில் - உசிலமரம், வௌவ்வால்.
துரிட்டம் - பெரும்பாவம்.
துரிதம் - ஒருதாளம், கலக்கம் காலதசப் பிரமாணத்தொன்று, அது துடியிரண்டுகொண்டது, கேடு, சீக்கிரம், துன்பம், பாவம்.
துரியசித்தன்-யயாதிபுத்திரனுகிய துர்வாசன் பௌத்திர பௌத்திரன். இவனுக்குச் சந்ததி யில்லாமையால் பரதனை சிற்றப்பனுகிய திஷ்யந்தனைத் தத்த புத்திரனுக வெடுத்து வளர்த்தான்.
துரியத்தானம் - நாபிக்கமலம்.
துரியம் - சுத்தநிலை, சுமத்தல் நான்காமவத்தை, பரமாத்துமா, பொதியெருது.
துரியர் - கடவுள், சுத்தநிலையிற் சலனமற்றிருப்போர்.
துரியாதீதம் - ஆன்மாக்கள் மிகத்துய்மையாய்நிற்குநிலை ஐந்தாமவத்தை.
துரியாதீதத்தானம் - மூலாதாரம்.
துரியோதனன் - தூரியோதனன்.
துரிலபம் - அருமையானது பெறுதற்கரியது.
துரீ - நெய்வார் கருவியிலொன்று.
துரீயபாகம - காற்பங்கு.
துரீயம் - நான்காவது, பொதியெருது.
துரீயவருணன் - சூத்திரன்.
துரீல் - சடுதி.
துரீயன் - பிரமன்.
துரு - உபாயம், களிம்பு, கறை, பொன்.
துருகணன் - பிரமன்.
துருகம் - மலைமேற்கோட்டை.
துருகா - ஆடு.
துருகிு - யயாதிபுத்திரன்.
துருக்கநாட்டுமணி - மரகதமணி.
துருக்கபாதை - ஒடுங்கியபாதை.
துருக்கபுரம் - அரணுணநகர்.
துருக்கம் - ஒடுக்கவழி, கத்தூரி, கத்தூரி மிருகம், கலக்கம், காடு, குங்குமமரம், சேரற் கரியவிடம், பஞ்சவிரையிலொன்று, மலைமேற்கோட்டை, மான்.
துருக்கர் - ஒருபாடைக்காரர்.
துருக்கல் - கீச்சுக்கிட்டம்.
துருக்கன் - ஓசுரன்.
துருக்கி - துருக்கதேயம்.
துருக்கு - துருக்கருக்குரியது, துலுக்கப்பாஷை, மிலேச்சசாதி.
துருச்கை - துர்க்கை.
துருசி - ஒருமருந்து, களிம்பு, சீக்கிரம்.
துருசிக்குரு - நவசாரம்.
துருசு - மயிற்றுத்தம், மாசு.
துருணம் - கத்தி, துரோணுசாரியன் வில், தேள், வண்டு, வில்.
துருணன் - சிக்கனக்காரன்.
துருணி - தேள், பெண்ணுமை, வின்னுண்.
துருதம் - துரிதம்.
துருதுருத்தல் - விரைதல்.
துருதுருபாவை - ஆடிமாலை.
துருதுருப்பு - சுறுசுறுப்பு.
துருதுரும்பை - பிள்ளைகள் விளையாட்டிலொன்று.
துருதுவெனல் - விரைவின்குறிப்பு.
துருதை - சுறுசுறுப்பு, சொறிவு.

துருத்தி - ஆற்றிடைக்குறை, ஊதுந் துருத்தி, தோல், நீர்த்துருத்தி, மட்டத்துருத்தி.
துருத்தூரம் - ஊமத்தை.
துருநகம் - முள். [ண்ணல்.
துருந்தல் - ஆராய்தல், துளைபருக்கப்ப
துருபதன் - துரோபதைதந்தை, பாஞ்சால தேசத்தரசன்.
துருபவருணி - காட்டாமணக்கு.
துருப்பணம் - துரப்பணம்.
துருப்பிடித்தல் - ஆராய்ந்துபிடித்தல், கறைபிடித்தல்.
துருமசிரேட்டம் - பனை.
துருமங்கம் - முள்.
துருமம் - கர்பகதரு, குங்குமமரம், மரப்பொது, மனக்கலக்கம்.
துருமாம் - முள்.
துருமவருணி - காட்டாமணக்கு.
துருமவியாதி - கொம்பரக்கு.
துருமனகம் - முள்.
துருமாரி - யானை.
துருமேசுவரம் - பனை.
துருமோற்பலம் - கோங்குமரம்.
துரும்பம் - பூமுடித்தகொண்டை.
துரும்பர் - ஈனர், பறையர் முதலானவர்க்கு வண்ணார்.
துரும்பு - திரணம்.
துருவகம் - குற்றி.
துருவங்கட்டுதல் - சூத்திர முண்டாக்குதல், வகைபண்ணல்.
துருவசக்கிரம் } துருவத்திற்கு இருபத்து மூன்றரைப் பாகையளவி னிற்பது, வான்சோதி மண்டலம்.
துருவச்சக்கிரம் }
துருவணம் } வெள்ளி.
துருவண்ணம் }
துருவதாளம் - நவதாளத்தொன்று.
துருவமண்டலம் - துருவபதம்.
துருவம் - அசையாநிலை, உபாயம், ஒடுக்கவழி, கிரகநடையின்றூரம், கூத்தின்விகற்பம், சத்ததாளத்தொன்று, சூத்திரம், துருவநட்சத்திரம், நிச்சயம், நித்தியம், நித்தியயோகத்தொன்று, நியாயசாத்திரம், நிலைபேறு, மோக்கம், வட்டத்தின்முனை.
துருவம்பண்ணுதல் - துருவங்கட்டுதல்.
துருவயம் - அளவு.

துருவலகு - துருவுமணை.
துருவல் - ஆராய்தல், கடைதல், துளைத்தல், தேடுதல், பிறாண்டுதல்.
துருவன் - மூலையினிற்கு நட்சத்திரம். உத்தாநபாதனுக்குச் சுநீதியிடத்துப் பிறந்தவன். அஷ்டவசுக்களு ளொருவன். மதிசாரன் இரண்டாம் புத்திரன், பலராமன் தம்பி. துருவநக்ஷத்திரம். பிரமன், விஷ்ணு, சிவன்.
துருவாசன் - ஒருமுனிவன்.
துருவாடு - செம்மறியாடு.
துருவாட்டி - சிற்றேலம்.
துருவாதி - காட்டாமணக்கு.
துருவு - துருவல், துருவென்னேவல், துளை.
துருவுதல் - கடைதல், துளைத்தல், தேடுதல், தொடர்தல்.
துருவுபலகை } தேங்காய்,துருவுமோர் கருவி.
துருவுமணை }
துருவை - செம்மறியாடு, தேவுறுப்பு
துருளக்கம் - குந்தரிக்கம். [ளொன்று.
துரை - அதிகாரி, மேன்மகன்.
துரைசாணி } மேன்மகள்.
துரைசானி }
துரைச்சி - உலோகநிமிளை.
துரைத்தனகாரர் - அதிகாரமுள்ளோர்.
துரைத்தனம் - அதிகாரம்.
துரைப்பெண் - துரைசாணி.
துரைமகள் - மேன்மகள்.
துரைமகன் - மேன்மகன்.
துரோகசிந்தனம் - துராலோசனை, பாதகநினைவு.
துரோகம் - கலக்கம், குற்றம், கொடும்பாவம், தப்பிதம். [ன்.
துரோகாடன் - எத்தன், வேட்டைக்கார
துரோகி - இரக்கமற்றவன், கொடும்பாவி.
துரோட்டி - துரட்டுக்கோல், தோட்டி.
துரோணகாகம் } காகம்.
துரோணகாகலம் }
துரோணகை - வெண்ணொச்சி.
துரோணமுகம் - துரோணீமுகம்.
துரோணம் - எண்காற்புள், ஒருமரம், காக்கை, சத்தமுகிலிலொன்று; அது மண்பொழிவது, தனுவிராசி, தும்பைச்செடி, துலைவாய், பதக்கென்னு மோரளவை, வில்.

துரோணன் - குருகுலத்தரசர்குரு.
துரோணாசாரியன் - பரத்வாஜமுனிபுத்திரன். அசுவத்தாமன்தந்தை, பாரதயுத்தத்தில்த்ருஷ்டத்யும்நனால்கொல்லப்பட்டவன். இவனுக்குக் கும்பனென்றும்பேர். துரோணம் ஓரளவு கருவியாகிய கும்பம், பரத்வாஜரது தவத்தை யழிக்கும் பொருட்டு இந்திரன் ஏவலிற் சென்ற மேநகை அவருக்கு மோகமுண்டாக்க, அவர் தமது வீரியத்தை ஒரு துரோணத்திலேவிட்டார், அதினின்றும் பிறந்தவராதலால் இவருக்கு துரோணன் எனப்பெயர்வாய்த்தது. இவன்கௌரவ பாண்டவர்களாகிய இருதிறத்தார்க்கும் வில்வித்தை கற்பித்த ஆசிரியன்.
துரோணிகை - ஆவிரை.
துரோணிதலம் - தாழை.
துரோணீமுகம் - நானூறு கிராமத்திற்றலைப்பட்டினம்.
துரோதரம் - சூதாட்டு.
துரோபதை-பஞ்சகன்னிகளி லொருத்தி, பாண்டவர்மனைவி.
துரோபவம் - மயக்கு.
துர் - தீதுப்பொருடருமோருபசருக்கம்.
துர்க்கதி - கெட்டநடை, தரித்திரம், [நரகம்.
துர்க்கதிநாசினி - துர்க்கை.
துர்க்கந்தம் - கெட்டநாற்றம்.
துர்க்கமம் - பெறற்கரியது.
துர்க்கம் - துருக்கம்.
துர்க்கி - பார்வதி.
துர்க்குணன் - தீயன்.
துர்க்கை-கொற்றவை, பூரநட்சத்திரம்.
துர்ச்சநன் - துஷ்டன்.
துர்ச்சனம் - செருக்கு, மோசலீலை, [வன்மம்.
துர்ச்செயன் - தநுபுத்திரன்.
துர்த்தமன் - துத்தமன். காந்தாரன். பௌத்திர புத்திரன், பத்திரசேநன் புத்திரன்.
துர்த்திநம் - கெட்டநாள், மழை.
துர்த்துரம் - துருத்துரம்.
துர்ப்பரிகம் - சிறுகாய்ஞ்சொறி.
துர்ப்பலம் - துர்பலம்.
துர்ப்பிட்சம் - துர்பிட்சம்.
துர்ப்பீசம் - துர்பீசம்.
துர்மதன் - வசுதேவன் புத்திரன்.
துர்மதி - துர்ப்புத்தி, துன்மதிவருடம்.
துர்மர்ஷணன் - துரியோதநன்தம்பி.
துர்மாமிசம் - துன்மாமிசம்.
துர்மார்க்கம் - துன்மார்க்கம்.
துர்முகன் - துரியோதனன் தம்பி, மாலியவந்தன் மகன்.
துர்முகி - துன்முகி, ஒருவருஷம்.
துர்மேதை - மந்தபுத்தி.
துர்லபம் - துரிலபம்.
துர்வசன், துர்வசு - யயாதிக்குத் தெய்வயானையிடத்துபிறந்தபுத்திரன்.
துர்வர்ணகம், துர்வர்ணம் - வெள்ளி.
துர்வாசன் - அத்திரிக்கு அநசூயையிடத்துப் பிறந்த புத்திரன், இவன் சகோதரன் சோமதத்தாத்திரேயன், இவன் கடுங்கோவியாதலால் இவன் கோவம் உலகத்தாருக்கு உவமாநப்பிரமாணமாய் விட்டது, கோவியாயினும் தவத்திற் சிறந்தவன், தாம் நீட்டியமாலையைத் தோட்டியா லேற்று யானைத் தலையிலெறிந்த இந்திரனது செல்வமெல்லாம் போய்த் திருப்பாற்கடலிற் புக்கொளிக்கும்படி சபித்தவன் இவனே.
துர்வாதம் - நியாயக்கேடானவாதம்.
துர்விதன் - துர்ஜநன்.
துர்விருத்தன் - துஷ்டன்.
துலக்கம் - தெளிவு, பளபளப்பு, பிரகாசம்.
துலக்கல் - விளக்கல்.
துலக்கு-துலக்கென்னேவல்,பிரகாசம்.
துலக்குதல் - பிரகாசிப்பித்தல்,மினுக்குதல், வெளிப்படுத்தல்.
துலங்கல் - ஒளிசெய்தல்.
துலங்கு - துடங்கு, துலங்கென்னேவல், தொழுமரம்.
துலங்குதல் - தெளிதல், பிரகாசித்தல்.
துலம்-கனம்,கோறை,நிறை, நீர்முள்ளி.
துலவம் - பஞ்சு.
துலா - ஏற்றமரம், ஒன்றற்குச் சரியாந்தன்மை, கைமரம், துலாராசி, நிறைகோல், பண்டிக்கோல், பாகம்.
துலாகோசம் - துலாபரீட்சை.
துலாகோடி - ஒருநிறை, காலணியினொன்று, பத்துக்கோடி.
துலாக்கட்டை - நிராவி.
துலாக்கொடி - பட்டைக்கொடி.

துலாக்கோல் - தராசுக்கோல் துலாப்படி.
துலாசூத்திரம் - துலாப்பிரகிரகம்.
துலாதடம் - சவள்மரம்.
துலாதரன் - சூரியன்.
[illegible] - துலாக்கோல், துலைத்தட்டு[illegible]று.
துலாதாரன் - ஒரு வியாபாரி. வாரணாசியிலிருந்த ஒரு வணிகசிரேஷ்டன், இவன் ஜாஜிலியென்னும் இருடிக்குப்பிரமகீதையைஉபதேசஞ்செய்த புருஷோத்தமன்.
துலாந்து - ஒருவகைவிட்டம்.
துலாபரீட்டை - குற்றவாளியை நிறுத்தறிதல்.
துலாபாரதானம் - ஒருதானம்.
துலாபாரமேறுதல் - தன் நிறைக்குப் பொன்கொடுக்கத் தன்னை நிறுத்தல்.
துலாபுருஷதானம் - துலாபாரதானம்.
துலாபுருஷன் - நிறுக்கப்பட்டவன்.
துலாப்படி - நிறைகோல்.
துலாப்பிரகாரம் - துலாக்கோலின்கயிறு.
துலாமானம் - நிறை.
துலாம் - ஏற்றமரம், ஐந்துவீசைகொண்டநிறை, ஓரிராசி, நிறைகோல், நூறுபலம்கொண்ட நிறை.
துலாம்பரம் - தெளிவு, விளக்கம்.
துலாவிஷுவம், துலாவிடுவம் - துலாராசியிற் சூரியன் வருங்காலம்.
துலி - ஒருமுனி, பெண்ணாமை.
துலிதம் - அசைவு, ஒப்பு, நிறுக்கப்பட்டது.
துலினி - இலவமரம்.
துலிபலை - இலவு.
துலியாசுனம் - செம்முருங்கை.
துலுக்கப்பூ - ஒருவகைப்பூ.
துலுக்கர் - துருக்கர்.
துலுக்காணம் - ஒருதேயம்.
துலுக்காணியம் - துலுக்கராச்சியம்.
துலுக்கிச்சி - துலுக்கப்பெண்.
துலுக்கு - அசைப்பு, ஒருதேசம், ஒரு பாஷை, துலுக்கென்னேவல்.
துலுக்குச்செவ்வந்தி - ஒருசெவ்வந்தி.
துலுக்குதல் - குலுக்கல்.
துலை - ஒப்பு, கனம், துலா, துலாராசி, துலையென்னேவல், தூரம், நிறை, நீரிறைக்குந்துலை, நூறுபலம், மடைமுகம்.
துலைக்கிடுதல் - தூரப்படுதல்.
துலைதல் - தொலைதல்.
துலைத்தல் - தொலைத்தல்.
துலைப்பள்ளம், துலைமுகம், துலைவாய் - துலைக்கிடங்கு.
துலோபம் - கருஞ்சுண்டி.
துல்லபம் - அருமை, எட்டாதது, மேன்மை.
துல்லம் - பேரொலி.
துல்லிபம், துல்லிமை - மேன்மை.
துல்லியப்பக்கம் - ஒத்தபக்கம்.
துல்லியபலம் - சரிபலம்.
துல்லியபானம் - பலரொன்றிக்குடித்தல்.
துல்லியம் - அப்பிரகம், உவமை, ஒருமிப்பு, சுத்தம்.
துல்லியரூபம் - ஒரேமாதிரி.
துல்லியவிருத்தி - ஒத்ததொழில்.
துல்லியோகிதாலங்காரம் - ஒப்புமைக்கூட்டவணி.
துவக்கம் - ஆரம்பம்.
துவக்கல் - கட்டல், தொடங்கல்.
துவக்கவிவரம் - செவ்வலரிசி.
துவக்கு - உடல், கட்டு, சங்கிலி, சம்பந்தம், துப்பாக்கி, துவக்கென்னேவல், தோல், பிணக்கு.
துவக்குதல் - துவக்கல்.
துவங்கல் - தொடங்குதல்.
துவங்கிசம் - சேதம், நட்டம்.
துவங்குதல் - துவங்கல்.
துவசங்கட்டுதல் - கொடிகட்டுதல், முயற்சியாய் நிற்றல்.
துவசப்பிரகாரணம் - காற்று.
துவசம் - அடையாளம், கொடி, விருதுக்கொடி.
துவசர் - கள்விற்போர், சாணார்.
துவசல் - தொடிசு.
துவசாரோகணம் - கொடியேற்றம்.
துவட்சி - அசைவு, பலவீனம், வறட்சி.
துவட்சிகை - கடுப்பிஞ்சு.
துவட்டர் - கம்மாளர், தச்சர்.
துவட்டல் துடைத்தல், துவட்டற்கறி, துவட்டுதல்.
துவட்டன் - துவாதசாதித்தரில் ஒருவன்.
துவஷ்டா, துவட்டா - விச்சுவகன்மா.
துவட்டாநாள் - சித்திரைநாள்.
துவட்டு - துவட்டென்னேவல், துவள்வு.
துவட்டுதல் - செறிவித்தல், துடைத்தல், துவளச்செய்தல்.

துவணீர் - துவண்டநீர்.
துவண்டை - காஷாயப்புடைவை.
துவத்தம் - விழுதல்.
துவந்தம் - இரட்டித்தது, இரண்டு, ஒன்றைத்தொடர்ந்தது, தொந்தம், நெருக்கம்.
துவந்தயுத்தம் - விடாதபோர். [தடை.
துவந்தனை - அலைவு, இரட்டித்திருப்பது,
துவந்தித்தல் - ஒன்றற்கொன்று தொடர்ந்திருத்தல், தொந்தித்தல்.
துவந்துவசரம் } சக்கிரவாகம்.
துவந்துவசாரி }
துவந்துவம் - இரண்டு, ஒன்றற்கொன்று தொடர்ந்திருப்பது, சோடு, புணர்ச்சி, வாது.
துவம் - அசையாநிலை, இரண்டு, சத்துவம்.
துவயம் - இரண்டு.
துவயாதிகன் - பரிசுத்தன்.
துவயார்த்தம் - உபயார்த்தம்.
துவரம் - துவர்ப்பு.
துவரி - காஷாயம்.
துவரை - ஒருபயறு, துவாரகை.
துவரைக்கோமான் - இடைச்சங்கப்புலவருள் ஒருவர்.
துவரைமல்லி - புஷ்பராகத்தரிப்பு.
துவர் - சிவப்பு, துவரென்னேவல், துவர்ப்பு, பகை, பவளம், விறகு.
துவர்க்கட்டி - காய்ச்சுக்கட்டி.
துவர்க்காய் - பாக்கு.
துவர்ச்சிகை - கடுக்காய்ப்பிஞ்சு.
துவர்தல் - திமிர்தல், தெளிதல், பிரிதல்.
துவர்த்தல் - துவர்ப்புக்கொள்ளுதல், பூசுதல்.
துவர்ப்பு - அறுசுவையினொன்று, பத்து.
துவலல் } தீவிரித்தல், துளி[illegible]டுதல்.
துவலுதல் }
துவலை - துளி, மழை, மழைத்தூவல்.
துவல் - சீக்கிரம், துவலென்னேவல்.
துவளல் } அசைதல், ஒசிதல், ஒட்டுதல், காய்தல், வளைதல், வாடல்.
துவளுதல் }
துவள்தல் }
துவள்வு - துவட்சி.
துவறல் - துவலைவிடுதல், விரைவு.
துவனம் - அக்கினி.
துவனி - ஒலி, துவண்டிருப்பது.
துவனிக்கிரகம் - காது, கேள்வி.
துவனை - தொனித்தல்.

துவன் - வட்டத்திருப்பி.
துவன்றல் - சாதல், நிறைதல், நெருங்கல், பொலிவு.
துவா - இரண்டு.
துவாட்சரி - இருவருக்கவெழுத்தான் முடியுமோர்கவி.
துவாதசகரன் - குமரன், வியாழம்.
துவாதசம் - பன்னிரண்டு.
துவாதசவிலோசனன் - குமரன்.
துவாதசாங்கிசம் - இராசியைப் பன்னிரண்டாய்ப் பகிர்தல்.
துவாதசாதித்தர் - பன்னிருசூரியர், அவர் தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவாச்சுவான், பூடன், சவித்திரு, துவட்டன், இவர் மேடமுதல் மீனமீறுய விராசியில் அவ்வம்மாதத்திற் புகுந்து சூரியனுக்கு முறையே செல்வர்.
துவாதசாந்தஸ்தலம் - மதுரை.
துவாதசாந்தம் } பன்னிரண்டாமவத்தை.
துவாதசாந்திரம் }
துவாதசாவத்தை - உயிர்வேதனை பன்னிரண்டு.
துவாதசான்மா - சூரியன்.
துவாதசி - பன்னிரண்டாந்திதி.
துவாஸ்தன் } துவாரபாலன்.
துவாஸ்திதகன் }
துவாஸ்திதன் }
துவாந்தம் - இருள், நரகம், வி[illegible]பெச்சம்.
துவாந்தாராதி - சூரியன்.
துவாபரம் - மூன்றாம்யுகம்.
துவாப்புலு - இருபது.
துவாரகண்டகம் - கதவு.
துவாரதம் - தீவரம், துவாரகை.
துவாரகாபுரி - துவாரகை.
துவாரகேசன் - விட்டுணு.
துவாரகை - ஒருபட்டினம், சத்தபுரியிலொன்று.
துவாரசாகை - சிறகுகதவு.
துவாரத்தம்பம் - கதவுநிலை.
துவாரபாலகன் - கடைகாப்போன்.
துவாரபிண்டி - வாசற்படி.
துவாரம் - துளை, வழி, வாயில்.
துவாரயந்திரம் - பூட்டு.
துவாரவதி } துவாரகை.
துவாராவதி }
துவாரிகன் - துவாரபாலகன்.
துவாரிகை - துவாரவதி.

துவாலே-உ-திரப்பெருக்கு.தீட்டு, பூச்சு, பூச்சுமருந்து.
துவாலேயிடுதல் - பூசுதல்.
துவாளிப்பு - குடைவு.
துவானம் - ஒலி.
துவி - இரண்டு.
துவிகபா - வட்டத்திருப்பி.
துவிகன்மக்கத்துருப்பிரயோகம் - செயப்படு பொருளிரண்டுடை வினை முதலின் முடிபு
துவிகன்மக்கன்மணிப்பிரயோகம் - செயப்படு பொருளிரண்டைச் செயப்படுபொருளின் முடிபு.
துவிகாபா - வட்டத்திருப்பி.
துவிகாயாசின் - செம்முருங்கை.
துவிகிருத்தியை - கருப்பிணி.
துவிசபதி - சந்திரன்.
துவிசபம் - கவைக்குளம்புள்ளது.
துவிசம் - பல், முட்டையிற்பிறப்பன.
துவிசராசகுலோத்துங்கன் - இராஜசார்த்தால பாண்டியனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன்.
துவிசவிரணம் - பற்கொதி.
துவிசன்-பிராமணன்,இருபிறப்பாளன்
துவிசாதி - பிராமணர்.முட்டையிற்பிறப்பன.
துவிசாயணி - பூணூல்.
துவிசாரகன் - அனந்தன், கருடன், சந்திரன்.
துவிசாலயம் - பிராமணவீதி, மரப்பொந்து.
துவிசிருவன் - கள்வன், கோட்சொற்காரன், பாம்பு.
துவிசோத்தமன் - பிராமணன்.
துவிஷ்டம் - பித்தளை.
துவிதகேந்திரம் - கால்வட்டத்திற் குறைவாயிருப்பது.
துவிதசம் - இருபது.
துவிதபாவனை - இரண்டாய்ப் பாவிப்பது.
துவிதம்-அசைவு,இரண்டு,இருமடங்கு.
துவிதயம் - சோடு.
துவிதவாதம் - சிவனுஞ்சீவனும்வேறெனக் கொள்ளுஞ்சமயம்.
துவிதவாதி - சிவனுஞ்சீவனும் வேறெனக் கொள்ளுஞ்சமயி.
துவிதன் - பிரமமாநஸபுத்திரரு ளொருவன்.
துவிதாகதி - நண்டு.
துவிதாகதி - முதலை.
துவிதாது - விநாயகன்.
துவிதாத்துமகம் - சாதிக்காய்.
துவிதியகேந்திரம்-துவிதகேந்திரம்.
துவிதியம் - இரண்டாவது, இரண்டு.
துவிதியை - கோரோஜனம்.
துவிதீயன் - புத்திரன்.
துவிதேகன் - விநாயகன்.
துவிபடி - துப்பட்டி.
துவிபமதம் - யானைமதம்.
துவிபம் - யானை.
துவிபாதசெந்து - இருகாலுள்ளது.
துவிபுடம் - கடலே.
துவிபுத்துரு - தண்ணீர்விட்டான்.
துவிமீடன் - ஹஸ்திகன் இரண்டாம் புத்திரன், சிவன் வமிசத்தார் பௌரவர் எனப்படுவர்.
துவிமுகம் - துவிபம்.
துவிமுகாகி - இருதலைப்பாம்பு.
துவிமுகை - நீர்ச்சாடி.
துவிமூர்த்தநன் - தநுபுத்திரரு ளொருவன்.
துவிரசனம் இரண்டுமுறைசாப்பிடுதல், பாம்பு.
துவிரதம் - யானை.
துவிரதாந்தகம் - சிங்கம்.
துவிரம் - தேனீ.
துவிராபம் - யானை.
துவிருடை - இரண்டுதாரமுள்ளவன்.
துவிருத்தி - இரண்டுபடச் சொல்லல், கூறியது கூறல்
துவிரேபம் - மிருகம், வண்டு.
துவிரேபாரி - சண்பகமரம்.
துவிலிங்கி - சத்திரியன்.
துவிவசனம் - இருவசனமிணைந்தது.
துவிவிதன் - மயிந்தன் சகோதரனாகிய ஒரு வாநரன், இவன் நரகாசுரன் சிநேகன், நரகாசுரனைக் கிருஷ்ணன் கொன்ற கோபத்தால் அந்தக் கிருஷ்ணன நகரத்தில்இவ்வாநரன்சென்று அழிவுசெய்தபோது பலராமனால் கொல்லப்பட்டவன்.
துவிவிதாரி - விட்டுணு.
துவிவேசரை - ஒருவிதபண்டி.
துவீபசித்திரம் - சிறுத்தைப்புலி.
துவீபம் - தீவு, புலித்தோல்.
துவீபவதி - ஒருநதி, பூமி.
துவேசம் } பகை, வெறுப்பு.
துவேஷம் }

துவேசித்தல் } வெறுத்தல்.
துவேஷித்தல் }
துவை - இறைச்சி, ஒலி, துவையென்னேவல், துளசி, பருகுதற்குரியனே, பிண்ணாக்கு, புளிங்கறி.
துவைதம் - துவிதம்.
துவைதல் - துவைக்கப்படுதல்.
துவைதிகரணம் - கூறுசெய்தல்.
துவைத்தல் - ஒலித்தல், துவைக்குதல், தோய்க்குதல், பானம் பண்ணுதல். பேரொலி, வாச்சியம், வாசித்தல், விடுதல்.
துவைபாயனன் - வியாசன்.
துவைப்பு - இடித்தல்,ஒலித்தல்,துவைக்குதல், துவையல்.
துவைமாதுரன் - விநாயகன்.
துவையல் - ஒருபச்சடி, சுண்டாங்கி, துவைக்கப்பட்டவை.
துவ்வல் - அனுபவித்தல், புசித்தல்.
துவ்வாதார் } தரித்திரர்.
துவ்வார் }
துவ்வாமை - அநுபவம், தரித்திரம், பொறுமை, வெறுப்பு.
துவ்வு - அனுபவம், உணவு, ஐம்பொறிநுகர்ச்சி, துவ்வென்னேவல்.
துழத்தல் - அளேதல், கலத்தல்.
துழவை - துழாவுதல்.
துழவை - துழாவியட்டகூழ், துளவை, மூங்கிற்பற்றை.
துழனி - ஒலி,பறவைக்கூட்டத்தொலி.
துழா - துழாவுதல்,துழாவென்னேவல்.
துழாய் - துளசி.
துழாய்மௌலி - விட்டுணு.
துழாய்வணம் - துழாய்.
துழாவல் - ஆராய்தல், கலத்தல், பரவுதல், வெட்டல்.
துழாவாரம் - ஊர்ப்பேச்சுப்பேசுகை.
துழாவு - துழாவுதல்,துழாவென்னேவல்.
துழாவுதல் - துழாவல்.
துளக்கம் - அசைவு, அச்சம், ஒலி,ஒளி, கலக்கம், சோதிநாள்.
துளக்கல் - அசைத்தல், ஒளிசெய்தல்.
துளக்கு - அசைவு, துளக்கென்னேவல்.
துளக்குதல் - துளக்கல்.
துளங்கல் - அசைதல், அச்சப்படுதல், ஒளிசெய்தல், கலங்கல்.
துளங்கொளி - கேட்டைநாள், மிக்கஒளி.
துளசி - ஒருபூச்செடி, ஒருபெண்.
துளசிதாசர் - பக்தலீலா ம்ருதத்திற் சொல்லப்பட்ட ஒரு விஷ்ணுபக்தர்.
துளசிதீர்த்தம் - துளசிபத்திரநீர்.
துளசிமணி - ஒருமணி.
துளசிமாடம் - துளசிமண்டபம்.
துளசிமாலே - துளசிமணிமாலே.
துளபம் - துளசி.
துளம்பிக்கிரி - ஆதொண்டை, காற்றுேட்டி.
துளர் - களேக்கொட்டு.
துளவம் - துளசி.
துளவன் - சோரபாஷாணம்,திருமால்.
துளவி - திப்பிலி.
துளவு - துளவம்.
துளவை - துளே, மூங்கிற்பற்றை.
துளாரி - நெய்வார்கருவியில் ஒன்று.
துளாவாரம் - தொளாவாரம்.
துளி - திவலே, துளியென்னேவல், பெண்ணுமை, மழை, மழைத்துளி.
துளித்தல் - துளியாய்விழுதல், மழைபெய்தல்.
துளிப்பு - துளித்தல்.
துளிமழை - திவலேயாய்ச்சொரியுமழை.
துளிர் - தளிர், துளிரென்னேவல்.
துளிர்த்தல் - செழித்தல், தளிர்த்தல்.
துளிர்ப்பு - தளிர்ப்பு.
துளும்பல் - அலேதல்,எழும்பல், ஒளிசெய்தல், திமிர்தல்,திமிறல்,துள்ளுதல்.
துளுவம் - தேயமைம்பத்தாறில்ஒன்று, பதினெண்பாஷையில் ஒன்று.
துளே - துவாரம், துளேயென்னேவல், மூங்கில், வாயில்.
துளேக்கருவி - சின்னமுதலிய துளேயடை வாத்தியம்.
துளேக்கை - யானேத்துதிக்கை.
துளேச்செவி - உட்செவி, துளேக்காது.
துளேதல் - அனுபவித்தல், கலத்தல், சுளியோடுதல்.
துளேத்தல் - துளேக்குதல்.
துளேப்பு - துளேக்கை.
துளேயடித்தல் - துளேத்தல்.
துளேயரியம் - ஊதுகொம்பு.
துள்ளம் - துளி, துள்ளு.
துள்ளலோசை - கலிப்பாவிேைச.
துள்ளல் - ஆடு,கலிப்பாவிேைச,குதித்தல், கூத்து, கொசுகு, விரைந்துபாடுமிசை.
துள்ளாட்டம் - துள்ளு.

துள்ளி - திவலை.
துள்ளு - குதிப்பு, துள்ளென்னேவல்.
துள்ளுதல் - குதித்தல்.
துள்ளுப்பூச்சி - தெள்கு.
துறக்கம் - தேவலோகம்.
துறடு } யானைத்தோட்டி.
துறட்டு
துறட்டிச்செடி - ஒருமுட்செடி.
துறட்டு - சுறட்டு, தொந்தரை.
துறட்டுத்தடி - கொழுவுதடி.
துறட்டுவாதம் - பிடிவாதம். [தல்.
துறத்தல் - துறவு, நீக்கல், வெறுத்துவிடு
துறந்தார் } நீத்தோர், துறவிகள்.
துறந்தோர்
துறப்பணம் - துளைக்குமூசி.
துறப்பு - துறவு, துறவுகோல்.
துறவர் - முனிவர்.
துறவறம் - இல்லறந்துறத்தல்-அது நாலாச்சிரமத்தொன்று.
துறவி - நீத்தோன், முனிவன்.
துறவு - இல்லறநீங்கி நிற்றல், விடுதல்.
துறவுபூணுதல் - துறவறத்துட்படல்.
துறவொழுக்கம் - சந்நியாசதருமம்.
துறவோர் - நீத்தோர்.
துறவோருரைக்குஞ்செயல் - புராணமோதல்.
துறு - உணவு, கூட்டம், செம்பூரான், துறுவென்னேவல், நெருக்கம்.
துறுகல் - சலதாரை முதலிய வடைக்குங்கல்.
துறுக்கல் - திணித்தல், அருக்கல்.
துறுக்குதல் - செறுமுதல்.
துறுட்டி - சிற்றேலம்.
துறுதல் - நெருங்குதல், புசித்தல்.
துறுத்தல் - நெருக்குதல்.
துறுபவம் - நெறுக்கம்.
துறுப்பு - திணிக்கை.
துறுமல் } திரட்சி, நெருங்கல்.
துறுமுதல்
துறுவல் - நெருங்கல், புசித்தல்.
துறுவு - உணவு, துறுவென்னேவல், நெருக்கம்.
துறுவுதல் - உண்ணல், நெருங்குதல்.
துறை - ஆறு, இடம், இறங்குதுறை, எல்லை, கலித்துறை, காரியம், தங்குமிடம், நீர்த்துறை, நூல், பாவினத்தொன்று, வழி.

துறைத்தோணி - துறையிலேற்றற்குரியதோணி.
துறைநியாயம் - அகப்பொருள் புறப்பொருட்டுறை மரபு.
துறைபிடித்தல் - உபாயந்தேடல்.
துறைபெயர்தல் - துறைமுகத்தைவிட்டுப்போதல்.
துறைபெய்தல் - நதியாடுவித்தல்.
துறைபோகுதல் } நூல்கற்றறிதல், முடிவறிதல்.
துறைபோதல்
துறைப்பேச்சு - சொந்தப்பேச்சு.
துறைமாலை - பகைத்திறச் செய்கைக்குரியமாலை.
துறைமுகம் - ஏற்றமிறக்கஞ்செய்யுந் துறை.
துறைவல்லோர் - கற்றோர். [துறை.
துறைவன் - நெய்தனிலத்தலைவன்.
துறோட்டி - தோட்டி.
துற்கதம் - உபத்திரவம், வறுமை.
துற்கதி - ஒடுங்கியபாதை, தரித்திரம், துர்ச்சீவியம், நரகம்.
துற்கந்தம் - கெட்டவாசனை.
துற்புரம் - அருக்கபுரம்.
துற்கமார்க்கம் - அருக்கபாதை.
துற்கம் - அருக்கம்.
துற்சருமம் - தீவினை, பாவம்.
துற்கன் - அருக்கன்.
துற்கன்மம் - துற்கருமம்.
துற்காதேவி - அருச்கை.
துற்காநவமி - புரட்டாதிமாதப் பூருவபக்கத்துநவமி.
துற்கிருதகருமம் - ஆகாமியம்.
துற்கிருதம் - பாவம்.
துற்கீர்த்தி - அவகீர்த்தி.
துற்குணம் - தீக்குணம்.
துற்குறி - அவக்குறி.
துற்கை - துற்காதேவி.
துற்சகுனம் - துற்குறி.
துற்சரிதம் - தீத்தொழில்.
துர்சனம் - துட்சணம், அநாசாரம், பொல்லாங்கு.
துற்சனவியோகம் - அன்னடை.
துற்சனன் - துட்டன், தூர்த்தன்.
துற்சாதம்-அதிட்டவீனம், துற்பிறப்பு.
துற்செய்கை - அவச்செய்கை.
துற்பகை - குணங்கெட்டமனைவி.
துற்பரிகம் - சிறுகாஞ்சொறி.
துற்பலம் - பலவீனம்.

துற்பலன் - தீங்கு, மத்திமபலன்.
துற்பாக்கியம் - நிரபந்தம்.
துர்பிட்சம் - பஞ்சம்.
துர்பீசம் - நல்விதியற்றபிள்ளை.
துர்புத்தி - பொல்லாதபுத்தி.
துற்போதனை - தீயுபதேசம்.
துற்றல் - உண்டல், குவிதல், நிறைதல், நெருங்கல்.
துற்று - உணவு, சோறு, துறுகல், துற்றென்னேவல், நெருக்கம்.
துற்றுதல் - குவிதல், துறுத்தல், நிறைதல், நெருக்கல், நெருங்குதல்.
துற்றுமாற்று - திரியாவரம்..
துறவி - திப்பிலி.
துனி - அச்சம்,கோபம்,சினம்,துன்பம். நோய்,புலவிநீட்டம்,யாறு,வெறுப்பு,
துனிநாதம் - கடல்.
துனை, துனைவு } விரைவு.
துன் - துர், துன்னென்னேவல், நெருக்கம்.
துன்பிலி - கடவுள்.
துன்பம் - உபத்திரவம்,கிலேசம்,நோய், வருத்தம்.
துன்பு - துன்பம்.
துன்புறுதல் - வருந்துதல்.
துன்மதி - அவமதி.ஐம்பத்தைந்தாவதாண்டு.
துன்மரணம் - அவச்சா.
துன்மனம் - தீமனம், அகாலமாணம்.
துன்மாதிரி - துற்பாவனை.
துன்மாமிசம் - ஊழ்த்தவிரைச்சி, ஒருநோய்.
துன்மார்க்கம் - தப்புவழி.
துன்மித்தல் - வருந்துதல்.
துன்முகன் - குதிரை, சிங்கன்.
துன்முகி ஓராசுகி,முப்பதாவதுவருடம்
துன்மை - தின்மை.
துன்றல், துன்றுதல் } நெருங்கல்.
துன்னகாரர் - தையற்காரர்.
துன்னநாயகன் - தையற்காரன்.
துன்னபோத்து - எருமைக்கடா.
துன்னம் - கிழிவு, தைத்தல், தையல்.
துன்னர் - சக்கிலியர்,செம்மார்,தையற்காரர், தோல்வினைமாக்கள்.
துன்னலர் - பகைவர்.
துன்னல் - கெட்டல்,தைத்தல், நெருங்கல்.
துன்னவாயன - தையற்காரன்.
துன்னுதார், துன்னோர் } பகைவர்.
துன்னிமித்தம் - துற்சகுனம்.
துன்னியார் - அடுத்தோர், சிநேகிதர்.
துன்னீதி - துன்னடை, அநீதி.
துன்னீர் - எச்சில்.
துன்னு - இறைச்சி, துன்னென்னேவல், நெருக்கம், பிதுக்கம், முதுகு.
துன்னுதல் - கிட்டுதல், தைத்தல், நிறைதல், நெருங்குதல், பிதுங்கல்.
துன்னுநர் - அடுத்தோர், சிநேகிதர், துன்னர்.
துன்னூசி - தையலூசி.
துன்னெறி - கெட்டநடை.

---

## தூ

தூ - ஓரெழுத்து, சீ, சுத்தம், தசை, தூவென்னேவல், பகை, பற்றுக்கோடு, பள்ளிறகு, வெண்மை.
தூகம் - காற்று.
தூக்கணங்குருவி - ஒருகுருவி.
தூக்கணம் - உறி, தூக்கணங்குருவி, தொங்கல்.
தூக்கணாங்குருவி - தூக்கணங்குருவி.
தூக்கம் - அயர்ச்சி, ஆபரணத்தொடக்கு, காதணி, சல்லியம், சோம்பு, தணிவு, தூக்கணம், நித்திரை, மந்தம், வடிவு, வதக்கம், வாட்டம்.
தூக்கம் - தூக்குதல்.
தூக்கி - தூக்குவோன்.
தூக்கிரி - காவலாள்.
தூக்கிரிமேரை - காவலுக்குக் கொடுக்குந் தானியம்.
தூக்கு - ஆசாரியன், ஆராய்வு,உயர்ச்சி, உவமைச்சொல், உறி, கனம், காற்றலாம், கூத்து, துலாராசி, தூக்கங்கள், தூக்கணங்குருவி, தூக்கணம், தூக்குதல், தூக்கென்னேவல்,நிறை, நிறைகோல், பாட்டு.
தூக்குக்கோல் - நிறைகோல்.
தூக்குணி - தழுக்குணி.
தூக்குதல் - ஆராய்தல், உதவிசெய்தல், உயர்த்துதல,சிந்தித்தல், தூங்கவைத்தல், நிறுக்குதல்.
தூக்குநூல் - கோறிகயிறு.

தூக்குப்பரிசை - செந்தூக்கு.
தூக்குமரம் - கொல்வோரைத் தூக்குமரம்.
தூக்குவிளக்கு - கொடிவிளக்கு.
தூங்கணம் - தூக்கணங்குருவி, தூக்கு.
தூங்கணி - ஓராபரணம்.
தூங்கமுட்டு - கோரைக்கிழங்கு.
தூங்கலன் - சோம்பன்.
தூங்கலாளி - தூங்குமூஞ்சி.
தூங்கலோசை - வஞ்சிப்பாவிஞேசை.
தூங்கல் - ஆடல், உறங்கல், ஓரோசை, கூத்து, சொரிதல், சோம்பல், சோம்பி, தணிதல், தாழ்தல், யானை. [வது.
தூங்கல்வண்ணம் - வஞ்சிபயின்றுவரு
தூங்காமை - அரசர்குணமூன்றிஞென்று; அது சோர்வில்லாமை.
தூங்கானைமாடம் - ஒரு சிவஸ்தலம்.
தூங்கிசை - நிரையொன்றுசிரியத்தளையான் வருவது.
தூங்கிசைச்செப்பல் - இயற்சீர்வெண்டளையான் வரும் வெண்பா.
தூங்கிசைத்துள்ளல் - கலிப்பாவோசையிஞென்று.
தூங்கிசையகவல் - நிரை நிரை யியற்றளையான் வருமகவல்.
தூங்குதல்-அசைதல், சொரிதல், சோம்பாயிருத்தல், சோர்தல், நாலுதல், வாடுதல்.
தூங்குமஞ்சம் - ஆடுமஞ்சம்.
தூங்குமூஞ்சி - தூக்கமுள்ளோன்.
தூசரம் - மங்கினவெண்மை.
தூசரன் - எண்ணெய்வாணிபன்.
தூசர் - வண்ணார்.
தூசி - குதிரை, கொடிப்படை, துகள், படைவகுப்பு, புழுதி.
தூசிகம் - புளியாரை.
தூசிதாங்கு - அழுக்குத்தாங்க உடையின்மேற்கட்டுந் துண்டுப்புடவை.
தூசிப்படை - கொடிப்படை.
தூசிபம் - கூடாரம்.
தூசு - சித்திரைநாள், சீலை, தூய்து, யானைகட்டுங்கயிறு, படைவகுப்பு, புழுதி.
தூசுதாங்கி - தூசிதாங்கி.
தூசுப்பு - தண்ணீர்விட்டான்.
தூடணம் } அசப்பியம், குற்றம்,
தூஷணம் } நிந்தனை, பழுதுபடுதல், மீறுதல்.
தூஷணன் - இராவணன் றம்பிமாரில் ஒருவன்.
தூஷணாரி - இராமன்.
தூஷணித்தல் - நிந்தித்தல்.
தூஷணை - நிந்தனை.
தூஷிகை - பீளை.
தூஷித்தல் - தீட்பாக்கல்.
தூஷிப்பு - தூஷணம்.
தூட்டி - சீலை.
தூட்டிகம் - தும்பை.
தூணம் - அம்புக்கூடு, தூக்கணம், தூண், பகை.
தூணி - அம்புக்கூடு, நாலுமரக்காலளவு.
தூணிகர் - செட்டிகள்.
தூணித்தல் - பருத்தல்.
தூணிப்பு - பருப்பம்.
தூணியங்கம் - அத்திப்பிசின்.
தூணீரம் - அம்புக்கூடு.
தூண் - தம்பம், பற்றுக்கோடு.
தூண்டல்-தூண்டில், தூண்டுதல். [க்கு.
தூண்டாவிளக்கு - தானேயெரியும்விள
தூண்டிக்காட்டல் - எடுத்துக்காட்டல்.
தூண்டில்-தோட்டி, மீன்பிடிக்குங் கருவியி ஞென்று.
தூண்டிவிடுதல் - உந்துதல், ஏவுதல்.
தூண்டு - தூண்டுதல், தூண்டென்னேவல், முயற்சி.
தூண்டுகுச்சி - தூண்டுகோல்.
தூண்டுகோல் - ஏவிவிடுவான், திரிதள்ளு மீர்க்கு.
தூண்டுதல் - எழுப்பல், ஏவுதல், செலுத்துதல், தள்ளுதல், நினைப்பூட்டுதல்.
தூதகம் - அருசி.
தூதம் - அசைவு, நிந்தை, தள்ளப்பட்டது.
தூதர் - ஒற்றர், கிங்கரர், சமாதானம் பேசுவோர்.
தூதல் - தாவுதல்.
தூதளை - தூதுவளை.
தூதனம் - மூங்கில்.
தூதன் - தூதுசெல்வோன், புதன்.
தூதாயி - ஒருவிதப்பூண்டு.
தூதிகை - தூதி.
தூது - ஒருபிரபந்தம்; அது காமுகர் பாணன் முதலிய வுயர்திணையையாவது கிள்ளை முதலிய அஃறிணையையாவது தூதனுப்புவதாகப் பாடுவது,

காரியம்பேசியிணக்குமாள், கோடாங்கல், சம்மதிபண்ணக் காரியம் பேசுவித்தல், செய்தி, பகை.
தூதுணம் } பொது, தூக்குணங்குருவி.
தூதுணி
தூதுணை } ஒருசெடி.
தூதுவளை
தூதுவன் - தூதன் புதன்.
தூதுளை } தூதுவளை.
தூதூவளை
தூதை - சிறுமுட்டி, சூதாடுபந்தயம்.
தூஸ்தம் - அணு, துகள், பாவம், பின்னல், மயிர்.
தூத்தியம் - செய்தி.
தூத்திரக்கூர்ச்சம் - ஆண்தருப்பை.
தூந்துதிருப்பிடித்தல் - நுட்ப ஆராய்ச்சிசெய்தல்.
தூபக்கலசம் - தூபங்காட்டுங்கலசம்.
தூபக்கால் - ஒரு தூபக்கருவி.
தூபங்கொடுத்தல் - தூபங்காட்டுதல் அது புண்ணிய மொன்பதினொன்று.
தூபமுட்டி - தூபக்கலசம்.
தூபம் - புகை.
தூபதண்டி - ஊதாரி.
தூபரம் - கொம்பில்லாமிருகம்.
தூபவருக்சம் - நறும்புகைப் பாண்டம்.
தூபனம் - தூபம், பிசின்.
தூபாயிதம் - அக்கினியில் மரணம்.
தூபி - மலைமுடி, முகடு.
தூபிகை - கோவில்முடி, தூமம். [பம்.
தூபிதம் - அக்கினியில் மரணம், வெப்
தூபிப்ரதிட்டை - சிகரத்தாபனம்.
தூமகம்பம் - ஒருற்பாதம்.
தூமகாரம் - சூதபாஷாணம்.
தூமகேதனன - தீ.
தூமகேது - அக்கினி, அக்கினிதேவன், கேதுகொடுமை, வால்நட்சத்திரம், விண்வீழ்கொள்ளி.
தூமத்துவசன் - தீ.
தூமப்பிரபை எழ்நரகவட்டத்தொன்று.
தூமம் - சூளை, புகை, புளிநறளை.
தூமம்போக்கி-புகைக்கூடு.
தூமயோனி - முகில்.
தூமலம் - கருமை, மிகச்சிவப்பு, பாவம்.
தூமாகாரம் - புகைவடிவு.
தூமாதிமார்க்கம் - பிதிர்க் கருமங்களைத் தவறுமற் செய்தவர்கள், பிதிர்லோகம் செல்லுமார்க்கம், பிதிரர்பொருட்டு வளர்க்கப்பட்ட அக்கிஹோத்ரத்தின் தூமகாரணம்பற்றி இப்பெயர் உண்டாயிற்று.
தூமான் - ஆசனம், ஆபரணச்செப்பு.
தூமியம் - புகை.
தூமிரகம் - ஒட்டகம்.
தூமிரகேது - தருபுத்திரன்.
தூமிரம் - தூமலம்.
தூமிராபம் - காற்று.
தூமிராக்ஷன் - சுமாலிபுத்திரன், இவன் அநுமனுற் கொல்லப்பட்டவன்.
தூமிரை - பிரஜாபதிபாரி, தான் என்னும் வசுவுக்குத் தாய்.
தூமை - தூய்மை, மகளிர்சூதகம், வெண்மை.
தூமோர்ணைபதி - யமன். [ண்மை.
தூமோரணை - யமன்மனைவி.
தூம் - ஓரளவு.
தூம்பல் - சுரை.
தூம்பா - தூம்பை.
தூம்பிரகருப்பம் - துத்தபாஷாணம்.
தூம்பிரம் - தூமிரம்.
தூம்பிராஷ்டகம் - ஒருகுளிகை.
தூம்பு - இடுக்குவழி, ஈயம், உட்டுளை, ஏரிமதகு, சலதாரை, பாதை, மரக்கால், மூங்கில், வழி, வாயில்.
தூம்பை - பாடை.
தூயது - சுத்தமானது.
தூயவர் - முனிவர்.
தூயவுடம்பினனுதல் - இறைவனெண்குணத்தொன்று.
தூயவுடம்புடைமை - கடவுளெண்குணத்தொன்று.
தூயாள் - சரச்சுவதி, சுத்தவாட்டி.
தூய்தன்மை - அசுத்தம்.
தூய்தாக்கல் - சுத்தமாக்குதல், செப்பம்பண்ணல்.
தூய்து } சுத்தம்.
தூய்மை
தூய்வெள்ளை - சுத்தவெள்ளை.
தூரகாரி - வருகாரியமறிவோன்.
தூரகாரியம் - காரியமொருவழியுங் காரணமொருவழியுமாய் நிகழ்வது.
தூரசூலை - ஒருசூலை.
தூரணம் - சீக்கிரம்.
தூரணி - தீவிரம், மலம், மனம். [யான்.
தூரதரிசி - தீர்க்கதரிசி, பண்டிதன், வலி

தூரதிட்டி } அஞ்சன பாஷாணம்
தூரதிருஷ்டி } தீர்க்கதரிசி, தூலப் பார்வை, முன்னுணர்ச்சி.
தூரதிட்டிக்கண்ணாடி - தூரத்திற் பொருளைக் கிட்டக் காட்டுமோர்கருவி.
தூரதை - தூரம்.
தூரத்தான் - அன்னியன்.
தூரஸ்திரீ - இடங்கரமானபெண்.
தூரம் - இசைக்கருவி, ஊமத்தை, சேய்மை, புறம்பு, விலாசம், வித்தியாசம்.
தூரல் - தூறுதல், வருத்தம்.
தூரவத்திரகம் - மிருவாணம்.
தூராகு - எலிச்செவிக்கள்ளி.
தூராதூரம் - வெகுதூரம்.
தூரி - ஊசல், ஊரி, எருது, தூரிக்கோல், பலகறை, பெருவலை.
தூரிகை }
தூரிகைக்கோல் } எழுதுகோல்.
தூரிக்கோல் }
தூரியகண்டம் - ஓரிசைக்கருவி.
தூரியக்கோல் - தூரிகை.
தூரியம் - ஆயுதப்பொது, ஈட்டி, உவகைப்பறை, எருது, எழுதுகோல், கைவேல், நல்லாடை, முரசப்பறை, வாத்தியப்பொது. [ன்.
தூரியன் - கடவுள், தூரத்திலேயுள்ளவ
தூரு - அடி. [ல்.
தூருதல் - மேவப்படுதல், வெளியடைத
தூருவாக்ஷி - வசுதேவன் தம்பியாகிய விருகன்பாரி.
தூரேத்தி - கம்பந்திராய்.
தூரோணம் - கவிழ்தும்பை.
தூர் - சேறு, தூவென்னேவல், மண்டி, வேர்.
தூர்க்கை - பூரநாள்.
தூர்ச்சடி - சிவன்.
தூர்தல் - நிரவுதல்
தூர்த்தத்தனம் - காமுகத்தன்மை.
தூர்த்தம் - அரப்பொடி, ஊமத்தை, தூர்த்தத்தனம்.
தூர்த்தர் - காமுகர், துட்டர், வஞ்சகர்
தூர்த்தல் - கூட்டல், செறுத்தல், நிரப்பு
தூர்த்தவியாபாரம் - தா[illegible] கநகை [தல்.
தூர்த்தன் - காமுகன், வஞ்சகன்.
தூர்த்தை - தூர்த்தக்குணமுள்ளவன்
தூர்ப்பு - நிரப்புதல்.
தூர்மம் - தேட்கொடுக்கி.
தூர்வம் - மீன்.
தூர்வகம் - சுமத்தல், பொதியெருது.
தூர்வாக்கிரம் - அறுகுநுனி. [தொன்று.
தூர்வாசம் - அட்டாதச வுபபுராணத்
தூர்வாசன் - ஒருமுனிவன், அவர் அத்திரிமகாரிஷியின் புத்திரர்.
தூர்வு - தூர்ப்பு.
தூர்வை - அறுகு, கிணற்றடைதார், கிணற்றைச்சார்ந்தநிலம், செத்தல், செய்கையினால் மிருதுபட்டநிலம்.
தூர்ஞ - முசற்புல்
தூலகம் - பருத்தி.
தூலகாயம் - தூலதேகம்.
தூலகார்முகம் - பஞ்சவட்டந்தடி.
தூலசரீரம் - புறவுடல்.
தூலசர்க்கரை - பருத்திவிரை.
தூலசிருட்டி - காணப்படுபூதியம்.
தூலசேசனம் - நூனூற்றல்.
தூலதனு - ஸ்தூலதேகம்.
தூலதேகம் - தூலசரீரம்.
தூலபஞ்சாக்கரம் - பூதபஞ்சாக்கரம்.
தூலபிசு - பஞ்சு.
தூலபூதம் - காணப்படுபூதியம்.
தூலப்பிரகாரம் - உறுப்புக்கேடு.
தூலம் - ஆகாயம், இலவமரம், கோரை, சீவதேகமூன்றினொன்று, அது தூலதேகம், நஞ்சு, நீர்முள்ளி, பஞ்சு, பருத்தி, பருமை, வீட்டுத்திரம்.
தூலவிருக்கம் - இலவமரம்.
தூலன் - தூளித்தவன்.
தூலாசம் - வில்.
தூலி - எழுதுகோல், பருத்தவள்.
தூலிகை - எழுதுகோல், மெத்தை, விளக்குத்திரி.
தூலித்தல் - பருத்தல், தூளித்தல்.
தூலிபலம் - இலவங்காய்.
தூலிப்பு - தூளிப்பு.
தூவினி - இலவு.
தூலை - பருத்தி.
தூவத்தி - வாள்.
தூவரம் - இடபம், துவர்ப்பு, மொட்டை.
தூவரன் - அண்ணகன்.
தூவரிகை - உவர்மண்.
தூவலகன் - மல்யுத்தத்தில் க்ருஷ்ணனாற் கொல்லப்பட்டவோரசுரன்.
தூவல் - அம்பிறகு, இறகு, எழுதுமிறகு, சிந்தல், தளிர், தூரியக்கோல்,

நீர்த்துளி, மழை, மழைத்துளி, மழைபெய்தல்.
தூவானம் - காற்றினாற் சிதறப்படு மழைத்திவலை.
தூவி - அன்னச்சிறகு, இறகு, மயிற்றோகை, மீன்சிறகு.
தூவு-வண், தூவுதல் தூவென்னேவல்.
தூவுதல் - சிந்துதல், தெளித்தல், மழைதூரல்.
தூளம் } தூள்.
தூளனம்
தூளி - அனுமானிதம், தூளியென்னேவல், பராகம், புழுதி.
தூளிகுச்சம் - கதம்பப்பொடி.
தூளிகேதாரம் - கொத்தளம்.
தூளிதம் - தூள், விபூதி.
தூளித்தல் - பருத்தல்.
தூளித்துவசம் - காற்று.
தூளிப்படலம் - புழுதிப்போர்ப்பு.
தூளிப்பு - பருப்பம்.
தூளிமட்டம் - தரைமட்டம்.
தூள் - கறித்தூள், சூரணம், புழுதி, பூந்தாது, பொடி.
தூறல் - பழிச்சொல்லல், மழை, மழைத்துளி, மழைபெய்தல்.
தூறவம் - நாவல்.
தூறன் - தூர்த்தன்.
தூறு - கூட்டம், சிலும்பல், சிறுசெடி, சிறுபற்றை, தூறென்னேவல், திராய், பழிச்சொல், பற்றைக்காடு, மஞ்சள்.
தூறுகுணம் - கடம்பு.
தூறுட்டி - சிற்றேலம்.
தூறுதலை - சிலும்பிய மயிர்த்தலை.
தூறுதல் - கிளைத்தல், சடைபற்றல், சிதறுதல், தூறுபடுதல், நிந்தித்தல், மழைதூமித்தல்.
தூறுபடுதல் - சடைபற்றல், சிதறிப்போதல், பரவுதல், பழமொழிகூறப்படல்.
தூறுபண்ணல் - அவதூறுசெய்தல்.
தூறுபுட்பம் - சிலந்தி, சீந்தில்.
தூறுபேசுதல் - தூற்றுதல், பின்பிதற்றல், பழிசொல்லுதல்.
தூறுமாறு - குழப்பம், தப்பு.
தூறுகாயன் - பழிச்சொற்காரன்.
தூற்றல் - சிதறுதல், தூற்றுதல், பழிகூறல், மழைத்தூரல்.
தூற்றுநெல் } பதர்பிரியாநெல்.
தூற்றுப்பொலி
தூற்றுரி - ஆராதூரி.
தூற்றுரித்தனம் - ஆராதூரித்தனம்.
தூற்று - தூற்றுதல், தூற்றென்னேவல், பழிப்பு.
தூற்றுக்காடு - சிறுதூறு, பற்றை.
தூற்றுக்கூடை - தூற்றுங்கூடை.
தூற்றுதலையன் - பிராய்மரம்.
தூறுவாதி - தீம்பாலை.
தூற்றுதல் - கோட்சொல்லல், சிதறல், சிலும்பச்செய்தல், நென்முதலியவற்றைத் தூற்றுதல், பழிகூறல், வீண்செலவுசெய்யல்.
தூற்றுமைக்கொற்றன் } ஒருகொடி.
தூற்றுவாய்க்கொற்றன்
தூனம் - அக்கினியில்மரணம், அசைதல், வருத்தம்.
தூனனம் - அகற்றல், அசைதல்.

---

## தெ



தெகிடி - ஒரு விளையாட்டு, புரட்டு.
தெகிட்டு - தெவிட்டு.
தெகிள் - ஒரு கொடி.
தெகுட்டல் - தெவிட்டல்.
தெகுட்டி } தேட்கொடுக்கி.
தெகுட்டிகை
தெகுளம் - நிறைவு, பெருக்கம்.
தெகுளல் } நிறைதல், பெருகுதல்.
தெகுளுதல்
தெக்கணம் - தெற்கு.
தெங்கங்காய் - தேங்காய்.
தெங்கணம் - தேயமைம்பத்தாறில் ஒன்று.
தெங்கநாடு - குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றுக்கு இடையிலிருந்த நாடு.
தெங்கு - சத்ததீவிலொன்று, தென்னமரம்.
தெசகண்டன் } இராவணன்.
தெசகந்தரன்
தெசமுகன்
தெசம் - தசம்.
தெசலம் - தேமா.
தேசலம் - மா.
தெசனி - பெருங்குரும்பை, மஞ்சள்.

தெட்சகன் - இரட்சிப்பவன், சாமர்த்தியன், தட்சகன்.
தெட்சணகயிலாயம் - தென்கயிலை,சீகாளத்தி.
தெட்சணருவம் - தென்முனை.
தெட்சணபூமி - தென்பூமி.
தெட்சணம் - தெட்சிணம். [சம்.
தெட்சணதி - மேருவுக்குத் தென்பாரிசம்.
தெட்சணமூர்த்தி-அகத்தியன், சிவன்.
தெட்சணவிருத்தம் - வலம்புரிச்சங்கு.
தெட்சணை - காணிக்கை, வலப்பக்கம்.
தெட்சிணம் - தெற்கு, வலப்பக்கம்.
தெட்டத்தெளிய - மிகுதெளிவாய்.
தெட்டல் - அபகரித்தல்.
தெட்டு - எத்து, தெட்டென்னேவல், யானைக்கணையம்.
தெட்டுதல் - வஞ்சித்தல்.
தெட்பம் - தெளிவு, முதிர்ச்சி.
தெண் - தெளிவு.
தெண்டம் - அபராதம், வணக்கம்.
தெண்டனை - தண்டனை.
தெண்டன் - வணக்கம், வணங்கல்.
தெண்டி - தண்டி, தெண்டியென்னேவல்.
தெண்டித்தல் - ஒறுத்தல், சிட்சித்தல், பிரயாசப்படல்.
தெண்டிப்பு - கண்டிப்பு, பிரயாசம்.
தெண்டிரை - சமுத்திரம்.
தெண்டு - தண்டு.
தெண்டுதல் - மிண்டுதல்.
தெண்டை - நெருக்கிடை.
தெண்ணீர் - தெளிநீர்.
தெண்மை - சாமர்த்தியம், தெளிவு.
தெத்தம் - தத்தம்.
தெத்து - தெற்று.
தெத்துமாற்று - அத்துமாற்று.
தெத்துவம் - கொடுத்தல்.
தெந்தன - தாளக்குறிப்பு.
தெந்தி - நேர்வாளம்.
தெப்பம், தெப்பல் - புணை.
தெம்பல் - சேறு.
தெம்பாங்கு - ஒருவகைச்சந்தம்.
தெம்மாடி - அறிவீனன்.
தெம்முனை - இரணகளம், பகைமுகம்.
தெய்ய - இடைச்சொல் (உ-ம்) சொல்லென்றெய்ய.
தெய்வகட்டாடி - ஆவேசங்கொண்டாடுவோன்.
தெய்வகளை - தெய்வமயம், தெய்வவிளக்கம்.
தெய்வகாரியம் - தெய்வகருமம்.
தெய்வகாவல் - தேவதுணை.
தெய்வசகாயம் - தேவவுதவி.
தெய்வசாட்சி - தெய்வமத்திட்சம்.
தெய்வசாயல் - தேவலோகம்.
தெய்வசிந்தனை, தெய்வசிந்தை - தெய்வதியானம்.
தெய்வசுரபி - காமதேனு.
தெய்வசோதனை - தேவபரிசோதனை.
தெய்வச்செயல் - தெய்வத்தின்செய்கை.
தெய்வதம் - தெய்வம்.
தெய்வதயானை - தெய்வயானை.
தெய்வதுணை - தெய்வவுதவி.
தெய்வதூஷணம் - தேவதூஷணம்.
தெய்வத்தாபனம் - தேவப்பிரதிட்டை.
தெய்வத்தீர்வை - தேவதீர்ப்பு.
தெய்வத்துதி - கடவுள் வாழ்த்து.
தெய்வத்துரோகம் - தெய்வபாதகம்.
தெய்வத்துவம் - தெய்வீகம்.
தெய்வநிந்தை - தெய்வதூஷணம்.
தெய்வநியமம் - தெய்வத்தீர்ப்பு, தெய்வம் நியமித்தது.
தெய்வபயம் - தெய்வபக்தி, தெய்வவசம்.
தெய்வபூசை - தேவாராதனை.
தெய்வபோகம் - தேவானுபவம்.
தெய்வப்பசு - காமதேனு.
தெய்வப்புலமை - சரசுவதிவாக்கு,தெய்வீகவுணர்ச்சியுடன்படுதல்.
தெய்வப்பெயர்த்தொகுதி - நிகண்டில் ஒருபாகம்.
தெய்வமணம் - திவ்வியமணம், வேள்வியால் வந்த கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது.
தெய்வமத்தியட்சம்-தேவநடுத்தீர்வை.
தெய்வமந்திரி - வியாழன்.
தெய்வம் - ஊழ், எண்வகை மணத்திலொன்று, ஐவகை யாகத்தொன்று, கடவுள், வருடம்.
தெய்வயாகம் - பஞ்சமாவெச்சத்தொன்று அது ஓமம் வளர்த்தல்.
தெய்வயானை - குமரன்றேவி.
தெய்வயானைகாந்தன் - குமரன்.
தெய்வவிரதன் - வீடுமாசாரி.
தெய்வவுத்தி - ஸ்ரீதேவியென்னுந் தலைக்கோலம்.
தெய்வாதீனம் - தெய்வசுதந்திரம், தெய்வத்திற்கடங்கியது.

தெய்வாராதனை - தெய்வவழிபாடு.
தெய்வாவி - பரிசுத்தாவி.
தெய்விகம் } தெய்வத்தன்மை.
தெய்வீகம் }
தெய்வேத்தனம் - தெய்வச்செயல்.
தெய்வோபாசனை - தேவவழிபாடு.
தெரிகடை - தீரக்கழிகடை.
தெரிகவி - பலகவியுட் டெரிந்தெடுக்குங்கவி.
தெரிசனம் - தரிசனம்.
தெரிசித்தல் - தரிசித்தல்.
தெரிசியம் - காட்சி.
தெரிசொல் - அருமொழிவிளக்கம், காரணம், சத்தியம்.
தெரிதால் - அறிதல், தோற்றுதல்.
தெரிதருதேற்றவுவமை-ஐயுற்றதனைத் தெரிந்துதுணிவது, (உ-ம்) கறைவிரவாததனால் மதியன்று முகமே.
தெரிதல் - அறிதல், ஆராய்தல், ஆலோசித்தல், காணல், தெரிந்து கொள்ளுதல்.
தெரித்தல்-எழுதல்,கொழித்தல்,சொல்லல், தெரிவித்தல், பங்கிடுதல், மாறுபடுதல்.
தெரிநிலை - விளங்கிநிற்பது.
தெரிநிலைவினை - கருத்தாகாலம் கிரியையெனும் மூன்றனையும் விளங்கிநிற்கும்வினை.
தெரிநிலை வினைப்பெயரெச்சம் - செயலுங்காலமும் விளக்கிப் பெயரையவாவிநிற்பது.
தெரிநிலைவினைமுற்று - செயல்காலம் வினையெனு மூன்றனையும் விளக்கி முற்றுப்பெற்று நிற்பது.
தெரிநிலைவினைவினையெச்சம் - செயல் காலமிரண்டையும் விளக்கி வினையையவாவிநிற்பது. [தோன்றுதல்.
தெரிபடுதல் - தெரிந்தெடுக்கப்படுதல்.
தெரிப்பு - அறிவிப்பு,ஆராய்வு,எழுதல், கொழிப்பு, சொல்லுதல், பிரிப்பு.
தெரிமா - சிங்கம்.
தெரிமானனப்புள் - ஆந்தை.
தெரியக்காட்டுதல் } வெளிப்படுத்துதல்.
தெரியக்கொடுத்தல் }
தெரியப்படுதல் - காணப்படுதல்.
தெரியப்படுத்துதல் } அறிவித்தல், காண்பித்தல்.
தெரியப்பண்ணுதல் }
தெரியலர்-அறிவீனர்,தரியலர்பகைஞர்
தெரியல் - ஆராய்தல், காணல், பூமாலை.
தெரியவருதல் - அறிதல்.
தெரியவைத்தல் - அறிவித்தல்.
தெரியாத்தனம் } அறியாமை, தோன்றாமை.
தெரியாப்புத்தி }
தெரியாமை }
தெரியிழை - பெண்.
தெரிவிடுதல் - ஆராய்தல், தெரிந்தெடுத்தல்.
தெரிவித்தல் - அறிவித்தல்,வெளிப்படுத்தல்.
தெரிவு - அறிவு, ஆராய்வு, தெரிதல், தெரிந்தெடுக்கப்பட்டன.
தெரிவை - இருபத்தாறுமுதல் முப்பத்தொருவயதிற்பெண், பெண்.
தெரு - வழி, வீதி.
தெருட்சி - அறிவு, தெளிவு.
தெருட்டு - இருது, தெருட்சி, தெருட்டென்னேவல்.
தெருட்டுக்கல்யாணம்-இருதுச்சடங்கு.
தெருட்டுதல் - அறிவுறுத்தல்,மனதைத் தெளிவித்தல், வற்புறுத்தல்.
தெருண்டபெண் - இருதுவானபெண்.
தெருண்டமேலவர்-அறிவிற்சிறந்தோர்
தெருமரல் } சுழலல், நம்பிக்கையற்றிருத்தல்.
தெருமருதல் }
தெருவிலழகி - குப்பைமேனி.
தெருவு - தெரு.
தெருளல் - இருதுவாதல், தெளிதல்.
தெருளுடைமை - அறிவு, ஞானம்.
தெருளுதல் - தெருளல்.
தெருள் - அறிவு, தெருளென்னேவல், தெளிவு.
தெருள்வின்மை - தெளிவின்மை.
தெருள்வு - தெளிவு.
தெர்ப்பாரண்ணியேசுவரர் - திருநள்ளாற்றிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமி திருநாமம்.
தெலிங்கம் - ஒருதேயம்.
தெலிங்கு } ஒருபாடை.
தெலுங்கு }
தெல் - அஞ்சல், கலாதி, நெடுங்கிடங்கு, நெடும்பாத்தி.
தெல்லாட்டம் - அணுப்பு,இழுபறி,எத்து, குழப்பம்.
தெல்லு - தெல்.
தெல்லுக்கட்டுதல் - இழுப்பறிப்படுதல், பாத்திகட்டுதல்.
தெல்லுக்காரர் - அஞ்சற்காரர்.

தெல்லுப்பு - வளையலுப்பு
தெல்லோட்டு - தொந்தறை.
தெல்லோட்டுதல் - தொந்தறைபண்ணு [தல்.
தெவம் - மாமரம்.
தெவிட்டல் தெவிட்டுதல்
தெவிட்டு - தெவிட்டென்னேவல், நிறைவு, வெறுப்பு.
தெவிட்டுதல்-உமிழ்தல்,ஒலித்தல்,தேக்கிடுதல், நிறைதல், நினைத்தல், வாந்தித்தல்.
தெவிளல் } நிறைதல்.
தெவிளுதல் }
தெவு - எடுத்துக்கொள்ளுதல்.
தெவுட்டல் - அடைத்தல், கொப்பளித்தல், சத்தித்தல், தங்குதல், நிறைதல், நினைத்தல், மறைத்தல்
தெவுட்டு-தெவுட்டென்னேவல், நிறைவு.
தெவிளல் } பெருகுதல்.
தெவிளுதல் }
தெவ் - சத்துரு, பகை, போர்.
தெவ்வர் - பகைவர்.
தெவ்வினை - போர்.
தெவ்வு-சத்துரு,சத்திரன்,பகை,போர்.
தெவ்வூன்றி - இராகு.
தெழித்தல் - அதட்டல், கோபம், சினக்குறிப்பு, துவைத்தல்,பேரொலி,பிரித்தல்.
தெழிப்பு - இரைச்சல்,தொனி
தெளி - ஒளி, விற்கால்.
தெளிஞன் - அறிஞன், கல்வியிற்சிறந்தோன்.
தெளிதல் - அறிதல், ஆராய்தல், ஆலோசனை, ஊடுருவுதல்,கலக்கம், கொழுக்குதல் சுத்தமாதல்,தேறுதல்,நீங்கல்.
தெளித்தல் - ஒலித்தல்,கொழித்தல்,சுத்தமாக்குதல்,தூவல், தெரித்தல்,நிச்சயித்தல், புரோட்சித்தல், விதைத்தல்.
தெளிநீர் - சுத்தநீர்.
தெளிப்பு-தெரிப்பு,நிச்சயம், விதைப்பு.
தெளிமணி - நல்லிரத்தினம்.
தெளிர்-உள்ளோசை, தெளிரென்னேவல்.
தெளிர்தல் - பிரகாசித்தல், பேசலாவெழுமொலி, பொருந்துதல்.
தெளிவித்தல் - அறிவித்தல், தெரியப்பண்ணல், விவரித்தல்.
தெளிவு - அறிவு,குணவலங்காரம்பத்தினொன்று அது கவியாற்கருதியபொருள்விளக்கத்தொடுப்பது,கொழுப்பு, தீர்க்கம், துணிவு, தெளித்தெடுக்குங்கஞ்சி, மனத்தேற்றம், வெளிச்சம்.
தெளிவுகொடுத்தல் - உணர்வுவரப்பண்ணல்.
தெளிவெண்ணெய் - நறுவேப்பெண்ணெய்.
தெள் - தெள்கு, தெள்ளெனேன்வல்.
தெள்கு-ஒருபூச்சி,தெள்கென்னேவல்.
தெள்குதல் - தெளிவித்தல், வீசுதல்.
தெள்விளி - ஓரிராகம், மகிழ்ச்சியாலார்
தெள்ளச்சி - பூநீறு.
தெள்ளத்தெளிதல் - நன்றாய்த் தெளிதல்.
தெள்ளல் - தெள்ளுதல்.
தெள்ளி - யானை.
தெள்ளிமை - அறிவு, தெளிவு.
தெள்ளியர் - அறிவுடையோர், கல்வியிற் சிறந்தோர்.
தெள்ளு - தெள்கு, தெள்ளுதல், தெள்ளென்னேவல்.
தெள்ளுதமிழ் - செந்தமிழ்.
தெள்ளுதல் - கொழித்தல்,தெளிவித்தல்.
தெள்ளேணம் - மகளிர்விளையாட்டு.
தெறி - அணி, அங்கி முதலியவற்றின் கடைப்பூட்டு,சிதறுகை,தெறியென்னேவல்.
தெறிகெடுதல் நிலைகெடுதல்.
தெறிச்சடித்தல் - சிதறடித்தல்.
தெறிக்குதல் } அட்டா அட்டி பண்ணல், அதைத்தல், சிந்தல், பாய்தல், முரிதல்.
தெறித்தல் }
தெறிப்பு - அதைப்பு, சிந்துதல், சுண்டுகை, முரிவு.
தெறிமுற்றினது - முழுதும்பழுத்தது.
தெறியன் - ஐதானது
தெறிவில் - சுண்டுவில்.
தெறுக்கால் - தேள், விருச்சிகவிராசி.
தெறுதல் - அழித்தல், தங்குதல்.
தெறுத்தல் - நெறித்தல்.
தெறுநர் - கொலையாளர், பகைவர்.
தெற்கித்தி - தெற்கேயுள்ளது.
தெற்கித்தியகாற்று - தென்காற்று.
தெற்கித்தியான் - தென்சீமையான்.
தெற்கு - தெக்கணதிக்கு.
தெற்பை - தருப்பை.
தெற்றல்-அலைத்தல்,இழைத்தல்,இறுக்கல், உடுத்தல், தடைப்படுதல், பின்னல், மாறுபடல்.
தெற்றி - சித்திரகூடம், திண்ணை.
தெற்றித்தல் - தெற்றுதல்.
தெற்று-அடைப்பு,இழைப்பு,தெற்றல், தெற்றென்னேவல், பின்னல்.

தெற்றுக்கால் - முட்டிக்கால்.
தெற்றுதல் - தெற்றல்
தெற்றுமாற்று - திரியாவரம்.
தெற்றுவாய் - திக்குவாய்.
தெற்றென - தெளிய, விரைய.
தெற்றெனல் - தெளிதல், விரைவுக்குறிப்பு.
தெற்றெனவு - தெளிவு.
தெனாது - தெற்கு, தெற்குள்ளது.
தென் - அழகு, இசை, எதிர், கருமை, தெற்கு, தென்னமரம்.
தென்கயிலை - பொதியமலை, திருக்காளத்தி.
தென்கலை - தமிழ்.
தென்காசி - பாண்டிநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
தென்காஞ்சி - ஆதிசங்கரர் காலத்திலே செங்குந்தமுதலிகள்குடியேறிய ஒரு பட்டினம்.
தென்கால், தென்காற்று - சோழகம்.
தென்கிழக்கு, தென்கீழ்திசை - அக்கினிமூலை.
தென்கீழ்திசைப்பாலன், தென்கீழ்த்திசையிறை - அக்கினிதேவன்.
தென்குமரி - ஓரியாறு.
தென்குரங்காடுதுறை - காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம்.
தென்சார் - தென்பக்கம்.
தென்சிதம்பரம் - ஒருதலம்.
தென்படுதல் - கிடைத்தல்.
தென்பரதம் - தென்பாரதம்.
தென்பாண்டி - கொடுந்தமிழ் நாட்டில் ஒன்று.
தென்பாரதம் - நவகண்டத்தொன்று; அதுபாரதகண்டத்திற்றென்பக்கம்.
தென்பாரிசம் - தென்றிசை.
தென்பாலிரேபதம் - நவகண்டத்தொன்று.
தென்பால் - தென்பக்கம்.
தென்பால்விதேகம் - நவகண்டத்தொன்று.
தென்புலத்தார் - பிதிர்கள்.
தென்புலம் - இயமலோகம்.
தென்புறம் - தென்பக்கம்.
தென்பூமி - பூமியின்றென்பக்கம், மேருவின்றெனபால்.
தென்மதுரை - திருவாலவாய்.
தென்மலை - சோலைமலை, பொதியமலை.
தென்முனை பூமியின்றென்புறக்கோடி.
தென்மேல், தென்மேற்கு, தென்மேற்றிசை - நிருதி திசை.
தென்மேற்றிசைப்பால் - நிருதி.
தென்விதேகம் - தென்பால்விதேகம்.
தென்றமிழ் - செந்தமிழ்.
தென்றல் - தென்றற்காற்று, முன்பனிப்பருவத்தின்காற்று.
தென்றற்றேரோன் - மன்மதன்.
தென்றி - தெற்கு, தென்காற்று.
தென்றிசை - தெற்கு.
தென்றிசைக்கோன், தென்றிசைப்பாலன் - இயமன்.
தென்றிருப்பேரை - பாண்டிநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
தென்னங்கிளி - கிளியினோர்பேதம்.
தென்னங்குரும்பை - தென்னம்பிஞ்சு.
தென்னமரம் - தெங்கு.
தென்னம்பிள்ளை - தென்னங்கன்று.
தென்னர் - பகைவர்.
தென்னவன், தென்னன் - பாண்டியன்.
தென்னிரேபதம் - தென்பாலிரேபதம்.
தென்னி - வாழை.
தென்னிலங்கை - இராவணன் பட்டணம்.
தென்னிலம் போர்க்களம்.
தென்னை - தென்னமரம்.

## தே

தே - ஓரெழுத்து, கடவுள், கிருபை.
தேககாந்தி - சரீரவொளி.
தேககோசம் - தோல்.
தேகக்கல் - நீலக்கல்.
தேகசம்பந்தம் - சரீரசேர்வை.
தேகசாரம் - மூளை.
தேகட்சயம் - நோய்.
தேகதாரகம் - என்பு.
தேகத்தியாயம் - உயிரைக் கொடுத்தல், சரீரப்பற்றுவிடல், மரணம்.
தேகத்திரயம் - சரீரத்திரயம்.
தேகநாசம் - சரீரவழிவு.
தேகபந்தம் - சரீரசேர்மானம்.
தேகமண் - செம்மண்.

தேகம் - உடல்.
தேகயாத்திரை - சரீரபோஷணை, மரணம்.
தேகரசம் - வெயர்வை.
தேகராசம் - கரிசாலை.
தேகனி - மஞ்சள்.
தேகாதாரம் - உண்டி, எலும்பு.
தேகாத்துமவாதி-சாருவாகமதஸ்த்தன்.
தேகாந்தம் - மரணம்.
தேகாபரணம் - உடை.
தேகாபிமானம் - சரீரப்பராமரிப்பு.
தேகி - சீவாத்துமா, புல்லூரி.
தேகிகை - ஒருபுழு.
தேக்கம் - தியக்கம், நிலைநீர், நிறைவு.
தேக்கல் - தியங்குதல், நிறைதல்.
தேக்கிடுதல் - தெவிட்டல், நிறைதல்.
தேக்கு - ஒருமரம், ஏழுகு, தித்திப்பு, தெவிட்டு, நிறைவு, தேக்கென்னேவல்.
தேக்குதல் - தடைபண்ணுதல்; தெவிட்டுதல், நிறைதல்.
தேக்கெறிதல்-ஏப்பமிடல், தெவிட்டல், நிறைதல்.
தேங்கல் - அச்சக்குறிப்பு, நிறைதல்.
தேங்காய் - தெங்கங்காய்.
தேங்காய்க்கயில் - தேங்காய்ப்பாதி.
தேங்காய்க்கீரை . ஒருகீரை.
தேங்காய்த்துருவல் - தேங்காய்ப்பூ.
தேங்காய்ப்பாரை - ஒருமீன்.
தேங்காய்ப்பால் தேங்காய்ப்பூவின்பால்.
தேங்காய்ப்பூ - தேங்காய்த்துருவல்.
தேங்காய்ப்பூக்கீரை } பீளைசாறி.
தேங்காய்ப்பூநாறி }
தேங்காய்மொத்தி - மாட்டின்முன்காலூடேயிருக்குந்திரட்சி.
தேங்கிட்டி - தேள்கொடுக்கி.
தேங்குதல் - அஞ்சல், நிறைதல்.
தேசகன் - ஆளுகைக்காரன்.
தேசகாலம் - இடமும், நேரமும் நெடும்பொழுது.
தேசசஞ்சாரி - பரதேசி.
தேசசு - தேயசு, அழகு.
தேசசுவாதியம் - தேயத்தின்சுகம்.
தேசதருமம் - தேசகட்டளை; தேசவொழுங்கு.
தேசநம் - மூங்கில்.
தேசபாடை-அவ்வவ்தேயத்திற்குரியபாஷை.
தேசபாரம்-இராச்சியபொறுப்பு.
தேசப்பழமை - தேசவழக்கம்.
தேசமுகி - இறைமுதலியவெழுதுவோன்.
தேசம் - இடம், உறைப்பு, கட்டளை, கூர்மை, நாடு, பங்கு, பிரபை.
தேசரூபம் - தேசாசாரம்.
தேசவழக்கம் } தேசநடபடி.
தேசவளமை }
தேசவியவகாரம் - தேசவழக்கம்.
தேசனம் - திருத்தம்.
தேசனி - மஞ்சள்.
தேஜஸ்வி - அகத்தியன் பௌத்திரன், திருசியன் புத்திரன்.
தேசா - ஒருபண்.
தேசாசாரம் - தேசநடை.
தேசாச்சாரம் - மயிர்.
தேசாட்சரி - ஓரிராகம்.
தேசாதி - கவரைசாதித்தலைவன்.
தேசாதிபதி - தேசத்தையாள்வோன்.
தேசாதிபத்தியம் - தேசத்தையாளுமதிகாரம்.
தேசாதேசம் - ஒவ்வோர்தேசம்.
தேசாந்தரம் - பரதேசம்.
தேசாந்தரி - பரிதேசி.
தேசாந்திரம் - பூமத்தியின்சாய்ப்பு.
தேசாந்திரரேகை - பக்கவரி.
தேசாவரம் - ஒருசெடி.
தேசி - எலுமிச்சை.ஓரிராகம், குதிரை, பாதவுறுப்புள்ஒன்று, பெருங்குதிரை.
தேசிகம்-அவ்வவ்நாட்டுச்சொல், அழகு, ஒளி, ஒருகூத்து, காந்தி, பொன்.
தேசிகன் - அரசன், அழகன், உபாத்தியாயன், குரு, தேசாந்தரி, வணிகன், வேதமோதுவிப்போன், வேதாந்ததேசிகன்.
தேசிக்காய் - எலுமிச்சங்காய்.
தேசிதம் - கூர்மை.
தேசியம் - திசைச்சொல்.
தேசு அழகு, உறைப்பு, ஒளிகாங்கை, கீர்த்தி, கூர், பலம், பொன், மகத்துவம், மனக்கதி, மூளை, விந்து, வீரம்.
தேசோபத்திரவம் - தேயவியாகுலம்.
தேசோபிந்து - உபநிடதமுப்பத்திரண்டில் ஒன்று.
தேசோமந்தரம் - நெல்லி.
தேசோமயம் - அழகு, பிரபை, பேரொளி.
தேசோரூபம் - ஒளி, ஒளியுருவம்.
தேசோரூபன் - கடவுள்.
தேசோவதி - யானைத்திப்பிலி.
தேஜோவதி - அக்கினிதேவனது நகரம், இது சோதிமயமாயிருக்கும்.
தேடல் - தேடுதல்.

தேடாக்கூறு - தேட்டாக்கூறு, பராமரிப்பின்மை.
தேடாமை - விசாரியாமை.
தேடிதம் - தோத்திரஞ்செய்தல்.
தேடுதல் - சம்பாதித்தல், பராமரித்தல், விசாரித்தல்.
தேட்கடை - ஒருமூலி, மூலநாள்.
தேட்குமச்சி - கதண்டு.
தேட்கெண்டை - ஒருமீன்.
தேட்கொடுக்கி } ஒருசெடி.
தேட்கொடுக்கிலை } ஒருசெடி.
தேட்டக்காரன் - சம்பாத்தியக்காரன்.
தேட்டம் - ஆராய்வு, கவலை, சம்பாத்தியம், சேகரித்தபொருள், சேகரிப்பு, மராமரிப்பு, பேரவா.
தேட்டாக்கூறு - தேடாத்தன்மை.
தேட்டாண்மை - சம்பாதிப்பு, நாட்டம், விசாரிப்பு.
தேட்டாளன் - தேட்டக்காரன்.
தேட்டு - தேட்டம்.
தேட்டை - தெளிந்தநீர், தெளிவு, தேட்டம்.
தேணிறம் - மாந்தளிர்க்கல்.
தேண்டுதல் - தேடுதல்.
தேதி - திகதி.
தேநவர் - சுகூதரோடு ஆயுர்வேதங்கற்றவர்.
தேமம் - ஈரம்.
தேமல் - படர்சுணங்கு.
தேமனம் - சிரமம், புளிப்பு.
தேமா - இருநேரசைச்சீர் வாய்பாடு, தித்திப்பு மாமரம்.
தேமாங்கனி - நேர்நேர் நிரையசைச்சீர் வாய்பாடு.
தேமாங்காய் - மூன்றுநேரசைச்சீர்வாய்பாடு.
தேமாநறுநிழல் - நேர்நேர்நிரைநிரைசீர் வாய்பாடு.
தேமாநறும்பூ - நேர்நேர்நிரை நேர்சீர்க்கு வாய்பாடு.
தேமாந்தண்ணிழல் - நேர்நேர்நேர்நிரை சீர்வாய்பாடு.
தேமாந்தண்பூ - நான்கு நேரசைச்சீர்
தேம் - இடம், ஈரம், எழனுருபு (உ-ம்) கோடாய்தேத்து, கள், தித்திப்பு, தேசம், தேன், வாசனை.
தேம்பல் - அழுகை, இளைத்தல், தேய்தல், பழம்பூ, மெலிதல், வாடல்.
தேம்பாவணி - ஒருகாப்பியம்.
தேம்புதல் - அழுகை, தேம்பல், தேய்தல்.
தேயசு - அழகு, ஒளி, விந்து.

தேயபரிச்சேதம் - ஒருதேசத்துண்டு ஒருதேசத்தின்றென்பது.
தேயாமணி - வைரமணி.
தேயம் - இடம், உடல், ஒளி, களவு, கொடைப்பொருள், நாடு.
தேயவாதனம் - ஒரு தாண்மடித்துமற்றைத் தாளூன்றியிருப்பது.
தேயு - தீஅது சிவனட்ட மூர்த்தத்தொன்று.
தேயுடலி - தேவாங்கு.
தேய்கடை - தேய்ந்தது.
தேய்தல் - உரைதல், குறைதல், மெலிதல்.
தேய்தவளை - தேரை.
தேய்த்தல் - அழித்தல், உரைத்தல், குறைத்தல், கொல்லல், துலக்கல்.
தேய்பிறை - அபரபக்கச்சந்திரன்.
தேய்ப்பு - தேய்த்தல்.
தேய்மானம் - சிக்கனம், தேய்வு, பொன்னுரை.
தேய்வாங்கு - தேவாங்கு.
தேய்வு - அழிதல், உரைதல், குறைவு, மெலிவு.
தேய்வை - பரிமளச்சாந்து.
தேரகன் - தேர்ப்பாகன்.
தேரடி - தேர்ச்சுவடு, தேர்நிலை, தேர்முட்டி.
தேரர் - பௌத்தர்.
தேரலர் - பகைவர், மதியீனர்.
தேரல் - தேன்.
தேரன் - ஒரு வைத்தியசாத்திரப் புலவன்.
தேரார் - கல்லாதவர், கீழ்மக்கள், பகைவர், மதியீனர்.
தேராள் - தேரேற்றத்தானை.
தேரி - மணற்றிட்டை.
தேரிடக்கியம் - தேர்க்கொடி.
தேருமச்சி - நத்தை.
தேரை - இட்டமானவீகை, தவளையின் ஒருபேதம்.
தேரைபாய்தல் - நோய்பட்டுடறேய்தல்.
தேரைமேய்தல் - உல்லிபற்றல்.
தேரையர் } தேரன்.
தேரையன் } தேரன்.
தேரனர் } தமிழிலே அகஸ்தியரிடத்து வைத்தியங் கற்ற மாணாக்கருள்ளே முதன்மை பெற்றவர், வைத்தியத்தில் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் மில்லாதவர், சாரீரம் நிதானம் சிகித்சை முதலிய துறைகளிலெல்லாம் மிகுசமர்த்தர், பதார்த்த
தேரையர் } தமிழிலே அகஸ்தியரிடத்து வைத்தியங் கற்ற மாணாக்கருள்ளே முதன்மை பெற்றவர்...

குணமெல்லாம் கடைபோக ஆராய்ந் தவர் பதார்த்தகுண சிந்தாமணியென் னும் சிறந்த நூல் செய்தவரும் இவரே. தமிழிலே இறந்தன ஒழிய எஞ்சியுள்ள உண்மைப் புராதனவைத் திய நூல்கள் இவராற் செய்யப்பட்ட னசிலவே, மற்றைய வெல்லாம் கற் பித நூல்களேயாம். நீர்க்குறி, நெய்க் குறி, தயிலவருக்கச்சுருக்கம், கஷா யம்நூறு, பதார்த்தகுணம், சிகித்ஸை ஆயிரம் முதலியன இவராற்செய்யப் பட்டன. சிகித்ஸை ஆயிரமும் அச் சிடுவோரால் ஆராய்வின்றி இடை யிடையே பிழைபட் டிருக்கின்றது. தேரையர் கூறும் சிகித்ஸைகள் உள் ளபடியே செய்யப்படுமாயின் தவ ருது, சாஸ்திர வைத்தியத்திலும் சி றந்ததாகிய கபாலசல்லியத்திலே பெ யர் படைத்தவ ரென்ருல் அந்தத்து றையில் அவர் வல்லுநத்தன்மை சொல்லவொண்ணுது, ஒருவாற்ரு னும் நீங்காததலைக்குத்தினுல் வருந்தி னஅரசனொருவனுக்கு, அந்நோயின் காரணத்தை நிதானித்துச் சம்மோ கினியைப் பிரயோகித்து அவனை ம யக்கி அவன்கபாலத்தைத் திறந்து அ மிர்தத்திலிருந்த தேரையை ஒரு நீர்க் கிண்ணத்தினுள்ளே பாய்வித்துப் பின்பு சந்தானகரணியினுலே அந்தக் கபாலத்தை முன்போலப் பொருத்தி அந்தநோயை நீக்கினுரென்பது கார ணபரம்பரை, இதற்கொப்பான சரித் திரமொன்று போஜப்ரபந்தம் என் னும்வடநூலினுங்கூறப்பட்டுள்ளது, அஷ்டவித பரீக்ஷையினுலே யன்றி நோயினது சாத்தியா சாத்தியங்களை ஆடிக் கலசத்திற்பெய்த மூத்திர நடு வேவிட்ட ஒரு துளியெண்ணெ யைக்கொண்டுபண்டிதரல்லாதவரும் உணர்ந்து கொள்ளுமாறு நெய்க்குறி நூல்செய்தவர் தேரையரே.

சூத்திரங்களுட் சிலவருமாறு

“விடுதுளிசிதறிவெவ்வேருயின்ம ற்கடுகெனப்பாவிற்கைவிடன்முறை யே” “அவியுமூத்திரமுமணந்தொன் றினுவி, அவியுமென்றல் கவுதம ரறையே” “மூல்லை யரும்புமுளரிப் பூவுஞ், சொல்லிய துளியிட்டோற் றிடுமாயின்,” இல்லையில்லை நோயெ ன்பது சாதமே.

தேரோடும்வீதி - கோயிற்புறவீதி.

தேரோட்டு - தேரிழுப்பு.

தேரோன் - இரதவீரன், சூரியன்.

தேர் - இரதம்அது நால்வகைத்தானையி னென்று,உரோகணிநாள்,தேரொன் [னேவல்.

தேர்க்கை - தீர்மானம்.

தேர்க்கவி - மிறைக்கவியி னென்று,அ து தோரங்கமாய்க் கோடுகீறியெழுத் தடைக்குங்கவி.

தேர்க்காரன்-தேரேற்றக்காரன்,தேர்ப் [பாகன்.

தேர்க்கால் - தேர்ச்சில்.

தேர்க்குடம் - தேர்முடி.

தேர்க்கூம்பு - கொடிஞ்சிமரம்.

தேர்க்கொடி - தேரிடக்கியம்.

தேர்க்கொடுங்கை-தேரின்மரச்சுற்று.

தேர்க்கொத்தர் - தேரிழுக்கிறவர்கள்.

தேர்ச்சார்பலகை - தேரின்தட்டு.

தேர்ச்சி-ஆராய்தல்எண்ணல்,கல்வி,தெ [ளிவு.

தேர்ச்சித்துணைவர் - மந்திரிகள்.

தேர்ச்சியர் - மந்திரியர்.

தேர்ச்சில், தேர்ச்சில்லு } தேர்ச்சக்கரம்.

தேர்ச்சுவடு - தேரடி.

தேர்ச்சேனை - தேர்த்தானை.

தேர்தல் - அறிதல்,ஆராய்தல்,சொல்ல ல், தெளிதல், நிச்சயித்தல்.

தேர்த்தடம் - தேர்ச்சுவடு.

தேர்த்தட்டு - தேர்நடு.

தேர்த்தானை - தேர்ச்சேனை.

தேர்த்திருநாள்-தேர்த்திருவிழா நாள்.

தேர்த்துகள்-இரததூளி, கதிரொழுதுக ளெட்டுக்கொண்டது.

தேர்தலை - தேரடி, தேர்முட்டி.

தேர்ந்தவன் - அறிஞன்.

தேர்ப்பந்தர் - தேர்ப்போலும் பந்தல்.

தேர்ப்பாகன் - தேர்செலுத்துவோன்.

தேர்ப்பார் - தேர்த்தட்டு.

தேர்முட்டி - தேர்விடுமிடம்.

தேர்மொட்டு - தேர்க்கூம்பு.

தேர்வடம் - தேரிழுக்குங்கயிறு.

தேர்வண்மலையன் - வட வண்ணக்கன் பெருஞ் சாத்தனுரால் புறநானூற்றி லே வைத்துப் பாடப்பட்டவன், இவன் இராஜசூயம்வேட்டபெரு நற்

கிள்ளிக்குத் துணையாகிச் சேரமான் மாந்தரஞ்சேரவிரும் பொறையைப் போரில் வென்றன்.
தேர்வீரர் - போர்மன்னர்.
தேர்வு - ஆராய்வு, தெளிவு.
தேலிகை - இலேசு.
தேலுதல் - தப்புதல், விலகல்.
தேவகங்கை - ஆகாயகங்கை.
தேவகணிகையர் - தேவநாடகியர்.
தேவகம் - தேவீகம்.
தேவகம்மாளன் - தேவதச்சன்.
தேவகன் - கிருட்டிணன்பாட்டன், தேவகிதந்தை.
தேவகன்னி-தேவரம்பை.
தேவகா - கோவிற்பூங்கா.
தேவகாஷ்டம் - தேவதாரி.
தேவகாதம் - மலைக்குகை.
தேவகாத்துமசை - கிருட்டிணன்ருய்.
தேவகாந்தாரி - ஒருபண்.
தேவகாயன் - கந்தருவன்.
தேவகாளம் - தேவர்கட்குரியராகம்.
தேவகி - கண்ணன்ருய், வசுதேவன்மனைவி.
தேவகிசுனு, தேவகிநந்தனன், தேவகிமைந்தன் - கிருட்டிணன்.
தேவகிரகம் - தேவாலயம்.
தேவகிரி - ஒருமலை.
தேவக்கிரியை - ஒருபண், தெய்வச்செயல்.
தேவசுவம் - கராம்பு.
தேவகுண்டம் - தாஞயுண்டானவூற்று.
தேவகுரு - வியாழபகவான்.
தேவகுருவஞ்சம், தேவகுருவம் - போகபூமி யாறில் ஒன்று.
தேவகுலம் - கோயில், தேவசாதி.
தேவகூத்தியர் - தேவரம்பையர்.
தேவகெந்தம் - குங்கிலியம்.
தேவகோட்டை - மதுரைக்கருகில்நாட்டுக் கொட்டையாரூர்.
தேவகோயில் - தேவாலயம்.
தேவக்கிரியை - ஓரிராகம்.
தேவசங்கு - சங்கநிதி.
தேவசபை - தேவகூட்டம்.
தேவசாட்சி-ஆணை, தெய்வமுன்னிலை
தேவசாயுச்சியம் - தேவனுடனென்றியிருத்தல்.
தேவசிகிச்சகன் - தேவமருத்துவன்.
தேவசிகிருதம் - தெய்வத்திற்குச்சேர்ந்தது.
தேவசிரவசு - வசுதேவன்தம்பி.
தேவசிருட்டி - சராசரம்.
தேவசிருட்டை - மதுபானம்.
தேவசுருதன் - தேவன், நாரதன்.
தேவசேகரம் - தவனம்.
தேவசேனபதி - குமரக்கடவுள்.
தேவசேனை-இந்திரன்மகள், தேவகூட்டம்.
தேவச்சந்தம்-நூறுசரமுள்ளமுத்தாரம்
தேவடன் - சிற்பி.
தேவடியாள் - தேவதாசி, வேசி.
தேவதச்சன் - விச்சுவகன்மா.
தேவதத்தம் - அருச்சுனன்கைசங்கு.
தேவதத்தன் - ஒட்டமுமிளைப்பும்வியர்வும் வருவிக்கும் வாயு, புத்தன்றம்பி.
தேவதத்தாக்கிரசன் - புத்தன்.
தேவதத்துவம் - தெய்வவல்லபம்.
தேவதரு - கற்பகம், மந்தாரம்.
தேவதா - தேவதை.
தேவதாகாரம் - கோவில்.
தேவதாசன் - அரிச்சந்திரன் மகன், தெய்வத்தொண்டன்.
தேவதாசி - தேவடியாள்.
தேவதாசொரூபி - அதிசுந்தர முள்ளவள் திவ்வியசொரூபி.
தேவதாதிபன் - இராகு, தீ.
தேவதாதிபன் - இந்திரன்.
தேவதாமரை - பதுமநிதி.
தேவதாயதனம் - கோவில்.
தேவதாயோக்கியம் - தெய்வீகம்.
தேவதாரம் - ஐந்தருவினென்று, ஒருமரம், செம்புளிச்சை.
தேவதாரி - ஒருமரம்.
தேவதாரு - செம்புளிச்சை, பஞ்சகற்பகதரு, பஞ்சதருவினென்று.
தேவதாருவனம் - ஒருதபோவனம், பிருகு முதலிய மகாரிஷிகள் தவஞ்செய்த மகாவனம், அந்த மகாரிஷிகளுடைய தவத்தை சோதிக்கும் பொருட்டும், மீமாஞ்சையே உண்மைநூலெனவும், அந்த நூலிலே கூறப்பட்ட யாகங்களே இருமைப்பயன்களையும் தரவல்லனவெனவும் கொண்ட மயக்கத்தைத் தீர்த்தாட்கொள்ளும் பொருட்டும் சிவபெருமான் பிக்ஷாடந வேடம்பூண்டு விஷ்ணுவை மோகினியாக்கித் தம்முடன் கொண்டு இவ்வனத்திற் புகுந்தார், மோகினி வடிவைக்கண்ட முனிவர்கள் காம

மயக்கத்தால் மனங்கலங்கித் தமது நியமமிழந்தார்கள், ரிஷிபத்தினிகள் பிக்ஷாடன மூர்த்தியுடைய பேரழகைக்கண்டு தமது கற்புநிலை கலங்கித் தம்மை மறந்து அவர்பின் சென்றுழன்றூர்கள், முனிவர்கள் தம்மனைவியரது கற்பைக்கலக்கிய சிவபிரானைக் கொல்லும்பொருட்டு அபிசாரயாகஞ் செய்து அதினின்றும் பூதங்களையும் புலியையும் பாம்பையும் முயலகனையும்தோற்றுவித்தார்கள், பூதங்களைச் சிவபெருமான் தமக்குப்பரிசநமாக்கிக்கொண்டார். புலியையுரித்து அத்தோலை ஆடையாக்கிக்கொண்டார், பாம்புகளை ஆபரணமாகப் பூண்டுகொண்டார், முயலகனைத் திருவடியின்கீழே யமைத்துக் கொண்டார், இதைக்கண்ட முனிவர்கள் தமது மயக்க மொழிந்து சிவபெருமானை வழிபட்டு உய்ந்தார்கள். இந்தச் சரித்திரத்தில் சிவபெருமான் ஆன்மாக்களை ஆணவமலத்தைக்கெடுத்து ஆட்கொண்டருளல் வெளிப்பட்டது, பிக்ஷாடநமூர்த்தம், சிவம், மோகினிவடிவம், சத்தி, ரிஷிகள், மெய்யுணர்வு தலைப்படாத பக்குவான்மாக்கள், ரிஷிபத்திகிகள் அகங்காரம்.

தேவதாவியற்சனம்-விக்கிரகாராதனை.
தேவதாளி - ஒருசெடி.
தேவதானியம் - ஒருதானியம்.
தேவதீபம் - கண்.
தேவதுந்துமி - தேவப்பறை.
தேவதூஷணம் - தெய்வநிந்தை.
தேவதூதர்-தெய்வதூதராகியவானோர்.
தேவதூபம் - சாம்பிராணி, வெள்ளைக் குங்கிலியம்.
தேவதேவன்-சிவன்,பிரமன்,விட்டுணு
தேவதை - தெய்வம், தேவி, பேய்.
தேவத்துவம் - தேவதன்மை.
தேவநகர் - கோவில், தேவபட்டணம்.
தேவநந்தி-இந்திரன்வாயில்காப்போன்.
தேவநாகரம் } சம்ஸ்கிருதத் தோர்வை யட்சரம்.
தேவநாகரி }
தேவநாயகன்-கடவுள்,தேவர்தலைவன்.
தேவநாயகன்பட்டணம் - கூடலூருக் கருகிலோரூர்.
தேவநிகாயம் - மோக்கம்.
தேவநிந்தகன் - தேவநிந்தனைகாரன்.
தேவநீதி - தெய்வத்தினுல் வருஞ்சிட்சை.
தேவந்தி - கண்ணகியின் பார்ப்பனத் தோழியாய் மாநாயகன் மனையில் வளர்ந்தவள். மானிடவடிவங்கொண்ட சாத்தனென்னும் தெய்வத்தின் மனைவி, தான்கண்ட தீக்கனவைக் கண்ணகி சொல்லியபொழுது தேற்றியவள், கண்ணகிக்கும் கோவலனுக்கும் நேர்ந்த துன்பத்தைக் கேட்டு மதுரையையடைந்து பின்பு வஞ்சி நகரஞ்சென்று அங்குப் பிரதிட்டிக்கப்பட்டிருந்த கண்ணகிவடிவத்தைப் பூசித்தவள்.
தேவபதம் - ஆகாயம், இராசசமூகம்.
தேவபதி - இந்திரன்.
தேவபத்தினி - தேவபாரி.
தேவபவனம்-அரசமரம்,கோவில், மோக்கம்.
தேவபாகன் - வசுதேவன்தம்பி, உத்தமனுக்குத் தந்தை.
தேவபாஷை - தேவர்களின்பாஷை.
தேவபாணி - இசைப்பாவின் பகுதியுள் ஒன்று.
தேவபூதி - கங்கை.
தேவபூமி - தேவலோகம்.
தேவபசு - காமதேனு.
தேவப்பிரதிமை - விக்கிரகம்.
தேவப்பிரமா - நாரதன்.
தேவப்பிரயாகை - இது அலகநந்தைகங்கையோடு சங்கமிக்கு மிடத்துள்ள நகரம், இங்கே 900 அடி யுயரமுள்ள ஒரு விஷ்ணு ஆலய மிருக்கின்றது.
தேவப்புள் - அன்னப்பறவை.
தேவப்பெண் - தேவஸ்த்ரீ.
தேவமஞ்சரம் - கிருட்டிண ஞபரணம்.
தேவமணி - அகன்மணி, கிருட்டிணுபரணம், குதிரைநற்சுழியில் ஒன்று, சிவபிரான்.
தேவமாசம் - கருப்பமுண்டான எட்டாம்மாதம்.
தேவமாதா } அதிதி.
தேவமாதுரு }
தேவமாநகம் - கௌஸ்துபமணி.
தேவமித்திரன் - மாண்டூகேயன்சீஷன்.
தேவமீடன் - ஹிருதிகன் மகன், வசுதேவன் பாட்டன்.
தேவம்-அனிச்சை, குளிநாவல்,தெய்வம், மாமரம்.

தேவயாத்திரம் - திருவிழா.
தேவயானம்-தேவவாகனம்,விமானம்.
தேவயானி - சுக்கிரன் புத்திரி.
தேவயானை-இந்திரன் பட்டத்தியானை. சுக்கிரன் மகள், முருகன்றேவி.
தேவயோனி - தேவப்பிறப்பு.
தேவரங்கம் - பணிப்புடைவை.
தேவரதம் - தேவயானம்.
தேவரம்பை - தேவப்பெண்.
தேவரன் - கொழுந்தன்.
தேவராசன் - இந்திரன்.
தேவராட்டி - சன்னதகாரி.
தேவராதன் - மிதிலையினரசன்.சுகேதன்மகன். காம்பியாகிய குந்திமகன். சனசேபன்.
தேவராளன் - சன்னதக்காரன்.
தேவருணவு - அமுதம்.
தேவர்-உயர்ந்தோர்,சுரர். ஜன்மதேவர் கர்மதேவர் என இருதிறத்தினர். தேவர், அக்கினி, இந்திரன், யமன், சூரியன்,வாயு,வருணன்முதலியோர் ஜன்மதேவதைகள். இவர்கள் லோகோபகாரார்த்தமாக ஒவ்வோரதிகாரத்தோடு சிருஷ்டிக்காலத்திலே சிருஷ்டிக்கப்பட்டுத் தத்தம் அதிகாரத்தைச் சாரகாலம்வரைக்குஞ் செலுத்தினின்று அழிபவர்கள், இனிக் கர்மதேவதைகள் மனுஷருள்ளே புண்ணிய விசேஷத்தாற் சுவர்க்கம்போய்த் தேவகதியடைந்து மீள்பவர்கள். இவர்கள் நகுஷன்முதலியோர், இன்னும் பிதிர்தேவதைகளெனவும் ஒருபாலாருளர், அவர்கள் பிரஜாபதி புத்திரர்கள், இவர்களே மனுஷகணங்களுக்கு ஆதிபிதாக்கள் இன்னும் இறந்து போகின்றவர்களெல்லாரும் தத்தம் குடும்பத்தினர்க்குப் பிதிராகின்றார்கள்.

ஒருகாலத்தில் இந்திராதி தேவர்களும் பிதிர்களும் அசுரபீடைக்கஞ்சிக்காக ரூபந்தாங்கிப் பூமியிற் சஞ்சரித்தார்கள், அதுபற்றியே காகங்களுக்குப் பிண்ட மிட்டுண்ணும் வழக்கம் உலகத்துண்டாயது, இது வாயசபிண்ட மெனப்படும்.

ஜன்மதேவர் முப்பத்துமூவர் பிரமா இந்திரன் வசுக்கள் ருத்திரர் ஆதித்தர் பிரமேந்திரரை நீக்கிஅசுவினி தேவர் இருவரையுங் கூட்டி எண்ணுவாருமுளர்.
தேவர்கோன் - தேவேந்திரன்.
தேவர்வசம் - அரசு.
தேவலகன் - பூசாரி.
தேவலதை - அடுக்குமல்லிகை.
தேவலன் - ஒருமுனி,கொழுந்தன்,சன்மார்க்கன், பார்ப்பான். அஷ்டவசுக்களு ளொருவனுகிய பிரத்தியுஷன் மகன். இவனுக்கு க்ஷமாவர்த்தன், மனஸ்வி என இருவர் புத்திரர். அக்குரூரன் சேட்டபுத்திரன். தேவகன் மகன்.
தேவலோகம் - சுவர்க்கம்.
தேவவணக்கம் - தேவவழிபாடு.
தேவவதி-சுகேசன்பாரி, கிராமணி யென்னும் கந்தருவன் மகள் தேவமணி.
தேவவத்திரம் - அக்கினி.
தேவவருடம் - தேவாண்டு.
தேவவருணனை - தெய்வப்புகழ்ச்சி.
தேவவல்லபம் - சுரபுன்னை.
தேவவாசி - இந்திராணி.
தேவவர்த்தகி - விசுவகர்மா.
தேவவர்த்தனன் - தேவகன்மகன்.
தேவவாக்கியம் - தேவவனம்.
தேவவிரதன்-தேவனை வழிபடுவோன், வீடுமன்.
தேவவிருட்சம் - பஞ்சதரு.
தேவவுணவு-அமுதம், அவிர்ப்பாகம்.
தேவவைத்தியம் - சிந்தூரவைத்தியம்.
தேவளம் - கோவில்.
தேவனம் - அழகு, ஒளி, சூதாடுகருவி, தாமரை, துக்கம், துதி, தோழி, நந்தனவனம், பொழுதுபோக்கு.
தேவன் - அகம்படியன், அரசன், அருகன், ஈட்டிக்காரன், கடவுள், கொழுந்தன், பரிசைக்காரன், மடையன்.
தேவாங்கம் - பட்டுச்சீலை.
தேவாங்கு - ஒருமிருகம்.
தேவாசனம் - தேவபுத்திராசனம்.
தேவாசீவன்-கோவிற்பணிவிடை செய்யும் பிராமணன்.
தேவாசுவம் - இந்திரன் குதிரை.
தேவாண்டு - தேவாண்டு, அது முந்நூற்றறுபத்தைந்து மானிட வருஷங் கொண்டது.

தேவாதி - கடவுள்.

தேவாதிதி - அக்குரோதன்மகன்.

தேவாதீனம் - தெய்வத்திற்குரியது.

தேவாத்திரம் - தேவர்களாற் கொடுக்கப்பட்ட அம்பு.

தேவாத்துவா - அரசமரம்.

தேவாந்தகன் - இராவணன்மகன் ஹனுமந்தனுற் கொல்லப்பட்டவன்.

தேவாபி - பிரதீபன் சேட்டபுத்திரன், இவன் தன்தம்பியாகிய சந்தனுவுக்கு இராச்சியத்தைக் கொடுத்து விட்டு காட்டுக்குத் தபசுக்குப் போனவன்.

தேவாபிருதன் - சாத்துவதன் புத்திருளொருவன். இவனுக்குப் பப்பிருவென்னும் புத்திரனொருவன் பிறந்தான்.

தேவாபீட்டை - வெற்றிலை.

தேவாமுதம் - தேவர்கள் பருகுமமுதம்.

தேவாயதனம் - கோவில்.

தேவாயுதம் - மழைவில்.

தேவாரணியம் - லோகித்தியநதி தீரத்திலுள்ள ஒருவனம், இங்கே மாணிதரன் என்னும் யக்ஷன் வசித்தான்.

தேவாரம் - ஒரு திருப்பாடல். தேவ ஆரம் தேவாரம், ஆரம்-மாலை, கடவுளுக்கு நாரினாலே தொடுத்துச் சாத்தப்படும் பூமாலைபோல, பத்திமையாகிய நாரினுல் தொடுத்துச் சாத்தப்படும் சொன்மாலையாதலால் இது தேவாரம் எனப்பட்டது. அப்பர், சுந்தரர், சம்பந்தர், என்னு மூவரால் பாடப்பட்ட சொன்மாலையே தேவாரமெனப்படும், அவை தொண்ணூற்றுருயிரம் பதிகங்கள். அவற்றுள் இறந்துவொழிந்தன போக எஞ்சியுள்ளன எழுநூற்றுத்தொண்ணூற்றைந்து பதிகங்கள். அபயகுலசேகர சோழன் தன் சபையில்வந்த புலவர்வாயினுல் ஒவ்வொரு தேவாரப் பாக்களைக் கேட்டு அவற்றின் இனிமையையும் பெருமையையும் அறிந்து பேராசையுற்று அத்திருமுறைகளை யெங்குந் தேடிக் கிடக்கப்பெருதவனுய் நம்பியாண்டார்நம்பியிடத்திற்சென்று இப்போதுள்ள எழுநூற்றுத் தொண்ணூற்றைந்து பதிகங்களைப் பெற்றுன், அதுபெற்றகாலம்இற்றைக்குஎழுநூறுவருடங்களுக்கு முன்னுள்ளது.

தேவாலயம் - கோவில், தேவபதவி, மேருகிரி.

தேவாலயஸ்திதபஜிதம் - ஆலயவிபூதி.

தேவாவாசம் - அரசமரம், கோவில்.

தேவானீகன் - க்ஷேமதந்வாமகன்.

தேவானுட்டிப்பு - தேவவணக்கம்.

தேவான்னம் - நைவேத்தியவமுது.

தேவி - அரசி, காளி, சீதேவியார், தலைவி, துர்க்கை, தேவப்பெண், பதுமினிப்பெண், பார்வதி, மனைவி.

தேவிகம் - தேவீகம்.

தேவிகை - ஊமத்தை, ஒருநதி.

தேவிதோட்டம் - ஒரூர், காளிகோவில்.

தேவிபட்டினம் - ஒரூர்.

தேவிமுத்திரை - காஸ்மீரபடிகம்.

தேவிரு - கொழுந்தன், முந்தினகணவன்.

தேவிலன் - தார்மிகன்.

தேவீகம் - தெய்வீகம்.

தேவேக்கியம் - ஓமம்.

தேவேசியம் - பிருகற்பதி.

தேவேத்தனம் - தெய்வேத்தனம்.

தேவேந்திரன் - தேவராசன்.

தேவை - அவசரம், இராமநாதபுரம், வேண்டுந்தன்மை.

தேவோக்கித்தம், தேவோக்தம் - வெளிப்படுத்தல்.

தேவோத்தியானம் - தேவகா.

தேளி - தேளித்தேங்காய், திரளிமீன், தேன்கெண்டை, தேள்.

தேள் - அனுடநாள், ஒருசெந்து, தெறுக்கால், விருச்சிகவிராசி.

தேள்கொடுக்கி - ஒருபூண்டு.

தேறகம் - தேறை.

தேறலர், தேறலார் - அறியாதார், பகைவர்.

தேறல் - கள், தங்கல், துணிதல், தேறுதல், தேன், நிச்சயம்.

தேறுர் - அறிவிலோர், பகைவர்.

தேறு - சுத்தம், தேறென்னேவல், தேற்றுமரம், நிச்சயம், மஞ்சள் முதலியவற்றின் தேறு.

தேறுகடை - தீர்மானம்.

தேறுசூடு - தெளிவு சூடு.

தேறுதலை - ஆறுதல், தைரியம்.

தேறுதல் - அதிகப்படுதல், தங்கல், துணிதல், துன்பந்தீர்த்தல், தெளிதல், நம்புதல், நிச்சயம், விறைத்தல்.

தேறுநர் - கற்ருேர், சேர்ந்தோர், நம்பினோர்.
தேறை - ஒருமீன்.
தேற்றம் - அதிகப்படல், கருமமுடிக்குந் துணிவு, திடன், தெளிவு, நிச்சயம்.
தேற்றரவாளன் - திடப்படுத்துகிறவன், திடனுடையோன்.
தேற்றாரு - திடப்படுத்துகை, தெளிவு.
தேற்றல் - அறிவித்தல், தீர்த்தல், தேறப்பண்ணுதல்.
தேற்றவுவமை - பொருளினுயர் விழிபு தோன்ற எகாரம் புணர்த்தி யுருவகிப்பது (உ-ம்) அல்லார் திருவின் இனிதேத் நல்லார் வறுமை.
தேற்ரு - ஒருமரம்.
தேற்ருர் - அறிவிலார், பகைவர்.
தேற்றுதல் - தேற்றல்.
தேனம் - சமுத்திரம்.
தேனர் - அசுரர், திருடர்.
தேனர்மொழியம்மை - திருக்குடந்தைக்காரோணத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் திருநாமம்.
தேனிகை - கொத்துமல்லி.
தேனிலேயான் - தேனீ.
தேனிருட்டு } தேன்கூடு.
தேனிருல் }
தேனீ - தேன்கூட்டுமீ.
தேனீக்குடிக்கீரனர் - கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்.
தேனு - எருமை, களவு, குதிரை, தெய்வப்பசு, பசு, பாற்பசு.
தேனுகசூதனன் - கிருட்டிணன்.
தேனுகம் - பெண்யானை.
தேனுகன் - ஓரசுரன்.
தேனுகா - தேனுகை, பாற்பசு, பெண்யானை.
தேனுகாசுரன் - பிருந்தாவநத்திலிருந்த ஜநங்களைக் கழுதை யுருத்தாங்கிக் கொன்றுவந்த ஓரசுரன். இவன் பலராமனுற் கொல்லப்பட்டான்.
தேனுகாதுத்தம் - பசுப்பால்.
தேனுகாரி - கிருட்டிணன்.
தேனுமுத்திரை - ஒருசைவமுத்திரை.
தேனெல் - அச்சுவினிநாள்.
தேனெறும்பு - பெரிய எறும்பு.
தேன் - கள், பெண்வண்டு, மது, வண்டு, வாசனை.
தேன்கடல் - சத்தசமுத்திரத்தொன்று.
தேன்கதலி - ஒருவாழை.
தேன்குழல் } ஒரு பண்ணிகாரம்.
தேன்குழாய் }
தேன்கூடு } தேனீக்கூட்டம், தேன்வதை.
தேன்கூண்டு }
தேன்தொடை - தேன்ருெடை.
தேன்மரம் - ஒருமரம்.
தேன்வதை - தேனிருல்.
தேன்ருெடை - ஒருதொடை.

---

## தை



தை - ஓரெழுத்து, ஒருமாதம், தாளக்குறிப்பினென்று, தைக்கத்தக்கவை, தையென்னேவல், பூசநாள், மகராசி.
தைசசம் - உலோகம், நெய், பலம்.
தைசசாவர்த்தினி - உலோக முருக்குங் குகை.
தைசதம் - அக்கினி சம்பந்தம், மகராசி, மூவாங்காரத் தொன்று.
தைலம் - விரனுனி.
தைதல் - அலங்கரித்தல்.
தைதிலம் - காண்டாமிருகம், தைதுலம்.
தைதுலம் } கழுதைக்கரணம்.
தைதுலே }
தைதேயர் - இராக்கதர்.
தைத்தல் - அடைதல், அறைதல், கணக்குப்பூட்டுதல், தையல்செய்தல், படுதல், பொருத்துதல்.
தைத்தியகுரு - சுக்கிரன்.
தைத்தியசேனை - தேவசேனையின் தமக்கை, அரிஷ்டநேமிமகள்.
தைத்தியதேவன் - வருணன்.
தைத்தியநிசூதநன் - விட்டுணு.
தைத்தியபுரோகிதன் - சுக்கிரன்.
தைத்தியமதநம் - கரணைச்செடி.
தைத்தியமந்திரி - சுக்கிரன், தைத்திய புரோகிதன்.
தைத்தியமாதுரு - திதி.
தைத்தியயுகம் - சதுர்யுகங்கொண்டது.
தைத்தியர் - அசுரர், திதிமைந்தர், திதிகாமாதி காரத்தால் சந்தியாகாலத்

திலே காசிபரை வலாற் காரமாகப் புணர்ந்து இரணியாக்ஷன் இரணிய கசிபன் என்னும் இரண்டு புத்திரரைப் பெற்ருள். சந்தியாகாலத்திற் பிறந்தமையால் இருவரு மக்ரூர குணமுள்ள இராக்ஷஸராஞர்கள், இவர்களுள் இரணியாக்ஷனை விஷ்ணு வராஹாவதாரத்திலும் இரணியகசிபனை நரசிங்காவதாரத்திலும் கொன்ருர். திதிவயிற்றில் சிங்கிகை யென்ருெரு புத்திரியும் பிறந்தாள். இவர் வழிவந்தோரும் தைத்தியர் எனப்படுவர்.

தைத்தியவநம் - சரசுவதி நதிக்கரையிலுள்ளகாமியகாவனத்துக்குப் போகுமுன்னே பாண்டவர்கள் வாசஞ் செய்தவனம். வேதவியாசர் பாண்டவர்களுக்குவெளிப்பட்டு உபதேசித்த வனம்.

தைத்தியாகோராத்திரம் - ஒரு வருடம் அது அசுரர்க்கோரிராப்பகல்.

தைத்தியாரி - திருமால்.

தைத்திரம் - சிச்சிலிக்குருவி.

தைத்திரியம் - இரண்டாம்வேதம், உபநிடத முப்பத்திரண்டி ஞென்று.

தைத்திரீயகன் - இரண்டாம் வேதானுசாரி.

தைநம் - எளிமை, தீனத்துவம்.

தைப்பான்-ஊசி, தையற்காரன். [தல்.

தைப்பு - தையல்செய்தல், பொருத்து

தைப்பூசம் - தைமாதத்துப் பூசத்திருநா

தைப்பை-சட்டை, தைத்தவுடுப்பு. [ள்.

தையல் - அழகு, தைப்பு, பெண்.

தையறம் - தைவறப்பு.

தைரியம் - குதிரையின் கெச்சைநடை, திடம், பலம். [லொருத்தி.

தைரியலட்சுமி - அட்ட லட்சுமிகளி

தைலகிட்டம் - எண்ணெய்அடிமண்டி.

தைலக்காப்பு - எண்ணெய்க்காப்பு.

தைலக்காரன் - எண்ணெய் வாணிபன்.

தைலசௌரிகை - வௌவால்.

தைலபர்ணிகம் - வெண்சந்தநம்.

தைலபிபீலிகை - செவ்வெறும்பு.

தைலபீதம் - தயிலபீதம்.

தைலமாட்டுதல் - எண்ணெயபிஷேகம் பண்ணல், பிரோதாலங்காரம் பண்

தைலமாலி - திரி. [ணல்.

தைலமிடுதல் - எண்ணெய் பொருத்துதல்.

தைலமிறக்குதல்-எண்ணெய்வடித்தல்.

தைலம் - சத்து, சாரம், தயிலம், எள்ளெண்ணெய்.

தைலாங்குருவி - தகைவிலான் குருவி.

தைலாம்புகை - துரிஞ்சில்.

தைலி
தைலிகன் } வாணிபன்.

தைலீநம் - எள்விளைநிலம்.

தைவகருமம் - தகனப்பலி.

தைவகி - தேவகி.

தைவகோவிதன் - தைவபண்டிதன்.

தைவதம் - தெய்வதம்.

தைவதீபம் - கண்.

தைவம் - பாக்கியம்.

தைவரல்
தைவருதல் } தடவல்.

தைவலேககன் - சோதிடன்.

தைவவாணி - தேவவாக்கு.

தைவாகரி - சனி, நமன்.

தைவிகம் - தேவச்செயலாய்ச்சம்பவிப் [பது.

தைவிளை - தைவேளை.

தைவீகம் - தெய்வத்தன்மை, தெய்வ வழியாய் வருவது.

தைவேத்தனம் - தேவேத்தனம்.

தைவேளை - அசகண்டர்.

தைனம் - தினம்.

தைனியம் - உலோகம், கீழ்மை, தாழ்மை, பொருளாசை.

# தொ

தொகம் - மதிப்பு.

தொகல் - கூடல், சுருங்கல்.

தொகாநிலை-வேற்றுமை முதலிய விரிந்து நிற்பது.

தொகுதல் - கூடுதல், சுருங்குதல், நெருங்குதல்.

தொகுதி - அளவு, கூட்டம், பகுதி.

தொகுதிப்பெயர்-குழூஉக்குறிப்பெயர்.

தொகுத்தல் - அளவுபடுத்தல்,ஒழுங்காக்குதல்,கூட்டல், சம்பாதித்தல், சுருக்குதல், தொக்கு நிற்கச்செய்தல்.

தொகுத்துக்காட்டல் - தொகையாகக் காண்பித்தல்.
தொகுத்துச்சுட்டல் - தந்திர யுத்தியி னொன்று. அது பலவுந் தொகுத்துச் சொல்லுதல்.
தொகுநிலைத்தொடர்மொழி - வேற்று மையுருபு முதலியன நடுவே தொக்கு நிற்பச் சொற்கடொடர்ந்துவருவது.
தொகுபுலப்பொருட்டற்குறிப்பு - ஓர லங்காரம், அது உபமேய வுபமானங் கட்குரிய தருமவிடயந் தொக்கு நிற்பது.
தொகுப்பு - தொகுத்தல்.
தொகை - கணக்குவகை நான்கினொன் று, கூட்டம், சுருக்கம், தொக்கு நிற்றல், மொத்தம்.
தொகைகட்டுதல் } தொகுத்தல்,முடி
தொகைக்கட்டுதல் } த்தல்.
தொகைக்காரன் - பணக்காரன்.
தொகைச்சூத்திரம் - பலதிறப்பொருள் களையும்வேறுவேறாகத்தொகுத்துச் சொல்லுஞ் சூத்திரம்.
தொகைத்தல் - தொகைப்படுத்தல்.
தொகைநிலை - தொக்குநிற்குநிலை.
தொகைநிலைச்செய்யுள் - ஒருபிரபந்தம்; அது பொருளானேனும் அளவானே னுந் தொகுத்துக் கூறப்படுவது.
தொகைநிலையுருவகம் - மாட்டேற்றுச் சொற்றொகுத்துக் கூறப்படு முருவ கம்.
தொகைபூட்டுதல் - கணக்குச்சரிக்கட்டு தல்.
தொகைப்பொருள் - முதலிற் பலகார ணங்களான் விரித்துச் சொன்ன பொருள்களை முடிவிற் சுருக்கிச் சொல்லல்.
தொகைமோசம் - பிழை, மறதியினால் வந்தது.
தொகையாக்குதல் - தொகைப்படுத்தல்.
தொகையுருவகம் - மாட்டேற்றுச்சொ ற்றொகுத்துருவகித்தல் (உ-ம்) கைம லரு மடித்தளிருஞ் சேருங்கொடி.
தொகையுவமம் - உவமான வுபமேயங்க ளின் உவமவுருபும் பொதுத்தன் மையுந் தொக்குநிற்கச் சொல்லப் படுமணி.
தொகையுவமை - பண்பு முதலாயின தொக்குநிற்பது (உ-ம்) தாமரை போன்முகம்.
தொகைவிரி - தொகுத்தலும் விரித்த லுமாயிருப்பது.
தொகைவிரியுருவகம்-உவமைச் சொற் றொக்கும் விரிந்தும் நிற்பது (உ-ம்) சூரியன் விளக்காகச் சொன்மாலை சூடினான்.
தொக்கடம் - தொக்கடி, மிதித்தல் முதலியன.
தொக்கடவு - குறுக்குவழி.
தொக்கடி - குடலை, காவற்குடிசை, சி றுகூடை.
தொக்கடை - தரித்திரம்.
தொக்கட்டி - தொக்கடி.
தொக்கம் - தொங்கல், வழக்கு.
தொக்கார் - அடுத்தோர், தோழர்.
தொக்கி - சமுத்திராப்பச்சை.
தொக்கிந்திரியக்காட்சி - ஓரளவை அது பரிசமறிதல்.
தொக்கு - அற்பம், உடல், தோல் அது பஞ்ச விந்திரியத்தொன்று, சருமம், மரப்பட்டை.
தொக்குதொக்கெனல் - ஈரடுக் கொலிக் குறிப்பு.
தொக்குநிற்றல் - உருபு முதலிய சுருங் கிநிற்றல், கலந்து நிற்றல்.
தொங்கணி - ஆபாணத்தின் கடைப் புணர்வு.
தொங்கல் - ஆண்மயிர்,ஆபரணக்கடைப் பூட்டு, காதணி, குதித்தல், தங்கல், தூக்கங்கள், தொங்குதல், பீலி, பீலிக் குஞ்சம், பீலிக்குடை, பூமாலை, மயிர், மயிற்றோகை, முந்தல், முலைமுடு முத்தரீயம், முனை, வெண்குடை.
தொங்கன் - கள்வன், திருடன்.
தொங்கி - கள்ளி, திருடி.
தொங்கிசம் - அழிவு, நட்டம்.
தொங்கீன் - சீனமல்லிகை.
தொங்கு-தொங்குதல், தொங்கென்னே [வல்.
தொங்குங்கல் - ஆட்டுக்கல்.
தொங்குதல் - குதித்தல்,தங்குதல்,தூங் குதல்.
தொங்குபறிவு - ஆதாரமின்மை, பட்டும் படாமலிருத்தல்.
தொங்குபுளுகன் - மகாவிசும்பன்.

தொங்குபொரிவு } தொங்குபறிவு.
தொங்குபொறி }
தொசங்கட்டுதல் - துவசங்கட்டுதல்.
தொசத்தம்பம் - கொடித்தம்பம்.
தொசம் - துவசம்.
தொசாரோகணம் } கொடியேற்றம்.
தொசாரோணம் }
தொசாவந்தி - ஓரிராகம்.
தொடக்கம் - ஆதி, செல்வம், துவக்கம், வருக்கம்.
தொடக்கு - திடக்கு.
தொடக்குதல் - திடக்குதல்.
தொடங்கல் - ஆரம்பித்தல், முயலல்.
தொடங்கு - காலணி, தொடங்கென்னேவல், விலங்கு.
தொடங்குதல் - தொடங்கல்.
தொடராமுறி - விடுதலைப்பத்திரம்.
தொடரி - ஒருசெடி, புலிதொடக்கி.
தொடரெழுத்து - நிலைமொழியீற்றையும் வருமொழி முதலையுந் தழுவி நிற்குமெழுத்து.
தொடர் - கோவை, சங்கிலி, தொடரென்னேவல், தொடர்பு, நூல், பஞ்சிநூல், பழமை, பிசின், பூமாலை, வாசம், விலங்கு.
தொடர்ச்சி - உரிமை, ஒழுங்கு, தொடர்பு, பற்றுதல், பூத்திரள், முயற்சி, வழக்கு.
தொடர்ச்சொல் - வாசகம்.
தொடர்ச்சொற்புணர்த்தல் - தந்திரயுத்தியில் ஒன்று அது ஒன்றற்கொன்று சம்பந்தமுடைய சொற்களைச் சேர்த்துவைத்தல்.
தொடர்தல் - கட்டல், தேடல், பின்போதல், பின்றொடர்தல், முயற்சிபாயிருத்தல், வழக்கிலே அழைத்தல்.
தொடர்நிலைச்செய்யுள் - பொருளானேனுஞ் சொல்லானேனுஞ் சொற்பொருளானேனுந் தொடர்ந்து நிற்கும் பாடல்.
தொடர்ந்தார் - மித்திரர்.
தொடர்ந்தேற்றி - தொடர்ச்சி.
தொடர்ந்தோர் - மித்திரர்.
தொடர்பின்மையணி - ஓலங்காரம் அது காரண மோரிடத்திருப்பக் காரியமற்றோரிடத்துப் பிறத்தலைச் சொல்லுதலும், ஓரிடத்துச் செய்தற்குரியதை மற்றோரிடத்துச் செய்தலும் ஒன்றைத்தொடங்கி அதற்குப் பகையாகிய மற்றொன்றைச் செய்தலுமாம்.
தொடர்பு - உறவு, ஒழுங்கு, சினேகம், சேர்மானம், தொடர்ச்சி, பழமை, பா, பாட்டு, முறைமை.
தொடர்புயர்புநவிற்சியணி - ஓலங்காரம் அது சம்பந்தமில்லாதிருப்பச் சம்பந்தத்தைக் கற்பித்தலும் சம்பந்தமிருக்கச் சம்பந்த மில்லாமையைக் கற்பித்தலுமாம்.
தொடர்ப்பாடு - தொடர்ச்சி.
தொடர்முழுதுவமையணி - ஓலங்காரம் அது முன் வாக்கியங்களுள்ளும் பின்வாக்கியங்களுள்ளும் ஒரே பொருத் தருமத்தைச் சொல்லுதல்.
தொடர்மொழி - புணர்மொழி.
தொடர்வு - தொடர்பு.
தொடலி - தொடரி.
தொடலை - மகளிர்விளையாட்டு, மாலை, விளையாட்டு.
தொடல் - சார்தல், தீண்டல், தோண்டல், பிடித்தல், புசித்தல்.
தொடி - ஒருபலம், கங்கணம், கைவளை.
தொடிசு - உடந்தை, சம்பந்தம்.
தொடித்தலைவிழுத்தண்டினர் - கடைச்சங்கப் புலவர்களில் ஒருவர், இவரால் பாடப்பட்டவன் பெருஞ்சாத்தனென்னும்வேளாளன். பூணிட்டதலையையுடைய பெருந்தண்டூன்றி நடக்கும் மிகு மூப்புள்ளவர் பெயர்ப்பொருள்.
தொடித்தலைவிழுத்தண்டினர் - சங்கப் புலவரில் ஒருவர்.
தொடு - அணைப்பு, தொடுவென்னேவல், தோண்டல், தோட்டம், பரிசம், மருதநிலம், வஞ்சம், வயல்.
தொடுகடி - மேற்கடி.
தொடுகயறு - தொடுவான்.
தொடுகழல் - தொடுசெருப்பு.
தொடுகிலும் - ஒருபொழுதும்.
தொடுகை - தோண்டுகை, பரிசம்.
தொடுக்கம் - பொன்.
தொடுசு - உடந்தை, சம்பந்தம்.
தொடுதல் - அணிதல், இணைந்திருத்தல், உண்ணல், எய்தல், தீண்டல், தொடங்கல், தோண்டல், பிடித்தல்.
தொடுதுணை - உதவி.
தொடுதோல் - செருப்பு.
தொடுத்தல் - அணிதல், அறிமுகமாதல், உருவாக்கல், கட்டல், கோத்தல்,

செலுத்தல், சேர்த்தல், தொடங்கல், பற்றல், பாத்தொடுத்தல், பிணைத்தல், பொருத்தல், வில்வளைத்தல், வைத்தல்.
தொடுத்து - தொட்டு.
தொடுபதம் - சோறு.
தொடுப்பு - கட்டு, கலப்பை, கூட்டு, கோவைகோள், சங்கிலி, சேர்க்கை, தந்திரம், துவக்கம், பழக்கம், பாதரட்சை, மரக்கொம்பு, வழக்கு, வெறும்புறங்கூறல்
தொடுப்புக்கத்தி ஒருபட்டா.
தொடுவழக்கு - கள்ளவழக்கு.
தொடுவாய்-ஆறுங்கடலுஞ்சந்திக்குமிடம்.
தொடுவான் - அடிவானம், தொடுக்குங் கயிறு.
தொடுவிலங்கு-இருவரைத் தொடுக்கும் விலங்கு.
தொடுவு - கொல்லை.
தொடுவை - கூட்டாளி, தொடுத்திருப்பது, புதுயானையைப்பழக்கும்யானை, வைப்பாட்டி.
தொடை - அம்பு, உத்திரந்தாங்குங்கட்டை, செய்யுட்டொடை அது பல வடிகளிலேனும் பல சீர்களிலேனு மெழுத்துக்களிலொன்றி வருவது, திடை, தொடர்ச்சி, நாணி, பூங்கொத்து, பூமாலை, மதில், மாலை, வீணை முதலியவற்றி னரம்பு.
தொடைதட்டிவெள்ளாழர் - நாவிதர், அம்பட்டர்.
தொடையல் - பூமாலை, மாலை.
தொடைவாழை - ஒருசெடி, ஒருநோய்.
தொட்டப்பன் - தலைதொட்டபிதா.
தொட்டம் - துண்டுநிலம்.
தொட்டல் உண்டல், தீண்டல், தோண்டல்.
தொட்டவிரல்தறித்தான் - பெருங்குறிஞ்சா.
தொட்டா - துவட்டா.
தொட்டாச்சி-ஞானத்தாய், தலைதொட்டமாதா.
தொட்டாட்டுமணியம் } குற்றேவல்.
தொட்டாட்டுவேலை } குற்றேவல்.
தொட்டாப்பு - துட்டாப்பு.
தொட்டால்வாடி-தொட்டால்சிணுங்கி, ஒருசெடி.
தொட்டற்சிணுங்கி-சுண்டில், ஒருசெடி
தொட்டார்சுருங்கி - தொட்டால்வாடி.
தொட்டி - காஞ்சொறி, தெண்டம், தொட்டில், வேலி, குறுந்தொட்டி.
தொட்டிக்கால் - படப்புக்கால்.
தொட்டிச்சி - தொட்டியப்பெண்.
தொட்டிபாஷாணம் - ஒரு பாஷாணம்.
தொட்டியக்கரு - தொட்டியவித்தைக் குரிய நகமயிர் முதலியகரு.
தொட்டியம் - ஒருதேசம், ஒருபாடை, ஒருவித்தை.
தொட்டியர் - ஒருசாதியார்.
தொட்டு தொடங்கி, பற்றியெனெச்சம்
தொட்டுக்காட்டுதல் - சுட்டிக்காட்டுதல்.
தொண்டகம் - குறிஞ்சிப்பறை.
தொண்டமான் - ஓரரசன்.
தொண்டரடிப்பொடியாழ்வார் - சோழநாட்டிலே திருமண்டங் குடியிலே புரச்சூடன் என்னும் வைணவனுக்குப் புத்திரராகப்பிறந்த ஒருவிஷ்ணு பக்தர். ஒரு வைணவ சமயாசாரியர்.
தொண்டலம் - யானைத்துதிக்கை.
தொண்டன் - அடியான்.
தொண்டி - ஒருபட்டினம், கள், கலப்பைக்கிழங்கு, தேவடியாள், சோழவமிசத்தார் வாழுமோர் நகரம்.
தொண்டிச்சி - அடியாள்.
தொண்டியோர் - சோழகுலத்தோர்.
தொண்டு - அடிமை, ஒன்பது, ஒருபூண்டு, கோழியுள்ளான், பணி, பழமை.
தொண்டுசெய்தல் - பணிசெய்தல்.
தொண்டுதுரவு - பணிசெய்கை, வேகர்க்குச் செய்யுமுதவி.
தொண்டை - ஆதொண்டைச்செடி, இளியகுரல், கொவ்வைச்செடி, பெருங்குரல், மிடறு, யானைத்துதிக்கை.
தொண்டைகம்முதல் - குரல்கம்முதல்.
தொண்டைக்கனப்பு - குரற்கனப்பு.
தொண்டைக்குழி - குரல்வளைக்குழி.
தொண்டைதிறத்தல் - மிடற்றடைப்பு நீங்கல்.
தொண்டைநாடு - தொண்டைமண்டலம்.
தொண்டைப்புற்று - ஒருநோய்.
தொண்டைமண்டலம் -"வேழமுடைத்துமலை நாடுமேதக்க, சோழவளநாடு சோறுடைத்து, பூழியர்கோன், தென்னாடுமுத்துடைத்துத் தெண்ணீர்வயற்றொண்டை, நன்னாடுசான்றோருடைத்து" என்று ஔவையாரால் புகழப்பட்ட இந்நாடு கிழக்கே கடலும் மேற்கே பவளமலையும், வடக்கே வேங்கடமலையும், தெற்கேபிநாகிநதி

யும் எல்லைகளாகவுடையது, இதற்கு இராஜதாநி காஞ்சிபுரம், இந்நாடு பூர்வகாலத்தில் சோழநாட்டைச் சேர்ந்தது, நாகபட்டினத்துச்சோழன் நாகலோகஞ் சென்ற காலத்திலே நாககன்னிகையை மணம்புரிந்து அவள் வயிற்றிலேபிறக்கும் புத்திரனுக்குத் தனது நாட்டில் பாதி கொடுப்பதாக வாக்களித்து மீண்டான், மீளும்போது நாககன்னிகைதன் புத்திரனையனுப்புவ தெவ்வாறென்றுவினவ, அவன்தொண்டைக்கொடியை அடையாளமாகக் கட்டித் தெப்பத்திலேற்றியனுப்பக்கடவை யென்றான், அவ்வாறே அப்புதல்வன் தொண்டைத்தழையுடுத்துக்கொண்டு அலைகளாற் செலுத்தப்பட்டுநாகபட்டினத்துறையை யடைந்தான். சோழன் அவனை வளர்த்து இந்நாட்டைப்பிரித்து அவனுக்குக்கொடுத்து தொண்டைமான் என்னும் பெயரும் முடியும் சூட்டினான், தொண்டைமான் ஆணமையால்இதுதொண்டைமண்டலம்என்னும் பெயர்த்தாயிற்று, இது நெடுங்காலம் உபநாடாகவும்சிலகாலம் தனிநாடாகவுமிருந்து பெரும்புகழ் படைத்தது, இந்நாட்டிலே திருவள்ளுவர் கச்சியப்பசிவாசாரியர், குகனேரியப்பர், கம்பர், பரிமேலழகர், ஒட்டக்கூத்தர், இராமாநுஜர், சேக்கிழார், இரட்டையர், அருணகிரிநாதர், பவணந்தி, படிக்காசுப்புலவர், அப்பையதீக்ஷிதர் முதலிய வித்வசிகாமணிகளும், அதிகமான், கறுப்பன், சடையப்பன், மணிகண்டன் முதலிய மஹாப்ரபுக்களும், உத்தமகுணத்தாற்சிறந்த அரசர்களும், இருந்து விளங்கினரென்றால் இதன்பெருமையை எடுத்து கூறுதல் மிகையாம். இந்நாட்டின் பெருமையைப் படிக்காசுப் புலவர் தொண்டைமண்டல சதகத்தில் விரித்துப்பாடியிருக்கின்றனர்.

தொண்டைமான் இளந்திரையன்- கடியலூர் உருத்திரங் கண்ணனாரலே பெரும்பாணாற்றுப்படையிலே வைத்துப் பாடப்பட்டவன்.

தொண்டையடைத்தல்-குரலடைத்தல்

தொண்டையடைப்பு - குரலடைப்பு.

தொண்டைவைத்தல் - சத்தமிட்டுக் கூப்பிடல்.

தொண்ணூறு - ஒரெண், தொகைகள் நூறு என்பதின் குறுக்கம்.

தொதி - பப்பரப்புளிமரம்.

தொத்தல் - பலவீனப்பட்டது.

தொத்தன் - அடிமைக்காரன்.

தொத்தி - அடிமைக்காரி, ஒருமரம்.

தொத்து - அடிமை, ஒட்டு, சார்பு, பழமை, பூங்கொத்து

தொந்தசத்துரு - தொடர்ந்தசத்துரு.

தொந்தப்பழி - தலைதலை முறையாகவிற்கும்பழி.

தொந்தம் - அன்னியோன்னியம், இரட்டித்தது, சலஞ்சாதித்தல், சேர்க்கை, தொடர்பு, பழமை, போர்.

தொந்தயுத்தம் - தொடர்ந்தபோர்.

தொந்தரவு } சோலி, வருத்தம்.
தொந்தரை }

தொந்தரோகம் - பழநோய்.

தொந்தவினை - பழவினை.

தொந்தறை - தொந்தரவு.

தொந்தார்த்தம் - பழவினை.

தொந்தி - தசைமடிப்பு, தொந்தியென்னேவல், தொப்பை, வயிறு.

தொந்தித்தல்-இசைவுபிசகாதல், இரட்டித்தல், தொடர்தல்.

தொந்திப்பு-இரட்டிப்பு, தொடர்பு, பேதம்.

தொந்திவயிறு-தொப்பைவயிறு, [

தொப்பாரம் - கொப்புளம், தோள்பாரம், நெடுஞ்சப்பாத்து, பேரில்லம், பொட்டணம்.

தொப்பி - கள், குல்லா, தலையின்மூப்பி, தாற்றுமடல், வாத்தி. [காரர்.

தொப்பிக்காரர் - தொப்பியிட்டுச்சாதிக்

தொப்பிமடல் - சமூகம் பாளைமடல்.

தொப்புத்தொப்பெனல்- ஒலிக்குறிப்பு.

தொப்புள் - கொப்பூழ்.

தொப்பை - கொப்புளம், திண்மையின் றிப்பருத்தது, தொந்தி.

தொம்பம் - கம்பக்கூத்திலொன்று.

தொம்பரம் - பந்தி, பேரில்லம்.

தொம்பர் - கழாய்க்கூத்தர்.

தொம்பறை - களஞ்சியம்.

தொம்பாரம் - பேரில்லம்.

தொம்பை } தானியங்களைச்சேமிக்கிற குதிர்.
தொம்பைக்கூடு }
தொம்மனை } மிகப்பருத்தது.
தொம்மை }
தொயில் - தொய்யில்.
தொய்தல் இளகல், இளைத்தல், தளர்தல்.
தொய்யகம் - தலைப்பாளை.
தொய்யல் - அகமகிழ்ச்சி, இளைத்தல், இன்பம், உழவு, சந்தோஷம், சேறு, சோர்தல், துன்பம்.
தொய்யா - துயிலி.
தொய்யில் - உழுநிலம், ஒருகீரை, சாந்தினுடலி விடுங்கோலம்.
தொய்வு - இளைப்பு, ஈளை, சுவாசமுட்டு, தொய்தல். [தோல்.
தொலி - உமி, தொலியென்னேவல்,
தொலித்தல் - உமிபோகக் குத்துதல், உரித்தல்.
தொலியல் - உமிபோக்கிய அரிசி, தொலிக்கப்பட்டது, தொலித்தல்.
தொலியாகரம்பை - நத்தைச்சூரி.
தொலை - உவமை, எல்லை, துலை, தூரம், தொலையென்னேவல்.
தொலைதல் - ஒழிதல், கெடுதல், சாதல், நீங்குதல், முடிதல்.
தொலைத்தல் - அழித்தல், கொல்லல், சேதப்படுத்தல்.
தொலைப்பு - கெடுதி.
தொலைவு - அழிவு, தூரம், தோல்வி.
தொலைவெட்டு - வெகுதூரம்.
தொல்காப்பியக்குடி - மதுரைக் கருகில் ஒருபட்டினம்.
தொல்காப்பியம் - அகத்தியமுனிவர் மாணுக்கருள் ஒருவரும் இடைச்சங்கப் புலவருள் ஒருவருமாகிய தொல்காப்பிய முனிவர்செய்த இலக்கணநூல், இதற்குரைசெய்தோர், கல்லாடர், இளம்பூரணர், சேனுவரையர், பேராசிரியர், நச்சினுர்க்கினியரென ஐவர்.
தொல்காப்பியம் - ஓரிலக்கணநூல்.
தொல்காப்பியனுர் - ஜமதக்கி முனிவர் புத்திரர், இவருக்குத் திரணதூமாக்கினி என்னும் பெயர், இவர் வடநாட்டினின்று தென்னுட்டிற்கு அகத்திய முனிவரோடுசென்று அவரிடத்துத் தமிழ்கற்று மிக வல்லுநராய்த் தம்பெயராலே தமிழில் இலக்கணநூல் செய்தவர். தொல்காப்பியக்குடியென்னும் ஊரையுடையவராதலால் இவர்க்குத் தொல்காப்பியர் என்னும் பெயர் வழங்கலாயிற்று. இவரோடொருங்கு கற்றவராகிய பனம்பாரனுர். இவர் நூற்குக்கூறிய சிறப்புக்கவி வருமாறு, "வடவேங்கடத் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து, வழங்குஞ் செய்யுளுமாயிருமுதலின், எழுத்துஞ்சொல்லும் பொருளுநாடிச் செந்தமிழியற்கை சிவணிய நிலத்தொடு, முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப் புலந்தொகுத்தோனே போக்கறுபனுவல், நிலந்தரு திருவிற் பாண்டியனவையத், தறங்கரைநாவினுன், மறைமுற்றிய, அதங்கோட்டாசாற் கரிறபத்தெரித்து, மயங்காமரபினெழுத்து முறைகாட்டி, மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த தொல்காப்பியனெனத் தன்பெயர்தோற்றிப், பல்புகழ்நிறுத்த படிமையோனே" இவர் நிலந்தருவிற்பாண்டியன் சயிமாகீர்த்தியின் காலத்தவர், இவர்காலம் முதற்சங்கத் திறுதியும் இடைச்சங்கத்து முதலுமாம், இவ்வுண்மை, தொல்காப்பியம் பொருளதிகாரம், கற்பியல், "பொய்யும்வழுவும்" என்னுஞ் சூத்திரத்திற்கு நச்சினுர்க்கினியார்செய்தவுரையில் 'இவ்வாசிரியர் ஆதி யூழியின் அந்தத்தே யிந்நூல் செய்தலின்" என வருவதனுற் பெறப்படும்.
தொல்காப்பியன - அகஸ்தியர் சிஷர்களில் ஒருவனுகிய திரணதூமாக்கினி எனும் நாமங்கொண்ட ஓரிலக்கண நூலாசிரியன், இவர் இடைச்சங்கப் புலவருளொருவர்.
தொல்பதி - பழமையானவூர்.
தொல்லை - தொந்தரவு, பழமை.
தொல்வினை - பழவினை.
தொவசலுகம் - பாவட்டை.
தொழல் - தொழுதல்.
தொழிலாளி - உத்தியோகத்தன், வேலைக்காரன்.
தொழிலானணையும்பெயர் - செயலைப் பற்றிவரும்பெயர் (உ-ம்) கணக்கன்,

தொழிலுவமம் - இருபொருளின் றொழிலொப்புமையானத் தொழிற்பொருளை யுவமானுபமேயமாகக் கூறு
தொழிலோர் - தொழிலாளர். [வது.
தொழில் - உத்தியோகம், சாமர்த்தியம், செயல், தந்திரம், தன்மை, வியாபாரம், வினைச்சொல், வேலை.
தொழிற்குறைவிசேடம் - ஓரலங்காரம் அது காரணமாகிய தொழில்குறைந்து அதனாலாய காரியம் விசேடித்திருத்தல்.
தொழிற்படுதல் - காரியப்படுதல்.
தொழிற்பண்பு - தொழிலையுணர்த்தும் பண்புச்சொல்.
தொழிற்பாடு - வேலை.
தொழிற்பெயர் - தொழிலானபெயர்.
தொழிற்றுறை - வியாபாரம்.
தொழின்மொழி - வினைச்சொல்.
தொழு - இரேவதி, குஷ்டநோய், துலங்குமரம், தொழுமரம், தொழுவென்னேவல், பசுக்கூட்டம், பசுக்கொட்டில், பட்டி, மந்தை.
தொழுகண்ணி - அரவாட்டிப் பச்சை.
தொழுகள்வர் - மாசாலக்காரர்.
தொழுகுலத்தோர் - ஒழுக்கமுடைய குலத்தவர், அந்தணர்.
தொழுகுலம் - பிரமவருணம்.
தொழுகை - தொழுதல்.
தொழுதல் - கும்பிடுதல், வணங்கல்.
தொழுதி - கூட்டம், திரட்சி, தொழுகிறாய், பறவை, கூட்டத்தொலி.
தொழுத்தை - அடிமைப்பெண், வசவி.
தொழுநோய் - குட்டநோய்.
தொழுந்தகை - தொழத்தக்கவன்.
தொழுப்பு - உழுதொழில், வளைப்பு.
தொழுமரம் - உழலை, துலங்குமரம்.
தொழும்பர் - அடிமைகள், குற்றேவல் செய்வோர்.
தொழும்பு - அடிமை, அடிமைவேலை.
தொழுவம் - தொழுவோம், பட்டி.
தொழுவர், தொளுவர் - தொழிற்செய்வோர், மருதநிலமாக்கள்.
தொழுனை - யமுனையாறு.
தொளதொளத்தல் - சோர்தல், தளர்தல்.
தொளதொளப்பு - சோர்வு, நெகிழ்வு.
தொளதொளெனல் - ஈடாட்டம், நெகிழ்தல்.
தொளாயாரம் - பழையகாரியம். [தல்.
தொளாயிரம் - தொள்ளாயிரம்.
தொளி - சேறு, தொளியென்னேவல்.
தொளுக்குதல் - துகைத்துக்கட்டல்.
தொளுதொளுத்தல் - நுகைதல்.
தொளை - உட்டுளை, துளை, மூங்கில்.
தொள்கு - வலை.
தொள்ளம் - சேறு, தெப்பம். [வானது.
தொள்ளல் - துளை, துளைத்தல், நெகிழ்
தொள்ளற்காது - வடிந்தகாது.
தொள்ளாடி - நெகிழ்ந்தசரீரமுள்ளது. பலமற்றவன்.
தொள்ளாடுதல் - தளர்தல்.
தொள்ளாமணி - தொளைக்காத முழுமணி.
தொள்ளாயிரம் - ஒன்பது நூறு. [ணி.
தொள்ளாளி - தொழிலாளி.
தொள்ளி - குழைசேறு.
தொள்ளுதல் - துளைத்தல்.
தொள்ளை - துளை, துளையுடைப்பொருள், மரக்கலம், மரக்கால்.
தொள்ளைக்காது - வடியற்காது.
தொறு - அடிமை, கூட்டம், தொழிற்பயில்வு, பசுக்கூட்டம், பொலிவு, மிகுதி.
தொறுத்தி - இடைச்சி.
தொறும் - தோறும்.
தொறுவர் - இடையர்.
தொறுவி - இடைச்சி.
தொறுவியர் - இடைச்சியர்.
தொறுவு - தொறு.
தொற்று - ஏறுதல், ஒட்டு, தொற்றென்னேவல், பற்று, பொருத்து, மூலைக்கையோடணைத்தமரம்.
தொற்றுதல் - ஏறுதல், ஒட்டுதல், பற்றுதருவர்க்குவரும்வியாதி.
தொற்றுத்தொடிசு - அற்பபிசகு.
தொற்றுவியாதி - ஒருவரிலிருந்து மற்றொருவர்க்குவரும் வியாதி.
தொனி - ஒலி, தொனியென்னேவல்.
தொனிச்சிலேடை - உரிப்பொருடவிரத்தொனியினலு மோர் பொருட்கிடங்கொடுப்பது.
தொனித்தல் - ஒலித்தல்.
தொனிப்பு - ஒலி.
தொனு - உக்காரம், உக்கிரசத்தம்.
தொனுப்புதல் - அலப்புதல்.
தொன்மரம் - ஆலமரம்.
தொன்மை - பழமை, பாவினெண்வகை வனப்பினென்று.

தொன்மைக்காட்சியனுமானம் - ஓரளவை அதுஒருபூவைக்காணுதிருக்க அதன்மணத்தால் இன்னபூவென்றறிதல்.
தொன்று - பழமை.
தொன்னீர் - கடல்.
தொன்னூல் } ஓரிலக்கணநூல்.
தொன்னூல்விளக்கம் }
தொன்னை - இலைமுதலியவற்றாற்செய்தபாத்திரம், ஈனன்.

# தோ

தோகசம் - பால்.
தோகதம் - வயா, விருப்பம்.
தோபதவதி - கருப்பிணி.
தோகம் - சிசு, சிறுமை, திருத்தி, பால்.
தோகலம் - விருப்பம்.
தோகலவதி - கருப்பவதி.
தோகலி - அசோகு.
தோகல் - சோளைப்புல்.
தோகாபநயம் - பால்.
தோகை - இறகு, தொங்கல், பனங்கிழங்கின்வாற்றோல், பெண், பெண்மயிர், மயில், மயிற்றோகை, முன்றானை, வால்விருதுக்கொடி.
தோகைமுசபூ'_ணம் - மஞ்சள்.
தோகையர் - பெண்கள்.
தோக்கியம் - காதுக்குறும்பி, முகில்.
தோக்கு - துப்பாக்கி.
தோக்குமம் - காதிர்குறும்பி.
தோக்குளம் - பருத்தி.
தோக்கை-சீலை,முன்றானை, மேற்போர்வை.
தோசி - தோஷி.
தோசை - அப்பவருக்கத்திலொன்று, அப்பவருச்கம்.
தோடகச்சிரங்கு - கொப்புளமான சிரங்கு.
தோஷகம் - பசுக்கன்று.
தோடகம் - கொப்புளம், தாமரை.
தோடஞ்சிரங்கு - தோடகச்சிரங்கு.
தோடத்திரயம் - முப்பிணி, அவை வாதபித்தசேத்துமம்.
தோடமூர்ச்சிதம் - நவமணிக்குற்றத்தில் ஒன்று அது புல்லினிறம்.
தோஷம் } இரவு, ஒருசுரம், குற்றம், சந்தோஷம், சன்னி, பாவம்.
தோடம் }
தோடயம் - ஒருகருவி, நாடகச்சிறப்புப்பாயிரக்கவி.
தோடலேசம் - நவமணிக்குற்றத்தொன்று அது தாமரை நிறம்.
தோடல் - நவமணிக்குற்றத்தொன்று அது எலுமிச்சையிலைநிறம்.
தோஷராத்திரவியம் - அக்கிராகாரம்.
தோடா - கைவளை.
தோடி - ஓரிராகம்.
தோஷி - குற்றப்படுமாள், பாவி.
தோஷிக்கொக்கு - ஒருகொக்கு.
தோடு - அணை, இலை, ஓலை, காதணியிலொன்று, கூட்டம், பழத்திலோடு, பூவிதழ், வளையம்.
தோகை - குளஞ்சிமரம், சலாபக் குளியிலோர்குழூஉக்குறி.
தோடையம் - நாடகச்சிறப்புப் பாயிரக்கவி.
தோட்கோப்பு - கட்டுச்சோறு.
தோட்சுமை - கா, காவடி.
தோட்டக்கள்ளன் - ஒருபறவை.
தோட்டப்பயிரி - ஒருபயிரி.
தோட்டம் - கொல்லை.
தோட்டா - வெடிமருந்துச்சுருள்.
தோட்டி - அட்டமங்கலத்தொன்று, அழகு, இராசசின்னத்தொன்று, கதவு, குடாரி, கொழுக்கி, சுத்திசெய்வோன், சூழ்கழியிருக்கை, செங்காந்தள், நெல்லி, வாயில், வெட்டியான்.
தோட்டிமை - ஒற்றுமை,வெட்டியான் வேலை
தோட்டுச்சக்கரம் - ஒருவிதபாணம்.
தோட்டுச்சிரங்கு - தோடகச்சிரங்கு.
தோட்பட்டை } கைசீப்பு.
தோட்பலகை }
தோட்டிமை - ஒற்றுமை.
தோணுமுகம் - கழியிருக்கை.
தோணி - அம்பு.இரேவதிநாள்,சிறுவழுதுணை, சேறு, நீர், மதிலின்சித்திரம், மரக்கலம்.
தோணிக்காரன் - சம்பானோட்டி.
தோணிதாங்குதல் - மரக்கோலிட்டுத் தோணிசெலுத்தல்.
தோணித்துறை - ஏற்றிறக்குத்துறைமுகம்.
தோணியம் - அம்பு
தோணியோட்டு - தோணிவிடல்.
தோண்டல் - தோண்டுதல்.
தோண்டான் - கோணய்.

தோண்டி - பானை, வறட்சுண்டி.
தோண்டுதல் - அகழ்தல், குடைதல், முகத்தல்.
தோண்மேல் - பிடரி.
தோதகத்தி - தூக்கமரம், மரியாதையற்றவள்.
தோதகமாடுதல் - மரியாதையற்று நடத்தல்.
தோதகம் - மரியாதையின்மை, வஞ்சகம், வருத்தம்.
தோதகன் - வஞ்சகன்.
தோதகி - வஞ்சகி.
தோதம் - பசுவின்கன்று, வருத்தம், வியாகுலம்.
தோதனம் - அங்குசம்.
சோதிபேலா - பேராமுட்டி.
தோத்திரம் - ஆவோட்டுங்கோல், துதி, தொட்டிபாஷாணம், யானைத்தோட்டி, வந்தனம்.
தோத்திரவேத்திரம் - ஆத்தூத்துங்கோல்.
தோத்திரத்தல் - துதித்தல்
தோத்தை - சிறங்கை.
தோப்பாடி - துஷ்டன்.
தோப்பு - சோலை.
தோப்புக்கண்டம், தோப்புக்காணம் - இருகைமாறிச்செவியைப் பிடித்திருகான்முடக்கி விழுதல்
தோப்பை - திண்மையின் றிப்பருத்தது.
தோமம் - படை.
தோமாக்கிரகன் - தண்டபாணி.
தோமரதரன் - தண்டபாணி, தீ.
தோமரம் - இருப்புலக்கை, எறிபடை, கைவேல், தண்டம், பெருஞ்சவளம்.
தோம் - குற்றம், பொல்லாங்கு.
தோம்பு - சிவப்பு.
தோயசூசகம் - தவளை.
தோயதம் - நெய், மேகம்.
தோயதாம் - மேகம்.
தோயதி - கடல்.
தோயதிப்பிரியம் - இலவங்கம்.
தோயநிதி - கடல்.
தோயபாணம் - பொடுதலை.
தோயப்பம் - தோசை.
தோயமாபுரம் - நிவாதகவசர்புரம்.
தோயம் - நீர்.
தோயல் - ஆயுதங்களைக்காய்ச்சித்தோய்த்தல், கலத்தல், குளித்தல்.
தோய் - உவமவாசகம்.
தோய்ச்சல் - குளிப்பு, தோய்த்தல்.
தோய்தல் - இரும்பைக்காய்ச்சி நனைத்தல், உறைதல், கலத்தல், புணரல், முழுகல்.
தோய்த்தல் - ஆயுதங்களைக்காய்ச்சிநனைத்தல், உறையிடுதல், ஊறவைத்தல், துவைத்தல், நனைத்தல்.
தோய்பனி - மிகுபனி.
தோய்ப்பன் - ஒருபண்ணிகாரம்.
தோய்ப்பாடி - தோப்பாடி.
தோய்ப்பு - தோய்த்தல்.
தோய்வு - கலப்பு, சார்பு, தோயல்.
தோரணகம்பம் - வெளிவாய்தற்றம்பம்.
தோரணம் - கோபுரவாயில், தலைவாய்தலின்வாயில், புடைவைத் தோரணம், மகரிகை, மாவிலை முதலியவற்றாற்செய்யுந்தோரணம், வாகனம்.
தோரணவாய்தல் - சித்திர கோபுரவாயில், தோரணம் வகுத்திருக்கும்வாயில், முதல்வாயில்.
தோரணவிளக்கு - வௌவால்விளக்கு.
தோரணி, தோரணிக்கம் - ஒழுங்கு, வரலாறு, வழிவகை.
தோரணை - துடித்தல், நடை.
தோரத்தம் - தொந்தறை.
தோரி - சோறு.
தோரிதம் - குதிரைநடை
தோரியமடந்தையர் - ஆடிமுதிர்ந்தவர்.
தோரை - இரத்தம், ஓரெண், ஒருபனை, குளநெல், கை, சரமணிக்கோவை, மயில்விசிறி, மூங்கிலரிசி, விரலிறை, வெண்மை கலந்த சிவப்பு.
தோர்மூலம் - அக்குள்.
தோர்வி - பின்னிடல்.
தோலடிப்பறவை - தோற்காற் பட்சி அவை தாரா முதலியன.
தோலம் - அசைவு, ஒருநிறை.
தோலனம் - நிறுத்தல்.
தோலன் - தழுக்குணி.
தோலாட்டம் - தழுக்குணித்தனம்.
தோலாண்டி - தோலன்.
தோலாநாவினர் - வாசாலகர்.
தோலாநியாயம் - பெருநியாயம்.
தோலாமை - ஈடழியாமை.
தோலாமொழித்தேவர் - சூடாமணியென்னும் தமிழ்க்காவியஞ் செய்த சைநமுனிவர்.
தோலாயா - இலவு.

தோலாவழக்கு - பெருவழக்கு.
தோலான் - அற்பன்.
தோலி - ஒருபிசின், ஒருமீன், சழுக்குணிப்பெண்.
தோலிகை - ஊஞ்சல், காது.
தோலின்துன்னர் - பறும்பர் முதலாயினோர்.
தோலுணி - தோற்றனமுடையார்.
தோலோதோல் - எவ்விதமும்.
தோல் - அபசயம், அழகு, எண்வகைவனப்பினுளொன்று, சருமம், திருத்தி, தோலென்னேவல், தோற்பரிசை, புரணி, மூங்கில், யானைவாசகத்தின் ஒருறுப்பு, வார்த்தை.
தோல்லி - தோர்வி.
தோல்வினைமக்கள் - செம்மார்.
தோல்வு - தோல்வி.
தோவத்தி - சோமன், புடைவை.
தோழமை - நட்பு.
தோழம் - தொழுவம்.
தோழன் - நண்பன், பாங்கன்.
தோழி - சினேகிதி, பாங்கி.
தோளணி - வாகுவலயம்.
தோளா - ஒரு வாகனம்.
தோளாமணி - தொளைக்காதமுழுமணி.
தோளி - அவுரி, தோளா.
தோளுதல் - துளைத்தல்.
தோள் - கை, புயம்.
தோள்கொடுத்தல் - உதவுதல்.
தோறு } தோறும் } பன்மைப்பொருடருமோரிடைச்சொல்.
தோற்கடித்தல் - தோற்றோடப்பண்ணல்.
தோற்கட்டு - கோதை.
தோற்கருவி - தோலால் மூட்டப்பட்ட வாத்சியம்.
தோற்கருவியாளர் - தோல்வினைஞர்.
தோற்காது - தோற்செவி.
தோற்காற்பறவை - தோலடிப்பறவை.
தோற்கொம்பு - தோலிலே முளைத்த கொம்பு
தோற்சித்தை-தோற்றுருத்தி
தோற்செருப்பு - அடியுயரமில்லாதசெருப்பு.
தோற்செவி - காது.
தோற்பரம் - தோர்பரிசை.
தோற்பறை - தோற்கருவி.
தோற்பாடி - வேசி.
தோற்பாய் - தோற்றவிசு.
தோர்பாவை - வினோதக் கூத்தாறினுளொன்று, அது தோலாற்செய்த பாவையை ஆட்டுவிப்பது.
தோற்பு - தோல்வி.
தோற்புரை - தோலையடுத்தசுவாரம்.
தோற்பெட்டி - தோலாற் செய்யப்பட்டபெட்டி.
தோற்பை - புரையுள்ளதோற்குல்லா.
தோற்றம் - உதயம், எண்ணம், எற்றமொழி, கணிப்பு, காட்சி, துலக்கம், துவக்கம், தோன்றுதல், பிரபலியம், பிறப்பு, புகழ்ச்சி, பெலன், பொலிவு, மகன், முதன்மை, மூலம், மேன்மை, வலி, வார்த்தை.
தோற்றப்பட்டவன் } தோற்றமானவன் } கணிக்கத்தக்கவன்.
தோற்றரவு - ஆவேசம், உதயம், கணிப்பு, மேன்மை, வெளிப்படல்.
தோற்றல் - தோல்வி, தோன்றல், பிறத்தல், முளைத்தல், வீணெண்ணம்.
தோற்றனம் - சுணைக்கேடு.
தோற்றன் - திருசி.
தோற்றுங்கொள்ளி - புறங்கொடுத்தவன்.
தோற்றுமை - வெளிப்படாமை.
தோற்றுனம் - தோற்பாத்திரம்.
தோற்றுதல் - உண்டாதல், உதித்தல், காணப்படல், பிறத்தல்.
தோற்றுவாய் - ஆரம்பம், தொடக்கம், பாயிரம்.
தோற்றுவித்தல் - உண்டாக்கல், பிறப்பித்தல்.
தோற்றுன்னர் - சக்கிலியர், செம்மார்.
தோறுய் - ஒருவகைநாய்.
தோன்றல் - ஆண்மகன், இராசா, ஒருவிகாரம் அது மொழிப்புணர்ச்சிக்கண் யாதானுமோரெழுத்துத்தோன்றல், தமையன், தோன்றுதல், பாலைநிலத்தலைவன், பெருமையிற் சிறந்தோன், மகன், முல்லைநிலத்தலைவன், வெளிப்படல்.
தோன்றல்விகாரம் - ஒருவிகாரம்.
தோன்றாத்துணை - அந்தரங்கத்துணை, கடவுள்.
தோன்றாவெழுவாய் - குறிப்பாய் நிற்கும் எழுவாய்.
தோன்றி - இரத்தம், காந்தள், செங்காந்தள்.
தோன்றிகர் - செட்டிகள்.
தோன்றுதல் - இடையில்வரல், உதித்தல், பிறத்தல், முளைத்தல், விளங்குதல், வெளிப்படல்.

## தௌ



தௌகித்திரன் - பௌத்திரன், மகண் மகன்.
தௌசருமியம் - சுன்னத்து.
தௌசாரம் - குளிர், பனி.
தௌதசிலம் - பளிங்கு.
தௌட்டகம் - துட்டகம்.
தௌதம் - வெள்ளி.
தௌதிகம் - முத்து, முத்துச்சிப்பி.
தௌத்தியம் - செய்தி, தவம், தூத்தியம், நானம்.
தௌமியன் - பாண்டவர்களுக்குப் புரோகிதன்.
தௌராத்துமியம் - ஆகாமியம்.
தௌரிதகம் - குதிரைமெல்லியநடை, குதிரைவட்டமாய்த் திரும்பல்.
தௌரிதம் - குதிரைநடை, துரிதம்.
தௌரியம் - தூரியம்.
தௌர்ப்பல்லியம் - பலஹீநம்.
தௌர்பாகிநேயன் - நிர்ப்பாக்கியவதி புத்திரன்.
தௌர்ப்பாகிநேயி - நிர்ப்பாக்கியவதி புத்திரி.
தௌர்ப்பாக்கியம் - நிர்ப்பாக்கியம்.
தௌர்வாசம் - துர்வாசரால் செய்யப்பட்ட ஒரு புராணம்.
தௌலம் - துலாக்கோல்.
தௌலிகன் / தௌலிகிகன் - வன்னக்காரன்.
தௌலேயம் - ஆமை.
தௌவல் - இளம்பருவமானது, குந்தி நடத்தல், கெடுதல்.
தௌவாரிகன் - துவாரபாலகன்.
தௌவுதல் - கெடுதல், தத்துதல், முடவுதல்.
தௌவை - அக்காள், தாய், மூதேவி.
தௌற்பல்லியம் - துற்பலம்.



## ந



ந - இன்மைப்பொருள் - எதிர்மறைப்பொருள் பிறிதின்பொருளிவைகளைக்காட்டுமோருபசருக்கம், ஓரெழுத்து.
நககுட்டன் - அம்பட்டன்.
நகக்கண் / நகக்கால் - நகத்திலடி.
நகக்காளான் - நகத்தில்முளைக்குங்காளான்.
நகக்குறி - நகத்தழும்பு.
நகங்கிருதி - அடக்கமருந்து, புண்ணியமெழியொன்று.
நகசத்துரு - இந்திரன்.
நகசம் - யானை.
நகசிறிதம் - குன்றி.
நகச்சிராய் - நகத்தருகுகிழிந்தசிம்பு.
நகச்சுற்று - நகக்கண்ணில் வருமோர் நோய்.
நகச்சூடு - சிறுசூடு.
நகட்டுதல் - அரைத்தல், சாப்பிட்டுப்போடல், நகரச்செய்யல்.
நகதிபீசம் - புலிதொடக்கி.
நகத்தல் - நகர்த்தல்.
நகநந்தினி - உமை.
நகநோக்கி - வேலிப்பருத்தி.
நகபதம் - நகக்குறி.
நகபதி - இமயமலை, சந்திரன்.
நகமுகம் - வில்.
நகம் - உகிர், நாகணம், பங்கு, பூமி, மரம், மலை.
நகராதம் - யானை.
நகரங்கட்டுதல் - நகரம்கோலுதல்.
நகரங்கம் - ஒருவாசனை, நகக்குறி.
நகரசம் - யானை.
நகரத்தார் - பட்டினத்தார்.
நகரத்துவெள்ளாளர் - வெள்ளாளர்வகையிலொன்று.
நகரமாக்கள் - நகரத்தார் இவர் அரசர்க்குறுதுணையிலொன்று.
நகரம் - இராசமனை, ஓரெழுத்து, பட்டினம், மருதநிலத்தூர்.
நகரா - ஒருபறை.
நகராயுதம் - நகாயுதம்.
நகரி - இராசமாநகரம், பட்டினம், வறட்சுண்டி.
நகரிபதம் - காகம்.
நகருதல் - நகர்தல்.
நகரேகை - நகத்தழும்பு.
நகரை - ஒருமரம், ஒருமீன், ஒருவகையரிசி.
நகரோபாந்தம் - நகரெல்லை.
நகரௌஷதி - வாழை.
நகர் - கோயில்; நகரம், நகரொன்னேவல், மருதநிலத்தூர், வீடு.
நகர்தல் - ஊர்தல், நழுந்தல்.

நகர்துரோணம் - தும்பை.
நகர்த்துதல் - அரக்குதல், குத்துதல்.
நகர்படுதிரவியம் - நகரிலுண்டாகுந்திரவியம். அது அரசன், கண்ணாடி, பித்தன், மந்தியானை.
நகர்வளம் - நகரின் செல்வம்.
நகர்வு - ஊர்தல்.
நகலேகை - நகரேகை.
நகல் - நகுதல், சிரித்தல்.
நகவிஷம் - நகங்கைத்ததோஷம்.
நகவியாக்கிரம் - புலித்தொடக்கி.
நகவிரணம் - நகத்தழும்பு.
நகவிலேகம் - நகரேகை.
நகவுளி - ஒருளி.
நகளுதல் - நகருதல்.
நகற்சிட்டு - சவாபுச்சிட்டு.
நகாசி - நெற்றி.
நகாடநம் - வாநரம்.
நகாதிபன் - இமயமலை.
நகாயுதம் - சிங்கம், சேவல், நகமுள்ளவை, புலி.
நகாரி - இந்திரன்.
நகிர் - தேள்கொடுக்கி.
நகிலம், நகில் } முலை.
நகுடம் - மூக்கு.
நகுஷன், நகுடன் } ஒருபாம்பு, சந்திரகுலத்தரசரிலொருவன் இவன் நூறு அஸ்வமேதயாகம் செய்தவன் இவனை அகஸ்தியர் சிலநாள் பாம்பாக சபித்தார். சந்திரவமிசத்து ஆயுவுக்கு ஸ்வர்ப்பாநவி யிடத்துப் பிறந்தவன், புரூரவன்பேரன், இவன்மனைவி பிரியம்வதை, புத்திரர்கள், யதி யயாதி, சம்பாதி, ஆயாதி, உத்தமன் என ஐவர், இந்திரன் பிரமகத்திதோஷத்தினால் அப்பதத்தைவிட்டு நீங்கிப்போக, அப்பதத்துக்கு நகுஷனே தகுந்தவனென்று தேவர்கள் தீர்மானித்து அவனை இந்திரபட்டத்துக்குரியவனாக்கினார்கள், அதனால் கர்வித்திருக்கிற நகுஷனை இருடிகள் சிவிகையில் தாங்கிச்சென்ற ஒரு சமயத்தில், நகுஷன் அவ்விருடிகளை விரைந்து செல்லுகவென்று ஏவும் பொருட்டு, "ஸர்ப்ப ஸர்ப்ப" என்றான், அதுகேட்டு பொறாத அகஸ்தியர் அவனை அஜகரம்(மலைப்பாம்பு) ஆகச் சபித்தார். அப்படியே அவன் இந்திரபதத்தி னின்றிழிந்து மலைப்பாம்பாகச் சஞ்சரிக்கும்போது பாண்டவர்களை வநவாச காலத்தில் இரையாகக் கவ்விவிழுங்க, வீமன் அதன் வயிற்றைப் பிளந்துகொண்டு வெளியேவந்து மற்றவர்களைக் காப்பாற்றினான், அப்போது தருமர் அவனுக்குச் சில வுபதேசஞ்செய்து அவன் சாபத்தை நீக்கினார்.
நகுஷாத்துமசன் - யயாதி.
நகுதல் - இகழ்தல், ஒளிவிடுதல், சிரித்தல், புட்பித்தல்.
நகுதா - கப்பலோட்டி.
நகுத்தம் - புன்குமரம்.
நகுலம் - கீரி.
நகுலன் - பஞ்சபாண்டவர்களில் ஒருவன், பாண்டுவுக்கு மாத்திரியிடத்தில் அசுவினிதேவர் பிரசாதத்தால் பிறந்தவன். இவனுக்கு திரௌபதியிடத்தில் சதாநிகனும், ரேணுமதியிடத்தில் நிரமித்திரனும் பிறந்தார்கள். பரிமாவுகைப்போன், சிவன், மகன்.
நகுலி - ஒருகந்தம், பட்டுப்பருத்தி.
நகுலேசன் - வைரவன்.
நகுலேட்டை - ஒருபூடு.
நகேசனங்கை - பார்வதி.
நகேசன் - இமயமலை.
நகேசிறு - புல்லூரி.
நகை - ஆபரணம், இகழ்ச்சி, இகழ்ச்சி மகிழ்ச்சிதோன்றக் கூறுமலங்காரம், இன்பம், எயிறு, ஒளி, களிப்பு, சிரிப்பு, நகையென்னேவல், பல், பூமொட்டு, மலர்ச்சி.
நகைச்சொல் - சிரித்துப்பேசல், பரிகாசப்பேச்சு.
நகைத்தல் - சிரித்தல், நிந்தித்தல்.
நகைத்திறைச்சுவை - விதூடகக்கூத்து வசைக்கூத்தெனினுமாம்.
நகைநோக்கம் - மஞ்சள்.
நகைப்பு - சிரிப்பு, பரிகாசம்.
நகையரல், நகையால் } பகன்றைச்செடி.
நகைரசம் - நகைக்குந்தன்மை.

நகைவேழம்பர்-சாரமாணிகள், சிரிக்கும் பரியாசகர்.
நகோற்பேதம் - ஒரு புண்ணியதீர்த்தம்.
நக்கப்பாரக்கச்சவடம் - நம்பிக்கையற்ற நாணயம்.
நக்கபாரம் - ஒருதீவு.
நக்கபாரி - நக்கபாரத்தவன்.
நக்கரித்தல் - அரக்குதல், அழுந்துதல், தவழுதல்.
நக்கரிப்பு - அழுந்தல், நகருதல்.
நக்கரைத்தல் - நக்கரித்தல்.
நக்கவாரம் - நக்கபாரம்.
நக்கல் - இலேகியம், எச்சில், சிரித்தல், தீண்டல், நக்குதல், இது நால்வகை யுணவினொன்று.
நக்கவாரி - குள்ளமானது, நம்பிக்கையற்ற நாணயஞ்செய்வோன்.
நக்கனத்துவம் - நிருவாணம்.
நக்கனப்பிரசாதனம் - வத்திரதானம்.
நக்கனம் - நக்கனத்துவம்.
நக்கன்-அருகன், சிவன், நரி, நிருவாணி.
நக்காரி - வறட்சுண்டி.
நக்கார் - ஒருபுலவன்.
நக்கி - நக்குவோன்.
நக்கிநதை - நிர்வாணம்.
நக்கினன் - சிவபிரான்.
நக்கினை - ஆடையில்லாதவள்.
நக்கிப்பூ - தேட்கொடுக்கி.
நக்கிரம் - மேல்வாய்த்தற்படி.
நக்கிராஜம் - முதலை.
நக்கிரை - தேட்கொடுக்கி, மூக்கு.
நக்கிரு - தேள்கொடுக்கி.
நக்கினகரணம் - நிருவாணமாக்கல்.
நக்கினம் - நக்கனம்.
நக்கினிகர்ணம் - நக்கனமாக்கல்.
நக்கினிகை - நிருவாணஸ்திரி, பத்தாண்டுப்பெண்.
நக்கீரர்- கடைச்சங்கத்தினிறுதிக்காலத்தில் அதில் தலைமை பெற்றிருந்த தெய்வப்புலவர். சிவபெருமான் அருளிச்செய்த ஒரு பாடலிலும் குற்றங் கற்பிக்கப்புகுந்த அஞ்சாநெஞ்சர், இறையனாரகப் பொருளுக்கு நக்கீரர் செய்த வுரையால் அவரது அல்கலில்லாக் கல்வித்திறமும், அக்காலத்திலே தமிழ்மொழிக் குண்டாயிருந்த அபிவிருத்தியும் ஆற்றலும் இவ்வளவினவென்பது நன்கு புலப்படுகின்றது, இவர் தமக்கொரு காலத்திலுண்டாகிய குஷ்டரோகத்தைக் "கயிலைபாதி காளத்திபாதியந்தாதி" பாடி ஒழித்துக்கொண்டார். திருமுருகாற்றுப்படை, கண்ணப்பதேவர் மறம் முதலியவும் இவராற் பாடப்பட்டனவே, இவர் மதுரைக் கணக்காயனார்மகனார், கடவுட்பூசையிலேவைத்தமனம் சிறிதுதிறம்பினவர்.தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின் மரையோர் மலைக்குகையிற் சேர்த்து வைத்துவிட்டு அப்படிப்பட்ட மற்றொருவரைத் தேடித்திரிந்த பூதமொன்று, நக்கீரர் ஒரு தடாகத்தருகே பூசைசெய்வதைக்கண்டு, அவர் முன்னே விழுந்த ஆலிலையைப் பாதி மீனாகவும் மற்றப்பாதியைப் பறவையாகவுஞ் செய்து அவர் அவ்வற்புதத்தைக்கண்டு மனங் கலங்குதலும் அவரையுங் கொண்டுபோய்த் தன் குகையில் சேர்த்துவிட்டு, நீராடிவந்து ஆயிரம்பேரையும் ஒருமிக்க வுண்போமென்று தடாகத்துக்குப் போயிற்று. அந்தச்சமயத்தில் நக்கீரர் திருமுருகாற்றுப் படையைப் பாடி சுப்பிரமணியக்கடவுளருளால் தம்மையும் மற்றையோரையும் காத்தனர்.
நக்கீரன் - நற்கீரன்.
நக்கு - நக்குதல், நக்கென்னேவல்.
நக்குடகம் - மூக்கு.
நக்குணி - ஒருபாம்பு, சிறுபிள்ளை, நக்கி.
நக்குதல் - நாவாலெடுத்துண்ணல்.
நக்கணவாய்ச்சி - நாகணவாய்ப்புள்.
நக்ஷத்திரகன் - விசுவாமித்திரன் சீடருள் ஒருவன். இவன் அரிச்சந்திரனைத்தொடர்ந்து அவனிடம் விசுவாமித்திரன் கட்டளையிட்ட தனத்தைக் கவர்ந்தவன்.
நங்கிலி - பயிரி.
நங்கு - பரிகாசம்.
நங்குரம் - நங்கூரம்.
நங்கூரப்பல் - நங்கூரத்தின்கொழுவி.
நங்கூரம் - மரக்கலத்தைத் தரிப்பிக்குங் கருவி.
நங்கை-ஒருபூடு, பெண்ணிற்சிறந்தாள்.
நசலாளி - துன்பவாளி.

நசல் - நையல், வியாதி.
நசற்காரன் - நசலாளி.
நசனை - மாணிக்காத்தினத்திலுண்டா கும் வெண்மையானநீர்.
நசாரி - காஞ்சிரை.
நசிகொதி - உணவுபாகம்பண்ணுதலில் ஓர்பழுது.
நசிதல்-ஈனப்படல்,கெடல்,நசுங்குதல்.
நசித்தல் - அழித்தல், கெடுத்தல், சாதல், நசுங்கப்பண்ணுதல், பிளிதல், பெலன்கெடுத்தல்.
நசிப்பு - அழிவு, கேடு, நசிவு, நெரிவு
நசியப்பிரசூதிகை - சாப்பிள்ளைபெற்றவள்.
நசியம் - மூக்கிலிடும்மருந்து.
நசியரி - குப்பைமேனி.
நசியல் - நசிந்தது, நசிவு, சிந்தை.
நசியற்பதம் - நசிந்ததுபோம்பருவம்.
நசிவு - ஈனம், நசியல்.
நசிருணி, நசிருண்டி - உலோபி, மெலிந்தவன், தொந்தரவுசெய்வோன்.
நசினை - நசனை.
நசுகுணி-மிகச்சிறியது, மெலிந்தோன்.
நசுக்கான் - சிறியது.
நசுக்கு - நசித்தல், நசுக்கென்னேவல்.
நசுக்குணி - நசுக்கான்;பின்னிடுவோன், மெலிந்தவன்.
நசுக்குதல் - நசியச்செய்தல்,பின்போடுதல், பெலன்கெடுத்தல்.
நசுங்கச்சப்பி - இழுகுணி, உலோபி.
நசுங்கடித்தல் - நசுங்குதல், பெலன்கெடுத்தல்.
நசுங்கலன், நசுங்கலாண்டி - இழுகுணி.
நசுங்கல் - நசிவு.
நசுங்குதல் - நசுக்கப்படுதல், நெருக்கிடைப்படுதல்.
நசுநசுத்தல் - இழுகுதல், தாமதித்தல், மெதுமெதுத்தல்.
நசுநசுப்பு - ஈரம், தாமதம், மனக்கசப்பு, மெதுமெதுப்பு.
நசுநெனல் - இழுகுதல், ஈரலித்தல், தாமதித்தல், மெதுமெதெனல்.
நசுபிசுத்தல் - இழுகுதல், நசுபிசெனல்.
நசுபிசப்பு - குழைந்தொட்டுந்தன்மை.
நசுபிசெனல் - இழுகுதல், ஈரலித்தல், குழைந்தொட்டுதல்.
நசுவல் - நசுகுணி, நசுங்கற்குணம், பெலன்குறைந்தது.

நசை - அன்பு, ஆசை, ஈரம், ஒழுக்கம், குற்றம்,பரிகாசம்.
நசைகுநகர்-நண்பர்.
நசைதல் - விரும்பல்.
நசைநர், நசையுநர் - சிநேகிதர்,விரும்பினோர்.
நசைவினை - நன்னடக்கை.
நசைவு - ஈரம்.
நச்சம்பு - நஞ்சுப்பாணம்.
நச்சறுப்பாய்ஞ்சான், நச்சறுப்பான் - ஒருகொடி, கழுதைப்பாலை.
நச்சினார்க்கினியார் - மதுரையிலே, பரத்வாஜ கோத்ரத்தில் அவதரித்த ஓரந்தணர், சிவபத்தியில் சிறந்தவர், தமிழாராய்ச்சியிலே தமக்கு ஒப்பாருமிக்காருமில்லாதவர், தொல்காப்பியம் என்னும் இலக்கண நூற்கடலின் கரைகாண்டல் இவருரைச்சோங்கில்லையாயின் எத்திறத்தார்க்கும்அரிதாம். தொல்காப்பியம், பத்துப்பாட்டு சிந்தாமணி, கலித்தொகை, குறுந்தொகையிருபது என்னும், நூல்களை இறந்தொழியாமல் காத்து நிலைநிற்கச்செய்தது அந்நூல்களுக்கு இவர் செய்த உரையேயாம். இவர் பிறந்திலராயின் அகத்தியம் முதலிய நூல்கள்போலவே இந்நூல்களும்கற்கைக்கமையாதனவாய்க் காலன் வாய்ப்பட்டேயிருக்கும், இவர் இந்நூல்களுக்கு உரையிட்டாரென்பது, "பாரத்தொல்காப்பியமும் பத்துப்பாட்டுங்கலியும், ஆரக்குறுந்தொகையுளைஞ்ஞான்கும், சாரத்திருத்தகுமாமுனிசெய் சிந்தாமணியும், விருத்திநச்சினார்க்கினியமே" என்பதனலுணர்க, இவர் முத்தமிழிலும் வித்தகரென்பது, இவர் செய்தவுரையே சான்றுசாற்றும், இவரும் பரிமேலழகரும் சமகாலத்தவர், கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர்காலத்துக்கும் கம்பர்காலத்துக்கும் முன்னுள்ளவரென்பது அவர் நூல்களை மேற்கோள்கொள்ளாமையானும் பிறகாரணங்களாலும் துணியப்படும், ஆதலால் இவர் ஆயிரத்திருநூறுவருடங்களுக்கு முன்னிருந்தவர், இவர்கலித்தொகைக்குச் செய்தவுரை மிகவும் அற்புதமானது. ஓராசிரியர்.

நச்சினி - குரக்கன்.
நச்சு - ஆசை, சிறுமை, தொனுப்பு, நச்செனவல்.
நச்சுக்கத்தி - கெட்டவன், நஞ்சுபாய்ச்சியகத்தி.
நச்சுக்காற்று - விஷக்காற்று.
நச்சுக்குழல் - குருவிக்குக் குண்டு தூங்குழல், தூரதிட்டிக் கண்ணடிக்குழல்.
நச்சுக்கொடி - கொப்பூழ்க்கொடி.
நச்சுச்சொல் - தீச்சொல்.
நச்சுதல் - அலட்டல், ஆசைப்பெருக்கம், விரும்பல்.
நச்சுத்தானம் - அமுதநிலைக்கேழாமிடம்.
நச்சுநச்செனல் - அலட்டுதல், கச்சுப்பிச்சுப்படல்.
நச்சுநீர் - நஞ்சுச்சலம்.
நச்சுப்பல் - நஞ்சுப்பல்.
நச்சுப்பல்லி - விஷப்பல்லி.
நச்சுப்பார்வை - கொடும்பார்வை, மோகப்பார்வை.
நச்சுப்பால் - கள்ளிப்பால், சீம்பால், விஷப்பால்.
நச்சுப்புகை - நஞ்சுப்புகை.
நச்சுப்பூடு - நஞ்சுப்பூண்டு.
நச்சுப்பொடி - ஒரு சிறுமீன், நஞ்சுச்சாரத்தூள்.
நச்சுமரம் - எட்டி, நஞ்சுள்ளமரம்.
நச்சுமருந்து - தீயமருந்து, நஞ்சுசேர்ந்த மருந்து.
நச்சுமழை - அவமழை, காலந்தப்பிய மழை.
நச்சுமனர் - கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்.
நச்சும்பிச்சும் - வீண்காரியங்கள்.
நச்சுவாக்கு / நச்சுவாய் } தீய்ச்சொல்.
நச்சுவிறகு - நஞ்சுச்சாரமுள்ள விறகு, அது எருக்கு கள்ளி முதலியன.
நச்சுறுத்தல் / நச்சுறுவித்தல் } ஆசையுண்டாக்குதல்
நச்செண்ணெய் - நஞ்சுப் பதார்த்தஞ் சேர்த்துச்செய்த வெண்ணெய்.
நச்செலி - மூஞ்சூறு, விஷவெலி.
நச்செழுத்து - நஞ்சுத்தன்மையுள்ள வெழுத்து அவை யா, யோ, ரா, ரோ, லா, லோ, ய், ர், ல், இவைகளும் எழு நெட்டுயிரும் ஆய்தமுமாம்.
நச்செள்ளையர் - ஒரு சங்கப்புலவர்.
நஞ்சம் - நஞ்சு.
நஞ்சறப்பாய்ந்தான் / நஞ்சறுப்பான் } பேய்ப்புடலவன்.
நஞ்சன் - தீயன்.
நஞ்சி - குன்றிமணி.
நஞ்சு - தீமை, நஞ்சுக்கொடி, விடம்.
நஞ்சுகக்குதல் - விடங்காலல்.
நஞ்சுகரத்தல் - நஞ்சுகலத்தல்.
நஞ்சுக்கொடி - கொம்பூழ்க்கொடி.
நஞ்சுணி - சிவபெருமான்.
நஞ்சுண்டோன் - சிவபிரான்.
நஞ்சுபற்றுதல் - நஞ்சுகலத்தல், விஷமேறுதல்.
நஞ்சுபாய்ச்சுதல் - ஆயுதங்களுக்கு நஞ்சூட்டல், வஞ்சகஞ்செய்தல்.
நஞ்சுமுறிச்சான் - நஞ்சறுப்பான்செடி.
நஞ்செழுத்து - நச்செழுத்து.
நடக்கல் - நடக்குதல்.
நடக்கை - ஒழுக்கம், செய்கை, நடத்தல், நடப்பு.
நடத்தல் - இயற்றுதல், காரியம் பலித்து வருதல், சம்பவித்தல், செலுத்தல், செல்லுதல், போகல்.
நடத்துதல் - இயற்றுதல், செலுத்துதல், நடப்பித்தல்.
நடத்தை - ஒழுக்கம், நடப்பு.
நடத்தைப்பிழை - துன்னடை.
நடநசபை - பஞ்சசபையிலொன்று.
நடநாடகசாலை - நாடகப்பெண்.
நடநாயகன் - கெருடப் பச்சைக்கல், சிவன்.
நடநாராயணம் - ஓரிராகம்.
நடந்தேறுதல் - சம்பவித்தல், நிறைவேறல்.
நடபடி - ஒழுக்கம், வர்த்தமானம், வழக்கம்.
நடபத்திரிகை - சேம்பு.
நடபாவி - நடைகிணறு.
நடப்பன் - இயங்குமுயிர் வருக்கம்.
நடப்பித்தல் - நடத்துதல்.
நடப்பு - சலுகை, திருவாங்குகை, நடக்கை, போக்குவரவு.
நடமண்டனம் - அரிதாரம்.
நடமாடி - சிவபெருமான்.
நடமாடுதல் - ஊடாடுதல், கூத்தாடுதல், வழங்குதல்.

நடமாட்டம் - ஊடாட்டம், செல்வாக்கு, பழக்கம்.
நடம் - ஒருபண், கூத்து.
நடராஜன் - சிவபெருமான்.
நடர் - கூத்தர்.
நடலக்காரன் - நாகரிகன்.
நடலமடித்தல் - தொந்தரவு பண்ணுதல்.
நடலம் - ஒய்யாரம், செருக்கு, நடலை.
நடலம்பண்ணுதல் - நாகரீகம் பண்ணுதல்.
நடலை - கபடம், துன்பம், நடுக்கம், நாகரீகம், பொய், வஞ்சனை, மரணம்.
நடல் - நடுதல்.
நடவடி, நடவடிக்கை - நடபடி.
நடவரன் - நடனமாக்களிற்சிறந்தவன்.
நடவாதநடத்தை - துன்னடத்தை.
நடவு - நடவுதல், நடவென்னேவல், நாற்று நடுகை.
நடவுதல் - செலுத்தல், நடத்துதல்.
நடவுபயிர் - நட்டபயிர்.
நடவை-கடவுமரம், தணக்குமரம், வழங்குமிடம், (உ-ம்) தமிழ்நடவை, வழி.
நடனம் - கூத்து.
நடனர் - கூத்தர்.
நடன் - கூத்தன்.
நடாத்துதல் - ஓட்டல், நடத்துதல்.
நடாந்திகை - இலஜ்ஜை.
நடாவுதல் - நடவுதல்.
நடி - நடியென்னேவல், நாடகக்கணிகை, பெருமை, மகத்துவம்.
நடித்தல் - கூத்தாடுதல், நாகரீகம் பண்ணல், வெளிப்படல்.
நடிப்பு - கூத்து, துன்னடை, நாகரீகம்.
நடிராசி - இடையிராசி, நடுத்தரம்.
நடு - அரை, இடை, ஊடு, தொழில், நடுவென்னேவல், நீதி, பூமி, மத்தம்.
நடுகை - நடுதல்.
நடுக்கட்டுதல் - மத்தியட்சத்தில் வைத்தல்.
நடுக்கம் - அச்சம்,கிறுகிறுப்பு,நடுங்கல்.
நடுக்கல் - நடுங்குதல்.
நடுக்கல்வாதம் - ஒருநோய்.
நடுக்கற்காய்ச்சல், நடுக்கற்சுரம் - ஒருநோய்.
நடுக்காரர் - நடுவர்.
நடுக்கு - கிறுகிறுப்பு, நடுக்கம், நடுக்கென்னேவல்.
நடுக்குடி - உட்சேரிக்குடி.
நடுக்குண்ணல் - நடுங்குதல்.
நடுக்குதல் - அசைத்தல், நடுங்கச்செய்தல்.
நடுக்கொள்ளுதல் - நடுவிலாகுதல்.
நடுங்கநாட்டம் - ஒருதுறை, அது தோழி தலைவியை நடுங்கப்பேசுதல்.
நடுங்கலன் - அச்சமுடையோன், திமிர்வாதக்காரன்.
நடுங்கல், நடுங்குதல் - அசைதல், அதிர்தல், பதறுதல், பயப்படல்.
நடுச்சாமம் - அத்தசாமம், பாதியிரா.
நடுச்செல்வம்-இடையில்வந்தசெல்வம்.
நடுச்செல்வர் - இடைச்செல்வர்.
நடுச்சொல்லுதல் - நியாயஞ்சொல்லுதல்.
நடுதல் - நாட்டல்.
நடுத்தரம் - இடைத்தரம்.
நடுத்தலை - உச்சி.
நடுத்தீர்த்தல் - நியாயந்தீர்த்தல்.
நடுத்தீர்ப்பு, நடுத்தீர்வை - நியாயந்தீர்ப்பு.
நடுநடுங்குதல் - பயத்தால் மிகக்கலங்கல், மிக நடுங்கல்.
நடுநாள் - சித்திரை.
நடுநியாயம் - நீதி.
நடுநிலை - நடுநிற்பு, நீதி.
நடுநிற்றல் - பிணைநிற்றல், மத்தியட்சநிற்றல்.
நடுநீதி - நியாயம்.
நடுப்பகல் - மத்தியானம்.
நடுப்படுத்துதல், நடுப்பண்ணுதல் - பொதுக்கட்டுதல்.
நடுப்பார் - இடை.
நடுப்பார்த்தல் - மத்தியட்சம்பார்த்தல்.
நடுப்பேசுதல் - நியாயம்பேசுதல்.
நடுப்போக்குதல்-ஊடுபோக்குதல், நியாயந்தீர்த்தல்.
நடுப்போர் - அமளி.
நடுமதியம், நடுமத்தியானம் - உச்சிக்காலம்.
நடுமையம் - உச்சம், நடு.
நடுராசி - நடுத்தரம்.
நடுவதிபாதி, நடுவத்தானம் - நடுவிடம்.
நடுவத்தசாமம் - நடுச்சாமம்.
நடுவறுத்தல் - சீர்தூக்கிப்பார்த்தல், நியாயந்தீர்த்தல்.

நடுவறுத்தான் - மூக்குரட்டைக்கொடி.
நடுவன் - நமன், நியாயாதிபதி, மத்தியக்கன்.
நடுவாந்தரம் - இடை.
நடுவிரல் - மத்திமை.
நடுவின்மை - சமமின்மை, நீதிக்கேடு.
நடுவு - நடு, மாதரிடை.
நடுவுநிலைமை - நிதானம், நீதி.
நடுவெலும்பு - முதுகெலும்பு.
நடுவெளி - இடைவெளி, பரவெளி.
நடுவைத்தல் - நடுக்சட்டல்.
நடேசன் } சிவபிரான்.
நடேசுவரன்
நடேச்சுரன்
நடை - ஒழுக்கம், கூத்து, செலவு, செல்வம், தொடர்பு, நடத்தை, பழக்கம், முறை, வழக்கம், வழி, வாயிற்கடவை.
நடைகாரன் - நடைசுருக்கம்.
நடைகாவணம் - நடைப்பந்தர்.
நடைகூலி - நடக்கிறதற்கானகூலி.
நடைகொள்ளுதல் - கதிகொள்ளுதல்.
நடைசாரி - உலாத்து, குதிரையின் மந்தகதி.
நடைசாரிமேளம் - உலாமேளம், சாப்பறை.
நடைச்சலங்கு - வள்ளம்.
நடைநாயகம் - அன்னப்புள்.
நடைநோய் - கிடைப்பாடில்லாதரோகம்.
நடைபடி - நடத்தை, வாடிக்கை
நடைப்பரிகாரன் - பயணச்சாமான்.
நடைப்பறிதல் - நடைகொள்ளுதல்.
நடைப்பாவாடை - நிலப்பாவாடை.
நடைபாவி - படி.
நடைப்பரிகாரம் - நடைமருந்து, பயணச்சாமான், பலபண்டம்.
நடைமருந்து - பத்தியமில்லாதமருந்து.
நடைமேல் - கானடை.
நடையன் - உழுமாடு, ஏறுகுதிரைமுதலியன, பாதகுறடு.
நடையாடுநோய் - கிடைப்பாடில்லாத துன்பம்.
நடைவாவி - நடைபாவி.
நட்சத்திரகண்டகி - அநாசிச்செடி.
நட்சத்திரசக்கிரம் - நட்சத்திரமண்டலம்.
நட்சத்திரசாகிகி - திருவாதிரைநாள்.
நட்சத்திரசீரகம் - அனீசு, ஒரு சீரகம்.
நட்சத்திரதீபம் - ஒருவிளக்கு.
நட்சத்திரநேமி - சந்திரன், துருவன், விட்டுணு.
நட்சத்திரப்பதவி - நட்சத்திரமண்டலம்.
நட்சத்திரபுருஷம் - ஒருவிரதம்.
நட்சத்திரமாலை - ஒருகூத்து, ஒருசோதிடநூல்.
நட்சத்திரம் - பஞ்சாங்கவுறுப்பி னொன்று, மூத்து, விண்மீன்.
நட்சத்திரவாணம் - ஒருவாணம்.
நட்சத்திராகிருதி - வெண்சோளம்.
நட்சத்திரேசன் - சந்திரன்.
நட்டசந்திரன் - ஆவணிப்பூர்வபக்கச் சதுர்த்திப்பிறை.
நட்டணை - ஆகடியம், எண்ணமை, கொரேம், வெறுப்பு.
நட்டநடு - சரிமத்தி.
நட்டபாடை - ஒருபண்.
நஷ்டம் - கேடு, சேதம்.
நட்டம் - அம்மணம், அழிவு, கலைஞானமறுபத்து நான்கினொன்று, கூத்து, கேடு, நட்டோம், நிறுதிட்டம்.
நட்டல் - நடுதல், நள்ளுதல், சிநேகம் பண்ணுதல்.
நட்டழிவு - நஷ்டதேசம்.
நட்டாத்திருத்திரம் - கொள்ளைப்பொருள்.
நட்டாமட்டி - நடுத்தரம்.
நட்டாமுட்டி - ஒருநூல், கீழ்மை, நடுத்தரம், வெறுவிலி.
நட்டாமுட்டிசிந்தனை - ஒருநூல்.
நட்டார் - உறவோர், சிநேகிதர்.
நட்டாறு - நடுஆறு.
நஷ்டி } நட்டம்.
நட்டி
நட்டு - கீழ்மை, சரிநடு, நட்டம், நட்டுவன், நாட்டியம்.
நட்டுக்கதை - கட்டுக்கதை.
நட்டுக்குநடுவே - சரிநடு.
நட்டுச்சி - நடுவுச்சி.
நட்டுச்சினை - நண்டுச்சினை.
நட்டுச்சினைக்கல் - ஒருவிதக்கல்.
நட்டுச்சினைமண் - ஒருவிதமண்.
நட்டுமுட்டு - நடனத்துக்குடுத்ததளபாடம்.
நட்டுவக்காலி - நட்டுவாக்காலி.
நட்டுவமுட்டுக்காரர் - மேளகாரர்.
நட்டுவம் - நாட்டியம், பழக்குந்தொழில்.
நட்டுவலை - சக்ஷுர்மனுவின்பாரி, உன் முகன்தாய்.
நட்டுவன் - நடனமாட்டுவோன்.

நட்டுவாக்காலி
நட்டுவாய்க்காலி } ஒரு விஷசெந்து, கொடுக்கன்.
நட்டுவிழுதல்-தலைகீழாய்விழுதல் அது யாக்கைக்குறுகுற்றமைந்தினொன்று.
நட்டுவைத்தெலும்பு - இடுப்பின் கீழ் திடையெலும்பு, கால்.
நட்டெந்துகலை - பூருவபக்கத்துப் பிரதமி.
நட்டோர் - உறவோர்.
நட்பாளன் - அரசர்க்குறுதிச் சுற்றத் தொருவன், நண்பன்.
நட்பு உறவு, சிநேகம், சுற்றம்.
நட்புக்கிரகம் - கிரகநிலையைந்தி னொன்று.
நட்புத்தானம் - கிரகம்நட்புப்பெற்றிருக் குந் தானம்.
நட்புப்பண்ணுதல்
நட்புவைத்தல் } பட்சங்காட்டல்.
நணந்தம் - சணல், புன்கு.
நணுகலர் - பகைவர்.
நணுகல் - கிட்டல்.
நணுகார் - பகைவர்.
நணுகுதல்-இணைதல்,கிட்டல்,சார்தல்.
நண்டல் - பொங்கல்.
நண்டு - கற்கடகவிராசி, ஞெண்டு.
நண்டுக்கல் - ஒருகல்.
நண்டுக்காற்கீரை - ஒருகீரை.
நண்டுக்காற்புல் - ஒருபுல்.
நண்டுக்கொடுக்கி - நண்டின்முன்கால்.
நண்டுத்தெருக்கால்
நண்டுவாய்க்காலி } நட்டுவக்காலி.
நண்ணலர் - பகைவர்.
நண்ணல் - கிட்டல்.
நண்ணார் - பகைவர்.
நண்ணுதல் - இருத்தல், கிட்டுதல், சேர்தல்.
நண்ணுநர் - மித்திரர்.
நண்பகல் - மத்தியானம்.
நண்பன் - குறிஞ்சிநிலத்தலைவன், சணல், தோழன், புருடன்.
நண்பு - நட்பு.
நதம் - ஆண்யாறு, உச்சத்திருந்து கிரகத்திற்குள்ள தூரம், கிரந்திதகரம், மேற்கோடும்ஆறு.
நதநதிபதி - சமுத்திரம்.
நதனு - சிங்கம், முகில்.
நதாங்கி - பொன.
நதாதிபதி - கடல்.
நதி - கிழக்கோடுமாறு, தீர்த்தம், பெண்யாறு, யாறு.
நதிகாந்தை - திப்பிலிமூலம்.
நதிக்கரை - கங்காதீரம்.
நதிசரம்-ஆற்லுச்சார்பிற்பிறந்தயானை.
நதிபதி - கடல், வருணன்.
நதிகாந்தன் - வருணன்.
நதீசம் - தாமரை.
நதீஜாரன் - சிவபெருமான்.
நதீநன் - கடல், வருணன்.
நதீரம் - ஆற்றுக்கரை.
நதீரயம் - நீர்ப்பாய்ச்சல்.
நதீவடம் - காராலமரம்.
நதீவரம் - தகரம்.
நதீனம் - கடல்.
நதுத்தல் - அவித்தல்,கெடுத்தல்,மறைத்தல்.
நத்தகம் - கந்தை.
நத்தத்தனார் - சங்கப்புலவரில் ஒருவர்.
நத்தபாகை - மையவரி.
நத்தபோசனம் - இராப்போசனம்.
நத்தப்பிலா - எருக்கு.
நத்தமகன் - ஒருவகை வேளாளன்.
நத்தமாடி
நத்தமார் } வேளாளர்.
நத்தமாலம் - புன்கமரம்.
நத்தமுகை - இரவு.
நத்தம் - இராத்திரி, இருள், ஊர், எருக்கு, கடிகாரவூசி, சங்கு, நடு, நத்தை, புன்கமரம், மூக்கு, வாழை.
நத்தாசை - பேராசை.
நத்தார்வைத்தல் - தோணியை நங்கூரம் வைத்திழுத்தல்.
நத்திதம் - நாணயம் போடப்பட்டது.
நத்து - ஓராபரணம், ஒருபறவை, சங்கு, நத்தென்னேவல், மூக்கணி.
நத்துதல் - விரும்பல்.
நத்துருவண்ணநாதம் - ஈயமணல்.
நத்தை - ஒருபூண்டு, கடுகு, சருநந்து.
நத்தைக்குத்தி
நத்தைக்கொத்தி } ஒருநாரை.
நத்தைச்சுண்டி
நத்தைச்சூரி } ஒருசெடி.
நத்தைப்படுவன் - ஒருகண்ணோய், கண்கட்டி.
நந்தகம் - வாள், விட்டுணுவின்வாள்.
நந்தகி - திப்பிலி.

நந்தகன் } இடையராஜன், கண்
நந்தகோபன் } ணனை வளர்த்த தந்தை.

நந்தகோபாலர் - இடையர்.

நந்தசுதன் - கிருட்டிணன்.

நந்தநந்தனன் - கண்ணன்.

நந்தநந்தினி - உமையவள்.

நந்தபாலன் - வருணன், விட்டுணு.

நந்தபுத்திரி - பார்வதி.

நந்தம் - இடையர், கஸ்தூரி, சங்கநிதி, [சங்கு.

நந்தர் - இடையர்.

நந்தல் - ஆக்கம், கெடுதல், நிந்தை, வளர்தல்.

நந்தவனம்-நந்தனவனம்.பூந்தோட்டம்.

நந்தன - இருபத்தாறுவது வருஷம்.

நந்தனம் - இந்திரன்பூந்தோட்டம், இருபத்தாறுவது வருடம், தவளை, பூந்தோட்டம்.

நந்தனவனம் - பூந்தோட்டம்.

நந்தனன் - மகன, மால்.

நந்தினி } மகள்.
நந்தினை }

நந்தன் - மகாநதியின் புத்திரனை ஓராசன், அரசாண்ட ஒரு சக்கிலியன், கிருட்டிணன், சேர்பந்தபாஷாணம், நந்தகோபன். கிருஷ்ணனைவளர்த்த தந்தை, இவன் மனைவி யசோதை, வசுதேவனுக்கு மதிரையிடத்துப் பிறந்தபுத்திரன், கலியுகம் ஆயிரத்தில் ரிபுஞ்சயன் அரசு செய்திருந்தான். அவனுக்குப்பின்னே மகததேசத்துக் காசனுனவன், அவன் மந்திரி சுனகன்மகன் பிரத்தியோதநன், அவன் பரம்பரையில் நந்திவர்த்தனீருக ஐவர் அரசுபுரிந்தகாலம்நூற்றுமுப்பத்தெட்டு வருஷம், இந்த நந்திவர்த்தனனும் நந்தனெனப்படுவன், இவன் வமிசத்திலே எட்டாஞ் சந்ததியாக வந்தவனும், நந்திவர்த்தநன் என்னும் பெயரோடு விளங்கினன், அவன் மகன் மகாநந்தி,இவன் ஒருசூத்திரப் பெண்ணைக்கூடி நந்தனென்பவனைப் பெற்றுன், இந்த நந்தன் மகாபதுமன் எனவும்படுவன். இவன் க்ஷத்திரியமணஞ் சிறிதுமில்லாமல் வேரறுத்து ஆரியதேசமுழுதும் ஒரு குடைக்கீழாண்டவன், இவன் வழியில் வந்தவர் ஒன்பதின்மர், நவநந்தர் எனப்படுவர். இவர்களை நாசஞ்செய்தவர்விஷ்ணுகுப்தர்என்னும்வேதியர், இந்த நந்தர்களுடைய இராஜ்ய காலமெல்லாம் கலியுகம் ஆயிரத்தைஞ்ஞூற்றுக்குள்ளாகவே முடிந்தன, ரிபுஞ்சயனுக்குப் பின்புஅரசுகைக்கொண்டு நானூறுவருஷகாலமாக வழிமுறையே அரசுபுரிந்தோரெல்லோருக்கும்நந்தர்என்பது பொதுப்பெயர், பரிக்ஷித்து காலத்திலே சப்தரிஷிகள் மக நக்ஷத்திரத்திலே யிருந்தனரென்றும், இவர்கள் பூர்வாஷாட நக்ஷத்ரத்திலே இருக்குங்காலத்தில் நந்தர்கள் அரசு செய்யத் தொடங்குவார்களென்றும் விஷ்ணுபுராணம் கூறுதலால் இதுஉண்மையாகும். சப்தரிஷிகள் ஒரு நக்ஷத்ரத்திலே நூறுவருஷத்துக்கிருக்கும், மகமுதல் பூர்வாஷாடமீருகப் பதினெரு நக்ஷத்ரமாகும்.ஆகவே பத்துநக்ஷத்ரங்களுக்கும் சென்றவருஷம்ஆயிரம்.அதன்மேல் பூர்வாஷாடகாலம், அது கலியுகம் ஆயிரத்தின்மேல்தொடங்கியது. அக்காலத்திலே தமிழ்நாட்டில் திருவவதாரஞ்செய்து விளக்கமுற்றிருந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனுரும் நந்தருடைய அரசியலைக் குறித்து, "கட்டார் துழாயன் தாமரையானென்றிவர் காண்பரிய, சிட்டார் பலிதேந்தையம் வவ்வாய் செய்கலை வவ்வுதியே, நட்டார்நடுவே நந்தனுள நல்வினையா லுயர்ந்த, கொட்டாறுடுத்ததண்வயல்சூழ் "கொச்சையமர்ந்தவனே" என்னுந் தேவாரத்திலெடுத்துரைத்தனர். திருநாளைப் போவார் நாயனுர்.

நந்தாத்துமசன் - கிருட்டிணன்.

நந்தாத்துமசை - துர்க்கை.

நந்தாப்பதம் - மோட்சம்.

நந்தாமணி - உத்தாமணி, சிறந்தமணி.

நந்தாவனம் - நந்தனவனம்.

நந்தி - அட்டாதச வுபபுராணத்தொன்று, இடபவிராசி - எருது, ஓராசன், ஒருமலை, சிவன், சிறுபறை, செக்கான், நந்திதேவன், நாகம்.

நந்திகேசரம் - நந்தியாவட்டம்.

நந்திகேசன் }
நந்திகேசுரன் } இடபவிக்கிரகம், சிவனூர்தி, சிவன், நந்திதேவன்.
நந்திகேச்சுரன் }
நந்திகை - இந்திரநகர், நந்தை, மட்பாண்டம்.
நந்திக்கிராமம் - அயோத்திக்குச்சமீபத்திலுள்ள ஒரு சிறுகிராமம், ஸ்ரீராமர் வனவாசம் போய் வருமளவும் பரதன் வசித்த இடமிதுவே.
நந்திதுர்க்கம் - ஒருமலை, இது மைசூர் தேசத்திலுள்ளது. இதில் பாலாறும் உத்தரபினாகினி நதியும் உற்பத்தியாகின்றன.
நந்திதேவர் - சிலாதரன் புத்திரர், இவர் கோடிவருஷம் உக்ரதபஞ் செய்து சிவபெருமானுக்கு வாகனமும் துவாரபாலகருமானவர். அகச்சந்தாநகுரவர்களுக்கு முதற்குருவும், சிவபெருமானுக்கு முதன் மாணுக்கருமானவர்.
நந்திதேவன்-சிவனது வாசற்காவற்காரன்.
நந்திபத்திரி - நந்தியாவட்டம்.
நந்திப்பூசுணி - சாம்பற்பூசுணி.
நந்திமலை - ஒருமலை.
நந்திமுகி - கோதுமை.
நந்தியெம்பெருமாள் }
நந்தியெம்பெருமான் } நந்திதேவன்.
நந்தியாவட்டத்தாமன்-துரியோதனன்.
நந்தியாவட்டம் }
நந்தியாவட்டை } ஒரு பூச்செடி.
நந்தியாவர்த்தம் }
நந்திவருத்தனன் - சிவன், சிநேகிதன், மகன்.
நந்திவர்த்தநன் - க்ஷத்ரிய வமிசத்து ரிபுஞ்சயன் என்னும் கடையரசனைக் கொன்று தன் மகனாகிய பிரத்தியோதநனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்த சுநகன் என்னும் மந்திரிவமிசத்து ஆறும்வழித் தோன்றலாகிய ஓரரசன், உதயணன் என்னுமரசன் புத்திரன், மகாநந்தி தந்தை.
நந்திவிருட்சம் - சின்னிமரம்.
நந்தினி - வசிஷ்டர்வளர்த்த காமதேநுவின்கன்று.
நந்தீசுவரன் }
நந்தீட்சுரன் } சிவபிரான்.
நந்து - சங்கு, நத்தை, நத்தென்னேவல்.
நந்துதல் - நந்தல்.
நந்துருணி - கோட்காரன், மதியீனன்.
நந்தேசன் - சிவன், நந்தி.
நந்தை - ஏகாதசி, கலப்பையை நுகத்தொடு பிணைக்குங்கயிறு, கொற்றான்கொடி, சஷ்டி, தேற்றுமரம், பஞ்சதெய்வப் பசுவினொன்று, பிரதமை.
நந்நான்கு - நான்குநான்காக.
நபகன்-வைவசுவதமநுபுத்திரன் இவன் மகன் நாயாகன்.
நபசங்கமம் - பறவை.
நபசம் - ஆகாயம்.
நபசுவதி - அந்தர்த்தாநன் இரண்டாமனைவி, ஹவிர்த்தாகன் தாய்.
நபசுவந்தன் - முராசுரன்மகன், இவன் கிருஷ்ணனுற் கொல்லப்பட்டான்.
நபச்சட்சு - சூரியன்.
நபப்பிரமாணம் - காற்று.
நபமணி - சூரியன்.
நபம் - ஆகாயம், ஆவணிமாதம்.
நபன் - விப்பிரசித்திமகன்.
நபாகம் - இருள்.
நபாலயம் - புகை.
நபி - தீர்க்கதரிசி.
நபுஞ்சகம் - பேடு.
நபுஞ்சகலிங்கம் - அலிப்பால்.
நபுஞ்சகன் - ஆண்குறி வாங்கப்பட்டவன், பேடன்.
நபோகசம் - முகில்.
நபோகதி - அந்தரகதி.
நபோதுகம் }
நபோதூமம் } முகில்.
நபோநதி - ஆகாயகங்கை.
நபோமணி - சூரியன்.
நபோரஜம் - இருள்.
நபோரேணு - பரமாணு.
நபோலயம் - புகை.
நப்பாலத்தனார்-சங்கப்புலவரிலொருவர்
நப்பின்னை - இலட்சுமி.
நம - மந்திரமுடிவினொன்று, வணக்கம்.
நமக்காரி - ஆடுதின்னாப்பாலை, வறட்சுண்டி.
நமஸ்கரித்தல் - வணக்கல்.
நமஸ்காரம் - நமற்காரம்.
நமசன் - இணக்கம்.
நபசன் - அனுகூலன்.
நமதன் - புகை.
நமசிதன் - பூசிக்கத்தக்கவன்.
நமதன் - ஆண்டவன்.

நமத்தம் - சடாமாஞ்சி.
நமருதல் - ஊறுதல்.
நமர் - சுற்றத்தார், நம்மவர்கள்.
நமள் - நம்மவள்.
நமற்கரித்தல் - வணங்குதல்.
நமற்காரம் - வணக்கம்.
நமன் - இயமன், சுற்றத்தான், நம்மவன்.
நமிடு - ஈர்.
நமிநந்தியடிகணயனூர் - தாம் செய்து வந்த திருவிளக்குத் தொண்டுக்கு நெய்யகப்படாமையால், அந்த நெய்க்கீடாகக் குளத்து நீரை முகந்து திருவாரூர் ஆலயமெங்கும் திருவிளக்கேற்றி யெரித்த சிவபத்தராகிய இவர் சோழமண்டலத்திலே ஏமப்பேறூரிலே பிராமணகுலத்திலே அவதரித்தவர்.
நமுசி - ஓரசுரன், மதன், மாவலியின்புத்திரன்.
நமுகிசூரதனன் - இந்திரன்.
நமுடு - ஒருநாரை, சீழுதடு, நமிடு.
நமுட்டுச்சிரங்கு - ஒரு சிறுசிரங்கு.
நமேரு - உருத்திராக்கம், புன்னைமரம்.
நமை - ஒருமரம், சொறிவு, தினவு, நமையென்னேவல்.
நமைக்காய் - கத்திரிக்காய்.
நமைச்சல் - தினவு.
நமைதல் - தின்றல்.
நமைத்தல் - சொறிதல், தின்றல்.
நமைப்பு - சொறிவு.
நமோகுரு - பிராமணன்.
நம் - சாரியை, நமது (உ-ம்) எல்லார் நம்மையும்.
நம்பகன் - சீர்ப்பந்தபாஷாணம்.
நம்பல் - ஆசைப்பெருக்கம், நம்புதல்.
நம்பவன் - நம்மவன்.
நம்பன் - கடவுள், சிவன், நம்பிரான்.
நம்பாசு - அவநம்பிக்கை.
நம்பி - அகப்பொருளிலக்கணஞ் செய்தோன், அரசமாதைப்பார்ப்பானிராக்கதமணஞ் செய்யப்பிறந்து விட்டுணுவை அருச்சிப்போன், புருடரிற் சிறந்தோன், வேடுவாசன்.
நம்பிக்கை - சத்தியம், நிசம், விசுவாசம்.
நம்பிக்கைகாரன் - நிசவான்.
நம்பிக்கைத்துரோகம் - இரண்டகம்.
நம்பிக்கைத்துரோகி - இரண்டகன்.
நம்பியாண்டார்நம்பி - திருநாரையூரிலே அவதரித்த ஒரு ஆதிசைவப்பிராமணர். இவர் இளம்பருவத்திலே ஒருநாள் இவர் தந்தையார் இவரையழைத்து, இன்றைக்கு நான் ஓரூருக்குப் போகவேண்டி யிருத்தலால், பொல்லாப்பிள்ளையார் கோயிற்பூசையை நான் நடத்துவதுபோற்சென்று நடத்திவரக் கடவையென்று கட்டளையிட்டுப்போனார். அவ்வாறே நம்பியாண்டார் பிள்ளையார் கோயிலுக்குப் போய் விதிப்படி பூசைசெய்து நைவேத்தியத்தை பிள்ளையார் திருமுன்னேவைத்து தந்தையார் வைக்கும் நைவேத்தியத்தைப் பிள்ளையார் திருவமுதுசெய்து வருபவரென்றெண்ணி, எம்பெருமானே திருவமுது செய்தருளுமென வேண்டினர். இவர் வேண்டியவாறே பிள்ளையார் திருவமுது செய்யாதிருப்பது கண்டு, நம்பியாண்டார் மனம் வருந்தி, எம்பெருமானே, அடியேன் என்ன தவறு செய்தேனென்று அழுது கொண்டே தம் தலையைக் கல்லிலே மோதப் புகுந்தார். உடனே பிள்ளையார், நம்பீ, பொறு, என்றுதடுத்து அந்த நைவேத்தியத்தைத் திருவமுது செய்தருளினர். பின்னுமொருநாள் சோழராஜன் முன்னிலையில் இந்த அற்புதம் நிகழ்ந்தது. இவரே திருத்தொண்டர் சரித்திரத்தைத் திருவந்தாதியாகப் பாடினவர். தேவாரத் திருமுறை கண்டவருமிவரே.
நம்பியாண்டார்நம்பி - ஒருபுலவன்.
நம்பியான் - நம்பி.
நம்பு - நம்பென்னேவல், நாவல், விருப்பம்.
நம்புதல் - விசுவாசித்தல், விரும்பல்.
நம்பூரி - மலையாளப்பார்ப்பாரி லுயர்ந்தோர்.
நம்மாழ்வார் - தாம்பிரவன்னி நதிக்கருகிலிருந்த ஒரு வேளாள வைணவாசாரியர். திருக்குருகூரிலே காரிமாறப்பிரானுக்குஉடையநங்கையாரிடத்திலவதரித்த ஒரு விஷ்ணுபக்தர், இவரது பக்தி ப்ராபவம் அவாங்மானசகோசரம்; இவர் இறைவர்மீது பாடிய பாடல்கள் ஆயிரம், இதற்கு திருவாய்மொழியென்று பெயர். இதற்குப் பூர்

வாசாரியர்களா லருளிச்செய்யப்பட்ட வ்யாக்யாநஸங்கியை இரண்டு லக்ஷம் கிரந்தம். அன்றியும் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்பவைகளும், இவரால் அருளிச் செய்யப்பட்டனவே.
நயகுணன் - நற்குணமுடையோன்.
நயக்கன் - நாய்.
நயச்சொல் - இச்சகம், சிரித்துப் பேசல், முகமன்வார்த்தை.
நயத்தல் - அதிகப்படல், ஆசைப்பெருக்கம், சிறத்தல், சிநேகித்தல், நன்மைப்படல், பலன்படல், பின்செல்லுதல், மதித்தல், மலிவாதல், விரும்பல்.
நயநத்திரயன் - சிவபிரான்.
நயநயவார்த்தை - உறுதியில்லாச்சொல்.
நயநிலைப்படலம் - நாடகம்.
நயநௌஷதம் - கண்மருந்து.
நயந்துகேட்டல் - இரந்துகேட்டல்.
நயந்துசொல்லுதல் - பலன்படப்பேசல், பாராட்டுதல்.
நயந்தோர் - சிநேகிதர்.
நயபோசனம் - நல்லாகாரங்கொடுத்தல் அது புண்ணியமேழினொன்று.
நயப்பாடு - பலன், மேம்பாடு.
நயப்பித்தல் - கனப்படுத்தல், சந்தோஷப்படுத்தல், சம்மதப்படுத்தல், சிறப்பித்தல், மலிவாச்கல்.
நயப்பு - அன்பு, ஆசை, இலாபம், சந்தோஷம், மலிவு.
நயப்புணர்வு - கண்ணோட்டம்.
நயப்புரை - விருப்புமொழி.
நயமாலி - மனோசிலை.
நயம் - அதிகம், அரசாட்சி, இலாபம், இன்பம், உபசாரம், சரி, நடத்தம், நன்மை, நீதி, பலன், மலிவு, மிகுதி, மேன்மை, வேதசாஸ்திரம்.
நயம்பயம் - நன்மைதின்மை.
நயம்பேசுதல் இன்னோசையுண்டாதல்.
நயவர் - சிநேகிதர்.
நயவார்த்தை - பணிவானசொல்.
நயவான் - ஆதாயக்காரன் நயப்புள்ளோன், நல்லுபகாரி, விரும்பினோன்.
நயவிசாரதன் - நீதிசாத்திரமறிந்தவன்.
நயனகத்தூரி - ஒரு கண்மருந்து.
நயனதீட்சை - ஞானதீட்சையினொன்று அது விஞ்ஞானகலர்க்குரியது.
நயனத்தோன் - புட்பராகம்.
நயனபாஷை - கண்பயில்.
நயனப்பத்து - ஒருபிரபந்தம் அது கண்ணிணைப் பத்துச் செய்யுளாற் கூறுவது.
நயனமோட்சம் - கண்டிறத்தல்.
நயனம் - கண்.
நயனரோகம் - நேத்திரரோகம்.
நயனவாரி - கண்ணீர்.
நயனவிதி - நேத்திரவைத்தியவாகடம்.
நயனவீடு - விக்கிரகத்துக்குக்கண்திறத்தல்.
நயனௌடதம் - கண்மருந்து.
நயனை - கண்மணி.
நயனோபாந்தம் - கடைக்கண்.
நயனோற்சவம் - அலங்காரப் பொருள், விளக்கு.
நயன் - இன்பம், கொடையாளி, நன்மை, பலன், மகிழ்ச்சி.
நயிச்சியம் - நைச்சியம்.
நயிட்டிகப்பிரமசாரி - பிரமசாரிமுறை தவறாது நிற்போன்.
நயிஷ்டிகம், நயிட்டிகம் - நியமநிட்டை.
நயிட்டிகர் - நிட்டைதவறாதோர்.
நயிந்தை - நாயனீர், நாயன்.
நயிராக்கியம் - நைராக்கியம்.
நயினர் - ஆண்டவன், எசமானன், ஐயனார், சைநர், நாயனார், பாளையக்காரர்.
நரககதி - நரகப்பிராப்தி.
நரகதேவதை - பிசாசம், மூதேவி.
நரகபாதாளம் - ஆழ்நரகம்.
நரகம் - பாதாளம், பாபலோகம், அது இருபத்தெட்டுப் பேதமாயிருக்கும், அந்தப் பேதத்தின் பெயர்களாவன: தமம், அந்ததமம், ரௌரவம், மகாரௌரவம், கும்பிபாகம், காலசூத்திரம், அசிபத்ரவநம், கிருமிபக்ஷம், அந்தகூபம், சந்தஞ்சம், சன்மலி, சூர்மி, வைதரணி, பிராணரோதம், வைசசம், லாலாபக்ஷணம், வீசி, சாரபக்ஷணம், வஜ்ரகண்டம், காரம், பிசிதபக்ஷணம், சூலப்ராந்தம், விதோதகம், தந்தசூகம், பர்யாவருத்தம், திரோதாநம், சூசிமுகம், பீடகம் என்பனவாம்.
நரஹரி, நரகரி - நரசிங்கம்.
நரகர் - கீழுலகத்தவர்.

நரகலித்தல் - அருவருத்தல், அழுக்குடைத்தாதல்.
நரலோகம் - கீழுலகம், அது பாவிகள் அடையுமுலகு.
நரகல் - அசுத்தம், மலம்.
நரகவட்டம் - நரகச்சுற்று.
நரகவாசி - நரகத்திலுள்ளவன்.
நரகவாதி - நரகத்திற்கீடானவன்.
நரகவாய் - குதம், நரகம்.
நரகளுதி - தேன்கொடுக்கி.
நரகன் - விஷ்ணுவுக்கு வதாராஹாவதாரத்திலே பூமியிற் பிறந்த புத்திரன். இவன் அசுரன், இவன் இராஜதானி பிராக் ஜோதிஷபுரம், இவன்வாகநம் சுப்பிரதீகம் என்னும் யானை. இவன் புத்திரன்பகதத்தன் இந்தநரகாசுரன் அதிதியினது கர்ண குண்டலங்களையும் வருணனது சத்திரத்தையும் கவர்ந்துகொண்டு தேவலோகத்திற் சென்று இந்திரனது சிங்காதநத்தையுங் கவர்ந்தான். அதுகண்டு இந்திரன் திருமாலிடம்போய் முறையிட அவர் இவனையும் இவன் தமையனாகியமுராசுரனையுங் கொன்று, இவன் சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரம் கன்னியரையும் சிறைமீட்டு மணஞ்செய்துகொண்டுதேவலோகஞ்சேர்ந்தார். இவன் இறந்தநாள்நரக சதுர்த்தசியென்று உலகத்தாரால் கொண்டாடப்படுகின்றது.
நரகன் - ஓரசுரன், நரகத்திலுள்ளோன்.
நரகாசுரன் - ஓரசுரன்.
நரகாசுரவைரி - கண்ணன்.
நரகாந்தகன் - விட்டுணு.
நரகாமயம் - ஆத்துமா.
நரகாரி - விட்டுணு.
நரகாலி - மாட்டுக்குவருமோர்நோய்.
நரகீலகன் - குருவத்திசெய்தோன்.
நரகு - நரகம்.
நரங்கடித்தல் - கெடுத்தல்.
நரங்குதல் - தேய்ந்துதேய்ந்துகெடுதல்.
நரசிங்கமுனையரையநாயனார் - சிவனடியார்களைத் திருவமுது செய்வித்தலும் திருநீறுமே பெரும்பேறெனக்கொண்டுத்ருடமாய்நின்ற சிவபத்தர். இவர் திருமுனைப்பாடி நாட்டில்குறுநிலமன்னர்குலத்தில் அவதரித்தவர்.
நரசிங்கமூர்த்தி - திருமால்.
நரசிங்கம் - திருமால் தசாவதாரத்தொன்று.
நரசிங்கராச்சியம் - விஜயநகரத்தைச் சார்ந்த தேசம்.
நரசிங்காவதாரம் - விஷ்ணுதசாவதாரங்களுள் ஆறுவது அவதாரம். இரணியகசிபனைக் கொன்று பிரகலாதனை இரக்ஷிக்கும் பொருட்டுப் பொற்றூணில் அவதரித்த அவதாரமிதுவே, கண்டத்தின்கீழ் நரரூபமும் அதற்குமேல் சிங்கரூபமு மாதலால் இது நரசிங்கவதாரமெனப் பெயர்பெற்றது.
நரசீவன் - மனிதர்.
நரதாரணன் - கடவுள்.
நரதுதி - மானிடரைப்புகழ்தல்.
நரதேவன் - அரசன்.
நரத்துவம் - மனிதத்தன்மை.
நரநாராயணர் - விஷ்ணு அமிசமாகப் பிறந்த இரண்டு முனிவர்கள். இவர்கள்பதரீவநத்தில் நெடுங்காலந் தவஞ்செய்தவர்கள். இவர்களுடைய தவத்தைக் கெடுக்கும்பொருட்டு இந்திரன் அரம்பையரை யனுப்ப, நாராயணன் தன்தொடையினின்றும் ஒரு கன்னிகையைத் தோற்றுவித்தான், அவளுடைய ரூபலாவண்யங்களைக் கண்ட அரம்பையர் நாணி அவ்விடம் விட்டு நீங்கினர். நரநாராயணர் என்னும் பெயர் கிருஷ்ணார்ஜுனர்களுக்கும் வழங்கும்.
நரநாராயணன் - திருமால் பதினைந்தவதாரத் தொருவன்.
நரந்தம் - கஸ்தூரிமிருகம், காகம், நாரத்தை, வாசனை.
நரந்தை - கொற்றான்.
நரபதி - அரசன், விசயநகரத்திராசா.
நரபலி - மனிதபலி.
நரபாலன் - அரசன்.
நரபுடம் - ஐம்பதெருப்புடம்.
நரபூமி - பாரதவருஷம்.
நரப்பிரதிட்டை - நரவுருத்தாபனம், மனிதர் தாபித்த விக்கிரகம்.
நரப்புக்கருவி - வீணைமுதலியவாத்தியம்.
நரப்புக்கருவியாளர் - யாழ்முதலிய வாசிப்போர்.
நரப்புக்கருவியைக் கொளுத்துமாக்கள் நரப்புக் கருவியாளர்.

நரப்புச்சிலந்தி - ஒருவிதச்சிலந்தி.
நரப்புச்சுழுக்கு - நரப்புச்சுளுக்கு.
நரமடங்கல் - நரசிங்கம்.
நரமேதம் - ஒருயாகம் அது நரபலியிட்டுச்செய்வது.
நரம்பன் - ஒருவகைப்புகையிலை, நரம்பு புடைத்த சரீரமுள்ளவன்.
நரம்பு - இலைமுதலியவற்றினரம்பு, தந்தி, நாடி, நாணி, நார், வின்னாண்.
நரம்புக்காய் - முருங்கை.
நரம்புச்சிலந்தி - ஒருவகைப்புண்.
நரம்புபுடைத்தல் - நரம்பு புறப்பட்டிருத்தல்.
நரம்புவாங்கல்-நரம்பையிழுத்துக்கொள்ளுதல், வெற்றிலை முதலியவற்றினரம்பையெடுத்தல்.
நரம்புவீச்சு - நரம்புவலி.
நரர் - மனிதர்.
நரலல்-ஒலித்தல், பேசலாவெழுமொலி.
நரலுதல் - ஒலித்தல்.
நரலை - கடல்.
நரலோகம் - பூமி.
நரல் - சனக்கூட்டம், செத்தை.
நரல்வு - உள்ளோசை, ஓசை.
நரஹரி, நரவரி } நரசிங்கம்.
நரவலித்தல் - அலுத்தல், நரகலித்தல்.
நரவாகனம் - குபேரனைச்சுமப்போன், சிவிகை.
நரவாகனன் - குபேரன்.
நரளி - கடலை.
நரற்றல் - ஒலித்தல்.
நரன் - ஒருதேவரிஷி, இவனும் நாராயணன் என்னும் இருஷியும் நரநாராயணரெனப்படுவர், இவ்விருவருமேஅருச்சுனனும்கிருஷ்ணனுமாகப் பின்னர்ப்பிறந்தார்கள். பிரியவிரதன் வமிசஸ்தனாகிய கயன்மகன். புமன்னியன்மகன். சங்கிருதி தந்தை.
நரன் - அருச்சுனன், கடவுள், திருமால், மனிதன்.
நரா - தழும்புபட்டது, நருங்கப்பட்டது.
நராங்குதல் - கிராங்குதல்.
நராதாரை - பூமி.
நராதிபன் - அரசன்.
நராந்தகம் - மரணம்.
நராந்தகன் - இயமன், விட்டுணு.
நராந்தம் - காகம்.
நராபோகம் - நினைத்திராவாழ்வுபெறல்.
நராயணன் - நாராயணன்.
நராரி - விட்டுணு.
நராலை - நரகம்.
நராவதாரம் - மனுவவதாரம்.
நரி - ஒருமிருகம்.
நரிக்காய்ச்சி - ஒருவகைப்பனை.
நரிக்கொன்றை - ஒருமரம்.
நரிதல் - நெறிதல்.
நரித்தல் - நருக்குதல், நிந்தித்தல், பிரமித்தல்.
நரிநிறம் - பலநிறக் கலப்பு, பலவெண்ணம், வெறுப்பு.
நரிப்பயறு - ஒரு புன்பயறு.
நரிப்பள்ளம் - ஆறுமுதலியவற்றிற்குள்ளிருக்குங் கிடங்கு.
நரிப்பாகல் - காட்டுப்பாகல்.
நரிப்பு - ஆச்சரியம், இகழ்வு, நருக்கம்.
நரிப்புத்தி - தந்திரப்புத்தி.
நரிப்புறம் - மிருகசீரிடம்.
நரிமருட்டி - கிலுகிலுப்பை.
நரிமுருக்கு - ஒருநெல், ஒருமுருக்கு.
நரிமெருட்டி - நரிமருட்டி.
நரியனெல் - ஒருவகைநெல்.
நரியன்-குள்ளத்தனமுள்ளவன், சூதன்.
நரியிலந்தை - ஒருமரம்.
நரியுடை - மொசுமொசுக்கை.
நரியுணி - நண்டு.
நரிவழை - நரிக்குழி.
நரிவாற்புல் - ஒருபுல்.
நரிவிளா - நிலவிளா.
நரிவெண்காயம் - ஒரு வெண்காயம்.
நரிவெருட்டுதல் - காரண மில்லாமல் வெருளல்.
நரிவெரூஉத்தலையார் - இவர்கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர். இவர் தம்முடம்பிலுள்ளதாகிய வேறுபாடு காரணமாக இப்பெயர் பெற்றவர். சேரவிரும் பொறையைக் கண்டமாத்திரத்தே அவ்வேறுபாடு நீங்கி நல்லுடம்பு பெற்றவர். (புறநானூறு)
நருகட்டியெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.
நருக்கல் - ஒருவயிற்றுவலி, நொருக்கல்.
நருக்கற்குத்து - காரியம் வாய்க்காமற் பண்ணுதல், பறுவறைக்குத்து.
நருக்காணி - நருவாணி.
நருக்கு-நருக்குதல், நருக்கென்னேவல்.

நருக்குதல் - நொருக்குதல்.
நருக்கெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக் குறிப்பு.
நருங்குதல் - நொருங்குதல்.
நருநருத்தல், நருநரெனல் - ஈரடுக்கொலிக் குறிப்பு, சருச்சரைக் குறிப்பு.
நருமதை - சத்தநதிகளிலொன்று.
நருமுதல், நரும்புதல் - துண்டாக்கல், பல்லுநரும்புதல்.
நருவல் - நருங்கினது.
நருவடுருவல் - இருநருவல்.
நருவாணி - சிற்றுருவானது.
நருவியுப்பு - ஒருப்பு.
நருள் - சனம்.
நரேசன், நரேசுவரன், நரேந்திரன் - அரசன்.
நரை - இடபவிராசி, கருமை கலந்த வெண்மை, சரை, சாமரை, சிவன், நரையென்னேவல், நாரை, மாயையாக்கை பதினெண்குற்றத் தொன்று, ரிஷபம், வெண்மை.
நரைகொம்பு - எலும்பு.
நரைக்கொள்ளு - சீர்க்கோழிப்பூடு.
நரைச்சல் - நரை, வெளிறினபயிர்.
நரைதல் - மெலிதல்.
நரைத்தல் - மலர்வெளிறல், மயிர்முதலிய வெளுத்தல்.
நரைமயிர் - வெளுத்தமயிர்.
நரைமாளினி - முகரோமக்காரி.
நரையல்லி - வெள்ளாம்பல்.
நரையன் - ஒருபருந்து, நரைகிறமுள்ளது, வல்லூறு.
நரையான் - காசம்,சின்னது,செங்காரை, மார்கண்டன், மீன்குத்திப்புள்.
நர்க்குடகம் - நாசி.
நர்த்தகம் - ஆண்யானை.
நர்த்தகி - பெண்யானை.
நர்த்தகப்பிரியம் - மயில்.
நர்மடம் - சாதகப்புள், முலைக்கண்.
நர்மடன் - சூரியன், விடன்.
நர்மதை - மேகலாபர்வதத்தி லுற்பத்தியாகிச் செல்லும் நதி.
நலகீலம் - முழந்தாள்.
நலகூபரன் - குபேரன் மகன்.
நலக்குதல் - அழுக்காக்குதல், கசங்கச் செய்தல்.
நலங்கல் - அழுக்காதல், அழுக்கானது.
நலங்கு - அரைத்தகுழம்பு, ஒரு கலியாணச் சடங்கு, நலங்கென்னேவல், வைசூரிக்குப் பூசுமோர் மருந்து.
நலங்குதல் - அழுக்காதல், வதங்குதல்.
நலச்சூடு - கடுப்புச்சூடு.
நலதம் - வெள்வெட்டிவேர்.
நலதம்பு - வேப்பமரம்.
நலதை - சடாமஞ்சில்.
நலத்தல் - சிந்தித்தல், நயத்தல்.
நலந்தட்டுதல் - விதையைவாங்கல்.
நலப்பாடு-அதிஷ்டம்,ஆதாயம்,நன்மை.
நலப்பு - சித்தி, நன்மை.
நலமடித்தல், நலமெடுத்தல் - நலந்தட்டுதல்.
நலம் - அழகு,இன்பம்,உபகாரம்,உயர்வு, கண்ணோட்டம்,சுக்கு,நன்மை,பயன், விருப்பம், விலங்கின்விதை.
நலம்நசுக்குதல் - நலந்தட்டுதல்.
நலம்பாராட்டுதல் - புணர்ந்து அழகுசெய்தல்.
நலம்பொலம் - நன்மையுந் தின்மையும்.
நலவு - நலம்போடுதல், நன்மை.
நலன் - நலம்.
நலி - நலியென்னேவல், நோய்.
நலிதல் - ஒரொலிவிகற்பம், சரிதல், தவறுதல், மெலிதல், வருந்தல்.
நலித்தல் - நலிவித்தல்.
நலிதம் - தாமரை, நீர், வெண்ணுரை.
நலிநீருஹம் - தாமரைத்தண்டு.
நலிவு - அழிவு, மெலிவு, வருத்தம்.
நல் - ஏற்ற, நல்ல, மிகுதி.
நல்கல், நல்குதல் - ஈதல், கடாட்சித்தல், விரும்பல்.
நல்குரவு - தரித்திரம்.
நல்கூர்தல் - தரித்திரப்படல்.
நல்கூர்ந்தோன் - தரித்திரன்.
நல்கூர்வேள்வியார்-சங்கப்புலவரில்ஒருவர்.
நல்லதம்பிரான் - நாகபாம்பு.
நல்லதனம் - சிநேகத்தன்மை, நற்குணத்தன்மை.
நல்லது - செம்மை, நன்மையானது.
நல்லதுபண்ணுதல் - இணக்குதல்.
நல்லத்தை - தந்தையின் சகோதரி.
நல்லந்துவனார் - கலித்தொகைநூலாசிரியர். இவர் கடைச்சங்கப்புலவர்களுள்ளவர், சமயத்தாற் சைவரென்பது கடவுள் வாழ்த்து முதலியவற்றாற் புலப்படும்.

நல்லபாம்பு - நாகபாம்பு.
நல்லப்பன் - தந்தையின் சகோதரன்.
நல்லமை - சற்குணம், சிநேகம், நன்மை.
நல்லம் - கறுப்பு, மங்கல்.
நல்லம்மாள் - தாயின் சகோதரி.
நல்லம்மான் - தாயின் சகோதரன்.
நல்லம்மான்பச்சரிசி - ஒருபூடு. [று.
நல்லறிவஞ்சம் - போகபூமியாறிலொன்
நல்லவர் - அறிஞர், உத்தமர், சிநேகிதர்.
நல்லவழி - நற்குலம், நன்னடக்கை, மோட்சவழி.
நல்லவளம் - வசதி.
நல்லவெல்லம் - கருப்பங்கட்டி.
நல்லவேளை - அதிஷ்டகாலம், நல்வேளைப்பூடு, நற்சமயம்.
நல்லவை - நற்சவை, மேன்மையானவை
நல்லவையோர் பெருமையிற் சிறந்தோ
நல்லள் - நல்லவள். [ர்.
நல்லறம் - நல்வாழ்க்கை.
நல்லறிவு - ஒழுக்கம், ஒரு நூல், நற்போதனை, பேரறிவு.
நல்லன் - நல்லவன்.
நல்லாங்கு - நன்மை.
நல்லாச்சி - நல்லப்பன்றேவி, நல்லம்மாள்
நல்லாதனார் - அகஸ்தியர் காலத்திருந்த ஒரு ஆசிரியர், இவர் திரிகடுகம் என்னும் நூல் செய்தார்.
நல்லாள்பிள்ளை - தொண்டைநாட்டிலே மகாதலம் பேட்டையிலே கருணீகர மாபிலே நூற்றெழுபது வருஷங்களுக்கு முன்னே அவதரித்தவர். வடமொழி தென்மொழி யிரண்டும் வல்லவர். இவர் வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தை வடமொழிப் பாரதம் போல விரிக்கவெண்ணி இடையிடையே தந்துவிரித்துப் பதினாலாயிரத் தெழுநூற்றிருபத்தெட்டு விருத்தங்களாற் பூர்த்தி செய்தவர். அவற்றுள் வில்லிபுத்தூராழ்வார்பாடல் நாலாயிரத்து முந்நூற்றைம்பது. நல்லாப்பிள்ளைசெய்த பாரதம் நல்லாப்பிள்ளை பாரதமென வழங்கும். தமிழிலே பாரதம் முதலிற் செய்தவர் பெருந்தேவனார். பின்னர்ச்செய்தவர் வில்லிபுத்தூரார் கடைசியிற்செய்தவர் இவர். இதனைப் பாடும்போது இவர்க்கு வயசு இருபது.

நல்லாப்பு - நன்மை.
நல்லார் - அறிஞர், உத்தமர், மாதர்.
நல்லாள் - அழகுடையாள், நலமுடையாள், பெண்.
நல்லாறு - நல்வழி.
நல்லி - நல்லாள்.
நல்லுறவு - இதமானவுறவு.
நல்லெண்ணெய் - திலநெய்.
நல்லேறு - எருமையேறு.
நல்லோர் - அறிஞர், உத்தமர்.
நல்வழி - ஔவையார்செய்த ஒருநூல், சன்மார்க்கம்.
நல்வார்த்தை - உத்தமமொழி, இது வாக்கினற்குண நான்கிலொன்று. [கை.
நல்வாழ்வு - இல்லறமகிழ்ச்சி, சுகவாழ்க்
நல்வினை - புண்ணியம், இது இருவினையிலொன்று.
நவகண்டம் - ஒன்பதுகண்டம், அது கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபாதம், தென்பாதம், மத்திமகண்டம்.
நவகம் - ஒன்பது.
நவகாரிகை - புதுமணப்பெண்.
நவக்கிரகம் - நவக்கோள் அவை ஆதித்தன், இராகு, கேது, சந்திரன், சனி, சுக்கிரன், செவ்வாய், புதன், வியாழம்.
நவசாரத்தான் - பொன்மணல்.
நவசாரம் - நவச்சாரம்.
நவசி - ஒரு கமுகு, ஒரு தெங்கு.
நவசித்தர் - நவநாதசித்தர்.
நவசிராத்தம் - கருமாதி காலத்தில் முதலில் ஒன்பது பிராமணருக்கு கொடுக்கும் கொடை.
நவசூதிகை - இளங்கன்றுப்பசு, இளம்பிள்ளைக்காரி.
நவச்சாரம் - ஒருமருந்து.
நவச்சி - எவட்சாரம்.
நவச்சிராத்தம் - முதலாம் மூன்றாம் ஐந்தாம் ஏழாம் ஒன்பதாம் பதினோராநாளிற்செய்யுஞ் சிராத்தம்.
நவஞ்சம் - அசமதாகம்.
நவட்சாரம் - நவச்சாரம்.
நவதளம் - தாமரைத்தளிர்.
நவதம் - யானைமேற்றவிசு.
நவதாரணை - ஒன்பதுதாரணை, அவைசதுரங்கதாரணை, சத்ததாரணை, சித்திர

தாரணை, நாமதாரணை, பேததாரணை, மந்திரதாரணை, மாயாதாரணை, வச்சிரதாரணை, வத்துத்தாரணை.
நவதானியம் - ஒன்பதுதானியம் அவை உளுந்து, எள்ளு, கடலை, கொள்ளு, சாமை, தினை, துவரை, நெல்லு, பயறு
நவதி - தொண்ணூறு, பொடுதலை.
நவதிகை - தூரியக்கோல்.
நவதை - புதுமை.
நவத்தம் - சடாமாஞ்சி.
நவத்துவாரம் - ஒன்பதுவாயில் அவை கண், காது, மூக்கு, வாய், குதம், குய்யம்.
நவநதி - கங்கை, யமுனை, நருமதை, சரசுவதி, கோதாவரி, காவிரி, பயோஷ்ணி, சரயு, குமரிஎன்னும் இவ்வொன்பதும்நவநதியெனப்படும். தம்மிற்படிவோர் பாவமனத்தையும் தாங்கவர்ந்து சுமத்தலாற்றாது ஒருங்குகூடிப் பெண்ணுருக்கொண்டு கைலைசென்று சிவனை வழிப்பட்டுத் தமது குறையைத் தீர்த்தருளும்படி வேண்டச் சிவன் அந்நதிகளைநோக்கிக் கும்பகோணத்திலே அக்கினிதிக்கிலே ஒரு தீர்த்தமுளது. வியாழன் சிங்கராசியில் வரும்பொழுது மகநக்ஷத்திரத்திலே நீங்கள் அத்தீர்த்தத்திற்சென்று படிந்து உங்கள் பாவத்தைப்போக்கக் கடவீரென்றனுக்கிரகித்தார்.
நவநாகம் - அசமதாகம், ஒன்பது நாகம். அவை அனந்தன், ஆதிசேடன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்கன், பதுமன், மகாபதுமன், வாசுகி.
நவநாணயம் - புதுவழக்கம்.
நவநாதசித்தர் - ஒன்பதுசித்தர் அவர் அனுதிநாதர், ஆதிநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், சதோகநாதர், சத்தியநாதர், மச்சேந்திரநாதர், மதங்கநாதர், வகுளிநாதர்.
நவநிதி - கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, நந்தநிதி, நீலநிதி, பதுமநிதி, மகாநிதி, மகாபதுமநிதி, முகுந்தநிதி இவையே குபேரன் நவநிதி.
நவநீதகம் - நெய்.
நவநீதசோரன் - விட்டுணு, வெண்ணெய்திருடிய கிருஷ்ணன்.
நவநீதபாகம் - செய்யுளினோர்சுவை.
நவநீதம் - புதுமை, புதுவெண்ணெய்.
நவபல்லவம் - தளிர்.
நவபவநம் - நூதநகிருதம்.
நவபாஷணம் - புதுமையான சொல், தேவிபட்டினம்.
நவபுண்ணியம் - ஒன்பது புண்ணியம். அவை அமுதமேந்தல், அருச்சித்தல், ஆசனத்திருத்தல், எதிர்கொளல், தாள்கழுவுதல், தீபங்காட்டல், தூபங்கொடுத்தல், பணிதல், புகழ்தல்.
நவபேதம் - சிவபேதமொன்பது அவை பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவம், சிவம், சத்திநாதம், விந்து.
நவப்பிரீதி - வெடியுப்பு.
நவப்பிரேதம் - ஒன்பது திக்கிற் காவற்பூதங்கள்.
நவமணி - ஒன்பதிரத்தினம், அவை கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம்.
நவமணிமாலை - ஒரு பிரபந்தம் அது வெண்பாமுதலாகப் பலவேறுபட்ட பாவும் பாவினமுமாக ஒன்பது செய்யுளந்தாதித்துப் பாடுவது.
நவமஸ்கந்தம் } பாகவதத்தின் ஒன்ப
நவமம் } தாம் அத்தியாயம்.
நவமி - ஒன்பதாந்திதி.
நவமுகில் - ஒன்பது மேகங்கள், அவை ஆவர்த்தம், சம்வர்த்தம், புட்கலம், துரோணம், காளம், நீலம், வாருணம், வாயுவம், தமம்.
நவம் - ஒன்பது, கார்காலம், கேண்மை சாரணை, சினேகம், புதுமை, பூமி.
நவயௌவனை - வாலைப்பெண்.
நவரசம் } ஒன்பதுசுவை அவை அற்ப
நவரதம் } தம், இரௌத்திரம், கருணை, குற்சை, சாந்தம், சிங்காரம், பயம், பெருநகை, வீரியம்.
நவரதன் - வீமரதன் புத்திரன்.
நவரத்தினம் - நவமணி.
நவராத்திரம் } கன்னிமாசம் சுக்லபக
நவராத்திரி } பிரதமைமுதல் ஒன்பது ராத்திரி, கிருதயுகத்திலே ப[...]தியிற் சிறந்த சுகேதன் என்னுமோ[ர்] ராசன் தனது இராஜ்யத்தையிழந்து மனைவியோடு வனத்துக்குப் போன போது அங்கிரசன் என்னு மிரு[...]

நவராத்திரி பூஜா மஹிமையையும் அதன்முறைறயையும் உபதேசித்தார். அவ்வரசன் அவ்வாறே நவராத்திரி பூசையை பக்தியோடுசெய்து தனது இராஜ்யத்தை மீளவும்பெற்று வாழ்ந்திருந்தான். அதனுல் அதுமுதலாக உலகத்தில் வருஷந்தோறும் அக்காலத்திலே துர்க்கை இலக்ஷ்மி சரசுவதி இம்மூவரைவும் முறையே ஒவ்வொருவர்க்கு மூன்றுதினமாக ஒன்பதுநாளும் பூசித்து ஒன்பதாநாள் ஆயுதங்களையும்புஸ்தகங்களையும் வைத்துப் பூசித்து வருகிறூர்கள். அடுத்தநாள் விஜயதசமி எனப்படும்.

நவரோசு - இராகம்.

நவலோகுப்பி - சுதைமண்.

நவலோகம் - ஒன்பதுலோகம்.

நவலோகாங்கம் - காந்தம்.

நவவடிவிறந்தோன் - பரமசிவன், நவவடிவமாவன:-பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம், என்பன. இவற்றுள் பிரமன் முதல் நான்கும் உருவம், விந்து முதல் நான்கும் அருவம், இடைநின்ற சதாசிவம் அருவுருவம்.

நவவது - புதுமணப்பெண்.

நவவஸ்திரம் - புதுத்துணி.

நவவரிகை - புதுமணப்பெண்.

நவவர்ஷங்கள் - பாரதம், கிங்நரம், ஹரி, இளாவருதம், ரம்யகம், ஹிரண்மயம், குரு, பத்ராசுவம், கேதுமாலம் என ஒன்பது வர்ஷங்கள், ஆரியர் இப்பூகோளத்தை ஊர்த்வகபாலம், அதக்கபாலம் என இருகூறுக்குவர், அவற்றுள் ஊர்த்வகபாலம் நிலமும், அதக்கபாலம் நீருமாம், நிலமுழுதும் மலைவேறுபாட்டால் ஒன்பது வருஷங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. சுமேருவை (துருவத்தை) இடையிலுடையது இளாவ்ருத வர்ஷம், அதற்குத் தெற்கேயுள்ளது ஹரிவர்ஷம், அதற்குத் தெற்கேயுள்ளது கிங்நரம், அதற்குத் தெற்கேயுள்ளது பாரதம், ரம்யகம் ஹிரண்மயம், குரு என்னும் மூன்றும் இளாவ்ருதத்துக்கு வடக்கேயுள்ளன, மற்றையவிரண்டும் இருபாரிசத்திலும் உள்ளன.

நவவாயில் - நவத்துவாரம்.

நவவியாகரணம் - சம்ஸ்கிருத விலக்கணமாகிய ஒன்பது வியாகரணம்.

நவவிலாசசபை - அதிதூதர், சத்துவகர், ஞானுதிக்கர், தூதர், நாதகிருத்தியர், பத்திச்சுவாலகர், பத்திராசனர், பலவத்தர் பிராதமிகர் என்னுமொன்பது வகைச் சுத்தான்மாக்கள்கூடிய தேவசபை.

நவாகம் - பிரதமை.

நவாங்கிசம், நவாமிசம் - இராசியை ஒன்பதாய்ப் பகிருதல், ஒன்பதுபங்கு.

நவாம்பரம் - கோடிப்புடைவை.

நவான்னம் - புதியதானியம், வெஞ்சோறு.

நவியம் - புதியது, கோடாலி, புதுமை.

நவிரம் - ஆண்மயிர், உச்சி, தலை, புன்மை, மயில், மருதயாழ்த்திறம், மலை, வாள்.

நவிரெழுசங்கு - முட்சங்கு.

நவிர் - ஆண்மயிர், திரணம், மயிர், மருதயாழ்த்திறம், வாள்.

நவிலல், நவிலுதல் - கற்றல், சொல்லல்.

நவிழ்த்தல் - அவித்தல்.

நவிறல், நவிற்சி, நவிற்றல் - சொல்லல்.

நவிற்றுதல் - அதிகாரத்தோடுரைத்தல், சொல்லல்.

நவின்றேர்க்கினிமை - நூலின்பத்தழகின்றென்று அது கற்போனுக்கு திருத்தி படுத்துகை.

நவீனம் - புதுமை.

நவுதல், நவுந்துபோதல் - இற்றுப் போதல், தளரல்.

நவை - இகழ்ச்சி, குற்றம்.

நவோர்டை - புதுமணப்பெண்.

நவோத்திருதம் - வெண்ணெய்.

நவ்வல் - நாவல்.

நவ்வி - அத்தநாள், அழகு, இளமை, தோணிமான்.

நவ்வியம் - புதியது.

நவ்வு - ஆடு, தோணி, நன்மை.

நவ்வுசுவ்வு - இதாகிதம், நயநட்டம்.

நழுக்கம் - ஆழமின்மை, மழுங்கல்.

நழுக்கு - நழுக்குதல், நழுக்கென்னேவல், மழுகுதல்.

நழுங்கல் - மழுங்கல், வழுவுதல்.

நழுவமிழ்து - கூழ்.
நழுவர் - நளவர்.
நழுவல் - வழுவுதல், விலகல்.
நழுவி - பிடிகொடாதவன்.
நழுவுசாதம் - கூழ்.
நழுவுதல் - நழுந்துதல், வழுவுதல்.
நள - ஐம்பதாவது வருஷம்.
நளகூபரன் - குபேரன்மகன், அழகிற்சிறந்தவன், மணிக்ரீவன்தமையன்; இவ்விருவரும் கைலாயத்தில் சலக்கிரீடைசெய்துகொண்டிருக்கையில், நாரதர் கண்டு, நீங்கள் நிர்வாணிகளாக நீராடிநிற்கும்தோஷத்தின் பொருட்டு மருதமரங்களாகக் கடவீர்களென்று சபித்தார். அவர்கள் அவ்வாறே பூமியில் நந்தன் வீட்டிற்கருகே இரண்டு மருதமரங்களாகப்பிறந்துநின்று கிருஷ்ணன் தான் கட்டுண்ட உரலையிழுத்துச் சென்றபோது அவ்வுரலால் இடறப்பெற்று வேரோடு சாய்ந்து சாபம் நீங்கிப் பழைய வடிவம் பெற்றார்கள்.
நளத்தம் - சடாமாஞ்சி.
நளத்தி - நளப்பெண்.
நளம் - அகலம், கள்ளிறக்குஞ்சாதி, சாணார், சிற்பநூன் முப்பத்திரண்டில் ஒன்று, தாமரை.
நளவர் - கள்ளிறக்குஞ்சாதியார், சாணர்.
நளன் - யதுவினதுமூன்றாம்புத்திரன், யயாதி பௌத்ரனாகிய அநுவின் இரண்டாம் புத்திரன், நிஷததேசத்தரசனாகிய வீரசேநன்மகன், இவன் மனைவி தமயந்தி, இவன் மகன் இந்திரசேநன், மகள் இந்திரசேனை, நளன் கொடையாலும் நடையாலும் கல்வியாலும் படையாலும் அழகாலும் ஆண்மையாலும் தன்னின் மிக்காரும் ஒப்பாருமில்லாத சக்ரவர்த்தி, இவன் கீர்த்தியை ஓரன்னப்பறவை, சொல்லக்கேட்ட தமயந்தி, தன்சுயம்வரத்துக்கு இந்திரன் முதலிய தேவர்கள் வந்திருக்கவும், அவர்களை விரும்பாது நளனைவிருப்பி அவனுக்கே மாலையிட்டுச் சிறிதுகாலம் காமனும் இரதியும்போல இன்புற்று வாழுங்காலத்தில், கலிபுருஷன் பொறாமைகொண்டு, புஷ்கரராஜனை யேவி, நீ நளனோடுசூதாடுவையாயின், அவனை வென்று அவனது இராஜ்யத்தை நீ கவர்ந்து கொள்ளும்படி அநுகூலஞ் செய்வேனென்றான். அவ்வாறே அவன் போய்த் தமையனாகிய நளனோடு சூதாடி இவனது இராஜ்யத்தைக் கவர்ந்துகொண்டு நளனையும் தமயந்தியையும் உடுத்த ஆடைமாத்திரத்தோடு காட்டுக்குப் போகும்படி செய்தான். அங்கே மெல்லியலாகிய தமயந்தி பஞ்சணையையும் வஸ்த்ராபரணங்களையும் களபகஸ்தூரிகளையும் பாங்கியரையும் மற்றைய போகங்களையுமறந்து, கல்லும் முள்ளும் வெயிலும் வருத்தும் வருத்தத்தையும் நோக்காது, நாயகன்மீதுள்ள பேரன்பால், அவன் படுந் துன்பங்களுக்கிரங்கி, அவனது சாயைபோல நீங்காது சஞ்சரிக்கும்போது, ஒருநாளிரவு நளன் அவள் படுந்துன்பங்களைச் சகியாதவனாகி நடுச்சாமத்தில் அவளைத் தனியே விடுத்தகன்றான், அவள் தனியளாய்த் தேடிப் புலம்பியலைந்து பல இடையூறுகளுக் கெல்லாந் தப்பித் தன் தந்தைவீடு சேர்ந்தபின்பு, நளன் தமயந்தியைத் தேடிக்கண்டு, அவளை அழைத்துச்சென்று புஷ்கரனைவென்று முன்போலத் தனது இராஜ்யத்தைப் பெற்று வாழ்ந்திருந்தான். இவன் அறுவகைச்சக்கிரவர்த்திகளிலும்முதலெழுவள்ளல்களிலும் ஒருவன். இவன்சரித்திரத்தைவிரித்துரைக்கும் நூல் நைஷதம், அது தமிழிலும் அப்பெயராலேயே விளங்கும், விசுவ கர்மாவுக்குப் பிறந்த ஒரு வாநரன், சேதுபந்தநம் செய்தவன் இவனே. ஒரு தேவதச்சன்.
நளி - அகலம், குளிர்ச்சி, கூட்டம், தேள், நெருக்கம், பெருமை, வெண்சாரணை.
நளிர் - குளிர், நண்டு, பகை, பெருமை.
நளினச்சொல் - பரிகாசப்பேச்சு.
நளினம் - இங்கிதம், தாமரை, சிந்தை, நீர், நீலம், பரிகாசம்.
நளினி - இலக்குமி, ஒருபண், தாமரைவாவி.
நளினை - இலக்குமி.
நளுங்கு - அழுங்கு, ஒரு கிளிஞ்சில்.
நளுத்தை - ஒருபண்.

நளுநொளுத்தல் / நளுநொளுப்பு / நளுநொளெனல் } வழுவி நழுவிப் போதல்.

நளை - எலத்தோல்.

நள் - உச்சிப்பொழுது, திருவோணம், நடு நள்ளென்னேவல், மருங்கு, மிகுதிப் பொருடரும் ஓரிடைச்சொல்.

நள்ளலர் - பகைவர்.

நள்ளல் - நட்டல்.

நள்ளார் - பகைவர்.

நள்ளாறு - ஒரு சிவஸ்தலம்.

நள்ளி - கடையெழுவள்ளல்களில் ஒருவனுகிய ஒரு மலைநாட்டரசன். "ஆர்வமுற் றுள்ளிவரு நருலைவு நணிதீரத், தள்ளா தீயுந் தகைசால் வண்மைக் கொள்ளாரோட்டிய நள்ளியும்" எனப் புறநானூற்றிலே பெருஞ்சாத்தனுரால் புகழப்பட்டவன். உறவு, கற்கடகவிராசி, நண்டு.

நள்ளிருள் - நடுரா.

நள்ளிருசளுறி - இருவாட்சிப்பூ.

நள்ளு - நடு, நள், மருங்கு.

நள்ளுதல் - நட்புக்கொள்ளுதல்.

நள்ளுநர் - சிநேகிதர்.

நறவம் - அனிச்சமரம், கள், குங்குமமரம், குழல், தேன், வாசனை.

நறவு - கள், குங்குமமரம்தேன், நறுமை, நன்மை, வாசனை.

நறளை - ஒருபூடு, இது சிறுநறளை, புளிநறளை, பெருநறளை என மூவிதம்.

நறா - கள், தேன், வாசனை.

நறியது - நல்லது.

நறிவெங்காயம் - ஒரு வெங்காயம்.

நறு - நறுமை.

நறுக்கு - ஊதுகுழலின்நாக்கு, ஓலையுறுதி, துண்டு, நறுக்கென்னேவல்.

நறுக்குதல் - துண்டித்தல். [க்கு.

நறுக்குத்திப்பிலி - தேசாவரம்எனும்சர

நறுக்கிமூலம் - திப்பிலிக்கட்டை, வெட்

நறுங்காந்தை - ஒருகாந்தை. [டிவேர்.

நறுஞ்சுதை - நல்லபசும்பால்.

நறுதடி - அடைகல்.

நறுநறுத்தல் / நறுநறெனல் } ஈரடுக்கொலிக்குறிப்பு, வாய்க்குக் கடினமாயிருத்தல்.

நறுநாற்றம் - சுகந்தம்.

நறுநுதல் - பெண், மணங்கமழ்நெற்றி.

நறுநெய் - பசுநெய்.

நறுந்தாளி - வாசனைத்தாளி.

நறுந்தொகை - அதிவீரராம பாண்டியனால் செய்யப்பட்ட ஒரு நீதிநூல்.

நறுமணம் - சுகந்தம்.

நறுமருப்பு - இஞ்சி.

நறுமா - அற்பம், எளியவன், அலட்சியம், வெறுமை.

நறுமுதல் - நறும்புதல்.

நறுமுறுத்தல் / நறுமுறெனல் } முறுமுறுத்தல்.

நறுமை - சுகந்தவருக்கம், நன்மை, வாசனை.

நறும்பிசின் - சாதிசம் எனும் பிசின், ஒருமருந்து.

நறும்புகை - சுகந்தபுகை.

நறும்புதல் - நரும்புதல்.

நறுவியது - நல்லது, வாசனைப்பண்டம்.

நறுவிலி / நறுவீழி / நறுவுளி } ஒரு மரம், அது சிறுநறுவிலி பெருநறுவிலி என இருவகை.

நறை - கள், குற்றம், தேன், நறும்புகை,

நற்கதி - மோக்கம். [வாசனை.

நற்சந்தம் - சுகந்தம்.

நற்சருணை - தெய்வீகவிருந்து, நற்கிரு

நற்கலிதம் - நற்சங்கலிதம். [பை.

நற்கல் - ஆட்டுக்கல்.

நற்காலம் - சுபகாலம், தற்செயகாலம்.

நற்கீரன் - நக்கீரன், ஒருசங்கப்புலவன்.

நற்கீர்த்தி - நல்லபுகழ்.

நற்குணம் - நல்லகுணம்.

நற்குலமேரு - செம்புமலை.

நற்குலம் - உயர்குலம்.

நற்குறி - நல்லடையாளம், நற்குணம்.

நற்கோள் - நற்கிரகம்.

நற்கடினம் - நன்னிமித்தம்.

நற்சங்கலிதம் - ஒன்றுதொடுத்துமுறையே தானங்களேறிநிற்பது.

நற்சமயம் - நற்றருணம்.

நற்சரக்கு - உயர்ந்தசரக்கு, பழுதற்றசர

நற்சா - சுகமரணம். [க்கு.

நற்சாங்கம் - சாலம்பாஷாணம், நல்லடையாளம்.

நற்சாந்து - சுண்ணச்சாந்து.

நற்சாரி - நவசாரம்.

நற்சாளை - ஒருமீன்.

நற்சித்தன் - இராசவத்தனக்கல்.

நற்சிலை - கருங்கல்.
நற்சீரகம் - கறிச்சீரகம்.
நற்சீர் - நன்னிலை.
நற்செங்கல் - மஞ்சட்காவிக்கல்.
நற்செய்தி - சுகசெய்தி.
நற்பாகுன்றி - சிந்துலவணம்.
நற்பலம் - வெட்பாலை.
நற்பிரியம் - ஒருசெடி, மிகுபட்சம்.
நற்புத்தி - நற்போதகம்.
நற்றத்தனார் - அகஸ்தியரின்சீஷர்களில் ஒருவராகிய நற்றம் எனும் ஓரிலக்கண நூலாசிரியர்.
நற்றமிழ் - இனியதமிழ், சுத்ததமிழ்.
நற்றாய் - பெற்றதாய்.
நற்றிணை - சங்கப்புலவர்செய்த எட்டுத்தொகைநூல்களுளொன்று, பெருந்தேவனாரால் பாடப்பட்ட கடவுள் வாழ்த்தும் கபிலர் முதலியோரால் பாடப்பட்ட ஏனைய நானூறுபாக்களுமுடையது, இந்நூலைத் தொகுப்பித்தோன் பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி.
நற்றுணையப்பர்- திருநன்னி பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
நற்றுளி - அத்திப்பிசின், அத்திமரம்.
நனந்தம் - புன்கு.
நனந்தலை - உச்சி, நடு.
நனவு - அகலம், இடம், சாக்கிரம், தெளிவு, பரப்பு, மயக்கநீங்கல்.
நன்காடு - சுடுகாடு.
நனை - நனவு.
நனி - நெருக்கம், பெருமை, மிகுதி.
நனை - கள், தேன், நினையென்னேவல், பூமொட்டு.
நனைதல் - எரலித்தல்.
நனைத்தல் - ஈரமாக்கல்.
நனைப்பு - ஈரமாக்குகை.
நனையாவிருட்டி - கொட்டைப்பால்.
நனைவிற்கூ - ஓதமறுபூமி.
நனைவு - ஈரம், நனைதல.
நன்கு - அழகு, இலாபம், நன்மை, மிகுதி.
நன்குணர்தல் - கற்றறிதல்.
நன்கொடை - உபகாரக்கொடை.
நன்செய் - நெல்விளைபுலம்.
நன்சொல் - இன்சொல், நற்புத்தி.
நன்பகல் - நண்பகல்.
நன்பன் - சணல்.
நன்மச்சான் - நல்லம்மான்பிள்ளை.
நன்மச்சினி - நல்லம்மான்புத்திரி.
நருமருகன் - சொந்தமருமகன், அதாவது ஒருவனுக்கு சகோதரிமகன் அல்லது ஒருவளுக்கு சகோதரன்மகன்.
நன்மருகி - சொந்தமருமகள், அதாவது ஒருவனுக்கு சகோதரிமகள். அல்லது ஒருவளுக்கு சகோதரன்மகள்.
நன்மணம் - மனப்பூரணம்.
நன்மாமன் - நல்லம்மான்.
நன்மாமி - நல்லத்தை.
நன்மார்க்கம் - உபசாரம், சன்மார்க்கம், நன்னெறி.
நன்முகம் - தாராளம்.
நன்மை - அதிட்டம், உதவி, உபகாரம், சன்மார்க்கம், நன்கு, பிரயோசனம்.
நன்மைகடைப்பிடித்தல் - தயாவிருத்தியெட்டினொன்று அது செய்ந்நன்றி மறவாதிருத்தல்.
நன்மைத்துனன் -நல்லம்மான்புதல்வன்
நன்மைப்பகுதி - நல்வினைப்பயன்.
நன்மைப்படுதல் - இருதுவாதல், பலன்படுதல்.
நன்மைப்பேறு - நன்மைப்பகுதி.
நன்மையானபெண் - இருதுவானபெண்.
நன்மொழி - தேவபாணி.
நன்றி - உபகாரகுணம், நன்மை.
நன்றிகேடு - செய்ந்நன்றியில்லாமை.
நன்றிகோறல்-செய்ந்நன்றிகெடுத்தல்.
நன்றிமறத்தல் - செய்ந்நன்றியயர்தல்.
நன்றியறிதல் - செய்ந்நன்றியயர்தல்.
நன்றியீனம் - செய்ந்நன்றிகேடு.
நன்று - சுகம், நல்லது, நன்மை, பெருமை, வாழ்வு.
நன்னடை - நல்லொழுக்கம்.
நன்னயம் - உபசாரச்சொல், நன்மை, கினைவு.
நன்னயன் - எண்ணம், நயப்பு, முகமன்.
நன்னருக்கல் - அற்பநோ.
நன்னர் - நன்மை.
நன்னலம் - அழகு, சிறந்தகாலம், நயப்பு, மேன்மை.
நன்னன் - விச்சிக்கோவினது பூர்வமரபிலுதித்தவன் பல்குன்றக்கோட்டமென்னும் பூமியையாண்டவன், மலைபடுக

டாம் என்னும் பிரபந்தத்தைப்பெற்ற நன்னன் இவன் மகன்.
நன்னாகனார் - புறநானூற்றிலே கரும்பனூர்கிழாரைப்பாடிய ஒருபுலவன்.
நன்னாரி - பாற்கொடி.
நன்னி - சிற்றுருவானது. [செய்.
நன்னிலம்-ஒருசிவஸ்தலம், நற்றரை, நன்
நன்னிலை - உலகம், சுகம், தவம், நல்லொழுக்கம்.
நன்னிறம் - வெண்மை.
நன்னுதல் - நறுக்குதல், பெண்.
நன்னூல் - நல்லநூல், பவணந்திமுனிவர்செய்த இலக்கணநூல்.
நன்னெருக்கல் - நன்னருக்கல்.
நன்னெறி - துறைமங்களம் சிவப்பிரகாசசுவாமிகளால்செய்யப்பட்ட ஒரு நீதிநூல், நல்வழி.

## நா

நா - அயலார், அயல், சுவாலை, திறப்பு, மணிமுதலியவற்றினாக்கு, நடு, நாக்கு, பொலிவு.
நாககங்கணன் - சிவபெருமான்.
நாககர்ணன் - சிவபிரான்.
நாககர்ணம் - செவ்வாமணக்கு.
நாககள்ளி - கள்ளியிலோர்பேதம்.
நாககற்பம் - செவ்வீயம்.
நாககன்னிகை - நாகலோகத்துப்பெண்.
நாககெந்தி - நேர்வாளம், வஞ்சிக்கொடி.
நாகக்குவடு - செம்புமலை.
நாகசம் - சிந்தூரம், வங்கம்.
நாகசம்பவம் - செவ்வீயம்.
நாகசரம் - ஒருகுழல்.
நாகசாபம் - நாகத்தைக் கொல்வதினால் வருஞ்சாபம்.
நாகசிகுவிகை - சிவந்தபாஷாணம்.
நாகசின்னம் - ஒருகுழல்.
நாகசீவனம் - துத்தநாகம்.
நாகசுரம் - ஒருகுழல்.
நாகசுவந்தை - நாகுலி.
நாகசேதகன் - இந்திரான்.
நாகச்சிலைக்கல் - சிலாநாகக்கல்.
நாகணம் - நேர்வாளம்.
நாகணவாய் } ஒருபட்சி.
நாகணவாய்ப்புள் }
நாகத்துவம்-திரீதத்துவங்களினொன்று.
நாகதந்தகம் - முளையாணி.
நாகதந்தம் - பாம்பின்பல், முளையாணி, யானைத்தந்தம்.
நாகதந்தி - ஒருமரம், வேசை.
நாகதமனி - ஒருமரம்.
நாகதம்பிரான் - நாகதேவன்.
நாகதங்வம் - வாசுகிநாகராஜனுக அபிஷேகம்பண்ணப்பட்ட இடம்.
நாகதாளி - ஒருவகைக்கள்ளி.
நாகதாளிக்கள்ளி - ஒருமரம்.
நாகதீபம் - ஐந்தலைவிளக்கு.
நாகதேவன் - ஆதிசேடன்.
நாகதேவி - நாகப்பாம்பு.
நாகதேனி - பெருமருந்து.
நாகதைவிகை - தசமிதிதி.
நாகத்திசை - மேற்குதிசை.
நாகத்தின்பாம்பு - பூநாகம்.
நாகநாடு - பவணலோகம்.
நாகநாதன் - ஆதிசேடன், இந்திரான்.
நாகநாயகபுரோஹிதன் - பிருகற்பதி.
நாகநாயகன் - நாகநாதன்.
நாகந்தி - நாகணம்.
நாகபடம் - ஒருகாதணி, பாம்பின்படம்.
நாகபடலம் - கண்ணோயுளொன்று.
நாகபட்டினம் - ஓரூர்.
நாகபந்தம் - நாகபெந்தம், ஒரு சித்திரக் [கவி.
நாகபந்து - அரசமரம்.
நாகபலன் - வீமன்.
நாகபலை - நாகமல்லி.
நாகபாசம் - நாகரூபமான ஒருகயிறு, வருணனாயுதம்.
நாகபாஷாணம் - ஒருபாஷாணம்.
நாகபிரம்பு - ஒருபிரம்பு.
நாகபூஷணன் - சிவபிரான்.
நாகபெந்தம் - ஒருமிறைக்கவி, அது இரண்டுபாம்பு தம்முட் பிணைவதுபோல இரேகைகீறியொரு நேரிசைவெண்பாவும் ஓரின்னிசை வெண்பாவும் எழுதியிரேகையிற் சந்திகளினின்ற எழுத்து மற்றையிடங்களினுமுறுப்பாக நிற்கப்படுவது.
நாகப்பகை - கருடன்.
நாகப்பச்சை - ஓரிரத்தினம்.
நாகப்பற்று - துத்தநாகப்பிடிப்பு.

நாகப்பிரதிட்டை - நாகவிக்கிரகப்பிரதிட்டை.
நாகப்பூச்சி - நாக்குளிப்பூச்சி.
நாகமணி - நாகரத்தினம்.
நாகமல்லம் - ஐராவதம்.
நாகமல்லி, நாகமல்லிகை } அனிச்சமரம், ஒருவகைப் புட்பம்.
நாகமாதா - துளசி.
நாகமுக்கியர் - கத்துருவை காசிபனுக்குப் பெற்றபுத்திரர். இவர் நாகராயினர், முக்கியர், முதன்மையானவர், அவர், சேஷன், வாசுகி, ஐராவதன், தக்ஷகன், கார்க்கோடகன், தனஞ்சயன், காளியன், மணிநாகன், முதலாயினோர்.
நாகமுத்து - பாம்பின்கல்.
நாகமோடி - ஒருபுடவை.
நாகம் - ஆகாயம், ஈயம், ஒலி, ஒருகரணம், ஒருபாம்பு, ஒருமரத்துமரம், கந்தகம், கருங்குரங்கு, காரீயம், குரங்கு, ஞாழல், துத்தநாகம், தேவலோகம், நற்புடவை, நாகபாஷாணம், நாகப்பச்சை, பாம்பு, புன்னைமரம், மலை, யானை.
நாகம்பூ - ஒருமருந்து.
நாகம்மா - நாகதேவி.
நாகரகம் - தேன்றோடை.
நாகரகன் - கள்வன், சித்திரவிவேகி.
நாகரங்கம் - தேன்றோடை.
நாகரத்தினம் - நாகமணி.
நாகரம் - இளைப்பு, ஒருபாஷைஒருவண்டு, சுக்கு, தேன்றோடை, விருப்பு.
நாகரவண்டு - பொன்வண்டு.
நாகரன் - கணவனின்சகோதரன், சிறந்தோன், நகரத்தான்.
நாகராகம் - ஒருபண்.
நாகராசன் - அனந்தன்.
நாகரி - குருக்கத்தி.
நாகரிபு - கருடன்.
நாகரிமுனை - மதுரைக்குச்சேர்ந்தஓரிடம்.
நாகரீகம் - கண்ணோட்டம், சாதுரியம், பிலுக்கு வினோதம்.
நாகரீகம்விடுதல் - நாகரீகம்பேசல்.
நாகரீகர் - காமுகர், நகரத்தார், சதுரர்.
நாகரு - குருக்கத்தி.
நாகருகம் - தேன்றோடை.
நாகரேணு - செவ்வியம்.
நாகறை - ஒருபூடு.
நாகர் - சற்பசாதியார், தேவர்,

நாகலதை - ஆண்குறி.
நாகலோகம் - கீழேழுலகினென்று, தேவலோகம்.
நாகல் - நாவல்மரம்.
நாகவம் - பாம்புக்கரணம்.
நாகவட்டம் - ஒருகாதணி.
நாகவராளி - ஒருபண்.
நாகவல்லி - கலியாணப்பூர்த்திச்சடங்கினென்று, வெற்றிலைக்கொடி, வெற்றிலை.
நாகவல்லிதளம் - வெற்றிலை.
நாகவள்ளி - ஒருகிழங்குக்கொடி, வெற்றிலைக்கொடி.
நாகவாடை - செம்பூறல், துத்தநாகப்பிடிப்பு.
நாகவாய் - ஒருசடைச்சற்கருவி.
நாகவாரிகம் - இராசயானை, கலுழன், மயில்.
நாகவாரிகன் - யானைப்பாகன்.
நாகவீதி - பால்வீதி மண்டலம். தருமன் மகள். இவள்தாய் யாமி, இவள்நக்ஷத்ரவீதியின் உத்தரபாகத்துக்கு அபிமான தேவதை.
நாகன் - தசவாயுவினென்று, அதுநீட்டலும் முடக்கலும் கிளக்கலுஞ்செய்விப்பது.
நாகன்றேவனார் - கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்.
நாகாசனன் - கருடன்.
நாகாதிபன் - அனந்தன், இந்திரன், இமயமலை, இராசயானை, ஐராவதம், மலையரசன், மேருகிரி.
நாகாத்திரம் - நாகபாணம்.
நாகாந்தகன் - இந்திரன், கருடன், சிவன், விட்டுணு.
நாகாபரணம் - நாரூபானஓராபரணம், சிவனணியினென்று.
நாகாபரணன் - சிவன்.
நாகாம்பிகை - கிருஷ்ணதேவராயன்தாய்.
நாகாயுதம் - ஒரு படைக்கலம்.
நாகாராதி, நாகாரி } கருடன், தேவேந்திரன்.
நாகாலயம் - தேவகோயில், பாதலம்.
நாகிணி - வஞ்சிக்கொடி, வெற்றிலை.
நாகு - இளமரம், இளமை, எருமை, சங்கு, நத்தை, பசி, மரையிவற்றின்கன்னிப்பெண், நத்தை, புற்று, பெண்மீன், மாக்கன்று, மலை.
நாகுலி - அரத்தை, கீரிபுரண்டான்பூடு.

நாகூர் - ஓரூர்.
நாகேசுரம் - ஒருசிவஸ்தலம், சிறுநாகப்பூ.
நாகேசுவரன் - ஆதிசேடன்.
நாகேந்திரன் - நாகாதிபன்.
நாகை - நாகப்பட்டினம், நாகூர், வெற்றிலைக்கொடி.
நாகோதரம் - மார்க்கவசம்.
நாக்கப்பாம்பு } நாங்கூழ்.
நாக்கப்பூச்சி }
நாக்கரளை - நாவில்வரும் ஒருநோய்.
நாக்கனிடுங்கூர்மை - கெந்தலவணம்.
நாக்கியாக்கிரம் - ஒரு முட்செடி
நாக்கிரந்தி - ஒருநோய்.
நாக்கு - கதிர், திறப்பு முதலியவற்றிை
நாக்குத்தவறுதல்-சொற்றவறுதல் [னா.
நாக்குப்புரட்டு - பொய்.
நாக்குப்புற்று - ஒருநோய்.
நாக்குப்பூச்சி - வயிற்றுமலப்பையிலுள்ள பெரும்புழு.
நாக்குமீன் - ஒருமீன்.
நாக்குவளைத்தல் - இகழ்தல்.
நாக்குவாங்கல் - நாக்கையிழுத்தல், விலங்கப்படுத்தல்.
நாக்குவிழுதல்-பேசநாவெழாதிருத்தல்.
நாக்குழிஞ்சான் - ஒருசெடி.
நாக்குளிப்பாம்பு } நாகப்பூச்சி.
நாக்குளிப்பூச்சி }
நாக்குறுதி - சொல்வன்மை.
நாக்கை - நாக்குளிப்பூச்சி.
நாங்கள் - நாம்.
நாங்குதல் - சோம்புதல், தைரியங்குன் [றல்.
நாங்குழு } நாக்கப்பூச்சி.
நாங்கூழ் }
நாசகன் - அழிப்பவன்.
நாசகாரி - கேடுசெய்வோன்.
நாசகாலம் - அழிவுகாலம்.
நாசஞ்சியம் - போக்கல்.
நாசமிலி - சிவபெருமான், என்றுமுள்ளவன்.
நாசம் - அழிவு, மரணம், விடுதல்.
நாசயோகம் - மரணயோகம்.
நாசரகிதன்-அழிவற்றவன்,சிவபிரான்.
நாசனம் - நாசம்.
நாசன் - அழிப்போன், நமன்.
நாசாக்கிரம் - நாசிநுனி.
நாசாதக்கணம் - வலமூக்கு.
நாசாபுடம் - மூக்குத்தொளை.
நாசாவாமம் - இடமூக்கு.
நாசி - சலதாரையின்வாய், மூக்கு, மூக்குத்துளை, மேல்வாய்தற்படி.
நாசிகாக்கிரம் - மூக்குநுனி.
நாசிகாபீடம் - நாசிக்குள் வளருமோர் [நோய்.
நாசிகாமலம் - மூக்குச்சளி.
நாசிகேது - அக்கினி.
நாசிகை - கதவுநிலையின் மேற்சட்டம், [மூக்கு.
நாசிதாரு - மேல்வாய்தற்படி.
நாசித்தல் - நசித்தல்.
நாசித்துவாரம் - மூக்குத்துளை.
நாசிப்பொடி - மூக்குத்தூள்.
நாசுகம் - பீர்க்கு.
நாசுவன் - அம்பட்டன்.
நாசியம் - நாணயக்கயிறு,மூக்காங்கயிறு.
நாசோற்பத்தி - அழிந்துபிறப்பது.
நாச்சிமார் - சத்ததேவிகள்.
நாஞ்சிநாடு - மலையாளம்.
நாஞ்சில் - கலப்பை, மதிலுறுப்பு.
நாஞ்சிற்படையோன் - பலபத்திரன்.
நாடகக்கணிகை - நாடகசாலைப்பெண்.
நாடகசாலை - கூத்துப்பயிலிடம், நாடகக்கணிகை.
நாடகத்தமிழ் - நாடகவழங்குந் தமிழ், அது மூத்தமிழிலொன்று.
நாடகத்தி - ஆடுமாலைப்பெண், கூத்தி, கூத்து, விளையாடும்பெண்.
நாடகப்பெண் - நடனப்பெண்.
நாடகமடித்தல் - ஆடுமாலைத்தனம்பண்ணுதல்.
நாடகமாடுதல் - ஆடுமாலைத் தனம்பண்ணுதல், கூத்தாடுதல்.
நாடகம் - கலைஞானமறுபத்து நான்கில் ஒன்று, அது கதை தழுவிவருங்கூத்து, கூத்துப்பாட்டு, நடனவீதி.
நாடகர் - கூத்தர்.
நாடகாங்கம் - அவிநயம்.
நாடகாங்கனை - வேசை.
நாடகியர் } கூத்தர்.
நாடகீயர் }
நாடடிப்படுத்தல்-தேசத்தைக்கீழ்ப்படுத் [தல்.
நாடன்-கார்த்திகைநாள்,சோழன்.
நாடன்பருத்தி - ஒருசெடி.
நாடா - ஒருகயிறு, நூனாழி.
நாடான்-சாணருக்குரியபட்டப்பெயர்.

நாடி - ஆண்மயிர். இருபத்துநாலு நிமிடங்கொண்டது, இலைநரம்பு, உட்டுளை, தாடி, தாது, துவாளிப்பு, நரம்பு, நாசி, நாழிகை, பூவிற்றுள், மூக்கு, யாழி நரம்பு.
நாடிகேளம் - நாரிகேளம்.
நாடிக்கிரந்தம் - பதினைந்துநாடிக் கிரந்தங்களுள அவை சூரியநாடி, சந்திரநாடி, குசநாடி, புதநாடி, சுக்கிரநாடி, குருநாடி, சாமிநாடி, இராகுநாடி, கேதுநாடி, சர்வ சங்கிரகநாடி, பாவநாடி, துருவநாடி, சர்வநாடி, சுகநாடி, தேவிநாடி, என்பன. இந்நாடிக்கிரந்தங்களிலே உலகத்திலே யுள்ளமாந்தர் பெரும்பாலர்க்கும் ஜாதகங்களும்பலன்களுங்கூறப்பட்டுள்ளன.
நாடிசுத்தி - யோகத்திற்குத் தாதுசுத்திபண்ணல்.
நாடிதாரணை - நவதாரணையினென்று.
நாடிநரம்பு - நாடியோட்டநரம்பு.
நாடிபார்த்தல் - நாடிக்குறியறிதல்.
நாடிப்பயிற்சி } தாதறியுமறிவு.
நாடிப்பரிட்சை }
நாடிமண்டலம் - ஆகாயசமரேகை.
நாடியொடுக்கம் - நாடித்தூக்கம்.
நாடியோடுதல் - நாடியியங்குதல்.
நாடிவிதி - நாடித்திட்டமறிவிக்குநூல்.
நாடிவிழுதல் - நாடியொடுங்கல்.
நாடு - இடம், உலகம், ஊர், நாடென்னேவல், பக்கம், பூமி.
நாடுதல்-தேடுதல், விசாரித்தல், விரும்புதல்.
நாடுபடுதல் - நாட்டார் வசப்படுதல்.
நாடுபடுதிரவியம் - நாட்டிலுண்டாகுந்திரவியம், அது கரும்பு, சிறுபயறு, செந்நெல், செவ்விளநீர், வாழை.
நாடுரி - நாவிரி.
நாடேயன் - நாடகக்கணிகை புத்திரன்.
நாடோடி - நிலையற்றவன்.
நாடோடிச்சொல் } வழக்கச்சொல்.
நாடோடிப்பேச்சு }
நாடோறும் - நாள்தோறும்.
நாடோன் - நாடகக்கணிகைபுத்திரன்.
நாட்கடத்துதல் - நாள்விடுதல்.
நாட்கணக்கு - அன்றாடகக்கணக்கு.
நாட்கால் - மங்கலப்பந்தருக்கு முதனாட்டுங்கப்பு.
நாட்குறித்தல் - நன்முகூர்த்த நியமித்தல்.
நாட்கூலி - அற்றைக்கூலி.
நாட்கொள்ளுதல் - புதிதாய்த் தொடங்கல்.
நாட்செலவு - அன்றன்றுசெல்லுஞ்செலவு, நாட்செல்லுதல்.
நாட்டமிலி - குருடன், அந்தகன்.
நாட்டமைதி - நாட்டுச்சிறப்பிற் குடையன. அவை குறும்பின்மை, செங்கோல், செல்வம், செழிப்பு, நோயின்மை, விளைநிலம்.
நாட்டம் - அசைவு, ஒருபண், கண், நோக்கம், வாள், விருப்பம்.
நாட்டல் - ஆடல், நாட்டுதல்.
நாட்டவத்தனம் - நாட்டுப்பாங்கு.
நாட்டவன் - நாட்டான்.
நாட்டா - ஊர்ப்பசு.
நாட்டாசாரம் - உலகவொழுக்கம்.
நாட்டாண்மை - ஊரதிகாரம்.
நாட்டார் - ஊரார்.
நாட்டியக்காரன் - கூத்தன்.
நாட்டியசாலை - நடனசாலை.
நாட்டியப்பிரியன்-சிவன், நடனப்பிரியன்.
நாட்டியம்-கருத்து,குறிப்பு,கூத்து.
நாட்டு - நாட்டென்னேவல், தாபிப்பு.
நாட்டுக்குற்றம் - ஊருக்குத் தீது செய்வன. அவை கள்வர் கிள்ளை தன்னரசு, தொட்டியர், நட்டம், பன்றி, பெருமழை, மிகுகாற்று, மிகுமழை, யானைவிட்டில் வேற்றரசு.
நாட்டுச்சார்பு - மருதநிலம் அது நாட்டைச் சார்ந்திருப்பது.
நாட்டுச்சிறப்பு - நாட்டுவளம்.
நாட்டுதல்-தாபித்தல்,நடத்தல்,நிறுத்தல்
நாட்டுப்புரம் - பட்டிக்காடு.
நாட்டுப்பெண் - மருமகள்.
நாட்டுப்போக்கு - நாட்டுக்கடுத்தவிதம்.
நாட்டுவழக்கம் - தேசநடை.
நாட்டுவளப்பன் - நாட்டின்சீர்.
நாட்டுவளம் - நாட்டுச்சிறப்பு.
நாட்டுவெள்ளரி - ஒரு வெள்ளரி.
நாட்டை - ஒருபெண்.
நாட்படுதல் - நாட்செல்லுதல்.
நாட்பட்டது - நாட்சென்றது.
நாட்பணிவிடை - அன்றாடகவேலை, நன்முகூர்த்தத்திற் செய்யும் வேலை.
நாட்பார்த்தல் - சுபதினம்பார்த்தல்.

நாட்பு - ஞாட்பு, வலி.
நாட்பூ - அன்றலர்ந்தபூ.
நாட்பொருத்தம் - சென்ம நட்சத்திரப் பொருத்தம் இது தசப்பொருத்தத் தொன்று.
நாணகம் - நாணயம்.
நாணக்கேடு - வெட்கமின்மை.
நாணப்படுதல் - அடங்குதல், மதித்தல், வெட்கித்தல்.
நாணம்-அச்சம், அடக்கம், மதிப்பு, வெட்கம் இது மகடூவுக்குணம் நான்கில் ஒன்று.
நாணயகாரன் - கிதானி.
நாணயங்குத்துதல் - மிருகங்களுக்குமூக்குத் துளைத்தல்.
நாணயங்குலைத்தல்
நாணயங்கெடுதல் } மானமழிதல்.
நாணயசில்லம் - அவமானம்.
நாணயச்சரக்கு - விலைச்சாமான்.
நாணயஞ்செலுத்துதல்-உண்மை தவறாமனடத்தல், பேச்சை யுண்மைப்படுத்தல்.
நாணயத்தப்பு - நாணயப்பிழை.
நாணயம் - உண்மை,உயர்வு உரோசம்,கட்டுப்பாடு, காசுநாணயம், கிதானம், நேர்மை,வழக்கம்,வாக்குப்பிசகாமை.
நாணயவான் - உண்மைதவறாதவன், நிதானி
நாணல் - ஒருபுல், நாணுதல்
நாணவந்தான் - நாணுவம்.
நாணறை - நாணற்றவன்.
நாணுங்கள்ளி - ஒருகள்ளி.
நாணி - நாணமுடையாள், வின்னாரி.
நாணிக்கண் புதைத்தல் - அகப்பொருட்டுறையினொன்று.
நாணித்தல் - நாணுதல்.
நாணிலி - வெட்கமில்லாதவன்.
நாணுகம் - குதிரை.
நாணுதல்-அடங்குதல்,மதித்தல், வெட்குதல்.
நாணுவத்தான்
நாணுவம்
நாணுவான் } நாகணவாய்ப்புள்.
நாணேறிடுதல்
நாணேற்றுதல் } வில்வளைத்தல்.
நாணையம் - நாணயம்.
நாண் - கயிறு,நாணென்னேவல், வின்னாண், வெட்கம்.
நாண்மலர்-அன்றுபூத்தமலர், புதுமலர்.
நாண்மீன் - நட்சத்திரம்.
நாண்முகப்புல் - ஒருபுல்.
நாதகிருத்தியர் - கடவுளது கிருத்தியத்தை அவனருளாற்புரிபவர்.
நாதக்குடம் - சங்கு.
நாததத்துவம் - நாதம்.
நாதம் - அப்பிரகம், இந்திரியம், ஒலி, நாணக்கயிறு, பாதிவட்டம்.
நாதரூபம் - சிவனதுருவினொன்று.
நாதவத்தம் - பெருநெருஞ்சில்.
நாதன்-அரசன்,அருகன்,எப்பொருட்குமிறைவன், கடவுள்,கணவன்,குரு, சிவன்,தலைவன்,முனிவன்,மூத்தோன்.
நாதாக்கள் - சுத்தவான்கள், பெரியோர்.
நாதாங்கி - கதவுநிலைச்சங்கிலி, பூட்டுக்களினொருறுப்பு.
நாதாந்தசோதி - கடவுள்.
நாதாந்தம் - ஞானநெறிகளினொன்று, பஞ்சகருத்தாவி லொருவன்.
நாதாந்தவிளக்கம் - ஒருநூல்.
நாதாந்தன் - சிவபெருமான்.
நாதாந்தி - பொன்னிமிளை.
நாதி ஒருபெருங்காயம்,ஜாதி, பங்காளி.
நாதித்தல் - ஒலித்தல்.
நாதேயம் - இந்துப்பு,சீந்தில், நதியிற்பிறப்பன, நீலாஞ்சனம்.
நாதேனி - மணித்தக்காளி.
நாத்தழும்பல்
நாத்தழும்பேறுதல் } நாவப்பியாசப்பட்டிருத்தல்.
நாத்தனர் - கணவன், சகோதரி.
நாத்தாங்கி - இலைக்கள்ளி, நாதாங்கி.
நாத்தாங்கிப்பேசுதல் - எண்ணிப்பேசுதல், நாவெறுத்துப்பேசல்.
நாத்தி - கணவன்சகோதரி,தாழ்வாரம், நாசம்.
நாஸ்தி - இன்மை.
நாஸ்திகமதம் - சூனியவாதம்.
நாஸ்திகம் - தெய்வமின்மை.
நாஸ்திகன் - சூனியவாதி.
நாத்திரம் - அதிசயம், புகழ்.
நாத்திரன் - சிவபிரான்.
நாத்தூண் - மைத்துனி.
நாந்தகம் - கிருஷ்ணன்வாள், வாள்.
நாந்தல் - ஈரம்.
நாந்தி - ஒருவனைப்புகழ்ந்து பாடியகவி, பதினாறுகருமத்தொன்று.
நாந்திகாரன்
நாந்திவாதி } மங்கலப்பாடகன்.
நாந்துதல் - நனைதல்.
நாந்தெனி - ஒருபூடு.

நாபம் - நாபி.
நாபாகன் - இக்ஷுவாகு தம்பியாகிய திஷ்டன்புத்திரன். இவன் தனது க்ஷத்திரியத் தொழிலை மேற்கொண்டொழுகி வைசியனுகிச் சுப்பிரபையென்னும் வைசியப்பெண்ணையே மணம் புரிந்தவன். இவன்புத்திரன் ஜலந்தரன். இக்ஷுவாகு தம்பிகளுள் மற்றொருவனுகிய நபகன்புத்திரன். இவன் அம்பரீஷன்தந்தை, சுகோத்திரன்புத்திரன். அம்பரீஷன்.
நாபி - ஆக்கினீத்திரன்புத்திரர்ஒன்பதின்மருளொருவன், இவன்பங்காக ஜம்புத்துவீபங் கிடைத்தது. இவன் பாரி மேருதேவி புத்திரன் ரிஷபன் (பரதகண்டங் காண்க.) கஸ்தூரி, கொப்பூழ், வற்சநாபம்.
நாபிக்கமலம் - கொப்பூழ்.
நாபிக்கொடி - கொப்பூழ்க்கொடி.
நாபிசன், நாபிசன்மன் } பிரமன்.
நாபிசூத்திரம் - நாபிக்கொடி.
நாபிதன் - அம்பட்டன்.
நாபித்தானம் - கொப்பூழ்.
நாபிநாடி - உந்திக்கொடி.
நாபிநாளம் - கொப்பூழ், நஞ்சுக்கொடி.
நாபீலம் - கடிதடகம், கொப்பூழ்க்குழி.
நாபீலை - உத்தமஸ்திரீ.
நாப்பண் - இடை, தேர்நடு, நடு, யாழினுறுப்பு.
நாப்பு - எத்து, பரிகாசம்.
நாப்புற்று - நாவறளை.
நாப்பொடிதல் - நாவுலர்தல்.
நாம - பயம்.
நாமகரணம் - பெயரிடுதல்.
நாமகள் - சரச்சுவதி, சரஸ்வதி.
நாமக்கட்டி - விட்டுணுபத்திக்காரர்போடுமோர் சாந்துக்கட்டி.
நாமக்காரர் - வைணவர்.
நாமக்குச்சரி, நாமக்குச்சலி } ஒருவகைப்புடைவை.
நாமசங்கிதை - சிற்பநூன்முப்பத்திரண்டினென்று.
நாமசாஸ்திரம் - நிகண்டு.
நாமசேடம் - மரணம்.
நாமச்சி - நத்தை.
நாமஞ்சாத்துதல் - நாமந்தரித்தல்.
நாமடந்தை - சரச்சுவதி.

நாமதாரணை - நவதாரணையி னென்று, அதுபூரணமாய்க்கடவுளைத்தியானித்தற்குக் கற்பித்த நாமதியானத்தினால் அக்கடவுளை யெல்லைப்படுத்தல்.
நாமதாரி - நாமந்தரித்தோன், விட்டுணுபத்திக்காரன்.
நாமதேயம் - பெயர்.
நாமத்துத்தி - ஒருபூடு.
நாமப்பொருத்தம் - பெயர்ப் பொருத்தம்.
நாமமாலை - ஒருபிரபந்தம், அது அகவலடியுங் கலியலடியும் வந்துமயங்கிவஞ்சிப்பாவால் ஆண்மகனைப் புகழ்ந்து பாடுவது.
நாமமிடுதல் - நாமக்குறிதீட்டுதல், பெயர்கொடுத்தல்.
நாமம் - அதிசயம், இணக்கம், ஐயம், கோபம், நிச்சயம், நிந்தை, நினைப்பு, மாய்மாலம் அவைகளைக் காட்டுஞ் சொல், கீர்த்தி, தும்பை, நிறைகோலினடு, பெயர், அது எண்குற்றத்தொன்று, வைஷ்ணவரிடு நாமம்.
நாமராசி - இராசிப்பொருத்தம், பெயர்ப்பொருத்தம்.
நாமவந்தம் - பெருநெருஞ்சில்.
நாமவெகுண்டம், நாமவைகுண்டம் } தும்பை.
நாமறல் - பேருமற்றுப்போதல், முற்றுமறல்.
நாமாது - சரச்சுவதி.
நாமபாரதம் - நிந்தனை.
நாமிதம் - வளைவு.
நாமுடி - நாறுனி.
நாமோச்சாரணம் - நாமவுச்சரிப்பு.
நாம் - அச்சம், பால்பகாவுயர்திணைத்தன்மைப் பன்மை.
நாம்பல் - இளைத்தமிருகம், இளைத்தல்.
நாம்பன் - இளவெருது.
நாம்பு - நாம்பென்னேவல், மெலிவு.
நாம்புதல் - மெலிதல்.
நாயகசுரம் - நாகசின்னம்.
நாயகச்சி, நாயகத்தி } தலைவி, தேவி, மனைவி.
நாயகத்வம் - தலைமை.
நாயகப்பானை - முதலுலைகட்டிப் பொங்கும்பானை.
நாயகமணி - மணிமாலை நடுவிலே கோத்திருக்கும் பெருமணி.

நாயகம் - ஆளுகை, கிரந்திநாயகம், சன்னிநாயகம், தலைமை, மாலையின் பிரதானமணி.
நாயகம்பண்ணுதல் - முதன்மைசெலுத்தல்.
நாயகவளந்து - பொங்கல்செய்வோர்முதலுலைவைக்கும் பானை.
நாயகன் - அரசன், எசமான், எப்பொருட்கு மிறைவன், சிவபெருமான், நடத்துவோன், பாளயக்காரன்.
நாயகாதிபன் - அரசன்
நாயகி - எசமாட்டி, பார்வதி, பெருமையிற் சிறந்தவள், மனைவி.
நாயகிமேனி - மரகதப்பச்சை.
நாயக்கன் - சேனைத்தலைவன், தெலுங்கருளோர் வகையான்.
நாயரஞ்சி - நாயுருவி.
நாயனூர் } அரசன், எசமான், ஐபனூர்,
நாயன் } கடவுள், சிவபிரான, பெருமையிற் சிறந்தோன்.
நாயன்மார் - தலைவர், துறவோர், பெருமையிற் சிறந்தோர்.
நாயாட்டம் - உலைச்சல், பேயாட்டம்.
நாயில் - ஞாயில்.
நாயிறு - ஒருகிழமை, சூரியன், ஓரூர்.
நாயிறுதிரும்பி - பொழுதுவணங்கி.
நாயிறுவணங்கி - கொழிஞ்சி.
நாயுருவி - ஒருபூடு.
நாயுறக்கம் - பொய்யுறக்கம்.
நாயோட்டம்-குதிரைநடையினொன்று.
நாய் - ஞமலி, சூதாடுகருவி, தென்மேற்றிசைப் பாலன்குறி.
நாயகர் - செட்டிகள்.
நாய்குருவி - நாயுருவி.
நாய்க்கடுகு - நாய்வேளை.
நாய்க்கரந்தை - குன்றி.
நாய்க்குட்டிச்செடி - ஒருசெடி.
நாய்க்கோலம் - இழிவானகோலம்.
நாய்ச்சி } எசமாட்டி.
நாய்ச்சியார் }
நாய்ச்சீரகம் - ஒருசீரகம்.
நாய்த்தயிர்வேளை - ஒருசெடி.
நாய்த்திசை - தென்மேற்கு.
நாய்த்துளசி - கஞ்சாங்கோரை.
நாய்நாக்கி } இலைக்கள்ளிபூடு.
நாய்நாக்கு }
நாய்ப்பயறு - ஒருபூடு.
நாய்ப்பாகல் - ஒருபால்.
நாய்ப்புடுக்கன் - ஒருமரம்.
நாய்ப்புடோல் - ஒருகொடி.
நாய்முருகை - ஒருமுருகைக்கல்.
நாய்முள்ளி - ஒருமுள்ளி.
நாய்விட்டைக்கல் - ஒருவகைச்சுண்ணம்புக்கல்.
நாய்வெள்ளை - நாய்த்தயிர்வேளை.
நாய்வேம்பு } ஒருபூடு.
நாய்வேளை }
நாரகம் - நரகம்.
நாரகன் - நரகன்.
நாரகி - நரகவாசி.
நாரங்கம் - தேன்றோடை, நாரத்தை.
நாரங்கி - ஒருவகைக் கிச்சிலி.
நாரசிங்கம் - இது அட்டாதசவுபபுராணத்தொன்று, உபமிடத முப்பத்திரண்டினொன்று, நரசிங்கம், அது திருமாலவதாரத் தொன்று.
நாரசிங்கன் - விட்டுணு.
நாரணவன் - ஒரு கிருமி, மாட்டுநோயிலொன்று.
நாரணன் - விஷ்ணு.
நாரணி - துர்க்கை.
நாரதம் - பதினெண்புராணத் தொன்று, முகில்.
நாரதன் - இவர் முந்திய மகா கற்பத்தில் உபவருகன் என்னும் கந்தருவனாக விருந்து பிரமசிரேஷ்டர் என்னும் பிராமணர் செய்த யாகத்துக்குப் போய் அங்கே வீணைகானஞ்செய்து அங்குவந்திருந்த ஒருகன்னிகையை வசியஞ்செய்து அவளைப் புணர்ந்து போயினர், அதுணர்ந்த பிராமணர் இவரைச் சூத்திர வருணத்திற் பிறக்கவென்று சபிக்க அவ்வாறே சூத்திரனாகப் பிறந்து மகாதவஞ்செய்து பிரமமானச புத்திரராகப் பிந்திய கற்பத்திற் பிறந்தவர், இவர் கலகப்பிரியர், இவர் தக்ஷப்பிரஜாபதி பிள்ளைகள் யாவருக்கும் ஞானோபதேசஞ்செய்து சிருஷ்டிக்குப் பிரதிகூலஞ்செய்ய அதுகண்ட தக்ஷன் சந்ததியில்லாதவராய் நிலையற்றலைகவென்று, இவரைச்சபித்தான் அதனாலே இவர் திரிலோகங்களிலுஞ் செல்பவராயினர். இவர் தாங் காதினாற் கேட்டவற்றைப் பிறர்க்குரையாமலிருப்பதில்லை, தேவசபை இராஜசபை வேள்விச்சாலைமுதலிய

எவ்விடத்துந் தடையின்றிச் செல்லும் சுவாதீனமுடையவர், தனியிடங்களிலகப் பட்டுத் திக்கற்றிருப்பவர்களுக்கு வெளிப்பட்டு உபாயங்களும் பின்னிகழ்வதுங் கூறுபவர், தூதுபோய்ச்சாதுரியமாகப் பேசுவதிலும் வல்லவர், தருமநூலிலும் சிறந்தவர் வீணையிலே ஒப்பாரும் மிக்காருமில்லாதவர். கிருஷ்ணனது அவதாரத்தைக் கஞ்சனுக்குணர்த்தினவரும், இராமாயணத்தை வான்மீகியாருக்குரைத்தவரும் இத்தேவவிருடியே, இவர்சம்பந்தப்படாதவைதிகசரித்திரங்கள் மிகச்சில. இவர்திருமால் பதினைந்தாவதாரத்தொருவன், பஞ்சபாரதீயமென்னும் இசைத்தமிழ் நூலாசிரியன்.

நாரதீயம் - அட்டாதசவுப புராணத்தொன்று, பதினெண்புராணத்தொன்று. இது நாரதப்ரோக்தம், பெரிய கற்பதர்மங்களைக் கூறுவது, இது இருபத்தையாயிரம் கிரந்தமுடையது, உபபுராணங்களுள்ளும் இப்பெயருடைய தொன்றுண்டு, இராகதாளலக்ஷணங்களைக் குறித்து நாரதர் செய்தநூல்.

நாரநதை - நதி.

நாரத்தம் - சடாமாஞ்சி, வசம்பு.

நாரத்தம்புல் - ஒருபுல்.

நாரத்தை - ஒருதோடை.

நாரம் - அன்பு, சனத்திரள், நாண், நாரத்தை, நீர், நீர்வாழ்புள், பசுக்கன்று, பாசி.

நாராங்கி - நாதாங்கி.

நாராசபாணம்-ஒரத்திரம்.

நாராசமூத்திரை-பூசாமூத்திரைவகையினொன்று.

நாராசம்-அம்பு, இருப்பாணி, எழுத்தாணி, சலாகை, விட்டம்.

நாராயணகவசம் - ஒருமந்திரம்,இதைக் கிரமமாகச் செபிப்போர்க்கு நாராயணன் விரைந்து அருள்புரிவர்.

நாராயணசதகம் - ஒருநூல்.

நாராணகவுளம் - ஒருபண்.

நாராயணகோபாலர்-திருமாலுருவுடையோர்.

நாராயணகோபியவர் - பல பராக்ரமங்களில் கிருஷ்ணனுக்குச் சமமானவர்கள், இவர்கள் யாதவர்கள், இவர்கள் பதினாயிரவரும் துரியோதநனுக்குத் துணையாகச்சென்றபோது அர்ஜுநனால் கொல்லப்பட்டார்கள்.

நாராயணதைலம் - ஒருதைலம்.

நாராயணப்பிரியன் - சிவன்.

நாராயணமுநி - ஒருமுனிவன்.

நாராயணம் - அரசமரம், உபநிடதமுப்பத்திரண்டினொன்று, மீன்.

நாராயணன் - சந்திரன், சிவன், பிரமன், வருணன், விட்டுணு.

நாராயணன் - திருமால், மஹாப்ரளயத்தில் எல்லாப் பொருள்களும் நீரிலொடுங்கினபோது அதனையிடமாகக் கொண்டுஎல்லாவற்றையும் தோற்றுவித்தாரென்றுவேதபுராணாதிகளின் துணிபு. ஆதலால் இவர்க்கு நாராயணன் எனனும் பெயர்வழங்கும். நாரம்-நீர்,அயநம்-இடம். இந்தநாராயணபதம் சிவனுக்கும் வழங்குமென்பர். உலகம் அப்புவில் ஒடுங்கிய கற்பத்திலே அதனை மீளவும் தோற்றுவித்த பரப்பிரமத்தினது புருஷாமிசமே நாராயணன்எனப்பட்டது நாரமென்பது அப்புவினது மூலப்பகுதி. அது எழுந்திட்டாடும் சர்ப்ப வடிவினையுடையதாயிருக்கும் அதன் சத்திபாகம் சங்கினது வடிவினையுடையது அப்புவினிடத்து விளங்கும் புருஷாமிசம் ஆதிசேஷன் என்னுஞ்சர்ப்பத்தை பாயலாகக்கொண்டு அறிதுயில் செய்யும் நாராயணனாகக் கூறப்படும். ஒடுங்காதெஞ்சிநின்று மீளவும் சகத்துக்கு ஆதிகாரணமாய்க் கிடந்து, அப்புவினது மூலப்பகுதியாதலின், அது ஆதிசேஷன் எனப்பட்டது, (சேஷம்) எஞ்சியஅப்புவினது மூலப்பகுதிமண்டலமிட்டெழுந்தாடுஞ் சர்ப்பவடிவினதென்பது அப்புவினது அணுவையெடுத்துச் சோதித்தால் இனிது புலப்படும். அவ்வணுவானது ஸ்தூல நிலைவிட்டுச் சூக்குமித்துச் சூக்குமித்துப் போய் ஏழாவது நிலையையடையும் அவதாரத்தில் இவ்வடிவைப்பெறும், கமல வடிவுடைய அப்புவினிடத்தே பிரமாவாகிய சிருஷ்டி புருஷன் தோன்றுவன். அதுநிற்க அப்புவின் மூலப்பகுதியைஆதிசேஷன்என்றும், அப்

புவுக்குக் குறிகமலமென்றுங் கூறிய நமது பூர்வ வேதாந்த சித்தாந்த நூலாசிரியர்களது பூதபௌதிக ஞானமும் புத்திநுண்மையும் அநுபவமும்பெரிதும்பாராட்டப்படத்தக்கன வென்பது இக்காலத்து ஐரோப்பிய இரசாயன பரீக்ஷகர்கள் வெளியிட்ட பரீக்ஷா விஞ்ஞாபனங்களை ஊன்றி விசாரிக்குமிடத்து நன்கு துணியப்படும்.

நாராயணாஸ்த்ரம் - ஒருபாணம்.

நாராயணி - இலக்குமி, ஓரிராகம், கங்காதேவி, சத்தமாதர்களிலொருத்தி, தண்ணீர்விட்டான்கிழங்கு, துர்க்கை.

நாரி - இடை, ஒருபண், கள், சேனை, தேன், நன்னாரி, நாணி, பன்னாடை, பார்வதி, வாசனை, பெண்.

நாரிகேரம் } தென்னமரம், தேங்
நாரிகேளம் } காய்.

நாரிபாகன் - சிவபிரான்.

நாரியங்கம் - தேன்றூடை.

நாரிதூஷணம் - பதிவிரதா விரதத்திற்குத் தப்பானது அது அன்னியக்கிரகசயனம் அன்னியக்கிருகப் பிரவேசம், அன்னியக்கிரகாசனம் கணவனைப் பிரிந்திருத்தல் துற்கூட்டம் மதுபானம்.

நாரீகவசன் - இக்ஷுவா, மூலகன்.

நாரீசங்கன் - ஒரு கொக்கரசன்.

நாரீதீர்த்தங்கள் - சௌபத்திரம், பௌலோமம், காரண்டவம், பிரசன்னம், பாரத்துவாஜம் எனத் தக்ஷணத்திலுள்ள ஐந்துதீர்த்தங்கள், நந்தை, சௌரபேயி, சமீசிவசை, லதையென்னும் ஐந்து அப்சரஸ்திரீகள், ஓரிருஷி சாபத்தினால் இத்தீர்த்தங்களிலே முதலைகளாகிக்கிடந்து, அத்தீர்த்தங்களிற் படிவோரைப்பற்றி விழுங்கிவந்து, அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை சென்றபோது அவன் காலைத்தீண்டிச் சாபவிமோசனம் பெற்றார்கள்.

நாரை - ஒருபுள்.

நாரைக்கொம்பு - நீண்டகொம்பு.

நாரைப்பசு - ஒருகைப்பசு.

நார் - அன்பு, கயிறு, கல்நார், தும்பு, மட்டை முதலியவற்றினார்.

நார்ச்சிலை - மரவுரி, வலைக்கோணி.

நாலடி } ஒருநூல். பதினெண்கீழ்
நாலடியார் } க்கணக்கிலுள்ள முதலாவதுநூல், ஜைந முனிவர்களால் பாடப்பட்டது, பதுமனால் தொகுக்கப்பட்டது, நாற்பது அதிகாரமும் நானூறு செய்யுட்களு முடையது. இது அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என முப்பால்களையுடையது, இதற்குப் பதுமனார் ஒரு உரை செய்துளர். திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் செய்த உரையுமுண்டு.

நாலம் - தாமரைப்பூ முதலியவற்றின் காம்பு.

நாலை - நாளம்.

நாலல் - தாழ்தல், தொங்குதல், விழுதல்.

நாலாகாரியம் - பலவகைக்காரியம்.

நாலாஞ்சடங்கு } விவாகத்தி னலா
நாலாநீர்ச்சடங்கு } நாட்பண்ணு முழுக்குச்சடங்கு.

நாலாமுறைக்காய்ச்சல் - நாலுநாளைக்கொருமுறைவருங்காய்ச்சல்.

நாலாம்வருணம் - வேளாளர், சூத்திர சாதி.

நாலாம்வருணர் - சதுர்த்தர் வெள்ளாழர்.

நாலாயிரப்பிரபந்தம் பன்னிருத்தாழ்வார்கள்பாடிய வைணவப்பிரபந்தம்.

நாலாவிதம் - பலவிதம்.

நாலி - கார்த்திகைப்பூ, முத்து.

நாலிகம் - எருமை, காகம், தாமரை.

நாலிகை - அடுப்புச்சந்து, தொளை, மூங்கில், குழை.

நாலுகவிப்பெருமாள் - திருமங்கையாழ்வார்.

நாலுதல் - தொங்குதல்.

நாலுபாதச்சைவம் - ஒருசைவம்.

நால் - நாலென்னேவல், நான்கு.

நால்வகைச்சாந்து - சாந்துவகை நாலு அவை கலவை பீதம் புலி வட்டிகை.

நால்வகைத்தோற்றம் - நான்குவகைப் பிறப்பு அவை சிலம்பை முட்டை வியர்வை இவைகளிற் சனிப்பு.

நால்வகைப்பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு.

நால்வர் - சம்பந்தர் அப்பர் சுந்தரர்மாணிக்கவாசகர், இந்நால்வரும் சைவசமயா சாரியரெனப்படுவர், இவராற் செய்யப்பட்டவை தேவார திருவாசகங்கள். இப்பாடல் சொற்சுவை பொருட்சுவை பத்திரசம் முதலிய

வற்ருற் பொலிந்துள்ளன, இப்பாடல்களால் முதலை விழுங்கினபிள்ளையை யுமிழ்ந்தது, என்புபெண்ணனது, நரி பரியானது முதலிய அநேக அற்புதங்கள் நிகழ்ந்திருக்கின்றன, பெண்ணசை யொழித்தவர்க்கே வீடுபேற்றையருள்வோமென்று வேதாகமாதிகளால் விதித்த எல்லாம் வல்ல இறைவர் தாமே தமது எற்பாட்டை மறுத்துச் சுந்தரர் பொருட்டுப் பரவையென்னும் வேசையினிடத்திற்கு அர்த்தயாமத்தில் தூது போனதற்குக் காரணம் இந்தப்பாடலின்மீது அவர்வைத்த விருப்பமேயாமன்றே, அடியில்வரும்பாடலால் இவர்கள் மேம்பாடு இனிது விளங்கும், "சொற்கோவுந் தோணிபுரத்தோன்றலுமென் சுந்தரனும், சிற்கோல வாதவூர்த்தேசிகனும் - முற்கோலி, வந்திலரேனீரெங்கே மாமறைநூறுனெங்கே, எந்தைபிரா னைந்தெழுத்தெங்கே" இதனல் தென்னட்டிலே சமணரால் மயங்கிய சைவத்தைமீளவும் விளக்கினவர்கள் இந்நால்வரே யென்பது தெள்ளிதிற் புலப்படும் நான்குபேர்.

நால்வாயன் - இந்திரன், விநாயகன்.

நால்வாய் - யானை.

நாவடக்கம் - நாவெழாமற் பண்ணல், [மௌனம்

நாவடைத்தல் - பேசக்கூடா திருத்தல்.

நாவணம் - உண்ணு.

நாவரசன் - அப்பர், சுவாமிகள், புலவர்.

நாவரட்சி - நீர்த்தாகம்.

நாவரணை - நாப்புற்று.

நாவரளுதல் - நீர்விடாய்த்தல்.

நாவலந்தீவு - சத்ததீவிலொன்று.

நாவலர் - கற்றவர், புலவர்.

நாவலோ - உரப்பர்குறிப்பு.

நாவல் - இரக்கக்குறிப்பு, ஒருமரம் அது துவர்பத்திலொன்று, சத்ததீவில் ஒ [ன்று.

நாவறட்சி - நாப்புலர்வு.

நாவறளை - நாப்புற்று.

நாவாசித்தி - நாவேறு, வாக்குச்சித்தி.

நாவாய் - இரேபதிநாள், மரக்கலம்.

நாவாள் - சரச்சுவதி.

நாவி - ஊமத்தை, ஒருமருந்து, கத்தூரி மிருகம், நாபி, புழுகுப்பூனை.

நாவிகன் - கப்பற்காரன்.

நாவிகை - இந்திரன்சபை.

நாவிச்சட்டம் - கத்தூரி.

நாவிதச்சி - அம்பட்டத்தி.

நாவிதர் - அம்பட்டர்.

நாவிதன் - அம்பட்டன், இராசசெல்லான், கார்த்திகை, பூரநாள்.

நாவித்தண்டை - எருமுட்டைப்பீநாறி.

நாவிநெய் - மயிர்ச்சாந்து.

நாவிப்பிள்ளை - ஒருமிருகம்.

நாவிப்புழுகு - மான்மதம்.

நாவிமிருகம் - கஸ்தூரிமிருகம்.

நாவியம் - கார்த்திகைப்பூ.

நாவிழுதல் - பேசநாவெழாதுபோதல்.

நாவு - நா.

நாவுதல் - நாக்குவளைத்தல், நோம்புதல்.

நாவுரி - நாழியுரி என்பதின் குறுக்கம், அது ஒன்றரைபடிகொண்டது.

நாவுழலை - நாக்குளறுதல், நாவூறு, விடா

நாவுழலையாடுதல் - நாக்குழறுதல். [ய்.

நாவூறு, நாவேறு - நாத்தோஷம்.

நாவை - கலப்பயிணு, படைவாள்.

நாழி - உட்டுளைப்பொருள், ஒருபடி, கொத்து, நாழிகை, பூரட்டாதிநாள்.

நாழிகை - உத்திரட்டாதி, விநாடியறுபதுகொண்டது.

நாழிகைப்பறை - நாழிகையறிவிக்க வடிக்கும்பறை.

நாழிகைவட்டம், நாழிகைவட்டில் - காலவளவைக்காட்டுமோர்சூத்திரம், சூரியகடிகாரம்.

நாழிகைவெண்பா - அரசற்கு நாழிகை தோறுஞ் சொல்லும் வெண்பா.

நாழியோடு - குழலோடு.

நாளகம் - இலாமிச்சு.

நாளடகம் - நாடோறும்.

நாளம் - உட்டுளை, நான், பூந்தண்டு, பொன்னரிதாரம், வட்டம்.

நாளரும்பு - புதியஅரும்பு.

நாளறுதி - நாள்முற்றும், நாள்வட்டம்.

நாளாதிறுதி - நாளறுதி.

நாளாயணி, நாளாயநி - நளாயணன் என்னும் ரிஷிபுத்ரி, இவளது இயற்பெயர் இந்திரசேனை, மௌத்கல்யரிஷி யென்னும் குஷ்டரோகிக்கு

மனைவியாகி, மறுபிறப்பில் திரௌபதியாகப் பிறந்தவள்.
நாளாய்ந்தோர் - வைத்தியர்.
நாளி - கள், நாய்.
நாளிகம் - தாமரை, வள்ளைக்கொடி.
நாளிகேரபாகம் - செய்யுளினோர்சுவை அது ஆழமான பொருளுள்ளது.
நாளிகேரம் } நாளிகேளம் } தென்னமரம்.
நாளினி - புளிமா.
நாளுக்குநாள் } நாளும் } எப்போழ்தும்.
நாளுத்தல் - இறத்தல், நாட்கழிதல்.
நாளெடுத்தல்- நன்முகுர்த்தங்குறித்தல்
நாளெல்லை - அத்தமனம், மரணகாலம்.
நாளை - மற்றைநாள்.
நாளைமின்று - நாளைவிட்டுமற்றைநாள்.
நாளோலை - சாதகம், சீதனக்குறிப்பு.
நாள் - இராப்பகல்கொண்ட பொழுது, காலம், நன்முகுர்த்தம், பெருநாள், முகுர்த்தம்.
நாள்தோறும் - நாளுக்குநாள்.
நாள்வட்டம் - நாட்சுற்று.
நாள்வழிப்படுமடிசில் - கட்டுச்சாதம்.
நாள்விடுதல் - சீவியம்பண்ணுதல்.
நாள்வேலை - நாட்பணிவிடை.
நாறணு - நாறணு.
நாறல் - நாறுதல், பதனழிதல், பதனழிந்தது.
நாறற்பாக்கு - ஒருவகைப்பாக்கு
நாறணு - சடைச்சிச்செடி.
நாறி - கற்றாழை.
நாறு - நாறென்னேவல், நாற்று.
நாறுகட்டி - பெருங்காயம்.
நாறுகரந்தை - ஒருவகைப்பூடு.
நாறுதல் - உண்டாதல், தோற்றுதல், மணத்தல், முளைத்தல்.
நாற்கணம் - நான்கினம் அவை இடையினம், உயிர், மெல்லினம், வல்லினம்.
நாற்கதி-தேவர், நரகர், மனிதர், விலங்கு.
நாற்கவி - நாலுவிதக்கவி அவை ஆசு, சித்திரம், மதுரம், வித்தாரம்.
நாற்கவிராசநம்பி - புளியங்குடியில் ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் எனும் நாற்கவிகளையும் பாடலில் வல்லவராய் அகப்பொருளிலக்கணம் பாடின ஒரு சமணபுலவர்.
நாற்காலி - ஒருவகையாசனம், நாற்கான்மிருகம்.
நாற்காற்சீவன் } நாற்கான்மிருகம் } நாற்காலுள்ள மிருகம்.
நாற்குணம் - ஆடூஉக்குணம் நான்கு அவை, அறிவு, ஓர்ப்பு, கடைப்பிடி, நிறைவு, மகடூஉக்குணம் நான்கு அவை அச்சம், நாணம், பயிர்ப்பு மடம்.
நாற்கோணம் - நாலுமூலை.
நாற்சதுரம் - சதுரங்கம்.
நாற்சந்தி - நாற்றெருக்கூடுமிடம்.
நாற்சி - ஞாற்சி.
நாற்பது - ஒருபிரபந்தம், அது இடம், காலம், பொருளென்பவற்றுள் ஒன்றனை நாற்பது வெண்பாவாற் கூறுவது, நான்குபத்து.
நாற்பயன்-நாற்பொருளினால்வரும் பேறு.
நாற்பான் - நாற்பது.
நாற்பொருள் - அறம், பொருள், இன்பம், வீடு எனப்படுபொருள்.
நாற்பொன் - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாமபூநதம் எனு நால்வகைப் பொன்.
நாற்றங்கால் } நாற்றங்கொல்லை } நாற்றுப் போட்டிருக்கு மிடம்.
நாற்றத்தானி - ஊன்.
நாற்றமடித்தல் - நாற்றம்வீசுதல்.
நாற்றமெடுத்தல் - துர்க்கந்தம் வீசுதல்.
நாற்றம் - கள், கெந்தகம், துர்க்கந்தம். தோன்றுதல், வசம்பு, வாசனை.
நாற்றம்வைத்தல் - நாற்றமெடுத்தல்.
நாற்றிசை - கிழக்கு, தெற்கு, மேற்கு வடக்கு எனுந்திக்கு.
நாற்று -முளைப்பயிர்.
நாற்றுதல் - தூக்குதல்.
நாற்றுப்பாவுதல் } நாற்றுப்போடுதல் } தானியம் முதலிய பதிபோடுதல்.
நானமா - கத்தூரிமிருகம்.
நானம் - கத்தூரி, கத்தூரிமிருகம், கவரிமா, குளித்தல், முழுகல், வாசனை.
நானு - பல்.
நானுப்பிரகாரம் } நானுவிதம் } பலவிதம்.
நானுளைமாறன் - நாலாமுறைக்காய்ச்சல்
நானிலம் - நால்வகைநிலம் அவை குறிஞ்சி, நெய்தல், மருதம், முல்லை.
நானூறு - நான்குதரம் நூறு.
நான் - யான்.
நான்கடிமடக்கு - மடக்கலங்காரத்தொன்று.

நான்கனுருபு - நாலாம்வேற்றுமையுருபு அவை கு முதலியன.
நான்காம்வேதம் - அதர்வணம்.
நான்கு - நாலு.
நான்மணிக்கடிகை - விளம்பி நாகனார் செய்த ஓர் நீதிநூல், இது பதினெண்கீழ்க்கணக்கினுள் இரண்டாவது. இதின் ஒவ்வொரு பாட்டிலும் நான்குவிஷயங்கள் அடங்கியிருக்கும்.
நான்மணிமாலை - ஒரு பிரபந்தம், அது வெண்பாவுங் கலித்துறையும் விருத்தமும் அகவலுமாக அந்தாதித்தொடையான் நாற்பது பாடுவது.
நான்மருப்பியானை - ஐராவதம்.
நான்மருப்பியானையூர்தி - இந்திரன்.
நான்மறை - நான்குவேதம், அவை இருக்கு தைத்திரியம் சாமம் அதர்வணம், அன்றியும் உபவேதம் நாலு அவை ஆயுள்வேதம், அருத்தவேதம், தனுர்வேதம் காந்தருவவேதம் என்னப்படும்.
நான்மறையோன் - பிரமன்,முனிவன்,
நான்முகப்புல் - ஒருவகைப்புல்.
நான்முகன் - அருகன், பிரமன்.
நான்முகன்கிழத்தி - சரச்சுவதி.
நான்முகன்தேவி - சரச்சுவதி,மனோசி
நான்முகன்வாழ்நாள்-பிரமகற்பம். [லை.



## நி



நி-இன்மை உறுதி எதிர்மறை ஐயம் சமீபம் நிச்சயம் நிலைபேறு பூரணம் மிகுதி இவைகளைக் காட்டுமோருபசருக்கம், ஓரெழுத்து.
நிக - நிர்.
நிகசம் - போசனம்.
நிகசலாகம் - ஏகாந்ததலம்.
நிகசோத்தியம் - பரிசுத்தம்.
நிகடம் - சமீபம்.
நிகணம் - ஓமப்புகை.
நிகண்டவாதம் - ஒருசமயம். [ன்.
நிகண்டவாதி - நிகண்டவாதசமயத்தா
நிகண்டு - சொற்பயன் விளக்குநூல், தொகுதி, நிச்சயம், படலம், தேவாங்கமாதிஞென்லு.

நிகதம் - சொல், பேச்சு.
நிகப்பிரபை - இருள்.
நிகமம் - கடைவீதி, நிச்சயம்,பட்டினம், வியாபாரம், வியாபாரிக் கூட்டம், வேதம்.
நிகமனம் - உறுதிப்படுத்தித் தீர்ப்புச் சொல்லுதல்.
நிகமாகமம் - வேதாகமங்கள்.
நிகமாச்சுவன் - சிவபிரான்.
நிகம் - பிரகாசம்.
நிகர - உவமைச்சொல், ஒளி.
நிகரணம் - விழுங்குதல்.
நிகரம் - கூட்டம், கொடை, சாரம், திரவியம், மொத்தம், விழுங்குதல்.
நிகரிடுதல் - ஒப்பிடுதல்.
நிகருஷணம் - அயல், முற்றம்.
நிகருமம் - நிகன்மம்.
நிகருவம் - அடக்கம்.
நிகர் - உவமை, சமானம், நிகரென்னேவல், பிரகாசம், போர்.
நிகர்தல் - ஒப்பாயிருத்தல்.
நிகர்தி - இருப்புலக்கை.
நிகர்த்தல் - ஒப்பாதல், பொருதல்.
நிகர்பக்கம் - உவமைப்பொருளிருக்குமி
நிகர்ப்பு - ஒப்பு, போர். [டம்.
நிகர்வம் - கர்வமில்லாதவன், தாழ்மை.
நிகர்வி - தாழ்மையுள்ளோன்.
நிகர்வு - ஒப்பு.
நிகலம் - தோண்மேல்.
நிகழ்காலம் - வர்த்தமானகாலம்.
நிகழ்காலவினையெச்சம் - அகர விகுதி பெற்று இடைநிலையோடு கூடாதுதானேநிகழ்காலம்காட்டிநிற்குஞ்சொல்.
நிகழ்ச்சி - ஒளி, சம்பளம்.வத்தமானம்.
நிகழ்தல் - ஒளிசெய்தல், செல்லல், நடத்தல், நிறைவேறல்.
நிகழ்த்துதல்-சொல்லுதல்,நடப்பித்தல்.
நிகழ்வினைவிலக்கு - ஓரலங்காரம் அது நிகழ்வினையைக்காட்டி விலக்குவது (உ-ம்.) மாதர்நுழைமருங்கு நோவ மணிக்குழைசேர், காதின்மிசைநீலங் கவின்புனைவீர் - மீதுலவு - நீணிலவு வாட்கண் நிமிர்கடையே செய்யாவோ, நாணிலஞ் செய்யு நலம்.
நிகழ்வு - சம்பவிப்பு.
நிகளம் - சங்கிலி, யானைச் சங்கிலி, விலங்கு.

நிகற்பம் - நூறு கல்பம்கொண்ட ஒரு கால அளவு.
நிகன்னம் - கொலை.
நிகாசம் - ஒப்பு.
நிகாதம் - சொல், வஞ்சம்.
நிகாதன் - வஞ்சகன்.
நிகாநம் - நிந்தித்தல்.
நிகாயம் - இலக்குகூட்டம்,மருதஞ்சார்ந் தவூர், வாசஸ்தலம்.
நிகாயன் - கடவுள்.
நிகாரணம் - காரணமற்றது, கொலை.
நிகாரணன் - கொலைகாரன்.
நிகாரணம் - அவசங்கைஆகாயசுரூபமறி தல், இறைத்தல், உயர்த்துதல், தப்பி தம், தூற்றுதல், பனி, விரோதம், விழுங்குதல்.
நிகாலம் - கழுத்து.
நிகாவா - பிரமி.
நிகிதம் - படை.
நிகிருதி - தரித்திரம், நிந்தை, பொல்லாங்கு.
நிகிருந்தநம் - நிகுந்தநம் என்னும் ஒருநாகம் இது குயவன் திகிரிபோல இடையறாது சுழன்று திரிந்து பாவிகளுடம்பைத் துண்டிக்கும் சக்கரங்களையுடையது.
நிகிலம் - எல்லாம்.
நிகீனன் - கீழ்மகன்.
நிகு - அறியுங்கருவி.
நிகுஞ்சம் - குகை, சிற்றில், புதர், வீடு.
நிகுட்டம் - தொனி.
நிகுஞ்சகம் - ஓரளவு, ஒருமரம்.
நிகுஞ்சனம் - கொலை.
நிகும்பம் - நேர்வாளம்.
நிகும்பலை - நிகும்பிலை.
நிகும்பன் - கும்பகர்ணன்மகன் (இக்ஷ்வா) ஹரியசுவன்மகன், இவன் மகன் பரிஹிணுசுவன் அமிதாசுவன் சம்ஹதாசுவன் என்பன ஏகநாகம். கும்பகர்ணன்புத்திரன், இவன் அநுமனாற் கொல்லப்பட்டான். சிவகணங்களுள் ஒருவர்.
நிகும்பலை - இந்திரசித்து யாகஞ்செய்த இடம்.
நிகும்பிலை - இலங்கையில் இந்திரசித்து யாகம்பண்ணினவிடம்.
நிகுரம்பம் - சமூகம்.
நிகூடம் - ஆழம், மறைவு.
நிகேசரம் - ஒருமரம்.
நிகேசாயம் - குவித்தல்.
நிகேதகம் } வீடு.
நிகேதம் }
நிகேதனம் - தேவர்கோயில், மருதஞ் சார்ந்தவூர், வீடு.
நிக்கந்தன் - அருகன்.
நிக்கநன் - அநமித்திரன்மூத்தமகன் இவன் புதல்வர், சத்திராசித்து, பிரசேநன் என்போர்.
நிக்கிரகணம் - கீழ்ப்படுத்தல்.
நிக்கிரமஸ்தன் - அழிப்பவன்.
நிக்கிரகத்தானம்-தற்கத்தி லெதிரியைச் சயிக்குநிலை.
நிக்கிரகம் - எல்லை, கட்டுதல், குற்றப்படுத்தல், கொலை, தண்டம், நாசம், வெறுப்பு.
நிக்கிரகன் - கிருட்டிணன்.
நிக்கிரகானுக்கிரகம் - இன்ப துன்பங்களூட்டல், தண்டனையுமிரக்கமும்.
நிக்கிரகித்தல் - கொல்லல்,தண்டித்தல், பந்தித்தல், வாதியைச்சயித்தல்.
நிக்குவணம் } வீணைமுதலியவற்றின்
நிக்குவாணம் } தொனி.
நிக்குரோத்தம் - காட்டாமணக்கு.
நிசகாம் - நிச்சயம்பண்ணல்.
நிசகன் - அபிமந்யன் ஏழாஞ்சந்ததி, இவன் காலத்திலேயே அஸ்திநாபுரியைக் கங்கைகொண்டது, அதன்பின்னர்க் கவுசாம்பி ராஜதாநியாயிற்று.
நிசங்கம் - அம்புக்கட்டு, இணக்கம்.
நிசஸ்தர் - நிசவான்கள்.
நிசத்தன் - நிசஸ்தன், மெய்யன்.
நிசமம் - நியமம்.
நிசமனம் - கேள்வி, பார்வை.
நிசமித்தல் - நியமித்தல்.
நிசம் - உண்மை, சொந்தம், நாணயம், நித்தியம், மெய், சத்தியம்.
நிசயம் - கூட்டம், நிச்சயம்.
நிசரேதம் - தள்ளுதல்.
நிசவான் - மெய்யன், சத்தியவான்.
நிசவு - நெசவு.
நிசற்கம் - உருவம், சிருட்டி, நிலைபரம், மாற்றுதல், விடுதல்.
நிசற்கசம் - பிறவிச்சுபாவம்.
நிசா - இரவு.

நிசாக்சம் - வெள்ளாம்பல்.
நிசாகம் - மஞ்சள்.
நிசாகரன் - சந்திரன்; சேவல், ஒருரிஷி இவர் ஆச்சிரமத்திலே வசிப்பனவாகிய ஜடாயு சம்பாதியென்னும் பக்ஷிகள் சூரியமண்டலத்தைக் காண்போமென்று அங்கே சென்றபோது சிறகுதீய்ந்து கீழேவிழுந்து அந்த ஆச்சிரமத்திற்றானே வசித்துக்கொண்டிருந்தன. இந்த ஆச்சிரமம் விந்தமலையிலுள்ளது, இராவணன் சீதையைக் கொண்டு போம்போது அவனைத் தடுத்து அவனோடு போர்செய்த சடாயுவென்பர்.
நிசாகேது - சந்திரன். [பாம்பு.
நிசாசரம்-இரவினடமாடுபவன், கூகை,
நிசாசரர் - அசுரர், இராக்கதர், கள்வர்.
நிசாசரி-இராட்சதத்திரி, கூகை, வேசி.
நிசாசலம் - பனி.
நிசாடம் - ஆந்தை.
நிசாடு - மஞ்சள்.
நிசாதனம் - இடம், நெய், வீடு.
நிசாதன் - கீழ்மகன்.
நிசாதி - மாலைவெளிச்சம்.
நிசாந்தகன் - சூரியன்.
நிசாந்தநாரி - இல்லாள்.
நிசாந்தம் - விடியற்காலம், வீடு.
நிசாபதி - கற்பூரம், சந்திரன்.
நிசாபிசா - மரமஞ்சள்.
நிசாபுட்பம் - இரவலரும்பூ, உறைந்த பனி, செவ்வாம்பல், பனி, வெள்ளாம்பல்.
நிசாமணி - சந்திரன், மின்மினி.
நிசாமனம் - கேள்வி, நிழல், பார்வை.
நிசாமனம் - இராத்திரிகாலவளவு.
நிசாரணம் - இராப்போர், கொலை.
நிசாரணன் - கொலைசெய்வோன்.
நிசாரம் - சாரமற்றது, வருத்தம்.
நிசாரி - சூரியன், சந்திரன்.
நிசாரியம் - போடல்.
நிசார்த்தம் - பாதிராத்திரி, மெய்.
நிசார்துனன் - சந்திரன்.
நிசானம் - ஒருகட்பறை.
நிசி - இரா, இருள், பொன், மஞ்சள்.
நிசிசரர் - அசுரர், இராக்கதர்.
நிசிதம் - இகழ்ச்சி, இரும்பு, கூர்மை.
நிசிதர் - அசுரர், ஈனர்.
நிசிமணி - சந்திரன்.
நிசீதம் - அத்தசாமம், அற்பம், இரவு, [கூர்மை.
நிசீதினி } இரவு.
நிசீத்தியை }
நிசுத்தன் - சுந்தோபசுந்தர் தந்தை.
நிசும்பம் } கொலை.
நிசும்பனம் }
நிசும்பன் - (திதிவமிசம்) சும்பநிசும்பர் பார்க்க.
நிசுலகம் - மார்க்கவசம்.
நிசுலம் - அலரி, கவசம், துப்பட்டி.
நிசுவாசம் - சிவாகமமிருபத்தெட்டில் ஒன்று, வெளிக்குவிடும் சுவாசம்.
நிசுனம் - நீர்க்கடம்பு.
நிசூதனம் - அழித்தல்.
நிசேஷம் - முற்றும்.
நிஷேதம் } நிடேதம், நீக்கப்படுவது.
நிசேதம் }
நிசோலகம் - மார்ச்சட்டை.
நிசோலநம் - தரிசனம்.
நிஸ்காரம் - நிந்தை.
நிச்சத்தியதை - பொய்.
நிச்சத்துவம் - தத்துவமின்மை.
நிச்சம் - நித்தம்.
நிச்சயதாம்பூலம் - பெண்ணை விவாகம் பண்ணிக் கொடுப்பதற் குடம்படிக்கையாக மணவாளனுக்குக் கொடுக்கும் பாக்கு வெற்றிலை.
நிச்சயப்படுத்தல் - உறுதிப்படுத்தல், நிசப்படுத்தல்.
நிச்சயம் - உறுதி, தீர்ப்பு, நியமம், மெய்.
நிச்சயார்த்தம் - மெய்ப்பொருள்.
நிச்சயித்தல் - உறுதிப்படுத்தல், தீர்மானித்தல்.
நிச்சயிப்பு - தீர்மானம், நிச்சயம்.
நிச்சலத்தியானம்-அசைவற்றதியானம்
நிச்சலத்துவம் - சலியாமை.
நிச்சலம்-அசைவின்மை, உறுதி, நித்தம்.
நிச்சலும் - எப்பொழுதும், சதாகாலம்.
நிச்சலன் - அசைவற்றவன், கடவுள்.
நிச்சள் - தாளி.
நிச்சாரகம் - காற்று.
நிஸ்ஸாரம் - நிசாரம்.
நிச்சாலங்கம் - மலை.
நிச்சிதம் - நிசம்.
நிச்சித்தம்-மனோலயம், விசாரமின்மை.
நிச்சித்தல் - நிச்சயித்தல்.

நிச்சிந்தன் - அருகன், எண்ணமற்றவன், கடவுள்.
நிச்சிந்தை - எண்ணமற்றிருத்தல்.
நிச்சியம் - உள்ளி.
நிச்சிரேணி - ஏணி.
நிச்சிரேயசம் - முற்றத்துறத்தல்.
நிச்சுவசனம் - பெருமூச்சு விடுதல், மூர்க்கங்கொள்ளுதல்.
நிச்சுவாசம் - சுவாசவொடுக்கம்.
நிஸ்தாரம் - ஈடேறல்.
நிஸ்தாரரத்திஞகரம் - ஒருகிறிஸ்தவநூல்.
நிஷக்கல்லு - சீதாங்கபாஷாணம்.
நிஷதம் - அட்டமலையினென்று, தேயமைம்பத்தாறினென்று.
நிஷாதம் - சத்தசுரத்தில் கடைசுரம்.
நிஷித்தம் - இகழ்ச்சி, தவறு.
நிடதம் - நிஷதம்.
நிடதர்கோன், நிடதன் - நளன்.
நிடலம் - நெற்றி.
நிடலாட்சன் - சிவபெருமான்.
நிடாலம் - நெற்றி.
நிடுதம் - உமிழ்தல்.
நிடுதனம் - கொலை.
நிடுதனன் - கொலைக்காரன்.
நிவேஷதம், நிடேதம் - மணவாளனும் மணவாளியும்முதன்முதற்கூடுதல்.
நிஷேதம், நிடேதம் - ஒழிவு, தடை, வழுவிலக்கு.
நிஷேதித்தல், நிடேதித்தல் - மணவாளனும் மணவாளியும் முதன்முதற் கூடுதல், விலக்கல்.
நிட்கபடபத்தி - மெய்ப்பத்தி.
நிஷ்கபடம், நிட்கபடம் - சத்தியம், மனச்சுத்தம்.
நிஷ்கம், நிட்கம் - இன்மைப் பொருடருமோருபசருக்கம், ஒருபறை, பலம், பொன், மார்பணி, வராகனிடை.
நிட்கம்பம் - அசைவின்மை.
நிட்கருடபத்திரிகை - உறுதிநடத்தைக்காகிதம்.
நிஷ்கருஷம், நிட்கருடம், நிட்கருஷை, நிட்கருடை - நிச்சயம்.
நிட்கலை - பிரசூதித்துடக்கன்றவள்.
நிஷ்களம், நிட்களம் - உருவின்மை, கலப்பின்மை.
நிஷ்களங்கம், நிட்களங்கம் - சுத்தம்.
நிஷ்களர், நிட்களர் - கடவுள், சுத்தமுடையோர்.
நிட்காபட்டியம் - கபடமின்மை.
நிஷ்காமியம், நிட்காமியம் - விருப்பின்மை.
நிஷ்காரணம், நிட்காரணம் - காரணமின்மை.
நிட்கிராமம் - கூத்திஞேர்விகற்பம்.
நிட்கிரியன் - இகபரலோக சடங்கற்றவன்.
நிட்குடி - ஏலம்.
நிட்சணம் - முத்தங்கொடுத்தல்.
நிட்சிப்பியம் - போடல்.
நிட்சேபம் - அடைவு, துடைத்தல், புதையல், விடுதல்.
நிட்டாபரன், நிட்டாவரன் - நியநிட்டை தவறுதோன்.
நிட்டானுபூதி - நிட்டையி லனுகூலப்படுந் திவ்வியானுபவம், ஒருசாத்திரம்.
நிட்டீவனம் - வாந்தி.
நிஷ்டூரம், நிட்டூரம் - இடையூறு, கொடுமை.
நிட்டூரி - கொடியவள்.
நிட்டேகம், நிட்டேவனம் - நிடுதம்.
நிஷ்டை, நிட்டை - மனம் வாக்குக் காயங்கள் அசைவன்றியிருத்தல், அழிவு, இக்கட்டு, உறுதி, சரித்திரமுடிவு, சாதகம், நம்பிக்கை, நன்னடை, நிலைபரம், முடிவு, வாழ்நாள்.
நிட்பத்தி - பிறப்பு, முடிவு.
நிட்பரிக்கிரகன் - முற்றத்துறந்தோன்.
நிஷ்பலம், நிட்பலம் - பலமின்மை, பிரயோசனமின்மை.
நிஷ்பவம் - அவரை.
நிட்பவம் - மொச்சைப்பயறு.
நிட்பன்னம் - பக்குவமானது.
நிட்பாவம் - தூற்றல், விசைக்காற்று, வைக்கோல்.
நிட்பானம் - குடித்தல்.
நிட்பிரகிருதி - பிரகிருதியற்றது.
நிட்பிரபஞ்சன் - சாந்தமுள்ளவன்.
நிட்பிரபை - ஒளியின்மை.
நிணச்செருக்கு - மூர்க்கம்.
நிணத்தல் - கொழுத்தல், முடைதல்.
நிணப்பு - கொழுப்பு, நெய்ப்பு.

நிணம் - கொழுப்பு.
நிணறு - உருக்கம்.
நிண்டுதல் - நிமிண்டுதல்.
நிண்ணயபாதம் - தீர்ப்பு.
நிண்ணயம் - உறுதி, தருக்கமுடிவு, தீர்ப்பு, நிச்சயம், நியமம், முறை.
நிண்ணயம்பண்ணுதல் - சத்தியம்பண்ணல், நிச்சயப்படுத்தல், நியமம்பண்ணல்.
நிண்ணயி - நிருணயி
நிண்ணரம் - சூரியன்பரியிறென்று.
நிண்ணித்தல் - நிசப்படுத்தல்.
நிதகம் - நீர்முள்ளி.
நிதத்துரு - மனிதன்.
நிதம் - நஞ்சு, நித்தியம்.
நிதம்பசூலை - ஒருசூலை.
நிதம்பம் - அல்குல், இடைக்குந்தொடைமூலத்துக்குநடு, கரை, கற்பரிபாஷாணம், தோள், மலைப்பக்கம்.
நிதரிசனம் - காட்சியணிஅதுயாதொன்றினிகழ்ச்சியானன்மையாவதுதீமையாவது வருவதாய்த் தெரிவித்தல், காணப்படாமை, திருட்டாந்தம்.
நிதலம் - கீழேழுலகினென்று.
நிதரிசனம்-உதாரணம், கட்டளை, வகை.
நிதருக்கம் - அருத்தமில்லா வசனங்களைப்பேசல்.
நிதனம் - அழிவு, தரித்திரம், தோற்றப்படாமை, பிறந்தநாளுக் கேழாநாள், மரணம்.
நிதாகம் - முதிர்வேனிற்காலம், வெப்பம், வெயர்வு.
நிதாகரன் - சூரியன்.
நிதாந்தம் - மேன்மை, விடியற்காலம்.
நிதாந்தன் - மேன்மையுள்ளவன்.
நிதார்த்தம் - உண்மை, சமஞ்செய்கை, நிசார்த்தம், நீதி.
நிதானம் - ஆதிகாரணம், கடவுண்மணிக்கும் நவமணிக்கும்பொது, சமம், சரி, சுத்தம், சுமுத்திரை, நிச்சயம், நேர்மை, பசுக்கட்டுங்கயிறு, படை, பிரமாணம், பொன், மதிப்பு, முடிவு, மெய், வைத்தியசாத்திரத்தொன்று.
நிதானவான் - நேராளி.
நிதானன் - கடவுள்.
நிதானி - நேராளி.
நிதானித்தல் - நிச்சயித்தல், மதித்தல்.
நிதானிப்பு - அருத்தாபத்தி, மதிப்பு.
நிதி - ஆபரணத்திற்றொங்கணி, கடவுண்மணிக்கு நவமணிக்கும்பொது, சமுத்திரம், திரவியம், நிறைவு, பொக்கிஷம், பொன்.
நிதிக்கிழவன் } குபேரன்.
நிதிக்கோன் }
நிதிசாத்திரம் - புதையலெடுக்கும் சாத்திரம்.
நிதித்தியாசனம் - சிந்திப்பு.
நிதிநாதன் - குபேரன்.
நிதிந்திகம் - கண்டங்கத்திரி.
நிதிபதி - குபேரன்.
நிதிப்பொதி - கிழிக்கட்டு.
நிதியம் - கடவுண்மணி, திரவியம், பஞ்சலோகப்பொது, மணிப்பொது.
நிதியறை } வறியன்.
நிதியிலி }
நிதியின்கிழவன் - தலைச்சங்கப் புதல்வருளொருவன்.
நிதியோன் } குபேரன்.
நிதீசன் }
நிதுவனம் - கலத்தல், சந்தோஷம், விளையாட்டு.
நிதேசம் - கட்டளை, சமீபம், வார்த்தை.
நிதேசினி - திக்கு.
நித்தம் - அனவரதம், நித்தியாக்கினி.
நித்தரங்கசமுத்திரம் - திரையில்லாக்கடல்.
நிஸ்தரங்கம் } அலையில்லாமை.
நித்தரங்கம் }
நித்தல் - நித்தம்.
நித்தன் - அருகன், ஆத்துமா, கடவுள், சிவபிரான்.
நித்திகம் - ஒருபூடு.
நித்தியகதி - காற்று.
நித்தியகருமம் - நித்தியநியமம், நியமநிட்டை.
நித்தியகலியாணம்- நித்தியசந்தோஷம்.
நித்தியகலியாணி - பார்வதி.
நித்தியகாலம் - அனவரதகாலம்.
நித்தியசுந்தரி - பிரமன்பட்டணம்.
நித்தியசுந்தரேசுவரர் - திருநெடுங்களத்திலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
நித்தியசூதகி - அபரகிரியைசெய்வோன்.
நித்தியசேவகம் - நித்தியசேவனை.
நித்தியதத்துவம் - அழிவின்மை.
நித்தியதானம் - நாடோறும்பண்ணும்தானம்.
நித்தியத்துவம் - நித்தியதத்துவம்.

நித்தியநைமித்திகம் - பூசனையும் விழாவும்.
நித்தியபிரளயம் - இடைவிடாத மரணம்.
நித்தியபூசை - தினபூசை.
நித்தியப்படி-எப்பொழுதுநடக்குங் கட்டளைப்படி, நாடோறும்.
நித்தியமுக்தன், நித்தியமுத்தன் - கடவுள், ஞானி.
நித்தியமுத்தி, நித்தியமோட்சம் - மீளாதகதி.
நித்தியம் - அழியாமை, எப்போழ்தும், சமுத்திரம், நாடோறும், மோட்சம்.
நித்தியயோகம் - தினஅதிட்டம், தினயோகம் அவை அதிகண்டம், அரிடணம், ஆயுஷ்மான், ஐந்திரம், கண்டம், சாத்தியம், சித்தம், சித்தி, சிவம், சுகர்மம், சுபம், சுப்ரம், சூலம், சோபனம், சௌபாக்கியம், திருதி, துருவம், பரிகம், பிரமம், பிரீதி, வச்சிரம், வரியான், விட்கம்பம், விதிபாதம், வியாகாதம், விருத்தி, வைதிருதி.
நித்தியயௌவனம் - என்றுமிளமை.
நித்தியயௌவனை - துரௌபதி.
நித்தியவிதி - ஓமக்கிடங்கு. நித்தியகருமம், பலிசெலுத்துமிடம்.
நித்தியவிநோதம் - அருகன் முக்குடையினொன்று.
நித்தியன் - கடவுள், நாசமில்லான்.
நித்தியாநித்தியம் - அழியாமையும் அழிவும், அழிவில்லதும் அழிவுள்ளதும்.
நித்தியாநித்தியவத்துவிவேகம் - பிரமமே நித்தியம் மற்றவை யநித்தியமெனவறிதல்.
நித்தியாபரோட்சம் - நித்தியபிரமம்.
நித்தியானத்தியாயம் - அட்டமி அமாவாசி சதுர்த்தசி பௌர்ணமியென்னுந் தினங்கள்.
நித்தியானந்தம் - மோட்சம்
நித்தியானந்தன் - கடவுள்.
நித்தியானம் - பார்த்தல்.
நித்திராஞ்சன்னம்-குறட்டை, சேடம்.
நித்திராதேவி - நித்திரைக்குரியதேவி.
நித்திராணன் - நித்திரைகொண்டவன்.
நித்திராலு - நித்திரையாயிருப்பவன்.
நித்திராவிருட்சம் - இருள்.
நித்திரித்தல் - நித்திரைகொள்ளல்.
நித்திரை - கண்படை அது மாயையாக்கைபதினெண் குற்றத்தொன்று.
நித்திரைச்சோபம் - நித்திரைத்தூக்கம்.
நித்திலம் - முத்து.
நித்திலவடம் - முத்துமாலை.
நித்தில் - நொச்சி.
நித்திரம் - கண்டங்கத்திரி.
நித்துவானம் - தொனி.
நிந்தம், நிநாதம் - ஒலி.
நிந்தகன் - பழிசொல்வோன்.
நிந்தம் - சொந்தம்.
நிந்தனம் - நிந்தனை.
நிந்தனை - நிந்தை.
நிந்தாட்சணை - நிந்தனை.
நிந்தாத்துதி - நிந்தித்தல்போற் றுதித்தல்.
நிந்திதம் - இகழ்ச்சி, தடை, பரிகாசம்.
நிந்திதன் - பழிக்கப்பட்டவன்.
நிந்தித்தல் - இகழ்தல்.
நிந்திப்பு - இகழ்ச்சி, பரிகாசம்.
நிந்து - சாப்பிள்ளைபெற்றவள்.
நிந்தை - நிந்திப்பு.
நிந்தையுவமை - உவமையை யிகழ்ந்து வமிப்பது (உ-ம்) மறுவுடைத்திங்களை யொப்பெனினும் முகஞ்சிறப்புடைத்து.
நிபச்சொல்-கோட்சொல், புறங்கூற்று.
நிபடம் - படித்தல்.
நிபடிதம் - வாசித்தல்.
நிபதனம் - இறக்குதல், விழுதல்.
நிபத்தி - உண்மை, நிச்சயம்.
நிபத்தியை - போர்க்களம்.
நிபந்தம் - கடமை, சலமறிப்பு, யாப்பு, வியார்த்தி.
நிபந்தகாரர் - சுருதிமிருதிகளும் சூத்திரங்களும் கூறும் ஆசாரவிதிகளைத் திரட்டி நூலாக்கினவர். அந்த நூல்கள் பாராசரமாதவீயம் வைத்தியநாததீக்ஷிதம் முதலியன.
நிபந்தனகிரந்தம் பலநூல்களிலிருந்தெடுத்துச் சேர்த்துப் பண்ணியிருக்கிற சாத்திரம்.
நிபந்தனம் - கட்டுதல், கட்டுப்படுதல், காரணம். பலநூல்களி லிருந்தெடுத்துத் திரட்டின புத்தகம், வீணையின் வலிக்கட்டு.

நிபந்தனை - உறுதி, ஏற்பாடு, கடமை, கட்டு, குண்டு, தண்டனை.
நிபம் - உவமை, கடப்பு, கபடம், காரணம், கோள், நீர்ச்சாடி, புறங்கூறல்.
நிபாகம் - சமைத்தல்.
நிபாடம் - படித்தல்.
நிபாடை - படித்தல்.
நிபாதம் - இறங்குதல், மரணம், வழு, விடுதல், விழுதல்.
நிபாதனம் - கொல்லல், தகர்த்தல்.
நிபாபம் - நீர்ச்சால்.
நிபாலனம் - பார்வை, வழு, விழுத்தல்.
நிபானம் - கிணறு, நீர்த்தொட்டி, பாற்சாடி.
நிபிடம், நிபிடாயம், நிபிடீகாரம் } நெருக்கம்.
நிதரீசம் - நெருக்கம்.
நிபுணத்துவம் - விரகு, விவேகம்.
நிபுணர் - கலைவல்லோர், விரகுமிக்கோர்.
நிபுணன் - கல்வியிற்சிறந்தோன், புதன், மிகவல்லோன்.
நிபூதம் - அதீதம்.
நிப்பரம் - தீவிரம், பாரமின்மை.
நிமந்தம் - நிபந்தம்.
நிமம் - பிடர்.
நிமயம் - ஒன்றற்கொன்றைமாற்றல்.
நிமலம் - அழுக்கின்மை.
நிமலன் - கடவுள், சுத்தன்.
நிமி, நிமிச்சக்ரவர்த்தி } சூரியகுலத் தரசரிலொருவன். இக்ஷ்வாகுபுத்திரருளொருவன் தம்மைக்கொண்டு யாகஞ்செய்விக்காமல் கௌதமரைக்கொண்டு செய்வித்ததற்காக வசிஷ்டரால் சபிக்கப்பட்டு அங்கஹீநனானவன். இவன் விதேகதேசத்தரசன்.
நிமிஷம், நிமிடம் } காலநுட்பம் அது காட்டையெட்டுக்கொண்டது.
நிமிடீகரம் - கலினம், நெருக்கம்.
நிமிட்டல் - கிள்ளல்.
நிமிண்டி - ஓரெறும்பு, தோன்றாமற்கவர்வோன்.
நிமிண்டுதல் - கிள்ளல், சாதுரியமாகக் களவெடுத்தல், நன்னுதல்.
நிமித்தம் - முத்தம்.
நிமித்தகாரணம் - கத்திருத்துவ வேதுவாயிருப்பது.
நிமித்தகாரர் - வருங்காரியஞ்சொல்வோர்.
நிமித்தகாரன் - நிமித்திகன்.
நிமித்தசூடாமணி - ஒரு சகுன நூல்.
நிமித்ததருமம் - நிவிர்த்திக்கிரியை.
நிமிர்த்ததானம் - தென்புலத்தார்க்குச் செய்யுஞ் சடங்கினொன்று.
நிமித்தத்துவம் - ஏது.
நிமித்தம் - அடையாளம், காரணம், பல்லி முதலியவற்றின்குறி, பொருட்டு.
நிமித்தர் - நிமித்தகாரர்.
நிமித்திகப்புலவன், நிமித்திகன் } அரசர்க் குறுதிச் சுற்றத்தொருவன், புரோகிதன், வள்ளுவன்.
நிமித்தியம் - நிமித்தம்.
நிமிரல் - நிமிர்தல்.
நிமிர்ச்சி - இறுமாப்பு, உறுதி, கிரகநடையினொன்று, திடன், நிமிர்வு, மேட்டிமை.
நிமிர்தல் - உயர்தல், ஓடல், சோறு, நெருங்கல், மேட்டிமை கொள்ளல், வளர்தல், வளைவுமாறல்.
நிமிர்த்தல், நிமிர்த்துதல் } உயர்த்துதல், சீர்படுத்தல், வளைவை மாற்றல்.
நிமிர்ந்தகூறி - அஞ்சாதகுணம், நேர்ந்தபடி செய்யுங் குணம்.
நிமிர்ந்தநடை - மேட்டிமையானநடை.
நிமிர்ப்பு - நிமிர்ச்சி.
நிமிர்வு - நிமிர்தல்.
நிமிலனம் - சிமிட்டு, மரணம்.
நிமிளை - அம்பறை, கூட்டுக்கல்.
நிமீலிகை - சிமிட்டு, மாயம்.
நிமுட்டல் - கிள்ளல்.
நிமேஷகம் - மின்மினி.
நிமேயம் - நிமயம்.
நிமை - இமை.
நிம்பகம் - வேம்பு.
நிம்பசேதம் - மூடக்கற்றூன்.
நிம்பத்தாரோன - பாண்டியன்.
நிம்பம் - வேம்பு.
நிம்பை - இலக்குமி.
நிம்மந்தம் - ஐக்கவீனம்.
நிம்மாந்தரம் - கடினம், மிகுதி.
நியக்காணம் - நிந்தைப்படுத்தல்.
நியக்கி - மான்.
நியக்குரோதம் - அகலம், ஆலமரம், ஒருபாகம்.

நியக்குரோதன் - கஞ்சன் தம்பி.
நியதம் - அடக்கம், உறுதி, நிசம், நிதம், முகவுரை.
நியதி - மேருமனை, வித்தன்மனைவி.
நியதி - ஊழ், செய்கடன், தத்துவம் முப்பத்தாறினொன்று, நியமநிட்டை, நியமிப்பு, முறைமை, வீதி.
நியதித்தல் - நியாசம்பண்ணல்.
நியதேந்திரியன் - இந்திரியத்தையடக்குபவன்.
நியத்துதல் - விடுதல்.
நியத்துவம் - பூசித்தல், வைத்தல்.
நியமச்சிலேடை - சிலேடித்தவற்றை வரையறைப்படுத்தி நிச்சயிக்குமுருவகம்.
நியமச்சூத்திரம் - முன்னொன்றன் முடித்துப் பின்னதை விலக்கலும் விதித்தலும்.
நியமஸ்தர் - நியமக்காரர், நியமித்த உத்தியோகஸ்தர்.
நியமநம் - வேம்பு.
நியமநிட்டை - சந்தியாவந்தனம்.
நியமம் - அட்டயோகத்தொன்றுஅவை தத்துவநூலோர்தல், தவம், தூய்மை, தெய்வம், வழிபடல், மனமுவந்திருத்தல், இடம், இணக்கம், கடைவழக்கம், கடைவீதி, தெரு, தேவர்கோயில், நிச்சயம், நிருமிப்பு, நெடுந்தெரு, நேர்த்தி, மருதஞ்சார்ந்தவூர், முறைமை
நியமவிலக்குச்சிலேடை - சிலேடித்த பொருளை நியமஞ்செய்து அந்நியமத்தை விலக்குவது.
நியமவுவமை - இதற்கிதுவே யொப்பெனவேகாரம் புணர்த்துரைப்பது (உ-ம்) வேயேகரமொப்பது.
நியமனம் - கட்டளை, முறை.
நியமிதம் - நிச்சயம்.
நியமித்தல் - சங்கற்பித்தல், நிரூபித்தல், நிலைப்படுத்தல், பிறப்பித்தல்.
நியமிப்பு - அமைப்பு, நியமித்தல்.
நியர்ப்புதம் - பதினாயிரங்கோடி.
நியாக்கியம் - பொரித்தரிசி.
நியாசம் - கிரியை, யோகஞ்செய்தல், விடுதல், வேம்பு, வைப்பு.
நியாதம் - தின்றல், நியாசம், வேம்பு.
நியாதனம் - விழுத்தல்.
நியாமகன் - சாரதி, படகோட்டி, கட்டளையிடுவோன்.
நியாமம் - தவமுதலியசாதகம்.
நியாமன் - சிவபிரான்.
நியாயகீனம் - நீதித்தப்பு.
நியாயக்காரன் - நீதிமான்.
நியாயக்கேடு - நியாயகீனம்.
நியாயசபை - நியாயத்தலம்.
நியாயசாத்திரம் - நீதிசாத்திரம்; பிரத்தியக்ஷாநுமாநாதிப் பிரமாணங்களைக் கொண்டு பொருளை யாராய்ந்து நிச்சயித்தற்குரியநூல், இது கௌதமமுனிவரால் செய்யப்பட்டது, இதுவும் கணாதர்செய்த வைசேஷிகமும் தருக்க நூல்களெனப்படும். இவ்விரண்டும் வடமொழியிலுள்ளன.
நியாயசூடாமணி - தருக்கநூலினொன்று.
நியாயதுரந்தரன் - நியாயசாத்திரி, நியாயம் பேசுவோன்.
நியாயத்தப்பு - நியாயத்தவறு.
நியாயத்தலம் - நீதித்தலம்.
நியாயத்தவறு - நியாயகீனம்.
நியாயநிஷ்டூரம் - அநியாயம்.
நியாயநூல் - நீதிசாத்திரம்.
நியாயநெறியாளன் - நீதிமுறையுள்ளவன்.
நியாயபரிசோதகன் நியாயத்திலே வல்லவன்.
நியாயபோதினி, நியாயபோதிநி - தற்க சாத்திரங்களில் ஒன்று, இது கௌடரும் தருக்கபாஷாப் பிரகாசஞ் செய்தவருமாகிய கோவர்த்தநமிசிரராலே செய்யப்பட்ட தருக்க சங்கிரக வியாக்கியாநம், இது நானூறு கிரந்தமுடையது, இது வடமொழியிலுள்ளது.
நியாயப்பிரமாணம் - நீதிச்சட்டம்.
நியாயப்பிரமாணன், நியாயப்பிரமாணி - நியாய நெறியாளன்.
நியாயப்பிழை - நியாயத்தவறு.
நியாயமலைவு - தருக்கசாத்திர வழுவில் ஒன்று, அது தீர்ப்புவிளங்காமல்மயங்கப்பேசுதல்.
நியாயம் - இடம், கட்டுப்பாடு, சரி, சன்மார்க்கம், தருக்கசாத்திரம், தருக்கம், நடு, நீதி, போக்கு, மூலம், வழக்கு.
நியாயவாதி - நியாயதுரந்தரன்.
நியாயவான் - நியாயந்துரந்தரன்.
நியாயவான் - நியாயதுரந்தரன், நீதித்தலைவன், நீதியுள்ளவன்.

நியாயவிதாயகன் - நியாயம்விதிப்போன்
நியாயாசனம் - நியாயசிங்காசனம் நியாயவானிருக்குமிடம்
நியாயசாரன் - சற்புருடன்.
நியாயாதிபதி - நீதியதிபதி.
நியுதம் - இலட்சம்.
நியுத்தம் - முட்டியுத்தம்.
நியுத்தன் - ஒன்றிற்கேற்பட்டவன், மனங்கவிந்தவன்.
நியுப்பிசம் - தருப்பையினுற்செய்தசுருவை, வளைவு, வியாதி.
நியோசப்பிரயோசனம் - நியமவேது.
நியோகம் - கட்டளை, தத்துவம். தொழில், நிச்சயம், நியமம், முயற்சி.
நியோகர் - உத்தியோகஸ்தர்.
நியோகித்தல் - ஏவுதல்.
நியோக்கியம் - தகுதி.
நியோசனம் - இசைவு, கட்டளை.
நிரங்குசம் - கீழ்ப்படியாமை.
நிரங்குசன் - கட்டுப்பாடற்றவன்.
நிரசம்-சாரமின்மை, சுவையின்மை.
நிரசவஸ்து சுவைப்பொருளல்லாதன.
நிரசனம் - அழித்தல்,எதிரிடை,தள்ளுதல், பட்டினி, வாந்தித்தல்.
நிரசாதிபதி, நிரசாதிபன் - நிரச வஸ்துக்கதிபன்.
நிரஞ்சனம் - இருளின்மை, நிறைவு.
நிரஞ்சனன் - அருகன்,கடவுள்,வியாபி
நிரஞ்சனி - பார்வதி.
நிரஞ்சனை - பௌரணை.
நிரட்சதேசம் - இராப்பகனுழிகை சரியாயிருக்குந்தேசம், உட்டணதேசம்.
நிரட்சம் - பூகோளசமரேகை.
நிரட்சரம் - அட்சரமின்மை.
நிரணம் - மனுக்கூட்டம்.
நிரதி - சம்பந்தம்.
நிரதிகாரன் - பக்குவமற்றவன்.
நிரதிசயம் - தனக்குமேற்பட்டதொன்றில்லாதது.
நிரதிசயானந்தம் - மேற்பட்ட தோரானந்தமில்லாதது.
நிரத்தகம் - பயனின்மை.
நிரத்தல் - கலத்தல், நிறைதல்.
நிரத்திமாலி - சிவபிரான்.
நிரத்தியயம் - குற்றமின்மை.
நிரந்தம் - இடங்கழிமை, நெருக்கிடை.
நிரந்தரம்- இடமின்மை, எப்பொழுதும், நெருக்கம், மந்தி, மறைவு, வெளி.
நிரந்தரவின்பம்-நிறைந்தவின்மை, சதாநந்தம்.
நிரந்தரன் - கடவுள்.
நிரந்தாப்பியாசம் - இடைவிடாப் பழக்கம்.
நிரந்தரி - பார்வதி.
நிரந்தரித்தல் - நிறைதல், பரம்பல்.
நிரந்திரியன் - சருவக்கியானி.
நிரபத்திரவம் - வெட்கமின்மை.
நிரபம் - நீரின்மை.
நிரபராதம் - அபராதமில்லாமை, குற்றமற்றிருத்தல்.
நிரபராதி - குற்றமற்றவன்.
நிரபாயம் - அழிவின்மை.
நிரபிமானம் - அடக்கம், அபிமானமின்மை.
நிரபேட்சம், நிரபேட்சை - விருப்பின்மை.
நிரப்பம் - பூரணம்.
நிரப்பு - குறைபாடு, தரித்திரம், நிரப்பென்னேவல், நிறைகுடத்தைச் சூழப்போடுநெல், நிறைத்தல், நிறை, நாழி, நிறைவு, மிடிமை.
நிரம்புதல் - திருத்தியாக்கல்,நிறைத்தல், பரப்புதல்.
நிரப்போர்-இரப்போர்,வறியோர்,தரித்திரர்.
நிரம்பரம் - வெளி.
நிரம்பரன் - அருகன், கடவுள், சிவபிரான், வத்திரமில்லாதவன்.
நிரம்பல் - நிறைதல்.
நிரம்பவழகியர் - சேதுபுராணம் செய்தவர்.
நிரம்பாச்சொல்-மழலைச்சொல்.
நிரம்பாமென்சொல், நிரம்பாமொழி - மழலை.
நிரம்பியபுட்பம் - வாழை.
நிரம்புதல் - இருதுவாதல், நிறைதல்.
நிரயம் - நிரையம், நரகம்.
நிரர்க்கலம் - தடையற்றது.
நிரர்த்தகம் - வீணனது.
நிரல் - ஒழுங்கு.
நிரவகாலிகை - வெளி.
நிரவம் - தொனியின்மை.
நிரவயவன் - கடவுள், சிவபிரான்.
நிரவலடித்தல் - உழுநிலத்தை நீர்வாரடித்தல்.
நிரவல் - உழுதநிலத்தை நீர்வாரடித்தல், நிரவுதல்.

நிரவவியம் - கித்தியம்.
நிரவனிலம் - நீர்வாரடித்தநிலம்.
நிரவுதல் - சரிக்கட்டுதல், நிரப்புதல், நிரம்புதல்.
நிரளியசாரை - கானற்கல்.
நிரனிறை - ஒழுங்காக நிறுத்தல், நிரனிறையணிப் பொருள் அவை வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்கட்குச் சம்பந்தமுள்ளவைகளையும் முறையே சொல்லுதல்.
நிரனிறைவழு - செய்யுள் வழுவினென்று, அது நிரன்முறைபிறழவைப்பது.
நிரன்னுவயன் - இல்லொழுக்கந் துறந்தோன்.
நிரா - நரா.
நிராகம் - உருவின்மை.
நிராகரணம் - மறுத்தல்.
நிராகரன் - அரூபி, கடவுள், சிவன்.
நிராகரித்தல் - எரிதல், தடை, தவறல், தள்ளுதல், மறுத்தல்.
நிராகரிப்பு - மறுப்பு.
நிராகன் - புலஸ்தியன் புத்திரன், இருபன் சீடன்.
நிராகாரம் - அரூபம், ஆகாயம், உபவாசம், நிந்தை, நிராகரிப்பு, மோக்கம்.
நிராகாரன் - கடவுள், சிவபிரான், சூக்குமசரீரன், திருமால்.
நிராகிருதம் - உருபமற்றது, தள்ளுண்டது.
நிராகிருதி - தவவொழுக்கந் தவறினேன், தள்ளுதல், வடிவின்மை, வேதமுற்றக் கல்லாதபார்ப்பான்.
நிராகுலம் - அமைதி, சந்தோஷம்.
நிராங்குதல் - தேய்தல்.
நிராசம் - எதிரிடை, நம்பிக்கையின்மை, விடுதல்.
நிராசனம் - ஆசனமின்மை, கொல்லுதல், தள்ளுதல், துப்புதல்.
நிராசாரம் - அநாசாரம், அயோக்கியம், துர்க்குணம்.
நிராசாரன் - ஆசாரகீனன்.
நிராசை - விருப்பின்மை, ஆசையின்மை.
நிராஞ்சனம் - மஞ்சணீரிறைத்தல்.
நிராதபம் - வெயிலின்றியிருக்கை.
நிராதமை - இரவு.
நிராதரம் } ஆசையின்மை, ஆதரவின்மை, ஆதாரமற்றது.
நிராதாரம் }
நிராதாரன் - ஆதாரமற்றவன், கடவுள் சிவபிரான்.
நிராதேசம் - இறுத்தல், தானமற்றது, நட்டம்.
நிராமயம் - நோயின்மை, பன்றி.
நிராமயன் - கடவுள், நோயில்லான், சிவபெருமான்.
நிராமாலு - விளாமரம்.
நிராயம் - வரவின்மை.
நிராயுதன் - அருகன், ஆயுதமில்லாதவன்.
நிராலம்பம் - ஆதாரம் வேண்டாதது.
நிராலம்பன் - கடவுள், சிவபிரான்.
நிரியாணசக்கிரம் - மரணசக்கிரம்.
நிரியாணதிசை - மரணதிசை.
நிரியாணம் - சாவு, பிறவிநீங்கல், யானைக்கடைக்கண்.
நிரீச்சுரவரசாங்கி - கடவுளில்லையெனும் மதஸ்தன்.
நிரீச்சுவரசாங்கியம் } சூனியவாதம்.
நிரீச்சுவரவாதம் }
நிரீட்சணசுத்தி - கண்ணூறுகழிப்பு.
நிரீட்சணம் - பார்வை, பார்வையின்மை, மதிப்பு.
நிரீட்சமாணம் - நம்பிக்கை, பார்த்தல்.
நிரீட்சிதம் - காணப்பட்டது.
நிருசேகரி - நரசிங்கம்.
நிருதத்தன் - இராட்சசன்.
நிருசிங்கம் - நரசிங்கம்.
நிருணயம் - ஆராய்வு, தீர்ப்பு, நிச்சயம், நியமிப்பு.
நிருணமன் - அருகன், கடவுள், சிவன்.
நிருணித்தல் - நிண்ணயம் பண்ணுதல்.
நிருதர் - இராக்கதர்.
நிருதன் - வைவசுவதமனுவின் இரண்டாம் புத்திரன், இக்ஷ்வாகு தம்பி, இவன் பெரும் புகழ்வென்ற அரசன், உசீரான் இரண்டாம் புத்திரன்.
நிருதாட்சணியம் - கண்ணோட்டமின்மை.
நிருதி - இராக்கத்தி, தென்மேற்றிசைப்பாலன். முதலெழு வள்ளலில் ஒருவன். அஷ்டதிக்குப் பாலகருளொருவன், தென்மேற்றிசைக்கதிபதி, இவன்மனைவி தீர்க்காதேவி, இவன்வாகனம் நரன், இவனது நகரம்கிருஷ்ணாங்கனை, இவனாயுதம்குந்தம்.
நிருதிதிசை - தென்மேற்றிசை.
நிருதூளி - பாரகம்.
நிருத்தமண்டபம் - நடனசாலை.

நிருத்தமாது - நாடகக்கணிகை.
நிருத்தம் - கூத்து, அது கலைஞானமறு பத்து நான்கினென்று, பதம்பிரித்தல், வேத வியார்த்தி, வேதாகமமாறில் ஒன்று.
நிருத்தன் - கட்டுப்பாடற்றவன், கூத்தன், சிவபிரான்.
நிருதாட்சணியம் - அபட்சநோக்கு, தாக்ஷிணியமின்மை.
நிருத்தாதனம் - ஒருகால்தூக்கிநிற்பது.
நிருத்தி - ஒரு தர்க்கநூல், இது தமிழ்நாட்டிலிருந்த தெலுங்கராகிய பட்டாபிராமசாஸ்திரியார் தமது புத்திரியின் பொருட்டுச் செய்த ஸம்ஸ்கிருத தர்க்கஸங்கிரஹ வியாக்யாநம், மற்றைய வியாக்யாநங்களுள் இது மிகவும் எளிதினறியற்பாலது, இது அறுநூறு கிரந்தமுடையது.
நிருத்தியலங்காரம் - பிரிநிலை நவிற்சியணி.
நிருநரன் - நரசிங்கம்.
நிருநாசம் - அழியாமை.
நிருநாமன் - அழிவில்லோன், கடவுள்.
நிருநாமன் - சிவபெருமான், அருகன், கடவுள், நாமமிலி.
நிருபதி - அரசன், குபேரன்.
நிருபத்திரவம் - உபத்திரமின்மை.
நிருபம் - கட்டளை, காகிதம், தீர்வை, நியமம்.
நிருபமம் - உவமையின்மை.
நிருபமன் - ஒப்பில்லாதவன்.
நிருபவல்லவை - இராசாத்தி.
நிருபன் - அரசன்.
நிருபாதானம் - துணைக்காரணமின்மை
நிருபாதி - தடையின்மை.
நிருபாதிகம் - தடையற்றது.
நிருபாவர்த்தம் - ஓரிரத்தினம்.
நிருபித்தல் - ஏற்படுத்தல், பிறப்பித்தல், நியமித்தல்.
நிருபூசல் - மும்மரிப்பு.
நிருமதம் - மதமில்லாயானை.
நிருமலம் - மலமின்மை, மாசின்மை.
நிருமலன் - அருகன், கடவுள், சிவன், மலத்துடக்கற்றவன், விஷ்ணு.
நிருமலோபலம் - படிகக்கல்.
நிருமாணம் - ஏற்பாடு, நிருமிப்பு.
நிருமாலியம்-பூசித்துக்கழித்தபொருள்.
நிருமாலியை - ஒருநூல்.
நிருமானம் - நிருமித்தல்.
நிருமிதம் - நியமிப்பு.
நிருமிதி - நிருமாணம்.
நிருமித்தல் - நியமித்தல்.
நிருமுத்தம் - தோலுரித்தபாம்பு.
நிருமூடம் - மிகவறிவின்மை.
நிருமூடன் - புத்தியில்லாதவன், மிகவறி வில்லான்.
நிருமூலம் - கட்டழிதல்.
நிருவகம் - நிருவாசம்.
நிருவகித்தல் - ஒழுங்காகநடத்தல், தாங்குதல், நிலைப்படுத்துதல்.
நிருவபணம் - கொடுத்தல்.
நிருவராகம் - கிருட்டிணனது வராகாவதாரம்.
நிருவாகங்கட்டுதல் - நிருவாகித்தல்.
நிருவாகம் - உண்மை, சீர், செவ்வை, நிலைமை, பாரமரிப்பு, பொறுப்பு, முடிவு.
நிருவாகி - சமர்த்தன், நிதானி, முகாமைக்காரன்.
நிருவாகித்தல் - சரிப்பட நடத்துதல், நோக்குதல்.
நிருவாசம் - குடியிராமை.
நிருவாணதீட்சை - சிவதீட்சையில்மேலானது இது பூசை முதலானது செய்யவும் உரித்தானது.
நிருவாணம் - கலையின்மை, தன்மை, மோக்கம்.
நிருவாணி-அருகன்,சிவபிரான்,நக்கன்.
நிருவிகற்பக்காட்சி - ஒருமையாயறிதல்.
நிருவிகற்பசமாதி - ஒரு யோகநிலை.
நிருவிகற்பம் - ஒருமையுணர்ச்சி.
நிருவிகற்பன் - தானாகவுந் தனக்கன்னியமாகவுங் காணப்பட்ட தத்துவவிகற்பங்கட் கன்னியமாக விருப்பவன்.
நிருவிகாரசைதந்நியம்-விகாரமற்ற வறிவன்.
நிருவிகாரம் - விகாரமின்மை.
நிருவிகாரி - கடவுள், விகாரமற்றவன்.
நிருவிக்கினம் - இடையூறின்மை.
நிருவிசாரம் - கவலையின்மை, வேண்டாமை.
நிருவிடம் } ஒருமருந்து.
நிருவிஷம் }
நிரூகம் - தற்கம், நிச்சயம், வெளிப்படை வசனம்.
நிரூடபசுபந்தம் - யாகமிருபத்தொன்றினொன்று.

நிரூபணம் - ஆராய்தல், நிசமம், பார்வை.
நிரூபதிகாரன - நிருபத்திரன்.
நிரூபம் - அரூபம். [ன்.
நிரூமன் - உருவமற்றவன், கடவுள், சிவ
நிரூபிதம் - ஆராயப்பட்டது, காணப்பட்டது.
நிரூபித்தல் - ஆராய்தல், நிதானித்தல்.
நிரேச்சுரசாங்கியம் } நிரீச்சுர சாங்கியம்.
நிரேச்சுவரசாங்கியம் }
நிரேட்சணம் - பார்வை.
நிரை - ஒழுங்கு, ஒருவிளையாட்டு, நிரையசை, நிரையெனேவல், பசு, பசுக்கூட்டம், பசுப்பொது, படைமுன்னணி, படைவகுப்பு.
நிரைகவர்தல் - சத்துருக்கள் காலிகளைக் கவர்தல், அது புறப்பொருட் டுறையினொன்று.
நிரைசல் - மறைப்பு.
நிரைச்சம் - அடைவு, ஒரு சூது, படைமுன்னணி, படைவகுப்பு.
நிரைச்சல் - இரவல், ஒருவிளையாட்டு, மறைப்பு.
நிரைதல் - ஒழுங்கு, நிரவுதல், நிரையாக்கல், வியாபாரப்பொருளைப் பலவிடத்தும் பரிமாறுதல்.
நிரைத்தல் - ஒழுங்காய்நிறுத்தல், வியாபாரப்பொருளை இலாபத்துக்குப் பலரிடத்துங் கொடுத்தல்.
நிரைநிறை - நிரனிறை.
நிரைபசை - நிரைக்கீழ்க்குற்றுகர முற்றுகரம் வருவது.
நிரைமீட்டல் - நிரைமீட்சி, பகைவர் கவர்ந்தகாலிகளைத் திரும்பக்கவர்தல்.
நிரையசை - குறிலிணைந்துங்குறினெடிலிணைந்துங் குறிலிணை யொற்றடுத்துங் குறினெடிலொற்றடுத்தும் வருமசை.
நிரையம் - நரகம்.
நிரையாடல் - நிரைவிளையாடுதல்.
நிரையொன்றாசிரியத்தளை - நிரையசையிணைந்துவரு மாசிரியத்தளை அது இயற்சீர்களொன்றும் பலவுந் தம்முளொத்துநின்ற சீரினீற்றசை நிரையாய் நிற்கவருஞ் சீர்முதலசை நிரையாயொன்றிவரப் பெறுவது.
நிரைவிளையாடுதல் - ஒருவிளையாட்டு.

நிரோஷ்டம் } ஒருகவி, மிறைக்கவியினொன்று. அது இதழ்குவிவாய் பிறக்குமெழுத்துக்கள் தொடராது முடிக்குங் கவி.
நிரோட்டம் }
நிரோட்டி }
நிரோதம் - அபகாரம், அழிவு, தடை, வெறுப்பு.
நிரோதனம் - தடை.
நிரோத்தியம் - கொடுத்தல்.
நிர் - உறுதிப்பொருளையு நீக்கப்பொருளையுந் தருமோ ருபசருக்கம், அது நிரு என்றும் நிர் என்றும், வழங்கும்,
நிர்க்குணம் - குணமின்மை. [வெளி.
நிர்க்குணன் - கடவுள், சிவபிரான்.
நிர்க்குண்டி - வெண்ணொச்சி.
நிர்ணயம் - நிருணயம். [தல்.
நிர்ணயித்தல் - தீர்மானித்தல், நிச்சயித்
நிர்த்தாட்சிணியம் - கண்ணோட்டமின்மை, தாக்ஷிணியமின்மை.
நிர்த்துகம் - கஷாயம்.
நிர்த்தூளி - சருவநாசம்.
நிர்நாசம் - நிருநாசம்.
நிர்நிமித்தம் } முகாந்தரமின்மை.
நிர்நிமித்தியம் }
நிர்ப்பத்தியம் } பத்தியமின்மை.
நிஷ்பத்தியம் }
நிர்ப்பந்தம் - தொந்தரை.
நிர்ப்பாக்கியம் - பாக்கியமின்மை, வறு
நிர்ப்ரீசதீட்சை - முழுப்போதனை. [மை
நிர்மலம் - நிருமலம்.
நிர்மாணம் - நிருமாணம்.
நிர்மாலியம் - நிருமாலியம், நிவேதித்த பொருள்.
நிர்மிதம் - நிருமிதம்.
நிர்மூலம் - நிருமூலம்.
நிர்வஹணம் - நிஷ்டை.
நிர்வர்ணம் - தரிசனம்.
நிர்வாகம் - நிருவாகம்.
நிர்வாசநம் - கொல்லுதல்.
நிர்வாணம் - நிருவாணம்.
நிர்வாணி - நிருவாணி.
நிர்வாதம் - காற்றின்மை, நிந்தை. [ல்.
நிர்வாபணம் - கொலை, தானம்கொடுத்த
நிர்விகற்பம் - நிருவிகற்பம், வேறுபாடின்மை.
நிர்விகாரம் - நிருவிகாரம், விகாரமின்
நிர்விகாரி - நிருவிகாரி. [மை.

நிர்விக்கினம் - நிருவிக்கினம்.
நிர்விசாரம் - நிருவிசாரம்.
நிர்விஷம் - நிருவிடம்.
நிர்விவாரம் - யானைக்காதினடி.
நிர்வீரம் - வீரமின்மை.
நிலஇலந்தை - ஒருபூடு.
நிலக்கடம்பு - ஒருபூடு.
நிலக்கடலை - வேர்கடலை.
நிலக்கணம் - மூன்று நிரையசைப்படுத்துவருஞ் சொல்.
நிலக்கரி - பூமியிலிருந் தெடுக்கப்படும் ஒருகரி.
நிலக்கறையான் - ஒருகறையான்.
நிலக்கன்று - சிறுபயிர்.
நிலக்காரை - ஒருமுட்செடி.
நிலக்காளான் - ஒருகாளன்.
நிலக்குணம் - பூசாரம்.
நிலக்குமிழ் - ஒருசெடி.
நிலக்குழி - அட்சரக்குழி, உரக்குழி.
நிலக்குறி - நிலச்சாத்திரத்தோர்பகுதி.
நிலக்கூந்தல் - எலிச்செவிப்பூடு.
நிலக்கொட்டை - ஒருபூடு.
நிலக்கொதி - நிலப்புழுக்கம்.
நிலச்சார் } நிலவளம், பூமியின்றன்மை.
நிலச்சார்பு
நிலச்சார்வு
நிலச்சுருங்கி - ஒருபூடு.
நிலத்தரசுகாரன் - சுயாதிபதி, தேசத்தலைமையுடையோன்.
நிலத்திணை - நடையில்லது.
நிலத்துத்தி - ஒருதுத்தி.
நிலத்துளசி - ஒருதுளசி.
நிலநவம் - பூமியினது நன்மை.
நிலநெல்லி - ஒருநெல்லி.
நிலந்தட்டி - நிலமடிக்கும் பலகை.
நிலப்பலா - வேர்ப்பலா.
நிலப்பனை நிலப்பனங்கிழங்கு, ஒருபூடு.
நிலப்பாகல் } ஒருபூடு.
நிலப்பாகை
நிலப்பாலை
நிலப்பாவாடை - நிலத்திணடக்க விரிக்கும் புடவை.
நிலப்பிளப்பு - கமர், வெடிப்பு.
நிலப்புழு - ஒருபுழு.
நிலப்பெயர்ச்சி } நிலவித்தியாசம்.
நிலப்பெயர்த்தி
நிலப்பேதம்

நிலப்பொட்டு - ஒருவகைக்காளான், மண்ணைத் தேய்த்திடுந் திலதம்.
நிலமகள் - பூமிதேவி.
நிலமகன் - செவ்வாய்.
நிலமட்டம் - தரைமட்டம்.
நிலமண் - வீட்டின்சார்மண்.
நிலமண்டிலவாசிரியப்பா - அகவற்பாவினொன்று. அது எல்லாவடியு மளபொத்து நாற்சீரடிகளாக வருவது.
நிலமதிப்பு - தரைமதிப்பு.
நிலமயக்கம் - தரைக்கலப்பு, திணைமயக்கம்.
நிலமறிதல் - ஒருவித்தை, பூமியின்வளமறிதல்.
நிலமிதி - நடைவசதி.
நிலமெடுத்தல் - மனைமுதலியவற்றிற்கு நிலங்குறித்தல்.
நிலமை - நிலவாதனம்.
நிலம் - இடம், கன்னி, தேசம், பூமி அது பஞ்சபூதத்தொன்று.
நிலம்பி - கொசுகு.
நிலம்பிரண்டி - ஒருபூடு.
நிலம்பிரண்டுதல் - நிலத்தைச்சுறண்டுதல்.
நிலம்பு - தாளி.
நிலயம் - இடம், இலக்கு, கூத்து, கோவில், சூடல், நிலை, பூமி, மருதநிலம், வாசகம்.
நிலயனம் - நிலயம்.
நிலவடலி - சிறுபனை.
நிலவடுப்பு - நில அடுப்பு.
நிலவரி - நிலவிறை.
நிலவலயம் - பூமி.
நிலவல் - ஒளிசெய்தல்.
நிலவளம் - நிலவாசி.
நிலவறை - நிலக்குகை.
நிலவாகை - நிலஆவிரை, நிலப்பாகல்.
நிலவாசி - நிலப்போக்கு.
நிலவாடகை - நிலவாடை.
நிலவாரம் - தரைவாரம்.
நிலவாவிரை - நிலாவிரை.
நிலவாழை - ஒருபூடு.
நிலவிழுது - நிலப்பனை.
நிலவிளா } ஒருமரம்.
நிலவிளாத்தி
நிலவிறிக - ஒருவாணம்.
நிலவீரியம் - பூநீறு.
நிலவு - ஒளி, சந்திரப்பிரபை, சந்திரன், நிலவென்னேவல்.

நிலவுகாய்தல் - நிலவெறித்தல்.
நிலவுதல் - ஒளிசெய்தல், நீர்த்திமுதலிய பரம்பல், விசாலித்தல்
நிலவுநாழிகை - நிலவினடிகொண்டு பிரமாணிக்கு நாழிகை
நிலவுமரி - நிலவுமரிப்பூடு.
நிலவூறல் - சிலவூறணி.
நிலவெடுப்பு - முதலாமுழவு
நிலவெழுத்து - பழகுவதற்காகநிலத்திலெழுதுமெழுத்து.
நிலவெறித்தல் - நிலவொளிகாலல்.
நிலவேம்பு - கிரியாத்துச்செடி.
நிலவேர் - பூநாகம்.
நிலன் - நிலம்.
நிலா - நிலவு, சந்திரன்.
நிலாக்கல் - சந்திரகாந்தக்கல்
நிலாக்காலம் - நிலாவெறிக்குங்காலம்.
நிலாக்காலுதல் - நிலவுவீசல்.
நிலாக்கிரணம் - சந்திரகிரணம்.
நிலாக்கொழுந்து - இளம்பிறை.
நிலாப்பதிவு - இருட்டுப்பக்கம்.
நிலாமணி - சந்திரகாந்தம்.
நிலாமண்டபம் - நிலாமுற்றம்.
நிலாமண்டலம் - சந்திரமண்டலம்.
நிலாமுகி } சகோரம்.
நிலாமுக்கி }
நிலாமுற்றம் - நிலாக்காலத் துலாவச்செய்யும் வீட்டின்வெளி.
நிலாவிரை - ஓராவிரை.
நிலாவுதல் - நிலவுதல்.
நிலிஞ்சிகை - பசு
நிலிம்பன் - தேவன்.
நிலுவை - இறுத்துமிஞ்சினதொகை.
நிலை - ஆபரணத்திற்றொருங்கணி, இடம், உலகம், கதவுநிலை, குணம், சாலை, தொழில், நிச்சயம், நிலைக்கல், நிலைபரம், நிலைபேறு, நிலைப்பரப்பு, நிலையென்னேவல், நிற்குந்துணை, நேரம், பரப்பு, பூமி, பொழுது, மார்க்கம், முறைமை, யுத்தநிலை, அவை ஆலீடம், பிரத்தியாலீடம், பைசாசம், மண்டிலம்.
நிலைகலங்குதல் - தடுமாறல்.
நிலைகுலைதல் - நிலைகெடுதல்.
நிலைகொள்ளுதல் - நிலைப்படுதல், நிலையூன்றுதல்.
நிலைகோலுதல் - அணிகோலுதல், இடந்தேடுதல்.
நிலைக்கடசம் - பெருங்கூடை.
நிலைக்கண்ணாடி - ஓரிடத்தினிறுவியிருக்குங்கண்ணாடி.
நிலைக்கல் - ஆட்டுக்கல்.
நிலைக்களப்போலி - ஓரெழுத்து நின்றவிடத்தில் அதற்கீடாய்வந்து நிற்குமெழுத்து.
நிலைக்களம் - நின்றவிடம்.
நிலைக்கால் - வாசற்கால்.
நிலைச்குடி - ஊரிலிருக்கும் பழையகுடி.
நிலைக்குத்துதல் - அசையாது நிற்றல், குடியேறுதல், பயிர்கணிலைத்துப்போதல்.
நிலைதடுமாறல் - நிலைகலங்குதல்.
நிலைதல் - சம்பவித்தல், நிலைப்படல்.
நிலைதவறுதல் } நிலைகெடுதல்.
நிலைதளம்புதல் }
நிலைத்தண்ணீர் - எட்டுந்தண்ணீர்.
நிலைத்தல் - நிலைக்குத்துதல், நிலைபெறுதல், நின்றுபோதல்.
நிலைத்தேர் - அலங்காரத்துக்குச்செய்து ஓரிடத்தினிறுத்தப்பட்டிருக்குந்தேர்.
நிலைநிறுத்துதல் - சீர்ப்படுத்துதல், நிலைப்படுத்தல்.
நிலைநிற்றல் - நிலைபெறுதல், பிடித்தபிடி விடாது நிற்றல்.
நிலைநீச்சு - ஒருவகைநீச்சு.
நிலைபரம் - உறுதி, நிலைமை.
நிலைபிடித்தல் - வளம்பிடித்தல்.
நிலைபெறுத்தல் } சாத்தல், நிலைநிறுத்துதல்.
நிலைபெறுத்துதல் }
நிலைபேறு - அசையாமை, உறுதி, தூண், நிச்சயம், மானம், மோக்கம்.
நிலைபோடுதல் - அடிப்போடுதல்.
நிலைப்படுதல் - நிசப்படுதல், நிலைநிற்றல்.
நிலைப்படுத்துதல் - திரமடைவித்தல், தீர்மானம் பண்ணுதல், நிசப்படுத்துதல், பிரியாது தங்கப்பண்ணுதல்.
நிலைப்பரப்பு - நிலையிலாச்சம்.
நிலைப்பாடு - உறுதிப்பாடு.
நிலைப்பு - உறுதி, இடங்கொள்ளுதல், தொடர்ந்தேற்றி, நிலை, மாறுமை, முயற்சி.

நிலமண் - இடையிலே போடப்படா தியல்பாவுள்ளமண்.
நிலமண்டில ஆசிரியப்பா - நிலைமண்டில வாசிரியப்பா.
நிலைமண்டுதல் - பிரியாதிருத்தல், தொழின் முதலிய மாறுதல், புணர்ச்சி விகாரத்தொன்று அது எழுத்து முதலிய மாறிநிற்றல் (உ-ம்) வைகாசி வைசாகி.
நிலைமை - இயல்பு, உறுதி, குணம், நிலவாதனம், நிலை, மெய்.
நிலைமொழி - பதப்புணர்ச்சிக்கண் முதனிற்கு மொழி.
நிலையகம் - இருப்பிடம், மனை. [டை
நிலையங்கி - உடன்முற்று மூடுகிற சட்
நிலையம் - இருப்பிடம், இலக்கு, குறித்தவிடம், கூத்து, தேவர்கோயில்பிரதானஸ்தானம், பூமி, மருதநிலத்தூர், வீடு.
நிலையழிதல் தோற்குதல் நிலைகெடுதல்.
நிலையழிவு - தோல்வி, நிலைகேடு.
நிலையறிதல் - எண்ணமறிதல், நிலைபரமறிதல்.
நிலையாடி - நிலைக்கண்ணாடி நெய்வார் கருவியுளொன்று
நிலையாநீர் - பெருகுநீர்.
நிலையாமை-அகத்தியம்;உறுதியின்மை
நிலையிடல் - நிலைப்படுதல்.
நிலையிலாச்சம் - வாகுவிரைப்பாடு.
நிலையில்லாமை } அநித்தியம், உறுதி
நிலையின்மை } யின்மை.
நிலையுடைமை - உறுதி.
நிலையுமல் - பருமுமல்.
நிலையுரல் - பருவிரல்.
நிலையூன்றுதல் - பலப்படுதல், பிரியாதிருத்தல், வேரூன்றுதல்.
நிலைவரம் - நிலைபரம்.
நிலைவிளக்கு - சட்டவிளக்கு.
நில்லாமை - அநித்தியம், உறுதிப்படாமை, தவறுதல்.
நிவகம் - திரள்.
நிவசதம் - கிராமம்.
நிவசதி - வீடு.
நிவசனம் - புடவை, வீடு.
நிவத்தல் - உயர்தல், உயர்த்தல்.
நிவபனம் - அபரக்கிரியையினொன்று.

நிவப்பு - உயர்ச்சி, எழுச்சி.
நிவருணம் - பார்த்தல்.
நிவரை - கன்னி.
நிவர்த்தல் - உயர்தல்.
நிவர்த்தனம் - இருநூறுமுழநீள மகலங்கொண்டது, கொடுத்தல், தாமதித்தல், திரும்புதல்.
நிவர்த்தித்தல் - விட்டுநீங்குதல்.
நிவறல் } கூடுதல், சுருங்குதல், திரளுதல், நுணுக்கம்.
நிவறுதல் }
நிவாகம் - இடம்.
நிவாசம் - இருப்பிடம்.
நிவாசனம் - வீடு.
நிவாசித்தல் - வாசம்பண்ணல்.
நிவாதகவசம் - காற்றுப்புகலாதகவசம், இதற்குப்பொருள் பாணம்புகாத கவசம்என்பது, இதனையுடையவர்நிவாதகவசர்.
நிவாதகவசர் - தோயமாபுரத்தசுரர், தைத்தியரு ளொருசாரர், இவர் பிரகலாதன் வமிசத்தார், இவர் தொகை முப்பதுகோடி, இவர்கள் கடலினடு வேவசிப்பவர்களாய்த் தேவர்களை வருத்தும்போது தேவேந்திரன் வேண்டுகோளின்படி அர்ஜுநனால் கொல்லப்பட்டார்கள்.
நிவாததீபம் - காற்றில்லா விடத்திட்ட விளக்கு.
நிவாதம் - காற்றின்மை.
நிவாபம் - சிரார்த்தம், பிதிர்தருப்பணம்.
நிவாரணம் - தடை, நீங்கல், பிராயச்சித்தம், விடுதல்.
நிவாரம் - தடை.
நிவிராகன் - மிகு விருப்புள்ளோன்.
நிவிர்த்தாளம் - நவதாளத்தொன்று.
நிவிர்த்தம் - தடை, துறத்தல்.
நிவிர்த்தன் - துறவி.
நிவிர்த்துமன் - தவத்தி, விட்டுணு. [ம்.
நிவிர்த்தி - ஒழிப்பு, துறவு, பிராயச்சித்த
நிவிர்த்திகலை - பஞ்சகலையினொன்று.
நிவிர்த்தை - பாகமாதல்.
நிவேசம் - உடுப்பு, உட்படுதல், ஒப்புவித்தல், கலியாணம், பாளயம், பெரியோருறைவிடம், வீடு.
நிவேசனம் - இடம், ஊர், பட்டினம், வாசல், வீடு.

நிவேதனம் - ஒப்புவித்தல்,கொடுத்தல், தேவர்க்குச் சமர்ப்பிக்கு நைவேத்தியம், பேசுதல்.
நிவேதித்தல் - நைவேத்தியஞ்செய்தல்.
நிவேத்தியம் - நைவேத்தியம்.
நிழலல் - நிழலுதல்.
நிழலி - காற்று.
நிழலிடுதல் - நிழல்செய்தல்.
நிழலுதல் - சாய்கைவிழுதல்,நிழல்செய்தல்.
நிழலுலர்த்தல் - நிழலிற்காயவைத்தல்.
நிழலொதுக்கு - நிழற்சாய்ப்பு.
நிழல் - ஒளி, கிருபை, குளிர், சாயை, செல்வம், தஞ்சம், இன்பம், தோற்றம், நிழலென்னேவல், நீதி, மரக்கொம்பு, விம்பம்.
நிழல்விழுதல் - நிழல்வீசுதல்.
நிழற்சரிவு - சாயந்தரம், நிழற்சாய்வு.
நிழற்சாய்ப்பு - நிழலொதுக்கு.
நிழற்செய்தல் - சாய்கைவிழுதல், நிழற்படுத்தல், மந்தாரம் போடுதல்.
நிழற்பாடு - ஒதுக்கு.
நிழற்பாவை - திரைப்புடைவைக்குள் விட்டாடும் பாவை.
நிழற்பிடித்தல் - நிழற்படுதல்.
நிழற்போடுதல் - நிழலிடுதல்.
நிழற்றல், நிழற்றுதல் } நிழற்செய்தல்;நுண்மையாயிருத்தல்.
நிழனுவல் - ஒருபூடு, நிகழ்நாவல்.
நிஷதம் - விந்தியபர்வத சமீபத்திலே பயோஷ்ணிநதிதீரத்திலுள்ளதேசம், இது நளன் தேசம், ஒருமாலை.
நிஷதன் - குருவின் நான்காம்புத்திரன் ஸ்ரீராமர் புத்திரனாகிய குசன்பௌத்திரன்.
நிறங்கொடுத்தல் நன்னிறம் பெயர்தல், வன்னங் கொடுத்தல்.
நிறத்தல்-சீர்படல்,நிறங்கொள்ளுதல்.
நிறப்பு - நிறத்தல்.
நிறப்பெயர்ச்சி - நிறப்பேதிப்பு. [ணம்.
நிறம் - ஒளி,குணம், சரீரம்,மார்பு, வண்
நிறம்பெயர்தல் - நன்னிறமாதல், நிறம்பேதித்தல்.
நிறம்பேதலித்தல் - நிறமாறுதல்.
நிறம்போடுதல் - நிறங்கொடுத்தல்.
நிறவேறுபாடு - மாறுமை, வைவர்ணியம்.
நிருல் - நரா.

நிறுதிட்டம் - நெறிப்பு, நேரேநிற்றல்.
நிறுத்தம் - சாயாமனிமிர்ந்து நிற்றல்.
நிறுத்தல் - கோடாமை, நிறுக்குதல், நிறுத்துதல்.
நிறுத்திப்பிடித்தல் - தூக்கிப்பிடித்தல், நிலைநிற்றல்.
நிறுத்துக்கட்டுதல் - அளவிடுதல்.
நிறுத்துதல் - ஆட்படுத்தல், காக்குதல், தரிப்பித்தல், நாட்டுதல், நியமித்தல், நிலைப்படுதல், நிற்கச்செய்தல், பின்போடுதல், முடித்தல், வைத்தல்.
நிறுபூசல் - நிருபூசல். [வன்.
நிறுப்பான் - தராசு, துலாராசி, நிறுப்ப
நிறுப்பு - தாமதிப்பு,தாபிப்பு, நிறுத்தல், வைப்பு.
நிறுவல் - நிலைபெறுதல், நிறுத்தல்.
நிறுவாகம் - நிருவாகம்.
நிறுவாணம் - நிருவாணம்.
நிறவிஷம் - நிருவிஷம்.
நிறவுதல் - நிறுத்தல்.
நிறை - அழிவின்மை,ஆடூஉக்குணநான்கினொன்று, இடை, உறுதிப்பாடு, கற்பு, தயிரியம், துலாராசி, நியாயம், நிறுத்தலளவு, நிறையென்னேவல், நிறைவு, நீர்ச்சால், நூறுபலம், மாட்சிமை,முறையினிலைமை,வரையறை
நிறைகருப்பிணி - பூரணகெற்பஸ்திரீ.
நிறைகலை - பூரணசத்தி,பூரணசந்திரன், முழுக்காட்சி.
நிறைகுடம் - அட்டமங்கலத்தொன்று. அது பூரணகும்பம். ஊமைகுடம்.
நிறைகுணம் - பொறுமைக்குணம்.
நிறைகோல் - தராசுக்கோல்.
நிறைசபை - பெரியசபை.
நிறைசன்னி - மூடுசன்னி.
நிறைசூல் - நிறைகருப்பம்.
நிறைசெல்வன் - குபேரன்.
நிறைச்சல் - நிறைவு.
நிறைப்பு - நீதிவழு.
நிறைதருதாறு - சீந்தில்.
நிறைதல் - பூரணப்படுதல்,பெருகுதல்.
நிறைத்தல் - நிறையச்செய்தல்.
நிறைநாழிவைத்தல்-சாச்சடங்கினொன்று, பிள்ளைப்பேற்றுச்சடங்கினொன்று.
நிறைநிலவு - பூரணசந்திரன். [று.
நிறைந்திடல் - நிறைதல்.
நிறைபடி - தலைவெட்டாதபடி.

நிறைபாரம் - கனத்தசுமை, மிகுதி.
நிறைபூசல் - பேரொலி.
நிறைபூரணம் - முழுத்திருத்தி.
நிறைப்பு - நிறைத்தல்.
நிறைமணி - பூரணாபிடேகம்.
நிறைமதி - பூரணசந்திரன், பூரணஞானம்.
நிறைமொழி - உறுதிச்சொல், பெரியோர்வாக்கு, மந்திரம்.
நிறைமொழியாளர் - பெரியோர், முனிவர்.
நிறையழிதல் - கற்பழிதல், மனத்திடன்கலங்குதல்.
நிறையழிவு - கற்பழிவு.
நிறையளவு - நிறுத்தறியுமளவு.
நிறையறிகருவி - தராசு.
நிறையாமை - குறைவு.
நிறையுள்ளவன் - நிதானி.
நிறைவாகரம் - நிறைவு.
நிறைவாரம் - மிகுதி.
நிறைவு - பூரணம், மாட்சிமை.
நிறைவேறுதல்-செய்துமுடிதல், முற்றுதல்.
நிறைவேற்றம் - முடிப்பு.
நிற்கத்தண்டனம் - தயாவிருத்தி பதினான்கினொன்று அது தண்டத்தினீக்கல்.
நிற்கல் - நிற்குதல்.
நிற்காரம் } இகழ்ச்சி.
நிஸ்காரம் }
நிற்கிரகம் - அபகாரம், தள்ளல்.
நிற்குணசைவம் - ஒருசைவம்.
நிற்குணத்துவம் - தேவதன்மை.
நிற்குணம் - குணாதீதம்.
நிற்குணன்-கடவுள், முக்குணத்தையும் பிரித்தடக்கியுகந்தோறுமிருப்பவன்.
நிற்குண்டி - நீர்க்குண்டி.
நிற்கை - நிற்குதல்.
நிற்சம்பந்தம் - விடயசம்பந்த மில்லாதவன்.
நிற்சரம் - அமுதம், மலையருவி.
நிற்சலம் - அசைவின்மை.
நிற்சனம் - தனிமையிடம், தள்ளல்.
நிற்பத்தி - விவாகம்.
நிற்பன } அசரம் அது மரமுதலியன.
நிற்பனவு }
நிற்பாக்கியம் - ஏதுமின்மை.
நிற்பியாதார்த்திதம் - எகசித்தம்.
நிற்பீசம் - ஏதுவில்லாதது.
நிற்பு - நிலை.
நிற்புதம் - ஒரெண்.
நிற்றல் - அடங்கல், ஒழிதல், தங்கல், தரித்தல், நிலைநிற்குதல், நிற்குதல்.
நினதம் } சத்தம்.
நிறுதம் }
நினைதல் - நினைக்குதல்.
நினைத்தகாரியம் - எண்ணியபொருள் இது சோதி சோதனையினொன்று.
நினைத்தல் - ஆலோசித்தல், எண்ணல், தியானித்தல், மனதிற்கொள்ளல்.
நினைப்பணி - ஓரலங்காரம், அது ஒரு பொருளைக்கண்டு ஒப்புமையினன் மற்றொருபொருளை நினைத்தல் (உ-ம்) கஞ்சமலர் கோதை முகங்காட்டும்.
நினைப்பாளி - ஞாபகமுள்ளோன்.
நினைப்பு - நினைக்குதல் அதுமாயையாக்கை பதினெண் குற்றத்தொன்று, நோக்கம்.
நினைப்பூட்டு - நினைப்புக்குறிப்பு, நினைப்பூட்டென்னேவல்.
நினைப்பூட்டுதல் - நினைப்பித்தல்.
நினையாப்பிரகாரம் - திடுகூறு.
நினையாமை - மறப்பு.
நினைவு - எண்ணம், கருத்து, நினைப்பு, நினைப்புக்குறிப்பு, நோக்கம்.
நினைவுகூர்தல் - நினைத்தல்.
நினைவுகேடு - கருத்தழிவு, மறதி.
நினைவுத்தப்பு - எண்ணப்பிசகு.
நினைவுமோசம் - நினைவுப்பிசகு.
நினைவுவைத்தல் - கருத்துவைத்தல்.
நினைவோடுதல் - ஞாபகம்வருதல்.
நின் - உனது.
நின்மலம் - அழுக்கின்மை.
நின்மலன் - கடவுள், சுத்தன்.
நின்மலாவத்தை - மேலாவத்தை.
நின்மாலியம் - நிருமாலியம்.
நின்மூடன் - நிருமூடன்.
நின்றநிலை - ஒருநிலை, பிடித்தபிடி.
நின்றவடி - நின்றவிடம், மிதித்தவடி.
நின்றவிடந்தீஞ்சான் - குருவிச்சை.
நின்று - அசைச்சொல், (உ-ம்) சொல்லிநின்முன்.
நின்றுசிணுங்கி - சிறியாணங்கை.
நின்றுபயனின்மை - நூற்குற்றம்பத்தினொன்று.
நின்றுபோதல் - அற்றுப்போதல், தரித்துப்போதல்.

நின்றும் - ஐந்தாம்வேற்றுமையி னீக்க வுருபுகளிலொன்று, (உ-ம்) ஊர்தியி னின்றுமிழ்ந்தான்.

---

# நீ



நீ - நீயென்னேவல், முன்னிலையொருமைப்பெயர்.
நீகம் - தவளை, மேகம்.
நீகாசம் - ஒப்பு, நிசம்.
நீகாமன் - நீகான்.
நீகாரம் - சங்கையீனம், பனி.
நீகான் - மீகாமன்.
நீகேதநம் - வீடு.
நீக்கப்பொருள் - ஐந்தாம் வேற்றுமைப் பொருள்களிலொன்று அது நீக்குதற்குரிய பொருள்.
நீக்கம் - நீக்கல், நீளம், பிரிவு.
நீக்கல் - அகற்றல், கண்ணறை, கொல்லல், நீக்கம், நீட்டல், நீளல், மாறுபாடு, மாற்றல்.
நீக்கவுருபு - நீக்கப்பொருளைத்தருமுருபு அது ஐந்தா முருபு.
நீக்கு - நீக்கல், நீக்கென்னேவல், பிளப்புமீதி, விலக்கு.
நீக்குதல் - அகற்றுதல், கழித்தல், குலைக்குதல், நீத்தல், பிரித்தல்.
நீக்குப்போக்கு - இடைவெளி, உபாயம், வழிவகை.
நீங்கல் - இட்டம், நீங்குதல், பிரிதல், புறம்பு, போகல், மாறுதல்.
நீங்கள் - முன்னிலைப்பன்மைப்பெயர்.
நீங்காதவோசையோன் - சங்கு.
நீங்காமை - பிரியாமை.
நீங்குதல் - நீந்துதல், விடுதலையாகுதல், விலகுதல்.
நீசகம் - நீர்.
நீசகன் - கீழ்மகன்.
நீசகை - நீசப்பெண், யாறு.
நீசக்கிரகம் - இராகு, கேது, உச்சத்திற் கேழாமிடக்கிரகம், நீசத்தானமடைந்த கிரகம்.
நீசசாதி - கீழ்சாதி.
நீசத்தனம் - இழிதன்மை.
நீசத்தானம் - உச்சத்திற் கேழாமிடம்.
நீசநடை - தீயொழுக்கம்.
நீசபங்காசயோகம் - ஒருயோகம்.
நீசப்படுதல் - ஈனகுணமுடைத்தாதல்.
நீசம் - ஈனம், உச்சத்திற் கேழாமிடம், கொடுமை.
நீசர் - கீழ்மக்கள்.
நீசவச்சிரம் - ஒருமணி.
நீசவாகனம் - கழுதை.
நீசன் - ஈனன்.
நீசாரம் - கம்பளிப்புடவை, திரைச்சீலை, திரைப்படல்.
நீசிகை - நற்பசு.
நீச்சல் - ஆழம், நீத்தல்.
நீச்சு - நீந்துதல்.
நீச்சுத்தண்ணீர் - எட்டாநீர்.
நீஞ்சுதல் - நீந்துதல்.
நீஞ்சும்பிராணி - நீர்வாழ்வன.
நீடசம் - குருவி.
நீடசேந்திரன் - கருடன்.
நீடம் - இருப்பிடம், குருவிக்கூடு.
நீடல் - நீளல், நெடுத்தல்.
நீடாணம் - கறி, குழம்பு.
நீடாமங்கலம் - ஓரூர், இது கும்பகோணத்தருகேயுள்ளது.
நீடாலைக்கோடு - சூடாலைக்கல்.
நீடிக்கை - நீடிப்பு.
நீடித்தல் - நெடுகுதல்.
நீடித்திருத்தல் - நெடுங்காலத்திற்கிருத்தல்.
நீடிப்பு - நீடித்தல்.
நீடு - நெடுங்காலமட்டும்.
நீடுதல் - செழித்தல், தாண்டல், நிலைத்திருத்தல், நீளுதல், நெடுங்காலத்திற்கிருத்தல்.
நீடுநினைந்திரங்கல் - அகப்பொருட்டுறையிலொன்று அது தலைவியை மிகநினைந்து தலைவனிரங்கல்.
நீடூழி } ஊழிகாலம்.
நீடூழிகாலம் }
நீடோத்பவம் - பறவை.
நீட்சி - நீளம், விசாலம்.
நீட்சிமை - நெடுமை.
நீட்டம் - நீட்சி.
நீட்டலளவை - கோல்முதலியவற்றுனளத்தல்.

நீட்டலளவையாகுபெயர் - நீட்டியளத் தற்குரிய கருவின்பெயர் அதனை ளக்கப்படுவதற்கு வழங்குவது (உ-ம்) தடி.
நீட்டல் - ஈதல், நீட்டுதல்.
நீட்டல்மானம் - நீட்டலளவை.
நீட்டாணம் - நீடாணம்.
நீட்டாள் - நெடுத்தவன், வேலையாள்.
நீட்டித்தல் - தாமதித்தல், நெடுகுதல், நெடும்பொழுது செல்லல், முடித் தல்.
நீட்டினவிரல்குறித்தான் - கிரந்திநாய கம்.
நீட்டு - நீட்டென்னேவல், நீளம், நெ டும்பொழுது.
நீட்டுதல் - ஈதல், தாமதப்படுத்தல், நாட் போடுதல், நீளச்செய்தல்.
நீட்டுப்போக்கு - அகலநீளம், செல்வ முதலியவற்றின் விசாலம், திராணி, நெடுமை, வலிமை.
நீட்டுமுடக்கு - கொடுக்கல் வாங்கல், தி ராணி.
நீட்பம் - நீளம்.
நீணுளம் - உயர்ந்த புகைக்குழை.
நீணெறி - நீண்டவழி.
நீணெறிநாதேசுவரர் - திருத்தண்டலை நீணெரியிலே கோயில்கொண்டிருக் கும் சுவாமிபெயர்.
நீண்டகரை - நெடுங்கரை.
நீண்டகையானை - காண்டா மிருகக் கொம்பு.
நீண்டது - நெடியது.
நீண்டமயல் - பெருமயக்கம்.
நீண்டவன் - விட்டுணு.
நீண்டாயம் - நீளம்.
நீண்டோன் - விட்டுணு.
நீதக்காரன் - நீதவான்.
நீதச்சிலைச்சூதம் - நீலாஞ்சனம்.
நீதத்தலம் - நீதம் விசாரிக்குமிடம்.
நீதபரிமளம் - சீதாங்கபாஷாணம்.
நீதம் - தானியம், நன்னெறி, நீதி, பாக் கியம்.
நீதவான் - நீதமுள்ளவன், நீதித்தலைவ ன்.
நீதன் - நீதிமான்.
நீதி - நியாயம், முறைமை, மெய்.
நீதிகேடு - அநியாயம்.
நீதிசாத்திரம் - கலைஞானமறுபத்து நா ன்கில் ஒன்று, நியாயநூல்.
நீதிசாரம் - ஒருநூல்.
நீதிஞ்சன் - நியாயசாத்திரி.
நீதித்தலம் - நீதத்தலம்.
நீதித்தவறு - நீதிப்பிழை.
நீதித்தீர்வை - நியாயத்தீர்வை.
நீதிநூலன், நீதிநூலி - அருகன், நியாயப்பிரமா ணிகன்.
நீதிநூல் - நீதிசாத்திரம்.
நீதிநெறி - ஒருநூல், சன்மார்க்கமுறை, சன்மார்க்கம்.
நீதிபரன் - அரசன், கடவுள், நீதிமான்.
நீதிமான் - நீதியுள்ளவன்.
நீதியதிபதி - நியாயாதிபதி.
நீதியறிந்தோன் - மந்திரி.
நீதியற்றவன் - அநியாயக்காரன்.
நீதியாதிபதி - நீதியதிபதி.
நீதியொழுங்கு - நீதிமுறை.
நீதிவழு - நியாயத்தப்பு அது தாமதகு ணத்தொன்று.
நீதிவிளக்கம் - நியாயவிசாரணை.
நீதிவிளங்குதல் - நியாயம் விசாரித்தல், நியாயம் வெளித்தல்.
நீத்தம் - தண்ணீர்விட்டான், வெள்ளம்.
நீத்தவன் - அருகன்.
நீத்தார் - நீத்தோர்.
நீத்து - நீந்தல், நீந்துபுனல்.
நீத்தோர் - துறவோர்.
நீந்தல், நீந்துதல் - கடத்தல், நீரினீஞ் சுதல்.
நீந்துபுனல் - எட்டாநீர்.
நீபம் - உத்திரட்டாதிநாள், கடம்பு, வெ ண்கடம்பு
நீபன் - பாரன்புத்திரன். இவனுக்கு நூறுபுத்திரர்கள் பிறந்தார்கள். அவர் களுள் மூத்தோனாகி யசமான் காம்பி லிய தேசத்தரசனாயினன்.
நீப்பு - துறவு, பிரிவு.
நீமம் - ஒளி.
நீம்பல் - வெடிப்பு.
நீயிர் - நீவிர்.
நீர - குணத்தையுடையன.
நீரசம் - தாமரை, மாதுளை.
நீரடி - நீரெட்டி.
நீரடைத்தல் - சலமடைத்தல்.
நீரடைப்பு - ஒருநோய்.
நீரதம் - மேகம்.
நீரதி - கடல், சாறு.

நீரத்தி - ஒருமரம்.
நீரணிமாடம் - பள்ளியோடம்.
நீரகிதி - கடல்.
நீரம் - நீர். [று.
நீரண் - அகழ் அது நான்காணிஞென்
நீரமகளிர் - நீரில்வாழுந் தெய்வப் பெண்கள்.
நீரரவம் - நீர்ப்பாம்பு.
நீராருகல் - நீர்ச்சிறுப்பு.
நீரலரி - ஓரலரி.
நீரழிவு - ஒருநோய்.
நீராகாரம் - நீர்த்தன்மை, பானகம்.
நீராசனம் } ஆலாத்தி, கண்ணூறு
நீராஞ்சனம் } கழிக்கு மோர்வகை யாலாத்தி.
நீராடல் - நானம்பண்ணல், நீர்கிலுங் குந் தேங்காய்.
நீராடுதல் - நானம்பண்ணல், நீர்விளை யாடல்.
நீராட்டம் - நீராடல்.
நீராட்டு - நீர்விளையாட்டு, முழுகவார்த் தல்.
நீராட்டுதல் - முழுக்காட்டுதல்.
நீராமம் - ஒருநோய்.
நீராமை - ஒருசிலந்தி,ஒருநோய்,கடலா
நீராம்பல் - ஆம்பல்,ஒருநோய். [மை.
நீராரம்பம்-பாய்ச்சல் நீலம்.
நீராரை - நீருளாரை.
நீராலி - நீர்த்துளி.
நீராவி - கேணி, புகை.
நீராழி - கடல்.
நீராழிமண்டபம் - குளத்தினடுவே கட் டிய மண்டபம்.
நீராளம் - நீராகாரமானது, மயக்கமில் லாதவள்.
நீரிலாகிலம் - பாலை.
நீரிழிவு - நீர்ப்பாடு.
நீரிறக்கம் - நீர்வற்றம்.
நீருடும்பு - ஒருடும்பு.
நீருதிபாசம் - கடற்பாசி.
நீருபம் - ஆகாயம், காற்று.
நீருமரி - ஒருபூடு.
நீருளாரை - நீராரை.
நீருள்ளி - வெண்காயம்.
நீருற்று - நீருறுதல்.
நீரெடுத்தல் - நீர்பெருகுதல்.
நீரெடுப்பு - நீர்ப்பெருக்கு.
நீரெட்டி - ஒருமரம்.
நீரெரிப்பு - நீர்க்கடுப்பு.
நீரெலி - ஓரெலி.
நீரேற்றம் - ஒருநோய், சலதோஷம், நீர்ப்பெருக்கு.
நீரொட்டி - நீராரை. [ம்.
நீரோசை-கொண்டாட்டம், சந்தோஷ
நீரோடி - இருசாரையு மிணைக்குமரம், மதகு.
நீரோட்டம் - நீர்ப்பாய்ச்சல்.
நீரோருகம் - தாமரை.
நீரோற்காரி - ஆவர்த்தம்.
நீர் - கடல், குணம், சாறு, தன்மை, நீ ரென்னேவல், நீவிர், புனல், இது அட்டமூர்த்தத்தொன்று,'பஞ்சபூதத் து மொன்று, பூராடநாள்.
நீர்க்கொள்வான் - ஸ்போடகம்.
நீர்க்சடம்பு - ஒருமரம்.
நீர்க்கடன் - திலதற்பணம்.
நீர்க்கடுப்பு - சலக்கடுப்பு.
நீர்க்கட்டு - நீர்மறிப்பு.
நீர்க்கட்டுதல் - கொப்புள முதலிய நீர்ப் பிடித்தல்.
நீர்க்கணம் - அட்டகணத்தொன்று, அ து ஒரு நேரசையு மிரண்டு நிரை யசையு மடுத்து வருவது.
நீர்க்கண்டகி - நீர்முள்ளி.
நீர்க்கமல்லி - அல்லி.
நீர்க்கரை - தண்ணீர்த்துறை.
நீர்க்கழிவு - நீரழிவு.
நீர்க்காகம் } ஒரு புள்.
நீர்க்காக்கை } ஒரு புள்.
நீர்க்காசம் - ஒருநோய்.
நீர்க்கால் - நீர்வாய்க்கால்.
நீர்க்காவி - கருங்குவளை, நாளுந்தோய்க் கும் புடவையிற் பற்றுநிறம்.
நீர்க்கிராம்பு - ஒருபூடு.
நீர்ச்கீரை - ஒருகீரை.
நீர்க்கீழ் - உதயத்திற்கு நாலாமிராசி.
நீர்க்குடம் - பூரணகும்பம், இது அட்ட மங்கலத்தொன்று இராசசின்னத்து மொன்று.
நீர்க்குட்டம் - ஒருநோய்.
நீர்க்குண்டி - வெண்ஞெச்சி.
நீர்க்குதல் - நீராதல்.
நீர்க்குமிழி - நீரிலெழும்புங் குமிழ்ப்பு வடிவு.

நீர்க்குளிரி - கல்லாரச்செடி.
நீர்க்குறிஞ்சா - ஒருசெடி.
நீர்க்குன்று - நத்தை.
நீர்க்கொதி - நீரொரிவு.
நீர்க்கொழுந்து - நீர்த்தலை.
நீர்க்கொள்ளான் - கொப்புளிப்பான்.
நீர்க்கொள்ளுதல் } நீர்பிடித்தல்.
நீர்க்கோத்தல் }
நீர்க்கோத்தை - ஒருவகைத் தண்ணீர்ப் பாம்பு.
நீர்க்கோவை - நீர்ப்பிடிப்பு.
நீர்க்கோழி - நீர்வாழுங்கோழி.
நீர்ச்சங்கு - ஒருபூடு.
நீர்ச்சலவை-புடவையைத்தோய்த்தல்.
நீர்ச்சாணி - நீர்விட்டுத்தீட்டுஞ்சாணை.
நீர்ச்சாரை - தண்ணீர்ச்சாரை.
நீர்ச்சால் - தண்ணீர்பூரிக்குஞ்சால்.
நீர்ச்சாவி - நீரால்வரும்பதர்.
நீர்ச்சிக்கு - நீரடைப்பு.
நீர்ச்சித்திரம் - நீரடிமுத்து.
நீர்ச்சிரங்கு - சேற்றுப்புண், நீர்ப்புழு.
நீர்ச்சிறுப்பு - சிறுநீர்.
நீர்ச்சின்னி - ஒருபூடு.
நீர்ச்சீலை - குளிசீலை.
நீர்ச்சுண்டி - கொடி நெட்டிச்செடி.
நீர்ச்சுழல் } நீரிலுண்டாஞ் சுரிப்பு.
நீர்ச்சுழி }
நீர்ச்சுனை - நீர்த்தடாகம்.
நீர்ச்சூலை - அண்டவாயு.
நீர்ச்செம்பை - ஒருசெடி.
நீர்ச்செறிவு - நீர்ப்பரப்பு.
நீர்சேம்பு - ஒருபூடு.
நீர்ச்சோறு - பழஞ்சோறு.
நீர்தூவுந்துருத்தி - நீர்விடுவிசிறி.
நீர்த்தல் - நீராதல்.
நீர்த்தாரை - சலதாரை, நீரோட்டம்.
நீர்த்தானம் - நீர்க்கீழ்.
நீர்த்திவலை - நீர்த்துளி.
நீர்த்துளி - நீர்ச்சொட்டு.
நீர்த்துறை - நீர்க்கறை.
நீர்த்தூம்பு - மதகு.
நீர்த்தோஷம் - சலதோஷம்.
நீர்நாய் - நாய்மீன்.
நீர்நாள் - பூராடம்.
நீர்நீதி - கடல்.
நீர்நிலை - குளம், தண்ணீரின்மட்டு,மடு.
நீர்நெட்டி - ஒருபூடு.

நீர்நொச்சி - ஒருநொச்சி.
நீர்பெய்கலன் - கமண்டலம்.
நீர்ப்பகண்டை - ஒருபூடு.
நீர்ப்பஞ்சு - கடற்காளான்.
நீர்ப்படுவன் - ஒருநோய்.
நீர்ப்பரிகை - ஆகமை.
நீர்ப்பறவை - நீரில்வாழும்பட்சி அவை கின்னரம்புள் முதலியன.
நீர்ப்பனை - புல்லாமணக்கு.
நீர்ப்போக்கு - ஊறற்பாக்கு.
நீர்ப்பாசி - வைப்புப்பாஷாண முப்பத் திரண்டினொன்று.
நீர்ப்பாடு - நீரழிவு, நீர்க்குறைவு, விஷக் கிராணி.
நீர்ப்பாட்டுச்சன்னி - ஒருசன்னி.
நீர்ப்பாம்பு - நீர்க்கோத்தை.
நீர்ப்பாய்ச்சல் - ஒருநோய் நீரோட்டம்.
நீர்ப்பிடி } நீர்கொண்டிருத்தல்.
நீர்ப்பிடிப்பு }
நீர்ப்பிரமியம் - நீர்க்கடுப்பு.
நீர்ப்பிளவை - ஒருசிலந்தி.
நீர்ப்பீனசம் - ஒருபீனசம்.
நீர்ப்பு - நீர்த்தல்.
நீர்ப்புடையன் - ஒருபாம்பு.
நீர்ப்பூ - நால்வகைப்பூவினொன்று அது சலத்திலுண்டுபடும்பூ.
நீர்ப்பூலா } நீர்ப்புல்லாய்.
நீர்ப்பூல் }
நீர்ப்பெருக்கு - சலப்பெருக்கு, நீர்ப் பாய்ச்சல்.
நீர்மட்டம் - சரிமட்டம்,சரிமட்டம்பார்க் குங் கருவி.
நீர்மதிப்பு - சிறுநீர்த்தடை.
நீர்மாங்காய் - மாங்காயடைக்காய்.
நீர்மாடம் - பள்ளியோடல்.
நீர்மீட்டான் - நீர்விட்டான்.
நீர்முகம் - இறங்குதுறை, நீர்ப்பாய்ச் சல் முனை.
நீர்முள்ளி - ஒருமுள்ளி.
நீர்மேனெருப்பு - கல்லுருவி.
நீர்மை - ஒப்புறவு, குணம், நிலைபரம்.
நீர்மோர் - ஒருபானம்.
நீர்வஞ்சி - ஒருவகைப்பிரம்பு.
நீர்வண்டு - நீரில்வாழ்வண்டு.
நீர்வரத்து - நீர்ப்பெருக்கு.
நீர்வல்லி - வெற்றிலைக்கொடி.
நீர்வழுக்கை - ஒரு நீர்ப்பூடு.

நீர்வளம் - நீர்ச்சிறப்பு, நீர்நயத்தினல்வருஞ் செல்வம்.
நீர்வள்ளி - சாற்றுவாரி, வெற்றிலைக்கொடி.
நீர்வற்றம் - நீர்வற்று.
நீர்வற்றற்றேங்காய் - கொப்பறுத்தேங்காய்.
நீர்வற்றுதல் - ஈரம்வற்றுதல், நீர்சுவறுதல்.
நீர்வாத்து - ஒருபறவை.
நீர்வாரம் - குளநெல், நீர்வஞ்சி.
நீர்வாழைக்காய் - மீன்.
நீர்வாழ்சாதி - நெய்தனிலமாக்கள், மீன் முதலியன.
நீர்வாழ்வன - எழுவகைப்பிறப்பில் ஒன்று அது மீன்முதலிய நீந்தும்பிராணி.
நீர்விடுதல் - பதனழிந்துநீராதல்.
நீர்விட்டான் - சாற்றுவாரி.
நீர்விழுதல் - இரத்தினகாந்தி, தளம்பல்.
நீர்விளையாட்டு - சலக்கிரீடை.
நீர்வேட்கை - நீர்த்தாகம்.
நீர்வேட்டல் - நீர்தாகித்தல்.
நீலகண்டசாத்திரியார் - தருக்கசங்கிரகதீபிகைக்கு நீலகண்டீயம் என்னும் வியாக்கியானஞ் செய்தவர். இவர் அறுபத்தைந்து வருஷங்களுக்கு முன்னே பல்லாரியிலிருந்த ஒரு தெலுங்கர்.
நீலகண்டசிவாசாரியர் - இவர் வேதாந்த சூத்திரத்திற்குச் சுத்தாத்துவிதபக்கமாகப் பாஷியஞ்செய்தவர். இவர் திருக்கோகர்ண ஸ்தலத்திலே பிறந்து விளங்கியவர்; தெலுங்கர். இவர் செய்த பாஷியம் நீலகண்ட பாஷியமெனப்படும். மாதவாசாரியர் செய்த சங்கரவிஜயத்திலே சங்கராசாரியசுவாமிகள் நீலகண்ட சிவாசாரியரை வாதத்திலேவென்றனரென்று கூறப்படுதலாலும், நீலகண்ட விஜயத்திலே சங்கராசாரிய சுவாமிகள் நீலகண்ட சிவாசாரியர் வினவியவைகளுக்கு உத்தரங்கூற வியலாது திகைத்தனரென்று கூறப்படுதலாலும், இருவரும் ஏககாலத்தவர்களென்பது பெறப்படுகின்றது, சரித்திரம்மாறுகொள்வனவாயினும்இருவரும்ஒருவரையொருவர் கண்டனரென்பதுண்மையாதலின் ஒரேகாலத்தவர்களென்பது நன்கு துணியப்படும். இருவிஜயங்களுங் கற்பித நூல்களாகுமிடத்து ஏககாலத்தவர்களென்பதும் பொய்மையின்பாலதாம். நீலகண்டர் இராமாநுஜாசாரியாது கொள்கைகளை யெடுத்துக் கண்டித்தலாலே நீலகண்டர் இராமாநுஜருக்குப்பிந்தியவரென்பதும் அவர்காலம் எண்ணூறு வருஷங்களுக்கு முன்னரென்பதும் சங்கராசாரியர் காலநிருபணஞ்செய்த பாஷியாசாரிய பண்டிதர் கருத்து. அதுண்மையாயின், நீலகண்டருக்கு இருநூறு வருஷங்களுக்குமுன்னேயுள்ளவரென்றுபாஷியாசாரியபண்டிதராலேகூறப்பட்ட ஹரதத்தாசாரியர் "நீலகண்டபாஷியத்துக்குச் சமர்த்தனம்" எனப் பெயரிய வியாக்கியானஞ்செய்தமை பொருந்தாதன்றே ஆதலின் ஹரதத்தாசாரியர் நீலகண்டருக்குப் பின்னர்க்காலத்திலாயினும் ஏககாலத்திலாயினுமுள்ளவராவர். ஆகவே பாஷியாசாரியபண்டிதர் கருத்துப் பொருத்தமுடையதன்று. அற்றேல் முன்னிருந்த நீலகண்டர் தமக்குப் பின்னர் விளங்கிய இராமாநுஜாது கொள்கைகளை எடுத்துக்கண்டித்தல் எங்ஙனங்கூடுமென்றுலோ, அக்கொள்கைகள் முன்னரு முள்ளனவேயாமாதலாலும் அந்நூலிலே இராமாநுஜர் பெயர்கேட்கப்படாமையானும் அது வினவாகாதென்க. நீலகண்ட சிவாசாரியர் வேதாகம புராணேதிகாசங்களிலே மிகவல்லுநரென்பது எடுத்துக்கூறவேண்டா, சங்கராசாரியரை வேதாந்திகள் எவ்வளவினராகக் கருதுகின்றார்களோ அவ்வளவாகச் சைவர்களும் நீலகண்ட சிவாசாரியரைத் தழுவுகின்றார்கள். சிவபரம்சாதித்த பிரபல ஆசாரியர்கள் நீலகண்டர் ஹரதத்தர் அப்பையதீக்ஷிதர் என்னும் மூவருள்ளே நீலகண்டர் எல்லாவகையாலும் முதன்மையுற்றவர். இந்த மூவரும் வடமொழிப் புலவர்களாக அவதரித்திலராயின் சைவசமயம் நிலைதலங்கி விடுமென்றாலும் குற்ற

மன்று, நீலகண்டர் சுவேதாசாரியர் மாணுக்கர். இவர் ஸ்ரீ கண்டர் எனவும்படுவர்.
நீலகண்டக்ஷேத்ரம் - இமாலயத்துக்குச் சமீபத்திலே கௌசிகிநதி யுற்பத்திஸ்தாநம்.
நீலகண்டநாயனர் - திருவெருக்கத் தம்புலியூரிலேகோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
நீலகண்டம் - மயில்.
நீலகண்டன் - ஒருபூரம், கொடியவன், சிவன், அருசி, முருங்கை, திருநீலக்கண்டநாயனர்.
நீலகண்டபட்சம் - உருத்திராக்கம்.
நீலகண்டி - பாம்பி னச்சுப்பல்லி னென்று பொல்லாதவள்.
நீலகண்டேசர் - திருமண்ணிப் படிக்கரையிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
நீலகண்டேசுவரர் - திருப்பாச்சிலாச்சிராமத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
நீலகந்தி - ஒருவகைக்கெம்பு.
நீலகமலம் - நீலோற்பலம்.
நீலகம் - காருப்பு, அருசு.
நீலகாசம் - கண்ணேயுளொன்று.
நீலகிரி - அட்டமலையினென்று, செங்குட்டுவன் வஞ்சிநகரத்திலிருந்து இமயமலைக்குப் போம்போது ஒருநாள் தங்கியிருந்த மலை இது சேரநாட்டிலுள்ளது இளாவ்ருத வருஷத்துக்கு வடக்கெல்லையாகவுள்ளமலை.
நீலகண்ணுடி - நீலநிறக்கண்ணுடி.
நீலக்கத்திரி - ஒருவழுதுணை.
நீலக்கல் - நீலரத்தினம்.
நீலக்காக்கட்டான் - ஒருபூடு.
நீலக்காரம் - அருசு.
நீலக்காலி - அவுரி, ஒருநண்டு.
நீலக்கிராந்தை - விஷ்ணுகிராந்தை.
நீலக்கிரீவன் - சிவபிரான்.
நீலக்கிரௌஞ்சம் - கருங்கொக்கு.
நீலங்கட்டுதல் - நீலந்தீர்த்தல், பெரும்பொய்கூறல்.
நீலசம்பூடம் - ஒருவகைநாவல்.
நீலச்சால் - நீலநிறச்சாய மூறவைக்குஞ்சால்.
நீலதரு - தெங்கு.

நீலநிதி - குபேரனவநிதிகளினென்று.
நீலந்தர் - இராகம்பாடுவோர்.
நீலந்தீர்தல் / நீலந்தோய்தல் } புலநிறம்போடுதல்.
நீலபங்கம் - கறுஞ்சேறு.
நீலபடிகம் - பளிங்கு.
நீலபதுமம் - நீலோற்பலம்.
நீலபத்திரம் - கருங்குவளை.
நீலபம் - சந்திரன், தேனீ, முகில்.
நீலபாஷாணம் - ஒருபாஷாணம்.
நீலபுட்பம் / நீலபுட்பிகை } அவுரி, எட்டிமரம், விட்டுணுகரந்தை, விட்டுணுகாந்தி.
நீலப்பணி - புடவையிலிடுநீலச்சாயம்.
நீலமணி - கண்ணிற்கருமணி, நீலரத்தினம், மரகதமணி.
நீலமணிகாயம் - கண்ணேயுளொன்று.
நீலமண்டலம் - சிற்றீச்சமரம்.
நீலமருந்து - அவுரி.
நீலமலர்க்கண்ணி - திருவெருக்கத்தம்புலியூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
நீலமாதவன் - திருமால்.
நீலமார்க்கம் - கையாந்தகரை.
நீலமீளிகை - மின்மினி.
நீலமேகம் - நீருண்டமேகம்.
நீலமேனியள் - பார்வதி.
நீலமேனியன் - இராமன், அருசி, விட்டுணு.
நீலம் - இருள், ஒருநிறம், ஒருமேகம், கருங்குவளை, கறுப்பு, காற்று, அருசு, நஞ்சு, நவமணியினென்று, நீலக்கட்டி, பனை.
நீலம்பற்றவைத்தல் - கதைகட்டுதல்.
நீலம்பாரித்தல் - விஷமுதலியவற்ருற் சரீரம் நீலவண்ணமாதல்.
நீலராசன் - ஓராசன்.
நீலராஜாவத்தம் - ஓரிரத்தினம்.
நீலருத்திரன் - ஒருருத்திரன்.
நீலலோகிதன் - சிவபிரான், பின்னேருருத்திரரிலொருவன்.
நீலவசனம் - சனி.
நீலவண்ணன் - சனி, விட்டுணு.
நீலவண்ணுன் - சாயக்காரன்.
நீலவத்திரம் - நீலப்புடவை.
நீலவத்திரன் - பலராமன்.
நீலவருணம்-சத்தமுகிலினென்றுஅது தீப்பொழிவது, நீலநிறம், மேகம்.

நீலவழுதலை - நீலக்கத்தரி.
நீலவாசன் – சனி.
நீலவாடையன் - பலராமன்.
நீலவிதானம் - நீலப்பட்டுமேற்கட்டி.
நீலன் - நீலியென்னும் பைசாசத்தால் கொல்லப்பட்ட ஒருவணிகன், குருரன், சனி. அசமீடன் புத்திரன். இராஜசூய யாகத்திலே சகாதேவனோடு யுத்தஞ்செய்த மாகிஷ்மதிபுரி ராஜன். ஆக்கினிக்குப்பிறந்த வாநரன், இவன் சுக்ரீவனுக்குப் படைத்தலைவன்.
நீலாக்காலி - ஒருநண்டு.
நீலாங்கம் - மலைத்தேன்.
நீலாங்கு - புழு.
நீலாசலநாதர் - இந்திரநீலப் பருப்பதத்தில்கோயில்கொண்டிருக்கும்சுவாமி பெயர்.
நீலாஞ்சனம் - கல்லீயம், கறுப்புக்கல், துருசு.
நீலாஞ்சனை - மின்னல்.
நீலாட்சம் – அன்னப்புள்.
நீலாம்பிகை - இந்திரநீலப் பருப்பதத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
நீலாப்பிரகம் - கருமுகில்.
நீலாம்பரன் - பலபத்திரன்.
நீலாம்புசம் - கருங்குவளை.
நீலாம்புரி - ஒருபண்.
நீலாயதாக்ஷி - திருநாகைக் காரோணத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
நீலி - அவுரி, கருநொச்சி, கறுப்பு, காளி, திட்டை, துருசு, துர்க்கை, பாம்பினச்சுப்பல்லிலொன்று, பார்வதி, மேகவண்ணப்பூவுள்ள மருதோன்றிமரம், சங்கமன் என்னும் வைசியன் மனைவி. கோவலன் கொலையுண்ணும்படி அவனுடைய முற்பிறப்பில் அவனைச் சபித்தவள். பழையனூர் வணிகன் மனைவி. இவள்விவாகமாகிக்கொஞ்சநாளில் இறந்து திருவாலங்காட்டிலே போய்த் திரிந்துகொண்டிருந்தாள், ஒருநாள் அவள் கணவன் அக்காட்டுவழியே தனித்துச் சென்றபோது இந்தநீலிப்பேய் அவனது இரண்டாமனைவியைப்போல வடிவங்கொண்டு, ஒரு கள்ளிக்கட்டையைப் பிள்ளையாக்கி மருங்கிலே தாங்கிக்கொண்டு அவனைத்தொடர, அவன் அவ்வடிவைப் பேயென நிச்சயித்து அப்பேயினது வஞ்சக மொழிகளுக்குஇணங்காதோடினான், பேயும், இது முறையோ என்னைக் காட்டில் தனியேவிடுத்துச் செல்லா நின்றீரே, என்று அழுதுகொண்டே பின்றொடர்ந்து காஞ்சிபுரத்தை யடைந்து, அங்கே பொதுவிடத்தில்கூடியிருந்த வேளாளரிடத்திற்சென்றுதன்வழக்கைச் சொல்லிற்று, அவ்வேளாளர் இவ்விருவர் வழக்கையுங் கேட்டுப் பேயைப்பார்த்து, நீ சொல்லுவதற்குச் சாக்ஷியாரென்று கேட்க, பேய், இந்தப்பிள்ளையைவிடுகிறேன், இது அப்பாவென்றழைத்துத் தந்தைமடிமே லேறுதோ, பாருங்களென்று, சொல்லி விடுக்க, குழந்தை அவ்வாறே செய்ய, வணிகன், இது பேய்க்கூத்தென்றான், அதுகேட்ட வேளாளர், அது உண்மையானால் நாங்கள் பிணையாவோம் நீயும் இவளும் இந்த அறையினுள்ளே போய்ச் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்து வாருங்கள் என்று சொல்ல வணிகன் அச்சொல்லைத்தடுக்கவொண்ணுதவனாய் அறையினுள்ளே செல்ல, பேயுந்தொடர்ந்துள்ளே புகுந்து கதவடைத்து அவனுயிர் குடித்து மறைந்தது. வேளாளர் எழுபதின்மரும் கதவைத் திறந்து பார்த்துத் தம்மாலிறந்த வணிகன் பொருட்டுத்தாமுந் தீப்பாய்ந்துஉயிர்விட்டார்கள், சிவபெருமான் அவர்களுடைய சத்திய மார்க்கத்துக்கிரங்கி, அவர்களெல்லாரையும் பிழைப்பித்து வேளாளர் வாக்கைக் காத்தருளினர், இச்செய்தி தொண்டைமண்டல சதகத்திலும் சேக்கிழார் புராணத்திலுங் கூறப்பட்டுள்ளது.

நீலிகை - அவுரி, தழும்பு.
நீலினி - அவுரி.
நீலோற்பலம் - கருங்குவளை, கல்பாரம்.
நீல் - காற்று, நீலம், வாதம்.

நீவரகம் - பஞ்சம்.
நீவரம் - சேறு, நீர், வியாபாரம்.
நீவல் - நீவுதல்.
நீவாரம் - செந்தினை, நாடு, வனநெல்.
நீவான் - மீகாமன்.
நீவி - கொய்சகம், சீலை, முதற்பணம்.
நீவியம் - சீலை.
நீவிரம் - வீட்டிறப்பு.
நீவிர் - நீங்கள் இது முன்னிலைப்பன்மைப் பெயர்களிலொன்று.
நீவுதல் - தடவுதல், தட்டுதல், துடைத்தல், பூசுதல்.
நீழல் - ஒளி, நிழல், நோய்.
நீளங்கடை - நாட்செல்லல்.
நீளப்பூச்சி - ஒருபூச்சி.
நீளம் - தாமதம், தூரம், நெடுமை.
நீளல் - ஓடுதல், தூரம், நீளுதல்.
நீளி - நீளியென்னேவல், நெடியன், நெடுமை, நெடுவல்.
நீளிடை - சேய்மை.
நீளித்தல் - தாமதித்தல், நாட்போதல், நீளுதல், நெடுநாளிருத்தல்.
நீளிப்பு - நீடிப்பு.
நீளியசாரை - கானற்கல்லு.
நீளியது - நெடியது.
நீளியன் - நெட்டையன்.
நீளுதல் - அதிகப்படுதல், ஓடுதல், நீளமாதல், நெடுகுதல்.
நீள் - உயரம், ஒளி, நீளம், நீளென்னேவல், பிரபை.
நீள்சடையோன் - கொன்றை.
நீறடித்தல் - கயிற்றினூற்சோலமிடுதல்.
நீறணிந்தோன் - சிவபிரான்.
நீறூடி - சிவபெருமான்.
நீறுடுதல் - அழித்தல், உத்தூளனமாய்ப்பூசுதல், பொடிபடுத்தல்.
நீறு - சாம்பர், சுண்ணம், துகள், நீறென்னேவல், புழுதி, விபூதி, துவம்சம்.
நீறுதல் - நீறுதல்.
நீறுபடுதல் - அழுக்குப்படிதல், சாம்பற்பொடித்தல்.
நீற்றல் - எரியிட்டுநீறச்செய்தல்.
நீற்றறை - சுண்ணம்புச்சூளை.
நீற்றுக்குட்டான் - சிறிய சுண்ணம்புப்பெட்டி.
நீற்றுண்டை - முட்டை.
நீற்றுதல் - நீறுக்குதல்.
நீற்றுப்பூசணி - ஒருகொடி.
நீற்றுப்பூசணிக்காய்த்தானம் - மிருத்துதானத்தொன்று.
நீற்றுப்பெட்டி - எண்ணெயூற்றுங் கூடை, மாவவிக்கும் பெட்டி.

## நு

நு - ஆயுதப்பொது, ஐயம் சங்கை வினாவென்பவைகளைக் காட்டுமோருபசருக்கம், தியானம், தோணி, நிந்தை, நேரம், புகழ்.
நுகம் - நுகத்தடி.
நுகம்புரட்டி - ஒழுங்கு தவறுகிறவன், கட்டுக்கமையாத எருது.
நுகர்ச்சி - அனுபவம், உணவு, உண்டல்.
நுகர்த்தல் - அனுபவித்தல், புசித்தல், விழுங்கல்.
நுகர்வு - நுகர்ச்சி.
நுகைதல் - இளகுதல், தளர்தல்.
நுகைத்தல் - இளக்குதல், தளர்த்தல்.
நுகைப்பு - நுகைத்தல்.
நுகைவு - இளக்கம், தணிவு, தளர்வு, மிருது.
நுக்காங்குலை - காய்விழுந்த பனங்குலை.
நுக்கு - எட்டிமரம், நுக்கென்னேவல், நுங்கு, பொடி.
நுக்குடம் - காஞ்சிறை.
நுங்கல் - பருகல், விழுங்கல்.
நுங்கு - நுங்கென்னேவல், பனையினிளங்காய்.
நுங்குக்கண் - நுங்கிற்கண்.
நுங்குதல் - குடித்தல், விழுங்குதல்.
நுங்கை - உன்றங்கை, உன்றாய்.
நுசுப்பு - இடை.
நுசை - சிவதைவேர்.
நுடக்கம் - தள்ளாட்டம், நுட்பம், முடக்கம், வளைவு.
நுடக்கு - முடக்கு.
நுடங்கல் - நுடங்குதல்.
நுடங்கு - நுடக்கம், நுடங்கென்னேவல்.
நுடங்குதல் - ஆடல், துவளல், முடங்கல்.
நுட்பம் - எளிது, ஓரலங்காரம், அது குறிப்பாற் கருத்தறிவித்தல், சூட்சம், சொற்பம், திட்பம், நுண்மை.

நுட்பவுரை - நுண்ணியதாய்விளக்குமுரை.
நுணக்கம் - நுணங்கல்.
நுணங்கல் - துவளல், நுண்மை, முடங்கல்.
நுணங்கியோர் - அறிவுடையோர்.
நுணங்கு - தேமல், நுணங்கென்னேவல், நுண்மை.
நுணங்குதல் - நுண்மையாதல், வளைதல், வாடல்.
நுணலை - ஒருமீன், தவளை.
நுணல் - தவளை, தவளையினோர்பேதம்.
நுணவு - தணக்கமரம், நுணாமரம்.
நுணவை - தணக்கமரம்.
நுணா - ஒருமரம்.
நுணாக்காய் - கிரந்தி, ஒருகிரந்தி.
நுணாசுதல் - தடவுதல்.
நுணாவுதல் - தடவித்தெரிதல்.
நுணி - நுணியென்னேவல், நுதி.
நுணித்தல் - குணம், நுணுக்கல்.
நுணுகு - நுணுகென்னேவல், நுண்மை.
நுணுகுதல் - நுண்மையாதல்.
நுணுக்கம் - அடக்கம், சூக்ஷ்சம், கூர்மை, நுண்மை.
நுணுக்கல் - நுண்மையாக்கல்.
நுணுக்கு-அற்பம், எழுத்துக்குணுக்கம், நுணுக்கென்னேவல்.
நுணுக்குதல் - நுணுக்கல்.
நுணுங்கல் - நுண்மை.
நுணுங்கு - நுணுங்கென்னேவல், நுண்மை.
நுண் - அணு, நுண்மை.
நுண்ணறிவு - நுண்ணியபுத்தி.
நுண்ணிச்சிறை - கொசுக்கட்டைக்குருவி.
நுண்ணிடை - சிற்றிடை, பெண்.
நுண்ணிமை - நுட்பம்.
நுண்ணியது - நுண்மையானது.
நுண்ணியர் - அறிவுடையோர், நுட்பமானவர், பெரியோர், மந்திரிகள்.
நுண்ணுணர்வு - கூறிய அறிவு.
நுண்பிண்டி } புழுதி.
நுண்பொடி } புழுதி.
நுண்பொருள் - நுட்பமானகருத்து, நுண்ணியபொருள்.
நுண்பொறிவெள்ளை - சிலமரையினேறு.
நுண்மணல் - மெல்லியமணல்.
நுண்மருங்குல் - நுண்ணிடை.
நுண்மை - கூர்மை, நுட்பம், நேர்த்தி.
நுதம் - தோத்திரம்.
நுதம்புதல் - நனைந்திளகுதல்.
நுதலணி - சுட்டி.
நுதலல் - கருதல், குறித்தல்
நுதலிப்புகுதல் - முப்பத்திரண்டுத்தியினென்று, அது சொல்வனென்று கூறிப் புகுதல்.
நுதலுதல் - நுதலல்.
நுதல் - சொல், நுதலென்னேவல், நெற்றி, புருவம்.
நுதன்விழியன் } சிவபெருமான்.
நுதற்கண்ணன் } சிவபெருமான்.
நுதற்சுடிகை - சுட்டி.
நுதனோட்டன் - சிவபிரான்.
நுதி - புகழ், முனை, வணக்கம்.
நுதுத்தல்-அடக்கல், அவித்தல், அழித்தல்.
நுதுப்பு - தணிப்பு.
நுந்துதல் - தள்ளுதல், தூண்டுதல்.
நுந்தை - உங்கடந்தை.
நுபம் - எருக்கு.
நுமர் - உம்மவர்.
நுமள் - உம்மவள்.
நும்-விரவுத்திணைமுன்னிலைப்பன்மை, சாரியை (உ-ம்) எல்லீர் நும்மையும்.
நும்பி - உம்பி.
நும்மோர் - உம்மவர்.
நுரு-நொரு, மூளியில்மூளைக்குமட்டம்.
நுரை - குமிழி, நீர்முதலியவற்றினுரை, நுரையென்னேவல், வெள்ளை, வெண்ணெய்.
நுரைத்தல் - நுரைக்குதல்.
நுரைப்பீர்க்கு - ஒருபீர்க்கு.
நுரையீரல் - ஈரலிலோர்வகை.
நுலையிலி - [illegible]மை.
நுவணம் } கல்விநூல், தினைமாவு, நுண்மை, பஞ்சினூல்.
நுவணை } கல்விநூல், தினைமாவு, நுண்மை, பஞ்சினூல்.
நுவலல் - சொல்லுதல்.
நுவலாநுவற்சி - ஓலங்காரம்.
நுவலுதல் - நுவலல்.
நுவல் - சொல், நுவலென்னேவல்.
நுவல்கை - சொல்லுதல்.
நுவற்சி - சொல்லுகை.
நுழாய்ப்பாக்கு - முதிராப்பாக்கு.
நுழுந்தி - நழுவி.
நுழுந்துதல் - திருடுதல், நகர்தல், நழுவுதல், பதுங்குதல்.
நுழுவல் - நழுவல், நுழாய்ப்பாக்கு.

நுழுவுதல் - நழுவுதல்.
நுழை - நுண்மை, நுழையென்னேவல், நுழைவாயில், பலகணி, துவாரம்
நுழைகடைவை - நுழைகண்டாயம்.
நுழைச்சல் - எழு, நுழைத்தல்.
நுழைசற்புலு - எழுபது.
நுழைதல் - சாடைசொல்லுதல், நுழைக்குதல், மட்டுக்கட்டுதல்.
நுழைத்தல் - நுழைதல், நுழைவித்தல்
நுழைநரி - ஒருநரி.
நுழைவாயில் - சிறுவாயில்.
நுழைவு - கூரியபுத்தி.
நுளம்பு - கொசுகு, மின்மினி.
நுளும்புதல் - அசட்டைபண்ணுதல்.
நுளை - ஈனம், குருடு.
நுளைச்சி - நெய்தனிலப்பெண்.
நுளையர் - நெய்தனிலமாக்கள்.
நுள் - கிள்ளு, நுள்ளென்னேவல்.
நுள்ளான் - ஓரெறும்பு.
நுள்ளு - நுள்.
நுள்ளுதல் - கிள்ளுதல்.
நுனி - நுண்மை, நுனியென்னேவல், முனை.
நுனித்தல் - உற்றாராய்தல், கூராக்கல்.
நுனித்துநோக்கல் - கூர்மையாய்ப் பார்த்தல்.
நுனிப்பந்தி - கடைப்பந்தி.
நுனை - முனை.
நுன் - உனது.

---

## நூ



நூ - ஆபரணம், ஓரெழுத்து, நூவென்னேவல்.
நூக்கம் - தோதகத்திமரம், நூக்கு.
நூக்கல் - செலுத்தல், தள்ளல், நெய்வார் கருவியினொன்று.
நூக்கு - தள்ளு, நூக்கென்னேவல், நொய்.
நூக்குதல் - செலுத்துதல், தள்ளுதல்.
நூங்கு - நூங்கென்னேவல், பெருமை, மிகுதி.
நூங்குதல் - பெருமையாயிருத்தல், மிகுதியாயிருத்தல்.
நூடி - சிற்றேலம்.
நூதநசாலி - புதுநெல்.
நூதநமணம் - புதுமணம்.
நூதநவிவாகம் - புதுமணம்.
நூதநவஸநம் - புதுவஸ்திரம்.
நூதநவஸ்திரம் - புதியஆடை.
நூதல் - அவிதல்.
நூதநகாரன் - நூதனச்செய்கையுள்ளவன்.
நூதநசட்டம் - புதிய ஏற்பாடு.
நூதனத்துவம், நூதனம் - புதுமை.
நூதனி - நூதனகாரன்.
நூத்தல் - நொதுத்தல்.
நூபம் - இடபவிராசி, எருக்கு, எருது.
நூபுரம் - காற்சிலம்பு, பாதகிண்கிணி.
நூப்பு - தணிப்பு.
நூரல் - அவிதல், ஆறல், பதனழிதல்.
நூர்த்தல் - அணைத்தல், ஆற்றல்.
நூலச்சு - கம்பியிழுக்கு, மச்சு.
நூலறிவு - கல்வியறிவு.
நூலாசிரியன் - நூலாக்கியோன்.
நூலாதாரம் - முதல்புத்தகம்.
நூலான்புடை - ஓட்டடை.
நூலான்பூச்சி - சிலந்திப்பூச்சி.
நூலியாப்பு - நூலினிடத்தியாப்பமைக்கும் விதம், அது தொகுத்தல் தொகைவிரி மொழிபெயர்ப்புவிரித்தல்.
நூலில்லாமாலை - வைப்புக்கட்டு.
நூலிழந்தாள் - அமங்கலி.
நூலிழைத்தல் - நூனூற்குதல்.
நூலுண்டை - நூற்சுருள்.
நூலுத்தி - தந்திரவுத்தி.
நூலுரைப்போன் - உபாத்தி.
நூலுரையுணர்வோர் - ஒல்லுநர்.
நூலுறிஞ்சி - நெய்வார்கருவியினொன்று.
நூலேணி - கயிற்றேணி.
நூலோடுதல் - தையலினூல்விட்டுப் பம்முதல்.
நூலோர் - அறிஞர், பார்ப்பார், மந்திரிகள்.
நூல் - ஆண்குறி, ஆலோசனை, இழை, எண்ணல், ஏற்றநூல், கல்விநூல், குறியைப்பற்றிய நரம்பு, சாஸ்திரம், நூலென்னேவல், பஞ்சிநூல், பூணூல், நாடகத்தமிழ்நூல்களுளொன்று.
நூல்சேர்த்தல் - நூல்பதனிடுத்தல்.
நூல்போடுதல் - நேர்பிடிக்கக் கயிறடித்தல்.

நூல்யுத்தி - நூலுத்தி.
நூல்வலை - நூலினன் முடியும்வலை.
நூல்வல்லோர் - அறிஞர், மந்திரிகள்.
நூல்வழக்கு - செய்யுள்வழக்கு.
நூல்விடுதல் - சிலம்பி முதலிய நூலுண்டாக்கல்.
நூவு - எள்.
நூழல் - நூறல்.
நூழிலாட்டு - கொலை,மெய்புதைபடை பறித்து மாற்றாரை யிரித்தல்.
நூழிலாட்டுதல் - கொல்லுதல்.
நூழில் - குவித்தல், கொடிக்கொத்தான், கொலை, தன்மெய்புதைந்தபடையைப் பறித்து நிற்கை, படர்கொடி, யானை.
நூழை - துவாரம், நுண்மை.
நூறல் - அழித்தல்.
நூறுவிரம் - இலட்சம்.
நூறு - ஓரெண், நூறென்னேவல்.
நூறுதல் - அழித்தல், நசுக்குதல்.
நூறை - மலங்குமீன்.
நூற்கயிறு - நூலினாற்றிரிக்குங்கயிறு.
நூற்கருத்து - நூற்பொருள்.
நூற்கழி - நூற்பந்து.
நூற்குச்சு - நூற்குச்சம்.
நூற்குதல் - நூற்றல்.
நூற்சாடு- நூலினாற்செய்யுமோர்கயிறு.
நூற்சுருள் } நூற்பந்து.
நூற்சுருளை }
நூற்பகந்திரம் - நூலடியிற்கட்டு.
நூற்படுகு - நெசவுபா.
நூற்பயன் - நூலினதுபலன், அவை அறம், இன்பம், பொருள், வீடு.
நூற்பவுந்திரம் - நூற்பகந்திரம்.
நூற்பழக்கம் - கல்விப்பயிற்சி.
நூற்பா - சிலவகையெழுத்துக்களாகிய சொற்றொடராய்ப் பலவகைப் பொருள்களை விளக்கித்திடம் நுட்பம் மைந்துவருவது.
நூற்பாவகவல் - இலக்கணசூத்திரம்.
நூற்புறனடை - நூலின்புறத்தினடைக்குங் காப்புமொழி.
நூற்பொருள் - நூலிற் சொல்லப்படுபொருள்.
நூற்றந்தாதி ஒருபிரபந்தம் அதுவெண்பா நூறினானேனுங் கலித்துறை நூறினானேனு மந்தாதித்துப்பாடுவது.
நூற்றல் - நூற்குதல்.
நூற்றுறு - நாழுழி.
நூற்றுறை-நூற்கருத்து, நூற்பொருள்.
நூனம் - குறைவு, நிச்சயம்.
நூனயம்-கல்விநயம், நூலின்மேன்மை.
நூனயம் - ஊனயம்.
நூனதிகம் } குறைவு நிறைவு.
நூனதிக்கம் }
நூனழி - நாடா.
நூனுட்பம் - நூலினது நுண்மை.
நூன்முகம் - நூற்றுறை, பாயிரம்.
நூன்முடிபு } நூலினது பொருளேக்கம்.
நூன்முடிவு }

---

# நெ



நெகல் - கனிதல், நெகித்தல்.
நெகிடி - நெருப்புக்குவை.
நெகிழம் - பாதச்சிலம்பு.
நெகிழி - ஞெகிழி.
நெகிழிசை - வல்லெழுத்துவராது மற்றீரின வெழுத்தி னொன்றான் முடியுஞ்செய்யுள்.
நெகிழுதல் - நெகிழ்தல்.
நெகிழ்ச்சி - இளக்கம், தளர்ச்சி.
நெகிழ்தல் - அழுந்தல், அவிழ்தல், இரங்குதல், இளகுதல்,உருகுதல்,குழைதல், தளரல், நழுவல், நுகைத்தல், பிரிதல், பொசிதல், பொடியாதல், மலர்தல், விட்டுநீங்குதல்.
நெகிழ்த்தல் } அவிழ்த்தல்,உருக்கல், நீக்கல், நசுக்கல், பிரித்தல், மலர்த்தல்.
நெகிழ்த்துதல் }
நெகிழ்ப்பு - நெகிழ்த்தல்.
நெகிழ்வு - குறைவு, தளர்வு, நுகைவு, பிரிவு, மலர்தல், விட்டுநீங்கல்.
நெகிளம் - ஞெகிளம்.
நெகுதல் - உருகுதல், கரைதல், நுகைதல்.
நெக்கல் - உக்கல், உருகுதல், கனிதல், கனிந்தது, கிளப்பல், தளர்ந்தது, தள்ளல்.
நெக்கு - நெக்குதல்,நெக்கென்னேவல்.
நெக்குடைதல் - நெகிழ்ந்துருகுதல்,நெகிழ்ந்துவிள்ளுதல், மனம் உருகுதல்.

நெக்குதல் - உருகுதல், கனிதல், இளப்பல், தள்ளல், நுகைதல், தாத்தியடித்தல், விள்ளுதல்.
நெக்குருகுதல் - விண்டுருகுதல்.
நெக்குரோதம் - நியக்குரோதம்.
நெக்குவிடுதல் - நுரைதல், விண்டுடைதல்.
நெசவு - நெய்குதல்.
நெசவுகாரர் - நெய்வார்.
நெச்சி - கடுக்காய்.
நெஞ்சகம் - நெஞ்சு.
நெஞ்சடைப்பு, நெஞ்சடைவாதம் - ஒருநோய்.
நெஞ்சம் - மனம், மார்பு.
நெஞ்சழிதல் - ஏங்கல், மதிமயங்கல்.
நெஞ்சறிதல் - மனமறிதல்.
நெஞ்சறிவிளக்கம் - ஒருநூல்.
நெஞ்சறிவுறுத்தல் - மனத்துக்கறிவித்தல்.
நெஞ்சன் - ஓர்மி.
நெஞ்சாங்கட்டை - சவஞ்சுடுவதற்கு நெஞ்சில் வைக்குங்கட்டை, துராலோசனை, நெஞ்செலும்பு.
நெஞ்சாங்குலை - ஈரற்குலை.
நெஞ்சாங்குற்றி - நெஞ்சாங்கட்டை.
நெஞ்சாங்கொழுந்து - நெஞ்சாங்குலை.
நெஞ்சிடி - நெஞ்சுபதறுதல்.
நெஞ்சிற்கல் - கவலை, துக்கம்.
நெஞ்சு - ஒருமம், துணிவு, தைரியம், தொண்டை, மனம், மார்பு.
நெஞ்சுக்கோழை - ஒருநோய்.
நெஞ்சுத்தடிமல் - நெஞ்சிற் சளிப்பிடியுண்டாந்தடிமல்.
நெஞ்சுத்துணிவு - மனவுறுதி.
நெஞ்சுநோ - நெஞ்சினோ, மனவிதனம்.
நெஞ்சுவிடுதூது - மெய்கண்ட சாத்திரத்தொன்று.
நெஞ்சூன்றி - ஒருபக்கம் வளைந்துமறுபக்கம் மிதந்திருப்பது.
நெஞ்செறிச்சல் - பொருமை.
நெஞ்செறிதல் - எரிச்சற்படல், பொருமைப்படல், மனநேர்ப்படல்.
நெஞ்செறித்தல் - உடற்பிசகால் வரும் ஒருநோய்.
நெஞ்செரிப்பு - நெஞ்செரித்தல், பொருமை.
நெஞ்சோர்மம் - நெஞ்சுத்துணிவு.
நெடநெடெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
நெடி - சிள்வண்டு, நாற்றம், நெடியென்னேவல், மிளகாயின்காரம்.
நெடிசு - நெடிது.
நெடித்தல் - பொழுதுநீட்டித்தல்.
நெடியவட்டம் - மரவட்டணம்.
நெடியவன் - நெட்டையன், விட்டுணு.
நெடியன், நெடியான் - நெட்டையன்.
நெடியோன் - திரிவிக்கிரமனுனவிட்டுணு, துளசி, மூக்கிரட்டை.
நெடியோன்குன்றம் - வேங்கடமலை, இது தமிழ்வழங்கு நிலத்தின் வடவெல்லையாயுள்ளது.
நெடிலடி - ஐஞ்சீரடுத்துநிற்பது.
நெடிலி - கடற்பறவையினென்று.
நெடிலெதுகை - அடிதோறு நெடிலெழுத்தெதுகையாய்வருவது.
நெடில் - நீளம், நெட்டெழுத்து, மூங்கில்.
நெடிற்றொடர் - நெட்டெழுத்தொடர்ந்துவருவது.
நெடின்மோனை - அடிதோறு முதலெழுத்து வருவது.
நெடு - நீண்ட.
நெடுகலும் - நீளத்திலே.
நெடுகல் - நீளுதல், போதல்.
நெடுகுதல் - உயருதல், சாதல், நீளித்தல், நீளுதல்.
நெடுக்கு - நீட்சி.
நெடுங்கடல் - கரையடுத்தகடல்.
நெடுங்கணக்கு - அரிவரி, பழங்கடன், பெருந்தொகை.
நெடுங்கணவாய் - ஒருகணவாய்.
நெடுங்கண்விழுதல் - பன்னமொருபக்கம்நெடுகி மறுபக்கந் தளர்ந்திருத்தல்.
நெடுங்கதை - பழங்கதை.
நெடுங்கயிற்றில்விடுதல் - நாட்கடத்துதல்.
நெடுங்கரை - நீண்டகரை.
நெடுங்கல்நின்றமன்றம் - காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள ஐவகைமன்றத்தொன்று, இது நஞ்சுண்டோர், பித்தேறினோர், பேய்பிடிக்கப்பட்டோர் ஆகிய இவர்கள் துன்பத்தை யொழிப்பது.
நெடுங்கழுத்தன் - ஒட்டகம்.
நெடுங்காலம் - வெகுகாலம்.

நெடுங்கிள்ளி - கோவூர் கிழாரால் பாடப் பட்டவன், இவன சோழபரம்பரை யிற் சேர்ந்தவன்.
நெடுங்குடர் - மணிக்குடர்.
நெடுங்குரலன் - கழுதை.
நெடுங்குரல் - பெருங்குரல்.
நெடுங்குளம் - பாண்டிநாட்டி லுள்ள வோரூர், இது அக்காலத்தில் உறை யூரிலிருந்து மதுரைக்குப் போகும் வழியிலுள்ளது.
நெடுங்கேடு - தீராதகேடு.
நெடுங்கோணி - ஒட்டகம்.
நெடுஞ்சட்டை - அங்கி.
நெடுஞ்சாணை, நெடுஞ்சாண்கிடை } நெடுங்கிடை.
நெடுஞ்செழியன் - மதுரையி லிருந்த வொருபாண்டியன். இவன் ஆராயா து கோவலனைக் கொலை புரிவித்துக் கண்ணகிக்கு வழக்கிற் றோற்றுத் தனக்குண்டான பழியை நினைந்து உயிர்விட்டவன்.
நெடுத்தல் - நீளுதல், நெடுக்குதல், நெ டும்பொழுதாதல்.
நெடுநல்வாடை - நெடுஞ்செழியனை நக் கீரர் பாடியது. இது பத்துப்பாட் டுள் ஏழாவது.
நெடுநாவை - நீண்டநாவை.
நெடுநாள் - வெகுநாள்.
நெடுநீட்டு - வெகுநீளம்.
நெடுநீர் - கடல், தாமதம்.
நெடுநீளம் - நேர்நீளம்.
நெடுநெடுகுதல், நெடுநெடுத்தல் } நெடுகநீளுதல், நெடுகவளர்தல்.
நெடுநேரம் - வெகுநேரம்.
நெடுந்தகை - பெரியோன்.
நெடுந்தகைமை - மேன்மை.
நெடுந்தட்டு - ஒரு கடுதாசிப்படம்.
நெடுந்தாயம்-அடுத்தடுத்துவிழுந்தாயம்.
நெடுந்துயில் - சாவு,நீண்டதூக்கம்.
நெடுந்தூரம் - வெகுதூரம்.
நெடுந்தெரு - இராசவீதி, நீண்டதெரு.
நெடுப்பம் - நீளம்.
நெடுப்பிணை - வங்கமணல்.
நெடுப்பு - நீளிப்பு.
நெடுமழை - பெருமழை.
நெடுமன் - நீண்டது, பாம்பு.
நெடுமால் - விட்டுணு.
நெடுமாறநாயனர் - திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரால் சுரநோயும் கூ னும் தீரப்பெற்றுச் சமணசமயம் வி டுவித்துச் சைவசமயப் பிரவேசமா ன கூன்பாண்டியனர், இவரே வட தேயத் தாசரைத் திருநெல்வேலிப் போர்க்களத்தில் வென்று, சைவசம யம் வளரும்படி நெடுங்காலம் அர சியற்றினவர்.
நெடுமி - நீண்டமரம்,நீளியபெண்,பனை, மழை.
நெடுமூரல் - ஒருமீன்.
நெடுமுழம் - ஒருவகைப்புடவை.
நெடுமூச்சு - பெருமூச்சு இது யாக்கைக் குற்றத்தொன்று.
நெடுமை - அமிர்தம், உயரம், நீளம், பெண்மயிர்.
நெடுமொழி - தன் மேம்பாட்டுரை.
நெடும்பயணம் - நெடும்பிரயாணம், மர ணம்.
நெடும்பழக்கம் - வெகுகாலச்சாதனை.
நெடும்பழி - பெரும்பழி.
நெடும்பா - ஆடாதோடை.
நெடும்பார்வை - கண்ணூன்றிப் பார்த் தல்.
நெடும்புகழ் - மிகுபுகழ்.
நெடும்புரிவிடுதல் - எய்த்தல், கடத்தல்.
நெடும்பொழுது - நெடுநேரம்.
நெடுவல் - நீளி.
நெடுவாய் - உள்ளாமீன்.
நெடுவாலூடகம், நெடுவாற்றிரளி } ஒருமீன்.
நெடுவிரல் - ஆடாதோடை.
நெடுவேர் - சாயவேர்.
நெடுவேளாதன் - குன்றூர் கிழார் மக னாரற் பாடப்பட்டவன்.
நெடுவேள்குன்றம் - திருச்செங்குன்று, இது சோழநாட்டிலுள்ளது.
நெட்டநெடியது - மிகநெடியது.
நெட்டம் - மிளகு.
நெட்டாயம் - நீளம்.
நெட்டி - ஒரு புல் கிடைச்சி, சடை, நெட்டு, நெட்டை அது யாக்கைக் குற்றமைந்தி னொன்று, முளி.
நெட்டிக்கோரை - ஒருபுல்.
நெட்டிசை - நீண்டொலிக்குமிசை.
நெட்டிப்பூ - கிடைச்சியிற்செய்தபூ.
நெட்டிமாலை - கிடைச்சிமாலை.

நெட்டிமுரிதல் - நெட்டைமுரிதல்.
நெட்டிமையார் - பாண்டியன் பல்பாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய புலவர்.
நெட்டிலிங்கு - அசோகு.
நெட்டில் - மூங்கில்.
நெட்டு - இணுக்கு, காம்பு, குலை, சீத்தல், தள்ளுதல், நெட்டென்னேவல்.
நெட்டுக்கட்டுதல் - குலைகட்டுதல்.
நெட்டுதல் - சீத்தல், தள்ளுதல்.
நெட்டுயிர் - நெட்டொலி யுயிரெழுத்து அது இரண்டு மாத்திரை யொலிப்பது.
நெட்டுயிர்த்தல் - பெருமூச்சுவிடுதல்.
நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு.
நெட்டுரு - நீடியவுருபு, வாய்ப்பாடம்.
நெட்டுருப்படுத்துதல், நெட்டுருப்பண்ணுதல் } வாய்ப்பாடமாக்கல்.
நெட்டேத்தி, நெட்டேதி } ஒருவித சங்கு.
நெட்டேரம் - நிட்டேரம்.
நெட்டெழுத்து - உடல்வாசகம், கையொப்பம், நீட்டு, நெடிலெழுத்து.
நெட்டெழுத்துக்காரன் - வாசகமெழுதுவோன்.
நெட்டை - நெடுமை, நெட்டி, முழுவெலும்பு.
நெட்டைக்கங்காளம் - நெடுமையுள்ளது, நெட்டி.
நெட்டைச்சி - நெடுமி.
நெட்டையன் - நெடுவல்.
நெட்டோடை - நீண்டவோடை.
நெண்டுதல் - நெளித்தல்.
நெத்தகர் - ஒருபூடு.
நெத்தலி, நெத்தில் } நெய்த்தோலி.
நெம்பு - இரு கூர்ஆணி, ■ணிப்பழு, எற்றமடலாணி, நென்பு, மிண்டி, விலாவெலும்பு.
நெம்புதல் - உயர்த்துதல், குளப்பல்.
நெய் - இரத்தம், சித்திரைநாள், நறுநெய் இது பஞ்சகௌவியத்தொன்று, நிணம், நெய்யென்னேவல்.
நெய்க்கடல் - சத்தசமுத்திரத்தொன்று.
நெய்க்குறி - தேரையர்செய்த மூத்திர பரீக்ஷை கூறும் நூல்.
நெய்க்கொட்டான் - பூவந்திமரம்.
நெய்க்கொடை - பூவந்திப்பழம்.
நெய்ச்சட்டி - செங்கழுநீர், பணிகாரச்சட்டி, பவளக்குன்றிமணி.
நெய்ச்சாதம் - நெய்ச்சோறு.
நெய்ச்சிட்டி - சிற்றிலைச்செடி.
நெய்ச்சுட்டி - ஒருகீரை.
நெய்தலுரிப்பொருள் - இரங்கல், இரித்தல், ஊடல், பிரிதல், புணர்தல் இவற்றினிமித்தம்.
நெய்தல் - ஆடைமுதலியநெய்தல், ஆம்பல், இரங்குதல், ஐந்நிலத் தொன்று அது கடலுங் கடல் சார்ந்த விடமும், சாப்பறை, புலர்ந்தோர் புலம்பல்.
நெய்தல்விளைவு - உப்பு, மீன்.
நெய்தற்கருப்பொருள் - நெய்தனில விளைபொருள்.
நெய்தற்குப்பொருள் - நெய்தனிலத்துற்பத்திப் பொருள்கள் அவை வருணன் முதற்கடலாட லீறுய பதினன்குமாம்.
நெய்தற்பதி - நெய்தற்றலைவன், நெய்தனிலத்தூர்.
நெய்தற்பறை - சாப்பறை, நெய்தனிலப்பறை.
நெய்தற்புரம் - தபுதாரநிலை, தாபதநிலை.
நெய்தற்றலைவன் - நெய்தனிலத் தலைவன், வருணன்.
நெய்தற்றிணை - நெய்தனிலம்.
நெய்தற்றிறம் - நெய்தற்பண்.
நெய்தற்றெய்வம் - வருணன்.
நெய்தனிலத்தலைவன் - சேர்ப்பன்.
நெய்தனிலத்தியாழ் - விளரியாழ்.
நெய்தனிலத்தினீர் - உவர்நீர்.
நெய்தனிலத்தூர் - பாக்கம்.
நெய்தனிலப்பறவை - கடற்காக்கை.
நெய்தனிலப்பறை - பம்பை.
நெய்தனிலப்பெண் - அளத்தி, நுளைச்சி, பரத்தி.
நெய்தனிலமரம் - அடம்பு, கோங்கு, தாழை, புன்னை, முள்ளி.
நெய்தனிலமாக்கடொழில் - கடலாடல், மீன், உப்புப்படுத்தல்.
நெய்தனிலமாக்கள் - அளவர், நுளையர், பரதவர்.
நெய்தன்மாக்களுணு - விலைக்குப் பெற்றன.

நெய்தன்மாக்கள் - நெய்தனிலமாக்கள்.
நெய்தன்முதற்பொருள் - கடலுங்கடல் சார்ந்தவிடமுஞ் சிறு பொழுதாய் வெற்பாடும் பெரும்பொழுதாறும்.
நெய்தை - பெருமை.
நெய்த்தல் - கொழுத்தல்.
நெய்த்துடுப்பு - ஆகுதிவிடுந்துடுவை.
நெய்த்தோர் - இரத்தம்.
நெய்த்தோலி - ஒரு பொடிமீன்.
நெய்நெட்டி - சம்பம்புல்.
நெய்ப்பற்று - நெய்ப்பிடி.
நெய்ப்பீர்க்கு - நுரைப்பீர்க்கு.
நெய்ப்பு - கொழுப்பு, சிதல்.
நெய்மீன் - வெள்ளிருமீன்.
நெய்யடிசில் - நெய்ச்சோறு.
நெய்யரி - பன்னுடை.
நெய்யல் - நெசவு, நெய்குதல்.
நெய்யற்கயிறு - நெய்வார் கருவியில் [ஒன்று.
நெய்யன்னம் - நெய்ச்சோறு.
நெய்யாடுதல் - நெய்பூசிமுழுகுதல்இது பிள்ளைபெற்றுச் சடங்கிலொன்று.
நெய்வண்டி - நெய்த்தவண்டி.
நெய்வார் - நெசவுகாரர்.
நெய்விழா - நெய்யாடுதல்.
நெய்விளக்கு - நெய்வார்த் தெரிக்கும் விளக்கு, மாவிளக்கு.
நெய்வு - நெசவு.
நெய்வைத்தல் - கொழுப்பேறுதல்.
நொடு - வாசிக்ககடினமானது.
நெரி - நெரியென்னேவல், நெரிவு, புடைவை முரிப்பு, புரி, மடிப்பு.
நெரிகுழல் - சுரிகுழல், பெண்.
நெரிகொட்டை - நெருங்குகொட்டை.
நெரிசல் - மனக்குறை, வெறுப்பு.
நெரிஞ்சி, நெரிஞ்சில் } ஒரு முட்பூண்டு இது தசமூலத்தொன்று.
நெருஞ்சின்முள் - ஒரு யுத்தாயுதம்.
நெரிதால், நெரிதல் } உடைதல், ஓடல், சாய்தல், நசிதல், நொருங்குதல்.
நெரித்தல் - நசுக்குதல், திமிட்டல், நொறுக்குதல், வருத்தல்.
நெரிநெட்டி, நெரிநெட்டிக்கோரை } சம்பம்புல்.
நெரிபடுதல் - நசுங்குதல்.
நெரிப்டித்தல் - புடைவைமுரிப்புவிடல்.
நெரிபுருவம் - கண்புருவம்.

நெரிப்பு - நெரிதல்.
நெரிமயிர் - சுரிமயிர்.
நெரிமீட்டான் - ஒருபூண்டு.
நெரியாசம், நெரியாசி } எரிகாசு.
நெரிவருண்சுக்கிரன் - கண்ணோயுள் ஒ [ன்று.
நெரிவிடுதல் - நெரிபிடித்தல்.
நெரிவு - நெரிதல், பகை.
நெரிக்கடி - இக்கட்டு, கடுமை, பலவந்தம், வருத்தம்.
நெருக்கட்டியெனல் - சீக்கிரக்குறிப்பு.
நெருக்கம் - இடைஞ்சல், இடைவிடாமை, ஒடுக்கம், கிட்டுமானம், கொடுமை, நெருங்குதல்.
நெருக்கல் - நெருக்குதல்.
நெருக்கவாரம்-தரித்திரம்,நெருக்கிடை.
நெருக்கிடை - குரூரம், தரித்திரம், நெருக்கம்.
நெருக்கு - நெருக்கம், நெருக்கிடை, நெருக்கென்னேவல்.
நெருக்குண்ணுதல் - நெருக்குப்படுதல், நெருங்குதல்.
நெருக்குதல் - ஒடுக்குதல், கடினம்பண்ணுதல், நெருங்கச்செய்தல், பலவந்தம் பண்ணுதல்.
நெருக்குவழி - அருங்கைவழி.
நெருக்குவாரம் - நெருக்கிடை.
நெருக்கெனல் - சீக்கிரக்குறிப்பு.
நெருங்கப்பிசைதல் - இருகப்பிசைதல்.
நெருங்கல் - உறுதிச்சொல், கொல்லல் செறிவு.
நெருங்குதல் - உறுதிப்படுதல், கடினமாதல், கிட்டுதல், கொல்லல்.
நெருஞ்சி, நெருஞ்சில் } நெரிஞ்சில், ஒரு முட்செடி.
நெருடல் - இழைபொருத்தல், உறுதித்தடவல், வஞ்சித்தல்.
நெருடன் - வஞ்சகன்.
நெருடு - இழையின் பொருத்து, நெருடென்னேவல், வஞ்சனை.
நெருடுதல் - நெருடல்.
நெருட்டுப்புத்தி - வஞ்சகப்புத்தி.
நெருகல் - சற்றுமுன், முன்னைநாள்.
நெருநெருத்தல் - ஒலிக்குறிப்பு,சீக்கிரக்குறிப்பு.
நெருநெருப்பு - அடைசல், உள்வலி, ஒலிக்குறிப்பு.

நெருநெரெனல் - நெருநெருத்தல்.
நெருப்பன் - கடுங்கோபி, பொல்லாதவன்.
நெருப்பு - அக்கினி.
நெருப்புக்கண் - சிவனதுநெற்றிக்கண், தீயன்.
நெருப்புக்கண்ணன் - அக்கினிக் கண்ணன்.
நெருப்புக்கல் - காடிக்காரம், தீத்தட்டிக்கல், சக்கிமுக்கி.
நெருப்புக்கொளுத்துதல் - அநீதஞ்செய்தல், கோபங்கொள்ளுதல், தீக்கொள்ளுதல். [கு.
நெருப்புக்கொள்ளி - தீயன், தீயுருவிற
நெருப்புக்கோழி - தீக்கோழி, வான்கோழிச்சேவல்.
நெருப்புச்சட்டி - தீச்சட்டி.
நெருப்புச்சயநீர் - ஒரு திராவகம்.
நெருப்புச்சாணை - ஒரு சாணைக்கல்.
நெருப்புச்சிகை - அக்கினிக்கொழுந்து.
நெருப்புத்தண்ணீர் - எரிநீர்.
நெருப்புத்தழல் - தீக்கட்டி.
நெருப்புத்திரள் - தீத்திரள். [ணீர்.
நெருப்புத்திராவகம் - நெருப்புத்தண்
நெருப்புப்படுதல் - அழிதல், தீப்படுதல்.
நெருப்புப்பிடித்தல் - தீப்பற்றல்.
நெருப்புப்பொறி - தீப்பொறி.
நெருப்புமழை - அக்கினிமழை.
நெருப்புவட்டம் - அக்கினி மண்டலம்.
நெருப்புவிழுதல் - தீவிளைதல்.
நெருமுதல் - நருமுதல்.
நெரேலெனல் - ஒலிக்குறிப்பு.
நொர்க்குண்டி - நொச்சி.
நெல் - நெல்லு, வாகை.
நெல்லி - ஒருமரம். [கம்.
நெல்லிக்கந்தகம் - நெல்லிக்காய்க் கந்த
நெல்லிக்காய் - நெல்லிமரத்தின் காய் இது திரிபலையினொன்று, துவர்பத்துனு மொன்று.
நெல்லிக்காய்கந்தகம் - ஒருகந்தகம்.
நெல்லித்துத்தி - ஒருபூடு.
நெல்லிமுள்ளி - பெருநெல்லிவற்றல்.
நெல்லு - ஓரளவு, சாலி, நெற்பயிர்.
நெல்லூர் - ஓரூர்.
நெளி - ஒருவகைமோதிரம், நெளியென்னேவல்.
நெளிச்சலன் - வளைந்தவன்.
நெளிச்சல் - வளைதல்.
நெளிதம் - அற்புதம், இலேசு.
நெளிதல்-கழிதல், புரளுதல், வளைதல்.
நெளித்தல் - இறுமாப்புக்காட்டல், நெளிக்குதல்.
நெளிப்பு இறுமாப்பு, நெளித்தல், பரிகா
நெளியலன் - கூனன், வளையலன். [சம்.
நெளியல் - நெளிவுள்ளது.
நெளிர் - பேசலாலெழுமொலி.
நெளிர்தல் - பேசலாலெழுமொலி.
நெளிவு - வளைவு. [ப்பு.
நெறநெறெனல் - ஈரடுக்கொலிக் குறி
நெறி - ஒழுங்கு, கண்மண்டைக்குழி, கற்பு, கோவில், சன்மார்க்கம், சுளுக்கு, செவ்வை, நரப்புத்திரட்சி, நீதி, முறை, வழி, விதம்.
நெறிகேடன் - நெறிகெட்டவன்.
நெறிகேடு - முறைத்தவறு.
நெறிக்கல் - சுக்கான்கல்.
நெறிக்கோரை - ஒருபுல்.
நெறித்தல் - சிலிர்த்தல், செவ்வேநிற்றல், முறிப்புக்கொள்ளல்.
நெறிநிற்போன் - நன்மார்க்கத்தில் நிற்பவன்.
நெறிபிழைத்தல் - நெறிதவறுதல்.
நெறிப்படுத்தல் - ஒழுங்குப்படுத்தல், குணப்படுத்தல், வழிப்படுத்தல்.
நெறிப்பு - சிலிர்ப்பு, முரிப்பு.
நெறிமயிர் - சிலிர்த்தமயிர்.
நெறிமான் - நீதிமான்.
நெறிமை - நீதி.
நெறியிலார் - கீழ்மக்கள், நீதிகேடர்.
நெறியிலி - துன்மார்க்கன்.
நெறுக்கட்டியெனல் - ஒலிக்குறிப்பு.
நெறுக்கிடுதல், நெறுக்கெனல் } ஒலிக்குறிப்பு.
நெறுநெறுத்தல், நெறுநெறுப்பு, நெறுநெறெனல் } ஈரடுக் கொலிக்குறிப்பு.
நெறுமுதல் - நெருமுதல்.
நெற்கணக்கு - நெல்வாய்க்கணக்கு.
நெற்கழி - ஒருவகைநிலம்.
நெற்காணி - நெல்விளைநிலம்.
நெற்குவியல், நெற்குவை } நெற்போர்.
நெற்குறி - நெற்கொண்டு சொல்லும் ஒரு சோசியம்.

நெற்கூர் - நெல்வால்.
நெற்சப்பி - ஒருபுல்.
நெற்பயிர் நெல்விளைவு.
நெற்பரப்பு - பன்னிரண்டுகுழிகொண்ட நிலம்.
நெற்பழம் - மதத்தினல்வெடித்தநெல்.
நெற்பு - சீ, மெலிவு.
நெற்பூமி - நெற்சாணி.
நெற்போர் - நெற்குவை.
நெற்றலன் - செத்தன்.
நெற்றலி - ஒருமீன்.
நெற்றி - உச்சி, நுதல், படைவகுப்பு.
நெற்றிக்கண்ணன் - சிவபிரான்.
நெற்றிச்சுட்டி - ஓராபரணம், நெற்றியில் வெண்ணிறப்புள்ளி.
நெற்றிச்சுழி - நெற்றியிற் சுழிப்பு.
நெற்றிச்செகில் - செகிற்சுட்டியேறு.
நெற்றித்தலம் - நெற்றி.
நெற்றித்திலகம் - பொட்டு.
நெற்றிப்பட்டம் - ஓராபரணம்.
நெற்றிப்புருவம் - புருவம்.
நெற்றிப்பொட்டு - திலகம்.
நெற்றிமாலை - ஒருமாலை.
நெற்றிமுட்டு - கிட்டுமானம், சரிநேர், முன்புறம்.
நெற்றியிற்கல்லுவைத்தல்- ஓராக்கினை, நெருக்கிடை.
நெற்று - உலர்ந்தபழம், நெற்றென்னேவல்.
நெற்றுதல் - இடறுதல்.
நென்பு - பழு, மர ஆப்பு.
நென்னல் - முன்னைநாள்.



## நே

நே - ஒரெழுத்து, நேயம்.
நேசகன் - வண்ணன்.
நேசநாயனர் - சாதியிற் சாலியராகிய ஒரு சிவபத்தர். இவர் சிவனடியார்க்கு உடையும் கீளும் நெய்து கொடுக்குந் திருத்தொண்டு பூண்டு காம்பிலி நகரத்திலிருந்தவர்.
நேசம் - அன்பு.
நேசன் - அன்பன், சிநேகன்.
நேசி - அன்புள்ளான், நேசியென்னேவல்.
நேசித்தல் - அன்புவைத்தல்.
நேசிப்பு - அன்பு.
நேடல் } தேடல், விரும்பல்.
நேடுதல் }
நேத்தி - நேற்றி.
நேத்திரசம் - கண்ணீர்.
நேத்திரச்சதம் - கண்மடல்.
நேத்திரநோய் - கண்ணோய்.
நேத்திரபரியந்தம் - கடைக்கண்.
நேத்திரபிண்டம் - கண்விழி, பூனை.
நேத்திரபேஷஜம் - கண்வைத்தியம்.
நேத்திரப்படலம் - ஒருகண்ணோய்.
நேத்திரநோக்கம் - கண்பார்வை.
நேத்திரம் - கண், பட்டாடை, வேர்.
நேத்திரயோனி - இந்திரன்; சந்திரன்.
நேத்திராஞ்சநம் - கண்ணுக்கிடுமை.
நேத்திரரோகம் - கண்ணோய்.
நேத்திரவாயு - ஒருவாயு.
நேத்திரவிதி - நயனவிதி.
நேத்திரவீட்சணம் - கிருபையாய்ப்பார்த்தல்.
நேத்திரவைத்தியம் - நயனபரிகாரம்.
நேத்திரவைத்தியன் - கண்பரிகாரி.
நேத்திராஞ்சனம் - கண்மருந்து.
நேத்திராமயம் - கண்ணோய்.
நேத்திராம்பு - கண்ணீர்.
நேத்திராரி - கள்ளிமரம்.
நேத்திராவுடதம் - கண்மருந்து.
நேத்திரோற்சவம் - கண்ணுக்கு விருப்பமானது.
நேத்திரௌஷதம் - கண்மருந்து.
நேபம் - நீர்.
நேபன் - புரோகிதன்.
நேபாலிகை - ஒருபாஷாணம்.
நேபாளம் - ஒரு நச்சுமரம், தேயமைம்பத்தாறினென்று.
நேமகம் - நியமம்.
நேமநிட்டை - நியமநிட்டை.
நேமம் - அணைப்பு, சாயங்காலம், நியமம், நேரம், பங்கு, பிளப்பு, முறை, மேல், வேர், வேலி.
நேமி - கடல், சக்கரவாகப்புள், சக்கிரம், தேருருள், நேமியென்னேவல், பூமி, மூங்கில், மோதிரம், வட்டம்.
நேமிசந்தன - வேங்கை.
நேமித்தல் - நியமித்தல்.
நேமிநாதம் - தொண்டைநாட்டில்களத்தூரில் விளங்கிய குணவீரபண்டிதர்

என்னும் ஆருகதர் செய்த தமிழிலக்கண நூல், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் என்னு மிரண்டுமேயுள்ளது, இது தொண்ணூற்ருறு வெண்பாக்களால் முடிந்துள்ளது.
நேமிநாதன் - அருகன், கடவுள், திருமால், வருணன்.
நேமிப்புள் - சக்கரவாகப்புள்.
நேமியான் } விட்டுணு.
நேமியோன் }
நேமிவலயம் - பூமண்டலம்.
நேமிவலவன் - அரசன், கடவுள்.
நேயம் - அன்பு, எண்ணெய், நன்மை, நிலப்பனை, நெய், உறவு.
நேயன் - நேசன்.
நேர - உவமைச்சொல்.
நேரகாலம் - தற்காலம்.
நேரங்கடத்துதல் - பொழுதுபோக்கல்.
நேரங்கெட்டநேரம் - ஒவ்வாதசமயம்.
நேரசை - குற்றெழுத்தேனு நெட்டெழுத்தேனுந் தனித்தும் ஒற்றடுத்தும் வருவது.
நேரசைக்கலித்துறை - நேரசையாய்த் தொடங்கும் கலித்துறை.
நேரன்சாய்தல் - பொழுதுசரிதல்.
நேரடி - அளவடி.
நேரஸ்தன் - குற்றவாளி.
நேரம் - அபராதம், காலம், குற்றம், சமயம், தண்டிப்பு, நற்சமயம், பகலிற்பாதி.
நேரலர் - பகைவர்.
நேரல் - ஒத்தல்.
நேராக்கல் - சரிப்படுத்துதல்.
நேராதல் - இணங்குதல், சரியாதல்.
நேரார் - பகைவர்.
நேராளி - நேருள்ளவன்.
நேரி - சோழதேயத்தோர்மலை.
நேரிசம் - அம்பு, எறிபடை.
நேரிசைக்கலிப்பா - கலிப்பாவினோர் பேதம்.
நேரிசைச்சிந்தியல்வெண்பா - மூன்றடியாய் நேரிசை வெண்பாப்போல விரண்டாமடியினிறுதி தனிச்சொற் பெற்றுவருவது.
நேரிசையாசிரியப்பா - ஈற்றயலடிமுச்சீராய் மற்றையடியெல்லா நாற்சீராய் வருவது.
நேரிசையொத்தாழிசைக்கலிப்பா - தரவுதாழிசை தனிச்சொல் சுரிதகமெனு நான்குறுப்புக்கொண்டு வருவது.
நேரிசைவெண்பா - நான்கடியாய் இரண்டா மடியினிறுதி தனிச்சொல்லால் வர அடிமுழுதும் ஒரொதுகையாயேனும் முன்னிரண்டும் ஒரொதுகையும் பின்னிரண்டு மற்றோரொதுகையாயேனும் வருவது.
நேரிடுதல் - எதிர்த்தல், எதிர்ப்படுதல், சம்பவித்தல், தொடங்குதல்.
நேரிட்டபடி - எழுந்த மரணம்.
நேரியது - நேரானது.
நேரியன் } சோழன், நுண்ணறிவினன்.
நேரிவெற்பன் }
நேரிவாயில் - உறையூர்க்குத் தெற்கிலுள்ளவோரூர்.
நேரிழை - பெண்.
நேரியிறை - சோழன்.
நேரீற்றியர்சீர் - நேரசையாலிறுமாசிரியவுரிச்சீர்.
நேருக்குச்சீர் - செம்பாகம்.
நேரேடம் } நாவன்மரம்.
நேரேடு }
நேரொன்றாசிரியத்தளை - இயற்சீர்கள் ஒன்றும்பலவுந் தம்முளொத்துநின்ற சீரினீற்றசை நேராய் நிற்கவருஞ்சீர் முதலசை நேராய் ஒன்றிவருவது.
நேரோடல் - நேராயோடல் இதுதுரக கதியி னொன்று.
நேர் - உடன்பாடு, உண்மை, உவமை, ஒப்பாவு, கற்பு, சரி, செவ்வை, தகுதி, நீதி, நீளம், நுட்பம், நேரசை, நேரென்னேவல், பாதி, முன், மேல்
நேர்கடன் - நேர்ந்தகடன். [வரிசை.
நேர்கட்டுதல் - சரிக்கட்டுதல்.
நேர்காட்டுதல் - சரிவளமாக்குதல், முன்காட்டுதல், விழுங்குதல்.
நேர்காற்று - வளக்காற்று.
நேர்கீர் - இணக்கம், நேருக்குச்சீர். [ல்.
நேர்சொல்லுதல் - சத்தியஞ் சொல்லுத
நேர்ச்சி - இணக்கம், சம்மதம், சிநேகம், தகுதி, நேர், பிரதிக்கினை.
நேர்ஞ்சிராய் - நேரியசிராய்.
நேர்தல் - ஈதல், உடன்படல், எதிர்த்தல், கிட்டல், சம்பவித்தல், பொருதல், மெலிதல், வேண்டுதல்.

நேர்திறம் - பாலைப்பண்ணின் றிறமைந் தனுளொன்று.
நேர்த்தி - சிறப்பு, திருத்தமுள்ளது, நேருதல், நேர்ந்த பொருள்.
நேர்த்திக்கடன் - வாசாதத்தம் பண்ணி யது.
நேர்த்திக்குறிப்பு - தவமுமை.
நேர்நஞ்சு - கல்மதம்.
நேர்நிதானம் - சரிநிதானம்.
நேர்நிறை - கற்பு, சரிபாரம், நீதி.
நேர்நெட்டி - ஒருபூடு.
நேர்ந்தபடி, நேர்ந்தபாடு, நேர்ந்தபார் - எதிரிட்டபடி.
நேர்ந்தார் - சினேகிதர்.
நேர்ந்துகொடுத்தல் - கொடுக்கவியமித் தல்.
நேர்பசை - நேர்க்கீழ்க்குற்றுகர முற் றுகரம் வருவது.
நேர்படுதல் - இணங்குதல், சந்தித்தல், சம்மதித்தல், சிநேகித்தல்.
நேர்பண்ணுதல் - சத்தியம்பண்ணுதல், சமனுக்குதல்.
நேர்பாடு - சம்மதி. நினையாமல்வருகிற து, நீளம்.
நேர்பாடுசொற்பாடு - சொற்படிவாய்ப் பு, கினைத்திராத காலத்துவந்தது.
நேர்பு - எழுச்சி, ஒன்றிப்பு, நீளம்.
நேர்போதல் - இணங்குதல், குணமா தல், சரிபோதல்.
நேர்ப்பிசின் - ஒருபூடு.
நேர்ப்பு - நேர்த்தி.
நேர்முகம் - எதிர்முகம்.
நேர்மை - இணக்கம், செவ்வை, நிதா னம், நுண்மை.
நேர்மையம் - சரிநடு.
நேர்வளம் - செவ்வழியாழ்த்திறம், பா லையாழ்த்திறம், வேய்ங்குழல்.
நேர்வாளம் - ஒருமரம், நேபாளங்கொ ட்டை.
நேர்வான் - சித்திரைநாள்.
நேர்வு - உடன்பாடு,எதிர்தல், கூடுதல், கொடை, சம்பவிப்பு, சருவுதல், பொருதல்.
நேற்றி - செவ்வை, நல்லது.
நேற்று - முதனாள்.

## நை



நை - இகழ்ச்சிக்குறிப்பு, ஓரெழுத்து, நையென்னேவல்.
நைகரம் - துன்பம், வருத்தம்.
நைகொதி - நசிகொதி.
நைக்காட்டுதல் - நையாண்டிபண்ணல்.
நைசர்க்கிகம் - சுபாவம்.
நைசல் - வியாதி.
நைசிகம், நைசியம் - காக்கை, நாசியிற் புகுத்து மருந்து.
நைச்சி - காகம், பாம்பு.
நைச்சிகம், நைச்சியம் - தாழ்வு.
நைஷதம், நைடதம் - ஒருகாப்பியம், நிடதம்.
நைட்டிகன் - நிட்டைக்காரன்.
நைட்டூரியம் - நிட்டூரம்.
நைவல் - இரங்கல், கெடுதல், தளர்தல், துக்கித்தல், துன்புறல், நசிதல், வத ங்கல், வருந்தல், வாடல்.
நைதிகை - முல்லை.
நைதெனல் - இரக்கக்குறிப்பு, மெலி வின் குறிப்பு.
நைத்தல் - கெடுத்தல், தளர்த்தல், துக் கப்படுத்தல், நசித்தல், வருத்தல், வாட்டல்.
நைத்திகம், நைத்தியம் - நித்தியம் நித்தியாரா தனை.
நைநையெனல் - இகழ்ச்சிக்குறிப்பு.
நைந்திகை - நைதிகை.
நைபடல் - நசிபடல்.
நைபாலி - அடுக்குமல்லிகை, சிவந்த பாஷாணம், நீலம்.
நைபாலிகம் - தாமிரம்.
நைபுணம் - நிபுணத்துவம்.
நைபுணன் - நிபுணன்.
நைபுண்ணியம் - நிபுணத்துவம்.
நைமிசம், நைமிசாரணியம் - ஒருவனம். வடநா ட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
நைமிசம் - மரீசி, அத்திரி, பிருகு, வசி ஷ்டன், கிருது, அங்கிரசன் என்ப வர்களுடைய வமிசத்தவர்கள் தவஞ் செய்த அரணியம்.
நைமித்திகம், விசேடாராதனை.

நைமித்திகதானம் - நிமித்தத்தாற் செய்யும் தானம்.
நைமுத்தியம் - நைமித்திகம்.
நையத்தியம் - நியதத்துவம்.
நையல் - நைசியம்.
நையல் - கிரந்திவியாதி, துன்பம், மெலிவு, வசூரி.
நையாண்டி - இகழ்ச்சி, சரசம், பரிகாசம்.
நையாயிகம் - ஒருமதம்.
நையாயிகர் - கௌதமகணததமத வாதிகள், இவர்கள் சித்துஞ்சடமுமாகிய இரண்டுமே நித்தியப்பொருள்களென்பார்கள். சடமாகிய இவ்வுலகம் பீஜத்தினின்றும் தோற்றுவிக்கப்பட்டதென்றும், தோற்றுவிப்பது சித்துப்பொருளென்றும்; தோற்றும்போது பீஜம் ஏகாணுவாய்ப் பின்பு த்வயாணுவாய் பின்பு த்ரயாணுவாய் வடிவுடைப்பொருளாகுமென்றும் ஒடுங்கும்போதும்அவ்வாறேயொடுங்கிச்சென்று பீஜமாய் நிற்குமென்றும், அந்நிலையில் அதுநித்தியமென்றும், வடிவுடையதாய் நிற்கு நிலைக்கண் அழியுமியல்பிற்றென்றும், சித்தின்றிச்சடம் காரியப்படாதென்றும், ஆன்மகோடிகளெல்லாம் சகத்காரணமாகிய சித்துப்பொருளின் அமிசங்களேயாமென்றும் அமிசங்களாதலால் சிற்றறிவும்சிறு தொழிலு முடையனவென்றும் சகத்காரணமாகிய சித்து முழுமுதலாதலால் முற்றறிவும் முற்றுத் தொழிலுமுடைய தென்றும், ஆன்மாக்கள் சரீரத்தோடு கூடியயிருக்கும்போது அஞ்ஞானமுடையதாயிருக்குமென்றும், இடையறுத முயற்சியால் ஞானத்தை யடைந்தவிடத்து அவ்வான்மாக்கள் முழுமுதலோடு சேர்ந்து பேரானந்தத்தை யநுபவிக்குமென்றும் கூறுவார்கள். இவையே நையாயிகமதக்கொள்கை.
நையாயிகன் - நியாயசாத்திரி, நையாயிகமதாநுசாரி.
நைரந்தரியம் - இறுக்கம்.
நைராக்கியம் - பரிகாசம்.
நைராசியம் - ஆசையின்மை.
நைருதி - நிருதி, நிருதிதிசை.
நைர்க்குண்ணியம் - நிற்குணம்.
நைர்மல்லியம் - சுத்தம்.
நைவளம் - குறிஞ்சியாழ்த்திறம்.
நைவ - நைதல்.
நைவேதனம் - நிவேதனம்.
நைவேத்தியம் - காணிக்கை, தேவர்க்குச் சமர்ப்பிப்பது.
நைஷதம் - ஸம்ஸ்கிருதத்தில் பஞ்சகாவியங்களுள் ஒன்று. இதுஸ்ரீஹர்ஷன் என்னு மஹாகவியால் செய்யப்பட்டது, நிஷததேசத் தரசனுகிய நளமஹாராஜன் சரிதத்தைச் சொல்லுதலால் இந்தக் காவியத்துக்கு நைஷதம் என்று பெயராயிற்று. இது தமிழில் புகழேந்திப் புலவரால் வெண்பாக்களாலும், அதிவீரராம பாண்டியனுல் விருத்தங்களாலும் மொழிபெயர்க்கப்பட்டுவழங்கிவருகின்றது அன்றியும் இது கலித்துறையாலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது, மொழிபெயர்த்தவர் பெயர் முதலியவை நன்கு புலப்படவில்லை. இந்நூலில் இரண்டொரு செய்யுட்களேயன்றி நூல் முழுதும் காணப்படவில்லை. இதில் முதற்காப்புச்செய்யுள் இங்குத்தருவாம், "தழைவிரி கொன்றைத் தனிமுதலோன் செஞ்சடையில் வைத்த, குழவிவெண்டிங்களையிற்றநங்கோட்டின் குறையிதெனப், புழைநெடுங்கையதனுற் பற்றிப்பொற்புறநோக்கி நிற்கும், மழைமதயானைமுகத்தோ னிருசரண் வாழ்த்துவனே."

## நொ

நொ - ஓரெழுத்து, துன்பம், நொவ்வென்னேவல், நோய், வருத்தம்.
நொக்காங்குலை - நுக்காங்குலை.
நொக்கு - வெடிப்பு.
நொங்கு - நுங்கு.
நொசி - மெல்லியது.
நொசிதல் - துவளல், நுண்மையாதல், வருந்தல், வாடல்.
நொசிவு - துவள்வு, நுண்மை, வருத்தம் வாட்டம்.

நொச்சி - ஒருசெடி அது அட்டாதச மூலத்தொன்று, சிற்றூர், மதில்.
நொச்சிநியமங்கிழார் - புறநானூற்றினுள்ளே ஒரு பாடல் பாடிய புலவர்.
நொச்சிமாலை - ஒருபிரபந்தம் அது மாற்றார்க்கெதிரூன்றி நொச்சிப்பூமாலை சூடித் தம்மதில்காக்குந் திறங்கூறுவது, மாற்றார்க்கெதிரூன்றித் தம் மதில் காப்போர்க்கு மாலை.
நொடி - காலநுட்பம், கைந்நொடி, சொல், நொடி யென்னேவல், பள்ளம், விடுகதை.
நொடிதல் - சொல்லல்.
நொடித்தல் - அழித்தல், கையால்நொடிக்குதல், சொல்லல், பால்சுரத்தல்.
நொடிபாராட்டுதல் - விடுகதைசொல்லல்.
நொடிப்பு - நொடித்தல்.
நொடியவிழ்த்தல்-விடுகதைவிளக்குதல்.
நொடுநொடுக்கெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு.
நொடுநொடுத்தல்-துடினமாய் நடத்தல், பரபரத்தல்.
நொடுநொடுப்பு - துடினம், பரபரப்பு.
நொடுநொடெனல் - நொடுநொடுத்தல்.
நொடை - விலை, விற்றல்.
நொட்டை - நொன்னை.
நொண்டல் - நொண்டுதல், முகத்தல், விழுங்கல்.
நொண்டி - ஒருநூல், கான்முடவன், பொய்க்கால்.
நொண்டுதல் - கால்முடக்கப்பட்டுக் குந்திநடத்தல்.
நொதி - நொதியென்னேவல், பெருஞ்சேறு.
நொதித்தல் } ஊறல், கொப்புளித்தல்,
நொதிப்பு } சீக்கட்டல், நுரைத்தெழும்பல்.
நொதுக்கல் - நொதுப்புள்ளது.
நொதுத்தல் - அவித்தல்.
நொதுநொதுத்தல் }
நொதுநொதுப்பு } இளக்கக்குறிப்பு.
நொதுநொதெனல் }
நொதுப்பு - இளக்கம்.
நொதுமலர் - அயலோர்.
நொதுமல் - அயல், நொய்மை, பற்றிகவின்மை.

நொத்தல் - நொப்புக்கட்டுதல், வருத்தல்.
நொத்து - நொப்பு.
நொந்தகைமை }
நொந்தலை } நோ, பலவீனம், வறுமை.
நொந்தலைமை }
நொப்பு - ஆட்டின்மூலையிற் சுற்றிய ஓலை, தடை.
நொய் - இலேசு, உடையுந்தன்மை, குறுநல், மிருதுத்துவம், மென்மை.
நொய் - நொய்மை.
நொய்தல் - குண்மை.
நொய்து - மிருது, மெல்லிசு, விரைவு.
நொய்தெனல் - மெதுமெதுத்தல், விரைவின் குறிப்பு.
நொய்மை - உருக்கம், எண்வகையூறில் ஒன்று, எளிமை, கேடு, தளர்வு, நொய்வு, மிருது, மென்மை, வறுமை.
நொய்யசொல் - எளியசொல்.
நொய்யரிசி - குறுநல்.
நொய்யவன் - எளியவன், பலவீனன், வறியவன், வெஞ்சொற் பொறாதவன்.
நொய்யெனல் - நுண்மைக்குறிப்பு.
நொய்வு - இலகு, நொய்மை.
நொரு - நுரு காய்ப்புமாறின பின்னரும்பும் பிஞ்சு, பயிரினடியில் மூளைப்பது.
நொருகை - தின்பண்டம்.
நொருக்கரிசி - உக்கலரிசி முட்டரிசி.
நொருக்கல் - நொருங்கப்பட்டது.
நொருக்காய் - குருவிற்காய்.
நொருக்கு - அடி, நெரிவு, நொருக்கென்னேவல், முரிவு.
நொருக்குதல் - அடித்தல், நருக்குதல்.
நொருங்குதல் - நருங்குதல், முரிதல்.
நொருநொருத்தல் }
நொருநொருப்பு } ஈரடுக் கொலிக் குறிப்பு.
நொருநொரெனல் }
நொருவல் - நொரு, நொருங்குண்டதாள்.
நொருவெடித்தல் - பயிர்கள்கப்பித்தல்.
நொலை }
நொலையல் } அப்பவருக்கம்.
நொவ்வி - தளர்வு, நொய்மை, நொவ்வென்னேவல், நோ, வருத்தம்.
நொவ்வுதல் - நொய்தாதல், வருந்துதல்.
நொளநொளத்தல் - நளுநொளுத்தல்.

நொளுக்கல் - இளம்பாக்கு.
நொளுநொளுத்தல்-நொளநொளத்தல்.
நொளுநொளெனல்-நொளநொளத்தல்.
நொளுவல் - நொளுக்கல்.
நொளுநொளுப்பு - நளுநொளுப்பு.
நொள்கல் } அச்சக்குறிப்பு, ஞொள்
நொள்குதல் } கல், முகத்தல்.
நொள்ளல் - குருடு, கொசுமு, நுளம்பு.
நொள்ளுதல் - நொள்குதல், விழுங்குதல்.
நொள்ளை - குருடு, நாகரவண்டு.
நொறிதல் - விரைவு.
நொறில் - அடக்கம், விரைவு.
நொறுக்கு - அடிக்கை, நருக்கு.
நொறுக்குச்சக்கந்தம் - பரிகாசம்.
நொறுக்குதல் - நறுக்குதல், பொடியாக்கல்.
நொறுக்குநொறுக்கெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
நொறுங்கல் - நொறுங்குதல்,நொறுங்கினது.
நொறுங்கு - குறுநல்,நொய்மை,நொறுங்கென்னேவல்.
நொறுங்குதல் - நருங்குதல், நொய்தாதல்.
நொறுவை }
நொற்பம் } நொய்து.
நொர்பன் }
நொன்னை - சரசம்.

## நோ



நோ - இன்னம், ஓரெழுத்து, சிதைவு, துக்கம், துன்பம், நோவென்னேவல், பலவீனம், வியாதி.
நோக்கம் - அருமை, அழகு, உயர்ச்சி, எண்ணம், கண், காவல், புன்மை, தோற்றம், பார்வை, விருப்பம்.
நோக்கர் - கழைக்கூத்தர்.
நோக்கல்-காணல்,காத்தல்,நோக்குதல்.
நோக்காடு - தரித்திரம், நோ, பிரசூதிநோ.
நோக்கு - அழகு, எண்ணம், கண், கிரகநிலைகளினேழாமிடம், தயவு, நோக்கென்னேவல், பார்வை, விருப்பம், விநோதக்கூத்து.
நோக்குதல் - கடாச்சித்தல்,காத்தல்,தயவுசெய்தல், பார்த்தல், விரும்புதல்.
நோக்குவித்தை - ஒரு தந்திரவித்தை.
நோசல் - நோவு.
நோஞ்சல் - மெலிதல்.
நோஞ்சி - மெலிந்தவன்.
நோடாலம் - நூதனம், நொன்னை.
நோட்டம் - கண்ணோடியறிதல், கண்திட்டம், விலை.
நோட்டம்பார்த்தல் - தகுதியறிதல், விலைபார்த்தல்.
நோட்டம்பேசுதல் - பிறரைத்தன்பேச்சுக் குட்படுத்தும்படி பேசல்.
நோண்டல் } உரித்தல், கிண்டல், கி
நோண்டுதல் } ள்ளுதல், தோண்டல், முகத்தல்.
நோதலை - தரித்திரம், நோ, மெலிவு.
நோதல் - கேடு துக்கித்தல், துன்புறல், நோயுறல், பெலவீனம், மரத்தின் சதா, வறுமை.
நோப்படுதல் - காயப்படல், மெலிதல், விதனப்படுதல்.
நோம்பு - நோன்பு.
நோம்புதல் - நுணுவுதல்.
நோயணுகாவிதி - தேரையர் செய்த ஆரோக்கியநூல்.
நோயாளி - வியாதிக்காரன்.
நோயின்மை - நாட்டுப்பெருமையாறில் ஒன்று.
நோய் - துன்பம், வருத்தம் இது மாயயாக்கைபதினெண்குற்றத்தொன்று.
நோய்கொள்ளுதல் - வியாதிகொள்ளுதல்.
நோய்ச்சல் - நோய்கொள்ளல்.
நோய்ஞ்சலன் - மெலிந்தவன்.
நோய்ஞ்சல் - நோய்ஞ்சி, நோய்.
நோய்ஞ்சி-வியாதிகொண்டுமெலிந்தது.
நோய்ஞ்சியன் - நோய்ஞ்சலன்.
நோய்த்தல் - நோய்ச்சல்.
நோய்முகன் - சனி.
நோலல் - நோற்றல்.
நோலாதார் - தவமில்லார், பொறுமையுள்ளோர்.
நோலாமை - தவமின்மை, பொறுமை.
நோலோர் - நோலாதார்.
நோலுதல் - நோற்றல், பொறுத்தல்.
நோலை - எள்ளுருண்டை.
நோவாளி - நோவுள்ளான், மிடியன்.

நோவு – நோய், மஞ்சள், மெலிவு, வருத்தம்
நோழிகை - நூற்பந்து.
நோற்பு - தவம், பொறுத்தல், விரதம்.
நோற்றல்-தவஞ்செய்தல், பொறுத்தல்.
நோனமை - தவமின்மை, பொறாமை.
நோனர் - தவமில்லார், பகைவர், பொறாமையுள்ளோர்.
நோனுதல் - தவஞ்செய்தல், நிலைநிறுத்தல், பொறுத்தல், விரதமனுட்டித்தல்.
நோன்பி – தவத்தி.
நோன்பு - உபவாசம், தவம், விரதம்.
நோன்புதுறத்தல் - பாரணை பண்ணல்.
நோன்மை - தவம், பெருமை, பொறுமை, வலி.
நோன்றல் - தள்ளல், நிலைநிறுத்தல், பொறுத்தல்.
நோன்றாள் – வலியகால்.

---

# ப



ப - இருபதிலோர் பாகத்தைக் காட்டும் ஓர் கீழ்வாயிலக்கக்குறி, ஓரெழுத்து, காற்று, சாபம், பெருங்காற்று.
பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா – பலதாழிசைகளோடு மற்றை யுறுப்புக்களையும் பெற்று வருவது.
பஃறி – இரேபதி, ஓடம், மரக்கலம்.
பஃறுளியாறு குமரியாற்றுக்குத் தெற்கின்னேடிய ஓராறு.
பஃறொடை வெண்பா - நான்கடியின் மிக்க பலவடிகளைப் பெற்றுவருவது.
பகசித்து - கண்ணன், வீமன்.
பகடக்காரன் - அதட்டி, எத்தன், தந்திரி, வெளிவேஷக்காரன்.
பகடம் – சிலம்பம், தந்திரம், வெருட்டு, வெளிவேடம்.
பகடி - அகசிபக்காரன், பரிகாசம், விகடம்.
பகடு ஆனை எருமை பசு இவற்றினாண், ஓடம், தெப்பம், பெருமை, பொதியெருது, யானை.
பகடை - அதிட்டம், சக்கிலிச்சாதி, சூதாடு தாயங்களி லொன்று.

பகட்டு - அதட்டு, இறுமாப்பு, தந்திரம், பகட்டென்னேவல், பார்வை, பிரகாசம், மயக்கம், மினுக்கம், வெருட்டு, வெளிவேடம்.
பகட்டுதல் - அதட்டுதல், தந்திரம்பண்ணுதல், வெருட்டுதல், வெளிவேஷங்காட்டுதல்.
பகண்டை - ஒருவாச்சியம், சிவற்பட்சி.
பகதத்தன் - நரகாசுரன் மூத்தமகன்.
பகந்தரம் - ஒருகுதநோய்.
பகநிசூதநன் - கண்ணன், வீமன்.
பகந்திரம் - நூலடியிற்கட்டு.
பகபகெனல் - வேகக்குறிப்பு.
பகம் - அவாவின்மை, ஈச்சுரத்தன்மை, கீர்த்தி, செல்வம், ஞானம், வீரியமென்னுமறுகுணம், அழகு, காக்கட்டான்கொடி, காந்தி, கொக்கு, பெண்குறி, மகத்துவம், முத்தி.
பகரம் - அலங்காரம், ஓரெழுத்து, மினுக்கம்.
பகரிப்பு - மினுக்கு.
பகர் – பங்கம், பாழை.
பகர்ச்சி - சொல்.
பகர்தல், பகர்வு } கூறல், சொல்லல், விற்றல்.
பகலவன் - சூரியன், பரணிநாள்.
பகலோன் - சூரியன்.
பகல் – ஒளி, சூரியன், தினம், நடு, பகற்காலம், பகுதல், பிரிதல், பிளத்தல், மதியாணி, மத்தியானம், மூர்த்தம்.
பகல்மானம் - பகனாழிகை.
பகல்வத்தி - ஒரு வினோதவிளக்கு.
பகல்வாயில் - பகல் தோற்றுகிற வழி, கீழ்த்திசை.
பகல் வெள்ளிகாட்டுதல் - இன்மைப் பொருடரு ஒருவமைக்குறிப்பு.
பகல்வேஷம்–பகற்காலத் துருமாற்றல்.
பகவதி - தருமதேவதை, துர்க்கை, பார்வதி.
பகவதிநாள் - பூரநாள்.
பகவத்கீதை, பகவற்கீதை } ஸ்ரீகிருஷ்ணபகவான் பாரதயுத்தத்தில் திருத்தேர்த் தட்டிலிருந்து அர்ஜுனனுக்குபதேசித்த ஞானநூல், இது பாரதத்தின் ஒரு பகுதியேயாயினும் தனி நூலாகவே வழங்கப்பட்டு வருகின்றது. இதில் பேரின்பத்துக்குச் சாத

நமாகிய நிஷ்காம்ய கர்மமும் ஞான சாதநமாகிய யோகமுமே கூறப்பட்டுள்ளன. வேதாந்தமாகிய உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளை யுணரும் பக்குவம் இந்தக் கலியுகமாந்தர்க்குக் கைகூடாதென்பது கருதியே, இந்தயுகம் தொடங்குவதற்கு முன்பே, லோக சம்ரக்ஷணார்த்தமாகத் திருவவதாரஞ் செய்தருளின ஸ்ரீகிருஷ்ணபகவான் அவ்வுபநிஷத்ஸாரமாகிய இந்நூலை அர்ஜுனன் வாயிலாகச்சர்வான்மாக்களுடைய ஈடேற்றத்தின் பொருட்டு உபகரித்தருளினார், பலாபேக்ஷையின்றிக் கர்மங்களைச் செய்துகொண்டும் ஒருவன் ஞானியா யிருக்கலாமென்பதே இந்நூற்றுணிபு. இந்த உபதேசநூலைக் கேட்டிருந்து வெளியிட்டவர் சஞ்சயமுனிவர். இந்நூலுக்குச் சங்கராசாரியர் அத்வைத பரமாகவும், இராமாநுஜாசாரியார் வசிஷ்டாத்வைத பரமாகவும், மத்வாசாரியர் த்வைதபரமாகவும், ஸ்ரீகண்டர் சுத்தாத்துவித பரமாகவும், பாஷ்யங்கள் செய்திருக்கின்றனர். இந்நூலை ஐரோப்பிய பண்டிதர்கள் பலர் புகழ்ந்தும் தமது பாஷையில் மொழிபெயர்த்தும் உச்சிமேற்கொண்டு கொண்டாடுவதே இதன் பெருமைக்குப் பெருஞ்சான்றாகும்.

பகவற்பத்தன் - தேவதொண்டன்.

பகவன் - அரன், அரி, அருகன், கடவுள், குரு, பிரமன், புத்தன்.

பகவான் - கடவுள், சூரியன், துவாதசாதித்தரி லொருவன்.

பகவிருக்கம் - நிலக்கடம்பு.

பகவு - துண்டு, பங்கு, பிளப்பு, வெடிப்பு.

பகவைரி - கண்ணன், வீமன்.

பகழி - அம்பிற்குதை, அம்பு.

பகற்குருடு - காக்கை.

பகற்குறி - களவுப்புணர்ச்சியிற் பகற்காலஞ் சந்திக்க நியமிக்குமிடம்.

பகற்பாடு - பகற்காலம்.

பகன் - ஏகசக்ராபுரத்துப் பிராமணருக்குத் துன்பஞ் செய்துகொண்டிருந்த ஒரு ராக்ஷஸன், (பகாசுரன்) அந்தப் பிராமணர் தத்தம் முறைப்படி தினந்தோறும் ஒரு வண்டிசாதமும் இரண்டு எருமைக்கடாவும் ஒரு பிராமணப்பிள்ளையும் உணவாகக் கொடுக்க ஏற்பாடு செய்துகொண்டு கொடுத்துவருநாளில், அந்த அக்ராகாரத்தில் வீமன் தங்கியிருந்த வீட்டுக்காரன் முறைவந்தது சாதத்தை மாத்திரம் வண்டியி லேற்றிக்கொண்டு வீமன் தானேசென்று பகனைக்கண்டு சாதம் வந்தது ஒப்புக்கொள்கவென்றான் சாதத்தோடு எருமைக்கடா முதலாயின வாராமை கண்டு அவன் கோவித்து வீமனைச்சாட, அவன் அந்தப் பகனைக்கொன்று மீண்டான். பிருந்தாவனத்தில் கஞ்சன் ஏவலால் ஸ்ரீகண்ணபிரானைக்கொல்ல யத்தமித்து வந்து அவராற் கொல்லப்பட்ட ஒரு ராக்ஷஸன், கங்கன் மூத்தமகன். துவாத சாதித்தருளொருவன், தக்கன் யாகத்தில் வீரபத்திரரால் தண்டிக்கப்பட்ட சூரியன்.

பகன்றை-கிலுகிலுப்பை, கிலேதை, சீந்தில், பெருங்கையால்என்னுங்கொடி.

பகாங்குரம் - பெண் யோனி யுறுப்பினொன்று.

பகாசூரன் - ஓரசுரன்.

பகாசுரவைரி - வீமன்.

பகாநிலை - பிரிவுபடாது நிற்பது.

பகாப்பதம்-பகுப்பிற்பயன்படாப்பதம்.

பகாப்பொருள் - கடவுள்.

பகாரி - கண்ணன், வீமன்.

பகாலம் - கபாலம்.

பகாலி - சிவபெருமான்.

பகிகண்டம் - பிடரி.

பகிடி - பரிகாசம், விகடம்.

பகிரங்கம் - மறைப்பின்மை, வெளியரங்கம்.

பகிரண்டம் - அண்டத்தின்வெளி, பேரண்டம்.

பகிரதன் - ஓரரசன்.

பகிர் - பகிரென்னேவல், பகுப்பு, வெடிப்பு.

பகிர்ச்சி - பகுப்பு.

பகிர்தல் - பங்கிடல், பிளத்தல்.

பகிரவிடல் - பிளவாதல்.

பகினி - உடன்பிறந்தாள், பெண்.

பகினேத்திரம் - கண்ணாம்பைப் பற்றின ஒருசன்னி
பகீரதன் - ஒரு சூரிய குலத்தாசன். (இக்ஷு) திலீபன் புத்திரன், இவன் சகரன் புத்திரரும் தனக்குப் பாட்டன்மாருமாகிய சகலரைக் கபிலரது சாபத்தினின்று நீக்கிக் காக்கும்பொருட்டு ஆகாய கங்கையைக் கொண்டுவந்து இவ்வுலகில் விட்டவன்.
பகீரதி - கங்கை.
பகீரிடுதல்-வெடித்தல், வேகக்குறிப்பு.
பகீரெனல் - அச்சக்குறிப்பு.
பகு - பகுவென்னேவல், பலது.
பகுகந்தன், பகுகவன் - சுத்தியுவின் புத்திரன்.
பகுதி - இயல்பு, குடியிறை, சொன்முதனிலை, பகுபதத்தோருறுப்பு, பங்கு, படை, பரிவு, பிரகிருதி.
பகுதிகட்டுதல் - இறைகொடுத்தல், பங்கிடுதல்.
பகுத்தல் - ஈதல், தறித்தல், பங்கிடல், இது வணிகரெண் குணத்தொன்று, வெட்டல்.
பகுத்தறிதல் - பிரித்தறிதல், மனநியாயமறிதல்.
பகுத்தறிவு மனநியாயம்.
பகுபதம் - பகுதி விகுதி முதலியவுறுப்பிணனியன்றபதம்.
பகுப்பு - பகுதி, பகுத்தல், பிரிவு.
பகுரதன், பகுநாதன் - புரஞ்சயன் மகன்.
பகுவபஞ்சம் - உபநிடத முப்பத்திரண்டினொன்று.
பகுவாய் - பிழா பேழ்வாய்.
பகுளசத்தமி கிருட்டிணபக்கச் சத்தமி.
பகுளம் - கிருட்டிணபக்கம்.
பகுளாசுவன் - ஸ்ரீகிருஷ்ணபகவானால் மோக்ஷமடைந்தவன்.
பகுளை - உத்தானபாதன் புத்திரனாகிய உத்தமன் மனைவி.
பகை - பகையென்னேவல், விரோதம், வெறுப்பு மூன்றாவதானுவது நாம்புகள்.
பகைஞர் - சத்துருக்கள்.
பகைத்தல் - பகைகொள்ளல், முரணல்.
பகைத்தானம் - ஆறுமிடம்.
பகைத்தொடை - முரண்டொடை.
பகைநாள் - பிறந்தநாட்கு மூன்றானாள்.
பகைநிரைகவர்தல் - பகைவரது காலிகளைக்கோடல், அது எண்வகை [illegible]றியினொன்று.
பகைப்படல் - விரோதமாதல்
பகைப்பு - பகைத்தல்.
பகைமுனைதிரு[illegible]ல - பகைவர்க்குழு[illegible]வெதிர்த்தல், அது எண்வகை வெற்றியினொன்று.
பகைமேற்செல்லல் - மாற்றாரைப்பொரப்போதல், இது எண்வகை வெற்றியினொன்று.
பகைமை - பகைத்தனம்.
பகையகம் - போர்க்களம்.
பகையாளி - பகைஞன்.
பகைவராண்வளைத்தல் - மாற்றாரதுமதிலைவளைத்தல், அதுஎண்வகை வெற்றியினொன்று.
பகைவர் - சத்துருக்கள்.
பகோளம் - வானஉண்டை.
பக்கம் - பக்கம், புறக்கதவு.
பக்ககன் - கூட்டாளி.
பக்ககேசம் - நரைமயிர்.
பக்கசம் - செட்டை.
பக்கசரம் - சந்திரன், யானை.
பக்கசமன் - சந்திரன்.
பக்கசூலை - பக்கத்திலே வருஞ்சூலை.
பக்கச்சொல் - துணைச்சொல்.
பக்கணம் - ஊர், கிராமம், பற்பல தீவிற்பண்டம் விற்குமிடம், வேடர் வீதி.
பக்கதி - செட்டைமூலம், பிரதமை.
பக்கத்தார் - அயலவர், இனத்தவர், கன்னையிலுள்ளவர்.
பக்கத்துணை - பக்கவுதவி.
பக்கபாதம் - பட்சபாதம்.
பக்கபாதிதை - சேர்மானம்.
பக்கப்பகந்திரம் - குறியின் பக்கத்தில் வருஞ்சிலந்தி.
பக்கப்பிளவை - முள்ளந் தண்டருகிற்பிளவை.
பக்கப்போலி - பொருளிருக்குமிடம்.
பக்கமூலம் - செட்டைக்குழி.
பக்கம - அம்பிறகு, அருகு, அருத்தாபத்திப்பொருள், அவயவம், இடம், இராசயானை, இறகு, உணு, எதிரிடை, ஒருகையணி, களிவு, சந்திரனுள், சமீபம், சுத்தம், செட்டை, சேனை,

தகுதி, நட்பு, நாரை, பட்சம், பதினை ந்துநாள், புட்பொது, புறம், வகுப்பு, வமிசம், வால், வீடு.
பக்கரசம் - மது.
பக்கரை - அங்கவடி, சேணம், முகட்டின் கீழ்க்கட்டு.
பக்கரைக்கட்டு - முகட்டுக்கட்டு.
பக்கர் - சுற்றத்தார், பக்கல்.
பக்கல் - இனம், பக்கம்.
பக்கவாகனன் - பட்சி.
பக்கவாதம் - பாரிசவாதம்.
பக்கவாயு - பக்கத்திலிருக்கும்வாயு.
பக்கவாரி - வெந்நீர்.
பக்கறை - குழப்பம்.
பக்காசயம் - இரைகுடர்.
பக்காந்தம் - பக்கத்தின்கடைநாள்.
பக்கான்னம் - சமைக்கப்பட்ட போசனம்.
பக்கி - பக்கியென்னேவல், பக்ஷி, பறவை, பிள்ளை.
பக்கிகை - அத்தாட்சி, தந்திரம், பெருஙியாயம்.
பக்கிடுதல் - திடுக்கிடுதல், வெடித்தல்.
பக்கித்தல் - பட்சித்தல்.
பக்கிராசன் - கலுழன், கருடன்.
பக்கிநேத்திரகம் - ஒருநோய்.
பக்கு - உடைவு, ஊத்தை, பிளவு, புண்ணசறு, பொருக்கு, மரப்பட்டை.
பக்குப்பக்கெனல் - அச்சக்குறிப்பு.
பக்குவகாலம் - தக்ககாலம்.
பக்குவசாலி - பக்குவவாளி.
பக்குவப்படுதல் - இருதுவாதல், தகுதியாதல்.
பக்குவமாக்குதல் - தகுதியாக்குதல்.
பக்குவமாதல் - எற்றதாதல், தகுதியாதல்.
பக்குவம் - தகுதி, திராணி, பருவம்.
பக்குவரசம் - சாராயம்.
பக்குவர் - மோட்சபக்குவர்மூவகை அவர் கருமகாண்டிகர் ஞானகாண்டிகர் பத்திகாண்டிகர்.
பக்குவவாளி, பக்குவன் - தகுதியுள்ளோன், வைத்தியன்.
பக்குவாசயம் - அன்னமயகோசம்.
பக்குவாத்துவர் - பரிபாகி.
பக்குவி - பக்குவப்பட்டபெண், பரிபாகி
பக்குவிடுதல் - பிளத்தல், வெடித்தல்.
பக்கெனல் - அச்சக்குறிப்பு, ஒலிக்குறிப்பு.
பக்தன் - பத்தன்.
பக்தி - பத்தி.
பங்கக்கிரீடம் - பன்றி.
பங்கசம் - பங்கயம், தாமரை.
பங்கசாசனன் - பிரமன்.
பங்கசாசனி - திருமகள்.
பங்கசாதம் - தாமரை.
பங்கசார்த்தம் - அசிதார்த்தம், பிசுனத்தனம்.
பங்கசினி - தாமரைக்குளம்.
பங்கசூரணம் - தாமரைவேர்.
பங்கணம் - நீசர்சேரி.
பங்கணி - பங்கம்பாளை.
பங்கப்படுதல் - பின்னப்படுதல்.
பங்கப்பாடு - ஈனம், தோல்வி, பழுது, வெட்கம்.
பங்கம் - அசைவு, அச்சம், அலை, ஈனம், எத்து, குழைசேறு, குளம், குற்றம், துண்டு, தூசு, தோல்வி, நீர்ப்பாய்ச்சல், நோய், பந்தயம், பயம், பழுது, பாவம், பிளப்பு, பின்னம், புழுதி, முடம், வத்திரம், வெட்கம், வேறுபாடு.
பங்கம்பாலை, பங்கம்பாளை - ஆடுதின்னாப்பாலை.
பங்கயத்தவன் - பிரமன்.
பங்கயம் - தாமரை.
பங்கயன் - சூரியன், பிரமன்.
பங்கயாசனன - பிரமன்.
பங்கருகம் - தாமரை.
பங்கவாசம் - நண்டு.
பங்காசுவன் - நூறுபுத்திரரையும் நூறு புத்திரிகளையும் பெற்றபின்பு இந்திரன் வரத்தால் பெண்ணுருக்கொண்டவோரரசன்.
பங்காரம் - படி, வரம்பு.
பங்காரு - ஒருவகைப்பொன்.
பங்காலி - வெளவால்.
பங்காளம் - ஒருதேயம், ஒருப்பண்.
பங்காளன், பங்காளி - கூட்டாளி, பங்குக்காரன்.
பங்கி - ஆண்மயிர், கஞ்சா, பங்கியென்னேவல், பிரிவு, புறமயிர்.
பங்கிடுதல் - பகர்தல்.
பங்கித்தல் - அரிதல், பிளத்தல்,
பங்கிலம் - தெப்பம்.

பங்குவித்து - கஞ்சாவிதை.
பங்கீடு - உபாயம், திட்டம், பங்கு, பங்கு செய்தல், வழிவகை.
பங்கு - கூட்டு, கூறு, சனி, பாதி, முடம், முடவன்.
பங்குக்கிராகம் - மகரராசி.
பங்குசம் - தலைக்கோலம்.
பங்குதை - அவலட்சணம்.
பங்குபடுதல் - பின்னப்படல், பொதுவாதல்.
பங்குபட்டநாள் - இரண்டு ராசியிற்றன்னங்கிசஞ்சேர்ந்துநிற்கும்பெருநாள்.
பங்குரம் - ஆற்றுமுடக்கு, வளைவு.
பங்குரை - அதிவிடயம்.
பங்குவீதம் - பங்கின்படி.
பங்குனன் - அருச்சுனன்.
பங்குனி - உத்திரநாள், ஒருமாதம்.
பங்கூரம் - மரமஞ்சள்.
பங்கேசம், பங்கேருகம் - தாமரை.
பசகன் - சமையற்காரன்.
பசண்டை - ஈரம், பச்செனவு.
பசதன் - இந்திரன், சூரியன், தீ.
பசத்தல் - காமமுதலியவற்றாற் பொன்னிறப் புள்ளியுண்டாதல், நிறமாறுதல், பசுமையாதல், மங்கல்.
பசந்தம் - நேரம்.
பசந்து - பசுந்து.
பசபசத்தல் - அலப்புதல், தினவெடுத்தல்.
பசபசப்பு - பசபசத்தல்.
பசபசெனல் - அலப்புதல், மசமசத்தல்.
பசப்பல் - பசப்புதல்.
பசப்பு - ஈரடிப்பிடிப்பு, ஏய்ப்பு, சாரம், பசலை, பச்சைநிறம், பொன்மை, மயப்பு
பசப்புதல் - ஓயாமற்பேசல், மயக்கல்.
பசமந்திரம் - மரமஞ்சள்.
பசம்பை - கழுத்து.
பசர் - சமைத்தல்.
பசலிமம் - வெந்தது.
பசலை - காமமுதலியவற்றா லுண்டாம் பசப்பு தேமல்.
பசவ்வியம் - புல்.
பசளி - ஒருகீரை, மடைமுகம்.
பசளை - எருமுதலியவுரம், ஒருகீரை.
பசளைக்கதை - முகமன்கதை, வீண்கதை.
பசறு - பச்சிலைச்சாறு.
பசனம் - சங்கோசை, சமைத்தல், சிற்றின்பம், வணக்கம்.
பசனன் - அக்கினி, பாகம்செய்வோன்.
பசாசம் - பேய்.
பசாசன் - பேயன்.
பசாசு - பேய்.
பசாசு, பசாடை - கண்ணிற்படலம், மாசு.
பசாரி - விபசாரி, கடைவீதிவருகுவாள்.
பசார் - சாரமற்றது.
பசானம், பசான் - ஒருநெல்லி.
பசி - அக்கினி, சமைத்தல், புசித்தல் இது உயிர்வேதனையினொன்று, மாயையாக்கை பதினெண் குற்றத்துமொன்று.
பசிதம் - சாம்பர்.
பசித்தல் - பசிகொள்ளல்.
பசிப்பு - பசி.
பசியம் - கயிறு.
பசியெடுத்தல் - பசியுண்டாதல்.
பசிரி - ஒருகீரை.
பசு - ஆன், இடபவிராசி, உயிர், எருது, கடவுள், சீவனுடையது, பலி, மிருகம், யாகத்துக்குரிய ஆடு, வெள்ளாடு.
பசுகரணம் - உயிர்க்கரணம், சீவகரணம்.
பசுகாதம் - மிருகபலி.
பசுகாயத்திரி - பலியிடப்படு மிருகத்திற்குபதேசிக்கு மந்திரம்.
பசுகை - புன்மிருகம்.
பசுகௌவியம் - மிருகபலி.
பசுக்கன்று - பசுவின்கன்று.
பசுக்காத்தல் - சூத்திரர், வைசியர்க்குரிய வறுதொழிலினொன்று.
பசுக்காவலர் - இடையர்.
பசுக்கிரியை - புணர்ச்சி.
பசுங்கதிர் - இளங்கதிர், சந்திரன்.
பசுங்கதிர்த்தே - சந்திரன்.
பசுங்கலை - பச்சைக்கல்.
பசுங்காய் - செங்காய்.
பசுங்குடி - போதியகுடி.
பசுங்கொடி - அறுகு.
பசுங்கொற்றான் - ஒருகொற்றான்.
பசுங்கோரை - ஒருபுல்.
பசுஞானம் - தத்துவஞானம், ஆன்மஞானம்.
பசுண்டி - சீரகம்.

பசுதருமம் - கைமைப்புணர்ச்சி, பாதாரப் புணர்ச்சி, பொதுமக்கடன்மை, மனுநீதிவழு, மிருகநடை.
பசுதை - மிருகத்தன்மை.
பசுத்தக்காளி - ஒருசெடி.
பசுத்துவம் - ஆத்துமதத்துவம், மிருகத்தன்மை.
பசுநரம்பு - பச்சைநிறநரம்பு.
பசுநா - பிராய்மரம்.
பசுநாகு - இளம்பசு, ஈனுநாகு.
பசுநிரை - பசுமந்தை.
பசுந்தரை - புற்றரை.
பசுந்து - அழகு, நெற்றி, பசுமை, மேன்மை.
பசுபதி - சிவபெருமான்.
பசுபதிநாயகி-திருப்பாசூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
பசுபதிநாயகேசுவரர் - திருச்சக்கரப்பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பசுபதி - சிவபிரான், அஷ்டமூர்த்திகளுள் ஒருவர்.
பசுபதீசர் - திருப்பந்தண நல்லூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
பசுபதீசுரர் - திருஆவூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பசுபதீசுவரர்-திருக்கருவூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பஜமானன் - சாத்துவதன புத்திரன். அந்தகன் ஜேஷ்ட புத்திரன்.
பஜி - சாத்துவதன் புத்திரன்.
பசுபந்தம் - ஒருயாகம்.
பசுபாசம் - மூலமலம்.
பசுபாலனம் - பசுக்காத்தல்.
பசுபாலன் - கோபாலன்.
பசுபாவம் - ஆத்துமவியல்பு, உயிர்க்குச் செய்யும் பாவம்.
பசுபிரேணம் - சாபம்.
பசுபுண்ணியம்-ஆத்துமாக்கட்குச் செய்யுந்தருமம்.
பசுப்பட்டி - பசுத்தொழுவம்.
பசுப்பிரோணம் - ஆவோட்டல்.
பசுமந்தை - சுபாபி, பசுத்தொழுவம்.
பசுமுல்லை - ஒருமுல்லை.
பசுமை - ஈரம், உண்மை, ஒருபுடவை, குளிர்மை, சாரம், சிறப்பு, செல்வம், செவ்வி, பச்சை, பொன்னிறம்.
பசும்பயறு - பாசிப்பயறு.
பசும்பிடி - பச்சிலைமரம்.
பசும்புல் - ஒருபுல், பச்சைப்புல், பயிர்.
பசும்பொன் - உயர்ந்தபொன்.
பசுரட்சணம் - பசுக்காத்தல்.
பசுராசன் - சிங்கம்.
பசுவதை - கோஹத்தி.
பசுவாசாரம் - சத்திபூசை.
பசுவாட்டம் - பன்னுங்குழியாட்டம்.
பசூசகன் - சோதிடன்.
பசேலெனல் - பச்சைநிறமாயிருத்தல்.
பசேலிபன் - சூரியன், தீ.
பசேலுகன் - சமையற்காரன்.
பசை - அன்பு, ஆசை, இலாபம், ஈரம், ஒட்டும் பசை, குழைவு, சாரம், செழிப்பு, தளைவு, பசையென்னேவல், பற்று, விருப்பம்.
பசைகாரம் - காரங்கூட்டியபசை.
பசைதல் - அன்புகொள்ளல், ஒட்டுதல், சாரமுடைத்தாதல், பசையாக்கல், பிசைதல்.
பசைந்தார் - சினேகிதர்.
பசைமட்டை - இரும்பைப் பசையுமட்டை.
பசையற்றன் - அமித்திரன், வறியன், வன்கண்ணன்.
பசைவு - அன்பு, நட்பு, பிசைதல்.
பச்சடி - துவையற்கறி.
பச்சடியன் - வெள்ளையிலே கறுப்பு புள்ளி யுள்ளது.
பச்சரிசி - அவியாமற்குத்தினவரிசி.
பச்சவடம் - பச்சைவடம்.
பச்சன் - சூத்திரன், வேளாளன்.
பச்சன்னியம் - மாமஞ்சள்.
பச்சாது - பின்பு.
பச்சாத்தாபம் - செய்த குற்றத்துக்கு மனஸ்தாபம், மனந்திரும்புதல்.
பச்சிமகாண்டம் - புதுவேற்பாடு.
பச்சியதோகரன் - கள்வன், தட்டான்.
பச்சிமப்பிறை - இளம்பிறை.
பச்சிமம் - பின், மேற்கு, நெற்றி.
பச்சியம் - அதிசயக்குறிப்பு.
பச்சிலை - ஒருமரம், பசுமருந்து, பச்சையிலை.
பச்சிலைப்பாம்பு - ஒருபாம்பு.
பச்சிலையோணன் - பச்சோந்தி.
பச்சிறைச்சி - பச்சையிறைச்சி.

பச்சுடம்பு - குழந்தையினுடல்,புண்ணு லிளமை பெற்றவுடல்.
பச்செனல் - சிறப்பாயிருத்தல்,பச்சை யா யிருத்தல்.
பச்செனவு - ஈரம், தழைவு, பச்சை.
பச்சை - அவியாதது, இளமை, இன்பம், ஈரம், ஒருநிறம், ஒருபுதர், தோல், பசுமை, புதள், மரகதம், மிகுதிக்குறிப்புச்சொல், (உ-ம்) பச்சைப்பொய், மூலபலவருக்கம், வாசனை, விட்டுணு.
பச்சைக்கட்டு - சாந்திமருந்து தாடாற்றி பரிதாணங் கொடுக்கை.
பச்சைகுற்றுதல் - பச்சைவண்ணம் பதித்தல்.
பச்சைக்கருப்பூரம் - ஒரு கருப்பூரம்.
பச்சைக்கல் - மரகதம்.
பச்சைக்கிளி - பசுங்கிளி.
பச்சைக்குங்கிலியம் - ஒரு குங்கிலியம்.
பச்சைக்குவடு - மரகதம்.
பச்சைக்கூடு - தூலதேகம்.
பச்சைக்கொம்பு - இஞ்சி.
பச்சைக்கடையன் - வயிரவன்.
பச்சைநஞ்சு - தீயன்.
பச்சைநிறநிற்களன் - துருசி.
பச்சைபழுக்காயடைத்தல்- கருநிறமும ஞ்சணிறமு மூட்டல்.
பச்சைப்பசேரெனல்-பச்சைநிற வொளிக்குறிப்பு.
பச்சைப்படி - அவியாமற் கொடுப்பது.
பச்சைப்பட்டி - எரு.
பச்சைப்பதம் - இளம்பதம்.
பச்சைப்பயறு - பசும்பயறு.
பச்சைப்பாம்பு - பச்சிலைப்பாம்பு.
பச்சைப்பாலன் - குழந்தை.
பச்சைப்புண் - புதுப்புண்.
பச்சைப்புல் - பசும்புல்.
பச்சைப்புழு - ஒருபுழு.
பச்சைப்புறு - ஒருபுறு.
பச்சைப்பெருமாள் - ஒருநெல், திருமால்.
பச்சைப்பொட்டு - பசுந்திலகம்.
பச்சைமண் எருவிடாமண்,வேகாமண்.
பச்சையன் - திருமால்.
பச்சையப்பன் - ஒரு வித்தியாதானக் கருத்தன்.
பச்சையுடல் - புண்ணுடல்.
பச்சைவடம் - ஒருவகைச்சீலை.
பச்சைவில் - இந்திரதனு.
பச்சைவெட்டு - எரிய இடாமருந்து.
பச்சைவெண்ணெய் - உருக்காநெய்.
பச்சோணன், பச்சோந்தி - ஒருவகை ஓந்தி.
பச்சோலை - பச்சை ஓலை.
பஸ்பம், பஸ்மம் - சாம்பர், பற்பம்.
பஸ்மகுண்டு - விபூதிமடல்.
பஞ்ச, பஞ்சம் - ஐந்து.
பஞ்சகதி - பரககதியைந்து அவை மயூரகதி மல்லகதி வானரகதி விடபகதி வியாக்கிரகதி.
பஞ்சகம் - ஐந்தின்கூட்டம்,யுத்தகளம்.
பஞ்சகம்மாளர் - ஐந்துவகைக்கம்மாளர். அவர் கன்னர் கொல்லர் சிற்பர் தச்சர் தட்டார்.
பஞ்சகருத்தாக்கள் - ஐவகைக் கருத்தாக்கள் அவர் அயன் அரி உருத்திரன் சதாசிவன் மகேசன்.
பஞ்சகலியாணி - பஞ்சகதியுள்ள குதிரை.
பஞ்சகலை - ஐவகைக்கலை, அவை சாந்தி, சந்தியாதீதம், நிவிர்த்தி,பிரதிஷ்டை, வித்தை.
பஞ்சகவ்வியம் - கோமயம் கோமூத்திரம் தயிர் நெய் பால் என்பன.
பஞ்சகன்னிகள் - ஐந்து கன்னிகைப் பெண்கள், அவர் அகலிகை சீதை தாரை துரோபதை மண்டோதரி.
பஞ்சகாலம் - கருப்புக்காலம்.
பஞ்சகாவியம் - ஐவகைக்காப்பியம், அவை குண்டலகேசி சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை வளையாபதி.
பஞ்சகிருத்தியம் - பிரபஞ்சத் தொழிலைந்து அவை சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம்.
பஞ்சகுத்தம் - ஆமை.
பஞ்சகுரோசஎல்லை - காசியில் ஓரிடம். இந்த இடத்தில் அசுசியானவன் வேறு மதத்தன் வரக்கூடாது.
பஞ்சகூடம் - ஆமை.
பஞ்சகோசம், பஞ்சகோஷம் - அன்ன முதலியவைந்தினலாய கூடு அவை அன்னமயகோசம், ஆனந்த

மயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம்.
பஞ்சகோண மண்டலம் - சுக்கிரமண்டலம்.
பஞ்சகோலம் - சித்திரமூலம் சுக்கு செவ்வியம் திப்பிலி மூலம்.
பஞ்சகௌடம் - கவுடதேயத்தின் ஐந்து பகுதி, அவை உற்கலம் கானகுச்சம் சாரசுவதம் சுத்தகௌடம் மைதுலே.
பஞ்சகௌடர் - ஸாரஸ்வதம், கந்யாகுப்ஜம், மிதிஸம், கௌடம், உத்கலம் என்னும் இந்த ஐந்து தேசத்துப் பிராமணரும் பஞ்சகௌடர் எனப்படுவர்.
பஞ்சகௌவியம் - பஞ்சதிரவியம்.
பஞ்சக்கருவி - ஐந்துவகைச் சத்தக்கருவி அவை கஞ்சம் கண்டம் துலை தோல் நரம்பு இவற்றாலாயது, அன்றியும் ஐந்துபொறி அவை கண் செவி மூக்கு மெய் வாய்.
பஞ்சசதம் - ஐஞ்ஞூறு.
பஞ்சசத்தி - இச்சாசத்தி, கிரியாசத்தி, சிற்சத்தி, ஞானசத்தி, பராசத்தி.
பஞ்சசயனம் - ஐந்தாலாய மெத்தை, அவை அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, மயிற்றூவி, மெத்தை வெண்பஞ்சு.
பஞ்சசனன் - ஓரசுரன்.
பஞ்சசன்னியம் - குதிரை.
பஞ்சசரன் - மன்மதன்.
பஞ்சசாகம் - முன்கை.
பஞ்சசாயகன் - மன்மதன், பஞ்சபாணன் என்பது பொருள்.
பஞ்சசிகன் - மிதிலைக்கரசனுகிய, ஜநகனுக்கு உபதேசஞ்செய்த மஹாத்மா.
பஞ்சசிகை - சௌளம் பண்ணுது விடுமைந்திடம், அவை தலை யுச்சி கண் புருவம் முழங்கை முதல்வரையும்.
பஞ்சசுகந்தம் - பஞ்சவாசம்.
பஞ்சசுத்தி - ஐவகைச்சுத்தி, அவைஆத்துமசுத்தி இலிங்கசுத்தி திரவியசுத்தி பூதசுத்தி மந்திரசுத்தி.
பஞ்சசூடை - ஒரு அப்ஸரஸு, நாரதருக்குப் பெண்கள் சுபாவம் இதுவென்றெடுத் துரைத்தவள்.
பஞ்சஜநன் - ஸம்ஹலாதன்புத்திரன், சாந்தீபன் புத்திரனைப் பிரபாச தீர்த்தத்துள்ளே யிழுத்துக் கொண்டு போன ராக்ஷஸன், ஸ்ரீ கிருஷ்ணபகவான் தம் குருபுத்ரனை அவன் மோசஞ்செய்தானென்றறிந்து அவனைக் கொன்று, அவன் கழுத்தெலும்பை யெடுத்துப் பாஞ்சஜந்யம் என்னுஞ் சங்காக்கினர்.
பஞ்சசூனை - அம்மி, உரல், உலக்கை, துடைப்பம், மடைப்பள்ளி.
பஞ்சசென்னியம் - பாஞ்சசன்னியம்.
பஞ்சஞானன் - பத்தன்.
பஞ்சடைதல் - கண்பஞ்சாடுதல்.
பஞ்சணை - பஞ்சாலாயமெத்தை.
பஞ்சதசப்பிரகாணம் - ஒருவேதாந்தநூல், இது வசநரூபமாயுள்ளது.
பஞ்சதசகம், பஞ்சதசம் - பதினைந்து.
பஞ்சதசி - பூரணை, வேதாந்தசாத்திரங்களினென்று.
பஞ்சதத்துவம் - வாம பூசைக்கடுத்த தசாங்கமைந்து, அவை இறைச்சி சாராயம் திரீ சம்பாஷணை புணர்ச்சி யபிநயம் மீன்.
பஞ்சதந்திரம் - ஐந்துவகை தந்திரம், அவை அசம்பிரேட்சிய காரித்துவம் அர்த்தநாசம் சந்திவிக்கிரகம் சுகிர்லாபம் மித்திரபேதம்.
பஞ்சதம் - சாவு.
பஞ்சதன்மாத்திரம், பஞ்சதன்மாத்திரை - பஞ்சபூதமூலம்.
பஞ்சதாது - பஞ்சபூதம்.
பஞ்சதாரை - சருக்கரை.
பஞ்சதிரவியம் - கோசலம், சோமயம், தயிர், நெய், பால்.
பஞ்சதிராவிடர் - தெலுங்கர், திராவிடர், கன்னடர், மஹாராஷ்ட்ரர், கூர்ஜரர் என்னும் இவ்வைவரும் பஞ்சத்ராவிடர் எனப்படுவர்.
பஞ்சதீர்க்கம் - உதரம், கண், கை, மார்பு, மூக்கு எனு மைந்துறுப்பு.
பஞ்சது - குயில், நேரம்.
பஞ்சதை - பஞ்சபூதியம்.
பஞ்சத்துவம் - ஐந்தின்கூட்டம், மரணம்.
பஞ்சநகர்க்கூர்மையோன் - ஆமை.
பஞ்சநகம் - ஆமை, புலி, யானை.
பஞ்சநகி - உடும்பு.

பஞ்சநதம் } திருவையாறுஎன்னும்
பஞ்சநதி } ஒரு சிவஸ்தலம்.
பஞ்சநிம்பம் - வேம்பின் இலை பட்டை பழம் பூ வேர் என்பன.
பஞ்சநிறக்கல் - சிலாநாகக்கல்.
பஞ்சநீராஞ்சனம் - ஐவகை யாலாத்தி அவை சாட்டாங்கம் சீலை தளிர் தாமரை விளக்கு.
பஞ்சபட்சி - எழுத்துப்பொருத்தமறியுமைந்துபட்சி, அவை வல்லூறு ஆந்தை காகம் கோழி மயில் அவைகட்கு முறையே எழுத்து அ, இ, உ, எ, ஒ, ஒரு சாத்திரம், வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினொன்று.
பஞ்சபட்சிக்காதல் - ஒருசாத்திரம்.
பஞ்சபத்திரகன் - வியசனமுள்ளவன்.
பஞ்சபல்லவம் - அருச்சனைக்கேற்ற ஐவகைப்பத்திரம் அவை ஆத்தி மா முட்கிளுவை முல்லை வில்வம்.
பஞ்சபாணம் - மன்மதாத்திர மைந்து அவை முல்லை அசோகுவனசம் சூதம் நீலம் அவை முறையேதைக் குமிடம், உச்சி நெற்றி நெஞ்சு முலை குய்யம்.
பஞ்சபாணன் - காமன்.
பஞ்சபாணவத்தை - மன்மதாத்திரத்தினுலுண்டாகு மைந்துபாதி, அவை சுப்பிரயோகம் விப்பிரயோகம் சோகம் மோகம் மரணம்.
பஞ்சபாணி - பார்வதி.
பஞ்சபாண்டவர் - பாண்டுவினைந்துபுத்திரர், அவர் தருமன் வீமன் அருச்சுனன் நகுலன் சகதேவன்.
பஞ்சபாண்டவர்முல்லை - ஒருமுல்லை.
பஞ்சபாதகம் - ஐந்து துரோகம் அவை களவு கள்ளுண் குருநிந்தை கொலை பொய்.
பஞ்சபாதகன் - பஞ்சபாதகஞ் செய்வோன், முழுத்துரோகி.
பஞ்சபாத்திரம் - ஒருபாத்திரம்.
பஞ்சபாரதீயம் - நாரதர்செய்த இசைத்தமிழ்நூல்.
பஞ்சபிராணன் - தசவாயுவினுள் வாயுவைந்து அவைஅபானன்உதானன் சமானன் பிராணன் வியானன்.
பஞ்சபூதம் - ஐந்துபூதம் அவை பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம்.
பஞ்சப்பிரமம் - பஞ்சமுகேச்சுரன்.
பஞ்சமகதி - மோக்கம்.
பஞ்சமம் - அழகு, ஐந்து, ஒருபண், சத்ததாளத்தொன்று, சமர்த்து.
பஞ்சமரபு - அறிவனுர்செய்த இசைத்தமிழ்நூல்.
பஞ்சமலம் - ஐந்துமலம்.
பஞ்சமன் - ஐந்தாம்சாதி.
பஞ்சமாசத்தம் - பஞ்சக்கருவினு லுண்டாகுநாதம்.
பஞ்சமாசியம் - குயில்.
பஞ்சமாபாதகன் - பஞ்சபாதகன்.
பஞ்சமாயெக்கியம் } ஐவகையாகம், அ
பஞ்சமாயெஞ்ஞம் } வை அக்கினி கருமம்தேவபூசை பிதிர்பூசை விருந்தோம்பல் வேதாத்தியயனம்.
பஞ்சமாரன் - பலதேவன் மகன்.
பஞ்சமி - அவிட்டமுதலைந்துநாள், ஐந்தாந்திதி, சொக்கட்டான்மனை, துரோபதி, துர்க்கை.
பஞ்சமிப்பேய் - பஞ்சமியிலிறந்துளி நிற்கும் பேய்.
பஞ்சமுகன் - சிங்கம், சிவபிரான்.
பஞ்சமுத்திரை - சைவதவத்தோர்முத்திரை, அவை உருத்திராக்கம் கமண்டலம் காவிப்புடவை சடை தண்டு.
பஞ்சமூலம் - ஐவகைமூலி, அவைசிறு பஞ்சமூலம் பெரும் பஞ்சமூலம் என இருவகைப்படும்.
பஞ்சம் - ஐந்து, கருப்பு, விழுதல்.
பஞ்சயன் - பஞ்சராத்திரி.
பஞ்சயாகம் - ஐந்தியாகம், அவைசுற்றப் போஷிப்பு தனக்குணவு தேவபலி பிதிர்பலி யோகிகள்பலி.
பஞ்சரத்தினம் - ஐவகைநிதி, அவை சுகந்தி பொன் மரகதம் மாணிக்கம் முத்து ஒரு பிரபந்தம்.
பஞ்சரம் - இடம், உடல், கழுகு, கூடு, செருந்திமரம், பன்னும்கூடு, மட்கலம் வளையுங்கூடம்.
பஞ்சராகேடம் - மீன்களைக் கொல்லுமுபாயம். [று.
பஞ்சராத்திரம் - வைணவமதத்தொன்
பஞ்சரித்தல் } உபசாரமாய்ப்பேசல்,
பஞ்சரிப்பு } குதலைபோல் கெஞ்சிக் கேட்டல், விரிவாய்ப்பேசல்.

பஞ்சலட்சணம் - இலக்கணம் ஐந்து அவை எழுத்து சொல், பொருள், யாப்பு, அணி, புராண வுறுப்பைந்து, அவை சரிதைத்தலைவர் வமிசம் பிரபஞ்சத்தோற்றம் பிரபஞ்சநாசம் மனுக்களரசாட்சி மனுவமிசவரலாறு.
பஞ்சலவணம் - ஐவகையுப்பு.
பஞ்சலிங்கம் - பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்துபூதங்களினுலும் தனித்தனி யுண்டான லிங்கங்கள். பிருதுவிலிங்கம் காஞ்சியிலும், அப்புலிங்கம் ஜம்புகேசுரத்திலும், தேயுலிங்கம் அருணசலத்திலும், வாயுலிங்கம் காளத்தியிலும், ஆகாசலிங்கம் சிதம்பரத்திலும் உள்ளன.
பஞ்சலித்தல் - பஞ்சங்கூறுதல்.
பஞ்சலிப்பு - பஞ்சங்கூறுதல், பஞ்சத்தின்வருத்தம்.
பஞ்சலோகம் - ஐந்துலோகம், அவை இரும்புஈயம்செம்பு பொன் வெள்ளி.
பஞ்சலோபி - மிகுபிசுனன்.
பஞ்சவடம் - பூணூல்.
பஞ்சவடி - ஒருதலம்.
பஞ்சவடி - ஸ்ரீராமர் வனவாசகாலத்தில் ஆசிரமம் அமைத்துக்கொண்டிருந்த இடம், இது கோதாவிரி தீரத்திலுள்ளது, வடம் - ஆலமரம், ஐந்து ஆலமரங்கள் கூடியொரு தோப்பாயிருந்தால்இது பஞ்சவடியெனப்பட்டது.
பஞ்சவட்டந்தடி-எஃகுக்கோல்.
பஞ்சவத்திரம் - சிங்கம்.
பஞ்சவத்திரன் - சிவபிரான்.
பஞ்சவர் - பாண்டுமக்கள்.
பஞ்சவர்தூதன் - கிருட்டிணன்.
பஞ்சவனநாதர்-திருமூக்கிச் சுரத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பஞ்சவன் - பாண்டியன்.
பஞ்சவன்னக்கிளி - ஓரினக்கிளி, அது ஐந்துவன்ன மூடையது.
பஞ்சவன்னம் - ஐந்துவன்னம், அவை கருமை செம்மை பச்சை மஞ்சள் வெண்மை.
பஞ்சவாசம் - ஐவகைவாசம் அவை இலவங்கம் எலம் கருப்பூரம் சாதிக்காய் தக்கோலம்.

பஞ்சவிடயம் - பஞ்சப்பொறியினுல் அறியப்படுவன, அவை இரசம் உருபம் கந்தம் சத்தம் பரிசம்.
பஞ்சவெச்சம் - பஞ்சயாகம்.
பஞ்சறைக்கிழவன் - அறக்கிழவன்.
பஞ்சனம் - அழித்தல்.
பஞ்சனி - சொக்கட்டான்மனை.
பஞ்சாக்கரம் - பஞ்சாட்சரம்.
பஞ்சாக்கினி - ஐந்து அக்கினி, அவை இராகம் காமம் கோபம் சடம் தீபனம் தவஞ்செய்வோர்சிற்குமைந்தக்கினி அவை நாற்றிசைக்கு நான்கு தீக்குண்டம் மேலே சூரியன்.
பஞ்சாங்ககுத்தம் } ஆமை.
பஞ்சாங்கக்கூர்மை }
பஞ்சாங்கதெண்டன் - கால் கை தலை எனு மைந்துறுப்பு நிலந்தோய வணங்கல்.
பஞ்சாங்கபலன்-பஞ்சாங்க நிருமித்திலிகண்டபலன்.
பஞ்சாங்கம் - ஆமை, குதிரை, சோதிடத்திற் குரியவைந் துறுப்பு, அவை காணம், திதி, நட்சத்திரம், யோகம், வாரம்.
பஞ்சாங்கவாக்கியம் - கணித முறையில் ஒன்று.
பஞ்சாங்கி - குதிரைக்கடிவாளம்.
பஞ்சாங்குலம் - ஆமணக்கு, கை.
பஞ்சாசியம் - சிங்கம்.
பஞ்சாடித்திருக்கை-ஒருதிருக்கைமீன்.
பஞ்சாடுதல் - கண்பஞ்சடைதல்.
பஞ்சாட்சரம் - சிவநாமாக்கரமைந்து.
பஞ்சாதபை - பஞ்சாக்கினி மத்தியிற் செய்யுந்தவம்.
பஞ்சாப்ஸரஸுமந்தகர்ணன் - தண்டகாரணியத்தி லுண்டாக்கின ஓர் குளம்.
பஞ்சாமிர்தம் - ஐந்தமுதம் அவைசருக்கரை தயிர் தேன் நெய் பால்.
பஞ்சாமிலம் - இலந்தை மாதளை புளியாரைநெல்லிஎலுமிச்சைசேர்ந்தது.
பஞ்சாமுதம் - பஞ்சாமிர்தம்.
பஞ்சாயத்தார் - நியாயசங்கத்தார்.
பஞ்சாயம் - ஐந்துபேர்கூடிய நியாயசங்கம்.
பஞ்சாயுதபாணி - விட்டுணு.
பஞ்சாயுதம் - ஓராபரணம், விட்டுணுவினைந்தாயுதம், அவை சக்காம் சங்கு தண்டு தனு வாள்.

பஞ்சாயுதன் - விட்டுணு.
பஞ்சாய் - கோரை.
பஞ்சாரகேடம் - மீன்கூடு.
பஞ்சாரம் - எருது பரி யிவற்றினுயுள், பழையது.
பஞ்சாரி - சொக்கட்டான்மனே.
பஞ்சார்க்கதோஷம் - ஐந்தருக்கத் தானும் வருந்தோஷம்.
பஞ்சார்க்கம் - ஐந்தருக்கம் அவை இந்திரவில் கேது தூமம் பரிவேடம் விதிபாதம்.
பஞ்சார்த்தல் - பஞ்சாடுதல்.
பஞ்சாலம் - ஒருதேயம்.
பஞ்சாவடம் - பூணூல்.
பஞ்சாவத்தம் - பிரேதம்.
பஞ்சாவத்தை - ஐந்தவத்தை அவை சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம்.
பஞ்சாளர் - பஞ்சகம்மாளர்.
பஞ்சானனம் - சிங்கம்.
பஞ்சானனன் } சிவபிரான்.
பஞ்சானன் }
பஞ்சான் - பச்சைக்குழந்தை.
பஞ்சி - சடைந்தது, சோம்பு, தூறு, பஞ்சாங்கம், பஞ்சு, வருத்தம்.
பஞ்சிகம் - தாளி.
பஞ்சிகாரகன் - கணிதன், சோம்பன், வருத்தக்காரன்.
பஞ்சிகை - கணக்கு,நமன்,பஞ்சாங்கம், மயிர், வியார்த்திப் பண்ணப்பட்ட நூல்.
பஞ்சிதம் - விண்மீன்.
பஞ்சிற்ளுெடர் - தூனுனி.
பஞ்சீகரணம் - ஒவ்வொரு பூதமும் இருகூறுகி ஒரு கூற்றை நிலுத்தி மற்றைக் கூற்றை நான்கு கூறுக்கி, எனய நான்கு பூதங்கட்கும் ஒவ்வொன்ருகக் கொடுத்தும் வாங்கியும் தம்மிற்கூடுவதே பஞ்சீகரணமாம். அதாவது பிருதுவியிலே பிருதுவி தன் மாத்திரை அரை, அப்பு தன்மாத்திரை அரைக்கால், தேயு தன்மாத்திரை அரைக்கால், வாயு தன்மாத்திரை அரைக்கால், ஆகாய தன்மாத்திரை அரைக்கால், இவ்வாறே மற்றவையும் ஆமெனக் கொள்க, நூல் பூதங்களைச் சோதித்தால் இக்கூறுகள் புலனுகும்.

பஞ்சீகரணம் - பஞ்சபூதவமிசகூட்டம்.
பஞ்சு - சீலே, தூறு, பருத்திப்பஞ்சு முதலியன.
பஞ்சிநீலப்பாணி - துருசி.
பஞ்சுரம் - ஒருபண், குறிஞ்சி யாழ்த்திறம், பாலைநிலத்திராகம்.
பஞ்சுருட்டான் - ஒருபறவை.
பருசுருத்தான் - ஒருகுருவி.
பஞ்சுவாய்க்கொள்ளுதல் - மூலேக்கொள்ளுதல்.
பஞ்சூகம் - பெருமை.
பஞ்சேந்திரியம் - ஐம்பொறி அவை கண் காது தோல் நா மூக்கு.
பஞ்சை - இரப்போன், எளிமை, தரித்திரம், பலவீனன்.
பஞ்சைமயிர் - மெல்லியரோமம்.
பஞ்சையன் - எளியன் தரித்திரன், பலவீனன்.
படகம் - இரணபேரி, கலகம், கவரிமா, கோல், தம்பட்டம், திரைச்சீலே; படாம்வீடு, பரண், விஷ்ணுகரந்தை.
படகாரன் - ஓவியன், நெய்வோன்.
படகு - தெப்பம்.
படகுடி - கூடாரம்.
படக்குப்படக்கெனல் - அச்சக்குறிப்பு, ஈரடுக்கொலிக்குறிப்பு, துடித்தல்.
படங்கன் - ஒருமீன்.
படங்கு - கூடாரம், சலாகை, பெருங்கொடி, பெருவரிச்சல், மெய்போற்பேசுதல், மேற்கட்டி, பதங்கம்.
படங்குந்திநிற்றல் - காலிற் பெருவிரலூன்றி நிற்றல்.
படச்சரம் - பழம்புடவை.
படபடத்தல்-துடிதுடித்தல், விரைதல்.
படபடப்பு - துடிதுடிப்பு, விரைவு.
படபடெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு, விரைவுக் குறிப்பு.
படபம் - பாதாளம்.
படபை - வடவைத்தீ.
படப்பம் - மருங்கிலூர் சூழ்பதி.
படப்பு - கொல்லே, வைக்கோற்போர்.
படப்பை - ஆன்கொட்டில், கொல்லே, நாடு, மருதநிலத்தூர்.
படப்பொறி - துத்தி, பாம்பின்படத்தினடையாளம்.
படமஞ்சரி - ஓரிராகம்.
படமடக்கி - தாழை.

படமண்டபம் } கூடாரம்.
படமயம் }
படமரம் - நெய்வார்கருவியி லொன்று.
படமெடுத்தல் - பாம்பு படம்விரித்தல்.
படம் - எழுத்துப்படம், காற்ரூட்டி சீலை, திரைச்சீலை, பாம்பின் படம், யானைமுகபடாம், விருதுக்கொடி.
படாடி - சிதறடிப்பு, முழுக்கூறும் வேண்டாத்தலை.
படருருக்கி - செந்நாயுருவி.
படரை - ஆவிரை.
படர் - இழிமக்கள், ஏவல் செய்வோர், கருத்து, செலவு, துகிற்கொடி, துன்பம், துன்புறுவோர், நடை, நினைப்பு, நோவு, பகை, படரென்னேவல், படைவீரர், மேடு, வருத்தம், வழி.
படர்கொடி - பயிர்க்கொடி, பீர்க்கு.
படர்க்கை - மூன்ருமிடம்
படர்ச்சி - நடை, பரப்பு, பரவுதல், விரித்தல்.
படர்தல் - அகலம், நடத்தல், நினைத்தல், பரவுதல், விரிதல்.
படர்தாமரை } ஒரு கரப்பன்.
படர்தேமல் }
படர்மல்லிகை - ஒருமல்லிகை.
படர்வு - படர்ச்சி.
படலம் - அடுக்கு, அதிகரிப்பு, இரதனக்குற்றம், இலக்கியச்செய்யுட் கூறுபாடு, கூட்டம், திசை, திலகம், நேத்திரபடலம், பரிவாரம், படல், மூடி.
படலிகை - இளைப்பு, கைமணி, படலம், பூந்தட்டு, பெரும்பீர்க்கு, வட்டம், வட்டவடிவு.
படலி - கூட்டம், வீட்டின்மேற்கூரை.
படலை - கட்டுக்கதவுகோத்தமாலை, தார்மணி, பரந்தவடிவு, பரந்த வாய்ப்பறை, பூமாலை, வெளிக்கதவு.
படலைமாலை - பச்சிலைமாலை.
படல் - அகப்படுத்தல், அத்தமித்தல், உண்டாதல், ஒன்ருடனே தோய்தல், கெடுதல், காதல், தட்டி, தெறித்தல், படுதல், பதிதல், புலனிலேறுதல், பூத்தல், முட்டுதல்.
படவாசகம் - கூடாரம், வாசனைத்தூள்.
படவாசம் - கூடாரம்.
படவாள் - படைவாள்.
படவு - படகு.
படவை - செருப்படி.
படனம் - படித்தல், மனப்பாடம்.
படன் - இழிகுலன், படவீரன்.
படாகை - கிராமம், விருதுக்கொடி.
படாடோபம் - உடைப்பகட்டு.
படாந்தரம் - கட்டுக்கதை, கோள், முழுப்பொய்.
படாபஞ்சனம் - தீர்க்கநாசம், படாவஞ்சனம்.
படாப்பழி - பெரும்பழி.
படாம் - சீலை, திரைச்சீலை, பெருங்கொடி.
படாம்வீடு - கூடாரம்.
படாரமூக்கி - வெண்ணுயுருவி.
படாரன் - பிடாரன்.
படாரிடுதல் - ஒலிக்குறிப்பு.
படாரூபம் - படாப்பழி.
படாரெனல் - படாரிடுதல்.
படாவஞ்சனம் } கடும்பொய், கொடிய வஞ்சனை.
படாவஞ்சனை }
படி - ஒப்பு, ஓரளவு, குணம், குதிரையங்கபடி, சம்பளம், சோபானம், தரம், தாழ்வாரம், நாழி, நிறையறிபடி, நீர்நிலை, நூறுபலங்கொண்ட நிறை, பகை, படியென்னேவல், பூமி, வாயிற்படி, விதம்.
படிகட்டுதல் - இடைகட்டுதல், படிகொடுத்தல்.
படிகபச்சை - ஓரிரத்தினம்.
படிகம் - கூத்து, பளிங்கு, பிச்சை, வெள்ளிலோத்திரம்.
படிகர் - வாயிலாளர்.
படிகை - படிவு, புடைவை.
படிகொடுத்தல் - நாளுக்குநாள் வேண்டிய செலவு கொடுத்தல்.
படிக்கட்டளை - கோயின் முதலியவற்றிற்குள்ள நித்திய விருத்திச் செலவு, நியமிதம்.
படிக்கட்டு - நியம அளவு.
படிக்கம் - படிக்காசு புலவன்.
படிக்காசு - இராமநாதபுரம், இரகுநாத சேதுபதியின் சமஸ்தானத்தில் ஒரு புலவன், இவர் சாதியில் செங்குந்தர் படிகொடுக்கும் பணம்.
படிக்காரம் - சீனக்காரம்.

படிக்காரர் - படிகொடுப்போர், படி வாங்குவோர்.
படிக்குப்பாதி - நியமித்ததிற்பாதி.
படிசம் - தூண்டில்.
படிசு - நிலைபரம்.
படிதம் - படித்தல்.
படிதல் - அமருதல், அமைதல், சலத்தல், குளித்தல், கூத்து, திருந்தல்.
படிதவ்வியம் - படித்தற்குரியது.
படித்தரம் - நிபந்தனை.
படித்தல் - சொல்லுதல்,பழகுதல்,வாசித்தல்.
படித்திரம் - சூட்டிறைச்சி.
படித்தீன் - படிக்கணக்கான சாப்பாடு.
படித்துறை - படிக்கரை.
படிப்பனை-சமர்த்து, படிப்பு,போதனை.
படிப்பனவு - படிப்பு, போதனை.
படிப்பாளி - கற்றோன்.
படிப்பித்தல் - கற்பித்தல், பழக்குதல்.
படிப்பினை - படிப்பனவு, வங்கமணல்.
படிப்பு - அறிவு, கல்வி, சொல்லல்,பழக்கம், புத்தி, வாசனை, வாசிப்பு.
படிப்போன் - மாணுக்கன்.
படிமக்கலம் - கண்ணுடி.
படிமதாளம் - நவதாளத்தொன்று.
படிமத்தாள் - சன்னதகாரி.
படிமத்தான் } தேவராளன்.
படிமத்தோன் }
படிகம் - கண்ணுடி, சுத்தம், வெண்மை, வெறியாட்டு.
படிமாத்தாள் - படிமத்தாள்.
படிமானம் கீழ்ப்படிதல், தகுதி, திருத்தம், விலைகுறைதல்.
படிமை - தவவேடம்.
படியகம் - படிக்கம்.
படியச்சு - ஒருகருவி.
படியப்பார்த்தல் - அடக்குதல், குறைத்தல், சேர்த்தல்.
படியரம் - ஓரம்.
படியவைத்தல் - படியப்போடுதல்.
படியளத்தல் - படிகொடுத்தல்.
படியளந்தோன் - விட்டுணு.
படியாள் - படிக்காரன்.
படிரம் - படீரம்.
படிலன் - வீரன், வேலைக்காரன்.
படிவம் - உடலுறுப்பு, உடல், சித்திரரூபம், நோன்பு, வடிவு.
படிவர் - சடைமுடியோர், முனிவர்.
படிவு - அடங்குகை, அழுந்துகை, கீழ்ப்படிவு, குளித்தல், தாங்குதல், தாழ்தல், வணக்கம்.
படிறர் - திருடர், தூர்த்தர், பொய்யர், வஞ்சகர்.
படிறு - களவு, பொய், வஞ்சகம்.
படினம் - பக்குவம்,மேன்மை,வெற்றி.
படீரம் - உதரம், உயரம், சந்தனம், சிவப்பு, வயல், வாதம்.
படீரிடுதல் } ஒலிக்குறிப்பு.
படீரெனல் }
படு - உப்பு, குலை, கள், குளம், கூர்மை, கொடுத்து, சம்பத்து, நன்மை, நீர்நிலை, படுவென்னேவல், மரக்குலை, மிகுதிக்குறிப்பு, (உ-ம்) படுபொய், வெப்பம்.
படுகர் - இருக்தேறும்வழி, குளம், பள்ளம், மருதநிலம், வயல்.
படுகளம் - போர்க்களம்.
படுகள்ளன் - வலுகள்ளன்.
படுகாடு - சுடுகாடு.
படுகாயம் - உயிர்ச்சேதமான காயம்.
படுகாச்சி - உபசாரமறியாதவன், கட்டையிற் புகையிலை.
படுகி - சீனக்காரம்.
படுகிடங்கு - பொறிகிடங்கு.
படுகு - வாக்குவிசேடம்.
படுகுடி - கெடுகுடி.
படுகுழி - யானை முதலிய படுகிடங்கு.
படுகை - ஆற்றங்கரையடுத்தவயல்.
படுக்கையாமணக்கு - ஓராமணக்கு.
படுக்காளி - தந்திரி, பொய்யன்.
படுக்காழிவிசேஷம் - கட்டுக்கதை.
படுக்கை - அடிப்பட்டை, படுத்தல், பல்லணம், மக்கட்படுக்கை, விலங்கின் படுக்கை.
படுசூரணம் - மருந்துத்தூள், மூழுநாசம்.
படுஞாயிறு-அத்தமசூரியன்,ஒருநோய்
படுதடி - பட்டதடி.
படுதல் - அகப்படுதல், அத்தமித்தல், இல்லாமை, உண்டாதல், ஒலி, சகித்தல், சாதல், படுந்தன்மை, பதித்தல், புலப்படுதல், பூத்தல், மூட்டுதல்.
படுதா - ஒதுக்கடம்.
படுதாமரை படர்தாமரை.

படுத்தடி - முரட்டுத்தன்மை.
படுத்தலோசை - தாழ்த்திசை.
படுத்தல் - அகப்படுதல், கொலை செய்தல், சயனித்தல், சயனிப்பித்தல், செறித்தல்.
படுத்துருமம் - வெள்வேலமரம்.
படுத்துவம் - சமர்த்து, வலிமை.
படுநிலம் - பாலைநிலம், மயானம், யுத்தபூமி.
படுநீலி - முழுநீலி.
படுபழம் - முதிர்ந்தபழம், வஞ்சகன்.
படுபழி - மிகுபழி.
படுபள்ளம் - பெரும்பள்ளம்.
படுபுரளி - சுத்தப்புரளி.
படுபுளுகு - மிகுபுளுகு, வீண்புகழ்ச்சி.
படுபொய் - முழுப்பொய்.
படுபொழுது - மாலைநேரம்.
படுமரம் - பட்டமரம்.
படுமலைப்பாலை - ஓரிசை.
படுமுடிச்சு - அவிழாமுடிச்சு.
படுமோசம் - முழுமோசம்.
படுவநாயகி - பாற்சோற்றி.
படுவர் - கள்விற்போர்.
படுவன் - ஒருசிலந்தி, ஒருநோய், ஒருபூண்டு.
படுவான் - அழிவான், மேற்றிசை.
படுவி - கள்விற்பாள், வசவி.
படுவை - தெப்பம்.
படை - அடுக்கு, ஆயுதம், கலப்பை, கல்லணை, செதிள், தானை, இஃது அரசியலினென்று திரள், நித்திரை, நிரை, படையென்னேவல், போர், போர்ப்படை, மெத்தை.
படைக்கலம் - ஆயுதப்பொது.
படைக்குழப்பம் - படைவீரரின்குழப்பம்.
படைக்கோலம் - போர்க்கோலம்.
படைச்சனம் - படைவீரர்.
படைச்சால் - உழவுசால்.
படைச்செருக்கு - படைவீரம்.
படைத்தலைவன் - சேனாதிபதி, இவன் அரசர்க்குத் துணைவரி லொருவன்.
படைத்தல் - உடைத்தாதல், சிருட்டித்தல், இது முத்தொழிலினொன்று, சோறு முதலிய வுண்கலத்திடுதல்.
படைத்தவன் - ஒன்றையடைந்தவன், கர்த்தா, பிதா.
படைத்துணை - போர்க்குதவி, போர்த்துணைவன்.
படைத்தோன் - கடவுள்சிருட்டிகர்த்தர்.
படைபயிற்றல் - சிலம்பம்பழக்கல், அது அரசராறுதொழிலினொன்று.
படைபேற்றல் - கீழறுத்தல்.
படைப்பு - சம்பாத்தியம், சாத முதலிய படைத்தல், சிருட்டி, சிருட்டிக்கப்பட்டது.
படைப்பௌஞ்சு - படைவகுப்பு.
படைமரம் - நெய்வார் கருவியினொன்று.
படைமுகம் - போர்முகம்.
படையல் - அடிக்குமடி, நிவேதனப்பொருள்.
படையன் - அடித்தல், அடிமை.
படையாச்சி - ஒருசாதி.
படையாளர் - ஆயுதவீரர், போராளர்.
படையிராசன் - வெடியுப்பு.
படையிறங்குதல் - பாளையம்போடுதல்.
படையுறுப்பு - படையணி.
படையுறை - ஆயுதவுறை.
படையுள்படுவோன் - சின்னமூதி.
படையெடுத்தல் - சேனையெழுதல்.
படையெழுச்சி - படையெழும்பல்.
படைவகுப்பு - படையணி.
படைவரம் - குதிரைச்சேணம்.
படைவாள் - கலப்பை, கலப்பையினோருறுப்பு.
படைவீடு - ஆயுதசாலை, தேவாலயம், பாசறை.
படைவீரர் - சேனைவீரர்.
படைலோகம் - சிப்பி.
படோலம் - யானைக்கட்டுத்தறி, முள்ளுவெள்ளரி.
படோலி - நிலவு.
படோலுகை - புடல்.
படோல்
படோல்ராசி } பேய்ப்புடல்.
பட்கை - பாம்பின்மேல்வாயினோர்பல்.
பட்சசம் - திட்டிவாயல்.
பட்சகன் - பேருண்டியன்.
பட்சசாரம் - பட்சி.
பட்சசரன் - பார்ப்பான்.
பட்சணம்
பட்சணை } இரை, உணவு, உண்டல்.
பட்சணி - உண்போன்.
பட்சணித்தல் - உண்டல்.
பட்சணியம் - உண்ணத்தகுபொருள்.
பட்சதாபம் - உருக்கம், பரிதாபம்.
பட்சத்துவாரம் - திட்டிவாயில்.

பட்சபாதம் - ஓரவாரம்.
பட்சபிந்து - கிலாமுகிப்புள்.
பட்சம் - உருக்கம், செட்டை, தாம், நேசம், பக்கம், பதினைந்து நாட்கொண்டது, பாட்டியம், மீனம்பர், வகுப்பு.
பட்சயம் - போசனம்.
பட்சவாதம் - பட்சபாதம்.
பட்சவாதி - ஓரவாரஞ் செய்பவன்.
பட்சாந்தம் - அமாவாசை, பூரணை.
பட்சு - பாகஞ்செய்வோன்.
பட்சி - பட்சியென்னேவல், பறவை.
பட்சிசாதி - பறவைக்குலம்.
பட்சிசாத்திரம் - பஞ்சபட்சியைக்குறித்தறியநூல்.
பட்சிசாலம் - பறவைக்கூட்டம்.
பட்சிசிங்கம் - கலுழன்.
பட்சித்தல் - உண்ணல், விழுங்கல்.
பட்சித்தோஷம் - பறவைத்தோஷம்.
பட்சிப்பு - பட்சித்தல்.
பட்சியம் - மாப்பலகாரங்கள்.
பட்சியிராசன் - கலுழன், கெருடப்பச்சைக்கல்.
பட்சியினெச்சம் - பொன்னம்பர்.
பட்சிராஜன் - கருடன்.
பட்டகசாலை - பண்டசாலை.
பட்டகம் - பண்டசாலை, புழுக்கொல்லிச்செடி.
பட்டங்கட்டி - செங்குந்தரிற்றலைவன், நெய்தனிலமாக்களிற்றலைவன், பட்டவத்தனன்.
பட்டங்கட்டுதல் - பட்டப்பேர்கொடுத்தல், பட்டமணிதல்.
பட்டகம் - ஒரு ஆயுதம்.
பட்டசாலை - பட்டகசாலை.
பட்டச்சீட்டு - பட்டப்பேரொப்பம்.
பட்டஞ்சூடுதல் - அபிஷேகமடைதல், பட்டமணிதல்.
பட்டஞ்சூட்டுதல் - அரசரைக் குரவரைஅபிஷேகம் பண்ணுதல், பட்டப்பேர்கொடுத்தல்.
பட்டடை - அடைகல், கழுத்தணி, குவியல், தலைதாங்கி, தாங்குபலகை, தாபரம்,தானியஉறை,|நரம்புகளின் இளி.
பட்டடைக்கழனி - தண்ணீரிணறைத்துப் பயிரிடுங்கழனி.
பட்டடையார் - முதல் வேலைகாரர்.

பட்டணசுவாமி, பட்டணத்துப்பிள்ளை } ஒருஞானி.
பட்டணத்தோர் - நகரப்பதியோர்.
பட்டணப்பிரவேசம்-நகரிவலம்வருதல்.
பட்டணம் - நகரம்.
பட்டணவர் - செம்படவர்.
பட்டத்தியானை - இராசயானை.
பட்டத்திரி - நெருப்புத்திரி.
பட்டத்திரீ, பட்டஸ்திரீ } இராசாத்தி.
பட்டத்துக்குமாரத்தி - அரசன் றலைமகள்.
பட்டத்துக்குமாரன்-அரசன்றலைமகன்.
பட்டத்துத்தேவி - இராசாத்தி.
பட்டத்துரை - பட்டவத்தனன்.
பட்டந்தரித்தல் - பட்டப்பேர்கொடுத்தல், பட்டமணிதல்.
பட்டந்தீர்தல் - ஆபரணந்தூண்முதலியவற்றிற் பட்டம் வகுத்தல்.
பட்டப்பகல் - நடுப்பகல், நல்லபகல்.
பட்டப்பேர் - குலமுறைப்பேர்,பட்டஞ்சூட்டற்பேர்.
பட்டமணி - பட்டந்தீர்ந்தமணி.
பட்டமரம் - படுமரம்.
பட்டம் - ஆயுதம்;எழுதும்படிசெய்ததகடு, கடுதாசிப்படம், கவரிமா, குளம், சதுக்கம், சீலை, தீர்க்கம், நாற்காலி, நெற்றிப்பட்டம், பட்டினம், பரிசை, மனிதர் படுக்கை, வழி,வாள், விலங்கின் படுக்கை.
பட்டயம் - பிரசித்தபத்திரிகை, வாள்.
பட்டர் - பாடுவோர், பிராமணரிலோர் வகுப்பு.
பட்டவர்த்தனர் - பட்டந்தரித்தவரசர்.
பட்டவிளக்கு - ஒருவிளக்கு.
பட்டறை - கண்டத்தணியுமோராபரணம்.
பட்டணம் - பட்டினம்.
பட்டன்-சத்துரு, ஞானி, பாடுவன்.
பட்டா, பட்டாகத்தி } வாள்.
பட்டாங்கு - ஊழ், சித்திரச்சேலை, பரிகாசம், மெய்.
பட்டாசிரியன்-ஒருசமையவாசிரியன்.
பட்டாசு - சீனவெடி.
பட்டாடை - பட்டுவஸ்திரம்.
பட்டாணி - ஒருகருவி, ஒரு சாதியான், ஒரு செடி.

பட்டாணி தயிலம் - ஒரு சிரங்கெண்ணெய்.
பட்டாணிப்பயிறு - ஒருபயறு.
பட்டாணிப்பாவை - ஒருபாவை.
பட்டாபிஷேகம், பட்டாபிடேகம் - பட்டந்தரித்தல், முடிசூட்டல்.
பட்டாரகர் - கடவுளர், குருக்கள்.
பட்டாரகன் - அரசன், அருகன், இருடி, கடவுள், குரு, சூரியன்.
பட்டாலிகம் - உறுதிப்பத்திரம்.
பட்டி - அட்டவணை, ஆட்டுக்கிடை, இடம் ஒருசெடி, ஒருவிதச்சிகிச்சை, களவு, கள்வன், சிற்றூர், சீலை, தெப்பம், நெகிழ்ச்சி, படல், பலகறை, பிள்ளை, மந்தை, வாலையென்னுமோர் கருவி, விக்கிரமாதித்தன் மந்திரி, வெற்றிலைச்சுருள், வேசி.
பட்டி - சந்திரசர்மன் புத்திரன், விக்ரமார்க்கன் தம்பி.
பட்டிகர், பட்டிகள் - திருடர்.
பட்டிகை - அரைநாண், சீந்தில், சீலை, சுவர்த்தலத்தின் சித்திரக்கம்பி, தெப்பம், தோணி, எட்டிச்செடி, முலைக்கச்சு.
பட்டிக்கடா - மாப்பிள்ளைக்கடா.
பட்டிக்காடு - காட்டுக்குள்ளூர்.
பட்டிக்கிடை - பட்டிக்கிடவை.
பட்டிக்குறி - பரவணிக்குறி.
பட்டிசம் - ஒருபாணம்.
பட்டிடை - நந்தியாவட்டை.
பட்டிணி - பட்டினி.
பட்டிநி - பார்ப்பனத்தி, போகமாது.
பட்டிப்பார்த்தகொம்பு - நிமிர்ந்து முள் வளைந்த கொம்பு.
பட்டிப்படி-பட்டியேய்ப்போர் செலவு.
பட்டிப்பயல் - திருட்டுப்பயல்.
பட்டிப்பொங்கல்-மந்தையிற் பொங்கல்.
பட்டிமண்டபம் - பாடற்சுவை மண்டபம், ஒலிக்க மண்டபம்.
பட்டிமரம் - கள்ளமாட்டின் கழுத்திற் கட்டுமரம்.
பட்டிமாடு - கள்ளமாட்டின் கழுத்திற் கட்டுமரம், பயிரழிக்குமாடு.
பட்டிமுறித்தல் - ஒருவிளையாட்டு, கட்டுக்கடந்து போதல், கூட்டத்தை நீக்கல்.
பட்டிமேய்தல் - மிருகம், பயிரழித்தல்.
பட்டிமை - களவு, வஞ்சம்.
பட்டியல் - வலிச்சல்.
பட்டியூண் - விளைவிற்பட்டிக்காரனுக்கு வைக்கும் பங்கு.
பட்டியெருது - பட்டிமாடு.
பட்டிவிடுதி - அந்திநேரத்தில் மழை விடுதல்.
பட்டினத்தடிகள், பட்டணத்துப்பிள்ளையார் - சோழநாட்டிலே, காவிரிப்பூம் பட்டினத்தில், வைசிய குலத்தில், ஆயிரத்திருநூறு வருஷங்களுக்கு முன்னே அவதரித்து, திருவெண்காட்டீசனாரிடத்தில் பேரன்புடையாராயொழுகின காரணப் பெயர்பெற்ற ஒரு புருஷரத்நம், இவர் கப்பல் வியாபாரத்தால் பெரும்பொருள் படைத்துக் குபேரனெனவும், சிவனடியாரைச் சிவனெனவேகொண்டு உபசரிக்கும் பத்திமேலீட்டால் சிறுத்தொண்டரெனவும் வாழ்ந்து இல்லறம் நடத்தி வருநாளில் விவாகஞ் செய்து கொள்வதற்குப் பொருளின்றிவருந்தியிருந்த ஒரு ஆதிசைவரிடம் சிவபிரான் ஒரு மானிடவுருக்கொண்டுசென்று உமதடிமையாகப் பாவித்து என்னைக் கொண்டு சென்று விற்றுக் கலிதீர்த்துக்கொள்வீராக வென்றுகூற, ஆதிசைவர் அவ்வாறே அவரைக்கொண்டு சென்று பட்டினத்தடிகளிடம்விற்றுப் பொருள்பெற்றுப் போயினர். பட்டினத் தடிகள் அவ்வடிமையை அடிமையாக நினையாது புத்திரனைப் போல வைத்து வணிகமுறை பயிற்றி, மரக்கலத்திலேற்றி, ஊர்தோறு மனுப்பிப் பொருளீட்டுவித்து மகிழ்ந்து வருநாளில், அவ்வடிமையானவர் ஒருமுறை தாம் மரக்கலத்திற் கொண்டுபோன பண்டங்களை யெல்லாம் விற்றுப்பெற்ற பெரும்பொருளை ஒரு தீவிலே ஆலயத் திருப்பணிக்கும் தருமத்துக்கும் செலவுசெய்துவிட்டு மீளும்போது அந்த மரக்கல நிரம்ப எருமுட்டைகளை யேற்றிக் கொண்டுவந்துபண்டாரத்திற் சேர்த்துப் பொன்மணலை யெருமுட்டை

களில்செறித்துவந்தே ளெனக்கூறி ஒன்றைப் பிட்டுக்கரைத்துக் காட்டினர், பின்பு அவரோடு சென்றசிலர் பட்டினத்தடிகளிடம் போய், இவர் உம்மை வஞ்சித்தா ரென்றுகூற அவர் அவ்வடிமையைச் சிறையிட்டு வைத்தார் அங்கே அவரிடத்து விளங்கிய அற்புதங்களை யறிந்த பிள்ளையார் அவரைச் சிறைநீக்கிவிட, அவர் பிள்ளையாருக்குஞானோபதேசஞ்செய்தருளினர், அவ்வளவில், பிள்ளையார் துறவாமை கண்ட பரமசிவன் ஒருகாதற்றவூசியால்அவருக்குஞான மூதிக்கச் செய்து மறைந்தருளினர், உடனே பிள்ளையார் துறவடைந்து தலங்கள் தோறுஞ் சென்று பாடி தரிசித்து அற்புதப்பாடல்களைப்பாடியும் அநேக அற்புதங்களைச்செய்தும் இறுதியில் திருவொற்றியூரையடைந்து சமாதிகூடிச் சிவலிங்காகாரமாயினர்.

பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தத்திரட்டு - இதனுள் கோயினான்மணிமாலை, திருக்கழுமலமும் மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்ப முடையார் திருவந்தாதி, திருவொற்றியூர்த் தொகை, திருவேகம்பமாலை முதலிவை அடங்கும். இவை யிற்றுக்கு வேண்டிய பொருள் வெறுப்பக்கொடுத்து அச்சுவாகன மேற்றி உலகத்திலே உலாவரச் செய்தவர் கல்வி கேள்விகளிற் சிறந்தவரும், பொருட் செல்வத்தோடு அருட்செல்வமொருங்குடையவரும், சிதம்பராலய ஜீர்ணோத்தநாரும் இராஜராஜாங்கத்தாரால் நன்கு மதிக்கப்பெற்றவரும், சிதம்பரம் நகர சீர்திருத்த சபையின் சபாநாயகரும் ஆகிய ஆனரெபில் S. RM. M. இராமசாமிசெட்டியார் அவர்களாம்.

பட்டினப்பாக்கம் - காவிரிப்பூம் பட்டணத்தின் உண்ணகர்.

பட்டினப்பாலை - பத்துப்பாட்டுள் ஒன்பதாவது, கரிகாற்சோழனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்பாடியது.

பட்டினம் - ஊர், நெய்தநிலத்தூர்.

பட்டினவர் - நெய்தனிலமாக்கள்,செம்படவர்.

பட்டினவர்சேரி - நெய்தனிலம், செம்படவரூர்.

பட்டினி - இராசாத்தி, உணவற்றிருத்தல், பார்ப்பனத்தி.

பட்டினிகாத்தல் } பசிகிடத்தல்.
பட்டினிகிடத்தல் }

பட்டினிப்பண்டம்-சாவீட்டுக் கனுப்பும் போசன பண்டம்.

பட்டீசுவரர் - திருப்பட்டீச்சரத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

பட்டு-உல்லாசம், ஒருபருத்தி, சிற்றூர், பட்டாடை, மடிப்பு, மேற்போர்வை.

பட்டுக்கரைச்சீலை - பட்டுநூலா லருகு நெய்யப்பட்ட புடவை.

பட்டுச்சீலை - மடிப்பு.

பட்டுத்தரித்தல் - பட்டனுபவித்தல்.

பட்டுநூர்பூச்சி } ஒரு சிலம்பி.
பட்டுப்பூச்சி }

பட்டை ஆபரணத்தோருறுப்பு, காறை, சலாகை, தோள்மூட்டு, நீரிறைக்கும் பூட்டை, பட்டுநாடா, பிழா, போதிகை, மரத்தோல். [டள்ளுங்குழி.

பட்டைகிடங்கு கிணற்றிற் பட்டையிட்

பட்டைக்காறை - ஒரு கழுத்தணி.

பட்டைக்கொடி - துலாக்கொடி.

பட்டைச்சாதம் - புற்கைத்தளிகை.

பட்டைச்சாராயம் - வெள்வேலம் பட்டையைக்காய்ச்சிஇறக்கும் ஒரு பான [ம்.

பட்டைச்சுருக்கு } ஒருவகைத்தடம்.
பட்டைத்தடம் }

பட்டைநாமம் - விட்டுணு பத்திக்காரர் நெற்றியிலணியுமோர்குறி.

பட்டைப்பெல்லி - பட்டைப்பிடி.

பட்டையம் - பட்டயம்.

பட்டையரைஞன் - ஓரரைஞாண்.

பட்டோஜீதீக்ஷிதன் - பாணினிவியாகரண சூத்திரங்களைச் சித்தாந்த கௌமுதி என்னும் பெயராற்பிரகாணஞ் செய்த பண்டிதர். இவர் கௌடப்பிராமணர் இவர்காலம் இற்றைக்கு 800 வருஷத்துக்கு முந்தியது.

பட்டோலை - அட்டவணை, அரசர்விடுந் திருமுகம், காரியக் குறிப்பெழுது மோலை.

பட்டோலைகொள்ளல் - திருமுறையெழுதுதல்.
பணகரம் - பாம்பு.
பணக்கொழுப்பு - செல்வச்செருக்கு.
பணசம் - வியாபாரச்சாமான்.
பணச்சலுகை
பணச்செருக்கு } பணப்பெருமை.
பணச்செலவு - பொருள்விரயம்.
பணதரதான் - சிவபிரான்.
பணதரம் - பாம்பு.
பணதி - ஆபரணம், செவ்வை.
பணநம் - விக்கிரயம்.
பணப்பித்து - பணவாஞ்சை.
பணப்புரட்சி
பணப்புரட்டு } பணவரவு.
பணப்பெட்டி - உரொக்கத்தயிலா.
பணப்பேய் - பணவாஞ்சை.
பணப்பைத்தியம் - பணப்பித்து.
பணமணி - நாகமணி.
பணமிடுக்கு - பணப்பெலன்.
பணம் - காசு, கிரகம், சூதாடுதல், பருமை, பாக்கியம், பாம்பின்படம், பாம்பு, பொக்கசம், வியாபாரச்சரக்கு, விலை, வேலை, சூதாடுபந்தயம்.
பணயம் - அடகு, பணம், பொருத்தப்பணம்.
பணர் - மரக்கிளை.
பணவம் - தம்பட்டம்.
பணவன் - பணிசெய்மகன்.
பணவிடை - வராகனிலொன்பதிலொருபங்கு.
பணவை - அட்டாலை, ஓரளவு, கழுகு, பரண்.
பணறு - பணர்.
பணுதரம் - பாம்பு.
பணுங்கனை - வேசி.
பணுடவி - ஆதிசேஷன்.
பணுபவம்
பணுதரம் } பாம்பு.
பணுதரதான் - சிவபிரான்.
பணுமகுடம் - பாம்பின்படம்.
பணுமணி - நாகரத்தினம்.
பணுமரம் - கொப்படர்த்தியானமரம்.
பணுமுடி - பாம்பின்முடி.
பணுயிதம் - வணங்கல்.
பணுயை - கடைவீதி, தொழில், வியாபாராதாயம்.
பணி - ஆபரணம், ஈகை, எருமை, ஏவல், கட்டளை, செய்கை, சொல், தொண்டு, தொழில், தோற்கருவி, பட்டாடை, பணியென்னேவல், பாம்பு, வார்த்தை, வேலை.
பணிகாரத்துத்தி - ஒருவகைப்பூடு.
பணிகாரம் - அப்பவருக்கம்.
பணிக்கம் - திருத்தம்.
பணிக்கணம் - பாம்பின்கூட்டம்.
பணிக்களரி - தொழில்செய்யுமிடம்.
பணிக்கன் - உபாத்தியாயன், கூத்து முதலிய பயிற்றுவோன், கொற்றர்தலைவன், சாராயங்காய்ச்சுகிறவன், நாவிதன், யானைப்பாகன், விஷவைத்தியன்.
பணிக்கு - ஆசான்வேலை, பணிக்கை.
பணிக்குச்செலுத்துதல் - முற்கந்தம் பண்ணுதல்.
பணிக்குதல் - பணித்தல்.
பணிக்கை - செய்கை, நேர்மியான செய்கை, பணித்தல்.
பணிசாரகன் - வேலையாள்.
பணிச்சக்கரம் - வேளாண்மைநாட்பொருத்தம் பார்க்குமோர் சக்கிரம்.
பணிதல் - இறங்கல், உண்டல், குறைதல், தாழ்தல், வணங்கல், இது புண்ணியமொன்பதிலொன்று, வளைதல்.
பணிதவ்வியம் - வீற்றற்குரியது.
பணிதானம் - தோத்திரஞ்செய்தல்.
பணிதி - பணதி.
பணித்தட்டார் - பொற்கொல்லர்.
பணித்தலைவன் - ஆதிசேடன்.
பணித்தல் - ஏவுதல், கட்டளையிடல், குறைத்தல், கொடுத்தல், சொல்லல், தாழ்த்தல்.
பணித்திறத்தல் - கீழேயிறக்கி வைத்தல்.
பணிப்படுத்துதல் - அலங்கரித்தல், செப்பனிடுதல்.
பணிப்பகை - கருடன், மயில்.
பணிப்பிரியம் - காற்று.
பணிப்பு - பணிதல்.
பணிப்பெண் - குற்றேவற்காரி.
பணிமாறுதல் - இரட்டல்.
பணிமுட்டு - தளபாடம்.
பணிமொழி - நல்லவார்த்தை.
பணியல் - வணங்கல்.
பணியாரத்துத்தி - ஒருதுத்தி.
பணியாரம் - பணிகாரம்.

பணியார் - பகைவர்.
பணியிஞக்கு - தண்ணீர்விட்டான் பூடு.
பணியிறை - ஆதிசேடன்.
பணியுலகு - நாகலோகம்.
பணிராஜன் - ஆதிசேடன். [த்தை.
பணிலம் - சங்கு, வலம்புரிச்சங்கு, வார்
பணிவிடை-கட்டளை,குற்றேவல்வேலை
பணிவு - தாழ்வு, பதுங்குகை, வணக்கம்.
பணினம் - பாம்பு.
பணீசுரன் - சேடன்.
பணை - அரசமரம், உயரம், கிளை, குதிரைப்பந்தி,தப்பிதம்,பணையென்னேவல், பருமை, பறைப்பொது, பிழை, பெருமை, மரக்கொம்பு, மருதநிலப்பறை, மருதநிலம், முரசு, மூங்கில், வயல், விலங்கின் படுக்கை,
பணைத்தல் - கிளைத்தல், பருத்தல், பிழைத்தல்.
பணைத்திராய் - ஒருபூடு.
பணைப்பு - கிளைப்பு, பருமை.
பணையம் - பணயம்.
பணையூதி - கிருஷ்ணன்.
பண்-அமைவு, இசைப்பாட்டு, ஊழியம், குதிரைக்கல்லணை, சீர், செவ்வை, தகுதி,நிந்தை,நிறைநரம்புள்ளவீணை நீர்நிலை, படுகுழி, பண்ணென்னேவல், பாய்மரக்கயிறு, மகளிர்கூட்டம்.
பண்கொடி - பிரம்பு.
பண்செய்தல் - பணிவிடைசெய்தல், பண்படுத்தல்.
பண்டகசாலை - களஞ்சியம், பொக்கசச்சாலை.
பண்டகாசினி - வேசி.
பண்டகேந்திரம் - ஒருகணிதம்.
பண்டசாலை - பண்டகசாலை.
பண்டபதார்த்தம் - இரசநிரசவஸ்து.
பண்டப்பழிப்பு - தேட்டாக்கூறு, நிந்தித்துரைத்தல்.
பண்டமாற்று - விற்பனவு.
பண்டம் - அறிவு, உணவுப்பொருள், கலைக்கியானம், தானியம், பண்ணிகாரம், பொருள், பொன், வயிறு.
பண்டர் - பாடற்கிழ்மக்கள்.
பண்டவறை } பொக்கசச்சாலை.
பண்டவீடு }
பண்டனம் - கவசம், போர்.
பண்டன் - ஆண்டன்மையில்லாதவன்.

பண்டாகி - சேம்பு.
பண்டாரக்குரு - ஆகமக்குரு.
பண்டாரசன்னிதி - ஆதீனத்துப்பெரியோர்களின் சாத்திர விசாரணைத்தலம், ஆதீனத்துப் பெரியோர் தலைவன்.
பண்டாரச்சொம் - பொதுச்சொம்.
பண்டாரத்தி - பண்டாரப்பெண்.
பண்டாரத்தெரு - இராசதெரு.
பண்டாரத்தோப்பு - இராசதோட்டம்.
பண்டாரப்பிள்ளை - அதிகாரியினேவற்காரன்.
பண்டாரமும்மணிக்கோவை - குமரகுருபரரால்செய்யப்பட்டஒருபிரபந்தம்.
பண்டாரமேளம் - இராசமேளம்.
பண்டாரம் - குங்குமம், சிவனடியான், துரைத்தனம், பலபண்டம், பொக்கசம், பொதுமஞ்சட்பொடி, மடாதீனத்தான்.
பண்டாரவாய்க்கால் - பொதுவாய்க்கா
பண்டாரவிடுதி - பொதுவிடுதி. [ல்.
பண்டாரவூழியம் } அமஞ்சி வேலை,
பண்டாரவேலை } பொதுவூழியம்.
பண்டாரி - பண்டாரம், பொக்கிஷக்காரன் வேளாண்மை நெய்வாரிலோர் வகுப்பு. [று.
பண்டி - உரோகணிநாள்,வண்டில், வயி
பண்டிகை - ஒருவகைசிற்பவேலை,திருவிழா, பெருநாள்.
பண்டிதபார்ப்பார் - பார்ப்பாரினோர் வகை.
பண்டிதம் - வித்தை, வைத்தியம்.
பண்டிதவாய் - கடுக்காய்.
பண்டிதன் - சுக்கிரன்,புதன்,புலவன், வைத்தியன், வித்துவான்.
பண்டிலன் - தூதன்.
பண்டு - பழமை.
பண்டுகம் - அசமதாகம், செவ்வகத்தி.
பண்டை - கல்வி, ஞானம், பண்டு.
பண்டையர் } முன்னோர்.
பண்டையோர் }
பண்ணல் - செய்தல்.
பண்ணவர் - கடவுளர், குருமார், திண்ணியர், தேவர், பாடகர், முனிவர்.
பண்ணவன் - அருகன், ஆசிரியன், கடவுள், குரு, திண்ணியன், தேவன், பாடகன், முனிவர்.

பண்ணிகாரம் - அப்பவருக்கம், பலபண்டம்.
பண்ணியங்கூலம் - பலபண்டம்.
பண்ணியசாலை - அப்பசாலை, சந்தை, வியாபாரவீடு.
பண்ணியஸ்திரீ - வேசி.
பண்ணியபலத்துவம் - வியாபாரசித்தி.
பண்ணியம் - பலகாரம், பலபண்டம், விற்றற்குரியது.
பண்ணியவீதி - கடைத்தெருவு.
பண்ணியாங்கனை - வேசி.
பண்ணியாசிவகம் - தடை.
பண்ணுதல் - செய்தல்.
பண்ணுவர் - குதிரைப்பாகர், யானைப்பாகர்.
பண்ணுறுத்தல் - சீர்ப்படுத்தல், வாகனங்களை ஆய்த்தம் பண்ணல்.
பண்ணை - ஒருகீரை, குளம், சமுசாரம், நீர்நிலை, படகு, மனை, மகளிர் கூட்டம், மகளிர்விளையாட்டு, மரக்கலம், மருதநிலம், வயல், விலங்கின் படுக்கை, விலங்கின் மேற்சேணம், தோட்டம்.
பண்ணைக்காரர் - பறையரிற் றலைவர், வயற் செய்கைக்காரர்.
பண்ணைக்காரியம் - கமக்காரியம், சமுசாரகாரியம்.
பண்ணையாள் - வயல்வேலைக்காரன், வீட்டுவேலைக்காரன்.
பண்ணைவீடு - தானியவீடு, மடைப்பள்ளி.
பண்ணைவைத்தல் - உணவுசமைத்தல், படகுவைத்தல்.
பண்படி - பண்புப்பகுதி.
பண்படுதல்-அமைதல், உதவுதல், ஏவல் செய்தல், சீர்திருந்தல், சொற்படி செய்தல்.
பண்படுத்தல் - சீர்ப்படுத்தல்.
பண்பாகுபெயர் - பண்பினாலாய ஆக்கப்பெயர் (உ-ம்) வரை.
பண்பி - பண்பையுடையபொருள்.
பண்பு - குணம், தகுதி, விதம்.
பண்புச்சொல் - உரிச்சொல்.
பண்புத்தற்கிழமை - பண்பினொற்றுமையுடைமை, (உ-ம்) கதிர்மணி.
பண்புத்தொகை - குணத்தொடு குணிக்குண்டாகிய வொற்றுமை நயத்தை விளக்கும் ஆகியவென்னும் பண்புருபு தொக்குவருந் தொடர், (உ-ம்) ஆதிபகவன்.
பண்புப்பெயர் - உரிப்பெயர்.
பண்புமறிநிலை - ஓரலங்காரம், அது ஒன்றன் குணத்தை மற்றொன்றற்குரைத்தல்.
பண்புரிச்சொல் - பொறிகளா லறியப்படுங்குணம், (உ-ம்) செம்மை.
பண்புரைப்பார் - தூதர்.
பண்புவமை - ஒன்றின் பண்பை மற்றொன்றிற் கொப்பிடுவது.
பண்மை - தகுதி.
பண்மொழியம்மை - திருப்பாண்டிக்கொடுமுடியிலே, கோயில்கொண்டிருக்குந் தேவியார் பெயர்.
பதகம் - ஒருபறவை, பாதகம்என்பதின் குறுக்கம்.
பதகர் - சண்டாளர்.
பதகளித்தல் - பதறுதல்.
பதகளிப்பு - பதறுகை.
பதகன் - கீழ்மகன்.
பதகை - திரிபதகை.
பதக்கம் - மாதரணிவடம், மார்பணியில் ஒன்று.
பதக்கிரமம் - காலடி.
பதக்கு - இரண்டுகுறுணிகொண்டது.
பதக்குபதக்கெனல் - அச்சக்குறிப்பு.
பதக்கெடுதல் - தைரியங்கெடல், பதனழிதல்.
பதங்கமம் - பறவைப்பொது, விட்டில்.
பதங்கம்-இரசம், சந்தனம், சாம்பிராணி முதலிய வற்றினெடுக்கும் பதங்கம், பறவைப்பொது, விட்டில்.
பதங்கராஜன் - கருடன்.
பதங்கன் - சூரியன.
பதங்கு - ஓட்டுவரிசை, குழி, பிளவு.
பதசம் - சந்திரன், பட்சி, மயிர்ப்புழு.
பதச்சேதம்பண்ணுதல் - பதமுடித்தல்.
பதஞ்சலி - ஒருஇருஷி, சேடன். யோகசூத்திரம்செய்தவராகிய இவர், இளாவிருத வருஷத்தில் அங்கிரனுக்குச் சதியிடத்திற் பிறந்தவர், இவர் பிறந்தவுடன் திரிகாலஞானமுடையராய் எல்லாமுணர்ந்தவர், இவர் லோலுபையைச் சுமேருவிலிருந்த ஓராலமரத்துப் பொந்திலே கண்டு மணம்

புரிந்தனர், பாணினி வியாகரணத்திக்கு மகா பாஷியஞ்செய்த பதஞ்சலி, இரண்டாயிரத் தெண்ணூறு வருஷங்களுக்கு முன்ன ரிருந்தவரென்பது சங்கராசாரிய காலநிருபணத்தால் நன்றாக நிச்சயிக்கப்படும், இக்கால நிருபணம் ஐரோப்பிய பண்டிதருக்கு மொத்ததுணிபரம், இப்பதஞ்சலிக்குப் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னேயிருந்தவர் பதஞ்சலி முனிவர், அவர் ஆதிசேஷனுடைய அவதாரம். ஆதிசேஷன் சிவபிரானது திவ்வியநடனங் காணவேண்டிப் பதஞ்சலி முனிவராக அவதரித்துந் தில்லைவனத்திலேஆனந்த தாண்டவதரிசனம் பண்ணிக்கொண்டிருந்தவரென்பது கோயிற்புராணம். மகாபாஷியஞ் செய்தவரும் யோகசூத்திரம் செய்தவரும் இருவேறு பதஞ்சலி என்பாருமுளர்.

பதஞ்சலியம் - பதஞ்சலிசெய்த நூல்.

பதடி - பதர்.

பதணம் - மதிலுண்மேடை, மதில்.

பதத்திரம் - சிறகு.

பதத்திரி - பறவை.

பதநியாசம் - ஒருபூடு, காலடி, நடை.

பதநிறம் - மாங்கிஷசிலை.

பதநீர் - கருப்பநீர்.

பதந்தன் - பூஜிக்கத்தக்கவன்.

பதபஞ்சனம்-சொல்லிலக்கணம்,சொற்பிரிவு விளக்கப்பண்ணுதல்.

பதபஞ்சனம் - ஈரடுக்கொலிக்குறிப்பு.

பதபாதம் - காலடி.

பதப்படுதல்-சீர்ப்படுதல், பக்குவமாதல்.

பதப்படுத்துதல் - சீர்ப்படுத்துதல்,பக்குவப்படுத்துதல்,

பதப்பலம் - கால்பலம்.

பதப்பாடு - மதிலுறுப்பு.

பதப்புணர்ச்சி - நிலைமொழியிலும் வருமொழி முதலும் இயல்பாயேனும், விகாரமாயேனும் புணர்தல்.

பதப்பேறு - பதமுத்தி.

பதப்பொருட் காட்சியணி-ஓரலங்காரம், அது உபமானோபமேயங்களுளொன்றின் றருமத்தை ஒன்றினேரோபித்தல்.

பதப்பொருத்தம் - சொற்பொருத்தம்.

பதப்பொருள் - பதவுரை, அது உரையிலக்கணமைந்தினொன்று.

பதமம் - சந்திரன், பட்சி, விட்டில்.

பதமழிவு - பதனழிவு.

பதமுடித்தல் - பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரமெனுமாறையுங்கொண்டு மொழிகளைப் பிரித்துக் காண்டல்.

பதமுத்தி - பதவிமுத்தி, பாதமுத்தி.

பதமை - அமைதி, இணக்கம்,தாழ்மை, மிருது, மெத்தனவு, மெல்லோசை.

பதம்-அடையாளம், அழகு, அறுகம்புல், ஆடை, இடம், இன்பம், ஈரம், உண்டல், எழுத்தானயபதம், ஒளி, ஒருமொழியிற் பிரகிருதியாய் நிற்பது, கால், காவல், குழைவு, கூர்மை, கொக்கு, சிந்து, சொல், சோறு, தின்றல்,தெரு நாழிகை,பச்குவம்,பதவி, பாவினேருறுப்பு, பூரட்டாதி, பொருள், பொழுது, முயற்சி, வரிசை, வழி, வேஷம்.

பதம்பிரித்தல்-சொற்பிரிப்புச்செய்தல்.

பதரி - இலந்தை.

பதரி / வதரி } சாஸ்வதி நதிக்குச் சமீபத்துள்ள ஒரு புண்ணியவனம்.

பதரிகாச்சிரமம்-ஒருதபோவனம், விஷ்ணுஸ்தலம், வேதவியாசராச்சிரமம்.

பதர்-அறிவீனன், அற்பம், சப்பட்டை, பலனற்றது.

பதலம் - பதனம்.

பதலை - ஒருகட்பறை, குண்டான், சிறுமலை தாழி, மத்தளம், மரக்கலம், வாயகன்றபறை.

பதல் - வதிள்.

பதவாயுதம் - சேவற்கோழி.

பதவி - இடம்,உலகம்,ஒழுங்கு,கதி, செல்வம், நிலை, நிலைபரம், முத்தி, வழி.

பதவியகுணம் - மெத்தெனவு.

பதவியடைதல் - கதியடைதல், பாதமடைதல்.

பதவியது-சாதுவானது,மிருதுவானது

பதவியல் - பதப்புணர்ச்சியிலக்கணம்.

பதவியன் - சாதுவானவன்.

பதவு - டல், மெத்தனவு.

பதவுரை - சொற்றோறு முரைக்கும் பொருள்.

பதவை - வழி.

பதறல் } தளம்புதல் திடுக்கிடல், நடு
பதறுதல் } ங்கல், விரைதல்.
பதறை - வெந்தோன்றி.
பதற்றம் - பதறுதல்.
பதனகேந்திரம் - அக்ககன்னம், உதயத்திலிருந்து நாலாம் எழாம் பத்தாமிடம்.
பதனம் - இறக்கம், இறக்குதல், களைதல், தாழ்தல், பத்திரம், பாவம், பேணல், போதல், வியோமாட்சரேகை, விழுதல்.
பதனழிதல் - ஊழ்த்தல்.
பதனழிவு - ஊழ்ப்பு.
பதனி - பதநீர்.
பதனிடுதல் - பதமையாக்கல், மிருதுவாக்கல்.
பதன் - பக்குவம், பதம்.
பதன்படுதல் - பக்குவமாதல், பதமையாதல், பாகமாதல்.
பதாகன் - அரசன், பதாகையுடையோன்
பதாகினி - படை.
பதாகை - அடையாளம், அதிட்டம், கூத்திஞேர்விகற்பம், விருதுக்கொடி.
பதாசனம் - பாதபடி.
பதாசி - பதாதி.
பதாதி - அமைதியின்மை, எதுமற்றவன், காலாள், சேனைத்தொகை பத்தி ஞென்று அது ஒரு தேரும் ஒரு யானையும் மூன்று பரியும் ஐந்து காலாளுங்கொண்டது.
பதாயுதம் - கோழி.
பதாரம் - காலிற்றுகள், தெப்பம்.
பதார்த்தகுணசிந்தாமணி - ஒருவைத்தியநூல்.
பதார்த்தசாரம் - வைத்திய சாத்திரத்தொன்று, அது பதார்த்தங்களின் குணத்தைச் சொல்வது.
பதார்த்தசிந்தாமணி-பதார்த்தசாரநூல்.
பதார்த்தம் - கறி, பதப்பொருள், பாக்கியம், பொருள், போசனவஸ்து.
பதி - அரசன், இடம், ஊர், எப்பொருட்குமிறைவன், ஒளி, கடவுள், குதிரை, குரு, கொழுநன், சிவபிரான், தலைவன், பட்டினம், பதித்தல், பதியென்னேவல், பதிவு, பூமி, மருதநிலத்தார், மூத்தோன், வீடு, வேர்.
பதிகசந்ததி-வழிச்செல்வோர்கூட்டம்.
பதிகம் - பத்துச்செய்யுளான் முற்றுப்பெறுமோர்பிரபந்தம், பாசி, பாயிரம்.
பதிகன் - காலாள், வழிச்செல்வோன்.
பதிகி - வழிச்செல்வோன்.
பதிக்கினி - புருஷனைக்கொல்லி.
பதிசத்திசாலம் - சிவசத்திமாயை.
பதிச்சாத்திரம் - பதிநூல்.
பதிசேவை-புருஷனுக்குக்கீழ்ப்படிதல்.
பதிச்சம் - வாலுளுவை.
பதிஞானம் - தேவவறிவு, துறவி.
பதிதபாவனன் - பதிதர்களின் பாதித்தியத்தைப் பரிகரிக்கிறவன்.
பதிதம் - கூத்திஞேர்விகற்பம், தவறு, வருணச்சிரமந்தவறுகை.
பதிதல் - அழுந்துதல், ஊன்றல், எழுத்துப்பதிதல், ஒடுங்குதல், கீழ்ப்படிதல், தங்குதல், தாழ்தல், பணிதல், பள்ளமாதல்.
பதிதன் - குல சமய முதலிய வொழுக்கத்திற் றவறினேன்.
பதித்தல் - அழுத்தல், எழுதல், தரித்தல், தாழ்த்தல், பள்ளமாக்கல், புதைத்தல், வைத்தல்.
பதித்திரி - உலைத்துருத்தி.
பதிநிச்சயம் }
பதிநிண்ணயம் } கடவுளது தன்மைமு
பதிநிதானம் } தலியன அறிதல்.
பதிநியமம் }
பதிநூல் - கடவுளது தன்மையை விளக்குநூல்.
பதிபடை - ஒளித்திருக்கும் படை.
பதிபக்தி - நாயகவிசுவாசம்.
பதிப்பிரஞ்ஞன் - வழியறிந்தவன்.
பதிப்பிராணை - பத்தினி.
பதிப்பு - பதித்தல்.
பதிமினுக்கி - விளக்குமாறு.
பதிமை - பிரதிமை.
பதிம்பரை - சுவயம்பரை.
பதியம் - பதிக்கப்பட்டநாற்று, பத்துச்செய்யுளான்முடியும்பிரபந்தம், பாசி, பாசிப்பூடு.
பதிபோதம் - இறைஞானம்.
பதிரன் - செவிடன்.
பதில் - வதில்.
பதிவத்தினி - மங்கலை.
பதிவாகன் - சுமைகாரன்.
பதிவிடை - ஒளித்திருக்குமிடம்.
பதிவிரதம் - கற்புத்தவறுமை.
பதிவிரதாதருமம் - கற்புநெறி.

பதிவிரதாபத்தினி - பதிவிரதை.
பதிவிரதாபுண்ணியம் } கற்புநெறி.
பதிவிரதாவிரதம்
பதிவிரதி } கற்புடையாள்.
பதிவிரதை
பதிவிருத்தல்-ஒளியில்மறைந்திருத்தல்.
பதிவு - குனிவு, சாய்வு, பதிதல்.
பதிவைத்தல் - நாற்றுப்பதித்தல், வேர் வைத்தல்.
பதிற்றந்தாதி - ஒரு பிரபந்தம் அது பத்து வெண்பாவும் பத்துக் கலித்துறை யுந்தோன்ற அந்தாதித்துப்பாடுவது.
பதிற்றுபத்தந்தாதி- நூறுசெய்யுள்கொண்ட ஒரு பிரபந்தம் அதில் ஒவ்வொருபத்தும் அந்தாதித்துப் பாடியது.
பதிற்றுப்பத்து- நூறு. கடைச்சங்கப்புலவரியற்றிய எட்டுத்தொகையுள்நான்காவது. இந்நூல் சேரர் புகழை யெடுத்துக் கூறுவது.
பதிற்ருென்பான் - தொண்ணூறு.
பதிஞயிரம் - ஒரெண், பத்தாயிரம்.
பதினுலுலோகம்-கீழேழுலகுமேலேழுலகு, அவை, அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம். இவை ஏழுங்கீழுலகு, பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகலோகம், சத்தியலோகம், இவையேழும், மேலுலகு.
பதினறுகோணம் - எட்டுத்திசையுமதினுள்ளந்தராள மெட்டும்.
பதினெண்கணம்-பதினென் கூட்டம், அவர் அசுரர், அந்தரர், அமரர், ஆகாயவாசிகள், இயக்கர், உரகர், கருடர், கந்தருவர், கிம்புருடர், கின்னரர், சித்தர், நிருதர், பூதர், பைசாசர், போகபூமியர், முனிவர் விஞ்சையர், வித்தியாதரர்.
பதினெண்குடிமை - ஓடாவி, கன்னர், குயவர், கொல்லர், கோவியர், சிவியார், தச்சர், தட்டார், நாவிதர், பள்ளர், பாணர், மாலைக்காரர், மூவாணிபர், வண்ணார், வலையர், வெட்டியான்.
பதினெண்ணுப்புராணம் - பதினெண் புராணத்து மெடுத்து ஆக்கியோர் பெயராய்வழங்குஞ்சார்புநூல், அவை ஆங்கிரம், உசனம், கபிலம், காளி, சனற்குமாரம், சாம்பவம், சிவதன்மம், சௌரம், துருவாசம், தந்தி, நாரசிங்கம், நாரதீயம், பராசரம், பார்கவம், மாரீசம், மானவம், வாசிட்டலைங்கம், வாருணம்.
பதினெண்பாடை - பதினெண்தேசத்தார்க்குரிய பாஷை, அவை அங்கம், அருணம், கலிங்கம், காம்போசம், கொங்கணம், கோசலம், கௌசிகம், சிந்து, சீனம், சோனகம், திரவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம்.
பதினெண்புராணம் - சிவபுராணம்பத்தும் விட்டுணுபுராணநான்கும் பிரமபுராண மிரண்டும் அக்கினிபுராணமொன்றும் சூரியபுராணமொன்றுமாம். இவைமுறையேஇலிங்கம்காந்தம், கூர்மம், சைவம், பிரமாண்டம், பெடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமனம், காருடம், நாரதீயம், பாகவதம், வைணவம், பதுமம், தாமம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம்.
பதினேராடல்- புறத்கூத்திற் குரியவற்றுள் ஒன்று.
பதுகரை - பழமுண்ணிப்பாலை.
பதுக்கம் - ஒளிப்பு, கபடம், பதுங்குந்தன்மை.
பதுக்காயன் - குள்ளன்.
பதுக்காய் - உள்ளான்குருவி, கூழை, வளர்ச்சியற்றது.
பதுக்குதல் - மலைறத்தல்.
பதுக்கை - சிறுதிட்டை, சிறுதூறு, பாறை.
பதுங்கலன் - பதுங்கி.
பதுங்கல் - ஒளித்தல்.
பதுங்கி - பின்நிற்பவன்.
பதுங்குதல் பதுங்கல்.
பதுமகருப்பன் - பிரமன், விட்டுணு.
பதுமகேசரம் - புன்னைமரம்.
பதுமகோசரம் - நாட்டியத்தில் ஐந்து விரல்களும் மேனேக்க விற்போல் வளைத்துக்காட்டல்.
பதுமகோமளை - சூரபத்மன்மனைவி. இவளிடத்திற் பிறந்த புத்திரன் பானுகோபன்.
பதுமசாரிணி - ஒரு தாமரை.
பதுமதந்து - தாமரைநாளம்.

பதுபநாபன்
பதுமநாபி } விட்டுணு.
பதுமநாளன் - தாமரைக்கொடி.
பதுமநிதி - தாமரையுருவாய்க்கிடக்கும் பொன் அது இந்திரனிருவகை நிதிகளிலொன்று, குபேரனவநிதிகளிலுமொன்று.
பதுமபத்திரம் - தாமரையிலை.
பதுமபந்து - சூரியன், தேனீ.
பதுமபந்தம்-ஓரலங்காரம், ஒருசித்திரக்கவி
பதுமபர்ணம் - தாமரையிலை.
பதுமபாணி - சூரியன்,பிரமன்,புத்தன்.
பதுமபுராணம் - பாத்தும புராணம்.
பதுமம் - ஈயம், ஒருகுளிகை, கோடாகோடி, சோதிநாள். தாமரை பதினெண்புராணத்தொன்று, பதுமாசனம், முடியுறுப்பைந்தினொன்று, யானைத்துதிக்கைப் பொறி.
பதுமமணி - தாமரைக்கொட்டை.
பதுமயோனி - பிரமன்.
பதுமராகம்-செம்பு,நவமணியினொன்று
பதுமரேகை- கையிரேகையினொன்று.
பதுமரோகம்- கண்ரெப்பைக்குள் சிகப்புசதை வளர்ச்சி.
பதுமலாஞ்சனன் - அரசன்,குபேரன், சூரியன், பிரமன்.
பதுமலாஞ்சனை - இலக்குமி, சாசுவதி.
பதுமவிரோதி - சந்திரன்.
பதுமவீசம் - தாமரைக்கொட்டை.
பதுமனர் - நாலடியாருக்கு உரையெழுதின ஒரு ஆசிரியர்.
பதுமன் - அட்டநாகத்தொன்று, இராமன் ஒரு சக்கிரவர்த்தி, பிரமன்.
பதுமாகரம் - தடாகம்.
பதுமாக்கம் - பதுமவீசம்.
பதுமாசநன் - பிரமன்.
பதுமாசனை - திருமகள்.
பதுமாசனம் - அட்டாங்கயோகாசனத்தொன்று அது இருதொடைமேலுமிரண்டுள்ளங் காலையு மாறித்தோன்றவைத்திருத்தல்.
பதுமாதனம் - பதுமாசனம்.
பதுமாந்தரம் - தாமரையிதழ்.
பதுமாப்தன் - சூரியன்.
பதுமார்க்கம் - கவிழ்தும்பை.
பதுமாலயை - இலக்குமி, சரச்சுவதி.
பதுமாவதி-ஒருநதி, ஒருமுனி பத்தினி,
பதுமினி - கூத்திறேற்விகற்பம், நால்வகைப் பெண்களிலொருத்தி.
பதுமினிகாந்தன் - சூரியன்.
பதுமுகம் - ஓரிருக்கை.
பதுமை - இலக்குமி, ஓரிதழ்த்தாமரை, காளி, பதிமை.
பதுமைகதை - பதிமைகதை, பாவையின்கதை.
பதுமோத்பவன் - பிரமன்.
பதைத்தல் - பதைப்பு.
பதைபதைத்தல்
பதைபதைப்பு } மிகப்பதைத்தல்.
பதைப்பு - இரக்கம்,தகளிப்பு,பதமுதல்.
பதோதகம் - சதக்கல், பாதப்பிரட்சாளனநீர், வழிக்கரையிற்றண்ணீர்.
பத்தகணம் - பத்தர்கூட்டம்
பத்தகாரன் - சமையற்காரன்.
பத்தகேசரி - கருப்பூரம்.
பத்தங்கம் - செஞ்சந்தனம்.
பத்தசந்தம் - போசனப்பிரியம்.
பத்தசனம் - தொண்டர்.
பத்தசாரம் - காடிச்சலம்.
பத்தசை - அமுதம்.
பத்ததி - ஒழுங்கு, கிரியைகளை விதிக்கிறநூல், சொற்பயன், வழி.
பத்தபராதீநன் - கடவுள்.
பத்தம் - உணு, உண்மை, கட்டு, நன்றியறிகை.
பத்தரடிப்பொடி - தொண்டரடிப்பொடியாழ்வார்.
பத்தரூபி - கருப்பூரம். [கர்.
பத்தர்- தட்டார்,தேவதொண்டர்,வத்த
பத்தல் - ஒருபாத்திரம், நீரிறைக்குஞ்சால், யாழிறேருறுப்பு.
பத்தவத்தலைவன் - கடவுள்.
பத்தரு - மொசுமொசுக்கை.
பத்தனம் - பட்டணம்.
பத்தன் - அன்புடையோன்,தட்டான், தொண்டன்.
பத்தா - கணவன்.
பத்தாசு
பத்தாயம் } மஞ்சி.
பத்தி - அடைப்பு,அன்பு,ஒழுக்கம், ஒழுங்கு, தூணினிடை, வெளி, தொண்டு, நடை, நம்பிக்கை, நிரை, பங்கு, பதாதி, பாத்தி, முறைமை, வரிசை, வழிபாடு, விசுவாசம், வீட்டிறப்பு.

பத்திகாண்டிகர் - மூவகைப்பக்குவரில் ஒருவர் அவர் நேசப்பெருக்க முடையோர்.
பத்திசாரர் -- திருமழிசையாழ்வார்.
பத்திசூலம் - ஒருநோய்.
பத்திச்சுவாலகர்-கடவுளைப்பற்றிய பத்தியிற் சுவாலிப்போர்.
பத்திநெறி - பக்திமார்க்கம்.
பத்திபங்காரம் - ஆற்றுநீர்ப்பாய்ச்சல்.
பத்திபாய்தல் - கதிர்வீசல், பிரதிவிம்பித்தல்.
பத்திமார்க்கம் - பத்திநடை.
பத்திமான் - பத்தியுடையோன்.
பத்திமை - அன்புடைமை, ஒழுக்கமுடைமை, தேவபத்தியுடைமை.
பத்தியம் - ஆரியம்தெலுங்குஇவற்றின் பிரபந்தம், இணக்கம், இதம், கடு, தமிழ், பாடல், போசனம், மருந்திற்கிசைந்த, புசிப்பு.
பத்தியகாரி - சிறுகீரை.
பத்தியம் - பத்தர்.
பத்திரகம் - இலை, இறகு, சந்தனம், பூசுதல்.
பத்மாவதி - விந்தியத்துக்குச் சமீபத்திள்ள ஒருநகரம். ஓரிராச குமாரிக்கும் பெயர்.
பத்திரகாகலம் } புள் சிறகடித் தெ
பத்திரகாகலை } ழுமொலி.
பத்திரகாளி - பார்வதிஅமிசமாகியஒருதேவி.
பத்திரகிரி - ஒரு விஷ்ணுஸ்தலம்.
பத்திரகிரியார் - பட்டணத்தடிகள்பால் ஞானோபதேசம் பெற்ற ஒருதுறவி. இவர் பாடிய புலம்பல் ஞானாமிர்தம் பொழிந்து எவர் மனத்தையு முருக்குமியல்பினது. இவர்ஒருஅரசர், பட்டினத்டிகளது உபதேசத்தாலே அரசுதுறந்து ஞானமுடிசூடினவர்.
பத்திரகும்பம் - முடிசூட்டுக்குச் சலம்பூரித்த கும்பம்.
பத்திரங்கம் - செஞ்சந்தனம்.
பத்திரசிரயம் - சந்தனம்.
பத்திரசிரேட்டம் - வில்வம்.
பத்திரசுராம் - கட்டாரி.
பத்திரசூசி - முள்.
பத்திரசேனன-மகிழ்மந்தன் புத்திரன்.
பத்திரதன் - சம்பன்பௌத்திரன்,பிருகத் கர்ணன் தந்தை.

பத்திரதாரகம் - சட்டவாள்.
பத்தித்தாருகம் - தேவதாரம்.
பத்திரதாலி - சாதிமல்லிகை.
பத்திரநாடிகை - இலைநரம்பு.
பத்திரபதி - சிற்றுமுட்டி.
பத்திரபரசு - அரம்.
பத்திரபலநம் - பலராமன்.
பத்திரபாணி - பூசிணி.
பத்திரபதை-இரேபதி, உத்திரட்டாதி.
பத்திரம் - அதிட்டம், அம்பிறகு,அம்பு, அழகு, இரும்பு, இலை, இறகு,உடைவாள், உறுதிப்பத்திரம், எருது,குறிச்சி, குற்றுவாள், சந்தோஷம், செல்வம், திரட்சி, திருமுகம், நன்மை, மடை, பத்திரவாகரணம், புத்தகத்திஞற்றை, பூவிதழ், பேணம், பொன், மலை, முடியுறுப்பு, மெல்லிய தகடு, வாகனம்.
பத்திரயௌவனம் - தளிர்.
பத்திரரதம் - பட்சி.
பத்திரரேணு - ஐராவதம்.
பத்திரலதை - பெரிய பட்டாக்கத்தி.
பத்திரவம் - பத்திரவாகரணம்.
பத்திரவாகம் - அம்பு, பட்சி.
பத்திரவாகரணம் - விட்டிக்கரணம்.
பத்திரவாகன் - சீட்டோலை கொண்டுபோவோன்.
பத்திரவாகு-வசுதேவன் புத்திரன்,சுபத்திரன் சகோதரன்.
பத்திரவீரியகம் - கோணமூங்கில், பிரப்பஞ்செடி.
பத்திரன் - சிவபிரான், வீரபத்திரன், வசுதேவன் புத்திரன், சுபத்திரன், சகோதரன்.
பத்திராகரணம் - சௌளஞ்செய்தல்.
பத்திராக்கியம் - தாளிசபத்திரி.
பத்திராங்கம் - ஊமத்தை, செஞ்சந்தனம்.
பத்திராசலம் - ஒரு விஷ்ணுஸ்தலம்.
பத்திராசனம் - அட்டாங்கயோகத்தோராசனம், அது பீசத்தின்கீழ்ச்சீவனியிடத் திருகாற்பாட்டையும் வைத்தவ் விருபதத்தையு மிருகையா லிறுகப்பிடித் தசையா திருத்தல். இராசாசனம்.
பத்திராசனர் - வானோர் நவகணத்தொருவர், அவர் கடவுளாதனத்தைப் புகழ்ந்துறைவோர்.
பத்திராசிரயம் - சந்தனம்.

பத்திராசுவம் - நவகண்டத்தொன்று.
பத்திராஞ்சனம் - மை.
பத்திராட்சம் - ஒருகொட்டை, வீரபத்திரமணி.
பத்திராதனம் - பத்திராசனம்.
பத்திராத்தியம் - திப்பிலிமூலம்.
பத்திராத்துமசம் - வாள்.
பத்திராவதி - அஸ்தினபுரத்துக்கு ஐங்காதத்திலுள்ள ஒரு நகரம்.
பத்திரி - அம்பு, இலை, காளி, குதிரை, பறவை.
பத்திரிகை - இலை, ஒற்றை, ஓலையுறுதி, திருமுகம்.
பத்திரை - அவுரி, இரண்டாம் ஏழாம் பன்னிரண்டாந்திதி, கங்கை, காளி, சீரிபுரண்டான்பூடு, நற்பசு, மஞ்சள், துர்க்காதேவி, வசுதேவன்பாரி, கிருஷ்ணன் பாரிகளு ளொருத்தி கேகயன் மகள்.
பத்திரைகேள்வன் - வீரபத்திரன்.
பத்திரோதகம் - இலையினீர்.
பத்திரோர்ணம் - வெண்பட்டு.
பத்திரோல்லாசம் - இலைத்தளிர்.
பத்திவான் - பத்தன்.
பத்திவிசுவாசம் - உறுதியானநம்பிக்கை.
பத்திவைராக்கியம் - தெய்வபத்தியிற் பிடிவாதம்.
பத்தினி - இல்லாள், கற்புடையாள்.
பத்தினிக்கடவுள் - கண்ணகி, இவளுக்கு இப்பெயர் கோவலனோடு சுவர்க்கஞ் சென்றபின்பு வந்தது.
பத்தினித்தனம் - கற்புநெறி.
பத்தினிப்பிள்ளை - குடிப்பிள்ளை.
பத்து - ஒரெண், தேவபத்தி, பாதம்.
பத்துக்காலோன் - நண்டு.
பத்தூரம் - பொன்னுங்காணி.
பத்தை - வகிர்.
பஸ்மம் - பற்பம், பற்மம், விபூதி.
பந்தகம் - கட்டு.
பந்தகி - பெண்யானை.
பந்தடித்தல் - பந்தெறிதல்.
பந்ததந்திரம் - சதுரங்கம், வியபிசாரி.
பந்ததயிலம் - பந்தமெரித்திறக்கு மெண்ணெய்.
பந்தம் - அழகு, உண்டை, உறவு, ஏற்பாடு, கட்டு, கயிறு, கைவிளக்கு, தளை, இது யாப்புறுப்பெட்டினொன்று, திரட்சி, தீக்கொளுத்தும் பந்து, தொடர், பெருந்துருத்தி, மதில், மயிர்முடி, முடிச்சு, முறை, விலங்கு.
பந்தயங்கட்டுதல் - ஒட்டம் வைத்தல்.
பந்தயச்சீட்டு - ஒட்டம் யார்க்குடை[illegible]தென வெழுதிப்போடுஞ் சீட்டு.
பந்தயமொட்டுதல் - பந்தயம் பிடித்தல்.
பந்தயம் - ஒட்டம்.
பந்தயித்துவம் - கட்டல்.
பந்தரம் - காண்டகபாஷாணம்.
பந்தரி - பிடாலவணம்.
பந்தர் - ஒருபட்டினம், பந்தல், பாச[illegible] அக்குள்ளானவர்கள், நிழல்.
பந்தல் - ஒடுஞ்சாலை, பந்தர்.
பந்தவரிசை - ஒரு விளையாட்டு, கு[illegible]ரைப் பற்பாஷாணம்.
பந்தவிளக்கு - தீவத்தி பந்தாய்த் திர[illegible]டிக்கொளுத்தும் விளக்கு.
பந்தற்பாடன் - முதுகுபதிந்து தாழ்வா[illegible] முயர்ந்தது.
பந்தற்பாடு - சாய்ப்பு.
பந்தர்பூ - உதிர்ந்த இருப்பைப்பூ.
பந்தனம் - அரைஞாண், கட்டல், கயி[illegible] காவல்செய்தல்.
பந்தனலயம் - சிறைச்சாலை.
பந்தனை - கட்டு, நிருணயம், பந்தித்த[illegible] மகள்.
பந்தன் - ஒருவாணிகன் இவன்பேரி[illegible] ஔவை பந்தனந்தாதி எனும் நூ[illegible] பாடினாள், சீர்பந்தபாஷாணம்.
பந்தன் } திரணவிந்து தந்தை புத[illegible]
வந்தன் } எனவும் படுவன். இவ[illegible] மனுவமிசத்தோன்.
பந்தி - ஒழுங்கு ஒருபண், கீர்த்தி, கு[illegible]ரை யானை முதலிய நிற்குஞ்சா[illegible] கூட்டம், சபை, பந்தியென்னேவ[illegible]
பந்தித்தல் - கட்டுதல்.
பந்தித்திரம் - நேயம்.
பந்திபோசனம் - பலரையுஞ் சேரவை[illegible]த்துப் புசித்தல்.
பந்திப்பாய் - மிகவொடுங்கி நீண்டபா[illegible]
பந்திருபாவனன் - சங்கைமான்.
பந்திலம் - அசைவு, சுபம்.
பந்திவஞ்சனை - பந்தி பரிமாறுதல் வஞ்சித்தல்.
பந்தினம் - பந்துசனம்.

பந்து - உறவு,எறியும் பந்து சகோதரன் சிநேகிதன், திரட்சி, திரிகை, ஆராலோசனை, மட்டத்துருத்தி.
பந்துக்கட்டு - கட்டுக்கதை, பலவையுமொன்ருய்ச் சேர்த்துக்கொள்ளல், போலி வெளிவராது மறைத்தல்.
பந்துசனம் - வமிசம்.
பந்துத்துவம் - இனச்சேர்வு.
பந்துரம் - அழகு.
பந்துரை - வேசி.
பந்துவராளி - ஒருராகம்.
பந்தூரம் - தொளை.
பந்தையம் - பந்தயம்.
பபதி - சந்திரன்.
பபீதி - ஏகபாத்திரபானம்.
பப்பரப்புளி - தொதி, பெருக்கமரம்.
பப்பரம் - ஒருபாடை, தேயமைம்பத்தாறினென்று, பதினெண் பாடையினென்று, பருப்பம்.
பப்பரர் - பப்பரதேசத்தார்.
பப்பரவன் - பருத்தது.
பப்பரவாகனன் } அருச்சுனனுக்குச் சித்திராங்கதையிடத்திற் பிறந்தபிள்ளை.
பப்பருவாகனன் }
பப்பளி - ஒருமரம்.
பப்பளிச்சேலை - ஒருவகை வன்னச்சேலை.
பப்பாதி - பாதிபாதி.
பப்பாளி - பப்பளி.
பப்பிரு - விதர்ப்பன் பௌத்திரன், சாத்துவதன் பௌத்திரன், திருஹியன் புத்திரன்.
பப்பிருவாகனன் - அருச்சுனன் மகன் இவன்தாய் மணலூர். இராஜாவாகிய சித்திரவாகனன் மகளாகிய சித்திராங்கதை. தருமன் அசுவமேதஞ் செய்தபோது அசுவத்தைத்தடுத்த பப்பிருவாகனனேடு அருச்சுனன் யுத்தஞ் செய்திறக்க, நாக கன்னிகை யாகிய உலூபி அருச்சுனனை மீளவும், உயிர் பெறும்படி எழுப்பிக் காத்தாள்.
பப்பு - ஒப்பு, பரப்பு.
பப்புவர் - புகழ்வோர்.
பமரம் - பேரொலி, வண்டு.
பம் - கிரகம், விண்மீன்.
பம்பம் - கிராய், புகை.
பம்பரத்தி - ஆடுமாலை, காமாதாமுள்ளவள்.
பம்பரமாட்டுதல் - அலைக்கழித்தல், பம்பரஞ் சுழற்றுதல்.
பம்பரம் - ஒரு விளையாட்டுக்கருவி,மந்தரகிரி, வேசி.
பம்பரை - ஒருபலா.
பம்பல் - ஆரவாரம்,பம்புதல், மிகுதிவலி.
பம்பளபளோ - இளமைக்குறிப்புமொழி
பம்பா - தக்ஷணத்தில் ஒருநதி.
பிம்பிகை - பீர்க்கு.
பம்புதல் - ஆரவாரித்தல் எழுச்சி,நெருங்கல், பரவல், பொலிதல்.
பம்பை - ஒருவாச்சியம், சுருண்டமயிர், பம்பாநதி, முல்லைநிலப்பறை. கிஷ்கிந்தைக்குச் சமீபத்திலுள்ள ஒரு வாவி.
பம்மல் - செம்முதல், பொருத்திக்கட்டுகை, மந்தாரம், மந்திப்பு, மூடுதல்.
பம்மாத்து - வெருட்டு, வெளிவேடம்.
பம்முதல் - பம்பல்.
பம்மை - சித்திரப்பாவை.
பயங்கரம் - அச்சம்.
பயசம் } நீர், பால்.
பயசு }
பயசுபம் - பூனை.
பயணங்கட்டுதல் - பிரயாணத்துக்காயத்தம்பண்ணல்.
பயணம் - பிரயாணம்.
பயணவிரோதி - பூனை.
பயதம் - வண்டு.
பயத்தல் - உண்டாதல், கொடுத்தல், சிந்தித்தல், பிறப்பித்தல்.
பயந்தாள் - தாய், பெற்றவள்.
பயந்தான் } பிதா.
பயந்தோன் }
பயபத்தி - ஒடுக்க வணக்கம்.
பயப்படல் - அஞ்சல்.
பயப்பாடு - அச்சம்.
பயப்பு - கிருபை, தேமல்,நிறம்,பசப்பு.
பயம் - அச்சம், அது சுபாவகுண மொன்பதினொன்று, அமிர்தம், குளம், சுதை, நீர், பயன், பால், பிரமா, மயையாக்கை, பதினெண் குற்றத்துமொன்று. மன்னர் விழைச்சி.
பயம்பு - பள்ளம், யானைபடுகுழி.
பயரை - ஒருமரம்.
பயல் - சரிபாதி, பள்ளம், பையல்.
பயளி - பசளி.

பயளை - பசளை.
பயறி - ஒரு குரு நோய்.
பயறு - ஒருதானியம், சித்திரைநாள்.
பயற்றங்காய் - ஒருகாய்.
பயற்றம்மை - ஒருவித வசூரிநோய்.
பயனில சொல்லல் - பிரயோசனமில்லாத பேச்சுப்பேசல், இதுவாக்கின் றீக்குண நான்கினொன்று.
பயனிலாள் - வேசி.
பயனிலி - வீணன்.
பயனிலை - பயன்முடிவு.
பயனின்மை - பயன்படாமை.
பயனுரைத்தல் - உரைசொல்லல்.
பயனுவமம் - பிரயோசனத்தையேயுவமையாய்ச் சொல்லுவது (உ-ம்) மாரிவண்கை.
பயன் - அகலம், சொல்லுரை, நீர், பலன், பால்.
பயன்சொல்லுதல் - வியர்த்தி பண்ணல்.
பயன்படச்சொல்லல் - பிரயோசனந்தரச்சொல்லல், அதுவாக்கினற்குண நான்கினொன்று.
பயன்படுசொல் - பிரயோசனந் தருஞ்சொல்.
பயன்படுதல் - பிரயோசனமாதல்.
பயன்முடிவு, பயன்முற்று } பொருளின் முடிவு.
பயாபகன் - அரசன்.
பயாப்தி - பாற்கடல்.
பயாப்திசயநன், பயாப்திசாயி } விட்டுணு.
பயாபிலாஷி - பூனை.
பயானகம் - அச்சம், இராகு, புலி.
பயிக்கம் - பிச்சை.
பயித்தியம் - பைத்தியம், மதிகேடு, மிண்டுத்தனம்.
பயிந்தரி - எகம்பபாஷாணம்.
பயிரங்கம் - அறிக்கைப்பத்திரம்.
பயிரவி - முடக்கொத்தான்.
பயிரி - ஒருகீரை, ஒருவசூரி.
பயிருகம் - பழம்பாசி.
பயிரேறுதல் - பயிர்ப்படல்.
பயிர் - இடும்பயிர், ஒலி, பயில், பறவைக்குரல், புல், விலங்கொலி.
பயிர்த்தல் - ஒலித்தல்.
பயிர்ப்பங்கு - செய்கைப்பங்கு.
பயிர்ப்பு - அசுத்தம், குற்சிதம் இது மகடூஉக்குண நான்கினொன்று.
பயிலல் - சொல்லுதல், பிடித்தல், பழகல்.
பயிலியம் - குப்பைமேனி.
பயிலுதல் - பயிலல்.
பயில் - சைகை, சொல், பயிலென்னேவல், பழக்கம், பாதி.
பயில்விடுதல் - பயில்காட்டுதல்.
பயில்வு - செய்கை, பயிற்சி.
பயிறல் - ஒலித்தல், கூடுதல், சொல்லுதல், பயிலுதல், பேசலாலெழூமொலி.
பயிற்சி - பழக்கம்.
பயிற்பேச்சு - யூகப்பேச்சு.
பயிற்றுதல் - படிப்பித்தல், பழக்குதல்.
பயினி - இணக்கம், ஒருமரம்.
பயின் - உட்படுகுருத்து, பிசின்.
பயோகடம் - தீவு.
பயோகனம் - ஆலாங்கட்டி.
பயோதகம் - சமுத்திரம், நீர்ப்பிரிவு, முகில்.
பயோததி - சமுத்திரம், பாற்கடல்.
பயோதம் - முகில்.
பயோதரப்பத்து - ஒருபிரபந்தம் அது முலையிணைப் பத்துசெய்யுளாற் கூறுவது.
பயோதரம் - கடல், கரும்பு, பால், முலை, மேகம்.
பயோததி - பாற்கடல்.
பயோதி - கடல்.
பயோதிகம் - கடனுரை.
பயோநிதி - சமுத்திரம்.
பயோவிரதம் - ஒருமாதவரைபசுக்கோட்டத்துறைந்து பால்மாத்திர முண்டுசெய்யுமோர் விரதம்.
பயோஷ்ணி - விதர்ப்பதேசத்தில் பிரவாகமாகி வரதநதியிற் கலப்பதாகிய ஒருநதி.
பய்யன் - பையன்.
பரகதி - முத்தி
பரகளத்திரம் - பிறர்மனையாள்.
பரகளத்திராவிகமனம் - விபசாரம் பண்ணுதல்.
பரகாயப்பிரவேசம் - கூடுவிட்டுக் கூடுபாய்தல் அது கலைஞான மறுபத்து நான்கினொன்று.
பரகாயம் - பிறசரீரம்.
பரகாரியம் - பிறகாரியம்.
பரகாலன் - திருமங்கையாழ்வார்.

பரகிதம் - நட்பமாகக்கணிக்கப்பட்டது, பிறர்க்கு நன்மையானது.
பரகீயம் - பிறர்க்குரியது.
பரகுடிலம் - பிரணவம்.
பரக்கம் - பரத்தல்.
பரங்கருணையம்மை - திருப்புனவாயிலிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார்பெயர்.
பரங்கி - இலவுங்கம்.
பரங்கிரிநாயகர் - திருப்பரங்குன்றத்திலே கோயில்கொண்டிருக்குஞ் சுவாமிபெயர்.
பரசஞ்சகம் - ஆன்மா.
பரசதம் - பலநூறு.
பரசமயகோளரி - திருஞான சம்பந்தமூர்த்திகள்.
பரசமயம் - பிறசமயம்.
பரசமயி - பிறசமயி.
பரசம் - ஓரிரத்தினம்.
பரசாதி - அன்னியசாதி.
பரசிராமன் - மழுவுடையிராமன் இவன் சமதக்கினியுமிரேணுகையுந் தந்தை தாயாகத் திருமாலவதரித்தது.
பரசிவம் } கடவுள்.
பரசிவன் }
பரசு-கோடாலி,பரசென்னேவல்,மழு.
பரசுகம் - மோட்சானுபவம்.
பரசுகரியன் - பரிவேடம்.
பரசுதரன் - கணேசன்,சிவன்,பரசுராமன்.
பரசுதல் - துதித்தல்.
பரசுபாணி சிவபெருமான்,பரசுராமன், விநாயகன்.
பரசுராமன் - திருமாலவதாரத்தின்று.
பரசுராமன் - ஜமதக்கினிக்குரேணுகையிடத்துப் பிறந்த புத்திரன். இவன் விஷ்ணுவினது ஆறுமவதாரம். கார்த்த வீரியார்ச்சுனன் புத்திரர் யாகப் பசுவைநாடிச் சென்றபோதுஜமதக்கினியினுடைய ஆச்சிரமத்தில் அதுநிற்கக்கண்டு ஜமதக்கினியைக் கொன்று பசுவைக் கவர்ந்துசென்றனர். அச்சமயம் வெளியேபோயிருந்தபரசுராமன் மீண்டுவந்து தந்தைகொல்லப்பட்டதைக் கண்டு, "க்ஷத்திரியரைவேரறுத்து இப்பழிதீர்ப்பேன்" என்று விரதம்பூண்டு க்ஷத்திரியரையெல்லாம் கருவறுத்து அவ்விரதத்தாற் பிதிர்கருமஞ்செய்தான். இவர் உக்கிரதவஞ் செய்து சிவனிடத்து அநேக திவ்வியாஸ்திரங்களைப் பெற்று வில்வித்தையிலே தனக்கிணையில்லா திருந்தான். இவன் சிறுபிள்ளையாயிருந்தபோது தந்தை சொற்படிதாயைக் கூசாது கொன்றவன். இவன் இராமர் காலத்திலே இராமரால் அபஜய மடைந்து மகேந்திரமலைக்குச் சென்று அங்கே இன்றும் சிரஞ்சீவியாகத் தவஞ் செய்கின்றானென்பர்.
பரசுவதம் - பரசு.
பரசுவம் - பிறர்பொருள்.
பரசூதனன் - சிவபிரான், பரசிராமன்.
பரசை - பரிசு.
பரஞ்சோதிமுனிவர் - திருவிளையாடற்புராணஞ் செய்தவர்.
பரஞானம் - பதிஞானம்.
பரஞ்சம் - செக்கு, நுரை, வாணுதி.
பரஞ்சனன் - வருணன்.
பரஞ்சுடர் - சுயம்பிரகாசக்கடவுள்.
பரஞ்சேயன் - பரஞ்சனன்.
பரஞ்சை - காகளமுதலியவற்றின்தொனி.
பரஞ்சோதி - கடவுள், பரஞ்சுடர்.
பரடன் - கூலிக்காரன்.
பரடு - கரடு.
பரட்டை - பறட்டை.
பரணம் - கவசம், சம்பளம், தாங்குதல், பட்டுச்சீலை, பரணி, பாரம்.
பரணர் - இவர் கடைச்சங்கப் புலவர்களுளொருவர். இவரும் கபிலரும் மிகநண்பினர்கள். இவர் கோச்செங்குட்டுவன்மேல் ஒருபிரபந்தம்பாடிப் பரிசிலாக உம்பற்காட்டுவாரி கொண்டவர். இவர் ஔவையாராலும் தாம் பாடிய "அமரர்ப் பேணியும்" என்னும் பாடலிலே, "சென்றமர் கடந்து நின்னாற்ற ஞேற்றிய-வன்றும் பாடுநகர்க்கரியை யின்றும் பரணன் பாடினன்" என்றெடுத்துச் சுட்டப்பட்டவர். இவர் தெய்வப் புலமையுடையவர்.
பரணி - அடுப்பு,அணிகலச்செப்பு,எரி, ஒருநாள், ஒருபாத்திரம், ஒருபிரபந்தம் அது ஆயிரங்களிற்றைக்கொன்ற வீரனைத் தலைமகனாகக்கொண்டு கட

வுள்வாழ்த்தும்கடைத்திறப்பும்பாலை நிலமுங் காளி சோவிலும் பேய்க ளோடுகாளியுங்காளியோடு பேய்களு ஞ்சொல்லத்தான் சொல்லக்கருதிய தலைவன்சீர்த்திவிளங்கலும்அவன் வழியாகப்புறப்பொருடோன்ற வெம் போர் வழங்க விரும்பலு மென்றி வையெல்லா மிருசீரடி முச்சீரடி யொழித்தொழிந்த மற்றையடிகளா னீரடிப் பஃறொழிசையாற் பாடுவது, கூத்து, மதகு.

பரணியம் – கூலி, சம்பளம்.

பரண் – இதணம்.

பரண்டை - கணைக்கால்.

பரதகண்டம் - நவகண்டத்தொன்று.

பரதகண்டம் - பாரத வருஷமானது விதேகம், ரேபதம், மத்தியம், பரத மெனநான்குகண்டங்களையுடையது விதேகம் மேல்பாலிலுள்ளது. ரேபதம் கீழ்பாலிலுள்ளது. மத்தியம் இமயத்துக்கும் விந்தியத்துக்கு மிடையேயுள்ளது. பரதம்விந்தியத்துக்குத் தெற்கேயுள்ளது. இவை நான்கையும் நவகண்டமாக்கிக் கூறுவாருமுளர்.

பரதசாத்திரம் - நடனநூல்.

பரதசேனுபதீயம் – ஆதிவாயிலார்செய்த நாடகத் தமிழ்நூல்.

பரதநாட்டியசபை - கூத்துக்களரி.

பரதநூல் - பரதசாத்திரம்.

பரதந்திரம் - சுதந்திரமின்மை.

பரதந்திரன் – சுதந்திரமற்றவன்.

பரதபித்தல் - பரிதபித்தல்.

பரதமோகனநாட்டியம் - பரதமுறைப் படியாடுங் கூத்து.

பரதமோகினி - நாடகி.

பரதம் -இலட்சம்கோடி,கோடாகோடி, கூத்து, நவகண்டத்தொன்று, பரதநூல்.

பரதம் - ஒரு நாடகத் தமிழ் நூல்.

பரதர் - நெய்தனிலமாக்கள், வைசியர்.

பரதவசந்தன் - ஒருகூத்து.

பரதவருடம் - பரதகண்டம்.

பரதவர் - நெய்தனிலமாக்கள்.

பரதவித்தை – பரதசாத்திரம்.

பரதனம் – பிறர்பொருள்.

பரதன் – ஒருமஹருஷி, சந்திர குலத்தோராசன், நெய்வான், பரதசாத்திரஞ் செய்தோன், தசரதன்புத்திரன் ஸ்ரீராமன் றம்பி இவன் அதிக நற்குணவான். இவன் இராமன் பெற வேண்டிய அரசியலைத் தனக்குவஞ்சனையாலே தாய் பெற்றுக்கொடுத்தாளென்றறிந்து,அதனை வேண்டாமென்று மறுத்து ராமனுக் குரைக்க, ராமன் தந்தை சொல்லைக் கடக்கலாகாதென்று கூறிச் சமாதானஞ்செய்ய, அது கேட்டொருவாறு ஸ்ரீராமன் வரும் வரைக்கும் அரசியலைக் கைக்கொண்டவன். சகுந்தலை வயிற்றிலே துஷ்யந்தனுக்குப்பிறந்தபுத்திரன், இவன் ஆரியதேசம் முழுதையும் கட்டியாண்டமையால் பாரதவருஷப்பெயர்அத்தேசத்திற்காயிற்று இவனுடைய ஒன்பதாஞ்சந்ததிகுரு, குருவினது பதினான்காஞ் சந்ததி சந்தனு. சந்தனுவுக்கு நான்காஞ்சந்ததிபாண்டவர்.

பரதன்மம் - பரோபகாரம்.

பரதாக்கிரசன் - இராமன்.

பரதாபம் - பரிதாபம்.

பரதாரகமனம் - பிறர்மனைகலத்தல்.

பரதாரகமநன் - பிறன்மனைவிழைவோன்.

பரதாரம் – பிறர்மனை.

பரதாரோபசேவனம் - விபசாரம்.

பரதி - நாடகி.

பரதிரவியம் - பிறர்திரவியம்.

பரதிருஹனயோகம்-பிறர்செய்ததீமையை மறந்து நன்மையை நினைத்தல் அது தயாபவிருத்தி பதினான்கில் ஒன்று.

பரதிருஷ்டிகோசரம் - வேறொருவன் யறிதல்.

பரதுக்கம் - அயலார் துன்பம்.

பரதூஷணம் - பிறரைத் தூஷணித்தல்.

பரதேசம் - பிறதேசம்.

பரதேசிவாசி - பிறதேசத்தோன்.

பரதேசி - ஒருசாதி, பிரதேசத்தான், யாசகி.

பரதேவதை - கடவுள்.

பரத்தர் - தூர்த்தர்.

பரஸ்தலம் – வேற்றிடம்.

பரத்தல் - பரம்புதல், மிகுதல், விருத்தியாதல்.

பரத்தன் - பரத்தையை நுகர்பவன்.

பரத்தி-நெய்தனிலப்பெண், பரவப்பெண், பரத்தியென்னேவல்.
பரத்தியானம் - தேவதியானம்.
பரத்திரம் - மறுமை.
பரத்திரவியம் - பிறர்பொருள்.
பரத்திரி } வேசி, வேற்றுப்பெண்.
பரஸ்த்ரி
பரத்திரிகமனம் } தூர்த்தவியாபாரம்.
பரஸ்த்ரிகமனம்
பரத்துவம் - கடவுட்டன்மை, யுத்தம், வித்தியாசம்.
பரத்துவாசன்-கரிக்குருவி, சத்தவிருடிகளில் ஒருவன் துரோணசாரியன் றந்தை.
பரத்துவாஜன் - உதத்தியன்புத்திரன். மமதை இவன் தாய். இவன் பிரஹஸ்பதி பிரசாதத்தால் உற்பத்தியானவன்.
பரத்துவாஜி - மாளவதேசத்தில் பிரவகிக்கும் ஒரு நதி.
பரத்தை - ஒருசெடி, வேசி.
பரத்தையருவி - பாந்துவெட்டுமெருவி.
பரத்தையிற்பிரிவு - தலைமகன்பரத்தையிடத்துப்பிரிதல், வாயில்வேண்டன் முதலாக வாயினேர்தலீருகிய நான்குமாம்.
பரஸ்பரம் - பரற்பரம்.
பரநாதம் - ஒருமருந்து.
பரநாமத்திலை - மாவிலிங்கிலை.
பரந்தநீர் - கடல்.
பரந்தவடிவு - தட்டைவடிவு.
பரந்தவட்டம் } சேமக்கலம்.
பரந்தவட்டிகை
பரந்தவம் - சேர்மானம்.
பரந்தவர் - யாசகர்.
பரந்தாமம் - வைகுந்தம்.
பரந்தாமன் - திருமால்.
பரபட்சம் - பிறர்நிலைசொல்லும்பகுதி, விரோதம்.
பரபதம் - மேன்மை, மோட்சம்.
பரபத்தி - சிவபத்தி.
பரபத்தியம் - சமன்செய்தல், பணங்கொடுக்கல், வாங்கல் பண்ணுதல்.
பரபத்தியம்வாங்கல் - பணங்கடன் வாங்கல்.
பரபாத்தல் - தீவிரப்படல்.
பரபாப்பு - சீக்கிரக்குறிப்பு.
பரபரீணம் - உரிமை, பாரம்பரை.
பரபரெனல் - சீக்கிரக்குறிப்பு.
பரபாகம் - அதிட்டம், சேடம், பிறர் சமைத்தது, மேன்மை.
பரபிண்டம் - பிறர்கையுணவு.
பரபிண்டாதன் - எப்பொழுதும்பிறரன்னம் புசிப்பவன்.
பரபிருதம் - காகம், குயில்.
பரபிருத்தம் - காகம்.
பரபுட்டமகோற்சவம் - மாமரம்.
பரபுட்டம் - குயில்.
பரபுட்டன் - காமதூர்த்தன்.
பரபுட்டை - வேசி.
பரபுருடன்-கள்ளப்புருடன், விட்டுணு.
பரபூமி - பிறதேசம்.
பரபூருவை-முன்கலியாணமுடித்தவள்.
பரபேதகம் - சத்துருவை யழித்தல்.
பரபோகம் - பேரின்பம்.
பரப்பத்தியம் - விசாலம்.
பரப்பல் - பரம்பச்செய்தல், பாவுதல்.
பரப்பிரபௌத்திரன் - அப்பாட்டன்.
பரப்பிரமம் - கடவுள்.
பரப்பு - அகலம், ஒருநிலவளவுப்பிரமாணம், சப்பிரமஞ்சம், படுக்கை, பரப்பென்னேவல், பரவைக்கடல், மிகுதி விசாலம், வீதி.
பரப்புதல் - பரம்பச்செய்தல், பாவுதல்.
பரம - சிரேஷ்டமான, திவ்வியமான, பிரதானமான.
பரமகதி - அடைக்கலம், மோட்சம்.
பரமகருத்தன் - கடவுள்.
பரமகாரியம் - தேவகாரியம், மகாகாரியம்.
பரமகுரு - ஆசாரியனுக்கு ஆசாரியன்.
பரமக்கியானம் - பரமஞானம்.
பரமசண்டாளன் - மகாதுரோகி.
பரமசத்துரு - மகாசத்துரு.
பரமசந்தேகம் - மிகுசந்தேகம்.
பரமசந்தோஷம் - மிகுமகிழ்ச்சி.
பரமசமாதி - தியானம்.
பரமசித்தி - முத்தி.
பரமசிவன் ஸ்ரீகைலாசத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர். மும்மூர்த்திகளையும் படைத்தருளும் தனிமுதற் கடவுள். இக்கருத்து அதர்வசிகையிற் கூறப்பட்டுள்ளது.
பரமசுந்தரி - தருமதேவதை.

பரமண்டலம் - வானுலகம்.
பரமத்திமிரபாநு - ஒரு சைவநூல்.
பரமதம் - கடவுள், பிறசமயம்.
பரமதுஷ்டன் - மிகுதுஷ்டன்.
பரமநாழிகை - முற்றுமுள்ள நாழிகை.
பரமநிவர்த்தி - பாசவிமோசனம்.
பரமபதம்-உலகம், மோட்சம், விட்டுணு.
பரமபாகவதசிகாமணி, பரமபாகவதன் } வைணவ சந்நியாசி.
பரமமூர்த்தி - பரப்பிரமம், விஷ்ணு.
பரமம் - பரப்பிரமம், மகாமேன்மை.
பரமரகசியம் - அந்தரங்கவுண்மை, ஒரு நூல்.
பரமலுத்தன் - மிகுலோபி.
பரமலோகம் - சிவலோகம், மோக்கம்.
பரமலோபி - மிகுலோபி.
பரமவிந்து - வேதம்வாசிப்போர் வாயிலிருந்து தெறிக்குநீர்.
பரமவிராகன் - ஏகாதிபதி.
பரமவியோமம் - பரமாகாசம் மோக்ஷம்.
பரமன் - கடவுள், சீர்பந்தபாஷாணம், சிவபிரான்.
பரமாகாயம் - துவாதசாந்தம், வெறுவெளி.
பரமாங்கனை - சௌந்தரி.
பரமாங்கிசம் - உபநிடதமுப்பத்திரண்டிலொன்று.
பரமாணு - அதிசூக்கவணு, ஒருகாலநுட்பம்.
பரமாத்துமன் - கடவுள், சன்னியாசி, பெருமையிற்சிறந்தோன்.
பரமாத்துமா - சுத்தாத்துமா.
பரமாயு - பூரண ஆயு.
பரமார்த்தம் - உண்மை, ஞானார்த்தம், தேவவறிவு, மெய்ம்மை.
பரமாற்புதம் - தேவாற்புதம்.
பரமானந்தம் - பேரின்பம்.
பரமானந்தன் - கடவுள்.
பரமானம் - பரமான்னம்.
பரமானுபவம் - அசிபதசோதனை.
பரமான்மா - இதரபதார்த்தாவச்சின்னவான்மா.
பரமான்னம் - சருக்கரையமுது.
பரமுத்தாத்துமா - சாயுச்சியகதியடைந்தோர், பக்குவர்.
பரமுத்தி - சாயுச்சியம், மோக்கம்.
பரமேசன், பரமேசுரன், பரமேசுவரன் } கடவுள், சிவன், விட்டுணு.
பரமேசுவரி - இலக்குமி, பார்வதி.
பரமேச்சுரன், பரமேச்சுரவன் } பரமேசன்.
பரமேச்சுவரி - பரமேசுவரி.
பரமேட்டி - அருகன், கடவுள், சிவபிரான், பிரமன், விட்டுணு.
பரமேஷ்டி - பிரமா, இந்திரத்துய்ம்மன் புத்திரன்.
பரமோட்சம் - பரமுத்தி.
பரமோபகாரம் - பேருதவி.
பரமோபகாரி - பேருதவிசெய்வோன்.
பரமௌஷதம் - மேலானமருந்து.
பரம் - அத்திமரம், உடல், கடவுள், கவசம், குதிரைக்கல்லணை, கேடகம், செயல், தனிமை, பழமை, பாரம், மிகுதி, முற்றத்துறத்தல், முன்பு, மோக்கம்.
பரம்படித்தல் - பலகையடித்தல்.
பரம்பதம் - மோட்சம்.
பரம்பரம் - சுந்தரம், வமிச பாரம்பரை, வமிசம்.
பரம்பரன் - அப்பாட்டன், கடவுள்.
பரம்பராகம் - யாகபசுக்கொலை.
பரம்பராதி - தொன்றுதொட்டுள்ளது, பரவணியானது.
பரம்பரை - சம்பிரதாயம், தொடர்பு, தொன்றுதொட்டது, பரவணி.
பரம்பர் - ஒருசாதியார்.
பரம்பு - கழனிதிருத்தும்பலகை, பரம்பென்னேவல், வரம்பு, விசாலம்.
பரம்புதல் - பெருகுதல், விசாலித்தல்.
பரராசசேகரன் - ஓரரசன்.
பரராஜகுஞ்சரன்-ஆயோதனவீரபாண்டியனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன.
பரரூபம் - விகாரப்படுதல்.
பரர் - அன்னியர், பகைவர்.
பரலோககமனம் - மரணம்.
பரலோகக்கிரியை - அபரக்கிரியை.
பரலோகசாதனம் - மோக்கத்துக்குரிய சாதிப்பு.
பரலோகசௌக்கியம்- மோட்சாநந்தம்.
பரலோகம் - தேவலோகம், மோக்கம்.
பரலோகவாசி - மோட்சத்தான்.
பரல் - பருக்கைக்கல், விதை.
பரவசஞ்சொல்லுதல் - பிரமாணத்தோடே வாக்குத்தத்தம் பண்ணுதல்.

பரவசம் - தன்வசமற்றிருத்தல், பிரமாணத்தோடுபண்ணும்வாக்கு, பிரமை, மிகுகளிப்பு, மூர்ச்சை.
பரவசவிலக்கு - தன்வசமல்லாமற்கூறிவிலக்கு மலங்காரம்.
பரவணி - தலைமுறை, வமிசம்.
பரவணிகாரன் - தலைமுறை,தலைமுறையாயுரித்துக்காரன்.
பரவணிப்பட்டம் - தலைமுறைப்பட்டவரிசைப்பெயர்.
பரவர் - ஒருசாதியார்,ஒருசெம்படவர், வலைஞர்.
பரவல்-சொல்லுதல்,பரவுதல், புகழ்தல், வணங்கல்.
பரவான்மா - முற்றத்துறந்த வான்மா, திரும்பாத்துறவி.
பரவிராகம் - முத்தியிலிச்சைக்கொள்ளல்.
பரவிருதயம் - குயில்.
பரவிவேகம் - ஞானவறிவு.
பரவுதல்-சொல்லல்,துதித்தல்,பரப்பிச்செப்பம் பண்ணுதல், பரப்புதல், வணங்கல், விரிதல்.
பரவுபகாரம் - பரோபகாரம்.
பரவெளி - பராகாயம், மாயாசூனியம்.
பரவை - இலக்குமிகூத்து, கடல்,சுந்தரர் மனைவி,திடல், நீர்ப்பரப்பு, பிரபலம், வழக்கு.
பரவையமுது - உப்பு.
பரவைவழக்கு - உலகவழக்கு, செய்யுளல்லாவியல்.
பரற்பரம் - பதிலுபகாரம்.
பரற்பரவிரோதம்-ஒன்றுக்கொன்று விரோதம்.
பரன் - கடவுள், சிவன், விஷ்ணு.
பராகண்டம், பராகண்டிதம் } அசட்டை, பராமுகம்.
பராகதம் - சருவுதல்.
பராகத்தின்சேவுகன் - பன்றி.
பராகமண் - செம்மண்.
பராகம் - ஒருமலை, ஒருவாசனைத்தூள், கிரகணம், கீர்த்தி, சந்தனம்தூளி, பூந்தாது, மகரந்தம், மற்றைநாள், தூள்.
பராகரணம் - இகழ்தல்.
பராகாயம் - பரவெளி.
பராக்கதம் - தைரியம்.
பராக்காட்டுதல் - பராக்குச்காட்டுதல்.
பராக்கிரமசாலி - பலவான், வீரன்.
பராக்கிரமம் - வலி, வீரம்.
பராக்கிரமன், பராக்கிரமி } பலவான், வீரன்.
பராக்கிரமவாகுபாண்டியன் - விக்கிரமவாகு பாண்டியனுக்குப்பின் அரசு செய்தவன்.
பராக்கிரமித்தல் - வீரங்காட்டல்.
பராக்கு - அசட்டை,ஒருபிரபந்தம்,நோக்கம், பலதையும் பார்த்தல், பொழுது கழித்தல், விளையாட்டு, வேறுபுலனா யிருத்தல்.
பராங்கதன் - சிவபிரான்.
பராங்கவம் - சமுத்திரம்.
பராங்குசர் - நம்மாழ்வார்.
பராசத்தி - பஞ்சசத்தியினொன்றுஅது பிராணன்முதலிய வாயுவாகநிற்பது.
பராசயம் - தோல்வி.
பராசரஸ்ம்ருதி - ஒருதருமநூல்.
பராசரம் - அட்டாதச வுபபுராணத்தொன்று, தருமநூல், பதினெட்டினுமொன்று.
பராசரன் - வியாசன்றந்தை.
பராசரஸ்மிருதி - கலியுகத்துக்கு ஏற்ற தருமங்களைக்கூறும் தருமசாஸ்திரம், பராசர் செய்தது.
பராசரன்-வசிஷ்டன்பௌத்திரன் சத்திபுத்திரன், வியாசன்றந்தை, சுகன்பாட்டன், இவன் தந்தையாகிய சத்தியை இராக்ஷசன் கொன்றுதின்றானென்றுணர்ந்து அவனையும் ஏனையஇராக்ஷசர்களையும் கொல்வதற்காக ஒரு யாகஞ்செய்தவன், அதுமுடிந்த பின்னர் இவன்யமுனையைத் தாண்டவேண்டிஒரோடத்தேறிச்செல்லும்போது சத்தியவதியென்னும் பெண் அவ்வோடத்தைத் தனியேதாங்கிச்செல்லக்கண்டுஅவளைப்புணர்ந்து வியாசரைப்பெற்றான், இவன் அவள்மீது இயல்பாக வீசிக்கொண்டிருந்த புலானமணத்தைமாற்றித் திவ்விய பரிமளம் வீசும்படிசெய்து அவளுக்கு யோசனகந்தியென்னும் பெயரைக் கொடுத்தான்.
பராசரியம்-சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று.
பராசனம் - கொலை.

பராசனன் - கொலைசெய்வோன்.
பராசிதம் - சிவபிரான், கைவாள்.
பராசியம் - பலரறிந்தது.
பராசுதை - துக்கம், மரணம்.
பராஞ்சம் - ஆயுதவலகு, செக்கு.
பராடம் - வனச்சார்பினிலம்.
பராதாரம் - காகம்.
பராதி - பீராதி.
பராதீனம் - சுதந்திரமற்றது.
பராத்தம் - பரார்த்தம்.
பராந்தகன்-இவன் சாரமுனிவர் சாபத்தால் தன் உறையூர் மண்மாரியாலழியப்பெற்ற சோழன்.
பராந்திரம் - பிறவழி.
பராபத்தியம் - பாரபத்தியம்.
பராபரக்கண்ணி - தாயுமானுற்பாடலில் ஒருபிரிவு.
பராபரம் - கடவுள்,சிவம்,நன்மைதீமை, நடுத்தரம், முன்பின்.
பராபரவஸ்து - கடவுள்.
பராபரன் - பரமேசுவரன்.
பராபரித்தல் - பராமரித்தல்.
பராபரிப்பு - பராமரிப்பு.
பராபரை - பார்ப்பதி.
பராபவ - நாற்பதாவதுவருஷம்.
பராபவம் - அபசாரம், தோல்வி.
பராபூதன் - தோற்றவன்.
பராமரிசம்-தீர்க்கமாக விசாரித்தறிகை.
பராமரிசித்தல்-ஆராய்தல்பகுத்தறிதல்.
பராமரித்தல் - ஆதரித்தல், ஆராய்தல், நடத்தல், பத்திரப்படுத்தல், வளர்த்தல், விசாரித்தல்.
பராமரிப்பு - விசாரிப்பு.
பராமாத்துமியம் - உபநிடத முப்பத்திரண்டினென்று.
பராமுகம்-அசட்டை, கவனிப்பின்மை, பின்னோக்கியமுகம்.
பராயணம் - அறுசமயத்தொரு வகுப்பு இராசிமண்டலம், பற்று, விருப்பு, வேதத்தின்பகுதி.
பராயணர்-குறிக்கொள்வோர், வேதாத்தியயனர்.
பராயணி - கன்னன்.
பராயத்தம் - பிறராதீனம்.
பராய் - பிராய்மரம்.
பராரி - மூன்றும் வருடம்.
பராருகம் - கல்.
பராரை - உள்ளோசை, பருமரத்தடி.
பரார்த்ததேவப்பிரத்தியம் - பிறர்க்காகத் தேவாராதனைசெய்தல், இது தயாவிருத்தி பதினென்கினென்று.
பரார்த்தம் - ஆயிரங்கோடி, கோடாகோடி, பிரமகற்பத்தரை, பிறர்க்குபகாரமானது.
பரார்த்தவனுமானம் - பிறர் பொருட்டாவனுமானம்.
பராவரம் - கடல்.
பராவித்தன் - குபேரன்.
பராவிருத்தமுகம் - வேண்டாததற்கு முகந்திருப்பல்.
பராவுதல் - துதித்தல், பரவுதல்,வணங்கல்.
பரானுகூலம் - பிறர்க்கனுகூலம்.
பரானுகூலி - உபகாரி, விபசாரி.
பரான்னம் - பிறர்கொடுத்தபோசனம்.
பரி-அசுபதி,அச்சுவினி, அடையாளம் அலங்காரம், அன்பு, உண்மை, உயர்ச்சி, உள்ளக்களிப்பு, கருமை, காழ்த்தல், குதிரை, சுமை, செல்வம், துக்கம், துன்பம், நெருக்கிடை, பங்கு, பரப்புதல், பரியென்னேவல், பருத்தி, பாதுகாத்தல், பெருமை, மிகுதி, முடிவு, வணக்கம், வருத்தம், வழி, விசாலம், விரிவு, விரைவு.
பரிகட்டம் - ஒருவகைக்கோடரி.
பரிகதம் - அறிவு, ஆதாயம், தடை,மறதி, விசாரணை.
பரிகதை - தரித்திரம்.
பரிகம் - அகழ், அழித்தல், இருப்புத்தண்டு, கதலிற்ருள், கிழங்கு, நித்தியோகத்தொன்று, நீர்ச்சாடி, மதிலுண்மேடை, மதில், வளைதடி, வெளிக்கதவு.
பரிகம்பம் - பயங்கரம்.
பரிகரணம் } பிடித்தல், விடுதல்.
பரிகரமாணம் }
பரிகாரம் - இடைக்கட்டு, தீர்ப்பு, துவக்கம், படுக்கை, பரிவாரம்.
பரிகரித்தல் - காத்தல்,குணமாக்கல்,நீக்கல், பத்தியம்பண்ணல்,பிராயச்சித்தம் செய்தல், மாற்றல், வைத்தியம் பண்ணுதல்.
பரிகரிப்பு-குணமாக்கல், வகைசெய்தல், விலக்கல்.

பரிகருத்தனம் - சூன்றல்.
பரிகருமம் - அலங்கரிப்பு, சுத்தி.
பரிகலச்சேடம் - உச்சிட்டம், மகாத்துமாக்களின் விசேடம்.
பரிகலத்தார் - பரிவாரசனம்.
பரிகலம்-சேனை,பரிவாரப்பேய், பரிவாரம், மகாத்துமாக்களுண்ணும் பாத்திரம்.
பரிகலிதம் - உருகுதல், பாய்தல்.
பரிகற்பனம் - உணவுமுதலியதேடல்.
பரிகாசப்பட்டன் - பரிகாசக்காரன்.
பரிகாசப்போர் - பகிடிச்சண்டை.
பரிகாசம் - பகிடி, நிந்தனை, மிகுநகை.
பரிகாதநம் - கதாயுதம், பெருந்தடி.
பரிகாதம் - ஆயுதம், கொல்லுதல்.
பரிகாரகிகண்டு - வைத்திய அகராதி.
பரிகாரம் - அவசங்கை, சூழ்தல், நீக்குகை, பரிகரித்தல், பிராயச்சித்தம், பெண்மயிர், மாற்றுமருந்து, மிகுதி, வைத்தியம்.
பரிகாரி - நாவிதன், வைத்தியன்.
பரிகிருசம் - மெலிவு.
பரிகீர்த்தனம் - சொல்லுதல், புகழ்தல்.
பரிகை - அகழ்,அன்பு, உருக்கம், மதிலுண்மேடை.
பரிக்கந்தி - அமுக்கிராக்கிழங்கு.
பரிக்காரம் - அலங்காரம், துலக்கம்.
பரிக்காரர் குதிரைக்காரர்,யானைக்காரர்.
பரிக்கிரகம் - பிறிக்கக்கூடியது, அழிவு, ஆனை, இணக்கம், ஏற்றுக்கொள்ளுதல், கிலைபேறு, பிற்படை, மனையாள், மூலம்.
பரிக்கிரகித்தல் - கைக்கொள்ளல்.
பரிக்கிரமம் - அலைந்துதிரிதல், சுற்றுதல், போதல், விளையாட்டு.
பரிக்கிரயம் - மீட்பு, சூழல்.
பரிக்கிராகம் - பலிபீடம்.
பரிக்கிரியை - வேலியடைத்தல்.
பரிக்கை - பரிட்சை.
பரிசக்குன்று - நாகபச்சை.
பரிசணித்தல் - மிருதுவாய்ப்பேசல்.
பரிசதன்மாத்திரை - பரிசவுணர்வின் மூலம்.
பரிசதீட்சை - ஒருதீட்சை அது பிரளயாகலருக்குப் பரிசத்தினல் மலமறுத்தருளுதல்.
பரிசத்தலன் - கூட்டாளி.
பரிசம் - உபத்திரவநோய்,கற்பாஷாணம்,கிரகணம்பற்றல், தொடல்,தொடுதலையறியுமறிவு, இது பஞ்சபுலனிலொன்று, மணவாளன்பெண்ணின் பிதாமாதாவுக்குக் கொடுக்கும் வெகுமானம்.
பரிசயம் - ஐக்கம், பரிசனே.
பரிசாம் - அகலம், மரணம், முறை.
பரிசான் - காவற்காரன், தோழன், படைத்தலைவன்.
பரிசரியம் - எங்குந்திரிதல்.
பரிசருப்பம் - சூழ்தல்.
பரிசவேதி - உலோகங்களைப் பொன்னுக்குவதாகியவோர் குருமுடிப்பு.
பரிசனம் - உறவு, ஏவல்செய்வோர், சூழ்வோர், தொடுதல், பரிசிப்பு.
பரிசனவேதி - இழிந்த லோகங்களைப் பொன்னுக்குமருந்து.
பரிசனன் - காற்று.
பரிசனே - ஐக்கம், பழக்கம்.
பரிசன்னியம் - பொன்மலை,மேருகிரி.
பரிசாதனம் - செய்துமுடித்தல், தீர்மானம்.
பரிசாயம் - ஓமக்கிடங்கு, ஓமம்.
பரிசாரகம் - ஏவல்வேலை.
பரிசாரகன் - ஏவல்செய்வோன்,கூடப்போகிறவன்.
பரிசாரம் - பரிவாரம், பெண்மயிர்.
பரிசாரிகை - ஏவல்செய்பவள்.
பரிசித்தல் / பரிசிப்பு } தீண்டல், பழகுதல்.
பரிசிரமம் - பிரயாசம், வருத்தம்.
பரிசிரயம் - கூட்டம்.
பரிசிலாளர் - இரப்போர்.
பரிசில் - ஈகை, கங்கை,பண்பு,பயணச்சனம், பரிசு, விதம்.
பரிசுகேடு - சங்கையீனம்.
பரிசுத்ததீர்த்தம் - புண்ணியதீர்த்தம்.
பரிசுத்தம் - தூய்மை, புனிதம், மாசின்மை, முழுதுஞ்சுத்தம், முழுமை.
பரிசுத்தவான் / பரிசுத்தவன் } சுத்தமுள்ளோன்.
பரிசுத்தாத்மா - மகாஞானி.
பரிசுத்தாவி - சுத்தமான ஆவி.
பரிசுத்தி - பரிசித்தம், முற்றுக.
பரிசுத்தை - சுத்தமுள்ளவள்.
பரிதேசம் - எல்லை, பிரிவு, மாற்று.

பரிசேதனம் - சிரிப்பு, பரிசேதம்.
பரிசை - கேடகம்.
பரிசைக்காரர் - ஒருசாதியார், கேடகம் பிடிப்போர்.
பரிசோதனை - பூரணசோதனை.
பரிசோதித்தல் - முற்றுஞ்சோதித்தல்.
பரிசோபை - அலங்காரம்.
பரிச்சதம் - மூடி.
பரிச்சயம் - பழக்கம், வேதசுரத்தி ஞென்று.
பரிச்சிதம் - பழக்கம்.
பரிச்சித்து - அருச்சுனன் பௌத்திரன், ஓரரசன்.
பரிச்சிரமம் - மிகுவருத்தம்
பரிச்சேதம் - எல்லை, துண்டிப்பு, நூற்கூறுபாடு, பகுத்தறிகை, முழுவதும்.
பரிசேதனம், பரிசேதன் - இலக்கியச்செய்யுட்கூறுபாடு, இன்மை, நீக்கம், முற்றும்.
பரிச்சை - பரிச்சியம்.
பரிஞ்சு - வாட்பிடி.
பரிஞ்ஞானம் - அறிவு.
பரிட்காரம், பரிஷ்காரம் - அலங்காரம், சமைத்தல், சமயாசாரத்துட்படுத்தல், துலக்கம், முடிவு.
பரிட்கிருதபூமி - பலிபீடம்.
பரிட்சாவிற்பத்தி - அப்பியாசத்திறம்.
பரிட்சித்தல் - அப்பியாசித்தல், ஆராய் [தல்.
பரிட்சித்து - பரிச்சித்து.
பரிக்ஷித்து - குருவினதுபுத்திரருளொருவன் இவன் ஜன்னுவினது தம்பி அபிமன்னியுபுத்திரன், அருச்சுனன் பௌத்திரன் இவன் கலியுகாரம்பத்தில் அஸ்தினபுரத்தில் அரசுசெய்தவன், இவன் தாய் உத்தரை. இவன் மகன் ஜனமேஜயன்.
பரிட்சை - ஆராய்வு, சோதனை, பழக்கம்.
பரிட்சைபண்ணுதல், பரிட்சைபார்த்தல் - அப்பியாசம் பண்ணுதல், ஆராய்தல்.
பரிட்டினகம் - பட்சிவட்டமிடுதல்.
பரிணதம் - கனிவு, முதற்பணம், வளைவு.
பரிணதை - விவாகஞ்செய்தவள். [ல்.
பரிணமித்தல் - பேதப்படல், வேறுபட
பரிணயம் - கடைப்பிராயம். கலியாணம், முதிர்வு.
பரிணயனம் - கலியாணம், பற்று.
பரிணாகம் - அகலம், வட்டத்தின்சுற்ற [ளவு.
பரிணாக்கன் - கணவன்.
பரிணாமசரீரம் - ஒன்றுதிரிந் துண்டான தேகம் அது தூலதேகம்போல்வது.
பரிணாமசூலம் - ஒருநோய்.
பரிணாமம் - வேறுபாடு. [வம்.
பரிணாமரூபம் - பரிணமிக்கப்பட்டவுரு
பரிணாமவாதசைவன் - உயிர்கெட்டுக் கூடி ஆனடியில் ஒன்றாகிப் போமென்று சொல்லுமோர் அகச்சமயி.
பரிணாமாலங்காரம் - திரிபணி.
பரிணாயம் - சொக்கட்டான்காய்.
பரிணேத்திரு - கணவன்.
பரிதகனம் - பொசுக்குதல்.
பரிதபித்தல் - இரங்குதல், துக்கித்தல், வருந்தல்.
பரிதபிப்பு - இரக்கம், துக்கம்.
பரிதல் - அறுத்தல், அன்பு அன்போடு பேசல், இரங்கல், ஒடித்தல், ஒழுகல், தறித்தல், பங்கிடல், பரிந்துபேசுதல், வெட்டுதல்.
பரிதாபசுரம் - ஒருசுரம்.
பரிதாபப்படுதல் - பரிதாபித்தல்.
பரிதாபம் - இரக்கம், ஒருநரகம், துயரம், பயம், வருத்தம், வெப்பம்.
பரிதாபி - துயருறுவோன், நாற்பத்தாறாவதாண்டு.
பரிதாயம் - சகவாசிகள், சந்து, நீர்க்குண்டு, பின்றொடை.
பரிதானக்காரன் - கைக்கூலி வாங்குவோன்.
பரிதானம் - உடுப்பு, கைக்கூலி, பொருள்கொடுத்துப் பொருள்வாங்குதல்.
பரிதி - ஒளி, சக்கராயுதம், சூரியன், தேர்ச்சில் பரிவேடம், பொன், யாகமேடை, யூபஸ்தம்பம் வட்டத்தின்சுற்றளவு, வட்டம்.
பரிதிமண்டலம் - சூரியமண்டலம்.
பரிதிவிட்டரம் - அகழ்.
பரிது - பரியது.
பரிதுஷ்டம் - சந்தோஷம்.
பரிதேவனம் - அச்சம், புலம்பல்.
பரிதேவிதம் - புலம்பல்.
பரித்தம் - பரிவட்டம்.
பரித்தல் - காத்தல், சுமத்தல், தரித்தல், தாங்குதல், தாபரித்தல்.
பரித்தியாகம் நட்டம், முற்றும் விடுதல்.

பரித்தியாகி-சன்னியாசி, துறந்தோன்.
பரித்தியாச்சியம் - முற்றத்துறத்தல்.
பரித்திராணம் - தற்காத்தல்.
பரிநாமம் - கீர்த்தி, செல்வம்.
பரிநியாசம் - முடிவுசெய்தல், வசனப் பொருள்.
பரிபக்குவம் - ஏற்றசமயம், ஏற்றபக்குவம்.
பரிபணம் - கைப்பணம்.
பரிபதி - பகைவன்.
பரிபந்தகன் - எதிரி.
பரிபந்தி - எதிரி, கள்வன்.
பரிபவபதம் - நிந்தையான நிலைமை.
பரிபவம் - அவசங்கை, இகழத்தகுபொருள். இழிவு, எளிமை, தோல்வி, வியாகுலம்.
பரிபாகம்-அடுதல், எற்றபக்குவம், சமர்த்து, பலம், சமித்தல், முதிர்வு.
பரிபாகி - ஏற்றபக்குவன்,முத்தியடையும் பக்குவன்.
பரிபாஷணம் - இணக்கம்,சம்பாஷணை, நிந்தை, முறை.
பரிபாடல் - தலைச்சங்கப் புலவர்செய்த பரிபாடலென்னும் நூல் இறந்தொழிந்தது. கடைசங்கப்புலவர் செய்ததுவே இப்போதுளது, அது எழுபது பாடல்களையுடையது, "திருமாற்கிருநான்கு செவ்வேட்குமுப்பத்தொரு பாட்டுக்கார் கோளுக்கொன்று,மருவினிய - வையையிருபத்தாறு மாமதுரை நான்கென்ப செய்யபரிபாடற்றிறம்" என்னும் பாவால்அவ்வெழுபதின் விபாகமுணர்க. அவ்வப்பாடல்களின் கீழ் ஆசிரியர்கள் பெயர் கூறப்பட்டுள்ளன.
பரிபாடி - ஒழுங்கு.
பரிபாடைசூத்திரம் - தெய்வவணக்கஞ் செயலும் மங்கலமொழிமுதல் வகுத்தலும் தொகைவகை விரியாய்ச் சொல்லலும் ஏற்புடைப் பொருளையுரைத்தலுமெனு நான்குமாம்.
பரிபாஷை - குழூஉக்குறி, சங்கேதம்.
பரிபாலகன் - காப்போன்.
பரிபாலம் / பரிபாலனம் } அருளுதல், ஆளுகை, காவல், சமாளித்தல், தற்காத்தல்.
பரிபாலனன் - காப்போன்.
பரிபாலன் காப்போன்,சமாளிப்போன்.
பரிபாலி - காப்போன், பரிபாலியென்னேவல்.
பரிபாலித்தல் - அருளுதல், காத்தல், செழித்தல்.
பரிபாலம் - நிந்தை.
பரிபிட்டகம் - ஈயம்.
பரிபீரேசனம் - களைதல், விடுதல்.
பரிபுடம் - நூறெருப்புடம்.
பரிபுட்கரை - ஒருவெள்ளரி.
பரிபுதம் - வெறுப்பு.
பரிபுரம் - காற்சிலம்பு, பாதகிண்கிணி.
பரிபூசனம் - வணக்கம்.
பரிபூதம் - அவமானம், சுத்தப்பட்டது, தெரிவு, பழையது.
பரிபூரணதை - திருத்தி.
பரிபூரணத்துவம் - திருத்தி, நிறைபூரணத்தன்மை.
பரிபூரணம் - திருத்தி, மிகுதி முழுப்பூரணம்.
பரிபூரணன்-எங்கும்நிறைந்தோன், கடவுள், சிவபிரான்.
பரிபூரணி - இலட்சுமி, பார்ப்பதி.
பரிபூர்த்தி - நிறைவு, மிகுதி.
பரிபோகம் - பிறன்பொருட்போகம்.
பரிப்பிரமம் - சுழலல், தவறு, திரிதல்.
பரிப்பு - பரித்தல்.
பரிமண்டலம் / பரிமண்டலிதம் } உண்டை,
பரிமந்தம் - அற்புதம், மந்தம்.
பரிமருச்சியம் - துடைத்தல்.
பரிமளகந்தி-மற்சகந்தி, வேதவியாசன்ருய்.
பரிமளக்குளம்பு - கலவை.
பரிமளசுகந்தநாயகி - திருவேள்விக்குடியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பரிமளசுகந்தம் - நற்கந்தம்.
பரிமளச்சேறு - பரிமளக்குழம்பு.
பரிமளதயிலம் / பரிமளதிரிவியம் / பரிமளத்தைலம் } கந்ததயிலம்.
பரிமளப்பொடி - சுகந்தப்பொடி.
பரிமளம் - சந்தோஷம், சம்போகம், மிகுமணம்இது அட்டபோகத்தொன்று.
பரிமளவருக்கம் - பரிமளதயிலம்.
பரிமளி - கரந்தை.
பரிமளித்தல் - சந்தோஷித்தல், சமாளித்தல், மிகமணத்தல்.

பரிமளிப்பு - சந்தோஷம், வாசம்.
பரிமா - குதிரை.
பரிமாணசந்தேகம் - அளவையிற் காணுஞ் சந்தேகம்.
பரிமாணம் - அளவு.
பரிமார்ச்சனம் - சுத்திபண்ணுதல்.
பரிமாவடிப்போர் - குதிரைப்பாகர்.
பரிமாறுதல் - உட்கொள்ளுதல், ஊடாடுதல், கொடுத்துமாறுதல், திரிதல், நடமாடுதல், பங்கிடுதல்.
பரிமாற்றம் - ஊராட்டம், கலப்பு, நடத்தை, புணர்ச்சி.
பரிமிதம் - அளவுபட்டது, எல்லை, மட்டுப்பட்டது.
பரிமிதாகாரம் - மட்டானபோசனம்.
பரிமித்தல் - அணிதல், அலங்கரித்தல்.
பரிமுகம் - அசுபதி, காலிற்றேல்.
பரிமுகவம்பி - குதிரைமுகவோடம்.
பரிமுகன் - ஹயக்ரீவன்.
பரிமேயம் - அளவுபட்டது.
பரிமேலழகர் - திருவள்ளுவர் குறளுக்கு உரைசெய்த ஓரந்தணக்கவிஞர் இவர் காஞ்சிபுரத்திலே வைஷ்ணவப்பிராமணகுலத்திலேஅவதரித்துவடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லுநராய் விளங்கித் திருவள்ளுவர் குறளுக்குரை யியற்றிய ஆசிரியர். இவரைப் பாண்டிநாட்டிற் பிறந்தவரென்பாரு முளர். அது பொருந்தாமை. "வள்ளல் சிலப்பெருமாணச் சர்சாத்தர் வழுதி முதற் - றள்ளுவனூர்க்குந் தலையான பேரையுந்தன்னுரையை - விள்ளுவனூர்க்குந் திருக்காஞ்சிவாழ் பரிமே - லழகன் - வள்ளுனூர்க்கு வழிகாட்டினன்றொண்டை மண்டலமே" என்னுந் தொண்டை மண்டல சதகத்தானுணர்க. வள்ளுவர் குறளுக்கு உரை செய்தவர்கள் பதின்மர். அவருள்ளே சிறந்தவர்கள் நச்சினார்க்கினியரும் இவருமே யாவர்கள். அவ்விருவருள்ளும் இவரேதம் முரையாற் சிறந்தார். பதின்மர்உரையையு மொருங்கு கற்று ஒப்புநோக்கிய அன்றோர் ஒருவர் கூறிய:— "பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள - நூலெல்லாம் வள்ளுவர் செய்நூலாமோ - நூலிற் - பரித்தவுரையெல்லாம்பரிமேலழகன் - றெரித்த வுரையாமோ தெளி" என்பதனால் அவ்வுண்மை பெறப்படும் நச்சினார்க்கினியர்இவர் காலத்தவரேயாயினும் அவர் வயசால் முதிர்ந்தவர். இவர் வைஷ்ணவ ரென்பது "அரிமேலன்புறா உமன்பமையந்தணன், என்னும் ஆன்றோருரையாற்றுணியப்படும். இவர் வைஷ்ணவரே யாயினும் சைவாகம வுணர்ச்சியு முடையரென்பது வள்ளுவருரையி லிடையிடை யெடுத்துரைக்கு மாற்றால் விளங்குகின்றது. வள்ளுவருக்குரை செய்த பதின்மருள் முற்பட்டவராகிற தருமர் ஆருகதர். அவரை ஆருகதர்கள்தருமசேனர்என்பர். அவருரைத்தவுரையிலேபெரும்பாலும் ஆருகதமதக்கொள்கைகளே பிரசங்கிங்கப்பட்டனஇவ்வாறேமற்றையோரும் தத்தஞ்சார்புபற்றியுரைத்தார்கள் அவருள்ளே நச்சினார்க்கினியர் ஒருவரே திருவள்ளுவரைப் பொது நூலெனக்கொண்டு நடுநிலை கலங்கா துரைசெய்தார். ஆயினும் அவ்வொன்பதின்மர் உரையும் மெய்யுரையல்லவெனக் கண்டே பரிமேலழகர் தாம் உரை செய்யப்புகுந்தார். பரிமேலழகர் யோகப்பயிற்சியுடையரென்றும் ஒவ்வொரு சொல்லுக்குஞ்சமாதியம யிருந்தே மெய்ப்பொருள், கண்டனரென்றும், பூர்வம்வைஷ்ணவராயிருந்து பின்னர்ச்சுப்பிரமண்யோபாசகராயின ரென்றும் ஒரு கர்ண பரம்பரையுளது. மற்றைய சரித்திரம் எவ்வாறாயினும் ஒவ்வொரு சொற்குஞ் சமாதியிருந்தே மெய்ப்பொருள் கண்டாரென்பது அவருரையை யூன்றி நோக்குந்தோறும் நம்பத்தக்கதாகின்றது.

இவர் உரையிலே பொருள் வன்மையும், செஞ்சொற் சிறப்பும், இலக்கணங் கூறும் சாதுரியமும், விசேடவுரை தெரிக்கு மாற்றலும், மேற்கோளெடுத்துச் சித்தாந்தஞ் செய்யுமுபாயமும், பிறரெல்லாம் பலசொற்களானன்றி, யறிவுறுத்த வொண்ணாத விஷயத்தைச் சிலசொற்களாம்

விளக்கிக்காட்டும் பேராண்மையும், வடமொழிகளைத் தென்மொழியாக்கும் சாமர்த்தியமும், சொற்றடைபட்டு வடசொற்களை யெடுத்தாளும் வறியர்போலாது செந்தமிழ்ச்சொற்செல்வ முடைமையும், வேதாகம சாஸ்திர புராணேதிஹாஸ ஸ்ம்ருத காவ்ய நாடகாலங்காராதிகளில் வடமொழிப் புலமையும், அஷ்டாங்க ஹ்ருதயம், ப்யாஹடம் முதலிய ஸம்ஸ்கிருத ஆயுர்வேத பரிசயமும் நன்கு புலப்படுகின்றன.

இவர் வைதிக சமயவுணர்ச்சியில் இணையற்றவரென்பது "யாதுமெய் யென நிகழுமையத்தினை யோகமுதிர்ச்சியுடையார் தம்மநுபவத்தானீக்கி மெய்யுணர்வார்" என்றும், "நிலமுதலுயிரீறாகியதத்துவங்களின்றொகுதியெனவுணர்ந்து,அவற்றைநிலமுதலாகத் தத்தங்காரணங்களி லொடுக்கிக்கொண்டு சென்றால், காரண காரியங்களிரண்டு மின்றி முடிவாய் நிற்பதையுணர்தலாம், என்றும்வீடாவதுநிரதிசயவின்பம்"என்றும்தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையால் தன்னை யொன்றுங் கலத்தலன்மையிற்றூய்தாய் தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி யெஞ்ஞான்று மொருதன்மைத்து என்றும, "துன்பங்களாவன பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி யீட்டப்பட்ட வினைப்பயன்களுள் இறந்த வுடம்புகளான் அநுபவிக்கப் பட்டனவும் பிறந்த வுடம்புகளால் முகந்து நின்றனவுமொழியப் பின்னும் அநுபவிக்கக் கடவனவாய்க்கிடந்தன, அவை விளக்கின்முன் னிருள்போல ஞான யோகங்களின் முன்னர்க் கெடுதலான்" என்றும், "பரம்பொருளை யுணரப்பிறப்பறும்" என்றும் வரும் விசேடவுரைகளால் துணியப்படும்.

இவர் தம்முரையிலே தமக்குடன்பாட்டயுள்ள உரையாசிரியர்களுடைய மதங்களை யெடுத்துக்காட்டித் தமுவுவதோடு தமக்குடன் பாடில்லாத மதங்களையு மெடுத்துக்காட்டி யேதுக்கூறி மறுத்தலுஞ் செய்வர்.

இவரும்நச்சினார்க்கினியரும்ஒரே காலத்தவரென மேலே கூறினும், பரிமேலழகர் திருவள்ளுவருக்கு உரையொன்றெழுதி, அதிலே தமதுரையைச் சிற்சில விடங்களிலெடுத்து மறுத்திருக்கிறாரென்று கேள்வியுற்ற நச்சினார்க்கினியர், பரிமேலழகரிடத்திற் சென்று அவ்வுரையைத் தமக்குக் காட்டும்படி வேண்டினர், அவ்வாறே அவர்காட்டினர். அதனை நச்சினார்க்கினியர் இருகையாலுமேற்றுத் தமக்குச்சந்தேகமாயிருந்த சில குறள்களை யெடுத்துநோக்கிச் சென்றனர். சென்றபோது, "குடம்பைதனித்தொழியப் புட்பறந்தற்றே, யுடம் போடுயிரிடை நட்பு" என்னுந் திருக்குறளிலே குடம்பை யென்பதற்குத் தாம்கூடென்றுரைத்திருக்க பரிமேலழகர் அதற்குமுட்டையென்றுரை யெழுதி, "கருவுந்தானு மொன்றாய்ப் பிறந்து வேறாந்துணையும் அதற்காதாரமாய் நிற்றலால் அதுடம்பிற் குவமையாயிற்று" என்றும்; "அதனுள் வேற்றுமையின்றி நின்றேபின் புகாமற் போகலின்புள் உயிர்க்குவமையாயிற்று என்றும், விசேடவுரை வரைந்து, கூடுபுள்ளுடன்றோன் றாமையானும், அதன்கண் அதுமீண்டு புகுதலுடைமையானும் உடம்பிற்குவமையாகாதென்று மறுத்திருக்கக்கண்டு, தாமுரைத்ததைக் கண்டித்தாரென்று வெகுளாமலும் நாணாமலும், மெய்ப்பொருள் மெய்ப்பொருள் என்று பாராட்டி உச்சிமேலேற்றிக் கொண்டாடின ரென்பது ஆசிரிய கர்ண பரம்பரை. இவ்வாறே தருமர் முதலியோரது உரைகளையும் ஒரோ விடங்களிலெடுத்து மறுப்பர்.

கந்தபுராணம் கம்பராமாயண முதலிய நூல்களினின்றும் உதாரணமெடுத்துக்காட்டாமையால் இவரது காலம் அவரது காலத்துக்கு முற்பட்

டதென்று துணியப்படுகின்றது. இவர் ஆயிரத்திருநூறு வருடங்களுக்கு முன்னிருந்தவர்.
பரிமோகனம் - மயக்கு.
பரியகம் - காற்சரி, கைச்சரி, பாதகிண்கிணி.
பரியங்கம் - கட்டில், மக்கட்படுக்கை.
பரியஸ்தம் - மேல்கீழாதல், தள்ளுதல், விழுதல்.
பரியஸ்திகை - படுக்கை.
பரியந்தம் - எல்லை, முடிவு, வரைக்கும்.
பரியம் - பரிசம்.
பரியயணம் - சேணம்.
பரியயம் - அசட்டை, எதிரிடை, ஒழுங்கின்மை, படுக்கை.
பரியவசானம் - முடிவு.
பரியவஸ்தானம், பரியவத்தை } எதிரிடை.
பரியவம் - பலர்செல்லுநெறி.
பரியன்னியம் - முகில், முழக்கம்.
பரியன்னியன் - இந்திரன்.
பரியாகாரம் - காகம், கொண்டுபோதல், சுமை, தானியக்குவியல், நுகம்.
பரியாசம் - பரிகாசம்.
பரியாத்தம் - கூட்டுந்தன்மை, சம்மதம், திருத்தி.
பரியாத்தி - காத்தல், சம்பாதித்தல், சம்மதம், தகுதி, திருத்தி, பகுத்தறிதல், விலக்குதல்.
பரியாயசந்தேகம் - அற்பசந்தேகம்.
பரியாயச்சொல் - ஒருபொருள்குறித்த மறுசொல்.
பரியாயநாமம் - ஒருபொருட்கினமாயிருப்பது.
பரியாயம் - ஒழுங்கு, ஒன்றற்குரியன, ஓரலங்காரம், அது கருதியபொருளை அதற்குரிய விதத்தாற் கூறாது. மற்றொரு விதத்தாற் கூறுதல், சமயம், சுபாவம், செய்யப்படுபொருள், மாதிரி, முகவுரை.
பரியாயான்னம் - ஒருவருணத்தான்மற்றோர் வருணத்தானுக்குக் கொடுக்குமன்னம்.
பரியாரம் - பரிகாரம்.
பரியாரி - பரிகாரி, அம்பட்டன்.
பரியாலோசனம் - ஆலோசித்தல், சூழ்வரப் பார்த்தல்.
பரியாளம் - பரிவாரம்.
பரியானம் - சேணம்.
பரியுதஞ்சனம் - கடன்.
பரியுதாசம் - வழுச்சூத்திரம்.
பரியுதாசனம் - வணக்கம்.
பரிரட்சணம் - காத்தல்.
பரிரபமாணம் - ஆலிங்கனம்.
பரிவசதம் - கிராமம்.
பரிவசிதம் - குருவைக்காத்தல்.
பரிவட்டம் - சீலை, தலையிற்கட்டுஞ்சீலை, துண்டுச்சீலை, நெய்வார்கருவியிலொன்று, விக்கிரகத்தினுடை.
பரிவதனம் - அழுதல், நிந்தித்தல்.
பரிவயத்தம் - விரோதித்தல்.
பரிவயம் - அரிசி, இளமை, நெடுநாட்கூடியிருத்தல்.
பரிவருக்கம் - பரிவாரம், பாக்கியம், பொருள்.
பரிவருத்தம் - உலகமுடிவு, கூர்மம், சதுர்யுகமுடிவு, சுற்றுதல், நூன்முடி, பின்னிடுதல், பொருள்கொடுத்துப் பொருள்வாங்கால்.
பரிவருத்தனம் - அதிகப்படல், சுற்றுதல், மாற்றுதல்.
பரிவருத்தனை - ஓரலங்காரம் அஃதுபொருள் ஒன்றற்கொன்று கொடுத்து வேறொன்று கொண்டனவாகக் கூறுவது, பரிவருத்தனம்.
பரிவருத்திதம் - சக்கரமானது.
பரிவற்சரம் - வருடம்.
பரிவற்சனம் - கொலை, விகுதல்.
பரிவாகம் - பெருக்கு, மதகு.
பரிவாகிதமுகம் - மதத்தாற்றலையை ஒருபுறஞ்சாய்த்துச்சிறிதாய்ச்சுற்றியாட்டல்.
பரிவாகிதம் - வெறுமை.
பரிவாசம் - தங்குதல்.
பரிவாதகன் - வழக்காளி.
பரிவாதம் - குற்றச்சாட்டு, பழிச்சொல், வீணை வியக்கும் வில்.
பரிவாபம் - சௌளம் பண்ணல், நீர்க்குண்டு, பரிவாரம்.
பரிவாபனம் - மயிர்களைதல்.
பரிவாரதேவதை - ஏவற்றேவர்.
பரிவாரம் - அணிசெய்வோர், உறை, சூழ்வோர், படை.

பரிவிணன் } முன்னோன் மணமுடியாதிருக்க முடித்த பின்னோன்.
பரிவித்தி
பரிவிந்தகன்
பரிவிரட்டம் - தவறு.
பரிவிருகிதம் - அதிகப்படல்.
பரிவிருங்கணம் - அதிகப்படுத்தல், சேர்க்கப்படுவன.
பரிவிருடன் - மேன்மையுடையோன்.
பரிவிருத்தம் } ஒரு பொருள் கொடுத்தொருபொருள் வாங்குதல், கிரகச்சுற்று, சுற்றுதல், முடிவு, முழுவட்டம்.
பரிவிருத்தி
பரிவிலி - இரக்கமில்லாதவன்.
பரிவின்மை - இரக்கமின்மை.
பரிவீதம் - பிரமன்வில்.
பரிவு - அன்பு, இன்பம், சுகம், துன்பம், பக்குவம்.
பரிவேசம் } சந்திர சூரியரைச்சூழத்தோனறும் வட்டம், சுற்றளவு, சூழுதல்.
பரிவேஷம்
பரிவேடணம் - சூழுதல், விருந்திடல்.
பரிவேடம் - பரிவேசம்.
பரிவேட்டணம் - சுற்றளவு, சூழுதல்.
பரிவேதனம் - ஆராய்வு, உபத்திரம், சம்பாத்தியம், விவாகம்.
பரிவேதிரு - பரிவிந்தகன்.
பரிற்பவம்-அசைவு,கொடுங்கோன்மை, மூழ்குதல்.
பரிஹிஞ்சுவன் - அமிதாசுவன்,இவன் கிருதரிசுவன் தந்தை.
பரிஹிஷதர் பிதிருள் ஒருசாரார்.
பரிஹிஷதன் - ப்ராசீநபர்ஹி.
பரிஹிஷ்மதி-விசுவகர்மாவின் புதல்வி, பிரியவிரதன் மனைவி.
பரீகம் - சித்தியயோகத்தொன்று.
பரீகாசம் - பரிகாசம்.
பரீக்கை - தான் விவகரிக்கும் பொருளினிவ்விலக்கணமுண்டோ வின்றோவெனப்பார்த்தல், அது போதப்பிதார மூன்றினொன்று.
பரீசாரம் - சுற்றுதல்.
பரீட்சணம் - சோதனை.
பரீட்சித்தல் - ஆராய்தல், பழகுதல்.
பரீட்சை - அப்பியாசம், ஆராய்வு, பழக்கம்.
பரீஷ்டி - ஆபத்தம்,ஆராய்வு, ஊழியம்.
பரீணம் - ஒடித்தல்.
பரீணயம் - சூதுகாயெடுத்தடைத்தல்.
பரீதாவி - ஓராண்டு.
பரீபாவம் - நிந்தை.
பரீமலம் - நறுமணம்.
பரீயமாணம் - ஊடுருவுதல்.
பரீரம் - பழம்.
பரீரம்பம் - தழுவல்.
பரீவத்தம் - கொடுத்துமாற்றல்.
பரீவாகம் - பிரவாகம்.
பரீவாதம் - கடிந்துகொள்ளல், வீணைவாசிக்கும் வில்.
பரீவாரம் - பரிவாரம், வாளுறை.
பரு-கடல், கண், குரு, சிலந்தி, பருமை, பருவென்னேவல், மலை, மோக்கம்.
பருகல் } குடித்தல் அது நால்வகையுணவினொன்று, நுகருதல், புசித்தல்.
பருகுதல்
பருக்கல் - பருக்கச்செய்தல்.
பருக்கன் - பரும்படியானது, மிழுதுவற்றது.
பருக்குதல் - பருகச்செய்தல்,பருத்தல்.
பருக்கை - உருண்டை, சோறு, பருக்கைக்கல், பளிங்கு.
பருக்கைக்கல் - தரிசு.
பருங்கடி - மேற்கடித்தல்.
பருங்காரியம் - பெருங்காரியம்.
பருங்குடல் - மலவாகி.
பருங்கை தாராளமாகக்கொடுக்குங்கை, பெருஞ்செல்வம்.
பருஞ்சாய் - சடாமாஞ்சில்.
பருஷம் } கடுஞ்சொல்.
பருஷவருஷம்
பருஷோத்தி
பருஷோத்திகன - கடுஞ்சொற்காரன்.
பருணயனம் - விவாகம்.
பருணிதர் - புலவர்.
பருதி - பரிதி.
பருதியப்பேசுவரர் - திருப்பருதி நிப்புரத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பருத்தல் - பெருத்தல்.
பருத்தாரம் - குதிரை.
பருத்தி - ஒரு பஞ்சுச்செடி.
பருத்திக்குண்டிகை - பருத்திப் பஞ்சடைத்த குடுவை.
பருத்தித்தூறு - வாய்க்கிராந்தி.
பருத்திபன்னுதல் - பஞ்சுநூற்றல்.

பருந்தலை - பெரியதலை, பெருமையிற் சிறந்தோர், மேட்டிமைகாரர்.
பருந்தின்விருந்து - நண்டு.
பருந்தின்வீழ்வு - சூத்திரநிலை நான்கில் ஒன்று, அது ஓடத்துச்சூத்திரம் பின்னோரிடத்துச்சூத்திரத்தை அவாவி நிற்பது.
பருந்து - ஒருபறவை.
பருந்தொட்டு - பருமிதழ்.
பருபருக்கை - இருவனெருவல், வேவாச்சோறு.
பருபாரித்தல் - பருத்தல்.
பருப்பதமங்கை - திருப்பருப் பதத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
பருப்பதம் - மலை, ஸ்ரீசைலம்.
பருப்பதி - பார்வதி.
பருப்பதேசுவரர் - திருப்பருப்பதத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பருப்பம் - அளவு, பருத்தல், பருமை.
பருப்பித்தல் - பரிதாக்கல்.
பருப்பு - அதிகப்படல், பயறு, பருப்பம், வித்தின்பருப்பு.
பருப்பொருள் - நுண்மையற்ற பொருள்.
பருப்போரை - பருப்புச்சாதம்.
பருமட்டம், பருமட்டு - செவ்வையின்மை, பரும்படி.
பருமம் - அகங்கி, குதிரைக்கல்லணை, நிதம்பம், மூவாறுகோவைமணி, பருப்பம்.
பருமல் - கப்பற்பாய், கட்டுமரம்.
பருமன் - பருத்தது, பருத்தவன்.
பருமிதம் - இறுமாப்பு, சிரமம்.
பருமித்தல் - அலங்கரித்தல், இறுமாப்பாயிருத்தல், சிரமஞ்செய்தல்.
பருமிப்ப - இறுமாப்பு, சிலம்பம்.
பருமுறி - பரும்புடைவை.
பருமை - பருப்பம்.
பரும்படி - பருமட்டு.
பரும்பனையன் - ஒருநோய்.
பருவகம் - முழந்தாள்.
பருவகாலம் - உரியகாலம், பக்குவகாலம்.
பருவக்காய் - உரியகாலத்திற்காய்.
பருவசந்தி - உவாக்கடையும் பிரதமை முதலும் பொருந்துஞ்சமயம்.
பருவணிகை - ஒருகண்ணோய்.
பருவதகாகம் - ஒருகாகம்.
பருவதம் - ஒருமரம், ஒருமீன், மலை.
பருவதவர்த்தினி - பார்ப்பதி.
பருவதவாசினி - காயத்திரி, துர்க்கை.
பருவதாகாரம் - மலைபோலும் வடிவு.
பருவதாசயம் - முகில்.
பருவதாசிரயம் - சரபப்பட்சி.
பருவதாதாரை - பூமி.
பருவதாரி - இந்திரன்.
பருவதி - சந்திரன், பார்வதி.
பருவபேதம் - காலவேறுபாடு.
பருவமலைவு - ஒரு காலத்துக்குரியதை மற்றோர்காலத்துக்குரியவாகக் கூறுவது.
பருவமழை - காலமழை.
பருவமாதல் - இருதுவாதல், தகுதியாதல்.
பருவம் - அமாவாசி, இருது, இளமை, உயரம், ஏது, கணு, காலம், பகுதி, பக்குவம், பருவகாலம், பிரமாணம், பூரணை, பெருநாள், பொழுது, முளி, வயது.
பருவயோனி - கரும்பு.
பருவரல் - அருவருப்பு, துன்பம்.
பருவரீணம் - திருவிழா.
பருவருதல் - அருவருத்தல், துன்பப்படல்.
பருவலயம் - சூழியம், பெரியவட்டம்.
பருவல் - பருத்தது.
பருவி - தில்லை.
பருவு - பரு.
பருவெட்டு - பரும்படியாய் வெட்டின வெட்டு.
பரூஉ - பருமை, பறித்தல்.
பரேஷ்டி - பரமேட்டி.
பரேதம் - பிசாசு.
பரேதராசன் - நமன்.
பரேபம் - நீர்நிலை.
பரை - ஐந்துமரக்கால்கொண்டஓரளவு, பார்வதி.
பரோநாதம் - நெல்லிக்காய் கந்தி.
பரோட்சக்கியானம் - அதிரிசியமானவற்றையறிதல்.
பரோட்சஞானம் - சத்தாவத்தையில்ஒன்று அது பிரமமொன்றுண்டென்று கேட்டறிதல்.
பரோட்சபோகம் - பாத்திரவியானுபவம்.
பரோட்சம் - அதிரிசியமானவை, இறந்தகாலம்.

பரோட்சன் - த்வசி.
பரோட்சாரதம் - காணப்படாத பொரு [ள்.
பரோதிதம் - அச்சுறுத்தல்.
பரோபகாரம் - பிறர்க்குபகாரம்.
பரோபகாரன் } பிறர்க்குபகாரி.
பரோபகாரி }
பரோபசாபம் - வாக்குவாதம்.
பரோபரீணம் - தோற்றநாசமற்றது.
பர்க்கம் - ஒளி, வீரியம்.
பர்க்கன் - சிவபெருமான், சூரியன்,பிரமன், விஷ்ணு.
பர்ணசாலை - இருடியர்ஆச்சிரமம்,இலைகளால் வேய்ந்தகுடில்.
பர்ஜந்யன் - மேகங்களுக்கு அதிதேவ [தை.
பர்ணம் - பன்னம்.
பர்ணாசநம் - மேகம், இலையுணவு.
பர்ணீ - முருக்கமரம்.
பர்த்தா - பத்தா.
பர்த்ருஹரி - இவர்தன் பெயராலொரு வடமொழி நூல்செய்த ஒரு பிரபல பண்டிதர்.
பர்ப்படாகம் } பற்பாடகம்.
பர்ப்பாடகம் }
பர்மம் - கொப்பூழ், பொன்.
பர்மியாசுவன் - பூருவமிசத்து அஜமீடன் புத்திரன்.
பர்யந்ததேசங்கள் - ஆர்யா வர்த்தத்துக்கயலிலேயுள்ள மிலேச்சதுருக்க தேசங்களுக்குப் பெயர்.
பர்யுகஞ்சனம் } கடன்.
பர்யுதஞ்சனம் }
பர்வதம் - பருவதம்.
பர்வதராஜபுத்ரி - திருநனிபள்ளியிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார் பெயர், பார்வதி.
பர்வதராஜன்-இமயமலை, இமயராஜன்.
பர்வதன்-நாரதன் சகோதரி புத்திரன்.
பர்வதாக்கிரம் - மலையுச்சி.
பல - அனேகம்.
பலகணி - சாளரவாயில், திட்டிவாயல்.
பலகண்டன் - உப்பாரவன், மண்வேலை செய்வோன்.
பலகம் - அடுக்கு, கேடகம், நாற்காலி, பின்சந்து.
பலகலப்ப } பலவுங் கலந்தது, வாசனைப்பொடி.
பலகலவை }
பலகறை - கவடி.

பலகாரம் - அப்பவருக்கம், யானைமேற் [றவிசு.
பலகீனம் - பலகேடு.
பலகேசரம் - தெங்கு.
பலகை - கேடகம், தொட்டிப்பாஷாணம், நெற்றியெலும்பு.
பலகைக்கயிறு - நெய்வார் கருவியினொ [ன்று.
பலகைக்கள்ளி - ஒருகள்ளி.
பலகைப்பா - இரதத்தோருறுப்பு, பாவப்பட்ட பலகை.
பலகைமரம் - நெய்வார்கருவியினொன் [று.
பலகையடித்தல் - பரம்படித்தல்.
பலகையுரு - வளையலுப்பு.
பலங்கரம் - பித்தம்.
பலசத்ரு - இந்திரன்.
பலசந்தமாலை - ஒருபிரபந்தம். அதுபப்பத்துச் செய்யுள் ஒவ்வோர் சந்தமாக நூறு செய்யுள் கூறுவது.
பலசம் - நகரவாயில், பழம், பனசம், புத்தம், வயல்.
பலசம்பத்து } பலபொருள்.
பலசம்பாரம் }
பலசரக்கு-கடைச்சரக்கு, பலசாமான்.
பலசாடவம் - மாதளை.
பலசாலி - பலமுள்ளோன்.
பலசித்தி - பலப்பேறு.
பலசிரேட்டம் - மாமரம்.
பலசூதனன் } தேவேந்திரன்.
பலசூதநன் }
பலச்சரீடம் - குன்றி.
பலட்சயம் - பலவீனம்.
பலட்சாரம் - இரத்தம்.
பலண்டு - வெங்காயம்.
பலண்டுறுகபாஷாணம் - விளைவு பர்ஷாணமுப்பத்திரண்டினொன்று.
பலதம் - மரம்.
பலதானம் - கருப்பதானம்.
பலதிரட்டு - பல பாடலினு மெடுத்துச் சேர்த்திருப்பது.
பலதுறை - நானாபேதம், பலவழி.
பலதூசு - புளியாரை.
பலதேவன் - பலபத்திரன், வாயு.
பலத்தல் - பெலத்தல்.
பலத்தியாகம் - பயனிழக்கை, வலியிழக் [கை.
பலத்திபயம் - திரிபலை.
பலந்தநன் - நாபாகன் புத்திரன்.
பலபடப்புனைவணி - ஓரலங்காரம், அது ஒருபொருளிற்பலரும் பல பொருட்

ளாற் பொருள்களை ஆரோபித்தலும் ஒருவரே யொருபொருளில் விடய பேதங்களாற் பல பொருள்களை யாரோபித்தலுமாம் (உ-ம்) ஆரணங்காணென்ப ரந்தணர்யோகிய ராகமத்தின் காரணங்காணென்பர் எனவும், வில்லிற்கு விசயன் கல்விக்குச் சேடன் எனவும் வரும்.

பலபடுதல் - இரட்டித்தல், வேறுபடல்.

பலபட்சணம் - கனியுணவு.

பலபட்டடை - ஓரூர்.

பலபட்டறை - பண்டகசாலை.

பலபண்டம் - பலகாரம், பலபொருள்.

பலபத்திரர், பலராமர் - ஆதிசேஷன் அம்சமாக வசுதேவனுக்குரோகிணியிடத்துப் பிறந்த புதல்வர். இவர் கிருஷ்ணரோடு வளர்ந்து விளையாடி, கிருஷ்ணருக்கு எல்லாக் காரியத்திலும் துணையாயிருந்தவர், துரியோதநனுக்குக் கதாயுதவித்தை பயிற்றினவர், இவர்க்குக் கொடிபனைக் கொடி, ஆயுதம்கலப்பைஇவரும்கிருஷ்ணரும் ஒருங்கு கூடியே விஷ்ணுவினது எட்டாம் அவதாரமானவர். தேனுகாசுரனையும் பிரலம்பாசுரனையும் கொன்றவர், யமுனாநதியைத்தாமிருக்குமிடத்துக்குத் தமதுகலப்பைப்படையினால் இழுத்துப் பாயும்படி செய்தவரும் இவரே. இவர் ரைவதராஜபுத்திரியாகிய ரேவதியை மணம் புரிந்தவர்.

பலபத்திரன் - பலதேவன்.

பலபந்தம் - வலோற்காரம்.

பலபலெனல் - ஒலிக்குறிப்பு, ஒளிக்குறிப்பு, விடியற்குறிப்பு.

பலபாகம் - கனிகொடுக்கும் பக்குவம், கனிமுதிர்வு, பிரயோசனப்பங்கு.

பலபாடு - பலதொந்தறை.

பலபூமி - நரகம், மோக்கம்.

பலபூரகம், பலபூரம் - மாதுளை.

பலபெயர்த்திரிசொல் - செந்தமிழ்நிலத்து மொழிகளாய்க் கற்றோர்க்குமாத்திரந் தம்பொருள் விளக்கி யொரு பொருளைக் குறித்த பல பெயராய் வரும் பெயர்ச்சொல்.

பலபை - சூரியன் மேடவிரியினிற்கையிற் கடிகார மத்தியில் விழு நிழல்.

பலபொருட்சொற்றொடரணி - ஓரலங்காரம் அது பல பொருள்களைத் தருதற்குரிய சொற்களைப் புணர்த்துக் கூறுதல்.

பலபொருளுவமை - ஒரு பொருட்குப் பலவுமையையெடுத்துக் காட்டுவது (உ-ம்)வேலுஞ்சேலும்போலும்விழி.

பலபொருளொருசொல் - பலவருத்தங் கொள்ளுஞ் சொல்.

பலபொருள் - குறித்த ஒருவினைத் திரிசொல் செந்தமிழ்நிலத்து மொழிகளாய்ச் செய்யுட்கே யுரியவாய்க்கற்றோர்க்கு மாத்திரம் பொருள்விளக்கிப் பலபொருடரு மொரு சொல்லாய் நிற்கும் வினைச்சொல்.

பலபொருள்குறித்த ஓரிடைத்திரிசொல்-செந்தமிழ் நிலத்துமொழிகளாய் செய்யுட்கே யுரியனவாய்க்கற்றோர்க்கு மாத்திரந் தம்பொருள் விலக்கிப் பல பொருடரு மோர் சொல்லாய் நிற்கு மிடைச்சொல்.

பலபொருள்குறித்தவோருரித்திரிசொல். அரிதுணர்பொருளாய்ப் பல பொருடருமோருரிச்சொல் (உ-ம்) கடி.

பலப்படுதல் - பலயடைதல், வளர்தல்.

பலப்பம் - மாக்கல்.

பலப்பல் - பலபல்.

பலப்பித்தல் - பலப்படுத்தல்.

பலப்பிராப்தி - பலசித்தி.

பலப்பிரியம் - செம்போத்து.

பலப்பிறேதம் - திப்பிலி.

பலப்பேறல் - உரப்பேறல்.

பலமுகம் - பல்காரியம், பலதிசை, பலவழி.

பலமுறை - நானாவிதம், பலதரம்.

பலமூலசாகாசனர் - முனிவர்.

பலமுலாசநர் - தவசிகள்.

பலமூலசாகாதி - இலை- கனிகிழங்கு முதலியன.

பலம் - அம்பலகு, ஆதாயம், ஆயுதநுனி, இலை, காய், கிழங்கு, கேடகம், கொழு, சாதிக்காய், சுரூபம், நெல்வாக்கு, தாது, தொகை, நிமிஷம், நிறைகல், நிறை யளவினொன்று, நெற்றிப்பட்டை, பயன், பருப்பம், பழம், பிறித்துக்கண்டபேறு, பெலன், பொன் மகளிர் சூதகம், மாதிரி, மாமிசம், வட்டத்தின் பரப்பு, வெட்பாலை.

பலம்பழம் - சேங்கொட்டை.
பலரறிசுட்டு - யாவராலு மறியப்பட்ட சுட்டு.
பலரறிசொல் - அலர்மொழி, உயர்திணைப் பன்மைச்சொல், பிரசித்த வார்த்தை.
பலராமன் - பலபத்திரன்.
பலர் - அனேகர்.
பலர்க்கம் - கதுப்பு.
பலர்பால் - ஆண்பன்மையையும் பெண்பன்மையையும் இருவர் பாற்கும் பொதுப் பன்மையையுங் காட்டி நிற்பது.
பலலப்பிரியம் - காகம்.
பலலம் - சேறு, பிண்ணாக்கு, மாமிசம்.
பலலன் - இந்திரன்மகன், பலராமன், பேருண்டியான்.
பலலாசயம் - கழுத்து.
பலவத்தர் - கடவுட்டிருவுளப்படி யெய்துங் கருமங்கட்குவரு மிடையூற்றை யவனருளாற்றடுப்பவர்.
பலவத்தை - பலம்.
பலவந்தம் - பலபந்தம்.
பலவயிற்போலியுவமை - ஒரு தொடர்மொழிக்கட் பலவுவமைவர அவ்வுவமைதோறு முவமைச் சொற்புணர்ந்து வருவது (உ-ம்) மலர்வாவி போலு மாதர் அதின் மலர்கள்போலும் அவர்முகம் அதிலுறை அணிபோலு மவர்விழி.
பலவரி-ககரமுதனகரமீறாய பதினெட்டெழுத்து.
பலவழித்தோன்றல் - மருமகன்.
பலவறிசொல் - அஃறிணைப் பன்மைச் சொல்.
பலவறுதி - பலவீனம்.
பலவன் - ஒரு மருந்துப்பூண்டு.
பலவானம் - மந்தாரச்சிலை.
பலவான் - பலசாலி.
பலவிதம் - நானாவிதம்.
பலவிருட்சகம் - பலாமரம்.
பலவினைச்சிலேடை - பலவினை யான் வருவது.
பலவினைத்திரிசொல் - செந்தமிழ்நிலத்து மொழிகளாய்க் கற்றோர்க்கு மாத்திரந் தம்பொருள் விளக்கி ஒருவினைகுறித்த பல சொல்லாய் வரும் வினைச்சொல்.
பலவின்கூட்டத்தற்கிழமை-பலவினொற்றுமை (உ-ம்) படையதுதொகுதி.
பலவின்பால்-அஃறிணைப் பன்மைப்பால்.
பலவு - பலாமரம்.
பலவிரோதி } தேவேந்திரன்.
பலவைரி } தேவேந்திரன்.
பலற்காரம் - பலபந்தம்.
பலனம் - கனிகொடுத்தல்.
பலன்-இந்திரனால் கொல்லப்பட்ட ஒரு இராட்சதன், இலாபம், ஈரவெங்காயம், காய், சிவதரும முதலியவற்றின் வரும்பேறு, பலதேவன், பழம், பிரயோசனம், புண்ணியம்.
பலன்கொடுத்தல் - பிரயோசனமளித்தல், பேறுதல்.
பலா - ஒருமரம, சிற்றுமுட்டி.
பலாகம் - கொக்கு.
பலாகன்-சுசர்மன்மனைவியைக் கவர்ந்த அசுரன், ஜாதகர்ணி சீஷன்.
பலாசாசுவன் - புரூரவன்மகனும்அமவசுவமிசத்து அஜகன்மகன், குசிகன் தந்தை.
பலாகாரம் - பழமுதலிய போசனம்.
பலாக்கினி - பித்தம்.
பலாங்கம் - ஒருவிதமீன்.
பலாசம் - இலை, ஒருபிசாசம், பச்சைநிறம், பயிர், பலாமரம், புன்முருக்கு, மகதம், முருக்கு.
பலாசவநேசுரர்-திருநாவலூர் மயானத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பலாசனம் - கிளி.
பலாசாக்கியம் - பெருங்காயம்.
பலாசி - மரப்பொது.
பலாசிநி - ஒருநதி, இது சுக்திமந்தத்திலுற்பத்தியாகிமகாநதியிற்கலப்பது.
பலாசு - பலாசம்.
பலாசுவன் - இரண்டாங் கணித்திரன் பௌத்ரன்.
பலாட்டியம் - பலபந்தம், பலம்.
பலாண்டு - ஈரவெங்காயம்.
பலாதவம் - பூனைக்காலி.
பலாதனம் - கிளி.
பலாதன் - ஓராக்கன்.
பலாத்காரம் - பலாற்காரம்.
பலாநுஜன் - கிருஷ்ணன்.
பலாந்தம் - ஒருசார் காய்த்துப்படுமரம், மூங்கில்.

பலாபம் - யானைமத்தகம்.
பலாபலம்
பலாபலன் } நயநட்டம், மிகுபலன்.
பலாபேக்ஷை - பயன்விருப்பம்.
பலாயனம்-நிலைகுலைவு, புறங்காட்டுகை, போதல்.
பலாரன்
பலாராதி } தேவேந்திரன்.
பலாரி - இந்திரன், பலசூதனன்.
பலாரெனல் - விடிதற்குறிப்பு.
பலார்த்தம் - அரைப்பலம்.
பலார்பற்றல் - பலாரெனல்.
பலாதோகதம் - மாமரம்.
பலாலகிருஹம் - காவக்கோல்வீடு.
பலாத்பிரதிமை - வைக்கோற்பாவை.
பலாப்புரி - வைக்கோற்றிரணை.
பலாலப்போர் - வைக்கோற்போர்.
பலாலம் - வைக்கோல்.
பலி - இதை, உடற்றிரை, ஒரு சக்கிரவர்த்தி, காகம், காணிக்கை, சாய்ந்திருந்தமரம், சாம்பல், சேடம், சோறு, தேவருணவு, நீறு, பலிபதார்த்தம், பிச்சை, பூசை, விண்ணோருணவு. சுதபன் எனனும் அசுரன் புத்திரன், பிரகலாதன் புத்திரனாகிய விரோசநன்மகன், இவன் மகா பராக்ரமசாலி, விஷ்ணு இவனைக் கொல்வதற்காக வாமனாவதாரமெடுத்து அவனிடஞ்சென்று மூன்றடிமண் தருகவென்றிரக்க அவன் சம்மதித்தலும், விசுவரூபங்கொண்டு பூமியையோரடியாலளந்து, ஆகாயத்தை மற்றோரடியாலளந்து, மூன்றாமடிக்கிட மின்மையால் அவன சிரத்தில் அடிவைத்து அவனைப் பாதலத் தழுத்திவிட்டார்.
பலிகம் - சுவர், நீர்க்குடம், பளிங்கு, பிச்சைப் பாத்திரம், வாயில்.
பலிகை - பிண்ணாக்கு.
பலிகொடுத்தல்
பலிசெலுத்தல் } பலியிடுதல்.
பலிச்சக்கரவர்த்தி - மாபலி.
பலிதம் - கனியுள்ளது, சேறு, பலிப்பது, மயிர்நரை, வெம்மை.
பலிதானம் - பலிகொடுத்தல்.
பலிதை - கிழவி.
பலித்தம் - இலாபம்.
பலித்தல் - செழித்துவளர்தல், நயப்படல், வாய்த்தல்.
பலிநந்தநன் - வாணாசுரன்.
பலிபீடம் - பலிசெலுத்தும்பீடம்.
பலிபுட்டம் - காக்கை.
பலிபுத்ரன் - வாணாசுரன்.
பலிபோடுதல் - பலிகொடுத்தல்.
பலிப்பு - பலித்தல்.
பலிமந்திரம் - பாதாளம்.
பலிமுகம் - குரங்கு.
பலியங்கம் - பரியாங்கம்.
பலியம் - தளிர், பூ.
பலியயனம் - சேணம்.
பலியிடுதல்
பலியூட்டுதல் } பலிசெலுத்துதல்.
பலியெடுத்தல் - உயிரெடுச்சுதல், பலியேற்றல்.
பலினம் - காய்த்திருக்குமரம்.
பலியாத்திரம் - பிக்ஷாபாத்திரம்.
பலினி - காய்த்திருந்தமரம், கோங்கு, ஞாழல், பலினம், மிளகு.
பலீ - எருது, ஒட்டகம், கடா, கோழை, பன்றி.
பலுகம் - குரங்கு.
பலுகல்
பலுகுதல் } பெருகுதல்.
பலுட்டல் - முடித்தல்.
பலேந்திரன் - பலவான்.
பலை - பழம்.
பலோதயம் - ஆதரீயம், சந்தோஷம், பலம், மோக்கம்.
பலோத்தமை - திராக்ஷிப்பழம்.
பலோற்காரம் - வலோற்காரம்.
பலோற்பதி - மாமரம்.
பலோனி - பெண்குறி.
பல் - ஆயுதக்கருக்கு, நங்கூரநாக்கு, பல்லு.
பல்கணி - நுழைவாயில்.
பல்கல் - பருகல், வெகுநாள்.
பல்காயனார் - ஒரு இலக்கண ஆசிரியர்.
பல்காற்பறவை - வண்டு.
பல்குதல் - பலுகுதல்.
பல்சாலைமுதுகுடுமி - பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி.
பல்பல - பலபல.
பல்லகம் - கரடி.
பல்லக்கர் - சிவனடியார்.
பல்லக்கு - சிவிகை.

பல்லங்குழி - பல்லாங்குழி.
பல்லணம் - குதிரைக்கல்லணை.
பல்லதி - ஓரிராகம்.
பல்லம் - அம்பு, ஒரெண், கரடி, குதிரைக் கல்லணை, கோரிகை, சேரான்மரம்.
பல்லரணை } ஒருநோய், பற்களிலேவ
பல்லரனை } ரும் ஒரு நோய்.
பல்லவகன் - தூர்த்தன்.
பல்லவதாரம் - மரக்கொம்பு.
பல்லவத்திரு - அசோகமரம்.
பல்லவபாணி - சரசுவதி.
பல்லவம் - இலை, கிளை, கொப்பு கையணி, சாயம், தளிர், தேயமைம்பத்தாறில் ஒன்று, பதத்தினோருறுப்பு, விசாலித்தல்.
பல்லவர் - கீழ்மக்கள், தூர்த்தர், பலர்.
பல்லவாதம் - மான்.
பல்லவாதாரம் - கொப்பு.
பல்லவாத்திரன் - காமன்.
பல்லவி - பல்லவம்.
பல்லவை - இழிபானபொருள், கீழ்மை, பலபொருள்.
பல்லாக்கு - பல்லக்கு.
பல்லாங்குழி - பன்னாங்குழி.
பல்லாண்டு - ஒருவகை வாழ்த்துக்கவி, பலவருஷம், வாழ்த்து.
பல்லாண்டு - திருப்பல்லாண்டு. ஒரு சைவநூல்.
பல்லாதகம் }
பல்லாதகி } சேரான்மரம்.
பல்லாதம் }
பல்லாதன் - உதச்சேநன் புத்திரன்.
பல்லார் - பலர்.
பல்லாரி - ஓரூர்.
பல்லாவரம் - ஓரூர்.
பல்லி - இடம், இடையரூர், ஒருடும்பு, கெவுளி, சிற்றூர்.
பல்லிக்கை - சேங்கொட்டை, பல்லி.
பல்லிச்சாத்திரம் - கௌளிநூல்.
பல்லிப்பூடு - ஒருபூண்டு.
பல்லியம் - சங்கீதம், வாச்சியப்பொது.
பல்லியோசியம் - பல்லிச்சாத்திரம்.
பல்லிலான் } சூரியன்.
பல்லிலி }
பல்லினர் - சதுரக்கள்ளி.
பல்லினர்குழவி - மலைப்பச்சை.
பல்லு - தந்தம்.
பல்லுகம் - கரடி, பெருவாகை.
பல்லுக்கடித்தல் - அதரத்தைக் கடித்தல்.
பல்லுக்காட்டுதல் - கெஞ்சுதல்.
பல்லுக்கிட்டுதல் - அலகுபூட்டுதல்.
பல்லுக்கெஞ்சுதல் - மன்றுடுதல்.
பல்லுக்கொறிக்குதல் - பல்லோடுபல்லராத்தல்.
பல்லுங்கம் - மூங்கில்.
பல்லுத்தீட்டுதல் - பல்லுக்கொறிக்குதல், பல்லுமினுக்குதல்.
பல்லுவிளக்குதல் - பல்லுமினுக்குதல்.
பல்லுறுசெங்களை - குதிரைப்பற்பாஷாணம்.
பல்லூகம் - கரடி, குரங்கு.
பல்லூழி - அனேகயுககாலம்.
பல்வலம் - சிறுகுளம், வாவி.
பல்லவன் - இல்வலன்புத்திரன், இவன் பலராமரோடு யுத்தஞ்செய்தபோது அவரால் கொல்லப்பட்டவன்.
பல்வலாவாசம் - ஆமை.
பவ - எட்டாவதாண்டு.
பவசாகரம் - பிறவிக்கடல்.
பவகாரணி - அழகர் மலையிலுள்ள ஒரு பொய்கை, இது தன்னிடத்தில் மூழ்குவோர்க்கு அவர் முற்பிறப்பிற் செய்தவற்றை யுணர்த்துவது.
பவணநதி - இவர் தொண்டைநாட்டிலே சநகாபுரத்திலே சன்மதி முனிவருக்குப்புத்திரராயவதரித்துத் தமிழ்ப்புலவராய் விளங்கிய ஒரு சமண முனிவர், சீயகங்கனது வேண்டுகோளின்படி தொல்காப்பியத்தைச் சுருக்கிப் பாணினீயவியாகரண முறைமைப்படி நன்னூல் என்னும் இலக்கண நூல்செய்தவர், இந்நூலின் சூத்திரங்கள் மிகவும் திட்பநுட்பங்களமைந்துள்ளன வென்பது சர்வசம்மதம். "மொழிமுதற் காரணமா மணுத்திரளொளியெழுத்து" என்று ஒலியெழுத்திற் கிலக்கணக்கூறிய இவரது சதுரதைமிகப்பெரிதும் வியக்கற்பாலது, குற்றெழுத்து வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்துக்களுக்கெல்லாம் எண்கூறியவரை யறுத்தவர். ஐயும், ஔவும் எல்லா விடத்தும் நெட்டெழுத்தாகா வென்பது உய்த்துணரவைக்கும் பொரு

ட்டு, நெட்டெழுத்திற்கு மாத்திரம், "ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்" என்று வாளாசூத்திரஞ் செய்த இவரதுசுசாக்ரபுத்தி அத்யத்புதமானது. இவ்வாறே ஒவ்வொரு சூத்திரமும் ஒவ்வோரதிசயமுடையன, இத்தன்மைத்தாகிய திட்பநுட்பங்களமைந்த இலக்கணநூல் வேறெந்தப் பாஷையிலு மில்லை, இது கருதியன்றே "முன்னூலொழியப் பின்னூல் பலவினுள், நன்னூலார்தமக் கெந்நூலாரும், இணையிலையென்னுந் துணிவே மன்னுக" என்றார் இலக்கணக்கொத்துச்செய்த சுவாமிநாததேசிகர் இப்பவணந்தி முனிவர் தொளாயிரவருஷங்களுக்கு முன்னிருந்தவ ரென்பதுசிலஹேதுக்களால் துணியப்படும்

பவணை - கழுகு.

பவநாசம் - ஒருபுண்ணிய தீர்த்தம்,ஒரு சிவஸ்தலம்.

பவநாசன் - கடவுள், சிவபிரான்.

பவநாசினீ - சரயுநதி.

பவந்தம் - சூது.

பவந்தி - கற்புடையாள்.

பவபந்தம் - பிறவிக்கட்டு.

பவபூதி - ஐசவர்யம், சிவன்,ஒருஸம்ஸ்கிருதகவி, இவர் காசிப்கோத்திரத்தார், இவர் தேசம் விதர்ப்பம், இவர் போஜராஜ ஸம்ஸ்தாந கவீசுவராருளொருவர்.

பவமானம், பவமானன் } தீ, வாயு.

பவம் - அழிவு, இருத்தல், உலகம்,காற்று,சதுப்புநிலம்,சம்பாத்தியம்,சாணி, சிங்கக்கரணம் சுத்தம்,தூர்த்தல்,நிலை, பரம், பலன், பாவம், பிறப்பு, மேன்மை.

பவரணை - பூரணை.

பவர் - கவர், நெருங்கல், மூடுகை.

பவர்க்கம் - நரகம்.

பவவீதி - முடிவு, முற்றத்துறத்தல்.

பவழம் - பவளம்.

பவளக்காலி - ஒருபுள், ஒருபூடு.

பவளக்குறிஞ்சி - ஒருபூண்டு.

பவளங்குறிஞ்சி - ஒருபூண்டு.

பவளக்கைநாயகி - திருவைகாவிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார் பெயர்.

பவளக்கொடியம்மை - குரங்காடுதுறையிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார் பெயர்.

பவளச்சோளம் - ஒரு சோளம்.

பவளநெடுங்குஞ்சியோன் - வயிரவன்.

பவளப்புற்றுப்பாஷாணம் ஒருவைப்புப்பாஷாணம்

பவளப்பூண்டு-ஒருபூண்டு.

பவளப்பூலா, பவளப்பூல் } ஒருசெடி.

பவளமல்லிகை - ஒருமல்லிகை.

பவளமஞ்ஞசிலை - ஒருசாக்கு.

பவளம் - நவமணியிலொன்று.

பவளவங்காரவாச்சி - ஒருபூண்டு.

பவளவன்னப்பூங்குழலம்மை - திருஅம்பார்ப்பெருந்திருவிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார் பெயர்.

பவனகுமாரன் - அக்கிநி.

பவனசுதன், பவனநந்தனன் } ஆஞ்சநேயன், வீமன்.

பவனம் - அரமனை, இடம்,இராசி,ஒதுக்கல், காடு, காற்று, குயவன்சூளை, கொழித்தல், கோட்டை,சுத்தம்,தூர்த்தல், தூற்றுதல், தேவலோகம், நாகலோகம்,பவனவாய்பாவனை,பூஞை பூமி, பொழுது, வாயு, வீடு.

பவனவாசல், பவனவாய் } அபானத்துவாரம்.

பவனவாயு - அதோவாயு.

பவனன் - காற்று.

பவனாசநாசம், பவனாசநாசன் } கருடன், மயில்.

பவனாசம், பவனாசனம் } பாம்பு.

பவனாத்துமசன் - அக்கினி,அனுமான், வீமன்.

பவனி - உலாப்போதல், பயணம்.

பவனிக்காதல் -ஒருபிரபந்தம், அதுபவனிவந்ததலைமகன்மேற்கொண்ட காமத்தாற் சிவபிரான் சிறப்பைப்பிறரோடுரைத்து வருந்துவதாகக் கூறுவது.

பவனோதரம் - உள்வீடு.

பவன் - கடவுள், தானாயுண்டானவன். அஷ்டமூர்த்திகளிலொருவன்,சிவன்

பவாகை - சுழற்காற்று.

பவானி - பார்வதி.

பவானிகுரு - இமயமலை.

பவாபாவம் - தூலசூனியம்.

பவாயனை - கங்கை.
பவாரண்மியம் - பாவக்கேடு.
பவானி - கோயம்பத்தூருக்கருகிலொரூர், காவிரியாற்றின்கிளைநதி, பார்வதி.
பவி - இடியேறு.
பவிகம் - சிலாக்கியம், மங்களம்.
பவிஞ்சு - பவுஞ்சு.
பவிசி, பவிஷி, பவிஷு } பவுஷி, மானம்.
பவிஷியம், பவிடியம் } எதிர்காலம், ஒரு புராணம், செல்வம்.
பவிதம் - சுத்தம், மிளகு.
பவிதவ்வியம், பவிதவ்வியதை } சுபம், பாக்கியம்.
பவித்திரகம் - அத்திமரம், ஆசமரம், தருப்பைப்புல், நெய், வலைக்கயிறு.
பவித்திரமுடிச்சு - ஒருவகைமுடிச்சு.
பவித்திரமோதிரம் - பவித்திரமுடிச்சாய்ச்செய்த மோதிரம்.
பவித்திரம் - காணிக்கைப்பாத்திரம், செம்பு, தண்ணீர், தருப்பை, தருப்பைப்புல்லாற்செய்த ஓர்முடிச்சு, துடைத்தல், தூய்மை, தேன், நெய்பூணூல்.
பவித்திரவான், பவித்திரன் } பரிசுத்தவான்.
பவித்திராங்குலி - தருப்பைமுடிச்சணிவிரல்.
பவித்திராரோபணம் - பூணூலணிதல்.
பவித்திரி - சுத்தன், தருப்பை.
பவித்திரிதம் - சுத்தம்.
பவித்திரீகணம் - நெய்.
பவித்திரீகரணம் - சுத்திசெய்தல்.
பவித்திரை - தூய்மையுள்ளவள், தண்டு[சர்தாய்.]
பவிநன் - நூலாசிரியன்.
பவிஷ்யத்புராணம் - பிரமன் சூரியன் பெருமையை மநுவக்குரைத்த பின்னர் அவர் அம்மநுவுக்கு அகோர கற்பத்திலே, லோகோத்பத்திகிரமம் ஸ்ருஷ்டி பேதம் முதலியவற்றையுரைத்ததாகச்சொல்லுவது, இதுமுப்பத்தோராயிரங் கிரந்தமுடையது.
பவுகம் - சுபம்.
பவுஞ்சு - படை.
பவுஷி, பவுஷு, பவுஷ் } சம்பிரமம், வாழ்வு.

பவுண்டரம் - வீமன்கையிற் சங்கு.
பவுண்டரிகம் - ஒருயாகம்.
பவுண்டிரகம் - ஒருபலி.
பவுதிகம் - பௌதிகம்.
பவுத்திரம் - பவுந்திரம்.
பவுந்திரர் - பௌத்திரர்.
பவுரணமி, பவுரணை } பௌரணை.
பவுராணிகம் - பௌராணிகம்.
பவுரி - கூத்தின் விகற்பம்.
பவுரிசம் - போலிபானநடை, வேஷம்.
பவுள்சு - ஆடம்பரம், ஐசுவரியம்.[யிர்.
பவேசம் - மோவாய்க்கட்டை, மீசைமயிர்.
பவோற்பவன் - பன்னோருருத்திரரிலொருவன்.
பவ்வம் - பௌவம், கடல்.
பவ்வியம் - சத்தியம், சுபம், பயன்.
பவ்வியன் - சுவாயம்புவ மநுபுத்திருளொருவன்.
பவ்வியை - உமாதேவி, யானைத்திப்பிலி.
பழகல் - பழகுதல்.
பழகாடி - பழக்கமுடையோன்.
பழகாதபழக்கம் - கெட்டபழக்கம்.
பழகுதல் - இணக்கமாதல், ஊடாடுதல், கற்குதல், பயிலல், வழங்குதல்.
பழக்கம் - அறிமுகம், சாதுத்துவம், பயிற்சி, பரிசனை, வழக்கம்.
பழக்கம்பண்ணுதல் - அப்பியாசித்தல், அறிமுகப்படுத்தல், பாவித்தல்.
பழக்காய் - செங்காய்.
பழக்குதல் - அறிமுகப்படுத்தல், பயிற்றல்.
பழங்கஞ்சி - முதனாட்கஞ்சி.
பழங்கனத்தல் - பழசுபடல்.
பழங்கணாளர் - துயருறுவோர்.
பழங்கண் - இளைப்பு, ஒலி, துன்பம், பழுதுய பயனின்மை, மெலிவு.
பழங்கதை - கிழக்கதை, பூருவகதை, பழமொழி, அநுபவக்கதை.
பழங்கிடையன் - நெடுநாட்பட்டது.
பழங்குடி - தொன்மரவு, ஆதிகாலத்தேறிய குடி.
பழசு - சாரமற்றது, பழயது.
பழசுபடுதல் - பழயதாதல்.
பழஞ்சாதம் - பழஞ்சோறு.
பழஞ்சுரம் - பழங்காய்ச்சல்.

பழஞ்சொல் - பழமொழி.
பழஞ்சோறு - பழஞ்சாதம்.
பழந்தண்ணீர் - நீர்ச்சோறு.
பழந்தரை - பழநிலம்.
பழந்திருடன் - நெடுநாட்டிருடன்.
பழப்பாசம் - கருஞ்சீரகம்.
பழப்புளி - புளியம்பழக்கனி.
பழப்பேசி - செப்புநெருஞ்சில்.
பழமலை - திருமுதுகுன்றம், விருத்தாசலம் என்னும் பெரிய ஒரு சைவத் தலம்.
பழமலையந்தாதி - சிவப்பிரகாசர்செய்த ஒரு பிரபந்தம், அது கற்பனலங்கார மலிந்துள்ளது.
பழமலை - விருத்தாசலம்.
பழமனை - அழிந்தவீடு, முன்வீடிருந்த நிலம்.
பழமுண்ணிப்பாலை - ஒருமரம்.
பழமை - சாரமின்மை, பூருவம், முதுமொழி.
பழமொழி - ஒரு நீதிநூல், முதுசொல். பதினெண் கீழ்க்கணக்கினு ளொன்று. மூன்றுறையரையர்செய்தது, அது நானூறு வெண்பாக்களையுடையது. அதுமுற்றும்நீதியே கூறுவது.
பழமொழித்திரட்டு - ஒருநூல்.
பழம் - கனி, பலன், முதிர்ந்தது.
பழம்பகை - தொந்தப்பகை, நெடுநாட்பகை.
பழம்பஞ்சாரம் - மிகமுதியோர், வெகுநாட்பட்டது.
பழம்பஞ்சுரம் - ஒருபண்.
பழம்பதிநாயகர் - திருப்புனவாயிலிலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி பெயர்.
பழம்பழுத்தல் - சொக்கட்டானிலோர் செய்கை.
பழம்பாசி - ஒருபூடு.
பழம்பாடம் - படித்தபாடம்.
பழம்பொருள் - கடவுள், பழையபொருள், புதையல்.
பழயகாலம் - முற்காலம்.
பழயபடி - முந்தினபிரகாரம்,
பழயபாடல் - முன்னோர்பாடல்,
பழயமனிதர் - முன்னோர்.
பழவடியார் - வழித்தொண்டர்.
பழவினை - ஊழ்வினை, பழம்பகை.
பழனமாக்கள் - பள்ளர்,
பழனம் - மருதநிலம், வயல்.
பழனி - ஒருசுப்பிரமணிய க்ஷேத்திரம், திருவாவினன்குடி.
பழி - குற்றம், நிந்தை, பழியென்னேவல், பொய், பொல்லாங்கு, வயிராக்கியம், விரோதம்.
பழிகட்டுதல் - பழிபிடித்தல், பழிமூட்டுதல், வசைகூறல்.
பழிகாரன் - பழிக்குடந்தைக்காரன், பழிவாங்குவோன்.
பழிகிடத்தல் - யாதொன்றுபெறுவதற்குப் பட்டினி கிடத்தல்.
பழிகூறல் - தூற்றல், அது மும்மொழியினொன்று.
பழிக்குச்செய்தல் - கடன் வழிக்குச்செய்தல்.
பழிக்குடி - எதிரிடைக்குடி, எளியகுடி, பழிக்கிடமா யிருக்குங்குடி.
பழிக்குவிடுதல் - தன்காரியமல்லவென்றுவிடுதல், மறுபெயரிலே பழிவரும்படி விடுதல்.
பழிசுமத்தல் - பழிசுமத்துதல், பழிவந்து பொறுத்தல்.
பழிசுமத்துதல் - பழியைச்சுமத்துதல், பிறர்மேற் பாரம்போடுதல்.
பழிசூழ்தல் - பழியடைதல், முற்பழி வந்து சேருதல்.
பழிசெய்தல் - தீங்குசெய்தல்.
பழிசொல்லுதல் - பொல்லாங்குசொல்லல்.
பழிச்சல், பழிச்சுதல் } துதித்தல்.
பழிச்சொல் - பழமொழி.
பழிதீர்தல் - குற்றநீங்கல், சமாதானமாதல், பொல்லாங்கு தீர்தல்.
பழிதீர்த்தல் - குற்றநீக்கல், சமாதானபடுத்தல், பொல்லாங்கு நீங்குதல்.
பழிதூறுதல், பழிதூற்றுதல் } புறங்கூறல்.
பழிதேடுதல் - பழிகட்டுதல், பொல்லாங்கு செய்தல்.
பழித்தல் - நிந்தித்தல்.
பழிநாணல் - பழிக்கஞ்சுதல்.
பழிபடுசெயல் - தீச்செயல்.
பழிபடுதல் - குற்றப்படல், பழிக்குட்படுதல்.
பழிபிடித்தல் - விரோதங்கட்டல்.
பழிப்படுதல் - குற்றப்படல், பழியேறுதல்,
பழிப்பனவு - பழிப்பனகாரியம்.

பழிப்பு - நிந்தை, பழி.
பழிமீட்குதல் - பழிதீர்த்தல், பழிவாங்குதல்.
பழிமுடிதல் - பழிமூட்டுதல்.
பழிமுடித்தல் - பழிசாதித்தல், விரோதங்கட்டல்.
பழிமூட்டுதல் - கோள்மூட்டுதல்
பழிமூளுதல் - பொல்லாங்குண்டுபடல்.
பழிமொழி - நிந்தனை, புறங்கூறல்.
பழியஞ்சல் - பழிக்சஞ்சுதல்.
பழியிடுதல் - பழியேற்றுதல்.
பழியெடுத்தல் - பழிதேடுதல்.
பழியேறுதல் - பழிபிடித்தல்.
பழியேற்குதல் - பழிக்குடன்படல்.
பழிவருதல் - பழிசுமருதல்.
பழிவாங்கல்-தீமைச்குத்தீமைசெய்தல்.
பழிவேலை - வேண்டா வெறுப்பான வேலை.
பழிவைத்தல் பழிப்படுத்திச்சொல்லல்.
பழு - அணிப்பழு, பழுவென்னேவல், விலா, விலாவெலும்பு, பிசாசு.
பழுக்கச்சுடுதல் - பொன்னணியைப் பழுப்பாக்கல்.
பழுக்கப்போடுதல் - காய் பழமாகும்படி கிடங்கிற்போடுதல்.
பழுக்கா - பொன்னிறம்.
பழுக்காய் - ஒருநிறம், தேங்காங், பாக்கு.
பழுதாதல் - பழுதுபடல்.
பழுது-குற்றம், சிதைவு, பொய், பொல்லாங்கு, சேதம், மிடி.
பழுதுபடல் - சீர்கெடல்.
பழுதுபார்த்தல் - திருத்துதல்.
பழுதை-கயிறு,பாம்பு,வைக்கோற்புரி.
பழுத்தபழம் - தீர்ந்தகள்வன், பூரணபலம், முதிர்ந்தவன், விருத்தன்.
பழுத்தல் - கனிதல், பழமாதல், பழுத்த இலை, பழுப்புநிறங்கொள்ளல், முதிர்தல்.
பழுபாகல் - ஒருபாகல், தும்பை.
பழுப்படைசுதல் இடைப்பழுப்பேறல்.
பழுப்பு - அரிதாரம், ஒருநிறம், நென்பு, பழுத்தலாயிருப்பது.
பழுப்பேறுதல் - பழுப்படைசுதல்.
பழுமரம் - ஆலமரம், பழுத்தமரம்.
பழுவம் - காடு.
பழுவறை - பழு
பழைசு } பழையது.
பழைது
பழைமை - தொன்மை.
பழைமைபாராட்டல் - பழைய வுரிமைகளை யெடுத்துப்பேசல்.
பழையது - நாட்பட்டது, பழஞ்சாதம்.
பழையர் - கள்விற்போர், தொல்லோர்.
பழையனூர்நீலி - பழையனூர்வணிகன் மனைவி.
பழையன் - பாண்டிநாட்டு மோகூர்க் குறுநிலமன்னன்.
பழையோள் - காடுகாள்.
பளகம் - பவளம், மலை.
பளகு - குற்றம்.
பளபளத்தல் - ஒளிகொள்ளுதல்.
பளபளப்பு - அலங்காரம், ஒளிக்குறிப்பு.
பளாபளா - இன்மைக்குறிப்பு, வியப்புக்குறிப்பு.
பளபளெனல் - ஒளிக்குறிப்பு.
பளிக்கறை - பளிங்குமண்டபம்.
பளிக்கு-கண்ணாடி, சுக்கிரன், தோணிக்கயிறு, படிகம்.
பளிச்சட்டியெனல் - பளிச்செனல்.
பளிச்சிடுதல் - ஒளிமின்னுதல்.
பளிச்சுப்பளிச்செனல் - ஒளிச்குறிப்பு.
பளிச்செனல் - ஒளிக்குறிப்பு.
பளிஞ்சி - கப்பலிஞுஞ்சான்கயிறு.
பளிதம் - ஓரெண், சருப்பூரம்.
பளீரிடுதல் - பளிச்சிடுதல்.
பளீரெனல் - ஒளிக்குறிப்பு.
பளீர்பளீரெனல் - ஒளிக்குறிப்பு.
பளுவு - பாரம், சுமை.
பளை - வளை.
பள் - ஒருசாதி, ஒருபிரபந்தம்.
பள்ளக்கை - பதிந்தநிலச்சார்பு.
பள்ளச்சி - பள்ளப்பெண்.
பள்ளச்சேரி - பள்ளக்குறிச்சி.
பள்ளத்தாக்கு - இரண்டுமேட்டுக்கூடாயிருக்குநிலம்.
பள்ளத்தி - பள்ளப்பெண்.
பள்ளம் - ஆழம், தாழ்ந்தநிலம்.
பள்ளயம் - தேவதைகட்குச்செய்யுங்குளிர்த்தி.
பள்ளர்-உழவர்,ஒருசாதியார்.
பள்ளாடு - பள்ளையாடு.
பள்ளி - அறச்சாலை, அறை, ஊர், ஒருசாதி, கல்லூரி, சிற்றூர், தேவர், கோவில், நித்திரை, பட்பெண், பள்ளிக்கூடம், மக்கட்படுக்கை, மருதநிலத்தார், முனிவர் வாசம்.
பள்ளி - இடைச்சேரி.

பள்ளிக்கணக்கர் - கற்போர்.
பள்ளிகொண்டபெருமாள் - விட்டுணு.
பள்ளிகொள்ளுதல்-நித்திரைசெய்தல்.
பள்ளிக்குவைத்தல் - பிள்ளைகளைக்கற்க வைத்தல்.
பள்ளிக்கூடம் - கல்விபயிலிடம்.
பள்ளிசெய்தல் - பள்ளிவளர்தல்.
பள்ளிப்பழக்கம் - கல்லூரிப்பயிற்சி.
பள்ளியடைத்தல் - சாலையுண்டாக்கல்.
பள்ளியறை - சயனவறை.
பள்ளியிற்பிள்ளை - கற்போன்.
பள்ளியெழுச்சி-ஒருபிரபந்தம், துயிலெழுப்புகை,நித்திரைவிழித்தெழுதல்.
பள்ளியெழுப்புதல் - நித்திரைவிழிக்கச் செய்தல்.
பள்ளிவளர்தல் - நித்திரைசெய்தல்.
பள்ளு - பள், ஒரு நாடகத்தமிழ்நூல்.
பள்ளுவிலி - ஒருசாதி.
பள்ளை - ஆடு, குள்ளம், வயிறுபருத்தது, வெள்ளாடு.
பள்ளையம் - உண்கலம், தாம்பாளம், படைக்கப்பட்டபலி.
பள்ளையன் - படர்ந்தவன்.
பறக்கடித்தல்- அகற்றல், துரத்துதல்.
பறக்காளி - பறைக்காளி.
பறக்குதல் - பறத்தல்.
பறங்கி - ஒரு மேகவியாதி, பறங்கிப் பாடைக்காரன்.
பறங்கிக்காய் - பூசினிக்காய்.
பறங்கிக்காரன் - ஒருபாடைக்காரன்.
பறங்கிக்கொடி - பூசினிக்கொடி.
பறங்கிக்கிழங்கு - சீதனக்கிழங்கு.
பறங்கிக்கூர்மை - காசிசாரம்.
பறங்கிச்சாம்பிராணி - ஒருமருந்து.
பறங்கிச்சிலைநிறம் - மாங்கிஷசிலை.
பறங்கித்தாழை - அன்னதாழை.
பறங்கிப்பட்டை - சீனக்கிழங்கு.
பறங்கிப்பாஷாணம் - ஒரு பாஷாணம்.
பறங்கிப்பாவைஷ - ஒருபாவைஷ.
பறங்கிப்புண் - ஒரு தொற்றுவியாதி.
பறங்கிப்பேட்டை - ஓரூர்.
பறங்கியணிநுணா - ஒருமரம்.
பறங்கியாமணக்கு - ஓராமணக்கு.
பறங்கிவராகன் - ஒருவகைவராகன்.
பறங்கிவியாதி - கிரந்திநோய்.
பறட்டை - சடைவு, செழிப்பற்றது, தழைவற்றது, வளர்ச்சியற்றது.

பறட்டைக்கீரை - ஒருவிதகீரை.
பறண் - புரண்.
பறண்டுதல் - சுறண்டுதல்.
பறதி - அவசரம், பறத்தல்.
பறதிக்காரன் - அவசரக்காரன்.
பறத்தல் - அவசரம்பண்ணல்,கிளர்தல், தூசி முதலிய கிளம்புதல், விரைவாயோடல்.
பறந்தடித்தல் - அவசரப்படுதல்.
பறந்தலை - சுடுகாடு, போர்க்களம்.
பறந்துவிழுதல் - பறந்தடித்தல்.
பறபறத்தல், பறபறப்பு } ஈரடுக் கொலிக்குறிப்பு, சீக்கிரம் பண்ணுதல்.
பறபறவிளையாட்டு - ஒரு விளையாட்டு.
பறபறெனல் - ஒலிக்குறிப்பு, விரைவுக் குறிப்பு.
பறப்பன - பட்சிசாதி.
பறப்பன் - அவசரக்காரன், தேள், விருச்சிகம்.
பறப்பு - பறதி.
பறப்பை - நெய்விடுபாத்திரம்.
பறம்பர் - தோல்வினைஞர்.
பறம்பு - மலை, பாரியென்னும் வள்ளலுடையமலை, முலை.
பறவாதி-பறதிக்காரன்,பேராசைக்காரன்.
பறவை-அவிட்டநாள்,இறகு,ஒருநோய், பறப்பு, புள்.
பறவையின்வச்சிரம் - பொன்னம்பர்.
பறவைவேந்தன் - கருடன்.
பறழ் - அணிலாதிகோட்டில்வாழ்விலங்கின்பிள்ளை, ஆடு, கீரி, நரி, நாய், பன்றி, பாம்பு, புலி, பூனை, மான், முயல் இவற்றின்குட்டி, பருப்பு.
பறளிகை, பறளை } குறடு, பற்றிரும்பு.
பறுண்டுதல் - பிறுண்டுதல்.
பறுரிடுதல், பறுரெனல் } ஒலிக்குறிப்பு.
பறி பறித்தல்,பறியென்னேவல், பொன், மீன்படுக்குங்கருவி, மீன்பெய்யுங்கருவி
பறிகாரன் - பறிக்கிறவன், வலைஞன்.
பறிகுதல் - கடந்தோடுதல், பெயர்ந்து வழுவுதல்.
பறிகொடுத்தல் - அழியக் கொடுத்தல், களவுகொடுத்தல், பறிக்கக்கொடுத்தல்.
பறிக்கல்லு - கற்கிட்டம்.

பறிக்குதல் - இறக்குதல், கொய்தல், சாய்த்தல், தோண்டுதல், பிடுங்குதல், வலாற்காரமாய் கவர்தல்.
பறிதலையர்-சமணரிலோர் விகற்பிகள்.
பறிதல் - பறிகுதல், வெளிப்படல்.
பறித்தல் - பறிக்குதல்.
பறிமணல் - பொன்மணல்.
பறிமுதல் - பறிக்கப்பட்டது.
பறிய - தூரமாக.
பறியல் - பறிப்பு.
பறியவிடுதல் - தப்பவிடுதல், நெகிழவிடுதல்.
பறிவு - ஒட்டுகை, பறியல்.
பறிவை - சீந்திற்கொடி.
பறுகன் - கட்டையன், சுறட்டையன்.
பறுகு - சிறுதூறு, பறட்டை.
பறுணி - கொள்ளு, சீந்தில், பெருங்குமிழ், பெருங்குரும்பை.
பறுவதம் - பருப்பதம்.
பறை - இறகு, ஓரளவு, ஓரளவுக்கருவி, சாதி, சொல், பறையென்னேவல், வாச்சியப்பொது, ஒருவகைநோன்பு.
பறைக்கம்பு - பறைவெட்டுங்கம்பு.
பறைக்காலி } பறைக்கால் } பறைக்காளி } ஒருவித புடைவை.
பறைகொட்டுதல் - மேளமடித்தல்.
பறைசாற்றுதல் பறையடித்தறிவித்தல்
பறைசீவி - சிறுநன்னாரி.
பறைச்சல் - பேச்சு.
பறைச்சி - பறைப்பெண்.
பறைதட்டுதல் - பறைமுறையடித்தல், பறைவெட்டுதல், பிரசித்தப்படுத்தல்.
பறைதல் - சொல்லல், தேய்தல்.
பறைநாகம் - ஒருபாம்பு.
பறைபோடுதல் - பறையடித்தல்.
பறைப்பருந்து - கரும்பருந்து.
பறைப்புடையன் - ஒருபாம்பு.
பறைப்பூச்சி - ஒரு சிலந்திப்பூச்சி.
பறைமுழக்கு - பறையொலி.
பறைமுழக்குதல் - பறையடித்தல்.
பறைமுறை } பறைமுறைசாற்றுதல் } பறையடித்தறிவித்தல்.
பறைமேளம் - பறையடிக்குமேளம்.
பறையடித்தல் - பறைமுழக்கிப்பிரசித்தம் பண்ணுதல், மேளமடித்தல்.
பறையர் - ஒருசாதியார்.
பறையறைதல் - பறையடித்தல்.

பறையன் - ஒருசாதியான்.
பறையாமை - கரியவாமை.
பறையூர் - சேரநாட்டுள்ளதோரூர்.
பறைவு - பறைச்சல்.
பறைவெட்டு - பறைதட்டுதல்.
பற்கம் - பிரபை.
பற்கன் - சிவபிரான், சூரியன், பிரமன், விட்டுணு.
பற்காவி } பற்காறை } பற்கிடுமோர் தூள்.
பற்குச்சி } பற்குச்சு } பற்கொம்பு.
பற்குறி - தந்தரேகை.
பற்குநன் } பற்குனன் } அருச்சுநன், பங்குனிஉத்தாத்திலே பிறந்தமையின், அவன் இப்பெயர் பெற்றான்.
பற்குனி - உத்திரநாள், பங்குனி.
பற்சொம்பு - தந்தசுத்திக்கம்பு.
பற்சர் - பகைவர்.
பற்சனம் - நிந்தை.
பற்சிராய் - பற்கறள்.
பற்ணி - வல்லாரை.
பற்னை - தண்ணீர்விட்டான் கிழங்கு.
பற்படகம் } பற்படம் } ஒருபூடு.
பற்பணம் - ஒருபலம்.
பற்பநாபன் - பதுமநாபன், விஷ்ணு.
பற்பறிகொடுத்தோன் - சூரியன்.
பற்படாமுனி - ஒருமுனி.
பஸ்பம் } பற்பம் } தாமரை, தூள், நீறு, பதுமம், விபூதி.
பற்பராகம் - பதுமராகம்.
பற்பரீகம் - அகங்கை, இனிப்பு, சூரியன், தீ, நீர்.
பற்பல - பலபல.
பற்பறித்தல் - பற்பிடுங்குதல்.
பற்பாடகம் - பற்படகம்.
பற்பித்தல் - பற்பமாக்கல்.
பற்பேத்தை - முரசிற்கட்டு.
பற்மகாரன் - வண்ணான்.
பற்மம் பதுமம், பஸ்மம், பொன், விபூதி.
பற்மராகம் - பதுமராகம்.
பற்மவேதகம் - கருப்பூரம்.
பற்மாசனம் - பதுமாசனம்.
பற்மீகரம் - சாம்பர்.
பற்மீகரித்தல் - பற்பமாக்கல்.
பற்றகற்றி - பாத்திரஞ்சுரண்டுங்கருவி.

பற்றடித்தல் - கல்லுமுதலியவற்றிற்கு ஒட்டிடுதல்.
பற்றம் - கனம், துணையாகப்பிடிக்கை.
பற்றம்பிடித்தல் - இருவர்கைவாருய்த் தாங்குதல்.
பற்றலர் - சத்துருக்கள்.
பற்றல் - ஆசைபெருகுதல், குறித்தல், தொடர்தல், பிடித்தல்.
பற்றவைத்தல் - தீமூட்டல், பொருத வைத்தல்.
பற்றறுதல்-அன்புகெடுதல், பாசபந்தம் விடல், முழுது மற்றுப்போதல்.
பற்றற்ருர்
பற்றற்ரோர் } முனிவர்.
பற்ருக்கூலி - அற்பகூலி, நாட்கூலி.
பற்ருக்கை - அம்புகட்டுங்கயிறு, கட்டுங் கயிறு.
பற்ருசு - இருகுறணேரிசைவெண்பா விற்கிடைவருவது, உலோகங்களைப் பொருத்தவிடையிடுந் துண்டு.
பற்ருதது - அலட்சியமானது, போதாதது.
பற்ருதவர் - அலட்சியமானவர்.
பற்ருப்படி
பற்ருப்பணயம் } அரும் பூட்டு, குறைவு.
பற்ருப்போரி - சரியற்றவெதிரி.
பற்ருர் - பகைவர்.
பற்றி - குறித்து, பற்ருசு.
பற்றிக்கொள்ளல்
பற்றிப்பிடித்தல் } தொடர்ந்து நிற்றல், நன்ருய்ப் பிடித்தல்.
பற்றிரும்பு - அள்ளு.
பற்றிலி - துறந்தோன்.
பற்றினர் - உறவோர், சிநேகிதர்.
பற்று - அறவிட்டது, அன்பு, ஆசை, இசைவு, உலோங்களைப் பொருத்துங்கூட்டு, சம்பந்தம், சிற்றூர், சேர்வை, தொடர்ச்சி, பசை, பற்றென்னேவல், பிடி, பொத்து, மண்டி, வாரப்பாடல்.
பற்றுக்கால் - தாபரம்.
பற்றுக்குறடு - ஒரு கம்மக்கருவி.
பற்றுக்கொள்ளுதல் - அன்புவைத்தல், ஆசை கொள்ளுதல்.
பற்றுக்கோடு
பற்றுக்கோல் } ஊன்றுகோல், தஞ்சம்.
பற்றுதல் - அன்பு, ஊன்றிப்பிடித்தல், தீப்பற்றுதல், நம்பிக்கை, பிடித்துக் கொள்ளுதல், பொருந்துதல், வாங்குதல்.
பற்றுப்பூசுதல்
பற்றுப்போடுதல் } பொருந்தப் பசை போடுதல்.
பற்றுவரவு - கொடுக்கல்வாங்கல்.
பற்றுவாய் - திரிவாய்.
பற்றுவீடு - இனமுதலிய துறத்தல், பாசம் விடுகை.
பற்றுவைக்குதல் - அன்புவைக்குதல், ஆசை கொள்ளுதல், துண்டிட்டு விளக்குதல்.
பற்றை - சிறுதூறு, செங்காந்தள்.
பற்றைச்சி - சோரஸ்திரீ.
பற்றைப்பிள்ளை
பற்றையன் } சோரபுத்திரன்.
பனங்கட்டி - பனைவெல்லம்.
பனங்கந்து - பனைத்திரள்.
பனங்கள் - பனைமரத்தி லிறக்குங்கள்.
பனங்கறுக்கு - இளம்பனை.
பனங்கற்ருழை- பனையிலுண்டாகுந்தாழை.
பனங்காட்டீசர் - திருப்பனங்காட்டூரிலேகோயில்கொண்டிருக்குஞ்சுவாமி பெயர்.
பனங்காய் - பனையிற்காய்.
பனங்கிழங்கு - பனைவித்திற்கிழங்கு.
பனங்கிளி - அன்றில், ஒருகிளி.
பனங்கீரை - ஒருகீரை.
பனங்கொடியோன் - பலராமன்.
பனங்கொட்டை - பனைவிரை.
பனங்கோரை - ஒருபுல்.
பனசம்-ஈரப்பலா, பலாமரம், முள்ளு.
பனசயித்தி - அரசு.
பனசை - ஒருபட்டினம், ஒருபாம்பு, ஒருவிதக்கொப்புள அம்மை.
பனநார் - பனைநார்.
பனந்தாமன் - பலபத்திரன்.
பனந்தாரான் - சேரன், பலபத்திரன்.
பனந்தாழை - ஒரு கற்ருழை.
பனம்பழம் - பனங்கனி.
பனம்பாகு
பனம்பாணி } பனங்கட்டிப்பாணி.
பனம்பாரனுர்-இவரே தொல்காப்பியத்துக்குப் பாயிரஞ் செய்தவர். பனம்பாரம்என்னும்சூத்திரம் செய்தாரும் இவரேபுறப்பொருட் பன்னிரு படலம்செய்த ஆசிரியர், அகத்தியர் மாணுக்கர் பன்னிருவருள் இவரும் ஒரு

வர், இவர் தொல்காப்பியரைப் போலவே தலைச்சங்கத் திறுதிக்காலத்திலிருந்தவர்.
பனம்பிடுக்கு - பனம்பூ.
பனம்பூ - ஆண் பனைப்பாளை.
பனர் - கிளை.
பனவம் - சிறுதம்பட்டம்.
பனவர் - பார்ப்பார்.
பனவோலை - பனையோலை.
பனாட்டு - பனங்களியிலட்டடை.
பனாட்டுத்தோல் - தோற்பனாட்டு.
பனாட்டுப்பாய்-பனங்களிபெய்யும்பாய்.
பனார் - அம்பு.
பனி-அச்சம், இக்கட்டு, குளிர், துக்கம், தூளி, நடுக்கம், பயம், பனியென்னேவல், பெய்யும்பனி.
பனிகாலம் - மார்கழி முதலிய நான்கு [மாசம்.
பனிக்சஞ்சி - தாமரை.
பனிக்கட்டி - உரைந்தபனி, உறைந்த மழை.
பனிக்கதிர் - சந்திரன்.
பனிக்காற்று - குளிர்காற்று.
பனிக்குடம் - பன்னீர்க்குடம்.
பனிக்குதல் - பனித்தல்.
பனிக்கூர்மை-இந்துப்பு, சிந்துலவணம்.
பனிச்சா - கஞ்சாங்கோரை.
பனிச்சாமை - ஒருசாமை.
பனிச்சை - காட்டத்திமரம் பின்னிமுடிக்கு மயிர்ச்சுருள், அது ஐம்பாலில் ஒன்று.
பனிதாங்கி - ஒருபூடு.
பனித்தல் - இடைவிடாது மழைபெய்தல், துளித்தல், தூறல், நடுங்கல், வருந்தல்.
பனிநத்தை - ஒருநத்தை.
பனிநீர் - ஒருவாசனை நீர்.
பனிப்பகை - சூரியன்.
பனிப்படலம் - பனிச்செறிவு.
பனிப்பயறு - ஒருபயறு.
பனிப்பருவம் - பனிகாலம்.
பனிப்பு - பனித்தல்.
பனிப்புகட்டு - பனியிறைப்பு.
பனிப்புகாரர் - பனிமேகம்.
பனிப்புழு - சேற்றுப்புழு, பனியிலுண்டாகும் புழு.
பனிப்பூங்காரம் - பனிமங்குளம்.
பனிப்பூடு - ஒருபூண்டு.
பனிப்பெயர்தல் - பனியுண்டுபடுதல்.
பனிப்பெய்தல் - பனிசொரிதல்.
பனிமலை - இமயமலை.
பனிமேகம் - வெண்மேகம்.
பனிமொழி-குளிர்ந்தமொழி, பெண்.
பனியவரை - ஓரவரை.
பனிவரை - இமயமலை.
பனுக்குதல் - தெளித்தல்.
பனுவலாட்டி - சரச்சுவதி.
பனுவல்-ஆகமம், கல்வி, சொல், நூல், பஞ்சிநூல், புலமை.
பனை - அனுடநாள், ஒருமரம்.
பனைக்கொடியோன் - பலபத்திரன், வீடுமன்.
பனைசை - பனையூர், பனப்பாக்கம்.
பனைமடல்-பனைமட்டை, பனையோலை.
பனைமீன் - யானைமீன்.
பனைமுகிழ்-பனங்காய்முகிழ். [மீன்.
பனையன் - ஒருநோய், ஒருபாம்பு, ஒரு
பனையேறி - ஒருகுருநோய், ஒருபாம்பு.
பனைவட்டு - பனைவெல்லம்.
பனைவாரை - பனைமரக்கீற்று.
பனைவெட்டு - பனைவெல்லம்.
பன் - ஒருபுல், பத்தின்சிதைவு, (உ-ம்) பன்னான்கு, பன்மை, பன்னென்னேவல்.
பன்பாய் - புற்பாய்.
பன்மணிமாலை ஒருபிரபந்தம் அது ஒருபோதும் அம்மனையும் மூசலுநீக்கி மற்றை யுறுப்புக்களெல்லாங் கலம்பகம்போலமையக்கூறுவது.
பன்முறைக்கருவியர் -படைக்கும்உற்சவத்துக்குங் கொட்டுவோர்.
பன்மூன்று - பதின்மூன்று.
பன்மை - பலவாகியதன்மை.
பன்மைபண்ணுதல் - கண்டுசாய்த்துவி [டுதல்.
பன்மைப்பால் - பலவின்பால்.
பன்மைப்பொதுப்பெயர் - பன்மைப்பால்கட்குரியபொதுப்பெயர் (உ-ம்) செவியிலி.
பன்மையாய்விடுதல் - கண்டுசாய்ப்பாய்விடுதல்.
பன்மொழித்தொகைத்தொடர் - பலமொழி தொடர்ந்துநிற்குந் தொகைநிலை, (உ-ம்) செங்கிறக்குவளை.
பன்றி - ஒருமிருகம், கொடுந்தமிழ்நாட்டிலொன்று.

பன்றிக்கரணம் - ஒருகரணம்.
பன்றிக்கிடை - பன்றிக்கூடு.
பன்றிக்குளி - ஒருவிதமீன்.
பன்றிக்குறும்பு - நிலப்பனை.
பன்றிக்கொவ்வை - ஒருகொவ்வை.
பன்றிச்சுருங்கு - ஒருதண்டனை, கூன் வாங்கிக்கட்டுதல்.
பன்றித்தகரை - ஒருதகரை.
பன்றிநெல் - ஒருநெல்.
பன்றிப்புல் - ஒருவகைப்புல்.
பன்றிமயிர் - எய்ப்பன்றிமயிர்.
பன்றிமொத்தை - சிறுகுரட்டை.
பன்றிவெட்டுதல் - ஒருவிளையாட்டு.
பன்னகசாலை - பன்னசாலை.
பன்னகண்டம் - மரம்.
பன்னகம் - சீதாங்கபாஷாணம், பாம்பு.
பன்னகவைரி - கருடன்.
பன்னகாசனன் - கலுழன், விட்டுணு.
பன்னகாபரணன் - சிவபிரான்.
பன்னகாரன், பன்னக்காரன் - பன்னவேலைசெய்பவன், வெற்றிலைவாணிபன்.
பன்னசந்தரம் - இலைமெத்தை.
பன்னசாலை - புல்வீடு, முனிவர்வாசம்.
பன்னசி - தாமரை, வசந்தமண்டபம்.
பன்னச்சத்தகம் - காப்புச்சத்தகம்.
பன்னத்தண்டு - நெய்வார் கருவியில் ஒன்று.
பன்னத்தை - பனிநத்தை.
பன்னநரன் - சாச்சடங்கிற் கிலையாற் செய்யப்பட்ட மனுவடிவு.
பன்னபோசனம் - இலையுணவு.
பன்னமாசாலம் - ஒருமரம்.
பன்னமிருகம் - இலையுணும் விலங்கு.
பன்னம் - இலை, ஓலை முதலியவற்றாற் பின்னும் வேலை, பத்திரி, பலாசு, வெற்றிலை.
பன்னலதை - வெற்றிலைக்கொடி.
பன்னல் - சொல்லுதல், தேர்தல், நெருங்கல், பருத்தி.
பன்னவல்லி - பன்னலதை.
பன்னவேலை - ஓலை முதலியவற்றாற் பின்னும்வேலை.
பன்னாங்கு - தண்டிகைப் பன்னாணம், தென்னோலைப்பன்னாங்கு.
பன்னாங்குழி - பதினாங்கு குழியுள்ள ஒரு விளையாட்டுத்தட்டு.
பன்னாகம் - துளசி.
பன்னாசனம் - இலையுணவு, புற்பாய், புன்மெத்தை, முகில்.
பன்னாசி - ஒருதுளசி.
பன்னாடை - நெய்யரி.
பன்னாணம் - பன்னாங்கு.
பன்னாலம் - தெப்பம்.
பன்னான்குழி - பன்னாங்குழி.
பன்னி - குருவின்றேவி, சணல், மனைவி.
பன்னிணவிலைஞர் - ஆட்டுவாணிகர்.
பன்னிரடாண்டித்தர் - துவாதசாதித்தர்.
பன்னிருபடலம் - அகஸ்தியர்மாணாக்கர் பன்னிருவராலும் செய்யப்பட்ட புறப்பொருணூல் இது தற்காலம் எங்கும் கிடைப்பது அரிதா யிருத்தலால் முற்காலத்திலேயே இறந்தொழிந்ததுபோலும்.
பன்னீர் - ஒருவாசனைநீர், கருப்பைநீர், காயத்திற்பாயுநீர்.
பன்னீர்க்குடம் - கருப்பத்தைச் சூழ்ந்த நீர்ப்பை.
பன்னீர்க்குப்பி, பன்னீர்ச்செம்பு, பன்னீர்த்துருத்தி - பன்னீர் தூவு கருவி.
பன்னீர்மரம் - ஒருபூமரம்.
பன்னீர்வடித்தல் - பன்னீர்காய்ச்சுதல்.
பன்னு - வரி.
பன்னுதல் - பன்னல்.
பன்னுமல் - புல்லுமல்.
பன்னை - ஒருசெடி, கருப்பூரம், சூடன்.
பன்னொன்று - பதினொன்று.
பஃறுளி - குமரியாற்றிற்குத் தெற்கேயுள்ளதோராறு. இது ஆதிகாலத்தில் கடல் கொள்ளப்பட்டது. இதனையுள்ளிட்ட நாற்பத்தொன்பது நாடுகள் கடல்கொண்டழிந்த காலத்தே தலைச்சங்கமிருந்த தென்மதுரையும் அவற்றோடு அழிந்ததென்பது சிலப்பதிகாரவுரையினால் இனிது விளங்கும். அதுவருமாறு, "முதலூழியிறுதிக்கண் தென்மதுரையில் தலைச்சங்கத்து சயமா கீர்த்தியாகிய நிலந்தரு திருவிற்பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்திவைத்தான். அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளியென்னும் ஆற்றிற்கும் குமரி

யென்னும் ஆற்றிற்கும் இடையே எழுநூற்றுக் காவதவாறும், இவற்றின் நீர்மலிவானெனன மலிந்த ஏழ் தெங்கநாடும் ஏழ்மதுரைநாடும் ஏழ் முன்பாலைநாடும் ஏழ்பின்பாலைநாடும் ஏழ்குன்றநாடும் ஏழ்குணகாரைநாடும் ஏழ்குறும்பனைநாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி, கொல்லம் முதலிய பன்மலைநாடும் காடும் நதியும் பதியும் தடநீர்க்குமரி வடபெருங்கோட்டின் காறும் கடல்கொண்டழிதலால்'' என்பது "வடிவேலெறிந்த வான்பகை பொறாது பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடு கொடுங்கடல் கொள்ள'' என்பதனுலும் அது வலியுறுத்தப்படும்.

---

## பா



பா - அழகு, ஓரெழுத்து, கடிகாரவூசி, கிழங்குப்பா, நிழல், நெசவுபா, பஞ்சிநூல், பரப்பு, பரவுதல், பாட்டு, பாவென்னேவல், பிரபை, வெண்பா முதலியவைந்துபா அது இரண்டுமுதலிய வடிகளாணுக்கப்பட்ட பிரபந்தம்.

பாகஎக்கியம் - அவ்ஷ்டகம், பாம்வணம், ஸ்தாலிபாகம், சிரார்த்தம், மாசிகம், சர்ப்பபலி, ஈசானபலி, ஆக்கிரஹாயணம் முதலிய எக்கியங்கள்.

பாககம் - பிரிக்குந்தொகை.

பாகசம் - ஒருவகையுப்பு, சூலம்.

பாகசாஸநன் - இந்திரன், விருத்திராசுரனுடைய சகோதரனுகிய பாகாசுரனைக் கொன்றவனுதலால் இவனுக்கு இப்பெயர் உண்டாயிற்று.

பாகசன் - ஓரிராக்கதன்.

பாகசாசனி } அருச்சுனன், இந்திரன் மகன், சயந்தன்.
பாகசாதனி }

பாகசாதனன் - இந்திரன்.

பாகசாலை - மடைப்பள்ளி.

பாகண்டன் - வெளிவேஷக்காரன்.

பாகதம் - எல்லாநாட்டுமேலோர்மொழி.

பாகதாரி - சமையற்காரன்.

பாகதானம் - மடைப்பள்ளி.

பாகபாண்டம் சமையற்பாத்திரம்.

பாகபுடி - குயவன் சூளை.

பாகப்படுதல் - சமைக்கப்படுதல், பக்குவப்படல், பதப்படுதல்.

பாகப்படுத்துதல் - சமைத்தல், பக்குவப்படுத்தல்.

பாகமாகுதல் - பாகப்படுதல்.

பாகம் - அச்சம், ஆந்தை, ஒருகணிதம், ஒரு பிசாசம், சபித்தல், சமைத்தல், செய்யுள்நடை, தேசபயம், நரை மயிர், நான்குமுழங் கொண்டவளவு, பக்கம், பக்குவம், பங்கு, பாகை, பாதி, பாத்திரம், பிச்சை, புயம், ஒருவகைத் தோற்கருவி.

பாகம்பண்ணுதல் - சமைத்தல், பகுத்தல், பக்குவப்படுத்தல்.

பாகர் - யானை குதிரை முதலியவற்றை நடத்துவோர்.

பாகலம் - குதிரை, யானைநோய்.

பாகலன் - உன்மத்தன்.

பாகல் - ஒருகொடி, பலா, வெட்பாவட்டை.

பாகவதம் - பதினெண் புராணங்களுள் ஒன்று. இது பன்னிரண்டு ஸ்கந்தங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. பத்தாங்கந்தம் ஒன்று மாத்திரம் பூர்வபாகம் உத்தரபாகம் என இருவகையாய்ப் பகுக்கப்பட்டிருக்கிறது. முதல்கந்தத்தில் மாயவன் அமிசாவதாரம், ஸ்ரீநாரதர் தோற்றம், தர்மபுத்ரன் அரசியல் முதலியவைகளும், இரண்டாங்கந்தத்தில், மாயவன் நிலை, சௌநகாதியர் அன்பின்நிலை, முதலியவைகளும், மூன்றுங்கந்தத்தில் மைத்ரேயர் விதுரனுக்குத் தத்வம், உணர்த்தல், மலரவன்தோற்றம்முதலியவைகளும், நான்காங் கந்தத்தில் மரீசி முதலியோர் படைப்பு, தக்கன் வேள்வி யழிவு முதலியவைகளும், ஐந்தாங்கந்தத்தில்பிரியவிரதன்மரபு, பரதன்சரித்திரம்முதலியவைகளும், ஆறுங்கந்தத்தில் அஜாமிளன்கதை, தக்கன் படைப்பு நாராயண கவசம் முதலியவைகளும், எழாங்கந்தத்தில் சிசுபாலன்வீடுபேறு, இரண்யவதை முதலியவைகளும், எட்டாங் கந்தத்தில் மநுக்கள் வரலாறு, கஜேந்த்ர மோட்சம், க்ஷீராப்திமதநம் முதலிய

வைகளும், ஒன்பதாங்கந்தத்தில் இளன்கதை, சையாதிகதை, அப்பரீடன்கதை, இக்ஷ்வாவிகுன்கதை, ஹரிச்சந்திரன்கதை முதலியவைகளும், பத்தாங் கந்தத்தில் ஸ்ரீ கண்ணபிரான் திருவவதாரம், பூதனைவீடுபேறு, சகடமுதைத்த சரித்திரம், மருதிடைத் தவழ்ந்த சரித்திரம், ப்ருந்தாவந மடைந்தசரித்திரம்அரவின்மேலாடிய சரித்திரம், வேய்ங்குழ லிசைத்தல், கோபியர் துகில் கவர்தல், வேள்வி மங்கையர் உணவளித்தல், கோவர்த்தந மெடுத்தல், கோபியரை மணத்தல் முதலியவைகளும், பதினொன்றுங்கந்தத்தில்இருப்புலக்கைபெறல், வசுதேவர்க்கு நாரதர் தத்வம், உரைத்தல், உத்தவர்தத்வம்வினுதல், ஞாந கர்மம், உரைத்தல், யோகசித்தி உரைத்தல், இயமநியமாதி உரைத்தல், முதலியவைகளும், பன்னிரண்டாங்கந்தத்தில், கலிதர்மம், கற்கியவதாரம், பரிக்ஷித்து வீடுபேறு முதலியவைகளும் விசதமாகக் கூறப்பட்டுள்ளன.

பாகவதர் - விட்டுணு சமயத்தவர்.

பாகவிரோதி, பாகவைரி, பாகசூதநன் } இந்திரன்.

பாகனம் - ஒருவருடம்.

பாகன் - சங்கம்வாங்கி, நடத்துவோன், புதன், விருத்திராசுரன் தம்பி, இவன் தன் தமையனாகிய விருத்திராசுரனை இந்திரன் கொன்றதைக் கேட்டு தான்வந்து அவ்விந்திரனை யெதிர்த்துப் போர்செய்து அவனாலேயே கொல்லப்பட்டான், இவனைக் கொன்றதனால் இந்திரனுக்குப் பாகசாசநன் என்னும் பெயர் உண்டாயிற்று.

பாகாரம் - பங்கிடுதல், பிரிவுகணக்கு.

பாகாரி - இந்திரன், வெண்பொன்.

பாகிநாய் - பக்குவன்.

பாகிடுதல் - பங்கிடுதல்.

பாகிநேயன் - மருமகன்.

பாகியம் - புறம்பானது.

பாகியேந்திரம் - புறவுறுப்பு.

பாகீடு - பங்கீடு.

பாகீரதி - கங்கை.

பாகு - கரை, கற்கண்டு, குழம்பு, சத்தி, சருக்கரை, தலைப்பாகு, பங்கு, பாணிநாள், பாகன், பாக்கு, பால், பிச்சை, புயம்.

பாகுடம் - அரசிறை.

பாகுபடுதல் - பகுக்கப்படுதல்.

பாகுபாடு - பகுப்பு.

பாகுரி - இலக்கணி.

பாகுலம் - கார்த்திகைமாதம்.

பாகுவன் - படையன்.

பாகேக்கியம்-பிதிர்பூசை, வைசுவதேவ [பூசை.

பாகை - தலைப்பா, பகுதி, வட்டத்தின் முந்நூற்றறுபதி லொருபங்கு.

பாகோடன் - சூரியன்.

பாக்கபுரேசர் - திரு அச்சிறு பாக்கத்திலே சேர்யில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

பாக்கம் - ஊர்ப்பொது, நெய்தனிலத்தூர், மருதநிலத்தூர்.

பாக்கல், பாக்கல்லு } பாவுகல்.

பாக்கன் - பூனை.

பாக்கானூல் - பாவினூல்.

பாக்கி - நிலுவை.

பாக்கியசாலி - அதிட்டமுள்ளவன்.

பாக்கியத்தானம் - சென்மத்துக்கு ஒன்பதாமிடம்.

பாக்கியம் - அதிட்டம், கஷாயம், சித்தி, செல்வம், தனம், பேறு.

பாக்கியலட்சுமி - அட்டலக்குமியில் ஒன்று இது செல்வந் தருவது.

பாக்கியவதி - செல்வி.

பாக்கியவான் செல்வன்.

பாக்கியானுகூலம் - செல்வப்பேறு.

பாக்கு எதிர்காலவிடைச்சொல் (உ-ம்) உண்பாக்குவந்தான், துவர்க்காய்.

பாக்குக்கட்டுதல் - ஒரு விளையாட்டு.

பாக்குச்சாரம் - பாக்குச்சாறு, பாக்கு வெற்றிலைத் தம்பலம்.

பாக்குப்பறித்தல் - மணமுடிக்க வருமணவாளனது சயஞ் சோதித்தல்.

பாக்குப்பை - அடைப்பை.

பாக்குப்போடுதல் - ஒருவிளையாட்டு, பிளவிலையருந்தல்.

பாக்குவெட்டி - பாக்குச்சீவுங்கருவி.

பாக்குவெற்றிலைப்பை - அடைப்பை.

பாங்கம் - பலண்டுறுவபாஷாணம்.

பாங்கர் - இடம், தோழர், பக்கம்.
பாங்கன் - தோழன்.
பாங்கி - தோழி.
பாங்கு - அழகு, இடம், இணக்கம், உரிமை, தகைமை, பக்கம், மாதிரி, முறை.
பாங்குபண்ணல் - சிறப்பித்தல்.
பாங்குமம் - கருஞ்சீரகம்.
பாசகத்திரி - சமயற்காரி.
பாசகம் - சூதாடுகருவி, மடைத்தொழில், மூலாக்கினி.
பாசகரன் - காலன், நமன், வருணன், விநாயகன்.
பாசகர் - மடையர்.
பாசகர்ணன் - சுமாலி புத்திரன்.
பாசகரன் - யமன்.
பாசகன் - அக்கினி, சமையற்காரன்.
பாசகுசுமம் - இலவங்கம்.
பாசக்கட்டு - பிரபஞ்சக்கட்டு.
பாசக்கயிறு - பாசம்.
பாசங்களினீங்கல் - நிருமலமாதல் இது சிவனெண் குணத்தொன்று.
பாசஞானம் - உலகஞானம்.
பாசடம் - வெற்றிலை.
பாசடை - பச்சிலை.
பாசண்டத்துறை - சமயக்கட்டினிலை.
பாசண்டம் - சமயக்கட்டு தொண்ணூற்றாறு சமயங்களின் சாத்திரக்கோவை, வைதிக சமயக் கொள்கையோடு அவைதிக சமயக் கொள்கையையும் எடுத்து விதிப்பது பாசண்ட சமயமெனப்படும்.
பாசண்டர் - சமயிகள்.
பாசதரன் - காலன், நமன், வருணன், விநாயகன்.
பாசநாசம் - பந்தநாசம்.
பாசநாசன் - கடவுள்.
பாசபந்தம் - கண்ணி, மலபந்தம்.
பாசபந்தர் - பாசநீங்காதோர்.
பாசபந்திகள் - பாசசம்பந்தர், மலசம்பந்தர்.
பாசபாணி - சிவன், யமதூதரில் ஒருவன், யமன், வருணன், விநாயகன்.
பாசபெந்தர் - பாசபந்திகள்.
பாசபேயம் - ஒருயாகம்.
பாசமோசனம - பாசநாசம்.
பாசமோசநன் - கடவுள்.
பாசம் - அழகு, அன்பு, இருள், ஊசித்துளை, ஓரளவைப் பிரமாணம், ஒருபடைக்கலம், கட்டு, கண்ணி, கயிறு, கவசம், கற்பாஷாணம், சிவனாயுதம், சீரகம், சுற்றம், நமனாயுதம், நூல், பலபந்தம், பாசக்கயிறு, பாசி, பிசாசம், மாயை, விலங்கு.
பாசரகிதன் - கடவுள்.
பாசருகம் - அகில்.
பாசலம் - காற்று, தீ, தீயிலாப்பாகம்.
பாசவபாலனம் - புற்றரை.
பாசவர் - இலையமுதிடுவோர், கயிறுதிரித்துவிற்போர், பச்சையிறைச்சி சூட்டிறைச்சி விற்போர்.
பாசவிமுக்தன் - கடவுள்.
பாசவிமோசனம் - மலநீங்கல்.
பாசவிமோசநன் - கடவுள்.
பாசவைராக்கியம் - பிரபஞ்சவெறுப்பு.
பாசறை - ஒருமரம், துன்பம், பகைமேற்சென்றோருறைவிடம், மணியாசிப் பலகை.
பாசறைமுல்லை - ஒருநூல், அது பாசறைத் தலைமகன் றலைவியை நினைத்தல்.
பாசனகம் - பருகுவன்.
பாசனம் - அக்கினி, உண்கலம், உறவு, ஒருமருந்து, நிவிர்த்தி, பங்கு, பாண்டம், பாத்திரம், பிரிவுக்கணக்கு, புளிப்பு மட்கலம்.
பாசன் - இயமன், ஒருமுனிவன், சிவன், வருணன்.
பாசாங்கடித்தல் - மாரீசம்பண்ணுதல்.
பாசாங்கடி - இல்லதை யுள்ளதாய்க்காட்டல், பாவனை, மாரீசம்.
பாசாங்கு - மாரீசம்.
பாசாங்குகாரன் - எத்தன், தந்திரி, பாவனைகாரன்.
பாசாங்குசன் - விநாயகன்.
பாசாங்குசை - சத்தி.
பாசாங்குசதரன் - விநாயகன்.
பாசாங்குபண்ணுதல், பாசாங்குபோடுதல் - மாரீசம் பண்ணுதல்.
பாசாண்டம் - பாசண்டம்.
பாசாண்டர் - பாசண்டர்.
பாசாபந்தம் - மாயையால் மறைக்கப்படுதல்.
பாசாபாசம் - அம்புக்கட்டு, கயிறு.
பாசானபேதி - செப்புநெருஞ்சில்.

பாசி-கண்ணியேற்றுவோன், கரியமணி, சடைச்சி, சமைத்தல், நமன், நாய், நீர்ப்பாசி, நெட்டி, பலம், புல்லுருவி, மீன், வருணன்.
பாசிதம் - ஈவு, பிரித்தானது.
பாசித்தீர்வை - மீன்றீர்வை.
பாசிபடர்தல் } பாசிபிடித்தல்.
பாசிபற்றல்
பாசிப்படை - பலமுள்ளபடை.
பாசிப்பயறு - ஒருவகைப்பயறு.
பாசிமணி - கரியமணி, பச்சைமணி.
பாசிலை - பச்சிலை.
பாசிவிலை - மீன்விலை.
பாசு-தைரியம், பசுமை, பச்சைமூங்கில்.
பாசுபதம் - உட்சமயமாறினொன்று, பசுபதிபாணம், பசுபதியுடையது.
பாசுபதர் - பாசுபத சமயத்தோர்.
பாசுபதன்-பாசுபதசமயி. சிவபிரான் விபூதி, சடைமுதலியவைதரித்த திருக்கோலமாய்த் தோற்றித் தன்னடியார்க் கருள்செய்வன் என்பவன். இவன் அகப்புறச்சமயிகளு ளொருவன்.
பாசுபதாத்திரம்:- சிவபிரான்பாணம்.
பாசுபதி - ஒருயாகம்.
பாசுபதேசுவரர்-திருவேட் களத்திலும் திருமுல்லை வாயிலிலும் கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர். இது அருச்சுநனுக்குப் பாசுபதாஸ்திரங் கொடுத்ததனுல் உண்டான பெயர்.
பாசுபாலியம் - பசுக்காத்தல்.
பாசுரம் பாட்டு, வசனம், வேய்ங்குழலோ
பாசுவசுரோணி காட்டாமணக்கு [சை.
பாசூர்நாதர் - திருப்பாசூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பாஸ்கரராமாயணம்-பாஸ்கரரால் செய்யப்பட்ட இராமாயணம், இது பாஸ்கரர், அவர் குமாரனுகிய மல்லிகார் ஜுநபட்டு, சீடனுகிய குமார ருத்ர தேவன், சிநேகிதனுகிய ஐயலார்யன் என்னும் இந்நால்வரானும் செய்யப்பட்டது, ஆயினும் பாஸ்கரர் முக்கியராதலால் பாஸ்கரராமாயணம் எனப்பட்டது. இது இவ்வாறியற்றப்பட்டதற்குக் காரணம் அந்தக் காலத்தில் இவருக்கு ஆசிரியனுயிருந்த அரசனிடத்தில் இவரது உறவினனுகிய அரங்கநாதன் என்பவன் அரசனது கட்டளையால் திவிபதராமாயணமொன்று செய்யத் தொடங்கும்போது அவரிடத்தில் தமக்குண்டாயிருக்கிற இயற்கையாகியபொறுமையால், அரசனை நோக்கி உன்பெருமைக்கு திவிபதகாவியம் தகுந்ததன்று, நான் பத்யகாவ்வியம் செய்துகொண்டு வருகிறேன், அதனையேற்றுக்கொள் என்று சொல்ல, இவர்சொன்னசொல்லைத் தடுக்கவொண்ணுமையாலும், அரங்கநாதனது கிரந்தத்தையே யேற்றுக் கொள்ள வேண்டு மென்னுங் கருத்துண்மை யானும், எவர் முன்னே கொண்டு வருகிருர்களோ அவரது கிரந்தத்தை யேற்றுக்கொள்வேனென்று சொல்லி அனுப்பினன். அப்போது அரங்கநாதனது இராமாயணம்மூன்றுபங்குமுடிந்திருந்தது, ஆகையால் இவர் அதுமுடிவதற்குமுன்பே தனது இராமாயணத்தை முடித்துக்கொண்டு போகவேண்டும் என்றும், எண்ணங்கொண்டவராய், மேற்சொல்லப்பட்ட மூவரது உதவியாலும் விரைவில் முடித்துக்கொண்டு அரசனிடம் போயினர். அப்போது அரங்கநாதன் தனது இராமாயணத்தை முடித்து அரசனது ஆஸ்த்தாநத்துக்குக் கொண்டுவந்திருந்தான். அதைப்பார்த்து அரசன் அரங்கநாதன் பக்கத்தில் வலது கையையும், பாஸ்கரர் பக்கத்தில் இடது கையையும் நீட்டினுன். அதற்கு பாஸ்கரர் கோவங்கொண்டு, பக்ஷபாத முள்ள உன்னையொத்த அரசனுக்கு என்கவியை ஏர்ப்பிப்பதைப் பார்க்கினும் ஒரு குதிரைக்காரனுக்கு எர்ப்பிப்பது நன்மையாமென்று சொல்லிக்கொண்டே ஆஸ்த்தாநத்தைவிட்டு வெளிப்பட்டுப் போகும்போது, அவ்வரசனுடைய குதிரைக்காரன் வந்து, கவிசார்வபௌமனே, நீசொன்னசொல் தவருதே யென்று வழிதடுத்துக் கும்பிட்டான். அவ்வளவில் இவர் அவனுக்குத்தன்கிருதியையேற்பித்தனர் அதனுலேயே காவ்யாரம்பத்தில், "ஸாஹிணிமாரா" என்று ஸம்போதித்துச்சொல்லப்பட்டிருக்கின்றது

பாஸ்கராசாரியர்- இவர்ஒருபிரபலஜோதிஷ கிரந்தகர்த்தா, பீஜகணிதம் செய்தவர் இவரே. இந்த பீஜகணிதத்தில் வருக்க சங்கரணவிதி யென்று சொல்லப்படுவதாகிய ஒரு அருமையாகிய கணிதவிதி சொல்லப்பட்டிருக்கின்றது. இவர் எழுநூற்றெழுபது வருஷங்களுக்கு முன்னிருந்தவர்.

பாஸ்வரார் - ஒருதேவகணத்தார், இவர் அறுபத்து நால்வர்.

பாசை - சமைத்தல், பாஷை.

பாச்சல் - எழுச்சி, பாய்தல்.

பாச்சி - பாச்சிகை, பால்.

பாச்சிகை, பாச்சிக்கை } சொக்கட்டான் கவறு.

பாச்சியம்-பங்கு, பிரிக்கப்படுந்தொகை.

பாச்சுருட்டி, பாச்சுற்றி } தறிமரம்.

பாச்சை - ஒருவண்டு.

பாச்சையடித்தல் - வண்டூதுதல்.

பாச்சொற்றி - பாற்சொற்றி.

பாஞ்சசத்திகம் - வாத்தியப்பொது.

பாஞ்சசன்னியதரன் - விட்டுணு.

பாஞ்சசன்னியம் - ஓடு, ஒருமீன், கிருட்டிணன் சங்கு அது சலஞ்சலமாயிரஞ்சூழந்தது, தீ.

பாஞ்சசந்நிபம் - விஷ்ணுசங்கம், பஞ்சசநன்என்னும் அசுரனது எலும்பினாற் செய்யப்பட்டதாகையால், இந்தச் சங்கத்துக்குஇப்பெயருண்டாயிற்று.

பாஞ்சராத்திரம்-ஐந்துநாளளவும் பிரமாவுக்கு விட்டுணு வுபதேசித்தஒரு சமயம் இது புறச்சமயமாறினொன்று, வைணவாகம மிரண்டினொன்று.

பாஞ்சராத்திரி, பாஞ்சராத்திரிகன் } பாஞ்சராத்திரியகத்தோன்.

பாஞ்சராத்திரி- நாராயணன் தன்னை வழிபட்டவருடையபந்தத்தைநீக்கி, அவர்களை விரஜாநதியில் மூழ்குவித்து பரிசுத்தர்களாகச்செய்து, வைகுண்டத்திலே தனது சாரூபபதவியைக் கொடுப்பவனென்பவன். இவன் புறச்சமயிகளுளொருவன்.

பாஞ்சலிகை - சித்திரப்பாவை.

பாஞ்சார்த்திகன்-பாசுபதமதஸ்த்தன்.

பாஞ்சாலபுருஷன் - இலட்சணவான்.

பாஞ்சாலமட்டியம் - ஒருதாளம்.

பாஞ்சாலம் - இலட்சணம், தேயமைம்பத்தாறி னொன்று.

பாஞ்சாலம் - அஸ்தினபுரத்துக்குவாயுதிக்கில் இமயமலைக்கும்சர்வநதிக்கும் நடுவிலுள்ள தேசம்.

பாஞ்சாலன்- இலட்சணவான், பாஞ்சாலதேயத்தான்.

பாஞ்சாலி-சித்திரப்பாவை, துரோபதி.

பாஞ்சாலிகை - சித்திரப்பாவை.

பாடகம் - ஒருவைத்தியக்கருவி, ஒருநீட்டலளவை, கரை, காலணியினொன்று, கிராமத்திற்பாதி, கூலி, சூதுவிளையாடல், நட்டம்.

பாடகர் - பாடுவோர்.

பாடகன் - உபாத்தி, பாடுவோன், மாணாக்கன்.

பாடங்கேட்டல் - ஆசிரியனிடத்தினூற்பொருள் விசாரித்தல், மாணாக்கன் கற்றது சோதித்தல்.

பாடசாலை - பள்ளிக்கூடம்.

பாடச்சுரன் - கள்வன்.

பாடச்சுவடி - தாயேடு.

பாடஞ்செய்தல் - பதப்படுத்தல்.

பாடஞ்சேர்தல் - அடைந்தயர்தல்.

பாடஞ்சொல்லல் - மாணாக்கற்கு நூற்பொருள் விளக்கல், மாணாக்கன் படித்த பாடத்தை ஆசிரியனுக்குச் சொல்லல்.

பாஷணம், பாடணம் } சம்பாஷணை, போதனை.

பாடம் - பாடவம்.

பாடமாக்குதல் - பாடம்பண்ணுதல்.

பாடம் - அடுக்கு, அழுத்தம், இடையர்வீதி, எழுதும்பாடம், ஓதும்பாடம், தெரு, படித்தல், படியவைத்தது, பொன் முதலியவற்றினுரை, விரிவு, வீதி.

பாடம்பண்ணுதல் - மனப்பாடமாக்கல்.

பாடம்போற்றல் - கேட்டபாடத்தைபலகாற்சிந்தித்தல், இது நூல்கற்போரியல்புளொன்று.

பாடலத்துருமம் - புன்னகமரம்.

பாடலம் - குதிரை, சபதம், இளஞ்சிவப்பு, சோன்குதிரை, பாதிரிமரம், மழைகாலத்துப்பழுக்குநெல், வெண்சிவப்பு.

பாடலங்கிரி - புரு.

பாடலாவதி - ருக்ஷபர்வதத்தில் உற்பத்தியாகிப் பாயும் நதி.

பாடலி - ஒருநெல்,ஒருபூக்கொடி,ஒருமரம், கள்.

பாடலிபுத்திரம் - ஓரூர். பிரதிஷ்ட்டானபுரம், உதயாசுவன் அமைத்தநகரம், இது குசுமபுரி யெனவும்படும், சோணநதிகங்காநதியோடு கூடுமிடத்துக்குச் சமீபத்திலிருந்ததாகிய இந்தப் பழைய நகரத்தை ஆயிரத்துநூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னே கங்கைப் பெருக்கு அழித்துவிட்டது. இவ்விடத்தில் பௌத்த முனிவர் மடங்களும் நூறு சிவாலயங்களும் இருந்தனவென்றும், அந்த மடங்களில் ஐயாயிரம் பௌத்த முனிவர்களிருந்தார்களென்றும், மற்ற வைதிகசமயிகள் தொகைக்கு அளவில்லையென்றும், சீனதேசத்திலிருந்து ஆரிய தேசத்துக்கு வந்துபோன ஹியூன் சங்கன் என்பவன் சொல்லுகிறான், இதனால் இந்த நகரம் நெடுங்காலம் கீர்த்திபெற்று விளங்கினதென்பதற்குச் சந்தேகமில்லை.

பாடலிபுரம் - பாடலிபுத்திரம்.

பாடலை - ஒருமரம்,துர்க்கை,பாடல்வர்ணப்பசு, பாடலிபுரம்.

பாடலோபலம் - மாணிக்கம்.

பாடல் - சங்கீதம், செய்யுள் பாடுதல், வாசித்தல்.

பாடவம் - களிப்பு, சமர்த்து, சுகம், பெருமை, வடவாமுகாக்கினி.

பாடவள்-பாடன்மகடூஉ,மிதுனவிராசி.

பாடவன் - பாடுபவன், மிதுனவிராசி.

பாடவிகன் - தூர்த்தன்.

பாடவை - பாடவன், மிதுனவிராசி.

பாஷனம், பாடனம் - பாடுதல், பேச்சு,போதித்தல், வெட்டல்.

பாடன்மகடூஉ, பாடன்மகள் - பாடுவாள், பாணாபெண்.

பாடா - பங்கம்பாளை.

பாஷாசமம் - இரண்டு பாஷைக்கேற்ற சொல்.

பாடாணதாகம், பாடாணதாரணம் - கல்லுளி.

பாடா்ணத்தாபனம் - சவக்கிரியையிலொன்று.

பாடணமுத்தி - கற்போற் கிடக்கு முத்தி.

பாடா்ணம், பாஷாணம் - கல், நச்சுச்சரக்கு.

பாடானவாதசைவன்-ஆன்மா முத்தியிலும் சகசமலம் நீங்காதுகல்லைப்போலக் கிடக்குமென்பவன். இவன் அகச்சமயிகளு ளொருவன்.

பாடாணரூபி - அகலிகை.

பாடாணமாரி - கல்மழை.

பாடாண்டிணை - புறப்பொருட்டிணையில்ஒன்று.

பாடாதல் - கெடுதல்.

பாஷாந்தரமாக்குதல் - பிறபாஷைப்படுத்தல்.

பாஷாந்தரம் - பலபாஷை,மறுபாஷை.

பாடாவறுதி, பாடாவாரி - மிகுபாடு.

பாடாவிதி - கெடுவிதி.

பாடாற்றல் - சகித்தல்.

பாடி - ஊர்,ஓரிராகம்,கவசம்,சேரி,சேனைநகரம், நாடு, உளவாளி, பாசறை, பாடுபவள், முல்லைநிலத்தூர்.

பாடிக்கதை - வீண்பேச்சு.

பாஷிதம், பாடிதம் - சொல்லல், பேச்சு.

பாஷியகாரன் - உரைகாரன்,பாஷைப்படுத்துவோன்.

பாடியம், பாஷியம் - உரை, சூத்திரவிருத்தியுரை.

பாடியோடுதல், பாடியோட்டம் - ஒருவிளையாட்டு.

பாடிரம் - ஒருகிழங்கு, சந்தனம், துத்தநாகம், முகில், மூங்கிலரிசி, வாதம்.

பாடிலம் - நாடு.

பாடிவீடு பகைமேற்சென்றோருறைவிடம்.

பாடினி - பாடுவாள், மட்பாண்டம்.

பாடீநம் - சித்திரமூலம்.

பாடீநன் - உபாத்தியாயன்.

பாடீரம் - பாடிரம்.

பாஷீரம் - சந்தனம்.

பாடு - அனுபவிக்கை, இடம்,உண்டாகுகை, உதயத்துக்கேழாமிடம், ஏழாம் வேற்றுமை யுருபு, ஓசை, கடமை, குணம், கேடு, சுயகாரியம், நடப்பு, பக்கம், படுதல், பாடென்னேவல், பெருமை, மலை வருத்தம், விருத்தி, வேலை.

பாடுகெட்டுதல் - பக்கம்சரிந்து கிடக்குதல், பாட்டிலேவிழுதல்.

பாடுகாயம் - படுகாயம்.

பாடுகிடத்தல் - வரங்கிடத்தல்
பாடுதல் இராகம்பாடுதல், கவிசெய்தல், பாடியோடுதல், வாசித்தல்.
பாடுபடுதல் - ஆக்கினைப்பண்ணுதல், வருத்துதல்.
பாடுபடுத்துதல் - ஆக்கினைபண்ணுதல், வருத்துதல்.
பாடுவள் - பாடுவாள்.
பாடுவன் - பாடுவான்.
பாடுவாள், பாடுவிச்சி } பாடன்மகள்.
பாடுவித்தல் - பாடப்பழக்குதல்,புலமை பாடச்செய்தல்.
பாடேடு - தாயேடு.
பாஷை - சபதம், சரச்சுவதி, பேச்சு.
பாடை - ஆசந்தி, பருத்தி, பாடைமரம், பாஷை, வட்டத்திருப்பி.
பாடைகுலத்தான் - பாகல்.
பாஷைக்காரன்-பாஷையில்வல்லோன்
பாஷைசொல்லுதல்-சபதம்சொல்லுத
பாடைப்படுத்தல், பாஷைப்படுத்தல் } ஒருபாஷையிலுள்ளதை வேறோர் பாஷையிற் றிருப்புதல்.
பாஷையிடுதல் - சபதம்சொல்லுதல்.
பாட்சிகன் - குருவிவேட்டக்காரன்.
பாட்டகம் - வைசூரி.
பாட்டகன் - பாடகன்.
பாட்டப்பிரபாகரம் - வேதமே தெய்வமென்னு மதம்.
பாட்டம் - அச்சல், மழை, பலகாரம்,பாட்டா சாரியமதம்.
பாட்டான்-பாட்டமதத்தான்,மூதாதை.
பாட்டா - பாட்டன்.
பாட்டாசாரியம் - பட்டாசாரியர்.வேதமேதெய்வமென்றுஏற்படுத்திய கொள்கை.
பாட்டாப்பிரபாகரம் - பாட்டப்பிரபாகரம்.
பாட்டாளிபாடுவோன் - வேலைப்பிரயாசி.
பாட்டாள் - பிரயாசி, வீணாள்.
பாட்டி - ஒருசார்விலங்கின்பெண்பொதுநரிநாய்பன்றிஇவற்றின்பெண்,பாடன்மகள், பாடுவாள், மூதாய்.
பாட்டியமி, பாட்டியம் } பிரதமை.
பாட்டியர் - பாணிச்சியர்.
பாட்டியல்-ஒருநூல்செய்யுளிலக்கணம்.
பாட்டியர் - இப்பெரியநூல்கள்பலவுள, அவற்றுள் வச்சணந்தியால்செய்யப்பட்டது வச்சணந்திமாலை யெனப்படும்,குணவீரபண்டிதரால் செய்யப்பட்டது வெண்பாப்பாட்டியல்எனப்படும்,அது, "பண்பார்கவிஞர்வினயந்தெடுத்தபாட்டியலை, வெண்பாவந்தாதிவிளம்பினன்,மண்பாவும் - கோடாத சீர்த்திக்குணவீரபண்டிதனும், பீடார்களந்தைப்பிரான்" என்னும் வெண்பாவால் அறியப்படும். இனியெஞ்சி நின்ற பலவற்றுள் ஒன்று தியாகராஜதேசிகர் செய்தநூல், இது மங்கலப்பொருத்த முதலியவற்றைக் கூறுவது, இந்தத்தியாகராஜதேசிகர், இலக்கண்விளக்கஞ்செய்த வைத்திய நாத நாவலர்க்குப் புதல்வர், இவர் காலம் இருநூறுவருடங்களுக்கு முற்பட்டது.
பாட்டு - இசைப்பாட்டு, சங்கீதம் இது அட்டபோகத்தொன்று, செய்யுள், சொல், வசைமொழி.
பாட்டுக்காணி - பாட்டுநிலம்.
பாட்டுக்காரன் - பாடுவோன்.
பாட்டுடைச்செய்யுள் -பலபாக்களோடு உரைப்பாட்டையும் இசைப்பாட்டையுமுடைய இயலிசை நாடகப் பொருட்டொடர்நிலைச் செய்யுள்.
பாட்டுடைத்தலைவன், பாட்டுநாயகன் } கவியுடைத்தலைவன்.
பாட்டுவாளி - பாடுவோன்.
பாட்டை - வழி.
பாட்டைசாரி - வழிப்போக்கன்.
பாட்டம், பாஷ்பம் } கண்ணீர்.
பாஷ்யம் - பாடியம்.
பாணகோசரம் - சரகதி.
பாணச்சி, பாணத்தி } பாணப்பெண்.
பாணபத்திரன் - மதுரைவரகுணபாண்டியனின் மந்திரி.
பாணபத்திரன் - இவன்வரகுணபாண்டியன் சபையிலே விளங்கிக்கொண்டிருந்த ஒரு யாழ்வல்லோன், தன் இசைப்பாட்டினாலே சிவபிரானைவசப்படுத்தி அவரிடம்ஒருபாசுரம்வரைந்த திருமுகமொன்று பெற்றுக்கொண்டுபோய்ச் சேரமான் பெருமாணயனாரிடங்கொடுத்து அளவற்ற பொ

ருள்பெற்று பெருஞ்செல்வனாக விளங்கினவன். அந்தப், பாசுரம் "மதிமலிபுரிசை மாடகூடற், பதிமிசை நிலவும் பானிறவரிச்சிற, கன்னம் பயில் பொழிலாலவாயில், மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம், பருவக்கொண்மூப் படியெனப்பாவலர்க், குரிமையினுரிமையி னுதவியொளிதிகழ், குருமாமதிபுரை குலவியகுடைக்கீழ்ச், செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க, பண்பாலியாழ் பயில்பாணபத்திரன்,தன்போலென் பாலன்பன்றன்பால், காண்பது கருதிப் போந்தனன், மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே" என்பது இவ்வரகுணபாண்டியன் கூன்பாண்டியன் காலத்துக்கு இரண்டாயிர வருஷங்களுக்குப் பின்னே யிருந்தவன்.

பாணம் - அம்பு, கை, திப்பிலி, துதி, நாடகவகைப்பத்தினொன்று, பூம்பட்டு, மழைவண்ணக்குறிஞ்சி, வியாபாரம்.

பாணர் - சங்கீதம்பாடிப் புகழ்வோர், தையற்காரர்.

பாணன் - காட்டாமணக்கு. கல்வியின் மூத்தமகன்; இவன் ஆயிரங்கையுடையவன், அநீகன்புத்திரன்.

பாணை - சால்,பருத்தசட்டி,பருத்தபீசம் வயிறுபருத்தபானை.

பாணைத்தடி - சிலம்பக்கம்பு.

பாணைலு - சூதிலோர்தாயம்.

பாணி - இலைச்சாறு, ஊர், ஊர்சூழ்சோலை, ஓசை, கடைவீதி, கருப்பநீர் முதலியவற்றின் பாணி, கள், கரண்டகபாஷாணம், கா, காடு, காலம், கீதம், கூத்து, கை இது கருமேந்திரியமைந்தினுமொன்று. தாமதம், சொல், தயிரோதனம், சருக்கரைக் கரும்பு, நாடு, நீர், நெடுநேரம், படை, பலபண்டம்பழச்சாறு, பற்று, பாட்டு, பாணியென்னேவல், பூம்பந்தல், மலை, வாச்சியப்பொது, வாணிபன்.

பாணிகன் - பாடன்மகன், வாத்தியகாரன்.

பாணிகை - அகப்பை.

பாணிகொட்டல் - கைகொட்டல்.

பாணிக்கிரகணம் - கைப்பற்றல், விவாகம்.

பாணிக்கிரகீதி - விவாகமனைவி.

பாணிக்கிரகம் - கைபிடித்தல், விவாகம்.

பாணிகம் - கைநகம், தாமரை.

பாணிசாரியை - கயிறு.

பாணிதம் - கருப்பஞ்சாறு.

பாணிதலம் - இரண்டு துலாங்கொண்டது, உள்ளங்கை.

பாணித்தல்-பொழுதுநீட்டித்தல், மதித்தல், தாமதித்தல்.

பாணிந்தயம் - கைமண்டையாய்க் குடித்தல்.

பாணிபாத்திரம் - கமண்டலம்.

பாணிபீடணம் - விவாகம்.

பாணிப்பனாட்டு-பாணியிலிட்டபனாட்டு.

பாணிப்பிடி - பாணிப்பற்று.

பாணிப்பு - பாணித்தல்.

பாணிப்பூ - இலுப்பைப்பூ.

பாணிமுத்தம் - எரியாயுதம்.

பாணியம் - வலம்புரிக்கொடி.

பாணிருகம் - கைநகம், தாமரை.

பாணிவாதன் - வாணிகன்.

பாணினன் - ஓரிலக்கணநூலாசிரியன்.

பாணிநி-இவர் நாலாயிரம்வருஷங்களுக்கு முன்னே காந்தார தேசத்திலே, சலாது நகரத்திலே பிறந்து உரிய காலத்தே வித்தியாப்பியாசஞ் செய்துவரும்போது, மந்த மதியுடையரா யிருத்தலைக் கண்டு குருவாலும் சகபாடிகளாலும் அவமதித்துத் தள்ளப்பட்டு மனம் வருந்தித் தமது வீடு நோக்கிச் செல்லாது. இமயமலையை நோக்கி நடந்து அங்கே சிவபிரானைநோக்கித் தவங்கிடந்து அவர்பாற் சகல சாஸ்திரங்களுக்கும் மூலசாஸ்திரமாகிய மாகேசுவர சூத்திரோபதேசம்பெற்றுக் கலையெல்லாம் வல்லவராயினவர். இவர் தந்தையார் பெயர் பணினி என்பவர். தாயார் பெயர் தாக்ஷியென்பது, தாக்ஷிபுத்திரரெனவும்இவர்வழங்கப்படுதலால் நன்கு துணியப்படும். இவர் அம்மாகேசுவர சூத்திரங்களை ஆதாரமாகக்கொண்டுசெய்த சம்ஸ்கிருதவியாகரணம் பாணினீயம் எனப்படும். அது எட்டு அத்யாயங்களையுடையதாதலின் அஷ்டாத்யாயி எனவும்படும். இவரும்வாருசியும் ஒரேகாலத்

தவர்கள். பாணினி பகவான் வியாகரணஞ் செய்யுமுன்னே வரருசிகா தந்திரமெனப் பெரிய ஓரிலக்கணம் வகுத்தாரேனும், பாணினி பகவான் செய்தருளிய நூலே சிறந்ததெனக் கண்டு அதற்குத் தாம் ஒருரை யியற்றினர். அவரே பாணினியத்துக்கு முதலுரை யாசிரியர்.

பாணினீயத்துக்கு மிகவிரிந்ததோருரைசெய்தவர் பதஞ்சலி பகவான். விரிவுநோக்கி அதற்கு மஹா பாஷ்யம் என்னும் பெயருளதாயிற்று. பதஞ்சலிபகவான் தாமியற்றிய பாஷ்யத்திலே இச்சூத்திரங்களின் பெருமையை நோக்குமிடத்துப் "பொருளில்லாததொரெழுத்தையேனும் அவற்றினுள்ளேயான் காண்கின்றிலேன்" எனக்கூறிப் போவரேல், பாணினீய சூத்திரங்களின் வன்மையும் நுட்பமும் வனப்பும் எடுத்துரைக்கவேண்டா, ஐரோப்பியபண்டிதர்களும் தாங்கண்ட பாஷைகளில் பாணினீயத்திற் கிணையான இலக்கணமொன்றில்லையென்றுகூறி உச்சிமேற்கொண்டு பாராட்டுவார்கள். பாணினீயத்துக்கு முன்னரும் ஐந்திர முதலிய வியாகரணங்கள் பல தோன்றி நடைபெற்றனவேனும் அவையெல்லாம் அது தோன்றிய பின்னாக்கற்றற்கெளிதலவென்று மாந்தரால் கைவிடப்பட்டனவாயின. ஆகவே, பாணினீயமே நின்று நிலவுவதாயிற்று. அது வேதமொழிக்கும் சாமானியமொழிக்கும் இலக்கணங்கூறுவது, பூர்வ வியாகரணங்கள் எல்லாம் வேதமொழிக்கே இலக்கணங்கூறுவன. பாணினீயம் இரண்டிற்கு மாதலின் மிகச் சிறப்பதாயிற்று, அதுவுமன்றி அது பூர்வ வியாகரணங்களைப்போல வேதத்திற்கும் அங்கமாயிற்று.

இத்துணைச் சிறப்புவாய்ப்ப வியாகரணஞ்செய்த பாணினியாரது அவதாரகாலம் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னதென்பர் சிலர். பாணினீயத்தினுள்ளே வரும் யவநபதம் கிரேக்கரைக் குறிப்பதென்பது அச்சிலர் கருத்து. அது கிரேக்கரைக் குறிப்பதன்றென்பது கௌதமதருமசூத்திரம், மநு, இராமாயணம், பாரதம், காசிகாவிருத்தி முதலியவற்றினுள்ளே கூறப்படும் 'யவநவரலாற்றாற் பெறப்படும் ராமாயணம், "யவநராவார் சகரனாலே விசுவாமித்திரரது ஆணைப்படி முண்டிதஞ்செய்து ஓட்டி விடப்பட்ட க்ஷத்ரியர் என்று கூறும். பாரதம் யவனர் துர்வசுவினது சந்ததியாராவர்" என்று கூறும், காசிகாவிருத்தியும் விஷ்ணு புராணமும் "யவனர் தமது தலையை முண்டிதஞ் செய்து கொள்பவர்" என்று கூறும் கிரேக்கரோ தமது தலையை வழித்துக் கொள்பவரல்லர். அது கிரேக்கனாகிய "டெமொஸ்தெனே" என்பவன் தான் வெளியே செல்லாவகை தன் தலையை முண்டிதஞ் செய்துகொண்டு ஓரறையினுள்ளே மறைந்திருந்து நூலோதி வந்தான் என்பதனால் நன்கு துணியப்படும், ஆதலின் பாணினி குறித்த யவநரும் வேறு, ஐரோப்பிய பண்டிதர்குறிக்கும் யவநரும் வேறென்பது நாட்டப்பட்டதாயிற்று, ஆதலின் கிரேக்கர் படையெடுத்து ஆரியாவர்த்தத்தை தாக்கியபின்னரப்பாணினி விளங்கினரென்னுங் கொள்கை ஏற்புடைத்தன்று, நிர்வாண பத்திற்குப் பாணினியார் கொண்ட பொருளும் வேறு; பௌத்தர் கொள்ளும் பொருளும் வேறென்பது பாணினி பாஷியத்தினுள்ளே பதஞ்சலியாரெடுத்துக் கூறும் தீபங் காற்றினால் நிர்வாணமுற்றது என்பது முதலாகிய உதாரணங்களால் நாட்டப்படும், ஆதலின் அதுகொண்டு அவர்காலம் புத்தர் காலத்துக்குப் பிற்பட்டது என்றும் சாதிப்பாரது கொள்கையும் பிரமாணமாகாது.

அது நிற்க, பாணினி தாம்செய்த வியாகரணத்தைக் காஸ்மீரதேசத்தாசனாகிய காநிஷ்க மஹாராஜன் சபையில் அரங்கேற்றி, தம்மை முன்னே அவமதித்த புலவர்களை யெல்லாம் வாதத்தில் வெற்றிகொண்டு, கலைகள்யாவும் முற்று முணர்ந்த பெரிய

பண்டித ரென்று திசையெல்லாம் புகழ்செல்ல விளங்கினர். இவர் திருவுருவைச் சிலையி லமைத்தும் பிரதிஷ்டைசெய்து பூசித்து வந்தவனுகிய காநிஷ்கராஜன் சந்திரகுப்தனுக்கு நெடுங்காலத்துக்கு முன்னே அரசுசெய்தவன். இதனுலும் பாணினி முனிவர்காலம் நாலாயிரம் வருஷங்களுக்கு முந்தின தென்பது நன்கு விளங்கும். இவரது சரித்திரம் கதா சரித் சாகரம் என்னும் நூலிலும் அதற்கு முதனுலாகிய ப்ருஹத் கதையிலுங் கூறப்பட்டுள்ளது.

பாணினியம் } ஒருகிரந்தவிலக்கணம்.
பாணினீயம் } பாணினி முனிவர் செய்த ஸம்ஸ்கிருத வ்யாகரணம், இது மூவாயிரத்துத் தொளாயிரத்துத்தொண்ணூற்ருறு சூத்திரங்களையுடையது.

பாணௌகரணம் - விவாகம்.

பாண் - இசைப்பாட்டு, கள், பாணச்சாதி, [பாழ்.

பாண்டகம் - சாமான்.

பாண்டம் - ஆபரணம், ஆற்றின்பரப்பு, உடம்பு, ஓடு, கையிருப்பு, பரிகாசம், பாத்திரம், மட்கலம், வாத்தியக்கருவி, விலங்கின் கழுத்தணி, வெண்ணெய்மணி.

பாண்டரங்கண்ணனுர் - சோழன் ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடின புலவர்.

பாண்டரங்கம் - சிவபிரான்கூத்து.

பாண்டரங்கன் - சிவபெருமான்.

பாண்டரம் - செஞ்சுண்ணம்பு, மல்லிகை, வெண்மை.

பாண்டல் - பாழ்த்துபோனது.

பாண்டவர் - பாண்டுராஜ குமாரர்கள். இவர் ஐந்துபேர், அவர் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் எனபவர், இவருள் முந்தின மூவரும்குந்திமைந்தராதலால் கௌந்தேயர் எனவும் பிந்தின இருவரும் மாத்திரி மைந்தராதலால் மாத்ரேயர் எனவும் சொல்லப்படுவர். இவர்கள் பாண்டுராஜன் இறந்தபிறகு அஸ்திநாபுரத்தில்திருதராஷ்டிரனிடத்தில் வளர்ந்து தநுர்வேத முதலிய வித்தைகளில் மிகு சமர்த்தர்களா யிருக்கையில், இவர்களுடைய மேன்மையைக்கண்டு திருதராஷ்டிரனுடைய பெரிய மகனுகிய துரியோதநன் பொறுக்கமாட்டாமல்சகுநி,கர்ணன், துச்சாசனன் என்பவர்களோடுகூடிக்கொண்டு இவர்களுக்கு இடையூறு செய்துகொண்டேயிருந்தான். அது எவ்வாறெனின், ஒருநாள் துரியோதநன் வீமன் கண்ணுறங்கும்போது அவனைப் பெருங்கயிறுகளாற் கட்டி கங்கையாற்று மடுவில் தள்ளுவித்தான். மற்ருெருநாள் அவனுடைய உடம்பு முழுதும் கிருஷ்ண சர்ப்பங்களைக்கொண்டு கடிப்பித்தான். மற்ருெருநாள் போஜநசமயத்தில் அவனுக்கு நஞ்சுண்பித்தான். அவன்அளவற்ற பலமுள்ளவனும் திவ்ய புருஷனுமாதலால்துரியோதநன்செய்த கொடுமைகளெல்லாம் அவனையொன்றுந்தீமைசெய்யாவாயின, மேலும் துரியோதநன் பாண்டவ ரெல்லாருக்கும், அபாய முண்டுபண்ண யோசித்து, வாரணவதத்தில் அரக்குமாளிகை யொன்று கட்டுவித்து அதில் பாண்டவரைச் சேர்த்து நெருப்புமூட்ட யத்தநிக்கும்போது, இந்தச்செய்தியைப்பாண்டவர் விதுரனுல்அறிந்து அவ்விடத்திலிருந்து தப்பித்துக்கொண்டுபோய் தாயாரோடு கூட வேறு வேஷதாரிகளாய்ஏகசக்ராபுரத்திலே கொஞ்சகாலமிருந்து, பின்பு துருபதராஜனது பட்டணத்திற்குப் போய் அவ்விடத்தில் அர்ஜுநன் துரௌபதியின் சுயம்வரத்தில் மச்சயந்திரத்தை யெளிதி லறுத்து எல்லாவரசரையும் வென்று துரௌபதையைக் கைக்கொண்டு, குருவாக்யத்தால். அவளை ஐவரும் மணம்புணர்ந்தார்கள். அவ்வளவிலே அந்தச் செய்தியெல்லாம் திருதராஷ்டிரன் அறிந்து, பாண்டவரை வருவித்து,அவர்களுக்குப் பாதிராச்சியங் கொடுத்து இந்திரப் பிரஸ்தபுரத்தி லிருக்கும்படியனுப்ப அவர்களுடைய ராஜ்யப்பெருக்கு குணசம்பத்து முதலியவற்றைக்கண்ட துரியோதநன் பொறுக்கமாட்டாமல் சகுனியின் வஞ்

சனையால் மாயச்சூதாடி, தருமனைத் தோற்பித்து பன்னிரண்டு வருடம் வனவாசமும் ஒருவருடம் ஜநபதத்தில் அஜ்ஞாதவாசமும் செய்யும்படி யேற்பாடுசெய்து, ராஜ்யத்தை விட்டோட்டினான். அவ்வாறே பாண்டவர் வனவாசஞ் செய்து அஜ்ஞாதவாசமும் செய்து மீண்டுவந்து தமது பங்கைக்கேட்க, கொடுக்காமல் துரியோதநன் அவர்களை விரோதித்து எதிர்த்துப் போர்செய்து மாண்டான். பாண்டவர்கள் பகைவரைக் கொன்று, ராஜ்யத்தைக் கைக்கொண்டு அசுவமேத முதலிய யாகங்களால் ஜநங்களுக்குச் சந்தோஷ முண்டாக்கி, கண்ணபிரான் திருநாடலங்கரித்த பிறகு பரிக்ஷித்துக்குராஜ்யாபிஷேகஞ் செய்து சுவர்க்கலோக மடைந்தார்கள்.

பாண்டவர் - முன்பிறந்தோர், கன்னன்.

பாண்டவதானம் - வாத்தியமியக்கல்.

பாண்டவாக்ரஜன் - தருமன்.

பாண்டவாபீலன் - கிருட்டிணன்.

பாண்டவாயநன் - கிருஷ்ணன்.

பாண்டவிகை - பெண், ஊர்க்குருவி

பாண்டவேயன் - பாண்டுவமிசத்தான்.

பாண்டாகாரம் - பண்டசாலை.

பாண்டி - ஒருதேயம், ஒருபண், ஒருவிளையாட்டு, பன்னுங்குழிப் பலகை, வாகைமரம்.

பாண்டிகன் - பள்ளியெழுச்சி பாடுவோன்.

பாண்டிதேசம் - சோழதேசத்துக்குத் தென்மேற்கில் கந்யாகுமரி வரையிலுள்ளதேசம், இதற்கு ராஜதானி மதுரை. பாண்டியன் அரசுசெய்தமையால் இதற்கு இப்பெய ருண்டாயிற்று. இதுவே தமிழ்பிறந்த நாடு, இது மிக்க பழமையும் பெருங்கீர்த்தியும் அநேகசரித்திரங்களும் புண்யக்ஷேத்திரங்களும், நதிகளும் மலைகளும் உடையநாடு, முதற்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் எனனும் முச்சங்கமிருந்ததும் இந்நாடே, சிவபெருமான் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்ததும் இந்த நன்னாடே.

பாண்டித்தியம் - கல்வித்திறம், படித்தல்.

பாண்டிமண்டலம், பாண்டியம் - பாண்டியன் தேயம், இது தேயமைம்பத் தாறினொன்று.

பாண்டியவமிசேசன் - சோரவமிசாந்தக பாண்டியனுக்குப் பின்னே அரசு செய்த பாண்டியன்.

பாண்டியன் - தமிழ்நாட்டு மூவேந்தரில் ஒருவன். துஷ்யந்தன் தம்பியாகிய திஷ்யந்தனது பௌத்திரனாகி ஆசிரிதன் புத்திரன், இவனே பாண்டிதேயஸ்த்தாபகன், இவன் வமிசத்து வந்தோர் பல்லாயிரம் பாண்டியர், இவனே குலசேகரபாண்டியன் போலும், இவன் தென்மதுரையை நகரமாக்கி நான்கு வருணத்தாரையும் குடியேற்றி, காசியிலிருந்து ஆதிசைவர்களையும் கோயிற் பூசைக்காகக் கொணர்ந்து அகஸ்தியர் அநுமதிப்படியேஅரசுபுரிந்தவன் இவன்மகன் மலயத்துவச பாண்டியன், மலயமலையைத் தனது கொடியில்எழுதிக் கொண்டதனால் மலயத்துவசன் என்னும் பெயர் இவனுக்குண்டாயிற்று, இவன் அகஸ்தியரைக்கேட்டே எந்தக்காரியமுஞ் செய்பவன், என்பது அக்கொடியின் குறிப்புப்பொருள். இந்தப் பாண்டியன்காலம் துவாபரயுகம்.

பாண்டீச்சுரன் - வமிசசிரோமணி பாண்டியனுக்குப் பின்னே அரசுசெய்த பாண்டியன்.

பாண்டியன் அறிவுடைநம்பி - இவன் தமிழ் புலமையிற் சிறந்த வோரரசன், படைக்கவேண்டிய செல்வங்க ளெல்லாவற்றையும் படைத்தும் பலருடனே யுண்ணும் பெருஞ்செல்வனாயினும், காலம் இடையேயுண்டாகக் குறுகக்குறுக நடந்துபோய், சிறுகைநீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலிட்டும், கூடப்பிசைந்தும், வாயாற்கவ்வியும், கையால் துழாவியும், நெய்ச்சோற்றை உடம்பிற்படப் பூசியும் தந்தைதாயருடைய அறிவை மயக்கும்புதல்வரில்லாதவருக்குத் தம் வாழ்நாட்பயன் வேறில்லை யென்னுங் கருத்துடைய

"படைப்புப் பலபடைத்துப் பலரோடு முண்ணும், உடைப்பெருஞ் செல்வராயினு மிடைப்படக், குறுகுறு நடந்து சிறுகை நீட்டி, இட்டுந் தொட்டுங் கவ்வியுந்துழந்தும், நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து, மயக்குறு மக்களை யில்லோர் பயக்குறவில்லை நாம் வாழுநாளே" என்னுஞ்செய்யுள் செய்த பெருந்தகையிவனே, இவனைப்பாடிய புலவர் பிசிராந்தையார், இவன் கடைச்சங்கக் காலத்திருந்தவன்.

பாண்டியன் ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன் - இவனேகோவலனைக் கொல்லுவித்தவ னென்பது சிலப்பதிகாரத்தா லினிது விளங்கும், இவன் கல்வியைப் பொருளாகவும் கற்றோரைத் தனக்குறுதிச் சுற்றமாகவும் கொள்பவன், கோவலன் ஊழ்வினைவலியே இத்துணைச்சிறந்தஇவ்வரசனைப்புத்திமயக்கி,அவனைக்கொல்விக்கும்படி செய்தது போலும், இவ்வரசனுடைய கல்வியறிவும் உலகியலுணர்ச்சியும் பெரிதும் வியக்கற்பால தென்பதற்கு, உற்றுழியுதவியுமுறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலைமுனியாது கற்றனன்றே, பிறப்போரன்னஉடன் வயிற்றுள்ளும், சிறப்பின்பாலாற்றாயுமனந்திரியும், ஒருகுடிப்பிறந்த பல்லோருள்ளும், மூத்தோன்வருக வென்னாதவருள், அறிவுடையோனாறரசுஞ்செல்லும் வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்,கீழ்ப்பாலொருவன் கற்பின் மேற்பாலொருவனு மவன்கட்படுமே" என்னும் இவவற்புதமான அநுபவப்பொருளையுடையசெய்யுளே சாக்ஷியாகும்,இச்செய்யுள் இவனாற்பாடப்பட்டதென்பதுபுறநானூற்றினுட்காண்க, சோழநாட்டில் படையேற்றி வெற்றிபுனைந்து மீண்ட கயவாகு ஆங்குப் புகுந்ததும் மீண்டதும் பாண்டிநாட்டுவழியே யாமாதலால் இவன் இலங்காபுரத்துக் கரசனாகிய அந்தக் கயவாகுவுககு நண்பனபோலும், இவனும் கரிகாற்சோழனும் கயவாகுவும் ஒருகாலத்தவர்கள், இவன் தனது நாட்டைச் செவ்வையாய்க் காக்கும் பொருட்டு உத்தரதேசத்திலிருந்து படைவீரரைக் கொணர்ந் திருத்தினவனாதலால் இவன் ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன் என்னும்பெயர்பெற்றான்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்-இவன் புலமையிற் சிறந்தவனென்பது புறநானூற்றி னுள்ளேவரும் எழுபத்திரண்டாஞ் செய்யுளால் இனிதுவிளங்கும், இவன் புலமையிற்சிறந்த புலவரைக் காத்தலினும் அவரால் பாடப்படுதலினும் மிகு விருப்புடையவனென்பது மாங்குடி மருதனாரால் மதுரைக்காஞ்சிக்குத் தலைவனாக்கப் பட்டமையாலும், கல்லாடர் இடைக்குன்றூர் கிழார் முதலியோரால் பாடப்பட்டமையாலும், இனிது புலப்படும், இவன் தலையாலங்கானத்திலேகோச்சேரமான்யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையைப் பெரும்போரில் வென்றானாதலால் இந்தப்பெயர் உடையவனாயினன்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் - இவ்வரசன் நக்கீரனாராலும் மதுரை மருதனிளநாகனார் முதலியோராலும் பாடப்பட்டவன், கடுஞ்சினத்தையுடையயானைப்படையும், வாயுவேகமுஞ்செருக்குமுடைய குதிரைப்படையும் பெருங்கொடிகளையுடைய தேர்ப்படையும், வன்னெஞ்சும்போர்விருப்புமுள்ள காலாட்படையுமாகிய நான்கினாலும் அரசுசிறந்ததாயினும் சிறந்த அறநெறியே அரசாதுவெற்றிக்குக் காரணமாகும், அதனால் இவர் நம்மவரெனக்கொண்டுஅவர்செய்யுங்கொடுஞ்செயல்களைப் பொறுத்து நின் செங்கோலுக்குக்குற்றத்தையுண்டாக்கிக் கொள்ளாமலும், இவர் பிறரெனக்கொண்டு அவர்செய்யும்நற்செய்கைகளைக் கெடாமலும் சூரியனைப் போற் காய்ந்தும் சந்திரனைப்போற் குளிர்ந்தும் மழையைப்போல் வழங்கியும் நீடூழி வாழ்கவென்னும்பொருளையுடைய "கடுஞ்சினத்த கொல்க

ளிறுங் கதழ்பரிய கரிமாவும், நெடுங் கொடிய மிமிர்தேரு நெஞ்சுடைய புகன்மறவருமென நான்குடன் மாண்டதாயினு மாண்ட, அறநெறி முதற்றே யரசின்கொற்றம், அதனால் நமரெனக்கோல் கோடாது பிறரெனக் குணங் கொல்லாது, ஞாயிறென்ன வெந்திற லாண்மையும், திங்களன்னதன் பெருஞ்சாயலும்,வானத்தன்ன வண்மையு மூன்றும், உடையையாகி நீடூழிவாழிய" என்னும் இச்செவியறிவுறூஉச் செய்யுள் மதுரை மருதனிளநாகரால் இவனுக்குரைக்கப்பட்டது. இக்காலத்துப் புலவர் போலாது அக்காலத்துப் புலவர் அரசருக்கு அறமுறை யெடுத்து இடித்துரைக்கும் ஆண்மையும் அறிவும் உடையோரென்பதும், அவர் சொல்லை, அரசரும்விரும்பி யேற்றொழுகும் இயல்பின ரென்பதும் இச்செய்யுளால் ஊகித்துணரற்பாலது.

பாண்டியன் கருங்கை ஒள்வாட்பெரும்பெயர்வழுதி - இவன் இரும்பிடர்த்தலையாரால் பாடப்பட்ட பெருங்கொடையாளன்.

பாண்டியன் கானப்பேர்ந்த வுக்கிரப் பெருவழுதி - "இரவலர்க் கருங்கல மருகாதுவீசி, வாழ்தல்வேண்டுமிவண் வரைந்த வைகல், வாழச்செய்த நல்வினையல்லது,ஆழுங்காலைப்புணை பிறிதில்லை, உயர்ந்து மேந்தோன்றிப் பொலிகநுந்நாளே" என்று ஔவையாரால் பாடப்பட்டவன். இவனே வேங்கைமார்பனை வென்று கானப்பேர் என்னும் அரண்கொண்டவன் இவனே திருவள்ளுவருக்குச் சிறப்புப்பாயிரஞ் சொன்ன பாண்டியன்.

பாண்டியன் கீரஞ்சாத்தன் - இவன் ஆவூர் மூலங் கிழாரால் பாடப்பட்டவன், இவன் தன் வாயிலையடைந்த பெரியோரை "என்மேலாணையுரைமின்" என்று சூளுற்றிரந் துண்பிப்பவன் எனபதும, போரில் பிறர்க்குடைந்து முதுகிட்டோடும் வீரர்க்கு முன்னே சென்று அபயங்கொடுத்துப் போரில் துணைசெய்து அவர்க்கு வெற்றி கொடுப்போன் என்பதும், "மணன் மலிமுற் றம்புக்க சான்றோர், உண்ணாராயினுந் தன்னொடு சூளுற், றுண்மெனவிரக்கும் பெரும்பெயர்ச்சாத்தன், நெடுமொழிமறந்த சிறுபோராளர், அஞ்சி நீங்குங்காலை, எம்மாகத்தான் முந்துறுமே" என்னுஞ் செய்யுளாற் பெறப்படும்.

பாண்டியன் கூடகார்த்துத் துஞ்சிய மாறன்வழுதி - இவன் ஐயூர் முடவனாராலும் மருதனிள நாகனாராலும் பாடப்பட்ட ஒருபாண்டியன், இவன் கூட காரமென்னு மூரிலிறந்தவன், இவனது போராண்மையை ஐயூர் முடவனார், "நீர் மிகிற்சிறையுமில்லைத் தீமிகின், மன்னுயிர் நிழற்று நிழலுமில்லை, வளிமிகின் வலியுமில்லையொளிமிக், கவற்றோரன்ன சினப்போர்வழுதி, தண்டமிழ் பொதுவெனப் பொறான் போரெதிர்ந்து, கொண்டி வேண்டுவனாயிற் கொள்கெனக் கொடுத்த மன்னர் நடுக்கற்றனரே" என்னுஞ் செய்யுளா லெடுத்துரைத்தனர்.

பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்-இவன் சீத்தலைச் சாத்தனாராலே "காய்சினந்தவிராது கடலூர்பெழுதரு, ஞாயிறனையை நின்பகைவர்க்குத் திங்களனையை யெம்மனோர்க்கே" என்று பாடப்பட்டவன், பகைவரிடத்தேபெரிஞ்சினமும் புலவரிடத்தே பேரருளு முடையவனென்பது இச்செய்யுட்கருத்து.

பாண்டியன் மதிவாணனார்-மதிவாணர் நாடகத்தமிழ் நூலாசிரியர்.

பாண்டில் - அகல், இடபவிராசி, எருது, ஒருவாத்தியம், கட்டில், கைத்தாளம், நாடு, பண்டி, மூங்கில், வட்டம், வாகனம், வாகைமரம், தேர்வட்டை.

பாண்டீச்சுரன் - வமிசசிரோமணிபாண்டியனுக்குப் பின்னே அரசுசெய்த பாண்டியன்.

பாண்டீரம் - ஆல், வெண்மை.

பாண்டு-ஒருநோய்சிறுபூளைவெண்மை. ஓரரசன, பாண்டுராஜன் விசித்திர வீரியன் மனைவியிடத்து வியாசருக்குப்பிறந்த இரண்டாம் புத்திரன்.

இவன் தாய் அம்பாலிகை, திரிதராஷ்டிரனுக்குத் தம்பி, இவனுக்குக் குந்தியும் மாத்திரியும் மனைவியர், இவன் காட்டில் வேட்டையாடச் சென்றபோது நெடுந்தூரத்தில் ஒரு முனிவர் மானுருக்கொண்டு தமது பத்தினியோடு கலந்திருப்பதை நோக்காது தனி மானெனக்கருதி அம்பெய்து இருவரையுங் கொன்றான். முனிவர் பாண்டுவைநோக்கி, நீயும் கலவிக்காலத்தில் தலைபிளந்திறக்கக்கடவையென்று சபித்திறந்தார். ஆதலாற்றான் இந்தப் பாண்டுராஜனுக்கு நேர்சந்தான மடையத்தகுந்த யோக்யதை யில்லாமற்போயிற்று. அச்சாபத்தால் நெடுநாள் கலவியின்றி யிருந்தும் ஒருநாள் காமாதிகாரத்தால் மாத்திரியைப் புணர்ந்துயிர் துறந்தான்.

பாண்டுகம் - காமாலை, மங்கல்வெள்ளை.
பாண்டுகம்பலம் - ஒருகல், யானைமேற்றவிசு, வெண்கம்பளம்.
பாண்டுசருமிலை - துருபதி.
பாண்டுநாகம் - ஐராவதம்.
பாண்டுபத்தினி - குந்திதேவி.
பாண்டுபுத்திரர் - தருமன் முதலிய ஐவர்.
பாண்டுபூபதி - பாண்டுராஜன்.
பாண்டுமைந்தர் - தருமன்முதலைவர்.
பாண்டுயாவநம் - பேரீச்சமரம்.
பாண்டுரம் - ஒருநோய், ஒருமரம், வெண்மை.
பாண்டுராகம் - வெண்மை.
பாண்டுராங்ககம் - தவநம்.
பாண்டுருவன் - பெரியவுருவுள்ளது.
பாண்டுரேட்சு - வெண்கரும்பு.
பாண்டுரை - பாதிரிமரம்.
பாண்டுரோகம் - பாண்டுவியாதி.
பாண்டுலாம் - கறிப்புடோல்.
பாண்டுவண்ணம் - வெண்மை.
பாண்டை - ஊழ்த்தநாற்றம்.
பாண்டைநெறி - வெடுக்கன்.
பாண்டைநாற்றம் - ஊழ்த்தநாற்றம்.
பாண்மகள் - பாடுவாள்.
பாண்மகன் - பாடுவான்.
பாண்மூலை - பாழ்மூலை.
பாதகடகம் - பாடகம்.
பாதகண்டீரம் - ஓதக்கால்.
பாதகம் - துரோகம்.
பாதகன் - துரோகி.
பாதகாணிக்கை - பாததட்சணை.
பாதகாப்பு - செருப்பு.
பாதகி - துரோகி.
பாதகுறடு - மிதியடி.
பாதங்கி - சனி.
பாதசத்துவரம் - அரசமரம், ஆடு, ஆலாங்கட்டி.
பாதசரம் - ஒருகாலணி.
பாதசன் - சூத்திரன், வேளாளன்.
பாதசாகை - கால்விரல்.
பாதசாபலியம் - உதைத்தல்.
பாதசாரம் - கிரகமன்றன்றுநிற்குநிலை.
பாதசாரி - காலாள்.
பாதசாலம் - காலணிப்பொது.
பாதசிலை - தூண்டாங்குழிக்கல்.
பாதசுத்தி - கால்கழுவல்.
பாதசேவனம் - ஊழியம், பாவந்தனம்.
பாதசேவை - அடித்தொண்டு.
பாதச்சனி - வாக்குத்தானத்துச் சனி.
பாதச்சாயை - மிதித்தவடிநிழல்.
பாதஞ்சலம், பாதஞ்சலியம் - பதஞ்சலி செய்த நூல்.
பாததட்சணை - பாதகாணிக்கை.
பாததரிசனம் - பெரியோர்காட்சி.
பாததாடனம் - உதை.
பாததாரி - காலின்வெடிப்பு.
பாததிரணம் - பாதரட்சை.
பாததீட்சை - பாதமுத்திரைகொடுத்தல், இது தீட்சை வகையிலொன்று.
பாததீர்த்தம் - பெரியோர்பாதங்கழுவியநீர்.
பாததூளி - காலிலொட்டினமண், திருவடித்துகள், நடைப்புழுதி.
பாதபடி - பாதம்வைக்குமாசனம், மிதியடி.
பாதந்தனம் - தொழுவம்.
பாதபம் - பாதவம்.
பாதபரிசம் - சீதரங்க பாஷாணம்.
பாதபரித்திருநம் - பாதபரிதட்டனம்.
பாதபீடம் - பாதகடி.
பாதபீடிகை - கீழ்த்தொழில், பாதபடி.
பாதபூசை - பெரியோர்க்குச் செய்யும் பாதாராதனை.
பாதபை - மிதியடி.
பாதம்பிரகாரம் - உதை.
பாதப்பிரக்ஷாளநம் - கால்கழுவல்.

பாதப்பிரதாரணம் - பாதரட்சை,கால்கழுவல்.
பாதமயக்கு - நான்கடியிலேது மொன்றை முதலாய் வாசிக்கச் சரிவரும்பா.
பாதமுத்தி - பரகதி, பாததீட்சை.
பாதமுத்திரை - குருவின்பாதஞ்சிரசில் வைத்தல்,பெரியோரின்பாதரட்சை.
பாதமூலம் - குதிக்கால்.
பாதம்-இராகு, கால், இது கருமேந்திரியமைந்திலொன்று, கிரணம், சம்பவித்தல், சரிதை முதலிய நிலைசெய்யுட்களினடி, திடர், நாலிலொன்று, நீர்பங்கு,மரவேர், வட்டத்திலொன்கிலொன்று, வைகறை, பொய்யென்னு நிச்சயம்.
பாதரசம் - இரதம்.
பாதரட்சணம் } தொடுதோல், மிதியடி.
பாதரட்சை }
பாதரதம் - இரதம், காலாட்படை, தொடுதோல்.
பாதராயணன் - வாதராயணன், வியாசன்.
பாதரோகணம் - அரசமரம்.
பாதலத்தம் - கிலக்காளான்.
பாதலம் - கமர், கிடங்கு, குகை, சூரியனிற்கு மிராசிக்கு நாலாமிராசி, நரகம், பாதாளம்.
பாதலவாழ்நர் - நாகர்.
பாதவந்தனம் - பாதவணக்கம்
பாதவம் - தோப்பு, பாதபடி, மரப்பொது, மரம், மலை.
பாதவன்மிகம் - ஒருநோய்.
பாதவிகன் - வழிச்செல்வோன்.
பாதவிரசை - பாதுகை.
பாதனம் - இழிதல், துக்கத்தாற் றலைசாய்தல், விழுதல்.
பாதன் - சூரியன், தீ.
பாதாக்கிரம் - கானுதி.
பாதாக்கிராந்தன்-அடிவணங்குவோன்.
பாதாங்கதம் - பாதகடகம்.
பாதாங்குட்டம் - காற்பெருவிரல்.
பாதாங்குட்டிகை - கால்விரலணி.
பாதாசனம் - பாதபடி.
பாதாதம் - காலாட்படை.
பாதாதி - பதாதி.
பாதாதிகேசம் - ஒருபிரபந்தம் அதுகலிவெண்பாவாலடிமுதன் முடியளவுங் கூறுவது,பாதமுதற்சிகைபரியந்தம்.
பாதாரம் - கிரணம்.
பாதாரவிந்தம் - சீர்பாதம்.
பாதார்த்தம் - எட்டிலொன்று, பாதகாணிக்கை.
பாதார்த்தியம் - குருபகாரம்.
பாதாவசேசனம் - பாதசுத்தி.
பாதாவத்தம் - நீரிறைக்குஞ்சூத்திரம்.
பாதாவனேசனம் - கால்கழுவல்.
பாதாவிகன் - காலாள்.
பாதாளகங்கை - கீழுலகநதி.
பாதாளகிரணம் - காணுக்கிரகணம்.
பாதாளகேதன் - மதாலசனை யெடுத்துப்போய்க் காலவனுக்குத் தபோபங்கஞ்செய்த வோரசுரன்.
பாதாளேசுவரர் - திருஅரதைப்பெரும்பாழியிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
பாதாளநிலயம் } கீழ்ப்பூமி.
பாதாளபூமி }
பாதாளநிலயன் - தைத்தியன்.
பாதாளபேதி - காடி.
பாதாளமூலம் } ஆடுதின்னாப்பாலை, கறையான்,கோரைக்கிழங்கு,சிறுநெருஞ்சில்,சீந்திற்கொடி.
பாதாளமூலி }
பாதாளம் - கீழுலகம், தாழ்வு, நரகம், பிலம்.
பாதாளலோகம் - கீழுலகம்.
பாதாளவஞ்சனம் - பூமிக்குட் பொருளைத்தெரிய காட்டுமை.
பாதாளவயிரவன் - ஒருவயிரவன்.
பாதாளவாகினி - பாதாளகங்கை.
பாதாளவாசிகள் - நாகர்.
பாதாளவினையன் - ஆழமானவினையன்.
பாதி - அரைவாசி,கணவன்,தலைவன், பங்கு, கூறு.
பாதிகம் - சம்பளம்.
பாதிச்சாமம் - பாதியிரா.
பாதிடுதல் - நெருக்கல்,பங்கிடுதல்,பாதுகாத்தல்.
பாதித்தல் - கூறுசெய்தல்.
பாதித்தியம் - பதித்தனம்.
பாதிமதி - அர்த்தசந்திரன்.
பாதிமம் - நான்கிலொன்று.
பாதியிரா } அர்த்தசாமம், நள்ளிரவு.
பாதியிராத்திரி }
பாதிரம் - மலையாத்தி.
பாதிரி - பாதிரிமரம்,அதுதசமூலத்தில் ஒன்று, மூங்கில்.
பாதிரிவிநாயகன் - பழனிவிநாயகன்.

பாதிலி - வலை.
பாதிவிர்த்தியம் - பதிவிரதைத்தனம்.
பாதீடு-காத்தல்,செறித்தல்,பங்கிடுதல்.
பாது - காவல், சூரியன், பங்கு.
பாதுகம் - செங்குத்து, தொடுதோல், மிதியடி.
பாதுகன்-நடைவல்லோன், விழுமியல் புள்ளவன்.
பாதுகாகாரன் - சக்கிலியன்.
பாதுகாசித்தி-நீர்மேல்மிதியடியி னடக் குஞ்சித்தி.
பாதுகாத்தல்-உதவிசெய்யல்,காத்தல்.
பாதுகாப்பு - காவல்.
பாதுகாவலன் - காவல்செய்வோன்.
பாதுகாவல் - பாதுகாப்பு.
பாதுகிருது - சக்கிலியன்.
பாதுகை - பாதுகம், சிறுசெருப்படை.
பாதேயம்-கட்டுச்சோறு,கன்னியிராசி.
பாதை - அடிப்பாடு, மரக்கலம்,மிதவை முறை, வழிவகை.
பாதோசம் - தாமரை.
பாதோதகம் - கால்கழுநீர், வழியருகிற் றண்ணீர்.
பாதோதம் - தாமரை, முகில்.
பாதோதரம் - முகில்.
பாதோதி, பாதோநிதி } கடல்.
பார்த்தம் - எல்லாநாட்டுமொழி,மருது.
பாத்தல் - கொடுத்தல், பங்கிடுதல்.
பாத்தி-சிறுசெய்,பங்கு,பயிரிடுமேடை, வீடு.
பாத்திபம் - புறுமுட்டிப்பூடு, பூமி.
பாத்திபன் - அரசன்.
பாத்தியஸ்தனம் - பங்காளி.
பாத்தியஸ்தன் - பாத்தியன்.
பாத்தியம் - உரிமை,சம்பந்தம்,பகுக்கப் பட்டது, பங்கு, பாதமலம்பக்கொடுக் குநீர், பாதமலம்புதல் இது பூசையி யல்பினொன்று, பிணை.
பாத்தியல் - தண்ணீர்விட்டான்.
பாத்தியன் - உரியவன், பிணைகாரன்.
பாத்திரைச்சுரை - ஒருசுரை.
பாத்திரடீரம் - காகம்,தீ, நாரை,பாத்தி ரம்.
பாத்திரபதம்-இரேவதி,உத்திரட்டாதி. புரட்டாசிமாசம்.
பாத்திரபாலம் - சுக்கான்.
பாத்திரப்பிரவேசம் - ஒருவிளையாட்டு.
பாத்திரமாதுரன்-கற்புடையான்மகன்.
பாத்திரம் - இரப்போர்கலம், இலை, உடல், உண்கலம், எண்சேர்கொண் டது, கட்டளை, தகுதி, புரட்டாதி, மந்திரி, வாய்க்கால்.
பாத்திரவாளி, பாத்திரவான் } தகுதிவான்.
பாத்திரன் - இரட்சகன், தகுதிவான்.
பாத்திராதீரம் - அக்கினி.
பாத்திராபாத்திரம் - தகுதி தகுதியின் மை.
பாத்திரிவன் - யாகோபகரணம்.
பாத்திரீயம் - பலிப்பாத்திரம்.
பாத்திரீரம் - காணிக்கை.
பாத்திரேசமிதன் - மாய்மாலன், விரிந் தூண்பிரியன்.
பாத்திரை - இரப்போர்கலம்.
பாத்தில் - வீடு.
பாத்து - கஞ்சி, சோறு, நான்கு, பங்கு, பாதி.
பாத்துதல் - பங்கிடுதல்.
பாத்துப்புலு - நாற்பது.
பாத்துமகற்பம் - பிரமனது ஆயுட்கால த்தில் முற்பாதி.வராஹகற்பமென்ப துமிதுவே.
பாத்துமபுராணம் - பாத்மகற்பவரலாறு கூறும் புராணம், இது 55,000 கிரந் தமுடையது.
பாநாள் - அத்தசாமம், பாதிநாள், மத்தி யானம்.
பாநிலம் - பானபாத்திரம்.
பாநியாமலகம் - நெல்லியினோர்பேதம்.
பாநுமதி - விக்கிரமார்க்கன் மனைவி.
பாநேமி - சூரியன்.
பாந்தம் - அடியாறு, ஒழுங்கு,பகாவீறு.
பாந்தல் - பதுங்கல்.
பாந்தவம், பாந்தவியம் } அடியாறு, பந்துத்து வம்.
பாந்தள் - பாம்பு, பெரும்பாம்பு.
பாந்தன் - வழிச்செல்வோன்.
பாந்து - அளை, பாந்தென்னேவல்.
பாந்துதல் - பதுங்குதல், மறைதல்.
பாந்தை - அளை, பொள்ளல்.
பாபகம் - பாவம்.
பாபகிரகம் - இராகு, சனி, செவ்வாய்.
பாபக்கிநம் - எள்.
பாபசமனம் - பாவப்பரிகாரம்.

பாபசரியன் - இராட்சசன், பாவஞ் செய்வோன்.
பாபத்தி - வேட்டை.
பாபபிரதி - பொல்லாங்கு.
பாபம்பொறுத்தல் - பாவமன்னிப்பு.
பாபமார்க்கம் - பாவவழி.
பாபமூர்த்திகள் - வேடர்.
பாபமோசம் - பாவநிவிர்த்தி.
பாபம் - குற்றம், பாவம்.
பாபயோனி - பாவப்பிறப்பு.
பாபரஹிதன் - பாவமற்றவன்.
பாபரோகம் - ஊழ்நோய், கொப்புளிப்பான்.
பாபரோகி - தொழுநோயாளி.
பாபர்த்தி - பாபத்தி.
பாபவிக்கியானம் - பாபசங்கீர்த்தனம்.
பாபவிமோசனம் - பாவநாசம்.
பாபாத்துமா - பாவி.
பாபாபநுதி - பாவநிவிர்த்தி.
பாபி - பாவி.
பாபிஷ்டன் - பாவஞ்செய்வோன்.
பாபிஷ்டை - பாபஞ்செய்பவள்.
பாப்பாச்சி - ஒருவகைத்தொடுதோல்.
பாப்பான் - ஒருபூடு, பார்ப்பான்.
பாப்பு - பாத்தல், பிராமணசாதி.
பாப்புரி - பாம்புரி.
பாப்பு - பாத்தல்.
பாப்பூசு - ஒருவகைத் தொடுதோல்.
பாமகள் - சரசுவதி.
பாமக்கினம் - கந்தகம்.
பாமடந்தை - பாமகள்.
பாமதம் - வாலுளுவை.
பாமநன் - சிரங்குபிடித்தவன்.
பாமம் - கோபம், தினவு, நுரை, பரப்பு, பிரபை.
பாமரம் - அறிவின்மை, இழிமை.
பாமரன் - அறிவிலான்.
பாமரர்-அரசர்க்குத்துணைவர், அறிவீனர்.
பாமரவைத்தியன் - அநப்பியாச வைத்தியன்.
பாமரன் - அறிவீனன், கீழ்மகன்.
பாமன் - சூரியன், மைத்துனன்.
பாமாரி - கந்தகம்.
பாமாலை - ஒருவன்கீர்த்தியைப்புகழ்ந்து தொடுத்த பா.
பாமினி - பெண்.
பாமுதல்வி - சரச்சுவதி.
பாமை - அகங்காரி, காமி, சிரங்கு.

பாம்பரணை - ஓரரணை.
பாம்பாட்டம் - சோலி.
பாம்பாட்டல் - தொந்தரைபண்ணல், பாம்பையாடச்செய்தல்.
பாம்பாட்டி-அரவாட்டுவோன், கௌசிகன்.
பாம்பாட்டிசித்தர் - ஒருசித்தர்.
பாம்புரேசர்-திருப்பாம்புரத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பாம்பு-அரவு,ஆயிலியநாள், கரைவரம்பு.
பாம்புகண்டசித்தன் - காடி.
பாம்புகொல்லி - ஒருபூண்டு.
பாம்புக்கல் - பாம்பின்விஷத்தை இழுக்கும்கல்.
பாம்புக்கண்ணி - சங்கங்குப்பி.
பாம்புக்குத்தச்சன் - கறையான், செல்.
பாம்புதின்னி - முண்ணுயகி.
பாம்புமொச்சை - ஒருபூண்டு.
பாம்புரி - அகழி, பாம்புச்சடை.
பாம்பாட்டிசித்தர் - இவர் திருக்கோகர்ணத்தைத் தமக்குச் சங்மஸ்த்தாநமாகவுடைய ஒரு சித்தர், இவர்காலம் நன்கு புலப்படா தாயினும் சமீபகாலத்தவரல்லரென்பது எளிதிற்றுணியப்படும், இவர், "ஆடுபாம்பே யெழுந்தாடுபாம்பே" என்னும் பாம்பை முன்னிலையாக்கிப் பாடல் செய்திருக்கிறாராகையால் இவர்க்குப் பாம்பாட்டிச் சித்தரென்னும் பெயர் வழங்கிவருகின்றது. இவர் பாடல் கூத்தர் பாடல்போல் வெள்ளையாயிருப்பினும் தத்துவார்த்தங்களின் மேலதாகிய அற்புத ஞானக்கருத்தை யுட்கொண்டிருக்கும். இவர்பாம்பென்று கூறுவது பாம்புருவாக மண்டலமிட்டுக்கிடக்குங் குண்டலிசத்தியை அதையெழுப்புதல் யோகிகளுக்கு அத்யாவசியகமாதலால் அதனையெழுப்புவாராயினர்.
பாம்புவிரல் - நடுவிரல்.
பாம்போடுவடலி - நெடுமட்டைவடலி.
பாயசம் - பால்,பாற்சோறு,பாற்சோற்றிச்செடி.
பாயமுகம் - வடவாக்கினி.
பாயம் - நீர், புணர்ச்சியைக் கருதுங்கருத்து, விருப்பமானது.
பாயல் - மக்கட்படுக்கை.

பாயிகன் - காலாள்.
பாயிரம் - பொழிப்புரை, முகவுரை, வரலாறு.
பாயிழுத்தல் - தோணியிற் பாய்தூக்கிவிடல்.
பாயு } குதம் அதுகருமேந்திரியமைந்தினென்று.
பாயுரு }
பாயெடுத்தல் - பாயிழுத்தல்.
பாய் - களப்பாய் முதலியன, கூறைப்பாய், பாயல், பாயென்னேவல்.
பாய்க்கோரை - ஒருபுல்.
பாய்ச்சல் - கீழ்ப்படியாமை, பாய்தல்.
பாய்ச்சல்காட்டுதல் - பாயும்படிஏவுதல்.
பாய்ச்சல்விடுதல் - குதிரைமுதலியவற்றைப் பாயவிடல்.
பாய்ச்சான்போடுதல் - இருவர்கூடிஒருலக்கையை மாறியோச்சல்.
பாய்ச்சி } சொக்கட்டான்முதலியவற்றின் கவறு.
பாய்ச்சிக்கை }
பாய்ச்சு-பாய்ச்சென்னேவல், விளாச்சு
பாய்ச்சுதல் - உட்செலுத்துதல், பாயச்செய்தல்.
பாய்ச்சுலக்கை - பாய்ச்சானுலக்கை.
பாய்ச்சுவலை - ஒருவலை.
பாய்ச்சை - தத்துப்பூச்சி.
பாய்தல் - உருவுதல், ஓடல், குதித்தல், தாண்டல், நீர்முதலியபாய்தல், பரம்புதல், பறக்குதல், பறிதல், மூட்டல்.
பாய்தூக்கல் - கப்பற்பாயெடுத்தல்.
பாய்த்தல் - பாயச்செய்தல்.
பாய்த்து-பாய்ச்சல், பாய்த்தென்னேவல்.
பாய்த்துதல் - பாய்ச்சுதல்.
பாய்மரம் - கப்பல் முதலியவற்றின் பாய்தூக்குமரம்.
பாய்மா - குதிரை, புலி.
பாய்மாறுதல் - தோணியிற்பாயை மறுபுறமாக்கிவிடல்.
பாய்வலித்தல் - கப்பற்பாயிழுத்தல்.
பாய்விரி - பசிரி.
பாரகஸ்பத்தியம் - தருமநூல் பதினெட்டினொன்று.
பாரகம் - கடக்குதல், திரைச்சீலை, தோணிநீந்தல், பூமி.
பாரகர் - கரைபிடித்தவர், தாங்குவோர்.
பாரங்கதன் - கல்வியிற்கரைகண்டவன்.
பாரங்கு - காட்டுப்பருத்தி, சிறுதேக்கு, பாரத்துவாசி.
பாரசவம் - ஆயுதப்பொது.
பாரசவன் - பார்ப்பானுக்குச்சூத்திரச்சிபெற்றபிள்ளை, வேசிபிள்ளை.
பாரசிகை - பருந்து.
பாரசீகம் - பாரிசதேசம், பாரிசதேயத்திற் குதிரை.
பாரசுவதன் - மழுவேந்தி.
பாரசுவயம் - பொன்.
பாரச்சுமை - வலுச்சுமை.
பாரஞ்சுமத்துதல் - பாரமேற்றுதல்.
பாரணம் } உண்டல், உபவாசமிருந்துண்ணல், திருத்தி செய்தல், முகில்.
பாரணை }
பாரதகண்டம் - நவகண்டத்தொன்று.
பாரதசம்பு - அநந்தபட்டர்செய்த ஒரு ஸம்ஸ்க்ருத காவியம்.
பாரதந்திரியம் - பாரதீநம்.
பாரதம் - இரதம், ஐந்தாம்வேதம், பாரதவருடம், பாரதாசம். பரதவமிசத்தார்கள் சரித்திரம், இது இதிகாசமெனப்படும், இதில் சிருஷ்டியாதிகளின் வரலாறும் தருமநூல் உபநிடதப்பொருள் முதலியவற்றைச் சரித்திரத்திலடக்கிக் கூறுவது. இது வியாசர் சொல்ல விநாயகர் மேருமலையை யேடாகவும் தமது கொம்பையெழுத்தாணியாகவுங் கொண்டெழுதப்பட்டது, இது லக்ஷத்தையாயிரங்கிரந்தமுடையது. இதனைத்தமிழ் வெண்பாவாற் பாடினவர்பெருந்தேவனார், இதுபாடினகாரணம்பற்றி இவரைப் பாரதம் பாடிய பெருந்தேவனாரென்பர். இதைவிருத்தப்பாவாற் பாடினவர்வில்லிபுத்தூரர், அதன்பிறகு இதனை எண்ணாயிரம் பாக்களையிடையிடையிட்டு விரித்துப் பாடினவர்நல்லாப்பிள்ளை, இற்றைக்கு ஐயாயிரவருஷங்களுக்குமுன்னே சந்திரவமிசத்திலுதித்த திருதராஷ்டிரன் பிறவிக்குருடனாயிருந் தமையால், அவன் தம்பி பாண்டு அரசனாகி, தருமன் முதலிய ஐவரைப்புத்திரராக்கியிறந்துபோக, திருதராஷ்டிரான் அந்தஐவருக்கு அந்த அரசிற்பாதி கொடுத்து இந்திரபிரஸ்த நகரத்திலிருக்கச்செய்ததும், திருதராஷ்டிரன்புத்திரர் நூற்றுவருள் மூத்தோனாகிய

துரியோதனன் பாண்டவர்களுடைய அரசைச் சூதாடிக்கவர்ந்துகொண்டு அவரைக் காட்டுக்கனுப்பினதோடு அவர்கள் மனைவியாகிய துரோபதையையும் துகிலுரிதல் முதலிய மானபங்கஞ் செய்ததும், அதுகண்ட பீஷ்மர் முதலிய பெரியோர் பாண்டவருடைய அரசைக்கவர்வது தகாதகாரியமென்று துரியோதநனுக்கு எடுத்துரைத்தபோது அவன்பாண்டவர்பன்னிரண்டுவருஷம் வனவாசமும் ஒரு வருஷம் அஞ்ஞாதவாசமும் செய்து மீண்டு வருவராயின் அவர்களுக்குப் பாதியரசு கொடுப்பேன் என்றுடன்பட்டதும், அவ்வாறே பாண்டவர் செய்து மீண்டுவந்து, கண்ணபிரானைத் தூதுபோக்கித் தமது பாகத்தைக் கேட்டதும், அவன் மறுத்ததும், பின்னே குருக்ஷேத்திரத்திலே பதினெட்டுநாள் பெரும்போர் புரிந்ததில் துரியோதநாதியர் நிர்மூலமாயொழிந்ததும், பாண்டவர் வெற்றியடைந்து அரசுபெற்றுச்செங்கோல் செலுத்தியதும் ஆகிய சரித்திரத்தைச் சாங்கோபாங்கமாய் இதில் கூறப்படும்.

பாரதம்பாடிய பெருந்தேவனார் - இவர் பாரத கதையைத் தமிழிலே உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக இயற்றிய ஆசிரியர், இவர் சாதியில் வேளாளர், இவர் நாடு தொண்டைநாடு, நற்றிணை, கலித்தொகை, புறநானூறு முதலிய நூல்களிலுள்ள கடவுள் வாழ்த்துக்களும் இவரால் பாடப்பட்டனவே, கடைச்சங்கப்புலவர்களுள்ளே பெயர் படைத்தவர்களுள் இவரொருவர். இவர் சைவசமயத்தினர்என்பது இவராற்பாடப்பட்ட கடவுள் வாழ்த்துக்களா லினிது விளங்கும், புறநானூற்றுக் கடவுள் வாழ்த்தாக இவர் செய்த "திருமுடிமேற் சூட்டப்படுங் கண்ணிகார் காலத்து மலரும் நறிய கொன்றைப்பூ; ஏறப்படுவது தூயவெளிய ஆனேறு; மிகச்சிறந்தகொடியும்அவ்வானேறு, என்று சொல்லுவர். நஞ்சினது கறுப்புத் திருமிடற்றை அழகுசெய்தலுஞ் செய்தது, அக்கறுப்புத்தான் மறுவாயும் வானோரை யுய்வித்தமையால் வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும் படும், பெண்வடிவு ஒரு பக்கமாயிற்று, ஆகிய அவ்வடிவுதான் தன்னுள்ளேயொடுக்கிமறைக்கினும் மறைக்கப்படும், பிறை திருநுதற்கு அழகாயது, அப்பிறைதான் பெரியோன்சூடுதலால் பதினெண்கணங்களாலும் புகழப்படும். எவ்வகைப்பட்ட வுயிர்களுக்குங்காவலாகிய நீர்தொலைவறியாக் குண்டிகையானும் தாழ்ந்ததிருச்சடையானும் சிறந்தசெய்தற்கரிய தவத்தையுடையோனுக்கு என்னும் பொருளினையுடைய செய்யுள் வருமாறு "கண்ணிகார் நறுங்கொன்றைகாமர், வண்ணமார்பிற் றாருங் கொன்றை, ஊர்திவால் வெள்ளேறேசிறந்த, சீர்கெழுகொடியு மவ்வேறென்ப, கறைமிடறணியலு மணிந்தன்றக்கறை, மறைநவி லந்தணர் நுவலவும்படுமே, பெண்ணுருவொருதிறனாகின்றவ்வுருத், தன்னுளடக்கிக்கரக்கினுங் கரக்கும், பிறைநுதல் வண்ணமாகின்றப்பிறை,பதினெண் கண்ணு மேத்தவும்படுமே, எல்லாவுயிர்க்கு மேமமாகிய, நீரறவறியாக் கரகத்துத், தாழ்சடை பொலிந்த வருந்தவத்தோற்கே என்பது, இச்செய்யுளிலே சிவபெருமானுக்குரிய பூவும் மாலையும் வாகநமும் கொடியும் அவர் நஞ்சுண்டருளிய பெருங்கருணையும் ஆன்மாக்களின் பொருட்டுக் கொண்டருளிய வடிவும் தலையிலே கங்கையையும் சந்திரனையுமணிந்தமையும், அவர் எல்லாவுயிர்க்குங் காவல்பூண்டமையும் எடுத்தோதப்பட்டன. இச்செய்யுளிலே "பெண்ணுருவொருதிறனாகின்றவ்வுருத் தன்னுளடக்கிக் கரக்கினுங் கரக்கும்" எனவரும் அடிகளால் சிருஷ்டியின் பொருட்டுத் தமது சத்தியை ஒருபாலாகத் தோற்றுவித்துப் பின்னர் உலகையொடுக்குங் காலத்திலே தமது சத்தியைத் தம்முள்ளே மறைத்துக் கொள்வர் என்பதுதோன்ற நிற்றலின், இவர்சைவ

சமயத் துள்ளுறைப் பொருளெல்லாம் நன்குணர்ந்தவ ரென்பது தெரியக்கிடக்கின்றது. இவர் மதுரைச் சங்கத்திறுதிக் காலத்திலே யிருந்த புலவர்களுள்ளே மிக முதியவர்.
பாரதர் - குருகுலவேந்தர்.
பாரதவருடம் - பரதகண்டம்.
பாரதன் - குருகுலவேந்தரி லொருவன், கூத்தாடி, தீ.
பாரதாரிகன் - விபசாரன்.
பாரதாரியம் - விபசாரம்.
பாரதி - சரச்சுவதி, சொல், மரக்கலம், பைரவி.
பாரதிகொழுநன் - பிரமன்.
பாரதிதீபம் - ஒரு நிகண்டு.
பாரதிபூசை - சரச்சுவதி பூசை.
பாரதியாங்கம் - சுடலை.
பாரதூரம் - மிகப்பெரியது, வெகுதூரத்தது.
பாரதேசிகன் - அன்னியன், பரதேசி.
பாரத்துவாசம் - எலும்பு, கரிக்குருவி, காடை, வலியான்.
பாரத்துவாசன் - அகத்தியன், துரோணசாரியன்.
பாரத்துவாசி - துரோணசாரி.
பாரந்தாங்குதல் - பாரஞ்சுமத்தல்.
பாரபட்சம் - ஓரவாரம்.
பாரபத்தியக்காரன் - அதிகாரி, உத்தியோகத்தன்.
பாரபத்தியம் - அதிகாரம், மேல்விசாரணை.
பாரப்படுதல் - பாரமாதல்.
பாரப்படுத்துதல் - பருப்பித்தல், பாரமாக்குதல்.
பாரப்பழி - மிகு குற்றம்.
பாரமார்த்திகன் - பரமார்த்தயுக்தன்.
பாரமிதம் - மேலானது.
பாரமுகாக்கியம் - சிவனைம்முகப் பூசை, பூசையியல்பினொன்று.
பாரமேச்சுரம் - சிவாகமமிருபத்தெட்டினொன்று.
பாரமேஷ்டி - பிரமன்.
பாரம் - இரதம், ஒருவிளையாட்டு, கடமை, கரைப்பொது, கவசம், கனம், காவுதடி, குதிரைச்சேணம், சுமை, துலாமிருபத்தெட்டுக்கொண்டது அது இரண்டாயிரம் பலங்கொண்டது, தோணி, நிறை, நீர்க்கறை, பருத்திப்பூ, பூமி, பொறுப்பு, பொறுமை, முடிவு, வரம்பு.
பாரம்பரம் / பாரம்பரியம் / பாரம்பரை - ஐதிகம், கிரமங்கிரமமாய் வருவது.
பாரம்பரைநியாயம் - கிரமங்கிரமமாய்வருமுறைமை.
பாரலௌகிகம் - பாயசம்.
பாரவதம் - புறப்பொது.
பாரவம் - வின்னாண்.
பாரவாகனம் - சுமையெடுத்தும்யானம்.
பாரவாகனன் - காக்காரன்.
பாரவி - இவர்கிராதார்ஜுநீயம் செய்த ஒரு ஸம்ஸ்க்ருதகவி.
பாரவிருதம் - உபகாரம், பலி.
பாரன் - பிருதுசேநன் புத்திரன், இவன் மகன் நீபன்.
பாராகம் - உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று.
பாராசரம் - ஒருபுராணம்.
பாராசாரி - சுக்கிரன்.
பாராசரியகற்பிகன் - பாராசர நூற்படி நடப்போன்.
பாராசரியன் - பாராசரி.
பாராசரியம் - பராசரியம்.
பாராசாரி - வியாசன்.
பாராட்டல் - மெச்சல், தூறல்.
பாராட்டு - கொண்டாட்டம், பாராட்டென்னேவல், புகழ்ச்சி.
பாராட்டுக்காரன் - புகழ்வோன்.
பாராட்டுதல் - உபசரித்தல், உரிமைபாவித்தல், புகழ்தல்.
பாராட்டுந்தாய் - ஐவகைத்தாயாரிலொருத்தி.
பாராட்டுப்பண்ணுதல் - புகழ்தல்.
பாராயணப்பத்திரம் - மாணாக்கர்க்குபாத்தியாயர் கொடுக்குமுறுதி.
பாராயணம் - கடந்துபோதல், நியமமாகப்படித்தல், முற்றுறமுடித்தல்.
பாராயணர் - நியமமாய்க் கற்போர், பார்ப்பார்.
பாராயணி - சரச்சுவதி.
பாராயணிகன் - கற்போன்.
பாராருகம் - மலை.
பாராவதம் - கருங்காலி, கரும்புறு, குரங்கு, புறப்பொது, மலை.

பாராவலேயம்
பாராவளையம் } வளைதடி.
பாராவாரம் - கடல், கடற்றிரை, கரை, சமுத்திரம். [ன்.
பாராவாரீணன் - இருபக்கஞ் சாய்ந்தவ
பாரி - இராக்காவல், ஓரளவு, கடையெழுவள்ளலிலொருவன், கட்டில், கள்குடிக்கும்பாத்திரம், சோட்டம், சிங்கம், சிறங்கைநீர், நல்லாடை, பாரியென்னேவல், பூந்தாது, பூமி, பெரியோன், மனைவி, யானைகட்டுங்கயிறு. இவன் பறம்பு என்னு மூரிலிருந்த ஒருசிற்றரசன், இவன்கொடையாற் சிறந்தோனாதலால் வள்ளல்களில் ஒருவனானான், இவன் கொடைச்சிறப்புநோக்கிக் கொடையாளரைப் புகழ்வோரெல்லோரும் பாரியேயென்று புகழ்வார்கள். சுந்தரமூர்த்திநாயனாரும் இவனது வள்ளற்றன்மையைக் கேள்வியுற்றே இவனைக் கொடைக்கிலக்கியமாகக் கூறியது, "கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினும்" என்னுந் திருப்புகலூர்ப் பதிகத்துத் தேவாரத்தாற் பெறப்படும், இவன்தன் காலத்திலிருந்தசேரசோழபாண்டியர்களுடைய கீர்த்திப் பிரகாசத்தையெல்லாம் தன் கொடைக்கீர்த்திப் பிரகாசத்தால் மழுங்குவித்தவன்; அதுகண்டு அவ்வேந்தர் மூவரும் போர் தொடுத்து இவனைக் கொன்றொழித்தார்கள். இவனோடு இவன்சுற்றத்தாரும் போரில் மடிந்தொழிய இவனை யடுத்து வாழ்ந்திருந்தபுலவர்களும்நிலைகுலைந்தொழிந்தார்கள். இவனுடையபுத்திரிகள் தம்மைக் காப்பவரொருவருமின்றிக் கபிலரையடைய அவர் தாம் பாரியிடத்துப்பெற்றநன்றியைமறவாது அவர்களைவளர்த்துக்கோமக்களுக்கு மணம்பொருத்த முயன்றும் பயன்படாமையால் அந்தணர்களுக்கு மணமுடித்துக் கொடுத்தார். கபிலர் கடைச்சங்கப்புலவரு ளொருவர்.
பாரிகன் - காக்காரன்.
பாரிகாரிகன் - மாலைக்காரன்.
பாரிகாரியம் - கடையம், பிடித்தல்.
பாரிக்கிதன் - பரிக்கிருது.
பாரிக்கை - பாரிப்பு.
பாரிசகிரணம் - பக்கக்கிரணம்.
பாரிசநோ - ஒருநோய்.
பாரிசம் - ஒருமலை, திசை, பக்கம்.
பாரிசவாதம்
பாரிசவாயு } ஒருநோய்.
பாரிசாதகம் - பஞ்சதருவினொன்று.
பாரிசாதம் - ஐந்தருவினொன்று, பவளமல்லிகை, முருக்கு.
பாரிஜாதம் - க்ஷீராப்தி மதநகாலத்துத் தோன்றின பஞ்ச தருக்களிலொன்று, வீமன் துரோபதையின் பொருட்டுத் தேவலோகஞ்சென்று இதன் மலரொன்றை யெடுத்து வந்து அவளுக்குக் கொடுத்தான்.
பாரிசாரம் - ஏவல், கட்டளை.
பாரிசேடம் - ஒழிபளவை அது தருக்க சாத்திரத்தி லோருறுப்பு அது கூட்டிக்கழித்தல்.
பாரிஷதன் - காவற்காரன், பார்க்கிறவ
பாரிடம் - பூதகணம், பூமி. [ன்.
பாரிணயம் - சீதனம்.
பாரிதத்தியை - நெற்றிச்சுட்டி.
பாரிதோஷிகம் - உபகாரம்.
பாரித்தல் - உண்டாக்கல், குற்றஞ்சார்த்துதல், தோற்றல், பரப்பல், பருத்தல், பலன்படல், வளர்தல்.
பாரிந்திரன் - சிங்கம்.
பாரிபத்திரம் - வேப்பு, கருசதேசத்து முக்கியபட்டணம், விந்திய பர்வதத்துக்குச் சமீபத்திலுள்ளது.
பாரிபந்திகன் - கள்வன்.
பாரிபாட்டியம் - ஒழுங்கு.
பாரிபார்ச்சுவிகன் - உதவிக்காரன், துணைக்கவிசொல்வோன்.
பாரிபார்விகம் - கை.
பாரிபாவியம் - ஒருகுளிகை, கோஷ்டம், பிணை.
பாரிப்பு - அதிகரிப்பு, கனம், பருப்பம், வீக்கம்.
பாரியம் - கடுக்காய், முருக்கு.
பாரியாடன் - மனைவியைப் பிறர்க்கனுகூலப்படுத்திச் சீவிப்போன்.
பாரியாடிகன் - மனைவிக்கடங்கிய கணவன்.
பாரியாதிக்கிரமம் - விபசாரம்.
பாரியாத்திரம் - ஒருமலை.

பாரியாத்திரன் - குருபுத்திரன், இவன் குசன்வமிசத்தவன்.
பாரியாள் - பருத்தவன், மனையாள்.
பாரியானிகம் - பண்டி.
பாரியை - மனைவி.
பாரிரட்சகன் - தவசி.
பாரிவர்ணம் - முள்ளாங்கி.
பாரிவேட்டை - வேட்டை.
பாரீட்சிதன் - ஜநமேஜயன்.
பாரீந்திரம் - சிங்கம், மலைப்பாம்பு.
பாரு - சூரியன், தீ.
பாருஷியம் - அகில், இந்திரன் தனம், கடுஞ்சொல், கொடுமை, நிந்தை.
பாரோகம் - வாள்.
பாரோதாரணம் - காவுதல்.
பாரை ஒருமீன், இருப்புலக்கை, கடைப்பாரை, குழிகல்லுங்கருவி.
பார் - அடுக்கு, உரோகணிநாள், தேசம், தேரின்பரப்பு, நிலம், படுக்கை, பாரென்னேவல், பார்ப்பார், பாறை, புத்தன், பூமி, முறை.
பார்க்க - பார்க்கிலும்.
பார்க்கடம் - சாம்பர்.
பார்க்கபூமி - பார்க்கவன் புத்திரன்.
பார்க்கவப்பிரியம் - வச்சிரம்.
பார்க்கவம்-உபபுராணம் பதினெட்டில் ஒன்று.
பார்க்கவன் - சுக்ரன், பாசுராமன், வில்லாச்சிரமி, சிவபிரான், வீதிஹோத்ரன் மகன்.
பார்க்கவி - இலக்குமி, சிறுதேக்கு, பார்வதி, வெள்ளறுகு.
பார்க்கியம் - நன்னடை.
பார்க்கியன் - சத்துரு.
பார்க்குணம் - பாற்குணம்.
பார்சவம் - பக்கம், பரிசு, வட்டத்தின் சுற்றளவு.
பார்சவன் - பரிசுபெற்றோன்.
பார்சுவகன் - கள்வன்.
பார்சுவத்தன் -அணைசொற்காரன், உதவிக்காரன்.
பார்சுவம் - உதவி, துதிப்போர்கூட்டம், வட்டம், விலா.
பார்சுவாசாந்தம் - உச்சிட்டபந்திபோசனம்.
பார்த்தசாரதி - பார்த்தனதுசாரதி, கிருஷ்ணன்.
பார்த்தல் - ஆராய்தல், கவனித்தல், காணல், தேடல், நோக்குதல், பத்திரம் பண்ணல், பிரயாசப்படுதல், வணங்கல்.
பார்த்தவம் - மிகுதி.
பார்த்தன்-அருச்சுனன், காத்தவீரியன்.
பார்த்திவ - பத்தொன்பதாவதாண்டு.
பார்த்திவசாலை - இராஜசபை.
பார்த்திவம் - பார்த்திபம், பூமி.
பார்த்திவன் - அரசன், பார்த்திபன்.
பார்த்தீப - பார்த்திவ.
பார்ப்பதி - பார்வதி, பெருநெருஞ்சில்.
பார்ப்பதிகொழுநன் - சிவபிரான்.
பார்ப்பரன் - யமன்.
பார்ப்பனக்கொலை - பிரமகத்தி.
பார்ப்பனச்சேரி - பார்ப்பார்சேரி.
பார்ப்பனத்தி - பிராமணத்தி.
பார்ப்பனமாக்கள் - பார்ப்பார்.
பார்ப்பனி - பார்ப்பனத்தி.
பார்ப்பாரறுதொழில் - ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்.
பார்ப்பான் - இயமன், பிராமணன்.
பார்ப்பினி - பார்ப்பனி.
பார்ப்பு - கோட்டில் வாழ்விலங்கின் பிள்ளை, தவழ்சாதியின்பிள்ளை, பறவைக்குஞ்சு, பார்த்தல், பிரமசாதி, மான்கன்று.
பார்மகன்சாரி - பச்சைக்கருப்பூரம்.
பார்மிசையோன் - புத்தன்.
பார்வணம் - பூரணைமான், பாசமிருபத்தொன்றினொன்று.
பார்வணன் - சந்திரன்.
பார்வதம் - மலை, வாலுளுவை, வேம்பு.
பார்வதி இடைச்சி, உமை, காவிமண், துருபதி.
பார்வதிகம் - மலைக்கூட்டம்.
பார்வதிகுமாரன் - முருகன்.
பார்வதிலோசனம் - தாள வகையிலொன்று, அது பதினாறு மாத்திரையையுடையது.
பார்வதேயம் - மலையிற்பிறப்பன.
பார்வல் - குஞ்சு, தீவகப்பட்சி, மான்கன்று முதலியன.
பார்வை - கண், கவனம், சிறப்பு, சூனியமயக்கு, நோக்கு, பார்த்தல், மதிப்பு.
பார்வைக்காரர் - நோய்தீர்ப்போர், மதிப்புக்காரர்.

பார்வைத்தகடு-திறப்பு வாய்த்தற்றகடு.
பார்வைத்தாழ்ச்சி - குருடு,பராமரிப்புத் தாழ்ச்சி.
பார்வைபார்த்தல் - நோய்தீர்க்க மந்திர முச்சரித்தல்.
பாலகத்துவம் - தற்காத்தல்.
பாலகம் - எள்ளு,குருவேர், கோட்டம், சிகைதோளணி, மோதிரம்.
பாலகன்-காப்போன், குதிரைக்காரன், குழந்தை, புத்திரன்.
பாலகி - புத்திரி.
பாலங்கம் - குதிரை, பறவை.
பாலசரசுவதி - நந்நயபட்டருடைய சீடன். இவர் ஸம்ஸ்க்ருதாந்த்ர மிரண்டினும் நந்நயபட்டீய வ்யாகரணத்துக்கு வ்யாக்யாநம் செய்தவர்.
பாலசரியன் - முருகன்.
பாலசவுந்தரியம்மை -திருப்பைஞ்ஞீலியிலேகோயில்கொண்டிருக்கும்தேவியார் பெயர்.
பாலசிகிச்சை - குழந்தை வைத்தியம்.
பாலசூரியன் - உதயாதித்தன்.
பாலசூலிகம் - சாமரம்.
பாலடை - ஒருசெடி, பாலகப்பை, பாலுறட்டி.
பாலதனயம் - கருங்காலி.
பாலதிருணம் - இளம்புல்.
பாலபோச்சியம் - சிறுவருணவு.
பாலமுடாங்கி - வேலிப்பருத்தி.
பாலம் - ஆற்றுப்பாலம், நெற்றி, பிரபை, பூமி, மரக்கொம்பு, மழு.
பாலரசம் - பொன்னிறம்.
பாலரதி - இளமைப்பருவப்பெண்.
பாலராஜம் - வைடூரியம்.
பாலரீசி - பிள்ளைத்தன்மை.
பாலர் - இடையர், பிள்ளைகள்.
பாலலீலை - குழந்தைவிளையாட்டு.
பாலலோசநன் - சிவபிரான்.
பாலவம் - வாலவம்.
பாலவரை - ஓரவரை.
பாலவற்சை - த்யுமத்ஸேநன் மனைவி, சத்யவந்தன் தாய்.
பாலவாயஜம் - வைடூரியம்.
பாலவாகடம் - ஒரு வைத்தியநூல்.
பாலனம்-இளங்கன்றின்பால், காத்தல், பாற்சோறு.
பாலனன் - காப்போன்.
பாலன் - இடையன், எழுத்துத்தானம் ஐந்தினொன்று, ஏழுவயசுக்குட்பட்டவன், காப்போன்.
பாலாக்குதல் - சாதுவாக்குதல், பங்கிடுதல்.
பாலாங்கன் - சிவபிரான்.
பாலாசம் - பச்சைநிறம்.
பாலாடை - பாலிற்பிறக்கு மாடை.
பாலாட்சன் - சிவபிரான்.
பாலார்க்கன் - இளஞ்சூரியன்.
பாலி -அணை,ஆலமரம்,எல்லைஓர்பாஷை ஓர்யாறு, கள்,கறை, காதிற்சோணை, சுற்றளவு, செம்பருத்தி, பாலியென்னேவல், பாற்பசு, பானை,புகழ்,வரிசை, வாண்முனை, கௌதமர்காலத்திலும் அதற்குப் பூர்வாபர காலங்களிலும் ஆர்யாவர்த்தத்திலே வழங்கியபாஷை, இந்தப்பாஷையிலேயே பௌத்தசமய சாஸ்திரங்க ளெல்லாமுள்ளன. இது ஸம்ஸ்க்ருதப்ராக்ருதம்.
பாலிகை - அடம்பு, ஆயுதமுனை,உதடு, படைவாளின்முட்டி, பாற்காண்டி, பெண்பிள்ளை, முளைப்பாலிகை, வட்டம்.
பாலிசின்னம் - ஆலவட்டம்.
பாலிதம் - பெருந்தேக்கு.
பாலிதன் - வளப்புப்புத்திரன்.
பாலித்தல் - அருளுதல், ஈதல்,காத்தல்.
பாலியம் - ஏழுவயசுக்குட்பட்டபருவம்.
பாலிறக்கம் - வைசூரிக் கொப்புளத்திற் பால் வடித்தல்.
பாலிறவி - முருக்கு.
பாலுகம் - கருப்பூரம்.
பாலுண்ணி - சரீரத்திலுண்டாகிற ஒரு [காய்.
பாலுறட்டி - வெள்ளுறட்டி.
பாலேடு - பாலாடை.
பாலேயம் - கழுதை, சிறு முள்ளங்கி, மிருது.
பாலை - ஒருகொடி, ஒருமரம், ஒருமீன், கடல், கல்வியிற்பிரிதல், குழந்தை, பாடற்சுவையினொன்று,பாலைநிலம், பாலைப்பண், பாலைப்பூ, புநர்பூசநாள், பொருள்வயிற்பிரிதல், மிருகசீரிடநாள், வெம்மை.

பாலைக்கருப்பொருள் - பாலைநிலத்துற் பத்திப்பொருள் அது காளிமுதற் குறையாட லீருய பதினுன்கு.
பாலைக்கிழத்தி - துர்க்கை.
பாலைத்திணை-பாலைநிலத்திற்குரியவை.
பாலைநிலக்குடிகள் - குறவர், வேடுவர்.
பாலைநிலத்தவன் - காளை.
பாலைநிலத்தெய்வம் - காளி, துர்க்கை.
பாலைநிலத்தூர் - குறும்பு.
பாலைநிலநீர் - வறுங்கூவநீர்.
பாலைநிலப்பண் - பஞ்சுரம்.
பாலைநிலப்பறை - துடி.
பாலைநிலப்புள் - கழுகு, பருந்து, புறு.
பாலைநிலப்பூ - கள்ளி, பாலை, பூளை.
பாலைநிலமரம் - ஓமை, கள்ளி, குரா, பாலை, மரா.
பாலைநிலமக்கடொழில் - கொள்ளையாடல்.
பாலைநிலமாக்களுணு - ஆறலையும்பதிப்பறியும்.
பாலைநிலம்-ஐந்நிலத்தொன்று, அதுநீரு நிழலுமில்லாச்சுரமுஞ் சுரஞ்சார்ந்த விடமும்.
பாலைநிலவிலங்கு - செந்நாய்.
பாலைப்புறம் - சுரநடை, முதுபாலை.
பாலைமுதற்பொருள்-சுரமுஞ்சுரஞ் சார்ந்த விடமும் வேனில் நண்பகல்பின் பனி யென்னும் பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுகளுமாம்.
பாலையாழ் - பாலைநிலத்தியாழ்.
பாலைவனம் - சுரம்.
பாலொடுவை - கொடிப்பாலை.
பாலோபவீதம் - பூணூல்.
பால்மோடிக்கா - ஒருபூடு.
பால் - இடம், இயல்பு, உரிமை, ஊழ், எழுனுருபு, கடமை, குணம், திக்கு, பகுதி, பக்கம், பங்கு, பஞ்சகௌவியத்தொன்று அது பசுப்பால், பலன், பாதி, மரப்பால், முலைப்பால், வெண்மை.
பால்கட்டுதல் - பால்கொள்ளுதல், வைசூரிப்பால், குற்றுதல்.
பால்கறத்தல் - பால்பிதிர்த்தல்.
பால்தோய்தல் - பாலுறைதல்.
பால்தோய்த்தல் - பாலுறைவித்தல்.
பால்பகாவஃறிணைப்பெயர் - பால்பகுத்தலின்றி நிற்கு மஃறிணைப்பெயர், (உ-ம்) மாடுவந்தது.
பால்பகாவுயர்திணைப்பெயர் - பால்பகுத்தலின்றி நிற்கு முயர்திணைப்பெயர் (உ-ம்) மக்கள்வந்தார்.
பால்பிடிபதம் - பயிர்க்கதிர் பாலடையும் பதம்.
பால்மரம் - பாலுள்ளமரம்.
பால்மறத்தல் - பால்குடிமறத்தல்.
பால்மறுத்தல் - பால்வற்றுதல்.
பால்மாறிக்கை - சோம்பு.
பால்மாறுதல் - சோம்பாயிருத்தல்.
பால்முடங்கி - ஒருபூடு.
பால்முட்டான் - ஒருமீன்.
பால்வண்ணன் - பலராமன்.
பால்மேனியாள் - சரசுவதி.
பால்வழு - பான்மயக்கம்.
பால்வண்ணநாதர் - திருக்கழிப்பாலையிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பால்வனை-திருபட்டீச்சுரத்திலேகோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
பால்வளைநாயகி - திருச்சக்கரப்பள்ளியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
பால்வீதிமண்டலம் - வாணட்சரேகையிற்றோன்றும் சோதிவரி.
பால்வெடித்தல்-நென்முதலான தானியம் பாலடையாது விள்ளல்.
பால்வெள்ளைமண் - சுதைமண்.
பாவகம்-இயல்பு, கருத்து, உருவு, கொலை, சேங்கொட்டை, தூய்மை, தோற்றம், பாவனை, மனதினன்பை வெளிப்படுத்தல்.
பாவகன் - அக்கினிதேவன், கற்றோன், சுத்தமடைந்தோன், சொரூபி, தூய்மை செய்வோன், நெருப்பு.
பாவகாரி - பாவாத்துமா.
பாவகி - முருகன்.
பாவசம் - காமம்.
பாவசன் - மன்மதன்.
பாவடம் - பாவாடம்.
பாவட்சயம் - பாவநிவிர்த்தி.
பாவட்டை-ஆடாதோடை திரணைச்செடி.
பாவட்டைச்சக்களத்தி-ஒருசெடி.
பாவண்ணம் - வண்ண பேதங்களில் ஒன்று.
பாவநாசம்-ஒரூர், ஒருநதி, பாவநீக்குதல்.
பாபநிவாரணம் } பாவநீக்குதல்.
பாவநிவிர்த்தி }

பாவமன்னிப்பு - பாவப்பொறுதி.
பாவமூர்த்திகள் - கீழ்மக்கள், வேடர்.
பாவம் - அக்கிரமம்,அதிட்டவீனம், ஆத்துமா,இயக்கம், இயங்குதிணை, இயல்பு, உலகம், உள்ளது, கருத்து, கருப்பை,செயல்,சொற்பொருள்,சொன்மூலம்,தன்மை, நோக்கம்,பரதவுறுப்புளொன்று, பாபம், பாவனை, பிறப்பு, பொருள், பொழுதுபோக்கு,போதனை, மெய்ப்பாட்டுக் குறிப்பு.
பாவலர் - கவிகள், புலவர்.
பாவல் - பாதகுறடு,பாவுதல், மரக்கலத்தோருறுப்பு.
பாவவாளி - பாவி.
பாவவிமோசனம் - பாவநிவிர்த்தி.
பாவனகடுக்காய் - ஒருவகைகக்டுக்காய்.
பாவனத்துவனி } சங்கு.
பாவனத்தொனி }
பாவனதீர்த்தம் - புண்ணியதீர்த்தம்.
பாவனம் - அத்தாட்சி,அலங்கரிப்பு,ஆப்பி, ஆராய்வு, இணைவு, எண்ணம், கருத லனுமானம் அது அளவையெட்டினொன்று, சுத்திசெய்தல், தவம், தியானம், தூபம், தூய்துசெய்தது, தூய்மை.
பாவனன் - அனுமன், ஒரு மஹருஷி புத்திரன், தீ, வியாசன, வீமன்.
பாவனுதீதம் - பாவனைக் கெட்டாதது.
பாவனுவுருவகம் - உரூபகா லங்காரத்தொன்று.
பாவனி - கங்கை, துளசி, பசு.
பாவனை-எண்ணம்,தியானம், நடத்தை, மாதிரி.
பாவனைபண்ணுதல் - பாசாங்குபண்ணல், பாவித்தல், மாரீசம்பண்ணுதல்.
பாவாடம் - நாவறுத்தல்.
பாவாடன் - சுத்தன், தூர்த்தன்.
பாவாடை - கோலம், நிலத்தில் விரிக்குஞ்சீலை, பெண்களாடை.
பாவாடைப்பூ - இலுப்பைப்பூ.
பாவாடையமுது-ஒருவகை நைவேத்தியம்.
பாவாணர் - புலவர்.
பாவாத்துமா - பாவி.
பாவாறுகை - சாயை.
பாவார்த்தம்-சொற்பொருள், வெளியருத்தம்.
பாவாற்றி - நெய்வார்குச்சு.
பாவி - உள்ளது, சுபாவி, தீயோன், பாவியென்னேவல், பேதை.
பாவிகம் - ஓரலங்காரம், அது சென்றதையும் வருவதையும் நிகழ்வதாகச் சொல்லுதல், காப்பியமாய் முடியவுரைப்பது.
பாவிதம் - கலப்பு,கூட்டு,சங்கற்பித்தல், சம்மதம், பாவிப்பு, பேறு.
பாவித்தல் -பாவனைசெய்தல்,வழங்கல்.
பாவித்திரம் - மூன்றுலகம்.
பாவிப்பு - பாவனை.
பாவினம் - பாக்களினமாகியஅகவற்பா கலிப்பா நூற்பா மருட்பா வஞ்சிப்பா, வெண்பா என்னும் பாக்களுமிவற்றின் விகற்பங்களுமாம்.
பாவின்புணர்ப்பு - ஓரலங்காரம்அதுஒரு பாட்டைப் பிரித்து வாசிக்க வெவ்வேறு பாட்டாகவரத் தொடுத்தல்.
பாவு - பா, பாவென்னேவல்.
பாவுகம் - சந்தோஷம், சுபதினம்.
பாவுகல் - வரிசைபடப் பரப்பினகல்.
பாவுதல் - தாண்டல்,நடுதல்,பரப்புதல், பரம்புதல், பற்றுதல், வேர்வைத்தல், விரித்தல்.
பாவுபலகை - மேல்மச்சு.
பாவை - சித்திரப்பாவை பதிமை, பெண், மதில், இலக்குமிக்கூத்து.
பாவைக்கயிறு - பாவையாட்டுங்கயிறு.
பாவைகூத்து - பாவையாட்டுதல்.
பாவைமன்றம் - காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஐவகைமன்றத்து ளொன்று, இது அரசனுடைய செங்கோல்கோடுதல் முதலிய குற்ற முண்டானல் அவற்றைப் பாவை தெரிவிப்பதற்கிடமாயுள்ளது.
பாவோடல் - இழையோடுதடி,பாவோடுதல்.
பாவோடுதல் - நெய்வார்தொழிலினொன்று.
பாவோதயம் - ஓரலங்காரம்.
பாழாக்குதல்-அழித்தல்,கெடுத்தல்.
பாழாதல் - ஊழ்த்தல், கெடுதல்,சினத்தல்.
பாழி - அகலம், அளை, ஆகாயம், உறை, ஊர், கடல், கிராமம், குகை,சயனம், சிறுகுளம், தேவர்கோயில், பகைவரூர், பாழ், பெருமை, மருதநிலத்தூர், முனிவர் வாசம், வலி, விலங்கின்படுக்கை.

பாழித்தியம் - ஒருநூல்.
பாழ் - அழிவு, ஆகாயம், கெடுதி, சூனியம், நட்டம், பாழென்னேவல், வீண், வெறுமை.
பாழ்க்கடி - கெடுதல், கேடு.
பாழ்க்கடித்தல் - பாழாக்கல்.
பாழ்க்கடிப்பு - கெடுத்தல், கேடு.
பாழாக்குதல் - பாழாக்கல், பாழாதல்.
பாழ்ங்கிணறு- செடிக்கிணறு,நீரில்லாக்கிணறு.
பாழ்ங்குடி - கெடுகுடி.
பாழ்ங்கோயில் - பாழடைந்தகோயில்.
பாழ்ஞ்சேரி - பாழ்பட்டபட்டினம்.
பாழ்த்தல் - பாழாதல்.
பாழ்நத்தம் - பாழ்பட்டவூர்.
பாழ்நிலம் - செய்கையற்றநிலம்,பாலைநிலம்.
பாழ்ந்தலம் - பாழாயிருக்குமிடம்.
பாழ்படுதல் - அழிதல், கெடுதல்.
பாழ்மூலை - வழங்காமூலை.
பாழ்வாயன் - வீண்பேச்சுக்காரன்.
பாழ்வாய்கூறல் - நியாயமற்ற முறைப்பாடு, வீண்பேச்சு.
பாழ்வாய்ச்சி - வீண்பேச்சுக்காரி.
பாழ்வீடு - குடியில்லாதவீடு.
பாழ்வெளி-அந்தரவெளி,சூனியவெளி.
பாளச்சீலை - மருந்துபூசிக்காயவைத்தபுடவை.
பாளபந்து-தேவநாகரஎழுத்து.
பாளம் - கட்டி, சீலையின்கிழிவு, பொற்பாள முதலியன, வெடிப்பு.
பாளயம் - பாளையம்.
பாளாசக்கயிறு - குதிரை கால்கட்டுங்கயிறு.
பாளி - அடையாளம், பாசறை.
பாளிக்கிரமம் - வேதமோதுங்கிரமம்.
பாளிதம் - கண்டசருக்கரை,கருப்பூரம், குழம்பு, சந்தனம், சோறு, பட்டுப்புடைவை, பாற்சோறு.
பாளை - கமுகு, தெங்கு, பனை முதலியவற்றின் பாளை, பதர், பாலப்பருவத்திற்கு முன்பருவம்.
பாளைப்பருவம் - கருவிலோர்பருவம்.
பாளைமடல் - பாளையை மூடியமடல்.
பாளையகாரன் - அரசர்க்குக்கீழ்ச்சிலசேனையோடும் ஒவ்வோர் புறங்கட்கதிகாரியாயிருப்போன், கூடாரத்திலிருப்பவன், படைத்தலைவன்.
பாளையப்பேட்டு - பாளையகாரன்.
பாளையமிறங்குதல் - கூடாரம் போடுதல், படைவந்திருத்தல்.
பாளையமெழும்பல் - படையெழுச்சி.
பாளையம் - குறுநிலமன்னரூர், சுற்றூர், படை, பாசறை.
பாளையம்போடுதல் - நெடுக விருத்தல், பாளையமடித்தல்.
பாளையரம் - ஓரரம்.
பாளைவருதல் - தெங்குமுதலியவற்றிற்பாளை புறப்படல்.
பாளைவெடித்தல் - பாளைவிடல்.
பாறல் - அடிப்பறிதல், இடபவிராசி, எருது, ஓடல், பொதியெருது, பொருதல், நீங்கல்.
பாறு - பருந்து, பாறென்னேவல்,மாக்கலம்.
பாறுதல் - அடிப்பறிதல், ஓடுதல்.
பாறை -கற்பாறைமுதலியன,திட்டை.
பாறையுப்பு - ஒருப்பு.
பாற்கடம் - பாற்குடம்.
பாற்கடல் - சத்தசமுத்திரத்தொன்று.
பாற்கடற்பிறந்தாள் - இலக்குமி.
பாற்கடற்றுயில்வோன் - விட்டுணு.
பாற்கட்டுப்பயிர் - முட்டுக்காய்ப் பருவத்திற்பயிர்.
பாற்கரம் - உபநிட்த முப்பத்திரண்டினொன்று, பொன், வீரம்.
பாற்கரன், பாஸ்கரன் - ஆதித்தன், தீ, வீரன்.
பாற்கரியோன் - தேவேந்திரன்.
பாற்கலசம் - பால்கறக்குங் கலசம்.
பாற்கவடி - பாற்சோகி.
பாற்காய் - பாலுண்ணி, பாற்பிடியான காய்.
பாற்காரன் - பால்விற்போன்.
பாற்காரி - குழந்தைப்பிள்ளைக்காரி,செவிலித்தாய், பால்விற்பவள்.
பாற்காவடி - பால்கொண்டுபோகுங்காவடி.
பாற்குடம் - பாற்கும்பம்.
பாற்கும்பம் - பாற்குடம்.
பாற்குழந்தை - கைக்குழந்தை, முலைப்பாலுண்ணும் பிள்ளை.
பாற்குழம்பு - குழம்புப்பால்,
பாற்குனம், பாற்குனி - உத்திரநாள்,பங்குனிமாதம்.
பாற்குனிகம் - பங்குனி.
பாற்கெண்டை - ஒருமீன்.

பாற்கொவ்வை - ஒருகொவ்வை.
பாற்சிரசந்தன் - கெருடபச்சை.
பாற்சுண்டு - பாலினடிப்பற்று.
பாற்சுறு - ஒரு சுறுமீன்.
பாற்சொக்கு - செல்லச்சொக்கு.
பாற்சொற்றி - பாற்சோற்றி.
பாற்சோறு - பாலன்னம்.
பாற்சோற்றி - ஒருபூண்டு.
பாற்பசு - கவை.
பாற்பள்ளயம் - ஒருகுளிர்த்தி, பால்விட்டுப் பொங்கிய அன்னப்படைப்பு.
பாற்பீர்க்கு - வெள்ளைப்பீர்க்கு.
பாற்புடல் - வெண்புடல்.
பாற்பொங்கல் - பாலோதனம்.
பாற்று - உரியது (உ-ம்) வைக்கற் பாற்றன்று பாலது.
பாற்றுத்தம் - வெண்டுத்தம்.
பானகம் - ஒருவகை நீர்மோர்.
பானகோட்டிகை - மதுக்கடை.
பானக்கம் - பானகம்.
பானசம் - பலாப்பழத்தட்டமது.
பானசியர் - மடையர்.
பானபரம் - குடித்தல்.
பானபலி - மதுப்பலி.
பானபாசனம் - குடிக்கும் பாத்திரம்.
பானபாத்திரம் - வள்ளம், கிண்ணம்.
பானம் - கள், குடித்தல், பருகுவன.
பானம்பண்ணுதல் - குடித்தல்.
பானல் - கடல், கருங்குவளை, கள், குதிரை மருதநிலம், வயல், வெற்றிலை
பானாள் - அத்தசாமம், மத்தியானம், பாதிநாள்.
பானி - படை, பருகுவோன், பானியென்னேவல்.
பானிக்குருச்சி - சீனக்காரம்.
பானித்தல் - குடித்தல்.
பானியம் - பாநபாத்திரம்.
பானியவல்லி - வலம்புரிக்கொடி.
பானீயம் - நீர், பருகுவன.
பானு - அரசன், அழகு, அழகுடையாள், எஜமான், ஒளி, கிரணம், சிற்பநூன் முப்பத்திரண்டினொன்று, சூரியன்.
பானு - வசுதேவன் தம்பி, சூரியன், தக்ஷப்ரஜாபதி மகன்.
பானுகோபன் - இவன் சூரபன்மனுக்குப் பதுமகோமளையிடத்துப் பிறந்த புதல்வன். இவன்தொட்டிலின் கண்ணே மகவாய்க் கிடக்குநாளி லொருநாள் தன் கண் கூசும்படி சூரியன் பிரகாசித்தா னென்று கோபித்து அவனைப் பிடித்துவந்துதொட்டிலிற் றளைசெய்தவனாதலாலேபானுகோபனென்னும்பெயர்பெற்றான். (பானு) சூரியன், கோபன் காய்ந்தவன். இவன் சுப்பிரமணிய யுத்தத்தி லுயிர்துறந்தவன்.
பானுபலை - வாழை.
பானுபூமி - மகாதலலோகம்.
பானுமதி - கார்த்தவீரியார்ச்சுனன் தங்கை. அகம்யாதி பாரி. துரியோதனன் பாரி. சகதேவன் பாரி.
பானுமந்தன், பானுமான் - சீதாதேவி சகோதரன்
பானுமைந்தன் - கண்ணன், சனி, சுக்கிரீவன், நமன்.
பானுவாசரம், பானுவாரம் - ஞாயிற்றுக்கிழமை.
பானை - மிடா.
பானைக்குடுவை - சிறுபானை.
பானைமூடி - மல்லாய்.
பானைவெடிச்சான் - புளவைகொல்லி.
பான் - எதிர்காலவிடைச்சொல் (உ-ம்) உண்பான்வந்தான், பத்தினோர்திரிபு (உ-ம்) ஒருபான்.
பான்மயக்கம் - ஒரு பாற்குரிய சொல் வேறோர்பாற்குரியசொல்லுடன்வழங்கல்.
பான்மாறுதல் - பான்மயங்குதல்.
பான்முளை - ஊழ்முளை.
பான்மை - குணம், தகுதி, தன்மை, பங்கு.
பாஷ்கலி - பாஷ்கலன் புத்திரன்.
பாஹிமிகம் - சிந்துநதிக்குச் சமீபத்திலுள்ள தேசம்.
பாஹிலிகன் - குருவமிசம் பிரதிபன் புத்திரன். சோமதத்தன் தந்தை. பூரிசிரவன் பாட்டன். இவன் பாரதயுத்தத்திலிறந்தவன்.
பாஹூகன் - சகரன் தந்தை. விருகன் புத்திரன். நளன் இருதுபர்னனிடம் சென்றிருந்த காலத்துத் தான் பூண்ட பெயர்.
பாஹூதை - சாவதிநதியோடு சேருகின்ற ஒரு நதி. மகாநதியிற் சலக்கின்ற சிறுநதி.

# பி



பி - அழகு, ஓரெழுத்து.
பிகபந்து - மாமரம்.
பிகம் - குயில்.
பிகவிரோதி - மேகம்.
பிகராகம் } மாமரம்.
பிகவல்லபம் }
பிகசத்ரு - மேகம்.
பிகாங்கம் - ஒருபுள்.
பிகானந்தம் - வசந்தகாலம்.
பிகி - பெண்குயில்.
பிகு- சத்தத்தினொன்றகை,பிகுவு,பெல [ன்.
பிகுதல் - தளர்ந்ததை வலிதாக்குதல்.
பிகுப்பட்டை - குதிரைமேற் சேணங் கட்டும் வார்.
பிகுவு - இறுக்கம், பெருமை.
பிகுவேற்றுதல் - இறுக்கல், பிளிதல், வில் வளைத்தல்.
பிக்கம் - யானைக்கன்று.
பிக்கு-ஒவ்வாமை,கலக்கடி,சிக்கு,பிசகு.
பிக்குப்பிசகு - பிசகு.
பிங்கசடன் - சிவபிரான்.
பிங்கதிருட்டி - சிங்கம்.
பிங்கம் - இளங்கன்று, பொன்மைகலந்த சிவப்பு.
பிங்கலந்தை - பிங்கலன்செய்த நிகண்டு
பிங்கலமுனிவர் - திவாகரநிகண்டுசெய்ததிவாகரர் புத்திரனர். இவர் சோழவமிசத்தி லுதித்தவரே யாயினும் துறவு பூண்டு தமிழ்நூலாராய்ச்சியிலே தமது காலத்தைப் போக்கியவர். இவர் செய்தநூல், பிங்கல நிகண்டு. இவர் காலம் நச்சினர்க்கினியர் காலத்துக்கு முந்தியது.
பிங்கலம் - அரிதாரநிறம், ஆந்தை,கீரி, குபேரநவநிதியினொன்று, குரங்கு, பிங்கலந்தை, பித்தளை, பொன், பொன்மைநிறம், வடக்கு.
பிங்கலலோஹம் - பித்தளை.
பிங்கலன் - ஒரு நிகண்டாசிரியன்,குபேரன், சிவபிரான், சூரியன், தீ.
ங்கலை - ஆந்தை, தசநாடியினொன்று அது வலமூக்கினிற்பது, பார்வதி, பிங்களை, வலமூக்கிற்சரம்.
பிங்கள - ஐம்பத்தோருவதாண்டு.
பிங்களம் - களிம்பு,பின்னிதம்,வஞ்சகம்.
பிங்களித்தல் - அருக்களித்தல், பின்போடுதல்.
பிங்களை - ஆயுட்காலத்தின் மூன்றிலோர் பகுதி, தக்ஷிணதிக்குக் காவல் பூண்ட யானைக்குப் பெண்யானை.
பிங்கன் - பாலகன்.
பிங்காசம் - ஒருவகைப்பொன்.
பிங்காசி - அவுரி.
பிங்காட்சன் - சிவபிரான்.
பிங்கி - வன்னிமரம்.
பிங்கேட்சணன் - சிவபெருமான்.
பிசகடி - தடை.
பிசகு - ஒவ்வாமை, தடை, தப்பிதம், பிசகென்னேவல்.
பிசகுதல் - தவறுதல், பிசகுபடல்,விலகுதல்.
பிசகுபண்ணுதல் - தடைபண்ணுதல்.
பிசக்கு - பிசகு, பிசகென்னேவல்.
பிசக்குதல் - தடுத்தல், நலக்குதல்.
பிசங்கதை - கருமைக்கலந்த பொன்மை, வெண்மை.
பிசங்கம் - பொன்மைகலந்த சிவப்பு.
பிசங்கல் } நலங்கல்.
பிசங்குதல் }
பிசண்டம் - மிருகத்தின் முதுகு, வயிறு.
பிசண்டிலன் - பெருவயிறுள்ளவன்.
பிசத்துதல் - பிதற்றுதல்.
பிசம் - இறகு, தாமரைவளையம்.
பிசல் - எருத்துத்திமில், புசல்.
பிசவ்வியம் - பருத்தி.
பிசறல் } கலத்தல்.
பிசறுதல் }
பிசனம் - செஞ்சந்தனம்.
பிசாசகி - குபேரன்.
பிசாசகை - ரிக்ஷபர்வதத்திலுற்பத்தியாகுமொரு நதி.
பிசாசம் - பேய், பேய்க்கரும்பு. [ன்.
பிசாசர் - தேவயோனியிற் பிறந்தோரிழிகுண சிருஷ்டிகள். [ன்.
பிசாசன்-பேய்,பேய்க்குணமுடையோ
பிசாசிகை - கிணற்றுப்பெண் தவளை.
பிசாசு - பிசாசம்.
பிசாச்சி - சடாமாஞ்சில்.
பிசாரதம் - நூதனம்.
பிசானம் - ஒருநெல்.

பிசான் - அழுக்கு, பிசு பிசுப்பானது.
பிசி - அரும்பொருள், சோறு, பொய்.
பிசிண்டம் - பிசண்டம்.
பிசிதம் - உதாரணம், ஊன், நீர், வேம்பு.
பிசிதாசி - ஊனுண்போன்.
பிசிதாசனர் - இராக்கதர்.
பிசிர் - துளிமழை.
பிசினம் - கோட்சொல்.
பிசினன் - கோளன்.
பிசினறி - பிசினேறி.
பிசினி - கோட்சொல்வோன், பசை.
பிசினேறி - உலோபி, ஒருமரம்.
பிசின் - சாம்பிராணி, நீர்வஞ்சி, பஞ்சினூல், மரப்பிசின், வெட்டுக்குருத்து.
பிசு - இரண்டு தலாங்கொண்டது, ஒரசுரன், ஒருநோய், பருத்தி.
பிசுகம் - உத்தாமணி.
பிசுகுதல் - கொசறுதல்.
பிசுக்கு - கிள்ளீடு, தொகையீடு, பீர்க்கு.
பிசுங்கொட்டுதல் - பிசான்பிடித்தல்.
பிசுணம் - சிதேவியார்.
பிசுனூலம் - பருத்தி.
பிசுபிசுப்பு - பிசான்.
பிசுபிசெனல் - பிசுபிசுப்புக் குறிப்பு.
பிசுமத்தம் } வேம்பு.
பிசுமந்தம் }
பிசுலம் - நீர்க்காகம், பிஞ்சு.
பிசுனத்தனம் - பிசினித்தனம்.
பிசுனம் - உலோபம், காகம், பருத்தி, மஞ்சள்.
பிசுனவசனம் - கோட்சொல்பழிமொழி
பிசுனன் } உலோபன், கோளன், பொய்யன், வேவாள்.
பிசுனி }
பிசுனித்தனம் - உலோபத்தனம்.
பிசுகம் - வேலிப்பருத்தி.
பிசைதல் } சேர்த்துக்கலத்தல், பசைதல்.
பிசைவு }
பிச்சடம் - ஈயம், துத்தநாகம்.
பிச்சப்பழம் - வத்தகுப்பழம்.
பிச்சம் - ஆண்மயிர், இருவேலி, இறகு, காஞ்சிரை, குடுமி, பீலிக்குஞ்சம், முடி, வத்தகு, வெண்குடை.
பிச்சர் - பித்தர், மருளர்.
பிச்சல் - பிய்த்தல்.
பிச்சாகாரம் - இரப்பூண்.
பிச்சாடனம் - இரக்குதல்.
பிச்சாசரன் - பிச்சைக்காரன்.
பிச்சாடிக்கயிறு - பாளாசக்கயிறு.
பிச்சாபாத்திரம் - இரப்போர்கலம்.
பிச்சி - ஒருகொடி, ஒருபெண், ஒரு பிசாசம், ஒருமல்லிகை, கொம்மட்டி, சிறுசண்பகம்.
பிச்சிலம் - ஆணம், ஈரம், கஞ்சி.
பிச்சு - பித்து.
பிச்சை - இரப்பு, ஒழுங்கு, சிசுமரம், சோற்றுநுரை, பாக்கு, மார்ச்சட்டை வத்தகுக்கொடி, வரிசை, வாழை.
பிச்சைக்காரன் - இரப்போன்.
பிச்சைக்குடி - இரப்புக்குடி.
பிச்சைச்சோறு - அறச்சோறு.
பிச்சைத்தனம் - இரப்புத்தனம்எளிமை.
பிச்சைபண்ணுதல் - இரத்தல்.
பிச்சைமுட்டி - பிடியரிசி.
பிச்சையுண்ணி - யாசகி.
பிச்சையெடுத்தல் - இரத்தல்.
பிஞ்சகம் - இறகு, கொலை, தலைக்கோலம்.
பிஞ்சகன் - கொலைக்காரன், சிவபிரான்.
பிஞ்சடம் - பீளை.
பிஞ்சம் - இறகு, கொலை, சத்திக்கொடி, பெலம்.
பிஞ்சரம் - அரிதாரம், கருமைகலந்த சிவப்பு, பொன்.
பிஞ்சலம் - அரிதாரம், தருப்பை.
பிஞ்சனம் - நூலெஃகும் வில்.
பிஞ்சானம் - பொன்.
பிஞ்சிதை - கொட்டையிட்ட பஞ்சு.
பிஞ்சு - இளங்காய், முற்றாமை.
பிஞ்சூஷம் - காதுகுறும்பி.
பிஞ்சூலம் - விளக்குத்திரி.
பிஞ்சூலை - தருப்பைப்புற்கட்டு.
பிஞ்சேடம் - கண்ணிற்பீளை.
பிஞ்சை - பஞ்சு, மஞ்சள்.
பிஞ்சோலம் - இலை முதலியவற்றாலெழுமொலி.
பிஞ்ஞகம் - தலைக்கோலம்.
பிஞ்ஞகன் - சிவபிரான்.
பிஞ்ஞை - நப்பின்னை.
பிடகம் - கோரிகை, நூல், பிச்சை, புத்தாகமம், பெட்டி.
பிடகன் - புத்தன், வைத்தியன்.
பிடகாரி - விடவைத்தியன்.
பிடகை - பூந்தட்டு.
பிடக்கு - வைத்தியன்.
பிடங்கம் - பெருவள்ளரி.

பிடங்கு - ஆயுதங்களின் பிற்பக்கம், சோங்கு.
பிடம் - புடம், பெட்டி, மரக்கால்.
பிடாம் - ஒருபுல், தயிர்கடைதறி, முகப்பரு.
பிடரி / பிடர் / பிடர்த்தலை - புறங்கழுத்து.
பிடர்ப்பிளவை - ஒருசிலந்தி.
பிடவம் / பிடவு - ஒருசெடி, முதுகு.
பிடவை - புடவை.
பிடாகன் ஒரு முனிவன்.
பிடாந்திரம் - இல்லாப்பழி.
பிடாரச்சொல் - நூதனச்சொல், வாகடச்சொல்.
பிடாரம் - வைத்தியவாகடம்.
பிடாரர் - குறவர், வைத்தியர்.
பிடாரன் - குறவன், பாம்புபிடிப்போன், வைத்தியன்.
பிடாரி - காளி, பிடாரிதேவி.
பிடாரிச்சி - குறப்பெண்.
பிடி - எலம், ஒட்டகம், கவரி, யானையிவற்றின்பெண், காமுட்டி, கிரகிப்பு, கைப்பிடி, கைப்பணம், நம்பிக்கை, நால்விரல் கொண்ட அளவு, பற்றுகை, பிடியென்னேவல், பெலன்.
பிடிகடா - சத்துவாங்கினகடா.
பிடிகம் - பிள்ளைக்கைவளை.
பிடிகாரர் - வேட்டைக்காரர்.
பிடிகொடுத்தல் - இடம்கொடுத்தல்.
பிடிக்கொழுக்கட்டை - ஒருவகைக்கொழுக்கட்டை.
பிடிச்சராவி - கம்மாளர்கருவியில்ஒன்று.
பிடிச்சீலை - பிடித்துணி.
பிடிதம் - பிச்சை.
பிடித்தபிடி - பற்றிக்கொண்ட நிலை, விடாப்பிடி.
பிடித்தம் - அபராதம், பிடிக்கும் காசு, வழக்கமின்றிப்போதல்.
பிடித்தல் - அடுப்பு முதலிய பிடித்தல், உடன்படல், உட்கொள்ளல், கடல், கப்பாத்துப்பண்ணல், காய் பூ முதலிய பற்றல், சளி, முதலியபற்றல், சார்தல், சுமையெடுத்தல், தெண்டுதல், தைத்தல், நீக்கியெடுத்தல், பட்டைகோலுதல், பற்றல், மட்டுக்கட்டுதல், மனதுக்கிணக்குதல், முடித்தல், வசமாக்கல், வேண்டியதாயிருத்தல்.
பிடித்திராவி - பிடிச்சராவி.
பிடிநடை - பெண் யானைபோலும் நடை.
பிடிபடுதல் - அகப்படுதல்மட்டுக்கட்டுதல்.
பிடிபாடு - அகப்படுதல், செல்விக்கை, சேர்மானம், பட்சம், பிசினித்தினம்.
பிடிப்பிட்டு - ஒருபிட்டு.
பிடிப்பித்தல் - விதையடித்தல்.
பிடிப்பு - சேர்மானம், பிடித்தல்.
பிடிமானம் - அன்பானபற்று, உலோபம், உறுதி, கையிருப்பு, சேர்மானம், தேட்டம்.
பிடியரிசி - தருமஞ் செய்ய அள்ளி வைக்குமரிசி.
பிடியல் - சீலை, நல்லாடை.
பிடியன் - கொள்ளத்தக்கது, பெண்யானை.
பிடியாள் - அமஞ்சியாள், பலபந்தமாகப் பிடித்த ஆள்.
பிடிவாதக்காரன் - பிடிவாதி.
பிடிவாதம் - கொண்டதுவிடாமை முரட்டு வைராக்கியம்.
பிடிவாதி - கொண்டது விடாதுநிற்போன்.
பிடுக்கு - பனம்பூ, பீசம்.
பிடுங்கல் / பிடுங்குதல் - கவர்தல், பறித்தல்.
பிடை - மூசை.
பிடையன் - புடையன்.
பிட்குதல் - பிள்ளச்செய்தல்.
பிட்சகன் - இரப்போன்.
பிட்சாசரம் / பிட்சாடனம் - இரத்தல்.
பிட்சாதானம் - தருமங்கொடுத்தல்.
பிட்சாபாத்திரம் - இரப்போர்கலம்.
பிட்சான்னம் - பிட்சைச்சோறு.
பிட்சை - ஊழியம், கூலி, யாசகம்.
பிட்டகம் - பலகாரம், பல்லழுக்கு.
பிட்டபம் - உலகம்.
பிட்டம் - இடித்தமா, ஈயம், சகனம், சிற்றுண்டி, மாவு.
பிட்டர் - ஆடுதின்னுப்பாளை.
பிட்டல் - பிட்குதல்.
பிட்டவத்தி - ஒரு பணிகாரம்.
பிட்டி - சிறுகூடை.
பிட்டிலம் - ஏலம்.

பிட்டு - சிற்றுண்டி, தினைமா.
பிட்டை - அண்டவாதம், விட்டை.
பிணக்கம் - பிணங்கல்.
பிணக்கன் - பிணக்கக்காரன்.
பிணக்காடு - சுடுகாடு, யுத்தகளம்.
பிணக்கு - சண்டை, நெருக்கம், பிணக்கென்னேவல், வனப்பேதம்.
பிணக்குதல் - கட்டுதல்.
பிணங்கல், பிணங்குதல் } குழம்புதல்.சண்டைசெய்தல், நெருங்கல்,பின்னல், மாறுபடல்.
பிணந்தின்னி - மாமிசபேதி.
பிணந்தின்னிப்பிச்சி - ஒரு பிசாசம்.
பிணப்பறை - சாப்பறை.
பிணம் - சவம், பிசாசம்.
பிணம்வீழ்களம் - சுடுகாடு,போர்க்களம்.
பிணர் - சோங்கு, சருச்சரைவடிவு.
பிணவறையன் - பருந்தேகி.
பிணவு - கவரிமா நாய் பன்றி புல்வாய் இவற்றின்பெண், பெண்பொது, விலங்கின் பெண்.
பிணவெடில் - சாவெடில்.
பிணு - பிணவு.
பிணுரம் - பெரிய சடலமுள்ளது.
பிணி - ஊடைநூலைப்பிணிக்கு, துற்படை, ஒரு பிசாசம், கட்டு,துன்பம், நோய், பிணியென்னேவல்.
பிணிகை - கச்சு.
பிணிக்குறை - பேய்க்குறை.
பிணித்தல் - கட்டல்.
பிணிப்பு - கட்டு. [றும்பேய்.
பிணிப்பேய் - பிள்ளைகளை நோய்செய்
பிணிமிதித்தல் - நெய்வார் தொழிலிலொன்று.
பிணிமுகம் - அன்னம்,பறவைப்பொது, மயில், முருகன் யானை.
பிணியன், பிணியாளன் } நோயாளன்.
பிணியாளி - நோயாளி.
பிணிபோலை - பிணிக்குறைக்குக் கட்டுமட்சரவோலை.
பிணை - ஆசை,உடன்பாடு, ஒட்டகம்,கவரிமா கழுதை குதிரை நாய் பன்றி புல்வாய் யானை யிவற்றின் பெண், கட்டு, பிணையென்னேவல், பூமாலை, மான், வதிட்பொருள்.
பிணைகாரன், பிணைக்காரன் } பிணைப்பட்டவன்.
பிணைதல் - இணைத்தல், கலத்தல்.
பிணைத்தல் - இணைத்தல், கட்டல் தொடுத்தல்.
பிணைபடுதல், பிணைப்படுதல் } இறுக்க உத்தரவாதியா யுட்படல், கட்டுப்பாட்டிற் குள்ளாதல்.
பிணைப்பு - இணைப்பு.
பிணையடித்தல் - பிணைத்தல்.
பிணையல் - இரணை,கதவு முதலியவற்றிலிடு மிணைப்புச்சலாகை, தொடுவை, பின்னரியமாலை,மாலை,இரட்டைக்கை
பிணையாளன், பிணையாளி } உத்தரவாதத்திற் குட்பட்டவன்.
பிணைவு - இணைவு, புணர்ச்சி.
பிண்டகம் - நறுந்தூபம்.
பிண்டகருமம் - பிதிர்பூசை.
பிண்டகன் - பிதிர்பிண்டமிடுவோன்.
பிண்டகாப்பு - சோறு.
பிண்டகோசம் - வாசனைப்பிசின்.
பிண்டசன் - யாசகன்.
பிண்டசூத்திரம் - தொகைச்சூத்திரம்.
பிண்டதன் - உபகாரி,கிட்டினவுறவன், தாபரிப்போன், பிதிர்பிண்ட மிடுவோன்.
பிண்டதானம் - பிண்டமிடுதல்.
பிண்டபாதம் - யானை.
பிண்டபுட்பம் - அசோகு, செவ்வந்தி.
பிண்டப்பிரசாதம் - பிதிருணவு.
பிண்டப்பிரதானம் - பிதிர்பூசை.
பிண்டப்புறனடை - புறனடைகளிலொன்று.
பிண்டப்பொருள் - குவிக்கப்பட்டபொருள், சடப்பொருள், தொகுக்கப்பட்ட பொருள்.
பிண்டம் - இரும்பு,உடல்,உண்டைகந்தவருக்கம், கருப்பம், கவளம், கற்கண்டு, கால்வட்டத்திருபத்து நான்கிலொன்று, கூட்டம், சிவன், செவ்வந்தி, சோறு, தொகை, பிச்சை, பெலன், போசனம், மாமிசம், மூலபதம், விலா, வெண்ணெய். விளாங்களிப் பிரமாணமாகப் பிதிர் தேவதைகளுக்கு இடப்படும் பலி.
பிண்டம்விழுதல் - கருப்பம் விழுதல்.
பிண்டவைத்தல் - பிதிர்கடன்செய்தல்

பிண்டரோபணம் - நாரத்தை.
பிண்டலம் - அணை, பாலம்.
பிண்டவுரை - பொழிப்புரை.
பிண்டனம் - பிண்டலம்.
பிண்டாசன் - யாசகன்.
பிண்டாப்பிரம் - ஆலங்கட்டி.
பிண்டாயசம் - உருக்கு.
பிண்டாரம் - ஒருபுண்ணியக்ஷேத்திரம். இது துரவாரகாபுரசமீபத்துள்ளது.
பிண்டாரன் - இடையன் யாசகன்.
பிண்டாரி - கொள்ளைக்காரன்.
பிண்டி-அசோகமரம்,குவிக்கப்பட்டது, கூட்டம்,சில்லினுட்சுருள், தினைமா, தொகுக்கப்பட்டது. னென்மா, பிண்டியென்னேவல், பிண்ணாக்கு, புனர்பூசம், ஒற்றைக்கை, பொகுட்கை.
பிண்டிகரணம் - ருண்டீகரணம்.
பிண்டிகை - ஆசனம்சில்லினுட்சுருள்.
பிண்டிதகம் - மருக்காரை.
பிண்டித்தல் - குவித்தல், தொகுத்தல்.
பிண்டிபாலம் - எறியாயுதம்,
பிண்டிலம் - பாலம்.
பிண்டிலன் - சாதககணிதன்.
பிண்டிவாலம் - பிண்டிபாலம்.
பிண்டிவாகனம் - குந்திருக்கம்.
பிண்டீகரணம் - உண்டையாக்கல்.
பிண்டீகரம் - தொகுப்பு.
பிண்டீதகம் - மருக்கொழுந்து.
பிண்டீரம்-சாரமின்மை,மாதளை.
பிண்ணாக்கு - எண்முதலியவற்றினரைப்பு.
பிண்ணாக்குக்கீரை - ஒருகீரை.
பிண்ணாக்குமாடன் - மதிகேடன்.
பிதகம் - இடி.
பிதாம் - பிளத்தல்.
பிதளை - எண்ணெய்ப்பாத்திரம்.
பிதற்றல் - பலகாற்பேசல்,பேசலாலெழுமொலி.
பிதற்று-பிதற்றல், பிதற்றென்னேவல் மழலை.
பிதற்றுதல் - பிதற்றல்.
பிதா - அருகன், கடவுள், சிவபிரான், தந்தை, பிரமன், பெருநாரை.
பிதாநம் - யானைமேற்கவசம்.
பிதாபிதா - பாட்டன்.
பிதாமகன் - பாட்டன், பிரமன்.
பிதாமகை - பாற்பசு.
பிதி - இடி.
பிதிகம் . பெருங்குரும்பை.
பிதிரம் - பிதி.
பிதிராசாரம் - பிதிர்பூசை.
பிதிராட்சணை - முதுசோம்.
பிதிரார்ச்சிதம் - பிதிரார்ச்சனை.
பிதிருலகம் - பிதிர்பதம்.
பிதிரெக்கியம் - பிதிர்யாகம்.
பிதிர் - கதை, காலநுட்பம், தந்தைவழியின்மூதாக்கள், திவலை,நொடி,பராகம், பிதாபிதிரென்னேவல்,பிதிர்கள், போர்க்கதை, யாகம்ஐந்தினுென்று.
பிதிர்கடன் } சிரார்த்தமுதலியதென்
பிதிர்கருமம் } புலத்தோர் கடன்.
பிதிர்கணம் - அங்கிரசப்பிரசாபதிக்குச் சுவதையிடத்துப் பிறந்தவர்கள் இவர்களேஉலகத்துப் பிரஜாவிருத்திக்கு வித்தாயிருப்பவர்கள்இவர்களேபிதிர்தேவதைகள், வசுருத்திரர் ஆதித்தியர் என்னுமிவர்களுடையரூபங்களையுடையராய்ச் சந்திரலோகத்திருப்பவர்கள் பிதிர்லோகத்தையடை பவர்கள்மீளும்போது,சந்திரனைவிட்டு ஆகாசம்,காற்று,புகை, மேகம்,மழை,வித்துஇவற்றின் வழியாக ஸ்திரீ புருஷர்களையடைந்து பிறப்பார்கள்.
பிதிர்காதகம் பிதாவைக்கொல்லுகை.
பிதிர்காரியம் - பிதிர்க்கடன்.
பிதிர்காலம் - சிரார்த்தபுண்ணியகாலம். அது பதினெண்ணாழிகைதொடங்கியிருபத்துநாலு நாழிகைபரியந்தம்.
பிதிர்கானனம் - மாயானம்.
பிதிர்கிரியை - பிதிர்கருமம்.
பிதிர்குலியை - மலயத்திலுற்பத்திராகுமொருநதி.
பிதிர்க்காதம் - பிதாக்கொலை
பிதிர்க்கிரகம் - சுடுகாடு.
பிதிர்ச்சந்ததி - பிதிர்வழி.
பிதிர்சனம் - மூற்பிதாக்கள்.
பிதிர்சாமான்னியர் - முற்பிதாக்கள்.
பிதிர்சிராத்தம் - பிதாவுடைய பிதிர்பலி.
பிதிர்தல் - உதிர்த்தல், சிதறல்.
பிதிர்தானம் - சிரார்த்ததானங்களினொன்று.
பிதிர்திதி - அமாவாசி.
பிதிர்தினம் - பிதிர்நாள்.
பிதிர்தீர்த்தம் - கெயை கயை,பிதிர்கடமைகழிக்கும் புண்ணிய தீர்த்தம்.
பிதிர்தேவர் - தென்புலத்தார்.

பிதிர்தைவதம் - மகம்.
பிதிர்த்தல் - சொரிவித்தல்.
பிதிர்த்துரோகம் - இறந்தபிதாமுதலோர்க்கு விரோதஞ்செய்தல், பிதிர்கடமை செய்யாது விடல்.
பிதிர்த்துவம் - பிதாத்துவம், பிதிர்தன்மை.
பிதிர்நாள் - அமாவாசி, இறந்தோர்நாள், மகநாள்.
பிதிர்பதம் - தெற்கு.
பிதிர்பதி - நமன், பிதிர்கட்குச் செய்ய வேண்டிய கடமை.
பிதிர்பந்து - பிதாவழிச்சுற்றம். [ன்.
பிதிர்பாந்தவன் - பிதா வழிச்சுற்றத்தா
பிதிர்பிண்டம் - இறந்தோர்க்கிடுமமுது.
பிதிர்பிதிர் - பாட்டன்.
பிதிர்புண்ணியகாலம் - பிதிர்காலம்.
பிதிர்பூசை-பிதிர்கட்குச்செய்யும்பூசை
பிதிர்போசனம் - பிதிருணவு.
பிதிர்ப்பிரசு-பிதாவின்மாதா, மாலைவெளிச்சம்.
பிதிர்மந்திரம் - கோரி, பிதிர்தேவதைகட் குரியமறை.
பிதிர்மேதம் - சிரார்த்தம்.
பிதிர்யானம் - விமானம்.
பிதிர்வசதி - பிதிர்வனம்.
பிதிர்வசனம் - இறந்தோர்வாக்கு.
பிதிர்வழி - பிதாவமிசம்.
பிதிர்வனம் - சுடுகாடு.
பிதிர்வனேசரன் - சிவபிரான்.
பிதிர்வாக்கியபரிபாலனம் - பிதிர்வசனத்தைப் போற்றி நடத்தல்.
பிதிர்வாக்கியம் - பிதிர்வசனம்.
பிதிர்விரதம் - பிதிர்கருமம்,
பிதிர்வு - பிதிர்தல்.
பிது - இடி.
பிதுகம்-நவமணிக்குற்றத்தொன்றுஅது தாமரை நிறம்.
பிதுக்கம் - பிதுங்கல்.
பிதுக்கல், பிதுக்குதல் - பிதுங்கச்செய்தல்.
பிதுங்கல், பிதுங்குதல். - உள்ளடங்காமற் புறப்படல்.
பிதுரம் - இடி.
பிதுரு, பிதுர் - பிதிர்.
பிதுர்யானம் - பிதுர்லோகப்பிராப்தி.

பித்தசம் - நவமணிக் குற்றத்தொன்று அது கிளிநிறம்.
பித்தகாசம் - ஒருகாசம்.
பித்தகாமாலை - ஒருநோய்.
பித்தகாரம் - பித்தகாங்கை.
பித்தகாய்ச்சல் - பித்தசுரம்.
பித்தகாலம் - பித்தத்தினதிகாரகாலம்.
பித்தக்கிராணி - ஒருநோய். [ஞ்சுழற்சி.
பித்தக்கிறுகிறுப்பு - பித்தத்தினுல்வரு
பித்தசரீரம் - பித்தாதிகாரமானதேகம்.
பித்தசாந்தி - பொன்னுங்காணி.
பித்தசிலேட்டுமம், பித்தசிலேற்பனம் - பித்தத்தோடுகலந்தசேட்பம்.
பித்தசுரம் - ஒருசுரம்.
பித்தசூடு - பித்தகாரகம்.
பித்தசூலை - ஒருசூலை.
பித்தசோகை - ஒருவிதசோகைநோய்.
பித்தச்சுழற்சி - தலைக்கிறுகிறுப்பு.
பித்தநாடி - நடுவிரனடி.
பித்தநீர் - பித்தத்தினுலுண்டானநீர்.
பித்தபாண்டு, பித்தபாண்டுரு - காமாலை.
பித்தப்பிளப்பு - பித்தவெடிப்பு.
பித்தமயக்கம் - கிறுகிறுப்பு, பைத்தியம்.
பித்தம் - கூத்தின்விகற்பம், மயக்கம், முப்பிணியினென்று.
பித்தரோகம் - பித்தநோய். [ளை.
பித்தலம் - ஒளியுடைப்பொருள், பித்த
பித்தலாடகம், பித்தலாட்டம் - ஒன்றை மற்றொன்ருய்க் காட்டல்.
பித்தல் - அருகு, பிடங்கு, விளிம்பு.
பித்தவாயு - உட்டணவாயு.
பித்தளை - செம்புநாகமுங்கலந்தது.
பித்தளைமலை - காளிக்கம்.
பித்தளையாடகம் - சூது.
பித்தன் - கள்வன், சிவபிரான், பைத்தியகாரன், வயிரவன்.
பித்தாதிகாரம், பித்தாதிக்கம் - பித்தமேலீடு.
பித்தாதிசாரம் - உவாந்திப்பிராந்தி.
பித்தாந்தலைக்கொட்டி - ஒருபூடு.
பித்தி - ஒதுக்கிடம், சுவர், துண்டு, பங்கு, பிற்றி, வெடிப்பு.
பித்திகம் - பிச்சிப்பூ.
பித்திகை - சிறுசண்பகம், சுவர்.
பித்திசௌரன் - கள்வன்.
பித்து - ஈரற்பித்து, பித்தம்.

பித்துப்பை - பித்தமிருக்குங் குடர்ப் போர்வை.
பித்தேறல் - பித்தவூறல்.
பித்தை - ஆண்மயிர்.
பிந்தபாலம் - எறியீட்டி.
பிந்தியாகாலம் - சாயங்காலம்.
பிந்து - புள்ளி, விந்து.
பிந்துசாரம் - ஒருவிஷவைத்தியநூல்.
பிந்துசாரன் - சந்திரகுப்தன்புத்திரன், மகத தேசாதிபதி.
பிந்துதல் - தாமதித்தல், பிற்படுத்தல்.
பிந்துமதி - சசிபிந்தன்மகள், மாந்தாதா பாரி.
பிபாசிதன், பிபாசு } தாகங்கொண்டவன்.
பிபாசை - தாகம்.
பிபீலவாதம் - பரமாணு பிரபஞ்சத்துக்கு காரணமெனல், பைபீலவாதம்.
பிபீலி - எறும்பு.
பிபீலிகாவாதம் - பிபீலவாதம், மிருகபாவைஷ.
பிபீலிகை - பிபீலி.
பிப்பலகம் - முலைக்கண்.
பிப்பலன் - இல்வலன்புத்திரன், அரிஷ்டன் தம்பி.
பிப்பலம் - அரசு, ஒருபுல், நீர்.
பிப்பபாச்சையர் - கொப்பூரில் விளங்கிய ஒருசிவனடியார். இவர்சிவனடியாருடைய பரிகலசேஷத்தைவாரிக்கொண்டு ஒருவைஷ்ணவஅக்கிரகாரவழியே செல்லும்போது அவ்வக்கிரகாரத்தார் தடுக்கச் சினங்கொண்டு அப்பரிகலசேஷத்தை வாரிவீசினர் அது பட்ட வீடுகள் எல்லாமெரிந்து சாம்பராயின, வைஷ்ணவர்கள் அது கண்டு அவரைச் சரணமடைந்து அநுக்கிரகம் பெற்றார்கள்.
பிப்பலாசநம் - யானை.
பிப்பலாதம் - சூரியகிரணம்.
பிப்பலாதன் - ஓரிருடி.
பிப்பலி - திப்பிலி.
பிப்பலிகம் - தைக்கிறநூல், முலைவட்டம்.
பிப்பலிகை - அரசமரம்.
பிப்பலை - திப்பிலிச்செடி.
பிப்பிகை - பல்லழுக்கு.
பிப்பிலி - பிப்பலி.
பிப்பிலியத்தி - பெருநெருஞ்சில்.
பிம்பகம் - சந்திரசூரியமண்டலம், கோவைக்கனி.
பிம்பம் - அடையாளம், ஒணான், கமண்டலம், கோவைக்கனி, சந்திரசூரியாதி மண்டலம், பிரதிபிம்பம், யோநி.
பிம்பி - கோவை.
பிம்பிகை - சந்திரசூரியமண்டலம், கோவைக்கனி.
பியை - அச்சம்.
பிய்ச்சல் - பிய்த்தல்.
பிய்தல் - கிழித்தல், பிள்ளுதல்.
பிய்த்தல் - கிழித்தல், பிட்குதல்.
பிய்ப்பு - பிய்த்தல்.
பிர - தோற்றம், மிகுதிமேன்மை, விரைவு இவைகளைக்காட்டு முபசருக்கம்.
பிரகசம் - கொல்லுதல்.
பிரகசனம் - பெருநகை, மகிழ்ச்சி, வசைப்பாட்டு.
பிரகசிதம் - பெருநகை.
பிரகஸ்பதி - பிரகற்பதி.
பிரகடம் - வெளியரங்கம்.
பிரகடம் - விளம்பரம்.
பிரகடிதம் - வெளிப்படல்.
பிரகணம் - அசையப்பட்டது, இருப்புத்தண்டம், செப்புப்பாத்திரம், முற்றம்.
பிரகணன் - சுமாலிபுத்திரன்.
பிரகணேமி - சந்திரன்.
பிரகண்டம் - புயவென்பு, முன்புயம்.
பிரகதவாதம், பிரகதவாயு } ஒருவாயு.
பிரகதாரண்ணியம் - உபநிடத முப்பத்திரண்டி லொன்று.
பிரகதி - கத்திரிச்செடி வழுதுணைச்செடி.
பிரகஸ்தம் - விரித்தகை.
பிரகமனம் - தருக்கம், தேற்றம்.
பிரகம்பனம் - அசைவு, காற்று, நாசம்.
பிரகம்பிதமுகம் - அதிசயக் குறிகாட்டு முகம்.
பிரகம்பிதம் - அசைவு.
பிரகரணம் - அத்தியாயம், ஆயுதம், சமயம், பகுதி, பெண்பிள்ளைகள் சாரிவருந்தேர், முகவுரை, யுத்தம், விடையமுடிவு.
பிரகரம் - உதவி, ஒருவாசனைமரம், குவியல், சங்கை, பூஞ்செண்டு, உளமை.
பிரகாரி - முன்றிற்றேட்டம்.
பிரகரித்தல் - சஞ்சரித்தல்.

பிரகருசம் - மிகுதி, மேன்மை.
பிரகலை - கீதவுறுப்புளொன்று.
பிரகற்பதி - தருமநூல் பதினெட்டில் ஒன்று, வியாழம்.
பிரகஸ்பதி, பிரஹஸ்பதி } பிரமமானச புத்திரருள் அங்கிரசன் புத்திரனாகிய வியாழன். இவன் தேவகுரு. மகாபுத்திமான். வாசஸ்பதியெனவும்படுவன். இவன் பாரி தாரை இவன் சகோதரி யோகசித்தி. இவன் பாரியாகிய தாரையைச் சந்திரன் கவர்ந்தான். அதனால் பிருகஸ்பதிக்கும் சந்திரனுக்கும் பெரும்போர் மூண்டது. பிரமதேவர் சந்திரன்பாற் சென்று தாரையை விட்டுவிடும்படி செய்தார். தாரை பிருஹஸ்பதிக்கு மீண்டும் மனைவியானாள். சந்திரனுக்குத் தாரைவயிற்றிற்பிறந்த புத்திரன் புதன். அவனே சந்திர வமிசஸ்தாபகன், பிருகஸ்பதி மண்டலமும் பிருஹஸ்பதி யெனப்படும். அது பொன்மயமா யிருத்தலின் பிருகஸ்பதி பீதகன், பொன் என்னும் பெயர்களைப் பெறுவன். இம்மண்டலத்தைச் சூழ்ந்துள்ள மண்டலங்களிலே மனுஷரிற் சிறந்த அறிவுடையோர்கள் வசிக்கின்றார்களென்பது ஐரோப்பிய வானசாஸ்திரிகள் துணிபு. அது பிருஹஸ்பதியைத் தேவகுரு என்று கூறும் நமது ஆசிரிய சித்தாந்தத்திற்கு மொத்ததாகும் பிருகஸ்பதி மண்டலம் நமது பூமண்டலத்திலும் பதின்மடங்கு பெரிதாயினும் மிக்க லேசான கோளமாயுள்ளது. அதுபற்றி ஆங்குள்ளோரும் அந்தரத்திற் சஞ்சரிக்கும் லகுதேகிகளாயிருப்பார். அவர்களைத் தேவகணத்தினர் என்பது புராணமதம். பிருஹஸ்பதி மண்டலம் புராணங்களிலே ரதமெனப்படும், அதனைச் சூழ்ந்துள்ளமண்டலங்களைப்புராணங்கள் வெண்ணிறக் குதிரைகளாக ரூபகாரம்பண்ணும். ஐரோப்பிய வானசாஸ்திரிகள் அவைகளைச் சந்திரரென்பார்கள். அம்மண்டலங்களின் தொகையைப் புராணங்கள் எட்டென ஐரோப்பியர் ஐந்தென்பர்.

பிரகற்பன் - பிரபு.
பிரகாசத்தி - அப்பிரகம்.
பிரகாசம் - ஒளி இது வானோர்வரநான்கினொன்று, நகை, பராசியம், பொருமல், போலுந்தன்மை, விரிவு, விளக்கம், வெண்கலம், வெய்யில்.
பிரகாசனம் - பிரகாசம்.
பிரகாசன் - ஒளியுடையோன், மூத்தாத்துமா.
பிரகாசாத்துமா - சூரியன்.
பிரகாசித்தல் - ஒளிசெய்தல், பிரபலியமாதல், விளங்குதல்
பிரகாண்டம் - கொப்பு, மரக்குற்றி, மேன்மை.
பிரகாண்டரம் - மரம்.
பிரகாபரணம் - தூாத்தல்.
பிரகாமியம் - அட்டபாக்கியத்தொன்று. நிறைவு.
பிரகாரணம் - நன்கொடை.
பிரகாரம் - காயப்படுத்தல், கோயின்முதலியவற்றின்வீதி, தன்மை, மதில், வகுப்பு, வழி, விதம், விசேடணம், வித்தியாசம்.
பிரகி - கிணறு.
பிரகிதம் - அனுப்பியது, எறியது, நியமித்தது, வைக்கப்பட்டது.
பிரகிருட்டம் - மேலானது.
பிரகிருதபிரளயம் - உலகநாசம்.
பிரகிருதம் - உண்டாக்கப்பட்டது.
பிரகிருதி - அரசாட்சிக்குரிய வுறுப்பேழு அது அரசன் ஆணைசெல்லுமிடம் கோட்டை சேனை நட்பாளர் பொக்கசம், மந்திரி, ஆதாரம், இயல்பு, காரணம், பகுதி, பகுதிமொழி, பஞ்சபூதம், பிரதானம், பிரபஞ்ச மூலமாயிருக்கும்மாயை, பெண், மாதா, மிருகம், யோனி.
பிரகீர்ணம் - சாமரம் விசாலம்.
பிரகுஞ்சம் - ஒருபலம்.
பிரகுடி - காட்டுமல்லிகை.
பிரகுலம் - யௌவனதேகம்.
பிரகேசுவரர் - திருநன்னிலத்துப் பெருங்கோயிலிலே எழுந்தருளி யிருக்குஞ் சுவாமிபெயர்.
பிரகேசுவரி - திருநன்னிலத்துப் பெருங்கோயிலிலே எழுந்தருளி யிருக்குந் தேவியார் பெயர்.

பிரகேலகம் - இனிப்புப்பதார்த்தம்.
பிரகேலிகை - நொடி.
பிரகோட்டம், பிரகோஷ்டம் - தோண்மூலம், முற்றம்.
பிரகோபணம் - காத்தல்.
பிரகோபம், பிரகோபனம் - கோபம், மூர்க்கம்.
பிரகோவம் - கடுங்கோவம்.
பிரக்கணம், பிரக்கரணம் - யாழோசை.
பிரக்கரம் - போர்க்கவசம்.
பிரக்கியம், பிரக்கியாதம் - அறிவு.
பிரக்யாதி - அறிவு, கீர்த்தி.
பிரக்கியாதை - ஒழுகல்.
பிரக்யானம் - அறிவு.
பிரக்கிரமம் - அடிமை, கிரணம், சமயம், தராசுக்கயிறு, துவக்கம், நெருக்கிடை, பசுக்கட்டுங்கயிறு, பட்சம், பிடித்தல், புயம், போதல், மேற்கொள்ளுதல்.
பிரக்கிரகம் - தராசுக்கயிறு, பிடித்தல்.
பிரக்கிரீடதம் - கிரீடை.
பிரக்கிரீவம் - கிரீடைமனை, சாளரம், மயிர்நுனி.
பிரக்கினை - அறிவு, உணர்வு.
பிரஸகந்தனம், பிரஸகந்திகை - பேதிப்பண்ணல், வயிற்றுளைவு.
பிரசகம், பிரசகனம் - இலையுணு மிருகம்.
பிரசங்கம் - உட்படுதல், கூட்டம், தருக்கதீர்மானம், தெளிவு, நியாயத்தொடர்பு, பற்று, பாயிரம், பிரபலியம், வாக்கியம், வெளிப்படுத்தல்.
பிரசங்கி - ஆடம்பரகாரன், பிரசங்கியென்னேவல், வியாக்கியானி.
பிரசங்கித்தல் - தீர்மானமெடுத்துக்காட்டல், பிரபலியப்படுத்தல். [புகழ்ச்சி.
பிரசஞ்சனம் - சேர்த்தல், பாவித்தல்,
பிரசஞ்சை - புகழ்ச்சி.
பிரசண்டகதி - அதிவேககமனம்.
பிரசண்டமாருதம் - பலத்தகாற்று.
பிரசண்டம் - பெலன், மிகுதி, மிகுவெப்பம், வலி, வீரம், வேகம்.
பிரசண்டவாயு - பலத்தகாற்று.
பிரசண்டவேகம் - அதிவேகம்.
பிரசண்டன் - வலியன், வீரன், வேசி.
பிரசத்தம் - சதானந்தம், நித்தியம்.
பிரசத்தி - அருத்தாபத்தி, இசைவு, கிருபை, சுத்தம், பற்று, பிரமையுள்ளது, முயற்சி, விம்பிக்கத்தக்கது.
பிரசபம் - பிரசவம், வலோற்காரம்.
பிரசமனம் - கொலை, சமாதானமாக்கல்.
பிரசம் - கள், தேனீ, தேன், தேன்கூடு, வண்டு.
பிரசயம் - இணைவு, திரட்சி.
பிரசரணம் - ஊர்கொள்ளையிடல், சத்துருவைச்சூழல், சுற்றுதல், சூழப்போதல், பரப்புதல், போதல்.
பிரசரம் - அம்பு, இடம், கதி, சமயம், சிறு கொம்பு, திரள், பெரிதாதல், போர், வழக்கம், வழி, விசாலித்தல்.
பிரசருப்பகன் - அழைக்கப்படாது விருந்துக்கு வந்தவன்.
பிரசருப்பணம் - விசாலித்தல்.
பிரசலாகம் - பாம்பு, மயிற்றோகை, வில்லாச்சிரமம்.
பிரசலிதம் - அசைத்தல், திரிதல்.
பிரசவபந்தனம் - பூந்தண்டு.
பிரசவம் - சந்ததி, பலம், பிள்ளைப்பேறு, பிறப்பித்தல், பிறப்பு, புட்பம்.
பிரசவவேதனை - பிள்ளைப்பேற்றுவருத்தம்.
பிரசவித்தல் - பிறத்தல், பெறுதல்.
பிரசற்பம் - மழலை.
பிரசனம் - கருப்பந்தரித்தல்.
பிரசனிகை - மாதா.
பிரசன் - கணவன்.
பிரசன்னமுகம் - அலர்ந்த முகம்.
பிரசன்னம் - காட்சி, தெளிவு, தோற்றப்படுதல், பிறப்பு, பெண்குறி.
பிரசன்னன் - கடவுள், தோற்றப்பட்டவன்.
பிரசாகிதம் - நீர்.
பிரசாக்கடை - மதகு.
பிரசானம் - ஆளுதல்.
பிரசாட்சயல் - சனவழிவு.
பிரசாதகன் - இந்திரத்துய்மன், வமிசத்தரசன்.
பிரசாதகை - கோலஞ்செய்வாள், வன்னெல்.
பிரசாதம் - அமுதம், அருள், கருப்பமுண்டாக்குமருந்து, களங்கமின்மை, கூட்டம், சுகசீவியம், தெளிவு, நிருமாலியம், நிவேதனப்பொருள், பட்

சம், பயன்,பவித்திரம்,பிரதிஷ்டை, பிரார்த்தனை, பிள்ளைப்பேறு, பேறு, மனவமைதி.
பிரசாதருமம் - புத்திரதருமம்.
பிரசாதனம் - அலங்கரிப்பு, சீப்பு, சுத்தம், சோறு, மனத்திருத்தி.
பிரசாதனம் - வெள்ளி.
பிரசாதி - புணர்ச்சி.
பிரசாபகன் – அரசன்.
பிரசாபதி அரசன்,ஆண்குறி, சூரியன், தீ, பிதா, பிரமன், மருமகன்.
பிரசாபத்தம் } பிரசாபத்தியம் } பெண்சுற்றமுமாண் சுற்றமுமொத்துத் தீமுன்னர்க்கொடுக்குமணம்.
பிரசாபன் – அரசன்.
பிரசாமம் - சமாதானம், மனவமைதி.
பிரசாரணம் - சத்துருவைச்சூழ்தல், விசாரித்தல், தருமம்.
பிரசாரணை – பிரஸ்தாபம்.
பிரசாரம் - நடை, பரம்புதல், போதல், வழக்கம், வேங்கைமரம்.
பிரசாரி - வாயுலோகம்.
பிரசாலம் – வீணைதண்டு.
பிரசாவதி-சகோதரன், மனைவி, மாதா.
பிரசாவிருத்தி - சனப்பெருக்கம், புத்திரவிருத்தி.
பிரசிதம் - சிதல்.
பிரசித்தப்பத்திரிகை - அறிக்கைப்பத்திரிகை.
பிரசித்தம் - அறிவிப்பு, கீர்த்தி, பராசியம், விளக்கம்.
பிரசித்தி - புகழ்.
பிரசிரயம்-உபசரணை, உருக்கம்,சங்கை, நட்பு.
பிரசிரவணம் - அருவி,சிறுநீர், நீர்நிலை, பொசித்தல்,மலைமேற்குளம்,வேர்வை.
பிரசிரன் } பிரசிருத்தி } உசுதேவனுக்குச் சாந்தியிடத்துப்பிறந்த புத்திரன்.
பிரசிருதி - அவையார்த்தம்.
பிரசினதுதி - நொடி.
பிரசினம் } பிரசினை } கேள்வி.
பிரசீவனம் - சம்பாதிக்கை, சீவனம்.
பிரசீனம் – காற்று.
பிரசுரபுருடன் - சோரன்.
பிரசுரம் – அறிவிப்பு, மிகுதி.
பிரசுரன் - சுக்கிரன்.
பிரசுரீகரணம் - சேர்த்தல்.
பிரசுருதம் - நீர்முதலியபாய்தல்.
பிரசுவாளம் - பேரொலி.
பிரசூ – ஒருகொடி, பெண்குதிரை, மாதா, வாழை.
பிரசூதம் - பிள்ளைபெறுதல்.
பிரசூதன் - சாரதி.
பிரசூதவாயு - கருப்பவாயு.
பிரசூதி - பிள்ளைப்பேறு, சுவாயம்புவமனு மகள்.
பிரசூதிகாலம் – பேறுகாலம்.
பிரசூதிகாவாயு - கருப்பவாயு.
பிரசூதிகை - பிள்ளைபெற்றிருத்தல்.
பிரசூதிசம் - வியாகுலம்.
பிரசூதிசயாதல் - பிரவேசமாதல்.
பிரசூதிவேதை – கருப்பவேதனை.
பிரசூதிவைராக்கியம் - பிள்ளைப்பேற்றினால் வந்த தீர்மானம்.
பிரசூதை - பிள்ளைபெற்றிருப்பாள்.
பிரசூனம் - கனி, புட்பம்.
பிரசேகம் - நனைத்தல், பொசித்தல்.
பிரசேச்சுவரன் - அரசன்.
பிரசேதசர் - பிராசீனபருக்குச் சமுத்திரன் மகளாகிய சத்திருதி யிடத்துப்பிறந்தவர்கள், இவர்கள்பதின்மர் சகோதரர்,மகாதபோதனர்கள். இவர்கள் பாரி மரீஷை.
பிரசேதசு - காந்தாரன் பௌத்திர பௌத்திரன். இவன் புத்திரர் யாவரும் மிலேச்சராயினர்.
பிரசேதன் } பிரசேதசன் } வருணன்.
பிரசேதிரு - சாரதி.
பிரசேலகம் - குதிரை.
பிரசேனசித்தன் - இரேணுகைதந்தை, ஜமதக்கினி மாமன்.
பிரசேனன் – சத்திராசித்து தம்பி
பிரஜாபதி - பிரமன்.
பிரஜாபதிக்ஷேத்திரம் – பிரயாகை, பிரதிஷ்டானபுரம், வாசுகி, ஹிரதம், வெகுமூலபர்வதம், என்னும்இந்நான்கிடத்துக்கு மிடையேயுள்ள ஒரு புண்ணிய க்ஷேத்திரம். இதில் ஸ்நானஞ் செய்வோர் வெகு புண்ணியங்களைப் பெறுவர்.
பிரஜானி - பிராம்சுமான்.
பிரசை - குடி, சனம், பிள்ளை.

பிரசோதனம் - அனுப்புதல், சொல்லுதல், முறை.
பிரசோதினி - கண்டங்கத்திரி.
பிரசோற்பதி, பிரசோற்பத்தி } ஐந்தாவதாண்டு.
பிரச்னை - உணர்ச்சி, கேட்டல்.
பிரச்சாதனம்-மூடி, வெளிப்புடைவை.
பிரச்சாது - பின்பு.
பிரச்சினை - பிரசினை.
பிரச்சுவாலியம் - கொளுத்தல்.
பிராஞத்துவம் - அறிவு, உணர்ச்சி.
பிரஞ்ஞமானம் - அறிஞர்க்கிடு முபசாரணை.
பிரஞ்ஞம் - அறிவுகேடு.
பிரஞ்ஞன் - அறிஞன், சமர்த்தன், பண்டிதன்.
பிரஞ்ஞாபங்கம் - அறிவு, கேடு.
பிரஞ்ஞானம் - அடையாளம், அறிவு.
பிரஞ்ஞை - அறிவு, அறிவுடையாள், சரச்சுவதி.
பிரடை - முறுக்காணி.
பிரட்சாளகம், பிரட்சாளனம் } கழுவுதல்.
பிரட்சாளியம் - கழுவுதல்.
பிரஷ்டம் - தள்ளுபடி.
பிரட்டம் - ஆதி, தள்ளுபடி, தீங்கானது, பொரித்தது.
பிரஷ்டன் - ஆதித்தன், அற்குணன்.
பிரட்டானம் - திதிவிசேடம்.
பிரட்டு - புரட்டு.
பிரட்டுக்கல் - இராசவருத்தனக்கல்.
பிரட்டை - ஒருசெடி.
பிராணம் - பழமை.
பிராணதன் - வணக்கமுள்ளவன்.
பிரணயகலகம் - கலவியிர்பிணங்கல்.
பிரணயமானம் - தலைவனுக்குந் தலைவிக்கு நடக்கு நேய விவாதம்.
பிரணயம் - அன்பு, கீழ்ப்படிதல், கல்வி, கேட்டல், நம்பிக்கை, பழக்கம், பிரதி, பிரார்த்தனை, மோக்கம்.
பிரணயம் - கொடுத்தல், நடத்தல், பரப்புதல்.
பிரணருத்தினம் - ஆடல்.
பிரணவம் - ஒருபறை, ஓங்காரம். ஆதி அக்ஷரம் பிரணவமானது சிருஷ்டிக்குமுன்னுள்ள அவசரத்திலே பிரமத்தின் வேறாகாத சிற்சோதியாகவுள்ளது. அது சிருஷ்டியின்பொருட்டு விகாரப்படுமிடத்து விந்துருபமாகக்கிடக்கும், விந்துருபமாகக்கிடக்கும் அவசரத்திலே அதனிடத்துளதாகிய வைந்தவ சக்தியினாலே புருஷாமிசமாகிய நாதம் கம்பிதமாகும். அதாவது, வட்டவடிவினதாகிய விந்து விஷமப்பட்டு அண்டவடிவு பெறும். எனவே பிரணவம் விஷமப்பட்டவிடத்து விந்துவென்றும் அதுவிஷமப்பட்டவிடத்து நாதமென்றும் பெயர்பெறும். காரணத்தி லொடுங்கிய வுலகத்தை மீளவும் எழுப்புவது சைதன்னியசேஷ்டையேயாம். சைதன்னிய சேஷ்டையின்றி உலகம் இயங்காது ஐரோப்பிய பௌதிகதத்துவ பண்டிதர்களும் சேஷ்டையே சிருஷ்டிக்குக் காரணமென்பார்கள்.

அந்தச் சேஷ்டை புரிபோலச்சுழன்று செல்வதென்பது ஐரோப்பியர் மதம். ஆரியசாஸ்திரங்களும் பிரணவம் சங்கு வடிவினது என்று கூறுகின்றன வாதலால், இரண்டிற்கும் வேறுபாடு காண்கிலேம். சங்கு தன்னிடத்தே ஆகாயவெளியும் புரியும் உடையதாதலால் பிரணவத்துக்குக் குறியாயிற்று.

பிரணவம், தூலப்பிரணவம், சூக்குமப்பிரணவம் என்று இருவகைப்படும் ஹ்ரீம்என்பது ஸ்தூலமும் ஓம் என்பது சூக்குமமுமாம், பிரணவம் பதினாறு உறுப்புக்களாலாயது அவ்வுறுப்புக்கள் மாத்திரையெனப்படும். அப்பதினாறு மாத்திரைகளும் வருமாறு:—

(1) அ, (2) உ, (3) ம், (4) அர்த்தம், (5) நாதம், (6) விந்து, (7) கலை, (8) களா, தீதை, (9) சாந்தி, (10) சாந்தியாதீதை, (11) உன்மனி, (12) மனோன்மணி, (13) புரி, (14) மத்தியமை, (15) பசியந்தி, (16) பரை, இப்பதினாறும் நூற்றைம்பத்தாறாகவும்வகுக்கப்படும். இவையெல்லாம் அப்பைய தீக்ஷிதர் செய்தருளிய அநுபூதி, மீமாம்ஸா பாஷ்யத்திலே விரித்து விளக்கப்பட்டிருக்கின்றன.

அகரம்பிரமாவையும், உகரம்விஷ்ணுவையும், மகாரம் ருத்ரனையும், குறி

க்குமென்பாரும், அகாம் விஷ்ணுவையும் உகாம் ருத்ரனையும் மகாம் பிரமாவையும் குறிக்குமென்பாருமாக. சைவவைஷ்ணவ சமயிகள் இப்பிரணவப் பொருளிலே தம்முன் மாறுபடுவார்கள். அகாம்பிரமத்தைக் குறித்துநிற்றலால் அந்தப்பிரமத்தை விஷ்ணுவென்றும் சிவனென்றும் தத்தமக் கிஷ்டமான பெயர்களால் வழங்கும் இருவர் குறிக்கோளும் ஒன்றேயாம்.

பிரணவசொரூபத்தைஇனவென்றெடுத் துரைத்தல் கூடாதென்று சாஸ்திரங்களெல்லாங் கூறுதலின், உண்மை யுணர்ந்த ஞானிகளுக்கே அதன் பரப்பெல்லாம் புலனுமென்க. மந்திரங்களுள்ளே பிரணவமே சிறந்ததும் மோக்ஷசாதனமாயுள்ளதுமாம், முண்டகோபநிஷத்தில் இப்பிரணவமாகிய வோங்காரத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட ஒரு வாக்கியம் வருமாறு:—

"ஓம்" என்பது வில்லு, ஆன்மாவே பாணம் பிரமமே குறி, இடையறுத் தியானத்தினாலேயே குறியை எய்தல் கூடும். குறியிற் புதைந்த பாணம்போல ஆன்மா பிரமத்திற் புதையக்கடவது, "பிரணவம் என்பதன் பொருள் அழியாதது. கழிந்ததும் நிகழ்வதும் வருவதுமாகிய முக்கூற்றுப் பிரபஞ்சமெல்லாம் ஓமெனும் பொருளே" "அகாம் ஜாக்கிரவுலகமாய் யாவரும் வசித்தற்கிடமாகவுள்ளது. இதனை யுணர்பவன் இஷ்டபோகத்தை யடைகிறான். உகாம் சொப்பனமாய்ப் பிரகாசமாகவுள்ளது. மகாம் சுஷுப்தியாய் முடிவிடமாகவுள்ளது."

பிரணவசுரூபம் - கடவுள், சிவபிரான்.
பிரணாசம் - அழிவு.
பிரணாதம் - காதுநோயினொன்று, பேரொலி.
பிரணயம் - இணங்காமை, நிதார்த்தம், வெறுப்பு.
பிரணாலம் - மதகு.
பிரணி - தானம்,தியானம்,முயற்சி,வாயில்.
பிரணிதி - ஒற்றன்,கேட்டல்,தோழன்.
பிரணிநாதம் - பேரொலி.
பிரணிபதனம், பிரணிபாதம் - வணங்கல்.
பிரணீதம் - உண்டாக்கப்பட்டது.
பிரண்டை - பாண்டை.
பிரதகம் - முன்பு.
பிரதக்கணம் - வலம்வருதல்.
பிரதக்கு - தனிமை.
பிரதட்சணம் - பிரதக்கணம்.
பிரதமகற்பிகன் - பாலமாணக்கன்.
பிரதமகாலம் - பூருவகாலம், விடியற்காலம்.
பிரதமசிருட்டி-பூருவசிருட்டி.
பிரதமம்-ஆரம்பம் முதன்மை, விசேஷித்தது.
பிரதமை - ஒன்று, கடுக்காய், முதல், முதற்றிதி.
பிரதம் - கொட்டை, பிரசித்தம், புகழ்.
பிரதாம் - அம்பு, சுருக்கு, சுழலல், பிளப்பு, விறைப்பு.
பிரதர்த்தன் - திவோதாசன் புத்திரன்.
பிரதலம் அம்பு, பாதலம்.
பிரதனம், பிரதனை - கிழித்தல், நீளுதல், படையிலோர் தொகை அது வாகினி மூன்றுகொண்டது, புராதனம், யுத்தம், விரித்தல்.
பிரதன் - ஈகையாளன்.
பிரதாபசூரியன்-சண்பகப் பாண்டியனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன்.
பிரதாபதி - பாண்டு.
பிரதாயமார்த்தாண்டம் - வீமாதபாண்டியனுக்குப்பின் அரசுசெய்த பாண்டியன்.
பிரதாபம் - உயர்ச்சி, கீர்த்தி, பிரகாசம், பெருமை, மகிமை, வீரம், வெப்பம்.
பிரதாபருத்திரீயம் - வித்தியாநாத கவி செய்த அலங்காரம் சாஸ்திரம்.
பிரதாபானம் - நரகம்.
பிரதாரம் - கடத்தல்.
பிரதாரகம் - எத்து.
பிரதாவனம் - காற்று.
பிரதானவாது - சுக்கிலம்.
பிரதானம்-அங்குசம், கடவுள்,கொடை, சுபாவம், புத்தி, மூலம், விசேடம், வீம்பு.
பிரதானன்-முதன்மந்திரி, யானைப்பாகன்.
பிரதானி - அதிகாரன், பொக்கிஷக்காரன்.
பிரதானிகம் - அதிகாரம்.
பிரதானியம் - பிரதானம்.

பிரதி - அற்பம், எதிர், எழுதிச்சேர்த்தல், தடை, பகுதி, பதில், மூலம்; விகாதம்.
பிரதிகதி - அதைப்பு.
பிரதிகஸ்தகன் / பிரதிகஸ்தன் } பதிலாள்.
பிரதிகம் - அவல், குழந்தை.
பிரதிகாணம் - வெறுத்தல்.
பிரதிகருமம் - அலங்கரித்தல், பதிற்கிரியை, மாற்று.
பிரதிகாசம் - பரிகாசம்.
பிரதிகாதம் - அதைத்தல், தடுத்தல், மோதுதல்.
பிரதிகாதனம் - கொல்லல்.
பிரதிகாந்தி - பிரதிவிம்பம்.
பிரதிகாயம் - அடையாளம், குறிப்பு.
பிரதிகாரகன் - வஞ்சகன், வாயில்காப்போன்.
பிரதிகாரணம் - உட்படுதல்.
பிரதிகாரம் - அணுப்பு, கதவு, பதில், பழிவாங்குதல்.
பிரதிகாரன் - வாயில்காப்போன்.
பிரதிகிரகணம் - பதில்வாங்கல்.
பிரதிக்கிரகம் - எற்றல்.
பிரதிகிருதி - பதில்செய்தல், பிரதிகாயம், பிரதிபிம்பம்.
பிரதிகூலம் - எதிர், கைகூடாமை, மாறுபாடு
பிரதிகூலியம் - எதிரிடை.
பிரதிக்கியாதம் - சம்மதித்தல்.
பிரதிக்கினம் - சரீரம்.
பிரதிக்கினை - அத்தாட்சி, அறிக்கையிடுதல், சம்மதி, நேர்த்திக்கடன், பொருத்தனை, வேண்டியது.
பிரதிசங்காரம் - அழித்தல், குறைத்தல்.
பிரதிசங்கை - பயம்.
பிரதிசத்தம் - எதிரொலி.
பிரதிசந்தானம் - இச்சையடக்கம்.
பிரதிசமாதானம் - மாற்றுமருந்து.
பிரதிசம் - சோணதிசை.
பிரதிசரம் - கைக்கடகம், படைவகுப்பு, மாலை.
பிரதிசரன் - வேலைக்காரன்.
பிரதிசருக்கம் - சிருட்டிப்பு, புராணத்திணுறுப்பு.
பிரதிசாகிரம் - எச்சரிக்கை.
பிரதிசாந்தானிகன் - புலவன்.
பிரதிசாடம் - எதிர்ச்சபிப்பு, நிதானித்தல்.
பிரதிசாயை - சுரூபம், நிழல், பிரதிபிம்பம்
பிரதிசாரணம் - இரணங்கட்டல், தள்ளல்.
பிரதிசிகுவை - உண்ணு.
பிரதிசந்தனம் - ஆலோசித்தல்.
பிரதிசிரயம் - அடைக்கலவிடம், இருப்பிடம், கூட்டம், யாகசாலை.
பிரதிசிரவணம் / பிரதிசிரவம் } சம்மதித்தல்.
பிரதிசீரை - திரைப்படாம்.
பிரதிசூரியகம் - சூரியமண்டலம், பல்லி.
பிரதிசூரியம் - பல்லி.
பிரதிசூரியன் - சூரியப்பிரதிபிம்பம்.
பிரதிதேசம் - எதிரிடை.
பிரதிஞ்ஞாபத்திரம் - உறுதிச்சீட்டு.
பிரதிஞ்ஞானம் - சம்மதி.
பிரதிஞ்ஞாவிரோதம் - எதிர்நியாயம்.
பிரதிஞ்ஞானம் - சம்மதி.
பிரதிஞ்ஞேபன் - புகழ்வோன்.
பிரதிஞ்ஞை - தத்துணிபுரைத்தல்.
பிரதிட்டம் - ஸ்தாபனம்.
பிரதிட்டாகலை - பஞ்சகலையிலொன்று.
பிரதிட்டாபனம் - நிறுத்துதல்.
பிரதிஷ்டவான் - கீர்த்தியுள்ளோன்.
பிரதிட்டை / பிரதிஷ்டை } இடம், எல்லை, ஓர்பா, கீர்த்தி, சடங்கு, முடித்தல், தாபனம், நிறைவேற்றல், நேர்த்தல், பூமி.
பிரதிதன் - அறிவாளி.
பிரதிதாரணம் - யுத்தம்.
பிரதிதானம் - கைம்மாறு, திரும்பக்கொடுத்தல், பொருண்மாற்றுதல்.
பிரதிதி - கீர்த்தி.
பிரதிதிசம் - சகல இடமும்.
பிரதிதினம் - நாடோறும்.
பிரதிதுறை - பதிற்றுறை.
பிரதிதுவந்துவம் - எதிரிடை, விரோதம்.
பிரதிதுவனி - எதிரொலி.
பிரதிதேவன் - சூரியன், நாள்.
பிரதிதொனி - எதிரொலி.
பிரதித்தல் - உருவுகாட்டுதல், தோற்றுதல்.
பிரதிநாதம் - எதிரொலி.
பிரதிநிசம் - இரவோடிரா.
பிரதிநிதி - உருநாட்டு, பிரதிபிம்பம்.
பிரதிநியாயம் - பதில்நியாயம்.
பிரதிபட்சன் - எதிரி.
பிரதிபதகன் - எதிரிடைகாரன்.

பிரதிபதம்-அடிக்கடி, பரியாயச்சொல்.
பிரதிபதூரியம் - உவகைப்பறை.
பிரதிபத்தி - அடக்குதல், அதிகரித்தல், எய்த்தல், கீர்த்தி, சம்பாதித்தல், சம்மதித்தல், நன்னடை, நிதானிப்பு நோக்கம் பாவிப்பு, மிகநம்பிக்கை.
பிரதிபத்திபடகம் - பெரும்புறை.
பிரதிபத்திரம் - மறுமொழிச்சீட்டு.
பிரதிபந்தகம், பிரதிபந்தம் - கட்டுப்பாடு, தடை.
பிரதிபம் - முரடு.
பிரதிபலநம், பிரதிபலம் - பிரதிபிம்பம்.
பிரதிபன்னம் - அறியப்படுதல்.
பிரதிபாகம் - பங்கு.
பிரதிபாதகம் - செயற்படுத்துவது.
பிரதிபாதனம் - ஈகை, உலகநடைசெய்து முடித்தல், நிதானித்தல், பிறப்பித்தல், முடித்தல்.
பிரதிபாதுகம் தெளிவப்பண்ணல், நிதானித்தல்.
பிரதிபாலகன்-அரசன், தற்காப்போன்.
பிரதிபாலனம் - காத்தல், பழகுதல்.
பிரதிபாவியம் - அடகு.
பிரதிபானம் - தைரியம், பிரபை.
பிரதிபிம்பம் - பிரதிவிம்பம், அதாவது எதிருருவம்.
பிரதிபுருடன் - ஒவ்வொருவன்.
பிரதிபூசனம் - வணக்கம்.
பிரதிபேதனம் - பிரித்தல், வெட்டுதல்.
பிரதிபை - அறிவு, கூர்மை, பிரகாசம், பிரதிகாந்தி.
பிரதிபோதம் - கற்பித்தல்.
பிரதிமண்டலம் - சுற்றளவு.
பிரதிமதை - பிம்பம்.
பிரதிமாலை - ஈற்றெழுத்துக்கவி.
பிரதிமானம் - சாரூபம், யானைக்கொம்பிடைடு, யானைநெற்றி.
பிரதிமூர்த்தி - தோற்றம், பாவனை, பெயர்த்தெழுதுகை.
பிரதிமை - விக்கிரகம்.
பிரயத்தினம் - எதிரிடை, திரைப்படுத்தல், பழிவாங்குதல், விருப்பம்.
பிரதியாதனை - சாயல்.
பிரதியுத்தரம் - பிரத்தியுத்தரம்.
பிரதியுபகாரம் - பிரத்தியுபகாரம்.

பிரதியெழுதல் - ஒன்றைப் பார்த்தது போலெழுதல்.
பிரதியோகம் - எதிரிடை, கூட்டம்.
பிரதியோகி - எதிரி, கூட்டாளி.
பிரதிராத்திரம் - இராவுக்கிரா.
பிரதிரூபம் - பிரதிமை.
பிரதிரோதகன் - எதிரி, கள்வன்.
பிரதிரோகம் - எதிரிடை, களவு, மறைத்தல், முற்றிகை போடுதல்.
பிரதிரோதி - திருடன்.
பிரதிலம்பம் - இலாபம்.
பிரதிலோமகன், பிரதிலோமன் - இழிபுயர்பாண் பெண்ணிற் பிறந்தோன்.
பிரதிவசசம் - கிராமம்.
பிரதிவசனம் - இணக்கம், எதிரொலி, மறுமொழி.
பிரதிவாகு-கிருஷ்ணன் வமிசத்து வச்சிரன் புத்திரன் அக்ரூரன் தம்பி.
பிரதிவாக்கியம் - மறுமொழி.
பிரதிவாசரம் - நாளுக்குநாள்.
பிரதிவாணி - பிரதிவாக்கியம்.
பிரதிவாதம் - எதிர்வாதம்.
பிரதிவாதி - எதிர்வாதி.
பிரதிவாதிப்பு - மறுமொழி.
பிரதிவாபம் - மருந்தனுபானம்.
பிரதிவிந்தியன் - தருமராஜனுக்குத் துரோபதையிடத்துப்பிறந்தபுத்திரன்.
பிரதிஷ்டானபுரம்-இதுகங்கையும் யமுனையும் கூடுமிடத்துக்குக் கிழக்கேயுள்ள ஒரு நகரம்.
பிரதிவிம்பம் - கண்ணாடி முதலியவற்றிற் றோற்றும் போலியுரு.
பிரதிவிம்பர் - உபதேவர்.
பிரதிவிம்பித்தல் - போலியுருத் தோற்றுதல்.
பிரதிவேசம் - அயல்வீடு.
பிரதீகம் - அவயவம், பங்கு.
பிரதீகாரம் - இணக்கம், கதவு, சீர்திருத்தல், பழிவாங்கல், மருந்துசெய்தல்.
பிரதீசி, பிரதீசீனம் - மேற்கு.
பிரதீதம் - கீர்த்தி, சங்கை, சந்தோஷம்.
பிரதீதி - அறிவு, கீர்த்தி, விருப்பம்.
பிரதீபம் எதிர், ஒப்பிடல், வக்கிரித்தல்.
பிரதீபவசனம் - எதிரிடை, முகங்கோடாது மறுமொழி கொடுத்தல்.
பிரதீபனம் - ■வுதல், ஒருமருந்து.

பிரதீபன்-வீமன் புத்திரன், இவன்மனை விசுநந்தை, புத்திரர், தேவாபி, சந்தநு.
பிரதீபாலங்காரம் - எதிர்நிலையணி.
பிரதீரம் - கரை.
பிரதீவாபம்- அனுபானஞ்சேர்த்தல், உபத்திரவம், உலோகநீற்றல்.
பிரதிவேசம் - அயல்.
பிரதுகம் - அலகுள்ளபட்சி.
பிரதெட்சணம் - பிரதட்சணம்.
பிரதேகம் - அபிஷேகம்.
பிரதேசம் - இடம், பிரதேசம்.
பிரதேசனம் - காணிக்கை, வெகுமதி, வெளிப்பாடு.
பிரதேசனி, பிரதேசினி } முன்விரல்.
பிரதை - அருச்சுனன் தாய், ஈகை, கீர்த்தி, குந்திதேவி.
பிரதோஷகாலம், பிரதோஷபுண்ணியகாலம். } திரயோதசித் திதியிற் பொழுதத்தமிக்க முன் மூன்றே முக்கானழிகை தொடங்கி அத்தமித்து மூன்றே முக்கானழிகை பரியந்தமுள்ள நேரம்.
பிரதோடம், பிரதோஷம் } அந்தமனத்துக்கு முன்னும் பின்னும் மூன்றே முக்கால் நாழிகை, இராவின் முதற்சாமம், திரயோதசி விரதம்.
பிரதோதம் - அங்குசம்.
பிரஸ்தம் - ஓரளவு, மலைமேற்பரந்த தலம், வயிரமானது, விசாலித்தல்.
பிரஸ்தரம் - இரத்தினம், ஓரிசை, கல், படுக்கை.
பிரத்தல் - எழுத்திலாஒலி.
பிரஸ்தாடம்-அத்தியாயம், அறிவித்தல், சமயம், புகழ்ச்சி, வெளிப்படுத்தல்.
பிரத்தாபம் - அவசரம், பகிரங்கம்.
பிரஸ்தாபனம்-அனுப்பல், நியமித்தல்.
பிரஸ்தாபனை கட்டியம், துவக்கம், வெளிப்படுத்தல்.
பிரஸ்தாரம் - காடு, படுக்கை, பிரத்தாரம், புட்பசயனம்.
பிரத்தாரம் - தாளப்பிரமாணம் பத்தினொன்று.
பிரத்திக்கினை - பிரதிக்கினை.
பிரத்திட்சம் - பிரத்தியட்சம்.
பிரத்திதம் - கேட்கும்பொருள்.
பிரத்தியக்கதரிசனம் - கண்ணாற்கண்ட காட்சி.
பிரத்தியக்கப் பிரமாணம் - பிரத்தியட்சப் பிரமாணம்.
பிரத்தியக்கம் - காட்சியளவை.
பிரத்தியக்காசாபதி - வருணன்.
பிரத்தியக்கிரன்-உபரிசரவசுவின் புத்திரன்.
பிரத்தியக்கு - பிரிவு, மேற்கு, வேறு.
பிரத்தியக்ஷநாயகியம்மை-திருக்காவீரத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பிரத்தியங்கம் - உபாங்கம், பர்தவுறுப்புள் ஒன்று, பிரதியுறுப்பு, மூக்குமுதலிய வுறுப்புகள்.
பிரத்தியங்கிரி - ஒருதேவதை.
பிரத்தியட்சப் பிரமாணம் - ஓரளவை அது கண்ணாலேகண்டு நிச்சயிப்பு.
பிரத்தியட்சம் - காணத்தக்கது.
பிரத்தியட்சாபாசம்-காட்சிப்பிரமாணம்
பிரத்தியதநம் - உணவு.
பிரத்தியநீகன் - சத்துரு.
பிரத்தியபகாரம்-தீமைக்குத்தீமை சரிக்கட்டுதல்.
பிரத்தியபதம் - விகுதி.
பிரத்தியபம் - அறிவு, ஆணை, கீர்த்தி, தியானம், நம்பிக்கை, நிச்சயம், நோக்கம், விகுதி.
பிரத்தியபாயம் - காணத்தக்கது.
பிரத்தியம் - குறுக்கு, விகுதி.
பிரத்தியயம் - சம்ஸ்கிருதவிகுதி.
பிரத்தியருத்த்ம்-எதிரிடை, மறுமொழி,
பிரத்தியவசாநம் - போசநம்.
பிரத்தியவசிதம் - பட்சித்தல்.
பிரத்தியவாயம் - எதிர், குற்றம், நம்பிமோசம்போதல், பாவம்.
பிரத்தியவியோகம் - எதிர், வழக்கு.
பிரத்தியாகரணம் - புலனடக்கல்.
பிரத்தியாகாரம்-இருந்துவாங்கல், உபாதியை நீக்கியுண்ணேக்கல் இது அட்டயோகத்தொன்று, எடுத்துக்கொள்ளுதல், சுருக்கம், படையுறை பற்றுதல்.
பிரத்தியாக்கியானம் - தள்ளல், தள்ளுதல், நிந்தை, மறுத்தல்.
பிரத்தியாசத்தி - கலப்பு.
பிரத்தியாசரம் - சேனை.

பிரத்தியாசாரம்-அணிவகுப்பு, சேனை.
பிரத்தியாதேசம்-அசரீரிவார்த்தை, அறிவித்தல், எச்சரித்தல், தள்ளுதல், மறுத்தல்.
பிரத்தியாசை - நம்பிக்கை.
பிரத்தியாபாசம் - ஓரளவை.
பிரத்தியாலீடம்-வலக்கான்முன் வைத்திடக்கான் மண்டலித்து கிற்குநிலை.
பிரத்தியுத்தரம் } கைம்மாறு, மறுமொழி.
பிரத்தியுத்தாரம் }
பிரத்தியுத்தானம் - உபசரித்தல்.
பிரத்தியுத்தி - மறுமொழி.
பிரத்தியுபகாரம் - கைம்மாறு.
பிரத்தியும்நன்-கிருஷ்ணனுக்கு ருக்மிணியிடத்துப்பிறந்தபுத்திரன் இவன் மனைவி ரதி.
பிரத்தியுர்கம்-யுத்தநிமித்தம்.
பிரத்தியுற்பன்னம் ஆபத்தம், பெருக்கம்.
பிரத்தியூகம் - தடை.
பிரத்தியூசன் } அட்டவசுக்களிலொருவன்.
பிரத்தியூஷன் }
பிரத்தியுஷன் - அஷ்டவசுக்களில்ஒருவன்.
பிரத்தியேகம்-தனிமை, பிறநீங்கல்.
பிரத்தியேகராச்சியம் - தனியரசு.
பிரத்தியோசம் - மனவேற்றுமை, நடு.
பிரத்தியோகார்த்தம் யுத்தநிமித்தம்.
பிரத்தியோதம்-கிரணம், பிரபை.
பிரத்தியோதநன் } சூரியன்.
பிரத்தியோதனன் }
பிரத்தியோதன் - சுக்ரீரகன்புத்திரன்.
பிரத்துலம்-பருத்தல்.
பிரத்துவமிசாபாவம் - அழிவு, ஊறுபட்ட பாவம்.
பிரத்தொங்கிசம்-தீமைக்குத்தீமை,சரிக்கட்டல், பழிவாங்குகை.
பிரகிகானம் - கொலை.
பிரந்தயோகம் - கூட்டம்.
பிரந்தாகாரம் - அதிசயம்.
பிரந்தாரம் - அழகு.
பிரக்திட்டம்-மிகுகூட்டம்.
பிரந்தை - சமூகம்.
பிரபஞ்சக்கட்டு - இலௌகிக மயக்கப்பெருக்கம்.
பிரபஞ்சசாகரம் - இலௌகிகமயக்கம்.
பிரபஞ்சபந்தம்-பிரபஞ்சக்கட்டு.
பிரபஞ்சபந்தம் - இலௌகிகபந்தம்.
பிரபஞ்சமாயை - இலௌகிகமாயை.
பிரபஞ்சமூலம் - பிரபஞ்சகாரணமான மாயை மூலப்பிரகிருதி.
பிரபஞ்சம் - உலகம், எத்து, கூட்டம், சேனை, பகிடி, மாயை, மாறு, விசாலம்.
பிரபஞ்சலட்சணம்-அசத்து, சடம்,துக்கம்.
பிரபஞ்சவாதனை - பிரபஞ்ச வாசனை, இலௌகிகாப்பியாசம்.
பிரபஞ்சவாழ்வு - இலௌகிக சம்பாஷணை, இலௌகிக வாழ்க்கை.
பிரபஞ்சவியாபாரம் - இலௌகிக காரியம்.
பிரபஞ்சவிரக்தி } உலகவெறுப்பு.
பிரபஞ்சவிராகம் }
பிரபஞ்சவிருத்தி - உலகச் செய்கை, மாயாகாரிய விருத்திப்பு.
பிரபஞ்சவிலாசம் - மாயாகாரிய சம்பிரமம்.
பிரபஞ்சவைராக்கியம் - உலகவெறுப்பு.
பிரபஞ்சனன் - காற்று.
பிரபஞ்சசாரம் - உலகவொழுக்கம்.
பிரபஞ்சானுக்கிரகம் - உலகதயை.
பிரபதனம் - அடைந்து கொண்டது, அழிவு, மரணம், விழுதல்.
பிரபதன் - மகன்.
பிரபதை - மகள்.
பிரபந்தகற்பனை - கட்டுக்கதை.
பிரபந்தம்-கதை, தொடர்பு, பாமாலை.
பிரபந்நன் - சரணடைந்தவன.
பிரபம் - தண்ணீர்ப்பந்தர்.
பிரபலம்-கீர்த்தி, தளிர், பெலன், முக்கியம்.
பிரபலன் - சௌரியவான், பேர்போனவன்.
பிரபலியம் - கீர்த்தி, முக்கியம்.
பிரபலோற்பலன் - விஷ்ணுபரிசாரகருளொருவன்.
பிரபவ - முதலாண்டு.
பிரபவம்-ஆதாரம், காரணம், பிறப்பு, பெலன்.
பிரபன்னம் - அடைதல், ஒதுங்குதல், சேருதல்.
பிரபா - பந்தல், பிரமம்.
பிரபாகரம்-ஆறுசாத்திரத்தொன்று.
பிரபாகரன்-அக்கினி,ஒருநூலாசிரியன் சந்திரன், சமுத்திரம், சூரியன்.

பிரபாகீடம் - மின்மினி.

பிரபாசம் - ஒரு புண்ணியதீர்த்தம், அசுவினி முதலிய இருபத்தேழு மனைவியருள்ளே ரோஹிணி மிக்க அழகுள்ளவளாதலால் சந்திரன் அவளிடத்தில் மிக்க விருப்பமுள்ளவனா யிருந்தான், அதற்கு மற்றைய மனைவியர் யாவரும் பொறாமைகொண்டு தமது தந்தையாகிய தக்கனிடத்திற்போய் இந்தச் செய்தியைத்தெரிவிக்க, அவன் மிகு கோபங்கொண்டு, சந்திரனுக்கு க்ஷீணகதியுண்டாகும்படி சபித்தான். அப்படியேநாளுக்குநாள்குறைந்து வருவதைக் கண்ட தேவர்கள் அவனை யழைத்துக்கொண்டு தக்கனிடத்திற்குப்போய் இவன் இனிமேல் தன் மனைவியரெல்லா ரிடத்தும் ஒரேவிதமான அன்புடையவனா யிருப்பான். இவனது குறைபாடு நீங்கும்படி அநுக்ரஹிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். அப்பொழுது தக்கன் மனமிரங்கி, பதினைந்துநாள் முறையே வளர்ந்தும், பதினைந்துநாள் குறைந்தும் வரக்கடவனென்று சொல்லி, சரசுவதீநதி கடலிலேசங்கமமான இந்தத் தீர்த்தத்தில் அமாவாசைகள்தோறும் ஸ்நாநம்செய்யும்படி நியமித்தான். அவ்வாறே சந்திரன் ஸ்நாநம்செய்து லோகட்பிரபாஸனானான். ஆதலால்இந்தத்தீர்த்தத்துக்குப் பிரபாச மென்னும் பெயருண்டாயிற்று. ஒரு பட்டணம்-இது துவாரகைக்குச் சமீபத்திலுள்ளது.

பிரபாசன் - அஷ்டவசுக்களில் ஒருவன், பீஷ்மன் இவனுடைய அம்சமென்பது, புராணநிச்சயம்.

பிரபாசை-பிரஜாபதி மனைவி.

பிரபாணி - உள்ளங்கை.

பிரபாதம் - கரை, செங்குத்து, தெரு, மலையின் வீழருவி, வைகறை.

பிரபாதசமயம் - விடியற்காலம்.

பிரபாதிகம் - மயில்.

பிரபாலன் - மாணாக்கன்.

பிரபாவதி - சூரியன் மனைவி.

பிரபாவம் - ஒளி, கீர்த்தி, சமனாக்கல், பெலன், மகத்துவம், மகிமை.

பிரபாவனம் - கொல்லை.

பிரபானம் - பிரகாசம்.

பிரபித்தம் - கிடைக்கும் பொருள்.

பிரபு-அதிகாரி, இரதம், உயர்குலத்தவன், கொடையாளி, தலைவன், தொனி, பெருமையிற்சிறந்தோன், வல்லவன், விட்டுணு.

பிரபுதத்துவம் ஆளுகை, பெருந்தன்மை

பிரபுதை - பெருமை, மகத்துவம்,

பிரபுத்தனம் - மேம்பாடு.

பிர த்துவம் - பிரபுதத்துவம்.

பிரபுமோடி - மேம்பாடானநடை.

பிரபுலிங்கலீலை - துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் அருளிச்செய்யப்பட்ட நூல்களுள் ஒன்று, இது ஐக்யவாதசைவநூல்களுட்சிறந்தது, இதி லமைந்துள்ள சொன்னலம் பொருணல முதலியவை கன்னலையுங் கைப்பிக்கும், இதில் கற்பனைகள் நூதநம்.

பிரபூரணம் - அம்பு, நாணேற்றல்.

பிரபேதம் - விதம்.

பிரபை - ஒளி, குபேரனகரம், தண்ணீர்ப்பந்தல், திருவாசி, துர்க்கை, தெளிவு புஷ்பாரணன் மனைவி, இவனது மக்கள்பிராதகாலம்மத்தியாநம் சாயங்காலம் என்பன.

பிரபோதசந்திரோதயம்-ஒருநூல். வடமொழியில் கிருஷ்ணமிசிர பண்டிதரால் செய்யப்பட்ட அற்புதமான ஒரு வேதாந்த நாடகம். இதனைத் தமிழிலே விருத்தப்பாவான்.மொழிபெயர்த்தவர் மாதை - திருவேங்கட சுவாமிகள். ஆன்மாக்களுடைய காமக்குரோதாதிகளையும், விவேகம், சாந்தம் முதலியவைகளையும் உருவகம் பண்ணிப் பாரதகதைபோல நாடுகவர்தல் காட்டுக்கோட்டல் தூதுபோக்கல் போர்புரிதல் வாகைசூடல்ஞானமுடிசூட்டல் என்னும்உட்பிரிவுகளையுடையது, சொற்சுவை பொருட்சுவைகளிற்சிறந்தது, இதுஆயிரத்துமுந்நூறு வருஷங்களுக்கு முன்னே வடமொழியிற் செய்யப்பட்டது.

பிரபோதம்-அறிவு, சுறுசுறுப்பு, தெளிதல், புத்தி.

பிரபோதனம்-எழுப்புதல், படிப்பித்தல்

பிரஸபோடனம் - அலர்தல், குல்லம், புடைத்தநெல், வீங்குதல்.
பிரப்பங்கூடை - ஒரு பிரம்பினுல் செய்தகூடை.
பிரப்பங்கோரை - ஒரு கோரைப்புல்.
பிரப்பு - ஒருகலத்திற் பல்லுணப் பரப்புவது, பேருண்டி.
பிரமகத்தி, பிரமகத்திதோஷம், பிரமகத்தியாதோஷம், பிரமகத்தியை } பிராமணரைக்கொன்ற தோஷம்.
பிரமகற்பம் - பிரமன்வாழ்நாள் அது ஆயிரங்கோடாகோடி வருடம்.
பிரமகன்னிகை - சரச்சுவதி, ராமணப்பெண்.
பிரமகாதகன் - பிராமண கொலைபாதகன்.
பிரமகாயத்திரி - ஒரு மஹாமந்திரம்.
பிரமகீதை - இது உபநிடதப்பொருளையெடுத்துரைப்பது, இதனை அருளிச்செய்தவர் பிரமதேவர், இதனைத்தமிழிலேபாடினவர்தத்துவராய சுவாமிகள்.
பிரமகுலம் - பிராமணசாதி.
பிரமகைவர்த்தம் - பதினெண் புராணத்தொன்று. இதுவசிஷ்டமுனிவரால் செய்யப்பட்டது. இது பதினெண்ணயிரம் கிரந்தமுடையது.
பிரமக்கியானம் - பிரமஞானம்.
பிரமக்கியானி - பிரமஞானி.
பிரமக்கிரந்தி - ஒருமுடிச்சு.
பிரமக்கொலை - பிராமணக்கொலை.
பிரமசடங்கம் - ஆறங்கத்தோடு செய்யுமோர் செபம்.
பிரமசரியம், பிரமசரியவிரதம் } கற்று விரதங்காத்து விவாகமின்றியிருக்குநிலை இது ஆச்சிரம நான்கில் ஒன்று.
பிரமசாபலம் - உபநிடத முப்பத்திரண்டினென்று.
பிரமசாரி பிரமசாரியமனுட்டிப்போன் வீடுமன், வேதம்படிக்குமாணக்கன்.
பிரமசாரிசந்நியாசி - பிரமசரிய நிலையிலிருந்து சந்நியாசத்திற் குவோன்.
பிரமசாரித்துவம் - பிரமசரியநிலை.
பிரமசித்தி - தேவஞானசித்தி.
பிரமசூத்திரம் - முப்புரிநூல், வேதாந்தசூத்திரம்இதுவேதவியாசமுனிவரால்செய்யப்பட்டநூல், இதுபிரமமீமாம்சை என்றும் சொல்லப்படும். இதனை திரிமதஸ்தர்களும் அங்கீகரித்திருக்கிறார்கள், இதற்குசங்கராசாரியர், நீலகண்டசிவாசாரியர், இராமாநுஜாசாரியர் என்னும் மூவரும் பாஷ்யங்கள் அருளிச்செய்திருக்கிறார்கள்.
பிரமசைதன்னியம் - கடவுள், மூலகாரணம்.
பிரமஞானம் - கடவுளையறியும்ஞானம்.
பிரமஞானி - தேவஞானமுள்ளோன்.
பிரமஞ்ஞம் - தேவவறிவு.
பிரமஞ்ஞானம் - தேவஞானம்.
பிரமணம் - சுழற்சி, திரிதல்.
பிரமதகணம் - கைலாயத்திலிருக்கும்பக்தசமூகம்.
பிரமதண்டம் - குருக்கு, பிராமணர்க்குரியகோல்.
பிரமதண்டு - ஒருபூடு, பிரமதண்டம்.
பிரமதத்தன் - சூளிபுத்திரன், இவன் குசநாபன்புத்திரிகளைமணம்புரிந்தவன், அணுஹன்மகன். இவன்யோகதந்த்ரமென்னும் ஒருகிரந்தஞ்செய்தவன், ஓரரசன், இவன்ஒருகாலத்தில் கௌதமருக்கு அன்னம் பரிமாறும்போது அதில் மாம்ஸகண்டம் காணப்பட்டமையால்அவரால் கழுகாய்ப்பிறக்கும்படி சபிக்கப்பட்டு அந்தச்சாபம் ஸ்ரீராமாது காஸ்பாஸத்தால் நிவர்த்தியாதலும் தேவசரீரமடைந்தான்.
பிரமதத்துவம் - தேவத்தன்மை, தேவவறிவு, மெய்ஞ்ஞானம்.
பிரமதம் - சந்தோஷம், வெறி.
பிரமதனம் - கடைதல், கொலை, வருந்தல்.
பிரமதாகானனம் - நந்தவனம், பிரமதாவனம்.
பிரமதாதிபன் - சிவபிரான்.
பிரமதாலயம் - நாகம்.
பிரமதாவனம் - நந்தனவனம்.
பிரமதானம் - வேதபோதனை.
பிரமதி - ச்யவநனுக்கு சுகந்யகையிடத்துப் பிறந்த புத்திரன், இவன் மகன் உரூரன், இவன் மனைவி கிருதாசி.
பிரமதிதம் - கடைதயிர்.
பிரமதேவன் - பிரமா.
பிரமதை - உருபவதி.
பிரமத்தம் - அசட்டை, பிழை, மதிமயக்கு, வெறி.

பிரமத்தி - பிரமகத்தி.
பிரமத்துவம் - பிரமதத்துவம்.
பிரமத்துவரை-விசுவாவசு என்னும்கந்தர்வராஜன் மகன், இதன்தாய் மேநகை.
பிரமநிருவாணம் - கடவுளுடனொன்றியிருத்தல்.
பிரமபதம் } பிரமலோகம்.
பிரமபதவி }
பிரமபத்திரம் } புகையிலை.
பிரமபத்திரி }
பிரமபந்து - பிராமணன்.
பிரமபிங்கை - வெள்ளி.
பிரமபிந்து - உபநிடத முப்பத்திரண்டினொன்று.
பிரமபுத்திரம் - ஒருநதி.
பிரமபுத்திரி-சரஸ்வதி, சரஸ்வதியாறு.
பிரமபுரநாதர் - திரு அம்பர்ப் பெருந்திருவிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
பிரமபுரம் - சீகாழிப்பதி.
பிரமபுராணம் - பிருமபுராணம்.
பிரமபுரிநாயகர் - திருச் சிவபுரத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
பிரமபுரீசர் - திருக்கடவூர் மயானத்தில் கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
பிரமபூதி - சந்திவெளிச்சம்.
பிரமப்பிரளயம் - பிருமப்பிரளயம்.
பிரமமணம் - பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர் கொடுக்குமணம் அது எண்வகை மணத்தொன்று.
பிரமமரிசம் - வெள்ளைமிளகு.
பிரமமுனி - பிரமரிஷி.
பிரமமூலி - பிரமி.
பிரமம்-அக்கினிஅட்டாதசவுபபுராணத்தினொன்று, ஆதிகாரணம், ஆதித்தன், இருடி, உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று, கடவுள், கலக்கம், சந்திரன், சிவபிரான், சுழல்,காற்று, சுழற்சி, ஞானம், தண்டசக்கிரம்,தத்துவம்,தவம்,தவறு,திரிதல்,திருமால் நடு, நித்தியயோகத்தொன்று, நீர்ப்பாய்ச்சல், பஞ்சமாவெச்சத் தொன்று,அதுவேதமோதல், பதினெண்புராணத்தொன்று, பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர்க் கொடுக்குமணம், பிரமன், மந்திரம், மாயை, முத்தி, யாகம், யோக மிருபத்தேழினொன்று, வேதம், வேதாந்தம். ஏகமாய் சச்சிதானந்தமாய் உலகமுழுதும்தோன்றி யொடுங்குதற்கிடமாயுள்ள பொருளாகிய கடவுள், புராணங்களும் ஒன்று,இதுபதிநாயிரங்கிரந்தமுடையது. லோக ஸ்ருஷ்டியையும் மந்வந்தரங்களையும் சூரியசந்திரவமிசத்தாரையும், சூரியன் பொருட்டும் சிவபெருமான் பொருட்டும் ஜகந்நாதர் பொருட்டும் உள்ளதிருக்கோயில்களையும், திருநந்தந வநங்களையும் ஜகந்நாத மான்மியத்தையும் உணர்த்துவது.
பிரமயம் - கொலை, மரணம்.
பிரமயாகம்-பஞ்சமாவெச்சத்தொன்று அது வேதமோதல்.
பிரமயோனி - பிராமணப்பிறப்பு
பிரமரட்சு - பருத்தமுருடன்.
பிரமரந்திரம் - உச்சித்துவாரம்.
பிரமரம் - வண்டு.
பிரமராட்சதன் } அவமரண மடைந்த
பிரமராட்சதை } பிராமணனுவியெடுக்கு மிராட்சதப்பேய்.
பிரமராம்பை-ஸ்ரீசைலத்திலுள்ள பராசத்தி பெயர்.
பிரமரி - கூத்தின்விகற்பம், சுழலல்.
பிரமரிஷி - பிராமணருஷி.
பிரமரிஷிதேசம்-குருக்ஷேத்ர மத்யபாஞ்சால சங்யாகுப்ஜ சூரசேந மதுராதேசங்கள் இப்பெயராற்கூறப்படும்.
பிரமரீதி - பித்தளை.
பிரமலிபி - பிரமாவினெழுத்து.
பிரமலோகம் - சத்தியலோகம்.
பிரமவமிசம் - பிராமணச்சாதி.
பிரமவருத்தனம் - செம்பு.
பிரமலோசை - ஒரு அப்ஸரஸை.
பிரமவாதம் - வேதமதம்.
பிரமவித்து - ஞானிகளிலோர்வகை.
பிரமவித்தை - பிரசாபதிமனைவி பிரமா அதர்வனுக் குபதேசித்த ஞானநூல்.
பிரமவிந்து - பிரமபிந்து.
பிரமனுள் - உரோகணி.
பிரமன்-பிரபா,பிராமணன்,முதற்குரு.
பிரமன்றந்தை - விட்டுணு.

பிரமா-பிரமதேவன். சிருட்டித்தொழிலைச்செய்யுமோர்தேவன்இவன்திரிமூர்த்திகளிலொருவன். இவன்மனைவி சரசுவதி, திருமாலின் திருநாபிகமலத்தில் அவதரித்தவன்.
பிரமாஞ்சலி-இருகையுங்குவித்துநெஞ்சிடைவைத்து வணங்கல்.
பிரமாட்சரம் - மூலவெழுத்து. [ல்.
பிரமாணஞ்செய்தல் - சத்தியம்பண்ண
பிரமாணம்-அத்தாட்சி,அளவு,அளவை, ஆணை, உண்மை, எல்லை, பொழுது, முகாந்திரம், முதல்வேதம், விதி.
பிராமணன் - மெய்யன், விட்டுணு.
பிரமாணுதீதம் - பிரமாணத்தைக் கடந்தது.
பிரமாணுபாவம்-அத்தாட்சியில்லாமை, அளவின்மை.
பிரமாணிகம் } ஆணை, உண்மை, திட்டாந்தம்.
பிரமாணிக்கம் }
பிரமாணிக்கன் - மெய்யன்.
பிரமாணித்தல் - அளவுபடுத்தல், நிதானித்தல், மதித்தல்.
பிரமாண்டநாயகன் - கடவுள், சக்கரவர்த்தி, சிவபெருமான்.
பிரமாண்டம் - உலகம், காத்திரம், பதினெண்புராணத்தினென்றுஇதுபிரமதேவனாற் செய்யப்பட்டது, இது பன்னீராயிரங் கிரந்தமுடையது.
பிரமாண்ணியம் பிராமணர்கூட்டம்.
பிரமாதம்-அசட்டை,உவாதித்தல், சொல்லல், தவறல், மதியீனம், மோகம், வருத்தம், வலாற்காரம், வெறி.
பிரமாதா - பாட்டன்.
பிரமாதாமகன் - அப்பாட்டன்.
பிரமாதி - பதின்மூன்றாவதாண்டு.
பிரமாதிகமனம் - வேதம்படித்தல்.
பிரமாதிகை - தீண்டப்பட்டவள்,புத்திகெட்டவள்.
பிரமாதிட்சு - அறிவித்தல்.
பிரமாதீச - நாற்பத்தேழாவதாண்டு.
பிரமாத்தியம் - அசட்டை, மதிமயக்கு.
பிரமாத்திரம் } பிரமபாணம்.
பிரமஸ்திரம் }
பிரமாந்தரம் - உயிர்நிலை.
பிரமாபணம் - கொலை.
பிரமாம்பசு - கோசலம்.
பிரமாயு - பிரமகற்பம்.
பிரமாயுதம் - பத்திலட்சம்.
பிரமாண்ணியம் - வேதாரணியம், திருமறைக்காடு.
பிரமாவர்த்தம் - சரசுவதி த்ருஷத்வதி என்னு மிரண்டுநதிகளுக் கிடையேயுள்ள தேசம். [ம்
பிரமானந்தம்-பரமானந்தம், பேரின்ப
பிரமி-ஒருபூடு,சுழல்,சுழல்காற்று, தண்டசக்கிரம், தவறு, பிழை, நடத்தல்.
பிரமிதம் - அறியப்பட்டது. [திவு.
பிரமிதி-அளத்தல், அநுமானம்,மெய்ய
பிரமித்தல்-அதிசயத்தாலு மச்சத்தாலும்விறைத்தல்,ஏங்குதல்,திகைத்தல்.
பிரமிப்பு - அதிசயம், திகைப்பு.
பிரமியம் } ஒருபூண்டு,ஒருவியாதி.
பிரமியன் }
பிரமுகுதம் - மிகுமேன்மை.
பிரமுகம் - அதிகநல்லது, நிகழ்காலம்.
பிரமுகன் - ரேவதிதந்தை.
பிரமுதிதம் - சந்தோஷம்.
பிரமூடன் - மடையன், மருண்டவன்.
பிரமேகம் - மேகவியாதி.
பிரமேயம் - அளவிடப்படுவது,அறியப்படுவதுஓலாலங்காரம்அநுசரீரம் ஆன்மா முதலிய பன்னிரண்டுபொருளையுடைத்தாயதாட்சிப் படுத்தப் படவேண்டியது, சமுசயம்.
பிரமை-அறியாமை,மாட்சி,பைத்தியம் மயக்கம், மெய்யறிவு, நடத்தல்.
பிரமோகம் - மயக்கம்.
பிரமோசனம் - இட்டமாதல்.
பிரமோதநி - மல்லிகைக்கொடி.
பிரமோதம்- விரும்பிபிரயத்தினப்பட்டதையடைதல், உவகை.
பிரமோதிதன் - குபேரன்.
பிரமோதூத - நான்காவதாண்டு.
பிரமோத்தரகாண்டம் - பிரம புராணத்துக் கடைக்கண்டம். வரதுங்கராமபாண்டியன்பாடியவொருதமிழ்நூல் இது சைவபுராணங்களின் சாரமாயுள்ளது.
பிரமோற்சவம் - கோயில்களில் வருஷத்துக் கொருதரம் நடக்கும் விசேஷ உற்சவம்.
பிரம்பு-சூரல்,தேர்,தேர்முட்டி,வரம்பு.
பிரயதன் - பரிசுத்தன்.

பிரயத்தனம் } எத்தினம்செயல்,நிறை
பிரயத்தினம் } வேற்றம் முயற்சி.
பிரயாகம் - குதிரை, பிரயாகை, யாகம்.
பிரயாகன் - இந்திரன்.
பிரயாகை-ஒருதலம்,ஒருநதி,திரிவேணி சங்கம். பிரசாபதிக்ஷேத்ரம்,இது கங்கையும் யமுனையும்கூடுமிடத்திலுள்ளது. இது பிரபலமான ஒரு ண்ய க்ஷேத்ரம்.
பிரயாசம்-ஒருயாகம், தெண்டிமை, முயற்சி, வருத்தம்.
பிரயாசி பிரயாசைக்காரன்,பிரயாசைக்காரி.
பிரயாசை-கஷ்டம், பிரயாசம்,பிரயாசி.
பிரயாணகாலம் - மரணகாலம்.
பிரயாணசந்நாகம்-பிரயாணத்துக்காயத்தம்.
பிரயாணம் - சா, பயணம், போதல்.
பிரயாணி - பிரயாணகாரன்.
பிரயாதன் - சௌப்திகன், பிருகு.
பிரயாபயன் - பிரயாகன்.
பிரயாமசிபாதம் - கிட்டவிருத்தல்.
பிரயாமம் - அருந்தல், நீளம், பஞ்சை.
பிரயுதம் - பத்திலட்சம்.
பிரயுத்தம் - முகாந்திரம், யுத்தம்.
பிரயுத்தார்த்தம் - யுத்தம்
பிரயுத்தி - பிரயோசநம்.
பிரயோகசாரம் - ஒரு இலக்கண நூல்.
பிரயோகம் - உதாரணம், உபாயம், உவமானம், எத்தனம், ஏவல், காரியம், குதிரை, சாதனை, சூட்சம், செயல், செலுத்துதல்,தம்பனம்,நியமம்,நிவர்த்தி, நோக்கம், பலம்,மயக்கம்,மருந்துசெய்தல், முகாந்திரம், முதற்பணம், முயற்சி, மூலவாக்கியம்.
பிரயோகம்பண்ணல் - அத்தாட்சி பண்ணல், அப்பியாசித்தல், யூகித்தல்.
பிரயோகவிவேகம் - திருக்குருகூர் சுப்பிரமணிய தீக்ஷிதர்செய்த வோரிலக்கண நூல். இதற்கு உரையும்அவரே செய்தார். இந்நூலில் வடமொழி தமிழ்மொழி யிரண்டிலுமுள்ள பிரயோக ஒற்றுமைகளை யெடுத்துக் கூறுவது. இது ஐம்பத்தொரு கலித்துறைகளாலாக்கப்பட்டது. இந்நூல் இருநூற்றிருபது வருஷங்களுக்கு முன்னே செய்யப்பட்டது.

பிரயோகி - சமர்த்தன், பிரயாசி, யூகி, வல்லவி.
பிரயோகித்தல்-செலுத்துதல், வழங்கல்
பிரயோசகம் - பிரயோசனம்.
பிரயோசகன்-பிரயோசனப்பட்டவன்
பிரயோசனப்பொருள் - பயன்படுபொருள்.
பிரயோசனம் - ஊது, நோக்கம், பலன், முகாந்திரம்.
பிரயோசனம்பண்ணுதல் - நயம் பண்ணுதல்.
பிரயோசனன் } உத்தம புருஷன்,
பிரயோசிகன் } பரோபகாரி.
பிரயோச்சியம் - மூலதனம்.
பிரயோந்திருக்கள்-உபயோகப்படுபவர்.
பிரரோகம் - தளிர்.
பிரலம்பம் - அசைவு, எத்து, கிளை, தளிர், தனம், துத்தநாகம்,தூக்கங்கள், பூமாலை.
பிரலம்பன்-பலராமரால்கொல்லப்பட்டவோரசுரன்.
பிரலாபசன்னி - அலறுசன்னி.
பிரலாபம்-அசைத்திசைத்தல், ஒருசன்னி, சம்பாஷணை, துக்கம்,நாக்குளறுதல், பயனில்சொல், புலம்புகை.
பிரலாபித்தல் - ஊன்றிப்பேசுதல், நாக்குளறுதல், புலம்பல்.
பிரலோடனம் - உருளுதல்.
பிரலோபம் - காமம்.
பிரலோபனம் - காமவிகாரம்.
பிரவசம் - காற்று.
பிரவசயோகம் - பரதேசம்போகல்.
பிரவசனம் - சுற்றுதல், பிரசங்கம் பண்ணுகை.
பிரவஞ்சம் - உலகம், வித்தியாசம்.
பிரவணம் - நாற்றெருக்கூடுமிடம், கதிவளைவு.
பிரவத்தகம் - செயல்.
பிரவத்தம் - சமுசாரம்.
பிரபணம் - விதைத்தல்.
பிரவயணம் - அங்குசம்.
பிரவரம் - சந்ததி, வமிசம்.
பிரவரன் - ஒருவிப்பிரன்.
பிரவருக்கம் - ஓமத்தீ.
பிரவருத்தகன் - ஆக்கியோன், தொல்லாசிரியன், நீதவான், முயற்சிசெய்வோன், வியாபாரி.

பிரவருத்தனம் - தீர்மானம், முயற்சி.
பிரவருத்தித்தல் - தீர்மானித்தல், முயறல்.
பிரவர்த்தகன் - பிரவருத்தகன்.
பிரவர்த்தனம் - பிரவருத்தனம், அதாவது நடக்கை.
பிரவர்த்தி - முயற்சி.
பிரவர்த்தித்தல் - பிரவருத்தித்தல்.
பிரவர்ஷணம்-மதுராபுரிக்குச்சமீபத்திலுள்ள ஒருமலை. கிருஷ்ண பலராமர்கள் ஜராசந்தனுக்கஞ்சி யொளித்திருந்தமலை. இது ஜராசந்தனால் தீயூட்டப்பட்டது.
பிரவாகம் - குளம், தத்துவம், தொழில், பெருக்கு, வரவு, வேலை, பரம்பரை.
பிரவாசம் - வெளிப்புறப்படல்.
பிரவாசனம் - கொலை, பிரதேசவாசம்.
பிரவாணி - நாடா.
பிரவாரணம் - கொடை, தடை.
பிரவாரம் - புடவை.
பிரவாலம் - இளந்தளிர், சிசு, முளை, நூதநமானதளிர், வீணாதண்டம்.
பிரவாளம் - பவளம்.
பிரவிக்கியாதி - கீர்த்தி.
பிரவிசெடம் - விலகல்.
பிரவிடை - பெண்பருவநான்கினுள் அது மத்தியபருவம்.
பிரவிதாரணம் - அரும்புதல், கிழித்தல், சந்தடி, யுத்தம்.
பிரவிருத்தர் - முயற்சியுடையோர்.
பிரவிருத்தி - செய்கை, செய்தி, சேர்மானம், நடை, நீர்ப்பாய்ச்சல், பெருக்குந்தொகை, முயற்சி, யானை மதம், வளர்ச்சி, விரிவு.
பிரவிருத்தித்தல் - அதிகப்படுதல், விரிதல்.
பிரவிருந்தியம் - வரவு.
பிரவீணதை - சமர்த்து, தேற்றம்.
பிரவீணன்-சமர்த்தன். பிராசின்னபுத்திரன்.
பிரவீரன் - பிராசின்னவானன் புத்திரன்.
பிரவீனம் - சாமர்த்தியம்.
பிரவேசம் - உட்படல், முயற்சி.
பிரவேசகன் - தூதன்.
பிரவேசப்படுத்தல் - பிரவேசிப்பித்தல்.
பிரவேசமாதல் - தோற்றுதல்.
பிரவேசம் - ஆரம்பம், உட்படல், கூத்தினோர் விகற்பம், தோற்றுதல் முயற்சி, வாயில்.
பிரவேசவுபமிடதம் - ஒரு வுபமிடதம்.
பிரவேசனம் - வாயில்.
பிரவேசித்தல்-உட்செல்லல், உட்படல், தொடங்கல், தோற்றப்படல்.
பிரவேட்சணம் - முன்னுறக்காணல்.
பிரவேட்டம்-புயம், பணிக்கட்டு, யானைமேற்றவிசு.
பிரவேணி - சடை, யானைமேற்றவிசு.
பிரவேணம் - வணக்கம்.
பிரவை - ஒளி.
பிரளயகாலக்கனல் - பிரளயாக்கினி.
பிரளயகாலம் - உலகமுடிவு.
பிரளயகாலருத்திரன்-சங்காரருத்திரன்
பிரளயகாலவெள்ளம்-உகாந்தவெள்ளம்
பிரளயமாருதம் - ஊழிக்காற்று.
பிரளயமுடிவு - உகாந்தம்.
பிரளயம் - அழிவுகாலம், படையிலோர் தொகை, அது வாகினி மூன்றுகொண்டது, வெள்ளம்.
பிரளயாகலர் - பிரளயகாலத்து முத்தியடைபவர், மாயைநீத்தோர்.
பிரளயாக்கினி - ஊழித்தீ.
பிரளல் - எழுத்திலாவோசை, புரளல்.
பிரளையம் - பிரளயம்.
பிரஹஸ்தன் - சுமாலிமகன்.
பிரஹேதி - ஹேதி.
பிரஹ்லாதன் - திதிவமிசம், இரணியகசிபன் புத்திரன், இவன்தாய் லீலாவதி, இந்தப் பிரஹலாதனை ரக்ஷிப்பதும் இரணியகசிபனைக் கொல்வதும் காரணமாகத் திருமால் பொற்றூணிடையே நரசிங்கரூபமா யவதரித்தார்.
பிரனலம் - நீர்க்கால்.
பிராகபாவம்-மாயை, முன்னையின்மை.
பிராகம் - கிழக்கு.
பிராகரியம்-உறைப்பு, கூர்மை, பொல்லாங்கு.
பிராகாதம் - யுத்தம்.
பிராகாமியம்-நினைத்த போகமெல்லாம் பெறுவது, இது அட்டசித்திகளுள் ஒன்று.
பிராகாரம்-பிரகாரம், மதில், வார்த்தல்.
பிராகிண்ணம் - முற்பொழுது,
பிராகிருதசனம் - நடுத்தரமானவசம்.

பிராகிருதபிரளயம் - உலகநாசம்.
பிராகிருதமித்திரன் - துணைவன்.
பிராகிருதம் - அழியத்தக்கது, எல்லாநாட்டு மேலோர்மொழி, திசைமொழி, பிரகிருதம், பொது.
பிராகிருதன் - உண்மையறிவில்லாதவன்.
பிராக்கியன் - அறிவுள்ளவன்.
பிராக்கு - சென்றது, பராக்கு.
பிராக்ஜோதிஷம் - நரகாசுரன்பட்டணம், இது கிராதர்வசிக்குங் காமரூபதேசத்துள்ளது.
பிராங்கணம் } ஒருபறை.
பிராங்கம் }
பிராசகம் - பித்தம்.
பிராசகன் - தேர்ப்பாகன்.
பிராசங்கம் - தொழுவம்.
பிராசம் - இறகம்பு, எதுகை.
பிராசயம் - ஆதி.
பிராசனம்-அங்குசம்உண்மை,சோறூட்டல்.
பிராசாகுக்குடம் - மாடப்புறு.
பிராசாதம் - கோயில்.
பிராசாபத்தம்-அட்டமங்கலத்தொன்று
பிராசாபத்தியம் - ஒருவிரதம்.
பிராஜாபத்தியன் - ஓரக்கினி, புரந்தரன் புத்திரன்.
பிராசாரம் - ஒழுக்கவழு.
பிராசாரியன் - மாணாக்கன்.
பிராசி - கிழக்கு, முன்.
பிராசிகன் - ஈட்டிக்காரன், எறிபடைகாரன்.
பிராசிகை - கொசுகு.
பிராசிதம் - காணிக்கை.
பிராசின்னவாணன் - முதல்ஜநமேஜயன்மகன், இவன் பிராசீசனெனவும்படுவன்.
பிராசீ - பிராசி.
பிராசீசன் - பிராசின்னவானன்.
பிராசீநதிலகம் - சந்திரன்.
பிராசீநாசாரம் - பழையவொழுக்கம்.
பிராசீநபநசம் - வில்வம்.
பிராசீபதி - இந்திரன்.
பிராசீரம் - சுவர், வேலி.
பிராசீனபர்ஹி - ஹவிர்த்தாநன் புத்திரன், இவன் வருகிஷிதன் எனவும் படுவன், இவன்தாய் திஷ்ணை, சதத்ருதியிடத்து இவனுக்குப்பதின்மர் புத்திரர் பிறந்தார்கள்.
பிராசீனம்-கிழக்கு, சுவர், பங்கம்பாளை, பழமை.
பிராசீனவாக்கிசன்-அரசன்,இந்திரன்.
பிராசீனுவீதம் - சூத்திரர் மார்பிலணியுநூல்.
பிராசு - கிழக்கு.
பிராசேதசன் - வான்மீகரிஷி.
பிராச்சித்தம் - பிராயச்சித்தம்.
பிராஞ்ஞத்துவம் } அறிவு.
பிராஞ்ஞம் }
பிராஞ்ஞன் - பிரஞ்ஞன், பிராக்கியன். ருசிவாசுவன் புத்திரன்.
பிராட்டி - தலைவி, பெருமாட்டி.
பிராணசகி - உயிர்த்தோழி.
பிராணசங்கடம் - உயிர்போகத்தக்க நெருக்கம்.
பிராணசமை - மனைவி.
பிராணசவுக்கியம் - செல்வம்.
பிராணசினேகிதன்-உயிர்த்துணைவன்.
பிராணசேதம் - உயிர்ச்சேதம்.
பிராணதம்-இரத்தம், காற்று, நீர்,தோத்திரஞ்செய்தல்.
பிராணதன்-பிறப்பித்தோன், வலியன்.
பிராணதாரகம் - பத்தியபோசனம்.
பிராணதாரணம் - சீவனத்திற்குரியன.
பிராணதுக்கம் - உயிரையும் போக்கத்தக்க கவலை.
பிராணத்தறுவாய் - மாணத்தறுவாய்.
பிராணத்தியாகம் - சீவனைக் கொடுத்தல், தற்கொலை.
பிராணநதம் - காற்று.
பிராணநாசம் - பிராணலயம்.
பிராணநாதன் } கடவுள், கணவன்.
பிராணநாயகன் }
பிராணநாயகி - மனைவி.
பிராணந்தியம் - நவக்கிரகம்.
பிராணபதேசுரர்-திருமங்கலக் குடியில் எழுந்தருளியிருக்கும்சுவாமிபெயர்.
பிராணப்ரதிட்டை-பிராணஸ்தாபனம்.
பிராணமயகோசம் - கருமேந்திரியமும் பிராணனுங்கூடிய சம்பந்தம் அது பஞ்சகோசத்தொன்று.
பிராணவயம்-பஞ்சமய கோசத்தொன்று.
பிராணமித்துரு - பிராணசினேகிதன்.
பிராணம்-காவிவல்லபம்,காற்று, சீவன், சுவாசம், பெலன்.
பிராணலயம்-உயிரழிவு, சீவ ஒடுக்கம்.

பிராணவாயு - பிராணன்.
பிராணவியோகம் - பிராணலயம்.
பிராணவீனன் - அப்பிராணி.
பிராணவேதனை - மரணவேதனை.
பிராணவ்வியம் - மரணம்.
பிராணனம் - சீவன், தொண்டை.
பிராணன் - உயிர், தசவாயுவினென்று அது இதயத்தியங்குவது.
பிராணன்-விதாதைக்கு ஙியதியிடத்துப் பிறந்தபுத்திரன், வேதசிரசு தந்தை.
பிராணநாதன் - கடவுள், கணவன்.
பிராணாந்தம் - உயிர்முடிவு, மரணம்.
பிராணாந்திகம் - கொலை.
பிராணபாதம்- சீவனுக்கிடையூறுனது.
பிராணயாமம் - அட்டாங்கயோகத்தொன்று அது பிராணவாயுவைஇரேசக பூரக கும்பகஞ்செய்தல்.
பிராணி - சீவனுடையது.
பிராணித்தியூகம் - கடாப்போர், சேவற் போர்.
பிராணிபீடை - சீவனைவருத்தல்.
பிராணேசன் - கணவன்.
பிராணேசை - மனைவி.
பிராதகம் - காப்பாற்றல்.
பிராதக்காலம் - விடியற்காலம்.
பிராதக்கிருத்தியம் - காலைப்பலி.
பிராதசந்தி - வைகறைவெளிச்சம்.
பிராதச்சந்தியை - காலைப்பலி, வைகறை.
பிராதமிகர் - வானோர்கணமொன்பதில் ஒருவர். இவர் கடவுட்டிருவுளப்படியேஇராச்சியசம்பந்தமானசாதாரண நன்மைகளை நடத்துந் தலைமைபெற்றோர்.
பிராதமிகன் முன்பிறந்தோன்.
பிராதம்மியம் - முதன்மை.
பிராதர் - மூதாக்கள்.
பிராதா - அண்ணன்.
பிராதி - பிரியாதி.
பிராதிபதிகன் - அக்கினி.
பிராதிரு - சகோதரன்.
பிராதிருசாயை } சகோதரன் மனைவி.
பிராதிருபத்தினி }
பிராது - அத்தாட்சி, முறைப்பாடு.
பிராதேசம் - ஒட்டை, தானம்.
பிராதேசனம் - கொடை.
பிராதை-தக்ஷப்ரஜாபதி புதல்வி, காசிபன் மனைவியரிலொருத்தி.

பிரார்த்தனை - நேர்கடன், வேண்டுதல்.
பிராத்தி - அட்டசித்தியினென்றுஅது வேண்டுவன வடைதல், ஆதாயம், றுதல், கூட்டம், சம்பாத்தியம், சித்தி, பேறு.
பிராத்திதம் - கேட்கும்பொருள்.
பிராத்தித்தல் - பிரார்த்தனைசெய்தல்.
பிரார்த்திப்பு - பிரார்த்தனை.
பிராத்தியக்கு - மேற்கு.
பிராந்தஅருக்கம் - நகரம்.
பிராந்தம்-அருகு, கடை, மதயானை.
பிராந்தன் - மூடன்.
பிராந்தாம் - காடு, பாரப்பொது, வன பாதை.
பிராந்தி - உறுதியின்மை, சுழிதல், சுழல்ல், தப்பிதம், திரிதல், கிலையின்மை, மயக்கம்.
பிராந்திகரன் - மந்திரி.
பிராந்திதாதான்மியம் - பிரமபூரணத்திலகங்காரங்கலத்தல்.
பிராந்திமதலங்காரம் - மயக்கவணி.
பிராந்தியம் - சுற்றுப்பட்டு.
பிராந்திரம் - புறவெளி.
பிராந்து - பருந்து, பிராந்தி.
பிராபவியம் - தத்துவம்.
பிராபவம் - முதன்மை.
பிராபாகரம் - பிரபாகரமதம்.
பிராயி - பிராசி.
பிராப்தி - ஜராசந்தன் புத்திரி, அஸ்தி தங்கை, கஞ்சனுடைய இரண்டாம் மனைவி. அஷ்டசித்திகளுள் ஒன்று. அது இஷ்டலோகஞ்சென்றுமீளுதல்
பிராபோதிகம் - விடியல்.
பிராப்பியம் - பெறத்தக்கது, பேறு.
பிராமகம் - எத்து, காந்தம், நரி.
பிராமணகாதுகன்-பிராமணத்துரோகி.
பிராமணத்தி - பார்ப்பனச்சி.
பிராமணத்துவேஷி பிராமணநிந்தகன்.
பிராமணநாகம் - ஒருநாகம்.
பிராமணபோசனம் - சமாராதனை.
பிராமணப்பாம்பு - பிராமணநாகம்.
பிராமணம்-பார்ப்பனக்கூட்டம், வேதப் பகுதி.
பிராமணவாளி - ஒருகாதணி.
பிராமணன்-பார்ப்பான், சீவன் முத்தன்.
பிராமணாதிகிரமம் - பிர்ராமண நிந்தனை.
பிராமணி - பார்ப்பனி, பார்ப்பான்.

பிர்ம்மணிகம் - பிரமாணயோகியம்.
பிராமணியம் - அத்தாட்சி.
பிராமம் - பெருவிரலடி.
பிராமம்-பிரமபுராணம் - இது பதினாயிரங் கிரந்தமுடையது.
பிராமரம் - கிராமம், சுழலல், தேன், விறைப்பு.
பிராமரி - பார்வதி.
பிராமணியம் - அத்தாட்சி.
பிராமதீட்சு - அறிவித்தல்.
பிராமி - உரோகிணி, சரச்சுவதி, பார்ப்பனத்தி, முசுறு.
பிராமியம் - தலைப்புறம்.
பிராமீத்தியம் - கடன்.
பிராம்சு - பிரஜாபிதந்தை.
பிராயச்சித்தம் - காமப்பகுதி, சாந்தி, தண்டனை, தவம், நிவர்த்தி.
பிராயச்சித்தம் - பாப பரிஹாரார்த்தமாகச் செய்யப்படுங்கிரியை.
பிராயச்சித்தவிதி - சாந்திமுறை, தவமுறை.
பிராயக்குறை - ஆயுட்குறை.
பிராயஞ்சென்றவன் - வயது முதிர்ந்தவன்.
பிராயணம் - மரணம்
பிராயப்படல் - பக்குவப்படல்.
பிராயமறிதல் - புத்தியறிதல்.
பிராயம் - அளவு, பக்குவம், பாவம், மரணம், வயது.
பிராயோபவேசம்-தேகசத்தியாகநிமித்தம் தர்ப்பைமீது சயனித்தல்.
பிராயவிருத்தி - ஆயுள்விருத்தி.
பிராயோபவேசனம் - உபவாசம் பண்ணல்.
பிராய் - பராய்.
பிராரம்பம் - ஆரம்பம்.
பிரார்த்தகன்மம் - அனுபவகன்மம்.
பிரார்த்த கன்மவாதனை - ஊழ்வினைப் பயன்.
பிரார்த்தனீயம் - துவாபரயுகம்.
பிரார்த்தம் - அனுபவிக்குங்கன்மம், ஊழ்வினை.
பிரார்த்தவினை-அனுபவிக்குமூழ்வினை.
பிராத்தனம் } மன்றாட்டு, விண்ணப்பம்.
பிரார்த்தனை }
பிரார்த்துவதேகம் - வினைப் பகுதியின்படி பெற்றவுடம்பு.
பிரார்த்துவம் - பிரார்த்தம்.
பிராலம்பம் - பூமாலை.
பிராலம்பிகை - மாலை.
பிராலேயம் - உறைந்தபனி.
பிராவம் - கொல்லை.
பிராவரணம் - வெளியங்கி.
பிராவரம் - வேலி
பிராவிருதம் - காணிக்கை, முக்காடு.
பிராவிருதி - வேலி.
பிராவேசனம் - வேலைக்கொள்ளிடம்.
பிராறு - நீந்துபுனல்.
பிரான்-எசமானன், எப்பொருட்கு மிறைவன்,கடவுள்சிவபிரான்விட்டுணு
பிரி-பிரியென்னேவல், பிரிவு,வெருகு.
பிரிசம் - பிரியம்.
பிரிசல் - குறைவு, வேறுபாடு.
பிரிசாலம் - கலக்கம்.
பிரிக்கல் - பிரிக்குதல்.
பிரிட்டிகி - பரிசனம்.
பிரிதல்-அகலல், குலைதல், கூறுபடல், போகல்.
பிரிதி - பிரீதி.
பிரித்தம் - பரிசனம்.
பிரித்தல்-குலைத்தல், கூறுசெய்தல்,நீக்கல்.
பிரிநிலை-பலவற்று ளொன்றைப் பிரித்துக்கொள்வது இது இடைச்சொற்பொருள்களினு மொன்று.
பிரிநிலையுயர்புநவிற்சியணி-ஓரலங்காரம் அது உபமானத்திற் குபமேயம் யாதொன்றானுயர்புடைத்தெனப்பிரித்துச் சொல்லுதல்.
பிரிநிலையெச்சம் - பிரிநிலையாக்குமோரெச்சம்(உ-ம்) அவனேகொண்டான்
பிரிநிலையெஞ்சணி - பிரிநிலையெச்சம்.
பிரிந்திசைக்குறள் - அம்போதரங்கம்.
பிரிந்திசைத்துள்ளல்-கலித்தளையும், பிறதளையும் பொருந்திய கலிப்பா.
பிரிந்திசைத்தூங்கல்-கலித்தளையும் பிறதளையு மயங்கிவரும் வஞ்சி.
பிரிபொருட்சொற்றொடர் - செய்யுள் வழுவினொன்றுஅதுகவிமுழுதுமோ பொருள் கொள்ளாது நோக்கப்பொருள் பிரிந்துநிற்பது (உ-ம்) பாலும் மதுவும் பனைபொழியும்.
பிரிப்பு - குலைப்பு, பகுப்பு, பிரித்தல்.
பிரிமணை - புரிமணை.

பிரிமொழிச்சிலேடை - ஒருவகையானின்ற சொல்லைப்பிரித்துத் தொகை வேறுபடுத்திப் பல பொருள்கொள்வது.
பிரியகம் - கடம்பு.
பிரியசத்தியம் - இனிய சம்பாஷணை.
பிரியசந்தேகம் - சண்பகமரம்.
பிரியஞ்செய்தல் - நேசித்தல்.
பிரியதரிசனம் - கிளி, பிரியமானபொருள்.
பிரியதரிசனி - வன்னிமரம்.
பிரியத்தம் - நன்கொடை.
பிரியபாவம் - நல்லெண்ணம்.
பிரியப்படுதல் - அன்புவைத்தல்.
பிரியப்பிராயம் - பிரியவசநம்.
பிரியமது - பலராமன்.
பிரியம் - அன்பு, உவகை, விருப்பம்
பிரியம்வதை - நகுஷன்மனைவி, சகுந்தலை தோழிகளுள் ஒருத்தி.
பிரியலர் - சிநேகிதர்.
பிரியவசநம் - இன்சொல்.
பிரியவிரதன் - சுவாயம்புவமனுவுக்கு சத்ருபையிடத்துப் பிறந்த புத்திரன், உத்தாநபாதன் தமையன்.
பிரியன் - கணவன், தலைவன், பிரியமுள்ளவன்.
பிரியாது - பிராது.
பிரியாதநாயகர் - திருப்பெருவேளூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பிரியாமை - நீங்காமை.
பிரியாம்பு - மாமரம்.
பிரியாலு - திராக்ஷை.
பிரியாவிடை - உள்ளம் பிரியாவன்புடன் விட்டு நீங்கல்.
பிரியை - ஏலம், ஓரிசை, ஒருபண், செய்தி, பெண், மது, மனைவி.
பிரியோதிதம் - இன்சொல்.
பிரிவனை - வேறுபாடு.
பிரிவாற்றுமை - புலவியாற்றுது வருந்தல்.
பிரிவினை - ஒவ்வாமை, சமயபேதம், வேறுபாடு.
பிரிவு - பகுதி, பிரிதல், வெறுப்பு, வேற்றுமை.
பிரிவுகணக்கு - கழிவுகணக்கு.
பிரீணனம் - திருத்தியடைவித்தல்.
பிரீதம் - உவப்பு.
பிரீதி - இரதி, உருக்கம், உவப்பு, நித்தியயோகத்தொன்று அது பிரியம். புலஸ்தியன் மனைவியாகிய ஹவிர்புக்குனன் பெயர்.
பிரீதிதன் - பகிடிக்காரன்.
பிரீது - பட்சி.
பிரு - கத்திரி.
பிருகதசுவன் - சபஸ்தன் புத்திரன், குவலயாசுவன் தந்தை.
பிருகதாரணியம் - உபநிடத முப்பத்திரண்டினென்று.
பிருகதி - கத்திரிச்செடி.
பிருகதிஷன் - அஜமீடன் புத்திரன், இவன்மகன் பிருகத்தநு, பர்மியாசுவன் மூன்றும் புத்திரன்.
பிருகத்சான் - பத்திரதன் புத்திரன்.
கருகத்கர்ணன் - பிருகத்திரதன் தந்தை.
பிருகத்காயன் - பிருசத்கர்மன், பிருகத்தநு புத்திரன்.
பிருகத்க்ஷத்ரன் - புமங்கியன் புத்திரன், ஹஸ்திகன் பாட்டன்.
பிருகத்ஸங்கிதை - வராஹமிசிரர் செய்த ஒருநூல், இதிலே சூரியசந்திரகிரகண விவரண பலாபலன்கள், தூமகேதுக்கள்வரலாறு, இரத்நகுணுதிசயங்கள் சகுநங்கள் முதலியன கூறப்படும்.
பிருகத்ஸேநன் - மத்திர தேசத்தரசன்.
பிருகத்ஜாதகம் - வராஹமிசிரர் செய்த சோதிடநூல்.
பிருகத்தநு - பிருகதிஷன் புத்திரன்.
பிருகத்திரதன் - குருவமிசத்து உபரிசரவசுவின் மூத்தமகன், இவன் புத்திரர் ஜராசந்தனும் குசாக்ரனும், தேவராதன் மகன் மகன், பிருகத் கர்ணன் புத்திரன்.
பிருகத்பலன் - வசுதேவன் தம்பியாகிய தேவபாகன் இரண்டாம் புத்திரன், சகுனி தம்பி, இராமன் புத்திரன்.
பிருகத்பானன் - பிருகத்திரன்புத்திரன்.
பிருகந்நளை - அர்ஜுநன் அஞ்ஞாதவாசத்தில் பேடிரூபம் கொண்டிருந்தபோது பூண்டபெயர்.
பிருகன்மநஸன் - பிருகத்பாநன் புத்திரன்.
பிருகு - சமதக்கினி, இவன் சுக்கிரன்பிருங்கிருஷி இவன் தசப்பிரமாவிலொ

ருவன், மலைமேற்பரப்பு, மிகவுமிளங்கிழங்கு. பிரமாவின் மாநஸ புத்திருளொருவன். ஒரு மகாரிஷி, இவர் வமிசத்தில் பரசுராமர்பிறந்தார், பிருகுரிஷி ஒருகாலத்தில் சிவபெருமானைத் தரிசிக்கச்சென்றபோது அவர் தரிசநங் கொடாமையால் கோவங்கொண்டு லிங்காகாரமாகும்படி சபித்துவிட்டு, பிரமாவைக்காணச்சென்றார். அவரும் இவரை மதிக்காதிருந்ததுகண்டு அவருக்குக் கோயிலும் பூசையும் இல்லாமற் போகக்கடவதென்று சபித்துவிட்டு, திருமாலினிடஞ்செல்ல, அவரும் நித்திரைசெய்திருந்தார். அதுகண்டு அவரைக்காலாலுதைத்தலும், அவர் கண்விழித்துக் கொண்டு கோவங்கொள்ளாமல் உமது திருவடி யென்மார்பிற்பட நான் செய்த புண்ணியமே புண்ணிய மென்று உபசரிக்க, நீரே யாவராலும் பூசிக்கப்படத்தகுந்த கடவுளாவீரென்று அநுக்கிரகித்துச் சென்றார்.

பிருகுக்ஷேத்திரம்-ஆநர்த்த தேசத்துச் சமீபத்திலே மேலைக்கடற்கரையிலுள்ள ஒரு புண்ணியக்ஷேத்திரம்.

பிருகுசிரவணம்-இமயமலையிலேசகரன் தவஞ்செய்த இடம்.

பிருசினி-அநமித்திரன்புத்திரன், சுவபற்கன் தந்தை. சத்தியகன் சிற்றப்பன்.

பிருகுசுதன் - சுக்கிரன், பரசிராமன்.

பிருகுடி-நெற்றியைநெறிக்கை,புருவம்.

பிருகுபதி - இராமன், பரசிராமன், பலராமன்.

பிருங்கம் - வண்டு.

பிருங்கரீடன் - ஒரு சிவகணத்தலைவன்.

பிருங்கராஜம் - கையாந்தகரை.

பிருங்கீசன் - சிவபிரான்.

பிருச்சகன் - விசாரணைகாரன்.

பிருச்சனம் - கேட்டல்.

பிருடை - சுழலானி, சுழல்துறப்பு.

பிருஷ்டம் - அரைத்தமா.

பிருட்டம் - பரப்பு, பிடரி, பின்பக்கம், முதுகு.

பிருட்டி - கிரணம், பரிசம்

பிருதகசனன்-கீழ்மகன், துட்டன், மூடன்.

பிருதகன்-கூலிக்காரன், வேலைக்காரன்

பிருதகாணம் - பகுத்தறிதல்.

பிருதத்துவம் - தனிமை.

பிருதனை - பிரதனை.

பிருதாகன் - பிருதகன்.

பிருதாகி - எலி, தேள், பாம்பு, யானை.

பிருதி - கூலி, போசனம்.

பிருதிவி - பூமி. பூதேவி. இவள் விஷ்ணுபாரி. இவளைப் பலர்க்கும் நாயகியாமாறு பார்வதி சபித்தார்.

பிருதிவிசக்கிரன் - பிருதிவிபதி.

பிருதிவிதத்துவம் - சடத்தின் மூலம்.

பிருதிவிதநயை - சீதை.

பிருதிவிபதி, பிருதிவிபாலன் } அரசன், இயமன்.

பிருதிவிலிங்கம் - மண்ணாலாய லிங்கம்.

பிருது - அங்கி, அவின், சூரியகுலத்தரசரிலொருவன், பெரியது. இக்ஷுவாகுவமிசம் அநேநசுபுத்திரன், விசுவகந்தன்தந்தை. இவனுக்குச் சாசுவதன் விசிவகனென்னும் நாமங்களுமுள. பிரசாதகன்மகன். பாரன்மகன, சுவாயம்புவமனு வமிசத்து வேநன் புத்திரன். இவன்சக்கரவர்த்தி. பாரி அர்ச்சி. புத்திரர் விஜயாசுவன், தூமிரகேது, ஹரியசுவன்; திரவிணன், விருகன் என்போர். இவன் சனற்குமாரரால் உபதேசிக்கப் பட்டவன். இவன் தனது பிரஜைகளைச் செவ்வேகாத்தரசாண்டவன். இவன்காலத்திலொருமுறை பஞ்சம்வந்து புல்பூண்டின்றிப் பூமிவறப் பெய்தியபோது இவன் தனதுதிவ்யாஸ்திரத்தையெடுத்துப்பூமியை அழிக்கவெழ, அதுகண்டு பூதேவி ஒரு பசுவாகிச் சுவாயம்புவமனுவைக்கன்றாகக்கொண்டுவெளிப்பட்டுச்சராசரங்களுக்குணவூட்டிப் பிருதுகோபத்தை ஆற்றினள். இவ்வுபாயத்தைத் தேவர்களும் இருஷிகளும் மற்றோரும் பின்னர்க்காலத்திலே பின்பற்றினார்கள். ருசிகன்புத்திரன். தர்மன் தந்தை.

பிருதுகர்மன், பிருதுகீர்த்தி, பிருதுஜயன், பிருதுசாதன், பிருதுயசன் } சசிபிந்து புத்திரர்.

பிருதுகேசுரம் - மலை.

பிருதுசேனன் - பிராஞ்ஞன் புத்திரன். பௌரன் தந்தை.
பிருதுமானம் - யானைக்கொம்பினடு.
பிருதுரோமை - மீன்பொது.
பிருதுலாக்ஷன் - சதுரங்கன்மகன்.
பிருதுவி-பஞ்சபூதத்தினொன்று, பூமி.
பிருதுவிகை - ஏலம்.
பிருதுவியண்டம் - பூமியண்டம்.
பிருதூதரம் - ஆட்டுக்கடா.
பிருதூதரன் - பெருவயிறன்.
பிருதை - பிரதை, குந்திதேவி.
பிருத்தம் - ஆஸ்தி.
பிருத்தியத்துவம் - ஊழியம்.
பிருத்தியர் - அடிமைகள்.
பிருந்தம் - கூட்டம், துளசி.
பிருந்தாரகன் - தேவன், சிவபிரான்.
பிருஷதன் - சுசன்மகிருத்துமகன், துருபதன் தந்தை.
பிருந்தாவநேசன், பிருந்தாவநேச்சுரன் } ஸ்ரீ கிருஷ்ணன்.
பிருந்தாவநேச்சுவரி - இராதை.
பிருந்தை - சலந்தரன்மனைவி, துளசி, விருந்தை.
பிருந்தாவனம்-யமுனாநதிக்கு மேற்கில் மதுராபுரிக்குச் சமீபத்திலுள்ள துளசிவனம். கிருஷ்ணன் தமது பக்தர்களுக்குப் பிரசன்னமாகநின்று அருள் புரியும் மகாக்ஷேத்திரம்.
பிர்ம்மவித்யா நாயகி - திருவெண்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பிரேஷணம், பிரேடணம் } போதல்.
பிரேட்சணம் - கண், களரி.
பிரேட்சணிகை - ஆடம்பரப்பீணிகை.
பிரேட்சை - அறிவு, ஆடல், காண்டல், புத்தி, மரக்கொம்பு.
பிரேதகருமம், பிரேதகாரியம் } அபரக்கிரியை.
பிரேதகிரகம் - கோரி.
பிரேதர்கிருத்தியம் - பிரேதகருமம்.
பிரேதகும்பம் - பிணத்துக்குடைக்கும் குடம்.
பிரேதக்குழி - சவக்குழி.
பிரேதசுத்தி - பிரேதத்தைக் குளிப்பாட்டல்.
பிரேதத்தலம் - மயானம்.
பிரேதநதி - நரகம்.
பிரேதநிர்காரகன், பிரேதநிஸ்காரகன் } சவங்காவி.
பிரேதபக்கம் - அபரபக்கம்.
பிரேதபதி - நமன்.
பிரேதபுரம் - யமபுரம்.
பிரேதம் - தெற்கு, பிசாசம், பிணம், பிதிர், பின்.
பிரேதராட்சஹி - துளசி.
பிரேதலோகம் - பிதிர்திசை.
பிரேதாசநம் - பாடை.
பிரேதாலங்காரம் - சவவலங்கரிப்பு.
பிரேதவனம் - மயானம்.
பிரேதான்னம் - பிண்டம், பிதிருண்.
பிரேதோத்தேசம் - பிதிர்பலி.
பிரேமபாதனம் - பீழை.
பிரேயம் - கள்.
பிரேரகம் - காரியப்படுத்தல்.
பிரேரகன் - காரியம்நடத்துவோன்.
பிரேரகாண்டம் - ஐம்பொறிகளின்பேதம்.
பிரேரணம் - அனுப்பல், ஏவல், ஓட்டுதல், நடத்துதல், விகாரம்.
பிரேராவத்தை - ஆன்மாக்கிரியைகளை நடத்துமவத்தை.
பிரேரித்தல் - காரியப்படுத்தல், நடத்துதல்.
பிரை - அரைப்பங்கு, உறை.
பிரைக்காற்சின்னி - அரைக்காற்படி.
பிரோகம்-முடிச்சு, யானைக்கணைக்கால், யானைக்கால்.
பிரோட்சணம் - கொலை, தெளித்தல், மிருகபலி.
பிரோதம் - கந்தை, குதிரை மூக்கு, தொடை முதிராக்கருப்பம்.
பிரோற்சாகம், பிரோற்சாகனம் } முயற்சி.
பிரௌடை - பிரவிடை.
பிர்மாண்டம் - பிரபஞ்சம்.
பிலகரி - ஓரிராகம்.
பிலகாரி - பெருச்சாளி.
பிலசம் - கருஞ்சீரகம்.
பிலஞ்சுலோபம் - எறும்பு.
பிலத்துவாரம் - நிலவறை, பாதாளவழி.
பிலம் - கீழறை, குகை, பாதலம், வளை.
பிலவ - முப்பத்தைந்தாவதாண்டு.
பிலவகதி - தவளைப்பாய்ச்சல்.
பிலவங்கம் - குரங்கு, தேரை.

பிலவகன் - அருணன், கம்பங்கூத்தாடி.
பிலவங்க - நாற்பத்தோராவதாண்டு.
பிலவங்கபதி - சுக்கிரீவன்.
பிலவங்கமம் - குரங்கு, தவளை.
பிலவங்கதம் - குரங்கு, தேத்ரை, மான்.
பிலவம் - ஆடு, ஒருபட்சி ஒரு புல், காப்பு, கீழ்சாதி, குரங்கு, சாயல், தவளை, தெப்பம், நீந்தல், நீர்நிலை, நெட்டிசை, பாய்தல், வாகை.
பிலவாகை - கப்பல்.
பிலன் - எறும்பு, பிலம்.
பிலா - பலாமரம்.
பிலாக்கு - ஒருமூக்கணி.
பிலாச்சை - கடற்றவளை.
பிலாவம் - தேய்த்தல், நிறைத்தல்.
பிலாளகம் - பழுகுசட்டம்.
பிலிம்பி - குச்சித்தமரத்தை.
பிலிற்றல் - கொப்பளித்தல், தூற்றல்.
பிலுக்கன் - ஆடம்பரமுடையோன்.
பிலுக்கு - ஆடம்பரம், லீம்பு.
பிலுபிலுத்தல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
பிலேசயம் - எலி, கீரி, சிங்கம், பாம்பு.
பிலேசயை - உடும்பு.
பிலோடம் - சுடுதல்.
பில்கல் } கொப்பளித்தல், பொசித்தல்.
பில்குதல் }
பில்லடை-அப்பவருக்கம், இடியப்பம்.
பில்லம் - ஒருகண்ணோய்.
பில்லி - ஒருவகைப்பேய், சூனியவித்தை, பூனை.
பில்லிக்குராயன் - இலாமிச்சை.
பில்லியத்தி - பெருநெருஞ்சில்.
பில்லிப்படை - பில்லிப்பேய்ப்பரிகலம்.
பில்லை - புல்லை, வில்லை.
பிழக்கடை - கோடிப்புறம்.
பிழம்பு - தம்பம், திரட்சி.
பிழா - ஓலைக்கலம், கொள்கலம்.
பிழார் - இறைகூடை.
பிழி - கள், பிழியென்னேவல்.
பிழிதல் - சாரமூறல், சாரம்வடித்தல்.
பிழியர் - கள்விறபோர்.
பிழிவு - பிழிதல்.
பிழுக்கை - விட்டையெரு.
பிழை - குற்றம், தவறு, பிழையென்னேவல், பொய்.
பிழைகாயம் - இலேசானகாயம்.
பிழைக்கடை - பிழக்கடை.
பிழைக்கை - பிழைத்தல்.
பிழைத்தல் - உய்தல், சீவனம்பண்ணுதல், தவறுதல், பிழைசெய்தல், பிழையாதல்.
பிழைபாடு - குற்றம், பிழைபடுதல்.
பிழைபார்த்தல் - திருத்தல்.
பிழைப்பித்தல் - தாபரித்தல், பிழைக்கச்செய்தல்.
பிழைப்பு - உயர்வு, சீவனம், சீவிப்பு.
பிழைப்பூட்டு - சீவனவேது.
பிழைப்பூட்டுதல் - உயிர்ப்பித்தல், சீவனவேது காட்டல்.
பிளகு - பிளவு.
பிளச்சு - பிளாச்சு.
பிளத்தல் - அறுத்தல், கீழ்தல், துளைத்தல், போழ்தல்.
பிளப்பு - பிளத்தல், வெடிப்பு.
பிளவு-கீற்று, துண்டு,பிளப்பு,வெடிப்பு.
பிளவை - விப்புருதி, வெடித்தபுண்.
பிளாச்சி - சிறுகலாகை, தட்டை.
பிளாச்சு - சிராய், பனங்கிழங்கின் பிளவு, பிளாச்சி, வரிச்சல்.
பிளிச்சி - சீனக்காரம்.
பிளிர்த்தல் - கொப்பளித்தல்.
பிளிறல் - ஒலித்தல், கீண்டல், பேசலாலெழுமொலி.
பிளிறு ஆரவாரம், எழுத்திலாவோசை, சேறு,பிளிறென்னேவல்,பேரொலி.
பிளிரொலி - யானை முதலிய குளிறுமொலி.
பிள்ளுதல் - போழுதல், வெடித்தல்.
பிள்ளை - அணில், அன்றிற்குஞ்சு, இளமையோன், கரிக்குருவி, காகம்,கிளி, கீரி, குரங்காதிகோட்டில் வாழ்விலங்கின்பிள்ளை, தெங்கு கமுகு இவற்றின்கன்று, நாகணவாய்ப்புள், பறவைக்குஞ்சு, பன்றி பூனை மான் முயல் இவற்றின்குட்டி, மகன், மரக்கன்று, வயிரவன், வெள்ளாளரில் ஒரு பட்டப்பெயர்.
பிள்ளைகொல்லி - ஒருநோய், ஒருபெருங்காயம்.
பிள்ளைக்கட்டி - கருப்பங்கட்டி.
பிள்ளைக்கவி - ஒருபிரபந்தம் அதுகாப்பு செங்கீரை தால் சப்பாணி முத்தம் வாரானைஅம்புலி சிறுபறைசிற்றில்சிறுதேர் எனும் பத்துறுப்புக்களையும்

கொண்டு கலிவிருத்தத்தான் முடிவதாண்பாற் பிள்ளைக்கவி, அவற்றுட்கடைமூன்றுறுப்பொழியகழங்கு அம்மனை ஊசல் எனு மூன்றுறுப்பையுங் கூட்டிக் கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவி, தொன்னூல்மொழிகளைத் தெரிந்துதொடுக்கும் கவி.
பிள்ளைக்கற்றுழை - ஒருகற்றுழை.
பிள்ளைக்கிணறு - உட்கிணறு.
பிள்ளைக்கைவளை - சிறுவளையல்.
பிள்ளைக்கோட்டை - அரையாப்பு, சிறுகோட்டை.
பிள்ளைச்சோமன் - சிறுசோமன்.
பிள்ளைக்காளி - ஒருசெடி.
பிள்ளைத்தமிழ் - பிள்ளைக்கவி. [சூதி.
பிள்ளைத்தாய்ச்சி - கருப்பஸ்திரி, வால
பிள்ளைத்தேங்காய் - நாற்றுத்தேங்காய்.
பிள்ளைத்தேள் - குட்டித்தேள்.
பிள்ளைப்பாட்டு - பிள்ளைக்கவி.
பிள்ளைப்பிறை - இளம்பிறை.
பிள்ளைப்பூச்சி - ஒருபூச்சி.
பிள்ளைப்பெருமாள்ஐயங்கார் - வேங்கடமாலை முதலிய அநேக வைஷ்ணவப் பிரபந்தம் பாடிய தமிழ்ப் புலவர். விஷ்ணு ஸ்தலங்கள் நூற்றெட்டின் மேலும் அந்தாதி பாடினேருமிவரே. இவர் நானூறு வருஷங்களுக்கு முன்னே சீரங்கத்திலே திருத்தொண்டு புரிந்து விளங்கினவர்.
பிள்ளைப்பேறு - மக்கட்பேறு.[தோன்.
பிள்ளைமாப்பிரபு - பெருமையிற் சிறந்
பிள்ளைமை - பிள்ளைத்தன்மை.
பிள்ளையாண்டான் - வாலிபன்.
பிள்ளையார் - கந்தன், சம்பந்தன், விநாயகன்.
பிள்ளையார்சுழி - ஊமையெழுத்து.
பிள்ளைலோகாசாரியர் - திருவரங்கத்தந்தாதி, திருவரங்கக்கலம்பகம், அர்த்தபஞ்சக முதலிய நூல்களை இயற்றிய வைஷ்ணவராகிய தமிழ்ப் புலவர். இவர் நூல்கள் சொல்லிரசம் பொருளிரசம் பத்திரசம் கால்வன ஆதலின் யாவராலும் சிரமிசைக் கொள்ளப்படுவன. இவர்காலம்சற்றேறக்குறைய நானூறு வருஷங்களுக்கு முற்பட்டது.
பிள்ளைவங்கு - பாய்மாகிற்கும்கழி.
பிள்ளைவண்டு - இளவண்டு.
பிள்ளைவிழுதல் - கருவழிதல்.
பிற-அசைச்சொல் (உ-ம்) யாஞ்சிலவரிசிவேண்டினே மாகத்தான் பிறவரிசையறிதலிற் றன்னுந்தூக்கி, பிறவென்னேவல், வேறு.
பிறகரம் - காவல், சாமம்.
பிறகரித்தல் - காத்தல், சாமங்காத்தல்.
பிறகரீசம் - அகில்.
பிறகிடல் - சேறல், பின்றல்.
பிறகு - பின்புபின்புறம். [றல்.
பிறகுகாட்டுதல் -பின்காட்டுதல்,தோற்
பிறக்கணித்தல் - இகழ்தல், நிந்தித்தல்.
பிறக்கணிப்பு - இகழ்ச்சி.
பிறக்கம் - அச்சம் கடைக்கணிப்பு, மரக்
பிறக்கிடல் - பின்றல். [கொம்பு.
பிறக்கியாதி } புறக்கியாதி.
பிறக்கினை }
பிறக்கு அசைச்சொல்(உ-ம்) எண்ணியபிறக்கியுட் செலான், பின், பின்புறம், வழுவேறு.
பிறக்குதல் - உண்டாதல்,உற்பவித்தல், வெளிவரல்.
பிறங்கடை-மகன், சந்ததி, வழித்தோன்றல்.
பிறங்கல் - அரசன்,உயர்ச்சி,ஒலித்தல், ஒழுக்கம், ஒளிசெய்தல், சிறுமலை, நிறைதல், பெருமை, மலை, மிகுதி.
பிறங்கியல் - முதுகாடு.
பிறங்கு-பிறங்கென்னேவல்,விரலிறை.
பிறங்குதல் - உயர்தல், ஒலித்தல்,நிறைதல், பிரகாசித்தல்.
பிறசாதனம் - தேக்கு.
பிறசாரிணி - கொடியார் கூந்தல்.
பிறதாரம் - பிறர்மனை.
பிறதிக்கினை - பிரதிக்கினை.
பிறத்தல் - பிறக்குதல்.
பிறத்தானம் - புறத்தானம்.
பிறத்தியகபன்னி - நாயுருவி.
பிறத்தியுத்தாரம் - மறுமொழி.
பிறநீங்கல் புறநீங்கள்.
பிறநூன்முடிந்ததுதானுடன்படல் - பிறநூலின் முடிந்த முடிபைத் தானங்கீகரித்தல் அதுயுத்தி முப்பத்திரண்டினொன்று.
பிறந்தகம் - சீதனம்,தாய்மனை, பரிசம்.
பிறந்தகோலம் - நிருவாணம்.

பிறந்தநாள் - பிறந்ததினம்.
பிறந்தமேனி - திருவாணம்.
பிறந்தவம் - பிறப்பு.
பிறந்தாள் - புறங்கால்.
பிறந்தை - சுபாவம், பாவம், பிறப்பு.
பிறபாஷை - அன்னியபாஷை.
பிறப்பார் - நாய்வேளை. [மூலம்.
பிறப்பிடம் - உறைவிடம்,பிறந்தவிடம்,
பிறப்பித்தல் - உண்டாக்கல், சயனிப்பித்தல், வெளிப்படுத்தல்.
பிறப்பிலி, பிறப்பில்லான் } கடவுள்,சிவபிரான்.
பிறப்பிறப்பில்லான் - கடவுள், சிவபெருமான்.
பிறப்பு - அச்சம்,உற்பத்தி,சகோதரம், துவக்கம், தோற்றம், நெருக்கம்.
பிறப்புவாசி - சென்மசுபாவம், பிறப்பிலுண்டானது.
பிறரையந்தீர்த்தல் -பிறருடைய சந்தேசமாற்றல், அது தயாவிருத்தி யெட்டினொன்று.
பிறரோகி - வறட்சுண்டி.
பிறர்-அயலோர்,அன்னியர்,மறுபெயர்.
பிறர்கருமத்திற்குடன்படல் - தயாவிருத்தி யெட்டினொன்று.
பிறர்கருமம்முடிக்கவிரைதல்- தயாவிருத்தி யெட்டினொன்று.
பிறர்க்குப்பொருள்வரவையுவத்தல் - தயாவிருத்தி யெட்டினொன்று.
பிறர்செல்வம் பொறுத்தல்- தயாவிருத்தியெட்டினொன்று.
பிறர்தம்மதமேற்கொண்டுகளைதல் - பிறர்மதத்திற்குடன்பட்டபின்பு மறுத்தல்அது ஆசிரியமதமேழினொன்று.
பிறர்துயர்காத்தல் - அறமுப்பத்திரண்டினொன்று.
பிறர்துயர்க்கிரங்கல் - தயாவிருத்தி யெட்டினொன்று.
பிறர்நூற்குற்றங்காட்டல் - ஆசிரியமதமேழினொன்று.
பிறர்பொருட்டனுமானம் - தானனுமானித்ததைப் பிறர்க்குரைத்தல்.
பிறர்மனைநயத்தல்-பாதாரம் விரும்பல்.
பிறர்முகம்பார்த்தல் - பாதாரம் விரும்பல். [ல்.
பிறலாபம் - பிரலாபம்.
பிறவாயாக்கைப் பெரியோன் - சிவபிரான்.
பிறவி- உற்பத்தி, சகோதரம், பிறப்பு.
பிறவிக்கடல் - சநநசாகரம்.
பிறவிக்குணம் - சுபாவகுணம். [ன்வ.
பிறவிக்குருடன் - குருடனாய்ப்பிறந்த
பிறவிசாரம் -பாதவுறுப்பினுளொன்று.
பிறவிச்சுபாவம் - பிறக்கையிலுள்ளது, பிறவியிலுள்ளது.
பிறவிச்செல்வம் - பிறந்தநா டொட்ட
பிறவிடுதி - புறவிடுதி. [செல்வம்.
பிறவித்துயர் - சகோதர நிரியாணதுக்கம், பிறப்பிலுண்டாகும் வருத்தம்.
பிறவித்துவக்கு - பிறவித்தொடர்பு.
பிறவித்துவந்தம் - பிறப்புத்தோறுந் தொடரும்வினை, பிறவித்தொடர்பு.
பிறவித்தொடக்கு, பிறவித்தொடர்பு } சநநத்தொடர்ச்சி.
பிறவித்தொந்தம் - பிறவித்துவந்தம்.
பிறவிநோக்கல், பிறவிநோக்குதல் } பிறக்கத் தொடங்கல்.
பிறவிநோய் - சென்மதுக்கம், பிறப்பிலே யுண்டான வியாதி.
பிறவிப்பயன் - சனனபலன்.
பிறவிப்பேறு - பிறப்பாலாயபயன்.
பிறவிமயக்கு - உற்பத்திமயக்கு.
பிறவியாதம் - புலான்மறுப்பு.
பிறவினை - காமம், பாவம், பிறகருத்தாவின்புடை பெயர்ச்சியாய்த்தொழிற்படுஞ் சொல்.
பிழற்ச்சி, பிறழ்தல், பிறழ்வு } ஒளிசெய்தல், சொல்லல், திரும்புதல், நடுக்கம்,வெருப்பு, வேருதல்.
பிறனில் - பிறன்மனை. [வன்.
பிறன் - அயலவன், அன்னியன்,மற்ற
பிறன்கோட்கூறல்-தன்னூலிற்பிறனது கோட்பாட்டைச் சொல்லுதல், அது யுத்தி முப்பதிரண்டினொன்று.
பிறன்மனை - பிறத்தியான் மனைவி.
பிறுக்காண்டம்- சாகாண்டபாஷாணம்.
பிறுண்டு - வேறிடம்.
பிறுண்டுதல் - வறுகுதல்.
பிறுமுட்டி - சாயவேர். [படல்.
பிறிதல் - நீங்குதல், பங்குபடுதல்,வேறு
பிறிதாராய்ச்சியணி - ஓரலங்காரம், அது உலகறிகாரணமில்லா திருப்பக்காரியம் பிறத்தலைச் சொல்லுதல்.
பிறிதி - பிரதி.
பிறிதிக்கினை - பிரதிக்கினை.

பிறிதினவிற்சி - பரியாயவலங்காரம்.
பிறிதின்கிழமை-தன்னோடொற்றுமையில்லது.
பிறிது - வேறு.
பிறிதுபடுபாட்டு - மிறைக்கவியினொன்று, அது ஒருசெய்யுளையே தொடையுமடியும் வேறுபடுத்துரைப்பச்சொல்லும் பொருளும் வேறுபடாதுவேறோர் செய்யுளாய் முடிவது.
பிறிதொடுபடான்றன்மதங்கொளல் - பிறர்மதத்திற் குடன்படாதுகித்தன் மதத்தைக்கொளல் அது ஆசிரியமதமேழினொன்று.
பிறித்தல் - பங்குபடுத்தல்,வேறுபடுத்தல்.
பிறிப்பு - பிரிப்பு.
பிறியம் - பிரியம்.
பிறியகம் - கடம்பு, ஞாழல், வேங்கை.
பிறியாவிடை - பிரியாவிடை.
பிறிவினை - பிரிவினை.
பிறிவு - பிரிவு.
பிறீதி - பிரீதி.
பிறை - காலட்சணத்தொன்று, அது பெருவிரலைப் பின்வாங்கி நீட்டி மற்றைய விரல்களை முன்னுக நீட்டுதலாம், சந்திரப்பிரவை, வாலசந்திரன்.
பிறைக்கொழுந்து - இளம்பிறை.
பிறைக்கோடு - பிறைநுதி.
பிறைசூடி - சிவபிரான்.
பிறைச்சிந்தாக்கு-கழுத்தணியினொன்று.
பிறைதொழுகென்றல் - புதுப்பிறைவணங்குவென்றல் அது அகப்பொருட்டுறையினொன்று.
பிறைமலர் - அகத்தி.
பிறைமுகவாளி-அர்த்த சந்திரபாணம்.
பிறைமுகாத்திரம் - பிறைமுக அம்பு.
பிறைவடிவு - வில்வளைவு.
பிற்கழித்தல் - பின்வாங்குதல்.
பிற்காலம் - பிற்படுசமயம், வருங்காலம்.
பிற்கூறு - பிற்பகுதி.
பிற்கொழுங்கோல் - உத்திரட்டாதி.
பிற்சாமம் - நான்காஞ்சாமம்.
பிற்பக்கம் - அபரபட்சம்.
பிற்படுதல் - பின்போதல்.
பிற்படை - பின்னணி.
பிற்பாடு - பிறகு.
பிற்றல் - பித்தல், பின்றுதல்.
பிற்றி - பிந்திப்போனது.
பிற்றை - பிறகு, பின்னைநாள்.
பினத்தல் / பினத்துதல் } பிதற்றுதல்.
பினற்றல் / பினற்றுதல் } பிதற்றுதல்.
பினுகபாணி - சிவபிரான்.
பினுகம் - சிவனுர்வில், திரிசூலம், மணிமாலை, மண்மாரி, சிவன்சூலம், சூலம், தம்பனம்.
பினுகி - ஓரிருடி, ஒருருத்திரன், சிவபிரான், பெண்ணையாறு.
பினுகிநதி / பினுகினி } பெண்ணையாறு.
பினுத்துதல் - பினத்தல்.
பினைச்சல் - பினைதல்.
பினைதல் - பிசைதல்.
பினைவு - பினைதல்.
பின் - ஏழனுருபு (உ-ம்) காதலிபின் சென்றகம்மகடை, காரணம், பின்னென்னேவல், பெருமை, வழி.
பின்கட்டு - பின்பக்கத்திற் கட்டு, வீட்டின்பிற்புறம்.
பின்காட்டுதல் - தோற்றோடுதல்.
பின்குடுமி - பின்சிகை.
பின்கொடுத்தல் - பிறகிடல்.
பின்கொண்டை - பின்குடுமி.
பின்கொம்பு-பல்லக்கின் பின்புறத்துக்கொம்பு.
பின்கோக்கி-ஆபரணக் கடைப்புணர்வு.
பின்சந்ததி - பின்னடியார்.
பின்சந்து - பின்னுரி.
பின்சரிவு - பின்னேரம்.
பின்சிகை-பஞ்சசிகையினொன்று அது பிடர்மயிர்முடி.
பின்செல்லல் - தொடர்ந்து போதல், ன்றோடுதல்.
பின்தட்டு-தோணியின்பிற்பக்கம், பின்மணந்தண்டு.
பின்பத்தி - பின்வரிசை.
பின்பற்றல் / பின்பற்றுதல் } ஒருவர் செய்ததுபோலச் செய்தல், கீழமைந்து நடத்தல், பின்போதல்.
பின்பணி - ஆறுபருவத்தொன்று அது மாசி, பங்குனி.

பின்பனியுரிமை - உலவைக்காற்றுவீச லும் பலபுறவினமுங்கானங்கோழியு மகிழ்தலுங் கோங்குமிலவும் பூத்த லும் பேரீந்து பனையிவை பழுத்த லும் பருத்தி வெண்சுளை வெடித்த லுமாகும்.
பின்பிறந்தாள் - இலட்சுமி, தங்கை.
பின்பிறந்தோன் - தம்பி.
பின்பு - பின்.
பின்புத்தி - பின்னேயுண்டாகு மறிவு.
பின்புறணி - ஒருவனை முன்னிலையிற் புகழ்ந்து இல்லாவுழியிகழ்தல்.
பின்புறம் - பின்பக்கம்.
பின்போகுதல் - பின்செல்லுதல்.
பின்போடுதல் - நாட்கடத்துதல்.
பின்மழை - பிற்பட்டமழை.
பின்மாரி - மார்கழி, தை, மாதங்களின் மழை.
பின்முடுகுவெண்பா - பின்னிரண்டடி முடுக்காய் வருவது.
பின்முரண் - இரண்டாஞ்சீரும் இறுதிச்சீரும் முரணிவருவது.
பின்மோனை - இரண்டாஞ்சீர்க்கண்ணு மிறுதிச்சீர்க்கண்ணு மோனை வருவது.
பின்வரிசை - பின்பகுதி.
பின்வருநிலை - ஓரலங்காரம் அது முன் வாக்கியத்தில் வந்த சொல்லேனும் பொருளேனுஞ் சொல்லும் பொருளுமேனும் பின்வாக்கியத்திலும்வருதல்.
பின்வருவிளக்கணி - ஓரலங்காரம் அது முன் வாக்கியத்து வந்த விளக்கச் சொல்லேனும் பொருளேனுஞ்சொல்லும் பொருளுமேனும் பின்வாக்கியத்துள்ளும் வருதல்.
பின்வாங்கல்-தோற்றல், பிற்கழித்தல்.
பின்வைத்தல்- பிடிபோடுதல், பின்னல் யாருக்கு வைத்தல்.
பின்றல் - பிறகிடல்.
பின்றளை - பின்னங்கால் பிணைக்குங் கயிறு, பின்னங்காற் பிணைப்பு.
பின்றுதல் - பின்றல்.
பின்றை - பின்பு, பிள்ளைநாள்.
பின்றொடரி - ஒருசெடி.
பின்றொடர்தல் - பின்செல்லல்.
பின்றோன்றல் - தம்பி
பின்னகம் - பேதம், மயிர்முடி.

பின்னகனம் - கீழ்வாயிலக்கத்தைச் சமமாகிய அவ்விலகத்தாற்றாக்கி வந்த இலக்கத்தை மறுமுறையும் பெருக்கல்.
பின்னகன் - பேதி.
பின்னகுணனம்-கீழ்வா யிலக்கத்தைப் பெருக்கல்.
பின்னங்கால் - பின்கால்.
பின்னசங்கலிதம் - கீழ்வாய்க்கூட்டல்.
பின்னசத்தி - பங்கப்படத்தக்கது.
பின்னடி - கடைசி, பிற்சந்ததி, வருகாலம்.
பின்னடியார்-கடைசி, பின்சந்ததியார்.
பின்னடைப்பன்-பசுநோயி னொன்று.
பின்னணி - பிற்படை.
பின்னணியம் - தோணியிற் பிற்பிறம், பிற்படை.
பின்னநிறுத்தல் - யுத்தி முப்பத்திரண்டினொன்று அது ஒரு பொருட்குக்கருவியாய் முன்வைத்தற்குரியதை முன்வைத்தற்கிடம்பெறாதாயின் அப்பொருளின் பின்னே அதனைவைத்தல்.
பின்னந்தண்டு - பின்காற்சிப்பு.
பின்னந்தலை - பிடர்.
பின்னந்தொடை - பின்றொடை.
பின்னபேதகம் } விரோதம்.
பின்னபேதம் }
பின்னம்-கிழிவு,சிதைவு, தடை, தவறு. பங்கு, பாகம், பழுது, பிணக்கு பிரிவு, வேற்றுமை, பிழைத்தல், பினத்தல்.
பின்னரை - பின்பாதி.
பின்னர் - சூத்திரர், பிறகு.
பின்னல்-சடை, சிக்கு, பிசகு, பின்பட்டது, பின்னுதல்.
பின்னவருக்கம்- கீழ்வாயிலக்கத்தைச்சமமாகியவவ்விலக்கத்தாற்பெருக்கல்.
பின்னவர் - சூத்திரர், வேளாளர்.
பின்னவன் - தம்பி.
பின்னவியவகலிதம் - கீழ்வாய்க் கழிவுகணக்கு.
பின்னவையகத்திணை- பின்வருவதைக் காட்டல், (உ-ம்)பகைபாவமச்சம்பழியென நான்கு மிகவாவா மில்லிறப் பான்கண்.
பின்னளபெடை-இரண்டாஞ்சீரு மிறுதிச்சீரு மளபெடுத்து வருவது.

பின்னறுவிடை - விடுகாலிவிளைவு.
பின்னற்காரன் - பின்னல்வேலைசெய்பவன்.
பின்னனை - சிறியதாய்.
பின்னரி - முதுகின் கீழ்ப்புறம்.
பின்னால் - பின்பு.
பின்னிடல், பின்னிடுதல் } அதைத்தல், தோற்றல், பின்னேபோதல்.
பின்னிடைதல் - பின்னிடுதல்.
பின்னிதம் - பேதம்.
பின்னியாசம் - பெருங்காயம்.
பின்னியைபு - முதற்சீர்க்கண்ணுமீற்றயற்சீர்க்கண்ணுமியைபு வருவது.
பின்னிரக்கம் - பிற்றயவு.
பின்னிருட்டு - பின்னிராவிருள்.
பின்னிரை - பின்வரிசை.
பின்னிலவு - அபரபக்கம்.
பின்னிழுக்கு - பின்வருங்குறை.
பின்னிளவல் - தம்பி, முற்பிறந்தோன்.
பின்னிற்றல் - பிறகிடல், மறுத்தல்.
பின்னுதல் - தெற்றல்.
பின்னும் - மேலும்.
பின்னெதுகை - இரண்டாஞ்சீர்க்கண்ணு மிறுதிச்சீர்க்கண்ணு மெதுகை வருவது.
பின்னேரம் - சாயங்காலம்.
பின்னை - இலக்குமி, இளையவள், இளையவன், பின்பு, பின்னைநாள்.
பின்னைகேள்வன் - திருமால்.
பின்னைநாள் - பின்னாள், மறுநாள்.
பின்னைபிரான் - திருமால்.
பின்னோக்கு - பிற்பார்வை.
பின்னோர் - சூத்திரர்.
பின்னோன் - தம்பிவழிநூல்செய்வோன்

# பீ

பீ - அச்சம், ஓரெழுத்து, மலம்.
பீகாரகாரம் - பயங்காரூபம்.
பீக்கருவேல் - ஒருமரம்.
பீக்கலாட்டம் - பித்தலாட்டம்.
பீக்கிலாத்தி - சங்கங்குப்பி.
பீங்கான் - ஒருபாண்டம்.
பீசகம் - யானைவிரல்.
பீசதீட்சை - ஒருதீட்சை.
பீசநியாயம் - மூலநியாயம்; வெளிப்படாதது.
பீசம் அண்டம்; ஆண்குறி, சந்ததி, சுக்கிலம், தாடி, தாமரைப்பூச்சுருள், மூலம் விதை.
பீசாங்குரநியாயம் - காரணகாரிய மிதுவதுவென முற்பிற்பாடு வரையறுக்கப் படாவழக்கு.
பீசாட்சரம் - விந்து.
பீசி - பீசத்தையுடையது.
பீச்சல் - கழிச்சல்.
பீச்சாக்கத்தி, பீச்சாங்கத்தி } சிறியகத்தி, பூச்சாத்தி.
பீச்சாங்குழல் - மலசலம்வாங்கும் ஒரு சூத்திரக்குழல்.
பீச்சாங்கொள்ளி - அச்சமுடையோன்.
பீச்சுவிளாத்தி - ஒரு நாற்றமுள்ளமரம்.
பீச்சைக்கால் - இடக்கால்.
பீச்சைக்கை - இடக்கை.
பீஞ்சல் - பீச்சுவிளா.
பீடகேலி - வேசி.
பீடணம், பீஷணம் } அச்சம்.
பீடம் - ஆசனம்; குதம்; சிங்காதனம் தருப்பைப்பாய்.
பீடரம் - தேவாலயம்.
பீடனம் - பீடை, வருத்தம்.
பீடாபஞ்சகம் - ஐவகைப்பீடை.
பீடாபயம் - பீடையினால்வரும்பயம்.
பீடார்த்தம் - அவத்தை.
பீடிகை - அணிகலச்செப்பு, ஆசனம். கடைவீதி, பூந்தட்டு, முகவுரை, முனிவரிருக்குமிடம்.
பீடித்தல் - இரங்கல், துன்புறுதல், துன்புறுத்தல்.
பீடிப்பு - உருக்கம், துன்பம், வருத்துகை.
பீடு - குறைவு, பீடை, பெருமை, வலி.
பீடை - உருக்கம், துன்பம், பாழாதல். முடிமாலை.
பீடைகழித்தல் - துன்பநிவாரணஞ்செய்தல், மார்கழிமாதத்திற் செய்யுமோர் சடங்கு.
பீடைமாதம் - மார்கழிமாதம்.
பீட்டகம் - உத்தியோகம், தொழில்.
பீட்டன் - இரண்டாம்பேரன், இரண்டாம்பாட்டன்.
பீட்டி - பாட்டி.
பீட்டிகை - பீடிகை.
பீட்டை - இளங்கதிர், இளஞ்சூல்.

பீதகதலி - செவ்வாழை.
பீதகந்தம் - பன்றி.
பீதகம் - அரிதாரம், இருவேலி, சாந்து, தேன், பித்தளை, பொன்னிறம், மஞ்சள்.
பீதகன் - வியாழன்.
பீதகாட்டம் - செஞ்சந்தனக்கட்டை
பீதகாரகம் - வேங்கைமரம்.
பீதகாபேரம் - பித்தளை, மஞ்சள்.
பீதகாவேரம் - மஞ்சள்.
பீதசந்தநம் - பொதியையிலுண்டான செஞ்சந்தநமரம்.
பீதசம்பகம் - ஒருவகைச் சண்பகம்.
பீதசாரகம் - வேங்கைமரம்.
பீதசாரம் - சந்தனம், வேங்கைமரம்.
பீதசாரி - சந்தநம்.
பீதசாலம் - பீதசாரம்.
பீததாரு-செம்புளிச்சை, தேவதாரமரம், பின்னை.
பீததுண்டம் - பொன்வாய்ப்புள்.
பீதத்துத்தை - இளங்கற்று.
பீதத்துருமம் - தேவதாரமரம்.
பீதத்துரும் - மரமஞ்சள்.
பீதநம் - அரிதாரம், குங்குமம்.
பீதநி - மூவிலைப்புன்னை.
பீதபத்திரம் - மலைக்காசினி.
பீதபீஜம் - வெந்தயம்.
பீதபூரம் - கொம்மட்டிமாதளை.
பீதமணி - புஷ்பராகம்.
பீதமுண்டம் - தூக்கணங்குருவி.
பீதம்-அச்சம், அரிதாரம், குடித்தல் சந்தணம், சிவப்பு, நால்வகைச்சாந்திலொன்று, நீர், நேரம், பருமை, பொன், பொன்னிறம், மஞ்சள்.
பீதயூதி - செம்மல்லிகை.
பீதராகம் - தாமரைநூல், பொன்மை.
பீதராசாவருத்தம் - ஒருகல்.
பீதரோசனை - ஒருமருந்து
பீதலகம், பீதலம் } பித்தளை.
பீதவாசன் - ஸ்ரீகிருஷ்ணன்.
பீதன் - அச்சமுள்ளோன், சூரியன், தீ.
பீதனகம் - பீதலகம்.
பீதாபன் - இந்திரன், குபேரன்.
பீதாப்தி - அகத்தியமுநி.
பீதாம்பரம் - கனகவத்திரம்.
பீதாம்பரன் - திருமால்.
பீதாம்பரி, பீதாம்பரை } பார்வதி.
பீதி- அச்சம்-குடிப் ,பயம், மதுக்கடை.
பீதிகை - செம்மல்லிகை, பொன்மை, மஞ்சணிறம்.
பீதை-தபொன்னிறப்பூவுளமருதோன்றி மரம், மஞ்சள்.
பீத்து - வீம்பு.
பீத்துதல் - வீம்புபேசுதல்.
பீத்தை - நாடா.
பீத்தோல் - மேற்றோல்.
பீநாறி - பெருமரம்.
பீநாறிச்சங்கு - ஒருசெடி.
பீந்தோல் - பூத்தோல்.
பீபசற்சன், பீபற்சு } அருச்சுனன்.
பீப்பாக்கு - நுங்குப்பாக்கு.
பீமசாசனம் - பெருங்கொலை.
பீமசேநன் - பீமன்.
பீமசாசனன் - நமன்.
பீமசேநன், வீமசேநன் } மூன்றும்பிக்ஷன் புத்திரன்.
பீமநாதம் - சிங்கம், பேரொலி.
பீமபாகம் - பாகவகையிலொன்று.
பீமபீசம் - அண்டநோயிலொன்று.
பீமம் - அச்சம், பருமை.
பீமரதன்-(யதுகுலம்)விகிர்திபுத்திரன்.
பீமரதி - பிறந்தஎழுபத்தேழாமாண்டினேழாமாதத்தேழாமிரவு.
பீமாதி-ஒருநதி, பீமநதி, யென்றுங்கூறுவர்.
பீமரம் - யுத்தம்.
பீமரன் - யுத்தவீரன்.
பீமன், வீமன் } சிவபிரான், விதர்ப்பதேசத்தரசன், அஷ்டமூர்த்திகளுள் ஒருவன், பாண்டு புத்திரனாகிய வீமசேநன், தமயந்தியின் தந்தை.
பீமாதேவி - துர்க்கை.
பீயாக்குதல் - கெடுத்தல்.
பீயு - ஆந்தை, காகம், காலம், சூரியன்.
பீயூஷம் - அமுதம், இளங்கற்றுப்பால்.
பீரங்கி - பெருவெடிக்குழாய்.
பீரம்-பலம், பீர்க்கு, பூவரசமரம், வாகைமரம், வீரம்.
பீராய்தல் - வீராய்தல்.
பீரிடுதல்-கம்பிபோலப்பாய்தல், நுட்பமாயாராய்தல்.
பீறிறங்கல் - பீரோடல்.
பீரு - அச்சமுள்ளோன், புருவம், புலி, வெள்ளாடு.

பீருகம் - ஆந்தை, காடி, காடு.
பீருகன் - அச்சமுடையோன்.
பீருகா - பீதரோகிணி.
பீருதந்தி - தண்ணீர்விட்டான்கிழங்கு.
பீருரந்திரம் - அடுப்பு, சூளை.
பீரோடல் } இரத்த முதலிய விதை
பீரோடுதல் } த்துப்பாய்தல்.
பீர் - அச்சத்தான் வேருபட்டநிறம், அச்சம், ஒலிக்குறிப்பு, பசலை, பீர்க்கு, முலைப்பால்.
பீர்க்கு - ஒருகொடி.
பீர்ச்சாங்குழல் - பீச்சாங்குழல்.
பீர்ச்சுதல் - பீரிடச்செய்தல், மலங்கழித்தல்.
பீர்விழுதல் - பீரிடுதல்.
பீலகம் - எறும்பு.
பீலி - ஆலவட்டம், ஒட்டச்சீட்டு, சிறுசின்னம், பத்தல், பறைபொது, பனங்குருத்து, பனங்கிழங்கினுட் குருத்து பெருஞ்சவளம், பொன், மதில், மயில், மயிற்றோகை, மாதர் காலணியினென்று, வாச்சியம், விசிறி.
பீலிக்கண் - மயிற்றோகைக்கண் [பி
பீலிக்குஞ்சம்-மயிற்றோகை, யீச்சோப்
பீலிக்குடை - மயிற்றோகைக்குடை.
பீலிக்கொட்டு - நீரிறைக்கும்பத்தல்.
பீலித்தண்டு - பிண்டிபாலம்.
பீலிப்பட்டை - பயிர்க்கு நீரிறைக்கும் பூட்டை.
பீலு அச்சமுடையோன், அச்சம் அணு அம்பு, உள்ளங்கை, ஒருமரம், செந்தா, பூ, யானை.
பீலுகம் - காடி.
பீலுகன் - அச்சமுள்ளோன்.
பீலுவாதம் - பைபீலவாதம்.
பீலுவாதி - பைபீலவாதி.
பீவரம் - ஆமை, பருமை.
பீவரன் - பருத்தவன.
பீவரி - அமுக்குரு, பசு, பருவப்பெண், பெண்கிளி.
பீவுரை - பருத்தவன்.
பீவை - நீர்.
பீழித்தல் - வருந்தல்.
பீழை - துன்பம்.
பீளல் - பெண்குறி.
பீளை - கண்ணழுக்கு.
பீளைசாரி - ஓர்பூடு.
பீளைசாறுதல் - கண்ணழுக்குப் புறப்படல்.
பீள் - கருப்பம், சினை, பயிரிளங்கதிர்.
பீறல் - கிழிதல், கிழித்தல், கிழியல்.
பீறு - கிழிவு, குதம், சூறு, பீறென்னேவல்.
பீறுகை - பீறுந்தன்மை.
பீறுதல் - கிழிதல், கிழித்தல், கீறுதல்.
பீற்றல் - கிழியல்.
பீனசக்குறட்டை - ஒருபூடு.
பீனசம் - மூக்கிலே உண்டாகும் வியாதி, ஒரு வியாதி.
பீனம் - பருமை, பாசி, வதக்கம்.
பீனிசம் - பீனசம்.
பீஷணன் - காசிராஜனுடையகிங்கரன்.
பீஷ்மகன் - விதர்ப்பதேசத்தரசன், உருக்குமணி தந்தை.
பீஷ்மன் - (குரு) சந்தனுவுக்குக் கங்காதேவியிடத்துப் பிறந்த புத்திரன், வசுக்களுளொருவன்.

---

# பு



புகடு - அடுப்பின் பின்பக்கம்.
புகட்டல் } உட்புகுதல், உட்புகுத்தல்,
புகட்டுதல் } பருகச்செய்தல்.
புகர் - கபிலநிறம், குற்றம், சுக்கிரன், நிறம், பொறி, அழகு.
புகர்முகம் - யானை.
புகர்வு - சோறு.
புகலல் - புகலுதல்.
புகலி - சீகாழி.
புகலிடம் - ஊர், தஞ்சம், பட்டினம்.
புகலுதல் - சொல்லல்.
புகலூர் - புகலி.
புகல் - உடல், உபாயம், குதிர், சொல், தஞ்சம், புகலென்னேவல், வெற்றி.
புகல்தல் - சொல்லல்.
புகழாப்புகழ்ச்சி - ஓரலங்காரம். அது இகழ்தல்போற் புகழ்தல், மேன்மை.
புகழாளன் - கீர்த்தியுடையோன்.
புகழுவமை - உவமையைப்புகழ்ந்துவமிப்பது, (உ-ம்) சிவன் சடையிற்றங்கும் பிறையேநின்னுதற்கொப்பு.

புகழேந்தி - வெண்பாபாடுவதிற்சிறந்த ஒருபுலவன், ஒட்டக்கூத்தன் காலத்திலே, சோழன், சமஸ்தாந வித்வானாகவிருந்த ஒரு தமிழ்ப்புலவர். இவர்செய்த நூல்கள் நளவெண்பா முதலியன, வெண்பாப்பாடுவதில் மிகு சமர்த்தர்.

புகழ் - கீர்த்தி, புகழென்னேவல்.

புகழ்கூறல்-கீர்த்தியை யெடுத்துச்சொல்லல் இது மும்மொழியினென்று.

புகழ்ச்சி - கீர்த்தி, துதி.

புகழ்ச்சிமாலை - ஒரு பிரபந்தம், அது அகவலடியுங் கலியடியும் வந்துமயங்கிய வஞ்சிப்பாவான் மாதரது சீர்மையைக்கூறுவது.

புகழ்ச்சோழநாயனார்-சோழநாட்டில் உறையூரில் செங்கோல் முறைவழுவாமல் அரசியற்றிய ஒரு சிவபத்தர், இவர் சிவகாமியாண்டார் கொண்டு சென்ற மலர்களைச் சிதறிய தமது யானையையும் பாகனையும் கொன்ற எறிபத்த நாயனாரை யடைந்து இந்தத் தீமைக்குக் காரணனாகிய என்னையுங் கொன்றருளுமென்று தமதுடைவாளைக்கொடுத்துத் தமது பத்தியைவிளக்கிய அரசராகிய பெருந்தகை, இவர் ஆயிரத்தெண்ணூறு வருஷங்களுக்குமுன்னேயிருந்தவர்.

புகழ்தல் - துதித்தல,பாராட்டுதல்,இது புண்ணியமொன்பதினொன்று.

புகழ்த்துணைநாயனார் - செருவிலிபுத்தூரிலே ஆதிசைவகுலத்திற்பிறந்து சிவாகம விதிப்படி பரமசிவனை வழிபட்டுவருங்காலத்தில், பஞ்சத்தினால் பசி யதிகரித்து மெய் சோர்ந்தபோதும் கைசோராத வுறுதிப்பாட்டைக்கண்ட சிவபெருமான் பஞ்சம் நீங்குமளவும் உனக்குத் தினந்தோறும், இங்கே ஒவ்வொரு காசுவைப்போம் என்றருளிச்செய்து அவ்வாறே செய்யப்பெற்று வாழ்ந்திருந்த சிவபத்தர்.

புகழ்நிலை - ஓரலங்காரம்.

புகழ்ந்தோத்தல் - புகழ்தல்.

புகழ்பொருளுவமையணி - இதரேதரவுபமாலங்காரம், அது முன்னதி லுபமானமாகச்சொன்னதைப் பின்னதிலுபமேயமாக்கியும் உபமேயமாகச்சொன்னதை யுபமான மாக்கியுஞ்சொல்லுதல்.

புகழ்பொருள் - வன்னிக்கப்படுவது.

புகழ்வீசுசந்திரன்- பச்சைக்கருப்பூரம்.

புகழ்வு - புகழ்ச்சி.

புகழ்வோர் - கீர்த்தியுடையோர், துதிப்போர்.

புகள் - அகத்தி.

புகறல் - குறித்தல், சொல்லல்.

புகாமை - பிரவேசியாமை.

புகார் - கபிலம், கழிமுகம், காவிரிப்பூம்பட்டினம், மந்தாரம், முகில்.

புகீர்புகீரெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு.

புகுடி - கழி, பருவம், மாதர் காதணியினொன்று, வாயில்.

புகுதல் - உட்செல்லுதல், சம்பவித்தல், செல்லல், தொடங்கல், நுழைதல்.

புகுதி - சம்பவிப்பு, நுழைவாயில், புகுவென்னேவல், போய்ச்சேர்தல்.

புகுத்தல், புகுத்துதல் - உட்செல்லுதல், போகவிடல்.

புகுபுகெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு, பனி முதலிய சொரிதற்குறிப்பு.

புகை - தூபம், இதுதென்கீழ்த்திசைப்பாலன்குறி, நீராவி, பனிப்படலம், புகையென்னேவல்,யோசனைதூரம்.

புகைகட்டுதல் - புகையூட்டுதல்.

புகைகாட்டுதல் - தூபங்காட்டுதல்,புகையூட்டுதல்.

புகைக்கப்பல் - புகையின் பலத்தாலோடுங்கப்பல்.

புகைக்காடு-வேகமுதலியவற்றின் மிகுதிக்குறிப்பு.

புகைக்குண்டு - நச்சுப்புகை புகைக்குங்குண்டு.

புகைச்சல் - இருள், கண்மங்கலாயிருத்தல், தீய்ந்துபுகைதல், பயிர்தீய்தல், புகையெழும்புதல், பொறாமை, வயிற்றெரிவு.

புகைச்சூழுதல், புகைச்சூழ்தல் - புகைபிடித்தல்.

புகைதல்-எரிச்சற்படல்,எரிதல், சினக்குறிப்பு, பயிர்தீதல், புகையெழல்.

புகைத்தல் - சினக்குறிப்பு, புகையச்செய்தல்.

புகைநாற்றம் - புகைமணம்.

புகைநிற்காரணம் - எவட்சாரம்.
புகைப்படலம் - புகைச்செறிவு.
புகைப்பித்தல் - புகையைச்செய்தல்.
புகைப்பு - புகைத்தல்.
புகைப்போடுதல் - புகையிடல்.
புகைமடக்கி - வெண்காரம்.
புகைமணம் - புகைநாற்றம்.
புகையாற்றி - ஒட்டறை.
புகையிலை - ஒருசெடி.
புகையுறை - ஒட்டறை.
புகையூட்டுதல் - புகைபிடித்தல்.
புகையூதுதல் - புகையூட்டுதல்.
புகையூரல் } புகைப்பற்று, புகைப்பற்றுதல்.
புகையூறல் }
புகைவரி - மனைவரி.
புகைவு - எரிச்சல்,புகைச்சல்,புகைதல்.
புக்ககம் - மாமியார்வீடு.
புக்கசன் - சண்டாளன்.
புக்கம் - உதயம்.
புக்கல் - புகுதல்.
புக்கனம் - குலைத்தல்.
புக்காதம் - உக்காரம்.
புக்கி - பிராய்மரம்.
புக்கில் - உடல், வீடு.
புக்குப்புக்கெனல் - புகுபுகெனல்.
புக்கை - புற்கை.
புத்தம் - உணவு.
புங்கம் - அம்பு, அம்புக்குதை,உயர்ச்சி, குவியல், சீலை.
புங்கவசனம் - ஐந்தாமாதச்சடங்கு,பூமுடித்தல்.
புங்கலம் - ஆத்துமா.
புங்கவம் - எருது.
புங்கவர் - கடவுளர், வானோர்.
புங்கவன் - கடவுள்,குரு,புத்தன், மூர்த்தபாஷாணம்.
புங்சவி - தெய்வப்பெண், பார்ப்பதி.
புங்கவிருகம் - பும்விருகம்.
புங்காபுரி - அம்புகட்டுங்கயிறு.
புங்கானுபுங்கம் - அம்பின்பின் அம்பு தொடர்கை.
பங்கு - புங்கமரம்.
புங்சவனம் - புஞ்சவனம்.
புங்சின்னம் - புஞ்சின்னம்.
புசகம் - பாம்பு.
புசகதாரணம் }
புசகாசனன் } கருடன்.
புசகாந்தன் }

புசங்கமம் }
புசங்கம் } பாம்பு.
புசபலம் - புயவலி.
புசம் - எருவரட்டி, தயிராடை, பதர், பாக்கியம், புயம்.
புசல் - குச்சுமட்டை, பெருங்காற்று.
புசாகண்டம் - கைநகம்.
புசாகோடி - ஏறுமிறங்குமிராசி.
புசாபலம் - புசாகோடிகளைந்தபின்மிஞ்சினதொகை.
புசி - புசியென்னேவல்.
புசிகாணம் - புசித்தல், போசனபதார்த்தம்.
புசிதம் - பூசை.
புசித்தல் - உண்டல்.
புசிப்பன - உண்டற்குரியன.
புசிப்பாளி - அனுபோகி.
புசிப்பித்தல் - உண்பித்தல், வினைப்பயனனுபவிக்கச் செய்தல்.
புசிப்பு - அனுபவிப்பு, புசித்தல், இது மாயையாக்கை பதினெண் குற்றமொன்று, போசனப்பொருள்.
புசியம் - தைமாதம்.
புசுண்டன் - ஒருயோகி.
புசை - முதலா மிரண்டா மூன்றும் ஏழாம் எட்டாமொன்பதா மிராசி.
புச்சபீதலம் - பின்பக்கம்.
புச்சம் - தோள், மயிற்றோகை, வால்.
புச்சி - எருக்கு, கோழி.
புஞ்சம் - குவியல்,திரட்சி,நூற்குஞ்சம்.
புஞ்சலி - வேசி.
புஞ்சவனம் - கருப்பங்கொண்ட மூன்றாந்திங்களில் செய்யுமோர் கருமம், மூன்றுமாதக்கருப்பம்.
புஞ்சானம் - புசித்தல்.
புஞ்சிகஸ்தலை - வருணன் மகளாகிய ஒரு அப்ஸாஸ்திரீ.
புஞ்சிகை - ஆலங்கட்டி.
புஞ்சித்துவம் - சுக்கிலம்.
புஞ்சின்னம் - ஆண்குறி.
புடகம் - இலைக்கலம், தாமரை.
புடகாம் - வடநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
புடகிரீபம் - கழுத்து, சாடி.
புடகினி - தாமரைப்பூங்கொத்து.
புடபாகம் - சமித்தல், சமைத்தல்.
புடபேதம் - ஆற்றுவளைவு, நகரம்.

புடபேதனம் - பட்டினம்.
புடமிடுதல் - பொன் முதலியவற்றைத் தூய்மைசெய்தல்.
புடம் - இடம், இலைக்கலம்,எண்ணலிற் சுத்தம், கண்ணிமை, குடவானது, கௌபீனம், சுத்தம், செம்முதல், படம்புறம், பொன்முதலான வற்றி றனவைப்பு, மருந்துசுத்தி,மூடி.
புடம்வைத்தல் - மிடமிடுதல்.
புடலித்தல் - திரண்டேதுதல்.
புடலிப்பு - திரட்சி.
புடல் - புடோல்.
புடவி - பூமி.
புடவித்தல் - புடைப்பு.
புடவ்மூலம் - சிறுகுரட்டை.
புடவை - சீலை, வஸ்திரம்.
புடனம் - பினத்தல்.
புடாரமூளை - செந்நாயுருவி.
புடிகை - ஏலம்.
புடிதம் - காமுட்டி.
புடை - அடிப்பு, இடம், எழனுருபு, தி ரட்சி, பக்கம், பாழி, புடையென் னேவல், போர், மொத்தி.
புடைகொள்ளல் - புடைத்தல்.
புடைக்கருத்து - ஒரு சார்தோற்றும் பொருள்.
புடைத்தல் - அடித்தல், குட்டுதல்,சுள குமுதலியவற்றாற் கொழித்தல், பற வை சிறகடித்தல், நீந்துதல், வீங்கு தல்.
புடைநூல் - சார்புநூல்.
புடைபெயர்ச்சி-பக்கத்திற் போக்குவர வுசெய்தல், பக்கத்திற்றிரும்பல், மா றிக்காரியபக்கத்திற்றிரும்பல்.
புடைபெயர்ச்சித்தொழிற்பெயர் - மா றிக்காரியப்படும் வினைப்பெயர்.
புடைபெயர்ச்சிவினை - மாறிக்காரியப் படும் வினை.
புடைபெயர்தல் - பக்கத்திற்போக்குவர வுசெய்தல், பக்கத்திற்றிரும்பல், மா றிக்காரியப்படல்.
புடைப்பு - புடைத்தல்.
புடைமண் - சுதைமண்.
புடையன் - ஒருபாம்பு.
புடைவிழுதல் - பாழிவிழுதல்,மொத்தி பற்றுதல்.
புடைவை - சீலை.
புடைவைகுஞ்சம் - வெள்ளொலியல்.
புடோசம் - வெள்ளைக்குடை.
புடோதகம் - தெங்கு.
புடோல் - ஒருகொடி.
புட்கரசிவை - தாமரைக்கிழங்கு.
புட்கரம் - அம்பு,ஆகாயம்,ஒருகுளிகை, ஒன்றிப்பு, ஒருதலம், ஒருநாரை,ஒரு நோய், ஒரு பாம்பு, ஒரு வாத்தியம், குகை, கோஷ்டம், சத்ததீவினொன் று, தாமரை, தாமரைப்பூ, தீர்த் தம், நடனசாத்திரம், நிறைவு, நீர், நீர்நிலை, பங்கு, பருந்து, பாண்டமு கம், புட்பகலாவர்த்தம், யானைத்து திக்கைநுனி, யுத்தம், வாளலகு, வா ளுறை, வாள்வெமி.
புட்கரன் - ஓரரசன், வருணன்மகன்.
புட்கரி - யானை.
புட்கரிணி - தாமரைக்குளம், நாற்சதுர வாவி, பெண்யானை.
புட்கரோபலம் } சந்திரகாந்தம்.
புஷ்கரோபலம் }
புட்கலம் - நிறைதல், புட்கலாவர்த்தம்.
புட்கலாதேவி - புட்கலை.
புட்கலாவர்த்தம்- சத்தமுகிலினொன்று அது பொன் பொழிவது.
புட்கலை - ஐயன்றேவிகளிலொருத்தி.
புட்கலைமணாளன் - ஐயன்.
புட்கலம் } நிறைவு.
புஷ்கலம் }
புட்குரல் - பட்சிக்குரல் அதுசையோக விஞேதத்துமொன்று.
புட்குத்திருப்பி - வட்டத்திருப்பி.
புட்டம் - காகம்,சீலை,நிறைவு,முடிதல்.
புட்டல் - தலைச்சுமை.
புட்டி } கொழுப்பு, திடர்.
புஷ்டி }
புட்டிகாந்தன் } கணேசன்.
புஷ்டிகாந்தன் }
புட்டில் - இறைகூடை, உறை,கூடை, முறம், விரலுறை.
புட்டிவெல்லம் - பனங்கட்டி.
புட்டுக்கூடை - நீற்றுப்பெட்டி.
புட்டுத்திருப்பி - ஒருசெடி.
புட்பகம் - அன்னபேதி,இரத்தினகங்க ணம், இரும்புப்பாத்திரம், ஒருகண் ணோய், குபேரனூர்தி,சகாதேவன்ச ங்கு, புட்பகவிமானம், மூக்கிரட்டை,

புட்பகவிமானன் - இந்திரன், குபேரன்.
புட்பகாசீசம் - அன்னபேதி.
புட்பகாசை - பூப்பதாரி.
புட்பகாதகம் - மூங்கில்.
புஷ்பகிரி - மேற்றிசைக்கடலில் வருணன் விளையாடுமோர் மலை, ஓரூர்.
புட்பகீடம் - தேன்வண்டு.
புட்பகினி - பூப்புமாறியபெண்.
புஷ்பகேதநன் - காமன்.
புட்பகேது - காமன்.
புஷ்பசகடி - ஆகாசவாணி.
புஷ்பசமயம் - வசந்தருது.
புட்பசயம் - பூந்திரள்.
புட்பசயனம் - பூமெத்தை.
புட்பசரன் } காமன்.
புட்பசாரணன்
புட்பசாபன்
புஷ்பசாமரம் - தாழை.
புட்பசாரம் - பூந்தேன்.
புஷ்பசூனியம் - அத்திமரம்.
புட்பச்சோலை - பூஞ்சோலை.
புட்படுத்தல் - பட்சிபிடித்தல்.
புட்பதந்தம் - வடமேற்றிசையானை.
புட்டதனுவன் - காமன்.
புட்பத்திரவம் } பூந்தாது, பூவில்வடிக்கு நீர்.
புட்பத்திராவகம்
புட்பபிரியாசம் - பூவமுதம்.
புட்பந்தயம் - தேனீ.
புட்பபதம் - யோனி.
புட்பபலம் - விளாங்களரி.
புட்பபிரசயம் } பூக்கொய்தல்.
புட்பபிரசாயம்
புஷ்பபுச்சி - ஒருவகைப்பசு.
புஷ்பபுரம் - பாடலிபுரம்.
புட்பமஞ்சரி - பூங்கொத்து.
புட்பமஞ்சரிகை - நீலோற்பலம்.
புட்பமழை - பூமாரி.
புட்பமாரி - புட்பமழை.
புட்பமாசம் - தளிர்காலம்.
புட்பமாலை - பூமாலை.
புட்பம் } ஒரு கண்ணோய், புட்பகம், பூ, மகளிர்ருதகம், வாழை, விசாலம்.
புஷ்பம்
புட்பாசம் - பூந்தேன்.
புட்பாதம் - பூந்தேர்.
புட்பாகம் - கவமணியிலொன்று.
புட்பரேணு - பூந்தாது.

புட்பலாவகன் } சாலியனுக்கும் பார்ப்பினிக்கும் பிறந்து பூங்கொய்து மாலைவிற்போன்.
புட்லாவன்.
புஷ்பலோலுபம் - வண்டு.
புஷ்பவதி - இராஜஸ்வலை.
புட்பவருஷம் - புட்பாஞ்சலி.
புஷ்பவாகநன் - புஷ்பகரன்.
புட்பவாடிகை - பூந்தோட்டம்.
புட்பவிமானம் - பூந்தேர்.
புட்பாசவம் - தேன்.
புட்பாசனன் - பிரமன்.
புட்பாசனி - இலக்குமி, சரஸ்வதி.
புட்பாசீவனி } பூமாலைகாரன்.
புட்பாசீவி
புட்பாஞ்சலி - புட்பஞ்சொரிந்து வந்தித்தல்.
புட்பாத்திரன் - காமன்.
புஷ்பாயுதன் - மன்மதன்.
புட்பிகை - இந்திரியம், பல்லழுக்கு.
புட்பிதை - பூப்பதாரி.
புட்பித்தல் - பூத்தல்.
புஷ்பேந்திரம் } சண்பகமரம்.
புட்பேந்திரம்
புணரி - அலை, கடல்.
புணருதல் - புணர்தல்.
புணர் - புணரென்னேவல், புதுமை.
புணர்ச்சி - இசைப்பு, இசைவு, எழுத்து முதலியவற்றின் சந்தி, கலத்தல்.
புணர்ச்சிமாலை - தண்டகமாலை.
புணர்ச்சியின்மகிழ்தல் - அகப்பொருட்டுறையி லொன்று.
புணர்ச்சிவிகாரம் - சொற்றொடரின் வருந்தோன்றல்திரிதல்கெடுதல்எனும் விகாரங்கள்.
புணர்தல் - இசைதல், இணங்கல், இணைதல், கலத்தல், சார்தல், விளங்கல்.
புணர்தல் } அணிதல், இணைத்தல் இயைவித்தல்.
புணர்த்துதல்
உண்டாக்கல், உபாயஞ்செய்தல், புணரச்செய்தல், விளங்கச்செய்தல்.
புணர்நிலை - ஓரலங்காரம் அது யாதோர் பொருளுடனே பிறிதோர் பொருளுங்கூட நிகழ்வதாய்ச் சொல்லுதல்.
புணர்பூசம் - அதிதிநாள்.
புணர்ப்பு - இணைப்பு, உடல், கூடல், தந்திரம், மாயம்.
புணர்பு - இசைவு, இணைவு, உடல், கலப்பு.

புணை - தெப்பம், புணையென்னேவல், மரக்கலம், மூங்கில், விலங்கு.
புணைத்தல் - கட்டல்.
புண் - ஊன், விரணம்.
புண்டரகேளி - யானை.
புண்டரநீறு - திருநீறு.
புண்டரம் - இரேகை, கழுகு, செங்குரங்கு நெற்றிற்குறி, வெண்கரும்பு, வெண்டாமரை, ஒருதேசம், இது வங்காளத்துக்கு மேற்கேயுள்ளது.
புண்டரன் - ஒருதைத்தியன். பலியின் நான்காம் புத்திரன்.
புண்டரீகக்கண்ணன் - திருமால்.
புண்டரீகப்பிரியன் - காலவமுநி.
புண்டரீகம் - ஒருநோய், ஒருபாம்பு, ஒரு மருந்து, கழுகு, தாமரை, தென்கீழ்த்திசையானை, புலி, யானைநோய், வண்டு, வெண்கொற்றக்குடை, வெண்டாமரை, அக்கினிதிக்குக் காவல்பூண்ட ஆண்யானை, ஒருதீர்த்தம்.
புண்டரீகாட்சன் - திருமால்.
புண்டரீகன் - நபசுபுத்திரன்.
புண்டரீகாக்ஷன் - விஷ்ணு.
புண்டரீயம் - ஒருகொடி.
புண்டலீகன் - சூத்திரன்.
புண்டாரம் - சூரியன் கைச்சங்கு.
புண்ணாக்கு - பிண்ணாக்கு.
புண்ணியகந்தம் - சண்பகம்.
புண்ணியகாலம் - சுபவேளை, திவ்விய காலம்.
புண்ணியக்கதை - தருமசரித்திரம்.
புண்ணியக்கருத்து - தருமசிந்தை.
புண்ணியசடம் - சற்சனன், புண்ணிய தேகம்.
புண்ணியசரவணம் - அழகர் மலையிலுள்ள ஒரு பொய்கை, இதில் மூழ்குவோர்களுக்குஇது ஐந்திரவியாகரணத்தை யுணர்த்துவது.
புண்ணியசரித்திரம் - புண்ணியக்கதை.
புண்ணியசரீரம் - புண்ணியசடம்.
புண்ணியசனம் - சற்சனர்.
புண்ணியசனேசுவரன் - குபேரன்.
புண்ணியசன்மம் - சற்சனன், நல்லஜன்மம்.
புண்ணியசாலி - புண்ணியவான். [மம்.
புண்ணியரூபி - திவ்வியரூபி.
புண்ணியசுலோகன் - உதிட்டிரன், நளன்.
புண்ணியசுலோகை - சீதை, துருபதி.
புண்ணியசேத்திரம் - பரிசுத்ததலம்.
புண்ணியசாந்தம், புண்ணியசாந்து } சாணம், விபூதி.
புண்ணியதவம் - தருமத்தை விருத்தியாக்குந் தலம்.
புண்ணியதானம் - தருமக்கொடை.
புண்ணியதிரணம் - வெண்டருப்பை.
புண்ணியத்தானம், புண்ணியஸ்தானம் } உதயத்திற்கொன்பதாமிடம், புண்ணியத்தலம்.
புண்ணியத்தினம் - சுபதினம்.
புண்ணியத்திசை - வடதிசை.
புண்ணியத்தீர்த்தம் - பாவ விமோசன நீர்.
புண்ணியபலம் - புண்ணியப்பேறு.
புண்ணியபுத்திரன் - சற்புத்திரன்.
புண்ணியபுருஷன் - சற்புருஷன்.
புண்ணியபூ, புண்ணியபூமி } புண்ணியசேத்திரம்.
புண்ணியமுதல்வன், புண்ணியமூர்த்தி } அருகன், கடவுள், புத்தன்.
புண்ணியம் - அறம், திவ்வியம், தூய்மை, நல்வினை, நீர்த்தொட்டி.
புண்ணியராஜி - நக்ஷத்ரலோகம்.
புண்ணியராத்திரம் - சுபராத்திரி.
புண்ணியலோகம் - சுபலோகம், தேவபதவி.
புண்ணியவதி - புண்ணியவாட்டி.
புண்ணியவாசனம் - புண்ணியயாகம்.
புண்ணியவாட்டி - தருமவதி.
புண்ணியவாளன், புண்ணியவான் } தருமவான்.
புண்ணியன் - அரசன், அருகன், ஒரு இருடிபுத்திரன், சிவன், சுத்தன், தருமவான், புத்தன்.
புண்ணியாகம் - ஆசுசநிவாரணம்.
புண்ணியாக்கம் - குந்துருக்கம்.
புண்ணியாகவாசனம் - ஆசுசநிவாரணம்.
புண்ணியாகனம் - பரிசுத்தநாள். [ம்.
புண்ணியாத்துமா - சற்சனன்.
புண்ணியை - துளசி, புண்ணியவதி.
புண்ணியோதயம் - அதிட்டம்.
புண்ணீர் - இரத்தம்.
புண்ணுடம்பு - பச்சையுடம்பு.
புண்படுதல் - புண்ணுதல், மனநோயுண்டாதல்.

புண்வாய் - புண்ணிற்றுவாரம்.
புதசனன் - அறிஞன்.
புதசுதன் - புரூரவச்சக்கிரவர்த்தி.
புத்தாதன் - சந்திரன்.
புதப்பிரியம் - மரகதரத்திநம்.
புதர் - ஞானிகள், தூறு, தேவர், புலவர்,
புதல் - நாணல், புருவம், புல், பூடு [புல்.
புதல்வன் - மகன்.
புதல்வி - மகள்.
புதவாரம் - புதன்கிழமை.
புதவு - ஒருவகைப்புல், கதவு, கதவுவிட்டுப்புகும்வழி, கோபுரவாயிற்கதவு.
புதற்பூ - புல் பூடுசெடியிவைகளின் பூ இது நால்வகைப்பூவினொன்று.
புதன் - அறிஞன், ஒருநாள், தேவன், புலவன், சந்திரன்மகன், தாய்தாரை, நவக்ரஹங்களுளொன்று.
புதா - கொக்கு, பெருநாரை, மரக்கால்.
புதானன் - அறிஞன், குரு.
புதிதாக்கல் - புதுப்பித்தல்.
புதிசு, புதிது } புதியது.
புதிதுணல் - புதுப்பிரயோசனத்தைச் சுபதினம் பார்த்துண்ணல்.
புதியநுட்பம் - தருக்கநூலுளொன்று.
புதியர், புதியவர் } விருந்தர்.
புதியனபுகுதல் - புதுமொழிவழங்கல்.
புதியோர் - புதியவர்.
புதிர் - புதிது.
புதிலி - எண்ணெய்த்துருத்தி.
புதினக்கடுதாசி - சமாசாரபத்திரிகை.
புதினம் - அதிசயம், நூதனம்.
புதிறு - ஒருபூடு.
புதீதம் - புத்தம்.
புதுக்க - புதிதாக.
புதுக்கல், புதுக்குதல் } புதுப்பித்தல்.
புதுச்சேரி - ஒருபட்டினம்.
புதுநாணயம் - நூதனவழக்கம்.
புதுபுதுக்கை - புதுமுகனே.
புதுப்பணம் - புதுநாணயம்.
புதுப்பித்தல் திருத்துதல், புதிதாக்கல்.
புதுமுகனே - முன்முகனே.
புதுமை - அற்புதம், நூதனம், மிகுதி.
புதுமைசெய்தல், புதுமைபண்ணல் } அற்புதஞ் செய்தல்.
புதுவது - புதியது.
புதுவை - புதுச்சேரி.
புதை - அம்பு, அம்புக்கட்டு, அறிவுடைமை, சரீரம், புதுமை, புதையென்னேவல், மறைவிடம், மறைவு.
புதைதல் - தாழ்தல், மறைதல்.
புதைத்தல் - சேமித்தல், தாழ்க்குதல், மறைத்தல்.
புதைபொருள் - புதைக்கப்பட்டபொருள், மறைபொருள்.
புதைப்பு - சேமம், தாழ்ப்பு, மறைவு.
புதையல்-புதைத்ததிரவியம், புதைப்பு.
புத்தகம், புஸ்தகம் } ஏடு, சித்திரப்படம்.
புத்தசேடம் - மிச்சில்.
புத்தசௌத்திராந்திகன் - உருவம் ஞானம் வேதனை குறிப்பு வாசனை என்பன தொடர்ச்சியாய் அழிவது பந்தமென்றும், அதைமுற்றும் ஒழிவதே முத்தியென்றுஞ் சொல்லுவோன்.
புத்தப்புதியது - மிகப்புதியது.
புத்தமுதம் - புதியவமுதம்.
புத்தம் - அதிசயப்படல், உணவு, புத்தமதம் இது புறச்சமயமாறி லொன்று, போசனம்.
புத்தாக்கன் - பருத்தகுறளன்.
புத்தர் - பௌத்தசமயத்தார், பௌத்தமதத்தை ஸ்தாபித்த கௌதமர். இவர் கங்கைக்குவடதிசையிலே ரோகிணி நதீ தீரத்தில் கபிலவாஸ்து என்னும் நகரத்திலே சுத்தோதநன் என்னும் அரசனுக்கு மாயாதேவி வயிற்றிலே அவதரித்தவர். இவர் அவதரித்திருந்தபோது அசிதர் என்னும், மஹாமுனிவர் அங்கேவர, சுத்தோதநன் அக்குழந்தையைக் கொண்டு போய், அவர் சீபாதத்திற் கிடத்தி, ஆசீர்வதிக்கும்படி வேண்டிக்கொண்டான். அசிதர் அந்தக்குழந்தையை வாங்கி அதன்பாதங்களைத் தன்னிரு கண்களிலும்ஒற்றிக்கொண்டு, பலவாறு புகழ்ந்துபோயினர். இவரது பிள்ளைத்திருநாமம்சித்தார்த்தனர். இவர் கௌதம கோத்திரத்திலே சாக்கியர் குடியிலே பிறந்தமையால் கௌதமர் என்றும் சாக்கியர் என்றும் இரண்டு பெயருடையவராயினர், புத்தர் என்

னும்பெயர் பின்னேபெற்ற ஆச்சிரமப்பெயர், இவர்தமக்குக்கல்விகற்பிக்கவந்த ஆசிரியர் சொல்லத்தொடங்கும்பாடங்களை அவர் சொல்லுமுன்னேதாமே யோதியும் அவர்வழுவியவிடத்து அவ்வழுக்களைத்திருத்தியும் வருவாராயினர், அதுகண்டு அவ்வாசிரியர் நீங்கினர், அதன்பின்னர்புத்தர் தாமாகவே சகலசாஸ்திரங்களையும் பழம்பாடம் படிப்பார்போலப் பூர்வ ஜந்மவாசனையால் ஓதியுணர்ந்தார். இவரது ப்ரதமசிஷ்யர் ஆநந்தர் என்பவர் இவர்காலத்தரசர் விம்பசாரன் அஜாத சத்ரு முதலியோர், இவர் நிர்யாணமடைந்தபோது இவர்க்கு வயது எண்பது.

இவரதுகாலம்இற்றைக்கு இரண்டாயிரத்தைஞ்ஞூற்றெண்பது வருஷங்களுக்கு மூன்னுள்ளது. முன்னும் காலாந்தரங்களிலே புத்தர்பலர் அவதரித்து பௌத்த மதஸ்தாபநம் பண்ணிப் போயினராயினும் அவர்கள் பெயரெல்லாம் இந்தக் கௌதம புத்தரால் ஒளியிழந்து போயின. முற்காலத்திலும் பலபுத்தரிருந்தமை பற்றியே அவரோடு கலவாமல் இவரைக் கௌதம புத்தரென்றும் சாக்கியபுத்தரென்றும் சாக்கிய முனிவரென்றும் கூறுவர்.

புத்தலிற்சுதையார் - செய்தபொம்மை.
புத்தன் - பௌத்த சமயி, பௌத்தன், போதமே வடிவானவன்.
புத்தாடை - புதியவஸ்திரம்.
புத்தாத்திறி - அரிநெல்லி.
புத்தாம்பழம் - ஒரு உபசாரப்பொருள்.
புத்தி - அறிவு, இடித்துரை, உட்கரண நான்கினொன்று, போதனை, யூகிப்பு. விநாயகக் கடவுளது உபயசத்திகளுளொருவர், மற்றொருவர் சித்தி.
புத்திகேடு - மதியீனம்.
புத்திகூர்மை-மனநுண்மை, விவேகம்.
புத்திசாலி - யூகி.
புத்திதாழ்ச்சி - மதிகேடு.
புத்திமயக்கம் - அறிவுமயக்கம்.
புத்திமழுக்கம் - புத்திக்குறைவு.
புத்திமான் - அறிவாளி.
புத்தியறிதல்-இருதுவாதல்,விரகறிதல்.
புத்தியூட்டுதல் - புத்திபடிப்பித்தல்.
புத்திரகன் - அன்பன், எத்தன்.
புத்திரகாமியம் - ஒருயாகம், புத்திர ஆசை.
புத்திரகாமேட்டி-புத்திரயாகம்.
புத்திரகை - மகள்.
புத்திரசந்தானம்-பின்சந்ததி, புத்திரர்.
புத்திரசம்பத்து - புத்திரபாக்கியம்.
புத்திரசுவிகாரம் - பிறர் பிள்ளையைத் தன் பிள்ளையாக்கல்.
புத்திரசென்னி - தாளி.
புத்திரசோகம், புத்திரசோபம் - பிள்ளையை யிழந்து படுந்துயர்.
புத்திரதானம் - புத்திரரை செனிப்பித்தல், புத்திரனைத்தானம்பண்ணுதல்.
புத்திரத்தானம் - உதயத்திற்கு ஐந்தாமிடம்.
புத்திரநாதன்-பிள்ளையினற் ருபரிக்கப்படுபவன்.
புத்திரபாக்கியம் - பிள்ளைப்பாக்கியம்.
புத்திரபௌத்திரபாரம்பரியம் -பிள்ளை பாட்டப்பிள்ளை முதலாகவரும்வமிசவரிசை.
புத்திரப்பிரதிநிதி - மஞ்சணீர்ப்பிள்ளை.
புத்திரமார்க்கம் - கிரியாமார்க்கம்.
புத்திரயாகம் - புத்திரகாமியயாகம்.
புத்திரர் - பிள்ளைகள்.
புத்திரலாபம் - புத்திரசம்பத்து.
புத்திரவதி - புத்திரசாலி.
புத்திரவேடணை - பிள்ளையிச்சை.
புத்திரன் - மகன்.
புத்திரி - மகள்.
புத்திரிகாசுதன், புத்திரிகாபுத்திரன் - மகண்மகள்.
புத்திரிகை - சித்திரப்பாவை, மகன்.
புத்திரேடணை, புத்திரேஷணை - புத்திரவாஞ்சை.
புத்திரோற்பத்தி - புத்திரவுற்பத்தி.
புத்திவான் - புத்திசாலி.
புத்திறி - கறிமுள்ளி, கீழ்காய்நெல்லி.
புத்தின்சாரி - காஞ்சிரை.
புத்தீந்திரியம் - உள்ளிந்திரியம்.
புத்து - ஒருநரகம், புதிது, புற்று. புத்திரரில்லாதவர் சென்றடைவதோர்நரகம், தந்தையைப்புத்தென்னும் நரகத்தினின்று நீக்கிக் காப்பவனுதலால் மகனுக்குப் புத்திர னென்னும் பெயருண்டாயிற்று.

புத்துருக்குநெய் - உடனே யுருக்கின நெய், புதுநெய்.
புத்துவணி - காஞ்சிரை.
புத்தேணுடு - தேவலோகம்.
புத்தேளிர் - தேவர்கள், வானோர்.
புத்தேள் - தெய்வம், புதுமை.
புத்தேன் - காஞ்சிரை.
புநருத்தி - அநுவதித்துக்கூறல்.
புநர்சமஸ்காரம் - விசேஷமானசடங்குகளைத் திரும்பச்செய்தல்.
புநர்ச்சரணை - சபம்.
புநர்தம், புநர்வசு - புநர்பூசம்.
புநிதம், புநீதம் - சற்குணம், சன்மார்க்கம்.
புநீதன் - அரசன், அருகன், இந்திரன், சிவபிரான்.
புந்தி - அறிவு, புதன், புத்தி.
புந்திதம் - காஞ்சிரை.
புந்தியர் - அறிவாளிகள், புலவர்.
புந்திவாரம் - புதவாரம்.
புந்திவிந்து - பச்சைக்கல்.
புபுட்சிதன் - பசித்தவன்.
புபுட்சை - பசி.
புபுதானன் - ஆசாரியன், தேவன், பண்டிதன்.
புப்புலம் - உதரவாயு.
புமங்யன் - துஷ்யந்தன் புத்திரன்.
புமான் - ஆண்குறி, ஆண்மகன், ஆன்மாவினோர் தத்துவம்.
பும் - ஆண்குறி, ஒலிக்குறி.
பும்விருசம் - கத்தூரிநாவி.
புயகடி - பாம்பு.
புயகதாரணம் - கருடன்.
புயகம் - பாம்பு.
புயகாசனன், புயகாந்தகன், புயகாந்தன் - கருடன்.
புயகோடரம் - கைக்குழி.
புயங்கநிருத்தம் - ஒருகூத்து.
புயங்கம் - ஒருகூத்து, பாம்பு.
புயத்துணை - உதவி.
புயபலம் - புயவலிமை.
புயம் - ஒருபக்கம், தோள், முன்கை, வளைந்தவரி.
புயல் - சுக்கிரன், நீர், பெருங்காற்று, மழைக்கோள், மேகம்.
புயவகுப்பு - திருவகுப்பில் ஒருபுரிவு, கலம்பகத்திஞேறுறுப்பு.
புயவலி - புயவலிமை.
புயாகண்டம் - நகம்.
புயாசலம் - மலையொத்ததோள்.
புயாதலம் - கை.
புயாந்தரம் - மார்பு.
புய்த்தல் - பயத்தல், பறித்தல்.
புரகிதன் - சிராத்தகருமாதிப்பார்ப்பான்.
புரஸ்காணம் - பூரணமாக்கல்.
புரஸ்காரம் - எத்தனப்படுத்தல், ஒழுங்குப்படுத்தல், காத்திருத்தல், குற்றஞ்சாட்டல், சருவுதல், முடித்தல், முன்வைத்தல்.
புரசபரம் - யத்தனபூர்வகம்.
புரசம் - அக்கிதேவன், கைச்சங்கு.
புரசல் - இரகசியம், உட்டுளை.
புரசு - பலாசமரம்.
புரசை - புரோசை.
புரஞ்சயன் - சூரியகுலத்தரசருளொருவன். விகுக்ஷிபுத்திரன் இவன் பூர்வநாமம் ககுத்ஸன். சுவீரன் மகன். ஸ்ருஞ்சயன் புத்திரன்.
புரஞ்சரம் - தோள், விட்டுணுகேடகம்.
புரஞ்சனன் - உயிர், சீவன்.
புரஞ்சனி - அழிவு.
புரடம் - பொன்.
புரட்சி - கிரகபுரள்வு, கீழ்மேலாய் வருதல், திரும்புதல்.
புரட்டல் - திருப்புதல், மாறுபாடுபண்ணல், வாந்திகொள்ளல்.
புரட்டன் - பொய்யன், மாறுபாடுகாரன்.
புரட்டாசி, புரட்டாதி - ஒருமாதம், பூரட்டாதி.
புரட்டாதிமாளயம் - புரட்டாதிமாதத்திற்செய்யும் சாதாரணமாசியம்.
புரட்டி - புரட்டன், புரட்டுக்காரி.
புரட்டு - புரட்சி, புரட்டென்னேவல், பொய், வாந்திக்குணம்.
புரட்டுதல் - புரட்டல்.
புரட்டுருட்டு - புளித்தனம்.
புரட்டை - பூரட்டாதி.
புரட்டோடியம் - அசப்பியம்.
புரணபாவனை - சருவவியாபகம்.
புரணம் - சமுத்திரம், புரட்சி, பூரணம்.
புரணி - ஊன், புணிர.
புரண்டை - ஒருகொடி.
புரதகனன் - சிவபிரான்.

புரதடி - கடைவீதி.
புரத்தல் - ஈதல், காத்தல், நிலைபெறுத்தல்.
புரத்துவாரம் - பட்டினவாயில்.
புரந்தரம் - தோள்.
புரந்தரன் - இந்திரன், கள்வன், வைவசுவதமநுவின் காலத்திலுள்ள இந்திரன். ஓரக்கினி.
புரந்தரை - கங்கை.
புரக்தன் - இந்திரன்.
புரப்பிரியை - அநாசிச்செடி.
புரப்பு - காப்பு.
புரமூன்றெரித்தோன், புரமெரித்தோன் - சிவபிரான்.
புரம் - இராஜதானி, உடல், ஊர், தோல், நகரம், மருதநிலத்தூர், மூன், மேன்மாடம் வீடு.
புரவலன் - அரசன், காப்போன், கொடையாளன்.
புரவி - அசுபதி, குதிரை, வேகி.
புரவிவட்டம் - வையாளிவீதி.
புரவு - கொடை.
புரவுகாத்தல் - கொடை.
புரளல் - புரளுதல், மாறுதல்.
புரளி - குழப்பம், சண்டை, தப்பிதம், துடுக்கு, பொய்.
புரளுதல் - உருளுதல், திரும்புதல், மாறுதல்.
புராகிருதபாவம் - ஊழ்வினை.
புராகிருதம் - முன்செய்தது.
புராடம், புராடனம் - சஞ்சாரம்.
புராணகன் - பிரமா, புராணம்படிப்போன்.
புராணபுருஷன் - விட்டுணு.
புராணம் - கதை, காந்த முதலிய புராணம், இது கலைஞானம் அறுபத்துநான்கினுளொன்று, பழங்கதை, பூருவம். உலகத்தின் தோற்றக் கேடுகளும் பாரம் பரியங்களும் மன்வந்தரங்களும்பரம்பரைக்கதைகளும் ஆகிய இவ்வைந்தனையுங்கூறலால் பஞ்சலக்ஷணம் எனப்படுவது. புராணம் பதினெட்டு, அவை வேதங்களுக்கு வியாக்கியானமாயுள்ளன, அவையாவன பிரமம், பதுமம், வைஷ்ணவம், சைவம், பாசுபதம், நாரதீயம், மார்க்கண்டேயம் முதலியன, புராணம் என்பதன்பொருள் பண்டைவரலாறு என்பது, அவற்றைவகுத்தவர்வேதவியாசர், அந்தப்புராணம் பதினெட்டுனுள் சிவபுராணம்பத்து, விஷ்ணுபுராணம்ஆறு, பிரமபுராணம் ஒன்று, சூரியபுராணம் ஒன்று, விஷ்ணுபுராணம் நான்கென்றும், பிரமபுராணம் இரண்டென்றும், அக்கினிபுராணம்ஒன்றென்றும் கூறுதலுமுண்டு.
புராணமானது சாஸ்திரங்களுள்ளே தலைமைபெற்றது அது க்ருதயுகத்திலே நூறுகோடிகிரந்தமாக பிரமதேவனால் செய்யப்பட்டமையால் பிராமம் என்னும் பெயருடையதாய் ஒன்றாக யிருந்தது. த்ரேதாயுகத்திலே கோடிகிரந்தங்களால் நூற்றுப்பதினெட்டுச் சங்கிதைகளை யுடைய பதினெட்டுப் பாகங்களாக மஹரிஷிகளால் வகுக்கப்பட்டது. துவாபரயுகத்திறுதியில் வேதவியாசர் நான்குலக்ஷம் கிரந்தங்களால் பதினெண்புராணமாகச் செய்தனர். அவற்றை ரோமஹர்ஷணர் என்னு முனிவர் வியாசரிடத்துக் கேட்டார், அவர்சுமதி அக்நிவத்ஸன் முதலியோர்க்கு உபதேசித்தார், இவ்வாறுகுரு சிஷ்யபாம்பரையாய் வெளியாயின, கழிந்துபோன பலகற்பத்துச் செய்திகளையேயெடுத்துக்கூறுதலாலும், கழிந்தசிருஷ்டிகளும் ஒருபடியின்றிவேறுபடுதலாலும் கற்பந்தோறும் அனுக்ரஹமூர்த்திகளும் வேறாதலாலும், அவ்வக் கற்பத்தின்வரலாற்றைக் கூறும்போது அவ்வக்கற்பத்ததிகாரமூர்த்தியே விசேஷமாகத் துதிக்கப்படுதலாலும் புராணங்கள் ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றினும் உண்மையாயுய்த்து நோக்குமிடத்து ஒற்றுமையுடையனவேயாம்.
புராணி - பட்டை.
புராணிகன் - புராணநிலையினிற்போன்.
புராதலம் - பாதலம்.
புராதனம் - பழமை.
புராந்தகன் - புராதகனன்.
புராந்தகியம்மை - திருவிற்கோலத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

புராந்திமகாண்டம் - பழையவேற்பாடு.
புராந்திமம் - பழமை.
புராரி - சிவபிரான்.
புராவசு - வீட்டுமன்.
புராவிருத்தம் - சரித்திரம், பரம்பரை
புரி-அரசன்,ஆசை,இராஜதானி, ஊர், கட்டுகயிறு,கயிற்றுப்புரி,கோட்டை, சங்கு, சுரி, சுருள், பட்டினம், புரியென்னேவல்,மருதநிலத்தூர்,யாறு.
புரிகுழலாள் - திருப்பாண்டிக் கொடுமுடியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
புரிகுழல் - கடைகுழன்றுசுருண்டகூந்தல்.
புரிசாலம்
புரிசாலம்பிடித்தல் } வருந்தி வேண்டல்.
புரிசை - மதில்.
புரிதல் - செய்தல், விரும்பல்.
புரிதிரித்தல் - புரிமுறுக்குதல்.
புரிந்தோர் - சினேகிதர்.
புரிமணை - பாண்டம்வைக்குமணை.
புரிமுகம் - கோபுரம், சங்கு, நத்தை.
புரிமுறுக்கல் - கோள்மூட்டிவிடுதல்.
புரிமோகம் - சம்புநாவல், விளாத்தி.
புரியட்டகம்
புரியட்டகாயம் } சூக்குமதேகம்.
புரியணை - புரிமணை.
புரியம் - கூத்து.
புரிவு - அன்பு, ஆசை.
புரீடணம் - மலம்.
புரீடமம் - உளுந்து.
புரீடம்
புரீஷம் } அழுக்கு, மலம்.
புரு - ஓரரசன், ஒருதைத்தியன், குழந்தை, மோட்சம்.
புருகுற்சன் - அறுவகைச் சக்கிரவர்த்திகளிலொருவன். மாந்தாதா சக்கிரவர்த்திமகன்.
புருகூதன் - இந்திரன்.
புருகோத்திரன் - அணுவின்புத்திரன்.
புருஜன் - சுசாந்திமகன்.
புருஜித்து - கிசிகன் புத்திரன், வசுதேவன் தம்பியாகிய கங்கன்மகன்.
புருஷகாரம் - ஆண்மை, முயற்சி.
புருஷகுஞ்சரன் -புருஷஸ்ரேஷ்டன்.
புருடதத்துவம்
புருஷதத்துவம் } ஆண்மை.
புருடநாள் - இரேவதிநாள்.
புருஷத்துவம்-ஆண்தன்மை,தைரியம்.
புருஷபசு - மனிதன்.
புருஷபழசம் - மைதுனம்.
புருடபிரமாணம் - நான்குமுழம்.
புருஷபுங்கவன்
புருஷபுண்டரீகன் } புருஷ சிரேஷ்டன்.
புருஷமேதம் - மனுஷபலி.
புருஷம்
புருடம் } புருடபிரமாணம், புன்னை, மகாமேரு.
புருடராகம் - நவமணியிலொன்று.
புருடரூபம் - ஆண்ரூபம்.
புருடர் - ஆடவர், நாயகர்.
புருடலக்கணம் - ஆடவலட்சணம் அது சாமுத்திரிகவிலக்கணத்தொன்று.
புருடவாகனம் - பல்லக்கு, விமானம்.
புருடவாகனன் - குபேரன்.
புருடவித்தை- ஆண்தேவதையுபாசனை
புருஷவியாக்கிரம் - உத்தியோகம், வலியன், வலியான்.
புருடன்
புருஷன் } அணு,ஆண்மகன்,ஓர்மரம், கடவுள்,கணவன்,சிவன், சீவான்மா, செவியுற்றிருக்கு நரம்பு இது தசநாடியிலொன்று, தலைவன், பிரமா, மனுஷன்.
புருடா - பொய்.
புருஷாங்கனை - புதன்மனைவி.
புருஷாதமன் - இழிந்தவன்.
புருடாயு
புருஷாயு } மனுவாயுள்.
புருடார்த்தம்
புருஷார்த்தம் } அடையவேண்டுவது, செய்யவேண்டுவது.
புருடோத்தமன் - சிரேஷ்டன், திருமால்.
புருஷோத்திகன்- உதவியற்றவன்.
புருண்டி - மல்லிகை.
புருதம் - பொன்.
புருபூதம் - விதலலோகம்.
புருடமீடன் - ஹஸ்திகன்மகன், அஜமீடன் தம்பி.
புருஷோத்தம பாண்டியன் - அறுலோமபாண்டியருளொருவன்.
புருவமத்தியம்
புருவமையம் } இலாடத்தானம்.
புருவம்-குதிரை, நெற்றிப்புருவம், வரை, விளிம்பு.
புருவை - ஆடு, இளமை.

புரூடன் - வசுதேவனுக்குச்சகதேவியிடத்துப் பிறந்தபுத்திரன்.
புரூணகத்தி - சிசுவதை.
புரூணகம், புரூணம், புரூண்ணம் - கருப்பத்திற்பிள்ளை.
புரூத்தியர் - வேலைக்காரர்.
புரூரம் - புருவம்.
புரூரவன் - அறுவகைச் சக்கிரவர்த்திகளிலொருவன். வைவசுவத மநுபுத்திரியாகிய இளையிடத்துப் புதனுக்குப்பிறந்த புத்திரன், இவன் பிரசித்திபெற்ற ஒரு சக்ரவர்த்தி. இவன் கொடையாலும் தெய்வபக்தியாலும் அழகாலும் சிறந்தவன். இவன் ஒரு நாள் ஊர்வசியைக்கண்டு மோகித்து அவளைத் தனக்கு மனைவியாம்படி கேட்க, அவள் நீர் என்னை யொரு நாளும்பிரியேனென்று வாக்குதத்தஞ்செய்தால்உம்மோடுகூடியிருப்பேனென்றுசொல்ல அதற்குடன்பட்டு அவளைக்கூடிச்சுகித்திருந்தவன்,இந்த விஷயம் ருக்வேதத்திலே கூறப்பட்டிருக்கின்றது.
புரை - இரகசியம், உட்டுளை, உயர்ச்சி, உவமை, எதிர்காலம், களவு, குடில், குழிப்புண், குற்றம், செல்காலம், பழமை, பழுது, பன்னசாலை, புரையென்னேவல், மடிப்பு, மாடச்சுழி, மூலப்பகந்திரம், மேன்மை, வீடு.
புரைசல்-இரகசியம், குழப்பம், சச்சரவு, பொத்தல்.
புரைசு - புரசு.
புரைசை - புரோசை.
புரைச்சல்-இழைப்பு, தைத்தல், பின்னுதல், வெளிவருதல்.
புரைதல் - இழைத்தல், தைத்தல்,போலுதல்.
புரைத்தல் -உட்புகுதல்.வெளிவருதல்.
புரைய - உவமைச்சொல்.
புரையன் குடில், பன்னசாலை, வீடு.
புரையேறுதல் - துளைவழியுட்புகுதல்.
புரையேறும் - புரையேறுந்தலையை
புரையோர் கீழோர்,கிருடா,மேலோர்.
புரோகதி - நாய், முன்னடப்பது
புரோகன - உயர்ந்தோன்.
புரோகிதத்துவம் - பௌரோகித்தியம்.
புரோகிதன்-அரசர்பஞ்சகுழுவிலொருவன் அவன் வருங்காரியஞ் சொல்வோனுங் கிருத்தியம் பண்ணுவிப்போனுமாகிறபார்ப்பான்,இந்திரன்.
புரோகை -பொதியையிற்பிறந்தவோர்நதி.
புரோசநன்-குபேரனுக்கு வாகனமாயிருக்கும் நரன், சமர்த்தன், ஞானவான். துரியோதநனுக்கு நண்பனாகிய ஒரு சிற்பி,இவன் துரியோதநனேவலால் பாண்டவர்களைக் கொல்லும் பொருட்டு அரக்குமாளிகை யமைத்தவன்.
புரோசர் - குறுநிலமன்னர்.
புரோசை - யானைகட்டுங்கயிறு,யானைக்கழுத்தணிக்கயிறு.
புரோடாசம் - ஒருமந்திரம், நெய்.
புரோடி - யாற்றுப்பாய்ச்சல்.
புரோட்சணம், புரோட்சணை - தெளித்தல்.
புரோட்சிதம் - சுத்தஞ்செய்தல்.
புரோட்சித்தல் - தெளித்தல், சுத்தஞ்செய்தல்.
புரோபாகி - பிறர்குற்றம்நாடுவோன்.
புரோற்கிதம்-சிவாகமமிருபத்தெட்டில் ஒன்று.
புலகர் - புலஸ்தியர்க்குத் தமையனார், இவர் தக்ஷபுத்ரிகளில் ஒருத்தியாகிய க்ஷமையை மணம்புரிந்து மூன்றுபுத்திரரைப் பெற்றவர்.
புலகன் - ஒரு இருடி.
புலக்கம் - வழக்கம்.
புலங்கொளி - புலங்கோளி.
புலத்தல் - கலவியிற்பிணங்கல், புணர்ச்சிக்கமையாததுபோல முறையிடல்.
புலத்தியர் - பிரமனது மானஸபுத்திரருளொருவர், இவருக்கு ஹவிர்புக்கு வினிடத்திலேஅகஸ்தியனென்றொருவனும்விசிரவசு வென்றொருவனும்பிறந்தார்கள், இந்த அகஸ்தியர்வேறு, கும்பமுனிவேறு, இந்தப் புலஸ்தியரேபுராணங்களை முதல்முதல்மானுடருக்குவெளியிட்டவர்.
புலத்தியன - ஓரிருடி.
புலத்தியன்மைந்தர் - குபேரன், இராவணன் முதலோர்.
புலப்படுதல் - விளங்குதல்.
புலப்படுத்துதல் - விளங்கப்பண்ணுதல்.

புலப்பம் - அலப்பு, பிதற்று,விளக்கம்.
புலப்பாடு - மட்டுக்கட்டுதல்.
புலமினுக்கி - விளக்குமாறு.
புலமை - கல்வி, வித்தாண்மை.
புலமையர் } கவிஞர்.
புலமையோர் }
புலம் - அறிவு,இடம்,ஒலிமுதலைம்புலன், திக்கு, நுண்மை,மேட்டுநிலம்,வயல், புலவரிசி.
புலம்பல்-ஆரவாரம்,இரங்கல்,ஒலித்தல்.
புலம்பன் - நெய்தனிலத்தலைவன்.
புலம்பு - அச்சம்,ஒலி, கலக்கம், சத்தம், தனிமை, துன்பம், புலம்பல், புலம் பென்னேவல்.
புலம்புதல் - அழுதல், ஒலித்தல், பிதற்றுதல்.
புலரி - விடியல்.
புலருதல் } காய்தல், வாடல், விடிதல்.
புலர்தல் }
புலர்த்தல் } காய்ச்சல், பூசுதல்.
புலர்த்துதல் }
புலர்வு - உலருகை, காய்வு, விடிவு.
புலவர் - அறிஞர்,கம்மாளர், கவிவாணர் குறுநிலமன்னர், கூத்தர், தேவர், புதன், பொருநர்.
புலவன் - அருகன்,அறிஞன், கம்மாளன், கவிவாணன், கூத்தன்,தேவன், தேவேந்திரன், புதன், போர்வீரன், முருகன், வானோன்.
புலவா - பூலா.
புலவி - ஊடலின் முதிர்தல், கூடியுங் கூட்டமின்மை.
புலவிநீட்டம் - ஊடல்.
புலவு - ஊன், நரகம், புலம், புலால், மணம்.
புலன் - அறிவு, இந்திரியவுணர்ச்சி, கருத்து, வனப்பெட்டினொன்று.
புலன்வனப்பு-இயற்சொல்லானியன்ற பொருடோன்றக்கூறல்.
புலன்வென்றோர் - முனிவர்.
புலாசஜை - இரதிதேவி.
புலாசுசன் - இந்திரன், மகேச்சுரன்.
புலாகம் - அழகு,சுருக்கம்,சோறு,பதர், மீன்.
புலாகி - மரம்.
புலாதி - கவலை, பிராந்தி.
புலால் - ஊன், மீன், வெடில்.
புலால்கட்டி - கடலின்மீன்முதலியவற்றைத்தடுப்போன்.
புலால்கட்டுதல் - மீன்முதலியவற்றைத் தடுத்தல்.
புலானீர் - இரத்தம்.
புலான்மறுத்தல் - ஒருநூல்.
புலி - அண்ணு,ஒருமிருகம், சிங்கவிராசி, நால்வகைச் சாந்திஞென்று, வேங்கைமரம், வியாக்கிரபாதர்.
புலிக்கண்கள் - கோமேதகம்.
புலிக்கொடியோன் - சோழன்.
புலிங்கம் - ஊர்க்குருவி,தீப்பொறி.
புலித்தடுக்கி } கற்றாழை, சிங்கிவி, தொடரி.
புலித்தொடக்கி }
புலித்தோலுடையோன் - சிவபிரான்.
புலிநகக்கொன்றை - ஒருமரம்.
புலிந்தம் - தேயமைம்பத்தாறிஞென்று, அது மிலேச்சதேசம்.
புலிந்தன் - மிலேச்சன்.
புலிபம் - பொன்னுவிரை.
புலிப்பாணி - வியாக்கிரபாதர், போகருடைய சீடர்.
புலிமுகக்கடுக்கன் - ஒருகாதணி.
புலிமுகச்சிலந்தி - ஒரு விஷவண்டு.
புலிமுகப்பணி - புலிமுகக்கடுக்கன்.
புலிமுகப்பூச்சி - ஒருபூச்சி.
புலிமெய்ச்சிலந்தி - புலிமுகச்சிலந்தி.
புலியுகிலி - புலிதொடக்கி.
புலியுறுமி - ஒருபறை, கிறிச்சான்.
புலியூர் - சிதம்பரம், வியாக்கிரபாதர் பூசித்த தலமாதலால் இதற்கிப்பெயருண்டாயிற்று.
புலியேறு - ஆண்புலி.
புலிரிகம் - பாம்பு.
புலு - பத்து.
புலுட்டுதல் - கருக்குதல், சுடல்.
புலுட்டை - தழைவற்றது, புலுண்டனிறம், புலுண்டினதன்மை.
புலுண்டலன் - புலுட்டையன்.
புலுண்டல் } கருகல்,கருகினது,கருகுதல்.
புலுண்டுதல் }
புலுதம் - அளபெடை, காலதசப்பிரமாணத்தொன்று அது இலகு மூன்று கொண்டதிருதிரை முழுவோட்டம்.
புலை - ஊன், புலால்,புன்குணம்,பொல்லாங்கு.
புலைச்சி - எவட்சாரம், புலைப்பெண்.
புலைச்சேரி - பறைச்சேரி.

புலைஞர் - ஈனர், சண்டாளர், பறையர், மறவர், வேடர்.
புலைத்தனம்-கொலைக்குணம், புன்குணம்.
புலைத்தொழில் - புன்றொழில், கொலைத்தொழில்.
புலைப்பாடி - புலைச்சேரி.
புலைமகள் - புலைப்பெண்.
புலைமகன் - புலையன்.
புலைமை - கீழ்மை, புலைத்தன்மை.
புலையர் - கீழ்மக்கள், சண்டாளர்.
புலையன் - கீழ்மகன், சண்டாளன்.
புலைவினைஞர் - இழிதொழிலாளர்.
புலோமசித்து இந்திரன்.
புலோமசை - இந்திராணி அவள்புலோமன் குமாரி, இந்திரன் மனைவியாகிய சசிதேவி, இந்திரன்புலோமனைக்கொன்று புலோமசையைக் கவர்ந்துசென்றான்.
புலோம்பிதன் - இந்திரன்.
புலோமன்-இந்திராணிதந்தை, ஓரரக்கன்.
புலோமாரி - இந்திரன்.
புலோமை - ஓரசுரன்.
புல்-அற்பம்,அனுடநாள், இழிவு,கல்வி, பனை, புலி,புல்லு,புல்லென்னேவல், புன்மை.
புல்கல் } புல்லல்.
புல்குதல் }
புல்மரம் - தென்னமரம்.
புல்மானம் - புன்மானம்.
புல்லகண்டம் - சருக்கரை.
புல்லகம் - நுதலணி.
புல்லணர் - தாடி.
புல்லம் - இடபவிராசி, எருது, புட்பம், மலர்ந்தது.
புல்லரிகம் - பாம்பு.
புல்லர் - கீழ்மக்கள், வேடர்.
புல்லல் - அமைதல், கூடுதல், சார்தல், புணர்தல்.
புல்லறிவாளர் - அறிவீனர்.
புல்லறிவாண்மை அறிவின்மை.
புல்லறிவு - அறிவின்மை, கீழ்மையான வறிவு.
புல்லன் - அறிவீனன், கீழ்மகன்,சிறியவன்.
புல்லாங்கழி } ஒருதுகுழல்.
புல்லாங்குழல் }
புல்லாந்தி - பூல்.
புல்லாமணக்கு - ஓராமணக்கு.
புல்லாமொய்ச்சி - புற்பற்றை.
புல்லார் - பகைவர்.
புல்லாற்றூர்எயிற்றியனூர் - தன்மக்கள் மேற்போருக்கெழுந்த கோப்பெருஞ்சோழனைப்பாடி அது செய்யாதபடி தடுத்தவர், போர்வலியிற் சிறந்த வேந்தேகேள், உன்னைப் பகைத்திருப்பவர் யார், உன் புதல்வரன்றோ, நீயவரைப் போரில் வென்று வாழ்ந்திருந்துவிண்ணுலகாளப் புகும்போது இம்மண்ணுலகை யாரும் பொருட்டு யாரைவைத் தகலுவை, ஒருகால் அவர்க்குநீ தோற்பின் உன் பகைவர் கொண்டாடப் பேரிழிவை நிலைநிறுத்துவையன்றே, ஆதலால் உன் சினம் ஒழிவதாக என்னுங்கருத்தமைத்து இவர் பாடிய பாட்டுமிகவுஞ் சாதுரியமானது. (புறநானூறு) (உகூ) பாட்டு.
புல்லி புறவிதழ், பூவினிதழ்.
புல்லிங்கம் - ஆண்பால்.
புல்லிதழ் - பூவின்புறவிதழ்.
புல்லிது - புன்மைத்து, பூ.
புல்லியம் - புளிநறளை.
புல்லியர் - கீழ்மக்கள்.
புல்லு - புதர்.
புல்லுக்கற்றை - புற்கற்றை.
புல்லுதல் - இணங்குதல், தழுவுதல், புணர்தல்.
புல்லுநர் - சினேகிதர்.
புல்லுருவி - குருவிச்சை.
புல்லுவர் - வேடர்.
புல்லூதியம் - பனை.
புல்லூரி - குருவிச்சை.
புல்லெடுத்தல் - புன்மிகுத்தல்.
புல்லெனல் - ஒளிமழுங்கல்,பொலிவழிதல்.
புல்லை - மங்கலானமஞ்சள்நிறம்,வெண்மைகலந்த சிவப்பு.
புல்வரகு - ஒருவிதபயிர்.
புல்வாடி - புல்கற்றையடுக்கியவாடி.
புல்வாய் - கருமான், கலைமான்.
புல்வாரி - புல்லுச்சத்தகம்.
புல்விரியன் - ஒருபாம்பு.
புல்வெட்டிப்பல்-மாட்டின் முன்வாய்ப்பல்.

புவலோகம் - மேலேழுலகினொன்று.
புவனகோசம் - பூகோளம்.
புவனசாத்திரம் - பூமிசாத்திரம்.
புவனத்திரயம் - திரிலோகம் அது சுவர்க்கம் மத்தியம் பாதலம்.
புவனநாயகர் - புவனகர்த்தாக்கள்.
புவனநாயகியம்மை - திருமாகறலிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
புவனமெண்வச்சிரம்-கால்மீர்ப்படிகம்.
புவனம் - அப்பியாசம், ஆகாயம், நீர், பதினான்குலகப் பொது, பூமி.
புவனி - பூமி.
புவனியு - எசமான், முச்சுடர்.
புவனேகலாகு - விஜய கூழங்கைச் சக்ரவர்த்தியானவன் யாழ்ப்பாணத்தில் அரசுபுரிந்த காலத்தில் அவனுக்கு மந்திரியாயிருந்தவர், இவர் தமிழ்ப் புலமையிற் சிறந்தவர், இவரால் கட்டப்பட்ட சுப்பிரமணியர் ஆலயம் இன்றும் நல்லூரில் நிலைபெற்று விளங்குகின்றது இவர் ஆயிரத் தெண்ணூற்றைம்பத்தைந்து வருடங்களுக்கு முன்னிருந்தவர், இவர், ஊர் தோறும் தருமபாடசாலைகள் அமைத்துத் தமிழ்க்கலையை வளர்த்தவர்.
புவனேசுவரி - பார்வதி ஒட்டரதேசத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
புவனை - ஒருசத்தி.
புவி - பூமி.
புவிதவ்ருக்கம் - பெருவாகை.
புவிப்பாத்திரம் - மண்கலம்.
புவுபீரு - தண்ணீர்விட்டான்.
புழக்கம்- அறிமுகம்,தோற்றம்,பழக்கம்.
புழங்குதல் - வழங்குதல்.
புழல் - ஒரூர், சலதாரை, துளையுடைப் பொருள்.
புழு - கிருமி, புழுவென்னேவல்.
புழுகு - நாவிப்புழுகு.
புழுகுசட்டம் - ஒருவாசனைப்பண்டம்.
புழுகுசம்பா - ஒருநெல்.
புழுகுபிள்ளை, புழுகுபூனை - நாவிப்பிள்ளை.
புழுக்கடி - புழுக்குத்தல்.
புழுக்கம்-உட்டணம், பொறாமை, வன்மம், வெப்பம்.
புழுக்கல் - அவித்தல்,சோறு,முதிரைப் பண்டம்.
புழுக்கு - அவிப்பு, புழுக்கென்னேவல்.
புழுக்குதல் - அவித்தல்.
புழுக்குத்தல் - புழுவரித்தது, புழுவரித்தல்.
புழுக்குத்தி - கொண்டலாத்தி.
புழுக்குத்துதல் - புழுவரித்தல்.
புழுக்கூடு - புழுவிருக்கும்பை.
புழுக்கை - அடிமை, ஆடு முதலியவற்றினொரு.
புழுக்கைச்சி - அடிமைப்பெண்.
புழுக்கையன் - அடிமை.
புழுக்கொடியல் - அவித்த ஒடியல்.
புழுக்கொல்லி-வண்டுகொல்லிச்செடி.
புழுங்கலரிசி - அவித்த நெல்லரிசி.
புழுங்கல் - உட்டணமாதல், சினக்குறிப்பு, புழுக்கினதானியம்.
புழுங்குதல் - அவிதல், உட்டணித்தல், கோபித்தல்.
புழுதி - பராகம்.
புழுதிப்படலம் - தூளிச்செறிவு.
புழுதிமாயம் - காரியஞ் சரிக்கட்டினது போற் காட்டல்.
புழுதியாடல் - புழுதிகுளித்தல், புழுதியாக்கல் இது எண்வகை நானத்தொன்று.
புழுதியார்த்தல் - தூளிபரம்புதல்.
புழுதிவிதைப்பு - ஈரமில்லாவிதைப்பு.
புழுது - அம்புக்குதை.
புழுத்தல் - புழுவுண்டாதல்.
புழுப்பு - புழுத்தல்.
புழுமேய்ச்சல் - புழுவரித்தல்.
புழுமேய்தல் - புழுக்கடித்தல்.
புழுவதை - தேனீவைக்கும்புழுக்கூடு.
புழுவெட்டு - புழுமேய்ச்சல்.
புழுவெட்டுதல் - புழுவரித்தல்.
புழை-உட்டுளை,கதவுவிட்டுப்புகும்வழி, துளையுடைப்பொருள்.
புழைக்கடை - பின்புறவாயில்.
புழைக்கை - துதிக்கை, யானை.
புளகம் - அரிதாரம், கண்ணாடி, சோறு, புடைப்பு, மகிழ்ச்சி, மயிர்சிலிர்த்தல், வெடிப்பு.
புளகாலயன் - குபேரன்.
புளகிதம் - மகிழ்ச்சி, மயிர்ச்சிலிர்ப்பு.
புளகித்தல் - மகிழ்தல், மயிர்சிலிர்த்தல்.

புளகிப்பு - மகிழ்ச்சி, மயிர்ச்சிலிர்ப்பு.
புளப்பாகல் - சிறுவாலுளுவை.
புளம் - அண்ணம், குதிரை, நடையினென்று.
புளவை - பிளவை.
புளாகம் - கஞ்சி, சோற்றுத்திரளை.
புளி - ஒருசுவை, புளியமரம், புளியென்னேவல்.
புளிக்கறி - புளிங்கறி.
புளிக்கீரை - ஒருகீரை.
புளிக்குடித்திருத்தல் - பிள்ளைபெற்றிருத்தல்.
புளிக்குழம்பு - புளியிட்டுச்செய்யுங் குழம்பு.
புளிங்கறி - புளிக்குழம்பு.
புளிச்சல் - புளித்தது.
புளிச்சற்பணிகாரம் - ஒருபணிகாரம்.
புளிச்சாறு - ஒருணவுநீர்.
புளிச்சை - ஒருசெடி.
புளிஞர் - வேடர்.
புளிஞ்சோறு - புளியோதனம்.
புளிதம் - ஊன்.
புளித்தல் - நெருங்கல், புளிப்பு
புளித்தோடை - ஒருதோடை.
புளிநடலை } புளிமதுரை.
புளிநறளை }
புளிந்தம் - புலிந்தம்.
புளிந்தயிர் - புளித்ததயிர்.
புளிந்தர் - விதர்ப்பாநத்த தேசங்களிலுள்ள ஒருசாதியார்.
புளிந்தன் - வேடன்.
புளிப்பற்றுதல் - புளிப்பிடித்தல்.
புளிப்பு - ஒருசுவை, பொங்குகை.
புளிமண்டி - அதிகவழுக்கு, புளிப்புக்கொண்டது.
புளிமதுரை - ஒருசெடி.
புளிமா - ஒருமரம், நிரை நேராய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.
புளிமாங்கனி - நிரைநேர் நிரையாய்வருஞ் சீர்க்கு வாய்பாடு.
புளிமாங்காய் - நிரைநேர்நேராய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.
புளிமாதளை - ஒருமாதளை.
புளிமாநறுநிழல் - நிரைநேர்நிரைநிரையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
புளிமாநறும்பூ - நிரைநேர் நிரைநேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
புளிமாந்தண்ணிழல் - நிரைநேர் நேர்நிரையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
புளிமாந்தண்பூ - நிரைநேர் நேர்நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
புளியமரம் - ஒருமரம்.
புளியமிலைக்கம்பி - புளியிலைபோற் சிறுஞ் சாயரேகை.
புளியம்பாசி - ஒரு நீர்ப்பூண்டு.
புளியறணை - ஒருபூண்டு.
புளியாமணக்கு - ஒருபூண்டு.
புளியாரை - ஒருகீரை.
புளியுப்பு - ஒருப்பு.
புளியோதனம் - புளிஞ்சோறு இது நிவேதனச் சாதவகையினென்று.
புளியோரை - புளியிட்டுத் தாளித்த சாதம்.
புளினம் - மணற்குன்று, மணற்றிட்டை.
புளினர் - வேடர்.
புளுகன் - விசித்திரகாரன், வீம்பன்.
புளுகு - புளுகென்னேவல், பொய், விசித்திரம், வீம்பு.
புளுகுதல் - மெய்போற் பொய்கூறல், வீம்பு பேசல்.
புள் - அவிட்டநாள், ஒரு விளையாட்டுக் கருவி, பறவைப்பொது இது பிறப்பேழினென்று, வண்டு.
புள்ளடி - உரைகல், புள்ளினடிச்சுவட்டையொத்த அடையாளம், ஒருபூடு.
புள்ளம் - அரிவாள், கொடுவாள்.
புள்ளரசு - கருடன்.
புள்ளலூர் - தொண்டைநாட்டகத்தோரூர்.
புள்ளி - இலக்கப்புள்ளி, ஒற்றெழுத்து, ஒரு அடையாளம், கணிசம், நண்டு, பணத்தொகை, பல்லி, பொறி, மதிப்பு, தேமல், நவமணியைங் குற்றத்தொன்று.
புள்ளிக்கணக்கன் - கணக்கிற் பயின்றவன்.
புள்ளிக்கணக்கு - இலக்கக்கணக்கு.
புள்ளிக்கல்லு - கானற்கல்.
புள்ளிக்காரன் - கணக்கன், கணிசவான்.
புள்ளிபாய்தல் - புள்ளிவிழுதல்.
புள்ளிபார்த்தல் - கணக்குப்பார்த்தல்.
புள்ளிபோடுதல் - புள்ளிவைத்தல், மதித்தல்.
புள்ளிமான் - ஒருபுள்ளியுடையமான்.
புள்ளிமிருகம் - கலைமான்.
புள்ளியம் - சிறுகுறிஞ்சா.

புள்ளிருக்குவேளூர் - வைத்தீஸ்வரன் கோயில்.
புள்ளிரோகம் - ஒருநோய்.
புள்ளிவண்டு - கழுதைவண்டு.
புள்ளிவராகன் - ஒருவகைவராகன்.
புள்ளிவரி - இடாப்பு.
புள்ளிவைத்தல் - கணக்கிற்றள்ளி யடையாளம் போடல்.
புள்ளீட்டம் - பறவைக்கூட்டம்.
புள்ளு - புள்.
புள்ளுவம் - வஞ்சகம்.
புள்ளுவர் - கீழ்மக்கள், வஞ்சகர், வேடர்.
புள்ளொலி - பறவைக்கூட்டத்தொலி.
புள்ளோச்சல் - பட்சிதுரத்தல்.
புள்ளோப்பல், புள்ளோம்பல் - பட்சிகாத்தல்.
புறக்கட்டு - சுற்றுவீடு.
புறக்கணித்தல் - வேற்றுமைபண்ணல்.
புறக்கணிப்பு - புறக்கணித்தல்.
புறக்கண் - கடைக்கண்.
புறக்கதவு - வெளிக்கதவு.
புறக்கந்து - கந்தினருகு.
புறக்களறி - வெளிக்களறிவிடல்.
புறக்காதுபடல் - காதிற்சோணை யுள்வளம் புறவளமாதல்.
புறக்காரியம் - பக்கத்திற்காரியம்.
புறக்காவல் - வெளிக்காவல்.
புறக்காழ் - புறவயிரம், பெண்மரம்.
புறக்கூரை - வெளிக்கூரை.
புறக்கை - புறங்கை, வலப்புறம், வெளிப்புறம்.
புறக்கோடி - வெளிக்கோடி.
புறங்கடை - வெளிக்கதவு.
புறங்காடு - சுடுகாடு.
புறங்காட்டல் - தோற்றோடுதல், பின்காட்டல்.
புறங்காணுதல் - தோற்றோடச் செய்தல்.
புறங்கால் - புறவடி.
புறங்காழ் - புறக்காழ்.
புறங்கான் - முல்லைநிலம்.
புறங்கூறல் - தூற்றல்.
புறங்கூற்று - பின்புறணி.
புறங்கை - உள்ளங்கைக்குட் புறவளம்.
புறங்கொடுத்தல் - தோற்றுத்திரும்பல்.
புறச்சுட்டு - மொழிக்குப்புறத்துச் சுட்டெழுத்தாய்ப் புணர்ந்து நிற்பது.
புறச்சுவர்தீற்றல் - சொந்தமானவர்களை விட்டுப் பிறனுக்குபகாரம் பண்ணல்.
புறச்சுற்று - வெளிச்சுற்று.
புறச்சேரி - வெளிச்சேரி.
புறணி - குறிஞ்சிநிலம், தோல், புறங்கூறல், புறம், முல்லைநிலம்.
புறதேசம் - அன்னியதேசம்.
புறத்தவன் - ஐயனார்.
புறத்தான் - புறம்பானவன்.
புறத்தி - பின்பக்கம், புறம்பு.
புறத்திணை - வெட்சிமுதலிய எழுவகையொழுக்கம்.
புறத்தியான் - அந்நியன்.
புறத்துறுப்பு - புறத்தங்கம்.
புறநகர் - நகர்ப்புறம்.
புறநடம் - வென்றிக்கூத்து முதலானவை.
புறநானூறு - ஒருசெய்யுள். இந்நூல் கடைச்சங்கத்தார் காலத்தது.
புறநிலை - ஒரு பிரபந்தம் அது நீதொழுதெய்வ நிர்புறங் காக்க வாழ்வையென வெண்பா முதலும் ஆசிரிய விறுதியுமாகப் பாடுவது.
புறநிலைமருதம் - உழைகுரலாய்க் கைக்கிளை குரலாய மேற்செம்பாலை.
புறநிலையகத்திணை - தான் குறித்தவற்றின் புறத்துட் பிறிதொரு பொருளை எடுத்துக்காட்டித் தன்பொருளை விலக்குதல்.
புறநிலைவாழ்த்து - புறநிலை.
புறநீங்கல் - தன்னிட்டம், விடுதலை, விலக்கு.
புறநீர்க்குந்தம் - கண்ணோயுளொன்று.
புறநீர்மை - ஒருபண், வெளிக்குணம்.
புறந்தரல், புறந்தருதல் - ஓம்பல், தோற்றல்.
புறந்தாள் - புறங்கால்.
புறப்பகை - வெளிப்பகை.
புறப்படுதல் - பயணப்படுதல், வெளிவருதல்.
புறப்பத்தியம் - பிற்பத்தியம்.
புறப்பற்று - வெளிப்பற்று.
புறப்பாடு - புறப்படுகை.
புறப்பாவகவல் - பாடாண்பாட்டுத் துறை மேற்பாடு மாசிரியம்.
புறப்புறம் - பாடாண்பொதுவியல்.
புறப்பேச்சு - சுயவறிவு, மயங்கிப்பேசல்.

புறப்பொருள் - அறம்பொருளென்னு மிருவகைப் பாற்பட்டிருப்பன, படைத்திறம்.
புறமயிர் - உரோமம்.
புறமறிவு-பிறர்க்கு நன்மை நினைக்கை.
புறம் - இடம், ஏழாம்வேற்றுமையுருபு, சுற்று, பக்கம், பின்புறம், மதில், முதுகு, வீரம், வெளிவளம்.
புறம்பனை-குறிஞ்சிநிலம், முல்லைநிலம்.
புறம்பனையான் - சாதவாகனன்.
புறம்பு - தனியானது, புறத்தி,மற்றை.
புறம்புக்கிருத்தல் - மலங்கழிக்க விருத்தல்.
புறம்புபண்ணுதல்-புறத்திபண்ணுதல்.
புறம்புறுத்தல் - புறக்காவல்செய்தல்.
புறம்பொசிதல் - வெளிவருதல்.
புறவடி - புறங்கால்.
புறவடை - மலங்கழிப்பிக்க அபானவாயில் வைப்பது.
புறவட்டம் - வெளிவட்டம்.
புறவணி - குறிஞ்சிநிலம், முல்லைநிலம்.
புறவம் - காடு, குறிஞ்சிநிலம், புறா, முல்லை நிலம்.
புறவயிரம் - ஆண்மரம், வெளிவயிரம்
புறவளையம் - சூழப்பூசு மருந்துப்பூச்சு.
புறவாயில் - கடைத்தலை.
புறவாளி - புறவேலை.
புறவிடன் - கடல், சோலை,மலை, யாறு.
புறவிதழ் - புல்லிதழ்.
புறவீச்சு - ஒருசன்னி.
புறவீதி - வெளிவீதி.
புறவு குறிஞ்சிநிலம்,புறா, முல்லைநிலம், விலங்கின் கூட்டம்.
புறவுரை - டாயிரம்.
புறவெட்டு - பட்டையடுத்தபலகை, எதிர்ப்பேச்சு, புறத்திவெட்டு.
புறவெண்டு - கடுக்கனிற் புறத்துவெண்டு.
புறவெளி - பராகாயம்.
புறவேலை - சக்கிரவாளத்தைச் சூழ்ந்த சமுத்திரம்.
புறவொடுபுலத்தல் - அகப்பொருட்டுறையினொன்று.
புறனடை-புறக்காப்பாய்ச் சொல்வது.
புறன் - புறம், முதுகு.
புறா - ஒருபுள்.
புறாக்காலி - ஒருபூடு.
புறாண்டுதல் - பிறாண்டுதல்.
புறாப்பரத்தல் - களவெடுத்தல்.
புறாமாடம் - புறாவசிக்குமிடம்.
புறாமுட்டி - ஒருபூடு.
புற்கசன் - சண்டாளன், வேடன்.
புற்கம் - எத்து, குறை.
புற்கலம் - உடல்.
புற்கலன் - உடல், உயிர்.
புற்கவ்வுதல் - தோல்விக்குறியாப்ப்புல்லுக் கவ்வுதல்.
புற்கற்றை - புற்றிரள்.
புற்கு - கபிலநிறம், குறை, நிந்தைக்குறிப்பு.
புற்கெனல் -அந்திப்பொழுதின்குணம், புகர்நிறக்குறிப்பு.
புற்கை - கூழ்.
புற்கொடி - சுரை.
புற்கோரை - ஒருபுல்.
புற்சாமை - ஒருசாமை.
புற்செடி - புற்பற்றை.
புற்பதி - அனுடநாள், பனை,வாழைக்கிழங்கு.
புற்பாய் - புன்மாய்.
புற்புதம் - நீர்க்குமிழி.
புற்புல்லெனல் - விடியற்குறிப்பு.
புற்பொழி - புற்பற்றை.
புற்போதி - பூவரசு.
புற்றாஞ்சோறு - கறையான்கூடு.
புற்றாளி - அனுடம், பனை.
புற்றிற்பூ - காளான்.
புற்று - வளை, வன்மீகம்.
புற்றுக்குதைச்சி - புற்றாஞ்சோறு.
புற்றெடுத்தல் - கறையான் முதலியன வளை தோண்டல்.
புனக்கல் - தேகக்கல்.
புனஸ்காரம் - வணக்கம்.
புனமுருக்கு - பலாசு.
புனமுருங்கை - ஒருமுருங்கை.
புனம் - கொல்லை, வயல்.
புனராகமனம் - திரும்பிவருதல்.
புனராவர்த்தம் - சனனம், சுற்றுதல், லுதரம்.
புனராவிருத்தி - செனனம்.
புனரி } ஒருபூடு.
புனரித்தண்டு } ஒருபூடு.
புனருக்தம் - புனருத்தம்.
புனருத்தசன்மம் - பார்ப்பான்.

புனருத்தம் } கூறியது கூறல்.
புனருத்தி }
புனர்செனனம் - மீண்டுபிறத்தல்.
புனர்தம் - புனர்பூசம்.
புனர்நவம் - நகம்.
புனர்பூசம் - ஒரு நட்சத்திரம்.
புனர்ப்பவம் - நகம், மீண்டுபிறத்தல்.
புனர்ப்பாகம்-சமைத்ததைச்சமைக்கை.
புனர்வசு - சிவபிரான், திருமால், புனர்பூச நட்சத்திரம், தவித்தியோதன் தம்பி, திந்துபிமகன்.
புனர்விவாகம் - இரண்டாமணம்.
புனலி - ஒருபூண்டு, புனரி.
புனலை - நெய்க்கொட்டான்மரம்.
புனல் - ஆறு, குதலை, நீர்.
புனல்முருங்கை - ஒருமுருங்கை.
புனல்விடுதல் - குதலைகொஞ்சல்.
புனல்வேந்தன் - வருணன்.
புனவர் - குறிஞ்சிநிலமாக்கள்.
புனற்பாகம்-சமைத்ததைமறுபடிசமைத்தல்.
புனற்பெருக்கு - நீர்ப்பெருக்கு.
புனற்றிரை - நீர்த்திரை.
புனனாடன் - சோழன்.
புனனாடு - காவேரிநாடு, இது கொடுந்தமிழ் நாட்டினொன்று, சோணாடு.
புனாகம் - பின்பு.
புனிகம் - சங்கபாஷாணம்.
புனிதம் - புனீதம், பரிசுத்தம்.
புனிதன் - அருகன், இந்திரன், சிவபிரான், சுத்தன், புத்தன்.
புனிறு - ஆசூசம், ஈன்றணிமை, சூதகம், தோல், பதுமை.
புனிற்று - இளங்கன்றுப்பசு.
புனீதம்-சுத்தம், புனர்பூசம், நட்சத்திரம்.
புனுகு - புழுகு.
புனை - அலங்கரிப்பு, அழகு, சீலை, புதுமை, புனையென்னேவல், பொலிவு, விலங்கு.
புனைகுழல் } பெண்.
புனைகோதை }
புனைசுருட்டு - சதியோசனை, சூது.
புனைதல் - அணிதல், அலங்கரித்தல்.
புனைந்துரை-சிறிதினைப்பெருக்கிப்பெரிதினைச் சுருக்கிக்கூறல், பாயிரம்.
புனையிழை - பெண்.
புனைவர் - கம்மாளர்.
புனைவில் - உபமானப்பொருள்.
புனைவிலிநவிற்சியணி - ஓரலங்காரம் அது உபமானத்தை வன்னிக்க அதனதுசம்பந்தத்தால்உபமேயந்தோன்றச் சொல்லுதல்.
புனைவுளி - வன்னிக்கப்படுபொருள்.
புனைவுளிவிளைவணி - ஓரலங்காரம்அது சொல்லப்பட்ட ஒரு உபமேயந் தோன்றுதலாம்.
புன்கண் - தரித்திரம், துன்பம், நோய், மெலிவு.
புன்கம் - உணவு, சோறு.
புன்காலி - காயாமரம், பாதிரிமரம்.
புன்கு - புனமுருங்கை, புன்கமரம்.
புன்குசடை - குஞ்சிச்சடை.
புன்குமரம் - பொன்னாங்காய்மரம்.
புன்குரி - புங்கம்பட்டை.
புன்சிரிப்பு - புன்முறுவல்.
புன்செக்கர் - மாலைநேரம்.
புன்செய் - சிறுதானியம் விளைநிலம், தரிசுநிலம்.
புன்செய்கை - சிறுதானியச்செய்கை.
புன்சொல் - எளியசொல்.
புன்பயிர் - சிறுபயிர்.
புன்புலால் - இழிவாகிய ஊன்.
புன்மரம்-மூங்கில் முதலிய வுட்டளைமரம்.
புன்மாலை - புனசெக்கர்.
புன்மானம் - இளஞ்செக்கர்வானம்.
புன்முறுவல் - மந்தச்சிரிப்பு.
புன்மை - அற்பம், ஈனம், சிறுமை, துன்பம், மறதி, வறுமை.
புன்றுமி - தூறல், சிறுதுளி.
புன்றுளி - சிறுதிவலை.
புன்றொழில் - இழிதொழில்.
புன்னகை - புன்சிரிப்பு.
புன்னறவம் - இஞ்சி.
புன்னறுவம் - சாறணை.
புன்னாகம் - கோழிக்கீரை, புன்னை.
புன்னாகவராளி - ஒருராகம்.
புன்னிடா - தகரை.
புன்னெறி - ஈனவழி.
புன்னை - புன்னைமரம்.

---

## பூ



பூ - அழகு, இடம், இந்துப்பு, இருக்குதல், இலை, ஓமாக்கினி, ஓரெழுத்து,

ஒருகண்ணோய், ஒருநாகம், கூர்மை, தாமரை, தீப்பொறி, பிறப்பு, புட்பம், பூமி, பூவென்னேவல், பொலிவு, மகளிர் சூதகம், பூநீறுக்குமுன்பு தோன்றுங்கதிர், மலர்.
பூகதம்பம் - நிலக்கடம்பு.
பூகதர் - புகழ்வோர்.
பூகபீடம் - துப்பற்காளாஞ்சி.
பூகம்-இருள், உண்டை, கமுகு, கழுகு, குவியல், கூந்தற்கமுகு, கூந்தற்பனை, கௌரி, சுபாவம், திரட்சி, நேரம், பலா, பாக்கு, பிளப்பு.
பூகம்பம் } பூமிநடுங்கல்.
பூகம்பனம் }
பூகரபம் - கையாந்தகரை.
பூகரம் - நஞ்சு.
பூகர்ணம் - பூகன்னம்.
பூகலம் - மதர்த்தகுதிரை.
பூகன்னம் - மையவரியினரைவிட்டம்.
பூகாகம் - அன்றில், சரும்புரு.
பூகாந்தை - பூமிதேவி.
பூகாமி - பூமிவழியாய்க்கமனிக்குங்குதிரை.
பூகேசம் - ஆலமரம், நீர்ப்பாசி.
பூகோளசாஸ்திரம் - புவனசாஸ்திரம்.
பூகோளம் - பூகோளசாஸ்திரம், ஆரிய சாஸ்திரம்பூமியினிடையேமேருவும் கடலினிடையே வடவைத்தீயுமிருக்கின்றன வென்றுகூறும், இவை முறையே வடத்ருவம் என்றும் தென்த்ருவம் என்றும்கூறப்படும், பூமத்யம் என்று ஆரிய சாஸ்திரத்திலே சொல்லப்பட்ட இடம் வடத்ருவமுனை, ஆரியசாஸ்திரம் பூமியை மேசலாரேகையை யெல்லையாக வைத்து உத்தரகோளார்த்தம் தக்ஷிணகோளார்த்தம் என்றிரு கூறாகப் பிரித்து உத்தர கோளார்த்த முழுதும் நிலமென்றும், தக்ஷிண கோளார்த்த முழுதும் நீரென்றும் கூறும் உத்தர கோளார்த்த முழுதும் நிலமெனவே அதன் மத்யஸ்தாநம் வடத்ருவத்திலுள்ள சுமேரு வாகின்றது, இனிக் கடலின் மத்யமெனவே தக்ஷிணகோளார்த்த முழுதும் நீராக அதன் மத்யஸ்தாநம் தென்த்ருவத்திலுள்ள வடவா முகமாகின்றது, உத்தரகோளார்த்த முழுவதையும் ஜம்புத்வீபம் என்று வழங்குவர். இந்த ஜம்புத்வீபம் ஒன்பது வர்ஷங்களாக வகுக்கப்பட்டது, இவற்றின் விரிவெல்லாம் பெரு நூல்களிற் காணலாம். பூச்சக்கிரம்.
பூக்கஞ்சா - ஒருகஞ்சா.
பூக்கட்டுதல் - பூதொடுத்தல்.
பூக்கந்தகம் - புடமிட்ட கந்தகம்.
பூக்கம் - ஊர்ப்பொது, கமுகு, மது, மருதநிலத்தூர்.
பூக்காணம் - சமரேகையின் விட்டளவு.
பூக்குடலை } பூக்கூடை.
பூக்குட்டான் }
பூக்குதல் - பூத்தல்.
பூக்குறடு - பூமாலை தொடுக்குஞ் சாலை.
பூக்கொய்தல் - பூவெடுத்தல்.
பூங்கஞ்சா - பூக்கஞ்சா.
பூங்கணை - புஷ்பபாணம்.
பூங்கதிர் - ஒளி, வெண்கதிர்.
பூங்கரும்பு - செங்கரும்பு.
பூங்கவணி - ஒருவகைப்புடைவை.
பூங்கா - நந்தனவனம்.
பூங்காரம் - மந்தாரம்.
பூங்காரை - ஒருநாரை.
பூங்காவனம் - பூங்கா.
பூங்காவி - ஒருசாவி.
பூங்குறுநல் - மெல்லியகுறுநல்.
பூங்கொடிநாயகி - திருவோமாம் புலியூரில்கோயில்கொண்டிருக்கும்தேவியார்பெயர்.
பூங்கொத்து - மலர்த்திரள்.
பூங்கொம்பனை-திருஇன்னம்பரில் கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பூங்கொல்லை - பூந்தோட்டம்.
பூங்கோதை-மதுரையிலே இற்றைக்கு இருநூற்றெழுபத்தைந்து வருஷங்களுக்கு முன்னேயிருந்த ஒரு தாசி, இவள் சீதக்காதியென்னும் சோனகப் பிரபுவுக்குக் காமக்கிழத்தி யானமையால் தன்னினத்தாராலே நீக்கப்பட்டவள், இவள் காயற் பட்டினத்திலே சீதக்காதி கொடுத்த பெருநிதியைக்கொண்டு தன்னூருக்குப் போகும்வழியிலே கள்ளர் அப்பொருளை பறித்துக்கொள்ள, கதியற்றவளாய் நின்று "தினங்கொடுக்குங் கொடையானே" என்னு முதற் குறிப்

புள்ள பாட்டுப்பாடி மீட்டும் அவனி டத்திற் பெரும்பொருள் பெற்றுப் போனளென்பர், இவள் தமிழ்ப்புல மையிற் சிறந்தவ ளென்பதற்கு இப் பாட்டே போதுமான சாட்சியாகும்.
பூக்கோரை - ஒருபுல்.
பூசகன் - பூசைசெய்வோன்.
பூசக்கிரவாளம் - சக்கிரவாளகிரி.
பூசக்கிரன் - அரசன்.
பூசணம் - பிசான், பூஞ்சணவன், பூஞ்சு, பூடணம்.
பூசணி - ஒருகொடி.
பூசம் - ஒருநாள், நக்ஷத்திரம்.
பூசல் - கழுவல், பூசுதல், பெரிதொலித்தல், பொருதல், பொருந்தல்.
பூசறுத்தல் - சுத்திபண்ணல்.
பூசனம் - பூசை.
பூசனி - அடைக்கலான்குருவி, வணக்கம்.
பூசனை - ஆராதனை.
பூசாகாலம் - ஆராதனை வேளை.
பூசாக்கல் - சுக்கான் கல்.
பூசாசாரி - பூசாரி.
பூசாந்தப்படலம், பூசாந்தப்படல் } பூம்படல்.
பூசாந்திரம் - அருமைபண்ணல், ஒரு கடுக்கன்.
பூசாபந்தம் - ஓரடி ஒருவரியாக நான்கு வரியெழுதி அந்நான்குவரியுள் மேல் வரி யிரண்டுந் தம்மிற்றுமே கோமூத்திரியாகவும் கீழ்வரியிரண்டுந் தம் மிற்றுமே கோமூத்திரியாகவும் மேல்வரி கீழ்வரி மூன்றினும் வந்து கோமூத்திரியாகவும் கீழ்வரி மேல்வரி மூன்றினும் வந்து கோமூத்திரியாகவும் வருவது.
பூசாபலம், பூசாபலன் } பூசையின் பலம்.
பூசாமுகம் - பூசைமுகம்.
பூசாயத்தம் - பூசையாயத்தம்.
பூசாரி - கோவிற்பூசைபண்ணுவோன்.
பூசாலி - பூசாரி.
பூசாவந்தம் - பூசாந்திரம்.
பூசாவிதி - பூசைமுறை.
பூசிதபயங்காம் - சடங்காராதனை.
பூசிதம் - வணக்கம்.
பூசிதன் - கனவான், பூசிக்கப்படுவோன்.
பூசித்தல் - பூசனைசெய்தல்.
பூசிப்பு - வணக்கம்.
பூசிலன் - தேவன்.
பூசு - தூசி, பூசென்னேவல், போர்.
பூசுணி - பறங்கிக்கொடி.
பூசுதல் - அலங்கரித்தல், கழுவல், சந்தனமுதலியவற்றைப் பூசுதல், சாத்தி மினுக்கல், தடவல்.
பூசுதன் - செவ்வாய்.
பூசுதை - சீதை.
பூசுத்தி - துடைத்தல், மெழுகுதல், பஞ்சசுத்தியில் ஒன்று.
பூசுரர் - அந்தணர்.
பூசை - அன்னதானம், ஆராதனை, பூனை.
பூசைப்பரிகாரன் - குருவின் சீடன்.
பூசைப்பெட்டி - பூசைத்தளவாடப்பெட்டி.
பூசைமுகம் - பூசாசந்நிதானம்.
பூசைமேடை - பூசைக்குறடு.
பூச்சக்கரம் - சூரியனேடும்பாதை, பூமிச்சுற்று, பூமி
பூச்சக்கரன் - அரசன்.
பூச்சட்டை - குடலைக்கதிர்.
பூச்சாண்டி - வெருளி.
பூச்சாபை - இருள், பூமிநிழல்.
பூச்சாரம் - நிலத்தன்மை, பூவினிரசம், பூநீறு.
பூச்சி - செந்து, புள்ளி.
பூச்சிகாட்டுதல் - வெருள்காட்டுதல்.
பூச்சிக்கூடு - ஓராபரணம்.
பூச்சியம் - அருமை, ஆடம்பரம், கீர்த்தி, சங்கை, சுன், பூசிக்கப்படத்தக்கது, மேன்மை, வெறுமை, பூசித்தல்.
பூச்சியவார்த்தை - கனிசப்பேச்சு.
பூச்சியன் - கருப்பும்வெள்ளையுமானமர்டு, பூசிக்கப்படத்தக்கவன், மாமன்.
பூச்சிலை - கருந்தண்ணீர்க்கல்.
பூச்சியாண்டி - பூச்சாண்டி.
பூச்சிவிடுதல் - பூச்சிகாட்டுதல்.
பூச்சு - பிலுக்கு, பூசுதல், வெளிக்காட்சி.
பூச்செண்டு - புட்பச்செண்டு.
பூச்சேலை - பூச்சித்திரப்படாம்.
பூஞை - பூனை.
பூஞ்சக்கல் - சீதகக்கல்.
பூஞ்சனங்கட்டுதல் - சிக்குப்பூத்தல், பூஞ்சுகட்டல்.
பூஞ்சணம், பூஞ்சணவன் } பூஞ்சு.
பூஞ்சப்பாம் - பூவினாற்செய்யுஞ்சப்புரம்.

பூஞ்சலாடுதல்-கண்ணொளிமயங்குதல்.
பூஞ்சல் - கண்மயங்குதல், பூஞ்சு, பூஞ்சை.
பூஞ்சற்கண்-குழிந்தகண், பீளைக் [கண், மயங்கினகண்.
பூஞ்சாடுதல்-பூச்சியாடல்போற்காணல்.
பூஞ்சாட்டி - பூம்பயிர்ச்சாட்டி.
பூஞ்சான் - ஒருபுல்.
பூஞ்சி - பூஞ்சு, பூஞ்சை.
பூஞ்சிவிகை - புஷ்பப்பல்லாக்கு.
பூஞ்சிறகு - பட்சிக்குஞ்சின் றூவி.
பூஞ்சு - ஓட்டை, பூசு.
பூஞ்சுண்ணம் - பூந்தாது.
பூஞ்சை - மங்கல்.
பூஞ்சைநிலம் - பாழ்நிலம்.
பூஞ்சோலை - புட்பக்கா.
பூஷணம், பூடணம் } ஆபரணம்.
பூஷணை - உபசாரம்.
பூடன் - துவாதசாதித்தரிலொருவன்.
பூஷிதம் - அலங்கரிப்பு, ஆபரணம்.
பூடு - உள்ளிப்பூடு, புல்லு, பூண்டு.
பூட்கரம் - கோட்டம்.
பூட்கை - தோல், மேற்கோள், யாளி, யானை. [த்து.
பூட்சி - உடல், உரித்து, பூணல், பொரு
பூட்டகம் - இளப்பமானவேலை, வெளிவேஷம்.
பூட்டகம்பண்ணுதல் - வீம்படித்தல்.
பூட்டகவேலை-நொர்பன்வேலை, மேன்மினுக்கானவேலை, வெளிவேஷமான வேலை.
பூட்டகாரன் - வீம்பன்.
பூட்டங்கம் - தொந்தறை, வில்லங்கம்.
பூட்டங்கயிறு - பூட்டாங்கயிறு.
பூட்டம் - முடித்தல்.
பூட்டாங்கம் - பூட்டங்கம்.
பூட்டாங்கயிறு - நுகக்கயிறு.
பூட்டல் - அடைத்தல், அணிதல், கணக்குத் தைத்தல், கொழுவுதல், தொடுத்தல்.
பூட்டன் - பாட்டன், தகப்பன்.
பூட்டு-கதவுமுதலிய பூட்டும்பூட்டு, கொளுவி, துலங்கு, பூட்டென்னேவல், பொருத்து, விலங்கு, வின்னாண்.
பூட்டக்கயிறு - பூட்டங்கயிறு.
பூட்டுதல் - பூட்டல்.
பூட்டுவாய் - திறவுகோல் புகுந்துவாரம்.
பூட்டுவிற்பொருள்கோள் - செய்யுண்முதலினு மிறுதியினு நிற்குஞ் சொற்கள் தம்முட் பொருள்கொள்வது.
பூட்டை - இறைகூடை, ஏற்றமரம், செக்கு. [க்கு.
பூட்பராசன் - கருஞ்சீரகம்.
பூணல் - அணிதல்.
பூணாரம் - ஆபரணம்.
பூணாரவெலும்பு - காறையெலும்பு, மணிக்கட்டி னெலும்பு.
பூணி - இடபவிராசி, எருது.
பூணித்தல் - சுட்டுதல்.
பூணிப்பு - தீர்ப்பு.
பூணுதல் - அகப்படுதல், அணிதல், உட்படுதல், பொருந்துதல்.
பூணுநூல், பூணூல் } உபவீதம்.
பூணூற்கலியாணம்-உபநயனச்சடங்கு.
பூணை - முல்லைநிலம்.
பூண் - ஆபரணம், உலக்கை முதலியவற்றிலிடும்பூண், கிம்புரி, பூணென்னேவல்.
பூண்டி - ஓர் ஊர், கடற்குட்டிடர்.
பூண்டு - பூதர், பூடு.
பூதகணம் - பூதசேனை.
பூதகரப்பன்பட்டை-பீநாறிப்பட்டை.
பூதகலம் - பூதாக்கலம்.
பூதகாலம் - சென்றகாலம்.
பூதகி - கிருஷ்ணனை மூலைமூலமாய் விஷமூட்டிக் கொல்லும்படி கம்சனால் ஏவப்பட்ட ஒரு அரக்கி, பேய்.
பூதகிராமம் - பஞ்சபூத சம்பந்தம்.
பூதகிருதாயி - இந்திராணி.
பூதகிருது - இந்திரன்.
பூதகேசரி - வெட்பாலை.
பூதகேசி - காஞ்சுரை.
பூதக்கண்ணாடி - சிறிதைப் பெரிதாகக் காட்டுங் கண்ணாடி.
பூதக்கலம் - பூதாக்கலம்.
பூதக்கால் - பருத்தக்கால்.
பூதக்கியம் - ஆலம்விழுது.
பூதசஞ்சாரம் - உலகவாழ்வு.
பூதசஞ்சாரி - உலகவாழ்வை விடாதோன், சாட்டாக்கினி.
பூதசரீரம் - பூதவுடம்பு.
பூதசாரசரீரம் - தேவர்களினுண்ணிய தேகம்.
பூதசாரம் - பஞ்சபூதசத்து.

பூதசுத்தி - பஞ்சசுத்தியிலொன்று.
பூததயை - ஆன்மாக்கட்குச் செய்யுந்தயை.
பூததாத்திரி - பூமி.
பூததானியம் - எள்.
பூதத்துணர் - புன்முருக்கு.
பூதநம் - சந்திரகிரணம், சூரியகிரணம்.
பூதநாசநம் - உருத்திராக்கம், கடுகு, சேங்கொட்டை, மெழுகு.
பூதநாசினி - பெருங்காயம்.
பூதநாடி - பசாசுபிடித்தவர்க் கியங்கு நாடி, மரணநாடி.
பூதநாதன் - சிவபிரான்.
பூதநாயகி - உமையம்மை.
பூதநிருத்தம் - ஒருகாலைமுடக்கியாடல்.
பூதநை - கடுக்காய்மரம், குபேரன்பட்டணம், சடாமாஞ்சி, பூதனையென்னு மோராக்கி.
பூதபஞ்சகம் - பஞ்சபூதம்.
பூதபஞ்சாக்கரம் - ஒரு பஞ்சாக்கரம்.
பூதபதி - சிவபிரான்.
பூதபத்திரி - துளசி.
பூதபரிணாமதேகம் - தூலதேகம்.
பூதபரிணாமம் - பூதங்களின் றிரிபு.
பூதபலம் - பலா.
பூதபலி - உச்சிட்டங்கொடுத்தல்.
பூதபாவநன் - விட்டுணு
பூதமகிபாலன் - ஔவையாருக்கு விருந்திட்டு அவரால் பாடப்பட்டவனாகிய புள்ளலூர் வேளாளப்பிரபு.
பூதம் - ஆல், இறந்தகாலம், உண்மை, உயிர், ஐம்பூதம், கிடக்கும்பொருள், சங்கு, சடாமாஞ்சில், சுத்தம், தருப்பை, பரணி, பூதகணம், பேய்.
பூதயாகம் - பஞ்சயாகத்தொன்று, அது பலியீதல்.
பூதரநாதன் - மலையரையன்.
பூதரபுத்ரி - பார்ப்பதி.
பூதரம் - பூமிதாங்கல், பொன்மலை, மலை.
பூதராரி - கிருஷ்ணன்.
பூதரவில்லான் - சிவபிரான்.
பூதரன் - அரசன், விட்டுணு.
பூதராயன் - பிசாசம்.
பூதர் - சாரதர் இவர் பதினெண்கணத் தொருவர்.
பூதலமார்க்கம் - உலகநெறி.
பூதலம் - பூமி.
பூதலவாசனை - பிரபஞ்சப்பற்று.
பூதலவாசி - பூலோகவாசி.
பூதலிகை - மாப்பலகாரம்.
பூதவக்குருக்கண் - ஆலம்விழுது.
பூதவச்சம் - பீநாறி.
பூதவம் - ஆல், மருது.
பூதவாக்கு - கெட்டபேச்சு.
பூதவாசகம் - பெருந்தேக்கு.
பூதவாசம் - சரீரம், தான்றி.
பூதவாதம் - ஒருசமயம்.
பூதவார்த்தை - பூதவாக்கு.
பூதவிருக்கம் - பெருவாகை.
பூதவிருட்சம் - ஆலமரம்.
பூதவிருள் - உலகவிருள்.
பூதவேசி - பூதாவேசி.
பூதனன் - அரசன்.
பூதனாகனன் - கிருட்டினன்.
பூதனாசரீரம் - பூதபரிணாம தூலசரீரம்.
பூதனாசூதனன், பூதனாரி - கிருஷ்ணன்.
பூதனை - ஒருபெண்தேவதை, பூதகி ஸ்ரீகிருஷ்ணர்சிசுவாயிருந்தபோது கஞ்சனது ஏவலால்தன்முலைகளிலேநஞ்சூட்டிக் கொண்டுவந்து சிசுவுக்குப் பாலூட்டினபோது அந்தப் பாலின் வழியாகவே அவளுயிரையும் கிருஷ்ணர் வாங்கிக்கொள்ள இறந்துபோன பூதகியென்னு மோராக்கி.
பூதன் - கடுக்காய், கிருட்டினபக்கத்து பதினான்காந்திதி, மகன், வசுதேவன் பத்திரன்.
பூதாக்கலம் - மாப்பிள்ளைக்கு மணவாட்டி சோறிடுங்கலம்.
பூதாக்கலம்பணிதல் - மணவாளப் பிள்ளைகள் முதன்முறை ஒரு பாத்திரத்திற் புசித்தல்.
பூதாங்குசம் - பேய்மருட்டி.
பூதாதியாங்காரம் - பூதோற்பத்தியாங்காரம்.
பூதாத்திரி - கீழ்க்காய்நெல்லி.
பூதாத்துமன் - சந்நியாசி.
பூதாத்துமா - உடல், சிவபிரான், துணைக்காரணம், பிரமன்.
பூதாரம் - பன்றி.
பூதாரன் - அரசன்.
பூதாரி - பெருங்காயம்.
பூதாவாசன் - விட்டுணு.
பூதாவேசி - வெண்ணொச்சி.

பூதி-உடம்பு,ஊன், கொடுமை, சாம்பர், சித்தி,சுத்தம்,செல்வம், தசை,தத்துவம், துற்கந்தம்,நரகம், நாய், வேளை, பிறப்பு, புலால், புழுதி, பூமி, பொறிக்கறி, மகத்துவம், யானை,மைதுனம், விபூதி.
பூதிகந்தம் } கந்தகம், துற்கந்தம்.
பூதிகந்திகம் }
பூதிகம் - அகில், ஆயில்மரம், ஒருவாசனைப்புல், சாதிக்காய், நிலவேம்பு.
பூதிகர்ப்பன் - பவபூதியென்னும் வடமொழிப்புலவன்.
பூதிகாஷ்டம் - செம்புளிச்சை.
பூதிகாமன் - மந்திரி.
பூதிசாரிசை - நாவி.
பூதிமாமிசம் - துன்மாமிசம்.
பூதிமாருதம் - வில்வமரம்.
பூதியம் - உடல், பிருதிவி முதலிய பூதம், பூமி.
பூதிவாகம் - வில்வமரம்.
பூதேசன் - சிவபிரான்.
பூதேவர் - பார்ப்பார்.
பூதை - அம்பு.
பூத்காரி - மரவயிரம்.
பூத்தட்டுதல் - மெழுகைத் தகடாக்கல்.
பூத்தல் - உண்டாதல், பயத்தல், மலர்தல், மாதவிருதுவாதல்.
பூத்தானம் - அருமைபண்ணல்.
பூஸ்திதி - நிலசம்பத்து.
பூத்திரணை - சணம்பு.
பூத்திரம் - மலை.
பூத்திரி - ஒருவகைவிரிசு.
பூத்துப்பூத்தெனல்- இளைப்புக்குறிப்பு. பூர்ப்பூரெனல்.
பூத்தொடுத்தல் - மாலைகட்டல்.
பூநதி - புன்குமரன்,பொன்னுங்காய்மரம்
பூநாகம் - நாங்கூழ், பூநீறு.
பூநாதம் - வெடியுப்பு.
பூநிம்பம் - நிலவேம்பு.
பூநிறம் - மாந்தளிர்க்கல்.
பூநீபம் - நிலக்கடம்பு.
பூநீர் - பனிநீர்.
பூநீலம் - சுத்தநீலம்.
பூநீறு - ஒருமருந்து.
பூநொய் - சிறுநொய்.
பூந்தட்டம் } பூவைச்குந்தட்டம்.
பூந்தட்டு }
பூந்தாது - கோங்கு, பூவிற்றுகள்.
பூந்தார் - மலர்மாலை.
பூந்தி - பூவந்தி.
பூந்துகள் - பூந்தாது.
பூந்துணர்-புன்முருங்கை, பூங்கொத்து.
பூந்துளிர் - மெல்லியதுளிர்.
பூந்தூள் - பூந்துகள்.
பூந்தேர் - புட்பத்தினாலாயதேர்.
பூந்தேன் - பூவிற்றேன்.
பூந்தை - ஓரூர், பூதன்தந்தை.
பூந்தோடு - பூவிதழ்.
பூந்தோட்டம் - நந்தனவனம்.
பூபசாலை - பணிகாரக்கடை.
பூபதம் - மரம்.
பூபதி-அரசன், ஒருகுளிகை,மல்லிகை.
பூபம் - பட்டாபிஷேகம், பணிகாரம்.
பூபரிதி - சூரியனோடும்பரி.
பூபன் - அரசன்,பூசாசாரி,பூரட்சகன்.
பூபாலர் - பூவைசியர்.
பூபாலன் - அரசன், வேளாளன்.
பூபாளம் - ஓரிராகம்.
பூபிரதிதம்பம் - மலைநடு.
பூபுத்திரி - சீதை.
பூப்பகம் - பெண்குறி.
பூப்பதாரி - தூரஸ்திரீ.
பூப்பரிதி - அயனவரி.
பூப்பருத்தி - பூவரசு.
பூப்பலகை - ஒருமரம்.
பூப்பிரதக்ஷணம்- பூமியைவலம்வருதல்.
பூப்பு - பூத்தல், மகளிர்சூதகம்.
பூமகணாயகன் - திருமால்.
பூமகண்மைந்தர் - வேளாளர்.
பூமகண்மார்பன் - திருமால்.
பூமகள் - இலக்குமி, பூமிதேவி.
பூமகன் - செவ்வாய்.
பூமடல் - பிள்ளைமடல்.
பூமடி - மெல்லியமடி.
பூமடை - பூவினாலிடுமடை.
பூமணம் - புஷ்பபரிமளம்
பூமண்டலம் - பாதவுறுப்பிலொன்று, பூச்சக்கிரம்.
பூமத்தை - ஒருசெடி
பூமஸ்நானம் - ஏழ்வகை நானத்தொன்று, அது வில்வம்முதலியதிவ்வியமரத்தருகின் மிருத்திகையாற் பூசுதல்.
பூமலேக்கினம் - சங்கங்குப்பி, ஞாழல்.
பூமன் - செவ்வாய், பிரமன்.

பூமாலை - புட்பமாலை, இது இராசசின்னத்தொன்று.
பூமாதளை - காய்க்காமல் பூமாத்திரம் விடும் மாதளை.
பூமான் - புமான், புருஷன்.
பூமி - இடம், குவியல், கோணங்களின் கீழ்வரி, தேசம், நிலம், பூநீறு, பூவுலகு, மூவுலகத்தொன்று.
பூமிகதம்பம் - நிலக்கடம்பு.
பூமிகாமி - பூகாமி.
பூமிகுருவகம - வெள்ளெருக்கு.
பூமிகொழுநன் - திருமால்.
பூமிக்கூர்மை - வெடியுப்பு.
பூமிசம் - நரகம், பூமியிலுண்டானது.
பூமிசம்பவை - சீதை.
பூமிசன் - செவ்வாய், நரகாசுரன்.
பூமிசாரம் - ஒருநூல், பூசாரம்.
பூமிசை - இலக்குமி, சீதை.
பூமிசைநடந்தோன் - அருகன், புத்தன்.
பூமிச்செருக்கன் - உவர்மண்.
பூமிதேவன் - பார்ப்பான்.
பூமிதேவி - பூமிலட்சுமி.
பூமித்திரம் - மலை.
பூமித்தைலம் - மண்டயிலம்.
பூமிநடுக்கம் - பூமியதிர்ச்சி.
பூமிநாதம் - இந்துப்பு, காந்தம், பூநீறு.
பூமிநாயகன் - காஸ்மீரப்படிகம், நிலவேம்பு.
பூமிபரிட்சை - கலைஞான மறுபத்துநான்கினொன்று.
பூமிபாரம் - சிருட்டிப்பொருள்களாற் பூமிக்குண்டானபாரம்.
பூமிபாலகன் - அரசன்.
பூமிபிசாசம் - பனை.
பூமிப்பிரவேசம் - விளைநிலத்திற் செய்கைபண்ண நாளுக்குப்போதல்
பூமியதிர்தல் - பூமிநடுங்கல்.
பூமியதிர்த்தல் - பூமிநடுக்கம்.
பூமிலட்சுமி - இலக்குமி, பூமிதேவி.
பூமிலாபம் - மரணம்.
பூமிலேபனம் - மெழுகுதல்.
பூமிவெளுப்புமண் - சுதைமண்.
பூமிவேர் - பூநாகம்.
பூமின் - இலட்சுமி, பூமிதேவி.
பூம்பட்டாடை, பூம்பட்டு } ஒருபட்டுப்புடைவை.
பூம்பந்து - பூவினாலாயபந்து.
பூம்பரியல் - குறைவு, தட்டுக்கேடு.
பூம்பனை - ஆண்பனை.
பூம்பாளை - பூப்பாளை.
பூம்பிஞ்சு - இளம்பிஞ்சு.
பூம்பிடா - பூக்குடலை.
பூம்பிரயோசனம் - புன்பயிர்ப்பிரயோசனம்.
பூம்புகை - நறும்புகை.
பூம்பொழில் - புஷ்பச்சோலை.
பூயம் - சீழ், முறிந்தாக்தம்.
பூயாரி - வேம்பு.
பூயாசலம் - கட்பீளை.
பூரகம் - பிதுர்பிண்டம், பூரித்தல், பெருக்குந்தொகை, மத்தங்காய்ப்புல், மூச்சுள்ளே வாங்கல்.
பூரங்களித்தல் - தீபாராதனை.
பூரட்சகன் - அரசன்.
பூரட்டாதி - ஒருநக்ஷத்திரம்.
பூரணகருப்பம் - நிறைகருப்பம்.
பூரணகருப்பிணி - நிறைகருப்பிணி.
பூரணகலசம், பூரணகும்பம் } சலம் பூரித்தகலசம், நிறைகுடம்.
பூரணசந்திரன் - நிறைகாலசந்திரன்.
பூரணசற்குணம் - நிறைந்தநற்குணம்.
பூரணசற்குணன் - நிறைந்தநற்குணன்.
பூரணசாத்திரம், பூரணசூத்திரம் } அகத்தியர்செய்த ஒரு நூல்.
பூரணதிசை - சரஞ்செல்லுந்திசை.
பூரணநூல் - பூரணசாஸ்திரம்.
பூரணபலன் - நிறைபலன்.
பூரணபாத்திரம் - இருநூற்றைம்பத்தாறு சிறங்கையரிசிகொண்ட பாத்திரம், பூரணகும்பம்.
பூரணபிண்டம் - நிறைகரு.
பூரணமனம் - நிறையனம்.
பூரணமாசம் - பிரசூதிமாதம்.
பூரணமி - பூரணை.
பூரணமை - பௌர்ணமி.
பூரணம் - உடைநூல், எல்லாம், கடல், நிறைவு, பிதுர்பிண்டம், பெருக்கம், பொலிவு, மழை, முழுமை.
பூரணலேகியம் - ஒருலேகியம்.
பூரணவடிவு - கட்டழகு, மகாலங்காரம்.
பூரணவர்ணன் - ஆயிரத்துநானூறுவருஷங்களுக்கு முன்னே மகததேசத்தையாண்ட ஓரசன், இவன் பௌத்தசமயி, கயாவிலே யிருந்த போதி

விருக்ஷத்தை சாங்கன் அழித்தானெ ன்பதைக் கேள்விப்பட்டு ஆற்றுதற் கரிய துக்கமுடையவனாய் நிலத்தில் விழுந்து புரண்டழுது தெளிவடைந் து ஆயிரம் பாற்பசுக்களைக் கொண்டு சென்று, அவற்றின்பால் முழுதும் கறந்து அடிமரத்துக்கு அபிஷேகஞ் செய்விக்க, அந்த அடிமரம் ஓரிரவுக் குள்ளே எழுமுழத்தளவாய் வளர்ந் தோங்க அது கண்டு பேரானந்த முடையவனாய் அதனை மீளவும் வே றொருவர் வெட்டாதபடி அதனைச் சுற்றிப் பதினாறுமுழ வுயரமுடைய ஒருமதி லெழுப்பினவன் இவனே.
பூரணவயசு - நிறைவயசு.
பூரணவித்தை - முழுக்கல்வி.
பூரணவிரதம் - உத்தமவிரதம்.
பூரணன் - அரசன், அருகன், கடவுள், மூர்த்தபாஷாணம், விஷ்ணு.
பூரணாகுதி - ஓமச்சடங்கை நிறைவேற் றுங் கடைசியாகுதி.
பூரணாதிலேகியம் - பூரணைலேகியம்.
பூரணாயு - பூரணவயசு.
பூரணானகம் - சந்திரகிரணம், மேளம்.
பூரணி - இலவமரம், காடு, நிறைவுள்ள வன், பூமி
பூரணேந்து - பூரணசந்திரன்.
பூரணை - ஐயன றேவிகளிலொருத்தி, சந்திரனைந்தாம் பத்தாந்திதி, பௌ ரணை.
பூரணைகேள்வன் - ஐயன்.
பூரபதி - பச்சைக் கருப்பூரம்.
பூரம் - இரசகருப்பூரம், ஒருநாள், ஒரும ருந்து, கருப்பூரம், சூழ்தல், தேள், நீர்க்குண்டு, பூரணம், பூரான்.
பூரவாகனி - சரச்சுவதி.
பூராசி - பூத்திரள்.
பூராடமாசு - பால்வீதிமண்டலம்.
பூராடம் - ஒருநக்ஷத்திரம்.
பூராயக்கதை - பழங்கதை.
பூராயம்-ஆராய்வு, பூருவம், விசித்திரம், விருப்பம்.
பூரான் - ஒருவிஷசெந்து, பனங்கொட் டை முதலியவற்றினுட்பருப்பு.
பூரான்காவிக்கல் - மஞ்சட்காவி.
பூரி-ஓரிசை, ஒருபணிகாரம், ஒருவீரன், கலப்புநெல், குற்றம், சிராத்தக்கிரி யையினொன்று, சிவபிரான், திரு மால், நாணி, நூறுகோடி, கோடி கோடாகோடி, பகல், பிரமன், புல், புரியென்னேவல், பொன், மிகுதி, சோமதத்தன் மூத்தமகன்.
பூரிகம் - அப்பவருக்கம்.
பூரிகலியாணி - ஓரிராகம்.
பூரிகா - அகில்.
பூரிகை-அப்பவருக்கம், ஊதிடும்பூரிகை.
பூரிகொடுத்தல் - சிராத்தச் சடங்கில் ஒன்று.
பூரிக்கோ-குறுந்தொகைதொகுத்தவன்
பூரிசிரவன் - சோமதத்தன் இரண்டாம் புத்திரன்.
பூரிநேசன்-சரியாதி புத்திருளொருவ [ன்.
பூரிதம் - பூரணம்.
பூரித்தல் - உவத்தல், நிரப்புதல், நிறைத் தல், பருத்தல், வாயுவை நிறைத் தல்.
பூரிபோசனம் - சிராத்தத்தின்பிற்கொ டுக்கும் போசனப்பொருள்.
பூரிப்பு-பூரணம், மிகக்களிப்பு, மிகுதி.
பூரிமாயு - ஆணரி, பழமை.
பூரியம் - அரசர்வீதி, அரசிருக்கை, ஊர், மருதநிலத்தூர், வேந்தர்வீதி.
பூரியர் } கீழ்மக்கள்.
பூரியோர் }
பூரு - குருகுலத்தரசரிலொருவன், புரு வம், யயாதிமகன். யயாதிக்குச் சன் மிஷ்டையிடத்துப்பிறந்த புத்திரன், இவன் தந்தைக்குத் தனதுஇளமைப் பருவத்தைக் கொடுத்து அவனது முதுமைப் பருவத்தைத் தான் பெற்றுத் தந்தையை மகிழ்வித்த வன், இவன்மகன் ஜநமேஜயன், இ வன் பாண்டவர்க்கு முன்னிருந்தவ னாதலால் பாண்டவர்க்குப் பின்னி ருந்த பரிக்ஷித்து மகனாகிய ஜனமே ஜயன் வேறு.
பூருகம் - மரம்.
பூருண்டி - மல்லிகை, வேலிப்பருத்தி.
பூருது - பூநீறு.
பூருபூரெனல் - பூர்பூரெனல்.
பூருவகங்கை - நருமதை.
பூருவகதை - பழங்கதை.
பூருவகருமம் } ஊழ்வினை.
பூருவகன்மம் }

பூருவகாட்டை - கிழக்கு.
பூருவகாலம் - முற்காலம்.
பூருவகௌளம் - ஓரிராகம்.
பூருவக்கியானம் - பிரார்த்தஞானம்.
பூருவசந்தியை - விடியல்.
பூருவசனனம் - முற்பிறப்பு.
பூருவசனன் - தலைமகன்,முன்னோன்.
பூருவசன்-ஜேஷ்டபுத்திரன் தமையன்
பூருவசன்மம் - முந்தியசனனம்.
பூருவசாகசம் - கடுந்தண்டம்.
பூருவசைலம் - உதயமலை.
பூருவஞானம்-முன்னனுபவத்தை யறியு மறிவு.
பூருவதிக்கு } கிழக்கு.
பூருவதிசை }
பூருவதுவந்தம் - ஊழ்வினைப்பயன்.
பூருவதேகம் - முந்தியசரீரம்.
பூருவதேசம் - கிழக்கு.
பூருவதொடர்ச்சி - பழவினைத்தொடர்.
பூருவதொந்தம் - முந்தியதுவந்தம்.
பூருவபக்கம் } வளர்பிறைப்பக்கம்.
பூருவபட்சம் }
பூருவபதம் - நிலைமொழி.
பூருவபருப்பதம் - உதயமலை.
பூருவபற்குனி - பூரம்.
பூருவபற்குனிபன - வியாழன்.
பூருவபாகம் - முற்பங்கு.
பூருவபாஷை - ஆதிபாஷை.
பூருவபுண்ணியம் - முற்றருமம்.
பூருவப்படுதல் - தொன்று தொட்டுரித்தா யிருத்தல்.
பூருவமீமாஞ்சை-மீமாஞ்சையின் முற்பகுதி.
பூருவமுகம் - கிழக்குமுகம்.
பூருவம் - ஆதி, எல்லாம், கிழக்கு, சந்திரன்முன்பக்கம், பழஞ்சரித்திரம்,பழமை, முதன்மை, முயற்சி, முன்பு.
பூருவவாசனை - முற்பிறப்பின் பற்று.
பூருவாஷாடம் - பூராடம்.
பூருவாண்ணம் } முன்னேரம்.
பூருவாண்ணியம் }
பூருவாபாரம் - அத்தாட்சி.
பூருவாப்பியாசம் - பழயவழக்கம்.
பூருவீகம் - ஆதி, பழமை.
பூருவோத்திரம் - பூருவோத்திரம்,வடகீழ்த்திசை.
பூருவோத்தா விருத்தம் - முன்னுக்கும் பின்னுக்கும் விரோதம்.
பூருவோத்திரசங்கதி - பூருவத்தின்வரலாறு.
பூருவோத்திரம் - பூருவீகம்.
பூரை - குறைவின்மை, பூரணம்.
பூரையிடுதல் - அலுத்துப்போதல்.
பூர்ணகம் - பொற்சிகைப்பறவை.
பூர்ணம் - பூசணம், பூரணம்.
பூர்ணுவதாரம் - இராமாவதாரம்,நரசிங்காவதாரம்.
பூர்ணிமை - தாதாவுக்கு அநுமதியிடத்துப் பிறந்த புத்திரி.
பூர்தல் - நிறைதல்.
பூர்த்தம் - தருமம்.
பூர்த்தி - ஐக்கம், நிறைவு.
பூர்ப்பியம் - நூதனம், பழங்கதை.
பூர்ப்பூரெனல் - பொலிந்து பருத்தல்.
பூர்வசித்தி - ஆக்கீத்ரன் மனைவியாகிய ஓரப்ஸரஸை.
பூர்வம் - பூருவம், கிழக்கு.
பூர்வராத்ரம் - முன்னிரவு.
பூர்வாசாரியர் - முற்காலத்தாசாரியர்.
பூர்வாத்ரி - உதயகிரி.
பூர்வார்த்தம் - முற்பாதி.
பூர்வான்னம் - பகலின் முற்பாதி.
பூர்வீகம் - பூருவீகம்.
பூர்வீகன் - பழையோன்.
பூலதை - நாங்கூழ்,படர்கொடி,பூநாகம்.
பூலத்தி - மருதமரம்.
பூலம் - புற்கட்டு.
பூலா - பூல்.
பூலாசம் - புல்லாந்தி.
பூலித்தகடு-மணியழுத்தவைக்குந்தகடு.
பூலோகம் - பூமி இது மேலேழுலகில் ஒன்று.
பூல் - ஒருசெடி, புல்லாந்தி, பூலா.
பூவசியர் - பூவைசியர்.
பூவணநாதர் - திருப்பூவணத்திலேகோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பூவணம் - மதுரைக்கருகில் ஒருசிவஸ்தலம்.
பூவணை - பூமெத்தை.
பூவந்தம் } நிலாவிரை.
பூவந்தவம் }
பூவந்தி - ஒருமருந்து, நெய்க்கொட்டான்,பன்குமரம்,பொன்னுங்காய்மரம்.
பூவமளி - புட்பசயனம் இது அட்டபோகத் தொன்று.
பூவம்பன் - மன்மதன்.

பூவரசு - ஒருமரம்.
பூவலயம் - பூகோளம்.
பூவல் - சிவப்பு, துரவு, செம்மண்.
பூவல்மண் - செவ்வல்.
பூவழலை - பூநீறு.
பூவள்ளம் - தங்கக்கிண்ணம், மண்கிண்ணம்.
பூவன்வாழை - ஒருவாழை.
பூவாணம் - ஒருவிதவாணம்.
பூவாமரம் - கோளி.
பூவாமற்காய்க்குமரம் - ஆல்முதலியன.
பூவாளி - ஒருபாணம், மதன்பாணம், மன்மதன்.
பூவிதழ் - பூந்தோடு.
பூவிந்து - அப்பிரகம், வீரம்.
பூவிந்துநாதம் - அப்பிரகம்.
பூவிலைமடந்தையர் - அற்றைப் பரிசங்கொள்வோர்.
பூவில் - மன்மதன்வில்.
பூவிளம் - கற்பாஷாணம்.
பூவுலகு - பூமி.
பூவெண்ணெய் - ஒரு நற்றயிலம்.
பூவை - காயாமரம், கிளி, குயில், நாகணவாய்ப்புள், பெண்.
பூவைசியர் - களமர், உழவர், வேளாளர் இவர் மூவைசியரிலொருவர்.
பூவைவண்ணன் - காயாம்புமேனியன், விஷ்ணு.
பூவொல்லி-தேங்காயிலோர்வகை யொல்லி.
பூவோடு - தொட்டிபாஷாணம்.
பூழான் - கவுதாரி, காணுங்கோழி.
பூழி - குழைசேறு, கொடுந்தமிழ்நாட்டினொன்று, சேற்றிற்குமிழி, பராகம், புழுதி.
பூழியபலம் - பூசுணி.
பூழியன் - சேரன், பாண்டியன்.
பூழில் - அகில், பூமி.
பூழிவேந்தன் - பாண்டியன்.
பூழை - கோபுரவாயிற் கதவிலிட்டுப் புகும் வழி, துவாரம், புதவு.
பூழ் - காடை, காணுங்கோழி.
பூழ்க்கரம் - கோட்டம்.
பூழ்க்கை - பூழைக்கை, யாளியானை, யானை.
பூழ்தி - தூசி, பராகம், புலால், புழுதி.
பூளம் - பூவரசு.
பூளை - இலவம்பஞ்சு, ஒருசெடி.
பூனை - பூஞை.
பூனைக்கச்சி - ஒருசெடி.
பூனைக்கண் - ஒருமணி, புருடராகம்.
பூனைக்கழற்சி - ஒருசெடி.
பூனைக்காஞ்சொறி - ஒருகாஞ்சொறி.
பூனைக்காய்வேளை - ஒருசெடி.
பூனைக்காலி - ஒருசெடி.
பூனைக்கீரை - ஒருகீரை.
பூனைத்திசை - தென்கிழக்கு.
பூனைப்பகைவன்முள் - எலிமுள்ளு.
பூனைப்பிடுக்கன் } ஒருசெடி.
பூனைமடி } ஒருசெடி.
பூனைமயிர் - பூனைக்கழற்சி, வெண்மயிர்.
பூனைவணங்கி - குப்பைமேனி.
பூஷன்-துவாதசாதித்தருளொருவன், தக்ஷயாகத்தில் வீரபத்திரரால் பல்லுதிர்க்கப்பட்டவன்.



## பெ

பெங்கு - கள்ளிஞேர்பேதம்.
பெடம் - மிகுதி.
பெடை - பறவைப்பெண்.
பெட்டகத்துத்தி - ஒருதுத்தி.
பெட்டகம் - பெட்டி, ஒருசிறுநூல், இதனால் உறையூரிலொருவன் தன் பெண்சாதியை அருந்ததிக்கு மேலான கற்புடையவளென நம்பியிருந்த அவனுக்கு பெண்சாதியின் சோரத்துவத்தை ஒளவையாரால் விளக்கிக் காட்டப்பட்டது.
பெட்டல்-ஆசைப்பெருக்கம், விரும்பல்.
பெட்டார் - சிநேகிதர்.
பெட்டி - கூடை, பேழை, மூளிவாய்.
பெட்டிலிக்குழல் - நச்சுக்குழல்.
பெட்டிக்கோரை - ஒருபுல்.
பெட்டு - பொய்.
பெட்டை-ஒட்டகம், கழுதை, குதிரை, சிங்கம், நாய், மரை யிவற்றின் பெண், பறவைப்பெண், பெண்பொது.
பெட்டைக்கடல் - சிறுகடல்.
பெட்டைக்கட்டு - வளமற்றகட்டு.
பெட்டைக்கண் - ஊனக்கண், சாய்ந்தகண், சிறுகண்.

பெட்டைக்கண்ணன் - சிறுகண்ணுள்ளவன்.
பெட்டைமுடிச்சு - பெட்டைக்கட்டு.
பெட்டையன்-அலிஆண்மையற்றவன்.
பெட்பு - அன்பு, ஆசை, பெருமை.
பெண்-கற்றாழை, ஸ்த்ரீ,மனைவி,விலங்கின் பெண்பொது.
பெண்கரு - சுரோணிதம்.
பெண்கலை - வண்ணத்தின் சிற்றின்பப்பகுதி.
பெண்குமஞ்சான் - சாம்பிராணி.
பெண்குறி - யோனி.
பெண்கேட்டல் - பெண்ணை மணம்பேசுதல்.
பெண்கொடி - பெண்.
பெண்கொடுத்தல் - பெண்ணை விவாகஞ்செய்து கொடுத்தல்.
பெண்சாதி - மனைவி.
பெண்சோடினை - பெண்வேஷவணி.
பெண்டகர் - அலியர்.
பெண்டகை - பெண்டன்மை.
பெண்டர் - பெண்டகர்.
பெண்டாட்டி - பெண், மனையாட்டி.
பெண்டாரி - பிண்டாரி.
பெண்டிர், பெண்டில் - பெண்.
பெண்டீர் - பெண்கள், மனைவி.
பெண்டுகம் - களற்சி.
பெண்டு - பெண்மகள்.
பெண்ணரசி - இராசாத்தி, செல்வமுடையாள், விவேகமுள்ளவள்.
பெண்ணரசுநாடு - பெண்ணாள்கை செய்யுமிராச்சியம்.
பெண்ணலம் - பெண்ணிலுள்ள வின்பம்.
பெண்ணழைத்தல் - பெண்ணை விவாகஞ்செய்தல்.
பெண்ணன் - ஆண்மையற்றவன்.
பெண்ணாசை - ஸ்த்ரீவிருப்பம், இது மூவாசையினொன்று.
பெண்ணாள் - பெண் நட்சத்திரம்.
பெண்ணினல்லாள் - திருக்கழுக் குன்றத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பெண்ணீலி - ஒருபெண்தேவதை, துட்டை.
பெண்ணுறுப்பு - பெண்குறி, பெண்ணிலட்சணம்.
பெண்ணெடுத்தல் - பெண்கொள்ளுதல்.
பெண்ணெழுத்து - நெட்டெழுத்து.
பெண்ணை - அனுடநாள், ஓராறு, நீர்முள்ளி, பனைமரம், பெண்மரம்.
பெண்தண்டு - காதினுட்புறத்தண்டு.
பெண்பழி - பெண்துரோகம்.
பெண்பனை - காயும்பனை.
பெண்பாகன் - சிவபிரான்.
பெண்பால் - ஸ்த்ரீலிங்கம், இது ஐம்பாலினொன்று.
பெண்பால்விகுதி - பெண்பகுதியை விளக்கிநிற்கும் விகுதி.
பெண்பாற்பிள்ளைக்கவி-ஆண்பாற் பிள்ளைக் கவியுறுப்புள் சிறுதேர் சிறுபறை சிற்றில் என்னு மூன்றொழித்து ஊசலம்மானை கழங்கெனுமூன்றுறுப்புங் கூட்டியுறுப்புக்குப் பப்பத்து விருத்தத்தான் முடிவது.
பெண்பிடித்தல் - கூத்திபிடித்தல்.
பெண்பிள்ளை - சிறுமி, பெண், மணவாட்டி.
பெண்பிறந்தவள் - பெண்ணாய்ப்பிறந்தவள்.
பெண்புத்தி - பேதைப்புத்தி.
பெண்பேசல் - பெண்ணை மணம்பேசுதல்.
பெண்பேதை - ஏழைப்பெண்.
பெண்போகம் - அறம் முப்பத்திரண்டினொன்று, அது மணமுடிப்பித்தல், ஸ்திரீபோகம், இது அட்டபோகத்தொன்று.
பெண்மகள் - ஸ்திரீ.
பெண்மதி - பெண்புத்தி.
பெண்மயக்கம், பெண்மயல் - பெண்போகம்.
பெண்மயிர் - அளகம்.
பெண்மரம் - புறவயிரமுள்ளமரம்.
பெண்மாயம் - பெண்மயக்கம்.
பெண்மூச்சு - பெண்மூர்க்கம்.
பெண்மை-பெண்டன்மை, மாட்சிமை.
பெண்மைச்சினைப்பெயர் - பெண்பான் முப்பகுதிக்கும் பொதுவான வுறுப்பானயபெயர் (உ-ம்) முடத்தி.
பெண்மைச்சினைமுதற்பெயர் - பெண்பான் முப்பகுதிக்கும் பொதுவான வுறுப்புமுதற்பொருட்பெயர் (உ-ம்) முடக்கொற்றி.
பெண்மைமுதற்பெயர் - பெண்பான் முப்பகுதிக்கும் பொதுவான முதற்பொருட்பெயர் (உ-ம்) கொற்றி.

பெண்மைமுறைப்பெயர் - முறையைக் காட்டிவரும் பெண்பெயர்; (உ-ம்) தாய்.
பெண்வகை - பெண்வகுப்புநாலு, அது பதுமினி சித்தினி சங்கினி அத்தினி.
பெண்வழி } பெண்ணைப் பற்றிய வினம்.
பெண்வழிசுற்றம் }
பெண்வழிச்சேறல்-பெண்வழியே செல்லுதல், பெண்பேச்சைக்கேட்டல்.
பெதரிகாளம் - காஞ்சிரை.
பெதும்பை - பதினொரு வயதிற்பெண், பெண் பொது.
பெத்தகாலம் - இலயகாலம்.
பெருத்ததிசை - ஆன்மாபாசத்திற்குட் பட்டிருக்குங் காலம்.
பெத்தமுத்தி - இலயமுத்தி.
பெத்தம் - ஒடுக்கம், கட்டு, சேர்மானம், நிலைபரம்.
பெத்தரிக்கம் - அகந்தை, கலம்பகம்.
பெத்தர் - அடிமைகள், பாசபந்தர்.
பெத்தல் - பெருங்குரும்பை.
பெத்தி - கரிமுள்ளி.
பெந்தம் - பந்தம்.
பெந்தர் - பந்தர்.
பெந்தனம் - பந்தனம்.
பெந்தித்தல் - பந்தித்தல்.
பெந்திப்பு - கட்டு.
பெந்து - சுற்றம்.
பெந்தை - அவலட்சணமாய்ப் பருத்தது, கலப்பையினோருறுப்பு.
பெந்தைக்கண் - பெரியகண்.
பெந்தைக்கயிறு - படைவாளை, மேழியோடிணைக்குங்கயிறு, வடக்கயிறு.
பெம்மான் - உயர்ந்தவன், பெருமான்.
பெயரடி - பெயர்ச்சி, பேர்மூலம்.
பெயரன் - பாட்டன், பேரன்.
பெயராளி - கீர்த்திமான்.
பெயரிடுதல் - நாமந்தரித்தல்.
பெயரிடைநிலை - பெயர்ப்பகுதிவிகுதிகளிரண்டிற்கு நடுவினிற்குமெழுத்து; (உ-ம்) வலைஞன், வலை-ஞ்-அன்.
பெயரியற்சொல் - செந்தமிழ்நிலத்து மொழிகளாய் உலகவழக்கினுஞ் செய்யுள் வழக்கினுநின்று தம்பொருளை யியல்பாக விளக்கும் பெயர்ச்சொல்.
பெயரின்னிசை - ஒருபிரபந்தம், அது பாட்டுடைத் தலைவன் பெயரினைச் சபார வின்னிசை வெண்பாவாற் பாடுவது.
பெயருதல் - நிலைவிலகுதல்.
பெயரெச்சம் -பெயரையவாவிநிற்குஞ் சொல் அது அகரமும் உம்முமாகிய இரு விகுதிகளையும்பெற்று கருத்தா காரணம் இடம் காலம் செயல் செயப்படுபொருள் எனு மாறனுள் ஒன்றைக்கொண்டு முடியும்.
பெயரெடுத்தல் - கீர்த்தியடைதல்.
பெயரெடுப்பு - நாமப்பிரபலியம்.
பெயர் - கீர்த்தி, நாமம், பெயரென்னேவல், பெயர்ச்சொல்.
பெயர்ச்சி - திரும்புதல், புரட்சி.
பெயர்ச்சூத்திரம் - இடுகுறி காரணக்குறியாலிதற்கிது பெயரென்றிடுதல்.
பெயர்ச்சொல் - இடுகுறியாயுங் காரணக்குறியாயும் வேற்றுமை யுருபுகள் சார்தற்கிடனாய் ஒன்றன் பெயரை விளக்கி நிற்குஞ்சொல்.
பெயர்தல் - ஆடல், உரிஞ்சல், எடுபடல், திரும்பல், போதல், வேறுபடல்.
பெயர்த்தல் - கிளப்புதல், திருப்புதல், வேறுபடுத்தல்.
பெயர்த்தி - பாட்டி, பெயர்ச்சி, பேத்தி.
பெயர்த்து - பெயரையுடையது.
பெயர்நேரிசை-ஒருபிரபந்தம் அது பாட்டுடைத்தலைவன் பெயரினைச்சார நேரிசைவெண்பாவாற் கூறுவது.
பெயர்போதல் - கீர்த்தி பிரபலமாதல்.
பெயர்ப்பகுதி - பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எனு மறுவகை அடிகள்.
பெயர்பிரஸ்தாபம் - கீர்த்தி.
பெயர்ப்பு - பெயர்ச்சி.
பெயர்வழி - தலைமுறை, பெயர்முறை.
பெயர்விகுதி - பெயர்ச்சொல்லின்விகுதி.
பெயர்விளங்கல்-கீர்த்தியுண்டாதல்.
பெயர்வு - பெயர்தல்.
பெயர்வேற்றுமை - எழுவாய்வேற்றுமை.
பெயலை - மழை.
பெயல் - மழை, மழைத்துளி.
பெயர்தானம் - வேங்கை.
பெய்கலம் - கொள்கலம்.
பெய்தல் - செறித்தல், சொரிதல், விடுதல்.
பெய்துரை - பாயிரம்.
பெய்வளை - பெண்.

பெய்வு - பெய்தல்.
பெரிசு } கனங்கொண்டது, பருத்தது.
பெரிது }
பெரியகை - கொடைக்கரம், தாராளமானகை.
பெரியகுணம் - பெருந்தன்மை.
பெரியதகப்பன்-தந்தையின் றமையன்.
பெரியதம்பிரான்-ஒருதேவதை. [மை.
பெரியதனம் - பெருந்தன்மை, மேட்டி
பெரியதாய் - தாய்க்குமுன்பிறந்தாள்.
பெரியது - பெரிது.
பெரியநங்கை - பிரியாணங்கை.
பெரியநடை - நல்லொழுக்கும்.
பெரியநாயகி - பார்வதி. திரு அரசிலியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர். திருப்பனையூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர் திருமுதுகுன்றத்திலேகோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர். திருப்பனந்தாளிலேகோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர். திருப்பழனத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
பெரியநாயகியம்மை - திருவலஞ்சுழியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர். திருக்குடவாயிலிலேகோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர். திருச்சிவபுரத்திலேகோயில்கொண்டிருக்கும்தேவியார்பெயர். திருத்தென்கூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர். திருப்பனையூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர். திருஉசாத்தானத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பெரியமாண்டேசுவரர் - திருநல்லூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
பெரியபிராட்டி - இலட்சுமி.
பெரியபுராணம்-திருத்தொண்டர் புராணம்.
பெரியபுலு - நூறு.
பெரியப்பன் - பெரியதகப்பன்.
பெரியமனம் - உதாரமனம்.
பெரியம்மாண்பச்சரிசி - ஒருபூடு.
பெரியம்மை - வசூரிகை.
பெரியர் - பெரியோர்.
பெரியவர் - மேன்மையுடையோர்.
பெரியவன் - தத்துவசாலி, மேம்பாடுடையோன், வளர்ந்தவன்.
பெரியாணங்கை - ஒருபூடு.
பெரியாத்தாள் } பெரியதாய்.
பெரியாயி }
பெரியாம்பிகை - திருநாலூர் மயானத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பெரியார் } பெரியவர்கள்.
பெரியோர் }
பெரியாழ்வார் - இவர் ஸ்ரீ வில்லிபுத்தூரிலே புரச்சூடனென்னும் வேதியனுக்குப் புதல்வரா யவதரித்து வேதங்களில் வல்லவராகிய ஒரு பிராமணர், இவர் திருமகளாற் கோதைநாய்ச்சியார், இவர் அயோநிஜராய்த் திருத்துழாய் வனத்திற் கண்டெடுக்கப்பட்டவர், திருப்பாவை, நாய்ச்சியார் திருமொழி முதலியவை பாடினவர் இவரே, இவரைஆண்டாளென்றும் சூடிக்கொடுத்த நாச்சியார் என்றும் கோதையென்னும்கூறுவர்.
பெருகல் - பெருகுதல்.
பெருகியல்-இராகத்தகுதியினொன்று.
பெருகியன்மருதம்-குரல்தார மாயத்தாரங்குரவாய விளரிப்பாலை.
பெருகு - தயிர், பெருகென்னேவல்.
பெருகுதல் - பாய்தல், மிகுதல், விருத்தித்தல்.
பெருக்கமரம் - பப்பரப்புளிமரம்.
பெருக்கம் - செல்வம், பெருகுதல், பெருக்கிக்கண்டபேறு, மிகுதி, விசாலம், விருத்தி.
பெருக்கம்பண்ணுதல் - பெருமைபண்ணுதல், போகுதல்.
பெருக்கல் - அதிகப்படுத்தல், எண்கூட்டித்தாக்கல், சீய்த்தல், நிறைத்தல், பருத்தல், மிகுவித்தல், விசாலித்தல்.
பெருக்கன் - பருக்கன்.
பெருக்காச்சவட்டு - கவலையீனம், வேண்டாவெறுப்பு.
பெருக்காளர் - போதியவர்கள்.
பெருக்கு - கணக்குவகை நான்கினொன்று, பப்பறப்புளி, பாய்ச்சல், பெருக்கென்னேவல், விசாலம், வெள்ளம்.

பெருக்குக்கணக்கு - கணக்குவகைநான்கினொன்று.
பெருக்குதல் - பெருக்கு.
பெருக்குவேளை - உச்சிப்பொழுது.
பெருங்கடல் - சமுத்திரம்.
பெருங்கடி - தொடுகடி.
பெருங்கணக்கு - பெருகிரவி, பெருந்தொகை.
பெருங்கதை - பிள்ளையார்நோன்புமுடிவில் வாசிக்குங்கதை.
பெருங்கருணைநாயகி-கொங்கு நாட்டில் கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பெருங்கலம் - ஆயிரங் கோலையுடைய பேரியாழ்.
பெருங்கலையன் - ஒருநெல்.
பெருங்காக்கைபாடினியம் - ஒரு நூல்.
பெருங்காஞ்சொறி -ஒரு காஞ்சொறி
பெருங்காப்பியம் - ஒருபிரபந்தம் அது தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் வாழ்த்தும் முன்னுளதாய் அறம் பொருள் இன்பம் வீடு எனு நாற்பொருட் பயத்ததாய் கவி நாயகனை யுடைத்தாய் மலைகடல் நாடு நகர் பருவ முதலியவற்றின் வளங்கூறுதலும் மணமுடித்தல் முடிகவித்தல் பொழில் விளையாட்டு நீர்விளையாட்டு உண்டாட்டு புலமி கலவி என்றிவற்றைப்புகழ்தலும் மந்திரம் தூதுசெலவு போர்வென்றி என்பவற்றைக் கூறலுமாகிய விவைதொடரச் சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் என்னும் பகுதியை யுடைத்தாய் வருவது.
பெருங்காயம் - ஒருமருந்து.
பெருங்காரை - ஒருமரம், ஒருவன்.
பெருங்கால் - சண்டமாருதம், பெருவாய்க்கால், யானைக்கால்.
பெருங்காற்று - ஊத்தகாற்று.
பெருங்கிடை, பெருங்கிடைச்சி } ஒருகிடைச்சி.
பெருங்கிரந்தி - ஒருநோய்.
பெருங்கிராமம் - ஐஞ்ஞூறுகுடிகொண்டவூர்.
பெருங்கிழங்கு - ஈசுரவேர், ஒருபூடு.
பெருங்கிழமை - முழுவுரிமை.
பெருங்கிள்ளி - கோவலன் காலத்தில் உறையூரிலிருந்தசோழன், இவனைப் பெருநற் கிள்ளியெனவுங் கூறுவர்.
பெருங்குடல் - ஒருகுடல்.
பெருங்குடிவாணிகர் - வணிகருள் ஒரு வகையார்.
பெருங்குமிழ் - ஒரு குமிழ் அது தசமூலத்தொன்று.
பெருங்குரல் - பெருஞ்சத்தம்.
பெருங்குருகு- சக்கரவாகப்புள் இதுஒரு இசைத்தமிழ்நூல், இதனைச் செய்தவர் தலைச்சங்கப்புலவருளொருவர்.
பெருங்குருந்து - ஒருகுருந்து.
பெருங்குரும்பை - ஒருமருந்து.
பெருங்குளவி - ஒருகுளவி.
பெருங்குறடு - பெரியகுறடு.
பெருங்குறட்டை-ஒருசெடி, காக்கணங்கொவ்வை.
பெருங்குறிஞ்சா - ஒருகுறிஞ்சா.
பெருங்குறிஞ்சி - இது சங்கநூல்களுளொன்று.
பெருங்குன்றூர்கிழார் - இவர்பதிற்றுப் பத்தும் ஒன்பதாம் பத்துப்பாடிச் சேரமான் குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை பால் முப்பத்தீராயிரம் காணப்பெற்றவர்.
பெருங்கொடி - ஒருதுவசம்.
பெருங்கொண்டலாத்தி - புழுச்குத்திப் புள்
பெருங்கொன்றை - ஒருகொன்றை.
பெருங்கோடணை - முரசு.
பெருங்கோழிநாய்கன் மகன் கண்ணனார்-இவர்சோழன் போர்வைக்கோப் பெருநற் கிள்ளியைப் பாடிய ஒரு தமிழ்ப்புலவர், இவர் வைசியர், இவர் கைக்கிளைப் பொருண்மேற் கவி பாடுவதில் மிக்க வல்லவர், "சிறந்த வீரக் கழலினையும், மைபோன்ற தாடியினையுமுடைய காளையை எண்ணுறுந்தோறும் என்கைவளை யென்னைக் கைவிடுவதை என் தாய்காண்பாடாயின் கடிவளே யென்று என் மனமேங்குகின்றது, இது வொரு பக்கமாக, அவட்குப் புலனாகாமல் அவனைக் கூடுவேனென்று துணிந்தாலும் அவனைச் சூழ்ந்திருக்கும் சபைக்குஎன் செய்வதென்று நாணம் அதிகரிக்கின்றது, இவ்வாறு மயங்குகின்றேன் என்னுங் கருத்தமைந்த" அடிபுனை தொடு கழல்

என்னுஞ்செய்யுளைப் பாடினவர் இவரே.] (புறநானூறு.)
பெருச்சாளி - ஓரெலி.
பெருஞ்சித்திரனர் - இவர் ஒரு அற்புதக்கவிஞர், இவர் மிகவும் வறுமையுற்றவராய் ஒருகாலத்திலே குமுணனது கொடைச் சிறப்பினைப்புலவர் வாய்க்கேட்டு அவனிடத்துச்சென்று தமது நிலைமையை உள்ளவாறு கூறி, அவனிடத்துப் பெற்ற பெருஞ்செல்வத்தால் குபேரனைப்போல வாழ்ந்தவர்.
பெருஞ்சிறப்பு - மிகுசிறப்பு.
பெருஞ்சினம் - பெருங்கோவம்.
பெருஞ்சீத்தனர் - இவர் கடைச்சங்கப் புலவருளொருவர்.
பெருஞ்சீரகம் - ஒருசரக்கு.
பெருஞ்செய்யான் - ஒருதேள்.
பெருஞ்செருப்படி - ஒருபூடு.
பெருஞ்செல்வம்-திரண்ட ஐசுவரியம்.
பெருஞ்சொல் - பலரறிசொல்.
பெருத்தல் - அதிகப்படல், பருமையாதல்.
பெருநகை - பெருஞ்சிரிப்பு, பெருமகிழ்வு, இது சுபாவகுணத்தினென்று, புறக்கூத்தினுளொன்று.
பெருநடை - உயர்ந்தநடை.
பெருநட்பு - பெருஞ்சிநேகம்.
பெருநண்டு - ஒருநண்டு.
பெருநந்தியாவட்டம் - ஒரு நந்தியாவட்டம்.
பெருநம்பி - குலச்சிறைநாயனர்.
பெருநயப்புரைத்தல்- பெருவிருப்பைக் கூறல் இது அகப்பொருட்டுறையினென்று.
பெருநறளை - ஒருபூடு.
பெருநறுவிலி - ஒருமரம்.
பெருநாரை ஒருநாரை, தலைச்சங்கத்து இசைத்தமிழ் நூல்களு ளொன்று, இது இறந்தொழிந்தது.
பெருநாள் - அச்சுவினி முதலியநாள், இரேவதி, கொண்டாட்டமானநாள்.
பெருநிரவி - குமுக்கு, மொத்தம்.
பெருநிம்பம் - வேம்பு.
பெருநீர் - கடல்.
பெருநூல் - விரிவுநூல்.
பெருநெருஞ்சி - ஒருநெருஞ்சி.
பெருநெருப்பு -தீச்செறிவு.
பெருநெறி - நன்மார்க்கம்.
பெருநையல் - பெருவியாதி, மசூரிகை,
பெருந்தகை-அரசன், பெருமையுடையோன்.
பெருந்தக்காளி - ஒருசெடி.
பெருந்தலைக்கறையான்-ஒருகறையான்
பெருந்தலைச்சாத்தனர்-தம்பியால் நாடுகொள்ளப்பட்டு காட்டிலிருந்த குமுணனைப் பாடியபோது அவன் தலையைக் கொண்டுபோய்த் தம்பிகையிற் கொடுத்தால் பெரும் பொருள் பெறுவீரென்று தன் வாளைக்கொடுத்து அறுக்கச்சொல்ல,இவர்அந்தவாளைக்கொண்டுபோய் அவன் தம்பிக்குக்காட்டி அவன் மனவைரத்தை மாற்றின பெருந்தகை யிவரே.
பெருந்தன்மை - அகந்தை, மானம், மேன்மை.
பெருந்தாரா - ஒருதாரா.
பெருந்தாளி - ஒருதாளி.
பெருந்திணை - பொருந்தாக்காமம்.
பெருந்திணைமணம் - பெருந்திணைக்குரியமணநான்கு அவை பிரமம் பிராசாபத்தியம் ஆரிடம் தெய்வம்.
பெருந்தில்லை - ஒருமரம்.
பெருந்தீன் - பேரூண்.
பெருந்துத்தி - ஒருபூடு.
பெருந்துளசி - ஒருதுளசி.
பெருந்தேவபாணி - இசைப்பா வகையுளொன்று.
பெருந்தேவனர்-தொண்டை நாட்டிற் பிறந்து தமிழில் மிகவல்லுநராய் பாரதத்தை வெண்பாவாற் பாடிக்கொண்டுபோய் மதுரைச்சங்கத்தில் அரங்கேற்றினவர்.இவர்சாதியில்வேளாளர், "சீருறும்பாடல்பன்னீராயிரமுஞ் செழுந்தமிழ்க்கு, வீரர் கஞ்சங்கப் பலகையிலேற்றிய வித்தகனர் பாரதம்பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண், மாருதம் பூவின்மணம் வீசிடுந் தொண்டைமண்டலமே" என்பதுமேற்கோள். வீரசோழியத்துக் குரைசெய்த ஆசிரியர்.
பெருந்தேன் - பேரிலையான், கூட்டுந்தேன்.
பெருந்தொகை - மிகுதொகை.

பெருந்தொடை - ஆடுதொடை.
பெருப்பம் - பருப்பம்.
பெருப்பித்தல் - அமிதப்படுத்தல், பருப்பித்தல்.
பெருமகள் - கோவலன்தாய், இவளைப் பெருமனைக்கிழத்தியென்றும், பேரிற்கிழத்தியென்றும், வழங்குவர், இவள் மதுரையில் கோவலன் கொலையுண்டிறந்ததைமாடலனால்தெரிந்து தன்னுயிரைவிட்டவள்.
பெருமகன் - அரசன், சிறந்தோன்.
பெருமகிழ்ச்சிமாலை - ஒரு பிரபந்தம், அது தலைவியது, சிறப்பைக்கூறுவது.
பெருமக்கள் - பெரியோர்.
பெருமங்கலம் - ஒரு பிரபந்தம்.
பெருமணிக்கோட்டுவான்-ஒரு நீர்ப்புள்.
பெருமந்தாரை - ஒருசெடி.
பெருமம் - பெரியது.
பெருமரம் - பீநாறி, பெருங்கள்ளிமரம்.
பெருமருந்து - ஒருமருந்து.
பெருமலை-மகாமேருகிரி. சேரநாட்டில் உள்ளவொருமலை.
பெருமலைகலக்கி - ஒருபூடு.
பெருமல்லரி - பெருங்கள்ளி.
பெருமல்லிகை - ஒருமல்லிகை இது தசமூலத்தொன்று.
பெருமழை - மிகு மழை.
பெருமன் - பருத்தது.
பெருமா - யானை.
பெருமாசோதேயர் - சேரமான் பெருமான்.
பெருமாட்டி - தலைவி.
பெருமாந்தம் - ஒருநோய்.
பெருமாரி - பெருமழை.
பெருமான் - முதிகன், திருமால், பெறுமையிற் சிறந்தோன்.
பெருமான் - அரசன், குரு, சிவபிரான், தலைவன், திருமால், பெருமையிற் சிறந்தோன், மூத்தோன்.
பெருமிட்டை - பீநாறி.
பெருமிதம் - களிப்பு, மிகுதி.
பெருமிழலைக்குறும்பநாயனார்-இவர்பெருமிழலையென்னு மூரிலே வாழ்ந்த ஒரு சிவபத்தர், இவர் சுந்தரமூர்த்திநாயனார் கைலாயமடைவதைத் தமது யோகப் பிரத்தியக்ஷத்தா லறிந்துபோக முயற்சியினாலே பிரமரந்திரந் திறந்துசென்று முத்தியடைந்தவர்.
பெருமீன் - யானைமீன்.
பெருமுசுட்டை - ஒருபூடு.
பெருமுட்டி - கூடம்.
பெருமுத்தரையர் - செல்வர், சொந்தப் பொருட்காரர்.
பெருமூளை - ஒருவகைப்பாடு.
பெருமூச்சு - நெடுமூச்சு.
பெருமை - ஆங்காரம், பொலிவு, மாட்சிமை.
பெருமைபண்ணுதல் - ஆங்காரங்காட்டுதல்.
பெருமைபாராட்டுதல் - வீம்புபேசுதல்.
பெரும்பசிரி - ஒருகீரை.
பெரும்பஞ்சமூலம் - தழுதாழைபாதிரி, பெருங்குமிழ், வாகை, வில்வம்.
பெரும்படி - பரும்படி.
பெரும்படை - ஒரு தேவகூட்டம்.
பெரும்பதி - தலைக்கிராமம், மருங்கிலூர் சூழ்பதி.
பெரும்பதுமனார் - இவர் புறநானூற்றிற் கூறப்பட்ட புலவருளொருவர்.
பெரும்பயறு - ஒருவகைப்பயறு.
பெரும்பயன் - மிகுபேறு.
பெரும்பராக்கு - அசட்டைத்தனம்.
பெரும்பருந்து - கூகை.
பெரும்பறவை - எண்காற்புள், சரபம்.
பெரும்பறை - ஒருவகைத்தோற்கருவி.
பெரும்பற்றப்புலியூர் - சிதம்பரம்.
பெரும்பனசை, பெரும்பனையன் - மசூரிகையினோர் வகை.
பெரும்பாடு - தீட்டுதிரமிறைப்பு.
பெரும்பாணாற்றுப்படை - இது பத்துப்பாட்டுளொன்று, கச்சிநகரத்திருந்த தொண்டைமானிளந் திரையனைக்கடியலூர்|உருத்திரங்கண்ணனார் பாடியது.
பெரும்பாந்தள், பெரும்பாம்பு - ஒருபாம்பு.
பெரும்பாலும் - மிகுதியும்.
பெரும்பாவி - மிகுபாவி.
பெரும்பாழ்வெளி - சூனியவெளி, அவாதசாந்தம்.
பெரும்பாற்சொற்றி - ஒருபூடு.
பெரும்பான்மை - மிகுபான்மை.

பெரும்பிரண்டை } ஒரு பிரண்டை.
பெரும்புரண்டை }
பெரும்புலால் - பெருமீன்.
பெரும்புலி - ஒருபுலி.
பெரும்புழுக்கல் } பேரவியல்.
பெரும்புழுக்கு }
பெரும்புள் - கூகை.
பெரும்புரு - ஒருபுரு.
பெரும்பூண் - பதக்கம்.
பெரும்பூழை - கதவிலிடும்வாயில்.
பெரும்பூளை - ஒருபூடு.
பெரும்பேச்சு - பலரறிசொல்.
பெரும்பெருக்கு - பெருவெள்ளம்.
பெரும்பெயர் - பராசியம்.
பெரும்பொங்கல் - ஊர்ப்பொங்கல், தைப்பொங்கல்.
பெரும்பொழுது - ஆறுபருவம் அவை கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனில்.
பெரும்போகம் - பேரனுபவம்.
பெருவண்ணம் - இசைப்பா வகையுளொன்று.
பெருவயிறு - ஒருநோய், குடவயிறு.
பெருவலி - பெருநோ.
பெருவல் - தூக்கத்தில் பிதற்றல்.
பெருவழக்கம் } பலராலும் வழங்கப்படுவது.
பெருவழக்கு }
பெருவள்ளி - ஒரு கிழங்குக்கொடி.
பெருவாமை - ஒருமரம்.
பெருவாஞ்சை - பேருசை.
பெருவாரி - கொள்ளைநோய்.
பெருவாரிக்காய்ச்சல் - கோதாரிக்காய்ச்சல்.
பெருவாழ்வு - மிகுசெல்வம்.
பெருவிடை - நெடுவிடை.
பெருவியாதி - கிரந்திநோய், குஷ்டம், மசூரிகை, தொழுநோய்.
பெருவிரியன் - ஒருபாம்பு.
பெருவெக்கைநோய் - வாந்திபிராந்தி.
பெருவெளி - ஏகவெளி.
பெருவெள்ளம் - மிகுவெள்ளம்.
பெருவெள்ளை - ஒருநெல்.
பெலக்குதல் - பலத்தல்.
பெலசாலி - பெலனுள்ளோன்.
பெலட்சயம் - பெலவீனம்.
பெலத்தல் - பலப்படல், மிகுத்தல்.
பெலபிடி - பெலன், பேருதவி.
பெலப்படுதல் - உறுதிப்படல், திரப்படுதல்.
பெலப்படுத்துதல் - உறுதிப்படுத்துதல், திரப்படுத்துதல்.
பெலப்பித்தல் - பெலப்படுத்துதல்.
பெலப்பு - உதவி, பெலன்.
பெலப்பேறுதல் - பெலப்படுதல்.
பெலம் - பலம்.
பெலவந்தம் - பலவந்தம்.
பெலவறுதி - பலகீனம்.
பெலன் - உறுதி, வலிமை.
பெலன்செய்தல் - உறுதிப்படல், பலித்தல், வலிமை கொள்ளுதல்.
பெலி - காணிக்கை.
பெலிபீடம் - பலிபீடம்.
பெல்லி - சூனியம் துறட்டியின்முள்,
பெல்லித்தடி-பூட்டைப்பிடி. [பிசாசம்.
பெறல் - பெறுதல்.
பெறுவிலை-அதிகவிலை, குறைந்தவிலை.
பெறுக்கல் - பொறுக்கல்.
பெறுதல் - அடைதல்,கிடைத்தல், பிரசவித்தல்.
பெறுதி - பெறுதல், பெறும்விலை.
பெறுத்தல் - பெறுவித்தல்.
பெறுமதி - உறுதி, தகுதி, திராணி, பெறும்விலை, வெகுமதி.
பெறுமானம் - பெறத்தக்கவிலை.
பெறுவகொள்வோர் } கூத்தியர், வேசையர்.
பெறுவதுகொள்வோர் }
பெற்றத்துவசன் - சிவபிரான்.
பெற்றப்பாகன் } சிவபிரான்.
பெற்றமேரி }
பெற்றம் - இடபவிராசி,எருது,காற்று, பசுசாதிப் பொது.
பெற்றம்பெற்றவன் - பீமன்.
பெற்றவூர்தி - சிவபிரான்.
பெற்றூர் - ஈன்றூர்.
பெற்றி } குணம், தன்மை.
பெற்றிமை }
பென்னம்பெரிது - மிகப்பெரிது.

# பே

பே - ஓரெழுத்து, நுரை, மேகம்.
பேகடம் - ஒருவகை மீன்.

பேகம் - தவளை முகில்.
பேகன் - ஆண்தவளை, கடையெழு வள்ளல்களுளொருவன். இவன் கபில பாணர்களுக்குப் பேருபகாரியாயிருந்த ஒரு மலைநாட்டரசன், இவனது இராஜதானி நல்லூர், இவன் மனைவி பெயர் கண்ணகி, அவளைத் துறந்திருந்த இவனைக் கைக்கிளைவகைப் பாடாண் பாட்டாற் பாணர் பாடினர்.
பேகி - பெண்டவளை.
பேசகம் - ஆந்தை,கூகை முகில்,யானைவாலடி, யானைவாநுனி, வாயில்.
பேசகி - யானை.
பேசலம் - உலக்கை, ஊமை, குயில், தகுதி, மிருது.
பேசலன் - சிவபிரான்.
பேசல் - சொல்லல்.
பேசாதபேச்சு - அசப்பியம்.
பேசாநிலை - மோநநிலை.
பேசாவநுபூதி - மௌநாநுபவம்.
பேசாமை - மௌனம்.
பேசி - இடியேறு, உடை, ஒருயாறு, தசை, நரம்பு, பூமொட்டு, முட்டை.
பேசிகோசம் - முட்டை.
பேசிலம் - யானை.
பேசுதல் - பறைதல்.
பேசுவாயன் - பரிந்துபேசுபவன், வாயாடி.
பேச்சல் - பறைச்சல்.
பேச்சழிதல் - பேச்சுத்தப்புதல்.
பேச்சறுதல் - மௌனம்.
பேச்சறுதி - தீர்மானம்.
பேச்சற்றவன் - பேசமாட்டாதவன், பொய்யன், மௌனி.
பேச்சாட்டுத்துணை - பேச்சுத்துணை.
பேச்சாளி - சொல்லாளி, நிதானி.
பேச்சி - ஒரு பெண்பேய்.
பேச்சு - சம்பாஷணை, சொல்,பாஷை, பேசுதல்.
பேச்சுக்குற்றம் - சொற்குற்றம்.
பேச்சுக்கொடுத்தல் - பேச்சுவளர்த்தல்.
பேச்சுநடத்தல் - சம்பாஷித்தல்.
பேச்சுவளர்த்தல் - நீடிக்கப்பேசல்.
பேச்சுவாயன் - வாயாடி.
பேச்சுறுதி - பேச்சுநிதானம்.
பேடகம் - கூடை, திரள்.
பேடணம் - திரிகைக்கல், பொடிசெய்தல்.
பேடம் - தெப்பம், வெள்ளாடு.
பேடர் - அலியர்.
பேடாடல் - மன்மதன் கூத்து.
பேடி - அலி, பெண்ணாடு.
பேடிகை - கூடை.
பேடிசம் - மயக்கு.
பேடிசவித்தை - மயக்குத்தொழில்.
பேடியர் - அலியர்.
பேடு - அலி, ஊர், காமனுடல், பறவைப்பெண், பெண்.
பேடுமூஞ்சி - பெண்முகம்.
பேடை - கூடை, பறவைப்பெண்.
பேட்டி - பெரியவாது வரவு காத்திருத்தல்.
பேட்டை - நகரத்தருகுஞ் சந்தை கூடலுமாகியவூர், பட்டைக்கரை.
பேணகம் - ஒருபணிகாரம்.
பேணம், பேணரவு - பேணுதல்.
பேணலர் - பேணார்.
பேணல் - ஆசைப்பெருக்கம், கருத்து, காத்தல், குறித்தல், விரும்பல்.
பேணாமை - போற்றாமை.
பேணார் - பகைவர்.
பேணுதல் - பேணல்.
பேண், பேண்மரம் - துலாத்தாங்கி, பேணெனோவல்.
பேதகமணி - வெண்காரம்.
பேதகம் - பேதம்.
பேதகன் - தப்பிதகாரன்.
பேதசைவம் - ஒருசைவம்.
பேததாரணை - நவதாரணையி னொன்று, அது இயமாதி யோகசாதனையாற் பிராணன் அபானன் உதானன் வியானன் எனு நான்கு வாயுக்களையுஞ் சமான வாயுவுடன் சேர்த்து அதோமுகமாயிருக்கு மிதயகமலத்தைப்பிராணவோச்சாரணத்தா லுண்முக மாக்குவது.
பேதநம் - பன்றி.
பேதமை - அறிவின்மை.
பேதம் - ஒவ்வாமை, சிவாகமமிருபத்தெட்டினொன்று, திரிபு, பகுப்பு, பகை, வினை, வேற்றுமை.
பேதலித்தல் - மறுப்பு, இது உபாய நான்கினொன்று,வேற்றுமைப்படல்.
பேதலிப்பு, பேதலிமை - வேற்றுமை.

பேதனம் - பேதிப்பு, இது அட்டகரு மத்தொன்று.
பேதாதிபேதம் } பலபேதம்.
பேதாபேதம் }
பேதாஞ - ஒருவிதை.
பேதி - இரதம், கழிச்சல், நேர்வாளம், பேதமானவன், பேதிப்பது, பேதியென்னேவல், வெளி.
பேதிகாரி - ஆற்றுத்தும்மட்டி, பேதிமருந்து, பேய்க்குமட்டி.
பேதிதம் - பிளத்தல்.
பேதித்தல் - பகைத்தல், விரோசனித்தல், வேற்றுமைப்படுதல், வேற்றுமைப்படுத்தல்.
பேதிபண்ணுதல் - விரோசனஞ் செய்தல்.
பேதிப்பு - பேதம்.
பேது - மதிமயக்கம்.
பேதுாம் - வச்சிராயுதம்.
பேதுறல் - பேதுறுதல், மதிமயங்குதல்.
பேதுறவு - மதிமயக்கு.
பேதுறுதல் - புத்திகலங்குதல்.
பேதை - அறிவிலான், எழு வயதுப்பெண், சுபாவி, தரித்திரன், பெண், பேடி, பேதைமை - அறிவின்மை, ஏழைமை, சுபாவம்.
பேதையர் - அறிவீனர், எழுவயதிற்பெண்கள், கீழ்மக்கள், தரித்திரர், பாலைநிலமகளிர்.
பேத்தி - பேர்த்தி.
பேத்துவம் - அமுதம், நெய்.
பேத்தை - ஒருமீன், கெளிசு, பற்பேத்தை.
பேத்தைப்பற்றுதல் - கெளிசுபற்றுதல்.
பேநன் - சந்திரன், சூரியன்.
பேம் - பயம்.
பேயகற்றுதல் - பேயோட்டுதல்.
பேயத்தி - ஒருமரம்.
பேயம் - கஞ்சி, நீர், பால்.
பேயவரை - ஓரவரை.
பேயன் - மதிகேடன்.
பேயன்வாழை - ஒருவாழை.
பேயாடுதல் - பேயுருக்கொள்ளுதல்.
பேயாட்டி - பேய்வித்தைக்காரன்.
பேயாட்டுதல் - பசாசையுருக்கொள்ளுவித்தல்.
பேயாமணக்கு - ஓராமணக்கு.
பேயாவிரை - ஒரு ஆவிரை.
பேயாழ்வார் ஒருவைணவாசாரியர். முதலாழ்வார்களாகிய மூவருளொருவர், இவர் பூதத்தாழ்வார் அவதரித்த மற்றைநாள் திருமயிலையில் ஒருவாவியிலே செவ்வல்லிமலரிலேயவதரித்தவர், மூன்றாந் திருவந்தாதி பாடினவர் இவரே.
பேயுள்ளி - ஒருள்ளி.
பேயுறைதல் - பேய் குடிகொள்ளுதல்.
பேயூடம் } அமுதம், ஈன்றவேழாநாட்கறக்கும்பால், நவநீதம்.
பேயூஷம் }
பேயூமத்தை - மருளுமத்தை.
பேயேற்றுதல் - பேயை யேவிவிடுதல்.
பேயோடாடி - சிவபிரான்.
பேயோட்டி - ஒருமரம், பேய் துரத்துவோன்.
பேயோட்டுதல் - பேயகற்றல்.
பேயோஞன் - ஒருவகை ஓஞன்.
பேய் - பிசாசம், மதிகெட்டது.
பேய்க்கண் - அஞ்சத்தக்கவிழி, வெருண்டபார்வை.
பேய்க்கண்டல் - ஒருமரம்.
பேய்க்கரும்பு - ஒருகரும்பு.
பேய்க்கனி - பேயன் வாழைப்பழம்.
பேய்க்காடு - பேயுறையுங்காடு.
பேய்க்காளான் - ஒருகாளான்.
பேய்க்குணம் - பேய்த்தனம்.
பேய்க்குப்பார்த்தல் - பேயைத் துரத்துதல்.
பேய்க்குமட்டி - ஒருகொடி.
பேய்க்குறை - பேய்த்தொடர்ச்சி.
பேய்க்குன்றி - ஒருகுன்றி.
பேய்க்கூண்டு - மாயவித்தை படிக்குமோரிடம்.
பேய்க்கொம்மட்டி - பேய்க்குமட்டி.
பேய்க்கோட்டாலை - பேய்க்குறை.
பேய்க்கோலம் - கோலக்கேடு.
பேய்ச்சத்தம் - அவசத்தம்.
பேய்ச்சாளை - ஒருமீன்.
பேய்ச்சி - பேய்க்குணமுள்ளாள்.
பேய்ச்சுரை - ஒருசுரை.
பேய்த்தக்காளி - ஒருசெடி.
பேய்த்தண்ணீர் - மதுநீர்.
பேய்த்தனம் - அறிவின்மை.
பேய்த்திமிட்டி - ஒருபூடி.
பேய்த்தும்பை - ஒரு தும்பை.
பேய்த்தும்மட்டி - பேய்க்கொம்மட்டி.

பேய்த்தேர் - கானல்.
பேய்நரி - வெறிநரி.
பெய்நாய் - வெறிநாய்.
பேய்பிடித்தல் - பிசாசுபிடித்தல்.
பேய்ப்பசலை
பேய்ப்பயலை } ஒருகீரை.
பேய்ப்பலவன் - படுவன்கீரை.
பேய்ப்பள்ளி - பேய்க்கூண்டு.
பேய்ப்பாகல் - ஒருபாகல்.
பேய்ப்பார்வை - மருட்பார்வை.
பேய்ப்பாற்சொற்றி-ஒருபாற்சொற்றி.
பேய்ப்பிடி - வீண்பிடி.
பேய்ப்பிரம்பு - ஒருபிரம்பு.
பேய்ப்பீர்க்கு - ஒருபீர்க்கு.
பேய்ப்புடல்
பேய்ப்புடோல் } ஒருபுடோல்.
பேய்ப்புத்தி - மதியீனம்.
பேய்ப்புல் - கணைப்புல் [நடை.
பேய்ப்போக்கு - ஒழுங்கின்மையான
பேய்மகன் இளவெயினி - சேரமான் பாலையாடிய பெருங்கடுங் கோவைப் பாடினவள், இவளை மாநுடவுருக் கொண்டுவந்த வொருபேயென்பாரு முளர்.
பேய்மகன் - கெட்டவன்.
பேய்மருட்டி - ஒருசெடி.
பேய்மனம் - அங்கலாய்த்தமனம்.
பேய்மாடி - புளிநறளை.
பேய்முகம் - அவலட்சணமுகம்.
பேய்முசுட்டை - ஒருகொடி.
பேய்முல்லை - ஒருகொடி.
பேய்முன்னை - ஒருமரம்.
பேய்வித்தை - சூனியவித்தை.
பேய்வெருட்டி - ஒருபூடு.
பேரகத்தி - ஓரகத்தி.
பேரடம் - வெண்ணெச்சி.
பேரடிபடுதல்-பெயர்பிரபல்யமாகுதல்.
பேரணி - நடுச்சேனை.
பேரணிகலம் - பெரும்பதக்கம்.
பேரண்டம் - உலகம், நரி.
பேரத்தி - கறிமுள்ளி.
பேரப்பிள்ளை - பாட்டப்பிள்ளை.
பேரமட்டி
பேரமுட்டி } ஒருசெடி.
பேரம்-உடல்,காஸ்மீரதேயம்,பேரிகை.
பேரம்பலம் - சிதம்பரத்துச் சபைகளில் ஒன்று.
பேராத்தை - பஞ்சமூலத்தொன்று.
பேரவம் - நரி.
பேரவன் - அரக்கன், அரசன்.
பேரவியல் - பெரும்புழுக்கு.
பேரருளுடைமை - கடவுளெண்குணத் தொன்று.
பேரருள் - பெருங்கருணை.
பேரறிவு - ஞானம், மூதறிவு.
பேரறுகு - ஒரு அறுகம்புல்.
பேரன் - பெயரன்.
பேரன்புடைமை - மிகுந்தவன்பாயிருத் தல், இது அறத்துறுப்பி னொன்று.
பேராசிரியர் - ஒருரையாசிரியர்.
பேராசை - மிகுவாசை.
பேராட்டி - பெருமையுடையவள்.
பேராண்டு - அறுபதுவருடங்கொண்ட காலம்.
பேராண்மை - அரியசெயல், வீரம்.
பேராந்தை - கூகை, நிலாமுகிப்புள்.
பேராமட்டி - பேரமட்டி.
பேராமணக்கு - ஓராமணக்கு.
பேராமல்லி - ஒருமல்லிகை.
பேராமுட்டி - ஒருகொடி.
பேராலவட்டம் - ஓராலவட்டம்.
பேராவூரான் - இவன் தொண்டை நாட்டுப் பேராவூரில் வாழ்ந்த ஒரு வேளாளப்பிரபு, புலவருக்குப் பொன்மாறி பொழிவோன், நந்தனைத் தன்னருகேயிருத்திப் புலையனென்று அருவருக்காமல் அவருடனிருந்துண் டோன்.
பேராழம் - பெரியஆழம்.
பேராழி - பெருங்கடல். [தை.
பேராழிமாமுனி - திருவள்ளுவர் தந்
பேராளன் - கீர்த்தியுடையோன்,மிருக சீரிடம்.
பேராளி - பேருள்ளவன்.
பேராளிமாமுனி - வள்ளுவன் றந்தை.
பேராறு - சேரநாட்டுள்ளதோராறு.
பேரானந்தம் - மோட்ச சந்தோஷம்.
பேரி
பேரிகை } பறைப்பொது, முரசு.
பேரிடி - முழக்கம்.
பேரிடுதல் - நாமஞ்சூட்டுதல்.
பேரியாழ் - நால்வகையாழினொன்று.
பேரிலக்கம் - முழுவிலக்கம்.
பேரிளம்பெண் - நாற்பதுவயதுப்பெண்.

பேரின்பம் - ஆனந்தம், மோட்ச சந்தோஷம்.
பேரீகம் - வட்டத்திருப்பி.
பேரீச்சு } ஒருமரம்.
பேரீஞ்சு
பேரீந்து
பேரு - சமுத்திரம், சூரியன், தீ, பொன்மலை.
பேருண்டம் - கருப்பந்தரித்தல், பயம், பறவை விசேடம்.
பேருண்டி - பேருணவு இது தாமத குணத்தொன்று.
பேருந்தம் - நரி.
பேருமரி - ஒருபூடு.
பேருயிர் - பெருங்காற்று.
பேருரியோர் - சக்கிலியர்.
பேருறுதி - திடவத்தாட்சி.
பேரூர் - பெரும்பதி, மேலைச்சிதம்பரம்.
பேரூழி - உருத்திரசங்காரம்.
பேரெடுத்தல் - கீர்த்திபெறுதல்.
பேரெடுபடுதல் - பிரபலமாதல்.
பேரெண் - அளவடியீரடியாக இரண்டுவருவது, பேரிலக்கம்.
பேரெயின்முறுவலார் - நம்பிநெடுஞ்செழியனைப்பாடிய புலவர்.
பேரெல்லைவெண்பா - எட்டடிவெண் [பா.
பேரெழும்புதல் - பிரபலமாதல்.
பேரேடு - கணக்கேட்டிலோர்வகை, பெயர் கணக்கேடு.
பேரொலி - மிகுவொலி.
பேரொளி - மிகுபிரபை.
பேரோசை - பேரொலி.
பேர் - பெயர், பெரிய.
பேர்க்குறி - பெயர்க்குறி.
பேர்ச்சி - பெயர்ச்சி.
பேர்தரித்தல் - நாமஞ்சூட்டல்.
பேர்தல் - பெயர்தல்.
பேர்த்தல் - பெயர்த்தல். [திரி.
பேர்த்தி - பாட்டி, பெயர்த்தி, பௌத்
பேர்வழி - பேரட்டவணை, வமிசவரி
பேலகம் - தெப்பம். [சை.
பேலம் - சிறுபங்கு, பீசம், போதல்.
பேலவம் - மிருது.
பேலன் - தீரன்.
பேலி - குதிரை.
பேலிகை - எச்சில்.
பேலுதல் - மலங்கழித்தல்.
பேழை - பேடகம், பெட்டி.
பேழ் - பெருமை.
பேழ்வாய் - பெருவாய்.
பேறு - இலாபம், ஒன்று, கொடை, செல்லல், நல்லூழ் பெறுதல், வரம், வாய்ப்பு.
பேறுகாலம் } பெறுங்காலம்.
பேற்றுக்காலம்
பேனம் - நுரை.
பேனவர்கி - இடி.
பேனுக்கிரம் - நீர்க்குமிழி.
பேனுசனி - இந்திரன்.
பேன் - தலையிற்பற்றும்பூச்சி.

## பை



பை - அழகு, ஓரெழுத்து, குடர், சாக்கு, நிறம், பசுமை, பச்சைநிறம், பாம்பின்படம், பையென்னேவல், பொக்கணம், மந்தக்குணம், மெத்தெனவு.
பைகோ } ஒருதேயம்.
பைகோவு
பைகோவை
பைகோவைச்சிவப்பு - ஒருவகை மாணிக்கம்.
பைக்கம் - பிச்சை.
பைக்கூறை - பை.
பைங்கண் - பசியகண்.
பைங்கழை - பசுமையானமூங்கில்.
பைங்காய் - பசுங்காய்.
பைங்கிளி - பச்சைக்கிளி.
பைங்கூழ் - நோய், பயிர்.
பைங்கொடி - பசுங்கொடி.
பைசந்தி - வாக்குநான்கினொன்று.
பைசாசநிலை - ஒருதாளினின்று மற்றைத்தாண் மூடக்கிநிற்றல், இது யுத்தநிலை நான்கினொன்று.
பைசாசமணம் - துயின்றுளைச்சென்று கூடுங் கூட்டம்.
பைசாசம் - இரும்பு, ஒருமணம், ஒரு யுத்தநிலை, பிசாசம்.
பைசாசி - இராக்கதத்தி, சடாமாஞ்சில், பிராகிருத பாஷைகளு ளொன்று, இது பைசாசி குளிகையென்றும் வழங்கும், இது பிசாச தேசங்களில்

பேசப்படுவது, கேகயம், நேபாளம், பாகிலீகம் முதலிய தேசங்கள் பிசாசதேசங்களெனப்படும்.
பைசார் - ஒருதொடுதோல்.
பைசுனம் - உலோபத்தனம்.
பைஞ்ஞீலம் - பசியநீலம், மக்கட்பரப்பு.
பைஞ்ஞீலி - ஒரு சிவக்ஷேத்திரம்.
பைஞ்ஞீல் - பைஞ்ஞீலம்.
பைண்டின்னியம் - யாசகம்பண்ணி வயிறு வளர்த்தல்.
பைதல் - துன்பம், பையல்.
பைதிரம் - நாடு.
பைத்தம் - பித்தம்.
பைத்தல் - சோபம், சினக்குறிப்பு, துன்பம், பசுமையாதல், பாம்பு படம் விரித்தல்.
பைத்திகம் - பைத்தம்.
பைத்தியக்காரன் - பித்தன்.
பைத்தியம் - பயித்தியம்.
பைத்திராகோராத்திரம் - பிதிர்களின் ஓர்நாள் அது மனிதருக்கோர் மாதம்.
பைத்து - பசுமை.
பைத்ருகதநம் - பிதிரார்ஜிததநம்.
பைத்ருகபூமி - பிதுரார்ஜிதபூமி.
பைத்ருகம் - பித்ருசம்பந்தம்.
பைந்தார் - பசியபூமாலை.
பைந்தினை - ஒருதினை.
பைந்தொடி - பச்சைவளையல், பெண்.
பைந்நாகம் - சர்ப்பம்.
பைபீலம் - எறும்பு.
பைபீலவாதம், பைபீலிகாவாதம் - எறும்புகளின் பேச்சறிதல், அது கலைஞான மறுபத்து நான்கின் ஒன்று.
பைபீலிகை - எறும்பு.
பைபைய - மெல்லமெல்ல.
பைமை - தவப்பெண், பசுமை.
பைம்பூண் - பொன்னுபரணம்.
பைம்பொன் - பசும்பொன், மேருகிரி.
பைய - மெல்ல.
பையல் - பயல்.
பையன் - சிறுவன்.
பையுள் - அற்பம், சிறுமை, துன்பம், நோய்.
பையெனல் - மந்தக்குறிப்பு.
பையோடதி - பச்சைக்கொடி.
பைரவம் - அச்சம், உட்சமயமாறினொன்று.
பைரவன் - சிவன், வயிரன், சிவமூர்த்தங்களுளொன்று.
பைரவி - ஓரிராகம், காளி.
பைராகி - வைராகி.
பைபலவான், பைலன் - ஓரிருடி.
பைலன் - ஒரு வேதவியாசர் மாணாக்கருளொருவன், ருக்வேதாத்யாபகன், ஜாதகர்ணி சீடன்.

## பொ



பொகுட்டு - சேற்றிலெழுங்குமிழி, தாமரைக்கொட்டை, மலை.
பொகுத்தல் - பொத்தல் செய்தல்.
பொக்கசம் - திரவியசாலை, திரவியம்.
பொக்கசவைப்பு - புதைத்ததிரவியம்.
பொக்கணப்பிச்சி - முடக்கொத்தான்.
பொக்கணம் - ஒருவகைப்பை, சோளி, பெருமருந்து.
பொக்கணி - ஒருபானபாத்திரம், குழியுரல், விரிந்ததொப்புள்.
பொக்கணை - கல்வளை, குழியுரல், மரப்பொந்து.
பொக்கம் - பொய், பொலிவு, மிகுதி.
பொக்கல்வாய் - பொக்குவாய்.
பொக்கிஷகாரன் - திரவியவான், பொக்கிஷ விசாரணைக்காரன்.
பொக்கிஷம் - பொக்கசம்.
பொக்கிலவணம் - திலாலவணம்.
பொக்கு - குற்றம், பொள்ளல்.
பொக்குப்பொக்கெனல் - ஒலிக்குறிப்பு.
பொக்குவாய் - பல்லற்றவாய்.
பொக்குளித்தல் - கொப்புளித்தல்.
பொக்குளிப்பான் - கொப்புளிப்பான்.
பொக்கெனல் - விரைவின்குறிப்பு.
பொக்கை - சிறுதுளை.
பொக்கைவாய் - பொக்குவாய்.
பொக்கைவாய்ச்சி - பொக்குவாய்ச்சி.
பொங்கடி - யானை.
பொங்கம் - நெற்றி, பரிமளிப்பு, பொலிவு.
பொங்கர் - இலவமரம், சோலை, மரக்கொம்பு, மலை, வாடற்பூ.
பொங்கலாண்டி - பொங்கற்காரன்.
பொங்கல் - உயர்ச்சி, கிளர்தல், சமைத்தல், பொலிதல், மிகுதி, கள்.

பொங்கழி - தூற்றுநெல்.
பொங்காரம் - பொங்கல், மிகுதுக்கம்.
பொங்குசனி - இரண்டாமுறை ஏழரையாய் வருஞ்சனி.
பொங்குதல் - கொதிர்த்துக் கிளர்தல், கோபித்தல், சாதஞ்சமைத்தல், நொதித்தல், பொலிதல்.
பொசிதல் - இரகசியம்வெளித்தல், கசிதல், நீரரும்பல், நீர்பறிதல்.
பொசித்தல் - புசித்தல்.
பொசிவு - அருகிச்செல்லல்.
பொசுக்குதல் - சுடுதல்.
பொசுங்கல் - கருகினது, கருகுதல்.
பொசுங்குதல் - வெம்மையாற்றீய்தல்.
பொசுபொசுத்தல் - இரகசியம்பேசல். கொஞ்சங் கொஞ்சமாய் வெளிப்படுதல்.
பொசுபொசெனல் - ஒலிக்குறிப்பு.
பொச்சடித்தல் - வெறுநாக்கடித்தல்.
பொச்சம் - அவா, உணவு, குற்றம், தேங்காய்மட்டை, விருப்பம்.
பொச்சாத்தல், பொச்சாப்பு - பொல்லாங்கு, மறதி.
பொச்சாலிநெல் - ஒருநெல்.
பொச்சாவாமை - மறவாமை.
பொச்சு - பொய்ச்சு, பயனில்லது.
பொச்சை - கரிகாடு, காடு, சிறுமலை, புழுக்கூடு, மலை.
பொஞ்சுதல் - ஒவ்வுதல், செழித்தல்.
பொடி-சிறிசு, சூரணம், பஸ்மம், பராகம், புழுதி, பொடியென்னேவல்
பொடிச்சி - சிறுபெண்.
பொடிச்சிலை - மஞ்சட்கல்.
பொடிதல் - கெடுதல், திட்டுதல், தூளாதல்.
பொடித்தல் - கெடுத்தல், தூளாக்கல், மயிர்சிலிர்த்தல், முளைத்தல்.
பொடிபண்ணல்-துண்டித்தல், மாவாக்கல், சுண்ணமாக்கல்.
பொடிபொடிதல் - மிகத்தூளாதல்.
பொடிபொட்டு - சிறியது, பதரானது.
பொடிப்பு - புளகம்.
பொடியன் - சிறுவன்.
பொடியாதல் - துகளாதல்.
பொடிவிளக்கணம் - பொன் முதலியவற்றைப் பொருத்திச்சுடுதல்.
பொடிவு - திட்டு, பொடிதல்.
பொடிவெட்டி - பொன்வெள்ளி முதலிய வெட்டுங் கத்திரிகை.
பொடுகன் - சிற்றாள்.
பொடுகு - ஒருபூடு, சிறிசு, சொடுகு.
பொடுதலை - ஒருபூண்டு.
பொடுபொடுத்தல், பொடுபொடுப்பு, பொடுபொடெனல் - அநுகரணம், ஒருகுறிப்பு, காய்தல், சீக்கிரக் குறிப்பு.
பொட்டணம், பொட்டணி - ஒத்திடும் மூட்டை, பொதி.
பொட்டலம் - பொட்டணம்.
பொட்டல் - காம்பு.
பொட்டளி - பொட்டணம்.
பொட்டிலுப்பு - வெடியுப்பு.
பொட்டில் - பொதி.
பொட்டு - ஒருபூச்சி, சங்கை, தாலிப்பொட்டு, தானியப்பொட்டு, நுழைவழி, நெற்றித்திலகம்.
பொட்டுக்கட்டுதல் - தாலிகட்டுதல்.
பொட்டுக்குலைதல் - சங்கைகெடுதல்.
பொட்டுக்குத்துதல் - திலகமெழுதல்.
பொட்டுக்கேடு - சங்கைகேடு.
பொட்டுத்தாலி - பொட்டாகாரத்தாலி.
பொட்டுப்பூச்சி - ஒரு சிலந்திப்பூச்சி.
பொட்டெனல் - சீக்கிரக்குறிப்பு.
பொட்டை-குருடு, கூசியகண்.
பொதி - அம்பலம், ஓலைக்குடை, கரிகாடுபொதியப்பட்டது, பொதியமலை, பொதியென்னேவல், மலரரும்பு, மூட்டை.
பொதிகாரன் - பொதிமாடு செலுத்துவோன்.
பொதிகை - பொதியம்.
பொதிசோறு - கட்டுச்சோறு.
பொதிதல் - திணித்தல், மறைத்தல்.
பொதிப்போதா - பெருநாரை.
பொதிமாடு - பொதியெருது.
பொதியமுனி - அகத்தியன்.
பொதியம் - தென்மலை, மலயமலை.
பொதியவிழ்த்தல் - கட்டுமுதவிழ்த்தல், பூ முதலிய விரிதல்.
பொதியவெற்பன் - பாண்டியன்.
பொதியறை-துவாரமில்லாத கீழறை.
பொதியன் - அகத்தியன்.
பொதியில் - அம்பலம், பொதியமலை, பாண்டி நாட்டிலுள்ளதொரு மலை,

இது தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பொதுவிடமாயிருத்தலால் இப்பெயர் பெற்றது.
பொதியெருது - பொதியெடுக்கு மெருது.
பொதிர் - நடுக்கம், பொதிரென்னேவல், மிகுதல்.
பொதிர்தல் - மிகுதல்.
பொதிர்ப்பு - அச்சம், நடுக்கம்.
பொதிர்வு - பொதிப்பு, மிகுதல்.
பொதிவு - பொதிதல்.
பொதின்பொதினெனல் } ஒலிக்குறிப்பு.
பொதீர்பொதீரெனல்
பொது - சாதாரணம், பலர்முன்னிலை.
பொதுக்கட்டுதல் - நடுக்கட்டுதல்.
பொதுக்கு - ஒதுக்கு, பொதுக்கென்னேவல், மறைப்பு.
பொதுக்குதல் - மறைத்தல்.
பொதுச்சீர் - நான்கசையாய்வருஞ்சீர்.
பொதுச்சூத்திரம்-தொகைச்சூத்திரம்.
பொதுச்சொல் - திணை பால் இடம் காலங்களைக் குறித்துப் பொதுவாயிருக்குஞ்சொல், பொதுப்பொருள்.
பொதுத்தல் - துளைத்தல்.
பொதுத்தன்மை - பொதுவியல்பு.
பொதுத்தன்மைத்தொகை - பொதுத்தன்மை தொக்குநிற்பது (உ-ம்.) காந்தட்போதினை நிகர்க்குங்கை.
பொதுத்தன்மையுருபுத்தொகை - பொதுத்தன்மையு முருபுந் தொக்குநிற்பது (உ-ம்) கயற்கண்.
பொதுத்தன்மை யுருபுவமானத் தொகை - பொதுத்தன்மையு முருபுவமானமுந்தொக்கது (உ-ம்)குயிற்கிளவி.
பொதுத்தன்மை யுவமானத்தொகை - பொதுத் தன்மையு முபமானமுந் தொக்கு நிற்பது (உ-ம்) நாசிபோல் வது மற்றூரும்.
பொதுத்திணை - பலதிணைக்கும் பொதுச்சொல்.
பொதுத்திரீ } வேசி.
பொதுஸ்திரீ
பொதுநடுவர் - மத்தியட்சர்.
பொதுநலம் - பலர்நன்மை.
பொதுநிலம் - எல்லார்க்கும் பொதுவாயிருக்கும் நிலம்.
பொதுநிறம் - பலநிறக்கலப்பு.
பொதுநீங்குவமை - இயைபின்மையணி அது உவமையைக்கூறி மறுத்துப் பொருடன்னையே யுவமையாய்க் கூறுவது(உ-ம்)திங்களில் வதனஞ் சிறப்புடைத்ததனலதுவேயதற்கு நிகர்.
பொதுநோக்கம் - பொதுப்பார்வை.
பொதுபொதுத்தல் } ஒலிக்குறிப்பு, மெதுமெதுத்தல்.
பொதுபொதெனல்
பொதுப்பணம் - பலர்க்கு முரியபணம்.
பொதுப்பெண் - பொதுமகள்.
பொதுப்பெயர் - திணை பால் இடங்களைக்குறித்துப் பொதுவாய்வரும்பெயர்.
பொதுப்பொருள் - பலர்க்கு முரிய [பொருள்.
பொதுமகள் - வேசி.
பொதுமத்தியம் - பொது.
பொதுமனிதன் - நடுவன்.
பொதுமாது - வேசை.
பொதுமுதல் - பங்கானமுதல்.
பொதுமை - பொதுத்தன்மை.
பொதுமொழி - பொதுப்பெயர்.
பொதும்பர் - மரச்செறிவு, மரப்பொந் [து.
பொதும்பு - பொந்து.
பொதுவகத்திணை - அகத்திணைப் பொது தனிக்குறுப்பெனப் பலவற்றை யடக்கிக் கொள்ளல். [சொல்.
பொதுவசனம் - பலவற்றை நோக்குஞ்
பொதுவடி - இயற்சீருரிச்சீர் பொதுச்சீரொன்னும் மூன்றுனும் வருமடி.
பொதுவர் - இடையர். [ப்பு.
பொதுவறுசிறப்பு - தனக்கேயுரிய சிற
பொதுவனுமானம் - ஒரளவை அது சாதனசாத்தியங்களி னொற்றுமையுணராது பொதுவாயனுமானித்தல்.
பொதுவார்த்தை - பட்சபாதமில்லாத
பொதுவி-முல்லைநிலப்பெண். [சொல்.
பொதுவிதி - பொதுவான நிருணயம்.
பொதுவியர் - இடைச்சியர்.
பொதுவில் - அம்பலம்.
பொதுவெழுத்து - தமிழிற்குமாரியத்திற்கும்பொதுவாய் வழங்குமெழுத்து.
பொதுவைத்தல் - நடுக்கட்டுதல்.
பொதுளல் } செழித்தல், நெருங்குதல்.
பொதுளுதல்
பொத்தலூசி - துளையூசி.
பொத்தல் - துவாரம், துளைத்தல், புரைதல், மூடுதல்.

பொத்தாறு } ஏர்க்கால்.
பொத்தாறுகட்டை }
பொத்தி-வாழைமுதலியவற்றின்காய்ப் பொத்தி. பிருகுக் கிழங்குத்தோற் பொத்தி.
பொத்திக்கரப்பன் - தண்டுக்கிரந்தி.
பொத்திக்காளான் - ஒருகாளான்.
பொத்திதள்ளுதல் - வாழை முதலிய பொத்திபோடுதல்.
பொத்திரை - பாழடைந்த அகழ்.
பொத்தி - ஆண்குறி, தவறு, புரைவு, பெண்குறி, பொத்தென்னேவல், பொந்து, பொய், மூடுதல்.
பொத்துதல்-அடித்தல், புரைதல், மூடுதல்
பொத்துப்பாய் - பருக்கன்பாய்.
பொத்துப்பொத்தெனல்-ஒலிக்குறிப்பு.
பொத்துமான்-ஒருவகைமான்.
பொத்தை - பருத்தது, மட்சிறுமலை.
பொத்தைக்கால் - யானைக்கால்.
பொத்தைச்சி - கும்மலி.
பொத்தையன்-நீர்ப்பிடியான சரீரமுள்ளவன்.
பொந்தர் - ஒருவகை நீர்ப்புள்.
பொந்தி - சரீரம், மரவாள், மொத்தி.
பொந்து - மரப்பொந்து, வங்கு.
பொந்தையக்கோல் - ஒருவகைப்பற்றுக் கோல்.
பொம்மலாட்டம் - பாவைக்கூத்து.
பொம்மலி - பருத்தவள்.
பொம்மல் - சோறு, பொம்மை, பொருமல், பொலிவு, மிகுதி.
பொம்மெனல் - அனுகரணவோசை.
பொம்மை - சிறுசுவர், பிரதிமை.
பொய் - அசத்தியம், இது தாமதகுணத் தொன்று, சிற்சிராய், பஞ்சபாதகத் துமொன்று, பொய்யென்னேவல், மரப்பொந்து, வேஷம்.
பொய்கை - குளம், கோட்டான்.
பொய்கையார்-ஒருபுலவன், கோச்செங் கட்சோழனாற்சிறைசெய்யப்பட்ட சேரமான் கணைக்காலிரும் பொறையைச் சிறைவிடும்பொருட்டு அந்தச் சோழனைக் களவழி நாற்பது என்னும் நூலாற் பாடியபுலவர், இவர் பிறந்த இடம்தொண்டிநகர், சேரமான் கோக்கோதையும் இவராற்பாடப் பட்டவனே.
பொய்கையாழ்வார் - ஒருவைணவாசாரியர்.
பொய்க்கடி - பருங்கடி.
பொய்க்கண் - கண்மண்டை.
பொய்க்கண்ணி-பிஞ்சுபிடியாதகண்ணி.
பொய்க்கண்ணுறக்கம் - குறைக்கணித்திரை.
பொய்க்கதை - கட்டுக்கதை.
பொய்க்கால் - போலிக்கால்.
பொய்க்கிளை - பிஞ்சுபிடியாதமுளை.
பொய்க்குதல்-பொய்சொல்லுதல், பொய்யாய்ப்போதல்.
பொய்க்குரல் - போலிச்சத்தம்.
பொய்க்குழி-நாற்றுநட்டகுழி, பொறிக்கிடங்கு.
பொய்க்கூடு - சரீரம், பொய்ச்சரீரம்.
பொய்க்கை-ஒருமீன், பொய்த்தல், போலிக்கை.
பொய்க்கோட்டை - பொய்ப்பிஞ்சு.
பொய்க்கோலம் - கரவேடம், போலிவேடம்.
பொய்சொல்லல் - தப்புப்பேசல் இது வாக்கின் தீக்குணநான்கினொன்று.
பொய்ச்சத்தம் - பொய்குரல்.
பொய்ச்சத்தியம் - பொய்யாணை.
பொய்ச்சாட்சி - கள்ளச்சாட்சி.
பொய்ச்சாதல் - மறத்தல்.
பொய்ச்சு-கொட்டைசுளையற்றது, பயனில்லது.
பொய்தல் - தோழி, மகளிர்கூட்டம், மகளிர் விளையாட்டு.
பொய்த்தலை - போலித்தலை.
பொய்ந்நீர் - கானல்.
பொய்படுதல் - பொய்யாதல்.
பொய்ப்பத்திரம் - கள்ளச்சீட்டு.
பொய்ப்படுதல் - பொய்படுதல்.
பொய்ப்பிஞ்சு - நிலையாப்பிஞ்சு.
பொய்ப்பு - பொய்த்தல்.
பொய்ப்பூ - பிஞ்சுபிடியாதபூ.
பொய்முயக்கம் - அன்பிலாக்கூட்டம்.
பொய்முளை - பொய்க்கிளை.
பொய்மூக்கு - உண்மூக்கு.
பொய்மை - கரவடம், பொய், பொய்வேஷம், மாயம்.
பொய்யடி - பகடம், வெருட்டு.
பொய்யடிமையில்லாதபுலவர்- மதுரைச் சங்கத்திலிருந்த கபிலர் பாணர் முதலியோர்.

பொய்யன் - பொய்சொல்வோன்.

பொய்யாணை - பொய்சத்தியம்.

பொய்யாதல் - பொய்சொல்லல்.

பொய்யாமை - தவறுமை, பொய்மொழி கூறுமை.

பொய்யாமொழி - சத்தியம்தவறுமை.

பொய்யாமொழிப்புலவர் - தெய்வப்புலவர், துறையூரிலே செங்குந்த குலத்திலேஅவதரித்துத் தமிழ்ப்புலமையும் சாபாநுக்ரஹமும்உடையராயிருந்தஒருதெய்வப்புலவர், அழிந்துபோன தமிழ்ச்சங்கத்தை மீட்டும் வளர்த்தல் வேண்டுமென்னும் பேரவாவுடையராய் வணங்காமுடிப் பாண்டியனிடஞ்சென்றனர். அவன் இவர்கருத்தையுணர்ந்து புலவரே சங்கம் தாபிக்குஞ்செய்தியைப்பற்றிப் பின்னேயோசிப்போம், இப்போது நமது சிவாலயத்திலே தாபிக்கப்பட்டிருக்கும் சங்கப்புலவர்களுடைய விக்கிரகங்களெல்லாம் தலையசைக்கும்படிப் பாடக்கடவீரென்றான். உடனேயிவர், "உங்களிலே யாரொருவரேனும்வேண்டுமென்னுமவல்லேனே- திங்கட்குலனறியச்செப்புங்கள், சங்கத்துப் பாடுகின்றமுத்தமிழ்க்கென் பைந்தமிழு மொக்குமோ, ஏடவிழ்தா ரேழெழுவீரே" என்னும் வெண்பாவைப்பாடினர், உடனே அந்தவிக்கிரகங்களெல்லாம் தலையசைத்தன. இந்தஅற்புதத்தைக்கண்டும் அப்பாண்டியன் இவரது விண்ணப்பத்தைப்பொருட்படுத்தானாயினன் அது கண்டு, புலவர் தமதுசோணாட்டை நோக்கி, பல்லக்கிலேறி மீண்டார், அப்போது பாண்டியன் மனைவியார் தமது பல்லக்கேறித்தொடர்ந்துபோயிறங்கி இவருடைய பல்லக்குச் சுமப்போருள் ஒருவராயினர். அதையறிந்த புலவர் நீ எமது பல்லக்குத் தாங்கப் புகுந்த கருத்தையறிந்தேம், யாம் வெகுண்டுஅரசனைச் சபிப்பேமல்லேம், அதற்கு நீ யஞ்சற்கவென்று அவ்வுத்தமியைத்தடுத்து, "உமையாளுநீயு மொருங்கொப்பேயொப்பே, உமையாளுக் கங்குண்டோருனம், உமையாடன், பாகந்தோய்ந்தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனின் ஆகந்தோய்ந்தாண்டானரசு" என்று வாழ்த்திப்போயினர். இவர் சோழராஜனது மந்திரியாகிய சீநக்கராயனுக்குப்பிரியாநண்பர், ஒருநாள் சீநக்கராயன் கட்டிலிலே அவனும் புலவருமாகவிருந்து பொழுதுபோய் பின்பு நெடுநேரம் அளவளாவிக்கொண்டிருக்கையில், புலவர் தமக்கு நித்திரைவந்ததென்று கூறி, ராயனைப் போஜநத்துக்குப் போம்படிசெய்து, அந்தக் கட்டிலின் ஒருபக்கத்தில் நித்திரை செய்தனர். ராயன் போஜநஞ் செய்துகொண்டு நிலாமணி மேடையிற்போய் சிறிதுநேரங்கழித்து மீளு முன்னே, ராயன்மனைவியும், அந்தக் கட்டிலிற் படுத்துறங்குகிறவரைத் தன் கணவனென்றெண்ணி ஒருபுறத்திற் படுத்துறங்கினாள், அதன்பின்பு ராயனும்போய் படுத்துறங்கினான், வைகறையிலே புலவர் முன்னேயெழுந்தார், அவ்வரவங்கேட்டு அரசனுமெழுந்தான், புலவர் தம்மருகேராயன்மனைவி படுத்துறங்குவதைக்கண்டு துணுக்குற்று ராயனைநோக்கி, என் செய்தாய் என்றனர், ராயன் அவரை நோக்கி, "அஞ்சாதீர் இப்போதெழுந்திருக்கவேண்டாம் சொல்லக் கிடமின்" என்றான். மனைவி அவ்வொலிகேட்டுப் பதைத்தெழுந்தோடி அந்தப்புரஞ் சேர்ந்தாள்.

ராயன் புலவரைநோக்கி, என் மனையாளைமாத்திரமன்று, உலகத்துப்பெண்களெல்லாரையும் தாய்மாராகக்கொண்டு போற்றுகின்ற உமது பக்கத்திலே யென்மனையாள் படுத்துறங்கினதை யெனது பெரும்பாக்கியமாகக் கொண்டேன் என்றான். அன்று முதலாகப் புலவரும் ராயனும் ஈருயிரும் ஒருடலும் போன்று ஒழுகினர். இவர் சீநக்கராயனிறந்தபோது சோழன் தடுக்கவுங் கேளாமல் மேல்வருங்கவிகளைக்கூறி உடன் கட்டை யேறினர்.

"வாழிசோழ வென்வாய் மொழிகேண்மோ, ஊழிநிலவெறிமாளிகையின்வயிற், கட்டிளங்கணவன் கவின்

பெறசேக்கை, என்றறி மனைவி நெடிது துயில்கொளச், செல்லக்கிடமி னெனக்கிடந்தருகெனச்,சொல்லிய நண்பன் றனிச்செல்பவனே, நானுமேகுவ னற்றுணையவற்கே"

"அன்று நீசெல்லக்கிட வென்றுயாயிழையோ, டின்று நீவானுலகமேறிஞய், மன்றல்கமழ், மாளுக்கும் வேல்விழியார் மாரனே கண்டியூர்ச், சீனக்காசெல்லக்கிட"

இப்புலவர் பெருமானே தஞ்சைவாணன் கோவைபாடினவர், அந்தக் கோவையிலுள்ள சொற்சுவை பொருட்சுவை முதலியவற்றையெடுத்துச்சொல்ல வல்லார்யாவர், இவர்தொண்டைநாட்டிலும் சிறிதுகாலம் வசித்தவரென்பதும்அக்காலத்தில் முருகக்கடவுள் தம்வாயால், "விழுந்ததுளியந் தாத்தேவே மென்றும்" என னுமுதற்குறிப்புள்ள வெண்பாப் பாடப்பெற்றவரென்பதும்தொண்டை மண்டல சதகத்தால் உணரப்படும். இவர் அதிவீரராமபாண்டியனுக்குச் சற்றுமுன்னேயிருந்த வணங்காமுடி பாண்டியன்காலத்தவராதலால் இவர்காலம் ஏறக்குறைய ஆயிரவருஷங்களுக்கு முற்பட்டது. திருவள்ளுவ நாயஞர்.

பொய்யுடல் - நிலையற்றவுடல்.
பொய்யுறக்கம் - குறைநித்திரை.
பொய்வார்த்தை - பொய்ப்பேச்சு.
பொய்வாழ்க்கை - அநித்தியவாழ்வு.
பொய்வாழ்வு - பொய்வாழ்க்கை.
பொய்வேஷம்-காவடவேஷம்,போலிக்கோலம்.
பொரி-சரிகாடு,நெற்பொரி முதலியன, பொரியென்னேவல்.
பொரிகாரம் - வெண்காரம்.
பொறிக்கறி - பொரியல்.
பொரிதல்-எரிச்சற்படுதல்,தீதல், பொரியாதல், பொருக்குவெடித்தல்.
பொரித்தல் - அலப்பல்,குஞ்சுபிறப்பித்தல், பொரியச்செய்தல், வறுத்தல்.
பொரிபொரிச்சான் - வெடிபலவன்,
பொரிமலர் - புன்கு.
பொரிப்பூண்டு-கரப்பான்பூண்டு, வயற்சுள்ளி.
பொரிமா - பொரியரிசிமா.
பொரிமாச்சிந்தி } வீணெண்ண மெ
பொரிமாத்தட்டி } ண்ணுவோன்.
பொரியரிசி - பொரித்தரிசி.
பொரியல் - பொரிக்கறி, பொரிதல்.
பொரிவிளங்காய் - பொரிமாத்திரளை.
பொரிவு - சிலிர்ப்பு.
பொருகளம் - போர்க்களம்.
பொருகு - சோறு.
பொருக்காங்கட்டி - பொருக்குமண்கட்டி.
பொருக்கு - செதிள், தகட்டுவடிவாய் வெடிக்கும் வண்டு.
பொருக்கெனல் - சீக்கிரக்குறிப்பு.
பொருட்காட்சியணி - ஓலங்காரம். அதுஒன்றன்செய்கையிஞ னற்பொருளையாயினுந் தீப்பொருளை யாயினுந் தெரிவித்தல்.
பொருட்குறைவிசேடம் - பொருட்குறைவிஞல் விசேடித்துக் காட்டுவது (உ-ம்) இருநாழிநெற்கொண்டுயிரளைத்தமூட்டும்.
பொருட்சிதைவு - பொருட்சேதம்.
பொருட்சிறப்பு - அருத்தாலங்காரம்.
பொருட்சுவை - அருத்தரசம்.
பொருட்செல்வம் - திரவியசம்பத்து.
பொருட்செல்வி - இலக்குமி.
பொருட்டிரிபு-கருத்துத்திரிபு.
பொருட்டு - காரணம், நிமித்தம், மேம்பட்டது.
பொருட்டொடர்நிலைச்செய்யுள் - ஒரு பிரபந்தம் அது பொருளாற்றொடர்ந்துவருவது.
பொருட்படுதல் - பயன்படுதல்.
பொருட்படுத்தல் - ஒரு பொருளாகமதித்தல், பயன்படுத்தல்.
பொருட்பால் - பொருளின்பகுதி.
பொருட்பிறிதின்கிழமை - தன்னேடொற்றுமையில்லாப்பொருள்(உ-ம்) குமரன் வேல்.
பொருட்பின்வருநிலை - மொழிந்தபொருளே பொருளாயினுஞ் சொல்வேருய் வருவது.
பொருட்பெண்டிர் - வேசிகள்.
பொருட்பெற்றி - பொருளின்குணம்.
பொருட்பேறு - திரவியலாபம்.
பொருணயம் - கருத்து, நயப்பு.
பொருணி - கள்.

பொருணிலை - பயனிலை.
பொருண்முடிவு - கருத்துமுடிவு.
பொருண்மை - பொருட்டன்மை.
பொருதல்-அலைமோதல், ஒப்புதல், தும்மை, பொருந்தல், போர்செய்தல், இது அரசாறு தொழிலினொன்று.
பொருதுதல் - பொருத்தல்.
பொருத்தக்கடுதாசி-உடம்படிக்கைக் கடுதாசி.
பொருத்தமின்மை - இணக்கமின்மை.
பொருத்தம் - இணக்கம், தகுதி, பொருத்தனை.
பொருத்தல் - பொருத்துதல்.
பொருத்தனை - நேர்த்திக்கடன், பொருத்தம்.
பொருத்து - இணக்குகை,இசைப்பு,சந்து,பொருத்தென்னேவல், மரக்கண், மூட்டு.
பொருத்துதல் - அமைத்தல், பொருந்தச்செய்தல்.
பொருத்தோலை - பொருத்தச்சீட்டு.
பொருநாற்றுப்படை - ஒருநூல். முடத்தாமக் கண்ணியாரால் பாடப்பட்ட ஒரு பிரபந்தம், இது பத்துப்பாட்டுளொன்று.
பொருநர்-அரசர்,கூத்தர்,நாடகர்,படைத்தலைவர், படைவீரர், புகழ்வோர்.
பொருநன் - அரசன்,குறிஞ்சிநிலத்தலைவன், திண்ணியன், நாடகன், படைத்தலைவன், படைவீரன்.
பொருநுதல் - உடன்படல்.
பொருநை-தாமிரபரணியாறு, தாமிரபர்ணிநதி, இது பாண்டிநாட்டிலுள்ளது. இது சேரநாட்டுக்குரிய தென்டாருமுளர்
பொருநைத்துறைவன் - சேரன்.
பொருந்தநதி - சூதநதி.
பொருந்தம் - பொருநை.
பொருந்தர் - நெய்வார், மேதாவர்.
பொருந்தலர் - பகைவர்.
பொருந்தல் - அடுத்தல், அமைதல், இயைதல், கலத்தல், சம்மதித்தல்.
பொருந்தாமை - இயையாமை, வெறுப்பு.
பொருந்தார் - பகைவர்.
பொருந்துதல் - பொருந்தல்.
பொருபுவி - பாலைநிலம், போர்க்களம்.
பொருபொருத்தல் - அறத்தீதல், மனவெரிச்சற்படல்.
பொருபொரும்பான் - ஒருமரம்.
பொருபொரெனல் - ஒலிக்குறிப்பு.
பொருப்பரையன் - மலையரையன்.
பொருப்பரையன்பாவை - பார்வதி.
பொருப்பன் - குறிஞ்சிநிலத்தலைவன்.
பொருப்பு - கொல்லிமலை, மலை.
பொருப்புவில்லான் - சிவபிரான்.
பொருப்பேந்தி - கிருஷ்ணன்.
பொருமலி - கொழுத்தபெண்.
பொருமல் - பொருமுதல், வயிற்றுப்பொருமல்.
பொருமுதல் - அழுதல், ஊறிக்கசிதல், வீங்கல்.
பொரும்பி - சுழலாவாரை.
பொருவ - உவமவுருபு.
பொருவாய் - ஒருமீன்.
பொருவு - உவமை, குற்றம், பொருவென்னேவல்.
பொருவுதல் - ஒப்பல்.
பொருளகத்திணை -தனக்குறுப்பெனப் பலவற்றையுடக்கிக்கொள்வது.
பொருளணி - பொருளான் வருமலங்காரம்.
பொருளந்தாதி - ஈற்றுப்பொருளை முதற்பொருளடியாகப்பாடல்.
பொருளவனுதி - பொருளானுயர்பு தோன்றக்கூறு மலங்காரம்.
பொருளாகுபெயர் - முதற்பொருளின் பேரைச் சினைப்பொருட்கு வழங்குவது (உ-ம்) மரையிதழ்.
பொருளாசை - திரவியவாஞ்சை.
பொருளாலணையும்பெயர் - சுற்றம்என் குழூஉ பொருண் முதலியவற்றான் வரும் பெயர்.
பொருளானந்தம் - சொற்பொருட்குற்றம்.
பொருளிலக்கணம் - அறம்பொருளின்ப மென்பவைகளை விளக்கு மிலக்கணம் இதுபஞ்சலட்சணத்தொன்று.
பொருளின்பம் - பொருட்சுவை.
பொருளீட்டல் - பொருள் சம்பாதித்தல் இது சூத்திரர் வைசியர்க்குரிய அறதொழிலினொன்று.
பொருளுவமம் - பொருட்டன்மையையுவமிப்பது (உ-ம்) நீர்போலுந் திருவுள்ளம்.

பொருள் - அருத்தாபத்தி, உடமை, உண்மை, குணம், சம்பத்து இது நூற்பயனென்கி னென்று, சொற்பொருள், தலைமை, பணம், பலபண்டம், பிள்ளை, பொன், வஸ்து.
பொருள்கோள்-ஆசுரமணம், பயனிலை.
பொருள்பண்ணுதல் - அருத்தம் பண்ணுதல், மதித்தல்.
பொருள்வயிற்பிரிவு - அகப்பொருட்டுறையினென்று.
பொருள்விலக்கு ஓரலங்காரம் அது குறித்தபொருளை மறுத்துக்கூறுவது.
பொருள்விளங்கவைத்தல் - அருத்தம் விளங்கவைத்தல் இது நூற்குணம் பத்தினென்று.
பொருள்வீடு - பொருட்பற்றறுதல்.
பொருனன் - பொருநன்.
பொருனை - பொருநை.
பொலங்கலம் - ஆபரணம்.
பொலந்துறவு - பெருந்தவம்.
பொலம் } அழகு, பொல்லாங்கு, பொ
பொலன் } ன், பொன்மைநிறம், மேன்மை.
பொலி - தூற்றுநெல், பொலியென்னேவல்.
பொலிகடா - பொலியெருது.
பொலிக்கந்து - பொலியருகிற்கந்து
பொலிக்கடா - பட்டிக்கடா.
பொலிக்கடை - பொலியெருது கட்டுங்கட்டை.
பொலிக்கொடி - வைக்கோல்.
பொலிசை - இலாபம்.
பொலிதல் - அதிகரிப்பு, அழகு, எழுச்சி, சிறத்தல், தாராளம், பருமை, புணர்தல், மிகுதல்.
பொலிதூற்றுதல் - தானியந்தூற்றல்.
பொலிநடையன் - பொலியெருது.
பொலியளவு - நிறையளவு.
பொலியெருது - போரடிக்கிற எருதுகளிற் பொலிகட்டைக்கடுத்த எருது, மாப்பிள்ளை, மாடு.
பொலிவு - அழகு, பொலிதல்.
பொலுகுதல் - நீர்பறிதல்.
பொலுபொலுத்தல் - உதிருதல்.
பொலுபொலுப்பு - உதிர்வு.
பொலுபொலெனல் - பொலுபொலுத்தல்.
பொல் - பொல்லு.
பொல்லம் - துண்டு, தைத்தல்.
பொல்லர் - சக்கிலியர், செம்மார், தையற்காரர்.
பொல்லன் - பொல்லான்.
பொல்லாங்கு - ஈனம், தீங்கு, மறதி.
பொல்லாது - பொல்லாதது.
பொல்லாநடை - தீநடை.
பொல்லாநிலம் - நரகம், மயானம்.
பொல்லாப்பிள்ளையார் - அபய குலசேகர சோழராஜன் கொண்டுபோய்க் கொடுக்க, நம்பியாண்டார் நம்பியென்னும் ஆதிசைவப் பிராமணர் வாங்கி நிவேதித்த பழம் அவல் எள்ளுண்டை முதலியவற்றைத் தமது துதிக்கையை நீட்டி யெடுத்துத் திருவமுதுசெய்த விநாயகமூர்த்தி, இந்த மூர்த்தி திருநாரை யூரிலுள்ளது.
பொல்லாப்பு - பொல்லாங்கு.
பொல்லாமணி - பொள்ளாமணி, துளையிடாதமணி.
பொல்லாமை - பொல்லாங்கு.
பொல்லார் - தீயோர்.
பொல்லு - ஊன்றுகோல், தடி, பதர்.
பொழிதல் - ஈதல், சொரிதல், மழைபெய்தல்.
பொழிப்பளபெடை - முதற்சொற்கண்ணும் மூன்றாஞ்சொற்கண்ணு மளபெடைவரத் தொடுப்பது.
பொழிப்பியைவு - முதற் சீர்க்கண்ணும் மூன்றாஞ்சீர்க்கண்ணும்இயைபுவரத் தொடுப்பது.
பொழிப்பு - அனுமானம், குறிப்பு, சுருக்கம், தொகைப்பொருள்.
பொழிப்புத்திரட்டல் - பொழிப்புரையுரைத்தல்.
பொழிப்புத்திரட்டு - பொருட்டொகுப்பு.
பொழிப்புமுரண் - முதற்சீர்க்கண்ணும் மூன்றாம்சீர்க்கண்ணும், முரண்வரத் தொடுப்பது.
பொழிப்புமோனை - முதற்சீர்க்கண்ணு மூன்றாஞ்சீர்க்கண்ணு மோனைவரத் தொடுப்பது.
பொழிப்புரை - பொருடொகுத் துரைக்குமுறை.
பொழிப்பெதுகை-முதற் சீர்க்கண்ணும் மூன்றாஞ்சீர்க்கண்ணும் எதுகைவரத் தொடுப்பது.

பொழில் - உலகப்பொது, சோலை, நாடு, பூந்தோட்டம், பூமி, பெருமை.
பொழிவு - பலன், புகழ்ச்சி, பொழிதல், மேன்மை, வருமானம்.
பொழுதறுதி - அத்தமனபரியந்தம்.
பொழுதிற்கூடல் - பொழுதொடுபுணர்தல்.
பொழுது - காலம், சூரியன்.
பொழுதுசாய்தல் - பொழுது மதியந்திரும்பல்.
பொழுதுபடுதல் - சூரியனத்தமித்தல்.
பொழுதுபுகுதல் - பொழுதத்தமித்தல்.
பொழுதுபோக்கல் - பொழுதுகழிய விளையாடல்.
பொழுதுபோக்கு - பராக்கு, பாராட்டு.
பொழுதுபோக்குதல் - காலம்விடுதல், பராக்குப்பண்ணல்.
பொழுதுவணங்கி - சூரியகாந்தி.
பொழுதுவிடிதல் - சூரியனுதித்தல்.
பொழுதுவிடுதல் - பொழுதுபோக்குதல்
பொழுதொடுபுணர்தல் - வணிகரெண்குணத்தொன்று.
பொளி - துளை, கண்வெட்டி வெட்டு, வரம்பு.
பொளிதல் } கன்முதலிய கோதல்,
பொளிவு } துளைசெய்யல்.
பொள்ளல் - அப்பவருக்கம், தழும்பு, பொத்தல், பொளிதல், மரப்பொந்து
பொள்ளாமணி - துளையாமணி, சுயம்புமணி.
பொள்ளுதல் - பொந்துபோதல்.
பொள்ளெனல் - அனுகரணவோசை, சீக்கிரக்குறிப்பு, சீக்கிரம்.
பொறாமை - எரிச்சல், தரியாமை.
பொறி - அடையாளம், அறிவு, இயந்திரம், இலக்குமி, இலிபி, எழுத்து, கைவரை, செல்வம், தீப்பொறி, தேமல், தேர், புலப்பொறி, புள்ளி, பொருள், பொலிவு, பொறி, பொறியப்படுவது, பொறியென்னேவல், பொறிவு, மதிலுறுப்பு, மரக்கலம், முத்திரை.
பொறிக்கல் - சிலாநாகக்கல், சுக்கான்கல்.
பொறிக்குதல் - பொறித்தல்.
பொறிதல் - கலைதல், சரிதல், சதுக்குதல், பறிதல், விழல்.
பொறித்தட்டுதல் - கண்மின்னுதல், பறிதல்.
பொறித்தல் - எழுதல், சித்திரமெழுதல், பொறியச்செய்தல்.
பொறிப்பு - பொறித்தல்.
பொறியார்த்தல் - கண்மின்னுதல்.
பொறியிலார் - அதிட்டகீனர், கீழ்மக்கள்.
பொறியிலி - அறிவிலி, விதிகேடன்.
பொறியேற்றுதல் - பொறிவைத்தல்.
பொறிவு - சாய்ந்தபதிவு, தொங்குபறிவு, பொறிதல்.
பொறுக்கல் - தாங்குதல், பெறுக்கல்.
பொறுக்கி - பொறுக்கல்.
பொறுக்குதல் - பொறுக்கல்.
பொறுக்கு - பொறுக்கி, பொறுக்கென்னேவல்.
பொறுதி - ஒய்வு, தணிவு, தாமதம், பொறுமை, மன்னிப்பு.
பொறுத்தல் - தறித்தல், தாங்குதல், பொறுமை, மன்னித்தல்.
பொறுப்பாளி - பொறுப்புக்காரன்.
பொறுப்பானவன் - பிரதானமானவன்.
பொறுப்பித்தல் - சுமத்துதல்.
பொறுப்பு - சென்மானம், தகுதி, பாரம், பிரதானம், பொறுத்தல், பொறுமை.
பொறுமை - சகிப்பு, பொறுதி.
பொறை - கருப்பம், சலதாரை முதலிய வடைக்குங்கல், சிறுமலை, சுமை, பாரம், பூமி, பொறுமை இது பெரியோரியல்பு ளொன்று, சாத்துவிககுணத்துமொன்று, மலை.
பொறைசாலி - பொறுதிக்காரன்.
பொறையன் - சேரன், தருமராசன்.
பொறையிலார் - பூமிபர், வேடர்.
பொறையுயிர்த்தல் - பாரங்கழித்தல், மகப்பெறுதல்.
பொற்கசை - பொற்கம்பி.
பொற்கணக்கு - பொன்னிறையளவு.
பொற்கண்டை - பொற்கெண்டை.
பொற்கம்பி - பொன்னின்கம்பி.
பொற்கலம் - பொன்பாத்திரம்.
பொற்கலை - பொன்வஸ்திரம்.
பொற்காசு - கொள்ளு, பொன்னின்காசு.
பொற்காரை - ஒருகழுத்தணி.
பொற்குவை - பொன்குவியல்.
பொற்கொல்லன் - கம்மாளன்.
பொற்சபை - கநகசபை.
பொற்சரக்கு - உயர்ந்தசரக்கு.
பொற்சரிகை - பொன்னூல்.
பொற்சிலை - பொன்மலை.
பொற்சீந்தில் - ஒருசீந்தில்.

பொற்சுண்ணம் - பொற்றூள்.
பொற்ப - பொற்புக்கொள்ள.
பொற்பணதி - பொன்ஞபரணம்.
பொற்பராகம் - பொற்பொடி.
பொற்பணி - பொன்ஞபரணம்.
பொற்பாளம் - பொற்சலாகை.
பொற்பிரகாசம் - பொன்ஞெளி.
பொற்பு - அலங்கரிப்பு, அழகு, ஒப்பனை, பொலிவு, மிகுதி.
பொற்புறுத்தல் - அலங்கரித்தல்.
பொற்பூ - பொன்மலர்.
பொற்பூச்சு - மலாம்பூச்சு.
பொற்பூண் - பொன்ஞபரணம்.
பொற்பூவராகன் - ஒருவராகன்.
பொற்பொருப்பு - மேருமலை.
பொற்றகடு - பொன்னின்றகடு.
பொற்றலைக்கரிப்பான் - பொற்றலைக்கையாந்தகரை.
பொற்றலைக்கையாந்தகரை - ஒருகையாந்தகரை, மஞ்சள் கரிசிலாங்காணி.
பொற்றூது-பொற்றலைக்கையாந்தகரை
பொற்றாமரை - பொன்னுருவத்தாமரை, மதுரையிலோர் தீர்த்தம்.
பொற்றிக்கீரை - ஒருகீரை. [ன்.
பொற்றேகராசம் - பொற்றலைக்கரிப்பான்.
பொற்றை - சிறுதூறு, சிறுமலை, மலை.
பொற்றொடி - பெண், பொன்வளை.
பொன் - அழகு, இரும்பு, இலக்குமி, ஒருநாணயம், சூரியன், பஞ்சலோகப்பொது, பிரகாசம், பொலிவு, பொன், வியாழம்.
பொன்காத்தபூதம் - புதையல்காத்தபூதம்.
பொன்செய்கொல்லர் - தட்டார். [ம்.
பொன்பற்றியூர்ப் புத்தமித்திரஞர்-வீரசோழன் காலத்துலேயிருந்து அவன் பெயரால் வீரசோழியம் என்னுமிலக்கண நூல் செய்தவர்.
பொன்புனைதல் - அகப்பொருட்டுறையினென்று. [தல்.
பொன்பூணுதல்- கடுக்கன் முதலியவணி
பொன்மணி-பொன்னினுற்செய்தமணி
பொன்மயம் - பொற்பிரகாசம். [றை
பொன்மயிர்க்கொன்றை - ஒருகொன்
பொன்மயிலம்பிகை - திருப்பராய்த்துறையிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
பொன்மலாம் - பொற்பூச்சு.

பொன்மலை - திருச்சிஞப்பள்ளியில் தாயுமானவர் மலை, மாமேரு.
பொன்மழை - புட்கலாவர்த்தமுகில் பொழியுமழை.
பொன்முசுட்டை - பங்கம்பாளை.
பொன்முடியார் - கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்.
பொன்முழை - பொற்காசினச்சு.
பொன்மெழுகு - ஒருமெழுகு.
பொன்மை - பொன்னிறம்.
பொன்வண்டு - பொன்னிறவண்டு.
பொன்வண்ணத்தந்தாதி - சேரமான் பெருமான் செய்த ஒரு அந்தாதி.
பொன்வலயம் - பொன்வளையம்.
பொன்வன்னக்காரிளை - கெந்தகம்.
பொன்வாய்ப்புள் - சிச்சிலிக்குருவி.
பொன்வானம் - பித்தளைமலை.
பொன்வித்து - நாகமணல்.
பொன்விலை - அரியவிலை.
பொன்விலைமகளீர் - வேசையர்.
பொன்விளைந்தகளத்தூர் - ஒரூர்.
பொன்வினைமாக்கள் - தட்டார்.
பொன்றல் - அழிதல், குறைதல், சாத
பொன்றூவல்லி - சீந்திற்கொடி. [ன்.
பொன்றுதல் - பொன்றல்.
பொன்னகர்-சுவர்க்கம், தேவலோகம்.
பொன்னகர்க்கிறைவன் - இந்திரன்.
பொன்னகை - பொன்ஞபரணம்.
பொன்னத்துப்பெட்டி - தாலி கூறைவைத்துக்கொண்டு போகும்பெட்டி.
பொன்னப்பிரகம் - ஓரப்பிரகம்.
பொன்னம்பர் - ஒருமருந்து.
பொன்னரிதாரம் - ஓரரிதாரம்.
பொன்னரிமாலை } ஒரு ஆபரணம்.
பொன்னரியமாலை }
பொன்னவண்டு - பொன்னிறவண்டு.
பொன்னவன் - இரணியன், வியாழன்.
பொன்னன் - அருகன், பொன்னுடையவன்.
பொன்ஞங்கண்ணி - பொன்ஞங்காணி.
பொன்ஞங்காணி - ஒருகீரை.
பொன்ஞசை - திரவியவாஞ்சை அது ஆசை மூன்றினென்று.
பொன்ஞங்கொட்டை - பூவந்தி.
பொன்ஞந்தட்டான் - ஒருபட்சி.
பொன்ஞபரணம் - பொன்னகை.
பொன்ஞம்பனம் - நெய்கொட்டான்.

பொன்னுவிரை - ஒருசெடி.

பொன்னி - எட்டாம்பாட்டன், காவே

பொன்னித்துறைவன் - சோழன். [ரி.

பொன்னிமிளை - ஒருகல்.

பொன்னிலம் - தேவலோகம்.

பொன்னிறமாட்சி - பொன்னிமிளை.

பொன்னுக்குவீங்கி - கூகைக்கட்டு.

பொன்னுச்சாமித்தேவர் - புதுக்கோட்டைச் சிவஞானத்தேவர் புதல்வராகிய இவர், சேதுபதி சமஸ்தானத்துச் சர்வாதிகாரியாகி அந்த ராஜராஜாங்கத்தைச் சீர்ப்படுத்தி நன்னிலையி லுய்த்தவர், முற்காலத்தில் தாராநகரத்திலிருந்து சம்ஸ்கிருதபாஷையை வளர்த்த போஜராஜனே இக்காலத்தில் தமிழையும் வளர்க்க இப்பொன்னுச்சாமித்தேவராக அவதரித்தாரென்று புலவர் நாவினும் பாவினும் போற்றற் குறியாய் விளங்கிய ராஜபண்டிதர், இவர் ஒருவரே தமிழ்ப்புலமை சிவநேசம், ராஜதந்திரம் பெருங்கொடை முதலிய நற்குண சமூகத்துக்கு ஆகரமா யிருந்து விளங்கினவர், இவர் குமாரர் மதுரைத் தமிழ்ச் சங்கஸ்தாபகராகிய பாண்டித்துரைத் தேவர்.

பொன்னுருக்குதல் - பொன்னை நீராக்

பொன்னுரை - தேய்மானம். [குதல்.

பொன்னுலகு - தேவலோகம்.

பொன்னூமத்தை - ஒருமத்தை.

பொன்னூல் - பொன்னாற்சமைச்சுநூல்

பொன்னெயில்வட்டம் - அருகனிருக்குமிடம்.

பொன்னெயிற்கோன் - அருகன்.

பொன்னேரி - ஒரூர்.

## போ



போ - அசைச்சொல் (உ-ம்) பிரியின் வாழாதென்போ, ஒரெழுத்து, போவென்னேவல்.

போககிருகம் - வசிக்கும்வீடு.

போககுஞ்சம் - பணயம்.

போகடல் - போகவிடல்.

போகடிபோக்கு - வந்தவாகு.

போகணி - ஒருபாத்திரம்.

போகண்டன் - ஐந்துவயசு தொடங்கிப் பதினாறு வயசுக்குட்பட்டவன்.

போகஸ்தானம் - ஆனந்த மயகோசம், உடல்.

போகஸ்த்ரீ - பொதுப்பெண்.

போகபதி - அதிபதி.

போகபாலன் - அசுவரக்ஷகன்.

போகபிசாசிகை - பசி.

போகபிருதன் - கூலிக்காரன்.

போகபூமி - கருமலபூமி, தேவலோகம், நல்வினைப்பலனை யனுபவிக்கும் பதவி, விளைநிலம்.

போகபோக்கியம் - அனுபவவின்பம்.

போகமார்த்தபூண்முலைநாயகி - திருநள்ளாற்றிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

போகம் - அனுபோகம், இன்பம், கூலி, செல்வம், தின்றல், பணயம், பாம்பின்படம், பாக்கியம், பாம்பினுடல், பாம்பு, பிரயோசனகாலம், வளர்த்தல், விளைவு.

போகம்பண்ணுதல் - அனுபோகித்தல், புணர்தல்.

போகர்-ஒருசித்தர்,இவர்சாதியிற்சீனர், புத்தசமயத்தர், ஆசிரமத்தால் துறவி, இற்றைக்கு ஆயிரத்தறுநூறு வருஷங்களுக்கு முன்னே சீனதேயத்திலிருந்து பாரத வருஷத்துக்கு வந்து பாடலிபுரம் கயா முதலிய விடங்களை தரிசித்துக்கொண்டு, தக்ஷிணதேசத்திலும் சோழபாண்டி நாடுகளுக்குச் சென்று அங்கே நெடுங்காலம் வசித்து ஆங்காங்குள்ள பண்டிதர்களிடத்தில் தாமறியாதவற்றைக் கற்றும் அவரறியாதவைகளை அவருக்குக் கற்பித்தும் மீண்டு சீனதேசத்தை யடைந்தவர், இவரிடத்தில் வைத்தியங்கற்ற மாணக்கர் ஒருவர் அவர் கூறிய முறைகளைச் செய்யுளுருவமாகப்பாடிப் போகர் நூலெனப் பெயர் புனைந்தார், பிற்காலத்து வைத்திய பண்டிதர்களும் தாமநுபவத்தாலறிந்த முறைகளைப்பாடிக் காலந்தோறும் அந்த நூலில் நுழைத்தும் விட்டார்கள், பிறகு அச்சிடப் புகுந்தோறும் கூட்டியும் திருத்தியும்

மாற்றியும் அதனை அடியோடு பிறழ வைத்தார்கள்.

இவர் சீன தேசத்துக்கு மீண்டு சென்றபோது இவருக்கு மாணாக்கராகச்சிலதமிழரும் உடன்சென்றார்கள் அப்பொழுது தஞ்சாவூர் பிருகதீசுவரன்கோயில் விமானத்துக்கபாலக்கல் சிற்பவேலைமுடிந்தும் அந்தச் சிற்பி யிறந்தமையால் நெடுங்காலமாக விமானவேலையில் பழுதுருவண்ணமேற்று முபாயந்தேர்ந்து கொள்ளப்படாமற் கிடந்தது, அவ்வளவேயன்று, நாகப்பட்டினத்துப் புதுவெள்ளிக்கோபுரத்துச் சக்கரத்தை நிறுத்தி அந்தக் கோபுரத்துள்ளே வைக்கப்பட்டு நெடுங்காலமாய்க் கிடந்த பொற்குவையையும் எடுக்கும் வகை தெரிந்து கொள்ளப்படா திருந்தது, இந்தச் செய்தியைப் போகரோடு சென்ற சீடர்வாய்க் கேட்ட சீன தேசத்துச் சிற்பிகளுள் ஒருவன் அந்தப் பெரிய கபாலத்தை யேற்றுதற்கு அவ்வூரில் பஞ்சுப்பொதியில் லையாவெனறும் அச்சக்கரத்தைத் தடுக்க வாழைத்தண்டு இல்லாதொழிந்ததாவென்றும் சொல்ல, அது கேட்ட தமிழருளொருவனாகிய கைக்கோள னொருவன் வேறொருவருமறியாமல் சோழநாட்டையடைந்து அரசனுக்கறிவிக்க, அரசன் பஞ்சை விமானத்தளவாகக் குவித்து அந்தக் கல்லை யேற்றுவித்தான் என்றும், வாழைத்தண்டை யிட்டுச் சக்கரத்தை நிறுத்திப் பொற்குவையைக் கவர்ந்து திருவரங்கத்து சத்தப் பிராகாரத் திருப்பணியை முற்றுவித்தானென்றும் ஒரு கர்ண பாரம்பரியமுண்டு.

புலிப்பாணியென்பவர்போகரோடு சீனதேசத்திலிருந்து வந்து அவர் மீளும்போது அவருடனே போகாமல் தமிழ்நாட்டிலேயே தங்கி விட்டவர், அவர் பாடலொன் றுள்ளன யாவும் அவரால் பாடப்பட்டனவன்று, அதுவும் புரட்டு நூலேயாம், இவர் வைத்தியமும் சாலவித்தையும் கைவந்தவர், தமிழ்நாட்டுக்கு ஆதியிலேயே வைத்திய நூல்கள் உபகரித்தவர்கள், அகஸ்தியர் தேரையர் முதலியோர்களே அவர்களுள்ளே பெரும்பாலன அழிந்தன வேனும் எஞ்சி நின்ற சில நூல்களை நோக்குமிடத்து அவை யாவும் வடநூல் களுக்கிணக்கமா யிருப்பது பிரத்தியக்ஷமாகும், போகர் புலிப்பாணி நூல்களோடு சிறிதுமொவ்வா.

போகல் - உயர்ச்சி, செல்லல், நீளம்.

போகவதி - நல்லனுபவமுடையவள், நாகலோகம், பாதாள நதி, வாசுகி ராஜதாநி.

போகவாஞ்சை - அனுபோகப்பிரியம்.

போகாங்கபூசை - சிவகணதிபர்க்குச் செய்யும பூசை.

போகார்க்கம் - பாக்கியம், செல்வம்.

போகாவலி - கட்டியம், புகழ்ச்சி.

போகாவாசம் - அந்தப்புரம்.

போகி - அரசன், இந்திரன், ஒருபண்டிகை, கார்போகிவிதை, சுகமனுபவிப்போன், சௌளகன், தலைமைக்காரன், பாம்பு, பிரபஞ்சவியாபாரி, போகியென்னேவல்.

போகிகன் - குதிரைக்காரன்.

போகிகாந்தம்-காற்று, குதிரைக்காரன்.

போகிசயனம் - சர்ப்பசயநம்.

போகிசயநன் - திருமால்.

போகித்தல், போகிப்பு } அனுபவித்தல், அநுபோகம், புணரல்.

போகில்-கொப்பூழ், பறவை,பூவரும்பு.

போகிவல்லபம் - சந்தனம்.

போகிவாசம் - சந்தனமரம்.

போகீசன் - ஆதிசேஷன்.

போகீந்திரன் - அனந்தன்.

போகு - நெடுமை.

போகுதல் - அழிதல், செல்லல், நீளம், நேர்மை, மாறுதல்.

போகை - போதல்.

போக்கடி-அழிவு, சுயேச்சை, நட்டம், போக்கடியென்னேவல், வழிச்செலவு.

போக்கடித்தல் - அழித்தல்.

போக்கணங்கேடு - இலச்சைக்கேடு.

போக்கணம்-இலட்சை, கட்டுச்சோறு.

போக்கல் - போக்குதல்.

போக்கன்-துஷ்டன், பரதேசி, வழிச் செல்வோன்.

போக்காடு - சாவு.
போக்காட்டுதல் - அனுப்புதல்.
போக்கி - பரதேசி.
போக்கிடம்-ஒதுங்குமிடம்,சேர்கதி.
போக்கியப்பொருள்-அனுபவப் பொருள்.
போக்கியம் - அனுபவப்பொருள் அனுபவம், செல்வம்.
போக்கியல் - சுரிதகம்.
போக்கியார்-கடைச்சங்கப்புலவருளொருவர்.
போக்கிரி - போக்கிலி, துர்மார்க்கன்.
போக்கிலி - கதியற்றவன், நாணயமில்லாதவன்.
போக்கு - அறையிருப்பு, சாட்டு, சாவு, பழக்கம், போகுதல், போக்கென்னேவல், யாதொன்று செல்லுந்துவாரம், வழி, விதம்.
போக்குதல் - அழித்தல், அனுப்புதல், செலுத்தல், விடுதல்.
போக்குநீக்கு - ஊடுவெளி, பழக்கம், விபரம்.
போக்துரு - புசிப்பவர்.
போங்காலம் - அழிவுகாலம்,சாங்காலம்.
போங்கு - போக்கு.
போஜகடகம் - நர்மதா நதிக் கரையிலுள்ள வொருபட்டணம்.
போசக்கை - மாயம், வெளிப்போலி, வெளியலங்காரம்.
போஜசம்பு - ஒரு சமஸ்கிருத காவியம், இது போஜராஜனாற் செய்யப்பட்ட ஸ்ரீராமசரித்திரம்.
போஜபதி - சஞ்சன்.
போஜப்பிரபந்தம் - இதிலே போஜசரித்திரமும், காளிதாசன் தண்டி முதலிய வித்வந் மணிகளது வரலாறும் கூறப்பட்டுள்ளது.
போசம் - அகத்தி, ஒருதேசம்.
போஜர் - யாதவருள் ஒரு சாரார்.
போஜனகஸ்தூரி - நாரத்தங்காய்.
போஜனக்குறடா - மிளகாய்.
போசனசவுக்கியம் - ஊண்சுகம்.
போசனபதார்த்தம் - தின்பண்டம்.
போசனப்பிரியன் - பெருந்தீன்காரன்.
போசனம் - உணவு, புசித்தல், இது அட்டபோகத்தொன்று.
போசன்-ஒருஅரசன், செல்வன். சாத்துவதன்புத்திரன், குந்தியைவளர்த்த தந்தை,இவன்குந்திப்போஜன்மஹாபோஜன் என்றும் வழங்கப்படுவன். மாளவதேசத் தரசனுகத் தாரா நகரத்திலிருந்தரசுசெய்தவோர் பிரபலமான அரசன். இவன் இற்றைக்குஆயிரத் திருநூறு வருஷங்களுக்கு முன்னே அரசு புரிந்தவன். இந்தப்போஜன் காலத்திலே கல்விஅபிவிருத்தியடைந்தது போல் முன்னுமில்லை பின்னுமில்லை, முற்காலத்திலே பூர்ணசந்திரன் போலப் பிரகாசித்து பிற்காலத்திலே அபரபக்ஷ சந்திரன் போ லொளியிழந்த கலைஞானங்களெல்லாம் இவன்காலத்திலே மீளவும் பூர்வபக்ஷத்துச் சந்திரன்போல நாளுக்குநாள் விருத்தியடைந்தமையால் இவனைக்கலைமகளுக்குத்தந்தையென்னலாம்,இவ்வரசன்மஹாபண்டிதனு யிருந்தமையால் கலைகளெல்லாவற்றையும் வித்துவான்களை கொண்டு ஆராய்விப்பானுயினன், இவனுற் செய்யப்பட்ட வைத்ய நூலும் ஒன்றுண்டு. இவன்காலத்திலேவேத முதலாகவுள்ள எல்லா நூல்களும் விருத்தி யடைந்ததுபோலவே அவற்றை ஆராய்ந்தபண்டிதர்களும் விருத்தியடைந்து விளங்கினுர்கள், காளிதாசன் முதலிய வித்வன் மணிகள் ஒளிசெய்ததும் இவனது சமஸ்தானத்திலேயேயாம். இவன்காலத்தில் மானுஷவைத்திய மாத்திரமேயன்று அசுரவைத்தியமாகிய சத்திர வைத்தியமும் மிகவும் விளங்கியதென்பது வல்லாளன் செய்த போஜப்ரபந்தத்திற் கூறப்பட்ட ஒரு சரித்திரத்தால் அநுமிக்கப்படும், போஜப்ரபந்தம் போஜனைப்பற்றிய சிறுசரித்திரங்களை யெடுத்துக்கோத்துக் கூறுவது. இவன் ஒருகாலத்தில் கொடிய தலைவலியால் வருந்துவானுயினன், அத்தலைவலியானது அவன் சம்ஸ்தானத்திலிருந்த சிறந்த வைத்தியர்களெல்லாராலும் தீர்க்கப்படாததாய் மேன்மேலும் அதிகரித்தது. இதுமரணஹேதுவாக வுண்டான தலைவலியென்று யாவரும் நிச்சயித்தார்கள். அந்தச்சமயத்தில், சல்லியசாத்திரத்தில் மிகவல்லுநராகிய இருவர் ராஜசமஸ்தானத்தையடைந்தார்கள், அவர்

கள் இந்த நோயை நிதாநித்துநோக்கி, இது சத்திரவைத்தியத்தாலன்றித் தீரும் வழிவேறில்லை யென்றுர்கள், அதற்கு அரசன் உடன்படுதலும் அரசனுக்குமூர்ச்சையுண்டாகும்படி சம்மோகநி யென்னும் ஒருஔஷதம் பிரயோகித்தலும் அரசன்மூர்ச்சித்தான், பண்டிதர்கள் அரசனது கபாலத்தை ஆயுதத்தால் திறந்து மூளையிலிருந்த விஷாமிசத்தை நீக்கிச் சுத்திசெய்து கபாலத்தை முன்போலவேபொருத்திச் சந்தாநகரணியிட்டுச் சஞ்சீவி யென்னு மருந்தை உள்ளுக்குப் பிரயோகித்து உயிர்ப்பும் அறிவும் உதிக்கும்படி செய்ய, அரசன் நித்திரை நீங்கி யெழுந்தவன் போலக் கண்விழித் தெழுந்து பூர்ண சுகமடைந்திருந்தான், இதன் விரிவு போஜப் பிரபந்தத்திற் காணலாம்.

சம்மோகனி யென்பது தற்காலம் ஐரோப்பிய பண்டிதர்கள் பிரயோகிக்கும் "க்ளோரபாரம்" போல்வதொரு மூர்ச்சையுண்டாக்குமருந்து, அது க்ளோரபாரத்திலும் மிகச்சிறந்தது க்ளோரபாரம் அபாயஞ் செய்வது, சம்மோகனி ஒரு பகற்காலம் வரைக்கும் அபாயஞ்செய்யாது வேண்டியபோது சஞ்சீவிநி பிரயோகத்தால் அதன் அதிகாரமுழுதும்நீங்கி, அறிவுதயமாகும், அக்காலத்து ஆரிய பண்டிதர்கள் சஞ்சீவிநி கையிலிருப்பினன்றிச் சம்மோகநிப் பிரயோகஞ் செய்யார்.

மேற்கூறிய சரித்திரத்தால்ஐரோப்பிய பண்டிதர்கள் தற்காலம் தாம் நூதநமாகக் கண்டுபிடித்த சஸ்திரசிகிச்சையென்றுஉச்சிமேல் வைத்துக்கொண்டாடும் கபாலசல்யம் (கபாலத்தைத் திறந்து சிதைவு சோதித்தல் முதலியன) ஆரியபண்டிதர் பல்லாயிரவருஷங்களுக்குமுன்னே சிறிதும் அபாயமின்றிப் பயின்று வந்த அரிய சிகிச்சைகளுள் ஒன்றேயாமென்பது நன்கு புலப்படுகின்றது, இந்தக்கபாலசல்யசம்பவம் இஃதொன்று மாத்திரமன்று, கௌதமபுத்தருடைய வைத்தியபண்டிதனுக விளங்கிய ஜீவகனும் அநேகமாகியகபாலசல்ய சிகிச்சைசெய்து புகழ்படைத்தானென்று பௌத்தநூல்கள் கூறுகின்றன சம்மோகனிக்கீடாக, "க்ளோரபாரம்" ஐரோப்பியவாகடத்திலுள தென்றுலும், சஞ்சீவிநிக்கீடாக அந்த ஐரோப்பிய வாகடத்தில் ஒன்றுமில்லை யென்பது இதனுல் புலப்படும்.

போஷகன் - காப்போன்.
போஷணம் } பராமரிப்பு.
போஷணை }
போசாதிபன் - கஞ்சன்.
போச்சியம் - உண்ணற்குரியபொருள்.
போஷித்தல் - ஆதரித்தல்.
போஷிப்பு - பேணுதல்.
போஷியன் - வளர்ப்புப்பிள்ளை.
போஸ்தக்காய்-உலர்ந்தகசகசாநெற்று.
போடகம் - கொப்புளிப்பான்.
போடம்-தேயமைம்பத்தாறினென்று.
போடல் - அடித்தல், எறிதல், போடுதல், வழுவவிடல், வைத்தல்.
போடி - சம்புநாவல்மரம். [ற்றது.
போடுதடி-அலட்சியமானது, தேவையபோடுதல் - அணிதல்,இடுதல், ஈனுதல்.
போட்டரி - இரட்சகன்.
போட்டி - எதிரிடை, கேலி.
போட்டிக்கை - போட்டி.
போட்டிக்காரன் - எதிரிடைக்காரன், கேலிக்காரன்.
போட்டுப்பொல்லாங்கு-குற்றம், வசை.
போணி - போகணி, முதல்விக்கிரயம்.
போதகம் - இளமை, உபதேசம், காஞ்சிரை, சிங்கக்குட்டி, பசளை, புலிக்குட்டி, மரக்கன்று, யானை, யானைக்கன்று.
போதகன்-உபதேசி,உவாத்தி,ஒற்றன்.
போதகான் - எழுச்சிபாடுவோன்.
போதகனம் - ஞானவடிவு.
போதகாசிரியன் - ஒருஆசிரியன்.
போதகி - பெண்ணூர்க்குருவி.
போதநாசத்தி - போதிப்புவல்லமை.
போதப்பிரகாரம் - அறிவகை இதுஇலக்கணம், உத்தேசம், பரீக்ஷை என மூவகைப்படும்.

போதம் - அறிவு, கன்று, ஞானம், பரணி, புடைவை, மரக்கலம், யானைக்கன்று, வீட்டுநிலம்.
போதரல் - போகுதல்.
போதரவு - ஆறுதல், உபசரணை, கணிசம், பேணுதல்.
போதருதல் - போதரல்.
போதலிப்பு, போதலிமை } போதரவு.
போதல் - அகலல், அழிதல், உட்படல், திருத்தியாதல், நீளப்போகல், வரல்.
போதவாகன் - தோணியோட்டுவோன்.
போதவுரம் - திடஞானம்.
போதனம் - அறிவித்தல், அறிவு, தூபங்காட்டல்.
போதனை - கற்பனை, தூண்டுகை, போதிப்பு, இராமகிரிக்குக்கிழக்கேயுள்ள ஒருமலை.
போதன் - அருகன், அறிவுடையோன் பிரமன்.
போதா - பெருநாரை.
போதாக்குறைச்சல் - மேற்குறைச்சல்.
போதாச்சாதனம் - கூடாரம்.
போதாந்தம் - ஞானந்தம்.
போதாந்தன் - கடவுள்.
போதாமை - குறைவு, வெறுப்பு.
போதாயநர் - ஓரிருடி.
போதாயநீயம் - உபநிடதமுப்பத்திரண்டில்வொன்று.
போதி - அரசமரம், அறிவு, போதியென்னேவல், மலை.
போதிகை - குறுந்தறி, சுமையடைக்கட்டை.
போதிகைக்கட்டை - தாழ்வாரந்தாங்கி.
போதிகைத்தூண் - குறுந்தூண்.
போதித்ரு - அரசமரம்.
போதித்தல் - கற்பித்தல், புத்திசொல்லுதல், போதகஞ்செய்தல்.
போதிப்பு - உபதேசம், படிப்பனை, போதித்தல்.
போதியது - போந்தது.
போதியவன் - கணிசவான், தக்கவன்.
போதிவேந்தன் - புத்தன், மலையரசன்.
போது - காலம், பூ, பூவலரும்பருவத்தரும்பு, போமென்னேவல்.
போதுதல் - அகலல், செல்லல், தகுதியாதல், திருத்தியாதல், நீளல்.
போதை - மயக்கம், மூதறிவு. புல்.
போதைப்புல் - கர்ப்பூரப்புல், காவட்டம்புல்.

போத்திரம் - இடியேறு, கொழு.
போத்திராயுதம் - பன்றி.
போத்திரி - பன்றி.
போத்து - எருமைகாட்டா, பசு, புலி, புல்வாய், பூனை, மயில், மரை, இவற்றினாண், செம்போத்து, நீர்சாதியினாண், மரக்கன்று, விலங்கின் படுக்கை.
போந்தகாலம் - தக்ககாலம்.
போந்தகுணம் - மேன்மையானகுணம்.
போந்தது - போதுமானது.
போந்தலிமை - போதலிமை.
போந்தவன் - தகுதியானவன்.
போந்தி - பருமை, வீக்கம்.
போந்தின்றூரோன் - சேரன்.
போந்து, போந்தை } அனுடநாள், இளம்பனை, பனை.
போபடி - சாடை.
போம் - அசைச்சொல், பயம்.
போம்பல் - நீர்கடம்பு.
போரடி - ஒருவிளையாட்டு.
போரடித்தல் - சூடுதறல், தேங்காய்முதலிய அடித்து விளையாடுதல்.
போரடுக்குதல் - போர்வைத்தல்.
போராடல் - யுத்தம்பண்ணல்
போராடுதல் - பொருதல், மலைதல்.
போராட்டம் - தொந்தறை செய்தல், போர்பண்ணல்.
போராட்டல் - கோட்டிசெய்தல்.
போரி - எதிரி, ஒத்தாம், திருப்போரூர்.
போரிடுதல் - சண்டைபிடித்தல்.
போரித்தனம் - எதிரித்தனம்.
போருடலல், போருடறல் } பொருதல்.
போருடன்றல் - போர்செய்தல்.
போரேறு - செவ்வாய், போர்வீரன்.
போரேற்றுதல் - போரடுக்குதல்.
போர் - சதயநாள், நெற்போர், பொந்து, போரென்னேவல், யுத்தம்.
போர்கலத்தல் - போர்நடத்துதல்.
போர்க்கடா - போர்பண்ணுங்கடா.
போர்க்கதவு - இரட்டைக்கதவு.
போர்க்களம் - யுத்தகளம்.
போர்க்கறைகூவல் - போருக்கழைத்தல்
போர்க்கெழுச்சி - படையெழுச்சி.
போர்க்கெழுவஞ்சி - ஒருபிரபந்தம் அது மாற்றூர்மேற்போர்குறித்தேகும்வயவேந்தர் வஞ்சிப்பூமாலைசூடிப் புறப்

டும் படையெழுச்சிச் சிறப்பை ஆசிரியப்பாவாற் கூறுவது.
போர்க்கோலம் - போரணித்தரிப்பு.
போர்ச்சேவகர் - யுத்தவீரர்.
போர்த்தல் - மூடுதல்.
போர்த்துக்கட்டுதல் - உள்ளுக்குள்ளே சரிப்படுத்துதல், மறைத் தடக்கிக் கொள்ளல்.
போர்த்துமூடுதல் - மறைத்துக்கொள்ளுதல்.
போர்த்தேங்காய் - வலியதேங்காய்.
போர்போடுதல் - போரடுக்குதல்.
போர்படை - படைச்சனம்.
போர்ப்பறை - இரணபேரிகை.
போர்ப்பு - போர்த்தல், போர்வை.
போர்ப்பை - உழவுசாலினுட்கை, களக்கட்டையடி.
போர்ப்பைக்காளை } உட்கைக் காளை,
போர்ப்பையன் } பொலியெருது.
போர்மடந்தை - துர்க்கை, வீரலக்குமி.
போர்மாந்தம்-அஷ்டமாந்தத்தொன்று.
போர்முகம் - படைமுகம்.
போர்முடிதல் - போர்மூட்டுதல்.
போர்முள் - சேவலின்கால்முள்.
போர்முனை - போர்முகம்.
போர்மூட்டுதல் - போருண்டாதல்.
போர்மூளுதல் - போருண்டாக்கல்.
போர்விடுதல் - போர்செய்யும்படி ஏவி விடுதல்.
போர்வீரன் - போர்வல்லன்.
போர்வெல்லல்-யுத்தத்திற் செயமடைதல், இது எண்வகை வெற்றியில் ஒன்று.
போர்வை - தோல், மூடுதல், மெய்க்கவசம், மேற்போர்வை.
போர்வைச்சீலை - மூடுகுப்பாயம்.
போர்தைத்தல் - போரடுக்குதல்.
போல - உவமைச்சொல்.
போலல் - போலுதல்.
போலி - ஒட்டகம், ஒப்பு, ஒன்றுபோலொன்றிருத்தல், கள்ளமுமிளப்புமாயிருப்பது, கேலி, சாயல்.
போலித்தனம் - வெளிவேஷம்.
போலிநடை - கேலிநடத்தை, வெளியலங்காரமான நடத்தை.
போலிபண்ணுதல் - கேலிப்படுத்தல்.
போலியாள் - வெளிவேஷக்காரன்.
போலியெழுத்து-பதிற்றொனியக்காம்.
போலிவேலை - கள்ளவேலை.
போலுதல் - உவமையாதல், சரியாதல்.
போலும் - அனுமான சந்தேகப்பொருளுணர்த்தும் இசைநிறை யசைச்சொல் (உ-ம்) வடுவென்றகண்ணாய் வருந்தினை போலும்.
போலுகன் - சேவகன்.
போல் - உவமை, பதர், பொந்து, போலென்னேவல், மூங்கில்.
போல்வு - போலுதல்.
போவது - போகவேண்டியது.
போழல் - பிளக்குதல்.
போழ் - பிளவு, போழென்னேவல்.
போழ்தல் - பிளத்தல்.
போழ்து - காலம், பொழுது.
போழ்முகம் - பன்றி.
போழ்வாய் - திறந்தவாய், பொக்குவாய்.
போழ்வு - பிளவு.
போளம் - ஒருவாசனைப்பண்டம், நிலக்கடம்பு, மணிவகையினொன்று.
போளி - அப்பவருக்கத்தொன்று.
போறல் - போலுதல்.
போறை - கோறை.
போற்றரவு - பேணரவு.
போற்றவர் - பகைவர்.
போற்றல் - போற்றுதல்.
போற்றார் - பகைவர்.
போற்றி - துதி, பாட்டன்.
போற்றிப்பஃறொடை - ஒருநூல்.
போற்றிமார் - ஒருவகைப் பிராமணர், கோளதேசத்துப் பிராமணர்.
போற்று - காப்பு, துதி, போற்றென்னேவல்.
போற்றுதல்-காத்தல், துதித்தல், புகழ்தல், பேணுதல், வணங்கல், வளர்த்தல்.
போனகச்சட்டி - சாதமெடுக்கும் பாத்திரம்.
போனகச்சாலை - அன்னச்சாலை.
போனகத்தி - ஊட்டுந்தாய், சமைக்கிறவள், வெள்ளாட்டி.
போனகம் - சோறு.
போனபோக்கு - நேரிட்டபடி.

# பௌ



பௌஞ்சு - சேனை.
பௌஷம் } தைமாதம்.
பௌடம்
பௌஷிகம் } பதினெண் புராணத்தொன்று, முதல்வேதம்.
பௌடிகம்
பௌடியம்
பௌஷியன் } ஒருசக்கரவர்த்தி.
பௌடியன்
பௌண்டரம்-வீமசேநன், சங்கு, ஒட்ர தேசத்துக்கும் ஆந்த்ர தேசத்தின் உத்தரபாகத்துக்கும் ப்ராசீநநாமம், இதற்கு பலியின் புத்ரனாகிய புண்டரனால் இப்பெயருண்டாயிற்று.
பௌண்டிரம் - ஒருதேயம்,பவுண்டரம்.
பௌதி - இராத்ரி.
பௌதிகசரீரம் - பூதவுடம்பு.
பௌதிகம் - பூதியத்துக்கடுத்தது.
பௌதிகப்ரபஞ்சம் - பௌதிகலோகம்.
பௌதிகன் - சிவபிரான்.
பௌதீகம் - உலகம்.
பௌத்தம் - புத்தமதம்.
பௌத்ரன் - பெயரன்.
பௌத்தர் - புத்தர். பௌத்தமதத்தை அவலம்பித்திருப்பவர்கள். இந்தமதம் சத்திய சீலங்களையும் யோகவித்தையையும் செவ்வனே போதிப்பது.
பௌத்தன் - புத்தசமயத்தான்.
பௌத்தி - பவுத்தி.
பௌத்திரம்-சுத்தம், புத்திரற்குரியது.
பௌத்திரர் - பெயரமார்.
பௌத்திரன் - சுத்தன், மகன் மகன்.
பௌத்திரி - பெயர்த்தி.
பௌத்திரிகேய்ன் - மகண் மகன்.
பௌமம் - நிலத்திற்பிறப்பன.
பௌமன் - செவ்வாய், அங்காரகன், பூபுத்ரனாதலால் இவனுக்குஇப்பெயருண்டாயிற்று, நரகாசுரன்.
பௌமி - சீதை.
பௌரகம் - நகர்சூழ்சோலை.
பௌரணமி } பூரணை.
பௌரணிமி
பௌரணை - பூரணை, மரக்கன்று.
பௌரம் - பட்டினம்.
பௌரவர் - குருகுலவேந்தர், பூருவம்சத்தோர்.
பௌரவி - மாகிலிகன்மகள், வசுதேவன்மனைவி.
பௌராணிகமந்திரம் - பிரணவ மில்லா மந்திரம்.
பௌராணிகம் - புராணமதம்.
பௌராணிகன் - புராணப் பிரசாரம் பண்ணுவோன்.
பௌருஷம் - புருஷத்தன்மை.
பௌரோகித்தியம் - புரோகிதத்தன்மை.
பௌர்ணிமி - பூரணை. [மை
பௌலஸ்தி - சூர்ப்பணகை.
பௌலஸ்தியன் - இராவணன், குபேரன், விபீஷணன்.
பௌலோமர் - வைவசுவரநான் என்னும் தாநவன்மகளாகிய புலோமையிடத்து மரீசிக்குப் பிறந்த அரக்கர்கள், இவர்கள் அருச்சுநனால் கொல்லப்பட்டார்கள்.
பௌலோமி - புலோமசை, சசிதேவி, புலோமன்மகள், இந்திரன்மனைவி.
பௌவம் - உப்பு, கடல், நீர்க்குமிழி, நுரை, பூரணை, மரக்கணு.
பௌளி - ஓரிராகம் பூபாளன்மனைவி.
பௌனருத்தம் - புனருத்தம்.
பௌஷியன் - உதங்கனுக்குக் குண்டலங்கொடுத்த அரசன்.



# ம



ம - இயமன், இறந்தகால விடைநிலை (உ-ம்) என்மர், ஓரெழுத்து, ஒரு மந்திரம், காலம், சந்திரன், சிவபிரான், நஞ்சு, நேரம், பிரமன், விட்டுணு.
மக - இளமை, காணிக்கை, பிள்ளை, மகன்
மககம் - ஆமை. [ன்
மககன் - மேன்மகன், விட்டுணு.
மகக்குழை - மாவிலை.
மகங்காரம் - அசங்காரம்.
மகசம் - அறிவு, விதம்.
மகடி - ஒருகுழல், ஒருவித்தை, ஒரு விளையாட்டு.
மகடூஉ - பெண்.

மகடூஉக்குணம் - பெண்டன்மைக்குரிய குணம்.
மகண்மா - அலி.
மகண்மை - மகட்டன்மை.
மகேசுவரன் - சிவபிரான்.
மகேசுவரி - பார்வதி.
மகதந்திரம் - சிற்பநூன் முப்பத்திரண்டினென்று.
மகதம் - தேயமைப்பத்தாறி னென்று, பதினெண்பாடையினென்று. வங்க தேசத்துக்குமேற்றிசையிலுள்ள தேசம், இதுமிகப்பழமையானது, உத்தமகுல வேந் களால் பாரம்பர்யமாக அரசு செ ப்பட்டது, புராணேதிகாசங்கெ லாவற்றிலும் எடுத்துக் கூறப்ப து, இதனது ராஜதானியும் மென்றே வழங்கப்படும், இத்தே த்தார் மாகதர் எனப்படுவர்.
மகதி - சேம்பு, திப்பிலி, நாரதன், வீணை.
மகதியாழ் - நாரதன் வீணை.
மகதிமுனி - நாரதிமுனி.
மகதேசுவரன் - சராசந்தன், மகததேசத்தரசன்.
மகதை - திப்பிலி.
மகதோத்பவன் - மகததேசத்திற் பிறந்தவன்.
மகத்திராத்திரு - இராமன்.
மகத்திருநாள் - மாசிமகம்.
மகத்து - பெரியது, பெரியவர், மகாத்துமா.
மகத்துவம் - மேன்மை.
மகபதி - இந்திரன்.
மகப்பால்வார்த்தல் - அனாத பிள்ளைக்குப் பாலூட்டல், இது அற முப்பத்திரண்டி னென்று.
மகமது - மக்காதிபர்.
மகமாயியம்மை - திருக்கானப்பேரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மகமுறை - யாகக்கிரமம், விருந்து.
மகமேரு - மகாமேரு.
மகமை - தருமக்கொடை.
மகம் - இருபத்தொன்று, இன்பம், ஒருநாள், பலி, பிரபை, யாகம், விழவு.
மகரகண்டிகை - மகரதோரணம்.
மகரகந்தம் - வெண்காயம்.
மரககாலம் - மாமரம்.
மகரகுண்டலம் - காதணியினென்று
மகரகேதனம் - மச்சக்கொடி.
மகரகேதனன், மகரகேது - மன்மதன்.
மகரக்குழை - மகரகுண்டலம்.
மகரக்குறுக்கம் - கான்மாத்திரையாய்நிற்கு மகரவெழுத்து.
மகரக்கொடியோன் - மன்மதன்.
மகரச்சா - சாவாக்கியத்தொன்று.
மகரச்சேலே - செஞ்சாயச்சேலே.
மகரதோரணம்-வாயலிற்றூக்குந் தோரணம்.
மகரத்துவசன் காமன்.
மகரந்தம் - கள்,குயில், தேமாமரம், தேனீ, தேன், பூந்தாது.
மகரந்தவதி - பாதிரிப்பூ,மதுவிசேடம்.
மகரந்தாட்டஹாஸம் - முல்லேச்செடி.
மகரந்தௌகம் - புவ்ஷ்பம்.
மகரமச்சம் - மகரமீன்.
மகரமண்டலம் - உத்தரவீதிக்கடை.
மகரமாதம் - தைமாதம்.
மகரமீன் - சுறவு.
மகரமுயர்த்தோன் - மன்மதன்.
மகரம்- இராசிசின்னத்தொன்று, ஓரிராசி,ஒரெழுத்து,ஒருகாயம், ஒருநிதானம், காமனகொடி,குபேரனவநிதிகளில்ஒன்று,சாயநிறம்,சுறுமீன்,தேவருலகு, பூந்தாது, முதலே, விருப்பம்.
மகரம்பு - வெந்தையம்.
மகரயாழ் - நால்வகையாழினென்று.
மகரயூகம் - படைவகுப்பினென்று.
மகரரேகை - தநவானிலக்கணம்.
மகரவாய்மோதிரம் - கால்விரலணி.
மகரவாழை - காட்டுமல்லிகை, மருகு.
மகரவியூகம் - மகரரூபமாக வகுக்கப்பட்ட படைத்தொகுதி.
மகரன் - ஆகாயத்தைத் தோற்றுவித்த பூதம், முக்குணமூலம்.
மகராகரம், மகராங்கம் - கடல்.
மகராங்கன் - காமன்.
மகராசன் - அரசன், பாக்கியவான்.
மகராசி - பாக்கியவாட்டி.
மகராசுவன் - வருணன்.
மகராக்ஷன் - கரன் புத்திரன்.
மகராட்டிரம்-சாதிநான்கினென்று,ஒருதேயம்.
மகராலயம், மகராலேயம் - கடல்.

மகராலயாம்ருதம் - உப்பு.
மகரி - கடல்.
மகரிகை - தோரணம்.
மகரிஷி - பெரியரிஷி.
மகருதம் - கொடிவேலி.
மகலோகம் - மேலேழுலகினென்று.
மகவதி - இந்திராணி.
மகவன் - இந்திரன்.
மகவாட்டி-குழந்தைப்பிள்ளைக்காரி.
மகவான் - இந்திரன்.
மகவு - கோட்டில் வாழ்விலங்கின் பிள்ளை, மகன்.
மகளிக்கீரை - ஒருகீரை.
மகளிரான்மலர்மரம் - மகடூஉக் காரணமாயலருமரம் அவை அசோகு எழிலைம்பாலை குராகுருக்கத்தி சண்பகம் பாதிரி புன்னை மகிழமரம் மரா முல்லை இவை முறையே உதைக்கநட்புற அணைக்க பாட நிழல்பட நிந்திக்க ஆடசுவைக்க பார்க்க நகைக்க தளிர்த்துப் பூர்ப்பனவாம்.
மகளிர் } மகளீர் } பெண்கள்.
மகள் - புத்திரி, பெண்.
மகன் - ஆண்பாற்பிள்ளைப்பொது,புதல்வன், புருடன்.
மகன்மை - ஆண்டன்மை.
மகா-பெருமை, மிகுதி, மேன்மை யிவற்றை விளக்குமோருபசருக்கம்.
மகாகச்சம் - சமூத்திரம், மலை.
மகாகதம் - காய்ச்சல்.
மகாகதி - மேற்கதி.
மகாகந்தம் - உள்ளி.
மகாபித்தம் - வில்வமரம்.
மகாகருவம் } மகாகர்வம் } பத்திலட்சங்கோடி.
மகாகவம் - யுத்தம்.
மகாகாசம்-குதிரைக்கனைப்பு,பரவெளி.
மகாகாயம் - யானை.
மகாகாலம் - நெடுங்காலம், மாமரம்.
மகாகாலன் - உருத்திரன்.
மகாகிதி } மகாக்ஷிதி } கோடி சோடாகோடி.
மகாகிரீவம் - ஒட்டை.
மகாகும்பி - பெரும்பூசினி.
மகாகுலம் - உத்தமகுலம்.
மகாகுலிகன் - உயர்குலத்திற் பிறந்தோன்.
மகாகூபம் - பெருங்கிணறு.
மகாகோஷம் - பேரொலி.
மகாகோணி } மகாக்ஷோணி } இலட்சங் கோடாகோடி.
மகாகோரம் - நரகத்தினொரிடம்.
மகாக்கினி - ஓமாக்கினி.
மகாங்கம் - ஒட்டை.
மகாசகா } மகாசகை } வாடாப்பூவுள மருதோண்டிமரம், வாடாமல்லிகை.
மகாசங்கம் - ஆயிரங்கோடாகோடி,எலும்பு,குபேரனிதியினென்று,நெற்றி.
மகாசங்காரம் - சருவசங்காரம்.
மகாசண்டன் - யமகிங்கரன்.
மகாசத்தி - குமரன்.
மகாசம்பு - பெருநாவல்.
மகாசயம் - சமூத்திரம்.
மகாசயன் - பிரபு.
மகாசனன் - பெரியோன்.
மகாசாந்தபனம்-ஆறுநாளாயனுட்டிக்கும்ஒருவிரதம் அது முதனாட் கோசலமும் இரண்டாநாட்கோமயமும் மூன்றுநாட் பாலும் நாலாநாட்டயிரும் ஐந்தாநாணெய்யும் ஆறுநாட்டருப்பையவித்தநீருமுண்டனுட்டிப்பது.
மாகாசாலி - பெரும்பீர்க்கு.
மகாசிவராத்திரி - சைவசமயிகளுக்குரிய விசேடவிரதநாள், இது மாசிமாதத்தில் வருவது.
மகாசுகம் - புணர்ச்சி.
மகாசுவேதம் - சிறுவாலுளுவை.
மகாசுவேதை - சரச்சுவதி.
மகாசூதம் - போர்பறை.
மகாசூத்திரன் - இடையன்.
மகாசேனன் - சேனாபதி,புத்தன் முருகன்.
மகாசைவம் - ஒருசைவம்.
மகாசோபம் } மகாக்ஷோபம் } நூறு கோடி கோடாகோடி.
மகாச்சாயம் - ஆலமரம்.
மகாச்சுவாலம் - ஓமாக்கினி.
மகாதந்தம் - யானை, யானைக்கொம்பு.
மகாதம்பிரபை - கீழ்நரகம்.
மகாதலம் - கீழேழுலகினென்று, நீதிதலம்.
மகாதனம் - தூபம், பொன், வேளாண்மை.
மகாதாது - பொன்.
மகாதாநம் - பெருங்கொட்டை.
மகாதிம்பம் - பெருமரம்.

மகாதியாகம் - சருவத்துறவு.
மகாதுந்துமி - போர்ப்பறை.
மகாதுருமம் - அரசு.
மகாதேஜம் - பாதரசம்.
மகாதேவன் - கடவுள், சிவபிரான், தெய்வம், வருணன்.
மகாதேவி - துர்க்கை, பார்வதி.
மகாதோரை - ஓரெண்.
மகாத்துமா - பரமஞானி.
மகாநசம் - அடுக்களை.
மகாநடன் - சிவபிரான்.
மகாநதி - கங்கை.
மகாநந்தசாகரம் - பேரின்பக்கடல்.
மகாநந்தல் - மோக்ஷம்.
மகாநந்தம் - பேரின்பம்.
மகாநந்தலோகம் - முத்தியுலகு.
மகாநந்தன் - கடவுள்.
மகாநந்தை - கள், ஒருநதி.
மகாநரகம் - ஒருநரகம்.
மகாநலம் - யாசாக்கிநி.
மகாநாகம் - சுரபுன்னைமரம், பெருஞ் சர்ப்பம்.
மகாநாதம் - சங்கு, சிங்கம், பேரொலி முகில், யானை.
மகாநாடு - ஜனசபை.
மகாநிசி - அத்தசாமம்.
மகாநிதி - குபேரனவநிதியி னொன்று, பெருந்தூக்கம்.
மகாநிதியோன் - குபேரன்.
மகாநித்திரை - மரணம்.
மகாநிம்பம் - பூவரசமரம்,பெருவேம்பு
மகாநீசன் - வண்ணான்.
மகாநீலம் - கையாந்தகரை, மரகதம்.
மகாநுபாவன் - மகாத்துமன்.
மகாநேமி - காகம்.
மகாபதம் - துர்க்கதி, மன்மதலோகம், இராசமார்க்கம்.
மகாபட்சி - ஆந்தை.
மகாபதுமம்-குபேரநவநிதியி னொன்று, பத்துக்கோடாகோடி, வெண்டாமரை.
மகாபதுமன் - அட்டநாகத்தொன்று.
மகாபத்திரம் - பனைமரம்.
மகாபத்திரை - கங்கை.
மகாபாரதம் - வடமொழியிலே சாரங்கதேவமுனிவர்செய்தபாரதசாஸ்திரம், இது லக்ஷங்கிரந்தமுடையது, இதை செய்வித்தவன் சோமராயன் என்னுமரசன், செந்தமிழ்ப் பரமாசாரியாகிய அகஸ்தியமுனிவரால் தமிழிலே ஆயிரஞ் சூத்திரரூபமாகச் செய்யப்பட்ட பாதநூல்.
மகாபலம் - ஆகாசம், குடம், கொளிஞ்சி, சித்தம், தெங்கு.
மகாபலலிங்கநாதர் - திருக்கோகர்ணத்திலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மகாபலன் - காற்று, பெலவான்.
மகாபலி - பலிச்சக்கிரவர்த்தி.
மகாபலிபுத்ரன் - பிரகலாதன்.
மகாபலிபுரம் - மாவலிபுரம் ஒரூர்.
மகாபலை - வில்வம்.
மகாபவன் - சுக்கிரன்.
மகாபாசகன் - யாசகி.
மகாபாசன் - யமதூதன்.
மகாபிரபம் - விளக்கொளி.
மகாபிரபு - அரசன், இந்திரன்.
மகாபிரளயம் - நானூற்று முப்பத்திரண்டுகோடி வருடமுடிவில் வருமழிவு, பிரமகற்பத்தழிவு.
மகாபிராணம் - காகம்.
மகாபிலம் - ஆகாசம்.
மகாபத்தி - பேரறிவு.
மகாபுருஷன் - உத்தமபுருடன்.
மகாபூ - சுக்கிரன், பெருஞ்சீரகம்.
மகாபூதம் - பஞ்சபூதம்.
மகாபுரி - ஆயிரங்கோடி, கோடி கோடாகோடி.
மகாபெலா - பேராமுட்டி.
மகாப்பிரகாசசத்தி - அப்பிரகம்.
மகாமகம்-மாசிமகத்திற்குருவருநாள்.
மகாமகிமை - பெருமகிமை.
மகாமசானம் - அவிமுக்தம், காசிநகரம்.
மகாமதம் - மதயானை, வெறி.
மகாமதி - பேரறிவு.
மகாமந்திரி - முதல்மந்திரி,குருபன்னி, செல்வி.
மகாமாத்திரன் - செல்வன், மந்திரி, யானைப்பாகன்.
மகாமாந்திரி - குருபன்னி, செல்வி.
மகாமாயி - துர்க்கை.
மகாமாயை-பஞ்சமாயையில்ஒன்று, பார்வதி.
மகாமாரி - பார்வதி.
மகாமிருகம் - யானை.

மகாமிருத்து - சிவபிரான்.
மகாமுகம் - முதலை.
மகாமுனி - அகத்தியன், புத்தன், வசிட்டன், வியாசன்.
மகாமூஷிகம் - பெருச்சாளி.
மகாமேதை - மருளூமத்தை.
மகாமேரு - பொனமலை.
மகாமேருவில்லி - சிவபிரான்.
மகாயாகம் - மகாயக்கியம்.
மகாயுகம் - நாலுயுகங்கூடினது.
மகாயக்கியம் - பார்ப்பார் தேவர் பிதிர் சுற்றம் தானென்னும் ஐவரையும் ஓம்பி வருதல்.
மகாரசரூதம் - ஒருமாமரம்.
மகாரசதம் - பொன்.
மகாரசம் - ஒருமரம், கஞ்சி
மகாரசனம் - மகாரசதம்.
மகாரண்ணியம் - பெருங்காடு.
மகாரதம்-பதினோராயிரந் தேற்குமுதற் றேர், பேராசை.
மகாரதன் - பதினோராயிரந்தேர்க்காருடனே பெருவோன், பதினோராயிரம் தேருக்குத் தலைவன்.
மகாராசன் - அதிபதி, அரசன், கவலையற்றவன், குபேரன், சமணகுரு, செல்வமுடையோன்.
மகாராட்டிரம்-ஒருதேசம், ஒருபாஷை.
மகாராத்திரம் - அத்தசாமம்.
மகாருத்ரன் - மஹாதேவன்.
மகாரூபகம் - நாடகத்தமிழ்.
மகாரூபன் - சிவபிரான்.
மகாரோகம் - குட்டமுதலிய பெருநோய் வியாதி.
மகாரௌரவம் - ஒருநரகம்.
மகார் - மக்கட்பன்மை.
மகாலக்குமி - மகாலட்சுமி.
மகாலயம் - கோயில், பிரம்லோகம்.
மகாலயன் - கடவுள், பிரமன்.
மகாலிங்கன் - சிவபிரான்.
மகாலோகம் - தீக்கால்கள், மேலேழுலகிலொன்று.
மகாலோகம் - காகம்.
மகாவநம் - பெருங்காடு.
மகாவபன் - சிவபெருமான்.
மகாவராகம் - சுவேதவராகம்.
மகாவல்லி - வசந்தமல்லிகை, வில்வம்.
மகாவற்புதம் - ஒரு பேரெண்.
மகாவாக்கியப்பொருள் - வேதமுடிவாகிய வாக்கியார்த்தம்.
மகாவாக்கியம்-பெரும்பதம், ஒருநூல்.
மகாவிசுவம் - மேடசங்கிராந்தி.
மகாவிஷம் - இருதலைப்பாம்பு.
மகாவிந்தம் - ஒரெண், நளன், நகரம், வைகுந்தம்.
மகாவிந்து - வுப்பிரகம்.
மகாவியாகிருதி - காயத்திரிமந்திரம்.
மகாவிரதம் - வீரசைவம்.
மகாவிரதர்-இலிங்கதாரிகள், சைவர்கள்.
மகாவிரதன் - சிவன் என்புமாலை தரித்த மூர்த்தியாய் அருள் செய்வரென்று சொல்வோன். இவன் அகப்புறச் சமயிகளுளொருவன்.
மகாவிருகதி - சேம்பு.
மகாவிருக்கம் - சதுரக்கள்ளி.
மகாவிலயம் - ஆகாயம், இதயம், குகை, நீர்ச்சாடி.
மகாவீசி - ஒருநரகம், பேரலை.
மகாவீரம் - அருக்கியபாத்திரம், ஓமாக்கினி, குயில், சிங்கம், வெண்குதிரை.
மகாவீரன் - அக்கினி, கலுழன், விட்டுணு, வீரன்.
மகாவெள்ளம் - ஒரெண்.
மகாவேகம் - குரங்கு.
மகாவேகன் - சிவபிரான்.
மகானந்தம் - முத்தி.
மகானசம் - மடைப்பள்ளி.
மகானலம் - ஓமாக்கினி.
மகான்னவம் - கடல்.
மகி - பூமி.
மகிமை - மூடுபனி.
மகிடசங்காரி - துர்க்கை, காளி.
மகிடமர்த்தினி - துர்க்கை, காளி.
மகிஷம், மகிடம் } மயிடம், எருமை.
மகிடதானம் - எருமைதானம்.
மகிடரோசனை - கோரோசனை.
மகிடவாகநன் - யமன்.
மகிடச்செற்றாள் - துர்க்கை, காளி.
மகிடன் - மகிடாசுரன்.
மகிடாசுரமர்த்தனி - துர்க்கை, காளி.
மகிடாசுரன் - ஒரு அசுரன்.
மகிஷி - இராணி.
மகிடி - மௌடி.
மகிடித்தல் - மக்களித்தல்.

மகிணன் - மகிழ்நன், மேன்மை.
மகிதம் - சிவன்சூலம்.
மகிதலபாணன் - ஆதிசேடன்.
மகிதலம் - பூமி.
மகிந்தகம் - எலி, கீரி.
மகிபதி, மகிபன் - அரசன்.
மகிமா - மகத்துவம், மிகவும் பருத்தல், அது அட்டமாசித்தியில் ஒன்று.
மகிமை - கனம், பெருமை.
மகிரன் - சூரியன்.
மகிருகம் - மகீருகம்.
மகிலம் - மயிலம்.
மகிலை - பெண், வெறிகாறி.
மகிழ் - ஒருமாம், களிப்பு மகிழென்னே [வல்.
மகிழ்ச்சி - இன்பம், களிப்பு.
மகிழ்தல் - களித்தல், சந்தோஷித்தல்
மகிழ்நன்-கணவன், மருதநிலத்தலைவன்
மகிழ்வு-இன்பம், களிப்பு, சந்தோஷம்.
மகிளம் - பூவிதழ்.
மகிளி - ஒருகீரை.
மகிளித்தல் - மக்களித்தல்.
மகினம் - இராச்சியம்.
மகி - ஒருயாறு, பசு, பூமி.
மகீசுதன் - செவ்வாய்.
மகீசுதை - சீதை.
மகீதரம் - மலை.
மகீதான் - ஆதிசேடன்.
மகீதலம் - பூமி.
மகீத்திரம் - மலை.
மகீபதி, மகீபன், மகீபாலன் - அரசன்.
மகீப்பிராசீரம் - சமுத்திரம்.
மகீமயம் - கண்ணுற்செய்யப்பட்டவை.
மகீருகம் - தாபரயோனி, மரம்.
மகீலதை - நாங்கூழ்.
மகுடபங்கம் - கிரீடாவமானம்.
மகுடம் - சல்லடைக்கொப்பு, சிகரம், சிவாகமமிருபத்தெட்டினென்று, தலையணி, மத்தள முதலியவற்றின் விளிம்பு, மறைவு, முடி, முடியுறுப்பு.
மகுடராகம், மகுடராமகிரியப - ஒருபண்.
மகுடவர்த்தனர் - முடிதரிக்குமரசர்.
மகுடாதிபதி - கிரீடதாரி.
மகுடி - மகிடி.
மகுணன் - மகிணன்.
மகுரம் - கண்ணாடி, தண்டசக்கிரம், பளிங்கு, பூமொட்டு.
மகுலம் - மகிழமரம்.
மகூலம் - மலர்ந்தபூ.
மகேசம் - அப்பிரகம், இந்திரன், சிவபி [ரான்.
மகேசன் - சிவபெருமான்.
மகேசுவரதீர்த்தர் - ஸ்ரீராமாயணத்துக்கு வியாக்யானஞ்செய்தவர். இந்த வியாக்யானத்துக்கு மஹேஸ்வர தீர்த்தீயம் என்று பெயர்.
மகேசுவரன் - சிவபிரான்.
மகேசுவரி - பார்வதி.
மகேச்சுரன், மகேச்சுவரன் - சிவபெருமான்.
மகேச்சுவரி - பார்வதி.
மகேந்திரகதலி - ஒருவாழை.
மகேந்திரசாலம் - ஒருமாயவித்தைஅது கலைஞானமறுபத்துநான்கினென்று.
மகேந்திரநகரி - அமராவதி.
மகேந்திரபுரி - தென்கடலினிடையேயிருந்த ஒரு நகரம், இது சூரபன்மனது ராஜதானி.
மகேந்திரம் - ஒருநகரம், ஒருமலை, மஹே [ந்திரம்.
மகேந்திரன் - இந்திரன்.
மகேந்திராணி - இந்திராணி.
மகேந்திரை - ஒருநதி.
மகேலிகை, மகேலை - பெண்.
மகேசுவரியம் - செல்வம்.
மகோததி - இந்திரன், கடல்.
மகோதயம் - ஒருபுண்ணியகாலம், பெருமை, முத்தி, மேன்மை, விடுதல்.
மகோதரம் - ஒருநோய், பெருவயிறு.
மகோதரன் - இராவணன் மந்திரிகளில் ஒருவன்.
மகோநி - சசிதேவி.
மகோந்தமரம் - மனைமரம்.
மகோபநிடதம் - உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று.
மகோற்சவம் - திருவிழா.
மகோற்பலம் - தாமரை.
மகோனமதம் - மருள்வெறி.
மகௌடதம் - சுக்கு, திப்பிலி, வசம்பு.
மகௌடதி - நனமருந்து.
மக்கடம், மர்க்கடம் - குரங்கு.

மக்கடித்தல் - அழித்தல்.
மக்கட்டம்பிடித்தல் - மற்கட்டம் பிடித்தல்.
மக்கட்பரப்பு-நாட்டார்,மன்பதை.
மக்கநகர் - திருக்கருக்கு விசேஷமான ஒரு தலம்.
மக்கம்-எருக்கு, ஒருதேயம், நெய்வார்த திபுராளுதல்.
மக்கல்-உக்குதல்.
மக்களித்தல் - சுளுக்குதல், திரும்புதல்.
மக்ளிப்பு - மக்களித்தல்.
மக்கள் - மகார், மனிதர் இவர் எழுவகைப்பிறப்பில் ஒருவர்.
மக்கனம் - ஆழ்தல், கேலி.
மக்கன் - பலவான்.
மக்காச்சோளம் - பெரியசோளம்.
மக்கி - உக்கன்மாக்கல், ஒருகுளிகை.
மக்கினம் - அமிழ்ந்தல், வெட்கம்.
மக்கு - அடைமண், மந்தகுளம்.
மக்குதல் - உக்கியழிதல்.
மக்குலம் - சிலாசத்து.
மங்கணன் - தபோமகிமையாலேசாரசுவதத்தில் நடநஞ் செய்தவன்.
மங்கலகாரியம் - சுபகாரியம்.
மங்கலகிரி - விஷ்ணுநாசிங்கமூர்த்தியாய்எழுந்தருளியிருக்கும் மூன்று ஸ்தலங்களிலொன்று, மூன்றுவன:-அகோபிலம், மங்கலகிரி, சுவாலை என்பன.
மங்கலகௌசிகம் - ஓரிராகம்.
மங்கலசண்டி - துர்க்கை.
மங்கலச்சொல் - மங்கலமொழி.
மங்கலஸ்நாநம் - மங்கலகாரியத்திற்குமுழுகுதல்.
மங்கலநாயகியம்மை - திருக்குடமூக்கிலேகோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மங்கலப்பாடகர் - கடிகைமாக்கள், சோபனம் பாடுவோர்.
மங்கலப்பிரதன் - சுபமுண்டாக்குவோன்.
மங்கலப்பிரதை - மஞ்சள்.
மங்கலமடந்தை - ஒருபெண் தெய்வம், இத்தெய்வத்தை மங்கலாதேவி என்பர், இத்தெய்வத்திற்கு ஆலயம்மலைநாட்டிலும் அதைச்சார்ந்த நாடுகளிலும் உண்டு, மங்களூர் என்பதை இதுபற்றிவந்தமங்கலபுரம் என்னும் பெயரின் மரூஉ வென்றுங்கூறுவர்.
மங்கலமொழி - சோபனவார்த்தை,செய்யுட்களின் முதற்கவியின் முதலில் வரவேண்டுஞ்சுபமொழி அவைஅமிழ்தம், ஆரணம், உலகம், எழுத்து, கங்கை,கடல்,சீர், சொல், திரு,தேர், நிலம்,நீர்,பரி, பரிதி, புகழ், புயல்,பூ, பொன், மணி, மதி, மலை, யானை முதலியன.
மங்கலம் - கலியாணம்,சுபம், சேகரிப்பு, சோபனம், தகனபலி, தருமம், பொலிவு, வாழ்த்து.
மங்கலம்பாடுதல் - சோபனம்படித்தல்.
மங்கலவள்ளை - ஒருபிரபந்தம், அதுஉயர்குலத்துதித்த மடவாரலை வெண்பாவொன்பதானும் வகுப்பொன்பதானும் பாடுவது.
மங்கலவாசகம் - மங்கலச்சொல்.
மங்களவாத்தியம் - மங்களவாச்சியம்.
மங்கலவாரம் - செவ்வாய்க்கிழமை, நல்லநாள்.
மங்கலன் - செவ்வாய், அங்காரகன்,நாவிதன்.
மங்கலி - நாவிதன், மங்கலியதாரி.
மங்கலியகம் - சிறுசடலை.
மங்கலியம் - தாலி.
மங்கலை - அம்பட்டத்தி, இலக்குமி, உமை, கற்புடையாள், சுமங்கலி.
மங்கல் - ஒளியின்மை, கெடுதல்,தோற்றக்குறைவு.
மங்கல்லியம் - சந்தனம், தயிர்.
மங்கிலியகாரி - இல்லவள்.
மங்கில்லீயம் -சந்தனம்,செவ்வீயம்,தயிர்,பொன்.
மங்களகான் - சுப முண்டாக்குவோன், சிவபிரான்.
மங்களகௌசிகம் - ஒருபண்.
மங்களநாயகி - திருமங்கலக் குடியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர், திருக்கண்டியூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர், திருநல்லத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர், திரு இடும்பாவனத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர், திருப்பரிதி நியமத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மங்களநாயகியம்மை - திருவாரூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மங்களபாடகர் - மங்கலபாடகர்.

மங்களம்-காரியம்,சுபகாரியம்,வாழ்த்து.
மங்களாசரணை - மங்களவழிபாடு அது வாழ்த்து,வணக்கம், வத்துநித்தேசம் என மூவகைப்படும்.
மங்களாசாசநம்-மங்கலவாழ்த்து, ஆசீர்வாதம்.
மங்களாதேவி - இலக்குமி.
மங்களூர் - மேற்கடற்கரையிலுள்ளஒரூர்.
மங்களை - யோகினிதிசையினொன்று.
மங்கிணி - மண்ணுணி.
மங்கிலம் - காட்டாக்கினி.
மங்கிலியம் - மங்கலியம்.
மங்குங்காலம் - துன்பகாலம், மாணவேளை.
மங்குசனி - முதன்முறைவருமேழரைநாட்சனி.
மங்குதல் - கெடுதல், தோற்றங்குறைதல், மழுங்குதல்.
மங்குரம் - பளிங்கு.
மங்குலம் - மங்குளம்.
மங்குல் - ஆசாயம்,இரவு,இருள்,மேகம்.
மங்குளம் - இருள், கலக்கம், மந்தாரம்.
மங்கை - கற்ருழை,பதின்மூன்றுவயதுடையப்பெண், பெண்.
மங்கைதீர்க்கம் - மணவாளிநாளுக்குமணவாளனுள் பதின்மூன்றக்குமேற்பட்ட நாளாயிருத்தல் இது தசப்பொருத்தத்தினொன்று.
மங்கைநாயகி - திரு அகத்தியான்பள்ளியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர், திருவிசயமங்கையிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
மங்கைபங்கன்
மங்கைபங்காளன் } சிவபெருமான்.
மங்கைபாகன்
மங்கையர்க்காசியம்மை - திருவேதிகுடியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர் பாண்டிமாதேவி.
மங்கையர்க்காசியார்- திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரை வரவழைத்துத் தமது நாயகனுகிய கூன் பாண்டியனுக்குச்சுரம் தீர்ப்பித்தவராகியமாதுசிரோமணியார், இவர் சோழராஜபுத்திரியார். அறுபத்துமூவரிலொருவர், கூன்பாண்டியன் மனைவி.
மசகம் - கொசுகு, நீர்த்துருத்தி, மயக்கம், மயிர்.
மசகி - அத்திமரம்.
மசகிற்புள் - ஒருகடற்பறவை.
மசகு - கடலிற்றிசைதெரியாத இடம், வண்டிக்கீல்.
மசகுதல் - சுணங்குதல், மயங்குதல்.
மசக்கல் - மசங்கல்.
மசக்குதல் - கசக்குதல், கலக்குதல், மயக்குதல்.
மசக்கை - கருப்பமசக்கு.
மசக்கைக்காரி - கருப்பஸ்திரீ.
மசங்குதல் - கசங்கல், மயங்கல்.
மசண்டை - அந்திநேரம், கருகுமாலை.
மசமசத்தல் - தினவுகொள்ளல்.
மசமசப்பு - சொறிவு.
மசமசெனல் - மசமசத்தல்.
மசம்-அளவு,கொசுகு,கோபம்,தொனி.
மசரதம் - பேய்த்தேர்.
மசனம் - அளத்தல், வருத்தல்.
மசாகம் - குருவி.
மசாரகம் - இந்திரநீலமணி.
மசாரம் - மரகதம், நீலரத்திநம்.
மசானம் - மயானம், சுடலை.
மசி
மஷி } மசியென்னேவல், மை.
மசிகம் - பாம்பளை.
மசிகூபி - மைக்கூடு.
மசிசலம் - மை.
மசிதல் - நசிந்துகுழைதல்.
மசிதானம்
மசிதானி } மைக்கூடு.
மசித்தல் - நசித்துக்குழைத்தல்.
மசிபண்ணியன் - எழுத்துக்காரன்.
மசிபதம் - தூவல்.
மசிப்பாணி
மசிமணி } மைக்கூடு.
மசியல் - மசிக்கப்பட்டது, கடையப்பட்டது.
மசி - அறுகு, மயிர்.
மசிவு - மசிதல்.
மசீது - பள்ளிவாசல்.
மசீலம் - வண்ணரச்சேரி.
மசுக்கரம் - மூங்கில்.
மசுரம் - கடலை.
மசுரை - வேசி.
மசூசிகம் - மசூரிகம்.
மசூரகம் - வட்டத்தலையணை.
மசூரம் - மூட்டுப்பூச்சி.
மசூரன் - தட்டான்.

மசூரி
மசூரிகம் } சின்னமுத்து, திருக்கர் கல்லறை.
மசூரிகை - குருநோய்.
மசூரை - வேசை.
மச்சகந்தி - வியாசன்றாய்.
மச்சதேசம் - விராடபுரம், மச்சதேசம்.
மச்சத்தின்சல்லியம் - மீனெலும்பு.
மச்சரம் - பொறாமை.
மச்சனம் - ஸ்நாநம்.
மச்சம்-தேயமைம்பத்தாறில்ஒன்று,பதி னெண்புராணத்தொன்று, மாற்றறி தானமறியவெட்டி வைத்திருக்கும் பதிற்பொன், மீனவிராசி, மீன் இது திருமாலவதாரத்துமொன்று.
மச்சன் - உபரிசரவசுவின் மூன்றாம் புத்திரன்.
மச்சாவதாரம் - விஷ்ணு தசாவதாரத் துள்ளேமுதலவதாரம்,இவ்வவதாரம் வேதங்களை யபகரித்துக்கொண்டோ டிக் கடலிலொளித்திருந்த சோமுகா சுரனைக்கொன்று அவற்றைமீட்டற் பொருட்டெடுத்தது. இந்தஅவதாரத் திலேயே மகாப்பிரளயம்வர வ ழா வது மநுவும்சப்தரிஷிகளும் மீனுருக் கொண்டு தம்முயிர் பிழைத்திருக்க, மற்றெல்லா வுலகங்களும் அழிந் தொழிந்தன. மீனவதாரம், இது திருமால் தசாவதாரத்துமொன்று.
மச்சாள் - மைத்துனி.
மச்சான் - மைத்துனன்.
மச்சி - பூனைக்காலி, மச்சுனி.
மச்சிகை - மோர்.
மச்சியம் - கடுகுரோகிணி, சிவபுராணத் தொன்று.
மச்சியாச்சி - பொன்னுங்காணி.
மச்சினச்சி - மச்சுனி.
மச்சினன் - மச்சான்.
மச்சினி - மச்சாள்.
மச்சினிச்சி - மைத்துனி.
மச்சு - குற்றம், சுவர்க்குமேல் வெளிய டைப்பு, மஞ்சு, மேனிலை.
மச்சுக்கல் - மேல்வீட்டிற்பாவுகல்.
மச்சுவீடு - மச்சடைத்தவீடு.
மச்சுனச்சி - மச்சுனி.
மச்சுனமை - மைத்துனவுரிமை.
மச்சுனன் - மைத்துனன்.
மச்சுனி - மைத்துனி.
மச்சேந்திரநாதர்-நவநாத சித்தரிலொரு வர்.
மச்சை - உட்சுரம், மறு, மீனம்பர், மூ ளை அது சத்ததாதிலொன்று.
மச்சைசமுற்பவம் - சுரோணிதநீர்.
மச்சோதரி - மச்சகந்தி.
மஞ்சகம் - கட்டில், மேடை.
மஞ்சகாசிரயம் - மூட்டுப்பூச்சி.
மஞ்சட்கடம்பு - ஒருமரம்.
மஞ்சட்கல் - கொடுங்கோபிச்சிலை.
மஞ்சட்காப்பு - மஞ்சட்பொடிச்சாந்து.
மஞ்சட்காமாலை - ஒருநோய்.
மஞ்சட்செவ்வந்தி - ஒருசெவ்வந்தி.
மஞ்சட்டி - மஞ்சிட்டி.
மஞ்சட்பாவட்டை - ஒருபாவட்டை.
மஞ்சட்பூச்சு - மஞ்சட்குளிப்பு.
மஞ்சணத்தி
மஞ்சணாற்றி } மஞ்சணுணா.
மஞ்சணீர்ச்சீட்டு வளர்ப்புப் பிள்ளையை ச் சுதந்தரத்திற்குரித்தாக்குஞ்சீட்டு.
மஞ்சணீர்ப்பிள்ளை - சுதந்தரத்திற்குரிய வளர்ப்புப்பிள்ளை.
மஞ்சணுணா - ஒருநுணா.
மஞ்சணை - எண்ணெய்க்குங்குமம்.
மஞ்சமண்டபம் - பள்ளிமண்டபம்.
மஞ்சம் - கடல், கட்டில், சப்பரம்.
மஞ்சரம் - முத்து.
மஞ்சரி-ஒருபிரபந்தம், தளிர், நாயுருவி, பூங்கொத்து, பூத்திரள், பூமாலை, ம லர்க்காம்பு, முத்து.
மஞ்சரீகம்-மிருதுவானமருக்கொழுந்து
மஞ்சலன் - விற்காரன்.
மஞ்சலிக்கான் - உருத்திரசடை.
மஞ்சளலரி-ஒருசிவலிங்கச்செடி, அலரி
மஞ்சளாலாத்தி-ஆலாத்திகளிலொன்று
மஞ்சளிளங்கலையன் - ஒருவகைநெல்.
மஞ்சள் - அரிசனம்.
மஞ்சள்மந்தாரை - ஒருவிதமந்தாரை.
மஞ்சள்வசந்தம் - ஒருசடங்கு, ஒரு விளையாட்டு.
மஞ்சனச்சாலை - ஸ்நானமண்டபம்.
மஞ்சனம் - குளித்தல், முழுகல்.
மஞ்சனி - வேலிப்பருத்தி.
மஞ்சன் - மகன், மைத்துனன்.
மஞ்சா - இலைக்கள்ளி.
மஞ்சாடி - இரண்டு குன்றிமணிகொண் டநிறை ஒருமரம், வயிரநிறை.

மஞ்சாரி - கஞ்சாங்கோரை.
மஞ்சாளி - வயிரநிறுக்குநிறை.
மஞ்சி - சங்கம்வாங்கி, சிறுவரம்பு, படகு, பேடகம், பேழை, மரல்நார்.
மஞ்சிகம் - தாளிக்கொடி, பேடகம்.
மஞ்சிகன் - நாவிதன்.
மஞ்சிகை - காதணி, குண்டலம், கையாந்தகரை, தாளிக்கொடி, பேழை, வேசி.
மஞ்சிட்டம் - மஞ்சாடி.
மஞ்சிஷ்டி, மஞ்சிட்டி - ஒரு கொடி, ஒரு சாயவேர்.
மஞ்சிதேவர் - காசியிலுள்ள பெருமாள் விக்கிரகத்தை எழுந்து சென்று எல்லாருங்காண சிவலிங்கத்தை வணங்கச் செய்தவர் அது காரணமாக அங்கிருந்த வைணவர்கள் சிவதூஷணம் செய்யாதடங்கினர்.
மஞ்சிபலை - வாழை.
மஞ்சிமம் - அழகு.
மஞ்சிரம் - காலாழி.
மஞ்சிலிக்கான் - உருத்திரசடைப்பூடு.
மஞ்சிலை - செங்கல்.
மஞ்சில் - பழையவரம்பின்வழி.
மஞ்சிறு - கையாந்தகரை.
மஞ்சீரம் - வண்ணார்சேரி.
மஞ்சு - அழகு, ஆபரணம், இளமை, கட்டில், களஞ்சியம், பனி, முகடு, முதுகு, மேகம், யானைமுதுகு, வலி.
மஞ்சுகமனன் - நடையழகன்.
மஞ்சுகமனை - அன்னப்பேடை.
மஞ்சுகம் - கொக்கு.
மஞ்சுகேசி - கிருட்டினன்.
மஞ்சுகோசர் - வஜ்ரசூசிசெய்த அசுவகோசர் குரு.
மஞ்சுக்கட்டை - மறுமாடி.
மஞ்சுபாஷணி - நயவசனி.
மஞ்சுலம் - நீர்ப்பாய்ச்சல்.
மஞ்சுவந்தம் - இமயமலைக்கு உத்தர திசையிலுள்ள ஒருமலை, இதில் மிகப் பெரிய தடாகமொன்றுண்டு, அதில் பஞ்சவர்ணங்களோடு கூடியதாமரை மலர்கள் மலர்வன.
மஞ்சுவாணி - இந்திராணி, கௌரி.
மஞ்சுளம் - அழகு.
மஞ்சூகை, மஞ்சூடை - கோட்டை, பேழை
மஞ்சூரம் - கடலை.
மஞ்ஞை - மயில்.
மஞ்ஞையூர்தி - கந்தக் கடவுள்.
மஞ்ஞைவாகனன் - சுப்பிரமணியன்.
மடக்கடி - கலக்கம், முடக்கு.
மடக்கடிக்காரன் - சூதன்.
மடக்கம் - அடக்கம், முடக்கு, வளைவு.
மடக்கல் - அடக்கல், தடுத்தல், வளைத்தல்.
மடக்கியல் - சுரிதகம்.
மடக்கு - ஓரலங்காரம் இது வந்தமொழியே மடங்கி வருவது, ஒருபாத்திரம், பேரகல், மடக்கென்னேவல், மடங்கடிப்பு, முடக்கு.
மடக்குக்கத்தி - பூச்சாத்தி.
மடக்குக்குடர் - ஒரு குடர்.
மடக்குதல் - மடக்கல்.
மடக்குப்பிடிக்கத்தி - எழுத்தாணிக்கத்தி.
மடக்குமடக்கெனல் - ஒலிக்குறிப்பு.
மடக்குவரி - இறைமேலிறை.
மடக்கொடி - பெண்.
மடங்கடித்தல் - தோற்றோடச்செய்தல், முறியடித்தல்.
மடங்கலர் - பகைவர்.
மடங்கல் - இடி, இயமன், காலன், கீழ்ப்படிதல், சிங்கம், தாழை, மீளல், முடங்கல், யுகமுடிவு, வடவா முகாக்கினி, வியாதி.
மடங்கலூர்தி, மடங்கல்வாகனி - பாரசத்தி.
மடங்கல்விரோதி, மடங்கல்வைரி - சரபம், எண்காற்புள்.
மடங்கற்கொடியோன் - வீமன்.
மடங்கு - அளவு, இழைக்கயிறு, பங்கு, மடங்கென்னேவல், வியாதி.
மடங்குதல் - கீழ்படிதல், மீளல், முடங்கல்.
மடதருமம் - மடபுண்ணியம்.
மடதி - ஆலங்கட்டி.
மடத்தல் - அறியாமையாயிருத்தல்.
மடத்தனம் - அறியாமை.
மடநடை - பதவியநடை.
மடநல்லார் - பெண்கள்.
மடநோக்கு - எண்ணமுமச்சமுங்கூடிய பார்வை.
மடந்தை - பத்தொன்பதாண்டிற் பெண், பருவமாகாதபெண், பெண்.
மடந்தைபாகன், மடந்தைபாதியன் - சிவபெருமான்.
மடப்பத்து - மடத்திற்குரியன.

மடப்பம் - அரண்மனையிற் பெண். ஐஞ்ஞூறு கிராமத்திற்குத் தலைக்கிராமம்.
மடப்பளி - ஒருசாதி, சமயல்வீடு.
மடப்பற்று - மடத்திற்பொருள்.
மடப்பிடி - பெண்யானை.
மடமடத்தல்
மடமடப்பு } ஈரடுக்கொலிக்குறிப்பு.
மடமடெனல்
மடமை - அறிவின்மை இது பெண்கள் நாற்குணத்தொன்று, கபடின்மை, புத்தியீனம்.
மடம் - அறப்புறம், இரதம், கோயில், சத்திரம், மடமை, முனிவர், வாசம்.
மடரன் - ஒருமஹருஷி.
மடலரிதாரம் - ஓரரிதாரம்.
மடலாயம் - மடம், பெரியோர்வசிக்கும் [வீடு.
மடலித்தல் - மடங்கித்திரும்புதல்.
மடலூர்ச்சி - மடலூர்தல்.
மடலூர்தல் } மடற்குதிரையிவர்தல்
மடலேறுதல் } இது அகப்பொருட்டுறையினொன்று.
மடல் - ஈந்து, கமுகு, தாழை, தெங்கு பனை, வாழையிவற்றின்பூமடி, ஏற்றமடல், ஒருபிரபந்தம், ஓலைமடல், காதின்மடல், கைச்சீப்பு, சிறுவாய்க்கால், பனைமட்டைக்கங்கு, பூவிதழ், வாழை முதலியவற்றின் மடல்.
மடவரல் } இளம்பெண்.
மடவாள் }
மடவாமீன் - ஒருமீன்.
மடவார் - அறிவீனர், பெண்கள்.
மடவியர் - பெண்கள்.
மடவை - ஒருமீன், கடம்பமரம், துடுப்பு.
மடவைக்கெண்டை - ஒருவகைமீன்.
மடற்பனை - கங்குப்பனை.
மடற்பாளை - பூமடற்பாளை.
மடற்றுத்தம் - ஒருதுத்தம்.
மடன் - அறியாமை, அறிவிலான், உன்மத்தன்.
மடன்மா - மடற்குதிரை.
மடாதிபதி - மடத்தலைவன்.
மடாதிபத்தியம் - மடத்தலைமை.
மடி - அடங்கல், கேடு, சீலை, சோம்பல், சோறு, தாழை, தாழைவிழுது, நோய், பொய், மடங்குதல், மடிந்தது, மடியென்னேவல், முலைமேற்றிரள், வயிறு, வலையினருகு.
மடிகம்பு - வலைகம்பு.
மடிகால் - கால்முடக்கி சகணத்தின்கீழ் வைத்திருத்தல்.
மடிக்குதல் - உபாயமாய்ச் செயித்தல், கொல்லுதல், மடக்குதல், முடக்குதல்.
மடிச்சுக்கட்டி - ஒருவிதப்புழு.
மடிதல் - கெடுதல், சாதல், மடங்குதல்.
மடித்தல் - மடிக்குதல்.
மடிபிடி - சண்டை, மடிச்சீலையிற் பிடிக்கும்பிடி.
மடிப்பணம் - கைப்பணம்.
மடிப்பாளி - மடிப்புக்காரன்.
மடிப்பிச்சை - மடிச்சீலையில் வாங்கும் பிச்சை.
மடிப்பிளை - வங்கமணல்.
மடிப்பு - மடக்கு, மடித்திருப்பது, மோசம், வஞ்சகம்.
மடிப்புக்காரன் - தீதுசெய்வோன், வஞ்சகன்.
மடிப்பெட்டி - கொட்டைப்பெட்டி.
மடிப்பை - அடைப்பை.
மடிமாங்காய்போடுதல் - பரிதானங்கொடுத்தல், பொய்க்குற்றஞ்சார்த்துதல்.
மடிமை - சோம்பு.
மடிவிடுதல் - மடிதளர்தல், அது பசு முதலியன சினைக்குறிகாட்டல்.
மடிவித்தல் - மடியச்செய்தல்.
மடிவு - கேடு, சாவு, சோம்பு, தரித்திரம், மடக்கம், மடிதல்.
மடு - ஆற்றினுட்பள்ளம், குளம், மடுவென்னேவல்.
மடுத்தல் - சுத்தியல், நிறைத்தல், மடிப்புச்செய்தல், வாய் முதலியவற்றாலுட்கொள்ளல்.
மடுப்பு - மடிப்பு.
மடை - ஆபரணக்கடைப்பூட்டு, சோறு, துவாரம், தேவதைகட்குப் படைப்பது, நீர்பாயுமடை, மதகு, வாய்க்கால்.
மடைக்கடல் - முகத்துவாரமுள்ளகடல்.
மடைத்தலை - மடைமுகம்.
மடைத்தனம் - அறிவீனம்.
மடைத்தொழிலோன் - சமயற்காரன் இவன் அரசர்க்குறுதிச் சுற்றத்தொருவன்.
மடைத்தொழில் - சமையல்வேலை.
மடைநூல் - பாகசாஸ்திரம்.
மடைபரவுதல் - நிவேதனஞ்செய்தல்.
மடைபோடுதல் - மடைப்பண்டம் பரவல், மடைப்பண்டம், பரப்பல்.

மடைப்பண்டம் - அலங்காரநைவேத்தியம்.
மடைப்பள்ளி - அடுக்களை, ஒருசாதி.
மடைப்புத்தி - அறிவீனம்.
மடைமாற்றுதல் - மடைக்கழித்தல்.
மடைமுகம் - ஆற்றுவரம்.
மடையசாம்பிராணி - அறிவீனன்.
மடையப்புத்தி - மடைப்புத்தி.
மடையன் - அறிவிலான், சமயற்காரன்.
மடையான் - ஒருபறவை.
மடைவேலை - சமையல்வேலை, புத்தியற்றவேலை.
மடைவைத்தல் - மடைபோடுதல்.
மட்கலசம் - மண்கலயம்.
மட்கலம் - மண்பாண்டம்.
மட்கல் - அழுக்கேறல், ஒளிமழுங்கல்.
மட்குகை - மண்குகை, மழுங்குதல்.
மட்குடம் - மண்குடம்.
மட்குதல் - மட்கல்.
மட்சம் - குரோதம், சமூகம்.
மட்சிகம், மட்சிகை } ஈ.
மட்டக்கோல் - மட்டங்கட்டுங்கோல்.
மட்டங்கட்டுதல் - சரியாய்நிறுத்தல், நிதானம்பண்ணல்.
மட்டசுத்தம் - மட்டம்.
மட்டச்சுறா - ஒருமீன்.
மட்டத்துருத்தி - ஒருவிசிறி.
மட்டந்தட்டுதல் - ஒப்புரவுதட்டுதல்.
மட்டப்பலகை - சமனறிகருவி.
மட்டம் - அளவு, எல்லை, உத்தேசம், ஒப்புரவு, கரும்பு நெல் மூங்கில் வாழை யிவற்றின் கன்று, கேடகம், சமம், வாலயானை, வாலக்குதிரை, மூன்றெழுத்துடையதாளம்.
மட்டம்பிடித்தல் - கப்பித்தல், நிதானம் பண்ணல்.
மட்டம்வெடித்தல், மட்டம்வைத்தல் } கப்பித்தல்.
மட்டலகு - ஒருகருவி.
மட்டவேலை - பருமட்டானவேலை.
மட்டறிதல் - அளவறிதல், குறிப்பறிதல்.
மட்டாயுதம் - வாள்.
மட்டி - ஒழுங்கின்மை, கடன்மட்டி, படைக்கலம், மட்டியென்னேவல், மதிகேடன்.
மட்டிகை - சாணிமுத்திரை.
மட்டிடுதல் - மட்டுக்கட்டுதல்.
மட்டித்தல் - பூசுதல், மட்டுக்கட்டுதல், மண்டலித்தல், முறித்தல்.
மட்டித்தையல் - பருக்கன்றையல்.
மட்டியம் - சத்ததாளத்தொன்று.
மட்டிலை - பச்சிலை.
மட்டு - அவதி, அளவு, எல்லை, கள்.
மட்டுக்கட்டுதல் - அளவிட்டறிதல்.
மட்டுக்கோணம் - சரிகோணம்.
மட்டுத்தப்பு - அளவுக்கதிகம், நிதானமின்மை.
மட்டுத்திட்டம் - சரிநிதானம்.
மட்டுப்படாமை - அடங்காமை, எட்டாமை.
மட்டுப்படுதல் - அளவுபடுதல்.
மட்டுப்படுத்தல் - அளவுபடுத்தல்.
மட்டுப்பிரமாணம் - சரியளவு.
மட்டுமதியம் - அளவு, நிதானம்.
மட்டுமரியாதை - ஆசாரவுபசாரம்.
மட்டுமிஞ்சுதல் - மட்டுத்தப்புதல்.
மட்டுவார்குழலி - திருச்சிராப்பள்ளியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
மட்டை - உடற்குறை, ஒருபாம்பு, கமுகு தெங்கு வாழை பனை யிவற்றின்மட்டை, மூடாள்.
மட்டைகட்டுதல் - கடகம் முதலியவற்றிற்குமட்டைவைத்துத் தலைகட்டுதல்.
மட்டைக்கட்டு - வட்டுத்திராட்சி.
மட்டைகுதிரை - மடலாற் செய்யப்பட்டகுதிரை.
மட்டைக்குறி - ஒருசாயக்குறி.
மட்டைக்கோரை - ஒருபுல்.
மட்டைச்சொண்டு - பெரியசொண்டு.
மட்டைத்தேள் - திருநீலகண்டன், பிள்ளைத்தேள்.
மட்பகைஞன் - குயவன்.
மண்பாண்டம் - குயக்கலம்.
மட்பாத்திரம் - மண்பாண்டம்.
மணக்கோலம் - கலியாணவலங்காரம்.
மணங்கட்டுதல் - வாசனை சேர்க்குதல்.
மணங்கல் - பானை, மிடா.
மணங்கு - ஆட்டுக்குட்டி, இருவாட்சி, ஒருநிறை.
மணச்சீலை - கூறைச்சீலை.
மணத்தக்காளி - ஒருசெடி.

மணத்தல் - கமழ்தல், கூடல், மோத்தல், வேட்டல்.
மணந்தட்டுதல் - மணங்கிளர்தல்.
மணப்பந்தல் - கலியாணப்பந்தல்.
மணப்பறை - கலியாணப்பறை.
மணப்பு - மயப்பு, வாசனை.
மணப்பெண் - கலியாணப்பெண்.
மணப்பொருத்தம் - விவாகத்திற்குரிய பொருத்தம் பத்து அவை இராசி இராசித்தலைவர் இரச்சு கணம் திரி தீர்க்கம் தினம் மாகேந்திரம் யோனி வசியம் வேதை.
மணமகள் - மணவாளி, மனைவி.
மணமகன் - புருடன், மணவாளன்.
மணமண்டபம் - கலியாணமண்டபம்.
மணமுரசு - விழாமுரசு, [வாசனை.
மணம் - கலியாணம், கூட்டம், மகிழ்ச்சி,
மணம்பிடித்தல் - எழில்பிடித்தல்.
மணலக்கம்பம் - பால்வீதிமண்டலம்.
மணலி - ஓரூர், மருக்கொழுந்து.
மணலிமுத்துகிருஷ்ணமுதலியார் - இவர்இற்றைக்குநூற்றைம்பது வருஷங்களுக்குமுன்னேசென்னையில் பிரபலமாக வாழ்ந்திருந்த ஒரு வேளாளப்பிரபு, கல்வி கேள்வி யொழுக்கங்களோடு பெருஞ்செல்வம் ஈகை முதலிய நற்குணங்களுக்கெல்லாம் ஆலயமாயிருந்தவர். இராமாயண கீர்த்தனைபாடின சீகாழி அருணாசலகவிராயருக்குப் பொன்மாரி பொழிந்தவள்ளல் இவரே ஆயிரம்வருஷங்களுக்கு முன்னே பாடப்பட்ட கம்பராமாயணத்திற்கும் இவர் மரபினரே அபிமானப் பிரபுக்களாயிருந்தார்கள்.
மணலூர்புரம் - மணிபுரம், பாண்டிநாட்டகத்தே சித்திராங்கத பாண்டியனுக்குஇராஜதானியாயிருந்தநகரம். சோழநாட்டிலுள்ள ஒரு சிற்றூர்.
மணலை - ஒருமீன்.
மணல் - வெள்ளைமண்.
மணல்வாரி - ஒருநெல், ஒருபுல், மணல் நீக்குங்கருவி.
மணவணி - கலியாணவலங்காரம். [ம்.
மணவறை - பள்ளியறை, மணமண்டப
மணவறைத்தோழர்-மணமக்கடோழர்.
மணவாட்டி - மனைவி.

மணவாளதாசர் - இவர் பிரபந்நகாயித்ரியென்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற இராமானுஜ நூற்றந்தாதி பாடின திருவரங்கத்தமுதனார் திருப்பேரனார், இவர் பிரபந்தவகை தொண்ணூற்றாறுஞ்செய்த பிரபலமான தமிழ்ப்புலவர் திலகர், இவரால் செய்யப்பட்ட நூல்களுள்ளே, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி முதலிய எட்டுமாத்திரம் அஷ்டப்பிரபந்த மென்னும் பெயர்பெற்று அச்சேறிஅச்சோடுவிளங்குகின்றன, மற்றவையாவும் இறந்தொழிந்தன ஆயினும், இவரருளிச்செய்த திருவரங்கக்கோவையென்னும் பிரபந்தத்திற் சிலபாடல்கள் மாத்திரம் இறவாது உயிரோடிருந்துலாவுகின்றன, அப்பாடல்களிற் சிலவற்றை அடியில் வரைந்திருத்தல் காண்க.

"பேயோவெயினர முதாலயத்திற்பிறந்தவுன்னை, யேயோதினைப்புனங்காவல் வைத்தாரெழுபாருமுண்ட, வாயோன்றிவுந்தி பூத்தோனரங்கன் மணிவரைமேல், ஆய்யாவெனுங்குலந்தோ புனத்தையழிக்கின்றதே."

"அல்லைப்பகல்செய்தமாவரங்கேசரணி வரைமேற், கொல்லைக் குறவர் மடந்தை யெங்கே சொலும்கோலமதன், வில்லைக்குனிப்பவரேய நூராகம்விளைப்பவரே, கல்லைப்பெண்ணாக்குமவரே யென்மானத்தைக்காப்பவரே."

"நீவந்தெனக்குமுன்னே நின்றமாயமுநீடழையோ, டாய்வந்தமாயமும் யாது கொல்லோவன்று நூற்றுவர் பாற், போய்வந்தநேமிப் பெருமானரங்கன்பொருப்பிலிள, வேய்வந்த தோளி யெனக்கென் சொன்னாள் கொலைவேலவனே."

மணவாளமாமுனிகள்-இவரும் சிவாக்ரயோகிகளும்ஒருகாலத்தவர்கள், இருவரும் தஞ்சாவூரிலே சரபோஜிமகாராஜன் சமுகத்தில்பதினேழுநாள்செய்தசமயவாதப் போரிலேதோற்றவராயினும் இவர்தமிழ்ப்புலமையில் மிகச்சிறந்தவரென்பது இவர் அருளிச்

செய்த உபதேசரத்நமாலை முதலிய பிரபந்தங்களால் கரதலா மலகமாக விளங்கும்.

மணவாளன் - ஆண்மகன், நாயகன்.

மணவாளி-புதுமணப்பெண், யாப்பிளை.

மணவியது - மணமுடையது.

மணவினை - விவாகச்சடங்கு.

மணவை - அடுப்பு, ஓரூர்.

மணவோலை-விவாகத்திற்கு வரவழைக்கும் பத்திரிகை.

மணற்காளான் - தவளை, மணலிலே முளைக்குங்காளான்.

மணற்குன்று - மணற்றிட்டை.

மணற்கூகை - தவளை.

மணற்கோவை - ஒருகொவ்வை.

மணற்சோறு - மணலாற் சங்கற்பிக்குஞ்சோறு.

மணற்பாக்கு - மணலிலிட்டுவைக்கும் பாக்கு.

மணற்பாங்கு - மண்ணிலம்.

மணற்றரை - மணல்கொண்டநிலம்.

மணற்றவளை - தவளையிலோர்பேதம்.

மணற்றாரா - ஒருவகைத்தாரா.

மணற்றிட்டை - மணற்றிண்ணை.

மணாட்டி - மணவாட்டி.

மணாளன் - ஆண்மகன், மணவாளன்.

மணி - அடிக்குமணி, அழகு, ஆட்டின் களகம்பளம், இரண்டரைநாழிகை கொண்ட நேரம், உருத்திராக்கம், எறிமணி, ஓசை, கண்விழி, கறுப்பு, சங்கு முதலியவற்றாலாயமணி, தாமரைக்கொட்டை, துளசி, நவமணிப்பொது, நன்மை, நீர்க்கலசம், நெல் முதலிய தானியம், பருக்கைக்கல், பறவையின் கழுத்தாரம், பெண்குறியினோருறுப்பு, பொன் முதலியவற்றாலாயமணி, மருந்துக்கல், முத்து, யானைமணி.

மணிகடம் - உத்தாமணி.

மணிகண்டன்-சிறீகண்டன், சிவபிரான்

மணிகம் - நீர்க்குடம்.

மணிகர்ணிகை - காசியிலுள்ள ஒரு தீர்த்தம், இது காசியில் கங்கையின் ஒரு கூட்டம். தீர்த்தத்துறை இந்தத்துறையில் மூழ்குவோர்அடையும்பயன் மிகப்பெரிதென்பதுலோகப்ரசித்தம்

மணிகன்றிகை / மணிகன்னிகை } காசித்தலத்திலோர் தீர்த்தம்.

மணிகாசம் - கண்ணோயுளொன்று.

மணிகாரகன் - இரத்நங்களை வேகடம் செய்வோன் அல்லது சாணைபிடிப்போன்.

மணிகாரம் - வெண்காரம்.

மணிகானனம் - கழுத்து.

மணிகிரி - இரத்நகிரி.

மணிகூடம் - ஒருபர்வதம்.

மணிக்கஞ்சட்டி - மணிச்சட்டி.

மணிக்கட்டு - புயத்தின்கீழ்.

மணிக்காம்பு - தக்காளி.

மணிக்கிரீவன் - குபேரன் மக்களிலொருவன்.

மணிக்குடர் - சிறுகுடர்.

மணிக்கூடு - நாழிகைவட்டம்.

மணிக்கோவை - மணிமாலை.

மணிசகம் - சந்திரகாந்தம்.

மணிசரம் - மணிக்கோவை.

மணிசேகரம் - யமன் அந்தப்புரம்.

மணிசௌபானம் முத்து முதலிய இரத்நங்களாற்றொடுத்த ஆரம்.

மணிச்சட்டி - பெருஞ்சட்டி.

மணிச்சோதி - இரத்நகாந்தி, வாயுதேவன்வில்.

மணிதம் - மணியோசை.

மணிதனு - வானவில்.

மணிதீபம் - பாற்கடலின் நடுவேயுள்ள ஒருதீவு.

மணிதுருவிடுதல் - வேகடஞ்செய்தல்.

மணித்தக்காளி - ஒருசெடி.

மணித்துவீபம் - பாற்கடலிலுள்ள வோர்த்வீபம்.

மணித்துவீபன் - ஆனந்தன்.

மணிநா - மணியினாக்கு.

மணிந்தம் - கைக்குளைச்சு.

மணிபத்திரன் - ஒருசைனபோதகன்.

மணிபந்தம் - மணிக்கட்டு.

மணிபர்வதம் - ஒருபர்வதம்.

மணிபிடித்தல் - தானியம்பிடித்தல்.

மணிபுரம் - கலிங்கதேசத்துள்ள ஒரு பட்டணம்.

மணிபுஷ்பகம் - சகாதேவனதுசங்கு.

மணிபூமி - இரத்தினம்விளைநிலம்.

மணிபூரகம் - ஆறுதாரத்தொன்று அது நாபித்தானம்.

மணிபூரம் - இரைக்குடர், கொப்பூழ்.
மணிப்பவம் - இருபது.
மணிப்புளகு - நெய்க்கொட்டான்.
மணிப்புரு - ஒருபுரு.
மணிப்புன்கு - பொன்னுங்காய்.
மணிப்ரபை - ஸநருதி மனைவி.
மணிமகுடம் - வீட்டின்புறங்காப்போலை யின் முடிச்சு.
மணிமங்கலம் - ஒருதலம்.
மணிமண்டபம் - இரத்நமண்டபம்.
மணிமதி - வில்வலன்வாதாவி என் போரிருந்த பட்டணம்.
மணிமந்தம் - இந்துப்பு.
மணிமந்தன் - குபேரனுக்குத்தோழனு கியவொரு யக்ஷன்.
மணிமலை - பொன்மலை.
மணிமாலை - இலக்குமி, ஒரு பிரபந்தம் அது எப்பொருண்மேலும் வெண் பாவிருபதும் கலித்துறை நாற்பதும் விரவிவரச் செய்து, கழுத்தணிமா லை, தந்தரேகை, பிரபை, முத்து வடம்.
மணிமான் - சூரியன்.
மணிமேகலை - ஒருபெண் தெய்வத்திற் கும், கோவலனுக்கு மாதவியிடத்துப் பிறந்த மகளுக்கும், ஒரு தமிழ்க்கா வியத்திற்கும் பெயர், இந்தத் தமிழ் க்காவியம் கோவலன் காமக்கிழத்தி யாகிய மாதவியின் மகளாகிய மணி மேகலை யென்பவளுடைய சரிதத் தைக் கூறுதலால் இந்தப்பெயர்பெற் றது. இது சாத்தனாரால் செய்யப்பட் டது இது சொற்சுவை பொருட் சுவை முதலியவற்றால் மிகச் சிறந்த தென்பது துறைமங்கலம் சிவப்பிர காசசுவாமிகள் அருளிச்செய்த திரு வெங்கைக் கோவையிலுள்ள, "மந் தாகினியணி வேணிப்பிரான்வெங்கை மன்னவநீ, கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங்கொள்வதெங்ங ன், சிந்தாமணியுந் திருக்கோவையு மெழுதிக்கொளினும்,நந்தாவுரையை யெழுதவெவ்வாறு நவின்றருளே.' என்னுஞ் செய்யுளாலினிது விளங் கும்; இந்நூல் பௌத்தமதச் சார் புள்ளது. பஞ்சகாவியத்தொன்று.
மணியகாரன் - விசாரணைகாரன்.
மணியம் - மணியகாரன், வேலை.
மணியாசம் - துலக்கம், மணியாசப்பல [கை.
மணியாசி - ஒருமரம்.
மணியாசிக்கட்டை - சாந்தழுத்தும்பல [கை.
மணியாட்சி - ஓரூர்.
மணியாட்டி - பூசாரி.
மணியாமணக்கு - பறங்கியாமணக்கு.
மணியிலையான் - ஓரிலையான்.
மணியீரல் - ஓரீரல்.
மணியூதுதல் - மணிதிரட்டுதல்.
மணிராககம் - இங்குலிகம்.
மணிவடம்-அக்கமாலை, இரத்தினமாலை, பாதசாலம், முத்துமாலை, வீரக்கழல்.
மணிவலை - ஒருவலை.
மணிவீசம் - மாதுளை.
மணிவேர் - மணிபோலிடையிடை திர ட்சிவிழுந்திருக்கும் வேர்.
மணீசகம் - சந்திரகாந்தம்.
மணீவசம் - பூ.
மணீவண்ணன் - காவிரிப்பூம்பட்டினத் திற்கு மேற்கே கோயில் கொண்டி ருக்கும் திருமால் பெயர்.
மணை - திருவலகு, பணிமுதலிய முட்டு, பாதபடி, மழுங்சல்.
மணையது - மழுங்கலாயுதம்.
மண் - அணு, ஒப்பனை, கழுவுதல், சுட்டசாந்து, துகள், நிலம், பூமி, மண்ணென்னேவல், மலை, மாட்சி மை, முழவின் மார்ச்சனை.
மண்கட்டி - மண்ணாங்கட்டி.
மண்கட்டுதல் - கருக்கட்டுதல்.
மண்கட்டை - உடம்பு, வாணக்குழலி னெதிரடைப்பு.
மண்கணை - ஒருபறை, வாச்சியப்பொ [து.
மண்கண்டம் - மட்பார்.
மண்கலம் - ஓடு, மட்பாண்டம்.
மண்கல் - செங்கல், வெண்சுக்கான்கல்.
மண்கிணறு - கற்பாரற்றகிணறு.
மண்கிண்டுதல் - மண்வேலை செய்தல்.
மண்குகை - நிலவறை, மண்ணாற்செய் தகுகை.
மண்கும்பம், மண்கும்பி - மண்மேடு.
மண்கொத்தளம் - மண்ணாற்செய்தகோ [புரம்.
மண்கொழுத்தல் - மண்மதத்தல்.
மண்கோபுரக்கல் - செங்கல்.
மண்சாடி - மட்சாடி.

மண்சிலை - கற்காவி.
மண்சிவப்பு - இருண்டசிவப்பு.
மண்சீலை - குகையைச்சுற்றும்படி மண்டோய்த்தசீலை.
மண்செய்கை - மண்வேலை.
மண்சோறுகறி - சிறுபிள்ளைகள் மண்ணாற் சங்கற்பிக்குஞ் சோறுகறி.
மண்டகம் - ஒரு சிற்றுண்டி, சர்க்கரை போடாதபூரி.
மண்டகாரகன் - சாராயம்வடிப்போன்.
மண்டக்கம் - மண்டக்கு.
மண்டக்கன் - மண்டக்குப்பிடிப்போன்.
மண்டக்காள் - மண்டக்கன்.
மண்டக்கிழுத்தல் - மண்டக்குக் கயிற்றை யிழுத்தல்.
மண்டக்கு - முத்துக்குளிப்பவர்களை யிழுக்குங் கயிறு.
மண்டக்குக்கயிறு - மண்டக்கன்கையிற் கயிறு.
மண்டைக்குக்காரன் - மண்டக்காள்.
மண்டநம் - அலங்காரம், ஆபரணம்.
மண்டப்படி - அலங்காரப்படைப்பு.
மண்டபம் - மாடம்.
மண்டம் - அலங்காரம், ஆமணக்கு, தயிரேடு, தலை, மண்டை.
மண்டயந்தம் - அலங்காரம், சோறு.
மண்டயிலம் - மண்ணிலூறுந் தயிலம், மண்ணில் வடிக்குந்தயிலம்.
மண்டர் - படைவீரர்.
மண்டலகம் - சூரியன் வட்டாகாரம், பளிங்கு.
மண்டலசெயம் - திக்குவிசயம்.
மண்டலநிருத்தம் - சுற்றியாடு நிருத்தம்.
மண்டலநிலை - இருகாலும் பக்கல்வளைய மண்டலித்து நிற்றல்.
மண்டலபுருடன் - தொண்டைநாட்டிலே வீரையென்னுமூரிலே யிருந்த ஆருகதராகிய ஒரு தமிழ்ப்புலவர், சூடாமணி நிகண்டு இவர்செய்ததே, இவர் குன்றையூரி லிருந்த குணபத்திராருக்கு மாணாக்கர். இவர் கிருஷ்ணராயன் என்னும் அரசன் காலத்தவர்.
மண்டலபுருஷன் - சூடாமணி நிகண்டு செய்த வாசிரியன்.
மண்டலமட்டி - சிற்றிலுப்பை.
மண்டலமழை - எங்கும்பொழியுமழை.
மண்டலமாக்கள் - அரசர்.
மண்டலமிடுதல் - மண்டலம் வகுத்தல், மண்டலித்தல்.
மண்டலம் - இயந்திரம், இருகாலும் பக்கல்வளைய நிற்குநிலை, உண்டை, குவியல், சூரியமண்டல முதலியன தேயம், நகக்குறி, நாடு, நாற்பது நாள் கொண்டது, நாற்பத்தெட்டு நாள், பூமி, வட்டம்.
மண்டலம்போடுதல் - மண்டலமிடுதல்.
மண்டலம்வகுத்தல் - நவக்கிரக மண்டல மிரேகித்தல்.
மண்டலவந்தாதி - ஈற்றடி யிறுதியும் முதலடி முதலுமொன்றாகவருவது.
மண்டலவிதி - சக்கரங் கீறுவதற்கான ஒரு விதி.
மண்டலாகாரம் - வட்டாகாரம்.
மண்டலாக்கிரம் - வாள்.
மண்டலாதிபதி, மண்டலாதிபன் - ஏகசக்ராதிபதி.
மண்டலாதீசன் - அரசன்.
மண்டலாத்தல் - அரைவட்டம்.
மண்டலாபிடேகம், மண்டலாபிஷேகம் - நாற்பது நாள் மட்டுக்குநாள் வட்டம் பண்ணுமபிடேகம்.
மண்டலாயிதம் - உண்டை.
மண்டலார்த்தம் - அர்த்தகோளம், பாதிவிட்டம்.
மண்டலி - ஒரெலி, ஒருவகைப் பாம்பு, கூட்டம், நாய், பாம்பு, பூமி, பூனை, மண்டலியென்னேவல்.
மண்டலிகன் - இருபதுயோசனை விஸ்தாரமான தேசத்தை யாள்வோன்.
மண்டலித்தல் - வட்டமிடுதல்.
மண்டலிப்பு - வட்டமிடுதல், வட்டம்.
மண்டலீகரணம் - உருட்டல்.
மண்டலீகர் - அவ்வத் தேசத்தையாளு மன்னர்.
மண்டலேசுவரர் - திருவாரூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மண்டலேசன், மண்டலேசுபரன், மண்டலேச்சுவரன் - அரசன், உலகாதிபதி, மண்டலாதிபதி.
மண்டல் - நெருங்கல், மண்டுதல், மிகுதல்.
மண்டா - இரட்டைக்கருவீட்டி.
மண்டி - இருகான்முடக்கிநிற்குநிலை, கலங்கனீர், களஞ்சியம், கள் முதலியவற்றி னடையல்.

மண்டிகை - அப்பவருக்கம்.
மண்டிதம் - சிறகீரை. அலங்காரம்.
மண்டிதன் - அலங்கரிக்கப்பட்டவன், புத்தகஞதிபன்.
மண்டிபோடுதல் } இருகான் முடக்கி நிற்றல்.
மண்டியிடுதல் }
மண்டிரவல் - கைமாற்ருய் வாங்கியது.
மண்டிலம் - குதிரை, நடனம், நாடு, போர், வட்டமாயோடல், வட்டம்.
மண்டு - மண்டல்.
மண்டுகம் - தவளை.
மண்டுகால் - முட்டுக்கால்.
மண்டுதல் - நெருங்கல், மிகக்குடித்தல்.
மண்டூசீவன் - தவளைக்கல்.
மண்டுகபன்னி - அழிஞ்சில்.
மண்டூகம் - கீச்சுக்கிட்டம், தவளை.
மண்டூகராகம் - ஒருபண்.
மண்டூகர் - ஓரிருடி.
மண்டூகி - பெண்தவளை.
மண்டூகை - வேசி.
மண்டூகை - மட்கலசம்.
மண்டூரம் - கீச்சுக்கிட்டம்.
மண்டெரி - பெருந்தீ.
மண்டை - இரப்போர்கலம், தலையோடு.
மண்டைக்கண் - தாழ்ந்தகண்.
மண்டைக்கரப்பன் - ஒருநோய்.
மண்டைக்குடைச்சல் - தலைக்குத்து.
மண்டைக்கோழை - ஒருகோழைநோய்.
மண்டைசூலை - ஒருநோய்.
மண்டைப்பீனசம் - ஒருநோய்.
மண்டையோடு - தலையோடு.
மண்டைவியாதி - தலைநோய்.
மண்டோதகம் - கோலமிடுதல்.
மண்டோதரி - இராவணன்மனைவி.
மண்ணகுண்டம் - மண்ணுன் மேடை செய்திருக்குமட்டாலை.
மண்ணம் - சுண்ணும்பு.
மண்ணரசி - பூவரசுமரம்.
மண்ணரிநார் - குயக்கலம்வனைந்தரிக [யிறு.
மண்ணரியான் } குயவன்.
மண்ணரிவான் }
மண்ணரைத்தல் - சோம்பி வீணுயிருத் [தல்.
மண்ணல் - மண்ணுதல்.
மண்ணவர் - மனிதர்.
மண்ணன் - மதிகேடன்.
மண்ணு - ஒருமீன்.
மண்ணுங்கட்டி - மண்கட்டி.
மண்ணுசை - ஆசைமூன்றினென்று.
மண்ணுளி - அரசன்.
மண்ணுள்வோன் - அரசன்.
மண்ணணி - மந்தன்.
மண்ணியற்று - மண்பாத்திரம்.
மண்ணிலம் - பூமி.
மண்ணில்வேந்தன் - அரசமரம், முடிதும்பை, வெற்றிலை.
மண்ணிறுதம் - உவர்மண்.
மண்ணின்பிரட்டு - பேரோசனை. [கல்.
மண்ணின்வத்தனம் - இராசவத்தனக்
மண்ணீடு - திண்ணை, மாடம், மூடு சாந்திட்ட வீடு.
மண்ணீட்டாளர் - குயவர், சிற்பாசாரி [யர்.
மண்ணீரல் - மண்ணிரவீறல்.
மண்ணீர் - கழுவுநீர்.
மண்ணுடையான் - அரசன், குயவன்.
மண்ணுணி - ஒருபாம்பு, மந்தன்.
மண்ணுதல் - அலங்கரித்தல், கழுவல்.
மண்ணுலகு - பூமி.
மண்ணுளி - ஒருவகைப்பாம்பு.
மண்ணுறுத்தல் - அலங்கரித்தல்.
மண்ணை - அறிவிலான், இளமை, பசாசு, வாலுளுவை.
மண்ணைத்தனம் - அறியாமை.
மண்ணைமனைத்தல் - காரசார மற்றிரு [த்தல்.
மண்ணையன் - மதிகேடன்.
மண்ணெட்டர் - மண்சுமப்போர்.
மண்ணேரம் - பக்ஷபாதம்.
மண்ணோர் - மனிதர்.
மண்பாண்டம் } மட்கலம்.
மண்பாத்திரம் }
மண்பார் - மண்கண்டம்.
மண்பிடி - மட்பசை.
மண்பொதுத்தந்தை - பிரமன்.
மண்மகள் - பூமிதேவி.
மண்மகள்புதல்வர் - வேளாளர், சூத்திரர்.
மண்மக்கள் - சூத்திரர், வேளாளர்.
மண்மலி - மருக்கொழுந்து.
மண்மழை } புழுதிமழை.
மண்மாரி }
மண்வெட்டி - ஓராயுதம், குயவன்.
மதகந்தை - மஸ்துள்ளது.
மதகமனம் - குழுக்கடா.
மதகயம் } ஆண்யானை.
மதகரி }
மதகரிக்கனை - யானைத்திப்பிலி.

மதகிரி - யானை.
மதகு - சலதாரை, ஏரிநீர்வெளியே போகும்வழி.
மதகுஞ்சரம் - மதயானை.
மதகுபலகை - நீர்தாங்குபலகை.
மதக்கம் - ஆகாசம், மயக்கம், வதக்கம்.
மதங்கஜம் - யானை.
மதங்கநாதன் - நவநாத சித்தரிலொருவன்.
மதங்கமம் - யானை.
மதங்கலை - ஒருமலை.
மதங்கம் - ஒருபறை, ஒருமலை, கலம்பக வுறுப்புப் பதினெட்டி னொன்று, முகில், யானை.
மதங்கர் - ஒருமுனி, பாணர்.
மதங்கன் - ஒருமுனி, சண்டாளன், முருகன், ஒருபார்ப்பனப்பெண்வயிற்றிலே ஓரிழிகுலத்தானுக்குப்பிறந்தபுத்திரன், இவன் பார்ப்பானுவதற்குமுயன்றும் வாய்க்காது இந்திரனைப் பூசித்துச் சண்டதேவனென்னும் பட்டப்பெயர்பெற்றிருந்தவன், ஓரிருடி, இவர் தபோசக்தியினாலே பராசத்திதன் புத்திரியாகி அவதரிக்கப்பெற்றவர், அது காரணமாக பார்வதிதேவிக்கு மாதங்கி என்னும் பெயர் வாய்த்தது. துந்துபிக்கும் பெயர்.
மதங்காச்சிரம் - மதங்கமுனியின் தவச்சாலை.
மதங்கி - காளி, பதினாறுவயதுப்பெண், பாடுவாள், பார்வதி.
மதசலம் - மதநீர்.
மதசாநம் - அன்னப்பறவை.
மதசாரம் - இலவு.
மதசைலம் - யானை.
மதஸ்தலம் - மதுக்கடை.
மதத்தல் - கொழுத்தல், செருக்குதல், மயங்குதல், வெறித்தல்.
மதஸ்தன் } சமயவாதி.
மதத்தன் }
மதஸ்தானம் - மதஸ்தலம்.
மதநகோபாலன் - கிருஷ்ணன்.
மதநசரம் - மன்மதபாணம்.
மதநம் - கடைதல்.
மதனலீலை - கலவி.
மதனன் - மன்மதன்.
மதநாகமம் } கொக்கோகம்.
மதனுகமம் }
மதநியை - மல்லிகைக்கொடி.
மதநீர் - மதசலம்.
மதபேதி - சமயபேதி.
மதப்பிரயோகம் - மதம்பொழிதல்.
மதப்பு - கொழுப்பு, செருக்கு, மயக்கு.
மதப்பூ - மராட்டிமொக்கு.
மதப்பொருப்பு - யானை.
மதமடு - வெள்வெங்காயம்.
மதமதப்பு - மிகுமதப்பு.
மதமதெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு, சுரணை குன்றல், மதமூறல்.
மதமத்தகம் - கஞ்சா.
மதமத்தம்பூ - ஊமத்தை.
மதமத்தன - மதத்தினால்மயங்கிக்கிடப்போன்.
மதமராளம் - மதர்த்த அன்னப்பறவை.
மதமலை - யானை.
மதமெடுத்தல் - மதத்தல், மதமடச்குதல்.
மதமொய் - யானை.
மதம் - அறிவு, கருத்து, கன்மதம், கொழுப்பு, சந்தோஷம், சமயம், சம்மதம், செருக்கு அது உட்பகையாறி னொன்று, தாது, நாவிச்சட்டம், நோக்கம், பெருமை, பைத்தியம், போதனை, மதாளிப்பு, மஸ்துள்ளது, மாயையாக்கை பதினெண் குற்றத்தொன்று, யானைமதம், வலி, விகாரமெட்டினுமொன்று, விருப்பம், வெறி.
மதம்பாய்ச்சுவடு - மதநீர்பாயுஞ்சுவடு.
மதயந்தி } ஒருமல்லிகை. மித்திரசகன் மனைவி.
மதயந்திகை }
மதராகன் - சேவல், மன்மதன்.
மதரபன்னி - வட்டத்திருப்பி.
மதர் - ஆச்சல், களிப்பு, செருக்கு, மதரென்னேவல், மிகுதி.
மதர்த்தல் - களித்தல், செழித்தல்.
மதர்ப்பு } அழகு, ஆசைப்பெருக்கம், இடம், இறுமாப்பு, செழிப்பு, மிகுதி.
மதர்வு }
மதலிகை - ஆபரணத்தொடக்கு வடிவு, தூக்கம்.
மதலிங்கம் - அமுக்கிரா.
மதலை - கொடுங்கை, கொன்றைமரம், சாக்கொன்றை, தூண், பிள்ளை, மரக்கலம், மழலை.
மதவிருத்தம் - யானை.
மதவு - மதகு.
மதவெறி - அகங்காரம், இரத்தவெறி, காமவெறி, குடிவெறி, மார்க்கவெறி, மதவெற்பு.

மதளை - மழலை.
மதனகளத்திரம் - இரதிதேவி.
மதனகாகளம் - குயில்.
மதனகாகுரவம் - புரு.
மதனகாமியப்பூ - ஒருசரக்கு.
மதனகேதநம் - மன்மதன்கொடி, மீன்.
மதனசத்திரம் - சந்திரன்.
மதனசமூத்திரம் - பாற்கடல்.
மதனசலாகை-ஒருமருந்து பெடைக்குயில்.
மதனசாத்திரம் } இலீலைநூல் இது கலைஞான மறுபத்துநான்கிலொன்று.
மதனநூல்
மதனபாடகம் - குயில்.
மதனமோகநன் - கிருஷ்ணன்.
மதனம் - ஈ, கடைதல், காமம், தேன், மெழுகு, மஸ்து, மருக்காரை, மனக்கலக்கம், மௌனம், இது பஞ்சபாணவத்தைக் குணங்களிலொன்று வசந்தகாலம்.
மதனலீலை - காமவிளையாட்டு.
மதனன் - காமன்.
மதனாங்குசம் - குய்யம், நகம்.
மதனாயுதம் - குய்யம்.
மதனாலயம் - குய்யம், தாமரை.
மதனாவத்தை - பிரிவு.
மதனி - மைத்துனி.
மதனை - கள்.
மதனோற்சவம் - வேனில்விழா.
மதனோற்சவை - அரம்பை.
மதன் } அழகு, கலக்கம், காமன், மாட்சிமை, வலி, வளமை, ஓரசுரன், இராம புத்திரனாகிய குசன்வமிசத்தரசன், இராவணன் மைத்துநன், இவன் மகன் லவணாசுரன், வைடூரிய பர்வதத்தில் அசுவிநிதேவர்களை இந்திரன் சோமபானஞ் செய்வித்தபோதுசியவநன் அவ்விந்திரனைக்கொல்லும்பொருட்டுப் பெற்றபுத்திரன், கார்த்தவீரியார்ச்சுநன் புதல்வருளொருவன், தேவக்ஷத்திரன் புத்திரன்.
மது
மதாசலம் - யானை.
மதாசாரம் - சமயவொழுக்கு.
மதாணி - ஆபரணம், பதக்கம்.
மதாத்தியம் - மதுவினான்வருநோய்.
மதாநுசாரம் - சமயத்தைக்கைக்கொள்ளுதல்.
மதாந்தரம் - மதபேதம்.
மதாபிமாநம் - மதப்பற்று.
மதாபிமானி - தன்சமயமே மெய்யெனக்கொள்வோன்.
மதாமத்தன் - மதோன்மத்தன்.
மதாமத்து } மிகவெறி, வெறுப்பின்மை.
மதாமஸ்து
மதாம்பரம் - இந்திரன், யானை.
மதாரம் - கஸ்தூரி, பன்றி, யானை, யானைமைதுனம்.
மதாரன் - எத்தன், தூர்த்தன்.
மதாலசை-ஒருஅப்ஸரசை, வற்சன்மகனாகியகுவலயாசுவன்மனைவி, இவள் தன்புத்திரராகியவிக்ராந்தன், சுபாகு சத்ருமர்த்தநன், அலர்க்கன் என்னும் நால்வர்க்கும் நீதிநெறியுணர்த்திவளர்த்த மஹாமதியாகிய மாதுசிரோமணி.
மதாலம் - கொன்றை.
மதார் - மதர்.
மதாலாபி - குயில்.
மதாவளம் - யானை.
மதாளித்தல் - ஓங்கிவளர்தல்.
மதாளிப்பு - செழிப்பு.
மதானுசாரியர் - சமயநிலை யனுசரிப்போர்.
மதி - அறிவு, கற்கடகவிராசி, சங்கை, சந்திரன், ஞாபகம், நிதானம், பானபாத்திரம், புத்தி, மதியென்னேவல், மாதம், முன்னிலையசைச் சொல் (உ-ம்) சென்மதி, வணக்கம், விருப்பம்.
மதிகம் - மோர்.
மதிகாந்தி - காஸ்மீரப்படிகம், பளிங்கு.
மதிகூர்மை - இந்துப்பு.
மதிகேடன் - மூடன்.
மதிகேடு - அறிவின்மை.
மதிக்கணம்-கணமெட்டிலொன்று அது கிரைவேர் நேரடுத்து வருகிறது, சந்திரகணம்.
மதிக்கலை - பதினாறு.
மதிக்கல் - சந்திரகாந்தக்கல்.
மதிக்கிராக்கிரம் - மதுக்கடை.
மதிசகன் - மன்மதன்.
மதிசாரன் - அந்திசாரன், இவன் இருகேயன் புத்திரன்.
மதிதம் - மோர்.
மதிதனு - பொன்மணல்.
மதிதாக்னி - கடைந்தெடுத்தநெருப்பு.
மதிதிசை - வடக்கு.

மதித்தல் - எண்ணல், கடைதல், கணித்தல், கருதல், கொழுத்தல், வரையறுத்தல்.
மதிநாள் - மிருகசீரிடம்.
மதிபகிச்சம் - வாலுளுவை.
மதிப்பகை - இராகு, கேது.
மதிப்பிரமம்
மதிப்பிராந்தி } பிழை, மதிமயக்கம்.
மதிப்பு - மதித்தல்.
மதிமகன் - சந்திரனுக்கும் உரோகணிக்கும் பிறந்த பிள்ளையாகிய புதன்.
மதிமணல் - வெள்ளிமணல்.
மதிமண்டலம் - சந்திரமண்டலம்.
மதிமயக்கம் - புத்திமயக்கம்.
மதிமயங்கல்
மதிமயங்குதல் } புத்திகெடுதல்.
மதிமரபு - சந்திரவமிசம்.
மதிமறு - சந்திரகளங்கம்.
மதிமலை - சந்திரகிரி.
மதிமேகக்கல் - மந்தாரச்சிலை.
மதிமோசம் - புத்திமோசம்.
மதியமுதம் - சந்திராமிர்தம்.
மதியம் - கணிசம், சந்திரன், நடு, மத்தியானம்.
மதியழிவு - அறிவுகேடு.
மதியாணி
மதியாணிக்கட்டை } நுகத்தி னடுவாணி.
மதியிலி - மதிகேடன்.
மதியீனம் - புத்தியீனம்.
மதியுணி - இராகு, கேது.
மதியுள்ளான் - ஒரு ஞானியரசன்.
மதிரம் - மது.
மதிராக்ருஹம் - கள்விற்கும்வீடு
மதிராட்சி - பெண்.
மதிரை - கள், குபேரன்மகள், வசுதேவன் பாரிகளி லொருத்தி.
மதிலுண்மேடை - கொத்தளம்.
மதிலுறுப்பு - மதிலின் சித்திரம்.
மதில் - இஞ்சி, மதிள்.
மதில்காத்தல் - பகைவர்மேலிடாமலுப்பரிகையைக் காவல்செய்தல் இது புறப்பொருட்டுறைகளினொன்று.
மதில்வளைத்தல் - மாற்றுருப்பரிகையைச் சூழ்தல் இது புறப்பொருட்டுறைகளி னொன்று.
மதிவல்லி - கொத்தான்கொடி.
மதிவல்லோர் - மந்திரிமார்.
மதிவாணர்நாடகத்தமிழ்நூல் - மதிவாணன் என்னும் பாண்டியன் செய்த நாடகத் தமிழ்நூல்.
மதிவாம்பல் - சீந்தில்.
மதிவேணி - சிவபெருமான்.
மதில்-சுற்றுச்சுவர் இதுஇராசசின்னத்தொன்று.
மதிர்கூற்று - மதிற்புறம். [தொன்று.
மதினி - மதனி, தமையன் மனைவி.
மது - அசோகு, அதிமதுரம், அமுதம், இருப்பைப்பூத்திராவகம், உருசி, ஓரக்கன், கள், சித்திரைமாதம், சீனி, தேன், நீர், பால், மகரந்தம், மஸ்துள்ளது, வசந்தகாலம், மதன்.
மதுகண்டம் - குயில்.
மதுகந்தம் - இலுப்பைமரம், மகிழமரம்.
மதுகம் - அதிமதுரம், இருப்பை, எட்டிமரம், காஞ்சிரை, தரா, தித்திப்பு, துத்தநாகம்.
மதுகரம் - ஆண்வண்டு, கள், தேனீ, பழம், வச்சநாபி, வண்டு.
மதுகரன் - அன்பன்.
மதுகாயநம் - குயில்.
மதுகாரி - தேனீ.
மதுகாரை - ஒருபூடு.
மதுகுக்குடிகை
மதுகுக்குடி } எலுமிச்சை.
மதுகேசடம் - மதுகாரி.
மதுகை - வலி, வெற்றி.
மதுகைடபன் - ஓரசுரன்.
மதுகைடயாரி - கிருஷ்ணன்.
மதுகோஷம் - குயில்.
மதுக்கிரமம் - தேன்கூடு.
மதுக்கிருது - தேனீ.
மதுக்கடம் - கட்குடம்.
மதுக்கடல் - தேன்கடல்.
மதுக்கூடு - தேன்கூடு.
மதுக்கொண்டை - ஒருமீன்.
மதுக்கோஷம் - குயில், தேன்கூடு.
மதுசகன்
மதுசகாயன் } காமன்.
மதுசாரதி - மன்மதன்.
மதுசாரன் - மதுசகன்.
மதுச்சிஷ்டம் - மெழுகு.
மதுசுவரம் - குயில்.
மதுசூதனன் - திருமால்.
மதுச்சந்தன் - விஸ்வாமித்திரன், புத்திரன்.
மதுஸ்மிகி - பறங்கிச்சக்கை. [ரன்.

மதுதிருணம் - கரும்பு.
மதுதீபன் - காமன்.
மதுதூதம் - மாமரம்.
மதுதூலி - கருப்பஞ்சாற்றுப்பாணி.
மதுத்துருமம் - இலுப்பைமரம்.
மதுநாலிகேரம் - ஒருவகைத்தெங்கு.
மதுநேதிரு / மதுநோலேகம் } தேனீ.
மதுபதி - காளி, யோகினி.
மதுபம் - கள், வண்டு.
மதுபருணிகை - அவுரி, ஒருபூடு.
மதுபர்ணிகை - சீந்தில்.
மதுபலம் - ஒருவகைத்தெங்கு.
மதுபலி - காளி.
மதுபன்னி - சீந்தில்.
மதுபாயி - வண்டு.
மதுபானம் - சுராபானம்.
மதுபாணி - சுராபாணி.
மதுபீஜம் - மாதுளை.
மதுபுரி - மதுராபுரி.
மதுப்பிரியன் - பலராமன்.
மதுமதனன் - விட்டுணு.
மதுமதி - ஒருநதி.
மதுமத்தை - ஒருமத்தை.
மதுமந்தம் - ஜனஸ்தானங்காண்க.
மதுமல்லி - இரட்டைமல்லிகை.
மதுமாமிசம் - கள்ளும் இறைச்சியும்.
மதுமூலம் - ஒருகிழங்கு.
மதுமோறி - வண்டு.
மதுரகவி - திருமால்தொண்டரிலொருவன், நாற்கவியிலொன்று, அதுபொருட்செல்வம், சொற்செல்வம், தொடை, தொடைவிகற்பம், செறியஉருபக முதலிய அலங்காரத்தோடு இன்னோசைத்தாய் அமுதமுறப்பாடுங்கவி
மதுரகவியாழ்வார்-இவர் பாண்டிதேசத்திலே திருக்கோளூரிலே முக்காணிப் பிராமணருக்குப் புத்திரராகப் பிறந்துவளர்ந்து அயோத்திக்குச்சென்று மீண்டுவந்து நம்மாழ்வாரை யடைந்து தத்துவஞானதீக்ஷை பெற்றவர்.
மதுரசப்பீலு-பெருங்குரும்பை.
மதுரகம் - இனிமை, கரும்பு, கொடிமுந்திரிகை, சாராயம், சொற்சுவை, பனைப்பொது, முந்திரிகை.
மதுரசம்பீரம் - இன்னெலுமிச்சை.
மதுரசை - பெருங்குரும்பை.

மதுரபாகம் - கமுகு.
மதுரபாடணம் / மதுரபாஷணம் / மதுரபாடனம் } கலைஞான மறுபத்து நான்கில் ஒன்று, சாதுரியம், வாயாற் பாடல்.
மதுரம் - அதிமதுரம், இனிப்பு, ஒருகவி, கொடி முந்திரிகை, சமனிசை, செஞ்சந்தனம், தித்திப்பு, துத்தநாகம், நஞ்சு, மதுரை, முந்திரிகை, முளை.
மதுரவசனம் - நயவசனம்.
மதுரவசனியம்மை - திருக்கோட்டூரிலே கோயில் கொண்டிருக்கும் அம்மன் பெயர்.
மதுரவல்லி - சர்க்கரைவள்ளி.
மதுரைவள்ளி - வத்தாலைக்கொடி.
மதுராந்தகம் - தொண்டைநாட்டின் கண்ணுள்ள ஒருவிஷ்ணுஸ்தலம்.
மதுராநாயகன் / மதுராபதி } கிருஷ்ணன், பாண்டியன்.
மதுராபுரி - மதுரைப்பட்டினம்.
மதுராலாபை - நாகணவாய்ப்புள்.
மதுரித்தல் - உருசித்தல், தித்தித்தல்.
மதுரிப்பு - விட்டுணு.
மதுரிப்பு - உருசி.
மதுரேசன்-கிருட்டிணன், பாண்டியன்
மதுரை - இனிமையானது, ஒருநகரம், கள், மதுரவஸ்து. யமுனைக்கரையிலுள்ள நகரம் இந்நகரம் கிருஷ்ணனுக்குரியது. கிருஷ்ணன் பகைவனாகிய ஜராசந்தன் இந்நகரத்தைப் பதினென்முறை வளைந்தான்.

பாண்டிதேசத்துக்கு இராஜதானி. இது வைகைக்கரையின்கணுள்ளது. இது முன் கடம்பவனமாகவிருந்தது. அதனை நகரமாக்கிச் சிவபெருமானைக் கொண்டு அவர் சடைக்கங்கை நீரால்சுத்திசெய்வித்தபோது அந்நீர்த்திவலைகள் மதுரமாயிருந்தமையால் அந்நகரம் மதுரையெனப் பெயர் பெற்றது.

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனுஞ், சௌந்தர பாண்டியனெனுந் தமிழ்நாடனுஞ், சங்கப்பலகையுந் தழைத்தினிதோங்கு, மங்கலப்பாண்டி வளநாடென்ப" என்று புகழப்பட்டதாகிய பாண்டி நாட்டு

க்கு முகம் போல்வதாகிய இந்நகரம் மிக்க பழமையும், மிக்க செல்வமும், மிக்க கீர்த்தியும், மிக்க தெய்வத்தன்மையும், மிக்க அலங்காரமுடையதாய்ப் பாண்டியர்களுக்கு இராஜதானியாக நெடுங்காலம் விளங்கியது. உமாதேவியாரது அவதாரமாகிய தடாதகைப் பிராட்டியாரும், சோமசுந்தரமூர்த்தியும், உக்கிரப்பெருவழுதியாகிய குமாரக்கடவுளும் உண்மையாகத் திருமுடிசூடி யரசாண்ட நகரமாகிய இம்மதுரையினது பெருமை எழுத்திலடங்குவதன்று.

பல்லாயிரம்வருஷங்களாகப்பல்லாயிரம் புலவர் சிகாமணிகளிருந்து பல்லாயிரம்நூல்களை இயற்றியும்ஆராய்ந்தும் தமிழைவளர்த்தது மித்திவ்விய நகரமேயாம். இந்நகரத்துக்குக் காவலாகப் பூர்வத்திலமைக்கப்பட்டுக்கிடந்த மதிலினது சிறப்புக்களைப் பௌராணிகர்களெடுத்துக் கூறியிருக்கின்றபடி கூற வீண்டமை யாதாயினும் அவற்றுட் சில கூறுவாம். வேற்றரசர் வந்து புகுங்காலத்தில் அவரைப் புகவொட்டாயலெதிர்த்து யுத்தஞ் செய்யுமாறு அம்மதின்மேலே யமைக்கப்பட்டுக் கிடக்கும் பொறிகளும், பாவைகளும் எண்ணிலவாம் அவற்றுட் சில பாவைகள் அக்கினியை வாரிவீசும்; சில மணலை வாரிப் பொழியும்; சில வாளைவீசி வெட்டும்; சில கயிறுகளை வீசிக்கட்டும்; சில வில்லு வளைத்துப் பாணங்களை யிடையறாமற் செலுத்தும்; சில பாம்புப் பொறிகள் சீறியெழுந்து மேல்விழுந்து பகைவரைக் கடித்துக் கொல்லும்; பகைவர்விடுகின்றபாணங்களை யெட்டிப் பிடித்து அப்பகைவர்மேற் செலுத்துவன சில பொறிகள். சில மல்லயுத்தஞ்செய்யும்; சிலவெந்நீரை யூற்றும்; இவ்வகைச்சிறப்புக்களுஞ் சிற்பசாதுரியங்களும் மலிந்து விளங்கிய இந்நகரம் பின்னர்க்காலத்திலே வேற்றரசர் கைப்பட்டுப் பூர்வமாண்பெல்லாமிழந்து பிரசண்ட மாருதத்திற் பட்டமாம்போ லிந்நாள் நின்று நிலவுவதாயிற்று.

மதுரைக்காஞ்சி - மாங்குடிமருதனார் பாடியநூல். இதற்குரைசெய்தவர் நச்சினார்க்கினியர்.

மதுரைத்தமிழ்நாயனார் - ஒருசங்கப்புலவர்.

மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழார் - இவர்கடைச்சங்கப்புலவர்களுளொருவர்.

மதுரைத்தமிழ்நாயகனார் - இவர்கடைச்சங்கப்புலவர்களுளொருவர்.

மதுரைப்பாலாசிரியனார் - இவர்கடைச்சங்கப் புலவர்களுளொருவர்.

மதுரைப்பெருமருதனார் - இவர்கடைசங்கப்புலவர்களுளொருவர்.

மதுரைமாதெய்வம் - மதுரைநகரத்தின் அதிதேவதையாகிய ஒருபெண்தெய்வம். இந்தத்தெய்வத்தாலேயே கண்ணகிகோவலனுடைய முற்பிறப்பின் வரலாறு முதலியவற்றைத்தெரிந்து கொண்டாள்.

மதுரைமாதேவி - மீனாட்சிதேவி.

மதுரை யறுவைவாணிகர் இளவேட்டனார் - இவர்கடைச்சங்கப்புலவர்களிலொருவர். இவர் வஸ்திரவணிகர், சாதியில் செங்குந்தர்.

மதுரையாசிரியன்மாறனார் - இடைச்சங்கப் புலவருளொருவர்.

மதுரையாசிரியர் - இவரேபேராசிரியர் எனப்படுவர். இவர் இளம்பூரணருக்கு வித்தியாகுரு. நச்சினார்க்கினியர்க்கு இளம்பூரணர்வித்தியாகுரு. நச்சினார்க்கினியர்தமதுகுருவாகிய இளம்பூரணரை ஆசிரியர் என்றும்தமதுகுருவுக்குக் குருவாகியமதுரையாசிரியரைப்பேராசிரியரென்றும்வழங்குவாராயினர். அவ்வழக்குப்பற்றி இவர்க்குப் பேராசிரியர்என்னும் பெயர்நிலைப்பதாயிற்று. இவரது இயற்பெயர்புலப்படவில்லை. இவரே குறுந்தொகையிலேயுள்ள நானூற்றிரண்டுசெய்யுளுள்ளே முன்னூற்றெண்பத்திரண்டு செய்யுட்களுக்கு முரைசெய்தவர், எஞ்சிய இருபதுக்குமுரைசெய்யுமுன்னே இவர் தென்புலஞ் சென்றனர். அவ்விருபதுக்கும் நச்சினார்க்கினியர் உரை செய்தனர். இப்பேராசிரியரே திருக்கோவையாருக்கு முரைசெய்தாரென்பாருஞ் சிலருளர்.

மதுரைஅளக்கர்ஞாழலார் மகனுர் மள்ளனுர் - பாண்டியன்மருகனுகியசிறுகுடிகிழான் பண்ணனைப் பாடியபுலவர். இவர் பாடிய செய்யுளிலே வெள்ளி தென்புலத்துறைய உலகில் விளைவு குன்றும் என்னும் சோதிட வுண்மை விளக்கமாகின்றது.

மதுரை இளங்கண்ணிக் கௌசிகனுர் - புறநானூறு பாடினேரு ளொருவர். போரிலே வெற்றிபெறுதல் எளிது. கொடிய சர்ப்பமுறைகின்றபுற்றைப் போலவும், கொல்லுகின்றவலியஇடபந்திரிகின்ற சாலையைப் போலவும், வலிய காவலையுடைய பகைவரதுபாசறைக்கண்ணே புகுந்திட்டானென்னும்புகழே பெறுதற்கரியதொன்றும் என்னும் கருத்தினைக்கொண்ட "இரும்பமுசஞ்சிதைய" வென்னுமிவர்பாடல்வீரர்க்கு ஊக்கந்தருதலின் மிகச் சிறந்தது.

மதுரை ஓலைக்கடைக்கண்ணம் புகுந்தாராயத்தனுர் - புறநானூறு பாடினேருளொருவர்.

மதுரைகணக்காயனுர் - தமிழ்க்கலைமுற்றும் பருகிய ஒப்பிலாப்புலவர் சிகாமணியாகிய நற்கீரருக்குத் தந்தையார் இவரும் புலமையிற் சிறந்தவரே.

மதுரைக்கள்ளிற் கடையத்தன் வெண்ணுகினர் - புறநானூறுபாடினேரும் ஒருவர்.

மதுரைக்கூலவாணிகன்சீத்தலைச்சாத்தனுர் - கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்இவர்பாண்டியன் சித்திரமாடத்துஞ்சியநன்மாறனது அபிமானப்புலவர்

மதுரைத்தமிழ்க்கூத்தனுர் - புறநானூறு பாடினேரு ளொருவர்.

மதுரை நக்கீரனுர் - புறநானூறுபாடினேரு ளொருவர். பிடவூர்க்கிழார் மகன் பெருஞ்சாத்தன் மகனுக்கு இவர் அபிமானப் புலவர்.

மதுரைப்படை மங்கமன்னியர் - புறநானூறு பாடிய புலவருளொருவர்.

மதுரைப் பூதனிளநாகனுர்-புறநானூறு பாடினேருளொருவர்.

மதுரைப்பேராலவாயார்-பூதபாண்டின் தேவி தன்நாயகனேடுஉடன்கட்டையேறியதுகண்டு வியந்து பாடியவர்.

மதுரைமருதனிளநாகனுர்-இறையனுரகப் பொருளுக்குரைசெய்த நாற்பத்தொன்பதின்மரு ளொருவர். இவருரை நக்கீரரொழித் தொழிந்தோருரையினுஞ் சிறந்தது. புறநானூறுபாடினேருள்ளு மொருவர். இவராற் பாடப்பட்டோன் நாஞ்சில் வள்ளுவன் முதலியோர்.

மதுரைவீரன் - அரசுக்காகாதவனென்றுகாட்டகத்தேகொண்டுபோய்விடுக்கப்பட்டகாசிராஜாவினதுபுத்திரன். இவன் ஒரு சக்கிலியன் மனையாள் கண்டெடுத்துப்போய் வளர்க்க வளர்த்து, வளர்த்த தந்தை தாயார் தென்னுட்டிற்சென்றபோது அங்கே மதுரையிலே பொம்மணன் சேவையிலிருந்து அவன் மகளைக் கவர்ந்துகொண்டு சீரங்கத்தை யடைந்து சோழனுக்குப்படைத்துணைவனுகிமதுரையை வெற்றிகொண்ட பராக்கிரமசாலி. இவன் தொட்டியர்க்கும் வேறு சில ஜாதியாளர்க்கும் குலதெய்வமானன். இவன் தெய்வபத்தியிற் சிறந்தவன்.

மதுரோதகம் - நல்லதண்ணீர்க்கடல்.

மதுர்ச்சி - பொன்னிமிளை.

மதுலம் - மஸ்துள்ளபொருள்.

மதுலேகம் } வண்டு.
மதுலேகி }

மதுலோலுபம் - வண்டு.

மதுவடித்தல் - மதுபானங் காச்சிவடித்தல்.

மதுவம் - கள், வண்டு.

மதுவனம் - குயில்.

மதுவனம் - யமுனைக் கரைக்கணுள்ள வனம். கிஷ்கிந்தைக்குச்சமீபத்துள்ளவனம், இது சுக்ரீவனுக்குரியது.

மதுவீசம் - மாதளை.

மதுனி - மைத்துனி.

மதூகம் - இருப்பை, எட்டிமரம்,வண்டு.

மதூகரம் - வண்டு.

மதூகவலர் - இலுப்பைப்பூ.

மதூச்சிட்டம் - தேனீ, மெழுகு.

மதூலி - அதிமதுரம், மாமரம்.

மதோன்மத்தர்-மிகு களிப்புடையோர், மிகுவெறியர்.

மத்குணம் - மூட்டுப்பூச்சி, யானை.

மத்தகஜம் - மதயானை.
மத்தசமூலம் - கழுத்து.
மத்தகம் - சென்னி, நெற்றி, பொல்லா நிலம், யானைமத்தகம்.
மத்தகாசம் - கண்ணோயினொன்று.
மத்தகாசி - மேன்மையுடையாள்.
மத்தகாசினி - உத்தமஸ்திரீ.
மத்தகீசம் } யானை.
மத்தகீசன் }
மத்தகுணம் - மதகுணம், யானை.
மத்தக்காளி - ஒருபூடு.
மத்தங்காய்ப்புல் - ஒருபுல்.
மத்தப்பிரமத்தன்-மிகு களிப்புடையோன், மிகுவெறியன்.
மத்தமாதங்கம் - மதயானை.
மத்தம் -எருமைக்கடா, களிப்பு, குயில், பூமத்தை, மதம், மத்து, வெறி, ஊமத்தை.
மத்தவாரணம்- அத்தகட்டத்தலையணை, நந்தனவனம், பாக்கு வெற்றிலைத் துவையல், மதயானை, மேல்வீட்டுத் தாழ்வாரம்.
மத்தளம் - ஒருபறை.
மத்தனம் - கடித்தல், கடைதல், தேய்த்தல்.
மத்தனலிங்கம் - மருக்காரை.
மஸ்தன் } புலன வேறு பட்டிருப்போன்,பைத்தியக்காரன்.
மஸ்தான் }
மத்தன் - மாலியவந்தன்புத்திரன்.
மத்தாடி - கருவூமத்தை.
மத்தாப்பு - ஒருவாணம்.
மத்தி - நடு.
மஸ்தி - எலும்பு.
மத்திகை - குகிரைச்சம்மட்டி, கூடம், பூமாலை, விளக்குத்தண்டு.
மத்திக்காய் - ஒருகாதணி.
மத்தித்தல் - கடைதல், தேய்த்தல்.
மத்திபதீபம் - நடுநிலைவிளக்கு,இதுதீபிகாலங்காரத்தொன்று.
மத்திபம் - குறை, மத்திமம்.
மத்திமகண்டம் - நவகண்டத்தொன்று.
மத்திகூர்மை - திலாலவணம்.
மத்திமசரீரம்-அயிராவதம், காமதேனு முதலியன.
மத்திமதானம் - நடுத்தரமானவீகை, இது மூவகைக்கொடையினொன்று.
மத்திமதீபம் - ஓரலங்காரம்.
மத்திமபட்சம் - நடுத்தரம்.
மத்திமபூமி - உட்டணமுஞ் சீதளமுஞ் சமமானபூமி.
மத்திபம் - மத்தியதேசம்.
மத்திமம் - இடை, குறைவு, சமனிசை, இது மூவிசையினொன்று.
மத்திமன் - நடுத்தரமானவன், நடுவுள்ளவன்.
மத்திமை-நடுவிரல்,நான்கு வாக்கினுன் ஒன்று.
மத்தியகந்தம் - மாமரம்.
மத்தியட்சம் - நடுநியாயம்.
மத்தியதேசம்-விபாசைக்குக்கிழக்கேயும் பிரயாகைக்குமேற்கேயும் இமயத்துக்குத்தெற்கேயும் விந்தியத்துக்கு வடக்கேயுமுள்ள தேசம். இங்கே வசிப்போர் மாத்யமிகரெனப்படுவர். குருக்ஷேத்திரத்திற்கும் தெற்கும் அளகபாதத்திற்கு வடக்கும் இமயத்திற்குமேற்கும் விந்தத்திற்குக்கிழக்குமாகவுள்ள பூமி என்றுங் கூறலாம்.
மத்தியஸ்தம் - மத்தியட்சம்.
மத்தியஸ்தலம் - இடை.
மத்தியஸ்தன் - நடுநியாயக்காரன்.
மத்தியஸ்தை - நடுநிலை.
மத்தியந்தினமுனிவர்-இவர் வியாக்கிரபாதமுனிவருடைய தந்தையார்.
மத்தியபானம் - மதுபானம்.
மத்தியபூமி - நிலவுலகம்.
மத்தியசங்கிரகம் - பிறர்மனைக்கலப்பு.
மத்தியமண்டபம் - மது, நுரை.
மத்தியமபிருதகன் - கமக்காரன்.
மத்தியமம் - இடை, சத்தசுருதியில் ஒன்று, நடுவிரல், மத்தி.
மத்தியமாவதி - ஓரிபர்கம்.
மத்தியமிகை - கன்னிப்பெண்.
மத்தியமை - குமரி, நடுவிரல்.
மத்தியம் - இடை,கள், தீழ்ப்பு, நடுமேற்கு, விபரீதசாதனை.
மத்தியராத்திரம் - நள்ளிரவு.
மத்தியலோகம் - பூலோகம்.
மத்தியலோகேசன் - அரசன்.
மத்தியவிருத்தம் - உந்தி.
மத்தியவுறுப்பு - இடை.
மத்தியாமோதம் - மகிழமரம்.
மத்தியானம் - உச்சிப்பொழுது.

மத்தியை - இடை,ஓரிராகம், காமமூநாணமூஞ் சமமாகவுள்ளவள், நடுவிரல்.
மத்திரம் - சிபிபுத்திரனுகிய மத்திரனுலே இமயமலைச்சாரலிலே நிருவிக்கப்பட்டதேசம், சந்தோஷம்.
மத்திராசரணம் - பிறவிமயிர்களை தல்.
மத்திரன் - சிபியுடைய நான்காம் புத்திரன், மத்திரதேசத்தரசன்.
மத்திரிப்பு - சினம். [னைவி.
மத்திரை - சுமத்திரை, பாண்டுவின் ம
மத்திவிருத்தம் - மத்தியவிருத்தம்.
மத்து - ஊமத்தை, தயிர் முதலியகடையுமத்து.
மஸ்து - தயிர், பைத்தியம், வெறி,தயிர்ச்சலம்.
மத்துமலை - மந்திரமலை.
மத்துவமதம் - சைவம்.
மத்துவம் - இலகிரி, மத்துவமதம்.
மத்துவன் - சிவபிரான்.
மத்துவாசவம் - பன்னீர்.
மத்துவாசாரியர் - இவர் துவைதமதஸ்தாபகர். இவர் க்ஷேத்திரம் பாசகக்ஷேத்திரம் இவர் ஜன்மநாள் தைமாசத்துச் சுக்கிலபக்ஷ நவமி.
மத்துவாசாரியர் - துளுவப்பிராமணர்.
மத்தேபம் - மதயானை.
மத்தேபகமகை - மதயானைபோல் நடப்பவன்.
மத்தை - ஊமத்தை, மஸ்துள்ளது.
மநுநீதிகண்டசோழன் - இவன் திருவாரூரை இராஜதானியாக்கி அரசுசெலுத்திவருநாளில், தன் மகனுகிய வீதியிடங்கன்தேரேறிச் சென்றபோது, தற்செயலாயொரு பசுவின் கன்றோடி, அத்தேர்க் காலிலகப்பட்டு அரைப்புண்டிறக்க, அதன் தாய்ப்பசுவோடி ஆராய்ச்சிமணியை யசைத்துக் கதறியது கண்டு மனமிரங்கி, அதன் துயரத்தைத் தீர்க்கும் பொருட்டுத் தன் மகனைத் தன் தேர்க்காலில் விட்டரைத்துக் கொல்ல முயன்றபோது சிவபெருமானது திருவருளால் அக்கன்று உயிர்பெறறெழக் கண்ட பேரருட் பெருந்தகை.
மந்திகதி - தாமதநடை.
மந்தகர்ணி - இவன் வாயுபோஜநனும்கற்படுக்கையனுமாகி, பதினுயிரம் வருடம் உக்ரதபசு செய்கையில், தேவர்கள்பயந்து,இவன் தவத்துக்கு இடையூறு செய்யும்பொருட்டு ஐந்து அப்ஸரஸ்திரீகளை யனுப்பினுர்கள். அவர்களைப்பார்த்து மோகித்துப் பஞ்சாப்ஸரசு என்கிற ஒரு பொய்கையையுண்டாக்கிக்கொண்டு அதில் அந்த அப்சர ஸ்திரீகளோடு கிரீடித்துக்கொண்டிருந்த ஒரு முனிவன்.
மந்தகாசம் } சுயரோகம், புன்னகை.
மந்தகாசியம் }
மந்தகாமி - பையநடப்பவன்.
மந்தகுணம் - செறியாக்குணம்.
மந்தகேந்திரம் - கிரகநடையினென்று.
மந்தக்குணம் - சமியாமையினுல் வருமோர் நோய், விபரீதமற்றகுணம்.
மந்தக்கொதி - ஒருநோய்.
மந்தசம் - வெண்ணெய்.
மந்தசன்னி - சனீச்சுரன்றூய்.
மந்தசானம்-அக்கினி சீவன், நித்திரை.
மந்தசைலம் - மந்தரமலை.
மந்தணம் - இரகசியஆலோசனை, கடைதல்.
மந்ததண்டசம் - தயிர்கடைதறி.
மந்ததாரம் - சோம்பு, சத்திநிபாதத்தொ
மந்தநகடி - தயிர்கடைதாழி. [ன்று.
மந்தபாலன் ஒரு பிரமசாரி. இவன்பிரமசரியத்தோடு அதிநிஷ்டையனுய் அநேகமாயிரம் வருடங்கள் தவஞ்செய்தும் புத்திரப் பேறுண்டாகாமையால் புண்யலோகத்தையடையுமுரிமை யில்லாதவனுகி விரைவில் புத்ரலாபமடையும் பொருட்டு சார்ங்கிசஜாரன் என்னும் பறவையாகி அந்த ஜாதிப்பெண்ணுகிய ஜரிதையென்பவளைச்சேர்ந்து நான்கு புதல்வரைப்பெற்றுப் புண்யலோகத்தையடைந்தவன்.
மந்தாபுரேசர் - திருவுசாத்தநத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மந்தப்படுதல் - அசீரணித்தல், அவிவேகப்படுத்தல், கூர்மையற்றுப்போதல்.
மந்தப்புத்தி - அவிவேகபுத்தி.
மந்தமதி - மந்தவறிவு.
மந்தமா - யானை.
மந்தமாருதம் - சிறுதென்றல்.

மந்தம் - அழித்தல், அற்பம், அசீரணம், உலகவழிவு, ஒருநோய், கடைதல், கண்ணோயினொன்று, கூர்மையின்மை, சோம்பல், பீழை, மத்து, மெல்லெனவு, வெறி.
மந்தரகிரி - மந்திரமலை.
மந்தரதரன் - விபகேது.
மந்தரம் - அறிவின்மை, ஒருமலை, கீழ்மை, கோட்டை, கோபம், சோம்பு, தடிப்பு, தடை, தயிர்கடைதறி, தேவலோகம், பருமை, பழம், பளிங்கு, பொக்கிஷம், மந்தாரம், மாலை, வெண்ணெய்.
மந்தரன் - ஒற்றன், சோம்பன்.
மந்தராசலம் } மந்தரமலை.
மந்தராத்திரி }
மந்தரை - கைகேசியின் வேலைக்காரி. விரோசனன் புத்திரி. கைகேசியினுடையதோழி, ஸ்ரீராமர் பாலியத்தில் பந்தடித்து விளையாடும்போது, இவள் அந்தப்பந்தை தட்டிவிட்டாள். அதற்காக ஸ்ரீராமர் கோபித்து இவளைத் தமது திருவடியால் நிலத்தில் விழும்படியுதைத்தார். இவள் அந்தக்குரோதத்தை மனதில் வைத்துக்கொண்டிருந்து, ஸ்ரீராமருக்கு யுவராஜ்யப்பட்டம் சட்டவொட்டாமல் இடையூறுசெய்தாள், இப்படி செய்தற்பொருட்டே இவளைத் தேவர்கள் பிறப்பித்தார்களென்று சொல்லுவர், இவள் கூனியாயும் விகாரரூபமுள்ளவளாயுமிருப்பாள்.
மந்தவசாரம் - சனிக்கிழமை.
மந்தவரை - மந்தாரத்தம்.
மந்தவாகினி - சுக்திமந்தத்தில் உற்பத்தியாகிய ஒருநதி. இது புண்யதீர்த்தங்களுளொன்று.
மந்தவாரம் - சனிக்கிழமை.
மந்தவிசை } மெல்லியவோசைஇது
மந்தவோசை } மூவிசையினொன்று.
மந்தவிரோதி } சுக்கு.
மந்தவைரி }
மந்தனம் - அழித்தல், ஆலோசனை, கடைதல், புகழ், யானைமுகபடாம்.
மந்தனி - தயிர்கடைதாழி.
மந்தன் - கூர்மையில்லான், சனி, நமன்.
மந்தாகம் - புகழ்.
மந்தாகினி - தேவகங்கை, ஆரவாரமின்றி மெல்லப் பாய்வது என்பது இதன் பொருள், இந்தநதி தேவர்களுக்கு நடைவாவியாதலால் சுரதீர்த்திகையென்று சொல்லப்படும். ருக்ஷபர்வதத்தி லுற்பத்தியாகிப் பெருகிப் பாய்வதாகிய ஒரு நதி. இது சித்திரகூடத்துக் கருகே பாயாநிற்கும், இதனையிக்காலத்தில் சாசிகங்கை யென்பர்.
மந்தாகினி - அறுபதாண்டுள்ளவள், கங்கை.
மந்தாசம் } புன்சிரிப்பு, வெட்கம்.
மந்தாசியம் }
மந்தாட்சம் - வெட்கம்.
மந்தாயு - அற்பாயுசு.
மந்தாரகாசம் - ஒருநோய்.
மந்தாரசாந்தி - பிடாலவணம்.
மந்தாரகெங்கையோன் - துரிசு.
மந்தாரக்கல் - ஈரர்கல்.
மந்தாரக்கொன்றை - ஒருகொன்றை.
மந்தாரங்கட்டுதல் - மந்தாரம்போடுதல்.
மந்தாரசு - வெள்ளெருக்கு.
மந்தாரச்சிலை - ஒருமருந்துக்கல்.
மந்தாரபீதம் - பித்தளைமலை.
மந்தாரமஞ்சி - சூதபாஷாணம்.
மந்தாரமேரு - தொட்டிபாஷாணம்.
மந்தாரம் - ஐந்தருவினொன்று, செம்பரத்தை, பூங்காரம், மப்பு, முண்முருக்கு.
மந்தாரன் - ஒரு வித்தியாதரன்.
மந்தாரித்தல் - பூங்காரம்போடல்.
மந்தாரிப்பு - பூங்காரம்.
மந்தாரை - ஒரு பூச்செடி.
மந்தார்த்தம் - சூரியனதுமையத்திருந்து வேறொரு கிரகத்திற்குள்ள தூரவளவு.
மந்தானம் - மத்து.
மந்தி - ஆடுதின்னாப்பாலை, கருங்குரங்கின் பெண், குரங்கு, பெண்குரங்கு, பெண்முசு, மந்தியென்னேவல், வண்டு.
மந்திட்டி - மஞ்சிட்டி.
மந்தித்தல் - மந்தமடைதல்.
மந்திப்பு - மந்தம்.
மந்திமூலைத்தலைவாரை - ஒரு தலைவாரை.
மந்திசகாஷாயம் } ஒரு காவிப்புடைவை.
மந்திரகாவி }
மந்திரகிருது - மந்திரி.
மந்திரகூடம் - கருங்கல்.
மந்திரகூடன் - ஒற்றன்.

மந்திரகூர்மை - இந்துப்பு.
மந்திரக்கூறை - மணக்கூறை.
மந்திரசஞ்சீவி - இந்திரகோபம்.
மந்திரசத்தி - மந்திரப்பலன்.
மந்திரசாத்திரம் - மந்திரவித்தை, இது கலைஞானமறுபத்துநான்கில் ஒன்று.
மந்திரசிருவன் - தீ.
மந்திரசித்தி - மந்திரத்தான்வரும்பேறு.
மந்திரசெபம் - மந்திரவுச்சாரணம்.
மந்திரதன் - உபாத்தியாயன்.
மந்திரதாபனம் - மந்திரவிதியுடன்கூடியதாவிப்பு.
மந்திரதாரணை - நவதாரணையிலொன்று அது பிரபஞ்சமனைத்துமாயும் அவற்றிற் கதிட்டானமாயுமிருப்பவன்சிவனன்றி வேறொன்றல்ல வெனக்கொண்டு பௌராணிக மந்திரத்தாற் சிவபெருமானைத் தியானித்தல்.
மந்திரத்தம்பம் } மந்திரத்தாற் றம்பித்தல்.
மந்திரத்தம்பனம் }
மந்திரஸ்நாநம் - எழ்வகை ஸ்நாநத்தொன்று அது மந்திரநீர்ப்புரோட்சணம்.
மந்திரதீதினி - தீ.
மந்திரநாயகர் - மந்திரதேவர்.
மந்திரபசு - பூனை.
மந்திரபூதாத்துமன் - கருடன்.
மந்திரப்பயிற்சி - மந்திரப்பழக்கம்.
மந்திரப்பிரயோகம் - மந்திரத்தாற் பிரயோகித்தல்.
மந்திரப்பொருத்தம் - அவ்வவர்க்குரிய தேவதைகளின் மந்திரம் பொருந்துதல்.
மந்திரமுருவேற்றுதல் - மந்திரமுச்சாரணம் பண்ணுதல்.
மந்திரமூர்த்தி - மந்திரதேவர்.
மந்திரம் - ஆலோசனை, இராசமனை, உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று, உள், எண்ணல், ஒருதேயம், கடல், கள்ளு, குகை, குதிரைக்கூட்டம், குதிரைப்பந்தி, கோயில், தாழ்த்திசை, நாப்புடைப்பெயரா துச்சரித்தல், பொருப்பு, வீடு, வேதம்.
மந்திரவாதம் - ஒருசமயம்.
மந்திரவாதி - மந்திரசமயி, மந்திரவித்தைக்காரன்.
மந்திரவாள் - அந்தரங்கவாள், அரசியற்குரியவாள்
மந்திரவித்தை - மந்திரசாத்திரம், மந்திரோபாசனை.
மந்திராசரணை - மந்திரஞ்செபித்தல்.
மந்திராட்சதை - மஞ்சளரிசி.
மந்திராலோசனை - இரகசியாலோசனை.
மந்திரி - குபேரன், சுக்கிரன், தந்திரி, திராய், தேர்ச்சித்துணைவன், இவன் அரசர்க்குக் குழுவிலொருவன், அரசர்க்குத் துணைவரினு மொருவன், புதன், மந்திரியென்னேவல், வருங்காரியஞ் சொல்வோன் வியாழம்.
மந்திரித்தல் - செபித்தல்.
மந்திரித்தனம் - மந்திரிக்குரியதன்மை.
மந்திரை - வீடு.
மந்திரோச்சாரணம் - மந்திரவுச்சரிப்பு.
மந்திரோபாசனை - மந்திராசரணை.
மந்தினி - தயிர்கடைதாழி.
மந்தீபவம் - அறியாமை, சோம்பு.
மந்து - அரசன், காய்வேளை, தப்பிதம், மனிதன்.
மந்துரம் - குதிரைப்பந்தி.
மந்துரை - தொழுவம், படுக்கை.
மந்தை - ஆடுமாடிவற்றின்கூட்டம்.
மந்தைக்கல் - ஆவுரிஞ்சுதறி.
மந்தையன் - அவிவேகி, கூர்மையற்றவன்.
மந்தைவெளி - மேய்ச்சனிலம்.
மந்தேஹாருணர் - மந்தேஹர், இவர்கள் பிரமனைநோக்கித் தவஞ்செய்து சூரியனோடு போர்புரியும்படி வரம்பெற்றவர்கள். இவர்களைச் சங்கரிக்கும் பொருட்டு முச்சத்திகளினும் வேதியர் காயித்ரியால் அபிமந்திரித்த அஸ்திரங்களை அருக்கிய மூலமாக விடுவார்கள் அவர்கள் அந்த அஸ்திரங்களால் சங்கரிக்கப்பட்டும் வரபலத்தால் மீட்டும் உயிர் பெற்றெழுந்து சூரியனோடு போர் புரிவார்கள்.
மந்தோச்சம் - கிரகவட்டத்தின் தூரமானமுனை.
மந்தோட்டணம் - உட்டணசீதளம்.
மந்தோட்டணவாரி - இளவெந்நீர்.
மந்தோததி - பாற்கடல்.
மந்தோதரி - இராவணன்மனைவி, மிகவும் கம்பீரமான ரூபமுள்ளவள், இவள் திதிபுத்திரனாகிய மயனுக்குமகள்.
மப்பு - மந்தம், மந்தாரம், மயக்கம்.
மம - அதிட்டம், நீர்.
மமகாரம் - அகந்தை.

மமகாரன் - ஓரரசன்.
மமதை - அகந்தை, தனிமை, பெருமை, உதத்தியன் மனைவி, தீர்க்கதமன் தாய், இவள் பிருகற்பதி அநுக்கிரகத்தால் பாரத்துவாசரைப் பெற்றாள்.
மம்மர் - துன்பம், மயக்கம்.
மம்மட்டி - சிற்றுமுட்டி.
மம்மாயி - மாங்கிஷபேதி.
மயகோசம் - ஒன்றற்குறைவிடமா யிருப்பது.
மயக்கடி - மயக்கம்.
மயக்கமின்மை - அறத்துறுப்பினொன்று, அது தெளிவு.
மயக்கம் - உன்மத்தம் இது முக்குற்றத்தொன்று, சாச்சடங்கினொன்று சோம்பு.
மயக்சரவம் - ஒருபாம்பு.
மயக்கல் - மயக்குதல்.
மயக்கவணி - ஓரலங்காரம் அது ஒப்புமையி னொருபொருளை மற்றொன்றாக நினைத்தல் (உ-ம்) மரகதக்கதிரைப்புல் புல்லெனக் கறிக்கும்.
மயக்கவொழிப்பு - அபநுதி யுருபகத்தொன்று அது ஒரு பொருளை மற்றொரு பொருளென்று கொள்ளும் பிராந்தியை உண்மைகூறி யொழித்தல் (உ-ம்) சுரமன்று காமநோய் வெப்பம்.
மயக்கிடை - மயக்கம்.
மயக்கு - மயக்கம், மயக்கென்னேவல்.
மயக்குதல் - அறிவைக்கெடுத்தல், கலத்தல்.
மயக்குறல் - கலங்குதல்.
மயங்கல் } அறிவுகெடுதல், அன்பினமிழ்ந்துதல், புத்தி கலங்குதல்.
மயங்குதல் }
மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா - தரவு தாழிசை அராசம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகமென்னு மாறுறுப்பு மிக்குங் குறைந்தும் பிறழ்ந்து முறழ்ந்தும் பலவாறு மயங்கிவருவது
மயடம் - புற்குடிசை.
மயண்டை - மைம்மல்.
மயப்பு சாரம், செல்வமுடைமை, நிறம்.
மயம் - அழகு, ஒட்டை, சி[illegible] நூ[illegible] முப்பத்திரண்டி னொ[illegible].
மயர்வு மயக்கம்.
மயல் - உன்மத்தம், செத்தை, பயம், பிசாசம், மந்தம், மயக்கம், பைத்தியம்.
மயனூல் - சிற்பசாத்திரம்.

மயன் - ஒருதேவதச்சன், கின்னரன், தச்சன், விணைஞன், காசிபமுனிவருக்குத் திதிவயிற்றிற் பிறந்த புத்திரன், அசுரர்க்குத் தச்சன், சிற்பசாத்திரம் செய்தவன் இவனே, மாளிகைகளும் அரண்மனைகளும் சமைப்பதில் மிகு சமர்த்தன். இதுவேயுமன்றி நினைத்த மாத்திரத்தில் நிருமிக்கும் ஆற்றலுமுடையவன், இவனுக்கு மாயாவி, துந்துபி என்றிரண்டு புதல்வரும், மண்டோதரி என்றொரு புதல்வியுமுண்டு, இராவணன் இவனுக்குமருமகன், இவனுக்குப் பின்வந்தோரும் இப்பெயராலேயே விளங்கினர் என்பது, அர்ஜுநன் மயனுயிரைக் காத்தானென்றும், அந்தநன்றியின் பொருட்டு மயன் ஒரு அலங்கார மண்டபஞ்செய்து பாண்டவர்க்குத் தந்தானென்றும்வரும் பாரதகதையாலறியப்படும், மயன் வமிசத்தார் தெய்வகம்மியராகிய துவஷ்டா எனப்படும் விசுவகர்மாவினது வமிசத்தார்க்கு[illegible]சி, ரோமகபுரியை யடைந்து அங்கு கம்மியராகி, அவர்க்குப் படைக்கலங்களும் ரதங்களும் மாடமாளிகைகளும் ஏனைய பலவகைக்காருக கம்மியங்களும் பயிற்றி விளங்குவாராயினர், ரோமகபுரி கடலாற் கொள்ளப்பட்டழிந்தபோது அவ்வமிசத்தார் பலர் அப்பிரளயத்துக்குத்தப்பி, மீண்டும் ஆரியதேசத்தையடைந்தனர். அவர் பெருக, மற்றைத் துவஷ்டாவின்வமிசத்தார் குறைந்தனர், ஆலயசிறயமானங்கள் ஆகமத்தி லொன்றும் மயன்வித்யில் வேறொன்றுமாக இக்காலத்தும் மாறுபடுதல் காண்க.
மயானக்கரை - இடுகாடு, சுடுகாடு
மயானக்கிரியை - சுடலையிற் செய்யுங் கரு[illegible]
மயானரு[illegible] - மயானவைராக்கிய
மயான[illegible] } மயானக்கரை.
மயானமை }
மயானவயிராவண - ஒருவயிரவன்.
மயானவைராக்கியம் - பிறர்மரித்தபோதுண்டாகும் வயிராக்கியம்.
மயிடமத்தனி - துர்க்கை.
மயிடம் - எருமை.

மயிடரோசனை-எருமைக்கோரோசனை
மயிடற்செற்றாள் - காளி, துர்க்கை.
மயிடோசனை - ஒருமருந்து.
மயிந்தி - பதுங்கி.
மயிந்துதல் - பதுங்குதல்.
மயிரகம் - மயிர்ச்சீலை. [த்தி.
மயிரெறிகருவி - கத்திரிகை,சௌளக்க
மயிரொழுங்கு - உரோமரேகை, மயிர்க்குழற்சி.
மயிரோசனை - ஒருமருந்து,மயிர்மாணிக் [கம்.
மயிர் - உரோமம்.
மயிர்க்கழித்தல் - சிரைத்தல்.
மயிர்களைவோன் - நாவிதன்.
மயிர்க்கடை - மயிர்க்கடை.
மயிர்க்கால் - உரோமத்துவாரம்.
மயிர்க்கிடை - உரோமவளவிடை.
மயிர்க்கிளர்ச்சி - உரோமச்சிலிர்ப்பு.
மயிர்க்குச்சு-கொண்டைக்குச்சு, துகிலிகை.
மயிர்ச்குட்டம் - ஒருநோய்.
மயிர்க்குட்டி - கம்பளிப்பூச்சி.
மயிர்க்குந்தம் - ஒருமருந்து
மயிர்க்குரு - உரோமத்துவாரத்திற்றோன்றியபரு.
மயிர்க்குழற்சி - உரோமப்புளகிதம், மயிர்க்குழைவு.
மயிர்க்கூச்சு - உரோமப்புளகிதம்.
மயிர்க்கூச்செறிதல் - மயிர்சிலிர்த்தல்.
மயிர்க்கொன்றை - ஒரு பூமரம்.
மயிர்க்கோரை - ஒருபுல்.
மயிர்சிலிர்த்தல் - மயிர்பொடித்தல்.
மயிர்ப்பட்டு - ஒருபுடவை.
மயிர்ப்பிளவை - ஒருபரு.
மயிர்ப்பொத்தி - மயிரொழுங்கு.
மயிர்மாட்டி - ஓராபரணம்.
மயிர்மாணிக்கம் - ஒருசெடி, கோரோசனை, பசுவுடற்றிரட்சி.
மயிர்முடி - குடுமி
மயிர்வாரி - சீப்பு.
மயிர்வினை - கத்தரிகை, சௌளம்பண்ணல்.
மயிர்வினைஞர் - நாவிதர்.
மயிலடி - மாதர்காலாழியினொன்று.
மயிலடிக்குருந்து - ஒருமரம்.
மயிலம் - குப்பைமேனி, மயிலிறகு, திருப்புகழ்பெற்ற ஒரு சுப்பிரமணியக்ஷேத்திரம்.

மயிலாடுதுறை - இது காவிரியாற்றின் தென்கரையிலுள்ள ஒருசிவஸ்தலம், இதில்வந்து தங்கினவர்கள், இதைப்புகழ்ந்தவர்கள், இதைத் தியானித்தவர்கள் ஆகிய யாவரும் சிவபதமடைதல் திண்ணமாதலால், இது சிவஸ்தலங்களெல்லாவற்றினுஞ் சிறந்ததென்பர் அறிஞர்.
மயிலாப்புரி, மயிலாப்பூர் } தேவாரம்பெற்ற ஒரு சிவஸ்தலம்.
மயிலியல் - மயிற்சாயல்.
மயிலுச்சிட்டம் - பாம்பு. [று.
மயிலுச்சிட்டவெச்சில் - தென்றற்காற்
மயிலெண்ணெய் - ஒரு மருந்தெண் [ணெய்.
மயிலெள் - ஒரெள்.
மயிலை - இருவாட்சி, கருமைகொண்டவெள்ளை,மீனவிராசி, மீன்,வெட்சி. ஒரு சிவஸ்தலம்.
மயிலைநந்தி - மருதோன்றி.
மயிலியம் - செம்பருத்தி.
மயிலூர்தி, மயிலேறி } முருகப்பிரான்.
மயில்விரோதி - பச்சோந்தி.
மயில் - செங்கத்தாரி, மயூரம், மயிலாப்பூர், பஞ்சபட்சியினொன்று.
மயில்முனிவன் - அகத்தி.
மயில்விரோதி - பச்சோந்தி.
மயில்வாகனன் - குமரன்.
மயிற்குரல் - அகவல்.
மயிற்பிச்சம் - மயிலிறகுக்குடை.
மயிற்பீலி - மயிலிறகு, மயில்விசிறி.
மயிற்றுத்தம் - துருசி, வெண்டுத்தம்.
மயிற்றோகை - மயில்வால்.
மயு - குதிரைமுகம்.
மயுகம் - மயில்.
மயுராஜன் - குபேரன்.
மயூகம் - அழகு, கடிகாரவூசிநிழல், கிரணம், சுவாலை, பிரபை.
மயூரகதி - துரக்கதி ஐந்தினொன்று.
மயூரகம் - துருசி, நாயுருவி, மயில்.
மயூரக்கிரீவகம் - துத்தம்.
மயூரபதகம் - நகக்குறி.
மயூரபிச்சம் - மயிற்பீலி.
மயூரபுரி - மயிலாப்பூர்.
மயூரம் - குரோசாணி, நாயுருவி, மயில், மயிற்கொன்றை.
மயூரவாஹநன் - குமாரக்கடவுள்.

மயூராதனம் - இருமுழங்கையு மூந்தியி லழுந்தப் புவியிற் கையூன்றிக் கா னீட்டித் தலை நிமிர்ந்திருத்தல்.
மயூராரி - ஓந்தி, பல்லி.
மயூரி - பெண்மயில்.
மயேசன் } சிவபிரான்.
மயேசுரன் }
மயேசுவரி - பார்வதி.
மயேச்சுரர் - இவர் ஒரு யாப்பிலக்கண நூலாசிரியர் என்பது குணசாகரர் காரிகையால் விளங்கும், இதனல் குணசாகரர்க்கு முன்னிருந்தவர் என்பதும் அந்நூல் இறந்துபோயிற் றென்பதும் இனிது விளங்கும்.
மயேந்திரசாலம் - ஒருமாயவித்தைஅது கலைஞான மறுபத்து நான்கில் ஒன்று.
மயேந்திரம் - ஒருபட்டினம்.
மரகதபத்ரி - நீர்ப்பாசி.
மரகதப்பச்சை - நாகப்பச்சை.
மரகதமேனியன் - திருமால்.
மரகதமேனியள் - பார்வதி.
மரகதம் - பச்சைநிறம், பச்சைமணி இது நவமணியினென்று.
மரகதவல்லி - உமை, தருமதேவதை.
மரகதவல்லியம்மை - திருவீங்கோய் மலையிலே கோயில் கொண்டிருக் கும் தேவியார் பெயர்.
மரகதன் - குபேரன்.
மரகதாசலேசுவரர் - திருவீங்கோய்மலை யிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மரகம் - பேதி.
மரக்கணு - மரக்கெட்டு.
மரக்கலப்பாய் - கப்பற்பாய்.
மரக்கலமோட்டி - மீகாமன்.
மரக்கலம் - கப்பல், தோணி.
மரக்கலன் - மீகாமன்.
மரக்கறி - காய்க்கறி.
மரக்கா - நந்தனவனம்.
மரக்காரை - ஒருமரம்.
மரக்கால் - ஆயிலியம், உப்பளம், கலத் தின் பன்னிரண்டிலொரு பங்கு அது ஒரு குறுணி, கொத்து, சோதி நாள், திருமால், தூர்க்கைக்கூத்து, முகந்தளக்குங் கருவியி னென்று, வள்ளம், விஷ்ணுகூத்து.

மரக்காளான் - மரத்தில் முளைக்குங்கா ளான்.
மரச்சினை - மரக்கிளை.
மரக்கூட்டம் - தோப்பு.
மரக்கொம்பு - மரத்தின்கொம்பு.
மரங்கொத்தி - ஒருபுள்.
மரக்கோல் - தோணியோட்டுங் கம்பு, மொட்டம்பு.
மரச்சிலைக்கல் - கண்டகிச்சிலை.
மரச்செப்பு - பரணி.
மரச்செறிவு - சோலை, மரப்பொது.
மரணகண்டி } ஒருநூல்.
மரணகண்டிகை }
மரணகண்டிதம்-மரணகாலநிண்ணயம்.
மரணகாலம் - சாவறுதி.
மரணக்குறி - சாவடையாளம்.
மரணக்கெடி - மரணபயம்.
மரணசன்னி - ஒருநோய்.
மரணசாதனம் - சாகுந்தறுவாயி லெழு துப்பட்ட வோலை. [க்கு.
மரணசூதகம் - மரணத்தாலாகுந்தொட
மரணச்சனி - மூன்றுமுறை யுடனுயிர் பன்னிரண்டாமிராசியில்வருஞ்சனி.
மரணஸ்தம்பனம்-மரணத்தைநிறுத்தல்.
மரணத்தருவாய் - மரணவோலை.
மரணமடைதல் - சாதல்.
மரணம் - சாவு இது மாயயாக்கை பதி னெண் குற்றத்தொன்று, பஞ்சபா ணவத்தையினென்று, அது மபக்க முமாய்தலும்.
மரணயோகம் - நாசயோகம்.
மரணவேதனை - மரணவேளைகளிற் ப டும் வருத்தம்.
மரணாசூசம் - மரணசூதகம்.
மரணாவத்தை - மரணத்தறுவாய்.
மரணித்தல் - மரணமடைதல்.
மரணிப்பு - மரணம்.
மரணை - சாதல், ஞாபகம்.
மரகதம் - [illegible]ச்சை.
மரதம் - சாவு.
மரதன் - கோவிந்தன், சிவபிரான்.
மரத்தம் - ஓரிரத்தினம்.
மரத்தல் - பிரமித்தல், விறைத்தல்.
மரத்துவக்கு - மரப்பட்டை.
மரத்துவவாழை - மருத்துவவாழை.
மரத்தோல் - கீரை.
மரநா - விறைத்தநாக்கு.

மரநாய் - [illegible]நாய்
மரமேறி [illegible]
மராங்கம் - [illegible]
மரபினோர் - [illegible], சுற்றத்தார்.
மரபு - குணம், பழமை, முறைமை, வமிசம்.
மரபுப்பெயர் - தொன்றுதொட்டு அவ்வவற்றிற்கு மரபுப்பெயராய் வழங்குஞ்சொல் (உ-ம்) பலா.
மரப்பட்டை - மரத்தோல்.
மரப்பத்தல் - இறைமரம்.
மரப்பாத்திரம் - மரவை.
மரப்புண் - திருவடிப்புண்.
மரப்பெட்டி - பெட்டகம்.
மரப்பெத்து - சோலை.
மரப்பொந்து - மரக்குகை.
மரப்போர் - மரப்பொந்து.
மரமஞ்சள் - ஒருமஞ்சள்.
மரமரம் - சருகு முதலியவற்றுனெழு மொலி.
மரமரிவாள் - ஈர்வாள்.
மரமெறிகருவி - கோடரி, கோடலி.
மரமூலம் - மரவேர்.
மரமேறி - சான்றான், சாணன்.
மரம் - விருக்கம்.
மரல் - அரலை, ஒருகற்றாழை, மருள்
மரவட்டணம், மரவருடணை, மரவட்டம் - தட்டு, நெடும்பரிசை.
மரவட்டு - மரத்தின் குருத்திருக்குந்தானம்.
மரவட்டை - ஓரட்டை.
மரவணில் - ஒருஅணில்.
மரவண்டு - ஒருவகைவண்டு.
மரவம் - குங்குமமரம்.
மரவள்ளி - ஒரு வள்ளிக்கிழங்கு.
மரவாணி - மரக்கெடுதி.
மரவிடை - பிரயோசனந்தருமரம்.
மரவினைஞர், மரவினையாளர் - தச்சர்
மரவீடம் - தாவரவிஷம்.
மரவுப்பு - ஓருப்பு.
மரவுரி - சீரம், நார்ச்சீரைகுறவிகளுடை.
மரவெண்ணெய் - ஒருதயிலம்.
மரவெலி - ஒரெலி
மரவெறும்பு - ஒரெறும்பு.
மரவை - மரச்செப்பு.
மரவொல்லி - கதம்பையொல்லி.
மரா - அரசமரம், ஆச்சரமரம், வெண்கடம்பு.
மராடம் - தேயமைம்பத்தாறினொன்று. பதினெண்பாடையினொன்று, மருக்காலை.
மராட்டிமொக்கு - ஒருபோதைவஸ்து.
மராட்டம் - இடம், புறமயிர், பெண்மயிர்.
மராட்டியம், மராட்டிரம் - மராஷ்டம்.
மராட்டியர் - ஒருபாஷைக்காரர்.
மராமரம் - அரசு, ஆச்சா, கடம்பு.
மராம் - கடம்பு, வெண்கடம்பு.
மராரம் - பண்டகசாலை.
மராலம் - கண்ணிடுமை, குதிரை, தாரா, மாதளை.
மராளம் - அன்னம், பாம்பு, மாதளை.
மராளவாகநன் - பிரமன்.
மராளாசநம் - தாமரைமலர்.
மரிக்கை - மரித்தல்.
மரிசம் - பொறுமை, மரீசம்.
மரிசி - புதுவரம்புவழி.
மரிசிதம் - பொறுமை.
மரித்தல் - சாதல், ஸ்மரித்தல்.
மரித்தோர்தலம் - கல்லறை, மயானம்.
மரிப்பு - சா.
மரிமாங்காய் - ஒருவகை மாங்காய்.
மரியாதம் - ஒழுங்கு, நீதி.
மரியாதை - அமைவிதநிச்சயம், எல்லை ஒழுக்கம், கரை, சரிமுறை, நீதி, வணக்கம், வரம்பு.
மரியை - எல்லை, நிச்சயித்த நிபந்தனை, நீதி, பெரியோர்கள்.
மரீசம் - மிளகு.
மரீசி - ஓரிருடி, இவன்பிரமனது மானஸபுத்திருளொருவன், இவனுக்குக்கர்த்தமன்மகளாகிய கலையினிடத்தில், காசிபன் என்னு மகனும் பூர்ணிமையென்னும் மகளும் பிறந்தார்கள். இந்தப் பூர்ணிமையைச் சில இடங்களில் மகனென்றும் சொல்லியிருக்கிறார்கள். கிரணம், பிசுனன், மிளகு.
மரீசிகம், மரீசிகை - கானல்.
மரு - ஒருபரிமளப்புல், மருவென்னேவல், மலை, வனந்தரம், வாசனை.
மருகம் - மான்.
மருகல் - ஒரு சிவக்ஷேத்திரம்.
மருகன் - மருமகன்.
மருகி - மருமகள்.

மருகு - ஒரு வாசனைப்பூண்டு, மகரவா ழை, மருமகன்.
மருக்கடம் - சிலம்பி, மர்க்கடம்.
மருக்கடவாசம் - சிலம்பிப்பொட்டு.
மருக்கடாசியம் - செம்பு.
மருக்கம் - காற்று, குரங்கு, சரீரம்.
மருக்காரை - ஒருகாரை.
மருக்கொழுந்து - ஒருவாசனைப்புல்.
மருக்கொழுந்துசக்களத்தி - அளத்துப் பச்சை.
மருங்கு - இடை, ஒழுங்கு, பக்கம்.
மருங்குல் - இடை, பக்கம்.
மருங்கை - பிரசவித்தைந்தாநாள்.
மருச்சகம் - கொம்மட்டிமாதளை.
மருச்சகன் - அக்கினி, இந்திரன்.
மருச்சுதன் - அனுமான், வீமன்.
மருட்கிழங்கு - மருளின்வேர்.
மருட்சி - அறிவின்மை, மயக்கம்.
மருட்செந்தொடை - இனவெழுத்துப் பெற்று மோனைமுதலாகிய தொடை யுந்தொடைவிகற்பமும் போலாமை வேறுபட்டு வருவது.
மருட்டம் - கள்.
மருட்டல் - எத்துதல், மயக்குதல்.
மருட்டி - எத்தி, கள், மயக்கம்தருவது.
மருட்டு - ஏப்பு, மயக்கு, மயக்கெனவே
மருட்டுதல்-எத்துதல், மயக்கல். [வல்
மருட்பா ஐந்துபாவினுளொன்று அது முத ற்கண் வெண்பாவுங் கடைக்கண் மக வலுமாய்வருவது.
மருட்பார்வை - வெருண்டபார்வை.
மருண்மா - மதயானை.
மருண்மாலை - கருகுமாலை.
மருதக்கருப்பொருள்-மருதநிலத்துற்பத் திப்பொருள் அவை இந்திரன்முதற் சனையாடலீறுயவாம்.
மருதங்கிளி - ஒருகிளி.
மருதணி - நாடுசார்நிலம், மருதாணி.
மருதத்திணை - மருதத்திற்குரியன.
மருதநிலம் - மருதணி.
மருதநிலவேந்தன் - இந்திரன்.
மருதப்பண் - ஒருபண்.
மருதப்பறை - ஒருபறை.
மருதப்புறம் - குற்றிசைக்குறுங்கலி.
மருதப்பேசுரர் -திருவிடைமருதூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மருதமலை - கொங்குநாட்டிலுள்ள ஒரு சுப்பிரமணியஸ்தலம்.
மருதமுதற்பொருள் - பழனமும்பழன ஞ்சார்ந்த விடமும் வைகறை யென் னுஞ் சிறுபொழுதும் ஆறுபெரும் பொழுதுகளுமாம்.
மருதம் ஐந்நிலத்தொன்று அது வயலும் வயல் சார்ந்த இடமும், ஒருமரம், காற்று, மருதநிலப்பண், மருது, வயல்.
மருதயாழ் - ஒருயாழ்.
மருதவேந்தன் - இந்திரன்.
மருதாணி - ஒருபூடு.
மருது - மருதமரம்.
மருதூர் - ஒரு சிவஸ்தலம்.
மருதேசம் -குருகுலத்தார்சேனைபாரத யுத்தகாலத்தில் தங்கியிருந்த இடம்.
மருதோன்றி - ஒருமரம்.
மருத்தன்-ஓரரசன் மருத்துவன், வாயுபகவான்.
மருத்திப்போதி - நாயுருவி. [கவான்.
மருத்திரதம்-குதிரை, விமானம். [ஷம்.
மருத்திடு - மருந்திடுதலினுல்வருந்தோ
மருத்து - காற்று. ஒருசக்ரவர்த்தி, இக்ஷ் வாகுவின் தம்பி மகனாகிய நாபாகனு டைய வமிசத்தனாகிய அவீக்ஷித்து வின் மகன், இவன் செய்ததுபோல ஒருவரும் யாகங்கள் செய்ததில்லை யென்றும், இவனுடைய யாகப்பொ ருள்களெல்லாம் பொன்மயமாயிருந் தன வென்றும் பெரியோர் கூறுவர், இவன் புத்திரன் நரிஷ்யந்தன், இவ ன் காமாதிகளை வென்ற மேலான வொழுக்கமுடையவன், இவன் யா கம் செய்யுங்காலத்தில் இராவணன் போய்ப்போருக்கழைக்க, அவன் யா கம்நிறைவேறுதென்றெண்ணி இரா வணனோடுசமாதானம்செய்துகொண் டான், அந்த இராவணனுக்கஞ்சி, இந்திரன் மயிலாகவும், யமன் காக மாகவும் குபேரன் ஓந்தியாகவும் உரு மாறி யொளித்து மீண்டு போயினர்.
மருத்துண்ணி - பாம்பு.
மருத்துநீர் - ஒருமுழுக்குநீர்.
மருத்துபதம் - பரமாணு.
மருத்துபலம் - ஆலாங்கட்டிமழை.
மருத்துபாரதம் - தேரையர்செய்தவை த்தியநூல்.
மருத்துபாலன் - இந்திரன்.

மருத்துப்பை - மருத்துச்சரக்கு.
மருத்துமகன் - அநுமான், வீமன். [ன்.
மருத்துமரம் - மருந்துமரம் போன்றவ
மருத்துமாவாழை - ஒருவகைவாழை.
மருத்துவக்கலைஞன் - வைத்தியசாத்திரி இவன் அரசர்க் குறுதிச் சுற்றத் தொருவன்.
மருத்துவதி - தக்கன் மகள் தருமன் மனைவி, ஜயந்தன் மருத்துவந்தன் என்னு மிருவரும் இவள் புதல்வர்.
மருத்துவந்தன் - தர்மனுக்குமருத்துவதியிடத்துப் பிறந்த மூத்தமகன்.
மருத்துவம் - பரிகாரிப்பு, வைத்தியம்.
மருத்துவர் - அச்சுவினி தேவதைகள், வைத்தியர்.
மருத்துவர்நாள் - அசுபதி.
மருத்துவவாழை - மருத்துமாவாழை.
மருத்துவன் - இந்திரன், வைத்தியன்.
மருத்துவன்றாமோதரனார் - இவர்கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் திருவள்ளுவர்குறளுக்குக்கூறிய சிறப்புப்பாயிரக் கவி, பாயிரமாதலோடு உலகத்தார்க்குத் தலைக்குத்து மருந்தாகவு மிருக்கின்றது அது "சீந்தி நீர்க்கண்டந் தெறிசுக்குத்தேனளாய் மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில் காந்தி மலைக்குத்து மால்யானை வள்ளுவர் முப்பாலாற்றலைக்குத்துத் தீர்வுசாத்தற்கு" என்பது.
மருத்துவாகம் - தீ, புகை.
மருத்துவான் - இந்திரன்.
மருத்துவிச்சி - பிரசவவைத்தியை.
மருத்தெண்ணெய் - வியாதிகட்குவடிக்குமெண்ணெய்
மருந்தம் - தாலம்பபாஷாணம், நஞ்சு.
மருந்தீசுவரம் - திருவான்மியூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மருந்திடு - மருத்திடு, வசியம்.
மருந்து - அமுதம், ஓடதி, ஔடதம்.
மருபுகா - வாழை.
மருபூ - பாலைநிலம்.
மருபூமிகள் - சிந்துதேசத்துள்ளமலைநாடுகள்.
மருப்பு - இஞ்சி, மரக்கொம்பு, விலங்கின் கொம்பு.
மருப்புத்திரன் - மருச்சுதன்.
மருப்பரியம் - ஒட்டை.

மருமகள் - சகோதரிமகள், மகன்மனைவி.
மருமகன் - சகோதரிமகன், மகள்கணவ
மருமம் - இரகசியம் உயிர்நிலைமார்பு. [ன்.
மருமாம் } இலை முதலியவற்றால்
மருமராஞ்சம் } எழுமொலி.
மருமவணி - பதக்கம்.
மருமா - ஒருவகைக்கொண்டை. [ன்றல்.
மருமான் - மகன், மருமகன், வழித்தோ
மருவகம் - இராகு, ஒருநாரை, புலி, மருக்காரை, மருக்கொழுந்து.
மருவலர் - பகைவர்.
மருவல் - அணைதல், கலத்தல், கிட்டல், சருவுதல், பொருந்துதல்.
மருவாரி - பாலை.
மருவார் - பகைஞர்.
மருவியகாந்தி - வைடூரியம்.
மருவு - கலியாணத்திடுவிருந்து, மருகு,
மருவுதல் - மருவல். [வாசனை.
மருவூர்ப்பாக்கம் - காவிரிப்பூம் பட்டினத்தின்புறநகர்.
மருளங்கிழங்கு - ஒருகிழங்கு.
மருளல் - அஞ்சல், எழுத்திலாவோசை, பேசலானெழுமொலி. மயங்குதல்,
மருளிந்தம் - ஒருபண். [வெருளுதல்.
மருளுதல் - மருளல்.
மருளுமத்தை - ஒருமத்தை.
மருள் - உவமையுருபு, உன்மத்தம், ஒருகிழங்கு, கள், குறிஞ்சியாழ்த்திறம், பிசாசம், மயக்கம், மருளென்னேவல்.
மரூஉமொழி - மருவிவழங்குமொழி.
மரூகம் - மயில்.
மரை - ஒருவகைமான், தவளை, தாமரை.
மரைக்காயர் } சோனகர்.
மரைக்கார் }
மரைநீகம் - தவளை.
மரைப்பூ - தாமரைப்பூ.
மரையிறக்கம் - மரையூடாடுமிடம்.
மர்க்கடபிப்பலி - நாயுருவி.
மர்க்கடப்பிடி - குரங்குப்பிடி.
மர்க்கடமுகம் - குரங்குமுகம்.
மர்க்கடச்சேட்டை - குரங்குச்சேட்டை.
மர்க்கடவேந்தன் - சுக்கிரீவன்.
மர்க்கடவைரி - பாம்பு.
மர்க்கடம் - குரங்கு.
மர்க்கடாசியம் - தாமிரம்.
மர்க்கடி - பூனைக்காலி, பெண்குரங்கு.
மர்க்கரம் - கையான்றகரை.

மர்த்தநம் - சூர்ணித்தல், பிசைதல்.
மர்த்தலம் - மத்தளம்.
மர்த்தனம் - இடிக்கை, கடைதல்.
மர்த்தன் - மநிதன்.
மர்த்தித்தல் - அரைத்தல்,உடைத்தல், கடைதல், மருந்துகலத்தல்.
மர்த்தியம் - உலகம்.
மர்த்தியன் - மர்த்தன்.
மர்மகீலன் - கணவன்.
மர்மம் - மருமம்.
மர்மரீகன் - ஏழை.
மர்மவித் } மருமக்காரன்.
மர்மவேதி }
மர்யாதகன் - மரியாதைக்காரன்.
மலஹரன் - சிவபெருமான்.
மலகரி - ஓரிராகம்.
மலக்கடி - கலக்கம்.
மலக்கட்டு - மலச்சிக்கு.
மலக்கம் - கலக்கம்.
மலக்கனம் - பொன்னம்பர்.
மலக்கனல் - இராசவத்தனக்கல்.
மலக்குடர் - மலவாசயம்.
மலங்கல் - கலங்கல், குளம், விலாங்கு.
மலங்கு - ஒருமீன், மலங்கென்னேவல்.
மலங்குதல் - மலங்கல்.
மலசகிதர் - மலசம்பந்தர்.
மலசம் - சிதல்.
மலசம்பந்தம் - மலத்தோடுகூடியிருத்த[ல்.
மலசலம் -மலமூத்திரம்.
மலச்சிக்கு - மலப்பின்னல்.
மலச்சுத்தி - மலக்கழிவு,மலநிவாரணம்.
மலடன் - பிள்ளையில்லாதவன்.
மலடி - மகப்பேறில்லாதவள், வந்தி.
மலடு - கருவற்றது, பாழ்.
மலதூஷிதம் - அழுக்கு.
மலத்தியம் - மும்மலம்.
மலத்துவாரம் - அபானவாய்.
மலபந்தம் - மலக்கட்டு.
மலபந்தன் - மலசகிதன். [டைதல்.
மலபரிபாகம் - பந்தபாசநீங்கிப்பக்குவம
மலபரிபாகன் - முமூக்ஷு சத்திநிபாத முடையோன்.
மல்பாகம் - மலபரிபாகம்.
மலபுக் - காகம்.
மலப்பற்றம் } மலப்பிடி.
மலப்பற்று }
மலப்பாண்டம் - உடம்பு.

மலப்புழு - மலத்திலுண்டாகுங்கிருமி.
மலப்பை - மலவாசயம்.
மலமலத்தல் } ஒலிக்குறிப்பு.
மலமலப்பு }
மலமலெனல் }
மலம் அழுக்கு, இரத்தம், கட்டம், கண் பீளை, கருப்பூரம், கறள், குறும்பி, சலம், தாது, நகம், பந்தம், பாவம், மண்டி, மூக்குச்சளி, மூளை, வேர்வை.
மலயகந்திநி - உமாதேவி சேடியரில் ஒருத்தி.
மலயக்கால் - மலையக்கால்.
மலயசம் - மலையசம்.
மலயத்துருமம் - சந்தநமரம்.
மலயமுனி - அகத்தியன்.
மலயம் - சந்தனம், மலையம், பொதியம[லை.
மலயாசலம் - பொதிகை.
மலயோத்பலம் - சந்தனம்.
மலரவன் - பிரமன்.
மலருக்குநாயகம் - கருவண்டு.
மலருதல் - மலர்தல்.
மலரோன் - பிரமன்.
மலர் - பூ, மலரென்னேவல், மலர்ச்சி[யானது.
மலர்க்கணைவேள் - காமன்.
மலர்க்கா - புஷ்பவனம். [லிவு.
மலர்ச்சி-அலர்ச்சி,எழுச்சி,களிப்பு,பொ
மலர்தல் - எதிர்தல்,தோன்றல், நிறைத[ல், விரிதல்
மலர்தாங்கி - ஒருகொடி.
மலர்த்தாள் - மலர்க்காம்பு
மலர்த்திரள் - பூங்கொத்து.
மலர்த்தேன் - பூந்தாது, பூந்தேன்.
மலர்மங்கை - திருநாட்டியத்தான் குடியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மலர்மிசையேகினன் புத்தன், பிரமன்.
மலர்வு - மலர்ச்சி.
மலவாசயம் - மலக்குடர்.
மலவாயில் - எச்சவாய்.
மலன் - லோபி.
மலாகை - தூதி, தூர்த்தை, பெண்யா[னை.
மலாக்கா - ஒருதேசம்.
மலாசு - சிறுபூளை.
மலாடனர் - ஒரு சங்கப்புலவர்.
மலாடு - கொடுந்தமிழ் நாட்டில் ஒன்று அது மலையமாநாடு.
மலாபஹாரிணி - ஒருநதி.
மலாம் - ஒருபூச்சு.

மலாரடி - கலக்கம்.
மலார் - மிலாறு, விளார்.
மலாவகம் - பிண்ணாக்கு.
மலிதல் - நிறைதல், பெருகல்.
மலினி - இராஜஸ்வலை.
மலிவு - நயம், மிகுதி.
மலினமுகம்-அக்கினி, ஆவி, சருச்சுராங்கு.
மலினமுகன் - இறந்தோன்,கொடியவன்,தீக்கடவுள்,தீயோன்,முசு,வண்டு
மலினம் - அழுக்கு,கருமை,குற்றம், பாவம், மாசு, மோர்.
மலீமசம் - அழுக்கு, இரும்பு.
மலூகம் - குருவி.
மலை - உவமை, பருப்பதம், மலையென்னேவல்.
மலைகலக்கி - ஒருபூடு
மலைகளிறு - போர்க்களிறு.
மலைக்கடுகு - ஒருகடுகு.
மருக்கரு - சாத்திரவேதி.
மலைக்கலவாய் - ஒருமீனிருஞ்சிப்புள்.
மலைக்கற்றாழை - ஒரு கற்றாழை.
மலைக்கால் - ஆட்டுக்கால்.
மலைக்குகை - மலைமுழைஞ்சு.
மலைக்குக்குறுப்பான் - ஒருபுள்.
மலைக்குடையோன்-கிருஷ்ணன், முருகக்கடவுள்.
மலைக்குறவி - சாத்திரவேதி.
மலைக்கொடுமுடி - மலையுச்சி.
மலைசாரி - கிளிஞ்சில்.
மலைச்சக்கரம் - சாலக்கிராமம்.
மலைச்சக்கரைவள்ளி - ஒருவள்ளிக்கொடி.
மலைச்சாரல் - மலையருகு.
மலைச்சார்வு - மலையைச்சார்ந்தவிடம்.
மலைதல்-அணிதல்,உவமையாதல், எதிர்த்தல், ஒருவழிபடாதநிற்றல், பொருதல், மறுத்தல், செய்யுள் வழுவில் ஒன்று, அது ஒன்றற்குரியதை மற்றொன்றற் குரியதாகப் பாடுவது.
மலைதாங்கி - ஒருகொடி, பங்கம்பாளை.
மலைத்தலை - மலையுச்சி.
மலைத்தலைவான் - மலையரையன்.
மலைத்தலை - தடுமாறல், பொருதல்.
மலைத்தொடக்கு - கல்மதம்.
மலைத்தும்பை - ஒருதும்பை.
மலைத்துவரை - ஒருதுவரை.
மலைத்தேன் - மலையில்வைக்குந்தேன்.
மலைநாடன் - சேரன்.
மலைநாடு - சேரநாடு.
மலைநாதம் - கல்மதம், சாத்திரவேதி. வக்கிராந்த பாஷாணம்.
மலைநார் - கல்நார்.
மலைநெல் - மலையில் விளைநெல்.
மலைபடுகடாம் - பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியநூல்.
மலைபடுதிரவியம் - மலையிலுண்டாகுந் திரவியம் அது மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமம்.
மலைப்பச்சை - ஒருபூடு.
மலைப்பருத்தி - ஒருபருத்தி.
மலைப்பாம்பு - ஒருபாம்பு.
மலைப்பாழி - மலைக்குகை.
மலைப்பாறை - மலைத்திட்டை, மலைப்பக்கம்.
மலைப்பிஞ்சு - கல்.
மலைப்பிறங்கம் - உலோகமணல்.
மலைப்பு - கூத்தின் விகற்பம், திகைப்பு, போர், மலைவு.
மலைப்புறா - ஒருவகைப்புறா.
மலைப்பூடு - ஒருபூடு.
மலைமகள், மலைமடந்தை - உமை, பார்வதி.
மலைமதம் - கல்மதம்.
மலைமல்லிகை - ஒருமல்லிகை.
மலைமுழை, மலைமுழைஞ்சி - மலைக்குகை.
மலைமுள்ளங்கி - ஒருபூடு.
மலையகம் - ஒருசாதி.
மலையக்கால் - தென்றல்.
மலையசம் - சந்தனம்,தென்றல்,மலையாடு.
மலையடிப்படி - குறிஞ்சிநிலக்கிராமம்.
மலையடிவாரம் - மலையினடிப்பக்கம்.
மலையத்தி - அசமந்தம், ஓரத்தி.
மலையத்துவஜன் - குலசேகரபாண்டியன்மகன், இவன்மகள் தடாதகைப்பிராட்டி. இவன் மனைவி காஞ்சனமாலை இவள் விச்சாவதி என்பவளது அவதாரம். அசுவத்தாமாவினாற்கொல்லப்பட்ட பாண்டியன்.
மலையத்துவசபாண்டியன் - ஒருபாண்டியராசன் அவன் மீனாட்சியின் தந்தை.
மலையத்தேரோன் - மன்மதன்.
மலையமாருதம் - தென்றற்காற்று.
மலையமான் - சேரன்.
மலையமான்திருமுடிக்காரி - கடையெழுவள்ளல்களுள் ஒருவனாகியகாரியெனப்படுபவன் இவனே. தொண்டை

நாட்டுக்குஞ் சேரநாட்டுக்கு மிடையேயுள்ள மலைநாட்டைக் கோவலூரிலிருந்தாண்ட சிற்றரசன் இவனே இவன் கொடையாலும புஜபலத்தாலுஞ் சிறந்தவன். புலவர்க்குப் பேருபகாரி. இவன் குதிரையும் காரியெனப்படும்.

போரிற் புறங்கொடுத்தோடும்வேந்தர்க்குத்துணைபுரிந்து வெற்றிமாலை சூடுவித்தலைத் தொழிலாக வுடையவன் காரியென்றும், குளிர்காலத்திலே காட்டகத்திலே ஒரு மயிலைக் கண்டு அது குளிரால் வாடுமேயென்றிரங்கித் தான்போர்த்திருந்த போர்வையை அதற்குக் கொடுத்தவன்பேகனென்றும், முல்லைக்கொடியிற் சிக்கியதேரைஅக்கொடியைச்சிதைத்து மீட்காது அக்கொடி படர்ந்துலகுக்குப்பயன்படும்படி அத்தேரை அதற்குக் கொடுத்தவன் புறம்புநாட்டுவேந்தனுகிய பாரியென்றுஞ் சிறு பாணற்றுப்படையிற் கூறப்பட்ட எழுவர் கடைவள்ளல்களுள்ளே இவன் விசேடித்துக் கூறப்பட்டவன்.

மலையம் – இந்திரன்கா, குறிஞ்சியாழ்த்திறம், தோட்டம், பொதியமலை மலை, மலையினுச்சி.

மலையரசன் - இமயபருவதராஜன்.

மலையரண் - மலையினுலாயகாவல் இது நான்காணினென்று.

மலையருவி - மலையிலிருந்து வீழ்நீர்.

மலையரையன் - பர்வதராஜன்.

மலையன் - ஒருசாமை, கடையெழுவள்ளலிலொருவன்,குறிஞ்சிநிலத்தலைவ[ன்சேரன்.

மலையாசலம்-பொதியமலை.

மலையாசலவாசி - அகத்தியன்.

மலையாடு - ஒருவகை ஆடு.

மலையாத்தி - ஒராத்தி.

மலையாமணக்கு - ஒராமணக்கு.

மலையாமி - மலையாளபாஷை.

மலையாரம் - சந்தனம்.

மலையாழம்-தேயமைம்பத்தாறில்ஒன்று

மலையாளபகவதி - ஒருதேவதை, உமாதேவியார்.

மலையாளம் - மலையாழம்.

மலையாளி - ஒருதேவதை, மலையாளத்திற்பிறந்தோன், மிளகு.

மலையானிலம் – தென்றல்.

மலையிசம் - சந்தனம்.

மலையிரும்பு - உலோகமணல்.

மலையிருவேலி – ஓரிருவேலி.

மலையிற்றிரண்டதி - கடனுரை.

மலையினுச்சி-மலைமுடி, மாமிசபேதி.

மலையின்முனிவன் - அகத்தி, மிளகு.

மலையீஞ்சு, மலையீந்து } ஓரீந்து.

மலையுச்சி – மலைச்சிகரம்.

மலையுருக்கன் - ஒருவெற்றிலைக்கொடி.

மலைவருணனை -மலைச்சிறப்புரைத்தல்.

மலைவளர்காதலியம்மை - இராமேச்சரத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

மலைவாசிக்கொம்பு – பன்றிக்கொம்பு.

மலைவாணர் – வேடர், மலைவாழ்நர்.

மலைவில்லோன் - சிவபிரான்.

மலைவாழை – ஒருவாழை.

மலைவிரோதி – இந்திரன்.

மலைவீரியம் – அன்னபேதி.

மலைவு- உவமை, போர், மயக்கம், மாறுபாடு.

மலைவெட்டு – சந்தனம்.

மலைவேம்பு - ஒருவேம்பு.

மல் - கூத்திஞெர் விகற்பம், திருமால் கூத்து, பெருகல், வலி, வளமை.

மல்கல் - நிறைதல், பெருகல்.

மல்காத்தல் - முதுகுகீழாய்க்கிடத்தல்.

மல்குவித்தல் – நிரப்பல்.

மல்புறு - கார்போகரிசி.

மல்லகசாலை - மற்களரி.

மல்லகதி – தூரககதியைந்தினென்று.

மல்லகம் - சிறுவாலுளுவை.

மல்லகை – மல்லிகை.

மல்லக்கச்செட்டி - மற்பிடிக்குஞ்சாதி.

மல்லசம் - மிளகு.

மல்லடர்த்தோன் - கிருஷ்ணன்.

மல்லதூர்யம் - ஒருவாத்தியம்.

மல்லநாகம் - இந்திரன்யானை.

மல்லம் – ஒருபாத்திரம் கதுப்பு,தட்டம், மற்பிடி, யாகமிச்சில், வலிமை.

மல்லயுத்தம் – மற்பிடி அது கலைஞான மறுபத்துநான்கினென்று.

மல்லரங்கம் - மல்லகசாலை.

மல்லரி – பம்பைமேளம்.

மல்லர்-மற்போர்செய்வோர்,வலியோர்.

மல்லல் - மிகுதி, வலி, வளமை.
மல்லன் - திண்ணியன், மல்வல்லன், வலியோன்.
மல்லாக்குப்பறிதல்-உட்புறம்மேலாதல்.
மல்லாடல் - பதினோராடலு ளொன்று. வாணாசுரனை வெல்லக் கண்ணன் மல்லனாய்ச் சென்று அவன் உயிர் நீங்க நெரித்தாடியது.
மல்லாட்டம் - போராட்டம்.
மல்லாத்தல் } உட்புறம் மேலாய்க்
மல்லாத்துதல் } கிடப்பித்தல்.
மல்லாய் - ஒருபாத்திரம்.
மல்லாரி - சண்டைக்காரி, பம்பைமேளம்.
மல்லாருதல் - மல்லார்தல்.
மல்லி - கொத்துமல்லி, மல்லிகை, மிகப் பருத்துரத்தவள்.
மல்லிகம் - பிரப்பஞ்செடி.
மல்லிகாட்சம் - வெண்கட்குதிரை.
மல்லிகாமோதிநி - குண்டுமல்லிகை.
மல்லிகார்ச்சுனம்-ஓரூர்ஒருசிவஸ்தலம்.
மல்லிகை - ஒரு பாத்திரம், ஒரு பூச்செடி, விளக்குத்தண்டு.
மல்லிநாதன் - இவன் இரகுவமிசம் நைஷதம் மாகம் இவைகளுக்கு வியாக்கியான கர்த்தா.
மல்லிபத்திரம் - ஒருகாளான்.
மல்லு - ஒருகூத்து, ஒருபோர்.
மல்லுக்கட்டுதல் - போராட்ட மாடுதல், மல்லுப்பிடித்தல்.
மல்லுப்பிடித்தல் - மற்பிடித்தல்.
மல்லூகம் - புழு.
மல்லை - இரப்போர்கலம், கைப்பரை, கப்பரை, மௌனம், வட்டம்.
மல்வில் - ஒரு சிவஸ்தலம்.
மவுடி - முடி.
மவுட்டியம் - அறியாமை.
மவுலி - மௌலி.
மவுனம் - மோனம்.
மவுனி - ஆமை, மவுனஞானி.
மழ - இளமையான.
மழகளிறு - இளங்களிறு.
மழம் - இளமை.
மழலை - இளமை, நிரம்பாமென்சொல்.
மழலைப்பேச்சு - குதலைவார்த்தை.
மழவன் - கட்டிளமையோன்.
மழவு - இளமை, குழந்தை.
மழித்தல் - மொட்டையாக்கல்.

மழு - எரியிரும்பு, சிவனாயுதத்தொன்று, பரசாயுதம்.
மழுக்கம் - கூரின்மை, தோற்றமின்மை, மங்கல்.
மழுக்கரன் - சிவபிரான்.
மழுக்கல் } அடித்தல், அரிசி மினு
மழுக்குதல் } க்குதல், கூர்மை மழுங்கச்செய்தல், தோற்றங்கொள்ளாமற் பண்ணல்.
மழுக்குலுக்குதல் - மழுவெடுத்தல்.
மழுங்கல் } ஒளிமழுங்கல், ஒருவகை
மழுங்குதல் } ப்பொன், கூர்கெடுத்தல், பேர்குறைதல், பொலிவழிதல்.
மழுப்பன் - குதர்க்கி, நியாயப்புரட்டி.
மழுப்புதல் - வீண்பேச்சினாலே புரட்டுதல்.
மழுமட்டை - அறமழுங்கல்.
மழுமாறி - புரட்டன்.
மழுவன் - அஞ்சாதவன், நகர்காப்போன், பிடித்ததை விடாதவன்.
மழுவாளி - சிவபிரான், பரசிராமன்.
மழுவெடுத்தல் - எரியிரும்பைக் கையேந்தல், பொய்யை நிலையாக்கல்.
மழுவெண்ணெய் - தீக்குளிர் விக்கும் எண்ணெய்.
மழுவேந்தி - சிவபிரான், பொய்யன்.
மழை - குளிர்ச்சி, நீர், மாரி, மிகுதி, மேகம்.
மழைகாலம் - மாரிகாலம்.
மழைக்கண்ணி - ஒருபட்சி.
மழைக்கரு - மழைக்குரியசூல்.
மழைக்காலிருட்டு - மழையடுத்த பேரிருள்.
மழைக்காற்று - குளிர்காற்று.
மழைக்கிளி - ஒரு வெட்டுக்கிளி.
மழைக்குறி - மழையடையாளம்.
மழைக்கோள் - சுக்கிரன்.
மழைதுளிதல் - மழைதூறல்.
மழைத்தல் - மழைபெய்தல்.
மழைத்தாரை - அதோகதியாய்ப் பெய்யுமழை.
மழைத்துமி
மழைத்துளி
மழைத்தூவல்
மழைத்தூற்றம் } பிதிர்மழை.
மழைத்தோற்றம் - மழைச்சாடை.
மழைப்பெய்தல் - மழைசொரிதல்.

மழைப்புகார் - மழைமுகில்.
மழைப்பூங்காரம்-மழைக்குணங் கொண்டமப்பு.
மழைமரக்கால் - மழையினளவு.
மழைமுகில் - சூற்கொண்டமேகம்.
மழையடை - மழையடைப்பு.
மழையடைத்தல் - மழைவிடாதுபெய்தல்.
மழைவண்ணக்குறிஞ்சி - ஒருகொடி.
மழைவண்ணன் - திருமால்.
மழைவாங்குதல் - மழைவிட்டொழிதல்.
மளமளத்தல், மளமளப்பு, மளமளெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
மளாரட்டியெனல், மளாரிடுதல், மளாரெனல் - ஒலிக்குறிப்பு.
மளிகாரம் - வெண்காரம்.
மளிகை, மளிகைக்கிடங்கு - பண்டசாலை, பலபொருட் கடைவீடு.
மளிகைக்கடை - கடைவீடு.
மளுக்கெனல் - ஒலிக்குறிப்பு.
மள்ளம் - வலி.
மள்ளர் - உழவர், குறவர், குறிஞ்சிநிலமாக்கள், திண்ணியர், படைவீரர், மறவர்.
மள்ளல் - வலி.
மள்ளு - கைமரம்.
மறதி - மறப்பு, அது தாமத குணத்தொன்று.
மறத்தல் - அசட்டை பண்ணல், பொச்சாப்பு, விட்டுவிடல்.
மறத்தியர் - பாலைநிலப்பெண்கள்.
மறநிலைப்பொருள் - மறத்தாற்கவர்பொருள் பகைவர்பொருள் திறைப்பொருள் சூதில் வெல்பொருள் முதலியன.
மறநிலையறம் - புறப்பொருட்டுறையினொன்று, அது நிறைமீட்டுப் பகைவென்று செஞ்சோற்றுக்கடன் கழியாதாரைத் தண்டித்துக் குறைவுறச் செய்தல்.
மறநிலையின்பம் - அகப்பொருட்டுறையினொன்று அது இலக்கமெய்தல் ஏறு தழுவன் முதலியமறத்தகையாற் கன்னியை மணமுடித்தின்புறுதல்.
மறப்பிலி - கடவுள்.
மறப்பு - மறதி.
மறப்புலி - சிங்கம்.
மறமலி - யானை.
மறமறத்தல், மறமறப்பு - ஈரடுக்கொலிக்குறிப்பு.
மறம்-ஒரு பிரபந்தம் அது கலம்பகத்தினோருறுப்புமாம், கெடுதி, கொலை, கோபம், சினம், நமன், பாவம், பிணவலி, வீரம்.
மறம்வைத்தல் - வன்மம் வைத்தல்.
மறலி - நமன், மயக்கம்.
மறலிமறலி - சிவபிரான்.
மறல்-எழுச்சி, ஒருகூத்து, காலன், குற்றம், சாதல், தரித்திரம், நமன், பகை, பிணக்கு, போர், மயக்கம், மறதி.
மறவர் - படைவீரர், பாலைநிலமாக்கள், வேடர்.
மறவன் - சிலேஷ்மம்.
மறவி - ஈனம், கள், மறதி.
மருடம், மருட்டியம் - மகாராட்டிரம்.
மருடர், மருட்டியர் - மகாராட்டிரர்.
மறி - அழுங்கு ஆடு குதிரை மான் இவற்றின் குட்டி, ஆடு, குதிரை, மானிவற்றின் பெண், மறியென்னேவல், மான், மேடவிராசி.
மறிகாண்குதல் - குட்டிபோடுதல்.
மறிக்கான்கல் - சுக்கான்கல்.
மறிக்கையன் - சிவபிரான்.
மறிதால் - மீளல்.
மறிதல் - தடைபடல், திரும்பல், மடங்கல்.
மறித்தல் - காவற்படுத்தல், தடுத்தல், திருப்புதல்.
மறிப்பு - தடுப்பு, திருப்பு.
மறிக்கரன், மறிக்கையன் - சிவபிரான்.
மறியல் - சிறை, தடை.
மறியேந்தி - சிவபிரான்.
மறு - குற்றம், மச்சம், மறுவென்னேவல், மற்றை, மாசு.
மறுகலிடுதல் - திரும்பிவருதல்.
மறுகலித்தல் - மறுதலித்தல்.
மறுகல் - மறுகுதல், வியாதிதிரும்பல்.
மறுகு-இரண்டாம்விளைச்சல், குறுந்தெரு, தெரு, மறுகென்னேவல்.
மறுகுதல் - சுழலல், புரளுதல், மனங்குழம்புதல்.

மறுகை - நுங்கு, பொதியினொருபக்கம், மற்றப்பக்கம்.
மறுக்கம் - இக்கட்டு, சுழற்சி, மனக்குழப்பம்.
மறுக்காரங்காய் - ஒருவகைக்காய்.
மறுக்காரை - மருக்காரை.
மறுக்கிடுதல் - பெயர்தல்.
மறுக்குதல் - மறுதலித்தல், மறையுழவுழுதல், மனஞ்சுழலல்.
மறுக்குத்து - ஒருசெடி.
மறுதட்டை - மறுமுறை
மறுதலித்தல் - மறுத்தல், வேறுபடல்.
மறுதலிப்பு - மறுப்பு. [ம்.
மறுதலை - சத்துரு, மறுதலிப்பு, வேறிட
மறுதல் - மாறுதல்
மறுத்தல் - கொடாமை, தவறு நீக்கல், மறையுழவு முதல், வெட்கம்.
மறுத்தல்விடை - வினவெதிர்மறுத்தல் (உ-ம்) உண்டாயோவெனஉண்ணேனென்பது.
மறுபத்தியம் - பிறபத்தியம்.
மறுபாவி - சத்துரு.
மறுபிறப்பு, மறுபிறவி - மறுசனனம்.
மறுபொருளுவமை - முன்வைத்தபொருட்கு நிகராவதோர்பொருள்பின்னரும்வைப்பது (உ-ம்) மக்களி லுனக்கொப்பில்லை சூரியனுக் கொப்பில்லைச் சுடர்கள். [டல்.
மறுப்படுதல் - ஊறடைதல், வசைப்ப
மறுப்பு - மறுக்குதல், மறுவுழவு.
மறுமாடி - மஞ்சுக்கட்டை, மலைப்பிளவு.
மறுமை - மரணத்தின் பின்வருநிலைபரம், வருபிறப்பு.
மறுமைப்பயன் - மரணத்தின் பின்னடைவது.
மறுமொழி - உத்தரம்.
மறுவல், மறுவி - கஸ்தூரிமிருகம், கஸ்தூரி.
மறுவிலி - குற்றமற்றவன்.
மறுவுத்தரம் - பிரதியுத்தரம்.
மறை - அடைக்கலம், இரகசியம், இரண்டாமுழவு, எதிர்மறுப்பு, ஒளிப்பிடம், கறை, கேடகம், சங்குச்சுரி, சொல், புள்ளி, மந்திரம், மறையென்னேவல், மறைவு, வேதம்.
மறைக்காடன் - சிவபிரான்.
மறைக்காடு - வேதாரணியம்.
மறைக்காட்டீசுவரர் - திருமறைக்காட்டிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மறைக்கொடியோர் - அந்தணர்.
மறைக்கொடியோன் - துரோணாசாரியன், பிரமன், பிராமணன்.
மறைசை - வேதாரணியம்.
மறைச்சி - துரும்பிச்சி, பார்ப்பனத்தி.
மறைஞானசம்பந்தர் - திருக்களாஞ்சேரியிலே விளங்கிய சந்தனாசாரியராகிய இவர் உமாபதி சிவாசாரியருக்குக் குருமூர்த்திகள். இவர் சற்றேறக்குறைய அறுநூறு வருஷங்களுக்கு முன்னே யுள்ளவர். இவர் அருணந்திக்கு மாணாக்கர். சிவதருமோத்தரத்தை வடமொழியிலிருந்து தமிழான் மொழி பெயர்த்துப் பாடியவர் இவரே.
மறைதல் - ஒளித்தல், தோன்றுமற்போதல்.
மறைத்தலை - வேதாந்தம்.
மறைத்தலைவி - இலக்குமி, உமை, சரச்சுவதி.
மறைத்தல் - மறையச்செய்தல், மூடல்.
மறைபடல் - ஒதுக்குப்படல், மறைக்கப்படுதல்.
மறைபாடு - மறைவு.
மறைபுகல் - அடைக்கலம் புகுதல்.
மறைபொருள் - உட்பொருள்.
மறைப்பிரிவு - வேதசாகை.
மறைப்பு - மறைத்தல், மறைவு.
மறைப்பொருள் - வேதார்த்தம்.
மறைமுடி - வேதத்துச்சி.
மறைமுடிவு - கடவுள், வேதாந்தம்.
மறைமுதலி, மறைமுதல் - கடவுள், சிவபிரான், விட்டுணு.
மறைமொழி - வேதமந்திரம்.
மறையவர் - அந்தணர், துரும்பர், முனிவர்.
மறையவர்கோன் - பிரமன். [வர்.
மறையன் - மறுவுடையது.
மறையிலார் - கீழ்மக்கள்.
மறையொர் - பார்ப்பார், முனிவர், பஞ்சர்கிராமிகள்.
மறையோன் - பிரமன், பிராமணன், வியாழம்.
மறைவிடம் - மறைவானவிடம்.

மறைவு - ஒதுக்கு, தோன்றாமை.
மற்கடப்பிடி - குரங்குப்பிடி.
மற்கடம் - குரங்கு.
மற்கட்டம்பிடித்தல் } இழுபறிப் படுதல்.
மற்கட்டம்பொருதல் }
மற்கரை - குகை, மலடி.
மற்குணம் - மத்குணம்.
மற்கோல் - பகை
மற்சதேசம் - இப்பெயரினால் இரண்டு தேசங்களுள் ஒன்று கூர்ச்சரதேசத்துக்கு மேற்றிசைக்கணுள்ளது. மற்றது தற்காலம் தினசபுரமென்று வழங்கும் இடத்துக்குச் சமீபத்துள்ளது.
மற்சபுராணம் - விஷ்ணுவினது மீனவதார மான்மியமும், அவ்விஷ்ணுஜலப்ரளய காலத்திலே மனுவையும் பிறவற்றையும் ஒரு பேழையினுள்ளே வைத்து இரக்ஷித்தமையும், பிரமசிருஷ்டியும், திரிபுராசுரர் சங்காரமும், தாரகாசுரனுக்கும் தேவர்களுக்கும் இடையினிகழ்ந்த யுத்தமும், பார்வதியம்மையார் திருக்கல்யாணமும், முருகக்கடவுள் திருவவதாரமும், விஷ்ணு அவதாரமுமாகிய காதைகளை யுணர்த்துவது. பதினாலாயிரங் கிரந்தமுடையது.
மற்சரம் - மச்சரம்.
மற்சியம் - மீன்.
மற்போர் - மல்லுயுத்தம்.
மற்ற - அடுத்த, பிற, மற்றவை, வேறு.
மற்றது - அடுத்தது, பிறிது, வேறு.
மற்றவர்-ஏனையோர், பிறர், மறுபெயர்.
மற்று - அசைநிலை, பிறிதின்பொருள் வினைமாற்றுப் பொருள் என்பவற்றைத் தருமிடைச்சொல். அவற்றிற்குமுறையே (உ-ம்) மற்றென்னையாள்க, ஊழிற் பெருவலி யாவுள, மற்றொன்று, மற்றறிவா நல்வினை.
மற்றும் - பிறவும்.
மற்றை } சுட்டியதற்கினம், மற்றைநாள்.
மற்றைய }
மற்றையது - மற்றது.
மற்றோ - அதிசயவிரக்கச்சொல்.
மனக்கசப்பு - மனவெறுப்பு.
மனக்கசிவு - மனவுருக்கம்.
மனக்கயக்கம் - மனத்துயர்.
மனக்கருத்து - உட்கருத்து.
மனக்கலக்கம் - மனச்சஞ்சலம்.
மனக்கவலை - மனவிசாரம்.
மனக்களிப்பு - அகக்களிப்பு.
மனக்கறை - மனக்களங்கம்.
மனக்கனிவு - மனவுருக்கம்.
மனக்காய்ச்சல் - மனக்கொதி.
மனக்காவல் - மனக்கட்டுப்பாடு.
மனக்கிடக்கை } மனவெண்ணம்.
மனக்கிடை }
மனக்கிலேசம் - மனத்துயர், மனப்பீடை.
மனக்குத்து - மனவிதனம்.
மனக்குருடு - அறிவீனம்.
மனக்குவியு - மனவொருமிப்பு.
மனக்குழப்பம் - ஒருமிப்பின்மை.
மனக்குள்ளம் - தந்திரம், வஞ்சகம்.
மனக்குறிப்பு - கருத்து, நோக்கம்.
மனக்குறை - பிரியவீனம்.
மனக்கூச்சம் - வெட்கம்.
மனக்கூர்மை - தெளிந்தபுத்தி.
மனக்கொடுமை - மனப்பொல்லாங்கு.
மனக்கொதி - எரிச்சல், கோபம்.
மனக்கோட்டம் - அழுக்காறு.
மனக்கோட்டரவு - மனவாட்டம்.
மனங்கசிதல் - இரங்கல், மனமுருகல்.
மனங்கரைதல் - துக்கித்தல், மனமிளகுதல்.
மனங்கலங்குவிப்போன் - மன்மதன்.
மனங்கல் - ஒடுங்கல்.
மனங்கனிதல் - மனமுருகல்.
மனங்கு - இருபத்தைந்திருத்தல் கொண்டது கைபடை.
மனங்குவிதல் - மனங்கூம்புதல்.
மனங்குறுவுதல் - மனங்கோணல்.
மனங்கூம்புதல் - மனமடங்குதல்.
மனங்கொதித்தல் - மனவேகங்கொள்ளல்.
மனங்கோணுதல் - மனங்கோடுதல்.
மனசாதேவி - ஒருதேவதை.
மனசார - மனசறிய.
மனசிகயன் } மன்மதன்.
மனசிசன் }
மனசியன் - பிரவீரன் புத்திரன்.
மனசு - மனது.
மனசுவிதை - நம்பிக்கை.
மனசை - மனசாதேவி.
மனச்சஞ்சலம் } துக்கம்.
மனச்சடைவு }

மனச்சந்தோஷம் - அகக்களிப்பு.
மனச்சம்பூரணம் - மனத்திருத்தி.
மனச்சலிப்பு - மனச்சஞ்சலம்.
மனச்சாட்சி - பகுத்தறியுமறிவு.
மனச்சாய்ப்பு, மனச்சாய்வு } மனவாரம்பம்.
மனச்சார்பு - மனப்பற்று.
மனச்சான்று - மனச்சாட்சி.
மனச்சுகம் - இதம்.
மனச்சுத்தம் - இருதயத்தூய்மை.
மனச்சோர்வு - மனவயர்ச்சி.
மனஞ்சலித்தல் துக்கித்தல், மனமலுத்தல்.
மனஞ்சிறியர் - லோபகுணமுள்ளவர்.
மனதார - மனப்பூருவமாக.
மனது - மனம்.
மனதுருக்கம் - மனக்கசிவு.
மனதுருகல் - மனங்கசிதல்.
மனத்தழிவு - மனவொடுக்கம்.
மனத்தழுக்கம் - அழுக்காறு.
மனத்தளர்ச்சி - மனமெலிவு.
மனத்தாபம், மனஸ்தாபம் } மனவிதனம்.
மனத்தாராளம் - மனப்பூரணம்.
மனத்தாழ்மை - மெத்தெனவு.
மனத்திடன் - மனத்தைரியம்.
மனத்திட்டம் - மனப்பிரமாணிப்பு.
மனத்தியானம் - மனச்சிந்தனை.
மனத்திருத்தி - மனப்பூரணம்.
மனத்துக்கம் - மனத்துயர்.
மனத்துணைநாகேசுவரர் - திருவலிவலத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மனத்துப்பரவு - மனச்சுத்தம்.
மனத்துயரம், மனத்துயர், மனத்துன்பம் } மனநோ.
மனத்தூய்மை - மனச்சுத்தம்.
மனத்தேற்றம் - மனத்திடன்.
மனத்தொழுக்கம் - மனவொழுங்கு.
மனநசிவு - மனக்குறை.
மனஸ்நாநம் - மானதஸ்நானம்.
மனநியாயம் - மனச்சாட்சிக்குரிய நீதி.
மனநிலை, மனநிறை } மனந்தளம்பாமை.
மனநிறைவு - மனப்பூரணம்.
மனநீதி - மனநியாயம்.
மனநெரிடு - வஞ்சகம்.
மனநெரிவு - மனக்குறை.
மனநெருக்கு - வெடுவெடுப்பு.
மனநேர், மனநேர்மை } மனதறிந்தவுண்மை.
மனநோ, மனநோக்காடு } மனவிதனம்.
மனந்தழைத்தல் - மனந்திருத்தியடைதல்.
மனந்தளம்புதல் - மனமசைதல்.
மனந்தளர்தல் - தைரியங்கெடல்.
மனந்திரும்புதல் - மனமானது ஒன்றைத்தீதெனக்கண்டு மற்றொன்றைப் பற்றுதல், மனத்திரிபு கொள்ளல்.
மனந்தீத்தல் - ஏங்குதல், மனம்புழுங்குதல்.
மனந்தெளித்தல் - மனந்தேறுதல்.
மனப்பகை - உட்பகை.
மனப்படுத்தல் - சம்மதப்படுத்தல்.
மனப்பற்று - சிநேகம்.
மனப்பாடம் - மனதிலே பதிந்தபாடம்.
மனப்பிடிப்பு - மனப்பற்று.
மனப்பிணக்கு - மனமாறுபாடு.
மனப்பிணி - மனோவியாதி.
மனப்பிரமை - மனமயக்கம்.
மனப்பின்னிதம் - மனவிரோதம்.
மனப்பீடை - மனத்துன்பம்.
மனப்புகைச்சல், மனப்புழுக்கம் } எரிச்சல்.
மனப்புனிதம் - மனச்சுத்தம்.
மனப்பூரணம் - உள்ளக்களிப்பு, மனத்திருத்தி.
மனப்பூருவம் - மனப்பூரணம்.
மனப்பேய் - மதிமயக்கு.
மனப்பொருத்தம் - மனவொன்றிப்பு.
மனப்பொலிவு - மனத்தாராளம்.
மனப்பொருப்பு - மனத்தரிப்பு.
மனமடிவு - மனத்துயரம்.
மனமலர்ச்சி - சந்தோஷம்.
மனமலர்தல் - சந்தோஷித்தல்.
மனமலிநம் - மதிவழுக்கு.
மனமிடுக்கு - மனவலி.
மனமுரிதல் - மனம்வெறுத்தல்.
மனமுரித்தல் - மனதை மடியப்பண்ணுதல்.
மனமுரிவு - மனவெறுப்பு.
மனமுருகல் - மனதுருகல்.
மனம் - இந்துப்பு, சிந்தை இது உட்கரண நான்கில் ஒன்று, முப்பொறியினுமொன்று.
மனம்பதிதல் - கருத்துவைத்தல்.

மனம்புழுங்கல் - மனங்கன்றுதல்.
மனம்பொங்குதல் - கோபங்கொள்ளல், மனங்களித்தல்.
மனம்வெறுத்தல்-வெறுப்புக்கொள்ளல்
மனராசி - சந்தோஷம், மனப்பொருத்தம்.
மனவஞ்சனை - குள்ளம்.
மனவந்தரம் - ஒருமனுவுடையவாளுகை காலம், அது ஒரு தேவாண்டு.
மனவலி - ஊக்கம்.
மனவாசகங்கடந்தார் - சித்தாந்த சாத்திரம் பதினன்கனுளொன்ருகிய உண்மை விளக்கமென்னு நூலாசிரியராகிய இவர் மெய்கண்டதேவர் மாணக்கருளொருவர். இவருக்கு ஜன்மநகரம் திருவதிகை.
மனவாஞ்சை - மனவாசை.
மனவிகற்பம் - மனவேறுபாடு.
மனவிகாரம் - மனத்திரிபு.
மனவிருத்தி - மனவிருப்பம்.
மனவிழி - இசைப்பாட்டு.
மனவிறப்பு - மனவொடுக்கம்.
மனவினை - குள்ளம்,மனவைராக்கியம்.
மனவு - அக்குமணி, சங்குபுடவை, மணிப்பொது.
மனவுச்சாகம் - மனவூக்கம்.
மனவுறுதி - மனவுச்சாகம்.
மனவூக்கம் - மனவெழுச்சி.
மனவெப்பல் - மனவழல்.
மனவெழுச்சி - மனவூக்கம்.
மனவெறுப்பு - மனக்கசப்பு.
மனவேகம் - கோபம்.
மனவொற்றுமை - மனவொருமிப்பு.
மனவொன்றிப்பு - மனப்பொருத்தம்.
மனனம் - சிந்தித்தல், ஞாபகம்.
மனஸ்வி - தேவலன் இரண்டாம்புத்திரன்.
மனஸ்வினி-ப்ரஜாபதிபாரி, (உ-ம்) ருகண்டன் பாரி.
மனன் - ஹரியசுவன் புத்திரன்.
மனுகுலம் - மனுவிதனம்.
மனுகை - பெண்யானை.
மனுயி - மனுமனைவி.
மனுவு - அரைப்பட்டிகை.
மனிதர் - மானிடர்.
மனிதன் - மானிடன்.
மனிலா - ஒரூர்.
மனிலா ஆத்தா - ஒரு ஆத்தா.
மனிலாப்பயறு - வேர்கடலை.

மனு - தருமநூல் பதினெட்டில்ஒன்று, நீதி, மந்தரம், மனுச்சக்ரவர்த்திகள் அவர் சுவாயம்பு சுவாக்கிருஷன் உத்தமன் தசமன் இரேவதன் தாக்கிஷன் வைவச்சுவதன்,மனுதன்,மன்ருட்டு விண்ணப்பம்.

சிருஷ்டி ஆரம்ப காலத்திலே பூமி பரிபாலனஞ் செய்யுமாறு தெய்வ ஆஜ்ஞையாற் பிறந்தவர். மனுக்கள் பதினல்வர்.சுவாயம்புவன்,சுவாரோஷிஷன் உத்தமன் தாமசன், ரைவதன், சாக்ஷுசன், வைவசுதவன், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, ப்ரஹ்மசாவர்ணி, ருத்ரஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ரௌஷியன், பௌசியன் என்போர்.

இம்மனுக்களே அவ்வச் சிருஷ்டி தோறும் மநுஷவர்க்கத்தைத் தோற்றுவிப்பவர்களாதலின் அவரே மனுஷருக்கு மூலபிதாக்களாவர். இப்போதுள்ள சிருஷ்டிக்கு மூலபிதா வைவசுவதமனு, இது எழாவது மந்வந்தரம். ஒரு மந்வந்தா காலம் 4320000-மநுஷ்யவர்ஷம். இப்படி மந்வந்தரம் ஆறு சென்றன, இப்போது செல்லாநிற்பது எழாவது மந்வந்தரம்.

மனுகுலம் - மனுஷசாதி.
மனுக்கள் - மனிதர்.
மனுசன் - மனிதன்.
மனுசேந்திரன் - அரசன்.
மனுசை - பெண்.
மனுடன், மனுஷன் - ஆத்துமா, மனிதன்.
மனுஷ்கத்துவம், மனுஷீகம் - மனுஷசுபாவம்.
மனுதர்மசாத்திரம் - மனுவினுற் செய்யப்பட்ட அறநூல்.
மனுத்தேவன் - ப்ரஹ்ம புத்ருளொருவன்.
மனுநீதி - தருமநூல், மனுமுறை.
மனுநூல் - மனுநீதிசாத்திரம்.
மனுநெறி - தருமநூல், மனுமுறை.
மனுபு - மனிதன்.
மனுப்புத்திரர் - மனுடர், மனுவமிசத்தார்.
மனுப்பேசுதல் - பரிந்துபேசுதல்.

மனுகன் - பிரபு, யோக்கியன்.
மனுமக்கள் - மனிதர்.
மனுமசித்தி - பூர்வம்,நெல்லூரிலரசுசெய்தராஜா.
மனுவந்தரம் - மனுவின்காலம்.
மனுவர் - கொல்லர், மானுடர்.
மனுவவதாரம் - மனுப்பிறப்பு.
மனுஸ்ம்ருதி - அஷ்டாதசஸ்ம்ருதிகளிலே சிரேஷ்டமானது.
மனை - இரண்டாயிரத்து நானூறு குழிகொண்டநிலம்,பதினறரையேயரைக்காற் குழிகொண்டநிலம், மனைவி, வீடு.
மனைக்கிழத்தி - மனையாட்டி.
மனைக்கோள் - பல்லி.
மனைத்தக்காள் - இல்லொழுக்கத்திற்குரிய மனைவி.
மனைத்தாயம்-இல்லொழுக்கத்தின் றிறமை, வீட்டுரிமை.
மனைமாட்சி - இல்லறத்துக்குரிய நற்குண நற்செய்கைகள், இல்வாழ்க்கையிலட்சணம்.
மனைமாட்சிக்குரிய - நிமித்தம்போற்றன்முதலாக வச்சமுற்றிரங்கலீறுகச் சொல்லப்பட்டவைந்தும்.
மனையவறம் - ஈதல், ஏற்றல், காத்தல், ஒழுக்கம், புணர்தல், துய்த்தல்.
மனையறம் - இல்லறம்.
மனையாட்டி, மனையாள் - மனைவி.
மனைவாழ்க்கை, மனைவாழ்வு - இல்லாச்சிரமம்.
மனைவி - நாயகி.
மனோகதம் - எண்ணம், விருப்பம்.
மனோகதி - மனோவேகம்.
மனோகரம்-அழகு,இச்சை, சந்தோஷம்
மனோகுலம் - மனுகுலம்.
மனோக்கியம் - அழகு,மனத்திற்குவப்புள்ளது.
மனோசங்கற்பம்-மனக்கருத்து
மனோசஞ்சலம் - துக்கம்.
மனோசலனம் - மனவசைவு.
மனோசவம் - விவேகம்.
மனோசன் - மன்மதன்.
மனோசாஞ்சல்யம் - மனச்சலனம்.
மனோசாட்சி - மனசாட்சி.
மனோசிலம், மனோசிலை - ஒருமருந்து இது விளைவு பாஷாண முப்பத்திரண்டினென்று.
மனோச்சாகம் - மனவூக்கம்.
மனோதண்டம் - மனக்கட்டுமை.
மனோதத்தம் - மனதிலேயீதற்குச் சங்கற்பித்தல்.
மனோதீபம் - மனதிறக்கப்படாதது.
மனோதுக்கம் - மனத்துக்கம்.
மனோதைரியம் - மனத்திடன், மனமுயற்சி.
மனோநாசம் - மனமிறத்தல்.
மனோநிதானம் - மனதின்றீர்ப்பு.
மனோபதி - பிரமன்நகரம்.
மனோபத்தி - மனப்பத்தி.
மனோபலம் - தைரியம்.
மனோபலம் - மனசிலேபிறந்தது.
மனோபவன் - மன்மதன்.
மனோபாஷிதம் - தன்னொடுதான்பேசல்.
மனோபாவம்-மனநிலை,மனவெண்ணம்.
மனோபாவனை - மனப்பாவிப்பு.
மனோபீஷ்டம் - மனப்பிரியம்.
மனோபு - மன்மதன்.
மனோபூசை - உட்பூசை.
மனோமயகோசம், மனோமயம் - பஞ்சகோசத்தொன்று.
மனோயோனி - காமன்.
மனோரஞ்சிதம் - மனப்பிரியம்.
மனோரதம் இச்சை,இன்பம்,விருப்பம்.
மனோரதியம்-இல்லதை யுள்ளதுபோற் கற்பித்தனுபவித்ததாயுருசியடைதல்.
மனோரமை - மேற்புத்ரி, இவள் இமவானைப் பெற்றுக் கங்கையையும் பார்வதியையும் பெற்றவள்.
மனோரமை - மேருமலைக்குமகளு மிமயமலைக்கு மனைவியுமாகிய மேனை.
மனோரம்மியம் - மனத்திருத்தி.
மனோராசி - மனச்சம்மதி.
மனோராச்சியம் - மனநினைவினுற்றான் மகிமை யடைந்தனுபவிப்பதாகச் சிந்தித்து மகிழ்தல் வீணெண்ணம்.
மனோலயம் - பரிகாசம்.
மனோலயம் - மனவொடுக்கம்.
மனோலவுலியம் - வீண்தோற்றம்.
மனோலி - பகிடிக்காரன், பரிகாசம்.
மனோலித்தனம் - பகிடிக்குணம்.
மனோவிகாரம் - மனச்சஞ்சலம்.
மனோவிசனம் - மனவிதனம்.
மனோவிதனம் - துக்கம்.
மனோவியாபாரம் - மனசின்றொழில்.
மனோவிருத்தி - மனதின்வியாபாரம்.

மனோவேகம் - எரிச்சல், மனக்கதி.
மனோற்சாகம் - மனமுயற்சி.
மனோற்பவன் - மன்மதன்.
மனோன்மணி } அப்பிரகம், உன்மநாசத்
மனோன்மனி } தி, பார்வதி. [தி.
மனோன்மணித்தாய் - இந்துப்பு, பார்ப்ப
மன் - அசைச்சொல் (உ-ம்) அது மற்கொண் கன்றேரே, ஆக்கம் (உ-ம்) நெடியன்மன், இறந்தகால விடைநிலை (உ-ம்) என்மனோர், ஒழியிசை, (உ-ம்) கூறியதோர் வாண்மகன், கழிவு (உ-ம்) சிறியகட் பெறினேயெமக்கீயுமன்னே, மிகுதி (உ-ம்) எந்தையெமக்கருளுமன், அரசன், நிலைபேறு, பெருமை.
மன்மதை - மக்கட்பரப்பு.
மன்மத - இருபத்தொன்பதாவதாண்டு.
மன்மதபாணம் - ஒருவகை மல்லிகை, காமன்கணை.
மன்மதம் - காமம், விழா.
மன்மதன் - காமன், மனங்கலக்குவிப்போன், விஷ்ணுமானஸ புத்திரன். இவன்பாரி இரதி. கொடி மகரம், பாணம், புஷ்பம்.

மன்மதன் என்பதன் பொருள், மனதுக்குக் கிளர்ச்சியைக் கொடுப்பவன் என்பது. மன்மதனை பிரஹ்ம புத்திரனென்று கூறுவாருமுளர். ருக்வேதம் ப்ரஹ்ம சைதந்யத்திலே முதற்கணெழுந்தது இச்சை யென்றுகூறும். அது நிற்க காமவிச்சைக் கதிதேவதையாகிய மன்மதனே பெரும்பாலும் புராணங்களிலே பேசப்படுவன். மன்மதன் அழகோடுகூடிய யௌவநத்தை அதிகரித்து நின்று ஆண் பெண்ணைக் கூட்டி பிரஜாவிருத்திக் குபகாரஞ்செய்யும் இதிகாரமூர்த்தி மன்மதன் அரூபியாய் வசந்தகாலம். நிலா, மணி, மேடை, மணற்குன்று, பூஞ்சோலை, சந்த்ரோதயகாலம், புஷ்பம், வாசனை, அழகு முதலியவைகளைத் தனக்குப் பரிவாரமாகக் கொண்டிருப்பவன்.

தாரகாதி அசுரரால் வருந்திய தேவர் வேண்டுகோளுக்கிரங்கி மன்மதன் சிவபிரான்மீது தனது காம பாணங்களைச்செலுத்தி அவர் நெற்றிக்கண்ணுக் கிரையாகி அங்க மிழந்து அன்றுதொட்டு அநங்கன் என்னும் பெயர்கொண்டான். மன்மதன் பாரியாகிய ரதிதேவி பார்வதியைப் பன்முறையிரந்து தன் குறையைக் கூற, பார்வதி இரதியைத்தேற்றி "உன்கணவன்கிருஷ்ணனுக்கு பிரத்யும்நன் என்னும் பெயரோடு புத்திரனாகப் பிறப்பான். அச்சிசுவைச் சம்பராசுரன் கவர்ந்துபோய்க் கடலில் விடுவான். அதனை மீன் கவர்ந்து விழுங்கும். அம்மீனை வலைஞர்பிடித்து சம்பரனுக்குக் கொடுப்பார்கள். நீ அவன்வீட்டு ஏவற்பெண்ணாகி அம்மீனை வாங்கி அறுத்து அச்சிசுவைக் கவர்ந்தேகி, அவனோடு வாழ்வை என்றார். அவ்வாறே இரதி சம்பரன் மனையில் ஏவற்பெண்ணாகி யிருந்து பிரத்யும்நனை நாயகனாகப் பெற்றாள்.

இச்சரித்திரம், வாமந, பாகவத, விஷ்ணு புராணங்களில் கூறப்பட்டுள்ளது. ஸ்காந்த புராணத்திலேகூறப்பட்ட சரித்திரம் சற்றே விகற்ப
மன்மதாலயம் - மாமரம். [மாம்.
மன்வந்தரம் - மனுவலந்தரம்.
மன்வந்தராதிபர் - ஸ்வாரோஷிஷ மந்வந்தரத்திலே விபஸ்சித்து என்னும் நிலிம்பதியும், உத்தம மந்வந்தரத்தில் சுசாந்த னென்னும் அமரபதியும், தாமசமந்வந்தரத்தில் சிபி என்னுமிந்திரனும், ரைவத மந்வந்தரத்தில் வாசவனும், சாக்ஷுச மந்வந்தரத்தில் மனோச்சவசன் என்னும் தேவபதியும், வைவஸ்வத மந்வந்தரத்தில் புரந்தரன் என்னும் பிருந்தார கேந்த்ரனும், சூர்யாதிதேவர்களையும், வசிஷ்டாதி ருஷிகளையும் நடாத்துவார்கள்.
மன்விருத்தம் - ஆசிரியவிருத்தம்.
மன்ற-அசைச்சொல், தோற்றம் (உ-ம்) கடவுளாயினுமாக மடவேமன்ற வாழியமுருகே.
மன்றகம் - சபை.
மன்றக்கூத்தன் - சிவபிரான்.
மன்றம் - சபை, நிச்சயம், நெடுந்தெரு, பலர் கூடும் வெளி, வாசனை, வெளி.
மன்றல் - கல்யாணம், நெடுந்தெரு, வாசனை,

மன்றவாணன் - சிவபிரான்.
மன்ருடி - சிவபெருமான்.
மன்ருடுதல் - இரந்துகேட்டல்.
மன்ருட்டம் } வேண்டுதல்.
மன்ருட்டு
மன்று - கனகசபை, சபை, நீதித்தலம், வெளி.
மன்றுபடுதல் - வெளிப்படல்.
மன்றுளாடி - சிவபிரான்.
மன்னர் - அரசர்.
மன்னர்பின்னோர் - வைசியர்.
மன்னர்மன்னவன் } இராசாதிராசன்
மன்னர்மன்னன் } துரியோதன்.
மன்னல் - மன்னுதல்.
மன்னவர் - மன்னர்.
மன்னவன் - மன்னன்.
மன்னன் - அரசன், ஆடவர் பருவத்தொன்று அது முப்பத்திரண்டுக்கு மேல் நாற்பத்தெட்டுக் குட்பட்டது. உத்திரட்டாதிநாள் எப்பொருட்கு மிறைவன்.
மன்னூர் - ஒரூர், பகைவர்.
மன்னூர்கோயில் - ஒரூர்.
மன்னித்தல் - பொறுத்தல்.
மன்னிப்பு - பொறுதி.
மன்னியு - இடைஞ்சல், கோபம், துக்கம், பலி, பெருமை.
மன்னியை - பிடர்நரம்பு, விசைநரம்பு.
மன்னிறைதருதல் - வேளாண்மைமாந்தரியல்பி னொன்று.
மன்னுதல் - சேர்தல், நிலைபெறுதல்.
மன்னுமான் - கடவுள்.
மன்னுயிர் - ஆத்துமா, சீவன்.
மன்னுலகு - தேவலோகம்.
மன்னெச்சி - மனவிதனம்.
மன்னை - கதுப்பு, கோபம், தொண்டை.
மன்னே - அசைச்சொல்.
மஹதி } நாரதர்வீணை.
மகதி
மஹாகாலம் - ஒரு புண்யக்ஷேத்ரம், அது உஜ்ஜயினியிலுள்ளது.
மஹாகாலன் - ஸர்வஸம்ஹார மூர்த்தியாகிய சிவபிரான்.
மஹாசுவாலே-ஒருநரகம், அது வ்யபிசாரம் புரிவோர் அடைதற்குரியது.
மஹாதேவன் - அஷ்டமூர்த்திகளிலொருவர், சிவபிரான்.

மஹாநந்தி - மகததேசத்து இராஜாக்களாகிய சைசுநாகருளீற்றரசன்.
மஹாநாபன் - ஹிரண்யாக்ஷன் மகன்.
மஹாபலன் - சுமாலிபுத்திரன்.
மஹாபலி - பலிச்சக்கரவர்த்தி.
மஹாபார்ஸ்வன் - இராவணன் சிறியதாய் புத்திருளொருவன்.
மஹாபிஷன் - பிரதீபன்.
மஹாபோஜன் - சாத்துவன் புத்திரன் இவன் வமிசத்தார் போஜரெனப்படுவர் இவன் மிக்க தர்மசீலன்.
மஹாப்ரகன் - விதிலன்வமிசத்தோர் அரசன், கீர்த்திநாதன் தந்தை.
மஹாமகம் - சிங்கராசியில்ப்ருஹஸ்பதி ப்ரவேசமாயிருக்கும் வருஷத்தில் மாசிமாசத்துப் பௌர்ணிமை. அது கும்பகோணத்திலே உள்ள மஹாமகத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தற்குரிய விசேஷ புண்யநாள்.
மஹாமனன் - மஹாமகாலன் புத்ரன். இவன்புத்ரர் உசீநரன் திதிக்ஷன் என்போர்.
மஹாமயன் - கீழ்லோகங்களில் ஒன்ருகிய அதலலோகத் ததிபதி.
மஹாயுகம் - சதுர்யுகம், இது 4320000 வருடங் கொண்டது.
மஹாராஜிகர் - கணதேவதைகளுளொருபேதம் இவர்கள் இருநூற்றிருபதின்மர்.
மாஹாராஷ்டிரம் - கூர்ஜ்ஜரதேசத்துக்குத் தெற்கின்கணுள்ள தேசம். இத்தேசத்தில் வழங்கும் பாஷையும் இப்பெயரேபெறும். இது பஞ்சத்ராவிடத்தொன்று. இத்தேசத்தார் மஹாராஷ்ட்ரர் எனப்படுவர்.
மஹாரோமன் - கீர்த்திநாதன் புத்ரன்.
மஹாரௌரவம் - அக்நிமயமான ஒரு நரகம் இது கொடிய பாபிகள் போய் வருந்துமிடம்.
மஹாவர்மன் - நந்தன்.
மஹாவாகு - ஹிரண்யாக்ஷன் புத்ரன்.
மஹாவீரன் - ஜைந குருக்களுளொருவன். இவன் கடைத்தீர்த்தங்கரன்.
மஹாவீர்யன் - புமங்யன் புத்ரன். ஹ்ருக்ஷயன் தந்தை. ப்ருஹத்ரதன் புத்ரன்.
மஹாஹயன் ஸதஜித்து - ஜ்யேஷ்டபுத்ரன்.

மஹிஷன் - தேவரும் அசுரரும் யுத்தஞ் செய்தபோது, அசுரரெல்லோரும் இறந்துபோக, திதியென்பவள், தவஞ்செய்து ப்ரஹ்மாவினது அநுக்ரஹத்தினாலே இம்மஹிஷனைப் பெற்றாள். இவன் கண்டத்தின்மேல் மஹிஷரூபமும் அதன்கீழ், மநுஷ்யரூபமும் உடையவன் இவன் மிக்க கொடுமையினை யுடையவன். இவனைத் துர்க்காதேவியார் கொன்று மஹிஷாஸுரமர்த்தநியென்னும் பெயர் பெற்றாள்.

மஹிஷாஸுரமர்த்தநி - துர்க்காதேவி.

மஹிஷ்மந்தன் - சஞ்ஜித்துபுத்ரன். நர்மதாநதி தீரத்தில் மாஹிஷ்மதிபுரத்தை நிர்மாணஞ்செய்தவன் இவனே.

மஹேந்த்ரம் - இது உத்கலம் முதல் காண்டவநாடு வரையும் வ்யாபித்திருக்கும்மலை. குலபர்வதங்களுள் ஒன்று.

மஹோதயம் - மகதநாட்டிலுள்ள ஒரு பட்டணம். இது விஸ்வாமித்திரன் இராஜதாநி குசிகன்மகன் குசநாபனாலே நிர்மிக்கப்பட்டது. தைமாசமும் அமாவாசையையும் திருவோணநக்ஷத்ரமுங் கூடிய சுபதினம் மஹோதயபுண்யகாலமெனப்படும். இப்புண்ய காலத்திலே செய்யப்படும் தாநதர்ப்பண முதலியன நற்பலன் தரும்.

மஹோதரன் - இராவணன் சிறியதாய் புத்திரன் நீலனாற் கொல்லப்பட்டவன் இவனே.



## மா



மா - அசைச்சொல், அழகு, அழைத்தல், அளவு, அறிவு, ஆணி, இடித்தமா, இடை, இலக்குமி, எதிர்மறையுபசருக்கம், ஐபவுபசருக்கம், ஓரசைச்சொல், ஓரெண், அது இருபதில் ஒன்று, ஓரெழுத்து, ஒருமரம், கட்டு, கறுப்பு, குதிரை பன்றி யானை யிவற்றினாண், குதிரைப் பொது, சாச்சுவதி, சீலை, செல்வம், தாய், தூகள், நஞ்சுக்கொடி, நிறம், பரி, பிரபை, பெரிய, பெருமை, மகத்துவம் மரணம், மிகுதி, மேன்மை வண்டு வயல், வலி, வியங்கோளொடு வருமசைச்சொல் (உ-ம்) உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே, விலங்கின் பொது, வெறுப்பு.

மாகக்கல் - கானற்கல்.

மாகசம் - கையாந்தகரை.

மாகட்டகம் - செந்நாயுருவி.

மாகண்டம் - அதிகண்டம் அது யோகம் இருபத்தேழினொன்று.

மாகதம் - மகததேயத்துள்ளது.

மாகதர் - அரசமாதுக்கும் வைசியனுக்கும் பிறந்தொருவர் வீரமுதலியவற்றைப் புகழ்வோர், பாணர், மகததேயத்தார்.

மாகதன் - ஜராசந்தன்.

மாகதி - சீனி, திப்பிலி, பிராகிருத பாஷை, முல்லைக்கொடி, மகததேசத்துப் பாஷை இது பிராக்ருதங்களுளொன்று, கோணநதிக்கும் பெயர்.

மாசநீர் - யாசித்தீர்த்தம்.

மாகந்தம் - மாமரம்.

மாகநந்தி - நெல்லிமரம், தக்ஷணபாஞ்சாலத்து இராஜதாநி.

மாகம் - ஆகாயம், மகநாள், மாசிமாதம். மாகன் செய்த ஸம்ஸ்கிருத காவ்யம் இக்காவ்யம் கிருஷ்ணன் சிசுபாலனை வதஞ்செய்த வரலாறு கூறு [வது.

மாகயம் - கௌரிபாஷாணம்.

மாகரி - ஆண்யானை.

மாகலி - இந்திரசாரதி, சந்திரன்.

மாகந்தி - ஆகாயகங்கை.

மாகலோகம் - விண்ணுலகு.

மாகபதி - இந்திரன்.

மாகவதி - கீட்டிசை.

மாகறல் - தொண்டைமண்டலத்து ஒரு சிவஸ்தலம்.

மாகனன் - பார்ப்பான்.

மாகன் - மாசஞ்செய்த சமஸ்கிருத கவி. இவன் தத்தகன் மகன்.

மாகாணம் - நாடு.

மாகாணி - ஓரெண் அது பதினாறிலொரு பங்கு.

மாகாதிபன் - இந்திரன்.

மாகாளம் } ஒரு சிவஸ்தலம்.
மாகாளயம்
மாகாளன் - அயன்படைத்தலைவன்.
மாகாளி - சத்தமாதர்களி லொருத்தி, களாவிழுது, மாவலிக்கிழங்கு.
மாகாளிசரன் - களாவிழுது.
மாகாளேசுவரர் - திரு இரும்பை மாகாளத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மாகிரன் - தேவேந்திரன்.
மாகினம் - இராச்சியம்.
மாகுத்தம் - பூனைக்காலி.
மாகுலர் - வேடர்.
மாகேசன் - தேவேந்திரன், மகேஸ்வரன்.
மாகேசி - துர்க்கை.
மாகேசுவரி - சத்தமாதர்களி லொருத்தி, பார்வதி.
மாகேந்திரம் - நித்தியயோகத்தொன்று மணப்பொருத்தம் பத்திலொன்று.
மாகேயம் - பவளம்.
மாகேயி } பசு.
மாகை
மாக்கடு - சூரத்துக்கடுக்காய்.
மாக்கருவி - குதிரைக்கல்லணை.
மாக்கள் - பிள்ளைகள், மனிதர்.
மாங்கல்லியசூத்திரம் - தாலிக்கொடி.
மாங்கல்லியதாரணம் - தாலிக்கட்டு.
மாங்கல்லியபிச்சை - தாலிப்பிச்சை.
மாங்கல்லியம் - தாலி.
மாங்கன் - ஓரீரல், ஒருமீன்.
மாங்காடு - குடகுமலைப் பக்கத்துள்ள தோரூர் இது இக்காலத்து மாங்காவென்று வழங்கப்படுகின்றது, தொண்டைநாட்டிலோரூர் இங்கே காமாக்ஷி அம்மையார் ஆலயம் உள்ளது.
மாங்காயீரல் - ஓரீரல்.
மாங்காய்ப்பூட்டு - ஒருவகைப்பூட்டு.
மாங்கிசம் - மாமிசம்.
மாங்கிஷச்சிலை - ஈரற்கல்லு.
மாங்கிஷபட்சணி - அசைவன், மாமிசம், புசிப்போன்.
மாங்கிஷம் - மாங்கிசம்.
மாங்கிஷவாசன் - கத்தூரி, எலும்பு.
மாங்குடிமருதனார் - இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்.
மாங்கொட்டை - மாம்பழத்தின் கொட்டை.
மாசக்காய் - ஒருமருந்துச்சரக்கு.
மாசங்கம் - சூதகம்.
மாசப்பிரவேசம் - மாசப்பிறப்பு.
மாசமானம் - வருடம்.
மாசம் - மாதம்.
மாசரம் - சஞ்சிமேலேடு.
மாசலம் - நோய், முதலை.
மாசலன் - கள்வன்.
மாசவிடாய் - மாதவிடாய்.
மாசறல் - குற்றந்தீர்தல், நன்மை.
மாசனம் - பிராமணர், பெரியோர்.
மாசாதம் - சூழ்.
மாசாத்தர் - திருக்கைலாச ஞானவுலாவை அங்கே கேட்டுவந்து திருப்பிடவூரிலே வெளியிட்டவர்.
மாசாத்தன் - கண்ணகைதந்தை.
மாசாத்துவான் - கோவலன் தந்தையின் இயற்பெயர். இவன் கோவலன் இறந்ததை மாடலன் சொல்லக்கேட்டு தன் கையிலுள்ள பொருள் அனைத்தையும் தானஞ்செய்துவிட்டுத் துறவு பூண்டவன்.
மாசாந்தம் - அமாவாசியை.
மாசாலம் - ஒருமாயவித்தை, சிணுங்கு கை.
மாசி - ஒருமாதம், புதுவரம்பு, மகநாள். மேகம்.
மாசிகம் - இறந்தோர்க்கு மாசந்தோறுஞ் செய்யும் ஒருகடன், ஒருமருந்து.
மாசிகை - பறவை.
மாசிங்கம் - கலங்கொம்பு.
மாசிபத்திரி - ஒருபூடு.
மாசிமகம் - ஒருதிருநாள்.
மாசியம் - மாசிகம்.
மாசிரம் - சீக்கிரம்.
மாசிலாமணியீசுவரர் - திருவாவடுதுறையிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர், திருமுல்லைவாயில் சுவாமி பெயர்.
மாசிலி - கடவுள்.
மாசிலிப்பட்டினம் - ஒருநகரம்.
மாசு - அழுக்கு, அற்பம், கருமை, குற்றம், பால்வீதி, மண்டபம், மழை, மறு, மேகம்.
மாசுகம் - பீர்க்கு.
மாசுணம் - பாம்பு, பெரும்பாம்பு.
மாசுணக்கங்கணன் } சிவபிரான்.
மாசுணக்கச்சையன்
மாசுதீர்ப்பான் - நாவிதன்.

மாசேனன் - அருகன், கடவுள், குமரன், திருமால்.
மாசேனை - மிகுதி.
மாசை - பொன்.
மாச்சக்காய் - மாசக்காய்.
மாச்சரியம் - பொறாமை.
மாச்சல் - மாய்ச்சல்.
மாச்சாதம் - சூழ்.
மாச்சி - பாம்புகொல்லி.
மாச்சிலை - மரக்கல்லு.
மாஞாலம் - பெரியபூமி, மாஞாலம்.
மாஞ்சி - ஒரு வாசனைபபண்டம, சடாமாஞ்சி.
மாஞ்சில் - ஒருமருந்து.
மாடகம் - வீணைமுறுக்காணி.
மாடக்குழி-விளக்குவைக்குஞ்சுவரறை.
மாடப்புறு - ஒருபுறு.
மாடப்புறுக்கண்ணிறம் - அழுக்கிறு.
மாஷம் - உழுந்து.
மாடம் - உப்பரிகை,உழுந்து,மண்டபம்.
மாடவன்-தலைச்செங்கானத்துள்ள ஒரு அந்தணன் கோவலனுடைய நட்பாளன் கோவலன் மதுரையில் கொலையுண்டது முதலியவற்றைக் காவிரிப்பூம் பட்டினத்தார்க்குச் சொல்லித் தன் சொல்லால்அவர்களிற்சிலரிறந்தமைதெரிந்து அப்பாவத்தைப்போக்குதற் பொருட்டுப்போய்க் கங்கையாடி மீளுகையில் இடையேசெங்குட்டுவனைக்கண்டு அளவளாவிவஞ்சிநகரஞ்சார்ந்து, அவனை யாகஞ் செய்யும்படி தூண்டி, அது செய்வித்து அவனை நல்வழிப்படுத்தினவன்.
மாடல் - செய்தல்.
மாடன் - ஒருபேய், மடையன்.
மாடி - அரண்மனை, இக்கட்டு,இரணைப்பல், கோபம், தரித்திரம், குளிர், புடைவையோரம்.
மாடியம் - பாதை.
மாடு - அகன்மணி, இடம், இரத்தினம், தனம், செல்வம், பக்கம், பசுப்பொது, பொன்.
மாடை - அரைவராகனெடைப்பொன், பொன்,விரிந்துமுன்வளைந்திருத்தல்.
மாடைக்கொம்பன் - உள்வளைந்த கொம்பன்.
மாட்சி } அழகு,பெருமை.
மாட்சிமை
மாட்டடி - குருட்டடி.
மாட்டல் - மாட்டுதல்.
மாட்டறைதல் - உறுதியின் கீழ்ப்புறத்தெழுதல்.
மாட்டங்கோல் - மாடோட்டுங்கோல்.
மாட்டாமை - இயலாமை.
மாட்டார் - ■லாதார்.
மாட்டிலையான் - பெரிய ஈ.
மாட்டிறக்கம் - ஆற்றிலே மாடிறங்குதுறை.
மாட்டீ - பேரீ.
மாட்டுக்கிடை - பசுத்தொழுவம்.
மாட்டுக்கொட்டில் - பசுக்கொட்டில்.
மாட்டுதல் - அடித்தல், இயலுதல், கடாவுதல், கட்டுதல், சம்மதித்தல், செருக்குதல், பூணுதல், மாள்வித்தல்.
மாட்டுத்தாள் - பருக்கன்கடுதாசி.
மாட்டுமுலைக்காளான் - ஒருகாளான்.
மாட்டெறிந்தொழுதல் - ஒருயுத்திஅது ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கு மாட்டிச் சொல்லி நடத்தல்.
மாட்டுணி - பேருணி.
மாட்டேற்று - குறிப்பு, புறத்துச்செலுத்துகை.
மாணம் - மாட்சிமை.
மாணல் - நன்மை, மாட்சிமை.
மாணவகம் - கல்வி.
மாணவகன் - அறிவீனன், பிரமசாரி, பிள்ளை, மாணாக்கன்.
மாணவம் - பதினறுகோவையுள்ளமுத்தாரம்.
மாணவன் - பிள்ளை, மனிதன்.
மாணவ்வியம் - சிறுவர்கூட்டம்.
மாணாக்கன் - கற்போன்.
மாணாமை - மாட்சிமைப்படாமை.
மாணார் - பகைவர்.
மாணி - ஆண்குறி, குறள், பிரமசாரி.
மாணிகை-எட்டுப்பலங்கொண்ட நிறை.
மாணிக்கத்தாள் - வேசி.
மாணிக்கத்தியாகர்-திருவொற்றியூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மாணிக்கம் - சிவப்புக்கல், செம்மணி அது நவமணியினொன்று.
மாணிக்கவண்ணஈச்சுவரர்- திருமருகலிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.

மாணிக்கவண்ணர் - திருவாழ்கொளி பூத்தூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

மாணிக்கவரதேசுரர் - திருமாணிகுழியிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.

மாணிக்கவல்லியம்மை - திருமாணிகுழியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

மாணிக்கவாசகன்-திருவாதவூராடிகள்.

மாணிக்கவாசக சுவாமிகள் - அரிமர்த்தனபாண்டியர்க்காகக் குதிரைகொள்ளச்சென்றவழியில் சிவபெருமான் ஞாஞசாரியராக எழுந்தருளி வந்து உபதேசஞ் செய்தாட்கொண்டருளப்பட்டவரும் குதிரை வாங்கும்பொருட்டுக்கொண்டுசென்ற திரவியங்களையெல்லாம் சிவாலயத் திருப்பணிக்காக்கிய துணர்ந்து பாண்டியனலொதுக்கப்பட்டு நின்றபோது சிவபிரான் நரிகளைப் பரிகளாக்கிக் கொண்டுபோய்க் கொடுத்தவழி அவராற் காத்தருளப்பட்டவரும் பரிகளெல்லாம் நரிகளாகமீளுதலும் பின்னரும் பாண்டியனெறுக்க, சிவன் வைகையைப்பெருக்கச்செய்து அதன்கரையைஅடைக்கக் கூலியாளாகிச்செல்லப்பெற்றவரும் அதுவாயிலாகப்பாண்டியன்பணியினின்றும் நீங்கிச்சீவன் முத்தராய் வணங்கினவரும் கேட்டோரை மனமுருக்கி முத்திநெறியிற்செலுத்துமியல்பினதாகிய திருவாசகமும் திருக்கோவையாரும் பாடியருளியவருமாகிய சைவசமையாசாரியர் இவர்பூர்வாச்சிரமநாமம் வாதவூரர். இவர்க்குப் பாண்டியனல் சூட்டப்பட்ட பட்டப்பெயர் தென்னவன்பிரமராயன். கல்லாடத்திலே.

"வெடிவாற் பைங்கட்குறு நரியினத்தினை, யேழிடந்தோன்றியின் னூற்கியைந்து, வீதிபோகிய வாலுளைப் புரவி, யாக்கியவிஞ்சைப்பிறை முடியந்தணன்," என்றும்.

"மண்ணகழ்ந்தெடுத்து வருபுனல்வையைக், கூலஞ்சுமக்கக்கொற்றுளாகி, நரைத்தலைமுதியோ ளிடித்தடு கூலி கொண், டடைப்பதுபோல வுடைப்பதுநோக்கிக், கோமகனடிக்க அவனடிவாங்கி"

என்றும் வருதலாலே கடைச்சங்கப் புலவராகிய கல்லாடருக்கு முன்னுள்ளவரென்பது நிச்சயிக்கப்படும்.

சிவன்வலைவீசியதிருவிளையாடலை இவர்பன்முறை யெடுத்தெடுத்துத்திருவாசகத்தி லோதுதலால் வலைவீசிய திருவிளையாடல் நிகழ்ந்தகாலத்தை யடுத்திருந்தவரென்பதும், எந்து,அச்சன், அச்சோபப்புஎன்பனமுதலிய மலையாளச்சொற்களை அத்திருவாசகத்திலேபிரயோகித்தலால் மலையாளத்திருந்துவந்து பாண்டிநாட்டிலே குடிகொண்டவரென்பதும் அனுமிக்கக் கிடக்கின்றன. இச்சிவஞானச்செல்வர். சண்டீசரையும்கண்ணப்பரையும்தமக்குமுந்தினோராக வெடுத்துக்கூறி, அவர்பெருமையைப்புகழுவர். கன்றால்விளவெறிந்தகிருஷ்ணன்செயலும் திருவாசகத்திலெடுத்துக்கூறப்படுதலின், இவர் கிருஷ்ணன்காலத்துக்குப் பிற்பட்டவரென்பதற் கையஞ்சிறிதுமில்லை. திருநாவுக்கரசு நாயனாராலே, தமது தேவாரத்திலே நரியைக் குதிரைசெய்த அற்புதமெடுத்துக் கூறப்படுதலால் அவர் காலத்துக்கு இவர் முன்னுள்ளவரென்பதற்கும் ஆக்ஷேபஞ்சிறிதுமில்லை. திருநாவுக்கரசு நாயனார்காலம், முன்னே சம்பந்தர் என்பதனுட் கூறப்பட்டபடி நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னுள்ளது. அவர்க்கு இவர் முன்னுள்ளவராதலின் இவர் காலம் நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னுள்ளதென்பது நன்குதுணியப்படும். அதுமாத்திரமன்று, திருவாசகத்திலுள்ள பிற் காலத்திலே அறியப்படாத அநேக சரித்திரங்களும், க்ஷேத்திரங்களும் எடுத்தோதப்படலாலும், கண்ணப்பர் சண்டீசர்களைத் துதிப்பவர் திருஞான சம்பந்தர் முதலியோரைத் துதிக்காமையாலும், "சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்" என்னுந் திருவாசகத்திலே

தேனித்தல் என்னுஞ் சொல்வழக்கும், உவலே முதலிய அரியசொற்களும் பிற்காலத்துவழக்கன்மையாலும் திருவாசகம் தேவாரத்துக்கும் கடைச்சங்கத்து நூல்களுக்கும் முந்தியதென்பது நன்ருகத் துணியப்படும். இனித் திருத்தொண்டத்தொகையினுள்ளே எடுத்தோதப்படாமையின், மாணிக்கவாசகர் - சுந்தரமூர்த்தி நாயனருக்குப் பிற்பட்டவரெனச்சாதிப்பாருஞ் சிலருளர். அஃதறியாமையின் பாலதாம். அகஸ்தியர், பதஞ்சலி, வியாக்கிரபாதர் முதலியோரெல்லாம் சிவபக்தியிலும் சிவயோகத்திலுஞ் சிறந்த மெய்யடியார்களாகவும் அவரையெல்லாந் திருத்தொண்டத்தொகையினுட்கூருமையாது காரணமாமோ அதுவே மாணிக்கவாசகரைச் சேர்த்தோதாமைக்குங் காரணமாம் முன்னர் வெளிப்படாத அடியார் வரலாறுகளே சேக்கிழாருக்கு அருளிச்செய்யபட்டனவன்றி முன்னே வெளிப்பட்ட சரித்திரங்களல்ல. மாணிக்கவாசகசரித்திரம் முன்னே ஆலாசியத்திற் கூறப்பட்டது. அதுபற்றியே அவர்சரித்திரம் திருத்தொண்டத்தொகையிலும் பெரிய புராணத்திலும் கூறப்படா தொழிக்கப்பட்டது. அவ்வாறே அகஸ்தியர் பதஞ்சலி வியாக்கிரபாதர்கள் சரித்திரங்களும் சிதம்பரமான்மியத்திலும் பிறவற்றிலுங் கூறப்பட்டுக் கிடந்தமையின் அவையு மொழிக்கப்பட்டன அற்றேல், சம்பந்தமூர்த்தி நாயனர் சரித்திரம் ஆலாசியத்திற் கூறப்பட்டிருக்கவும் மீளவும் பெரியபுராணத்திலும் திருத்தொண்டத் தொகையிலும் கூறப்பட்டது யாதுபற்றியோ வெனின், ஆலாசியத்துள் அச்சரித்திரம் விரித்துரைக்கப் படாமையினென்க இதுவே திருத்தொண்டத்தொகையிலும்மாணிக்கவாசகர் எடுத்துக் கூறப்படாமைக்குக் காரணமாமெனக்கொள்ளுக. அதுநிற்க மாணிக்கவாசகர் இடையரு சிவத்தியானமுஞ் சிவபத்தியுமுடையராய் விளங்கினரென்பதும், அவருடைய சரித்திரம் முற்று முண்மை யென்பதும் அவர் திருவாக்குக்களே வெளிப்படப்பகர்கின்றன. வாசனையாற்புறத்தே காணப்படும் எச்செயல்களையுஞ் சிவசம்பந்தப்படுத்தியே யெடுத்தோதுவர். திருவண்ணமலையிலே, இவர் தலவாசஞ்செய்த காலத்திலே அங்குள்ள பெண்கள் வைகறையிலேயெழுந்து சிவதோத்திரஞ் சொல்லிக்கொண்டு அயல்வீட்டுப் பெண்களை எழுப்பி நீராடப் போதலைக்கண்டு, அச்செயலைச்சிவசத்திகள் சிருஷ்டியின்பொருட்டு ஒருவரை யொருவரெழுப்புவதாகப் பாவித்துத்திருவெம்பாவைப் பாடியருளினர். இப்படியே புறத்தே நிகழுகின்ற செயல்களாகிய படையெழுச்சி சாழல்பொற்சுண்ண முதலியவைகளை யெல்லாம் சிவஞானச் செயலாகப் பாவித்துப் பாடியருளினர்.

இவருடைய மனமுஞ்செயலுமெங்கேயழுந்திக்கிடந்தன வென்பது.

எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ்
செய்யற்க, கங்குல்பக லெங்கண்மற்
ருென்றுங் காணற்க, இங்கிப்பரிசே
யெமக்கெங்கோனல்குதியே, லெங்
கொழிலென்ஞாயி றெமக்கு''

என்பதுமுதலியதிருவானுக்கானுணரப்படும். பேரின்பக்கனியாகிய சிவத்தைக்கிடைத்தற்கரியபேரும்பேறுமதித்தார் என்பது,

''ஞானக்கரும்பின் றெளிவைப்பாகை
மாடற்கரிய நலத்தை நந்தாத்
தேனைப்பழச்சுவையாயினனைச்
சித்தம்புகுந்துதித்திக்கவல்ல
கோனைப்பிறப்பறுத்தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும்பேற வாழ்த்து''

என்னுந் திவ்விய வாக்கா னுணரப்படும்.

இவருடைய பாடலெல்லாம்ஞானப்பொருள் குறித்தவுருவங்களாமென்பதற்கு.

வையகமெல்லா மூரலதாக
மாமேருவென்னு முலக்கைநாட்டி

மெய்யெனு மஞ்சனிறைய வட்டி மேதகு தென்னன் பெருந்துறையா ன்செய்யத்திருவடிபாடிப்பாடிச்செ ம்பொனுலக்கைவலக்கைபற்றிபைய னணிதில்லை வாணனுக்கே யாடப் பொற்சுண்ண மிடிதுநாமே'' என் னுந்திருவாக்குச் சான்றாம்.

இனி இவருடைய மெஞ்ஞானபோ தவாற்றலோ வென்றால் அஃதெடுத் துரைக்குந்துணைத்தன்று. கல்லையுங் கனியவைக்குந்திவ்வியவாய்ச்சொல் லைச்சொல்லென்றுரைத்தலாகாதெ ன்றே மாணிக்கவாசகமென் றிவ்வுல கந் தலைமேலேற்றி ஓலமிடுவதா யிற்று.

தாமேதமக்குச் சுற்றமும்
தாமேதமக்கு விதிவகையும்
யாமாரெம தார்பாசமா
ரென்னமாய மிவைபோகக்
கோமான் பண்டைத்தொண்ட
ரொடுமவன்றன் குறிப்பேகுறிக்கொ ண்டு, போமாறமைமின் பொய்நீக்கி ப்புயங்கனாள்வான்பொன்னடிக்கே''

இப்பரமோத்தம வாக்கு வேதோபநி ஷதங்க ளெல்லாவற்றையு மொருங் கேயளக்குந்துணையதாம். இப்படியே ஒவ்வொன்று மொவ்வோருப நிஷத மாமன்றி வாளா இலக்கியமன்று சிதம்பரத்திலே சிவத்தோ டிரண்ட றங் கலந்தபோது இவர்க்கு வயசு முப்பத்திரண்டு

மாணிக்குழி - ஒரூர்.

மாணிக்குறி - ஆண்குறி.

மாணிபத்திரன் - குபேரன்சேனாதிபதி யாகிய ஒரு யக்ஷன் குபேரனோடு போர்புரிந்த போது இம்மாணிபத் ரன் இராவணனை யெதிர்த்து அமர் புரிந்து மிக்க சூரனாய் நின்றசமயத் து இராவணன் தன் கதாயுதத்தால் அவன் தலையை மோத அவன் தலை ஒருபக்கஞ்சாய்ந்து போன மையால் பார்சுவ மௌலியெனப் பெயர் பெற்றான்.

மாணிபந்தம் } உப்பு.
மாணிமந்தம் }

மாண் - மாட்சிமை, மாணென்னேவல்.

மாண்டது - மகிமைப்பட்டது.

மாண்டல் - மாட்சிமைப்படுதல்.

மாண்டவி - தசரதபுத்திரனாகியபரதன் பாரி. குசத்துவசன் புத்திரி. மாளவி யெனவும் படுவள்.

மாண்டார் - இறந்தோர், பெரியோர்.

மாண்டவ்வியன் - மகாதவங்களைச்செய் து சிறந்த ஒரு பிரமரிஷி. இவரே விதுரனாகப் பின்னர்ப் பிறந்தவர். விதுரன் காண்க.

மாண்டுகேயன் - இந்திரப்பிரமிதி சீஷர். இவர் இருக்கு வேதாத்தியயனர்.

மாண்டுகம் - உபநிடதமுப்பத்திரண்டில் ஒன்று.

மாண்பு - அழகு, பெருமை, மாட்சிமை.

மாதங்கதிவாகரன் - ஒரு வடமொழிப் புலவன்.

மாதங்கம் - அரசு, உத்தியாபரணம், யா னை.

மாதங்கர் - சண்டாளர்.

மாதங்கன் - அரசமாதுக்கும் வேடனுக் கும் பிறந்துசெருப்புத்தைப்போன், கீழ்மகன், வேடன்.

மாதங்கி - காளி, துர்க்கை.

மாதசூதகம் - மாதசூரம்.

மாதச்சங்கிரமம் - மாதப்பிறப்பு.

மாதண்டம்-இராசவீதி, பெரும்பாதை.

மாதசூரம் - மகளிர்சூதகம்.

மாதநம் - இலவங்கம்.

மாதப்பிறப்பு - சூரியனோரிராசியினின் றுமற்றொரிராசிக்குச் செல்லுஞ்சம யம்.

மாதப்புறா - ஒரு நீர்ப்புள்.

மாதம்-கடைதல், காம்பு, கொல்லல், சந் தோஷம், பாதை, பெருமை, மதம், மாசம்.

மாதரி-காளி, மதுரையைச்சார்ந்த ஆயர் பாடியிலிருக்கும் இடைச்சியர் தலை வி. இவள் கோவலன் கொலையுண்டி றந்ததையும் கண்ணகி துன்புற்ற தையுங்கேட்டுவருத்தமுற்றுத் தீயில் விழுந்திறந்தவள்.

மாதர் - அழகு, ஆசை, இசைச்சொல், தலைவியர், பெண்கள்.

மாதர்கள் - சிவனுக்கு ஏவற்குரியமாதர் கள் இப்பெயர் பெறுவார்கள், அவ ர்கள் பிராமி, மஹேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹீ, இந்திராணி, சாமுண்டி என எழுவர், சிலர் மதப்

படி சண்டியோடு அஷ்டமாதர் என வும் படுவர்.
மாதர்குணச்சலம் - கெந்தகம்.
மாதலி - இந்திரன்சாரதி.
மாதலுங்கம் - மாதளே.
மாதவப்ரியம் - செம்பூசினி.
மாதவம் - இனிமை, கள், தவம், வசந்த காலம், வைகாசிமாதம்.
மாதவர் - முனிவர்.
மாதவறுதி - மாதக்கடை.
மாதவன்-பெரியதவமுடையவன், திரு மால், வசந்தன்.
மாதவாசாரியர் - வித்தியாரணியர்.
மாதவன் - விஷ்ணு,மதுவமிசத்தில்வந் தவன், கிருஷ்ணன், பரசுராமன், வசந்தன்.
மாதவி-அருச்சுனன்மனைவி, ஒருகொடி கண்ணன் மனைவி, கள்ளினையட்ட வெல்லம், குருக்கத்தி, சீனி, துளசி துர்க்கை, தூதிகை, நாடகக்கணிகை, வசந்தகால மல்லிகை. யயாதிபுத்திரி, இவள் காலவனை மணந்து அஷ்டக ன் முதலியோரைப் பெற்றவள், அ கத்திய முனிவர் சர்பத்தால் உலகிற் பிறந்த உருப்பசி, கோவலன் காதற் பரத்தை இந்திரன் சபையில் ஒரு வரை யொருவர் காமுற்று அகத்திய முனிவரால் சாபம் பெற்ற சயந்த னும் உருப்பசியும் முறையே விந்த மலையில் மூங்கிலாகவும், காஞ்சி நக ரத்திலே தேவகணிகையாகவும் பிறந் தனர் என்பது சிலப்பதிகாரம், உ ருப்பசி காஞ்சிநகரிற் பிறந்து மாதவி யென்னும் பெயர் கொண்டாள், அ வள் மரபிற்பிறந்த கோவலன் காதற் பரத்தையும் மாதவியெனப்பட்டாள்.
மாதவிகை - வசந்தமல்லிகைக்கொடி.
மாதவிகொழுநன் - அருச்சுனன், கண் ணன்.
மாதவிடாய் - மாதத்தீட்டு.
மாதவிடை - மாதத்தீட்டு.
மாதவியசங்கிதை - காலநிர்ணயம், வித் யாரண்யர்செய்த ஜோதிஷகிரந்தம்.
மாதவியம் - பராசரஸம்ருதிவியாக்யா னம் மாதவாசாரியர் செய்தது.
மாதளை - ஒருமரம்.
மாதளைச்சிலை - மாந்தளிர்க்கல்.
மாதறி - விட்டம்.

மாதனம் - காம்பு.
மாதன் வித்யாதரங்களாற் கர்வித்திருப் பவன்.
மாதா - தாய் இலக்குமி, துர்க்கை, உமா தேவியார், உலகத்தை யீன்றளித்த லால் உமாதேவியார்க்கு இப்பெயர் உவமையாகு பெயர்.
மாதாசை - பெண்ணாசை.
மாதாநுபங்கி - திருவள்ளுவநாயனர்.
மாதாந்தம் - மாதவறுதி.
மாதாமஹன்-தாயைப்பெற்றபாட்டன்.
மாதாமஹி - தாயைப்பெற்றபாட்டி.
மாதி - மா, வட்டமாயோடல்.
மாதிகம் - குதிரைமார்க்கம்.
மாதிபோதி - நெருஞ்சில்.
மாதிரக்காவலர் - திக்குப்பாலகர்.
மாதிரம் - ஆகாயம், திசை, பூமி, மண் டலம், மலை, யானை.
மாதியாடையான் - சிவபிரான்.
மாதிரி - அதிவிடயம், மாதிரிகை.
மாதிரிகை - சாயல், மாதா, விதம்.
மாதிரு - ஆகாயம்.இரேபதி, இலக்குமி, பசு, பார்ப்பனிச்சி, பூமி, மாதா.
மாதிருகசிதன் - பாசுராமன்.
மாதிருகாசுதன் - அறிவீனன்.
மாதிருகாதுகன் - இந்திரன்.
மாதிருகை - அரிவரி, கைத்தாய், தேவி, மாதா.
மாதிருகோத்திரம் - மாதாவமிசம்.
மாதிருமுகன் - அறிவீனன்.
மாது - அசைச்சொல்,(உ ம்)விளிந்தன் றுமாதவர்த்தெளிந்தவென்னெஞ்சு, பெண், விருப்பம்.
மாதுகரம் - பிரமசாரிபிச்சை.
மாதுங்கம் - கொம்மட்டிமாதளை.
மாதுபங்கன் - சிவபிரான்.
மாதுபாகம் - புட்பாகம், பெண்பக்கம்.
மாதுபாகன் - சிவபிரான்.
மாதுமையம்மை - திருக்கோணமாமலை யிலே கோயில் கொண்டிருக்கும் தே வியார் பெயர்.
மாதுரம் - மல்லிகை.
மாதுரி - சாராயம்.
மாதுரியம் - மிதுமதுரம்.
மாதுரு - மாதா.
மாதுருகமனம் } ஈன்றாட் கலத்தல்
மாதுருகாணம் } இது பாதகமைந் பதில் ஒன்று.

மாதுருமட்டை - விசாள்மட்டை.
மாதுலங்கம் - மாதளை, கொடிமாதுளை.
மாதுலம் - ஊமத்தை.
மாதுலர் - மாமன்மார்.
மாதுலன் - மாமன்.
மதுல, மாதுலாநி } மாமன், மனைவி.
மாதுலி - மாதலி, மாமன்மனைவி.
மாதுலுங்கம் - மாதளை.
மாதுவசை - பெண்வசம்பு.
மாதுவம் - கள்.
மாதுளங்கம், மாதுளம் } மாதளை.
மாதுறுப்பு - உத்தியாபரணம்.
மாதூகரம் - மாதுகரம்,பிரமசாரிபிச்சை
மாதேவன் - சிவபிரான்,பன்னொருருத்திரரிலொருவன்.
மாதேவி - பார்ப்பதி.
மாதேவியம்மை - திருஅம்பர்மாகாணத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மாதைவேங்கடேசுரன் - இந்தப்பிரபுதமிழ்ப் புலவர்களுக்குப் பரமோபகாரியாயிருந்து தமிழை வளர்த்த அவதாரபுருஷன். ஒரு கவிக்கு ஆயிரம் பொன்னாகத் தொண்ணூற்றொன்பது கவிக்குக்கொடுத்து நூறாவது கவிக்கு நூறாயிரம் பொன் கொடுத்து ஒரு பிரபந்தங்கொண்ட பிரபு சிகாமணியிவனே, இது நோக்கியேபடிக்காசுப்புலவர், தமது தொண்டைமண்டல சதகத்தில், "எல்லப்பன் என்னும் செய்யுளிலே," மாதை வேங்கடேசுரன்போல வரிசைசெய்தான் என்று புகழ்ந்திருக்கின்றனர்.
மாதொருபாகன் - சிவபெருமான்.
மாதோ - அசைச்சொல்.
மாதத்தகை - மிகுசிறப்பு, மிகுதகை.
மாத்தியாகி - ஞானிகளிலோர்வகை.
மாத்தியானம், மாத்தியானிகம், மாத்தியான்னம் } மத்தியானம்.
மாத்திரம் - அளவு, தனிமை.
மாத்திரி - மத்திரன்மகள்,சல்லியன்தங்கை, பாண்டுமகாராஜனுடைய இரண்டாமனைவி, இவள் தன் கணவனோடு உடன்கட்டையேறினவள், நகுல சகாதேவர்கள் இவள்வயிற்றிற் பிறந்தவர்கள்.
மாத்திரை - அளவு, அற்பம், காதணி, காலநுட்பம், காலிவிரைவு, குளிகை, குற்றுயிரெழுத்து, பாக்கியம்.
மாத்திரைக்கோல் - அளவைக்கோல்.
மாத்திரைச்சுருக்கம் - ஒருபொருள்பயந்து நிற்பதோர் சொல்லொரு மாத்திரை குறையவேறோர்பொருள் பயக்கப்பாடுவது (உ-ம்) வரி, வரி.
மாத்திரைவருத்தனம்-ஒரு பொருள்பயப்பதோர் மொழி ஒருமாத்திரைகூடப் பிறிதோர் பொருள்பயப்பது, (உ-ம்) ஒதி, ஓதி.
மாத்மீகன் - அறிவும்அறியப்படுபொருளும் சூனியமென்றும், அதனாலே பிரபஞ்சம் தோன்றாதென்றும்சொல்பவன்.
மாத்ரி - பாண்டுராஜன் மனைவி, வசம்பு.
மாத்ரீபதி - பாண்டுராஜன்.
மாத்ருகாதுகன் - தேவேந்திரன்.
மாத்ருகேசடன் - மாமன்.
மாத்ருநந்தநன் - முருகக்கடவுள்.
மாத்விகம் - இலுப்பைப்பூச் சாராயம்.
மாநசபூசை - மனப்பூசை.
மாநசவாவி - மாநசதடாகம்.
மாநடன் - சிவபிரான்.
மாநவன் - பாலகன், மனிதன்.
மாநவி-சுவாயம்புவமநுவின்மகள், மாநுடப்பெண்.
மாநவ்யம் - மானுடத்தொகுதி.
மாநாகம் - ஒருபாம்பு.
மாநாய்கன் - கண்ணகிதந்தை, இவன் கோவலன்கொலையுண்டதையும்கண்ணகி துன்புற்றதையும் மாடலன்கூறக்கேட்டுத் துன்புற்றுத்தன் பொருளையெல்லாம் தானஞ் செய்துவிட்டுத் துறவுபூண்டவன்.
மாந்தக்கொதி - ஒருசுரம்.
மாந்தசன்னி - ஒருநோய்.
மாந்தப்புல் - ஒருபுல்.
மாந்தம் - ஒருநோய், மந்தம்.
மாந்தரஞ்சேரலிரும்பொறை- சேரருள் ஒருவன், இவன் பராசரன்என்னும் அந்தணனுக்குப் பரிசுகொடுத்தவன்.
மாந்தர் - ஆண்மக்கள், மனிதர்.

மாந்தல் - அவிந்தடங்கல், உள்ளழிதல், குடித்தல், புசித்தல்.
மாந்தளிர் - மாமரத்துளிர் இது துவர்ப்பத்தில் ஒன்று.
மாந்தளிர்ச்சிலை - கற்காவி.
மாந்தளிர்ப்பச்சை - கொக்குக்கல்.
மாந்தன் - ஆண்மகன், மனிதன்.
மாந்தாதா - (இக்ஷூ) இரண்டாம்யுவநாசுவன் புத்திரன், இவன் மனைவி, சசிபிந்து, இவன்மகன் விந்துமதி, மாந்தாதா புருகுற்சன் அம்பரீஷன் முசுகுந்தன் என்னும் மூன்று புத்திரரையும் ஐம்பது புத்திரிகளையும் பெற்றவன் சௌபரி யென்னும் முனிவன் இந்த ஐம்பது பெண்களையும் மணம்புரிந்தான்.
மாந்தாதுரு - ஓரரசன்.
மாந்தி - ஒரு கலியாணச்சடங்கு, மாமரம்
மாந்தியம் - மந்தமானது.
மாந்திரியர் - மந்திரவாதிகள்.
மாந்துதல் - மாந்தல்.
மாந்தை - ஒரூர், ஒருநோய்.
மாபத்தியன் - காமன்.
மாபலன் - காற்று.
மாபலி-மாவலி பலிச்சக்ரவர்த்திஇவன் பிரஹ்லாதன் புத்திரனாகிய விரோசநன் மகன், மகா பராக்ரமசாலி, தேவர்களை இவன் துன்புறுத்த, அவர்கள் திருமாலிடத்தில் முறையிட அவர் வாமநாவதாரமெடுத்துப்போய் மூன்றடி மண் கேட்டுவாங்கி, பூமியை ஓரடியாகவும் ஆகாயத்தை ஓரடியாகவும் அளந்து மூன்றாமடிக்கு அவன் தலைமேல் திருவடியையூன்ற நெரிந்திறந்தவன், இந்தச் சரித்திரத்தைக் கம்பர் இராமாயணத்தில் மிக சிறப்பித்துக் கூறியிருக்கின்றனர்.
மாபலிவாணன் - ஒரு சக்ரவர்த்தி.
மாபனம் - அளவு, தராசு
மாபுலி - சிங்கம்.
மாபுற்பாகம் - வெளியரங்க சிவபூசை.
மாபூதி - சத்தநாகினென்று.
மாப்பலகை - மாக்கல்.
மாப்பிடி - மாப்பிடிப்பு.
மாப்பிள்ளை - மணவாளப்பிள்ளை.
மாப்பு - மிகுதி, மீன்றிரள். [குளம்.
மாமகக்குளம் - கும்பகோணத்திலோர்
மாமசம் - மாசிமகம், மாமாங்கம்.
மாமகன் - அம்மான், பிசுனன், மன்மதன்.
மாமடி - மாமன்.
மாநாதன் } திருமால்.
மாமணாளன் }
மாமணி - மாணிக்கம்.
மாமருத்துநூலோர் - வைத்தியர்.
மாமல்லபுரம் - மாபலிபுரம்.
மாமன் } அத்தைகொழுநன், அம்மான்,
மாமா } புருஷன் தந்தை, மனைவியின் றந்தை.
மாமாங்கம் - ஒருபுண்ணியகாலம், கும்பகோணத்தில் பன்னிரண்டு வருஷத்துக் கொருதரம் நடக்கும் விசேஷ தீர்த்தத் திருவிழா.
மாமாத்திரர் - வைத்தியர்.
மாமி - அம்மான்மனைவி, பிதாவின் சகோதரி, மனைவியின்றாய்.
மாமிசதாரி - ஊன்றின்போன்.
மாமிசசிலை - கார்நிறக்கல்.
மாமிசபேதி - ஒருபூடு.
மாமிசம் - இறைச்சி.
மாமிசி - சடாமாஞ்சில்.
மாமிசோத்தானம் - உயிர்த்தெழுதல்.
மாமுகன்கை - ஐந்து.
மாமுடி - நெட்டி.
மாமுனி - அருகன், வசிட்டன், நாயுருவி.
மாமூலனார் - இவர் கடைச்சங்கப்புலவருளொருவர். இவர் "பேர் மூலமுணருமா மூலா" என்று ஆன்றோரால் புகழப்பட்டவர்.
மாமேரு - மகாமேரு.
மாமை அழகு, நிறம், அரித்துவாரம்.
மாயநகர் - தாருகாசுரன் அரசுசெய்திருந்த நகரம்.
மாயப்பெண் - மாயாபோகப்பெண்.
மாயம்-அழகு, கறுப்பு, தந்திரம், தீமை, பொய், வஞ்சகம், கனவு.
மாயயாக்கை - மாயாதேகம்.
மாயரூபம் - மெய்போலத் தோற்றும் பொய்யுருவம்.
மாயவள் - இடாகினி, காளியேவல் செய்வாள், தெய்வப்பெண்.
மாயவன் - திருமால்.
மாயவன்சோதரி - துர்க்கை.
மாயவன்மேனி - நாகப்பச்சை.

மாயாவித்தை - ஒரு மாந்திரியவித்தை, தந்திரத் தொழில்.
மாயவன் - கரியவன், திருமால்.
மாயாகாரன் - இந்திரசாலக்காரன்.
மாயாகாரியம் - மாயையிற் றோற்றப்படுதல்.
மாயாகிருது - மாயாகாரியகத்தன்.
மாயாசங்கற்பம் - மாயாகாரியம்.
மாயாசத்தி - பஞ்சசத்தியில் ஒன்று.
மாயாசாலம், மாயாசித்து } மாயம்.
மாயாசிதை - போலிச்சிதை.
மாயாசுதன் - புத்தன்.
மாயாசூனியம் - மறைவின்மை.
மாயாதாரகம் - முதலே.
மாயாதாரகம் - மாயையை ஆதாரமாகவுடையது, மாயையை முதற்காரணமாகவுடையது.
மாயாதாரணை - நவதாரணையில் ஒன்று அது நாமம் வடிவு முதலிய விகாரங்களின்றிக் காலத்தகத்தும் இடத்தகத்தும் படாத பரமாத்மாவிடத்தில் அந்தக்கரணஞ் செய்கையாற் புனைந்துரைக்கப்பட்ட பிரபஞ்சத்தை வியாபாரமின்றித் துறத்தற்குக் கருவியான மகா வாக்கியத்தைப் பொருளுணர்ச்சியோடுச்சரித்தல்.
மாயாதி - நரபலி.
மாயாதேகம் - நிலையற்றசரீரம், மாயையாலான தேகம்.
மாயாதேவி - சம்பராசுரன் வீட்டில் பதிவிரதத்தை அநுஷ்டித்திருந்தவள். புத்தன் றாய்.
மாயாதேவிசுதன் - புத்தன்.
மாயாபாசம் - பந்தமாயை.
மாயாபிரதிபிம்பர் - ஒன்றின்சாயலாய்த் தோற்று மருபிகள், மாயையாற் பிரதிபலிக்கு முருவுடையோர்.
மாயாபுரி - சத்தபுரியில் ஒன்று, பித்தளை, மாயாசரீரம்.
மாயாமந்திரம் - ஒருமந்திரம்.
மாயாமயக்குமாரன் - முருகப்பெருமான்.
மாயாமருளி - ஒருதேவதை.
மாயாமலம் - மாயைமலம்.
மாயாலட்சணம் - அசத்து சடம் அநித்தம் துக்கம் சண்டம் ஆகிய ஐந்து.
மாயாவதி - சம்பாசுரன் மனைவி, இரதிதேவி புத்தன் தாய்.
மாயாவரம் - அழியாதவரம்.
மாயாவல்லபம் - மாயாகாரிய வல்லமை.
மாயாவாதம் - வககன்ம ஒருசமயம்.
மாயாவாதி - சுத்தமாகிய பரப்பிரமம் மாயோபாதியினாலே வாதிக்கப்பட்டுச் சரீரத்திலுள்ளே சீவான்மாவாக நிற்குமென்றும் சீவான்மாவும் விவேகஞான மடைந்து மாயாவித்தையைக் கடந்து பரமான்மாவோடு கடாகாயமும் மஹாகாயமும்போல அபேதமாய்க் கலந்து விடுமென்றும் சொல்லுமோர் சமயி.
மாயாவி - மயன் மூத்தமகன், மண்டோதரிக்கும் துந்துபிக்கும் தமையன், இவன் வாலியாற் கொல்லப் பட்டவன், மாயக்காரன்.
மாயாவித்தை - மாயவித்தை.
மாயாவிமோசனம் - மாயைநீங்கல்.
மாயாவினோதம் - மாயைவிளையாட்டு.
மாயாவீடு - முத்தி.
மாயாளி - வட்டத்திருப்பி.
மாயு - பித்தம்.
மாயுராஜன் - குபேரன் மகன்.
மாயூரம் - ஓரூர், மைலம், மயில்.
மாயூரேசர் - திருமயிலாடு துறையிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மாயேசுபரி - சத்தமாதர்களில் ஒருத்தி, பார்வதி.
மாயை - அறிவு, இந்திரசால முதலியன இரக்கம், இரதிதேவி, இலக்குமி, காளி, சத்தபுரியில் ஒன்று. பஞ்சமாயையில் ஒன்று, அது சகத்துரூபமான அன்னிதாத் தோற்றத்திற்குக் காரணமாகை, பொய், மாயம், மாயாசத்தி, வஞ்சகம், வித்தியாதத்துவமேழில் ஒன்று.
மாயைபறை - ஒருசத்தி.
மாயைபுரி - மாயாநகர், இது கஜமுகாசுரன் இராஜதானி, இது ஜம்புத்வீபத்திலுள்ளது.
மாயைமலம் - மும்மலத்தொன்று அது மறைப்பு.
மாயையுற்றாள் - காளி.
மாயோபதானம் - மாயையையுபாதானமாகவுடையது.
மாயோள் - பெண்.

மாயோனுடல் - குடக்கூத்து.
மாயோனுள் - திருவோணம்.
மாயோன் - திருமால்.
மாயோன்மருமகன் - குமரக்கடவுள்.
மாய் - ஆச்சா.
மாய்ச்சல் - சாவருத்தம்.
மாய்ச்சி - பூட்டுவிலங்கு.
மாய்தல் - சாதல், மடிதல், மறைதல்.
மாய்த்தல்-கொல்லல், மடித்தல், மறைத்தல், வருத்தல்.
மாய்ப்பு - மாய்தல்.
மாய்மாலம் - எத்து, பேமாசாலம், மாரீசம்.
மாய்வு - சாவு, மறைவு.
மாரகம் - மரணம், மரணம் வருவிக்கிறது, மாரி.
மாரகன் - கொல்வோன்.
மாரகாகளம் - குயில்.
மாரகேநதம் - மன்மதன்கொடி.
மாரசயன் - புத்தன்.
மாரசத்ரம் - மன்மதன்கொடை.
மாராசரம் } மன்மதபாணம்.
மாராசாயகம் }
மாரடித்தல் - இழவுக்கடித்தல்.
மாரடைப்பு - நெஞ்சடைப்பு.
மாரணசாந்தி - அழிக்கச்செய்யுஞ் சாந்தி.
மாரணமந்திரம்-மாரணத்தொழில் பண்ணு மந்திரம்.
மாரணம் - மந்திரத்தாற் கொல்லல், மரணம் அது அட்டகருமத் தொன்று.
மாரணம்பண்ணுதல் - மந்திராதிகளினலழித்தல்.
மாரணயாகம் - அந்தியேஷ்டி, மாரகஞ் செய்யும் வேள்வி.
மாரணவித்தை - சூனியவித்தை, மாரணக்கிரியை.
மாரணவோமம் - மாரணயாகம்.
மாரண்டம் - பாம்புமுட்டை.
மாரதம் - நால்வகையுத்தாத்தில்ஒன்று.
மாரதர்-நால்வகையிரதவீரரிலொருவர்.
மாரதனுசு - மன்மதன்வில்.
மாரதன் - சிவன், மகாரதன், விட்டுணு.
மாரத்துச்சாமை - ஒருசாமை.
மாரநாரி - மாரன்வின்னுண்.
மாரபேரி - மன்மதன் முரசு.
மாரமணம் - கருமம்.
மாரம் - எதிரிடை, கோடகசாலே, மரணம்.
மாரரதம் - மன்மதன் தேர்.
மாரதந்தி - மன்மதன்யானை.
மாரன் - காமன்.
மாராட்டம் - ஒரூர், நகரம்.
மாராபிராமன் - புகழேந்திப்புலவர் காலத்திலே தொண்டைநாட்டுச் செஞ்சிநகரை யாண்டிருந்த சிற்றரசன். இவன் தமிழ்க்கலை விநோதனுய்ப் புலவர்களை அபிமானித்து ஆதரித்துவந்தவன்.
மாராப்பு சீலைப்பொட்டணி.
மாராப்புப்பட்டை - கத்தியின்கச்சை.
மாராயம் - உவகை, சோபனம், வந்தனம், விசேஷம்.
மாரி - அழிவு, உவாதி, ஒட்டுநோய், கள், காடுநாள், கொலை, சாவு, நீர், பற்பலரிறக்குநோய், மழை, மாரிகாலம், மேகம்.
மாரிகாத்தோன் - கிருஷ்ணன்.
மாரிகாலம் - ஐப்டசிசார்த்திகையின்பருவம்.
மாரிக்குடா - வடகீழ்த்திசை.
மாரிசா - பெருந்திரைக்கிளர்ச்சி, மாறுபாடு.
மாரிசாதம் - வானம்பாடி.
மாரிநாள் - உத்திரநாள்.
மாரிப்பண் - மாரிப்பொழுது.
மாரிப்போகம் - புன்பயிர்விளைவு.
மாரிமறுத்தல் - மழைவறத்தல்.
மாரிமுத்து - ஒருநோய்.
மாரீசம் - அட்டாதசவுபாரணத் தொன்று, மாயம். உபபுராணங்களுள் ஒன்று.
மாரீசன் - இராவணன் மாமனுன ஓராக்கன், மாயம்பண்ணுவோன்.
மாரீசன் - தாடகையின் புத்திரன், சுபாகு தமையன் மாயா விநோதங்களில் வல்லவன், விசுவாமித்திரமுநிவர் யாகஞ் செய்தபோது அதனை யழிக்கக் கருதிவந்த இந்த மாரீசன் சுபாகு என்னு மிருவருள் சுபாகுவை ஸ்ரீராமர் நெருப்புக்கணையாற் கொன்று மாரீசனை வாயுக்கணையாற் கடலிலே தள்ளிவிட்டா ரதன்பின்னே இந்த மாரீசன் சீதையை இராவணன் கவர்ந்து சென்ற காலத்தில் மாயாமானுகிவந்து இராமரை வஞ்சித்துக் காட்டில் கொண்டுசெல்ல இராமர் இது பொய்ம்மானென் றறிந்து அவனைத் தன்னெரு பாணத்தாற்கொன்றூர்.
மாருண்டம் - பாதை, பாம்புமுட்டை.

மாருதம் - காற்று, வாயு.
மாருதபுத்ரன் } அநுமான், வீமன்.
மாருதாத்மஜன் } அநுமான், வீமன்.
மாருதவன்னக்கல் - காக்கைக்கல்.
மாருதவீமன் - ஏகம்பபாஷாணம்.
மாருதவர்னம் - காற்றுமழை.
மாருதவேகம் - வாயுவேகம்.
மாருதாசநம் - பாம்பு.
மாருதாத்துமசன் - ஹநுமான், வீமன்.
மாருதாபகம் - எலுமிச்சை.
மாருதி - அநுமன், காற்று, வீமன்.
மாருதிச்செங்கை - கண்டகிச்சிலை.
மாருதிநாதம் - வங்கமணல்.
மார் - பன்மைவிகுதி (உ-ம்) தாய்மார், மார்பு, வருங்காலங்காட்டி நிற்குயோர் வினைமுற்று விகுதி (உ-ம்) உண்மார்.
மார்கழி - ஒருமாதம், மிருகசீரிடம்.
மார்க்கசகாயர் - திருவிரிஞ்சைப் பதியிலெழுந்தருளியிருக்கும்சுவாமிபெயர்.
மார்க்கசஹாயம் - வழித்துணை.
மார்க்கசிரம் - மார்கழிமாதம்.
மார்க்கணம் - அம்பு, இரப்பு, தேடல்.
மார்க்கணர் - இரப்போர்.
மார்க்கண்டர் - ஒருமுனிவர்.
மார்க்கண்டேய புராணம் - வேதவியாசமுனிவருடைய சீடராகிய ஜைமினி பகவான் முற்பிறப்பிலே பிராமண குலத்தனவாயும், முற்பிறப்பில்எய்திய ஞானவிசேடத்தினலே மிகுசமர்த்துள்ளனவாயுமிருந்த இரண்டுபக்ஷிகளைநோக்கி, திருமால் மானுடசரீரம் எடுத்ததற்குக் காரணம் யாதென்றும், தருமன், வீமன், அருச்சுநன், நகுலன், சகாதேவன் என்றும்பாண்டவர் ஐவருக்கும் பொதுவாகத் திரௌபதியம்மையார்என்னும் ஒருவரே மனைவியாதற்குக் காரணம் யாதென்றும், பலராமர் மதுமயக்கத்தால் தாம்செய்துகொண்ட பிரமகத்தி பாவ நிவாரணத்தின் பொருட்டு இவர் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டியது யாதுக்கென்றும், த்ரௌபதியாருடைய புதல்வர் ஐவருக்கும் காத்தற்றலைவரா யிருந்த கிருஷ்ணர்ஜுந ரிருவருக்கும் அகாலமரண முண்டாவதற்குக் காரணம் யாதென்றும் வினவிய நான்கு விசேட வினக்களின் உத்தர விவரணங்களை யுணர்த்தும்புராணம், இது முப்பத் தீராயிரம் கிரந்தமுடையது. இது மார்க்கண்டேயராற் சொல்லப்பட்டதனல் இப் பெயர்த்தாயிற்று.
மார்க்கண்டேயம் - பதினெண்புராணத்தொன்று.
மார்க்கண்டேயனர் - மதுரைத் தலைச்சங்கப் புலவருள் ஒருவர். புறநானூற்றில் ஒரு செய்யுள் இவராற் பாடப்பட்டது, இவர் செய்தானூலைநச்சினர்க்கினியார் தலையாயவேதத்தென்று கூறுவர், இத்தனை "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னும் தொல்காப்பியச் சூத்திர வுரையிற் காண்க.
மார்க்கண்டேயர் - மிருகண்டுமுனி புத்ரர், இவர் மகாரிஷி, இவர் தமது ஆயுளெல்லை பதினறொன்பதை யறிந்து தீர்க்காயுள்பெறக் கருதிச் சிவபெருமானை நாடோறும்இடைவிடாமற் பூசித்து அவரருளால் காலன் வலியை வென்றவர்.
மார்க்கதேனு - யோசனைதூரம்.
மார்க்கம் - ஆராய்வு,உலகம்,ஒருகூத்து, கஸ்தூரி,கையாந்தகரை, சமயம்,தாளப்பிரமாணம் பத்தினென்று, தெரு, மறுதலை, மார்கழிமாதம், மூலம், வழி.
மார்க்கவம் - கரிசாலை.
மார்க்கிகன்-வழிச்செல்வோன்வேடன்
மார்ச்சரியம் - பொறாமை, இது உட்பகையாறினென்று, விகாரமெட்டினுமொன்று.
மார்ச்சனம் - துடைத்தல்.
மார்ச்சனி - விளக்குமாறு.
மார்ச்சனை-முழவின்வாய்வார்,முழவொலி.
மார்ச்சாரகண்டம் - மயில்.
மார்ச்சாரகம் - மயில்.
மார்ச்சாரம் - பூனை.
மார்ச்சாரி - கஸ்தூரி.
மார்ச்சாலகியாயம்-சந்தேகிக்கும் படியானநியாயம்.
மார்ச்சாலம் - கோமேதகம், பூனை, மாநாய்.

மார்த்தண்டன் - எருக்கு, பன்றி.
மார்த்தண்டம் - சூரியன்.
மார்த்தம் - ஒரு நீதிசாஸ்திரம்.
மார்த்தவம் - மிருதுத்துவம்.
மார்த்தண்டம் - பதினெண் புராணத்தொன்று அது சூரியமண்டலம்.
மார்த்தாண்டமண்டலம் - சூரியமண்டலம்.
மார்த்தாண்டன் - சூரியன்.
மார்த்தோல் - மரமேறிகள் மார்பிலிடுந்தோல்.
மார்பகம் - நெஞ்சு.
மார்பதை - மாதம்.
மார்பம் - மார்பகம்.
மார்பு - அகலம், நெஞ்சு.
மாலகம் - மேடு, வேப்பமரம்.
மாலதி - இரவு, இளம்பெண், ஒருமல்லிகை, சந்திரகிரணம், சிறுசண்பகம், புட்பம், மல்லிகை, முல்லை. காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஒரு பார்ப்பனி.
மாலபத்திரி - சாதிபத்திரி.
மாலதிபலம் - சாதிக்காய்.
மாலமாயம் - பேயின்றந்திரம்.
மாலம் - குங்குமமரம், பேய், வயல்.
மாலயம் - சந்தனம், மாளயம்.
மாலயற்கரியான் - சிவபிரான்.
மாலரும்பு - மராட்டிமொக்கு.
மாலர்-கவசம், பார்ப்பனப் பெண்ணுக்குஞ் சூத்திரனுக்கும் பிறந்தோா புலைஞர், வேடர்.
மாலவம் - ஒருதேசம்.
மாலவன் - புதன்.
மாலன் - விட்டுணு, வேடன்.
மாலாகண்டம் - நாயுருவி.
மாலாகாரன் - பூவிற்போன்.
மாலாதீபகம் - ஓலங்காரம், தீபகச்சொல் மலையாய் வருவது (உ-ம்) மணக்கு விளக்கு மடவாண் மடவாடனக்குத்தகைசால் புதல்வர்.
மாலாபலம் - உருத்திராக்கம்.
மாலி - ஆதித்தன், கள், மாலையணிந்தவன், சுதேசன்புத்திரன், இந்த ராக்ஷஸன் தேவாசுர யுத்தத்தில் விஷ்ணுமூர்த்தியாற்கொல்லப்பட்டவன்.
மாலிகன் - பூவிற்போன்.
மாலிகை - ஒருமது, கழுத்தணி, நிரல்படகிற்குங் குழூஉ, மகள், மாலை.

மாலிங்கம் - இலிங்கபாஷாணம்.
மாலிமி - இளமைப்பருவத்திற் செய்த நட்பு, மாலுமி.
மாலிமை - மாலுமி, மாலுமித்தனம்.
மாலியம் - புஷ்பம், மானம்.
மாலியவந்தம் - கிஷ்கிந்தைக்குச் சமீபத்திலுள்ள ஒருமலை, வாலி வதத்தின் பிறகு ராமலக்ஷமணர்களிருந்து கார்காலத்தைக் கழித்த விடம் இம்மலையே.
மாலியவான் } மாலியவந்தன் } சுதேசன் புத்திரன், முதல்முதல் இலங்காபுரியில் அரசுசெய்தவன் இவனே இவனை வென்று குபேரன் அரசனானன், அவனைவென்று இராவணன் இலங்கையைக் கைக்கொள்ள மாலியவான் அவனுக்கு மந்திரியானன்.
மாலினி - உமை, கங்கை, காளி, பூமாலைக்காரி.
மாலினி - ஒருநதி இது அயோத்திக்கு வாயுதிக்கில்அபரதாலபர்வதங்களில் உற்பத்தியாகிக் கோசலதேசத்திற் பிரவகிப்பது.
மாலிகரணம் - நவபாதகத்தொன்று.
மாலுகம் - வேம்பு.
மாலுக்கிளையாள் - துர்க்கை, மால்தங்கை.
மாலுங்கம் - புளிமாதுளை.
மாலுடைக்கண்டன் - புருடராகம்.
மாலுதல் - மயங்குதல்.
மாலுதாசனன் } மாலுதானம் } கண்குத்திப்பாம்பு.
மாலுந்திவந்தோன் - பிரமன்.
மாலுமி - மீகாமன்.
மாலுமிசாத்திரம் - கடலோடிகளின் கணிதம்.
மாலுறல் - மயங்கல், மாறுபாடாய் நினைத்தல்.
மாலுறம் - வில்வமரம், வில்வம்.
மாலூதி - கருடன்.
மாலை - அந்திப்பொழுது, அரசன்மனை, இயல், இரா, ஒழுங்காயிருப்பது, ஒழுங்கு, சொல்லாலேனும் பூவாலேனும் பொன்னாலேனும் மணியாலேனுந் தொடுத்ததொடை, நோய், பெண், முறை, வரி.
மாலைக்காதம் - மாலைநேரம்.
மாலைக்கண் - மாலைக்காலத்திருப்பிடிக்குங்கண்.

மாலைக்காமாலை - மாலைக்கண்.
மாலைசூட்டு - சுயம்வரம்.
மாலைநுழைஞ்சான் - ஒருகருவி, ஒரு பூடு.
மாலைநேரம் - அந்திப்பொழுது.
மாலைப்படிதம் - பளிங்கு.
மாலைப்பண் - மாலைப்பொழுது.
மாலைப்பொழுது - அந்திக்காலம்.
மாலைமாற்று - முதலெருடுத்துங் கடை தொடுத்தும் வாசிக்க ஒரு படித்தாய் முடியும் பா.
மாலையணி - ஒரு அலங்காரம் அது பின் பின் வருவனவற்றிற்கு முன் முன் வந்தவற்றை விசேடணங்களாகவே னுஞ் சொல்லுதல் (உ-ம்) மன்னி வள்கண் காதளவுங்காது தோண்மட்டிசையும் எனவும் புனலு மதினூறு மருமதன் மணமுமெனவும் வரும்.
மாலையாங்காலம் - மாலைநேரம்.
மாலையீடு - மாலைசூட்டு.
மாலையுவமை - ஓரலங்காரம், அது ஒரு பொருட்குவரும் பல வுவமையை மாலையாகத் தொடுத்துக் கடைக்கட் பொருளைக் கூட்டியுரைப்பது.
மாலைவாரம் - மாலைப்பொழுது.
மாலைவெள்ளி - அந்திவெள்ளி.
மாலோன் - திருமால், புதன்.
மால் - அருகன், இந்திரன், கண்ணேணி, கம்மாளர்கருவியிலென்று, கருமை, காற்று, கொட்டில், சோழன், திருமால், பழமை, புகர்நிறம், புதன், பெருமை, மயக்கம், மேகம், வலை, வீடு, வெற்பு, வேட்கை.
மால்சமயம் - விஷ்ணுசமயம்.
மால்தங்கை - உமை, ஏகம்பபாஷாணம்.
மால்தொடை - துளசி.
மால்பாகலட்சுமி - அரிதாரம்.
மால்பு - கண்ணேணி.
மால்முருகு - துளசி.
மால்மைத்துனன் - சிவபிரான், அருசு.
மால்வணங்குமீசர்-திருமாற்பேற்றிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மால்விந்து - அப்பிரகம்.
மால்வீடு - சாலக்கிராமம்.
மால்வெட்டல் - தெல்லுவெட்டல்.
மாவகம் - இலுப்பை, காஞ்சிரை.
மாவசன் - அச்சோதைதந்தை.
மாவடியார் - ஏகாம்பரநாதர்.
மாவட்டை - செவ்வட்டை.
மாவகை - தேனில்லாவகை.
மாவலர் - குதிரைப்பாகர், யானைப்பாகர்.
மாவலி - ஒரு சக்கிரவர்த்தி.
மாவிடை - மரச்செறிவு.
மாவிட்டம் - கடனுரை.
மாவிரதம் - உட்சமயமாறிலொன்று.
மாவிரதியர் - இலிங்கிகள்.
மாவிருக்கம் - சதுரக்கள்ளி.
மாவிலங்கு, மாவிலங்கை - ஒருமரம்.
மாவிலந்தம் - விடத்தேர்.
மாவிலிங்கு - ஒருவகைமரம்.
மாவிலைத்தோரணம் - மாவிலையாலிடுந் தோரணம்.
மாவிளக்கு - மாவினாற்செய்த நெய் விளக்கு.
மாவிளம் - வில்வம்.
மாவிறங்கல் - மாப்பிடிப்புக் கீழ்படுதல், மாவிறங்கியது.
மாவீரன் - அதிவீரன்.
மாவுத்தன் - குதிரைப்பாகன், யானைப் பாகன்.
மாவுரம் - வலி.
மாவெனல் - அழைத்தல்.
மாவொல்லி - ஒருவிதவொல்லி.
மாழாத்தல் - மயங்குதல்.
மாழை - அழகு, அறிவின்மை, ஆயம், உலோகக்கட்டி, ஓலை, திரட்சி, புளிமா, பொன், மாமரம்.
மாழையங்கண்ணி - திருமலிவலத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மாழ்கு - சா, மயக்கம், மாழ்பொன்னேவல், மிருகசீரிடம்.
மாழ்குதல் - சாதல், சோம்பல், மயக்கம், மேவல்.
மாள-முன்னிலை யசைச்சொல் (உ-ம்) சிறிது தவிர்ந்தீகமாளநின்பரி சிலருய்ம்மார்.
மாளயபட்சம்- புரட்டாசிமாதத்து அபர பக்கத்தும் பிரதமைமுதற் பூருவபக் கத்துச் சதுத்திமட்டு முள்ளகாலம்.
மாளயம் - புரட்டாதிமாதத்திற் பண்ணும் பொதுச்சிராத்தம்.
மாளல் - மாளுதல்.
மாளவகவுளம் - ஓரிசை.

மாளவம் - தேயமம்பைத்தாறி ஞென்று. முன்னர் உச்சயினிபுரமும் பின்னர்த் தாராபுரமும் இராஜதானியாகப் பெற்றதேசம், இது விதற்பதேசத்துக்கு வடதிசையிலுள்ளது,இது மாளுவம் எனவும்படும்.
மாளவி - ஒரிராகம். மத்திரதேசாதிபனுகிய அசுவபதியின் மனைவி, சாவித்திரியின் தாய்.
மாளிகை - அரசன்மனை, வீடு.
மாளிகைத்தேவர் - ஒரு ஞானசாரியர்.
மாளுதல் - சாதல், தாழ்தல்.
மாளுவவேந்தர் - மாளவதேசத்தரசர்.
மாறக்கட்டுதல் - இல்லையென்று புரட்டுதல்.
மாறல் - ஆடல் கொடுத்து வாங்குதல், தவிர்தல், மறுபுறமாக்கல், விடுதல், விற்றல், வேருக்கல்.
மாறன் - சடகோபாழ்வார், பாண்டியன், மாறிவருவது.
மாறனர் - மதுராசிரியன் மாறனர் எனப்படுவர் இவரே, இவர் இடைச்சங்கத்துப் புலவர்களுள் ஒருவர்.
மாருடி - மாறுபாடுகாரன்.
மாருடுதல் - எதிராடுதல், மயங்குதல்.
மாருட்டம் - மயக்கம், மாறுபாடு.
மாறி - மாருடி.
மாறு - துடைப்பம், பகை, பிரதி, மாறென்னேவல், மிலாறு, விகாரம்.
மாறுகண் - சாய்ந்தகண்.
மாறுகம் - சீலை.
மாறுகூலி - மாமேற்றுக்கார்கூலி.
மாறுகோள் - ஒவ்வாமை, விரோதம்.
மாறுதல் - மாறல்.
மாறுத்தரம் - மறுமொழி.
மாறுபடல் - மாறிப்போதல், விரோதித்தல்.
மாறுபடுபொருள் - ஓலங்காரம் அது கருதிய பொருளை மறைத்ததனைப் பழித்தற்குமற்றென்றைப்புகழ்வது
மாறுபாகை / மாறுபாடு } பிசகு, மருதலிப்பு, விரோதம்.
மாறுவேடம் - வேற்றுருவம்.
மாறொக்கத்தாப்பசலையார் - கொற்கையைச் சூழ்ந்த நாட்டில் விளங்கிய இப்புலவர் 'காரி முதலியோரைப்பாடிப் பெருஞ் செலவம் படைத்தவர் (புறநானூறு.)

மாற்கண்டேயம் - மார்க்கண்டேயம்.
மாற்கரியோனுதல்விழிப்பால் - அக்கினிமூலை.
மாற்சரியம் - மார்ச்சரியம்.
மாற்றமிலி - மௌனி.
மாற்றம் - சொல், பகை, வேற்றுமை.
மாற்றலர் - பகைவர்.
மாற்றல்-ஒன்றுகொடுத்தொன்று வாங்கல், ஒன்றை யொன்ருக்கல், கொடாமை, தீர்த்தல், விற்றல்.
மாற்றறிவரதேசுரர் - திருப்பைஞ்ஞீலியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
மாற்றவள் / மாற்ருடிச்சி / மாற்ருட்டி } சக்களத்தி, வேற்றுப் பெண்.
மாற்ருந்தகப்பன் - மாதாவின் பின்தாரத்துக் கணவன்.
மாற்ருந்தாய் - பிதாவின் பின்தாரத்துப்பெண்.
மாற்ருர் - பகைவர்.
மாற்ருன் - பகைவன்.
மாற்று - எதிர் கிரயம், பொன் வெள்ளியின் தரம், மாற்றல்.
மாற்றுதல் - மாற்றல்.
மாற்றுநொடி - பிரதிநொடி.
மாற்றுயர்பொன் - தங்கம்.
மாற்றுவஸ்திரம் - வதிற்புடவை, விலையுயர்ந்தபுடவை.
மான-உவமைச்சொல் (உ-ம்)கொங்கைமுகமான முன்னிலையசைச்சொல்.
மானக்கலை - அரையாடை.
மானகக்காட்சி - மனோதரிசனம்.
மானசசரோவரம் - மானதப்பொய்கை.
மானக்கஞ்சாறநாயனர்-கஞ்சனூரெனவழங்கும் கஞ்சனூரிலே வேளாளர் குலத்திலே விளங்கிய ஒரு சிவபக்தர். மணக்கோலஞ்செய்து மணப்பந்தலின் கீழ்வந்திருந்த தமது புதல்வியினது கூந்தலை மாவிரதி வேடங்கொண்டு சென்று சிவபெருமான் கேட்க அதனை மறுக்காது கொய்து கொடுத்தவரிவரே.
மானக்குறை - மானக்கேடு.
மானக்கேடு - சங்கையீனம்.
மானச்சரசு / மானசவாவி } கைலாயத்தில் குபேரவனத்திலுள்ள சரசு,

அன்னப்பக்ஷிகளுக்கு உறையிட மிதுவே, அன்னங்கள் பிறவிடங்களிற் சென்று வாழினும் மழைக்காலத்தில் மீண்டு சென்று இவ்வாவியை அடையும், இந்த வாவியின் காட்சிமிக்க ரமணியமும் வசீகாமும் உடையதாம்.
மானசதீர்த்தம் - ஒருதீர்த்தம்.
மானசம் - கருத்து, புத்தி, மனது, மானதவாவி.
மானசன் - மந்மதன். [ம்.
மானசஜபம் - மனத்திற்செய்யுஞ்செப
மானசவிரதம் - கொல்லாமை முதலிய
மானசாலயம் - அன்னப்பறவை. [ன.
மானசூத்திரம் - அரைஞாண்.
மானதநானம் - எழ்வகை நானத்தொன்று, அது சற்குருவருளான் மூலமலமறுத்தல்.
மானதபூசை - மனோபூசை.
மானதப்பிரத்தியட்சம்-மானதக்காட்சி.
மானதம் - மனத்துக்கடுத்தது.
மானதவாவி - பிரமலோகவாவி.
மானதீபம் - உபகிடதமுப்பத்திரண்டில்
மானத்தாட்சி - மானக்கேடு. [ஒன்று.
மானதவாவி - மானசதடாகம்.
மானத்தோல் - பீஜம்.
மானபங்கம் - மானஈனம்.
மானபாவி - பெரும்பாவி.
மானபோதம்-சிற்பநூன் முப்பத்திரண்டினொன்று.
மானமா - கவரிமா.
மானமிருகம் - கவரிமா.
மானம் அகங்காரம், அபிமானம், அளவு, உவமை, ஒரு விதப் பொருத்தம், கணிதம், குற்றம், நேசம், பிடிப்பு, பெருந்தன்மை, பெருமை, மரியாதை, வலி, விமானம், வெட்கம்.
மானம்பாடி - வானம்பாடி.
மானரந்தரி - நாழிகைவட்டில்.
மானரியம் - பூராயம், விடுப்பு.
மானல் - இவச்சை, ஐயம், ஒத்தல், மயக்கம்.
மானவம் - உபபுராணங்களு ளொன்று.
மானவர் - ஆண்மக்கள், படைவீரர், மனிதர், மானமுடையோர்.
மானவர்ஜிதன் - வெட்கமற்றவன்.
மானவிலங்கு - கவரிமா.
மானவு - தெளிவு.
மானவேதியன் - வேதமுணர் பேறிவோன்.
மானனம் - சங்கை.
மானன் - தலைவன், மூடன், வேடன்.
மானு - பாட்டன்.
மானுகம் - பெருநாரை.
மானுகர் - கோவலன்றந்தை.
மானுபரணம் - மானமாகிய ஆபரணமுடையோன்.
மானுர் - பகைவர், பெண்கள்.
மானி - மானமுடையோன், மானியென்னேவல்.
மானிகை - ஒரு முகத்தளவு, சாராயம்.
மானிடச்சட்டை - மானிடதேகம்.
மானிடத்தன் - சிவபிரான்.
மானிடத்தன்மன் - குபேரன்.
மானிடமுடையோன், மானிடமேந்தி - சிவபிரான்.
மானிடத்தான் - சிவபிரான்.
மானிடம், மானிஷம் - மனுஷப்பிறப்பு.
மானிடர், மானிடவர் - மனிதர்.
மானிடவன் - சிவபெருமான்.
மானிடன் - சிவன், மனிதன்.
மானிடவைத்தியம் - ஓடதி கொண்டு செய்யும் வைத்தியம்.
மானிதம் - கனம், மானம்.
மானிதை - மகத்துவம்.
மானித்தல் - சங்கித்தல்.
மானிபம் - மானம், வெட்கம்.
மானியக்காரன் - சொந்தநிலக்காரன்.
மானியம் - அரசர்கள் சம்மானத்தால் விட்டநிலம், சங்கம்.
மானினி - பெண்.
மானுசன் - மனிதன்.
மானுடமடங்கல் - நரசிங்கம்.
மானுடம், மானுஷம் - மானிடப்பிறப்பு.
மானுடயாகம் - பஞ்சமா வெச்சத்தொன்று அது இரப்போர்க்குணவு முதலியவீதல்.
மானுடர் - மனிதர்.
மானுடவைத்தியம் - மானிட வைத்திய
மானுஷகம் - மனுஷிகம். [ம்.
மானுதல் - மானல்.

மானுபாவன் - மஹாநுபாவன்.
மானுபாவி - மானபாவி.
மானேறு - உத்திரநாள், கலைமான்.
மானேக்கியகம் - சிறப்பு.
மான் - உருவம், ஒருமிருகம், குதிரை, பெண், மகரமீன், மகரராசி, மானென்னேவல், விலங்கின்பொது.
மான்களங்கம் - சந்திரகளங்கம்.
மான்களிக்கண் - இருவட்டக்கம்பி.
மான்கையன் - சிவபிரான்.
மான்கொடி - ஒரு படர்கொடி.
மான்செவி - இலைக்கள்ளி, எருமைநாக்கிப்பூடு.
மான்செவிக்கள்ளி - ஒருகள்ளி.
மான்மகன் - பிரமன், மன்மதன்.
மான்மதம் - கஸ்தூரி.
மான்மதச்சேறு - கஸ்தூரிக்குழம்பு.
மான்மியம் - மகிமை, சரித்திரம்.
மான்மைத்துனன் - சிவபிரான்.
மான்றலை - மிருகசீரிடம்.
மான்வேடன் - மாரீசன்.
மான்றல் - மயக்கம், மயங்கல்.
மாஹேசுவரசூத்திரம் - ஸம்ஸ்கிருத வியாகரணத்துக்கு முதனூலாகச் சிவபிரான் தமது டமருகத்தி னின்றுந் தோற்றுவித்தசப்தமூலசூத்திரங்கள்.
மாஹிஷ்மதி - நர்மதாநதீ தீரத்திலுள்ள ஒருநகரம்.
மாஹேசுவரம் - உபபுராணங்களுள்ஒன்[று.
மாஹேயர் - இப்போது முல்டான் என்று வழங்குகிற தேசத்துப் பிராசீந வேளாளர்.



## மி

மிகல் - கடத்தல், மிகுதல்.
மிகவல்லோர் - அதிவீரர், அறிஞர்.
மிகவும் - மிகுதியும்.
மிகன் - பெருமை.
மிகன்மக்கள்-பெருமையிற்சிறந்தோர்.
மிகிரம் - காற்று, முகில்.
மிகிரன் - சந்திரன், சூரியன்.
மிகிராணன் - சிவபிரான்.
மிகுகளிப்பு - பெருமகிழ்ச்சி.
மிகுகொடையான் - கன்னன், தியாகி.
மிகுண்டம் - சாறணை.
மிகுத்தியல் - வில்வம்.
மிகுச்சுதல் - மிகுத்தல்.
மிகுதம் - மிகுதி.
மிகுதல் - அதிகப்படல், கடத்தல், பூரித்தல்.
மிகுதி - அதிகம், திரட்சி, பூரிப்பு, பொலிவு, மதர்ப்பு, மீதி.
மிகுத்தல் - அதிகப்படல்.
மிகுத்துச்சொல்லல்-விதந்துசொல்லல்
மிகுந்தவனம் - தண்ணீர்விட்டான்.
மிகுப்பலத்தம் - காத்தொட்டி.
மிகுவெறி - பெரும்பைத்தியம்.
மிகை-குற்றம், கேடு, துன்பம், மிகுதி, வருத்தம்.
மிகைபடக்கூறல்-அதிகப்படச்சொல்லுதல், அது நூற்குற்றம் பத்தில் ஒன்று.
மிகைபடல் - குற்றப்படல், மிகுதல்.
மிகையதன்செய்கையுருவகம் - ஓலங்காரம் அது உருவகம் செய்கையிலொத்தும் யாதோமிக்குள தெனச் சொல்வது.
மிகையொற்றுமையுருவகம் - உருவகத்தில் யாதுமோர் யேற்பாடு தோன்றச்சொல்வது (உ-ம்) தடங்கட்கெண்டை.
மிக்கது - மிகுதியானது.
மிக்கவன் - பெருமையிற்சிறந்தோன்.
மிக்கவை - உச்சிட்டம், ஊண், சோறு, நியாயமல்லவை, நிறை.
மிக்கான் - மேலானோன்.
மிக்கிளமை - கட்டிளமை.
மிக்கு - மிகுதி.
மிக்கோர் - அறிஞர், பெரியோர்.
மிசி - தாளிசபத்திரி, சதகுப்பை.
மிசிகம் - பாம்புவளை.
மிசிரகேசி-வசுதேவன்தம்பியாகிய வற்சகன் மனைவி.
மிசிரம் - கலப்பு, சமம்.
மிசிரவர்ணம் - கலப்புநிறம்.
மிசிரன் - கல்வியாலுயர்ந்தபெரியோர்க்குரிய ஒரு வரிசைப்பெயர், கிருஷ்ணமிசிரன் வராஹமிசிரன்,என்பன போல்வன.
மிசிரஸ்தாநம் - துருக்கரால் மிசிரு என்று வழங்கப்படுகிற ஒருதேசம், தற்

காலத்தில் ஐரோப்பியரால் ஈஜிப்ட் என்று வழங்கப்படுகின்றது. யயாதியால் தன் தேசத்தினின்றும் ஒட்டப்பட்ட அவன் புத்திரர் நால்வரும் இந்த மிலேச்ச தேசத்திற் சென்று அத்தேசத்தாசராகி அந்தத் தேசத்துச்சனங்களோடு கலந்தமையால் இது மிசிரஸ்தாநம் என்னும் பெயருடைத்தாயிற்று.
மிசுக்கன் - ஈனன், தரித்திரன்.
மிசுக்கை - சின்னத்தனம்.
மிசுரம் - உச்சவிசை.
மிசை - உணர்வு,உயர்ச்சி,சோறு,தரித்திரம்,மிசையென்னேவல்,மீமிசைச்சொல், மேடு, மேல்.
மிசைதல் - அனுபவித்தல், உண்டல்.
மிசைத்திரள் - காடு.
மிசைவடம் - வீரதண்டை.
மிச்சம் - சேடம், மிகுதி.
மிச்சரம் - மிசிரம்.
மிச்சிரகாவநம்-இந்திரன்பூந்தோட்டம்.
மிச்சிரம் - கலப்பு.
மிச்சில் - எச்சில், ஒருபொருள், கரி.
மிச்சை-அஞ்ஞானம்,தரித்திரம், பொய் விலாமிச்சை.
மிஞிறு - வண்டு.
மிஞிறுநாண் - வண்டுநாண்.
மிஞிறுணவு - தேன்.
மிஞ்சல் - கடத்தல், மீதியாதல்.
மிஞ்சி - காலணியினென்று.
மிஞ்சுதல் - மிஞ்சல்.
மிடல் - வலி.
மிடறு - கழுத்து,கீழ்வாய்,தொண்டை.
மிடா - குழிசி, பானை.
மிடாரி - பிரமன்.
மிடி - மிடியென்னேவல், வறுமை.
மிடித்தல் - வறுமையுறல்.
மிடிமை - வறுமை.
மிடியறை } செல்வன்.
மிடியிலி }
மிடியன் - தரித்திரன், வறியவன்.
மிடிவு - மிடிமை.
மிடுக்கண்-பெலப்பானது, பெலப்பானவன், வலிமையுள்ளவன்.
மிடுக்கு - பெலப்பு, வலிமை.
மிடுமிடுத்தல் - விரைதல்.
மிடுமிடுப்பு - விரைவு.
மிடுமிடெனல் - விரைவுக்குறிப்பு.
மிடை - தூறு, மிடையென்னேவல்.
மிடைதல் - நெருங்கல்.
மிடைதூறு - நெருங்கியகாடு.
மிட்டா - அனுபவம், ஆட்சி, சுதந்திரம்.
மிணுமிணுத்தல் - இரகசியம்பேசல்.
மிணுமிணுப்பு - ஒலிக்குறிப்பு.
மிணுமிணெனல் - மிணுமிணுத்தல்.
மிண்டல் - நெருங்குதல், மிண்டுதல்.
மிண்டன் - திண்ணியன்.
மிண்டி - கிளப்புமோர்கருவி.
மிண்டுபோடுதல் - மிண்டிட்டுப்பெயர்த்தல்.
மிண்டு - சார்த்துமிண்டு மதத்தாற்பிழைத்தல், மிண்டென்னேவல்.
மிண்டுதல் - நெருங்கல், மதத்தாலடர்த்தல்.
மிதக்குதல் - மேலேகிளர்தல், மேற்படல்.
மிதங்கமம் - யானை.
மிதசுரம் - மத்திமசுரம்.
மிதத்தல் - கிளர்தல், கிளர்த்தல்.
மிதத்துதல் - உயர்த்தல், கிளப்புதல்.
மிதத்துரு - கடல்.
மிதபாஷிணி - அளவுகடவாத பேச்சுக்காரி.
மிதப்பு - உயர்ச்சி, கிளர்வு, மேடு, மேற்படுகை, வலைமுதலியவற்றிற் கட்டிவிடுமறிகுறி.
மிதபோஜநம் - அளவுகடவாதவுண்டி.
மிதம் - அளவு, மிருகம்.
மிதலை - கொப்பூழ்.
மிதவை - சோறு, தெப்பம்.
மிதாகாரம் - மிதபோஜநம்.
மிதாசனம் - அற்பவுணவு.
மிதி - அத்தாட்சி, அழகு, அறிவு, கிணற்றுமிதி, நெய்வார்கருவியினொன்று, மிதித்தல், மிதியென்னேவல், விலை.
மிதித்தல் - உழக்கல், குதித்தல்.
மிதிபட்டடை } பாதம்வைக்கும் பலகை.
மிதிபலகை }
மிதிபாகல் - ஒருபாகல்.
மிதிப்பு - மிதித்தல்.
மிதிமரம் - மிதிபலகை.
மிதியடி - பாதகுறடு.
மிதியல் - மிதிப்பு.
மிதியிடுதல்-காலாற் குறிசெய்யல், மிதித்தல்.
மிதிலன்-நிருபுத்திரன், வசிட்டர்சாபத்தால் நிமி தன்னுடம்பை விட்டுழல

அவன் இராஜ்யம் அரசின்றி யிருக்கக்கண்ட மந்திரிகள் அவன் தேகத்தைக்கடைய அதினின்றும் ஒரு புத்திரன் தோன்றினன், அவன்பெயர் மிதிலன். கடைந் தெடுக்கப்பட்டவன் என்பது சொற்பொருள், நிமி பிறந்த பின்னர் அவனுடைய சரீரம் தைலத்தால் பக்குவம்பண்ணி நெடுங்காலம் வைத்துக் காக்கப்பட்டமையால் அவனுக்குப் பிற்காலத்தில் விதேகனென்று ஒரு பெயருமுண்டாயிற்று.

மிதிலை - சனகனகர். மிதிலன்என்னும் அரசன் நிருமித்த நகரமாதலால் மிதிலையென்னும் பெயர் இதற்குண்டாயிற்று. இது கண்டகி கௌசிகி நதிகளுக்கு நடுவேயுள்ளது. ஜநகராஜனுக்கு ராஜதாநியா யிருந்தது மிதுவே, இது பஞ்சகௌட தேசங்களுள்ளும் [ஒன்று.

மிதிலாதிபன் - ஜநகன்.

மிதிலாதிபதிதநயை - ஞானகி.

மிதுக்காங்காய் - ஒரு வெள்ளரிக்காய்.

மிதுக்கை - ஒரு வெள்ளரிக்கொடி.

மிதுனம் இரட்டை, ஓரிராசி, ஒருபுண், புணர்ச்சி, மைதுனத்தின் றிரிபு.

மிதுனவீதி-அருக்கன்வீதியுளொன்று.

மிதுனி - கரிக்குருவி.

மித்தம் - ஆலசியம், நித்திரை.

மித்தியம் - பொய்.

மித்தியாசாட்சி - பொய்ச்சாட்சி.

மித்தியாகிரசநம் - சபதம்.

மித்தியாபிரபஞ்சம் - பொய்யுலகம்.

மித்தியாமதி - அறியாமை, பிழை.

மித்தியாவாசகம் - பொய்மொழி.

மித்தியாவாதி - பொய்யன்.

மித்தியை - கபடம், பொய்

மித்தியோத்தரம் - பொய்மறுமொழி.

மித்தியோபசாரம் - சத்துருவுக்கு மித்துருப்போற் காட்டல்.

மித்திரசகன் - கல்மாஷபாதன்காண்க.

மித்திரதுரோகி - சினேகசத்துரு.

மித்திரதுருகன்-மாய்மாலசினேகிதன்.

மித்திரநாள் - அனுடம்.

மித்திரபீரு - பனி.

மித்திரபுத்திரன் - கர்ணன், சுக்ரீவன்.

மித்திரபேதம் - மித்துருபேதம்.

மித்திரம் - நட்பு.

மித்திரவிரோதம் - சிநேகவிரோதம்.

மித்திரர் - சினேகிதர்.

மித்திரலாபம் - சினேகசம்பாதனே.

மித்திரன் - சினேகிதன், துவாதசாதித்தரிலொருவன், அரிஷ்டன் தந்தை, நாலாம் ரேவதி, நாயகன், சூரியனுக்கும் பெயர்.

மித்திராயு - திவோதாசன் மகன்.

மித்திரை - தோழி.

மித்துரு - சினேகிதன்.

மித்துருதுரோகி - சினேகத்தில் துரோகம் பண்ணுவோன்.

மித்துருத்தானம் - சென்மத்துக்கு நாலாமிடம்

மித்துருபேதம் - சினேகமாயிருந்துபேதித்தல் இது பஞ்சதந்திரத்திஞென்[று.

மித்துருப்பதமை - ஈயமணல்.

மித்தை - பொய்.

மியா - முன்னிலையசைச்சொல். (உ-ம்) கேண்மியா.

மியூலசிவி - ஒருபூடு.

மியூல் - ஒருவகைப்பூடு.

மிரட்டல் - அதட்டல்.

மிரட்டுதல் - பயமுறுத்துதல்.

மிரதம் - பாம்பு.

மிரதாபரணன் - சிவபிரான்.

மிரளுதல் - சங்காலியங் கொள்ளுதல், பயப்படுதல்.

மிராசி } முதுசொம்.
மிராசு }

மிரிகை - முறுக்காணி.

மிரிசபத்திரி - வறட்சுண்டி.

மிரியல் - மிளகு.

மிரியற்கொடி - மிளகுக்கொடி.

மிரு - பாலைநிலம்.

மிருகாரன் - சிவபிரான்.

மிருககண்டு - மிருகண்டின்றந்தை, மார்க்கண்டேயர் பாட்டன்.

மிருககீரம் - மான்பால்.

மிருகக்குணம் - ஒழுங்கற்றகுணம், துட்டகுணம், வன்குணம்.

மிருகசஞ்சாரம் - ஒழுங்கற்றநடை, மிருகத்துடன் புணர்தல்.

மிருகசயிடகம் - வெருகு.

மிருகசாதி - விலங்குசாதி.

மிருகசாலிகை - மான்வலை.

மிருகசிரிடம் - ஒரு நக்ஷத்திரம்.

மிருகசீவனன் - வேட்டைக்காரன்.
மிருகசைடகம் - ஆண்பூனை.
மிருகண்டகன் - மார்க்கண்டன்.
மிருகண்டன் - பிருகு புத்திரனாகிய தாதைக்கு ஆபதியென்பவள் பெற்ற புத்திரன், மார்க்கண்டேயன் தந்தை.
மிருகண்டன், மிருகண்டு } ஓரிருடி.
மிருககாமினி - வாயுவிளங்கம்.
மிருகதஞ்சகன் - நாய்.
மிருகபிந்தம் - பன்றிக்கொம்பு.
மிருகதரன் - சந்திரன்.
மிருகதிருஷ்ணை, மிருகதிருஷ்ணிகை } கானல்.
மிருகதூர்த்தகன் - நரி.
மிருகத்தனம் - மிருகத்தின்றன்மை.
மிருகத்தியு - வேட்டைக்காரன்.
மிருகநாதன் - சிங்கம்.
மிருகநாபி - கத்தூரி, கத்தூரிப்பூனை.
மிருகநாபிசம் - கத்தூரி.
மிருகபதி - சிங்கம்.
மிருகபந்தினி - மான்வலை.
மிருகபாலிகை - நாவி.
மிருகமதம் - கத்தூரி.
மிருகமதவாசை - கஸ்தூரிமல்லிகை.
மிருகமர்த்தகம் - நரி.
மிருகமாதிருகை - பெண்மான்.
மிருகம் - கத்தூரி, பன்றி, மான், மிருகசீரிடம், யானை, விலங்கின் பொது, வேட்டை.
மிருகராசன், மிருகரிபு } சிங்கம், வேங்கைப் புலி.
மிருகாஞ்சனன் - சந்திரன்.
மிருகவதாசீவன் - வேடன்.
மிருகவாகனன், மிருகவாசநன் } வாயு.
மிருகவ்வியம் - வேட்டை.
மிருகாங்கம் - காற்று, சந்திரன்.
மிருகாங்கன் - சந்திரன், சிவபிரான்.
மிருகாசனம் - சிங்கம், புலி.
மிருகாசீவன் - புலி, வேடன்.
மிருகாண்டசம், மிருகாண்டஜை } கஸ்தூரி.
மிருகாண்டி - மிருகத்தனமுள்ளவன்.
மிருகாதகம் - புலி.
மிருகாதி - சிங்கம், சிவிங்கி, புலி.

மிருகாதிபதி, மிருகாதிபன் } சிங்கம்.
மிருகாயினம் - மான்றோல்.
மிருகாரசிங்கி - மிருதாரசிங்கி.
மிருதாரகதி, மிருகாரி } சிங்கம், நரி, நாய், புலி.
மிருகார்த்தகம் - புலி.
மிருகி - மான்.
மிருகேந்திரன் - ஒரு சைவாகமம்.
மிருகேந்திரன் - சிங்கம்.
மிருகம் - காட்சி.
மிருச்சகடி - சூத்திரகனாலே செய்யப்பட்ட ஒரு நாடகம், இது பத்துப்பாகமுடையது.
மிருஞ்சி - செம்முருங்கை.
மிருடங்கணம் - பிள்ளை.
மிருடபத்தன் - சிவபக்தன்.
மிருடபத்தி - சிவபக்தி.
மிருடன் - உருத்திரன், சிவபெருமான், சுகத்தைக் கொடுப்பவன் என்பது பதப்பொருள்.
மிருடானி - பார்வதி.
மிருடார்த்தகம்-அபாவஅளவை, (உ-ம்) ஆமைமயிர்.
மிருடாலகம் - மாமரம்.
மிருடாவாதம் - இகழாவிகழ்ச்சி.
மிருடி, மிருடிகம் } மான்.
மிருடை - துர்க்கை.
ருடோத்தயம் - பொய்.
மிருட்டி - சமைத்தல், சுத்தி, தெளித்தல், நெருக்கம்.
மிருட்டேருமன் - கொடையாளன், தற்பிரியன்.
மிருணாலம் - தாமரைநூல்.
மிருணாலி - தாமரை.
மிருண் - மண்.
மிருதகம் - பிரேதம்.
மிருதகன் - அச்சுரான் தம்பி.
மிருதகாந்தம் - நரி.
மிருதங்கபலம் - பலா.
மிருதங்கம் - ஒலி, கலைஞான மறுபத்து நான்கினொன்று, முழவு, மூங்கில்.
மிருதசங்கை - மரணசங்கை.
மிருதசஞ்சீவி, மிருதசஞ்சீவினி } இறந்தவர்களை யெழுப்புமருந்து ஒரு மந்திரம்.

மிருதசூதகம் - மரணசூதகம்.
மிருதச்சேதகம் - இறத்தல்.
மிருதண்டன் - சூரியன்.
மிருதஸ்நானம் - குளிப்பாட்டு.
மிருதபம் - பிரேதம்.
மிருதபாஷாணம் - பாஷாணமறுபத்து நான்கினொன்று.
மிருதமத்தம் - நரி.
மிருதம் - நீர்வள்ளி, போர், மரணம், மித்துரு, விளைவு பாஷாணமுப்பத் திரண்டினொன்று.
பிருதவற்சை - கன்றிழந்தபசு, மகவி ழந்தபெண்.
மிருதாகரம் - இடி.
மிருதாண்டன் - சூரியன்.
மிருதாமதம் - துருசி.
மிருதாரசிங்கி - ஈயம், ஒருபூடு, சிங்கி பாஷாணம்.
மிருதி - தருமநூல், நினைப்பு, மரணம்.
மிருதிமதாலங்காரம் - கிளைப்பணி.
மிருதினி - நன்னிலம்.
மிருது - சாந்தம், நொய்மை, மந்தம், மழுங்கல், மென்மை.
மிருதுகமனை - அன்னப்பேடு, மந்த நடையினள்.
மிருதுநட்சத்திரம் - இலகுநட்சத்திரம்.
மிருதுபத்து - அக்ரூரன்தம்பியருளொருவன்.
மிருதுபர்வகம் - பிரம்பு.
மிருதுபலம் - பேரீந்து.
மிருதுபாடிதம், மிருதுபாஷிதம் - மெத்தன வான மொழி.
மிருதுபாஷி, மிருதுபாஷிணி - மென்மொழியாள்.
மிருதமூர்த்தம் - மரணமூர்த்தம்.
மிருதுரோசநி - இலைக்கள்ளி.
மிருதுலோமகம் - முசல்.
மிருதுவாதம் - சிறுதென்றல்.
மிருதுன்னசம் - பொன்.
மிருதூற்பலம் - நீலோற்பலம்.
மிருதை - பூமி.
மிருதோற்பவம் - கடல்.
மிருத்தஞ்சயன் - சிவபிரான்.
மிருத்தாலகம் - உவர்மண்.
மிருத்திகை - நிலம், மண்.
மிருத்தியம் - மண்.
மிருத்தியு - இயமன், சூதி, மரணம்.
மிருத்தியுஞ்சயன் - சிவபெருமான்.
மிருத்தியுநாசகன் - சிவபிரான், பாதரசம்.
மிருத்தியுபலம் - இலந்தை.
மிருத்தியுபலை - வாழை.
மிருத்தியுபுஷ்பந்தயம் - மூங்கில்.
மிருத்தியபுட்பம் - கரும்பு.
மிருத்தியபுத்திரன் - கேது.
மிருத்தியுப்பிரசூநம் - கரும்பு.
மிருத்திவஞ்சன் - சிவபெருமான்.
மிருத்து - மண், பூமி, மரணம்.
மிருத்துகரன் - குசவன்.
மிருத்துகாரகன் - மரணத்தைச் செய் யுங்கிரகம்.
மிருத்துகாவதி - மாளவ தேசத்திலுள் ள ஒருபட்டணம்.
மிருத்துகிரகம் - மிருத்துகாரகன்.
மிருத்துசாந்தி-அவமிருத்தைநீக்குஞ்சாந்தி.
மிருத்துசூதகம் - மரணசூதகம்.
மிருத்துசூதி - நண்டு.
மிருத்துஞ்சயம் - மரணத்தைவிலக்கு மந்திரம்.
மிருத்துயுஞ்சயன்-சிவபிரான்.
மிருத்துநாசகம் - இரதம்.
மிருத்துநாசகன் - சிவபிரான்.
மிருத்துநிலை - மிருத்துகிரகநிலை.
மிருத்துபஞ்சகம், மிருத்துபயம் - மரணபயம்.
மிருத்துபாண்டம் - மட்கலம், மண்பானை.
மிருத்தமூர்த்தம் - சாமூர்த்தம்.
மிருத்துயு - யமன்.
மிருத்துவங்குரகம் - சாப்பறை.
மிருத்துவஞ்சனன், மிருத்துவிஜயன் - சிவபிரான்.
மிருத்துவீசம் - மூங்கில்.
மிருநாளம் - தாமரைக்கொடி, விலாமிச்சு.
மிருநாறம் - தாமரை.
மிலாங்கலி - செங்காந்தள்.
மிலாந்தி-வெருட்கொண்டுபார்ப்போன்
மிலாந்துதல் - அலமலந்துபார்த்தல், ஏற இறங்கப்பார்த்தல்.
மிலாடி - உன்மத்தம், மயக்கம், மலாரடி.
மிலாறு - வளார்.
மிலிந்தம் - வண்டு.
மிலேச்சகந்தகம் - உள்ளி.
மிலேச்சதேசம்-இந்துதேசத்தைச்சூழ் ந்திருக்குந்தேசம், சோனகர் முதலி யோர் தேசம்.
மிலேச்சத்தனம் - அறிவின்மை.
மிலேச்சநடை - மிலேச்சவொழுக்கம்.

மிலேச்சமண்டலம் - மிலேச்சதேசம்.
மிலேச்சமுகம் - செம்பு.
மிலேச்சம் - சரச்சுவதியாற்றின் வடதேசம், செம்பு.
மிலேச்சர் - சோனகர், மதிகேடர்.
மிலேச்சன்-அறிவீனன், ஈனன், சோனகன்,மிலேச்சக்கண்டத்தவன்,வேடன்.
மிலேச்சாசம் - கோதும்பை.
மிலேச்சாசாரம் - மிலேச்சநடை.
மிலேச்சாசியம் - செம்பு.
மிலேச்சிதம்-இலக்கணவழுவான பேச்சு, சமஸ்கிருதமு மதற்குச் சேர்ந்த பாஷைகளுமல்லாத பிறபாஷை.
மிலைச்சல்
மிலைச்சுதல் } அணிதல், சூடுதல்.
மிலைதல்
மிழலை - மழலை.
மிழற்றல் - சொல்லல், கிரம்பா மென்சொல், பேசலானெழுமொலி.
மிழற்றுதல் - மிழற்றல்.
மிளகரணை - ஒருசெடி.
மிளகறையன் - ஒருபுடவை.
மிளகாய் - ஒருசெடி, மிளகுகாய்.
மிளகாய்ச்சக்களத்தி - ஒருசெடி.
மிளகாய்ப்புள் - ஒருபுள்.
மிளகு - ஒருசரக்கு.
மிளகுகரணை - கரண்டை.
மிளகுகாய் - ஒரு கார்ப்புக்காய்.
மிளகுக்கஞ்சி - குரங்கு.
மிளகுசம்பா - ஒருநெல்.
மிளகுசாதம்-சித்திரான்னத்தொன்று.
மிளகுசாறு - மிளகுநீர்.
மிளகுதக்காளி - ஒருதக்காளி.
மிளகுதிரி - ஒருகுருநோய்.
மிளகுநீர் - அதிரசம்.
மிளகோரை - மிளகுகலந்த சித்ரான்னம்.
மிளப்பு - இலவுங்கம்.
மிளிர் - ஒளி, பெருமை, மிளிரென்னேவல்.
மிளிர்தல் - ஒளிசெய்தல், பருமைப்படல்.
மிளிர்வு - ஒளிவிடுதல்.
மிளிறு - கரடி
மிளை - காவற்காடு.
மிறல் - பெருமை.
மிறிதாறிசிங்கி - மிருதாரசிங்கி பாஷாணம்.
மிறுங்கம் - கையாந்தகரை.
மிறுசீரம் - இலாமிச்சை.
மிறுது - சமுத்திரப்பச்சை.
மிறுதுபலா - நெல்லி.
மிறுதுபுட்பம் - வாகை.
மிறுத்தாலகம் - துவரை.
மிறுத்திகம் - கொடிமுந்திரிகை.
மிறை - அச்சம், குற்றம், மிறையென்னேவல், வருத்தம்.
மிறைக்கவி - சித்திரக்கவி.
மிறைத்தல் - துன்பப்படல், பாடுபடல்.
மினக்கெடல் - தடைபடல்.
மினக்கேடு - வியர்த்தம்.
மினவுதல் - உபசரித்தல்.
மினுக்கம் - ஒளி, பகட்டு.
மினுக்கல் - மினுக்குதல்.
மினுக்கு - ஒளி, மினுக்கென்னேவல்.
மினுக்குதல் - ஒளிதோன்றச்செய்தல்.
மினுக்குப்பசை - நறும்பசை,நெய்வாரிடும்பசையினென்று.
மினுக்கெண்ணெய் - ஓரெண்ணெய்.
மினுங்குதல் - மிளிர்தல்.
மினுங்குபொழுது
மினுங்குவாரப்பொழுது } சாய்பொழுது.
மினுமினுத்தல் - ஒளிசெய்தல்.
மினுமினுப்பு - மிளிர்வு.
மின் - ஒளி, பெண், மகள், மின்னல், மின்னென்னேவல்.
மின்கொடி - மின்னற்கொடி.
மின்மினி - இருளில்மின்னும்புழு.
மின்னம்மை-திருப்பூவணத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மின்னல் - ஒளிசெய்தல், மின்.
மின்னற்கொடி - மின்மாலை.
மின்னற்றளுக்கு - நாகமணல்.
மின்னனையாளம்மை - திருப்பெருவேளூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மின்னார் - பெண்கள்.
மின்னி - கருத்தக்காக்கணம்,நீர்ப்பயறு.
மின்னியார்த்தல் - சோதிவீசியாடுதல்.
மின்னுதல் - பிரகாசித்தல், மின்னற்காலுதல்.
மின்னெறி - மின்னலின்மார்க்கம்.
மின்னெறிதல் - மின்னுதல்.

## மீ



மீ - ஆகாயம் - உயர்ச்சி, ஓரெழுத்து, மகிமை, மேல், மேற்புரம்.
மீகண் - இடத்தின்மேல்,கண்ணின்மேல்.
மீகாமன் } மாலுமி.
மீகான் }
மீகாரம் - மேல்முற்றம்.
மீகை - புலிதொடக்கி.
மீக்குவம் - மருதமரம்.
மீக்கூர்த்தல் - பெருகுதல்.
மீக்கூறல் - கொண்டாடல், புகழ்தல், மெச்சல்.
மீக்கூறு - புகழ்.
மீக்கூறுவோர் - புகழ்வோர்.
மீக்கூற்று - புகழ்ச்சி.
மீக்கோள் - ஏறுதல், மேற்போர்வை.
மீசரம் - மேலானது, விரைவு.
மீசாடுதல்-மீதேவிரைத்தல்,மேலாலேகையாடுதல்.
மீசு - மிகுதி.
மீசுபொலி - முதலள்ளுந்தானியம்.
மீசுமிட்டல் - மேலாலேகவர்தல்.
மீசுரம் - அதிகம், மிகுஉக்கிரம்.
மீசுவைத்தல் - மேலேவைத்தல்.
மீசை - மேலிதழின்மீதுள்ளமயிர்.
மீச்செலவு - கருவம்; மேற்போதல்.
மீடம் - மூத்திரம்.
மீட்குதல் - இரட்சிக்குதல், சோறுமுதலியவள்ளுதல், திருப்புதல்.
மீட்சி - மீளுதல்.
மீட்சியில்பதம் - முத்திப்பதம்.
மீட்சியின்விரி - தலைவிசேணகன்றமை செவிலித்தாய்க் குணர்த்தன் முதலாக நற்றாய் கேட்டவனுளங்கொள வேலனை விளுதலீறுயவையாம்.
மீட்டல் - அள்ளுதல், இரட்சித்தல், வீணைவாசித்தல்.
மீட்டிடுதல் } சுண்டுதல், வீணைவாசித்தல்.
மீட்டுதல் }
மீட்டும் - திரும்பவும்.
மீட்டெடுத்தல் - இரட்சித்தல், இரையெடுத்தல், மேலாலேயெடுத்தல்.
மீட்பர் - இரட்சகர், மீட்கிறவர்.
மீட்பு - மீட்குதல்.
மீதல் - மிகுதல்.
மீதி - கருஞ்சூரை, மிச்சம்.
மீது - மேல்.
மீதுந்து - நெல்லி.
மீதுரை - பலகால் விளம்பல்.
மீதூர்தல் - நெருங்கல்.
மீந்தோல் - மீத்தோல்.
மீப்போர்வை - மேற்போர்வை.
மீமாஞ்சகன்-வேதம் அநாதியென்றும், கடவுளை வேண்டாமல் கன்மமேபயன்கொடுக்கும் என்றும்சொல்பவன்.
மீமாஞ்சை - வேதார்த்த மிதுவென்று நிச்சயித்துக்கூறும் நியாயசாத்திரம், இது பெரும்பாலும் கிரியாகாண்டத்தையே யெடுத்து வியஹரிக்கும், இந்நூல்செய்தவர் ஜைமினிபகவான், இத்தனைப் பூர்வ மீமாம்ஸையென்றும் வழங்குவர்.
மீமாஞ்சை - பிரமாணத்தா லுண்மையறிதல், புறச்சமயமாறினொன்று.
மீமிசை - மேலுக்குமேல், மேல்.
மீமிசைச்சொல்-ஒருபொருட்பன்மொழியடுக்கு [உ-ம்] இந்துமதி.
மீரம் - சமுத்திரம்.
மீராசு - பிரயோசனம்.
மீலம் - வானம்.
மீலனம் - கண்சிமிட்டு.
மீலிதம் - ஒரு அலங்காரம்.
மீள - திரும்பவும்.
மீளல் - திரிதால், திரும்பல்.
மீளவும் - மீள.
மீளாக்கதி - மோக்கம்.
மீளாப்பதம் - மோக்ஷபதவி.
மீளி - அரசன், திண்ணியன், நமன், பாலைநிலத்தலைவன்,பெருமை,மேன்மக்கள், வலி.
மீளிமை - வீரத்திறம்.
மீளுதல் - திரும்புதல், மீட்டெடுத்தல்.
மீளவித்தல் - மீளச்செய்தல்.
மீறல் } அடங்காமற்போதல், அதிகரித்தல்.
மீறுதல் }
மீனகாதி - கொக்கு.
மீனகேதனன்-பாண்டியன்,மன்மதன்.
மீனக்கொடியோன் - மீனகேதனன்.
மீனகொதிகை - நீர்நிலை.
மீனங்கம் - மீனெலும்பு.
மீனத்துவன்-பாண்டியன், மன்மதன்.

மீனமாதம் - பங்குனிமாதம்.
மீனம் - ஓரிராசி, மீன்.
மீனம்பர் - ஒருமருந்து, செம்மீன்வயிர [ம்.
மீனராசி - பன்னிரண்டாவது இராசி.
மீனவல்லிகை - மீன்கொத்திக் குருவி.
மீனவன் - பாண்டியன்.
மீனுங்கன் - மன்மதன்.
மீனுஞ்சு - அக்கினிக்கட்டி, ஒருபூடு.
மீனுட்சி - அங்கயற்கண்ணி, குபேரன் மகள், பொன்னுங்காணி.
மீனுக்ஷி - தென்மதுரையில் கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மீனுக்ஷிபீடம்-சந்திபீடம் [சுச] ல் ஒன் [று.
மீனுண்டி - சர்க்கரை.
மீனும்பூச்சி - மின்மினிப்பூச்சி.
மீனுய் - ஒருமீன், நீர்நாய்.
மீனுலயம் - கடல்.
மீனெரிஞ்சான் - மீனஞ்சு.
மீனெறி - மீன்குத்திக்குருவி.
மீனேறு - மகரமீன்.
மீன் - சித்திரை நாள், நெய்தற்பறை, மகரமீன், மச்சம், விண்மீன்.
மீன்குத்தி - ஒருபுள். [று.
மீன்கூடு-மீன்பிடிக்குங் கருவியினென்
மீன்கொடியோன்-பாண்டியன், மன்ம
மீன்கொத்தி - மின்குத்திப்புள். [தன்.
மீன்கொல்லி } மீனஞ்சு.
மீன்கொள்ளி } மீனஞ்சு.
மீன்சிதள் - மீன்செதிள்.
மீன்சிறகு - மீன்செட்டை.
மீன்சினை - மீன்கரு, மீன்கொழுப்பு.
மீன்சுவை - சித்திரைநாள்.
மீன்செகிள் } மீனின்புறமுள்.
மீன்செதில் } மீனின்புறமுள்.
மீன்செதிள் } மீனின்புறமுள்.
மீன்செலு } மீனின்புறமுள்.
மீன்தலைவாளம் - மீனெலும்பு.
மீன்பாடு - மீன்படுதல்.
மீன்பிடிகாரர் - வலைஞர்.
மீன்பிடிப்போர் - வலையர்.
மீன்பிரால் - மீன்செகிள்.
மீன்பீலி - கெண்டைப்பீலிமீன்.
மீன்மலம் - மீனம்பல்.
மீன்முள் - மீனெலும்பு.
மீன்வேடன்-சிவபிரான், செம்படவன்
மீன்வேட்டை - மீன்பிடி.

## மு

முகஆட்டம் - முகமன்.
முகக்கடுப்பு - முகச்சினப்பு.
முகக்கட்டு - நாணமின்மை.
முகக்கட்டை - தாடி.
முகக்கந்தம் - முருங்கைமரம். [பை.
முகக்களை - முகச்செழிப்பு, முகச்சோ
முகக்கிளர்ச்சி - முகமலர்வு.
முகக்குருவுதல் - முகக்கோட்டரவு.
முகக்குறி - முகச்சாடை.
முகக்குறிப்பு - முகத்தோற்றம்.
முகக்கோட்டம் - முகப்பொலிவழிவு.
முகங்காட்டல் - கோவித்தல்.
முகங்குப்புறல் - முகங்கீழ்புறமாதல்.
முகங்குருவுதல் - முகங்கோடல்.
முகங்கொடுத்தல் - இசைதல்.
முகங்கொள்ளுதல் - சிலந்தி யுடைக்க முனைகொள்ளுதல்.
முகங்கோடுதல் } முகங்குருவுதல்.
முகங்கோணுதல். } முகங்குருவுதல்.
முகசம் - பல்லு.
முகசன் - பார்ப்பான்.
முகசம்பவன் - பார்ப்பான்.
முகசிங் - ஒருநோய்.
முகசீரி - நாக்கு.
முகசுரம் - பனங்கள்.
முகசோதனம் - முகங்கழுவுதல்.
முகசோதி - எலுமிச்சை.
முகச்சரக்கு - பார்வைச்சரக்கு, முதற் [சரக்கு.
முகச்சாடை } முக்குறி.
முகச்சாயல் } முக்குறி.
முகச்சாய்ப்பு - முகப்பழக்கத்திற்காகச் சாருதல், விருப்பின்மை.
முகச்சித்தி - மறுபேர் மோகிக்கத்தக்க முகமாயிருத்தல்.
முகச்செழிப்பு - தாராளம். [தல்.
முகஞ்சின்னம்போதல் - வெட்கமடை
முகஞ்சுண்டுதல் - முகங்கருகுதல்.
முகஞ்சுளித்தல் - முகஞ்சோறுதல்.
முகஞ்செய்தல் - சிலந்திகுமிழ்த்தல், ப [லித்தல்.
முகடி - மூதேவி.
முகடிக்கொடி - காக்கை.
முகடு - உச்சி, சுவர்ப்புறத்துநீண்டவுத் திரம், மலை, வீடுமுதலியவற்றினுச்சி.
முகடுந்தல் - மேற்கொள்ளல்.

முகடோடி - முகட்டினீரம்.
முகட்டுப்பூச்சி - மூட்டைப்பூச்சி.
முகதலை } முதனெய்யுஞ் சீலைத்த
முகதலைப்பு } லைப்பு.
முகதா - சமுகம்.
முகதாவநம் - முகங்கழுவல்.
முகத்த - முகத்தையுடைய, முகத்திற் கொண்ட.
முகத்தலளவு - நாழி முதலியவற்றால் அளக்குதல்.
முகத்தலளவையாகுபெயர் - அளத்தற்குரிய பெயரை யளக்குங் கருவிக்கு வழங்குவது (உ - ம்) நாழி.
முகத்தலைத்தல் - கூடிப்பேசல், சந்தித்தல், முகாமுகமாதல்.
முகத்தல் - மணத்தல், மொள்ளல் இது அளவை நான்கினொன்று.
முகத்தாடணை - கண்ணோட்டம்.
முகத்தாட்சணியம் - முகக்காட்சி.
முகத்தாமரை - முககமலம்.
முகத்தாராளம் - முகப்பொலிவு.
முகத்தாலடித்தல் - முகவெறுப்பை முகக்குறியாற் காட்டல்.
முகத்திடு - பிரேதாலங்காரத்தொன்று இது பிரேதத்தைமூடிப் புடைவையைப்போடுதல்.
முகத்துதி - முகமன்வார்த்தை.
முகத்துரோணி - முகஞ்செல்லாதவன்.
முகத்துவாரம் - கடலுமாறும் பொருந்துமிடம், முகப்பு, வாயில்.
முகத்தெளிவு - முகத்தாராளம்.
முகநகை - முகமலர்ச்சி.
முகநட்பு - முகத்திற்குமுன்காட்டுநட்பு.
முகநாடி - முகரூபு.
முகநிவாசினி - இலட்சுமி.
முகநிலை - முகத்திற்படுந்தரவு.
முகந்தகம் - ஈரவெண்காயம்.
முகபங்கம் - இலச்சை, முகமாறு.
முகபாடம் - யானையின்முகம்போர்வை.
முகபாடம் - வாய்ப்பாடம்.
முகபூஷணம் - தாம்பூலம். [யது.
முகபூரணம் - தாராளமுகம்,வாய்நிரம்பி
முகப்படை - முற்படை.
முகப்பணி - முகவேலை.
முகப்பரீட்சை - அறிமுகம்.
முகப்பரு - முகக்குரு.
முகப்பழக்கம் - முகப்பரீட்சை.

முகப்பிரியம் - முகவாட்டம்.
முகப்பு - தலைப்பு, முகத்தல், முகனை, மூட்டு, முன்.
முகப்புமடை - தலைமடை.
முகப்பூச்சு-முகமன்,முகமாற்று,வேஷ
முகப்பொருத்தம் - முகராசி. [ம்.
முகப்போதரவு-இச்சகம், முகப்பொலி
முகமது - மக்காதிபர். [வு.
முகமண்டலம் - முகவட்டம்.
முகமலர்ச்சி - சந்தோஷம்.
முகமலர்தல் - முகந்தழைத்தல்.
முகமறிதல் - முகப்பழக்கமாதல். [த்தி.
முகமறியாமை-அன்னியம், தூரம், பிற
முகமறுத்தல் - கண்டித்தல், முகத்தாட்சணையின்மை.
முகமன் - உபசாரம், முகஸ்துதி.
முகமன்சொல் } உபசாரப்பேச்சு
முகமன்வார்த்தை }
முகமாயம் - முகமயக்கு.
முகமாட்டம் - பாரபட்சம், முகமன்.
முகமாற்று - ஒரு மயக்குவித்தை.
முகமுகமாய் - முகத்திற்கு முன்னாய்.
முகமுகெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
முகமுறிதல் - வெறுத்தல்.
முகமுறித்தல் - கோபமூட்டுதல், வெறுப்பித்தல்.
முகமுறிவு - வெறுப்பு.
முகமுன்னிலை - முகதா.
முகமூடி - பிறக்கையில்முகத்தை மூடியிருக்கும் பை.
முகமூடிவத்திரம் - முக்காட்டங்கி.
முகமொட்டுதல் - முகங்கொடுத்தல்.
முகம் - இடம், சந்தி, தொனி, பட்சிச்சொண்டு, பருவின் முகப்பு, புறம், முகப்பு, முந்தல், வதனம், வாய், வாயில், வேதம், அந்தரக்கொட்டு.
முகம்பார்த்தல் - கணித்தல், முகமன் செய்தல்.
முகம்வாடல் - முகங்குறுவுதல்.
முகரதம் - புணர்ச்சிவகையினொன்று.
முகரம் - காகம், சங்கு.
முகரன் - பயனிலசொல்வோன்.
முகராசி - முகவிணக்கம்.
முகரி - முகனை,மூக்கினடிமூரி,தாழை.
முகரிகுளித்தல் - அள்ளுகொள்ளை.
முகரிமை - திவ்வியஞானம், பேரறிவு.
முகரியோலை - முடக்கோலை.

முருகுதல் - முகத்தல்.
முசரூபம் } முகலட்சணம்.
முகரூபு }
முகரெனல்-அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு.
முகரை - மூக்கினடி.
முகரோமம் - தாடி, மீசை.
முகலதேசம் - ஒருதேயம்.
முகலாங்கலம் - பன்றி.
முகவங்கு - முகத்திற்படருங் கருந்தேமல்.
முகவசிகரம் - பட்சமானபார்வை.
முகவசியம் } ஒருவித்தை, முகஞ்செல்லு.
முகவசிகரம் }
முகவணை - முகவுரை.
முகவணைக்கல் - உத்திரப்படிக்கல்.
முகவல்லபம் - மாதுளை.
முகவாசம் - முகப்பழக்கம், தாம்பூலதிரவியம்.
முகவாசல் - தலைவாசல்.
முகவாசை - முகப்பிரியம்.
முகவாடல் } முகஆட்டம், முகக்கோட்டம்.
முகவாட்டம் }
முகவாதம் - ஒருநோய்.
முகவிகாசம் - முகமலர்ச்சி.
முகவிகாரம் - முகவேறுபாடு.
முகவிச்சகம் - முகமன்.
முகவிச்சை - முகமன்.
முகவிலாசம் - முகச்சிறப்பு.
முகவுண்ணியடுங்குதல் - முகமன்காட்டுதல்.
முகவுரை - பாயிரம், மேல்வாசகம்.
முகவெட்டு - முகத்தினந்தம்.
முகவெள்ளைப்பருந்து - ஒருபருந்து.
முகவேலை - முகப்பணி.
முகவை - அகப்பை, இராமநாதபுரம் கண்வாயில்.
முகவைப்பாட்டு - பொலிபாடும்பாட்டு.
முகனை - முதலீடு, முதல், முதன்மை, முனை.
முகனைக்காரன் - முதலாளி.
முகனைமுடிவு-ஆதியந்தம், மூலாக்கிரம்.
முகன் - முகம்.
முகாக்கினி-ஓமாக்கினி, ஒருபைசாசம், கட்டையில் வைத்த பிரேதத்திற்கு வாயிலிடு நெருப்பு, காட்டாக்கினி.
முகாந்தரம் } ஏது, நியாயம்.
முகாந்திரம் }
முகாம்யம் - முகரோகம்.
முகாமுகம் - சமுகம்.
முகாமை - முதன்மை.
முகாரவிந்தம் - முகத்தாமரை.
முகாரி - ஓரிராகம், முதன்மைக்காரன்.
முகிதல் - முற்றுதல்.
முகித்தல் - முற்றச்செய்தல்.
முகிரம் - அன்பு, காமம்.
முகிரன் - காமன், மூடன்.
முகிலூர்தி - தேவேந்திரன்.
முகில் - மேகம்.
முகில்வண்ணன் - திருமால்.
முகிவு - அந்தம், கடை.
முகிவுகாலம் - கடைசிகாலம், மரணகாலம்.
முகிழம் - மலரும்பருவத்தரும்பு.
முகிழி - முகிழ்.
முகிழிதம் - அரும்பு.
முகிழ்த்தல் - குவிதல்.
முகிழ் - அரும்பு, காம்படி, முகிழெனவல்.
முகிழ்த்தல் - அரும்புதல், குவிதல்.
முகிழ்ப்பு - குவிவு.
முகிழ்ப்புறம் - முகிழ்வளம்.
முகிழ்குன்றம் - மேகமுடிமலை, வக்கிராந்தபாஷாணம்.
முகினி - புளியமரம்.
முகு - இட்டம்.
முகுடம் - முடி.
முகுந்தநிதி - குபேரனவநிதிகளில் ஒன்று.
முகுந்தமாலை - ஒருநூல்.
முகுந்தம் இரசம், ஓரிரத்தினம், குபேரனவநிதிகளில் ஒன்று.
முகுந்தன் - விட்டுணு.
முகுரம் - ஒருமல்லிகை, கண்ணடி, தண்டசக்கரத்தின்பிடி, தளிர், பளிங்கு.
முகுராநநன் - திருதராஷ்டிரன்.
முகுர்த்தபலன் - முகூர்த்தநயம்.
முகுர்த்தமெடுத்தல் - முகுர்த்தங் குறித்தல்.
முகுர்த்தம் - முகூர்த்தம்.
முகுர்த்தவிசேஷம் - முகூர்த்தபலன்.
முகுலம் - ஆத்துமா, சரீரம், மலரிதழ்.
முகுளம் - தாமரைவளையம், முகிழ்க்குந்தன்மை.
முகுள் - மலரும்பருவத்தரும்பு.
முகூர்த்தம் - இரண்டு நாழிகைகொண்டநேரம், சுபவேளை.
முகூர்த்தை - தக்ஷப்ரஜாபதியின் இரண்டாம்புத்திரி, தர்மன் மனைவி, இவள் சந்ததியார் மொகூர்த்தியார் எனப்படுவர்.

முகூலகம் - தந்திமரம்.
முகோல்லாசம் - முகமலர்ச்சி.
முகோன் - மூடன்.
முகை - கூட்டம், மலரும் பருவத்தரும்பு, மிடா, முகையென்னேவல்.
முகைத்தல் - அரும்புதல்.
முகையலூர்ச்சிறுகருந்தும்பியார் - இவர் கடைச்சங்கத்துப் புலவர்களுள் ஒருவர்.
முக்கடுகம், முக்கடுகு - திரிகடுகம்.
முக்கட்பிரான், முக்கட்பெருமான் - சிவபெருமான்.
முக்கணவன் - ஒருகொடி.
முக்கண் - மூன்றுவிரலினகக்கண்.
முக்கண்டகி - நெரிஞ்சில்.
முக்கண்ணன் - சிவபிரான், விநாயகன், வீரபத்திரன்.
முக்கண்ணி - காளி, தேங்காய், பார்வதி.
முக்கம் - பேராலவட்டம், முக்காரம்.
முக்கம்பி - மூன்றுகம்பிக்குறி.
முக்கரணம் - மனம், வாக்கு, காயம்.
முக்கல் - உண்டல், பேசலானெழு மொலி, முக்குதல்.
முக்கவீன்ம் - மக்கனம்.
முக்காட்டை - மூக்கிரட்டை.
முக்கனி - முப்பழம் அது கதலி பலா மா இவற்றின் கனி.
முக்காடு - முட்டாக்கு.
முக்காட்டங்கி - முக்காடு.
முக்காணி - சிற்றிலக்கத்தொன்று.
முக்காணியர் - பிராமணரி லோர்வகையார்.
முக்காரம் - எருதுபோர்வளைக்குங்குறி, தாழ்ப்பாள்.
முக்காரி - கலம்என்னும் ஓரளவை.
முக்காலமறிந்தவன் - கடவுள்.
முக்காலம் - திரிகாலம், அது இறப்பு எதிர்நிகழ்வு.
முக்காலி - அக்கினி, கலம்வைக்குமாத் தட்டு.
முக்கால் - மூன்றுகால், மூன்றுமுறை.
முக்காவல்லி யம்மை - திருமண்ணிப் படிக்கரையிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
முக்காவேளை - முட்காவேளை.
முக்காழி - மூன்றுகொட்டையுள்ளது.
முக்காணேக்கு - கிரகணேக்கில் ஒன்று.
முக்கான் - துட்டன்.
முக்கியம் - பிரதானம், மேன்மை.
முக்கியர் - ஒருசாதியார்.
முக்கியன் - முதன்மையானவன்.
முக்கு - பிரயாசம், முடுக்கு.
முக்குகர் - முக்கியர்.
முக்குடுமி - சூலம்.
முக்குடை - சந்திரவட்டம், சகலபாசனம் நித்தியவிநோதம், அவை நிரையே முத்துக்குடை பொற்குடை மணிக்குடை.
முக்குடைச்செல்வன் - அருகன்.
முக்குணத்தேவர் - பிரம விஷ்ணு உருத்திரர்கள்.
முக்குணப்பொருள் - அறம்பொருள் இன்பங்கள்.
முக்குணம் - மூன்றுகுணம் அவைஇராசதம், சாத்துவிகம், தாமதம்.
முக்குதல் - முட்டுப்பட்டவனுங்குதல், விழுங்கல்.
முக்குலம் - மூன்றுகுலம் அவை அக்கினிவமிசம், சந்திரவமிசம், சூரியவமிசம்.
முக்குவர் - ஒருவகைச்சாதியார்.
முக்குச்சு - முக்கால்.
முக்குளம் - சோமசூரியாக்கினி தீர்த்தம் கங்கை, சரஸ்வதி, யமுனை எனும் நதிகளைப் பொருந்தி யிருக்குமோர் கிராமம், பூராடம்.
முக்குளி - கோழி, முளையான்.
முக்குளித்தல் - அமிழ்ந்துதல்.
முக்குளிப்பான் - ஒருநோய், ஒருபட்சி.
முக்குற்றங்கடிந்தோன் - கடவுள்புத்தன்.
முக்குற்றம் - மூன்றுகுற்றம் அவை காமம் வெகுளி மயக்கம்.
முக்கூடல் - பாலி வேகவதி சேயாறு மூன்று சந்திக்குமிடம் ஒருமலை.
முக்கூடற்பள்ளு - ஒருபிரபந்தம்.
முக்கூட்டு - அடுப்பு, பரணி.
முக்கூட்டெண்ணெய் - ஒரு மாத்தெண்ணெய்.
முக்கோணசாத்திரம் - அளவறியுஞ் சாத்திரத்தொன்று.
முக்கோணம் - மூன்றுமுலை, மூன்று மூலைவடிவம்.
முக்கோல் - திரிதண்டு, திருவோணம்.
முக்கோற்பகவர் - திரிதண்ட சந்நியாசிகள்.

முக்தகஞ்சுகம் - தோலுரித்தபாம்பு.
முக்தசட்சு - சிங்கம்.
முதம் - பயறு.
முக்தாகலாபம் - முத்துமாலை.
முக்தாகாரம் - முத்துச்சிப்பி.
முக்தாபலம் - கர்ப்பூரம், முத்து.
முசகம் - எலி.
முசங்கி - ஒருவகைக்கொவ்வை.
முசரு } தயிர்.
முசர் }
முசலம் - இருப்புப்பலகை, உலக்கை, தண்டம்.
முசலி - உடும்பு, ஓணான், ஓந்தி, சந்திரன், தாழை, நிலப்பனை, பலபத்திரன், பல்லி, முதலை, மெருகன்கிழங்கு.
முசலிகாசனம் } இருகாலு மிருகையுஞ் சம்மணமாகமடக்கி மார்பு நிலத்திலே தோயக்கிடப்பது.
முசலிகாதனம் }
முசலிகை - உடும்பு.
முசலை - முயல்.
முசல் - முயல்.
முசல்வலி - ஒருவலிப்பு.
முசற்காது - ஒருபூண்டு.
முசற்கொம்மட்டி - ஒரு கொம்மட்டி.
முசிகுதல் - முசித்தல்.
முசிகுந்தம் - குபேரன்வில், சூரியன் கைச்சங்கு.
முசிகுந்தன் - பிரமன்.
முசித்தல் - இளைத்தல், மெலிதல்.
முசிப்பாறல் } இளைப்பாறுதல்.
முசிப்பாறுதல் }
முசிப்பாற்றல் - இளைப்பாற்றல்.
முசிப்பாற்றி - இளைப்பாற்றி.
முசிப்பு - இடை, மெலிவு, வெளிப்பு.
முசிரம் - வள்ளற்றன்மை.
முசிரன் - கொடையாளி.
முசிலாப்பு - புடைவையைச் சுருக்கிக் கட்டுவது.
முசிறு - முயிறு, முன்கோபி.
முசு - ஒருசாதிக்குரங்கு.
முசுகுந்தன் - மாந்தாதாவின் கநிஷ்டபுத்திரன், இவன் தேவர்களுக்கு யுத்தத்தில் சகாயஞ் செய்யப்போய் வெகுகாலம் நித்திரையின்றி அவர்கள் பொருட்டு யுத்தஞ்செய்தான், பிறகு தேவர்கள் மகிழ்ந்து, நீ நெடுங்காலம் இடையூறின்றி நித்திரை செய்யக்கடவை, உனது நித்ராகாலத்தில் உன்னை யெழுப்புகிறவன் உயிர்துறக்கக்கடவனென்று அனுக்ரஹித்தார்கள். கிருஷ்ணரது சூதினால் காலயவனன் முசுகுந்தனதுநித்திரையைக்கெடுத்துஉயிர்துறந்தான் இவன் அறுவகைச் சக்கிரவர்த்திகளில் ஒருவன்.
முசுக்கட்டைச்செடி - கம்பளிக்கொண்டான்.
முசுக்கட்டைப்பூச்சி - கம்பளிப்பூச்சி.
முசுடர் - கீழ்மக்கள்.
முசுடி - நொடி.
முசுடு - பொல்லாங்கு, முயிறு.
முசுட்டை - ஒருகொடி.
முசுட்டைப்பெண் - ஒருபுழு.
முசுண்டம் - ஒரு ஆயுதம்.
முசுண்டர் - கீழ்மக்கள்.
முசுண்டி-ஒருவாச்சியம், படைக்கலம்.
முசுத்தலைவன் } சுக்கிரீவன்.
முசுநாதன் }
முசுநாயகன் }
முசுப்பதி - பாசறை.
முசுப்பு - எருத்தினேரி.
முசுக்கை - ஒருகொடி.
முசுமுசுத்தல் - குறட்டைவிடல், நீர் முதலிய கொதித்தற்குறிப்பு.
முசுசெனல் - தின்வுக்குறி.
முசும்புதல் - மிணுமிணுத்தல், முறுமுறுத்தல்.
முசுவல் - முசுட்டை.
முசுறு - முசிறு.
முசுறுப்புல் - அளத்துப்புல்.
முச்சகம் - திரிலோகம்,மூன்றுலோகம் அவை சுவர்க்கமத்திய பாதாளலோகங்கள்.
முச்சங்கம் - முதலிடைகடையாய் மதுரையில் வழங்கிய சங்கம்.
முச்சட்டை - அழகு.
முச்சதுரம் - முக்கோணம்.
முச்சத்தி - இச்சாஞானக்கிரியாசத்திகள் அவை சிருட்டி திதி சங்காரம்.
முச்சந்தி - திரிகாலசந்தி அதுகாலைஉச்சி மாலைமூன்றுமொன்றாய்ப்பொருந்துமிடம், முத்தெருக் கூடுமிடம்.
முச்சி - உச்சி, உச்சிக்கொண்டை, சிறுசுளகு, மயிர்முடி.

முச்சியர் - உறைகாரர், மரவினையாளர், வன்னக்காரர்.
முச்சிரம் - சூலம்.
முச்சிரன் - திரிசிரன்.
முச்சிலிக்கை-உடன்படிக்கை, யுறுதி.
முச்சிலில் - சிறுமுறம்.
முச்சினியக்கேடு } சோம்பு.
முச்சினியம்
முச்சிரடி - சிந்தடி.
முச்சுடர் - மூன்றுசுடர் அவை அக்கினி ஆதித்தன் சந்திரன்.
முச்சுழி - ணகரம்.
முச்சூடும் - முழுதும்.
முச்செயல் - மூன்றுசெய்கை அது படைத்தல் காத்தல் அழித்தல்.
முச்சை - மூன்றொன்றாய் முடிவது.
முச்சொல்லலங்காரம் - ஓரலங்காரம் அது ஒருமொழி முப்பயன்விளைவிப்பது.
முஞல் - கொசுகு.
முஞ்சகேசன் } திருமால்.
முஞ்சகேசி
முஞ்சபந்தனம் - பூணூலணிதல்.
முஞ்சம் - அம்பு, பூணூற்பூண்டு.
முஞ்சரம் - தாமரைக்கிழங்கு.
முஞ்சல் - சாதல், முற்றல்.
முஞ்சன் - போஜன் சிறியதந்தை.
முஞ்சி - உபவீதத்திற்கட்டும்புல், நாணற்புல்.
முஞ்சுதல் - முஞ்சல்.
முஞ்சை - தருப்பைப்புறக்கட்டு பார்வதி.
முஷிதம் - திருட்டுத்தனம்.
முஷ்கரம் - முரட்டாட்டம்.
முஷ்கரன் - முரண்டன்.
முஷ்டம் - திருட்டுத்தனம்.
முஷ்டி - ஆயுதப்பிடி, ஒருபிடி, முடக்கியகை.
முஷ்டிகாந்தகன் - பலதேவன்.
முஷ்டிந்தயன் - பாலகன்.
முஷ்டிபந்தம் - கைப்பிடி.
முஷ்டியுத்தம் - கைக்குத்துச்சண்டை.
முடக்கம் - தடை, மிடங்குதல்.
முடக்கல் - தடுத்தல், மடக்குதல்.
முடக்கற்றான் - ஒருபூடு.
முடக்கு - மடக்கு, முடக்கென்னேவல் விரலணியிலொன்று.
முடக்குக்குவர் - மடிப்புக் குடவர்.
முடக்குச்சரக்கு - அவியற் சரக்கு, இடையன், சரக்கு.
முடக்குற்றான் - ஒருகொடி.
முடங்கல் - தாழை, நோய், மடங்கல், முள்ளி, மூங்கில், வரைந்தனுப்பு மோலை.
முடங்கன்முலை - தாழைவிழுது.
முடங்கி - கிடைப்பாடானவன்.
முடங்கு - ஒருநோய், முடங்கென்னேவல்.
முடங்குதல் - மடங்குதல்.
முடங்குளை - குதிரையின்பிடரி ரோமம், சிங்கம்.
முடத்தி - முடப்பெண், வளைவுள்ளது.
முடமுடெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு.
முடம் - நொண்டி அது உறுப்புக்குறை எட்டினொன்று, குற்றம்.
முடலை உண்டை - கழலை, திரட்சி, நாற்றம், பெருங்குறடு, பெருமை, மூருடு, வலி.
முடவன் - அருணன், சனி, நொண்டி.
முடவட்டுக்கல் - ஆட்டுக்கல்.
முடவுதல் - நொண்டுதல்.
முடி - ஐம்பாலினொன்று அது உச்சியின் முடித்தல், கிரீடம் அது இராசசின்னத்தொன்று, குடுமி, தலைஅு ழாய்தேங்காய்முடி, நாற்று, முடிமயிர், முடியென்னேவல் மொக்கு.
முடிகளைதல் - முடிமயிர்வாங்குதல்.
முடிகாணிக்கை - நேர்ந்தசடை கழித்தல்.
முடிக்கோரை - ஒருபுல்.
முடிசூடுதல் - முடிசூட்டுதல்.
முடிசூட்டு - கிரீடதாரணை.
முடிசூட்டுதல் - முடிதரித்தல்.
முடிச்சவிழ்க்கி - திருடன், புரட்டன்.
முடிச்சு - கழுத்தின் முடிச்சு தந்திரம், முடித்தல், முடியப்பட்டது, முட்டு.
முடிச்சுமாறி - திருடன், புரட்டன்.
முடிதரித்தல் - முடிசூட்டுதல்.
முடிதல் - கட்டுதல், கெடுதல், சாதல், தொடுத்தல், முற்றுதல்.
முடிதும்பை - ஒருபூடு.
முடித்தகேள்வி - கரைகண்டகேள்வி.
முடித்தல் - அழித்தல், கெடுத்தல், சூடுதல், முற்றுவித்தல்.
முடித்துக்காட்டல் - மேலோர்முடித்தவாறு முடித்துக்காட்டல் அது தந்திர யுத்திகளிலொன்று.
முடிநாதம் - இந்திரகோபம்.
முடிந்தது முடித்தல் - ஒருத்தி அது சிறப்பு வாய்பாடான் முடிந்ததைப்பொதுவாய்பாடான் முடித்தல்.

முடிபொறுத்தராசா - கிரீடாதிபத்திய வரசன்.
முடிபொறுத்தவன் - முடிதரித்த ராசன்.
முடிப்பீரி-இறைமுதலியசேர்க்கிறவன்
முடிப்பு - தீர்மானம், முடிச்சு, முற்றுன் தொகை.
முடிப்புக்கட்டுதல் - தீர்த்தல்.
முடிப்புச்செலுத்தல் - இறை முதலிய செலுத்தல்.
முடிப்புச்சொல்லுதல் - தீர்ப்புச் சொல்லுதல்.
முடிப்புரி - முடிப்பீரி.
முடிமணி - சிகாமணி, சூடாமணி, சுளாமணி.
முடிமயிர் - தொற்றுவைக்குமயிர்.
முடிமன்னர் - கிரீடந்தரித்த அரசர்.
முடிமாலை - முடியின்மேன்மாலை.
முடிமேலழகி - கோடகசாலை.
முடிமேல்முடி - செருந்தி.
முடியணி - மகுடம்.
முடியல் - எல்லாம்.
முடியாட்டுதல் - திருமஞ்சனம்செய்தல்.
முடியாமை-கட்டுபடாமை, முற்றுமை.
முடியிரக்குதல் - கிரீடாவமானஞ்செய்தல்.
முடியுண்குதல் - கட்டுப்படுதல்.
முடியுறுப்பு - முடியினங்கம்.
முடிவறிதல் - துறைபோதல்.
முடிவாங்குதல் - பிறவிமயிர்களைதல்.
முடிவிடங்கூறல்-ஒருபுத்தி அது தான். சொல்லுமிலக்கணத்திற்கு இலக்கியந்தோன்றுமிடத்தைச் சொல்லுதல்.
முடிவிடம் - முடியுமிடம்.
முடிவில்லாமை - அனந்தம், நித்தியம்.
முடிவு - சடை, சாவு.
முடிவுகாலம் - யுகாந்தகாலம்.
முடிவுரை - கடைக்காப்பு.
முடுகடி - கிட்டுமானம்.
முடுகல் - எதிர்த்தல், கிட்டல், சீக்கிரம் மொய்த்தல்.
முடுகியல் - கலிப்பாவினோருறுப்பு.
முடுகு - அராகம், கடமைப்பெண், முடுகென்னேவல்.
முடுக்கர் - பல்முடையோர், மலைக்குகை.
முடுக்கல் - அவசரப்படுத்தல், ஊன்றுதல், ஒட்டல், நெருக்கல், மொய்த்தல்.
முடுக்கன் - பல்முள்ளவன்.
முடுக்கு - ஒடுக்கம், நெருக்கமானவிடம், கோணல், நெருக்குதல், மூக்கு, மூலை.
முடுக்குதல் - முடுக்கல்.

முடுக்குவழி - ஒடுக்குவழி.
முடுங்குதல் - நெருங்குதல்.
முடுவல் - செந்நாய், நாய், பெண்ணாய்.
முடுவற்படையோன் - படைநாய்களை வைத்திருக்கிறவன், வயிரவன்.
முடை - ஓலைக்குடை, தீயவாசனை, நாற்றம், புலால், முடையென்னேவல்.
முடைச்சேரி - முல்லைநிலத்தூர்.
முடைஞ்சல் - மிடைதல்.
முடைதல் - இளைத்தல், நிணத்தல், பின்னுதல்.
முடைநாற்றம்-நெய்ப்பு, மரணம், புலான்மணம்.
முட்கத்தரி - முள்ளம்கத்திரி.
முட்கடு - ஒரு கடுமரம்.
முட்காடு - முள்ளுக்காடு.
முட்காய்வேளை - ஒருசெடி.
முட்கிளுவை - ஒருமரம்.
முட்கீரை - ஒருசெடி.
முட்கொன்றை - ஒருகொன்றை.
முட்கோல் - இருப்புமுள்.
முட்சங்கு - ஓராயுதம், ஒருசங்கு.
முட்செடி - முள்ளுப்பற்றை.
முட்செவ்வந்தி - ஒரு செவ்வந்தி.
முட்ட - ஒட்ட, முடிய.
முட்டக்கலிப்பு - தாராமலை.
முட்டடி - கிட்டுமானம், சமீபம்.
முட்டடைப்பன் - ஒருநோய்.
முட்டத்தனம் - முறட்டுத்தனம், மூடத்தனம், மூர்க்கத்தனம்.
முட்டமுடிய - ஆகநிறைவேறுமளவும்.
முட்டம் - ஒரூர், களவு, ஒரு விஷ்ணுஸ்தலம்.
முட்டரிசி - முற்ற அவியாத சோறு.
முட்டல் - உதைத்தல், கிட்டல்.
முட்டற்றது - தாவரமற்றது.
முட்டன் - கோபி, முட்டாள்.
முட்டா - ஒருபணிகாரம், சம்பாரம்.
முட்டாக்கு - போர்வை, முக்காடு.
முட்டாட்டம் - முட்டத்தனம், முட்டுத்தனம்.
முட்டாள் - பருவேலைக்காரன், முட்டன், மூடன்.
முட்டி - ஆயுதப்பிடி, எட்டிமரம், ஒரு பலம், ஒருசெடி, ஒருபிடி, கலசம், கலைஞானமறுபத்து நான்கினொன்று, கைப்பொத்து, சம்மட்டி, பிச்சை, மூடக்கியகை.

முட்டிகன் - தட்டான்.
முட்டிகாந்தகன் - பலதேவன்.
முட்டிகை - இலைக்குறடு, கைக்குத்து, சாவணம், மத்திகை.
முட்டிக்கத்தரி - ஒருவழுதலை.
முட்டிக்கால் - ஒன்றோடொன்று தட்டப்படுங்கால்.
முட்டிச்சுரை - ஒருசுரை.
முட்டிபாதம் - கைப்போர்.
முட்டியுத்தம் - கைக்குத்துப்போர்.
முட்டு - அடைப்பு, அரணவளைதல், இலம்பாடு, கடிவாளம், குறைவு, தடை, தளபாடம், நெருக்கம், பூப்பம், முட்டுதல், முட்டென்னேவல், முழந்தாள், பேடு, வருத்தம்.
முட்டுக்கட்டுதல் - பாத்திகட்டுதல், மிண்டுகொடுத்தல். [தடி.
முட்டுக்கட்டை - எதிர்க்கட்டை, மிண்டு
முட்டுக்களிக்கண் - பணிகளிளொருறுப் [பு.
முட்டுக்காய் - இளந்தேங்காய்ப்பணி.
முட்டுக்கால் - உதைகால், முழந்தாள.
முட்டுக்கொடுத்தல்-மிண்டுகொடுத்தல்.
முட்டுதல் - அணைதல், எதிர்த்தல், ஒற்றுதல், குத்துதல், குறைதல், தடுத்தல், தீண்டல், நிறைவுறல், நெருக்குதல்.
முட்டுத்தொய்வு - ஒருநோய்.
முட்டுப்பாடு - இலம்பாடு, திக்கு முக்கடைத்தல், தீமை, நெருக்கிடை, வருத்தம்.
முட்டுயுத்தம் - நெருங்கினபோர்.
முட்டுற்றவன் - மூடன், மடையன்.
முட்டை - அண்டம், ஒருநோய், கந்தன், சிறுகரண்டி, தவிடு.
முட்டைக்கண் - பொந்துக்கண்.
முட்டைக்கணீர் - சொட்டுச் சொட்டாய் விழுங்கண்ணீர்.
முட்டைக்கோழி - முட்டையிடுங் கோ
முட்டைப்பாசி - ஒரு நீர்ப்பூடு. [ழி.
முட்பன்றி - முள்ளம்பன்றி.
முட்பாஷாணம் - பன்றிமுள்.
முட்புறக்கனி - பலா.
முட்பூல் - ஒருசெடி.
முணங்கல் - அடங்குதல்.
முணங்கு - அடக்கம்.
முணங்குதல் - முணங்கல்.
முணுமுணெனல் - ஒலிக்குறிப்பு.
முண்டகானன் - முண்டகன்.

முண்டகம் - கடல், கருக்குவாளிமரம், கள், தலை, தாமரை, தாழை, நீர்முள்ளி, நெற்றி.
முட்செடி - முள்ளிச்செடி.
முண்டகன் - பிரமன்.
முண்டகாசநன் - பிரமன்.
முண்டகவநம் - தாமரைக்காடு.
முண்டகத்தடம் - தாமரைத்தடாகம்.
முண்டகாசனி } இலக்குமி.
முண்டகாசனை } இலக்குமி.
முண்டசணன் - மல்லன்.
முண்டநாயகன் - சூரியன்.
முண்டகோபநிஷத்து - முப்பத்திரண்டு உபநிஷத்துக்களில் ஒன்று.
முண்டகோபநிஷத் - அஞ்ஞானமாகிய களைவைச் சிதைக்கும் முண்டகம் போலுதலால் இது முண்டகோபநிஷத் என்னும் பெயர்த்தாயிற்று, (முண்டகம் - மயிரெறிகருவி,) இந்த உபநிஷத்து, அதர்வணவேதத்தைச் சார்ந்தது, இதில் இதைக்கேட்ட இருடிகளின் குருபரம்பரை, பிரமவித்தை, வேதவித்தை, அக்நி காரியதத்துவம், கிரியாபலத்தினது நிலையின்மை, இருடியும் பிரமவித்தையும், உண்மையை நாடுவோன், குருவைத்தேடுவான், எல்லாம் பிரமத்திலுதிக்கும் எல்லாம் பிரமமாம், பிரமமும் அதனையடையுமுபாயமும், பிரணவவில், யோகம், என்பனவே இதிற் கூறப்பட்ட விடயங்கள்.
முண்டபலம் - தேங்காய்.
முண்டம் - உடற்குறை, உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று, குற்றி, தலை, திரட்சி, நெற்றி, மொட்டைத்தலை.
முண்டனசிரம் - மொட்டைத்தலை.
முண்டனம் முண்டித்தல், மொட்டை.
முண்டணி - கொட்டாங்கரந்தை.
முண்டன் - இராகு, நாவிதன், மொட்டந்தலையன்.
முண்டாகாரம்-அவயவப்பகிர்வற்றது.
முண்டாசு - தலைப்பா.
முண்டாயி - தீம்பண்டம்.
முண்டி - நாவிதன், முண்டியென்னேவல், மொட்டைத்தலையன்.
முண்டிதம் - மொட்டை.
முண்டிதன் - மொட்டைத்தலையன்.

முண்டித்தல் - மழித்தல்.
முண்டிரம் - உபநிடத முப்பத்திரண்டில் ஒன்று.
முண்டீரம் - ஒருகீரை.
முண்டீரபாதி - சூரியன்.
முண்டு - உள்வேட்டி, முரண்டுத்தனம், மூடத்தனம்.
முண்டுதல் - முரண்டுபண்ணல்.
முண்டை - மொட்டை, விதவை.
முண்டைக்கண் - பருத்தகண்.
முண்ணுயகி - ஒருசெடி.
முண்மா - முட்பன்றி.
முண்முருக்கு - ஒருமுருக்கு.
முதங்கி - வெள்ளகத்தி.
முதம் - உவகை.
முதலது - முதலானது.
முதலல் - துவக்கம், துவங்குதல், முதலாதல்.
முதலனுமானம் - முதற் காரணத்தைக் கொண்டனுமானித்தல்.
முதலாகுபெயர்-முதலின்பெயர் சினைக்காவதோராகுபெயர்.
முதலாளி - முதன்மைக்காரன்.
முதலி - முதல்வன், செங்குந்தன்.
முதலிச்சாதி - ஒருசாதி.
முதலிலனுதல்-கடவுளநுகுணத்தொன்று அது தானென்றிலுந் தோன்றுமை.
முதலுதல் - துவங்குதல், முதலாதல்.
முதலெழுஞ்சனி - மகம்.
முதலெழுத்து - தனியெழுத்து அஃது உயிரு மெய்யுமாகிய முப்பதெழுத்து.
முதலை - செங்கிடை, வன்மீன்.
முதலைக்கோரை - ஒருபுல்.
முதலைப்பூண்டு - ஒரு பூண்டு.
முதலோன் - கடவுள்.
முதல் - ஆதி, ஏழனுருபு (உ-ம்) சுரன் முதல் வந்த வுரன்மாய்மாலை, கடவுள், முதலென்னேவல், வட்டிக்குக் கொடுக்கும்பணம், வியாபாரஞ் செய்யும் பணம்.
முதல்முதல் - துவக்கம்.
முதல்வடி, முதல்வடிப்பு } முதற்சாரத் தயில வடிப்பு.
முதல்வர் - அதிபதிகள், வானோர்.
முதல்வள்ளல் - குறிப்பறிந்து கொடுப்போர்.
முதல்வன் - அரசன், அரன், அருகன், கடவுள், முதலாளி, முன்னவன்.
முதல்வி - தலைவி, தேவி.
முதல்வேதம் - இருக்குவேதம்.
முதளை - ஒரு நீர்ப்பூண்டு, முதலை.
முதற்கண் - முதலிடம்.
முதற்கருவி - மத்தளம், முதற்காரணம்.
முதற்காரணகாரியம் - ஆதிகாரண காரியம்.
முதற்காரணம் - காரணத்திற் காதியாயிருப்பது.
முதற்சங்கம் - இதன்வரலாற்றை மேல்வரும் ஆசிரியப்பாவா னுணர்க.
"வேங்கடங் குமரிதீப்புனற் பவ்வத் திந்நான்கெல்லையி னிருந்தமிழ் பயின்ற, செந்நாப்புலவர் செய்த யீண்டுரைப்பிறைக்குடுமி மாடக்கூலின், முன்னர்ச் சங்கக் கனமாப்பலசையில், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள், மன்றன்மராத்தார்க் குன்றெறியினஞ்சேய், திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி, புவிபுகழ் மருதங் கவினியமுரிஞ்சிப், பதி முடிநாகன் நிதியின் கிழவன், இனையர்நானூற்று நாற்பத் தொன்மதின்மர், அனையர் நானன்காயிர நூற்றொடு,நாற்பத்தொன்பதின்மர்பார்க்கிற் செந்தமிழோர், புரிந்தனசெய்யுட் பெரும்பரிபாடலும், முதுமையடுத்த நாரையுங் குருகும், கதியுறச் செய்த களரியாவிரையும், ஆங்கவரிருந்தது மத்தொகையாகும், ஈங்கிவர் தம்மை மிரீ இப்பாண்டியர்கள், காய்சினவழுதி முதற்கடுங்கோனீறு, ஏசிலாவகை யெண்பத்தொன்பதின்மர், கவியரங்கேற்றின ரெழுவராகும், மகத்துவமுடைய வகத்தியமிலக்கணம்" இந்தச்சங்கமிருந்த தென்மதுரையும் அதைச்சார்ந்த சிலநாடுகளும் கடல்கொண்டழிந்து போக அதற்குப்பின் வந்த பாண்டியர்கள், கபாடபுரத்தைத் தமக்கு இராஜதானியாக்கி, இரண்டாஞ் சங்கத்தை அங்கே தாபித்தார்கள், இதன் விரிவெல்லாம், "தமிழ்" என்பதனுட் காண்க.
முதற்பட்சம் - முதற்றாம்.

முதற்பருவம் - பிள்ளைத்தமிழிற் காப்புப்பருவம், பாலப்பருவம், பேதைப்பருவம்.
முதற்பலபாசம் - விளைவின் முதற்கண் வருமானம்.
முதற்பலம் } முதற்பேறு.
முதற்பலன் }
முதற்பா - வெண்பா.
முதற்பூசை - அக்ரபூஜை.
முதற்பெயர் - முதனிலைப்பெயர்.
முதற்பேறு - தலைப்பிள்ளை, முதற்பலன்.
முதற்பொருள் - கடவுள், மூலதநம்.
முதனடை - மிகவும் தாழ்ந்த செலவினை யுடையபாடல், இயக்கம் நான்கினுளொன்று.
முதனாள் - அசுபதி, முந்தினநாள்.
முதனிலை - பகுதி.
முதனிலைத்தீபகம் - செய்யுளலங்காரத்தினொன்று அது தீபகச்சொல் முதனிற்பது.
முதனிலைத்தொழிற்பெயர் - பகுதிப்பொருண்மாத்திரமாய் நிற்கும் வினைச்சொல் (உ-ம்) வருதல்.
முதனிலைவிளக்கு - தீபகாலங்காரத்தில் ஒன்று.
முதனிறம் - மாங்கிஷச்சிலை.
முதனீர் - கடல்.
முதனூல் - முதல்வன்வாக்கு, வேதம்.
முதன்மடக்கு - மடக்கலங்காரத்தும் ஒன்று அது அடிகளுளொன்றேனும் பலவேனு மடிமுதலில் மடங்கிவருவது.
முதன்மறிநிலை - ஓரலங்காரம் அது சினைப்பெயர் முதற்கு முதற்பெயர் சினைக்குஞ் செல்ல வுரைத்தல்.
முதன்மாணக்கர் - முதற்பட்சமான சிடர்.
முதன்மை - அதிகாரம், முன்னீடு.
முதாரி } கிறைகன்றுத்தாய்ச்சி, முதுகன்று.
முதாரு }
முதாருகன்று - ஊட்டுமறந்த கன்று.
முதாவதி - சௌநந்தை, விடுதன்மகள், இவள் தோழிகளோடு நந்தநவநஞ் சென்றபோது குஜம்பன் என்னும் ராக்ஷஸனால் பாதலத்திற் கொண்டுபோய் மறைக்கப்பட்டாள், வற்சந்திரன் அவ்வரக்கனைக்கொன்று அவளை மீட்டுக்கொண்டுபோய் மணம் புரிந்தான்.

முதிதம் - உவகை.
முதியகொல்லை - பழங்கொல்லை.
முதியம் - நாய்வேளை.
முதியர் - முதியோர்.
முதியன் - முதியான், மூத்தோன்.
முதியோர் - கற்றோர், பெரியோர், மூத்தவர்.
முதியான் - ஒருபட்சி, முதியது, முதுகன்று.
முதியாள் - மூத்தவள்.
முதிரம் - மேசம்.
முதிரன் - தூர்த்தன்.
முதிரிமை - முதுமை.
முதிருதல் - முதிர்தல்.
முதிரை - அவரை, ஒருமரம், காராமணி, கொள்ளு, துவரை முதலியன.
முதிர்காய் - கனி, முதிர்ந்தகாய்.
முதிர்காற்று - கடுங்காற்று.
முதிர்சுவை - மிக்கசுவை.
முதிர்சொல் - திருந்தினசொல்.
முதிர்ச்சி - முதிர்வு, மேட்டிமை.
முதிர்தல் - காய்தல், தேறுதல், பழுத்தல், வயசாதல், வறத்தல்.
முதிர்பிறை - சதுர்ப்பிறை முதலாக வருநிலவு.
முதிர்பு - முதிர்வு.
முதிர்புனம் - முதுகொல்லை.
முதிர்ப்பு - கலக்கம், முதிர்ச்சி.
முதிர்வயது - கிழப்பருவம்.
முதிர்வு - மூப்பு.
முதிர்வேனிலுரிமை - சோடைக்காற்று வீசலுங் கானறோன்றலுங் காடைவலியான் வானம்பாடி காகம் கவுதாரியிவை மகிழ்தலும், மல்லிகை புளி பாதிரி இவை மலர்தலும் பாலைகாஞ்சிரம் நாவல் இலுப்பை இவை காய்த்தலுமாம்.
முதிர்வேனில் ஆடி ஆடியின்பருவம்.
முதீ - சந்திரகிரணம்.
முது - பழமை.
முதுகாஞ்சி ஒருபிரபந்தம், அது முதுக்குறைந்தோர் முதுக்குறையா மாக்கட்குக் கூறுவது.
முதுகாடு - சுடுகாடு, பிறங்கியல்.
முதுகால் - முந்தினவருடத்தின் வெற்றிலைக்கொழுந்து.
முதுகிடல் - புறங்காட்டல்.
முதுகு - உரப்பு, பின்புறம்.

முதுகுகாட்டுதல் - புறங்காட்டுதல்.
முதுகுகொடுத்தல் - துணைசெய்தல், புறங்கொடுத்தல்.
முதுகுதாங்கி - சார்மணை.
முதுகுநீர்ச்சடங்கு - சீமந்தச்சடங்கு.
முதுகுபிளவை - ஒருசிலந்தி.
முதுகுன்று-திருமுதுகுன்று அது பழமலை என்னும் விருத்தாசலம்.
முதுகொல்லை - முதிர்ந்தகொல்லை
முதுக்குறைதல் } திவ்வியஞானம், பெ
முதுக்குறைவு } ண் புத்தியறிகை, பேரறிவு, ஞானம்.
முதுசொல் - பழஞ்சொல், மூதுரை.
முதுநிலம் - களர், பாலைநிலம், பெரும்பாழ்நிலம்.
முதுநீர் - கடல்.
முதுமகன் - சனி, மூடன்.
முதுமறை - அநாதிவேதம்.
முதுமை - பழமை, பழமொழி, மூப்பு.
முதுமொழி - பழஞ்சொல்.
முதுமொழிக்காஞ்சி - ஒருநூல்.
முதுவர் - புலவர், மந்திரிமார், மூதுணர்ந்தோர், மூத்தோர்.
முதுவு - பருக்கன்.
முதைகாடு - வெட்டிச் சுட்டகொல்லை, சந்தோஷம்.
முதைப்புனம் - பழங்கொல்லை.
முதையல் - முதுகாடு.
முத்தகச்செய்யுள்-தனித்தனியே முற்றுப்பெறுஞ்செய்யுள்.
முத்தகம் - உறியாயுதம், கருக்குவாளிமரம், தனித்தனியே முற்றுப்பெறுஞ்செய்யுள்.
முத்தக்காசு - கோரைக்கிழங்கு இது அவர் பத்திஞென்று, அட்டமூலத்தும் ஒன்று.
முத்தஞானவுரு பி - கடவுள்.
முத்தண்டு - திரிதண்டு.
முத்தப்பருவம் - பிள்ளைத்தமிழினோர் பருவம்.
முத்தமிழுரியோன் - அகத்தியன், வயிரவன்.
முத்தமிழ் - இயல் இசை நாடகம் இன்னும் மூவகைத்தமிழ்.
முத்தம் - இட்டம், உதடு, கொஞ்சுதல், மணிக்குற்றத்தொன்று, அது குல்லைநிறம், பிரியம், மருதநிலம், முத்துக்கொட்டை, விடப்படுவது, விடுதல், விடுகை.
முத்தரையர் - செல்வர்.
முத்தர் - திடர், முத்திக்குரியோர்.
முத்தலை - சூலம்.
முத்தலைச்சூலி - சிவபிரான்.
முத்தலையன் - திரிசிரன்.
முத்தலையிருதலைவேல் - அறுதலைக்கழுமுள். [ல்.
முத்தலைவேலையன்-சிவபிரான், திருமா
முத்தலைவேலோன் - சிவபிரான், வயிரவன்.
முத்தன்-அரன், அருகன், சுத்தன், புத்தன், முத்திபெற்றோன், வயிரவன்.
முத்தகாந்தம் - பருப்புப்பொங்கல்.
முத்தகேசம் - அவிழ்ந்தசிகை.
முத்தாகலாபம் - முத்தாரம்.
முத்தாகாரம் - முத்துச்சிப்பி.
முத்தாடல் - கொஞ்சுதல்.
முத்தாதனம் - இடக்காற்பரட்டாற் சீவனியையமுத்தி வலக்காற்பரடு அப்பரட்டின் கீழழுந்தவிருத்தல்.
முத்தாத்துமா - பக்குவன்.
முத்தாபலம் - இசங்கம்பழம், முத்து.
முத்தாமணக்கு - ஓராமணக்கு.
முத்தாரம் - முத்துமாலை.
முத்தாவதேசுரர் - திருத்துருத்தியில் கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
முத்தாவளை - முத்துமாலை, ஒருபண், சம்ஸ்கிருத சருக்க சாஸ்திரம்.
முத்தாவலி-முத்தாவணி, முத்துமாலை.
முத்தானம்-அடுப்பு, மூவகைத்தானம்.
முத்தான்மா - முத்தாத்துமா.
முத்தி - திசை, பிறப்பு, நீங்குகை, முத்தம், மோட்சம்.
முத்திக்கை - அரணவளைப்பு.
முத்தி - கொஞ்சுதல், மோக்கம்.
முத்திதானம் - மோட்சதலம்.
முத்திதிசை - ஞானபட்சம்.
முத்திநெறி - ஞானமார்க்கம்.
முத்திபதம் - மோட்சபதவி, ஞானநிலை.
முஸ்திப்பு - ஆசீர்.
முஸ்தை - கோரைக்கிழங்கு.
முத்திப்பேறு - மோட்சவாழ்வு.
முத்திமண்டபம் - காசியில் விசுவநாதர் சந்நிதிக்குத்தெற்கிலுள்ளமண்டபம்.

முத்திமார்க்கம் - விதிமார்க்கம்.
முத்தியம் - முத்து.
முத்திராங்கிதன் - முத்தரிக்கப்பட்டவன்.
முத்திராங்கிதை - தங்கசாலை.
முத்திரி - அடையாளம்.
முத்திரிகை - முத்திரை, முத்திரை மோதிரம்.
முத்திரித்தல் - முத்திரைவைத்தல்.
முத்திருக்கஞ்செடி - ஒருபூடு.
முத்திருக்கஞ்செவி - ஒருசெடி.
முத்திரை - அடையாளம், இலாஞ்சனை.
முத்திரைக்கம்பு - முத்திரை அச்சு.
முத்திரைகுத்திப் பார்ப்பார் - தத்துவாதிகள்.
முத்திரைக்கூடம் - காவலறை.
முத்திரைக்கோல் - முத்திரைக்கம்பு.
முத்திரைப்பல்லவம் - பதத்தினடிதோறு மொட்டிப்படிக்கும் பல்லவம்.
முத்திரைமோதிரம் - ஒருவகைக்கணையாழி.
முத்திவிக்கினம் - முத்திக்கிடையூறு அது அறியாமை ஐயம் திரிபு.
முத்திவித்து - ஞானம்.
முத்தீ - உதாத்தீயுயிர்த்தீ, சினத்தீ, அன்றியும் ஆகவனீயம்காருகபத்தியம்தக்கணுக்கியம் எனும் மூவகை அங்கி.
முஸ்தீது - அசீர்.
முத்து - ஓர்ரத்தினம், சங்குமுதலியவற்றின்முட்டை, பருப்பு, பிரியம், மேலானது வைசூரிக்குரு.
முத்துக்கற்கம் - ஒருமருந்து.
முத்துக்கிருஷ்ணமுதலியார் - மணலி முத்துக்கிருஷ்ண முதலியாரிவரே இவர் இன்றைக்கு நூற்றிருபத்தெட்டு வருடங்களுக்கு முன்னேதென் புலஞ்சேர்ந்த அருணசல கவிராயர் பாடிய ராமாயணகீர்த்தநத்தைத் தமதுசபையில் அரங்கேற்றுவித்து அவர்க்குக் கநகாபிஷேகம்பண்ணி, "கனந்தந்தான் கனகாபிஷேகந் தந்தான் களங்கமிலாக் கரும்பொருளே யழைத்துத்தந்தான், மனந்தந்தான் முடிசூட்டு மாலைதந்தான் வாணி சிங்காசநத் திருத்திவரிசைதந்தான், இனந்தந்தானிராமகதை யெவர்க்குந்தந்தானெனக்கு ராமாயணக் கவிஞனெனப் பேர்தந்தான், அனந்தந்தான் மணலி முத்துக்ருஷ்ண பூபன் அகந்தந்தானிருமையிலுஞ் சுகந்தந்தானே" என்னும் பாடல்பெற்ற பெருந்தகையாம்.
முத்துக்குடை - மூவகைக் குடையில் ஒன்று.
முத்துகுமாரன் - முருகக்கடவுள்.
முத்துக்குளி, முத்துக்குளித்தல் - முத்தெடுக்கநீரில் முழுகல்.
முத்துக்கொட்டை - ஆமணக்கங்கொட்டை.
முத்துச்சம்பா - ஒருநெல்.
முத்துச்சலாபம் - முத்து குளிப்பின்பேறு.
முத்துச்சனிப்பு - முத்துண்டாகுமிடம் அது உடம்பு கமுகு கரும்பு கொக்கு சங்கு சந்திரன் சிப்பி செந்நெல் தாமரை நங்கையர் கழுத்து நந்துநாகம் பசுவின்பல் பன்றிக்கொம்புமீன் முதலை மூங்கில் மேகம் யானைக்கொம்பு வாழை.
முத்துச்சிப்பி - முத்திருக்குமிப்பி.
முத்துச்சிவிகை - முத்துப்பல்லக்கு.
முத்துச்சோளம் - வெள்ளைச்சோளம்.
முத்துத்தாண்டவர் - இவர் சங்கீதவித்வான், இவர்பாடிய பதங்களும் கீர்த்தநங்களும் அத்புத ரசமுடையன, இவர் சீர்காழியிலே பிறந்து சிதம்பரத்தில் சிவதொண்டு பூண்டிருந்தவர், இவர் இற்றைக்கு இருநூற் றறுபத்தாறு வருடங்களுக்கு முன்னிருந்தவர்.
முத்துமாதளை - ஒருமாதளை.
முத்துமாலை - முத்துக்கோவை.
முத்துருவி - ஒருவகைக்காதணி.
முத்துவடம் - ஒருசீலை, முத்துமாலை.
முத்துவன்னச்சேலை - ஒருசேலை.
முத்தூர்க்காற்றம் - சோழநாட்டிலோர் சிற்றூர்.
முத்தெறிதல் - குறுநோய்பிடித்தல்.
முத்தை - கவளம், திரட்சி, மிகவுந்தெரிவிலாள்.
முத்தையன் - சுப்பிரமணியன்.
முத்தொகைவினை - ஒருவகைக்கணக்கு.
முத்தொழிலார் - வைசியர்பொது.
முத்தொழில் - முச்செயல் அது சிருட்டி திதி சங்காரம்.
முத்தொழிற்பகவன் - கடவுள்.

முத்தொள்ளாயிரம் - கடைச்சங்கப் புலவர் சேர சோழ பாண்டியர்கள் மீது பாடியநூல்.
மூத்தோஷம் - மூப்பிணி.
முந்த - முன்னே.
முந்தல் தலைப்பு, மூச்சந்தி, முந்துதல்.
மூந்தன் - கடவுள், மூத்தோன்.
மூந்தானே - முன்றானை.
முந்தி - முன்றானை, முன்னே.
மூந்திரி-ஒருசிற்றிலக்கம் அது முந்நூற்றிருபது பாகத்தொன்று.
மூந்திரிகை - ஓரெண், ஒருசெடி.
மூந்து-பழமையான,பொந்து,முத்தென்னேவல், வெண்ணுரை.
முந்துதல் - முற்படுதல்.
முந்துநூல் - முதனூல், வேதம்.
முந்துறக்காண்டல் - அகப்பொருட்டுறையினென்று.
முந்துறல் - முற்படுதல்.
முந்தூழ் - பழவினை.
முந்தூள் - மூங்கில்.
முந்தை - பழமை.
முந்தைநாள் - முன்னாள்.
முந்தையோர் - முன்னோர்.
மூந்நாடி - மூன்றுநாடி, அவை வாதநாடி, பித்தநாடி, சிலேத்துமநாடி யென்பன.
மூந்நாடு - சேரசோழபாண்டியர்களுக்குரிய மூன்றுநாடு.
முந்நீர் - கடல்.
முந்நூலார்-முதல்மூன்றுவருணத்தார்.
முந்நூல் - பூணூல், மூவகைநூல், அது முதனூல், சார்புநூல், வழிநூல்.
முந்நூன்மார்பர் - அந்தணர்.
மூற்பகை - காமம்மயக்கம்வெகுளி,முத்திவிக்கினமாகிய பகைமூன்று அது உடல் உலகு, பசாசு.
முப்பலே - திரிபலை.
முப்பழம் - முக்கனி, அது மா பலா வாழை யிவற்றின்கனி, திரிபலை.
முப்பா-ஆசிரியப்பாகலிப்பா,வஞ்சிப்பா.
முப்பாட்டன் - பாட்டனுடைய பாட்டன்.
முப்பாட்டி-முப்பாட்டன்மனைவி.
முப்பால் - முப்பகுதி அது ஆண்பால், பெண்பால் அலிப்பால் மூன்றுவிதப்பால் அது காய்ச்சுப்பால் திரட்டுப்பால் குழம்புப்பால்.

முப்பாழ் - உடம்புக்குட்சூனியமாய மூன்றிடமும்.
முப்பான் - முப்பது.
முப்பிணி - மூத்தோஷம் அவைவாத பித்த சிலேற்பனம்.
மூப்பு - அகஸ்தியர் தமிழ்வாகடம்.
மூப்புடி - முக்குணம்.
முப்புடைக்காய் - தேங்காய்.
முப்புரமெரித்தோன் - சிவபிரான்.
முப்புரம் - திரிபுரம்அவைஇருப்புமதில் பொன்மதில் வெள்ளிமதில்.
முப்புரிநூலோர் - பார்ப்போர்.
முப்புரிநூல் - பூணூல்,மூன்றுபுரிசேர்த்தநூல்.
முப்புள்ளி - ஆய்தவெழுத்து.
முப்பூரம் - பூரட்டாதி, பூரம்,பூராடம்.
முப்பேதம்-சுகதபேதம், சுசாதிபேதம், விசாதிபேதம்.
முப்பொருள் - திரிபதார்த்தம், திரிமூர்த்தி.
முப்பொறி - மனம் வாக்கு காயம்.
முமுசாநம் - மேகம்.
முமுடம் - முற்றத்துறத்தல்.
முமுட்சு - துறவி மோக்ஷதாஹமுள்ளோன்.
முமுட்சுத்துவம் பைரவிராகம், முற்றத்துறத்தல்.
முமுட்சுக்கள்- மோக்ஷவிருப்பமுள்ளவர்கள்.
மும்மடங்கு, மும்மடி - மூன்றுமடங்கு.
மும்மடியாகுபெயர் - ஒன்றற்கிருமடியாகுபெயராய் நிற்பது அதனலாய் மற்றொன்றற்கும், பெயராய் வழங்குவது (உ-ம்) கார்.
மும்மணிக்கோவை-ஒருபிரபந்தம் அது வெண்பாவு மாசிரியப்பாவுங் கலித்துறையு முறையே தொகைமுப்பதுபெறவடுக்கி அந்தாதித் தொடையாய்ப்பாடுவது.
மும்மணிமாலை - ஒருபிரபந்தம் அதுவெண்பாவுங் கலித்துறையும் அகவலும் அந்தாதித் தொடையான் முப்பது பாடுவது.
மும்மண்டலம் - பூமி அந்தரம் சுவர்க்கம் (அக்கிமண்டலம் ஆதித்தமண்டலம் சந்திரமண்டலம்.)

முத்மதக்கோடு - தாலம்பபாஷாணம்.
மும்மரம் - மும்முரம்.
மும்மரித்தல்-உக்கிரம்கொள்ளல், கொந் தளித்தல்.
மும்மலம் - முக்குற்றம் அவை ஆணவம் மாயை காமியம்.
மும்மின் - மிருகசீரிடம்.
மும்முரம் - உக்கிரம், கொந்தளிப்பு.
மும்முரித்தல் - உக்கிரங்கொள்ளல்.
மும்மூட்சுது - துறவு.
மும்மூர்த்தி - பிரமா விட்டுணு உருத் திரன், திரிகடு.
மும்மை-முக்காலம்,முப்பிறப்பு, மூன்று யிருக்குந்தன்மை, மூன்று.
மும்மையுலகு - மூன்றுலகு, அவை சுவ ர்க்கம், மத்தியம், பாதாளம்என்பன.
முயக்கம் } கலவி, முயங்கல்.
முயக்கு }
முயங்கல் - தழுவல்.
முயங்காமை - தழுவாமை.
முயங்கு - முயங்கென்னேவல்.
முயங்குதல் - தழுவல், புணர்தல்.
முயலல் - முயலுதல்.
முயலாக்கிரபுத்தி - மந்தபுத்தி.
முயலாக்கிரம் - உலக்கைத்தலை.
முயலாமை - முயலாதிருத்தல்.
முயலின்கூடு - சந்திரன்.
முயலுதல் - முயற்சிசெய்தல்.
முயலை - ஒரு கோரைக்கிழங்கு.
முயல் - போர், முசல் அது வடகீழ்த்தி சைப்பாலன் குறியுமாம், முயலென் னேவல்.
முயல்வார் - யோகியர்.
முயல்வு - முயற்சி.
முயறல் - முயலுதல்.
முயற்களங்கம் - சந்திரகளங்கம்.
முயற்கறை - முயற்களங்கம்.
முயற்சாதிலை - ஒருவகையிலை, முயற் கறையன், சந்திரன்.
முயற்கூடு - சந்திரன்.
முயற்கோடு - இன்மையுவமை.
முயற்சி - ஊக்கம், தொடர்ந்தேற்றி.
முயற்சிநாயகர் - திருமீயச்சூரிலே கோ யில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
முயற்சிவிலக்கு-முயற்சிதோன்றக்கூறி விலக்குமலங்காரம்.
முயற்செவிக்கள்ளி - ஒருகள்ளி.
முயற்புல் - ஒருபுல்.

முயற்றிசை - வடகீழ்த்திசை.
முயற்று - முயற்சி.
முயிறு - ஒரெறும்பு.
முரசகேதனன் } தருமன்.
முரசக்கொடியோன் }
முரசத்துரு - திருமால்.
முரசபலம் - பலா.
முரசம் - மேளம், வாச்சியப்பொது.
முரசவாத்தியம் - பேரிகைவாத்தியம்.
முரசிடுதல் - முரசுவைத்தல்.
முரசு - ஒருமேளம் அது அட்டமங்கலத் தொன்று, இராசசின்னத்துமொன் று, உத்திரட்டாதிநாள், பல்லினீறு, பேரிகை, வாச்சியப்பொது.
முரசுவைத்தல் - முரசுவளர்தல்.
முரவை - குபேரன்மனைவி.
முரசொலி - பேரிகையோசை.
முரஞ்சியூர்முடிநாகராயர் - தலைச்சங்கப் புலவர்களிலொருவர்.
முரடன் - முரட்டாள்.
முரடு கணு, காடு, பதமையின்மை, மு ரணி.
முரட்கை - கலிப்பா.
முரட்டாட்டம் - முரட்டுத்தனம்.
முரட்டுக்கழுத்து - வணங்காதகுணம்.
முரட்டுத்தன்மை - முரட்டுத்தனம்.
முரட்டுமாடு - படியாதமாடு.
முரட்டுவேலை - ஒழுங்கற்றகாரியம்.
முரணத்தொடுத்தல் - மாறுபடத்தொ டுத்தல்.
முரணந்தாதி-ஈற்றுப்பொருட்கு மாறு கியபொருளை முதற்கண்வரப்பாடல்.
முரணல் - மாறுபடல்.
முரணிற்றோன்றல்-விலக்கு, ஓரலங்கா ரம் இது இன்னபொருட்கின்னின் னவை விரோதமா யிருந்தாலு மின் னதினல் அவிரோதமெனக் கூறல்.
முரண் - அமையாமை, சொல்லும்பொ ருளு மொன்றற்கொன்று விரோதி ப்பக்கூறுவது (உம்) வெண் மலர் கார் வண்டு, பகை, போர், முரணெ ன்னேவல், முரண்டொடை, வலி.
முரண்டல் - எதிர்த்தல்.
முரண்டன் - அடிணக்காரன், பொறை யிலான்.
முரண்டு - அமையாமை, இசையாமை, மாறுபாடு.
முரண்டொடை - சொல்லும்பொருளு முரணத்தொடுப்பது.

முரண்படுதல் - மாறுபடுதல்.
முரண்மறலி - இயமன்.
முரண்மொழி - எதிர்மொழி.
முரண்விளைந்தழிவணி - ஓரலங்காரம் அது ஓரிடத்துள்ளனவுங் காரிய காரணங்க ளாகாதனவுமாகிய இரண்டு தருமங்கட்கு மேன்மேலுந்தோன்றி யழியும் பகைமையைச்சொல்லுதல்.
முரண்வினைச்சிலேடை - சிலேடித்துக் கூறு முரண்டொடை.
முரதம் - பாஞ்சசன்னியம்.
முரந்தலை - நர்மதாநதி.
முரப்பிரியை - ஈசானன்மனைவி.
முரமர்த்தநன் - விட்டுணு.
முரம்பு - உப்பளம், கழி, பரலடுத்துயர் நிலம், பாறை, மேடு.
முரரிபு - விஷ்ணு.
முரலல்-ஒலித்தல், பேசலானெழுமொலி.
முரலி - முரளி.
முரலிதரன் - கிருட்டிணன்.
முரலை - கேரளநாட்டிலுள்ளதோர்நதி.
முரலை - நர்மதாநதி.
முரல் - ஒருமீன், முரலென்னேவல்.
முரல்வு - உள்ளோசை.
முரவைரி, முரவிரோதி - கிருஷ்ணன்.
முரளி - மூக்கால்வாசிக்குங்குழல், வேய்ங்குழல்.
முரற்றல், முரற்றுதல் - ஒலித்தல்.
முரன் - ஓரரக்கன்.
முராசுரமர்த்தகன் - கிருஷ்ணன்.
முராசுரன்-தநுஜன், நரகாசுரன் தமையன், இவனை கிருஷ்ணர் கொன்று முரார் என்னும் பெயர்பெற்றார்.
முராசுரன் - ஓரசுரன்.
முராரி-இவன் அநர்க்கராகாவியம் என்னும் நாடகஞ்செய்த ஸம்ஸ்கிருதகவி கிருஷ்ணர், திருமால்.
முரி - பாலைநிலம்.
முரிகுதல், முரிதல் - ஒடிதல், கெடுதல், தோற்றல், பின்னப்படுதல்.
முரித்தல் - ஒடித்தல், கெடுத்தல், தோல்விசெய்தல், முறித்தல்.
முரிகிலை - இறுதியிற்படுந்தாவு.
முரிப்பு - எருத்துத்திமில், முரித்தல்.
முரியல் - முரியப்பட்டது.
முரிவு - ஒடிவு, மடிப்பு, முறிவு.

முருகநாயனார் - திருப்புகலூரிலே பிராமண குலத்திலே அவதரித்து விளங்கிய ஒரு சிவபத்தர், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு சிநேகமாயிருந்தவர்.
முருகன் - இளையோன், குமரன், வெறியாட்டாளன்.
முருகன் - பால சுப்பிரமணியக்கடவுள்.
முருகியம் - குறிஞ்சிநிலப்பறை.
முருகீசன் - குமரன்.
முருகு - அகில், அழகு, இளமை, எலுமிச்சை, எழுச்சி, கள், காதணியில் ஒன்று, குமரன், திருவிழா, தேன், வாசனை, வெறியாட்டாளன்.
முருகுவளர்கோதை - திருக்கண்ணார் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் தேவியார் பெயர்.
முருகேசன் - குமரன்.
முருகை - ஒருகல்.
முருக்கல் - கொல்லல், முருக்குதல்.
முருக்காமை - கொல்லாமை.
முருக்கிதழ் - முருக்கம்பூப்போலும் அதரம்.
முருக்கு - எலுமிச்சை, கிஞ்சுகமரம், கொலை முருக்கென்னேவல்.
முருக்குதல் - அழித்தல், உருக்குதல், கொல்லல்.
முருங்கல், முருங்குதல் - அழிதல்.
முருங்கை - ஒருமரம்.
முருடர் - வேடர்.
முருடு - ஒருவாச்சியம், பறைப்பொது, பெருங்குறடு, விறகு.
முருந்தம், முருந்து - கோமளாஸ்தி, இறகினடியிற்குருத்து, வெட்டிய மரத்தினடி, வெண்மை, வெண்குருத்து.
முருமுரன் - சூரியன்குதிரையினொன்று.
முருவிலி - வவ்வாலொட்டி.
முரை-ஒன்பதாம்நந்தன் மனைவி,இவள் சந்திரகுப்தன் தாய், இவள் சூத்திர குலத்தினள்.
முலமுலெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு.
முலாம் - மலாம்.
முலை - கொங்கை, விலங்கின்மடி.
முலைக்கச்சு - இரவிக்கை.
முலைக்கட்டு - இரவிக்கை, ஒரு சிலந்தி.

முலைக்கண் - முலைப்பால்வருந்துவாரம்.
முலைக்காம்பு - முலைக்கண்.
முலைக்கால் - ஆட்டுக்கால்.
முலைக்கோடு - ஸ்தநாக்ரபாகம்.
முலைத்தாய் - செவிலித்தாய்.
முலைப்பணி - ஸ்தநாபரணம்.
முலைப்பாலி - புற்றும்பழம்.
முலைப்பால்-பெண்கள் முலையின்பால்.
முலைமார்பு - நெஞ்சு.
முலைமுகம் - முலைச்சிகரம்.
முலைமூடி - கச்சு, கஞ்சுகம்.
முலையணி - ஸ்தநாபரணம்.
முல்லை இசை, ஐந்நிலத்தொன்று, அது காடுங் காடுசார்ந்தவிடமும், ஒருமரம், கற்பு, மன்மதன் கணையினொன்று, முல்லைக்கொடி, வனமல்லிகை, வெற்றி.
முல்லைக்கருப்பொருள் - முல்லை நிலத்துற்பத்திப் பொருள் அவை முல்லைத்தெய்வம் முதற் கான்யாறுடலீறுயவாம்.
முல்லைக்கான்யாறு முல்லைநிலத்தியாறு
முல்லைக்குழல் - முல்லைக்கொடியால் முப்புரியாகத்தெற்றிய வளையை வளைவாய்க்கட்செறித் தூதுங்குழல்.
முல்லைத்தலைவன் - குறும்பொறை, நாடன், திருமால்.
முல்லைத்தலைவி - கிழத்தி.
முல்லைத்திணை - முல்லைக்குரியன.
முல்லைதெய்வம் - திருமால்.
முல்லைத்தொடை - முல்லைமலராற்றொடுத்த மாலை அது கற்பிற் சிறந்த மகளிர்க்குரியது.
முல்லைநகைவடிவாள் - திருமயேந்திரப் பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
முல்லைநிலத்தூர் - பாடி.
முல்லைநிலநீர் - கான்யாறு, குறுஞ்சுனை.
முல்லைநிலப்பண் - முல்லை நிலத்திற்குரியராகம்.
முல்லைநிலப்பயிர் - காராமணி சாமை வரகு.
முல்லைநிலப்பறை - பம்பை.
முல்லைநிலப்புள் - காட்டுக்கோழி.
முல்லைநிலப்பெண் - ஆய்ச்சி.
முல்லைநிலமரம் - காந்தள், காயாகுருந்து கொன்றை துளசி முதலிய.
முல்லைநிலமாக்கடொழில் - ஏறு தழுவல் கான்யாறு குளித்தல் குரவையாடல் குழலூதல் பசுமேய்த்தல்.
முல்லைநிலமாக்கள் - ஆயர்.
முல்லைநிலம் - மான்முயல்.
முல்லைநிலம் - காடாகியநிலம். [ல்.
முல்லைப்பல் - முல்லையரும்புபோன்றப
முல்லைப்பாட்டு - ஒருநூல், இது, காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனாராற் பாடப்பட்டது.
முல்லைப்புறம் - இல்லாண்முல்லை, பாசறைமுல்லை.
முல்லைமுதற்பொருள் - புறவும் புறவு சார்ந்த விடமும் கார் மாலை என்னும் பெரும்பொழுது சிறு பொழுதுகளுமாம்.
முல்லையர் - இடையர்.
முல்லையாழ்-முல்லைநிலத்திற்குரியயாழ்.
முல்லையுரிப்பொருள் - உரிப்பொருள்.
முல்லைவனநாதர் - திருமுல்லைவாயிலில் கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
முல்லைவநேசர் - திருக்கருவூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
முல்வயன் } முள்வாயன்.
முல்வாயன் }
முவலம் - அவுபலபாஷாணம்.
முழக்கம் - ஆரவாரம், ஒலி, குமுறுகை, மேகத்தில், ஒலிப்பு.
முழக்கல் - முழக்குதல்.
முழக்கு - ஒலி, முழக்கென்னேவல், மேகோற்காரம்.
முழக்குதல் - தொனிப்பித்தல்.
முழக்கோல் - நிலமளக்குங்கோல், முழக்கம்பு.
முழங்கல் - ஒலித்தல், வானங்குமுறல்.
முழங்கனீர் - கடல்.
முழங்கால் - முழந்தாள்.
முழங்காற்சில்லு - முழந்தாளினுருளை.
முழங்கை - மணிக்கட்டின்கீழ்.
முழங்கோதை - முழங்கொலி.
முழத்துண்டம் - மூரத்துணி.
முழந்தாட்கச்சு - அரைச்சட்டையும் காலுறையும் பூட்டிக்கட்டுமோர்கச்சு.
முழந்தாள் } முழங்கால்.
முழந்து }

முழம் - இருசாண்கொண்டது.
முழல் - சுழற்சிக்கொடி.
முழவம் - குடமுழா, முரசு.
முழவின்மார்ச்சனை - மண்.
முழவு - பறைப்பொது.
முழவுக்கனி - பலா.
முழவுத்தோள் மத்தளம்போலும் புயம்.
முழா - மேளம்
முழாசு - சுவாலை.
முழாசுதல் - சுவாலித்தல்.
முழாவுசால் - முடிவுசால்.
முழி - விழி.
முழுகல் } குளித்தல்.
முழுகுதல் }
முழுக்க - முழுதும்.
முழுக்காடுதல் } அப்பியங்கஸ்நானம்.
முழுக்காட்டல் }
முழுக்காட்டு - நீராட்டு.
முழுக்காளி - சலாபங்குளிக்கிறவன்.
முழுக்கு - மாதவிடாய், முழுகல்.
முழுக்கூறு - முழுமை.
முழுக்கொலை - பிராணவதை.
முழுங்கல் - விழுங்கல்.
முழுச்சவுரம் - சருவாங்கசௌளம்.
முழுச்சேதம் - முழுநஷ்டம்.
முழுச்சௌளம் - முழுச்சவுரம்.
முழுது } எல்லாம்.
முழுதும் }
முழுதொருங்குணர்ந்தோன் - அரன், அருகன், கடவுள்.
முழுத்தசுரம் - ஒருநோய்.
முழுத்தம் - முகூர்த்தம்.
முழுத்தல் - முழுமையாதல், மூழ்குவித்தல்.
முழுத்திருடன்-பெருந்திருடன.
முழுநட்டம் - முழுச்சேதம்.
முழுநா - இராசிக்குப்பங்குபடாநாள்.
முழுநோக்கு - பூரணநோக்கு இது கிரகநோக்கில் ஒன்று.
முழுப்பகை - பெரும்பகை.
முழுப்பார்வை - பூர்ணதிருஷ்டி.
முழுமகன் - அறிவிலான், மூடன்.
முழுமணி - தொளையாதமணி.
முழுமதி - பூரணசந்திரன்.
முழுமதிக்குடையோன் - சந்திரன்.
முழுமனை - அறுபதடி நீளமும் நாற்பதடி அகலமுங்கொண்ட நிலம்.
முழுமன் - முழுமை.
முழுமுதல் - கடவுள்.
முழுமுற்றும் - முழுதும்.
முழுமை - எல்லாம், முற்றும்.
முழுவதுஞ்சேறல்விலக்கு-ஓரலங்காரம் அது ஒரு பொருட்கோர் காரியத்தைக்காட்டித் திரும்ப எல்லாவற்றின்மேலுஞ் செல்லுவதாகக் கூறியதற்குமாத்திரமன்றெனல்.
முழுவதும் - முழுமை.
முழுவலயம் - முழுவட்டம், வெற்றி.
முழுவெலும்பு - தசைகழிந்தவென்பு.
முழை - குகை, துடுப்பு.
முழைஞ்சு - மலையினுட்குகை.
முழைத்தல் - எழுத்தில்லாவோசை.
முழைவாசி - சிங்கம்.
முழகரணை - ஒருபூடு.
முளரி - ஓமவிறகு, கடைக்கொள்ளி, காடு, தாமரை, நுண்மை, நெருப்பு, முட்செடி, விறகு.
முளரிநாளம் - தாமரைவளையம்.
முளரிப்பகை - சந்திரன், பனி.
முளரிமாது - சரசுவதி, திருமகள்.
முளரியான் - பிரமன்.
முளவு - முட்பன்றி.
முளா - முள்ளங்கி.
முளி - குளசு, மா முதலியவற்றின்காடு, முளியென்னேவல்.
முளித்தல் - காய்தல், வறத்தல்.
முளை - அங்குரம், ஆப்பு, தண்டாயுதம், தறி, நாணயவச்சு, பருவின் முளை, மகன், முளையாணி, முளையென்னேவல், மூங்கில்.
முளைக்குதல் - அரும்புதல், வெளிப்படல்.
முளைக்கூச்சு - குண்டூசி.
முளைக்கொட்டு - ஆற்றுக் காலாட்டிப் பெண்களினோர் விளையாட்டு.
முளைதெளித்தல் - முளையிடல்.
முளைத்தல் - முளைக்குதல்.
முளைப்பாலிகை - அங்குரார்ப்பணம்.
முளைப்பு - முளைத்தல்.
முளையடித்தல் - ஆப்பறைதல், நாணயமச்சடித்தல்.
முளையாணி - கதவுநிற்குமிரும்பு.
முளையான் - குழந்தை.
முள் - நுண்மை, முள்ளு.
முள்காத்தல் - மௌனமாயிருத்தல்.

முள்வறையன் } ஒரு கறையான்.
முள்வாயன் }
முள்ளங்கத்திரி - முள்ளாங்கத்தரி.
முள்ளங்கி - ஒரு கிழங்கு.
முள்ளங்கிழங்கு - ஒரு கிழங்கு.
முள்ளந்தண்டு - முள்ளென்பு.
முள்ளம்பன்றி - முட்பன்றி.
முள்ளாங்கத்தரி - ஒருசெடி.
முள்ளி - ஒருசெடி.
முள்ளிக்கீரை - ஒருகீரை.
முள்ளிலவு - ஒருமரம்.
முள்ளு - ஒருகருவி, நுண்மை,மரத்தின் முள், மீன்முள்.
முள்ளுடைய மூலம் - முள்ளுள்ளவை.
முள்ளுநாயகம - ஒருகொடி.
முள்ளுப்பலா - ஒருபலா.
முள்ளெலி - ஓரெலி.
முள்ளெலும்பு - முள்ளந்தண்டு.
முறண்டு - முரண்டு
முறண்டுகம் - அவுபலபாஷாணம்.
முறச்செவியன் - யானை.
முறம் - சுளகு. விசாகநாள்.
முறி - அடிமை, இலை, உயர்ந்தவெண்கலம், எழுதுமுறி, ஒருவகைப் புடைவை, தளிர், துண்டு, முறியென்னேவல், மூலைமுறி.
முடிகரை - இடிகரை.
முறிகட்டி - உயர்ந்த வெண்கலக்கட்டி.
முறிக்கலை - வஸ்திரத்துண்டு.
முறிக்கலைச்சுருக்கு - துண்டுபெற்றகலையாகிய சுருக்கு அது தண்டிற் கட்டியிருப்பதை யவிழ்த்துச் சுத்தாசமந முதலிய செய்தற்குக் கையிற் சுருக்கிக் கொள்ளப்படுவது.
முறிக்குதல் - முறித்தல்.
முறிச்சாதனம் - முறிப்பத்திரம்.
முறிச்சி - விற்றற்குரியஅடிமைப்பெண்.
முறிதல் - திரைதல், முரிதல்.
முறிதிரிசூலை - ஒருசூலை.
முறித்தல் - முறிதல்.
முறிப்பத்திரம் முறிச்சீட்டு.
முறிப்பு - முரிப்பு.
முறியல் - விற்றற்குரிய அடிமைகள்.
முறியல் - முறிதல்.
முறியன் - விறறற்குரிய அடிமைக்காரன்
முறிவு - முரிவு.
முறிவெட்டியான் - ஒருசடற்காளான்.

முறுகல் - கடுமைபடல், திருகல், முதிர்தல், வேகங்கொள்ளுதல்.
முறுகுபதம் - முதிர்ந்தபதம்.
முறுக்கரவு - ஒருபாம்பு.
முறுக்கல் - கோபித்தல், திரித்தல், வலித்தல்.
முறுக்கவரை - ஓரவரை.
முறுக்கவிழ்தல் - கட்டுநெகிழ்தல்.
முறுக்காணி - சுரியாணி.
முறுக்கு - ஒரு பண்ணிகாரம், பிணக்கு, புரி, முறுக்கென்னேவல், வீறுப்பு.
முறுக்குதல் - சினத்தல், முறுக்கல்.
முறுக்குப்பணிகாரம் - ஒரு பண்ணிகாரம்.
முறுக்குவிரியன் - ஒருவகைப்பாம்பு.
முறுமுறுப்பு - குறைசொல்லல்.
முறுவஞ்சி முத்து.
முறுவலித்தல் - சிறித்தல்.
முறுவலிப்பு - புன்னகை.
முறுவல் - எயிறு, சிறிப்பு, இது இறந்தொழிந்த நாடகத் தமிழ் நூல்களுள் ஒன்று, பழைய காப்பியம் ஐந்தனுள் ஒன்று.
முறுவல்முகம் - நகைமுகம்.
முறை - இடைச்சொல், உறவொழுங்கு, ஒழுக்கம், ஒழுங்கு, கிராமம், குணம், தரம், பழமை, புத்தகம், முறைமை, முறையீடு, வரிசை.
முறைகாரர் - முறைப்படிசெய்வோர்.
முறைகேடு - தப்புநெறி.
முறைக்காச்சல் - ஒன்றை விட்டொரு நாள்வருங் காச்சல்.
முறைதெரிந்தோன் - சிற்பாசாரி, பிரமன்.
முறைதெரிபகவன் - பிரமன்.
முறைத்தல் - விறைத்தல்.
முறைத்தவறு - கிரமக்கேடு.
முறைநிரனிறை - நேர்நிரனிறை.
முறைப்படுதல் - முறையிடுதல்.
முறைப்பாடு - முறையீடு.
முறைப்பு - விறைப்பு.
முறைமசக்கு - முறைகேடு.
முறைமயக்கி - குப்பைமேனி.
முறைமாறுதல் - ஒழுங்கு தப்பிவரல், முறைப்படி மாறுதல்.
முறைமாற்றுதல் - கிரமத்தைக் கெடுத்தல்.

முறைமை - ஒழுங்கு, கட்டளை, கிரமம்.
முறையிடுதல் - குறைகூறுதல்.
முறையிலுயர்புநவிற்சியணி - ஓரலங்காரம், அது காரணகாரிய மொருவழி நிகழ்வதாகக் கூறுவது.
முறையிலோர் - கீழ்மக்கள்.
முறையினிலைமை - கட்டளைமுறை
முறையின்வைப்பு - நூலழகிலொன்று.
முறையீடு - முறைப்படுதல்.
முற்கந்தெரித்தல் - தொனிவைத்தல்.
முற்கம் - கெற்சிதம், பச்சைப்பயறு.
முற்காம் - ஓராயுதம், சம்மட்டி, படைக்கலம்.
முற்காவன் - குபேரன்.
முற்கலம் - உபநிடத முப்பத்திரண்டினொன்று.
முற்கலன் } இவ்விருடிமிகுசிலமுடை
முற்கவன் } யவராய்த் துர்வாசரிஷி முதலியோர்களை நட்புச்செய்துதெய்வலோகத்தளவும் பிரசித்திப்பெற்றவர். அஜமீடன் இரண்டாம் புத்திரனாகிய நீலன் வமிசத்தவன், தந்தை அரியசுவன், இவன் மகன் திவோதாசன். இவன் புதல்வி அகலிகை, இவள் கௌதமரிஷி பத்நி, இந்த முத்கலன் க்ஷத்ரியனாயினும் தபசினால் பிராமணன் ஆயினன்; இவன் வமிசத்துப் பிராமணர் மௌத்கல்யகோத்திரத்தாரென்று சொல்லப்பட்டு இன்றளவு மிருக்கின்றனர்.
முற்கு - கெற்சிதம்.
முற்குளம் - பூராடம்.
முற்குறி - உற்பாதம்.
முற்கூறு - துவக்கம், முற்பாகம்.
முற்கொழுங்கோல் - பூரட்டாதி
முற்சநநம் - முற்பிறப்பு.
முற்சனி - மகநாள்.
முற்சாமம் - முதற்சாமம்.
முற்பகல் - ஒருபகலின் முற்பகுதி.
முற்பக்கம் - பூர்வபக்ஷம்.
முற்படல் - எதிர்தல், முந்தல்.
முற்படுதல் - எதிர்ப்படுதல், கையிடுதல், பிணைப்படுதல், முந்துதல்.
முற்பவம் - பழையபாவம், முற்பிறப்பிற் பாவம், முற்பிறப்பு.
முற்பழி - பூருவப்பழி.
முற்பனி - மார்கழி தை மாதங்களிற் பனி.
முற்பாடு - முற்படுகை.
முற்பால் - முற்கூறு.
முற்பிறப்பு - முற்சநநம்.
முற்ற - எல்லாம்.
முற்றத்துறத்தல் - சந்நியாசித்தல்.
முற்றம் - முன்றில்.
முற்றல் - காழ்கொள்ளல், முடிதல், முதிருதல், மூப்பு, விளைத்தல், விளைவு, வெறுத்தல்.
முற்றவுணர்கை - கடவு ளெண்குணத்தொன்று.
முற்றவுணர்தல் - முற்றுமறிதல்.
முற்றளபெடை - எல்லாச் சீர்க்கண்ணுமளபெடை வரத்தொடுப்பது.
முற்றறிவு - பேரறிவு.
முற்றறிவன் - கடவுள்.
முற்றாமை - முடியாமை.
முற்றாய்தம் - தன் மாத்திரையிற்குன்றாவாய்ந்த வெழுத்து.
முற்றிகரம் - முற்றியலிகரம்.
முற்றிக்கை - முற்றுக்கை.
முற்றியலிகரம் - ஓசைகுன்றாவிகரம்.
முற்றியலுகரம் - ஓசைகுன்றாவுகரம்.
முற்றியைபு - எல்லாச்சீர்க்கண்ணு மியைபுவரத் தொடுப்பது.
முற்றில்-சிறுமுறம், முற்றம், விசாகநாள்
முற்றிழை - பெண்.
முற்று-எல்லாச்சீர்கண்ணுமோனை முதலாயின வருவது, முடிவு முற்றெனேவல்.
முற்றுகரம் - முற்றியலுகரம்.
முற்றுகை - குறைவு, நெருக்கம், முற்றுதல்.
முற்றுணர்ச்சி - பூர்ணஞானம்.
முற்றுதல்-முடிதல, முதிர்தல், விளைதல்.
முற்றுதொடர்மொழி, எழுவாயும் பயனிலையு முடிவுபெற்று நிற்பன.
முற்றுமடக்கு - ஓரலங்காரம், அது அடிமுழுது மடங்கி வருவது.
முற்றுமுருகுவெண்பா - நான்கடியுமுடுக்காய் வருவது.
முற்றுமுரண் - எல்லாச்சீர்க்கண்ணுமுரண்வரத் தொடுப்பது.
முற்றுமோனை - எல்லாச் சீர்க்கண்ணு மோனைவரத் தொடுப்பது.
முற்றும் - எல்லாம் கடை, பெயரெச்சம், மூலநாள்.

முற்றுருவகம் - அவயவ அவயவிகளை ஏற்ற இடத்தோடும் பிறவற்றோடும் முற்ற உருபகஞ்செய்வது (உ-ம்)உள த்தடத்து விழிவண்டுமொழித்தேனு முளமலரொன் றும் மலர்ந்தது.
முற்றுவமை - பூர்ணோபமம்.
முற்றுவினை - வினைமுற்று.
முற்றூட்டு - பூர்ணாநுபவபூமி.
முற்றெச்சம் - வினையெச்சத்திற்காக வழங்கப்படும் வினைச்சொல்.
முற்றெதுகை-எல்லாச்சீர்க்கண்ணுமெ துகை வரத்தொடுப்பது. [டு.
முற்றெருத்தின்செவி -எழுத்தாணிப்பூ
முனி-அகத்தி,தவத்தோன், பலாசு,புத் தன்முனியென்னேவல்,யானைக்கன் று, வில், தக்கன் புதல்வியருள் ஒருத் தி.
முனிசடிலம் - தவநம்.
முனிச்சிரேட்டன் - முனீந்திரன்.
முனிஷி - பாஷைபயிற்றுவோன்.
முனிதல் - சினத்தல், வெறுத்தல்.
முனித்துருமம் - காரகத்தி.
முனிந்துரை - வெந்தயச்செடி.
முனிபித்தலம் - தாமிரம்.
முனிபுங்கவன் - முநிசிரேஷ்டன்.
முனிமூத்திரம் - கல்லுப்பு.
முனிவர் - அந்தணர், சடைமுடியோர், தவத்தோர்.
முனிவறுமை - கோபமாறுமை, அது . உயிர்வேதனையி னென்று.
முனிவு - சோபம், சினம், வெறுப்பு.
முனீந்திரன் - புத்தன், முனீசுரன்.
முனை-துணிவு,நுனி,பகை, முதன்மை, முனையென்னேவல், யுத்தம், வினை வெறுப்பு.
முனைசுனை - விகண்டிப்பு.
முனைதல்-சினக்குறிப்பு,போர்கலத்தல், முனையாக்கல்.
முனைந்தோர் - பகைவர்.
முனைப்பதி - பாடிவீடு.
முனைமடிதல் - அபசயப்படுத்தல், கூர் மழுங்கல்.
முனைமுகம் - போர்முகம்.
முனையடுவார்நாயனர் - சோழ நாட்டி லே திருநீடூரிலே வேளாளர் குலத் திலவதரித்துக் கூலிப்படையாளாகப் போர்முனையிற் சென்று பொருது பொருளீட்டி அப்பொருளைக் கொ ண்டு சிவனடியார்க்குத் திருவமுது செய்வித்தலே விரதமாகக்கொண்ட ஒரு சிவபக்தர்.
முனையிடம் - பாலைநிலத்தூர், போர்க் களம்.
முனையுள்ளோன் - தைரியவான்.
முனைவர் - பகைவர், முனிவர்.
முனைவன்-அருகன்,கடவுள், பகைவன், புத்தன்.
முனைவு - கோபம், சினம், வெறுப்பு.
முன்-இனியென்பது,ஏழனுருபு (உ-ம்) கற்றூர் முற்றோன்று கழிவிரக்கம், பக்கம், பழமை, முதல், முன்பு,முன் னென்னேவல், மேல்.
முன்கட்டு - முன்னாலேகைமடித்துக் கட்டுதல், வீட்டின்முற்பக்கம்.
முன்குடிமி - முன்கொண்டை.
முன்குடுமிப்பார்ப்பார் - சோழியப் பார் ப்பார், மலையாளப்பார்ப்பார்.
முன்கை-கெண்டைக்கை,முன்புறம்[ல்
முன்கைவளை - முன்கையிலிடும்வளைய
முன்கொம்பு - பல்லக்கின்முன்புறக் கொம்பு.
முன்சொல் - பழமொழி.
முன்தண்டு - முற்படை.
முன்தளை - முன்னங்காற்கட்டு.
முன்பக்கம் - முன்புறம்.
முன்பனி - மார்கழி தை மாதங்களிற் பனி, மார்கழி தையின் பருவம்.
முன்பனியுரிமை - கொண்டல்வீசலுஞ் சிதகன் கூகை ஆந்தை இவை மகிழ் தலும் மாவுஞ் சிவந்தியு மலர்தலும் இலந்தை பழுத்தலும் செந்நெல் விளைதலும் கரும்பு முதிர்தலுமாகும்.
முன்பன் - முதல்வன்.
முன்பிறந்தாள் - அக்காள்.
முன்பாலைநாடு - குமரியாற்றுக்கும் பஃ றுளி யாற்றுக்கும் இடையிலுள்ள நாடு.
முன்பு - பழமை, பெருமை, முன் ,வலி.
முன்மடி - மேன்மடி.
முன்மறம் - முற்கோபம்.
முன்மாதிரி - பூருவநடை.
முன்முகப்பு - ஆசாரவாயில்.
முன்முகனை - துவக்கம்.
முன்முச்சியம் - அவிழ்த்தல்.

முன்முடுகுவெண்பா முன்னிரண்டடி முடுக்காய்வருதல்.
முன்மொழி - தொடர்மொழியின்முன் னிற்குஞ்சொல், மூதுரை, வேதம்.
முன்மொழிந்துகோடல் - ஓர்யுத்தி, அது முன்னே ஒன்றனைச் சொல்லிப் பின்பு அதனை வேண்டுமிடந்தோறும்மெடுத்துக்கொள்ளல்.
முன்வாய் - உதடு, வாய்முகனை.
முன்றளை - முன்காற்கட்டு.
முன்றுதை - பாட்டன்.
முன்றுய் - பாட்டி.
முன்றுனே - முன்றோரை, மேற்போர்வை.
முன்றில் - முற்றம்.
முன்றொடரி ஒருசெடி.
முன்றோன்றல் - தமையன்.
முன்னங்கால் - முன்பக்கத்திற்கால்.
முன்னங்கை - முன்கை.
முன்னடி - முன்னே.
முன்னடியான் - காவற்றேவதை.
முன்னடைப்பான் - மிருகங்கட்கு வருமோர்நோய்.
முன்னணி - முற்படை.
முன்னணை - மாட்டுத்தொட்டி, முதற்பிள்ளை.
முன்னதம் - காலட்சணத்தொன்று, அதுபதாகைக்கையில் சுட்டுவிரலைப் பிரித்திடலாம்.
முன்னந்தொடை - தொடையின் முற்பக்கம், தோள்.
முன்னமிசம் - முற்கூறு.
முன்னம் - கருத்து, குறிப்பு, சீக்கிரம், சீக்கிரியம், மனம், முன்.
முன்னர் - ஆதி, இடம், நெஞ்சு, முன்.
முன்னவர்விலக்கு - ஓரலங்காரம், அது குறிப்பி னொருபொருளை விலக்குவது.
முன்னல் - நினைத்தல், நெஞ்சு.
முன்னவள் - தமக்கை, மூதேவி.
முன்னவன் - கடவுள், சிவன், தமையன் முதலானவன்.
முன்னவையகத்திணை - எடுத்துப்பொருடோன்ற முன்னையவற்றை விரித்துக்காட்டல்.
முன்னிடுதல் - நேரிடுதல்.
முன்னிட்டி - விலங்குணவிடுந்தொட்டி.
முன்னிரவு - இராவின்முற்பகுதி.
முன்னிரா - இரவின்முற்பகுதி.
முன்னிருட்டு - முன்னிராவிருள்.
முன்னிரை - பெருந்தொகைக்கூட்டம்.
முன்னிலவு - முன்னிராவின்நிலவு.
முன்னிலை - காரணம், முகதா, மூவிடத்தொன்று.
முன்னிலைகாரன் - கொல்லர், தச்சர், வண்ணுறிற் றலைவன்.
முன்னிலைத்தீபகம் - தீபகாலங்காரத்தொன்று.
முன்னிலைப்பன்மைவினைமுற்று - இர், ஈர் என்னும் விகுதிகளையுடையபன்மை வினைமுற்று.
முன்னிலைப்புறமொழி - முகதாவினிற்போர்க்குப்பிறருடன் பேசுதல்போற் பேசல்.
முன்னிலைமொழி - அறத்தொடுநிலை.
முன்னிலை யேவலொருமை வினைமிற்று - ஆய் உ ஆல் எல்காண் என்னும் ஐந்து விகுதிகளையும் அகர முதல் ஔகாரவிறுதிநின்ற பன்னீருயிரையும் ஞ் ண் ந் ம் ன் ய் ர் ல் வ் ழ் ள் என்னும் பதினொருமெய்களையும் ஈற்றாகவுடைய இருதிணை முக்கூற்றொருமை முன்னிலையேவல் வினைச்சொற்கள்.
முன்னிலையேவல்பன்மைவினைமுற்று - மின் உம் என்னும் விகுதிகளை இறுதியுடையாய் இடைநிலை யேலாது எதிர்காலத்தைக் காட்டி வருமொழிகள்.
முன்னிலையொருமை வினைமுற்று - ஐ ஆய் இ என்னும் விகுதிகளையுடைய விருதிணைமுக்கூற் றொருமை வினைமுற்று.
முன்னிளவல் - தமையன்.
முன்னிற்றல் - உதவுதல், முன்னேநிற்குதல்.
முன்னீடு - தலைமை, முன்னடைவு.
முன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல் - அகப்பொருட்டுறையினொன்று.
முன்னூல் - கடவுள்மொழிந்தநூல், பழையநூல், வேதம்.
முன்னூற்கேள்வன் - கடவுள்.
முன்னெழுச்சி - பழையவெண்ணம் முன்னெண்ணம்.
முன்னெறி - பழையமார்க்கம்.

முன்னெற்றி - மேனெற்றி.
முன்னேரம் - இளம்பகல்.
முன்னேர் - முன்னுழவுமாடு.
முன்னேறுதல் - முந்துதல்.
முன்னை - அக்காள், அண்ணன், ஒரு மரம், பழமை.
முன்னையோர் - பழமையோர்.
முன்னொற்றி - முன்னீடு.
முன்னோடி - முன்போவோன்.
முன்னோர் - பழையோர், மந்திரிகள்.
முன்னோர்நூல் - முதனூல்.
முன்னோன் - சிவபிரான், அருகன், கடவுள், தமையன், விநாயகன்.
முஷ்டிகன் - சஞ்சன், தூதன், இவன் மற்போரிற் சிறந்தவனாகிய பலராமனால் கொல்லப்பட்டவன்.

## மூ



மூ-ஓரெழுத்து மூப்பு, மூவென்னேவல்
மூகம் - ஊமை, ஒருபைசாசம், ஒரு மீன், தரித்திரன், மௌனம்.
மூகன்-ஓரசுரன், ஊமை, வறிஞன். அருச்சுனன்தவஞ்செய்தபோது அவன் தவத்தைச்சோதிக்கும்பொருட்டுக்கிராதவேடங்கொண்டுசென்ற சிவபெருமானால் கொல்லப்பட்டவன், இவன்பன்றியுருக்கொண்டவோரசுரன்.
மூகான் - ஊமை, செவிடன்.
மூகலன் - இராக்கதன்.
மூகாத்தல் - மௌனமாயிருத்தல்.
மூகாம்பை - சையமலைக்கருகே எழுந்தருளியிருக்கும் தேவியார் பெயர்.
மூகை - ஊமை.
மூக்கணாங்கயிறு - நாணயக்கயிறு.
மூக்கரிகத்தி-வெற்றிலைக்காம்பரிகருவி.
மூக்கறட்டை - ஒருபூடு.
மூக்கறை - நாசியறுபட்டவன்.
மூக்கறைச்சி - அரிதாரம், ஒருசெடி.
மூக்கன் - முன்கார்ச்சிப்பின்குருத்து.
மூக்காங்கயிறு - மூக்கணாங்கயிறு.
மூக்காங்கொழுந்து - நாசிமுனை.
மூக்காந்தண்டு - மூக்கினடுத்தண்டு.
மூக்காவளை, மூக்காவனை } ஒருபூடு.

மூக்கிரட்டை - மூக்கறட்டை.
மூக்கிலழகி - குமிழ்.
மூக்கிலி - சொக்களிப்பூடு, மூக்கறை.
மூக்கில் - வசம்பு.
மூக்கிறைச்சி - ஒருபூடு.
மூக்கிற்கல் - காக்கைக்கல்.
மூக்கு - நாசி இது பஞ்சப்பொறியினொன்று, பறவைமூக்கு, வித்துக்களின்மூக்கு, விளக்குமுதலியவற்றின் மூக்கு.
மூக்குக்கண்ணாடி மூக்கிலிடுங்கண்ணாடி.
மூக்குக்கொழுந்து-மூக்காங்கொழுந்து.
மூக்குச்சளி - மூக்கிற்சளி.
மூக்குச்சாத்திரம் - சரசாத்திரம்.
மூக்குச்சிந்துதல் - மூக்குச்சீறுதல்.
மூக்குத்தழுக்கி, மூக்குத்தி } ஓராபரணம்.
மூக்குத்தூள் - புகையிலைப்பொடி.
மூக்குப்பிளவை - ஒருசிலந்தி.
மூக்கூழ்தல் - கவிந்து விழுதல்.
மூக்கூளை - மூக்குச்சளி.
மூக்கொலி-நாசியிற்பிறக்குமோசை.
மூக்கொலியன் - சங்கு.
மூக்கொற்றி - ஒருகாய், ஒருகோரை, மூக்குத்தி.
மூக்கொற்றிப்பூண்டு - ஒரு பூண்டு.
மூங்கர் - மூங்கையர்.
மூங்கா - கீரி.
மூங்காப்பிள்ளை - கீரிப்பிள்ளை.
மூங்கி - சிறுபயறு.
மூங்கிலரிசி - மூங்கிற்கொட்டை.
மூங்கிலுப்பு - ஒருப்பு.
மூங்கில் - ஒருமரம்.
மூங்கிற்குத்து - மூங்கிற்போத்து.
மூங்கிற்குழல், மூங்கிற்குழாய் } வேய்ங்குழல்.
மூங்கிற்புதர் - மூங்கிற்கிளை.
மூங்கிற்போத்து - மூங்கில்முளை.
மூங்கிற்றண்டு - மூங்கிற்கழி.
மூங்கினெல்-குறிஞ்சியுணவிலொன்று.
மூங்கின்முத்து-மூங்கிலிற்பிறந்தமுத்து.
மூங்கு - சிறுபயறு.
மூங்கை - ஊமை.
மூங்கையர் - ஊமையர்.
மூசல் - சாதல், மூசுதல், மொய்த்தல்.
மூசாந்தம் - வெண்டாமரை.

மூசாப்பு - மந்தாரம், மூட்டுமூச்சு.
மூசாம்பரம் - காசுக்கட்டி.
மூசாலே - அந்தசந்தமற்றது, சோம்பு.
மூசுதல் - மூசல்.
மூசை - மட்குகை.
மூச்சடக்கல் - சுவாசபந்தநம்பண்ணல்.
மூச்சன் - ஆண்மைக்காரன்.
மூச்சு - ஆண்மை, உயிர்ப்பு, சுவாசம், பலம்.
மூச்சுக்காட்டுதல் - ஆண்மைகாட்டுதல்.
மூச்சுத்தாங்கல் - மூச்சடைப்பு.
மூச்சுப்பறிதல் - சுவாசம் வெளியே செல்லல், பலவீனப்படுதல்.
மூச்சுப்பிடிக்குதல் - மூச்சமர்த்தல்.
மூச்சுப்பேச்சு - அசுமாற்றம்.
மூச்சுப்பொறுத்தல்-மூச்சுத்தாங்குதல்.
மூச்சுவாங்கல் - மூர்ச்சையுள்ளேஅடக்கல்.
மூச்சுவிடுதல் - சுவாசம்விடல்.
மூச்செடுத்தல் - மூச்சுவாங்குதல்.
மூச்செறிதல் - நெடுமூச்சுவிடுதல்,மூச்சுவிடுதல்.
மூச்செறிவு - மூச்செறிதல்.
மூச்சை - மூர்ச்சை.
மூச்சொடுங்கல் - சாதல், மூச்சடங்கல்.
மூஞ்சல் - மொய்த்தல்.
மூஞ்சி - மூஞ்சை.
மூஞ்சிசுண்டுதல் - முகங்கருகல்,மூக்கை நெரிதல்.
மூஞ்சுறு } சுதந்தரி.
மூஞ்சூறு }
மூஞ்சூற்றுமுள்ளன் - ஒருகிழங்குக்கொடி.
மூஞ்சை - கோணியமுகம்,நீண்டமுகம், நீண்டமூக்கு.
மூஷககர்ணி } எலிச்செவிக்கீரை.
மூஷகபர்ணி }
மூஷகம் - பெருச்சாளி.
மூஷகவாஹநன் - விநாயகன்.
மூஷகவிரோதி } பூனை.
மூஷகவைரி }
மூஷகாரதி - பூனை.
மூஷம் - மூஷகம்.
மூஷாதுத்தம் - துருசு. [ளே.
மூடகருப்பம் - கருப்பத்திலிருந்த பிள்
மூடக்கொத்தான் - முடக்கொற்றான்.
மூடதை - அறியாமை.
மூடத்தனம் - அறிவின்மை.
மூடமதி - அறிவிலி,
மூடம் - அறிவின்மை, எட்டுமரக்கால் கொண்ட ஓரளவை, ஐயம், குளிர், மந்தாரம்.
மூடர் - அறிவிலார், கீழ்மக்கள்.
மூடல் - மூடுதல், மேன்மூடி.
மூடவிருத்தி - தாமதவிருத்தி.
மூடனம் - மிளகு.
மூடன் - அறிவீனன், மந்தன்.
மூடாத்துமா - மதிகேடன்.
மூடி-கொத்தமல்லிப்பூடு, மூகடி, மூடப்பெண், மேன்மூடி.
மூடிகம் } எலி, பெருச்சாளி, மலையாள தேயத்தினோர் பகுதி.
மூஷிகம் }
மூஷிகவாகனன் - விநாயகன்.
மூஷிகாங்கன் } விநாயகன்.
மூஷிகாஞ்சனன் }
மூடிகாராதி - பூனை.
மூஷிதம் - திருடப்பட்டது.
மூடுகுப்பாயம் - மேற்போர்வை.
மூடுசன்னி - மொய்யற்சன்னி.
மூடுசாந்து - மேற்புறஞ்சாந்துக்காறை போட்டிருப்பது.
மூடுகூளை - மொய்ப்பு
மூடுதல் - போர்த்தல், மறைக்குதல்.
மூடுபனி - மறைபனி.
மூடை - பொதிப்பை.
மூட்டம் - ஆயத்தம், உலைமுகம், கம்மாளர் கருவி, மூடியிருப்பது, விறகு.
மூட்டம்பண்ணுதல் - மூட்டங்கட்டுதல்.
மூட்டல்-இசைத்தல்,எவிவிடுதல், கோண்மூட்டுதல், சந்திப்பு, பற்றப்பண்ணுதல்.
மூட்டு - எழுச்சி, கடிவாளம், கோள், பொருத்து, மூட்டென்னேவல்.
மூட்டுச்சாட்டு - கோள்.
மூட்டுதல் - மூட்டல்.
மூட்டை - ஒருபூச்சி, சாமான்பை.
மூண்டன் - மிளகு.
மூதணங்கு - காடுகாள்.
மூதண்டகஷாயம் - அறுகும் மிளகும் சேர்ந்த கஷாயம்.
மூதண்டமலை - சுஷணிகாசலம்.
மூதண்டம் - பழையலோகம்.
மூதண்டவேடத்தான் - தாமலே.
மூதரித்தல் } ஒப்புவித்தல்.
மூதலித்தல் }
மூதலிப்பு }

மூதறிஞர் - பேரறிவுடையோர்.
மூதறிவன் - கடவுள்.
மூதறிவு - பேரறிவு.
மூதா - தம்பலப்பூச்சி.
மூதாக்கள் } முதியோர்.
மூதாட்கள்
மூதாட்டி - முதியவள்.
மூதாதை - பாட்டன்.
மூதாய் - பாட்டி.
மூதாளர் - முதியோர்.
மூதிக்கம் - சிவனார்வேம்பு.
மூதிற்பெண்டிர் - மறக்குடிமகளிர்.
மூதிரி - எருமை.
மூதிரை - திருவாதிரைநாள்.
மூதுகுருகு - முதற்சங்கத்தார், செய்த இசைத்தமிழ் நூல் இது பெருங்குருகு எனவும்படும். இஃதிறந்தொழிந்தது.
மூதுணர்வு - பேரறிவு.
மூதுநாரை - முதற்சங்கத்தார், செய்த இசைத்தமிழ் நூல் இதுவும் இறந்தொழிந்தது.
மூதுரை - ஒருசெய்யுள், பழமொழி.
மூதூர்ப்பொழில் - இலவந்திகைச்சோலை.
மூதேவிக்கொடி - நாகம்.
மூதேவி - சேட்டை.
மூதேவிபுத்திரன் - வறியன்.
மூதை - இசங்கு, மூதணங்கு, வெட்டிச் சுட்டகாடு.
மூத்தல் - முதிர்தல்.
மூத்தார் - புருஷன் தமையன்.
மூத்தாள் - அக்காள், கிழவி, தலைவி, மூதேவி.
மூத்திரகிரிச்சம் } ஒருநோய், கல்லடைசல்.
மூத்திரகிரிச்சனம்
மூத்திரகிறீச்சனம்
மூத்திரக்குளவி - ஒருகுளவி.
மூத்திரசங்கம் - நீரிழிவு.
மூத்திரசுக்கிலம் - வெட்டைநோய்.
மூத்திரதோஷம் - சலரோகம்.
மூத்திரத்தடை - நீரடைப்பு.
மூத்திரபுடம் - கீழ்வயிறு.
மூத்திரப்பை - சலப்பை.
மூத்திரம் - சிறுநீர்.
மூத்திரரோகம் - நீர்வியாதி.
மூத்திரலம் - சலக்கடுப்பு.
மூத்திராகாதம் - சலவடைப்பு.
மூத்திராசயம் - சலப்பை.
மூத்திராதிக்கியம் - நீர்வியாதி.
மூத்திரோற்சங்கம் - இரத்தரோகம்.
மூத்தோர் - புலவோர், மந்திரிகள், முதியோர்.
மூத்தோன் - அண்ணன், முதிர் வயதுடையோன், விநாயகன்.
மூப்பர் - முதன்மைக்காரர், முதியோர்.
மூப்பன் - பறையரிற்றலைவன், முதன்மைக்காரன்.
மூப்பு - தலைமை, முதுமை.
மூப்தல் - மூடுதல்.
மூரல் - சிரிப்பு, சோறு, பல்.
மூரி - எருது, எருத்துத்திமில், எருமை, ஓலை மூரி, சோம்பல், நெரிவு, பழமை, பெருமை, வலி.
மூரிமுரித்தல் - திமிர்தீரவுடற்பொருத்து நெறித்தல்.
மூரியூரிதி } சிவபிரான்.
மூரிவாகநன்
மூர்க்கநாயனார் - தொண்டைநாட்டிலே வேளாளர் குலத்திலே தலைமைபெற்று விளங்கிய ஒரு சிவபக்தர், இவர் தம்மிடத்துள்ள திரவியங்களையும், நிலம் அடிமை முதலிய வற்றையும் மஹேச்சுவர பூசையின் பொருட்டுச் செலவு செய்துவிட்டு, வேறுவழியில்லாமையால் தாம் முன்னேபயின்ற சூதாட்டத்தால் பொருள்சம்பாதித்துத் தாம் எடுத்துக்கொண்ட காரியமாகிய மஹேச்சுவர பூசையைக் குறைவற நடத்தி வந்தவர்.
மூர்க்கம் - உக்கிரம், கோபம், சலஞ்சாதித்தல், நாகப்பூச்சி.
மூர்க்கர் - கீழ்மக்கள்
மூர்க்கன் - ஆங்காரன்.
மூர்க்கை - ஆங்காரி, மூர்க்கம்.
மூர்ச்சனம் - கலக்குதல், மூர்ச்சனை.
மூர்ச்சனை - நினைவுமயக்கம்.
மூர்ச்சாலன் - மூர்ச்சாரோகி.
மூர்ச்சிதம் - அறிவின்மை, உயரம், நினைவுமயக்கம், வாட்டம்.
மூர்ச்சித்தல் - நினைவுமயங்கிக்கிடத்தல்.
மூர்ச்சிப்பு - மூர்ச்சிதம்.
மூர்ச்சை - அறிவுமயக்கம், வாட்டம்.
மூர்ச்சைதீர்த்துயிர்தருமருந்து - குற்றுயிர் தருமருந்து.
மூர்ச்சைவாயு - அறிமை மயக்குமோர்வாயு.

மூர்த்தகர்ணி - குடை.
மூர்த்தகன் - க்ஷத்திரியன்.
மூர்த்தகோலம் - குடை.
மூர்த்தகம் - தலைமயிர்.
மூர்த்தம் - இருகடிகைப்பொழுது, உடம்பு, உருவுடையது, தலை.
மூர்த்தரசம் - கஞ்சிநுரை.
மூர்த்தவேட்டணம் - தலையணி.
மூர்த்தன்னியம் - கிளர்ச்சி.
மூர்த்தாபிஷிக்தன் சத்திரியன், மந்திரி.
மூர்த்தி - அருகன், உடல், உருவம், சிவன், தலைவன், தேவன், புத்தன், பொருள், மாதிரி.
மூர்த்திகாம் - தெய்வீகம், தேவச்செயல்.
மூர்த்திகள் - அஷ்டமூர்த்திகள்.
மூர்த்திகன் - குமரன், வயிரவன்.
மூர்த்திநாயனார் - பாண்டி நாட்டிலே மதுராபுரியிலே வைசிய குலத்திலே அவதரித்து விளங்கிய ஒரு சிவபக்தர், தாம் செய்துவந்த சந்தநத்திருத்தொண்டுக்குச் சந்தநக்கட்டை அகப்படாமல் இடையூருண்டாகத் தமது முழங்கையைச் சந்தநக் கட்டை போலக் கல்லிலே எலும்பு தேயும்படி தேய்த்த மனவுறுதியுடையவரும், மதுரை நகருக்கு அரசனாகும்படி சிவாஜ்ஞையுண்டானபோது, சடாமுடியே கிரீடமும், ருத்ராக்ஷமே ஆபரணமுமாகக் கொண்டு அரசுசெய்தவரும் இவரே.
மூர்த்திமம் - சரீரம்.
மூர்த்திமான் - கடிநதிரவியம்
மூர்த்தனி - தலை.
மூலகதலம் - ஒருமுருங்கை.
மூலகந்தம் - வெட்டிவேர்.
மூலகபல்லவம் - முருங்கைமரம்.
மூலகம் - கிழங்கு, முள்ளங்கி.
மூலகருமம் - சடகருமம்.
மூலகன் - நாரீகவசன், இவன் அசுமகன் புத்திரன், பரசுராமன், க்ஷத்ரியநாசஞ்செய்துவரும்போது இவன் தன் மனைவியை வைத்துவிட்டிறந்தான், அவள் மூலமாக மீளவும் க்ஷத்திரிய வமிசம் தழைத்தமையால் இவன் மூலகன் என்னும் பெயர் பெற்றான்.
மூலகாரியம் - முதற்காரியம்.
மூலக்கடுப்பு - மூலநோய்.
மூலக்காப்பன் - ஒருகரப்பன்.
மூலக்கரணி - கற்கடகபாஷாணம்.
மூலக்கிரந்தம் - முதனூல்.
மூலக்கிரந்தி - ஒருநோய்.
மூலக்கிராணி - ஒரு கிராணிநோய்.
மூலக்கொதி - ஒருநோய்.
மூலசத்தி - குண்டலிசத்தி.
மூலசம் - வேருற்பத்திப்பயிர்.
மூலசாகிநம் - வேர்விளைநிலம்.
மூலச்சோதி - கடவுள்.
மூலதனம் - மூலத்திரவியம்.
மூலதிரவியம் - மூலதநம்.
மூலதேவன் - கஞ்சன்.
மூலத்தம்பம் - ஒரு சிற்பநூல்.
மூலத்தனம் - முதற்பணம்.
மூலத்தானம் } ஆகாயம், கடவுள், கெற்பக்கிரகம்.
மூலஸ்தானம் }
மூலத்திரவியம் - அடியுரக்கம்.
மூலத்தின்சாரம் - அமுரி, இந்துப்பு.
மூலத்துருவம் - கிரகவீதியின் மூலநீளவு.
மூலநாடி - குதநாடி.
மூலநாள் - மூலநட்சத்திரம்.
மூலபஞ்சாட்சரம் - மூலமந்திரம்.
மூலபத்திரன் - கஞ்சன்.
மூலபலதம் - பலா.
மூலபலம் - அடிப்பலம், அடிப்பெலமாயிருக்குஞ்சேனை.
மூலபாடப் - உரைதவிர்த்தெழுதும்பாடம்.
மூலபாடை } ஆதிபாஷை
மூலபாஷை }
மூலப்படை - மூலபலம்.
மூலப்பகுதி } பிரபஞ்ச காரணமான மாயை.
மூலப்பிரகிருதி }
மூலப்பொருள் - கடவுள், மூலதனம்.
மூலமந்திரம் - பஞ்சாட்சரமந்திரம்.
மூலமலம் - ஆணவமலம்.
மூலம் - ஆதி, உரையில்லாப்பாடம், ஒருநாள், ஒருநோய், காரணம், கிழங்கு, சமீபம், சொந்தம், தலைமை, தாலம்பபாஷாணம், பாதம், மூலாதாரம் இது ஆதாரமாறினொன்று, வேர்.
மூலவல்லி - வெற்றிலை.
மூலவாயு - ஒருநோய்.
மூலவிக்கிரகம் - மூலத்தான விக்கிரகம்.
மூலவியாதி - மூலநோய்.

மூலவிருள் - ஆணவமலம்
மூலவுவம் - ஒன்றினடங்கி யிருப்பதை எடுத்துவமிப்பது (உ-ம்) ஆணவம் போலும் பிரகிருதி.
மூலவேர் - மூதல்வேர்.
மூலன் - பெருந்தலைச் சாத்தனரால் இகழ்ந்து பாடப்பட்ட ஒருசிற்றரசன், அப்புலவர்பாடிய "பொய்கைநாரை" என்னும்பாடலிலே 'மழனுடைப்பெருமரந் தீர்ந்தெனக் கையற்றுப் பெரூது பெயரும் புள்ளினம்போல நின்னசைதரவந்துநின்னிசைநுவல் பரிசிலேன்,வறுவியேன்பெயர்கோ' என்றுபாடி நொந்து சென்றனர்.
மூலாக்கிரம் - அடியுநுனியும்.
மூலாக்கினி - உதராக்கினி.
மூலாசனம் - வேர்கிழங்கு புசித்தல்.
மூலாதாரம் - ஆறுதாரத்தில் ஒன்று அது குதத்தானம்.
மூலி - கிழங்கு, மருந்துபூடு, வேருள்ள மரம்.
மூலிகன் - மரத்தடியிலிருக்கும் தவசி.
மூலிகை - மருத்துப்பூடு, மருந்துவேர்.
மூலிக்காரணம் - அறுதிமுறி, ஆதி.
மூலிக்கை - மூலிகை.
மூலியம் - கொண்டபொருள்,சம்பளம், விலை.
மூலேரம் - சடை.
மூலை - கோணம், வீடு.
மூலைக்குடா - கோணத்துமுடக்கு.
மூலையரம் - முக்கோணவரம்.
மூலையோட்டம் - சரிகோணமற்றது.
மூவசைச்சீர் - நேரசையாவது நிரையசையாவது தன்னோடு தானேனும் ஒன்றோடொன்றேனும் புணர்ந்து மூன்றசையடக்கிவருவது.
மூவட்சித்தொக்கு - தேங்காய்நார்.
மூவரசர் - மூன்றிராசாக்கள், அவர் சேரன், சோழன், பாண்டியன்.
மூவர்- திரிமூர்த்திகள், சைவசமயாசாரியர் மூவர் அவர் அப்பர் சுந்தரர் திருஞானசம்பந்தர் என்பவர்.
மூவாசை - மூன்றாசை அது மண், பெண், பொன்.
மூவாமுதல் - கடவுள், பரமேசுவரன்.
மூவிசை-மந்தம், மத்திமம், தாரம் எனு மூன்று விகற்பமான இராகங்கள்.

மூவிடம் - மூன்றிடம், அவை தன்மை முன்னிலை படர்க்கை.
மூவிலை - நரிப்பயறு.
மூவிலைவேல் - சூலம்.
மூவுதல் - முடிதல், விலகுதல்.
மூவுலகம் - மூன்றுலகம் அவை, பூமி அந்தரம், சுவர்க்கம்.
மூவுலகளந்தோன் - விஷ்ணு.
மூவுலகாதரன் - கடவுள்.
மூவுலகாளி - இந்திரன், கடவுள்.
மூவுலகு - மூவுலகம்.
மூவுலகுணர்ந்தோன் - அருகன், கடவுள்.
மூவுலகுண்டோன் - விஷ்ணு.
மூவுலகேந்தி - கடவுள்.
மூழி - அகப்பை, குளம், சோறு, துடுப்பு, மத்து.
மூழிக்களம் - ஒரு விஷ்ணுக்ஷேத்திரம்.
மூழை-அகப்பை,சோறு,துடுப்பு,மத்து.
மூழ் - முகிழ்.
மூழ்தல் - அமிழ்த்தல், கெடுதல்.
மூழ்த்தல் - மொய்த்தல்.
மூளல் - மூளுதல்.
மூளி - காதறை,பெட்டி,விளிம்பற்றது.
மூளிவாய் - பெட்டி.
மூளுதல் - கூடுதல், நெருப்பு முதலிய பற்றல், முபறல்.
மூளை - தலை முதலியவற்றின் மூளை.
மூள்தல் - மூளுதல்.
மூறவர் - பெருங்குறும்பை.
மூன்று - ஒரெண்.
மூஷிகம் - ஒருதேசம், இது தற்காலம் கொச்சி எனப்படும், விநாயகர் வாகநம், சௌபரி முனிவன் மனைவியாகிய மநோமயை என்பவளைக் கிரவுஞ்சன் என்னும் கந்தர்வராஜன் கண்டு மோகித்து அவள் கையைப்பிடித்தான், அதுகண்டமுனிவர் வெகுண்டு கிரவுஞ்சனை, மூஷிகமாகுகவென்று சபித்தார் அவ்வாறே அவன் மூஷிகமாகி பலிபீடமுள்ள விடங்களையெல்லாம் அகழ்ந்து திரிகையில் விநாயகக்கடவுள் அந்தமூஷிகத்தைத் தமக்கு வாகநமாக்கிக்கொண்டனர்.
மூஷிகம் - பெருச்சாளி.

---

## மெ



மெச்சல் } கொண்டாடல், துதித்
மெச்சுதல் } தல், புகழ்தல்.
மெட்டு-ஆயத்துறை,கிராமத்தைச்சூழ்ந்தகாடு, முனிப்பு, சுங்கச்சாவடி.
மெது - மிருது.
மெதுக்கு - ஒருசெடி.
மெதுமெதுத்தல் } மிருதுவா யிருத்
மெதுமெதெனல் } தல்.
மெதுமெதுப்பு - நகைவு.
மெத்த - மிக.
மெத்து - மென்மை.
மெத்துதல் - மிகுதல்.
மெத்தெனல் } மிருது, சாந்தகு
மெத்தெனவு } ணம்.
மெத்தை - ஒருபூடு, அமளி, சட்டை, மேல்வீடு.
மெத்தைப்பாய் - ஒருவகைப்பாய்.
மெத்தைவீடு - தட்டுவீடு.
மெந்திரி - வதண்டை.
மெய் - உடல், இது பஞ்சப்பொறியி ளொன்று, உண்மை, ஒற்றெழுத்து, சொல், சொற்பொருள்.
மெய்கண்டதேவர் - திருவெண்ணெய் நல்லூரிலிருந்த வேளாளராகிய சுவேதவனப்பெருமாள் இவர் பரஞ்சோதி முனிவருடைய மாணாக்கர் சித்தாந்த சாத்திரத்தின் மெய்பொருளுணர்ந்து உலகுய்ய வெளிப்பட்டருளிய குருபீடமாதலால் மெய்கண்டதேவர் என்னும் காரணப்பெயர்பெற்றார், வடமொழிச் சிவஞானபோதத்தைத் தமிழிலே மொழிபெயர்த்து அந்தப்பெயரினாலேயே வெளியிட்டவர் இவரே இவரதுமாணாக்கர் அருணந்தி சிவாசாரியர்.

அருணந்தி சிவாசாரியர்தாம்மெய்கண்டதேவருக்கு வயதினாலும் கல்வியறிவினாலும் சிறந்தவரென்று நினைந்து தம்மாணாக்கரோடு அவரிடஞ்சென்று இறுமாப்போடு உலாவி நின்றார். அப்பொழுது அருணந்தி சிவாசாரியர் ஏவலால் அவர் மாணாக்கருளொருவர் மெய்கண்ட தேவரை வணங்கி அகங்காரமாவது யாதென்றுவினவ, மெய்கண்டதேவர், நும் குருமூர்த்தி நிற்குநிலையே அதுவாம் என்றருளிச்செய்ய, அருணந்திசிவாசாரியர் மெய்கண்டான் திருவடியிலேவிழுந்து, திருவடி யிரண்டையும் பற்றிக்கொண்டு தமக்கு ஞானோபதேசம் செய்தருளுமாறு வேண்டிச் சிவஞான போதநூலைக் கேட்டறிந்தார் என்பது கர்ணபரம்பரை, இவர்கள் காலம் அறுநூற்றறுபதுக்கு முன்னுள்ளது, இந்த மெய்கண்டதேவர் அவதாரஞ் செய்திலராயின், தமிழ்நாட்டில், ரௌரவாகமத்திற் கூறப்பட்டசிவஞானபோதபடலமாகிய சகலாகம நவநீதம் எளிதிலே வெளிப்படுதலும் சைவம் ஏனைய சமயப் பெரும்படைகளை யெதிர்த்துப் பொருதுவெற்றித் தம்பம் நாட்டுவதும் இல்லையாம்.

இந்தக்கலியின் கொடுமைக்கஞ்சிச் சமயாசாரியரெல்லாரும் மறைந்த இக்காலத்தில் நாற்றிசையிலும் ரணபேரி முழக்கி வளைந்திருக்கும் புறச்சமயவாதிகள் படைத்திரள் இச்சிவஞானபோத மென்னும் பேரகழிக்கும் சிவஞானசித்தி யென்னும் வாளாஸ்திரத்துக்குமே அஞ்சி நிலைதளர்கின்றது, அந்தப் பேரகழியும் அந்த வஸ்திரமு மில்லையாயின்,சைவம் நெடுங்காலத்திற்கு முன்னமே அரசிழந்துவிடும், அவ்வகழியைக்கடக்கு மாற்றலும் அவ்வஸ்திரத்திற்கு மேற்பட்ட வஸ்திரமும், உலகத்தில் வேறெந்தச் சமயமும் எக்காலத்திலும் பெறுதென்பது நன்கு துணியப்பட்ட உண்மையாம்.

மெய்காப்பாளர் - உற்றகாவற்காரர்.
மெய்காவல் - உற்றகாவல்.
மெய்கூறல் - உண்மைபேசல், அது மும்மொழியினொன்று.
மெய்க்கவசம் - மார்ச்சட்டை.
மெய்க்கிளை - மெய்முளை.
மெய்கீர்த்திமாலை - ஒருபிரபந்தம், அது சொற் சீரடியென்னுங் கட்டுரைச் செய்யுளாற் குலமுறையிற் செய்த கீர்த்தியைக்கூறுவது.

மெய்க்கூத்து - சாந்திக்கூத்து நான்கிஞெளொன்று.
மெய்க்கொட்டை - பலாக்காய் முளை.
மெய்க்கொள்ளல் - நம்புதல்.
மெய்கோள் - முன்னறவாங்கல்.
மெய்சொல்லல் - உண்மைபேசுதல்.
மெய்ச்சுதல் - புகழ்தல்.
மெய்ஞ்ஞாலம் - உண்மையானநலம்.
மெய்ஞ்ஞானசாரம் } ஒருநூல்.
மெய்ஞ்ஞானதீபம் }
மெய்ஞ்ஞானநீலகண்டேசுவரர் - திருப்பைஞ்ஞீலியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
மெய்ஞ்ஞானம் - உண்மைஞானம்.
மெய்ஞ்ஞானவிளக்கம் - ஒருநூல்.
மெய்ஞ்ஞானி - உண்மைக்கியானி.
மெய்த்தல் - உண்மைப்படல்.
மெய்நலம் - வலி.
மெய்நூலன் } துரோணாசாரியன்.
மெய்நூலாளன் }
மெய்ப்புகுகருவி - கவசம்.
மெய்ப்படாம் - திரைச்சேலை, நிலையங்
மெய்ப்படுதல் - உண்மைப்படுதல். [கி.
மெய்ப்படுத்தல் } உண்மைப் படுத்தல்.
மெய்ப்படுத்துதல் }
மெய்பரிசம் - தொட்டுணருமுணர்வு.
மெய்ப்பாடு - குறிப்பு வெளிப்படுக்குந்தோற்றம்.
மெய்ப்பித்தல் - மெச்சுவித்தல், மெய்ப்படுத்தல்.
மெய்ப்பீரம் - மேகம்.
மெய்ப்பு - மெய்ச்சிக்கொள்ளப்படல், மெய்மை.
மெய்ப்பை - சட்டை.
மெய்ப்பொருணயனார் - தமது அரண்மனையினுள்ளே புகுந்து சைவாகமோபதேசஞ்செய்ய வந்தே னென்று கூறி அங்கே யொரு தனியிடத்திற் கொண்டு சென்றிருந்து உபதேசஞ் செய்வார் போல, மறைத்து வைத்திருந்த உடைவாளினல் தம்மைக் குத்தி வீழ்த்திய முத்திநாதன் என்னும் பகையரசனுக்கு அவ்வுயிர் நீங்குஞ்சமயத்திலும் ஒருவரும் இடையூறுசெய்யாதபடி பக்கத்திலே நின்றவர்களைத் தடுத்து உயிர்விட்ட பக்தசிரோமணியாகிய இவர் சேதி நாட்டிலே திருக்கோவலூரிலே மலையமா நாட்டாருக்கு அரசாயிருந்தவர்.
மெய்ப்பொருள் - உண்மை, கடவுள், கல்வி, நற்போதனை, மெய்ப்பாக்கியம்.
மெய்ப்பொறி - கன்மேந்திரிய ஞானேந்திரியங்கள்.
மெய்மயக்கம் } ஒற்றெழுத்தியைபு.
மெய்மயக்கு }
மெய்மலம் - உடம்பின்மாசு, நரகல்.
மெய்மறதி - கோபம், தன்னைமறத்தல், வெறி.
மெய்மறத்தல் - தன்னைமறத்தல்.
மெய்மாசு - உடம்பின்மாசு, மலம்.
மெய்ம்மை - உண்மை, கருத்து, நினைவு.
மெய்மொழி - வேதம். [வு.
மெய்யர் - பார்ப்பார், மகார், முனிவர், மெய்சொல்வோர்.
மெய்யறிவு - மெய்ஞ்ஞானம்.
மெய்யன் - கடவுள், சத்தியவான்மகன்.
மெய்யிலி - பொய்யன். [றிவு.
மெய்யுணர்வு - உண்மையறிதல், நல்ல
மெய்யுரை - சத்தியவாசகம், இது வாக்கி நற்குண நான்கினொன்று.
மெய்யுரைத்தல் - உரைசொல்லல், சத்தியஞ்சொல்லல்.
மெய்யுவமம் - உண்மையையே யெடுத்துவமிப்பது (உ-ம்) சூரியப் பிரகாசம்போன் மணி யொளி.
மெய்யுறுபுணர்ச்சி - மெய்தொட்டுப்பயிறல்.
மெய்யுறை - கவசம்.
மெய்யெழுத்து - ஒற்றெழுத்து.
மெய்வகை - உறுமிகழ்வைக்கூறுவது.
மெய்வழிநீர் - அமுரி.
மெய்வாழ்த்து - உறுப்புகளை முறையே கூறுவது.
மெய்விரதன் - தருமன், வீடுமன்.
மெய்விவாகம் - தலைமகனுந்தலைவியும் இருசுற்றமு மிசைந்து முடிக்குமணம்.
மெருகிடுதல், மிருதுவாக்குதல், மெழுகிடுதல்.
மெருகு - ஒருகிழங்கு, மிருது, மெழுக்கு.
மெருகெண்ணெய் - மினுக்கெண்ணெய்.
மெலிதல் - இடைதல், இளைத்தல்.
மெலித்தல் - இசையை மெல்லிதாக்கல், வல்லினவெழுத்து வழங்குதல்.
மெலிந்தோன் - விபன்னன்.

மெலியது - மென்மையானது.
மெலிவடைதல் - சஞ்சலப்படல்.
மெலிவித்தல் - கனங்குறைத்தல், மிருதுவாக்கல், வாட்டல்.
மெலிவு - இளைப்பு, வருத்தம்.
மெலு - அற்பன்.
மெலுக்கு - வெளியலங்காரம்.
மெல்கல் - இலேசாதல்.
மெல்ல - மிருதுவாக.
மெல்லணை - மெத்தை.
மெல்லல் - மெல்லுதல்.
மெல்லன் - நெய்தனிலத்தலைவன்.
மெல்லி - பெண்.
மெல்லிக்கை - ஒஞ்சட்டை.
மெல்லிது - மிருது.
மெல்லிமை - மென்மை.
மெல்லியது - மெல்லிது.
மெல்லியநல்லாள் - பெருமாட்டி.
மெல்லியர் - மாதர், மெலிந்தவர்.
மெல்லியலார் - பெண்கள்.
மெல்லியல்-பெண். மரத்திளங்கொப்பு.
மெல்லியார் - எளியோர், பெண்கள், மென்மையோர்.
மெல்லியார்கூந்தல் - அம்மையார் கூந்தல்.
மெல்லியாள் - பெண்.
மெல்லிலை - வெற்றிலை.
மெல்லினம் - மெல்லொலியெழுத்து.
மெல்லினவெதுகை-எல்லாச் சீர்க்கண்ணும் மெல்லின வெழுத்துகளெதுகையாய் வருவது.
மெல்லுதல் - கறித்தல்.
மெல்லெழுத்து-மெல்லினவெழுத்து.
மெல்லெனல் - மந்தக்குறிப்பு
மெல்லெனவு - மிருது.
மெல்லொற்று - மெல்லினவொற்று.
மெழுகல் - மெழுகுதல்.
மெழுகிடல் } தரைமெழுகுதல், மெழுகு கட்டுதல், மெழுகு பூசுதல்.
மெழுகிடுதல் }
மெழுகு - அரக்கு, மெழுகென்னேவல்.
மெழுகுகட்டுதல் - மெழுகுபூசுதல்.
மெழுகுசாணை - ஒருசாணை.
மெழுகுசீலை - மெழுகுதோய்த்த புடைவை.
மெழுகுசேர்வை - ஒருசேர்வை.
மெழுகுதல்-நிலத்தைப்பூசுதல், பூசுதல்.
மெழுகுதிரி - மெழுகாலாயதிரி.
மெழுகுத்தட்டு - மெழுகுத்தகடு.
மெழுகுத்தண்டு - மெழுகுதிரி.
மெழுகுபதம் - மருத்தெண்ணெய்க் கடுகு மெழுகுபோலுருளும் பதம்.
மெழுகுபனையன் - ஒருவைசூரி.
மெழுகுபாகல் - ஒருபாகல்.
மெழுகுமண் } பசைமண்.
மெழுமண் }
மெழுகுவத்தி - மெழுகுதிரி.
மெழுக்கிடுதல் } மெழுகுதல்.
மெழுக்கு }
மெள்ள - மிருதுவாய்.
மென்கணம் - மெல்லினம்.
மென்பால் - மருதநிலம்.
மென்புரட்டு - கைமாற்றிலே புரட்டிவருதல்.
மென்மேல் - ஒன்றன்மேலொன்று.
மென்மை - மிருது, அது எண்வகை பூதிஞென்று, சாத்துவித குணத்துமொன்று.
மென்றல் - வெற்றிலை முதலியமெல்லுதல்.
மென்றொடர் - மெல்லெழுத்துத் தொடர்ந்து வருவது.
மென்னடை - அன்னம், மிருதுவானநடை.
மென்னி - மிடறு.
மென்னிலை -காலட்சணத்தொன்று, அது பெருவிரலை மடக்கி மற்றைய விரல்களை விரித்து நீட்டுதலாம்.
மென்னை - சொத்தை, மிடறு.

## மே



மே - அன்பு, ஓரெழுத்து.
மேககாக்கையோன் - சீர்பந்தபாஷாணம்.
மேகலகங்கை - நர்மதாநதி.
மேகசாந்தி } ஒருநோய்.
மேககாரகம் }
மேககாலம் - கார்காலம்.
மேககெர்சனம் - இடி.
மேகக்கருப்பக்கல் } ஆட்டுக்கல்.
மேகக்கல் }
மேகக்கிராணி - ஒரு கிராணிநோய்.
மேகசத்தேகம் - ஒருஸம்ஸ்கிருதநூல்.
மேகசம் - மேகத்திற்பிறப்பன, மேகத்திலுண்டாகிற கோழிமுட்டையளவுள்ள முத்து, முத்து.
மேகசாரம் - கர்ப்பூரம்.
மேகசாலம் - ஒருமணி, முகிற்கூட்டம்.

மேகசிந்தகம் } சாதகப்பட்சி.
மேகசீவகம் }
மேகசூலே - ஒருசீலே.
மேகசோரணம் - இராசவத்தனக்கல்.
மேகச்சிலே - மாக்கல், வங்கக்கல்.
மேகதாரரி - மயிலிறகு.
மேகதீபம் - மின்.
மேகதேகம் - மேகநோய்கண்டவுடம்பு.
மேகஸ்தம்பம் - மேகத்தூண்.
மேகத்தின்கருப்பக்கல் - ஆட்டுக்கல்.
மேகத்தின்விந்து - பூநாகம்.
மேகத்துவாரம் - ஆகாயகங்கைசெல்வ
மேகத்தொனி - முழக்கம். [ழி.
மேகநாதசித்து - இலக்குமன்.
மேகநாதம் - சிறுகீரை, பலாசு, மலேப்பச்சை, முழக்கம்.
மேகநாதன் - இந்திரசித்து, இந்திரன், நவசாரம், வருணன். ராவணனுக்கு மந்தோதரியிடத்துப் பிறந்த புத்திரன், இந்திரனேடுபொருது அவனே வென்றமையால் இந்திரஜித்து என்னும் பெயர் படைத்தவன், இவன் லக்ஷ்மணனல் கொல்லப்பட்டவன், இருவருக்கும் நடந்தயுத்தம் மிகக் கொடியதும் கம்பர் தாம்பாடிய இராமாயணத்திலே இவனே, "வில்லாளராேர்க்கெல்லாம் மேலவன்" என்ற புகழ்ந்திருக்கின்றனர்.
மேகநாயகன் - இந்திரன்.
மேகநீர் - ஒருநோய், நீர்.
மேகநோய் - ஒருநோய்.
மேகபச்சை - நாகபச்சை.
மேகபடலம் - ஒருகண்ணேய் மேகச்
மேகபந்தர் - முகிற்படலம். [செறிவு.
மேகபந்தி - முகினிரை.
மேகபிரசவம் - மழை.
மேகபுட்பம் - நீர், மழை.
மேகபூதி - இடி.
மேகப்புள் - வானம்பாடி.
மேகமண்டலம் - முகின்மண்டலம்.
மேகமந்தாரம் - மந்தாரச்சிலே.
மேகமாலே - முகிற்கூட்டம்.
மேகம் - ஒருநோய், கடுக்காய், குயில்,
மேகயோனி - புகை. [முகில்.
மேகரஞ்சி - ஒரிராகம்.
மேகராகக்குறிஞ்சி -குறிஞ்சித்திரத்தில்
மேகராடி-மயிலடிக்குருந்து. [ஒருபண்.
மேகலம் - நர்மதாநதி ப்ரவஹிக்கும் தேசம் மேகலம் என்னும் மலே.
மேகலன் - விந்த மலேச்சாரலில் வசிக்கும் ஒருமுனி.
மேகலகன்னிகை - நர்மதை, மேகலபர்வதத்தில் உற்பத்தியாதலால், இது இப்பெயர் பெற்றது.
மேகலாகன்னிகை - நருமதை.
மேகலாத்ரிஜை - நர்மதாநதி.
மேகலாபதம் - இடை.
மேகலாபாரம்-எழுகோவைமணிவடம்.
மேகலே-இடைக்கட்டு, ஓமகுண்டத்தை வளேயவிடுங்கோலம், சீலே, தேர்முடி, நருமதை, மலேப்புடைப்பு, மலேமுடி, மலேயருகு, மாதரிடையணியுளேழு கோவைமணி, மான்ரேற்பூணூல், மேருகிரிச்சிகரம்.
மேகவண்ணக்குறிஞ்சி - மழைவண்ணக்
மேகவண்ணன் - திருமால். [குறிஞ்சி.
மேகவத்துவம் - பரமாணு.
மேகவருணே - அவுரி.
மேகவாகனன் - இந்திரன், கருங்கல்,
மேகவாயு - ஒருநோய். [சிவன்.
மேகவியாதி - மேகநோய்.
மேகவிரஞ்சி - மேகரஞ்சி.
மேகவிரோதி - பெருங்காற்று.
மேகவூறல் - மேகநீர்ப்பாய்ச்சல்.
மேகவெட்டை - ஒருநோய்.
மேகனம் } ஆண்குறி, மூத்திரம்.
மேஹநம் }
மேகாகமம் - கார்காலம், மழை.
மேகாக்கினி - மீன்.
மேகாஸ்பதம் - ஆகாயம்.
மேகாநந்தி } மயில்.
மேகாரம் }
மேகோதகம் - மழை.
மேக்கு - உயர்ச்சி, மேல், மேற்கு.
மேசகம் - இருள், கருமை, புகை, மயிற்ரேகைக்கண், முகில்.
மேசகாலகை - யமுநாநதி.
மேசகை - இருள், கருமனேசிலே.
மேசை - பீடம்.
மேடகம் - மேடம்.
மேடக்கோடு - ஆட்டுக்கோட்டுப்பாலே.
மேடசிங்கி - புழுக்கொல்லி.
மேடப்பாய்ச்சல் - ஆட்டுப்பாய்ச்சல்.
மேடமதி - சித்திரைமாதம்.

மேடம் } ஆடு, ஆட்டுக்கடா, ஓரி
மேஷம் } ராசி.
மேடவிடவம் - மேடாயனம்.
மேஷவிஷாணிகை - ஆட்டுக்கொம்பு.
மேஷவிலோசநம் - பேரவுரி.
மேடவீதி - சித்திரை வைகாசி ஆனி மாதங்களிற் சூரியன் செல்லும்வீதி.
மேடாயனம் } ஆதித்தனிடப விராசி
மேஷாயனம் } யினின்று கற்கடக விராசிக்குச் செல்லும்பாதை, உத்தராயண மூலம்.
மேடு - உயர்ச்சி, ஊர், திடர், வயிறு
மேடுகம் - சுவர்.
மேடை - உப்பரிகை, மேடால் வகுக்கப்பட்டது, வேதிகை.
மேட்டி - இறுமாப்பு, முதன்மை.
மேட்டிமை - அகந்தை, மேன்மை.
மேட்டிரம் - ஆட்டுக்கடா, ஆண்குறி.
மேட்டிராந்தம் - மேல்.
மேண்டம் - ஆடு.
மேதகம் - கோமேதகம், சாலங்கபாஷாணம், மதிட்பு, மேன்மை.
மேதகு - மேன்மையான.
மேதகையோர் - உயர்ந்தோர்.
மேதச்சி - கற்பரிபாஷாணம்.
மேதம் - கொலை, கொழுப்பு, யாகம்.
மேதரவர் - வேக்காரர்.
மேதாதிதி - பிரிய விரதன் புத்திருருள் ஒருவன், இவன் பாகத்துக்குவந்தது ப்லக்ஷத்வீபம், இவன் புதல்வர் எழுவர், கண்ணுவர்புத்திரன், இவன குலத்தார் காண்வாயர் எனப்படும்.
மேதாதிதி - ஒருமுனி.
மேதாவிதி - சிரகாரி.
மேதாரம் - மலை.
மேதாருத்திரன் - காளிதாசன்.
மேதாவதி - அறிவுள்ளவள்.
மேதாவர் - மூங்கில்வெட்டி விற்போர்.
மேதாவி - அறிவு, உணர்வு, கிளி, பண்டிதன், புத்தியுள்ளவன்.
மேதாவிகி - நாகணவாய்ப்புள்.
மேதாவியர் - அறிஞர்.
மேதி - எருமை, நெற்களம், பொலிக்கட்டை, வெந்தயம்.
மேதிக்கவுணன் - மூர்த்தபாஷாணம்.
மேதிச்சென்னிமிதித்தோள்-துர்க்கை.

மேதியன் } இயமன்.
மேதியூர்தி }
மேதிரம் - சமம்.
மேதிரன் - புத்திசாலி.
மேதிவாகநன் - யமன்.
மேதினி - பூமி.
மேதினீத்திரவம் - பூதூளி.
மேது - அறிவு.
மேதேதரை - நிணப்பை.
மேதை - அறிஞன், அறிவு, இறைச்சி, கள், தோல், நரம்பு, நிணம், புதன், பேரறிவு, பொற்றலைக் கையாந்தகரை, மேன்மை.
மேதையர் - புலவர்.
மேதோசம் - எலும்பு.
மேத்தியம் - சுத்தம், சீரகம்.
மேத்திரம் - ஆட்டுக்கடா, சலவாய்.
மேநகாத்மஜை - பார்வதி.
மேநகை - மேனகை.
மேநகைப்புதல்வி - பார்வதி.
மேந்தலை - கப்பலிற் காற்றெதிர்பக்கம், முதன்மை, மேன்மை.
மேந்தானம் - உயரம்.
மேந்தி } வெந்தயம்.
மேந்திகை }
மேந்திரி - மெந்திரி.
மேம்படுதல் - உயர்தல்.
மேம்பாடு - புகழ், மேன்மை.
மேய் - தகுதியான.
மேய்க்கி - இடையன், கவளங்கொடுப்போன்.
மேய்ச்சல் - விலங்குணவு.
மேய்தல் - உண்டல், மூடல்.
மேய்த்தல் - மேயச்செய்தல்.
மேய்ப்பர் - இடையர்.
மேய்ப்பன் - இடையன்.
மேய்ப்பு - மேய்ச்சல்.
மேரு-பூமிக்கு நாசம்போலத் தென்துருவமுதல் வடதுருவம்வரையும் உள்ளே வளர்ந்து வடதுருவத்தில் மூளைத்திருக்கும் பொன்மயமாகிய மலை, வடதுருவம் சுமேருவென்றும் தென்துருவம் குமேருவென்றும் வடவாமுகம் என்றும் சொல்லப்படும், சுமேருவே சாதாரணமாக மேருவென்று வழங்கப்படும், இந்தசுமேரு ப்ரதேசத்திலிருப்பவர்களுக்கு உத்தராயண காலமாகிய ஆறுமாசமும் பக

லும், தக்ஷிணாயகாலமாகிய ஆறுமாச மும் இரவும் ஆயிருக்கும், இந்த மேருவின் புதல்வி மேநகை.
மேரு - ஆசனபீடம், ஒருவகைக்குப்பி, பொன்மலை, மலை.
மேருகம் - ஒருவாசனை.
மேருசாவணன்-பதினொன்றாவதுமநு.
மேருதேவி - நாபியின் மனைவி, ருஷ மன் தாய்.
மேருமணி - நாயகமணி.
மேருயந்திரம் - கதிர்க்கம்பி.
மேருவில்லி - சிவபிரான்.
மேருவின்வாரி - பொன்மணல்.
மேரை - குடிமக்கட்குக் களத்திற்றரும் தானியம், மரியாதை, வகை.
மேலகம் - மேல்வீடு, மோக்கம்.
மேலச்சுலுகம் - சிறுத்தைப்புலி.
மேலத்தாட்சி - மேலொப்பனை.
மேலநம் - கலப்பு.
மேலவரிறைவன் - இந்திரன்.முருகன்.
மேலவர் - பெரியோர், வானோர்.
மேலனம் - கலப்பு, கூட்டம், பழக்கம்.
மேலாடை - அங்கவஸ்திரம்.
மேலாத்தல்-மேற்புறமாக்கல்,மேன்மை
மேலாமண்டலம் - எழுதுமைக்கூடு.
மேலாமுதாம் - கஸ்தூரிஎலும்பு.
மேலார்ப்பு - மேல்விரித்துப் பிடிக்கும் புடவை.
மேலாலம் - மழை.
மேலாலவத்தை - மேனோக்கி நிற்கும் அவத்தை.
மேலிடுதல் - அதிகப்படுத்தல், அதிக ரித்தல், மேலேதாவுதல்.
மேலிமைத்தாறு - கற்கடகபாஷாணம்.
மேலீடு - அதிகரிப்பு, ஓராபரணம், மே விடுதன்மை, மேன்மை.
மேலுக்கெடுத்தல் - எதிரொடுத்தல்.
மேலுதடு - மேலதரம்.
மேலுலகம் - தேவலோகம், பூலோகமு தலேழுலகம்.
மேலுறுதி - துணையுறுதி.
மேலெடுப்பு - மேன்மையான எடுப்பு, வீம்பு.
மேலெழுச்சி - பெருமிதம், மேம்பாடு.
மேலேடு - காவலொற்றை.
மேலை - அஞ்சனக்கல், மேலிருப்பது, மேல், மேற்கு, மேன்மை, வருங் காலம்.
மேலைத்திசை - மேற்றிசை.
மேலைத்திருக்காட்டுப்பள்ளி - காவிரி யின் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ் தலம்.
மேலைநாள் - முன்னாள்.
மேலையார் } பெருமையிற் சிறந்
மேலையோர் } தோர்.
மேலொற்றி - திரும்பவைத்தவொற்றி.
மேலோங்கி - கரையாரிலோர்பகுதி.
மேலோர் - அறிஞர்,புலவர்,பெரியோர், வானோர்.
மேல்-அகலம், அதிகம், ஆகாயம், இடம், இனியென்பது ஏழாம் வேற்றுமை யுருபு, சரீரம்,பின்,மிசை,முன்னே மேற்கு, மேற்புறம், வருங்காலம்.
மேல்காற்று - கோடைக்காற்று.
மேல்கை - உயர்ந்தபூமி, மேடு, மேற்கு.
மேல்சாதி - உயர்குலம்.
மேல்பார் - மேற்கு.
மேல்பால்விதேகம் - நவகண்டத்தொன் று.
மேல்பால் - மேற்கு.
மேல்பாலிரேபதம் - நவகண்டத்தொன் று.
மேல்வட்டம் - சங்கை, மகத்துவம். [ம்.
மேல்வாசகம்-பத்திரிகையின் புறவாசக
மேல்வாய் - அண்ணம், ஒன்று முதலாய் மேற்பட்ட கணக்கு.
மேல்வாரம் - இறைப்பங்கு, வாரக்கா ரன் வைத்தவாரம்.
மேல்விசாரணை - பராமரிப்பு, முதன் மையான விசாரணை.
மேல்விதேகம் - மேன்பால்விதேகம்.
மேல்விழுதல் - யுத்தங்கலத்தல்.
மேல்வீடு - மச்சுவீடு.
மேவலர் - பகைவர்.
மேவல் - உண்டல், சமமாக்கல், சேர் தல், நிரவுதல், விரும்பல்.
மேவாமை - பொருந்தாமை.
மேவார் - பகைவர்.
மேவினர் - உறவோர், சிநேகிதர்.
மேவு - ஆசை, மேவென்னேவல்.
மேவுதல் - மேவல்.
மேழகம் - ஆடு, கவசம், செம்மறிக்கடா, துருவாட்டேறு.
மேழகவூர்தி - முருகக்கடவுள்.
மேழகயாகம் - அஜமேதயாகம்.
மேழி-கலப்பை,கலப்பையின்கைப்பிடி.
மேழிப்படையோன் - பலதேவன்.

மையலி - மாசாலி.
மையல் - உன்மத்தம், மயக்கம், மோகம்.
மையவாடி - முள்வேலியுள்ளவிடம்.
மையாத்தல் - மயங்குதல்.
மையார்தடங்கணுபதி - திருக்கோடிக்குழகரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மையிடுதல் - மைதீட்டுதல், மைபூசுதல், மைபோடுதல்.
மையுடை - கருவேல்.
மையுண்ணல் - மைதீட்டப்படுதல்.
மையூட்டுதல் - மைதீட்டுதல்.
மைரேயம் - ஒருதைலம்.
மைவார்குழலியம்மை - திருவிற்குடி வீரட்டத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மைவிளக்கு - நெய்விளக்கு.
மைனம் - மீன்.
மைஞ - நாகணவாய்ப்புள்.
மைனிகன் - கரையான்.

## மொ



மொகமொகெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
மொகவை - முகவை.
மொக்கட்டை - முகம்.
மொக்கட்டைமுறித்தான் - குறும்பன்.
மொக்கட்டைமுறித்தல்-முகமுறித்தல்.
மொக்கட்டையீனம் - சங்கைத்தாழ்வு.
மொக்கணி - தோற்பை, பொக்கணி.
மொக்கவீனம் - சங்கையீனம்.
மொக்களித்தல் - தாமதித்தல், பயணத்திற்றரித்தல்.
மொக்கன் - பருத்தவன்.
மொக்கு - பூமொட்டு, மரத்தின்கணு.
மொக்குளித்தல்-குழியிட்டொலித்தல்.
மொக்குள் - கொப்பூழ், நீர்க்குமிழி, யலரும்பருவத் தரும்பு.
மொக்கை - அங்கை, கூரின்மை, பருமை, மனை, வெட்கம்.
மொக்கைகுலைதல் - அவமானப்படுதல்.
மொக்கைச்சோளம் - ஒருசோளம்.
மொக்கைபண்ணல் - அவசங்கை யாக்கல், ஆயுதங்களைமணைத்தல், கெடுத்தல்.
மொக்கைபோதல் - அணுப்பப்படுதல், அவசங்கைப்படுதல், ஆயுதமுனைமடிதல்.
மொக்கையீனம் - சங்கைக்குறைவு.
மொங்கன் - மொழுங்கன்.
மொசுமொசுக்கை - முசுமுசுக்கை.
மொசுமொசுத்தல் - ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு, தினவுக்குறிப்பு.
மொச்சடித்தல் - மொச்சையசடித்தல்.
மொச்சு - மொச்சை.
மொச்சை-ஆட்டுமணம், ஒருவகைப்பயறு.
மொச்சையடித்தல்-மொச்சைமணம்விடுதல்.
மொஞ்சி - ஸ்தனம்.
மொடமொடெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
மொடு - இலாபம், நயம், பயற்றஞ்சப்பட்டை, பருமை.
மொடுக்குமொடுக்கெனல் - ஒலிக்குறிப்பு.
மொடுமொடுத்தல் } ஈரடுக் கொலிக்குறிப்பு.
மொடுமொடுப்பு }
மொடுமொடெனல் - ஒலிக்குறிப்பு.
மொட்டம்பு - அலகில்லா அம்பு.
மொட்டல் - அரும்பல்.
மொட்டு-இளம்பூவரும்பு, குமிழ்ப்புவடிவுள்ளது.
மொட்டறுமலர் - முழுதும் விகசியாத புஷ்பம்.
மொட்டுதல் - அரும்புதல்.
மொட்டை - கூரின்மை, மழுக்கம், மூண்டிதம்.
மொட்டைக்கறுப்பர் - எமதூதர்.
மொட்டைச்சி - அமங்கலி, பூநீறு.
மொட்டைத்தலை - மொட்டந்தலை.
மொட்டைப்புத்தி - மழுங்கற்புத்தி.
மொட்டையடித்தல் - தலை முண்டிதமாக்கல்.
மொட்டையம்பு - அலகில்லாத அஸ்திரம்.
மொட்டையன் - மொட்டைத்தலையன்.
மொட்டைவெட்டு - முண்டித வெட்டு.
மொண்டணி - மொந்தணி.
மொண்டன் } ஒருசாமை.
மொண்டாவன் }
மொண்டி - ஒருசாமை, நொண்டி.
மொண்டு - அலைவு, முரண்டு, மொண்டெனெச்சம்.
மொண்டுக்காரன் - அலைவு பண்ணுபவன், முரண்டன்.

மொதுமொதெனல் - ஒலிக்குறிப்பு, நொதத்தற்குறிப்பு.
மொத்தம் - தொகை, பருப்பம், பொது.
மொத்தல் - அடித்தல்.
மொத்தளம் - கூட்டம், தொகை.
மொத்தி - புடைப்பு.
மொத்து - அடி, மொத்தென்னேவல்.
மொத்துண்ணல் - அடியுண்ணல்.
மொத்துதல் - அடித்தல்.
மொத்தை - பருத்தது.
மொந்தணி- திரட்சி, பருப்பம், மரக்கணு
மொந்தணியன்- திரண்டது, பருத்தது.
மொந்தன் - ஓரினவாழை.
மொந்தை-ஒருகட்பறை, ஒருபாத்திரம், பருத்தது.
மொந்தைவாழை - ஒருவகைவாழை.
மொப்பு - வெடிநாற்றம்.
மொய்- கூட்டம், தாய், பெருமை, போர், போர்க்களம், மகமை, மொய்த்தல், மொய்யென்னேவல், யானை, வண்டு.
மொய்கதிர் - அடர்ந்தகதிர், முலை.
மொய்குழல் - பெண்.
மொய்ச்சல் - மொய்த்தல்.
மொய்தாய் - ஈன்றாள்.
மொய்த்தல் - நெருங்கல், மூடுதல்.
மொய்த்தாய் - ஈன்றாள்.
மொய்ப்பணம் - மகமைப்பணம்.
மொய்ப்பு - மொய்த்தல்.
மொய்ம்பு - தோள், வலி.
மொய்யெழுத்து - தருமசாதனவெழுத்து.
மொருமொருத்தல் } ஒலிக்குறிப்பு.
மொருமொரெனல் }
மொலுமொலுத்தல்-ஒலிக்குறிப்பு, தினவுக்குறிப்பு.
மொல்லு - இரைச்சல்.
மொல்லுமொல்லெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
மொழி - சொல், மொழியென்னேவல்.
மொழிக்கொடை - வித்யாதானம்.
மொழிதல் - சொல்லுதல்.
மொழிந்ததுமொழிதல் - செய்யுள் வழுவினொன்று.
மொழிபெயர்த்தல்-பாஷைதிருப்புதல்.
மொழிபெயர்ப்பு - பாஷைதிருப்பல்.
மொழிப்பொருள் - சொற்பொருள்.
மொழிமாற்று - பொருள்கோளெட்டில் ஒன்று அது பயனிலைகட் கேற்ற மொழிகளைப் பயனிலைகட் கேலா மொழிகளோடு புணர்ப்பது (உ-ம்) யானைக்கு நீத்துமுயற்குநிலை.
மொழிமானம் - ஆகமளவை.
மொழிமுதலெழுத்து - சொற்குமுதனிற்குமெழுத்து.
மொழிமை - பழஞ்சொல்.
மொழியன் - பரும்பேன்.
மொழிஇடையெழுத்து - சொல்லிடைநிற்குமெழுத்து.
மொழியீற்றெழுத்து - சொல்லிறுதியில் நிற்குமெழுத்து.
மொழியொலிக்குறிப்பு - எழுத்தினோசைக்குறிப்பு.
மொழியோசை - சத்தம்.
மொழுக்கன் } தடித்த ஆள், வெண்மட்டவேலை.
மொழுங்கன் }
மொழுக்கெனல் - ஒலிக்குறிப்பு.
மொள்ளல் } முகத்தல்.
மொள்ளுதல் }
மொறுமொறுத்தல் } ஒலிக்குறிப்பு, மிக்காய்த்தல்.
மொறுமொறெனல் }

---

# மோ



மோ - ஓரெழுத்து, முன்னிலையசைச்சொல் (உ-ம்) கேண்மோ, மோவென்னேவல்.
மோகநீயம் - மோகமின்மை.
மோககான் - மன்மதன்.
மோகப்படைக்கலம் - எதிரியை மயக்கும் படைக்கலம்.
மோகம் - ஆசை, உட்பகையாறினொன்று, உன்மத்தம், காமம், தம்பிதம், பஞ்சமாயையினொன்று அது விபரீதஞானமுண்டாக்குவது, பஞ்சபாணவத்தையினொன்று அது அழுங்கலும் பிதற்றலும், பாதிரி, மயக்கம், மதியீனம், முருங்கை, வருத்தம், வாழை, விகாரமெட்டினுமொன்று.
மோகாம் - உக்கிரம், மயக்கம்.
மோகரித்தல்-சினத்தார்த்தல், மயங்கல்.
மோகரிப்பு - ஆக்கிரமிப்பு, மயக்கம், வீராவேசம்.

மோகர் - உன்மத்தர், சித்திரக்காரர்.
மோகலீலை - காமவிநோதம்.
மோகவதி - மோகவந்தன் புத்திரி, சுதரிசநன்மனைவி, இவளே நிருவகன் வமிசத்துக் கடைத்தோன்றல், பாரதயுத்தம் நடக்குங்காலத்திலே குருக்ஷேத்ரத்தின்சமீபத்திலிருந்தவோர் நதி. பாண்டவர்கள் பாரதயுத்தம், முடிந்த பதினெட்டா நாளிரவில் இந்தநதிக்கரையிற் படுத்து நித்திரை செய்தார்கள்.
மோகவியாபாரி-காமவிகாரி, தூர்த்தன்.
மோகவுவமை - பொருண்மேலெழுந்த வேட்கையான் வந்த மயக்கந்தோன்ற வுரைப்பது (உ-ம்) கயல்போலுமென்று நின் கண் பழிப்பல் கண்ணின்செயல்போற் பிறழுந் திறத்தாற்கயல் புகழ்வன்.
மோகனக்கல் - கோயில் வாயின்மேற் படிக்கல்.
மோகனசாத்திரம் அறிவைமயக்குநூல்
மோகனநாட்டியம் - மகளிர்கூத்து.
மோகனப்படைக்கலம் - மோகப்படை.
மோகனமாலை - ஓராபரணம், ஒரு பிரபந்தம்.
மோகனம் - அணுப்பு, புணர்ச்சி, மயக்கம்,மன்மதன் கணையினுென்று அது அட்டகருமத் தொன்று, கலைஞானமறுபத்து நான்கினுமொன்று.
மோகனவித்தை - மயக்குத்தொழில் இது அட்டகருமவித்தையினுென்று.
மோகனுங்கனை } மோகினி.
மோகனுங்கினி } மோகினி.
மோகனுஸ்திரம் - மன்மதபாணம்.
மோகனி - மோகனப்பெண்.
மோகனீயம் - அட்டகுற்றத் தொன்று அது மோசமின்மை.
மோகன் - மன்மதன்.
மோகாதி - முக்குற்றம் அது காமம், வெகுளி, மயக்கம்.
மோகாம்பிகை - திருப்பாற் றுறையிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
மோகி - கஞ்சா.
மோகிதன் - காமங்கொள்வோன், மோகமுள்ளவன்.
மோகித்தல் - மயங்கல்.
மோகிப்பு - மயக்கம்.
மோகினி - திருமால் பெண்வடிவங் கொண்டகாலத்தில் தேவர்களோடு அசுரர் மாறுகொண்டுநிற்க, அந்த அசுரரை அமிர்தத்திற் பங்குபெறுமல் தடுக்கும் உபாயமாக இந்த மோகினி ரூபத்தை விஷ்ணுவெடுத்து, அவாவர்களை நோக்கி,இந்தஅமிர்தம்வேண்டுமோ என்போகம் வேண்டுமோ என்றுகேட்க, அவர்கள் அந்த மோகினிமேற் காதல்கொண்டு புறஞ்சென்ருர்கள், அந்தச் சமயத்தில் தேவர்களெல்லாருங்கூடிஅமிர்தத்தைப்பங்கிட்டுக் கொள்வாராயினர், அப்போது ராகுவும் கேதுவும் தேவவுருக்கொண்டு தேவர்களோடு கலந்து நின்று அமிர்தம்பருக யத்தகித்தார்கள், அதனைச் சூரியசந்திரர்கள் குறிப்பாலுணர்த்த உணர்ந்த விஷ்ணுமூர்த்தியானவர் தமது சக்ராயுதத்தால் ராகு கேதுக்களது சிரசரீரங்களைச் சேதித்தாரென்பது புராணகதை தாருகாவனத்தில் சிவபெருமான் மிகஅழகான வடிவங்கொண்டபோது, விஷ்ணு மூர்த்தியானவர் எடுத்த மோகினிவடிவு.

ஒரு அப்ஸரஸ்த்ரீ - இவள் பூஞ்சோலைமுதலிய இடங்களிலும், காமுகர் கனவிலும் தோன்றி, அவர்களை உருக்குலைக்குந் தொழிலையுடையவள், ஒருதேவதை, திருமால்கொண்டபெண்ணுரு இது திருமால் பதினைந்தவதாரத் தொன்று.
மோகினிப்பணம் உற்சவவரிப்பணம்.
மோகொரம் - துருக்கர்பண்டிக்கை.
மோக்கட்டை - மோவாய்க்கட்டை.
மோக்கம் - தீர்தல், பரகதி, விடுகை.
மோக்கல் - மணத்தல், மொள்ளல்.
மோக்குதல் - மணத்தல், முகந்துகொள்ளல்.
மோசகம் - துறவு, வாழை.
மோசகன் - துறவி.
மோசகி - கிலுகிலுப்பைச்செடி.
மோசனம் - விடுகை.
மோசகி - இலவமரம், பாதாட்சை.
மோசம் - அவத்தம், தவறு, பிசகு, வஞ்சனை.

மோசநம் - ஒருவகைநெல், கிரகணம்விடுகை, தீர்தல், துறத்தல், விடுகை.
மோசாசம் - பருத்திப்பிசின்.
மோசாடம் - சந்தனம், வாழைப்பழம்.
மோசிகீரனார் - இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர், சேரமான் தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறையும், கொண்கானம் கிழானும் இவரால் பாடப்பட்டோர், இவர் திருவள்ளுவருக்கும் சிறப்புக் கவியொன்று பாடியிருக்கின்றனர்.
மோசிகை - உச்சிமுடி.
மோசிசாத்தனார் - புறநானூறு பாடின புலவர்களுள் ஒருவர்.
மோசித்தல்-தவறுதல்,மோசம்போதல்.
மோசை - அவுரி, இலவு, வாழை.
மோஷகன் - தட்டான், திருடன்.
மோடசகன் - கள்வன்.
மோஷனம் - சேதித்தல், வதைத்தல்.
மோடனம் - அரைத்தல், காற்று.
மோடன் - மூடன்.
மோடி-காடுகாள்,பிணக்கு, மேட்டிமை, மௌடி, வேடிக்கை, வனத்தில் வாழுங்காளி.
மோடு - உயர்ச்சி, பிளப்பு, பெருமை, மூகடு, மூடத்தனம், மேடு, வயிறு.
மோட்சமார்க்கம் - முத்திநெறி.
மோட்சம் - இட்டம், கடன்செய்தல், தீர்தல், மரணம், மோக்கம்.
மோட்சவாசம்-மோட்சத்திலிருத்தல்.
மோட்சவாசி, மோட்சவாதி, மோட்சவான் - மோட்சஞ்சேரப்பக்குவன், மோட்சத்திற் சஞ்சரிப்போன்.
மோட்சவிளக்கு - வீரசைவர் பிரேதமடக்குமிடத்துவைக்கும் விளக்கு.
மோட்சாநந்தம் - மோட்சவின்பம்.
மோட்சோபாயம் - கதிபெறும் வழிவகை.
மோட்டுத்தனம்-முரட்டுத்தனம்.
மோனம் - பழவற்றல், பாம்புப்பெட்டி.
மோதகக்கையன் - விநாயகன்.
மோதகப்பிரியன் - விநாயகன்.
மோதகமாம் - குதிரைபிடுக்கன்மரம்.
மோதகம் - அப்பவருக்கம், இணக்கம், ஒருபணிகாரம், சந்தோஷம், தோசை.
மோதகி - விஷ்ணுகதாயுதம்.
மோதநம் - சந்தோஷம்.
மோதம் - விரும்பியதையடையப் பிரயத்தினப்படுதல், ஓமம், களிப்பு, சந்தோஷம், வாசனை.
மோதயந்தி - காட்டுமல்லிகை.
மோதல்-அடித்தல்,இடித்தல்,பருத்தல்.
மோதனம் - உவகை.
மோதிதம் - சந்தோஷம்.
மோதிதன் - களிப்புடையோன்.
மோதினி - க்ஸ்தூரி, மல்லிகை.
மோதிரக்கள்ளி - ஒருகொடி.
மோதிரகண்ணி - ஒருசெடி.
மோதிரமாறுதல் - விவாக வுடம்படிக்கையிற் பெண்ணும் ஆணுங் கணையாழி மாற்றிக்கொள்ளுதல்.
மோதிரம் - விரலணி.
மோதை - வசம்பு.
மோத்தல் - மூகத்தல்.
மோத்தை - வெள்ளாட்டுக்கடா.
மோப்பம் - மணத்தல், மூக்கு.
மோப்பி - கைம்பெண்.
மோப்பு - மோப்பம்.
மோரடம் - கரும்புவேர், பெருங்குரும்பை, வேர், வீழி.
மோரடம் - கரும்புவேர்.
மோருதல் - மூகத்தல்.
மோர் - மச்சிகை.
மோலி - மௌலி.
மோவாய் - தாடி.
மோவாய்க்கட்டை - மோவாய்.
மோழல் - பன்றி.
மோழை - கஞ்சி, கீழாறு, மடமை, மொட்டை, வெடிப்பு.
மோரு - ஒரு பொற்காசு.
மோறை - மோவாய்.
மோனம் - மௌனம் அது சாத்துவித குணத்தொன்று.
மோனர் - முனிவர், மௌனிகள்.
மோனை - ஆதி, ஒருதொடை.
மோனைத்தொடை - முதற்சீரின் முதலெழுத்தோடு பின்வருஞ் சீர்களில் ஒன்றனுள்ளேனும் பலவற்றினுள்ளேனு முதலெழுத் தோன்றிவருவது.

## மௌ



மௌகலி
மௌகுலி } காகம்.

மௌக்திகமாலை - முத்துவடம்.

மௌத்திகம் - முத்து.

மௌக்திகதண்டுலம் - வெண்சோளம்.

மௌக்திகப்ரஸவம் - முத்துச்சிப்பி.

மௌகூர்த்திகர் - தர்மன் முகூர்த்தையினிடமாகப்பெற்ற தேவகணம், முகூர்த்தகாலங்களுக்கு அதிதேவதைகளாகிய இவர்கள் அந்தந்த முகூர்த்தங்கள்தோறும் உலகத்தாரால் செய்யப்படுங் கருமங்களை ஏற்றுவைத்திருந்து அந்தக் கிரமமாகவே அந்தக் கருமங்களின் பயன்களை யூட்டுவோர்.

மௌஞ்சி-நாணற்புல்லாற்செய்த வரைஞாண், முஞ்சி.

மௌடி-ஒருவித்தை,பகடம்,பரிகாசம்.

மௌட்டியம் - அறியாமை.

மௌட்டை - கைபொத்திக்குத்துங்குத்து.

மௌண்டம் - ஒரு பலகாரம்.

மௌண்டிதம் - உபநிடதமுப்பத்திரண்டில் ஒன்று, முண்டிதம்.

மௌதக்லயன் - ஒருமுநி.

மௌதகல்லியர் - முத்கலன் கோத்திரத்துப் பிராமணர்.

மௌத்கல்லியன் - சாகல்லியன் சீடன்.

மௌத்காலம் - காகம்.

மௌத்திகம் - முத்து.

மௌநேயர் - காசிபன் முனியென்பவளிடத்திற்பெற்ற கந்தருவர்.

மௌரவி
மௌர்வி } விண்ஞன்.

மௌரவியர் - சந்திரகுப்தவமிசத்தாசர் இவர் பதின்மர், நூற்றுமுப்பத்தேழு வருடம் அரசுசெய்தனர்.

மௌலன் - நல்லமிசத்தாள்.

மௌலி - உச்சிக்குடுமி,கள்,சடை,தலை, பூமி, மயிர்முடி, முடி.

மௌவல் - முல்லை, வனமல்லிகை.

மௌளம் - மோளம்.

மௌனம் - மோனம்.

மௌனியர் - முனிவர்.

மௌனேயம் - கந்தர்வகண விசேஷம்.

## ய



ய - இறந்தகாலவிடைநிலை (உ-ம்) போயது, ஒரு எழுத்து.

யக்ஷராசன் - குபேரன்.

யக்கர் - இயக்கர்.

யக்கராத்திரி - கார்த்திகாபூரணை.

யக்காபரான் - குபேரன்.

யக்கர்
யக்ஷர் } காசிபன் சுரசையிடத்துப்பெற்ற புத்திரர், இவர் குபேரன் முதலானோர், உவாதேவசபையில் யாழ்வாசிப்பவர், யக்கர், கிந்நரர், கந்தருவர் என்பவர் தேவருக்குப் பிறந்தமையால் தேவயோநிகள் எனப்படுவர்.

யக்கன் - யக்காசன்.

யக்ஞோபவீதம் - பூணூல்.

யக்கியக்கினன் - யஜ்ஞ மூர்த்தியாகிய விஷ்ணு மூர்த்தியால் கொல்லப்பட்டவன்.

யக்கியகோபன் - இவன் யஜ்ஞகோபன் எனவும் படுவன், இவன் மாலியவந்தன் புத்திரன்.

யக்கியசாலை - யாகசாலை.

யக்கியசூத்திரம் - முப்புரிநூல்.

யக்கியசேடம் - யாகமிச்சில்.

யக்கியதத்தன் - இவன் ஒரு பிராமண புத்திரன், தசாதன் வேட்டையாடச் சென்றபோது இவன் தன் கமண்டலத்திலே குனிந்து நீருந்துகையில், இவனை ஒருயானையென்று நினைத்து தூரத்திலே யிருந்து அம்பெய்து கொன்றனன், அதுகண்ட அந்தவேதியச் சிறுவனுடைய தந்தை தாயார் தசரதனைநோக்கி, யாம் இச்சிறுவனது சோகத்தால் உயிர்விடுகிறோம், நீயும் எம்மைப்போலவே புத்திரசோகத்தால் உயிர் நீங்கக்கடவையென்று சபித்துவிட்டு உயிர்துறந்தார்கள்.

யக்கியஸ்தானம் - யாகம்பண்ணுமிடம்.

யக்கியநாமிகை - மகநட்சத்திரம்.

யக்கியபசு - குதிரை, பலிக்கேதுவான மிருகம்.

யக்கியபுருஷன் - விட்டுணு.

யக்கியம்-தேவதாப்பிரீதியாகச்செய்யப்படும் அக்கி காரியம், இது இருபத்

தொருவகைப்படும். (யக்கியம் - யாகம்) அவையாவன ஸப்தயாகயஜ்ஞும், ஸப்தஹவிர்யஜ்ஞும், ஸப்தஸோமஸ்மஸ்தம் என்பன, இவற்றைக்குறித்த விதானங்களெல்லாம்ஆபஸ்தம்பஸூத்ரத்துட்காண்க இன்னும்பிராமணர்க்கு நியதமாகவுள்ள யாகங்கள் ஐந்து அவை பஞ்சமஹா யஜ்ஞமென்று சொல்லப்படும், அவைதேவயஜ்ஞும், பிருத்யஜ்ஞும், பூதயஜ்ஞும், மாநுஷ்யஜ்ஞும், ப்ரஹ்மயஜ்ஞும் என்பன.

யக்கியம் - துவாபரயுகம், யாகம்.

யக்கியவராகம் - வர்ாஹாவதாரம்.

யக்கியன் } ருசிப்ராஜாபதிக்குச்சுவாயம்புவமனு புத்ரியினிடத்திற் பிறந்த புத்திரன் இவனுடைய தங்கையை தக்ஷிணன் மணம்புரிந்தான், இந்த யக்கியனை விஷ்ணு அவதார மென்பாருமுளர்.
யஜ்ஞன் }

யக்கியயோக்கியம் - அத்திமரம்.

யக்கியாரி - சிவபிரான்.

யக்கியோபவீதம் - மூப்புரிநூல், பூணூல்.

யக்கேசன் - குபேரன்.

யங்கூரா - அதிவிடையம்.

யசசு - புகழ்.

யசந்தன் - யாககர்த்தா.

யசமானன் - தலைவன், யாககுரு.

யசனம் - யாகஞ்செய்தல்.

யசஸ்வி - புகழானன்.

யசாகன் - கொடையாளி.

யசசு } இரண்டாம் வேதம்.
யசரு }

யசோதை - நந்தன் மனைவி, இவளே கிருஷ்ணனை வளர்த்த தாய், கிருஷ்ணன் பிறந்த அன்றிரவிலே இவள் வயிற்றிலும் ஒரு பெண்குழந்தை யோகநித்திரையின் அமிசமாய்ப்பிறந்தது, அது பிறந்தவுடனே யசோதை பிரசவவேதனையால் அறிவழிந்து சோகமுற்றுக் கிடந்தாள், அவளருகே யிருந்தவர்களும் சோகித்துக் கிடந்தார்கள், அப்போது மழையும் காரிருளும் மூடுவவாயின அந்தச் சமயத்தில் வசுதேவன் தன் குழந்தையாகிய கிருஷ்ணனை கஞ்சன்வாளுக் கிரையாகாமல் தப்புவிக்கவேண்டுமென்னும் கருத்துடையவனாய் பிறந்தவுடனேகையிலேந்திக்கொண்டுபோய், நந்தன் மனையுட் புகுந்து யசோதையின் பக்கத்திற் கிடத்திவிட்டு, அங்கிருந்த பெண்குழந்தையைக் கொண்டுபோய்த் தேவகிபக்கத்திலேவிட அதுவரைக்கும் வாய் திறவாமற்கிடந்த சிசு அழத்தொடங்கிற்று, அவ்வழுகுரல்கேட்ட காவலாளர்போய்க் கஞ்சனுக்கறிவிக்க, அவனோடிப்போய் அக்குழந்தையை யெடுத்துத்தரையிற்கிடத்திவாளையோங்கினன், அதுகண்ட தேவகி கதறியழுது, அண்ணா, மண்டலேசுவரா, இது பெண்குழந்தை இதனால் உனக்கு என்ன தீங்குநேரிடப்போகிறது, வீணாக உயிர்க்கொலை செய்வதனால் உனக்கென்ன லாபம் என்று சொல்லித் தடுத்தாள், அது அவன் செவியிற் பட்டிலது, அவன் ஓங்கியவாள் மீளுமுன்னே அந்தக்குழந்தை ஆகாயத்தி லெழுந்து எட்டுக்கைகளோடு சோதி ரூபமாய்த் தோன்றி நின்று, ஓ, கஞ்சனே என்னை வீணாய்க் கொல்ல முயன்றாய், உன்னைக் கொல்ல வந்தபாலன் வேறோரிடத்தில் வளர்கின்றான், அவனாலே நீ மடிந்தொழிவது சத்தியம் என்று சொல்லி மறைந்தது.

அது நிற்க, அங்கே யசோதை மயக்கந் தீர்ந்து விழித்துப் பார்த்தபோது நீலரத்நம்போல ஒரு ஆண்குழந்தையிருக்கக்கண்டு பெருமகிழ்ச்சியடைந்து அதனை நாளொருமேனி பொழுதொரு வண்ணமாக வளர்த்தாள், அந்தக் குழந்தையின் உண்மையாகிய வரலாறு முழுதும் அறிந்த பின்பும் தன் அருமைக்கண்மணிபோலவே அன்போடு வளர்த்துவந்தாள்.

யசோவிதி - ஈசானபுடவேதம்.

யஜ்ஞகோபன் } மாலியவந்தன் புத்திரன்.
யக்கியகோபன் }

யச்சு - இரண்டாம்வேதம், புகழ்.

யட்சர் - ஒருசாதியார்.

யட்சி - குபேரன்மனைவி.

யட்சிணி-எட்சிணி, ஒரு ஜாலவித்தை.

யட்டி - ஊன்றுகோல், தண்டு, மாலை, முத்துத்தாழ்வடம்.

யதா - ஏற்ற, சரியான, தகுதியான.
யதாகத்தவ்வியம் - சருவகத்தவ்வியம்.
யதாகற்பம் - கற்பனைப்படி.
யதாகாரம் - உண்டியொறுப்பு.
யதாகாலம் - காலத்திக்கேற்க.
யதாசத்தி - இயன்றமாத்திரம்.
யதாஸ்திகம் - அடியாருய்.
யதாஸ்து - முற்றுமப்படியாக.
யதாபூருவம் - தொன்றுதொட்டது.
யதார்த்தம் - சரிமுறை.
யதி-அடக்கம், இளைப்பாற்றி, ஒன்றிப்பு, ஓரிருடி, கைம்பெண், தாளப்பிரமாணம் பத்தினொன்று, முனி, மோனை, வாசகத்திற் றரிக்குமிடம் பிரமனது மானஸ புத்திரருள் ஒருவன், நகுடனுடைய மூத்த மகன், யயாதிக்குத் தமையன், இவன் இராஜ்யத்தை விட்டுத் துறவியாய்ப் போனவன்.
யதிபதி - யதிராஜன், சங்கரன்.
யதிகிரி - திருநாராயணபுரம்.
யதிபாத்திரம் - பிச்சைப்பாத்திரம்.
யதிராஜர் - ராமாநுஜர் இவரை பாஷ்யகாரர் உடையவர்முதலிய பலபெயர்களால் வழங்குவர், வைஷ்ணவ சமயத்திற்குச் சிரோபூஷணமானவர், இவர் எழுபத்துநான்கு சிங்காசநாதிபதிகளை யேற்படுத்தி அவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காராதிகாரமுங் கொடுத்து அவர்கள் வாயிலாக உலகத்தைச் சீர்திருத்தினவர் ஸ்ரீபாஷியம், முதலிய அநேக மோக்ஷப்ரதமான நூல்கள் இவராலே செய்யப்பட்டன.
யது - ஓரரசன், அவன் யயாதிக்குத் தேவயானை வயிற்றிற் பிறந்த புத்திரன், இவன் வமிசத்தார் யாதவர் எனப்படுவார்.
யதுகிரி - மைசூரையடுத்த பிரதேசத்துள்ள ஒரு சிறந்த விஷ்ணுஸ்தலம், இதனை யாதவகிரி, யாதவாத்ரி, திருநாராயணபுரம் மேலைக் கோட்டை முதலிய பல பெயர்களால் வழங்குவர், இது துவாபரயுகாந்தத்தில் பலராமர் முதலிய யாதவ சிரேஷ்டர்களால் ஆராதிக்கப் பெற்றமையால் யாதவகிரி யதுகிரியென்னும் பெயர்களுண்டாயின, இந்தக் கலியுகத்தில் ஸ்ரீமத் ராமாநுஜ யதீந்திரரால் ஜீர்ணோத்தாரணஞ் செய்யப்பட்டகாலந்தொட்டு யதிகிரி எதிகிரியென்னும் பெயர்களும் வழங்குவன வாயின, இந்த திவ்யக்ஷேத்ரம் ஸ்ரீமத் நாராயணனுக்கு இருதயஸ்தாநம் என்று அவ்வெம்பெருமானாலேயே தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் ஸ்ரீவடபதரிகாசிரமத்தில் உபதேசிக்கப்பட்டது, இத்திருமலை திருவநந்தாழ்வானது அவதாரம், இதன்மேல் விளங்கும் விமானத்துக்கு ஆநந்தமய விமானம் என்றுபெயர். இவ்விமாநம் பூர்வத்தில் பிரமனது தவத்திற் கிரங்கிய ஸ்ரீமந்நாராயணனால் ஆரோகணித்தருள பெற்றுத் திருநாட்டி னின்றும் இழிந்துவர, அந்தப்பிரமன் சத்யலோகத்தில் வைத்து ஆராதித்துப் பின்பு ஸநத்குமாரருக்குக் கொடுக்க அவரால் இத்திரு நாராயணகிரியில் திருக்கலியாணிக் கருகில் பிரதிஷ்டை செய்யப்பட்டது, பிரமலோகத்தில் ஐந்து லக்ஷயோசனை அளவாயிருந்த இது இங்கு ஐந்து ஆளுயரமாய் நிற்க, "சுருக்குவாரையின்றியே சுருங்கினாய்" என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்தபடியே, பெருமாளும் தமது திவ்யாயுத திவ்யபூஷணங்களுடனே சுருங்கிய விமானத்திற்கேற்பச் சுருங்கி நின்றருளினர், இந்த மூலவிக்ரஹத்திற்குத்திருநாராயணப் பெருமாள் என்றும், உத்ஸவவிக்ரஹத்திற்கு ஸம்பத்குமாரர், என்றும் செல்வப்பிள்ளையென்றும், தேவிமார்க்கு ஸ்ரீதேவி பூதேவியென்றும் பெயர்கள் இந்தத் திருமலையில் அநந்தகருட விஷ்வக் ஸேநாதி நித்ய முக்த முமுக்ஷுக்கள் மாநுஷதிர்யக்ஸ்த்தாவரங்களாக வர்த்திக்கின்றனர், இதில் வாழ்வாரைக் கலிதோஷம் அணுகாது, யமயமபடர் என்பவரும் தூரத்தே நின்று தண்டன் சமர்ப்பிப்பர், இத்தலத்தில் கல்யாணி, வைகுண்ட கெங்கை, நாராயணஹ்ரதம், மைத்ரேயகுண்டம், வேதபுஷ்கரிணி, தர்ப்பதீர்த்தம், கமலதீர்த்தம், பலாசதீர்த்தம், யாதவி என்று

சொல்லப்படுகிற ஒன்பதுபுண்யதீர்த்தங்களுண்டு, இத்திருமலையின் சிகரமாகிய நரசிம்ஹகிரியில், ஸ்ரீப்ரஹலாதாழ்வான்எழுந்தருளப்பண்ணின அழகிய சிங்காரது திருக்கோயில் விளங்காநிற்கும், இந்தத்திருமலையின் கீழே திருக்கல்யாணி தீர்த்தக்கரையில் ஞானப்பிரானாகிய ஸ்ரீவராஹப்பெருமாள் எழுந்தருளி யிருக்கின்றனர். இந்த ப்ரதேசத்திற்கு வராஹஸதாநம் என்றும் வைகுண்ட வர்த்தந க்ஷேத்ரம் என்றும் பெயர் பெரிய திருவடி சுவேதத் வீபத்தினின்றும் திருமண்கொணர்ந்து இங்கு ப்ரதிஷ்டைபண்ண, அது எம்பெருமான் திருவருளால் நாளுக்குநாள் பெருகி வருகின்றது.

ஒருகாலத்தில், இத்தலத்தில் வாழ்ந்திருந்த சுதரிசநா என்னும் பிராமணோத்தமர் தேசயாத்திரையின் பொருட்டுவெளியேசென்றிருக்கும்போது, இவர் ஆசரித்துவந்த கட்டளைப்படித் திருமாளிகையி லிருந்த நாராயணன் என்னும் இவரதுகனிஷ்டகுமாரர், தமது மாதாவாகிய சுசீலையைக்கேட்டுப் பிரசாதம் வாங்கிக்கொண்டுபோய்ப் பெருமாளை யாராதித்து, அமுதுசெய்தருளும்படி பிரார்த்திக்க, அச்சிறுவனது பிரார்த்தனைக்கிரங்கி, லோகபாரணரான பகவான் தேவியாரோடுஞ் சேவைசாதித்து அந்தப்ரஸாதத்தைத் திருவமுது செய்தருளினர். இங்கு எம்பெருமானது வாத்ஸல்ய ஸௌலப்யாத்யஸங்க்யேய திவ்ய கல்யாணகுணவிசேஷங்களை யறியாத மாதாவானவள், ப்ரஸாதத்தைப் பூனைக்கிரையாக்கினன் போலுமெனக் கோவித்து, அவனை மாதுகரமெடுத்துண்ணும்படிவிடுக்க, அப்படியே அந்தப்பிள்ளை யேழுதரம் செல்ல, கருணைரூபியாகிய பிராட்டியார் வீடுதோறு மறைந்து நின்று நவரத்நங்களையே பிக்ஷையாயிட்டு எட்டாந்தரம் அமுதளித்தனர், இத்யாதி வைபவங்கள் இந்தஸ்தல புராணமாகிய யாதாகிரி மாஹாத்ம்யத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

யதுதானன், யதுநாதன் - கிருட்டிணன்.

யதெந்து - என்ன, யார்.

யதேச்சை - இட்டம்.

யதேஷ்டம் - சுயேச்சை, மிகுதி.

யதேந்திரியம் - கற்புவழுவாமை.

யதோத்தேசபக்கம் - இருந்தவிடத்திருந்து கொண்டு காரியங்களை நடைபெறச் செய்தல்.

யத்தனம் - எத்தனம்.

யத்திரகிரகம் - சூத்திரம், செக்கு.

யத்தினம் - யத்தனம்.

யந்திரசாத்திரம் - இயந்திரமடைக்கும் வித்தை.

யந்திரதாபனம் - சக்கரதாபனம்.

யந்திரம் - செக்கு, திரிகை, தீக்கடைகோல், தேர், பஞ்சரைக்குஞ்சூத்திரம், பொறி, மந்திரசக்கிரம்.

யந்திரலோகம் - பயறு.

யந்திரு ஆளுவோன், குதிரைப்பாகன், தேர்ப்பாகன்.

யமகம் - வந்தசொல்லேவருதல்.

யமகண்டம் - எமகண்டம், ஒருபாட்டு.

யமகாளிந்தி - சரயுநதி.

யமகிங்கான் - நமனேவற்காரன்.

யமகீடம் - ஒருபுழு.

யமசபம் - இயமசபை.

யமதக்கினி - சமதக்கினி.

யமதூதன் - பாம்பின் நச்சுப்பற்களில் ஒன்று, யமகிங்கரன்.

யமதூதி-பாம்பின்நச்சுப்பல்லில்ஒன்று.

யமதேவதை - பரணி நட்சத்திரம்.

யமத்ருமம் - இலவமரம்.

யமபகினி - யமுனாநதி.

யமபடன் - யமகிங்கரன்.

யமபாசம் - காலபாசம்.

யமப்ரியம் - ஆலமரம்.

யமம்-அடக்கம், இயமம், காக்கை, சனி, தருமநூல் பதினெட்டி னொன்று, தவம், திருவிழா, பஞ்சகிருத்தியத் தொன்று.

யமரதம் - எருமைக்கடா.

யமராஜம் - யமுனாநதி.

யமவாகனம் - யமரதம்.

யமவாசம் - சிறுகாய்ஞ்சொறி.

யமவிரதம் - இயமானுட்டிப்பு, பட்சபாதமின்றி அரசுமுறை நடத்தல்.

யமவிரோதி } சிவபிரான்.
யமவைரி }

யமளம் - இரட்டை.

யமனிகை - சீலைப்படல்.

யமன் - நமன். காசிபன் புதல்வனாகிய விவசுவதன் என்னும்சூரியன் புத்திரன், இவன் அஷ்டதிக்குப் பாலகர்களுள்ளும் ஒருவன், இவன் பிதிர்லோகாதிபன், இவனிருக்குந்திசை தென்றிசை, இவன் மனைவி சாமளாதேவி, பட்டணம் சம்யமநி, வாகனம் மகிஷம், ஆயுதம் தண்டம், தருமன் என்றும் பெயர் பெற்றவன், யமன் என்பதற்குக் கூற்றுவன் என்பது பதப்பொருள் கூறுசெய்வோன் என்பது கருத்து. இவனது தொழில், உயிர்களை ஆயுள் முடிவில் உடலினின்றும் பிரித்துக்கொண்டு போதல். அத்தொழிலில் சிறிதும் நடுநிலைதவறாதவன், அது பற்றியே இவனைத் தருமனென்று கூறுவர், இவன் தருமத்தைக்குறித்து "போற்றவும்போகான் பொருளொடும்போகான், சாற்றவும் போகான் தமரொடும் போகான், நல்லாரென்னான் நல்குரவறியான், தியாரென்னான்செல்லரென்றுன்னான்" என்று ஆன்றோரும் பாடினர் மார்க்கண்டேயரைச் சிவபெருமானுக்கு உத்தமத்தொண்டரென்று கருதாது அவர்மீது பாசந்தொட்டு அவரைப் பற்றியபோது சிவபெருமானார்அவனுக்கு முன்னே தோன்றி தடுத்தபோதும் அஞ்சாமல் தனது ஆணையைச் செலுத்த யத்தனித்து அவராற் கொல்லப்பட்டுப் பின் உயிர் பெற்றானென்றால் அவனது நடுவுநிலைமை பெரிதும் வியக்கற்பாற்று.

யமாந்தகன் - சிவபிரான்.

யமாரி - சிவபெருமான்.

யமி - முனிவன்.

யமீ - யமுநாநதி.

யமுனைகனசன் - சூரியன்.

யமுனாதீரவிஹாரன் - கிருஷ்ணன்.

யமுனாநதி - சூரியன்புதல்வி, யமனுக்குச் சகோதரி, இந்நதிகளிந்தமலையில் உற்பத்தியாதலால் இதற்குக் காளிநதியென்னும் பெயருண்டாயிற்று.

யமுனைப்பிராதிரு - யமன்.

யமுனை - சத்தநதிகளிலொன்று அது காளிந்தி.

யமுனைத்துறைவர் - இவர்க்கு ஆளவந்தாரென்னும் வேறொரு பெயருமுண்டு, இவர் பன்னிரண்டு வயதுநிரம்பாச் சிறுவராக இருக்குங்காலத்திலேயே பாண்டியனது சம்ஸ்தான வித்வானாகிய ஒருபிரபலமஹா பண்டிதரை (வித்வசன கோலாகலனை) மூன்று அற்பவினாக்களால் வென்று பாண்டியன் சங்கேதப்படி அவனது பாதி நாட்டைப் பெற்று அரசாண்டவர், "உமது தாய் புத்திரவதியல்லள்" என்றும் "தர்மவானாகிய பாண்டியன் தர்மவான் அல்லன்" என்றும், பதிவிரதையாகிய ராஜபத்நி பதிவிரதையல்லள்" என்றும் எதுக்கூறி ஸ்த்தாபித்தல் வேண்டுமென்று கேட்ட கேள்விகளுக்கு பண்டிதர் விடைசொல்ல மாட்டாமல் மௌனமாயிருக்க, பாண்டியன்யமுனைத்துறைவரைநோக்கி, நீர் இந்தக் கேள்விகளுக்குசரியான விடைசொல்லி நிர்வகிப்பீராயின் என்நாட்டிற் பாதி தருவேனென்று சொல்லுதலும், யமுனைத்துறைவர் அரசனை நோக்கி. ஒருமரமுந்தோப்பல்ல ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல, என்னும் பழமொழியின்படியே ஏக புத்திரனைப்பெற்றவள் மலடியென்று சொல்லப்படுவாள். இது முதல் வினாவுக்குவிடையென்றும், குடிகள் செய்யும்பாவம் அரசனைச்சேரும் என்னும் விதியால் அரசன் தருமவான் அல்லன், இது இரண்டாம் வினாவுக்கு விடையென்றும், மணப்பந்தரிலே அக்கி முதலிய தேவர்களுக்குச் சமர்ப்பிக்கப்பட்டுப் பிறகு கண்வின் கையில் ஒப்பிக்கப்பட்டவளாதலால் பதிவிரதையல்ல, இது மூன்றும் வினாவுக்கு விடையென்றும்கூற, அரசன் அவருடைய நுண்ணறிவிற்கு

வியந்து அவரை மார்புறத் தழுவிக் கொண்டு தன் பாதிநாட்டை அவர் அரசாளக் கொடுத்தான்.

இவர் சிலநாள் அரசுசெய்து வருகையில் மணக்கால் நம்பியென்றும் வைஷ்ணவாசாரியர் இவரிடத்தில் வந்து நீர் எம்மோடு தனித்துவருவீராயின் உமது பாட்டனார் வைத்துப்போன புதையலைக்காட்டுவேனென்றுகூறி இவரை வஞ்சித்தழைத்துப்போய்த் திருவரங்கத்தில் கோயில் கொண்டிருக்கும் அழியாநிதியாகிய திருமாலைக் காட்ட பூர்வஜந்மவாசனையால் அந்தச் சந்நிதியையடைந்த மாத்திரத்தில், இவர் துறவுடையராகி, விஷ்ணுவழிபாடே பரமசாம்ராஜ்யம்எனக்கொண்டு அன்றுமுதல் அதனையே பற்றிநின்றார். இவர்எழுநூற்றறுபது வருடங்களுக்கு முன்னிருந்தவர்.

யயாதி-குருகுலத்தரசர்களி லொருவன் நகுஷன் புத்திரன், இவன்முன்னே சுக்கிரன் புதல்வியாகிய தேவயானையையும், பின்னே ருஷபர்வன்புதல்வியாகிய சர்மிஷ்டையையும் மணம் புரிந்தவன், தேவ யானையிடத்தில் யது,துர்வசனன்என்று இரண்டுபுத்திரரையும், சர்மிஷ்டை யிடத்தில் துருகியன், அநு, பூரு என்று மூன்று புதல்வரையும் பெற்றான்.

சுக்கிரன் யயாதியைநோக்கி, இருவரையும் பக்ஷபாதமின்றி நடத்திவரவேண்டுமென்று சொல்லித் திட்டப்படுத்தி யிருந்தும் யயாதியானவன் அந்த நியதியினின்றும்தவறினமையால், சுக்கிரன்யயாதிமேற் கோவங்கொண்டு நீ கிழப்பருவத்தையடையக் கடவையென்று சபித்துப்போயினான். அதனால் யயாதியானவன் வருந்தி தன் புத்திரரைநோக்கி, என் கிழப் பருவத்தைப் பெற்றுக் கொண்டு தன் இளமைப்பருவத்தை யெனக்குக் கொடுக்க விரும்புவோறும்மில் யாவனென, ஏனையர் மறுக்க, பூருவென்பவ னொருவன் மாத்திரம் அதற்குச் சம்மதித்து முகமலர்ச்சியோடு தனது யவ்வநத்தை அவனுக்குக் கொடுத்து அவனதுகிழத்தனத்தைத் தான் வாங்கிக்கொண்டான். அதனைப் பெற்ற யயாதியானவன், ஆயிரம் வருடம் சிற்றின்பம் அநுபவித்தும் திருப்தியடையாமல் முடிவில் பூருவுக்கு முடி சூட்டிக் காட்டிற் சென்று தவஞ்செய்து தன் காலங்கழித்தான். யதுவினால்யாதவவமிசமும், துர்வசனால் சேர சோழ பாண்டிய வமிசமும் துருகியனால் காந்தாரவமிசமும் விருத்தியடைந்தன.

யயு-அசுவமேதக்குதிரை,குதிரை.

யவகம் - ஒருவகைத்தாநியம்.

யவகாரி - கிருட்டிணன்.

யவசம் - வெடியுப்பு.

யவசி - கழுதைப்பாலை.

யவசூகம் - யவசம்.

யவட்சாரம் - எவட்சாரம், வெடியுப்பு.

யவநம - பாரத வர்ஷத்துக்குமேற்கேயுள்ளதேசம், க்ரேக்கதேசம், அத்தேசத்தார் யவநர் எனப்படுவர், யவநரும் யவநப்பெண்களும் முற்காலத்தில் ஆரிய ராஜாக்களுக்கு அடிமைகளாயிருந்தார்களென்பது சில ஸம்ஸ்க்ருதநாடகங்களால் அறியப்படுகின்றது, அவருள்ளே சிலர் ஆரிய சாஸ்திரங்களைக் கற்றுப் பண்டிதர்களாகித் தமது நாட்டிற் சென்று விளங்கியது மன்றிச் சோதிடசித்தாந்த முதலிய நூல்களும் செய்தார்கள். அவைஆரியராலும் எடுத்தாளப்பட்டு வருவனவாயின.

யவநர்-பாரத வர்ஷத்துக்கு மேற்கேயுள்ள தேசத்தார் யவநர் எனப்படுவர். இவர்களுள்ளே ஒரு சாரார் யயாதியின் புத்திரனாகிய துர்வசு வமிசத்திலே பிறந்த வேதாநுஷ்டாநங்களைத் துறந்து பதிதரான க்ஷத்திரியர், அவர்கள் பாரத வர்ஷத்தை விட்டு அதன் மேற்கேயுள்ள தேசங்களிற்போய், யவனரோடுகூடி யவநராயினார்கள். தற்காலத்தவரால் கிரேக்கர் என்று சொல்லப்படுவோர்களும், மற்றையஹூணர்களும் பாரசீகர்களும் பூர்வகாலத்தில் யவநரென்றே சொல்லப்படுவார்கள். யவநர் வெண்ணிற முடையவரும் க்ரூரிற

முடையவரும் என்றிருவகையினர். கருநிற முடையவர் காலயவநர் என்றும் மற்றவர் உவநர் என்றும் வழங்கப்படுவர்.
யவபலம் - மூங்கில்.
யவம் - நெல்லு, வாற்கோதுமை.
யவநர் - துலுக்கர், மிலேச்சர் முதலாயினோர்.
யவநாலசம், யவலாசம் } வெடியுப்பு.
யவனப்பிரியம் - மிளகு.
யவநம் - சீக்கிரம், தேயமைம்பத்தாறினொன்று.
யவனர்-கம்மாளர், சித்திரக்காரர், சோனகர்.
யவனாசார்யன் - சோதிடசாத்திரகர்த்தாவாகிய ஒருமுனி.
யவனாரி - கிருட்டிணன்.
யவனிகை - திரைச்சீலை.
யவாநி, யவாநிகை } ஓமம்.
யவீநரன் - பூரு வமிசத்துத்துமீடன், புத்திரன், முற்கலன் தம்பி.
யவ்வனம் - யௌவனம்.



## யா



யா - அஃறிணைப்படர்க்கைப் பன்மை வினா, அசைச்சொல் (உ-ம்) யாபன்னிருவர், ஓரெழுத்து, ஒருமரம், சந்தேகம், இல்லை.
யாகசாலை - வேள்விச்சாலை.
யாகசேனன்-ஒருஅரசன், பாஞ்சாலன், துருபதராசன்.
யாகத்தம்பம் - வேள்வித்தூண்.
யாகத்திரவியம் - யாகப்பொருள்.
யாகபதி-ஓரரசன், இவன்திருமால்பதினைந்தவதாரத் தொருவன்.
யாகபத்தினி, யாகபன்னி } துரோபதை.
யாகபாகம், யாகபோசனம் } அவிர்பாகம்.
யாகபோசனர் - வானோர்.
யாகம் - பலி, வேள்வி.
யாகுவம் - சாவகம்.
யாக்கியவற்கியம்-அட்டாதசதரும சாத்திரத்தொன்று உபநிடத முப்பத்திரண்டினொன்று.
யாக்கியவற்கியன் - ஒருமுனி, ஜனகராஜனுக் குபதேசம்செய்தவர் இவரே.
யாக்குதல் - கட்டுதல்.
யாக்கை - உடல், கட்டு.
யாக்கணம், யாங்கண் } யாங்ஙனம்.
யாங்கு - இடத்தின் ஐயுற்றசொல்.
யாங்ஙனம் - எங்ஙனம்.
யாசகபந்து - கர்ணன்.
யாசகம் - இரப்பு, இராசயானை, மதயானை.
யாசகர் - இரப்போர்.
யாசமாநன் - யாசகன்.
யாச்னம்-பூசாபலிநடத்தல், வெடித்தல்.
யாசனை - பிச்சை.
யாசிதம் - இரப்புத்தொழில்.
யாசித்தல் - இரத்தல்.
யாஜ்ஞவல்க்யன் - இவன்பிரமராதன் புத்திரன், வைசம்பாயநர்சீடன், ஒருநாள் வைசம்பாயநர் தமது சகோதரி புத்திரனை இருளிலே கால்பிழைத்து மிதிக்க, அந்தப்புத்திரன் இறந்தான், அதனால் அவர்க்கு பிரமகத்திநேர்ந்தது, அதனை நீக்கும் பொருட்டுத் தமது சீடர்களை விரதங்காக்கும்படியேவினர். யாஜ்ஞவல்கயர், மற்றையோர் சரீரபலமில்லாதவராயிருத்தலால் அதனைத்தாமேசெய்வதாகவேண்டினர். அவர் தம்முரையை மறுத்தாரென்று யாஜ்ஞவல்க்யரைமுனிந்து என் வேதங்களை விடுத்துப்போகவென்றனர். அவர் பக்திமிகுதியினால் சொன்னதையறியாமல் முனிந்த வுமக்கு யான் சீடனாயிருத்தலும் தகாதெனக்கூறி, அவரிடத்தோதிய யஜுர்வேத சாகைகளை யெல்லாம் கண்டத்தினின்றும்உதிரங்கக்கி விழும்படி யோதிவிட்டு, இந்த வேதசாகைகளை இனி ஓதமாட்டேன்என்று சொல்லிப் போய்ச் சூரியனை நோக்கித் தவஞ்செய்தார்.

சூரியன் குதிரைவடிவங்கொண்டு வெளிப்பட்டு வைசம்பாயநர்க்குத் தெரியாத பதினைந்து சாகைகளை அநுக்ரஹித்துப்போக, யாஜ்ஞவல்

கியர் அவற்றையேர்துவாராகி தம் சீடரையு மோதுவித்தார், குதிரை வடிவோடு வந்து அநுக்ரஹித்தமை யால் வாஜஸநேயசம்ஹிதை யென்னும் பெயர் இந்தச் சாகைகளுக் குஉள தாயிற்று. முன்னே இவர் உமிழ்ந்த உதிரங்களை சஹபாடிகள் மாநுட சரீரத்தோடிருந்துண்பது தகாதென்று தித்திரி ரூபங்கொண்டு உண்ட மையால் அந்தச் சாகைகளுக்குத் தைத்திரீய மென்னும் பெயர் உள தாயிற்று.

யாஜ்ஞவல்க்யம் - பதினெட்டு ஸ்ம்ருதி களுளொன்று இதற்கு விஞ்ஞாநேசுவ ர யோகிகள் ஒரு வியாக்கியாநம் செய்தனர்.

யாஜன் - ஒரு முனிவன், இவரதநு க்ரஹத்தால் துருபதராஜன் அக்கி குண்டலத்திலே த்ருஷ்டத்யும்நன் என்னும் புத்திரனையும் க்ருஷ்ணை யென்னும்புத்திரியையும்பெற்றான்.

யாஞ்ஞவற்கியம் - தருமநூல் பதினெட்டில் ஒன்று.

யாஞ்ஞவற்கியம்-ஓர்மிருதி நூலாசிரியர்.

யாடம் - காஞ்சொறி.

யாடு - ஆடு.

யாணர் - அழகு, தச்சர், நன்மை, புதுமை, வளமை.

யாண்டு - இடஐயச்சொல், எங்கு, எப்பொழுது, காலம்.

யாண்டை - இடஐயச்சொல்.

யாதசாம்பதி - வருணன்.

யாதபதி - கடல், வருணன்.

யாதம் - இயாதம், பசுக்கூட்டம்

யாதயாமம் - ஜீர்ணம்.

யாதவநிகண்டு-ஒருஸமஸ்க்ருத நிகண்டு.

யாதவம் - யாதம்.

யாதவர் - யதுவமிசத்தார், இந்தவமிசம் பல்கிப் பல கிளைகளாகி அநேகமான ப்ரபலராஜாக்களைத் தந்தது, யதுவினுடைய மூத்தகுமாரனாகிய ஸஹஸ்ரஜித் என்பவனாலே ஹேஹய வமிசமாயிற்று. அவர்களுக்கு ராஜதாநி மாஹிஷ்மதி, அந்தவமிசத்திற்றானே கார்த்தவீரியார்ஜுனன்என்னும் ப்ரசித்திபெற்ற அரசன்தோன்றினான். அவன் சந்ததியிலே தாளஜங்கர்தோன்றி விளங்கினர், யதுவினது இரண்டாம் புத்திரனாகிய குரோஷ்டுவஷ வமிசத்திலேபிரசித்திபெற்றவர்கள். சசிபிந்து, சியாமகன், விதர்ப்பன் என்பவர். இவருள்ளே விதர்ப்பனால் விதர்ப்பராஜ வமிசமுண்டாயிற்று, விதர்ப்பன் மூன்றாம் புத்திரனாலே சேதிவமிசம் வந்தது. இரண்டாம் புத்திரன் வமிசத்தனாகிய சாத்வதனால் போஜவமிசமும், அந்தக வமிசமும் வ்ருஷணிவமிசமும் உண்டாயின, போஜவமிசத்துக்கு ராஜதாநி தாராபுரம், அந்தகவமிசத்திலே க்ருஷ்ணர் அவதரித்தார்.

யாதவன் - கிருட்டிணன், இடையன்.

யாதவாத்ரி - திருநாராயணபுரம்.

யாதவி - உமை.

யாதனம் - தெப்பம், மரக்கலம்.

யாதனாசரீரம் - ஆக்கினையனுபவிக்கத் தக்க சரீரம், புரியட்டகாயம்.

யாதனை - துன்பம், நரகத்திற்கொல்லாது வருத்துநோய்.

யாதி - ஆழியகருத்து, ஞாபகம்.

யாதிகன் - வழிச்செல்வோன்.

யாது -அஃறிணைபடர்க்கை யொருமை வினா, இராக்கதர்கள்.

யாதுதானவர் - இராக்கதர்.

யாதோ - ஐயச்சொல்.

யாதோநாதன் - ஸமுத்ரராஜன்.

யாதோநிவாசம் - நீா.

யாத்தல் - கட்டல்.

யாத்திரகாணம்-பிரயாணம் புறப்படல், பொழுதுபோக்கு.

யாத்திராப்பிரசங்கம்-யாத்திரையிலிருத்தல்.

யாத்திரை - கடலேறிச்செல்லும் பயணம், கூத்து, திருவிழா, நடத்தல், பிரயாணம், வழக்கம்.

யாத்திரைக்காவி - புண்ணியஸ்தல தரிசனர் தரிக்குங் காவிவஸ்திரம்.

யாத்திரோற்சவம் - வெளித்திருவிழா.

யாபம் - மைதுனம்.

யாபனம்-இகழ்ந்துவிடல், தாமதித்தல், பொழுதுபோக்குதல்.

யாபாரம் - வியாபாரம்.

யாப்பண்டம் - வயாப்பண்டம்.

யாப்பருங்கலம் - ஓர் யாப்புநூல்.

யாப்பியம்-எளிமை, பொழுதுபோக்கு.
யாப்பியாநம் - சிவிகை.
யாப்பிலக்கணம் - செய்யுளியல்புணர்த்தும்விதி.
யாப்பு - கட்டு, செய்யுள்.
யாமகோடம்-சேவல், நாழிகைவட்டம்.
யாமநேமி - இந்திரன்.
யாமபதி - சந்திரன்.
யாமம் - இடக்கைமேளம், இராத்திரி சாமம், தெற்கு, மாலைப்பொழுதின் பின்பத்து நாழிகை.
யாமர் - யக்கியன் மக்கள். இவர்பன்னிருவர், சுவாயம்புவ மநுவந்தரத்திலுள்ள தேவதைகள்.
யாமவதி - இராத்திரி.
யாமளம் - இளமை, தோடு, பச்சை.
யாமளேந்திரர் - இந்திரகாளிய நூலாசிரியர், இந்த்ரகாளியம்என்னும் இசைத்தமிழ்நூல் செய்தவர், இவர் கடைச்சங்கமிருந்தகாலத்தை யடுத்திருந்தவர், சிலப்பதிகாரவுரை யாசிரியர் மேற்கோளாகக் கொண்ட நூல்களுள் இந்நூலுமொன்று.
யாமளை-காளி,பார்வதி, உமாதேவியார்.
யாமி - இரா, கற்புடையாள், சகோதரி, தெற்கு, மகள், மருமகள், ஜாமி, இரண்டாவது தக்ஷப்ரஜாபதிமகள், தருமன்மனைவி, இவள் அருக்கதேசத்துக்கு அதிஷ்டாநதேவதை.
யாமிகன் - நகர்சோதனைக்காரன்.
யாமிகை - இராத்திரி.
யாமிநி - ஒரு கலாசத்தி.
யாமநீ - இராத்திரி.
யாமிநீபதி - கர்ப்பூரம், சந்திரன்.
யாமியம் - அட்டாதச தருமசாத்திரத்தொன்று, சந்தனம், தெற்கு.
யாமியன் - அகத்தியன்.
யாமியாயனம் - தெக்கணயனம்.
யாமியை - இரா.
யாமிருகம்-நாடகவகை பத்தினொன்று.
யாமினி - இராத்திரி.
யாமினியம் - தெற்கு.
யாமீரன் - சந்திரன்.
யாமீரை - இராத்திரி.
யாமுகம் - ஆலோசனை.
யாமுனம் - அஞ்சனக்கல்.
யாமுனாசாரியர் - ஓர்வைணவாசாரியர்.
யாமுனேட்டகம் - ஈயம்.
யாமை - இரா, தெற்கு, பரணி.
யாம் - நாம்.
யாரி - எதிரி, கதவு.
யார்பதம் - வாலுளுவை.
யாரும் - யாவரும்.
யார் - நத்தைச்சூரி, யாவர்.
யாவம் - ஆச்சாமரம்.
யாவகம் - காருளுந்து, செம்பஞ்சு.
யாவசூகம் - வெடியுப்பு.
யாவச்சீவம் - இச்சீவியத்துக்கடுத்தது.
யாவநாலம் - சோளம்.
யாவம் - அரக்கு, செம்பஞ்சு.
யாவரும் - எல்லாரும்.
யாவர் - உயர்திணைப்படர்க்கைமுப்பாற்பொது வினை.
யாவள் - உயர்திணைப்படர்க்கையொருமைப்பெண்பால்வினை.
யாவன் - உயர்திணைப்படர்க்கையொருமையாண்பால் வினை.
யாவும் - எல்லாம்.
யாவை-அஃறிணைப்படர்க்கைப்பன்மை வினை.
யாழ் - முன்னிலையசைச்சொல் (உ-ம்) செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ.
யாழல் - கறையான்.
யாழினுமென்மொழியம்மை - திருவிளமரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
யாழின்மென்மொழிநாயகி - திருமணஞ்சேரியில் எழுந்தருளியிருக்கும்தேவியார் பெயர்.
யாழைப்பழித்தமொழியம்மை - திருமறைக்காட்டிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
யாழோர்கூட்டம் - காந்தருவமணம்.
யாழ் - அசுபதி, ஆந்தை, திருவாதிரை, நீர்ச்சுழியின் றிரை, மிதுனவிராசி, வீணை.
யாழ்நரம்பு - தந்திரி.
யாழ்ப்பாணம் - ஒரூர்.
யாழ்ப்பாணர் -ஒருதேசத்தார், யாழ்வாசிப்போர்.
யாழ்முகி - நாரதர்.
யாழ்மூரி - ஒரு சம்பந்தர் திருப்பதிகத்தில் ஒரு பதிகம்.

யாழ்முரிநாதேசுவரர் - திருத்தருமபுரத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
யாழ்வகை - குறிஞ்சிநெய்தல் பாலைமருதவமனு நானிலத்தியாழ்.
யாழ்வல்லோர் - கந்தருவர், வீணைவல்லோர்.
யாழ்வல்லோன் - நாரதன்.
யாளி - சிங்கம், சிங்கவிராசி, மரக்கலப்பாய்க்கு நீர்வீசுங்கருவி, யாளியானை.
யாளியானை - பூட்கை.
யாளியூர்தி - காளி, துர்க்கை.
யாறு - ஆறு.
யாற்றுநீர்ப்பொருள்கோள் - பொருள்கோளெட்டி னொன்று அது அடிதொறும் யாற்று நீரொழுக்குப்போலநெறிப்பட்டு அற்றற்றொழுகுவது.
யானபாத்திரம் - மரக்கலம்.
யானமுகம் - பண்டியினேர்க்கால்.
யானம் - அறைவீடு, கள், சிவிகை, மரக்கலம், வாகனம்.
யானை - ஆனை, இதுஇராசசின்னத்தொன்று, வடதிசைப்பாலன்குறியுமாம்.
யானைக்கச்சை-யானைகழுத்தணிகயிறு.
யானைக்கட் சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை - பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனாற் கட்டுண்டவன், இவனைப் பாடிய புலவர் குறுங்கோழியூர்கிழார்.
யானைக்கண் - இலை காய் முதலியவற்றில் விழும்புள்ளி.
யானைக்கம்பம் - யானைகட்டுந்தறி.
யானைக்கள்ளிமுளையான் - எழுமான்.
யானைக்காலை - யானைவிட்டு நிற்கு மடைப்பு.
யானைக்கால் - மொத்திக்கால்.
யானைச்சப்பரம் - யானைமேற்றவிசு.
யானைச்சாலை - யானைக்கூட்டம்.
யானைச்சிரகம் - கத்தரிநாயகம்.
யானைத்தடிச்சல், யானைத்தடிப்பு - துளிநடலை.
யானைத்தண்டம் - யானைசெல்புறவழி.
யானைத்தந்தம் - யானைக்கொம்பு, யானைப்பல்.
யானைத்தம்பம், யானைத்தறி - யானைகட்டுந்தூண்.
யானைத்திசை - வடக்கு.
யானைத்திப்பிலி - ஒருதிப்பிலி.
யானைநெருஞ்சி - பெருநெருஞ்சி.
யானைப்பாகன் - யானைப்பணிக்கன்.
யானைப்புச்சான் - ஒருசெடி.
யானைப்பெருங்காயம்-ஒருபெருங்காயம்.
யானைமஞ்சள் - பெருமஞ்சள்.
யானைமட்டம் - இளயானை.
யானைமாவுத்தன் - யானைப்பாகன்.
யானைமீன் - ஒரு பெருமீன்.
யானைமுகன் - விநாயகன்.
யானைமுகவற்கிளையோன் - வீரபத்திரன்.
யானைமுகவன், யானைமுகன் - விநாயகன்.
யானையுண்குருகு - சக்கரவாகம்.
யானையுரித்தோன் - சிவபிரான்.
யானையேற்றம் - கசபரீட்சை.
யானையைவிழுங்குமீன் - திமிங்கிலம்.
யானைவணங்கி - தேட்கொடுக்கி.
யானைவாழை - ஒருவாழை.
யானைவிச்சுளி - ஒருகழுகு.
யானைவீரன் - அரசருக்குத் துணைவரிலொருவன்.



## யு

யுகங்கள் - க்ரேதாயுகம், திரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என நான்கு, இந்நான்குங் கூடினது ஒரு சதுர்யுகம், இது சந்தி அமிசகாலங்க ளுட்படப் பன்னீராயிரம் தேவ வருடங் கொண்டது.

கிருதயுகம் 17,28,000 வருடங் கொண்டது.

திரேதாயுகம் - 12,96,000வருடங் கொண்டது.

துவாபரயுகம் 8,64,000 வருடங் கொண்டது.

கலியுகம் - 4,32,000 வருடங்கொண்டது.

இந்த சதுர்யுகம் ஆயிரங்கழிந்தால் பிரமனுக்கு ஒருபகலாம், பின்னும் ஓராயிரங்கழிந்தால் ஓரிரவாம், இப்படி 360 பகலிராக்கள் கழிந்தால்பிரமவருட மொன்றாம் இவ்வருடம்நூறு சென்றால் பிரமனுடைய ஆயுள்

முடிவாம். இந்த ஆயுளின் முற்பாதியாகிய ஐம்பது வருடம் பாத்மகல்பமென்றும் பிற்பாதியாகியயஐம்பது வருடம் வாராஹகல்பமென்றும் சொல்லப்படும். இப்போது நடப்பது வாராஹகல்பம். பிரமனது ஒரு பகற்காலத்தில் பதினான்குமநுக்கள் அரசுசெய்வர். அந்த மநுவந்தரம் ஒன்றில், தேவேந்திரன் சப்தரிஷிகள் முதலியோர் பிறந்திறப்பார்கள். பிரமனுக்கு இரவாகும்போது பிரளய கால முண்டாகும். அந்தப் பிரளயத்தில் த்ரிலோகங்களும் அழிந்தொழிய மஹாலோக வாசிகள் ஜநலோகஞ் சேர்வார்கள்.

க்ருதயுகத்திலே தர்மதேவதை நான்குபாதத்தாலும் த்ரேதாயுகத்தில் மூன்றுபாதத்தாலும் த்வாபரயுகத்தில் இரண்டுபாதத்தாலும் கலியுகத்தில் ஒருபாதத்தாலும் நடக்கும். இன்னும க்ருதயுகத்திலேதியாநமும் த்ரேதாயுகத்திலே தியாநமும், யாகமும். த்வாபரயுகத்திலே யாகமும். கலியுகத்திலே தாநஞ்செய்தலும் சற்கருமங்களெனப்படும்.

யுகசந்தி - கிருதயுகத்துக்கு தேவவருடம் எண்ணூறும் மற்றை யுகங்களுக்குத் தனித்தனியே இருநூறு.

யுகதருமம் - யுகபேதத்தின லுண்டாகும் நடை.

யுகந்தரம் - ஒருமலை, தேயமைம்பத்தாறி னொன்று, தேர்முதலியவற்றைப் பிணிக்குந்தறி.

யுகபத்ரகம்
யுகபத்ரம் } கோவிதாரமரம்.

யுகபத்திரிகை - அசோகமரம்.

யுகப்பிரளயம் - யுகாந்தம், யுகாந்தவெள்ளம்.

யுகமுடிவு - உலகமுடிவு.

யுகம் - இரண்டு, இருபொருள், ஓர்காலத்தளவு, நாலுமுழங்கொண்டது, நுகத்தடி, பூமி.

யுகவத்திரகம் - காட்டாத்தி.

யுகளமந்த்ரம் - லக்ஷ்மீநாராயணதிமந்த்ரங்கள்.

யுகளம்
யுகளி } இரண்டு.

யுகாதி - அருகன், கடவுள், வருஷாரம்பம்.

யுகாந்தம் - உலகாந்தம், யுகமுடிவு.

யுக்மபத்திரிகை - அசோகமரம்.

யுக்மம் - இரண்டு.

யுஜாநன் - சாரதி.

யுதகம் - இரண்டு, ஜயம், சீலைத்தொங்கல், சம்பந்தம், நன்கொடை.

யுதாஜித் - யதுவமிசத்தவ்ருஷ்ணியின் இரண்டாம் புத்திரன், இவன் புத்திரர் சிநி அநமித்ரன் என இருவர், கேகய தேசாதிபதி, அவன் தசரதன் மனைவியாகிய கைகேசிக்குச் சகோதரன். இவன் ராஜதாநி கிரிவிரஜம்

யுதிட்டிரன் - தர்மநந்தனன். குருவமிசத்துப் பாண்டு மூத்தமகனாகிய தருமராஜன். யுதிஷ்டிரன் என்பதற்குக் கலங்காமல் யுத்தஞ் செய்வோன் என்பது பொருள். இவன் பொறுமைக்கு இலக்கியமாயுள்ளவன்.

யுத்தகளம் - போர்க்களம்.

யுத்தங்கலத்தல் - போர்செய்தல்.

யுத்தசன்னத்தன் - போர்க்காயத்த மானோன்.

யுத்தசன்னாகம் - போர்க்கு ஆயத்தம்.

யுத்தசாரம் - குதிரை.

யுத்தந்தொடுத்தல் - போர்மூட்டுதல்.

யுத்தமுகம் - போர்முகம்.

யுத்தம் - உசிதம், கூடுதல், நாலுமுழங்கொண்டது, நியாயம், பொருத்தமானது, போர்.

யுத்தரங்கன் - குமரன்.

யுத்தவேது - ஓரலங்காரம், அது பொருத்தமான வேது.

யுத்தி - அருத்தாபத்தி, ஆராய்வு, உபாயம், ஓரலங்காரம், கூடுதல், தகுதி, பொருத்தம், மேற்கோள்கூறல், யூகை, யோசித்தல், வழக்கம், விவேகம்

யுபம் - சாமர்த்தியம், புத்தி.

யுயு - குதிரை.

யுயுதாநன் - இந்திரன், ஸாத்யகி, யதுவமிசத்துச் சாத்யகி.

யுயுற்சன் - திருதராஷ்டிரனுக்குவைசியப் பெண்ணிடத்துப் பிறந்த புத்திரன், திருதராஷ்டிரனுக்குப்பின்னே இந்திரப்பிரஸ்தத்தில் அரசு புரிந்தவன்.

யுவ - ஒன்பதாவதாண்டு.
யுவதி - பதினறுவயதுபெண்.
யுவநாசுவன் - சூரியகுலத்தரசரி லொருவன். இந்தன் புத்திரன், சபஸ்தன் தந்தை, கிருதாசுவன்மகன், இவன் மகன்மாந்தாதா, இவன்தனக்குச்சில காலம் புத்திரோற்பத்தி யில்லாமையால், அதன்பொருட்டு ஒரு இந்திரயாகஞ் செய்தான், அந்த யாகத்தில் இவன்மனைவிக்காக மந்திரித்துவைத்த நீரை இவன் இரவில் மிகுந்ததாகத்தால் அதுவென்றறியாது பருகினமையால் தன்மனைவி சுமக்கவேண்டிய கருப்பத்தைத் தானே தரித்தான் அதுகாரணமாக அவன் வயிற்றிலிருந்த சிசுவானது வயிற்றைப் பீறிக்கொண்டு உரியகாலத்தில் வெளிப்பட்டது. தாயின்பாலுக்குப்பிரதியாக இந்திரன் தன் விரலைக்கொடுத்து வளர்த்தான், இக்காரணம்பற்றியே அந்தச் சிசுவுக்கு மாந்தாதா வென்னும் பெயருண்டாயிற்று.
யுவராசன் - இளவரசன், ஒருசமணகுரு
யுவன் பதினறுக்குமேல் முப்பதுவயசுக்குட்பட்டவன்.



யூகம் - அகப்பொருளறிதல், ஒருபுல், கருங்குரங்கு, கவந்தம், காந்தி, கோட்டான், தருக்கம், படை, படைவகுப்பு, பெண்குரங்கு, பெண்முசு, பேன், யோசிப்பு, விவேகம்.
யூகபதி - சுக்ரீவன்.
யூகவான் - புத்திமான்.
யூகி - யூகியென்னேவல், விவேகி.
யூகித்தல் - ஆராய்தல், யோசித்தல்.
யூகிபாடை } ஒருபயிற்பேச்சு.
யூகிப்பயில் }
யூகை - கல்வி, பேன்.
யூதநாதன் }
யூதபதி } இனத்தைக் காக்கு மியானை.
யூதபம் }
யூதபன் }
யூதப்பிரஷ்டன் - கிளைவிட்டயானை.
யூதம் - பசுக்கூட்டம், பட்சிசாலம், யானைக்கூட்டம், விலங்கின் கூட்டம்.
யூதர் - ஒருசாதியார்.
யூதி - அம்பட்டன், காட்டுமுல்லை.
யூதிகம் - முல்லை.
யூபத்தம்பம் - வேள்வித்தூண்.
யூபம் - உடற்குறை, படைவகுப்பு, யாகப்பசுவைக்கட்டுந்தறி, யாகம், வேள்வித்தம்பம், வெற்றித்தம்பம்.
யூபாஷன் - இராவண பரிவாரத்தாருள் ஒருவன், இவன் அநுமானல் அசோகவனத்தில் கொல்லப்பட்டவன்.

## யோ



யோகக்கட்டு - இருகாலுஞ் சம்மணமாய் மாறியக்கால்களையு மிடையையுஞ்சேர்த்துத் தொடுப்பது.
யோகக்காட்சி - தேசகால விகர்பமின்றித் தன்செயலற்றுச் சிவன்செயலிற் கூடியறிவுமறிவு.
யோகசத்தி - நவசாரம்.
யோகசமாதி - யோகநிலைஎட்டினென்று அது இந்திரியாதி தத்துவ சகிதமாய் யாக்கையுணின்றும் அவற்றிற் பற்றின்றியிருக்கும் ஆத்துமதரிசனம்.
யோகசம் - சிவாகம மிருபத்தெட்டினென்று.
யோகசரன் - அனுமான்.
யோகசாதனை - யோகப்பரீட்சை.
யோகசாத்திரம் - யோகாப்பியாச நூல் இது கலைஞான மறுபத்து நான்கில் ஒன்று.
யோகசாரன் - சவுத்திராந்திகளிற் சிறிது வேறுபட்டு, அறிவு அருபமென்றும் பிரபஞ்சம் பொய்யென்றும் சொல்பவன், இவன் புறப்புறச் சமயிகளிலொருவன்.
யோகசித்தி - அங்கிரசன்புத்திரி, ப்ரஹஸ்பதிசகோதரி, பிரபாசுரன்மனைவி, விசுவகர்மன் தாய்.
யோகசேமம் - சமாசாரம், செய்தி.
யோகசைவம் - ஒருசைவம்.
யோகம் - கூடல்.
யோகசித்தி - யோகபலிதம்.

யோகஞ்சாதித்தல் - யோகம்பழகுதல்.
யோகஞ்செய்தல்-தியானம்பண்ணுதல்.
யோகட்சேமம் - யோகசேமம்.
யோகதண்டம்-யோகமுத்திரைக்கோல்.
யோகதீட்சை-ஒருதீட்சை.
யோகநந்தேசர் - திருவியலூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
யோகஸ்நாநம் - எழுவகை ஸ்நாநத்தொன்று அது யோகாப்பியாசத்தா லாத்துமசுத்தியடைதல்.
யோகநாலிகம் - ஒருமீன்.
யோகநித்திரை - அறிதுயில்.
யோகநிலை - யோகானுட்டிப்பு.
யோகநூல் - யோகசாத்திரம்.
யோகநெறி - யோகமார்க்கம்.
யோகப்பட்டை - யோகக்கட்டுக்கேற்ற கச்சு.
யோகபரீக்கை } யோகப்பயிற்சி.
யோகபரீட்சை }
யோகபாதம் - யோகநிலை.
யோகபீடம் - யோகாசநம்.
யோகப்பிரத்தியட்சம்-யோகக்காட்சி.
யோகமாயை-பகவதி, விஷ்ணுமாயை.
யோகமார்க்கம் - யோகநிலை.
யோகம்-அட்டயோகம், அதிட்டம், உபசாரம், உபாயம்,உயர்ச்சி, உற்சாகம், எத்து, கூடல், கூட்டம், கூட்டல், சாவு, சிவிகை, சூத்திரம்,தகுதி, தியானம், நிஷ்டை, பக்கம், பஞ்சாங்கவுறுப்பினொன்று, பலன், பொருத்தம் போர்க்கவசம், வரம். இந்திரியங்களை வசஞ்செய்துகொண்டு சித்தத்தைப் பிரமத்தில் நிறுத்தல், இது இராஜயோகம் கர்யயோகம் ஹடயோகம் என மூன்றுவகையாயிருக்கும், மேலும் ஸாங்க்யதாரக அமநஸ்கம் எனவும் மூன்றுவிசையுண்டு, அன்றியும் மந்திரயோகம், லயயோகம் ஹடயோகம் என்றொரு மூவிகையுண்டு, இவற்றின்விரிவெல்லாம் யோகநூல்களிற் காண்க. இந்த யோகசாஸ்திரம் செய்தவர் பதஞ்சலிபகவான்.
யோகாங்கம் - கொளுஞ்சிமரம்.
யோககுடி - காரணவிடுகுறி.
யோகர் - சமணமுனிவர், முனிவர்.
யோகவாகி - இரசம்.
யோகாசநம் - யோகஞ்செய்வோரிருப்பு அது சுவத்திகமுதனூற்றெட்டுவகையிருப்பு.
யோகாசாரம் - யோகவொழுக்கம்.
யோகாசாரியன்-யோகபோதகன், யோகாப்பியாசி.
யோகாதிசயம் - சுகம், நிலைபரம்.
யோகாப்யாசி - யோகம்பழகுவோன்.
யோகாரங்கம் - கொளுஞ்சிமரம்.
யோகார்த்தம் - திரிசொல் பலகருத்துடைய ஒருசொல்.
யோகி-அரன்,அருகன்,ஐயன்,நிஷ்டைசெய்வோன், முனிவன். நிர்மலசத்துவபரிணாமரூபமாகிய சித்தவிருத்திகளை அந்தர்முகமாகத்திருப்பி அவற்றை அவற்றின் காரணத்திலே யொடுக்குதலா மென்பவன், இவன் புறச்சமயிகளு ளொருவன்.
யோகிகன் - முனிவர்.
யோகிதண்டம் - பிரம்பு.
யோகித்தல் - ஆழ்ந்துநினைத்தல்.
யோகிநிகள்-இவர் பன்னிருவர், வித்யா, ரேசிகா, மோசிகா, அமிர்தா, தீபிகா, ஞானா, ஆபியாயநி, வியாபிநி, மேதா,வ்யோமா, சித்திரூபா, லக்ஷ்மி யோகிநிகள், இவர்கள் வித்தியாசக்திகளாய் வாசினிகளோடு அக்ஷரங்களை அதிகரித்து நிற்பவர்கள்.
யோகிப்பு - சிந்திப்பு.
யோகினி - காளி, காளியேவல் செய்பவன். [நடப்பது.
யோகினிதிசை- யோகினிதேவதையா
யோகீசுவரன் - யாக்கியவற்கியமுனி, யோகஞ்செய்வோன்.
யோகீசுவரி - துர்க்கை.
யோகு - யோகாப்பியாசம்.
யோகேசன் - சிவபிரான், முனிவன்.
யோகேசுவரன் - கிருஷ்ணன்.
யோக்கியதாபத்திரிகை - நடத்தைக்கடுதாசி.
யோக்கியதை - யோக்கியம்.
யோக்கியதைச்சீட்டு-யோக்கியதாபத்திரிகை.
யோக்கியாபாத்திரம்-யோக்கியவான்.
யோக்கியம் - ஆசாரம், தகுதி.
யோக்கியர் } தக்கவர், பெரியோர்.
யோக்கியவாளர் }

யோக்கியவான் - ஒழுக்க முதலியவற்றிற் றிறம்பாதவன்.
யோசனம் – யோசனை.
யோசனன் – கடவுள்.
யோசனவல்லி-மந்திட்டிவேர், வல்லாரை.
யோசனை - ஆலோசனை, ஓசை, ஓரெல்லையளவு, தியானித்தல், புத்தி.
யோசனைகந்தி - வியாசன்றாய்.
யோசனைவான் - யூகவான்.
யோசித்தல் - ஆராய்தல், கூட்டுதல்.
யோசியம் - சோதிடம்.
யோசியர் - சோதிடர்.
யோதனன் – போர்வீரன்.
யோது - அளவு.
யோதேயன் - போர்வீரன்.
யோதைகள் - அறிவுடையோர்.
யோத்திரம் – நுகக்கயிறு.
யோநலம் – ஒருதானியம்.
யோனி - ஆண்குறி, காரணம், நீர்பிறப்பு, பெண்குறி.
யோனிக்கலப்பு - சாதிக்கலப்பு.
யோனிசங்கரம் – யோனிக்கலப்பு.
யோனிசங்கரன் – பிறப்பினிலிழிந்தோன்.
யோனிபேதம் - பிறவிபேதம்.
யோனிப்படுதல் - பிறத்தல்.
யோனிப்பொருத்தம் - மணப்பொருத்தம்பத்தினொன்று.
யோனிமுத்திரை - யோனியாசாரமாகச்செய்யு முத்திரை.
யோனிரஞ்சநம் - பூப்பம்.
யோனிலிங்கம் - யோனிமணி.
யோனிவாய் - யோனி.

## யௌ



யௌகிகம் - பகுபதம்.
யௌதகம் - சீதனம்.
யௌதம் – ஓரளவு, பெண்கள்கூட்டம்.
யௌதம் - யவ்வநம்.
யௌவநன் - பிரியவிரதன் வமிசத்தவன், தீமந்தன் மகன்.
யௌவநாசுவகன் } மாந்தாதா, அம்பரீஷன் புத்திரன், ஹரிதன் தந்தை.
யௌவநாசுவன் }
யௌவநிதை - பதினாறுவயதுதொடங்கி ஐம்பதுவயதுக்குட்பட்டபெண்.
யௌவனகண்டகம் - முகப்பரு.
யௌவனதசை - வாலிபம்.
யௌவநபருவம் - குமாரப்பருவம்.
யௌவனம் - அழகு, இளமை, களிப்பு, மகளிர் கூட்டம்.
யௌவனலட்சணம்-அழகு, கொங்கை.

---

## ர



ரகு-தீர்க்கயாஹுபுத்திரன், அஜன்தந்தை, (ரகு வைத்திலீபன் மகனென்பது ரகுவமிசம்) ஆண்மையிலும் கல்வியிலும் சிறந்த பெயர் படைத்தவன், இவன்விசுவஜித் என்னும் யாகஞ்செய்து அந்த யாகத்திற் சென்றிருந்த அந்தணர் கூட்டத்துக்குத் தன் செல்வமுழுதும் வாரி வழங்கினவன்.
ரக்தபீஜன் - சும்பநிசும்பாசகோதரிபுத்திரன், இவனுடம்பிலிருந்து சிந்துகிற ரத்தத்துளிகள் எத்தனையோ அத்தனை அசுரர் பிறப்பார்களென்று நியமமிருந்தமையால் அதனை நினைத்துக் காளிகாதேவி கராளரூபந்தாங்கி ஒரு துளியாவது சிந்தாமல் அவனைக்கொன்று தொலைத்தார்.
ரங்கநாதன் - திருவரங்கத்திற் கோயில்கொண்டிருக்கும் விஷ்ணுமூர்த்தி ஒரு ஆந்தரகவி, இவராற் செய்யப்பட்ட இராமாயணம் இரங்கநாதராமாயண மென்னும் பெயரால் விளங்குகின்றது.
ரசசு - அநேநசுவமிசத்துத் திரிகருத்தன் தந்தை.
ரசநிரூபணம் ஓரலங்கார கிரந்தம், இது சிருங்காரரச நிரூபணம், அஷ்டரச நிரூபணம், பாவநிரூபணம் என மூன்று நிரூபணங்களை யுடையது.
ரசாத்நாகரம் - ஒருரசவாதகிரந்தம் நவரத்நங்கள், லோஹங்கள் கந்தகாதிகள் என்பவற்றைப் பஸ்பம் பண்ணும் முறை, உருக்குமுறை, முதலியன இதிற்கூறப்படும். இது நித்யநாதசித்தராற் செய்யப்பட்டது.
ரசனை - திதிபுத்திரி, துவஷ்டாவின்மனைவி.

ரசாதலம் - கீழேழுலகத்தொன்று,இது மலைமயமாயுள்ளது, இதற்கு அரசன் வாசுகி, இதற்கு இராஜதாநி போகவதி நகரம், வாமநாவதார மெடுத்த விஷ்ணுவினால் மிதித்தழுத்தப்பட்ட பலிச்சக்கிரவர்த்திபோயுறைந்த இடமிது வாதலால் பலிசத்தவமென்னும் பெயர் பெற்றது.

ரசை - பிரஜாபதியின் மனைவி, அகன் என்னும் விசுவுக்குத் தாய்.

ரஜன்-பிரியவிரதன் வமிசத்துவிரஜன் புத்திரன், ஆயுபுத்திரன், புரூரவன் புத்திரன் நகுஷன் தம்பி இவனுக்கு ஐஞ்ஞூறு புத்திரர் பிறந்தனர். அவர்களெல்லாரும்மஹாவீரர்கள், தேவர்கள் அவர்களைவேண்ட, அவர்கள் தைத்தியர்களைவென்று தேவேந்திரனுக்குச் சுவர்க்கலோகத்தைக்கொடாமல் தாமே ஆள விரும்பியபோது இந்திரனால் நிர்மூலமாக்கப்பட்டார்கள்.

ரதிகள் - ஜயசேநன புத்திரன்.

ரதிதேவி - மன்மதன்மனைவி, இந்தாதிதேவியே மாயாதேவியாகவும் பிரத்தியும்நன் மனைவியாகியும் அவதரித்தாளென்பது புராணகதை.

ரதீதரகோத்திரங்கள்-ரதீதரன் மனைவியிடத்து ஆங்கிரஸமுநிக்குப் பிறந்த பிரமதேஜோதநருடைய சந்ததிகள்.

ரதீதரன் - இக்ஷுவாகு தம்பி,நபகன்வமிசத்து அம்பரீடன் புத்திரனாகிய விரூபன் பௌத்திரன்.

ரத்நகிரிநாதர் - திருதநாட்டியத்தான்குடியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

ரத்நபரீக்ஷை - வயிரம் காண்க.

ரத்நநாயகர் - திருவாடானையிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.

ரத்நாபணம் - பிரதாபருத்ரீயவியாக்யாநம்.

ரத்நாவளி - ஸ்ரீஹர்ஷதேவர் செய்த ஒரு ஸம்ஸ்கிருதநாடகம். இது பாண்டவ வமிசத்து உதயணன் சரித்திரத்தை விரித்துக் கூறுவது.

ரந்திதேவன் - பூருவமிசத்தன், சங்கிருதிபுத்திரன், இவன் தன் சம்பத்துக்களையெல்லாம் வறிஞர்க்குக் கொடுத்துவிட்டு வனத்திற்போய் வசிக்கும் போது ஒருநாள் பசியால் வருந்தி கிடைத்த அற்பவுணவை யுண்ணத் தொடங்கும்போது, ஓரந்தணனும்பசியால்வாடி அவனிடம்வந்தான், ரந்திதேவன் அவ்வுணவிற்பாதியை அவ்வந்தணனுக்குக் கொடுத்தான். அந்தச் சமயத்தில் மற்றொரு அந்தணன் பசித்து வந்தான், அவனுக்கும் எஞ்சியபாகத்தில் பாதியைக் கொடுத்தான், மற்றொருவன் வரவே மிச்சமாயிருந்த தன்பாகத்தையுங் கொடுத்தான். இங்ஙனமாக, பின்னுமோர் அதிதிவந்து தாகத்திற்காக வைத்திருந்த நீரையுங் குடித்துவிட்டுப்போனான், அதுகண்ட தேவர்கள் இவனுடைய வுபகார குணத்தை மெச்சி இவனுக்கு வேண்டிய வரங்களைத் தந்துபோனார்கள், இவன் அளவற்ற யாகங்கள்செய்தவன், யாகபலித்தோலின் உதிரத்தால் ஒருநதி யுண்டாயிற்று, அது சர்மணவதி எனப்படும்.

ரபசன் - ஆயுவின்பௌத்திரன், கம்பீரன்தந்தை, ஒரு ஸம்ஸ்க்ருத நிகண்டு செய்த பண்டிதன் அந்த நிகண்டு ரபஸகோச மெனப்படும்.

ரம்பன்-ஆயுபுத்திரன், புரூரவன் பௌத்திரன், நகுஷன் தம்பி.

ரமா, ரமை } இலக்குமி.

ரம்பை - அரம்பை, இந்திரன் சபையிலாடும் ஒரு அப்ஸர ஸ்த்ரீ, இவள் மஹாசௌந்தர்யவதி, இவள் நளகூபரன் மனைவி, கௌரி.

---

## ரா



ராகு- விப்ரஜித்தி புத்திரன், இவன்தாய்சிங்கிகை, இவன் தம்பி கேது, இவ்விருவரும் காசிபன் பௌத்திரர், விஷ்ணுவானவர் மோகிநி வேடங்கொண்டு அமிர்தம் பங்கிடும்போது ராகு தேவரூபங்கொண்டு தேவரோடுகலந்து அமிர்தம் பெற யத்தனித்த போது, சூரிய சந்திரர் அதையறிந்து விஷ்ணுவுக்கறிவித்தமையால்சூரியசந்திரர்க்கும் ராகுகேதுக்களுக்கும்

திராப்பகை யுண்டாயிற்று. அந்தச் சமயத்தில் விஷ்ணுவானவர் ராகுவின்தலையைக் கொய்துவிட்டார், ராகுகேதுக்கள் சாயாக்ரஹங்கள்.

ராகை - தாதாவின்மனைவியரி லொருத்தி, சுமாலிமகள், தூஷணன் திரிசிரன் என்பவர்களுக்குத்தாய்.

ராக்ஷஸர் - காசிபனுக்குச் சுரசையிடத்துப்பிறந்தபுத்திரர்கள், இவர்கள்பிறந்தவுடனே பசிதாகங்களை யடைந்த சிலர், "யக்ஷாம என்றும் பசிதாகங்களில்லாதமற்றவர்கள், "ரக்ஷாம" என்று அழுதார்கள், அதுபற்றியே யக்ஷர் என்றும் ராக்ஷசர் என்றும் பெயர்பெற்றார்கள், யக்ஷாமயாமுண்ணுக, ரக்ஷாம் யாம்காக்க, நந்தர்களுடைய மந்திரி ராக்ஷசன் என்னும் பெயருடையவன், முத்ராராக்ஷஸம் என்னும் நாடகத்தில் இவன் முக்கிய பாத்திரமாயுள்ளவன், ராக்ஷஸர்கள் புலஸ்தியன் மரபில்வந்தவர்களென்று கூறுதலுண்டு. இவர்கள் பிராமண அமிசமாகப் பிறந்தும், நரமாம்ஸபக்ஷணமும்மாயவல்லமையுமுடையவராய்த் தேவர்களுக்குப்பகைவராயிருந்தவர்கள், இவர்களுள்ளே ராவண கும்பகர்ணர்கள் முக்கியர்கள்.

ராசிகள் - மேஷமுதலும் மீனம் இறுதியுமாயுள்ளபன்னிரண்டும் ராசிகளெனப்படும், சூரியன் ஒருராசியிற் சஞ்சரிக்கும்காலம்ஒருமாசமெனப்படும்

ராஜசேகரி - ஒருசோழன், ஈழநாட்டில் அரசுபுரிந்தவோரரசன், அரசகேசரிகாண்க.

ராஜதர்யன் - நாரீஜங்கன்.

ராஜராஜநரேந்திரன் - வேகிதேசாதிபதி இந்த அரசனது சமஸ்தான வித்வானே நன்னயப்பட்டவன்.

ராஜன் - சந்திரன், இந்திரன், ஒருயக்ஷன்

ராஜாநகன் - உத்தம பண்டிதர்களுக்கு முற்காலத்தில் சூட்டப்பட்டதாகிய ஒரு பட்டப்பெயர்.

ராஜாதிதேவி - வசுதேவன் தங்கை, ஜயசேசன் மனைவி, இவள்புத்திரர் இருவர், அவர் விந்தன் அநுவிந்தன் என்பவர்.

ராதை - கிருஷ்ணன் பிரிய நாயகி, நந்தன் தங்கை, கர்ணனைவளர்த்த தாதை, இதுபற்றியேகர்ணன்ராதேயன்என்னும்பெயர்பெற்றவனானன்.

ராமகிரி நாகபுரத்துக்குச் சமீபத்திலுள்ளவொருமலை, இதன் பிரஸ்தாபம் மேகசந்தேசத்திற் சொல்லப்படும்.

ராமகிருஷ்ணன் - ஒரு ஆந்த்ரகவி, இவனூர்தெனாலி, கிருஷ்ணதேவராயருடைய சபையிலிருந்த வித்வான்கள் எண்மருள் ஒருவன், அதிக சாதுரிய புத்தியும் விகட சாமர்த்தியமும் உடையவன், தெனாலிராமன் என்னும் பெயர் சாதாரணவழக்கு, பாண்டுரங்கமான்மியம் என்னும் பெருங்காவியஞ்செய்தவனும்இவனே, இதுமுழுதும் விலக்ஷணரசமுடையது, இவன் சொன்ன விகடகதைகள் அநேகம் இக்காலத்தும் வழங்கி வருகின்றன.

ராமபுத்திரன் - இவர் கிஷ்ண தேவராயர்சபையில்வித்வான்கள் எண்மருள் ஒருவர், ராமாப்யுதயம் என்னும் மஹாகாவியஞ் செய்தவர்.

ராமமந்திரி - ஒரு ஆந்திரகவி, இவர் அதிக்கவிகளுள் ஒருவர், இவர் தசாவதார சரித்திரஞ் செய்தவர்.

ராமராஜபூஷணம் - பட்டுமூர்த்தி.

ராமர் - விஷ்ணுதசாவதாரங்களுள் ஏழாம் அவதாரமாயுள்ளவர், இவர் இக்ஷ்வாகுவமிசத்திலே அஜன் புத்திரனாகிய தசரத சக்கிரவர்த்திக்குக் கௌசலையிடத்துப் பிறந்த புத்திரர், இவர் மனைவி சீதை, பரதன் லக்ஷ்மணன் சத்துருக்கன் என்பவர் மூவரும் இவர்தம்பிமார், குசலன்லவன் என்னுமிருவரும் புத்திரர், இவர் மனைவியோடும், லக்ஷ்மணனோடும் பித்ருவாக்கியபரிபாலனார்த்தம் பதினான்கு வருடம் வனவாசஞ்செய்து ராவண கும்பகர்ணாதியரைக் கொன்று, தண்டகாரண்ய வாசிகளாகிய முனிவர்களுக்கு அவ்வரக்கரால் விளைத்த துன்பங்களைநீக்கி மீண்டு தமது இராஜ்யம்பெற்று நல்லரசு புரிந்தவர், இவர் தசரதன் புதல்வராதலால் தாசரதியென்றும், ககுத்தன்வமிசத்தாராதலால் காகுத்தன் என்றும், ரகுகுலத்

திற் பிறந்தமையால் ராகவன் என்றும் பெயர்பெறுவர்.

ராவணனைக்கொன்று,சீதையைச் சிறைமீட்டபோது ஸ்ரீராமருக்கு வயசுநாற்பது,பூர்வகாலத்தில்தேவர்க்கும் அசுரர்க்கும் யுத்தம் நடந்தபோது பிருகுமஹா முனிவருடைய பத்தினியை விஷ்ணுகொன்ற காரணத்தால் பிருகுமஹாமுனிவர் கோபித்து விஷ்ணுவை நரனுகப்பிறந்து பத்தினியைப்பிரிந்து வருந்தும்படி சபித்தமையால் விஷ்ணு இந்த அவதாரமெடுத்து வருந்தினர், ஸ்ரீராமர் தம்மைக் காட்டுக்கனுப்பித் தனது புத்திரனுகிய பரதனுக்கு அரசுபுரிவித்த சிறிய தாயாகிய கைகேசியினிடத்திலே அணுவளவும் கோவமில்லாதவராய்த் தமதுதந்தையாகிய தசரதசக்ரவர்த்தியினிடஞ்சென்று அவனைச் சபித்த சாபத்தை நீக்கும்படி வரம் பெற்ற பெருந்தகைமையும், பிறர் துயர்கண்டு சகியாதபேரருளும் உடையரென்றால் அவரிடத்து விளங்கிய திவ்விய மங்களகுணங்களை யெடுத்துப் புகழவல்லார் யாவர்.

ஸ்ரீராமபிரான் நல்லரசு புரிந்ததற்கேயன்று, அவரது பெருங்கருணைக் குணத்தைப்பற்றியே இந்நாளிலும் யாவராலும்வழிபடப்படுவாராயினர், இவரை வழிபடுவோர் தொகையும் இவர்க்குள்ள ஆலயங்களும் ஆரியாவர்த்தத்தில் எண்ணிலவா யிருக்கின்றன, "ராமராம சத்யநாம" என்னும் மந்திரம் ராமபக்தர்களுடைய நாவிலும் மனத்திலும் நீங்காதிருப்பது, இவரது பெருந்தகைமையை மேல்வரும் "இராமாயணம்" என்பதனுட் காண்க.

இது ஸ்ரீராமருடைய திவ்யசரித்திரத்தைக் கூறுவதாகிய ஓரிதிஹாசம், இது வடமொழியிலே வால்மீகி பகவானுற் கூறப்பட்டது, இது ஆதிகாவியம் எனவும்படும், இது பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்யகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம்,சுந்தரகாண்டம், யுத்தகாண்டம், உத்தரகாண்டம் என வேழுகாண்டங்களைக் கொண்டிருக்கும், இது இருபத்துநாலாயிரங் கிரந்தமுடையது, ஒவ்வோராயிரத்து முதற் சுலோகத்து முதற்பாதம் காயித்திரிமந்திரத்து ஒவ்வோரெழுத்தால் தொடங்கப்பெறுதலால் இது காயித்திரி ரூபமெனப்படும் காயித்திரி மந்திரம் இருபத்து நான்கெழுத்துக் கொண்டது, இந்தக் காயித்திரி மந்திரம் வேதியருக்கு இன்றியமையாத மஹாமந்த்ரம், இந்த மந்த்ரஜபத்தால் பஞ்சமஹா பாதகங்களும் பெருநெருப்பிற் பட்ட பஞ்சு போல எரிக்கப்பட்டொழியும்.

இந்த ராமாயணத்தை தமிழில் மொழி பெயர்த்துக் காவியரூபமாக அருளிச்செய்தவர் கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பநாட்டாழ்வார், இவர் சாலிவாகநசகம் எண்ணூற்றேழில் விளங்கியிருந்தவர், இவர் மொழிபெயர்த்தது ஸ்ரீவால்மீகி ராமாயணத்தையேயெனறு "தேவபாடையினிக்கதைசெய்தவர் மூவரானவர் தம்முளுமுந்திய, நாவினுருரையின்படி நற்றமிழ்ப், பாவினுலிதுணர்த்திய பண்பரோ" என்னுங் கம்பர்வாக்கினுனே அறியப்படும், முதலிற் செய்தவர் வான்மீகிபகவான், அதின் பின் செய்தவர் வசிட்டர், அதன்பின்னே செய்தவர் போதாயநர், கம்பராமாயணத்துச் சரித்திரம் பெரும்பாலும் வால்மீகிராமாயணத்தை யொத்திருப்பதேயாயினும் கற்பனை வர்ணனை முதலியவும் கம்பருடையனவேயாம். சுந்தர காண்டத்தை லங்கா காண்டமென்று வழங்குவர்வடநூலார், பாலகாண்டமுதல் யுத்தகாண்டம் வரைக்குமே கம்பாற் செய்யப்பட்டது, உத்தர காண்டம் ஒட்டக்கூத்தரால் செய்யப்பட்டது.

கம்பர் பாடிய ராமாயணத்திலே சொல்வன்மை சொற்சாதுரியம் சந்தவின்பம் அர்த்தகௌரவம், முதலியவும் சிங்காரம் சோகம் வீரம் முதலியநவரசங்களும் அவ்வவ்விடங்களு

க்கேற்ப அமைந்து பயின்றுபயின்று வருதலால், இது தமிழிலேயுள்ள இலக்கியங்களை யெல்லாம் வென்று தமிழ்க்கலைவிநோதரை யெல்லாம் வசிகரிக்கும் பெருஞ்சிறப்பினையும்பெருமதிப்பினையு முடையபெருங்காப்பியமாயிற்று. கம்பர்வாக்குமுழுதும்உற்றுநோக்குமிடத்து ஒரு பொருளும், வெளிப்படையி லொரு பொருளும், பயப்பனவாகி கற்போருக்கு அதிசயமும் ஆராமையு முண்டாக்கு மியல்பினவாயிருக்கின்றன, அவரது சாதுரியத்தை மேல்வருங் கவியினாலறிக.

"இந்திரன் சசியைப்பெற்றானிரு மூன்றுவதநத்தோன்றன்தந்தையுமுமையைப்பெற்றான் றாமரைச்செங்கணனும், செந்திருமகளைப்பெற்றான் சீதையை நீயும்பெற்றால், அந்தரம் பார்க்கினன்மை யவர்க்கிலை யுனக்கேயையா"

என்னும் இக்கவியிலே "நன்மை அவர்க்கில்லை உனக்கே நன்மையென்னும்" பொருள் தொனிக்கினும், பின்னே நிகழப்போவனவற்றைநோக்குமிடத்து "நன்மை அவர்க்கு உனக்கில்லை" என்பது தோன்றுகின்றது, இக்கவியில் மாத்திரமன்று அடுத்த இரண்டுகவிகளிலும் இவ்வாறே மேல்வரும் அநிஷ்டப் பொருட் குறிப்பமையப்பாடியிருத்தல்காண்க.

"பாகத்தில் ஒருவன் வைத்தான்" என்னுஞ்செய்யுளிலே நீயெங்குவைத்து வாழ்த்தி, என்றவினாவியதற்கு நீயெவ்விடத்தில்வைத்துவாழப்போகிறாய் என்றும், நீ யெப்படிவைத்து வாழப்போகிறாய் வாழமாட்டாய்என்றும் பொருள்பட வமைத்திருக்கின்றனர். மற்றொருசெய்யுளிலே, "பிள்ளைபோற் பேச்சினாளைப் பெற்றபின் பிழைக்கலாற்றாய்" என்பதற்கு, சீதையைப் பெற்றபின் அவள் இஷ்டத்துக்குமாறாக யாதுஞ் செய்யமாட்டாய் என்றொரு பொருளும், அவளைப்பெற்றால் இறப்பாய் என்பதுவேறொரு பொருளும் தோன்றஅமைத்திருக்கின்றனர். இவ்வாறே அவர் சாதுரிய சாமர்த்தியங்கள் உய்த்து நோக்குந்தோறும் ஊற்றுய்ச் சுரக்கும். இங்கே யெடுத்துக்காட்டிய செய்யுட்கள் மாரீசன் வதைப்படலத்திலே சூர்ப்பணகை கூற்றாகவருவன.

இனிவான்மீகிபகவான் வைதிகப் பொருளையெல்லாம் லௌகிகப்பொருள்மேல் வைத்துக் கூறுங் கருத்துடையவராய், ராம சரித்திரத்தையே ஏற்ற வாயிலாகக்கொண்டு, வெளிப்படையிலே லௌகிகத்துக் குரிமையும் இனிமையும் பயக்கவும், குறிப்பிலே வைதிகபோதமும் தத்வார்த்தங்களும் விளங்கவும் இந்தப் பாரகாவியத்தைஇயற்றியருளினர். இவ்வுண்மை யேலேயெடுத்துக்கூறியகாயித்ரியக்ஷரக்குறிப்பினால் நன்கு துணியப்படும்.

ராமாயண கதாநாயகராகிய ஸ்ரீராமபிரான் சக்ரவர்த்தித்திருமகனாராக அவதரித்தும் தந்தையார் வாக்கினைக் காக்குமாறு காட்டுக்கேகிய பெருந்தகைமையும், சத்தியம், பொறுமை, அறிவு, ஆண்மை, நீதிதிறம்பாமை, பேரருளுடைமை, நன்றிமறவாமை, அடுத்தவரையாதரிக்கும்பேராற்றல், சகோதரவொற்றுமை, முதலிய உத்தமகுணங்களுக்கெல்லாம் உறைவிடமாகவுள்ளவர். அவருடைய இல்லறவொழுக்கச்சிறப்பு சூர்ப்பணகைக்கு எடுத்தோதியநன்மதிவிளக்கச்சொற்களால் இனிதுவிளங்கும் ஸ்ரீராமரை இளமைப்பருவத்தில் வீதியில் விளையாட்டயருங்காலத்தில், கண்டு உச்சிமோந்து கட்டித்தழுவிச் செல்வோனாகிய ஒரு பிச்சைக்காரன், அவர் காட்டுக்கேகி மீண்டுவந்து பட்டாபிஷேகம்செய்துகொண்டு எழுந்தருளியிருக்கும் சமயத்திலே, அவர் சபைக்கெதிரே வந்து, நின்று, அடாராமா, எங்கடா போயிருந்தாய், உன்னைக் காணாமையால் என்கண்கள்மிகவருந்தினவே யென்று பெரிய ஆராமையோடு கூவியழ, அவர்சிங்காதநத்தை விட்டெழுந்து, யானும் உம்மைக்காணாமையால் பெருந் துன்பமடைந்தேன், வாரும்என்சிறிய தந்தையே,

என்றிருகையும் நீட்டியழைக்க, அந்தச் சபையிலிருந்த அரசர் முனிவர் பெரியோர் எல்லாரும் அதிசயித்தெழுந்து வழிவிட, பிச்சைக்காரனாகிய முதியோன் சென்று அவரைத்தழுவி உச்சிமோந்து போயினன், அவனது அழுக்காடையும் நாறுகின்ற சரீரமும் நோக்காது பேரன்பாற் கட்டுண்டு மயங்கிய ராமபிரானது பெருந்தகைமைக்கு ஒருஎல்லையுமுண்டோ, இத் துணைச்சிறந்த பெரியோனது சரித்திரத்தைக்கற்றலும் கேட்டலும் உலகத்தார்க்கும்பெரும்பயனைத் தராமற்போகுமா, இந்தப்பெருமையெல்லாம் நோக்கியே பெரியோரெல்லாரும் இதனை மோக்ஷகிரந்தமென்று சிரவண பாராயணஞ்செய்வர்.

ராமாநுஜாசாரியர்-விசிஷ்டாத்வைத மதோத்தாரகராகிய இவர் எண்ணூற்றிருபது வருஷங்களுக்கு முன்னிருந்தவர், இவர் தந்தையார் ஆசூரிகேசவாசாரியர், தாயார் காந்திமதி, இவர் ஜந்மஸ்தாநம் பூதபுரம் (ஸ்ரீபெரும்பூதூர்) இவர் வித்யாப்யாஸஞ்செய்த விடம் காஞ்சி.

இவர்யாதவப்ரகாஸரென்னும்ஸந்யாஸியிடத்திற் சாஸ்த்ரங்களைக்கற்றுவல்லவராகித்தங்குரு முன்னிலையிலே தானே விசிஷ்டாத்வைத மதத்தைச் சாதித்துப் பின்னர் த்ரிதண்டஸந்யாஸியாகியதிராஜன் என்னும் பெயர்பெற்றுத் திருநாராயணபுரம் ஸ்ரீரங்கம், திருப்பதி முதலிய ஸ்தலங்களிற் சென்று ஆங்காங்கும் மடங்கள் ஸ்தாபித்து வைஷ்ணவமதத்தை நிலைநாட்டினர், அதன்பின்னர்ப் பலவிடங்களுக்குஞ் சென்று பரமதங்களைக் கண்டித்துத் தமது மதநாட்டி ஆங்காங்குஞ் சிஷியர் குழாங்களைச்சேகரித்துத் தமது மதத்தைவ்ருத்திசெய்தனர், இவர்கீதாபாஷ்யம் வ்யாஸ ஸூத்ர பாஷ்யம், தர்க்க பாஷ்யம் முதலிய அநேகநூல்களைச் செய்தார், இவரை வைஷ்ணவர்கள் பாஷ்யகாரரென்றும் எம்பெருமானாரென்றும்வழங்குவர், இவருக்குமுன்னர் விசிஷ்டாத்வைத மதம் நாட்டினவர்கள் பன்னிருவராவார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார்,நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், சூடிக்கொடுத்தாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்போர்.

ராமேஸ்வரம் - ஸ்ரீராமர், ராவணனைக் கொன்று திரும்பியபோதுஸேதுவோரத்திலே சிவலிங்க ப்ரதிஷ்டைசெய்து பூசைபுரிந்த ஸ்தலம், இவ்விலிங்கத்தைத் தரிசித்து வழிபடுவோர் சகலபாபங்களும் நீங்கப்பெறுவர்என்பது புராண சம்மதம்.

ராவணன் - ராக்ஷஸர்தலைவன். இவன் ராஜதாநி லங்காபுரி, புலஸ்த்யன்புத்ரனாகிய விஸ்ரவாவுபுத்ரன். தாயஸுமாலிபுத்ரியாகிய கைகஸி, இவன் பாரி மயன் மகளாகிய மந்தோதரி (மண்டோதரி) கும்பகர்ணன், விபீஷணன், என்போர் இவன்தம்பியர், ஸூர்ப்பணகைதங்கை, இவன் புத்ரன், இந்த்ரஜித்து, இவன் பத்துத் தலைகளை யுடையனாதலின், தஸக்ரீவன்தஸகண்டன், முதலிய நாமங்களைப்பெறுவன், இவன் மகாவூஸ்ரதவங்கள்செய்து,மனுஷரைப்பொருட்படுத்துகிலேன், மற்றெவ்வகைத் தேவராலும் அசுரராலும் இறவாதிருக்க வரந்தருக, வென்று ப்ரஹமாவை வேண்டிப்பெற்றான். அவ்வரப்ரஸாதத்தால்மிக்க கர்வமுடையவனாகித்ரிலோகங்களிலுஞ்சென்று சாதுக்களையுந்துன்புறுத்திவந்தான். இத்துன்பங்களையொழிக்குமாறேவிஷ்ணு ஸ்ரீராமராகப்பிறந்துராவணனைக்கொன்றார். ராவணன்திக்கெல்லாம்வெற்றிபெற்று வடக்கிற்சென்றுகுபேரனைக்கண்டு அவனை ஜயித்து அவன்புஷ்பகவிமாநத்தைக் கவர்ந்துகொண்டு கைலைக்குமேல் நேராக வந்தபோது நந்திதேவர்தடுப்ப, இவன் தனது விமாநத்தோடிழிந்து அக்கைலையையவேரோடும் பறித்துச் செல்வேனென்று கர்வங்கொண்டு பெயர்த்துத் தோள்மேற்கொள்ள வெத்தனிக்க, அது

கண்ட சிவபெருமான் தமது பெருவிரலாலழுத்த அம்மலையின்கீழ் அகப்பட்ட இவன் நெடுங்காலங்கிடந்து வருந்திச் சிவபெருமானை ஸ்தோத்ரித்து அவ்வாபத்தினின்றும் நீங்கிப் போயினான். அக்கைலையின்கீழ்க்கிடந்துச் சவிசையாலழுது துதித்தமையால் இவனுக்கு ராவணன் என்னும் பெயர் வாய்ப்பதாயிற்று.

இவன் திக்விஜயஞ் செய்யப்போனவிடங்களில் அபஜயப்பட்டுத் திரும்பியது இரண்டிடத்தன்றி மற்றெங்குமில்லை. ஒன்றுவாலியாலும் மற்றது கார்த்த வீர்யார்ஜுநனாலுமேயாம். இவன் மேருபக்கஞ் சென்றபோது அங்கே ரம்பையைக்கண்டு அவளைப் பலவந்தம் பண்ணிப் புணர்ந்தான். அதுகேட்ட நளகூபரன் சினந்து, நீ எப்பெண்ணை யாயினும் அவள் சம்மதமின்றிப் புணர்வையேல் உன் தலைகள் ஆயிரந் துண்டமாகச் சிதறியிறக்கக்கடவை யென்று இவனைச் சபித்துப் போனான். அதுபற்றியே ஸீதா பிராட்டியாரை மானபங்கஞ் செய்யாது தன் சிறையிலிட்டுஅவன் பார்சென்றிரந்து வருவானாயினதும் முன்னோரைப் பொருட் படுத்தாது கேட்டவ ரத்திழுக்கால் நாளாகிய ஸ்ரீராமராலிறந்ததுமாமென்க.

ராஷ்ட்ரபாலன் - கம்ஸன்தம்பி.

ராஷ்ட்ரபாலிகை-உக்ரஸேநன்புத்திரி, ஸ்ருஞ்ஜயன் பாரி.

ரி

ரிபு - யதுவினது நான்காம்புத்திரன்.

ரிபுஞ்ஜயன்-ப்ருஹத்ரதன் வம்ஸத்துமகதமேசராஜர்களுள் கடையரசன். இவன் தனது மந்த்ரி ஸுநக்ரீநகனாற் கொல்லப்பட்டவன்.

ரு



ருகன்-வருகன் தந்தை, விஜயன்புத்திரன்.

ருக்மகேஸன், ருக்மதரன், ருக்மநேத்ரன், ருக்மபாஹு — ருக்மிதம்பியர்.

ருக்மன், ருக்மேஷு — ருசிகன் புத்திரர், ஸ்யாமகன் ஸஹோதரர்.

ருக்மி - விதர்ப்பராஜனாகிய பீஷ்மகன் மூத்தமகன், ஸ்ரீருக்மிணீ தமையன்.

ருக்மிணீ- ஸ்ரீகிருஷ்ணன்மூத்தமனைவி, பீஷ்மகன புத்திரி, பிரத்யுமநன்தாய்.

ருக்ஷபன் - மஹாவீரன் புத்திரன், இவனுக்குப் புஷ்கராருணி, கவி, த்ரயாருணி, எனமூவர் புத்திரர், இவர்கள் ஸந்ததியார் ப்ராஹ்மணராயினர்.

ருசி-ஒருப்ரஜாபதி. ஸதரூபன் புத்திரியாகியஆஹூதிஇவன்பாரி, இவளிடத்திற் பிறந்தபுத்திரன் யஜ்ஞன்.

ருசிகன்-தர்மன் புத்திரன், இவன் புத்திரர் ஸ்யாமகன், பிருது, ருக்மேஷு, ருக்மன், ப்ருஜித்து என்போர்.

ருசிதரன் - குரு.

ருசிராஜன் - பிருஹதிஷன்வம்சத்துச் சேநஜித்துபுத்ரன், பிராஜ்ஞன்தந்தை

ருத்ரகோடி - ஒருதீர்த்தம், இது ஒருகாலத்தில் ருத்திரன் ருஷிகளுக்கு பிரத்தியக்ஷமாகக் கோடி ரூபமாய்த் தோன்றினமையால் இப்பெயர் பெற்றது.

ருத்ரபர்வதம்-ஜாஹ்நவி கட்டமென்னும், கங்கைக்கரையிலே யுள்ளமலை.

ருத்ரப்ரயாகை - மந்தாகினிக்கும் அளகநந்தைக்கு மிடையேயுள்ளக்ஷேத்ரம்.

ருத்ரர்-இவர்அஜான், ஏகபாதன், ஹரன் அஹிர்ப்புத்யன், ஸம்பு, த்ரியம்பகன், அபராஜிதன். ஈஸாநன், த்ரிபுவநன், த்வஷ்டா, ருத்திரன் எனப்பதினொருவர், இவர்களை ருத்திரன் மாநஸ புத்ரரெனவழங்குவர், ப்ரஹ்மமாநஸ புத்ரரெனவும் படுவர்.

ருத்ரன் - த்ரிமூர்த்திகளுளொருவராகிய ஸம்ஸாரகர்த்தா, சிவனுக்கும் பெய

ராம், ப்ரஹ்மாவினது புத்ரருள்ளு மொருவராவர் ஸ்ரீகண்ட ருத்திரர் முதலிய ருத்திரபேதமெண்ணி.ல

ருத்ராக்ஷம் - சிவபக்தராற்றரிக்கற்பால தாகிய ஒருமணி, த்ரிபுராஸுரர் களை வதம்பண்ணப்புறப்பட்டபோ து காயத்ரியை ஜபிக்கக் கண்களிலி ருந்து வீழ்ந்த கண்ணீர்த் துளிகள் இம்மணிகளாயின வென்பது சரித்ர

ருமை - ஸுக்ரீவன்பாரி. [ம்

ருரான்-ஸ்யவனன்புத்ரனுகிய ப்ரமதிக்கு கிருதாசியென்னும் அப்ஸரஸையிட த்திற்பிறந்த புத்ரன். இவர்ஒருருஷி, இவர் பாரி ப்ரமத்வரை. இவர் தமது பாரி ஒரு பாம்பாலிறக்க, அவளைத் தமது தபோமஹிமையா லெழுப்பி, அன்றுமுதற் பாம்புகளைக் கொல்வ தேவிரதமாகக்கொண்டவர், அவ்விர தத்தை நீக்கினவர் டுண்டுபமஎன்னு ம் சர்ப்பரூபந் தாங்கியிருந்தவராகிய ஸஹஸ்ரபாத முனிவர். ருரான் மகன் ஸுநகன்.

## ரூ



ரூபாஸ்வன் - க்ருதாஸ்வன்.

ரூபாவாகிகள் - ரூபாநதீதீரவாஸர்கள்.

ரூபை - சுக்திமந்தமென்னு மிடத்திலி ருந்து பாய்கின்ற வொருநதி.

## ரே



ரேணுகை - பரஸுராமன்தாய், ஜமதக் னிபாரி.

ரேணுமதி - நகுலன்பாரி.

ரேவதி - ரைவதபர்வதமீதில்தகமரைத் தடாகத்திற் பிறந்த ஒரு நங்கை. இவளை பரமஸனென் என்னு முனிவர் எடுத்து வளர்த்தார், இவள் புத்ரன் ரைவதமநு.

(௨) பலராமர் பாரி, ரேவதன் புத் திரி. இவள் சர்யாதிபௌத்ரனுகிய ரைவதன்புத்ரன்,குகுத்மிபுத்திரியெ னவும் படுவள்.

(௩) நக்ஷத்திரங்களுளொன்று.

(௪) ஹரிஷ்டன் பிப்பலன் என் போர்க்குத்தாய் மத்ரன் பாரி.

ரேவந்தன் - ஒரு குஹ்யகன்.

## ரை



ரைப்யன் - ஈளிநன் இவன்ஸுமதிபுத் ரன், (௨)அர்த்தாவஸு,பதிராவஸு என்போர் தந்தை.

ரைவதம் - ஒருமலை. இதுகுடமலையெ னவும்படும். இது தவாரகைக்குச்சமீ பத்திலேயுள்ளது. ஹருதவாக்குஎன் னும்ருஷியால் சபிக்கப்பட்ட ரேவதி இம்மலைமேல் வீழ்ந்து ஒரு தடாக மாயினமையால் இப்பெயர்பெற்றது.

ரைவதன் ஐந்தாம்மநு ப்ரியவ்ரதன்வம் ஸத்துத்திர்த்தமநுக்கு ரேவதியிடத் திற்பிறந்த புத்திரன்.

(௨) ஆநர்த்தன் புத்திரன்,குகுத்மி தந்தை.

## ரோ



ரோசனை-வசுதேவர்பாரிகளுள்ஒருத்தி

ரோமகஸித்தாந்தம் - ஜ்யோதிஷஸித் தாந்தங்களுளொன்று. இது ரோம கன் என்னும் பண்டிதன் செய்தது.

ரோமகபுரி - இதுபூர்வகாலத்திலே,மே கலாரேகையிலே இலங்கைக்கு மேற் கே தொண்ணூறுபாகை தூரத்திலி ருந்த பட்டணம்.

ரோமகர்ஷணன்-வேதவியாசபகவானு டைய மாணுக்கராகிய சூதர், இவர் அநேக புராணுதி காசங்களையுபதே சித்தவர் (௨) உக்ரசிரவசன்தந்தை.

ரோமகன் - ரோமகபுரியிலிருந்து ஆரிய தேசத்தில்வந்து ஆரிய சாஸ்திரங்க ளைக்கற்று விளங்கின முற்காலத்துப் பண்டிதன்.

ரோகிணம் } ரோஹிணம் } (௧) ஒருமலை, இந்தமலை யிலே அநேக ரத்நா கரங்களுண்டு, (௨) ஒருமரம், இதி லே வாலகில்லியர் தலைகீழாகத்தூங்

கித்தவஞ்செய்துகொண்டிருந்தபோது கருடன் அமிர்தங்கொண்டு வரப்போனது, அவன் தனக்கு வழியுணவாக ஒரு யானையையும் ஒரு ஆமையையும் கொண்டுபோய், இந்த மரத்தின்கிளை யொன்றின்மேல் உட்கார்ந்தவுடனே இவனது பாரம்பொறுக்கமாட்டாமல் அந்தமரம் ஒடிந்து அடியோடு சாய்ந்து விட்டது. சாய்ந்தவுடனே அந்தமரம் விழுவதற்கு முன்னே கருடனெழுந்து தன்காலிலகப்பட்ட அம்மரத்தையும் அவ்வுணவையும் உடன்கொண்டுபோய் நிஷபுருஷமலையிலே யிறங்கித் தனது உணவைத் தின்றுவிட்டான். அந்தமரத்தில் தொங்கிக்கொண்டிருந்த வாலகில்லியரும் அந்த மரத்தோடு கொண்டுபோய் இந்த மலையில்விட்டப்பட்டார்கள்.

ரோமபாதகன் - (க)(அங்) தசரதன் தருமாதன் புத்திரன், இவன் தனக்குச் சந்ததியில்லாமையால் ஸ்ரீமான் தந்தையாகிய தசரதன் புத்திரியாகிய சாந்தையை யெடுத்து வளர்த்தவன் (உ) விதர்ப்பன் மூன்றும் புத்திரன்.

ரோமஸன் - இந்திரன் ஏவலால் அருச்சுனன் நாகலோகத்தி லிருக்கிறானென்று தருமருக்குணர்த்தி, அருச்சுநனைத் தீர்த்தயாத்திரைசெய்ய ஏவிய முனிவர்.

ரோஹிணி - நக்ஷத்திரங்களு ளொன்று, தக்ஷன் மகள், சந்திரன் அதிப்ரீதையாகிய நாயகி, (உ) பலராமன்தாய், வசுதேவன் மனைவி.

## ரௌ



ரௌகிதம் - பாரதயுத்தத்துக்குப் புறப்பட்ட கௌரவசேனைக்குப் பாசறையாயிருந்தவனம்.

ரௌத்திராசுவன் - அஹம்யாதி புத்திரன், இவனுக்கு க்ருரு தாசியினிடத்திற்பிறந்த புத்திரர் பதின்மர், இவர்களில் மூத்தவன் இருசேயன்.

ரௌரவம் - ஒருநரகம், இதில் மிகுந்த பாவம் செய்தவர்களை யமபடர் வீழ்த்திவருத்துவர், இரண்டாயிரம்யோசனை சதுரமாயுள்ளது, இந்நரகம் முழங்கால் ஆழம் உருக்கிய செம்பு நீர்ப் பரவையாயிருப்பது.



## ல

லங்காதேவி - தருமன் மனைவியாகிய தக்ஷன்மகள், இவளுக்கு லம்பா என்றொரு பெயருமுண்டு.

லங்காபுரி, லங்கை } ராவணன்ராஜதானி. இது தென் சமுத்திரத்திலே த்ரிகூடபர்வதசிகரத்திலே விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட பட்டணமும், அதைச்சேர்ந்த நாடுமாம், இது முதலிலே மால்யவந்தனுக்கு ராஜதானியாகி, அதன்பிறகு குபேரனுக்கு ராஜதானியாகி அதன்பிறகு ராவணனாலே அபகரிக்கப்பட்டது. இந்தப் பட்டணத்துக்கு வழு மதில்களுண்டு இதைச்சேர்ந்த நாட்டைச்சேர்த்து எழுநூறுகாதம் விஸ்தாரமுடையது, இதுசூரிய சித்தாந்தத்திலேசொல்லப்பட்ட மேகலா நகரங்கள் நான்கனுள்ஒன்று, சோதிடசாத்திரத்துக்குநாடிஸ்த்தாநமாயிருந்தது இப்போதுள்ளலங்கைமேகலாரேகைக்கு வடக்கே அதிதூரத்தி லிருப்பதாலும் ஆதி லங்காபுரி மேகலா ரேகையிலிருந்தமையாலும், கடலாற்கொள்ளப்பட்ட இலங்கையின் ஒரு சிறுகூறே தற்காலத்துளதாதல்வேண்டும்.

லங்கினி - இலங்கைநகரத்தைக் காவல் செய்திருந்த வோராக்கி, இவள்வாயு புத்ரனாகிய ஆஞ்சநேயனால் கொல்லப்பட்டாள்.

லங்கை - லங்காபுரிகாண்க.

லக்ஷ்மணவதி - கௌடபுரி.

லக்ஷ்மணன் - ஸ்ரீராமருக்குத் தம்பி, தசரதனுக்குச் சுமித்திரை யென்னும் மனைவியினிடத்திற் பிறந்த மகன், இவன் தன் தமையனிடத்தில் அதிக அன்பும் பக்தியுமுள்ளவன் இவன் ஸ்ரீராமர்மேல் வைத்த அன்பினாலும் பக்தியினாலும் சகோதர வாஞ்சையா

லும், ஸ்ரீராமர் வனவாசத்திற்குச் சென்றபோது அவரை விடாதுதொடர்ந்துசென்று அவர்க்கு நேரிட்டதுன்பங்களையெல்லாம் தானும் உடனிருந்து அநுபவித்தானாதலால் இவனை உலகத்தாரெல்லாரும் சகோதரவாஞ்சைக்குச் சிறந்த இலக்கியமாயெடுத்துப் புகழ்ந்து பேசுவார்கள்.

லக்ஷ்மி - திருப்பாற்கடலைத்தேவாசுராகிய இருதிறத்தாரும் கடைந்து அமிர்தம் பெற்றகாலத்தில் அந்தக் கடலிற்றோன்றிய பெண்ணரசியார், இவர் திருமாலின் வலத்திருமார்பில் வாழ்ந்திருப்பவர், இவர் செல்வங்களுக்கெல்லாம் அதிதேவதையா யிருப்பவர் இவர் பிரமாவுக்குப் புத்திரியாகிய ஜ்யேஷ்டாதேவிக்குப்பின்பிறந்தவரென்றுஞ்சொல்லப்படுவர், பிருகுபுத்திரியென்றும் அக்காரணத்தானே பார்க்கவியென்னும் பெயர்பெற்றனரென்றும் சிலர் கூறுவர், இந்த விகற்பமாகிய கொள்கைகளெல்லாம், கற்பந்தோறும் அவதாரபேதத்தால் உண்டாவன, இவர்க்கு, இந்திரை லோகமாதா, மா, ரமை, மங்கள தேவதை, லோகஜநநீ, க்ஷீரசாகரகந்யகை, கமலாசனை, கமலாலயை, பதுமாலயை, பொறி, ஆக்கம், பொன், செய்யாள், பூமகள், முதலிய பல பெயர்களுண்டு

லக்ஷ்மீசுவரர் - திருநின்றியூரிலேகோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.

லதை - ஒரு அப்ஸரஸ்த்ரீ, இவள் பூங்கொடிப்போல் பவளாதலால் இவளுக்கு இப்பெயருண்டாயிற்று, (லதை-கொடி.)

லம்போதரன் - விநாயகன், இவர் சரிந்தவயிற்றையுடையராதலால் இவர்க்குஇப்பெயருண்டாயிற்று, விநாயகன் விக்நராஜன், த்வைமாதுரன், கணதிபன், ஏகதந்தன், ஹேரம்பன், கஜாநநன், என்றற்றொடக்கத்துப் பலபெயர்களும் இவருக்குண்டு. இவற்றுள் விநாயகன் என்பதற்கு, துஷ்டரையும் இடையூறுகளையும் சிக்ஷிக்கிறவனென்றும், தனக்குமேலொரு நாயக னில்லாதவனென்றும் பொருள், விக்நராஜன் என்பதற்கு இடையூற்றை ஆக்கவும் போக்கவும் வல்லன் என்பதும், த்வைமாதுரன் என்பதற்குகங்கை பார்வதி என்னும் இரண்டு தாய்மாரை யுடையவன் என்பதும், கணதிபன் என்பதற்கு பரமதாதி கணங்களுக்குத் தலைவன் என்பதும், ஏகதந்தன் என்பதற்கு ஒற்றைக் கொம்புள்ளவன் என்பதும், ஹேரம்பன் என்பதற்கு சிவனருகே யிருப்பவனென்பதும், கஜாநநன் என்பதற்குயானைமுகத்தையுடையவன்என்பதும் பொருள்.

லவணாசுரன் - மதுபுத்திரன், இவன் உலகத்திலுள்ள சாதுக்களெல்லாரையும் வருத்துவதே தொழிலாகக்கொண்டு திரியுங்காலத்திலே, சத்ருக்கனாலே கொல்லப்பட்டவன்.

லவன் - சிரீராமர் புத்திரன்.

## லா



லாங்கலி - பலராமன்.

லாங்கலினி - மகேந்திரமலையிலுற்பத்தியாகுமோர் நதி.

லாசகன் - சிவன்.

## லி



லிங்கம் - சிவபெருமானுர், ஆன்மாக்கள் தம்மை வழிபட்டுய்யும்படிகொண்ட நிர்குணசொரூபமாகிய சகளவடிவம் பீடமும் லிங்கமும் சதாசிவவடிவம் அது கன்மசாதாக்கிய வடிவமெனவும்படும், பீடம் சத்தியையும் லிங்கம் சிவத்தையும் குறிக்கும். இந்தச்சாதாக்கியத்திருமேனிசர்வான்மாக்களையும், சர்வாண்டங்களையும் தன்னுள்ளேயடக்கிக்கொண்டிருக்கும், பரம காரணனை விளக்குதலால், உலகத்துமக்கள் தியாகித்து வழிபடுதற்குச் சிறந்த குறியாயுள்ளது, இதினுஞ் சிறந்ததாகிய குறி வேறொன்றுமில்லை. இந்தலிங்கம் பரார்த்தமென்றும்இன்டமென்றும் இருவகைப்படும். அவற்

றுள்பாரார்த்தம், சுயம்புகாணம், தை விகம், ஆரிடம், மாநுடம்எனஐந்துவ கையாம். இஷ்டலிங்கம் சுவார்த்தமா கப் பூசிக்கப்படுவதாய் ஒருவன் தன் குருவினிடத்துப் பெறுவது விக்ர ஹங்களுக்குப் பொதுப்பெயர்.

## லீ



லீலாவதி - இரணியகசிபன்மனைவி, ப்ர ஹ்லாதன் தாய், பாஸ்கராசாரியர் புத்ரி, இவள்பொருட்டே லீலாவதி யென்னும் பரபலகணிதநூல் பாஸ்க ராசார்யராலேசெய்யப்பட்டது, அர்க் கை.

லீலாவதியென்னுங் கணிதநூலி லே வல்லவளாகியபின்னேதான்செ ய்த நூல்களை யெல்லாம் தன்தந்தை பெயரால் பரசுரித்தாள் என்பர்.

## லை



லைங்கம் - லிங்கபுராணம், இது நந்திகே சுரரால் சொல்லப்பட்டது. இதுபதி னோராயிரங் கிரந்தங்களையுடையது.

## லோ



லோகபாலர் - பூமிக்கு நாற்புறத்திலும் லோகாலோக பர்வதத்திலேயிருந்து பூமியைக் காக்கின்ற சுதந்தவன், சங் கன், ஹிரண்யரோமன், கேதுமந்தன் என்னும்நால்வர் இப்பெயர்பெறுவர்.

லோகாலோகம்-சக்கரவாளகிரி இதுவ ட்டவடிவாயிருப்பது, இதுவரைக்கு ந்தான் சூரியகிரணம் வியாபிக்கும், ம னிதர் வசிக்க வொண்ணாத பூப்பிர தேசம் அலோகமென்றும் வசித்தற் குரியது லோகமென்றும் சொல்லப் படும், பூகோளத்தின் அத்யுத்தரபா கமும் அதிதக்ஷிணபாகமும் அலோ கமாம், இரண்டையும் பிரிக்குமெல் லையே லோகாலோக பர்வதமாம்.

லோகிதாசியன் - அரிச்சந்திரன்மகன்.

லோகித்தியநதி - தேவாரணியத்தருகே யுள்ள வோர்நதி.

லோபாமுத்திரை- அகஸ்தியமுனிவர் ம னைவி, விதர்ப்பதேசத்தரசன் மகள், புலஸ்தியர் தங்கை.

லோமபாதன் - அங்கதேசத்தரசன்.

லோலா - லோலை, லவணாசுரன் தந்தை யாகிய மதுவின் தாய்.

## வ



வஃகான் - வகரம்.

வககி - எருது, காற்று, சினேகிதன்.

வகது - எருது, பிரயாணக்காரன்.

வகத்திறம் - வாகை.

வகந்தம் - காற்று, குழந்தை.

வகம் - காற்று, வழி, வாகனம்.

வகரம் - வகரஎழுத்து.

வகனிசூதனன் - வீமன்.

வகன் - குபேரன், பகன்.

வகாரத்திரவியவித்தை- பஞ்சாக்கரவித் தைகளுண் மூன்றுவித்தை.

வகாரம் - ஓரெழுத்து.

வகித்தல் - சகித்தல்.

வகிரங்கம் - பகிரங்கம்.

வகிரியாகம் - வெளியாகப்பூசை.

வகிருதல் - அறுத்தல், கோதல், பங்கு செய்தல், போழ்தல்.

வகிரேந்திரியம் - அரிகருவி.

வகிர் நரம்பு, பிளவு, வகிரென்னேவல், வழி, வார்.

வகிர்தல் - வகிருதல்.

வகுண்டம் - கவிழ்த்தும்பை.

வகுண்டிமடம் - வாலுளுவை.

வகுதி - வகுப்பு.

வகுத்தல் - வகைப்படுத்தல்.

வகுத்திரம் - தெப்பம்.

வகுத்திராபிகாரம் - பஞ்சேந்திரியம்.

வகுத்துக்காட்டல் - ஒருயுத்தி, அது தொகுதி காட்டியவைகளை வேறு விரித்துக்காட்டுதல்.

வகுந்து - வழி.

வகுப்பு - அழகு, பகுப்பு, பொலிவு.

வகுலி - ஒருமீன்.

வகுளமாலாதரர்
வகுளபாஸ்கரர் } சடகோபர்.
வகுளபூஷணர்
வகுனி - ஒலி.
வகுள் - சமுத்திராப்பச்சை.
வகுளிநாதர் - நவநாதசித்தரிலொருவர்.
வகை - இனம், உபாயம், ஏது, கூறுபாடு, தரம், பகுப்பு, முதல், முறை, வகுப்பு, வழிவகை.
வகைதேடுதல்
வகைபார்த்தல் } உபாயந்தேடுதல்.
வகைபுனைதல் - வகைப்பண்ணல்.
வகைப்படுதல் - பங்குபடுதல்.
வகைப்படுத்தல் - பங்கிடுதல்.
வகையகத்திணை - தொகையாயுரைத்த பொருளை வகையறுத்துரைத்தல்.
வகையிடுதல் - வகைப்படுத்தல்.
வகையுளி - அவ்வச்சொல் முடிவேசீர் முடிவாக்கித் தளைகொள்ளாமல் வேண்டியவிடத்துச் சீர்முடிவு செய்து தளைகோடல்.
வக்கட்டை - கடவான்.
வக்கணம் - நாகரிகம், நிந்தை, பட்டப்பேர், மார்பு, வர்ணனை, விற்பன்னம்.
வக்கணத்தி - ஒருபூண்டு.
வக்கணை - வக்கணம்.
வக்கபாகை - ஓரூர்.
வக்கரை - பக்கரை.
வக்கா - ஒருபட்சி.
வக்காமணி - ஒருமணி.
வக்கான் - வைக்கான்.
வக்கிரகட்கம் - கரவாளம்.
வக்கிரகண்டம் - இளந்தை.
வக்கிரக்கிரீவம் - ஒட்டகம்.
வக்கிரசச்சு - கருடன், கிளி, வலியான்.
வக்கிரசந்திரன் - இளம்பிறை.
வக்கிரசிருங்கி - வளைகொம்புப்பசு.
வக்கிரசுஞ்சி கிளி.
வக்கிரதந்தம் - வளைந்தபல்.
வக்கிரதுண்டம் - கிளி, வக்கிரசச்சு.
வக்கிரபுஷ்பம் - முருக்கமரம்.
வக்கிரநக்கிரம் - கிளி.
வக்கிரநக்கிரன் - பிசுநன், லோபி.
வக்கிரநாசிகம் - ஆந்தை, கிளி.
வக்கிரம் - கலக்கம், கொடுமை, நிமிர்தல், பொய், பொறாமை, மீளுமடங்குதல், மீளுதல், வஞ்சனை, வட்டம், வளைவு.
வக்கிரவத்திரம் - பன்றி.
வக்கிரவாலதி - நாய்.
வக்கிரவாலி - நாய்.
வக்கிரன் - உருத்திரன், குரூரன், சனி, செவ்வாய், தந்தவக்கிரன்.
வக்கிராங்கம் - அன்னம்.
வக்கிராங்கி - கடுகுரோகணி, கூனி.
வக்கிராத்தமனம் - திரும்புதலோடத்தமனம்.
வக்கிரித்தல் - திரும்புதல்.
வக்கிரோதயம்-திரும்புதலோடுதித்தல்.
வக்கு - தொட்டி, தோல், வழி.
வக்குத்திரிகாணம் - படுக்கை.
வக்துரு - சொல்வோன்.
வக்தரயோதி - விப்ரஜித்தி புத்ரன்.
வங்கக்கடல் - கப்பலோடுங்கடல்.
வங்கக்கல் - சுக்கான்கல்.
வங்கசெந்தூரம் - ஈயபஸ்மம்.
வங்கசேநகம் - வெள்ளகத்தி.
வங்கடம் - வமிசம்.
வங்கணம்
வக்கனம் } உற்றநேசம், ஒருதேயம், சிநேகம்.
வங்கணதூஷணம் - அவதூறுபண்ணுதல்.
வங்கணன் - உற்றதோழன்.
வங்கநீறு - ஈயமணல்.
வங்கபற்பம்
வங்கபஸ்மம் } வங்கசெந்தூரம்.
வங்கமணல் - வங்கநீறு.
வங்கம் - ஆற்றுமடக்கு, ஈயம், கத்தரிச்செடி, கருத்து, சிறுகத்தரி, துத்தநாகம், தேயமைம்பத்தாறினொன்று, இது கௌடதேயத்தைச் சார்ந்திருப்பது பதினெண் பாடையினுமொன்று, மரக்கலம், வழுவு, வெள்ளி.
வங்கம்விளையுங்கல்-வெள்ளைச்சுக்கான்கல்.
வங்கர் - ஒருசாதியார், சண்டாளர்.
வங்கனம் - சேம்பு.
வங்கனர் - ஒரு சங்கப்புலவர்.
வங்கன் - பலியின் இரண்டாட்புத்திரன், இவனால் அரசாளப்பட்டநாடு வங்கநாடென்று வழங்கப்பட்டது.
வங்கா - காளம்.
வங்காரம்-உலோகக்கட்டி, பொன், வணிதம்.
வங்காரவச்சி
வங்காரவாசி } ஒருகீரை.

வங்காளத்திப்பிலி - ஒருதிப்பிலி.
வங்காளப்பச்சை-ஒருபூடு, ஒருவர்ணம்.
வங்காளம் - தேயமைம்பத்தாறினொன்று.
வங்கி - ஒரு கைவளை, துடிவேலி.
வங்கிஷம் - வமிசம்.
வங்கியசூடாமணி - சண்பகபாண்டியன் தருமியென்பவன் இவன்காலத்திலிருந்தவனே.
வங்கியசேகரன்-விக்ரமச்சோழன் காலத்திலே மதுரையில் அரசுபுரிந்த பாண்டியன், இவன் சோமசுந்தரக் கடவுளிடத்துத் தமிழ்ச்சங்கப்பலகைபெற்றவன், கடைச்சங்கத்தைத் தாபித்து அதற்குவேண்டிய நிபந்தனைகளையேற்படுத்தி நூலாராய்ச்சியும் நூல்செய்வித்தலுமாகிய இவைகளாலேயே தமிழை விருத்தி செய்தவன் இவனே.
வங்கியம்-இசைக்குழல்,மூங்கில்,வளைவு.
வங்கிலம் - முள்.
வங்கு - அளை, கழுதைப்புலி, கற்புழை, சந்து.
வங்குக்கட்டை, வங்குக்கால் - மாக்கலத்தறி.
வங்கூழ் - காற்று, வாதம்.
வங்கை - பகை.
வசகம் - கொறடு.
வசக்கட்டு - ஆட்சி.
வசக்குதல் - படியப்பண்ணல்,வசையப்பண்ணல்.
வசக்கேடு - சரீரமெலிவு.
வசங்களித்தல் - ஆட்சியைவிலக்கல்.
வசங்கெட்டவன் - இட்டமில்லாதவன், சுகமற்றவன்.
வசட்டி - வயிரமண்.
வசதி - இடச்சுகம், இரா, இருப்பிடம், நல்லிடம், மருதநிலத்தூர், வீடு.
வசதிக்கேடு - சுகவீனம்.
வசத்திற்சோதினி - எலுமிச்சை.
வசநாவி - நஞ்சு.
வசநீயம் - வார்த்தை.
வசநீயதை - நிந்தை.
வசந்தகாலம் - சித்திரைவைகாசியின்பருவம்.
வசந்தகோஷி - குயில்.
வசந்தங்களித்தல் - வசந்தனடித்தல்.
வசந்தசகன் - மன்மதன்.
வசந்தசமுகன் - காமன்.
வசந்ததிரு - மாமரம்.
வசந்ததிருநாள் - மஞ்சணீர்த்திருவிழா.
வசந்ததூதம் - குயில், சித்திரை,மாதம், மாமரம்.
வசந்தநாதன் - மன்மதன்.
வசந்தபைரவி - ஓரிராகம்.
வசந்தமண்டபம்- இளைப்பாறுமண்டபம் சிறு தென்றல் வீசுமண்டபம்.
வசந்தமலர் - இலவுங்கம்.
வசந்தமல்லிகை - ஒருகொடிமல்லிகை.
வசந்தமாலை - ஒருபிரபந்தம்,அது தென்றலைச் சிறப்பித்துப் பாடுவது, மாதவிதோழி, இவளுக்குக் கூனி யென்றொரு பெயருமுண்டு.
வசந்தம் - இந்திரன்மாளிகை, இளவேனில், ஓரிராகம், சின்னமுத்து, சுகந்தம், தென்றற்காற்று, வாசனை.
வசந்தருது - இளவேனிற்பருவம்.
வசந்தவிழா - வேனில்விழா.
வசந்தனடித்தல் - வசந்தன்கூத்தாடல்.
வசந்தன் - ஒருகூத்து, குரங்கு, தென்காற்று, மன்மதன்.
வசந்திகை, வசந்தியை - தேமல்.
வசப்படல், வசப்படுதல் - வசமாதல்.
வசப்படுத்தல் - வசமாக்கல்.
வசப்பிழை - பெலகீனம்.
வசமாக்கல் - ஆட்சிகொடுத்தல்.
வசமாதல் - ஆட்சியாதல்.
வசம் - அமைச்சல், ஒழுங்கு, கீழ்ப்படிதல், கைவசம், துரைத்தனம், நிலைவரம், பிறப்பு.
வசம்பு - ஒருமருந்து.
வசரம் - கோழி.
வசலு - சத்துரு.
வசலை - ஒருகொடி, பசலை.
வசவி - துட்டை.
வசவு - இழிவுரை.
வசளை - பசளை.
வசனம் - அரைப்பட்டிகை, சொல்,பழமொழி, புடவை, பேச்சு, வாக்கியம், வாசகம், வீடு.
வசனுபாசம் - ஓரளவைப்பிரமாணம்.
வசனுவி - வச்சநாபி.
வசனித்தல் - சொல்லல், விபரித்தல்.
வசன் - எல்லை, நேர்.

வசன்கட்டு - எல்லைவரம்பு.
வசாரம் - அபிப்பிராயம்.
வசி - இருப்பிடம், கழுமுள், குற்றம், கூர்மை, சூலம், தழும்பு, திரட்சி, வசியம், வாள், மழை.
வசிகம் - மிளகு.
வசிகரணம் - கலைஞான மறுபத்துநான்கினொன்றுபுணர்ச்சிக்கிணக்கம், மன்மதன் கணையினொன்று, வசியென்னேவல், வாள்.
வசிகரம் - சிந்தில், வசியன்.
வசிகரித்தல்-வசப்படுத்தல்,வேண்டுதல்.
வசிகரிப்பு - மன்றாட்டு.
வசிட்டம் - வாசிட்டம்.
வசிட்டன்-ஓரிருடி,பிரமனது மாநசபுத்திருள் ஒருவர், இவர் தவத்தால் மிகச் சிறந்தவர். இக்ஷ்வாகு வமிசத்தரசரெல்லாருக்கும் இவரே குலகுரு. இவர் வைவசுவத மன்வந்தரத்திலே சப்தரிஷிகளுள்ளே ஒருவர், இவர். மனைவி அருந்ததி, புத்திரர் சக்தி முதலிய நூற்றுவர், இவர் முற்காலத்திலே தக்ஷன் மகளாகிய ஊர்ச்சையென்பவளை மணம்புரிந்து அவரிடத்திலே ரஜன், கோத்திரன், ஊர்தவபாகு, தவநன்,அநகன், சுதபன், சுக்ரன் என்னும் ஏழுபுதல்வரைப்பெற்றார். இவ்வெழுவரும்சுவாயம்புவ மன்வந்தரத்திலே சப்தரிஷிகளாக இருந்தார்கள். இவர் முன்னே பிரமாவின் மாநச புத்திரராக இருந்தபோதுநிமி சாபத்தால் சரீரமிழந்து, பிறகு மித்ரா வருணர்களுக்குப் புத்திரராகப் பிறந்தார். பிறகு வியாசராகப் பிறந்தவரு மிவரே.
வசிதை - கீழ்ப்படுத்தல், மருட்டுதல்.
வசித்தல் - தங்கல், வசனித்தல்,வசியம் செய்யல்.
வசித்துவம் - அட்டசித்தியினொன்று அது யாவரும் வணங்கநிற்றல்.
வசிகி - வன்னிமரம்.
வசியகரன் - வசியஞ்செய்வோன்.
வசியமை - வசியஞ்செய்யும் மை.
வசியம் -காம்பு, கைவசம், மண்பொருத்தம் பத்தினொன்று, வசமாதல், அது அட்டகருமத்தொன்று.
வசியை - பதிவிரதை.
வசிரம் - ஆனைத்திப்பிலி, கடலுப்பு.
வசிவு - வளைவு.
வசீகரணம்-கீழ்ப்படுத்தல், வசிகரணம், வசியப்படுத்தல்.
வசீகரம் - வாசம்.
வசீகரன் - வசியப்படுத்துவோன்.
வசீரம் - யானைத்திப்பிலி.
வசு அட்டவசுக்கள், ஒருமணி, கிரணம் குபேரன்,சிவபிரான், சூரியன், செல்வம், தேவர், நீர், நெருப்பு, பசுவின்கன்று, பொருள், பொன், மரப்பொது, வெள்வெங்காயம்,சேதிராயனாகிய கருதி புத்திரன், கிருகன்வமிசத்துப் பூதசோதி புத்திரன்.
வசுகந்திகை - நாய்வேளைச்செடி.
வசுகடன் - யாசகன்.
வசுகூபம் - அமுரி.
வசுக்கள் - அட்டவசுக்கள் .
வசுநேசன், வசுசேனன் } கர்ணன்.
வசுதன் - குபேரன், திருசதசியன்.
வசுதாதரம் - மலை.
வசுதாதிபன் - அரசன்.
வசுதாரை-அருகர்க்குரியஒருசத்தி, அளகை.
வசுதேவநந்தநன் - க்ருஷ்ணன். [
வசுதேவன் - ஆநகதுந்துபி,சூரன்புத்திரன், தேவகிநாயகன், க்ருஷ்ணபலராமர்களுக்குத் தந்தை, கண்ணுவன்.
வசுதை - பூமி, தேசம் மாலியனென்னும் இராக்கதன் மனைவியாகிய கந்தருவப்பெண்.
வசுநாள் - அவிட்டநாள்.
வசுந்தரை - பூமி.
வசுபதன் - உபரிசர வசுவினது சேனாபதி, கோலாகல சங்கமத்திலே சுக்திமதியிலே பிறந்தவன்.
வசுபை - புநர்பூச நட்சத்திரம்.
வசுப்பிராணன் - நெருப்பு.
வசுமதி - பூமி.
வசுமந்தன் - சுருதாயு.
வசுவசி, வசுவாசி } ஜாதிபத்திரி.
வசூரி - மசூரி.
வசூரை - வேசி.
வசை-இகழ்ச்சிச்சொல்,கணவன்சகோதரி, குற்றம், பசு, பெண், பெண்யா

னை, மகள், மலட்டுப்பசு, மனைவி, மூழை.
வசைச்சொல் - இகழ்ச்சிச்சொல்.
வசைதல் - சூழப்படல், வளைதல்.
வசைத்தல் - வளைக்குதல்.
வசையாடுதல் - நிந்தித்துப்பாடுதல்.
வசைப்படுதல் - வடுப்படுதல்.
வசைபாட்டு - சாபப்பாட்டு.
வசைவினை - துன்னடை.
வச்சகத்தண்டுலம் - வெட்பாலையரிசி.
வச்சகம் - மலைமல்லிகை.
வச்சநாபி - வற்சநாபி.
வச்சநி - மஞ்சள்.
வச்சலமணி - கோரோசனம்.
வச்சாதனி - சீந்தில்.
வச்சி - காயாமரம்.
வச்சிரகங்கடம் - வச்சிரக்கட்டை.
வச்சிரகங்கடன் - அனுமன்.
வச்சிரகங்கணம் - வயிரகங்கணம்.
வச்சிரகம் - தாமரைக்காய்.
வச்சிரகம்பம் - வயிரத்தூண்.
வச்சிரகரன் - இந்திரன்.
வச்சிரகவசன் - வயிரச்சட்டை.
வச்சிரகாயம் } வச்சிரயாக்கை.
வச்சிரசரீரம் }
வச்சிரசிதன் - கருடன்.
வச்சிரசுவாலை - கும்பகர்ணன் மனைவி.
வச்சிரசூசிகாபரணம் - ஒருவகையம்பு.
வச்சிரசூரியன் - புத்தன்.
வச்சிரசெலதம் - கோரைக்கிழங்கு.
வச்சிரச்சுவாலை - மீன்.
வச்சிரதசநம் - எலி, பன்றி.
வச்சிரதந்தன் - பகதத்தன் புத்திரன்.
வச்சிரதந்தி - ஒருபுழு.
வச்சிரதம்ஷ்ட்ரன் - ராவணன் துணைவரிலொருவன்.
வச்சிரதம்பநாயகர் - திருமழபாடியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வச்சிரதரன் - இந்திரன்.
வச்சிரதாரணை - நவதாரணையி னொன்றுஅது அகங்காரத்தையுஞ் சீவதத்துவத்தையுநீக்கிப் பாதத்துவமேதியானஞ்செய்யத்தக்கதென்றறிதல்.
வச்சிரதுண்டம் - கருடன், கொசுகு, வலியான்.
வச்சிரதுண்டம் - விநாயகன்.
வச்சிரதேகம் - வச்சிரயாக்கை.
வச்சிரத்தலைச்சி - கதண்டு.
வச்சிரநாடு - ஒருதேயம், இது சேனையாற்றின் கரையிலுள்ளது.
வச்சிரநாபன் - விப்ராஜித்தி புத்திரன், இவன் தாய் சிங்கிகை, இவன் மகள் ப்ரபாவதி.
வச்சிரபஞ்சகவசம் -ஒருகாப்பு.
வச்சிரநிம்பம் - கருவேம்பு.
வச்சிரபாணி - இந்திரன்.
வச்சிரபாதம் - இடியேறு.
வச்சிரபீசகம் - கொடிப்புன்கு.
வச்சிரபீஜம் - கழற்சிக்காய்.
வச்சிரபுட்பம் - எட்பூ.
வச்சிரப்பசை - ஒருபசை.
வச்சிரமுஷ்டி - மாலியவந்தன்புத்திரன்.
வச்சிரம் - அத்திபேதி, இடி, எட்பூ, ஒருபிசின், குலிசம், கொடுஞ்சொல் சதுரக்கள்ளி, சிற்பநூன் மூப்பத்திரண்டிலொன்று, தருப்பை, நித்தியயோகத்தொன்று, பசுமை, மாட்டுத்தோலினின்றெடுக்கும்பசை, வச்சிராயுதம், வயிரமணி, வயிரம்.
வச்சிரயாக்கை - ஊறுபடமாட்டாத சரீரம்.
வக்சிரவராகி - சமணர் கொண்டாடும் ஒரு மாயாசத்தி.
வச்சிரவல்லி - பிரண்டை, பொழுதுவணங்கிப்பூச்செடி.
வச்சிரவாகு - சூரபன்மன்மந்திரிலொருவன், இவனதாய் பத்மகோமளை.
வச்சிரவாராகி - மாயாதேவி.
வச்சிரன் - இந்திரன், ஒருபத்தன். கிருஷ்ணன் பௌத்ரனுகிய அநிருத்தன் மகன், கிருஷ்ணவதாரத்தின் பிறகு இவனே மதுராபுரிக் கரசனுயிருந்தவன்.
வச்சிராங்கதம் - இடியேறு.
வச்சிராங்கம் - சதுரக்கள்ளி.
வச்சிராங்கன் - காசிபன் புத்திரன், இரணியாக்ஷன் இரணிய கசிபன் என்போர் இறந்த பிறகு திதியானவள் புத்திரவாஞ்சையால் தவஞ்செய்து கருப்பங்கொள்ள, அந்தக்கருப்பத்தை இந்திரன் சேதித்தான், அப்படி சிதைந்த கருப்பமானது எழுகூறாக எழுமருத்துக்கள் பிறந்தார்கள், அத

ன்பிறகும் புதல்வர்ப்பேற்றைக் குறித்துத் தவஞ்செய்து இந்த வச்சிராங்கனை யீன்ருள். இந்த வச்சிராங்கன் இந்திரனை வென்று பிரமாவைநோக்கித் தவஞ்செய்து தாரகனைப் பெற்ருன்.
வச்சிராங்கி - வச்சிராங்கன் மனைவி, தாரகன் தாய்.
வச்சிராசனி - இந்திரன்கொடி.
வச்சிராட்சி - பிரண்டை.
வச்சிராதம் - பன்றி.
வச்சிராயுதம் - குலிசம்.
வச்சிராயுதன் - இந்திரன்.
வச்சிராவர்த்தம் - இராமன்வில்.
வச்சிரி - இந்திரன்.
வச்சிரீமரணம் - இடைபிங்கலைசுழிமுனை.
வச்சிரை - ஒரு ரப்ஸரஸ்த்ரீ.
வச்சையம் - கலைமான்.
வஞ்சகச்சொல் - மடிப்பானபேச்சு.
வஞ்சகமூடி - ஆமை.
வஞ்சகம் - அணுப்பு, இது தாமதகுணத்தொன்று, சூத்திரம், நரி, மடிப்பு, மறைவு.
வஞ்சகவொழிப்பு பெயர் முதலியசொற்களால் வருணியத்தினது தருமத்தை மறுத்தல், (உ-ம்) இம்மடந்தை கட்கடை நோக்கென்னும் பெயரினைக்கொண்டம்மதவேள்வாளிபடும்.
வஞ்சகன்-தூர்த்தன், நரி, வஞ்சிப்போன்.
வஞ்சகாரம் - கொடிவேலி.
வஞ்சசதம் - கபடம்.
வஞ்சகநடை - கபடநடை.
வஞ்சநவிற்சியணி - ஓரலங்காரம், அது ஒரு காரணத்தானிகழ்ந்த சத்துவமாகிய குணத்தை மற்ருெரு காரணங்கூறி மறைத்தல்.
வஞ்சகந்தீர்தல் - பழிவாங்கல்.
வஞ்சப்பழிப்பணி - ஓரலங்காரம், அது நிந்தையானிந்தை தோன்றச் சொல்லல்.
வஞ்சப்புகழ்ச்சியணி-ஓரலங்காரம், அது பழிப்பினுற் புகழ்ச்சியும் புகழ்ச்சியாற்பழிப்பும் புகழ்ச்சியாற் புகழ்ச்சியுந் தோன்றச் சொல்லல்.
வஞ்சப்பெண்-காளியேவல் செய்வாள்.
வஞ்சமனம் - கபடமனம்.
வஞ்சமனத்தான் - கபடமனமுள்ளவன்.
வஞ்சம் - கபடம், கொடுமை, சிறுமை பொய், வடிப்பு, மாயம், வாள்.
வஞ்சவம் - பாம்பு.
வஞ்சனம் - ஒருமீன், வஞ்சகன்.
வஞ்சனி - இடாகினி, காளியேவல்செய்வாள், பெண்.
வஞ்சனை - ஆணை, தெய்வப்பெண், பொய், மாயம், வஞ்சகம்.
வஞ்சனைபண்ணுதல் - வஞ்சித்தல்.
வஞ்சன் - வஞ்சகமுள்ளவன்.
வஞ்சி-ஒருகொடி, ஒருபா, கருவூர், சீந்தில்கொடி, தருமதேவதை, பகைவர்மேற்செலவு, பகைவர்மேற்செல்வார்க்குமாலை, பெண், வஞ்சியென்னேவல், சேரர்களுக்கு இராஜதானி, இதனைக் கொடுங்கோளூர் என்பார் சிலர், திருவஞ்சைக்களம் என்பார் சிலர், இவ்விரண்டூர்களும் கொச்சியைச்சார்ந்த நாட்டில் ஒன்றுக்கொன்று சமீபித்திருப்பன.
வஞ்சிச்சீர் - வஞ்சியுரிச்சீர்.
வஞ்சிதன் - வஞ்சிக்கப்பட்டவன்.
வஞ்சித்தல் - வஞ்சனைசெய்தல்.
வஞ்சித்தளை - கனிநிழலென்னும் வாய்பாடுகளின் பின் நேரசையேனுநிரையசையேனும் வருவது.
வஞ்சித்தாழிசை - நிரையசை யோடேனு நேரசை யோடேனும் புணர்ந்து இருசீரடி நான்குகொண்டொருபொருள்மேல் மூன்றடுக்கிவருவது.
வஞ்சித்துறை - இருசீரடிநான்குகொண்டுவருவது.
வஞ்சிப்பா - ஐந்துபாவினென்று, அது பெரும்பான்மை வஞ்சித்தளையுஞ் சிறுபான்மை பிறதளையுந்தழுவி இருசீரடியானேனு முச்சீரடியானேனுமூன்று முதலிய பல அடிகளைக்கொண்டு தனிச் சொற்பெற்று அகவற்சுரிதகத்தான் முடிவது.
வஞ்சியர் - பெண்கள்.
வஞ்சியர்தரிசனம் - கண்ணாடி.
வஞ்சியுரிச்சீர் - நேரசையு நிரையசையுந்தம்முள் விரவி மூன்றடுத்துநிரையசைமுடிவுபெற்று நிற்பது (உ-ம்) தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி.
வஞ்சிரம் - ஒருமீன்.

வஞ்சிவிருத்தம் - முச்சீரடிநான்குகொண்டு வருவது.
வஞ்சிவேந்தன் - சேரன்.
வஞ்சினம் சபதம்.
வஞ்சுளம் - அசோகமரம், வேங்கை.
வஞ்சுளன் - கரிக்குருவி.
வஞ்சூரன் - ஒருமீன்.
வடகடல் - வடதிசைக்கடல்.
வடகம் - உல்லாசம், ஒரு பணிகாரம், தோல், போர்வை, மேலங்கி, வற்றல்.
வடகயிலாயம் - உத்தரகயிலாயம்.
வடகலை - கிரந்தநூல், வைணவத்திலோர்பேதம்.
வடகாற்று - வாடை.
வடகிரி - மாமேரு.
வடகீழ்த்திசை - ஈசானம்.
வடகீழ்த்திசைப்பாலன் - ஈசானன்.
வடகீழ்த்திசைப்பாலன்குறி - காகம்.
வடகீழ்த்திசையானை - சுப்பிரதீபம்.
வடகுரங்காடுதுறை - காவிரிக்கரையிலுள்ளவொரு சிவஸ்தலம்
வடகோடு - வக்கிரசந்திரனின் வடநுதி.
வடகோடை - குன்றுவாடை.
வடக்கயிறு - பருங்கயிறு.
வடக்கு - வடதிசை.
வடசொல், வடதமிழ் - கிரந்தமொழி.
வடதிசைப்பாலன் - குபேரன்.
வடதிசைப்பாலன்குறி - யானை.
வடதிசையானை - சாருவபூமம்.
வடதேசம் - பாண்டிமண்டலத்திற்குவடபாற்பூமி.
வடநாடு - வடதேசம்.
வடநாட்டுத்திருப்பதி - வடதேசத்திலுள்ள திருப்பதிகள்.
வடநூல் - ஸமஸ்கிருதசாஸ்திரம்.
வடநெடுந்தத்தனார் - இவர் நாலைகிழவனைப்பாடிய புலவர்.
வடந்தை - வடகாற்று, வாடை.
வடபத்ரசாயி - விஷ்ணு.
வடபத்திரம் - ஆலிலை.
வடபாதம் - பாதகண்டத்திேனார்பிரிவு.
வடபாரிசம் - வடக்குப்பக்கம்.
வடபாலிரேவதம் - நவகண்டத்தொன்று.
வடபால் - வடக்குப்புறம்.
வடபால்விதேகம் - வடவிதேகம்.
வடபுறம் - வடபக்கம்.

வடபூமி - வடதேசம்.
வடமதுரை - வடநாட்டிலுள்ளதோர் விஷ்ணுஸ்தலம்.
வடமரம் - ஆலமரம்.
வடமர் - பிராமணரிலோர்பேதம்.
வடமலை - திருப்பதி, மகாமேரு.
வடமலையாண்டவன், வடமலையான், வடமலைவாணன் - ஒருநெல், திருப்பதிப் பெருமாள்.
வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார் - இவர் வடவண்ணக்கன் பெருஞ்சாத்தனாரெனவும் படுவர். தேர்வண்மலையனைப்பாடிய புலவர் இவரே.
வடமீன் - அருந்ததி.
வடமீன்கணவன், வடமீன்காதலன், வடமீன்கொழுநன் - வசிட்டன்.
வடமுகம் - பாரிசம்.
வடமூலகன் - சிவபிரான்.
வடமூலநாதர் - திருப்பழுவூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வடமேரு - மகாமேரு.
வடமேற்கு - வாயுமூலை.
வடமேற்றிசைப்பாலன் - வாயு.
வடமேற்றிசைப்பாலன்குறி - கழுதை.
வடமேற்றிசையானை - புட்பதந்தம்.
வடமொழி - கிரந்தமொழி.
வடம் - ஆலமரம், ஊர், ஒரு பண்ணிகாரம், கயிறு, நாணி, பூவரும்பு, மணிவடம், வட்டம்.
வடரம் - தலைச்சீலை, பாய்.
வடலி - இளம்பனை.
வடதனல், வடவாக்கனல், வடவாக்கினி - வடவாமுகம்.
வடவாரி - இயக்கன், ஆலடியில் வசிப்போன்.
வடவாசுதர் - தேவமருத்துவர்.
வடவாநலம், வடவாமுகம், வடவாமுகாக்கினி - ஊழித்தீ.
வடவாமுகம் - குமேரு.
வடவிதேகம் - நவகண்டத்தொன்று.
வடவிருக்கம், வடவிருட்சம் - ஆலமரம்.
வடவேங்கடம் - திருப்பதி.

வடவை-அச்சுவினி, அடிமைப்பெண், ஊழித்தீ, எருமை, பெண்குதிரை, பெண்யானை, பெண்குதிரை யுருவாகிச் சூரியனைக்கூடிய அச்சுவினி, இது சமுத்திரத்தி னிடையேயுள்ளது.
வடஸ்தானம் - பாரதயுத்தகாலத்திலேகுருசேனைக்குப்பாசறையாயிருந்தவிடம்.
வடவாம்பிகை- திருக்கோடிகாவிலெழுந்தருளியிருக்கும் தேவியார் பெயர்.
வடாகரம் - கயிறு.
வடாது - வடக்கு.
வடாரகை - கயிறு.
வடி-கயிறு, கள், குசைக்கயிறு, கூர்மை, நாய், வடியென்னேவல்.
வடிகட்டுதல் - வடித்தெடுத்தல்.
வடிகயிறு - குதிரைவாய்க்கயிறு.
வடிகாது - தாழ்காது.
வடிக்கண் - வடுவகிர்போலுங்கண்.
வடிக்கதிர், வடிக்கருவி } நூல் முறுக்கு மோர் கருவி.
வடிக்குதல் - களங்கமறுத்தல், வடியச்செய்தல்.
வடிசம் - தூண்டில்.
வடிசல் - வடிதல்.
வடிசாந்து - நற்சாந்து.
வடிதங்கம் - சுத்ததங்கம்.
வடிதமிழ் - தெளிதமிழ்.
வடிதயிர் - நீர்வடிந்த தயிர்.
வடிதல் - நீர்முதலியபாய்தல், நீளம், நீளுதல், வற்றுதல்.
வடித்தல் - கூராக்குதல், தெளித்தெடுத்தல், வசமாக்குதல்.
வடிப்பம் - அழகு, செப்பம், திரம்.
வடிப்பு - சலாகை, தெளித்தெடுத்தல், வடித்தல்.
வடிம்பு - நுதி, விளிம்பு.
வடிம்புக்கழி - எதிர்ச்சட்டம், குறுக்கு விட்டம்.
வடியல்-ஒன்றிலிருந்து நீங்கியநீர், வடிதல்.
வடியெண்ணெய் - கடுகுவடித்தெடுக்குமெண்ணெய்.
வடிவம் - உடல், உருவு.
வடிவவுவமம் - உருவத்தையே யுவமிப்பது, (உ-ம்) சிவன்வடிவேகுருவடிவு.
வடிவு - அல்குல், அழகு, உருவு.
வடிவுடையம்மை - திருவொற்றியூரில் கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வடிம்பலம்நின்றபாண்டியன் - பஃறுளியாற்றை யமைத்தவன், இவன் கடற்றெய்வத்துக்குப் பெருவிழவாற்றினவன்.
வடிவுப்பண்புத்தொகை - உருவுப்பண்பைக்காட்டி நிற்குந்தொகை நிலை, (உ-ம்) வட்டக்கல்.
வடிவெழுத்து - வரியுங்கோடும் புள்ளியுமாகக் கட்புலனுக்கு விடயமாயெழுதுமெழுத்து.
வடு - இளங்காய், குற்றம், செம்பு, தழும்பு, பிரமசாரி, மச்சம், மருதயாழ்த்திறம், வசை, வடுவென்னேவல், வண்டு, வாலிபன், வாள்.
வடுகச்சி - வடுகப்பெண்.
வடுகநம்பி - ஒரு வைணவாசாரியர்.
வடுகன் - பிரமசாரி, மூடன், வயிரவன், வாலிபன்.
வடுகன்றாய் - காடுகாள்.
வடுகி - துர்க்கை.
வடுகு - உபநயனம், இந்தளராகம், ஒரு சாதி, ஒருதேயம், ஒருபாஷை, மருதயாழ்த்திறம்.
வடுகேசுவரர் - திருவடுகூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வடுச்சொல்லல் - வசைசொல்லல்.
வடுத்தல் - இளங்காயரும்பல்.
வடுநேர்கண்ணம்மை - திருவலம்புரத்திலே கோயில்கொண்டிருக்கும் தேவியார்பெயர். திருவடுகூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
வடுப்படுதல் - ஏறுபடுதல், குற்றமடைதல், வசைபூணல்.
வடுப்படுத்துதல் - குற்றப்படுத்துதல், மறுப்படுத்துதல்.
வடுவகிர் - மாவடுவின்பிளவு.
வடுவரி - வண்டு.
வடுவிலி - மறுவற்றவன்.
வடூகரணம் - பூணூலணிதல்.
வடை - உழுந்துவடை.
வடையற்றது - வீணானது.
வட்கல் - கெடுதல், வெட்கம்.
வட்கர் - பகைவர்.
வட்கார் - பகைவர்.
வக்ஷஸ்தலம், வட்சஸ்தலம் } மார்பு.
வட்டகை-அடைப்புநிலம், சிறுகிண்ணம்.

வட்டக்கிலுகிலுப்பை - ஒருகிலுகிலுப்பை.
வட்டக்குடில் - பெருங்குடில்.
வட்டக்கைச்சில் - தேங்காயடிச்சில்.
வட்டச்சீட்டு - கழுவுசீட்டு.
வட்டணம் - நெடும்பரிசை, பரிசை.
வட்டணிக்கை - சுற்றுகை,வட்டவடிவு.
வட்டணித்தல் - வட்டமாக்கல், வட்டிப்பாய்வருதல்.
வட்டணை - தாளம், வட்டம்.
வட்டணையுறுத்தல் - தாளம்போடல்.
வட்டத்தலைப்பா - தலைப்பாக்கட்டினொன்று.
வட்டத்தாமரை - மலையாளத்திலிருக்கும் ஒரு தாமரை.
வட்டத்திரி - காதிடுதக்கை,துவக்கிற்கு நெருப்புவைக்குந்திரி.
வட்டத்திருப்பி - மலைதாங்கி.
வட்டத்துத்தி - ஒருசெடி.
வட்டத்தொப்பி - சோனகத்தொப்பி.
வட்டப்பாலை - நால்வகைப்பாலையினொன்று.
வட்டமிடுதல் - சுற்றுதல்.
வட்டம் - குளம், கேடகம், கைம்மணி, கொள்கலம், சக்கிரம், சீலை, தாழ்வு, திரிகை, நாணயமாற்றுதலின்கழிவு, நீர்ச்சால், பரிவேடம், பீடம், வட்டவடிவு, வளைதடி, வாகுவலயம்.
வட்டம்பண்ணுதல் - தேவதுதியைநாள் வட்டத்திற் படித்தல்.
வட்டரவு - வட்டவடிவு, விருத்தம்.
வட்டவடிவு - வட்டாகாரம்.
வட்டறவு - முற்றாக அறவுபண்ணுதல்.
வட்டா - ஒருபாத்திரம்,தட்டம்,தாம்பாளம்.
வட்டாகிருதி - வட்டவடிவு.
வட்டாடல் - சூதாடல்.
வட்டாப்பத்து - கூந்தற்பூகத்தோலையாற்செய்யுமோர் விசிறி.
வட்டாறம் - சுற்றுப்புறம், தானியக்களஞ்சியம், வீடு.
வட்டி - கூடை, பலகறை, முதற்பொருட்கு வருமூதியம், வட்டியென்னேவல்.
வட்டிகை - கூடை, கைமணி, சித்திரம், நால்வகைச்சாந்தினொன்று வட்டம்.
வட்டிக்குவட்டி - வட்டிபணத்துக்கு மேல்வட்டி.
வட்டித்தல் - ஆணையிடல், ஊனிடுதல், தாளம்போடல், வட்டமாதல்.
வட்டிப்பு - வட்டம்.
வட்டில் - ஒருண்கலம், கிண்ணம், கூடைசூதாடுகருவி, புட்டில், வழி.
வட்டிற்பூ - தாமரைப்பூ.
வட்டு - ஒருசெடி, ஒருவிளையாட்டு, கறிமுள்ளி, சூதாடு கருவி, திரட்சி, மரவட்டு.
வட்டுக்குத்தி - மரவட்டு.
வட்டுச்செடி - வட்டு.
வட்டுடை - ஒருடைவிசேடம், சீலை.
வட்டுவம் - ஒருவகைப்பை.
வட்டுறப்பு - திருத்தம்.
வட்டை - இரதம், புலியினதுடல்வரி, வழி.
வட்புலி - சிங்கம்.
வணக்கம் - கீழ்ப்படிதல், சங்கித்தல், தொழுதல் இது மங்களாசரணை மூன்றினொன்று.
வணக்கல் - வளைத்தல்.
வணங்கல் - தொழுதல், வளைதல்.
வணங்காமுடியன் / வணங்காமுடியினன் / வணங்காமுடியோன் } துரியோதனன் மற்றொருவரை வணங்காதவன்.
வணசி - ஒருகரணம்.
வணம் - உதயாணம், ஓசை, பலகறை, வநம்.
வணர் - வளைவு.
வணிகபதம் - வியாபாரம்.
வணிகம் - செட்டு, வியாபாரம்.
வணிகன் - செட்டி, துலாராசி, வியாபாரி.
வணிசம் - எருது, எருதுக்கரணம்.
வணிசன் - ஒருகரம், வாணிகன்.
வணிச்சியம் - வாணிச்சியம்.
வணிதம் - செப்பம்.
வண் - தெளிவு, மிகுதி.
வண்களமர் - சூத்திரர், வேளாளர்.
வண்கை - கொடைக்கை.
வண்மை - வழங்குகை.
வண்சிறை - மதில்.
வண்டத்தனம் - குறும்புத்தனம்.
வண்டமர்பூங்குழலம்மை - திருக்கோளிலியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வண்டமர்பூங்குழனாயகி - திருவாழ்கொளிபுத்தூரிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

வண்டமர்பூங்கழனுயகியம்மை - திருப்பரம்புரத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வண்டம் - குந்தாயுதம்.
வண்டரம்-நாய்,நாய்வால்,மார்பு,முகில்.
வண்டரன் - அண்ணகன், உலோபி.
வண்டர் - கடிகைமாக்கள்,கவிகற்றோர், மங்கலப்பாடகர், மிண்டர்.
வண்டலம் - சேறு.
வண்டல் - அடையுங்கஞ்சல், நீர்ச்சுழி, பருபருக்கை, பெருக்கு மகளிர் விளையாட்டு.
வண்டன் - குள்ளன், திண்ணியன், அட்டன், விருத்தசேதனம் பண்ணப்பட்டவன்.
வண்டார்குழலி - திருவாலங்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர். திருக்கோளிலியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார்பெயர்.
வண்டாலம் - குந்தாலி, சூரயுத்தம்.
வண்டானம் - நாரை.
வண்டி - பண்டி, வயிறு.
வண்டிக்கடுக்கன் - ஒருவகைக்கடுக்கன்.
வண்டிக்கால் - வண்டிவிற்சில்லு.
வண்டியகவாய் - வண்டிற்ருேடு.
வண்டில் - பண்டி.
வண்டிற்கால் - வண்டிற்சில்.
வண்டிற்சத்தம் - வண்டிற்கூறி.
வண்டு- அம்பு, குற்றம், கைவளை, சங்கு
வண்டுகுத்தி - ஒருகுருவி. [பூசநாள்.
வண்டுகொல்லி ஒருசெடி,தேவதாரம்.
வண்டுணுமலர்மரம்-சண்பகமரம், வேங்கைமரம்.
வண்டுவார்குழலியம்மை - திருமருகலிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வண்டுறை - எழுத்திலாவோசை.
வண்டை - ஒருசெடி.
வண்டோதரி - பஞ்சகன்னிகளிலொருத்தி,அவள்இராவணன்பெண்சாதி.
வண்ணக்கஞ்சாத்தனர் - இவர் கடைச்சங்கப் புலவர்களில் ஒருவர்.
வண்ணம் - அழகு, இராகம், குணம்,சந்தம், சந்தனம், சாந்துப்பொது நிறம் முடுகியல், வடிவு, வாசனை.
வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா - கலிப்பாவினேர்பேதம்,அது ஒருதரவு. மூன்றுதாழிசை, அராகம், அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னுமிவ்வாறுறுப்பினையுங் கொண்டுவருவது.
வண்ணகூடிகை - மைக்கூடு.
வண்ணக்கிரமம் - எழுத்தொழுங்கு, சாதியொழுங்கு,
வண்ணக்குழிப்பு
வண்ணக்குனப்பு } ஓரோசை.
வண்ணதூதன் - திருமுகங் கொண்டு போவோன்.
வண்ணத்தரு - ஒருபாடல்.
வண்ணப்பண்புத்தொகை - நிறத்தைக் காட்டிநிற்கும்பண்புத்தொகை (உ-ம்) செந்தாமரை.
வண்ணமகள் - கோலஞ்செய்வாள்.
வண்ணமாதிரு - இலேகினி நூதி.
வண்ணமாதிருகை - சரச்சுவதி.
வண்ணமாலை - அரிவரி.
வண்ணம் - அழகு, இராகம், ஒப்பனை, குணம், சந்தம், சாந்துப்பொது, செயல், நன்மை, நிறம், வடிவு, விதம்.
வண்ணாத்தி - பூநீறு,வண்ணரப்பெண்.
வண்ணாத்திப்பூச்சி - ஒருபூச்சி.
வண்ணாப்பண்டி - வண்ணார் புடவையேற்றும் வண்டில்.
வண்ணான் - ▪காலியன்.
வண்ணிகன் - எழுத்துக்காரன்.
வண்மை - அழகு, ஈகை, குணம், புகழ், மெய்மை, வளமை, விதம்.
வதகம் - மரணம், வியாதி.
வதகன் - கொலைகாரன்.
வதக்கம் - வாட்டம்.
வதக்கல்
வதக்குதல் } வசைத்தல், வாட்டல்.
வதங்கல்
வதங்குதல் } வாடுதல்.
வதண்டன் - ஒருமுனி.
வததண்டம் - கொலைக்கேற்றதண்டம்.
வதஸ்தானம் - கொலைக்களம்.
வதத்திரம் - அம்பு.
வதத்திரி - பறவை.
வதமியன் - வரையாதுகொடுப்போன்.
வதந்தி - கதை, பேச்சு.
வதம் - கொலை.
வதரம் - இலந்தை, இலந்தைக்கனி.
வதரி - இலந்தை, பதரி.

வதரியாச்சிரமம்-வடநாட்டிலுள்ளதோர் விஷ்ணுஸ்தலம்.
வதவரிசி - தீஞ்சரிசி.
வதவல் - வாடினது.
வதறுதல் - திட்டல், மழலைபொழிதல்.
வதனம்- முகம், முக்கோணத்தின்மேற்கோணம்.
வதனாசவம்-உமிழ்நீர்.
வதனாரவிந்தம் - பெண்முகம்.
வதனேந்து - முகம்.
வதன் - கொலைசெய்வோன்.
வதாங்கம் - சிறைவீடு.
வதாங்கம் - நஞ்சு.
வதாருகன் - வதைத்தற்குரியவன்.
வதாகலம் / வதாலம் } ஒரு மீன்.
வதாவதன்-இராஜசபைமுதலானவிடங்களில்நிஸ்ஸங்கையாகப்பேசுவோன்.
வதானியன்-குபேரன். வரையாதுகொடுப்போன்.
வதி-சேறு, வதியென்னேவல், வழி.
வதிட்கடித்தல் - வக்கணந்தரித்தல்.
வதிட்சீட்டு - பிரதிபத்திரம்.
வதிட்டன் - பருத்தது, பருத்தவன்வசிட்டன்.
வதிதல் - தங்கல்.
வதிரன் - செவிடன்.
வதிரிகாச்சிரமம் - ஒரு தபோதலம்.
வதில் / வதிள் } பதில்.
வதிவு - இருத்தல்.
வதிள்மொழி - பிரதிவாக்கு.
வதி - கொலைகாரன்.
வது - மகன் மனைவி, மனைவி.
வதுகை - மனைவி.
வதுவடி - பாலை.
வதுவர்-குதிரைப்பாகர், யானைப்பாகர்.
வதுவை - கலியாணம், வதுவந்தம், வாசனை.
வதூ-புதுமணப்பெண், பெண், மனைவி.
வதூவரர்-மணப்பெண்ணு மாப்பிள்ளையும், தம்பதிகள்.
வதூசரை - ஒருநதி, இது மிருகுரிஷியின் மனைவியைப் புலோமன் என்னும் இராக்கதன் கவர்ந்து போனபோது அவள் கண்களிலிருந்தொழுகிய நீர்த்தாரைகளாலுண்டாகிய நதியென்பர்.

வதூடி - மருமகள்.
வதூவரர்-மணப்பெண்ணும்மணாளனும்.
வதை - உபத்திரவம், கொலை, தேன்வதை, வதையென்னேவல்.
வதைசெய்தல் / வதைத்தல் } கொல்லல்.
வதோபாயம்-கொலைக்கேதுவான உபாயம்.
வத்தகமை-வருத்திப்பு,வியாபாரம்.
வத்தகம் - வத்தகைமை, வெட்பாலை.
வத்தகன் - செட்டி, வியாபாரி.
வத்தகாலம் - நிகழ்காலம்.
வத்தகோபன் - கோபத்தையடக்கினோன்.
வத்தங்கி - ஒருமரம்.
வத்தமம் - ஆமணக்கு.
வத்தமானம் - கருமம், சங்கதி, நிகழ்காலம் நிகழ்ச்சி.
வத்தர் - வத்திரு.
வத்தல் - சிறுவள்ளம், செத்தல்.
வத்தனை - பெருக்கம், வமிசம்.
வத்தாச்கு / வத்தாலை } ஒருகொடி, கொம்மட்டி.
வத்தாவி - ஒருதேயம்.
வத்தி - இரத்தினத்தின் கீழ்ப்பதிக்குந்தகடு, சீலைத்தொங்கல், திரிச்சீலை, திரிவாய்ப்பெட்டி, பரிமளதிரவியங்களைக்கூட்டியரைத்துச்செய்தவத்தி வத்தியென்னேவல், வரி, விளக்கு, விளக்குத்தகழி.
வத்தித்தல் - பெருகல்.
வத்தியதானம் - கொலைக்களம்.
வத்தியபாலன் - சிறைச்சாலைக் காவற்காரன்.
வத்தியபூமி - வத்தியதானம்.
வத்தியம் - மரணம்.
வத்தியன் -வதைக்கப்படுதற்குரியவன்.
வத்திரசேவை - முகதரிசநம்.
வத்திரசோதினி - எலுமிச்சை.
வத்திரதுண்டன் - விநாயகன்.
வத்திரதாரணம் - ஆடைதரித்தல்.
வத்திரபஞ்சகன் - சிவபிரான்.
வத்திரபட்டம் - நெற்றிப்பட்டம்.
வத்திரபுத்திரிகை - சித்திரப்பாவை.
வத்திபேதகன் - தையற்காரன்.
வத்திரம் / வஸ்திரம் } ஆடை, உடை, சீலை, போர்க்கருவி, முகம்.
வத்திராஞ்சலம் - புடைவையருகு.
வத்திராட்சம் - பத்திராட்சம்.

வத்திரானசந்தானம்-பஞ்சமுகங்கூடல்.
வத்திரி - தோல்வார்.
வத்திரு - பேசுவோன், வாக்கி.
வத்திறதாரு - செம்புளிச்சை.
வத்திரோணம் - பெருமரம்.
வத்து } பொருள்.
வஸ்து }
வத்துதாரணை - நவதாரணையிதென்று அது விடயப்படா தசைவற்றிருக்கு மனம் புத்தியை சித்தத்திற் சேர்க்கச் சித்தந்தன்னிடத் தமைந்த புத்தியை மனதிற்சேர்க்கச் சித்தமும் மனமும் புத்தியை அகங்காரத்திற் சேர்க்க அகங்காரம் புத்தி சித்தம் மூன்றும் மனத்திற்சேர அம்மனத்தாற் பிரமதரிசனம் பிறத்தல்.
வஸ்துநிச்சயம் } பிரபஞ்சகாரணமாய்கடவுளுண்டென்றும் அவன்யாவனென்றுங் கண்ட தீர்ப்பு.
வஸ்துநிர்ணயம் }
வஸ்துநிதானம் }
வத்துபரிச்சேதம் - ஒரு பொருளிஃதாகும் ஒரு பொருளிஃதன்றென்பது.
வத்துவித்தியாபதி - சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.
வத்தூரம்-பொன்னுங்கண்ணி. [யமரம்.
வத்தேக்கு - கொம்மட்டி, வத்தங்கிச்சா
வத்தேந்தி - கதவு நிலைக்குமேல் வைக்குஞ் சுவர்தாங்கி
வத்தை - ஒரு மரத்தோணி, சோற்றி.
வத்தைவெட்டு-சோற்றிவெட்டு.
வநசதர்ப்பன் - பிரமன்.
வநசந்தநம் - அகில், தேவதாரம்.
வநசந்த்ரிகை - மல்லிகை.
வநசம்பகம் - காட்டுச்சண்பகம்.
வநசன் - பிரமன்.
வநச்சாகம் - காட்டாடு.
வநஜாசநன் - பிரமன்.
வநஜாசனை - திருமகள்.
வநஜீரம் - காட்டுச்சீரகம்.
வநஜை - இலக்குமி.
வநஜநாபி - திருமால்.
வநதேநு - காட்டுப்பசு.
வனமல்லிகை - காட்டுமல்லிகை.
வநமிருகம் - காட்டுமிருகம். [ணம்.
வந்தனமாலை - வாயிலிற் கட்டுந்தோர
வந்தனம் - அட்டாங்கமாகப் பணிதல், பணிதல், முகம், விநயம்,
வந்தனித்தல் - வந்தித்தல்.
வந்தனை - ஆராதனை, வணங்கல்.
வந்தி ஏணி, மலடி, வந்தியென்னேவல், வருத்தம், வாராவந்தி, ஓரிருடி, ஜநகமஹா ராஜனுடைய யாகசாலையிலே இவரை அஷ்டவக்ரன் வென்றான்.
வந்திகட்டுதல்-கட்டாயம் பண்ணுதல்.
வந்திகள் - கவிஞர், புகழ்வோர், மங்கலப்பாடகர். [ங்கல்.
வந்தித்தல்-பங்கம்பாழை, புகழ்தல், வண
வந்தித்துநிற்போர்-புகழ்ந்துபாடுவோர்.
வந்திபாடம் - புகழ்ந்து பாடிய பாட்டு.
வந்திபோடுதல் - கட்டாயமாய்ப் பொறுப்பித்தல்.
வந்தியர்-புகழ்வோர், மங்கலம், பாடகர், மலடிகள்.
வந்தியாபுத்திரன் - மலடிமகன்.
வந்தியிறுத்தல் - கட்டாயத்திற் கிறுத்த
வந்தியை - மலடி.
வந்திவாங்குதல் - கட்டாயமாய் வாங்குத
வந்து காற்று. [ல்.
வந்தை - பெறுமை, மலடி.
வந்த்ரம் - கல்யாணம்.
வந்த்ரன் - பூசித்தற்குரியவன்.
வபனம் - சுக்கிலம், மழித்தல், முண்டிதம், விதைத்தானியம்.
வபிலன் - பிதா.
வபு - உடல். வபு வபுசுஓ ரப்ஸரகந்யகை, இவள் நாரதரேவலால் துர்வாசமுனிவருடைய தவத்தை யழிக்கயத்தநித்தபோது, அவரால் சபிக்கப்பட்டுப்பறவையாய்ப்பிறந்தாள், தர்மபக்ஷிகளைப் பெற்றவள் இவளே.
வபுஷ்டை - காசிராஜன் மகள், மூன்றாம் ஜநமேஜயன் மனைவி.
வபுஷ்மந்தன்-பிரியவிரதன் புத்திரரில் ஒருவன், இவன்பங்குக்குச் சான்மலித்தீவுவந்தது, இவன்புதல்வரெழுவர்.
வபை - வயிற்றுநாபிக்குள் வெண்டுகில் போன்ற புரையாகிய கிணம்.
வப்பிரம் - ஈயம்.
வப்பு - இடைவேற்று.
வப்ரீ - புற்று.
வமநம் - சத்திபண்ணல்.
வமநீ - அட்டை, பருத்தி.
வமம் - வமநம்.
வமி - அக்கினி, தூர்த்தன், வாந்தி.

வமிசபரம்பரை - வமிசக்கிரமம்.
வமிசம் } சந்ததி, சுற்றம்.
வம்சம் }
வம்படித்தல் - சரசம்பண்ணல், தீங்கு செய்தல், தீதுபேசுதல், நிந்தித்தல்.
வம்பமாக்கள் - புதியமாக்கள்.
வம்பம் - சாலங்கபாஷாணம்.
வம்பலர் - அயலோர், புதியோர்.
வம்பல் - திசை.
வம்பளத்தல் - பொருந்தாதபேச்சுப்பேசுதல்.
வம்பன் - சோரபுத்திரன், துட்டன்.
வம்பி-சருவண்டு, சோரபுத்ரி, துட்டை.
வம்பு - கயிறு, அசப்பியம், சண்டை, தீச்செயல், தீச்சொல், நிலையின்மை புதுமை, மிடா, முலைக்கச்சு, வாசனை, வீம்பு.
வம்புக்காய்-பருவந்தப்பி காய்க்குங்காய்.
வம்புக்காரன் - வம்பன்.
வம்புத்தனம் - நேரின்மை, மடிப்பு.
வம்புப்பாளை - பருவந்தப்பிவரும்பாளை
வம்புபிறப்பு- சோரஸ்திரீயிடத்திற்பிற [த்தல்
வம்புப்பேச்சு-தூஷணவார்த்தை
வம்புவழக்கு - வீண்வியாச்சியம்.
வயகுண்டம் - கவிழ்தும்பை.
வயக்கம் - பிரபை.
வயக்குதல் - வசக்குதல்.
வயங்கல் - ஒளிசெய்தல், நடத்தல்.
வயசு - வயது, வாலிபம்.
வயசுப்பிள்ளை - வாலிபப்பிள்ளை, வாலி [பன்.
வயணம் - வகை.
வயதரம் - கடுக்காய்.
வயது - ஆயுசு, யௌவனம்.
வயதுவம் - முதிர்வயது.
வயதெர்றி - திப்பிலி.
வயத்தன் - அடிமை.
வயந்தம் - வசந்தம்.
வயப்படுதல் - வசப்படுதல்.
வயப்படை - வெற்றிப்படை.
வயக்கொடி - வெற்றிக்கொடி.
வயப்புலி } சிங்கம்.
வயப்போத்து }
வயமா - குதிரை, சிங்கம், புலி, யானை.
வயம் - ஆடு, இரும்பு, குதிரை, நீர், பறவைவசம், வலி, வெற்றி.
வயலூர் - பாண்டிநாட்டிலுள்ள ஒரூர் இது வார்த்திகனுக்கு ஒரு பாண்டியனால் பிரமதாயமாகக் கொடுக்கப்பட்டது, இது திருத்தங்காலுக்குக் கிழக்கேயுள்ளது.
வயல் - கழனி, மருதநிலம், வெளி.
வயல்நெட்டி - ஒருநெட்டி.
வயல்மாதளை - ஒருமாதளை.
வயல்மெருகு - ஒருமெருகு.
வயவரி - புலி.
வயவர் - படைவீரர்.
வயவன் - கரிக்குருவி, காதலன், தலைவன், திண்ணியன், வலியன், வீரன்.
வயவாள் - வெற்றிவாள்.
வயவீரர் - வெற்றிவீரர்.
வயவு - ஆசை, கருப்பம்.
வயவை - வழி.
வயளை - பசளை.
வயற்கல் - வெள்ளைச்சுக்கான்கல்.
வயற்கொடுக்கி - ஒருகொடுக்கி.
வயற்கோவியன் - ஒருபாம்பு.
வயற்சார்பு - மருதநிலம்.
வயற்சுள்ளி - பொரிப்பூண்டு.
வயற்செம்பை - ஒருசெம்பை.
வயற்றுத்தி - ஒருதுத்தி.
வயனம் - வயணம்.
வயணிலம் - மருதநிலம்.
வயன்கட்டு - வசன்கட்டு.
வயா - ஆசை, கருப்பநோ, கருப்பம், கருப்பவருத்தம், சோர்வு, நடுக்கம், மசக்கை.
வயாப்பண்டம் - கருப்பவதி விரும்பிய [பொருள்.
வயாமது - சீந்தில்.
வயாவு - வயா.
வயாவுயிர்த்தல்-கருவீனல், வருத்தந்தீர் [தல்.
வயானம் - பறவை.
வயாணன் - வலியன்.
வயிக்கிராந்தம் - குமுதபாஷாணம்.
வயிடூரியம் - வைடூரியம்.
வயித்தியம் - வைத்தியம்.
வயிந்தவம் - வைந்தவம்.
வயிரகாணி - பெருநெருஞ்சில்.
வயிரங்கி - துவக்கிற்றிரிவாய் துளக்குமோர்கருவி.
வயிரஞ்சாதித்தல் - பகைசாதித்தல்.
வயிரத்தனம் - வன்குணம்.
வயிரப்படை - வச்சிராயுதம்.
வயிரப்படையோன் - இந்திரன்.
வயிரப்பொடி - வயிரமணி,

வயிரமணி-ஒருவகைப்பொன்மணி, வச்சிரம்.
வயிரமுடிச்சேவை-வயிரமுடிதரிசநம்.
வயிரமுத்து - வயிரித்தமுத்து.
வயிரம்-கூர்மை,சலஞ்சாதித்தல், சினம், தண்டாயுதம், திருவோணம், பூணுகக்கட்டுவது, மரவயிரம்,வச்சிரமணி, வச்சிராயுதம், வாளியின்தகடு.
வயிரவகுருசந்தானம் - வைரவமார்க்கக் குருபரம்பரை.
வயிரவசாந்தி-வயிரவருக்குச் செய்யுஞ் சாந்தி.
வயிரவம் - பயம், பைரவம்.
வயிரவல்லி - பிரண்டை.
வயிரவளை - நரிப்பயறு.
வயிரவன் - ஒருகடவுள், சிறுகீரை, வயிரவக்கீரை.
வயிரவாள்- குலிசம்.
வயிரவி - துர்க்கை, பைரவி.
வயிரவூசி - முத்துத்துளைக்குமூசி.
வயிரவேர் - சாயவேர்.
வயிராகம் } வைராக்கியம்.
வயிராக்கியம் }
வயிராவி - ஒருவகைவிரதி, வயிரமனமுடையோன்.
வயிரி - வல்லூறு, வன்னெஞ்சுடையவன்.
வயிரித்தல் - வயிரமாதல், வலுத்தல்.
வயிரிப்பு - வயிரம், வலிப்பு.
வயிரியம் மயிர்ச்சீலை.
வயிரியர் - கூத்தர், பாணர்.
வயிர் - ஊதுகொம்பு.
வயிறு - உதரம், கருப்பப்பை.
வயிறுகழித்தல் - பேதியாதல்.
வயிறுகாந்துதல் - பசித்தல்.
வயிறுதாரி - வயிற்றுமாரி.
வயிறுபிடித்தல் - வயிறுநோதல்.
வயிறுபேதித்தல் - வயிறுகழிதல்.
வயிறுப்புதல் - வயிறூதுதல்.
வயிறுவளர்த்தல் - வயிற்றூண் மாத்திரம் பெற்றுப் பிழைத்திருத்தல்.
வயிறுவாய்த்தல் - கருப்பமாதல்.
வயிறுவிடுதல் - வயிறுகழிதல்.
வயிற்றுக்கடுப்பு - ஒருநோய்.
வயிற்றுக்கழிச்சல் - வயிற்றுப்போக்கு.
வயிற்றுக்கனப்பு - கொழுப்பினால் வயிறூதல், தொந்திப்பு, புசிப்பினால் வயிறுவிம்மிதல்.
வயிற்றுக்காய்ச்சல் - பசி.
வயிற்றுக்கிருமி - வயிற்றுட்புழு.
வயிற்றுக்குத்து - வயிற்றிலுண்டாகுங் குத்து.
வயிற்றுக்கொதி - பசி.
வயிற்றுச்சுரப்பு - வயிற்றுக்கனப்பு.
வயிற்றுப்படிப்பு - உதரபோஷணார்த்தம், படித்தல்.
வயிற்றுநோய் - வயிற்றுவலி.
வயிற்றுப்பாதி-சீவனந்தேடித் திரிதல்.
வயிற்றுப்பறப்புசீவனந்தேடுமுலைச்சல்
வயிற்றுப்பாடு - உட்புறம்.
வயிற்றுப்பிழைப்பு - உணவுதேடுதல், சீவியம்.
வயிற்றுப்புகைச்சல் - வயிற்றுட்புகைதல்.
வயிற்றுப்பொருமல் - வயிறூதல்.
வயிற்றுப்போக்கு - உவாந்திப் பிராந்தி.
வயிற்றுமாரி - பேருணன்.
வயிற்றுவலி - வயிற்றுநோவு.
வயிற்றுளைவு - ஒருநோய்.
வயிற்றெரிச்சல் - பொறாமை.
வயிற்றெரிவு - ஒருநோய்.
வயிற்றையொறுத்தல் - உண்ணுதுகுறைத்தல்.
வயிற்றைவலித்தல் - குடர்வலிகொள்ளல்.
வயினதேயவாகனன் - திருமால்.
வயினதேயன் - கருடன்.
வயினம் - பறவை.
வயின் - இடம்,எழனுருபு (உ-ம்) அவர்வயிற்செல்வாய், வயிறு, வீடு.
வயுநம் - ஞானம், தேவாலயம்.
வயேகடம் மாமஞ்சள்.
வயோதிகம் - விருத்தாப்பியம்.
வயோதிகர் - கிழவர்.
வயோவங்கம் - ஈயம்.
வயோவிருத்தன் - வயதினுற்பெரியவன்.
வரகவி - தேவவருள்பெற்றுப்பாடும் புலவன்.
வரகு - ஒருதானியம்.
வரகுணபாண்டியன் - சேரமான்பெருமாணயனர் காலத்தில் மதுரையில் அரசுசெய்த பாண்டியன்.
வரகுதிரி - வஞ்சியிலோர்வகை.
வரக்காட்டல் } வரவிடுதல்.
வரக்காட்டுதல் }
வரக்கிருது - இந்திரன்.
வரங்கொடுத்தல் - வரமருள்தல்.
வரச்சந்தனம் - ஒருசந்தனம்.
வரடம்-அன்னம்,ஒருபுழு, மாட்டீ, மூலை.
வரடி - அன்னப்பேடை.
வரட்சி - வரள்வு.

வரட்சுண்டி - ஒருசெடி.
வரணசி - வாரணசி.
வரணம் - ஒட்டகம்,சூழ்தல்,நியமித்தல், பால்,மதில்,மறைத்தல்,மாவிலிங்கு.
வரணை-காசிக்கருகே ப்ரவஹிக்கும் ஒரு சிறுநதி.
வரண்டகம்-உண்டை, சுவர், முகப்பரு, யானைமேற்றவிசு.
வரண்டம் - சாலை, தூண்டிற்கயிறு, புற்குவியல், முகப்பரு
வரண்டாலு - ஆமணக்கு.
வரண்டியம் - பேராமுட்டி.
வரண்மாடு - கடாரிமாடு.
வரதகம்-அனுக்கிரகக்குறிப்பாக இதயத்திக்குச்சமீபமாய்க் கையுறுவித்தல்.
வரதம் - ஈதல்.
வரதனு - அழகு.
வரதன்-அரன்,அரி,அருகன், உபகாரி, வரமருளத்தக்கோன்.
வரதானம் - விரும்பினவரங்களைக்கொடுத்தல்.
வரதாரு - தேக்குமரம்.
வரதுங்கபாண்டியன் - பிரமோத்தர காண்டத்தைத் தமிழிற்பாடினவர், இவர் அதிவீரராமபாண்டியனுக்குத் தமையனர்.
வரதை - கன்னி, விதர்ப்பதேசத்திலுற்பத்தியாகிக்கோதாவிரியிற் கலக்கும் ஒருநதி.
வரத்து - வருகை, வருமானம்.
வரநதி - கங்கை.
வரநதிச்சடையோன் - சிவபிரான்.
வரந்தருவார் - வில்லிபுத்தூ ராழ்வார்க்குப் புதல்வர், இவர் தமது தந்தையிடத்தே பாடங்கேட்டு வரும்போது, ஒருநாள் தந்தைசொன்ன பொருளை விடுத்துத் தாமாக வொன்றைக் கற்பித்துரைத்தனர், அதுகண்ட வில்லிபுத்தூரார்சினங்கொண்டு தம்வீட்டினின்றும் இவரை யோட்டிவிட்டனர். அன்று முதல் அவர் வேறொரு ஆசிரியரையடுத்து கல்விகற்று வல்லவராகித் தமது தந்தையாருக்குப் புலப்படாமல் நெடுநாள் மறைந்தொழுகி வருவாராயினர். தந்தையார் பாரதம் பாடி அரங்கேற்றுங்காலத்தில் இவர் வேடமாறி அந்தச்சபையிற் சென்றிருந்தார், வில்லிபுத்தூரார் நூலை அரங்கேற்றத் தொடங்கி "ஆக்குமாறயனும்" என்னும் பாடலைக் காப்பாக வெடுத்தோதி, அதன்பொருளை விரித்துரைத்தனர். அந்தச் சபையிலிருந்தவர்கள் வில்லிபுத்தூராரை நோக்கி எமது வினவுக்கு உத்தரங்கூறி, பிறகு உமது நூலை அரங்கேற்றக் கடவீர் என, வில்லிபுத்தூரார் அவர்களை நோக்கி, உமது வினயாதென்றனர். அவர்கள், உமது நூலுக்கு முதனூல் வியாசபாரதமன்றோ, அதில்விநாயக வணக்கஞ் செய்து நூல் ஆரம்பித்திருக்க. நீர் அவ்வாறுசெய்யாமல்பொதுவாகத் தெய்வ வணக்கங் கூறியது என்ன யென்றார்கள், அப்பொழுது வரந்தருவார் எழுந்து, இந்தச் சபையில் பலவகைச்சமயவாதிகளும் கூடியிருக்கும்பொதுவாதலால் அவரெல்லார்க்கும் ஒப்பக்கூறியது மற்றை விநாயகவணக்கம் கவி தம் அகத்துக் கூறிவிட்டே இதுகூறினர் என்றார், அதுகண்ட வில்லிபுத்தூரார் மகிழ்ந்து அச்ச மொழிந்தனராயினும் அது கூறினன் யாவனென்று அதிசயித்திருந்தார்.

சபையார் வரந்தருவாரைநோக்கி, வில்லிபுத்தூரார் மனத்தால் விநாயக வணக்கஞ் செய்தது உமக்கெப்படி புலப்பட்ட தென்றார்கள், அதற்கு விடையாக வரந்தருவார்.

"நீடாழி யுலகத்து மறைநாலொடைந்தென்று நிலைநிற்கவே, வாடாத தவவாய்மை முனிராஜன் மாபாரதஞ் சொன்னநாள்; ஏடாக மாமேரு வெற்பாகவங்கூ ரெழுத்தாணி தன், கோடாகவெழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

என்னுங் காப்பைப்பாடி இதுவே அவர்கூறிய காப்பென்பது யான் முன்னமே அறிந்திருக்கிறேன்யான் அவர்க்குப் புதல்வன் என்றார். அது கேட்டுச் சபையார் வாயடங்குதலும் வில்லிபுத்தூராரும்மனக்களிப்புடனே நூலை அரங்கேற்றினர். அது முடிந்தபின்பு வில்லிபுத்தூரார் தம் புதல்வனையே அதற்குச் சிறப்புப்பாயிரம்

செய்கவென்றேவி அவ்வாறேஅவர் செய்யக்கண்டு மனமகிழ்ந்து அவரைத் தழுவிக்கொண்டார் என்பது கர்ணபரம்பரை அச்சிறப்புப்பாயிரம் இவரே செய்தார் என்பது "அவன் மகன் வரந்தருவா னிப்பதிகஞ் செப்பிஞனே" என்னும்பாடலாலுணர்க, இதில் தம்மைப் படர்க்கையாகக் கூறியது வடநூல் வழக்கு.

வரந்தருவான் - வில்லிபுத்தூரான்.

வரபலம் - தென்னமரம்.

வரப்பார்த்தல் - வரவுகாத்தல்.

வரப்பிரசாதம் - தேவவருட்கொடை.

வரப்பிரதானம் - நன்கொடை.

வரப்பிரதை - அகத்தியன்மனையாள்.

வரப்பு - எல்லை, வரம்பு.

வரப்புக்கடா - நண்டு.

வரப்புள் - வயல்.

வரம்-அடைக்கலாங்குருவி, ஆசீர்வாதம் எறும்பு,கையிட்டுக்கொள்ளல்,சூழல், தேவவீகை,நவநிதியிலொன்று,மஞ்சள், மேன்மை, விருப்பம்.

வரம்பழிதல் - ஒழுங்குகெடுதல்.

வரம்பிகத்தல் - அளவுகடத்தல்.

வரம்பிலாற்றலுடைமை - கடவுளெண்குணத்தொன்று.

வரம்பிலின்புடைமை - கடவுளெண்குணத்தொன்று.

வரம்பிறத்தல் - ஒழுங்குதப்புதல்.

வரம்பு - அணை, எல்லை, ஒழுங்கு, வழி.

வரம்புகட்டுதல் - அணைகட்டுதல்,எல்லைகட்டுதல், முடித்தல்.

வரம்புபண்ணல் - சரிப்படுத்தல்.

வரயிதன் - கணவன், தந்தை.

வரயோகம் - சுபயோகத்தொன்று.

வாருசி - ஓர்வடமொழிப்புலவன்,பாணிநிவியாகரணத்துக்கு வியாக்கியானஞ் செய்த வேரிருடி, இவருக்குக் காத்யாயனர் என்றொரு பெயருமுண்டு.

வரர் - மேலோர், வானோர்.

வரலக்ஷ்மிவிரதம் - ஆவணி மாசத்துச் சுக்கிலபக்ஷத்துச் சுக்கிரவாரத்திலே லக்ஷ்மிதேவியைக் குறித்து அநுஷ்டிக்குமோர் விரதம் இதனால் பெண்கள், புத்திர பௌத்திர விருத்தியும் சகல சம்பத்தும் அடையப்பெறுவர் என்பது நூற்றுணிபு.

வரலாறு - ஒழுங்கு, மூலம்.

வரலாற்றுவஞ்சி - ஒருபிரபந்தம், அது குலமுறையிற் பிறப்பு முதலிய மேம்பாட்டின் பல சிறப்பையுங் கீர்த்தியையும் வஞ்சிப்பாவாற் கூறுவது.

வரல் - வருதல்.

வரல்வாறு - வரலாறு.

வரவண்ணினி - இலச்குமி, ஓர்நிறம், கவரி, கற்புடையாள், சரஸ்வதி, பெண், மஞ்சள்.

வரவர - மேலும்மேலும், வழிபாடு.

வரவரச்சுருட்டி - ஒரு தேவதாசி.

வரவிடுதல் - அனுப்புதல்.

வரவிருத்தன் - சிவபிரான்.

வரவு - வருகை.

வரவுகாத்தல்-வருதலைக்காத்திருத்தல்.

வரவை - விளையுட்பாத்தி.

வராளரை - ஒருசெடி.

வரள்தல் - காய்தல்.

வரன் - கணவன், சந்யாசிகளிலோர் பேதம்,சிவன், தமையன், மருமகன்.

வராகனிடை - ஒன்பது பணவிடை கொண்டநிறை.

வரன்முறை - ஊழ், வரலாறு.

வரன்றல் - கொழித்தல்.

வராககர்ணன் - ஒருயக்ஷன்.

வராககர்ணி - அசுவகந்தி.

வராகபுடம் ஐம்பதெருவைத்தெரிக்கும் புடம்.

வராகபுராணம் - விஷ்ணுவின்வாயிற்காவலாளராகிய ஜயவிஜயர்என்னுமிருவரும்ஒருகாலத்தில் வைகுண்டலோகப்ரவேசஞ் செய்யவந்த ஒரு முனிவரைத் தடைசெய்தமையால் சாபமடைந்து, பூமியிலே காசிபருக்குத் திதியினிடத்துப் புதல்வராகப் பிறந்து இரணியாக்ஷன் இரண்யகசிபு எனப் பெயர்பெற்றதும், இவ்விருவரிலே இரணியகசிபு மூன்றுலகத்தையும்வென்றதும், இரணியாக்ஷன் நேரேசுவர்க்கத்துக்குப்போய்த் தேவர்களைவென்றதும் தேவர்கள் வராகரூபமாயிருந்த விஷ்ணுவைவேண்ட, அவர் அந்தஇரணியாக்ஷனைக்கொன்றதும், திதியென்பவளுக்கும்விஷ்ணுவுக்கும்நடந்த யுத்தத்திலே திதிதோற்றதும்,விஷ்ணுவானவர் வராகவுருவை

நீக்கிக்கொண்டதும் ஆகிய விஷயங்க ளெல்லாவற்றையும் உணர்த்துவதா கிய ஒருபெரியநூல். இது இருபத்து நாலாயிரங் கிரந்தமுடையது.
வராகமிசிரர்-ஒரு ஜோதிஷ சாஸ்திரி, இவர் கலியுகம் மூவாயிரத் தறுநூற் றில் இருந்தவர், அதாவது இற்றைக் குஆயிரத்துநானூறு வருஷங்களுக்கு முன்னே யிருந்தவர், இவர்செய்த நூல்கள் ப்ருஹத்ஸம்ஹிதையும் ப்ரு ஹத் ஜாதகமுமாம்.
வராகம் - விஷ்ணு தசாவ தாரங்களுள் ஒன்று, அது மூன்றாவது அவதாரம், கற்பாந்தரத்திலே எல்லாப் பொருள் களும் நீரிலே மூழுகிப்போனபோது அந்த நீரின்மேல் ஆலிலையில் அறி துயிலமர்ந்திருந்த விஷ்ணு அந்தப் பூமியைத் தமது கொம்பிற்றாங்கி மே லே கொண்டுவந்து காக்கவும், இரணி யாக்ஷனைக் கொல்லவும் சுவேதவராக மாக அவதரித்தார், (உ) மகததேசத் திலுள்ள வொருமலை.
வராகம் - திருமாலவதாரத்தொன்று, பதினெண்புராணத் தொன்று, பன் றி, போர், மலை.
வராகன் - ஒருநாணயம், திருமால்.
வராகன்பூண்டு - கூத்தன்குதம்பை.
வராகாதனம் - காலுங்கையு மூன்றிக் கவிழ்ந்துநிற்பது.
வராகாவதாரம் - திருமாலின்பத்தாவதா ரங்களுள் மூன்றாமவதாரம்.
வராகி - ஒருசத்தி, சத்தமாதர்களிலொ ருத்தி, சிற்றரத்தை, நிலப்பனை, பன்றி மொத்தை, தேவிகொண்ட மூர்த்தங்களுள் ஒன்று.
வராகிப்புகை - ஒரு மருந்துப்புகை.
வராகிமாலை - ஒரு பிரபந்தம்.
வராகிவேய் - பன்றிமுள்.
வராங்ககம் - இலவங்கப்பட்டை.
வராங்கம் - உடல், தலை, யானை.
வராங்கனை-உருவிற்சிறந்தவள், கூந்தற் பனை.
வராங்கன் - திருமால்.
வராங்கி - மஞ்சள், சர்யாதியின்மனைவி.
வராசனம் - சீனமுட்செவ்வந்தி, பாத் திரம்.
வராசனன் - வாயில்காப்போன், வே சிக்கள்வன்.
வராசி - பரும்புடைவை.
வராடகம் - ஓர்தேயம், கயிறு, தாமரைக் காய், பலகறை.
வராடம் - பலகறை, விராடம்.
வராடி - பலகறை, முழக்குநூற்சீலை.
வராட்டி - வரட்டி.
வராணசி - காசி.
வராணன் - இந்திரன்.
வராத்தம் - கட்டளை, வரிவாங்குதல்.
வராரோகன் - யானைப்பாகன்.
வராலகம் } இலவங்கம்.
வராலம் } இலவங்கம்.
வராலி - பிரமிச்செடி.
வராலிகை - துர்க்கை.
வரால் - ஒருமீன்.
வராளம் - பாம்பு.
வராளி - ஓரிராகம், சந்திரன்.
வராணி - பாலை.
வரி - அக்கினி, இசைப்பாட்டு, எழுத் து, சடல், குடியிறை, தேமல், நிறை, நீளம், நெல், வடிவு, வண்டு, வரியென் னேவல், வழி, விரலிறை.
வரிக்கடை - வண்டு.
வரிக்காரன் - வரிபணந்தண்டுவோன்.
வரிக்குதிரை - கல்லணை யில்லாதேறு குதிரை.
வரிக்கோரை - ஒருபுல்.
வரிசந்தி - நாற்றெருக்கூடுமிடம்.
வரிசி - தூண்டில்.
வரிசை-ஒழுங்கு, சங்கை, நற்சீர், பரிசு, முறைமை, வெகுமானம்.
வரிசைக்கிரமம் - நல்லொழுக்கு, வமிச வரிசை.
வரிசைக்குப்பச்சை - நாகப்பச்சை.
வரிசைக்கேடு - முறைக்கேடு.
வரிசைப்பாராட்டல்-சங்கைகொண்டாடல்.
வரிசைபார்த்தல் - சங்கைபார்த்தல்.
வரிச்சல் - சலாகை.
வரிச்சுருள் - செவ்வட்டை.
வரிஷம் - வருஷம்.
வரிடன் - சந்நியாசிகளிலோர்பேதம்.
வரிதகம் - சொல்வகை நான்கி னு ளொன்று அது32 அடியால்வருவது.
வரிதல் - எழுதல், கட்டல், சித்திரமெழு தல்.
வரித்தல் - கட்டல், நியமித்தல், பூசுதல், மொய்த்தல்.

வரித்துவைத்தல் - நியமித்திருத்தல்.
வரிப்பணம் - வீதமாயிருக்கும் இறை.
வரிப்பிரோத்தம் - சதகுப்பை.
வரிப்புலி - ஒருபுலி.
வரிப்புறம் - அணில்.
வரியரிசி - சீரகம்.
வரியாத்துக்கிழங்கு - ஒருகிழங்கு.
வரியான் - சந்நியாசிகளிலோர்பேதம், நித்தியயோகத்தொன்று.
வரியொட்டி - ஒருமீன்.
வரியோரா - ஒருமீன்.
வரிவசிதம் - குருவைக்காத்தல்.
வரிவடிவெழுத்து-அறிகுறியாய்த் தீட்டப்படுமெழுத்து.
வரிவரி - தண்ணீர்விட்டான்கிழங்கு.
வரிவரிமணலி - கற்றாழை.
வரிவனம் - தில்லை.
வரீ - சூரியன்மனைவி.
வரீயான - ஒருயோகம், சிறுபெண், யோக்கியன்.
வருகம்-இலை, பரிவாரம், மயிற்றோகை.
வருகாலம் - எதிர்காலம்.
வருகை - வரவு.
வருக்கனம் - கனவருக்கம்.
வருக்கக்கோவை - ஒருபிரபந்தம், அது அகரமுத லெழுவருக்கம் ஒவ்வோர் காரிகையின் மொழிமுதற்கண் முறையேவரத்தொடுப்பது.
வருக்கமாலை- ஒருபிரபந்தம், அது மொழிக்கு முதலாம் வருக்கவெழுத்திற் கொவ்வோர் செய்யுட்கூறுவது
வருக்கமூலம்-வருக்கத் தொகையினின் றதன மூலமறிதல்.
வருக்கமோனை - அடிகடோறும் வருக்கவெழுத்துக்க ளவ்வவ் வருக்கமாய் வருவது.
வருக்கம் - அத்தியாயம்,இனம்,ஒழுங்கு, குலம், கூட்டம், சதுரம், சமமாகிய வீரெண்ணின்பெருக்கம், வருப்பு.
வருக்கலாடசங்கலிதம்-ஒரு சங்கலிதம்.
வருக்கவெதுகை-சேர்வையின்வெழுத்துக்களாஞகு மெதுகைத்தொடை.
வருக்கவெழுத்து - சேர்வையின்வெழுத்து.
வருக்கு - கஞ்சி.
வருக்கை - ஒழுங்கு, பலா.
வருக்கைக்கனி - பலாப்பழம்.
வருக்கைப்பலா - ஓரினப்பலா.
வருச்சித்தல் - நீக்கல்.
வருச்சியம் - தள்ளப்படுவது.
வருஷபுட்பம் - தாழம்பூ.
வருடகம் - முடக்கொத்தான்.
வருடதேவதை - அவ்வவ் வருஷத்திற் குரியதெய்வம்.
வருடபலன் - வருஷத்திற்குக் கண்ட பலன்.
வருடப்பிறப்பு-புதுவருஷத்தோற்றம்.
வருடம், வருஷம் - ஆண்டு, கண்டம், மழை.
வருடல் - தடவல்.
வருடவான் - அண்ணகன்.
வருடன் - மிலேச்சன்.
வருடகாலம் - மழைக்காலம்.
வருடாங்கம் - மாதம்.
வருடாந்தரம், வருஷாந்தரம் - வருடமுடிவு.
வருடாயுதம் - பதினுயிரம்.
வருடாரம்பம் - மழைத்தொடக்கம், வருடத்தொடக்கம்.
வருடுதல் - வருடல்.
வருடல்-எண்காற்புள்,குறும்பாடு,மேடவிராசி, வரையாடு.
வருட்டம் - வேம்பு.
வருட்டல், வருட்டுதல் - வற்புறுத்தல்.
வருணகுலாதித்தன்மடல் - ஒருநூல்.
வருணசிலைவந்தோன் - வயிரம்.
வருணசுதா - யமன்மனைவி.
வருணசிந்தாமணி - ஒருநூல்.
வருணதருப்பணம் - ஒருநூல்.
வருணதருமம் - அவ்வவ் வருணத்தார்க் குரியகிருத்தியம், அஃது அந்தணர்க் குஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், சத்திரியர்க்குவேட்பித்தல்,ஈதல்,வைசியர்க் குகொள்ளல் விற்றல் கோக்காத்தல் கிருஷிபண்ணல், வேட்டல், சூத்திரர்க்கு சுயங்கிருஷியால் வந்த பயனீதல்,கிருஷிபண்ணல்,கோக்காத்தல்.
வருணம் - எழுத்து, கீர்த்தி, குலம், நிறம், நீர், பிரகாசம், பொன், பொன்னுரை, மஞ்சள், மாதிரி, யானை, வாசனை, விதம், வேஷம்.
வருணவிந்து - முத்துச்சிப்பி.
வருணவில் - வானவில்.
வருணநாள் - சதயநாள்.

வருணனை - தோத்திரம், வன்னிப்பு.
வருணன் - சமுத்திரம், துவாதசாதித்தரிலொருவன், மேற்றிசைப்பாலன்.
வருணன் - அஷ்டதிக்குப் பாலகருள் ஒருவன், இவன் திக்கு மேற்கு இவன் மனைவி சாமளாதேவி, இவன் பட்டணம் சிரத்தாவதி, ஆயுதம் பாசம், வாகநம், முதலை. அன்னவாகநமும் இவனுக்குண்டென்று சிலர் கூறுவர். இவன் நீருக்கு அதிதேவதை.
வருணாசாரம் - சாதியொழுக்கம்.[
வருணாஸ்திரம் - வருணபாணம்.
வருணாத்மஜன் - இந்த்ரசாரதி.
வருணாத்மஜை - கள்.
வருணானி - வருணன்மனைவி. [தல்.
வருணித்தல் - வன்னித்தல், அலங்கரித்
வருணை - ஆர்யாவர்த்தத்திலே யுள்ள ஒரு நதி.
வருதல் - நடத்தல், வருகை.
வருத்தகம் - வத்தகம்.
வருத்தகன் - வத்தகன்.
வருத்தப்படுதல் - துன்பப்படுதல்.
வருத்தப்படுத்தல் - துன்பப்படுத்தல்.
வருத்தம் - உள்ளக்களிப்பு, துன்பம்.
வருத்தல் - துன்புறுத்தல்.
வருத்தனம் - உண்டை, சம்பளம், சீவனம், தொழில், பெருகுதல், வத்திப்பு, வழி.
வருத்தனி - நீர்க்குடம், விளக்குமாறு.
வருத்தனை - பெருகுதல்.
வருத்தி - இரத்தினங்களின் ஜ்ப்பதிக் குந்தகடு, வருத்தியென்னேவல்.
வருத்தித்தல் - வளர்தல்.
வருத்திப்பு - வத்திப்பு.
வருத்து - வரவு.
வருத்துதல் - வருத்தல், வருவித்தல்.
வருத்துலம் - வட்டவடிவு.
வருந்தல் } துன்புறல்.
வருந்துதல் }
வருந்திரு - கோங்கு.
வருபிறப்பு - மறுபிறப்பு.
வருபுனல் - யாறு, வேற்றுநீர்.
வருமதி - வரவு.
வருமம் - வர்மம்.
வருமானம் - வரவு. [ழி.
வருமொழி - நிலைமொழிக்குப் பின்மொ
வருவாய் - வரலாறு, வரவுகட்கானவேது
வருவித்தல் - வரச்செய்யல், வேண்டியதொன்றைப் பொருந்த விரித்துக் கொள்ளல்.
வரூதம் - இருப்பிடம், கவசம், தேரைப் பாதுகாக்கும் புலித்தோன் முதலிய தோல்.
வரூதினி - ஒரு தெய்வப்பெண், படை. ஒருகந்தர்வஸ்த்ரீ, இவள் ப்ரவரன் என்னும் பிராமணனைக் கண்டு மோகித்துத்தொடர, அவன் அதற்கிணங்காது மறுத்துச் சென்றனன். அப்போது ஒரு கந்தர்வன் அந்த பிராமணன்போலவடிவங்கொண்டு அவள் முன்னேசெல்ல, இருவருங்கூடிச் சுவரோசிஎன்பவனைப்பெற்றார்கள் இந்தச் சுவரோசி யென்பவன் சுவாரோசிஷ மநுவைப் பெற்றவன்.
வரேசுவரன் - சிவபிரான்.
வரேண்யம் - குங்குமம்.
வரேந்திரன் - அரசன், இந்திரன், வரத்தின் மிக்கோன்.
வரை - அளவு, கரை, சிறுவரம்பு, மலை, மூங்கில், வரையென்னேவல், வரைவு, விரலிறை, விவாகம்.
வரைகம்பு - கம்மாளர் கருவியினொன்று.
வரைக்குடிலம் - வங்கக்கல்.
வரைசிறகரிந்தோன் - இந்திரன்.
வரைதல் - எழுதல், கொள்ளல், சித்திரமெழுதல், சுற்றிவரைதல், நீக்கல், மாற்றல், விவாகஞ்செய்தல்.
வரைபகவெறிந்தோன் - குமாக்கடவுள்.
வரைப்பகைஞன் - இந்திரன்.
வரைப்பு - எல்லை, மதில்.
வரையரமகளிர் - மலையில்வாழுந் தெய்வப்பெண்கள்.
வரையரசன் - மலையரையன்.
வரையறவு - வரையறை.
வரையறுத்தல் - எல்லைப்படுத்தல், மதித்தல், வளைத்தல்.
வரையறை - அளவு, எல்லை, தீர்க்கம்.
வரையாடு - குறும்பாடு.
வரையுறுத்தல் - எல்லைப்படுத்தல், வளைத்தல்.
வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல், அகப்பொருட்டுறையிலொன்று
வரைவின்மாது - வேசி,

வரைவு- அளவு, எல்லை, பிரிவு, மணம், மாறுபாடு, வரைதல், வரையப்பட்டது.
வரைவுமலிதல்கிளவி-காதலன்முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தன் முதலாகத் தலைவியணங்கைப் பரவனிலைகண்டோன் மகிழ்தலீறாகிய வேழும்.
வரைவுமலிவு - வரைவிற்குரிய கிளவித்தொகை அது வரைவுமுயல்வுணர்த்தன் முதலாகப் பராவல் கண்டுவத்தலீறாகிய நான்கும்.
வர்க்கம், வர்க்கு } வருக்கம்.
வர்க்கை - வருக்கை, பலா.
வர்ச்சம், வர்ச்சியம் } வருச்சியம்.
வர்ச்சசு-சந்திரன்மக்களுளொருவன்.
வர்ஜநம் - துன்பம், மரணம், விடுதல்.
வர்ஜநீயம் - விலக்கத்தக்கது
வர்ணம் - குங்குமம்.
வர்ணகம் - சந்தநம்,திலகமரம்,மண்டலம்.
வர்ணகவி - குபேரன்மகன்.
வர்ணகாரிகை - நிலத்திலிடுங்கோலம்.
வர்ணங்கள் - சாதிகள்.
வர்ணசாரகன் - சித்திரகாரன்.
வர்ணதம் - ஒருவகைச்சந்தனம்.
வர்ணத்ருக்கு - அச்ரூரன் தம்பி.
வர்ணப்ரசாதநம் - அகில்.
வர்ணரூபிணி - சரசுவதி.
வர்ணவதி - மஞ்சள்.
வர்ணி - பொன.
வர்த்தகம் - த்ருத்தகம், வியாபாரி.
வர்த்தகம் - ஜீவநோபாயம்.
வர்த்தமானம் - சங்கதி, சிற்றுமணக்கு, செய்தி, நிகழ்காலம், நிகழ்வு.
வர்த்தரூகன் - துவாரபாலகன்.
வர்த்தனம் - பெருகுகை.
வர்த்தனை - வரவேண்டியது.
வர்த்தி - இரத்தினங்களின் கீழ்பதிக்குந்தகடு, வத்தி.
வர்த்திக்கும் - இருக்கும்.
வர்த்துலம் - வட்டவடிவு.
வர்ஷாதேவி-மரீசிமனைவியருளொருத்தி,இவள்புத்திரர் அறுவர், இவர்கள் பிரமசாபத்தால் தேவகிவயிற்றிலே புத்திரராய்ப்பிறந்துகஞ்சனாற்கொல்லப்பட்டுச் சுதலலோகத்தை யடைந்தார்கள், பிறகு கிருஷ்ணர் பிறந்து வளர்ந்தபிறகு தேவகியின் வேண்டுகோளால் அவ்வறுவரையுங்கொண்டுவந்து அவளுக்குக் காண்பித்து அவர்களையும் சாபவிமோசநராக்கினர்.
வர்மம் - வன்மம்.
வலக்காரம் - பொய்.
வலங்கமர் - ஒருசாதியார்.
வலங்கம் - பாரிசமுசாரம்.
வலங்காரம் - மேளத்தின் பசையிட்டபுறம்.
வலங்குலம் - ஒருகுலம்.
வலங்கை - வலக்கை, வலப்புறம்.
வலங்கையார் - ஒருசாதியார்.
வலங்கையான் - வலங்கமத்தான்.
வலங்கொள்ளல்- வலம்வருதல், வெற்றியடைதல்.
வலசல்-அன்னியகிரகபிரவேசம்.
வலசாரி - வலமாய்ச்சுற்றிப்போதல்.
வலசு, வலசை } கூட்டம்.
வலசைவாங்குதல் - கூட்டத்தோடேஎடுபட்டுப்போதல்.
வலசோர் - ஒருபட்டினம்.
வலஞ்சுழி - வலஞ்சுற்றுஞ்சுழி, ஒரூர்.
வலட்டி - வலித்தது.
வலது - செயல், வலபக்கம், வல்லமை.
வலத்தல்- சொல்லல், பிணைத்தல், வளைத்தல்.
வலத்திடல் - சொல்லல்.
வலநாடு - ஒரூர்.
வலந்தம் - வசனம், வளைவு.
வலந்தரி - ஒருகொடி, வலத்துக்குச்சுற்றுங்கொடி.
வலப்பாரிசம் - வலப்புறம்.
வலமன் - வலப்பக்கம்.
வலம் - இடம், ஏழனுருபு (உ-ம்) கைவலத்தியாழ், கனம், சேனை, மேல், வலப்பக்கம், வலி, வெற்றி.
வலம்பம் - நிறுதிட்டவரி.
வலம்புரநாதர்-திருவலம்புரத்திலேகோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வலம்புரி- நந்தியாவட்டம், வலப்புரி, வலம்புரிச்சங்கு.
வலயம்-எல்லை, கடல், குளம், கைக்கடகம், சுற்று, வட்டம், வட்டவடிவு, வளையம்,

வலவன் - சமர்த்தன், தேர்ப்பாகன், வெற்றியாளன், விஷ்ணு, வீமன் அஞ்ஞாதவாசகாலத்தில் வைத்துக் கொண்டபெயர், பலராமனுக்கும் இப்பெயருண்டு.
வலவிரோதி - இந்திரன்.
வலவை - டாகினி, காளி, காளியேவல் செய்வாள், வல்லவள், வல்லோன், விநாயகன்றேவி, நாணிலி.
வலவைரி - இந்திரன்.
வலவோட்டு - சூரியன் முதலிய சத்தக் கிரகங்களின் சுற்று.
வலன் - ஓரசுரன், வலப்பக்கம், வலி, வல்லவன், வெற்றி.
வலாகம் - கொக்கு, நீர்.
வலாகை - கொக்கு.
வலாசகம் - குயில், தவளை.
வலாட்டிகன் } தத்துவசாலி.
வலாட்டியன் }
வலாரி - இந்திரன்.
வலாற்காரம் - வலோற்காரம்.
வலி - இரேகை, ஓரலங்காரம், அது தொகைச்சொற்றொடர் புண்டாகத் தொடுப்பது, ஒருநோய், குரங்கு, நறு விலிமரம், பற்றிரும்பு, வரி, வலி யென்னேவல், வல்லமை.
வலிக்கட்டு - வீணையினோருறுப்பு.
வலிக்கென - தெளிவாய்.
வலிங்கம் - பலபந்தம்.
வலிசங்கம் - குரங்குக்கூட்டம்.
வலிசம் - தூண்டில்.
வலிச்சலன் - அறமெலிந்தவன், பிடித் ததுவிடாதோன்.
வலிச்சல் - காய்ந்தது, பனையின்கடுங் காய், வரிச்சு.
வலிச்சற்கொடி - ஒருகொடி.
வலிதம் - அசைவு, சூழ்வு.
வலிதல் - தங்கல், துணிதல்; வலிந்து கோடல், வலோற்காரஞ்செய்தல்.
வலிது - வலியது.
வலித்தல் - இழுத்தல், உடன்படல், ஏங்கல், கடினமாய் வாங்கல், காய்தல், தோணிதூண்டல், நினைத்தல், மரக்கலப்பா யுயர்த்தல், மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்கல், வயிற்றுள் முறுக்குதல், வலிவலித்தல், வளைத்தல், வளையயாப்புச்சரித்தல்.

வலிந்துகோடல் - அருமையிற்கருத்துக் கொள்ளல்.
வலிபம் - கீழேழுலகத்தொன்று, அது மஹாதலம்.
வலிபதம் - அற்பகடுமை.
வலிப்பு - இழுப்பு, வலி.
வலிமாந்தம் - மாந்தமெட்டினொன்று.
வலிமுகம் - குரங்கு.
வலிமை - வலோற்காரம், வன்மை.
வலிமைசெய்தல் - பலபந்தம்பண்ணல்.
வலிமைபாராட்டல் - சமர்த்துக்கொண் டாடுதல்.
வலிய - தானக.
வலியறிதல் - திராணியறிதல்.
வலியன் - சரிக்குருவி, வலிபதமானது, வலியுடையோன, வல்லவன்.
வலியான் - ஒருபருந்து, சரிக்குருவி, வலியுடையோன்.
வலியுறுத்தல் - உறுதிப்படுத்தல், பலப் [பித்தல்.
வலீநகம் - தழை.
வலீநம் - தேள்.
வலீமுகம் - குரங்கு
வலு - எட்டு, ஒருபசைமருந்து, கனம், கொசுகு, பலம், பற்று.
வலுசுருதி - வலோற்காரம்.
வலுத்தல் - திறப்படுத்தல், பலத்தல்.
வலுப்பு - திறம், பலப்பு.
வலுவந்தம் - வலோற்காரம்.
வலுவந்தரம் - வலிமை.
வலுவாயன் - வல்வாயன்.
வலூகம் - தாமரைக்கிழங்கு.
வலை - மீன் முதலிய படுக்குங்கருவி.
வலைக்குணுக்கு - வலையைத்தாழச்செய் யுமுண்டை.
வலைச்சி - நெய்தனிலப்பெண்.
வலைஞர் - நெய்தனிலமாக்கள்.
வலைஞன் - செம்படவன்.
வலைதடுத்தல் - மீன்படாமற்றடுத்தல்.
வலைப்படல் - சிறைப்படல், மயக்கிலகப்படல், வலையிலகப்படல்.
வலைப்பாடு - மீன்பிடி.
வலையச்சேரி - நெய்தனிலச்.
வலையம் - வலயம்
வலையர் - செம்படவர், நெய்தனிலமாக் [கள்.
வலையன் - ஒருசாதியான், ஒருசாமை, பரதவன்.
வலைவீசுதல் - வலையெறிதல்.

வலோத்காரம் } பலோத்காரம்.
வலோற்காரம் }
வல் - கச்சு, சீக்கிரம், சூதாடுகருவி, மேடு. வலி.
வல்கம் - பட்டை.
வல்கி - வீணை.
வல்கிதம் - குதிரை யிருகாற்றூக்கியாடி வருநடை
வல்சி - அரிசி, உண்டல், சோறு.
வல்லகி - வீணை.
வல்லடி - வலுபந்தம், வல்லபம்.
வல்லடிக்காரன் - வலுவந்தம்செய்வோன்.
வல்லடிவழக்கு - வலுபந்தநியாயம்.
வல்லணங்கு - காளி, துர்க்கை.
வல்லதம் - கொலை, மூடுதல்.
வல்லபசத்தி - மிகுவலி.
வல்லபம் - கதியுள்ள குதிரை, பிரியம், வல்லமை.
வல்லபன் - இடையரிற்றலைவன், குதிரைமேல் விசாரிப்புக்காரன், நாயகன், பிரியமுள்ளோன், மேல் விசாரணைகாரன், வல்லோன்.
வல்லபாசாரியர் - வேதாந்த சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்தவர்.
வல்லபி - மனைவி, வல்லபமுள்ளான், வல்லபமுள்ளோன். ராஜபுத்ர ஸ்தானத்திலேயுள்ள ஒரு நகரம்.
வல்லபை - பிரியநாயகி, வலவை. விநாயகக்கடவுளின் சத்திகளில் ஒருத்தி, இவள் யமுனையாற்றி னருகேயுள்ள ஒரு தடாகத்தில் ஒருதாமரைமலரில் பெண்வடிவாக அவதரித்து மரீசியாலெடுத்து வளர்க்கப்பட்டு வருநாளில் இவள் தந்தையின் அநுமதியால் காட்டிலே தவஞ்செய்யச்சென்றாள். இவள் உமாதேவியின் அமிசமாதலால் சிவபிரான், மரீசி தானொரு புத்திரியைப்பெற்றுச் சிவபெருமானுக்கு மருகியாக்குதல் வேண்டுமெனக் கொண்ட அபீஷ்டத்தைத் தந்தருளுமாறு விநாயக வடிவங்கொண்டு அவ்விடத்திற்சென்று இவளைச் சத்தியாக்கிக் கொண்டனர் என்பது புராணகதை.
வல்லமை - வல்லபம்.
வல்லம் - ஓரூர், வாழை. [கொத்து.
வல்லரி - கொடி, தளிர், பசுங்காய், பூங்
வல்லவன் - இடையன், பருப்புக்கறிசமைப்போன், புருடன், வல்லான், வீமன்.
வல்லவாட்டு - உத்தரீயம், மேற்போர்வை.
வல்லவி - வல்லபி. [வை.
வல்லவை - வல்லபை.
வல்லாத்துக்கம் - ஞாயமில்லா துண்டாகிய துக்கம்.
வல்லாரல் } ஒருபூடு, கேட்டைநாள்.
வல்லாரை }
வல்லார் - அயலார், சமர்த்தர், மாட்டாதவர்.
வல்லார்கொள்ளை - பலராற் கவரப்படுதல்.
வல்லாளகண்டன் - மிகவல்லோன்.
வல்லாளராசன் - திருவண்ணாமலையை ஆண்ட ஓரரசன்.
வல்லாளன் - திண்ணியன், வல்லான்.
வல்லான் - வல்லவன்.
வல்லி - அளவு, ஆய்ப்பாடி, உபமிடதமுப்பத்திரண்டிலொன்று, கலியாணம், கால்விலங்கு, நீங்கல், படர்கொடி, பிரிதல், பூமி, பெண், முருக்கு, வள்ளிக்கொடி.
வல்லிகம் - கொடி, மிளகு.
வல்லிகை - காதணி, யாழ்.
வல்லிசம் - மிளகு.
வல்லிசாதகம் - கற்பகத்திற்படர்கொடி.
வல்லிசாதம் - ஒருகொடி.
வல்லிசூரணை - புளிவசலை.
வல்லிசை - உச்சவிசை, பாம்பு.
வல்லியம் - இடையரூர், கொல்லிமலை, செவ்வள்ளி, புலி, மஞ்சள்.
வல்லிமை - அமுக்கிராங்கிழங்கு.
வல்லிவன்னி - சித்திரமூலம்.
வல்லினமோனை - எல்லாவடிவுகளின் தற்கண்ணும் வல்லின வெழுத்துக்கள் வருவது.
வல்லினம் - வலிதாயுச்சரிக்கு மெழுத்தின் பகுதி.
வல்லினவெதுகை - எல்லாவடிகளின்முதற் சீர்க்கண்ணும் வல்லினமெழுத்துக்க ளெதுகையாய் வருவது.
வல்லீஜம் - மிளகுக்கொடி.
வல்லீட்டுக்குற்றி - பனை முதலிய பிளக்குங் குற்றி.
வல்லுநர் - வல்லோர்.

வல்லுதல் - ஒழுங்கு வன்மையுடைத் தாதல்.
வல்லுயிர் - அரிதாய்ப்பிழைத்திருக்குமுயிர்.
வல்லூரம் - காடு, காட்டுப்பன்றி யிறைச்சி, தனிமை, புற்றரை, பூங்கொத்து, மணல், வயல், வனந்தரம்.
வல்லுவம் - அடப்பை, கைப்பை.
வல்லுளி - பன்றி.
வல்லுணர் - வல்லோர்.
வல்லூகம் - ஆண்குரங்கு, கரடி, மூசு.
வல்லூரம் - பாழ்நிலம், வள்ளூரம், வனந்தரம்.
வல்லூறு - இராசாளி, இது பஞ்சபட்சியினு மொன்று.
வல்லெழுத்து - வன்மையா யுச்சரிக்கும் எழுத்துக்கள்.
வல்லெனல் - அனுகரணவோசை.
வல்லை - ஒருநோய், கடுப்பு, காலவிரைவு, கோட்டை, புன்முருக்கு, பெருங்காடு, முருக்கு, மேடு, வட்டம், வருத்தம், வலிமை.
வல்லையம் - எறியீட்டி.
வல்லொட்டு - அருமையான இருப்பு, அரும்பூட்டு.
வல்லொற்று - வல்லினமெய்.
வல்லோரொழிப்பு - அபநுதி யுருபகத்தொன்று, அதுபிறரையமுற்று வினவிய தம் சொல்லினுண்மைப் பொருளை வல்லோரச்சொல்லுக்கு மற்றொரு தாற்பரியத்தைக் கற்பித்து மறுத்தல்.
வல்லோன் - வலிமையுடையோன்.
வல்வருத்தம் - கடுவருத்தம்.
வல்வாயசாணன் - ஒருபாம்பு.
வல்வாயன் - பேச்சிற்றிறமுடையோன்.
வல்விடம் - கடுநஞ்சு.
வல்விலங்கு - யானை.
வல்வினை - வலியவினை.
வவி - வேதமுத்திரை தரியாதவன்.
வவ்வலோட்டி - ஒருமுட்செடி.
வவ்வல் - வாருதல்.
வவ்வாலொட்டி - ஒருமுட்செடி.
வவ்வால் - வெளவால்.
வவ்வால்மீன் - ஒருமீன்.
வவ்வால்விளக்கு - ஒருவகை தொங்கும் விளக்கு.
வவ்வாற்குறடு - செருப்பிலொருறுப்பு.
வவ்வாற்பந்தம் - வவ்வால் விளக்கு.
வவ்வானற்றி - ஆதாரமற்றது.
வவ்வி - வவி.
வவ்வுதல் - க்ரஹித்தல்.
வழக்கச்சொல் - இயற்சொல்.
வழக்கம் - ஈகை, நடைபடி, வழங்குதல்.
வழக்கறிதல் - நடையறிதல்.
வழக்காடுதல் - வழக்குச்செய்தல்.
வழக்காளி - தொடர்ச்சிக்காரன்.
வழக்கிடுதல் - வழக்காடுதல்.
வழக்கு - அறப்பால் மூன்றனு ளொன்று, அதுபொருள் காரணமானவியாச்சியம், நியாயம் பேசுதல், வழக்கம்.
வழக்குக்கேட்டல் - நியாயம்விசாரித்தல்.
வழக்குச்செய்தல் - வழக்குப்பேசுதல்.
வழக்குத்தொடுத்தல் - வழக்குண்டாக்கல்.
வழக்குப்பேசல் - நியாயமுத்தரித்தல்.
வழக்குவெல்லல் - வழக்குக் கெலித்தல்.
வழக்கோரம் - ஒருபக்கஞ் சாய்ப்பான நியாயம்.
வழங்கல் - ஆட்சிபண்ணுதல், இயங்குதல், ஈதல், உலாவல், சொல்லல், நடத்தல், மழைபொழிதல்.
வழங்காநடை - புதுநடை.
வழங்காமொழி - சொல்லத்தகாதசொல்.
வழங்காவழி - புதுக்கட்டு.
வழங்குதல் - வழங்கல்.
வழட்டுதல் - வழுந்துதல்.
வழப்பம் - வழக்கம்.
வழலிக்கை - சோர்பு.
வழலுதல் - வழுந்தல்.
வழலை - ஒருபாம்பு, ஒருமருந்து, கோழை, சவுக்காரம்.
வழலையுப்பு - சவுக்காரவுப்பு.
வழாநிலை - திணை பாலிடம் கால முதலிய வழுவாது வழங்குவது.
வழாறு - நிறைபுனல்.
வழி - இடம், ஏழனுருபு, (உ-ம்) நிழல் வழியசைந்தனன், காரணம், திரட்சி, நடவை, பழமை, பின், மகன், மார்பு, முறைமை, வழியென்னேவல்.
வழிகட்டுதல் - எத்தனம்பண்ணுதல், வகைபண்ணுதல், வழிமறித்தல்.
வழிகாட்டி - முன்மாதிரி வைப்போன், வழிநடத்துவோன்.
வழிகாணுதல் - நேர்வருதல், வயணம் பிடித்தல்.

வழிக்கரை - வழியருகு.
வழிக்குதல் - திடைத்தெடுத்தல்.
வழிக்கொள்ளுதல் பயணப்படுதல்.
வழிச்சாரி - தீர்வைகொடாத சரக்குகளைக்கொண்டுபோகிறவர்களைக் கண்டுபிடிப்பதற்கான கள்ளப்பாதை, நடையுள்ளவழி.
வழிச்செலவு-பயணச்செலவு,பயணம்.
வழிச்செல்வோன் - பதிகன்.
வழிதல் - மிகுந்துவடிதல்.
வழிதுறை - பயணப்போக்கு.
வழித்தடை - சகுனப்பிழை.
வழித்தல் - வழிக்குதல்.
வழித்துணை - பாரம்பரியமான துணை, வழிநடையிற்றுணை.
வழித்தெய்வம் - குலதெய்வம்.
வழித்தொண்டு - தலைமுறைப் பட்ட தொண்டு.
வழித்தோன்றல் - மகன்.
வழிநடத்தல் - நடப்பித்தல்.
வழிநடை - பிரயாணம்
வழிநாள் - பின்னைநாள்.
வழிநாற்பது - ஒருசெய்யுள்.
வழிநூல் - முதனூல்வழியே விகற்பித்துரைத்த நூல்.
வழிபடல், வழிபடுதல் - கீழ்ப்படுதல், வணங்கல்.
வழிபடுத்தல் - நேர்ப்படுத்தல், பயணப்படுத்தல்.
வழிபண்ணுதல் - வகைபண்ணுதல்.
வழிபயத்தல் - மறுப்பறுத்தல்.
வழிபறித்தல் - அதர்பறித்தல்.
வழிபாடு - அப்பியாசம், ஆராதனை, தாழ்மை, வணக்கம், வழிபடல்.
வழிபாடுமறுத்தல் - அகப்பொருட்டுறையினொன்று.
வழிபார்த்தல் - வகைபார்த்தல், வரவு பார்த்தல்.
வழிப்படுதல் - நேர்ப்படுதல், வழிநடக்கத்துவக்கல்.
வழிப்படுத்தல், வழிப்படுத்துதல் - உட்படுத்துதல், ஒழுங்காக்கல், சரிவழியினடத்தல்.
வழிப்பயணம் - வழிப்பிரயாணம்.
வழிப்பறி - ஆறலை.
வழிப்பிரயாணம் - வழிநடை.
வழிப்பிரிவு - தெருச்சந்தி.
வழிப்போக்கர் - பயணக்காரர்.
வழிப்போதல் - பின்செல்லல்,வேறொருவர், காரியத்திற்குட்படல்.
வழிமுரண் - ஒவ்வோரடிக்கண்ணுஞ் சீர்களொன்றற்கொன்று மறுதலைப் பட்டு வருவது.
வழிமுறை - தலைமுறை, வழிமுதல்.
வழிமோனை - மோனைகளினொன்று.
வழியடைத்தல் - புறம்புறுத்தல்.
வழியல் - வழித்தெடுக்கப்பட்டது,வழியிற்றங்குகிறவன்.
வழியுரைப்போர் - தூதர்.
வழியெதுகை - ஒவ்வோரடிக்கண்ணும் முறையே சீர்களொன்றற்கொன்று எதுகையாய் வருவது.
வழிவகை - இடம்பாடு, ஏது.
வழிவழியாய் - வம்ஸபாரம்பர்யமாய்.
வழிவிடுதல் - பயணமனுப்புதல், வழிவெட்டி விடுதல்.
வழிவைத்தல் - போகத்தொடங்கல், முன்தொடங்கல்.
வழு - இன்மை, ஈனக்கேடு, தப்பு,வழுவென்னேவல்.
வழுகுதல் - வழுவுதல்.
வழுக்கட்டை - சிறுவன் மூடத்தன்மை.
வழுக்கல்-அடித்தல். இழுக்கல்,மோதல்.
வழுக்காய் - இளங்காய்.
வழுக்கு - தவறு, நிணம், மறதி, வழுக்கென்னேவல்.
வழுச்சுதல் - வழுக்கல்.
வழுக்குநிலம் - வழுக்கற்றரை.
வழுக்குப்பாசி - ஒருநீர்ப்பூடு.
வழுக்கெண்ணெய் - ஒருவகை யெண்ணெய்.
வழுக்கை - தேங்காய்வழுக்கல்,வழுக்காய்.
வழுக்கைத்தலை - மொட்டந்தலை.
வழுக்கைப்பலா - ஒருபலா.
வழுதலை - கத்தரி, புனத்திடும்பொய்க்கமுழு.
வழுதி - பாண்டியன்.
வழுது - பொய், வைக்கோல்.
வழுதுணை - கத்தரி.
வழுத்தல், வழுத்துதல் - சொல்லல், துதித்தல்.
வழுநிலை - திணைபாலிடங்கால முதலிய வழுவி வழங்குவது.
வழுந்தல் - காய்ப்பேறல்.
வழும்பு - அழுக்கு, நிணம், விலங்கின் குட்டிகள் பிறக்கும்போதிருக்கும் வழுவல்.

வழுவமைதி - திணைபாலிடம் முதலிய மாறுபட்டுவரினு மமைத்துக்கொள்ளத்தக்கது.
வழுவமைப்பு - வழுவமைதி.
வழுவல் - இளநீர்வழுவல், சாய்தல், தப்புதல், வழும்பு.
வழுவவிடுதல் - தப்பவிடுதல்.
வழுவற்றேங்காய்-வழுக்கைத்தேங்காய்.
வழுவன்சுறு - ஒருமீன்.
வழுவாடி - காரியத்தினழுவுகிறவன்.
வழுவாமை - நேர்மை.
வழுவாவியல் - தவறாதவொழுக்கம்.
வழுவிலி-குற்றமற்றவன்.
வழுவின்மை - குற்றமின்மை.
வழுவு - குற்றம், தவறு.
வழுவுடைக்காமம்-துரிச்சை, பிறர்பொருள் விரும்பல்.
வழுவுதல் - தவறுதல்.
வழுவை யானை.
வழூஉச்சொல் - பிழைமொழி.
வழூஉச்சொற்புணர்த்தல் - குற்றமான சொற்களைச் சேர்த்தல், அது செய்யுட்குற்றம் பத்தினொன்று.
வழை - சுரபுன்னை.
வளங்கட்டுதல் - வழிபண்ணுதல்.
வளந்து - பெரியமிடா.
வளப்படுதல் - சீர்ப்படுதல், நேராதல்.
வளப்பம் - கொழுப்பு, நன்மை, மாட்சிமை, வளமை.
வளப்பாடு - வளமை.
வளமடல் - ஒருபிரபந்தம், அஃது அறம் முதலிய முப்பொருளின் பயனையிகழ்ந்து காமவின்பத்தினையே பயனெனக்கொண்டு பாட்டுடைத் தலைமகனியற்பேர்க்குத்தக்கதை யெதுகையாகத் தனிச்சொல்லின்றி யின்னிசைக் கலிவெண்பாவாற் றலைமகனிரந்து குறைபெறாது மடலேறுவதாயீரடியெதுகை வரப்பாடுவது.
வளமை - உபகாரம், கொழுப்பு செல்வப்பொலிவு, நன்மை, மாட்சிமை.
வளமையர் - பூவைசியர், மாட்சிமையுள்ளோர்.
வளம்-அழகு, செல்வம், செவ்வை, பக்கம், பதவி, பலபண்டம், மாட்சிமை, வலி, வழி, வாறு.
வளயம் - வலயம்.

வளருதல் } வளர்தல்.
வளர்ச்சி }
வளர்தல் - உயர்தல், கதித்தல், விர்த்தி.
வளர்த்தல் - உண்டாக்கல், வளரச்செய்தல்.
வளர்த்தாள் - செவிலித்தாய்.
வளர்த்தி - வளர்ச்சி.
வளர்த்துதல் - கிடத்துதல், சயனிப்பித்தல், பருப்பித்தல்.
வளர்பிறை - பூருவபக்கச்சந்திரன்.
வளர்ப்பு - வளர்க்குந்தன்மை.
வளர்ப்புணி } வளர்த்தபிள்ளை.
வளர்ப்புப்பிள்ளை }
வளர்மயிர் - மயிர்க்குழற்சி.
வளவளத்தல் - பயனின்றிப் பிதற்றல்.
வளவளப்பு - பயனில்சொல்.
வளவன் - சோழன்.
வளவி - வீட்டிறப்பு.
வளவு - கொல்லை, வளைவு, வீடு.
வளன் - வளம்.
வளாகம் - இடம், ஒருநாகம், சூழ்ந்திடல், திணைப்புனம், வளைந்தவிடம்.
வளார் - இளங்கொம்பு.
வளாவல் } கலத்தல், வளைதல், வளைவு.
வளாவுதல் }
வளி - ஓதம், காற்று, சூறைக்காற்று.
வளு - இளமை, இளைது.
வளுந்தல் - தோல்வவ்வப்படல்.
வளுவல் - இளமை, வழுக்கத்தக்கது.
வளுவளுத்தல் - நொளுநொளுத்தல்.
வளுவனெனல் - வளுவளுப்பக்குறிப்பு
வளை - உத்திரம், கங்கணம், களங்கம், சக்கிரம், சங்கு, நுழைவளை, புற்று, வளையென்னேவல்.
வளைக்கரன் - திருமால்.
வளைக்குதல் - கட்டல், கோணச்செய்தல், சூழுதல், தடுத்தல், நளினஞ்செய்தல், வாருதல்.
வளைக்கையன் - திருமால்.
வளைச்சல் - சூழ்வு.
வளைதடி - பாராவலயம்.
வளைதருகுழியம் - கட்டுக்குழியம்.
வளைதல் - கட்டல், சுற்றுதல், சூழ்தல், தடுத்தல், வாருதல்.
வளைத்தல் - வளைக்குதல்.
வளைத்தழும்பு - வளையல்வடு.
வளைபோழ்நர் - சங்கறுப்போர்.

வளைப்பு-உழவுசால், மதில், வளைத்தல்.
வளைமணி - அக்குமணி, சங்குமணி.
வளையகம் - சங்கு.
வளையக்கொடி - அண்ணந்தாள்.
வளையமிடுதல்-குமிழமாடுதல், சூழ்தல்.
வளையம் - எல்லை, குளம், கைவளை, சீதாங்கபாஷாணம், தாமரையுட்சுருள், வட்டம்.
வளையலுப்பு - ஒருப்பு.
வளையல் - கண்ணாடிக்கரு, கைவளை, வளைவுள்ளது.
வளையல்மண் - வளையி லுண்டாக்குகிற மண்.
வளையாபதி - ஒரிலக்கியநூல்.
வளையில் - கண்ணாடிக்கரு, கைவளை.
வளைவாணி - தூண்டல்.
வளைவிற்பொறி-வளைந்து தானே பெய்யும் யந்திரவில்.
வளைவு - பணிதாவு, வட்டம், வணக்கம் வணங்கல், வளர்ந்தது.
வள் - ஒலிக்குறிப்பு, காது, கூர்மை, நெருக்கம், வலி, வளம், வார், வாளுறை, வாள்.
வள்வள்ளெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு.
வள்ளடி - செவிமூலம்.
வள்ளம் - ஒருவகைச்சிறுதோணி, நாழி கைவட்டில், மாக்கால், வட்டில்.
வள்ளலார் - ஒழிவிலொடுக்கம் என்னும் ஒரு ஞானநூல் செய்தவர். இவர் நூற்றறுபது வருஷத்துக்கு முன்னிருந்த பெரியோர்.
வள்ளல் - வரையாது கொடுப்போன், வலியன், வள்ளைக்கீரை.
வள்ளல்நாயகர் - திருமணஞ்சேரியிலெழுந்தருளி யிருக்கும் சுவாமிபெயர்.
வள்ளன்மை - வள்ளற்றன்மை.
வள்ளி - ஆபரணம், ஒருகூத்து, ஒரு கொடி, கைவளை, சுப்பிரமணியன தேவி, படர்கொடி, பிரப்பங்கேடகம்.
வள்ளிக்கண்டம் - சீந்தில்.
வள்ளிசு - நேற்றி.
வள்ளித்தண்டு - பிரம்பின்வட்டம்.
வள்ளிநாயகி - சிவமுனிக்கு மான்வயிற்றிலே பிறந்த புதல்வி, வள்ளி மலையில் வள்ளிக்கிழங்கு தோண்டியெடுத்த குழியிலே பிறந்த காரணத்தால் வள்ளி யென்னும் பெயர் படைத்தாள். இவள் வேடராலெடுத்து வளர்க்கப்பட்டவள், முருகக்கடவுளுடைய உபசத்திகளில் ஒருத்தியாகப் பிறந்தமையால் இவள் மறுபடியும் அக்கடவுளுக்குத் தேவியாயினள்.
வள்ளிபங்கன் - முருகன்.
வள்ளிமணவாளன் } முருகன்.
வள்ளிமணாளன் }
வள்ளிமலை - திருப்புகழ்பெற்ற ஒரு சுப்பிரமணி க்ஷேத்திரம்.
வள்ளியம் - ஊதுகுழல், மரக்கலம், மிளகு, மெழுகு.
வள்ளியோர்-வரையாது கொடுப்போர்.
வள்ளூரம் - ஆட்டிறைச்சி, ஆவினிறைச்சி, சூட்டிறைச்சி, புலால்.
வள்ளுவசாத்திரம் - ஒரு சோசியம்.
வள்ளுவர்குறள் - திருக்குறள்.
வள்ளுவன் - ஒருசாதியான், புரோகிதன், வருங்காரியம் சொல்லுவோன்.
வள்ளுறு - வல்லீறு.
வள்ளுரம் - வள்ளூரம்.
வள்ளை - உலக்கைப்பாட்டு, ஒருகொடி.
வறக்காலன் - துடைகாலன்.
வறடு - வாடு
வறட்காமாலை - வரட்சி, வறள்வு.
வறட்சுண்டி - ஆடுதின்னாப்பாளை.
வறட்டல் - காயச்செய்தல், வறுத்தல்.
வறட்டி - வறூட்டி.
வறட்பூல் ஒருபூல்.
வறண்டி-குப்பைவாரி, வழிக்குங்கருவி.
வறதாரு - கறிமுள்ளி.
வறத்தல் - காய்தல், சுருங்கல்.
வறப்பு - குறைவு, வற்று.
வறலாரை - வரளாரை.
வறவு - கஞ்சி.
வறவொட்டி - ஒருபூடு.
வறளாறை - வரளாரை.
வறண்முள்ளி - வரள்முள்ளி.
வறளாங்குளம் - நீர்வற்றினகுளம்.
வறளி - வரளி.
வறளுதல் } வரள்தல்.
வறள்தல் }
வறள்வு - வரள்வு.
வறிஞர் - தரித்திரர்.
வறிது - அறியாமை, குறைவு, சிறுமை, பயனின்மை, வீண்.
வறிதுநகைதோற்றல் - அகப்பொருட்டுறையி னொன்று.

வறிமை - வறுமை, தரித்திரம்.
வறியர் } தரித்திரம்.
வறியோர்
வறியோன் - தரித்திரன்.
வறுகுதல் - பிறுண்டுதல்.
வறுக்கற்றுப்போதல் - திரவறுமைப் பட்டுப்போதல்.
வறுங்காலம் - வறப்புக்காலம்.
வறுங்கோடை-மழையில்லாதகோடை.
வறுதல் - தீயாலுவர்தல்.
வறுத்தல் - வறட்டல்.
வறுத்துறுப்புச்செய்தல்-முற்றுநீக்கல்.
வறுநகை - புன்னகை.
வறுநிலம் - பாழ்நிலம்.
வறுமம் - வன்மம்.
வறுமை - தரித்திரம், வெறுமை.
வறுமொழி - வீண்சொல்.
வறும்புனங்கண்டுமறுதல் - அகப்பொருட்டுறையினொன்று.
வறும்புனம்-பாலைநிலம், விளைவுகொய் புனம்.
வறுவிலி - அகதி.
வறை } துவட்டற்கறி, பிண்ணுக்கு.
வறையல்
வற்கசங்கலிதம் - வருக்கசங்கலிதம்.
வற்கடம் - பஞ்சகாலம், வறப்புக்காலம்
வற்கடை - குறைவு.
வற்கமூலம்-வருக்கத்தொகையின் மூலம்
வற்கமார்க்கம் - நாயுருவி.
வற்கம்-கஞ்சி, குதிரைவாய்வார், சமமாகிய வீரெண்ணின்பெருக்கம், மாவுரி, மரப்பட்டை.
வற்காடம்-நகக்குறி, மத்தியானக்கிரணம்.
வற்கரி - காகம், குதிரைக்கயிறு.
வற்கலம் - மரவுரி, மரப்பட்டை.
வற்கலை - மரவுரிச்சீரை.
வற்காலி - வெள்ளாடு.
வற்கித்தல் - ஒருதொகையை யத்தொகையாற் பெருக்கல்.
வற்கு - அழகு, ஆடு, கஞ்சி.
வற்குசா - கார்போகரிசி.
வற்குலிகம் - வலியான்குருவி.
வர்சகம் - பசுக்கன்று, பிள்ளை.
வற்சகன் - வசுதேவன், தம்பி.
வற்சதந்திரி - கன்றுகட்டுங்கயிறு.
வற்சதரம் - இளங்கன்று.

வற்சநாபம் } ஒருமருந்து.
வற்சநாபி
வற்சநீயம்-தள்ளத்தக்கது, நேரற்றது.
வற்சப்ரீதி-திஷ்டன் வமிசத்துப் பலந்தனன் புத்திரன்.
வற்சமம் - குடசப்பாலை.
வற்சம்-எருமை பசு விவற்றின்கன்று, ஒருதேயம்,குதிரைவாய்வார், மார்பு.
வற்சரம் - வருடம்.
வற்சரன்-துருவனது இரண்டாம் புத்திரன், இவன் புஷ்பாரணன், சந்த்ரகேதன் இஷன், ஊர்ச்சன், வசு, ஜயன் என்பவர்க்குத் தந்தை.
வற்சலம் - இளயங்கன்றுப்பசு, தயை.
வற்சலை - பலராமன் மகள், அபிமந்யு மனைவிவற்சன்சேநசித்து புத்திரன், வருதத்தநன், குவலயாசுவன், ஹ்ருதத்வஜன் என்பவர்க்குத்தந்தை, கம்ஸன் தூதர்களுளொருவன். இவன் கிருஷ்ணனாற் கொல்லப்பட்டவன்.
வர்சிதம் - தள்ளுகை.
வர்சித்தல் - தள்ளுதல், விலக்குதல்.
வர்சிப்பு - தள்ளுகை.
வர்சியம் - விடப்பட்டது.
வர்சை - குழந்தை, மலட்டுப்பசு.
வர்ணம் - வண்ணம்.
வர்தனை - பார்ப்பாருக்குங்கிராமத்தூழியகாரருக்குங் கொடுக்குங்கூலி.
வற்பம் - அருமை, ஒறுப்பு, பஞ்சம்.
வர்பு உறுதி, வலி, வற்பம்.
வற்புறுத்தல் - உறுதிப்படுத்தல்.
வற்மம் - வன்மம்.
வற்றம் - வறட்சி, வற்று.
வற்றல் - அடைகாய், உலர்தல், காய்ந்தது, வடிதல்.
வற்றற்சூடு - நலம்வற்றச்சுடுஞ்சூடு.
வற்றாலை - ஒரு கிழங்குக்கொடி.
வற்று - நீர்ச்சுருக்கம்.
வற்றுக்கடை - குறைவு.
வற்றுதல் - காய்தல், வடிதல்.
வனகசம் - வனசரம்.
வனகதலி - காட்டுவாழை.
வனகந்தம் - காட்டுக்கருணை.
வனகவம் - காட்டுப்பசு.
வனகுத்தன் ஒற்றன்.
வனகோசரம் - காடு.
வனகோசரன் - வனவாசி, வேட்டைக்காரன்.

வனகௌ - காட்டுப்பசு.
வனசங்கடம் - கடலை.
வனசஞ்சரிப்பு } வனவாசம்.
வனசஞ்சாரம் }
வனசஞ்சாரி - வனவாசி.
வனசமூகம் - பூஞ்சோலை,
வனசபீடம் - தாமரையாசனம்.
வனசபீடன்-தாமரையாசநன் பிரமன்.
வனசம் - தாமரை.
வனசரம்-பெருங்காடு, மூவினயானையி ஞென்று, இது வனத்திற் பிறந்த யானை.
வனசரர் } வனவாசிகள், வேடர்.
வனசரிதர் }
வனசரோசினி - காட்டுப்பருத்தி.
வனசாசகன் - பிரமன்.
வனசாசநி - இலக்குமி, சரச்சுவதி.
வனசிருங்காடம் - யானைநெருஞ்சில்.
வனசீவி - வனவாசி.
வனசுரம் - அருங்காடு.
வனசூகரம் - காட்டுப்பன்றி.
வனசூகரி - காட்டுப்பன்றியின்பெண்.
வனசெந்து-காட்டுமிருகம்.
வனசோபனம் - தாமரை.
வனச்சார்பு - முல்லைநிலம்.
வனச்சுவை - நரி, நாவி, புலி.
வனதம் - முகில்.
வனதித்தம் - குடசப்பாலை.
வனதீபம் - சண்பகம்.
வனதேவதை - வனத்திற்றெய்வம்.
வனநரம் - குரங்கு.
வனபதி - பூவாதுகாய்க்குமரம், மரம்.
வனபந்தம் - தடாகம்.
வனபலம் - யானைத்திப்பிலி.
வனபாதவம் - காட்டுமரம்.
வனபிப்பலி - காட்டுத்திப்பிலி.
வனபூமி - காட்டுத்தேயம்.
வனபத்தியம் - பூவாமறகாய்க்குமரம்.
வனப்பிரியம் - குயில்.
வனப்பு - அலங்காரம், அழகு.
வனமல்லி - காட்டுமல்லிகை.
வனமா - கொடிவேலி, முதிரை.
வனமாலி - திருமால், பிரமி.
வனமாலிநி - துவாரகை, வராகி.
வனமாலை - திருமால்மாலை.
வனமுறை - முதிரை.
வனமுலைநாயகியம்மை - திருக்கீழ்வே ளூரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வனமுதல் - முகில்.
வனமோசை - காட்டுவாழை.
வனமௌவல் - காட்டுமுல்லை.
வனம்- அழகு, ஊர்சூழ்ந்தசோலை,காடு குடியிருப்பு, சுடுகாடு, துளசி, நீர் புற்று, மலையருவி, மிகுதி,வழி,வீடு.
வனரம் - குரங்கு.
வனராசன் - சிங்கம்.
வனருகம் - தாமரை.
வனலதா - காட்டுக்கொடி.
வனலக்ஷ்மி - வாழை.
வனவசம் - சந்தனம்.
வனவரம்பை - காட்டுவாழை.
வனவாசம் - வனவிருப்பு.
வனவாசநம் - நாவி.
வனவாசி - வனசஞ்சாரி.
வனவாந்தரம் - வனாந்தரம்.
வனவிரீகி - மலைநெல்.
வனவிலங்கு - காட்டுமிருகம்.
வனவிலாசினி - ஒருசெடி.
வனாகம்பம் - மரவசைவு.
வனாகி - முயல்.
வனாசம் - காட்டாடு.
வனாந்தம் - காட்டோரம்.
வனாந்தரம் - நின்மானுஷியகாடு.
வனாமலகம் - காட்டுநெல்லி.
வனாயு - ஒருதேயம்.
வனார்ச்சகன் - பூவிற்போன்.
வனிசை - கா.
வனிதம் - சிறப்பு.
வனிதை - பெண், மனையாள்.
வனீ - காடு.
வனீகன் } யாசகன்.
வனீயதன் }
வனீரம் - காட்டுத்திப்பிலி.
வனேசன் - காட்டில்சஞ்சரிப்போன்.
வனைதல் - அலங்கரித்தல், செய்தல்.
வனோற்சாகம் - காண்டாமிருகம்.
வன்கட்பேதையர் - குறிஞ்சிநிலப் பெ ண்கள், பாலைநிலப்பெண்கள்.
வன்கணம் - வலியுடையவருக்கம், வல் லெழுத்து வருக்கம்.
வன்கண்-கொடுமை,கொடும்போர்வை பொறாமை, வீரத்தன்மை, வைராம்

வன்கண்ணர் - வைராக்கியர்.
வன்காய் - கடுங்காய்.
வன்காரம் - வலோற்காரம்.
வன்கிடை - அருங்கிடை.
வன்கிழம் - அகிமுதுமை.
வன்குணம் - வைரத்தனம்.
வன்கை - வைராக்கியம்.
வன்கைவாரம் - அரும்பழி.
வன்கொலை - அருங்கொலை
வன்சா - அருஞ்சா.
வன்சிரம் - ஒருமீன்.
வன்சுரம் - பாலைவனம்.
வன்சொல் - கடுஞ்சொல்.
வன்சொல்விலக்கு - ஓரலங்காரம், அது வன்சொற்சொல்லி விலக்குவது.
வன்பகை - கடும்பகை
வன்பரணர் - வையாவிக்கோப் பெரும் பேகனையும் வல்விலோரியையும் பாடியபுலவர் இவரைக் கபிலர் என்பாருமுளர். (புறநானூறு.)
வன்பால்-குறிஞ்சிநிலம்,பாலைநிலம்,மேடு.
வன்பு - வன்மை.
வன்பொறை - பெரும்பாரம்.
வன்மத்தானம்-உயிர்நிலை,நொய்யவிடம்
வன்மம் - வைராக்கியம்.
வன்மரம் - அகக்காழுள்ளமரம்.
வன்மனம் - கல்நெஞ்சு.
வன்மி - பகைஞன்.
வன்மிகம் - ஓதம், வன்மீசம்.
வன்மித்தல் - வைரங்கொள்ளுதல்.
வன்மீகநாதர் - திருவான்மியூரில் கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வன்மீகம் - புற்று.
வன்மீகி - வான்மீகி.
வன்மீன் - முதலை.
வன்முகிழ் - தேங்காய்க்காம்பினடி.
வன்மை கடினம் இது எண்வகையூறில் ஒன்று, கருத்து, பெலம், வலி, வலோற்காரம்.
வன்மொழி-உறுதிப்பேச்சு, கடுஞ்சொல்.
வன்றொடர் - வல்லெழுத்துத்தொடர்ந்து வருவது.
வன்னக்கல் - மந்தாரச்சிலை
வன்னம் - எழுத்து, சித்திரிப்பு, நிறம்.
வன்னி ஒருமரம், கிளி, கொடி, வேலி, சேங்கொட்டை, தீ, பிரமசாரித்துவம், யயாதிபௌத்ரன் துர்வசுபுத்ரன்.
வன்னிகருப்பம் - இலிங்கம், மூங்கில்.
வன்னிகருப்பன் - குமரக்கடவுள்.
வன்னிகர் - பொடுதிலை.
வன்னித்தல்-உவமித்தல், சிறப்பித்தல்.
வன்னித்தீ - நவசாரம்.
வன்னிநாதன் - தீக்கடவுள்.
வன்னிநாயகர் - திருவெண்ணியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வன்னிபொக்கிஷம் } நெய்.
வன்னிபொக்கியம் }
வன்னிப்ரியம் - கொடிவேலி.
வன்னிப்பு - வருணனை.
வன்னிமாரகம் - நீர்.
வன்னிமித்திரன் - காற்று.
வன்னிமை ஒருசாதி, வன்னியருக்குரியமேன்மை.
வன்னியம் - வன்னிக்கப்பட்டது.
வன்னியர்-ஒருசாதியார், குடியானவர், பள்ளிகள்.
வன்னியன் - குடியானவன்.
வன்னியின்கெற்பம்- இலிங்கபாஷாணம்.
வன்னிலம் - உரநிலம்.
வன்னிலோகம் - செம்பு
வன்னிவண்ணம் - செந்தாமரை, செவ்வாம்பல்.
வன்னிவீசம் - பொன்.
வன்னெஞ்சன் - வயிரநெஞ்சன்.
வன்னெஞ்சு - வயிரநெஞ்சு.
வன்னெத்து - நத்தைச்சூரி.
வன்னெல் - வயதுள்ளநெல்.

## வா



வா - ஓரெழுத்து, வாவென்னேவல்.
வாகநன-காக்காரன், குதிரைக்காரன்.
வாகசம்-நீர்ப்பாய்ச்சல், பெரும்பாம்பு.
வாகசி - குத்திரப்பேச்சு.
வாகடம் - வைத்தியசாத்திரம்.
வாகடர் - பாஹடாசாரியர், இவர் சிறந்த ஒரு வைத்தியநூலாசிரியர்.
வாகம்-இடபம், எருமைக்கடா, ஓளவு, காற்று, குதிரை, செங்கீரை, பலண்டுறுவபாஷாணம், புயம், வாகனம்,

வாகரம்-கோணம், சாணைக்கல், தடை, நிச்சயம், வடவாமுகம்.
வாகரன் - பண்டிதன், வீரன்.
வாகனப்புடைவை - புடைவைக் கட்டைத்தாங்குஞ்சீலை.
வாகனம் ஏறிநடத்தப்படுபவை, சீலை, பரி, முயற்சி.
வாகன் - அழகன், காவாள்.
வாகாசனி - புத்தன்.
வாகிடி - நீர்ப்பன்றி.
வாகித்தம் - யானைக்கதுப்பு.
வாக்கியப்பிரவேசம்-வெளியேபோதல்
வாகியம் - வாகனம், வெளி.
வாகிருவன் - அறிஞன், சாதுரியன்.
வாகினி - படை,படையிலோர்தொகை அது கணசமூன்றுகொண்டது, பாதி
வாகினிநிவேசம் - பாசறை. [ரி.
வாகினிபதி } சமுத்திரம், சேனாதி
வாகினீபதி } பதி.
வாகீகம் - பண்டி, பெரும்பறை.
வாகீசர் - திருநாவுக்கரசர்.
வாகீசன்-அப்பர், ஆக்கியோன், திருநாவரசன், பிரமன்.
வாகீசுவரன் - வாகீசன்.
வாகீசுவரி - சரச்சுவதி, ஒருசத்தி.
வாகீசை - சரச்சுவதி.
வாகு - அழகு, ஒழுங்கு, தோள், பக்கம், முக்கோணத்திெனாருபக்கம்.
வாகுசம் - எள், கிளி.
வாகுசன் - அரசன், சத்திரியன்.
வாகுசி - கார்போகரிசி.
வாகுதம் - ஒருபட்சி.
வாகுத்திராணம் - தோட்சவசம்.
வாகுபுரி - பூணூல்.
வாகுமாலை-பந்தற்சோடிப்பிலொன்று.
வாகுமூலம் - கைக்குழி, தோண்மூலம்.
வாகுயுத்தம் - மல்லுயுத்தம்.
வாகுரம் - வலை.
வாகுரிகன் - வேட்டைக்காரன்.
வாகுரை - கண்ணி, பொறி.
வாகுவம் - மகிழங்கனி.
வாகுலிகன் - அடைப்பைக்காரன்.
வாகுலேயன் - முருகக்கடவுள்.
வாகுலை - கார்த்திகைப்பெண்.
வாகுவம் - வஞ்சி
வாகுவலயம் - தோளணி.
வாகுவீரியம் - புஜபராக்கிரமம்.

வாகுனி - கீழ்காய் நெல்லி.
வாகெடுத்தல் - உச்சிவகிருதல்.
வாகேசுவரி-ஒருசத்தி, வாக்கு, வாணி
வாகை - அறத்தின்றுறை, ஈகை, உண்மை, ஒழுக்கம், ஒருமரம், அது தசமூலத்தொன்று,குணம்,தவம்,நலன், மாட்சிமை, மிகுதி, முயற்சி, வாகை, மாலை, வெற்றி.
வாகைமாலை - ஒருபிரபந்தம் அது மாற்றாரை வென்று வாகைமாலை சூடுவதை ஆசிரியப்பாவாற் கூறுவது, வெற்றிமாலை.
வாக்கன் - மாறுகண்ணன்.
வாக்காடல் - வாதுபண்ணல்.
வாக்காட்டல் - வைத்தல்.
வாக்காள் - சரச்சுவதி.
வாக்கி-அறம்பொருளின்பம் வீடெனு நாற்பொருட் பயன்களைக் கேட்க வேட்கைவிரித்துக் கூறுவோன், மாறுகண்ணி, வரகவி.
வாக்கிடுதல் - வாக்குக்கொடுத்தல்.
வாக்கியகண்டனம் - பொய்யென்று ரூபித்தல்.
வாக்கியதம் - மௌனம்.
வாக்கியப்பிரயோகம் - பேசுதல்.
வாக்கியப்பொருட்காட்சியணி - ஓரலங்காரம் அது இரண்டு வாக்கியார்த்தங்கட்கு ஐக்கியத்தை யாரோபித்தல்.
வாக்கியம் - உரையிலக்கணமைந்தினொன்று அது வினைமுதற் செயப்படுபொருள், பயனிலையோடு முடிந்த சொல், முறை, வசனம், வாசகம், வெளி, வைணவாகமத்தொன்று.
வாக்கியாதன் - மௌனி.
வாக்கியார்த்தம் - பொழிப்புரை.
வாக்கின்செல்வி - சரச்சுவதி.
வாக்கீசர் - அப்பர்.
வாக்கீசன் - திருநாவுக்கரசன்.
வாக்கீரன் - மைத்துனன்.
வாக்கு - சொல்,திரும்பினபார்வை,நேரிலக்கற்றவளைவு, பக்கம், முப்பொறியினொன்று, மெய்ம்மை, வாக்கென்னேவல், வாய் அது ஐம்பொறியினொன்று, விதம்.
வாக்குக்கண் - மாறுகண்.
வாக்குக்குற்றம் - சொற்குற்றம்.
வாக்குக்கொடுத்தல் - நிசஞ்சொல்லல்

வாக்குசாபல்லியம் - பேச்சிலிளைத்துப் போதல்.
வாக்குச்சகாயம் - சொற்றுணை.
வாக்குச்சித்தி-சொற்படி யனுகூலமாதல்.
வாக்குச்சொல்லுதல் - நிசஞ் சொல்லுதல்.
வாக்குதண்டம் - கடிந்துபேசுதல்.
வாக்குதத்தை - மணமுடிக்க வாக்குக் கொடுத்த ஸ்திரீ.
வாக்குதல் - வார்த்தல்.
வாக்குதேவதை - வியாழம்.
வாக்குதேவி - சரச்சுவதி.
வாக்குதோஷம் - நிந்தனை, பேச்சுக்குற்றம், வழூஉச்சொல்.
வாக்குத்தத்தம் - வாக்குக்கொடுத்தல்.
வாக்குத்தம்பம் - பேச்சைத் தடைபண்ணல் அது கலைஞான மறுபத்துநான்கி லொன்று.
வாக்குத்தானம் - சென்மத்திற்கிரண்டாமிடம்.
வாக்குத்தீட்சை - தீட்சை பேதத்தொன்று அது உபதேசம்.
வாக்குத்துஷ்டம் - வாக்குதோஷம்.
வாக்குநாண்யம் - பேச்சுறுதி.
வாக்குபதி - வியாழம்.
வாக்குப்பண்ணுதல்-நிசஞ்சொல்லுதல்
வாக்குமாறுதல் - புத்திமழுங்கல், பேச்சுத்தவறல்.
வாக்குமூலம் - சொற்கருத்து, வார்த்தைமுகாந்தரம்.
வாக்குரோசம் - பேச்சுக்குநாணல்.
வாக்குவசீகரம் - செல்வாக்கு.
வாக்குவந்தனம் - அவையடக்கம்.
வாக்குவல்லபம் - பேச்சுவல்லபம்.
வாக்குவாதம் - தர்க்கம்.
வாக்குவி - சரச்சுவதி.
வாக்குவித்தல் - வார்ப்பித்தல்.
வாக்குவியாபாரம் - பேச்சுவிதம், வழக்கமானபேச்சு.
வாக்குவிலாசம் - வாசாலகம்.
வாக்கெடுத்தல் - உச்சிவகிருதல்.
வாக்பதி - பிருஹஸ்பதி.
வாங்கம் - கடல்.
வாங்கல் - அடித்தல், அழைத்தல், இழுத்தல், எற்றுகைகொள்ளல், நீளம், பெற்றுக்கொள்ளல், போதல், வளைத்தல், வளைவு.

வாங்கா - ஒருகுழல்.
வாங்காவில் - எதிரித்தனம்.
வாங்கு - வளைவு, ஓராசனம், கிரிசு, பிச்சுவா, வாங்கென்னேவல்.
வாங்குதல் - வாங்கல்.
வாசகத்தீட்டை - வாக்குத்தீட்சை.
வாசகபதம் - வழக்கச்சொல், வெளிப்படைமொழி.
வாசகப்பா - வாசாப்புப்பாட்டு.
வாசகப்புணர்ச்சி - வாசகப்பொருத்து.
வாசகம் - வசனம், வார்த்தை.
வாசகன் - தூதன்.
வாசகிரகம் - உள்வீடு.
வாசங்கட்டுதல் - மணமூட்டுதல்.
வாசகல்லியம் - கத்தூரி எலும்பு.
வாசசாம்பாதி - வியாழம்.
வாசஞ்செய்தல் - இருத்தல், மணமூட்டுதல்.
வாசதம் - கழுதை.
வாசதேயி - இரவு.
வாசத்தலம் } இருப்பிடம்.
வாசஸ்தலம் } இருப்பிடம்.
வாசஸ்தானம் - வாசஸ்தலம்.
வாசந்தம் - ஒட்டகம், குயில், தென்காற்று, மிருகத்தினிளங்கன்று.
வாசந்தி - ஆடாதோடை, குருக்கத்தி, திப்பிலி, வசந்தகாலமல்லிகை.
வாசந்திகை - ஒரு ஸம்ஸ்கிருதநூல்.
வாசபதி - வியாழம்.
வாசபேயம் } ஒருவேள்வி.
வாசபோசினி } ஒருவேள்வி.
வாஜபோஜி - வாஜபேயயாகம்.
வாஜஸநேபம் - ஜநமேஜயன் செய்த வேதாந்தகிரந்தம்.
வாசம்-அம்பு, அரிசி, இருப்பிடம், இலாமிச்சை, இறகு, உணவு, ஊர், சரச்சுவதி, சீலை, நாள், நீர், நெய், பூமணம், பேச்சு, மந்திரம், மருதநிலத்தூர், யோசனை, வாக்கியம், வாக்கு, வாசனை, வேகம்.
வாசம்பண்ணுதல் - இருத்தல்.
வாசரம்-ஒருநரகம், நாள்.
வாசரம்யமன் - முநி, மௌனவிரதி.
வாசல் - வாயில்.
வாசவன் - இந்திரன்.
வாசவதத்தை - பிரத்யோதநன் மகள், இவள் அநேக கிரந்தங்களுக்குக் கதாநாயகி.

வாசவத்திரன் - திருமால்.
வாசவர் - பஞ்சவாசம் விற்போர்.
வாசவன் - இந்திரன்.
வாசற்காவல் - காவலாளன், காப்பு.
வாசற்படி - வாயிற்படி.
வாசனம் - அறிவு, குரல், புடைவை, வாசனை, வாசித்தல்.
வாசனி - மேற்கட்டி.
வாசனை - அறிவீனம், அறிவு, இடம், நம்பிக்கை, மணம்.
வாசனைத்திரவியம் } கந்தவருக்கம்.
வாசனைப்பண்டம் }
வாசனைப்பொடி - கந்தபொடி.
வாசஸ்பதிமிசிரர் - வேதாந்த சூத்திரத்துக்குச் சங்கராசாரியார் செய்த பாஷ்யத்துக்கு வியாக்கியானஞ் செய்தவர், இவர் இராமாநுஜாசார்யருக்கு முன்னிருந்தவர்.
வாசா - சரச்சுவதி, வாய்விசேஷம்.
வாசாகாரம் - அந்தப்புரம்.
வாசாங்கியம் - மிளகு.
வாசாடம் - வாசாலம்.
வாசாடன் - வாயாடி
வாசாதி - ஆடாதோடை.
வாசாப்பு - ஒருகூத்து.
வாசாமகோசரம் - வாக்குக்கெட்டாமை
வாசாலகம் - வாக்குவல்லபம்.
வாசாலகன் - வாய்வல்லபன்.
வாசாலம் - வாக்குவல்லபம், வாக்குவிற்பன்னம்.
வாசாலன் - மிகப்பேசுவோன்.
வாசாலை - வாக்குவல்லவி.
வாசி - அச்சுவினிநாள், அதிகம், அம்பு அளவு, இசைக்குழல், இசைப்பாட்டு, இருப்பிடம், குதிரை, சுவாசம், சௌக்கியம், தன்மை, திட்டம், நிமித்தம், நியாயம், பறவை, பாணம், மிகுதி, வட்டிக்குமேல் அதிகமாய்க் கழித்தெடுக்குங்கழிவுபணம், வாசஞ்செய்கிறவன், வாசியென்னேவல்.
வாசிகந்தகம் - ஒருபூடு.
வாசிகபத்திரம் - திருமுகம்.
வாசிகம் - செய்தி.
வாசிகரணம் - அன்புடைக்காமம்.
வாசிகன் - தூதன்.
வாசிகை - கோத்தமாலை, தொடுத்தமாலை.
வாசிக்கல் - காக்கைக்கல்.
வாசிக்காரகம் - திருமுகம்.
வாசிக்காரகன் - தூதன்.
வாசிசாலை - குதிரைப்பந்தி.
வாசிட்டம் - அட்டாதச தருமநூலில் ஒன்று, அட்டாத சோபபுராணத்தொன்று, இரத்தம்.
வாசிதம் - அறிவு, ஒலி, குடியேற்றுதல், புட்குரல், மிருகக்குரல்.
வாசிதாரணை - வாயுதாரணை.
வாசிதை - பெண், பெண்யானை.
வாசித்தல் - படித்தல், மணத்தல், வீணை முதலிய வாசித்தல்.
வாசிரம் - நாற்றெருக்கூடுமிடம், பகல், வீடு.
வாசிராயநீயம் - உபநிடதமுப்பத்திரண்டில் ஒன்று.
வாசினி - வெண்குதிரை.
வாசினை - வாசித்தல்.
வாஜஸநேயசாகை - யாஜ்ஞவல்க்யர் செய்த யஜுர்வேத சாகை.
வாட்பட்சம் - கட்டில.
வாஜிபேயம் - ஒருயாகம்.
வாஜிபோஜநம் - பயறு.
வாசு - இருவேலி, கடவுள், திருமால்.
வாசுகி } அட்டநாகத் தொன்று.
வாசுகேயன் }
வாசுதேவன் - கிருஷ்ணன், கரூசதேசத்தரசன், இவன் மிகுந்த கர்வமுடையவனாய், தானே கிருஷ்ணனென்று இறுமாந்திருந்தகாலத்திலே கிருஷ்ணனாலே கொல்லப்பட்டவன்.
வாசுபத்திரன் - கிருட்டிணன்.
வாசுரை - இரவு, பூமி, பெண், பெண்யானை.
வாசை - ஆடாதோடை.
வாசோயுகம் - ஒருசோடு புடவை.
வாச்சல்லியம் - தயை.
வாச்சி - வாய்ச்சி.
வாச்சியம் - குற்றம், சொல்லப்படத்தக்கது, நிந்தை, பறை முதலியன, வெளிப்படை.
வாச்சியாயன் - களநூல்செய்தமுனி.
வாஞ்சனம் - வாஞ்சை.
வாஞ்சனீயம் - விரும்பத்தக்கது.
வாஞ்சனை - வாஞ்சை, ஆசை.
வாஞ்சாபோகம் - இச்சித்தபோகம்.
வாஞ்சிதம் - விரும்பியது.

வாஞ்சித்தல் - ஆசைப்படுதல்.
வாஞ்சியம் - ஒருசிவஸ்தலம்.
வாஞ்சினம் - விரும்பியது.
வாஞ்சினி - காமி.
வாஞ்சை - ஆசை.
வாடகை - குடிக்கூலி, கொல்லை, தெரு, மட்சுவர், வாகனசாலை, வீட்டுக்கூலி.
வாடபேயம் - எருது.
வாடம் - சுவர், மதில், மிருதி.
வாடல் - சாதல், மெலிதல், வதங்கல்.
வாடாக்குறிஞ்சி - குரவகம்.
வாடாமல்லிகை - ஒரு பூச்செடி.
வாடாமாலை - பொன்னரிமாலை.
வாடி, வாடிகை } அடைப்புகொல்லை, தங்குமிடம், தொட்டால்வாடி, பூந்தோட்டம், மதில், முற்றம், வீடு.
வாடிக்கை - வழக்கம்.
வாடுகி - ஒருவகை வெள்ளரி.
வாடுதல் - வாடல்.
வாடை - இடைச்சேரி, இடையர்வீதி, காற்று, குடிக்கூலி, தெரு, நிரை, மணம், வடகாற்று, வடக்கு, வரிசை, வாசனை, வீட்டுக்கூலி, வேடர்வீதி.
வாடைக்கச்சான் - வடமேல்காற்று.
வாடைக்காற்று - வடகாற்று.
வாடைக்கொண்டல் - வடகீழ்காற்று.
வாடையுண்ணி - பாம்பு.
வாட்கை - வாழ்க்கை.
வாட்கோரை - ஒருபுல்.
வாட்சூலை - ஒருநோய்.
வாட்டம் - குறைவு, சாய்வு, சோர்வு, தெருதோட்டம், மெலிவு, வதக்கம், வழி, வாடல்.
வாட்டரவு - சோப்பம், வதக்கம்.
வாட்டல் - மெலிவித்தல்.
வாட்டாலை - மெலிந்தவன்.
வாட்டாழை - கடற்றாழை.
வாட்டாளை - வாட்டாலை.
வாட்டி - முறை, வசட்டி.
வாட்டியபுட்பம் - சந்தனம், மஞ்சள்.
வாட்டியம் - தோட்டம், வீடு. [வல்.
வாட்டு - நன்மை, நீதி, வாட்டென்னே
வாட்டுதல் - துன்புறுவித்தல், வாடப்பண்ணுதல்.
வாட்படையாள் - துர்க்கை.
வாட்யாயகி - அதிபலை.
வாணகந்தி - அரசமரம், ஒருகந்தகம்.
வாணகம் - அக்கினி, அம்பு, தனிமை, பசுமடி, வேய்ங்குழல்.
வாணகன் - திருமால்.
வாணங்கட்டுதல் - வாணமடித்தல்.
வாணதண்டம் - புடவைநெய்சூத்திரம்.
வாணமாட்சணம் - அம்பெய்தல். [ம்.
வாணம் - அம்பு, தீ, பாணம், மத்தாப்பு முதலியன.
வாணவாரம் - மார்க்கவசம்.
வாணன் - ஓரசுரன், கார்த்திகைநாள், வாழ்நன்.
வாணங்கோவை - ஒருபாடல்.
வாணுக்கம்பு - சிலம்பக்கோல்.
வாணுசனம் - வில்.
வாணுசிரயம் - அம்பு.
வாணுத்தண்டம் - வாணுக்கம்பு.
வாணுரி - திருமால்.
வாணுள் - வாழ்நாள்.
வாணி - அசமதாகம், ஒருகூத்து, சரச்சுவதி, சொல், சொல்லல், மனோசிலை.
வாணிகம் - இலாபம், விபாபாரம்.
வாணிகன் - செட்டி, துலாராசி.
வாணிகேள்வன் - பிரமன்.
வாணிஜம் - வடவைத்தீ.
வாணிஜன் - விபாபாரி.
வாணிஜிகம் - வாணிஜம்.
வாணிஜிகன் - வியாபாரி.
வாணிச்சி - செட்டிப்பெண்.
வாணிச்சிமேனி - மாணிக்கம்.
வாணிச்சியம் - வாணிகம்.
வாணிதம் - கள்.
வாணிதி - கூத்து, மதர்த்தவள்.
வாணிநி - தூதி, நர்த்தகி.
வாணிபம் - செட்டு அது வைசியாறு தொழிலி ஞென்று.
வாணிபர் - எண்ணெய்விற்போர், ஒரு சாதியார், செட்டிகள், விபாபாரிகள்.
வாணியம் - வாணிகம்.
வாணியன் - வாணிபன்.
வாணிவிச்சி - வாணிச்சி.
வாணினி - கூத்தி, மூர்க்கமுள்ளவன், விவேகமுள்ளவன்.
வாணீசன் - பிரமன்.
வாணுதல் - பெண்.
வாண்டியம் - பேராமுட்டி.
வாதகாப்பன் - ஒருநோய், ஒருபட்டை.
வாதகாசம் - ஒருகாசம்.

வாதகாமி - பட்சி.
வாதகாலம் முன்னேரம்.
வாதகி - சத்திசாரம்.
வாதகிராணி - ஒருகிராணி.
வாதகுண்டலிகை - நீரடைப்பு.
வாதகும்பம் - யானைக்கதுப்பு.
வாதகுலுமம் - பெருங்காற்று.
வாதகுன்மம் - ஒருநோய்.
வாதகேது - தூளி.
வாதகேலி - சரசப்பேச்சு, நகக்குறி.
வாதக்கடல் - நவசாரம்.
வாதங்கிறி - ஒருமரம்.
வாதசகம் } அக்கினி.
வாதசகன் }
வாதசாதனம்-தருக்கத்தினுடன்படுதல்
வாதசாரதி - அக்கினி.
வாதசிரோமணி - நவசாரம்.
வாதசீரிடம் - அடிவயிறு.
வாதசுரம் - வாதத்தைப் பற்றியெழுந்த காய்ச்சல்.
வாதசூலை - ஒருசூலை.
வாதசோணிதம் - வாதநீர்.
வாத்தநுஜன் } அநுமான், வீமன்.
வாத்தநயன் }
வாததூலம் - காற்றிற்பறக்கும் பஞ்சு
வாததூளம் - நொய்யது.
வாதத்தனிக்கல் - இராசவத்தனக்கல்.
வாதத்துவம் - மேகசம்.
வாதநாசனம் - ஆமணக்கு.
வாதநாடி - வாதத்திற்குரியநரம்பு.
வாதநிகண்டு - இரசவாதநிகண்டு.
வாதபித்தசூலை - ஒருநோய்.
வாதபித்தம் - இரத்தத்திற்கலந்த பித்தம்.
வாதபிரியை - பாம்பு.
வாதபுத்திரன் - அனுமன், வீமன்.
வாதபுல்லம் - காற்றுக்கொண்டது.
வாதபூமி - வாதங்கொண்டதேயம்.
வாதபோதம் - பலாசு.
வாதப்பிரமரி - சுழல்காற்று.
வாதப்பிரமி - மான்.
வாதபுக் - பாம்பு.
வாதமடக்கி - தழுதாழை, நந்தக்காரி.
வாதமண்டலி - சுழல்காற்று.
வாதமாணம் - வருத்தம்.
வாதமிருகம் - கலைமான்.
வாதம் - இரசவாதம், இரும்பு முதலிய லோகங்களைப் பொன்னுக்கும் வித்தை, காற்று இது உயிர்வேதனையி னென்று, சம்பாஷணை, தருக்க முடிவு, தருக்கம், முப்பிணியினென்று, முறைப்பாடு, வில்வம்.
வாதயுத்தம் - தருக்கம்.
வாதரத்தம் - ஒருநோய்.
வாதரக்காச்சி - வாதநாராயணமரம்.
வாதரங்கம் - அரசு.
வாதராதம் - சித்தாந்தம், மூகில்.
வாதரதம் - வாதலம்.
வாதராசன் - நவசாரம்.
வாதராட்சதன் - ஒருமருந்து.
வாதராயணம் - அம்பெய்தல், ஒருமரம், மலைமுடி, மிகுகதி, வாள்.
வாதராயணன் - வியாசமுநிவன்.
வாதராயன் - வாயுபகவான்.
வாதரூடம் காற்று,கைக்கூலி,வானவில்
வாதரோகம் - வாதநோய்.
வாதரோகி - வாயுரோகி
வாதமண்டலி - சுழல்காற்று.
வாதலம்-அதிமதுரம்,காற்று,விரைவு.
வாதலிங்கி - வாதரோகி.
வாதவைரி - ஆமணக்கு.
வாதனம் - ஒலி, சீலை, வருத்தம்.
வாதனை - தடை, வருத்தம்.
வாதாசதம் - காற்றடியுண்டது.
வாதாசனி - பாம்பு.
வாதாடகம் } சூரியன் குதிரையில் ஒன்று.
வாதாடம் }
வாதாடல் - வழக்காடல்.
வாதாட்டம் - தருக்கம்.
வாதாட்டுதல் - தருக்கத்திற் குட்படுத்தல், தொந்தரைப்படுத்தல்.
வாதாவி - ஓரசுரன்.
வாதாபி - விப்ரஜித்திக்குச் சிம்ஹிகையிடத்துப்பிறந்த புத்ரன். அஜமுகியென்பவள் துர்வாசரை வலிதிற் புணர்ந்து, இல்வலன் வாதாபியென்னும் இருவரையும் பெற்றாள் என்பது புராணகதை.
வாதாபிசூதநன் - அகத்தியன்.
வாதாமோதம் - மான்மதம்.
வாதாயம் - இலை.
வாதாயணம் - பலகணி, மண்டபம்.
வாதாயநர் - ஒருமுனி.
வாதாயு - மான்.
வாதாரி - ஆமணக்கு.

வாதாலம் - ஒருமீன்.
வாதாலி - சுழல்காற்று.
வாதாவி - ஓரசுரன்.
வாதானுலோமனம் - காற்றடக்கல்.
வாதானுவாதம் - வினவிடை.
வாதான்னியம் - வள்ளற்றன்மை.
வாதி - காரணமுமேற்கோளுமெடுத்துக்காட்டிப் பிறன்கோள் மறுத்துத் தன் மதநிறுத்திப் பாடுவோன், காற்று, தருக்கி, முறைப்பாடுகாரன், வாதஞ்செய்வோன், வாதியென்னேவல்.
வாதிகம் - ஒருநோய், செம்பு.
வாதிக்குதல் - வருத்தப்படுத்துதல்.
வாதிங்கணம் - சேம்பு.
வாதிசன் - கல்விமான்.
வாதித்தல் - தருக்கித்தல், பேசுதல், வருத்தப்படுத்துதல்.
வாதித்திரம் - ஒரு வாச்சியக்கருவி.
வாதிராசன் - நவசாரம்.
வாதிரு - காற்று.
வாதியம் - வஞ்சி.
வாது - சண்டை, சபதம், தருக்கம்.
வாதுகூறல் - சபதஞ்சொல்லுதல்.
வாதுகை - மனைவி.
வாதுக்கியம் - கலியாணம்.
வாதுமை - ஒருமரம்.
வாதுலம் - சுழல்காற்று.
வாதுலன் - உன்மத்தன்.
வாதுலி - வெளவால்.
வாதுவர்-குதிரைப்பாகர், யானைப்பாகர்.
வாதுளம் - சிவாகமமிருபத்தெட்டில் ஒன்று.
வாதூகம் - சேம்பு.
வாதூலம் - சுழல்காற்று.
வாதூலன் - உன்மத்தன்.
வாதை - துன்பம், நோய், வருத்தம்.
வாதைவரி - ஆமணக்கு.
வாதோரணமஞ்சரி-ஒருபிரபந்தம், அது மதகளிற்றை வசப்படுத்தினோரதும் எதிர்பொருகரியைச் சயித்தோரதும் கரி தழுவினோரதும் வென்றியை வஞ்சிப்பாவாற் கூறுவது.
வாத்தி - கற்பிப்போன். [வீணை.
வாத்தியபாண்டம் - வாத்தியப் பொது,
வாத்தியம் - கஞ்சக்கருவி, துளைக்கருவி, தோற்கருவி, நரம்புக்கருவி யெனு மிசைக்கருவிகள்.
வாத்தியாயன் } கற்பிப்போன்.
வாத்தியான் }
வாத்திலை - சுழல்காற்று.
வாத்து - வாஸ்துபுருஷன், வீடு.
வாத்துசாந்தி - வாத்துமனுக்குச்செய்யுஞ்சாந்தி.
வாத்துபுருடன்-வாத்துமன். [ஞ்சாந்தி.
வாத்துபோதம் - சிற்பநூல் முப்பத்திரண்டினொன்று.
வாத்துமன் - வாத்துபுருடன்.
வாத்துமாதனம் - இருகாலு மொருகையுநீட்டி ஒரு முழங்கையூன்றித் தலை நிமிர்த்திக்கிடப்பது.
வாத்ரோணவாயசம் - மலைக்காகம்.
வாத்ஸியன் - சாகல்லியன் சீடன்.
வாந்தகி - கடியள்.
வாந்தம் - சத்தி.
வாந்தாதம் - நாய்.
வாந்தவன் - மித்திரன்.
வாந்தி - சத்திபண்ணல்.
வாந்திசோதகி - கருஞ்சீரகம்.
வாந்தித்தல் - சத்தித்தல்.
வாந்திப்பிராந்தி - கழிச்சற்கோதாரி.
வாந்தியம் - தான்றி, வாலுளுவை.
வாபதண்டம் - நெய்யற்பலகை
வாபம் - சௌளஞ்செய்தல், நெய்குதல், விதைத்தல்.
வாபி - வாவி, தடாகம். [வித்து.
வாபிதம் - ஓர்வகைத்தானியம்.
வாபீ - தடாகம்.
வாபீகம் - சாதகப்புள்.
வாப்பியம் - கோஷ்டம்.
வாமதேவன் - வசிஷ்டரோடு அயோத்தியில் வசித்த தசரதன் புரோஹிதன் சிவபிரான்.
வாமசுக்கிலம் - பொன்னவிரை.
வாமதந்திரம் - வாமசமயநூல்,
வாமதேவன் - ஒருமுனி, சிவபிரான்.
வாமநம் - அஷ்டாதசபுராணங்களுளொன்று சுவேதவராக கற்பத்துக்குரியதாகிய முதல் மூன்று வேதத்திலும் சொல்லப்பட்டவிஷயங்களையும் திரிவிக்கிரமன் வரலாறுகளையும் எடுத்துக்கூறுவது. இது பிரமதேவனால் சொல்லப்பட்டது. இது பதினாலாயிரம் கிரந்தமுடையது, தென்றிசை யானைவாமனன் பலிசக்ரவர்த்தியைச் சங்கரிக்கும் பொருட்டுக் காசிபனுக்கு அதிதியிடத்துப் பிறந்த விஷ்ணு.

இந்த அவதாரம் தசாவதாரங்களுள் ஐந்தாவது.காசிகாவிருத்திசெய்தவர்.
வாமபுரகோபம் - சுத்தம்.
வாமபாகம் - இடப்பக்கம்.
வாமபாகி – பார்வதி.
வாமம் - அழகு, இடப்பக்கம், உட்சமய மாறினொன்று,ஒளி, ஒருபாம்பு, குறுமை, கூன்,சிவனைம்முகத் தொன்று, செல்வம்,தீமை,தொடை, பசுமுலை, முலை, விரோதம்.
வாமலூரம் } புற்று.
வாமலூரு }
வாமலூருதநயன் – வான்மீகி முனிவர்.
வாமலோசனன் - அழகிய விழியுடையான், திருமால்.
வாமலோசனை – அழகிய விழியுடையாள், இலக்குமி.
வாமலோசிகம் } கற்றாழை.
வாமல் }
வாமனம் - குறள்,திருமால்தசாவதாரத்தொன்று, தென்திசை ஆண்யானை, பதினெண் புராணத்தொன்று.
வாமனன் - குள்ளன்,குறளுருக்கொண்டதிருமால்.
வாமனவதாரம் – திருமாலின்தசாவதாரங்களுளொன்று, அது ஐந்தா மவதாரம்.
வாமன் – அருகன்,|காமன், சிவபிரான்.
வாமாசாரம் – வாமசமயாசாரம். தந்திரமார்க்கத்து இடக்கையார் ஒழுக்கம்.
வாமாட்சி - வாமலோசனை.
வாமாவர்த்தம் - இடம்புரிச்சங்கு.
வாமி - பார்வதி, வாமசமயத்தவள்.
வாமிலம் - அகந்தை, அழகு.
வாமை-இலக்குமி, சரச்சுவதி, பார்வதி, [பெண்.
வாம்பல் – மூங்கில்.
வாயகம் - கூட்டம்.
வாயசகேதநி - மூதேவி.
வாயசதுண்டகன் - விநாயகன்.
வாயசவஜை - மூதேவி.
வாயசம் - காக்கை.
வாயசவாஹநன் – சனிபகவான்.
வாயசபுஜண்டர் - காகபுஜண்டர்.
வாயசவிரோதி } கூகை.
வாயசவைரி }
வாயசாராதி - கூகை.
வாயசி -செம்மணத்தக்காளி.
வாயதண்டம் - நெய்யற்பலகை.
வாயடித்தல் - வாயினால்தட்டுதல்.
வாயடைத்தல்-நாவெழாதிருக்கச் செய்தல், பேசக்கூடாமலிருத்தல்.
வாயம் – நீர், பெய்குதல்.
வாயலம்புதல் - வாய் சுத்திபண்ணல்.
வாயல் - பக்கம், வாயில்.
வாயவி - வடமேற்கு.
வாயலியம் – ஏழ்வகைநாணத்தொன்று அது பசுநடையினெழுதூளியிற்படிதல்.
வாயனம் - தீம்பண்டம்.
வாயாங்காரம் - பேச்சுமதம்.
வாயாடல் - வாய்சாலமாய்பேசல், வாய்வழங்குதல்.
வாயாடி - வாய்வல்லவன்.
வாயாடுதல் – வாயாடல்.
வாயாவி - மூச்சு.
வாயிலார்நாயனார் - மயிலாப்பூரிலேவேளாளர் குலத்திலே அவதரித்து சிவபூசைசெய்து சிவபதமடைந்த ஒரு சிவபக்தர்.
வாயிலாளர் – வாயில்காப்போர்.
வாயிலோர் - தமிழ்க்கூத்தர், தூதுவர், வாயில்காப்போர்.
வாயில் - ஐம்பொறி, கடை, கதவு, காரணம், திறம், தூது, வாய்தல்.
வாயில்காப்போர் - கடைகாவலோர்.
வாயில்வேண்டல்- அகப்பொருட்டுறையினொன்று.
வாயிற்காட்சி - காட்சிபேதத்தொன்று.
வாயு - காற்று இதுஅட்டமூர்த்தத்தொன்று, மூச்சு, வாதம். வாயுமண்டலத்துக்கு அதிதேவதை வெண்ணிறமும் மான்வாகநமும் எக்காளமும் அழகிய ரதமும், அந்த ரதத்துக்கு இரண்டுமுதல் ஆயிரங் குதிரைகளு முடையவன், இவன் அதிதி புத்திரன.
வாயுகண்டம் – அசீரணம்.
வாயுகுமாரன் - அநுமான், வீமன்.
வாயுகுலுமம் – சுழல்காற்று.
வாயுகேது - துகள்.
வாயுகோணம் – வாயுமூலை.
வாயுக்குத்து - ஒருநோய்.
வாயுசகன் - தீ.
வாயுசம்பவன் } அநுமன், வீமன்,
வாயுசாதன் }

வாயுசூலை - ஒருநோய்.
வாயுச்சகன் - தீ.
வாயுசுதன் - அநுமான், வீமன்.
வாயுதவி - பேச்சுதவி.
வாயுதநயன் } அனுமான், வீமன்.
வாயுசூது
வாயுதாரணை - வாயுவை நிறுத்துதல்.
வாயுதாரு - முகில்.
வாயுத்தம்பம் } வாயுவை தடுத்தல் இது கலைஞான
வாயுத்தம்பனம் மறுபத்துநான்கில் ஒன்று.
வாயுத்தானி - காற்றுவீசுந் திசையைக் காட்டுமோர் கருவி.
வாயுநிவர்த்தி - காற்றமைவு.
வாயுபகாரம் - பேச்சுபகாரம், முகமன் வார்த்தை.
வாயுபசாரம் - வாயுபகாரம்.
வாயுபட்சணம் } காற்றூண், பாம்பு.
வாயுபட்சம்
வாயுபலம் - மழை, வானவில்.
வாயுபுத்திரன் - அனுமன், வீமன்.
வாயுமூலை - வடமேற்கு.
வாயுமைந்தன் - அனுமன், வீமன்.
வாயுரோகம் - வாதநோய்.
வாயுவாகம் - புகை.
வாயுவாகினி - நரம்பு.
வாயுவாஸ்திரம் - வாயுவம்பு.
வாயுவிளங்கம் - ஒருமருந்து.
வாயுவின்கூறுபாடு - ஓடல் கிடத்தல் கூடல் போதல் வருதல்.
வாயுவின்கோபம் - வாதம்.
வாயுவு - வாயு.
வாயுவேகம் - மிகுந்தவேகம்.
வாயுவேகி - மிகுசுறுக்கன்.
வாயுறை - பசுமுதலியவற்றிற்குக்கொடுக்குங் கைத்தீன், வாயுபதேசம்.
வாயுறைவாழ்த்து - ஒருபிரபந்தம் அது இடித்துரையாவது முன்னர்த்தாங்கச்கூடாவாயினும் பின்னர்ப் பெரிதும் பயன்பயக்குமென வெண்பாமுதலினும் ஆசிரியமிறுதியுமாகக் கூறுவது வாயுறைவாழ்த்துமருட்பா - உறுவதாய் மெய்ப்பொருள்கூறுவது.
வாயூறல் - வாயினீரூறுதல்.
வாயூறுதல் - அபேட்சித்தல், வாய்நீரூறுதல்.
வாயூற்றி - வாய்நீரூறுதல்.
வாயெடுத்தல் - பேசத்தொடங்கல்.
வாயொடுங்குதல் - பேச்சடங்குதல்.
வாய் - இடம், உதடு, [illegible]துகுழல், எழனுருபு (உ-ம்) குரைகடல்வாயமுதென்கோ, சொல், துவாரம், நுதி, பேச்சு, மெய், வாக்கு இது பஞ்சப்பொறியினென்று, விதம், வாயில், வாயென்னேவல், விளிம்பு.
வாய்கட்டி - வாய்திறவாதுதடுப்போன்.
வாய்கட்டுதல் - பிரேதங்கட்டு வாய்கட்டுதல், மந்திரத்தால் வாய்திறவாமற் பண்ணல், மரியாதைக் குறிப்பாய் வத்திரம் வாயிலிட்டுக்கட்டல்.
வாய்காட்டுதல் - அதிகப் பிரசங்கமாய்ப் பேசல்.
வாய்குளிறுதல் - அச்சமுதலியவற்றினால் குளிறுதல்.
வாய்க்கட்டை - அசீதக்கொடை.
வாய்க்கணக்கு - எழுதாமற்சொல்லுங் கணக்கு.
வாய்க்கரிசி-பிரேதத்தின்வாயிலிடுமரிசி
வாய்க்கரிசிபோடுதல்-வாய்க்கரிசியிடல்
வாய்க்கரிசியிடுதல் - அபரக்கிரியையில் ஒன்று.
வாய்க்காசு - வாய்க்கரிசிபடுகையி லிடுங் காசு.
வாய்க்காரன் - அதிகப் பிரசங்கமாய்ப் பேசுவோன்.
வாய்க்கால் - நீரோடுங்கால், மகநாள்.
வாய்க்கிரந்தி - ஒருநோய்.
வாய்க்கிறுது - அசங்கதவார்த்தை.
வாய்க்குற்றம் - பேச்சுக்குற்றம்.
வாய்க்கூலி - கைக்கூலி.
வாய்க்கொழுப்பு - மதியாப்பேச்சு.
வாய்க்கொள்ளாதபேச்சு அசப்பியம்.
வாய்சலிக்குதல் - வாயயர்தல்.
வாய்சளப்புதல் - வீண்பேச்சுப்பேசல்.
வாய்சளிக்குதல்-வாய்சவர்க்களித்தல்.
வாய்ச்சம்பிரதாயம் - பேச்சிச் சாமார்த்தியம்.
வாய்ச்சாக்கூட்டம் - பல்லு.
வாய்ச்சி - மரம்வெட்டுமோராயுதம்.
வாய்ச்சித்தலை - சப்பளிஞ்சதலை.
வாய்ச்சொல் - வாய்மொழி.
வாய்ஞானம் - வாசாஞானம்.
வாய்தடுமாறுதல் - வாய்பதறுதல்.
வாய்தல் - வாயில்.
வாய்தர்கூடு - கதவினிலை.
வாய்தற்படி - கதவினிலைப்படி.
வாய்தா - கிலவிறைப்பணம்.

வாய்தாரி } ஆயுதங்களினுதி,கிணறு
வாய்தாரை } முதலியவைகளின் விளிம்பு.
வாய்த்தலை - வாய்க்காற்றலை.
வாய்த்தல் - கிடைத்தல், சித்தித்தல், சிறத்தல், பொருந்தல், மாட்சிமை.
வாய்த்தாரை - வாய்தாரி.
வாய்நாற்றம்-வாயின் அசுசியானமணம்.
வாய்நீர் - உமிழ்நீர்.
வாய்பாடு - வாயிலாட்சிப்பட்டுவரும்பேச்சு.
வாய்பாறுதல் - உளறுதல்.
வாய்பிதற்றுதல் } அலப்புதல்.
வாய்பினற்றுதல் }
வாய்புதைத்தல் - வாய்மூடுதல்.
வாய்பூசல் - வாயலம்புதல்.
வாய்பூசறுத்தல் - வாய் சுத்திசெய்தல்.
வாய்பூசுதல் - வாய்நனைத்தல்.
வாய்பொறுத்துதல் - வாய்புதைத்தல்.
வாய்பொருமுதல் - கன்வில் வாய்குளிறுதல்.
வாய்போடுதல் - வாயிட்டுக்கேட்டல்.
வாய்ப்படுதல் - உரிசிப்படுதல்.
வாய்ப்பன் - ஒரு பண்ணிகாரம்.
வாய்ப்பனசட்டி - ஒருபணிகாரச்சட்டி
வாய்ப்பாடம் - ஏடுபாராமற் சொல்லும் பாடம்.
வாய்ப்பிரசங்கம் - வாயாற்பேசும் பிரசங்கம்.
வாய்ப்பிறப்பு - வாய்மொழி.
வாய்ப்பு - சித்தி, சிறப்பு, தகுதி, நயம், பேறு, வளமை.
வாய்ப்புண் - வாய்க்கிரந்தி.
வாய்ப்புள் - நிமித்தம்.
வாய்ப்பூட்டு - அடைப்பு.
வாய்மட்டம் - வாய்வளையம்.
வாய்மண்போடுதல் - கொடுமைசெய்தல்.
வாய்மதம் - வாய்க்கொழுப்பு.
வாய்முத்தம் - பல்லு.
வாய்மூடுதல் - வாய்பொத்தல்.
வாய்மூத்தகுடி - வாய்ப்பேச்சினுலெவரையு மடக்கிவருங்குடி.
வாய்மூத்தவன் - முந்திப்பேசுவோன்.
வாய்மை - மெய் அதுசாத்துவிதகுணத்தொன்று, சொல், வலி.
வாய்மொழி - வாயினுற்சொல்வது.
வாய்மோசம் - பேச்சுமோசம்.
வாய்வடம் - குதிரைவாய்க்கயிறு.
வாய்வழங்கல் - உண்டல், பேசல்.
வாய்வளையம் - யாதொன்றின் வாயில் வைக்கும் வளையம்.
வாய்விசேடம் - வாக்குச்சுத்தியால்வருவது.
வாய்விடல் - பேசல்.
வாய்விடாச்சாதி - மிருகம்.
வாய்விடுதல் - வாய்விடல்பேசத்தொடங்கல்.
வாய்விலங்கம் } ஒருமருந்து.
வாய்விளங்கம் }
வாய்வெட்டு - பறைவெட்டு.
வாய்வெருதல் - அயர்ச்சியில்வாய்குளிறுதல்.
வாய்வைத்தல்-கடித்தல்,கேட்டல்,புசித்தல்.
வாரகம் - குதிரை,குதிரைநடை.
வாரகி - கடல், சத்துரு, தவத்தி.
வாரகீரம்-சீப்பு,பேன், போர்க்குதிரை, வடவாமுகம்.
வாரகீரன் - சுமைகாரன்,மைத்துனன்.
வாரக்கம் - நெல்வட்டிக்குக்கொடுக்கும் பணம்.
வாரக்குடி - நிலம்பயிரிட்டுப் பங்குபெறுங்குடி.
வாரக்குடிச்சி - வாரக்குடிப்பெண்.
வாரங்கம் - ஆயுதப்பிடி, புட்பொது.
வாரசுநாமம் - ஆட்சி, உறுதி.
வாரசுந்தரி - வேசி.
வாரசேவை - வேசிகூட்டம்.
வாரடம் - வயல்.
வாரடித்தல் - நீர்சிரவியோடுதல்.
வாரணசி - வாரணுசி, காசி.
வாரணபுசை - வாழை.
வாரணம் - உன்மத்தம், கடல், கவசம், காத்தல், கேடகம், கோழி, சங்கு, சட்டை, தடை, பன்றி,மாவிலங்கை, யானை, விடுதல்.
வாரணவல்லபை - வாழை,
வாரணவச்சி } காசி.வாரணசி,வரணை அசி என இருநதிகள் கூடி பிரவகித்தலால் இதற்கு இப்பெயர் வழங்குவதாயிற்று.
வாரணுசி }
வாரணுவதம்-பிரயாகை, இதுதுரியோதனன்பாண்டவர்களை இருத்திக்கொல்லும்பொருட்டு அரக்குமாளிகை யமைத்த இடம். இது பாரத யுத்தகாலத்தில் கௌரவசேனைக்கு ஒருபாசறையாகவு மிருந்தது.
வாரணை } தடுத்தல்.
வாரணையம் }

வாரத்தண்டு - கறிமுல்லை.
வாரநாரி – வேசி.
வாரபலம்-வாரத்தாலுண்டாகும் பயன்.
வாரபுசை – வாழை.
வாரப்படுதல் – உருக்கங்கொள்ளுதல்.
வாரப்பாடு – உருக்கம்.
வாரமுக்யை – வேசி.
வாரம்-அன்பு,உரிமை,ஏழுகிழமை கொண்டது, கடல், கரை, சமயம், சிறுவரம்பு, சுரிதகம், தடை, திரள், திரை, நாடகவகை பத்திஞென்று, நாள், பக்கபாதம், பங்கு, பஞ்சாங்கத்திஞென்று, பாத்திரம், மலைச்சார்பு, வாயில்.
வாரல் – அள்ளுதல் ஓலைமுதலிய வாருதல், கொள்ளையிடல், கோலுதல், தடவுதல், நீளல், மயிர்கோதல், முகத்தல், வடிதல், வாரலென்னேவல்.
வாரவது - வேசி.
வாரவாணம் - பஞ்சுபெய்து தைத்தமெய்ப்பை, மார்க்கவசம்.
வாரவாணி - குயிலுவன், நியாயாதிபதி, வருடம், வேசை, விறலி.
வாரவாரம் – கவசம்
வாரவிலாசினி - வேசை.
வாரச்செலவு - வாரவிரயம்.
வாரஸ்திரீ - வேசை.
வாராகம் ஒருகற்பம்,ஒருபுராணம், இது கற்பாதிமாநங்களும்பிரவுங்கூறுவது, இது இருபத்து நாலாயிரங் கிரந்தமுடையது.
வாராஹம் - ஒருதீர்த்தம்.
வாராகி – ஒருகிழங்கு, சத்தமாதர்களிஞெருத்தி, பூமி. பெண்பன்றி.
வாராங்கனை - வேசி.
வாராசனம் - நீர்க்குடம்.
வாரணசி – காசி.
வாரணசேயன் - காசியிற்பிறந்தவன்.
வாராதிபன் - கிழமைக்கதிபன்.
வாராஸ்திரீ – வேசை.
வாராநிதி - சமுத்திரம்.
வாராவதி – பாலம்.
வாராவந்தி – கட்டாயமாய்வந்தது.
வாராவரத்து - அநீதமாய்வருதல்.
வாராவாரி – மிகுதி.
வாராவிருந்து – நல்விருந்து,வருதற்கரியவிருந்து.

வாராதனை-வரவழைத்தல்இதுபிள்ளைக்கவியுறுப்புப் பத்திஞென்று.
வாரி இசைக்குழல், கடல்,கதவு,சரச்சுவதி,சீப்பு, தானியம், நிறைநீர்,நீர்,மடை;மதில்,மதிற்சுற்று,மிகுதி;யானைகட்டுங்கயிறு, யானைக்கொட்டம், யானைபடுகுழி, வழி,வாயில்,வாரியென்னேவல், விளைவு, வெள்ளம்.
வாரிகிருமி - அட்டை.
வாரிக்காய்ச்சல் – கோதாரிக்காய்ச்சல்.
வாரிசம் - உப்பு, சங்கு, தாமரை.
வாரிசரம் - மீன்.
வாரிசன் - பிரமன், திருமால்.
வாரிசாசநன் - பிரமன்.
வாரிசாசநி இலக்குமி, சரசுவதி.
வாரிசாக்ஷன் - திருமால்.
வாரிசாக்ஷி-தாமரை மலர்போலுங் கண்ணுடையவள்.
வாரிசாதம் – தாமரை.
வாரிசாதை - இலக்குமி.
வாரிசாமரம் – நீர்ப்பாசி.
வாரிசோத்பவன் - பிரமன்.
வாரிடுதல் - கிழிதல், கீழ்மக்கள்.
வாரிஞதம் - கடல், நாகலோகம்.
வாரிஞதன் – வருணன்.
வாரிதம் – தடை, மேகம்.
வாரிதி - கடல்.
வாரிதித்தண்டு - பவளம்.
வாரிதிநஞ்சு - அக்கினிக்கட்டி.
வாரிதிநாதம் – சங்கு.
வாரிதிவிந்து - கடனுரை.
வாரித்தல் - ஆணையிடல், தடுத்தல்.
வாரித்திரம் – ஓலைக்குடை, சாதகப்புள், பக்கான்.
வாரிநாதம் - கடல், பாதலம், முகில்.
வாரிநாதன் – வருணன்.
வாரிநிதி - கடல்.
வாரிபர்ணி - வள்ளைக்கீரை.
வாரிப்பிரவாகம் - நீர்ப்பெருக்கு, மலையருவி.
வாரிப்பிரசாதன் - தேற்று.
வாரிமசி - முகில்.
வாரியுற்பவம் - தாமரை.
வாரிரசிதம் - வெள்ளிமணல்.
வாரிரதம் - தெப்பம்.
வாரிராசி - கடல்.
வாரிருஹம் - தாமரை.

வாரிவனநாதன் - சிவபெருமான்.
வாரீவாகம் - மேகம்.
வாரீசம் - கடல், தாமரை.
வாரீடம் - யானை.
வாருகம்-ஆற்றுத்தும்மட்டி, வெள்ளரி.
வாருகோல் - துடைப்பம்.
வாருடம் - ஆசந்தி.
வாருணம் - அட்டாதச வுபபுராணத்தொன்று, கடல், மாவிலங்கு, மேகம், மேற்கு, சலம்.
வாருணி-அகத்தியன், ஆட்டாங்கொடி, கள், காய்ச்சிவடித்த மது, சதயநாள், மேற்குமத்தியத்துக்குஅதிதேவதை.
வாருணிவல்லபன் - வருணன்.
வாருண்டகம் } எண்காற் புள், கண்பீழை, குரும்பி.
வாருண்டம் }
வாருதல்-கவர்தல், கொழித்தல், கொள்ளல், திருடல், வரன்றல், வாரல்.
வாருதி - நவசாரம், வாரிதி.
வாருல்லியம் - விருத்தி.
வாரூடம் - பகடை.
வாரூணி-அகத்தியன், புரட்டாதி. [ம்.
வாரை-காத்தண்டு, திராந்தி, மரவுத்திர
வாரைபிட்டகம் - உத்திரம். [தல்.
வாரொலிகூந்தல் - நீண்டு ஒலித்தகூந்
வார்-கச்சு, தோல்வார், நீர், நீளம், நுண்மை, நேர்மை, புயல், வாரென்னேவல்.
வார்கடை - வார்த்துமிஞ்சினது.
வார்கொண்ட முலையம்மை - மேலைத்திருக்காட்டுப் பள்ளியிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வார்க்கயிறு - தோற்கயிறு.
வார்க்குதல் - உலோக முதலியவற்றையுருக்கி விட்டுருவ முதலிய வுண்டுபண்ணல், பெய்தல்.
வார்க்கோலபுரம் - தோயமாபுரம்.
வார்ச்சியாநீயம் உபநிடதமுப்பத்திரண்டினொன்று.
வார்தல்-உயர்ச்சி, ஒழுகல், தெரிதல், நீளல், வாருதல்.
வார்த்தகம்-கிழத்தன்மை, கிழவர்குழு.
வர்த்தகமை - விருத்தியுரை.
வார்த்தசாகி - கற்றாழை.
வார்த்தம் - சுகம், பதர்.
வார்த்தரம் - நீர்.
வார்த்தலம் - கெட்டநாள்.
வார்த்தல் - வார்க்குதல்.
வார்த்தவம் - இருது.
வார்த்தாகம் - கத்தரிக்காய், கத்தரிச்செ
வார்த்தாகி - சிறுவழுதலை. [டி.
வார்த்தாயனன் } ஓலைச்செய்திகள் கொடு போகுவோன், தூதன்.
வார்த்தாவகன் }
வார்த்திகம்-கிழத்தன்மை, கிழவர்குழு, மார்க்கசடப் பிராமணத் தொன்று அது நான்கு மாத்திரையோர் களையாகக்கொண்டது.
வார்த்திகன் - தூதன், வைசியன். தக்ஷிணாமூர்த்தி, கிழவன்.
வார்த்தை - செய்தி, வசனம்.
வார்த்தைத்தொழிலோர் - பூவைசியர்.
வார்த்தைநாணயம் - பேச்சுறுதி.
வார்த்தைபோடுதல் - பேசுதல், பேச்சுநிச்சயம்பண்ணுதல்.
வார்த்தைப்பாடு - பேச்சுநிச்சயம்.
வார்த்தையெடுத்தல் - பேச்சுத் தொடங்கல்.
வார்நாமச்சீட்டு - ஏற்றுமதிச்சீட்டு.
வார்ப்பு - வார்த்தல்.
வார்ப்புவேலை - உருக்கிவத்தர் வேலை.
வார்மை - நன்னடை.
வார்வாரணம் - மார்க்கவசம்.
வாலகம் - கடையம், மோதிரம், வால்.
வாலகருப்பிணி - கன்னிகருப்பிணி, முதற்சினைப்பசு.
வாலகிருமி - பேன்.
வாலகில்லியர்-அறுபதினாயிரம்ரிஷிகள் இவர்கள் பிரமனது மானச புத்திரர்களுள் ஒருவராகிய கிருதுவின் புத்திரர்கள். இவர் அறுபதின்மர், பெருந்தவ முடையோர், இவர்கள் அங்குஷ்டப் பிரமாணமா புள்ள தேகமுடையவர்கள், இவர்கள் எப்போதும் சூரியரதத்தைச் சூழ்ந்து திரிவர்.
வாலசந்திரன் - இளம்பிறை.
வாலசந்நியாசி-இளமையிற்றுறந்தவன்.
வாலசரம்-உரியாதேசத்திலோரூர், ஒருநெல்.
வாலசுப்பிரமணியன் - முருகக்கடவுள்.
வாலசூரணம் - ஒருமருந்து.
வாலசூரியன் - இளவாதித்தன்.
வாலஞானம் - இளமையில்ஞானம்.
வாலதத்துவம் - யௌவனசத்தி.

வாலதந்திரம் - மருத்துவநூல்.
வாலதி - யானைவால், வால்.
வாலநாயகம் - சிறுபிள்ளையதிகாரம்.
வாலபத்திரம் - கதிரம், கருங்காலி.
வாலபுட்டி - முல்லை.
வாலமாலம் - அரிதாரம்.
வாலமுத்தையன் முருகப்பிரான். [யிர்.
வாலம்-கந்தைத்துணி, தலைமயிர்,வால்ம
வாலயக்கியோபவீதம்-பிள்ளைப்பூணூல்
வாலரசம்-சாதிலிங்கத்தில்வடித்தரசம்.
வாலராசன் - வைடூரியம்.
வாலவதனயன் - அபரசன்.
வாலவம் - புலிக்கரணம்.
வாலவயசு } இளவயது
வாலவயது }
வாலவாயசம் } வைடூரியம்.
வாலவாயம் }
வாலவாயம் - இளம்பிராயம்.
வாலவியசனம் - கவரிமயிர் விசிறி.
வாலறிவன் - கடவுள், மெய்யறிவுடையோன்.
வாலறிவு - பேரறிவு.
வாலன் - வாலிபன்.
வாலாசம் - பின்வார்.
வாலாதி - பந்தயக்குதிரை.
வாலாதித்தன் - உதயகாலசூரியன்.
வாலாமை - அசுத்தம், மகளிர்சூதகம்.
வாலாம்பிகை - பார்வதி. திருநெய்த்தானத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வாலாயம் - வைடூரியம், வழக்கம்.
வாலான் - ஒருநெல்.
வாலி-கிட்கிந்தைமன்னன், சுக்கிரீவனுக்குத்தமையன்,அங்கதனுக்குத்தந்தை, இவன்மனைவி தாரை, இவன் சுக்கிரீவன் வேண்டுகோளின்படி இராமரால் கொல்லப்பட்டவன். இவன்இறந்தபிறகு தாரை சுக்கிரீவன் மனைவியானாள், பலதேவன்.
வாளிகை - மணல்.
வாலிசம் - தலையணை.
வாலிசன்-அறிவீனன், இளவயதுடையோன்.
வாலிசை - இளம்பெண்.
வாலிது - தூயது.
வாலிபம் } பாலியம்,
வாலியம் }
வாலியன் - இளவயதுடையோன்.
வாலீசர் - வாலிபர்.
வாலீசுவரர்-குரங்கணில் முட்டத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வாலு-சாகை,பசுப்புட்டம், பிரவாஹம்.
வாலுகக்குன்று - மணற்குன்று.
வாலுகசந்தகை - கங்கை.
வாலுகபிரபை-எழ்நரக வட்டத்தொன்று அது சுடுமண்ணிலம்.
வாலுகம் - வெண்மணல், மணல்.
வாலுகர் - மடையர்.
வாலுகை - குப்பி.
வாலுங்கி - கக்கரி, வாலுளுவையரிசி.
வாலுவசாத்திரம் } மடைநூல்.
வாலுவநூல் }
வாலுவர் - மடையர்.
வாலுளுவை - ஒருமருந்து.
வாலூகம் - நஞ்சு.
வாலேபம் } கழுதை.
வாலேயம் }
வாலை-இளது, ஒருசத்தி, சுத்தம்,திராவகம் வடிக்கும் பாத்திரம், பன்னிருவயதிற் பெண், பெண்.
வாலைமெழுகு - ஒருமருந்து, ஒருமீன்.
வாலோபவீதம் - பிள்ளைப்பூணூல்.
வால்-இளமை, சுத்தம், தோகை, மிகுதி, வெண்மை.
வால்மிளகு - ஒரு வாசனைச்சரக்கு.
வால்மீகபலம் - எலுமிச்சை.
வால்மீகம் - இந்த்ரதநுஸ்ஸு, வால்மீகராமாயணம்.
வால்மீன் - வால்நட்சத்திரம்.
வால்மீகி-வடமொழியிலே இராமாயணம் செய்த மஹாபண்டிதர்,இவர் ஜாதியிலே பிராமணராகியும், கிராதர் தொழிலை மேற்கொண்டு காட்டிலேயிருந்துவழிப்போக்கர்களை அழைத்து அவர்கள் பொருளைக் கவர்ந்தொழுகும் நாளில், நாரதர் கண்டு ஞானோபதேசம் பண்ணி நல்வழியி லொழுகச் செய்தார், பிறகு இவர் மஹா தவசிரேஷ்டராகி, ராமாயணத்தைச்செய்து முடித்தார், இந்த இராமாயணத்தை வால்மீகி ராமாயணமென்று கூறுவர், ஸ்ரீராமர் சீதாபிராட்டியைக் காட்டுக் கனுப்பின

காலத்தில், பிராட்டியையும் புத்திரர்களாகிய குசலவர்களையும் ஆதரித்தவர் இவரே, இவர் தேகாபிமானமற்று கடுந்தவம் புரிந்திருந்தபோது, இவர் மீது புற்றுவளர்ந்து நெடுங்காலஞ் சென்ற பிறகு அந்தப் புற்றிலிருந்து வெளிப்பட்டதனால் இவர்க்கு வால்மீகி யென்னும் பெயர் வழங்கலாயிற்று. இவரை வருணன் புத்திரர் என்றுங் கூறுவர், வருணனுக்குப் பிரசேதஸ் என்னும் பெயருண்மையால், இவரை பிராசேதசர் என்றுங் கூறுவர்.

வால்லவேயம் - எருது.
வால்வெள்ளி - ஒருநட்சத்திரம்.
வாவயம் - துளசி.
வாவரியுரி - கிளியூறற்பட்டை.
வாவல் - கடத்தல், நசை, வெளவால்.
வாவி - குளம்.
வாவிப்பாய்தல் - தாவிப்பாய்தல்.
வாலிமலை - கிட்கிந்தை.
வாவாசம் - குதிரையின்வாய்வார்.
வாவுதல் - கடத்தல், பாய்தல்.
வாழகம் - குந்துருக்கம்.
வாழபுளப்பி - முல்லை.
வாழவந்த நாயகியம்மை-திருவாஞ்சியத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வாழவைத்தல் - வாழ்வித்தல்.
வாழாக்கோடி - விவாகமற்றிருப்பவள்.
வாழாத்திப்போளம் - ஒருவிதபோளம்.
வாழி-வாழ்த்து,இடைச்சொல் வாழிய.
வாழித்தல் - மதர்த்துண்டாதல்.
வாழிப்பு - மதர்ப்பு.
வாழிய-முன்னிலையசைச்சொல்(உ-ம்) காணிய வாழிய மலைச்சாரல், வாழ்கவென்னேவல்.
வாழுதல் - வாழ்தல்.
வாழைக்குட்டி - வாழைக்கன்று.
வாழைப்பழத்தி - எருமைநாக்கி.
வாழைமட்டம் - வாழைக்கன்று.
வாழைபடிவாழை -வாழைக்கீழ்வாழை.
வாழ்க்கை ஊர்,சந்தோஷநிலை, சீவிப்பு, செல்வம், மருதநிலத்தூர், மனைவி.
வாழ்க்கைத்துணை - இல்லாள்.
வாழ்க்கைப்படுதல்-இல்லாச்சிரமமாதல்.
வாழ்தல்-சீவித்தல்,செல்வத்தோடிருத்தல், வாழ்வு.
வாழ்த்தல் - துதித்தல்.
வாழ்த்து - ஆசீர்வாதம், ஒருவருக்குநன்மைவருவதாக வெனக்கூறுவது, ஓரலங்காரம், சுபவசனம், துதி, மங்களாசரணை மூன்றினென்று, வாழ்த்தென்னேவல்.
வாழ்த்துதல் - ஆசீர்வாதம் பண்ணல், சோபனம்பாடுதல், துதித்தல்.
வாழ்த்துரை - வாழ்த்து.
வாழ்த்துவிலக்கு - ஓரலங்காரம், அது வாழ்த்தி மறுப்பது.
வாழ்த்தொலி - வாழ்த்துதலினொலி.
வாழ்கன் - வாழ்வோன்.
வாழ்நாள் - சீவியகாலம்.
வாழ்வாடிச்சி, வாழ்வாட்டி } சுமங்கலி
வாழ்வாளன் - வாழ்வுடையோன்.
வாழ்வித்தல் - வாழச்செய்தல்.
வாழ்விழத்தல்-அமங்கலியாதல், தாரமிழத்தல்.
வாழ்விழந்தவள் - அமங்கலி.
வாழ்வு - முறைமை, வாழ்தல்.
வாளமலை - சக்கரவாளகிரி.
வாளப்புலி - சக்ரவாகப்பறவை.
வாளம் - சக்கரவாளகிரி, சக்கரவாளப்புள், வளைவு, வாள்.
வாளகம் - வெட்டிவேர்.
வாளரம் - ஓரம்.
வாளவரை - ஓரவரை.
வாளா - வீண்.
வாளாண்மை - வாட்போர்.
வாளாமை - கேளாமை, பயனின்மை, மௌனம்.
வாளி-அம்பு, மாதர் காதணியினென்று, வட்டமாயோடல்.
வாளிச்சிமேனி - மாணிக்கம்.
வாளீரல் - வளைத்தவீரல்.
வாளுழவர் - படைவீரர்.
வாளேந்தி - தூர்க்கை.
வாளை - ஒருவகைமீன்.
வாளைகடியன் - விஷமுள்ள ஒரு கடற்பாம்பு.
வாள்-அரிவாள், ஈர்வாள், ஒளி, பட்டயம்.
வாள்கைக்கொண்டாள் - தூர்க்கை.

வாள்மீன் - ஒருமீன்.
வாள்வரிக்கொடுங்காய்-வளைந்தவரிகளை யுடைய வெள்ளரிக்காய்.
வாறுன்-கப்பலிஞேர்கயிறு,வருகிறுன்
வாறு - பெலன், வாய்ப்பு.
வாற்கம் } மரவுரி
வாற்கலம்
வாற்சின்னம்-அகப்பை, ஒருகிண்ணம்.
வாற்கோதும்பை - ஒருவிததானியம்.
வாற்சகம் } கன்றுக்கூட்டம், பசுக்கூட்டம்.
வாற்சலம்
வாற்சல்லியம் - உருக்கம்.
வாற்சிபுத்திரன் - வாற்சோபுத்திரன்.
வாற்சியாயன் - ஒருமுனிவன்.
வாற்சோபுத்திரன் - அம்பட்டன்.
வானகப்புதைச்சி - கதண்டு.
வானகம் - ஆகாயம், தேவலோகம், மஞ்சாடி.
வானக்கல் - காக்கைக்கல்.
வானசாத்திரம் - வான சோதிகளின் போக்குவரவறியுஞ் சாத்திரம்.
வானசோதி - ஆகாயப்பிரபாரூபிகள்.
வானட்சத்திரம் - வால்வெள்ளி.
வானதி - ஆகாயகங்கை.
வானதிசூடி - சிவபிரான்.
வானதிச்சடையன் - சிவபெருமான்.
வானநாடு-பொன்னுங்காணி, தேவலோகம்.
வானநாட்டிறை-தேவேந்திரன்.
வானபத்தி - பூவாதுகாய்க்குமரம்.
வானபத்தியம்-பலாசு, பூவாமற்காய்க்குமரம்.
வானப்பிரத்தம்-இலுப்பை, நாலாச்சிரமத்தொன்று, அது வனத்திற்றவஞ்செய்தல், பலாசு.
வானப்பிரத்தன்-வனத்திற் றவஞ்செய்யு மூன்றுமாச்சிரமி.
வானப்பிரத்தி - காட்டிற் றவஞ்செய்பவள், பூவாது காய்க்குமரம்.
வானப்பிரியை - மரம்.
வானமிருகம் - கத்தூரி எலும்பு.
வானம்-அத்திபாரம், ஆகாயம், உலர்ச்சி, உலர்ந்தகாய், உலர்ந்தது, உலர்ந்தமரம், கோபுரத்திஞேருறுப்பு, சீவனேடிருத்தல், சுவரறை, நீர்த்திரை, புற்பாய், போதல், மழை, வாசனை.
வானம்பாடி - ஒருபுறவை.
வானம்பார்த்தகதிர் - கொப்புத்தாழாக்கதிர்.
வானம்பார்த்தபயிர் - மழையால் விளையும் பயிர்.
வானம்பார்த்தபிறவி - விருட்சயோனி.
வானரகதி - தூரகதியைந்திஞென்று.
வானரக்கொடியோன் - அருச்சுனன்.
வானரநேயம் - பழமுண்ணணிப்பாலை.
வானரபதி - சுக்கிரீவன்.
வானரப்பகை - நண்டு.
வானரம் - குரங்கு.
வானவருலகு - தேவலோகம்.
வானரவிரோதி } நண்டு.
வானவைரி
வானரசத்ரு
வானராகரம் - மரம்.
வானராராதி - நண்டு.
வானரேந்திரன்-அனுமான், சுக்கிரீவன்
வானலம் - துளசி.
வானவரம்பன் - சேரன்.
வானவருறையுள்-தேவர்கோயில், தேவலோகம்.
வானவர் - தேவர்.
வானவர்கோன் - இந்திரன்.
வானவர்பகைவர் - அசுரர்.
வானவர்முதுவன் - சேரன், பிரமன்.
வானவல்லி - மின்னற்கொடி.
வானவன்-இந்திரன், சேரன், பிரமன்.
வானவில் - இந்திரவில்.
வாஞசி - கார்போகரிசி.
வானி - ஓமம், கூடாரம், படை, மேற்கட்டி, விருதுக்கொடி.
வானியம் - வனம்.
வானிற்கெற்பத்தி - முத்துச்சிப்பி.
வானீரம் - நீர்ப்பிறப்பு, நீர்வஞ்சி.
வானுலகம் - தேவலோகம்.
வானேறு - இடி.
வானோர்பிரான் } இந்திரன்.
வானோர்தலைவன்
வானோர்பெருமான்
வானோர் - தேவர்கள்.
வானோர்கணம் - நவகணத்தொன்று.
வானோர்கோமான் - இந்திரன்.
வானோர்பகைஞர் - அசுரர்.
வானோர்மாற்றலர் - அசுரர், இராக்கதர்.
வானோர்முதுவன் - சேரன், பிரமன்.
வானோர்வரம் - வானவாசிகள், பேறு, அது இலகு, சூக்குமம், அட்சயம், பிரகாசம், இவைமுறையேகணமின்மை,

கண்டிப்பின்மை, கேடின்மை, விளக்கம்.
வான்-அமுதம்,ஆகாயம்,எதிர்காலவினையெச்சவிடைச்சொல், புயல், பெருமை, மகத்துவம், மழை, முகில்.
வான்கொடி - ஆகாயவல்லி.
வான்கோழி - கோழியிலோர்வகை.
வான்பயிர் – மரப்பயிர்.
வான்பிரயோசனம்-மரப்பிரயோசனம்.
வான்மிகம் - இந்திரவில், புற்று.
வான்மிளகு – ஒருமிளகு.
வான்மீகம் - குங்குமப்பூ.
வான்மீகி - ஒருமுனி.
வான்மீகியார் - முதற்சங்கத்திலிருந்த ஒரு சிறந்த தமிழ்ப்புலவர், இவர் செய்தநூலை நச்சினார்க்கினியர் தலையாயவோத்தென்பர். கடைச்சங்கப்புலவருளொருவர்,இவராற் பாடப்பட்ட பாடலொன்று புறநானூற்றிலுள்ளது.
வான்மீன் - நட்சத்திரம்.

---

## வி

வி-அதிகம் அறிவு இன்மை நிச்சயம் பிரிவு முகாந்திரம் வித்தியாசம் வெறுப்பு இவற்றைக் காட்டுமோர் உபசருக்கம், ஆகாயம், கண், காற்று, திசை.
விககம்-அம்பு, ஒருபட்சி, கிரகம், சந்திரன், சூரியன், முகில்.
விகங்கதம் – இலந்தை.
விகங்கபதி } கருடன்.
விகங்கராஜன் } கருடன்.
விகங்ககேதநன் } திருமால், பிரமன்.
விகங்கத்துவசன் } திருமால், பிரமன்.
விகங்கமை - காத்தண்டு.
விகங்கம்-அம்பு,அன்னம்,சந்திரன்,சூரியன், பறவை, முகில்.
விகசதா - மூக்கிரட்டை.
விகசம்-கேது, மஞ்சாடி, மலர்தல், மலர்ந்தது, மிச்சப்பண்டம், மொட்டை.
விகசனம் - புன்னகை, மலர்ச்சி.
விகசன் - சந்திரன்.
விகசாதன்-திருமாலியவூணன்.
விகசிதம்-புனமுருக்கு, மந்தகாசம், யலர்தல்.
விகசித்தல் - மலர்தல்.
விகசுவரம் -விசாலம்.
விகடகவி-பகிடிக்காரன்,பகிடிப்பாட்டு.
விகடசக்கரன் - கச்சித்திருவேகம் பத்தாலய விநாயகன்.
விகடபுத்தி-கருக்குச்சுட்டடான் புத்தி.
விகடம்-அழகானது. உன்மத்தம்,தொந்தரை, பெரியது, வேறுபாடு.
விகடவிநாயகர் - விஷ்ணு சக்கரத்தைக் கவ்வின கபாலம் அதனை நெகிழ்க்காதாகவிஷ்ணுவிநாயகரைவேண்ட, அவர் விகடக் கூத்தாடுவையாயின் அதனை வாங்கித் தருவோமெனக் கூறி, அப்படியாயின பிறகு சக்கரத்தை வாங்கித் தந்தவர்.
விகடன் - சுமாலி புத்திரன்.
விகடி - கருக்குசுருட்டான ஆள்.
விகடிகை விநாடி.
விகணனம் - கடனிறுத்தல், கணித்தல், தியானித்தல்.
விகணிதம் - தீர்ப்பு.
விகண்டிதம் – பிரிவு, வேறுபாடு.
விகண்டித்தல் } ஆட்சேபித்தல், வேறுபடுதல்.
விகண்டிப்பு } ஆட்சேபித்தல், வேறுபடுதல்.
விகண்டை - துறெண்ணம், வைராக்கியம்.
விகதம்-இட்டமானது, இருளுதல், கடனிறுறுப்பு, சாவு.
விகதனம் -புகழ்ந்துரைத்தல்.
விகதி - தோழன்.
விகத்தனம்-அடித்தல், அவிழ்த்தல், இகழாவிகழ்ச்சி, உரோஞ்சுதல்,புகழ்ந்துரைத்தல்.
விகத்தை – இகழாவிகழ்ச்சி, புகழ்ச்சி.
விகமம் - பிரிவு.
விகமனம் - துர்நடக்கை.
விகம் – வழியீற்றுப்பசுப்பால்.
விகம்பிதம் - நடுக்கம்.
விகரம் – இயைபின்மை, நோய், பிரிவு.
விகரன் – காற்றுப்புசிப்போன், திருமாணி.
விகராலம் - மிகப்பெரியது.
விகர்ணன் - துரியோதநன் தம்பி.
விகர்த்தனன் - சூரியன்,பிதாவினதிகாரத்தை வலிதாகக் கவர்ந்தமகன்.
விகர்ப்பத்தம் - அடாதது.
விகர்மிகன் – விகன்மிகன்.
விகலபாணிகன் - சூம்பினகையன்.
விகலபுத்தி - சபலபுத்தி.

விகலம் - கலக்கம், குறைபாடு, விகலை.
விகலாங்கம் - உறுப்புக்குறை.
விகலாங்கன் - குறையுறுப்புள்ளவன்.
விகலிதகேசம் - நெகிழ்ந்தகேசம்.
விகலிதம்-சிந்தல், நெகிழ்ந்தது, முடியப்பட்டது, வடிதல், விழுந்து போனது.
விகலிதாங்கன் - தளர்ந்தசரீரமுடையவன்.
விகலை - காலநுட்பம், காலம், நாழிகை.
விகற்பக்காட்சி - பொருளின் பேதங்களைக் கண்டறியுங் காட்சி.
விகற்பத்தின் முடித்தல்-ஒருயுத்திஅது விளங்குதற் பொருட்டுப் பலவேறு பாடுகளின் சிறப்பு வாய்பாட்டான் முடித்தல்.
விகற்பபுத்தி - வேறுபாடானபுத்தி.
விகற்பம்-சந்தேகம், தவறு, பிழை, வேற்றுமை.
விகற்பித்தல் - வேறுபடுத்தல்.
விகற்பு - விகற்பம்.
விகனம் - கனமற்றது.
விகன்மிகன் - காரியவிசாரணைகாரன்.
விகன்னம் - எதிரிடை, கொலை, நீங்கு, பருத்தி கடைதறி,
விகன்னன் - செவிடன்.
விகாகம் - அமிழ்ந்தல், மூழ்கல்.
விகாசதம் - ஆகாயம், ஆடம்பரம், தனிமை, புன்னகை, மகிழ்தல், மலர்தல்.
விகாசதை-தனிமை, தோற்றம், விரிவு.
விகாசம்-விகாசதம், விரித்தல், மலர்ச்சி.
விகாசனம் - தனிமை, விரிவு, வெளிப்படுதல்.
விகாசை - நா.
விகாதம்-அழிவு, எதிர், தடை, விரோதம்
விகாதித்தல் - விரோதித்தல்.
விகாபதம், விகாபிதம் - கொடை.
விகாயசம் - பட்சி.
விகாய் - ஒருமரம்.
விகாரப்புணர்ச்சி - நிலைமொழியேனும் வருமொழியேனு மிவ்விருமொழியுமேனுந் தோன்றல் திரிதல் கெடுதலெனும் விகாரத்தோடு புணர்வது.
விகாரம்-அலைந்துதிரிதல், உலர்த்துதல், கவலை, காமக்கவலை, தன்மயம்தோள், நோய், பொழுதுபோக்கு, வருத்தம், வேற்றுமைப்படுதல், விளையாட்டு.
விகாரவுவமை உவமையைவிகாரப்படுத்தியுவமிப்பது (உ-ம்) முத்துக்கூர்த்தன்னமுறுவல்.
விகாரி - இருபத்திரண்டாவதுவருஷம் மோகி.
விகாரிதம் - மாறுபட்டது.
விகாரித்தல் - பேதித்தல், மோகித்தல்.
விகாலகம், விகாலம் - மைம்பல்.
விகாலிகம் - நாழிகையறியவைக்கு மில்லிக்குடம்.
விகானம் - துற்செய்தி, நிந்தை.
விகிசிரன் - சந்திரன்.
விகிதம் - சிநேகம், விகிர்தம்.
விகிதி - எதிர், நிந்தை, பாடல்.
விகிரணம் - சிதறுதல், விரிதல்.
விகிரம்-இறைத்தல், துண்டு, புட்பொது.
விகிருடம் - இழுக்கப்படுவது.
விகிருதம் - தலைமகடன் றலைவர்க்குத் தன்காதல் சொல்ல நாணித்தல்.
விகிருதி-அச்சம், கல்லிற்பிறந்தபொருள், கவலை, நோய், பயம், பொழுதுபோக்கு, மாறுதல், வருத்தம், விகிர்திவருஷம், விகுதி, வேறுபடுதல், ஜீமூதன்புத்திரன்.
விகிர்தம்-அங்கபங்கம், குறைவு, நோய், பொய், விதி, முறை, வெறுப்பு, வேறுபாடு.
விகிர்த்தி - இருபத்துநாலாவதாண்டு, வேறுபாடு.
விகீதம் - ஒவ்வாமை.
விகீதி - நிந்தை, விரோதம்.
விகீரணம் - எருக்கிலை.
விகீரியம் - இறைத்தல்.
விகுட்சி - இக்ஷ்வாகுராஜபுத்திரன்.
விகுணம் - குணமின்மை.
விகுணி - குணங்கெட்டது.
விகுதி-பகுபதவுறுப்பினொன்று, பிரகிருதிமாயை, விகாரம்.
விகுரம் - வெள்ளெருக்கு.
விகுர்வாணன்-நிறைமனமுள்ளவன்.
விகுக்ஷி - குக்ஷிபுத்திரன், ககுஸ்த்தன் தந்தை.
விகூணநம் - கடைக்கண்பார்வை.
விகூணம் - வாக்குப்பார்வை.
விகூணிகை - மூக்கு.
விகேசம் - கூடம், மொட்டை.

விகேசிகை - சேர்வைச்சீலை,விக்கினத் தலைவன் விநாயகன்.
விகேடன் - வேதனைசெய்வோன்.
விகேடம் - தீங்கு.
விகேடனம்-அரைத்தல், துக்கம், வாதித்தல்.
விகை - மோக்கம்.
விகோகன் - வருகாசுரபுத்திரன்.
விகோஷணம் - பிரசித்தம்.
விகோடம் - கடினம், துறந்தது.
விகௌதுகம் - பழமையானது.
விக்கம் - யானைக்கன்று.
விக்கல் - ஒருநோய், விக்குதல்.
விக்கியாதம் - கீர்த்தி, பிரசித்தம்.
விக்கியாதன் - பிரசித்தன்.
விக்கியாதி - விக்கியாதம்.
விக்கியாபனம் - அறிவிப்பு, விண்ணப்பம், வெளிப்படுதல்.
விக்கியானம் - கல்வி, விபரீதார்த்தம்.
விக்கியானி - கல்விமான்.
விக்கிரகம்-விசேஷயிடம், உடல், கருங்கல், சாயல்,மங்கு,போர்,விரிவு,விகுதி.
விக்கிரகாராதனை - சுரூபவணக்கம்.
விக்கிரசாவரம் - முதுகு.
விக்கிரம் - பதினன்காவதாண்டு-
விக்கிரமசிங்கன் } விக்கிரமாதித்தன்.
விக்கிரமசேனன் }
விக்கிரமசோழன்-ஒருசோழன், இவன் மீது ஒருகோவை பாடப்பட்டுளது.
விக்கிரமம்-நடத்தல், பராக்கிரமம், மிகுபலம், வெற்றிமுறை, பிழைத்தல்.
விக்கிரமாணம் - போதல்.
விக்கிரமாதித்தன் } ஓரரசன். சந்திர
விக்கிரமார்க்கன் } சர்மன்என்னும் பிராமணனுக்கு உச்சயினி புரத்தரசனாகிய சுருத கீர்த்தியினது புத்திரியிடத்துப் பிறந்த புத்திரன். இவன் கடுந்தவம் புரிந்து காளிதேவியின் அனுக்ரஹம் பெற்று அந்த அநுக்ரஹபலத்தால் எந்தக் காரியத்தையும் சாதிக்கத்தகுந்த ஆற்றலுடையவனானன், சாகசாங்கன் என்னும் சிறப்புப்பெயர் இவனுக்கு இக்காரணத்தால் உண்டானதேயாம். இவன்நெடுங்காலம் உச்சியினிபுரத்திலே பெரும் புகழோடு அரசுசெய்து இறுதியிலே சாலிவாகனனலே கொல்லப்பட்டான். இவன் அரசுபுரியத்தொடங்கினகாலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆருயிரம்வருடங்களுக்குமுனேயாம்.
விக்கிரமார்ச்சிதம்-வெற்றி.
விக்கிரமி - சிங்கம், வீரன்.
விக்கிரமோர்வசியம் - ஒரு ஸம்ஸ்கிருதநாடகம், இது காளிதாசனுற் செய்யப்பட்டது. இது புரூரவன் ஊர்வசிமேல் வைத்த காதற்சிறப்பை யெடுத்துக் கூறுவது.
விக்கிரயணம் } விற்றல்.
விக்கிரயம் }
விக்கிரயிகன் - விற்போன்.
விக்கிரயீ - விற்போன்.
விக்கிராந்தகன் - சிங்கம், வீரன்.
விக்கிராந்தம் - வீரம்.
விககிராந்தி-குதிரைநடை,பராக்கிரமம். வீரநடை, வீரம்.
விக்கிராயிகன் - விற்போன்.
விக்கிரேயம் - விற்கத்தக்கது.
விக்கிரோசனம் - இகழ்ச்சி.
விக்கிள் - விக்கல்.
விக்கினகாம் - தடுத்தல்.
விக்கினத்வம்ஸன் - விநாயகன்.
விக்கினநாசஸன் - பீடைதீர்ப்போன், விநாயகன்.
விக்கினம் - இடையூறு, தடை, தீமை.
விக்கினராசன் - விநாயகன்.
விக்கினவிநாசனன்-விக்கினநாசனன்.
விக்கினவிநாயகன் - விக்கினரி.
விக்கிஞபனம் - அறிக்கை.
விக்கிஞரி } விநாயகன், வினை தீர்ப்போன்.
விக்கினேசன் }
விக்கினேசுவரன் }
விக்கினேச்சுவரன் }
விக்குதல் - விக்கல்.
விக்ஞாபனம் - விக்கியாபனம்.
விக்ஞானம் - விக்கியானம்.
விங்கம் - குதிரைக்குளம்பு.
விங்களம்-கபடம்,களிப்பு,திரிவு,பேதம்.
விங்களித்தல் } சூதுசெய்யல், நிலையற்றிருத்தல், பிரித்தல், வித்தியாசப்படுத்தல்.
விங்களிப்பு }
விசங்கடம் - சிங்கம்.
விசசம் - தாமரை.
விசசனம்-கொடுவாள்,கொலை,தண்டம்.
விசதம்-அழகு,சுத்தம்,நிருமலம், வெண்மை, வெளிப்படை.

விசத்துரு - அடம்பு.
விசபிலம் - சேறு.
விசபுட்பம் } தாமரை.
விசப்பிரசூனம்
விசமபாதம் - அணுப்பு, ஒவ்வாமை.
விசமம் - சமமின்மை, வைராக்கியம்.
விசம் - தாமரைநூல்.
விசய - இருபத்தேழாவதாண்டு.
விசயகுஞ்சரம் - இராசகயம்.
விசயகேதநம் - வெற்றிக்கொடி.
விசயகோதண்டம் - வெற்றிவில்.
விசயசித்தி - வெற்றி.
விசயச்சந்தம் - எழுநூறுகோவை முத்தித் தாழ்வடம்.
விசயத்துவசம் - வெற்றிக்கொடி.
விசயநகரம் - ஒருபட்டினம்.
விசயநாதர் - திருவிசய மங்கையிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
விசலபேரி - வெற்றிமுரசு.
விசயப்பொறி - விற்பொறி.
விசயமத்தளம் - இரணபேரிகை.
விசயம்-அடைக்கலம், ஆராய்வு, ஜபம், சருக்கரை, சிவாகமமிருபத் தெட்டில் ஒன்று, சூரியமண்டலம், தேவ விமானம், வெற்றி.
விசயனம் - ஆராய்வு.
விசயன்-அருச்சுனன், கலிசகார்த்தன், திருமால், வாயில்காப்போன்.
விசயாரத்தம் - திருக்கைலைமலை.
விசயை - துர்க்கை, துர்க்கையேவல் செய்வாள், மூன்றும் எட்டாம் பதினைந்தாந்திதிகள்.
விசரம் - கூட்டம், கொலை.
விசர் - பைத்தியம்.
விசர்க்கம்-கொடை, தள்ளுதல், துறத்தல், தெட்சணாயனபாதை, நிறுத்தியுச்சரிப்பதற்கிடு மடையாளம், பிரவை, பிரிதல், போதல், மலங்கழித்தல், விடுதல்.
விசர்ச்சனம் - அனுப்புதல், நன்கொடை, விடுதல்.
விசர்ச்சிகை - இலக்குமி, சிரங்கு.
விசர்ச்சிதை - கூத்தினோர்விகற்பம்.
விசர்ப்பம்-ஒருசிலந்தி, பரம்புதல், படர்தல்.
விசர்ப்பனம் - பரம்புதல்.

விசலம் - கஞ்சி, தளிர்.
விசலனம்-உறுதியின்மை, தற்புகழ்ச்சி.
விசலி - சீந்தில்.
விசலிதன் - சலநகுணமுள்ளவன்.
விசவல்லி - கீழ்காய் நெல்லி.
விசளை-சட்டி, நீற்றுப்பெட்டி கொண்ட அளவு.
விசனம்-அபாக்கியம், கலகம், துன்பம், நின்மாநுஷியம், பாவம், பேராசை, விசிறி.
விசனனம் - பிறப்பு.
விசனுமனம் - யாகதோத்திரம்.
விசாகதத்தன்-முத்திராராக்ஷஸம் என்னும் நாடகம் செய்த மஹாகவி.
விசாகசம் - தோடை.
விசாகம் - அனிலநாள், வைகாசி.
விசாகலம் - ஓராச்சிரமம்.
விசாகன் - குமரன்.
விசாகை - வியாகம்.
விசாதி - நோய், புறசாதி, வேறுபட்ட சாதி.
விசாதிபேதம்-பேதமூன்றில் ஒன்றுஅதுமாத்திற்குங் கல்லுக்குமுள்ள வித்தியாசம்.
விசாயம் - தூங்கல்.
விசாரகன் - நியாயாதிபதி.
விசாரங்கம் - கீர்த்தி.
விசாரசர்மர் - சண்டேசுரநாயனர்.
விசாரசாகரம் - ஒரு வேதாந்தநூல்.
விசாரணம்-கொலை, தியானம், நிதானித்தல்.
விசாரணியம் - சாஸ்திரம்.
விசாரணை-ஆராய்ச்சி, மீமாஞ்சை, விசாரிப்பு.
விசாரதர் - சிறந்தோர், புலவர்.
விசாரபூ - கல்விச்சங்கம்.
விசாரம் - ஆராய்வு, ஆலோசனை, ஊருதல், கவலை, மரம், மீன், விவாதம்.
விசாரவகம் - கீர்த்தி.
விசாரவம்-கீர்த்தி, நம்பிக்கை, புத்தி.
விசாரி-கலக்கமுடையோன், வாயுத்திசை, விசாரியென்னேவல்.
விசாரிதம் - ஆலோசிக்கப்பட்டது.
விசாரிதன் - ஆலோசனைகாரன்.
விசாரித்தல் } ஆராய்தல், பராமரித்தல்.
விசாரிப்பு
விசாலகுலம் - நல்வமிசம்.
விசாலதை-அகலம், பருமை, மேன்மை.
விசாலம்-அகலம், ஒருபட்சி, ஒருமான், கடம்பு, சிற்பநூன்முப்பத்திரண்டில்

ஒன்று, பெரியது, பேய்த்திமிட்டி, விரிவு. கிரிவிரசத்துக்கும் மிதிலைக்கும் இடையேயுள்ள நாடு.
விசாலன்-இக்ஷ்வாகு தம்பியாகிய நபகன் வமிசத்து, திருணபிந்துவின் புத்திரன் இவன் புத்திரன் ஹேமசந்திரன்.
விசாலாக்கன் } கருடன், சிவபிரான்.
விசாலாட்சன்
விசாலாட்சி-விரிந்த கண்களை யுடையவள், பார்ப்பதி.
விசாலாக்ஷி-காசியி லெழுந்தருளியிருக்கும் தேவியார் பெயர், திருப்பைஞ்ஞீலியிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
விசாலித்தல் - விரிதல்.
விசாலிப்பு - விரிவு. [னி.
விசாலை-சத்தபுரியிஜென்றுஅது உச்சி
விசானபூமி } மசானம்,சுடுகாடு.
விசானம்
விசி அலை, கட்டில், கட்டு, பறையிறுக்கும் வார்.
விசிகம் - அம்பு, புனற்றிரை.
விசிகப்பிரயோகம்-அஸ்திரப் பிரயோக
விசிகாந்தம் - அம்புநுனி. [ம்.
விசிகிலம் - தவநம், மல்லிகை.
விசிகை-கச்சு, கருத்து, தெரு, பாரை, வைத்தியக்கிரகம்.
விசிஷ்டம் } மேன்மை.
விசிட்டம்
விசிட்டாத்துவிதம்-ஒருபிரபந்தம், வை
விசிதம் - விபூதி. [ணவ மதம்.
விசிவிரு - ஙியாயாதிபதி, பங்காளி.
விசிதை - உசித்துவம்.
விசித்தல் - கட்டல்.
விசித்தி-அழிவு,இழத்தல்,எல்லை, கடுகு, தரிப்பு,பிரித்தல்,விசுத்தி, வெட்டல்.
விசித்திரகம் - அதிசயம்.
விசித்திரதேகம் - முகில்.
விசித்திரதை - விசித்திரகம்.
விசித்திரம் - அதிசயம், எதிர்ப்பேச்சு, பலநிறம், பேரழகு, வேடிக்கை.
விசித்திரவீரியன் - சந்திரகுலத்தரசரிலொருவன். திருதராஷ்டிரன், பாண்டு என்னு மிருவருக்கும் தந்தை இவன் தந்தை சந்தநு. தாய் சத்யவதி, தமையன் சித்ராங்கதன்.
விசித்திரவேளாகொல்லி - கொல்லித்திறத்தில் ஒன்று.
விசித்திரன்-கநகவிஜயருடையநட்பாளனாகிய வேோரசன்.
விசித்திராங்கம்-அழகு,நன்னிறம், மயில்
விசியம் - கோயில்.
விசிப்பலகை - வாங்குப்பலகை.
விசிப்பு - கட்டி.
விசிமந்தம் - வேம்பு.
விசிரகந்தி - பொன்னரிதாரம்.
விசிரகை - தளர்ந்தகாலம்.
விசிரயம் - ஒதுக்கிடம், தாவரம்.
விசிரவசு-புலஸ்தியன் புத்திரன், இவன் மனைவியர் நால்வர், த்ருணபிந்துவின் புத்திரியாகிய இளாவளை என்பவளிடத்தில் குபேரன் பிறந்தான், சுமாலிமகளாகிய கைகேசியிடத்தில், இராவணன் கும்பகர்ணன் விபீஷணன் என்னும் மூன்று புதல்வர் பிறந்தார்கள், இவள் தங்கையாகியராகை யிடத்தில் கரன் தூஷணன் திரிசிரன் என்போர் பிறந்தார்கள்,இவனை விசித்திரவாகு என்றுங் கூறுவர்.
விசிராமம்-இளைப்பாற்றி,தரிப்பு,மனவ
விசிருஷ்டன்-கம்ஸன் தம்பி. [மைதி.
விசிலம் - கஞ்சி.
விசிறி - ஒருசெடி, சிற்றாலவட்டம்.
விசிறுதல் - விசுக்கல், வீசுதல்.
விசினம் - பிரபை.
விசினி - தாமரைப்பூந்திரள்.
விசிஷ்டாத்வைதம் - இராமாநுஜ மதம் இது பிரமம் வேறு, ஆன்மா வேறு, ஆன்மாபிரமத்துக்குசரீரமாயிருந்து, பிரமத்தின் சந்நிதாந விசேஷத்தால் ஞானம் கைகூடப்பெற்றுப் பிரபஞ்சத்தை முற்றத்துறந்து, மரமத்தின் மேல் பற்றுடையராய், வைகுண்டத்தை யடைந்து பிரமசாரூபம் பெற்று இன்புற்றிருத்தலே முத்தியென்று கூறுவது.
விசு } பதினைந்தாவதாண்டு.
விஷு
விசுக்கிடுதல் - பிரியவீனப்படுதல், விதனப்படுதல்.
விசுக்கெனல் - சீக்கிரக்குறிப்பு.
விசுதம் - கறிப்புடோல்.
விசுத்தம் - சுத்தம், புத்தி, வணக்கம்.

விசுத்தி } அடிநாத்தானம் அது ஆரு
விஸத்தி } தாரத்தொன்று ஐயம், சுத்தம், திருத்தம், தீர்தல், நிகர்.
விசுபம் } உடம்பு, உலகம், சடபதார்த்
விசுமம் } தம்.
விசுமிகினி - வேம்பு.
விசும்பு-ஆகாயம், திசை, தேவலோகம், மேகம், வீம்பு.
விசும்புதல் - அசட்டையாய்விலக்கல்.
விசும்புத்திசை - உச்சி.
விசுருதி - கீர்த்தி, பாய்தல்.
விசுவகந்தன்-பிருதன் புத்திரன். சாசுவதன், இந்தன், விசுவகன், அதிசாந்திரன் என்னும் பெயர்களும் இவனுக்குண்டு.
விசுவகந்தன் - பூமி.
விசுவகர்மஜை - சூரியன்மனைவி.
விசுவகர்மசுதா - குபேரன்மனைவி.
விசுவகர்மா-பிரபாசனுக்கு யோகசித்தியினிடத்துப்பிறந்தபுத்திரன், இவன் தேவகம்மியன்.
விசுவகர்மன் - தேவத்தச்சன்.
விசுவகன் - பிரமன்.
விசுவகந்தன்-அங்கிரசன் வமிசத்து ஒரக்கினி.
விசிவகன்மா - சூரியன், தேவதச்சன்.
விசுவகேது - அநிருத்தன்.
விசுவக்கிராசம்-உலகத்தை யுட்கொண்டிருத்தல்.
விசுவசகன் - விருத்தசர்மன் புத்திரன், கட்டுவாங்கன் தந்தை.
விசுவகோதிரு - இந்திரன், திருமால்.
விசுவங்கரம் - கண்.
விசுவசகை - பூமி.
விசுவசங்கிராந்தி - சூரியன் விசுவத்தினின்று அயலிராசிக்குப் போவது.
விசுவசனம் - நம்புதல்.
விசுவசித்து-ஒருவேள்வி. ஜயத்திரதன் புத்திரன், சேனசித்துக்குத் தந்தை.
விசுவதாரிணி - பூமி.
விசுவதினம் - இராப்பகனாழிகை சரியாயிருக்குநாள்.
விசுவதேவம்-தேவபூசை, பிதிர்பூசை.
விசுவதேவர் - திரயோதச தேவகணத்தொருவர்.
விசுவதேவர்கள்-சிரார்த்த காலத்திலே அர்ச்சிக்கப்படுகிற தேவதைகள், இவர்கள் வசுபந்தர், கிருதுதக்ஷர், காலகாமர், துர்விரோசநர், புரூரவாத்திரவர் எனப் பதின்மர்.
விசுவநாதர்-அகிலேசன், விசுவேசுரன் காசியிலேயுள்ள சந்திரசேகரசுவாமி.
விசுவநாதன் - சிவபிரான்.
விசுவநாள் - உத்திராடம்.
விசுவபதி } அங்கிரசன் வமிசத்து ஒ
விசுவபுக்கு } ரக்கினி.
விசுவபேடகம் - வேர்க்கொம்பு.
விசுவபை - சந்திரன், சூரியன், தீ.
விசுவபோதன் - புத்தன்.
விசுவமதை - தீநாவேழினொன்று.
விசுவம் - அதிவிடையம், உலகம், எல்லாம், பூமியின் சமரேகையுஞ் சூரியன்பாதையுஞ் சந்திக்குமிடம். ஒரு நிகண்டு, இது விசுவனாற் செய்யப்பட்டது.
விசுவம்பரம் - பிரபஞ்சாதாரம்.
விசுவம்பரன் - இந்திரன், விட்டுணு.
விசுவம்பராதிபன் - அரசன்.
விசுவம்பரை - பூமி.
விசுவம்பாரன் - இந்திரன், சிவபிரான், விஷ்ணு.
விசுவயு - காற்று.
விசுவராசன் - சுபாதிபதி.
விசுவரூபம் - பிரபஞ்சரூபம்.
விசுவரூபன்-திருமால். துவஷ்டாவுக்கு ரசனையிடத்துப்பிறந்த புத்திரன்.
விசுவரேதா - பிரமன்.
விசுவரோசனம் - ஒருகிழங்கு.
விசுவவராகம் - ஊர்ப்பன்றி. [தவன்.
விசுவன்-விசுவம் என்னும்நிகண்டுசெய்
விசுவாசகன் - நம்பிக்கைவான்.
விசுவாசகாதகன்-விசுவாசத்தைக் கொலைப்போன்.
விசுவாசகாதம்-நம்பிக்கைக்கிரண்டகம்.
விசுவாசத்ரோஹி-நம்பிக்கைத்ரோஹி.
விசுவாசபங்கன் - விசுவாசகாதன்.
விசுவாசபத்தி - நல்விசுவாசம்.
விசுவாசபாதகம்-நம்பிக்கைத்துரோகம்.
விசுவாசபாதகன்-நம்பிக்கைத்துரோகி.
விசுவாசபாத்திரன் - நம்பத்தக்கவன்.
விசுவாசபூமி - நம்பத்தக்கது.
விசுவாசம்-உண்மை, நம்பிக்கை, பத்தி.
விசுவாசி - வேங்கை.
விசுவாசித்தல் - நம்புதல்.

விசுவாத்துமன் - கடவுள்.
விசுவாநரன்-சாண்டில்யமிசத்திற்பிறந்தவன். இவன் புத்திரன் வைசுவாநரன் என்னும் அக்கினி.
விசுவாமித்திரர்-புரூரவன் மூன்றாம்புத்திரனாகிய அமவசன் வமிசத்திற்பிறந்த காதிபுத்திரர், இவர் ஜாதியில் க்ஷத்ரியர், தனது தபோபலத்தால் பிராமணராயினர், தம்மைப் பிராமணராக அங்கீகாரஞ்செய்யாத வசிஷ்டர்மீது கோவங்கொண்டு அவருடையபுத்திரர்நூற்றுவரையும் சபித்துக் கொன்றுவிட்டார், அதனால் வசிஷ்டர் சவிக்காதிருந்தார்,திரிசங்குவுக்கு அந்தர சுவர்க்கம் கொடுத்தவரும் அரிச்சந்திரனைக் கொடிய பரீக்ஷையால் சத்தியவிரதன் என்னும் பெயரோடு விளங்கச் செய்தவரும் சகுந்தலைக்குத் தந்தையும் இவரே.
விசுவாமித்திரபிரியம் - தென்னமரம்.
விசுவாமித்திரப்புல் - ஒருபுல்.
விசுவாமித்திரன் - ஓரிருடி.
விசுவாமித்திரை - வைடூர்யபர்வதத்திலுண்டாகி ப்ரவஹிக்கிற ஒருநதி.
விசுவாவசு இருபத்தொன்பதாவ தாண்டு, ஒரு கந்தர்வராஜன், இவனுக்கு யாஜ்ஞவல்க்ய மஹருஷிதத் வோபதேசம் செய்தார்.
விசுவாசன் - ஒரு கந்தருவன்.
விசுவான்மா - பிரமன்.
விசுவேசன் } சிவபிரான்.
விசுவேசுவரன் }
விசுவை - தக்ஷப்ரஜாபதிமகள், தருமன் மனைவி, இவளிடத்திற்பிறந்த புதல்வர் விசுவதேவர்.
விசுவௌஷதம் - சுக்கு.
விசுளி - களா.
விசூகை - ஒருநோய்.
விசூரணம் - துக்கம்.
விசூரிதம் - குணப்படுதல்.
விசேடகம் - நெற்றித்திலகம்.
விசேடாலங்காரம் - ஓரலங்காரம் அது ஒப்புமையாட் பொதுமை யுற்றிருந்தவிரண்டு பொருள்களுக்கொருகாரணத்தால் விசேஷந்தோன்றவுரைத்தல்.
விசேடனம் - அடைமொழி,குணத்தைவிளக்குவன, பகுத்தறிவு.
விசேஷதீட்சை - ஒருதீட்சை.
விசேஷம் - பிரதானம்.
விசேடம்-மேன்மை, வகை, விசேடாலங்காரம், விதம், வித்தியாசம்.
விசேடணம் - பண்பு.
விசேடவாக்கியம் - சிறப்புமொழி.
விசேடிதம் - உறுதிப்படுத்துவது.
விசேடித்தல் } விசேஷப்படுத்தல்.
விசேஷித்தல் }
விசேடியம் - அடையடுத்தபொருள்.
விசேடோத்தி-ஓரலங்காரம், அது காரணகாரியத்தையிணைத்துச்சொல்வது.
விசேட்டிதம் - தூற்செய்கை, முயற்சி.
விசேதம்-அபாக்கியம், இடம், கலக்கடி, துக்கம், பிரிவு.
விசை-சீக்கிரம், தாம், பொறி, முறை, வலிக்கை, விசையென்னேவல்.
விசைகொள்ளல் - பெலன்கொள்ளல்.
விசைக்கம்பு } நெய்வார் கருவியில் ஒன்று.
விசைக்கால் }
விசைக்காற்று - செல்விசையினா லுண்டாகுங் காற்று.
விசைத்தடி - நெய்வார்கருவியினொன்று, பொறியினோர்தடி.
விசைத்தல் - வேகமுறல்.
விசையதண்டம் - சதுரங்கதானையை மோதிவென்ற வீரன்கதைத்தண்டு.
விசையம் - விசயம்.
விசையன் - அருச்சுனன்.
விசையேற்றுதல் - பொறியேற்றுதல், மூட்டிவிடுதல்.
விசையை - விசயை.
விசையனம் - ஆராய்வு.
விசோகம்-அசோகமரம்,சோகரஹிதம்.
விசோதனம் - சுத்திகரித்தல்.
விச்சதையன் - புல்லூரி.
விச்சநந்தா - வெள்ளெருக்கு.
விச்சம் - தாமரை.
விச்சலம் - அம்பு.
விச்சல்லி - பேய்த்திமிட்டி.
விச்சாதரர் - வித்தியாதரர்.
விச்சாதி - வேறுசாதி.
விச்சிக்கோன் - கபிலரால் பாடப்பட்ட ஒரு சிற்றரசன், பாரியினது புத்திரிகளை மணத்திற் கொள்ளுகவென்று

கபிலர் வேண்டிய வழியும் உடன்படாது மறுத்தவன் இவனே.
விச்சித்திரம் - விற்பன்னம்.
விச்சிரமம் - ஓய்வு, மலங்கழித்தல்.
விச்சிராந்தம் - கடைக்கண்.
விச்சிராந்தி - ஓய்வு, ஒருதீர்த்தம்.
விச்சிராமம் - விச்சிரமம்.
விச்சிராவம் - கீர்த்தி.
விச்சிரானம் - கொடை.
விச்சிரானம் - பேதிமருந்து.
விச்சிரிப்பு - சிச்சிலுப்பான். [ரிதல்.
விச்சிரும்பணம் - பொழுதுபோக்கு, வி
விச்சிரும்பிதம் - அலர்ச்சி, பொழுதுபோக்கு, விருப்பம்.
விச்சிலுப்பை - விச்சிரிப்பு.
விச்சிறல் - கோரை.
விச்சின்னம் - வேருக்கப்பட்டது.
விச்சு - வித்து.
விச்சுருதம் - ப்ரசித்தம்.
விச்சுருதி - புகழ்.
விச்சுவன் - பிரமன். [வன்.
விச்சுவகன்மா - தேவகம்மாளரிலொரு
விச்சுவகாசிபம் - சிற்பநூன் முப்பத்திரண்டினென்று.
விச்சுவகேது - அநிருத்தன்.
விச்சுவங்கரம் - நேத்ரம்.
விச்சுவசாரம்-சிற்பநூன் முப்பத்திரண்டினென்று.
விச்சுவதருமம் - சிற்பநூன் முப்பத்திரண்டினென்று.
விச்சுவதாரிணி - பூமி.
விச்சுவநாதன் - உலகநாதன், அகிலநாதன், சிவபிரான்.
விச்சுவதேவர் - பிதிர்களிலோர்பிரிவு.
விச்சுவபோதம் - சிற்பநூன் முப்பத்திரண்டினென்று.
விச்சுவம் - வீஸ்வம்.
விச்சுவரேகை - வானவரை. [பார்.
விச்சுவர் - சிற்பர், வானோரிலோர்வகுப்
விச்சுவேசம்-சிற்பநூன் முப்பத்திரண்டினென்று.
விச்சுளி ஒருகுருவி, சுறுக்கன், விவேகி.
விச்சுளியன் - விவேகி.
விச்சை - அறிவு, அறுதொழிலினொன்று, அவித்தை, தெருவெள்ளொருக்கு.
விச்சொருபம் - விகாரவடிவம்.
விச்சோடு - சோடற்றது.
விஜயநகரம் கன்னடதேசராஜதானி இக்காலத்தும் இது ஆரியராஜனால் ஆளப்பட்டு வருகின்றது.
விஜயமாநகரம் - பாண்டிநாட்டி லுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம்.
விஜயன்-சுதேவன் புதல்வன், உருகன் தந்தை. (விஷ்ணு பரிசாருளொருவன், அர்ஜுநன், அமவசுபிருகன்மாநசபுத்திரன், ஜயன் புத்திரன்.)
விஜயாசுவன்-பிருது சக்ரவர்த்திமகன், இவன் அந்தர்த்தாநன் எனவும் படுவன்.
விஞ்சுதல் - மிகுதல்.
விஞ்சை - கல்வி.
விஞ்சையரூர் - வித்தியாதரரூர்.
விஞ்சையர் - புலவர், வித்தியாதரர்.
விஞ்ஞதை - ஞானம்.
விஞ்ஞம் - அறிவு.
விஞ்ஞாதம் - அறிந்தது, அறிவு, பிரசித்தம்.
விஞ்ஞாத்தி - அறிவிப்பு.
விஞ்ஞாபனம் - அறிவித்தல்.
விஞ்ஞானகலர் - மூவகை ஆத்துமாக்களிலொருவர்.
விஞ்ஞானபாதன் - வியாசன்.
விஞ்ஞானமயகோசம் - பஞ்சகோசத்தொன்று அது ஞானேந்திரியமும் புத்தியும்.
விஞ்ஞானம்-அறிவு, வாத்தியம், வேலை.
விடகடி
விஷகடி } விஷந்தீண்டல்.
விடகன் - சுமாலிபுத்திரன்.
விடகாரி - காண்டாமிருகக் கொம்பு, விடவைத்தியன்.
விடக்கு - ஊன்.
விடங்கம் - அழகு, ஆண்மை, கொடுங்கை, சுவர்ப்புறத்து நீண்ட வுத்திரம், துகிற்கொடி, புழுக்கூடு, புறவுகட்குத் தாண்கண்மேற்செய்த கூட்டின் வரிசை, முகடு, வீதிக்கொடி.
விடங்கர் - சிறுவழி, தியாகராஜர்.
விடங்கொல்லி
விஷங்கொல்லி } ஒருபூண்டு.
விடசிருங்கம்
விடசூகம் } ஒருவண்டு.
விடசூசகம் - சகோரப்புள்.

விடசெந்து - விஷப்பிராணி.
விடதந்தகம் - பாம்பு.
விடதம் - திருசி, முகில்.
விடதரம் - பாம்பு, மேகம்.
விடதரன் - சிவபெருமான்.
விடதாரி } மருத்துவன், வைத்
விஷதாரி } தியன்.
விடதாளம் - நவதாளத்தொன்று.
விடத்தலை } ஒருமரம்.
விடத்தேரை }
விடத்தேர் }
விடத்துக்கரசன் - கெருடபச்சை.
விடநீர் } சரீரத்துறுமோர் தோஷ
விஷநீர் } நீர்.
விடந்தை - ஓரூர்.
விடபகதி - துரககதியைந்திலொன்று.
விடபட்சணம் - நஞ்சுபுசித்தல்.
விடபதுவசன் - சிவபிரான்.
விடபபதி - சிவபெருமான்.
விடபம் - அலர்வு, இடபவிராசி, எருது, சிவனூர்தியுங்கொடியும், சிறுதூறு, தளிர், மரக்கொம்பு, விசாலம்.
விடபாரி - கிருட்டிணன்.
விடபி - ஒருமரம், மரப்பொது.
விடப்பு - கமர்.
விஷமசாகசம் - எக்கம்.
விஷமந்திரன் - குறவன்.
விடமம் } சமமின்மை, தொந்தரவு,
விஷமம் } வருத்தம்.
விஷமவிபாகம் - சரியற்றபங்கு.
விஷமாசனம் - அசீரணபோசனம்.
விஷமாட்சன் - சிவபிரான்.
விஷமாயுதன் - காமன்.
விஷமி - வன்மி.
விஷமுட்டி - காஞ்சிரமரம்.
விடமூங்கில் - ஒருமரம்.
விடமரக்கனி - எட்டிப்பழம்.
விடம் - அதிவிடையம், எத்து, காய்ச்சுப்பு, தாமரைநூல், தேள், நஞ்சுநீர், பரஸ்திரீகமனம், பாஷாணம், மலை.
விஷம் - நஞ்சு, நீர், பாஷாணம்.
விடம்பனம் - உபத்திரவம்.
விடம்பு - கமர்.
விடயக்காட்சி - பஞ்சபொறிகளினலறி [தல்.
விடயஞானம்-உலகஞானம்.
விடயபஞ்சகம் - கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறிதல்.
விடயபருத்தியாகம் - துறத்தல், நீங்கல்.
விடயம் } அடைக்கலம், அறியப்படத்
விஷயம் } தக்கது, இருத்தல், உரியது, உலகப்பொருள், காணப்பட்டது, காரணம், சுக்கிலம், தேயம், நாயகன்.
விடயவாசனை - விஷயப்பற்று.
விடயாயி - அரசன், காமம், சிற்றின்பம், பதார்த்த மாத்திர முண்டென்று சொல்பவன், பொறி.
விடயி - பொருள்.
விடரவன் - பூனை.
விடரு - அதிவிடயம்.
விடருகம் - விடரவன்.
விடராசன் - கெருடபச்சை.
விடரோகம் - ஒருநோய்.
விடர் } கமர், காடு, தூர்த்தர், மலைப்
விடர்வு } பிளப்பு.
விடலம் - உள்ளி, குதிரை, நஞ்சு.
விடலி - கீழ்மக்கள், பூப்பதாரி மலடி.
விடலை - ஆண்மகன், இளவாண்பொது, திண்ணியன், பாலைநிலத் தலைவன், மணவாளன், முப்பதுவயதிற் குட்பட்டவன்.
விடல் - குற்றம், சாதல், விடுதல்.
விடவம் } அயனவரி.
விஷவம் }
விஷவாதகரப்பன் - ஒருகரப்பன்.
விடவிடெனல் - நடுக்கக்குறிப்பு.
விடவு - கமர்.
விடன் - தூர்த்தன், விடம்.
விடாச்சேரி - நீங்காவரவு.
விடாணம் } விலங்கின்கொம்பு.
விஷாணம் }
விடாணி-எருது, கொம்புள்ளது, யானை.
விடாதம் - இக்கட்டு, மனத்தளர்ச்சி.
விடாதவாகுபெயர்-கருவியின் பெயரே கருத்தாவைக்காட்டி நிற்பது (உ-ம்) குதிரையாலவ்வூர் கொள்ளை யிடப்பட்டது.
விடாதவாக்கச்சொல் - தன்செம்பொருளைவிடாது நின்றும் பிறபொருளை யுந் தழுவிநிற்கு மாக்கச்சொல்.
விடாநோய் - தீராதநோய்.
விடாந்தகன் - சிவபெருமான்.
விடாப்பிடி-ஒருகண்டசீர், பிடித்தபிடி.
விடாப்பூட்டு - ஒப்பில்லாமை.

விடாமழை } ஒபாமழை, தினமழை.
விடாமாரி }
விடாயுதம் - பாம்பு.
விடாய் - ஆசை, சோர்வு, தாகம்.
விடாய்த்தல் - தாகமடைதல்.
விடாய்ப்பு - தாகம்.
விடாரகம் } பூனை.
விடாரகன் }
விடாரம் - பாம்பு,
விடாலகம் - பூனை, பொன்னரிதாரம்.
விடாலநியாயம் - வார்ஜாலநியாயம்
விடாலம் - கண்மணி, பூனை.
விஷானனம் - பாம்பு.
விஷானி - சதுரக்கள்ளி,
விடி - திரைச்சீலை,விடியென்னேவல்.
விடிதல் - அனுகூலமாதல்,உதயமாதல்.
விடியல் - வைகறை, விடியற்காலம்
விடியற்றரம் - விடியற்காலம்.
விடிவு - அனுகூலப்பட்டது.
விடிவெள்ளி - வைகறை வெள்ளி
விடு - நீர்யானை, யானைமத்தகத்தினடு.
விடுகதை - நொடி.
விடுகாசு - பொடிக்காசு.
விடுகாலி - கட்டாமாடு, தூர்த்தன்.
விடுகை - விடுதல்.
விடுசரம் - ஊர்ப்பன்றி.
விடுசி - அம்பு.
விடுதலை - இட்டம், தன்னிட்டம், நீக்குதல், முடிவு, விடுந்தலைப்பு.
விடுதல்-அனுப்புதல், எரிதல், ஒழிதல், நீக்கல், விள்ளுதல்.
விடுதி - ஆறியிருத்தல், உத்தரவு, தங்குமிடம்.
விடுது - விழுது.
விடுதுறை - வாசித்து நிறுத்துமிடம்.
விடுத்தம் - தடவை.
விடுத்தல் - அனுப்பல், தங்கல், தள்ளுதல், நடத்தல், பிரிதல்.
விடுந்தலைப்பு - கொய்பகம்,முன்றானை
விடுபடை - அஸ்த்ரமுதலியன.
விடுபதி - மருமகன்.
விடுப்பு - ஆராயுங்குணம், பூராயம், வேடிக்கை.
விஷுவம் } விடவம்.
விடுவம் }
விடுவாய்ச்செய்தல் - அறுத்தல்.
விடுவித்தல் - விடுதலைசெய்பல், விரித்துரைதல்.

விடுசி - அம்பு.
விஷேபம் - திரிபு.
விடேலெனல் - அனுகாரணவோசை.
விடை - இடபம், இடபவிராசி, உத்தரம் இது உரையிலக்கணமைந்தினொன்று, எதிர்மொழி, எருது, குதிரை, கோழிப்பேடு, வருத்தம், வலிமை, விடுதல்.
விடைகாலெறிதல் - இளங்கன்று துள்ளிக்காலெறிதல்,கால்வீசியுதறுதல்.
விடைகொடுத்தல்-உத்திரவுகொடுத்தல்.
விடைகொள்ளல் - உத்திரவு பெறுதல் விடைபெறுதல்.
விடைக்கந்தம் - செம்மணத்தக்காளி.
விடைக்கொடி - இடபக்கொடி.
விடைகொடிபன் - சிவபிரான்.
விடைக்கோழி - விடை துரத்தப்பட்ட கோழிக்குஞ்சு.
விடைதல் - அபராதம்சொல்லுதல், கோபம், சினம், பிரிதல், பிளத்தல்.
விடைதுரத்தல் - குஞ்சுகளை விடுதல்.
விடைத்துவசன் - சிவபெருமான்.
விடைத்தல் - சினக்குறிப்பு பெருங்கோபம்.
விடைபெறல் - உத்திரவுபெறல்.
விடைப்பு - அபராதம்.
விடையூர்தி } சிவபிரான்.
விடையேறி }
விடையோன் - சிவபிரான்.
விஷ்கம்பம் - நித்தியயோகத்தொன்று.
விட்கம்பம் - கதவின்றாழ், செயல், தடை, தூண், நித்தியயோகத்தொன்று, விசாரித்தல், விட்டம்
விட்சவம் - இருமல்.
விட்சி - ஒருமரம்.
விட்சேபசத்தி - ஒருசத்தி அது சுருங்கி விரியத்தக்கது.
விட்சேபணம்-அனுப்பல்,எறிதல்,சிதறல்.
விட்சேபம் - அனுப்பல்,உமிழ்தல்,எறிதல், ஒன்றைச்சொல்லத் தொடங்கி வேறுஞாபகத்தாற்சொல்லாமல்விட்டுவிடுதல், கலக்கம், கூத்திஞேர் விகற்பம், பதனம், பயம், பொய்யென்று ரூபித்தல், வாஞட்சரேகை.
விட்டம் - உத்திரம், குறுக்களவுவரி.
விட்டாச்சிரவன் - திருமால்,

விட்டரம் - ஆசனம், ஒருபிடிதருப்பை, ஒருமரம், கொள்கலம், தவத்தோர் பீடம், படுக்கை.
விட்டரி - அகத்தி.
விட்டவர் - துறவோர், பகைவர்.
விட்டவாகுபெயர் - மொழிக்கியன்ற பொருளைவிட்டு குறிக்கப்படு பொருட்கிடனுய்ப் பிறிதொன்றை விளக்குவது (உ-ம்) கங்கைக்கண் இடைச்சேரி.
விட்டவாக்கச்சொல் - சொற்பொருளை விட்டு வேறென்றிற்கு வழங்குஞ் சொல் (உ-ம்) அவ்வூர் வந்தது.
விட்டாடி - தனியன்.
விட்டார்த்தம் - பாதிவிட்டம்.
விட்டாற்றி - ஆறுதல்.
விட்டி - கோழி, கோழிக்காணம்.
விட்டிசை - பிரிந்திசை.
விட்டிசைத்தல் - பிரிந்திசைத்தல்.
விட்டித்தல், விஷ்டித்தல் } மலங்கழித்தல்.
விட்டில் - ஒருபறவை, ஒருவண்டு, நாட்டுக்குற்றமேழினென்று, பிராய்மரம், வெட்டுக்கிளி.
விட்டுணு, விஷ்ணு } திருமால்.
விட்டுணுகரந்தை - ஒருபூடு.
விட்டுணுகாந்தி ஒருதருமநூல், ஒருபூடு.
விட்டுணுகிராந்தி - மூங்கில்.
விட்டுணுபதம் - பரமபதம், பாற்கடல், வைகுந்தம்.
விட்டுணுபுராணம் - ஒரு வைணவ புராணம்.
விட்டுணுப்ரியம் - துளசி.
விட்டுணுரதம் - கருடன்.
விட்டுணுலோகம் - வைகுண்டம்.
விட்டுணுவல்லபை - இலக்குமி.
விட்டேறாணம், விட்டேறு } வேல்.
விட்டை, விஷ்டை } இலத்தி, சட்டி, திரளை.
விட்டோசை - விட்டிசை.
விட்பாரம் - விற்றெனி.
விஷ்வம் - விடவம்.
விண்டு - ஆகாயம், இளமை, கடுதாசிப் படத்திலோர் கருவி, தேவலோகம், மேகம்.
விணிகை }- மூலைக்கச்சு.
விண்டபூரகம் - மாதளை.
விண்டிலம் - ஆகாயம்.
விண்டல் - அலர்தல், மூங்கில், வெடித்தல், வெளிவருதல்.
விண்டு - அட்டாதசதருமநூலி னென்று, காற்று, தகரை, திருமால், மலை, மூங்கில், மேகம், விஷ்ணுகாந்தி.
விண்டுதம் - தகரை.
விண்டுநதி - ஆகாயகங்கை.
விண்டுபதம் - ஆகாயம்.
விண்டுரதம் - கருடன்.
விண்ணபத்திரம் - விண்ணப்பபத்திரம்.
விண்ணப்பபத்திரம் - மன்றாட்டுப்பத்திரம்.
விண்ணப்பம் - அறிவித்தல், மன்றாட்டம்.
விண்ணல் - காவட்டம்புல்.
விண்ணவர்கோன் - இந்திரன்.
விண்ணவர்பிரான், விண்ணவர்பெருமான் } இந்திரன்.
விண்ணவர்க்கிறை - தேவேந்திரன்.
விண்ணவர்தலைவன் - இந்திரன்.
விண்ணவன் - அருகன், தேவன்.
விண்ணங்கு - ஒருமரம்.
விண்ண - கடுகுரோகிணி.
விண்ணணம் - நாகரிகம், மாசாலம், விஞ்ஞானம், வெட்கம்.
விண்ணுகம் - கறிமுள்ளி.
விண்ணுலகம் - தேவலோகம்.
விண்ணுளார் - ஆகாயவாசிகள், விண்ணோர்.
விண்ணேறு - இடி.
விண்ணோர் - தேவர்.
விண்மணி - சூரியன்.
விண்மீன் - நட்சத்திரம்.
விண்மூழுதாளி - இந்திரன்.
விண்விண்ணெனல் - இசைக்குறிப்பிடுக்குமொழி.
விண்வீழுங்கொள்ளி - உற்கை.
விதண்டம் - ஒருபூட்டு, யானை.
விதண்டாவாதம் - வாதவகையினென்று.
விதண்டை - அகப்பை, தன்மதநிறுத்திப்பேசல், திருத்தம்.
விததம் - விசாலம், வீணை முதலான வாத்தியம் பொய்.
விததன் - பாத்வாஜன், இவன் [illegible]தத்தியின்மனைவியிடத்தில் ப்ருஹஸ்பதிக்குப் பிறந்தவன், இவன் பிறந்தவுடனே தந்தைதாய ரிருவரும் இறந்துபோயினர், அப்போது மருத்து

இவனை யெடுத்துப்போய்சந்தானமில்லாதிருந்த பூருவமிசத்துப் பரதனுக்குக் கொடுத்தார். இவன் புத்திரனாகிய புமன்யனைப் பரதன் தத்தபுத்திரனாக்கிக் கொண்டான். தவத்தி, பண்டிதன்.
விததி - சமூஹம், விஸ்தாரம்.
விதத்தல் - மிகுத்துரைத்தல்.
விதத்தியம் - அசத்தியம்.
விதந்து - அமங்கமலை, மாங்கல்ய நூலிழந்தவள்.
விதப்பு - அதிசயம், சீக்கிரம், நடுக்கம், மதிலுறுப்பு, மிகுதி.
விதப்புக்கிளவி – விதப்புமொழி, சிறப்பித்துச் சொல்லுமொழி.
விதம்-அறியப்படுதல், இனம், சம்பளம், சாயல், சூத்திரம்,செயல், துளை, மாதிரி, விலங்குணவு.
விதம்பம் - கற்பரிபாஷாணம்.
விதாணம் – அழகு, ஈகை,சுறுக்கு,போதல், விடுதல், விவேகம்.
விதாணை - விவேகம்.
விதாம் – பிளப்பு.
விதரி - அறியப்படுதல்.
விதயுதம் - உருக்கப்பட்டவை.
விதர்க்கணம்-ஆலோசனை, சம்பாஷணை
விதர்க்கம் - எண்ணம், ஐயம், நியாயம் பஞ்சமயகோசத்தொன்றுபெருக்கம்.
விதர்த்தி - சாலை, பந்தர், பீடப்பலகை.
விதர்ப்பஜை - அகத்தியன்மனைவி, தமயந்தி, ருக்மிணி.
விதர்ப்பம் – அஸ்தினாபுரத்துக்குத்தெற்கேயுள்ள தேசம்.
விதர்ப்பன் – சியாமகன் புத்திரன், இவன் அரசாண்டதேசம் விதர்ப்பமென்றுபெயர் பெருவதாயிற்று, இவனுக்கு குசன், க்ருதன், ரோமபாதன் என மூவர் புத்திரர். [ற்றி.
விதர்ப்பு-அச்சம், நெருக்கம்,போர், வெ
விதலம் - கீழேழுலகங்களுள் இரண்டாவது இது இருளால் மூடப்பட்டிருக்கும்.
விதலம்-கீழேழுலகிலொன்று, பயற்றம் பருப்பு, பெட்டி.
விதலை - நடுக்கம்.
விதவளம் - அசைவு.
விதவாகாமி - கைம்பெண்ணை விரும்புவோன்.
விதாவவேதனம் - கைம்பெண்ணை விவாகம்பண்ணல்.
விதவை - கைம்பெண்.
விதற்பம் – விதர்ப்பம்.
விதனம் - மனத்துயர், வேதனை.
விதனித்தல் - துயருறல்.
விதன் - பண்டிதன்.
விதஸ்தை – சந்திரபாகையிற் பிரியுமோர் உபநதி.
விதாகம் - உறைப்பு, வெப்பம்.
விதாதா - அருகன், பிரமன்.
விதாகிரி - திப்பிலி.
விதாதிரு - காமன், பிரமன், விதி.
விதாதை – தாதைதம்பி, இவன்மனைவி நியதி.
விதாரம் - போடல்.
விதாரகம் - கிணறு.
விதாரணம் - கிழித்தல், கொல்லல், பிளத்தல், யுத்தம்.
விதாரம் – கிழித்தல், பிளத்தல், யுத்தம், வெள்ள மெடுத்தல்.
விதாரி – புன்முருக்கு.
விதாரு - பல்லி.
விதாவிதம் - பலவிதம்.
விதாகனம் - குவியல், மேற்கட்டி, வருத்தம்.
விதானகன் - பண்டிதன்.
விதானம் – இளைப்பாற்றி, உபாயம், ஒழுங்கு, ஒருபண், கற்பனை, குவியல், கூட்டம், சாரமின்மை,செயல்,செல்வம், பாக்கியம், மந்தம், மாதிரி, முறைமை, மேற்கட்டி, யாகம், யானை, யுணவு, வணக்கம், வன்மம், விகுதி, விடுதி, விதம், விரிவு.
விதானிகாணம் - மூடுதல்.
விதி-அறிவு, உண்மை, ஊழ், கட்டளை, காலம், குணம், குதிரை முதலியவற்றினுணவு, சூத்திரம், செய்தொழில், செல்வம், நியமிப்பு, பிரமன், மெய், விட்டுணு, விதம், விதியென்னேவல், வேதாகமமுறை.
விதிசை - மாளவதேசத்துள்ள ஒருநதி, மாளவதேசத்திலுள்ள ஒருநகரம்.
விதிகபாலி - சிவபெருமான்.
விதிக்கு – கோணத்திசை.

விதிசாரதி - சிவபிரான்.
விதிசிரந்தடிந்தோன்-சிவபிரான்.
விதிச்சூத்திரம் - முன்னில்லதனை விதித்தல்.
விதிதம் - சம்மதித்தல், தெரியப்பட்டது, வெளிப்படை.
விதிதன் - கவிஞன், புத்தன், யோகி.
விதிதரிசனி விதிதேசகன்.
விதிதேசகன் - யாகபாதுகன்.
விதித்தல் - உண்டாக்கல், செய்தல், சொல்லல், நியமித்தல்.
விதித்தோன் - கடவுள், பிரமன்.
விதிநிஷேதம்- செய்வதும், தவிர்வதும்.
விதிபாதம் - வியதிபாதம்.
விதிப்பாள் - மகள்.
விதிப்பிரசங்கம், விதிப்பிரயோகம் } சூத்திர முறையைச்சாதித்தல்.
விதிப்பு - இலபிப்பு, நியமிப்பு.
விதிமுறை - நெறிப்பிரகாரம்.
விதியர் - கணக்கர், தந்திரிகள், மந்திரிகள்.
விதியுளி- ஓமம், தூதர், விவாகம்.
விதியை - இரண்டாந்திதி.
விதியோகம் - விதிப்பிரகாரஞ்சம்பவித்தல்.
விதிர்க்குவிதிர்க்கெனல் - படபடத்தல்
விதிர்த்தல் - அசைத்தல், அஞ்சுதல், நடுங்கல்.
விதிர்ப்பு - அச்சம், நடுக்கம்.
விதிர்விதிர்த்தல் - சுழலல், நடுங்குதல்.
விதிவத்து - முறைப்படியானது.
விதிவிலக்கு - விதிநிஷேதம்.
விதிவினை- உடன்பாட்டான்முடியும்வினை.
விது - கருப்பூரம், சந்திரன், நிவிர்த்திக்காயபலி, பிரமா, விட்டுணு.
விதுகம் - விலகல்.
விதுடன் - கற்றவன்.
விதுடி, விதுஷி } அறிவாளி, கற்றவள்.
விதுட்சயம் - தேய்பிறை.
விதுதமுகம் - வேண்டாமைக்குத் தலையசைதல்.
விதுதம் - தள்ளப்பட்டது.
விதுநநம் - சலநம்.
விதுந்துதம் - இராகு.
விதுபஞ்சரம் - வாள்.
விதுப்பிரியை - உரோகணி.
விதுபுக் - பாம்பு.
விதுப்பு - ஆசை, காமித்தல், சீக்கிரம்.
விதுமுகி - சந்திரமுகி.
விதும்பல் - ஆசைப்படல்.
விதூரஜம் - வைடூரியம்.
விதூரம் - கலக்கம், பிரிவு.
விதூரன் - அறிஞன், கள்வன், திண்ணியன், தூர்த்தன, வாழ்க்கைத்துணையிழந்தோன். குருகுலவரசருளொருவன், திருதராஷ்ட்ரன் மந்திரி, அம்பிகையின் தோழியினிடத்தில் வியாசருக்குப் பிறந்த புத்திரன், இவன் மாண்டவ்யர் சாபத்தால் சூத்திரனாகப் பிறந்தயமன், இவன் மஹா தர்மசீலன், திருதராஷ்ட்ரன் பாண்டவரை வஞ்சிக்கத் துணிந்தபோது அது தகாதெனவாதாடினவன், இவன் தருமமார்க்கத்திற் சிறிதும் வழுவாதவன், பாண்டவருக்கு திருதராஷ்ட்ரனும் அவன் புத்திரரும் சூழ்ந்த வஞ்சனைகளையெல்லாம் அப்பாண்டவருக் கறிவித்து அவர்களை அவ்வஞ்சனைக்குத் தப்புவித்தவனும் அரக்குமாளிகையமைத்து அதில் பாண்டவர்களை யிருத்தித் தீக்கொளுவிக் கொல்லத் துரியோதநன் யத்தனித்தபோது, அந்த மாளிகையிலே ரஹஸ்யமாகப் பிலவழியொன் றமைப்பித்து அவ்வழியே புகுந்து பாண்டவர்களை உயிர்பிழைக்கும்படி காத்தவனும் இவ்வுத்தமனேயாவன், இவன் யவநபாஷையிலும் வல்லவன், யுதிஷ்டிரனும் யவநபாஷையில் வல்லவன், இவன் திருதராஷ்ட்ரன் சபையில் நடந்த ரஹஸ்யங்களையெல்லாம் இந்தப் பாஷையிலேயே யுதிஷ்டிரனுக்குப் பிறரறியாதபடி வாய்மொழியாலும் திருமுகக் குறியாலும் அப்போதைக்கப்போது உணர்த்திவந்தவன்.
விதுவதநம் - சந்திரன்போலுமுகம்.
விதுவனம் - அச்சம், உதறுதம்.
விதுவேணி-சந்திரசடையோன், சிவபிரான்.
விதுன்னகம் - துத்தம்.
விதுஷன் - இந்திரனுக்குச் சசிதேவியிடத்துப் பிறந்த மூன்றும் புத்திரன்.
விதூடணம் - பெருந்தூஷணம்.
விதூதம் - நடுக்கம், விடுதல்,
விதூநிதம் - நடுக்கம்.

விதூரஜம் - வைடூர்யம்.
விதூரதன்-ஓரரசன், சுரதன்புத்திரன்.
விதூரம் - வெகுதூரம்.
விதூனனம் - கலக்கம்.
விதூனனம் - உதருதல்.
விதேகமுத்தி - நால்வகை முத்தியி லொன்று.
விதேகம் - தேகவிமோசனம், மிதிலை.
விதேகன்-நிமிபுத்திரன், மிதிலன், அரசுபுரிந்தமையால் மிதிலாதேசம் விதேகதேசமெனவும்படும்.
விதேகை - மிதிலைநகரம்.
விதேசம் - தூரதேசம், பிரதேசம்.
விதேயன் - சொற்படிகேட்போன்.
விதை-அறிவு,பத்தி, பெருமை, விதையென்னேவல், வித்து.
விதைத்தல் - வித்திடுதல்.
விதைப்புனம் - புதுக்கொல்லை.
விதைமணி - விதைக்குந்தானியம்.
விதைமுதல் - வித்துமுதல்.
வித்தசம்-அதிசயம், ஞானம், நன்மை.
வித்தகர் - அறிஞர், கம்மாளர், தூதர், பெரியோர்.
வித்தகன் - அறிஞன், சதுரப்பாடுள்ளோன், தூதன், வயிரவன்.
வித்தகன் - பொருள்கொடுப்போன்.
வித்தம் - அறிவு,இகழ்வு, ஞானம், பாக்கியம், பொருள், டொன்.
வித்தரித்தல் } பெருக்கல் விரித்துச்
விஸ்த்தரித்தல் } சொல்லல்.
வித்தன் - உபகாரி, தவத்திபண்டிதன்.
வித்தாரகவி - நாற்கவியிலொன்று அது மும்மணிக்கோவை, பன்மணிமாலை, மறம், கலிவெண்பா, தசாங்கம், மடலூர்தல், கிரீடை, இயல், இசை, நாடகம், பாசண்டத்துறை இவைமுதலிய விரித்துப்பாடுங்கவி.
வித்தாரம் } அகலம், சிற்பநூன் முப்
விஸ்தாரம் } பத்திரண்டிலொன்று. மரக்கொம்பு, மிகுதி, விட்டம், வித்தாரகவி, விரித்தல், விற்பன்னம்.
வித்தாரி } விற்பன்னன்.
விஸ்தாரி }
வித்தி-அறிவு, ஆராய்தல், சம்பாதிப்பு.
வித்தியதம் - வேதிகை.
வித்தியம் - அறிவு, தான்றி.
வித்தியர் - கம்மாளர்.

வித்தியாகரன் - அறிஞன்.
வித்தியாகலை - பஞ்சகலையிலொன்று.
வித்தியாசம் - வேறுபாடு.
வித்தியாதத்துவம் - தத்துவத்திரயத்தொன்று, தொண்ணூற்றாறு தத்துவங்களுள் இருபத்துநாலு தத்துவங்கொண்டது.
வித்தியாதரர் - கந்தருவர், தேவர்களுள் ஒருபேதம், இவர்கள் மாலிகாஞ்சநாதி வித்தைகளையுடைய மேகவாகனர்கள்.
வித்தியாதானம் - படிப்பித்தல்.
வித்தியாதுரம் - கல்வியாசை.
வித்தியாநாதன் - ஐந்நூறு வருஷங்களுக்கு முன்னே ஏகசிலா நகரத்திலிருந்த ஒரு ஸம்ஸ்கிருதாலங்கார கவி, இவர் தமது அபிமாநப் பிரபுவாகிய ப்ரதாபருத்ரன்மேல் அலங்கார நூலொன்று செய்து பிரதாபருத்ரீயம் என்னும் பெயரினால் அதை ப்ரகாசஞ்செய்தவர்.
வித்தியாபாரகன் - கற்போன்.
வித்தியாப்பியாசம் - கற்றல்.
வித்தியாப்பிராத்தி - கல்விச்செல்வம்.
வித்தியாரண்யசுவாமி - வேதாந்தசிரியர்களிலொருவர்.
வித்தியாரண்யர்-மாதவாசாரியர், இவர் துங்கபத்ராநதி தீரத்திலுள்ள பம்பையென்னுங் கிராமத்திலே, இற்றைக்கு ஐந்நூற்றுமுப்பது வருஷங்களுக்கு முன்னே வித்யாநகரத்தில் அரசுசெய்திருந்த ஹரிஹரராயர் காலத்திலிருந்தவர்.

இவர் ஸ்ம்ஸ்க்ருதத்திலே ஏறக்குறைய எல்லாச் சாத்திரங்களிலும் வல்லவராய் அவ்வச்சாத்திரங்களிலும் தாம் சில நூல்கள்செய்து விளங்கியிருந்த பிரசித்தமான பண்டிதர்.

இவர் தந்தை மாயணன், போகநாதர்சாயணாசாரியர் என்பவர் இவர் சகோதரர்கள், இவர் புக்கணன் என்னும் அரசனுக்குமந்திரி யாகவுமிருந்தவர், பராசரமாதவியம் செய்தவருமிவரே.

இவர் வறிய குடும்பத்திற்பிறந்தவராதலால் இளமையிலேயே செல்வராக வேண்டுமென்னும் பேராவ

லோடு கல்விகற்றுவந்தார். தமதெண்ணம் விரைவிலே கைகூடாமையால் திருமகளையும் கலைமகளையும் நோக்கி தவஞ்செய்யும் பொருட்டுக் காட்டிற் சென்று திரிவாராயினர், ஒருநாள் அக்காட்டில் அரசனுடைய மாடுகளை மேய்த்துத் திரிபவனுகிய புக்கணனென்னு மொரு க்ஷத்ரியனைக்கண்டு தாம் அனுபவிக்குங் கஷ்டத்தை யெடுத்துக்கூறினர். அதைக்கேட்ட அவர்மீது பேரிரக்கமுடையவனாய், அவர்க்கு தினந்தோறும் வேண்டிய பால் கொடுப்பதாக வாக்களித்தான். அதற்கு இவர் அரசனுக்குரிய பாலை யான்பெருதல் துரோகமாகுமேயென்ன, புக்கணன், அரசனுக்கு அளவுக்கு மேற்படப் பாலிருத்தலால் அவமாகவே யொழுகிப் போகிற பாலிலொரு சிறுகூறுதவம் புரிகின்ற வுமக்குப் பயன்படுதல் அவனுக்குப் புண்ணியப் பயக்குமேயென்ன, இவர் அந்தப்பாலை யேற்றுக் கொள்ள வுடன்பட்டனர். இப்படி தினந்தோறும் புக்கணன் கொடுக்கும்பாலை யுண்டு காலங் கழித்துவரும் மாதவாசாரியர் அந்தப் புக்கணன் மீது பேரன்புடையவரானர், உணவின் கவலைதீர்த்தலும் மாதவர் தாமெண்ணிய தவத்தைப் பேரூக்கத்தோடு முயன்று செய்துவந்தார்.

நெடுங்காலங் கழிந்தபிறகு கலைமகளும் திருமகளும், புக்கணனுக்குத்தோன்றி, மாதவர்கருத்து இப்பிறப்பிலே நிறைவேறுதென்றுகூறிப்போக அவன் அந்தச் செய்தியை மாதவர்க்குக் கூறினன். அதுகேட்டும் மாதவர் தம் தவத்தை விடாது செய்துவந்தார். இறுதியிலே அவர் கோலங்கொண்டு தமது பூணூலை யறுத்தெறிந்துவிட்டுச் சந்நியாசியாயினர். அதைக்கண்ட திருமகளும் கலைமகளும் வெளிப்பட்டு, இனி உனக்கு வேண்டியதைக் கேட்கக்கடவையென்ன, இவர் கலைமகள் அநுக்ரஹமொன்றேவேண்டுவது, திருமகள் அநுக்ரஹத்தையினிவேண்டேன், ஆயினும் திருமகள் அநுக்ரஹம் புக்கணனுக்குண்டாகுக, அவனே நமதருளையான் பெறுதற்குக் காரணராயிருந்த பரமோத்தமன் என்றூர். அதுகேட்ட இரண்டுதேவியரு மனமகிழ்ந்து, மறைந்துபோயினர். இது நிகழ்ந்த சிலநாளில் அஸ்திஞபுரத்தரசன் இறக்க, அவனுடையமந்திரிமார்பட்டத்து யானையை அலங்கரித்து அபிஷேக குடத்தை அதன்கையிற் கொடுத்து ஓரரசனைக் கொண்டுவரும்படி பரிசனங்களோடு விடுத்தனர். அதுபலநாடுகளைக் கடந்து புக்கண்ணனிருக்குங் காட்டையடைந்தது.

அந்தச்சமயத்தில் புக்கணன்நித்திரைசெய்துகொண்டிருந்தான். யானை அவனைக்கிட்டி, அவன்மீது கங்கைநீரைச்சொரிய, அவன் துணுக்குற்றெழுந்துபார்க்க அவன்கழுத்தில் மாலையைச் சூட்டிவணங்கி அவனைத் தூக்கித் தன் முதுகின்மேலுள்ள தவிசின்மே லிட்டுக்கொண்டுபோய் அவனை யரசனுக்கிற்று.

அதன் பின்னர் சிலநாள் கழிந்தபிறகு மாதவாசாரியர், புக்கணன், தம்மேற்கொண்ட அன்பைஅரசனாயிருக்குங்காலத்திலும் சாதிப்பவனேவென்று நிதானிக்கும்பொருட்டு அவனிடத்தேசென்றுஇவர்வரவையொற்றாலறிந்த புக்கணன் முன்னிலுமிருந்தஅன்பும் வணக்கமும் அடக்கமும் நட்பு முடையவனாய் நடந்தெதிர்கொண்டு தழுவிக்கொண்டாடி இவரைத் தனக்குபிரிய நண்பராக்கிக்கொண்டு எந்தக்காரியமும் இவரது கருத்திற்கிணங்கவுசாவிநடத்திவருவானாயினன்.

ஒருநாள்புக்கணன் இவரைப்பார்த்து உமதுபெயர் இவ்வுலகில் நிலைபெற்றிருக்கும் பொருட்டும், எனக்குப்பின்னே வருகிற மக்கட்பரப்புக்கெல்லாம் பயன்படும்பொருட்டும் பலநூல்களைச்செய்து உலகுக்கு உபகரிக்கக் கடவீரென்ன, அப்படியே செய்வோமென் றுரைத்து, எண்ணிறந்த நூல்களுக்கு வியாக்கியாநங்கள் செய்து பிரகடநஞ்செய்தனர்.

வேதம் உபநிஷத்து சூதசங்கிதை முதலானவையாவும்இவர்அவதாரஞ் செய்திலராயின் பாஷ்யங்கள் வியாக்

கியாநங்கள் என்பன கண்ணிற்காணப்படமாட்டா. பாஷ்யங்களுக்கும் வ்யாக்கியாநங்களுக்கும் அளவில்லை, இவர்செய்த சங்கரவிலாசம் நாற்பதிணயிரம் சுலோகமுடையது, வித்யாரண்யா என்பது இவர்க்குத் தீக்ஷா நாமம்.

வித்தியாரம் - பூராயம்.

வித்தியாரம்பம் - கற்கத்தொடங்கல் இது பிள்ளைச்சடங்குகளிலொன்று.

வித்தியார்த்தி - கற்போன்.

வித்தியாலயம் - பாடசாலை, கல்லூரி.

வித்தியானுசேபனம் - கல்வி தேறச் செய்தல்.

வித்தியானுபாலனம் - படித்தல், படிப்பித்தல்.

வித்தியை - அறிவு, கமனகுளிகை, தூர்க்கை.

வித்தியோதமானம் - பிரகாசம்.

வித்தியோபாற்சனம் - கல்வித்தேற்றம்

வித்திரகம் - வெள்ளெருக்கு.

வித்திரணம் - விரிவு.

வித்திரம் - துளைத்தல், பிளப்பு.

வித்திரவம் - பின்னிடல்.

வித்திராவணம் - உலோக முதலிய உருக்குதல், துரத்தல்.

வித்திருதி, விஸ்திருதி } அகலம், விசாலம், விட்டரேகை.

வித்து - சம்பிரதாயம், வமிசவழி, விதை, வித்தென்னேவல், விந்து.

வித்துதல் - விதைத்தல்.

வித்துரு - மின்னல்

வித்துருமம் - இளந்தளிர், பவளம்.

வித்துருமாதரி, வித்துருமோஷ்டி } பவளம்போலும் அதாமுள்ளவள்.

வித்துவகற்பன் - சொற்பகவிக்காரன்.

வித்துவஞ்சம் - அவமரியாதை, பகை, வெறுப்பு.

வித்துவாமிசன், வித்துவான் } டலவன்.

வித்துவேடணம், வித்துவேணை } விரோதித்தல் அது அட்ட கருமத்தொன்று, கலைஞான மறுபத்துநான்கினுமொன்று.

வித்துவேடம் - விரோதம்.

வித்துவேடி, வித்துவேஷி } பகைவன்.

வித்தேசன் - குபேரன்.

வித்தை - கல்வி, ஞானம், தந்திரத்தொழில், மாசாலம், வித்தியாதத்துவமேழினொன்று.

வித்யமாநம் - வர்த்தமாநம்.

வித்யாதநம் - கல்விப்பொருள்.

வித்யாதேவி - சாச்சுவதி.

வித்யாபாரங்கதன் - கல்விகரை கண்டோன்.

வித்யுத்ருவன் - குபேரன் சேவலாளருளொருவன், கங்கன் என்னும் பக்ஷிராஜனைக் கொன்றதாகக் கந்தரன் என்னும் பக்ஷியாற் கொல்லப்பட்டவன்.

வித்யுத்கேசன் - ஹேதி புத்ரன், இவன் தாய் பயை.

வித்யுத்ஜிஹ்வன் - ராவணன் தூதருளொருவன், மஹாமாயாவி, சீதை, அசோகவனத்திலிருந்தும் ராவணனதுஜாலங்களுக் குடன்படா திருந்ததைக் கண்ட இவன் ராம லக்ஷமணர்களுடைய தலைகளைக் கொய்துவந்தேனென்று பொய்த்தலைகள் செய்து காட்டி, இனியாயினும் ராவணன் கருத்துக் கிணங்கமாட்டாயா வென்றுகேட்டவன், சூர்ப்பணகைநாயகன் இவன் காலகேயவமிசத்தவன், ராவணன் திக்குவிஜயத்துக்குச் சென்றபோது உடன்சென்ற இவனைகாலகேயயுத்தத்திலே தனது மைத்துனனென்றறியாது கொன்று மீண்டபோதுதன் செயலையுணர்ந்து சூர்ப்பணகையைத்தேற்றி, அதற்காக ஜநஸ்தாநத்தை நிருமித்து அங்கே அவளையிருந் தாசு செய்யுமாறு செய்தான்.

விநதம் - தொனி, வளைவு.

விநதன் - சீதையைத் தேடிவரும்பொருட்டுச் சுக்ரீவனால் அனுப்பப்பட்டதூதருளொருவன்.

விநதாசூனு - அருணன், கலுழன்.

விநதி - மரியாதை, வணக்கம், வளைவு

விநதை, வினதை } சத்தபுரியிலொன்று தக்ஷப்ரஜாபதிமகள், காசிபன் மனைவியரி லொருத்தி, இவன் கருடன்தாய்.

விநயம் - கட்டளை, தருமம், நன்னடை, மரியாதை, வணக்கம்.

விநயனம் - கட்டளை, நன்னடை, மரியாதை, வணக்கம்.
விநாசகம் - அழிப்பு.
விநாசகர் - அழிப்போர்.
விநாசகன் - மூக்கறை.
விநாசம், விநாசனம் - அழிப்பு, கொலை, நாசம்.
விநாசன் - கொலைசெய்வோன்.
விநாசி - அழிப்போன்.
விநாடி, விநாடிகை - சாலநுட்பம்.
விநாயகசட்டி - கார்த்திகையிற் கார்த்திகைகழித்த இருபத்தோராநாள் வருஞ்சட்டி.
விநாயகம் - தடை, பெருநாயகம்.
விநாயகன் - விக்கிநேசுவரன், கருடன் அருகன், குரு, புத்தன்.
விநாழிகை - நாழிகையறுபதிலோர் பங்கு, பங்கிடல்.
விநிகதம் - உற்பாதம்.
விநிகமம் - நியாயத்தால் வந்ததீர்ப்பு.
விநிச்சுவாசம் - பெருமூச்சு.
விநிபாதம் - இகழ்ச்சி, இக்கட்டு, மரணம், விழுதல்.
விநிவயம் - அடகு, மாற்றுதல்,
விநியோகம் - தடை, நியமிப்பு, பிரிதல் விடுதல்.
விநிர்ப்பயம் - அச்சமின்மை.
விநீதம்-அழகு, அனுப்புதல், கற்பு, சாந்தம், தண்டிப்பு, நடத்துதல், நன்னடை, படியப்பண்ணுதல், மரியாதை.
விநீதன் - தண்டிக்கப்பட்டவன், விநயமுள்ளவன்.
விநீதை - கற்புடையாள்.
விநீயம் பாவம்.
விநோதம் - அவா, அழகு, சந்தோஷம் தள்ளுதல், தொழில், பகை,மகத்துவம், விளையாட்டிற்பொழுதுகழித்தல்.
விநோதர் - பொழுதுகழிப்போர்.
விந்தஸன் - சந்திரன்.
விந்தம் - ஒரெண், குதிரைப்பற்பாஷாணம், விந்தியமலை, மாணிக்க வகையுளொன்று.
விந்தாம் - கற்கடகபாஷாணம்.
விந்தர் - இடையர்.
விந்தாக்கினி - காமாக்கினி.
விந்தாநுவித்தர் - ஜயத்ஸேநனுக்கு வசுதேவன்தங்கையாகிய ராஜாதிதேவியிடத்திற் பிறந்த புத்திரர்.
விந்தாரற்கல் - ஈரற்கல்.
விந்திபகூடன் - அகத்தியன்.
விந்தியபர்வதம் - விந்தமலை, இது தக்ஷிணோத்தரதிசைகளைப் பிரிக்கும் எல்லைமலை, அகத்தியரால் பாதாளத்தில் அழுத்தப்பட்டமலை.
விந்தியம் - அட்டகுலமலையினொன்று.
விந்தியவாசி, விந்தியவாசினி - கோட்டம், துர்க்கை.
விந்தியாவலி - புத்திரன், வாணாசுரன்.
விந்தியாவணி - பலிச் சக்ரவர்த்தியின் மனைவி.
விந்து-குறி, தாது, நீர்த்துளி, நெற்றித்திலகம், புருவமத்தி, புள்ளி,வட்டம்.
விந்துசாலம் - யானைமுகப்பொறி.
விந்துசித்திரகம் - மான்.
விந்துதந்திரம் - சூதாடுகவறு, சூதாடுபடம்.
விந்தை - ஆச்சரியம், ஓரகத்தி, துர்க்கை விற்பன்னம், வீரலட்சுமி.
விந்தையம் - செங்கத்தாரி.
விபகரித்தல் - வழக்குச்சொல்லல்.
விபகலனம், விபகலிதம் - கழித்தல்.
விபகாரம் - வியவகாரம்.
விபக்கம் - பகை.
விபக்கன் - பகைவன்.
விபங்கம்-உடைத்தல்,பிரித்தல், வளைத்தல்.
விபசாயம் - பயிர்த்தொழில், கிருஷி.
விபசாரம் - வியபிசாரம், வேசித்தனம்.
விபசாரி - வியபிசாரி.
விபசியம் - அறிவு.
விபச்சிந்து - பண்டிதன்.
விபஞ்சி, விபஞ்சிகம் - வீணை.
விபஞ்சிகை - பொழுதுபோக்கு, விளையாட்டு, வீணை.
விபட்சதை - எதிரிடை யுத்தம்.
விபட்சதை - பிறபட்சம், விலக்கு.
விபட்சன் - எதிரி, சத்துரு.
விபணம் - விலை.
விபணி-கடை, கடைவீதி, வியாபாரி, வியாபாரப்பண்டம், விலைச்சாக்கு.
விபண்டகன் - இவன்பிரமசரியவிரதத்தையநுட்டித்துவரும்போதுஒருநாள்

ஒரு தடாகத்திலே நீராடிநிற்கையில் அங்கே ஊர்வசிவர, அவளைக்கண்டு மோகித்து தனது வீரியத்தை அத்தடாக நீரில்விட்டான், அதனை ஒரு பெண்மான் நீரோடருந்திக் கருப்பமடைந்து ருசிய சிருங்கன் என்னும் குமாரனை யீன்றது

விபண்ணகம் - பலாசு

விபதம் - கெடுவழி, கைக்காணிக்கை.

விபதி - குருவி.

விபதை - தரித்திரம்.

விபத்தம் - காஞ்சிரை, பஞ்சம்.

விபத்தன்-அபாக்கியன், கிலேசமுடையோன், விகாரி, வேறுபட்டோன்.

விபத்தி-அபாக்கியம், கலக்கம், குற்றம், தரித்திரம், துன்பம், பங்கு, மரணம், வேதனை, வேற்றுமை.

விபத்து-அபாக்கியம், ஆபத்து,கலக்கம், துன்பம்.

விபந்நம் - நஷ்டம், பாம்பு.

விபம் - செல்வம், மேலானதத்துவம், மேன்மை.

விபரம் - விரிவு.

விபரிணாமம் - மாறுதல்.

விபரித்தல் - விரித்துச்சொல்லல்.

விபரியயம்-அழிவு,எதிரிடை, கோபக்குணமாறுதல்.

விபரியாசம் எதிரிடை, மாறு.

விபரீதை - எதிரிடை.

விபரீதம் - அதிசயம், மாறுபாடு.

விபரீதவிலக்கு - ஓரலங்காரம் அது காரணத்திற்கியையாது விபரீதமாய்க் காரியங்கூறி விலக்கிக்காட்டல்.

விபரீதவுணர்ச்சி - ஒன்றையொன்றாக அறிதல்.

விபரீதவுவமை - தொன்றுதொட்டு வழங்கு முவமையைப் பொருளாக்கியும் பொருளை யுவமையாக்கியு முரைப்பது (உ-ம்) கண்போர்பிறழுங் கயல்.

விபலம்-காலநுட்பம், பயனின்மை.

விபலாயனம் - பறத்தல்.

விபலீகரணம் - தடுத்தல், பயனில்செய் [கை.

விபவ - இரண்டாவதுவருஷம்.

விபவம் - சாதல், செல்வம், பொருள்,மகத்துவம், வரம், வாழ்வு.

விபவனம்-கீழ்ப்படிவு.

விபன்னம் - குற்றம், மெலிவு.

விபன்னன் - மெலிந்தோன்.

விபாகம்-உருசி,சமைத்தல்,சீரணித்தல், செய்பலம், செல்வம், தரித்திரம்,தற்செயலாய்வருவது, பக்குவம், பங்கு, பழுத்தல், போகம், மாறுதல், வேறுபாடு.

விபாகரன்-சூரியன், தீக்கடவுள்.

விபாசம் பந்தமோசனம்.

விபாசன் - ஒருமுநி, பற்றற்றவன்.

விபாச்சியத்துவம் - பகுக்கத்தக்கது.

விபாச்சியம் - பகுதி, பகுப்பு.

விபரசை - பிரகாசம்.

விபாடம் - அம்பு

விபாடிகை-ஒரு குட்டநோய்.

விபாதம் - உதயகாலம்.

விபாதனம் - அழித்தல்.

விபாதிகை - நொடி, பித்தவெடிப்பு.

விபாவசன் - விபாகரன், தநுவின்புத்திரருளொருவன், முராசுரன் புத்திரன், இவன் கிருஷ்ணமூர்த்தியால் கொல்லப்பட்டவன்,ஒருபிராமணன், இவன் தனது தம்பியால் கூர்மமாகச் சபிக்கப்பட்டுக் கருடனால் பக்ஷிக்கப்பட்டவன்.

விபாவசி மந்தாரன் என்னும் வித்யாதரன்மகள் இவள் சுவரோசிக்கு மிருக பக்ஷிஜாதிகளுடைய பாஷைகளையறியும் வித்தையைக் கற்பித்து அவனுக்கு மனைவியானவள்.

விபாவசு சந்திரன்,சூரியன,தீக்கடவுள்.

விபாவரி இராத்திரிசங்கம்வாங்கி,வேசி,

விபாவனம் - ஆராய்வு, தீர்த்தல், பகுத்தறிவு, தரிசனம், பாவிக்கப்பட்டது.

விபாவனை-ஆராய்வு, ஓரலங்காரம் அது உலகறிகாரண மில்லாதிருப்பக் காரியம் பிறத்தலைச் சொல்வது, மட்டுக்கட்டுதல்

விபாவன் - சிநேகிதன்.

விபாவியம் - சிந்தித்தல்.

விபினசரன் - வேடன்.

விபினமிருகம் - காட்டுமிருகம்.

விபினம் - காடு.

விபீடன்புத்தி - ஒருநூல்,

விபீடணன - இராவணற்கிளையோன்.

விபீதகம் - தானறிமரம்.

விபீஷணன் - விசிரவசுவுக்குக்கைகேசியிடத்திலே பிறந்த மூன்றாம்புத்ரன்,

இராவணன்தம்பி, இவன் சீதையை இராமனிடத்திற்கொண்டுபோய் ஒப்பித்து விடும்படியாகப் பலவாறு போதித்தும் அவன் கேளாமையால் அவனை விட்டுப்போய் ஸ்ரீராமபிரானைச்சரணமடைந்தவன், இவனுக்கு ஸ்ரீராமர், அப்யஸ்தங்கொடுத்து இராவணசங்காரத்தின்பிறகுஇவனை இலங்கைக்கரசனாக்கினார். இவன் சிரஞ்சீவிகளில் ஒருவன், இவன்பொருட்டாக ஸ்ரீரங்கநாதர் தென்முகமாக அறிதுயில் செய்கின்றனர் என்பது பிரத்தியக்ஷாநுபவம்.

விபு-ஆகாயம், ஆன்மா, எசமான், இடம், கடவுள், கருத்தா, சிவன், தலைவன், நித்தியம், நேரம், பரிபூரணம், பிரமன், விட்டுணு, வேலைக்காரன். சத்தியகேதுபுத்திரன், சுரபுதந்தை, பப்பிருபுத்திரன்.

விபுசத்துரு-தண்ணீர்விட்டான்யோன்

விபுணன்-சிறந்தோன், வெற்றியுடை

விபுதர்-அறிஞர், மிகக்கற்றோர், வானோர்.

விபுதர்கந்தம் - நெய்ச்சட்டி.

விபுதர்கோன்
விபுதர்தலைவன்
விபுதர்பிரான்
விபுதர்பெருமான் } தேவேந்திரன்.

விபுதன்-சந்திரன், தேவன், பண்டிதன்.

விபுதாநன்-ஆசாரியன், தேவன், பண்டிதன்.

விபுதுவம் பரிபூரணமாயிருத்தல்.

விபுதை-தத்துவம்.

விபுத்தன் - நன்மாணாக்கன்.

விபுலம்-அகலம், இமயகிரி, பூமி, பெருமை, மேருகிரி, விரிவு.

விபுலன் பலராமன்தம்பி, சலகன்தம்பியருளொருவன், மேரு, இமயம்.

விபுலரசன் - கரும்பு

விபுலை - பூமி.

விபூஷணம்
விபூடணம் } அலங்காரம், ஆபரணம்.

விபூடை - அலங்காரம், அழகு, பிரபை.

விபூதி - அஷ்டைசுவரியம், உத்தமகுணம், குற்றம், கொடுமை, செல்வம், தசை, பெருமை திருநீறு. சைவசின்னங்களுள்ளே மேன்மையாகிய திருநீறு. இது ஐசுவரியத்தைத் தருவதும் பாவநாசஞ்செய்வதும் சகல துக்கங்களையும் நீக்குவதுமாகிய குணங்களையுடையது. இக்காரணம்பற்றி இது விபூதி ரக்ஷைமுதலிய பெயர்களைப் பெறும் விபூதியென்பதன் பொருள், அரன் வலி.

விபூயம் - முஞ்சிப்புல்.

விபேகம் - புத்தி, வல்லபம்.

விபேகி - சூரியன்.

விபேகம் - எதிர், கலக்குதல், பிரித்தல், வன்மம்.

விபேதனம் - பிரித்தல்.

விபை - அழகு, கிரணம், பிரபை.

விபோதம் - புத்தி.

விப்பிரகாசியம்-ஆகாயவுருவங்காணல்.

விப்பிரகாதகன் - பிராமணகாதகன்.

விப்பிரத்துரோகி பிராமணத்துரோகி.

விப்பிரகாரம்-எதிரிடை, தீங்கு, நிந்தை, பொல்லாங்கு.

விப்பிரகிருதி - நிந்தை, பதில்.

விப்பிரசித்தி-இவன் காசிபனுக்குத்தநுவினிடத்திற் பிறந்தபுத்திரன், திதிபுத்திரியாகியசிம்மிகையென்பவள் இவன் மனைவி, இவன் புத்திரர், ராகு, கேது, நமுசி, வாதாபி, இல்வலன், நரகன்; சுவர்ப்பாநன், புலோமன், வக்த்கயோதி முதலியோர்.

விப்பிரதகம் - வற்றல்.

விப்பிரபம் - ஒளியின்மை.

விப்பிரதிகாரம்-எதிரிடை, பதில், மாறு.

விப்பிரதிசாரம்-கோபம், சீர்ப்படுதல், பகை, பொல்லாங்கு, விசனம்.

விப்பிரதித்துவம் - தடை, விலக்கியது.

விப்பிரமம்-அழகு, இலீலாமோசனவெறுப்பு, குற்றம், பிரமை, மோகப்பிணக்கு, மோகலீலை.

விப்பிரம்-அழகு, ஐயம், சந்தேகம், சீக்கிரம், சுழலுதல், தவறு, பிழை.

விப்பிரயோகம் - ஒவ்வாமை, பஞ்சபாணவத்தையின்ஒன்று அதுவெய்துயிர்த்திரங்கல், பிரிதல்.

விப்பிரர் - பார்ப்பார்.

விப்பிரலம்பம் - அணைப்பு, சண்டை, பிரிவு, தலைவன்றலைவி பிரிதல்.

விப்பிரலாபம் - பயனற்றபேச்சு, வாக்குவாதம்.

விப்பிரவமிசம் - பிராமணசந்ததி.

விப்பிரவாசம் - பரதேசவாசம்.

விப்பிரவாசனம் - ஊருக்கப்புறப்படுத்தல்.

விப்பிரன்-பிராமணன். சிஷ்டிபுத்திரு ளொருவன்.
விப்பிராந்தசீலம் - குரங்கு, சூரியசந்திர வட்டம்.
விப்பிராந்தி-கலக்கம், சுழலுதல், தவறு.
விப்பிராஜன் - சுக்ருதி புத்திரன்.
விப்பிரியம் - மீறுதல்.
விப்பிலம் - தேசோபத்திரவம்.
விப்பிலவம் - அநியாயப்போர், அநீதக் கொள்ளை, கலக்கம், சீக்கிரம், பொல்லாங்கு, வல்லமை.
விப்பிலீகரணம் - தடுத்தல், பயனில்செய்கை.
விப்புருதி - ஒருசிலந்தி.
விப்ரகாரம் - பற்கடித்தல்.
விப்ரப்ரியம் - முருக்கமரம்.
விப்ரதியோகம்- பிரிவு.
விமதன் - பகைவன்.
விமதி - எண்ணப்பேதம், வெறுப்பு.
விமயம் - பொருண்மாற்றல்.
விமரிசம், விமரிசனம், விமரிமை, விமர்ச்சம், விமர்ச்சநம் - ஆராய்வு, கேள்வி, பாவனை, யூகம்.
விமர்த்தல் - அழித்தல், தேய்த்தல்.
விமர்த்தனம் - அடக்குதல், அமர்த்துதல், அரைத்தல், அழித்தல், கிரகணம், தூளாக்குதல், தேய்த்தல், வாசனை,
விமர்த்தார்த்தம் - கிரகணஸ் பரிசனகாலந்தொடங்கி மோசனம்வரைக்கும்.
விமலதானம் - ஈசுவரப்ரீதியாய்ச் செய்யுந்தானம்.
விமலமணி - பளிங்கு.
விமலம் - அழகு அழுக்கின்மை, சிவாகமமிருபத்தெட்டினென்று, பொன் மலாம் வெண்மை.
விமலன் - கடவுள், சிவபிரான்.
விமலாகாசம் - ஞானாகாசம்.
விமலாத்மகன் - மலமில்லாதவன், நிர்மலன்.
விமலார்த்தம் - மலமின்மை, நிர்மலம்.
விமலி, விமலை - இலக்குமி, சரச்சுவதி, துர்க்கை, பரிசுத்தவாட்டி, பார்ப்பதி, விந்தை.
விமாதிரு - சிறியதாய்.
விமாமிசம் - அசுத்தபோசனம்.
விமார்க்கம்-துன்னடை, விளக்குமாறு.
விமானம்-அவசங்கை, அளவு, உரோகணி, இராசமாளிகை, எழுநிலைமேடை, ஒருவகைத்தேர், குதிரை, தேவர் கோயில், தேவலோகம், வாகனம்.
விமுகம் - பஹிர்முகம்.
விமுகிதை - எதிரிடை.
விமுக்தம் - விமோசநம், நன்றாய்விடப்பட்டது.
விமுத்தி - பிரிவு முத்தி.
விமுத்திரம் - தளிர், பூந்தளிர்.
விமூட்சஞ்ஞம் - அறிவின்மை.
விமோகனம் - அனுப்புதல்.
விமோசனம் - ஒழிதல், நிவிர்த்தி, விட்டு நீங்கல்.
விமோட்சணம் - விடுதல்.
விமோட்சம் - விமுத்தி.
விம்ஸகம் - இருபதுகூடியது.
விம்ஸதி - இருபது.
விம்பகம் - விம்பம்.
விம்படம் - கடுகுச்செடி.
விம்பபூசை - திருவுருவாராதனை.
விம்பப்பிரதிவிம்பபாவம் - விம்பத்திற்கும் பிரதிவிம்பத்திற்குமுடையது.
விம்பம் - உருவம், ஒளி, கொவ்வை, சந்திரசூரியர்களின் மண்டலம், சாயை, சாலங்கபாஷாணம், சிவாகமமிருபத்தெட்டினொன்று, நிழல், பலண்டுறு கடாஷாணம், வட்டம்.
விம்பிகை - கோவைக்கொடி.
விம்பித்தல் - சாயைவீசுதல்.
விம்பு - கழுகு.
விம்மல் - அழுதல், இறுகிப்பொலிதல் ஏங்கல், ஒலித்தல், கலக்கம், சந்தோஷம், பருத்தல்.
விம்மிதம் - அச்சம், அதிசயம், உடல்.
விம்முதல் - விம்மல்.
விய - இருபதாவதுவருஷம்.
வியக்கம் - பெருமை.
வியக்கம் - குடிக்கூலி.
வியத்தம் - வியத்தம்.
வியங்கம் - தவளை, பிறவிமறு.
வியங்கியம் - குறிப்பு, குற்றுவார்த்தை.
வியங்கோள், வியங்கோள்வினைமுற்று - ஐம்பான் மூவிடங்களிலு மியலும் வினை அது க-ய-ர்-அல்-அட்டு என்னும் விகுதிகளைப் பெற்றுவரும்.

வியசநீயன் - வெறிகாரன்.
வியசனம்-அரிட்டம், உபத்திரவம்,காற்று, குற்றம்.
வியஞ்சகம் - அபிநயம், எத்து.
வியஞ்சனம்-அடையாளம், ஒற்றெழுத்து, தாடி, பருப்புத்திரளை, யோனி, கறி.
வியடம்பகம் - ஆமணக்கு.
வியட்டிரூபம் - தூலரூபம்.
வியதம் - வேதனை.
வியதிதன் - துக்கிதன்.
வியதிபாதம் - கலகம், துன்னிமித்தம், நித்தியயோகத் தொன்று.
வியதிரேகம் - எதிர்மறை, விகற்பம், விழுதல், வெதிரேகம்.
வியதீகரம் - அபாக்கியம் கலகம்
வியதீகாரம் - மாறு.
வியதீபாதம் - நித்தியயோகத்தொன்று.
வியதை - கஷ்டம், வேதனை.
வியத்தகங்கை - கங்காநதி.
வியத்தபதம் - தனிச்சொல்.
வியத்தம் - அத்தாட்சி, அறிவு, எதிர், கலக்கம், தரிசிக்கத்தக்கது, தெளிவு, பிரதானம், மூலம், விளக்கம்.
வியத்தல் - அதிசயப்படல், துதித்தல், நன்குமதித்தல், பாராட்டல்.
வியத்தி - காரியம், வெளிப்படுதல்.
வியத்திகை - பெருமை.
வியத்தியாசம் - ஓரிடத்துப் பிரிந்தோரிடத்துறல், வித்தியாசம்.
வியத்பூதி - அந்தகாரம்.
வியநெறி - பெரும்பாதை.
வியங்யரம் - பிசாசம்.
வியபதேசம் - அவநாணயம், சாட்டு.
வியபரோபணம் - கிருமூலம்.
வியபிசாரம் - தவறு, தூர்த்தம்.
வியபிசாரி - வேசி.
வியபேட்சை - சாதனை, சேர்மானம், வரவுகாத்திருத்தல்.
வியப்பித்தல் - அதிசயப்படுத்தல்.
வியப்பு - அதிசயம், மெய்ப்பு, வியப்பைக் கூறுமலங்காரம்.
வியமம் - துக்கம், வியாமம்.
வியம் - அகலம், உடல், ஏவல், செலவு, பறவை, பெருமை.
வியயம் - செலவு.
வியர்த்தம் - பயனின்மை.
வியர்த்தல் - சினக்குறிப்பு, வேர்த்தல்.
வியர்ப்பு - சினம், வேர்வை.
வியர்வு, வியர்வை - வேர்வை.
வியலிகை - பெருமை.
வியலிடம் - அகலம்.
வியலீகம் உபாதி,துற்செய்கை,மீறுதல்
வியலூர் - செங்குட்டுவனால் வெல்லப்பட்டவூர்களுளொன்று, வீயலூர்எனவும் வழங்கும்.
வியல் - அகலம், காடு,பெருமை,விரிவு.
வியல்கனு - திப்பிலி.
வியல்பூதி - வில்வம்.
வியவகாரம் பிணக்கு, முறைமை, வழக்கு, வியாபாரம், விநோதம்.
வியவகாரவிதி - நியாயப்பிரமாணம்.
வியவன் - ஏவுவான், திண்ணியன், வழிச்செல்வோன்.
வியனிலையுருவகம் - ஓரலங்காரம், அது ஒன்றனங்கம் பலவற்றையு முருவகித்து முருவகியாது முரைப்பது.
வியனிலைமருட்பா - கைக்கிளை வெண்பா முதலாசிரியமீறாக வருமிடத்தாசிரியவடி யிரண்டேயா யவற்றுளீற்றயலடி யொவ்வாது வருவது.
வியனுநாதம் - எதிரொலி.
வியனுலகு - தேவலோகம்.
வியன் - அதிகம், ஒற்றை, பெருமை.
வியன்சமன்சங்கலிதம் - ஒருசங்கலிதம்.
வியன்சமன்பார்த்தல் - பெருமையுமொப்புங்குறித்தல்.
வியன்மணி - சூரியன்.
வியாகதம் - கலங்கினது.
வியாகம் ஒருநட்சத்திரம், காற்று, விவாகம்.
வியாகரணம் - இலக்கணம் அது வேதாங்கத்தொன்று, கலைஞான மறுபத்து நான்கினுமொன்று, விபரம்.
வியாகன் - குமரன்.
வியாகாதம் - அழிவு, இடையூறு,தடை நித்தியயோகத்தொன்று.
வியாகாரம் - அவலட்சணம், சத்தம், சருவுதல், பேச்சு, மாறுதல்.
வியாகிருதி - வியாகாரம்.
வியாகிருதம்-மாறு,விபரம், பிரிக்கப்பட்டது.
வியாகுலம் - கலக்கம், துக்கம்.
வியாகுலித்தல் - துக்கப்படல்.
வியாகூதி - எத்து, மாயம்.
வியாக்கியானம் - உரை, விபரம்.

வியாக்கியானன்
வியாக்கியனி } உரைகாரன்.

வியாக்கியாதா - வியாக்கியானன்.

வியாக்கிரகதி - தாளகதியைந்திலொன்று.

வியாக்கிரதலம் - திருப்புலீச்சரம், ஆமணக்கு.

வியாக்கிரநகம் - புலிதொடக்கி.

வியாக்கிரநாயகன் - நரி.

வியாக்கிரபாதர் - மத்தியந்தி நவமுனிவர் குமாரர், இவர் பூர்வநாமம் பாலமுனிவர், இவர் சிவபூசையின் பொருட்டு க்கொய்யும் மலர்கள் பகற்காலத்திலே வண்டுகளால் எச்சிற்படுகின்றனவேயென்றுவருந்தி, சிவனிடத்திலே புலிக்கண்ணும் புலிக்காலும் வேண்டிப்பெற்றுத்தில்லைவனத்திலே இராவிற்சென்று மலர்கொய்துவைத்துப் பகல்முழுதும் பூசைசெய்பவர், இக்காரணம் பற்றியே இவர் வியாக்கிரபாதர் என்னும் பெயர்பெற்றார். இவர் சிதம்பரத்திலே கனகசபையிலே சிவபெருமான் செய்கிற ஆனந்தத் தாண்டவத்தைப் பிரத்தியக்ஷமாகக் கண்டவர்.

வியாக்கிரபாதன் - கௌதமரிஷி, புலிப்பாணி.

வியாக்கிரபுச்சம் - ஆமணக்கு.

வியாக்கிரபுரம் - சிதம்பரம், புலியூர்.

வியாக்கிரபுரேசர் - திருப்பெரும்புலியூரில் கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.

வியாக்கிரமம் - ஆமணக்கு, உத்தமம், சிறந்தசொல், புலி, மேன்மை.

வியாக்கிரம்-சிறந்தசொல், புலி, மேன்மை.

வியாக்கிராசனம்-புலித்தோலாசனம்.

வியாக்கிராசியம் - பூனை.

வியாக்கிரி - கண்டங்கத்தரி.

வியாசங்கம்-கலக்கம், சேர்த்திக்கை, பிரிவு.

வியாசங்கிதை - ஓரலங்காரம்.

வியாசம்-உவமை, தந்திரம், தருமநூல், பதினெட்டிஞென்று, தாரணம், கிபம், பகுத்தறிதல், பொல்லாங்கு, மாயம், முகாந்தரம், விரிவு, வேஷம்.

வியாசர்-கிருஷ்ணத்வைபாயநர், பராசரர் சத்யவதியைக் கூடிப்பெற்ற புத்திரர், வேதங்களை வகுத்த காரணத்தால் வேதவியாசர் எனப்பெயர்பெற்றனர். வேதாந்தசூத்திரஞ்செய்தவரும் மஹாபாரதத்தை விநாயகரைக்கொண்டு எழுதுவித்தவரும் இவரே, இவர்புத்திரர் சுகர், இவர் கங்காத் வீபத்திலேபிறந்தமையால் த்வைபாயநர் என்னும் பெயர்பெற்றனர். (த்வீபம் - தீவு அநயர் - அதிற்பிறந்தவர்) இவர் புராணங்களையும் பதினெட்டாக வகுத்தனர். பாண்டு திருதராஷ்டிரன் என்பவர்களுக்குத் தந்தையுமிவரே.

வியாசன் - வேதவியாசன்.

வியாசை - இமயமலைக்குத் தெற்கே உற்பத்தியாகி சதத்துருநதியிற் கலக்கிறவோர்நதி, இது புத்ரசோகத்தால் வருந்திய வசிஷ்டரது பாசத்தை வியோசநம் செய்தமையால் இப்பெயர் பெற்றது.

வியாச்சியம் - வழக்கு.

வியாடம் - இலையுணவிலங்கு, பாம்பு.

வியாதம் - உபத்திரவம், துயரம், வேறுபாடு.

வியாதன்-கீழ்மகன், வியாசன், வேடன்.

வியாதாகாரம்-தயாவிருத்தி பதினொன்கிஞென்று அது துயரகற்றல்.

வியாதாமம்
வியாதாவம் } இடி, குலிசம்.

வியாதானம் - வாயில்.

வியாதி - கோட்டம், நோய், கருஷன் மகன்.

வியாதிகாதம் - கொன்றை.

வியாதிசாந்தி - வியாதிதீர்த்தல்.

வியாதுதம் - அசைவுள்ளது.

வியாத்தம்-உறுதி, கலந்திருப்பது, கீர்த்தி, சூழ்வு, நிறைவு, வியாத்தியோடு கூடியது, விரிவு.

வியாத்தி - பெறுதல், வியாபித்தல்.

வியாபகத்துவம் - நிறைந்திருத்தல்.

வியாபகம் - எங்குமிருப்பது, சாதாரணம், சுயதன்மை, வியாபித்தல்.

வியாபனம் - வியாபகம்.

வியாபாதம் - கேடுநினைத்தல், வஞ்சகம்.

வியாபாதனம் - கொல்லல்.

வியாபாரம்-அப்பியாசம், செட்டு, தொழில்.

வியாபாரி - செட்டுச்செய்வோன், தொழிற்படுவோன்.
வியாபி - எங்குநிறைந்தது, வியாத்தி.
வியாபித்தல் - எங்குமிருத்தல்.
வியாபிருதன் - மந்திரி.
வியாபினி - வியாபித்திருப்பது.
வியாபுத்தி - வருந்தல்.
வியாப்தம் - வியாக்தம்.
வியாப்தி - வியாத்தி.
வியாப்பித்தல்-சூக்குமமாய்க் கலந்திருத்தல்.
வியாப்பியம்- அருத்தாபத்திப்பொருள், காரணம், கோட்டம், வியாத்தியையுடையது.
வியாமம் - இக்கட்டு,இளைப்பு,ஒளி,சாந்தகுணம், நான்குமுழஅளவு நிந்தை புகை, மூஞ்சு, வருத்தம், வழி.
வியாமனம் - அங்க சேட்டையின்மை, மதியாமை.
வியாயோகம் - நாடகவகை பத்தினொன்று.
வியாவகாரிகன் - மந்திரி.
வியாவத்தம் - சுழலல், சூழ்தல்.
வியாவத்தனம் - வியாவத்தம்.
வியாவபாஷி - வாக்குவாதம்.
வியாவிருதி - புறம்பு, மறைவு
வியாவிருத்தி - தள்ளுதல், தெரிதல், புகழ்ச்சி, மறைத்தல்.
வியாழகேந்திரம்-வியாழவீதியின்மத்தி.
வியாழதிசை வியாழனுக்குச் செல்லுங்காலம்.
வியாழம் - ஒருகிரகம், ஒருகிழமை, தேவகுரு.
வியாழவட்டம் - வியாழத்தின் பன்னிருவருடச்சுற்று.
வியாழன் - வியாழம்.
வியாளகம் - வியாளம்.
வியாளக்கிராகன் } குறவன், பிடாரன்.
வியாளக்கிராகி
வியாளகேதரன் } துரியோதநன்.
வியாளத்துவசன்
வியாளம் - கெட்டயானை, பாம்பு, புலி.
வியாளபுக் - மயில்.
வியாளாசனம் - காற்று.
வியாளாயுதம் - புலிதொடக்கி.
வியானபூமி - மயானபூமி.

வியானம்-நான்குமுழ அளவு, மயானம்
வியானன்-தசவாயுக்களினொன்றுஅது சரீரமுழுதும் வியாபித்திருப்பது.
வியுட்டம் - நாள், பலன், வைகறை.
வியுட்டி - கீர்த்தி, பலன், வத்திப்பு.
வியுற்பத்தி-சொற்புணர்ச்சியிலக்கணம்
வியுஷ்டி-டஷ்பாரணனுக்குத்தோஷையிடத்துப் பிறந்த புத்திரருளொருவன், இவன் மனைவிபுஷ்கரிணி, இவன்புத்திரன்சர்வதேஜஸ௲பிரதோஷன் நிசிதன் என்பவர், இவன் தமையன்மார்.
வியூககாரன் - தையற்காரன்.
வியூகபங்கம் - அணிகுத்தல்.
வியூகபேதம் - அணிமுறிதல்.
வியூகம் - உடல், கூட்டம், படைவகுப்பு, விலங்கின்கூட்டம்.
வியூகனம் - ஒழுங்கு, சரீரக்கட்டு.
வியூட்டி - அணி, ஒழுங்கு.
வியோகம் - பிரிதல், விடுதல்.
வியோகி - சக்ரவாகம்.
வியோடம் - திரிகடுகம்.
வியோமகேசன் - சிவபிரான்.
வியோமசாரி - இருடி, தேவன், பட்சி பார்ப்பான்.
வியோமசாரிபுரம் அரிச்சந்திரன் பட்டினம்.
வியோமதூமம் - முகில்.
வியோமமஞ்சரம் } கொடி.
வியோமமண்டலம்
வியோமபலம் - மழை.
வியோமமூதம் - முகில்.
வியோமம - ஆகாயம், கோவில், நீர்.
வியோமரூபி - அரூபி.
வியோமன்-கம்ஸன் சேநாபதி, இவன் திருவாய்ப்பாடியிலே கிருஷ்ணமூர்த்தியாற்கொல்லப்பட்டவன், தசாருகன் புத்திரன்.
விரககதியன் - விரேகி, வீம்பன்.
விரகதம் - வெள்ளைச்சாரணை.
விரகதாபம் - காமவருத்தம்.
விரகநோய் - காமவிகாரம்.
விரகம் - காமநோய், தணித்தல், பிரிவு, புலவி விடுதல்.
விரகவேதனை - காமநோய்.
விரகறிதல் - பிராயமாதல்.

விரகாங்கன் - ஓரரசன், இவன், புத்திரர் ஐவரும் வேதத்திலுள்ள சிலசூக்தங்களுக்குக் கர்த்தர்.
விரகிணி சம்பளம், தலைமகற்பிரிந்தாள்.
விரகிதம் } அழிவு, உச்சாகம், உணர்
விரகு } வு, உபாயம், கதி, சமர்த்து, புத்தி.
விரக்தன் - விரத்தம்.
விரக்தன் - பற்றற்றவன்.
விரசநம் - அச்நி, ஓரரக்கன், சந்திரன், சூரியன்.
விரசம் - நிந்தை.
விரசனம் - இணைத்தல், உண்டாக்கல், போதல்.
விரஜன் - ஜாதகர்ணன், சேஷன், துவஷ்டா புத்திரன்.
விரசாகீரம் - தொழுவம்.
விரசுதல் - நெருங்குதல்.
விரஜை - பரமபதத்திப் புறத்தியாறு.
விரச்சனம் - கரவாளம், வெட்டுதல்.
விரஞ்சன் - பிரமன்.
விரடம் - புயம்.
விரட்டுதல் - மிரட்டுதல்.
விரணசம் - ஆமணக்கு.
விரணகிருது - சேங்கொட்டைமரம்.
விரணம் - ரணம், புண், விழல்.
விரணம்போக்கி - ஆடுதின்னாப்பாளை.
விரதகற்பம் }
விரதகுச்சம் } ஒருநூல்.
விரதமஞ்சரி }
விரதங்காத்தல் - நியமம்பேணல்.
விரதசங்கிரகம் - விரதத்திற்குச் சங்கற்பித்தல்.
விரதநிண்ணயம் - விரதவிதி.
விரதநியமம் - தீட்சித்தல்.
விரதநிறுத்தல்-விரத நிறைவேற்றுதல்.
விரதபங்கம் - விரதபின்னம்.
விரதம் - ஆணை, காமநோய், தவம் இது புண்ணியமேழினொன்று, தின்றல், பொய், வேறுபாடு.
விரதயம் - ஒளி.
விரதர் - தவத்தோர், துறவோர்.
விரதலோபனம் - சங்கற்பமீறுதல்.
விரதவுத்தியாபனம் - விரதமுடித்தல்.
விரதன் - யோகி.
விரதாசரணம் - விரதானுட்டிப்பு.
விரதாதேசம் - உபவீதம்பூணல்.
விரதாநுஷ்டாநம் - விரத மேற்கொள்ளல்.
விரதி - ஒழிவு, துறவி, துறவு, முறை.
விரதோபவாசம் - உபவாசம், விரதானுட்டிப்பு.
விரத்தம் - துறவு, வெறுப்பு.
விரத்தன் - விரதி.
விரத்தி - துறவு, விருத்தி.
விரயம் - பேதி, மிகுசெலவு.
விரலணி - மோதிரம்.
விரலம் - தூரம், நெகிழ்வு, நெற்றி, புளித்த தயிர்.
விரலேறு - ஒருவகைத் தோற்கருவி.
விரல் - அங்குலி.
விரல்நொடி - நாயுருவி.
விரவலவர் - பகைஞர்.
விரவலர் - கலத்தல், பொருதல்.
விரவி - வெள்ளரி.
விரவு - கலப்பு, விரவென்னேவல்.
விரவுதல் - அணுகல், கலத்தல்.
விரவித்திணை - பொதுத்திணை.
விரவுப்பெயர் - பொதுப்பெயர்.
விரளம்-தயிர், நீக்கம், நெகிழ்வு, மிருது, விசாலம்.
விரற்சுற்று - நகச்சுற்று.
விரற்புட்டில் - விரலுறை.
விராகநிலை - வைராக்கியநிலை.
விராகம் - வெறுப்பு.
விராகன் - அருகன், ஒரு பொற்காசு, இச்சையற்றவன், கடவுள்.
விராடம் - ஒருதேயம்.
விராடன்-மச்சதேசாதிபதி, இவன்தேசத்திலேயே பாண்டவர்கள் தமது அஜ்ஞாதவாசகாலத்தைக் கழித்தார்கள், இவன் மகளாகிய உத்தரையை அர்ஜுனன் புத்ரனாகிய அபிமந்யு பாணிக்ரஹணம் பண்ணினான், பாண்டவர்களுக்கு பாரதயுத்தத்திலே விராடராஜன் பெருந்துணையாயிருந்தவன்
விராட்டு - அழகு, சுவாயம்புவமனுவின் பிதா மாதா. அது பிரமன் தான்தானேஸ்திரீபுருடரூபமாய்த்தோற்றியது, பரப்பிரமம், பிரமன், புள்ளரசு.
விராணி - யானை.
விராதநம் - பீடை.
விராதம்-எதிரிடை, கலக்கடி, கூட்டம், கைவேலை, தடை, நாள்வேலை.
விராதன் - ஒருதைத்தியன், ஓரரசன். முற்காலத்தில் தும்புரு என்னும் கந்

தருவன் குபேரன் சாபத்தால் ராக்ஷசனாகி இப்பெயர்பெற்றான். இவன் ஸ்ரீராமர் தண்டகாரணியஞ் சென்றபோது அவரால் கொல்லப்பட்டவன்.
விராதானம் - வருத்தம்.
விராதீனன் - கூலிக்காரன், வேலையில்லோன்.
விராத்தம் - இறைப்பணம், தண்டல்.
விராத்தியன் - சாதிதருமம்விட்டவன். பிரதிலோமத் தந்தைக்கு மனுலோமத்தாய்க்கும் பிறந்தவன்.
விராமம் - இளைப்பாற்றி, ஒற்றெழுத்து, தரிப்பு, முடிவு.
விராயம் - தளபாடம்.
விராய் - தலவாடம், விறகு.
விராலம் - பூனை.
விராலி - ஒருமலை, ஒரு சுப்பிரமணிய க்ஷேத்திரம், ஒருசெடி.
விரால் - வரால்.
விராவம் - ஒலி.
விராவி - சந்திரனுலகு.
விராவுதல் - விரவுதல்.
விராளி - விரகல்.
விராறு காக்கணம்.
விரி - பொதியெருதிலிடுஞ்சேணம், வியன்னேவல்.
விரிகண் - ஒரு கண்ணோய்.
விரிகி - நெல்.
விரிகுளம்பு - கவைக்குளம்பு.
விரிக்கட்டு - சேணம்.
விரிசநன் - பிரமன்.
விரிசற்குளம்பு - கவைக்குளப்பு.
விரிசா - கையாந்தகரை.
விரிசிகை - முப்பத்திரண்டு கோவையுள்ள மாதர்மேடையணி.
விரிச்சு - நன்னிமித்தம்.
விரிச்சிகம் - விருச்சிகம்.
விரிச்சிகன் - சூரியன்.
விரிச்சியூர்நன்னாகனார் - புறநானூறு பாடின புலவருளொருவர்.
விரிஞ்சகம் - காற்று, பரமாத்மா.
விரிஞ்சனன் } பிரமன்.
விரிஞ்சன் }
விரிஞ்சி-சிவபிரான், பிரமன், விஷ்ணு
விரிதல் - அகலுதல், அலர்தல், ஒளிசெய்தல், பரவல், விசாலித்தல்.
விரிதூறு - புதர், பெருந்தூறு.
விரித்தல்-அலர்த்தல், சொல்லல், பரப்பல், பூசுதல், விரிவாக்குதல், விளக்குதல.
விரித்துரை - விரித்தியுரை.
விரிபுலப்பொருட்டற்குறிப்பணி - ஓலங்காரம் அது உபமானத்திற்கும் உபமேயத்திற்கு முரிய காரணத்தானுபமேயத்தை யுபமானமாகச் சொல்லுதல் (உ-ம்) காமத்தீப்புகைபோலுமிருள்.
விரிப்பூடு - பற்படாம்.
விரிப்பூ - விரித்தல்.
விரிமுரண் - இசைப்பாவகையினொன்று.
விரியலர் - மலர்ந்தபூ.
விரியல் - ஒளி, பரவல், மலர்த்தல், விரிந்தது.
விரியன் - ஒரு பாம்பு.
விரியுரை - அகலவுரை.
விரியுருவகம்- மாட்டேற்றுச்சொல்விரிந்து நிற்பவுருவகிப்பது (உ-ம்) கொங்கை முகையாக, மென் மருங்குல் கொம்பாக, அங்கை மலராவடிதளிராத் திங்கள் அளிநின்ற மூரலணங்காமெனக்கு வெளிநின்றவேனிற்றிரு.
விரியுவமை - உவமானமும்உவமேயமும், பொதுத்தன்மையும் உவமையுருபும் விரிந்து வருவது.
விரியூர்நக்கனார் - புறநானூறுபாடினபுலவருளொருவர், விரியூர் அங்கன் எனப்படுவாரும் இவரே யென்பர் சிலர்.
விரிவு - அகலம்.
விரீகி - அரிசி, காரேலம், நெல்.
விரீகிபாகாரம் - களஞ்சியம்.
விரீடம் - வெட்கம்.
விரீடனம் - மரியாதை, வெட்கம்.
விருகதேசகன் } இவர்கள் சிஷ்டி புத்திரர்கள்.
விருகலன் }
விரிகத்திரணம் - மூங்கில்.
விருகந்தண்டு - ஒருபயிர்.
விருகம் - ஓநாய், காகம், செந்நாய், நரி, மிருகம்.
விருகற்பதி - வியாழம்.
விருகற்பாடலி - விளா.
விருகற்பாலம் - ஆல்.
விருகற்பானு - தீ.
விருகன் - இருகன் புத்திரன், பாகுகன் தந்தை, சுகன் என்னும் தைத்தியன்

புத்திரன், வசுதேவன்தம்பி, வசுதேவன் தம்பியாகியவற்கசன்புத்திரன்.
விருகாராதி } சிங்கம், நரி, நாய், புலி,
விருகாரி } வெருகு.
விருகு - ஒருமரம், வெருகு.
விருகோதரன் - பிரமன், வீமன்.
விருக்கண்டம் - ஆராமம்.
விருக்ககாதனம் - கோடாலி, வாய்ச்சி.
விருக்ககுக்குடம் - காட்டுக்கோழி.
விருக்கசம் - பல்லி.
விருக்கசரம் - குரங்கு, கோட்டில்வாழ் விலங்கு.
விருக்கசஞ்சாரி - குரங்கு.
விருக்கசாயிகை - அணில்.
விருக்கசாயை - மரநிழல்.
விருக்கதலம் - மரவடி.
விருக்கதேனி - புல்லூரி.
விருக்கநாதன் - அரசு.
விருக்கநிவாசம் - மரவாசம்.
விருக்கபவனம் - மரப்பொந்து.
விருக்கபாகம் - விருக்கநாதன்.
விருக்கபேதி - உளி.
விருக்கம் - விருட்சம்.
விருக்கவாடிகை - நந்தனவனம்.
விருக்காக்கிரம் - மரநுனி.
விருக்காங்கிரி - மரவடி.
விருக்காலபம் - பட்சி.
விருக்காவாசன் - தவத்தி.
விருக்கிணன் - கார்த்த வீரியார்ச்சுநன் பௌத்ரன், மநுபுத்திரன், வ்ருஷிணிதந்தை.
விருங்கிதம் - யானைபிளிறெலி.
விருசகத்தி - விரியறுகு.
விருசம் - இஞ்சி, எலி.
விருசனம்-ஆகாயம்,உரோமம்,பாவம்.
விருசினம் இக்கட்டு, உரோமம், பாவம்.
விருசு - ஒருமரம்.
விருச்சலாபம் - நெருஞ்சில்.
விருச்சி - சொன்னிமித்தம்.
விருச்சிக்காணி - தேள்கொடுக்கி.
விருச்சிகம் ஓரிராசி,ஒருமாதம்,சாரணை, கண்டு, மயிர்க்குட்டி, வண்டு, புழு.
விருஜினவந்தன்-குரோஷ்டு புத்திரன்.
விருடசத்திரு - விட்டுணு.
விருஷணம் - பீசம்.
விருடதுவசன் - சன்மார்க்கன், சிவபிரான், விநாயகன்.
விருடபக்தி - துரகசதிஜந்தினொன்று.
விருடபதி - கட்டாக்காலி, சிவபிரான்.
விருடபத்துவசன் - சிவபிரான்.
விருடபம் } எருது, காது, யானைக்
விருஷபம் } காது, வாசகத்திறம்.
விருடபாரூடன் - சிவபிரான்.
விருடன் - இடபம், எலி, ஓரிராசி, சன்மார்க்கன், த ரு ம ம், மயிற்சிறகை, மேன்மை.
விருடலம் - உள்ளி, குதிரை.
விருடலி - கீழ்மகள், பன்னிரண்டாண்டிற் பெண், பூப்பதாரி, மலடி.
விருடலோசனம் } எலி.
விருடலோசனன் }
விருடவாகனன் - சிவபிரான்.
விருடன் - கன்னன், காமன், சத்துரு, சிவபிரான், விட்டுணு.
விருடாகபாயி - இலக்குமி, கவரி, சசி, சுவாகை.
விருடாகாரன் - பூனை.
விருடாங்கன் சிவபிரான்,தேவபத்தன்.
விருட்சசரம் - குரங்கு.
விருட்சநாதன் } அரசு.
விருட்சபாகன் }
விருட்சம் - விருக்கம்.
விருட்சராஜம் - அரசமரம்.
விருட்சவாடிகை - கொல்லை, சோலை.
விருஷ்டி - மழை.
விருஷ்டிலோபம் - மழைக்குறை.
விருதம் - அழுதல், வெள்ளெருக்கு.
விருதர் - படைவீரர்.
விருதா - பயனின்மை, பிழை, வீண்.
விருதாதானம் - அதமதானம்.
விருதி - கேட்குதல், சூழ்தல், தெரிந்தெடுத்தல், மறைத்தல்.
விருது - அடையாளம், கொடி, வமிசம், விரதம், வெற்றி.
விருதுக்கொடி - வெற்றித்துவசம்.
விருதுமோதிரம் - அரசன் வீரங்கல்வி முதலிய கண்டு கொடுக்குமோதிரம்.
விருத்தகங்கை - கோதாவரி.
விருத்தகிரி - விருத்தாசலம், பழமை.
விருத்தசங்கம் - முதியோர்கூட்டம்.
விருத்தசர்மன்-தசரதன்புத்திரன்,திலீயன் எ ன் று ம் சொல்லப்படுவன், இவன் புத்திரன் விசுவசகன். [னம்.
விருத்தசேவை - விருத்தாதிகார வந்த

விருத்ததை - எதிரிடை, ஒவ்வாமை, வன்மம்.
விருதத்தானம் - செய்யுட்டானப்பொருத்தத்தினென்று.
விருத்தத்துவம் - முதிர்வயசு.
விருத்தபம் - மிளகு.
விருத்தபன்னி - பங்கம்பாழை.
விருத்தபாவம் - முதிர்வயசு.
விருத்தபுட்பம் - கடம்பு.
விருத்தபேதம் ஓரளவைப்பிரமாணம்.
விருத்தபோசனம் - விருத்தான்னம்.
விருத்தப்பண் - விருத்தராகம்.
விருத்தப்பிரபிதாமகன்-முப்பாட்டன்.
விருத்தம் - அறிவு, ஆமை, ஒவ்வாநியாயம், ஒவ்வாமை, ஓரளவைப் பிரமாணம், கடினமானது, கிழத்தன்மை, குவியல், சிற்பநூன் முப்பத்திரண்டினொன்று, சூது தாயத்தொன்று, சூழ்ந்தது, செய்தி, தடை, தெரிந்துகொள்ளப்பட்டது, தொழில், நடக்கை, கடந்தேறினது, நிலக்கடம்பு, நூதனம் படித்தது, பழமை, பாவினத்தொன்று, பிரபலிய முள்ளது, பெலன், முதுமை, மூடினது, மூப்பு, வட்டம், விரோதம், வெறுப்பு, வேறுபாடு.
விருத்தர் - கிழவர், மேலோர்.
விருத்தவிலக்கணம் - ஒருபிரபந்தம்.
விருத்தன்-அதிகாரி, கிழவன், படித்துத்தேறினவன். முதிர்ந்தவன்.
விருத்தக்ஷத்ரன் - ஜயத்ரான் தந்தை.
விருத்தாங்குலி - பெருவிரல்.
விருத்தாசலம்-ஒரு சிவஸ்தலம் பழமலை.
விருத்தாசிரமம் - திரிதல்.
விருத்தாந்தம் - இளைப்பாற்றி, கதை, காரியம், சுபாவம், செய்தி, முழுமை, வர்த்தமானம், விதம்.
விருத்தாப்பியம் - கிழத்தன்மை.
விருக்தாரணியம்-ஒரூர், காவியம், வாசிக்குமிடம்.
விருத்தான்னம் - பழஞ்சோறு.
விருத்தாதீபகம் - ஓரலங்காரம் அது "வரிவண்டுநாணு மதுலரம்பாகப், பொருவெஞ் சிலைக்குப்பொலிவும், பிரிவின், விளர்க்கு நிறமுடையார் தம்மேன்மெலிவும், வளர்க்கு மலையாநிலம்" எனவரும்.
விருத்தி-அடிமை, அபராதம், இலாபம், ஏறுதல், ஒழுக்கம், ஓரலங்காரம், ஒருரை, குவியல், கூட்டம், சந்தோஷம், சித்தி, செல்வம், தரித்தல், தொழிலிலாபம், நல்லொழுக்கம், நித்தியயோகத்தொன்று, பலன், பாக்கியம், பிழைப்பு, போங்கு, மருது, வட்டம், வளர்தல், விபரம், வியாபாரம்.
விருத்திசந்தி - நிலையொழியுறுதி, அகர ஆகாரங்கண்முன் ஏகார ஐகாரம்வரில் ஐகாரமும் அவ்விரண்டிலொன்றன்முன் ஓகார ஔகாரம் வந்தால் ஔகாரமும் நிலைமொழியீறும் வருமொழி முதலுங்கெடத்தோன்றல்.
விருத்திதானம் - சீவனங்கொடுத்தல்.
விருத்தியர் - அடிமைகள்.
விருத்திரகன், விருத்திரத்துரு, விருத்திரத்துவிஷன், விருத்திரதாரி } இந்திரன்.
விருத்திரம் - இருள், ஒருமலை, சத்தம், முகில்.
விருத்திரவிரோதி, விருத்திரவைரி } இந்திரன்.
விருத்திரன் - இந்திரன், ஓரிராக்கதன், சத்துரு, ஓரசுரன். துவஷ்டாதனது மூத்த மகனாகிய விசுவசொருபனை இந்திரன் கொன்றுனெனக் கோவித்து அவனை வெல்லும் பொருட்டுத் தவஞ்செய்து பெற்றபுத்திரன் இவன். இவ்விருத்திரன் மேகங்களைப் பிடித்துச் சிறையிட்டபோது இந்திரன் நெடுங்காலம் போர்செய்து இவனைக் கொன்றொழித்தான்.
விருத்திராரி - இந்திரன்.
விருத்திரூபம்-தூலரூபம், வட்டவடிவு.
விருத்தை - கிழவி, இது பெண்பருவ நான்கில் ஒன்று.
விருத்தோக்கம், விருத்தோட்சம் } எருது.
விருந்தம்-காம்பு, குவியல், கூட்டம், மண்பாண்ட முதலியவற்றின் பாதம், மூலைக்காம்பு, விலங்கின் கூட்டம், வேம்பு.
விருந்தர் - அதிதியர், புதியவர்.
விருந்தனை - மனைவி.
விருந்தாகம் - சேம்பு.
விருந்தாரகன் - தேவன் பிரதானி.

விருந்தாரம்-அழகு, மேன்மை.
விருந்தாட்டு - நித்தல்விழாவன்றியாண்டுதோறுஞ் செய்யும் விழைவு.
விருந்திடல் - விருந்துகொடுத்தல்.
விருந்திட்டநாதர் - திருக்கச்சூ ராலக்கோயிலிலே யெழுந்தருளியிருக்கும் சுவாமி பெயர்.
விருந்தினர் - அதிதியர், புதியோர்.
விருந்து - புதிதாய்வந்தோர்க் குணவு கொடுத்தல், புதுமை
விருந்துபுறந்தருதல் - விருந்தினர்க்கீய வஞ்சல்.
விழிந்துவனப்பு - இப்பொழு துள்ளாரைப்பாடுவது.
விருந்தெதிர்கோடல் - விருந்தினரை யெதிர்கொள்ளல்.
விருந்தை - சலந்தரன்மனைவி, துளசி
விருந்தோம்பல் - வேளாண்மை மாந்தரியல்பினொன்று.
விருபன் - வெள்ளெலி.
விருப்பம் - ஆசை, பிரியம்.
விருப்பின்மை - அவாவின்மை இதுஅறத்துறுப்பி னொன்று.
விருப்பு - ஆசை, பிரியம்.
விருமன்னியம் - சேங்கொட்டை.
விரும்பல் / விரும்புதல் } ஆசைப்படுதல், கருத்தி
விருவிருத்தல் - சீக்கிரக்குறிப்பு.
விருவிருப்பு நஞ்சுமுதலியவேறுங்குறி.
விருவிரெனல் - சீக்கிரக்குறிப்பு.
விருளை - கடிவாளப்பூண்.
விருஷகன் - சகுனிதம்பி
விருஷசேநன் - கர்ணன்புத்திரன், இவன்அருச்சுநனாற் கொல்லப்பட்டவன்
விருஷணன் - கார்த்த வீரியார்ஜுநன் மூன்றாம் புத்திரன்.
விருஷதர்ப்பன் - சிபிமூத்தமகன், உசீநாதேசத்தரசன்.
விருஷத்திரன்-இக்ஷ்வாகுதம்பி, வைவசுவதன் புத்திரன்; இவன் குருசாபத்தால் சூத்திரனுகி பிறகு பிராமணனாயினன்.
விருஷபகிரி - தற்காலம் ரத்நகிரிஎனப்படும். இது மகததேசத்திலேவராஹ பர்வதத்துக்கருகேயுள்ளது. திருமாலிருஞ்சோலைமலை, இது தென்மதுரைக்கருகேயுள்ளது, இதிலெழுந்தருளியிருக்கும் சுவாமியெயர் அழகர் என்றும் அலங்காரர் என்றும் பிரசித்தம், இதில் சந்திர விமாநம், நூபுரநதி (சிலம்பாறு) முதலியவையுண்டு, இதன்பெருமை சொல்லுக்கடங்காது, இந்த இடபகிரியிலெழுந்தருளியிருக்கும் பெருமாள் விஷயமாக வேப்பத்தூர் சங்கத்தாரால் செய்யப்பட்ட கலம்பக மொன்றுண்டு. அதற்கு அழகர் கலம்பகமென்று பெயர், கலம்பகங்கள் பலவற்றுள்ளும் இது சொற்சுவைபொருட்சுவைகளால் மிகவுஞ் சிறந்து விளங்குவது, திருக்குறளுக்குஉரையிட்ட பதின்மருள்ளே சிறந்த புலவரொருவருக்குப் பரிமேலழகர் என்னும் சிறப்புப்பெயர்வாய்த்ததும் இந்த திவ்விய தேசத்திலேயே யாமென்பது எல்லாருக்குந்தெரிந்த விஷயம்.
விருஷபர்வன் - தானவர்க்கதிபதி, சுக்கிரன்சீஷன், இவன் காசிபனுக்குத் தநுவினிடத்திற் பிறந்த புதல்வன், இவன் மகளாகிய சர்மிஷ்டை சுக்கிரன் மகளாகிய தேவயானையை அவமதித்துப்பேசினாள். அதை யறிந்த விருஷபர்வன் அந்தச் சர்மிஷ்டையைத் தேவயானைக்கு ஏவற்பெண்ஆகுகவென்று சபித்தான். அவ்வாறு அவள் அடியவளாயிருக்குங் காலத்தில், யயாதி யென்பவன் தேவயானையை மணம்புரிந்தபோது சர்மிஷ்டையையும் உடன் கொண்டுபோய் பிறகு அவளையு மனைவியாக்கிக்கொண்டான்.
விருஷாதன் - கர்ணன் தம்பி.
விருஷன் - சிருஞ்சயன்ராஷ்டிரபாலிகை வயிற்றிற்பிறந்த புத்திரன்.
விருஷ்ணி விருக்கிணன் புத்திரன் விதர்ப்பனுடைய இரண்டாம் புத்திரன துவமிசத்துச் சாத்துவனது நான்காம்புத்திரன், இவன் வமிசத்தோர் வ்ருஷ்ணர் எனப்படுவர், சுமித்திரன் யுதாசித்து என்பவர் இவன் புதல்வரே, அந்தகன் பௌத்திரன், குரூரன்புத்திரன், பஜமாநன் புத்திராருள் ஒருவன்.
விருட்சணம் - ஆணை, குற்றச்சாற்று.

விரூபகாணம் - சந்தக்கேடு செய்தல்.
விரூபகரூபகம் - ஓரலங்காரம் அது ஒரு பொருட்குக்கூடாத தன்மை பலவுங்காட்டி யுருவகஞ் செய்வது (உ-ம்) தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்துவைகாது மலரும் அரிவைவதனும் புயம்.
விரூபம் - அந்தக்கேடு, குணபேதம், விகாரரூபம், வேற்றுமை.
விரூபன் - இரண்டாம்அம்பரீஷன்மகன்
விரூபாக்கன் } சிவபிரான், பன்னோருருத்திரர்களிலொருவன்.
விரூபாட்சன்
விரூபாக்ஷன் - மாலியவந்தன் புத்திரன் இவன் சுக்ரீவனாற் கொல்லப்பட்டவன், தநுபுத்திரன்.
விரூபி - யமன்றேவி, வடிவற்ற ஆள்.
விரூபை - இயமன்மனைவி.
விரேகம் - கழித்தல்.
விரேசனம் - கழித்தல், பேதி, பேதிமருந்து விடுவித்தல்.
விரேசித்தல் - கழிதல்.
விரேபம் - ஆற்றுப்பொது, ஓராறு.
விரை - கலவைச்சாந்து, தூபம், நறும்புகை, பூந்தேன், வாசனை, வித்து, விரையென்னேவல்.
விரைதல் - விரைவு, விரைவு செய்தல், வெயில், வேண்டல்.
விரைத்தல் - விதைத்தல்.
விரைவு - வேகம்.
விரோகம் - பொந்து.
விரோசநசுதன் - மஹாபலி.
விரோசநி - ஒருநதி.
விரோசனசுதன் - வாலி.
விரோசநன் - ப்ரஹலாதன்புத்ரன், பலிச்சக்ரவர்த்திக்குற் றந்தை.
விரோசனன் - அககினி, சந்திரன், சூரியன், பலிச்சக்கிரவர்த்தி தந்தை.
விரோதச்சிலேடை - முன்னர்ச்சிலேடித்துவந்தவற்றைப் பின்னரும் விரோதிப்பச் சிலேடிப்பது.
விரோதம் - அதிட்டவீனம், எதிர், ஒவ்வாமை, ஓரலங்காரம், சூழ்தல், பகை போர், வன்மம், வேற்றுமை.
விரோதவுவமை ஓரலங்காரம் அது உபமானோபமேயங்கடம்முளொன்றற்கொன்றுபகையனவெனக்கூறுவது, (உ-ம்) செம்மரை மலருந் திங்களுநும்முகமுந் தம்முட்பகை விளக்குந் தன்மையவே.
விரோதனம் - எதிரிடை, ஒவ்வாமை, கோபமூட்டல், தடை, பகை.
விரோதாபாசம் - ஓரலங்காரம்.
விரோதாலங்காரம் - மாறுபட்ட சொல்லானும் பொருளானு மாறுபடுந்தன்மை விளைவு தோன்றவுரைப்பது.
விரோதி - இருபத்து மூன்றாவதாண்டு எதிரி, சத்துரு, விரோதியென்னேவல். [ண்டு.
விரோதிகிருது - நாற்பத்தைந்தாவதா
விரோதித்தல் - பகைத்தல், வேற்றுமைப்படுதல்.
விரோதோத்தி - எதிர்ப்பேச்சு.
விரோஹணன் - நரன்புத்திரன்.
விலகல் } எறிதல், நீங்கல்.
விலகுதல்
விலக்கணம் - திருட்டாந்தமற்றது, வித்தியாசம்.
விலக்கம் - மாற்றல், விலகுந்தன்மை.
விலக்கு - தவிர்ப்பு, மறிப்பு, வழு, விலக்கென்னேவல்.
விலக்குதல் - தவிர்த்தல், மறித்தல்.
விலக்குருவகம் - ஓரலங்காரம் அதுஉருவகிக்கிற பொருளினியல்பை விலக்கி உருவவிப்பது (உ-ம்) மலையிற்பயிலாமட மஞ்ஞை.
விலக்குவமை - ஓரலங்காரம் அது முன்னியமித்த வுவமையின் குறைகளையெடுத்துக்காட்டி யுவமைப்பொருட்கு ஒப்பல்லவென்பது படப்புணர்ப்பது.
விலங்கரசு - சிங்கம். [பது.
விலங்கிறை - சிங்கம்.
விலங்கல் - கலங்கனீர், மலை, விலகுதல்
விலங்கலிறை - மலையறையன்.
விலங்கு - தடை, தளை, மிருகம், விலங்கென்னேவல்.
விலங்குதல் - எறிதல், துலங்கல், விலகல்.
விலசனம் - விநோதவிளையாட்டு.
விலசிதம் - இலீலாவிநோதம்.
விலட்சணம் - மேன்மை, பிங்கம்.
விலட்சத்துவம் - அடையாளமின்மை, அதிசயம், பகுத்தறிவின்மை, வெட்கம். [ம்.
விலட்சயம் - அபாவவியல்பு.

விலத்தல்
விலத்துதல் } நீக்குதல், நீங்குதல்.
விலபனம் - மழலை.
விலம் - அகில், குகை, பொந்து.
விலம்பனன் - தாமதம்.
விலம்பம்-தாமதம், தூங்குதல், நன்கொடை, கொடுத்தல்.
விலம்பிதம் - தாமதம்.
விலயம் - அழிவு, உருக்குதல், உலகாந்தம்
விலயனம் - அகற்றுதல்,அழித்தல்,உருகுதல்.
விலா - பழு.
விலாக்கொடி - எலும்பு.
விலாங்கு பாம்புபோன் ஒருவகைமீன்.
விலாசகானனம் - விநோததானம்.
விலாசமந்திரம் - விநோதாலயம்.
விலாசம் - அழகு, ஆடவர்மகளிர் விளையாட்டு, இலீலாவிநயம், நாணயக்குறிப்பு,பத்திரிகையின்புறவெழுத்து, பொழுதுபோக்கு, விளையாட்டு, விநோதம், வேடிக்கை.
விலாசனை - மகளிர்விளையாட்டு.
விலாசி - காமன், சந்திரன், சிவபிரான், திருமால், தீ, பாம்பு.
விலாசினி - பெண், வேசி.
விலாடித்தல்-இரட்டைவரிகொடுத்தல்.
விலாத்தோரணம் - என்பு.
விலாபம்-கனவுகண்டிரங்கல், புலம்பல்
விலாமிச்சை
விலாம்மிச்சை } ஒரு வாசனைப்புல்.
விலாய் - சட்டம்.
விலாலம் - இயந்திரம், பூனை.
விலாழி-குதிரைவாய்நுரை,யானைக்கையுமிழ்நீர்.
விலாலம் - ஆண்பூனை, பூனை.
விலீனம் - அழிந்தது,உருக்கப்பட்டது, கலக்கப்பட்டது.
விலூபன்னி - பெருங்குரும்பை.
விலேசயம் - எலிகுகை, பாம்பு, முயல்.
விலேபம் - சாந்து, பூச்சு.
விலேபனம் - பூசுதல், வாசனை.
விலேபி - கஞ்சி.
விலை - கிரயம், விற்றல்.
விலைகட்டுதல் - விலைமதித்தல்.
விலைகாரர் - கொள்வோர்.
விலைகுறித்தல் - விலைமதித்தல்.
விலைகூறுதல் - விலையைப் பலமுறையுஞ்சொல்லல்.
விலைக்கிரயம் - விலை.
விலைச்சரக்கு
விலைச்சாமான் } விலைப்படுத்தவைத்திருக்கும்பொருள்.
விலைஞர் - செட்டிகள்.
விலைதீருதல்
விலைதீர்தல்
விலைதீர்த்தல் } விலைநிதானித்தல்.
விலைபேசுதல் - விலைசொல்லல், விலைநிதானித்தல்.
விலைபோடல் - விலைகுறித்தல்.
விலைபோதல் - விலைப்படல்.
விலைப்படல்
விலைப்படுதல் } விற்கப்படல்.
விலைப்படுத்தல் - விற்குதல்.
விலைப்பண்டம் - விலைப்பொருள்.
விலைப்பருவம் - விலையின்முறைமை.
விலைமகள் - வேசி.
விலைமானம் விலைப்படுதற்கானமதிப்பு.
விலையாளர் - விலையிடுவோர்.
விலையுணி - அலட்சியமானஆள்.
விலையுயர்தல் - விலையதிகப்படல்.
விலைவைத்தல் - விலைகுறித்தல், விலையேற்றுதல்.
விலோகணியதை-அழகு.
விலோகனம் - பார்வை.
விலோசனபாதம் - பார்வை.
விலோசநம் - கண், பார்வை.
விலோசனம்பு - கண்ணீர்.
விலோசனஹீநன் - குருடன்.
விலோடனம்-உருளுதல்,கலக்குதல்.
விலோடிதம் - மோர்.
விலோதம் - துகிற்கொடி, பெண்மயிர், மயிற்குழற்சி.
விலோதனம் - துகிற்கொடி, பெருங்கொடி.
விலோபம்
விலோபனம் } அழிவு,இழுத்தல், கலக்குதல், புகழ்ச்சி, மயக்கம்.
விலோமதநயன் - குகுரான் பௌத்ரனாகிய வ்ருஷ்ணி புத்ரன்.
விலோமத்திரைராசிகம் - குறுக்கு முத்தொகைவினா.
விலோமம்-நீரியந்திரம்,நீர்,பாம்பு,பின்,முறைபிழைத்தல்.
விலோமவிதி - ஒழுங்குதப்பின முறை.
விலோமன் - வருணன்.
விலோலதை - உறுதியின்மை.
விலோலம் - சஞ்சலம்.

வில்-ஒளிசேரன்கொடி,தனு,மூலநாள், வில்லென்னேவல்.
வில்கண்டம் - பலபந்தம், மூட்டு.
வில்ஞாண் - விற்கயிறு.
வில்லங்கம் - தடை, பலபந்தம், மூட்டு, வியாச்சியம்.
வில்லடை - இடையூறு, எதிர்த்தனம்.
வில்லண்டம் - வில்கண்டம்.
வில்லம்-குகை, பெருங்காயம், வில்வம்.
வில்லவன் - சேரன்.
வில்லவன்கோதை-செங்குட்டுவன் மா
வில்லாச்சிரமம் - விற்பரிட்சை. [திரி.
வில்லாண்மை - வில்வல்லமை.
வில்லார் - வில்லுடையார், வேடர்.
வில்லாளி - அருச்சுனன்.
வில்வி-மன்மதன், விசையன், விற்போராளன், வீரபத்திரன்.
வில்லிபுத்தூரன்-பாரதம் தமிழிற் செய்த ஒரு கவிஞன்.
வில்லியர் - வில்வல்லோர்.
வில்லுகன் - சிற்றுமூட்டி.
வில்லுவம் - வில்வமரம்.
வில்லூதி - ஒரு சகலாத்து.
வில்லேருழவர் - படைவீரர், வில்லார்.
வில்லை - அடை, அண்டை, தகட்டு, வட்டம், வட்டித்தது, வில்வம்.
வில்லைமுருகு - ஒருகாதணி.
வில்வஞ்சாத்துதல்-தெய்வங்கட்கு வில்வஞ்சாத்தி யருச்சித்தல்.
வில்வமாலை - பொன்வெள்ளிகளாற்செய்யு மோர்வகைமாலை.
வில்வம்-ஒருமரம், இது, தசமூலத் தொ
வில்வல்லவன்-வில்லாச்சிரமி. [ன்று.
வில்வநாதர் - திருக்கொள்ளம் பூதூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வில்வநேசர்-திருவைகாவிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வில்வலாவு } வில்லாகாரமான வளைவு.
வில்வாங்கல் }
வில்வித்தை - வில்லாச்சிரமம்.
விவகரித்தல் - நியாயஞ்சொல்லுதல்.
விவகலனம் } கழிவுக்கணக்கு.
விவகலிதம் }
விவகாசம் - சிரிப்பு.
விவகாரதரிசனம் - நீதம் விசாரித்தல்.
விவகாரஸ்தானம் - நீதாசனம்.
விவகாரம்-நீதியதிபதித்துவம், பிணக்கு, முப்பொருளினொன்று அது பொருளீட்டல், தொழில், வழக்கு, வளமை.
விவகாரவிதி - நியாயப்பிரமாணம்.
விவகாரவேளை - தொழில்செய்யுங் கா
விவகாரி - வழக்காளி. [லம்.
விவகாரிகம் - வழக்கம், வழக்கு.
விவசம்-கீழ்ப்பட்டது, பரவசம், பற்றிலாமை, மரணவிருப்பம்.
விவசாயம் - கிருஷி, பயிர்த்தொழில், வேளாண்மை.
விவசுதன் - சூரியன். த்வாதசாதித்தியருளொருவன், இவன் தந்தை காசிபன் இவன் தாய் அதிதி, இவன் விசுவகர்மன் புத்திரிகளாகிய சஜ்ஞாதேவி சாயாதேவியென்னும் இருவரையும் மணம்புரிந்தான் இந்தவிசுவதனுக்கு, வைவசுவதமநு, யமன், சநி என்னு மூன்று புத்திரரும் யமுனை, தபதி என்னும் இரண்டு புத்திரிகளும் பிறந்தார்கள்.
விவஸ்வதி - சூர்யநகரம்.
விவட்சை - விருப்பம்.
விவதம் - காத்தண்டு, குவித்தல், சுமை
விவத்து - பவித்து. [தெரு.
விவஸ்தை - பகுத்தறிவு.
விவத்தை - ஆபத்து.
விவம் - ப்ரகாசம்.
விவாணம் - விபரம்.
விவரநாலிகை - மூங்கில்.
விவரம்-உட்டுளை, குகை, குறை, பிரிவு, வகை, விருத்தாந்தம்.
விவரிதம் - விபரிதம்.
விவரித்தல் - பகுத்துச்சொல்லல்.
விவருணம் - தீழ்ப்பு, துன்னிறம்.
விவர்ணன்-நீசன், விவேகமில்லாதவன்
விவர்த்தம்-ஆடல், கூட்டம், சுற்றி வருதல், தப்பிதம், திரிவு.
விவர்த்தரூபம் - மாயாரூபம்.
விவர்த்தனம்-சுழலல், சுற்றிவரல், திரும்புதல், பிரித்தல், புரளல், வருத்திப்பு.
விவாகம் - மணம்.
விவாகரணம் } ஊருக்குப் புறப்படுத்தல்.
விவாசம் }
விவாசனம் }
விவாதம் - சொற்கலகம், தருக்கம், வழக்காடுதல்.

விவாரம் - விரிதல்.
விவித்தம் - ரஹஸ்யம்.
விவிதம் - பலவிதம்.
விவிம்சன் - இரண்டாங் கனித்திரன் தந்தை.
விவிருதி - விவரம்.
விவிருருதி - சுழலல், வருத்திப்பு.
விவேகசிந்தாமணி - ஓராகமநூல்.
விவேகசூனியம் - அறிவின்மை.
விவேகதை - புத்தி.
விவேகம் - ஆராய்வு, பகுத்தறிவு, புத்தி, மனக்கூர்மை.
விவேகி - சூரியன், புத்திமிகுந்தோன்.
விவேகிதை - ஆராய்வு, பகுத்தறிவு.
விவேகித்தல் - மட்டுக்கட்டல்.
விவேசனம்-ஆராய்வு, பகுத்தறிவு.
விழம்பு - சோறு.
விழலர் - வீணர்.
விழலாண்டி - வீணன்.
விழல் - ஒருபுல், விழுதல், வீண்.
விழவு - திருவிழா, மிதுனவிராசி.
விழற்கட்டு - புல்வீடு, வீடு.
விழா - திருவிழா, மங்கலச்சடங்கு.
விழாலரிசி - ஒருமருந்து.
விழால் - விழாலரிசி. [ல்.
விழி-கண், கண்மணி, விழியென்னேவ
விழிதுரை - பாரம், வழிவகை.
விழித்தல்-அருண்டெழுதல், உருட்டிப்பார்த்தல்,கண்டிறத்தல், பார்த்தல்.
விழிப்பு - எரிச்சரிக்கை, சாக்கிரதை, துயிலொழிவு, தெளிவு.
விழியழகர் - திருவீழிமிழலையாயிலேகோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
விழியன் - பெருங்கண்ணன்.
விழுவிழுங்கி - கண்ணோயுளொன்று.
விழுகுதல் - வீழ்தல்.
விழுகை - விழுதல்.
விழுக்காடு - குறைவு, சகட்டுவிலை, தூக்கம், வசக்கேடு, விதம்.
விழுக்கு - நிணம்.
விழுங்கல் - நுங்குதல், பட்சித்தல்.
விழுசுமை - வலுசுமை.
விழுதல் - சாதல், வீழல்.
விழுதி - ஒருமரம்.
விழுது - ஆலமராமுதலியவற்றின் வீழ், ஆழம்பார்ப்பதற்கானகயிறு, நெய்வார்கருவியினொன்று, வெண்ணெய்.
விழுத்தம்-கருஞ்சீரகம்.
விழுபாலை - ஒருகொடி.
விழுப்பம் - ஆசை, குலம், சிறப்பு,நன்மை, மேன்மை.
விழுப்பகை - பெரும்பகை.
விழுப்பழி - பெரும்பழி.
விழுப்பு - அனுசாரம், தீட்டு.
விழுப்புரம் - ஒரூர்.
விழுப்பொருள் - நுண்ணிய பொருள், மேன்மையான பொருள் [மை.
விழுமம்-இடும்பை,சிறப்பு,சீர்மை, நன்
விழுவிழெனல்-பசைபிடியாதிருத்தல்.
விழைச்சு-இளமை, புணர்ச்சி.
விழைதல் - ஆசைப்படல், ஆசைப்பெருக்கம், புணர்தல்.
விழைந்தோர்- கணவர், சினேகிதர், விரும்பினோர்.
விழைவிலி - துறவி, விரக்கதன்.
விழைவு - ஆசைப்பெருக்கம், உள்ளோசை, கலத்தல்.
விளகம் - சேங்கொட்டை. [ல்.
விளக்கணம்-பொடிவைத்து விளக்குத
விளக்கணி - ஓலங்காரம், அது உபமானமு முபமேயமு மொருதருமத்தின்முடிதல். [ணே.
விளக்கம் - சந்திரனுள், தெளிவு, விசார
விளக்கல்- அழுக்குநீக்கல், ஒட்டவைத்தல், தெளிவித்தல், பிரகாசிப்பித்தல், மினுக்குதல்.
விளக்கவொலி-பொருடருமொலி.
விளக்கறை - தீபமேற்றுமாடம்.
விளக்கீடு - ஒருதினம் அது சருவாலயதீபமேற்றுதல்.
விளக்கு அட்டமங்கலத்தொன்று அது ஆலாத்தி, ஒளி, சோதிநாள், தீபம், விளக்கென்னேவல்.
விளக்குக்கூடு-விளக்குத்தகழி.
விளக்குதல் - விளக்கல்.
விளக்குத்தகழி - விளக்கக்கல்.
விளக்குத்தண்டு - விளக்குத்தாள்.
விளக்குநிலை - ஒருபிரபந்தம். அதுவேலும் வேற்றலையும் விலங்காதோங்கிய வாறுபோலக் கோலொடு விளக்குமொன்று பட்டோங்கு மாறோங்குவதாகக் கூறுவது.
விளக்குநிறுத்துதல் - விளக்கணைத்தல்
விளக்குப்பாதம் - விளக்குத்தண்டு.
விளக்குமாறு - துடைப்பம்.

விளக்கெண்ணெய் - ஆமணக்கெண்ணெய், விளக்கிடுமெண்ணெய், வேப்பெண்ணெய்.
விளக்கேற்றல் - தீபம்வைத்தல்.
விளக்கொளி - தீபப்பிரகாசம்.
விளக்கொளிப்பெருமாள் - தீபப்பிரகாசர், இது வைணவ திருப்பதியில் ஒன்று. இங்கே நடைபெறும் சர்வாதிகாரமும் செங்குந்த முதலியாருடைய தர்மம்.
விளங்கம் - வாயுவிளங்கம்.
விளங்கல் - ஒளிசெய்தல், தெளிதல்.
விளங்கிழை - பெண்.
விளங்கு - சிற்றரத்தை.
விளங்குதல் - விளங்கல்.
விளங்குதிங்கள் - சுக்கிரன்.
விளத்தல் - விபரித்தல், விலக்குதல்.
விளத்தாரு - அடம்பு
விளத்துதல் - விலத்துதல்.
விளம்பம் - தாமதம்.
விளம்பரம் அறிக்கைப்பத்திரம், விளக்கம்.
விளம்பல் - சொல்லல், விசாரித்தல்.
விளம்பனம் - தாமதம்.
விளம்பி-கள், முப்பத்திரண்டாவதாண்டு.
விளம்பிதம் - தாமதப்பட்டு முற்றுதல், அது தாளப்பிரமாணத்தொன்று.
விளம்புதல் - விளம்பல்.
விளரி - இளமை, எழிசையினொன்று அது நெஞ்சாற்பிறப்பன, நெய்தனிலத்தியாழ், மிகுதி, யாழினோர் நரம்பு, யாழ், வேட்கை.
விளரிப்பாலை - ஓரிசை.
விளர் - இளமை, கொழுமை, நிணம், வெண்மை.
விளர்த்தல் - வெளுத்தல்.
விளர்ப்பு - வெளுப்பு.
விளவு-கமர், விளவென்னேவல், விளாமரம்.
விளவுதல் - விளாவல்.
விளவெறிந்தோன் - விட்டுணு
விளா - விளாமரம்.
விளாகம் - போர்க்களம்.
விளாசம் - விலாசம்.
விளாத்தி - விளா.
விளாப்பு - பிறர்க்குப்பங்கில்லாதது.
விளாம்பூச்சு - ஒரு சித்திரப்பூச்சு.
விளாவல் - கலத்தல்.
விளி - அழைப்பு, எட்டன்வேற்றுமை, எழிசையினொன்று, விளியென்னேவல்.
விளிதல்-கெடுதல், கோபித்தல், சாதல் மறிதல், வருத்தப்படுதல்.
விளித்தல் - அழைத்தல்.
விளிம்பு - அருகு, கண்ணிமை, கரை.
விளிம்புதெற்றி - கரைத்திண்ணை.
விளிவித்தல் - அழைப்பித்தல், சொல்லல்.
விளிவிலி - இறவாதவன், சிரஞ்சீவி.
விளிவு - கோபம், சாவு.
விளை - ஒருமீன், கொல்லை.
விளைகரி - நிலக்கரி.
விளைச்சல் - விளைவு.
விளைஞர் - மருதநிலமாக்கள்.
விளைநிலம், விளைபுலம் - வயல்.
விளைப்பு - செய்தல்.
விளைமீன் - ஒருமீன்.
விளையாடுதல் - பொழுதுபோக்கல்.
விளையாட்டு - பொழுதுபோக்கு
விளையாட்டுப்பிள்ளை - சிறுபிள்ளை வீணன்.
விளையுங்காலம் - அறுப்புக்காலம்.
விளையுள் - வயல்.
விளைவித்தல் - விளையச்செய்தல்.
விளைவு - சம்பவிப்பு, தானியம், பயன், மேகம், வயல்.
விளைவுகாலம் - தானியம் விளைந்திருக்குங்காலம்.
விள்ளல், விள்ளுதல் - தழுவல், திறத்தல், பிரிதல், பேசுதல், மலர்தல், வெடித்தல், வேறுபடல்.
விள்ளோடன் - பருப்புவேறுசிரட்டை வேறாய்க்கழலுந் தேங்காய்.
விறகு - கறல், சமிதை.
விறகுதலையன் - விறகுவெட்டி.
விறத்தல்-அஞ்சுதல், நெருங்குதல், பெருகுதல், போர்செய்யல், வெல்லல்.
விறப்பு-அச்சம், நெருக்கம், பெருக்கம், போர், வெற்றி.
விறலி-பதினாறுவயசுப்பெண், பாடன்மகடூஉ.
விறலுவமம்- ஒன்றன்விறலாலுவமிப்பது (உ-ம்) மதயானைபோலு மகங்காரம்,

விறலோன் - அருகன், திண்ணியன்.
விறல்-பெருமை, வலி, வீரம், வெற்றி.
விறல்மிண்டநாயனார் - அறுபத்துமூன்றுநாயன்மாருளொருவர். இவர்திருச்செங்குன்றூரிலேவேளானமரபிலேதோன்றின மஹா சிவபக்தர். இவர் சுந்தரமூர்த்திநாயனார் காலத்தவர்.
விறற்கொடி - வெற்றிக்கொடி.
விறற்படை - வெற்றிப்படை.
விறன்மிண்டநாயனார் - அறுபத்துமூவரிலொருவர்.
விருட்டி - எருவராட்டி முதலியன.
விருண்டுதல் - பிருண்டுதல்.
விருய் - வீருப்பு.
விரிசு - ஒருவாணம், புழுகுப் பேச்சு, பொய்.
விறுதா - விருதா.
விறுமதண்டம் - குருக்குற்றி.
விறுமதரு - டன்முருக்கு.
விறுமமூலி - பிரமி.
விறுமன - ஒருதேவதை.
விறுமை - பிரமை.
விறுவிறுத்தல் - கொதித்தல், விறுவிறுப்புக்கொள்ளல்
விறுவிறுப்பு-கொதித்தலினதற்குறிப்பு, மிகுகோபம், விரைவுக்குறிப்பு.
விறுவிறெனல் - விரைவின் குறிப்பு, விறுவிறுத்தற் குறிப்பு
விறைத்தல் - மரத்துநிற்றல்
விறைப்பு திமிர், பிரமிப்பு, முறைப்பு.
விற்குதல் - விலைப்படுத்தல்.
விற்பத்தி - கல்விவல்லபம்.
விற்பத்திமான்-கல்வியிற்சிறந்தோன்.
விற்பனம் - விற்பன்னம்.
விற்பனவு
விற்பனை } விற்றல்.
விற்பன்னம்-கல்வி, நூதனம், பிரசங்கம், விந்தை.
விற்பன்னர்-கற்றோர், நூதனகாரர், புலவர்.
விற்பன்னித்தல் - சிறப்பித்தல்.
விற்புருதி - ஒருசிலந்தி.
விற்புருதிநாயகம் - அமுக்கிரு.
விற்பூட்டு - பொருள்கோளெட்டினொன்று அது செய்யுளிறுதியினுமுதலினுமிற்கு மொழிகளைக்கூட்டிப் பொருள் கொள்வது.
விற்போர் - வில்லாண்மைப்போர்.
விற்றல்-விலைக்கிரயம்பண்ணுதல்.
வினசம் - சேங்கொட்டைமரம்.
வினதாசுதன் - கருடன்.
வினதை - கருடன்றாய், சத்தபுரியினொன்று.
வினயம் - வஞ்சகம், விநயம்.
வினவல்
வினவுதல் } அளவளாவுதல், கேட்டாராய்தல்.
வினா-உரையிலக்கணமைந்தினொன்று, கேள்வி, சொல், வினாவென்னேவல்.
வினாசம் - காணாதிருத்தல்.
வினாசன் - விநாசன்.
வினாடி - விநாடி.
வினாதல் - வினாவுதல்.
வினாபூதகற்பனை - தெளிவில்லாதது.
வினாயகன் - விநாயகன்.
வினாவிடை - சல்லாபம்.
வினாவுதல் - கேள்விகேட்டல்.
வினாவுத்தரம் - மிறைக்கவியில் ஒன்று அது ஒரு செய்யுட்கண் வினாவினாக்களுள்கடை வினாயதற்கோருத்தரமாய் நின்றமொழி பிரிந்து மேலவினாய பலவினாவிற்கும் பலவுத்தமாய் நின்று டொருடாத் தொடுப்பது.
வினாவெண்பா-ஒருசைவசித்தாந்தநூல்
வினாவெதிர்வினா - வினாவுக்குவிடையாய்வினாவுதல் (உ-ம்) உண்டாயோவென்றவழி உண்ணேனோவென்பது.
வினாவெழுத்து - வினாப்பொருடருமெழுத்து, அவற்றுள் எ, யா, ஏ, முதனிலைவினா, ஆ, ஓ, ஈறுநிலைவினா.
வினியோகக்காரன்-கொடையாளன்.
வினியோகம் - பிரதி பலனை நோக்கியீதல்.
வினீதன்-தண்டிக்கப்பட்டவன், வினயமுள்ளவன்.
வினை-இரண்டு, ஊழ், கருத்து, கள்ளம், தொழில், போர், வஞ்சகம்.
வினைசாதித்தல் - வினைபாராட்டல்.
வினைச்சொல் இடம் கருவிகருத்தாசெயப்படுபொருள் செயல் காலம் எனுமிவைகளை விளக்கிநிற்குஞ் சொல்.
வினைஞர்-கம்மாளர், கூத்தர், சூத்திரர், செயலாளர், மருதநிலமாக்கள்.
வினைதீர்த்தல் - விக்கினந்தீர்த்தல்.
வினைதீர்த்தான் - விநாயகன்.
வினைத்தொகை-பெயரெச்சத்தின்விகுதியிடை நிலைகடொக்கு நிற்கப்பதம்

வந்து புணரும் புணர்ச்சி (உ-ம்) விடுசரம்.
வினைபாராட்டல்-வினையழுத்தல்.
வினைப்பகுதி - வினையிற் பகாப்பதமாய் முதனிற்கு முறப்பு.
வினைப்பகாப்பதம்-செய்யென்னும்வாய்பாட்டால் வருமுதனிலைவினை.
வினைப்பகுபதம்-பகுதிபமுதலியவுறுப்புக்களாற் பிரிக்கத்தக்க வினைச்சொல்.
வினைப்பயன் - முன்வினைப்படி வந்தபலன்.
வினைமுதல் - கருத்தா.
வினைமுதற்பொருள் - தொழிற் காரணம்.
வினைமுறுகுதல் - வினைமூளுதல்.
வினைமுறுக்குதல் - வினைமூட்டுதல்.
வினைமுற்று - பொருள்இடமுதலிய ஆறன்புடை பெயர்ந்துசெய்பவன் முதலிய ஆறையும்பெரும்பாலுந்தோற்றிமுடியும்வினை, (இவற்றுள்) தெரிநிலைவினை முற்று பொன், வயல், வேணல், காம்,பசப்பு,பிறப்பு என்பவற்றோடு நீண்டது என வொட்டிக்காண்க,குறிப்பு, வினைமுற்று அவன் பொன்னினன்; புறத்தன், ஆதிரையான்; தாளன், கரியன், நடையன் (இவைபோல்வன)
வினையம் - வஞ்சகம்.
வினையழுத்தல் } வினைபாராட்டல்.
வினையளத்தல் }
வினையாளர் - ஏவல்செய்வோர், ஒரு தொழிலிற்றலைப்பட்டோர்.
வினையியற்சொல் - செந்தமிழ் நிலத்து மொழிகளாய் உலகவழக்கினுஞ்செய்யுள்வழக்கினு நின்று தம்பொருளை யியல்பாக விளக்கும் வினைச்சொல்.
வினையுரைப்போர் - தூதர்.
வினையுவமம் - தொழிலையே யுவமமாக வெடுத்துக்கூறுவது (உ-ம்) தீப்போற்றீயன்.
வினையெச்சக்குறிப்பு-தொழில் தோன்றாது வினையெச்சம்போல நின்று பிறிது வினையோடு முடிவது (உ-ம்) அன்றி-இன்றி என்பவற்றோடுகின்றூர் என வொட்டிக்காண்க.
வினையெச்சம்.- பிறிதோர் வினையொடு முடிய அவாவிநிற்கும்வினைச்சொல், இதில் தெரிநிலை வினையெச்சம் செய்து, செய்பு, முதலிய வாய்பாட்டான்வருவன, குறிப்புவினை யெச்சம் - அன்றி, இன்றி, முதலியன.
வினையெஞ்சணி - ஓரலங்காரம் அது வினையெஞ்சி நிற்பது.
வினைவயிற்பிரிதல் - அகப்பொருட்டுறையில் ஒன்று.
வினைவசம் - கர்மவசம்.
வினைவழிச்சேறல் - அகப்பொருட்டுறையினென்று.
வினைவளர்த்தல் - வினைபாராட்டல்.
வினைவிநாசன் - கடவுள்.
வினைவிளைத்தல் - பொல்லாங்குசெய்தல்.
விநோதம் - அவா, அழகு, எதிரிடை, சந்தோஷம், தள்ளுதல், தொழில், பொழுதுபோக்கல், மகத்துவம், விளையாட்டு.
விநோதன் - பொழுதுகழிப்போன்.
விநோதி - ஒன்றிலே பொழுதுகழிப்போன்.
வின்னம் - அறியப்பட்டது, கிடைத்தல், தடை, பங்கப்பட்டது.
வின்ஞை - கடுகுரோகிணி.
வின்ஞாண் - விற்பூட்டுங்கயிறு.
வின்னூலாளன் - துரோணசாரியன்.
வின்னூல் - வில்லாச்சிரமவித்தை.
விஷ்ணு-திரிமூர்த்திகளிலொருவர், இவர் உலகத்தைக் காக்குந் தொழிலையுடையவர் இவர்லோகபரிபாலநத்தின் பொருட்டுச் செய்த அவதாரங்கள் பத்து அவையாவன மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமநம், பரசுராமம், ஸ்ரீராமம், கிருஷ்ணம்,புத்தம், கற்கிஎனபனவாம். இவருக்குபீதாம்பரன், கருடத்வஜன், சக்ராயுதன், லக்ஷ்மீபதி, நாராயணன், வைகுண்டன், தாமோதரன், ஹ்ருஷீகேசன், கேசவன்,மாதவன், தைத்யாரி, புண்டரீகாக்ஷன், கோவிந்தன்,அச்சுதன், சாரங்கபாணி,ஜநார்த்தநன், உபேந்திரன், சக்கரபாணி, சதுர்ப்புஜன் முதலியபலநாமங்களுண்டு.இவருக்கு ஆயுதம்சுதரிசநம் என்னும்சக்ரமும்பாஞ்சஜன்யம் என்னுஞ் சங்கும், கௌமோதகியென்னுந் தண்டும், நந்தகம் என்னும்வாளும், சார்ங்கம் என்னும் வில்லுமாகிய ஐந்தாம், இவருக்கு ஆப

ரணம் கௌஸ்துபம், இவர் மார்பிலேயுள்ள மறுவுக்கு ஸ்ரீவத்ஸம் என்றபெயர், இவர் திருப்பாற்கடலிலே சர்ப்பசயநத்திலே யோகநித்ராரதராயிருப்பவர், நாராயணனே விஷ்ணுவென்றும், சகுணவடிவென்றும், நிர்க்குணவடிவென்றும், புராணங்கள் பலபடக்கூறுகின்றன. (நாராயணன் காண்க.)

விஷ்ணுகுப்தன் - சாணக்யன்.

விஷ்ணுசர்மன் - (க) வேதநாராயண புரத்து அக்ரஹாரத்தில் வசித்துக்கொண்டிருந்த வொருபிராமணன். இவன் புத்திரன் விக்ரமார்க்கன் தந்தையாகிய சந்திர சர்மன். (உ) பஞ்சதந்திரமென்னும் நூலைச்செய்து சுதரிசநன் என்னும்அரசனுடையபுத்திரருக்கு அந்த நூலினால் ராஜதந்திரம் நீதிசாஸ்திரம் முதலியவற்றைக் கற்பித்தவர்.

விஷ்ணுபுராணம்-பதினெண் புராணத் தொன்று. இது பராசர முனிவரால் அருளிச் செய்யப்பட்டது இது இருபத்து நாலாயிரங் கிரந்தமுடையது இதில் வராககர்பம் முதலியவற்றின் வரலாறுகள் விரிவாய் கூறப்படும். பலவகையாகிய வுலகங்களையும் கிரகமண்டலங்களையும் யுகசரித்ரங்களையுங் குறித்து ஆராயவிரும்புவோர்க்கு இது சிறந்த நூலாகும்.

விஷ்வக்ஜோதி - பிரியவிரதன் வமிசத்து ஓரரசன்.

விஷ்வக்ஸேநன் -(க)பிரமதத்தன்மகன், (உ) விஷ்ணுபரிசாரு ளொருவன் இவன் வைகுண்ட சேநாதிபதி.

விஷ்ணுவர்த்தநன் - பாஸ்கர வுபாத்யாயர்.

விஹாரம் - வங்கதேசத்துக்கு வடக்கேயுள்ள தேசம்.

## வீ

வீ - ஒரெழுத்து, கருப்பந்தரித்தல், சாவு, சொல்லுதல், நீக்கம், பறவை, பூ, போதல், முன்னிலையசைச்சொல், விரும்புதல், வீயென்னேவல்.

வீகம் - காற்று, பட்சி, பூட்டு, மோதிரம்.

வீகாசம் - ஆடம்பரம், தனிமை.

வீக்கம் - ஒரு வியாதி, ஆசை, கட்டு, பூரிப்பு, மிகுதல், வீங்குதல்.

வீக்குதல் - அழிக்குதல், கட்டல்.

வீங்கல் - நித்திரைசெய்தல், பருத்தல், மிகுதல், வீக்கம், வீங்கலாள்.

வீங்கி - சேங்கொட்டை, பேராசையுள்ளோன், வீங்கையாள்.

வீங்குதல் - வீங்கல்.

வீங்கை - அசைதல், ஆடல், குதிரை நடை.

வீசகா - வேங்கை.

வீசகணிதம் - அட்சரகணிதம்.

வீசகோசம் - கொட்டை, தாமரைக் கொட்டை.

வீசநோய் - அண்டநோய்.

வீசமாதிருகை - வீசகோசம்.

வீசம் - அவசியம், ஓரெண், ஒருகணிதம், ஒருமந்திரம், கொட்டை, சத்தியம், சுக்கிலம், நெல்லிடைப்பொன், மாகாணி, மூளை, மூலம்.

வீசயனம் - விசாரணை.

வீசல் - அடித்தல், ஈதல், எறிதல், பரவல், மோதல், வீசல்.

வீசனம் - சிற்றாலவட்டம், பொருள்,விசிறி.

வீசாட்சரம் - மந்திரமூலம்.

வீசி - அலை, அற்பம், இளைப்பாற்றிகிரணம், சந்தோஷம், வீசத்தை யுடையது.

வீசிமாலி - சமுத்திரம்.

வீசீதரங்கம் - ஒரு நியாயம்.

வீசீதரங்கநியாயம் - தருக்கநூலிற்சொல்லப்படுமோர் நியாயம்.

வீசுகாலேணி - ஒரேணி.

வீசுதல் - வீசல்.

வீசுதவர் - ஒருதுறப்பணம்.

வீசுவில் - விசுதவரின்வில்.

வீசுவிற்குடம் - வீசுதவரின்குடம்.

வீசை - ஒருநிறை, மீசை.

வீசோதகம் - ஆலாங்கட்டி.

வீசோதகிருட்டம் - நல்விதை.

வீச்சம் - நாற்றம்.

வீச்சு - அடி, ஆட்டம், எறிதல், ஒருநோய், பூமி, வலி.

வீச்சுக்காரன் - செலவுகாரன்.

வீச்சுக்காரி - செலவுகாரி, வேசி.
வீச்சுக்கொள்ளுதல் - வலிகொள்ளல்.
வீச்சுவலை - ஒருவலை.
வீச்சேணி - வீசுகாலேணி.
வீஞ்சுதல் - அதிககிரயங்கேட்கல்.
வீடல் - சாதல், விடுதல்.
வீடாரம் - வீடு.
வீடாவழி - வீட்டுக்கு வீடு.
வீடி - கொத்தான்.
வீடிகை - கட்டு, தாம்பூலம்.
வீடு - ஒன்று, மனை, மோக்கம், விடுதல் வீடென்னேவல்.
வீடுதூங்கி - தூக்குணி.
வீடுநெறிப்பால் - ஓர்நூற்பகுதி.
வீடுமன் - பீஷ்மன்.
வீடுவிலக்கம் - மகளிர்சூதகம்.

வீடூரான், வீடூர்முதலி } இவன் தொண்டைநாட்டில் வீடூர்க்கிறைவனாகிய வொரு வேளாளப்பிரபு, இவன்தமிழ்ப்புலவர்க்குத்தாதா வென்று தன்வாயிலே கொடிகட்டித் தன்னிடம் வரும் புலவர்க்கெல்லாம் பெரும்பொருள் வழங்கி வரும்நாளில் ஒருநாள் ஒருபுலவன் போய்த் தனது நுண்புலமை நிலைநாட்ட, இவன் அவனைப் புகழ்ந்து மெச்சி, உமக்கு வேண்டுவதைக்கேட்டருளுமென்ன புலவன் உன் பிரியநாயகியை யெனக்குத் தரல்வேண்டுமென்றான் அது கேட்ட இந்தப்பிரபு சற்றும் மனம் வருந்தாமல், கற்பிற் சிறந்த தன் மனையாளை யழைத்து, உன்னை இப் புலவர் பெருமானுக்குக் கொடுத்து விட்டேன். இன்று முதலாக நீ யெனக்கு மனைவியல்லை தாயாகிறாய் என்றான். அதுகேட்ட புலவன் நெஞ்சந் துணுக்குற்று, புருஷசிகாமணியே, உன்மனதைச் சோதிக்கும்பொருட்டு நான் கேட்டதேயன்றி வேறல்ல, என் குற்றத்தைப் பொறுத்தருளி, என் புத்திரியாகிய இவ்வுத்தமியைப் பழையபடியே மனைவியாயங்கீகரித்துக்கொண்டு, இன்றுமுதலாக என்னை உமது மாமனாகக்கொண்டு என்மீது அன்புசெய்தி வரக்கடவை, இதுவே நீயெனக்குச் செய்யவேண்டிய வுபகாரமும்பரிசிலும்ஆகுமென்றான். பிரபவும் புலவன் சொல்லை மறுக்காமல் அங்கீகரித்தான்.

"போதாருந்தண்பொழில்வீடூரதிபன் புலவர்க்கெல்லாந் தாதாவெனக்கொடி கட்டுதலா லவன்றன் மனையை, நீதாவென வொருபாவணன் கேட்பவந்நேரிழையை, மாதாவென வழைத்தா னென்கொலாந் தொண்டை மண்டலமே.

என்னுந் தொண்டைமண்டல சதகத்தாற் பெறப்படும்.

வீட்சணம், வீட்சணை } பார்த்தல், பார்வை, விழுதல்.
வீட்சம் - அதிசயம்.
வீட்சிதம் - பார்வை.
வீட்சியம் - அதிசயம், காணப்பட்டது.
வீட்டாள்-மனைவி, வீட்டுவேலைகாரி.
வீட்டுக்கிரியை - சாச்சடங்கினொன்று.
வீட்டுக்குத்தூரம் - மகளிர்சூதகம்.
வீட்டுதல் - கொல்லல்.
வீட்டுநெறி - முத்திமார்க்கம்.
வீட்டுநெறிப்பால்-அறப்பாலினொன்று.
வீட்டுப்பூனை - இற்புலி.
வீட்டுமம் - வைராக்கியம்.

வீட்டுமன், வீஷ்மன் } கங்கைவயிற்றிலே சந்தநுவுக்குப் பிறந்த புத்திரன், சந்தநு கிழப்பருவ யடைந்தபோது அதிரூபவதியாகிய ஒரு கன்னிகையைக் கண்டு, அவள்மீது, மோகங்கொண்டு, அவளுடைய தந்தையாரிடத்தில் தூதனுப்பித்தனக்கு மணம்பேசுவித்தான். அவர்கள் பீஷ்மன்பட்டத்துக்குரிய புத்திரனாயிருத்தலால், அவள்வயிற்றிற் பிறக்கும்புத்திரன் பட்டத்துக்குரியவனாகமாட்டானென்று மறுத்தார்கள். அதைக் கேள்வியுற்ற பீஷ்மன் தந்தையின் ஆசையைத் தீர்க்கும்பொருட்டு, அந்தப்பெண்ணினுடைய தந்தையிடஞ் சென்று, தனக்கு அரசுரிமையும் விவாஹமும் வேண்டுவதில்லையென்று சத்தியஞ்செய்து கொடுத்தான். அதன்பிறகு சந்தநு அந்தக் கன்னிகையை மணம்புரிந்து, அவளிடத்துப் பெற்ற விசித்ரவீரியனுக்கு அரசுரிமையைக்கொடுத்தான். பீஷ்மன் வி

சித்ரவீரியனையும், அவன் புத்திரனையும் சத்தியந்தவறுமல் அன்போடு காத்துவந்தான். இவன் பாரதயுத்தத்திலே அர்ஜுனனுக்குத் தோற்று நெடுங்காலந் தவஞ்செய்திருந்தான்
வீட்டுமாசாரி - பீஷ்மாசாரி.
வீட்டுமுன்கட்டு - முன்கட்டுவீடு.
வீட்டுவாடை - வீட்டில் இருப்போர் கொடுக்கும் குடிக்கூலி.
வீட்டுவிசாரணை - உக்கிராணம்.
வீட்டுவீரன் - வீட்டிலிருந்து வீரம்பேசியும் வெளியில் அஞ்சுவோன்.
வீட்டுள்ளார் - உள்ளிட்டார்.
வீஷ்மம் - வீட்டுமம்.
வீஷ்மாசாரி - சந்தனுவின் புத்திரன்.
வீணன் - வீண்வார்த்தையுடையவன், விருதாவி.
வீணுகாணம் - வீணைவாசித்தல்.
வீணுகானபுரம் - யாழ்ப்பாணம்.
வீணுகானம் - வீணைநாதம்.
வீணுநிபுணை - சரசுவதி.
வீணுசியன் - நாரதன்.
வீணுட்டம் - வீண்பிரயாசம்.
வீணுதண்டம் } முள்ளெலும்பு,வீணைக்கழுத்து.
வீணுதண்டு }
வீணுவாதன் - யாழ்ப்பாடி.
வீணுள் - விருதாவி.
வீணுனுபந்தம் - வீணையினடிப்பக்கம்.
வீணை-ஓசையாழ், கலைஞானமறுபத்து நான்கினென்று,மின்னல்,தபதிநதி.
வீணையியக்கல் - வீணையிலேபாடுதல்.
வீணைவல்லோர் - கந்தருவர்.
வீணைவாசித்தல் - வீணையியக்கல்.
வீண் - பயனின்மை.
வீண்பத்தி - அவபத்தி.
வீதகவ்வியன் - ஒருமுனிவன்.
வீதசோகம் - அசோகு.
வீதபயன் - விஷ்ணு
வீதம் - அவிழ்த்துவிடப்பட்டது, இட்டமானது, சமாதானம், பங்கு, முறை, விதம், வேறு வேருய்ப்பகுத்த பகுப்பினளவு.
வீதராகம் - பற்றின்மை, விஷமம், வைராக்கியம்.
வீதராகன - பற்றற்றவன், புத்தன்.
வீதராகி - பற்றற்றவன்.
வீதல் - கெடுதல், சாதல், வறுமை.
வீதன் - சாந்தன்.
வீதி ஒழுங்கு, கடைவீதி, குதிரை, சுத்திபண்ணல், தெரு, நாடகவகைபத்தினென்று, நேரோடல், பிரபை, மேடை, வரி, வழி, விசாலம், வையாளி வீதி.
வீதிகோத்திரன்-அக்கினி, சூரியன்.
வீதிக்குதல் } பங்கிடுதல், விசாலித்தல்.
வீதித்தல் }
வீதியங்கம் - சம்பாஷணை.
வீதிவண்ணச்சேலை-ஒருபுடவை.
வீதிஹோத்திரன் - தானஜங்கன் புத்திரன் (உ) (கா) திருஷ்டகேதன் புத்திரன், பாரவன் தந்தை (ந) இந்திரசேனன் புத்திரன்.
வீத்துகம் - சதகுப்பை, வெள்ளரி.
வீநாகம் - கூவற்சுவர்.
வீபணி - கடைவீதி.
வீபத்து - சந்திரன்.
வீபற்சு - அருச்சுனன்.
வீப்பகழிபுட்பாத்திரம்-மன்மதன்கணை.
வீமசேனன்-தமயந்தியின்பிதா, பஞ்சபாண்டவரி லொருவன்.
வீமதேவன்-பன்னேருருத்திரரி லொருவன்.
வீமபராக்கிரமன் - ஒரு பாண்டியன்.
வீமம் - பயங்கரம், பருமை.
வீமரதன் - ஒரு பாண்டியன்.
வீமன்-வீமசேனன். பாண்டுவினது இரண்டாம் புத்திரன் வாயுவினது அனுக்கிரகத்தினுற் பிறந்தவன். இவன் மல்யுத்தத்தினும், புஜ பலத்தினும், காதயுதப்போரினும் தனக்கிணையில்லாதவன். ஜராசந்தனை வென்றவனும், திரௌபதியைக் கவர்ந்துசென்ற ஜயத்திரதனை வென்றவனும், விராடனிடத்திலே மடைப்பளிக் கதிபனுக விருந்தவனும் கீசகனைக் கொன்றவனும் இடிம்பனைக் கொன்று அவன் தங்கையை மணம் புரிந்தவனும் இவனே.
வீம்பு - புகழ்ச்சி, பெருமை.
வீரகண்டாமணி - வீரத்தாற்கட்டுமணி
வீரகத்தி - வீரரைக் கொன்றபழி.
வீரகத்திச்சேதகன் - திருமறைக்காட்டில் எழுந்தருளி யிருக்கும் விநாயகர் பெயர்.

வீரகம் - மீன்.
வீரகன் - சுத்தத் கிரகாக்கினியைத்த ணியவிட்ட பார்ப்பான், விநாயகன்.
வீரகவிராயர் - தமிழிலே அரிச்சந்திர புராணம் பாடியபுலவர். இவர் நல்லூர் நகரத்தில் நானூறு வருஷங்களுக்கு முன்னே இருந்த ஒருமகாவித்வான்
வீரகுடியான் - பதினெண் குடிமையி னொருவன்.
வீரகெம்பீரம் - மிகுவீரம்.
வீரகேயூரம் - இருப்புத்தோளணி.
வீரகச்சு - புலித்தோற்கச்சு.
வீரக்கடகம்-மிருகவேட்டையாடின வீ ரர்க்குக் கொடுக்குங் காப்பு.
வீரக்கவசம் - வயிரமணியான் மார்பி லணியுஞ் சீரா.
வீரக்கழல்-கெண்டாமணி, கொடையா லும் வீரத்தாலுங் கட்டுங்கழல்.
வீரக்குட்டி - வீரவான்.
வீரக்குழல் முன்கையிலணியு மிருப்புக் கவசம்.
வீரக்கொடி - வெற்றிக்கொடி.
வீரங்காட்டுதல் - சூரங்காண்பித்தல்.
வீரசயந்திகை - யுத்தம், யுத்தவீரரது நடனம்.
வீரசல்லாபம் - வீரக்களிப்பாற் பேசிக் கொள்ளும் பேச்சு.
வீரசாகி - சேமரம்.
வீரசு ஆண்பிள்ளையின்ருய் வீரன்ருய்
வீரசூரம் - மிகுவீரம்.
வீரசூரன் - அதிவீரன்.
வீரசூலம்-போரிலேற்றவ ரீரலைச் சூல த்தாற் குற்றிப் பிடுங்கின வீரன் வி ருது.
வீரசேநசன் - நளராசன்.
வீரசேனன்-நளராசாவின் பிதா நளன் மகனும் இப்பெயர் பெறுவன்.
வீரசைவம் - ஒருசமயம்.
வீரசைவர் - இலிங்கதாரிகள்.
வீரசொற்கம் - போரிலிறக்கும் வீரர் சேரும்பதவி.
வீரசோழியம் - பொன்பற்றியூர் புத்த மித்திரனற் செய்த இலக்கண நூல் இது வீரசோழன் என்னும் அரச னல்செய்விக்கப்பட்டது.
வீரச்சலங்கை - ஒற்றைக்காலிலணியும் பொற்சலங்கை.
வீரச்செல்வி - துர்க்கை.
வீரட்டம் - ஒருசிவதலம்.
வீரட்டாணம் - கூத்தின் விகற்பம்.
வீரட்டானம் - ஒருசிவஸ்தலம்.
வீரட்டானேசுவரர் - திருக்கண்டியூர்மு தலிய அட்டவீரட்டத்திலும் கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வீரணம் - இலாமிச்சம் வேர்.
வீரணன் - ஒரு பிரஜாபதி.
வீரணி - மிளகு, விளாமிச்சை.
வீரதச்சுவன் - மன்மதன்.
வீரதண்டை - வீரத்தாலணியுந் தண் டை.
வீரதத்துவம் - வீரத்தன்மை.
வீரதாம் - அம்பு.
வீரதாராசநம் - வில்.
வீரதரு - மருது, விடத்தேர்.
வீரதுரந்தரன் - மகாவீரன்.
வீரதை - வீரம்.
வீரதட்டி - மான்ரேற்பட்டை.
வீரநகரம் - தேவிகாநதி தீரத்திலே புல ஸ்திய பிரமா தவஞ்செய்த இடம்.
வீரந்தரம் - மயில், மார்ச்சட்டை.
வீரபத்திரர் - சிவகுமாரருளொருவர் த க்ஷன் சிவனையும் உமாதேவியாரை யும் அவமதித்த காரணத்தால் சிவன் கோபித்து தனது நெற்றிக்கண்ணை விழிக்க அதில் நின்றும் வீரபத்திரர் அவதரித்தார். அவர் சிவபெருமா னது கட்டளையால் தக்ஷன்யாகஞ் செய்கிற இடத்திற்குச் சென்று அந் தயாகத்தையும் அழித்து அந்தயாகஞ் செய்பவனுகிய தக்ஷனையும் கொன் ருர். அதுகண்ட தேவர்களெல்லா ரும் பயந்து சிவபெருமானை நோக்கி யாம் செய்த பிழையைப் பொருத்த ருள வேண்டுமென்று பிரார்த்திக்க அவர் தக்ஷனை ஆட்டுத் தலையை உடையவனுக்கி எழுப்பி யருளிப் போயினர்.
வீரபத்திரர் - ஆயிரம் தலையும் இரண் டாயிரம் கையும் மூவாயிரம் கண் ணும் உடையவர்.
வீரபத்திரன் - அசுவமேத யாகத்துக் கேற்ற குதிரை, உருத்திரமூர்த்திக ளிலொருவன், சிவகணத் தொரு வன், வீரவான்.

வீரபத்தினி - கண்ணகி, இவள் நெடுஞ்செழியனை மடிக்கில் வென்று மதுரையை தன் கற்பால் எரித்தமையால் இவளுக்கு இப்பெயர்வழங்கிற்று, இவள் மதுரையிலிருந்த கோவலன் என்னும் வணிகனது இல்லறக்கிழத்தி கற்பினில் அருந்ததிக்குச் சமானமானவள். இவள் சரித்திரம் பஞ்சகாவியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தில் விரிவாய் காணலாம்.

வீரபாஹு - விஷ்ணு, நவவீரரில்ஒருவர்.

வீரப்பட்டயம் - வெற்றிபெற்ற வீரர் நெற்றியிலணியும் பொற்றகடு.

வீரபாண்டியன் - மதுரையில் பரம்பரையாய் அரசாண்டுவந்த பாண்டியருள் ஒருவன் இவன் தான் அரசாட்சி செய்யுங்காலத்தில் ஒருநாள் வேட்டையாடும் பொருட்டு காட்டுக்குச் சென்று பல மிருகங்களைக்கொன்று கடைசியில் ஒரு புலியைக்கொல்ல எத்தனித்தபோது அது இவன் குறிக்குத்தப்பி, இவன்மேல் விழுந்து இவனைக் கொன்றுவிட்டது.

வீரப்பாடு - வெற்றி.

வீரமகரம் - கடல்கடந்து பகைவருரைக் கைப்பற்றிய தேர்வேந்தர் முன்பாகப் பிடிக்கும் விருது.

வீரமாகாளர் - ஐபன்படைத்தலைவன்.

வீரமார்த்தாண்டன் - நவசத்தி புத்திரரிலொருவன்.

வீரமாலை - வெற்றிபெற்று வாங்கும் பொன்மணிமாலை.

வீரமுட்டி } வீரசைவத் தருத்திரவேடம்பூண்டு சமயப் பாதுகாவலனு யிருப்போன்.
வீரமுஷ்டி }

வீரமுத்திரிகை - சுண்டுவிரலணி.

வீரம் - இஞ்சிக்கிழங்கு, ஓரத்தி, ஓலங்காரம் அது வீரந்தோன்றக்கூறுவது, ஓர்மருந்து, கஞ்சி, சிவாகமமிருபத்தெட்டினொன்று, பெலன், மலை, மிளகு, மேன்மை, வலி, வீராதனம், வீரியம்.

வீரம்பேசல் } வீம்புபேசுதல்.
வீரம்பேசுதல் }

வீரபாகம் - வீரபத்திரருக்குச் செய்யும் ஒரு வேள்வி.

வீராதம் - அம்பு.

வீரரேணு - வீமசேனன்.

வீரர் - படைவீரர்.

வீரலட்சுமி - அட்டலட்சுமிகளி னொருத்தி.

வீரவாகு - முருகவேள்கணத்தலைவன். விசுவாமித்திரர் வேண்டுகோளுக்கு இசைந்து அரிச்சந்திரனை அடிமைகொள்ளும் பொருட்டுச் சண்டாளனாக அவதரித்தயமன்.

வீரவாகுதேவர் - இவர் பார்வதிதேவியாருடைய காலில் அணிந்த சிலம்பில் நின்றும் சிந்திய நவரத்தினங்களும் நவசத்திகளாகி சிவத்தை இச்சித்து நோக்கி, தனித்தனி ஒவ்வொரு புத்திரரை ஈன்றார்கள். அவருள் முதற் சத்தியாகிய இரத்தினக் கன்னிகை ஈன்ற புத்திரனர் இந்த வீரவாகுதேவர். இவர் முருகக்கடவுள் சூரபன்மனை சங்கரிக்க அவதரித்தபோது அவருக்கு சேனபதியாயிருந்து சூரசங்காரத்துக்கு பேருதவியா யிருந்தவர். இவரது பராக்கிரமம் முதலிய வீரகுணங்கள் கந்தபுராணத்தில் விரிவாய்க்கூறப்படும். இவர் சந்ததியாரே செங்குந்தராம்.

வீரவாரம் - வெட்சிமாலைமுதலியன.

வீரவாளி - ஒருபுடவை.

வீரவிருட்சம் - சேமரம்.

வீரவெட்சிமாலை - ஒரு பிரபந்தம் அது நிரைகோடற்கு வெட்கிப் பூமாலை சூடிப்போய் நிறைகவர்ந்துவரி லவனுக்கு முன்பு தசாங்கம் வைத்துப் போய்வந்த வெற்றியைக் கூறுவது.

வீரவெண்டயம் - வீரகண்டாமணி.

வீரவெறி - வீரத்தாலாயமதர்ப்பு.

வீரன் - அருகன், ஓமாக்கினி, கூத்தாடி, திண்ணியன், தீ, வீட்டுமாசாரி.

வீராசனம் - நாடகவகை பத்தினொன்று, போர்க்களம், முழந்தாளி னிற்றல், வீராதனம்.

வீராணம் - ஒருவாத்தியம், நகரம், நீர்க்கரை

வீராணிக்கிழங்கு - ஒருகிழங்கு.

வீராதனம் - வலத்தொடையிலிடக்காற் பாட்டைச்சேர்த்தி இருமாப்புற்றிருத்தல்.

வீராதிவீரன் - மிகுவீரன்.

வீராப்பு - பொருமல்.

வீராய்தல் - அகலல், சுற்றி விசாரித்துச் சம்பாதித்தல்.

வீராவளி - வீராவேசம்.
வீராவேசம் - வீரவெறி.
வீரி - காளி, துர்க்கை, வட்டத்திருப்பி, வீரமுடையவள்.
வீரிடம் - நாவல்.
வீரிடுதல் - ஒலிக்குறிப்பு.
வீரியம் - சுக்கிலம், தைரியம், பறைப்பொது, பிரபை, மகத்துவம், வலி, விந்து, வீரம்.
வீரியர் - வீரமுடையோர்.
வீரியவான் - வீரமுடையோன்.
வீருதம் - மிடைதூறு.
வீரேசன் - சிவபெருமான்.
வீரேசுவரன்-மகாவீரன். வீரபத்திரன்.
வீரை-ஒருபட்டினம், ஒருமரம். கடல், துன்பம், மனைவி, மாதா, வாழை, வட்டத்திருப்பி.
வீரைச்செடி - ஒருசெடி.
வீர்யஜன் - புத்திரன்.
வீர்வீரெனல் - ஈரடுக்கொலிக்குறிப்பு
வீவதம் - கா, காத்தண்டு.
வீவதிகன் - சுமைசுமப்போன்.
வீவு - சாவு.
வீழி - ஒருசெடி, விழுது.
வீழுதல் - விழுதல்.
வீழ் - மாவிழுது, வீழென்னேவல்.
வீழ்கதி - நரகம்.
வீழ்க்கை - சோதிநாள், விருப்பம்.
வீழ்ச்சி - வீழுக்காடு, வீழுதல்.
வீழ்தல்-ஆசை, ஆசைப்படுதல், ஆசைப்பெருக்கம், மேவல், வீழுதல்.
வீழ்த்தல் - வீழுவித்தல்.
வீழ்த்துதல் - வீழுத்தூதல்.
வீழ்நாள் - இழந்தநாள்.
வீழ்பிடி - குறைவு, வெறுப்பு.
வீழ்வு - வீழுதல்.
வீறல் - வீறுதல்.
வீறுப்பு - இறுமாப்பு, சினப்பு.
வீறு - தனிமை, பிரகாசம், புண்ணியம், பெருமை, மருந்துச்சத்து, விளக்கம், வீறுதல்,வீறென்னேவல்,வெறுப்பு, வேகம்.
வீறுகாட்டல் - பெருமைகாட்டல்.
வீறுதல்-இழுத்தல், கீறுதல், தனித்திருத்தல், பிரிதல், பீறுதல், பெருமையுறுதல், விளங்குதல், வெறுப்பாதல்.
வீற்றம் - வேறுபாடு.
வீற்றிருத்தல்-சிறந்தஆசனத்திருத்தல், தனித்திருத்தல், மகிழ்ந்திருத்தல்.
வீற்று - தனி, வஞ்வு, வேறுபாடு.

## வெ



வெஃகல் - ஆசைப்படுதல், ஆசைப்பெருக்கம், விரும்பல்.
வெஃகா - வைணவத் திருப்பதிகளில் ஒன்று.
வெஃகாமை-வெறுப்பு, வேண்டாமை.
வெகு - பல.
வெகுகரிஷாத்தம் - பருத்தல்.
வெகுசனத்துரோகம்- பலசனத்துரோகம்.
வெகுசனரட்சை - பலசனரட்சிப்பு.
வெகுசனவிரோதம்-வெகுசனப்பகை.
வெகுசு - மிகுதி.
வெகுச்சுருதம் - சிற்பநூன் முப்பத்திரண்டில் ஒன்று.
வெகுட்சி - கோபம்.
வெகுண்டம் - கரும்பு.
வெகுதானிய-பன்னிரண்டாவதாண்டு.
வெகுத்தம் - அநேகம், மிகுதி.
வெகுத்தல் - மிகுத்தல்.
வெகுத்துவம் - பன்மை, மகத்துவம்.
வெகுநாயகம் - வெகுபோதிகாரம்.
வெகுநியாயம் - வெளியரங்கபூசை.
வெகுபத்திரி- அறிநெல்லி, கறிமுள்ளி, வட்டு.
வெகுபிட்டம் - விரிவு.
வெகுபுத்திரி - கீழ்காய்நெல்லி, துளசி.
வெகுப்பு - மிகுதி.
வெகுமதி - வெகுமானம்.
வெகுமாரி - மிகுதி, வெகுமழை.
வெகுமானம் உபசாரம், மிகுகணம்.
வெகுமானித்தல் - உபசரித்தல்.
வெகுமுகம் - பலகவர், பலநோக்கு, பலவழி.
வெகுரசம் - கரும்பு.
வெகுரூபன் - ஓந்தி, சிவபிரான், திருமால், பிரமன், மதன்.
வெகுர் - உட்டணத்தால் வரும்பரு.

வெகுலாங்கம் - ஆடுதின்னாப்பாளை.
வெகுலாதி - சிற்றேலம்.
வெகுளல் - வெகுளுதல், கோபித்தல்.
வெகுளாமை - கோபம், கோபியாமை
வெகுளி-கோபம்; சினம் இது முக்குற்றத்துளொன்று, மாயையாக்கை பதினெண் குற்றத்துமொன்று.
வெகுளிவிலக்கு-ஓரலங்காரம் அது வெகுளி தோன்றக்கூறி விலக்குவது.
வெகுளுதல் - கோபித்தல்.
வெகுள்வு - கோபம்.
வெக்காயம் - சூடு.
வெக்காலி - ஒருமரம்.
வெக்காளம்-மழையில்லாக்காலம், வெப்பியாரம்.
வெக்காளித்தல்-வானந்தெளிதல்,வெப்பியாரப்படுதல்.
வெக்கை - காங்கை, நிலக்கொதிப்பு.
வெக்கைநோய் - மிருகங்கள் நோயில் ஒன்று, வைசூரிநோய்.
வெங்கண்-ஒருமீன், பொறாமை, வைராக்கியம்.
வெங்கண்மை - தறுகண்மை.
வெங்கதிர் - சூரியன்.
வெங்கதிர்ச்செல்வன் - சூரியன்.
வெங்கலம் - சுடுகையுள்ளபாத்திரம்.
வெங்களம் - போர்க்களம்.
வெங்காயம் - வெண்காயம்.
வெங்காரம் - வெண்காரம்.
வெங்கார் - வேடை.
வெங்கான்வெளி-கடுங்கானல்வெளி.
வெங்கிணத்தி - ஒருபாம்பு.
வெங்கிராயன்வெளி - கடுங்கானல்வெளி.
வெங்கை - ஒரு சிவஸ்தலம்.
வெங்கோஷ்டம் - ஒருமருந்து.
வெங்கோல் - கொடுங்கோல்.
வெங்கோன்மை-கொடுங்கோன்மை.
வெச்சுவெந்நீர் - சுடுநீர்.
வெச்செனல் - வெம்மையாதல்.
வெச்செனவு - சூடு.
வெஞ்சமம்-பாலைநிலத்திராகம், போர்.
வெஞ்சமன் - இயமன்.
வெஞ்சம் - கோபம், பழி.
வெஞ்சனம்-கறிபதார்த்தம்,சிற்றுண்டி, சுண்டற்குழம்பு.
வெஞ்சிலைச்செல்வன் - வீரபத்திரன்.
வெஞ்சினக்காரன்-கடுங்கோவக்காரன்.
வெஞ்சினம் - கடுங்கோபம்.
வெஞ்சுடர்க்கிரணன் - சூரியன்.
வெடி - அச்சம், இடி, கள், துப்பாக்கி முதலியவற்றிற் பிறக்குமொலி, நறுமணம், நறும்புகை, புகை, வெடியென்னேவல், வெளி.
வெடிகிரந்தி - ஒருவகைக்கிரந்தி.
வெடிகுண்டு - ஒருவிதவெடி.
வெடிக்குதல் - வெடித்தல்.
வெடிசன்னி - சன்னிபேதத்திலொன்று.
வெடிசூலை - ஒருசூலை.
வெடிச்சுடுதல் - வெடிவைத்தல்.
வெடித்தகுரல்-கடுந்தொனியானகுரல்.
வெடித்தசொல் - வெடுவெடுப்பானபேச்சு.
வெடித்தல்-பிளத்தல்,விள்ளுதல்.
வெடிபலவன் - பேய்ப்பலவன்.
வெடிப்பாய்ப்பேசல்- வெறுப்பாய்ப்பேசல்.
வெடிப்பு - அதிகம், கமர், விள்ளுகை.
வெடியுப்பு } ஒருப்பு.
வெடிலுப்பு }
வெடிலுப்புத்திராவகம்-ஒருதிராவகம்.
வெடில் உறணுற்றம், வேட்டு.
வெடுக்கன் - கோபி.
வெடுக்கு - வெடில், வெட்டெனவு, வெட்டெனவுள்ளது.
வெடுக்கெனல்-கடுமைக்குறிப்பு.
வெடுப்புக்காட்டுதல்-சினப்புக்கொள்ளுதல்.
வெடுவெடுத்தல் - கடுமையாயிருத்தல், கோபித்துப்பேசல்.
வெடுவெடெனல் - சினக்குறிப்பு.
வெட்கக்கேடு - மானபங்கம்.
வெட்கம் - நாணம்.
வெட்கல் - அச்சக்குறிப்பு, நாணுதல்.
வெட்குதல் - வெட்கல்.
வெட்கறை - இலச்சை.
வெட்கிளுவை-கிளுவைஞேர்பேதம்.
வெட்குவெட்கெனல் வெட்கக்குறிப்பு.
வெட்சி-ஒருபூஞ்செடி, பகைநிரை றயோட்டுவார்க்குமாலை.
வெட்சித்தாரோன் } குமரக்கடவுள்.
வெட்சிமாலையோன் }
வெட்சிவிருப்பன்-முருகப்பெருமான்.
வெட்டல் - கொலைசெய்தல்,தறித்தல், நால்வகை யூறுபாட்டிலொன்று, மெய்ப்பரிசமெட்டிலொன்று.
வெட்டவெளி ஏகவெளி, வெளியரங்கம்.
வெட்டறுமூலி - நத்தைச்சூரி.

வெட்டடெனம் - காப்புக்கட்டல்.
வெட்டனவு - கடுமை, பலோற்காரம், வெடுக்குத்தனம்.
வெட்டாந்தரை - கடுந்தரை.
வெட்டி-இருவேலிச்செடி, வழி, வீண்.
வெட்டிப்பேசல்-கண்டித்துப்பேசுதல்.
வெட்டிமை - வெட்டியான்றொழில்.
வெட்டியான் - ஒருபூச்சி, சவஞ்சுடுவோன், பறையன்.
வெட்டிரும்பு-இரும்புவெட்டுமோருளி.
வெட்டிவீரன் - சுத்தவீரன்.
வெட்டிவேர் - இருவேலிவேர்.
வெட்டிமை - கடுமை, சினம்.
வெட்டு - ஒருறு.
வெட்டுக்கன்று - வரைகன்று.
வெட்டுக்கிளி - ஒருபூச்சி.
வெட்டுணி - தப்பிலி.
வெட்டுண்ணல் - வெட்டப்படுதல்.
வெட்டுப்படுதல்-வெட்டுண்ணல்.
வெட்டுதல் - வெட்டல்.
வெட்டுத்தட்டு - பறையின்வாய்வார்.
வெட்டுமாறன்-வெறியுள்ளஒருவஸ்து.
வெட்டுனர் வெடுவெடுப்பானபேச்சு.
வெட்டுரைப்பணம் - கள்ளநாணயம்.
வெட்டுவாய் - தறிவாய், பொருத்து.
வெட்டுவாள் - ஒருவாள்.
வெட்டுவெட்டெனல்-கடுமைக்குறிப்பு
வெட்டுவேளாண்மை-தானியமறுப்பு.
வெட்டெனல் - கடுமைக்குறிப்பு.
வெட்டெனவு - கடுமை.
வெட்டேறு - ஒருகருவி.
வெட்டை - உட்டணம், ஒருநோய், கடினம், நிலக்கொதி, வெளி, வெறுமை.
வெட்டைவெளி - வெறுவெளி.
வெட்பகடம் - வெளிப்பகடம்.
வெட்பாடம் - வாய்ப்பாடம்.
வெட்பாலை - ஒருமரம்.
வெட்பாவட்டை - ஒருபாவட்டை.
வெட்புக்கார் கருக்கொள்ளாமுகில்.
வெட்பூல் - ஒருபூல்.
வெண்கடம்பு - ஒருகடம்பு.
வெண்கடுகு - ஒருகடுகு.
வெண்கண் - வெங்கண்.
வெண்கதிரோன் } சந்திரன்.
வெண்கதிர் } சந்திரன்.
வெண்கலம் - செம்பும் வெள்ளியமும் கலந்த ஒருலோகம்.
வெண்கலி - கலித்தளையும் வெண்டளையும் விரவியும் அயற்றளையருகியும் வந்து ஈற்றடி முச்சீரானிறுவது.
வெண்கல் - வெள்ளைக்கல்.
வெண்கவி - பொருளாழமில்லாத பாட்டு, வெண்பா.
வெண்காக்கணம்-வெள்ளைக்காக்கணம்.
வெண்காசம் - கண்ணோயுளொன்று.
வெண்காடர் - பட்டினத்தடிகள்.
வெண்காடு - ஒரு சிவதலம்.
வெண்காந்தள் - ஒருகொடி.
வெண்காயம் - வுள்ளி, ஒருகாயம்.
வெண்காரம் - ஒருகாரம்.
வெண்காரை - வெள்ளைக்காரை.
வெண்கிடை } ஒருகிடைச்சி.
வெண்கிடைச்சி } ஒருகிடைச்சி.
வெண்கிளி - வெள்ளைக்கிளி.
வெண்குங்குலியம்-வெள்ளைக்குங்குலியம்.
வெண்குட்டம் - ஒருநோய்.
வெண்குமுதம் - வெள்ளாம்பல்.
வெண்குன்றி - அதிமதுரம்.
வெண்குன்று - முருகக்கடவுளுடைய திருப்பதிகளுள் ஒன்று.
வெண்கூதாளம்-ஒருசெடி, நீர்த்தாளி.
வெண்கூவெண்பா- இனவெழுத்துமிக்கிசைப்பது.
வெண்கொடிவேலி - ஒருபூடு.
வெண்கொல் - வெள்ளி.
வெண்கொற்றக்குடை-தவளச்சத்திரம்
வெண்கோட்டம் - ஒருசெடி.
வெண்சலசமுற்றாள் - சரச்சுவதி.
வெண்சலசம் - வெண்டாமரை.
வெண்சலசை - சரசுவதி.
வெண்சாமரம் } வெள்ளைச்சாமரம்.
வெண்சாமரை } வெள்ளைச்சாமரம்.
வெண்சாரை - இந்திரியம், வெள்ளைச்சாரை.
வெண்சீர்-மூவசைசேர்நீற்றுச்சொல்.
வெண்சீர்வெண்டளை - காய் முன்னேனும் பூ முன்னேனும் நேரொன்றி வரும் பந்தம்.
வெண்சுக்கான்கல் - ஒரு உபரசம்.
வெண்சுடர் - சந்திரன்.
வெண்செந்துறை - இரண்டடிகள் தம்முள் அளம்பாத்துவிழுமியபொருளுமொழுகியவோசையுமாய் வருவது.
வெண்டகரை - ஒருபூடு.

வெண்டயம் - வெண்டையம்.
வெண்டலூர் - ஓரூர்.
வெண்டலை - தலையோடு.
வெண்டல் - காய்தல்.
வெண்டளை - வெண்பாவுக்குரிய பந்தம் இது வெண்சீர் வெண்டளை இயற்சீர் வெண்டளை என விருவகைப்படும்.
வெண்டாது வெள்ளி.
வெண்டாமரை - வெள்ளைத்தாமரை.
வெண்டாமரையாள் - சரச்சுவதி.
வெண்டாவி - அன்னக்கிளி.
வெண்டாழிசை- வெண்பா வினங்களி ளொன்று அது மூன்றடியாய் முதவிரண்டடியு நாற்சீராயும் ஈற்றடியொன்றும் வெண்பாவைப்போல முச்சீராயும் முடிவுபெற்று வேற்றுத்தளை விரவிவருவது.
வெண்டாழை - ஒருதாழை.
வெண்டாளி - இடைச்சங்கத்து நூல்களுளொன்று.
வெண்டி - விறுதா.
வெண்டிக்காய் - வெண்டைக்காய்.
வெண்டு-உட்டுளை, கடுக்கன்புரி.
வெண்டுறை வெண்பா வினங்களிளொன்று அது மூன்றடிமுதலேழடியீறாகப் பின்பு நின்ற சிலவடிகளிற் சிலசீரடி குறைந்துவருவது.
வெண்டுறைநாதர் - திருவெண்டுறையிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வெண்டேர் - கானல்.
வெண்டைக்காய் - ஒருகாய்.
வெண்டையம் - ஒரு சிறுமணி.
வெண்டோன்றி - வெள்ளைத்தோன்றி மலர்.
வெண்ணங்கு-ஒடைக்கொடி, ஒருமரம்
வெண்ணந்தை-வெள்ளாந்தை.
வெண்ணயுருவி - ஒருசெடி.
வெண்ணரி - ஒருபூடு.
வெண்ணாரை - ஒருகொக்கு.
வெண்ணாவலன் - திருவானைக்காவில் எழுந்தருளியிருக்கும் சிவபிரான்.
வெண்ணாவல் - ஒருநாவல்.
வெண்ணிலம் - மணற்றரை, வெருந்தரை.
வெண்ணிலவை - மென்புரட்டு.
வெண்ணிலை - கைமாற்றுக்கடன்.
வெண்ணிறம் வெள்ளைநிறம், வெள்ளைநரை.

வெண்ணெய் - உருக்காநெய்.
வெண்ணெய்ச்சுறா - ஒருசுறா.
வெண்ணெய்தல்-ஒரு நீர்ப்பூ.
வெண்ணெய்நல்லூர் - ஒரு சிவதலம்.
வெண்ணெய்மலை - இதுகொங்குநாட்டிலுள்ள சுப்பிரமணிய ஸ்தலங்களுள் ஒன்று இது முருகக்கடவுளுக்கு மிகவும் விருப்பமான ஸ்தலம்.
வெண்ணொச்சி - ஒருநொச்சி.
வெண்ணோ - ஒருகண்ணோ.
வெண்பதம் - இளம்பதம்.
வெண்பலி - சாம்பல்.
வெண்பா-ஒருபா அது ஈற்றடி முச்சீரடியாகவும் ஏனையடி நாற்சீரடியாகவும் பெற்றுக் காய்ச்சீருமகவற்சீரும் வெண்சீர்வெண்டளையு மியற்சீர் வெண்டளையுங் கொண்டுவருவது.
வெண்பாக்கநாதர் - திருவெண்பாக்கத்திலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வெண்பாட்டு - வெண்பா.
வெண்பாப்புலி - ஒருபுலவர்.
வெண்பு - வெண்ணிலம், வெளிப்பு.
வெண்புணர்ச்சிமாலை - தண்டகமாலை அது வெண்பாவான் முந்நூறுசெய்யுட்கூறுவது.
வெண்புழுக்கு - இளம்புழுக்கு.
வெண்பொன் - வெள்ளி.
வெண்பொன்மலை - கைலாசகிரி.
வெண்மட்டம்- கொத்துவேலையில்லாத செய்கை.
வெண்மட்டவேலை-ஒப்புரவானவேலை.
வெண்மணல் - வெள்ளைமணல்.
வெண்மணி - வெள்ளைவிழி, ஒருவர்.
வெண்மயிர் - சாமரம், நரைமயிர்.
வெண்மலை - திருக்கைலைமலை.
வெண்மை அறிவின்மை, இளமை, வெள்ளை.
வெண்மொந்தன்-ஒருவாழை.
வெதிரம் - செவிடு.
வெதிரன் - செவிடன்.
வெதிரேகம்-எதிர்மறை,பிரிவு,விலக்கு.
வெதிரேகவனுமானம் - ஒரு அளவைப் பிரமாணம்.
வெதிரேகாலங்காரம் - ஒருஅலங்காரம், அது உவமான வுபமேயத்திற் பிரிவு தோன்றச் சொல்வது.
வெதிர் - செவிடு, மூங்கில்,

வெதிர்த்தல் - அஞ்சுதல், சினத்தல், நடுங்குதல்.
வெதிர்ப்பு - கலக்கம், சினக்குறிப்பு, நடுக்கம்.
வெதுக்கலன் - வெதும்பினவன்.
வெதுக்கல்- வெதுப்பல், வெதும்பலன்.
வெதுப்படக்கி - குப்பமேனி.
வெதுப்பம் - ஒருநோய், வெப்பம்.
வெதுப்பல் - வாட்டல்.
வெதுப்பு-சுரம், வெதுப்பென்னேவல், வேம்பு.
வெதுப்புதல் - வாட்டுதல்.
வெதும்பல் - சினக்குறிப்பு, வாடல்.
வெதும்புதல் - வாடல்.
வெதுவெதுத்தல் - இளஞ்சூடாயிருத்தல்.
வெவ்வெதுப்பு - இளஞ்சூடு.
வெந் . மூதுகு
வெந்தயம் - ஒருசரக்கு.
வெந்தல் - வெந்தயம்.
வெந்தித்தல் - கொதித்தல், சினத்தல்.
வெந்திப்பு - கொதிப்பு, சினப்பு.
வெந்து - கிளை.
வெந்துசனம் - சுற்றத்தார்.
வெந்தை - பிட்டு.
வெந்தையம் - வெந்தயம்.
வெந்நிடுதல் - புறங்காட்டுதல்.
வெந்நீர் - சுடுநீர்.
வெப்பசாரம்-மனத்துயர், வெக்காளம்.
வெப்பம்-ஆசை, மனத்துயர், வெந்திப்பு, வெம்மை.
வெப்பித்தல் - வெம்மைகொள்ளுதல்.
வெப்பியாரம் - வெப்பசாரம்.
வெப்பு - ஒருநோய், மனத்துயர், வெம்மை.
வெப்புக்கட்டி - வெப்பினல் வயிற்றில் உண்டாகுங்கட்டி.
வெப்புக்கொதி-வெப்பினு லுண்டான காய்ச்சல்.
வெப்புப்பாவை-வெப்புக்கட்டி.
வெப்புவெப்பெனல் - கோபக்குறிப்பு, துயர்க்குறிப்பு.
வெம்பல்-பெருங்கோபம், வாடல், விம்மல், வெக்காளித்தல். வெம்பலானது.
வெம்பளிக்கை - வெம்பிளிக்கை.
வெம்பிளாந்தி- மயிலாந்தி.
வெம்பிளிக்கை-அகங்காரம்.
வெம்புதல்-கலங்குதல், சினத்தல், வாடுதல், வெக்காளித்தல்.

வெம்மை - ஆசை, உட்டணம், எண்வகையூறினென்று, கடுமை.
வெயிலுந்தாவிந்தம் - தாமரை.
வெயிலெறித்தல் - ஒளிவீசல்.
வெயில்- ஒளி, சூரியகிரணம், சூரியன்.
வெயிற்குளித்தல்-வெயிலடியுணல்.
வெயிற்குளிர்தல் - சூரியகிரண வெம்மை தணிதல்.
வெய்து-வெம்மையுடையதுவெய்யது.
வெய்துயிர்த்தல் - நெடுமூச்சுவிடல்.
வெய்துரை - கடுஞ்சொல்.
வெய்துறல் - அச்சக்குறிப்பு, சினக்குறிப்பு, துன்பம்.
வெய்தெனல்-விரைவுக்குறிப்பு.
வெய்யது-பொல்லாதது, வெம்மையானது.
வெய்யநீர் - வெந்நீர்.
வெய்யவன் - கொடியோன், சூரியன், மிருகசீரிடம், விருப்புற்றோன்.
வெய்யில் - சூரியகிரணம், வெய்யில்.
வெய்யோன் - வெய்யவன்.
வெரிந் - முதுகு.
வெரு - அச்சம்.
வெருகடி - பூனையடி.
வெருகடிப்பிரமாணம் - மூன்றுவிரலாற் கிள்ளுமளவு.
வெருகம் - வாலின்கீழ்.
வெருகு - ஆண்பூனை, பூனை, மெருகு.
வெருக்கொள்ளல் - அச்சமுறல்.
வெருட்சி - அச்சம், மயக்கம்.
வெருட்டல்-அச்சமுறுத்தல், மயக்கல்.
வெருட்டி-அச்சம், அச்சுறுவிப்போன்.
வெருட்டு - அச்சுறுத்தல், வெருட்டென்னேவல்
வெருட்டுதல்-வெருட்டல்.
வெருணை - பாவட்டை.
வெருவந்தம் - அச்சம்.
வெருவல் - வெருவுதல்.
வெருவு அச்சம், வெருவென்னேவல்.
வெருவுதல் - அஞ்சல்.
வெருளல் - வெருளுதல்.
வெருளார்த்தல்-திகைத்தல், மயங்கல்.
வெருளி-அச்சமுடையது, அச்சமுறுவிப்பது வெருட்சி.
வெருளிகட்டுதல்-அச்சுறுத்தல், வெருட்சிக்குறி.
வெருளுதல் அஞ்சுதல், மருளுதல்.
வெருள் - அச்சம், உன்மத்தம், வெருளென்னேவல்.

வெருள்வு - வெருட்சி.
வெலி - நீக்கல்.
வெலிசம் - கற்றாழை.
வெலிகாரம் - வெண்காரம்.
வெலித்தி-கடித்தமில்லாதது, சீலை.
வெல்லப்பாகு - வெல்லப்பாணி.
வெல்லம் - கரும்பின்கட்டி.
வெல்லல் - கசித்தல், சயித்தல்.
வெல்லி - சிற்றேலம்.
வெல்லுதல் - மேற்கொள்ளல்.
வெல்லுமா - புலி.
வெல்வி - வெற்றி.
வெவ்விது - வெய்து.
வெவ்வியன்-கோபி,வெப்பமுடையோன்.
வெவ்வினை - போர்.
வெவ்வுயிர்த்தல் - பெருமூச்செரிதல்.
வெவ்வுரை - கடுஞ்சொல்.
வெவ்வுழவு - அடையாதவுழவு.
வெவ்வேறு - வேறுவேறு.
வெளி-ஆகாயம், புறம், மறைப்பில்லாவெளி.
வெளிக்கட்டு - வீட்டிற்புறக்கட்டு.
வெளிக்காட்சி - வெளியானதோற்றம்.
வெளிக்கிடல் - புறப்படல்.
வெளிசங்கம் - வெளியரங்கம்.
வெளிசம் - தூண்டில்.
வெளிச்சங்காட்டுதல் ஒளிகாட்டுதல்.
வெளிச்சம்-பிரபை, வெளியரங்கம்.
வெளிதிறத்தல் - வெளிவிடுதல்.
வெளிது-வெண்மையுடையது, வெறிதானது.
வெளித்தட்டு-பொறுப்பின்றிக் காரிய நடத்தல்.
வெளித்தல் - தெளிதல், வானம்வெளிவாங்குதல்,விளங்குதல்,வெறிதாதல்.
வெளித்தோற்றம்-உள்ளொன்று புறம்பொன்றாயிருப்பது,உற்பத்தி, பிரத்தியட்சம்.
வெளிநாடுதல்-வெளியேகாணப்படுதல்.
வெளிநாட்டம்-புறநோக்கம்.
வெளிபொருள் - வெளியரங்கமான பொருள்.
வெளிப்பகடம் - உள்ளிருப்பதைமறைத்து நடப்பது, வீண்பகட்டு.
வெளிப்பகட்டு வெளிவெருட்டு.
வெளிப்படல் } தோற்றல், வெளிவருதல்.
வெளிப்படுதல் }
வெளிப்படுத்தல்-அறிவித்தல்,வெளியாக்கல்.
வெளிப்படை - வெளியரங்கம்.
வெளிப்படைச்சொல் - இயல்பாய் விளங்கிநிற்குமொழி.
வெளிப்படையுவமம்-வினையும் பயனும் உவமையுருபும் வெளிப்பட விளங்கிநிற்குமுவமம்.
வெளிப்பாடு - காணிக்கை, தோற்றம்.
வெளிப்பு - விளக்கம், வெளித்தல், வெளியிடம்.
வெளிமடை - புறமடை.
வெளிமான் - பெண்மான்.
வெளிமான் - பெருஞ்சித்திரனாராற் பாடப்பட்டோன், இச்சிற்றரசன் மிக்க கொடையுளோன், இவன் இறக்கும்போது பெருஞ்சித்திரனார்க்குப் பரிசுகொடுக்குமாறு தம்பிக்கு ஆஜ்ஞை செய்திருந்தான். அவன் கூறியஅளவிற் சிறிது கொடுப்பப் பெருஞ்சித்திரனார் ஏற்றுக்கொள்ளாமற்போய்க் குமணனை யடைந்து, யானையும் பொன்னும் பெற்று, மீண்டுபுக்கு அவனைநோக்கி,இரப்போர்க்குக்கொடுப்பவரில்லையுமல்லர், யான்பெற்று வந்து ஊர்ப்புறத்தே கட்டியிருக்கும் யானை குமணன் தந்த பரிசில் யான் போய் வருகிறேன் என்னுங் கருத்தினையுடைய.

"இரவலர் புரவலை நீயுமல்லை, புரவலரி லவர்க்கில்லையுமல்ல, ரிரவலருண்மையுங்கா ணி னி யி ர வலர்க், கீவோருண்மையுங்காணினி நின்னூர்க், கடிமரம் வருந்தத்தந்தியாம்பிணித்த, நெடுநல்யானை யெம்பரிசில், கடுமான்றோன்றல் செல்வல்யானே"

என்னும் பாடலைக் கூறிப்போயினர்.

வெளியடை - திரைச்சீலை.
வெளியரங்கம் - வெளிப்படை.
வெளியாகுதல் - வெளித்தல், வெளிவருதல்.
வெளியாக்கல் } விளக்குதல், வெளிவரப்பண்ணுதல்.
வெளியாக்குதல் }
வெளியாடை - தோரணம்,புறவுடை.
வெளியார் - மௌட்டியர்.
வெளியிடல் - வெளிவாங்குதல்.
வெளில் - அணில், கட்டுத்தறி, தயிர்கடைமத்து,யானைத்தூண்,வெண்மை,

வெளிவாங்குதல் - வெளித்தல்.
வெளிவாயன் - அந்தரங்கமற்றவன்.
வெளிவாய் - பரிகசியவாக்கு.
வெளிவிடுதல் - வெளிப்படுத்தல்.
வெளிவிருத்தம்-வெண்பாவினங்களில் ஒன்று அது மூன்றடியானேனும் நான்கடியானேனு முற்றுப்பெற்று அடிகளி னிறுதிதோறுந் தனிச்சொற்பெற்றுவருவது.
வெளிவேடம் - புறக்கோலம்.
வெளிறர் - அறிவில்லார்.
வெளிறல் - வெண்மையாதல்.
வெளிறு-அலிமரம், அறிவின்மை, நறுவிலிமரம், வயிரமில்லாமரம், வெண்மை, வெளிறென்னேவல்.
வெளிறுதல் - வெளிறல்.
வெளிற்றுக்குணம்-விநயமில்லாத குணம்.
வெளிற்றுமரம் - அலிமரம், முருக்கு.
வெளிற்றுரை - பொருணய மின்றிய சொல்.
வெளுத்தல் ஒருமரம், வெள்ளையாக்கல், வெள்ளையாதல்.
வெளுப்பு - விடியல், வெண்மை, வெளுத்தல்.
வெளுவெளுத்தல்-மிகவும்வெளிறுதல்.
வெளுவெளுப்பு - நோயடைந்தவெண்மை.
வெளுவை - வெளுத்தல்.
வெளேரெனல்-வெண்மைக்குறிப்பு.
வெள்கல்-அச்சம், வெட்கம், வெட்குதல்
வெள்வரி - பலகறை.
வெள்வவ்வால் - ஒருவகைமீன்.
வெள்வாடை - சிறுவாடை.
வெள்வெடி - சத்தவெடி.
வெள்வங்காயம் - வெள்ளுள்ளி.
வெள்வெட்சி - ஒருபூடு.
வெள்வெவற்றிலை-வெள்ளைவெற்றிலை.
வெள்வேல் - ஒருமரம்.
வெள்ளக்காடு - பெருவெள்ளம்.
வெள்ளடி - வெருட்டு.
வெள்ளடிச்சேவல்-கத்திகட்டாமலடிக்குஞ்சேவல்.
வெள்ளடை - வெள்வெற்றிலை.
வெள்ளணியணிந்து விடுத்தல் - அகப்பொருட்டுறையினொன்று.
வெள்ளப்பாடு - பள்ளம், வெள்ளம்பிடிப்பதினால் வருஞ்சேதம்.
வெள்ளம்-ஒரெண், கடல், நீர்ப்பெருக்கு, மிகுதி.
வெள்ளரசு - ஒரு அரசு.
வெள்ளரணை - சிலைப்பேன்.
வெள்ளரவம் - ஆதிசேஷன்.
வெள்ளரவவெற்பு - திருவேங்கடமலை.
வெள்ளரி - ஒருகொடி.
வெள்ளலரி - ஒருபூமரம்.
வெள்ளல்லி-வெள்ளாம்பல்.
வெள்ளழுகல் - அழுகி வெண்ணிறம்பிடித்தது.
வெள்ளறிவன் - அறிவீனன்.
வெள்ளறிவு - அவிவேகம்.
வெள்ளறுகு - ஒருபூடு.
வெள்ளாடு - ஒருவகையாடு.
வெள்ளாட்டி - ஏவற்பெண்.
வெள்ளாண்மை - கிருஷி.
வெள்ளாந்தை-ஒரு ஆந்தை.
வெள்ளாப்பு - வைகறை.
வெள்ளாம்பல் - ஒரு ஆம்பல்.
வெள்ளாவி - வெறுமாவி.
வெள்ளாவிதட்டுதல் - ஆவிபிடித்தல்.
வெள்ளாவிரை - ஒரு ஆராவிரை.
வெள்ளாவிவைத்தல்-ஆவிபட வைத்தல்.
வெள்ளாளர் - பூவைசியர், யருதநிலமாக்கள்.
வெள்ளானை - ஐராவதம்.
வெள்ளி - வெண்பொன். சுக்கிரன், இவன் அசுரகுரு.
வெள்ளிக்காசு-ஒருமீன்.
வெள்ளிக்கிழமை - சுக்கிரவாரம்.
வெள்ளிக்கோல் - ஒருநிறைகோல்.
வெள்ளிடி - மழைக்குண மில்லாமல் விழுமிடி.
வெள்ளிடை - வெளி.
வெள்ளிடைமன்று - காவிரிப்பூம்பட்டினத்துள்ள ஐந்துமன்றத்துள்ஒன்று. இதுதிருடர்களைவெளிப்படுத்துவது
வெள்ளித்தோற்றம் - சுக்கிரோதயம்.
வெள்ளிநகம் - கைலாசம்.
வெள்ளிநிமிளை - ஒருநிமிளை.
வெள்ளிப்பிரிவு - சுக்கிரனிருந்த விராசிவிட்டுப்பிரிதல்.
வெள்ளிமடந்தாள் - ஒருமீன்.
வெள்ளிமலாம் - ஒருமலாம்.
வெள்ளிமலை - கைலைமலை, கயிலாசம்.
வெள்ளிலை - வெறுயிலை, வெற்றிலை.

வெள்ளிமலைநாதர் - திருத்தெங்கூரிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வெள்ளியம்பலம் - மதுரையிலுள்ள ஒரு மன்றம்.
வெள்ளயம்பெருமலை - வித்தியாதரர்களுடையமலை.
வெள்ளிலோத்திரம் - ஒருமருந்து, விளாம்பட்டை.
வெள்ளில் - பாடை, விளாமரம்.
வெள்ளிவாயல் - ஒருஊர்.
வெள்ளிவீதியார் இவர் திருவள்ளுவர்க்குச் சிறப்புப்பாயிரஞ் சொல்லிய கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர்பாடிய "கன்றுமுண்ணாதுகலத்தினும்படாது"என்றபாட்டுத்தொல்காப்பியவுரையினு மொன்றுளது. இவர் கற்பனலங்காரம் பெறப்பாடுவதில் வல்லவர்போலும்.
வெள்ளிறகுமந்தாரை - ஒருமந்தாரை.
வெள்ளிறால் - ஒருவகையிறால்.
வெள்ளீயம் - ஒருஈயம்.
வெள்ளீரல் - மணிக்குடர்.
வெள்ளுப்பு - ஒருப்பு.
வெள்ளுழவு - பழுதியுழவு.
வெள்ளுளுவை - ஒருமீன்.
வெள்ளுள்ளி - ஒருள்ளி.
வெள்ளுறட்டி - ஒருபண்ணிகாரம்.
வெள்ளுமத்தை - ஒருமத்தை.
வெள்ளுக்காப்பியனார் - இடைச்சங்கப் புலவருள் ஒருவர்.
வெள்ளெருக்கு - ஒரெருக்கு.
வெள்ளெலி - ஒரெலி.
வெள்ளெலும்பு - தசைகழிந்த வென்பு.
வெள்ளெழுத்து - கண்புகைச்சல். பார்வைக்கு வெளிதாய்நிற்கு மெழுத்து.
வெள்ளெல் - ஒரெள.
வெள்ளென - காலம்பெற.
வெள்ளெனல் - வெண்மையாதல்.
வெள்ளேடு - எழுதாவேடு.
வெள்ளேறன் - பழுதானஇரும்பு.
வெள்ளை - ஆழமான கருத்தில்லாதது, சங்கு, சுண்ணம்பு, பலபத்திரன், மேற்கட்டி, வெட்டை, வெண்பா, வெண்மை, வெள்ளாடு, வெள்ளாட்டுமறி, வெள்ளி, வேங்கை.
வெள்ளைகட்டுதல் மேற்கட்டிகட்டுதல்.
வெள்ளைக்கமலத்தாள் - சரசுவதி.
வெள்ளைக்கரு - முட்டையிற் சிவப்புக்கருவின்புறக்கரு.
வெள்ளைக்கலையாள் - சரசுவதி.
வெள்ளைக்கவி - புன்சொற்கவி.
வெள்ளைக்காகம் - வெண்காக்கை.
வெள்ளைக்காக்கணம் - ஒருகொடி.
வெள்ளைக்காரர் - வெள்ளைமனிதர்.
வெள்ளைக்காரை - ஒருசெடி.
வெள்ளைக்கிளி - ஒருகிளி.
வெள்ளைக்கீரி - இராசகீரி.
வெள்ளைக்கீரை - ஒருவகைக்கீரை.
வெள்ளைக்குங்கிலியம் - ஒருமருந்து.
வெள்ளைக்குன்றி - அதிமதுரக்கொடி.
வெள்ளைகுன்றிமணி - ஒருகுன்றிமணி.
வெள்ளைக்கொம்பு - நரைமயிர்.
வெள்ளைச்சாரணை - ஒருசாரணை.
வெள்ளைச்செவ்வந்தி-ஒருசெவ்வந்தி.
வெள்ளைநாவல் - ஒருநாவல்.
வெள்ளைநிறத்தாள் - சரச்சுவதி.
வெள்ளைநெல் - ஒருநெல்.
வெள்ளைபூருதல் - மல்லாக்காய்க்கிடத்தல்.
வெள்ளைப்பணியாள்-சரசுவதி.
வெள்ளைப்பவளம்-வெள்ளைப்போளம்.
வெள்ளைப்பாகல் - ஒருபாகல்.
வெள்ளைப்பாட்டு - வெண்பா.
வெள்ளைப்பாஷாணம் ஒருபாஷாணம்.
வெள்ளைப்பிள்ளை - வஞ்சகமற்றவன்.
வெள்ளைப்புத்தி - பிள்ளைப்புத்தி.
வெள்ளைப்பூண்டு - வெள்ளுள்ளி.
வெள்ளைப்பேச்சு - சுத்தவாக்கு.
வெள்ளைப்பொன்னவிரை ஓராவிரை.
வெள்ளையபோளம்-ஒருமணி, ஒருமருந்து.
வெள்ளைமந்தாரை-ஒருமந்தாரை.
வெள்ளைமனிதர் - வெள்ளைக்காரர்.
வெள்ளைமாதளை - ஒருமாதளை.
வெள்ளைமெய்யாள் - சரச்சுவதி.
வெள்ளைமேனியாள் - சரச்சுவதி.
வெள்ளையடித்தல் - சுவர் முதலியவற்றிற்கு நீறுபூசுதல்.
வெள்ளையானை - கீழ்த்திசையானை.
வெள்ளையானையூர்தி இந்திரன், ஐயன்.
வெள்ளைவண்ணத்தை - ஒருபூச்சி.
வெள்ளைவாரணன் - வெள்ளையானையூர்தி.
வெள்ளைவிழி - கருமணியருகு.
வெள்ளைவெளுக்குதல் - ஆடையழுகச் சுற்றல்.

வெள்ளைவெளேரெனல் - மிகுவெள்ளைக்குறிப்பு. [சை.
வெள்ளொத்தாழிசை - வெண்டாழி
வெள்ளொலியல் புடைவைக்குஞ்சம்.
வெள்ளோக்காளம் } கக்கலில்லாத
வெள்ளோங்காளம் } வோங்காளம்.
வெள்ளோடன் - ஓடுவிட்டுக்களருந்தேங்காய்.
வெள்ளோந்தி - ஒருவோந்தி.
வெள்ளோலை - எழுதாவோலை, முத்திரையில்லாவோலை
வெறி-அச்சம், ஆடு, கலக்கம், கள், கோபம், சீக்கிரம்,நாற்றம், பிசாசம், மஸ்து, வட்டவடிவு, வியாதி, வெறியென்னேவல், வேலனுடல்.
வெறிகொள்ளுதல் - சன்னதங்கொள்ளல், வெறித்தல்.
வெறிக்கப்பார்த்தல் - பயமுறுத்திப்பார்த்தல்.
வெறிக்கடுக்காய் - பேய்க்கடுக்காய்.
வெறிக்குணம் - மஸ்துக்கொண்டகுணம், மருட்குணம், மூர்க்ககுணம்.
வெறிக்குதல் - வெறிகொள்ளுதல்.
வெறிது-அறிவின்மை,கோது, வறிது.
வெறித்தபார்வை - பயமுறப் பார்க்கும் பார்வை.
வெறித்தல்-ஆவேசமாதல், மயக்குதல், வெறிதாய்ப்போதல்.
வெறிநாய் - பயித்தியம்பிடித்தநாய்.
வெறிப்பு-பஞ்சம், மயக்கம்,வெறித்தல், வெறுமைத்தன்மை.
வெறியயர்தல் - வெறியாடல்.
வெறியன் - பித்தன். [கொள்ளல்.
வெறியாடல் - சன்னதமாடல், வெறி
வெறியாட்டாளன்-உன்மத்தன்,சன்னதக்காரன்.
வெறியாட்டு-உன்மத்தம், சன்னதம்.
வெறியெடுத்தல் - சன்னதங்கொள்ளுதல் இது அகப்பொருட் டுறையின் ஒன்று.
வெறியேறி - அக்கினி.
வெறியோடுதல்-திகைத்தல், நம்பிக்கையறல், வெறுமையாதல்.
வெறு-வெறுமை,வெறுவென்னேவல்.
வெறுக்கை - கள், செல்வம், பொன், விழுப்பொருள்.
வெறுங்கை - பொருளின்மை.
வெறுங்கோது - மூடன்.
வெறுத்தல் - கோபித்தல், சினத்தல், பகைத்தல்,மறுத்தல்,வேண்டாமை.
வெறுநுகம் - சோதிநாள்.
வெறுப்பின்மை விருப்பம் இது அறத்துறுப்பினொன்று.
வெறுப்பு - அச்சம், கலக்கம், சினம், செறிவு, துன்பம், வேண்டாமை.
வெறுப்புக்காட்டுதல்-பிரியவீனங்காண்பித்தல்.
வெறுப்புக்கொடுத்தல்-பிரியவீனப்படல். 
வெறுமனே - வெறிது.
வெறுமை - இன்மை.
வெறும்பிலுக்கு - வீண்வேடம்.
வெறும்புறங்கூறல் - பழிகூறல், அலர்தூற்றல்.
வெறும்புறங்கூற்று - அலர்மொழி.
வெறும்புறம் - ஒன்றுமில்லாதிருக்கை.
வெறுபிரதம் - கருப்பூரசிலாசத்து.
வெறும்பேச்சு - வீண்சொல்.
வெறுவாயலட்டுதல் } வீண்பேச்சுப்
வெறுவாய்பசப்புதல் } பேசுதல்.
வெறுவிலி - வறியவன்.
வெற்பன்-குறிஞ்சிநிலத்தலைவன்.
வெற்பு - மலை.
வெற்றம் - சயம்.
வெற்றாள் - தனியாள், வெறுவிலி.
வெற்றி - வென்றி, ஜெயம்.
வெற்றிகாணுதல் } வெல்லுதல்.
வெற்றிகொள்ளல் }
வெற்றிக்கம்பம் - வெற்றித்தம்பம்.
வெற்றிக்கரந்தைமஞ்சரி ஒரு பிரபந்தம் அது பகைவர்கொண்ட தன்னிரை மீட்டான் கரந்தைப்பூமாலை சூடிப் போய் மீட்பதைக் கூறுவது.
வெற்றிக்குதிரை - பந்தயம் வென்ற குதிரை.
வெற்றிக்கொடி - விருதுக்கொடி.
வெற்றிச்சீட்டு - பந்தயச்சீட்டில் வெற்றிகுறித்தசீட்டு.
வெற்றித்தண்டை - வீரத்தண்டை.
வெற்றித்தம்பம்-வெற்றிக்கொடிகட்டுந்தூண், வென்றோர் நிறுத்துந்தூண்.
வெற்றித்துவசம் - வெற்றிக்கொடி.
வெற்றிமாலை - போர்வென்றோர் சூடுமாலை.
வெற்றிலை - தாம்பூலம்.

வெற்றிலைக்காய் - மாற்று வெற்றிலைக் கொடியின்காய். [ம்
வெற்றிலைக்கால்- வெற்றிலைத்தோட்ட
வெற்றிலைக்கொடி - தாம்பூலவல்லி.
வெற்றிலைக்கொழுந்து - வெற்றிலைக் கொடி.
வெற்றிலைசுருட்டி - ஒருபுழு.
வெற்றிலைச்சுருள்-ஒருவிதவெற்றிலைக் கட்டு, மணவாளர்கையிற் பிடிக்குஞ் சுருள்.
வெற்றிலைத்தட்டம் - வெற்றிலைவைக குந்தட்டம்.
வெற்றிலைத்தட்டி - வெற்றிலைச்சவை.
வெற்றிலைத்தம்பலம் -வெற்றிலைபாக்கு மென்றசாரம்.
வெற்றிலைநறுக்கி - ஒருசெடி.
வெற்றிலைநாரி - ஒருபுதர்.
வெற்றிலைப்படிக்கம்- தாம்பூலப்படிகம்.
வெற்றிலைப்பூமணி - மாதரணிபணியின் ஒன்று.
வெற்றிலைமடிப்பு - வெற்றிலைச்சுருள்.
வெற்றிலைவெடிபதம் - மருந்தெண் ணெய்பதத்தினென்று.
வெற்றிலைவைத்தல் - கலியாணத்துக்கு வரவழைத்தற்குறிப்பு.
வெற்றிவாகை- போர்வென்றோர் சூடு மாலை.
வெற்றிவேற்கை - ஒரு நீதிநூல்.
வெற்றிவேற்செழியன்- கொற்கை நகர த்திருந்த ஒருபாண்டியன், இவன் கண்ணகிக்கு ஆயிரம் பொற்கொல்ல ரைப்பலியிட்டுத் திருவிழாச்செய்து தன்னாட்டிற் சம்பவித்திருந்த துன் பங்களையெல்லாம் நீக்கினவன். இ வனுக்கு இளஞ்செழியனென்றும் பெயருண்டு.
வெற்று - வெறு.
வெற்றுடம்பு - தசைபிடியற்றதேகம், வெறிதாயவுடல்.
வெற்றுரை - பயனில்சொல்
வெற்றெலும்பு - தசைகழிந் வென்பு.
வெற்றெனத்தொடுத்தல் - நூற்குற்றம் பத்தினொன்று.
வெற்றொழிப்பு-அபநுதியுருவகத்தொ ன்று அது உபமான தருமத்தை யா ரோபித்தற்கு உபமேயதருமத்தை ஒ ழித்தல் (உ-ம்) மதியன்று வெண்கம லப்பூ. வென்முகத்து. [லப்பூ.

வென்றி - வெல்லி, வெற்றி.
வென்றிக்கொடி - வெற்றிக்கொடி.
வென்றிமாலை செந்திபுர புராணஞ்செ ய்தோன்போர்வென்றோர்சூடுமாலை.
வென்றோர் - புலனடங்கப்பெற்றோர், வெற்றியடைந்தோர், துறவோர்.
வென்றோன் - அருகன்.
வென்னிடுதல் - புறங்கொடுத்தல்.

---

## வே

வே - ஒருஎழுத்து, வேயென்னேவல், வேவு, வேவென்னேவல்.
வேகசரம் - ஒட்டகம், குதிரை.
வேகடம்-ஒருமீன், மணியழுக்ககற்றல், யெளவனம்.
வேகடன்-மணியொப்பஞ்செய்வோன், வாலிபன்.
வேகடை - வேசடம்
வேகடைத்தாள்-குருநாப்பட்டை.
வேகநாசனம் - கோழை.
வேகம்-கடுமை. மதி, கோபம், சினம், சுக்கிலம், தீவிரம்.
வேகம் - உக்கிரம், உறைப்பு.
வேகரோதம் - மலமறிப்புநோய்.
வேகவதி-காஞ்சிநதி, கம்பையாறு, வை கையாறு.
வேகவத்தமம் - மிருகதி.
வேகவிதாரணம் - தடை.
வேகாகாதம் - தடை, மலக்கட்டு.
வேகாப்பிணம் - குறைக்கட்டை பிண ம்.
வேதாளம் - சீக்கிரம்.
வேகி - வேகமுடையோன்.
வேகிதை - விரைவு.
வேகித்தல் - மேகமடைதல்.
வேகுதல்- அவிதல், உக்கிரங்கொள்ளல், எரிதல், காய்தல்.
வேக்காடு - சூடு, வேகுதல்.
வேக்காளப்படுதல் - வெட்கப்படுதல், வெப்பியாரப்படுதல்.
வேக்காளம் - வெக்காளம்.
வேங்கடம் / வேங்கடாசலம் } ஒருமலை, இதுதமிழ் நாட்டுக்குவட வெல்லையாகவுள்ளது. இதிலே அதிப்பு ராதனமாகிய ஒருசுப்பரமணியஆல

யமும், விஷ்ணுவாலயமும் உள்ளன முன்னையது தற்காலம் விஷ்ணுவாலயமாக மாற்றப்பட்டுள்ளது. பின்னது குகனேரி தீர்த்தக்கரையிலுள்ள ஆலயமேயாம்.
வேங்கை-ஒருமரம், புலி, பொன்.
வேசகம்-யானைவானுனி, வால், வீடு.
வேசடை - துக்கம்.
வேசந்தம் - குளம்.
வேசம் உடை, கதம், சம்பளம், வாயில், வீடு, வேசிதெரு, வேஷம்.
வேசரம்- ஒட்டகம், தெலுங்குபாஷை.
வேசரி - கழுதை, கோவேறுகழுதை.
வேசரிவாஹநி - மூதேவி.
வேசனம்-மருதநிலத்தூர், வாயில், வீடு
வேசாடல் - மனக்கலக்கம்.
வேசாடை - துக்கம்.
வேசாறல் } ஆறுதல், இளைப்பாறு
வேசாறுதல் } தல், துக்கமடைதல்.
வேசி - வியாபாரி, விலைமகள்.
வேசிகை - வாயில்.
வேசிக்குணம்-விபசாரக்குணம்.
வேசிதெரு - பரஸ்திரிகுடிஇருப்பு.
வேசித்தனம் - கர்புத்தவறல், வேசித்தன்மை.
வேசிநடை - விபசாரநடை.
வேசிப்பார்வை - புணர்ச்சிநோக்கு.
வேசிப்பிள்ளை - கொண்டோற்பிழைத்துப்பெற்ற புத்திரன்.
வேசியார்க்கம்-தூர்த்தநடை, வேசிகள்நடை
வேசியம்-வேசிதெரு, வேசிவீடு.
வேசியாசனமாசிரயம் - வேசிவீடு
வேசியாசாரியன் - நட்டுவன்.
வேசியாடுதல்-கற்பொழுக்கந் தவறிநடத்தல்.
வேசியை - வேசை.
வேசிவிலை - பயணம்.
வேசிவிளையாட்டு - கணிகையர் கூத்து, வேசிநடை.
வேசுமநகுலம் - மூஞ்சூறு.
வேசை - சம்பளம், வேசி.
வேஷகம் } காதணி.
வேடகம் }
வேடங்காட்டுதல்-கோலங்காட்டுதல்.
வேடசேரி - வேடரூர்.
வேடச்சி - வேடப்பெண்.
வேடதாரி-வேஷந்தரிப்போன்.

வேடம் } ஆவேசம், உடை, ஒருகாதணி, தன்கோலம் விட்டு
வேஷம் } வேறு கோலங்கொள்ளல்.
வேஷகம் - வேடகம்.
வேடன் - வேடுவன்.
வேடிக்கை-அலங்காரவேஷம், ஆடம்பரம்.
வேடிக்கைகாட்டுதல் - ஆடம்பரங்காட்டல், கோலங்காட்டுதல்.
வேடிச்சிகாலன் - குமரன்.
வேடிதம் - மருந்துநாற்றம்.
வேடு - செழுதல், பொட்டணி, மூடுசீலை, வடிகட்டுசீலை.
வேடுகட்டல் } பொட்டணிகட்டல்,
வேடுகட்டுதல் } வண்டுகட்டல்.
வேடுவன்-பாலைநிலமகன், வேட்டைக்காரன், வேட்டையாளி.
வேடை- அபேட்சை, காமநோய், செட்டித்தெரு, மரக்கலம், வெப்பம்.
வேட்கை - ஆசை.
வேட்கைத்துணைவி - மனைவி.
வேட்கைப்பெருக்கம் - காமநோய், பேராசை.
வேட்கோபன் - குயவன்.
வேட்சை - அபேட்சை, புடவை.
வேட்டகம் - தலைப்பா, புத்தகம், மாமியார்வீடு.
வேஷ்டகம் - பிசின்.
வேட்ணடம் - காது, காப்புக்கட்டல், சுவர் சுற்றல், சூழ்தல்.
வேட்டம் - சாரம், பிசின், வேட்டை.
வேட்டல் ஆசைப்பெருக்கம், ஓமஞ்செய்தல் அது அந்தணர் வணிகர்க்குரிய அறுதொழில் ஒன்று, மாயையாக்கை பதினெண் குற்றத்தொன்று விருப்பம், விவாகஞ் செய்தல்.
வேட்டார-சினேகிதர், புருடர்மித்திரர், விவாகமானோர்.
வேட்டாள்-மணம்புரிந்தவள், மனைவி.
வேட்டி - வேஷ்டி, சோமன்.
வேட்டிதம்- கூத்தின்விகற்பம், சூழ்வு, தடை, மடிப்பு
வேட்டியம் - சுற்றல்.
வேட்டு - வெடி வேட்டென்னேவல்.
வேட்டுவன்-குளவி, மகநாள், வேடன், வேட்டையாளி.
வேட்டை-இளைப்பு, துன்பம், வேட்டம்
வேட்டைக்கடா-வேட்டைக்குப்பழக்கியகடா.

வேட்டைக்காரர்- வேட்டையாடுவோர்.
வேட்டைநாய் - கடிநாய், வேட்டையாடப்பழகியநாய்.
வேட்டைப்பல் - வக்கிரதந்தம்.
வேட்டையவியல் - கூட்டிடாவவியல்.
வேட்டையாடல் } வேட்டஞ் செய்தல்.
வேட்டையாடுதல் }
வேட்டைவாளி - ஒருகுளவி.
வேட்டோர் - வேட்டார்.
வேட்டோன் - சினேகிதன், புருடன்.
வேட்பித்தல் - ஓமஞ்செய்வித்தல் அது அந்தணரறுதொழிலில் ஒன்று.
வேட்பு - விருப்பம்.
வேணகை - மதில், வேட்கை.
வேணவா - ஆசைப்பெருக்கம்
வேணன் - அம்பட்டத்தியிடத்திற் பார்ப்பானுக்குப் பிறந்து புகழ்ந்து பாடுவோன்.
வேணி-ஆகாயம், இடையர்வீதி, சடை, மரவேர், யாறு, வசம்பு.
வேணிகை - சடை.
வேணிசம்ஹாரம் - ஒருநூல்.
வேணீரம் - பொன்னுங்கொட்டை.
வேணீர் - தாகநீர்.
வேணு - உட்டுளை, கலைஞானமறுபத்துநான்கில் ஒன்று, குழல், புள்ளாங்குழல், மூங்கில், வாள், வில், வேய்ங்குழல்.
வேணுகம் - யானைத்தோட்டி.
வேணுகன் - வேய்ங்குழலூதுவோன்.
வேணுசாநம் - வேய்ங்குழலூதல்.
வேணுகோபாலன் கிருஷ்ணன், வேய்ங்குழல் வாசிக்கும் வடிவத்திற்கொண்ட பெயர்.
வேணுநம் - மிளகு.
வேணுநாதர் - திருநெல் வேலியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வேணுநாதன் - வீணைவாசிப்போன்.
வேணுபலம் - மூங்கிலரிசி.
வேணும் - வேண்டும்.
வேணுவனம்-திருநெல்வேலி, திருப்பாசூர்.
வேணுவணயன் - சதசித்து புத்திரன்.
வேண் - அவா, கொங்குதமிழ் நாட்டில் ஒன்று, வேட்கைப்பெருக்கம்.
வேண்டல் - ஆசை, ஆசைப்பெருக்கம் இரத்தல், விரும்புதல்.

வேண்டாத்தலையன் - அஞ்சாதவன், மூடன்.
வேண்டாமை - வெறுப்பு.
வேண்டார் - பகைவர்.
வேண்டாவெறுப்பு - பகை, வேண்டாமென்றவெண்ணம்.
வேண்டிக்கேட்டல் மன்றாடிக்கேட்டல்
வேண்டுதல்-வாங்குதல், வேண்டிக்கேட்டல்.
வேண்மாள் - செங்குட்டுவன் மனைவி, இவள் கண்ணகியைப் பிரதிஷ்டை செய்து பூசிக்கவேண்டும் என்றுதன் கணவனை வேண்டிக்கொண்டு அவனது அநுஜ்ஞைபெற்று அவ்வாறே பூசித்துவந்தவள், கண்ணகி கற்பிற் சிறந்தவளாதலால் இவள் பூசித்தற்குரியவளானாள்.
வேதகம் - கருப்பூரம், தானியம், வேறுபடுத்தல்.
வேதகருப்பன் - பார்ப்பான், பிரமன்.
வேதகர்ப்பை - தூர்க்கை.
வேதகாரர் - நெய்வார், பொருந்தர்.
வேதகிரீசுரர் - திருக்கழுக் குன்றத்திலே கோயில் கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
வேதகௌலேயகன் - சிவபிரான்.
வேதக்கொடியோன் - துரோணசாரியன்.
வேதசங்கிதை - வேதத்திரட்டு.
வேதசம் - பிரம்பு, பெருவிரலடி.
வேதசாத்திரம் - வேதம்.
வேதசாத்திரி - வேதவியார்த்தி பண்ணுவோன்.
வேதசாரம் - நாணற்புல், வேதத்தின் சத்து.
வேதசிரசு-பிராணன், புத்திரன், உசேநசு தந்தை, மார்க்கண்டேயன் புத்திரனென்றும் சிலர் கூறுவர்.
வேதஞ்ஞன் - வேதஅறிஞன்.
வேதண்டம் - கைலை, பொதியமலை, மலை, யானை.
வேதண்டவில்லி - சிவபெருமான்.
வேததத்துவம் - வேதப்பொருள்.
வேதநாதன் - கடவுள், பிரமன்.
வேதநாதேசுவரர் - திருவேதத்துறியிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.
வேதநாகம் - அனுபவித்தல்.

வேதநாயகன் - வேதநாதன்.
வேதநாயகி - திருக்கழிப் பாலையிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வேதநி - வெந்தயம்.
வேதநிந்தகன் - நாஸ்திகன், புத்தன்.
வேதநிந்தை - வேதத்தையிகழ்தல்.
வேதநிருத்தன்-சமணன், சூனியவாதி.
வேதநீயம் - உபாதியின்மை.
வேதபாரகர் - பார்ப்பார்; வேதத்தைப் படிப்பிப்போர்.
வேதபுண்ணியம் - வேதானுசாரம்.
வேதப்பொருத்தம் - மணம்பொருத்தம் பத்தில் ஒன்று.
வேதபுரீசர் - திருவேதிகுடியிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர். திருவெழுந்தூரிலே கோயில்கொண்டிருக்கும் சுவாமிபெயர்.
தேவமங்கையம்மை - திருநணுவிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வேதமாதிரு - காயத்திரி.
வேதமாயாவாதம் - ஒருசமயம்.
வேதமார்க்கம் - வைதிகம்.
வேதமித்திரன் - சௌபரிகுரு.
வேதமுக்கியை - கஸ்தூரி.
வேதமுதல்வன் - கடவுள்.
வேதமுதல்வி - சரச்சுவதி, பார்வதி.
வேதம் - அறிவு, ஆழம், கலைஞானமறுபத்து நான்கில் ஒன்று, துளைத்தல், முதனூல் விபரம். சுருதி, இது இருக்கு வேதம், யஜுர் வேதம், சாமவேதம், அதர்வணவேதம் என நான்குவகைப்படும். இந்தநான்கும் ஞானகாண்டம் கர்மகாண்டம் என இருவகைப்படும். ஞானகாண்டம் பிரமத்தைப் பிரதிபாதிப்பது, அது உபநிஷத்து எனப்படும், கர்மகாண்டம் வர்ணாசிர தர்மங்களையும் இந்திராதி தேவபூசைகளையும் விவரித்துக்கூறுவது அந்தப்பூசைகள்சர்வாந்தரியாமியாகிய பரமபதிக்கும் பிரீதியாக ஒவ்வொரு மூர்த்தமூலமாகச் செய்யப்படுவன. இந்தவேதம் காலந்தோறும் அந்தந்தக் காலவேறுபாட்டுக்கேற்ப இருடிகளால் வகுக்கப்படும். தற்காலத்துள்ள நான்கும் துவாபரயுகத்தின் இறுதிக்காலத்தில் அவதரித்த கிருஷ்ணத்வையாயனர் என்று சொல்லப்படுகிற வேதவியாச முனிவரால் வகுக்கப்பட்டன, இருக்குவேதம்இருபத்தொரு சாகையும் யஜுர்வேதம் நூறுசாகையும், சாமவேதம் ஆயிரஞ்சாகையும், அதர்வணவேதம் ஒன்பது சாகையும் உடையன, இன்னும் இந்தவேதம் மந்திரமென்றும் பிராமணமென்றும் இரண்டு பிரிவுகளையுடையது, மந்திரம் தேவதைகளை தியானிக்கும் வாக்யங்கள், பிராமணம் அந்த மந்திரங்களைப் பிரயோகிக்கு முறையை யறிவிப்பது.
வேதாஞ்சகன் - பிரமா.
வேதரட்சணம்-வேதத்தைப் பாதுகாத்தல்.
வேதல் - வேகுதல், வேய்தல்.
வேதவசனம் - திருவாக்கு.
வேதவாக்கியம் - வேதவசனம்.
வேதவதநம் - வியாகரணம்.
வேதவதி-ஒருநதி, குசத்வராஜபுத்திரி. சீதையின் பூர்வநாமம், இவள் குசத்வஜன் என்னும் முனிக்கு மாநசபுத்திரியாகப் பிறந்து விஷ்ணுவுக்குத் தேவியாக வேண்டுமென்னும் விருப்பத்தோடிருக்குங்காலத்திலே, தம்பன் என்னும் இராக்ஷஸன், இவளைத் தனக்கு மனைவியாகத்தருமாறு குசத்வஜனைவேண்ட, அவன் அதற்கு உடன்படாது மறுத்தான், அதற்குத் தம்பன் கோபங்கொண்டு குசத்வஜனைக்கொன்று, அந்தக்கொலைகாரணமாக நேர்ந்த பிரமகத்தியால் தானும் இறந்தான், அப்பால், இவளை, இராவணன்கண்டு மோகித்து வலாத்காரம்பண்ண, அவள் கோவித்து, அடா பாவி, நீயென்னை அவமானஞ்செய்ய எத்தனித்தமையால் நான் வுன் வமிசத்துக்கு நாசகாரணமாக, உலகத்திலே யோனிவாய்ப்படாது பிறந்து இப்பழி தீர்ப்பேனெனக் கூறித் தீப்பாய்ந்து அந்தச் சரீரத்தையொழித்தாள், அதன்பிறகு அவள் இலங்கையில் ஒருதடாகத்தில் தாமரைப் பூவிற்பிறந்து அழகாகிய சிசுவாய் விளங்க, அச்சிசுவை ஏவலாளர்கண்டு எடுத்துப்போய் இராவணன்கையிற்

கொடுத்தார்கள், அவன் இந்தச் சிசுவினால் இலங்கையழியுமென்று சோதிடர் கூறக்கேட்டு, சிசுவை ஒரு பொற்பேழையில் அடக்கஞ்செய்து கடலிலிட்டான், அந்தப்பேழை மிதந்துபோய் மிதிலைநாட்டுத் துறையிற் சேர்ந்து மண்ணிற்புதைந்து கிடந்து ஜநகமஹாராஜன் புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்ய வுழுதபோது அவன் கையிலகப்பட்டது அந்தச் சிசுவே சீதை.

வேதவதி-ஒருநதி குசத்வஜராஜபுத்திரி.

வேதவநம்-திருமறைக்காடு, வேதாரணியம்.

வேதவாசன் - பார்ப்பான்.

வேதவித்தகன் - வேதங்கற்றோன்.

வேதவியாசர் - வியாசர்.

வேதவியாசன்-ஓரிருடி அவன் வேதத்தைச் சிக்கறுத்தோன்.

வேதவிருத்தம் - வேதபோதனை.

வேதனம் - அறிவு, ஒருசடங்கு, கூலி, சம்பளம், சீவனம், துளைத்தல், பொன், விடயத்தான்வந்த அறிவு, வேதம், வேதனை.

வேதனுதானம் - கூலிகொடாமை.

வேதனி - கன்னவேதனக்கருவி.

வேதனை - அலைத்தல், நோய், வருத்தம்.

வேதனைக்காட்சி - காட்சி பேதத்தொன்று அது இச்சாஞானச் செயவில ராகாதி செலுத்தல்.

வேதனைதீர்தல் - மாயாமறைவு விடுதல், வருத்தந்தீர்தல்.

வேதனைப்படுதல் - உபாதிப் படுதல், மறைக்கப்படுதல்.

வேதன் - அருகன், கடவுள், பிரமன், வியாழம், பௌஷ்ய இராஜாவுக்குக் குரு, அயோத தவுமியன் சீடன்.

வேதா - கடவுள், சூரியன், பிரமன், முனிவன்.

வேதாகமம் - வேதம்.

வேதாக்கினி - ஆகவனீயம், காருகபத்தியம், தக்கணாக்கினியம்.

வேதாக்ரணி - சரச்சுவதி.

வேதாங்கம் - வேதசாத்திரம், வேதப்பகுதி (வேதாங்கம்-வேதவுறுப்பு.) அது சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம் என்னும் ஆறும் வேதத்துக்கு அங்கமெனப்படும், இதனை ஷடங்கமென்பர் வடநூலார், வேதத்தை ஸ்வரத்தோடு கிரமமாக ஓதுதல்வேண்டும். அவ்வாறு ஓதாவிடின், ஓதப்படுகிற மந்திரங்கள் தத்தம் பயன்களைத் தாராதொழிதலே யன்றி தோஷமும் சித்திக்கும், ஸ்வரபேதத்தாலுச்சரிக்கப்படுகிற முறையைத் தெரிவிப்பது சிக்ஷையெனப்படும். வேதங்களால் விதிக்கப்பட்ட கர்மங்களை அநுஷ்டிக்குங் கிரமத்தைத் தெரிவிப்பது கற்பமெனப்படும், வேதங்களின் எழுத்து சொல் பொருள் ஆகிய இவற்றினிலக்கணங்களை தெரிவிப்பது வியாகரணமெனப்படும், வேதார்த்தத்தை நிச்சயிப்பது நிருத்தமெனப்படும், வேதமந்திரங்களில் காயித்ரி முதலிய சந்தஸ்ஸுகளின் பெயரையும் அவைகளின் எழுத்து இத்தனை யென்பதையும், அறிவிப்பது சந்தோபிசிதம்எனப்படும், வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிற கர்மங்களைச் செய்தற்குரிய காலத்தை நிச்சயிப்பது சோதிடம் எனப்படும்.

வேதாதி, வேதாதிபீஜம் - பிரணவம்.

வேதாதிவர்ணம் - வேதாதி.

வேதாதிவண்ணன் - கடவுள்.

வேதாத்தியாபகன் - வேதமோது விப்போன்.

வேதாத்தியாபனம், வேதாத்தியாயனம் - வேதமோதல்.

வேதாத்தியையி - வேதமோதுவோன்.

வேதாத்திரி - வேதமலை, கழுக்குன்றம்.

வேதாந்தகன் - வைதிகன்

வேதாந்தகன் - வேதாந்தி.

வேதாந்த சூடாமணி, வேதாந்த சூளாமணி - இது துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் தமிழ்மொழியிற் செய்யப்பட்ட ஒரு வேதாந்த நூல், இது செய்யுட்சிறப்பு பொருளாழம் முதலியவற்றாற்சிறந்தநூல், இதற்கு முதனூல் வடமொழியிலுள்ள விவேகசிந்தாமணி, இது பத்துப் பரிச் சேதங்களையுடையது, அந்தப் பத்துப் பரிச்சேதங்களுள் ஒன்றாகிய வேதாந்த பரிச்சேதத்தின் மொ

ழிபெயர்ப்பே இந்த வேதாந்த சூடாமணியென்னும்நூல், பிரபுலிங்கலீலை முதலிய பலநூல்கள் இவ்வாசிரியராற் செய்யப்பட்டன.

வேதாந்தசூத்திரம்-வேத சாரங்களாகிய உபநிடதங்களையெல்லாம் ஆராய்ந்து வேதவியாசமுனிவார்இயற்றிய சூத்திர ரூபமாகிய பிரமமீமாஞ்சைவேதாந்த சூத்திரம் எனப்படும், இதனை உத்தரமீமாஞ்சையெனவும், சாரீரக சூத்திரமெனவுங் கூறுவர், இந்த வேதாந்தசூத்திரம் நான்கு அத்தியாயங்களையும், பதினாறுபாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐஞ்ஞூற்றைம்பத்தைந்து சூத்திரங்களையும் உடையது.

இரண்டாம் அத்தியாயத்திலே சாங்கியம் முதலிய புறச்சமயவிரோதபரிஹாரமும், மூன்றாம், அத்தியாயத்திலே வித்தியாசாதநநிர்ணயமும் நான்காம் அத்தியாயத்திலே ஞான சாதந பலமாகிய வீடுபேறும் சொல்லப்படும்.

வேதாஞ்ஞன் - வேதாந்தி.

வேதாந்ததீபம் - ஒருநூல்.

வேதாந்தம் - வைதிகம். வேதமுடிவு, அது உபநிஷத்து எனப்படும். உத்தரமீமாஞ்சை,அது அத்வைதமெனப்படும்.

வேதாந்ததேசிகர்-இவர்வடகலை வைஷ்ணவாசாரியர், வடமொழியில் சிறந்த பண்டிதசிகாமணி, இவராற்செய்யப்பட்ட வடமொழி நூல்களும் தென்மொழி நூல்களும் பலவுள, வடமொழிநூல்களாவன த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி முதலியன, தென்மொழி நூல்களாவன, தேசிக பிரபந்த முதலியன, இவர் ஐந்நூறு வருடங்களுக்கு முன்னிருந்தவர்

வேதா - பிரமன்.

வேதாந்தன் - அரன், அருகன் ,கடவுள்.

வேதாந்தி - வைதிகன்.

வேதாப்பியாசம் - வேதமோதல்.

வேதாரணியம் - திருமறைக்காடு. சோழநாட்டின் தென்புறத்திலுள்ள ஒரு சிவஸ்தலம், வேதாரணியம் என்பதன்மொழிபெயர்ப்பு வேதங்களால் பூசிக்கப்பட்ட தலமாதலால் இதற்கு வேதாரணிய மென்னும் பெயர் வழங்கலாயிற்று.

வேதாரன் - பல்லி.

வேதார்த்தன் - கடவுள்.

வேதாளம் - ஒருபிசாசம்.

வேதாளி - காளி.

வேதாளியர் - புகழ்வோர்.

வேதி - ஓமகுண்டம், கேட்டைநாள், மதில்,வேதிகைவேதியென்னேவல்.

வேதிகை - கேடகம், திண்ணை, பலிபீடம், மேடை தருமராஜன் மனைவி, திரௌபதி.

வேதிகைபீடம் - ஓமவதி.

வேதிஜை - திரௌபதி.

வேதிதம் - துளைத்தல், துளையுடைப்பொருள்.

வேதித்தல் - பிளத்தல், விகாரப்படுத்தல் வேறுக்கல்.

வேதித்துவம் - அறிவு.

வேதியர் - பார்ப்பார்.

வேதினம் - ஈர்வாள்.

வேதீசன் - பிரமன்.

வேது - காரமருந்து, வெய்து.

வேதை-இரேகை, துன்பம், பொன்னுக்கல், வேதித்தல்.

வேதைச்சிந்தூரம் - உலோகங்களைப் பொன்னுக்குமருந்து.

வேதோதயன் - சூரியன்.

வேதோபகரணம்-வேதானுசாரமானது.

வேத்தவை - இராஜசபை. [கது.

வேத்தியம் - அடையாளம், அறியத்தக்

வேத்திரகீயம் - ஒருநகரம்.

வேத்திரச்சாய் - பிரப்பங்கோரை.

வேத்திரதான் / வேத்திரதாரகன் } கட்டியகாரன், நந்திதேவன் வாயில் காவலன்.

வேத்திரத்தாள் - பிரப்பங்கிழங்கு.

வேத்திரம்-அம்பு, இலக்கை, பிரம்பு.

வேத்திரவதி - ஒருநதி.

வேத்திராசனம் - பிரப்பம்பாய்.

வேத்திரி - துவாரபாலகன்.

வேந்தவை - இராசசபை.

வேந்தன் - அரசன், இந்திரன், சந்திரன், சூரியன், வியாழன்.

வேந்து - அரசன், இறைமை.

வேந்திரு - ஏழாந்தலைமுறையிற்பிதா.
வேந்தோன்றி - காந்தாள், கார்த்திகைக் கிழங்கு.
வேபனம் - பயம்.
வேப்பத்தூர் - ஒரூர், இவ்வூர் கலியுகம் பதினுருவ தாண்டாகியஜயவருடத்திலே சந்திர குலசேகரபாண்டியன் அயோத்யையிலிருந்து இரண்டாயிரத்தெண்மர் பிராமணரைக் கொண்டுவந்து குடியேற்றி தானஞ்செய்த ஊர்களுள் ஒன்று, இது பாண்டிநாட்டில் இன்றும் பெரியதோர் அக்ரஹாரமாக விளங்குகின்றது.
வேப்பம்பாகி-ஒரு நீர்ப்பூடு.
வேப்பாலை - ஒருசெடி.
வேமம் - நெய்வார்கருவியின் ஒன்று.
வேமநன் இவர் சற்றேறக்குறைய மூந்நூற்றுப்பத்து வருடங்களுக்கு முன்னே விஜயநகரத்திலேயிருந்த ஒரு ஆந்த்ரகவி, இவர் மஹாஞானி, வேதாந்த சாஸ்த்ரங்களின் ஆராய்ச்சியில் மிகச் சிறந்தவர், இவராற்செய்யப்பட்ட நூல் அத்யத்புதமானது, இந்த நூல்தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது, அதன் பெயர் வேமநவெண்பா.
வேம்பனம் - கள்.
வேம்பன் - பாண்டியன்.
வேம்பாணி - கிருணி.
வேம்பின்ருரோன்-பாண்டியன்.
வேம்பு - வேப்பமரம்.
வேயர் - வேவுகாரர்.
வேயல் - மூங்கில், வேய்தல்.
வேயாம் - இலங்கை.
வேயுள் - மாடம், வீடு.
வேய்-உட்டுளைப்பொருள், ஒற்று, மூங்கில், வேயென்னேவல்.
வேய்கள் - வேவுகாரர்.
வேய்ங்குழல் - மூங்கிற்குழல்.
வேய்தல் - அணிதல், அலங்கரித்தல், சூடுதல், மாடம், மூடுதல், வீடு.
வேய்த்தல் - எய்த்தல்.
வேய்வு - எய்ப்பு, மூடுதல்.
வேரகம் - கருப்பூரம்.
வேரடம் - இலந்தைப்பழம்.
வேரடன் - நீசன்.

வேரம்-சரீரம், சலஞ்சாதித்தல், செம்பு, மஞ்சள், முகில்.
வேரல் - மூங்கில்.
வேரறுத்தல் - அடிகெடுத்தல்.
வேரி - கள், வாசனை, வெட்டிவேர்.
வேரிபீதகம் - இருவேலி.
வேரூன்றல் - வேர்பதிதல்.
வேரோடுதல் - தூர்விடுதல்.
வேர்-காரணம், கோபம், திப்பிலிமூலம், மூலம், வேரென்னேவல், வோவை.
வேர்க்கடலை - ஒருபருப்பு.
வேர்க்குச்சு - ஒருகுச்சுப்புல்.
வேர்க்குரு - வெகுர்.
வேர்க்குறி - சினக்குறிப்பு.
வேர்க்கொம்பு - இஞ்சி, சுக்கு.
வேர்க்கொள்ளல்-வேரூன்றல்.
வேர்த்தல் - கோபித்தல், வியர்த்தல்.
வேர்ப்படலம் - கண்ணோயுள் ஒன்று.
வேர்ப்பு - கோபம், வியர்வு.
வேர்வு- மாயையாக்கை பதினெண்குற்றத்தொன்று.
வேர்வை - வியர்வை.
வேலமாம் - ஒருமரம்.
வேலம் - தோட்டம்.
வேலம்பாசி - ஓர்பூடு.
வேலனாடல் - தேவர்க்காடுங்கூத்து.
வேலன்-முருகன், வெறியாட்டாளன்.
வேலாமூலம் - கடற்கரை.
வேலாயுதம் - வேல்.
வேலாயுதன்-ஞானசத்திதரன், முருகக்கடவுள், வேலாவது சத்தியின் கூட்டம், அது மூன்று சதுஷ்கோணங்களாற் குறிக்கப்படும், இச்சாசக்தி ஞானசக்தி கிரியாசக்தி என்னும் மூன்றன் பரசொரூபம் முக்கோணமாகவும், அவற்றின அபரசொரூபம் அந்த முக்கோணத்தின் பாதகோணமிரண்டையும் ஆதாரமாகக்கொண்டு முக்கோணமாகவும் விரிந்து இரண்டுங்கூடி நாற்கோணமாகும்.

அந்தஅதோமுகமுக்கோணத்தின் நுனியினின்றும பின்னும் அந்தச் சக்திகள் தம்முள்மாறி, இச்சையிற் கிரியை, கிரியையில் ஞானம், ஞானத்திலிச்சை எனக்கூடித்திரிகோணமாகும், அந்தத் திரிகோண பாதத்திலிருந்து அபர சொரூபமாகிய முக்

கோண முதிக்கும், அவையிரண்டுங் கூடி மத்ய சதுஷ்கோணமாகும். அதன் அதோமுக கோணத்தினின் றும் மீளவும் அந்தச் சக்திகள் தம் முள் மாறிக்கூடி முக்கோணமாகும், அதினின்றும் பின்னு முக்கோண மாகக் கூடிச் சதுஷ்கோணமாகும், இந்த மூன்று நாற்கோணங்களுமே வேலாயுதமாம்.

முதற்சதுஷ்கோணத்தில், இச்சா சக்தியும், மத்ய சதுஷ்கோணத்தில் ஞானசக்தியும், பாதசதுஷ்கோணத் தில் கிரியாசக்தியும், உதித்து நிற் கும் இந்தச் சக்திகளை யெல்லாம் ஆயுதமாகக்கொண்ட கடவுள் என்ப தேவேலாயுதன் என்னுஞ்சொற்குப் பொருளாம், அற்றேல், வள்ளிதெய் வயானைகளைச் சக்திகளென்பதென் னெனின், அது உண்மையே, ஞா னமே வடிவாகவுள்ள சுப்பிரமணிய க்கடவுளுக்கு இச்சாசக்தியும் கிரி யாசக்தியும், உபசக்திகளாம், ஞான சக்தியைவிட்டு அவையிரண்டும் நீங் காவாதலால் தேவிகளாகப் பாவிக் கப்பட்டன.

ஞானமே சுப்பிரமணியக் கடவுளு க்கு வடிவமென்பதற்கு "ஞானந்தா னுருவாகிய" என்னுங் கந்தபுராணச் செய்யுள் பிரமாணமாம், அற்றேல், ஆறுமுகங்களால் குறிக்கப்படுவன யாவையோ வெனின்,அவைசிவன், சதாசிவன்,மகேசுவரன்உருத்திரன், விஷ்ணு, பிரமாஎன்னும் அறுவரது தொகுதி ரூபங்களேயாம், அதுபற் றியே அறுவர்க்குமுறிய தொழில்க ளெல்லாம் முருகக்கடவுளிடத்திலே யுளவாகப் புராணங்கள் கூறுவது என்றறிக.

வேலாவலயம்-கடல், பூமி.
வேலி-ஊர், ஐந்துகாணிநிலம், காவல், நிலத்தளவையினென்று.
வேலிமூங்கில் - ஒருபூண்டு.
வேலிக்கால் கதிகால், வேலியருகு.
வேலிப்பருத்தி - உத்தாமணி.
வேலிப்பாகல் - கொல்லம்பாகல்.
வேலிமூங்கில் - ஒருபூண்டு.
வேலிறை - குமரக்கடவுள்.
வேலை - அவமிருத்து, இளைப்பாற்றி, எல்லை, கடல், கடற்கரை, கரை, காலம், செய்பொருள், தொழில், நிகழ்காலம், நோய், பனி, புனற்றி ரை, பொழுது. மேருபுத்ரி, சமுத்ர ராஜன் மனைவி.
வேலைப்பரிட்சை - வேலைப்பழக்கம்.
வேலுயிற்றுயின்றோன் - விட்டுணு.
வேல் - ஆயுதப்பொது, ஒருமரம், கை வேல், சூலம், மூங்கில்.
வேல்லஜம் - மிளகு.
வேல்லி - கொடி.
வேல்லிதம் - நடை.
வேவாள் - வேவுகாரன்.
வேவித்தல் - வேகச்செய்தல். [வல்.
வேவு -ஒற்று, வேதல், வேவென்னே
வேழம்-கரும்பு, கொறுக்கை, நாணல், மூங்கில், யானை.
வேழம்பர் - கழைக்கூத்தர்.
வேளன் - வேளான்.
வேளா - ஒருமீன்.
வேளாட்டி - வெள்ளாட்டி.
வேளாண்குலர் - குயவர்.
வேளாண்மரபியல் - ஒருநூல்.
வேளாண்மை - ஈகை, உபகாரம், கொ டை, பூவைசியம், நெய்.
வேளாண்மை மாந்தரியல்பு - அழிந் தோரை நிறுத்தல் ஆணைவழிநிற்ற ல் ஒக்கல் போற்றல் ஒற்றுமைகோ டல் ஒவாமுயற்சி கசிவகத்துண்மை கைக்கடனாற்றல் திருந்திய ஒழுக்கம் மன்னிறைதருதல் விருந்து புறந்த ருதல் ஆகப் பத்துக்குணம்.
வேளாண்மையாந்தர் - வேளாளர்.
வேளாவளி - ஒரிராகம். [திரர்.
வேளாளர்-ஈகையாளர், பூவைசியர் சூத்
வேளான்-குயவன், வேளாளரி லோர் பகுதியான்.
வேளிர் - குறுநிலத்தரசர்.
வேளை - ஒருபூடு, காலம், நேர்ந்துகட்டு கிற விலை.
வேளை பூணல் - மன்றாடுதல்.
வேளைப்பிழை - அரிட்டம்.
வேள்-ஆசை, ஆண்மகன், உபகாரம், குமாரன, மண், மன்மதன்.
வேள்புலவரசர் - சாளுவர்.

வேள்வி - ஆராதனை, ஈகை, ஓமகுண்டம், மகநாள், யாகம்.

வேள்விக்குண்டம் - ஓமகுண்டம்.

வேள்வித்தறி - யாகத்தம்பம்.

வேள்விநாயகன் - இந்திரன்.

வேள்விப்பசு - யாகபசு.

வேள்விப்பயன் - யாகபலன்.

வேள்வியாளர் - ஈகையாளர், பார்ப்பார்.

வேள்வு - அரும்பண்டம், மணவரிசைப் பண்டம்.

வேள்வெடுத்தல் - பலபண்டந் தேடிக் கொண்டு போதல்.

வேறல்-வெல்லுதல்,வெற்றிகொள்ளல்

வேறுதல் - பிரிதல்.

வேறிடம்-ஏகாந்தம்.

வேறு-மற்றது, வேற்றுமையுடையது.

வேறுபடுதல் - பிரிதல்.

வேறுபடுத்தல் - பிரித்தல்.

வேறுபாடு - விகற்பம், வேறுபடல்.

வேறுபாட்டொழிப்பு - அபநுதியலங்காரத்தொன்று அது அனனியத்திலாரோபித்தற் பொருட்டு அவன்னிய தருமத்தை யொழித்தல், (உ-ம்) தெரியுமது திங்களன் றரிவைமுகமே திங்களாம்.

வேற்கண்ணியம்மை - திருவேற்காட்டிலே கோயில்கொண்டிருக்கும் தேவியார் பெயர்.

வேற்காட்டீசுரர் - திருவேற்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் சுவாமி பெயர்.

வேற்கோட்டம் - முருகவேணிற்குங் கோயில்.

வேற்றலம் - காற்று.

வேற்றுக்குரல் - மாறுகுரல்.

வேற்றுநிலைமயக்கு - கசதப வொழிந்த மெய்கள் ஒன்றோடொன்று மயங்கி வருவது.

வேற்றுப்பொருள்வைப்ப - ஓலங்காரம் அது முன்னொரு பொருட்டிறந் தொடங்கிப்பின்னதனை முடித்தற்கு வலிதுடைப் பிறிதொரு பொருளை யுலகறிபெற்றி யான்வைத்துமொழிவது, இது முழுவதுஞ்சேறல் ஒருவழிச்சேறல் முரணிற் றோன்றல் சிலேடையின் முடித்தல் கூடாவியற்கை கூடுமியற்கை இருமையியற்கை விபரீதம் என எண்வகைப்படும்.

வேற்றுமன்னன் - பரபுருடன்.

வேற்றுமை - பதங்கள்புணருமிருவகைச் சந்தியுளொன்று அது எழுவாய் முதலிய உருபுகள் பெறநிற்பது. வேறுபடல், வேற்றுமையணி. [டல்.

வேற்றுமைகாட்டுதல் வித்தியாசங்காட்

வேற்றுமைத்தொகை-வேற்றுமை யுருபுகள் தொக்குநிற்பது.

வேற்றுமைப்புணர்ச்சி - பேரும் விளியுமல்லாத வாறுருபும் விரிந்தேனுந் தொக்கேனும் புணர்வது.

வேற்றுமைபொருள்விலக்கு - ஓலங்காரம் அது ஒப்புடையவாயிருக்கு மிருபொருளையொருங்குவைத்துக்காட்டி யொன்றை விலக்கி வேற்றுமைப் படுத்திச் சொல்லுதல்.

வேற்றுமைமயக்கு - வேற்றுமையுருபுகளில் ஒன்று பிறிதொன்றற்காக மயங்கி நிற்பது.

வேற்றுமையணி-ஓலங்காரம் அது உபமானோப மேயங்களு ளொன்றை விசேடமுடைத்தாய்ச் சொல்லுதல்.

வேற்றுமையுருபு-தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேறுபடுத்துவது அது ஐ, ஆல், கு, இன், அது, கண்.

வேற்றுமையுருவகம்- ஓலங்காரம்அது குணப்பொருளையு முக்கியப் பொருளையு மொருபண்புடைத்தெனக் காட்டி முக்கியப் பொருட்கோர் வேற்றுமை யுடைத்தெனக் கூறுவது.

வேற்றுமைவிரி - வேற்றுமையுருபு விரிந்து நிற்பது.

வேற்றுரு - மாறுரு.

வேற்றொலிவெண்டுறை - பல ஓசைத்தாய் வரும் வெண்டுறை.

வேனல் - கானல்.

வேனன் - சுவாயம்புவமநுவின் வமிசத்தில் அங்கன்மகன், பிருதுசக்ரவர்த்தி தந்தை, வேனன் புதல்வரின்றி யிறக்க, அவன் தொடையெலும்பை யெடுத்துக் கடைந்தபோது இந்த பிருது சக்கரவர்த்தி பிறந்தான்.

வேனிலாளி
வேனிலான் } மன்மதன்.

வேனில் - கோடை.

வேனில்மாலை - ஒரு பிரபந்தம்.

வேனில்வேள் - வசந்தகால மன்மதன்.

வேனிற்காலம் - கோடைகாலம்.
வேனின்மாலை - ஒருபிரபந்தம்அது இரு வேனிலையுஞ் சிறப்பித்துப்பாடுவது.
வேனெடுங்கண்ணியம்மை - திருவெண்டுறையிலே கோயில் கொண்டிருக்கும் தேவியார் பெயர்.
வேன் - வியன்.



## வை

வை-ஒரெழுத்து, கூர்மை, புல், வைக்கோல். வையகம்,வையென்னேவல்.
வைகடசம் - உத்தரியம்.
வைகடிகன் - இரத்தினங்கள் சாணை தீர்ப்போன்.
வைகரி - அகங்காரம் மூன்றினொன்று, திட்டம், வாக்கு நான்கினொன்று.
வைகரியாங்காரம் - மூவாங்காரத்தொன்று.
வைகர்மன் - ஒருமுனி.
வைகல்-சழிவுநாள், தங்கல், நாள், விடியல்.
வைகல்லியம் - கலக்கம், குறைவு, சூனியம், தகுதியின்மை.
வைகறை - விடியல்முதற்பத்துநாழிகையளவு, காலம், விடியற்காலம்.
வைகற்பிகம் - ஐயம்.
வைகாசம் - ஒருமாதம், விசாகம், விடியற்காலம், வைணவாகமமிரண்டில் ஒன்று.
வைகாசி - ஒருமாதம், விசாகம்.
வைகாசிவசந்தன் - வைகாசி மாதத்திற் பாயுங் காவிரியாறு.
வைகானசம் - வைணவாகமத்தொன்று.
வைகானசன் - வனவாசி.
வைகாலம் - சாயங்காலம்.
வைகானசம் - வைகானசம், வைணவாகமம்.
வைகிராந்தம் - ஓரிரத்நம்.
வைகிருதம் } வெறுப்பு.
வைகிருத்தியம் } வெறுப்பு.
வைகுண்டம் - திருமானகரம்.
வைகுண்டன் - திருமால்.
வைகுண்ணியம் - ஒவ்வாமை,குணமின்மை, குறை.
வைகுதல் - இராத்தங்கல், இருத்தல், [வசுதல்
வைகுந்தநாதன் - திருமால்.
வைகுந்தம் - வைகுண்டம்.
வைகுந்தன் - வைகுண்டன்.
வைகுல்லியம் - எதிரிடை.
வைகுறு - வைகறை.
வைகூலியம் - வைகுல்லியம்.
வைகை - காஞ்சிநதி, பம்பாநதி, இது கச்சியிலுள்ளது அம்மையார் பூசித்தபோது உண்டாயநதி, மதுரையாறு வேகவதிநதி,இதுபாண்டிநாட்டிலுள்ளது, இதன் கரையில் மதுரைமாநகரம் என்றொரு பெரிய பட்டணமுண்டு, இந்த் வைகைநதிக்கு வேகவதியென்றபெயர், வேகமுடையதாதலால் உண்டான பெயர்.

திருவாதவூரடிமளாகிய மாணிக்கவாசக சுவாமிகள் பொருட்டு கரைகடந்து பெருகிய இந்த நதியின் கரையின் ஒரு கூற்றைச் சிவபெருமான் செம்மெனச்செல்வி யென்னும் பிட்டுவாணிச்சிக்குக் கூலியாளாகி, மண் சுமந்து அடைப்பார் போன்று திருநடம்புரிந்தார், இச்செய்தி முழுதும் திருவாதவூரடிகள் புராணத்திலும், திருவிளையாடற் புராண முதலிய பல நூல்களிலும் விரிவாய்க் காணலாம்.
வைகைத்துறைவன் - பாண்டியன்.
வைக்கல் - வைக்குதல், வைக்கோல்.
வைக்கிராந்தம் - ஒரு பாஷாணம்.
வைக்குதல் - வைத்தல்.
வைக்கோல் - வைக்கல்.
வைக்கோல்வாரி - ஒருகம்பு.
வைக்கோற்கந்து - வைக்கோற்றிரள்.
வைக்கோற்பழுதை - வைக்கோற்புரி.
வைக்கோற்பாம்பு - வேஷம்.
வைக்கோற்புரி-வைக்கோல்முறுக்கு.
வைங்கியாரம் - பகை.
வைசத்தியம் - உண்மை, சுத்தம்.
வைசத்திரம் - அரசாட்சி.
வைசம்பாயநன் - விசம்பன் என்னும் ரிஷிபுத்திரன், இவன் வேதவியாசனுடைய மாணவர் நால்வர்களுள்ஒருவர், வேதவியாச பகவானாற் செய்யப்பட்ட வியாசபாரத மென்னும் நூலை ஜநமேஜயனுக்கு விஸ்தரித்துச் சொன்னவனும் இவனே.

வைசயந்தம்-இந்திரனுப்பரிகை, இந்திரன் கொடி, இந்திரன் மாளிகை.
வைசயந்தி - திருமான்மாலிகை, துகிற்கொடி.
வைசயந்திகன் - கொடிக்காரன்.
வைசயந்திகை - துகிற்கொடி.
வைசனனம் - பிள்ளைப்பெருமாதம்.
வைகாசம் - வைகாசிமாதம், விசாகம்.
வைசாகி - வைகாசி.
வைசாரிணம் - மீன்.
வைசிகம் - உடலுயிரைப் பிரித்தரிதல், தளிர், முகாந்தரம், வேசித்தனம்.
வைசித்ரியம் - விசித்திரம்.
வைசியக்கிரியை - வேளாண்மை, வியாபாரம்.
வைசியர்-மூன்றாவது சாதியார் அவர் தனவைசியர். அல்லது வணிகர் பூவைசியர் அல்லது உழவர் கோவைசியர் அல்லது இடையர் என மூன்றுவகுப்பினர். இவர்க்கு ஓதல், வேட்டல், உழவு, நிரையோம்பல், வாணிகம் என்பனவும் பூணூலும்உரியவை.
வைசியர்தொழில்- பொருளீட்டல்பயிர் செய்தல் ஆன்காத்தல் என மூன்று தொழில்.
வைசியவிருத்தி - வைசியர்தொழில்
வைசிரவணன் -வைச்சிரவணன், விச்சிரவன் குமாரனாகிய குபேரன்; இவனுக்கு தநபதி தநதன்புட்பகவூர்தி முதலிய பல பெயர்களுமுண்டு, இவன் பட்டணத்தின் பெயர் அளகாபுரி, இவனின் மேற்பட்ட செல்வர் எவ்வுலகத்திலுமில்லை. இவன் சிவபெருமானுக்கு உயிர்த்தோழன் இவன் கிந்நரருக்கு அரசன்.
வைசுவதேவம் - ஓமப்பலி, பிதிர்பூசை. போஜநார்த்தமாக வேனும் சிவஹிம்சையால் வந்த பாப நிவ்ருத்தியின் பொருட்டாக வேனும் பிராமணர் தினந்தோறும் செய்கிற நற்கருமம்.
வைசுவாநரன் - அங்கிரசன் வமிசத்தானாகிய அக்கினி, தநுபுத்திரன், இவனுக்கு ஹயசிரை காலகை, உபதாநவி புலோமை என்னும் நான்கு புத்திரிகள் பிறந்தார்கள், அவர்களுள் உபதாநவி ஹிரண்யாக்ஷனையும் ஹயசிரை கிருதுவையும், காலகையும், புலோமையும் காசிபனையும் மணம் புணர்ந்தார்கள்.
வைசூரி - வசூரி.
வைசேஷிகம் } சாத்திரமாறில்ஒன்று.
வைசேடிகம் } தரிசநங்கள் ஆறனுளொன்று இது கணாதமத மெனப்படும் கௌதமமதம் திரவியம் பதினறென இஃது எழென்பது இதுதர்க்க சாஸ்திரம் எனவும் படும் இது பொருணிச்சயம் பண்ணுதற்குபகாரமாயுளதாதலால் மக்களெல்லாரும் ஓதற்பாலதாகிய ஒருசாஸ்திரம், இது சமய நூலாராய்ச்சிக்கும் பெருந்துணையாம்.
வைச்சிரம் - வச்சிரம்.
வைச்சிரவணன் - குபேரன்.
வைச்சிரவணாலயம் - ஆலமரம்.
வைச்சிராயிணன் - குபேரன்.
வைடம்மியம் } பகை அது சத்த விசனத்தொன்று.
வைஷம்மியம் }
வைடாலக்கிரதிகன் - மாயக்காரன்.
வைடாலம் - பூனை, மாயசாலம்.
வைடாலவிரதிகன் - மாயசாலன்.
வைடூரியம் - நவமணியில் ஒன்று. ஒரு மலை இது நருமதை தபதி என்னுமிரண்டு நதிகளுக்கிடையேயுள்ளது.
வைணவம் } ஒரு சமயம், பதினெண்புராணத்தொன்று, மூங்கிலரிசி, வேய்ங்குழல்.
வைஷ்ணவம் }
வைணவர் - நாராயணசமயத்தோர்.
வைணவாகமம் - வைஷ்ணவ சமயநூல் அது பஞ்சராத்திரம் வைகாநசம் என இரண்டு.
வைணவி - சத்தமாதர்களில் ஒருத்தி, மூங்கிற்குழல்.
வைணவிகம் - மூங்கிற்கூட்டம்.
வைணவிகன் - வீணைவாசிப்போன், வேய்ங்குழலூதுவோன்.
வைணிகன் - வீணைவாசிப்போன்.
வைணுகம்-கழிகோல்,யானைத்தோட்டி.
வைதலிகை - இரத்தினங்களைத் தொளைக்குங்கருவி.
வைதரணி - யமபுரத்திலுள்ள ஒருநதி, இந்த நதியை எளிதிற் கடக்கும்பொருட்டு கோதாநம் செய்யப்படுவது, மரணகாலம் நேரிட்டபிறகும் உயிர் சரீரத்தைவிட்டு எளிதிற்பிரிய ஒட்

டாமல் அதனைத்தடுத்து நிற்பதாகிய வாசனைக் கெல்லையே வைதரணி யென்றுருவகித்துக் கூறப்பட்டது போலும், பிதிர்களுக்குச் சுதையிடத் துப்பிறந்தபுத்திரி, கலிங்கதேசத்திற் பிரவகிக்குமோர்நதி, இந்தநதி சகல யாகங்களுக்கும்ஏற்றவிடமாகக் கூறப் பட்டுள்ளது.

வைதருக்கம் – தந்திரப்பேச்சு.

வைதருப்பம் - வஞ்சகத்தருக்கம் அது கௌடத்திற் கெதிர்.

வைதருப்பி } தமையந்தி.
வைதர்ப்பி }

வைதலம் - பாத்திரம்.

வைதல் - ஏசல், திட்டல்.

வைதவ்வியம் - கைமைத்தன்மை

வைதனிகம் – அற்றைக்கூலி.

வைதனிகன் - கூலிக்காரன்.

வைதாத்திரன் - சனற்குமரன்.

வைதாளிகன் - துயிலெடைபாடுவோன்.

வைதானம் } ஓமப்பலி.
வைதானிகம் }

வைதானிகன் - பள்ளியெழுச்சி பாடுவோன்.

வைதானோபசாணை - அந்திசந்தி செலுத்துங் கடவுட்பலி.

வைதிகம் - வேதமார்க்கம்.

வைதிகர் – வைதிகசைவத்தோர்.

வைதிகன்-வேதமுணர்ந்தபிராமணன்.

வைதிகாசாரம் – வேதவொழுக்கம்.

வைதிருதி-நித்தியயோகத்தொன்று.

வைதீகம் - வைதிகம்.

வைதூரியம் } ஓரிரத்தினம்.
வைதூர்யம் }

வைதேகன்-பார்ப்பனத்திக்கும் வைசியனுக்கும் பிறந்து துதித்துய்வோன், வியாபாரி.

வைதேகி – சீதை, திப்பிலி.

வைதேயம் – அறிவின்மை.

வைதேயன் – அறிவீனன்.

வைத்தல் - வைக்குதல்.

வைத்தியகம் - வைத்தியசாஸ்திரம்.

வைத்தியசாத்திரம் - கலைஞான மறுபத்து நான்கில் ஒன்று, அது வாகட நூல்.

வைத்தியநாதநாவலர் - இற்றைக்கு இருநூற்றெழுபது வருடங்களுக்கு முன்னே திருவாரூரிலே அபிஷேகத்தார் மரபிலே அவதரித்துத் தமிழ்க்கடல் குடித்துத் தமிழ்மாரிபொழிந்து விளங்கிய பண்டித சிகாமணி இவர் ஐந்திலக்கணங்களும் மமைந்த இலக்கணவிளக்கம் என்னும் நூலும் அதற்குரையும் செய்தவர், தொல்காப்பியத்துக்குப் பின்னே தோன்றிய இலக்கணநூல்களுள்ளே இந்த நூல் மிகச் சிறப்புற்றது, இது குட்டித் தொல்காப்பியம் என்று வழங்கப்படும், வைத்தியநாத நாவலர்க்கு தொண்டைமண்டல சதகம்பாடிய படிக்காசுப்புலவர் மாணுக்கராவர்.

ஒரு துறைக்கோவை பாடிய அமிர்தகவிராயர் என்பவர் இவர்க்குச் சமகாலத்தவர். வைத்யநாத நாவலரைச் சுவாமிநாத தேசிகரென்கிற இலக்ணக்கொத்தாசிரியரே, "தமிழ்க்கிலக்காகிய வைத்தியநாதன்" என்று புகழ்வதென்றால் இவரது கல்விப்பெருமைக்கு வேறு சாக்ஷியும் வேண்டுமோ.

வைத்தியநாதன் - சிவபிரான்.

வைத்தியம் - பரிகாரம்.

வைத்தியன் - பண்டிதன், பரிகாரி, வேதாப்பியாசி.

வைத்ூறு - வைக்கோற்போர்.

வைநதேயன் - கருடன்.

வைநம் - பிரிவு.

வைநாசிகம் - ஒருயோகம்.

வைநாசிகன் - அடிமை, சிலம்பி.

வைநாயிகன் - புத்தன்.

வைநாயிகை - சதுர்த்தி திதி.

வைநிகம் - புராதன சாஸ்திரகேள்வி.

வைநியன் - இவன் வேநன்வாமபாகத்திற்பிறந்தவன்.

வைநீதகம்-ஈரிணை மூவிணை எருதேனுங்குதிரையேனும் கட்டியபண்டி.

வைந்தவம் - குதிரை.

வைபரித்தியம் - எதிரிடை.

வைபவம் - வரலாறு, விபவம்.

வைபாடிகன் - மஞ்சளும் சுண்ணும்பும் கூடியவிடத்து செங்நிறந்தோன்றுதல்போல இந்திரியங்கள் கூடியவிடத்துப் பிரபஞ்சம் தோன்றும் என்று வாதிக்கிற ஒருசமயி.

வைபோகம்-சந்தோஷம், சிற்றின்பசம்பிரமம், வயணம், விவேகம்.
வைபோகி - விவேகி.
வைபோதிகன்-சாமக்காவற்காரன்.
வைப்பாட்டி - குடிப்பெண்ணல்லாதவள்.
வைப்பிராசை-மேருவுக்கு மேற்கேயுள்ள ஒருவநம், இது அதிரமணீயமானது.
வைப்பு-இடம்,ஊர்,உண்டாக்கல், சேமதிரவியம், பெருமை, வைத்தல்.
வைப்புக்கட்டு - பொய்க்கதை.
வைப்புச்சரக்கு-உண்டாக்கின சரக்கு.
வைப்புச்செப்பு - வைக்குமிடம்.
வைப்புத்தலம் - மூவர் பாடல்பெறுதலம்.
வைமாத்திரேயன்- சக்களத்திபுத்திரன்.
வையகம் } வையம் } உரோகணி, சிவிகை, தண்டிகை,தேர்,பண்டி,பாண்டில்பூண்டவூர்தி, பூமி, வாகனம்.
வையாகரணம் - வியாகரணம், இலக்கணம்.
வையாகரணன் } வையாகரணி } இலக்கணம் ஆக்கியோன், வியாகரணம் படித்தோன்.
வையாசம் - வியாசம்.
வையாபுரி - பழனியிலுள்ள ஓரேரி, ஒரு புண்ணியதீர்த்தம்.
வையாளி - குதிரையின் மிகுகதி.
வையாளிவீதி - குதிரைநடத்தும்வீதி.
வைரகரம் - பகைசாதித்தல்.
வைரகரன் - சத்துரு.
வைரங்கிதன் - பற்றிலான்.
வைரசுத்தி - பகைதீர்த்தல்.
வைரநிரியாணம் - பகைநீக்கல்.
வைரம் - நவமணியிலொன்று, பகை, விரோதம், வீரத்தின்றன்மை. வயிரம், வலாசுரன் கொல்லப்பட்டபோது அவனது எலும்பு சிதறி பல மலைகளின்மேலும் விழுந்து வைரமணிகளாயின, ததீசியெலும்பு என்பாருமுளர், அவ்வயிரம் ஒளிவேறுபாட்டால் நான்காகும். "அந்தணன் வெள்ளையரசன் சிவப்பு, வந்தவைசியன் பச்சை, சூத்திரன், அந்தமில் கருமையெனறறைந்தனர் புலவர்."
அவை பிரமவயிரம்,க்ஷத்திரியவயிரம் வைசிய வயிரம் சூத்திரவயிரம் என்பனவாம்.

வயிரத்திற்குக் குற்றமாவன:—"சரைமலங்கீற்றுச்சம்படிபிளத்தல், துளைசரிவிந்து காகபாதம், இருத்துக்கோடிகளிலாதன் முரிதல், தாரைமழுங்கறன்றே, டீராறும் வயிரத்திழிபெனமொழிப" என்றபடி பன்னிரண்டாம், அவற்றுள் பெருங்குற்றம் நான்கும் பயனுமாவன.
"1. காகபாதநாகங்கொல்லும்"
"2. விந்துசிந்தையிற்சந்தாபந்தரும்"
"3. மலம்பிரியாத துநிவங் தருகிளைகெடும்"
"4. கீற்றுவரலினைபெற்றவர் மாய்வர்" எனப்படும்.
குணமாவன:—பலகை யெட்டுங்கோணமாறும், இலகிய தாரையுஞ் சுத்தியுந்தராசமும், ஐந்துங்குணமென்றறைந்தனர்புலவர், இந்திரசாபத்திக வொளிபெறினே" என்பன.
சில சாத்திரங்களில் வயிரம் ஒருவகைக் கல்லென்று கூறப்பட்டுள்ளது,யுயிரம், மதங்கமலை இமயமலைவேணுநதி முதலிய இடங்களி லுண்டாமென்பது ஆரியநூற்றுணிபு, வயிரத்தைச் சரீரத்திலணிவதனால், கர்ப்பதோஷத்தால் புத்ரோத்பத்தியில்லாத பெண்களுக்குப் புத்திரலாபமும், எல்லார்க்கும் இடிவிஷம்முதலியவற்றுக்கு அஞ்சாமையுமுண்டாகும். வலாசுரன்வயிற்றின் புறத்தைக்கொத்திவிழுங்கிய கருடன் அதனைக் கழித்துமிழ, அது வீழ்ந்து பல மலைகளிலுமூறிப் பிறந்த கற்கள் மாகதமெனப்படும், கருடோத்காரம் எனப்படுவதுமதுவே, பச்சைக்கு, "நெய்த்த மயிற்கழுத்தொத்தபைம்பயிரிற்,பசுத்தல்பொன்மை தன்னுடன் பசுத்தல், வக்கிபாய்தல், பொன்வண்டின் வயி,றொத்துத்தெளிதலோடெட்டுங் குணமே"
"கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்று, பரிவுதார் சாயையிறுகுதன் மாகதத், தெண்ணிய குற்ற மிவையெனா மொழிப"
இனி மாணிக்கம் பதுமராகம் சௌகந்தி குருவிந்தம் சோவாங்கு என நான்கு. "தாமரை கழுநீர் சாதகப்

புட்கண கோபமின்மினி கொடுங் கதிர்விளக்கு, மாதுளைப் பூவிதைத வன்னியீரைந்து, மோது சாதுரங்க வொளியாகும்மே''

"திலக முலோத்திரஞ் செம்பருத்திப்பூக், கலிமலர்குன்றி முயலுதிரம்மே, சிந்தூரங் குக்கிற் கண்ணென வெட்டும், எண்ணிய குருவிந்தமன்னிய நிறமே''

"கோகிலக்கண் செம்பஞ்சு கொய்மலர்ப்பலாசம், அசோகப் பல்லவ மணிமலர்க்குவளை, இலவத்தர்க ளென்றாறுகுணமும்சௌகந்திக்குச் சாற்றிய நிறனே''

"கோவை நற்செங்கல் குராமலமஞ்சளெனக், கூறிய நான்குங் கோவாங்கு நிறனே''

இனிப் புருடராகத்தின் குணம், பொன்னையுருக்கி மாசறத் தெளிய வைத்தாலொத்த நிறத்தினை யுடைமை, வைடூரியம் - தேன்றுளி நிறத்தினையுடையது. நீலம், "வெள்ளை சிவப்புப்பச்சை கருமையென்றெண்ணிய நாற்குலத்திலங்கிய நிறமே'' "கோகிலக்கழுத்துக்குவளை சுரும்பர், ஆகுலக் கண்களவுரிச்சாறு, காயா நெய்தல் கனத்தல்பத்தி, மாய்தலெனக்குணம் பதினொன்றாமே'' என வருவனவற்றாலே தெளியப்படும்.

நீலத்துக்குக் குற்றமெட்டு, இது வரைக்கும் சொல்லிய மணிகளெல்லாம் ஒருமுதலிற் றோன்றின.

இனி முத்துக்குரிய குற்றம் - காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீர்நிலையென்பன, குணம்-சந்திர னிறமும், வெள்ளியின் சோதியும், செவ்வாயினொளியும் என மூன்றும், எல்லாம் உருண்டனவாதல்வேண்டும்.

பவளத்தின்குணம்-துளையின்மையும், உருட்சியும், சிந்தூர நிறமும், மூசுமுசுக்கைக் கனிநிறமும் உடைமை, முத்தினால் மேகவெப்பந் தணியும், பவளத்தினால் சர்மரோகம் நீங்கும், இவற்றின்விரிவெல்லாம்இரத்ந பரீக்ஷையென்னும்நூல் முதலியவற்றிற் காண்க.

வைரவக்கடவுள்-சிவரூபங்களு ளொன்று, இவர் சிவபெருமான் திருக்குமாரருள் ஒருவர், சிவபெருமான் தம்மை மதியாத பிரமனது ஐந்து சிரங்களி லொன்றைக் கொய்விக்கும்பொருட்டுத் தோற்றுவித்தமூர்த்தி.

வைரவம் - வயிரவம்.

வைரவன் - பைரவன்.

வைரன் - சத்துரு.

வைராகம் - விராகம்.

வைராகி - துறவி.

வைராகிகன் - துறவி,

வைராக்கியசதகம்-ஒருதுறவுநூல். வைராக்கியதீபம்செய்தசாந்தலிங்க சுவாமிகளாற் செய்யப்பட்ட ஒரு ஞானநூல், இது சொற்பொருள்களால் மிகச் சிறப்புற்று விளங்குவன.

வைராக்கியசூரியோதயம்-ஒருநூல்.

வைராக்கியதீபம் - ஒருநூல்.

வைராக்கியம்- பகை, வெறுப்பு, ஆசையற்றிருத்தல்.

வைராடம் - இந்திரகோபம்.

வைராயமாணம் - சத்துருத்தனம்.

வைராரோஹம் - பெரும்போர்.

வைராவி-வயிரமனதுடையோன்.

வைரி - சத்துரு.

வைரிதை - வன்மம், வீரம்.

வைரியம் - வீரியம், வைராக்கியம்.

வைரியர் - பாணர்.

வைரூப்பியம் - அவலட்சணம்.

வைரோசனநிகேதனம் - பாதலம்.

வைரோசனன்-சூரியன்,மாவலி,வாலி.

வைரோசனி - புத்தன்,மாவலி,வாலி.

வைரோதாரம் - பழிவாங்கல்.

வைலட்சணம் - அவலட்சணம்.

வைலட்சயம்-எதிரிடை, வித்தியாசம்.

வைலவம் - வில்வம்.

வைவசுவதமநு-விவ்சுவதன்புத்திரன், இவன்மனைவி சிரத்தை, இவன் புத்திரர், இக்ஷ்வாகு நிருகன், சரியாதி, திஷ்டன், திருஷ்டன், கரூசன், நரிஷ்யந்தன்,விருஷத்திரன்,நபகன், கவி எனப்பதின்மர், இவருள் இக்ஷ்வாகு வமிசத்தரசர்களுக்கு அயோத்தை இராஜதாநியாயிற்று,

இக்ஷ்வாகுவுக் குக்ஷி மூத்தமகன், குக்ஷி தம்பியாகிய நிமிக்கு மிதிலை இராஜதானி.

கரூசன் வமிசத்தார் காரூசர் எனப் படுவர்.

நபகன் வமிசத்தார்க்கு கண்டகிநதி தீரத்திலுள்ள தேசமுரியது.

சரியாதி வமிசத்தார்க்கு குசஸ்தலி இராஜதானி. இவர்களே வைவசுவத மநு வமிசத்தரசர்கள்.

வைவசுவத மநுவின் மனைவியாகிய சிரத்தையானவள் தனக்கு ஒரு புத்திரியும் வேண்டுமென்று பிரார்த்தித்து இளை யென்னும் புத்திரியைப் பெற்றாள், அதுகண்ட வைவசுவதன் தனது குருவாகிய வசிஷ்டரை நோக்கி, அந்தப் புத்திரியைப் புத்திரனாகச்செய்து தருகவெனவேண்ட, அவரும் அவ்வாறே இளையென்னும் புத்திரியைச் சுத்தியுமநன்என்னும் புத்திரனாகச்செய்து தருதலும், அவனையும் ஒரு திசைக் காசனாக்கினாள், அவன் ஒருநாள் வேட்டைமேற் சென்றபோது, சரவணப் பொய்கையைக்கண்டு அங்கே தங்கினான், தங்குதலும், பூர்வகாலத்தில் பார்வதிதேவியார், யாவனொருவன் இந்தப் பொய்கையில் வந்து தங்குவானோ அவன் பெண்ணுருவை யடையக் கடவனென்று விதித்திருந்ததனால் சுத்தியுமநன் மீளவும் இளையென்னும் பெண்ணாயினான், அந்தப்பெண்ணுருவைக் கண்ட புதன் மோகங்கொண்டு அவளைக்கூடிப் புரூரவனைப் பெற்றான். இந்தப் புரூரவனாலேயே சந்திரவமிசம்பெருகுவதாயிற்று, பிறகு வசிஷ்டரது முயற்சியால் இளையானவள் ஒருமாசம் பெண்ணாகவும், ஒரு மாசம் சுத்தியுமநன் என்னும் ஆண் மகனாகவும் இருக்கும்படிச் சிவபெருமான் அருள் செய்தார்.

வைவச்சுதன் - ஏழாவதுமனு, நமன்.

வைவஸ்வதன்-ஏழாவதுமனு, சநி.

வைவஸ்வதி - தென்றிசை.

வைவாகிகம் - விவாகத்திற்குரியது.

வைவு - ஏச்சு, சாபம்.

வைசுதன் - ஒருமனு, சனி, நமன்.

வைனதகம் - நெய்ப்பாத்திரம்.

வைனதேயன் - வைநதேயன்.

வைனம் - பகுத்தல்.

வைஹாரம் - மகததேசத்து இராஜதானியாகிய கிரிவிரசத்துக்குச் சமீபத்திலுள்ள ஒருமலை.

வைஷ்ணவம் - விஷ்ணுசம்பந்தம், வைதிசமயம் மூன்றனுள் ஒன்று, மூன்றுவன-சைவம் வைஷ்ணவம் சாக்தம் என்பன.

வைஷ்ணவமாவது விஷ்ணுவை முதற்கடவுளாகக் கொண்டு வழிபடுசமயம்.

இது தென்கலை வடகலை யென இரண்டு பிரிவுகளை யுடையதாகும், இவற்றுள்.

தென்கலையாவது நாலாயிரப்பிரபந்தத்தையும் வேதபுராணேதிஹாஸங்களையும் சமமாகக்கொண்டசமயம்.

வடகலையாவது நாலாயிரப்பிரபந்தத்தை அவ்வாறு அங்கீகரியாத சமயமாம்.

ஆழ்வார்களும் இராமாநுஜாசாரியரும் இந்தச்சமயத்தை நிலைபெறுத்தினவர்களாவார்கள். வைஷ்ணவர்கள் விசிஷ்டாத்வைத சித்தாந்தக் கொள்கையை யுடையவர்கள்.

---

# வௌ



வௌ - ஒலிக்குறிப்பு, ஓரெழுத்து, வௌவென்னேவல்.

வௌவம் - தாமரை.

வௌவல் - கொள்ளையிடல், திருடல், பிடித்தல், வாருதல்.

வௌவி - மான்.

வௌவுதல்-வௌவல்.

வௌவால்-ஒருபறவை. இதற்குப் பல்லிருத்தலால் மிருகவினத்திலொன்றென்பாருமுளர்.

---

# வ்



வ்ருகதூமம் - நீர்மேற்படர்கொடி.
வ்ருகோதரன் - வீமசேநன்.
வ்ருஜநம் - தலைமயிர்
வ்ருஜிநம் - கிலேசம்.
வ்ருட்சசரம் - குரங்கு.
வ்ருட்சநாதம் } ஆலமரம்.
வ்ருட்சபாகம் }
வ்ருட்சஸம் - உடும்பு.
வ்ருட்சாதநம் - அரசமரம், கோடரி.
வ்ருட்சாதநி - காட்டுப்பாகல்.
வ்ருத்தசங்கம் - கிளிஞ்சில்.
வ்ருத்தபலம்-இலந்தை,மாதளை, மிளகு.
வ்ருத்தமல்லிகை - குடமல்லிகை.

# ஸ்ரீ



ஸ்ரீ-ஓரெழுத்து ஒருமொழியிலே மின்னிற்கு காட்ட முன்னிற்கும் எழுத்து.

ஸ்ரீகண்டம் - மலயபர்வதம்.

ஸ்ரீகண்டன்-சிவபெருமான், பவபூதி.

ஸ்ரீகண்டாசாரியர்-நீலகண்ட சிவாசாரியர், இவர் சங்கராசாரிய ரிருந்த காலத்திலிருந்தவர், இவ்விருவரும் ஒருமுறை சந்தித்தபோது, ஸ்ரீகண்டர் வினவிய வினைக்களுக்குச் சங்கராசாரியர் விடைகூறாது மயங்கி நரசிங்கமூர்த்தியைத் தியானித்தார் அந்தமூர்த்தி வெளிப்பட்டு ஸ்ரீகண்டரைத் தண்டிக்க யத்தனித்தது, அது கண்ட நீலகண்டர் பரமசிவத்தைத் தியானித்தனர்.

அப்பொழுது பரமசிவம் சரபரூபங்கொண்டு நரசிங்கத்தைக் கிழித்தெறிய, சங்கரர் ஸ்ரீகண்டரை வணங்கி, அவரிடத்துச் சிவதீக்ஷைபெற்றுச் சிவாநந்தலகரி சௌந்தரியலகரி முதலியவற்றைச் செய்தாரென்பர். இவ்விரண்டையும், வீரைக்கவிராஜ பண்டிதர் என்னும் புலவர் பெருமானனவர் தமிழில் விருத்தயாப்பால் மொழிபெயர்த்தருளினர் இதில் நாற்பது கவி சிவசத்திகளுடைய இன்பப்பெருக்கையும் மேலே எழுபது கவி தேவியின் சௌந்தரியப்பெருக்கையும் கூறும். இந்நூலில் காணப்படுகிற சொற்சுவை பொருட்சுவை கற்பனலங்காரங்கள் வேறெந்த நூலினும் காணப்படா, இதைச் சத்திபத்தி மிகுந்தவர் விசேடமாகக் கொண்டாடுவார்கள்.

ஸ்ரீசைலம் - க்ஷிதிதரம் என்னும் மலை, இதனைத் திருப்பருப்பத மென்பர் தமிழர்.

ஸ்ரீதாராசாரியர் - ஸ்ரீவிஷ்ணு புராணத்துக்கும் பாகவதத்துக்கும் வியாக்யானஞ்செய்தவர்.

ஸ்ரீதேவி - இலக்குமி, தேவகன்மகள், வசுதேவன் மனைவியாகிய தேவகியோடு பிறந்தவள்.

ஸ்ரீபெரும்பூதூர் - தொண்டை நாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், இதில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் பெருமாள் பெயர் ஆதிகேசவப் பெருமாள் இந்த திவ்யதேசத்திலே விசிஷ்டாத்வைத மதோத்தாரகராகிய ஸ்ரீராமாநுஜாசாரியர் எண்ணூற்று முப்பது வருஷங்களுக்கு முன்னே அவதரித்து வைஷ்ணவமதஸ்த்தாபகராய் விளங்கியிருந்தனர்,இவர்தந்தையார்பெயர் ஆசூரி-கேசவாசாரியர், தாயார் பெயர் காந்திமதி, இந்த ஸ்ரீபெரும்பூதூரை ஸ்ரீபூதபுரியென்றுமவழங்குவர் இவர் கல்விகற்றது திருக்கச்சியில் திருக்காஞ்சியில் பிரபல வித்வானாயிருந்த யாதவப்பிரகாசர் என்னும் சந்நியாசியினிடத்தில் சகலசாஸ்திரங்களையும் ஐயந்திரிபறக்கற்றுவல்லவராகிதமது குரு முன்னிலையிற்றானே விசிஷ்டாத்வைதமதத்தைச் சாதித்துப்பின்னர் திரிதண்டசந்நியாசியாகி, யதிராஜன் என்னும் பெயர்பெற்று திருநாராயணபுர முதலிய தலங்களிற்சென்று ஆங்காங்கு மடங்கள் கட்டுவித்து ஸ்ரீவைஷ்ணவ ப்ரபாவத்தை ப்ரவசநஞ்செய்து, வைஷ்ணவமதத்தை நிலைபெறுவித்தவர், இவர் பல

விடங்களினுஞ்சென்று பல மதங்களைக்கண்டித்து தமது மதத்தைநாட்டி, அவ்வவ்விடங்களிற் சீடர்கள் அநேகரைச்சேர்த்து, தமது மதத்தை விருத்திசெய்தனர், இவர் கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம், தர்க்கபாஷ்யம், வேதாந்த தீபம் முதலிய அநேக நூல்களைச்செய்தார், இவரைவைஷ்ணவர் பாஷ்யகாரரென்றும், எம்பெருமானாரென்றும், உடையவரென்றும், வழங்குவர், இவருக்கு முற்காலத்தில் விசிஷ்டாத்வைத மதத்தை நாட்டினவர். பன்னிருவர் அவராவார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வர், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணழ்வார், திருமங்கையாழ்வார், என்பவர்.

ஸ்ரீமுஷ்டம் - நடுநாட்டிலுள்ள ஒரு விஷ்ணுஸ்தலம், இதில்திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் பெருமாளுக்கு ஸ்ரீவராகப் பெருமாள் என்றுதிருநாமம், இத்தமிழிலே திரிமுட்டம் என்று அழைக்கப்படும்.

# ஸ்



ஸ்காந்தம் - சிவபுராணங்களுள் ஒன்று, சிவமான்மியங்களையும் அனையதர்மங்களையும் மிகவிரிவாய்க் கூறுவது.

இது சகல வேதாந்த சித்தாந்தங்களின் சாரத்தை உள்ளடக்கினதாய் ஐம்பது காண்டங்களால் புனையப்பட்டதாய், ஒரிலக்கம் கிரந்தமுடையதாய், சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூதசங்கிதை, என ஆறுசங்கிதையுடையதாம், ஒரிலக்கம் கிரந்தத்தைக்கொண்டு விளங்கும்.

ஸ்காந்தத்தின் ஒருபாகமே கந்தபுராணம் என்னும்பெயரால் கச்சியப்ப சிவாசாரியராலே தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது, கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்து அர்ச்சகராயிருக்கும்போது சுப்பிரமணியக் கடவுளது ஆஞ்ஞையாலே கந்தப்புராணத்தைமொழிபெயர்த்தனர் என்று கூறுவர், அது உண்மையேயாமென்பது அப்புராணச் செய்யுணடையாலும், செம்பாகத்தாலும், சாஸ்திரக் கருத்துக்களின் பொலிவாலும் இனிதுவிளங்கும் உபபுராணம் பதினெட்டிலே ஸ்காந்தம்என்பதும் ஒன்றுண்டு.

ஸ்தண்டிலம் - மந்திரவேதிகை.

ஸ்தபனம் - ஸ்தாபனம்.

ஸ்தூலகர்ணன் - ஒருயக்ஷன், இவனாலேயே சிகண்டி புருஷத்வம்பெற்றது.

ஸ்தூலகேசன் - பிரமத்துவரையென்பவனுக்குத் தந்தை.

ஸ்தூலசிரசு - கவந்தனுக்குச் சாபமிட்ட மஹாரிஷி

ஸ்நபனம் - ஸ்நானம்.

ஸ்நுஷை - விதர்ப்பன்மனைவி.

ஸ்மிருதி - தக்ஷன்புதல்வி, முதல் அங்கிரசன்மனைவி, இவளுக்கு சிரத்தையென்றும் ஒருபெயர் வழங்கும், சினீவாலி, குகு, ராகை, அநுமதி என்பவர் இவள் புதல்வியர்.

ஸ்மிருதிகள் - வேதார்த்தங்களைத்தழுவிச் செய்யப்பட்ட தர்ம சாஸ்திரங்கள், அவற்றுள்ளே மநுஸ்மிருதி மிகவுஞ் சிறந்து விளங்குவது, அது பிரபஞ்ச சிருஷ்டிமுதல், சகலவிஷயங்களோடும் மாந்தர் தத்தம்வர்ணாசிரம தர்மப்படியே ஒழுகவேண்டிய விஷயங்கள் எல்லாம் விரித்துரைப்பது. இது கலியுக மிருதியந்தர்.

பிருஹஸ்பதி ஸ்மிருதி, தக்ஷஸ்மிருதி, கௌதம ஸ்மிருதி, யமஸ்மிருதி, ஆங்கிரஸ ஸ்மிருதி, யாஜ்ஞவல்க்ய ஸ்மிருதி, ப்ரசேதஸ ஸ்மிருதி, சாதாதப ஸ்மிருதி, பிராசா ஸ்மிருதி, ஸம்வர்த்த ஸ்மிருதி, ஔஸநஸ்மிருதி, சங்கஸ்மிருதி, விகித ஸ்மிருதி, ஆத்ரேய ஸ்மிருதி, விஷ்ணு ஸ்மிருதி, ஆபஸ்தம்பஸ்மிருதி, ஹாரீதஸ்மிருதி என ஸ்மிருதிகள் பதினெட்டு, இவையே யன்றி உப ஸ்மிருதிகளும் பதினெட்டுண்டு, அவை கண்வ

சபில லோஹித தேவல காத்யாயந லோகாக்ஷி புத சாதாதப அத்ரிபிர சேததக்ஷ விஷ்ணுவ்ருத்த விஷ்ணு வ்ருத்தமநு தௌம்யநாரத பௌலஸ்த்ய உத்தராங்கித ஸ்ம்ருதிகள்.

இந்த ஸ்மிருதிகளை எல்லாம் ஆதரவாகக்கொண்டு தென்னாட்டிலே வசித்துவந்த வைத்தியநாததீக்ஷிதர் செய்தருளிய ஸ்மிருதியை வைத்தியநாத தீக்ஷிதியம் எனப்படும். இதிலே இக்காலத்திலே பெரும்பாலும் அனுட்டிக்கத்தக்கதாம்.

ஸ்வதை - பிதிர்தேவதைகள் மனைவி.

ஸ்வயம்ப்ரபை-ஹேமையென்னும் அப்ஸரசுபுத்ரி, அநுமான் முதலியோர் சீதையைத் தேடிச் சென்றபோது, இவளிருக்கும் காஞ்சாபிலத்தில் பிரவேசித்துவெளிப்படவொண்ணமல் திகைத்துநிற்க இவன் அவர்கள் வெளிப்படும்படி உதவிசெய்தவள்.

## க்ஷ



க்ஷூர்மி-டசிதாகம், சோகம், மோகம், ஜனனமரணங்களாம்.

## ஹ



ஹம்ஸகீதை-ஹம்சரூபியாகிய பிரமன், சாத்தியர்களுக்கு உபதேசித்த கீதை இது தர்மமார்க்கத்தை விரிவாய்க் கூறும்.

ஹம்ஸன் - வசுதேவனுக்குச்சீதேவியிடத்துப்பிறந்த இரண்டாம் புத்திரன், கடிசிகன் சகோதரன், இவன் கௌசிகன் எனவும்படுவன்.

ஹம்ஸை - மேருவுக்கு உத்தரபாகத்தில் உள்ள ஒருமலை.

ஹயக்ரீவன் - குதிரை முகமும் மநுஷ்யதேகமும் உடைய கற்கி யவதாரத்தராகிய விஷ்ணு பூர்வகாலத்தில் விஷ்ணுவானவர் யோகநித்ரை செய்யும்போது மதுகைடபர்கள் பிறந்து வேதங்களை அபஹரித்துக்கொண்டு போய் பாதாளத்தில் அடக்கிவிட, ஸ்ரீமந்நாராயணன்பிரமன துவேண்டுகோளால் யோகநித்திரைநீங்கி,ஹயக்ரீவரூபந்தரித்து மதுகைடபர்களைக் கொன்று வேதங்களைக் கொண்டுவந்து பிரமதேவனுக்குக் கொடுத்தார்.

ஒருதாநவன்,இவனுக்குசோமகன் என்னும் வேறொருபெயரும்உண்டு.

ஹயசிரை-வைவசுவாநரன்புத்ரி,க்ருது மனைவி.

ஹரதத்தாசாரியர் - கஞ்சனூரிலேமதுசூதநாசாரியருடைய புதல்வர். இவர் பூர்வசமயம் வைஷ்ணவம். பிறகு சைவசமய சாஸ்திரங்களைக் கற்றுச் சைவசமயத்தராயினர், அதுகண்ட வைஷ்ணவர்கள், இவரை நோக்கி, உமது சிவன் உண்மையாகப் பரம் பொருளாயின் நாங்களிடும் இருப்புப் படிமே னின்று சிவபரத்துவத்தை நிலைபெறுத்தக் கடவீரென இவர் அதற்குடன்பட்டு, வைஷ்ணவர்கள் பழுக்கக் காய்ச்சிய இருப்புப்பாளப் படியேறிச் சிவபரத்துவஞ் சாதித்தவர், அப்போது இவரால் செய்தருளப்பட்ட நூலுக்கு சதுர்வேத தாற்பரியசங்கிரகம் என்பதாம், இதனைத் தமிழிலே மொழி பெயர்த்தவர் துறைசைச் சிவஞான முனிவரர். இவர் பூர்வநாமம் ஹரிதத்தர்.

ஹரன் - பாவஹாரி,பாபத்தைக்கெடுப்பவன், சிவன்,மாலியவான்புத்திரன் விபீஷணன் மந்திரி.

ஹரி - விஷ்ணு.

ஹரிகேசன் - வசுதேவன் தம்பியாகிய சியாமகன் மகன்.

ஹரிக்ராமம் - விதர்ப்ப தேசத்து ஒரு நகரம்.

ஹரிச்சந்திரன்-இவன் அரிக்கும் சந்திரனுக்கும் பிறந்தவன் சூரியவம்சத்தில் இருபத்துமூன்றும் சந்ததியில் வந்த திரிசங்கினுல் வளர்க்கப்பெற்றவன், கதைவரலாறு, சந்திரன் தட்சப்பிரசாபதியின் இருபத்தேழுகன்னிகைகளையும் விவாகஞ் செய்துகொண்டு, அவர்களை யனுபவிக்க முதலில்அச்சுவினி,பரணி,கார்த்திகை,

மூவரையுஞ் சேர்ந்து நாலாநாள் உரோகணியிடம் போக உத்தேசித்திருக்கையில் அவள்பேடியானதால் என்செய்வதென்று ஆலோசித்து வனத்திற்சென்றுதவஞ்செய்துபெண் வடிவு பெற்றாலன்றி உயிர்விடுவதே நலமெனத் தீர்மானித்து வனமடைந்து விஷ்ணுவைநோக்கித் தவம்புரிய அவர் எதிர்வந்து என்னவரம் வேண்டுமென்று கேட்க அவள் தனது பேடித்தன்மையைத் தெரிவிக்க அவர் ஒரு தடாகத்தை யுண்டுபண்ணியதில் முழுகிவரும்படி கட்டளையிட அவள் அங்ஙனமேசெய்து கோடி சூரியப்பிரகாசமான தேஜசுபெற்று அதிக ரூபலாவண்யமடைந்து உடனே சந்திரன் வருவதற்கு முந்தித் தன் வீட்டிற்குபோகஉத்தேசித்து வனத்தின்வழியேவருகையில் சந்திரன்சந்தித்துஅவன்தனதுமனைவியெனத் தெரிந்துகொள்ளாதுஅவளைக்கண்டு மயங்குகையில் அவள் தனது நாயகனெனத் தெரிந்துகொண்டு அவனைநோக்கி ஐயா இதோ தெரிகிற தடாகத்தில் மூழ்கி வருவாயாயின் உன்னை அணைவேனெனச் சொல்லி யனுப்பிவிட்டுத் தனதிருப்பிடம் வந்துவிட்டனள். சந்திரன் அவள் வார்த்தையை நம்பித் தடாகத்தில்மூழ்கி, எழுந்தவுடன் தான் பெண்வடிவாகிவிடத்தன்னைக்கண்டு வெட்கித் தனது மைத்துனனாகிய விஷ்ணுவைத் தியானித்தவுடன் அவர்வந்து சந்திரனாகிய பெண்வடிவினைக்கண்டுமோகித்து ஆலிங்கனஞ்செய்ய அவன் சந்திரனென்று பலவிதம் சொல்லியும் கேளாது பிடித்து வலித்துப் புணர்ந்தனன். அப்போது விஷ்ணு தனது வீரியத்தை ஒருசங்கினில் வாங்கிச் சமுத்திரத்திலெறிந்தனள் அவ்வீரியம்சென்று அச்சமுத்திரக்கரையில்புத்திரனை நோக்கித் தவம்புரிந்துகொண்டிருந்த திருசங்கு என்பவனுக்குச் சமீபத்தில் சங்கத்தோடுருவாகிய குழவியவனிடமணுக அவன் அச்சங்கினைக் கரத்திலெடுக்க அச்சங்கம் வெடித்து குழந்தை வடிவாக அதை யெடுத்து வளர்த்தனர். சந்திரன் விஷ்ணுவின் உத்தரவின்படி வேறு தடாகத்தில் மூழ்கி ஆண்வடிவங்கொண்டு உரோகணிபாலடைந்து எல்லா விருத்தாந்தங்களையும் தெரிந்துகொண்டு வாழ்ந்தனன், அரிச்சந்திரன் மனைவி சந்திரதயன் புதல்வியாகிய சந்திரமதி, இவன்புத்திரன் லோகிதாசன்.

ஹரிச்சந்திரன் மஹா உதாரசீலனும், சிறிதுந்தவறாத சத்தியவந்தனுமாய் விளங்கினவன், இவனது சத்தியவிரதத்தை வசிஷ்டமுனிவர் இந்திரன் சபையில் எடுத்துப் புகழ்ந்தபோது விசுவாமித்திரன் அதுபொறாமல், அந்த அரிச்சந்திரன் சத்தியந்தவறிப் பொய்சொல்லப் பண்ணுகிறேனென்று சபதஞ்செய்து, அவனது சத்தியவிரதத்தைப் பரீக்ஷிக்கப் புகுந்தான், இவன்செய்த கொடிய வஞ்சப் பரீக்ஷைகளுக்கெல்லாம் அவன் சிறிதுங் கலங்காதுநின்று, தன்மனைவி மக்களைப்பிரிந்து தானும் புலையனுக்கடிமையாகியும் தான் கொண்ட சத்தியவிரதத்தைக்காத்து என்றும் அழியாத பெரும்புகழ்படைத்தவன்.

ஹரிணங்கன் - சந்திரன்.

ஹரிணி - ஓரப்ஸரசை.

ஹரிதன்-யவனாசுவன்புத்திரன் இவன் தவத்தால்பிரமரிஷியானவன் இவன் க்ஷத்திரிய வர்ணஸ்த்தனேயாயினும் இவன் வமிசத்தாரெல்லாரும் பிராமணராயினர், இவரெல்லாரும் ஹரிதர் எனப்படுவர், அம்பரீஷஆங்கிரசயாவநாசுவ வமிசமாகப் பிறந்தார்கள், லோகிதாசியன் புத்திரன், சம்பன் தந்தை.

ஹரித்துவாரம் - கங்காத்வாரம் எனப்படும் க்ஷேத்ரம், விஷ்ணுவாற் கொல்லப்பட்ட மது தனது மரணகாலத்திலே இந்தத் தலம் புண்ணிய ஸ்தலமாகும்படி, அநுக்ரகிக்க வேண்டுமென்று வேண்ட, அவ்வாறேயாகுகவென் றநுக்ரஹித்தார்.

ஹரியங்கன் - சம்பன் புத்திரன்.

ஹரியசுவன் - த்ருடாசுவன் புத்திரன், நிகும்பன் தந்தை, அநரணியன் புத்

திரன், சுமநசன் தந்தை த்ருஷ்ட கேது புத்ரன், பர்மியாசுவன்.

ஹரிஹரராயன் - இவன் துங்கபத்ராநதி தீரத்திலே காடு கெடுத்து நாடாக்கி வித்யாநகரம் நிருமித்து அங்கிருந்து அரசியற்றின ஓரரசன், இவன் இற்றைக்கு ஐந்நூற்றுப்பத்து வருஷங்களுக்கு முன்னிருந்தவன்.

ஹரிஹரன் - விஷ்ணும் சிவனும் கூடிக் கொண்டிருக்கும் வடிவம்.

ஹரிஹரபுத்திரன் - சாத்தனார் இவர், ஐயனார் என்றும் வழங்கப்படுவர், மோஹினி வடிவங்கொண்ட விஷ்ணுவைச் சிவன் கூடித் தோற்றுவித்த புத்திரர் இவரே, இவர் அறநெறி வழுவினோரைத்தண்டிப்பவர், இவர்க்கு வாகனம் வெள்ளையானை, இவர்க்குத் தேவிமார் பூரணை புட்கலை என்னுமிருவருமே, இவர் தற்காலத்திலே கிராம தேவதையாகப் பூசிக்கப்படுபவர், இவர்க்கு ஆயுதம் செண்டு, நிறம் கருங்கடல் நிறம். ஹரீதன் - விசுவாமித்திரன் புத்திரன், இவன் வமிசத்துப் பிராமணர் ஹரீதர் எனப்படுவர்.

இந்திரன் சூரபதுமனுக்குப் பயந்து இந்திராணியைச் சீகாழிப்பதியிலே தனியே யொளித்துவைத்து விட்டுத் தான் தேவருடன் மேரு மலைக்குப் போயிருக்கையில் சூரன தங்கையாகிய அஜமுகி தனது தமையன் உத்தரவின்படி உலகெங்கும் தேடிச் சீகாழியில் இந்திராணியைக் கண்டு பலாத்காரமாக விழுக்கையில் ஹரிஹரன் தனது சேவகனாகிய மாகாளரைக் கொண்டு அஜமுகியினின்றும் இந்திராணியை விடுவித்து அவ்விராக்கதஸ்திரீயின் வலதுகாத் தையறுப்பித்தனர்.

ஹர்ஷன் - தருமனுக்குச்சிரத்தையிடத்துப்பிறந்த புத்திரன், இவன் மனைவி நந்தை, இவன் சகோதரர் சமன் காமன் என்பவர்.

ஹலாதன் - ப்ரஹலாதன்தம்பி, இவன் அநுஹலாதன் எனவும்படுவன்.

ஹவ்யவாகநன் - க்ரஹபதி, அக்கி, சுசி புத்ரன்.

ஹவிர்ப்புக்-ப்ரீதி. இவள் புலத்தியன் மனைவி, விச்சிரவாவு தாய்.

ஹவிர்யக்ஞங்கள் - சிரௌதாக்கினியிலே அமைக்கப்படும் யஜ்ஞபேதங்கள், அக்னியாதேயம், அக்னிஹோத்ரம், தர்ஸ பூர்ணமாசம், ஆக்ரஹாயயணம், சாதுர்மாசியம், நிரூடபசுபந்தம், சௌத்ராமணி, என ஏழாம்.

ஹவிர்த்தாநன் - விஜயாசுவனென்னும் அந்தர்த்தாநனுக்கு நபஸ்பதியிடத்துப் பிறந்த புத்திரன், இவன் பர்ஹிஷ்டதன் என்னும் பிராசீநபர்ஷிகயன், சுக்கிலன், க்ருஷ்ணன், சத்தியன், என்னும் யஜன், ஜிதவாதன் என அறுவர்புதல்வரைப்பெற்றான், அவருள், ப்ராசீநபர்ஹீக்குப் பதின்மர்புத்திரர் பிறந்தார்கள், அவர்கள் ப்ரசேதசர் எனப்படுவார்கள்.

ஹனுமந்தன் - ஹநுமான், சுக்ரீவன் மந்திரி ஸ்ரீராமதூதன், வாயுதேவனது அநுக்ரஹத்தால் அஞ்சநா தேவியினிடத்திற் பிறந்தவன், சூரியனிடத்தில் கல்விகற்று நவவியாகரண பண்டிதன் எனப் பெயர்படைத்தவன், ஸ்ரீராமாயணமென்கிற பெரிய மணிமாலையில் நாயகமணியாய் விளங்கினவன், ஸ்ரீராமாயணத்தில் எல்லாப் பாகங்களிலும் வியாபித்து விளங்குவது இவனது பராக்ரமாதிசயமே, இவன் ஸ்ரீராமாநுக்ரஹத்தால் ஸ்திர ஜீவிபட்டம் பெற்றவன், அன்றியும் அவரது ஸ்ரீபாதத்தை யிடையறாது தாங்கிநின்று சிறிய திருவடியென்னும்பெயரும்பெற்றவன், இராவணாதியர் யுத்தத்தில் இவனால் மாண்ட ராக்ஷஸசேனையின் சங்கியை மிகப் பெரிது. இவனது பிரபாவம் ஸ்ரீராமாயணத்தில் விரிவாய்க்காணலாம்.

ஹஸ்திபுரம் - ஹஸ்திநபுரம்.

ஹஸ்திநபுரம் - கௌரவர்களுக்கு ராஜதானி, இது ஹஸ்திகனால் நிருமிக்கப்பட்ட நகரம், இந்நகரம் பிற்காலத்தில் கங்கைகொண்டழிந்தது, இப்போதுள்ள இலங்கை தில்லிநகருக்கு அறுகாத தூரத்திலுள்ளது.

ஹஸ்தன் - வசுதேவனுக்குரோசனையிடத்துப்பிறந்த புதல்வன்.

ஹஸ்திகன் - சுகோத்திரன் புத்திரன், இவனே அஸ்திஞபுரத்தை நிருமித்தவன், அஜமீடன், துவிமீடன், புருமீடன் என்போர் இவன்புத்திரரே.

# ஹா



ஹார்த்திக்கியன் - க்ருதவர்மா.

ஹாஹா - ஒருகந்தருவன்.

# ஹி



ஹிரண்யநாபன் - ஸ்ரீராமன் மகனுகிய குசன் வமிசத்திற் பிறந்தவன், இவன் யாஜ்ஞவல்கியரால் யோகமார்க்கம் உபதேசிக்கப்பெற்றவன், மைநாகன்.

ஹிரண்யபுரம் - நிவாத காலகேயர்களுடைதேசம், இது சமுத்திரத்திடையே யுள்ளது.

ஹிரண்யரோமன் - நன்கு லோகபாலகர்களுள் ஒருவன்.

ஹிரண்யாக்ஷன் - ஹிரண்யகசிபன் தம்பி, தந்தை காசிபன், தாய், திதி, இவனும் இவன்தமையனும் சநகசநந்தநர்களுடைய சாபத்தால் ராக்ஷசர்களாகப் பிறந்த ஜயவிஜயர்கள், இவ்விருவரும் விஷ்ணுத்வாரபாலகர்கள் இவர்கள் தவத்தினுல் மிகு கர்வமுடையவர்களாகி, தேவர்களுக்குத் துன்பஞ் செய்துவருங் காலத்தில், விஷ்ணுவினுற் கொல்லப்பட்டவர்கள், வசுதேவன் தம்பியாகிய சியாமகனது இரண்டாம் புத்திரன்.

ஹிடிம்பன் - வீமனுற் கொல்லப்பட்டவோரசுரன்.

ஹிடிம்பை-ஹிடிம்பன்தங்கை, இவளை வீமன் காட்டகத்திற் கண்டு மணம்புரிந்தான், இவள் வயிற்றிற் பிறந்த புத்திரன் கடோத்கசன்.

ஹிமசுதை - பார்வதி.

ஹிமசுதன் - மைநாகன்.

ஹிமபுரம் - ஓஷதிப்ரஸ்தம்என்னும்ஹிமாலே ராஜதானி.

ஹிமம் - பனி.

ஹிமான்-ஹிமவந்தன், இமயமலைமேருபுத்ரியாகிய மநோரமை யென்னும் மேனையை மணம்புரிந்து பார்வதியையும் கங்கையையும் பெண்களாகப் பெற்றுவளர்த்தவன்.

ஹிமாயம் - இமயபர்வதம்.

ஹிமாலயம் - பனிமலை.

ஹிம்சை-நிருதிமகள், அதர்மனமனைவி.

ஹிரண்யகசிபன் - காசிபனுக்குத் திதியினிடத்துப் பிறந்தபுத்திரன், இவன் விஷ்ணு நரசிங்காவதாரத்திற்கொல்லப்பட்டான், இவன் மூவுலகையும் வென்றவன், இவன்மகன் ப்ரஹலாதன்.

ஹிண்ரயகர்ப்பன் - பிரமன், விஷ்ணு.

ஹிரண்மயவருஷம் - நவ வருஷங்களுளொன்று, இது இளாவ்ருதவர்ஷத்துக்கு வடக்கேயுள்ளது.

ஹிரஸ்வரோமஸ்-சுவர்ணரோமன் புத்திரன், இவன் இரண்டாஞ் சநகன் தந்தை.

ஹிருஷிகேசன் - விஷ்ணு.

ஹில்வலை - மிருகசீரிடநக்ஷத்திரத்தினது தலையிலுள்ளஉபநக்ஷத்திரங்களைந்தும் இப்பெயர்பெறும்.

ஹிரன்-நைஷதம்செய்த ஹர்ஷன் தந்தை.

ஹிருதிகன்-போஜன்புத்திரன், இவன் புத்திரர் தேவமீடன், சத்தந்வன், கிருதவர்ணன்.

# ஹூ



ஹூணதேசம் - ஹூணர்களுடைய தேசம், இத்தேசத்தவர் யவநர் எனவும்படுவர், ஹூணர் - வெண்ணிறமுடையவர்.

ஹூஹூ - ஒரு கந்தருவன், இவன் ஒருசாபத்தால் முதலையாய்க் கிடந்து கஜேந்திரன் என்னும் யானையைப் பிடித்தபோது விஷ்ணுவினுற்கொல்லப்பட்டவன்.

# ஹே



ஹேதி - சிருட்டிகாலத்தில் பிரமனால் படைக்கப்பட்ட ராக்ஷஸராஜன், இவன் மனைவி காலாக்கினி யென்னும் பயை, புத்திரன் வித்யுத்கேசன், இவன் மாலியவந்தன் முதலாகிய ராக்ஷஸவமிஸத்துக்கு மூலபுருஷன்.

ஹேமசந்திரன் - விசாலன் புத்திரன், சாலிவாகனசகாப்தம் ஆயிரத்துநூறு வருஷத்திலிருந்த ஒரு ஸம்ஸ்க்ருதகவி, இவர் தம் பெயரால் ஒரு நிகண்டு செய்தவர், அது ஹேமசந்திரகோசம் எனப்படும்.

ஹேமன்-ஜயத்திரதன்புத்திரன், பலிக்குப்பாட்டன்.

ஹேமாத்திரி - மேருமலை.

ஹேமாங்கன்-வசுதேவனுக்கு யோசனையிடத்துப்பிறந்த புத்திரன்.

ஹேமை - ஒரு அப்சரஸ்திரீ.

ஹேமவடம் -மேருவுக்குத் தென்றிசை நுனியிலேயுள்ள மலைகளுளொன்று.

ஹேஹயன்-சதஜித்து மூன்றாம் புத்திரன்.

---

# ஹை



ஹைரம்பம்-ஒருமலை, இது மணிபுரத்துக்கேகபிலநதிக்கு உத்பத்திஸ்த்தானமாயுள்ளது.

ஹைஹயம் - கார்த்தவீரியார்ஜுனன் அரசாண்டதேசம் இது நர்மதாநதி தீரத்திலுள்ளது.

எல்லாஞ் செயற்கு மிடமாகு மென்னெஞ்சே
கல்லாரன் வெற்பன் கழல்.

---

தமிழ்மொழியகராதி முற்றியது.

திருவருட்சகாயம்.

---

கடவுள் துணை.

# பொருளகராதி.



## கடவுள் வணக்கம்.

அருடருந் தெய்வத் தடிமலர் போற்றப்
பொருளக ராதிப் புந்தியில் வருமே.

நதிகாட்டுந் திருமுடியு நடங்காட்டும் பதமலரு நஞ்ச யின்று
துதிகாட்டுந் திருமிடறுந் துணைகாட்டும் பாரசிவையுந் துஞ்ச வில்லா
விதிகாட்டுந் திருவாயும் விடைகாட்டு மீச்சுரனார் விழைவி னைத்தப்
பதிகாட்டுந் திருக்குடிலைப் பதங்காட்டுந் தணிகைவரைப் பகவன் வாழி



அ-சிவபெருமான், பிரணவத்துமுதல் எழுத்து. அகாரம் பிரமன், உகாரம் விஷ்ணு, மகாரம் உருத்திரன் எனக் கொள்வதொன்றாயினும் அவற்றிற்கு அதிதேவதை பரசிவனே என்க.

அகக்கூத்து, அகம், அகமார்க்கம், அக நாடகம், குணத்தின்வழி.

அகங்காரதத்துவம் - முப்பத்தாறுதத் துவங்களுள் ஒன்று. இது புத்திதத் துவத்தினின்றுந் தோன்றி, இவ்வி டத்து யாவர்தான் என்னோடு ஒப் பாவர் ஒருவரும் இல்லையென அக ந்தைப்படுதற்குக் காரணமாய் வாயி ற்காட்சிக்கு விஷயமாய்த் தோன்றி யதொன்றனை இது இன்னதென் று புத்திதத்துவம் நிச்சயிக்கும்படி யாக யான் எனவும், எனது எனவும் அதன்கண் ஒருபட்டெழுந்து ஆன் மாவுடன் முதல்வனது ஆணையினா லே வேற்றுமையின்றி நிற்கும் என் க. அது குணவேற்றுமைபற்றி முத்திறப்படும்.

அகங்காரவகை - வைகரியாங்காரம், தைசதாங்காரம், பௌதிகாங்காரம், என மூன்றாம்.

இவற்றினுள்ளே தைசத வகங் காரத்தினின்றும் மனமானது தோன் றி எதிர்ப்பட்ட பொருளைச் சித்தரூப மாய்நின்று சிந்தித்தும், ஐயுற்ற அதனை நிச்சயித்தற்கண்ணதாய் வேட்கையை ச்செய்தும் நிற்கும். அதன்பின் செவி, மெய், கண், நா, மூக்கு என்னும் பஞ் சேந்திரியங்கள் தோன்றாநிற்கும். இவ ற்றை முறையே வடநூலார் சோத்தி ரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கி ராணம் என்பர், வைகரி யகங்காரத்தி னின்றும் வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்துந்தோன்றும். பூதாதியகங்காரத் தினின்றும் சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம், என்னுந் தன்மாத்தி ரைகள் ஐந்துந்தோன்றும். தன்மாத் திரைகளும், இச்சாரூபமாகிய அங்கக்

காரணங்கள் மூன்றுங் கூடிப் புரியட்டகசரீரம் எனப்படும்.

அகசியம்-விகடம், விநோதக்கூத்து.

அகசு-பகல்மானம், அளவு.

அக்ச்சமயங்கள்-பாடாணவாதசைவம் சங்கிராந்தவாதசைவம், அவிகாரவாதசைவம், பரிணாமவாதசைவம், சுத்தசைவம்,பேதவாதசைவம் என்னும்ஆறுமாம். இவற்றுள்,பாடாணவாதம் ஆவது ஆன்மாமுத்தியிலும் சகசமலம் என்னும் இயற்கைமலம் நீங்காது, ஆகந்துகமலம் என்னும் செயற்கைமலம் மாத்திரம் நீங்கப்பெற்றுக் கல்லுபோலக்கிடக்கும் என்பதாம். சங்கிராந்தவாதசைவம் ஆவது விகாரமின்றி நிற்கும் ஆன்மாவின் சந்நிதியிலே அசத்தாகிய கருவிகளே சத்தாகிய சிவத்தைச் சிவகாரணமாய்நின்று அறியுமெனக் கொள்வதாம். அவிகாரவாதசைவம் ஆவது கொடியவெப்பமிக்க வெயிலிலே நடந்தோரால் அடையப்படுகின்ற மரநீழல்போலப் பதி விகாரமின்றிநிற்ப ஆன்மாவானதுதானே பக்குவமடைந்தபோதுஞானக்கண் பெற்றுப் பதியைச்சேரும் எனக் கொள்வதாம். பரிணாமவாதசைவம் ஆவது உயிர்கெட்டுக்கூடி அரனடியில் ஒன்றாய் நிற்கும் என்பதாம். சுத்தசைவம்ஆவது ஆன்மாவுஞ்சிவமுங்கூடியவிடத்து ஆன்மா சிவாநுபவத்திற்கு உரித்தாகாது எனக் கொள்ளுமதம். இந்நூல் இக்காலத்துள்ளதென்பாருமுளர். பேதவாதசைவம் ஆவது ஆன்மா தத்துவஞானமடைந்தபோதே மும்மலமும் நீங்கப்பெறு மென்றும், இதுவே முத்தியென்றும் கொள்ளுவதாகும்.

அகடிதகடனசாமார்த்தியம் - மாயம். கூடாததையும் கூட்டுந்தன்மை.

அகண்டானந்தமுனி-இலக்குமிதோத்திரமுதலியநூல்களைச்செய்த சம்ஸ்கிருதகவி; இவர்ஜென்மதேயம்கச்சி.

அகத்தி-அச்சம்-சரீரம், முனி

அகத்திபசங்கிதை இது கெத்தியமகாமுனிவரால் வடமொழியிலே செய்யப்பட்ட ஒருசிறஅம நூல்.

அகத்தியபட்டன் - அகத்தியபண்டிதன், இப்பண்டிதர்வடமொழியிலே பாலபாரதம் என்னும் நூலைச்செய்தவர்; இவர் கச்சியிலிருந்தவர்.

அகத்தியபத்தவிலாசம் - சிவனடியார் சரித்திரங்களை முறையாகக்கூறும் வடமொழி நூல், அகத்தியராற் சொல்லப்பட்டது.

அகத்தியப்பிரமதா - அகத்தியமுனிவன் சகோதரன்.

அகத்தியம்-முதனூல். முத்தமிழிலக்கணம் இது இயல் இசை நாடகம் என்னும்முத்தமிழ் இலக்கணத்தையும் பன்னீராயிரஞ் சூத்திரத்தாற் தெரிவிப்பதாகிய இலக்கண நூல். தென்மதுரைக்கணிருந்த தலைச்சங்கப்புலவர்களுள் முதல்வராகிய அகத்தியனாற் செய்தருளப்பட்டது. இதுநச்சினார்க்கினியர் காலத்திலேயேமறைந்ததென்ப தொல்காப்பிய உரையாசிரியர்களும் பிறரும் ஆங்காங்குச் சிற்சில்சூத்திரங்களையெடுத்துக்காட்டி யிருக்கின்றனர். பேரகத்தியம், சிற்றகத்தியம் எனப் பிரசுரிக்கப்பட்டன. பிறழ் வென்பது பெரியோர்கிடக்கை.

அகத்தியன் - கடயோனி, கடோற்பவன், கலசமுனி, கலசோற்பவன், குடமுனி, கும்பசம்பவன், கும்பசன்,கும்பயோனி, கும்போற்பவன் கும்பமுனி,குறுமுனி, மலயமுனி, முத்தமி ழூரியோன், மைத்திராவருணி, தத்தோத்திரி, வாரிகுடித்தோன், கும்போனி, புலத்தியன், மைந்தன், பிரீதிபுதல்வன், சித்தன் ருதை,தமிழ்வளர்த்தோன், உலோபாமுத்திரை கணவன்,அகத்தியன் என்னும்பெயருடைய இவர்இருடிசிரேட்டர்களுள் முதல்வர்மித்திராவருணர் என்னும் முனிவரானவர் சமுத்திரக் கரையிற் சஞ்சரித்த போது அங்கே ஊர்வசிவா, அவன் மீதுகொண்ட போக மேலீட்டினாலே இந்திரியங் கலிதமாக, அதனை அவர் குடத்தில்விட அதினின்றுந் தோன்றினவர். பலர் பிரமதேவர் செய்தயாகரும்பத்தினின்றுந்தோ

ன்றினவர் எனவுங்கூறுவர். குடத்தினின்று முற்பவித்தமையாற் றூன்கும்பயோனி, கலசமுனி, கும்பசம்பவர், கடோற்பவர் எனப் பெயர் பெற்றனர். ஆரியர்கள் விந்தமலைக்குத்தெற்கேபோகலாகாதென்றகட்டுப்பாட்டைக்கடந்து முதன்முதல் தக்ஷிணம் வந்து அந்நாட்டியல்புகளைத்திருத்தி செம்மை செய்தவர். இவரே சிவபெருமானிடத்துங் குமாரக்கடவுளிடத்துஞ்செந்தமிழினியல்புகளைச் சந்தேகம் விபரீதம் மயக்கம் என்னும் முக்குற்றமுமறத்தெரிந்துதெளிந்தவராவர் மற்றும் பிரமனுமறியாப் பிரணவப்பொருளுண்மையைக்குன்றமெறிந்த தேவருஞ்சரி நாயகனிடத்துக் கேட்டுணர்ந்தாரும் இவரே. உமாதேவியாரின் கலியாணத்துக்குத்தேவர்முதலிய அண்டத்துள்ள உயிர்வர்க்கங்கள் யாவும் அணுகி திரண்டபோது இமயமலை தாழ்ந்து தென்புலம் உயர்ந்தது. அது கண்ட தேவர் முதலாயினோர் அன்னோ? சிவனேயென்று இரங்க, சிவபெருமான் அகத்தியரையே தென்றிசைக்கணுள்ள பொதியத்துச் சென்றிருவெனக் கட்டளையிட அவர் அதனைச் சிரமேற்கொண்டு பொதியமலையில் வரப்பூமி சமப்பட்டதுபின்னர் அங்கேயே திருமணக் கோலத்தையுந் தரிசித் தருளினர். ஓர்கால் மேருமலையின்பக்கத்துத்தவஞ்செய்திருந்தனர். அப்போதுமேருமலையோடு பகைத்தவிந்தமாமலையானது வளர்ந்து பெருத்து தேவர்கள்செலவைத்தடுப்பத், தேவர்கள் யாவரும் அகத்திய முனிவரே யோலமோலம்! என்று அழைத்திரங்க, அதனையுணர்ந்த முனிவனுர்மலையின் வலியையடக்கித் தேவர்துயரை தீர்ப்பான் எண்ணிச் சிவபிரானைத்தியானிக்க அவர் தோற்றியருளி, விந்தமலையையடக்கும் ஆற்றலும், பூசை நிமித்தம் கயிலையிலிருந்த காவிரி தீர்த்தமுங் கொடுப்பப்பெற்றவர். புத்திரப்பேறுவிரும்பிவிதர்ப்பராசன்பயந்த உலோபாமுத்திரை யாரை விவாகஞ்செய்து, சித்தன் என்னும் குமாரனைப்பெற்று வைத்துத் தென்றிசைநோக்கிச் சென்றனர். சமுத்திரக் கன்னிகையையணந்துபெருஞ் சாகரர் என்னும் புத்திரரைப் பெற்றூர் என்றும், உலோபா முத்திரை புலத்தியனாரின்சகோதரியெனவுஞ் சொல்லாநிற்பர். இவர் குமாரராய சித்தமுனிவரின் புத்திரரான சுபதிட்டமுனிவர் இலங்கையைஅரசாண்ட புலவ சிகாரத்தினமாகிய பராசசோரன்என்னுஞ்சக்கரவர்த்தியின் கொலுமண்டபத்திற்கு வந்து பறங்கிக்காரார், உலாந்தக்காரர்அங்கிலேய ராதியர் இவ்வூரை இந்த இந்தக்காலத்து, அரசாள்வரெனச் சொல்லிப்போயினர் என பாரம் பரிய கதையும் ஒன்றுளது.

வழியில்கிரவுஞ்சன் என்னும்ஓர் அசுரன் மலைவடிவாய் நின்று மயக்கக் கோபமுற்று, மலையாகநின்றுவானவர் முனிவரைமயக்கிக் கந்தக் கடவுளின் வேலாயுதத்தால் அழியக் கடவையெனச் சாபமிட்டுமீண்டு, விந்தமலையைப் பாதலம் போயமுழ்துமாறு கையால் இருத்தி, அசமுகியின்மைந்தர்களான வில்வலன் வாதாவி என்னும் இரண்டசுரர்களையும் அழித்து, திருக்குற்றலம் என்னும்தலத்தையடைந்து, விஷ்ணுவிம்பத்தைச்சிவலிங்கமாகத்தாபித்துப் பொதியமலைக்குச்சென்று வீற்றிருந்தனர். காவிரிபூமியில் வந்ததற்கும் இவரே காரணர். தமதுகமண்டலத்திலிருந்த காவிரியை விநாயகக்கடவுள் காகவடிவாய்ச்சென்றுகவிழ்ப்பப்பரந்தோடிய அதனை அரசிளங்குமாரைத் துணையாகக் கொண்டு, ஒருமுகமாகத் திருப்பி நாடுவழியே பாயுமாறு விடுவித்தவரும் இவரே. பொதியமலையின் பாங்கருள்ளகாடுகளையெல்லாம்நாடாக்கினர். அவைகளே ஏழ்தெங்காடு, ஏழ்மதுரைநாடு, ஏழ்முன்பாலைநாடு ஏழ்பின்பாலைநாடு, ஏழ்குன்றநாடுஏழ்குணகாரைநாடு, ஏழ்குறம்பனைநாடு, குமரி, கொல்லம் முதலிய பன்மலைநாடு எனப்பட்டனவாம். இவைகளைத்திருத்

தியபின்யமதக்கினியாருழைச்சென்று அவர்மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு துவாரகைக்குச் சென்று கண்ணமூர்த்தி வழிக்கலாவந்த அரசர் பதினெண்மரையும் பதினெண்கோடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையுங்கொண்டுபோந்து அந்நாடுதோறுமிருத்திக் குருபீடமாய்விளங்கினர். அப்போது இலங்கைநகரத்திருந்து இராக்கதர்கள் வந்து பற்பல துன்பஞ் செய்ய எத்தனித்தார்கள். அதுகண்ட அகத்தியனார்இராவணனைச்சங்கீதத்தாற்சிநேகஞ்செய்து,இராக்கதர் அந்நாட்டிற்குவாராதிருக்குமாறு செய்வித்தனர். அகத்தியரோடு வந்த அரசிளங்குமாரே சேரசோழபாண்டிமண்டலங்களை அமைத்தவர். அதற்குமுன் அரசுசெய்தவர்குறுநில மன்னர் ஆகும். தென்னாட்டைத்திருத்தம்பலவகையானும் விருத்திசெய்தவர் துவராபதி அரசிளங்குமரரேயாம். அது "சுராதிராசன் முதலாகவரு சோழனுமுனாட்சோழமண்டலமமைத்தபிறகு எனவும்" காலனுக் கிது வழக்கெனவரைத்தவனுங்காவரிப்புனல்கொணர்ந்தவனும், எனவும் கலிங்கத்துப் பரணிகூறுவதனால் அறிக.

இந்திரன்முதலிய தேவர்பொருட்டுக் கடலின்கண் ஒளித்திருந்த விருத்திராசுரனை வெளிப்படுத்தலினந்தருளித் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுள் அருளினர் கையைநீட்டி உழுந்தளவாகக் கடலையடக்கி யுண்டனர். காசியம்பதியிலேசம்ஸ்கிருதத்தைவிருத்தி செய்யும்படி பாணினி முதலிய முனிவரர்கள் சங்கமொன்று தாபித்தனர். அதிற் றம்மையுஞ் சேர்க்குமாறு முனிவர்பெருமான் வேண்டவும் அவர் மறுத்தாராக, கோபமுற்று திருவேங்கடப்பதிபோந்து, சிவசுப்பிரமணியக் கடவுளை நோக்கித் தவங்கிடப்ப அவர் தோன்றிச்செந்தமிழினியல்பெல்லாந் தெரிக்கத் தெரிந்து பொதியத்திற் சென்றுதம்நாட்டுக்குரியதமிழ்பாஷையையுஞ் செம்மைசெய்யக்கருதி அகத்தியம்என்னும் முதனூலைச்செய்தனர் அதன்பின்னர்ச் சோதிடம், வைத்தியம் முதலிய நூல்கள் பலவற்றைச் செய்தனர். அவை யெல்லா மறைந்தொழிந்தன. இக்காலத்து அவர்பெயரால் வழங்கப்படும் வைத்தியமுதலிய நூல்கள்யாவும் அவராற் செய்யப்பட்டனவல்ல. இங்ஙனம், நூல்களையியற்றித் திரண தூமாக்கினி என்னுந் தொல்காப்பியனார், அதங்கோட்டாசிரியர், துராலிங்கர், செம்பூட்சேஎய், வையாபிகனார், வாய்ப்பியனார், பனம்பாரனார், கழாரம்பனார், அவிநயனார், காக்கைபாடினியார், நற்றத்தர், வாமனர் என்னும் பன்னிருவர்க்கும் போதித்தனர்.

அதன்பின்னராய முதலூழியிறுதிக்கண் தென்மதுரையகத்துஇறையனாரையுங் குமரவேளையும் உடனிருக்கவேண்டி.,முரிஞ்சியூர்முடிநாகராயர் நிதியின்கிழவனார் என்றிவருள்ளிட்ட நாலூற்றுநாற்பத்தொன்பதின்மர் கூட ஆராய்ந்து, தம் நூல்களையரங்கேற்றினர். அன்றிமற்றையோர்எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும், களரியா விரையும் முதலிய நூல்களைச் செய்தனர். நாலாயிரத்து நாலூற்றுநாற்பதிற்றியாண்டு ஆராயப்பட்டது. இத்தலைச்சங்கமிரீஇயினார் காய்சின வழுதிமுதற் கடுங்கோனீறுயுள்ள பாண்டியர் எண்பத்தொன்பதின்மர். அவருட் கவி யரங்கேற்றினார் எழுவர் பாண்டியருள் ஒருவனாய சயமா கீர்த்தியனாகிய நிலந்தருதிருவிற்பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்து இரீஇயினான்.

இத்தலைச்சங்கம் குறித்தவருடம் அளவும் நிலைபெற்றுவருங் காலத்தில் அதற்கிடமாயிருந்த தென்மதுரைகடல்கொள்ளப்பட்டது. இதுவன்றிமேற்காட்டிய நாற்பத்தொன்பது நாடுகளும் அழிபட்டன. இக்காலத்தை ஆராயுமிடத்துத் துவாபரகலியுகசந்தியாதல் வேண்டுமென்றும், எனவே இற்றைக்குப் பன்னீராயிரம் வருடத்திற்குமுன் எனவுங் கூறுநிற்பர்.

இற்றைக்கு ககச௪அக, வருடங்களுக்கு முன்னர் ஒருபிரளயம்வந்ததென்றும், அப்பிரளயத்தால் இப்பூமுகத்

திலேசமுத்திரக்கரையாற்சூழப்பட்ட நாடுகளெல்லாஞ்சிதைந்தும்வேறுபட்டும்போயினவென்றும், "போசிடோனிஸ்" முதலிய தீவுகள் கடல்வாய்ப் பட்டழிந்ததெனவும் அப்பிரளயத்தாலேயாமென்றும், அத்திலாந்திச் சரித்திரமெழுதிய எல்லியட் என்னும் ஆங்கிலபண்டிதர் கூறியதும் இதற்கோர் ஆதாரமாம்.

அதுநிற்க,தேவவிருடியாகியஇக் குறுமுனிபாற் கேட்ட மாணுக்கருள் சிகண்டி என்னும் அருந்தவமுனிவர் ஒருவர் உளர் என்றும் அவர் இடைச் சங்கத்து அநாகுலன் என்னுந் தெய்வப்பாண்டியன் தேரோடு ஆகாயவழியிற் செல்லும்போது திலோத்தமையைக்கண்டு தேரிற் கூடினவிடத்துத் தேவரும் முனிவருஞ் சரியா நிற்கத் தோன்றினமையாற்சாரகுமாரனெனப்பெயர்பெற்றஅக்குமாரன்அறிதற்காக இசைநூலாகிய இசைநுணுக்கம் செய்தனர் என்றும் அடியார்க்கு நல்லார் உரைத்திருக்கின்றனர்.

ஓர் காலத்து இந்திரசபையிற் சென்றிருந்த அகத்தியமுனிவரைஇந்திரன் மகிழ்விக்குமாறு உருப்பசியையழைத்து நடனஞ்செய்க வென்ன, அவளும்அங்ஙனம் ஆடத்தொடங்கும்போது,சித்திரசேனன் என்னுங் கந்தருவன், கோலமுங் கோப்பும் இசையும் நடமுந்திருத்திக்கரந்துவருகின்ற திரையுட் புகுந்துபாட, வெளிப்பட்டு ஆடுகின்றவன் சயந்த குமாரனிடத்து மோகங்கொண்டாள். அதனை யறிந்த நாரத மகாமுனிவர் கலகப்பிரிய ராதலின் அம்மோகத்தைப்பலர்க்கும்அறிவிக்கவிரும்பிப் பகைநரம்புபட யாழ் வாசித்தனர். அதனுல் ஊர்வசியின் ஆடல்நெகிழ்ந்தமையும், பாடல் முதலிய பலவகைக் கருவிகள்நெகிழ்ந்தனவுங்கண்டஅகத்தியனர் சினந்து சயந்தனை மூங்கிலாகவும, உருப்பசியை மானுடமகளாகவும், நாரதரதுயாழை மங்கலமிழந்துமணமிசைதங்கும்வீணையாகவும் ஆகவென்றுசபித்தார்எனவும் அங்ஙனமே சயந்தன் விந்தமலையில் மூங்கிலாகவும் உருப்பசி காஞ்சிமாநகரத்தில் மாதவியென்னும் பெயருடன் தேவகணிகையாகவும் பிறந்தனரெனவும், மகதியாழ் மணமிசைத் தங்கியதெனவுஞ்சரிதமுண்டு. அதனை "வானவர்கோமான்வானிடையிருந்து" எனவரும் சுத்தானந்தப்பிரகாசபாத நூற்செய்யுளானும், நாரதன்வீணை என்னும் கடலாடுகாதைச் செய்யுளானும் "திருந்திய பொதியிலருந்திற லகத்தியன்" என்னும் சிலப்பதிகார நூன்முகச் செய்யுளானு மறிக.

இன்னும் இம்முனிவரானர் நகுடன் என்னும் அரசன் தேவேந்திர பதம்பெற்றகாலத்தில் அவன்சிவிகையைமுற்றூங்கிச் சென்றாராக, அவன் விரைவாகச் செல்லுங்கள் என்னும் பொருள்பட "சர்ப்பசர்ப்ப"எனக்கூற உடனேமலைப்பாம்பாகச்சபித்தார் எனமகாபாரதமும்,சீதாதேவியின்சிறைமீட்டற்காக இராமபிரான் இலங்கையம் பதிநோக்கிவருவழியில் இம்முனிவரின் ஆச்சிரமத்திற்றங்கி,இராவணன் வரலாற்று முறைமைகளையும், இலங்கையின்மகாதமியம் முதலானவற்றையுங்கேட்டுணர்ந்து, அவராற்கொடுக்கப்பட்டபிரமாஸ்திரத்தைக் கைக்கொண்டு அவர்அருளையும்பெற்றுச் சென்று வெற்றியடைந்தனர் எனக் கூர்ம மகாபுராணமும் இராமாயணமுங்கூறுகின்றன.

"கொங்குதேர் வாழ்க்கை" என ஆலவாயடிகளாற் றிருவாய்மலர்ந்தருளப்பட்ட திருமுகப் பாசுரத்திற்குக் குற்றங்கூறிய கடைச்சங்கப் புலவருள் ஒருவராய் களவியற்பொருள் கண்ட மதுரைக்கணக்காயன் மகனான நக்கீரர்க்கு மயக்கம் நீங்க இலக்கணங்களை யிறைவன் ஆஞ்ஞைப்படி உபதேசித்தனர் என ஆலாசியமான்மியமும் கூறுகின்றது.

இவ்விருடியர்பெருமானது கலைகளுள் ஒன்று தற்காலத்துஎம்மனேரை யுய்விப்பான் சிவஞானமுனிவர் என்னும் திருநாமத்தோடு தோன்றி, திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத் தமர்ந்து செந்தமிழை விருத்திபண்ணியதன்றிப்பாமத நிரா

கரணமும் சைவசித்தாந்தமாகியசுவம தஸ்தாபனமுஞ் செய்து, சிவஞான போதமுதலிய உண்மை நூல்களுக்குத் திராவிடமாபாடியம் எனப்பெயரியஉரையும், வார்த்திகமுஞ் செய்து விளங்கிற்றுஎன்பது வெள்ளிடைமலைபோற்றெள்ளிதின் விளக்கமே. எனவே இவர் செந்தமிழ் நங்கைக்குச்செவிலித்தாயாய் விளங்கினரென்பதுதிண்ணமேயாம்.

அகத்தியமுனிவர் பெயரால்ஒரு நட்சத்திரமுமிருக்கின்றது. அது தோன்றுமாயின் சமுத்திர அலைகள் ஒடுங்கும்இதுகடல்குடித்த பெருமாட்சிமைக்கு ஓரறிகுறியாக் கொள்ளத் தக்கதாகும்.

அகத்தீசுவரர்- திருவகத்தியான்பள்ளி என்னும் திவ்விய க்ஷேத்திரத்திலே எழுந்தருளியிருக்கும் சுவாமிபெயர்.

அகநகர் - நகருள்ளிடம், இராசதானியைச்சூழ்ந்தநகரம்.

அகநானூறு- இருஎட்டுத்தொகையுள் எழாவதுதொகை. வாழ்த்துஉட்பட சº0 செய்யுளையுடையது. உத்தரமதுரைக்கணிருந்தகடைச்சங்கப்புலவர்களுள்பாரதம்பாடியபெருந்தேவனாரால்வாழ்த்துச்செய்யுளும், மாமூலனார்முதல் உலோச்சனார் இறுதியாகவுள்ள புலவர் பலரால் மற்றை நானூறுசெய்யுட்களுஞ் செய்யப்பட்டுள்ளது. அகப்பொருட்பகுதிகளையேபொருளாகஉடையதுபதின்மூன்றடிச் சிறுமையும்முப்பத்தேழடிப்பெருமையுமுள்ள ஆசிரியப்பாக்களாலமைந்தது இத்தொகைக்கண் வாழ்த்துஒழிந்த நானூறு செய்யுட்களில்முன்புள்ள நூற்றிருபது செய்யுள் களியற்றியானைநிரை எனவும், அவற்றின் பின்புள்ள நூற்றெண்பதுசெய்யுள் மணிமிடை பவளம் எனவும்,மற்றைய நூறும் நித்திலக்கோவை எனவும் கூறப்படும். இத்தொகைதொகுத்தவர் மதுரை உப்பூரி குடிகிழார் மாபிற்றோன்றிய உருத்திரசன்மர். தொதிப்பித்தவர் உக்கிரப்பெருவழுதி. இது அகம் அகப்பாட்டு எனவும்பெயர்பெறும்

அகநிலைப்பாசக்கை-சுட்டுவிரல் நுனியிற் பெருவிரலகப்படுவது.

அகநிலை-ஊர். (ப்பாலை.

அகநிலைமருதம்-உழைநரலாய கோடி

அகநீகு - தேவானீகன்புத்திரன், குருவின் பிதா.

அகப்புறக்கருவி- எழுவகை முழவின் ஒன்று. மந்திமமான தண்ணுமை, தக்கை, தகுணிச்ச முதலாயின.

அகப்புறச்சமயங்கள் - சைவம், பாசுபதம்,மாவிரதம்காளாமுகம் வாமம் வைரவம் என்னும் ஆறுமாம் இவற்றுள் சைவசமயி சிவன் தாண்டவ பூஷணமூர்த்தியாய் அருள்செய்வர் எனக் கூறுவன். பாசுபதசமயிதிருநீறுஞ்சடைமுடியுந் தரித்தமூர்த்தியாகவும், மாவிரதி என்புமாலை தரித்தமூர்த்தியாகவும்காளாமுகத்தன் படிகம் புத்திர தீபமணிகள்தரித்த மூர்த்தியாகவும், வாமசமயிஅக்கினியும்உபவீதமுந்தரித்த மூர்த்தியாகவும்,வைரசமயி தமருகமுஞ் சிலம்புந்தரித்த மூர்த்தியாகவும் அருள்செய்வர் என்றுங் கூறுவர். இவ்வறுவருஞ் சிவபெருமானையேகடவுளாகக்கொண்டு அவர்க்கு முக்கண்ணுடைமையையொப்பிதிற்றலாற் சிறிதுவேறுபாட்டையுடையர்.

அகப்பை-கோரிகை,மூழி, மூழை.

அகமார்க்கம் - அருமையிற்பாடல், மெய்க்கூத்து.

அகமுழவு-முழவு வகையின் ஒன்று, அதாவது உத்தமமான மத்தளம். சல்லிகை, இடக்கை, காடிகை, பேரிகை,பாடகம் குடாமுழாவென்ற இவையாம்.

அகம்பன் - கும்பகன்னன் புத்திரன். இவன் அநுமானாற் கொல்லப்பட்டான்.

அகலம்-அகலுள், அகறல், ஆய்வு, ஆன்றல்,இடம்,இடம்பாடு, கண்ணறை, சேண், ததம்,நளம்,நளி,நனவர்,சக்குரோதம், படர்தல், பாழி, மார்பு விபுலம், வியல், விரிவு, விசாலம், வியலிடம்.

அகலிகை-முற்கல முனிவர் புத்திரி, இவள் அதிக சுந்தரமுடையவள்

அதனால் அநேகர் மணஞ்செய்ய விரும்பவும், அநுசண்டமுனிவர் நீர்க்குள் நின்றுநெடுங்காலந்தவஞ்செய்வார்க்கே இவள்உரியவள்என்றுசொல்ல, பற்பலமுனிவருந் தேவரும்அங்ஙனம் புகுந்தும்முடியாராயினர். இந்திரனும் பற்பலமுறைமூழ்கி மூழ்கிச்செய்யஇயலாமற்போயினன். கௌதமரே அங்ஙனம் நெடுங்காலஞ் செய்தமையால் மனைவியாக்கப் பெற்றனர். இந்திரன் மாயவடிவங்கொண்டு வந்துசேர்ந்தமையால், கௌதமமுனிவரால்,கல்லாகக்கிடக்கும்படி சாபம்பெற்றனள். பின் இராமரின்திருப்பாத தூளிபட்டமையால் முன்னுருவாகி முனிவரைச் சேர்ந்தனள். பன்னிருவருடமழையில்லாமையால்எங்குமுள்ளமுனிவர்யாரும்இவள் ஆச்சிரமத்திற்குச்செல்லஅவர்களைக்கௌதமர்இவளுடையதுணைப்பலத்தாற்றன் பாதுகாத்துவந்தனர் இவள் கங்கையின் வரத்தினால் எங்கே தோண்டுகின்றனரோ அங்கேதூயநீர் வருமென்ப. இவளைகாலிற்பாடகமணிந்தே திருப்பாற் கடலில் பிறந்தவள் என்பாருமுளர்.

அகலுள்-தெரு எவ்விடமும்.

அகல் இடிஞ்சில், சராவம், சுத்திகை தகழி, பாண்டில்.

அகவல்-ஆசிரியம், தொகை.

அதனிலக்ஷணமாவது- அளவடியுடைத்தாய் இயற்சீர்பயின்றும், அயற்சீர் விரவியும், தன்றளை தழுவியும், பிறதளைமயங்கியும், கருவிளங்கனிகூவிளங்கனியென்னும் இருசீருங் கலவாது மூன்றுமுதலியபலவடிகளால் முற்றுப்பெற்று, ஈற்றிற் பெரும்பாலும் ஏகார ஒகாரங்கள்வந்து நடக்கப்படுவதாம். நேரிசையாசிரியப்பா நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பாஎனநான்குவகைப்படும்

அகவற்பாவினம் - ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம் என மூவகைப்படும்.

அகவிதழ்-அல்லி.

அகவை-பதினறுவயதிற்கு உட்பட்ட பிராயத்தையுடையவள்.

அகழி-அகழ், உடு, ஓடை, கயம், கிடங்கு, கேணி, பரிகம், பரிகை, பாம்புரி, அகப்பா.

அகழெலி-இரும்பன்.

அகறல்-கணத்தல்,வல்லி, பிரிதல், நீங்கல், உணர்தல், தவிர்தல்.

அகற்றல்-உச்சாடனம்,ஒருவுதல், துறத்தல், நீக்கல், தவித்தல், தூரத்தல் ஓட்டல், நீத்தல், பரித்தல், கழித்தல், தீர்த்தல்,விடுத்தல். [சலாகை,

அகன்மணிப்பொதுப்பெயர்-அரதனம்

அகன் -அகாசுரன், இவள். கஞ்சனேவலால் மலைப்பாம்புவடிவாய் வந்து கண்ணனைவிழுங்கி அவராற்கொல்லப்பட்டவன். [இராசதானி.

அகிகேத்திரம் - உத்தர பாஞ்சாலத்து

அகிலாண்டேசுவரி- திருவானைக்காவிலே கோயில்கொண்டிருக்குந்தேவியார் பெயர்

அகிலேசர் - திருவாரூரிலே கோயில் கொண்டிருக்குஞ் சுவாமிபெயர்.

அகிலேசுவரி-திருவாரூரிலே கோயில் கொண்டிருக்குக் தேவியார்பெயர்.

அகில் - அகரு, உலோகம், காகதுண்டம், சாகர துண்டம், சோங்கம், புழில், வமிசசம்.

அகில்வகை-அருமணவன், தக்கோலி, கிடாரவன் காரகில்.

அகோபிலம் - தொண்டைநாட்டிற்கு வடமேற்றிசையிலுள்ள ஒருவைணவமடம்.

அகோரசிவாசாரியர்-சைவசித்தாந்தத்தைப் பற்பலஅத்தியற்புதசெய்கைகளானும் போதனையினாலும் நிலைநிறுத்திய மகான்களுள்இருவம்ஒருவர் சைவசித்தாந்தத்திற்கு வேண்டியநூல்களை வடமொழியில் இயற்றினர். மிருகேந்திராசமம் முதலிய சிவாகமங்கட்குஉரைசெய்தும்வியாக்கியானஞ்செய்து முள்ளார். ஆதிசைவப்பிராமண குலத்தில் அவதரித்தவர். சிதம்பர க்ஷேத்திரத்திலே பரிபூரண தசையடைந்தனர் அவதரித்ததானமும் அதுவென்றுகூறுகின்றனர். அகோர தேவரென்று இவர்க்குப்பெயருமுண்டு. அதிவீரராமபாண்டியர்க்குத் தீக்ஷாகுருவாயிருந்தனர் என்றுங் கூறுவாருமுளர்

அகோரசிவாசாரியார்பத்ததி-இதுவட
மொழியிலே அகோரசிவாசாரிய
ராற் செய்தருளப்பட்ட நூல். பத்த
திகளுள்ளே இதுவும்வாமதேவசிவா
சாரியராற் செய்தருளப்பட்ட வாம
தேவ பத்ததியுமேமுக்கியமாகக்கை
க்கொள்ளப்படுகின்றன. சைவக்கி
ரியைக்கிரமங்களைப்போதிக்கும்.

அகோரம்-சிவபெருமானதுஐந்துதிரு
முகங்களுள் ஒன்று. இதுகண்டவர்
க்குப்பயங்கரமுண்டாக்குந்தோற்ற
முடையதாய்கீழேதூங்குந்தாடியை
க்கொண்டு, புறப்பட்டபற்களும் வி
ருத்தர்முகம்போன்ற தன்மையையு
முடைத்தாய்கருநிறமுற்றுவலப்புய
த்தின்மேல் தெற்குநோக்கிவிளங்கு
ம், விசயம், நிச்சுவாசம்,சுவாயம்புவ
ம்,ஆக்கினேயம், வீரம் என்னும்ஐந்
துஆகமங்களையும் பாரத்துவாசவிரு
டிபொருட்டுத்தோற்றுவித்ததும்இ
துவேஅகத்தியான்மக நூல்கள்தோ
ன்றினவென்றுஞ் சிவாகமங்கூறும்.

அக்கசாலையர்தெரு-ஆவேசனம். [யன்
அக்கபாதன்-நியாயநூல்செய்த ஆசிரி

அக்கயபாத்திரம். சூரியதேவனிடத்தி
னின்றும் அவன்பொருப தருமரா
சன்பெற்றுக்கொண்டவற்றதபாத்
திரம் எவ்வளவு ஆயிரவர் வரினும்
அவர்கள் யாவர்க்கும் அன்னங்கொ
டுக்கும் விசேடமுடையது.

அக்கன் - இராவணன் மகன் அனுமா
னாற் கொல்லப்பட்டவன்.

அக்காரக்கனிநச்சுமனார் - கடைச்சங்
கப்புலவருளொருவர்.

அக்கினிட்டி - ஞெகிழி, இந்தனம்,
கொப்பிடுகலம், அனற்குணவை.

அக்கினிதேவன்-சாதவேதா, மைவா
கனன், தீபதி, சித்திரபானு,தனஞ்
சயன், தென்கீழ்த்திசையோன்,
தேயு,வாயுசகன்,பாவகன்.

அக்கினிமுகன்-சூரபன்மனது புத்திர
ருள் ஒருவன் வீரவாகுவின்றுணைவ
ராயஒருவரானுங் கொல்லப்படாதி
ருந்தவீரதீரன், வீரமார்த்தாண்டன்
வீரகேசரி முதலியஎண்மர்களையும்
போர்முகத்திற்பின்கண்டவன் இ
வனேகாளியின்வரபலமுடையவன்.

அக்கினிவகை-ஆகவனீயம், காருகபத்
தியம், தக்கிணாக்கினியம் என்னு
மூன்றுமாம். இவை முறையே சது
ரம் வில்வட்டம், கோணம் என்னு
மூவடிவினவாம்.

அக்கினிதிக்கு-தென்கீழ்த்திசை.

அக்கினிமனைவி-சுவாகாதேவி.

அக்கினிவாகனம்-ஆட்டுக்கடா. [மணு.
அக்குமணி. சங்குமணி,மாவுலைமணி

அக்குரோணி - தாதிவகை. அநீகம்
மூன்றுபங்குகொண்டது.

அக்குரோணிவகை-பதாதிசேனாமுகம்
குமுதம், கணகம்,வாகினி, பிரளயம்
சமுத்திரம்,சங்கம், அனிகம் என்று
மொன்பதுமாம். இவற்றுள் பதாதி
யாவது ஓரியானையும், ஒருதேரும்,
மூன்றுகுதிரைகளும்,ஐந்துகாலாளு
ங்கொண்டது. சேனாமுகம் ஆவது
பதாதி மூன்று பங்குகொண்டது.
குமுதம் ஆவது சேனாமுகம்மூன்று
பங்குகொண்டது. கணகம் ஆவது
குமுதம் மூன்று பங்குகொண்டது
வாகினி ஆவதுகணகம்மூன்றுபங்கு
கொண்டது. பிரளயம்ஆவது வாகி
னிமூன்றுகொண்டது. சமுத்திரம்
ஆவதுபிரளயம் மூன்றுகொண்டது
சங்கம் ஆவது சமுத்திரம் மூன்று
கொண்டது. அனிகம் ஆவது சங்
கம் மூன்றுகொண்டது அவற்றின்
றொகையாவன.

யானை-க.
தேர்-க.
க. பதாதிக்கு— குதிரை-ங.
காலாள்-ரு.

யானை-ங.
தேர்-ங.
உ. சேனாமுகத்திற்கு—குதிரை-கூ
காலாள்-கரு.

கூ.
கூ.
ங. குமுதத்திற்கு— உஎ.
சரு.

உஎ.
உஎ.
ச. கணகத்திற்கு— அக.
ரு

| | |
|---|---|
| ௫. வாகினிக்கு | ௮௧, ௮௧<br>௨௪௩<br>௪௦௫. |
| ௬. பிரளயத்திற்கு | ௨௪௩.<br>௨௪௩.<br>௭௨௯<br>௧௨௧௫. |
| ௭. சமுத்திரத்திற்கு. | ௭௨௯.<br>௭௨௯,<br>௨௧௮௭<br>௩௬௪௫ |
| ௮. சங்கத்திற்கு | ௨௧௮௭.<br>௨௧௮௭.<br>௬௫௬௧.<br>௧௦௯௩௫. |
| ௯. அனிகத்திற்கு— | ௬௫௬௧.<br>௬௫௬௧.<br>௧௯௬௮௩.<br>௩௨௮௦௫ |

அங்கக்கிரியை - வசைக்கூத்தின் இலக்கணத்தொன்று.

அங்கதன் - குரங்குச்சேனைவீரருள் ஒருவன்

அங்கதேசராசன் - கன்னன்

அங்கநாடு - விஷ்ணுமூர்த்தியின் மனத்தினின்றுந் தோன்றினமையால் மனோபவன், மனோசன், சித்தசன் எனப் பெயர்பெற்ற மன்மதனானவன் சிவபெருமான் சனகர், சனாதனர், சனந்தனர், சனற்குமாரர்என்னும் நான்கு மகா முனிவர்களுக்கு சிவஞானயோகத்தைக் காட்டாநிற்புழி, பிரமன்முதலிய தேவர்களின் ஏவலாற் சென்று அம்பு பிரயோகிக்க, நெற்றிக்கண்ணினின்றுந் தோன்றிய அக்கினி சுட்டதனால் வெந்துவிழுந்த நாடாம்.

அங்கவகை - படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும ஆறுமாம்.

அங்காகமம் - மதனநூல், கொக்கோகம்.

அங்காடி - கடைவீதி, ஆவணம், கூலம், பீடிகை, ஞென்னல்.

அங்குலன் - ராகபுரத்திலிருந்தவேடன். பாதகங்களைச்செய்தவன். இவன் ஒருநாள் வேட்டையாட வனத்திற்குச் சென்று அங்கு மிருகம் பறவைகள் ஒன்றும் அகப்படாமையால் வருந்தி நீரருந்தவரும் மிருகங்களைக் கொன்றுபோவோம்என்றுநினைத்து ஒருகரையினிடத்துள்ள வில்வமரத்தின் மேல்ஏறி மறைவாயிருக்கும் இலைகளையெல்லாம்தன்வாளினாலும்கைகளினாலும் அரிந்தும்பிடுங்கியும்எறிய, அவையெல்லாங்கீழிருந்த சிவலிங்கத்தினுச்சியிற்பட்டன. இங்ஙனமே மிருகபயத்தினால்நித்திரையின்றி இராமுழுவதுங் கழிந்தமையானும், அத்தினத் தூணின்றியிருந்தமையானும், சிவசந்நிதியினுள்ள வில்வமரத்து இலைகளைப்பறித்தெறிய, அவை அருச்சனைசெய்ததுபோலாகலானும், சிவராத்திரிதினமாகிய அவ்விரதத்தை அன்புடன் அநுட்டித்தவரது பலன் அவனுக்குக்கிடைத்தது. இங்ஙனமாயவேடன் மறுநாள் தன்வீடு சென்று மனைமக்களோடு சிறிதுகாலம் வாழ்ந்து இறந்தனன். யமதூதர்கள் பாசத்தினாற்கட்டி யமலோகங்கொண்டுபோகச் சிவபெருமான் ஆஞ்ஞைப்படி நந்திகணங்கள் சென்றுயமதூதர்களை யடித்துத் துரத்திப் பாசத்தையவிழ்த்து விமானத்திலேற்றிச் சிவலோகஞ்சார்ந்தனர். சிவபெருமான் அவ்வேடனைநோக்கி அன்பனே! சிவராத்திரி விரதத்தையநுட்டித்த பலனையுடையை ஆதலாற் சிவகணத்தவர்களுள் ஒருவனாய் இருக்கக் கடவாயென்று கூறியருள அங்ஙனமிருந்தனன்.

அசகாயசூரன் - வேறொருவரது சகாயமில்லாமற் பகைவரை வெல்லும் பலமுள்ளவன்.

அசதி - குட்டினி, தொழுத்தை, கூனி, குறளி, படுவி, குண்டம், துட்டை.

அசதியாடல் - நகை, நயச்சொல், பிக்குச் சிரித்துவிளம்பல், நகல், நயக்கிளவி.

அசமுகி - காசிபமுனிக்கும் மாயையென்பவட்கும்பிறந்தவள். துருவாசமுனியுடன்சேர்ந்து வில்வலன் வாதாவியென்னும் இருவரையும்பெற்றவள் வீரமாகாளரால் கைவெட்டப்பட்டவள்.

அசிதம் சிவாகமம்இருபத்தெட்டினுள் ஒன்று, சத்தியோசாதமுகத்தினின்றுந்தோன்றியது. நாற்பாதங்களையும் பதினாயிரங்கிரந்தசங்கியைகளையுமுடையது. நான்குஉபபேதங்களையுடையது. இதுசதாசிவமூர்த்திக்கு முழந்தாளென்ப. இது கேட்டவர் சிவர், சுசிவர், அச்சுதராகும்.

அசுணமா-கேகயம், இசையறி பறவை.

அசுத்தபுவனம்-ஆன்ம தத்துவம் எனவும்படும். பிரகிருதி முதற் பிருதிவி தத்துவம் இறுதியாகவுள்ள இருபத்துநான்குமாம்.

அசுத்தமாயை - மாயாமலத்தின் கூறுபாடினுளொன்று. இதுசுத்தமாயையின் அதோபாகமாய், பிரகிருதிமாயைதோன்றுதற்குக் காரணமாயுள்ளது. பிரபஞ்ச சங்கார காலத்தில், இஃதழிந்தால்மீட்டும் இதனை உண்டாக்கும் அப்பொருளுக்கும் ஓர் உபாதானமாக அநவத்தா தோடமடைதலால் இதற்கு அநித்தியத்துவங்கூடாதபடியினாலே அழிவில்லாததாய் அருவமாய், அநேகமென்கின்ற பிரமாண மில்லாத படியினாலே ஒன்றாகி, சகல சகத்துக்குங் காரணமாய், காரியஞ்சடமாயிருத்தலாற்றானுஞ்சடமாய், எவ்விடத்துங் காரியங்காணப்படுகையினாலேவியாபகமாய் நிருமலராகிய சிவபெருமானுக்குப் பரிக்கிரக சத்தியாய், ஆன்மாக்களுக்கு மாயேயமான தனுகரணபுவனபோகங்களை யுண்டாக்குவதாய், ஆணவம், மாயைகன்மம் என மூவகைப்பட்டமலங்களில்ஒன்றாய் மாயாமலத்தின் காரியப் பாட்டினுளொன்றாய்விளங்குவதாம். எனவே விந்துவின் கீழாயடங்கி மலகர்மங்களோடு விரவிமுதற்காரணமாய் நிற்பதாம்.

அசுத்தமாயைத் தோற்றம்-வாயுவானதுகடலின்ஒருபிரதேசத்தை விகாரப்படுத்துமாறுபோல அனந்ததேவநாயனார் கிரியா சத்தியால் அந்தமாயையினொருபிரதேசத்தை விகாரப்படுத்தி அதனின்றும் நியதியையுங் காலதத்துவத்தையுமுண்டாக்குவர். எனவே முதல்வனாணையால் அனந்தேசுரநாயனார் கிரியா சத்தியைப் பிரேரிக்க, அது சத்திதத்துவத்தையெழுப்ப, சத்தி தத்துவங் காலதத்துவத்தை யெழுப்ப, அது ஆன்மாவுக்கு கன்மத்தைக் கூட்டுமெனக் கொள்க. அந்தக்காலம்இறந்தகாலம் நிகழ்காலம், எதிர்காலம், எனமுத்திறப்பட்டு, இறந்தகாலத்துஎல்லையும், நிகழ்காலத்திற்பலமும், எதிர்காலத்திற் புதுமையுமுண்டாக்கும். நியதி தத்துவம் அரசன் நியாயம்போலச் சிவபெருமானாற் கன்மத்துக் கீடாகக்கொடுக்கப்பட்ட போகங்களைப் புசிக்கும்படியறுதியிடும். காலதத்துவம் நியதிக்குப் பின்தோன்றி ஆணவத்தைச் சிறிதுநீக்கி ஆன்மாவின் சேட்டைக்குக் காரணமாய கிரியா சத்தியைத் தோற்றுவிக்கும்.

அசுத்தம் - அசுசி, அருவருப்பு, குற்சிதம், சூதகம், தூயதின்மை, பயிர்ப்பு, வாலாமை, ஆசௌசம்.

அசுரர்-அவுணர், சுக்கிரசீடர், தகுவர், தநுசர், தானவர், திதிசுதர், திதிமைந்தர், தைதேயர், தைத்தியர், நிசாசரர், நிசிசரர், பூர்வதேவர், வானோர் மாற்றலர், கண்டகர், மேனிகரப்போர், கார்வண்ணர், மாயையமைந்தர்.

அசுவத்தாமன் - துரோணாச்சாரியன் புதல்வன். பிறந்தபோது அசுவம் போலக்கனைத்தமையின் இப்பெயர் வந்தது. சிரஞ்சீவிகளுள் ஒருவன்.

அசுவினிதேவர்-நாதன், தத்தியன்.

அசை - தாளவகையுளொன்று, ஒரு மாத்திரை, இதற்கு வடிவு-எ.

அசை-எழுத்துக்களாய் ஆக்கப்பட்டுச் சீர்க்குறுப்பாய் வருவது. அதுநேரசை, நிரையசை என இருவகைப்படும் அவற்றுள் நேரசையாவது குற்றெழுத்தேனும் நெட்டெழுத்தேனுந்தனித்தும்ஒற்றடுத்தும்வருவது நிரையசையாவது குறிலிணைந்தும் குறினெடில் இணைந்தும், குறில் இணைந்து ஒற்றடுத்தும், குறினெடிலிணைந்து ஒற்றடுத்தும் வருவது.

அசைச்சீர் - நேரசையாயினும் நிரையசையாயினுந்தனித்துநின்றுசீராய்

வருவதாம். உதாரணம்நேர் (நாள்) நிரை (மலர்) இவை பெரும்பாலும் வெண்பாவி னீற்றிலுஞ் சிறுபான்மை மற்றையாவற்றுள்ளும் வரும்.

அசைச்சொல் - அத்து, அந்தில், அம்ம, அரோ, அன்று, ஆங்கு, ஆம், ஆல், இரும், இட்டு, இருந்து, கின்று, ஒரும், கா, குதிரை, சின், தம், தாம், தான், தில், நின்று, பிற, பிறக்கு, போம், போலும், மன், மன்னே, மா, மாது, மாதோ, யா, இக, மியா, போ, நும், வான், சொல், மற்று, ஆங்க, ஒ, உம், இவற்றுண், மாயென்னுமசைச்சொல் வியங்கோளோடும் வரும். அன்றியும் முன்னிலைபசைச்சொன் முதலிய தத்தம் வரியிற் காண்க. இவை அசைநிலைகளெனவும் படும். என்னை? வேறுபொருள் உணர்த்தாதுபெயர்ச்சொல்லோடும்வினைச்சொல்லோடுஞ் சார்த்திச்சொல்லப்பட்டு நிற்றலாயின.

அசைத்தல் - சார்த்துதல், அலங்கல், அசைசல், ஒசிதல், சலித்தல், சாய்தல், ததும்பல், தயங்கல், தளம்பல், தள்ளாடல், திவளல், துயல்வரல், துவளல், கசடல், தாளுதல், கம்பிதஞ் செய்தல், சஞ்சலித்தல், தளர்தல, ஆடல், ஆட்டல், இரட்டல், ஒசித்தல், சலிப்பித்தல், துவட்டல்.

அசைத்தொழில் - தாக்கியெழுதல்.

அசைமீட்டல்-மிருகங்கடாம் உண்ட உணவை இரைப்பையினுட் செலுத்தல்.

அசையாநிலை அசலம், சலியாமை, சாசுவதம், திருவம், துவம், தம்பநிலை.

அசைவு-உலோகம், சம்பனம், கம்பம், கம்பிதம், சஞ்சலம், சலம், சலனம், தாளம், துலிதம், மடிவு.

அசோகமரம்-காகோளி, சிஞ்சுபம், செயலை, சேந்து, பிண்டி.

அசோகவனம் - இராவணனது உத்தியானவனம், சீதையை சிறைவைத்த இடம். சோகத்தைமாற்றும் வனம்.

அச்சக்குறிப்பு - அஞ்சல், உலமால், நடல், நலைதல், நலைபல், நளிர், கூசல், ஞெரேலெனல், ஞொள்கல், திட்கல், துட்கல், துணுக்கெனல், துண்ணெனல், தேங்கல், வெட்கல், வெய்துறல், துடுக்கெனல், திடீரெனல், திண்ணெனல்.

அச்சமின்மை-அபயம், நிர்ப்பயம், வெருவாமை, தறுகண்மை, அஞ்சாமை.

அச்சமுள்ளோன் - கரிதன், காதரன், சிதன், பீதன், பீரு, பீருகன், பீலுகன், சகிதன்.

அச்சம் - அடுப்பு, அணங்கு, அற்றம், உட்கு, உரும், உருவு, உறுகண், கடி, கம்பலை, கலக்கம், கவலை, கொன், கோரம், சூரம், சூர், தரம் நாம், பயம், பனி, பனிப்பு, பீதி, பீர், புலம்பு, பைரவம், பேம், பிறப்பு, வெடி, வெருவக்கம், வெருவு, வெறி, வெறுப்பு, அதிர்ப்பு, பயானகம்

அச்சவலிநயம் - நாடகவுறுப்பினொன்று, அதாவது ஒடுங்கிய உடம்பும், நடுங்கியநிலையும், மலங்கிய கண்ணும், கலங்கியமனமும், மறைந்துவருதலுடைமையுமகையெதிர் மறுத்தலும், பரந்த நோக்கமும் இசைந்த பண்பினதாம்.

அச்சியந்திரம்-எழுதாவெழுத்து, எழுத்துப்பதிகருவி. [காலம், முன்பனி.

அச்சிரவகாலம்-வாடையொடு வருஉங்

அச்சு-தென்னுதெனுவென்று பாடல், பாரணை, ஆளத்தி.

அச்சுமாறுவாதிமதம்-ஆன்மாக்கள்பிறவியை யடையும்போது முன்னர் ஆணைத் தோன்றியது ஆணாகவும், பெண்ணாய்ப்பிறந்தது பெண்ணாகவும், பிறக்குமென்றும், சிவபூசையின் பலத்திறைற் பிறவியொழிந்து சிவ சந்நிதியிலே அச்சு மாறுமலேயிருக்குமென்றுங் கொள்வதாம்.

அச்சுருவாணி-அச்சாணி, அச்சு.

அச்சுவகண்டன்-ஒருவிஞ்சையன், திவிட்டகுமாரனுற்கொல்லப்பட்டவன்.

அச்சுவினிநாள்-இரலை, ஏறு, ஐப்பசி, சென்னி, பரி, புரவி, மருத்துவநாள், முதனாள், யாழ், வாசி.

அச்சுவினிதேவர்-பரிமருத்துவர், அச்சுவினிகள், மருத்துவதர், மருத்துவதிகுமாரர்.

அஞ்சலிக்கை-இரட்டைக்கை, அதாவது, இரண்டுகையும் பதாகைபோல

ல்ல வசுதேவனுந் தேவகியு மூரோசணியுந் தந்தை தாயாகப் பலபத்ரராமாவதாரம். பாரதநடத்த வசுதேவனுந் தேவகியுந் தந்தை தாயாகக் கண்ணனவதாரம். அறத்தை நிலைபெறச் செய்யக் கற்கியவதாரம்.

திருமாலவதாரம்-கரு-சனகன், சனந்தனன், சனாதன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, யாகபதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்.

திருமாலாடல் - சு - அல்லியம், குடம், மல், மரக்கால், அஞ்சன வண்ணனாடிய வாடலுள் என்ற சிலப்பதிகாரச் செய்யுளில், அஞ்சன வண்ணனாடிய வாடல் பத்துள் என்று அடியார்க்கு நல்லாரும், அங்ஙனே அரும் பதவுரை ஆசிரியரும் உரைத்தலால் பத்தென்று விளங்குகின்றது அவற்றை வந்துழிக் காண்க.

திருமாலாயுதம் - ரு - சக்கரம், தனுசு, வாள், தண்டு, சங்கம்.

திறம் - கஉ - நேர்திறம், னையவந்துழிக்காண்க, இத்திறத்தைச் சாடவமென்பர் வடநூலார்.

திறவகை-சு-தாரப்பண்டிறம், பையுள்-காஞ்சி, படுமலை இவை விரியான் நூற்று மூன்றாகும்.

---

# தீ



தீ-ங-உரியிலுள்ளதீ, உதரத்துள்ளதீ, சினத்திலெழுந்தீ. அன்றியும், வேதாக்கினி - ங - காருகபத்தியம், தக்கணாக்கினியம், ஆகவனீயம்.

தீக்கணத்தின்பெயர்-சு - அந்தரகணம், வாயுகணம், சூரியகணம், அக்கினிகணம்.

தீக்கணப்பயன்-சு-அந்தரகணம், வேறு தேசத்திற்செல்லுதலும் வாயுகணம் செல்வத்தைப் போக்கலும் சூரியகணம், சூனியஞ்செய்தலும் தீக்கணம், நோய் செய்தலுமாகிய பயனைத்தரும்.

தீக்குணம்-க௦-பொய்சொல்லல் கோட்சொல்லல் கோபித்துச்சொல்லல் பயனில்சொல்லல், இந்நான்கும் வாக்கின் றீக்குணம், களவாடல்போதல், வறிதேதொழில்செயல், கொலைசெயல் இம்மூன்றுங் காயத்தீக்குணம், கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை இம்மூன்று மனத்தீக்குணம்.

தீர்த்தவகை - ருஙட - கங்கை, யமுனை, சரச்சுவதி, கௌதமை, நருமதை, காவிரி, பொருநை, குமரி, ஆன்பொருந்தம், மணி, கன்றிகை, மாணிக்ககங்கை, வைகை, கோதாவரி, பிரமதீர்த்தம், குருக்சடீர்த்தம், கோகன்னம், சித்தவாசம், மதுவனம், சோமம், விசிவதீர்த்தம், விரசை, மகாகாளம், கனகலம், வைதரணி, சித்திநதி, வியாததீர்த்தம், பிருது, துங்கம், கவசிகம், கனகம், நந்தை, தேசாச்சுவமேதம், மாதுங்கம், சுவாமிதீர்த்தம், சுழுமுனை, சிந்து, புண்டரீகம், குபேரதுங்கம், பஞ்சகந்தம், பாவநாசம், சொன்னவதி, பிலக்காவதானம், காலசர்பி, மானசவாவி, கேதாரம், அசுவம், கிட்டிணவேணி, மாகாளம், ஒக்கிசபிருட்டம், தன்மம், புருடை, சந்திரம், சாளக்கிராமம். இவையே விதக்கப்பட்ட புண்ணிய தீர்த்தங்களாம்.

தீவு-எ-நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்காம், தெங்கு, கமுகு, இவ்வெழுவகைப்பொருளு மவ்வத்தீவின்மிக்கனவாகையாலிவற்றாற்பெயர் பெற்றன.

---

# து



துரககதி-ரு-மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி.

துவர்-க௦-நாவல், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி இத்தி, மூத்தக்காசு, மாந்தளிர்-

துறவறத்தின்றுறை-சு-சரியை, கிரியை யோகம், ஞானம் என்னுமிவைகளே நாகம் தோலுரித்தாற்போல அகப்பற்றும்புறப்பற்றுமறுத்து இந்திரிய

வசமறுத்துமுற்றத்துறத்தலே யுடைய துறவறத்துறையெனச் சித்தாந்த மெய்ந்நூலாரன்றி சிலப்பதிகாரவுரை காண்காதைக் கணுமுரைத்துள்ளார் அடியார்க்கு நல்லார்.

---

## தூ



தூக்கு-எ - செந்தூக்கு, மதலைத்தூக்கு, துணிபுத்தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கு, இவற்றுள் ஒருசீர் செந்தூக்கு, இருசீர் மதலைத்தூக்கு, முச்சீர் துணிபுத்தூக்கு, நாற்சீர் கோயிற்றூக்கு, ஐஞ்சீர் நிவப்புத்தூக்கு, அறுசீர்கழாற்றூக்கு, எழுசீர்நெடுந்தூக்கு, எனக்கொள்க.

தூபம்-ரு-குந்துருக்கம், சூடன், அகில், சந்தனம், கருஞ்சீதாரி.

---

## தே



தேசிக்குரியகால்-உ௬-நீற்று, கடிசரி, மண்டலம், வர்த்தனை, கரணம், ஆலிடம், குஞ்சிப்பு, கட்டுப்புரியும், களியம், உள்ளாளம், கட்டுதல், கம்பித்தல், ஊர்தல், நடுக்கல், வாங்குதல், அப்புதல், அனுக்குதல், வாசிப்பு,குத்துதல், நெளிதல், மாறுக்கால், இட்டுப்புகுதல், சுற்றிவாங்குதல், உடற்புரிவு.

தேவேந்திரர்-க௪-அரி,விபசித்துசுசாந்தி, சிவி, விபு, மனோசவன், புரந்தரன்,மாவலி,அர்புதன், சாந்தி, விருடன், இருத்தாமன், திவற்பதி, சுகி என்பவர்களாம். இவருள் விபுவை வசு இரவியெனவும், புரந்தரனை தூசஸ்வியெனவுங் கூறுப.

தேயம் ருசு-அங்கம், அருணம், அவந்தி, ஆந்திரம், இலாடம், யவனம், ஒட்டியம், சருசம், கலிங்கம், கன்னடம், கன்னுடம், காசம், காசிமீரம், காந்தாரம், காம்போசம், சிராடம், குருகு, குடகம், குந்தளம், குரு, குலிந்தம், கூர்ச்சரம், கேகயம், கோளம்,கொங்கணம், கொல்லம், கோசலம், சகம், சவ்வீரம், சாலவம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சோழம்,சோனகம், திராவிடம், துளுவம், தெங்கணம், நிடதம், நேபாளம்,பாஞ்சாலம், பப்பரம், பல்லவம், பாண்டியம், புலிந்தம், போடம், மகதம், மச்சம், மராடம்,மலையாளம், மாளவம், யுகந்தரம், வங்கம், வங்காளம், விதர்ப்பம்.

தேவராடல்-கக-கொடுகொட்டி, பாண்டரங்கம், குடை, துடி, அல்லியம், மல், குடம், பாவை, மரக்கால்,பேடி, கடையம், இவற்றுள் கொடு கொட்டியாவது தேவர்புரமெரிய வேண்டுதலால் வடவை யெரியைத் தலையிலேயுடைய பெரியவம்பு வல்கேட்டவளவிலே அப்புரத்திலவுணர்வெந்துவிழுந்த வெண்டலைக் குவையாகிய பாரதியரங்கத்திலே யுமா பிராட்டியார் ஒருகூற்றினராய் நின்று பாணி தூக்குசீரென்னும் தாளங்களை செலுத்தத்தேவர்யாரினும் மிக்கவனும் எம்மையாட் கொள்வான் புதுச்சந்நிதியொருபெருங்கோயிலுழை வீற்றிருந்தருளுமெந்தை கந்தவேளின் றந்தையாய் விளங்கும் இறைவன் சயானந்தத்தாற்கைகொட்டிநின்று ஆடியதாம். திரிபுரந் தீமடுத்தெரியக்கண்டும் இரங்காது கைகொட்டி நின்று ஆடுதலிற்கொடுமையுடைத்தாதனோக்கிக் கொடுகொட்டி யென்றுபெயர் கூறுப. கொடுங்கொட்டி யென்பது கொடுகொட்டியென விகாரமாயிற்றென்பர் ஆசிரியா நச்சினார்க்கினியரும் இதற்குறுப்பு நான்கு என்னை. "கொட்டி கொடுவிடை யோனுடிற்றதற்குறுப் - பொட்டிய நான்காமெனல்" என்றாராகலின்.

உ-பாண்டரங்கமாவது -வானோராகிய தேரில் நான்மறைக்கடும்பரிபூட்டி நெடுப்புறமறைத்து வார்துகின் முடித்துக் கூர்முட்பிடித்துத் தேர்முன்னின்றதிசைமுகன் பாரதியைப் பிரிந்த பரிவானமூங்கவது தபுப்பான் பாரதிவடி

வாய் இறைவன் அவற்கு மலநீற்றும் வெண்ணீற்றை யணிந்து ஆடியதாம் அது ஆறங்கமுடைத்துஎன்னே?"பாண் டரங்கமுக்கணஞடிற்றதற்குறுப்-பாய்ந் தன வாருமெனல்" என்ருராகலின்.

௩- குடையாவது-எதிரிலாத கதி ரைவேறரித்த முருகவேள் அவுணர்வி டுத்த படைக்கலங்களை யெல்லாம் போ ரிற்காற்ருது போகட, அவர் வருத்த முற்ருராக அவ்வளவிலே பெருமானுர் தங்குடையை முன்னே சாய்த்து அது வே ஒருமுகவெழினியாக நின்ருடிய ருளியதாம் அது நான்கங்க முடைத்து என்னே? "அறமுகத்தோனுடல்குடை மற்றதற்குப் பெறுமுறுப்பு நான்காமெ னல்" என்ருராகலின்.

௪-துடியாவது - புதுச்சங்கிதிக்கதி ரைநாயகக் கடவுள் கரியகடலி னடுவு நின்ற சூரபன்மனது வேற்றுருவாகிய வஞ்சத்தையறிந்து அதனடுவண்திரை யே அரங்கமாகின்று துடிகொட்டியாடி யருளியதாம். அஃது ஐந்தங்க முடைத் து என்னே? "துடியாடல் வேண்முருக னுடலதனுக்-கொடியாவுறுப்போ ரைந் தாம்" என்ருராகலின்.

௫-அல்லியமாவது - அஞ்சனவண் ணனுய கண்ணபிரான் கஞ்சன் வஞ் சத்தின் வந்த குவலயாபீடம் என்னும் யானையின் கோட்டை ஒசித்தற்கு நின் ருடியதாம், இதனை அலிப்பேடென் றும், வைணவ நிலையென்னுங் கூறுவா ருமுளர். அஃதாறங்கமுடைத்து என் னே? "அல்லியமாயவனுடிற்றதற்குறுப் புச் - சொல்லுபவாருமெனல்" என்ரு ராகலின்.

௬-மல்லாவது-வாணுசுரனைவெல் லுதற்கு மல்லனுய்ச்சென்ற நெடுமால் சேர்ந்தாரிற்சென்று அறைகூவி உடற் கரித்தெழுந்து அவனைச் சேர்ந்தவளவி லே சடங்காகப்பிடித்து உயிர்போகநெ ரித்துத் தொலைத்தற்காடியதாம் அஃது ஐந்தங்கமுடைத்துஎன்னே? "நெடியவ னுடிற்றுமல்லாடன் மல்லிற் - கொடி யாவுறுப்போ ரைந்து" என்ருராக லின்.

௭-குடமாவது வாணுசுரனுனவன் காமகுமாரனுகிய அநிருத்த னென்பவ னைத் தன்மகள் உஷை காரணமாகச் சிறைவைத்தலின் அவனை மீட்டற்கெ ண்ணியகண்ணன் அவ்வசுர நகரமாகிய சோவென்னும் புரவீதிக்குட் சென்று பஞ்சலோகங்களானும் மண்ணானுஞ் செய்யப்பட்டகுடங்கொண்டாடிய கூத் தாம். இஃதுவிநோதக்கூத்தாறினுளொ ன்று. இதற்குறுப்புவைந்தாம்.என்னே? "குடத்தாடல் குன்றெடுத்தோனுடல தனுக்கடைக்குப- வைந்துறுப்பாய்ந்து" என்ருராகலின்.

௮- பாவையாவது அவுணர்போர்க் கோலத்தோடு மோகித்து விழும்படி கொல்லிப்பாவைவடிவாய்ச் செய்யோ ளாகிய திருமகளால் ஆடப்பட்டதாம். இதற்குறுப்பிரண்டு. என்னே?"பார்வை திருமகளாடிற்றதற்குறுப் - போவாம லொன்றுடனே யொன்று" என்ருரா கலின்.

௯-மரக்காலாவது - மாயவளாகிய துர்க்காதேவி போர்முகத்தில் அவுணர் செய்யும் வஞ்சத்தைப் பொருதவளாய் அவர் மாயமெலாம் நீங்க மரக்கால் கொ ண்டாடியதாம். மாயையாவது அசுரர் அவளைவேறல்கருதிப் பாம்பு தேள்முத லிய வாய்ப்புகுந்தமை. இதற் குறுப்பு நான்கு என்னே? "மாயவளாடின மரக் காலதற்குறுப்பு-நாமவகையிற் சொலு ங்காணன்கு" என்ருராகலின்.

௧௦-பேடியாவது - காமன் தனது மகன் அநிருத்தனைச் சிறைமீட்டற்காக வாணனகரிடைச் சென்று ஆண்மைத் தன்மையிற்றிரிந்த விகாரமும் தாடி யும், முலை முதலிய, பெண்ணுறுப்புப் பலவுமுடைய ஆண்பேட்டுருக் கொண் டு ஆடியதாம் அதனை "சூரியற்ருடிமரு ள்படுபூங்குழற் பவளச்செவ்வாய்த் தவ ளவொண்ணகைநீணில மளந்தோன்மக ன்முன்னுடிய - பேடிக் கோலத்துப் பேடுகாண்குநரும்" என் மணிமேகலை யினும் "ஆண்மைதிரிந்த பெண்மை கோலத்துக்காமனுடிய பேடியாடலும்" எனச் சிலப்பதிகாரத்துங் கூறப்பட்டத னைறிக. இதற்கு உறுப்புநான்கு,என் னே? "காமன்தாடல்பே டாடலதற்கு றும்-வாய்மையினுராயினுன்கு" என் ருராகலின்.

கக-கடையமாவது-முற்கூறியவாணன்நகரத்து வடக்கு வாயிர்கணுளதாயவயலிடத்து நின்று இந்திராணியாடியதாம், அதற்குறுப்பு ஆறுகும்என்னை? "கடையமயிராணியாடிற்ற தனுக்கடையவுறுப்புக்களாறு" என்றுராகலின்.

தேவர்-ரு-பிரமா,விட்டுணு உருத்திரன், மகேசுரன், சதாசிவன். இவர் பஞ்சதேவதையும்பஞ்சகருத்தாக்களுமாம்

தேவர்வகை-௩௩-ஆதித்தர்-க௨, அச்சுவினிகள் – உ, உருத்திரர்-கக, வசுக்கள்-அ, இவற்றை யவ்வவ் வரியிற் காண்க.

---

# தொ



தொகைநிலை-அ-இயமம், நியமம், ஆதனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி.

தொழில்-௩-ஆக்கல்,காத்தல்,அழித்தல்.

தொழில்-ரு-படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல், இவையே சிருட்டி, திதி,சங்காரம்,திரோபவம்,அநுக்கிரகம். இவையேஇறைவன்செய்யும்பஞ்சகிருத்தியங்களாம்

தொழில்-௬-உழவு, தொழில், வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம்.

தொழில்-௬-அந்தணரறுதொழில் - ஓதல்,ஓதுவித்தல்,வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், அரசரறுதொழில்-ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படையியற்றல். பொருதல், வைசியரறுதொழில் - ஓதல், வேட்டல், பொருளீட்டல், ஈதல், பசுக்காத்தல், ஏருழல், சூத்திரரறுதொழில்-முதன் மூவர்க் கேவல் செயல், பொருளீட்டல், உழுதல், பசுக்காத்தல், குயிலுவத்தொழில் செய்தல், காருக வினைகளாக்கல். இவற்றுட் குயிலுவத்தொழில்களாவன,-- தோற்கருவிகளைக் கொட்டலுந் துளைக்கருவிகளை யூதலுமாம் காருகவினைகளாவன,-பட்டுநூலையும்பருத்திநூலையுங்கொண் டாடையாக்கலுஞ் சுமத்தலு முழத்தலுமாம்.

---

# தோ



தோற்கருவிகள்-௩க-பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை,முரசு,கண்டுவிடுதூம்பு, நிகாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறை. இவை அகமுழவு,அகப்புறமுழவு,புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமை முழவு, நாண்முழவு, காலைமுழவு என வெழுவகைப்படும்.

தோற்றம்-உ-சரம், அசரம், இவற்றுட் சரம் நடையுள்ளன. அசரம், நடையில்லன.

தோற்றம்-௪-பை, முட்டை, நிலம், வியர்வை.

---

# ந



நகர்படுதிரவியம் ரு-கண்ணடி,பித்தன், கருங்குரங்கு, யானை, வேந்தன்.

நட்சத்திரம்-உஎ-அசுவினி,பரணி, கார்த்திகை, உரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்தரம், அத்தம்,சித்திரை,சுவாதி,விசாகம்,அனுடம்,கேட்டை, மூலம்,பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, இரேவதி,இவற்றுள்ஒவ்வொன்றும் முறையே மேடமுதற் பன்னிரண்டிராசிகளிற் பதின்மூன்றுபாகமுமிருபது கலையுங் கொண்டவிடம்.

நதி - எ-கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி, இவையே சத்த தீர்த்தமெனப்படும்.

நதி-கக-மேற்சொல்லிய வேழின்மேல் சிந்து தாமிரபருணி, துங்கபத்திரி, கிட்டினியென்று கூட்டுக.

நரகம்-எ-அள்ளல், இரௌரவம், கும்பீ பாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி.

நாகவகை உஅ - கோரம், கீழ்க்கோரம், அதிகோரம்,கோரதரம்,கோரரூபம், தாளதரம், பயாநகம், காளராத்திரி, பயோற்கடம்,சண்டம், மகாசண்டம், சண்டகோலாலம்,சண்டதரம்,சரோருசம், சலசவதிவீமம், வீமவீடணம், கரளம், விகரளம், குலிசம், மூக்கோணம், ஐந்துகோணம், தீர்க்கதரம், பரிவர்த்துளம், மகாரௌரவம், அதிதமம், அதிசீதம், அதிவெப்பம்.

நாகவட்டம்-எ - தமப்பிரபை, இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சாகரப்பிரபைஇரத்தப்பிரபைஅழற்பிரபை,அவையாவன-இருள்,குளிர்புகை, மணல், துயிலாமை, இரத்தம், தீ.

நரம்பு-எ-இசைகாண்க.

நரம்பு-ச-இணை,கிளை, பகை,நட்பு,இவற்றுள் இணையிரண்டு நரம்புகிளையைந்து நரம்பு பகையாறு மூன்றுமாம். நட்பு நான்கு நரம்பினை யுடைத்தாய் நிற்குமென்ப.

நற்கணப்பயன்-ச - நிலக்கணம் பெருக்கஞ்செய்தல், சந்திரகணம்,வாழ்நாள் தருதல் நீர்க்கணம் கீர்த்தியைத் தருதல், இயமானன் கணஞ்செல்வத்தைத் தருதலாம்.

நற்கணப்பெயர்-ச-நிலன்,நீர், மதி, இயமானன்.

நற்குணம்-கo-மெய்யுரை நல்வார்த்தை இனியவைகூறல், பயன்படு சொல், இந்நான்கு வாக்கினற்குணம், கோயில்வலம்வரல்,தவம்புரிதல், தானஞ்செயல், இம்மூன்றுங் காயநற்குணம் அருணினைவு ஆசையறுத்தல், தவப்பற்று இம்மூன்றும் மனநற்குணம்.

நன்னாட்டமைதி-கூ—செல்வம், விளையுள், பல்வளம், செங்கோல், குறும்பின்மை, பிணியின்மை.

## நா



நாகம்-அ—வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன்,குளிகன், பதுமன், மகாபதுமன்,கார்க்கோடகன்,இவற்றைக் கடவுட்பாம்பென்ப இவைமுறையே கிழக்குமுதலெண்டிக்கிற் பூமியைத் தாங்குவதன்றி நடுவேயுள்ள சேடனென்னு நாகமும் பூமியைத்தாங்கா நிற்கும். இந்நவநாகமுங் காசிபப்பிரமாவுக்கு மவன்மனைவிகள் பதின்மூவருட்கத்துருவைக்கும் பிறந்தன.

நாடகத்தரம்பையர்-ச-உருப்பசி, மேனகை, அரம்பை, திலோர்த்தமை.

நாடகநூலின் கூறுபாடு—வேத்தியல், பொதுவியல்.

நாடி-கo-சுழிமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை,புருடன், குரு, சங்கினி அவையாவன-சுழிமுனை யாதார மாறினுமூடுருவிநிற்பது, இடைபிங்கலை யிரண்டுங்கத்திரிகைகால்போற் பின்னி நிற்பன-காந்தாய் நாபியிற்றோன்றிச் சத்தமேழுக்கு மேழு நாடியாய்க்கண்டத்துறுவது, அத்திசிகுவை யிரண்டும் பத்துநாடியுற்றுக் கண்ணினிற்பன, அலம்புடை புருடனிரண்டுஞ் செவி னூற்றிருபது நரம்புற் றிருப்பன, குருநாபியுறைந்துருய்யம்பற்றி நிற்பதுசங்கினி உபத்தத்தைப்பற்றியிருப்பது.

நாடுபடுதிரவியம்-ரு—செந்நெல், செவ்விளநீர், சிறுபயறு, கரும்பு, வாழை.

நாட்டமைதி-கூ - செல்வம், விளைநிலம், செங்கோல், நோயின்மை, வளம், குறும்பின்மை.

நாட்டுக்குற்றம்-எ-தொட்டியர், கள்வர், யானை, பன்றி, விட்டில், கிள்ளை, பெருமழை.

நாட்டுக்குற்றம்-அ-விட்டில், தன்னரசு, வேற்றரசு, யானை, மிகுமழை, மிகுகாற்று, கிள்ளை, நட்டம்.

நாமகளமிசமாய கடைச் சங்கப்புலவர்கள்-ருக-நக்கீரர், பாணர், கபிலர், மாமூலனார், பல்லாடர், சீத்தலைச்

சாத்தனார், மருத்துவன் றாமோதரனார், நாகன்றேவனார், அரிசிற்கிழார், பொன்முடியார், கோதமனார், நத்தத்தனார், மூகையலூர்ச்சிறுகருந்தும்பியார், ஆசிரியர் நல்லந்துவனார், கீரந்தையார், சிறுமேதாவியார், நங்கூர் வேள்வியார், தொடித்தலை விழுத்தண்டினார், வெள்ளிவீதியார், மாங்குடிமருதனார், எரிச்சலூர் மலாடனார், போக்கியார், மோசி கீரனார், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார், மதுரைத்தமிழ் நாயகனார், பாரதம்பாடிய பெருந்தேவனார், உருத்திர சன்ம கண்ணர், பெருஞ் சீத்தனார், நரிவெருத்தலையாா, மதுரைத்தமிழாசிரியர், செங்குன்றூர்க்கிழார், மதுரையறுவை வாணிகர், இளவேட்டனார், கவிசாகரப் பெருந்தேவனார், மதுரைப் பெருமருதனார், கோவூர்க்கிழார், உறையூர்முதுகூற்றனார், இழிகட்பெருங்கண்ணனார், செயிர்க்காவிரியார் மானார், சாத்தனார், செயலூர்க்கொடுங்கண்ணனார், வண்ணக்கஞ்சாத்தனார், களத்தூர்க்கிழார் நச்சமனார், அக்காரக்கனி நச்சனார், நப்பாலத்தனார், குலபதிநாயனார், தேனீக்குடிக்கீரனார், கொடிஞாழன்மாணிபூதனார், கவுணியனார், மதுரைப் பாலாசிரியனார், ஆலங்குடிவங்கனார், நாற்பத்தொன்பதின்மரே சங்கப்புலவரென்பது தொல்லோர் கருத்துந் துணிபுமாம்.

---

## நி



நியமம்-௧௦-தவம், மனமுவந்திருத்தல், கடவுளுண்டென்னும்விசுவாசம், பாவத்துக்குப் பயந்துதேடியபொருளை ச்சற்பாத்திரமா யுள்ளவருக்குக்கொடுத்தல், தன்னின்மூத்தோரை வழிபடுதல், உயிர்க்குறுதிபயக்கு மூண்மை, நூல்களைக்கேட்டல், குலம்செல்வம் அதிகாரம் முதலியவைகளினாலே கருவம் இன்றி யடங்கியொழுகுதல், தக்கனவுந் தகாதனவும் பகுத்தறிதல், செபம், விரதம்,

நிருத்தக்கை ௩௦ - சதுராச்சிரம், உத்துவீதம், தலமுவம், சுவத்திகம், விப்பிரகீர்ணம், அருத்தரேசிதம், அராளகடமுகம், ஆவித்தவத்திரம், சூசீமுகம், இரேசிதம், உத்தானவஞ்சிதம், பல்லவம், நிதம்பம், கசதந்தம், இலதை, கரிக்கை, பக்கவஞ்சிதம், பக்கப்பிரத்தியோகம், கருடபக்கம், தண்டபக்கம், ஊர்த்துவமண்டலி, முட்டிகச்சுவத்திகம், நளினீபதும கோசிகம், அலபதுமம், உற்பணம், இலளிதை, வலிகை இவை சுத்தானந்தப் பிரகாச பரதநூலிற் காணப்பட்டன.

நிலம் – ச – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்.

நிலம்-டு-குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்.

நிலம் – எ – ச, ரி, க, ம, ப, த, நி. யென்னுமெழுவகைப்பட்ட வெழுத்தடியாக பிறக்கும்குரன்முதலாயவேழுமாம்.

நிலை-ச-பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம், இவைநான்கும் விற்றொடுத்தம்பினை யெய்வார்க்குரியநிலை. இவற்றி லொருகாலி னின்றொருகான் முடக்கல் பைசாசநிலை இருகாலும் பக்கல்வளைய மண்டிலித்தலே மண்டலநிலை. வலக்கான் மண்டலித்திடக்கான் முந்துறலே யாலீடநிலை. வலக்கான்முந்துற்றிடக்கான் மண்டலித்தலே பிரத்தியாலீடநிலை.

நிலை-ரு-வைணவம், சமநிலை, வைசாதம், மண்டலம், ஆலீடம் பிரத்தியாலீடம்.

நின்றாடல்-ரு-அல்லியம், கொடி கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், என்னை "அல்லியங்கொட்டி குடை குடம் பாண்டரங்க - மல்லுடனின்றாடலாறு" என்றாராகலின்.

---

## நீ



நீர்நிலைவகை-௩௪- இலஞ்சி, பண்ணை, ஏல்வை, குண்டம், அலந்தை, பொய்கை வலயம், சுனை, சிறை, பட்டம், உடுவை, பயம்பு, படுகர், குட்டம், தாங்கல், கோட்டகம், ஏரி, எரி, உவள

கம், மடு, ஓடை, படு, தடம், வாவி, தடாகம், ஆவி, சூழி, இடங்கு, சலதரம், கேணி, பணை, கயம், பல்வலம், நளினி, இலந்தை, மூழி, குழிகுளம்.
நீலமணிச்சாதி - ச - வெள்ளை, பச்சை, சிவப்பு, கருமை.

---

## நூ



நூல் ௩-முதனூல், வழிநூல், சார்புநூல். இவற்றுளொருவன் முன்கண்டுரைத்ததே முதனூல், முதனூல் வழியே விகற்பித் துரைத்தநூலே வழிநூல், அவ்விருநூற்பொருட் கூட்டித்திரிபு வேறுடைய நூலே, சார்புநூல்.
நூற்பயன் - ச-அறம், பொருள், இன்பம், வீடு.

---

## ப



பகைநரம்பு-ச-அதிர்வு, ஆர்ப்பு, கூடம், செம்பகை இவற்றுள் செம்பகையாவது தாழ்ந்தவிசையென்றால் இன்பமின்றி யிசைத்தல் ஆர்ப்பமாவது மாத்திரை யிறந்த சுருதி என்றால் ஓங்கவிசைத்தல், அதிர்வாவது நரம்பைச் சிதறவுந்தல், கூடமாவது இசைநிறவாதது, என்னின் தன் பகையாகிய ஆறு நரம்பினிசையிற் குன்றித் தன்ஞேசை மழுங்கலெனக்கொள்க. இதனை இன்னிசை வழியதன்றியிசைத்தல் செம்பகையதாகுஞ் சொன்ன மாத்திரையினோங்க விசைத்திடுஞ் சுருதியார்ப்பே மன்னிய விசைவராது, மழுங்குதல் கூடமாகு-நன்னுதால் சிதறவுந்த லதிர்வென நாட்டினரே, என்று பஞ்சபாரதீயங் கூறியதனாற் கொள்க.
பக்குவர் - ௩ - கருமகாண்டி, ஞானகாண்டி, பத்திகாண்டி.
பஞ்சபரமேட்டிகள் - ரு - அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்கள்.
பஞ்சமூலம் - ரு - செவ்வியம், சித்திரமூலம், கண்டுபரங்கி, பேரரத்தை, சுக்கு.
பசாசக்கை-௩-அகநிலைப்பசாசம், முகநிலைப்பசாசம், உகிர்நிலைப்பசாசம்.
பசு-ரு-நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை.
படைவகுப்பு-ச - அணி, உண்டை, ஒட்டு, யூகம்.
பட்சி-ரு-வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் இவற்றிற்கு முறையேயெழுத்து அ, இ, உ, எ, ஒ, உண்டி, நடை, அரசு, தூக்கம், சாவு, பிற்பக்கமாயின் உண்டி, சாவு, தூக்கம், நடை, அரசு, சாவு தூக்கமில்லாத பொழுதறிந்து செய்யுண்முதமுதலிய செய்தநன்மை.
பட்டினத்திற்குரியன-அ௩-படகுநாவாய்கள், பிணிக்கும்பக்கம், இளமரக்கா, தோப்பு, படப்பை, உத்தியானம், ஏரி, அகழி, மதில், கோட்டை, அரணம், நால்வகைச் சேனைகளிருக்கை, ஆயுதசாலை, அறச்சாலை, பாகசாலை, பண்டகசாலை, பொதுதெற்றி யம்பலம், நாற்குலத்தார் இருக்கை, அத்தாணி மண்டபம், பட்டிமண்டபம், மந்திரம், அந்தப்புரம், அரங்கம், பரதவிருப்பு, நூதனப்பொருட்சாலை, கலாசாலை, நாளங்காடி, அல்லங்காடி, தேவர் கோயில், அறவோர்பள்ளி, முனிவர் உறைவிடம், பசுக்கோட்டம், முரசமுழக்கம், அரசனரண்மனை, உவராசன், பிரதானி அமைச்சர், புரோகிதன், சேனாபதி, தௌவாரிகன், அந்தர்வம், சிகன், காராகா, ராதிக்கிருதன், அர்த்த சஞ்சயக்கிருது, காரியநியோசகன், பிராட்டு, விவாகனன், சேனாநாயகன், நகராத்தியக்கன், கருமாந்திகன், சப்பியன், தருமாத்தியக்கன், தண்டபாலன், துர்க்கபாலன், இராட்டிராந்தபாலன், சபிகர், தூதுவர், வித்துவாம்சர் - காயகர், கவிகள், பட்டர், பாரங்கதர், தீரோதித்தன், தீரோதப்பிதன், தீரலலிதன், தீரசாந்தன், இரதாபரிணிதர், சதுர்வித போகசங்கார், மோக்காயிதை, விரபோகலலிதை, இலீலை, கிலகிஞ்சிதை, விசித்தை, விலாசை, விசித்தை, விப்பிரலம்பை, குட்டி

மை, தயை, இலலிதை என்னும் கேளிபாலலீலாசதியர், மோகமயர், காரணபரிணிதர், வித்தகர், அவத்தாத்திரய பரீக்ஷகர், அவத்தா விசாரபரர், சந்துவிசர், அடாவிசர், குடுபாவிசரென்னும் ஆசியக்காரர், முதலினோர் இருக்கைகளுமாம்.

பண் - ௪ - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி.

பண்-௧0௩ - பன்னிருபாலையினுருதொண்ணூற் றொன்றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள் நூற்று மூன்றாதற்குக் காரணமாமெனக்கொள். பெயர்களை - வந்துழிக்காண்க.

பதவி-௪ - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம். இவற்றுட் கடவுளுலகத்தில் வாழ்தலே சாலோகம். கடவுள் சமீபத்துவாழ்தலே சாமீபம். கடவுளுருப்பெற்று வாழ்தலே சாரூபம். கடவுளோ டத்துவித முற்றுவாழ்தலே சாயுச்சியம்.

பரிச்சேதம்-௩-காலபரிச்சேதம், தேயபரிச்சேதம், வத்துபரிச்சேதம், அவையாவன-ஒருகாலத் துண்டொருகாலத்தின்றென்பது காலபரிச்சேதம், ஒரு தேயத்துண் டொருதேயத்தின் றென்பதுதேய பரிச்சேதம் ஒருபொரு ளிதுவாகுமொரு பொருளிஃதன்றென்பது வத்துபரிசேதம்.

பருவகாலம் - ௬ - கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதிர்வேனில், இவையேயாவணிமுதலாகவிரண்டிரண்டுமாக வொவ்வொன்றும்.

பருவம் - ௪ - பால், தருணி, பிரவிடை, விருத்தம், இவை பெண்கட்குரிய பருவமாம்.

பருவம்-எ-பேதை, பெதும்பை-மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் இவர்க்கு முறையே வயதெல்லை, ஐந்து முதலேழளவும் பேதை, எட்டுமுதல் பதினொன்றளவும் பெதும்பை - பன்னிரண்டுமுதற்பதின்மூன்றளவும் மங்கை பதினான்கு முதற் பத்தொன்பதளவும் மடந்தை, இருபத்தாறு முதன் முப்பத்தொன்றளவுந் தெரிவை, - முப்பத்திரண்டு முதனாற்பதளவும் பேரிளம் பெண், ஆகையா லொவ்வொரு பருவங்கொண்டவருடம், ௩, ௧0, ௨. ௬, ௬, ௬, ௬, இவை பெண்கட்குரிய பருவமாம்.

பாலை-௩-கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், இவையே திரிபலையென்ப.

பவளக்குணம்-௬-நிறம், உருட்சி, சிந்தூரம், மிக்கசெங்காய், முசுமுசுக்கைக் கனி, தூதுளைகழுதுணம்பழம்.

பவளக்குற்றம் - ௩ - கருப்பத்திற்றுளைப்பட்டன, கல்லிடுக்கிற்புக்கு முடங்குபட்டன, திருக்கு முருக்குண்டெழுந்தன.

பழம்-௩-பலாப்பழம், மாம்பழம், வாழைப்பழம்.

---

## பா



பா - ௪ - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பாவொன்று கூட்டியைந்தென்பாருமுளர்.

பா - ௬ - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, பரிபாடற்பா.

பாடை-௧௮-அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோ கம், திராவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம்.

பாணிவிகற்பம் - ௧௧ - ஒன்றன், பாணி முதலாக எண்கூத்துப்பாணி, யீறாகவுள்ளனவாம்.

பாதகம்-ரு-கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குருநிந்தை, இவையே பஞ்சமாபாதகம்.

பாதகம்-௩-தூலம், சூக்குமம், அதிசூக்குமம், இவை முறையே பாதகம், அதிபாதகம் மகாபாதகமென்றுஞ் சொல்லப்படும்.

பாதகம்-எ-சித்தசமுன்னதி, அத்தலோபம், காமம், வைடம்மியம், அசனப்பிரியம், கோபம், அறுட்டணம், இவையே சத்தவிசனம். இவை முறையே அகங்காரம், உலோபம், காமம், பகை, போசனப்பிரியம், காய்தல்,

சோம்பல், இவை யேழுந் தலைமை யான பாதகமெனப்படும்.

பாயிரம்-உ - பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம்.

பாலை-எ-இசையைக்காண்க.

பாலைவகை-ச - ஆயப்பாலை, சதுரப்பாலை,திரிகோணப்பாலை,வட்டப்பாலை.

பாலைப்பண்ணின்றிறம்-ரு - தக்கராகம், நேர்திறம், காந்தாரபஞ்சமம், சோமராகம், காந்தாரம், என்னை "தக்கராக நேர்திறங் காந்தாரபஞ்சமமேதுக்கழி, சோமராகமே-மிக்கதிறற் காந்தாரமென் றைந்தும் பாலைத்திறமென்றார்-பூந்தாரகத்தியனார் போந்து" என்றாராகலின்.

பாலையாழ்த்திறம்-ரு-அராகம், ஆசான், உறுப்பு, குறுங்கலி, நேர்திறம், பாலையாழ்த்திறன்வகை-உக-அந்தாளி, தக்கராகம், பாடை, அந்தி, மன்றல், நேர்திறம், வராடி, பெரியவராடி, சாயரி, பஞ்சமம், திராடம், அழுங்குதநாசி, சோமராகம், மேகராகம், துக்கராகம், கொல்லிவராடி, காந்தாரம், சிகண்டி, தேசாக்கரி, சுருதிகாந்தாரம்.

பால்-கஉ-கைக்கிளைத்திணை, முல்லை, குறிஞ்சி மருதம், நெய்தல்,பாலை,பெருந்திணை, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காசி, பாடாண்டிணை.

பால்-ரு-ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல்.

பாவபுண்ணியவழக்கம் - ௩ - செய்தல், செய்வித்தல், உடன்படல்.

பாவனை-௩-பிராமிபாவனை, அவ்வியத்தபாவனை, உருவபாவனை. இவற்றின் விரிவுகளைக் கூர்மபுராணவிருத்தியுரைக்கட் காண்க.

பாவினம்-௩-தாழிசை, துறை, விருத்தம்.

பி



பிணி-௩-வாதம், பித்தம், சிலேட்டுமம்.

பிரபந்தம்-கசு-அவையாவன - சாதகம், திதிநிலை, வாரநிலை, நாண்மீனிலை, யோகநிலை, காரணநிலை, ஓரைநிலை, கிரகநிலை, இவ்வேழ்வகை யுறுப்புக் கணிலையையுஞ்,சோதிட நூலானன் குணர்ந்தவற்றை யமைத்த வற்றாற் றலைவர்க்குருவன கூறுவது, மற்றும் யுகாதியாண்டு முதலியவுங் கொள்க. இப்பிரபந்தம் தொண்ணூற்றாறும் அகலக் கவியெனவும், வித்தாரக் கவியெனவும் பெயர்பெறும்.

க. பிள்ளைக்கவி - இதனிலக்கணத்தைத்தெளிவுறக்கூறுங்கால், ஆண்பாற் பிள்ளைத்தமிழ் பெண்பாற்பிள்ளைத்தமிழ்,எனவிருவகைத்து. இவற்றுள்இரண்டாமாதத்திற் காப்புக்கூறுதலும், ஐந்தாமாதத்திற் செங்கீரை கூறுதலும், ஆறுமாதத்திற் சொற்பயில்வு கூறுதலும், ஏழாமாதத்திலமுதூட்டலும், எட்டாமாதத்திற்றலாட்டுக் கூறுதலும், ஒன்பதாமாதத்திற் சப்பாணி கூறுதலும், பத்தத்தொடொன்றின் முத்தமொழிதலும் பன்னிரண்டாமாதத்தில் வாரானைகிளத்தலும், பதினெட்டாமாதத்திற் சந்திரனையழைத்தலும், இரண்டாமாண்டிற் சிறுபறை கொட்டலும், மூன்றாமாண்டிற் சிற்றில்சிதைத்தலும், நான்காமாண்டிற் சிறுதேருருட்டலும், பத்தாமாண்டிற் பூணணிதலும், பன்னிரண்டாம் ஆண்டில் கச்சினோடு உடைவாளை விரும்பத் தரித்தலுமென்று சொல்லப் பட்டவும் பிறவுமுடைத்து பெண்பாற் பிள்ளைத்தமிழாவது அம்புலியிறுதியாய் நின்ற பருவங்களுடன் மூன்றாம் ஆண்டிற்றான் விளையாடும் பாவைக்கு மணம்பேசுதலும், ஐந்தாம் ஆண்டுமுதல் ஒன்பதாம் ஆண்டுகாறும் மன்மதனை யொத்த புருடனைப் பெறத் தவஞ்செய்தலும், குளிர்ந்தநீராடலும், பதுமைவைத்து விளையாடலும், அம்மனையாடலும், கழங்காடலும், பந்தாடலும், சிறுசோறடுதலும், சிற்றிலிழைத்தலும், ஊசலாடலும் என்று சொல்லப்பட்ட இவற்றுள் ஏற்பன்கூறப்படுமென்க. இஃதன்றி மூன்றுமாத முதலாகவு முறைக்கப் படுமென்பர் வெண்பாப்பாட்டியற்காரர்காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர், இவற்

றை முறையே அகவல் விருத்தத்தாற் பப்பத்தாகக் கூறுவதாண்பாற் பிள்ளைக் கவி. இவ்வுறுப்பினுட்கடை மூன்றொழித்துக்கழங்கு, அம்மனை, ஊசல், என்பவற்றைக்கூட்டி மேற்சொல்லியவாறு கூறுவது பெண்பாற்பிள்ளைக்கவியாம், இங்ஙனமே முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், திருப்போரூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ், திரிவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், புதுச்சந்நிதிக் கந்தர் பிள்ளைத்தமிழ், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பிள்ளைத்தமிழ்,சேக்கிழார் பிள்ளைத்தமிழ், முதலிய ஆண்பாற் பிள்ளைத்தமிழ், நூல்களினும், மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகையம்மை பிள்ளைத்தமிழ், கொடியிடைநாயகி பிள்ளைத்தமிழ், வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் முதலிய பெண்பாற்பிள்ளைத்தமிழ் நூல்களிலுங்கூறப்பட்டமையறிக.

௨. பாணி போர் முகத்தாயிரங்களிற் றியானையைக் கொன்ற வீரனைத் தலைமகனாகக்கொண்டு கடவுள் வாழ்த்துங் கடைதிறப்பும் பாலைநிலமுங் காளிகோயிலும், பேய்களோடு காளியுங் காளியோடு பேய்களுஞ் சொல்லத்தான் சொல்லக் கருதிய தலைவன் சீர்த்தி விளங்கலுமவன் வழியாகப் புறப்பொருடோன்ற வெம்போர் வழங்க விரும்பலுமென்றிவை யெல்லா மிருசீரடி? முச்சீரடி யொழித்தொழிந்த மற்றைய வடியாக வீரடிப்புலீற்றிசையாற் பாடுவது. இவற்றைஇலக்கியங்களா வமைக்கப்பட்ட கலிங்கத்துப்பரணி, மோகவதைப்பரணி, அஞ்ஞவதைப்பரணி, அண்டத்துப்பரணி, வீரபத்திரப்பரணி முதலிய நூல்களாற்றெளிக.

௩. கலம்பகம் ஒருபோகும்,வெண்பாவும், கலித்துறையு முதற்கலியுறுப்பாக முற்கூறப்பெற்றுப் புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், என்னுமிப்பதினெட்டுறுப்புகளு மியைய, மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை யென்னுமிவற்றுலிடையே வெண்பா, கலித்துறைவிரவவந்தாதித் தொடையான் முற்றுறக்கூறுங்காற்றேவர்க்கு நூறும், அந்தணர்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், வைசியர்க்கம்பதும், சூத்திரர்க்கு முப்பதுமாகப் பாடுவது இவ்விலக்கணங்களமையத் தில்லைக்கலம்பகம், மறைசைக் கலம்பகம், மதுரைக்கலம்பகம், காசிக்கலம்பகம், அருணைக்கலம்பகம், கதிர்காமக்கலம்பகம், கச்சிக்கலம்பகம், வெங்கைக்கலம்பகம், புள்ளிருக்குவேளூர் கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம், முதலிய செய்யப்பட்டிருத்தல் காண்க.

௪ அகப்பொருட்கோவை - இருவகைப்பட்ட முதற்பொருளும் பதின்குவகைப்பட்ட கருப்பொருளும் பத்துவகைப்பட்டவுருப்பொருளும் பொருந்திக்கைக்கிளை முதலுற்ற வன்புடைக்காமப்பகுதியவாங்கள வொழுக்கத்தினையுங் கற்பொழுக்கத்தினையுங் கூறுதலே யெல்லையாகக் கட்டளைக் கலித்துறை நானூற்றுற்றினை முதலாகத் துறையீறாகக் கூறப்பட்ட பன்னிரண்டகப் பாட்டுறுப்பும் வழுவின்றித்தோன்றப்பாடுவது, இது வெண்பா, அகவல்,கலி,வஞ்சி,வண்ணம். இவற்றானும் வழங்கப்படும். இவற்றிற் குதாரணமாகத் திருக்கோவையார், தஞ்சை வாணன்கோவை, வெங்கைக்கோவை,கோடீசுரக்கோவை, ஒருதுறைக்கோவை, அம்பிகாபதிக்கோவை, திருவாரூர்க்கோவை, காழிக்கோவை முதலியன விருத்தில்காண்க.

௫. ஐந்திணைச்செய்யுள்புணர்தன் முதலிய வைந்துருப்பொருளும் விளங்கக் குறிஞ்சி முதலிய வைந்திணையினையுங்கூறுப.

௬. வருக்கக்கோவை அகரமுதலாகியவெழுத்து வருக்கமொழிக்கு முதலாமெழுத்து முறையே காரிகைத்துறைப்பாட்டாகப் பாடுவது.

௭. மும்மணிக்கோவை ஆசிரியப்பாவும், வெண்பாவும், நேரசையுநிரை

யசையுங் கொண்டெழுத் தெண்ணிப் பாடிக்கலித்துறையு மூறையேதொகை மூப்பது பெறவடுக்கி யந்தாதித் தொடையாற்பாடுவது. சிதம்பர மும்மணிக் கோவை, திருவொற்றியூர் மும்மணிக் கோவை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, முதலியன - வமைந்திருத்தலறிக.

அ. அங்கமாலை - ஆண்மகனுக்கும் பெண்மகளுக்கு மிங்கனமெடுத்துக்கூறும் அவயவங்களை வெண்பாவாலாயினும் வெளி விருத்தத்தாலாயினும், பாதாதிகேசங் கேசாதிபாதமுறை பிறழாது தொடர்புறப்பாடுவது.

௯. அட்டமங்கலம், — கடவுளைப் பாடியக்கடவுள் காக்கவென வாசிரிய விருத்தமெட்டிலந்தாதித்துக்கூறுவது.

௧௦. அநுராகமாலை - தலைவன்கனவின்கணொருத்தியைக்கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றி னிமையுறப் புணர்ந்ததைத் தன்னுயிர்ப்பாங்கற் குறைத்தாக நேரிசைக்கலிவெண்பாவாற்கூறுவது.

௧௧. இரட்டை மணிமாலை, — முறையானேவெண்பாவுங் கலித்துறையுமிருபஃதந்தாதி தொடையான் வருவது, நேரிசைவெண்பாப்பத்தும், ஆசிரியவிருத்தம் பத்துமந்தாதித் தொடையாற்பாடுவது, மூத்தநாயனார் இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மை யிரட்டை மணிமாலை முதலியன விலக்கியமாயுள்ளன.

௧௨. இணைமணிமாலை, - வெண்பாவுமகவலும், வெண்பாவுங் கலித்துறையுமாக விரண்டிரண்டாக விணைத்து வெண்பா வகவலிணைமணிமாலை, வெண்பாகலித்துறை யிணைமணிமாலை என நூறுநூறு அந்தாதித்தொடை நான்கானும் பாடுவது.

௧௩. நவமணிமாலை, - வெண்பா முதலாக வேறுபட்டபாவும் பாவினமுமாக வொன்பதுசெய்யு ளந்தாதித்துப் பாடுவது. பிக்ஷாடன நவமணி மாலை யிதற்கிலக்கியமா யுள்ளது.

௧௪. நான்மணிமாலை, - வெண்பாவுங் கலித்துறையும் விருத்தமு மகவலுமந்தாதித் தொடையாக நாற்பது பாடுவது. கோயினான்மணிமாலை, நால்... நான்மணிமாலை, திருவாரூர் நான்ம... மாலை முதலியன விதற்கிலக்கியங்க...

௧௫. நாமமாலை, - அகவலடி... கலியடியும் வந்துமயங்கிய வஞ்சிப்பா... லாண்மகனைப் புகழ்ந்துபாடுவது.

௧௬. பலசந்த மாலை, - பப்பத்... செய்யு ளொவ்வோர் சந்தமாக நூ... செய்யுட்கூறுவது.

௧௭. பன்மணிமாலை, -மேற்சொ... லிய கலம்பகத்துள் வருமொருபோ... மம்மானையு மூசலுமின்றி யேனையுறு... புக்க ளெல்லாமமைய வவ்வாறு கூ... வது இதையே கலம்பகமாலையென்ப...

௧௮. மணிமாலை, - எப்பொரு... மேலும், வெண்பாவிருபதுங் கலித்... றை நாற்பதும் விரவிவருவது.

௧௯. புகழ்ச்சிமாலை, - அகவலடி... ங்கலியடியும்வந்து மயங்கிய வஞ்சிப்... வான் மாதர்களினது சீர்மையை... கூறுவது.

௨௦. பெருமகிழ்ச்சிமாலை, - த... வியினழகு குணமாக்கஞ் சிறப்பினை... கூறுவது.

௨௧. வருக்கமாலை, - மொழிக்... முதலாம் வருக்கவெழுத்தினுக் கொ... வோர் செய்யுட்கூறுவது.

௨௨. மெய்கீர்த்திமாலை, - சொ... சீரடியென்னுங்கட்டுரைச் செய்யுளா... குலமுறையிற்செய்த கீர்த்தியைக்கூ... வது.

௨௩. காப்புமாலை, -தெய்வங் கா... தலாக மூன்றுசெய்யுளானும், ஐந்... செய்யுளானும், ஏழுச்செய்யுளானு... பாடுவது.

௨௪. வேனின்மாலை, - இளவே... னிலையு முதிர்வேனிலையுஞ் சிறப்பி... துப்பாடுவது.

௨௫. வசந்தமாலை, - தென்றலை... ருணித்துப்பாடுவது.

௨௬. தாரகைமாலை, - அருந்ததி... கற்பின்மகளிர்க்குள்ள வியற்கை குண... களை வகுப்பார்கூறுவது. தூசி... படையினணியைப்புகழ்ந்த வகுப்பெ... பாருமுளர்.

உஎ. உற்பவமாலை, - திருமால் பிறப்புப்பத்தனையு மாசிரிய விருத்தத்தாற்கூறுவது.

உஅ. தானைமாலை, - அகவலோசையிற் பிறழாதாசிரியப்பாவான்முன்னெடுத்துச்சொல்லுங் கொடிப்படையைக்கூறுவது.

உகூ. மும்மணிமாலை, - வெண்பாவுங் கலித்துறையு மகவலு மந்தாதித் தொடையான் முப்பதுபாடுவது.

௩௦. தண்டகமாலை, - வெண்பாவான் முந்நூறுசெய்யுட்கூறுவது இது வெண்புணர்ச்சி மாலையெனவும்படும்.

௩௧. வீரவெட்சிமாலை, - சுத்தவீரன், மாற்றானூரிற்சென்று,பசுநிரைகோடற்குவெட்சிப்பூமாலை சூடியவண்ணம்போய் நிரைகவர்ந்து வரினவனுக்கு முன்பு தசாங்கம் வைத்துப் போய்வந்த வெற்றிபாடுவது.

௩௨. வெற்றிக்கரந்தைமஞ்சரி, - பகைவர்கொண்ட தந்நிரை மீட்போர் கரந்தைப் பூமாலை சூடிப்போய் மீட்பதைக்கூறுவது.

௩௩. போர்க்கெழுவஞ்சி, - மாற்றார்மேற் போர்குறித்துப் போகின்றவயவேந்தர் வஞ்சிப்பூமாலை சூடிப் புறப்படும் படையெழுச்சிச் சிறப்பை யாசிரியப்பாவாற்கூறுவது.

௩௪. வரலாற்றுவஞ்சி, - குலமுறைபிறப்பு முதலியமேம்பாட்டின் பல சிறப்பையுங் கீர்த்தியையும் வஞ்சிப்பாவாற்கூறுவது.

௩௫. செருக்களவஞ்சி, - போர்க்களத்திலே யட்டமனிதருடலையும் யானை குதிரையுடலையு நாயும்பேயும்பிசாசமுங்கழுகும், பருந்துங்காகமுந் தின்றுகளித்தாரவாரமாயிருக்க, பூதமும் பேயும்பாடியாட விங்ஙனமிருந்த சிறப்புப் பாடுவது. இதையே பறந்தலைச்சிறப்புப் பாட்டு மென்ப.

௩௬. காஞ்சிமாலை, - மாற்றானூர்ப்புறத்துக் காஞ்சிப் பூமாலைசூடி யூன்றலைக்கூறுவது.

௩எ. நொச்சிமாலை, - புறத்தூன்றிய மாற்றார்க்கோடலன்றி நொச்சிப் பூமாலைச்சூடித் தன்மதில்காக்குந்திறங் கூறுவது.

௩அ. உழிஞை மாலை, - மாற்றானூர்ப்புறஞ்சூழ வுழிஞைப்பூமாலைசூடிப் படை வளைப்பதைக்கூறுவது.

௩கூ. தும்பைமாலை, -மாற்றாரோடு தும்பைப் பூமாலைசூடிப் பொருதுவதைக்கூறுவது.

௪௦. வாகைமாலை, - மாற்றாரை வென்று புகழ்படைத்து வாகைமாலை சூடுவதைக்கூறுவது.

௪௧. வாரணமஞ்சரி, - கொலைபுரி மதயானை வயப்படுத்தி யடக்கினவர்கட்குமெதிர் பொருகளிற்றை வெட்டி யடக்கினவர்கட்கும், பற்றிப்பிடித்துச் சேர்ந்தவர்கட்கும் வீரப்பாட்டின் சிறப்பைவஞ்சிப்பாவாற்றொடுத்துப்பாடுவது

௪௨. எண்செய்யுள், - பாட்டுடைத்தலைவன் ஊரினையும் பெயரினையும் பத்துமுத லாயிரமளவும் பாடி யெண்ணாற் பெயர்பெறுவது.

௪௩. தொகை நிலைச்செய்யுள், - நெடிலடி செய்யுளாற் றொடுத்தது நெடுந்தொகையும், குறளடிச்செய்யுளாற்றொகுத்தது குறுந்தொகையும், கலிப்பாவாற் றொகுத்தது, கலித்தொகையும் போல்வன.

௪௪. ஒலியலந்தாதி,-பதினாறுகலையோரடியாகவைத் திங்ஙன நாலடிக்கருபத்து நாலுகலைவகுத்துப் பலசந்தமாகவண்ணமுங் கலைவைப்புந் தவறுமலந்தாதித்து முப்பதுசெய்யுள்பாடுவது. சிறுபான்மை யெட்டுக் கலையானும் வரப்பெறும் அன்றியும்வெண்பாவகவல்கலித்துறையாகியஇம்மூன்றையும் பப்பத்தாக வந்தாதித்துப் பாடுவதுமாம். ஒட்டக்கூத்தரால்இவ்விலக்கணங்களும் பெயருமமையைச்செய்யப்பட்டவந்தாயிதற் குதாரணமாம்.

௪௫. பதிற்றந்தாதி, - பத்துவெண்பா பத்துக் கலித்துறைப் பொருட்டன்மை தோன்ற வந்தாதித்துப் பாடுவது.

௪௬. நூற்றந்தாதி, - நூறுவெண்பாவினாலேனும் நூறுகலித்துறையினாலேனு மந்தாதித் தொடையாற் கூறுவது. அருணகிரியந்தாதி, கந்தாந்தாதி, திருக்கருவைவெண்பா வந்தாதி, திருக்

சருவைக் கலித்துறை யந்தாதி, பொன் வண்ணத்தந்தாதி,அற்புதத்திருவந்தாதி பழமலையந்தாதி, அபிராமியந்தாதி, மறைசையந்தாதி, கல்வளையந்தாதி, கைலைபாதி, காளத்திபாதி, வெண்பா வந்தாதி, கம்பரந்தாதி, மருதூரந்தாதி, பந்தனந்தாதி முதலியன உதாரணங்க ளாயுள்ளன.

சஎ. உலா, இளமைப் பருவமுற்றதலைமகனைக் குலங்குடிப்பிறப்புமங்கலம்பரம்பரை யிவற்றானின்று னென்பது தோன்றத்தலைமையாய் மாதர் நெருங்கிய வீதியிடத்தவன்பவனிவரப்பேதைமுதலிய வேழுபருவப் பெண்களுங் கண்டு தொழுததாக நேரிசைக்கலி வெண்பாவாற் கூறுவது திருக்கைலை, யுலா, கச்சியேகம்பருலா, காழியுலா வைக் காண்க.

சஅ. உலாமடல் - கனவி லொரு பெண்ணைக்கண்டு கலவியின்ப நுகர்ந்தோன் விழித்தபின்னவள் பொருட்டு மடலூர்வே னென்பதைக் கலிவெண் பாவான் முற்றுவிப்பது.

சகூ. வளமடல்,அறம்பொருளின் பமாகிய வம்முக்கூறுபாட்டின் பயனை யெள்ளி மங்கையர் திறத்துறுங்காம வின்பத்தினையே பயனெனக்கொண்டு பாட்டுடைத் தலைமகளியற் பெயர்க் குத் தக்கதை யெதுகையாக நாட்டியுரைத் தவ்வெதுகை படத்தனிச் சொலின்றியின்னிசைக் கலிவெண்பாவாற் றலைமகனிறந்து குறைபெறுதும டலேறுவதாரடி யெதுகைவரப்பாடுவது.

ரு0 ஒருபாவொருபஃது, -அகவலும் வெண்பாவுங் கலித்துறையு மாய விவற்றி லொன்றனு லந்தாதித் தொடையாற் பத்துப்பாடுவது.

ருக. இருபாவிருபஃது-பத்துவெண்பாவும் பத்தகவலுமந்தாதித்தொடையானிருபதினைந்து வருவது சித்தாந்த சாத்திரம் பதினன்கனு ளொன்றிதற் கிலக்கியமாயுள்ளது.

ருஉ. ஆற்றுப்படை, - அகவற்பாவால் விறலி, பாணர், கூத்தர், பொருநரிந்நால்வருளொருவர் பரிசிற்குப்போவாரைப் பரிசுபெற்று வருவா ராற்றி

டைக்கண்டு தலைவன் கீர்த்தியுங் [...] டையுங் கொற்றமுஞ் சொல்வது [...] துப்பாட்டுள் முதலாவது பாட்[...] நக்கீரனாற் சொல்லப்பட்டு மூந்[...] றுப் பதினேழடிகளை யுடையதாய்[...] ருகவேளதுபடை வீடாறனையும் [...] பப்பாராட்டிக்கூறுமிற்குந் திருமு[...] ற்றுப்படை, இரண்டாவது பாட்[...] பொருநராற்றுப்படை, சிறுபாணற்[...] படை, பெரும்பாணற்றுப்படை, கூ[...] ராற்றுப்படை, தணிகையாற்றுப்ப[...] முதலியன விதற்கிலக்கியங்களாம்.

ருங. கண்படைநிலை,-அரசரு[...] சரைப் போல்வாரு மவைக்கணெ[...] வைகியவழிமருத்துவரு மமைச்சரு[...] லியோ ரவர்க்குக் கண்டுயில் கோட[...] கருதிக்கூறுவது.

ருச. துயிலெடைநிலை, - தன்[...] யாற்பாசறைக் கண்ணொரு மனக்க[...] சியின்றித்துயின்ற வரசர்க்கு நல்ல[...] ழைக் கொடுத்தலைக்கருதிய சூதர் [...] லெழுப்புதலாகப் பாடுவது.

ருரு. பெயரின்னிசை, - பாட[...] டைத்தலைவன் பெயரினைச்சார, இ[...] ன்னிசைவெண்பாவாற்றொண்ணூற[...] ழுபதேனு ஐம்பதேனும் பாடுவது.

ருசு. ஊரின்னிசை, பாட்டுடை[...] தலைவனூரினைச்சார், வின்னிசை [...] ண்பாவாற் றொண்ணூற்றேனு மெழு[...] தேனு மைம்பதேனும் பாடுவது.

ருஎ. பெயர்நேரிசை,-பாட்டுடை[...] த்தலைவன் பெயரினைச்சார நேரிச[...] வெண்பாவாற் றொண்ணூறேனுமெ[...] பதேனு மைம்பதேனும் பாடுவது.

ருஅ. ஊர்நேரிசை,- பாட்டுடை[...] தலைவனூரினைச்சார நேரிசை வெ[...] பாவாற் றொண்ணூறேனு மெழுப[...] னு மைம்பதேனும் பாடுவது.

ருகூ. ஊர்வெண்பா,-வெண்பா[...] லூரைச் சிறப்பித்துப் பத்துசெய்யு[...] கூறுவது.

சு0. விளக்குநிலை, -வேலும்வே[...] றலையும் விலங்காதோங்கியவாறு [...] லக் கோலொடு விளக்கு மொன்றுப[...] டோங்குமாறோங்குவதாகக் கூறுவது.

சுக. புறநிலை, நீவணங்குந் தெய்வ நின்னைப் பாதுகாப்ப நின்வழி வழிமிகு வதாகவெனக் கூறுவது.

சுஉ. கடைநிலைசான்றோர்சேணிடைவருதலாற் பிறந்தவருத் தந்நீரவாயில்காக்கின்றவனுக்கென்வரவினைத் தலைவற்கிசையெனக் கடைக்கணின்று கூறுவது.

சுங. கையறுநிலை-கணவனொடுமனைவிகழிந்துழியவர் கட்பட்டவழிவுப் பொருளெல்லாம் பிறர்க்கறிவுறுத்தித் தாமிறந்து படாதொழிந்த வாயத்தாரும்பரிசில்பெறும் விறலியருந்தனிப்படருழந்த செயலறுநிலையைக் கூறுவது.

சுச. தசாங்கப்பத்து, - நேரிசை வெண்பாவா லரசன்படைத்த தசாங்கத்தினைப்பத்துச்செய்யுளாற் கூறுவது.

சுரு. தசாங்கத்தயல்-அரசன் தசாங்கத்தினை யாசிரியவிருத்தம் பத்தினாற் பாடுவது.

சுசு. அரசன்விருத்தம், - பத்துக் கலித்துறையு முப்பது விருத்தமுங் கலித்தாழிசையுமாகிய விவற்றால்மலை, கடல்நாட்டுவருணனையு நிலவருணனையும், வாண்மங்கலமுந்தோண் மங்கலமும் பாடிமுடிப்பது, இது முடிபுனைந்த வேந்தர்க்காம்.

சுஎ. நயனப்பத்து, - மண்ணினைப் பத்துச் செய்யுளாற் கூறுவது.

சுஅ. பயோதரப்பத்து, - முலையினைப் பத்துச்செய்யுளாற் கூறுவது.

சுகூ. பாதாதிகேசம், - கலிவெண்பாவாலடிமுதன் முடியளவுங் கூறுவது.

எ0. கேசாதிபாதம்,-கலிவெண்பாவாலடிமுதன் முடியளவுங் கூறுவது.

எக. அலங்காரபஞ்சகம், - வெண்பா, கலித்துறை, அகவல், ஆசிரியவிருத்தம், சந்தவிருத்த மிவற்றையே மாறி மாறி நூறு செய்யுளாக வந்தாதித்துப் பாடுவது.

எஉ. கைக்கிளை, - ஒருதலைக்காமத்தினை யைந்துவிருத்தத்தாற் கூறுவது அன்றி வெண்பா முப்பத்திரண்டுசெய்யுளாற் கூறுவதுமாம்.

எங. மங்கலவள்ளை,-உயர்குலத்துதித்த மடவரலை வெண்பா வொன்பானாலும்வருப்பொன்பானாலும்பாடுவது.

எச. தூது,-ஆண்பாலும் பெண்பாலுமவரவர்காதல்பாணன் முதலிய வுயர்திணையோர்டுங்கிள்ளை முதலிய வஃறிணையோடுஞ்சொல்லித் தூதுபோய் வாவெனக்கலிவெண்பாவாற் கூறுவதுநெஞ்சுவிடுதூதுகிள்ளைவிடுதூது, கச்சியானந்தருத்திரேசர்வண்டுவிடுதூது முதலிய விலக்கியமாம்.

எரு. நாற்பது,-காலமு மிடமும் பொருளுமாகிய விவற்று ளொன்றனை நாற்பது வெண்பாவாற் கூறுவது: கார் நாற்பது, களவழிநாற்பது, இன்னாநாற்பது, இனியவை நாற்பது முதலியவற்றைக் காண்க.

எசு. குழமகன், - கலிவெண்பாவான் மாதர்கடங்கையிற்கண்ட விளமைத் தன்மையுடைய குழமகனைப் புகழ்ந்து கூறுவது.

எஎ. தாண்டகம்,-இருபத்தேழெழுத்து முதலாக வுயர்ந்த வெழுத்தடியினவாயெழுத்துங்குருவுமிலகுவு மொத்துவந்தன அளவியற்றாண்டக மெனவும், எழுத்தொவ்வாதுமெழுத்தலகொவ்வாதும் வந்தன அளவழித்தாண்டகமெனவும் படும்.

எஅ. பதிகம்,-ஒரு பொருளைக்குறித்துப் பத்துச்செய்யுளாற் கூறுவது.

எகூ. சதகம்,-அகப்பொருளொன்றன்மேலாதல் புறப்பொருளொன்றன்மேலாதல்கற்பித்து நூறுசெய்யுள்கூறுவது அறப்பளீசுரசதகம், குமரேசர்சதகம், வைராக்கியசதகமுதலியன காண்க.

அ0. செவியறிவுறூஉ, - பொங்குதலின்றிப்புரையோர் நாப்பண் விறல் கடனெனவவையடக்கியற் பொருளுற வெண்பாமுதலு மாசிரிய மிருதியுமான மருட்பாவாற் கூறுவது.

அக. வாயுறைவாழ்த்து,-வேம்புங் கடுவும் போல்வனவாகிய வெஞ்சொற் கண்முன்னர்த்தாங்கக்கூடா வாயினும் பின்னர்ப்பெரிதும்பயன்றருமெனமெய்ப்பொருளுறவெண்பாமுதலுமாசிரிய மிறுதியுமான மருட்பாவாற் கூறுவது.

அஉ. புறநிலைவாழ்த்து, - வழிபடு தெய்வநிற்புறங்காப்பப் பழிதீர்செல்வமோ டொருகாலைக்கொருகாற் சிறந்து

பொலிவாயென வெண்பாமுதலு மாசிரியமிறுதியுமானமருட்பாவாற்பாடுவது.

௮௩. பவனிக்காதல்,-உலாக்காட்சியாலெய்திய காம மிகுதியாலவை பிறரொடு முரைத்து வருந்துவது.

௮௪. குறத்திப்பாட்டு,- தலைவன் பவனிவரவு, மகளிர்காமுறுதல், மோகினிவரவு, உலாப்போந்ததலைவனைக்கண்டுமயங்கல்,திங்கள்தென்றன் முதலியவுபாலம்பனம், பாங்கியுற்றதென்னென வினவல்,தலைவிபாங்கியோடுற்றதுகூறல், பாங்கி தலைவனைப் பழித்துக்கூறல், தலைவிதலைவனைப் புகழ்ந்துகூறல், தலைவிபாங்கியைத் தூதுவேண்டல், தலைவிபாங்கியோடுதலைவனடையாளங்கூறல், குறத்திவரவு, தலைவி குறத்தியை மலைவள முதலியவினவல், குறத்திமலைவளநாட்டுவளமுதலியகூறல், தலைவன்றலவளங்கிளைவளமுதலியகூறல், குறிசொல்லிவந்தமைகூறல்தலைவிகுறிவினவல் குறத்திதெய்வம்பராவல், குறிதேர்ந்து நல்வரவுகூறல்,தலைவிபரிசிலுதவிவிடுத்தல், குறவன் வரவு, புள்வரவு கூறல், கண்ணிகுத்தல், புட்படுத்தல், குறத்தியைக்காமுற்றுத்தேடல், குறவன்பாங்கனொடு குறத்தியடையாளங்கூறல், குறவன்குறத்தியைக்கண்ணுறல், குறவனணிமுதலிய கண்டையுற்று வினவலுமாண்டாண்டு குறத்திவிடை கூறலுமாகக் கூறல்,பெரும்பான்மையுமிவ்வகையுறுப்புக்களால் அகவல்,வெண்பாதரவுகொச்சகம், கலித்துறை, கழிநெடில் விருத்தம், கலிவிருத்தம் இச்செயுளிடைக்கிடைகூறிச் சிந்துமுதலிய நாடகத்தமிழாற்பாடுவது.

௮௫. உழத்திப்பாட்டு, - கடவுள் வணக்கமுறையே மூத்தபள்ளியிளைய பள்ளி குடும்பன்வரவோடவன் பெருமைகூறல்,முறையேயவர்வரலாறுநாட்டுவளம், குறியிற்கூக்கேட்டல்மழைவேண்டிக்கடவுட்பராவல், மழைக்குறியோர்தல்,ஆற்றின்வரவு,அதன்சிறப்புக்காண்டலிவற்றிற்கிடையிடையாகப் பொருட்டுறையுங்கூறிப்பண்ணைத் தலைவன்வரவுபள்ளிகளிருவர்முறையீடு, இளையாளையவனுரைப்பல்,பள்ளன்வெளிப்படல், பண்ணைச்செயல்வினவல்,அவனதுகூறல்,ஆயரைவருவித்தல், அவர்வரல் அவர்பெருமைகூறல். மூத்தபள்ளிமுறையீடுகும்பன்கிடையிலிருந்தான்போல்வரல், அவனைத்தொழுவின்மாட்டல், அவன் புலம்பல், மூத்தபள்ளியடிசில்கொடுவரல்,அவனவளோடுகூறல், அவனவளைமன்னித்தல், கேட்கவேண்டல், அவன்மறுத்தல், அவன்சூளுறல், அவளவனைமீட்கவேண்டிப்பண்ணைத்தலைவனைப்பரவல்,விழிமுதலியவளங் கூறல், உழவருழல், காளைவெருளல், அதுபள்ளத்துப்பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவனெழுந்துவித்தல், அதைப் பண்ணைத்தலைவர்க்கறிவித்தல்,நாறுநடல்விளைந்தபின்செப்பஞ்செயல், நெல்லளத்தல், மூத்தபள்ளிமுறையீடு, பள்ளிகளுளொருவர்க்கொருவரேசலென விவ்வுறுப்புக்களுறப் பாட்டுடைத் தலைவன் பெருமையாங்காங்குத்தோன்றச் சிந்தும்விருத்தமும்விரவிவர விவற்றாற்பாடுவது.

௮௬. ஊசல்-ஆசிரியவிருத்தத்தானுதல் கலித்தாழிசையானுதல் சுற்றத்தோடும்பொலிவதாக, ஆடிரூசல்,ஆடாமோ வூசலென்றிறக் கூறுவது.

௮௭. எழுகூற்றிருக்கை,-எழுரையாக்கக்குறுமக்கண்முன்னின்றும் புக்கும் போந்தும்விளையாடும் பெற்றியால் வழுவாமையாலொன்றுமுதலாகவேழிறுதியாக முறையானே பாடுவது.

௮௮. கடிகைவெண்பா,-தேவரிடத்துமரசரிடத்தும், நிகழுங்காரியங் கடிகையளவிற் றோன்றிநடப்பதாகமுப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் கூறுவது-

௮௯. சின்னப்பூ,-நேரிசைவெண்பாவாலரசனதுசின்னமாகிய தசாங்கத்தினைச் சிறப்பித்துவிரித்துநூறு, தொண்ணூறு,எழுபது, ஐம்பது, முப்பது என்னு மெண்படக்கூறுவது-

௯0. விருத்த விலக்கணம்,- வில், வாள்,வேல்,செங்கோல் யானைகுதிரை, நாடு,ஊர்,கொடை, இவ்வொன்பதினையும் பப்பத்து விருத்தத்தா லொன்பது வகையாற் பாடுவது.

௬௧. முதுகாஞ்சி, - இளமை கழிந்தறிவுமிக்கோரிளமைகழியாதவறிவின்மாக்கட்குக் கூறுவதாம்.

௬௨. இயன்மொழிவாழ்த்து,-இக்குடிப்பிறந்தோர்க்கெல்லாமிக்குணமியல்பென்றுமவற்றைநீயுமியல்பாகவுடையையென்றுமுன்னோர்போல்நீயுமியல்பாகவீயென்றுமுயர்ந்தோரவனை வாழ்த்துவதாகக் கூறுவது.

௬௩. பெருமங்கலம், - நாடோறுந்தான் மேற்கொள்கின்ற சிறைசெய்தன் முதலிய செற்றங்களைக் கைவிட்டுச் சிறைவிடுதன் முதலிய சிறந்த தொழில்கள்பிறந்ததற்குக்காரணமானநாளிடத்து நிகழும் வெள்ளணியைக்கூறுவது.

௬௪. பெருங்காப்பியம், - தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளுமிவற்றிற்கிரியைவாழ்த்து முன்னுளதாய் அறம்பொருளின்பம் வீடென்னும் நாற்பொருளும்பயக்குநெறியுடைத்தாய்நிகரில்லாத் தலைவனையுடைத்தாய், மலையுங்கடலுநாடுநகரும் பருவமு மிருசுடர்த்தோற்றமுமென்றிவற்றின் வளங்கூறுதலும் மணமும் முடிகவித்தலும் பொழில் விளையாட்டும் நீர்விளையாட்டும் உண்டாட்டும் மகப்பேறும்புலவியுங் கலவியுமென்றிவற்றைப்புகழ்தலும்,மந்திரமுந்தூதுஞ் செலவும் போரும் வென்றியுமென்றிவற்றைத் தொடர்ந்து கூறலுமாகிய விவைமுறையேதொடர்வுறச்சருக்கமிலம்பம்பரிச்சேதமென்னும் பகுதியையுடைத்தாய்,வீரமுதலிய சுவையமவற்றைவிளக்குங்கருத்து விளங்கக்கற்றோரானியற்றப்படுவதாம் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி, சூடாமணி, கந்தபுராணம், தணிகைப்புராணம், கூர்மபுராணம் முதலியன காண்க.

௬௫. சிறுகாப்பியம், - அறம்பொருளின்பம் வீடென்னு நான்கனுளொன்றும்பலவுங்குறைந்தேனைய வுறுப்புக்கண்மேற் கூறியவா றியல்வது. உலாமடல் முதலியனவாம்.

பிறப்பு-எ-தேவர்,மக்கள், விலங்கு புள்,ஊர்வன,நீர்வாழ்வன,தாவரம்,இவற்றின்யோனிபேதமெண்பத்து நான்கு நூறாயிரம்,அவையாவன. தேவர்பதினன்கு நூறாயிரம், மக்களொன்பது நூறாயிரம், விலங்குபத்து நூறாயிரம்,புள்பத்து நூறாயிரம், ஊர்வனபதினொரு நூறாயிரம், நீர்வாழ்வன பத்துநூறாயிரம்-தாவரமிருபது நூறாயிரம், அன்றி, தேவர் பதினறு நூறாயிரமெனவுந் தாவரம்பதினெட்டு நூறாயிரமெனவுங்கூறுப.

---

## பு



புண்ணியத்தோற்றம் - ௪ - தவம், ஒழுக்கம், கொடை, கல்வி.

புண்ணியம்-எ-புகங்கிருதி, தானம், விரதம், சினேகம், நயபோசனம், கமை, உற்சாகம்.

புண்ணியம் - ௪ - தானம், கல்வி, தவம், ஒழுக்கம்.

புண்ணியம் ௯-எதிர்கொளல், பணிதல், ஆசனத் திருத்துதல், தாள்கழுவல், அருச்சித்தல்,தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், புகழ்தல், அமுதமேந்தல் இவை துறந்தோர்க்குசெய்வனவாம்.

புரம் - ௩-இருப்புமதில், வெள்ளிமதில், பொன்மதில் இவையே முப்புரம்.

புராணம் - ௧அ-(௧)பிரமம் (௨) பதுமம் (௩)வைணவம் (௪)சைவம் (௫)பாகவதம் (௬) நாரதீயம் (எ) மார்க்கண்டேயம்(அ)ஆக்கினேயம்(௯) பவிடியம் (௧௦)பிரமகைவர்த்தம் (௧௧) இலிங்கம்(௧௨) வராகம் (௧௩) காந்தம் (௧௪) வாமனம் (௧௫) கூர்மம் (௧௬) மற்சம், (௧எ)காருடம்.(௧அ)வாயவியம்.

இவற்றுள்சைவம்.மார்க்கண்டேயம், பவிடியம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மற்சம், வாயவியம், என்னுமிப்பத்துஞ் சிவபுராணங்களாம். வைணவம், பாகவதம், நாரதீயம், காருட்டம் என்னு மிந்நான்கும் விஷ்ணுபுராணங்களாம், பிரமம், பதுமம், என்னுமிரண்டும் பிரமபுராணங்களாம். ஆக்கினேயம்,என்னும்ஒன்று அக்கினி புராணம்,பிரமகைவர்த்தம், என்னும் ஒன்று சூரியபுராணமாம். யோகிகளுக்கு

ஞானம் உபதேசிக்குஞ் சிவபெருமான் தெளிபளிங்குவடிவினராயும் எங்குமுறங்காது பிரமணுதிபராயும் அருட்செய்கையுடையராயும் விளங்கலால் சிவபுராணங்கள் பத்தும் சுகஞானங்களுக்கு இடமாயதும் வெண்ணிற முடையது, மாயசாத்துவிகக்குண புராணங்களாம். விட்டுணுசரியரும் சேஷசயனஞ்செய்வோரும் பத்தரைமோகிப்பவரும் பிரமாதமவஞ்சன முதலியவுடையரும் மருட்செய்கை யுடையருமாதலால் விட்டுணுபுராணங்கள் நான்கும் உதாசீனரூபமும்கூட கிருத்தியசமர்த்தமும், நித்திரை,சோம்புபிரமாத வஞ்சனங்களும் கருநிறமுமுடையதாமதகுண புராணங்களாம். பிரமாச்செந்நிறமுடையராய், சஞ்சலரூபியாய் விளங்களால் பிரமபுராணங்கள் இரண்டுஞ்சிவந்தநிறமுடையதும் துக்கத்துக்கிடமாயதும் சஞ்சலரூபமுடையதுமாகிய இராசதகுணபுராணங்களாம். அக்கினிதேவனுஞ் சூரியமூர்த்தியும் முக்குண வடிவினராய்த் தோன்றலால் அக்கினி புராணமுஞ் சூரியபுராணமும் திரிகுணயுத்தங்களாம். பிரமபுராணம்பிராமியம் எனவும் பெயர்பெறும் பதினுயிரங் கிரந்தங்களை யுடைத்து,பதுமபுராணம் பாத்மம் என்றும் சொல்லப்படும் ஐம்பத்தையாயிரங் கிரந்தமுடையது, வைணவ புராணம். விஷ்ணுபுராணம், விண்டுபுராணம் எனவும் பெயர், ஆருயிரங் கிரந்தங்களையுடையது. சைவபுராணம் வாயுபுராணம் எனவும் பெயர். இருபத்து நாலாயிரங் கிரந்தங்கள் கொண்டது பாகவதமானது இதிகாசபாகவதம், புராண பாகவதம், சங்கிதாபாகவதம், உபசங்கிதா பாகவதம், விட்டுணுரகசியபாகவதம், விட்டுணுயாமளபாகவதம், கௌதம சங்கிதா பாகவதம்,தேவிபாகவதம், என எண்பகுப்பினதாயிருத்தலான் அவற்றுள்சுகர் பாகவதமே புராணபாகவதமாம் சிலர் தேவிபாகவதமேயஃதென்றுங் கூறுவர் அது பதினெண்ணுயிரங் கிரந்தமுடைத்து. நாரதீயபுராணம் இருபத்தையாயிரங் கிரந்தமுடையது மார்க்கண்டேய புராணம் முப்பத்திராயிரங் கிரந்தமுடையது. ஆக்கினேய புராணம் எண்ணுயிரங் கிரந்தமுடையது பவிடியபுராணம் பவிஷ்யத் எனவும் பெயர்பெறும் முப்பத்தோராயிரங் கிரந்தமுடையது பிரமகைவர்த்தபுராணம் பன்னீராயிரங் கிரந்தமுடையது இலிங்க புராணம் பதினோராயிரங்கிரந்தமுடையது. வராகபுராணம் இருபத்து நாலாயிரங் கிரந்தமுடையது, கந்தபுராணம் ஓரிலக்கமுடையது, வாமனபுராணம் பதினுலாயிரங்கிரந்தமுடையது கூர்மபுராணம்,கௌர்மம்,தத்துவசாகரம் எனவும் பெயர்பெறும். ஆருயிரங் கிரந்தங்களையுடையது மற்சபுராணம் மத்ஸயம் என்றுஞ்சொல்லப்படும் பதினுலாயிரங்கிரந்தங்களையுடையது. காருடபுராணம் ஆருயிரங்கிரந்தமுடையது. வாயவியபுராணம், பிராமம் பிரமாண்டம், எனவும் பெயர்பெறும். பன்னீராயிரங் கிரந்தமுடையது.இவைகள்வேதாகமங்களின் சாரங்கள் என்னவென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றி விளக்குதலால் உபாங்கம் என்வும், உபப்பிருங்கணம், யாவரானுங் கொள்ளப்படுவதுடன் முதல்வனால் அருளப்பட்டமைபற்றிச் சுத்தவித்தையெனவும், பழையவரலாற்று முறைகளை யுணர்த்தலால் புராணங்கள் எனவும் சொல்லப்படும். புராணம் பதினெட்டிற்குங் கிரந்தத்தொகை நாலிலக்கத்தெண்ணுயிரமாகும். இவைகளின் யேனைய வரலாற்றிலக்கணங்களையெல்லாங் கூர்மபுராணம் இந்திரத்துய்ம்மன் முத்தியடைந்த அத்தியாயத்தில் "பிரமநற்பதுமம்" என்னுந் திருவிருத்தத்து விசேடவுரைக்கண்கண்டு,தெளிக. உபபுராணங்கள் முன்காட்டப்பட்டன.

புராணலக்கணம்-ரு-உலகத் தோற்றம், ஒடுக்கம், முனிவர், அரசர், மரபு, அவர்சரிதம், மநுவந்தரம்.

புராணலக்கணம் – ௧௦-சர்க்கம், விசுர்க்கம், விருத்தி, இரட்டை, மநுவந்தரம், வமிசம்,வமிசாநுசரிதம்,சங்கிதை, எது, ஆசிரயம்.

புரி-எ-அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை.

புருடார்த்தம்-சு-அறம், பொருள், இன்பம், வீடு.

புலமையோர் - ச - கவி,கமகன்,வாதி, வாக்கி, இவருள் ஆசு,மதுரம், சித்திரம், வித்தாரமென்னு நாற்கவிகளைப் பாடுவோன் கவி, அரும் பொருளைச் செம்பொருணடையாகக்காட்டி விவகரிப்போன்கமகன், - காரணமுமேற்கோளு மெடுத்துக் காட்டி பிறன் கோண் மறுத்துத் தன்மத நிறுத்துபவன் வாதி - அறம்பொருள், இன்பம், வீடெனுநாற்றிறங்களைக்கேட்க வேட்க விரித்துக் கூறுவோன் வாக்கி.

புலன்-ரு-சுவை, ஒளி, ஊறு, ஓசை,நாற்றம்.

புறச்சமயம்-சா - தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம்.

புறத்திலக்கணம் - உ - பதம், புணர்ச்சி, இஃது எழுத்திலக்கண வகையினொன்று.

புறத்திலக்கணம்-க௦ - விபூதிருத்திராக்கம்என்னுஞ் சிவசின்னங்களைத்தரித்தல்,குருவைவழிபடல், சிவபெருமானைத்தோத்திரஞ்செய்தல்,சிவநாமங்களை யுச்சரித்தல், சிவபெருமானைப் பூசை செய்தல், சிவ தருமங்களைச் செய்தல், சிவபுராணங்களைக் கேட்டல் சிவாலயதரிசனஞ்செய்தல்,சிவனடியாரிடத்தன்றிப்போசனம்பண்ணாமை, சிவனடியார்களுக்குக்கொடுத்தல், என்பனவாம். உபவிலக்கணமும் பத்து அவையாவன -சிவபெருமானுடைய பெருமையைப் பேசுந்தோறும் சிந்திக்குந்தோறும், கண்டம், விம்முதல், நாத்துடித்தல், உதடுதுடித்தல், சரீரநடுங்குதல், உரோமஞ்சிலிர்த்தல், குறுவேர்வைகொள்ளல், நாக்குத் தழுதழுத்தல், ஆனந்தக் கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல்,பரவசமாய்த் தன்னை அயர்த்தல், என்பவைகளாம்.

புறப்புறச்சமயம்-சா-உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், ஆருகதம்.

புறப்பொருள்வகை-அ - பசுக்கவர்தல், நிரைமீட்டல், பகைமேற் செல்லல், பகைமுன் னெதிருன்றல், தன்னரண்காத்தல், பகையரண் வளைத்தல், பொருதல், போர் வெல்லல்.

---

# பூ



பூ - ச - கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ, நிலப்பூ, என ஒன்றுகூட்டி ஐந்தென்பாருமுளர்.

பூதம் - ரு - நிலம், நீர், தீ, காற்று, விசும்பு.

---

# பெ



பெண்கை-அ-கடகம், சகதுண்டம், காங்கூலம், பிறைக்கை, அராளம், பக்கம், தாம்பிரசூடம், மான்றலை.

பெண்வகை - ச - பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி.

பெரியோரியல்பு - எ - அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, பொறுமை.

பெருங்கலவிலக்கணம் - எ - கோட்டினதளவு பன்னிருசாண், வணரளவு சாண், பத்தரளவு, பன்னிருசாண் இப்பெற்றிக்கேட்ட ஆணி, திவவு, உந்தி ஆயிரங்கோற்றொடுப்பு.

பெருந்தானம் - அ - நெஞ்சி, மிடறு, நா, மூக்கு, அண்ணுக்கு, உதடு,பல், தலை.

பெரும்பண்ணின்வகை-பாலையாழ், செந்து, மண்டலியாழ், பௌரி, மருதயாழ், தேவதாளி, நிருபதுங்கராகம், நாகராகம், குறிஞ்சியாழ், ஆசாரி, சாயவேளர், கொல்லி, கின்னராகம், செவ்வழி,மௌசாளி,சீராகம்,சந்தி.

---

# பே



பேடியிலக்கணவகை-உரு - நச்சுப்பேசல், நல்லிசையோர்தல், அச்சமாறல், ஆண்பெண்ணுதல், ஒருகைவீசிநடத்தல்,தலையிலொருகைவைத்தல்,எதிர்

ந்தோரைக்கண்டு விலகல்எதிர்ந்தோர்மேற்செல்லுதல் பார்வை வேறுபடுதல், பிறருக்கு நடுநடுங்கிச்சுழன்று திரிதல், பிறரைக்கண்டுநகைத்தல், நாணுதல், பலநாடகஞ்செய்தல், பக்கம்பார்த்தல், பதுங்கித்திரிதல், காரணமில்லாமற் பலவற்றைக் கோறங்கொண்டுபேசல், தனைமூலையைத்தானே வருத்தல், அசக்கல், அழுதல், சோர்ந்தருவருத்தல், குறுக்கிக்கூட்டிப்பார்த்தல், இடையிலொருகை வைத்தல், அதனை வாங்கல், இறங்கிப்பேசல், எல்லெல்லென்று பாடுதல்.

பேதம்-௩-சுகதபேதம், சசாதிபேதம், விசாதிபேதம், அவையாவன - மரத்துக்கிலையரும்பு பூ காய் கனி முதலிய சுகதபேதம், மரத்துக்குமறுமாஞ் சுசாதிபேதம், மரத்துச்குக்கல் விசாதிபேதம்.

பேறு - கசு - புகழ்,கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பொருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள்.

---

## பொ



பொதுப்பாயிரம்-ரு-நூல்வரலாறு, ஆசிரிய னிலக்கணம், நுவலுந்திறன், கொள்வோன்றிறன், கோடன்மரபு.

பொருள்கோள்-அ-யாற்றுநீர், மொழிமாற்று, நிரனிறை, விற்பூட்டு, தாப்பிசை, அலைமறிபாப்பு,கொண்டுகூட்டு, அடிமறிமாற்று.

பொருளாராய்ச்சிவகை-அ - திணை, பால், செய்யுள், நிலம், காலம், வழுவழக்கு, இடம் இவற்றுள் திணை யிரண்டு, பால் பதினொன்கு, செய்யுளறுவகை நிலன் நால்வகை, காலம்பன்னிரண்டு,வழுபதினொன்கு, வழக்கிருவகை.

பொருளின் பொதுத்தொழிற்பண்பு - கூ-தோன்றல், மறைதல், வளர்தல், சுருங்கல், நீங்கல், அடைதல், நடுங்கல், இசைத்தல், ஈதல்.

பொருள் - உ - கல்விப்பொருள் செல்வப்பொருள்.

பொருள்-ச-அறம், பொருள், இன்பம், வீடு.

பொருள்வகை-ச-நாடகம், பிரகரணப்பிரகரணம், பிரகரணம், அங்கம்.

பொழுது-கூ-மாலை, யாமம், வைகறை விடியல், நண்பகல், எற்பாடு, இவையேயத்தமயகால முதலொவ்வொன்று பப்பத்து நாழிகையாக முறையே கொள்க, இவற்றைச் சிறுபொழுதென்பர், கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில், என்னுமாறனுமாம் இவைபெரும்பொழுதாம்.

பொறி - ௩ - மனம்,வாக்கு,காயம்.[வி.

பொறி-ரு-மெய், வாய்,கண் மூக்கு,செ

பொறிக்காட்சிவகை - கூ - சையோகம், சையுத்த சமவாயம் சையுத்தசமவேதசமவாயம், சமவாயம்,சமவேத சமவாயம், விசேடணவிசேடிய பாவம், இவற்றுள்.

க-சையோகம் ஆவது யாதொருபொழுதுகடம் விடயமாயிருக்கிற ஞானமான துண்டாகநின்ற தப்பொழுதுகண் இந்திரியம் கடம் விடயம் இந்த விரண்டினுடைய கூட்டுறவு இது பிரிந்திருக்கிற வத்துக்களினுடைய சம்பந்தமாகையாலே சையோகமெனப் பெயராயிற்று. சையுத்த சமவாயமாவது யாதொருபொழுது கண்ணாலே கடத்திலேயிருக்கிற உருவமானது அறியப்படுகின்றதோ அப்பொழுதே கண் இந்திரியம் கடத்தையடைந்திருக்கிற நீலாதிரூபம் விடயம் இவைகளினுடைய சம்பந்தம். சையுத்தசமவேதசமவாயமாவது யாதொருபொழுது கண்ணாலே கடத்தையடைந்திருக்கிற உருவத்திலே யிருக்கின்ற ரூபத்துவமானது அறியப்படுகின்றது. அப்பொழுது கண்இந்திரியம் உருவத்துவம்விடயம் இவைகளினுடைய சம்பந்தம். சமவாயமாவது - எக்காலத்திற் சோத்திரேந்திரியத்தினாலேசத்தமானது அறியப்படுகிறதோ அப்போது சோத்திரம்இந்திரியம்சத்தம்விடயம் இவைகளினுடைய சம்பந்தமாம். சமவேதசமவாயமாவது எக்காலத்தில்சோத்திரத்தி

எனல்-செந்தினை, தினைப்புனம், பைந்தினை.
கானல் - உப்பளம், ஒளி, கடற்கரைச் சோலை, கழி, சூரியகிரணம், பேய்த்தேர்,
கூனல் - கோணல், சங்கு, பிறை, வியங்கோண்முற்று.
பானல்-கருங்குவளை, மருதநிலம், வயல்.
மானல் - ஐயம், ஒத்தல், மயக்கம், வியங்கோண்முற்று.
வேனல் - கானல், வெயில்.
கானவர் - குறிஞ்சிநிலமாக்கள், முல்லைநிலமாக்கள், வேடர்.
தானவர் - அசுரர்.
மானவர்-படைவீரர், மனிதர், மானமுடையோர்.
கானவன் - கானவன், குரங்கு.
தானவன் - அசுரன், சந்திரன்.
மீனவன் - பாண்டியன்.
வானவன் - சேரன், பிரமன்.
ஆனனம் - முகம்.
ஈனனம் - வெள்ளி.
கானனம் - காடு.
ஊனன் - குறைவுள்ளோன்.
ஈனன் - குலமில்லான்.
சீனன் - ஓர் தேயத்தான்.
ஞானன் - பிரமன்.
தீனன் - தரித்திரன்.
வேனன் - பிருதுமன்னன் றந்தை.
ஆனுமை - உத்திராடம், நீங்காமை.
நோனுமை - தவஞ்செய்யாமை, பொறுமை.
கோனுர் - இடையர்.
நோனுர் - தவமில்லார், பகைவர்.
மானுர் - பகைவர், மாதர்.
ஆனி-ஓர்மாதம், கேடு, கேட்டை, பொருந்தநதி, வெட்டுக்குருத்து.
கூனி - ஓர்மீன், கூனுள்ளான், வசவி.
ஞானி - அருகன், பிரமன்.
தானி - தானத்தையுடையது.
பானி - படை, பானஞ்செய்வோன்.
மானி - மானமுடையோன்.
மேனி - உடலுருவம், நிறம், வடிவு.
யோனி - காரணம், பெண்குறி.
வானி - கூடாரம், படை, மேற்கட்டி, விருதுக்கொடி.

ஆனியம் - நாள், பருவம், பொழுது, மூலநாள்.
சூனியம் - பாழ்.
தானியம் - பண்டம்.
பானியம் - நீர்.
மானியம் - அரசர்கள் சம்மானத்தால் விடுநிலம்.
ஆனு - இனிமை, நன்மை.
சானு - மலைச்சாரல், முழங்கால்.
சூனு - மகன்.
தேனு - எருமை, களவு, குதிரை, தேவப்பசு, பசு.
பானு - சூரியன்.
ஆனேறு - இடபம்.
தேனேறு - ஆண்வண்டு.
மானேறு - உத்திரநாள், கலைமான்.
மீனேறு - மகரமீன்.
வானேறு - இடி.
ஆனை - யானை.
ஏனை - மலங்குமீன், மற்று.
கூனை-கருப்பஞ்சாறடுகூன், வெள்விக்குண்டம்.
சேனை - ஆயுதம், கடைவீதி, படை.
சோனை-சொரிதல், திருவோணநாள், விடாமழை.
தானை - ஆயுதப்பொது, துாசு, படை.
பானை - மிடா.
பூனை - பூசை.
மேனை - மலையரையன்றேவி.
மோனை-ஆதி, ஓர்வகைத்தொடை. [ம்.
யானை-வடதிசைப்பாலன்குறி, வாரணம்.
ஆன்-ஆண்பால்விகுதி. (உ-ம். வேளான்) சாரியை, (உ-ம். ஒருபான்) பசுப்பொது, பெண்பசு, வேற்றுமையுருபு. (உ-ம், ஊரனென்னுந் தோட்டியானுரைந்துங்காப்பான்.)
ஊன் - தசை.
கான்-எழுத்தின்சாரியை, (உ-ம், ஐகான்) காடுமணம்.
கூன் - ஆந்தை, கூனென்னேவல், நத்தை வளைவு. [வன்.
கோன்-அரசன், எப்பொருட்கு மிறைவன்.
தான் - அசைச்சொல். (உ-ம். நீதான்) படர்க்கைப் பொதுப்பெயர்.
தீன் - உணவு. [சனை.
தேன் - கள், பெண்வண்டு, வண்டு, வாசனை.
நான் - தன்மை யொருமைப்பெயர்.

நோன் - வலிமை, பெருமை.
பான் - எதிர்காலவிடைச்சொல்(உ-ம். உண்பான்வந்தான்.
பேன்-ஒருயிர்.
மான் - உருவம், நவ்வி, மகரமீன், மகரராசி விலங்கின்பொது.
மீன்-நெய்தற்பறை, மகரமீன், மச்சம், விண்மீன்.
வான்-ஆகாயம், எதிர்காலவிடைச்சொல், (உ-ம். கொல்வான் கொடித்தானைகொண்டெழுந்தான்) பெருமை, மழை, மேகம்.
ஆன்மா - உயிர்.
ஏன்மா - பன்றி.
கோன்மை - தலைமை.
நோன்மை - தவம், பெருமை, பொறுமை கலி.
பான்மை - குணம்.
மேன்மை - பெருமை.
ஆன்றல் - அகலம், மாட்சிமை, மிகுதி.
ஈன்றல் - உண்டாதல், பெறுதல்.
ஊன்றல்-சார்தல், தள்ளல், நடல், வியங்கோண்முற்று.
கான்றல் - கக்கல்.
கீன்றல் - கிழித்தல்.
சூன்றல் - தோண்டல்.
தோன்றல்-ஆண்மகன், இராசா, தலையன், மகன்,முல்லைநிலத்தலைவன், வியங்கோண்முற்று.
நான்றல் - நாவல், தொங்குழல்.
நோன்றல் - தள்ளல், நிலைநிறுத்தல், பொறுத்தல்.
மான்றல் - மயக்கம்.
ஆன்றவர் - புலவர்.
ஈன்றவர் - இருமுதுகுரவர்.
சான்றவர் - அறிஞர்.
ஊன்றி - பாம்பு, வினையெச்சம்.
தான்றி - தான்றிமரம்.
தோன்றி - இரத்தம், காந்தள், வினையெச்சம்.
ஆன்று - அகன்று.
ஊன்று - நிறுத்தென்னேவல்.
சான்று - நடுச்சொல், சாக்ஷி, வினையெச்சம்.
ஞான்று - இடைச்சொல், நாள், வினையெச்சம்.
ஆன்றோர் - அறிவுடையோர், புலவர்.
ஈன்றோர் - பெற்றவர்.
என்றோர் - சிநேகிதர்.
சான்றோர் - அறிஞர்.

## நெடிற்கீழெதுகை

முற்றிற்று.

---

ஈண்டுக்காட்டிய பற்பல தொடைப்பதமன்றி அடைமொழியானும், மீரெச்சத்தானும், அறுதொகையானும், முற்றுவினையானும், வினைக்குறிப்பானும், வேற்றுமைமுதலிய வுருபானும் சங்குதமுதலிய எழுத்துத்திரிபானும் ஓரளவின்றிச் சிறப்புள்தொடைப்பதமாக வேண்டுவனவெல்லாங் கூட்டிக்கொள்க. அங்ஙனஞ் சிந்தாமணி, கம்பராமாயணம் கந்தபுராணமுதற் பலவிலக்கியங்களில் வந்துள்ளன:—

க-வது.

அந்நீர்ப்பதுமம் - அழகியதாமரை.
செந்நீர்ப்பவளம் - சிவந்தபவளம்.
பைந்நீர்க்கதலி - பசியவாழை.
முந்நீர்ப்புணரி மூன்று நீருடைக்கடல்.
வெந்நீர்க்கடமா - வெம்மைப்பொருந்தியமதயானை என்பன பலவும் அடைமொழியானுங் குணத்தொகையானும் வந்த தொடைப் பதங்களாம்.

உ-வது.

ஆனிலையிறை திருவானிலை யென்னுந் தலத்துவீற்றிருந்தருளுஞ் சிவபெருமான்.
தேனிலைமாலை.
நூனிலைமார்பன்.
பானிலைமொழி.
வானிலைநதி - ஆகாயகங்கை.
வேனிலைவிழி- என்பன பலவு மெழுத்துத் திரிபானுங் குணத்தொகையானும் வந்த தொடைப்பதங்கள்.

ந-வது.

அரணம்பரம் - கோட்டைமறைவு.
இரணம்பரம் - போர்க்கடல்.
கிரணம்பரம் - கதிருடையாக வுடுத்தல்.
சரணம்பரம் - அடைக்கலம், மறைவு எனபனவும்.
மரணம்பரம் - இறப்புச்சமுத்திரம்.
சிராங்கம் - தலை.
தராங்கம் - மலை.
பராங்கம் - தேவலோகம்.
வராங்கம் - முத்தியருடல்,என்பனவும், வடமொழிச் சங்கிருதத் திரிபினால் வந்த தொடைப்பதங்கள்.

ச-வது.

கனையநீலம்.
சினையசண்பகம்.
தினையுகொல்லை.
நனையநாகம்.
முனையசாகம்.
அனையயாவும்-என்பல பலவும் வினைக்குறிப்புப் பெயரெச்சத்தால் வந்த தொடைப்பதம்.

ரு-வது.

காவிற்றுக - சோலைபோல.
தீவிற்றுக - தீவுபோல.
நாவிற்றுக - சொல்ல.
கோவிற்றுக் - ஆகாயத்தைப்போல.
நீவிற்றுக - நீவ.
பாவிற்றுக-பாவினதாக.
மேவிற்றுக - மேவ. என்பன பலவும் வினைக்குறிப்பினாலும் முற்றுவினையாலும் வந்த தொடைப்பதங்கள்.

சு-வது.

சாலி-வாலி-என்பவற்றிற்கு காலி-கோலி-சீலி-சூலி-தாலி - தூலி - தோலி நீலி.
நூலி-பாலி, மாலி, வேலி, பலவும் பகுபதவிகுதியால் வந்ததொடைப்பதங்கள்.

எ-வது.

குரவை.
பரவை - என்பவற்றிற்கு.
அரவை.
இரவை.
கரவை.
சரவை.
புரவை-பலவும், ஐயென்னும் வே[illegible]மையுருபினால்வந்த தொடைப[illegible]கள்.

அ-வது.

செந்தினை - என்றதற்கு.
அந்தினை.
இந்தினை.
உந்தினை.
கந்தினை.
சந்தினை.
பந்தினை-பலவும்,இன்சாரியையோடையெனும் வேற்றுமையுருபினாலும்.

உந்திளை.
சிந்திளை.
நந்திளை.
மூந்திளை-பலவு மிறந்தகாலத் தொரு மைமுன்னிலை முற்று வினையாலும் வந்த தொடைப்பதங்கள்.

௯ - வதி.

சிந்தனை - என்றதற்கு.
கந்தனை.
தந்தனை.
தொந்தனை.
நிந்தனை.
நொந்தனை.
வந்தனை.
வெந்தனை - பலவு மிறந்தகாலத் தொரு மை முன்னிலைமுற்று வினையால் வந்த தொடைப்பதங்கள்.

௰ - வதி.

சடிதி - என்றதற்கு.
கடிதி.
தடிதி.
படிதி.
மடிதி.
வடிதி.
முடிதி-பலவு மேவலின் மேற்கூட்டிய தி என்னும் விகுதியால் வந்த தொடைப்பதங்கள்.

௧௧ - வதி.

புண்ணயஉடல் - என்றதற்கு.
அண்ணியவருள்.
எண்ணியமுறை.
கண்ணியபொருள்.
தண்ணியகலை.
நண்ணியவிடம்.
நுண்ணியவிடை.
மண்ணியகோயில்-பலவும்பெயரெச்சத் தால் வந்த தொடைப்பதங்கள்.
கன்னி - சென்னி - என்பவற்றிற்கு, உன்னி - சன்னி-துன்னி-பன்னி-பின்னி-எனவும், அல்லி - நெல்லி - என்பவற்றிற்கு, இல்லி-ஒல்லி-கல்லி கொல்லி-சல்லி-சில்லி-சுல்லி-சொல்லி-தல்லி-துல்லி-நல்லி-புல்லி-எனவும்,பல்லி-பில்லி-பெல்லி-மல்லி-நல்லி வல்லி-வில்லி-எனவும்வினையெச்சத் தானும் பகுபதவிகுதியானும் வந்த தொடைப்பதம்.

௧௨ - வதி.

புதுச்சந்நிதி - என்பன.
சதுச்சந்நிதி - என்பதற்கு
இடைதொடைப்பதங்களாம்.

இங்ஙன மீண்டுக்கூறியவற்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு புத்திவழியாற் கூறுதனவு முணர்வதறிவோர் கடனே என்னை?

எந்நூற் சூட்டினு மெத்துறை காட்டினும்
அந்நூற் கெல்லா மறிவாதி யெனவே.

தொடையகராதி முற்றிற்று.

---

தமிழ்மொழியகராதி

முற்றியது.